ஸ்ரீ

# பகவத்விஷயம்

## முதற்பத்து

### திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்தினாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி, திருவாய்மொழிநூற்றந்தாதி இவைகளுடன்

---

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு.

---

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியராலும்,
அ. வீ. நரஸிம்மாசாரியராலும்
பரிசோதிக்கப்பெற்றது.

---

திருவல்லிக்கேணி
நோபில் அச்சுக்கூடம்.

ரக்தாக்ஷி ஹூ] ரூ 60 == [1925.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

வ்யாக்யாந ஸஹிதங்களான

# பொதுத்தனியன்கள்.

## அழகியமணவாளன் அருளிச்செய்தது.

ஸ்ரீஶைலேஶதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ||

[**ஸ்ரீஶைலேஶ இத்யாதி**] - "நமஶ்ஶ்ரீஶைலநாதாய குந்தீநகரஜந்மநே | ப்ரஸாதலப்த பரமப்ராப்யகைங்கர்யஶாலிநே" என்றும், "பரமப்ராப்யபராங்குஶசரணகமலவிஷய விவிதகைங்கர்யகரணதத்பராய ஸ்ரீஶைலபூர்ணதேஶிகாய" என்றும், "அகந்தன் திருமலையாழ்வாரென்ன வந்தவதரித்து" என்றும் அவதாரவிஶேஷமாகச் சொல்லப்படுமவராய், சரமபர்வமான ஆழ்வார்திருவடிகளில் கைங்கர்யத்தை அவாருளாலே லபித்து வாழுமவராய், அதிலும் அவர்திருவடிகளான எதிராசர் செம்பொற்பாதம் இரவுபகல் மறவாமல் இறைஞ்சியேத்தும் எழிலையுடைய திருவாய்மொழிப் பிள்ளை சீரருளுக்கு எற்ற கலமா யுள்ளவரை; "ஸம்ஶ்ரீஶைலநாதார்யவரிவஸ்யாப்ரணக்ஷ்வாஜஷே" என்னக்கடவதிறே. ஸ்ரீஶைலபூர்ணர்க்ருபையாலும் ஸ்ரீஶைலதேஶிகர்தயையாலும் இராமாயணமென்னும் பத்திவெள்ளமும், தீர்த்தங்களாயிரமான திருவாய்மொழியும், யதீந்த்ரதத்ப்ரவணரிடங்களிலே குடிகொண்டு தேங்கிற்று. இவரும் தன்பத்தியென்னும் வீட்டின்கண் வைத்தபின்பிறே பெருகி வெள்ளமிட்டு விளைந்தது; "ஸ்ரீராமாயணதக்ஷவிஷ்நு:", "பாலோடமுதன்னவாயிரம்"; இராமாநுசனிறே இவரும். [**தீபக்த்யாதிகுணார்ணவம்**] - மதிநலங்கள் இவருக்குப் பிள்ளையருளால் உண்டாயிற்று. "ப்ரஜ்ஞாவிஜ்ஞாநவைபவயாமுநி" என்றும், "உத்தண்டவஸ்த்வயிஜத:", "நமஶ்சேவகாஸ்த்ரைணம்" என்றுதொடங்கி, "தயாவிநாநகாஜே" என்றுமிறே எதத்பூர்வாவதாரங்களிலும் ஜ்ஞாநபக்த்யாதிகள் பூர்ணமாயிருப்பது; ஆராவன்பிளையவனிறே. அச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹாதிகள் உண்டிறே இங்கே; அவ்வவதாரத்திற் குறைகளும் தீர்க்க அவதரித்தவிடத்திலும், பெரியபெருமாள் விஷயத்துக்கு அநுரூபமாகப் பெரியசீயருடைய அத்தப்ரேமாதிகள் இரட்டித்திறே இருப்பது. "நிரவதிகுணஜணிகணவாரணாலய", "பராத்பரதீஜநயே:", "குணாநாமாகர:" என்னக்கடவதிறே. "ஸ்வாமித்வஸேவாவ்ருத்தஸவாதுஸௌம்யஜாமாத்ருயோகீ" என்றும், "யதிவரப்ரவணதர:" என்றும் சொல்லக்கடவதிறே. இனி, நம்பெருமாளிடத்தில் ப்ராவண்யம் எல்லை

யானை எம்பெருமானாரளவும் வர்த்தித்தபடி சொல்லுகிறது; ஸாந்யவிவ்ருத்தியாய்க்கொண்டு சரமபர்வ வரக்கடவதாயிருக்கும். [யதீந்த்ரப்ரவணம்] அர்த்தப்ராவண்யந்தான், "யதீந்த்ரப்ரவணாயார்ய ஸர்வஜ்ஞாய ப்ரணாமிநே" என்று விசேஷஜ்ஞான வேதாந்தாசார்யரும் விக்ருதராய்ப் பேசி அநுபவிக்கும்படியாயிருக்கும். இவர்தாம் நிஜதேசிகஸக்தர்சிதஸம்யமிதுரந்தரநிஹித ஸகலநிஜஹாவபாவராமுனிவரிறே. அவர் பராங்குசபாதபக்தர்; இவர் யதீந்த்ரப்ரவணர்; அத்தப்ராவண்யமிறே இவரை அனைவரும் கால்கட்டுகிறது. [வந்தேரம்யஜாமாதரம்முநிம்] - "வந்தே நாதமுநீந்த்ரம்" என்கிறதெல்லாம் இவருக்கு இவ்விஷயத்திலேயாயிற்று. "ஸ்ரீமதே ரம்யஜாமாத்ருமுநயே விஷ்யே நம:" என்னுமாபோலே திருநாமத்தை அநுஸந்தித்துத் திருவடிகளிலே விழுகிறார். இவருடைய அநுஸந்தாந விஷயமான மந்த்ரமும் ஸ்துதிப்ரணமமும் இருக்கும்படி இதுவாயிற்று. "வந்தே நியந்தாரம்" என்கிறபடியே சேஷசேஷிகளுடைய ஸத்தாஸம்ருத்திகள் இவர் ஸங்கல்பாதீனைகளாயிருக்கும்படியைப் பற்ற 'முநி' என்கிறது.

இப்படிகளால் ஏற்றங்களையுடைய இவர் ஸ்துதிரூபமான இவர் தனியன்தான் "யத்வேதாதௌ ஸ்வர: ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டித:" என்று வேதத்துக்கு 'ஓம்' என்னுமாபோலே, த்ராவிடவேத தந்கோபாங்கங்களென்ன, ஏதத்வ்யாக்யாநவிசேஷங்களென்ன, ஏதத்ஸாரபூதமான ரஹஸ்யங்களென்ன இவற்றினுடைய ஆத்யந்தங்களிலே அகிலதிவ்யதேசவிலக்ஷணராலும் அநுஸந்திக்கப்படுமதாயிருக்கும். இவருடைய ஸகலதிவ்யப்ரபந்தப்ரவர்த்தகத்வம் பண்டு பலவிடங்களிலே கண்டுகொள்வது. அதுக்குமேலே உபயப்ரதாநப்ரணவயான உறைகோயிலிலேயிறே இவர் உதித்தருளிற்று; இவருக்கு இவ்வைபவம் ஜந்மஸித்தம்; இது, ப்ரணவார்த்தமாகிற பிதாபுத்ர ரக்ஷ்யரக்ஷக சேஷசேஷி ஸம்பந்தத்ரயமும் இவரிடத்திலே தர்சிக்கையாயிருக்கையாலே; "அகாரஸ்ஸ்ரீதரோ தேவஸ்ஸ்ரீவிஷ்ணுர்வாசக இஷ்யதே | உகாரஸ்ஸ்ரீதரோ தேவ்யா வாசகோ வாசியதே | மகாரஸ்து தயோர்தாஸ இதி ப்ரணவலக்ஷணம்" என்கையாலே - அகாரம் பகவத்வாசகமாயும், மகாரம் சேதந வாசகமாயும், உகாரம் உபயஸம்பந்த ப்ரகாசிகையையும் சொல்லும்; "அவ்வானவர்க்குமவ்வானவரெல்லாமுவ்வானவரடிமையென்றுரைத்தார்" என்னக்கடவதிறே; விளக்குப்பொன்போலே நடுநிலத்தீவமிறே; "ஜீவதீவரோவாம்", "ஸ்ரீயோவடிகஹாவத:", "ஸ்ரீயாவதிகயா" என்றே தத்ஸாபேக்ஷமாயிறே இருப்பது; "ஜநகோ தாஹித தவி த்ரியே ஜாம்ருதகேஷிஸாயிந: | கவதாரேஷ தஜ்ஜம் விஜிஸளவரம் நிம்", "ஸூதாகேஷ ஹவஹிஹமவஜாநாஸ்ரவி தாதம்", "தைவீகஜீவவிசிநயயாவகுதைவ நவதம்", "ஸளஜிதிரேஸவவஹமவாதுஸளஜிஜாமாதுயோகீ" என்னக்கடவதிறே; இப்படி முப்புரியூட்டியிறே இவரவதாரவைபவம் இருப்பது.

இன்னமும் இச்ச்லோகத்திலே பதங்கள்தோறும் இவ்வர்த்தம் காணலாயிறே இருப்பது. எங்ஙனேயென்னில்,—'ஸ்ரீசைலேச' என்கையாலே-அகாரவாச்யனான ஸர்வேச்வரனைச் சொல்லி, 'தயாபாத்ரம்' என்கையாலே - பகவதநந்யார்ஹசேஷபூதனான சேதநன் அவன்க்ருபைக்குப் பாத்ரமென்னுமத்தைச் சொல்லுகிறது. அடியில் பதத்தில் - ஆசார்யனை அவன்தானாகச் சொல்லுகிறது, விசேஷாதிஷ்டாநத்தாலே; தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேசம்போலே; "ஸஜாதீயாகாரோ யாசு" இத்யாதி, "ஸுவாஸ ஹரிஸாக்ஷாத்" 'தீபக்த்யாதிகுணார்ணவம்' என்கிறஇப்பதத்தாலும் "தாமரையாள்கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றும், "ஆதியஞ்சோதிக்கே யாராதகாதல்" என்றும், "உன்னித்துமற்றொருதெய்வந்தொழாள்" என்றும் சொல்லுகிறபடியே ஜ்ஞாநபக்திவைராக்யங்களை ப்ரதிபாதிக்கையாலே அகாரோதித பகவச்சேஷத்வத்தை பக்தியாலே சொல்லுகிறது; ஸ்வரூபமும் உன்னிணைத்தாமரைகட்கு அன்புருகிநிற்குமதிறே; அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தே:. ஜ்ஞாநமாவது - தஜ்ஜ்ஞாநமிறே; பகவதேகாவலம்பியாயிறே ஜ்ஞாநம் இருப்பது. வைராக்யமாவது - தேவதாந்தரத்யாக ப்ரதாநமாயிறே இருப்பது. [யதீந்த்ரப்ரவணம்] - யதீந்த்ரராகையாவது - ஸ்வஸ்வரூபத்தை அநுஸந்தித்துத் தரும்பு நறுக்காதிருக்குமவர்களைத்

கிருத்தித் திருமகள்கேள்வனுக்கு ஆக்கி அடிமைசெய்விக்கை. தம்மளவிலும் - யதிஶப்தம் அவிஶிஷ்டமாகையாலே, யதிந்த்ரராகையைப்பற்ற ப்ரவணராகிறார்; பகவதநந்யார்ஹஶேஷத்வம் ததீயபர்யந்தமிறே. அன்றிக்கே, [யதீந்த்ரப்ரவணம்] - அஸாதாரணமான ராமாநுஜஶப்தபர்யாயவாசகமாயிறே இத்திருநாமம் இருப்பது; அதுவும் ப்ரணவார்த்தம். ராமஶப்தத்தாலே - அகாரார்த்தமும், அநுஜஶப்தத்தாலே - தச்சந்தாநுவர்த்தியாயிருக்கிற ஆத்மஸ்வரூபமுமிறே சொல்லுகிறது. "ராமா நுஜம் லக்ஷ்மண பூர்வஜம் ச" என்றிறே ப்ராவண்யம் இருப்பது. [வந்தே ரம்யஜாமாதரம்முநிம்] - இத்தாலும் உக்தார்த்தமே சொல்லுகிறது; ரம்யஜாமாத்ருஶப்தத்தாலே - அகாரவாச்யனைச் சொல்லி, முநிஶப்தத்தாலே - ததநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநத்தையுடைய பரமசேதநனைச் சொல்லுகிறது. ரம்யஜாமாதுர்மநநம் கரோதீதி - ரம்யஜாமாத்ருமுநி:. ஆக, இவையெல்லாவற்றாலும் - ப்ரணவார்த்தமாக அநுஸந்திக்கத் தட்டில்லை.

"ஶ்ரியோயஶ்ச யஶோராயா" என்றும், "வடதிசை மதுரை அயோத்தி" என்றும் அவதாரஸ்தலத்ஙீச சொல்லுகிறபடியே, கோயிலுக்கு வடக்காயிருக்கிற வடதிருவேங்கடநாட்டில் ஏரார்பெரும்பூதூரிலே எம்பெருமானார் வடமொழியையும் தென்மொழியையும் வெளியிட அவதரித்தருளினார்; "காரணனைக்காட்டிய வேதன் களிப்புற்றது தென்குருகைவள்ளல் வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்தது" என்னக்கடவதிறே. "அரங்கநகரும் மேவுதிருநகரியும் வாழவந்த மணவாளமாமுனி" என்கிறபடியே தென்னாட்டுத் திலதமான தென்குருகூரிலே பெரியசீயர் தென்மொழியை வெளியிடவே அவதரித்தருளினார்; "விரவு தமிழ்மறைமொழியும் வடமொழியும் வெளியாய்ச்செய்யும்விசித்ரவ்யாக்யாநஶேஷன்" என்னக்கடவதிறே. "ஶ்ருத்யர்த்தௌ ஶௌம்ய நாயாஸ" இத்யாதி. இவருக்கும் இரண்டினுடைய ப்ரவர்த்தகத்வம் உண்டேயாகிலும், ஊற்றத்தைப்பற்ற ஒன்றிலே ஓதுகிறது. உடையவருடைய அவதாரவிஶேஷமாகையாலும், மற்றும் ஸர்வதாஸாம்யத்தாலும் யதிவரபுநரவதாரமாகையாலே, தீர்க்கஶரணாகதியை ஈன்ற முதல்தாயினுடைய மாதாபிதாபோலே, யோகித்யமும் ஸ்ரீஶைலேஶமும் நடந்துசெல்லுகிறது. இவரும் ஜந்மபூமியைவிட்டுவந்து காவிரிநடுவுபாட்டிலே கருமணியைக்கண்டு தந்மத்யஸ்தராய், வைஷ்ணவஸ்ரீயோடே வாழ்ந்துகொண்டிருந்து, ஸ்ரீரங்க ஸ்ரீயையும் ஶ்ருதிஸாகரத்தையும் த்ராவிடவேதஸாகரத்தையும் பெருகப்பண்ணிப் பெருமாளை நோக்கிப் போந்தார்; அவர் எல்லாவுயிர்கட்கும்நாதனரங்கனென்னும் பொருள் சுரந்தார். இவர் பல்லுயிர்க்கும் விண்ணின்றலைநின்று வீடளிப்பான் அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராசமாமுனிவனென்னும் அர்த்தத்தை அருள்சுரந்தார். சீயர் அவதரித்து வெளியிடாதபோது கண்ணுறந்தாரகமாயிறே உடையவர்வைபவம் இருப்பது; இராமாநுசமுனி செய்யகுன்றிலேற்றிய தீபமிறே இவர். நரநாராயணாவதாரம் போலேயிறே இவர்களுடைய அவதாரமும் "நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம்", "ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும்", "யோகீஶ்வரம் வந்தே", "தஸ்யாம் ஹி ஜாத:"; இரண்டுக்குமுண்டான தர்ம்யைக்யமும் அப்படியே; ஸம்பந்தமும் அப்படியே; அவர் நாராயணவைபவப்ரகாஶகர், இவர் ராமாநுஜவைபவப்ரகாஶகர். அவ்வவதாரத்திலும் இவ்வவதாரத்துக்கு ஏற்றமுண்டு; "பிறப்பாயொழிவது": நாராயண, ராமாநுஜ என்றிறே சதுரக்ஷரிகளின் வாசி இருப்பது. இவர் சதுரரில்தலையாகையாலே சரமசதுரக்ஷரியிலேநிலைநின்றார்; "எத்திறிருப்பாரைவெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார்தவம்," "தஸ்மாத் ஸர்வஸ்மாதபி ஶ்ரீமந்நாதஸ்ய விஶேஷத:", "அடியேன் சதிர்த்தேனின்றே", "நம்புவார்பதி வைகுந்தங்காண்மினே". ஆழ்வார்க்கு மதுரகவிகளிலும் சரமமான திருவடிகள் ராமாநுஜனைப்போலே, அந்தராமாநுஜனை இவர்க்கும் ஸ்ரீவத்ஸாங்காசார்யரிலும் சரமமான சரணங்கள் யதீந்த்ரப்ரவணனிறே; ஆகையால், சரமபர்வமான சீயர்விஷயமான இத்தனியனும் ஸகலவேதஸாரமான ப்ரபத்திபோலே நிரந்தராநுஸந்தேயமாகக்கடவது. (௧)

## ஆழ்வான் அருளிச்செய்தது.

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ॥

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் இத்யாதி]: இத்தனியன்தான், ஸர்வாத்மஹிதைஷியாய் ஆப்ததமராம் [illegible]னான கூரத்தாழ்வான் அனைவர்க்கும் குருபரம்பராநுஸந்தானத்தாலே உஜ்ஜீவநமுண்டாம்படி அருளிச்செய்ததாயிருக்கும்; ஆகையாலிறே, ஸர்வஶிஷ்டர்களும் இதை அங்கீகரித்து அநுஸந்தித்துக்கொண்டு போருகிறது.

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம்] - அதில் முற்பட "ஸ்ரீயஃபதிராதிகுருவெ" என்று [illegible]த்ரய ப்ரதிபாதகத்வத்தாலே ப்ரதமகுரு ஸ்ரியஃபதியான எம்பெருமானுகையாலே முற்பட அருளிச்செய்கிறார்; "நரநாரணனு யுலகத்தறநூல் சிங்காமைவிரித்தவன்" என்றும், "தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமே, லென்னடியாரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தாரென்பர்" என்றும், "பார்த்தனுக்கன்றருளிப் பாரதத்தொருதேர்முன்னின்று", "குருமுகமாய்", "பண்டேபரமன்பணித்த பணிவகை" என்றும் சொல்லக்கடவதிறே; "ஶாஸ்த்ருத்வே", "ஶாஸிதா", "ஹக்தஶக்தஶ ஜ்ஞாஹாரஸம்ஸ்காரம்", "பீதகவாடைப்பிரானர் பிரமகுருவாகிவந்து," "அறியாதனவறிவித்தவத்தா," "என்னைத்தீமனங்கெடுத்தாய்", "மருவித்தொழும் மனமேதந்தாய்" என்றுயிற்று அநுஸந்தித்துப்போருவது. பெரியபிராட்டியாருக்கு முற்படவாயிற்று ஸர்வேஶ்வரன் ஸ்ரீவிஷ்ணுலோகத்திலே த்வயத்தை அருளிச்செய்தது. "தத்த்வவசயாஶ்ருதஃ" என்றுளே; அவன் தானும் "ஸர்வாந்த்ருஷ்யம் ஸுஹ்ருந் விஷ்ணோர்லோகே மஹாவஸரே । தஸ்மிந்ஸந்நிதௌ லக்ஷ்ம்யா உபதிஷ்டம் ஸநாதநம்" என்று அருளிச்செய்தானிறே அத்தாலும், கடகத்வத்திலே முற்பாடுடையளாகையாலும், மற்றையார்க்கு ஶடகத்வம் அவளடியாகையாலும், "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்று - மிதுநச்சேர்த்தியாக அருளிச்செய்தது. "இறையுமகலகில்லேன்" என்றிருக்கையாலே பிரிந்து நிலையில்லை; லக்ஷ்மிக்கு லக்ஷ்மீதந்த்ரத்திலே ப்ரபத்திப்ரவர்த்தகத்வம் உண்டிறே. ஸமாரம்பாம் என்று - இவர்கள் தொடக்கமாகக் குருபரம்பரையைச் சொல்லுகையாலே, ஸ்ரீவிஷ்வக்ஸேநஸம்ஹிதையிலே பகவானுலே ப்ரபத்யுபதேஶம் பண்ணப்பட்டதாகச் சொல்லப்படுமவருமாய், "தத்தஃஷவிஸ்வாஷி தவரிவர்யாயாஜ்ஞாவயத்ரா" என்று - பூவளருந்திருமகளாலே அருள்பெற்று, அத்தாலே "ஸ்ரீஸ்திவிஷ்வக்ஸேந" என்னும்படி கைங்கர்ய ஸ்ரீயையுடைய ஸேனைமுதலியாரும், "திருமாலாலருளப்பட்ட சடகோபன்", "திருமாமகளாலருள்மாரி" என்னும்படியான ப்ரபந்நஜநகூடஸ்தரும் ஸூசிதர். ஸேனைமுதலியாரும், விஷ்வக்ஸேநஸம்ஹிதாதிகளிலே கஜாநநாதிகளுக்கு ப்ரபத்தியை வெளியிட்டருளினரிறே; இப்படி வெளியிட்ட ப்ரகாரத்தை, "ஐதத்த்வாநுஜ்ஞமந்நாயொ ஶ்ரீஷாநநரோ ஸ்ருதி" என்று தாமே அருளிச்செய்தார்; அத்தைப்பற்றவாயிற்று "நமஸ்வந்நாயிவ தயேஜ்ஞா நயாயாத்ருஷ்டாயிநே" என்று அத்யாத்மசிந்தையிலே அருளிச்செய்தது. அவ்வளவன்றிக்கே, ஆழ்வாரவதாரவைபவத்தை ஸநத்குமாரர் மார்க்கண்டேயபுராணத்திலே ஒரு அத்யாயமெல்லாம் சேர அருளிச்செய்தாராகையாலே, இவர்களளவும் விவக்ஷிதம்.

இந்தக்குருபரம்பரையில் ஆதிமத்யாவஸாநங்களை அருளிச்செய்கிறவராகையாலே நாதயாமுநர்களை மத்யமபதஸ்தராக அருளிச்செய்கிறார். 'நாதயாமுநமத்யமாம்' என்று. நாதயாமுநர்கள் - நாதமுநிகளும் யாமுநமுநிகளும். அவர்கள் தாம் பரமஹம்ஸரிறே; "நாதயாமுநர் போல்வாரை அன்னமென்னும்" என்கிறே ஆசார்யஹ்ருதயத்திலே அருளிச்செய்தது; அவனும் அன்னமாகியிறே அருமறைகளை அருளிச்செய்தது. ஏவம்விதராளுமிவர். [illegible]மாவது - தேவ[illegible]ய திவ்யப்ரபந்தாநவதாநுஸந்தாநத்தாலே ஆழ்வாருடைய அருள்பெற்[illegible]ராகையாவது - ஸ்வஸ்வரூபத்தை அறாலேயிறே யமுனைத்துறைவர் அ[illegible]ர்த்து தர்

ஶநத்தை ஆள வந்தாரானது. "[illegible]" என்னக்கடவதிறே. அவ்வளவன்றிக்கே, "[illegible]" என்று ஶ்ரீஸேநாபதியாழ்வா ரவதாரமாக நம்மாழ்வாரைச் சொல்லிற்றிறே. ஆளவந்தாருக்கு ப்ரபத்யர்த்தோபதேஶம் பண்ணுகைக்கு அடியான உய்யக்கொண்டாரும் மணக்கால்நம்பியும் இவர்களிடையிலே அடைபடக்கடவரா யிருப்பர்கள். நாதயாமுநமத்யமாம் என்று - ஆழ்வான் அநுஸந்தாநக்ரமமாயிற்று இது; இவரை யொழிந்த மற்றையார் "[illegible] | [illegible]" என்றுமிறே அநுஸந்தித்துப்போருவது.

உடையவர்தாம், குருபரம்பரைக்கு நடுநாயகமிறே. அவர்தாம் ஆழ்வானுக்கு ஸாக்ஷாதாசார்யராகையாலே 'அஸ்மதாசார்யபர்யந்தாம்' என்கிறது. "[illegible]" என்னக்கடவதிறே; "[illegible]" என்றும் அநுஸந்தித்தார். இதிலே யமுனைத்துறைவ னிணையடியாங் கதிபெற்றுடைய இராமாநுசனைகையாலே - ஆளவந்தாருக்குச் சரணத்வயமென்னலாம்படியான பெரியநம்பியும் ஸூசிதர். "இளையாழ்வாரை விஷயீகரித்த அநந்தரத்திலே, 'இளையாழ்வீர் ! பெருமாள் ஸ்ரீதண்டகாரண்யத்துக்கு எழுந்தருளும்போது மரவடியைத் தம்பிக்கு வான் பணயம் வைத்துப்போய் வானோர்வாழ எழுந்தருளினாற்போலே, மேலை வானோர்வாழ இவரும் தமக்கு அடியானை அடியேனை அப்படி உமக்குவைத்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார்' என்று அவர் அருளிச்செய்தார்; அத்தைப்பற்ற "யமுனைத்துறைவனிணையடியாங்கதி பெற்றுடைய இராமாநுசன்" என்று அமுதனார் அருளிச்செய்தார்" என்று திருநாராயணபுரத்தில் திருவாய்மொழியாசார்யர் அருளிச்செய்தார். உடையவரை குருபங்க்திஹாரநாயகமாக நடுவே அநுஸந்திக்கவேண்டியிருக்க, யதாபாடம் எல்லாரும் அநுஸந்திக்கிறது - "ஆழ்வான் திவ்யஸூக்தி" என்னுமது எல்லாரும் அறிகைக்காக. இதிலே, ஆசார்யாபிமாநயுக்தராய் இவ்வருகிலுமுண்டான அனைவரும் ஸ்வாசார்யபர்யந்தமாக அநுஸந்திக்கும்போது நாதயாமுநர்களை நடுவாகச்சொன்னது - யதிவரர்க்கும் உபலக்ஷணமாகிறதென்று கண்டுகொள்வது. 'அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்' என்கிற இத்தால் - 'ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததா மபிவர்த்ததாம்' என்று - எம்பெருமானார் திவ்யஸங்கல்பத்தாலே வர்த்தித்துக்கொண்டு போருகிற ஆசார்யபரம்பரையானது ஸ்வாசார்யபர்யந்தம் ஸேவிக்கப்படுமதென்கிறது. "எம்பெருமானிற்காட்டில் குருபரம்பரை அதிகம்; குருபரம்பரையைக்காட்டில் ஸ்வாசார்யன் அதிகன்" என்னக்கடவதிறே. அஸ்மதாசார்யபர்யந்தாம் என்கையாலே - இவ்வருகுள்ளார்க்கு உத்தேஶ்யராய் ப்ரபத்திமார்க்கப்ரவர்த்தகரான கூரத்தாழ்வான், அவர் செல்வத்திருமகனாரான பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை பிள்ளைலோகாசார்யர் கூரகுலோத்தமதாஸநாயன் திருவாய்மொழிப்பிள்ளை பெரியசீயர் முதலாக "[illegible]" என்னுமவர்களெல்லாரும் அநுஸந்தேயராம்படி ஸூசிதர்.

வேதாந்தாசார்யரான அண்ணவும் "[illegible] | [illegible] | [illegible]" என்று தொடங்கி, "[illegible] | [illegible]" என்று நடுவாகவும், "[illegible] | [illegible] ‖ [illegible] | [illegible]" என்று - ஶ்ரிய:பதியைத் தொடங்கி ஸ்ரீமத்ராமாநுஜார்யர் நடுவாகவும், ஸ்ரீஶைலேஶதயாபாத்ரரான பெரியசீயரளவாக ஶோகரிக்கையாலே, இதுவே ஶாஸ்த்ரஸம்ப்ரதாயம்; மறுவிபரீதம்போலே, இதுக்குப் புறம்பானது அஸம்ப்ரதாயம். உபாயாந்தரோபதேஷ்டாக்கள் - ஸ்வரூபநாஶகரான குருக்கள்; ஆகையாலிறே, "[illegible]" என்றது. "[illegible] பலகலக்ஷ்யத்வ ப்ரதிபத்தியாலே மந்த்ரரத்நத்தை உபதேஶிக்குமவர்களிறே - ஸத்குருக்களாகிறார்; "[illegible]த்வயத்தினுடைய அர்த்தத்தையும் திரு

# பொதுத்தனியன்கள்.

வாய்மொழியினுடைய அர்த்தத்தையும் உபதேஶிக்கிறான் யாவனொருவன், அவனுக்கேயிறே ஆசார்யத்வ பூர்த்தி உள்ளது" என்று ப்ரமேயரத்நத்திலே அருளிச்செய்தார். ஏவம்விதமான குருபரம்பரையிறே ஸேவ்ய மென்கிறது. மேலும், குருகுலதுர்யரான வரவரமுநிவர்யருடைய பரம்பரயா "அஸ்மதாசார்ய பர்யந்தாம்" என்று நடந்துசெல்லுவது; "அஸ்மத்தேசிகமஸ்மதீயபரமாசார்யாநசேஷாந் குரூந்" என்று தொடங்கி, "ஸௌமித்ர்யாவயந்தர்யாஸிதிம்" என்றிறே தலைக்கட்டியருளினர். "நமஸ்ஸம்ப்ரதாய[illegible]" என்று தொடங்கி, "நமோ ராமாநுஜாயேதம் பூர்ணாய மஹதே நம:" என்று நடுவாகவும், "ஸ்ரீதராயாதிகுரவே நமோ[illegible] நம:" என்று எம்பெருமானளவாகவும் வாக்யகுரு பரம்பராக்ரமத்தாலே வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்தது; இந்த க்ரமத்தை "முந்தை வினையகலமுன்னருளுமாரிபனால், எந்தையெதிராசனின்னருள் சேர்ந்து-அந்தமில்சீர்ப், பொற்பாவைதன்னருளால் பொன்னரங்கர்தாள் பணிந்து, நற்பாலடைந்துய்ந்தேன் நான்" என்றும், "அஸ்மத்[illegible] [illegible] | [illegible]" என்று விவரணமாலையின் அடியிலும் தத்வதீபாதியிலும் அருளிச்செய்தார்.

இந்தக்ரமம், "ஆசார்யாணாமஸாவஸாவித்யாபகவத்த:, ஸ ஆசார்யவம்சோ ஜ்ஞேய:" என்கிற ஶ்ருதியையும், "[illegible]" என்கிற பாஷ்யகாரவசநத்தையும் பற்றி யிருக்கிறது; "ஆசார்யாநஸ்மதீயாநவி[illegible] ஸ்வரூபோவாசார்யவம்ச்யம் ஸ்ரீ[illegible]ராமாநுஜார்யம் [illegible] | [illegible]" என்னக்கடவதிறே. "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்கிற இத்தனியனில் குருபரம்பராக்ரமத்தையும் "தென்னரங்கனருந்திருமகளுமாதியா, அன்னவயற்பூதூர்மன்னுங்கிடையா - என்னையருளாரியனே தானளவா வன்னகுருமுறையின், சீரியதாள்சேர்ந்துய்ந்தேனே" என்றும் அவர்தாமே அருளிச்செய்தார். இந்தக்ரமம், "திருவருள்மால்சேனைமுதலிசடகோபன்", "நாதம் [illegible]" என்கிற தனியன்களிலும், "ஆதிமுதல்மாயன்மலர்மங்கைசேனைத்தலைவன்" என்றும், "சேனைநாதன் அருள்மாறன் நாதமுனி தாமரைக்கண் இராமர்வாழ், சீர்சிறந்தயமுனைத்துறைக்கிறைவர் செந்தொடைக்கதிபாருளினால், தானமர்ந்தவெதிராசர் கூரம்வருதலைவர் நீதிபுனைபட்டர்பின், தலைமையான மாதவச்சீயர் நம்பிள்ளை தழைத்தகண்ண ரிருவகையினு, ரீனமின்றியருளுலகவாசிரிய ரினியகூரகுலதாதருக், கின்பமேவுதிருவாய்மொழிப்பிள்ளை யிவர்க்குத்தானடிமையாகவே, யானவாழ்வுபெறவருள்வார் கோலமணவாளமாமுனிவன்" என்றுஞ் சொல்லிற்றிறே. இப்படி ஆரோஹாவரோஹக்ரமங்களிரண்டாலும் குருபரம்பரையை அநுஸந்திக்கக் குறையில்லை. "ஸம்ஸாரஸ்யவஸம்ஹாரம்" இத்யாதியாலே எம்பெருமான் செய்த ஆசார்யஸம்பந்த பர்யந்தமான உபகார பரம்பரையை அநுஸந்தித்தால், குரு பரம்பரைக்குத் தலையான எம்பெருமானை முந்துறப்பற்ற அடுக்கும்; "ஆத்யோநாஹம் ஸ்ரீநிவாஸ" இத்யாதியாலும், "நாராயணன் திருமால்" இத்யாதியாலும் ஆசார்யன்பண்ணின பகவத்ஸம்பந்தகௌரவத்தை அநுஸந்தித்தால், "அஸ்மத்குருப்யோ நம:" என்று ஆசார்யனை முந்துற அநுஸந்திக்க அடுக்கும். "குருபரம்பரையை முன்னிடவே ஶரணாகதன் குறைதீரும், பிராட்டியை முன்னிடவே ஶரண்யன் குறைதீரும்" என்றிறே ஆச்சான்பிள்ளை மாணிக்கமாலையிலே அருளிச்செய்தது. "ஜப்தவ்யம் குருபரம்பரையும் த்வயமும்" என்றிறே அருளிச்செய்தது. குருபரம்பராபூர்வகமல்லாத த்வயாநுஸந்தாநமும், நாவகாரியமிறே. இப்படி ஆதிமத்யாவஸாநஸஹிதையான ஸத்குருஸந்ததி, ஸர்வஸத்துக்களாலும் ஸதாநுஸந்தேய மென்றாயிற்று.

## இதுவும் ஆழ்வான் அருளிச்செய்தது.

---

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே ।
அஸ்மத்குரோர்பகவதோऽஸ்ய தயைகஸிந்தோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ॥

[யோநித்யம் இத்யாதி] - ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்தபோதராய், "ஸ்ரீவத்ஸசிஹ்ந:" என்று நிரூபகத்தையுடையரான கூரத்தாழ்வான், ஸ்ரீராமாநுஜதர்சநத்தை ரக்ஷிக்கவேண்டி ராஜகோஷ்டியிலே சென்று, "நாராயணபரம் ப்ரஹ்ம" என்றும், "நாராயணபரா வேதா:" என்றும், "நாரணனைக்காட்டிய வேதம்" என்றும், "நாராயண த்வயி ந த்ருஷ்டிமிதி வேதிகை: கை:" என்றும் "நாரணனேயாவதீதன்றென்பாரார்" என்றும், "அந்யாயமந்யாயம்" என்று அறைகூறிவென்று, "கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதான்" என்னும்படி அவர்கள் தர்சநம் அஸஹ்யமாய், அத்தர்சநத்தை வேண்டாதே மீண்டு எழுந்தருளி தர்சநப்ரவர்த்தகரான எம்பெருமானார்தர்சநத்தை அபேக்ஷித்துக் கொண்டு எழுந்தருளியிருக்க, அவரும் "இனியறிந்தேனீசற்கும் நான்முகற்கும் தெய்வம் - நற்கிரிசை நாரணன்நீ" என்று திருவில்லாத்தேவரெல்லார்க்கும் மேலாக மேல்காட்டிலே திருநாராயணனை ஸ்தாபித்து மீண்டு எழுந்தருளி, "அரங்கனல்லால்தெய்வமில்லை" என்று அறுதியிட்டு அரங்கனார்க்கு ஆள் செய்துகொண்டிருக்கிறவர், ஆழ்வான் கண்ணழிவுகண்டு கண்கலங்கியருளி, "பேரருளாளர், க்ஷேத்ரபுத்ராதிகளான ஐஹிகபுருஷார்த்தத்தையும், பெரியவிசும்பாகிற ஆமுஷ்மிக புருஷார்த்தத்தையுங் கொடுக்குமவராகையாலே, க்ஷேத்ரவிஷயமாக ஒரு ஸ்தோத்ரத்தைச் செய்யும்" என்று நியமிக்க, அப்படியே "அஸ்து" என்று ஸம்மதிபூர்வகமாக ஸ்தவம்பண்ணுகிறவர், "நேத்ரஸாமக்ர்யம் ஸ்ரீசஸதாமே" என்றும், "ஸ்ரீசவச்யவைபவஸுதம்ஸரா:" என்றும் அங்குத்தையிலநுபவபரிகரமான அப்ராக்ருத சக்ஷுஸ்ஸை அபேக்ஷிக்க, அப்படியே பேரருளாளரான பெரியபெருமாளும் "வச்யந்தி வஸதாமேவம் நேமேத்ராநேநவாசரா:", "ஸர்வம் ஹ பச்ய: பச்யதி" என்னும்படியான இமையாத கண்ணை இவர் பெறும்படி பெரியவீட்டுக்கு விடைகொடுத்தருள, அவரும் அதிப்ரீதராய் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் திருமாளிகையிலே புறவீடுவிட்டிருக்க, இத்தை எம்பெருமானார் கேட்டருளி "அறப் பதறினர்" என்று பதறிக்கொண்டு இவரிருந்தவிடத்தேற எழுந்தருள, அவரும், பரந்தாமமென்னும் திவந்தருகைக்காக அவர்க்கு மறக்கவொண்ணாதபடி அவர்விஷயத்தில் ப்ரபத்தியான இச்ச்லோகத்தை "ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே" என்று விண்ணப்பஞ்செய்து திருவடிகளிலே விழ, அவரும் இவரபிப்ராயம் அறிந்து தம்முடைய ஸ்வம்மான ப்ரபத்தியை "திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்னும்படி "ஸ்ரீமந்நாராயண த்வச்சரணாரவிந்தயுகளம் சரணமஹம் ப்ரபத்யே" என்று குறைவற அவர்வலத்திருச்செவியிலே ப்ரஸாதித்தருளினாரிறே; அதடியாக, ஸ்ரீவைகுண்டகத்யத்திலே அவர்ப்ரார்த்தித்தருளின பேற்றை இவரும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலே ப்ரார்த்தித்துப் பேற்றோடே தலைக்கட்டினார்; அப்பேறுதான் ஆசார்யாதீநமாகையாலே அவரை அடியிலே சரணம் புகுகிறார்.

[யோநித்யம்] - இதில் - பக்திவிரக்திஜ்ஞப்திகுருத்வாநுகம்பாதிக்ய குணத்தாலே முக்திப்ரதத்வசக்தியையுடைய உடையவர் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறார். [யோநித்யம்] - "திசையனைத்து மேறுங்குணன்" என்று சொல்லப்படுகிற குணவத்தாப்ரதையையுடையராய், நாள்தோறும் ஆச்ரிதரை நழுவுதலின்றிக்கே ரக்ஷித்துக்கொண்டு போருகிற ஸர்வேச்வரனுடைய சரணாரவிந்தயுகலவ்யாமுக்ததையாலே தத்வ்யதிரிக்தஸமஸ்தவஸ்துக்களையும் த்ருணவத்ப்ரதிபத்திபண்ணியிருப்பாராய், அடியேனுக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணும் ஆசார்யராய், அதுக்கடியான ஜ்ஞாநாதிக்யத்தை யுடையருமாய், அகதிகள்விஷயங்களில் "ஐயோ!" என்று இரங்கும் ஆந்ருசம்ஸ்யத்தை யுடையருமாய், சரூபியாய் முன்வந்துநிற்கிற இந்த ராமாநுசனுடைய சரணங்களை சரணமாக அடைகிறேனென்கிறார்.

[போநித்யம்] - யஃ என்று - "வைதிகோத்தமர்" என்னும் ப்ரஸித்தியைப்பற்றச் சொல்லுகிறது. நித்யம் அச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹதஃ என்று - "ஸர்வதேஶகாலேஷு ஸர்வாவஸ்தாஸு சாச்யுத । கிங்கரோஸ்மி" என்றும், "ஸ்வாத்யந்திகத்தஜ்ஞாநாத்ரே தாஸ்மி" என்றும் சொல்லுகிறபடியே ப்ரணதார்த்திஹராச்யுதரானபேருளாளர் ஸ்ப்ருஹணீயமான திருவடித்தாமரைகளிலே நிரவதிகப்ரேமத்தாலே, "த்வத்பாதகமலாதந்யந்ந மே" என்கிறபடியே திருவடிகளுக்கு அசலான அனைத்தையும் த்ருணவமமாக எண்ணியிருப்பரென்கிறது. "நிரஸ்ததாஹோ மஹாமோஹஸம்ஶயக்ஷதஃ", "தென்னத்தியூர்கழலிணைக்கீழ்ப் பூண்ட வன்பாள னிராமானுசன்" என்று வரதநாராயணனையாயிற்று, "போதித்வம் ஸததம்யாயேஹ நாராயணே நந்யயஃ" என்று நிரவதிக ப்ரேமத்துடனே நித்ய திருவாராதநமாக நடத்திப்போருவது; அந்தபக்த்யைஶ்வர்யமதத்தாலே, "த்ருணீக்ருதாநந்தஹேதுகிஸித்திஃ", "கொள்வதெண்ணுமோ தெள்ளியோர்குறிப்பு" என்னும்படி பண்ணியிருப்பராயிற்று; "ஸஹஸ்ரஹவத்த்வா ஸ்வைஜ்ஞயவரிவஸ்யாபரநிரஸ்தஸ்ஸேஷதாஹோமாஸோவமத ஸஸ்ஸஸாம் ஸாரிகஸ்ஸவஃ" என்றாயிற்று இவர் ஸ்ரீஸூக்தியும் இருப்பது. [யஃ] - "திக்குற்றகீர்த்தி யிராமானுசன்" என்று ப்ரஸித்தரானவர். [நித்யம்] - நாடோறும். [அச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹதஃ]-அச்யுதனாகையாவது - குணவிக்ரஹவிபூதிகளை நழுவுதலின்றிக்கே யிருக்குமவ னென்னுதல், ஆஶ்ரிதரை நழுவ விடாதவ னென்னுதல், ஆஶ்ரிதரக்ஷணத்தில்நின்றும் நழுவாதவ னென்னுதல். "வீவிலின்பம்மிக வெல்லை நிகழ்ந்த நம்மச்சுதன் வீவில்சீரன் மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான்" என்றும், "ஆதுமில்காலத் தெந்தை யச்சுதனமலன்" என்றும், "அயரவாக்குநமன்றமர்க்கருநஞ்சினை யச்சுதன்றன்னை" என்றும், "நத்யஜேயம்" என்றுஞ் சொல்லப்படுகிற குணங்களிலேயாயிற்று இவர் ப்ரவணராயிருப்பது. அந்த அச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹம், அர்ச்சாவதாரந் தொடங்கிப் பரபர்யந்தமாக எங்கும் நித்யமாக உண்டாயிறே இவர்க்கு இருப்பது. அது எங்ஙனேயென்னில்;—அத்திகிரிப்பச்சைநிறத்தச்சுதனுடைய பதாப்ஜங்களிலும், வேங்கடத்தச்சுதனுடைய தாங்கு தாமரையன்ன பொன்னாரடியிலும், அரங்கமாநகரச்சுதனுலகமளந்த பொன்னடியிலும், நண்ணித்தொழுமவர் நச்சுவார்முன்னிற்கும் நாராயணனச்சுதனுடைய துளங்குசோதித்திருப்பாதத்திலும், தயரதற்குமகனன அச்சுதன் காடுறைந்த பொன்னடியிலும், கோவிந்தனச்சுதன் பொற்றாமரையடியென்று பேசும்படியாய்க் கானில்கன்றின்பின்போன பொன்னடியிலும், அச்சுதனனந்தசயனன்செம்பொன் திருவடியிணையிலும், வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்த நம்மச்சுதனன விண்ணோர்பிரானார் மாசில்மலரடியிலு மாயிற்று, இவர் மயல்கொண்டிருப்பது. இதுதான் "ஆர்வமொடுநிச்சல்நினைவார்" என்னும்படியிறே நித்யேச்சை நடந்து செல்வது. "தென்னத்தியூர்கழலிணைக்கீழ்ப்பூண்டவன்பாளன்", "அரங்கன்கழல் சென்னிவைத்துத் தானதில்மன்னும்", "பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன் பாதம் நண்ணு", "நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் நிறைவேங்கடப்பொற்குன்றமும் வைகுந்தநாடுங் குலவியபாற்கடலு முன்தனக்கெத்தனையின்பந்தரும்" என்னக்கடவதிறே. அவர் தாமும் "ப்ரணதார்த்திஹர," "ப்ரஹ்மணி ஶ்ரீநிவாஸே," "ஶ்ரீரங்கஶாயிநம்" என்றும், "க்ருஷ்ணாநந்தஸாரதிம்" என்றும், "காகுத்ஸ்த", "ஶேஷிணி ஶேஷஶாயிநே", "ஶ்ரீவைகுண்டநாயக" என்றுமிறே அருளிச்செய்தது. ஆகையாலே, பூவார்கழல்களிலும், கண்ணன் கழலிணையிலும், காகுத்தன் தன்னடியிலும், பாற்கடலுள்பையத்துயின்ற பரமனடியிலும், வைகுந்தச்சேவடியிலும், ஸர்வாந்தர்யாமியான நாராயணசரணங்களிலுமாயிற்று வ்யாமுக்தராயிருப்பது. இப்படி பஞ்சாவஸ்தாவஸ்திதனான ஸர்வேஶ்வரனுடைய சரணாரவிந்தயுகளமகரந்தரஸாஸ்வாத மதுவ்ரதமாய் அநுபவித்து அதிலே மக்கராய், அத்தாலே ததிதரங்களாய் ஆவிரிஞ்சாத் அமங்களமானபாஞ்சபௌதிகவிஷயபஞ்சகத்தையும், அதுக்குமேலான ஆத்மாநுபவத்தையும் த்ருணவத்ப்ரதிபத்தி பண்ணியிருப்பாராயிற்று. இப்படி பக்திவிரக்தியுடைய இவர்திருவடிகளைத் தாமும் அப்படி பரத்வாதிகளெல்லாமாக அறுதியிட்டு அடையப் பார்க்கிறார்.

[அஸ்மத்குரோஃ] - கீழ்ச்சொன்ன அச்யுதபக்தியாலே ததிதரங்களை த்ருணவத்கரிக்கையாலுமாயிற்று, இவரை ஆசார்யவரணம் பண்ணுகிறது. "விதிவித்ஸதாநாகதயாயாத்ருஷ்டாயிநே" என்னும்படி தத்த்வத்ரயத்தையும் உபதேசிக்கையாலே அலகலகாக ஆராய்ந்து "ஹோமாஜ்ஜேவியிஶிவாதி

[illegible]" என்று தத்த்வத்வய விஷய வைராக்யத்தையும், "[illegible]" என்று தத்த்வைகவிஷய பக்தியையுமுடையராகையாலே தமக்கு அநுகுணமாகவே 'அஸ்மத்குரோ:' என்கிறார். "[illegible]", "[illegible]". இவர்க்கும் இரண்டிற்கும் அடி எம்பெருமானாரிறே: "[illegible]" என்றாயிற்று இருப்பது. இவரையாயிற்று ப்ரதாந ஶிஷ்யராக ப்ரதமம் பெரியதிருமந்த்ரம் முதலான ரஹஸ்யங்களை ப்ரஸாதித்து அபிமாநித்தருளிற்று. நமகாராயணவதார மென்னலாம்படியிறே. ராமாநுஜ கூராதிபர்கள் கூட்டாவிருப்பது. எல்லாரும் ஒருதட்டும் இவர் ஒருதட்டுமாகவிறே எம்பெருமானார் எண்ணியிருப்பது; அத்தைப்பற்ற, "ஒருமகள் தன்னையுடையேன்" என்றாரிறே. இப்படி அத்விதீயமாயிற்று இரண்டு விஷயமும் இருப்பது. "கலையறக்கற்றமாந்தர்" என்னலாம்படியான இவருக்கு ஸகலார்த்தமும் ப்ரஸாதிக்கும்படியான ஜ்ஞாநவைபவத்தைச் சொல்லுகிறது 'பகவத:' என்று. "சொல்லார்தமிழொருமூன்றும் ஶ்ருதிகள்நான்கு மெல்லையில்லாவறநெறி யாவுந்தெரிந்தவன்", "உண்மை நன்ஞான முரைத்த", "இராமானுசன் மெய்ம்மதிக் கடல்" என்னும்படியிறே ஜ்ஞாநவைபவம் இருப்பது. "[illegible]" என்னக்கடவதிறே; பகவச்சப்தம் - ஸர்வகல்யாணகுணங்களையும் பரிபூர்ணஜ்ஞாநத்தையும் சொல்லுகையாலே, அவற்றால்குறைவற்ற விஷயமாயிருக்கை. இத்தால் - தமக்கு அஜ்ஞாதஜ்ஞாபகம் பண்ணுகைக்கு உடலான ஜ்ஞாநவைபவத்தைப் பேசினார். இனித் தம்முடைய துர்க்கதி கண்டு இரங்கும்படி தயாபூர்த்தியை அருளிச்செய்கிறார், "அஸ்யதயைகஸிந்தோ:" என்று; ஈடுபடுகிறார். அஸ்ய - ராமாநுஜஸ்ய என்று மேலில் பதத்தோடே சேர்த்தி. தயைகஸிந்து என்று - கேவலக்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்ய ரென்றபடி. "பயனன்றாகிலும் பாங்கலராகிலும், செயல்நன்றாகத்திருத்திப் பணிகொள்வான், குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி" என்றிறே இருப்பது. "பாடினனருள்கண்டீர் இவ்வுலகினில்மிக்கதே," "எண்டிசையுமறிய வியம்புகேன் ஒண்டமிழ்ச்சடகோபனருளை" என்னுமாபோலே. "நிகரின்றி நின்ற வென்னீசதைக் குன்னருளின்கணன்றிப், புகலொன்றுமில்லை யருட்குமஃதேபுகல்" என்றும், "உன்பெருங்கருணை தன்னை" என்றும், "வண்மையினாலும் தன்மாதகவாலும்" என்றுமிறே இவர்க்ருபையின் பெருமை இருப்பது. அருளாழியம்மானாய், "[illegible]" என்னும்படியான ஸர்வேஶ்வரன் க்ருபை மறுத்தகாலத்திலும் ஒதுங்கலாம்படியான க்ருபை; அவன்கைவிட்ட ஸம்ஸாரிகளையும் "[illegible]" என்று உபதேஶித்துத் திருத்துமவரிறே. கீழ்ச்சொன்ன ஜ்ஞாந பக்திவைராக்யம், நிரவதிகதயையாகிற இக்குணங்களெல்லாம் கேட்டேபோகாமே கண்ணாலே கண்டு அநுபவிக்கலாம்படி ப்ரத்யக்ஷமாய் முன்வந்து நிற்குமவரை 'அஸ்ய ராமாநுஜஸ்ய' என்று அநுபவிக்கிறார். இந்த ராமாநுஜனுடைய வென்று - இவர்க்கு ஈடுபாட்டுக்கு விஷயம் இருக்கிறபடி. 'ராமாநுஜஸ்யசரணௌ ஶரணம்ப்ரபத்யே' என்று நாராயணசரண ஶரணவரணத்திற் காட்டிலும் ராமாநுஜசரணஶரணவரணம் ஸ்வரூபாநுகுணமுமாய் அமோகமுமா யிருக்குமாகையாலே, அவர்திருவடிகளை ஶரணமாகப் பற்றுகிறார்; "பழுதாகாதொன்றறிந்தேன்" இத்யாதி. "மாறாயதானவனை - வேறாக, வேத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச், சாத்தியிருப்பார்தவம்". "பாற்கடலுமுன்தனக்கெத்தனை யின்பந்தரும்" என்று செழுந்திருப்பாற்கடல் கண்துயில்மாயன் திருவடிக்கீழ் விழுந்திருப்பாரிறே. வளர்ந்தவெங்கோப மடங்கலொன்றாய் அன்று வாளவுணன் கிளர்ந்தபொன்னாகங்கிழித்தவன்கீர்த்திப்பயிரெழுந்து விளைந்திடும் சிந்தையிராமானுசனைக் கண்டுஇறைஞ்சி மற்றவரைச் சாத்தியிருக்கப் பார்க்கிறார். எம்பெருமானார்தவம் - தபஶ்ஶப்தவாச்யையான ப்ரபத்தி. இவர்தவம் - "எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்" என்னும் ஆசார்யாபிமாநம்; "[illegible]" என்றாரே. அவர்தவத்தைக்காட்டிலும் இவர்தவம் வென்றதாயிற்று; அவர்க்குமுன்னேயிறே இவர்க்குப் பேறு ஸித்தித்தது; "[illegible] * [illegible]", "நம்புவார்பதி வைகுந்தங்காண்மினே" என்னும்படி வைகுண்டப்ரியதர்ஶநம் பண்ணினார்.

---

* [illegible] என்று பாடாந்தரம்.

இந்த ராமாநுஜப்ரபத்தியிலே நாராயணப்ரபத்யர்த்தமெல்லாம் அநுஸந்தேயம்; கீழ் பக்திவிரக்தி ஜ்ஞப்தி வ்யூணிதையாகிற இவை - மூக்திப்ரதஸக்திஸாதநங்களாயிருக்கும்; இதிறே, புருஷகாரஹாவத்திக்கு அநுகுணமான ஸ்ரீமத்பதார்த்தமும். இவையும் ஈஶ்வரவஶீகரண ஹேதுவான குணமிறே. புருஷகாரார்த்தரநிரபேக்ஷமாயிறே இவ்விஷயம் இருப்பது. இனி, வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்யாதிகள் ஸௌகர்யாபாதகங்களாயிருக்கும், நாராயணபதத்திற்போலே; "ரோதாவிதாஹாதாநிவாஸஶ்ரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண:" என்று இஸ்ஸம்பந்தத்தாலே வாத்ஸல்யாதிகள் அநுஸந்தேயம் அங்கு. "இதத்தா யிராமாநுசன்", "எந்தையிராமாநுசன்", "எம்மைய னிராமாநுசன்", "ஏலப்புனைந்தென்னைமார்". என்னைமார் - ஆணுடன்பிறந்தவர்கள் என்னுமாபோலே இங்கு எல்லாரோடுமுண்டான ஸௌப்ராத்ரம், "கோயிலண்ணனிராமானுசன்", "அடியேனுக்கிருப்பிடம்", "இராமாநுசன்சரண்", "இராமாநுசன்சரணேகதி" என்கையாலே; தோஷபோக்யத்வமாகிற வாத்ஸல்யமும், ஸ்வத்தினுடைய லாபாலாபம் ஸ்வாமியதாம்படியாய் ஸ்வத்தை நோக்குகிற ஸ்வாமித்வமுமாகிற இவை - ராமாநுஜஶப்தத்தாலும் அநுஸந்தேயம்; தாழ்ந்தவர்களோடே தன்பேருகக் கலக்கையாகிற ஸௌஶீல்யமும் ஆஶ்ரயிப்பார்க்கு த்ருஷ்டிகோசரமாய்ப் புரோவர்த்தியாய் நிற்கிற ஸௌலப்யம். ஜ்ஞாநமாவது - ஆஶ்ரிதர்க்கு த்யாகஸ்வீகாரங்களுக்கு உறுப்பான இஷ்டாநிஷ்டங்களை யறிகைக்கு உடலான அறிவு; ஶக்தியாவது-அநிஷ்டங்களைப் போக்குகைக்கும் இஷ்டங்களைக்கொடுக்கைக்கு முடலாய், அஶக்தரானவர்களை அக்கரையேற்றவல்லஶக்தி; பூர்த்தியாவது - இவனிட்டதுகொண்டு த்ருப்தனாகவேண்டாத பூர்த்தி; ப்ராப்தியாவது-தன்பேறாகச்செய்து தலைக்கட்டுகைக்கு உடலான ஸம்பந்தம்; காருணிகத்வமாவது - ஸம்பந்தமில்லாவிடிலும் குருடன் குழியிலேவிழுந்தால் எடுக்கைக்கு ஸம்பந்தம் வேண்டாதாபோலே பிறர்நோவுகண்டால் 'ஐயோ!' என்ன வேண்டும்படியான தயை; "ஸுநிர்வ்ருத்தநவிஸ்ஹோஜகேவலம்த்வதநுகம்பயா" என்னக்கடவதிறே. ஔதார்யமாவது - கொள்வாரைத் தேடிக் கொடாவிடில் தரியாமற் கொடுக்கும் கொடையுடைமை; இந்த ஸௌகர்யாபாதக குணசதுஷ்டயமும், கார்யாபாதகுணஷட்கமும் இங்கும் அநுஸந்தேயம். அது எங்ஙனேயென்னில்;—"இப்படியைத்தொடருமிராமாநுசன்" என்னும்படி அவர்பின்படரும் குணனுய் "நிம்பனிவனென்றுநினைத்தென்னையிகழா ரெதிராச, ரன்றறிந் தங்கீகரிக்கையால்" என்கிற வாத்ஸல்யமும், "அண்ணலிராமாநுசன்" என்னும்படியுடையவராகையாலே பல்லுயிர்க்கும் வீடளிப்பானுய் விண்ணின்தலைநின்றும் மண்ணின்தலத்து உதித்தபடியாலே ஸ்வத்திருந்தவிடத்தேவந்து நோக்கும்படியான ஸ்வாமித்வமும், "என் அருவினையின் திறஞ்செற் றிரவும்பகலும் விடா தென்தன்சிந்தையுள்ளே நிறைந்தொப்பறவிருந்தான்" என்னும்படி ஒருநீராகக் கலந்த ஸௌஶீல்யமும், "என்கண்ணுள்ளும்நெஞ்சுள்ளும்நின்ற" என்று சொல்லும்படியான ஸௌலப்யமும், "மெய்ஞ்ஞானத்திராமாநுசன்", "கதி ராமாநுசன்", "உண்மைநன்ஞானமுரைத்த விராமாநுசன்" என்று அறியாதன அறிவிக்கைக்கும் அவர்களுக்குச் செய்யவேண்டுமதுவும் தவிர்க்கவேண்டுமதுவும் அறிகைக்கும் ஈடான ஜ்ஞாநமும், நிலத்தைச்செறுத்துண்ணும் நீசக்கலியை நினைப்பரிய பலத்தைச் செறுத்தும் என்பெய்வினை தென்புலத்தில் பொறித்த வப்புத்தகச்சும்மை பொறுக்கியும் போருகிற பாபவிமோசகதவஶக்தியும், "சலியாப்பிறவிப்பவந்தருந் தீவினைபாற்றித்தரும் பரந்தாமமென்னும்திவந்தரும்" என்னும்படி விரோதிநிவ்ருத்திபூர்வக பகவத்ப்ராப்தியை உண்டாக்கிக்கொடுக்குமதான ஶக்தியும், பகவத்விஷயத்தை அண்டைகொண்ட பூர்த்தியும், "எந்தையிராமாநுசன் வந்தெடுத்தனனின்றென்னை" என்கிற ப்ராப்தியும், "காரேய்கருணை" என்கிற காருணிகத்வமும், "கொண்டலனைய வண்மை", "உன்னுடைய கார்கொண்டவண்மை", "உன்வண்மையென்பாலென்வளர்ந்ததுவே" என்று அபேக்ஷாநிரபேக்ஷமாக உபகரிக்கும் ஔதார்யஸ்வபாவமுமாகிற ப்ரபத்த்யபேக்ஷித குணங்களெல்லாம்குணந்திகழ்கொண்ட விராமாநுசனிடத்திலே கண்டு அநுபவிக்கலாம்படியா யிருக்குமிறே.

இப்படி கோடித்வய குணயுக்தரான ராமாநுசனுடைய சரணங்களை உபாயமாக ஸ்வீகரிக்கும்படி சொல்லுகிறது-"ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே"என்று;குலந்தரும் நலந்தருஞ்சொல்லான நாராயணா என்னும் நாலெழுத்துப்போலே ஸகலபுருஷார்த்த ஸாதநமன்றிக்கே, கேவலம்மோக்ஷைகஹேதுவாயாயிற்று, இந்தச் சதுரக்ஷரி இருப்பது; "வதாஶ்ரு வதாஶ்ரக்ஷரீ" என்றுரே இவர்தாமே. "யதா நாராயணாயேதிஜமாநுவதாஶ்ரக்ஷரஶ்ச"; நாராயண ராமாநுஜ என்றிறே விகல்பிக்கலாயிருப்பது. இத்திருநாமந்தான், புகந்தோறுமுண்டாயிருக்குமாயிற்று; இளையபெருமாளிடத்திலும், நம்பிமூத்தபிரானுக்குத் தம்பியான க்ருஷ்ணனிடத்திலும், இப்போது இளையாழ்வாரான இவரிடத்திலும் பேர்பெற்றதிறே

யிருப்பது. ஏதத்பூர்வாவதாரத்வயமும், ஸாதுபரித்ராணத்துக்கும் துஷ்க்ருத்விநாஶத்துக்கும் உடலாயிருக்கும்; இவ்வவதாரமும், வைதிகமார்க்கத்தை ஸ்தாபிக்கைக்கும், அவைதிகமார்க்கத்தை நிரோதிக்கைக்கும், ப்ரபத்திமார்க்கத்தைப் பெருக்கி வளர்க்கைக்கும் உடலாயிருக்கும். அவ்வவதாரங்களிலும் அப்படியே, "ஸக்ருதேவ ப்ரபந்நாய," "மாமேகம் ஶரணம் வ்ரஜ", "[illegible] ஶரணம் கத:" என்றிறே இவர்கள் ப்ரபத்தியை வர்த்திப்பித்தது. அவர், ஸ்ரீமந்நாராயணவிஷயத்தில் ப்ரபத்தியை கத்யமுகேந வெளியிட்டார்; இவர், ராமாநுஜவிஷயத்தில் ப்ரபத்தியை இப்பத்யமுகேந வெளியிடுகிறார். அங்கு, ப்ரமேயபூதர் வெளியிட்டார்கள்; இங்கு, ப்ரமாதாவானவர் வெளியிட்டார் [ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம்ப்ரபத்யே] என்று. 'அஸ்யராமாநுஜஸ்ய சரணௌ' என்று "இராமாநுசன்பரன்பாதமுமென்சென்னித்தரிக்கவைத்தான்" என்னும்படி திருவடிகளிலே தலையைமடுத்து ஶிரஸா யாசிக்கிறார். ராமஶரணாகதி, "[illegible]" என்று பலித்ததில்லை; ராமாநுஜஶரணாகதி அவ்யபிசரிதமாக பலிக்குமிறே. "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்னும்படி, "ராமாநுஜஸ்ய சரணௌ" என்று - வேறு த்வயம் வேண்டாதே, அடியே த்வயமாயிருக்கை. லோகவிக்ராந்தசரணம் போலே மாறிநடப்பனவாயிறே இராமாநுசன்தன் இணையடி இருப்பது; நாராயணசரணங்களளவுஞ் செல்லவேண்டாத பூர்த்தி. விக்ரஹைகதேஶத்தைச் சொன்னது - விக்ரஹத்துக்கும் உபலக்ஷணமாக. "கையிற்கனியென்னக் கண்ணனைக்காட்டித்தரிலு முன்றன், மெய்யிற் பிறங்கிய சீரன்றி வேண்டிலன் யான்" என்னும்படியாயிருக்கும். [சரணௌ ஶரணம்] - "இராமாநுசன் நம்மை நம்வசத்தே விடுமே சரணமென்றால்" என்கிற உபாயாத்யவஸாயத்தைச் சொல்லுகிறது. 'ப்ரபத்யே' என்று - உபாயஸ்வீகாரஞ் சொல்லுகிறது. "கையும்மனமுன் குணங்களை யுன்னி யென்னாவிருக்தெம்,மைய னிராமாநுசனென் றழைக்குமருவினையேன், கையுந்தொழும்", "[illegible]" என்னும்படி த்ரிவிதகரணத்தாலும் பற்றுகிறார். "இராமாநுசனையுன்னுந்திண்மை" என்று - எல்லார்க்கும் மாநஸாத்யவஸாயமாகலாம்; இவர் பூர்ணாதிகாரியாகையாலே த்ரிவிதகரணத்தாலும் பூர்ணப்ரபத்தி பண்ணுகிறார். இந்த ஸ்வீகாரம் ப்ராப்யமாகையாலே, "எய்ந்தபெருங்கீர்த்தி யிராமாநுசமுனிதன், வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன்" என்று வர்த்தமாநமாய் நடக்கிறது.

இவர் தீர்க்கபந்துவாகையாலே, எல்லார்க்கும் தாம் பண்ணின ப்ரபத்தியே தஞ்சமாம்படி கொழுந்துவிட்டுப்படரும்படி பண்ணுகிறார்; அத்தைப்பற்றவிறே "[illegible]" என்றது. இத்தால் - இவர் சரமகாலத்திலே பண்ணின சரமப்ரபத்தியே இவர் சரண்கூடின சரமபர்வநிஷ்டர்க்கெல்லாம் அவ்யபிசரிதமான உபாயமாய்ப் பேற்றோடே தலைக்கட்டுமென்றதாயிற்று. "ப்ரபந்நஜநகூடஸ்தரான எம்பெருமானார், தம்முடைய பெருகிப்போருகிற பெருங்கருணையாலே பெரியபெருமாள் திருமுன்பேசென்று பெரியபிராட்டியாரை முன்னிட்டு, 'ப்ரபந்நஜநங்களான பெரியோர்களிடத்திலே பேதைகளானவர்கள் செய்யும் பெரும்பிழைக்கும் ப்ரபத்தியே இவர்சரண்கூடின சரமபர்வநிஷ்டர்க்கெல்லாம் ப்ராயஶ்சித்தமாகக்கடவது' என்று ப்ரார்த்திக்க, புருஷகாரபலத்தாலே 'பொறுத்தோம்' என்ன, இந்த ப்ரார்த்தநாப்ரகாரத்தை ராமாநுசனைத்தொழும் பெரியோரான கூரத்தாழ்வான் ஏகாந்தத்திலே ஸேவித்து அனைவர்க்கும் தஞ்சமாக "நமஸ்தே" இத்யாதி ஶ்லோகத்தை அருளிச்செய்தார்" என்று பெரியோர்கள் அருளிச்செய்வர்கள். வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரும், பகவந்தம் யதிவரம் ப்ரணிபத்ய யதீந்த்ராங்க்ரியாஶ்ரயரானார்; அத்தைப்பற்றப் பின்புள்ளாரும் "[illegible]" என்றார்கள்; [illegible]க்கு ப்ரவர்த்தகரான ஈயுண்ணிமாதவப்பெருமாள் ப்ரஶிஷ்யரான நாலூர்ப்பிள்ளையும் ராமாநுஜதாஸரிறே. யதிவரபுநரவதாரமாய் யதீந்த்ரப்ரவணரான சீயரும் தம்ஶிஷ்யபுத்ரர்களுக்கு ராமாநுஜநாமத்தையுண்டாக்கி நடத்தியும், நூற்றந்தாதியை அநுகரித்து அருளிச்செய்த யதிராஜவிம்ஶதியிலே ஸ்ரீவத்ஸசிஹ்நரடியாக "[illegible]" என்றும், "[illegible]" என்றும், ஸ்ரீஶைலநாதரிடத்திலே ஶேகரித்தது. ஏவம்வித ஸம்பந்தயுக்தராய் குருகுலதுர்யரான பெரியசீயர்ஸம்பந்தமேயிறே [illegible]; இத்தால் - விஶிஷ்டபக்ஷத்திலே ஊன்றின ஶிஷ்டராய், அத்தாலே ஶ்ரேஷ்டருமாய், ஸர்வப்ரகாரத்திலும் அஹங்காரரஹிதரான ஆசார்யர்கள் ஸம்பந்தமே ஆதரணீயமென்றதாயிற்று. (௩)

## ஆளவந்தார் அருளிச்செய்தது.

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுலாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ||

[மாதா இத்யாதி] - இந்த ஜ்ஞாநம் அதிக்ருதாதிகாரமாய்ப் போகாமே ஸர்வாதிகாரமாம்படி த்ராமிடியான ப்ரஹ்மஸம்ஹிதையை "மயர்வறமதிநலம்" என்கிற பக்தியாலே வாசிகமாக்கி, "மரங்களுமிரங்கும்வகை" என்கிற தம்முடைய ஆகர்ஷகமான ஈரச்சொல்லாலே அருளிச்செய்கையாலும், பெரியமுதலியார்க்கு இந்த ஜ்ஞாநத்துக்கு உபாதாநம் ஆழ்வாராகையாலும், அவர் திருவடிகளிலே விழுகிறார். "உரலினோடிணைந்திருந்தேங்கியவெளிவெத்திறம்" என்றும், "செய்யுண்வார்த்தையுளன்னேகோல்கொள்ள்" என்றும், "எல்லாங்கண்ணன்" என்றும் பெரியமுதலியாரையும் ஸ்ரீபராஸரபகவானையும்போலே க்ருஷ்ணவித்தராயிருக்கிறபடியையும் நினைத்து ஆழ்வார்திருவடிகளிலே ஸரணம்புகுகிறார்.

[மாதா] - உத்பத்திக்கு முன்னே வரங்கிடந்து பெறுகைக்கு வருந்தி, பத்துமாஸம் கர்ப்பதாரணம் பண்ணி, ப்ரஸவவேதனையநுபவித்து, அஸூத்திகளையும் மதியாதே பால்யதஸையில் ஆதரித்து வளர்த்து, பக்வனானால் பின்பு பருஷபாஷணம்பண்ணினாலும் அவற்றைப்பொறுத்து, அகலவிசையாதே இவன் ப்ரியத்தையே வேண்டியிருக்கும் மாதாவைப்போலே உபகாரகராயிருக்கை. [பிதா] - அவன்பாத்ரமாத்ரமென்னும்படி உத்பாதகனாய், என்றுமொக்க ஹிதைஷியான பிதா பண்ணும் உபகாரத்தைப் பண்ணுமவரென்கை. "ஸ்ரீயாநுவ்ருத்தி: பிதா". [யுவதய:] - இவ்விருவரையும் மறந்து விரும்பும் யுவதிகளைப்போலே நெஞ்சுக்கினியராயிருக்கை. [தநயா:] - அவர்களுடைய யௌவநத்தை அழியமாறிப்பெற்றவராய், பால்யத்தில் ஸூககராய், பக்வதஸையில் ரக்ஷகராய், நிரயநிஸ்தாரகரான புத்ரர் பண்ணும் உபகாரத்தைப் பண்ணுமவரென்கை. [விபூதி:] - விபவமில்லாதபோது இவையெல்லாம் அஸத்ஸமமாகையாலே, இவையெல்லாவற்றையும் நன்றாக்கும் ஐஸ்வர்யம்போலே உத்தேஸ்யராயிருக்குமவரென்கை. [ஸர்வம்] - அநுக்தமான ஸர்வைஹிகங்களுமாயிருக்கை. அதாவது - மோக்ஷோபாயமும் முக்தப்ராப்யமும். [யதேவ] - அவநாரணத்தால் "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய்தந்தையு மவரே" என்றிருக்கும் ஆழ்வார் நினைவுக்கே. [நியமேந] - என்றுமொக்க, அவர்க்கு ப்ரியமென்று போமதொழிய ப்ராமாதிகமாகவும் புறம்பு போகக்கடவதன்றிக்கே யிருக்கை. [மதந்வயாநாம்] - "வித்யாஜந்நாவா" என்கிற உபயஸந்தாநஜாதர்க்கு. [ஆத்யஸ்ய ந:] - வைஷ்ணவஸந்தாநத்துக்கு ப்ரதமாசார்யரென்கை. [குலபதே:] - ஸ்த்ரீக்கு பர்த்ருகுலம்போலே கோத்ரருஷியும் அவரே. [வகுலாபிராமம்] - திருமகிழ்மாலையாலே அலங்க்ருதமாயுள்ளதை. இத்தால் - திருவடிகளில் பரிமளத்தால் வந்த போக்யதையைச் சொல்லுகிறது. திருத்துழாயாலே அலங்க்ருதமான பகவச்சரணாரவிந்தங்களை வ்யாவர்த்திக்கிறது. "நல்லடிமேலணிநாறுதுழாய்." [ஸ்ரீமத்] - ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயோடே நித்யஸம்யுக்தமாயிருக்கை; "ஸுதரிஷ்டமத ஸ்ரீரோ", "ஸதாநாமவஸ்ரீரோ" என்று - பகவத்ப்ரத்யாஸத்தியை ஐஸ்வர்யமாகச் சொல்லக்கடவதிறே. என்னுடைய ஸம்பத்துக்கு ஊற்றான ஐஸ்வர்யத்தையுடையவரென்னவுமாம். [ததங்க்ரியுகளம்] - ஆதுவென்னுமத்தனை யொழியப் பேசிமுடியவொண்ணாதென்கை. [யுகலம்] - சேர்த்தியால்வந்த அழகையுடைத்தாயிருக்கை. [ப்ரணமாமி மூர்த்நா] - ஆழ்வாருடையபடிகளை நினைத்தவாறே, நம: என்று நிற்கமாட்டாதே அவர் திருவடிகளிலே தலையைச் சேர்க்கிறார். (௪)

## பட்டர் அருளிச்செய்தது.

---

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத ஸ்ரீபக்திஸார குலஶேகர யோகிவாஹாந் ।
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஶ்ராந் ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥

கீழ் உபகாரகரை ஆஶ்ரயித்த இத்தால் செய்ததாயிற்று - முமுக்ஷுவுக்கு உபகாரகர் ஶேஷித்வ ப்ரதிபத்திவிஷயபூதரும் ஸ்துத்யரு மென்னுமிடம் சொல்லுகிறது. ஒருவனுக்கு ஶேஷிகள் இருவருமாம்படி எங்ஙனே? என்னில்-க்ருதிஶேஷித்வம் யாகாதிகளுக்கும் புரோடாஶாதிகளுக்கும் உண்டானாற்போலே ஈஶ்வரன் ப்ரதாநஶேஷியாய் பாகவதர் த்வாரஶேஷிகளா மிடத்தில் விரோதமில்லை; அதவா, ஈஶ்வரன் நிருபாதிக ஶேஷியாய், தத்ஸம்பந்த மடியாக வந்ததாகையாலே பாகவதஶேஷத்வம் ஔபாதிக மென்றுமாம். "தமக்கு ஸ்தோத்ராரம்பஹேதுவான பக்த்யாதிகள் பிதாமஹோபாத்தநம்" என்கைக்காக முதலிலே பெரியமுதலியாருடைய ஜ்ஞாநபக்திகளுடைய ஆதிக்யஞ் சொன்னார். நான்காம்ஶ்லோகத்தாலே - இவ்வர்த்தம் த்ரைவித்யவ்ருத்தாநுமத மென்கிறது. ஐந்தாம்ஶ்லோகத்தாலே - இத்தஜ்ஞாநம் இவர்க்கு ஆழ்வார்களாலே வந்த தென்கை. "[illegible]" என்று ஆழ்வான் அக்ரகண்யராகையாலே - "[illegible]" என்றார். அப்படிப்பட்ட பாரதந்த்ர்யத்தை "இவ்வாத்மவஸ்து அவர்க்குஶேஷமாகில் அவருடைய விநியோகப்ரகாரங் கொண்டு கார்யமென்?" என்றார்; ஏவம்விதஸ்வரூபராகையாலே, உடையவரும் "ஒருமகள்தன்னை யுடையேன்" என்றார். இப்படி ஸ்வாசார்யவிஷயத்தில் பாரதந்த்ர்யத்தாலும், "நாம் பெற்ற லோகம் காலூரானும் பெறவேணும்" என்று ப்ரார்த்திக்கையாலும், "ஶிஷ்யாசார்யக்ரமத்துக்கு ஸீமாபூமி கூரத்தாழ்வான்" என்றார்கள்; "[illegible]" என்னக்கடவதிறே. அதைப்பற்ற, உடையவரும் "[illegible]" என்று ப்ரார்த்தித்தருளினார்; நூற்றந்தாதியிலும் மொழியைக்கடக்கும் பெரும்புகழா னடியாக விரும்பியருளினர். மற்றையாரான இவ்வருகிலுள்ளாரும் அல்லாவழியைக் கடப்பது அவர்களாலேயிறே; அவர்கள்தாம் யோநித்யம் த்ரைவித்யாதிகளடியாக அடியுடையாரா யிருப்பார்கள். "மாறனடிபணிந் துய்ந்தவன்", "ராமாநுஜாங்க்ரிஶரணோஸ்மி" இத்யாதி. மதுரகவிகளடிப்பாட்டிலே நடக்கிற க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர்கள் ஆழ்வானடியாயிருப்பார்கள்; "ஸ்ரீவத்ஸ[illegible]" இத்யாதி. "ஆரியர்காள் கூறும்" என்கிற எழுபத்துநாலுமுதலிகளுக்கும் உடையவரடியான ஆசார்யத்வம்; அதில் முக்யம் ஆழ்வான் ஸம்பந்தம்; பட்டரடியாகவிறே. அஷ்டஶ்லோகீமுகேந ரஹஸ்யத்ரயார்த்தஸம்பந்தம். திருவாய்மொழியும் அடியாயிருக்கும், ஒன்பதினாயிரம் பன்னீராயிரத்திலே பர்யவஸித்தது; பெரியபட்டருடைய ப்ரஶிஷ்யரான நம்பிள்ளை திருவடிகளிலேயிறே நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் ஆஶ்ரயித்தது; அவரும் ராமாநுஜநாமாவிறே; அஷ்டாக்ஷரதீபிகை அவரடியாயிருக்கும்; நம்பிள்ளைகுமாரரும் ராமாநுஜனிறே; அவரும் ஸாரஸங்க்ரஹஞ் செய்தருளினர்; தத்வம்ஶ்யரும் கோயிலுடையவர்க்குச் சிறிது கைங்கர்யங்களுஞ் செய்தார்கள். வடக்குத்திருவீதிப்பிள்ளை குமாரரான பிள்ளைலோகாசார்யரும் வகுளபூஷணஶாஸ்த்ரஸாரமான வசநபூஷணாதி ரஹஸ்யப்ரபந்தகர்த்தாவாய், தம்முடைய ப்ரதாநஶிஷ்யரான எம்பெருமானார்க்கு "கூரகுலோத்தமதாஸர்" என்று திருநாமஞ்சாத்தினர்; "என்னுரியர்க்காக எம்பெருமானார்க்காக" என்றிறே அக்கோஷ்டியில் பரிமாற்றம் இருப்பது.

[பூதம்ஸரஸ்ய] - பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, நஞ்சீயர்புருஷகாரம் பிறக்க, அவர்க்காக ஆழ்வார்களை அநுஸந்தித்ததாயிருக்கும் இஶ்ஶ்லோகம். ஆண்டாளை "நீளா" என்று தனித்து ஶரணம்புகுகிறதாயிருக்கும் அஶ்ஶ்லோகம். ஆழ்வார்கள்தஞ்செயலை விஞ்சியிறே அவள்வைபவம் இருப்பது. [பூதம்ஸரஸ்ய இத்யாதி] - நிரவதிகபகவத்ப்ரேமயுக்தரான ஆழ்வார்கள் பதின்மரையும், அவர்களுக்குஶேஷபூதரான மதுரகவி யதிவரர்க ளிருவரையும் தாம் நித்யஸேவை பண்ணும்படியை அருளிச்செய்கிறார். "மேவினே னவன்பொன்னடி மெய்ம்மையே" என்னுமவராகையாலே ஆழ்வாரைச் சொன்னபோதே அதிலே அவரும் அந்தர்ப்பூதர்.

[பூதம்] - பூதத்தாராகிறார் - "மாதவன்பூதம்" என்று நிரூபிக்கும்படியான மஹத்தையுடையராய், மாமல்லையில் மாதவீகுஸுமத்திலே அவதரிக்கையாலே "கடல்மல்லைப்பூதத்தார்" என்று நிரூபகமானவரென்கை. 'ஸரஸ்ய' என்று - "மல்லையாய் மதிட்கச்சியூராய்" என்கிறபடியே மல்லைக்கு அநந்தரபாவியாக எடுப்பதான கச்சிவெஃகாவில் பொய்கையிலே, "பூவில்நான்முகனைப்படைத்த" என்கிறபடியே பொற்றாமரைப்பூவிலே அவதரித்த பொய்கையாரென்றபடி. மஹதாஹ்வயராகிறார் - "மாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி" என்னும்படியான அத்தேசத்துக்கு ஸமமாயிருப்பதான மாடமாமயிலையில் மாவல்லிக்கேணியில் செவ்வல்லிப்பூவிலே அவதரித்து, "யானுமோர்பேயன்", "பித்தரென்றே பிறர்கூற" என்று பேசும்படியான பேயார். இவர்கள் மூவரும் பரவிஷயத்தில் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளையுடையராயிறே இருப்பது. அதில் சரமதசையான பரமபக்தியையிறே, இவர் ப்ராப்தரானது. பட்டநாதராகிறார் - "வேதாந்தவிழுப்பொருளின்மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனன்" என்கிறபடியே - வித்வத்கோஷ்டியிலே சென்று அவர்களை வென்று, பரதத்வநிர்ணயமுகேந 'பட்டர்பிரான்' என்று பேர்பெற்றவரென்கை. இவரும் "சோராதகாதல்பெருஞ்சுழிப்பால் தொல்லைமாலையொன்றும் பாராதவனைப் பல்லாண்டென்றுகாப்பிடும்" என்னும்படி நிரவதிகபகவத்ப்ரேமயுக்தராயிறே இருப்பது. பட்டநாத, ஸ்ரீ என்று - பிந்நபதமாய், லக்ஷ்மீதல்யையான ஆண்டாளென்னுதல்; அன்றிக்கே, பட்டநாத ஸ்ரீயென்று - பெரியாழ்வார்க்கு ஸ்ரீயான ஆண்டாளென்று அநுஸந்திக்கவுமாம். "திருமகள்போல வளர்த்தேன்" என்றாரிறே. மேல் 'பக்திஸார' என்கிறது; அன்றிக்கே, பட்டநாதர்க்கநந்தரம் "ஸ்ரீபக்திஸார" என்று சொல்லுகிறது - "பெறற்கரிய நின்னபாதபத்தியான பாசனம், பிறர்க்கரியமாயனே எனக்குநல்கவேண்டுமே" என்று ப்ரார்த்தித்து பக்தியைப் பெற்று, 'பக்திஸாரர்' என்று நிரூபகமானவரென்கையைப் பற்றவாயிற்று; "பொன்னிசூழரங்கமேய பூவைவண்ண" என்றிறே இவருடைய முடிந்த அவாவுக்கு விஷயம் இருப்பது. குலசேகராகிறார் - "அங்கையாழியரங்கனடியிணை, தங்குசிந்தைத் தனிப்பெருமைப்பித்தன்" என்னும்படி பெரியபெருமாள் விஷயத்திலே நிரவதிகப்ரேமத்தை யுடையரான ஸ்ரீகுலசேகரப்பெருமாளென்கை; மாவடிமுடிமேல் கோலமாங் குலசேகரனிறே. "எம்பெருமான்தன் சரிதை செவியாற்கண்ணாற்பருகுவோ மின்னமுத மதியோமன்றே" என்றிறே பெருமாள்விஷயத்திலும் இவர் ப்ரேமம் இருப்பது. யோகிவாஹராகிறார் - முநிவாஹநரான பாண்பெருமாளென்கை. இவரும் "இலங்கைக்கிறைவன் தலைபத்துதிரவோட்டி யோர்வெங்கணையுய்த்தவனோதவண்ணன், அரங்கத்தம்மான்" என்றும், "அணியரங்கனென்னமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்றும் அவ்விஷயத்தில் அஸ்தமிதாந்யஹாவராயிருக்கும்படி யாயிற்று. இவர்பக்தியும். பக்தாங்க்ரிரேணுவாகிறார் - "எல்லையிலடிமைத்திறத்தினிலென்றுமேவுமனத்தனும்" என்றும், "அடியார்க்கென்னையாட்படுத்தாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே எல்லையான ததீயசேஷத்வமே நிலைநின்ற ஸ்வரூபமென்று அறுதியிட்டு, அதுவே நிரூபகமான தொண்டரடிப்பொடியாழ்வாரென்கை; "துளபத்தொண்டாயதொல்சீர்த்தொண்டரடிப்பொடி" என்றும், "தொடையொத்ததுளவமும் கூடையும் பொலிந்துதோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்றும் தாமேஅருளிச்செய்தாரிறே. இவர்தாம் "தன்பால் ஆதரம்பெருகவைத்த வழகன்" என்று பேசுகையாலே பகவத்ப்ரஸாதாயத்தபக்தியை யுடையவரென்னுமது தோற்றுகிறது. பரகாலயதிராகிறார் - "மருவலர்தமுடல் துணிய வாள்வீசும் பரகாலன்" என்கிறபடியே - பகவத்த்விட்டுக்களான பாஹ்யர்கள் கேளாராகையாலே அவர்களைத் தோள்வலியாலும் நிரஸித்து அதுக்குமேலே சாஸ்த்ரீயமார்க்க ப்ரவர்த்தகராய் வந்த சத்ருக்களை ஸ்வோக்திசாஸ்த்ரங்களாலும் நிரஸித்து, "ராஜவாஹ | ..." என்னும்படி காயிககைங்கர்யங்களையும், "அரங்கமாலைச் சொல்லினேன் தொல்லைநாமம்", "என்னுடைச்சொற்களென்னும் தூயமாமாலைகொண்டு சூட்டுவன் தொண்டனேன்" என்றும் வாசிககைங்கர்யங்களையுஞ் செய்து போந்தவரென்கை. "காம்பினார் திருவேங்கடப்பொருப்ப நின்காதலையருளெனக்கு" என்று ப்ரார்த்தித்து, "பத்திமைக்கன்புடையேனாவதே பணியாயெந்தாய்" என்னும்படி ஆசைதான் பெரியதாயிற்று; "அரங்கமென்பதிவள்தனக்காசை" என்னக்கடவதிறே. ததீயசேஷத்வத்திலும் "நின்திருவெட்டெழுத்தும் கற்று நானுற்றது முன்னடியார்க்கடிமை" என்றிறே இருப்பது.

யதீந்த்ரமிஶ்ராகிறார் - "ஸம்ஸேவிதஸ்ஸம்யமிஸஹஸ்ர" என்னும்படி யதிகளாலே ஸேவிக்கப்படும் எதித்தலைநாதனான எம்பெருமானாரென்கை. மிஶ்ரஶப்தம் - பூஜ்யவாசி; "ராமாநுஜாசார்யர்" என்னுமாபோலே. மிஶ்ராந் என்கிற பஹுவசநம் எல்லாரையுஞ் சொல்லுகிறதாய், இதிலே அநந்த

ரான மதுரகவிகளேயுங் கூட்டி அநுஸந்திக்கிறதாகவுமாம். "மதுரகவியாழ்வா ரெதிராசரா மிவர்கள்" என்றிரே சேர்த்தி இருப்பது. அன்றிக்கே, மிஸ்ரஸப்தம் - பெரியோரைச் சொல்லுகிறதாய், அதாலே சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவரான மதுரகவிகளேச் சொல்லுகிற தென்னுதல்; அன்றிக்கே, இவரும் பொன்னரங்கமென்னில் மயலேபெருகு மிராமாநுசனுய், ரங்கேஸகைங்கர்ய துரந்தரராயிறே இருப்பது; அச்யுதபதாம்புஜ யுக்மருக்மவ்யாமோஹம் இவர்க்கு முண்டிறே. [ஸ்ரீமத்பராங்குஸமுநீம்] - "யதீந்த்ரமிஸ்ராந்" என்று - கீழ்உக்தரானவர்களெல்லாரும் ஒருதட்டும், ஸ்ரீமத்பராங்குஸமுநி யென்கையாலே - ஆழ்வாரொருவரும் ஒருதட்டு மென்னுமது தோற்றுகிறது; எல்லாரையும் அவயவபூதராயுடையராயிறே ஆழ்வார்தாம் இருப்பது. ஸ்ரீமத் என்கையாலே - ஒழிவில்காலத்தில் ப்ரார்த்தித்த கைங்கர்ய ரூப ஸம்பத்தை யுடையவ ரென்கை. பராங்குஸ ரென்கையாலே-"மதாவலிப்தர்க்குஅங்குசமிட்டு"என்னும்படியிருக்கை; "வித்யாமதோ தநமதஸ்ததீயோபிஜநாந்வய:" என்று சொல்லப்படுகிற முக்குறும்பையறுக்கும் அங்குஸமாயிறே இவர் இருப்பது. "ஓதியுணர்ந்தவர்முன்னு வெஞ்சவிப்பார்மனிசர்" என்றும், தத்ராஹித்யமுடையவர்களே "முழுதுணர்நீர்மையினர்" என்றும், "கொள்ளென்றகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாகக் கொள்ளென்று தமமூடும்" என்றும், "பெருஞ்செல்வமு மவரே" என்றும், "பரமனைப்பயிலுந் திருவுடையார்யவரேலும்" என்றும், "சண்டாளசண்டாளர்களாகிலும் வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென் றுள்கலந்தாரடியார் தம்மடியாரெம்மடிகள்" என்றும் இப்படி ஸ்வஸூக்த்யங்குஸத்தாலே அஜ்ஞருடைய மும்மதங்களே அருளென்னுந்தண்டாலே தமித்து ஓட்டினபடி. அன்றிக்கே, பராங்குஸரென்று - நிரங்குஸஸ்வதந்த்ரனை ஈஸ்வரனே ஸ்வஸூக்த்யங்குஸத்தாலே வஸீகரிக்க வல்ல ரென்னவுமாம்; "வலக்கையாழி யிடக்கைச்சங்க மிவையுடை மால்வண்ணனே,மலக்குநாவுடையேற்கு" என்று தாமும் அருளிச்செய்தார்; "வகுளாபரணோ வசீகர்" என்று பின்புள்ளாரும் பேசினர்கள். முநிஸப்தத்தாலே - மநநஸீலரென்கிறது. எண்ணுதனவெண்ணும் நன்முனிவரிறே. பராக்ஷணமேயாயிற்று, இவர் சித்தமூலத்திலே சிந்தித்திருப்பது. ஸர்வேஸ்வரனுடையவும் ஸம்ஸாரிகளுடையவும் ஸம்ரக்ஷணத்திலேயாயிற்று, இவர் திருவுள்ளம் ஊற்றிருப்பது. "ஆளுமாளார்", "தனிமையும் பெரிதுனக்கு" "அவத்தங்கள்விளையுமென்சொற்கொள்" என்றும், "உலகினதியல்வே", "இவையென்னவுலகியற்கை" என்றும், இவர்கள் துர்க்கதியைக் கண்டு "மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்" என்று உபதேஸித்துத் திருத்திப்போருமவரிறே; இவரும், மதிநலம்அருளப்பெற்று ஆராதகாதலையுடையராயிறே இருப்பது. 'பாகாலயதீர்த்தமிஸ்ராந் ஸ்ரீமத்பராங்குஸமுநிம்' என்கையாலே - "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்று ஆழ்வாராலே இருவரும் ஸூசிதரென்னுமதுவும், "பராங்குஸபரகாலயதிவராதிகள்" என்கிற ப்ரபந்நஜநகூடஸ்தத்வமும் தோற்றுகிறது. "திரிவிக்கிரமனடியிணைமிசை"என்றும், "எந்நாளேநாம் மண்ணளந்தவிணைத்தாமரை" என்றும்நிர்த்தேஸித்து, "உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே" என்றும், "உலகமளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன்" என்றும், "ஸோகவிக்ராந்தசரணௌ ஸரணம் தேவ்ரஜம் விபோ" என்றுமிறே, இவர்கள் ப்ரபத்திபண்ணும் க்ரமம் இருப்பது. இக்க்ரமம் ஆழ்வார்களெல்லார்க்கும் ஒக்குமிறே. "த்ரிவிக்ரமக்ரமாக்ராந்த". இவர்கள் தாம் ஸர்வேஸ்வரன்பக்கல் தாங்கள் கற்றத்தையிறே பேசியோதச் சொல்லுகிறது. "பேசுமின் திருநாமமெட்டெழுத்தும்", "மனமுடையீர் மாதவனென்றோதுமின்" என்று. "ஸ்வயம்வ்ருணாந ஸ்ரீநாதோ நநவஸம வஸுதைவம்வக்த்ரா" என்று உடையவரும் பெரிய பெருமாளிடத்திலே கேட்டு உபதேஸித்தும், "பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்கூறும்" என்றுபேசியும் வரம்பறுத்துச் செய்தருளினரிறே. உடையவர் தாம் த்வயத்தை ஜ்ஞாநாதிகர்க்கு ப்ரீத்யதிஸயத்தாலே புந:புந: ப்ரஸாதிக்கையும், அஜ்ஞர்க்கு அவர்களார்த்ததர்ஸநத்தாலே அருள்விஞ்சி ப்ரஸாதிக்கையுமாகிற ஆகாரத்வயம் உண்டிறே; எட்டு மிரண்டு மறிவித்த எம்பெருமானரிறே. "யதீந்த்ரமிஸ்ராந் ஸ்ரீவைஷ்ணவாநுஸஞ்சாரிணீ" என்கையாலே திருவாய்மொழிமுதலான திவ்யப்ரபந்தங்களாலும் ஸ்ரீபாஷ்

---

* "த்ருதீயோபிஜநோந்வய:" என்ற பாடம் லக்ஷணையால் பொருள் கொள்ளத் தகுந்தது.

யாஜி ஸ்ரீஸூக்தியாலும் தர்சநத்தை நடத்திப்போருமவர்களாய், ஆழ்வாருக்கு சரணவத் பரதந்த்ரராய் "மாறனடிப்பணிந்துய்ந்தவன்" என்றும், "சடகோபர்தேமலர்த்தாட்கேய்ந் தினியபாதுகமா மமந்தை யிராமாநுசனை" என்றும் ஆழ்வார்திருவடிகளுக்கு அத்யந்தம் அந்தரங்கரான ஆகாரத்தைப் பற்ற, அண்மையாக அருளிச்செய்தது. ஆழ்வானும் "ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே" என்று அகந்தரஸ்லோகத்திலே "[illegible]" என்று ஆழ்வாரை அநுஸந்தித்தருளினர். "[illegible]" என்றிறே சேர்த்தி இருப்பது.

"[illegible]" என்று தொடங்கி - ஆழ்வார்களோடு அவர்களையும் "[illegible] ஸ்ரீமத் ததங்க்ரி [illegible]" என்று ஸஹபடித்தது - இவர்கள் ப்ராதாந்யம் தோற்ற. "யோநித்ய" "மாதா" என்கிற இரண்டு தனியனுலும் - விசேஷித்து ஆசார்யர்கள் அநுஸந்தித்தார்கள், குருபரம்பரையிலும் த்வயத்திலும் எம்பெருமானை அநுஸந்திக்குமாபோலே. அதிலும் உடையவர் ப்ராதாந்யத்தாலே - யோநித்யம் முற்பட்டிருக்கும். ஆகையால், யதிவரசரமராய் அவரோடும் ஸமமான தேசிகர்களையும், தேசிககுலகூடஸ்தரான சடாரிபுசரணங்களையும் 'ப்ரணதோஸ்மி நித்யம்' என்று நித்யஸேவைபண்ணும்படி சொல்லுகிறது. உபகாரத்துக்காகில் "[illegible]" என்று ஒருகால் அநுஸந்திக்குமதே உள்ளது, ப்ராப்யபுத்யா ஸதாவிறே. "[illegible]", "[illegible]" என்று அங்கும் அநுவர்த்தகமுண்டாகவிறே அருளிச்செய்தது. 'ப்ரணதோஸ்மி' என்று - ததீயவிஷயத்தில "[illegible]" என்கிறபடியே த்ரிவிதகரணப்ரவணதையாலே ப்ரணாமம்பண்ணுகிறே னென்கிறார். இத்தால் - பக்திபாரவஸ்ய ப்ரபந்நரான ஆழ்வார்களும், அவர்களோடு விகல்பிக்கும்படியான ஸ்ரீபாஷ்யகாரரும், ஸர்வதாபஜநீய ரென்றதாயிற்று. "[illegible]" என்றிறே ஆழ்வார்களைத் தொடங்கி ஸேவிக்கும் க்ரமம் இருப்பது.

பிள்ளைலோகம்சீயர் திருவடிகளே சரணம்.

வ்யாக்யாந ஸஹிதங்களான

# திருவாய்மொழியின் ஈட்டுத்தனியன்கள்.

## திருமலையாழ்வார் அருளிச்செய்தது.

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

## மணவாளமாமுநிகள் அருளிச்செய்தது.

திருவருள்மால் சேனைமுதலி சடகோபன் நாதமுனி சிருயக்கொண்டார் மணக்கால் நம்பி சென்றுமாளவந்தார், குருமாலாதரர் குருகைப்பிராற்கன்பாமெதிராசர் கோவிந்தர் கூரேசர் பட்டர் வேதாந்திமுநி, இருகண்ணர்க்கனபுடையநம்பிள்ளை யிவரீடளித்தற்கேய்ந்தமாதவர் பற்பநாப ரிவரருளாளர், திருவடியூன்றியதேவப்பெருமாள் கைக்கொண்டருளும் திருமலையாழ்வார் பதங்கள் முன்பென்னுட்சேர்ந்தனவே.

"[illegible]" என்கிற தனியனிலும், "திருவருள்மால்" என்கிற திருநாமத்திலும், திருவாய்மொழியின் ஈட்டின் ஸம்ப்ரதாயத்தை அடியேதொடங்கித் திருவாய்மொழிப்பிள்ளை யளவும் தர்ஶிப்பித்தபடி சொல்லுகிறது. "[illegible]" என்கிறபடியே, நாதாதியாக தேவாதிப ரளவு மூண்டானவர்களை "வந்தே" என்று - குருபங்க்திநமஸ்காரத்தைச் சொல்லுகிறது, 'நாதம்' இத்யாதியால்.

நாதராகிறர் — "ஸ்ரீரங்கநாதர்" என்னும் நாமதேயத்தை யுடையராய், "[illegible]" என்னும்படியான ஆழ்வாரை நாதராகவுடையராய், "[illegible] । [illegible]" என்று 'திருமாலால் அருளப்பட்ட சடகோபன் அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினன்' என்கிறபடியே அந்த ஆழ்வாருடைய அருள்பெற்ற நாதமுநியென்கை. ஆழ்வாரைத் திருப்புளியடியிலே மயர்வறமதிநலமருளி விஶேஷகடாக்ஷம்பண்ணினாற்போலே, அவ்விடந்தன்னிலே ஆழ்வாரும் விஶேஷகடாக்ஷஞ் செய்தருளினர்; 'தாம் மயர்வறமதிநலமருளி பஜநத்திலே சேர்க்கிறர்' என்னக்கடவதிறே; ஆழ்வாருடைய பக்தியோடு விகல்பிக்கலாம்படியான அகாதபகவத்பக்தியிறே இவரது. இத்தால் "முநிவரை யிடுக்கியும்" என்னும்படி ஸத்வாரகபகவத்ப்ரஸாதமடியாக நடந்துவந்த ஶாஸ்த்ரங்களிற்காட்டில், அத்வாரகபகவத்ப்ரஸாதமடியாக ஆழ்வாராலே அவதரித்த ஏற்றத்தையுடைய திருவாய்மொழியை அவர் ப்ரஸாதத்தாலே பெற்ற ஏற்றத்தைச் சொல்லுகிறது; ஶாஸ்த்ரப்ரவர்த்தநத்துக்கு அடி வ்யாஸப்ரஸாதமாகையாலே ஆர்ஷமூலமாயிருக்குமது; "[illegible]" என்றதிறே; "[illegible]

ஶடாரா ஜநவ்யாஸ" என்று - அநுபாஸ்யராக எடுக்கப்பட்டதிறே அவர்களே. அதின் தாத்பர்யமான இதுக்கு "திருவருள்மால்சேனைமுதலிசடகோபன்" என்கையாலே ஸர்வேஶ்வரப்ரஸாத் ஸாக்ஷாத் க்ருதஜ்ஞாகரான ஆழ்வார் அடியாயிருக்கும்; ஆகையாலிறே, "லக்ஷ்மீ நாதஸமாரம்பாம்", "திருவருள்மால்" என்று அடியிலே எடுத்தருளிற்று. நாதமுநிகள்தாம் தண்தமிழ்க் கண்ணிநுண்சிறுத்தாம்பைப் பண்டையுருவால் பன்னீராயிரமுரு உரைசெய்ய, ஒண்தமிழ்மாறன் திருவுள்ளமுகந்து திவ்யஞாநம் நாதமுனிக்கு நயந்தருள்புரிந்தாரிறே.

பங்கஜநேத்ரராகிறர் -:"சிருய்யக்கொண்டார்" என்னும்படியான சீர்மையையுடையவர். அவர்தாம் புண்டரீகாக்ஷரிறே; "வந்தே புண்டரீகாக்ஷம் மநஸ:" என்றாயிற்று அருளிச்செய்தது. அவாக்குச் சீரவது - ஶரணாகதிக்கும் தீர்க்கசரணாகதிக்கும் ப்ரவர்த்தகராம்படியான பெருமை; "ஸாக்ஷிஶ்ரீ ரஹு தாஸதாஸ:" என்னக்கடவதிறே; பரமயோகிகளான ஸ்ரீமந்நாதமுநிகள், குருகைக்காவலப்பனை யோகரஹஸ்யத்திலே ஊன்றுவித்து இவரை ப்ரபத்திப்ரவர்த்தநத்திலே நியோகித்தருளினரிறே.

ராமராகிறர் - ஸ்ரீராமமிஶ்ரர். அவர்தாம் "ஸோ'யம் ராமாநுஜ ...ராகவஸ்ய நிவேஶநே" என்னும்படி, பன்னிரண்டாண்டு ஆசார்யர் திருமாளிகையிலே ஸேவைபண்ணிப் படியாய்க்கிடந்து "மணக்கால்நம்பி" என்னுந் திருநாமத்தை யுடையரானவ ரென்கை.

யமுநாவாஸ்தவ்யராகிறர் - 'தூயபெருநீர்யமுனைத்துறைவர் திருநாமத்தை இங்கே நம்முடைய பேரனை 'யமுனைத்துறைவர்' என்று உம்முடையருளால் உகந்துசாத்தும்' என்று நாதமுனிகளாலே நாமநிர்த்தேஶம் பண்ணப்பெற்று, அவரை ஜந்மநா ச வித்யயா ச பிதாமஹராகவுடையவ ரென்கை; அவரும் "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய" என்றார். இப்படி அவராலே சாத்தப்பட்ட திருநாமம், "எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன்" என்று பின்பும் பேர்பெற்றது. அடியார்க்கின்பமாரியும் நாதமுநிநாமஜீமூதமும் வர்ஷித்தால், "தூயபெருநீர்யமுனைத்துறைவர்" என்னும்படியான யாமுநதீர்த்தம் எல்லார்க்கும் அவகாஹிக்கலாமிறே; "யாமுநார்யஸுதாம்போதிமவகாஹ்ய", "ஞானத்துறைபடிந்தாடி" என்னக்கடவதிறே; இவரும் "நாதாய நாதமுநயே'த்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ ஶரணம் மதீயம்" என்றும், "அக்ருத்ரிம த்வச்சரணாரவிந்த ப்ரேமப்ரகர்ஷாவதிமாத்மவந்தம் பிதாமஹம் நாதமுநிம்" என்றும் உபகாரஸ்ம்ருத்யதிஶயத்தாலே திருவடிதொழுகையால் அடியுடையராயிறே இருப்பது. யமுநாவாஸ்தவ்ய ரென்றத்தை "மணக்கால்நம்பிசென்றுமாளவந்தார்" என்கிறது.

மணக்கால்நம்பிசென்றுமாளவந்தாராவது - வாதத்திலே ஆழ்வான்வாயை அடக்குகையாலே 'ஆளவந்தார்' என்று திருநாமத்தையுடையராய், தர்ஶநத்தை ஆள வந்தாரா யிருக்கையாலே இத்தை மணக்கால்நம்பி கேட்டு இவர்பாடு பலகால்நடந்து பசசையிட்டிறே இவரைப பச்சைமாமலைபோல் மேனியிலே மூட்டிற்று; ஆகையாலே, அவர்யத்நவிஶேஷத்தாலே யானவ ரென்றபடி; 'பூர்வதநம் இது புகுந்து அநுபவியும்' என்று ஆறுபுடைசூழரங்கரைக் காட்டினரிறே. அவரும் "மதிளரங்கர்வண்புகழ்மேலான்ற தமிழ்மறைகளாயிரமும்" என்னும்படி, திருவாய்மொழி முதலானவற்றையும் திருமாலையாண்டான் முதலானர்க்கு ப்ரஸாதித்தருளினர்; "நடமினோ நமர்களுள்ளீர்" என்று அநுபவிக்கும்படியிறே அக்காலத்திலே நடந்துபோந்தது.

மாலாதராராகிறர் - "குருமாலாதரர்" என்னும்படியான திருமாலையாண்டான். 'குருமாலாதரர்' என்கிற விஶேஷணம் - திருவாய்மொழி ப்ரவர்த்தநத்தாலுண்டான குருத்வத்தைச் சொல்லுகிறது; உடையவர்க்குத் திருவாய்மொழியினர்த்தத்தை உபதேஶித்தாரிறே இவர்தாம்; இது அறியாக்காலத்திலே அறியலாம். மாலாதரரென்று - நாட்கமழ்மகிழ்மாலைமார்வரான ஆழ்வார் திருநாம மாயிற்று; "செந்தொடைக் கதிபர்" என்றிறே பர்யாயநாமம் இருப்பது; சொல்மாலைகள் சொல்லும்படிக்கு மாலையிட்டபடி,

'யோகீந்த்ரம்குருகேஶசந்த்ரஜலதிம்'-அதாவது - குருகைப்பிராந்த அன்பாம் எதிராசரென்றபடி: திருக்குருகைப்பிரான்பிள்ளானை ஆழ்வார் திருநாமஞ்சாத்துகையாலேயும், "பாதீக்ருதோ தாஸஸ்ய க்ருதாவஸ்யம்:" என்கிறபடியே குமாரராக அபிமாநித்தருளுகையாலும், "யதிராஜோஜீவது நௌ:" என்று அவரைக் கண்டபோதெல்லாம் சந்த்ரோதயத்தில் மஹோததிபோலே ப்ரீதிப்ரகர்ஷத்தையுடையராயிறே உடையவர்தாம் இருப்பது. மாறனடிபணிந்துய்ந்தவன் உறபெருஞ்செல்வமும் இத்யாதி, அறிதரநின்ற இராமாநுசனிறே; வளர்த்த இதத்தாயிராமாநுசனுகையாலே, ஆழ்வார்திருவடிகளில் தமக்குஉண்டான ஸம்பந்தம் பிள்ளானளவும் வெள்ளமிட்டது. இப்படி திருவாய்மொழியினர்த்தத்தை இவரிடத்திலே தேக்கினபடியையும், அது அப்பால் புறவெள்ளமிட்டபடியையும் "தெள்ளாரும்ஞானத் திருக்குருகைப் பிரான்பிள்ளான் எதிராசர்பேரருளால்" என்று தொடங்கி, "அன்றுரைத்தது இன்பமிகுமாறாயிரம்" என்று அருளிச்செய்தாரிறே. ஸம்ஸ்க்ருதத்ராவிடவேதங்களான உபயவேதாந்தத்துக்கும் ப்ரவர்த்தகராயிற்று இவர்தாம்; ஆகையாலிறே, "கூராதீஶஸ்ரீபாஷ்யக்ருதௌ" என்றது.

கோவிந்த கூராதிபாகிறர் — "கோவிந்தர், கூரேசர்" என்னும்படி தர்ஶநத்துக்கு த்ருஷ்டி பூதரானவர்களாய், உடையவர்க்கும் அத்தாலே அத்யந்தம் அபிமதவிஷயமானவர்கள். இவர்களையாயிற்று ப்ரபத்திஶாஸ்த்ரப்ரவர்த்தகராகக் கற்பித்தருளிற்று; ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸநத்துக்கு நடாதூராழ்வானையிறே அதிஷ்டாதாவாக்கியருளிற்று; ஆழ்வான் திவ்யஸூக்திகளெல்லாம், ப்ரபத்த்யர்த்தப்ரகாஶகமான ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களை அடியொற்றியாயிற்று இருப்பது. இங்கு இவ்விருவரையும் இடுக்கிச் சொன்னது - இருவரும் பட்டர்க்கு ஆசார்யர்களாகையாலே; பட்டர்க்குத் திருவாய்மொழியில் ஆழ்வானோடே உண்டான ஸம்பந்தம், "எண்பெருக்கந்நலத்து" வீட்டிலே கண்டுகொள்வது; எம்பார், பட்டர்க்கு பகவச்சரணவரணாநுஷ்டாநப்ரகாஶகமான த்வயோபதேஶமுகேந ஆசார்யரென்னுமது, "த்விஷிஸ்ரோஹேஸஸ்ய:" என்கிற அவர்ஸூக்தியிலே காணலாம்; 'பட்டர் ஆழ்வான் திருவடிகளிலே ஆஶ்ரயித்து, எம்பார்பக்கலிலே ஜ்ஞாநோபஜீவநம்பண்ணினர்' என்றும் ப்ரமேயரத்நத்திலே பேசிற்று; 'பட்டர்தாம் எம்பார்பாடே ரஹஸ்யங் கேட்டாராயிறே இருப்பது' என்று தனித்வயத்திலே அருளிச்செய்தார்; இவர்க்கு அவர்பக்கல் திருவாய்மொழியில் அந்வய முண்டென்னுமதுக்கு "பூவியல் பொழிலும் தடமு மவன்கோயிலுங் கண்டு ஆவியுள்குளிர" என்கிறவிடத்துக்கு வ்யாக்யாநஞ் செய்தருளுகையில் சீராமப்பிள்ளை அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது; அதுதோன்ற, "ஸ்ரீவத்ஸசிஹ்நமிஸ்ரேப்ய:", "ராமாநுஜபதச்சாயா" என்று இரண்டு ஶ்லோகத்தையும் ஸஹபடித்தருளிற்று; "ஸாக்ஷாத்ஸ்வயம்வதிம்ஹ்ருதிஶஷயவாஶம் ஶ்ராவிதார்தாயஸேவேஶம்ஸ்ரீஸாஷ்யேத்யாதவிவயதிவஶாஷேஶஷோஶாஞ்சதைஸ்யாது । யஶ்ஶ்வாஶ்சாஷேஶிகேஷநாயதிவஶவஶணஶாயநாயோஶ்ஸ்வஸ்யதஸஷேஷாவிதாஸ்யேஸ்தக்ஷேமா ஶாஶ்வதஜாநவேஶாஹ்யேவ" என்னக்கடவதிறே.

'பட்டார்யம்' — அவராகிறர் - 'பட்டர்' என்னும்படியான 'ஸ்ரீபராஶரபட்டர்' என்னும் அபிதாநத்தையுடையராய், "ஸ்ரீரங்கராஜகமலாபதலாலிதத்வம்" என்னும்படி பெரியபெருமாளுக்கும் ஸ்ரீரங்கநாயகியார்க்கும் குமாரராய், அதுக்குமேலே உடையவரும் :'இவனை நம்முடையாரெல்லாரும் நம்மைக்கண்டாற்போலே கண்டுகொள்ளுங்கோள்' என்று பெருமாள்ஸந்நிதியிலே விஶேஷாபிமாநம்பண்ணும் படியான பெருமையையுடையவரென்கை. இவர்தாம் அஜஸ்ரம் ஸஹஸ்ரகீத்யநுஸந்தாநதத்பரராய் பகவத்குணங்களை அநுபவித்துக்கொண்டு, திருநெடுந்தாண்டகத்திலும் மண்டியிறே இருப்பது; இவருடைய திவ்யஸூக்திகளும் அருளிச்செயலை அடியொற்றியிறே இருப்பது; அருளிச்செயல் நாலாயிரத்துக்கும் பட்டர்நிர்வாஹமேயிறே அதிஶயித்திருப்பது.

நிகமாந்தயோகியாகிறர் — வேதாந்திமுநியான வேதாந்திநஞ்சீயரென்கை; "நமோ வேதாந்தவேத்யாய" என்னக்கடவதிறே. பட்டர் நெடுந்தூரம்சென்று தேடித் திருத்தி யெடுத்த விஷயமாயிற்று இவர்தாம்; •எவம்விதரான இவர் பட்டர்நல்லருளாலேயாயிற்று ஒன்பதினாயிரமாகத் திருவாய்மொழிக்கு

ஒரு வ்யாக்யாநமுஞ் செய்தருளி, நூறுரு திருவாய்மொழியை நிர்வஹித்து அத்தாலே ஶதாபிஷேகமுஞ் செய்தருளினர் என்னுமது ஜகத்ப்ரஸித்தமிறே.

ஜகதாசார்யராகிறர் — "துன்னுபுகழ்க்கந்தாடைத்தோழப்பர்" இத்யாதியிற்படியே உண்டான திருநாமத்தி னேற்றத்தையுடையரான இருகண்ணர்க்கன்புடைய நம்பிள்ளை யென்கை. 'நம்முடைய பிள்ளை திருக்கலிகன்றிதாஸர்' என்றிறே நஞ்சீயராலே இவர் நாமநிர்த்தேஶம் பண்ணப்பட்டது; "காருண்யபூர்ணம் கலிவைரிதாஸம்" என்னக்கடவதிறே. இவர்தோற்றியிறே திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களுக்கெல்லாம் வ்யாக்யாந முண்டாயிற்று. "'இவர்தாம் ஆழ்வாரவதாரம்' என்னுமது தோற்ற, கார்த்திகையில் கார்த்திகைத்திருநக்ஷத்ரத்தின் நாள் கலியன் திருமங்கையாழ்வார் திருவீதியெழுந்தருளும்போது, திருக்கலிகன்றிதாஸரான இவர்திருமாளிகைவாசலிலே திருக்காவணமிட்டு அலங்கரிக்க, அங்கேயெழுந்தருளித் திருப்பணியாரவகைகளும் அமுதுசெய்தருளி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரஸாதித்து, அவரை அத்யாபி உபலாலித்து அவ்வருகே யெழுந்தருளுவர்" என்று பெரியோர்கள் அருளிச்செய்வர்கள்; ஆகையாலிறே, 'நம்மாழ்வார்' என்னுமோபாதி, 'நம்பிள்ளை' என்று போருகிறது. அவரை 'ப்ரதமாசார்யர்' என்னுமோபாதி இவரை 'லோகாசார்யர்' என்றும், அவரை 'திருநாவுடைய பிரான்' என்னுமோபாதி இவரை 'வீறுடையார்' என்றும் போருகிறது; "ஆழ்வார்தம்முடைய அவதாரம் போலே ஓரவதாரவிஶேஷமாய்ப் பெருமாளுக்கு ப்ராணபூதரான நம்பிள்ளையை" என்றிறே ஜ்ஞாநாதிகையான தோழப்பர்தேவிகளும் அருளிச்செய்தது. "வாதீந்த்ரஸ்துதாவலி" என்று தொடங்கி; "தஸ்மை நமோ ஸூக்திஹாரணாய" என்றிறே நம்பிள்ளைவைபவம் இருப்பது.

'ஸத்த்ருஷ்ணத்வயேன' — அவர்களாகிறர் - "இருகண்ணர்" என்னும்படி ஸௌப்ராத்ரத்தை யுடையராய், 'நம்பிள்ளைக்கு நயநத்வயம்' என்னலாம்படி ஸூக்ஷ்மதர்ஶிகளாயிருக்கிற பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை என்கை. இருகண்ணர்க்கன்புடைய நம்பிள்ளை யென்கையாலே, "ஸ்நேஹமோஹநக்ருபயாவாவலி" என்கிறபடியே ஸ்நேஹபூர்வகமான க்ருபையாலே யாயிற்று, ஸகலார்த்தங்களையும் ப்ரஸாதித்தருளிற்று. இவர்களும் அப்படியே "மாறன்மறைப்பொருளைச்சொன்னது இருபத்து நாலாயிரம்", "நன்குரைத்தது ஈடுமுப்பத்தாறுயிரம்" என்னும்படியிறே திருவாய்மொழிக்கு வ்யாக்யாநமும் ஈடும் அருளிச்செய்தது; அத்தைப்பற்ற, "ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமஜெ யதநுக்ருபயா | விஹாதி விஶதீம்ஜொகேஷு ராவிஷ்ஸஹஸ்ரம் ஸம்ஹிதா" என்று அநுஸந்தித்தார்கள். "பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும்" என்னும்படி மற்றமூவாயிரத்துக்கும் வ்யாக்யாநஞ்செய்தருளினரிறே; திருவாய்மொழிக்கு வடக்குத்திருவீதிப்பிள்ளையிலும் ப்ரதமப்ரவர்த்தகர் ஆச்சான்பிள்ளையாகையாலே "ஸ்ரீக்ருஷ்ணஸமாஹ்வாய" என்றும், "ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே" என்றும் இரண்டுதனியனும் அடைவே இருவருக்கும் உண்டாயிற்று; அதுதோன்ற, 'முந்தின தனியன் ஆச்சான்பிள்ளையது' என்று அருளிச்செய்வார்கள்; "பெரியவாச்சான்பிள்ளை", "தெள்ளார்வடக்குத்திருவீதிப்பிள்ளை" என்றிறே எடுத்தருளிற்று; ஆச்சான்பிள்ளைஸந்நிதியிலே தாம் சில அர்த்தவிஶேஷங்கள் கேட்டதாகவும் அருளிச்செய்தாரிறே வடக்குத்திருவீதிப்பிள்ளை. 'ஆசார்யஸம்மதி' என்கிற ரஹஸ்யத்திலே; அங்ஙனன்றிக்கே, முந்தின தனியன் வடக்குத்திருவீதிப்பிள்ளையதாகவும், மற்றைத்தனியன் ஆச்சான்பிள்ளையதாகவும் அருளிச்செய்வர்கள்; திருவாய்மொழியீட்டின் ப்ராதாந்யத்தாலும், வடக்குத்திருவீதிப்பிள்ளை செய்தருளின ஆசார்யஸம்மதியின் அடியிலும் "ஸ்ரீக்ருஷ்ணஸமாஹ்வாய" என்று எழுதி யிருக்கையாலும், இத்தை வடக்குத்திருவீதிப்பிள்ளை தனியனாகவும் "ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே" என்கிறது ஆச்சான்பிள்ளையதாகவுமே ஸித்தாந்தம்; அப்போது, "ஸர்வஸித்திரபூந்மம" என்கிறது ஸரஸமாயிருக்கும். அவர் ரஹஸ்யப்ரபந்தங்களின் அடியிலே எழுதியிருக்கிறதும் அப்படியே.

மாதவ பத்மநாபர்க ளாகிறர் — இவர் ஈடளித்தற்கேய்ந்த மாதவர் பற்பநாப ரென்கை. இவர்களில் ஸ்ரீமாதவராகிறர் - "சீமாதவனடிக்கன்பு செய்யும் தஞ்சத்தொருவன்" என்றும், "மாதவஸ்ரீவிஷ்ணுபாதஜ" என்றும் சொல்லும்படியான நம்பிள்ளை, தம்முடைய ஆசார்யரான நஞ்சீயருடைய திரு

நாமம்சாத்தும்படியான பெருமையையுடையராய், அவர்க்கு அத்யந்தம் ப்ரீதிவிஷயமாயிருக்கிறவியுண்ணிச் சிறியாழ்வான் அப்பிள்ளை என்று நிரூபகத்தையுடையரான ஸ்ரீமாதவரென்கை. "யத்³வஸ்ஸகலம் ஶாஸ்த்ரம் யத்க்ருபா வேதி³கோவித³: | யத்கடாக்ஷாஜமஹோக்ஷா தம்வந்தே³ மாத⁴வம் முநிம்", "ஸ்ரீபராஶரப⁴ட்டார்யஸம்ஶ்ரயநாய ஸ்ரீமாதவ முநயே நம:" என்னக்கடவதிறே. ஏவம்விதரான இவர்க்கு ஈடு வந்த வரலாற்றை, "சீரார் வடக்குத்திருவீதிப்பிள்ளை" என்று தொடங்கி அருளிச்செய்தாரிறே; அத்தைப்பற்ற "வரதார்யதயாவாப்தம் ஸ்ரீமாதவமுகாம்புஜே | கீடாகாயஸ வெதாந்தவெஸ்வாநீவிதவெதநம்" என்கிற தனியன் உண்டாயிற்று.

பத்மநாபராகிறர் — "ஆங்கவர்பால்பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை, தாங்கொடுத்தார் தம்மகனார் தங்கையில்" என்றும், "மாதவாத்மஜஸ்ய" என்றும் பேசும்படி ஸ்ரீமாதவப்பெருமாள் குமாரரான பத்மநாபப்பெருமாளென்கை. இப்படி நம்பிள்ளையாலே மஹைஶ்வர்யமான திருவாய்மொழியின் ஈட்டை ப்ராப்தரான ஸ்ரீமாதவர், தம்குமாரரான பத்மநாபர்க்கு ஈட்டை ப்ரஸாதித்து நம்பிள்ளைநியமநத்தின்படியே ஓராண்வழியாய் உபதேசித்துப்போரும்படி உபதேசிக்க, அவரும் அப்படியே அநுஸந்தித்து ஸ்ரீகோஶத்தைக் கோயிலாழ்வாரிலே திருவாராதநமாக எழுந்தருளப்பண்ணி நிதியைநோக்குமாபோலே நோக்கிக் கொண்டு போந்தாரிறே; பெருமாள்கோயிலில் பட்டர்கள் திருவீதியிலே திருமாளிகையிலே "யேநாத்ய மாஹாத்ம்யவிவேகஶாலி ஶாஸ்த்ரார்த்தவதூணி ஸ்தநார்யவம்யோபஸம்யாவமாயாம் | ஸ்ரீமந்நாதஸ்வருணாஸ்ய தாயஸ்ய பத்மநாபஸ்ய வெநதாஸ்வாமீ:" என்றிறே சோலாலாபம் இருப்பது.

'ஸமஸ்தகோலேஶதேவாதிபாங்'—கோலேஶராகிறர் - 'கோலவராஹப்பெருமாள்' என்று திருநாமத்தையுடையரான நாலூர்ப்பிள்ளையென்கை. இவரருளாளர் திருவடியூன்றியவ ரென்றிறே இவர்க்கு நிரூபகம். அதாவது - பத்மநாபப்பெருமாள் திருவடிகளை யாஶ்ரயித்து, அவரை ப்ரணிபாதநமஸ்கார ப்ரியவாக்குகளாலே குருக்களுக்கு அநுகூலராய் அவரை மிகவும் உகக்கப்பண்ண, இப்படி பலஸாதநஶுஶ்ரூஷையையுடையராயிருக்கிற நாலூர்ப்பிள்ளைக்கு, ப்ரணிபாதப்ரஸந்நராயிருக்கிற அவர், ஈட்டை இவரொருவருக்குமே ஓராண்வழியாக முன்புநடந்துபோந்தபடியே ப்ரஸாதிப்பதாக இவரைப் பேரருளாளப்பெருமாள் திருமுன்பே கொண்டுபுக்கு, 'ப்ரமாணபுரஸ்ஸரமாகச் சூளுறவுகொண்டு சொல்லவேணும்' என்று ஸ்ரீசடகோபனை அர்ச்சகமுகேந இவர்திருமுடியிலே ஊன்றுவிக்க, அவர் இத்தை வெளியிடாமைக்கு ஊன்றுவிக்கிற ஆகாரத்தை பாவஜ்ஞரான இவர் அறிந்து பெருமாள்திருமுகமண்டலத்தைப் பார்த்து, தம்திருமுடியிலே வைத்த ஸ்ரீசடகோபனை "அருளாளர்திருவடியூன்றினவர்" என்னும்படி தம்திருக்கையாலே ஊன்றி ஸம்ஜ்ஞைபண்ண, அது ஸர்வஜ்ஞரான பெருமாள்திருவுள்ளத்திலே யுற்று, 'இத்தை நீர் எல்லார்க்கும் ப்ரகாசிப்பியும்' என்று அர்ச்சகமுகேந திவ்யாஜ்ஞையிட்டருள, அத்தைக்கேட்ட பத்மநாபரும் எண்ணினவாறாகாமையாலே 'திருவுள்ளமானபடி' என்று பின்பு உகப்புடனே ப்ரஸாதித்தருளினரென்கை; "பாங்குடனே நாலூர்ப்பிள்ளைக்கவர்தாம்" என்னக்கடவதிறே. இவர் 'இத்தை எல்லார்க்கும் வெளியிடவேணும்' என்கிற தம்முடைய பரஸம்ருத்யேக ப்ரயோஜநதாரூபமான திருவுள்ளக்கருத்தாலே பேரருளாளப்பெருமாளைக்குறித்து ப்ரதக்ஷிணநமஸ்காராதிகளைப் பண்ணியும், அநதிக்ரமணீயஹேதுவான சரணக்ரஹணத்தைப் பண்ணியு மாயிற்று, இவர் அர்த்தித்தது; அவரும் அர்த்திதார்த்தபரிதாந தீக்ஷிதராம்படி செய்தருளினர். இப்படி வகுளபூஷணவாகம்ருதமாத்ரமன்றிக்கே, வசநபூஷணத்துக்கும் ப்ரவர்த்தகர் பேரருளாளப்பெருமாளிறே. நாலூர்ப்பிள்ளைதான் இப்படி ஈட்டை அர்த்தித்துப் பெற்றபடியாலே, "ஸாதநம்கொலேஶ"என்று ஸவிஶேஷணமாக அருளிச்செய்தது. 'வந்தாரோஹம் ஶ்ரீதேவராஜகிங்கரம் | ஸர்வதாவ்யஸநிஷ்டம்கொலாஹயவேஹம்ஹஜெ", "ஸ்ரீதேவராஜாநுஜதாஸவாதயாப்த்ஸ்வாஸஹெ | ஶம்கொலார்யவாணீநாதஸ்தாத்ரவிதயெ" என்றிறே இவர்விஷயத்தில் தனியன்கள் இருப்பது. இப்படி திருவாய்மொழிக்கு ப்ரவர்த்தகரான மாத்ரமன்றிக்கே, பெரியாழ்வார்திருமொழி, பெரியதிருமொழி முதலானவற்றுக்கும் ஶப்தார்த்தவ்யாக்யாநமுஞ் செய்தருளினர்.

அதிலே ஸ்ரீவசநபூஷணவாக்யத்தையும் ஸம்மதியாக எடுத்தருளினர். ‘‘யத்வேதநாதமுநிநா தஸ்மிந்ஜிநா நீதம் ஸ்ரீவத்ஸசிஹ்நாஷ்டமிஸ்ரைஸ்ஸம்யக்ப்ரபோதிதம் । தத்தேவராஜஸம்யோகேநஹ்ருதிஸ்ருதம் ஸ்ரோவஸக்கோவர்த்தநாசார்யஸ்ய தத்’’ என்றமிறே இவர் ஸம்ப்ரதாயக்ரமம் இருப்பது.

தேவாதிபராகிறர் -- தேவப்பெருமாள். அவர்தாம் - ராமாநுஜார்யதாஸஸுதரான தேவராஜர். நாலூர்ப்பிள்ளைதாம், தம்முடையதிருவுள்ளக்கருத்தின்படியே பெருமாள் தலைக்கட்டியருளுகையாலே, பெற்றுப் பேரிடும்படியான அந்த உபகாரத்துக்கு, தமக்குக் குமாரர் திருவவதரித்தவுடனே ‘தேவப் பெருமாள்’ என்று திருநாமஞ்சாத்த, இப்படி பேர்பெற்ற ஸகலகலாபூர்ணராய் வளர்ந்துபோருகிற குண ஸாலியாய் நல்லமகனுரான நாலூராச்சான்பிள்ளைக்கு, ‘இத்தை வர்த்திப்பித்துக்கொண்டு போரும்’ என்று ஈட்டை ப்ரஸாதித்தருளினர்: ‘‘ஸந்தம் கோவர்தநாஹஸ்ய ஸாகாயிஸ்வதீர்வஜம் । ஸாந்தம் வஸ்த்ருதிரந்தம் தேவராஜமஹம் பஜே’’, ‘‘நமோஸ்து தேவராஜாய’’ என்னும்படியிறே நாலூராச் சான்பிள்ளை வைபவம் இருப்பது. அன்றிக்கே, ‘‘ ‘இவரருளாளர் திருவடியூன்றினவர்’ என்கிறதுக்கு இவரென்று - கீழ் ப்ரஸ்துதரான பத்மநாபரைச் சொல்லி, அருளாளரென்று - அவருடைய அருளை யுடையவரென்று நாலூர்ப்பிள்ளையைச் சொல்லி, திருவடியூன்றினி தேவப்பெருமானென்று-ஈட்டைப்ரகா சிக்கும்படி பேரருளாளப்பெருமாளாலே திருவடியூன்றப்பட்ட நாலூராச்சான்பிள்ளையைச் சொல்லி, அப் படி திருவடியூன்றின தேவப்பெருமாள் கைக்கொண்டருளுந் திருமலையாழ்வாரென்று திருவாய்மொழிப் பிள்ளையைச் சொல்லுகிறது’ என்றும் அருளிச்செய்து போருவர்கள்; இந்த யோஜனையே ‘‘மேலோர்க் கீந்தாரவரேமிக்கு’’ என்கிறத்துக்கு மிகவும் சேர்த்தியாயிருக்கும். ‘தேவாதிபார்’ என்கிற பஹுவசநத் தாலே - கீழுக்தரானவர்களையெல்லாஞ் சொல்லுகிறது; ‘‘திருமலையாழ்வார்பதங்கள் நான்பெண்ணுட்சேர்ந் தனவே’’ என்னக்கடவதிறே.

‘‘நாயம் வஞ்ஜயந்த’’ என்கிற தனியனும், ‘‘திருவருள்மால்’’ என்கிற தமிழ்த்திருநாமத் தனியனும், ஈட்டுக்கும் மற்ற அருளிச்செயல் வ்யாக்யாநங்களுக்கும் தனியனுக, முப்பத்தாறுயிரப் பெருக்க ரான பெரியசீயர் அநுஸந்தித்துப் போருமதாயிருக்கும். ‘‘நாயம்’’ என்று தொடங்கி, திருவருள்மால் திருமலையாழ்வாரிலே சாற்றும்படியாயிருக்கும். ரஹஸ்யங்களினுடைய வரலாற்றையும், ‘‘லோகம் ஸம்ஸாரஹிம:’’ என்று தொடங்கி, ‘‘தீவ்ரஸ்யா நஸம்ஸாரஜ்ஞமஹமஹம்’’ என்று நீக்லக் கட்டின தனியனுலே அநுஸந்தித்தருளினர். ‘தேவாதிபாக்’ என்று சொல்லுகிறவிடத்திலே - ஈட்டிலர்த் தத்துக்கு உபயுக்தமாக வகுளபூஷண ஸாஸ்த்ரஸாரமான ஸ்ரீ வசநபூஷணம், ‘‘த்வயார்த்தம் தீர்க்கஸரணா கதியென்றது ஸாரஸங்க்ரஹத்திலே’’ என்னும்படியான ஸாரஸங்க்ரஹம் முதலானவற்றை அருளிச் செய்த லோகாசார்யகுருவும், திருவாய்மொழி வ்யாக்யாநம் இருபத்துநாலாயிரத்துக்கு ப்ரவர்த்தகரான அபயப்ரதராஜபுத்ரரும், அவர்ஸிஷ்யராய்த் திருவாய்மொழிக்கு உரை பன்னீராயிரமாக அருளிச்செய்த ஸுந்தரஜாமாத்ருமுநியும், த்ராவிடாம்நாய ஹ்ருதயதர்ஸியான ஸுந்தரஜாமாத்ருதேவரும் ஸூசிதர்; ஆகையாலிறே, மேல் இவர்கள் தனியன்களை அநுஸந்திக்கிறது; இவைகளுக்கு மேலாகவாயிற்று, ‘‘நமோஸ்து தேவராஜாய’’, ‘‘நமஸ்ஸ்ரீஶைலநாதாய’’ என்று நடத்திப்போருவது. தேவாதிப ரான நாலூராச்சான்பிள்ளை மேலோர்க்கு ஈகையாவது - கீழில் அவர்களைப்போலே ஓராண்வழியாய் ஆழ்வா ரைத் திருப்புட்குழியிலே கைக்கொண்டருளி, அங்குநின்றும் திருநாராயணபுரத்திலே யெழுந்தருளி அவர்நோடக்கமாக ஆய் பிள்ளை உள்ளிட்டார்க்கும் ப்ரஸாதித்தருளினபடி யென்கை. அத்தைப்பற்ற ‘‘கோவாயிவாதித்தாவாவ்யஸஹஸ்ரீதராஷ்யம்ஹிவர்த்ததேஸிகவர்யமவம் । தேயாவ்யவர்யஸவிய: வ்யயாஜ்ஞகார தேவராஜஸம்வர்யஹம்வ்யவஷ்யே’’, ‘‘ஸ்ரீ ஶைலநாயஸாரூ ஊதுமாத்ராஹ்யாம் ஸ்ரீவத்ஸசிஹ்நதேஸிகவரோணவயவஸ்திதேவம் । வ்யக்தம்ஸ்ரீக்ருதிஹாஷ்யஸாஸ ஸ்ரூதாயோவிஸ்தாரஸ்திஸஹிதேவஷ்ணவஸ்ஜ்ஞதேஷ’’, ‘‘தேவாயிவாத்தயிமஸ்யஸஹஸ்ரீதராஷ்யந்தீமஷயேய:வ்யயாஜ்ஞகார । ஸந்தீவ்ர

"[illegible]", "[illegible]", "[illegible]" என்னக்கடவதிறே; இப்படி நடந்துபோருகிற ஈட்டின்வரலாற்றை "சீரார்", "ஆங்கவர்பால்" என்கிற இரண்டுபாட்டிலும் விஶதமாக அருளிச்செய்தருளினாரிறே பெரியசீயர்; அவ்வளவுமன்றிக்கே, திருவாய்மொழிக்கும் மூவாயிரத்துக்கும் திருவாய்மொழிப்பிள்ளைக்கு நாலூராச்சான்பிள்ளை அர்த்தம் ப்ரஸாதித்தருளினதுக்கு த்யோதகமாக, "மாற்றத்தாய்" என்கிற பாட்டின் வ்யாக்யாநத்திலே பெரியசீயர்தாமே ஸூசிப்பித்தருளினார்; பிள்ளைசெய்தருளின பெரியாழ்வார்திருமொழிவ்யாக்யாநம் பலவிடங்களிலும் "நாலூர்ப்பிள்ளை ப்ரஸாதித்ததாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்வர்" என்றிறே அருளிச்செய்தது. பிதாபுத்ரர்களுக்குத் திருவாய்மொழிமுகேந உண்டான ஶிஷ்யாசார்யஸம்பந்தம், கூராதிபபட்டார்யர்களிடங்களிலும், அபயப்ரதராஜ தத்புத்ரர்களிடங்களிலும், க்ருஷ்ணபாதலோகாசார்யரிடங்களிலும், மாதவ பத்மநாபர்களிடங்களிலும், கோலேஶதேவாதிபரிடங்களிலும் தர்ஶிக்கலாயிருக்கும்.

இப்படி தேவாதிபராலே அதிக்ருத பரமார்த்தரான ஸ்ரீஶைலாதீஶதேஶிகரும், "[illegible]" என்னும்படி ஆழ்வார்திருவடிகளிலே அதிப்ரவணராய், "[illegible]" என்ற சொல்லுகிறபடியே ஆழ்வார்திருவடிகளில் அஶேஷஶேஷவ்ருத்தியிலும் அந்வயித்து, அவருடைய அமுதமென்மொழியான திருவாய்மொழியே தமக்கு தாரகாதிகளெல்லாமாக அநுபவித்துக்கொண்டு வாழ்ந்துபோராநிற்க, அப்படி அநுபோக்தாவான அந்தத் திருவாய்மொழிப்பிள்ளைமாதகவால் வாழும் மணவாளமாமுனிவனென்றும், "[illegible]" என்றும் பேசும்படி பெரியசீயரும் அவர்திருவடிகளையாஶ்ரயித்து, "[illegible]" என்கிறபடியே திருவாய்மொழி முதலான அஶேஷதிவ்யப்ரபந்ததாத்பர்யத்தையும் அவருபதேஶமுகத்தாலே லபித்தருளினாரிறே.

பின்பு, ஸர்வலோகப்ரசாரம் உண்டாம்படியிறே இவர் ஈட்டை நடத்தியருளிற்று. அதுக்குமேலே இவர்க்குப் பெருமாள் அருளப்பாடிட்டருளித் தம்திருவடியூன்றுவித்திறே திருவாய்மொழியின் ஈட்டை ப்ரவர்த்திப்பித்ததும்; "[illegible]" என்னக்கடவதிறே; அத்தாலே முப்பத்தாறாயிரப் பெருக்கரென்றாயிற்று, இவர் பேர் பெற்றது "[illegible]" என்னும்படியிறே பெரியசீயர் ப்ரபாவம் இருப்பது. பின்பும், "[illegible]" என்னும்படி ஸௌம்யஜாமாத்ருமுநிவர்யர்ஸம்ப்ரதாயம் நடந்துபோரும்படி இதுவாயிற்று.

'நாந்பட்டநாதமுநி' என்ற இவர்களில் ப்ரதமோபாத்தரான பெரியபட்டர்பிரான் சீயரும், ஸகலதிவ்யப்ரபந்தவ்யாக்யாநங்களையும் ஸ்வாசார்யமுகேந லபித்து, அதுக்கு த்யோதகமாக அத்தை, ஸ்வப்ரபந்தமான அந்திமோபாயநிஷ்டையிலே "பணிமானம்பிழையாமே யடியேனைப் பணிகொண்ட மணிமாயன்", என்கிறவிடத்திலே கிடாம்பியாச்சான் கதையையும்; "பொன்னுலகாளீரோ" என்கிற பாட்

டின் ஈட்டிலே அருளாளப்பெருமா ளெம்பெருமானர் கதையையும்; "நாவகாரியம்" என்கிற பாட்டின் வ்யாக்யாநத்திலே திருக்குருகைப்பிரான்பிள்ளான் வடுகநம்பி இவரருளிச்செய்த வார்த்தைகளையும்; அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் அருளிச்செய்த திருப்பாவைவ்யாக்யாநத்திலே நஞ்சீயர் ஸ்ரீபாதத்தை யகன்றுபோவானெரு ஸ்ரீவைஷ்ணவன்விஷயமாகத் தத்ஸம்பந்தமுடையராயிருப்பாரொரு ஜ்ஞாநாதிகரைக் குறித்து ஜ்ஞாநாதிகையான அம்மையார் அருளிச்செய்த வார்த்தையையும்; "நம்மாழ்வாரை பகவதவதாரமாக ஆளவந்தார் அருளிச்செய்துபோருவர்' என்னுமது திருவிருத்த வ்யாக்யாநத்திலே ஸுஸ்பஷ்டம்" என்றும்; "நம்புவார்பதிவைகுந்தம்" என்கிறவிடத்தில், "கூரத்தாழ்வான் திருமகனர் அவதரித்த பின்பு ஸம்ஸாரத்துக்கும் பரமபதத்துக்கு மிடைச்சுவர்தள்ளி ஒருவிபூதியாயிற்று" என்று கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யாநத்திலே திருவழுதிவளநாடு தாஸர் அருளிச்செய்த வார்த்தையையும்; "அவர்பாசுரங்கொண்டு அறுதியிடக்கடவோம்" என்று "பிள்ளைலோகாசார்யர்தாம் அவதாரவிசேஷம்" என்னுமத்தை ஸ்வாசார்யர் ஸ்ரீவசநபூஷண வ்யாக்யாநப்ரவேசத்திலே ப்ரதிபாதித்தபடியையும்; "வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகள்" என்கிறவிடத்துக்குத் திருநாராயணபுரத்தில் ஆயி அருளிச்செய்த ஸ்ரீவில்லிபுத்தூர்ப்பகவர்துறைவேறிட்ட கதையையும்; மற்றும் தாம் ஐதிஹ்யமாக அருளிச்செய்யும் அசேஷரஹஸ்யவாக்யங்களையும் "ஊஹ்ஸஹாவாமொரக்ஷூ" என்று ப்ரகாசிப்பித்தருளினரிறே. ஏவம்விதமான அர்த்தவிசேஷங்களெல்லாவற்றையும் தம்திருவடிகளை யாச்ரயித்துத் திருவடிகளல்லதொரு தெய்வம் அறியாத மதுரகவிதாஸரண்ணன் முதலானர்க்கு ப்ரஸாதித்தருளினர். அவரும், "ஹமொவதீரு திவஸளஷ்வமு0ஃஃநீநூ" என்னும்படி வரவரமுநிவர்யாபராவதாரமாய், தந்நாமபாஜநராய், தமக்கு ஸப்ரஹ்மசாரிகளான அழகியமணவாளச் சீயர்க்குத் திருவாய்மொழியொழிந்த அனைத்தாழ்வார்களருளிச்செயல் மூவாயிரத்துக்கு வியாக்யாநமும், ஆசார்யர்கள் திவ்யஸூக்திகளான அசேஷரஹஸ்யவ்யாக்யாநமும் தாமே ப்ரஸாதித்தருளினர். 'பெரியதிருமொழிக்கு, அண்ணன் மேல்நாட்டிலே யெழுந்தருளியிருக்கிற காலத்திலே அவர்ஸந்நிதியிலே அர்த்தம் அநுஸந்தித்தருளினர்' என்று அஸ்மதாசார்யோக்தம்.

அநந்தரம், 'வாநமஹாத்ரியோகி' என்று ப்ரஸ்துதரான வானமாமலைச் சீயரும் தம்முடைய ஸ்ரீபாதத்தையாச்ரயித்த ராமாநுசன்பிள்ளைக்கும், கோயில் பெரியகந்தாடையண்ணன் ஸ்ரீபாதத்திலாச்ரயித்த சுத்தஸத்வம் அண்ணனுக்கும் ஈடு முதலான திவ்யப்ரபந்தவ்யாக்யாநங்களை ப்ரஸாதித்தருள, அவர்களும் அப்படி தந்தாம் சிஷ்யபுத்ரர்களுக்கு ப்ரவர்த்தகராம்படி ப்ரஸாதிக்க, அத்தாலே அத்யாபி நடந்துசெல்லுகிறது.

இனி, ருசிராஜாமாத்ருயோகீந்த்ர பாதாச்ரயராய், வாதூலவம்சயவரதார்யரான பெரியஅண்ணனும் ஆசார்யநியமநத்தின்படியே ஆசார்யபௌத்ரரான நாயனரை அநுவர்த்தித்துத் திருவாய்மொழியின் ஈடு ப்ரஸாதித்தருளினர்.

வேதாந்தாசார்யராய், பின்பு 'ஸ்ரீவைஷ்ணவதாஸர்' என்று பெரியசீயராலே நிரூபகத்தையுடையரான ப்ரதிவாதிபயங்கர அண்ணவும், பட்டர்பிரான் சீயர் ஸ்ரீபாதத்திலவராய், 'அழகியமணவாளப்பெருமாள்நாயனர்' என்று திருநாமத்தையுடையரான திருப்பதிஅழகியமணவாளச்சீயர் முதலானர்க்கு ஈட்டையும் ஸ்ரீபாஷ்யத்தையும் ப்ரஸாதித்தருளி, 'திருவாய்மொழிநாயனர்' என்னுமதுவே நிரூபகமாம்படி சீயரை விசேஷாபிமாநம் பண்ணியருளினர். முன்பு திருவாய்மொழியின் ஈடு ஏகமுகமாய், அநந்தரம் த்ரேதாவாய், பெரியசீயராலே ப்ராக்சதுர்த்தாவாய், அநந்தரம் ஸஹஸ்ரமுகமாய் ப்ரவஹிக்கும்படியாயிற்று. மற்றுமுண்டான ஆசார்யர்கள் ஸம்ப்ரதாயங்களையும் அவ்வவஸம்ப்ரதாயஸ்த ருபதேசமூலமாகக் கண்டு கொள்வது. இப்படி உபதேசமாலையாய்த் துறையுண்டுவருகிற இத்தனியன்களிரண்டையும், திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்த வ்யாக்யாநாரம்ப வேளையிலும் அவைசாற்றும் ஸமயத்திலும் அநுஸந்தித்துக்கொண்டு போரும்படி அருளிச்செய்தாராயிற்று. க

இத்தத்தனியனில், "நிமோநுயொமிஜமஹாவாரஒளவஸகூஷஷயள" என்று நஞ்சீயரையும், நம்பிள்ளையையும், பெரியவாச்சான்பிள்ளையையும், வடக்குத்திருவீதிப்பிள்ளையையும் எடுத்திருக்கச்செய்தேயும், இனிமேல் ப்ரத்யேகமாகவும் இவர்கள் தனியன்களை அநுஸந்திக்கிறதுக்குக் கருத்து - நஞ்சீயர் ஒன்பதினுயிரப்படி வ்யாக்யாநம் அருளிச்செய்கையாலும், நம்பிள்ளை ஈடு முப்பத்தாறுயிரத்துக்கு ப்ரவர்த்தகராகையாலும், பெரியவாச்சான்பிள்ளை இருபத்துநாலாயிரப்படி வ்யாக்யாநம் அருளிச்செய்கையாலும், வடக்குத்திருவீதிப்பிள்ளை இந்தநாடறிய மாறன்மறைப்பொருளை நன்குரைத்தது ஈடுமுப்பத்தாறுயிரப்படியாகையாலும்.

மேல்தனியன்களெல்லாம்

அவரவர்சிஷ்யர்களால் அருளிச்செய்யப்பட்டன.

---

நமோ வேதாந்தவேத்யாய ஜகந்மங்களஹேதவே ।
யஸ்ய வாகம்ருதாஸார பரிதம் புவநத்ரயம் ॥

நஞ்சீயரதான இத்தத்தனியனுக்கு அர்த்தம் - யாவரொருவருடைய ஒன்பதினாயிரப்படி வ்யாக்யாநமாகிற அம்ருதப்ரவாஹத்தினாலே லோகமெல்லாம் பரிபூர்ணமாயிற்றது, ஜகத்துக்கு மங்களாவஹராய்க் கொண்டிருக்கிற அந்த வேதாந்திநஞ்சீயரின்பொருட்டு நமஸ்காரமாகக்கடவது. (உ)

வேதாந்தவேத்யாம்ருதவாரிராசேர் வேதார்த்தஸாராம்ருதபூரமக்ர்யம் ।
ஆதாய வர்ஷந்தமஹம் ப்ரபத்யே காருண்யபூர்ணம் கலிவைரிதாஸம் ॥

நம்பிள்ளையதான இத்தத்தனியனுக்கு அர்த்தம் - வேதாந்திநஞ்சீயராகிற அம்ருதமயமான ஸமுத்ரத்தில்நின்றும் வேதத்தினுடைய ஸாரார்த்தமான திருவாய்மொழியாகிற அம்ருதத்தை வாங்கிக்கொண்டு, லோகத்தவர்களெல்லாரும் உஜ்ஜீவிக்கும்படியாக வர்ஷியாநிற்கிற க்ருபாபூர்ணரான திருக்கலிகன்றிதாஸராகிற தாஸ்யநாமத்தையுடையரான நம்பிள்ளையை, ப்ரபத்யே - பற்றுகிறேன். (௩)

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
* யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ்ஸதா ॥

பெரியவாச்சான்பிள்ளையதான இத்தத்தனியனுக்கு அர்த்தம் - யாவரொருவருடைய கடாக்ஷத்துக்கு விஷயபூதரானவர்களுக்கு ஸ்ரிய:பதியான ஸர்வேஸ்வரன் ஸர்வகாலமும் ஸுலபனாயிருக்கிறான்; யாமுநருடைய குமாரராய் க்ருஷ்ணனென்கிற திருநாமத்தையுடையரான பெரியவாச்சான்பிள்ளையின் பொருட்டு நமஸ்காரமானது ஆகக்கடவது. (௪)

ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமாமி ஸிரஸா ஸதா ।
யத்ப்ரஸாதப்ரபாவேந ஸர்வஸித்திரபூந்மம ॥

வடக்குத்திருவீதிப்பிள்ளையதான இத்தத்தனியனுக்கு அர்த்தம் - யாவரொருவருடைய ப்ரஸாதிஶயத்தினாலே எனக்கு ஸமஸ்தபுருஷார்த்தஸித்தி யுண்டாயிற்றது; அப்படிப்பட்டிருக்கிற வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளை ஸர்வகாலமும் தலையாலே ஸேவியாநிற்கிறேன். (௫)

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே ।
ஸம்ஸாரபோகிஸந்தஷ்டஜீவஜீவாதவே நம: ॥

பிள்ளைலோகாசார்யரதான இத்தத் தனியனுக்கு அர்த்தம் - ஸம்ஸாரமாகிற ஸர்ப்பத்தினாலே கடிக்கப்பட்டிருக்கிற சேதநரை உஜ்ஜீவிப்பிக்கிறவராய், வடக்குத்திருவீதிப்பிள்ளையுடைய குமாரரான பிள்ளைலோகாசார்யரின்பொருட்டு நமஸ்காரமானது ஆகக்கடவது. (௬)

ஸ்ருத்யர்த்தஸாரஜநகம் ஸ்ம்ருதிபாலமித்ரம் பத்மோல்லஸத்பகவதங்க்ரிபுராணபந்தும் ।
ஜ்ஞாநாதிராஜமபயப்ரதராஜபுத்ரம் அஸ்மத்குரும் பரமகாருணிகம் நமாமி ॥

நாயனாராச்சான்பிள்ளையதான இத்தத்தனியனுக்கு அர்த்தம் - ஸ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸங்களுக்கு ஸாரார்த்த ப்ரதிபாதகராய், ஸ்ம்ருதிக்கு பாலமித்ரராய், விகஸத்பத்மஸத்ருஶபகவச்சரணங்களுக்குப் புராதநபந்துவாய், ஜ்ஞாநஸாம்ராஜ்யஸம்ருத்தராய், பெரியவாச்சான்பிள்ளைகுமாரராய், பரமகாருணிகராய், அஸ்மத்குருவுமான நாயனாராச்சான்பிள்ளையை ஸேவிக்கிறேன். (௭)

---

* யத்கடாக்ஷண என்று பாடாந்தரம்.

த்ராவிடாம்நாய ஹ்ருதயம் குருபர்வக்ரமாகதம் |
ரம்யஜாமாத்ருதேவேந தர்ஶிதம் க்ருஷ்ணஸூநுநா ||

பிள்ளைலோகாசார்யர் திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள்நாயனருடைய இந்தத் தனியனுக்கு அர்த்தம் - வடக்குத்திருவீதிப்பிள்ளைகுமாரரான அழகியமணவாளப்பெருமாள்நாயனராலே, ஆசார்யபரம்பராப்ராப்தமான ஆசார்யஹ்ருதயமானது ஸாக்ஷாத்கரிப்பிக்கப்பட்டது. (அ)

ஸுந்தரஜாமாத்ருமுநே: ப்ரபத்யே சரணாம்புஜம் |
ஸம்ஸாரார்ணவஸம்மக்நஜந்துஸந்தாரபோதகம் ||

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரதான இந்தத் தனியனுக்கு அர்த்தம் - ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்திலே அழுந்தாநிற்கிற சேதநரை அக்கரைப்படுத்துகிற ஓடமாய்க்கொண்டிருக்கிற வாதிகேஸரி அழகியமணவாளச்சீயருடைய திருவடிகளைப் பற்றுகிறேன்.

'பிள்ளைலோகாசார்யர், நாயனாராச்சான்பிள்ளை, அழகியமணவாளப்பெருமாள் நாயனார், வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் இவர்கள் நால்வரும் - ஈட்டுஸம்ப்ரதாயத்துக்கு ப்ரவர்த்தகராகாமலிருக்கச் செய்தேயும், பிள்ளைலோகாசார்யர் ஈட்டிலர்த்தத்துக்கு உபயுக்தமாக வசநபூஷணஶாஸ்த்ரஸாரமான ஸ்ரீவசநபூஷண திவ்யஶாஸ்த்ரத்தை அருளிச்செய்கையாலும்; நாயனாராச்சான்பிள்ளை-பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி வ்யாக்யாநத்துக்கு ப்ரவர்த்தகராகையாலும் ; அழகியமணவாளப் பெருமாள்நாயனார்-திருவாய்மொழியினுடைய சந்தைத்திரட்டான ஆசார்யஹ்ருதயம் அருளிச்செய்கையாலும்; வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் - பன்னீராயிரப்படியுரையும், திருவிருத்தத்துக்கு ஸ்வாபதேஶமும் அருளிச்செய்கையாலும் இவர்களுடைய தனியன்களும் அநுஸந்திக்கிறார்கள் நம் ஆசார்யர்கள்' என்று சிரோபாவித ஸத்வ்ருத்தஸம்ப்ரதாயஸ்தர்கள் அருளிச்செய்வர்கள். (கூ)

நமோஸ்து தேவராஜாய சதுர்க்ராமநிவாஸிநே |
ராமாநுஜார்யதாஸஸ்ய ஸுதாய குணஶாலிநே ||

நாலூராச்சான்பிள்ளையதான இந்தத் தனியனுக்கு அர்த்தம் - "ஸ்ரீராமாநுஜதாஸர்" என்கிற நாலூர்ப்பிள்ளையுடைய குமாரராய், ஶமதமாதிகுணங்களாலே விளங்காநிற்கிறவராய்க்கொண்டிருக்கிற நாலூர்தேவராஜரென்கிற ஆச்சான்பிள்ளையின்பொருட்டு நமஸ்காரமானது ஆகக்கடவது. (௧௦)

நம: ஸ்ரீஶைலநாதாய குந்தீநகரஜந்மநே |
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யஶாலிநே ||

"தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே பூஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமாக அவதரித்த திருவாய்மொழியிலே அவகாஹித்து, அதில் ஶப்தரஸம் அர்த்தரஸம் பாவரஸம் இவற்றையநுபவித்துத் ததேகநிஷ்டராய், தத்வ்யதிரிக்த ஶாஸ்த்ரங்களை த்ருண வத்ப்ரதிபத்திபண்ணியிருக்கையாலே திருவாய்மொழியோட்டை ஸம்பந்தத்தையே தமக்கு நிரூபகமாகவுடைய திருவாய்மொழிப்பிள்ளையதான இந்தத் தனியனுக்கு அர்த்தம் - ஆழ்வார், மலையாளத்திலே அறுபதுஸம்வத்ஸரம் நம்பெருமாள் முதலான ஸ்வாமிகளோடே சேரத் துலுக்கவலசையாக எழுந்தருளியிருந்து, துலுக்கன் முடிந்துபோனவாறே திருநகரியைநோக்கி மீண்டெழுந்தருளுகிறவர், 'திருக்கணம்பி' என்கிற க்ராமத்திலே எழுந்தருளினவாறே, திருநகரி ஊர்இன்னவிடமென்றும், கோயில் இன்னவிடமென்றும் தெரியாதபடி காடாய்ப்போனபடியைக் கேட்டருளி, 'நமக்கும் நம்அடியார்க்கும் படைவீடும் திருவிருப்பும் சமைத்துத்தருவது' என்று பிள்ளைக்குத் திருமுகம் அனுப்பியருள, பிள்ளையும் ஶிஷ்யர்களும் தாமுமாக எழுந்தருளி, காடுவெட்டி நாடாக்கி, ஊரிலே குடியேற்றி, ஆழ்வாரையும் ஊரிலெழுந்தருளப்பண்ணி ஸகலவிதகைங்கர்யங்களும் பண்ணுகையினாலே மிகவும் விளங்காநிற்பாராய், குந்தீநகரத்திலே திருவவதரித்தருளினவராய், 'திருமலையாழ்வார்' என்கிற திருநாமத்தையுடையவருமான திருவாய்மொழிப்பிள்ளையின்பொருட்டு நமஸ்காரமானது ஆகக்கடவது. (௧௧)

ஶ்ரீஶைலேஶ தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ||

"வாழிதிருவாய்மொழிப்பிள்ளை மாதகவால் வாழும் மணவாளமாமுனிவன்" என்று பேசும்படி பெரியசீயரும், "ஸமிஸ்ருத்ய த்வயப்ஶ்லேஷ ஶ்ரீஶைலேஶாபிதேஶிகம் | ஸுசேஷ்டா ஸ்ருத்யணொஷ்டிவ்யாநு வ்யவஸ்தாநுவஸ்து நஸ்திதி:" என்கிறபடியே திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளை யாஶ்ரயித்து, திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்த தாத்பர்யத்தையும் அவருபதேஶமுகத்தாலே லபித்தருளி, "தாம்அதிகரித்த அர்த்தத்தை எல்லாருங் கேட்டுஉஜ்ஜீவிக்கும்படியாக நடத்தவேணும்" என்றுஉத்யோகித்துக்கொண்டிருக்கிற இவரை, நம்பெருமாள் அர்ச்சகமுகேந அழைத்தருளி, "திருவாய்மொழியின் அர்த்தத்தை நாமும் நம் அடியாரும் கேட்டு வாழும்படி பெரியதிருமண்டபத்திலே தொடங்கி நடத்தும்" என்று தம்திருவடிகளை ஐன்றுவித்து அருள்பாடிட்டு நியமித்தருள, இவரும் அப்படியே நடத்துகிறவளவிலே, பெரியபெருமாளும், ஈடுதொடங்குகிறவன்றும் சாற்றுகிறவன்றும் தாம் எழுந்தருளி, "உயர்வறவுயர்நலம்" தொடங்கி. "அவாவறச்சூழ்" என்கிற சாற்றுப்பாட்டளவாக இவர் உபந்யஸிக்கிற உபந்யாஸத்தைக் கேட்டருளி மிகவும் உகந்து "முப்பத்தாறாயிரப்பெருக்கர்" என்று இவருக்குத் திருநாமஞ்சாத்தியருளித் தனியனும் அநுஸந்தித்து எழுந்தருளினர். இப்படி பெரியபெருமாள் நிர்ஹேதுகமாகத் தம்மை விஷயீகரித்து நியமித்தருளினதுக்குச் சீயர் அருளிச்செய்த திருநாமம் - "நாமார் பெரியதிருமண்டபமார் நம்பெருமாள், தாமாகநம்மைத் தனித்தழைத்து - நீமாறன், செந்தமிழ்வேதத்தின் செழும்பொருளை நாளுமிங்கே, வந்துரையென்றேவுவதேவாய்ந்து".

இப்படி நம்பெருமாள் அருளிச்செய்த பெரியசீயரதான இந்தத் தனியனுக்கு அர்த்தம் - திருவாய்மொழிப்பிள்ளையினுடைய க்ருபைக்கு விஷயபூதராய், ஜ்ஞாநபக்திவைராக்ய மஹோததியாய், ஸ்ரீபாஷ்யகாரர்விஷயத்தில் ப்ராவண்யத்தையுடையராய்க்கொண்டிருக்கிற கோயில் அழகியமணவாளச்சீயரை ஸேவிக்கிறேனென்றபடி. (கஉ)

பிள்ளைலோகம் சீயர் திருவடிகளே சரணம்.



வ்யாக்யாந ஸஹிதங்களான

# திருவாய்மொழித் தனியன்கள்

## நாதமுநிகள் அருளிச்செய்தது.

பக்தாம்ருதம் விஶ்வஜநாநுமோதநம் ஸர்வார்த்ததம் ஶ்ரீஶடகோபவாங்மயம் |
ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம் நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம் ||

[பக்தாம்ருதம்]-" பத்தராகக்கூடும் ", "தொண்டர்க்கமுது" என்றபடி. [விஶ்வஜநாநுமோதநம்]-"பார்பரவின்கவி ", " அடியார்க்கின்பமாரி" என்கிறதைச் சொன்னபடி. [ஸர்வார்த்ததம்] - " எல்லாப் பொருளும் விரித்தானை" என்னும்படி ஸகலார்த்தப்ரதமாயிருக்கை. " மிக்கவிறைநிலை" தொடங்கி, "மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினன் " என்கிறபடியே, அறிய வேண்டும் அர்த்தமெல்லாவற்றையும் அறிவிப்பிக்கு மென்றபடி. [ஶ்ரீஶடகோபவாங்மயம்] - "குருகூர்ச்சடகோபன்சொல்" என்றபடி. [ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம்] - ஸஹஸ்ரஶாகை ஸாமவேதமாய், தத்ஸாரம் சாந்தோக்யோபநிஷத்தாய், அதின்ஸாரம் உத்கீத மென்றதாய், அத்தையாயிற்று இப்படி பாடியருளிற்று என்றபடி. வேதவரும்பொருள் நூல்களை வண்தமிழ்நூ லாக்கினபடி. எய்தற்கரிய மறைகளை ஆயிர மின்தமிழாற்செய்தற்கு உலகில்வரும் சடகோபனிறே. [நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்] - அளவியன்ற அந்தாதி ஆயிரத்தைப் பத்தர்பரவும்படி சொல்லிற்று.

கடலையும் சடகோபன்சொல்லையும் ஸமாநமாகச் சொல்லுகிறது பக்தாம்ருதம்; " விண்ணவரமுதுண" என்னும்படி விண்ணின்மீது அமரர்கட்காய தேவபோக்யமான அம்ருதத்தையுடைத்தாயிருக்கும் அது; இது " பாலோடமுதன்னவாயிரம்" என்னும்படி அவனித்தேவரான பூஸுரர்க்கு போக்யமான அம்ருதமாய், ஆராவமுதத்தையுடைத்தாயிருக்கும். [விஶ்வஜநாநுமோதநம்] - ஸர்வஜநாபிமதப்ரதமாகையாலும், தர்ஶநீயமாகையாலும், ஸமுத்ரம் ஸர்வஜந ஸந்தோஷவேஷத்தை யுடைத்தாயிருக்கும்; இதுவும் முதல் பத்தர் வானவரென்னம்மான் பார்பரவென்னும்படி ஸேஶ்வரவிபூதி போக்யமாயிருக்கும். [ஶ்ரீஶடகோபவாங்மயம்] - அதில் அம்பஸ்ஸு அகஸ்த்யவாங்மயமாயிருக்கும்: இதில் சந்தஸ்ஸு சடகோபவாங்மயமாயிருக்கும்; திருவாய்மொழியிறே. ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம் அது, ஸர்வஶாகாஸாரமான சந்தஶாகாஸமாகமத்தை ஸமீபத்திலேயுடைத்தாயிருக்கும் இது. ஸர்வவேதஶாகாஸாரமான உபநிஷத்தினுடைய திரட்சியாயிருக்கும். [நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்] - அந்தஸாகரம் "ஸுஜீவம்ப்ராஜீவம்க்ஷ்த்வா" என்னும்படி அஶரண்யனுக்கு ஶரண்யமாயிருக்கும்; வண்தமிழ் நூல்களான இது, சட

கோபன் பாட்டென்றவாறே நாடடையக் கையெடுக்கும்படியாயிருக்கும்; "நரோத்தமம்" என்று - நாடெல்லாம் அநுஸந்திக்கக்கடவர்களிறே; "ஸப்தநாராயணார்ணவம்" என்னுமாபோலே.

"ஸ்லோகஜாலஜலாகீர்ணம் ஸர்ககல்லோலஸங்குலம் | காண்டக்ராஹமஹாமீநம் வந்தே ராமாயணார்ணவம்". அங்கு - சதுர்விம்ஶத் ஸஹஸ்ரம்; இங்கு - சீர்த்தொடை யாயிரம். தீர்த்தங்களாயிருக்கும். அங்கு - ஐந்நூறு ஸர்க்கம்; இங்கு - "பத்துநூறு" என்னும்படியாயிருக்கும். அங்கு - ஷட்காண்டமாயிருக்கும்; இங்கு-ஷட்பதார்த்த ப்ரதிபாதகமாய்ப் பத்துப்பத்தாயிருக்கும். அது-ராமாயணார்ணவம், இது-த்ராவிடவேத ஸாகரம். அது - ரகுவம்ஶசரிதமாயிருக்கும்; இது - "முகில்வண்ணனடிமேற்சொன்ன சொல்மாலையாயிரம்" என்னலாயிருக்கும். அது - "வால்மீகிர்பகவாந்ருஷி:" என்னும்படியான வால்மீகிப்ரோக்தம்; இது - குருகூர்ச்சடகோபன் சொல்லாயிருக்கும். அது - மஹாபாதகநாஶகமாயிருக்கும்; இதுவும் - அருவினைநீறுசெய்யுமதாயிருக்கும். அது - "ஸம்ஸாரஸம்விஹாய மஹ்யாம் ஸ்ரீவிஷ்ணோ: பதம் ஶாஶ்வதம்" என்று பலமாயிருக்கும்; இதுவும் - "வானின்மீதேற்றி யருள்செய்துமுடிக்கும் பிறவிமாமாயக் கூத்தினையே" என்று திருவடியே அடைவிக்கும்.

---

## ஈஶ்வரமுநிகள் அருளிச்செய்தது.

---

திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும்
மருவினியவண்பொருநலென்றும் — அருமறைக
ளந்தாதிசெய்தானடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சேதெளிந்து.

திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும் மருவினியவண்பொருநலென்றும் ஆழ்வார்திருவடிகளை அவர்ஸம்பந்தமுடைய நாட்டோடும் ஊரோடும் ஆற்றோடும் வாசியற எல்லாவற்றையும் சேர்த்து ப்ரஸந்நமான மநஸ்ஸே! அநுஸந்தித்துப் போரு என்கிறது. வைகுந்தச்செல்வனார் சேவடியோபாதி வைகுந்தவாஞம் இறந்தால் தங்குமூரான கண்ணன் விண்ணூரும் அமுதவிரசையாறும் உத்தேஶ்யமாமாபோலே, இங்கும் இவை உத்தேஶ்யமாகிறபடி.

திருவழுதிநாடென்றும் இத்யாதியாலே - ஆழ்வார்திருவடிகளைச் சிந்திக்கும்படி சொல்லுகிறது. "தவளயானைக்கொம்பொசித்த கண்ணனென்றும்" என்று தொடங்கி, "பார்த்தன்பள்ளிபாடுவாள்" என்னுமாபோலே. [திருவழுதிநாடென்றும்] - "வாய்ந்தவழுதிவளநாடன்" என்று நிரூபகமாகவிறே அதுதான் இருப்பது; அவர்ஸம்பந்தத்தால் அவரோபாதி அதுவும் அநுஸந்தேயமா யிருக்குமாகையால் திருவடிகள் நாட்டோடே நடக்கிறது. [தென்குருகூரென்றும்] - "குருகூர்நகரான்" என்று - அவரிருக்குமூராகையாலே, அதுவும் அப்படியேயாயிருக்கை. [மருவினியவண்பொருநலென்றும்] - மருவ இனிதான வண்பொருந லென்றபடி. பொருநல்சங்கணி துறைவனிறே. இதுவும் இவரிறங்குந்துறை, அவர் திருவடிகளும் இறங்குந் துறை: நன்ஞானத்துறையிறே. வண்சடகோபனைப்போலே இதுவும் வண்மையை யுடைத்தாயிருக்கை; "ஸவித்ரீம் ஶ்ருதீநாம்". இப்படி விலக்ஷணமான நாடும் நகரும் துறையு மென்று அநுஸந்தித்து. [அருமறைகளந்தாதிசெய்தா னடியிணையே எப்பொழுதும் சிந்தியாய் நெஞ்சே தெளிந்து]-அதாவது - எய்தற்கரிய மறைகளை ஆயிர மின்தமிழாற் செய்தற்கு உலகில்வரும் சடகோபனைச் சிந்தையுள்ளே சிந்தித்துப் போரு என்கை; "மநஸைவ ஜகத்ஸ்ருஷ்டிம்" என்கிறபடியே திருவடிகளையே சிந்தித்துப்போரு, மற்றொன்றிலே மருளாதே தெளிந்து அவ்வடியையே அநுஸந்திக்கப் பார்.

அன்றிக்கே, வேதத்திலே "வைகுண்டஸ்ய நகரம்" என்று நாட்டையும், "யோ வேதாம்ருதஸ்ரோதஸம் ... நாவ்ய தாம் ஸரிதம்" என்ற அம்ருதவாஹிநியான விரஜையாற்றாலே ஆவ்ருதமான வைகுண்டநகரத்தையும், "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்றும் "தத்விஷ்ணோ: பரமம் பதம்" என்றும் அவன் திருவடிகளையும் உபநிஷத்து ஓதினாற்போலே; அந்த அருமறையின் தாத்

பர்யமான அர்ச்சாவதாரமான ஆதிப்பிரானதான திருவழுதித்திருநாட்டையும், "திருக்குருகூரதனுள் நின்ற வாதிப்பிரான்" என்னும்படி அவன் வர்த்திக்கிற ஊரையும், ஊருக்குவடக்கான வண்பொருநலாற்றையும், அங்கேநின்ற ஆதிப்பிரானுடைய நீள்கழலையுமிறே திருவாய்மொழியிற் சொல்லிற்று; இது - மற்றை உகந்தருளின நிலங்களில் ஆற்றுத்துறைக்கும் ஊருக்கும் நாட்டுக்கும் உபலக்ஷணம். "குட்டநாடு" என்றிறே நாட்டையும் அருளிச்செய்துபோருவது; "தேறுநீர்ப்பம்பைவடபாலைத் திருவண்வண்டூர்" என்றும், "தண்புனல்சூழ் திருவரங்கத்துள்ளாய்" என்றும் ஊரையும் ஆற்றையும் அருளிச்செய்தது. இப்படியாயிற்று திவ்யதேஶ திவ்யநகர திவ்யநதிகளின் வைபவத்தையும் திருவாய்மொழிமுகேந தர்ஶிப்பித்தது. ஆக, மூர்த்தியில் பண்ணிய தமிழானபடி. திருநாமப்பாட்டுக்கள்தோறும் - தமக்குநிரூபகமாகவும் ஊரையும் நாட்டையும் ஆற்றையும் பாடுகையாலே - அதுதான் மிக்கவேதியர் வேதத்தினுட்பொருளாக அருளிச்செய்கையாலே, அத்தைப்பற்ற, திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும் மருவினியவண்பொருநலென்றும் அருமறைகளந்தாதியாகச் செய்தான் என்று இங்ஙனே சொல்லுகிறதாகவுமாம். திருவழுதிநாடென்றும் சிந்தியாய் என்னுதல்; திருவழுதிநாடென்றும் அருமறைகளந்தாதி செய்தா னென்னுதல். ததீயவைபவமிறே வேததாத்பர்யமாய் அறிவது. இப்படி வேதத்தை த்ராவிடமாகச்செய்த த்ராவிடோபநிஷதாசார்யருடைய அங்க்ரியுகளங்களை "தெளிவுற்றசிந்தையர்" "தெளிந்தவென்சிந்தை" என்னுமாபோலே, உபாயோபேயம் என்று தெளிந்து, மநஸ்ஸே! ஸந்ததம் ஸ்மரித்துப்போரு என்று ஆழ்வார்திருவடிகளே அநுஸந்தேயமாகச் சொல்லிற்று. (௨)

---

## சொட்டைநம்பிகள் அருளிச்செய்தது.

மனத்தாலும்வாயாலும்வண்குருகூர்பேணும்
இனத்தாரையல்லாதிறைஞ்சேன் — தனத்தாலும்
ஏதுங்குறைவிலேன்எந்தைசடகோபன்
பாதங்கள்யாமுடையபற்று.

[மனத்தாலும் வாயாலும்] - இதில் - ஆழ்வார்திருவடிகளே ப்ராபகமும் ப்ராப்யமுமாகிறபடியை அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் தர்ஶிப்பிக்கிறது.

[மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணும் இனத்தாரையல்லாதுஇறைஞ்சேன்]-மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணுகையாவது - "திருக்குருகூரதனை யுளங்கொள் ஞானத்து வைம்மின்", "திருக்குருகூரதனைப்பாடியாடிப் பரவிச்சென்மின்கள்" என்று ஆழ்வாருபதேஶங் கேட்டபடியே, மநஸ்ஸாலே நினைத்தும் வாயாலே சொல்லியும் போருகை. பேணுகை - விரும்புகை. "யத்ஸ்நேஹஸாயுஜ்யாயதிஷ்டாவஹதி" என்னக்கடவதிறே. இப்படி ஆழ்வார்ஸம்பந்தமுடைய தேஶத்திலே விருப்பமுடையவர்களை அடைய பஜித்தேன். ஆழ்வார்ஸம்பந்தி ஸம்பந்திகளை யொழிய அந்யரை ஆதரித்து பஜியேன். [வண்குருகூர்பேணுமினத்தார்] - நல்லார்நவில்குருகூரிறே. [இனத்தார்] - ஸமூஹமாயுள்ளவர்கள். அன்றிக்கே, ஸஜாதியரென்றாகவுமாம். இத்தால் - குருகூர்ச்சடகோபன்பாட்டான திருவாய்மொழியிலே அந்வயமுடைய ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தை யென்றபடி. குழாங்கொள் தென்குருகூரிறே. இத்தால் - திருவாய்மொழியிலே அதிப்ரவணரானவர்களையொழிய அந்யரை ஆதரியே னென்றதாயிற்று; இப்படி அந்யரை அநாதரிக்கைக்கு அடியுடைமை சொல்லுகிறது 'தனத்தாலுமேதுங்குறைவிலேன்' என்று; "யந்நத்ருஷ்டீயந்நவீவாதிவஷ்டஜம்" என்கிறபடியே ஆழ்வார்திருவடிகளைப் பற்றின நமக்கு "விஹிதிஸ்வஸ்வம்" என்னும்படி, [தனத்தாலும் ஏதுங்குறைவிலேன்]-ஒன்றுங்குறையுடையேனல்லேன். [எந்தைசடகோபன்]- "அன்னையாய் அத்தனாய்," "ஶோதா பிதா" என்னும்படி, எனக்கு ஜநகரான ஆழ்வார். [பாதங்கள்]- ப்ராப்தஶேஷியானவர்திருவடிகள். [யாமுடையபற்று] - தச்சேஷபூதரான நம்முடைய பற்று. "தகையான் சரணம் தமர்கட்கோர்பற்று"; யாமுடையபற்று அதுவாயிற்று. (௩)

## அநந்தாழ்வான் அருளிச்செய்தது.

ஏய்ந்தபெருங்கீர்த்தியிராமாநுசமுனிதன்
வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேன் — ஆய்ந்தபெருஞ்
சீரார்சடகோபன்சேந்தமிழ்வேதந்தரிக்கும்
பேராதவுள்ளம்பெற.

இனி, "சடகோபன்பாதங்கள்" என்றத்தை விவரியாநின்றுகொண்டு, திருவாய்மொழி ஷ்ருத்கதமாம்படி, ஆழ்வார்க்குப் பாதஸ்த்ரரான உடையவர் திருவடிகளைத் தொழாநின்றே னென்கிறது, ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமாநுசமுநிதன் வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றே னென்று.

[ஏய்ந்தபெருங்கீர்த்தியிராமாநுசமுனிதன்] - "எற்கும்பெரும்புகழ் வானவரீசன்" என்னுமாபோலே அங்குத்தைக்கு அநுரூபமாய்ப் பொருந்தியிருக்கிற பெரியபுகழையுடைய எம்பெருமானார் தம்முடைய. [வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேன்] - ஒன்றுக்கொன்று பொருந்தியிருப்பதாய் மலர்போன்ற திருவடிகளை ப்ரணதிபண்ணுகின்றேன். "ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே" என்கிறபடியே, ப்ராப்யபுத்யா வர்த்தமாநமாய்ச் சொல்லுகிறது. இப்படி வணங்குகிறது எதுக்காகவென்னில், - [ஆய்ந்தபெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும் பேராதவுள்ளம்பெற] - ஆய்ந்தபெருஞ்சீரார்சடகோபன் - "ஆய்கொண்டசீர்" என்றும், "ஆயபெரும்புகழ்" என்றுஞ் சொல்லுகிறபடியே, ஆயப்படும் விலக்ஷணமாய் நிரவதிகமான கல்யாணகுணங்களால் பூர்ணரான ஆழ்வாருடையதாய் அதிஸுலபமான த்ராவிடவேதத்தை தரிக்கும்படி நிஸ்சலமான மநஸ்ஸைப் பெற. அன்றிக்கே, ஆய்ந்தபெருஞ்சீரரென்று - செந்தமிழ்வேதத்துக்கு விசேஷணமாகவுமாம்; சீர்த்தொடையாயிரமிறே. இந்தப்ப்ரபந்தாரணார்த்தமாக ஆய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன். தீமனங்கெடுத்து மருவித்தொழும் மனத்தை ஆசார்யன் தரவேணுமிறே; ஆகையால், "தங்குமனம் நீயெனக்குத் தா" என்னும்படி, போரா தவுள்ளம் பெறவென்று எம்பெருமானாரை ப்ரார்த்திக்கிறது. அதாவது - இவர்தான், மாறனடிபணிந்துய்ந்தவராய் "மாறன்பணித்தமறையுணர்ந்தோனை" என்னும், "தென்குருகைப்பிரான்பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ்தன்னைத் தன்பத்தியென்னும் வீட்டின்கண்வைத்த இராமாநுசன்" என்றும், பண்டருமாறன் பசுந்தமிழானந்தம்பாய்மதமாக வுடையராய், திருவாய்மொழியின்னிசை மன்னுமிடந்தொறு மிருக்குமவராய், உறுபெருஞ்செல்வமும் மாறன் விளங்கிய சீர் நெறிதரும் செந்தமிழென்று அறிதருகிற்குமவராகையாலும், அவர்திருவடிகள் ராமாநுசனுகையாலும், அவரை அர்த்திக்கிறது. "மற்றையாழ்வார்கள் திவ்யப்ரபந்தங்களை அங்கோபாங்கமாகவுடைய இவருடைய த்ராவிடவேதமான திவ்யப்ரபந்த மொழிய ததிதரக்ரந்தங்களில் சபலமான மநஸ்ஸு சலியாமல் இதொன்றிலுமே உற்று நிலைநிற்கவேணும்" என்று அவரை அர்த்திக்கிற தென்கை. (௪)

## பட்டர் அருளிச்செய்தது.

வான்திகழுஞ்சோலைமதிளரங்கர்வண்புகழ்மேல்
ஆன்றதமிழ்மறைகளாயிரமும் — ஈன்ற
முதல்தாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த
இதத்தாய்இராமாநுசன்.

இனி, இதில் - திருவாய்மொழியினுடைய உத்பாதகரையும் வ(ர்)த்தகரையுஞ் சொல்லுகிறது, "வான்திகழும்சோலை" என்று.

வான்திகழும் சோலையாவது - வானிலே - ஆகாசத்திலே. திகழுகிற - ப்ரகாசிக்கிற சோலையென்றபடி. "வ்ருக்ஷஷண்டேதாஹாதி", "வானேய்ந்தசோலை" "சோலையணிதிருவரங்கம்" இறே. [மதிளரங்கர்] - "திட்கொடிமதிள்சூழ்", "மதிள்திருவரங்கம்". அதுவும் வானையுந்து மதிளாயிருக்கை. [வான்திகழுஞ்சோலை] - உயர்ந்த சோலையையும் மதிளையுமுடைய கோயிலே நிரூபகமான பெரிய

ரியபெருமாளுடைய ஶ்லாக்யமான கல்யாணகுணவிஷயமாய் விஸ்த்ருதமாயிற்று, ஆயிரந்திருவாய்
மொழியும்; "முகில்வண்ண னடிமேற் சொன்ன சொன்மாலை யாயிரம்" என்னக்கடவதிறே. அதி
தான் சீர்த்தொடையாயிர மென்று - சீர்கலந்தசொல்லாயிறே இருப்பது. "நலமுடையவன்", "ஈறிலவண்
புகழ் நாரணன்" என்று உபக்ரமித்து, "வாழ்புகழ்நாரணன்" என்றிறே தலைக்கட்டியருளினர். பெரிய
பெருமாள்தான் - நலந்திகழ்நாரணனிறே; "நாராயணபரம்ப்ரஹ்ம", "நாராயணபராவேதா:"
என்னக்கடவதிறே; அத்தாலே, மதிளரங்கர்வண்புகழ்மேலான்றதமிழ்மறைகளாயிரமுமென்கிறது. இனித்
தான் திருவாய்மொழி பத்துப்பத்தாலும் ப்ரதிபாதிக்கிற "பரபரன்" என்கிற பரத்வமும், "சோராத வெப்
பொருட்குமாதி" என்கிற காரணத்வமும், "முழுதுமாய்முழுதியன்றாய்" என்கிற வ்யாபகத்வமும், "மறு
கலிலீசன்" என்கிற நியந்த்ருத்வமும், "ஆவாவென்றருள்செய்து" என்கிற காருணிகத்வமும், "ஏறுசேவ
கனார்க்கென்னையுமுளள்" "வரங்கொள்பாதமல்லாலில்லையாவர்க்கும்வன்சரண்" என்கிற ஶரண்யத்வமும்,
"எண்ணிலாப்பெருமாயனே" என்கிற ஶக்திமத்த்வமும், "தேவிமாராவார்திருமகள்பூமி யேவமற்றமரராட்
செய்வார்" என்கிற ஸத்யகாமத்வமும், "எண்டிசையுங்கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான்" என்கிற
ஆபத்ஸகத்வமும், "சுரிகுழற்கமலக்கட்கனிவாய்க்காளமேகம்" என்ற ஆர்த்திஹரத்வமுமாகிற அதில் பத்து
அர்த்தமும், பெரியபெருமாளை ப்ரதிபாதிக்கிற கங்குலும் பகலிலும் காணலாயிருக்கும்; "வடிவுடை
வானோர்தலைவனே" என்று பரத்வமும், "முன்செய்திவ்வுலகம்" "விண்ணோர்முதல்" என்று காரணத்வ
மும், "கட்கிலீ" "என்னுடையாவி" என்று வ்யாபகத்வமும், "பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்"
"காலசக்கரத்தாய்", "மூவுலகாளி" என்கையாலே நியந்த்ருத்வமும், "இவள்திறத்தருளாய்" என்று
காருணிகத்வமும், "பற்றிலார்பற்றநின்றானே" என்று ஶரண்யத்வமும், "அலைகடல்கடைந்தவாரமுதே"
என்று ஶக்திமத்த்வமும், "என்திருமகள்சேர்மார்பனே", "நிலமகள்கேள்வனே" "ஆய்மகளன்பனே"
என்று ஶக்தியாலே நித்யமாகக்கற்பித்த பத்நீபரிஜநாதிகளையுடைய ஸத்யகாமத்வமும், "இவ்வுலகமுண்
டொழிந்தாய்" என்று ஆபத்ஸகத்வமும், "முகில்வண்ணனடியையடைந் தருள்சூடியுய்ந்தவன்" என்று
ஆர்த்திஹரத்வமும் அருளிச்செய்தாரிறே; ஆக, எல்லாவற்றாலும் "மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற
தமிழ்மறைகளாயிரம்" என்னத் தட்டில்லையிறே. ஆழ்வார்களில் நம்மாழ்வார் அதிகாரானாற்போலே, எம்
பெருமான்களில் நம்பெருமாள் அதிகாரியிறே இருப்பது; அத்தைப்பற்றவுஞ் சொல்லிற்று. இப்படி
பெரியபெருமாள் விஷயமாகவே ப்ரதிபாதித்த திருவாய்மொழியை "ஈன்றமுதல்தாய்சடகோபன் மொய்ம்
பால்வளர்த்தவிதத்தாயிராமாநுசன்"; நெடுங்காலமும் நோற்றுப்பெற்ற முந்தின மாதா ஆழ்வார்; "வண்
டமிழ்நூற்கநோற்றேன்" என்றாரிறே; வருந்திப்பெற்ற பிள்ளையை வளர்த்தெடுக்கும் மாதாவைப்போலே
திருவாய்மொழியை வளர்த்த இதத்தாய் - வர்த்திப்பித்த மாதா எம்பெருமானாராயிற்று; ஞானக்கலையான
திருவாய்மொழிக்கு ஜந்மபூமி - ஆழ்வார்; தத்வர்த்தகர் - எம்பெருமானார்; இப்படியாயிற்று ஜ்ஞாநஸந்தாநம்
வளர்த்திபோடே நடந்துசெல்லுவது. "பெற்றார்பெற்றொழிந்தார் பின்னும் நின்றடியேனுக்கு உற்றா
னாய்வளர்த்து" என்னுமாபோலே. மொய்ம்பால்வளர்த்த இதத்தாயாவது - ஈன்றதாய் பெற்றுப்போகட்
டுப்போனால் வளர்க்குந்தாய் தன்மிடுக்காலே காத்துநோக்குமாபோலே யாயிற்று இவரும் அத்தைக்காத்து
வளர்த்தபடியும். தேவகிபெற்ற உருவுகரியவொளிமணிவண்ணனை வளர்க்குந்தாயான யசோதை தன்மிடுக்காலே
யெடுத்து "ஏதேனுஞ்சொல்லி யசலகத்தாரேதேனும்பேச நான்கேட்கமாட்டேன்" என்றும், "தூசனஞ்
சொல்லும் தொழுத்தைமாரும் தொண்டரும் நின்றவிடத்தில் நின்று - போதர்கண்டாய்" "தாய்சொல்
கொள்வது தருமங்கண்டாய்" என்று குற்றஞ்சொல்லுமவர்களையும் தன்சொல்லாலே வாய்ப்புடைபடைத்துத்
தன்வசமாக்கி, "தீயபுந்திக்கஞ்சன்" என்று கருத்தைக் குலைத்து "காப்பாருமில்லை" என்று இரந்து
"அசோதைவளர்க்கின்ற செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை" என்னும்படி நிறம்பெறவளர்த்து ப்ரமேய
ஸாரத்தை வர்த்திப்பித்தாற்போலே, ப்ரமாணஸாரத்தை வர்த்திப்பித்த ப்ரகாரமும். அது எங்ஙனேயென்
னில்? - இங்கும் ஆழ்வார் அவதரிப்பித்து அவாவற்று வீடுபெற்று எழுந்தருளினபின்பு, பாஹ்யகுத்ருஷ்டி
களாலே பாஷாகாநமான திருவாய்மொழி அபிபூதமாய் வருகிறபடியைக் கண்டு, பாஷ்யஸூக்திகளாலே அத்
தைநிரோதித்து அத்தை இதுக்குக்காவலான வேலியாகக் கற்பித்து, திருவாய்மொழியைத் தம்கைவசமாக்கி,
திருக்குருகைப்பிரான்பிள்ளானைக்கொண்டு இதின் அர்த்தத்தை வெளியிடுவித்து வர்த்திப்பித்துக்கொண்டு
போந்தாரிறே. "மாறனடிபணிந்துய்ந்தவன்" என்னும்படியான அடியாராகையாலே; ஆண்டவனிட்ட
பயிரை வர்த்திப்பிக்கவேணுமிறே அடியானுக்கு. (௫)

## இதுவும் பட்டர் அருளிச்செய்தது.

மிக்கவிறைநிலேயும் மெய்யாமுயிர்நிலேயும்
தக்கநெறியும் தடையாகித் — தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதுங்குருகையர்கோன்
யாழினிசைவேதத்தியல்.

[மிக்கவிறைநிலே இத்யாதி] - "ஶ்ரீவசிஶ்ரவதநஸ்யாஸ்யஹேதோர்த்வநஸோஶ்ரித: । ஸுநிஷ்டாநிஷ்டவ்யாத்ருத்திஜ்ஞாநாதேவ்யய:" என்று ஸகலவேதஸங்க்ரஹமான திருமந்த்ரத்தில் பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற அர்த்தபஞ்சகத்தை, "திருமாலாலருளப்பட்டசடகோபன்" என்னும்படி, ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனாலே மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார் அருளிச்செய்த திருமாலவன்கவியான திருவாய்மொழிப்ரபந்தம் ப்ரதிபாதித்த ப்ரகாரத்தை இத்தனியனிலே சொல்லித் தலைக்கட்டுகிறது, 'மிக்கவிறைநிலேயும் மெய்யாமுயிர்நிலேயும் தக்கநெறியும் தடையாகித்தொக்கியலுமூழ்வினையும் வாழ்வினையுங் குருகையர்கோன் யாழினிசைவேதத்தியல் ஓதும்' என்று.

மிக்கவிறைநிலேயாவது - "இறைநிலேயுணர்வரிது" என்னும்படியான ஸர்வஸ்மாத்பரத்வம். "தமீஶ்வராணாம்பரமம்மஹேஶ்வரம் தந்தேவதாநாம்பரமஞ்சதைவதம்", "நாராயணபரோ ஜ்யோதி:" என்றும், "தத்த்வம் நாராயண: பர:" என்றும், "மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்குந் தேவாவோ" என்றும், "தேவதேவனை" என்றும், "பரஞ்சோதிநீபரமாய்" என்றும், "மிகுஞ்சோதி" என்றும், "முழுதுண்டபரபரன்" என்றும், "வானோரிறை" என்றும், "கழிபெருந்தெய்வம்" என்றும், "பெருந்தெய்வம்" என்றும், "பெரியவப்பனைப் பிரமனப்பனை யுருத்திரனப்பனை" என்றும், "திருவுடையடிகள்" என்றும், "திருமகளார்தனிக்கேள்வன் பெருமையுடையபிரானார்" என்றும், "திருமாமகள்கேள்வாதேவா" என்றுஞ் சொல்லப்படுகிற ஸர்வஸ்மாத்பரனையாயிற்று, மிக்கவிறை என்கிறது. "திருமங்கைநின்றருளுந் தெய்வம்", "திருமாலையல்லதுதெய்வமென்றேத்தேன்", "திருவில்லாத்தேவரைத்தேறேன்மின்தேவு" என்னக்கடவதிறே. இதுவாயிற்று, பரஸ்வரூபம். இறைநிலேயாவது - ஸௌலப்யத்துக்கு அவ்வருகில்லாதபடி முடிந்தநிலமான ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தோடே நிற்கிற அர்ச்சாவதாரமென்கை. அத்தையாயிற்று "எளிவரும்" இத்யாதியிற் சொன்னது. இதிறே ஈஶ்வரஸ்வரூபயாதாத்ம்யம்.

மெய்யாமுயிர்நிலேயாவது - "உருவியந்தவிந்நிலேமை" என்றும், "எண்பெருக்கந்நலத்தொண்பொருள்" என்றும், "உணர்வைப்பெறவூர்ந்து" என்றும், "நின்றவொன்றை" என்றும், "உயிர்வீடுடையான்" என்றும் ப்ரக்ருதே:பரனாய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாய் ஜ்ஞாநகுணகனாய் நித்யனாய் ஈஶ்வரனுக்கு ஶரீரவத்பரதந்த்ரனானபடியைச் சொல்லுகிறது. 'மெய்யாமுயிர்' என்கையாலே - "ஸத்யம்" என்றும், "உள்ளதும்" என்றும், "மெய்ம்மையே" என்றுஞ் சொல்லுகையாலே ப்ரக்ருதிஸ்வபாவத்திற்காட்டில் ஆத்மஸ்வரூபநித்யத்வஞ் சொல்லிற்று. அன்றிக்கே, 'மெய்யாமுயிர்' என்கையாலே, "யஸ்யாத்மாஶரீரம்" என்கிறபடியே "உள்ளதவனுரு" என்று ஶரீரஶரீரிபாவம் சொல்லிற்றாகவுமாம். உயிர்நிலேயாவது - "மெய்ம்மையேமிகவுணர்ந்து" என்கிறபடியே, "தம்மடியாரடியோங்கள்" என்றும், "தொண்டன்சடகோபன்" என்றும், "சிறுமாமனிசராயென்னையாண்டார்" என்றும் ததீயபர்யந்தமான நிலே. இதிறே ஸ்வஸ்வரூபயாதாத்ம்யம்.

தக்கநெறியாவது - அத்யந்த பாரதந்த்ரஸ்வரூபத்துக்கு அநுரூபமான உபாயம். அல்லாதது தகாதநெறியாயிறே இருப்பது; "நெறிகாட்டிநீக்குதியோ" என்னக்கடவதிறே. "நீயம்மாகாட்டும்நெறி," "கண்ணனல்லாலில்லைகண்டீர்சரண்"; ஶரீரரக்ஷணம் ஶரீரிக்கே பரமிறே; "மாஶுச:" என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக்கொள்ளேனே வென்றிறே அவன்வார்த்தை. "எம்மையாளும்பரமர்" என்று ததீயஶேஷத்வம் ஸ்வரூபமானால், "நன்மைபெறத் தெம்மைநாளுய்யக் கொள்கின்ற நம்பர்" என்றவர்களே உபாயமாகவும் வேணுமிறே; தக்கநெறி - ததீயோபாய மாகவுமாம். உபாயயாதாத்ம்யம் இதுவிறே.

தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையாவது - விரோதியாய்த் திரண்டு வர்த்திக்கிற ப்ராக்தநகர்மமென்கை. "முன்செய்தமுழுவினை", "பாரமாயபழவினை" என்னக்கடவதிறே. ஊழ்மை - பழமை,

வினை - கர்மம். "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்", "அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதிஸம்பந்தம்". பகவத்ஸ்வரூபதிரோதாநகரியிறே தேஹம். விரோதிஸ்வரூபயாதாத்ம்யம் - அஹங்காரமமகாரங்கள், "யானே யென்னை யறியகிலாதே யானேயென் றனதே யென்றிருந்தேன்," "நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்த்து", "ஸ்வீஜஞேதஜ்யாவஜிதம்", "முன்னமே" என்னும்படி அநாதியாயிறே போருவதீ. இதுதான் அநுகூலர்பக்கல் அநாதரத்தைப் பிறப்பிக்குமதாயிருக்கும்; அதுதான் தேஹாத்மப்ரமமூலமாகையாலே ஸ்ரீவைஷ்ணவர்கள்திறத்தில் ஜந்ம நிரூபணத்திலே மூட்டி அநர்த்தத்திலே பர்யவஸிக்கும்; 'அதிலே ஒன்ற அவர்கள்பக்கல் ஜந்மநிரூபணம்' என்றாரிறே. 'மன்பக்கல்சேவிப்பார்க் கன்புசெய்வார் சன்மநிரூபணம் ஆவிக்குநேரே யழுக்கு' என்றாயிற்று அதின் க்ரௌர்யம் இருப்பது; "அமரவோரங்கம்" இத்யாதி.

வாழ்வினையாவது - வாழ்வை யென்றபடி. வாழ்வினையென்ற - முழுச்சொல். வாழ்வாவது - நின்தாளிணைக்கீழ் வாழ்ச்சியைப் பெற்று வாழ்வெய்தி ஞாலம்புகழ வாழ்வர் என்றபடி. "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே", "உன்தன் திருவுள்ள மிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க வின்புறுதும்" என்ற அவனுகந்தபடியைச் செய்து ஆகந்திக்கை. அன்றிக்கே, "அவனடியார் நனிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்க நங்கட்கே" என்கிறபடியே, "அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை" என்றுஞ் சொல்லுகிற சரமப்ராப்ய மாகவுமாம். இதிறே ப்ராப்யத்தின் எல்லைநிலம்.

[குருகையர்கோன் யாழினிசைவேதத்தியல் ஓதும்] - இந்த அர்த்தபஞ்சகத்தையும் ஓதுகையாவது - "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்" இத்யாதியில் "ஊநயஸூஹாநா நாவெடிவெடிநூவெடிநஃவடிதி" என்கிறபடியே, சடகோபமுனியான இவர் திவ்யஸூக்தியும் இமையோரதிபதி அடியேன்மனனே பொய்ம்மயர்வு பிறந்தருளினன் விண்ணப்பம் தொழுதெழு என்ற பஞ்சகத்தையும் அடியிலேயாயிற்று சொல்லிற்று; "உயர் திண் அணை ஒன்று பயில் ஏறு கண் கரு வீடு சொன்னால் ஒரு கொண்ட நோற்ற நாலும் எம்மா ஒழி நெடுவேய் என்கிற இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே அஞ்சையும்" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே அருளிச்செய்தது. குருகையர்கோன் யாழினிசை வேதமாவது - ஸம்ஸ்க்ருதவேதம்போலே தான்தோன்றியன்றிக்கே, "எய்தற்கரிய மறைகளை யாயிரமின் தமிழாற் செய்தற் குலகில்வரும் சடகோபன்" என்னும்படி ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்ட அதிசயத்தையுடைத்தாய், "யாழினிசையே" என்ற காநஸ்வரூபியான ஸர்வேஸ்வரனை ப்ரதிபாதிக்கையாலே "பண்ணார்பாடல்", "பண்புரையிசைகொள்வேதம்" என்னலாம்படி "பண்கொளாயிரம்" என்ற ஸாமவேதம்போலே ஸரஸமாயிருக்கை. இதினுடைய வேதஸாம்யமெல்லாம் ஆசார்யஹ்ருதயத்திலே விசதமாக அருளிச்செய்தார்; அதிலே கண்டுகொள்வது. "விண்மீதிருப்பாய்" என்கிற பாட்டிலே பரஸ்வரூபம் காணலாம்; ஆத்மஸ்வரூபம் "அடியார்ந்தவைய"த்திலே காணலாம்; உபாயஸ்வரூபம் "உழலை"யிலே காணலாம்; விரோதிஸ்வரூபம் "அகற்றநீவைத்த" என்கிறத்திலே காணலாம்; பலம் "உற்றே"னிலே உணரலாம். அர்த்தபஞ்சகஜ்ஞாநத்தாலேயிறே "அந்தமில்பேரின்பத்தின்புறுகையும்"என்று அறுதியிட்டருளிற்று. "எண்பெருக்கந்நல"த்திலும், "எனக்கேயாட்செய்", "ஒழிவில்காலம்", "வேங்கடங்கள்", "சிலமில்லா" "களைவாய்", "ஞாலத்தூடே" என்கிற பாட்டுக்களிலும் - திருமந்த்ரார்த்தம் காணலாயிருக்கும். அகாரத்தாலும் மகாரத்தாலும் ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையுஞ் சொல்லி, சதுர்த்தியாலும் உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையுஞ் சொல்லுகிறது; ஸவிபக்திகமான நாராயணபதத்திலே ஸர்வஸ்மாத்பரன்திருவடிகளில் கைங்கர்யத்தைச் சொல்லுகையாலே, திருமந்த்ரம் அர்த்தபஞ்சகப்ரதிபாதகமென்னுமிடம் ஸ்பஷ்டமிறே; ஆகையாலே, திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கும் அர்த்தமெல்லாம் அர்த்தபஞ்சகப்ரதிபாதகமான திருமந்த்ரார்த்தமென்னத் தட்டில்லை. "ஸ்ரீவத்ஸசிஹ்நமிஸ்ர" என்கிற ஸ்லோகத்திலே அருளிச்செய்த அர்த்தபஞ்சகமும், இதில் இரண்டிரண்டுபத்தாலே ஒரோவர்த்தம் ப்ரதிபாதிக்கப் படுகிறது" என்று திருவாய்மொழியின் உரைப்ரவேஸத்திலே வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்தாரிறே. (௬)

திலதமுலகுக்கான திருவேங்கடத்தானை
அலகில்புகழ்ச் சாதியாயிரமும் — உலகில்
உரைத்தான்சடகோபன் உத்தமர்கள்நெஞ்சில்
விரித்தான்பெரும்பூதூர்வேந்து.

பிள்ளைலோகம்சீயர் திருவடிகளே ஸரணம்.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படியின் அவதாரிகை.

இந்தஜகத்தில், சிதசிதீஸ்வரர்களுடைய ஸ்வரூபஸ்வபாவங்களொன்றையும் அறியாதே, புருஷார்த்தோபாயங்களொன்றிலும் மூளாதே, ஶப்தாதிவிஷயங்களிலே மிகவும்மண்டி, பொறுக்கவும் கடக்கவு மொண்ணாதிருக்கிற ஸம்ஸாரது:கஸாகரத்திலே அழுந்தாநின்ற சேதநருக்கு "[illegible] | [illegible]" என்கிறபடியே புருஷார்த்தோபயோகியான மநுஷ்யஶரீரம் துர்லபம். இப்படி துர்லபமானஶரீரத்தைப் பெற்றாலும் மோக்ஷேச்சை பிறக்கை அரிது; மோக்ஷேச்சைபிறந்தாலும் நிரதிஶயஸுகரூபமாய் பகவத்குணாநுபவகாரிதமான தத்கைங்கர்யப்ராப்திரூபமோக்ஷேச்சை ஒருவர்க்கும் பிறக்கிறதல்ல. பாகவதஶேஷதைகரதித்வாபாவம் கிம்புநர்ந்யாயஸித்தம். "[illegible]" இத்யாதி ஶ்லோகத்திற்படியாலே மிகவும் கலிகாலத்தில் பகவத்ருசி ஒருவர்க்கும் பிறக்கிறதல்ல. இத்தன்மையை "[illegible]" இத்யாதி ஶ்லோகத்தாலே எம்பெருமான்தானும் அருளிச்செய்தான். இப்படியிருக்கிற ஸம்ஸாரத்திலே "[illegible]" இத்யாதி ஶ்லோகத்திற் சொல்லுகிறபடியே ஜகத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் நீங்கி லோகமெல்லாம் வாழும்படியாகச் சேதநர்பண்ணின பாக்யத்தாலே, ஆழ்வார் திருநகரியிலே வந்து திருவவதாரம் பண்ணியருளி, "[illegible]" இத்யாதி ஶ்லோகத்திற்படியாலே பகவத்ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்க்ருதமான பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையராய், "[illegible]" என்று எம்பெருமான் அருளிச்செய்த ஜ்ஞாநிகளுக்கு அக்ரேஸரராய், "[illegible]", "[illegible]" என்று சொல்லுகிறபடிகளையுடைய இளையபெருமாளைப்போலே ஜங்மப்ரப்ருதி எம்பெருமானையே தாரகாதிகளாகவுடையராய், அவனைப் பிரியில் தரியாத தன்மையருமாய், நிரஸ்தநிகிலஸாம்ஸாரிகஸ்வபாவருமாய், "[illegible]" இத்யாதி ஶ்லோகத்திற் சொல்லுகிறபடியே பகவத்வ்யதிரிக்த புருஷார்த்தப்ரஸ்தாவத்திலே வெருவும் ஸ்வபாவருமாய், "[illegible]", "[illegible]" இத்யாதியிற் சொல்லுகிற படிகளையுடைய அர்ஜுந தஶரதாதிகளைப்போலே காலதத்த்வமுள்ளதனையும் எம்பெருமானை அநுபவித்தாலும் த்ருப்தி பிறவாதே மேன்மேலெனக் கடல்போலே பெருகுகிற தம்முடைய அபிநிவேஶத்தாலே கபளீக்ருத சிதசிதீஸ்வரதத்வத்ரயத்தையு முடையருமாய், பிராட்டிமார்பக்கலாதல் அந்தலக்ஷ்மணபரதாதிகள்பக்கலாதல் ஸ்ரீகோபிமார்பக்கலாதல் தம்முடைய இப்படிக்கு ஸர்வதா ஸாம்யம் காணவொண்ணாதபடியான ப்ரபாவத்தை யுடையருமாய், "[illegible]" இத்யாதி ஶ்லோகத்தில் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானை ஸாதுக்களுக்கெல்லாம் உபமாநபூமியாகச் சொன்னாற்போலே எல்லாருக்கும் தம்முடைய ஓரோவகைகளாலே உபமாநபூமியுமாய், "[illegible]" என்னும்படியாலே, பகவத்குணங்களுக்குத் தோற்று அடிமைகொள்ளுவது

புகுவதும் செய்து, "ஈஹம் தாவசு" இத்யாதி ஶ்லோகத்திற்படியே பகவதைகாந்த்யவஶீமையுமாய், "ஈஹம்ஸவ-ீம்ஞரிஷ்யாமி" என்னும்படியாலே எப்பேர்ப்பட்ட அடிமையும் செய்தல்லது தரியாதபடியையுடையருமாய், தம்முடைய ஸந்நிதிமாத்ரத்தாலே எல்லாருடைய அஹங்கார மமகாரரூபமான அவித்யாக்யதமஸ்ஸைப் போக்கி ஜ்ஞாநபக்திகளைப் பிறப்பித்து அவர்களை பகவத்கைங்கர்யலக்ஷண மோக்ஷத்துக்கு நிலவராக்கும் ஸ்வபாவத்தையுடையராய்க்கொண்டு வளர்ந்தருளுகிற காலத்திலே, இவருடைய பகவத்குணாநுபவம் உள்ளடங்காமை வேதங்களிலும் வேதோபப்ரும்ஹணமான இதிஹாஸபுராணாதிகளிலு முண்டான ஸம்ஶயங்களை அறுக்கைக்கீடான ஸாத்குண்யத்தையுடைத்தான திருவிருத்தம் திருவாசிரியம் திருவந்தாதி திருவாய்மொழியாகிற ப்ரபந்தங்களாய்க்கொண்டு ப்ரவ்ருத்தமாயிற்று. இப்படி "அவாவிலந்தாதிகளாலிவையாயிரமும்" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்தார்.

இது இங்ஙனாகில், இப்ப்ரபந்தங்களுக்குப் பாட்டும் ஸங்க்யையும், பாட்டுக்கள் நாலடியாகையும், அக்ஷரங்கள் ஸமமாகையும் தொடக்கமான இப்ப்ரபந்தலக்ஷணங்கள் சேரவிழுந்தபடி எங்ஙனே? என்னில்;—ஶோகவேகத்தாலே பிறந்த "மாநிஷாத" இத்யாதி ஶ்லோகமானது "ஶ்லோக ஏவ" என்கிற ஶ்லோகத்தின்படியே ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே ஸர்வலக்ஷணோபேதமானாற்போலே, பகவத்ப்ரஸாதமடியாகப் பிறந்த இப்ப்ரபந்தங்களுக்கு இவற்றில் கூடாததில்லை. "இவை என்னகோடியிலே அடைக்கப்பட்ட ப்ரபந்தங்கள்? இவை பிறந்தபடி எங்ஙனே? இவற்றுக்கு மூலமென்? ஒன்றை மூலமாகச்சொன்னால் அது மூலமென்றறியும்படி எங்ஙனே? இவை ப்ரமாணமென்று அறிவது எத்தாலே? இவற்றுக்கு ப்ரதிபாத்யர் ஆர்? இப்ப்ரபந்தங்கள் கற்கைக்கு அதிகாரிகள் யார்? இவற்றுக்கு போக்தாக்கள் யார்? இவை எதுக்காகப் பண்ணப்பட்டன?" என்று அவ்யுத்பந்நர் கேட்கில்;—இவை புருஷார்த்தப்ரகாஶகமான ப்ரபந்தங்களில் ப்ரதாநமான ப்ரபந்தங்கள்; பகவத்குணாநுபவ ஜநித ஹர்ஷப்ரகர்ஷபலாத்காரம் சொல்லுவிக்கப் பிறந்தன; பகவத்ப்ரஸாதலப்தமான திவ்யசக்ஷுர்மூலமாகப் பிறந்தன வென்னுமிடம் ஸ்வரவசநவ்யக்திகளாலே அறியலாம்; வேதார்த்தவித்துக்களான ஸர்வஶிஷ்டஜநங்களும் பரிக்ரஹிக்கையாலும், ஸம்ஸாரத்தில்உத்வேகம்பிறந்தாருக்கு ஜ்ஞாதவ்யமான வேதார்த்தங்களை இப் ப்ரபந்தங்களிலே காண்கையாலும், இவை உத்க்ருஷ்டதமமான ப்ரமாணங்க ளென்று அறியலாம்; எல்லாருக்கும் பரமப்ராப்யபூதனான ஶ்ரிய:பதி இப்ப்ரபந்தங்களுக்கு ப்ரதிபாத்யன்; ஸம்ஸாரத்தில் ருசியற்று எம்பெருமான்திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யவேணுமென்றிருக்குமவன் இவை கற்கைக்கு அதிகாரி; முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் ஶ்ரிய:பதியான எம்பெருமான்தானும் இவற்றுக்கு போக்தாக்கள்; பகவத்கைங்கர்யமாகிற நிரதிஶய புருஷார்த்தம் இன்னபடிப்பட்டிருக்குமென்று அறிவிக்கைக்காகப் பிறந்த ப்ரபந்தங்கள் இவை" என்று ஶிரோபாஷித ஸத்வ்ருத்தராயிருப்பார் பரிஹரித்தார்கள்.

"நிஷித்தபாஷையா யிருக்கையாலும், இப்ப்ரபந்தங்களை ஸ்த்ரீஶூத்ராதிகளும் அப்யஸிக்கக் காண்கையாலும், இக்கலிகாலத்திலே ஜ்ஞாநத்துக்கு அடைவில்லாத சதுர்த்த வர்ணத்திலே பிறந்தாரொருவராலே நிர்மிதங்களாகையாலும், தேஶாந்தரங்களிலின்றிக்கே ப்ராதேஶிகங்களாகையாலும், அவைதிகர் க்ரஹிக்கையாலும், ஶ்ருதிஸ்ம்ருதிவிருத்தமான காமபுருஷார்த்தத்தைப் பலகால் பேசுகையாலும், ஶ்ருதிஸ்ம்ருதிகளில் புருஷார்த்ததயா சொல்லப்படுகிற ஐஶ்வர்ய கைவல்யங்களைக் சாற்கடைகொள்ளுகையாலும், இப்ப்ரபந்தங்கள் ப்ரமாணமாகமாட்டா" என்று வைதிககோஷ்டியில் ப்ரவேஶமில்லாதார் சில அறிவுகேடர் ப்ரத்யவஸ்தாநம்பண்ண, மாத்ஸ்யபுராணத்திலே பாஷாந்தரத்திலே பாடாநின்றுள்ள கைஶிகாதிகளைத் தன் காட்டினின்

றும் போக்விட்ட ராஜாவைக்குறித்து, "ஹரிகீர்த்திம்விநைவான்யத் ப்ராஹ்மணேந நரோத்தம | பாஷாகானம் நகாதவ்யம் தஸ்மாத்பாபம் த்வயாக்ருதம்" என்ற யமன்வசநத்தின்படியே பாஷா நிஷேதம் பகவத்விஷயமொழிய பாஹ்யவிஷயங்களிலே யாகையாலும், இங்ஙனன்றிக்கே பாஷா மாத்ராவதியாக விதிநிஷேதங்களை அங்கீகரிக்கில் ஸம்ஸ்க்ருத பாஷையான பாஹ்யஶாஸ்த்ராப்யாஸங்கள்பண்ண ப்ரஸங்கிக்கையாலும், ஆழ்வார் தம்முடைய க்ருபாதிஶயத்தாலே வேதத்தில் அநதிகாரிகளான ஸ்த்ரீஶூத்ராதிகளும் இழவாதபடி வேதார்த்தத்தை த்ராவிடபாஷையாலே அருளிச்செய்கையாலும், "எதிர்சூழல்புக்கு" என்னுங் கணக்காலே அநேக ஜந்மங்கள் எம்பெருமான்தானே தொடர்ந்து விஷயீகரிக்கைக்கு ஈடான பாக்யத்தையுடையராய், நிரந்தர பகவத் கடாக்ஷபாத்ரமுமாய், தத்வஹிதங்களில் நிபுணராய், அவற்றினுடைய உபதேஶத்திலும் ப்ரவ்ருத்தராய், வித்ர ஶபர்யாதிகளில் விலக்ஷணரான ஆழ்வார்பக்கலிலே இப்ப்ரபந்தங்கள் பிறக்கையாலும், இப்பாஷை நடையாடி ஶிஷ்டப்ரசுரமான தேசங்களெங்கும் உண்டாய் பாஷாந்தரங்களிலே பிறந்து விலக்ஷணராயுள்ளாரும் இவற்றின் வைலக்ஷண்யத்தைக் கேட்டு "இவற்றை அப்யஸிக்கைக்கு ஈடான இப்பாஷை நடையாடுந் தேசத்திலே பிறக்கப்பெற்றிலோமே!" என்றிருக்கையாலும், இவற்றின் நன்மையைக் கண்ட அவைதிகனுங் கூடப் பரிக்ரஹிக்கை ஶ்லாக்யதாஹேதுவாகையாலும், வேதநமென்றும் உபாஸநமென்றும் உபநிஷத்துத்தன்னில் சொல்லப்படுகிற பக்தியை இவற்றில் காமமாகச் சொல்லுகையாலும், ஐஶ்வர்யகைவல்யங்களை தூஷித்தது-அல்பாஸ்திரத்வாதி தோஷத்தாலே யாகையாலும், ப்ரதிபாத்யனான எம்பெருமானுடையமாஹாத்ம்யத்தாலும், அவனை ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கையாலும், பக்திக்கும் உத்பாதகங்களாகையாலும், உத்பந்நையான பக்திக்கு வர்த்தகங்களாகையாலும், ஶ்ரவணாதிகளில் அப்போதே நிரதிஶய ப்ரீதி ஜநகங்களாகையாலும், இவற்றிற் சொல்லுகிற பொருளுக்குப் பலவிடங்களிலும் வேதத்தை ஸாக்ஷியாகச் சொல்லுகையாலும், ப்ரஹ்மகாரணவாதத்தாலும், ப்ரஹ்மஜ்ஞாநாந் மோக்ஷத்தைச் சொல்லுகையாலும், புருஷார்த்தவிஷயமான ப்ரபந்தங்களெல்லாவற்றிலும் இப்ப்ரபந்தங்களை த்ருடதரப்ரமாணங்களாக உபபாதித்து வைதிககோஷ்டிகளில் அபியுக்தரானவர்கள் பரிஹரித்தார்கள்.

பகவத்ப்ரஸாதத்தாலே பரிபூர்ணமாக அவனை அநுபவித்துப் பூர்ணராயிருந்த ஆழ்வாருக்கு எம்பெருமானைப் பிரிகையும், பிரிவாலே நோவுபட்டுக் கூப்பிடுகையும் கூடினபடி எங்ஙனே? என்னில்;—ஓரோகுணத்தை அநுபவித்தால் அநநுபூதகுணங்களிலுண்டான ப்ரீதிப்ரகர்ஷம் க்ஷுத்ரவிஷயங்களில் வைராக்யத்தைப் பிறப்பித்து குணாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப் பிறப்பிக்கும்; அக்குணங்களில் க்ரமப்ராப்திபற்றாதே யாதொருபோது ஆசை மிக்கது, அப்போது ஆசைப்பட்ட பொருள் கிடையாமையாலும், பகவதநுபவ விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்த ஸ்மரணாதிகளாலுமாக பகவத்விஷயத்தில் அநுபவித்த அம்ஶத்தையும் இழந்து நோவுபடாநிற்பர். பஹுகுணனான எம்பெருமான்பக்கலிலே நிரதிஶய பக்திமான்களாய், தத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகதுঃகராய், அவனையல்லது அறியாதபடியாய், பகவதநுபவஸுகமே மிக்கபோது இதரபதார்த்தங்களுமெல்லாம் தம்மைப்போலே எம்பெருமானைப்பெற்று ஸுகிக்கிறனவாக நினைத்தும், விஶ்லேஷமென்று ஒருபதார்த்த முண்டென்று அறியாதே லோகயாத்ரையோடு ஒக்க மறந்தும், விஶ்லேஷவ்யஸநம் மிக்கால் ஸம்ஶ்லேஷரஸமுண்டென்றும் அறியாதே, அந்யபரமான இதரபதார்த்தங்களுமெல்லாம் தம்மைப்போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் நோவுபடாநிற்பர். இவருக்குப் ப்ரியாப்ரியங்கள் ஒருகாலும் முடியாதே பர்யாயேண உண்டாயிருக்கையாலே சிந்தயந்தியுடையபடி நித்யமாய்ச் செல்லுமென்று சொல்லுவர்.

சேதநருக்கு ஸ்த்ர்யந்ந பாநாதிகளே தாரகபோஷக போக்யங்களாய்ச் செல்லாநிற்க, இவரை பகவத்குணைகதாரகரென்னக் கூடுமோ? என்னில்;—திருவயோத்யையிலும் கோஸலஜநபதத்திலு முள்ள ஸ்தாவரஜங்கமங்களடைய ராமகுணைகதாரகங்களாயிருக்கும்படியை அநுஸந்தித்த இதுவுங்கூடுமென்று கொள்வது. இப்படியிருக்கிற இவர்க்கு எம்பெருமானோடே ஸம்ஶ்லேஷமாவது-ப்ரத்யக்ஷஸமாநாகாரமான ஜ்ஞாநஸாக்ஷாத்காரம்; விஶ்லேஷமாவது-பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷைபண்ணி அதுபெறாமையாலே மாநஸாநுபவத்துக்கு வந்த கலக்கம். ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தனாய் ஸர்வநியந்தாவாய் நிரவதிகக்ருபாவானாயிருந்த எம்பெருமான் இவருடைய இவ்வநுபவத்தை உருவ நடத்தாதே விச்சேதித்ததுக்கு ப்ரயோஜநமென்? என்னில்;-திருவயோத்யையிலும் திருக்குரவையிலும் பிரிந்த பிரிவிற்போலே இவர்க்கு அநுபூதகுணங்கள் ஸாத்மிக்கைக்கும் மேன்மேலென த்ருஷ்ணை பிறக்கைக்கும். எம்பெருமான்பக்கல் பிறந்த ஆசை முதிர்ந்து நினைத்தபடி பெறாவிட்டவாறே ஶோகமோஹங்கள் பிறக்கும். இப்படியுள்ள கலவியாலும் பிரிவாலும் ஆழ்வாருக்கு வந்த தசை அந்யாபதேஶப்பேச்சைப் பேசுவிக்கும். இப்ப்ரபந்தங்களில் ஸூக்திகள் ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூப ப்ரதிபாதகங்களாயிருக்கும் சில; ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூப விஷயமாயிருக்கும் சில; ப்ராப்த்யுபாயத்தைச் சொல்லாநிற்கும் சில; பலத்தைச் சொல்லாநிற்கும் சில; ப்ராப்தி விரோதிகளைச் சொல்லாநிற்கும் சில; அவஶிஷ்டமானவை இவ்வர்த்தங்களுக்கு உபபாதகங்களாயிருக்கும். இவற்றில் உத்தேஶ்யம் பலம்; ததர்த்தமாக மற்றுள்ள நாலார்த்தமும் சொல்லுகிறது.

இவற்றில் ப்ரதம ப்ரபந்தமான திருவிருத்தத்தில் த்வதநுபவ விரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தை யறுத்துத் தந்தருளவேணுமென்று எம்பெருமானை அர்த்திக்கிறார். திருவாசிரியத்தில் நிவ்ருத்தஸம்ஸாரர்க்கு விஷயமான எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவித்து ப்ரீதராகிறார். பெரியதிருவந்தாதியில் நிரதிஶயபோக்யனான எம்பெருமானை அநுபவிக்கையாலே, ததநுகுணமாக த்ருஷ்ணை பிறந்து த்ருஷ்ணாநுகுணமாக அவனைப் பேசியும் நினைத்தும் தரிக்கிறார். திருவாய்மொழியில் இவருடைய த்ருஷ்ணாநுகுணமாக ஶ்ரிய:பதியாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், தனக்குத்தகுதியான திவ்யதேஹத்தையு முடையனாய், திவ்யபூஷணபூஷிதனுமாய், ஶங்கசக்ராதி திவ்யாயுதனுமாய், பரமவ்யோமத்தில் ஆநந்தமயமான திவ்யாஸ்தாந ரத்நமண்டபத்திலே பிராட்டிமாரோடேகூட திவ்யஸிம்ஹாஸநத்திலே வீற்றிருந்தருளி அஸ்தாநேபயஶங்கிகளான அயர்வறுமமரர்களாலே அநவரதபரிசர்யமாண சரணநளிநனாய்க்கொண்டு அங்கு அங்ஙனே செல்லாநிற்க;ஸ்வஸங்கல்பாயத்தஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திகமான ஸ்வேதரஸமஸ்தத்தையும் ஶரீரதயா ஶேஷமாகவுடையனாய்,அந்தராத்மதயா சேதநாசேதநங்களை அடைய வ்யாபித்து,தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாய்; நாராயணாதி நாமங்களைத் தனக்கு வாசகமாகவுடையனாய், ஏவம்விதனாக உபநிஷத்ப்ரஸித்தனுமாய், இப்படி விஸஜாதீயனுமா யிருந்துவைத்து ஆஶ்ரிதவாத்ஸல்யத்தாலே தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாய்வந்து திருவவதாரம்பண்ணும் ஸ்வபாவனுமாய், தன்னுடைய திருவவதாரங்களிலும் உதவுகைக்கீடான பாக்யமில்லாதார்க்கும் இழக்கவேண்டாதபடி ஸர்வாபராதஸஹனாய்,பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனாய்க்கொண்டு ஆஶ்ரிதர்க்கு அத்யந்த பராதீநனாய், அவர்களுடைய இச்சாநுகுணமான போஜநஶயநாதிகளையுடையனாய், ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனான தானே ஆஶ்ரித ஸௌலப்த்யார்த்தமாகக் கோயில்களிலே வந்து நின்றருளியும், இப்படியுள்ள ஸர்வேஶ்வரத்வத்துக்கும் ஆஶ்ரிதாநுக்ரஹத்துக்கும் ஏகாந்தமான படிகளால் பரிபூர்ணனான எம்பெருமான், தன்னை நிர்ஹேதுகமாகக் காட்டியருளக் கண்டு அநுபவித்துத் தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தமாகிற ப்ரதிபந்தகமும் அற்று எம்பெருமானைப் பெற்று முடிக்கிறார். இனிச்சொல்லவேண்டுவன அவ்வவ திருவாய்மொழிகள்தோறும் சொல்லக் கண்டுகொள்வது.

முதல் திருவாய்மொழியிற் சொல்லிற்றயிற்று - நாநாரத்நபூர்ணமாய் அபரிச்சேத்யமான கடலை முன்துறைத் திரளக்கண்டாற்போலே ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் பரிபூர்ணனாய், எல்லாப்படியாலும் எல்லாரிலும் மேற்பட்டு ஸர்வேஶ்வரனாய் ஶ்ரியப்பதியாக அபௌருஷேயமாய்க்கொண்டு ஸ்வதஃப்ரமாணமான ஶ்ருதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்ட எம்பெருமானை, பாஹ்யகுத்ருஷ்டிகளால் அவிசால்யமாம்படி அவன்ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து, அநுபவஜநித ப்ரீதி உள்ளடங்காமை, அநுபவித்தபடியே ஸவிபூதிகனான எம்பெருமானைப் பேசி, ஏவம்விதனானவன் திருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவியென்று தந்திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார். கடலைத் திரளக்கண்டானொருவன் அதில் திரைகளையும் மற்றும் அங்குண்டான ரத்நாதிகளையும் தனித்தனியே காணுமாபோலே, முதல்திருவாய்மொழியில் திரள அநுபவிக்கப்பட்ட எம்பெருமானுடைய ஓரோவகைகளிலே ஓரோ திருவாய்மொழியாய்ச் செல்லுகிறது, இரண்டாந்திருவாய்மொழி அடங்கி மேலெல்லாம். இப்படிச்செய்தார் இவரேயல்ல, பாரதராமாயணங்களைப்பண்ணின வ்யாஸாதிகளும் ஸங்க்ஷேபவிஸ்தரங்களாலே தங்கள் ப்ரபந்தங்களை ப்ரபந்தீகரித்தார்கள்.

---

## அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்த பன்னீராயிரப்படியின் அவதாரிகை.

---

[illegible] ।
[illegible] ॥

ஸாங்கோபப்ருப்ஹண ஸகலவேதவேதாந்த ஸாரார்த்த ப்ரகாஶகமாய், ஸமஸ்த கல்யாணகுணாத்மக ஸவிபூதிக பகவதநுபவ ப்ரவ்ருத்த பரபக்திஸிந்து பரீவாஹரூபமாய், ஸாம்ஸாரிக ஸகலதாப தாவாநல நிர்வாபண ஸரஸாம்ருதப்ரவாஹ பூராத்மகமாய், நித்யப்ரத்யக்ஷ நிரவதிகாதிஶய பரமாநந்தஸந்தோஹ ஸம்வர்த்தகமாய், ஸகலஜநோஜ்ஜீவநார்த்தமாக ஸர்வேஶ்வரன், தன் பரமகாருணிகத்வத்தாலே ஸ்வஹ்ருதயத்திலே ப்ரவர்த்திப்பிக்க, ஸர்வாதிகாரியோக்யமான த்ராமிடபாஷா ஸந்தர்ப்பத்தாலே ப்ரதமாசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம் திருவாசிரியம் திருவந்தாதி திருவாய்மொழி யாகிற ப்ரபந்தங்களில், திருவிருத்தத்திலே ஸம்ஸாரஸம்பந்த நிவ்ருத்தியை அபேக்ஷித்து, திருவாசிரியத்திலே நிவ்ருத்தஸம்ஸாரர்க்கு அநுபாவ்யமான ஸௌந்தர்யாதிகளை அநுபவித்து, திருவந்தாதியிலே அநுபவ ஜநிதமான அபிநிவேஶாதிஶயத்தைப் பேசி, திருவாய்மொழியிலே அபிநிவேஶாநுரூபமாகப் பூர்ணமான பகவத்விஷயத்தை அநுபவித்து இவர் க்ருதார்த்தராகிறார்.

இதில் சரமமான திருவாய்மொழியாகிற திவ்யப்ரபந்தம் "[illegible] । [illegible]" என்று ஶ்ரியஃபதியானவன் சேதநனுக்கு உபாயத்வேந ஆஶ்ரிதனாய்க்கொண்டு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டமான ஸ்வப்ராப்தியையும் தானே பண்ணிக்கொடுக்குமென்று அநுயாயியான மஹாவாக்யார்த்தத்தை ப்ரதிபாதிக்கிறது.

இப்ப்ரபந்தம் ஸர்வஶாஸ்த்ரஸாரோபப்ரும்ஹணம் பண்ணுகிறதாகையாலே, ஸகலவேதஶாஸ்த்ரதாத்பர்யமான அர்த்தபஞ்சகமும் இப்ப்ரபந்தத்தினுடைய மஹாவாக்யார்த்தத்திலே அந்தர்ப்பூதம். "ஶ்ரீபதிஃ" என்று ப்ராப்யமான ப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபமும், "சேத

நஸ்ய" என்று ப்ரத்யகாத்மஸ்வரூபமும், "ஹேதுத்வேந" என்று உபாயஸ்வரூபமும், "அநிஷ்டஹாநிம்" என்று ப்ராப்திவிரோதிநிவ்ருத்தியும், "இஷ்டஸ்வப்ராப்தி" என்று ப்ராப்திபலாவாப்தியுமான அர்த்தபஞ்சகமும் ஸூசிதமாகிறது.

இப்ப்ரபந்தத்தில் முதலிட்டு நாலுபத்தாலே ஸித்தரூபமான பராவராத்ம யாதாத்ம்யத்தை ப்ரதிபாதிக்கிறது. முடிவிட்டு நாலுபத்தாலே ஸாத்யரூபமான அநிஷ்டநிவ்ருத்தி பூர்வக இஷ்டப்ராப்தியை ப்ரதிபாதிக்கிறது. நடுவிட்டு இரண்டுபத்தாலே ஸித்தஸாத்யரூபமான நிரபாயோபாயவரணத்தை ப்ரதிபாதிக்கிறது; ஸித்தமான உபாயத்தினுடைய வரணம் ஸாத்யமென்று கருத்து. அதில் ஸித்தரூபமான பராவராத்மயாதாத்ம்ய ப்ரதிபாதகமான முதல் நாலுபத்தில், முதல்பத்தும் இரண்டாம்பத்தும் – ப்ராப்யமான பரஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. மூன்றாம்பத்தும் நாலாம்பத்தும் - ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. அஞ்சாம்பத்தும் ஆறாம்பத்தும்–ப்ராப்த்யுபாய ஸ்வீகாரத்தை ப்ரதிபாதிக்கிறது. ஏழாம்பத்தும் எட்டாம்பத்தும் - ப்ராப்திவிரோதிநிவ்ருத்தியை ப்ரதிபாதிக்கிறது. ஒன்பதாம்பத்தும் பத்தாம்பத்தும்–ப்ராப்தி பலஸித்தியை ப்ரதிபாதிக்கிறது. அதில் முதற்பத்து - பரனான ஶேஷியினுடைய ரக்ஷகத்வத்தையும், இரண்டாம்பத்து - போக்யத்வத்தையும் சொல்லுகிறது. மூன்றாம்பத்து –பகவதேகஶேஷபூதனான ஆத்மாவினுடைய ததேகாநுபவத்தையும், நாலாம்பத்து- ததேகப்ரியத்வத்தையும் சொல்லுகிறது. அஞ்சாம்பத்து - நிரபாயமான உபாயவேஷத்தையும், ஆறாம்பத்து - தத்வரணப்ரகாரத்தையும் சொல்லுகிறது. ஏழாம்பத்து - அநிஷ்டமான விரோதி ப்ரகாரத்தையும், எட்டாம்பத்து - தந்நிவ்ருத்தி ப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது. ஒன்பதாம் பத்து - பலப்ரகாரத்தையும், பத்தாம்பத்து - ததவாப்திப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது. ஆக, இவ்வர்த்தபஞ்சகத்தினுடைய அவாந்தரார்த்தபேதத்தாலே இப்ப்ரபந்தத்தில் பத்துப்பத்துக்கும் வாக்யார்த்தம் சொல்லிற்றாயிற்று. அதில் ஶேஷியினுடைய ரக்ஷகத்வபரமான முதற்பத்தில் முதல்திருவாய்மொழி - ரக்ஷகத்வோபயுக்தமான ஸர்வஸ்மாத்பரத்வத்தையும், இரண்டாந்திருவாய்மொழி - ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தையும், மூன்றாந்திருவாய்மொழி - ததநுகுணமான ஸௌலப்யத்தையும், நாலாந்திருவாய்மொழி - ஆஶ்ரிதாபராத ஸஹத்வத்தையும், அஞ்சாந்திருவாய்மொழி - ஸௌஶீல்யாதிஶயத்தையும், ஆறாந்திருவாய்மொழி - ஸ்வாராதனதையையும், ஏழாந்திருவாய்மொழி - ஆஶ்ரயணத்தில் அத்யந்த ஸ்வாரஸ்யத்தையும், எட்டாந்திருவாய்மொழி - ஆஶ்ரிதவிஷயமான ஆர்ஜவகுணத்தையும், ஒன்பதாந்திருவாய்மொழி-ஸாத்ம்ய போகப்ரதத்வத்தையும், பத்தாந்திருவாய்மொழி - நிர்ஹேதுக மஹோபகாரித்வத்தையுஞ் சொல்லுகையாலே, பரமஶேஷியினுடைய ரக்ஷகத்வபூர்த்தியை ப்ரதிபாதித்ததாயிற்று. அதில் பரத்வப்ரகாஶகமான முதல்திருவாய்மொழியில் தத்ப்ரதிபாதகமான விலக்ஷணகுணவிபூதிவிக்ரஹயோகத்தையும், ததாஶ்ரயமான ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும், அபரிச்சிந்நமான லீலா விபூதிஸம்பந்தத்தையும், அநந்தரம் மூன்று பாட்டாலே விபூத்யந்தர்க்கத ஸமஸ்தபதார்த்தங்களினுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்யாதிகள் ஸ்வாதீநங்களென்னுமிடத்தையும், அதில் முதற்பாட்டில் ஸமஸ்தபதார்த்தங்களினுடைய ஸ்வரூபம் ஸாமாநாதிகரண்யத்தாலே தததீநமென்னுமிடத்தையும், ஸர்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் ஸாமாநாதிகரண்யத்தாலே ததநீநங்களென்னுமிடத்தையும், தத்ப்ரதிபாதகமான ஶரீராத்மஸம்பந்தத்தையும், அநந்யேஶ்வரத்வத்தையும், அவைதிகரால் அப்ரகம்ப்யத்தையும், அகிலவ்யாபகத்வத்தையும் சொல்லி, அஶேஷஶேஷித்வரூபமான பரத்வத்தை ஸ்திரீகரித்தருளுகிறார்.

# பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்திநாலாயிரப்படியின் அவதாரிகை.

இந்த ஜகத்தில் சிதசிதீஶ்வரர்களுடைய ஸ்வரூபஸ்வபாவங்களொன்றும் அறியாதே, புருஷார்த்தோபாயங்களுள் ஒன்றிலும் ஊன்றாதே, ஶப்தாதிவிஷயங்களிலே மிகவும் மண்டி, பொறுக்கவும் கடக்கவு மொண்ணாதே யிருக்கிற ஸாம்ஸாரிகமான து:கஸாகரத்திலே அழுந்தாநின்றுள்ள சேதநர்க்கு, "துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷணபங்குர: | தத்ராபி துர்லபம் மந்யே வைகுண்டப்ரியதர்ஶநம்." என்கிறபடியே புருஷார்த்தோபயோகியான மநுஷ்யஶரீரம் துர்லபம். இப்படி துர்லபமான ஶரீரத்தைப் பெறிலும் மோக்ஷேச்சை பிறக்கை அரிது; "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி: | நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே" என்கிறபடியே இந்தலோகத்திலே மநுஷ்யஶரீரத்தைப் பெற்று ஊமையாயிராது மன்றிக்கே யிருக்கிறவன் ஸம்ஸாராத் உத்தீர்ணனாகாதவன், ப்ரஹ்மஹந்தாவாகக் கடவனிறே. மோக்ஷேச்சை பிறந்தாலும் நிரதிஶயஸுகரூபமாய் பகவத்குணாநுபவகாரிதமான தத்கைங்கர்யப்ராப்திரூபமான மோக்ஷேச்சை ஒருவர்க்கும் பிறக்கிறதல்ல. பாகவதஶேஷதைகரதித்வாபாவம் கிம்புநர்க்யாயஸித்தம். இவ்வர்த்தத்திலே ஸ்ரீபராஶரப்ரஹ்மர்ஷியும் "கலௌ ஜகத்பதிம்" இத்யாதி ஶ்லோகத்திற் சொல்லுகிறபடியாலே, மிகவும் கலிகாலத்தில் பகவத்ருசி ஒருவருக்கும் பிறக்கிறதல்ல. இத்தன்மையை "மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு" இத்யாதி ஶ்லோகத்திற் சொல்லுகிறபடியாலே எம்பெருமான் தானும் அருளிச்செய்தான். இப்படியிருக்கிற ஸம்ஸாரத்திலே "கலௌ கலு பவிஷ்யந்தி" இத்யாதி ஶ்லோகத்திற் சொல்லுகிறபடியே இஜ்ஜகத்தில் அஜ்ஞாநாந்தகாரமெல்லாம் நீங்கி லோகமெல்லாம் வாழும்படியாகச் சேதநர் பண்ணின பாக்யவஶத்தாலே ஆழ்வார் திருநகரியிலே வந்து திருவவதாரம்பண்ணியருளினர். "ஹரிணா ஸம்ப்ரேக்ஷிதம்", "ப்ரஸாதாத்" இத்யாதி ஶ்லோகங்களிற்படியே பகவத்ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்க்ருதமான பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையராய், "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" என்று எம்பெருமான் அருளிச்செய்த ஜ்ஞாநிகளுக்கெல்லாம் அக்ரேஸரராய், "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:", "ந வஸாமி" என்று சொல்லுகிற படிகளையுடைய இளையபெருமாளைப்போலே ஜந்மப்ரப்ருதி எம்பெருமானையே தாரகாதிகளாக வுடையராய், அவனைப் பிரியில் தரியாத தன்மையருமாய், நிரஸ்தநிகில ஸாம்ஸாரிக ஸ்வபாவருமாய், "ந தேவலோகாக்ரமணம்" இத்யாதி ஶ்லோகத்திற் சொல்லுகிறபடியே பகவத்வ்யதிரிக்த புருஷார்த்த ப்ரஸ்தாவத்திலே வெருவும் ஸ்வபாவருமாய், "விஷ்ணோர்தேஹாநுயாநம்", "ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்" இத்யாதி ஶ்லோகங்களிற் சொல்லுகிற படிகளையுடைய அர்ஜுந தஶரதாதிகளைப்போலே காலதத்த்வமுள்ளதனையும் எம்பெருமானை அநுபவியாநின்றாலும் த்ருப்தி பிறவாதே, மேன்மேலெனக் கடல்போலே பெருகுகிற தம்முடைய அபிநிவேஶாதிஶயத்தாலே கபளீக்ருதமான சிதசிதீஶ்வர தத்த்வத்ரயத்தையுடையருமாய், பிராட்டிமார்பக்கலாதல் நித்யஸூரிகள்பக்கலாதல் லக்ஷ்மண பரதாதிகள்பக்கலாதல் ஸ்ரீகோபிமார்கள்பக்கலாதல் தம்முடைய இப்படிகளுக்கு ஸர்வதாஸாம்யம் கொள்ளவொண்ணாத ப்ரபாவத்தையுடையருமாய், "யஸ்ய ஸ்மரணமாத்ரேண ஜந்மஸம்ஸாரபந்தநாத் | விமுச்யதே நமஸ்தஸ்மை விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே" இத்யாதி ஶ்லோகத்தில்

ஸ்ரீப்ரஹ்லாதாழ்வாரை ஸாதுக்களுக்கெல்லாம் உபமாநபூமியாகச் சொன்னாற்போலே எல்லாருக்கும் தம்முடைய ஓரோவகைகளாலே உபமாநபூமியுமாய், "ஸர்வைஸ்ஸாத்யேஷு வாமத:" என்னும்படியாலே பகவத்குணங்களுக்குத் தோற்று அடிமைபுகுவதுஞ் செய்து, "அஹம் தாவந் மஹாராஜே" இத்யாதி ஶ்லோகத்திற்படியும் "சேலேய்கண்ணியரும்" இத்யாதிப்படியே(யும்) பகவதைகாந்த்யஸீமையுமாய், "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்றபடியாலே எப்பேர்ப்பட்ட அடிமைகளுஞ் செய்தல்லது தரிக்கமாட்டாதபடியையு முடையராய், தம்முடைய ஸந்நிதிமாத்ரத்தாலே எல்லாருடைய அஹங்காரமமகாரரூபமான அவித்யாக்ய தமஸ்ஸைப் போக்கி அவர்களுக்கு ஜ்ஞாநபக்திகளைப் பிறப்பித்து அவர்களை பகவத்கைங்கர்யலக்ஷணமோக்ஷத்துக்கு நிலவராக்கும் ஸ்வபாவத்தையுடையராய்க்கொண்டு வளர்ந்தருளுகிற காலத்திலே, இவருடைய பகவத்குணாநுபவம் உள்ளடங்காமை வேதங்களிலும் வேதோபப்ரும்ஹணமான இதிஹாஸபுராணாதிகளிலு முண்டான ஸம்ஶயங்களை அறுக்கைக்கு ஈடான ஸாத்குண்யத்தையுடைத்தாய்க்கொண்டு வேதஸங்க்யையிலே திருவிருத்தம் திருவாசிரியம் திருவந்தாதி திருவாய்மொழி யாகிற ப்ரபந்தங்களாய்க்கொண்டு ப்ரவ்ருத்தமாயிற்று. இப்படியை "அவாவிலந்தாதிகளாலிவையாயிரமும்" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்தார்.

இங்ஙனாகில், இப்ப்ரபந்தங்களுக்குப் பாட்டும் ஸங்க்யையும் பாட்டுக்கு நாலடியாகையும் அக்ஷரங்கள் ஸமமாகையும் தொடக்கமான ப்ரபந்தலக்ஷணங்கள் சேரவிழுந்தபடி எங்ஙனே? என்னில்;—ஶோகவேகத்தாலே பிறந்த "மாநிஷாத" இத்யாதி ஶ்லோகமானது "மச்சந்தாதேவ" என்கிற ஶ்லோகத்தின்படியே ஸ்ரீவால்மீகிபகவானுக்கு ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே ஸர்வலக்ஷணோபேதமானாற்போலே, இவ்விடத்திலும் பகவத்ப்ரஸாதமடியாகப் பிறந்த இப் ப்ரபந்தங்களுக்குக் கூடாததில்லை. "இவை என்ன கோடியிலே அடைக்கப்பட்ட ப்ரபந்தங்கள்? இவை பிறந்தபடி எங்ஙனே? இவற்றுக்கு மூலமென்? ஒன்றை மூலமாகச் சொன்னால் அது மூலமென்று அறியும்படி எங்ஙனே? இவை ப்ரமாணமென்று அறிவது எத்தாலே? இவற்றுக்கு ப்ரதிபாத்யர் ஆர்? இப்ப்ரபந்தங்கள் கற்கைக்கு அதிகாரிகள் ஆர்? இவற்றுக்குப் போக்தாக்கள் ஆர்? இவை எதுக்காகப் பண்ணப்பட்டன?" என்று சில அவ்யுத்பந்நர் கேட்கில்,—"இவை புருஷார்த்த ப்ரகாஶகமான ப்ரபந்தங்களில், ப்ரதாந ப்ரபந்தங்கள்; பகவத்குணாநுபவஜநித ஹர்ஷப்ரகர்ஷ பலாத்காரம் சொல்லுவிக்கப் பிறந்தன. பகவத்ப்ரஸாதலப்தமான திவ்யசக்ஷுஸ்ஸு மூலமாகப் பிறந்தன வென்னுமிடம் ஸ்வர வசந வ்யக்திகளாலே அறியலாம். வேதார்த்தவித்துக்களான ஸர்வ ஶிஷ்டர்களும் பரிக்ரஹிக்கையாலும், ஸம்ஸாரத்தில் உத்வேகம்பிறந்தார்க்கு ஜ்ஞாதவ்யமான வேதார்த்தங்களை இப்ப்ரபந்தங்களிலே காண்கையாலும், இவை உத்க்ருஷ்டதமமான ப்ரமாணமென்று அறியலாம். எல்லார்க்கும் பரம ப்ராப்யபூதனான ஶ்ரிய:பதியான நாராயணன் இப்ப்ரபந்தங்களுக்கு ப்ரதிபாத்யன்; ஸம்ஸாரத்தில் ருசியற்று எம்பெருமான் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யவேண்டு மென்றிருக்கு மவன் இவை கற்கைக்கு அதிகாரி; முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் ஶ்ரிய:பதியான எம்பெருமான்தானும் இவற்றுக்கு போக்தாக்கள்; பகவத்கைங்கர்யமாகிற நிரதிஶய புருஷார்த்தம் இன்னபடிப்பட்டிருக்குமென்று அறிவிக்கைக்காகப் பிறந்த ப்ரபந்தங்கள் இவை" என்று ஶிரோபாவிதஸத்வ்ருத்தராயிருப்பார் பரிஹரித்தார்கள்.

இனி, "நிஷித்தபாஷையாயிருக்கையாலும், இப்ப்ரபந்தங்களை ஸ்த்ரீஶூத்ராதிகள் அப்யஸிக்கக் காண்கையாலும், கலிகாலத்திலே ஜ்ஞாநத்துக்கு அடைவில்லாத சதுர்த்த வர்ணத்திலே பிறந்தாரொருவராலே நிர்மிதங்களாகையாலும், தேசாந்தரங்களிலின்றிக்கே ப்ராதேஶிகங்களா

கையாலும், அவைதிகருங்கூடப் பரிக்ரஹிக்கையாலும், ஶ்ருதி ஸ்ம்ருதி விருத்தமான காமபுருஷார்த்தத்தைப் பலகாலும் பேசுகையாலும், ஶ்ருதிஸ்ம்ருதிகளில் புருஷார்த்ததயா சொல்லப்படுகிற ஐஶ்வர்யகைவல்யங்களைக் காற்கடைக் கொள்ளுகையாலும், இப்ப்ரபந்தங்கள் ப்ரமாணமாகமாட்டா" என்று வைதிககோஷ்டியில் பழக்கமில்லாதார் சிலர் அறிவுகேடர் ப்ரத்யவஸ்தாநம்பண்ண, மாத்ஸ்யபுராணத்திலே பாஷாந்தரத்தாலே பாடாநின்றுள்ள கைஶிகாதிகளைத் தன்னுட்டில்நின்றும் போகவிட்ட ராஜாவைக்குறித்து, "ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம | பாஷாகாநம் ந காதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்" என்கிற யமவசநத்தின்படியே பாஷாநிஷேதம் பகவத்விஷயமொழிய பாஹ்யவிஷயங்களிலே யாகையாலும், அங்ஙனன்றிக்கே பாஷாமாத்ராவதியாக விதிநிஷேதங்களை அங்கீகரிக்கில் ஸம்ஸ்க்ருதபாஷையான பாஹ்யஶாஸ்த்ராப்யாஸங்கள் பண்ண ப்ரஸங்கிக்கையாலும், ஆழ்வார்தாமும் தம்முடைய க்ருபாதிஶயத்தாலே வேதத்தில் அநதிகாரிகளான ஸ்த்ரீஶூத்ராதிகளும் இழவாதபடி வேதார்த்தத்தை த்ராவிடபாஷையாலே அருளிச்செய்கையாலும், "எதிர்சூழல்புக்கு" என்னுங் கணக்காலே அநேக ஜந்மங்களில் எம்பெருமான்தானே தொடர்ந்து விஷயீகரிக்கைக்கடியான பாக்யவைபவத்தையுடையராய், நிரந்தர பகவத்கடாக்ஷ பாத்ரபூதருமாய், தத்த்வஹிதங்களில் அத்யந்தநிபுணருமாய், அவற்றினுடைய உபதேஶத்திலும் ப்ரவ்ருத்தரான ஸூத தர்மவ்யாத விதுராதிகளில் அத்யந்த விலக்ஷணரான ஆழ்வார்பக்கலிலே இப்ப்ரபந்தங்கள் பிறக்கையாலும், இப்பாஷை நடையாடி ஶிஷ்டப்ரசுரமான தேசங்களெங்கும் உண்டாகையாலும், பாஷாந்தரங்களிலே பிறந்து விலக்ஷணராயுள்ளாரும் இவற்றின் வைலக்ஷண்யத்தைக் கேட்டு "இவற்றை அப்யஸிக்கைக்கு ஈடான இந்த பாஷை நடையாடுந் தேசத்திலே பிறக்கப்பெற்றிலோமே!" என்று இருக்கையாலும், இவற்றின் நன்மையைக் கண்டு அவைதிகருங்கூடப் பரிக்ரஹிக்கை ஶ்லாக்யதாஹேதுவாகையாலும், வேதநமென்றும் உபாஸநமென்றும் உபநிஷத்துக்களிற் சொல்லப்படுகிற பக்தியை இவற்றில் காமமாகச் சொல்லுகையாலும், ஐஶ்வர்யகைவல்யங்களை தூஷித்தது - அல்பாஸ்திரத்வாதி தோஷத்தாலே யாகையாலும், ப்ரதிபாத்யனான எம்பெருமானுடைய மாஹாத்ம்யத்தாலும், அவனை ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கையாலும், பக்திக்கு உத்பாதகங்களாகையாலும், உத்பந்நையான பக்திக்கு வர்த்தகங்களாகையாலும், ஶ்ரவணமாத்ரத்தில் அப்போதே நிரதிஶயப்ரீதிஜநகங்களாகையாலும், இவைதன்னிற் சொல்லுகிற பொருள்களுக்குப் பலவிடங்களிலும் வேதத்தை ஸாக்ஷியாக எடுக்கையாலும், ப்ரஹ்மகாரணவாதத்தாலும், ப்ரஹ்மஜ்ஞாநாந் மோக்ஷத்தைச் சொல்லுகையாலும், புருஷார்த்தவிஷயங்களான ப்ரபந்தங்களெல்லாவற்றிலும் இப்ப்ரபந்தங்களை த்ருடதரப்ரமாணங்களாக உபபாதித்து வைதிககோஷ்டிகளில் அபியுக்தராயிருப்பார்கள் பரிஹரித்தார்கள்.

பகவத்ப்ரஸாதத்தாலே பரிபூர்ணமாக அவனை அநுபவித்துப் பூர்ணராய் எழுந்தருளியிருந்த ஆழ்வார்க்கு எம்பெருமானைப் பிரிகையும், பிரிவாலே நோவுபட்டுக் கூப்பிடுகையும் கூடினபடி எங்ஙனே? என்னில்;— ஒரோகுணத்தை அநுபவித்தால் அநநுபூத குணங்களிலுண்டான ப்ரீதிப்ரகர்ஷம் க்ஷுத்ரவிஷயங்களில் வைராக்யத்தைப் பிறப்பித்து குணாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப் பிறப்பிக்கும்: அந்தக் குணங்களில் க்ரமப்ராப்தி பற்றாதபடி யாதொருபோது ஆசை மிக்கது, அப்போது ஆசைப்பட்ட பொருள் கிடையாமையாலும், பகவதநுபவ விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் ஸ்மரணாதிகளாலுமாக பகவத்விஷயத்தில் அநுபவித்த அம்ஶத்தையும் இழந்து நோவுபடாநிற்பர். பஹுகுணனான எம்பெருமான்பக்கலிலே நிரதிஶய பக்திமான்களாய், தத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகதுக்கராய், அவனையல்லது அறியாதபடி பகவதநுபவ ஸுகம் மிக்கபோது இதர பதார்த்தங்களும் எல்லாம் தம்மைப்போலே எம்பெரு

மானைப் பெற்று ஸுகிக்கின்றனவாக நினைத்தும், விஶ்லேஷமென்று ஒருபதார்த்தமுண்டென்றும் அறியாதே லோகயாத்ரையோடொக்க மறந்துபோருவர். விஶ்லேஷவ்யஸநம் மிக்கால் ஸம்ஶ்லேஷம் உண்டென்றும் அறியாதே அந்யபரமான இதரபதார்த்தங்களுமெல்லாம் தம்மைப் போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகின்றனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாமே நோவுபடாநிற்பர்? இவருக்கு ப்ரியாப்ரியங்கள் ஒருகாலும் முடியாதே பர்யாயேண உண்டாயிருக்கையாலே இவருக்குச் சிந்தயந்தியுடையபடி நித்யமாய்ச் செல்லாநிற்கு மென்பர்கள். சேதநர்க்கு அந்நபாநாதிகளே தாரகபோஷக போக்யங்களாய்ச் செல்லாநிற்க, இவரை பகவத்குணைக தாரகரென்னக்கூடுமோ? என்னில்; - திருவயோத்யையிலும் கோஸலஜநபதத்திலுமுள்ள ஸ்தாவர ஜங்கமங்களுடைய ராமகுணைகதாரகங்களாயிருக்கும்படியை அநுஸந்தித்து இதுவுங்கூடுமென்று கொள்வது. இப்படியிருக்கிற இவர்க்கு எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷமாவது - ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான ஜ்ஞாநஸாக்ஷாத்காரம்; விஶ்லேஷமாவது - பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து அது பெறாமையாலே மாநஸாநுபவத்துக்கு வந்த கலக்கம். ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தனாய் ஸர்வநியந்தாவாய் நிரவதிகக்ருபாவானுமாயிருந்துள்ள எம்பெருமான் இவருடைய இவ்வநுபவத்தை முடிய நடத்தாதே விச்சேதிப்பித்ததுக்கு ப்ரயோஜநமென்? என்னில்,—திருவயோத்யையிலும் திருக்குரவையிலும் பிரிந்த பிரிவுபோலே இவர்க்கு அநுபூதகுணங்கள் ஸாத்மிக்கவும், மேன்மேலென த்ருஷ்ணை பிறக்கவும். இவர்க்கு எம்பெருமான்பக்கல் பிறந்த ஆசை முதிர்ந்து நினைத்தபடி ஸம்ஶ்லேஷிக்கவும் பெறவிட்டவாறே ஶோகமோஹங்கள் பிறக்கும். இப்படியுள்ள கலவியாலும் பிரிவாலும் ஆழ்வாருக்குப் பிறந்த தஶை அந்யாபதேஶப்பேச்சைப் பேசுவிக்கும். இப்ப்ரபந்தங்களில் ஸூக்திகள் சில-ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூப ப்ரதிபாதகங்களாயிருக்கும்; சில - ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூபவிஷயமாயிருக்கும்; சில - ப்ராப்த்யுபாயத்தைச் சொல்லாநிற்கும்; சில - பலத்தைச் சொல்லும்; சில - ப்ராப்த்யுபாயவிரோதிகளைச் சொல்லாநிற்கும்; அவஶிஷ்டமானவை இவ்வர்த்தங்களுக்கு உபபாதகங்களாயிருக்கும். இவற்றில் உத்தேஶ்யம் பலம்; அதாவது - கைங்கர்யம்; ததர்த்தமாக மற்றுள்ள நாலர்த்தமும் சொல்லுகிறது.

இனி இவற்றில் ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் த்வதநுபவவிரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேணுமென்று எம்பெருமான் திருவடிகளிலே அர்த்திக்கிறார். திருவாசிரியத்தில் நிவ்ருத்த ஸம்ஸாரர்க்கு விஷயபூதனான எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவித்து ப்ரீதராகிறார். பெரிய திருவந்தாதியில் நிரதிஶயபோக்யனான எம்பெருமானை அநுபவிக்கையாலே ததநுகுணமாக த்ருஷ்ணை பிறந்து த்ருஷ்ணாநுகுணமாக அவனைப் பேசியும் நினைத்தும் தரிக்கிறார். திருவாய்மொழியில் இவருடைய த்ருஷ்ணாநுகுணமாக ஶ்ரிய:பதியாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனுமாய்த் தனக்குத்தகுதியான திவ்யமங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்தையு முடையனாய் திவ்யபூஷணபூஷிதனுமாய் ஶங்க சக்ராதி திவ்யாயுததரனுமாய் பரமவ்யோமத்தில் ஆநந்தமயமான திவ்யாஸ்தாநரத்நமண்டபத்திலே "வைகுண்டே து" என்கிறபடியே பிராட்டிமாரோடேகூட திவ்யஸிம்ஹாஸநத்திலே வீற்றிருந்தருளி அஸ்தானே பயஶங்கிகளான அயர்வறுமமரர்களாலே அநவரதபரிசர்யமாண சரணநளிநனாய்க்கொண்டு, அங்கு அங்ஙனே செல்லாநிற்க, ஸ்வஸங்கல்பாயத்தஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திகமான ஸ்வேதர ஸமஸ்தத்தையும் தனக்கு ஶரீரதயா ஶேஷமாக வுடையனாய் அந்தராத்மதயா சேதநாசேதநங்களையடைய வ்யாபித்து, தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாய், நாராயணாதி நாமங்களைத் தனக்கு வாசகமாகவுடையனாய், ஏவம்விதனாக உபநிஷத்ப்ரஸித்தனுமாய், இப்படி ஸர்வவிஸஜாதீயனாயிருந்துவைத்து அப்ராக்ருதமான தன்னுடைய திவ்யவிக்ரஹத்தை இதரஸஜாதீய மென்னலாம்படி யாக்கி ஆஶ்ரித வாத்ஸல்யத்தாலே தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாய் வந்து திருவவதாரம்பண்ணியருளும் ஸ்வ

ஹாவனுமாய், தன்னுடைய திருவவதாரங்களிலும் உதவப்பெறாத பாக்யஹீநருக்கும் இழக்க வேண்டாதபடி ஸர்வாபராதஸஹனாய், பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனுமாய்க்கொண்டு ஆஶ்ரிதர்க்கு அத்யந்தபராதீநனுமாய், அவர்களுடைய இச்சாதீநமான போஜநஶயநாதிகளையுடையனுமாய், ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனுமாயிருக்கிற தானே ஆஶ்ரிதஸௌலபத்வார்த்தமாகக் கோயில் திருமலை தொடக்கமான திவ்யதேசங்களிலே வந்து நின்றருளியும், அவ்வளவு செல்லமாட்டாத ஸம்ஸாரிகளும் இழவாதபடி தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே க்ராமங்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளியும், விஷயபரதந்த்ரனான இவன் செய்தவற்றை ஸாங்கஸமாராதநமாகக் கைக்கொண்டருளி ருசியைப்பிறப்பித்து இவனுக்கு இவ்விடந்தன்னிலேயிருக்கச்செய்தே போகமோக்ஷங்களைக் கொடுத்தும், இப்படியுள்ள ஸர்வேஶ்வரத்வத்துக்கும் ஆஶ்ரிதாநுக்ரஹத்துக்கும் ஏகாந்தமான படிகளால் பரிபூர்ணனான எம்பெருமான் தன்னைத்தானே நிர்ஹேதுகக்ருபையினாலே காட்டியருளக் கண்டு அநுபவித்துத் தாம் முதலிலே அபேக்ஷித்தபடியே தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தமாகிற ப்ரதிபந்தகத்தை ஸவாஸநமாக அறுத்துக்கொடுக்கையாலே, நித்யவிபூதியிலே நித்யஸூரிகளோடே எம்பெருமானைப் பெற்று க்ருதார்த்தராகிறார். இனிச் சொல்லவேண்டுவனவெல்லாம் அவ்வவதிருவாய்மொழிகள்தோறும் சொல்லக் கண்டுகொள்வது.

முதல்திருவாய்மொழியிற் சொல்லிற்றாயிற்று என்? என்னில்; — நாநாரத்நபரிபூர்ணமாய் அபரிச்சேத்யமான கடலை முந்துறத் திரளக்கண்டாற்போலே ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் பரிபூர்ணனாய், எல்லாப்படியாலும் எல்லாரிலும் மேற்பட்டு ஸர்வேஶ்வரனாய், ஶ்ரிய:பதியாய், அபௌருஷேயமாய்க்கொண்டு ஸூத்ருடப்ரமாணமான ஶ்ருதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்டுள்ள எம்பெருமானை பாஹ்யகுத்ருஷ்டிகளால் அவிசால்யமாம்படி அவன் ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து அவ்வநுபவஜநித ப்ரீதி உள்ளடங்காமையாலே அநுபவித்தபடியே ஸவிபூதிகனான எம்பெருமானைப் பேசி ஏவம்விதனான அவன் திருவடிகளிலே அடிமை செய்து உஜ்ஜீவியென்று தம்முடைய திருவுள்ளத்தைக்குறித்து அநுஶாஸிக்கிறார். கடலைத் திரளக் கண்டானொருவன் அதிலுள்ள திரைகளையும் மற்றும் அங்குள்ள ஸத்த்வங்களையும் ரத்நாதிகளையும் தனித்தனியே காணுமாபோலே முதல்திருவாய்மொழியில் திரள அநுபவிக்கப்பட்ட எம்பெருமானுடைய ஓரோவகைகளிலே ஓரோ திருவாய்மொழியாய்ச் செல்லுகிறது, இரண்டாந்திருவாய்மொழி தொடங்கி மேலெல்லாம். இப்படி செய்தார் இவரேயல்லர்; பாரதராமாயணாதிகளைப் பண்ணின வ்யாஸாதிகளும் ஸங்க்ஷேபவிஸ்தரங்களாலே தந்தாமுடைய ப்ரபந்தங்களை ப்ரபந்தீகரித்தார்களிறே.

முதற்பாட்டுக்குக் கருத்து - அகிலஹேயப்ரத்யநீக கல்யாணகுணாத்மகனாய், அக்குணங்களுக்கும் நிறங்கொடுக்கவற்றான திவ்யதேஹயுக்தனாய், ஶ்ரிய:பதியாய், இந்த்ரஸௌந்தர்யாதிகளுக்கு போக்தாக்களான அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாயிருந்துவைத்துத் தன்னுடைய நிரவதிக க்ருபையாலே என்னுடைய தோஷாகரத்வத்தைப் பாராதே என்னுடைய அஜ்ஞாநமெல்லாம் நீங்கும்படி ஸ்வவிஷய பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தை நிர்ஹேதுகமாக ஸாதரனாய்க்கொண்டு தந்தருளினான்; ஆனபின்பு, அவன் திருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவிப்போமென்று திருவுள்ளத்தோடேகூட எம்பெருமானுக்கு அடிமைசெய்கையிலே ப்ரவ்ருத்தராகிறார். இத்தால், ப்ரபந்தாரம்பத்திலே வஸ்துநிர்த்தேஶ நமஸ்காரங்களும் பண்ணப்பட்டனவாய் விழுந்தது.

திருவிருத்தத்தில் தேவரீரை அநுபவிக்கைக்கு விரோதியான தேஹஸம்பந்தத்தை யறுத்துத் தந்தருளவேணு மென்கிறார்; இப்படி ஸம்ஸாரம் அத்யஸஹ்யமென்று கைவிட்ட இவரைக்கொண்டு ஈஶ்வரன் நாட்டுக்கு ஒரு வெளிச்சிறப்பைப் பண்ண நினைத்திருக்கிறானொருவனாகையாலே, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு விஷயமான தன்னுடைய ஸ்வரூபாதிகளைத் தானே இவர்க்குக் காட்டிக்கொடுக்கக் கண்டு அநுபவித்து ப்ரீதராகிறார், திருவாசிரியத்தில்; அவ்விஷயாநுகுணமாக த்ருஷ்ணைபிறந்து அந்தத்ருஷ்ணாநுகுணமாகப் பேசியும் நினைத்தும் தரிக்கிறார், திருவந்தாதியில்; இவ்விடாய்க்கு அநுகூலமாக ஶ்ரிய:பதியாய் நித்யவிபூதியிலே அயர்வறுமமரர்களுக்கு அழகோலக்கங் கொடுத்துக்கொண்டிருக்கிற பெரிய மேன்மையையும், இப்பால் லீலாவிபூதிநிர்வஹணார்த்தமாக வ்யூஹவிபவஅர்ச்சாவதார அந்தர்

யாமித்வ பர்யந்தமாகத் தன் அநுக்ரஹத்தாலே பார்த்துக்கொண்டிருக்கிற நன்மையையும், அவன் நிர்ஹேதுகமாகக் காட்டிக்கொடுக்கக் கண்டு அநுபவித்து, அதுக்குமேலே தமக்குப் பரபக்த்யாதிகளைப் பிறப்பித்துத் தாம் ஆசைப்பட்டபடியே தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தையும் ஸவாஸநமாக அறுத்து எம்பெருமான் பெரிய திருவடியை மேற்கொண்டருளி நாய்ச்சிமாரும் தானுமாக வந்து தோற்றி, தன்படிகளொன்றுங் குறையாமை வந்து "நயாமி" என்கிறபடியே இவரைப் பரமபதத்தேறக் கொண்டுபோய், இவர் முதலிலே அபேக்ஷித்தபடியே நித்ய கைங்கர்யத்திலே அந்வயிப்பிக்கப்பெற்று க்ருதார்த்தராகிறார், திருவாய்மொழியில். திருவாய்மொழிக்கெல்லாம் ஸங்க்ரஹம் - முதல் திருவாய்மொழி.

---

## குணுக்கரம்பாக்கம் ராமாநுஜசீயர் செய்தருளின அரும்பதவுரையில் ஈட்டின் அவதாரிகை.

---

ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேச்வரன் "வைகுண்டே து பரே லோகே" இத்யாதிப்படியே ஸ்ரீவைகுண்டத்திலே ஆநந்தமயமான திவ்யாஸ்தாநமண்டபத்திலே திவ்யஸிம்ஹாஸநத்திலே ஏழுலகும் தனிக்கோல்செல்ல வீற்றிருந்தருளி அஸ்தாநே பயசங்கிகளான அயர்வறுமமரர்களாலே அநவரதபரிசர்யமாண சரணநளினனாய் நித்யமுக்தரை ஆநந்திப்பித்துக்கொண்டு தானும் நிரதிசயாநந்தியாய்ப் போராநிற்க, அந்த நித்யமுக்தரோபாதி லீலாவிபூதியிலுள்ளாரும் தன்திருவடிகளை ஆச்ரயித்து அடிமைசெய்து வாழலாயிருக்க, அத்தையிழந்து நோவுபடுகிறபடியைக் கண்டு வ்யாகுலனாய், ஸ்வசரணகமலஸமாச்ரயணத்துக்கு உடலாகக் கரணகளேபரங்களைக் கொடுத்தும், சாஸ்த்ரப்ரதாநம்பண்ணியும், ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணி வடிவழகைக்காட்டியும், தர்மஸம்ஸ்தாபநம்பண்ணியும் செய்தவிடத்திலும் கார்யகரமல்லாமையாலே 'விஜாதீயரான நம்மால் இவர்களைத் திருத்தவொண்ணாது; ஸஜாதீயரைக்கொண்டு திருத்தவேணும்' என்று பார்த்துத் தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே ஸஜாதீயபுத்திபண்ணலாம்படியான ஆழ்வாரைத் திருவவதரிப்பித்தருளினான். இவ்வாழ்வாராகிறார் - ருஷிகளையும் மற்றையாழ்வார்களையும் போலே கர்மாதிஸாத்ய ஜ்ஞாநாதிகரன்றியே லௌகிகஜ்ஞாநம் நடையாடாநிற்க பகவத்ப்ரஸாதத்தாலே ஒருகாலவிசேஷத்திலே பிறந்த தத்த்வஜ்ஞாநருமன்றியே திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமாபோலே பகவந் நிர்ஹேதுக கடாக்ஷ லப்த ஸஹஜஜ்ஞாநபக்திவைராக்யாதிகளையுடையராகையாலும், "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்று தத்த்வ ஜ்ஞாநப்ரவர்த்தநத்தில் ப்ரதமாசார்யராக விலக்ஷணபரிக்ருஹீதராகையாலும், ஈச்வரன்தானே 'லோகோஜ்ஜீவநார்த்தமாக இவர் ஆவர்' என்று அங்கீகரித்து இவரைக்கொண்டு இப்ப்ரபந்தங்களை ப்ரவர்த்திப்பிக்கையாலும், அத்யந்தவிலக்ஷணராயிருப்பாரொருவராயிற்று. இப்படி விலக்ஷணரான ஆழ்வார் பகவத்ஸ்வரூபரூபகுண விபூத்யாதிகளை விசததமமாக அநுபவித்து அவ்வநுபவ பரீவாஹரூபேண பேசுகிற பாசுரமானது "மா நிஷாத" இத்யாதிச்லோகம்போலே திருவிருத்தம் திருவாசிரியம் திருவந்தாதி திருவாய்மொழி என்கிற நாலுப்ரபந்தமாய் ப்ரவ்ருத்தமாயிற்று.

இவற்றில் சரமப்ரபந்தமான திருவாய்மொழிக்குப் பரமகாருணிகரான நம்பிள்ளை வ்யாக்யாநம் பண்ணியருளுவதாகத்திருவுள்ளம்பற்றி இப்ப்ரபந்தம் ஸர்வர்க்கும் பரிக்ராஹ்யமென்கைக்காக ப்ரபந்த தத்வக்த்ரு தத்ப்ரதிபாத்ய வைலக்ஷண்யங்களை அருளிச்செய்கிறார் மஹாப்ரவேசத்தாலே; அதில் ப்ரதமம் வக்த்ருவைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார் "ஸ்ரிய:பதியாய்" என்று தொடங்கி, "தொழுதெழென் மனனேயென்கிறார்" என்னுமளவாக. மேல் "இப்படி பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளை" என்று தொடங்கி "அந்யாபதேசப்பேச்சைப் பேசுவிக்கும்" என்னுமளவாக ப்ரபந்தவைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார். அநந்தரம், "இப்ப்ரபந்தங்களில் ஸூக்திகள்" என்றதொடங்கி "பெரியவங்கிப்புரத்துநம்பி திருவாய்மொழிக்கு வாக்யார்த்தமாக அருளிச்செய்தார்" என்னுமளவாக ப்ரதிபாத்யவைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார். அநந்தரம் இரண்டாம் ஸ்ரிய:பதியாலே - திருவாய்மொழியினுடைய த்வயார்த்தவிவரணரூபத்வத்தை அருளிச்செய்கிறார். மூன்றாம் ஸ்ரிய:பதியால்-இப்ப்ரபந்தசதுஷ்டயத்துக்கும் முக்ய தாத்பர்யார்த்தகதந பூர்வகமாக இப்ப்ரபந்த சதுஷ்டயத்திலும் இவர்க்குண்டான தசையை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார். "மஹாப்ரவேசத்துக்கெல்லாம் ப்ரபந்தவைலக்ஷண்யமொன்றிலே நோக்கு" என்று சொல்வாருமுண்டு. இவ்வைலக்ஷண்யத்ரயமும் ஆழ்வாருக்கு விவக்ஷிதமென்று "மாதவன்பாற் சடகோபன்" என்கிற பாட்டில் பூர்வாசார்யர்களாலே வ்யாக்யாதமாயிற்றிறே. இவ்வைலக்ஷண்யத்ரயமும் "வால்மீகேர் முநிஸிம்ஹஸ்ய" இத்யாதியாலும் "வாக்ஜந்ம வைபவம் ...” இத்யாதியாலும், "வேதவேத்யே பரே பும்ஸி" இத்யாதியாலும், ஸ்ரீராமாயணத்திலும் சொல்லிற்றிறே.

---

நம்பிள்ளை திருவாய்மலர்ந்தருளின

# ஈடு முப்பத்தாறாயிரப்படியின் அவதாரிகை.

## மஹாப்ரவேசம் — முதல்ஸ்ரீய:பதி.

ஸ்ரீய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய்,

---

அதில் ப்ரதமம் ஸர்வேஶ்வரன் ஆழ்வாரை விஶேஷ கடாக்ஷம் பண்ணி யருளினபடியை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீய:பதியாய்' இத்யாதி முதல் வாக்யத்தாலே; இவ்வாக்யத்தால் பகவந்நிர்ஹேதுக கடாக்ஷலப்த திவ்யஜ்ஞாநவத்த்வரூப வைலக்ஷண்யம் சொல்லப்பட்டது. இத்தால், ஆப்ததமத்வம் பலிதம். ஆப்ததமத்வந்நாம-யதார்த்த தர்ஶித்வே ஸதி யதாத்ருஷ்டார்த்தவாதித்வம். இந்த வாக்யத்திலே விஶேஷ கடாக்ஷமும் தத்பலபூதாபரிச்சேத்யா ஆநந்தப்ரவாஹாவகாஹநமும் சொல்லுகையாலே, 'ஸ்ரீய:பதியாய்' இத்யாதி விசேஷணசதுஷ்டயமும் கடாக்ஷோபயோகித்வேநவும், கடாக்ஷத்தினுடைய பலாவ்யபிசாரோபயோகித்வேநவும் அநுஸந்தேயம். எங்ஙனேயென்னில்,—நித்யஸம்ஸாரி விஷயத்தில் ஸ்வதந்த்ரனான ஈஶ்வரனுடைய கடாக்ஷம் லக்ஷ்மீபுருஷகாரமின்றியிலே கூடாது; அத்தாலே சொல்லிற்று 'ஸ்ரீய:பதியாய்' என்று. இவ்விடத்தில் "யஸ்யா வீக்ஷ்ய முகம்", "விஷ்ணோஸ்த்வத்ப்ரஸாதாத்" இத்யாதிகம் அநுஸந்தேயம்.

பிராட்டி புருஷகாரமானாலும் சேதநனிடம் பச்சையை அபேக்ஷித்திருக்கும் அபூர்ணனாகில் நிர்ஹேதுக கடாக்ஷம் கூடாதே என்ன, — அதுக்காகச் சொல்லுகிறது 'அவாப்தஸமஸ்தகாமனாய்' என்று. இப்படி பூர்ணனானாலும் இத்தலையில் தோஷம் கண்டிருக்கச்செய்தே, இவளுக்காக வைநமாக நிர்ப்பந்தரூபேண கடாக்ஷிக்குமோ? என்ன, 'அத உக்தம் ஸமஸ்த இதி'. தோஷபோக்யத்வரூப வாத்ஸல்ய ஸௌஶீல்யாதி கல்யாணகுணாத்மக னென்றபடி. தோஷபோக்யத்வாதி ஹேதுபூதஸம்பந்தம் சொல்லுகிறது, 'ஸர்வேஶ்வரன்' என்று; ஸ்வாமித்வம்ஸம்பந்தம்; "ஸம்பந்தமநுஸந்தாய" என்னக்கடவதிறே. யத்வா, வ்யக்திவிஶேஷத்திலே நிர்ஹேதுககடாக்ஷம் கூடுமோ? என்ன, நிரங்குஶஸ்வதந்த்ரனாகையாலே கூடு மென்கிறார், 'ஸர்வேஶ்வரன்' என்று; இவ்விடத்தில் "பட்டத்துக்குஉரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது", "நாவஸ்யம் ஸ்வாதந்த்ர்யேண" இத்யாதிகம் அநுஸந்தேயம். ஸ்வாதந்த்ர்யம் கர்மாநுகுணோபேக்ஷைக்கும் ஹேதுவன்றோ? என்னுமிடத்தில், அத்தைக் கீழ்ப்படுத்தி உத்பவியாநின்றுள்ள தயாதிகுண விஶிஷ்ட னென்கிறார், 'ஸமஸ்த' இத்யாதியாலே. இப்படி தயாதிகுண விஶிஷ்டனானாலும், அபூர்ணத்வேந சேதநனிடம் பச்சையை அபேக்ஷிக்குமோ? என்னில், - அது வேண்டா, பூர்ணனென்கிறார், 'அவாப்த' இத்யாதியாலே. பூர்த்திக்கு ஹேது சொல்லுகிறது, 'ஶ்ரிய:பதியாய்' என்று. இப்படி கடாக்ஷோபயோகித்வத்தில் ஆரோஹாவரோஹவ்யாவர்த்யசோத்யங்கள் கண்டுகொள்வது. அநந்தரம் 'ஶ்ரிய:பதி'இத்யாதி விஶேஷணங்கள் கடாக்ஷத்தினுடைய பலவ்யாப்தத்வோபயுக்தங்களான பக்ஷத்திலே, கடாக்ஷம் பலவ்யாப்தமாகைக்கு அடி ஸ்வேச்சாக்ருதகார்யத்தில் ப்ரவ்ருத்திவிஹதிரஹிதநிரங்குஶஸ்வாதந்த்ர்ய மென்கிறார், 'ஸர்வேஶ்வரன்' என்று. கேவலம் ஸ்வாதந்த்ர்யம் கார்யகரமாகாதே; பலப்ரதத்வௌபயிக ஜ்ஞாந ஶக்த்யாதிகளும் வேணுமே என்ன, சொல்லுகிறார், 'ஸமஸ்த' இத்யாதி. ஆனாலும், அபூர்ணனாகில் நிர்ஹேதுகபலப்ரதாநம் கூடாதே என்ன, — அது வேண்டா; ஸர்வப்ரகாரபரிபூர்ணனென்கிறார், 'அவாப்த' இத்யாதியாலே. இந்தப் பூர்த்தி காதாசித்கையாகில் தந்மூலபலப்ரதத்வமும் காதாசித்கமாகையாலே, கடாக்ஷபலம் நியதமாகாதே? என்னுமிடத்தில், பூர்த்தி நித்யதாஹேதுபூத லக்ஷ்மீவைஶிஷ்ட்யம் சொல்லுகிறது, 'ஶ்ரிய:பதியாய்' என்று. அதவா, ஶ்ரிய:பதித்வம் ஸர்வாதிகலக்ஷணமாகையாலே, ஸர்வாதிக கடாக்ஷத்துக்கு ப்ரதிஹதியில்லாமையால் கடாக்ஷம் பலவ்யாப்த மென்கிறார், 'ஶ்ரிய:பதியாய்' என்று; ஶ்ரிய:பதித்வம் ஸர்வாதிகத்வே ப்ரயோஜகம் என்னுமிடத்தில் ப்ரமாணம்— "ஶ்ரிய:பதேர் தேவதேவஸ்ய", "க: ஶ்ரீ: ஶ்ரிய:" இத்யாதி; ஸர்வாதிகத்வேந தத்கடாக்ஷம் பலவ்யாப்தமானாலும் தீயமாநபலம் பரிமிதமாயிருக்குமோ? என்னில், —

ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேஶ்வரன்,

அதுவேண்டா; "வேண்டிற்றெல்லாந் தரும்" இத்யாதிப்படியே ஸர்வாபேக்ஷித ப்ரதத்வாநுகுண விபூதித்வயவத்தாயாத பூர்த்திமானென்கிறது, 'அவாப்த' இத்யாதியாலே. ஆனாலும், ப்ரதிபந்தக நிரஸநபூர்வக பலப்ரதத்வாநுகுண ஜ்ஞாநஶக்த்யாதி விஶிஷ்டனாகவேணுமே என்ன, சொல்லுகிறது, 'ஸமஸ்தகல்யாண' இதி. பூர்வோக்தாகாரத்ரயவிஶிஷ்டனானாலும் ஆஶ்ரிதபாரதந்த்ரனாகையாலே ஆஶ்ரிதராலே ப்ரதிருத்தனாய், கடாக்ஷம் பலியாதிருக்குமோ? என்னில், அது இல்லை; "ந த்யஜேயம் கதஞ்சந" என்னும் நிரங்குஶ ஸ்வதந்த்ரனென்கிறது, 'ஸர்வேஶ்வரன்' என்று. அதாவது - ஆஶ்ரிதபாரதந்த்ரனானாலும் "ஸ்ருஜநமேயநம் ஹரிரேஷ" இத்யாதிவத் ஆஶ்ரிதரையநுஸரித்தும் கார்யஞ்செய்யும் ஸ்வதந்த்ரனென்று கருத்து. இப்படி "குணசதுஷ்டயமும் கடாக்ஷோபயோகித்வபக்ஷத்தில் ஸௌலப்யபரம்; கடாக்ஷத்தினுடைய பலாவ்யபிசாரித்வோபயோகித்வபக்ஷத்தில் பரத்வபரம்" என்பர்கள். இவ்வாக்யத்தில் பிராட்டி ஈஶ்வரனுக்கு ப்ரதாநநிரூபிகையாகையாலும், ஸர்வப்ரகாராதிஶயஹேதுவாகையாலும்,புருஷகாரத்வேந பகவத்கடாக்ஷத்திலும் தத்பலாவ்யபிசாரித்வத்திலும் ப்ரதாநப்ரயோஜிகையாகையாலும், ப்ராரிப்ஸித க்ரந்தத்தினுடைய நிஷ்ப்ரத்யூஹ பரிஸமாப்திவுடகதயா மங்களரூபையாகையாலும்'ஶ்ரிய:பதியாய்' என்கிறதுக்குப்ராதம்யம்; விபூதித்வயமும் மிதுநசேஷமாகையாலே விபூதித்வயவத்தாரூபாவாப்தஸமஸ்தகாமத்வத்துக்குத் ததாநந்தர்யம்; பூர்ணனுடையவேகுணங்கள் கல்யாணகுணங்களாயும் நிர்ஹேதுகமாகக் கார்யகரங்களுமாகின்றனவென்று ததாநந்தர்யம், ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வத்துக்கு உக்தாகாரத்ரயநிரூப்யமாகையாலும்,விஶேஷ்ய ஸமர்ப்பகமாகையாலும் ஸர்வாநந்தர்யம்'ஸர்வேஶ்வரன்'என்கிறதுக்கென்று விசேஷணசதுஷ்டயத்துக்கும் க்ரமம்.

இன்னமும், இந்நாலுகுணங்களும் உபாயத்வோபயோகியான ஸௌலப்யத்துக்கும் உடலாய் உபேயத்வோபயோகியான ஜ்ஞாநஶக்த்யாதி குணோபேதமான பரத்வத்துக்கும் உடலாயிருக்கும். எங்ஙனே? என்னில்,—ஶ்ரிய:பதித்வம்,-"அஸ்யா ஸஹஸ்ராக்ஷீகேஶ:","யஸ்யா வீக்ஷ்ய"இத்யாதிப்படியே ஸௌலப்யத்துக்கும் உடலாய்,"ஸ்ரவ்யேயம் ஹி தநூத்ஜ:"இத்யாதிப்படியே பரத்வத்துக்கும் உடலாயிருக்கும்; அவாப்தஸமஸ்தகாமத்வமும்-பூர்த்தி கைவாங்காதே மேல்விழுகைக்குஉடலாமத்தனையாகையாலே ஸௌலப்யத்துக்கும் உடலாய், பரத்வத்துக்கும் உடலாயிருக்கும்; ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வமும் - ஜ்ஞாநாதி குணங்கள் பரத்வஹேதுவாய், வாத்ஸல்யாதி குணங்கள் ஸௌலப்யத்துக்கும் உடலாயிருக்கையாலே, பரத்வஸௌலப்யங்களுக்கு உடலாயிருக்கும்; ஸர்வேஶ்வரத்வமும் "ஸம்ஸ்ரேஶீதத்வஸம்வைநாஸ" என்று ஸம்பந்தங்கொண்டு கிட்டுகைக்கு உடலாய் ஸர்வாதிகனாகையாலே பரத்வத்துக்கும் உடலாயிருக்கும். இன்னமும் "கவிஃ" இத்யாதிஶ்லோகம் ஶாஸ்த்ரஸங்க்ரஹமானாற்போலே இச்சூர்ணையும் இத்திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப்படுகிற அர்த்தபஞ்சகத்தையும் த்வயார்த்தத்தையும் ஸங்க்ரஹேண சொல்லுகிறது. எங்ஙனேயென்னில், - "ஶ்ரிய:பதியாய்" இத்யாதியாலே ப்ராப்ய ப்ராபகபூத பரஸ்வரூபம் சொல்லிற்று; "மாறிமாறி" என்று தொடங்கி "நித்யஸம்ஸாரியாய்ப்போந்த" என்னுமளவாலே விரோதிஸ்வரூபமும், "அடியையடைந்து" என்று தொடங்கி "மூழ்கினன்" என்னுமளவாலே பலஸ்வரூபமும், "இவரை" என்றும் "யான்" என்றும் சொல்லுகையாலே ஆத்மஸ்வரூபமும், "விசேஷகடாக்ஷம் பண்ணி" என்றும் "அருளினான்" என்றும் சொல்லுகையாலே உபாயஸ்வரூபமும் சொல்லிற்று. அப்படியே "ஶ்ரிய:பதியாய்" இத்யாதி விசேஷணசதுஷ்டயத்தாலே பூர்வோத்தர வாக்யகத ஶ்ரீமந்நாராயண ஶப்தார்த்தமும், "மாறிமாறி" இத்யாதியாலே நமஶ்ஶப்தநிவர்த்யாவித்யாதி பாஹ்யவிரோதிகளும், "அடியை" என்று சரணஶப்தார்த்தமும், "அடைந்து" என்று க்ரியாபதார்த்தமும், "விசேஷ கடாக்ஷம்பண்ணியருளினான்" என்று ஶரணஶப்தார்த்தமும்,"யான்" என்று "வ்யவஸ்யே" என்கிற உத்தம புருஷனால் ஆக்ஷிப்தனான அதிகாரியும், "ஈறிலின்பத்திருவெள்ளம்மூழ்கினன்"என்று சதுர்த்த்யர்த்தமும், "உள்ளந்தேறி" என்று ஸ்வபோக்த்ருத்வபுத்திராஹித்யரூப நமஶ்ஶப்தார்த்தமும் சொல்லிற்று. இன்னமும் இச் சூர்ணையாலே "ஶ்ரிய:பதியாய்" இத்யாதியால் வஸ்துநிர்த்தேசமும், "அடியையடைந்து" என்கையாலே நமஸ்காரமும், "ஈறிலின்பத்திருவெள்ளம் யான் மூழ்கினன்" என்று ஸ்வலாபாநுஸந்தாநம் பரோபதேஶகர்ப்பமாகையாலே "எம்பெருமான் திருவடிகளையாஶ்ரயித்து நிர்மலாந்த:கரணராய் நித்யாபரிச்சேத்யாநந்த ப்ரவாஹத்தில் மூழ்குங்கள்" என்று ஆசீஸ்ஸும் பலிதமாகையாலே அவிக்நபரிஸமாப்தி ப்ரசயகமநார்த்தமாக ப்ரபந்தாரம்பத்தில் பண்ணக்கடவ வஸ்துநிர்த்தேஶநமஸ்காராசீஸ்ஸுக்களாகிற த்ரிவிதமங்களமும் ஆசரிக்கப்பட்டது. 'ஸர்வேஶ்வரன் விசேஷகடாக்ஷம் பண்ணியருளினான்' என்று அந்வயம்.

* "மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து" என்கிறபடியே ஜந்மபரம்பரைகளிலே தோள்மாறி நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த இவரை "அடியையடைந்துள்ளந்தேறி ஈறிலின்பத்துஇருவெள்ளம் யான்மூழ்கினன்" என்று முதலிலே தம்திருவாயாலே சொல்லவல்லராம்படியாக முதலடியிலே விசேஷ கடாக்ஷம்பண்ணியருளினன். "[Grantha text] | [Grantha text]

## ஈட்டின் ப்ரமாணத்திரட்டு.

([Grantha text]) [Grantha text]

"[Grantha text] | [Grantha text] || [Grantha text] | [Grantha text] ||

---

கடாக்ஷோத்கர்ஷவிந்யர்த்நமாகத் தத்பூர்வாவஸ்தையில் இவருடைய ஆகாரத்தை அருளிச்செய்கிறார், 'மாறிமாறி' இத்யாதி 'போந்த இவரை' என்னுமளவாக. இத்தால், கடாக்ஷத்தினுடைய நிர்ஹேதுகத்வமும் ஸூசிதம். தோள்மாறுகையாவது - சிவியார் ஒருதோள்நொந்தால் மற்றொரு தோளிலே மாற்றிக்கொள்ளுமாபோலே, ஒரு ஜந்மம் போனவுடனே ஜந்மாந்தரத்தை அடைகை. இவ்விடத்தில் "[Grantha text]", "[Grantha text]" இத்யாதிகம் அநுஸந்தேயம். 'நித்யஸம்ஸாரியாய்ப்போந்த இவர்' என்கையாலே - நித்யமுக்தேஶ்வரர்களிலே ஒருவர் ஆழ்வாராக அவதரித்தாரென்பது இவருடைய ப்ரபாவாதிஶய நிபந்தந மென்று கருத்து. கடாக்ஷபலத்தை அருளிச்செய்கிறார், 'அடியையடைந்து' இத்யாதி,"சொல்லவல்லராம்படியாக' என்னுமளவும். "அடியையடைந்து உள்ளந்தேறி" என்கையாலே - கர்மாநுஷ்டாநத்தாலே மநஸ்ஸு நிர்மலமாய் ஈஶ்வரனை ஸாக்ஷாத்கரித்தவர்களில் வ்யாவ்ருத்தி; இதுக்கு த்ருஷ்டாந்தமாக "[Grantha text] | [Grantha text]" என்றத்தை அருளிச்செய்வர். "'உள்ளந்தேறி' என்று - ஜ்ஞாநத்தைச் சொல்லுகையாலே ப்ராமாண்யமும் 'மூழ்கினன்' என்று குமிழ்நீர் உண்ணும்போதில் சப்தம்போலே இப்ப்ரபந்தம் என்று ஸூசிதமாகையாலே பக்தி வழிந்த சொல்லென்று தோற்றுகையாலே நியாத்யாதிமூலத்வாபாவமும் ஸித்திக்கிறது என்று திருவுள்ளம்" என்று பர்வதாகாரம். ஈறிலின்பத்து இருவெள்ள மென்று அந்வயம். "அத்து" என்று நிரர்த்தக அவ்யயபதம். ஈறு - நாசம்; இல் - இல்லாமை; ஆக, நித்ய மென்றபடி. இத்தால், ஸ்வர்க்காத்யைஶ்வர்யவ்யாவ்ருத்திः. 'இரு' என்று - பெருமையாய், அபரிச்சேத்யதா வாசி. இத்தால், கைவல்யவ்யாவ்ருத்திः. இருவெள்ள மென்கையாலே மூழ்கினனென்கிறது. முதலிலே - ஸம்ஸாரத்திலே; பக்த்யங்குரதசையாகவுமாம். க்ரமேண, கர்மம் ஜ்ஞாநம் பக்தி பரபக்தி பரஜ்ஞாநம் பரமபக்தி மூர்த்தந்யநாட்யுத்க்ரமணம் அர்ச்சிராதிகதிப்ராப்தி தேசவிசேஷப்ராப்தி பகவத்ப்ராப்தி கைங்கர்யப்ராப்தி ஏததநந்தரம் சொல்லும் வார்த்தையை, ப்ரதமதஏவ விக்ரஹத்தோடே ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தேதானே அதிலும் பக்த்யங்குரதசையிலேதானே அதிலும் ப்ரபந்தாதியிலே தானே என்றபடி. 'சொல்லவல்லராம்படி' என்றது - விஸ்ரம்பாதிசயம் சொன்னபடி. முதலடியிலே - முழுச்சொல்லு. கார்யத்துக்கு முதலடி - ஸாதநதசை. நிர்ஹேதுகத்வே தாத்பர்யம். இங்கே "[Grantha text]" இத்யாதிகம் அநுஸந்தேயம்.

'விசேஷகடாக்ஷம் பண்ணியருளினன்'—விசேஷ கடாக்ஷம் பண்ணுகை யாவது - "மயர்வற மதிநலமருளினன்"என்கிறபடியே பக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தை யுடையராம்படி ஸங்கல்பிக்கை. யத்வா, கடாக்ஷமாவது-இதரவிஷய வைராக்யபூர்வகமாக பகவதநுபவைகபரத்வரூபஸ்வோஜ்ஜீவநமாத்ர ஹேதுவாயிருக்குமதாய், விஶேஷகடாக்ஷமாவது - ப்ரபந்தநிர்மாணமுகேந அகிலோஜ்ஜீவயித்ருத்வாபாதகமாயிருக்குமதென்னவுமாம். இப்படி அவன்கடாக்ஷம் பலித்தவிடமுண்டோ? என்ன, உண்டென்கைக்கும்,கடாக்ஷம்பண்ணினதும்

---

* திருவாய்மொழி - ௨, ௬, ௮.

உந்மேஷதாஹ மஹாநந்தா"என்கிறபடியேஸ்ரீப்ருந்தாவநத்தை"உத்புல்லபத்மபத்ராக்ஷ" என்னும்படி கடாக்ஷித்தாற்போலே தத்த்வங்களை விஶதமாக அறியவல்லராம்படி கடாக்ஷித்தான்.

இதரதர்ஶநங்களில் தத்த்வங்களைப் பதினறென்பார் ஆறென்பாராய், பஹுப்ரகாரங்களிலே விப்ரதிபத்திபண்ணுவர்கள்.

---

ப்ர.— உத்புல்லபத்மபத்ராக்ஷ ஶ்ரீவத்ஸாங்கித வக்ஷஸே । நமோஸ்து தே ஜகந்நாத க்ருஷ்ணாய ॥

---

இன்னதுக்காகவென்றும், பின்புஅவர்தாம் இன்னபடியானரென்றும்அருளிச்செய்கிறர் 'ப்ருந்தாவநம்'இத்யாதி. புத்திஸமாதாநார்த்தம் த்ருஷ்டாந்தோபந்யாஸ:. அயம்ஶ்லோக: ஶ்ரீவிஷ்ணுபுராணே பஞ்சமாம்ஶே ஷஷ்டேத்யாயே. இந்த ஶ்லோகத்துக்கு அர்த்தம்-ப்ருந்தாவநம்-நெரிஞ்சிற்காடு, பகவதா-விசித்ரஶக்திமானய், அக்லிஷ்டகர்மணா - க்லேஶம்விநா பலவத்கர்ம ஸாதகனய், க்ருஷ்ணேந - "க்ருஷிர்பூவாசக: ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதிவாசக: । விஷ்ணுஸ்தத்பாவயோகாச்ச க்ருஷ்ணோ பவதி ஸாத்வத" என்று சொல்லப்பட்டிருந்துள்ள குணயோகத்தையுடைய க்ருஷ்ணனலே, ஶுபேந—அவ்யாஹதேந, மநஸா - ஸங்கல்பரூபஜ்ஞாநேந, த்யாதம் - விஷயீக்ருதம், கவாம்வ்ருத்திம் - பஶுவ்ருத்தியை, அபீப்ஸதா - ஆபிமுக்யேந ஆசைப்படுமவ னென்றபடி. இத்தால், கோவ்ருத்தியே பல மென்றதாயிற்று. 'உத்பந்ந' இத்யாதி - உத்பந்நஶப்த: கோமலத்வாநுவ்ருத்திபர:. நவஶப்த: அத்யந்தாத்ருஷ்டத்வ பரஸ்ஸந், ஸ்த்தலாந்தரீய கோமலஶஷ்பாந்தர வைலக்ஷண்யம் வ்யஞ்ஜயதி. இந்த வசநத்தை இங்கேயெடுக்கையாலே இவருடைய ஜ்ஞாநத்துக்கு வ்யாஸாதி பரமருஷிகளுடைய ஜ்ஞாநத்திற்காட்டில் வைலக்ஷண்யமும், அந்த ஜ்ஞாநத்துக்கு பகவதநுராகாந்தரிதத்வமும் தோற்றுகிறது. 'ஶஷ்பாட்ய' மென்று ததர்த்தாநுவாதமாதல், ப்ருந்தாவந விஶேஷணத்வ விவக்ஷயாவாதல், நபும்ஸகலிங்க ப்ரயோக:. நிர்ஹேதுகத்வப்ரகாஶநார்த்தமாகவும் கோவ்ருத்திவஜ் ஜகத்ரக்ஷணம் ஈஶ்வரனுக்கு அபிமதமென்கைக்காகவும் கோவ்ருத்யர்த்தப்ருந்தாவநகடாக்ஷமே த்ருஷ்டாந்தத்வேநோபாத்தம். 'ப்ருந்தாவநகடாக்ஷத்துக்குப்போலே பரம்பரயா ப்ரயோஜநம் தார்ஷ்டாந்திகத்திலுண்டோ' என்ன, அருளிச்செய்கிறர் - 'தத்த்வங்களை விஶதமாக' என்று. விஶதமாக அறிகையாவது - பரோபதேஶாநுகுணவைஶத்ய யுக்தமாம்படி அறிகை. இத்தால், ஆழ்வாருக்கு ஜ்ஞாநத்தையுண்டாக்கி, தந்முகேந ஸம்ஸாரிகளுக்கும் தத்த்வஜ்ஞாநத்தை உண்டாக்கி, தஜ்ஜீவநரூபஸ்வப்ரயோஜந லாபார்த்தமாகவும், "தென்னவென்னும்" இத்யாதிப்படியே தனக்கு ஆழ்வார்அருளிச்செய்த ப்ரபந்த ஶ்ரவணஜநிதாநந்தார்த்தமாகவும், "தொண்டர்க்கமுதுண்ண" இத்யாதிப்படியே தத்ப்ரபந்தமுகேந ஸ்வாஶ்ரிதர்களை க்ருதார்த்தராக்குகைக்கும் கடாக்ஷித்தானென்றபடி.

"தத்த்வங்களை விஶதமாக அறியவல்லராம்" என்கைக்கு 'தத்த்வங்களில் ஸந்தேஹமுண்டோ' என்ன, தத்த்வவிஷயமான விப்ரதிபத்திகளை அருளிச்செய்துகொண்டு "நம்தர்ஶநத்துக்குத் தத்த்வங்கள் மூன்று"என்ற ஸ்வவஸித்தாந்தத்தையும் அருளிச்செய்கிறர், 'இதர தர்ஶநங்களில்'இத்யாதி. 'பதினறு, ஆறு' என்றது - வக்ஷ்யமாண தத்த்வத்ரயவிருத்தாகாரம். ப்ரமாணப்ரமேயஸம்ஶய ப்ரயோஜநத்ருஷ்டாந்த ஸித்தாந்தாவயவ தர்க்கநிர்ணயவாதஜல்ப விதண்டாஹேத்வாபாஸச்சல ஜாதிநிக்ரஹஸ்த்தாநங்களாகிற தத்த்வங்கள் பதினறென்பவர்கள் நையாயிகர்கள். த்ரவ்யகுணகர்மஸாமாந்ய விஶேஷஸமவாயங்களாகிற தத்த்வங்களாறென்கிறவன் வைஶேஷிகன். 'பஹுப்ரகாரங்களிலே' - வக்ஷ்யமாணதத்தந்மதப்ரகாரங்களிலே. இத்தால், இவ்விடத்தில் பஞ்சவிம்ஶதி தத்த்வவாதிகளான ஸாங்க்யர்; இத்தோடீஶ்வரனையும் கூட்டி ஷட்விம்ஶதி தத்த்வவாதிகளான யோகிகள்; அந்த இருபத்தஞ்சோடே "நியதி காலம் ராகம் வித்யை கலை மாயை ஶுத்தவித்யை ஈஶ்வரன் ஸதாஶிவன் ஶக்தி ஶிவன்" என்கிற பதினென்றையுங் கூட்டிக்கொண்டு முப்பத்தாறு தத்த்வமென்கிற பாஶுபதர்; "பஞ்சஸ்கந்தம், த்வாதஶாயதநம், அஷ்டாதஶதாதுக்கள், தத்த்வம்" என்கிற பௌத்தர்; "ஜீவன் தர்மாதர்மங்கள் புத்கலர் காலாகாஶங்கள் தத்த்வம்" என்கிற ஜைநர்; முதலாக மற்றுமுண்டான தத்த்வஸங்க்யா விவாதகர்களெல்லாரும் விவக்ஷிதர். விப்ரதிபத்தி,விருத்தப்ரதிபத்தியாதல்; விவிதப்ரதிபத்தியாதல். இங்கு-தத்த்வவிப்ரதிபத்தி சொன்ன இது - உபாயோபேய விஷய விப்ரதிபத்திகளுக்கு உபலக்ஷணம்; மேலுபபாதநக்ரந்தாநுகுணமாக. இங்கு விப்ரதிபத்தி - வாதிவிப்ரதிபத்தியைச் சொன்னபடி.

எங்ஙனேயென்னில், — லோகாயதிகன் ப்ருதிவ்யாதிபூதங்கள் நாலினுடைய கூட்டரவிலே

---

ப்ர.— லோகாயதிகன் இத்யாதி:—“அத² லோகாயதம், ப்ருதி²வ்யாபஸ்தேஜோவாயுரிதி தத்த்வாநி, தேப்⁴யஶ்சைதந்யம் கிண்வாதி³ப்⁴யோ மத³ஶக்திவத்” இதி பா³ர்ஹஸ்பத்யஸூத்ரம். அஸ்யாயமர்த²: - அத்ராயமேவ ஶாஸ்த்ரார்தோ² வர்ததே. “யாவஜ்ஜீவம் ஸுக²ம் ஜீவேந்நாஸ்தி ம்ருத்யோரகோ³சர: । ப⁴ஸ்மீபூ⁴தஸ்ய தே³ஹஸ்ய புநராக³மநம் குத:” “யாவஜ்ஜீவம் ஸுக²ம் ஜீவேத்” இதி லௌகிகாபி⁴மதாநுவாதி³ந:, அர்த²காமயோரேவ புருஷார்த²த்வ ப்ரதிவாதி³த்வாத் சார்வாகா:, அலௌகிகார்த²ப்ரதிஷேதா⁴த், லோகேஷ்வாயதம் - விஸ்த்ருதமிதி லோகாயதமித்யுச்யதே. ஏவம் லோகேஷ்வதிவிஸ்த்ருதமிதம் சார்வாகமதே - ப்ருதி²வ்யப்தேஜோவாயவ:. தத்ர ப்ருதி²வ்யாதி³பூ⁴தவிஶேஷாணாம் (ப்ருதி²வீதி). ஶரீரேந்த்³ரியாணாம் ஸமஷ்டிரேவ தத்த்வம். தேஷாம் ப்ருதி²வ்யாதி³பூ⁴தாநாம் பரஸ்பரம் ஸம்ஸர்க³விஶேஷாத் தத்³பா⁴வாபந்நே தே³ஹே சைதந்யமுத்பத்³யதே. தத்³த்³ருஷ்டாந்தேநாவதா⁴ரயதி (கிண்வாதி³ப்⁴ய இதி). கிண்வம் - ஸுராப்ரக்ருதித்³ரவ்யம்.

ஏவமுக்தவிஷயம் ஸமவாயிகாரணாநாம் பூ⁴தாநாமேவ தே³ஹே சைதந்யாவஸ்தா²நிரூபணமாஹுராயி:— “தே³ஹ ஏவாத்மா ப்ரத்யக்ஷத: ப்ருதி²வ்யாதி³ப்⁴ய:, அஹம் ஜாநாமீதி ஜ்ஞாதா அஹமிதி ப்ரகாஶ: தே³ஹஸ்யாஹங்காராஶ்ரயத்வாத். ஸ்தூ²லோঽஹம் க்ருஶோঽஹமிதி ப்ரதீதே:. தே³ஹஸ்யைவ ஸ்தௌ²ல்யாதி³யோக³:; அதஸ்தத³நாதிரேகதயா அயமஹங்காரஶ்ஶரீராவச்சி²ந்ந இத்யவஶ்யாஶ்ரயணீயம்” இத்யாஹு:, “க்ருமிகீடாதி³வத் ... ப்ருதி²வ்யாதி³பூ⁴தாநாமபி ராக³வ்யவாயவிதி ஸம்யோக³விஶேஷாத், தே³ஹாரம்ப⁴கபரமாணுஸம்ஶ்லேஷவிஶேஷாதே³வ தே³ஹே சைதந்யஸ்யாவிர்பா⁴வோ நாநுபபந்ந:. நநு அசேதநஜநிதஸ்ய சேதநஸம்யோக³ ஸம்வாதி³த பா⁴வேநோபபத்தி:, த்³ருஷ்டாந்தோ ப்ராணாபாநவாயு இதி சேந், ப்ராணாபாநவாயு: அபி ச, ஸிதாஸிதாதி³ த்³ருஷ்டாந்தேந ப்ருதி²வ்யாதி³பூ⁴தேஷு சைதந்யவிஶேஷணம் ததா²ப்³ஜேவதி³ ஸ்வபா⁴வஸித்³தா⁴நாம் கத²ம் காரணகு³ணவத்த்வம் ஸ்யாத்? நநு த்³ருஶ்யஸ்ய தே³ஹஸ்ய கத²ம் த்³ருஷ்டத்வமிதி சேந், கோ விரோத⁴:. கத²மேவ - யதே²கஸ்யாம் க்ரியாயாமேகஸ்ய கர்த்ருத்வம் கர்ம்மத்வம் ச க⁴டதே இதி. யத்³யேவம் வ்யதிரேகவாதே³ந கத²ம் தத³நுப்ரவ்ருத்தி:? ஸ்வபா⁴வாதி³தி சேத், ஸர்வத்ர தே³ஹாத்மவாதே³பி. அபி ச, பரலோகாயிக்ரியாஸமவாயி கர்த்ரு; ஸர்வஸ்யைவ தஜ்ஜ்ஞாநஸமாநாதி⁴கரணஸ்ய கர்த்ருத்வமேவ நாஸ்தீதி தத்ஸ்வப்நாதி³யோக³வ காஶ:. அதோ தே³ஹ ஏவாத்மேதி சார்வாகஸித்³தா⁴ந்த:” இத்யேவ ஸித்³தா⁴ந்த.

தத்த்வத்ரயவிவரணே “சைதந்யவிஶிஷ்டகாயஏவ தத்த்வமிதி சார்வாகா: ப்ராஹு:” இதி சைதந்யவிஶிஷ்டகாயஸ்யாபி ஆத்மத்வம் பௌத்³த⁴வைஶேஷிகை: ப்ருதி²வ்யாதி³தம். தத்த்வ

---

லோகாயதிகன் - சார்வாகன். அவன்மதத்தில் ஆகாஶத்தோடேகூட பூதபஞ்சகவாதிகளுமுண்டு; ஆகையாலே, தத்த்வசதுஷ்டய பஞ்சகவிஷய க்ரந்தங்களுக்கு விரோதமில்லை. கூட்டரவு-ஸமுதாயம். கிண்வாதிப்யோ மதஶக்திவத் க்ரமுகபல தாம்பூலதலாத்யவயவ ஸமுதாயே ராகோதயவத் பூதசதுஷ்டய ஸமுதாயத்தில் சைதந்யமென்று ஒரு தர்மம் பிறக்குமென்றபடி.

முதானுயே'' என்றும் இந்த ஹோமத்தினுடைய நித்யாபூர்வதையைச் சொல்லி, *''உகந்துபணி செய்துனபாதம்பெற்றேன்'' என்று குணுநுபவஜநித ப்ரீதிகாரிதகைங்கர்யமே புருஷார்த்தமென்னு மிடத்தைச் சொல்லி, இதுதான் யாவதாத்மபாவியான புருஷார்த்த மென்கைக்காக † ''ஈதே யின்னம்வேண்டுவதெந்தாய்'' என்றுதலைக்கட்டுகையாலே ஹகவத்குணுநுபவஜநிதப்ரீதிகாரிதகைங் கர்யமே புருஷார்த்தமென்று அருளிச்செய்தார்; இப்புருஷார்த்தத்துக்கு இடைச்சுவரான விரோதி வேஷத்தை இரண்டாந்திருவாய்மொழியிலே ''வீடுமின்முற்றவும்'' என்று கட்டடங்கச் சொல்லி அதுதன்னையே மேல் மூன்று திருவாய்மொழியாலே விஸ்தரித்து அருளிச்செய்தார்; அவை எவை யென்னில்;—அஸேவ்யஸேவை த்யாஜ்ய மென்றுர், ''சொன்னுல் விரோத''த்திலே; ஐஶ்வர்ய கைவல்யங்கள் த்யாஜ்ய மென்றுர், ''ஒருநாயகத்''திலே; ஶரீரஸம்பந்தநிபந்தநமாக வரும் பரிக்ர ஹங்கள் த்யாஜ்யமென்றுர், ''கொண்டபெண்டி''ரிலே; அங்ஙனே சொல்லலாமோ? ஶாஸ்த்ரஸித்த மான ஐஶ்வர்யகைவல்யங்கள் புருஷார்த்தமாகத் தட்டென்? என்னில்; - பரம புருஷார்த்த லக்ஷணமோக்ஷத்திலே அதிகரித்தவனுக்கு ஐங்கருவிகண்ட வின்ப மாகையாலும், தெரிவரிதாய் அளவிறந்து இருந்ததேயாகிலும் ஹகவதநுபவத்தைப் பற்றச் சிற்றின்பமாகையாலும், முமுக்ஷு வுக்கு இவை த்யாஜ்யமென்றுர்; ஆக த்யாஜ்யவேஷத்தை அருளிச்செய்தார். த்யாகப்ரகாரமிருக் கும்படியென்? என்னில்,—த்யாஜ்யமென்றுல் விடுமத்தனையன்றே; த்யாகப்ரகாரமிருக்கும்படி அறியவேணுமோ? என்னில், - வேணும்; விஷயங்களினின்றும் தான் கடக்க வர்த்திக்கவோ? அன்றியே, விஷயங்களை நஶிப்பித்து வர்த்திக்கவோ? என்றுல்;— இரண்டும் ஒண்ணுது; கடக்க வர்த்திக்கவென்று நினைத்தால் லீலாவிபூதிக்கு அவ்வருகே போகவேணும்; நஶிப்பித்து வர்த்திக் கவோவென்றுல் ஹகவத்விபூதியை அழிக்கையாய்விடும்; இரண்டுமொழிய விஷயஸந்நிதியினின் றும் நிர்மாநுஷமான காட்டிலே வர்த்தித்தாலோ? என்றுல்,— ஸர்வத்தையும் விட்டுக் காட்டிலே யிருந்த ஆதிபரதனுக்கு மானின்பக்கலிலே ஸங்கமுண்டாய் ஜந்மாந்தரம் பிறந்தது; ஸௌபரி நீருக்குள்ளே முழுகிக்கிடக்கச்செய்தே அங்கே சிலமத்ஸ்யஸஞ்சாரத்தைக் கண்டு விஷயப்ரவண ஞுனன்; ஆகையாலே, த்யாகப்ரகாரம் இவையல்ல; ஆனுல் ஏதாவதென்னில், - ‡''நீர்நுமதென் றிவை வேர்முதல்மாய்த்திறைசேர்மின்'' என்று தேஹத்தில் ஆத்மபுத்தியையும், தேஹாநுபந்திக ளான பதார்த்தங்களில் மமதாபுத்தியையுந் தவிருகை த்யாகப்ரகாரமென்று பிறர்க்கு உபதேசித் தார்; ¶''யானேயென்னையறியகிலாதே யானேயென்தனதேயென்றிருந்தேன்''என்று தாமும் அநுஸந்

*ஞய். உகந்து இத்யாதி - ப்ரீதிப்ரேரிதனுய்க்கொண்டு அடிமைசெய்து உன்திருவடி பெற்றேன். ஈதே இத் யாதி - இவ்வடிமையே இவ்வாத்மாவுள்ளதனையும் அபேக்ஷிதம், எனக்கு நிருபாதிக பந்துவானவனே. விரோதி ஸ்வரூபமாஹ - இப்புருஷார்த்தத்துக்கு இத்யாதி. இடைச்சுவர் - மத்யகுட்யம்; ப்ரதிபந்தக மென்றபடி. கட்டடங்க - ஸாகல்யேந. ஐஶ்வர்ய கைவல்யங்களை க்ரமேண அருளிச்செய்கிறுர் - ஐங்கருவி இத்யாதி. ஐங்கருவி பஞ்சேந்த்ரியம். அளவிறந்தது - அபரிச்சிந்நம். ஐங்கருவிகண்ட வின்பம் என்றது - பஞ்சேந்திரியங்களாலே அநுபவிக்கப்பட்ட ஐஹிக ஸுக மென்றபடி. ஜிஜ்ஞாஸாப்ரஶ்நம் - த்யாகப்ர காரமித்யாதி. தடஸ்த்த ப்ரஶ்நம் - த்யாஜ்யமென்றல் இத்யாதி. விவரணம் - விஷயங்களில்நின்றும் இத் யாதி. ஜந்மாந்தரம் பிறந்த தென்றவிடத்திலே-''யஜ்ஞ யாவஸூ ஹரிணா த்யக்தா நிஜஸுதஸம்பத் ...'' என்றது அநுஸந்தேயம். விஷயப்ரவண ஞுனன் என்றது - ''...'' என்றத்தைப்பற்ற. நீர்நுமது இத்யாதி - நீங்கள் உங்களது என்கிற அஹங்காரமமகாரங்களாகிற இவற் றை வேரோடே முதலறுத்து. யானே இத்யாதி - நான்தானே என்னுடைய யாதாத்ம்யத்தை அறியமாட்

* திருவாய்மொழி க0-அ-கo. † ஷை ஷை. ‡ ஷை க-உ-௩. ¶ ஷை உ-க-க.

தித்தார்; "நிவ்ருத்தராமஸ்ய க்ருஹமேவ தபோவநம்" (நிவ்ருத்தராகஸ்யக்ருஹந்தபோவநம்) என்று நிவ்ருத்தராமனுயிருக்குமவனுக்குத் தானிருந்த தேசமே தபஸ்ஸுக்கு ஏகாந்தஸ்த்தல மென்றதாயிற்று; இப்படி எங்கேகண்டோம்? என்னில், - ஸ்ரீஜநகராஜன்பக்கலிலும் ஸ்ரீகுலசேகரப்பெருமாள்பக்கலிலும் கண்டுகொள்வது; ஆகையாலே, புத்தித்யாகமே த்யாகமென்றபடி. இவ்விரோதி நிவ்ருத்திக்கும் புருஷார்த்தஸித்திக்கும் உபாயம் எது? என்னில்,— த்ரைவர்ணிகாதிகாரமான பக்தியும் அகிஞ்சநாதிகாரமான ப்ரபத்தியும் என்று இரண்டிறே வேதாந்தஸித்தமான உபாயம்; இதில் ப்ரபத்தியே உபாயமென்று தமக்கு ஸித்தாந்தமென்னும் ஆகாரம் தோற்ற உபாயவேஷத்தை அருளிச்செய்தார், *"நோற்றநோன்பிலேன்" என்று தொடங்கி †"ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்றும், ‡"உழலையென்பிற் பேய்ச்சிமுலையூடவளையுயிருண்டான்கழல்களவையேசரணாகக்கொண்ட" என்றும்; $"நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேற்சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்" என்றும், ¶"நாகணைமிசைநம்பிரான்சரணேசரணமக்கு" என்றும் சொல்லிக்கொண்டுபோந்து. §"ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்" என்று தலைக்கட்டுகையாலே திருவடிகளே உபாயமென்று அருளிச்செய்தார்; இத்தைப் பிறர்க்கு உபதே

---

டாதே 'நான்' 'என்னது' என்று அஹங்காரமமகாரங்களைப் பண்ணி அநர்த்தாவஹமாம்படி யிருந்தேன். நிவ்ருத்தாஹங்கார மமகாரனுக்கு வஸ்தவ்யதேசநியமாஹாவத்தை அருளிச்செய்கிறார் - நிவ்ருத்தராகஸ்ய இத்யாதி. இதிஹாஸஸமுச்சயே த்ரயோதசாத்யாயே இதம்வசநம். "வநேபி தோஷா: ப்ரபவந்தி ராகிணாம் க்ருஹேபி பஞ்சேந்த்ரியநிக்ரஹஸ்தப: | அகுத்ஸிதே கர்மணி ய: ப்ரவர்த்ததே" இதி பூர்வாம்ஸ:. ஸ்ரீஜநகராஜன் பக்கலிலும் என்கிற விடத்திலே "மிதிலாயாம் ப்ரதீப்தாயாம் ந மே கிஞ்சித் ப்ரதஹ்யதே" என்றத்தைக் கண்டுகொள்வது. ஸ்ரீகுலசேகரப்பெருமாள் பக்கலிலும் என்றது- "ஊனேறு செல்வத்துடற்பிறவி" இத்யாதிகளைப் பற்ற. அகிஞ்சநாதிகாரமான ப்ரபத்தியும் - இவ்விடத்திலே "த்வயி ப்ரபந்நா: ஸர்வேஷாம் ஸர்வேஷாம்", "ப்ரஹ்மஹத்யாதிபாபாநாம் ...", "ஸர்வஸ்வ ... தத்" இத்யாத்யநுஸந்தேயம். - ப்ரபதநம் - உபாயாந்தரஸ்பர்ஸராஹித்யாத் விஸுத்தஹஸ்த இத்யர்த்த:. இரண்டிறே என்றவிடத்திலே - "ஸாக்ஷாத் ... ந | ... ப்ரபத்தி:" இத்யாத்யநுஸந்தேயம். வேதாந்தஸித்தமான என்றது - "நிக்ஷேபாபரபர்யாய:" "ந்யாஸ இதி ..." "... ஸர்வஸாதநம்" இத்யாதியைப்பற்ற. அதில் ப்ரபத்தியே உபாய மென்று தமக்கு ஸித்தாந்தமென்கையாலே பக்தி உபாயமன் றென்றபடி. ப்ரபத்தி: - ஈஸ்வர:. "ந்யாஸ இதி ப்ரஹ்ம" என்று இருக்கையாலே. நோற்ற இத்யாதி - பலவ்யாப்தமாம்படி அநுஷ்டித கர்மயோகமுடையேனல்லே னென்றபடி. ஆறெனக்கு இத்யாதி - எனக்கு உபாயம் தருமிடத்தில் உன் திருவடிகளையே உபாயமாகத் தந்துவிட்டாய். உழலை இத்யாதி - உழலைத்தடிகோத்தாற்போலே யிருக்கிற எலும்புகளை யுடைய பேய்ச்சிமுலையின் அகவாயில் அவள் ப்ராணங்களை யுண்ட க்ருஷ்ணனுடைய அத்தத்திருவடிகளையே உபாயமாகப் புத்திபண்ணிக்கொண்ட. நாமங்கள் இத்யாதி - நாமஸஹஸ்ரத்தையுமுடைய நம்முடைய ஸ்வாமியான ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளின்மேலே க்ஷேமகரத்வபுத்திரூபவ்யவஸாயத்தையு முடையராய், அழகிய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். நாகணை இத்யாதி - திருவநந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே கண்வளர்ந்தருளின நம்முடைய ஸ்வாமியுடைய திருவடிகளே உபாயம் நமக்கு. ஆவிக்கோர் இத்யாதி - என்னாத்மாவுக்கு அபாஸ்ரயமாயிருப்பதொரு உபக்நம் உன்னையொழிய நான் அறியேன். தாம் சதுர்த்தவர்ணத்திலே அவதரிக்கையாலே பக்தியில் அதிகாரமில்லாமல் ப்ரபத்திநிஷ்டரானால், அத்தாலே பக்தி உபாயமன்ற,ப்ரபத்தியே உபாயமென்று தோன்றமோ? என்ன,இத்தைப்

---

* திருவாய்மொழி ௫-எ-க. † ஷை ௫-எ-௧௦. ‡ ஷை ௫-அ-௧௧. $ ஷை ௫-௯-௧௧.
¶ ஷை ௫-௧௦-௧௧. § ஷை ௧௦-௧௦-௩.

சிக்கிறவிடத்திலும் *“திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ” என்றார். “ஆறெனக்கு நின்பாதமே” என்றும், “கழல்களவையே” என்றும், “சரணேசரணமக்கு” என்றும் அவயரிக்கை யாலே உபாயபூர்த்தியை அருளிச்செய்தார். இவ்வுபாயத்துக்கு அதிகாரிகளாவார் ஆர்? என்னில்;- †“மயர்வறமதிநலமருளினன்”என்ற விடத்தில் எனக்கருளினனென்கைக்குத் தம்மைக்காணுமை யாலே ஆகிஞ்சந்யத்தையே புரஸ்கரித்து, உபாயநிர்ணயவேளையிலே “நோற்றநோன்பிலேனுண் ணறிவிலேன்” என்று த்ரைவர்ணிகாதிகாரமான உபாயாந்தரங்களில் அநந்வயமுகத்தாலே ஆகிஞ் சந்யத்தைப் பேசி, ஆஶ்ரயணவேளையிலே ‡“புகலொன்றில்லாவடியேன்” என்றுசொல்லி ஹோம வேளையில் தமக்கு உண்டானது அடங்க பகவத்ப்ரஸாதலப்த மென்கைக்காக $“நீசனேன் நிறை யொன்றுமிலேன்” என்று கருந்தரையைப் பேசி, ¶“ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு” என்று ஸாபராதஜந்துக்களுக்கும் புகுரலாமென்று தோற்றுகையாலே ஸர்வாதிகார மென்றதா யிற்று. அதிகாரியைப்பெற்றாலும், உபாயம் ஸித்தமானாலும், ஸ்வீகாரமில்லாதபோது ஜீவிக்கையா காமையாலே அந்தஸ்வீகாரவேஷத்தை §“கழல்களவையேசரணுகக்கொண்ட” என்றும்; இதினு டைய ஸாங்காநுஷ்டாநவேளையிலே **“அடிக்கீழமர்ந்துபுகுந்தேன்” என்றும் அருளிச்செய்தார்; இந்த ஸ்வீகாரஸித்திதானும் அவனாலே யென்னுமிடத்தை **“நின்பாதமேசரணாகத் தந்தொழிந் தாய்” என்றும், (§)“அதுவுமவனதின்னருளே” என்றும் அருளிச்செய்தார்; இந்த ஸ்வீகர்த்தாவினு டையஅத்யவஸாயவேஷத்தை (||)“களைவாய்துன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்” என் றும் $$“நாடொறு மேகசிந்தையனாய்” என்றும் அருளிச்செய்தார். இவ்வுபாயத்தைப் பிறர்க்கு உப தேசிக்கிறவிடத்திலே ¶¶“சிற்றவேண்டாசிந்திப்பேயமையும்” என்று உபாயஸௌகர்யத்தை அரு ளிச்செய்து, இதுதன்னை ஸப்ரகாரமாக அருளிச்செய்கிறவிடத்திலே “இது பக்த்யங்கமன்று; ஸ்வ

பிறர்க்கு இத்யாதி. திருநாரணன் இத்யாதி-ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளைக் காலவிளம்பம் பிற வாமல் சடக்கென அநுஸந்தித்து உஜ்ஜீவியுங்கோள். அவயரிக்கையாலே-அவதாரணமாக அருளிச்செய்கை யாலே. உபாயபூர்த்தி யென்றது - ஏகஶப்தார்த்தத்தைக் கடாக்ஷித்து. உபாயபூதனான ஈஶ்வரனுடைய ஸஹாயாந்தர ஸம்ஸர்க்காஸஹத்வரூப பூர்த்தியை யென்றபடி. கீழே ‘அகிஞ்சநாதிகாரமான ப்ரபத்தியும்’ என்கையாலே இங்கே ‘இவ்வுபாயத்துக்கு அதிகாரிகளாவார் ஆர்? என்னில்’ என்கிற ஶங்கைக்கு உத்திதி யில் லையென்னில்,—அங்கு ஶாஸ்த்ரார்த்தத்தை அவலம்பித்து தத்ஸ்வரூபகதநம் பண்ணினபடி; இந்தஶங்கை திருவாய்மொழியை அவலம்பித்து உண்டானது;ஆகையாலே,ஶங்கிக்கலாம். ஆகிஞ்சந்யமாவது-உபாயாந்தர ஶூந்யதையும் கத்யந்தரஶூந்யத்தையு மென்று விவக்ஷித்து உபயத்தையும் க்ரமேண அருளிச்செய்கி றார் - உபாயநிர்ணயவேளையிலே இத்யாதி. புகலொன்றில்லாவடியேன் - கத்யந்தரமொன்றுமில்லாத தாஸபூதனான நான். நீசனேன் நிறையொன்றுமிலேன் - அத்யந்தநீசனான நான் குணபூர்த்தியொன்று மில்லாதவன். கருந்தரை - பாழ்நிலம்; ஶூந்யதை யென்றபடி. ஒப்பிலா இத்யாதி - ஒப்பற்றிருக்கிற க்ரூரபாபத்தையுடைய என்னை உஜ்ஜீவிக்கும்படி கைக்கொண்டு. இது ஸர்வாதிகாரமாயிருக்க, உபாயம் ஸித்தோபாயமாயிருக்க, ஸர்வர்க்கும் முக்தி வரவேண்டாவோ? என்ன, அதிகாரியை இத்யாதி. ஸ்வீகார மில்லாதபோது என்ற விடத்திலே - “ஸர்வஜ்ஞோபி ஹி விஶ்வேஶஸ்ஸதா காருணிகோபி ஸந் । ஸம்ஸார தந்த்ரவாஹித்வாத் ரக்ஷாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே” என்றது அநுஸந்தேயம். ஜீவிக்கை யாகாமையாலே-ஜீவநஹேதுவாகாமையாலே. அமர்ந்து-அநந்யப்ரயோஜநனாய்ப் பொருந்தி. இப்படியானால் நிர்ஹேதுகத்வபங்கம் வாராதோ? என்ன, இந்தஸ்வீகாரஸித்தி இத்யாதி. அதுவும் அவனதின்னருளே - அந்த இச்சைதானும் அவனுடைய நிர்ஹேதுகக்ருபையடியாக உண்டானதே. களைவாய் இத்யாதி - துஃகத்தைப் போக்குவாய், போக்காதொழிவாய், கத்யந்தரம் வேறில்லாதவனாயிருந்தேன். நாடொறும் ஏகசிந்தையனாய் - நாள்தோறும் ஏக ப்ரகாரமான சிந்தையுடையனாய். சிற்றவேண்டா இத்யாதி - பரக்க ஆயாஸிக்கவேண்டா; சிந்தாமாத்ரமே அமையும். ஸப்ரகாரமாக - “அடைந்தார்க்கெல்லாம்” என்று ஸர்

* திருவாய்மொழி ௬-௧-௧. † ஷை ௧-௧-௨. ‡ ஷை ௬-௧௦-௧௦. $ ஷை ௩-௩-௪.
¶ ஷை ௭-௯-௪. § ஷை ௫-௮-௧௧. ** ஷை ௫-௭-௧௦. (§) ஷை ௮-௮-௩. (||) ஷை ௫-௮-௮.
$$ ஷை ௫-௧௦-௧௧-௧௧. ¶¶ ஷை ௯-௧-௭.

தந்த்ரோபாயம் என்கைக்காக *"சரணமாகும்" என்று தொடங்கி "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று ப்ராப்திபர்யந்தமாக முடியநடத்துமென்று அருளிச்செய்தார். இவ்வுபாயாத்யவஸாயம் பண்ணியிருக்குமவனுக்குக் காலக்ஷேபப்ரகாரம் இருக்கும்படி யென்? என்னில்,- †"தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னேன்" என்று திருவாய்மொழிதானே காலக்ஷேபப்ரகார மென்று அருளிச்செய்தார். இப்படி உபாயத்தை ஸ்வீகரித்து இதுவே போதுபோக்காகத்திரியும் அதிகாரிக்கு பலவேஷமிருக்கும்படியென்? என்னில்; - ஜிதேந்த்ரியத்வம் ப்ரதமமாய் கைங்கர்யஸித்தி சரமமாயிருக்கு மித்தனையும் உபாயபலமென்னுமிடத்தை அருளிச்செய்தார். ப்ரதமத்திலே இழியும்போது ஜிதேந்த்ரியனாய்க்கொண்டு இழியவேணும் உபாஸகனுக்கு; ஜிதேந்த்ரியத்வமும் உபாயபலம் இவ்வதிகாரிக்கு. எங்ஙனேயென்னில், - ‡"என்னைத்தீமனங்கெடுத்தாய்" ‡‡"மருவித்தொழும்மனமேதந்தாய்"என்று ஜிதேந்த்ரியத்வம்அவனாலேயென்னுமிடத்தைச்சொல்லி ஜிதேந்த்ரியனானவாறே ஸம்வதநுபவத்துக்கு உபகரணமான ஸக்த்யாதியாதிகள் தனக்குத்தானே உண்டாகிறதோ? என்னில், - "மயர்வறமதிநலமருளினன்" என்று ஸக்திரூபாபந்நஜ்ஞாநத்தையுந் தானே தந்தா னென்கையாலே ஸக்த்யுத்பத்தியும் அவனாலே யென்னுமிடமும் சொல்லிநின்றது. ஆனால், உத்பந்நையான பக்திக்கு வர்த்தகர்ஆர்? என்னில், - ¶"காதல்கடல்புரையவிளைவித்தகாரமர்மேனிநங்கண்ணன்" என்று அவனே வர்த்தக னென்னுமிடஞ் சொல்லி, வ்ருத்திக்கு எல்லை ஏதென்னில், §"அதனிற்பெரியவென்னவா" என்று தத்த்வத்ரயங்களையும் விளாக்

---

*வாதிகாரத்வப்ரகார ஸஹிதமாக. சரணமாகும் இத்யாதி - தன் திருவடிகளை அடைந்தவர்க்கெல்லாம் உபாயமாம்; அவர்களுக்கு மரணமானால் பரமபதத்தைக் கொடுக்கும். இவ்வுபாயாத்யவஸாயம் இதி - கைங்கர்யமே புருஷார்த்தமென்றும், அதுக்கு உபாயம் அவன் திருவடிகளே யென்றும் அருளிச்செய்தாராகையாலே இத்திருவாய்மொழி எதுக்காக வென்று இப்ரஸங்காவாக்யத்துக்குத் தாத்பர்யம். காலக்ஷேபப்ரகாரம் - காலக்ஷேபஸாதநம். தொண்டர்க்கு இத்யாதி - அவனடியார்க்கு உகந்து அநுபவிக்கலாம்படி ஸப்தஸந்தர்ப்பரூபமானவற்றைச் சொன்னேன். உபாயத்தை - ஸித்தஸாதநத்தை. இதுவே - இத்திருவாய்மொழியே. போதுபோக்காக - காலக்ஷேபஸாதநமாக. 'ப்ரீதிகாரிதகைங்கர்யமே புருஷார்த்தம்' என்று கீழே அருளிச்செய்து 'பலவேஷமிருக்கும்படி என்னென்னில்' என்றால் வ்யாஹதமன்றோ? என்னில்;—பலத்தினுடைய ப்ரதமசரமாவதியை தர்சிப்பிக்கிறார் - பலவேஷம் இத்யாதி. அவாந்தர ப்ரதாந பல வேஷ மிருக்கும்படி யென்? என்னி லென்றபடி. யத்வா, கீழே பலஸ்வரூபம் சொல்லியிருக்க மீளவும் பலப்ரஸ்நம் உபாஸகரிற்காட்டில் ப்ரபந்நனுக்கு வாசிசொல்லுகைக்காக. அத்தை ஸங்காபூர்வகமாக அருளிச்செய்கிறார், பலவேஷம் இத்யாதி என்னவுமாம். ஜிதேந்த்ரியத்வம் - ப்ரதமாவதி, கைங்கர்யம் — சரமாவதி. இவனுக்கு விசேஷம் எது? என்ன, ஜிதேந்த்ரியத்வம் இத்யாதி. ஜிதேந்த்ரியத்வம் உபாயபலமென்றத்தைக்காட்டுவாராக ஜிஜ்ஞாஸுப்ரஸ்நத்தை உத்ப்ரேக்ஷிக்கிறார், எங்ஙனே இத்யாதி. எங்ஙனே- என்ஙனே அருளிச்செய்தா ரென்றபடி. என்னைத்தீமனங்கெடுத்தாய் - என்னுடைய துஷ்டமான மாஸைப் போக்கினாய். மருவி இத்யாதி - அநந்ய ப்ரயோஜநமாய்ப் பொருந்தி அடிமை செய்யும் நெஞ்சைத் தந்தாய். காதல் இத்யாதி - அபிநிவேசத்தைக் கடல்போலே ஸம்ருத்தமாய் விளையும்படி பண்ணின வர்ஷுகவலாஹகஸ்வபாவத்தை யுடைய திருமேனியை யுடைய நம்முடைய க்ருஷ்ணன். அதனிற்பெரிய

---

* திருவாய்மொழி ௩-௧௦-௫. † ஷை ௧-௪-௧. ‡ ஷை ௨-௭-௮. ‡‡ ஷை ௨-௭-௭.
¶ ஷை ௫-௩-௪. § ஷை ௧௦-௧௦-௧௦.

குலைகொள்ளும்படி பெருகினபடி சொல்லி, "என்னவாவறச் சூழ்ந்தாய்" என்று தம்திருவா யாலே அருளிச்செய்கையாலே ஶரீரஸம்பந்தத்தை யறுத்து தேஶவிஶேஷத்திலே கொண்டுபோய் ஸம்ஶ்லேஷித்துத் தலைக்கட்டினானென்றதாயிற்று. ஆக, இவ்வைந்தர்த்தமுமே திருவாய்மொழி யால் ப்ரதிபாதிக்கிறது; அல்லாதவை ஆநுஷங்கிகஸித்தமாய் வந்தது இத்தனை; எங்ஙனேயென் னில், — பரதத்த்வம் ஸ்ரீமந்நாராயணனேன்றும், அநந்யார்ஹஶேஷத்வமே ஸ்வரூபமென்றும், குணாநுபவஜநித ப்ரீதிகாரிதகைங்கர்யமே புருஷார்த்தமென்றும், அஹங்கார மமகாரங்கள் தத் விரோதியென்றும், தந்நிவ்ருத்திக்கும் கைங்கர்யஸித்திக்கும் ஸர்வஸுலபனான ஸர்வேஶ்வரன் திருவடிகளே உபாய மென்றும், ஜிதேந்த்ரியத்வம் தொடக்கமாகக் கைங்கர்யபர்யந்தமாக உபாய பலமென்றும் சொல்லிநின்றது. "𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌨𑌃। 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌸𑍍𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌚 ॥ 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌕𑌲𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌸𑍇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌕𑌾𑌃। 𑌮𑍁𑌨𑌯𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑍇𑌦𑌿𑌨𑌃" (ப்ராப்யஸ்யப்ர ஹ்மணோரூபம் ப்ராப்துஶ்சப்ரத்யகாத்மந:। ப்ராப்த்யுபாயம்பலம்ப்ராப்தேஸ்ததாப்ராப்திவிரோதிச। வதந்திஸகலாவேதாஸ்ஸேதிஹாஸபுராணகா:। முநயஶ்சமஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந:) என்று ஸகல வேததாத்பர்யம் இவ்வர்த்தபஞ்சகமென்னுமிடத்தைப் பெரியவங்கிப்புரத்துநம்பி திருவாய்மொழிக்கு வாக்யார்த்தமாக அருளிச்செய்தார்.

---

என்னவா, அவா - அபிநிவேசம். அதிற்காட்டில் பெரிய என் அபிநிவேசம். விளாக்குலைகொள்ளுகை - தன்னிலே அந்தர்ப்பவிக்கும்படி பண்ணுகை. உக்தார்த்த நிகமநம் - ஆக இத்யாதி. "𑌯𑌦𑌿𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌯𑌨𑍍𑌨𑍇𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌤𑌤𑍍𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍" இதிப்ரகாரேண பரமதநிராஸாதேரப்யத்ர தர்ஶநாத் இதரநிஷேதம் எப்படி பண்ணுகிறது? என்ன, அல்லாதவை இத்யாதி. ஆநுஷங்கிக ஸித்தமாய் - அநுஷங்கஸித் தமாய். புத்திஸௌகர்யார்த்தம் விஸ்த்ருதம் ஸங்க்ருஹ்ணாதி - எங்ஙனேயென்னில் இத்யாதி. அர்த்த பஞ்சகஸ்வரூப மிருக்கும்படி யெங்ஙனே? என்னி லென்றபடி. உக்தார்த்தத்துக்கு வங்கிப்புரத்து நம்பி யோஜனையை ஸம்வாதமாக அருளிச்செய்கிறார், 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 இத்யாதி. 'இந்த ப்ரமாணம் வங்கிப்புரத்து நம்பி அருளிச்செய்தது' என்று அரும்பதத்திலே யிருக்கிறது. "𑌹𑌾𑌰𑍀𑌤𑌸𑌂𑌹𑌿𑌤𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌭𑌾𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌜𑌾𑌜𑌲𑌿𑌸𑌂𑌵𑌾𑌦𑍇 𑌜𑌾𑌜𑌲𑌿𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌶𑍌𑌨𑌕𑌃" இதி ப்ரமாணத் திரட்டி லிருக்கிறது. ஸகலவேத தாத் பர்யம்-இவ்வர்த்தபஞ்சக மென்னுமிடத்தை ப்ரதிபாதிக்கிற வழியாலே பெரியவங்கிப்புரத்துநம்பி திருவாய் மொழிக்கு வாக்யார்த்தமாக அருளிச்செய்தா ரென்று க்ரமேண அந்வயமாகவுமாம்; ஸகலவேததாத்பர்யம் இவ்வர்த்த பஞ்சகமென்னு மிடத்தையும், இவ்வர்த்த பஞ்சகமே திருவாய்மொழிக்கு வாக்யார்த்தமாகவும் வங்கிப்புரத்துநம்பி அருளிச்செய்தாரென்று யோஜிக்கவுமாம்.

## ஈடு - மஹாப்ரவேஶம் - இரண்டாம்ஶ்ரிய:பதி.

ஶ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேஶ்வரன், *"மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து" என்கிறபடியே ஜந்மபரம்பரைகளிலே தோள்மாறித்திரிகிற இவரை இவ்வர்த்தபஞ்சகத்தையும் விஶததமமாக அறியவல்லராம்படி முதலடியிலே நிர்ஹேதுகமாக விஶேஷகடாக்ஷம்பண்ணியருளினான். நம்மாழ்வார் திருவாய்மொழி ப்ரபந்தத்தாலே த்வயவிவரணம் பண்ணுகிறார். இதில் முதலிட்டு மூன்றுபத்தாலே உத்தரார்த்தத்தை விவரிக்கிறார்; மேலிட்டு மூன்றுபத்தாலே பூர்வார்த்தத்தை விவரிக்கிறார்; மேலிட்டு மூன்றுபத்தாலே உபாயோபயோகியான குணங்களையும், ஆத்மாத்மீயங்களில் தமக்கு நசையற்றபடியையும், அவனோடு தமக்கு உண்டான நிருபாதிக ஸம்பந்தத்தையும் அருளிச்செய்தார்; மேலிற்பத்தாலே தாம் ப்ரார்த்தித்தபடியே பெற்றபடியைச் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

இதில் முதற்பத்தாலே "உயர்வறவுயர்நலமுடையவன் - அயர்வறுமமரர்களதிபதியவனவன் - துயரறுசுடரடிதொழுதெழென்மனனே" என்று ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், ஸுஶீலனாய் ஸுலபனாய் போக்யனானவன் திருவடிகளில் கைங்கர்யமே புருஷார்த்தமென்று நிர்ணயித்து, உக்தமான அர்த்தத்துக்கும் வக்ஷ்யமாணமான அர்த்தத்துக்கும் ப்ரமாணம் "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்று நிர்த்தோஷமான ஶ்ருதியே ப்ரமாணமென்றும், ஏவம்விதனானவன் ஆர்? என்ன, "வண்புகழ்நாரணன்" என்றும், "திருவுடையடிகள்" என்றும், "செல்வநாரணன்"

*இப்படி திருமந்த்ரவிவரணத்வாநுகுணமஹாவாக்யார்த்தத்தை அருளிச்செய்தார் கீழ்; மேல் த்வயவிவரணரூபத்வாநுகுணமஹாவாக்யார்த்தத்தை அருளிச்செய்வாராக தாத்ருஶப்ரபந்த நிர்மாணஸாமர்த்ய ஹேதுத்வேந வக்தாவினுடைய ஜ்ஞாநாதிக்யத்தை மீளவும் அருளிச்செய்கிறார் - ஶ்ரிய:பதியாய் இத்யாதி. ஶ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீராமாயண ஶ்ரீபாஞ்சராத்ரசாஸ்த்ரப்ரக்ரியயா க்ரமேணார்த்தபஞ்சகப்ரபத்தி பக்தி ப்ரயோஜநத்ரயாபிப்ராயேண ஶ்ரிய:பதித்ரயமென்றும் சொல்லுவர்கள்; அதவா, ஶ்ரிய:பதீத்யாதி வாக்யத்ரயம் அருளிச்செய்தது-மத்யேமத்யே வந்த ஶ்ரீவைஷ்ணவர்களுக்காகவாதல், மஹாபாஷ்யத்தில் பூர்வதிவஸோபந்யஸ்தாநுவாத பூர்வகமாக திவஸத்ரயம் உபந்யஸிக்கையாகிற ஆஹ்நிக த்ரயப்ரக்ரியையாலேயாதல். திருவிருத்தம் திருவாசிரியம் திருவந்தாதியாகிற மூன்றும் திருமந்த்ரத்தினுடையவும் சரமஶ்லோகத்தினுடையவும் அர்த்த மென்னுமத்தை ஹ்ருதீகரித்துக்கொண்டு, திருவாய்மொழி த்வயத்தினுடைய அர்த்தமாயிருக்கிறதென்கிறார் - நம்மாழ்வார் இத்யாதி. யத்வா, கீழ் அர்த்தபஞ்சக யோஜனையை அருளிச்செய்து த்வயயோஜனையும் அருளிச்செய்கிறார் - நம்மாழ்வார் இத்யாதி என்னவுமாம். முதலிட்டு-த்வயார்த்தத்தை க்ரமத்திலே அருளிச் செய்யாதே உத்தரவாக்யார்த்தம் முன்னாக அருளிச் செய்தது - அநுஷ்டாநதசையில்போலே உபாயம் முற்பட்டு, பலம் பிற்படுகையன்றிக்கே வ்யுத்பத்தி தசையில் "ஏதே ப்ரயோஜநஸ்ய ஜ்ஞாநே ஸதி தத்ஸாதநாபேக்ஷா" இதி ந்யாயேந பலம் முற்பட்டு உபாயம் பிற்படவேண்டுகையாலே; "ஸர்வகாமோ ஜ்யோதிஷ்டோமேந யஜேத" என்னக் கடவதிறே. "கடல்ஞாலங்காக்கின்ற, மின்னு நேமியினாய்" என்றத்தைப்பற்ற, உபாயோபயோகியான குணங்களை என்றது." உங்களோடெங்களிடையில்லை" என்றத்தைப்பற்ற, ஆத்மாத்மீயங்களில் தமக்கு நசையற்றபடி என்றது. "நாராயணன் நங்கள்பிரானவன்" என்றதைப்பற்ற, அவனோடு தமக்குஉண்டான இதி. தாம் ப்ரார்த்தித்தபடியே இத்யாதி - "தொழுதெழு" என்று ப்ரார்த்தித்தபடியே, "அவாவற்றுவீடுபெற்ற" என்று பெற்றபடியைச் சொல்லித் தலைக்கட்டுகிறா ரென்றபடி.*

*உக்தவிவரணம் - இதில் முதற்பத்தாலே இத்யாதி. அயர்ப்பிலன் இத்யாதி - அநந்யப்ரயோஜநனாய்ப் பொருந்தி மறப்பில்லாதவனாய் அக்ரமமாக குணங்களைச் சொல்லுவன், ஸம்ஶ்லேஷிப்பன், தலையாலே வணங்குவன்; இப்படி கரணத்ரயத்தாலும் அநுபவிப்பன். முதற்பத்தாலே பகவத்கைங்கர்யமே புருஷார்த்த மென்று அறுதியிட்டா ரென்றது -"உபக்ரமோபஸம்ஹாராவப்யாஸோऽபூர்வதா*

* திருவாய்மொழி உ-கூ-அ.

என்றும் விஶேஷித்து, "தொழுதெழென்மனனே" என்று உபக்ரமித்து *"அயர்ப்பிலனலற்று வன் தழுவுவன் வணங்குவனமர்ந்தே" என்று த்ரிவிதகரணங்களாலும் அடிமைசெய்து தலைக் கட்டுகையாலே பகவத்கைங்கர்யமே புருஷார்த்த மென்று அறுதியிட்டார். இரண்டாம்பத்தால் இந்தக் கைங்கர்யத்துக்கு விரோதியான ப்ரக்ருதிஸம்பந்தத்தையுங் கழித்து, †'ஒளிக்கொண்ட சோதியமாய் இக்கைங்கர்யத்துக்கு தேஶிகரான அடியார்கள் குழாங்களை உடன்கூடுவது என்றுகொலோ?' என்று தாமும் ப்ரார்த்தித்து, ‡"நலமந்தமில்லதோர்நாடுபுகுவீர்" என்று பிறர்க்கும் உபதேசிக்கையாலே 'இவர்க்குப் பரமபதத்திலே நோக்காயிருந்தது' என்று ஈஶ்வரன் பரமபதத்தைக் கோடுக்கப் புக, ‡‡"எம்மாவீட்டுத்திறமும்செப்பம்" என்று-எனக்கு அதில் ஒரு நிர்ப்பந்தமில்லை; ¶"தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்று - உனக்கேயாயிருக்கும் இருப்பே எனக்கு வேண்டுவது' என்று இப்புருஷார்த்தத்தை ஓடவைத்தார். மூன்றும்பத்தால் இவர்க்குக் கைங்கர்யத்திலுண்டான ருசியையும் த்வரையையும் கண்ட ஈஶ்வரன் கைங்கர்யத்துக்கு ஏகாந்தமான திருமலையில்நிலையைக் காட்டிக்கோடுக்கக் கண்டு §"வழுவிலாவடிமை செய்யவேண்டும்நாம்" என்று பாரித்து, பாரித்தபடியே ஸாமவதஶேஷத்வபர்யந்தமாக வாசிகமாக அடிமைசெய்து தலைக்கட்டுகிறார். நாலாம்பத்தால் இப்புருஷார்த்தத்துக்கு உபாயம் திருநாரணன் தாளென்றும், விரோதி **"குடிமன்னுமின்சுவர்க்கம்";"எல்லாம் விட்டவிறுகலிறப்பு"என்று ஐஶ்வர்யகைவல்யங்களே விரோதி யென்றும் பிறர்க்கு உபதேசித்து, ††"ஐங்கருவிகண்டவின்பம் தெரிவரியவளவில்லாச்சிற்றின்பம்" என்று தாமும் அநுஸந்தித்தார். அஞ்சாம்பத்தால் இந்த இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவ்ருத்திக்கும் ‡‡"ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்"என்று தன்திருவடிகளையே உபாயமாகத் தந்தா னென்றார். அவன்தந்த உபாயத்தை வடகரை மூன்

---

ஸமம் | ஸுவாமிதோவபத்தீவஹிஹ்ம்தாதரூநிரணயே" என்கிறபடியே "தொழுதெழு" என்று உபக்ரமித்து "சொல்பணிசெயாயிரம்" என்று உபஸம்ஹரிக்கையாலும், "அயர்ப்பிலன்" இத்யாத்யப்யாஸத்தாலும், இந்த அர்த்தம் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணப்ராப்தத்வேந அபூர்வமாகையாலும், "தொழுதெழு" என்கிற இத்தால் பலார்த்தவாதங்கள் ஸித்திக்கையாலும், "தொழுதெழு" என்கிற இந்தவிதேயார்த்தத்திலே "உயர்வற வுயர்நலம்" இத்யாதிகள் ஹேதுகர்ப்பவிஶேஷண மாகையாலே உபபத்தி யுண்டாகையாலும், முதற்பத்து பகவத்கைங்கர்யமே புருஷார்த்த மென்னு மிடத்தை ப்ரதிபாதிக்கிறத்திலே தத்பர மென்றபடி. இரண்டாம்பத்தால் இதி - ப்ராக்ருதஸம்பந்தத்தையுங் கழித்து என்றது - "களிப்புங்கவர்வுமற்று" இத்யாதியைப்பற்ற. ஒளிக்கோண்ட சோதியமாய் - தேஜோரூபமான விக்ரஹத்தை யுடையோமாய். நலமந்தம் இத்யாதி-நன்மைக்கு முடிவின்றிக்கே யிருக்கிற நாட்டிலே புகவேண்டியிருப்பீர். ஓடவைத்தார் - நிஷ்கர்ஷித்தார். மூன்றம்பத்தால் இதி - "ஈதேயானுன்னைக்கொள்வது" என்றத்தைப்பற்ற ருசி. "ஒல்லை" என்ற த்வரை. நாலாம்பத்தால் இதி - குடிமன்னும் இத்யாதி - குடியிருப்புடைய ஸுகோத்தரமான ஸ்வர்க்கம். எல்லாம் இதி - ஆத்மவ்யதிரிக்தங்களையெல்லாம் விட்டவனாய் ஆத்மமாத்ரத்திலே பர்யவஸித்த மோக்ஷம். இறுகல் - ஸங்கோசம். இறப்பு - மோக்ஷம். ஐங்கருவி இத்யாதி - ஜ்ஞாநேந்த்ரியங்களும் பரிச்சேதித்தநுபவித்த ஐஶ்வர்யஸுகமும், இந்த இந்த்ரியங்களுக்கு க்ரஹித்து அநுபவிக்க அரிதாய் இந்த ஐஶ்வர்யஸுகத்திற்காட்டில் நித்யத்வாதிகளாலே அபரிச்சிந்நமாய் பகவதநுபவாபேக்ஷயா அத்யல்பமான ஆத்மாநுபவஸுகமும். வடகரைமுன்னிட்டு என்றது - "வைகல்" "பொன்னுலகாளீர்"

---

* திருவாய்மொழி க-ங-கO. † டை உ-ங-கO. ‡ டை உ-அ-ச. ‡‡ டை உ-கூ-க. ¶ டை உ-கூ-ச. § டை ங-ங-க. ** டை ச-க-கூ. †† டை ச-கூ-கO. ‡‡ டை ரு-எ-கO.

னிட்டுப் பெரியபிராட்டியாரை புருஷகாரமாக *"அலர்மேல்மங்கையுறைமார்பா! உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேன்" என்று ஸ்வீகரித்தார் ஆறும்பத்தால். ஏழாம்பத்தால் இப்படி ஸித்தோபாயஸ்வீகாரம் பண்ணியிருக்கச்செய்தேயும் கடக்கெனப் பலியாமையாலே விஷண்ணராய் †"கடல்ஞாலங்காக்கின்றமின்னுநேமியினாய்" என்றுதொடங்கி உபாயோபயோகியான குணங்களைச் சொல்லிக் கூப்பிட ‡"கூராராழி வெண்சங்கேந்திவாராய்" என்று இவர் ஆசைப்பட்டபடியே வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தி வந்தஇது மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷம் கிடையாமையாலே விஶ்லேஷித்தபடியை அருளிச்செய்தார். எட்டாம்பத்தால் கீழ்ப்பிறந்த ஸம்ஶ்லேஷம் பாஹ்யஸம்ஶ்லேஷயோக்யமல்லாமையாலே §"உமருகந்துகந்தவுருவநின்னுருவமாகி உன்றனக்கன்பரானாரவருகந்தமர்ந்தசெய்கையுன்மாயை" என்று - இப்படி ஆஶ்ரிதாயீந ஸ்வரூபஸ்த்தித்யாதிகளையுடையவன் நமக்குத் தன்னைக்காட்டி மறைக்கைக்கு அடி ஆத்மாத்மீயங்களில் ஏதேனும் நசையுண்டாகவேணுமென்று அதிஶங்கைபண்ணி, அவற்றில் நசையற்றபடியை அருளிச்செய்தார்; ஒன்பதாம்பத்தால் "நீரேன்றிய அதிஶங்கைபண்ணிப்படேரீர்இப்படி" என்று தன்னுடைய நிருபாதிகபந்தத்தையுங் காட்டி, "நான் நாராயணன்: ஸர்வஶக்தியுக்தன்: உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் செய்து தலைக்கட்டுகிறோம்" என்று அருளிச்செய்ய, ¶"சீலமேல்லையிலான்" என்று அவனுடைய சீலகுணங்களிலே ஆழங்கால்பட்டார். பத்தாம்பத்தால் ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்டு திருமோகூரிலே தங்குவேட்டையாக வந்துதங்கி, இவருக்கு அர்ச்சிராதி கதியையுங் காட்டிக்கொடுத்து, இவர் ப்ரார்த்தித்தபடியே "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்று இவர் திருவாயாலே அருளிச்செய்யும்படி பேற்றைப்பண்ணிக்கொடுத்தபடியை அருளிச்செய்கிறார்.

*களில் தூதப்ரேஷணமுகேந ஆசார்யர்களை முன்னிட்டு என்றபடி. விஷண்ணராய் என்றது - "உண்ணிலாவி"யில் ப்ரமேயம். கடல் இத்யாதி - கடல்சூழ்ந்த பூமியை ரக்ஷித்த உஜ்ஜ்வலமான திருவாழியையுடையையாய். கூரார் இத்யாதி - கூர்மைமிக்க திருவாழியையும் வெளுத்த சங்கத்தையும் ஏந்திக்கொண்டவராய். வெள்ளை இத்யாதி - வெளுத்த நிறத்தையும் சுரியையுமுடைய சங்கோடே திருவாழியையும் தரித்து. விஶ்லேஷித்தபடி என்றது-"பாமருமூவுலகு" "ஏழையராவி"களைப் பற்ற. கீழ்ப்பிறந்த ஸம்ஶ்லேஷமென்றது - "ஆழியெழச் சங்கு" "கற்பாரிராமபிரான்"களைப் பற்ற. உமருகந்து இத்யாதி – உனக்கு ஶேஷபூதரானவர்கள் எப்போதும் உகந்த ரூபமே உனக்கு ரூபமாய் உன்னளவிலே அன்பையுடையரானவர்கள் ஆதரித்து அநந்ய ப்ரயோஜநமாக அடிமை செய்கைக்கு ஈடாயிருக்கிற உன்னுடைய சேஷ்டிதங்களை. அவற்றில் நசையற்றபடியை என்றது - "உங்களோடெங்களிடையில்லை" என்றத்தைப் பற்ற. ஒன்பதாம்பத்துக்கு, ஓராயிரத்திலே நோக்கு. என்றிய - எதுக்காக. திருமோகூர் இத்யாதிக்கு - தாளதாமரையிலே நோக்கு. அர்ச்சிராதி இத்யாதிக்கு - சூழ்விசும்பிலே நோக்கு. என்னவாவறச்சூழ்ந்தாய் - என் அபிநிவேஶங்கெடும்படி ஸம்ஶ்லேஷித்தாய்.*

*ஆக, முதற்பத்தாலே உத்தரவாக்யகத ப்ரதம த்விதீயபதார்த்தம் சொல்லப்படுகிறது; இரண்டாம் பத்தால் நமஶ்ஶப்தார்த்தம்;மூன்றாம்பத்தால் இந்தக் கைங்கர்யம் பாகவதசேஷத்வபர்யந்தமென்று நிஷ்கர்ஷித்து நிஷ்க்ருஷ்டார்த்தாநுகுணமாக ஸ்வாநுஷ்டாநம் சொல்லுகிறது; ஆக, கீழ் மூன்றுபத்தும் உத்தரகண்டார்த்தம். நாலாம்பத்தால் பூர்வகண்டஸ்த்த பதத்வயார்த்தமும், ஐந்தாம்பத்தால் க்ரியாபதார்த்தமும், ஆறாம்பத்தால் உபாயத்தினுடைய ஸாங்கஸ்வாநுஷ்டாநமும் சொல்லுகையாலே, மேல் மூன்றுபத்தாலும் பூர்வகண்டார்த்தம்; மேல் நாலுபத்தும் இதுக்கு ஶேஷமென்றபடி.*

---

* திருவாய்மொழி ௬-௰-௰. † ஷை ௭-௧-௨. ‡ ஷை ௬-௯-௧. § ஷை ௮-௧-௪. ¶ ஷை ௯-௩-௧௧.

## ஈடு—மஹாப்ரவேசம் - மூன்றும் ஸ்ரீயப்பதி.

ஸ்ரீயப்பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேச்வரன்; "மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து" என்கிறபடியே ஜந்மபரம்பரைகளிலே தோள்மாறி நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த இவரை *"அடியையடைந்துள்ளந்தேறி யீறிலின்பத்திருவெள்ளம்யான் மூழ்கினன்" என்று தம்திருவாயாலே அருளிச்செய்யலாம்படி முதலடியிலே விசேஷகடாக்ஷத்தைப்பண்ணியருளினான். முதல்தன்னிலே சித்ஸ்வரூபமாதல் அசித்ஸ்வரூபமாதல் ஈச்வரஸ்வரூபமாதல் அழியாதே யிருக்கிற இவர்க்கு அசித்ஸம்ஸம் த்யாஜ்யமென்னுமிடத்தையும், சேதநன் உபாதேயனென்னுமிடத்தையும், தான் உபாதேயதம னென்னுமிடத்தையும் அவன்தானே காட்டிக்கொடுக்கக் கண்டு, அவனோட்டை யநுபவத்துக்கு இத்தேஹஸம்பந்தம் விரோதியாயிருக்கையாலே, த்வதநுபவவிரோதியான இத்தேஹஸம்பந்தத்தை யறுத்துத் தந்தருளவேணு மென்று அர்த்தித்தார் திருவிருத்தத்தில்; ஸம்ஸாரஸம்பந்தமற்று ஒருதேசவிசேஷத்திலே போனால் அநுபவிக்கக்கடவ தன்னுடைய மேன்மையையும் நீர்மையையும் வடிவழகையும் பரப்பற ஏழு பாட்டாலே அநுபவிக்கலாம்படி இங்கேயிருக்கச்செய்தே ஒருதசாவைசத்யத்தைப் பண்ணிக்கொடுக்க அவ்வழகை யநுபவித்தார் திருவாசிரியத்தில்; இப்படி அநுபவித்த விஷயத்திலே விஷயாநுரூபமான ஆசை கரைபுரண்டபடியைச் சொன்னார் திருவந்தாதியில்; ஆமத்தையறுத்துப் பசியைமிகுத்துச் சோறிடுவோரைப்போலே தமக்கு ருசியைப்பிறப்பித்த படியையும், அந்த ருசிதான் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாய்க்கொண்டு பக்வமான படியையும், பின்பு ப்ரக்ருதி ஸம்பந்தமும் அற்றுப் பேற்றோடே தலைக்கட்டின படியையும் சொல்லுகிறார் திருவாய்மொழியில். கைங்கர்யமநோரதம்பண்ணிக்கொண்டு வரக் கொள்ளக் கைகேயி "ராஜநு" "ராஜந்" என்ற சொற்கேட்டு ஸ்ரீபரதாழ்வான் பட்டபாடுபோலே யிருக்கிறதாயிற்று, திருவிருத்தத்தில் நிலை; அவன் திருச்சித்திரகூடத்திலே பெருமாள் எழுந்தருளியிருந்தா ரென்று கேட்டு "ஏபிஶ்சஸசிவைஸ்ஸார்த்தம்" (ஏபிஶ்சஸசிவைஸ்ஸார்த்தம்) என்கிறபடியே என்னொருவன்கண்ணில் கண்ணநீர் பொறுக்கமாட்டாதவர் இத்தனைபேர்ஆற்றாமைகண்டால் மீளாதொழிவரோ? "ஶிரஸாயாசிதோமயா" (ஶிரஸாயாசிதோமயா)-என் அபிமதம் தந்தலையாலே யிரந்துசெய்யக்கடவஅவர், நான்

---

*ஸ்ரீபரதாழ்வானை த்ருஷ்டாந்தீகரிக்கைக்காகப் புநஶ்ச ப்ரபந்த சதுஷ்டயத்துக்கும் அர்த்தம் அருளிச்செய்வாராக மீளவும் வக்த்ருவைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார் - 'ஸ்ரீயப்பதியாய்' இத்யாதி. 'யத்வா, இப்ப்ரபந்த சதுஷ்டயத்திலும் இவர்க்கு உண்டான தசைக்கு ஸ்ரீபரதாழ்வானுடைய தசையை த்ருஷ்டாந்தீகரிக்கிற முகேந திருவாய்மொழியினுடைய பக்தியோக ப்ரதிபாதகபரத்வத்தை அருளிச்செய்வாராகத் தாத்ருஶ ப்ரபந்தநிர்மாண ஸாமர்த்ய ஹேதுத்வேந மீளவும் வக்தாவினுடைய ஜ்ஞாநாதிக்யரூபவைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார் - ஸ்ரீயப்பதியாய் இத்யாதி என்னுதல். சேதநனுக்கு உபாதேயத்வம் - 'அடியேன்' என்றதைப் பற்ற. தன்னுடையமேன்மை இத்யாதிக்கு - முதற்பாட்டிலே நோக்கு. பரப்பற - ஸங்க்ரஹமாக. "ஆமத்தையறுத்து" என்றுதொடங்கிச் சொன்ன த்ருஷ்டாந்தத்ரயத்துக்கும் அடைவே தார்ஷ்டாந்திக த்ரயத்தைக் காட்டுகிறார், தமக்கு ருசியை என்று தொடங்கி. ஆமத்தையறுத்து என்றதுக்கு - தார்ஷ்டாந்திகம் யயர்வறமதிநலமருளுகை யென்று கண்டுகொள்வது. இப்ப்ரபந்த சதுஷ்டயத்திலும் இவர்க்கு உண்டான அவஸ்த்தைகள் ஸ்ரீபரதாழ்வானுடைய அவஸ்த்தைகள்போலே யென்கிறார், கைங்கர்ய மநோரதம் இத்யாதி. "ராஜந்" என்ற சொற்கேட்டு -*

---

* திருவாய்மொழி ௨-௩-௮.

என்தலையாலேஇரந்த கார்யத்தை மறுப்பரோ? "ப்ராது:" (ப்ராது:) - நான் தம்பின்பிறந்தவனல்லேனே? "சிஷ்யஸ்ய" - (சிஷ்யஸ்ய) பின்பிறந்தவனென்று கூறுகொள்ள இருக்கிறேனே? மந்த்ரஸம்பந்தமும் தம்மோடேயன்றோ? "தாஸஸ்ய" (தாஸஸ்ய) - சிஷ்யனாய் க்ரயவிக்ரயார்ஹனன்றிக்கே இருக்கிறேனே? "ப்ரஸாதம் கர்த்துமர்ஹதி"(ப்ரஸாதம் கர்த்துமர்ஹதி) - ஆனபின்பு என்பக்கல் ப்ரஸாதத்தைப்பண்ணியருளாரோ? என்று மநோரதித்துக்கொண்டு போகிறபோதை தரிப்புப்போலே,திருவாசிரியத்தில்நிலை; ஸ்ரீநந்திக்ராமத்திலே "ராமாகமநகாங்க்ஷயா" (ராமாகமநகாங்க்ஷயா) என்கிறபடியே பதினாலாண்டும் ஆசைவளர்த்துக்கொண்டிருந்தாற்போலே யிருக்கிறது, திருவந்தாதியில்; மீண்டெழுந்தருளித் திருவபிஷேகம் பண்ணியருளி, அவனும் ஸ்வரூபாநுரூபமான பேறு பெற்றாற்போலேயிருக்கிறது, இவர்க்குத் திருவாய்மொழியில் பேறு.

திருவாய்மொழிக்காக ஸங்க்ரஹம் முதல்திருவாய்மொழி; முதல்திருவாய்மொழியினுடைய ஸங்க்ரஹம் - முதல் மூன்றுபாட்டு; முதல்மூன்றுபாட்டினுடைய ஸங்க்ரஹம் - முதற்பாட்டு; முதற்பாட்டினுடைய ஸங்க்ரஹம் - முதலடி; என்போலேன்னில்; - "ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச | ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம் யச்சாந்யதபி வாங்மயம்" (ருசோயஜூம்ஷிஸாமாநி ததைவாதர்வாணநிச | ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம் யச்சாந்யதபிவாங்மயம்) என்கிறபடியே ஸகலவேதஸங்க்ரஹம் திருமந்த்ரமாய், அதினுடையஸங்க்ரஹம் ப்ரணவமாய், அதினுடைய ஸங்க்ரஹம் அகாரமானாற்போலே. மற்றும் பாரதராமாயணாதிகளையும் ஸங்க்ஷேப விஸ்தரங்களாலே செய்தார்களிறே.

---

"உத்திஷ்டோத்திஷ்ட கிம் சேஷே ராஜந் த்வம் ரகுநந்தந | தவ்யாநந்யோ ஹி சிஷ்யோஹம் தாஸஸ்ய தவ ஸத்தம" என்கிற சொல்லைக் கேட்டு. அயம் ஶ்லோகோऽயோத்யாகாண்டே மாதுலகுலாதாகதம் பரதம்ப்ரதி கைகேய்யுக்தி:. மறுப்பரோ - திரஸ்கரிப்பரோ. கூறு - பாகம். மந்த்ரஸம்பந்தமும் தம்மோடேயன்றே இதி-அத்ர வஸிஷ்டர் பெருமாளுக்கு மந்த்ரங்களை உபதேசித்தார், பெருமாள் கநிஷ்டர்களுக்கு உபதேசித்தாரென்று கண்டுகொள்வது. ஶிஷ்யஸ்யேத்யாதி - அயம்ஶ்லோகோऽயோத்யாகாண்டே. இது பெருமாள் ஸமக்ஷத்திலே விண்ணப்பம் செய்ததே யாகிலும் வழியிலும் நினைவு இது ஆகையாலே மநோரதபரமாக வ்யாக்யாநம் உபபந்நம். "ஸகாமாந்வாபிவ்யவாஸாரவராத்ரவர்ஷ | நந்திக்ராமேऽகரோத்ராஜ்யம் ராமாகமநகாங்க்ஷயா" இதி ஸங்க்ஷேப. அவனும் - ஸ்ரீபரதாழ்வானும்.

முதற்பாட்டுக்கு முதலடி ஸங்க்ரஹமாம்போது விக்ரஹவிபூதிகள் எங்கே சொல்லுகிறது? என்ன, விக்ரஹவிபூதிகள் ஆநந்தாவஹங்களாகையாலே 'நலம்' என்று ஆநந்தம் சொன்னபோதே விக்ரஹவிபூதிகளும் அர்த்தாத்ஸித்தங்கள்.

ஸ்ரீமந் மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

## திருவாய்மொழிநூற்றந்தாதியின் தனியன்கள்

அல்லும்பகலும் அனுபவிப்பார்தங்களுக்குச்
சொல்லும்பொருளும் தொகுத்துரைத்தான் — நல்ல
மணவாளமாமுனிவன் மாறன்மறைக்குத்
தனையா நூற்றந்தாதிதான்.

மன்னுபுகழ்சேர் மணவாளமாமுனிவன்
தன்னருளால் உட்பொருள்தம்முடனே — சொன்ன
திருவாய்மொழி நூற்றந்தாதியாம்தேனை
ஒருவாதருந்து நெஞ்சே! உற்று.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## முதற்பத்து.

முதல்திருவாய்மொழி—உயர்வற

### முதற்பாட்டு.

உயர்வறவுயர்நலமுடையவன் யவனவன்
மயர்வறமதிநலமருளினன் யவனவன்
அயர்வறுமமரர்களதிபதி யவனவன்
துயரறுசுடரடி தொழுதெழென்மனனே.

#### ஆறுயிரப்படி.

(உயர்வறவுயர்நலம்.) அப்ராக்ருதஸ்வாஸாதாரண திவ்யரூபபூஷணாயுத மஹிஷீபரிஜந ஸ்தாந விஶிஷ்டனாய், நிகிலஜகதுதயவிபவாதிலீலனாயிருந்த பரமபுருஷனை உள்ளபடியே ஆழ்வார் தாம் தம்முடைய திருவுள்ளத்தாலே அநுபவித்து அவ்வநுபவஜநிதமான நிரவதிகப்ரீதியாலே அவனை அநுபவித்தபடியே பேசுகிறார்.

அஶேஷதோஷப்ரத்யநீகமாய், "தேஶயஶதம்" இத்யநுக்ரமத்தினாலே நிரதிஶயாதிஶாஶிரஸ்கமான அப்யஸ்யமாநமாயிருந்த ஆநந்தாத்யஸங்க்யேய கல்யாணகுண மஹோததியாய், இந்த ஆநந்தாதி கல்யாணகுணங்களையுடையனான தான் மேலே பொன்னுமாய் நாறினாற்போலே நிர்ஹேதுகமாக எனக்குத் தன்திறத்தில் அஜ்ஞாநகந்தமில்லாதொருபடி தன்னை உள்ளபடி அறிவித்துத் தன்திருவடிகளிலே நிரவதிகபக்தியையுண்டாக்கின இம்மஹாகுணத்தை யுடையனாய், இந்தக்கல்யாணகுணங்களையுடையனான தன்னை ஸ்வஹாவதஏவ நிரஸ்த ஸமஸ்த தோஷராய் அஸ்கலிதஜ்ஞாநராயிருந்துள்ள ஶேஷ ஶேஷாஶந வைநதேய ப்ரப்ருத்யஸங்க்யேய திவ்யபுருஷர்களுக்குக் கொடுத்துகொண்டிருக்கிற பரமௌதார்யத்தை யுடையனாயிருந்த எம்பெருமானுடைய ஆஶ்ரிதஜநஸமஸ்ததுःகாபநோதந ஸ்வஹாவமான திருவடிமலர்களிலே ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸர்வஶேஷவ்ருத்தியையும் பண்ணி உஜ்ஜீவியென்று தம்முடைய திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறார்.

#### ஒன்பதினாயிரப்படி.

முதற்பாட்டுக்குக் கருத்து — அகிலஹேயப்ரத்யநீக கல்யாணகுணனாய், குணங்களுக்கு நிறங்கொடுக்க வற்றான திவ்யதேஹயுக்தனாய், ஶ்ரிய:பதியாய், ஸௌந்தர்யாதிகளுக்கு போக்தாக்களான அயர்வறு மமரர்க ளதிபதியா யிருந்துவைத்துத் தன்னுடைய நிரவதிகக்ருபையாலே என்னுடைய தோஷாகரதையைப் பாராதே என்னுடைய அஜ்ஞாநமெல்லாம் நீங்கும்படி ஸ்வவிஷய

பக்திரூபஜ்ஞாநத்தை நிர்ஹேதுகமாக ஸாதரனாய்க்கொண்டு தந்தருளினான்; ஆனபின்பு, அவன் திருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவிப்போமென்று திருவுள்ளத்தோடே கூட எம்பெருமானுக்கு அடிமைசெய்கையிலே ப்ரவ்ருத்தராகிறார். இத்தால், ப்ரபந்தாரம்பத்திலே வஸ்துநிர்த்தேஶ நமஸ்காரங்களும் பண்ணப்பட்டனவாய் விழுந்தது.

[உயர்வற வுயர்நலமுடையவன்] - ஆநந்தவல்லியிற் சொல்லுகிறபடியாலே ஓரோ குணத்தின் ஸந்நிதியிலே வ்யதிரிக்த ஸகலார்த்தகதமான எல்லாப்படியாலுமுள்ள எல்லாவுயர்த்தியும் ஆதித்ய ஸந்நிதியில் நக்ஷத்ராதிகளைப்போலே யுண்டாய், அவற்றை இல்லையென்னலாம்படியாய், அவைதனக்கு அவதியுண்டாயிருக்கை யன்றியே காலதத்த்வமுள்ள தனையும் அநுஸந்தியாநின்றாலும் மேன்மேலென உயர்ந்து காட்டாநிற்பனவான கல்யாணகுணங்களை யுடையான். நலமென்றவிடத்தில், ஏகவசநம் - குணஜாதிபரம். நலமாவது - குண விபூத்யாதிகளை அநுபவிக்கையாலே வந்த ஆநந்தகுணமாகவுமாம்; ஆநந்தமென்று ஆநந்தஶ்ருதிகளில் ப்ரஸித்தம். குணநிரபேக்ஷமாகத் தானே விலக்ஷணமாய், தன்னைப்பற்றிக் குணங்கள் நிறம்பெறும்படியான திவ்யாத்மஸ்வரூபத்தினுடைய உபநிஷத்ப்ரஸித்தியைச் சொல்லிற்றாகவுமாம். [அவன்]—முன்புசொன்ன நன்மைகளிற்காட்டில் மேற்பட்டதொரு நன்மை சொல்லுகைக்காக அவனென்று நிர்த்தேசிக்கிறது. இப்படியே மேல் யவனவன்களுக்கும் பொருள். ‘அவன்’ என்று பலகால் சொல்லுகிறதுக்குக் கருத்து - இப்பாட்டில் ப்ரதிபாதிக்கிற குணங்கள் தனித்தனி ஈஶ்வரத்வஸாதகங்களென்று தோற்றுகைக்காக. [மயர்வற]--ஸ்வவிஷயத்திலே எனக்கு அநாதியாய்வருகிற அஜ்ஞாநமெல்லாம் போம்படி. [மதிநலம்] – பக்திரூபாபந்நஜ்ஞாநம். [அருளினன்] - இத்தலை நன்மை தீமைபாராதே நிர்ஹேதுகமாகத் தன்க்ருபையாலே தந்தருளினான். எனக்குத் தந்தருளினானென்னு தொழிவானென்? என்னில்;— “அஸந்நேவ ஸ பவதி” என்று சொல்லுகிற கணக்காலே பகவத்விஷயீகாரத்துக்குமுன்பு தம்மை அஸத்கல்பராக நினைத்திருக்கையாலே. [அயர்வறுமமரர்களதிபதி] - பகவத்ஜ்ஞாநத்துக்கு விச்சேதமில்லாமை ஸ்வபாவமாய், அவ்வநுபவத்துக்கு ஒருநாளும் விச்சேதமின்றிக்கே யிருக்கிற நித்யஸூரிகளுக்கு ஸ்வாமி. ‘அமரர்கள்’ என்கிற பஹுவசநத்துக்கு முக்யார்த்தத்வம் ப்ராப்தமாகையால் அவர்கள் தங்களுக்கு எண்ணில்லை யென்கிறது. [துயரறுசுடரடி] – துயரறும் ஸ்வபாவமாய், அப்ராக்ருத தேஜோரூபமான திருவடிகளை. திருவடிகளுக்குத் துயருண்டோ? என்னில்,— ஆஶ்ரிதருடையதுயர் திருவடிகளுக்குத துயர். அவனைத் தொழுதெழென்னாதே திருவடிகளைத் தொழுதெழு என்பானென்? என்னில்,— ஸ்தநந்யப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே அடியனானவனுக்குத் திருவடிகளிலே தலைமடுக்கை முறைமையாகையாலே. [தொழுதெழு] - அடிமையாலல்லது செல்லாத தன்மையா யிருக்கச்செய்தே அநாதிகாலம் அடிமையிழந்து உருவி இல்லாதார்கணக்காயிருக்கிற நீயே எம்பெருமானுடையதிருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவி. எம்பெருமானோடு ப்ரத்யாஸந்நமான திருவுள்ளத்தோடே தமக்கு ஸம்பந்தத்தை ஆசைப்பட்டு, ‘என்மனனே’ என்கிறார்.

‘ஸந்மாத்ரமே வஸ்து’என்கிற வாதமும், ‘ஜீவபரர்களுடைய பேதம் ஔபாதிகம்; மோக்ஷதசையில் எல்லாம் ஒன்று’ என்கிற வாதமும் இவர்க்கு ஸித்தாந்த மன்றென்னுமிடம் வ்யக்தம் இப்பாட்டில்; பராமவர்களுக்கு விருத்தமாகையால். இப்பாட்டில் ‘அவன், அவன்’ என்கிற மூன்று பர்யாயத்திலும் ‘துயரறுசுடரடி தொழுதெழென்மனனே’ என்று வாக்யபேதம்பண்ணி யோஜிப்பர். “நமோநமஃ” இத்யாதி ஶ்லோகவத் ப்ரதிநிர்தேஶணம் ஈடுபடுகையாலே.

## பன்னீராயிரப்படி.

இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமான முதற்பாட்டில் பரத்வப்ரதாநோபபாதகமான நிரவதிக கல்யாணகுணயோகத்தையும் நிர்ஹேதுக உபகாரகத்வத்தையும் நித்யஸூரிநிர்வாஹகத்வத்தையும் நித்யமங்கள விக்ரஹயோகத்தையு முடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே நிரந்தர ஶேஷவ்ருத்தியைப் பண்ணென்று தம்நெஞ்சை நியோகிக்கிறார்.

(ஆநந்தவல்லியிற் சொல்லுகிற கணக்கிலே), உயர்வு — அல்லாத உயர்த்திகள், அற - அஸத்கல்பமாம்படி, உயர் - அவாங்மநஸகோசரமாய் உயர்ந்த, நலம் - ஆநந்தத்தை, உடையவன் - உடையனாக, யவன் அவன் — ப்ரமாணப்ரஸித்தனானவன் யாவனொருவன்,—மயர்வு - (ஸம்ஶயவிபர்யயாதி ரூபமான) அஜ்ஞாநம், அற - நசிக்கும்படி, மதிநலம் - ஸ்வாபாவிகஜ்ஞாந ப்ரேமங்களை, அருளினன் - (தன் அருளாலே) தந்தருளினவனாக, யவன் அவன்-"ப்ரஜ்ஞாவஸ்தாந ... " என்கிற ப்ரஸித்தியை யுடையவன்) யாவனொருவன் —அயர்வு - விஸ்மரணப்ரஸங்கம், அறும் - இல்லாத, அமரர்கள் - (நிரந்தராநுபவயுக்தரான) நித்யஸூரிகளுக்கு, அதிபதி - நிரவதிகஶேஷியானவன், யவன் - யாவனொருவன்,—அவன் - அவனுடைய, துயரறு - ஸமாஶ்ரிதது:கநிவர்த்தகமாய், சுடர் - நிரந்தரௌஜ்ஜ்வல்யவிஶிஷ்டமான, அடி - திருவடிகளைக் குறித்து, தொழுது - ("வஜ்ஞாஞ்ஜலி ..." என்கிறபடியே) ஶேஷத்வாநுரூபவ்ருத்தியைப் பண்ணி, என்மனனே - என்மநஸ்ஸே! எழு - நித்யோச்ச்ராய ரூபமான உஜ்ஜீவநத்தைப் பெறு (என்று தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்து அநுஸந்தித்தருளினாராயிற்று.)

இதில் முதலடியில் - 'நலம்' என்று ஆநந்தகுணத்தையாதல், ஆநந்தஹேதுவாக உபநிஷத்திற்சொன்ன யுவத்வாதிகுண விபூதிகளையாதல் சொல்லுகிறது. இரண்டாமடியில் - 'நலம்' என்று பக்திரூபஸ்நேஹத்தைச் சொல்லுகிறது. இப்பாட்டில் மூன்றடியிலும் 'யவன்' என்கிற ஶப்தத்தோடே 'அவன்' என்று தொடங்கி, நாலாமடியைத் தனித்தனியே அந்வயித்து, மூன்று வாக்யமாகவும் சொல்லுவர்; முதலடியில் யவனோடே 'அவன்' என்று தொடங்கி இரண்டாமடியைக் கூட்டி வாக்யமாக்கி, அவ்விரண்டாமடிதன்னை ஆவர்த்தித்து யச்சப்தத்தாலே நிர்த்தேசித்து அத்தை 'அவன்' என்று தொடங்கி மூன்றுமடியோடே கூட்டி, அதுதன்னையும் ஆவர்த்தித்து 'யவன்' என்று நிர்த்தேசித்து அத்தோடே 'அவன்' என்று தொடங்கி நாலாமடியிலே வினைமுடித்து வாக்யைகவாக்யமாகவும் சொல்லுவர்; அங்ஙனன்றியே, "யஸ்யாயம் ... யஸ்யாவாஸ ... " என்கிற கணக்கிலே 'யவனவன்' என்று யச்சப்தார்த்தமாய் ப்ரஸித்தியைக் காட்டி, அத்தை 'அவன்' என்று தொடங்கி நாலாம்பாதத்தாலே பராமர்ஶித்து முடிக்கையாலே ஏகவாக்யமாகவும் சொல்லுவர். இப்பாட்டு ஸர்வஶாஸ்த்ரோபப்ரும்ஹணமான இப்ப்ரபந்தஸங்க்ரஹமாகையாலே ஸகலஶாஸ்த்ரஸங்க்ரஹரூபமான மந்த்ரரஹஸ்யார்த்ததாத்பர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது. எங்ஙனேயென்னில்,—'உயர்நலமுடையவன்' என்கிற ஸர்வாதிக ஶேஷித்வத்தாலே ப்ரதமபதார்த்தமான அநந்யார்ஹஶேஷத்வ ப்ரதிஸம்பந்தித்வத்தையும், 'மதிநலமருளினன்' என்று க்ருபாகார்யமாகச் சொன்ன உபகாரகத்வத்தாலே மத்யமபதார்த்தமான உபாயபாவத்தையும், 'அமரர்களதிபதி' என்று நித்யஸூரிஸேவ்யத்வத்தாலே சரமபதார்த்தமான ப்ராப்யத்வத்தையும், 'தொழுதெழு' என்கையாலே சதுர்த்த்யர்த்தமான கைங்கர்யத்தையும் சொல்லிற்றாயிற்று.

## இருபத்திநாலாயிரப்படி.

முதற்பாட்டு. ஸ்ரீய:பதியாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் அக்குணங்களுக்கு ப்ரகாசகமான திவ்யவிக்ரஹத்தையுடையனாய் அவற்றையநுபவிக்கும் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருக்கிற இருப்பைத் தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையினாலே அநுபவயோக்யமாம்படி நமக்கு பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைத் தந்தருளினான்; அவன் திருவடிகளிலே அடிமைசெய்து உஜ்ஜீவிக்கப்பாரென்று தம்திருவுள்ளத்தைக் குறித்து அநுஸாஸிக்கிறார்.

[உயர்வு] - உயர்த்தி; அதாவது—தன்னையொழிந்த ஸகலபதார்த்தங்களிலும் எல்லாப்படியாலுமுண்டான எல்லாவுயர்த்தியையுஞ் சொல்லுகிறது. [அற]-ஆதித்யஸந்நிதியிலே நக்ஷத்ராதிகளைப்போலே யுண்டாய், அவற்றை இல்லையென்னலாம்படி யிருக்கை; "ஜ்யோதீம்ஷ்யாதித்யவத்" இத்யாதி. [உயர்] - உயாநிற்கை. காலதத்த்வமுள்ளதனையும் அநுபவியாநின்றாலும் அவ்வருகாய்க்கொண்டு வாங்மநஸங்களால் பரிச்சேதிக்கவொண்ணாதிருக்கை. அநுபூதாம்ஸம் அல்பமாய் அநநுபாவ்யாம்ஸமே விஞ்சியிருக்கை. [நலம்] - குணவிபூத்யாதிகளை அநுபவிக்கையால் வந்த ஆநந்தகுணம்; ஏகவசநம் - ஜாத்யபிப்ராயமாய்க் குணஜாதிபரமாகவுமாம்; ஆநந்தாவஹமான குணவிபூத்யாதி பரமாகவுமாம். நலமென்கையாலே - கட்டடங்க நன்மையேயாயிருக்கை. [உடையவன்] - ஆகந்துகமன்றிக்கே ஸ்வரூபாநுபந்தியாயிருக்கை. இதுக்கு ஆளவந்தார் "ஸ்வாபாவிகாநவதிகாதிஸயாஸம்வ்யேய கல்யாணகுணகண:" என்று அருளிச்செய்வர். 'குத்ருஷ்டிகளுடைய மிடற்றைப் பிடித்தாற்போலே நலமுடையவன் என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி கண்டாயே' என்று பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்தான். [யவன்] - இக்குணங்களுக்கு ஆஸ்ரயமான திவ்யாத்மஸ்வரூபத்தினுடைய ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. இந்தக்குணங்கள்தானும் நிறம்பெறும்படியான ஸ்வரூபவைலக்ஷண்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். [அவன்] - முன்பு சொன்ன நன்மைகளிற்காட்டில் மேற்பட்டதொரு நன்மை சொல்லுகைக்காக 'அவன்' என்று உத்தேஸிக்கிறது. [மயர்வு] - அஜ்ஞாநம்; இத்தால், ஜ்ஞாநாநுதய அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாந ரூபமான அஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. [அற] - ஸவாஸநமாகப் போகும்படி. [மதிநலம்] - மதியென்று - ஜ்ஞாநம், நலமென்று - பக்தி: பக்திரூபாபந்நஜ்ஞாந மென்றபடி [அருளினன்] - இத்தலையில் நன்மை தீமை பாராதே, நிர்ஹேதுகக்ருபையாலே தந்தருளினான்; முலைக்கடுப்பாலே தரையிலே பீச்சுமாபோலே. எனக்குத் தந்தருளினானென்னாதொழிந்தது - பகவத்விஷயீகாரத்துக்குமுன்பு தம்மை அஸத்கல்பராக நினைத்திருக்கையாலே. [யவன்] - இப்படி உபகாரகனாக ப்ரஸித்தனானவன். [அவன்]-அதுக்குமேலே ஒருநன்மை சொல்லுகைக்காக அவனென்று உத்தேஸிக்கிறது [அயர்வறும்] - பகவத்ஜ்ஞாநத்துக்கு விஸ்ம்ருதியில்லாமை ஸ்வபாவமாயிருக்கை. [அமரர்கள்] – மரணமின்றிக்கே யிருப்பவர்கள். அவர்களுக்கு மரணமாவது - பகவதநுபவ விச்சேதம்; அதின்றிக்கே யிருக்கை. அமரர்களென்கிற பஹுவசநத்தாலே — அவர்களுக்கு எண்ணில்லை யென்கிறது. [அதிபதி] - அதிகனான பதி. அஸங்க்யாதரான நித்யஸூரிகள் நித்யாநுபவம் பண்ணாநின்றாலும் பரிச்சேதிக்கவொண்ணாத பெருமையையுடையவன். [யவன்] - நித்ய விபூதியோகத்தாலே வந்த ப்ரஸித்தி. [அவன்]-அதுக்குமேலே விக்ரஹத்தால் வந்த வைலக்ஷண்யம் சொல்லுகைக்காக உத்தேஸிக்கிறது. [துயரறு] - துயரற்ற என்றபடி. இவர் மயர்வற, அவன் துயரற்றபடி. [சுடரடி] - நிரவதிகதேஜோரூபமான திவ்யவிக்ரஹம். [அடி] - மோக்ஷபூதர் அநுபவிக்க இழியுந் துறை. [தொழுது]-மோக்ஷியைக்கண்டால் பிறக்கும் வ்ருத்திவிசேஷம். [எழு] - உஜ்ஜீவி. தொழப்பெறாத போது "அஸந்நேவ" என்னும்படியாயிறே இருப்பது. [என்மனனே] - பகவத்ப்ராத்யாஸத்தியாலே தமக்குத் திருவுள்ளத்தோடே ஒரு ஸம்பந்தத்தை ஆசைப்படுகிறார்.

தனித்தனியே 'அவன்' என்கிறது - ஓரோவொன்றே ஈஸ்வரத்வ ஸாதகங்களென்று தோற்றுகைக்காக. மூன்றுபர்யாயத்திலும் 'துயரறுசுடரடிதொழுதெழென்மனனே' என்று வாக்யபேதம்பண்ணி யோஜிக்கவுமாம்; "நமோ நமோ வாங்மநஸாதிபூமயே" என்னுமா

போலே தனித்தனியே ப்ரீதியாலே ஈடுபடுகையாலே. "உயர்வறவுயர்நலமுடையவன் யவன், அவன் மயர்வறமதிநல மருளினன். மயர்வற மதிநலமருளினன் யவன், அவன் அயர்வறும் அமரர்களதிபதி; அயர்வறும் அமரர்களதிபதி யவன், அவன் துயரறுசுடரடி தொழுதெழு என் மனனே" என்று வாக்யைகவாக்யந்யாயத்தாலே யோஜிக்கவுமாம்.

## ஈடு முப்பத்தாறாயிரப்படி.

முதற்பாட்டு.—தான் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாயிருக்கிற இருப்பைக் காட்டி உபகரித்தான்; அக்குணங்களும் தன்னைப்பற்றி நிறம்பெறவேண்டும்படியாயிருக்கிற திவ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டி உபகரித்தான்; இப்பேற்றுக்கு என்பக்கல் சொல்லலாவது ஒன்றுமின்றிக்கேயிருக்க, நிர்ஹேதுகமாகத் தானே உபகாரகனானான்; ஸ்வஸ்வரூபாபந்நராயிருக்கிறவர்களுக்கும்அவ்வருகாயிருக்கிற இருப்பைக் காட்டி உபகரித்தான்; தன்னுடைய திவ்யவிக்ரஹவைலக்ஷண்யத்தைக் காட்டி உபகரித்தான் என்று அவன்பண்ணின உபகாரங்களடையச் சொல்லி, இப்படி உபகாரகனானவன் திருவடிகளிலே நித்யகைங்கர்யத்தைப் பண்ணி உஜ்ஜீவிக்கவாராய் யென்று தம்திருவுள்ளத்தோடேகூட்டுகிறார். ஆறு திண்ணகமெடுத்தால் நேர்நின்றமரங்கள் பறியுண்டுபோய்க் கடலிலே புகும்; நீர்வஞ்சி தொடக்கமானவை வளைந்து பிழைக்கும்; அதுபோலே பகவத்குணங்களினுடைய எடுப்பு இருந்தபடி கண்டோமுக்கு எதிரே நானென்று பிழைக்க விரகில்லை; அவன் திருவடிகளிலே தலைசாய்த்துப் பிழைக்க வாராய் நெஞ்சே என்கிறார்; உயர்வறவுயர்நலமுடைய

---

## ஸ்ரீயர் அரும்பதம்.

இப்படி அவதரிப்பித்த ப்ரபந்தத்தில் பாட்டுக்களை அடைவே விவரிப்பதாக உபக்ரமிக்கிறார் - 'முதற்பாட்டு' இதி; முதற்பாட்டு வ்யாக்யாயதே என்றபடி. இப்படி எங்கும் கண்டுகொள்வது. வாக்யைக வாக்யயோஜநாநுகுணமாக அவதாரிகை-'தான் ஸமஸ்த' இத்யாதி. 'தொழுதெழு' என்ற கைங்கர்யம் ப்ரீதிகாரிதமாக வேண்டுகையாலே ப்ரீதிஹேதுத்வேநோபகாரபரம்பரைகளை அருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது. 'அருளினன்' என்றத்தை ப்ரதிவாக்யம் அந்வயித்து 'உபகரித்தான் உபகரித்தான்' என்கிறாராதல்; இப்ப்ரபந்தம் அநுபவபரீவாஹரூபமாகையாலே உபகரித்தமை அர்த்தாத்ஸித்தமாதல். தான் ஸமஸ்தேத்யாதிக்கு - 'நலம்' என்றதிலே நோக்கு. அக்குணங்களும் 'தன்னைப்பற்றி' என்கிறவிடத்திலே - 'குணாயத்தம்' இத்யாதி ஶ்லோகஶ்ச, ஹேமாரவிந்தபரிமளந்யாயஶ்ச அநுஸந்தேயஃ. மங்களபதம் - மங்கள பதப்ரயோகஃ. ஶ்ரீபூயம் - ஶ்ரீபத்வம். ஶ்ருதிவஶாத் என்றது - "ஜ்யோதிஷாம்ஜ்யோதிஃ" என்றத்தைப் பற்ற. 'அக்குணங்களும்' இத்யாதிக்கு - 'யவன்' என்ற விசேஷ்யாம்ஶத்திலே நோக்கு. 'இப்பேற்றுக்கு' இத்யாதி - 'அருளினன்' என்றத்தைப் பற்ற. 'ஸ்வஸ்வரூபாபந்நராய்' இத்யாதி - 'அயர்வறுமமரர்களதிபதி' என்றத்தைப் பற்ற. 'ஸ்வஸ்வரூபாபந்நராய்' - தங்களுடைய அபஹதபாப்மத்வாத்யஸாதாரணாகாரத்தை அடைந்தவர்களாய். 'துயரறுசுடரடி' என்றத்தைப் பற்ற, 'தன்னுடைய திவ்ய விக்ரஹ' இத்யாதி. கூட்டுகை - உபதேசிக்கை. உபகாரத்துக்குத் தோற்றால், "ஹரயே நமஃ" என்றாற்போலே தாம் தொழாதே நெஞ்சுக்குச் சொல்லுகிறது - ப்ரீத்யதிசயத்தாலே உசாவவேண்டி, அதுக்கு இவ்விபூதியில் ஆளில்லாமல், முந்துற்ற நெஞ்சாகையாலே- 'திருவுள்ளத்தோடேகூட்டுகிறார்' என்று பாடமானால், 'என்மனனே' என்று உறவுகொண்டாடுகிறாரென்றபடி. இந்தப் பாடத்தில் 'உஜ்ஜீவிக்க வாராய்' என்றது, நான் உஜ்ஜீவிக்கும்படி வாரா யென்றபடி. வாக்யபேதயோஜநைக்குச் சேர அவதாரிகாந்தரம் - 'ஆறு திண்ணகம்' இத்யாதி. இதுக்கு 'உயர்வறவுயர்நலமுடையவன்' என்கிற பதத்திலே நோக்கு. யத்வா, 'தான் ஸமஸ்த' இத்யாதி வாக்யத்திலே உபகாரங்களை அநுஸந்திக்கில் அவஶ்யம் தொழவேணு மென்கிறாராய், 'இதில் நேரே நாம் தொழாதொழியிலும் குணோத்ரேகம் தொழுவித்துக்கொள்ளு மென்றார்' என்று யோஜிக்கவுமாம். திண்ணகம் - ப்ரவாஹம். நேர் - எதிர். 'நீர்வஞ்சி' இதி; அத்ர "ஆநுகூல்யஸங்கல்பம் வைதஸம் ப்ராதிகூல்யம்" என்றது அநுஸந்தேயம். எடுப்பு-அதிசயம்;ஔத்நத்யம்வா. குணங்களுடைய எடுப்பு என்கிற விடத்திலே - "த்ருஷ்டாநுஸ்வஹம் ததா" இத்யாத் யநுஸந்தேயம். கண்டோமுக்கு - கண்ட நமக்கு. உத்தாரத்தஸ்ய ஶப்தாகாங்க்ஷாயாமாஹ - 'உயர்வற' இத்யாதி. குணக்ருத

வன் துயரறுசுடரடிதொழுதெழப்பாரா யென்கிறார்; "அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர்தாஸ்யமுபாகத:" (அஹமஸ்யாவரோப்ராதா குணைர்தாஸ்யமுபாகத:) என்னுமாபோலே: இளைய பெருமாளை 'நீர்இவர்க்கு என்னுவீர்?' என்ன, 'பெருமாளும் ஒருபடி நினைத்திருப்பர், நானும் ஒரு படிநினைத்திருப்பேன்' என்றார்; 'அவர்' நினைத்திருக்கும்படி யேன்? நீர் நினைத்திருக்கும்படியேன்?' என்ன; 'அவர் தம்பின்பிறந்தவனென்றிருப்பர்; நான் அவர் குணங்களுக்குத் தோற்று அடியேனு யிருப்பன்' என்றாரிறே; அப்படியே இவரும் 'உயர்வறவுயர்நல முடையவன் துயரறுசுடரடி தொழுதெழப்பாராய் நெஞ்சே' என்கிறார். இவர்தாம் முற்படக் குணங்களிலே யிழிவானேன்? என்னில்;—தாம் அகப்பட்டதுறை அதுவாகையாலே. இவரைக் குணத்தையிட்டாயிற்று வணங் குவித்தது.

[உயர்வு இத்யாதி] - பகவதாநந்தத்தைப் பேசப்புக்க வேதங்கள் மநுஷ்யாநந்தம் தொடங்கி ப்ரஹ்மாநந்தத்தளவும் சென்று பின்னையும் அவ்வருகே உத்ப்ரேக்ஷித்துக்கொண்டு சென்று பின்னையும் பரிச்சேதிக்கமாட்டாதே "யதோ வாசோ நிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த் தந்தே) என்று மீண்டனவிறே; இது ஆநந்தகுணமொன்றிலுமிறே; குணங்களெல்லாம் இப்படியே

---

தாஸ்யஸ்யத்ருஷ்டாந்த: - 'அஹமஸ்ய' இத்யாதி. உபாதகம் 'இளையபெருமாள்' இத்யாதி. 'நீர் இவர்க்கு என்னுவீ ரென்ன' என்றதுக்கு - "ராஜ்யாத்ப்ரஷ்டேந வநவாஸம்யாஸாஸ்ருதிஹீந: [illegible] ஸ்வஹஸ்தேந ஸீதயா [illegible]" என்கிறபடியே பித்ருவசநத்தாலே அவர் வந்தார், பார்யை யாகையாலே பிராட்டி வந்தாள்;இரண்டுநிமித்தமு மின்றிக்கேயிருக்க "[illegible]" என்று நீர் வந்த இது க்கு நிமித்தபூத ஸம்பந்தமேது? என்று தாத்பர்யம். ப்ராத்ருத்வமாவது-தோள்தீண்டியான ஆகாரம். தாஸத்வ மாவது-க்ரயவிக்ரயார்ஹத்வம்.ஒருவனுக்கு ஏகவிஷயத்தைக்குறித்து இந்தஉத்கர்ஷாபகர்ஷரூப ப்ராத்ருத்வ தாஸத்வபுத்திகள் விருத்தங்களாகையாலே பிந்நபுத்யதீநங்களாக அருளிச்செய்கிறார் 'பெருமாளும்' இத் யாதி. ஏதந்நியாமகம் - "[illegible]" என்றது; ப்ரீதி - ப்ராத்ருத்வ நிபந்தனை. அநுக்ராஹ்யதை - தாஸத்வநிபந்தனை. "அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர்தாஸ்யமுபாகத:" என்று 'ஸப்தநிர்வாஹம்' என்று பிள்ளை அருளிச்செய்வர். ப்ரக்ருதத்திலே ஏதென்ன, 'அப்படியே இவரும்' இத்யாதி- கத்யத்தில் "[illegible]" இத்யாதிப்படியே ஸ்வரூபம் முன்னுகச் சொல்லாதே குணத்தில்இழிவான் என்? என்றபடி. முற்பட - ஸ்வரூபாபேக்ஷயா என்றபடி. த்விதீயாவ தாரிகைக்குச்சேர ஹாவாந்தரம்-'இவரை'இத்யாதி. சாவுக்குக்குணம்-கயிறு. குணத்தையிட்டிறே தநுஸ்ஸை வணங்குவிப்ப தென்றபடி.

ஶ்ருதியாலும் அபரிச்சேத்யமான ஆநந்தத்தை 'உயர்வற' இத்யாதியாலே வர்ணித்து நிலமா கப் பேசுகையால் வந்த ஜ்ஞாநாதிக்யத்திலே வ்யாக்யாதா ஈடுபடுகிறார். 'பகவதாநந்தத்தை' இத்யாதி; 'நில மாய்ப்பேசுகிறாரிறே இவர்' என்னுமளவாக அதாவது - வேதத்தைப்போலே பரிச்சேதிக்கவென்று இழி ந்து நிலமல்லாமை மீளுகையன்றிக்கே முதலிலே அபரிச்சிந்நமென்று சொல்ல இழிகையாலே நில மாய்ப் பேசத் தட்டில்லை யென்றபடி; அதவா, ஆநந்தகுண பரிச்சேத்யதைக்கு ப்ரமாணம்-'பகவத்' இத்யாதி. "யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக: [illegible]" என்றுதொடங்கி "ஸ ஏக: ப்ரஜாபதேராநந்த:" என்னுமளவும் கடாக்ஷித்து 'மநுஷ்யாநந்தம்தொடங்கி ப்ரஹ்மாநந்தத்தளவும் சென்று' என்கிறார் பின்னையும் அவ்வருகே உத்ப்ரேக்ஷித்து என்றவிடத்திலே - "[illegible]", "[illegible]" இத்யாத்யநுஸந்தேயம். 'யுவாஸ்யாத்' இத்யாதி ஶ்ருதியிலே அவ்வருகே உத்ப்ரேக்ஷித்தமை இல் லாவிட்டாலும் ஸஹர்யாயஸித்தம். அதாவது - "யுவாஸ்யாத்"இத்யாதியாலே மநுஷ்யாத்ய ஸம்பாவித ஆகாரத்தைச் சொன்னபோதே ப்ரஹ்மாவையும் மநுஷ்யஸ்தாநே கல்பிக்கை ஶ்ருதிக்கு விவக்ஷித மென்ற படி: ஆநந்தகுணமொன்றிலுமிறே; 'மற்றகுணங்களின் அபரிச்சேத்யதை சொல்லவில்லையே யென்னில்' என்று சங்கையைப் பூரிப்பது. 'குணங்களெல்லாம் இப்படியேயிறே' என்றது - ஆநந்தாபரிச்சேத்யதா

யிறே இருப்பது; இக்குணங்களெல்லாம் தமக்கு நிலமாய்ப் பேசுகிறாரிறே இவர். உயர்வு - வருத்தம். எல்லாருக்கும் உயர்த்தியுண்டாம்போது வருத்த முண்டு; அப்படி வருந்தவேணுமோ? என்றால், உயர்வறஉயராநிற்கும்; இத்தைப்பற்றவிறே ஆளவந்தார் அருளிச்செய்த சந்தை. பகவத்வ்யதிரிக்தஸமஸ்தவஸ்துகதமானஸர்வப்ரகாரத்தாலுமுண்டான உச்ச்ராயத்தை'உயர்வு'என்கிறது; அற - இன்றியிலே ஒழிய. இத்தால் அத்யந்தாபாவத்தைச் சொல்லுகிறதன்று; பின்னை என்

---

*ஹேது குணவிஶிஷ்டபரிச்சேத்யதையாகையாலே, ஆநந்தம் அபரிச்சிந்நமென்றபோதே தஜ்ஜபரிச்சிந்நத்வ ஹேதுவான குணாந்தராபரிச்சேத்யதையும் அர்த்தஸித்த மென்றபடி. இது "யதோவாசோ" இத்யாதி ஶ்ருதிவ்யாக்யாநத்திலே வ்யக்தம். ஆனால், இவர் பரிச்சேதித்துப்பேசும்படி என்? என்னில்,—'இக் குணங்களெல்லாம்' இத்யாதி என்று இங்ஙனே யோஜிக்கவுமாம்.*

*தைத்திரீயகே "யுவா ஸ்யாத் ஸாதுயுவாத்யாயக: ஆஶிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட: | தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணா ஸ்யாத், ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:, தே யே ஶதம்" இத்யாதி — [illegible]*

*[illegible]*

*உயர்வென்று - வருத்தமாதல்; உச்ச்ராயமாதல். அதில் ப்ரதமத்தை அருளிச்செய்கிறார், 'உயர்வு வருத்தம்' என்று. வருத்தத்துக்கு ப்ரஸக்தியேது? என்ன, 'எல்லாருக்கும்' இத்யாதி. "[illegible]", "[illegible]" இத்யாதிப்படியே ப்ரஹ்மாதிகளுக்கு வருத்தமுண்டு என்றபடி. உயர்வற உயராநிற்கும் - வருத்தமற்று உயராநிற்கும். இந்த அர்த்தத்தில்'அற'என்று அத்யந்தாபாவத்தைச் சொல்லி, வருத்தமற்றென்றபடி. வருத்தமற்றிருக்குமென்கையாலே ஸ்வாபாவிக மென்றபடி. இந்தஅர்த்தத்துக்கு ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியை அருளிச்செய்கிறார், 'இத்தைப்பற்ற' இத்யாதி. வருத்தமற உயராநிற்கும் என்கிற இவ்வர்த்தத்தைப் பற்றவிறேயென்றபடி. ஆளவந்தார் அருளிச்செய்யும் சந்தையாவது - "ஸ்வாபாவிக" இத்யாதி சந்தை யென்றபடி. இது மேலே சொல்லுகிறதிறே. உயர்வென்று-உச்ச்ராயமாக அர்த்தாந்தரம்-'பகவத்வ்யதிரிக்த' இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு 'அற' என்று அல்பதையிலே தாத்பர்யம் பூர்வயோஜனையில் வ்யாவ்ருத்தி - 'இத்தால்' இத்யாதி.*

தனக்குஉடையவனல்லனாய், ஒழிவிலன் பரந்த - ஒன்றும் ஒழியாமல் பரந்து வ்யாபித்திருக்குமவனாய், அந்நலனுடை - கீழ்ச்சொன்ன உயர்வறவுயர்நலத்தையுடையனான, ஒருவனை - அத்விதீயனை, நாம் நணுகினம் - நாம் கிட்டப்பெற்றோம்.

இப்பாட்டில் முதற்கூற்றால் வஸ்துபரிச்சேதராஹித்யத்தைச் சொல்லி, மேல் வ்யாப்தியாலே தேசபரிச்சேத ராஹித்யத்தையும் சொல்லிற்றாயிற்று; ஆக, இப்பாட்டில் லீலாவிபூதியோகம் சொல்லுகிறது.

இ.—மூன்றாம்பாட்டில், முதற்பாட்டிற் சொன்ன நித்யவிபூதியுக்தனான ஸர்வேஶ்வரனுக்கு லீலார்த்தமான ஜகத்விபூதியோகம் சொல்லுகிறது.

• [இலனது] - அதில்லாதான். ஒன்றைத் தான்அநுபவித்து அத்தைத ஸ்மரித்து அது இவனுக்கில்லையென்றால், ஐஶ்வர்யத்திலே சிறிதுகுறைந்து தோற்றும். [உடையனிது] - இத்தையுடையவன். ஒன்றைப்ரத்யக்ஷித்து இது இவனுக்குஉண்டென்றால், அல்லாததெல்லாம் இவனுக்கு இல்லாமையாலே அல்பவிபூதிகனென்று தோற்றும். [எனநினைவரியவன்]-இரண்டுபடியாலும்நினைக்கமுடியாதவன். பின்னை எங்ஙனே சொல்லுவதென்னில்;-[நிலனிடை] - பூமிமுதலான கீழுள்ள லோகங்களில். [விசும்பிடை] - மேலுள்ள லோகங்களில். [உருவினன் அருவினன்] — இரண்டு கோடியிலுமுண்டான சேதநாசேதநங்களையெல்லாமுடையவன். நிலனும், விசும்புமென்று கீழுள்ள லோகங்களுக்கும், மேலுள்ள லோகங்களுக்கும் உபலக்ஷணம். உருவென்று - அசேதநம். அருவென்று - ஆத்மா. உருவினனென்று - உருவையுடையவனென்கிற அர்த்தத்துக்கு வாசகமாமோ? என்னில், - "காராயின காளநன்மேனியினன்" என்றாற்போலே இதுவும் வாசகமாம். [புலனொடு] - புலனென்று புலப்படும் பதார்த்தங்களைச் சொல்லுகிறது. ப்ரமாண விஷயமான ஸகலபதார்த்தங்களோடே அந்தராத்மதயா கலந்துநின்று ஸத்தையை நோக்கும். [புலனலன்] - அந்தப் பதார்த்தகதமான தோஷங்கள் தன்பக்கல் தட்டாதபடியிருக்கும்; தத்தர்மாவல்லன். "ஜ்ஞாநவைராக்யைஶ்வர்யாதிஸமஸ்தகல்யாணகுணவிஶிஷ்டஸ்ஸதா | தயோரந்தர்விஶ்வம் வ்யாப்ய அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" என்று ஒட்டை நீங்கி விளங்காநிற்குமென்று. [ஒழிவிலன்பரந்த] - பரந்த ஒழிவிலன். இப்படி ஸகலத்திலும் வ்யாபித்துநிற்கும். [அந்நலனுடை யொருவனை] - முதற்பாட்டிற்சொன்ன அத்யந்தவிலக்ஷணமாய் அந்தரங்கதமமாயிருந்துள்ள நித்யவிபூதியையும் இரண்டாம்பாட்டிற்சொன்ன அத்விதீயமான திவ்யாத்மஸ்வரூபத்தையுமுடையனானவனை. இந்த லீலாவிபூதியோடேகூட. [நணுகினம்] - கிட்டப்பெற்றோம். [நாமே] - அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே மங்கி பகவத்கடாக்ஷரஹிதரான நாம், இப்படி உபயவிபூதியுக்தனாயிருந்துள்ள ஸர்வேஶ்வரனைப் பூர்ணமாக அநுபவிக்கப்பெற்றோம். "அவன் துயரறு சுடரடி தொழுதெழென்மனனே" என்று அந்வயம். "ஸதேவப்ராணானுதந்தஸம்ஹாராஜோயஸ்யவீக்ஷ" என்கிற ஸ்ரீபராதாழ்வானைப்போலே இப்படி பெறுவோமேயென்று விஸ்மிதராகிறார். "வாநராணாம் நராணாஞ்ச கதமாஸீத்ஸமாகம:". [நாமே] - "கிமஹம்ஸ்த்ருதோமஹாய்" - இது ஏதேனும் ப்ரமஸ்வப்நாதிகளோ வென்றாற்போலே.

ஈடு.—மூன்றாம்பாட்டு. முதற்பாட்டிலே ப்ராதாந்யேந கல்யாணகுணயோகத்தையும் நித்யவிபூதியோகத்தையும் விக்ரஹவைலக்ஷண்யத்தையும் அநுபவித்து, அவற்றுக்கு ஆஶ்ரய

---

மூன்றாம்பாட்டு - 'இலனது'. போக்யமான கல்யாணகுணயோகாதிகளையும், அவற்றுக்கு ஆஶ்ரயமான திவ்யாத்மஸ்வரூபவைலக்ஷண்யத்தையும் அநுபவியாநிற்கிற இவர்க்கு இப்போது ஹேயமான லீலாவிபூதியோகத்தை அநுபவிக்க ப்ரஸக்தி யேது? என்ன, உத்தரம் - 'முதற்பாட்டிலே' இத்யாதி. அவற்றோபாதி லீலாவிபூதியும் உத்தேஶ்யமாய்த் தோற்றுமோ? என்ன, 'கோபஜநம்' இத்யாதி. சாக்

மான திவ்யாத்மஸ்வரூபம் சிதசித்விலக்ஷணமுமாய் உபமாநரஹிதமுமாயிருக்குமென்று இரண்டாம்பாட்டாலே அருளிச்செய்து நின்றார்; அவற்றோடே சேர ஒருகோவையாய்த் தோற்றுமிறே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதியும் இவர்க்கு; "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்னாநிற்கச்செய்தே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதியும் உத்தேஶ்யமாகாநின்றதிறே முக்தனுக்கு; இவர்க்கும் கர்மநிபந்தநமான ஆகாரமும் கிடக்கச்செய்தே மயர்வறமதிநலம் அருளப்பெற்றவராகையாலே ததீயத்வாகாரமும் தோற்றி அநுபவிக்கிறார். ராஜாக்களுக்கு நாடெங்கும் செல்லாநிற்கச்செய்தே மஹிஷிகளும் தாங்களுமாகச் சில பூந்தோட்டங்களைக் குடநீர்வார்த்து ஆக்குவது அழிப்பதாய் லீலாரஸம் அநுபவிக்குமாபோலே * "திருவிண்ணகர்சேர்ந்தபிரான் பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடை மூவுலகு" என்கிறபடியே ஸர்வேஶ்வரனும் பெரியபிராட்டியாருமாகக் கடாக்ஷித்தபோது உண்டாய் இல்லையாகில் இல்லையாய் அவர்களுக்கு லீலாரஸவிஷயமாயிருக்கிற லீலாவிபூதியை அநுபவிக்கிறார்.

[இலனதுவுடையனிதெனநினைவரியவன்] - அதுஇலன், இதுஉடையன் என நினைவரியவன். அநுபூதமாயிருப்பதொன்றைச் சொல்லி அதிலன்என்றவாறே அதொழிந்தத்தையுடையவனென்று தோற்றும்; ஒன்றைக்காட்டி இத்தையுடையவனென்றவாறே இதொழிந்ததில்லையாய்த் தோற்றும்; இலனது என்றால் பரிச்சிந்ந விபூதிகனும்; உடையனிது என்றால் இதொழிந்ததில்லாமையாலே அல்பவிபூதிகனும்; இரண்டுவழியாலுமாக ஐஶ்வர்யம் குறைந்து தோற்றும் என - இப்படியிருக்குமென. [நினைவரியவன்] - அநுபபந்நங்களைச் சேர்த்து நினைக்கலாமிறே: ஓர்ஊசி நிற்கிறதாகவும், அதின்மேலே கலசம் இருக்கிறதாகவும், அதின்மேலே சால் இருக்கிறதாகவும், அதின்மேலே மஹாமேரு இருக்கிறதாகவும், இப்படி அநுபபந்நங்களைச் சேர்த்து நினைக்கலாமிறே; அப்படியேதான் மநோரதத்துக்கு விஷயமாயிருக்குமோ? என்னில், - மநோரதஸமயத்திலும் பரிச்சேதிக்கவரியனாயிருக்கும். ஆனால், இவனைஶ்வர்யத்தைப்

---

*தோக்யே "ஸ உத்தம: புருஷ: ஸ தத்ர பர்யேதி ஜக்ஷத் க்ரீடந் ரமமாண: ஸ்த்ரீபிர்வா யாநைர்வா ஜ்ஞாதிபிர்வா நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம்": அஸ்யார்த்த:,- ஸ: - பரஞ்ஜ்யோதிஸ் ஸம்பத்யாஸ்ய ஈஶ்வர: உத்தம: புருஷ:. ஸ: - ஜீவ:—ஜக்ஷத் - "ஜக்ஷஹஸந்" இதி தாது:; ஸம்ருத்தபோகாந்புஞ்ஜாநஸ்ஸந். ஸ்த்ரீபி: க்ரீடந் யாநைர்வா ஜ்ஞாதிபிர்வா ரமமாணஸ்ஸந், உபஜநம் - ஜநஸமீபேஸ்த்திதமிதம் ஶரீரம், நஸ்மரந்ஸந், தத்ர - ஈஶ்வரே, பர்யேதி - இதஸ்ததஸ்ஸஞ்சரதி. ஸ்மரணநிஷேதம் கர்மநிபந்தநத்வாகாரேணவாதல் "யத்ர நாந்யத்பஶ்யதி" இத்யாதிப்படியே அநுபாவ்யவிஷய போக்யதாதிஶயத்தாலேயாதல் உபபந்நம். உத்தேஶ்யமாகாநின்றதிறே - "ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி" என்று உத்தேஶ்யமாகாநின்றதிறே என்றபடி. ஆனால். இவர் முக்தரோ? என்ன, 'இவர்க்கும்' இத்யாதி. இத்தால், லீலாவிபூதி ஸ்வரூபேண ஹேயமானாலும் ததீயத்வாகாரேண போக்யமென்றதாயிற்று. இதுக்கு எவ்வாகாரத்தாலே ததீயத்வம்? என்ன, 'ராஜாக்களுக்கு' இத்யாதி. யத்வா, ததீயமான இதுக்கு விநியோகமேது? என்ன, 'ராஜாக்களுக்கு' இத்யாதி யாதல். 'திருவிண்ணகர்' இத்யாதி - திருவிண்ணகரிலே சேர்ந்த ஸர்வேஶ்வரன் வைத்த லீலோத்யாநங்கிடீகோள் ப்ரஹ்மாத்யுத்க்ருஷ்ட தேவர்களையுடைத்தான த்ரைலோக்யமும்.*

*விவரணம் - 'அநுபூதமாய்' இத்யாதி. இத்தால் பலித்ததேது? என்ன, 'இலனதுவென்றால்' இத்யாதி. எனவரியவனென்னாதே 'நினைவரியவன்' என்றதுக்கு ஹாவம் - 'அநுபபந்நங்களை' இத்யாதி. ததேவ விவ்ருணோதி - 'ஓர்ஊசி' இத்யாதி. சால் - வடஶபேஷம். ப்ரக்ருதோபயோகமித்யத்ராஹ - 'அப்படியே' இத்யாதி. இத்தால் ஸம்ஶயாதியிலே அப்படி ஆரோபம் கூடும், அர்யத்ராநுபூதத்துக்கு அந்யத்ராரோபம் ஶக்யமாகையாலே; இவ்விடத்திலேயோ என்றால், ப்ரஹ்மம் ஸ்மர்யமாணமாகிறபோது தர்மிக்ராஹகப்ரமாணத்தாலே அபரிச்சிந்நவிபூதிகமாகவே ஸ்மர்யமாணமாகையாலே அப்ரஹ்மாத்மக வஸ்துவில்லாமையாலே ப்ரஹ்மவிபூத்யந்தர்க்கத வஸ்த்வாரோபம் ஶக்யமன்றென்றபடி.*

---

** திருவாய்மொழி - ௬, ௧, ௯.*

பேசும்படியென்? என்னில்,-[நிலன் இத்யாதி]-"பதிம் விஶ்வஸ்ய" [பதிம்விஶ்வஸ்ய] என்னுமித்தனை 'நிலனிடை' என்கிறஇது பாதாளத்தளவும் நினைக்கிறது; 'விசும்பிடை' என்கிறஇது-பரமபதத்துக்கு இவ்வருகுள்ளத்தையெல்லாம் நினைக்கிறது. [உருவினன்]-உருக்களையுடையான். [அருவினன்] - அருக்களையுடையான். 'இனன்' என்ன,உடையவனென்று காட்டுமோ? என்னில்;- * "காராயின காளநன்மேனியினன்" என்றால், மேனியையுடையவனென்று காட்டுமாபோலே. ஆக, கீழ்மேலுண்டான சேதநாசேதநங்களை யுடையா னென்றபடி. இத்தால், ப்ராதேசிகமான ஐஶ்வர்ய முடையவர்களதன்று லீலாவிபூதி; ஸர்வாதிகன தென்கை. இப்படி ஸர்வத்தையுமுடையவனாய்த் தான் போகத்திலே அந்யபரனாய்க் கோயிற்சாந்துபூசி நித்யவிபூதியிலே யிருக்குமோ? என்னில், - [புலனோடு] - இவை பட்டத்தைத் தானும் பட்டு உடன்கேடனாய்நின்று நோக்கு மென்கிறது. *புலன் என்கிறது - புலப்படும் பதார்த்தங்களை. "த்ருஶ்யதே ஶ்ரூயதேபிவா" (த்ருஶ்யதே ஶ்ரூயதேபிவா) என்கிறபடியே ப்ரமாணகோசரங்களான பதார்த்தங்களை. [ஒடு] "தத்ஸ்ருஷ்ட்வா" (தத்ஸ்ருஷ்ட்வா) என்கிறபடியே இவற்றை யுண்டாக்கி, ஜீவத்வாரா அநுப்ரவே

---

ப்ர.— 'நிலனிடை' இத்யாதி:— நாராயணாநுவாகே (கக) "பதிம்விஶ்வஸ்யாத்மேஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்"—"பதிம் ஸமஸ்தஶேஷிணாம் । ... ரக்ஷணே' இதி யா தோர்வ்யுத்பத்த்யா ... ஶேஷிணா ... ; ... ஸர்வஸ்ய ... ; ... இதி வேத ... ஸ்வரூப ... ஶேஷிணி ... ; ... இதி ஶ்ருதவ்யாக்யாநகார ... உக்தம். (ஜிஜ்ஞாஸாதிகரணே).

---

நினைவரியவன் - நினைக்கவரியவன். வாக்யதாத்பர்யம் - 'பதிம்' இத்யாதி. ஶப்தார்த்தம் - 'நிலனிடை' இத்யாதி. நிலனிடை - நிலத்திலே, விசும்பிடை - விசும்பிலே. ஜிஜ்ஞாஸாப்ரஶ்நம் - 'இனனென்ன' இத்யாதி. ப்ரயோகாந்தரத்தாலே பரிஹாரம் - 'காராயின' இத்யாதி. காளமேகம்போலே ஶ்யாமளமாய் விலக்ஷணமான விக்ரஹத்தையுடையவன். பலிதம் - 'ஆக' இத்யாதி. வ்யதிரேகாந்வய ப்ரயோகம் பண்ணினதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார்-'இத்தால்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. இத்தால் - ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸௌரிஸேவ்யனா யிருக்குமவன் சேதநாசேதந ஸ்வாமி யென்கையா லென்றபடி. 'ப்ராதேஶிகமான ஐஶ்வர்யம்' - தத்தத்ப்ரதேசமாத்ராதிபத்யாகத ஈஶ்வரஹ்வ மென்றபடி. கோயிற் சாந்து - அகர்க்கமான சந்தநம். இது போகோபகரணங்களுக்கும் உபலக்ஷணம். புலனென்றதுக்கு மூக் யார்த்தம் - இந்த்ரியங்கள்; புலப்படும் பதார்த்தங்கள் லக்ஷணயா சொல்லப்படுகிறன. வாக்யார்த்தம் - 'இவை' இத்யாதி. இவை பட்டத்தைத் தானும் பட்டு இத்யத்ர - "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" இத்யாத்யநுஸந்தேயம். உடன்கேடன் - கூடக்கெட்டுக்கிடக்குமவன். ஸமதுக்கஸுகீ. இதுக்கு ப்ரமாணம் - 'த்ருஶ்யத' இத்யாதி. த்ருஶ்யதே ஶ்ரூயதே யென்றது - ப்ரத்யக்ஷகம்யாசித்தையும், ஶாஸ்த்ரகம்யாத்மாவையுமாதல்; தேவமநுஷ்யர்களையாதல். "அநேந ஜீவேந" இத்யாதி விவக்ஷயா, ஜீவத்வாரா அநுப்ரவேசித்து என்றது. அன்றிக்கே "தத்அநுப்ரவிஶ்ய" என்றது அநுவாதமன்றிக்கே, "இவையமவை

---

* திருவாய்மொழி - க, ந, க.

ஶித்து; பின்னை இவற்றுக்கு வஸ்துத்வ நாமபாக்த்வங்களுண்டாம்படி பண்ணி, "அந்த:ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" (அந்தப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜநாநாம்ஸர்வாத்மா) என்கிறபடியே ஸர்வாந்தராத்மாவாய் நிற்கும்படியைச் சொல்லுகிறது. ஆனால், பின்னை தான் ஸர்வாத்மாவாய் நின்றால் அசித்தினுடைய பரிணாமாதிகளாதல், சேதநருடைய ஸுகித்வ து:கித்வங்களாதல் தனக்கு ஸ்பர்ஶிக்கும்படி யிருக்குமோ? என்னில், - [புலனலன்]-தத்தர்மாவல்லன். "த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே | தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" (த்வாஸுபர்ணுஸயுஜாஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம்பரிஷஸ்வஜாதே | தயோரந்ய:பிப்பலம்ஸ்வாதவத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி) என்று தானொட்டற்று

ப்ர.— "அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் — ஸர்வாத்மா" அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா இத்யத்ர தத்வதாத்பர்யவிவரணம். அந்த:ப்ரவிஷ்ட:, ஶாஸ்தா, இத்யாப்யாம் வ்யாப்யாந்தர்வர்த்திநிர்வாஹாவ்யாப்தி:, அநேநஶரீராத்மபாவ: ஸூசித:; அந்த: ப்ரவிஶ்ய நியாம்யத்வம் ஹி ஶரீரத்வமித்யர்த:.

'புலனலன்' இத்யாதி: — ருக்வேதே "த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே | தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி". அஸ்யார்த்த:- த்வா - த்வௌ ஜீவாத்மபரமாத்மாநௌ இதி ஹி த்விவசநம். ஸுபர்ணௌ - ஶோபநபர்ணௌ. ஜீவஸ்யாபி ஸுபர்ணத்வம் ஜ்ஞாநாத்யாத்மகத்வாத். ஸயுஜா - ஸயுஜௌ: அபஹதபாப்மத்வாதிகுணகௌ. ஸகாயா - ஶேஷஶேஷிபாவஸம்பந்தயுக்தௌ. யதா, ஸுபர்ணௌ - ஶோபநகதிஸாதநௌ, ஶோபநஜ்ஞாநாவித்யர்த:. ஸயுஜா - ஸமாநஶேஷஶேஷித்வஸம்பந்நௌ; ஜீவஶ்ஶேஷத்வேந ஸம்பந்நாஹ:, பரஶ்ஶேஷித்வேந ஸம்பந்நாஹ இத்யர்த:. "ஸகாயௌ ஸயுஜௌ ஸக்ஷாயௌ ஸகிபூதௌ" இதிவசநாத். ஸகாயா - ஶேஷஶேஷிணாவபி ஸஹைவ வர்த்தமாநௌ. ஸமாநம்வ்ருக்ஷம் - ஶரீரம். பிப்பலம் - கர்மபலம். அபிசாகஶீதி - ஸ்வயமநஶ்நந் ஆஶ்ரிதரக்ஷணார்த்தம் ப்ரகாஶத இத்யர்த:.

யும்" என்கிற பாட்டிற்போலே நியமநார்த்தாநுப்ரவேஶபரமாதல். "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய", "தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிஶத்" என்கிற இவையிரண்டும் - ஸ்ருஷ்ட்யர்த்தமான அநுப்ரவேஶத்தைச் சொல்லுகிறது. 'அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம்' என்றது, ஸ்தித்யர்த்தாநுப்ரவேஶத்தைச் சொல்லுகிறது என்பர்கள். வஸ்துத்வநாமபாக்த்வங்க ளென்றது - "ஸச்ச த்யச்சாபவத்" என்றதைப் பற்ற. ஸத் - சேதநம். த்யத் - அசேதநம். ப்ரஹ்மந்தானே சேதநாசேதநநாமரூபபாக்பவதி யென்றபடி. புலனொடு புலனலன் - புலப்படும் பதார்த்தங்களோடே கலந்து நிற்கச்செய்தே தத்கததர்மத்தை யுடையவனல்ல னென்று ஶப்தார்த்தம். முந்தின 'புலன்' என்கிற ஶப்தம் - ப்ரமாணமாத்ரோபலக்ஷணமாய் ப்ரமாணகோசரபதார்த்தங்களை லக்ஷிக்கிறது. இரண்டாம் 'புலன்' என்கிற ஶப்தம் - ப்ரமாணகோசரபதார்த்தகததர்மத்தை லக்ஷிக்கிறது; அவற்றினுடைய தர்மம் இவனுக்கில்லை யென்னுமிதுக்கு ப்ரமாணம் - 'த்வாஸுபர்ணு' இத்யாதி; ருக்வேதே "த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே | தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி"; அஸ்யார்த்த:- த்வா - ஜீவேஶ்வரௌ. ஸுபர்ணு - ஸம்யக்ஜ்ஞாநரூபபக்ஷவந்தௌ; ஸயுஜா - ஸமாநாபஹதபாப்மத்வாதிகுணகௌ. ஸகாயா-ஶேஷஶேஷித்வரூபபாந்தவயுக்தௌ. ஸமாநம்வ்ருக்ஷம் - ஏகம்ஶரீரம், பரிஷஸ்வஜாதே. அந்ய: - ஜீவ:. பிப்பலம் - கர்மபலம். அபிசாகஶீதி - ஸ்வயமநஶ்நந்நத்வாத் ஆஶ்ரிதருத்வாச்ச ப்ருஶந்தரம்பாதீத்யர்த்த: "அநஶ்நந்" இத்யாதியைப்பற்ற, 'தானொட்டற்று' இத்யாதி. ஒழிவிலன்பரந்த

நின்று விளங்காநிற்கும். [ஒழிவிலன் பரந்த]- *ஒருவஸ்துக்களோழியாமே இப்படிவ்யாபித்திருக்கு மென்னவுமாம்; அன்றியே, காலபரமாக்கி, எல்லாக்காலத்திலும் எல்லாவஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கு மென்னவுமாம். [அந்நலனுடையொருவனை] - கீழிரண்டுபாட்டாலும் சொன்ன குணவிஶிஷ்டஸ்வரூபத்தை நினைத்து 'அந்நலனுடையொருவனை' என்கிறார். [நணுகினம்] - "மயர்வறமதிநலமருளினன்" என்கிற ஜ்ஞாநமாத்ரமன்றிக்கே கிட்டப்பெற்றோம். •[நாமே] - இது போய்யோ? "கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்" (கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம்) - இது ஏதேனும் ப்ரமஸ்வப்நாதிகளோ? என்றாற்போலே. இவர் ஈஶ்வரோஹமென்றால் அவனுக்கும் குடிவாங்க வேண்டும்படியாயிறே இருப்பது; அஹமென்றால் அவனளவிலே பர்யவஸிக்க வேண்டும்படியாயிருக்க, தேஹத்தளவிலேயாம்படியாகவிறே முன்பு போந்தது; "மந்யே ப்ராப்தாஸ்ஸ்ம தம் தேஶம் பரத்வாஜோயமப்ரவீத்"(மங்யேப்ராப்தாஸ்ஸ்மதந்தேஶம் பரத்வாஜோயமப்ரவீத்)-கைகேயி†"ராஜந்" (ராஜந்) என்று ஸம்போதிக்கும்படி பிறந்து;ஸ்ரீபரத்வாஜபகவான்'அவள்மகனாய்க் கீழ்வயிற்றுக் கழலையறுக்க வருகிறானோ?' என்று "கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி" (கச்சிந்நதுஷ்டோவ்ரஜஸி)-

---

என்றதுக்கு - விடாதவனாய்க்கொண்டு வ்யாபித்திருக்கு மென்று ஶப்தார்த்தம். இன்னத்தை விடாதவனென்று நிர்த்தரியாமையாலே வஸ்துக்களை விடாதவன், காலத்தை விடாதவனென்று இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - 'ஒருவஸ்துக்கள்' இத்யாதி வாக்யத்தாலே. இன்னவஸ்துவிலே யென்னாமையாலே, 'எல்லாவஸ்துக்களிலும்' என்கிறார். அந்நலனுடையொருவனை - கீழிரண்டுபாட்டிலும் சொன்ன கல்யாணகுணவிஶிஷ்டஸ்வரூபனான அத்விதீயனையென்று ஶப்தார்த்தம். ஜ்ஞாநமாத்ரமன்றிக்கே கிட்டப்பெற்றோம்- ஜ்ஞாநம்பிறந்தமாத்ரமாகாமே அநுபவபர்யந்தமாகப் பெற்றோமென்றபடி. நாமே யென்றது - ‡ பிரிநிலையேகாரமாய், 'இதுபொய்யோ' என்கிறார். பிரிநிலை - வ்யதிரேகம். "தேற்றம்வினாவேபிரிநிலையெண்ணே, யீற்றசை யிவ்வைந்தேகாரம்மே" என்னக்கடவதிறே. தேற்றம் - நிஶ்சயம். வினாவே - ப்ரஶ்நம். பிரிநிலை - வ்யதிரேகம். எண்ணே - ஸங்க்யை. ஈற்றசை-பாதபூரணம்; அவ்யய மென்றபடி. இவற்றுக்கு உதாஹரணம்- ஏகாரத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிற இடங்களிலே கண்டுகொள்வது. இப்படி ஶங்கித்ததுக்கு உதாஹரணத்ரயம் - 'கிந்நுஸ்யாத், மங்யேப்ராப்தாஸ்ஸ்ம, வாநராணாம்' இத்யாதி. "கிந்நுஸ்யாச்சித்தமோஹோயம் பவேத்வாதகதிஸ்த்வியம் | உதாஹோஸ்வித்விகாரோயம் ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா" இதிஸுந்தரகாண்டே சதுஸ்த்ரிம்ஶே ஸர்க்கே ஹநூமத்தர்ஶநாநந்தரம் ஸீதா. சித்தமோஹோந்மாதஜவிகாரங்களுக்கு பேதம் அருளிச்செய்கிறார் - 'ப்ரமஸ்வப்நாதிகளோ' என்று. வாதகதியாவது - வேணுரந்த்ரங்களிலே காற்றுவரும்போது தைவாத் வர்ணஸாரூப்யம் தோற்றலாமிறே. ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா என்றது - சொன்னவற்றில் ஏதேனுமொரு ப்ரகாரத்திலே ஸம்மதமித்தனையல்லது ப்ரமையாகமாட்டாதிறே என்றபடி. யத்வா, ம்ருகத்ருஷ்ணிகையும் ஒரு ப்ரமப்ரகாரமுண்டென்று கேட்டிருந்தபடியாலே கலக்கத்தாலே அதுதானோ வென்று ஶங்கிக்கிறா ளென்னவுமாம். இப்படி ஸம்ஶயிக்கைக்கு அடியேது? என்ன, 'ஸ்வாதந்த்ர்யாபிமாநமும் தேஹாத்மாபிமாநமும்' என்கிறார் - 'இவர்ஈஶ்வரோஹம்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. குடிவாங்கவேண்டும்படியாயிறே - ஸநிவேஶநிர்க்கமநம் பண்ணவேண்டும்படியிறே. 'மங்யே' இத்யாதி - "ஶத்ருக்நஸ்வாஹ்வயந்ஸர்வாந் ஸாநந்தோ த்யாம் ஸ்வஸாரஸ: | மந்யே ப்ராப்தாஸ்ஸ்ம தம் தேஶம் பரத்வாஜோயமப்ரவீத்" இத்யயோத்யாகாண்டே சித்ரகூடமார்க்கே பரதவசநம். 'மங்யே' என்றது - ஶங்கே யென்றபடி. "அந்யஶங்கீயந்த்ரவம்வ்யாயஸம்ஶயாபேக்ஷாவஶதே" இதி தண்டி. 'ஸ்ரீபரத்வாஜபகவான்' இத்யாதி - "கச்சிந்ந தஸ்யாபாபஸ்ய பாபம் கர்த்துமிஹேச்சஸி" இத்யாதியிலே நோக்கு. 'அவள்மகனாய்' - கைகேயியினுடைய புத்தியை அநுவர்த்திக்கிறவனாய். கீழ்வயிற்றுக்கழலை - அதஃகுக்ஷிவ்ரணம். 'கச்சிந்நதுஷ்டோவ்ரஜஸி' - என்றது - குஹவசநமேயாகிலும் பாரத்வாஜோக்தி துல்யார்த்தகயாகை

---

* ஒருவஸ்துக்களொழியாமே - வஸ்துக்களிலொன்றும் ஒழியாமே யென்றபடி.

† ஸ்ரீராமாயணம் - அயோத்யா - எஉ, உச. ‡ வினாவேகாரமாய் என்றிருக்கலாம்.

என்னும்படியான நான் அவன் சோன்ன ஆஶ்ரமத்திலே புகுந்தேனே? என்று ஶங்கியாநின்றேனென்றுனிறே. "வாநராணாம் நராணாஞ்ச கதமாஸீத்ஸமாகம:" (வாநராணாம்நராணாஞ்சகதமாஸீத்ஸமாகம:)-காட்டிலே வர்த்திக்கக்கடவ குரங்குகளுக்கும் நாகரிகரான சக்ரவர்த்திபிள்ளைகளுக்கும் ஒருசேர்த்தியுண்டானபடி எங்ஙனே? என்ன, "ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத" (ராமஸுக்ரீவயோரைக்யம்தேவ்யேவம்ஸமஜாயத) - பெருமாளும் மஹாராஜரும் சேர்ந்த சேர்த்தி; பின்னே பிறந்த இளையபெருமாள் நிற்க அடியேன் அந்த:புரகார்யத்துக்கு வரும்படியாகவிறே; நானும் இங்ஙனே கூடிக்கொண்டு நிற்கக் கண்டேனித்தனை. [நாமே]-இவ்வநுபவத்துக்குப் புறம்பான நாம். பகவத் ஸமாஶ்ரயரஹிதரான நாம். [நாமே] - இது பொய்யோ? (௩)

## நான்காம் பாட்டு.

நாமவனிவனுவன் அவளிவளுவளெவள்
தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது
வீமவையிவையுவை அவைநலந்தீங்கவை
ஆமவையாயவை ஆய்நின்றஅவரே.

---

யாலே அப்படி அருளிச்செய்யக் குறையில்லை. "க்வ தாரணேஷு ஸம்ஸர்கோ யஜ்ஞானாவிலக்ஷணம் | வாநராணாம் நராணாஞ்ச கதமாஸீத்ஸமாகம:" இதி ஸுந்தரகாண்டே பஞ்சத்ரிம்ஶே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. எததுபரிஷ்டாத்ப்ரஶ்நோத்தரே "ததா நிஹத்ய தாஸாராஜோவாலி நோஹவே | ஸர்வக்ஷஹரீணாம் ஸுக்ரீவமகரோத்பதிம் | ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத". "கதமாஸீத்" இத்யத்ர கதம்ஶப்த: ப்ரகாரபரோ ஹேதுபரஶ்சேதிஹ்ருதிக்ருத்வா ஏவம் ஶப்தஸ்ய ஹாவத்வயமாஹ - 'பெருமாளும்' இத்யாதி வாக்யத்வயேந. "நராணாம்" இதி பஹுவசநம், கௌரவிகம்; யத்வா, இவர்களோட்டைச்சேர்த்தியே ரகுவம்ஶத்திலுள்ளார், திருவயோத்யையிலுள்ளார் இத்தனைபேரோடும் சேர்ந்த சேர்த்தியாகையாலே நராணா மென்கிறதாதல். கதம்ஶப்தஸ்ய அர்த்தத்வயபர்த்வம் எங்ஙனே? இதி பதேந ஸூசிதம். எங்ஙனே - கிம்ப்ரகாரம்; எவ்வளவு ஸ்நேஹ மென்றபடி; என்னஹேது? என்றபடி. திருவடிவாக்யம்-'ராமஸுக்ரீவயோ:' இத்யாதி. கிம்ப்ரகாரமென்றதுக்கு உத்தரம் - 'இளையபெருமாள்' இத்யாதி. என்ன ஹேதுவென்றதுக்கு உத்தரம் - 'நானும் இங்ஙனே' இத்யாதி. இச்சேர்த்திக்கு ஹேது அறிந்திலனென்றபடி. இந்த அர்த்தம் "ஸமஜாயத" என்கிற பூதார்த்தப்ரத்யயத்தாலே தோற்றுகிறதென்று பாவம். ஏவம் - "ததா நிஹத்ய" இத்யாரப்ய "ஸுக்ரீவமகரோத்பதிம்" இத்யாத்யுக்தப்ரகாரேண என்றபடி. "ஏவம்" என்றது - ப்ரக்ருதபராமர்ஶியன்று, புத்திஸ்தபர மென்கிறார்-'நானும்' இங்ஙனே இத்யாதி. "ஏவம் ஸமஜாயத" என்கையாலே திருவடி ஶங்கித்தமை தோற்றுகிறது. 'வாநராணாம்நராணாஞ்ச' - என்கிற ஶ்லோகம் ராமஸுக்ரீவயோரைக்யமென்றதுக்கு உபோத்காதமாக வந்த தித்தனை; 'ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம்ஸமஜாயத' என்ற இதுவே இவ்விடத்துக்கு வேண்டுவது. "இவர் ஈஶ்வரோஹம்" இத்யாதி வாக்யத்வயவிவரணம் - 'இவ்வநுபவத்துக்கு' இத்யாதி வாக்யத்வயத்தாலே; யத்வா, 'நாம்' என்றதுக்குத் தாத்பர்யம் - 'இவ்வநுபவத்துக்கு' இத்யாதி. ஏதத்விவரணம் - 'பகவத்கத' இத்யாதி. 'நாமே' என்கிற ஸ்வரத்துக்குத் தாத்பர்யம் - 'இதுபொய்யோ' என்று. இப்பாட்டில் முற்கூற்றிலே வஸ்துபரிச்சேதராஹித்யம் சொல்லி, மேல் வ்யாப்தியாலே தேஶபரிச்சேதராஹித்யம் சொல்லிற்றாயிற்று; ஆக, இப்பாட்டால் லீலாவிபூதியோகம் சொல்லுகிறது. ஆக, இவ்விரண்டுபாட்டாலும் "ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம" என்கிற ஸ்வரூபஶோதக வாக்யார்த்தம் சொல்லப்பட்டது. 'இலனது' என்று தொடங்கி 'நாமேநனுகினம்' இத்யந்வய:. (௩)

ஆ.—(நாமவன்.) இனி இத்திருவாய்மொழிக்குறையும் இப்பாட்டை விஸ்தரிக்கிறது. விவிதநிர்த்தேஶங்களாலே நிர்த்திஶ்யமான ஸமஸ்தவஸ்துக்களினுடைய ஸ்வரூபம் பகவததீநமென்று சொல்லுகிறது.

ஒ.—இத்திருவாய்மொழியில், ஶேஷித்த பாட்டுக்களால் இம்மூன்றாம்பாட்டில் பொருளே விஸ்தரிக்கப்படுகிறது. நாலாம்பாட்டு. நாநாவிதமான சொற்களாலே சொல்லப்படுகிற எல்லாப்பதார்த்தங்களினுடைய ஸ்வரூபஸ்வபாவம் பகவததீநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறது.

'நாமவனிவனுவன் என்கிறது' - தந்தாமையும் தூரஸ்தனேயும் ஸந்நிஹிதனேயும் அதூரவிப்ரக்ருஷ்டனேயும் சொல்லுகிறது. 'அவளிவளுவளெவள் என்கிறது' - தூரஸ்தையாயும் ஸந்நிஹிதையாயும் அதூரவிப்ரக்ருஷ்டையாயும் வினவப்படுமவளுமான ஸ்த்ரீலிங்க பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [தாமவரிவருவர்] - பூஜ்யராயுள்ளாரில் தூரஸ்தராயும் ஸந்நிஹிதராயும் அதூரவிப்ரக்ருஷ்டராயு முள்ளாரைச் சொல்லுகிறது. 'அதுவிதுவுதுவெது' என்றது - தூரஸ்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயும் வினவப்படுவதுமான நபும்ஸக பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [வீமவையிவையுவை] - நஶ்வரமான பதார்த்தங்களில் ஸந்நிஹிதமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயும் தூரஸ்தமாயுமுள்ள பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [அவைநலந்தீங்கவை] - அவற்றில் நல்லனவும் தீயனவும். [ஆமவையாயவையாய்நின்ற அவரே] - ஆகக்கடவனவும், பண்டேயானவையும் ஆய்நின்ற பதார்த்தங்கள் அவரே. இப்பாட்டிற் சொன்ன ப்ரயோஜகங்கள் ஓரிடத்திலுண்டாய் ஓரிடத்திலின்றிக்கே ஒழிந்தவை இல்லாதவிடத்தில் யோக்யமானவை கூட்டிக்கொள்ளக்கடவது.

ப.—அநந்தரம், மூன்றுபாட்டாலே விபூத்யந்தர்க்கத ஸமஸ்த வஸ்துக்களினுடைய ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்த்யாதிகள் பகவததீநங்கள் என்கிறார். அதில் முதற்பாட்டில் ஸமஸ்த பதார்த்தங்களினுடைய ஸ்வரூபமும் ததீநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்கிறார்.

நாம் - (மேல் சொல்லுகிற தூரத்வாத்யுபாதிகளுக்கு த்ருவமான) தாமும், அவன் - அதுக்கு தூரஸ்தனும், இவன் - அந்திகஸ்தனும், உவன் - அதூரவிப்ரக்ருஷ்டனும் என்று புல்லிங்கரூப்த நிர்த்திஷ்ட பதார்த்தமும், அவள் - (ஸ்த்ரீலிங்கரூப்த நிர்த்திஷ்டையான) தூரஸ்தையும், இவள் - ஸந்நிஹிதையும், உவள் - அதூரவிப்ரக்ருஷ்டையும், எவள் - வினவப்படுமவளும், தாம் - கௌரவ்யதயா பூஜ்யரும், அவர் - அவர்களின் விப்ரக்ருஷ்டரும், இவர் - அந்திகஸ்தரும், உவர் - அநதிதூரவர்த்திகளும், அது இது உது - நபும்ஸகலிங்கரூப்த நிர்த்திஷ்டமான தூரஅந்திகஅவிதூரஸ்தமும், எது - வினவப்படும் வஸ்துவும், வீமவை - நஶ்வரமாய் அப்ரக்ருஷ்டங்களான, இவை உவை அவை - ஆஸந்நஅநதிதூரவிப்ரக்ருஷ்ட வஸ்துக்களும், நலம்தீங்கவை - உத்கர்ஷஅபகர்ஷரூப தர்மங்களும், ஆமவை ஆயவை-ஆகாமிகளாயும் அதீதங்களாயுமுள்ள ஏவம்விதவஸ்துக்களும், ஆய்நின்ற அவர் - தாமேயாய் நின்ற அவர். இதாநீந்தநங்களான இவ்வஸ்துக்களு மானு ரென்றதாயிற்று. 'எவன் எவர்' என்று இல்லாதவிடங்களுக்கு அழைத்துச் சொல்லிக்கொள்வது. இத்தால், காலத்ரயவர்த்தி ஸகலபதார்த்தங்களும் ததீநமென்று கருத்து.

இ.—இனி இத்திருவாய்மொழியில் குறையும் இந்தலீலாவிபூதியை விஸ்தரேண பேசுகிறார். நாலாம்பாட்டில், இதினுடைய ஸ்வரூபம் ததீநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறார்.

[நாமவனிவனுவன்] - தந்தாமும், தூரஸ்த்தனும், ஸந்நிஹிதனும், அதூரவிப்ரக்ருஷ்டனும். [அவளிவளுவளெவள்] - தூரஸ்த்தையும், ஸந்நிஹிதையும் அதூரவிப்ரக்ருஷ்டையும், வினவப்படுமவளும். [தாமவரிவருவர்] - பூஜ்யராயுள்ளாரில் தூரஸ்தரும், ஸந்நிஹிதரும், அதூரவிப்ரக்ருஷ்டரும். [அதுவிதுவுதுவெது] - தூரஸ்த்தமாயும், ஸந்நிஹிதமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ளவையும், வினவப்படுமதாயுமுள்ளவையும். [வீமவையிவையுவை] - நஶ்வரபதார்த்தங்களில் ஸந்நிஹிதமாயும், தூரஸ்தமாயும், அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்களைச் சொல்லுகிறது. [அவைநலந்தீங்கவை] - அவற்றில் நல்லனவும் தீயனவும்; நன்மையும், தீமையு மென்னவுமாம். [ஆமவையாயவை] - ஆகக்கடவனவும், பண்டேயானவையும். [ஆய்நின்ற அவரே] - ஆகாநின்ற அவரே. இவையெல்லாம் ஆகாநின்ருர் ப்ரக்ருதரானவர். ஸகல பதார்த்தங்களிலும் அந்தராத்மதயா ஸத்தாஹேதுவாய் நிற்கையாலே ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறது. இப்பாட்டிற் சொன்ன ப்ரயோஜகங்கள் ஓரிடத்திலே உண்டாய் ஓரிடத்திலின்றிக்கே யொழிந்தவற்றை இல்லாதவிடத்திலே யோக்யமானவற்றைக் கூட்டிக் கொள்ளக்கடவது. ஸ்த்ரீபுந்நபும்ஸக பேதத்தாலும், பூஜ்யபதார்த்தங்கள் நஶ்வரபதார்த்தங்களென்கிற பேதத்தாலும், விலக்ஷணவிலக்ஷண பேதத்தாலும், பூதபவிஷ்யத்வர்த்தமாநகால பேதத்தாலும் வந்த விஶேஷங்களாலே ஸகலசேதநாசேதநங்களையும் ஸங்க்ரஹித்து அவற்றினுடைய ஸ்வரூபம் பகவததீந மென்றதாய்விட்டது.

ஈடு — நாலாம் பாட்டு. கீழ்ப்பாட்டிலே ததீயத்வாகாரத்தாலே அவன் குணங்களோபாதி உத்தேஶ்யமாய்த் தோற்றுகையாலே லீலாவிபூதி யோகத்தை அநுபவித்தார்; இனி மேலிற் பாட்டுக்களெல்லாம் லீலாவிபூதிவிஷயமாயிருக்கிறது. நித்யவிபூதியில்வந்தால் அவ்விபூதி ஸாவஜ்ஞமாய் அவனுடையசந்தத்தைப் பின்செல்லுமதாயிருக்கும்; * "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்னும்படியாயிறே இருப்பது; கர்மநிபந்தநமான அசித்ஸம்ஸர்க்கத்தோடே கூடி ஈஶ்வரஸங்கல்பத்தைப் பின்செல்லுமதாயிருக்கும் இந்த விபூதி. அந்த விபூதியில் வந்தால் அவ்விருப்புக்கண்டு உகக்குமதுக்கு அவ்வருகு ஒன்றுமில்லை; அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்கள் நடையாடுகிறது இவ்விபூதியிலேயாகையாலே இரண்டையும்தவிர்த்து பகவததீநமென்று சொல்லவேண்டுவது இங்கேயாயிருந்தது. இனி ஒரு மூன்றுபாட்டாலே இதினுடைய ஸ்வரூபஸ்த்திதி

---

நாலாம்பாட்டு - 'நாமவன்' இத்யாதி. லீலாவிபூதி விஷயமாயிருக்கிற தென்றது - ஸ்வரூபஸ்த்தித்யாதி பரங்களாகையாலே. நித்யவிபூதியை ஒருபாட்டிலும், லீலாவிபூதியைப் பலபாட்டுக்களிலும் அநுபவிப்பானென்? என்ன, 'நித்யவிபூதியில்' இத்யாதி. சொல்லவேண்டுவது இங்கேயா யிருந்ததென்னுமளவும். விபூதியென்றது - விபூதிஸ்தரை. 'சந்தத்தை - அபிப்ராயத்தை. அவ்விபூதி சந்தாநுவர்த்தி யென்னுமதுக்கு ப்ரமாணம் - 'ஒண்டொடியாள்' இத்யாதி. விலக்ஷணமான முன்கைச்சரியையுடைய பிராட்டியும் நீயுமே ஒருபடிப்பட்டு வர்த்திக்கக் கடவதாக நீ பார்த்துவைத்த நல்ல விரகைக் கண்டு. இவ்விபூதி யிருக்கும்படி யென்? என்ன, 'கர்மநிபந்த' இத்யாதி. ஈஶ்வரஸங்கல்பத்தை - கர்மாநுகுணமான ஈஶ்வர ஸங்கல்பத்தை. பின்செல்லுமென்ற விடத்திலே - "க்ஷிப்ராமி அஜஸ்ரம் அஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு" இத்யாத்யநுஸந்தேயம். இஶ்ஶ்லோகத்தில் "ஶ்வஹம்" என்கிறது - நரகம். ஆகையாலே, 'அந்தவிபூதியில்' என்று கூட்டிக்கொள்வது. அவ்வருகு ஒன்றுமில்லை - ஶிக்ஷிக்கவேண்டுவதில்லை. சொல்லவேண்டுவது - உபதேசிக்க வேண்டுவது. 'சொல்லவேண்டுவது' என்றது - இவர்க்குப் பரோபதேஶகர்ப்ப ஸ்வாநுபவ மென்றும், ஸ்வாநுபவகர்ப்ப பரோபதேஶமென்றும் ஆகாரத்வய முண்டு. அதில் இத்திருவாய்மொழி கேவலாநுபவமன்றிக்கே பரோபதேஶகர்ப்பமாகையாலே பரக்கச் சொல்லவேணு மென்றபடி. புத்திஸௌகர்யார்த்தமாக மேலிற் பாட்டுக்களுக்கெல்லாம் ஸங்க்ரஹேண தாத்பர்யம் அருளிச்செய்கிருர் - 'இனியொரு மூன்று' என்று தொடங்கி. அதாகிறபடி - ஸ்வரூபம்அவனதீநமாகிறபடி. வஸ்துத்வ மென்றது - ரூபமாய், - ரூபநாமங்

---

* திருவாய்மொழி—௪, ௯, ௧௦.

ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் பகவததீநமாயிருக்கு மென்று, ஜகத்துக்கும் ஈஶ்வரனுக்கும் ஸம்பந்தம் ஶரீராத்மபாவமென்று குத்ருஷ்டிகளை நிரஸித்து, ஶூந்யவாதியை நிரஸித்து, வ்யாப்திஸௌகர்யத்தைச் சொல்லி, பலத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறார். அதில் ஸ்வரூபம் அவனதீந மென்கிறார் இப்பாட்டில். அதாகிறபடி எங்ஙனே? என்னில்; — ஸ்ருஷ்டிகாலத்திலே வந்தவாறே இவற்றையுண்டாக்கி ஜீவத்வாரா அநுப்ரவேஶித்து, வஸ்துத்வநாமபாக்த்வங்களும் உண்டாம்படி பண்ணியும், இது அடங்கலும் அழிந்தவன்று ஶக்த்யவஸ்த்த ப்ரபைபோலே தன்பக்கலிலே ஸூக்ஷ்மரூபேண கிடக்கும்படிஎறிட்டுக்கொண்டு தரித்தும், காரணதசையோடு கார்யதசையோடு வாசியறத் தன்னைப்பற்றிஸ்வரூபஸ்த்தித்யாதிகளாம்படி இருக்கையாலே ஸ்வரூபம்அவனதீநமென்கிறது. அதில், லோகத்தில் ஸகலபதார்த்தங்களையும் தனித்தனியே சொல்லி, 'இதினுடைய ஸ்வரூபம் அவனாலே, இதினுடைய ஸ்வரூபம் அவனாலே' என்னில், பணிப்படுமிறே ஜீவாநந்த்யத்தாலே; இனி ப்ரயோஜகத்திலே சொல்லிவிடு மன்று, ப்ரதிபத்திக்கு விஷயமாகாது; ஆகையாலே, தேவாதிபதார்த்தங்களை நாலுமூன்று வகையாலே சேர்த்து அவற்றினுடைய ஸ்வரூபம் அவனதீந மென்கிறார்.

[நாம் அவன் இத்யாதி] - நானென்றும், நாமென்றும், யானென்றும், யாமென்றும் தந்தாமைச் சொல்லக்கடவது. ஸந்நிஹிதமென்ன, தூரஸ்த்தமென்ன, அதூரவிப்ரக்ருஷ்டமென்ன, வினவப்படுகிறதென்ன, [அவள்இவள்உவள்எவள்] - ஸ்த்ரீலிங்க நிர்த்திஷ்டவஸ்துக்களைச் சொல்லுகிறது. [தாம்] - பஹுமந்தவ்யரை. [அது] - நபும்ஸகலிங்க நிர்த்திஷ்டவஸ்துக்களைச் சொல்லுகிறது. [வீமவை] - நஶ்வரபதார்த்தங்கள். [நலம்தீங்கு] - நன்மை தீமை என்னுதல், நன்றானவை தீதானவை என்னுதல். [ஆமவையாயவை] - கழிந்தவற்றிலும் வருமவற்றிலும் அடைப்புண்ணுமிறே வர்த்தமாநம். [ஆய்நின்ற] - ஆய்நின்ற பதார்த்தங்கள். இவற்றைப்

---

*களுண்டாம்படிபண்ணி யென்றபடி. ஶக்த்யவஸ்த்தப்ரபை, விகாஸாவஸ்தப்ரபை என்று த்விவிதம். ஶக்த்யவஸ்த ப்ரபையாவது - பொடிமூடின தணல். பணிப்படும் - யத்நகௌரவமாம்; ப்ரயாஸமா மென்றபடி. ப்ரயோஜகம் - ஸங்க்ஷேபம். நாலுமூன்றுவகை - ஏழுவகை. அதாவது - ஸ்த்ரீபுந்நபும்ஸகம் மூன்று,பூஜ்யபதார்த்தம்ஒன்று, நஶ்வரபதார்த்தம் ஒன்று, நன்மைதீமையொன்று, காலபேதமொன்று; ஆக, ஏழு. நாலுமூன்றென்று - சாடு.*

*'அவனிவன்' என்றால் நானென்னுதே 'நாம்' என்கிறதென்? என்ன, 'நானென்றும்' இத்யாதி. தூரஸ்த்தத்வஅந்திகஸ்த்தத்வஅதூரவிப்ரக்ருஷ்டத்வங்கள் ஸ்வாபேக்ஷயா வாகையாலே 'நாம்' என்றுதம்மை முந்துறச் சொல்லுகிறது. அவன்-தூரஸ்தன்: இவன்-ஸந்நிஹிதன்: உவன்-அதூரவிப்ரக்ருஷ்டன்: எவன்-வினவப்படுமவன். இப்படி மேலுள்ளவற்றுக்கும் கண்டுகொள்வது. 'எவள்' என்றும் 'எது' என்றும் இருக்கையாலே வர்க்காந்தரங்களிலும் எவன், எவர், எவை என்றும் கூட்டுவது. பஹுமந்தவ்யர்-பூஜ்யர். 'தாம்' என்கிறதுக்குள் விஹாமும் 'அவர்' இத்யாதி. 'வீமவை' என்கிற இதுக்குள் விஹாமும்-'அவை' இத்யாதி. 'நலந்தீங்கு', முந்தினது - தர்மபரம்; இரண்டாவது - தர்மிபரம். பதார்த்தப்ரகரண ஸ்வாரஸ்யத்தைப் பற்ற, இப்பக்ஷத்வயம். ஆமவை - ஆகக்கடவவை. ஆயவை - பண்டேயானவை. வர்த்தமாநஞ் சொல்லாதொழிவானென்? என்ன, 'கழிந்த' இத்யாதி. அடைப்புண்ணும் - அந்தர்ப்பூதமாம். பவிஷ்யத்காலாபேக்ஷயா பூதார்த்தா பவந்தி, பூதகாலாபேக்ஷயா பவிஷ்யதர்த்தா பவந்தி என்றபடி. 'ஆய்நின்ற' என்றது - ஆய்நின்ற பதார்த்தங்களைச் சொல்லி, இவற்றுக்கு அந்தர்யாமியானஈஶ்வரபர்யந்தஞ் சொல்லி, ஆய்நின்ற பதார்த்தங்களுக்கு அந்தர்யாமியாய்நின்றவரென்னுதல்; அன்றிக்கே, அவர் ஆமவை ஆயவையான பதார்த்தங்களெல்லாமாய் நின்றாரென்னுதல். அந்தராத்மதயா ஸத்தாஹேதுவாய்நின்றாரென்றபடி. முந்தின அர்த்தத்திலே ஆய்நின்றபதார்த்தங்களுக்கு அந்தர்யாமியாய்நிற்கிறவரென்று ஈஶ்வரபர்யந்தஞ் சொல்லுகிறதென்? பதார்த்தமாத்ரஞ் சொன்னாலோ? என்ன, 'இவற்றை' இத்யாதி*

பதார்த்தத்தளவிலே கொண்டபோது மேல் ஐக்யஞ் சொல்லப்போகாது; அசித்தும், அசிதபிமானி யான ஜீவனும், ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவுமான இஸ்ஸங்காதம் இத்தனைக்கும் வாசகமா யிருக்கிறது இச்சப்தம். [அவர்] - இவையாய் நிற்கிறார் அவர். "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (இதம்ஸர்வம் ப்ரஹ்மகலு) என்னுமாபோலே. "தத்த்வமஸி" (தத்த்வமஸி) என்றாற்போலேயிருக் கிறது. முதற்பாட்டிலே கல்யாணகுணயோகத்தையும் நித்யவிபூதியோகத்தையும் விக்ரஹவை லக்ஷண்யத்தையும் சொல்லி, இரண்டாம் பாட்டிலே ஸ்வரூபவைலக்ஷண்யத்தையும் சொல்லி ற்று; தச்சப்தம் ப்ரக்ருத பராமர்ஶியாகையாலே 'அவர்' என்று கல்யாணகுணவிசிஷ்ட வேஷத்தைச் சொல்லி, 'ஆய்நின்ற' என்று அசிஜ்ஜீவவிசிஷ்டபரமாத்மாவைச் சொல்லி, ஸாமாநாதிகரண்யத்

---

ப்ர.— நாமவன் இத்யாதி — ஸாந்தோக்யே (௩-௧௪) ஶாண்டில்யவித்யாயாம் "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி ஶாந்த உபாஸீத அத கலு க்ரதுமய: புருஷ: யதாக்ரதுரஸ்மிம்ல்லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி". அத்ர ப்ரஹ்மஶப்த: - காரணாவஸ்தஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டப்ரஹ்மபர:, ஸர்வஶப்த: - கார்யரூபஜகத்விஶிஷ்ட ப்ரஹ்மபர:, தயோ: ஸாமாநாதிகரண்யம் ப்ரதிபாத்யதே. தஜ்ஜ தல்ல [illegible] ஸர்வமிதம் ப்ரஹ்மஸ்வரூபம் இதி ஸாமாநாதிகரண்யம் [illegible] [illegible] நிர்தேஶ: [illegible] ஸாமாநாதிகரண்ய [illegible] இதி.

ததைவ [௬-௧௨] ஸத்வித்யாயாம் "ஸ ய ஏஷோऽணிமைதாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி ஶ்வேதகேதோ" இதி. (தத்த்வமஸீதி)— அஸ்யாயமர்த்த:— "தத் த்வம்" இதி ஸாமாநாதிகரண்யத்வயோர்பதயோர் [illegible] ப்ரஹ்மைவ [illegible] [illegible] ஜகத்காரணத்வம் ஸகலகல்யாணகுணாகரம் நிரவத்யம் நிர்விகாரத்வமுச்யதே; [illegible] த்வமிதி ப்ரஹ்ம ஜீவாந்தர்யாமி ஸஶரீரஜீவப்ரகாரவிஶிஷ்டத்வமுச்யதே. ததேவம் ப்ரவ்ருத்திநிமித்தபேதேநைகஸ்மிந் ப்ரஹ்மண்யேவ "தத் த்வம்" இதி உபயோரபி பதயோ வ்ருத்திருச்யத இதி.

---

*இவற்றை - ஸந்நிஹிதத்வாதி பதார்த்தங்களை. ஐக்யஞ்சொல்லப்போகாது - "ஆய்நின்றவவர்" என்று ஸா மாநாதிகரண்யத்தால் வந்த ஐக்யம் மேற்சொல்லுகிற ப்ரஹ்மவஸ்துவுக்கும் இவற்றுக்குஞ் சொல்லப்போகா தென்றபடி. ஆனால், ஆய்நின்ற பதார்த்தங்களுக்கு வாசகமான ஶப்தம் ஈஶ்வரபர்யந்தஞ் சொல்லும்படி யென்? என்ன, 'அசித்தும்' இத்யாதி. 'அவர்' என்கிற ஸாமாநாதிகரண்யத்தால் பலித்ததென்? என்ன, 'இவையாய்' இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு ப்ரமாணம் - 'இதம்ஸர்வம்ப்ரஹ்ம' இத்யாதி. அவர்இவை யெல்லாமாய் நின்றாரென்ற அர்த்தாந்தரவிவக்ஷயா ப்ரமாணம் - 'தத்த்வமஸி' என்றது. சாந்தோக்யே சாண் டில்யவித்யாயாம் "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாந்" இதி. தத்ரைவ ஸத்வித்யாயாம் "ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி ஶ்வேதகேதோ" இதி. அங்கு 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்' என்று ஜகத்காரணத்வேந ப்ரஹ்மம் ப்ரஸ்துதமாகையாலே "தத்" என்கிற நிர்த்தேஶம் கூடும்; இங்கு அப் படி ப்ரக்ருதபராமர்ஶம்கூடுமோ? என்ன, 'முதற் பாட்டிலே' இத்யாதி. ஜகத்காரணத்வாதி குணவிஶிஷ்ட ப்ரக்ருதபராமர்ஶம் உபயத்ர துல்ய மென்றபடி. இத்தால், பேதஶ்ருதிகளெல்லாம் இங்கே கர்ப்பிதங்*

தாலே ஐக்யம் சொல்லுகிறது. ஆக, ஸ்த்ரீபுந்நபும்ஸக பேதத்தாலும், பூஜ்யபதார்த்தங்கள் நஶ்வர பதார்த்தங்க ளென்கிற பேதத்தாலும், விலக்ஷணவிலக்ஷண பேதத்தாலும், பூத பவிஷ்யத் வர்த்தமாந காலபேதத்தால் வந்த விசேஷங்களாலும், ஸகல சேதநாசேதநங்களையும் ஸங்க்ரஹித்து அவற்றினுடைய ஸ்வரூபம் பகவததீந மென்றதாய்விட்டது. (ச)

## ஐந்தாம் பாட்டு.

அவரவர்தமதம தறிவறிவகைவகை
அவரவரிறையவரேன அடியடைவர்கள்
அவரவரிறையவர் குறைவிலரிறையவர்
அவரவர்விதிவழி அடையநின்றனரே.

**ஆ.**—கர்மங்களுக்கு ஆராத்யஸ்வரூபம் பகவததீந மென்று சொல்லுகிறது. (அவரவர்.) ஸ்வர்க்காதிஸாதநபூத ஜ்யோதிஷ்டோமாதி கர்மநிஷ்டரான அவ்வவபுருஷர்கள் தந்தா

---

**ப்ர.**—(ஸாமாநாதிகரண்யத்தாலே ஐக்யஞ்சொல்லுகிறது) [illegible]

---

ளென்றதாயிற்று. 'நாலுமூன்றுவகையாலே' என்றத்தை முதலிக்கிறுர் - 'ஆக' இத்யாதி. 'அவர்' இத்யாதியும் 'அவை' இத்யாதியும் - 'அவன்' இத்யாதியோடும், 'அது' இத்யாதியோடும், புநருக்தமன்றோ? என்னில், - 'அவர்' இத்யாதி - கௌரவ்யாவாந்தரவிஹாரம், 'அவை' இத்யாதி - நஶ்வராவாந்தர விஹாரமென்று தாத்பர்யம். (ச)

முடைய ஜ்ஞாநாநுகுணமாக அவ்வவ இந்த்ராதிகளைத் தந்தாமுடைய கர்மங்களுக்கு ஆராத்யரா கவும் ஸ்வாபிலஷித பலப்ரதராகவும் அநுஸந்தித்துக்கொண்டு அந்தக் கர்மங்களாலே ஆஶ்ரயிப் பார்கள்; ஆஶ்ரயிக்கப்பட்ட அவ்வவ இந்த்ராதி தேவதைகளும் தத்ஸமாராதநாபிலஷிதபல ப்ரதாநத்திலே குறையுடையருமல்லர். எத்தாலே யென்னில்;-ஶாஸ்த்ரோக்த மார்க்கத்தாலே அந்தந்தப் புருஷர்கள் இந்த்ராதிகளை ஆஶ்ரயித்து ஸ்வாபிலஷித பலங்களைப் பெறும்படி பரமபுரு ஷன் தானே அந்த இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தராத்மதயா நின்று ஸகலகர்மபலப்ரதனாய் ஸர்வகர்மஸமாராத்யனா யிருக்கையாலே. இவ்வர்த்தத்தில் ப்ரமாணம் என்னென்னில்; "ஊஷா வ்ருத்தம்..." "..." என்று தொடக்கமாயுள்ள ஶ்ருதி ஸ்ம்ருத்யாதிகள். ஆக, இப்பாட் டாலே சொல்லிற்றாயிற்று ஏது? என்னில்;—எம்பெருமான் ஸர்வதேவதாந்தராத்மதயா ஸர்வ கர்மஸமாராத்யனாய் ஸகலபல ப்ரதனா யிருக்கையாலே ஜகத்ரக்ஷணமும் தததீநம் என்கிறது.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஸகலபதார்த்தங்களுடைய ஸ்திதியும் எம்பெருமானாலே என்கிறது.

[அவரென்று தொடங்கி] - தந்தம் ப்ரக்ருத்யநுகுணமாக விவிதபலாபிஸந்தியை யுடைய அதிகாரிகள் தந்தாமறிந்த மார்க்கபேதங்களாலே தங்களுடைய அபேக்ஷித பலப்ரதாந ஶக்தரான அவ்வவதேவதைகளை இவர்களே நமக்கு அஸாதாரணஸ்வாமிக ளென்று ஆஶ்ரயிப் பர்கள். [அவரவரென்று தொடங்கி] - ஆஶ்ரயணீயர் ஆஶ்ரயிக்கிறவர்களுடைய அபேக்ஷிதம் செய்கைக்குக் குறையுடையரல்லர்; ஆஶ்ரயிக்கிறவர்கள் ஆஶ்ரயணீயரை வித்த்யுக்தப்ரகாரமே ஆஶ்ரயிக்கவும், அவர்கள் அவர்களுக்கு பலப்ரதாநஶக்தராகவும், ஸர்வேஶ்வரன் அந்தராத்மத யா நின்றான்.

ப.—அநந்தரம், ரக்ஷணரூபையான ஸ்திதி, தததீநையென்று வையதிகரண்யத் தாலே அருளிச்செய்கிறார்.

(அவ்வோபுருஷார்த்தங்களுக்காக), அவர் அவர் - அதிகாரிகள், தமதமது - தந்தா முடைய, அறிவு அறி வகை வகை-அறிவினறிவின்வகையாலே, அவர் அவர் - ருசிக்கு ஈடான தேவதைகளை, இறையவர் என - பலந்தரும் சேஷிகளாக, அடி அடைவர்கள் – ஆஶ்ரயிப்பார் கள்; அவர் அவர் - அவ்வவதேவதைகள், இறையவர் - பலங்கொடுத்து ஸ்வாமிகளாக, குறைவிலர் - குறையில்லை; இறையவர் - ஸர்வஸ்வாமியான அவர், அவரவர் - அவ்வோ அதி காரிகள், விதிவழி - விதிமார்க்கத்தாலே, அடைய - பலத்தை அடையும்படி, நின்றனர் - (அத் தேவதைகளுக்கு அந்தராத்மாவாய்) நின்றார். அன்றியே, 'அவரவர்விதிவழியடைய' என்று அவ் வோதேவதைகள் தந்தாமுடைய பலப்ரதத்வாதிபதவித்யர்த்தமாக வித்த்யுக்தமார்க்கத்தாலே ஆஶ்ரயிக்கும்படி இறையவர் ஆஶ்ரயணீயராய்நின்றா ரென்றுமாம்.

இ.—ஸ்த்திதியும் பகவததீநையென்று வையதிகரண்யத்தாலே சொல்லுகிறது.

[அவரவர்]-ஸத்வாதிகுணபேதத்தால்வந்த ப்ரக்ருதிபேதத்தைச் சொல்லுகிறது. [தம தமது]-குணபேதத்தால் வந்த பலபேதத்தைச் சொல்லுகிறது. [அறிவறி] -அதுக்கு அடியான ஜ்ஞாநபேதத்தைச் சொல்லுகிறது. [வகை வகை] - மார்க்கபேதங்களாலே. [அவரவர்] - அவ்வோபலப்ரதாநத்துக்கு ஶக்தராக ஸ்வீகரித்த தேவதைகளை. [இறையவரென] - அவரவர் களே தந்தாமுக்கு ஸ்வாமிகளென்று. [அடியடைவர்கள்] - ஆஶ்ரயிப்பர்கள். அடியடைவர்க

ளென்று - ஸ்வகோஷ்டீப்ரஸித்தியாலே அருளிச்செய்கிறார். [அவரவர் இறையவர்] - அவ்வோதேவதைகள். [குறைவிலர்]-ஆஸ்ரயிக்கிறவர்களுடைய பலம்கொடுக்கைக்குக் குறையுடையரல்லர். [இறையவர்] - நிருபாதிக ஸர்வேஸ்வரன். [அவரவர் விதிவழியடைய] - ஆஸ்ரயிக்கிறவர்கள் வித்யுக்த ப்ரகாரத்தாலே ஆஸ்ரயிக்கவும், ஆஸ்ரயணீயர் அவர்களுக்கு பலப்ரதாநத்துக்கு ஸக்தராகவும். [நின்றனர்] - அந்தராத்மதயா நின்றார்.

ஈடு.— அஞ்சாம் பாட்டு. ஸ்வரூபம் அவனதீநமானவோபாதி ஸ்த்திதியும் அவனதீநை யென்கிறார்.

[அவரவர் இத்யாதி] - ஒருவன் ஒருக்ருஹத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் ஒரு க்ராமத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் ஒருஜநபதத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் த்ரைலோக்யத்துக்குக் கடவனாயிருக்கும்; ஒருவன் சதுர்த்தஸபுவநத்துக்குக் கடவனாயிருக்கும்; ஆக, சதுர்த்தஸபுவநத்துக்குக் கடவனானவனோடு, ஒருக்ருஹத்துக்குக் கடவனானவனோடு வாசியற அவர்கள் ரக்ஷகராகிறதும், இவை ரக்ஷ்யமாய் உபகாரங்கொண்டதாகிறதும்.- ஸர்வேஸ்வரன் அந்தராத்மாவாய் நின்று நடத்துகையாலே; அவன் இப்படி நடத்திக்கொண்டு போராதவன்று இவர்கள் ரக்ஷகராகமாட்டார்க ளென்கிறார். “நஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே । ஸமர்த்தோ த்ருஸ்யதே கஸ்சித் தம் விநா புருஷோத்தமம் ‖ நஹி பாலந ஸாமர்த்த்யம்ருதே ஸர்வேஸ்வரம் ஹரிம்” (நஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே । ஸமர்த்தோத்ருஸ்யதேகஸ்சித்தம் விநாபுருஷோத்தமம் ‖ நஹிபாலந ஸாமர்த்த்யம்ருதே ஸர்வேஸ்வரம்ஹரிம்) - எல்லா நன்மைகளையும் பண்ணித்தரவல்லனாய் விரோதிகளையும் போக்கவல்லனானவனை யொழிய வேறொருவர் பக்கலில் இந்த ரக்ஷகத்வம் கிடவாது. “யத்வேதாதௌ ஸ்வர: ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டித:” (யத்வேதாதௌஸ்வர:ப்ரோக்தோ வேதாந்தேசப்ரதிஷ்டித:) - செப்பிலேகிடந்த ஆபரணத்தை

---

ப்ர.— தைத்திரீயகே ஸ்ரீநாராயணே [௧0] “யோ வேதாதௌ ஸ்வர: ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டித: । தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பர: ஸ மஹேஸ்வர:”. அஸ்யார்த்தோ வேதபாஷ்யகாரேணாபிஹித:— “ஸர்வஸ்ய வேதஜாதஸ்ய ப்ரக்ருதி: ப்ரணவஸ்தத:; ப்ரணவஸ்ய ச ப்ரக்ருதிரகார:; ப்ரணவவிகாரோ வேத:, ஸ்வப்ரக்ருதிஹ்ப்ரணவே லீந:. ப்ரணவோப்யகாரவிகார: ஸ்வப்ரக்ருதாவகாரே லீந:. தஸ்ய ப்ரணவப்ரக்ருதிலீநஸ்யாகாரஸ்ய ய: பர: - வாச்ய:, ஸ மஹேஸ்வர:” இதி.

---

அஞ்சாம்பாட்டு - அவரவர் இத்யாதி. ஸ்த்திதி அவனதீநை என்கிறதென்? பித்ராதிகளன்றோ ரக்ஷகராகிறார்களென்ன, ஒருவன் இத்யாதி. க்ருஹாதிஸப்தங்கள் - தத்ரத்யர்களைச் சொல்லுகிறன.

அவர்கள் ரக்ஷகர்களாகமாட்டார்க ளென்கைக்கும், ஈஸ்வரனே ரக்ஷக னென்னுமிடத்துக்கும், ப்ரமாணம்-நஸம்பதாம் இத்யாதி. நஹீதி - “ஸ்திதௌ ஸ்திதம் மஹாத்மாநம் பவத்யந்யஸ்ய கஸ்ய வித்” இத்யுத்தரார்த்தம். இதம் - ஸ்ரீவிஷ்ணுபுராணே ப்ரதமேம்ஸே த்வாவிம்ஸோத்யாயே. ஸ்ருதிக்கு முன்னே புராணவசநக்ரஹணம் ஸ்பஷ்டார்த்தமாகையாலே. “புருஷோத்தமம், ஹரிம்” என்ற பதத்வயார்த்தம் - எல்லாநன்மைகளையும் இத்யாதி. அதாவது “ஷண தாநே” என்ற தாதுவாய், புரு - பஹு ஸநோதீதி புருஷ: என்றாய், பஹுப்ரத னென்றபடி. “ஹரணாத்தேவதேவோ நாம்ஹரிரித்யபிதீயதே” என்கிற நிருக்தியாலே விரோதிநிவர்த்தக னென்றபடி. ப்ரமாணாந்தரம்-யத்வேத இத்யாதி. வேதாதௌ வேதாந்தேச என்றது-வேதாத்யயநாதியிலும், அத்யயநாந்தத்திலு மென்றபடி; அல்லது “அநந்தா வை வேதா:” என்று வேதத்துக்கு ஆத்யந்தங்கள் இல்லையிறே. இங்கே. “ப்ராஹ்மண: ப்ரணவம் குர்யாதாதாவந்தே ச ஸர்வதா । ஸ்ரவத்யநோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாச்ச விஸீர்யதே” என்றது அநுஸந்தேயம். ப்ராஹ்மண:-வேதஸ்ய. “ஸ்வரோ வேதாதௌ ப்ரோக்த:, வேதாந்தே ச ப்ரதிஷ்டித:” என்றதின் தாத்பர்யம் - செப்பிலே இத்யாதி. ப்ரணவத்தை உச்சரித்து, வேதத்தை அநுஸந்தித்து, பின்

வாங்கிப் பூண்டு, பின்னையும் அவ்வாபரணத்தை வாங்கிச் செப்புக்குள்ளே யிட்டு வைக்குமா போலே ஆதியந்தபீஜமாயிருக்கிறது யாதொன்று: "தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய" (தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய) - அது தன்னுடைய ப்ரக்ருதியிலே லீநமாயிருக்கிறதாகிறது - அகாரம். அது ரக்ஷகனைக் காட்டுவதொன்றிறே. "யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ" (யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ) - அதுக்கு வாச்யதயா பரனாயிருக்கிறான் யாவனொருவன், அவன் ஸர்வேஶ்வர னென்றதிறே. [அவரவர்] - தம்முடைய அநாதரமும், அவர்களுடைய வைவித்யமும் தோற்றுகிறது. [தமதமது] - குணபேதத்தால் வந்த பலபேதத்தைச் சொல்லுகிறது. [அறிவறி] - அதுக்குஅடியான ஜ்ஞாநபேதத்தைச் சொல்லுகிறது. [வகைவகை] - மார்க்கபேதங்களாலே. [தமதமதறிவறிவகைவகை] - சேதநபேதத்தோபாதியும் போருமாயிற்று ருசிபேதங்களும். தந்தாமுடைய குணநுகுணமாகப் புறம்பே ஆஶ்ரயிப்பாரும் ஆஶ்ரயணீயராயிருப்பாருமா யிருக்குமிறே. ரஜோகுணப்ரசுரராயிருப்பாரும் தமோகுணப்ரசுரரா யிருப்பாரும் அளாவனான ஸத்வத்தையுடையரா யிருப்பாருமாயிறே இருப்பது, அப்படியே குணநு குணமாகப்பிறந்த ஜ்ஞாநமும். அறிந்தவறிந்த வகைகளாலே. [அவரவர் இறையவரென] - அவ்வவர் ஆஶ்ரயணீயரென்று. [அடியடைவர்கள்] - அவ்வவதேவதைகள் தான் துராராததேவதைகளாய், 'ப்ரஜையை யறுத்துத்தா, ஆட்டையறுத்துத்தா', என்னநிற்கச்செய்தேயும், ஆஶ்ரயணமாவது - அவற்றின்காலிலே குனியும் அதுக்கு அவ்வருகில்லை யென்றிருக்கிறார்இவர், ஸ்வகோஷ்டீப்ரஸித்தியாலே; ஓரஞ்சலிஸாத்யவஸ்துவோடேயிறே தமக்கு வாஸனை, "அஞ்ஜலிஃபரமாமுத்ராக்ஷிப்ரந்தேவப்ரஸாதிநீ" (அஞ்சலிஃபரமாமுத்ராக்ஷிப்ரந்தேவப்ரஸாதிநீ); "க்ருதாபராதஸ்ய

---

னையும் ப்ரணவத்தை உச்சரிக்கக்கடவதிறே; அதில் ப்ரதமோச்சாரணத்தாலே அத்யேஷ்யமாண வேதார்த்தங்களெல்லாம் இதுக்குள்ளே யிருக்கிற தென்று ஸூசிப்பித்து, அந்த அர்த்தங்களை வேதமுகத்தாலே அநுஸந்தித்து, அधீதார்த்தமெல்லாம் இதுக்குள்ளே யென்று த்விதீயோச்சாரணத்தாலே ஸூசிப்பிக்கையாலே செப்பிலாபரணவமாதி தோன்றுகிற தென்றபடி. ஆத்யந்தபீஜம் - ஆத்யந்தோச்சார்யமாணபீஜம். ப்ரக்ருதிலீநஸ்ய தஸ்ய - ப்ரணவத்துக்குக் காரணமான அகாரத்திலே லீநமான. ப்ரணவமாவது . அகாரமென்றபடி. ஸ்வரஃ - ப்ரணவஃ. யச்சப்தஶ்ச சாந்தஸஃ. அவர் இத்யாதி. அதுக்கடியான - பலபேதத்துக்கு அடியான. ராஜஸராயும், தாமஸராயும், ஸாத்த்விகராயுமுள்ள அவ்வோசேதநர் தந்தாமுடைய பலபேதங்களுக்கு அடியான ருசிபேதங்களுக்கு அநுகுணமான ஸாதநபேதங்களாலே என்று ஶப்தார்த்தம். ஆக, குணநுகுணமான ருசிகளும், ருச்யநுகுணமான பலங்களும், பலங்களுக்குசுடான ஸாதநபேதங்களு மென்று அர்த்தக்ரமம். அவரவர் அடியடையவர்களென்று அந்வயம். கீழ்ச்சொன்ன ஜ்ஞாநம் ருசிரூபமென்றும் 'அறிவறி' என்கிற வீப்ஸையால் பலித்த அர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - சேதநபேத இத்யாதி. இந்த ருசிபேதத்துக்கு அடியேது? என்ன, தந்தாமுடைய இத்யாதி. ஏதத்விவரணம் - ரஜோகுண இத்யாதி. அளாவனான - மிஶ்ரமான. ருசிபேதஹேதுவைச் சொல்லுகிற வழியாலே அதிகாரிபேதமும் ஸித்திக்கையாலே அத்தை ருசிபேதத்துக்கு த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - அப்படியே இத்யாதி. 'அறிவறி வகைவகை' என்றதுக்கு அர்த்தாந்தரம் - அறிந்தவறிந்த வகைகளாலே என்று; அவ்வோ அதிகாரிகள் தந்தாமுடைய பலவிஷயமாக அறிந்தவறிந்த மார்க்கபேதங்களாலே யென்றபடி. ஏகபலவிஷயமாகவும் அநேக ஸாதநங்க ளுண்டாகையாலே, அறிந்தவறிந்த என்கிறது. அப்போதைக்கு, உபாயவிஷயமான ஜ்ஞாநமென்றபடி. முந்தின அர்த்தத்திலே, பலவிஷயமான ஜ்ஞாநமென்று கண்டுகொள்வது. 'அதுக்கு அடியான ஜ்ஞாநபேதத்தைச் சொல்லுகிறது' என்று - பலத்துக்கு அடியாகவும் கீழே அருளிச்செய்கையாலே. ஆராதிப்பர்களென்னுதே 'அடியடைவர்கள்' என்கிறதென்? என்ன, அவ்வவதேவதைகள் இத்யாதி. ஸ்வகோஷ்டீ - பரமவைதிக ப்ரபந்நஜநகோஷ்டீ. பரிஹாராந்தரம் - ஓரஞ்சலி இத்யாதி; தம்முடைய வாஸனையாலே அருளிச்செய்கிறா ரென்றபடி. யத்வா, ஸ்வகோஷ்டியில் ப்ரஸித்திக்கு ஹேது வேது? என்ன, ஓரஞ்சலி இத்யாதி. அஞ்சலிஸாத்யவஸ்துவுக்கு ப்ரமாணத்வயம்; அஞ்சலிஃ இத்யாதி. இதம் பரத்வாஜஸம்ஹிதாயாம். க்ருதாபராதஸ்ய இத்யாதி - கிஷ்கிந்தாகாண்டே த்வாத்ரிம்ஶே ஸுக்ரீவம் ப்ரதி ஹநுமத்வசநம். "[illegible]" என்கையாலே "க்ருதாபராதஸ்ய" என்கிற

ஹிதேநாந்யத்பஶ்யாம்யஹம் க்ஷமம் | அந்தரேணாஞ்ஜலிம் பத்த்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்'' (க்ருதாபராதஸ்யஹிதேநாங்யத்பஶ்யாம்யஹம்க்ஷமம்| அந்தரேணஞ்சலிம்பத்வா லக்ஷ்மணஸ்யப்ரஸாதநாத்) - இளையபெருமாளுடைய ஜ்யாகோஷத்தைக் கேட்டு மஹாராஜர் கழுத்தில் மாலையையறுத்துப்போகட்டுக் காபேயமாய்ச் சிலவ்யாபாரங்களைப் பண்ணி, அருகே நின்ற திருவடியைப் பார்த்து 'இவ்வளவில் நமக்குச் செய்யவடுப்பதேன்?' என்ன, 'அபராதகாலத்திலே அநுதாபம் பிறந்து மீண்டோமாய் எளியனசில செய்கிறோமல்லோம்; தீரக்கழியஅபராதம்பண்ணினபின்பு இனி ஓரஞ்சலி நேராமற்போகாது' என்றானிறே. இப்படி குணாதிகனாய் ப்ராப்தனாயிருக்கிறவனோட்டை வாஸனையாலே 'அடியடைவர்கள்' என்கிறார். மாமலர்நீர்சுடர் தூபங்கொண்டு தொழுதெழுது மென்னுமிது மிகையாயிறே இவர்பற்றின விஷயம் இருப்பது. [அவரவர் இறையவர் குறைவிலர்] - ஆஶ்ரயிக்கிறவர்களுடைய இறையவ ரென்னுதல், அவ்வவ் ஆஶ்ரயணீயரானவர்க ளென்னுதல். அவர்களுக்கு ஆஶ்ரயணீயரானவர்கள் அவர்களுக்கு பலப்ரதாநஶக்தராகைக்குக் குறையுடையரல்லர். அதுக்கு அடியேன்? என்னில்,—[இறையவர்] - பொதுவிலே 'இறையவர்' என்கிறார், அவர்களோடு, அவர்களாஶ்ரயிக்கிற தேவதைகளோடு, தம்மோடு வாசியற எல்லார்க்கு மொக்க இறையவராகையாலே; "பதிம் விஶ்வஸ்ய'' (பதிம்விஶ்வஸ்ய) என்கிறபடியே எல்லார்க்குமொக்க ஸ்வாமியானவர். [அவரவர் விதிவழி யடைய நின்றனரே] - அவ்வவ் ஆஶ்ரயணீயர் தந்தாமுடைய ஆகமாதிகளிலே விதித்துவைத்த ப்ரகாரங்களிலே அடையும்படியாக நம் இறையவர் அந்தராத்மாவாய் நின்றார். அன்றிக்கே, ஸர்வேஶ்வரன் காமநாதிகாரத்தில் அருளிச்செய்தபடியே அவர்களடை

---

ப்ர:—(காமநாதிகாரத்தில் அருளிச்செய்தபடியே)—பகவத்கீதாஶாஸ்த்ரே;''காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே(அ)ந்யதேவதா:| தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா||20|| யோ யோ யாம் யாம் தநும் பக்த: ஶ்ரத்தயார்ச்சிதுமிச்சதி| தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவ விததாம்யஹம்||21|| ஸ தயா ஶ்ரத்தயா யுக்தஸ்தஸ்யாராதநமீஹதே| லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந்||22|| அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்'':—ஸர்வ ஏவ ஹி லௌகிகா: புருஷா: ஸ்வயா ப்ரக்ருத்யா வாஸநயா குணமயபாவவிஷயயா நியதா:, தே ஸ்வவாஸநாநுகுணமேவ காமைஸ்

---

ஶ்லோகம், ஈஶ்வரன் அஞ்சலிஸாத்யனு யிருக்கு மென்றதுக்கு ப்ரமாணம். க்ருதாபராதஸ்ய தே அஞ்ஜலிம் பத்த்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத் அந்தரேண என்று அந்வயம். "க்ருதாபராதஸ்ய'' என்றதுக்கு அர்த்தம்-இளையபெருமாள் இத்யாதி. "க்ருதாபராதஸ்ய'' என்ற பூதநிர்த்தேஶத்துக்கு ஹாவம்- தீரக்கழிய இத்யாதி. தீரக்கழிய - அத்யந்தாதிகமாக. நேராமல் - பண்ணாமல். போகாதென்றானிறே - திருவடி சக்ரவர்த்தி பிள்ளைகளுடைய ஆஜ்ஞையாலே யென்றபடி. நேராமற் போகாது என்று - ஸுகரமான அஞ்சலியை துஷ்கரமாகச் சொன்ன இது 'நீ கனக்க நேர்ப்புகுகிறாய்' என்று உபாலம்பதாத்பர்யத்தாலே. உக்தார்த்தநிகமநம் - இப்படி இத்யாதி. அஞ்சலிஸாத்யனான வளவன்றிக்கே அஞ்சலிதான் மிகையாயிருக்கு மென்கிறார் - மாமலர் இத்யாதி. ஶ்லாக்யமான புஷ்பங்களையும் அர்க்யாதிஜலத்தையும் தீபதூபங்களையும் ஸ்வீகரித்துக்கொண்டு தொழுகைக்காக உத்யோகிப்போ மென்னுமிது உன் ஶீலாதிஶயத்தாலே மிகையா யிருத்தலா லென்றபடி. தொழுதெழுது மென்ற அந்வயித்தார். இன்னாருக்கு என்னாதே 'இறையவர்' என்றதுக்கு ஹாவம் - பொதுவிலே இத்யாதி. விவக்ஷிதார்த்தத்தை ஸப்ரமாணமாக அருளிச்செய்கிறார் - பதிம் இத்யாதி. விதித்துவைத்த - "ஶாஸ்த்ரவாஸ்'' போலே விதித்துவைத்த. அடையும்படியாக - ஆஶ்ரயித்து பலமடையும்படியாக. அர்த்தாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. காமநாதிகாரத்தில் அருளிச்செய்தபடியே - ஸர்வேஶ்வரன் காமநாதிகாரத்தில்

பும்படியாக வென்னுதல். ஸர்வேச்வரன் இராமடமூட்டுவோரைப்போலே முகந்தோற்றுதே அந்த ராத்மாவாய் நின்று நடத்துகையாலே அவர்களும் ஆச்ரயித்தார்களாய், இவர்களும் பலப்ரதாநசக்த ராகிறுர்க ளித்தனை; அவனையொழிந்தவன்று இவர்கள் ஆச்ரயிக்கவும் மாட்டார்கள், அவர்கள் பலப்ரதாநம் பண்ணவும் மாட்டார்க ளென்கிறுர். "அய்யன்பாழியில் ஆனை போர்க்கு உரித்தாம்" அன்றுயிற்று அவ்வோதேவதாமாத்ரங்களுக்கு பலப்ரதாநசக்தி யுள்ளது. (ரு)

## ஆறும் பாட்டு.

நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்
நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்
என்றுமோரியல்வினர் எனநினைவரியவர்
என்றுமோரியல்வொடு நின்றவெந்திடரே.

[illegible]

---

விதித்தபடியே. அதாவது-கீதாயாம் ஸப்தமே "[illegible]" இத்யாதி. 'அவரவர் விதிவழி யடைய நின்றனர்' என்றதுக்கு - அந்தஅந்த ஆச்ரயணீயதேவதைகள் தந்தாமுடைய ஆகமாதிகளிலே "[illegible]" போலே விதித்த ப்ரகாரங்களிலே தங்களை யாச்ரயித்து பலமடையும்படியாகவும், ஆச்ரயணீயர் அவர்களுக்கு பலப்ரதாந ஸக்தராகவும், ஆச்ரயணீயர்க்கும் ஆச்ரிதர்க்கும் அந்தர்யாமியாய் நின்றனர் என்று ப்ரதமயோஜனைக்கும், அந்தஅந்த அதிகாரிகள் காமநாதிகாரமான "[illegible]" இத்யாதியிலே ஈச்வரன் விதித்த ப்ரகாரத்திலே தத்தத்தேவதைகளை ஆச்ரயிக்கும்படி உபயர்க்கும் அந்தராத்மாவாய் நின்றுர் என்று த்விதீயயோஜனைக்கும் நிஷ்க்ருஷ்டமான பொருள். முந்தின அர்த்தத்தில் தேவதாந்தர்யாமித்வமும், இரண்டாமர்த்தத்தில் சேதநாந்தர்யாமித்வமுஞ் சொல்லுகிறதென்னுமது, பாட்டு யோஜனையோடு விரோதிக்கும். இந்த அர்த்தத்வயத்தாலும் பலிதம் - ஸர்வேச்வரன் இத்யாதி. இராமடமூட்டுவோரைப்போலே - விஷயப்ரவணரான பிள்ளைகளை வாத்ஸல்யத்தாலே ராத்ரியில் ஸத்ரங்களிலே தாங்கள் அவர்கள் கண்படாமல் புஜிப்பிக்கும் மாத்ராதிகளைப்போலே என்றபடி. மாட்டார்க ளென்கிறதென்? "[illegible]" இத்யாதிகளிலே அவ்வவதேவதைக ளன்றே பலப்ரதாநம்பண்ணுகிறதாகச் சொல்லுகிறது என்ன, அய்யன் இத்யாதி. அய்யன் - சாஸ்தா. பாழி - தத்ஸ்தாநம். க்ரமேண அந்வய:. (ரு)

ஆ.—(நின்றனர்.) சேதநாசேதநாத்மக ஸமஸ்த வஸ்துக்களினுடைய ஸமஸ்த ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் பரமபுருஷ ஸங்கல்பாதீநமென்று சொல்லுகிறது.

ஒ.—ஆறும்பாட்டில், சேதநாசேதநாத்மக ஸமஸ்த வஸ்துக்களுடைய ஸமஸ்தப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் பகவத்ஸங்கல்பாதீந மென்கிறது.

'நின்றனர் இருந்தனர்' என்று தொடங்கி. [என்றுமொரியல்வினர் என்று தொடங்கி]- அநேக ப்ரகாரனுயிருக்கையாலே ஒரு ப்ரகாரத்தைச் சொல்லி இதுவே படியென்று ஒருநாளும் பரிச்சேதிக்க அரியனாய் அபரிச்சேத்யதைகஸ்வரூபனாய் இப்படி ஶாஸ்த்ரைகப்ரமாண ஸித்தனாயுள்ளவர். 'எம்' என்று - ஸ்வலாபத்தைச் சொல்லுகிறது. நாலாம்பாட்டிலே ஸ்வரூபதாதீந்யம் ஸித்தமாகையால் இப்பாட்டில் ப்ரவ்ருத்தி நிவ்ருத்த்யம்ஶ தாதீந்யத்திலே தாத்பர்யமாயிற்று; "அருணயா பிங்காக்ஷ்யா ஸோமங்க்ரீணாதி" என்கிறவிடத்தில் ஆருண்யாதிகளே விதேயமானாற்போலே.

ப.—அநந்தரம், ஸர்வப்ரவ்ருத்திகளும் தததீநைகளென்று ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்கிறார்.

நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர் - நிற்றலும் இருத்தலும் கிடத்தலும் திரிதலுமாகிற ப்ரவ்ருத்திக்கு ஆஶ்ரயமான பதார்த்தங்களும், நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர் - நிவ்ருத்திக்கு ஆஶ்ரயமான பதார்த்தங்களுமாய், (இத்தாலே), என்றும் - என்றுமொக்க, ஓர் இயல்வினர் - ஒருஸ்வபாவத்தை யுடையவர், என - என்று, நினைவு அரியவர் - நினைக்கைக்கு அரியராயிருப்பர், என்றும் - என்றுமொக்க, ஓரியல்வொடு நின்ற - ஸ்வேதரஸமஸ்த வ்யாவ்ருத்தமான, எம் திடர் - நம்முடைய ஶாஸ்த்ரைகப்ரமாணஸித்தர்.

ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளான தர்மங்களினுடைய தததீநத்வம் சொல்லாநிற்க தர்மிபர்யந்தமாகச் சொல்லிற்று - இத்தர்மங்கள் ஆஶ்ரயத்தை யொழிய ப்ரதிபத்திபண்ணவொண்ணாமையாலும், கீழே தர்மிஸ்வரூபம் ததீநமென்று சொல்லுகையாலும்; தர்மிபர்யந்த ஶப்தமேயாகிலும் தர்மத்திலே தாத்பர்யமாகக்கடவது. இவ்விடத்தில் 'ப்ரவ்ருத்தி ஈஶ்வராதீநையானாலும் ஏறிட்ட கட்டி விழுகைக்கு ப்ரேரகர் வேண்டாதாப்போலே நிவ்ருத்திக்கு ததபேக்ஷையுண்டோ?' என்னில்,-த்ரிஶங்கு நிவ்ருத்திக்கு ப்ரதிபந்தம் காண்கையாலே நிவ்ருத்திக்கும் ஈஶ்வராபேக்ஷை யுண்டு. இப்படி பாபாதிகளில் ப்ரவ்ருத்தருடைய நிவ்ருத்திக்கும் ஈஶ்வராபேக்ஷை யுண்டாகையாலே ஸர்வப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கும் ஈஶ்வராபேக்ஷை யுண்டு.

இ.—ஆறும்பாட்டில், ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் பகவத்ஸங்கல்பாதீநைகளென்று ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுகிறது.

[நின்றனர் இத்யாதி] - ஸகல சேதநாசேதநங்களுடைய ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் விஶேஷ்யபர்யந்தாபிதாநம் பண்ணாநிற்க, இங்ஙனே சொல்லுமதென்? என்னில்;—"நாமவன்" என்கிறபாட்டிலே ஸ்வரூபஞ்சொல்லுகையாலே இப்பாட்டில் ப்ரவ்ருத்திநிவ்ருத்தி மாத்ரத்தையே நினைக்கிறது; அருணாதிகரணத்தில் ஆருண்யாதிகளே விதேயமானாற்போலே. [நின்றனர் இத்யாதி] - ஸகலப்ரவ்ருத்திநிவ்ருத்திகளும் ததீநைகளென்கிறது. நிவ்ருத்தி ததீநையாவதென்? ஏறிட்ட கட்டி விழும்போது ஒருநியாமகர் வேணுமோ? என்னில்,—வேணும்; ஸ்வர்க்கத்தினின்றும் விழுகிற த்ரிஶங்குவுக்குத் தன்னால் முடிய விழவொண்ணாமையாலே. [என்றுமொரியல்வினரென நினைவரியவர்]-அநேக ப்ரகாரனாகையாலே ஒருப்ரகாரத்தையே சொல்லி இது இப்படி யென்று ஒருநாளும் பரிச்சேதிக்க அரியவர். [என்றுமொரியல்வொடுநின்ற]-என்றுமொக்க

*இப்படி அபரிச்சேத்யதைகஸ்வஹாவராயிருக்கை. [எம்திடரே]-இப்படி ஸுத்ருட ப்ரமாண ஸித்தர். 'எம்' என்று தமக்கு இவ்வர்த்தம் ப்ரகாஶிக்கையாலே ஸ்வலாபத்தைச் சொல்லுகிறது.*

**ஈடு.—ஆறும்பாட்டு.** லீலாவிபூதியினுடைய ஸ்திதியும் பகவத்ஸங்கல்பாதீநமென்றார் கீழ்; அதினுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியும் பகவத்ஸங்கல்பாதீந மென்கிறார் இதில்.

[நின்றனர் இத்யாதி] - நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் என்றும்; நில்லாமை இராமை கிடவாமை திரியாமை என்றும் சொல்லக் கடவதிறே - ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை. பகவத்வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களுடையவும் ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளைச் சொல்லுகிறது இப்பன்மையால். ஆக்ருதி வாசகஶப்தம் வ்யக்தியிலே பர்யவஸித்து நிற்குமாபோலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு வாசகமான ஶப்தமும், அபர்யவஸாநவ்ருத்த்யா அவனளவிலே சென்றல்லது நில்லாது. **"அருணயாபிங்காக்ஷ்யா ஸோமங்க்ரீணாதி"** (அருணயாபிங்காக்ஷ்யாஸோமங்க்ரீணுதி) என்கிறவிடத்திலே குண விஶிஷ்டவஸ்து தோற்றுநிற்கச்செய்தேயும் ஆருண்யாம்ஶத்திலேதாத்பர்யமாகிறப்போலே,ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு ஆஶ்ரயமான வஸ்துக்களினுடைய ஸ்வரூபம் அவனதீநமென்று முன்னே சொல்லுகையாலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்யம்ஶத்திலே நோக்கென்று சொல்லுவாருமுண்டு; அப்போது ஸாமாநாதிகரண்யம் ஸித்தியாது; ஆக, ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கு வாசகமான இஶ்ஶப்தம் அவற்றுக்கு ஆஶ்ரயமான சேதநனைக் காட்டி, அவன்தனக்கு ஈஶ்வரனையொழிய ப்ருதக்ஸ்திதியாதல் உபலம்பமாதல் இல்லாமையாலே அவனளவுங் காட்டுகிறது; ஆக, விசிஷ்டவஸ்துவையே காட்டுகிறது.

---

*ப்ர:—வ்யக்தியிலே பர்யவஸித்துநிற்குமாபோலே, — ஆக்ருதிவாசகஶப்தம் ஸ்ரீபாஷ்யே [க-க] ஸமந்வயாதிகரணே தத்ஸ்ய ப்ரகாரஸம்ஸ்தாநபேதாக்ருதிவாசிநஶ்ஶப்தா: ப்ரகாரிணிவ்யக்தௌ பர்யவஸ்யந்தி, வ்யக்திவாசிநோঽபி ஶரீரபேதேந தத்ப்ரகாரகாத்மநி ஶரீரவாசிநோঽபி ஶரீராத்மப்ரகாரதயா ஶரீராத்மந்யேவ பர்யவஸ்யந்தீதி, ஸர்வேஷாம் ஶப்தாநாம் பரமாத்மைவ வாச்ய இதி பரமாத்மவாசிஶப்தேந ஸாமாநாதிகரண்யஞ்சோபபத்யதே இதி.*

---

*ஆறும்பாட்டு-நின்றனர் இத்யாதி. உக்தாநுவாத பூர்வகமாக இப்பாட்டில் பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - லீலாவிபூதியினுடைய இத்யாதி வாக்யத்வயத்தாலே.*

*மூலத்தில் விஶேஷ்ய பர்யந்தமா யிருக்கச்செய்தேயும் நாலாம்பாட்டில் ஸ்வரூபதாததீந்யம் உக்தமாகையாலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமாத்ரத்திலே தாத்பர்யமென்கிறார் - நிற்றல் இத்யாதி. யத்வா, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் இங்குத் தோற்றுகிறதோ? என்ன, நிற்றல் இத்யாதி என்னுதல். பஹுவசநதாத்பர்யம் - பகவத்வ்யதிரிக்த இத்யாதி. ப்ரவ்ருத்திநிவ்ருத்தி தாததீந்யம் சொல்லுகிறதாகில் தர்மிபர்யந்தஞ்சொல்லுவானென்? என்ன, ஆக்ருதி இத்யாதி. ஆக்ருதி: - ஜாதி:. அபர்யவஸாந வ்ருத்தி: - பர்யவஸாநரஹித போதகஶக்தி:. அருணாதிகரணத்தில் பாஷ்யகாரஸித்தாந்த ப்ரக்ரியையாலே அருளிச் செய்து பூர்வபக்ஷமதாநுஸாரேண சொல்லுகிற பக்ஷத்தை அநுவதிக்கிறார் - அருணயா இத்யாதி. "ருணத்ரவ்யவ்யவச்சேதாய த்ரவ்யவசநாக்ஷிணீ" என்று நஷ்டாஶ்வதக்தரதந்யாயேந பரஸ்பரஸாகாங்க்ஷதையாலே விஶிஷ்டதர்மிஸ்வரூபம் ப்ரதீதமத்தனே; "ஸோமங்க்ரீணாதி" என்று கோஸ்வரூபம் முன்னே ப்ரதிபந்நமாகையாலே அருணாதிஶப்தங்கள் ஆருண்யாதி தர்மமாத்ரவாசகங்களென்று பூர்வபக்ஷ்யபிப்ராயம். குணமென்று - விசேஷணம், த்ரவ்யமென்று - விசேஷ்யம்.ஸாமாநாதிகாண்யம் ஸித்தியாது-'எந்திடர்' என்ற பதத்தோடே ஸாமாநாதிகரண்யம் ஸித்தியாது. 'ஆக்ருதி' இத்யாதி வாக்யோக்த ஸ்வஸித்தாந்தமாஹ-ஆக இத்யாதி. ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு வாசகமான- ப்ரவ்ருத்தி நிவ்ருத்யம்ஶத்திலே தாத்பர்யமான. உபலம்பம் - தோற்றரவு. பக்ஷாந்தர நிராகரணத்தை உபஸம்ஹரிக்கிறார் - ஆக விஶிஷ்ட என்று; விஶேஷணும்ஶத்திலே ஊற்றமானாலும் விஶிஷ்டத்துக்கே வாசகமென்றபடி. நிர்வ்யாபாரதாரூபநிவ்ருத்திக்கும் அவன் வேணுமோ? என்கிற ஶங்கையை அபியுக்தோக்தியாலே*

'ப்ரவ்ருத்தி அவனதீநையாகிறது வேணுமாகில் நிவ்ருத்திக்கு அவன் வேணுமோ?' என்று எம்பாரைக் கேட்க, 'ஸ்வர்க்கத்தினின்றும் விழுகிற த்ரிஶங்குவை சக்திமான் நிற்கச் சொல்ல நிற்கவேண்டிற்றுக் கண்டாயே; அப்படியே நிவ்ருத்திக்கும் அவன் வேணுங்காண்' என்று அருளிச்செய்தார். [என்றுமொரியல்வினரேன நினைவரியவர்] - இப்படி அநேக ப்ரகாரரா யிருக்கையாலே காலதத்த்வமுள்ளதனையும் ஆராயாநின்றாலும் இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தையுடையவ னென்று நினைக்கவுங்கூட அரியவர். [என்று மொரியல்வொடு நின்ற] - வ்ருஷலவிவாஹமந்த்ரம்போலே என்றும் ஓரியல்வோடு நின்றவராவது என்? என்னில்;—என்றும் ஒருபடிப்பட்ட ஸ்வபாவத்தை யுடையவ ரென்று நினைக்க அரிதான நிலை என்றும் ஒருபடிப்பட்டிருக்குமென்கை. [எம்திடர்] - அபௌருஷேயமான வேதப்ரதிபாத்ய னுகையால் வந்த தார்ட்யத்தைச் சொல்லுகிறது. இப்படி ஸ ˆத்ருட ப்ரமாண ஸித்தரான நிலை தம்முடைய லாபமாய்த் தோற்றுகையாலே, 'எந்திடர்' என்கிறார். நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர் நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலரான இவையெல்லாம், என்று மொரியல்வினரேன நினைவரியவராய் என்றும் ஓரியல்வோடு நின்ற எந்திடரானவர். (௬)

## ஏழாம் பாட்டு.

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசைப்
படர்பொருள்முழுவதுமாய் அவையவைதோறும்
உடல்மிசையுயிரேனக் கரந்தெங்கும்பரந்துளன்
சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே.

**ஆ.**—(திடவிசும்பு.) *கீழ் மூன்றுபாட்டாலும் ஜகத்தினுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகள் பகவததீநமென்னு மிடத்தை ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லிற்று; இனி இந்த ஸாமாநாதிகரண்யமானது ஜகதீஶ்வரயோஶ்ஶரீராத்மத்வநிபந்தந மென்று சொல்லுகிறது.*

*இந்தஶரீரத்தை இவ்வாத்மா நியந்த்ருதயா வ்யாபித்திருந்தாற்போலே எம்பெருமானும் அபாதித ப்ரமாண ஸித்தமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையும் ததாரப்தங்களான ஸமஸ்தவஸ்துக்களையும் நியந்த்ருதயா வ்யாபித்திருக்கும். இப்படி கார்யகாரணோபயாவஸ்தாசித்வஸ்துவிற்காட்டிலும் பத்த முக்த நித்ய ஸித்த த்ரிவித சேதநரிற்காட்டிலும் விலக்ஷணஜ்ஞாநாநந்தாமலஸ்வரூபனாய், ஹேயப்ரத்யநீககல்யாணைகதாநாபரிமித குணவிபூதிகனாய், அகிலபுவநநிர்மாண த்ராண ஸம்ஹாரணுதி லீலாவிநோதனாய், ஸர்வஜகதாத்மாவாய், ஸர்வ*

---

*பரிஹரிக்கிறார் -* **ப்ரவ்ருத்தி** *இத்யாதி. ஸ்வர்க்கத்தினின்றும் விழுகையாகிற ப்ரவ்ருத்திக்கு* **விழாமை** *நிவ்ருத்தியிறே; அது ஸ்வாபீஷ்டமானாலும் தன்னால் முடியாதே; ஶக்திமததீநமாகவேண்டிற்றென்னுதல். பதநமே நிவ்ருத்தியாய் அதுதானும் சக்திமத்ப்ரதிருத்தமாயிற் றென்னுதல்.* **அநேகப்ரகாராயிருக்கையாலே**-*'நின்றனர்' இத்யாத்யநேகப்ரகாரராயிருக்கையாலே. 'என்றுமொரியல்வினரென நினைவரியவர்' என்றத்தை "முடிச்சோதி" யிலே வடிவழகு விஷயமாக எடுக்கையாலே இது ஸர்வப்ரகார பரிச்சேத்யதைக்கும் உபலக்ஷணம். கீழே 'நினைவரியவர்' என்றுவைத்து "வ்ருஷலவிவாஹமந்த்ரம்போலே" என்று கூட்டுவது. வ்ருஷலவிவாஹமந்த்ரமாவது - 'அரசாணியைத் தொட்டுத் தொட்டிலேன், பாய்ந்திட்டுப் பாய்ந்திலேன், சொல்லிட்டுச் சொல்லிலேன்'. த்ருடத்வமாவது என்? என்ன,* **அபௌருஷேயமான** *இத்யாதி. 'எம்' என்றதுக்குத் தாத்பர்யம் -* **இப்படி** *இத்யாதி. ஶ்ரோத்ருபுத்திஸமாதாநார்த்தம் அந்வயம் -* **நின்றனர்** *இத்யாதி.* **இவையெல்லாம்** *- ஸங்காதாத்மகமான இவையெல்லாம். இவையெல்லா மென்றது - அவிதமாகைக்காக.* (௬)

ஜகச்சரீரனாய், ஸ்வதஏவ அகர்மவஶ்யனாகையாலே ஸ்வஶரீரபூத சேதநாசேதநாத்மகஸமஸ்த வஸ்துகத ஸுகது:கவிகாராதி ஸர்வதோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருந்த பரமபுருஷன், "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம", "ஆநந்தோ ப்ரஹ்ம", "அஶப்தமஸ்பர்ஶமரூபமவ்யயம்", "பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச", "மநோமய: ப்ராணஶரீரோ பாரூப: ஸத்யஸங்கல்ப:", "ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: ஸர்வமிதமப்யாத்தோऽவாக்யநாதர:", "தஸ்ய நாம மஹத்யஶ:", "அத பரா யயா ததக்ஷரமதிகம்யதே யத்தத் அத்ரேஶ்யமக்ராஹ்யமகோத்ரமவர்ணமசக்ஷு:ஶ்ரோத்ரம் ததபாணிபாதம் நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம் ததவ்யயம் யத்பூதயோநிம் பரிபஶ்யந்தி தீரா:", "அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸ: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:", "ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே ஹிரண்யஶ்மஶ்ருர்ஹிரண்யகேஶ ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண: தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ", "ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி", "ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்", "ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே", "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா", "மஹாரஜநம் வாஸ:", "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ", "அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ", "ஶ்ரியம் ஸர்வஹ்ருதாநாம் ஜ்ஞாநிஹோமவஹ்நயே ஶ்ரியை", "யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா:", "யத்ரர்ஷய: ப்ரதமஜா யே புராணா:", "தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸ: ஸமிந்ததே விஷ்ணோர்யத் பரமம் பதம்", "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய:", "யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந்", "யோऽஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந்", "ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶ:", "க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:", "ஸ காரணம் கரணாதிபாதிப:", "ஆஸந்வணுரஸ்யஜா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே । தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி", "ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோऽநீஶயா ஶோசதி முஹ்யமாந: । ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶமஸ்ய மஹிமாநமிதி வீதஶோக:", "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா", "போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா", "அந்தர்ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா", "ஸர்வம் ஹ்யேதம் ப்ரஹ்ம", "தமேவ வித்வாநம்ருத இஹ பவதி", "ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்", "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சந", "ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதேதி", "ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம் ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ ஶரீரம் - ய ஆத்மநி திஷ்டந்நாத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:", "ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:", "அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா", "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்", "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே", "ப்ரஹ்மவா இதமேக ஏவாக்ர ஆஸீத்", "ஸர்வாணி ஹவா இமாநி பூதாந்யாகாஶாதேவ ஸமுத்பத்யந்தே", "ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்", "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவா ப்ருதிவீ ந நக்ஷ

த்ராணி", "நதஸ்யேஶே கஶ்சந", "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்", "யச்ச கிஞ்சிஜ்ஜகத்ஸர்வம் த்ருஶ்யதே ஶ்ரூயதே(அ)பி வா । அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்திதஃ", "ஸஹஸ்ரஶீர்ஷா புருஷஸ் ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்" இத்யாதியாய், "அவிகாராய ஶுத்தாய", "ஶுத்தே மஹாவிபூத்யாக்யே", "ஸ்வஸங்கல்பக்ருதப்ரக்ருதிம் விகாராத்", "பராத்பரம் ஸர்வமயீஶ்வரம்", "ஸமஸ்தஶக்திரூபாணி தத்கரோதி ஜநேஶ்வர । தேவதிர்யங்மநுஷ்யாக்யா சேஷ்டாவந்தி ஸ்வலீலயா", "ஸர்வேஷாமேவ ஸர்வேஶ்வரம்", "ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய", "ததேஷ ஸர்வதோ ஸர்வஜ்ஞ ஸர்வஶக்தி: । ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஶ்ரீ ரஜய்யஶ்ஶாஶ்வதோ த்ருவஃ", "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ", "தேஷாம் து ஸம்ஸ்தாநம் யதைவ பஶ்யந்தி ஸூரய:", "திவ்யம் ஸ்தாநமஜரஞ்சாப்ரமேயம் துர்விஜ்ஞேயம் சாகமைர்நித்யஸித்தம்", "வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ", "கலாமுஹூர்த்தாதிமயஶ்ச காலஃ", "காலம் ஸ பசதே", "பஞ்ச வர்ணாநி ஸர்வாணி பஞ்சமஹாபூதமயஸ்ய", "ஸர்வம் ஸமாப்நோஷி ததோ(அ)ஸி ஸர்வஃ", "தாநி ஸர்வாணி தத்வபுஃ", "தத்ஸர்வம் வை ஹரேஸ்தநுஃ", "ஸர்வ ஏவ ஸர்வம் ஸர்வஸ்ய தாதா த்வமேவ விஶ்வரூபோ யதா வ்யயஃ", "ஜகத்ஸர்வம் ஶரீரந்தே", "ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாத் அஸந்நிஹிதத்வாச்ச", "போகமாத்ர ஸாம்யலிங்காச்ச", "ஜகத்வ்யாபாரவர்ஜம் ஸமாநோ ஜ்யோதிஷா", "இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: । ஸர்கே(அ)பி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச", "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம்" இத்யாதி ஸ்ம்ருதீதிஹாஸபுராணோபப்ரும்ஹிதமாய், அபௌருஷேய மாகையாலே நிர்த்தோஷமாய், அபாதிதப்ராமாண்யரூப தேஜஃப்ரசுரமாயிருந்த ஶ்ருதிகளிலே 'உளன்' என்கிறார். ஆதலால், லோகாயத மாயாவாத பாஸ்கரீய யாதவப்ரகாஶாதி வேதவிருத்த ஸமயங்களெல்லாம் நிரஸ்தமாயின.

ஒ.—ஏழாம்பாட்டில், கீழ்மூன்றுபாட்டிலாகச் சேதநாசேதந பதார்த்தங்களினுடைய ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திகள் பகவததீநமென்று ஸாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலுமாகப் பேசி, அந்தஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநமான ஜகதீஶ்வரர்களுக்குஉண்டான ஶரீர ஶரீரி பாவஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. 'ஜகத்தினுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகள் பகவததீநமாகையாலே இந்த ஜகத்து அவனுக்கு ஶரீர மென்கிறது' என்றுஞ் சொல்லுவர்.

[திடவிசும்பு என்று தொடங்கி] - ஸ்வகார்யமான பூதசதுஷ்டயங்களுண்டாவதற்கு முன்பே உண்டாய் அவை நஶித்தாலும் தான் சிலநாள் நிற்குமதான ஆகாஶம் முதலான பூதபஞ்சகங்களையும் உபாதாநமாகக் கொண்டு கார்யமாய் விஸ்த்ருதமாகாநின்றுள்ள தேவாதிபதார்த்தங்களையெல்லாம் உண்டாக்கி. இங்கு ஆகாசத்துக்குச் சொன்ன தார்ட்யம் லோகாயதாதிமதநிராஸபரம்; எரியாவது - தேஜஸ்ஸு, வளியாவது - காற்று. [அவையவை யென்று தொடங்கி] - அவ்வவபதார்த்தங்கள்தோறும் ஶரீரத்தில் ஆத்மாவைப்போலே தாரகனுமாய் நியந்தாவுமாய்க் கொண்டு வ்யாப்யபதார்த்தங்களுக்குத் தெரியாமே வ்யாபித்து, அவ்வளவன்றிக்கே அப்பதார்த்தங்களுடைய புறம்பும் வ்யாபித்து, காலத்திலே இவற்றை ஸம்ஹரிப்பதுஞ் செய்த ஸர்வேஶ்வரன், முதற்பாட்டுத் தொடங்கிச் சொன்னபடியே,பௌருஷேயத்வ நிபந்தநமான விப்ரலம்பாதி தோஷ ரஹிதமுமாய், அபாதிதப்ரமாணமுமாகையாலே மிக்கதேஜஸ்ஸை யுடைத்தாய், ஒருவரால் பண்ணப்பட்டதன்றிக்கே என்றுங்கேட்டேவருகையாலே ஶ்ருதியென்று சொல்லப்படுகிற வேதத்திலே ப்ரதிபாத்யனாய்க்கொண்டு உளன். தாம் அநுஸந்தித்த அர்த்தத்துக்கு ஶ்ருதியை ஸாக்ஷி

யாகச் சொல்லுகையாலே ஶ்ருதியிற்சொல்லுகிற ஶ்ரியஃபதித்வமும் நாராயணஶப்தவாச்யத்வமும் அநுஸந்தித்தாராகவேணும். இவ்வர்த்தத்தில் நிர்த்தோஷஶ்ருதியே ப்ரமாணமாகப் பிடிக்கையாலே வேதவிருத்தரான பாஹ்யரும், ஜகதீஶ்வரர்களுக்கு அந்யதாஸம்பந்தஞ் சொல்லும் குத்ருஷ்டிகளும் அர்த்தாத் ப்ரதிக்ஷிப்தரானார்கள்.

ப.—அநந்தரம், இந்த ஸாமாநாதிகரண்யம் ஶரீராத்மபாவஸம்பந்த நிபந்தநம் என்கிறார்.

திடம் - (பூதாந்தரங்களிற்காட்டிற் சிலகாலம் நிற்கையாகிற) திக்கனவையுடைத்தான, விசும்பு - ஆகாசமும், எரி - அக்நியும், வளி - வாயுவும், நீர் - ஜலமும், நிலம் - பூமியும், இவைமிசை - இவை ஆஶ்ரயமாகக்கொண்டு, படர் - பரந்த, பொருள்முழுவதும் - பௌதிகபதார்த்தங்களுமெல்லாம், ஆய் - (தானும்படி அவற்றுக்கு) உபாதாநமாய், அவைஅவைதொறும் - அவ்வோ பதார்த்தங்கள்தோறும், உடல்மிசை - சரீரத்தில், உயிர் என - ஆத்மா வ்யாபிக்குமா போலே, கரந்து - கரந்து வ்யாபித்து, எங்கும் பரந்து - இப்படி ஸகலபதார்த்தங்களிலும் வ்யாப்தனாய், சுடர் - ஸ்வதஃப்ராமாண்யௌஜ்வல்யத்தாலும், மிகு - மிக்கிருப்பதாய், சுருதியுள் - (கேள்வியாலே வருவிக்கப்படுவதான) ஶ்ருதியினுடைய, உளன் - உள்ளானபொருளாய்க்கொண்டு தோற்றுமவன், இவையுண்ட - (இப்பதார்த்தங்களை ஸம்ஹ்ருதிகாலத்திலே "[illegible]" என்று தன்னுள்ளே) விழுங்கின, சுரன் - தேவஶப்தவாச்யன்.

"[illegible]" என்னக்கடவதிறே. விசும்புக்கு அநந்தரம் வளியை எடாதே எரியை எடுத்தது - தைத்திரியோபநிஷத்திலே "[illegible]" என்கிற ஆகாஶப்ராதம்யமும், சாந்தோக்யத்தில் "[illegible]" என்கிற தேஜஃப்ராதம்யமும் தோற்றுகைக்காக. இத்தால், ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களும் அநுப்ரவேஶநிபந்தநமான அந்தராத்மத்வமும் ததீநமென்றதாயிற்று.

ஈ.—ஏழாம்பாட்டில், கீழ் மூன்றுபாட்டிலே சேதநாசேதநங்களுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள் பகவததீநைகளென்று ஸாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலும் சொல்லிற்று; அந்த ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் ஜகதீஶ்வரர்களுடைய ஶரீராத்மபாவ ஸம்பந்தமென்கிறது. ஜகத்தினுடைய ஸ்வரூபாதிகள் பகவததீநங்களாகையாலே இந்த ஜகத்து அவனுக்கு ஶரீரமென்று சொல்லிற்றாகவுமாம்.

[திடவிசும்பு] - த்ருடமான விசும்பு. ஸ்வகார்யமான பூதசதுஷ்டயத்துக்கு முன்பேயுண்டாய் அவை நஶித்தாலும் சில நாள் நிற்கக்கடவதாகையாலே ஸ்திரமான ஆகாஶமென்கிறது; இது முதலான பூதபஞ்சகங்களென்ன: [இவைமிசை படர் பொருள்] - இவற்றின் கார்யமாய் விஸ்த்ருதமாகாநின்றுள்ள தேவாதி பதார்த்தங்களென்ன: [முழுவதுமாய்] - இந்த ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்கி. ஆகாசத்துக்குச் சொன்ன தார்ட்யம் லோகாயதாதிமத நிராஸ பரம். வளி - காற்று. [அவையவைதொறும்] - அவ்வவபதார்த்தங்கள்தோறும். [உடல்மிசை உயிரென] - ஶரீரத்தில் ஆத்மாவைப்போலே தாரகனுமாய், நியந்தாவுமாய், ஶேஷியுமாய்; "[illegible]" [கரந்து] - வ்யாப்ய பதார்த்தங்களுக்குத் தெரியாமே. [எங்கும் பரந்து] - உள்ளும் புறம்பும் வ்யாபித்து. [இவையுண்டசுரன்] - ப்ரளயதஶையிலே இவற்றை ஸம்ஹரித்த ஸர்வேஶ்வரன். [உளன் சுடர் மிகு சுருதியுள்] - முதற்பாட்டுத் தொடங்கிச்சொன்ன அர்த்தங்களெல்லாவற்றுக்கும் ப்ரமாணம் நிர்த்தோஷஶ்ருதி யென்கிறது. சுடர்மிகுகையாவது -

பௌருஷேயத்வ நிபந்தநமான விப்ரலம்பாதிதோஷ ரஹிதமுமாய், ப்ரமாணாந்தரங்களைக்கொண்டு பாஹ்யகுத்ருஷ்டிகளால் அவிசால்யமாகையாலே மிக்கதேஜஸ்ஸை யுடைத்தாகை. ஒருத்தரால் பண்ணப்பட்டதன்றிக்கே என்றுங் கேட்டேவருமதாகையாலே ஶ்ருதி யென்கிறது. [உளன்] - இப்படிப்பட்ட ஶ்ருதியிலே ப்ரதிபாத்யனைக்கொண்டு தோற்றினவன். தாம் அநுஸந்தித்த அர்த்தங்களுக்கு ஶ்ருதியை ஸாக்ஷியாகச் சொல்லுகையாலே அதிற்சொல்லுகிற ஸ்ரீய:பதித்வமும் நாராயணஶப்த வாச்யத்வமும் அநுஸந்தித்தாராக வேணும்; இவர்க்கு நிர்த்தோஷஶ்ருதியே ப்ரமாணமாகையாலே பாஹ்யரும், ஜகதீஶ்வரர்களுக்கு அந்யதாஸம்பந்தஞ் சொல்லும் குத்ருஷ்டிகளும் அர்த்தாத் ப்ரதிக்ஷிப்தரானார்கள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. [திடவிசும்பு இத்யாதி] — கீழ் ஸாமாநாதிகரண்யம் சொன்ன இது - * ஹாவிப்ரதிஸந்தாந ந்யாயத்தாலேயாய், அத்தால் பலித்த ஸம்பந்தம் ஶரீராத்மபாவம் என்கிறாராதல்; அன்றியே, கீழே ஸாமாநாதிகரண்யத்தாலும் வையதிகரண்யத்தாலும் சொன்னார்; அப்படி சொன்ன ஐக்யத்துக்கு நிபந்தநம் ஶரீராத்மபாவம் என்கிறாராதல். "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி" (அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்யநாமரூபே வ்யாகரவாணி) என்கிறபடியே த்ரிவ்ருத்க்ருதமான அசித்தி

---

ஏழாம்பாட்டு - திடவிசும்பு இத்யாதி. இப்பாட்டிலே ஶரீராத்மபாவம் சொல்லுகிறதுக்கு இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - கீழ் ஸாமாநாதிகரண்யம் இத்யாதி வாக்ய த்ரயத்தாலே. கீழே ஸாமாநாதிகரண்யஞ் சொல்லுகிற விடத்தில் ஹ்ருதிக்ருதமான ஶரீராத்மபாவத்தை இங்கே வெளியிடுகிறாரென்று முந்தின அர்த்தம். ஹாவிப்ரதிஸந்தாநந்யாயத்தாலே - இத்தப்பாட்டிலே ஶரீராத்மபாவத்தை அருளிச்செய்யப் புகுகிறோமென்று திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு கீழே "நாமவன்" என்கிற பாட்டிலும் "நின்றனர்" என்கிற பாட்டிலும் ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்தார்; அங்கு அருளிச்செய்த ஸாமாநாதிகரண்யம் ஶரீராத்மபாவநிபந்தநமென்று தெரிய அருளிச்செய்கிறா ரென்றபடி. அத்தால் - ஸாமாநாதிகரண்யத்தாலே. பலித்த ஸம்பந்தம் - காரணதயா பலித்த ஸம்பந்தம். ஸாமாநாதிகரண்யத்தாலும் இத்யாதி - "நாமவன்" "நின்றனர்" என்கிற பாட்டுக்களிலே ஸாமாநாதிகரண்யத்தாலும், "இலனது" "அவரவர்" என்கிற பாட்டுக்களிலே வையதிகரண்யத்தாலும் சொன்னாரென்றபடி. இந்தபேதாபேதங்களிரண்டுங் கூடும்படி யெங்ஙனே?என்கிற ஶங்கையிலே கடகஶ்ருத்யர்த்தமான ஶரீராத்மபாவத்தை அருளிச்செய்கிறா ரென்கிறார் - அப்படிசொன்ன இத்யாதி. அப்படிசொன்ன - வையதிகரண்ய நிர்த்தேஶஸஹசரித ஸாமாநாதிகரண்ய விசிஷ்டமான வென்றபடி. 'அப்படிசொன்ன ஐக்யத்துக்கும் பேதத்துக்கும் நிபந்தநம்' என்று கூட்டுவது. ஆக, கீழ் "தத்த்வமஸி", "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" இத்யாத்ய பேதஶ்ருத்யர்த்தமும், "போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச", "ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரம்", "நித்யோ நித்யாநாம்", "பதிம் விஶ்வஸ்ய" இத்யாதி பேதஶ்ருத்யர்த்தமுஞ் சொல்லிற்றாய், இப்பாட்டில் "யஸ்யாத்மா ஶரீரம்", "ய ஆத்மநி திஷ்டந்" இத்யாதியான கடகஶ்ருத்யர்த்தமுஞ்சொல்லுகிறது. இங்கே "ஸர்வாணி ரூபாணி" இத்யாத்யநுஸந்தேயம். ப்ரமாணத்ரயமுகேநோக்தார்த்த விவரணம்-அநேந இத்யாதி. சாந்தோக்யே ஸத்வித்யாயாம் "ஸேயம் தேவதைக்ஷத ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீதி தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணி" என்றதைப் பற்ற, த்ரிவ்ருத்க்ருதமான அசித்திலே என்கிறார். இந்தஶ்ருதியிற் சொன்ன தேஜோபந்நங்கள்மூன்றும் ஆகாஶவாயுக்களுக்கும் உபலக்ஷணமாய், பஞ்சீக்ருதமான அசித்திலே யென்றபடி. இமாஸ்திஸ்ரோ தேவதா: அஹமநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணீதி ஸேயம் தேவதைக்ஷத த்ரிவ்ருதய: ஸேயம் தேவதா - அந்த ஈஶ்வரனான பரதேவதை. ஐக்ஷத - பார்த்தது; ஸங்கல்பித்ததென்றபடி. திஸ்ர:- ப்ருதிவ்யப்தேஜாம்ஸி. இவை தேவதைகளென்கிறது-அக்ந்

---

* ஹாவிப்ரதிஸந்தாநந்யாயம் - 'உரைத்து மென்றல்' என்னும் உக்தி.

லே ஜீவத்வாரா அநுப்ரவேஶித்து வஸ்துத்வநாமபாக்த்வங்களுண்டாம்படி பண்ணி, இவை தானென்னலாம்படி யிருந்தால் 'ம்ருதாத்மகோகட꞉' என்னும்படி யிருக்கையன்றிக்கே, "**அந்த꞉ப்ரவிஷ்ட꞉ ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா**" (அந்தஃப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜநாநாம்ஸர்வாத்மா) என்கிறபடியே ஸர்வேஷாம் ஆத்மாவாய், இவற்றை நியமிக்குமிடத்தில் இந்த ஶரீரத்துக்கு இந்த ஆத்மா தாரகனும் நியாமகனும் ஶேஷியா யிருக்கிறப்போலே "**யஸ்யாத்மா ஶரீரம்**"(யஸ்யாத்மாஶரீரம்), "**யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்**" (யஸ்யப்ருதிவீஶரீரம்) என்கிறபடியே தான் இரண்டுக்கும் தாரகனும் நியாமகனும் ஶேஷியாய் நின்று நடத்திக்கொண்டு போருமென்று கீழ்ச்சொன்ன ஸாமாநாதிகரண்யத்

---

ப்ர:—"அந்த꞉ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" ப்ருஹதாரண்யகே [௫-௭] அந்தர்யாமிப்ராஹ்மணே "ய꞉ ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம் ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ ஶரீரம் ய꞉ ப்ருதிவீமந்தரோ யமயதி ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத꞉ யஶ்சாத்மநி திஷ்டந் ஆத்மநோந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மாந்தர்யாம்யம்ருத꞉" (ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம், ஶரீராத்மபாவமென்கிறார்.) பகவாந் பாஷ்யகார꞉ "சேஷ்டேந்த்ரியார்தாஶ்ரயஶ்ஶரீரம்" இதி ந்யாயஸூத்ரோக்தம் ஶரீரலக்ஷணத்வயம் ஸர்வாத்மநாநங்கீக்ருத்ய லௌகிகவைதிக ஸகலஶரீரவ்யாப்தம் லக்ஷணாந்தரம் தர்ஶயதி "யஸ்ய சேதநஸ்யேத்யாதி". [ஸ்ரீபாஷ்யம். ௨-௧.] யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்தே நியந்தும் தாரயிதும் ச ஶக்யம் தச்சேஷதைகஸ்வரூபம் ச தத் தஸ்ய ஶரீரம். யஸ்யேதி ஷஷ்ட்யைந வசநேந ஶரீரத்வம் நஷ்டாதிவ்யவச்சேதகம், கிந்து விதத்வாதிவ்யவச்சேதகமிதி த்யோதயதி; தத்ர "தஸ்யாத்மாநம் தஸ்யாத்மா" [தை-ஆ-க.] இத்யாதிஷு கேவலாத்மஶப்தப்ரயோகேபி தஸ்ய ஸ்வஸ்ய ஸ்வஶரீரத்வம் விவக்ஷிதமிதி ஜ்ஞாபநாய தாரயிதும் ஶக்யம், ஶேஷதைகஸ்வரூபமிதி லக்ஷணத்வயே ப்ருதக்ப்ருதக்பாவேந லக்ஷணத்வயேப்யாதயே ஶேஷத்வஜ்ஞாநயோஶ்ச ஶரீரஶரீரிபாவவ்யவஸ்தாபகத்வம் வேதநஸ்யேதி வத꞉. வேத

---

யாதிதேவதாதிஷ்டிதங்களாகையாலே. ஜீவேநாத்மநா-ஜீவஶரீரகேணமயா "ஸிம்ஹேந ஸஹ ஏகோ ஸஹவோ யோத்தா꞉" இதிவத். ஸிம்ஹேந ஸஹ ஏகோ-ஸிம்ஹஶரீரகேணபூத்வா. ஜீவஸ்வரூபேண மயாவென்னு தொழிக் ததை-இந்தவாக்யம்ஶரீராத்மபாவப்ரதர்ஶநபரமாகையாலே. "அநேந ஜீவேந" இத்யாரப்ய 'இவைதானேன்னலாம்படியிருந்தால்'என்னுமளவும் இப்பாட்டில் பூர்வார்த்தார்த்தத்தை அருளிச்செய்தபடி; "அந்த꞉ப்ரவிஷ்ட꞉" இத்யாதியாலே மூன்றும் பாதார்த்தம் சொல்லுகிறது. 'இவைதானென்னலாம்படி' என்றது, "ஸத்த்வ பாவஸ" என்றத்தைப்பற்ற. "அந்த꞉ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா" என்கிற இது - ஸர்வாத்மஶப்த விவரணம். "அந்த꞉ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா"இத்யநேந ந்ருபநபோவ்யாவ்ருத்தி꞉. ஶரீராத்மபாவலக்ஷணமாக பாஷ்யகாரர் அருளிச்செய்த ஆதாராதேயபாவ, நியந்த்ருநியாம்யபாவ, ஶேஷஶேஷிபாவங்களாகிற மூன்றும் 'உடல்மிசை யுயிரென' என்கிற இதிலே விவக்ஷிதமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார், 'இவற்றைநியமிக்குமிடத் தில்' என்று தொடங்கி 'ஶேஷியாய்நின்று நடத்திக்கொண்டுபோரும்' என்னுமளவாக. ப்ருஹதாரண்யகே அந்தர்யாமி ப்ராஹ்மணே "ய꞉ ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம் ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ ஶரீரம் ய꞉ ப்ருதிவீமந்தரோ யமயதி - யஶ்சாத்மநி திஷ்டந் ஆத்மநோந்தரோ யமாத்மா ந வேத யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி" இதி. 'ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் ஶரீராத்மபாவ மென்கிறார்' என்றது - "யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்தே நியந்தும் தாரயிதும் ச ஶக்யம், தச்சேஷதைகஸ்வரூபம் - தத் தஸ்ய ஶரீரம்" என்ற பாஷ்யவாக்யத்தைப்பற்ற.

துக்கு நிபந்தநம் ஶரீராத்மபாவ மேன்கிறார். வ்ருக்ஷத்திலே தேவதத்தன் நின்றானென்றால் அங்கு ஶரீராத்மபாவமில்லை, ஜாதிகுணங்கள் வ்யக்தியிலே கிடந்த தென்றால் அங்கு ஶரீராத்மபாவ மில்லை; விஶிஷ்டத்திலேயிறே ஶரீராத்மபாவம் கொள்ளலாவது.

[திடவிசும்பு] - இது தான் அல்லாதவற்றிலும் ஒழி, 'த்ருடமான எரி, த்ருடமான காற்று' என்று கிடக்கிறதாகவுமாம்; அன்றிக்கே, "ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ" (ஆத்மநஆகாஶஸ்ஸம்பூதஃ) என்று சொல்லுகிறபடியே அல்லாத பூதங்களுக்கு முன்னே யுண்டாய், அவை யழிந்தாலும் சிலநாள் நிற்கக்கடவதாகையாலே த்ருடமான விசும்பென்னவுமாம்; அன்றிக்கே, "ஸத்வார்யேவ பூதாநி" (சத்வார்யேவபூதாநி) என்கிறவனை நிராகரிக்கிறாராகவுமாம். ஆக, பூதபஞ்சகங்களை

---

நஸ்ய - ஏவைதந்ய விஶிஷ்டஸ்யைத்யர்த்ஃ. யதி தி - யதேவ நிதேஶஃ. ஊர்வ்யஶ்வேந ஜீவமதகீயாதீநாம் ஶரீரத்வம் வ்யாவஸ்யதே. ஸவர்வாத்மநேதி காஷ்டாதிஷ்தநியாம்யத்வாதிதாம் ஜஹுஷாவ வஸ்ாஹரணஜ்ஜஹக்ஷேத்ராதீநாம் ஶரீரத்வம் வ்யாவஸ்யதே. ஸவர்வாத்மநா யாவத்வ்யாவிதயேத்யர்த்ஃ. ஸதவவ வரகாயவ்விஷம்வ்தி வரகாயஸ்ய தேஹத்வவ்யாவ்ருத்திஶ். ஆகாஶாதி வ்தேஶஜநாதிஷுவதேஷு நியநாவஸம்ஹவாத்த வ்யாவ்ருத்யர்த்தம் 'ஸ்வாயே' இத்யுக்தம். ஸஶவஶரீரவரஃ; தத்வஶரீரஸாவாஜ்வ ஷு காரேஷ்வித்யாவக். ஜநியாம்யாயார்யாஶேஷஹத்தேஷு வரகோதாஷ்வித்வ்யாவ்விவரிஹாராய நியஜுஷித்யாதிவஷ். ரணாதி ஶரீரேஷு நியநாஷ்யஶுநேந ஸக்ஷணவ்யாவ்யாவ்விவரிஹாராய ஶக்யதித்யுக்தம். ரணஶரீரேஷ்வி நியநாதி ஶக்திவிருத்தவவ; காரியாநஷ்யஸ்த ரோகாதி வ்திபாஷாக்; ஶக்திவ்திவநாஷ்ஜ்ஜாதே ஷஜஹநாதிகார்யாநஷ்யவக். ஶக்யம்-ஶக்திவிஷயஹஜ்ஜதிஷ்யர்த்ஃ. 'தவெஷதைக ஸ்வாஜ்வஷ்'இதி ஷிஷவாக்யதயா நிதேஶஸ்த, ஸ்வாயே ஶக்யஷ் இதி வஜ்வ வாக்யஸ்ய வஷஷயாநவயாக். தவெஷதைக ஸ்வாஜ்வதிதி - ஸத் வநகஶஜ்வேந ஸவர்வாத்மநேதி வஷாயர்த்த உக்தஃ. வேஷாஷீந ஸ்தார்யவாதிதயா ஜஹஸ்தாஷ்யவயவாநாம் ஸசேஷிதாநா வேவாவயவிக்வேந ஶரீரத்வா ஜதேஷ்தி வ்யாவ்ஶஶ்நீயா. நியாம்யத்வாதிகம் ஹி ஸசேஷிதாநாமேவ ஷ்ஶ்யதே, நதஷ விஜஹதாநாம். வநவிஜிஷ்யேஷ்வி

---

அப்ருதக்ஸித்தபத வ்யாவர்த்த்யமாஹ-வ்ருக்ஷத்திலே இதி; ப்ருதக்ஸ்தித்யர்ஹமாகையாலே யென்றபடி. த்ரவ்ய பதவ்யாவர்த்த்யமாஹ-ஜாதி இதி;ஜாதிகுணங்கள் அத்ரவ்யங்களாகையாலே யென்றபடி. ஆனால், எங்ஙனே என்ன, விஶிஷ்டத்திலே இத்யாதி. ஊர்வ்யசேஷதி வஜ்யக்ஷிஷ்யந ஜஹநாயாராயேயஹாவ நியந்துநியாம்யஹாவ ஶேஷிஶேஷிஹாவ விஶிஷ்டத்திலே யென்றபடி. இத்தால், தாரகத்வாதி விஶிஷ்ட த்ரவ்யத்திலே ஆத்மபாவமும், தார்யத்வாதிவிஶிஷ்டத்ரவ்யத்திலே ஶரீரத்வமு மென்றபடி. அவஶிஷ்டம் ப்ரமாணத்திரட்டிலே வ்யக்தம்.

இதுதான் - 'திடம்' என்கிற விசேஷணந்தான். த்ருடத்வத்தை மூன்று வகையாக அருளிச் செய்கிறார். இது தான் இத்யாதி. இரண்டாமர்த்தத்துக்கு த்ருடமென்கிறது - சிரகாலஸ்தாயித்வத்தைப் பற்ற. "தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ, ஆகாஶாத்வாயுஃ" இத்யாதி தைத்திரீயகே. 'சிலநாள் நிற்கக்கடவதாகையாலே' யென்றவிடத்தில் "வாயுஶ்சாந்தரிக்ஷம் சைததம்ருதம்" இத்யாதி ஶ்ருதிர் விவக்ஷிதா. மூன்றாமர்த்தத்தில், த்ருடமென்று - ஶ்ருதியிலே த்ருடமாகச் சொல்லப்படுகிற இத்தைப் பற்றச் சொல்லுகிறதாகையாலே "ஸத்வார்யேவ பூதாநி" என்கிறவனை நிராகரிக்கிறா ரென்றபடி. "ஸத்வார்யேவ பூதாநி ப்ருதிவ்யப்தேஜோவாயவஃ தேப்ய ஏவ சைதந்யமுத்பத்யதே" என்கிற

யும் சொல்லுகிறது. [இவைமிசை படர்பொருள் முழுவதுமாய்] - இவற்றை அடியாகக் கொண்டு மேலே விஸ்த்ருதமாகாநின்றுள்ள பதார்த்தகங்களெல்லாவற்றையும் உண்டாக்கி. 'ஆய்' என்றது - ஆக்கி என்றபடி. 'ஆய்' என்பானேன்? என்னில்;—"வஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிற தன் விகாஸமே யாகையாலே, வைதிக நிர்த்தேஶம் இருக்கிறபடி. [அவையவைதோறும்] - அவ்வோபதார்த்தங்கள் தோறும். அவற்றிலே வ்யாபிக்குமிடத்தில் பலதூணுக்காக ஒரு உத்திரம் கிடந்தாற்போலேயன்றிக்கே, ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே எல்லாவற்றிலும் தனித்தனியே குறைவற வ்யாபித்துநிற்கும். இப்படி வ்யாபித்துநிற்குமிடத்தில், [உடல்மிசை உயிரென]-இஶ்ஶரீரத்துக்கு ஆத்மா தாரகனும் நியாமகனும் ஶேஷியாயிருக்கிறப்போலே இஶ்ஶரீராத்மாக்களுக்குத் தான் தாரகனும் நியாமகனும் சேஷியாயிருக்கும். [கரந்து] - இப்படியிருக்கச்செய்தே "யமாத்மா ந வேத" (யமாத்மாநவேத) என்கிறபடியே அந்யைரத்ருஶ்யனுமாயிருக்கும். [எங்கும் பரந்து] - அந்தர்வஹிஶ்ச வ்யாபித்து. இதில் ப்ரமாணமேன்? என்னில்,—[உளன் சுடர்மிகு சுருதியுள்] - அபௌருஷேயமாய் நிர்த்தோஷமாயிருக்கிற வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும். ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள்போலே ஹேத்வந்தரத்தாற் கழிக்கவோண்ணாத ஒளியையுடைத்தாயிருக்கை. சுருதி - பூர்வபூர்வோச்சாரணக்ரமத்தைப்பற்றி உத்தரோத்தரோச்சார்யமாணத்வத்தைப் பற்றச் சொல்லுகிறது. இத்தால் முதற்பாட்டுத் தொடங்கிச் சொன்ன அர்த்தங்களுக்கெல்லாம் ப்ரமாணம் நிர்த்தோஷஶ்ருதி என்கிறது. [இவையுண்ட சுரன்] - இவற்றை ஸம்ஹரித்த தேவன். முன்பே ஸ்ருஷ்டி ஸ்திதிகள் அவனதீந மேன்று சொல்லிற்று; ஸம்ஹாரம் வேறொரு சேதநாதீநமாகில் இது தன்னதல்லாமையால் வரும் ஐஶ்வர்யம் குறையுமிறே; அதுக்காக ஸம்ஹாரமும் அவனிட்ட

---

நாதிவ்யாப்தி:. த்ரூதஶரீரஸ்ய சேதநவியோகக்ஷணவநவ விஶரிதத்வாரஸ்ய க்ஷணாந்தரே விஶீர்ணத்வேந ஶரீரத்வா ஸாவ்யாப்தி:. தத்ர ஶரீரஶப்த ப்ரயோகஸ்து, வஸ்துவதுபசாரிக:, ஶரீரதயாபவகஸ்ய ஸம்பாதிதேஶவரஸ்ய சேதநஸ்ய வஸாமிகஸ்ய. தஸ்மாதிதிசேவ ஸவீவநம் ஶரீரலக்ஷணம் யுக்தமிதி.

---

வன் - லோகாயதிகன். இவைமிசை - இவற்றின்மேலே. இவற்றை அடியாகக்கோண்டு - பூதபஞ்சகத்தைக் காரணமாகக்கொண்டு. ஆய் என்கிற பதம் உண்டாக்கி யென்கிற அர்த்தத்தைச் சொல்லுமோ? என்ன, ஆய்என்றது இத்யாதி. ஆக்கி என்றபடி யென்ற இது-பலிதார்த்தம். ஜிஜ்ஞாஸா ப்ரஶ்நம் - ஆய் இத்யாதி. உத்தரம்-வஹுஸ்யாம் இத்யாதி. வஹுஸ்யாம்என்று-வ்யஷ்டிஸ்ருஷ்டி. ப்ரஜாயேயஎன்று-ஸமஷ்டி ஸ்ருஷ்டி. வைதிகநிர்த்தேஶம்-வைதிகநிர்த்தேஶம்போலே யென்று கூட்டுவது. தாத்பர்யார்த்தம் - அவற்றிலே வ்யாபிக்குமிடத்தில் இத்யாதி. அவையவற்றில் என்னுமல் 'அவை தொறும்' என்றதின் தாத்பர்யம் - ஜாதி இத்யாதி. கரந்து - வ்யாப்யபதார்த்தங்களுக்குத் தெரியாதே. ஶ்ருதிக்குத் தேஜ:ப்ராசுர்யத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார்-அபௌருஷேயம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. ப்ரத்யக்ஷாதி இதி-ஆதிஶப்தத்தாலே அநுமாநத்தைச் சொல்லுகிறது. 'ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்கள்' இத்யாதி வாக்யம் - 'சுடர்' என்றதுக்கு அர்த்தாந்தரம். ஜ்வாலாபேதாநுமாநத்தாலே ஐக்யக்ராஹிப்ரத்யக்ஷமும், ப்ரத்யக்ஷத்தாலே வஹ்ந்யநுஷ்ணத்வாநுமாநமும் பாதிதமிறே. ஶ்ரூயதே நித்யமிதி ஶ்ருதி: என்றாய், க்ஷணத்வம்ஸியான ஶப்தத்துக்கு நித்யத்வம் எப்படி? என்ன, பூர்வபூர்வ இத்யாதி. க்ரமநித்யத்வம் விவக்ஷிதம். இப்பாட்டிற்சொன்ன அர்த்தத்தில் ப்ரமாணமேது? என்றால், வேதங்களென்று சொல்லிற்று; முதற்பாட்டுத்தொடங்கிச் சொன்ன அர்த்தங்களிலே ப்ரமாணமேது? என்ன, இத்தால் இத்யாதி. இவற்றை ஸம்ஹரித்த தேவன் - "தஸ்ய ஏஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" என்கிற ஶ்ருதிப்ரத்யபிஜ்ஞைக்காக 'சுரர்' என்கிற தென்கிற திருவுள்ளத்தாலே 'தேவன்' என்கிறார். 'யஸ்ய ப்ரஹ்மச' இத்யாதி ஶ்ருதியில் ஓதநோபஸேசநஸூசிதாத்தாவை ஸூத்ரகாரர் 'அத்தா' என்ற ஸூத்ரத்தில்நிர்த்தேஶித்தாற்போலே 'உண்ட' என்கிறார். ஶரீராத்மஹாவப்ரகரணத்திலே ஸம்ஹாராதாததீந்யம் சொல்லுவானென்? என்ன, முன்பு இத்யாதி. முன்பே-"படர்பொருள் முழுவதுமாய்", "கரந்தெங்கும்பரந்து" என்ற இடத்திலே. இது தன்னதல்லாமையால் வரும் ஐஶ்வர்யம்-ஸம்ஹாரம் தன்னதல்லாமையாலே ஸம்ஹாரம் தததீநமென்று வருகிற ஐஶ்வர்யம். இத்தால் இத்திருவாய்மொழியில்ஈஶ்வரத்வமாயிற்றுப்ரதிபாதிக்கிறதாகையாலேஇத்தைச்சொல்லாதொழி

வழக்கு என்கிறார். இத்தால், ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை ப்ரஹ்மாதிகளே நடத்துகிறார்க ளென்கிற குத்ருஷ்டிகளை நிரஸிக்கிறார். 'திடவிசும்பு' என்கிற இத்தால், அவைதிகமர்யாதையிலே நடக்கிற லோகாயதிகளை நிரஸிக்கிறார். 'உடல்மிசையுயிர்' என்கிற இத்தால், ஸ்வரூபேண தாதாத்ம்யம் சொல்லுகிறவர்களை நிரஸிக்கிறார். 'சுடர்மிகுசுருதியுள்' என்கையாலே, நாராயணாநுவாகாதிகளிற் சொல்லுகிற பரத்வம், லக்ஷ்மீஸம்பந்தம் இவையெல்லாவற்றையும் அங்கீகரித்தாராகிறார். (எ)

## எட்டாம் பாட்டு.

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும்
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன்
புரமொருமூன்றெரித்து அமரர்க்குமறிவியந்து
அரனயனென உலகழித்தமைத்துளனே.

ஆ.—(சுரரறிவருநிலை.) இப்படி ஶ்ருதிப்ரஸித்தனுகிற ஸர்வேஶ்வரனுகிறான் ப்ரஹ்மாவாக அடுக்கும் ஜகத்ஸ்ருஷ்டிக்ஷமனுகையாலேயென்றுதல், ருத்ரனுக அடுக்கும் ஸம்ஹாரக்ஷமனுகையாலே யென்றுதல் சொல்லுகிற குத்ருஷ்டிகளை நிராகரிக்கிறது. எங்ஙனே யென்னில்,- "[illegible]", "[illegible]", "[illegible]", "[illegible]", "[illegible]" "[illegible]" இத்யாதி வாக்யங்கள் அண்டத்துக்குள்ளே ப்ரஹ்மா பிறந்தானென்றும், அந்த

---

யில் ஐஶ்வர்யம் குறைந்து தோற்றுமிறே என்றபடி. ஶரீராத்மபாவப்ரதிபாதகமான இப்பாட்டிலே ஸ்ருஷ்டியைச் சொல்லுவானென்? என்னில்,—ஶரீராத்மபாவம் அநுப்ரவேஶகாரணமாகையயாலும், ஸ்ருஷ்டிப்ரகரணத்திலேயே அநுப்ரவேஶம் சொல்லுகையாலும் சொல்லுகிறது. இத்தால் - "படர்பொருள்முழுவதுமாய்" என்றும் "உண்டசுரன்" என்றும் சொல்லுகிற இத்தா லென்றபடி. பரபக்ஷநிரஸநமும் இத்தாலே ஸ்வபக்ஷஸ்த்திதியும் உண்டாயிற்று என்கிறார் - திடவிசும்பு இத்யாதி. ஸ்வரூபேண தாதாத்ம்யவாதிநஃ - யாதவீயாஃ. 'பூர்வபூர்வோச்சாரணத்தைப்பற்றி' என்கிறவிடத்திலே-"[illegible]" என்கிற பாஷ்யவாக்யம் அநுஸந்தேயம். 'ஸ்வரூபேண தாதாத்ம்யஞ் சொல்லுகிறவர்களை' என்கிறவிடத்திலே - "[illegible]" என்கிற பாஷ்யவாக்யம் அநுஸந்தேயம். இவையுண்ட சுரன் திடவிசும்பு என்று தொடங்கி, சுடர்மிகுசுருதியுள் உளன் இத்யந்வயஃ. (எ)

ப்ரஹ்மாவின்பக்கலிலே ருத்ரன் பிறந்தா னென்றும் சொல்லுகையாலே அண்டாந்தர்க்கதரான ப்ரஹ்ம ருத்ராதிகள் அண்டாத் பஹிர்ப்பூதமான ப்ரக்ருதிமஹதஹங்காராதி பதார்த்தங்களை அறியமாட்டாமையாலும், அவற்றினுடைய ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணமாட்டாமையாலும், அவற்றினுடைய ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை எம்பெருமான் பண்ணுகையாலும், "யொ ஹ்ராணம் விஷ்யாதி வ௱ிவ௲ம்" என்றும், "விஷ்ணோரா௲ா ஹஹவதொ ஹவஹ்யாஜிதஶெ ஜஸஃ" என்றும் இப்படி ப்ரமாணங்களாலே சதுர்முக ருத்ராந்தர பூதனைக்கொண்டு அமரஜந ஜ்ஞாந ப்ரதாநமும் த்ரிபுரதஹநமும் பண்ணினாற்போலே அண்டாந்தர்க்கதமான பதார்த்தங்களினுடைய ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களையும் முன்புசொன்ன ந்யாயத்தாலே சதுர்முக ருத்ராந்தர்ப்பூதனாய், அதவை தத்வாசகஶப்தவாச்யனைக்கொண்டு அவர்களுக்குந் தெரியாதபடி நின்ற எம்பெருமான்தானே செய்தருளுகையாலும் எம்பெருமானே ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் ஈஶ்வரன் என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டு. இப்பாட்டில் இப்படி ஶ்ருதிஸித்தனான ஸர்வேஶ்வரனுகிறான் ஸ்ருஷ்டிஸம்ஹாரகர்த்தாக்களாக ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ராதிகளிலே ஒருவனன்றோ? என்று சொல்லுகிற குத்ருஷ்டிகள் நிரஸிக்கப்படுகிறார்கள்.

[சுரரென்று தொடங்கி] - ப்ரஹ்மாதிகள் அறியவொண்ணாத ஸ்திதியையுடைத்தாயிருந்த ப்ரக்ருதி தொடக்கமாக மேலுள்ள ப்ராக்ருதபதார்த்தங்க ளெல்லாவற்றுக்கும் வரிஷ்ட்டமான காரணமாய். விண் என்று - ப்ரக்ருதிகார்யமான ஆகாஶவாசிஶப்தத்தைக் காரணமான ப்ரக்ருதியிலே ப்ரயோகிக்கிறார். [அவைமுழுதுண்ட] - ஈஶ்வரனாலும், அவன் காட்டின வழியையுடைய ப்ரஹ்மாவாலும் ஸ்ருஷ்டமான பதார்த்தங்களில் ருத்ரனால் ஸம்ஹார்யமாவதுஏகதேஶம்; ஸம்ஹர்த்தாவான ருத்ரன்தன்னையும், அவனுக்கு நிலமன்றிக்கே யிருந்துள்ள மஹதாதிகளையும் அகப்பட ஸம்ஹரித்தவன். [பரபரன்] - அவன் காட்டின வழியாலே ஏகதேஶஸ்ருஷ்டியையும் ஏகதேஶஸம்ஹாரத்தையும் பண்ணுகையாலே அஸ்மதாதிகளைக்காட்டில் பராயிருக்கிற ப்ரஹ்ம ருத்ரர்களுக்கு நிலமல்லாத ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணுகையாலே அவர்களுக்கும் பரனென்றவாறு. [புரமொரு மூன்றெரித்து என்று தொடங்கி] - ருத்ரன் த்ரிபுரதஹநம்பண்ணினானென்றும், ப்ரஹ்மா வைதிகஜ்ஞாநத்தை தேவர்களுக்கு உபதேசித்தா னென்றும் அவர்களுக்கு ப்ரஸித்தியைக் கொடுத்து, அந்தராத்மதயா நின்று தானே அவ்வுபகாரங்களை லோகத்துக்குப் பண்ணினாற்போலே ஸமஸ்தஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் தானே செய்தருளுகையாலே வேறேயும் சிலர் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணுவா ருண்டென்று சொல்ல முடியாது.

ப.—அநந்தரம், வ்யஷ்டி ஸ்ருஷ்டி ஸம்ஹர்த்தாக்களான ப்ரஹ்மருத்ரர்களும் தததீநர் என்கிறார்.

சுரர் - தேவர்களான ப்ரஹ்மாதிகளுக்கும், அறிவு அரும் - அறியவொண்ணாத, நிலை - நிலையையுடைத்தான, விண்முதல் - ஆகாஶம்முதலாயுள்ள, முழுவதும் - ஸமஷ்டிரூப ஸமஸ்த வஸ்துக்களுக்கும், வரன்முதலாய் - வரிஷ்டமான காரணமாய், அவை - அவற்றை, முழுது உண்ட - நிஶ்ஶேஷமாக உபஸம்ஹரிப்பதும்செய்கையாலே, பரபரன் - (வ்யஷ்டிஸ்ருஷ்டி ஸம்ஹாரகர்த்தாக்களாய்க்கொண்டு) பரரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் பரனானவன்; அரன் - ருத்ரனும், அயன் - ப்ரஹ்மாவும், என - என்று ப்ரஸித்தமாம்படி, புரமொருமூன்று - அத்விதீயமான புரத்ரயத்தை, எரித்து - தஹித்தும், அமரர்க்கு - தேவர்களுக்கு, அறிவு இயந்தும் - ஜ்ஞாநத்தை உபதேசித்தும், உலகு - அண்டாந்தர்வர்த்திலோகங்களை, அழித்து - ஸம்ஹரித்தும், அமைத்து - அவற்றை ஸ்ருஷ்டித்தும், உளன் - (அவர்களுக்குள்ளே) ஆத்மாவாய்நிற்குமவன்.

வின் என்று - "க்ஷேத்ரஜ்ஞவஶாகாஶஓதஶ்ச ப்ரோதஶ்ச" என்று கார்க்கிவித்யையில் சொல்லுகிற கணக்கிலே மூலப்ரக்ருதி யாகவுமாம். இயத்தல் - கொடுத்தல். இத்தால், ப்ரஹ்ம ருத்ராதிகள்பக்கலிலே பாத்வஶங்கைபண்ணுகிற குத்ருஷ்டிகளை வ்யாவர்த்திக்கிறது.

இ.—எட்டாம்பாட்டில், இப்படிஶ்ருதிப்ரஸித்தனை ஸர்வேஶ்வரனுகிறுன் ஸ்ருஷ்ட்யாதிகளிலே ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ராதிகளிலே ஒருவனைலோ? என்கிற குத்ருஷ்டிகளை நிரஸிக்கிறுர்.

[சுரர் அறிவரு நிலை விண்] - ப்ரஹ்மாதிகளால் அறிய அரிதான ஸ்திதியையுடைய முதல் ப்ரக்ருதி. கார்க்கிவித்யையில் "க்ஷேத்ரஜ்ஞவஶாகாஶ ஓதஶ்ச ப்ரோதஶ்ச" என்று ஆகாஶ ஶப்தத்தாலே முதல் ப்ரக்ருதியைச் சொல்லுகையாலே, இங்கும் ஆகாஶஶப்தத்தாலே மூலப்ரக்ருதியை அருளிச்செய்கிறுர். [விண்முதல் முழுவதும் வரன்முதலாய்] - மூலப்ரக்ருதி தொடக்கமான மேலுள்ள பதார்த்தங்களெல்லாவற்றுக்கும் வரிஷ்டமான காரணமாய். வரன் - வரம். [அவை முழுதுண்ட] - ஈஶ்வரனும் அவனடியாக ப்ரஹ்மாவாலும் ஸ்ருஷ்டமான பதார்த்தங்களில் ருத்ரனல் ஸம்ஹார்யமாவது ஏகதேஶம்; ஸம்ஹர்த்தாவான ருத்ரனையும், அவனுக்கு நிலமல்லாத மஹதாதிகளையும் அகப்பட ஸம்ஹரித்தவன். [பரபரன்] - ஈஶ்வரனடியாக ஏகதேஶ ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணுகிற ப்ரஹ்மாதிகள் அஸ்மதாதிகளில் பரர்; அந்த ப்ரஹ்மாதிகளுக்கும் பரனுகையாலே பராத்பரன். [புரமொருமூன்று எரித்து என்று தொடங்கி] - ருத்ரனுக்கு அந்தர்யாமியாய்க் கொண்டு த்ரிபுரதஹநம் பண்ணி, ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய்நின்று வைதிகஜ்ஞாநத்தை தேவர்களுக்கு உபதேசித்து. இயந்து - ஈந்து; அறிவையீந்து. [அரன் அயனென] - த்ரிபுரதஹநம்பண்ணினன் ருத்ரனென்றும், வைதிகஜ்ஞாந ப்ரவர்த்தகன் ப்ரஹ்மாவென்றும் அவர்களுக்கு ப்ரஸித்தியைக் கொடுத்தாற்போலே. [உலகழித்து அமைத்துளனே] - ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று அண்டாந்தர்வர்த்திகளை ஸ்ருஷ்டித்தும், அவனுக்கு நிலமல்லாத ப்ராக்ருத ஸ்ருஷ்டியை ஸ்வேநரூபேண பண்ணியும், ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனாலே ஸம்ஹார்யமான அம்ஶத்தை ஸம்ஹரித்தும், அவனுக்கு நிலமல்லாத ப்ராக்ருத ஸம்ஹாரத்தை ஸ்வேநரூபேண பண்ணினன் ஸர்வேஶ்வரனே. "ஸதத்ஸத்விஶ்வயோநிஷு". இப்படி ஸமஸ்தஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் தானேசெய்கையாலே வேறேயும் சிலர் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்குக் கடவாருண்டென்று சொல்ல முடியாது. சுராறிவருநிலை விண்முதல் முழுவதுக்கும் வரன்முதலாய் அவை முழுதுண்ட பரபரன் அரனெனப் புரமொருமூன்றெரித்து, உலகழித்து அயனென அமரர்க்கு அறிவியந்து உலகமைத்துமுளன். "விஷ்ணுராத்மா ஹவிஷ:".

ஈடு.—எட்டாம்பாட்டு. [சுரர் இத்யாதி] - ஶ்ருதிஸித்தன் அவனேயென்றும், ஸர்வ ஶரீரியாய்நிற்கிறுன் அவனே யென்றும் சொல்லாநின்றீர்; அல்லாதாரும் ஓரோ கார்யங்களிலே அதிகரித்து அவையும் நடத்தியன்றே போருகிறது? ப்ரஹ்மா ஸ்ருஷ்டிக்குக் கடவனுய், ருத்ரன் ஸம்ஹாரத்துக்குக் கடவனுயன்றே போருகிறது; இவற்றை ஒரு வ்யக்தியிலே ஏறிட்டால் நீர் பக்ஷபாதத்தாலே சொன்னீராகீரோ? என்ன, - 'ஒரு வ்யக்தியில் பக்ஷபாதத்தாலே சொல்லுகிறேனல்லேன்; ப்ரமாணகதிகளை யாராய்ந்தால் அவை அவர்கள்பக்கலில் கிடவாமையாலே சொல்லுகிறேன்' என்கிறுர்.

---

எட்டாம்பாட்டு - சுரர் இத்யாதி. 'வரன்முதலாயவைமுழுதுண்டபரபரன்' என்கிற பதங்களையும் 'அரனயனெனவுலகழித்தமைத்துளன்' என்கிற பதங்களையும் கடாக்ஷித்து ப்ரஶ்நோத்தரரூபேண ஸங்கதி - ஶ்ருதிஸித்தன் அவனே இத்யாதி. ஶ்ருதிஸித்தன் அவனே யென்றும் என்றது-'சுருதியுளுளன்' என்றத்தைப் பற்ற. ஸர்வஶரீரியாய் இத்யாதியாலே - ஶரீரபூதப்ரஹ்மாதிகளுக்கு ஸ்வதந்த்ரதயா கர்த்ருத்வமில்லையென்று பலிதம். தத்ர ஶங்கதே - அல்லாதாரும் இத்யாதி. விவரணம் - ப்ரஹ்மா இத்யாதி.

[சுரர் இத்யாதி] - ப்ரஹ்மாதிகளால் அறியவரிய ஸ்வபாவத்தை யுடைத்தாயிருக்கிற விண் உண்டு - மூலப்ரக்ருதி : அது தொடக்கமாக வுண்டான எல்லாவற்றுக்கும் வரிஷ்டமான காரணமாய். "**அக்ஷரமம்பராந்தத்ருதே:**" (அக்ஷரமம்பராந்தத்ருதே:) என்று அம்பராந்த மென்று சொல்லக்கடவதிறே ; கார்க்கி வித்யையிலே "**கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்ச**" (கஸ்மிந்நுகல்வாகாச ஓதச்சப்ரோதச்ச) என்று ஆகாசசப்தத்தாலே மூலப்ரக்ருதியைச் சொல்லுகையாலே இவரும் ஆகாசசப்தத்தாலே மூலப்ரக்ருதியை அருளிச்செய்கிறார் ; ப்ரக்ருதிகார்யமான ஆகாசவாசி சப்தத்தை யிட்டுக் காரணமான மூலப்ரக்ருதியை

---

**ப்ர.**—(*அறிவருநிலைவிண்*)- உத்தரமீமாம்ஸாயாம் ப்ரதமாத்யாயஸ்ய த்ருதீயே பாதே [ஸூ - ௧௦] "அக்ஷரமம்பராந்தத்ருதே:" அஸ்ய ஸூத்ரஸ்யார்த்த: ஸ்ரீபாஷ்யகாரேண ஸம்யக் விவ்ருத:. அக்ஷரம் பரம் ப்ரஹ்ம ; குத:? (அம்பராந்தத்ருதே:) அம்பரஸ்ய ஆகாசஸ்ய அந்த: பாரஸ்திதமவ்யாக்ருதம் - அம்பராந்த:. தஸ்ய த்ருதே: தாரணாத் அக்ஷரஸ்யாவ்யவஹிதாதாரத்வம் யாவத். அயமர்த்த:, "கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்ச" [ப்ரு-௫-௮-௭] இத்யுக்த ஆகாசசப்தநிர்திஷ்டம் ந வாயுமதம்பரம், அபிது தத்காரணபூதமவ்யாக்ருதம்; அவ்யக்தஸ்யாவ்யாக்ருதஸ்யாவ்யயாரகோ நோ வ்யாநக்ஷரம் நாவ்யாக்ருதம் பவிதுமர்ஹதீதி. ப்ருஹதாரண்யகே கார்கிப்ரச்நே [௫ - ௮] "யதூர்த்வம் கார்கி திவோ யதவாக் ப்ருதிவ்யா யதந்தரா த்யாவாப்ருதிவீ இமே யத்பூதம் ச பவச்ச பவிஷ்யச்சேத்யாசக்ஷதே ஆகாச ஏவ ததோதம் ச ப்ரோதம் சேதி கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்சேதி".

---

*சுராறிவருநிலை என்கிற விசேஷணம் - ப்ரஹ்மருத்ரர்களுக்கு ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள் ஸார்வத்ரிகங் களன்றென்று அறிவிக்கைக்காக. சப்தார்த்தம் - ப்ரஹ்மாதிகளால் இத்யாதி. நிலை - ஸ்வபாவம். விண் உண்டு - மூலப்ரக்ருதி. ப்ரஹ்மாதிகளால் துர்ஜ்ஞேயஸ்வபாவமான ஆகாசமென்றபோதே மூலப்ரக்ருதி பரமென்று ஸித்தம். முழுவதும் - முழுவதுக்கும். அர்த்தஸௌகர்யார்த்தமாக ஸ்ருத்யந்தரம் ஸூத்ரம் அநுஸந்தேயம். ஆகாசவாசி சப்தத்தாலே மூலப்ரக்ருதியைச் சொன்ன இடமுண்டோ? என்ன, கார்க்கி இத்யாதி. ப்ருஹதாரண்யகே கார்க்கிப்ரச்நே "யதூர்த்வம் கார்கி திவோ யதவாக் ப்ருதிவ்யா யதந்தரா த்யாவாப்ருதிவீ இமே யத்பூதம் ச பவச்ச பவிஷ்யச்சேத்யாசக்ஷதே ஆகாச ஏவ ததோதம் ச ப்ரோதம் சேதி கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்சேதி". ஆகாசசப்தவாச்யமான மூலப்ரக்ருதி எவனிடத்திலே குறும்பாவும் நெடும்பாவும் போலே ஸம்ச்லிஷ்டமாகக் கோக்கப்பட்டுக் கிடக்கிறது? என்ன, அக்ஷர சப்தவாச்யமான ப்ரஹ்மத்திலே ஓதமும் ப்ரோதமுமாகக் கிடக்கிறதென்றதிறே ப்ரக்ருதி யென்றபடி. இச்ச்ருதியில் ஆகாசவாசிசப்தம் மூலப்ரக்ருதிக்கு வாசகமென்னுமதுக்கு நியாமகமேது? என்ன, அக்ஷரம் இத்யாதி. உத்தரமீமாம்ஸாயாம் ப்ரதமாத்யாயஸ்ய த்ருதீயபாதே, இதம் ஸூத்ரம். "கஸ்மிந்நு கல்வாகாச:" என்ற ஆகாசவாசிசப்தம்-மூலப்ரக்ருதிவாசி யென்னுமது தோற்ற அம்பராந்த என்றாரிறே ஸூத்ரகாரரென்றபடி. அம்பராந்தம் - அம்பரகாரணம், ஆகாசகாரணம் அவ்யாக்ருதம். தஸ்ய த்ருதே:,-தாரணாத், அஸ்யாக்ஷரஸ்யாவ்யவஹிதாக்ஷரம் பரம் ப்ரஹ்மேதி ஸூத்ரார்த்த: . 'விண்' என்று மூலப்ரக்ருதிக்கு வாசகமான க்ரமமேது? என்ன, ப்ராக்ருதிகார்யமான இத்யாதி. "அக்ஷரமம்பராந்தத்ருதே: என்று"*

உபசரிக்கிறது. [வரன் முதலாய்] - காரணதசையிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்துத் தன்மேலே யேறிட்டுக்கொண்டு நோக்கியும், கார்யமாமளவிலே வந்தவாறே அவ்யக்தம் மஹாந் அஹங்காரம் என்கிற இவற்றிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்தும், காரண பரம்பரையோடு கார்ய பரம்பரையோடு வாசியறத் தானேநின்று நடத்திக்கொண்டு போருகையாலே வரிஷ்டமான காரணமாய் என்கிறது. [அவை முழுதுண்ட] - ஸம்ஹாரத்திலும் வந்தால் முழுக்க ஸம்ஹர்த்தாவாகிறானும் அவனே. “**யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந: | ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்**” (யஸ்ய ப்ரஹ்மசக்ஷத்ரஞ்ச உபேபவத ஓதந:, ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்) - யாவனொருவனுக்கு ப்ரஹ்ம க்ஷத்ராத்மகமாயிருக்கிற இதெல்லாம் ஓதநமா யிருக்கிறது, யாவனொருவனுக்கு ம்ருத்யு உபஸேசந கோடியிலே நிற்கிறான். “**க இத்தா வேத யத்ர ஸ:**” (கஇத்தாவேத யத்ரஸ:) - அப்படி யிருக்கிறவன் பெருமை ஒருவர்க்கும் அறிய நிலமோ? என்னுநின்றதிறே. [பரபரன்] - ப்ரஹ்மாதிகள் அதிகாரிபுருஷர்களா யிருக்கையாலே நம்மைக்குறித்து அவர்கள் பரரா யிருப்பதொன்று உண்டிறே, “**பர: பராணாம்**” (பர:பராணாம்) என்கிறபடியே அவர்கள் தங்களுக்கும் பரனாயிருக்குமவன். “மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்குந் தேவா” என்னக் கடவதிறே. [புரம் இத்யாதி] - ருத்ரன் த்ரிபுரதஹநம் பண்ணினா னென்றும்; [அமரர்க்கு மறி வியந்து] - அறிவை ஈந்து. அன்றிக்கே, வியத்தல் - கடத்தலும், கொடுத்தலு மாகையாலே அறிவைக் கொடுத்து என்னவுமாம். ப்ரஹ்மா தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினா னென்றும் ஒருப்ரஸித்தி யுண்டிறே நாட்டிலே அவர்களுக்கு; அங்ஙனன்றோ? என்னில்; —அவற்றை ஆராய்ந்தால் “**விஷ்ணுநா தத்தவரதோ ப்ரஹ்மா ஸம்ஶ்ரிததேஜஸ: | தத்தாஜ்ஞாநாத் ப்ரஸாதம்**

---

*என்ற வாக்யாநந்தரம் ‘ஆகாஶஶப்த நிர்த்திஷ்டத்தை’ என்று ஶேஷம். உபசரிக்கிறது-காரணே கார்யோபசாரம். காரணத்துக்குப் பரத்வமாவது என்? என்ன, காரணதசையிலும் இத்யாதி. ஸம்ஹாரத்தை ஊணாகச்சொல்லுவானென்? என்ன, யஸ்ய ப்ரஹ்ம இத்யாதி. கடவல்லியாம் “யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:| ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ:” இதி. ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச என்றது-ஸம்ஹார்யங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். ம்ருத்யுவைச் சொன்னது - ஸம்ஹர்த்தாக்களுக்கெல்லாம் உபலக்ஷணம். “வ்யஞ்ஜநம் ஸஹாதநஹேது: உபஸேசநம், உபஸேசநம்- வ்யஞ்ஜநம்” இத்யாதி. ஸ: யத்ர - யஸ்மிந் ப்ரகாரே ஸ்தித:, தம் ப்ரகாரம் இத்தா - இத்தம் இதி கோ வேத என்றபடி; ஸ: யத்ர - யஸ்மிந் ஸ்தித:, தம் ஸ்திதிஸ்தாநம் இதி கோ வேத இதி வா. “பர: பராணாம் பரம: பரமாத்மாத்மஸம்ஸ்தித:| ரூபவர்ணாதிநிர்தேஶவிஶேஷணவிவர்ஜித:” இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. ‘பராணாம் பர:’ ‘பர: ஆத்மஸம்ஸ்தித:’-தனக்குத்தானே ஆதாரம். ‘ப்ராக்ருதரூபவர்ணாதிரஹித:’. ஸம்வாதம் மனிசர்க்கு இத்யாதி - மநுஷ்யர்களுக்கு தேவதைகள் உத்தேஶ்யமானவோபாதி, தேவர்களுக்கும் உத்தேஶ்யதயா ஆஶ்ரயணீயனாயிருக்குமவனே. ‘சுரரறிவருநிலை’ இத்யாதியாற் சொன்ன ஸமஷ்டிஸ்ருஷ்டி ஸமஷ்டிஸம்ஹாரங்கள் பகவததீநங்களாகிலும், வ்யஷ்டிஸ்ருஷ்டி வ்யஷ்டிஸம்ஹாரங்கள் ப்ரஹ்மருத்ராதீநங்களென்றன்றோ ப்ரஸித்தி? என்ன, அவற்றையும் ததந்தர்யாமியாய் ஈஶ்வரனே செய்கிறானென்கிறார்-புரமொரு மூன்றெரித்து இத்யாதி என்று மேலுக்கெல்லாம் ஸங்கதி கண்டுகொள்வது. இந்த ஸங்கதிக்கு ‘அரனயனென வுலகழித்தமைத்துளனே’ என்றதிலே நோக்கு. ஆனால், ‘புரமொருமூன்றெரித்தமரர்க்குமறிவியந்து’ என்கிற பதங்களுக்குக் கருத்தென்? என்னில், - அவர்களுக்கு அந்தராத்மாவாய் நின்று த்ரிபுரதஹநத்தையும் ஜ்ஞாநப்ரதாநத்தையுந் தானே நடத்தினாற்போலே வ்யஷ்டிஸ்ருஷ்ட்யாதிகளையும் ததந்தராத்மாவாய் நின்று தானே நடத்தினானென்று த்ருஷ்டாந்தார்த்தமென்று கண்டுகொள்வது. ‘ருத்ரன் த்ரிபுரதஹநம் பண்ணினானென்றும்’ என்ற சப்தம் - ‘தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினானென்றும்’ என்றத்தை ஸமுச்சயிக்கிறது. அறிவு இயந்து என்றுபிரித்து, இயந்து என்றது ஈந்து என்றதாய், கொடுத்து என்னுதல்; அன்றிக்கே, அறி வியந்து என்று பதபேதமானபோது வியத்தல் - கடத்தலும் கொடுத்தலு மாகையாலே அறிவைக்கொடுத்து என்றபடி;*

**ஸஶ-ூஂஸவிஷெஹஃஹெஶ்ஶ:"** (விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:, தஸ் மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம் ஸவிஷேஹேமஹேஶ்வர:) என்றுநின்றார்களிறே அத்தை அடியறி வார்; "நண்ணார்நகரம் விழ நனிமலை சிலைவளைவுசெய் தங்கழனிற வம்பதுவானவனே" என்று நின்றார்களிறே மயர்வறமதிநல மருளப் பெற்றவர்கள்; தான் பூட்டின நாணி, தன் கழுத்தை யறுத் துக்கொண்டு போகாதொழியும்போதும் ஈஶ்வரன் அந்தராத்மாவாய் நிற்கவேணும். ப்ரஹ்மா தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினானென்று ஒரு ப்ரஸித்தி யுண்டு; அதுக்கு அடி ஆராய்ந் தால் "**யொஸ்ஹ்மாணஂ விஜயாதிவூவஂ**" (யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்) என் கிறபடியே அவன் அடியா யிருக்கும். [அரன் இத்யாதி] - அரன் செய்தான், அயன் செய்தா னென்ன உலகழித்தமைத்துளன். சுரரறிவருநிலை விண்முதல் முழுவதும் வரன்முதலாய் அவை முழுதுண்ட பரபரன் அரனெனப் புரமொருமூன்றெரித்து உலகத்தையழித்து, அயனென அமரர்க்கும் அறிவியந்து உலகத்தை யமைத்துளன். "**வஹதௌவிவுயஶ்ரெஷ்ஸ ஶ்ஸாகக்ரொயஜஸ்ஸ்ரதௌ | தஷாதஶிதவஞ்நாநௌஸ்ருஷ்டிஸஂஹாரகாரகௌ**" (ஏதௌத்வௌவி புதஶ்ரேஷ்டௌப்ரஸாதக்ரோதஜௌஸ்ம்ருதௌ, ததாதர்ஶிதபந்தாநௌஸ்ருஷ்டிஸம்ஹாரகார கௌ)என்கிறபடியே ப்ரமாணகதிகள்இருந்தபடியால் ஏகதேஶஸ்ருஷ்டியும் ஏகதேஶஸம்ஹாரமுமே ப்ரஹ்மாதிகளுக்கு உள்ளது; அதுதானும் இவர்களுக்கு அந்தராத்மாவாய்நின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்

---

**ப்ர.**—(ப்ரஹ்மா தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினனென்று) ஶ்வேதாஶ்வதரே. ||சு|| "யொ ஸ்ஹ்மாணஂ விஜயாதி வூவஂ யொவெ வெஜாஂஶ்ச ஸ்ஹிணொதி தஸ்மை | தஂஹ தெவமாத்மவுஜி ஸ்ஸாஜஂ முமுக்ஷுவெஶரணமஹஂ ஸ்வெஷ்ய" மஹாஹாரதெ மொக்ஷவவணி நாராயணீயெ, நாமநிவுவநாயாயெ. ||கசுகூ|| "வஹதௌ விவுயஶ்ரெஷ்ஸ ஶ்ஸாகக்ரொயஜௌ ஸ்ஸ்ரதௌ| தஷாதஶிதவஞ்நாநௌ ஸ்ருஷ்டி ஸஂஹாரகாரகௌ" - தஜநாத்தயாஉ வஸிதநாராயணஜஶிதவஞ்நாநௌ ஸ்ஹ்ரூௌ ஸ்ருஷ்டிஸஂஹாரகாயகாரா விதாயஃ ||

---

அர்த்தபேதமில்லை, பதபேதமே யுள்ளது. அடியறிவார்-வ்யாஸாதிகள். 'விஷ்ணுராத்மா' இத்யாதி ஶ்லோகோ பாரதே கர்ணபர்வணி. தத்ரைவ நாராயணீயே நாமநிர்வசநாத்யாயே 'வஹதௌ' இத்யாதிஶ்ச. ப்ரமாணாந்தரம் - நண்ணார் இத்யாதி. ஶத்ருக்களுடைய த்ரிபுரமாகிற படைவீடு நசிக்கும்படியாகப் பெருத்த மேருவான வில்லை வளைத்து, அங்கரங்களிலே நெருப்புகிளரும்படி அம்புக்குக் கூர்மையாய்ப்புக்கு அழியச்செய்து அந்த விஜயாபதாநத்தை அவன்செய்தானென்று விருதூதித்திரியும்படி பண்ணினவனே! 'தஸ்யாநுஜ்ஞா ஸஂஸ்ஶவஂஸவிஷெஹ' என்றதுக்குத்தாத்பர்யம் - தான்பூட்டின இத்யாதி. ப்ரமாணகதார்த்தமாக உக்தாநுவாதம்-ப்ரஹ்மா தேவர்களுக்கு இத்யாதி. 'யொவெவெஜாஂஶ்ச ஸ்ஹிணொதிதஸ்மை' என்னுமளவும் விவக்ஷிதம். இயம் ஶ்வேதாஶ்வதரே "தஂஹதெவமாத்மவுஜி ஸ்ஸாஜஂ முமுக்ஷுவெஶரணமஹஂ ஸ்வெஷ்ய" இத்யந்தம். ஆத்மபுத்திப்ரஸாதம் - ஆத்மபுத்திப்ரஸாதகம். அவன் அடியாயிருக்கும் என்றது தான் ப்ரஹ்மாவுக்கு ஜ்ஞாநப்ரதாநம்பண்ணி, அவனுக்கு அந்தராத்மாவாய் அவனையிட்டு தேவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம்பண்ணின னென்றபடி. அழிக்கை-ஸம்ஹாரம். அமைக்கை-ஸ்ருஷ்டி. இப்படி பதங்களினுடைய அர்த்தங்களை அருளிச்செய்து வாக்யயோஜனையை அருளிச்செய்கிறார் - சுரர் இத்யாதி. கீழே த்ரிபுரதஹநத்துக்கும் ஜ்ஞாநப்ரதாநத்துக்கும் அடி அவனென்னுமதுக்கு ப்ரமாணங்காட்டி, வ்யஷ்டி ஸ்ருஷ்டி வ்யஷ்டி ஸம்ஹாரங்களுக்கும் அடி அவனென்னுமதுக்கு ப்ரமாணங்காட்டுகிறார் - வஹதௌ இத்யாதி. யத்வா, 'ப்ரமாண கதிகளை ஆராய்ந்தால்' என்று அவதாரிகா விவக்ஷித ப்ரமாணத்தைக் காட்டுகிறார் - வஹதௌ இத்யாதி

களைப் பண்ணுகிறான் ஸர்வேஶ்வரனாகையாலே சொன்னேனத்தனை, ஒரு வ்யக்தியில் பக்ஷபாதத்தாலே சொன்னேனல்லேன் என்று குத்ருஷ்டிகளை நிரஸிக்கிறார். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

---

உளனெனில்உளன் அவனுருவம்இவ்வுருவுகள்
உளனலனெனில் அவனருவம் இவ்வருவுகள்
உளனென இலனென இவைகுணமுடைமையில்
உளனிருதகைமையொடு ஒழிவிலன்பரந்தே.

**ஆ.**—(உளனெனிலுளன்.) இப்படி வேதாவலம்பி குத்ருஷ்டிகளை நிராகரித்து, 'ப்ரமாணமு மில்லை; ப்ரமேயமு மில்லை; ஸர்வமும் ஶூந்யம்; ஆகையாலே, வேதமும் வேதவேத்யனான ஈஶ்வரனும், அவனுடைய ஐஶ்வர்யமான ஜகத்தும் இல்லை' என்கிற ஶூந்யவாதியை நிராகரிக்கிறது.

ஶூந்யவாதியான உன்னைக் கேட்போம்; ஈஶ்வரனுடைய இல்லாமையை ஸாதிக்கிற நீ ஈஶ்வரன் உளனென்றோ இலனென்றோ ப்ரதிஜ்ஞை பண்ணுவது? இவை இரண்டுப்ரகாரத்தாலும் நீ நினைக்கிற இல்லாமை ஸம்பவியாது. எத்தாலேயென்னில், லோகத்தில் பாவாபாவஶப்தங்களும் பாவாபாவ ப்ரதீதிகளும் வித்யமாநவஸ்துவினுடைய அவஸ்த்தாவிஶேஷ கோசரமாகக் காண்கையாலே. ஆதலால், ஈஶ்வரன் உளனென்னில், அஸ்தித்வதர்மவிஶிஷ்டனாயிருக்குமென்று சொல்லிற்றாய் வரும்; ஈஶ்வரன் உளனலனென்னில், நாஸ்தித்வதர்மவிஶிஷ்டனாயிருக்குமென்று சொல்லிற்றாய் வரும். இப்படி ஈஶ்வரவ்யதிரிக்த பதார்த்தங்களையும் உளவென்னில், இவையும் அஸ்தித்வதர்மவிஶிஷ்டங்களாய்க்கொண்டு உளவென்று சொல்லிற்றாய் வரும்; தத்வ்யதிரிக்த பதார்த்தங்களை இல்லையென்னிலும், அவை நாஸ்தித்வதர்மவிஶிஷ்டங்களென்று சொல்லிற்றாய் வரும்; அந்த அஸ்தி நாஸ்தி ரூப பதார்த்தங்களும் அவனுக்கு ரூபமாயிருக்கும், கீழ்ச்சொன்ன ப்ரமாணங்களாலே. இப்படி அஸ்தித்வ நாஸ்தித்வங்களாகிற குணங்களையுடையனென்று சொல்லுகையாலே, அஸ்தியென்னிலும் உளன்; நாஸ்தியென்னிலும் உளன்; உளனுமிடத்து ஸர்வாந்தராத்மாவாய்க்கொண்டு உளன் என்கிறார். இப்படி ஶூந்யவாதியை நிரஸித்தது.

**ஒ.**—ஒன்பதாம்பாட்டில், இப்படி ப்ரமாணமும் ப்ரமேயமும் ஒருபடி உளவாகக்கொண்டு ஈஶ்வரஸ்வரூபத்திலும் ஈஶ்வரவிசேஷணத்திலும் விப்ரதிபத்தி பண்ணின வாதிகளையெல்லாம் நிராகரித்து, 'ப்ரமாணமுமில்லை, ப்ரமேயமுமில்லை, ஸர்வமும் ஶூந்யம்; ஆதலால், வேதமுமில்லை, வேதப்ரமேயமாயுள்ள ஈஶ்வரனும் அவனுடைய விபூதியாயுள்ள ஜகத்து மில்லை' என்கிற ஶூந்யவாதியை நிராகரிக்கிறது.

எங்ஙனேயென்னில்;—ஶூந்யவாதியான உன்னைக் கேட்போம்: ஈஶ்வரன் இல்லாமையை ஸாதிக்க நினைக்கிற நீ நினைத்த பொருளை ஒருவாக்யத்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணி, பின்னை ஹேதுவாலே அதனை ஸாதிக்கவேணுமிறே; அவ்விடத்தில் நீ ஹேது சொல்லுவதற்கு முன்பே உன் ப்ரதிஜ்ஞையைக்கொண்டு ஈஶ்வரனுளனென்னுமிடமே ஸாதிப்பன்; அதுக்காக ஈஶ்வ

---

யாதல். 'சுராறிவருநிலை' இத்யாதி வாக்யத்தில் அந்வயம் அருளிச்செய்கையாலே அந்தவாக்யத்திலே பாட்டுக்கு அந்வயங்கண்டுகொள்வது. 'உளன்' - ப்ரஹ்மருத்ரர்களுக்குள்ளே அந்தராத்மாவாய் நிற்குமவனென்றபடி. (அ)

னுடைய இன்மையை ப்ரதிஜ்ஞை பண்ணுவது உளனென்ற சொல்லாலேயோ? இலனென்ற சொல்லாலேயோ? என்ன, இப்படிக் கேட்கைக்குக் கருத்தென்? என்னில்,—உளனென்ற சொல்லால் இன்மையைக் காட்டவொண்ணாதாப்போலே இலனென்ற சொல்லால் நீ கிற்ற நினைத்த இன்மை காட்டவொண்ணா தென்றவாறு. அது எங்ஙனேயென்னில்,—உண்டென்ற சொல்லாலும் இல்லையென்ற சொல்லாலும் லோகத்தில் யாதொருபொருள் விளையக் கண்டோம், அப்பொருளே உன் சொற்களுக்கும் பொருளாக வேணுமிறே; கண்டறியாததொரு பொருளை இஶ்ஶப்தங்கள் காட்ட மாட்டாதிறே; லோகத்தில், குடமுண்டென்றால், குடமென்று சொல்லப்படுகிற பொருள் உண்மையென்பதொரு தர்மத்தை யுடைத்தென்று தோற்றுநின்றது; அவ்விடத்தில் குடமாவது - மண்ணாலே பண்ணிற்றொன்று. அதினுடைய உண்மையாவது - மண்ணும் உருளையுமன்றியே இரண்டுக்கும் நடுவில் அவஸ்தையாய் வயிறும் வாயும் உடைத்தான மண்ணாயிருக்கை. இப்படியால், ஈஶ்வரனுளனென்னில் உளனாய் வரும்; இச்சொல்லால் அவனுடைய இன்மை காட்டவொண்ணாது. இப்படி ஈஶ்வரனுள னென்னவே, ஐஶ்வர்யத்தையொழிய ஈஶ்வரன் உளனாகக் கூடாமையால் அவனுடைய விபூதியான ஜகத்தும் உண்டாம்; ஆமிடத்திலும் அவனுக்கு ஶரீரமாயே உளதாம். இப்பொருள் "அவனுருவமிவ்வுருவுகள்" என்றவிடத்தாலே சொல்லப்பட்டது. இனி, ஈஶ்வரன் இலனென்ற சொல்லாலே அவனுடைய இன்மை காட்ட நினைத்தாயாகில், இல்லையென்ற பொருளிலும் லோகத்திற்கண்டபடி பொருள்கொள்ளவேணும். லோகத்தில் குடமில்லையென்றால், இங்கில்லை யென்னுதல், இப்போதில்லை யென்னுதல், மண்ணுருளையா யிருந்தது குடமாய்ப் பிறந்ததில்லையென்னுதல், தளர்ந்து ஓடுகளாய்க் கிடந்ததென்னுதல், இவ்வனைத்திலொன்று பொருளாகக் கண்டோம்; இப்படியன்றியே, வெறுமனே குடமில்லையென்னில், என்றும் எங்கும் எப்படியும் குடமில்லையென்று சொல்லிற்றாக வேணும்; அப்படியாகில், எப்படியும் குடமென்றொன்று அறிய உபாயமில்லை யாகையால் குடமென்று சொல்லவுங் கூடாது, நினைக்கவுங் கூடாது; ஆதலால், ஒன்றில்லை யென்பானுக்கு ஒருபடியாயின்றியே மற்றப்படியாலுண்டாக இசையவேணும்; ஆதலால், இங்கில்லை யென்றது - அப்பாலே யுண்டு என்றவாறு. இப்போதில்லையென்று - மற்றொருபோது உண்டு என்றவாறு. குடமில்லையென்றது - மண்ணுருளையாதல், ஓடுகளாயாதல் இருந்ததென்றவாறு. இப்படியால் இன்மையாவது - மற்றொருபடியா லுண்மையாய்த் தோற்றிற்று. இப்படியால் ஈஶ்வரனில்லை யென்றானுக்கும் அவன் தன்னையும் அவனைஶ்வர்யங்களையும் ஒருபடியால் உளவாகக் கொண்டு, அப்படியால் உண்மையில்லையென்ற சொல்லாலே சொன்னானாகவேணும்; ஆதலால், உளனென்ற சொல்லால் அவனும் அவனைஶ்வர்யமும் ஸித்தித்தாற்போலே இலனென்ற சொல்லாலும் அவன் தன்னுடைய உண்மையும் அவனைஶ்வர்யத்தின் உண்மையும் ஸித்தமாய் வந்தது. இப்பொருள் - உளனலனெனில் அவனருவம் இவ்வருவுகள் என்றத்தால் சொல்லப்பட்டது. அவனருவமென்றது - அரூபமென்ற சொல்லாலே சொல்லப்பட்டதான உளதாயிருந்தது என்றவாறு. இப்படியால் உண்மையும் இன்மையுமாகிறன உள்ள வஸ்துவுக்கே இரண்டு குணமாய் முடிந்தன. ஆதலால், ஈஶ்வரனுளனென்றாதல், இலனென்றாதல், இரண்டுபடியாலுமுளனாம். இவ்வழியாலே வேத முண்டாயிற்று; அதிற் சொன்னபடியே அவன்தான் எங்கும் பரந்துளனானன். இப்பொருள் இப்பாட்டில் மேலிரண்டடியாலுஞ் சொல்லுகிறது. இப்பாட்டு ஆழ்வான் யோஜித்தபடி.

ப.—அநந்தரம், ஈஶ்வரதத்த்வத்தை இசையாதே வேதபாஹ்யரில் ப்ரதமகண்யராய் ஸர்வஶூந்யவாதிகளான மாத்யமிக பௌத்தரை நிராகரிக்கிறார்.

உளனெனில் - (ஸ்வமதத்தாலே) உளனெனிலும், உளனலனெனில் - (பரமதத்தாலே) உளனலனெனிலும், உளன் - (ஸத்பாவாஸத்பாவ தர்மங்களுக்கு ஆஶ்ரய விதுர ஸ்த்திதியில்லா

மையாலே ப்ரதிஜ்ஞாவேளையிலும்)உளனென்றாய் ஸத்பாவங்கொள்ளவேணும்; (ஆனபின்பு), உளனென இலனென இவை - உளனென்றும் இலனென்றுஞ் சொல்லுகிற இவற்றை, குணமுடைமையில் - குணமாகவுடையனாகையாலே, இவ்வுருவுகள் இவ்வருவுகள் - ரூபவத்தாயும் அரூபவத்தாயுமுள்ள இஜ்ஜகத்தில் வஸ்துக்கள், அவனுருவம் அவனருவம் - தனக்கு ப்ரகாரரூபமாயும் அப்ரகாரரூபமாயுமுள்ள ப்ரகாரமாயிருக்கிற, இருதகைமையொடு - இரண்டுஸ்வபாவத்தோடும், உளன் - உளனாய், பரந்து - அவற்றை வ்யாபித்து, ஒழிவிலன் - ஒழிவின்றியே நிற்குமவன்.

௯.—ஒன்பதாம்பாட்டு. ஒருபடியாலே ப்ரமாணப்ரமேயங்களைக்கொண்டு ஈஶ்வரஸ்வரூபத்திலும் ஈஶ்வரவிசேஷணத்திலும் விப்ரதிபத்தி பண்ணினவர்களை நிராகரித்தது, கீழ்; இப்பாட்டில் ப்ரமாணப்ரமேயங்களிரண்டு மில்லை யென்ற ஶூந்யவாதியை நிராகரிக்கிறது; ஶூந்யவாதியை ஹேது சொல்லுவதுக்குமுன்பே ப்ரதிஜ்ஞாமாத்ரத்திலே ஸவிபூதிகனான ஸர்வேஶ்வரனுடைய உண்மையை ஸாதிக்கிறார்.

[உளனெனில்] - உளனென்று ப்ரதிஜ்ஞையாகில். [உளன்] - அஸ்தித்வ விசிஷ்டனாய்க்கொண்டு உளனும்; ஈஶ்வரன் உளனும்போது ஐஶ்வர்யத்தையொழிய உளனாகக்கூடாமையாலே விபூதியான ஜகத்தும் உண்டாம். [அவனுருவம் இவ்வுருவுகள்] - உண்டாமிடத்தில், ப்ரமாணம் காட்டுகிறபடியே ஶரீரமாய்க்கொண்டு உளவாம். 'இல்லாமையை ஸாதிக்கிற நான் அஸ்திஶப்தத்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணுவனோ?' என்னில்,—'உளன்' என்கிற ஶப்தம் இல்லாமையைக் காட்டமாட்டாதோபாதி, 'இல்லை' என்கிற ஶப்தமும் நீ நினைக்கிற அத்யந்தாபாவத்தைக் காட்டமாட்டா தென்கை. [உளனலனெனில்] - நாஸ்திஶப்தத்தாலே அவனுடைய இல்லாமையை ப்ரதிஜ்ஞை பண்ணில், லோகத்தில் நாஸ்தி ஶப்தார்த்தமே உனக்கும் அர்த்த மாகவேணும்; கடோ நாஸ்தி யென்றால், இங்கில்லையென்னுதல், இப்போதில்லை யென்னுதல், ம்ருத்பிண்டமாய் உத்பத்த்யபாவத்தாலே இல்லையென்னுதல், கபாலாவஸ்த்தமா யில்லை யென்னுதல், இவற்றிலே ஒன்று நாஸ்திஶப்தார்த்தமாகக் கண்டோம்; ஆகையாலே, ஒருபடியாலே இல்லையானது ப்ரகாராந்தரத்தாலே உண்டாயிருக்கையால், ஈஶ்வரனும் நாஸ்தித்வ விஶிஷ்டனாய்க்கொண்டு உளனும். [அவனருவம் இவ்வருவுகள்] - அவனுடைய விபூதியும் ஒருப்ரகாரத்தாலே இல்லையானவை ப்ரகாராந்தரத்தாலே உண்டாகையாலே அபாவவிஶிஷ்டமாய்க் கொண்டு உளவாம். [உளனென இலனென இவைகுணமுடைமையில்] - அஸ்தித்வ நாஸ்தித்வங்கள் உள்ள வஸ்துவுக்கு இரண்டுங் குணமாய் முடிகையாலே. [உளனிருதகைமையொடு] - ஈஶ்வரன் உளனென்றுதல், இலனென்றுதல், இரண்டுபடியாலு முளன். [ஒழிவிலன்பரந்தே] - இவ்வழியாலே விபூதியையும் வ்யாபித்துக் கொண்டே யொழிவிலன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஸர்வஶூந்யவாதியை நிரஸிக்கிறார். நிரஸிக்கிறபடிதான் என்? என்னில்,—பாஷ்யத்திலே ஶூந்யவாதியை நிரஸித்த க்ரமத்திலே. இவ்வாழ்வார்தாம் அடியாக பாஷ்யகாரர்க்கு அவனை நிரஸிக்கலாம்; இவர்தாம் அவனை நிரஸிக்கைக்கு அடியென்? என்

---

ஒன்பதாம்பாட்டு - உளனெனில் இத்யாதி. பாஷ்யத்திலே ஶூந்யவாதியை நிரஸித்தக்ரமத்திலே யென்றது - ''ஸர்வதாநுபபத்தேஶ்ச'' என்ற ஸூத்ரத்தை விவக்ஷித்து. 'பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்' என்றிருக்க, பாஷ்யத்தில் நிரஸநக்ரமத்தை த்ருஷ்டாந்தீகரிப்பா னென்? என்ன, பாஷ்யகாரருக்கு அநந்தரகாலீநரான வ்யாக்யாதாவுக்கு த்ருஷ்டாந்தீகரிக்கலாமென்று பரிஹாரமாதல், க்ரமைக்யமாத்ரத்திலே தாத்பர்யமாதல். ஶங்காந்தரம் - இவ்வாழ்வார்தாமடியாக இத்யாதி. ஆழ்வார்தம்பக்கலிலே யுண்டு என்றது - மயர்வற மதிநலமருளப்பெற்றவராகையாலே நிரஸிக்க அறியலா மென்றபடி. நிரஸிக்கும் ப்ரகாரமேது? என்ன, புறம்பே இத்யாதி. யத்வா, இவர்தாம் அவனை நிரஸிக்கைக்கு அடி யென்?

னில்;—அதுவும் இவ்வாழ்வார்தம்பக்கலிலே யுண்டு. புறம்பே சிலர் ப்ரஹ்மாதிகள்பக்கலிலே ஈஶ்வரத்வப்ரதிபத்தியைப் பண்ணி, ப்ரமாணங்களையும் அதுக்கீடாக நியமித்துக்கொண்டு வந்து தோற்ற, தாம் அங்கீகரித்தவனே ஸர்வஸ்மாத்பர னென்றும், ஜகத்து அவனுக்கு ஶரீரதயா ஶேஷ மென்றும், தத்ப்ரதிபாதகப்ரமாணம் வேத மென்றும், தம்முடைய மதத்தை உபந்யஸித்துநின்றார் கீழ்; இவையித்தனையும் இல்லையென்னும்போது பூர்வபக்ஷமாக இவற்றை அங்கீகரித்து அநுபாஷித்துக் கழிக்கவேணுமிறே; அதில் இவற்றை அங்கீகரித்து அநுபாஷித்து அவனால் இல்லையென்னப் போகாது; முதலிலே ஶூந்யமென்னில் ஸர்வ ஶூந்யவாதம் ஸித்தியாது. இனி உன்னைக் கேட்போம்: நீதான் ஈஶ்வரன் உளனென்கிற சொல்லாலே அவனில்லாமையை ஸாதிக்கப்பார்க்கிறாயோ? இல்லையென்கிற சொல்லாலே இல்லாமையை ஸாதிக்கப்பார்க்கிறாயோ? என்ன, இங்ஙன் விகல்பிக்கைக்குக் கருத்தேன்? என்ன; உளனென்கிற சொல்லாலே சொன்னால், உனக்கு அபிமதமான அபாவம் ஸித்தியாதவோபாதி, இல்லையென்கிற சொல்லாலும் உனக்கு அநபிமதார்த்தமேகாண் ஸித்திப்பது; ஆனபின்பு, நீ இல்லையென்கிற சொற்கொண்டே அவனுண்மையை ஸாதிப்பன்.

---

என்னில் என்றது - ஶூந்யவாதியை நிரஸிக்கைக்கு ப்ரஸங்க மேது? என்றபடி. அதுவும் இவ்வாழ்வார்தம் பக்கலிலே யுண்டு என்றது - அந்தப்ரஸங்கமும் இவர்பக்கலிலே யுண்டென்றபடி. ப்ரஸங்கமுண்டென்றத்தை உபபாதிக்கிறார் - புறம்பேசிலர் இத்யாதி. ஸவிபூதிகனான ஈஶ்வரனுடைய உண்மையையும் வேதப்ராமாண்யத்தையும் இவர் கீழே ஸாதிக்கையாலே அவர்கள் ப்ரத்யவஸ்தாநம்பண்ணுகிறார்க ளென்றபடி என்று இங்ஙனே ஸங்கதியாதல்; அதவா, இப்பாட்டுக்கு ஸங்கதி - புறம்பேசிலர் இத்யாதி ஆதல். உபந்யஸித்து நின்றார் கீழ் - ஏழாம்பாட்டிலும் எட்டாம்பாட்டிலும் உபந்யஸித்துநின்றா ரென்றபடி. 'இவையித்தனையும்' என்றுதொடங்கி 'ஶூந்யவாதம் ஸித்தியாது' என்னுமளவும் ஸ்வகதமாக ஆழ்வாருடைய விசாரம். இவையித்தனையும் என்றது - கீழ்ச்சொன்ன ப்ரமாத்ருப்ரமாணப்ரமேயங்களை. கழிக்கவேணுமிறே - வெறுமனே ஶூந்யமென்று சொல்லப்போகாதே என்று கருத்து. இல்லை யென்னப் போகாது என்றது - அநுபாஷித்தில்லையென்னும்போது, இப்போதில்லை, இங்கேயில்லை, இன்னப்ரகாரத்தாலில்லை என்னவேணுமிறே; அதில் இப்போதில்லை யென்றால், காலாந்தரத்திலே யுண்டாம்; இங்கில்லையென்றால் தேஶாந்தரத்திலே யுண்டாம்; இன்னப்ரகாரத்தாலே யில்லையென்றால், ப்ரகாராந்தரத்தாலேயுண்டாம்; ஆக, லோகத்ருஷ்டப்ரக்ரியையைப்பார்த்தால் ஸாவாந்தரம் அபாவமாகையாலே தேஶாத்யுபாதிரஹிதமாக இல்லையென்னப்போகா தென்றபடி. முதலிலே ஶூந்யமென்னில் - உல்லோகமாக ஶூந்யமென்னில். ஸர்வஶூந்யவாதம் ஸித்தியாதென்றது - ஶூந்யத்வப்ரதீதிக்குப் பாரமார்த்த்யம் அங்கீகரிக்கையாலே யென்றபடி. அன்றிக்கே, முதலிலே இத்யாதிக்கு - அங்கீகரித்து அநுபாஷியாதே வெறுமனே ஶூந்யமென்னில், ஶூந்யபூதமான ஶஶவிஷாணாதிகபோலே ஶூந்யமாமித்தனை யொழிய ஸர்வஶூந்யவாதம் ஸித்தியாது; ஸர்வத்தையும் ஆஶ்ரயத்வேந அங்கீகரித்து அவற்றில் ஶூந்யத்வத்தை ஸாதியாமையாலே என்றது அர்த்தமாதல். அத்ர *"வ்ருத்திர்விஶேஷா" இத்யாத்யநுஸந்தேயம். கீழ் ஸ்வகதமாக விசாரித்து, இனி அவனை அபிமுகீகரித்து விகல்பித்துதூஷிக்கிறார் - இனி உன்னை இத்யாதி. இனி - ஏவம் ஸ்வமதே உபந்யஸ்தேஸதீத்யர்த்தஃ. [Grantha text] இதி பரிஹரதி - இங்ஙன் விகல்பிக்கைக்கு இத்யாதி. ஸித்தியாதவோபாதி என்கிறவிடத்தில் - அநபிமதஸித்தியும் விவக்ஷிதம். தார்ஷ்டாந்திகத்தில் அபிமதாஸித்தியும் விவக்ஷிதம். இல்லையென்கிற சொல்லாலும் இத்யாதி: ஘டோநாஸ்தியென்றால் [Grantha text] ஆகாரம் போய் கபாலாவஸ்த்தமா யிருக்குமாபோலே, அவஸ்த்தாந்தராபந்நமாய் ஸித்திக்கையாலே, உனக்கு அநபிமதார்த்தமே ஸித்திக்கு மென்றபடி. ஸாதிக்கிறபடியைக் காட்டுகிறார் - லோகத்தில் இத்யாதி. இன்ன

---

* ஸ்ரீரங்கராஜஸ்தவே - உத்தரஶதகே "வ்ருத்திர்விஶேஷா [Grantha text] ॥"

லோகத்தில் ஹாவாஹாவஶப்தங்களுக்கு யாதோருபடி பொருள்கோள்ளுகிறோம், அப்படிகோள்ளில் நீ நினைக்கிற அர்த்தம் உன்னால் ஸாதிக்கப்போகாது; அங்ஙனேகோள்ளாயாகில் வாதந்தன்னில் உனக்கு அதிகார மில்லை.

[உளனேனில்] - ஈஶ்வரஸத்ஹாவம் முதலிலே இல்லை யேன்கிற நீ அவனுண்மைக்கு இசையாயிறே; நான் உளனேன்கிறுப்போலே சோல்லில் தானே உளன். [அவனுருவம் இவ்வுருவு கள்] - ஈஶிதவ்யநிரபேக்ஷமாகவன்றிறே ஈஶ்வரன் உளனுவது; அவன் உளனுமிடத்தில் **“யஸ்யா த்மா ஶரீரம்”** (யஸ்யாத்மாஶரீரம்) **“யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்”** (யஸ்யப்ருதிவீஶரீரம்) என்கிற படியே ஜகத்து அவனுக்கு ஶரீரதயா ஶேஷமா யுண்டாம். உளனலனேன்பாயோ**?** அப்போது

---

**ப்ர.**—(உளனெனில் இத்யாதி). (ஸ்ரீபாஷ்யத்திலே ஶூந்யவாதியை நிரஸித்த க்ரமத்திலே) உத்தரஶ்லோகஸ்யாஸ்ய த்விதீயாத்யாயஸ்ய த்விதீயபாதே “ஸர்வதாநுபபத்தேஶ்ச” [ஸூ-ந-௩०] இத்யாத்யுக்த: — ஸர்வதாநுபபத்தே: ஸர்வஶப்தார்த்தஸம்பாதிதம் ந ஸம்பவதி. கிம்ஹவாந் ஸர்வம் அஸதிதி ப்ரதிஜாநீதே ? அஸதிதி வா ? அந்யதா வா ? ஸர்வதாஹிதம் தத்தஶ்சம் நஸம்பவதி ; லோகேஹாவாஹாவஶப்தயோர் ஸச்ச ப்ரத்யாஶ விஷ்யோ நஞ்செஷ்யவ வஸ்த்வந்தரஸம்பந்தவஸ்தாவிஶேஷயோர் வாசகஸ்ய ப்ரதிவாதிக த்வாத். அதஶ்ச ஸர்வஶூந்யத்வ ப்ரதிஜாநதாஸர்வம்ஸதி ப்ரதிஜாநதே தவஸர்வஸ்யவிஷ்யோ நஸ்யா வஸ்தாவிஶேஷயோகியேதவ ப்ரதிஜ்ஞாதாஹவதீதி ஹவதிஸிதா தத்தாநக்ஷதஶ்சவி ஸித்யதி. கிஞ் ஶூந்யத்வஸ்ய ப்ரமாணாதஸர்வஶூந்யத்வமஹ்ய ஶூந்யத்வம்ஸிஷாயயிஷதா தஸ்ய ப்ரமாணஸ்ய ஸத்யத்வமேஷ்டவ்யம். தஸ்யாஸத்யத்வே ஸர்வம் ஸத்யம் ஸ்யாதிதி ஸர்வதாஸர்வஶூந்யத்வம் வாநுபபந்நமிதி.

---

வஸ்து இங்கேயுண்டு, இப்போது உண்டு, இன்னப்ரகாரத்தாலே உண்டென்கிறது - ஹாவம்; இங்கில்லை, இப்போதில்லை, இன்னப்ரகாரத்தாலே யில்லை யென்கிறது - அஹாவம். இப்படிகொள்ளில் ஹாவாஹாவங்களிரண்டாலும் உண்மை ஸித்திக்கையாலே நீ நினைக்கிற அர்த்தம் உன்னால் ஸாதிக்கப்போகா தென்றபடி. அங்ஙனே கோள்ளாயாகில் இத்யாதி- ஹாவாஹாவங்களுக்கு இப்படி அர்த்தங்கொள்ளாதே வெறுமனே இல்லையென்ற போது நீ சொல்லுகிறது உல்லோகமாகையாலே வாதந்தன்னில் உனக்கு அதிகாரமில்லை யென்றபடி. இங்கே “ஸர்வஶாஸ்த்ரவாதிநாம் வாதிநாம் ப்ரவர்த்ததே । அலௌகிகார்த்தவாதித்வாந் நாத்ர ஶூந்யவாதிந:” என்கிற ஹட்டவசநம் அநுஸந்தேயம்.

“எனில்” என்கிற யதிஶப்தத்துக்குத் தாத்பர்யம் - ஈஶ்வரஸத்ஹாவம் இத்யாதி. ஸாம்வ்ருதிக ஸத்யதையை யிட்டு அவனுக்கு முளனென்று சொல்லலாமிறே, அத்தை வ்யாவர்த்திக்கிறார் - நானுளன் இத்யாதி. ஸம்வ்ருதி - ஜ்ஞாநம். சொல்லில்தானேயென்று - முழுச்சொல்லாய், சொல்லி லென்றபடி. அவனுருவம் - அவன்வடிவு. உரு - ஸ்த்தூலரூபம் வஸ்து. அரு - நாமரூப விபாகரஹிதம் ஸூக்ஷ்மரூபம் வஸ்து. இவ்வுருவுகள் அவனுருவமாய்க் கொண்டே உளவென்று, உளவென்றத்தை அத்யாஹரித்து அந்வயம். அவனுளனுகில் இவையும் உளவாகவேணுமோ? என்ன, ஈஶிதவ்ய இத்யாதி. இவ்வுருவுக ளென்று - சேதநாசேதநாத்மகமான ஜகத்தைச் சொல்லுகிறது. ஶரீரதயா வென்றது - உருஶப்தார்த்தம். ஶேஷமாயென்றது - ‘அவன்’ என்கிற ஷஷ்ட்யர்த்தம். உளனல னேன்பாயோ? என்கிற இடத்தில் - ஏவம் விகல்போபிப்ரேத:. ஸோபாதிகநிஷேதமே பண்ணுகிறதோ? நிருபாதிகநிஷேதமோ? ஸோபாதிகநிஷேத பக்ஷத்திலும், ப்ரகாராவாயி நிஷேத: கிம் ப்ரதேஶ உத தேஶாவாயிநிஷேத:? காலாவாயிநிஷேதோ வா ? இதி த்ரேதாவிகல்ப:; ஏதத்விகல்பத்ரயஸ்யாபி நிருபாதிகநிஷேதபக்ஷஸ்யாபி க்ரமேண தூஷணமாஹ- அப்போது அஹாவதர்மியாய்த் தோற்றுமித்யாதிநா. அபாவதர்மியாய்-அஹாவரூபதர்மவிஶிஷ்டமாய். இவ்வுருவுகள் அவனுருவமுளநாஸ்திஶப்தவாச்யமாய் ஸூக்ஷ்மரூபமான சிதசிதாத்மக ப்ரபஞ்சமான இவை அவனுக்கு அவஸ்தாந்தராபந்நக்காய்

அஹாவதர்மியாய்த் தோற்றும். [அவனருவம் இவ்வருவுகள்] - அப்போது நாஸ்திஶப்தவாச்யமாய் அவஸ்தாந்தர பாக்காய்க்கொண்டு இவற்றின் உண்மை தோற்றும். '஘டோஸ்தி' என்றால் வாயும் வயிறுமான ஆகாரந் தோற்றும்; '஘டோநாஸ்தி' என்றால் நாஸ்தித்வதர்மவிஶிஷ்டமாய்த் தோற்றும்; இங்கு இல்லை யென்றதாகில், வேறோரிடத்திலே யுண்டாம்; இப்போது இல்லையென்றதாகில், வேறொரு காலவிஶேஷத்திலே யுண்டாம்;எங்கும் எப்போதும் ஒரு ப்ரகாரத்தாலும் ஘டமில்லையென்னக்கூடாமையால், நிருபாதிகநிஷேத மில்லையிறே. [உளனென இலனென இவைகுணமுடைமையில்] - உளனென்கிற இத்தையும் இலனென்கிற இத்தையும் இவையிரண்டையுங் குணமாக வுடையனாகையாலே. இவையிரண்டும் இரண்டு தர்ம மாயிற்று. [உளனிருதகைமையொடு] - உளனென்கிற சொல்லாலும் இலனென்கிற சொல்லாலுஞ் சொன்ன இரண்டு ஸ்வஹாவத்தாலும் உளனானன். [ஒழிவிலன்பரந்தே] - நான் உளனென்கிற சொல்லாலே உண்மையை ஸாதித்தேன்; நீ இலனென்கிற சொல்லாலே உண்மையை ஸாதித்தாய்; ஆக, இருவருமாக உண்மையை ஸாதித்தோம்; இனி அவன் உளனானால் உளனுமாபோலே, ஸவிபூதிகனாயே உளனாக அமையாதோ? என்கிறார்.

## பத்தாம் பாட்டு.

பரந்ததண்பரவையுள் நீர்தோறும்பரந்துளன்
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவறக்
கரந்தசிலிடந்தோறும் இடந்திகழ்பொருள்தோறும்
கரந்தெங்கும்பரந்துளன் இவையுண்டகரனே.

---

*அப்ரகாஶரூபமாய்க்கொண்டு ஶேஷமாய்த்தோற்ற மென்றபடி. அவனுருவம் இவ்வுருவுகள் உள - அஸ்திஶப்தவாச்யமாய் ஸ்த்தூலரூபமாய்ச் சேதநாசேதநாத்மகமான இவ்வஸ்துக்கள் அவனுக்கு ஶரீரதயாஶேஷமாய் ப்ரகாஶரூபமாய்க்கொண்டு தோற்ற மென்றபடி. இப்படி ஶப்தார்த்தங் கண்டுகொள்வது. அப்போது - அஹாவதர்மித்வேந அவனுடைய ஸத்ஹாவந் தோற்றும்போது. உண்மைதோற்றும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - ஘டோஸ்தியென்றால் இத்யாதி. நாஸ்தித்வதர்மவிஶிஷ்டமாய் - கபாலாவஸ்த்தமாய். ப்ரத்வம்ஸாஹாவத்தைப்பற்ற நாஸ்தியென்னப்போகா தென்றார் கீழ்; தேஶாதியாலுண்டான ஸம்ஸர்க்காஹாவத்தாலும் நாஸ்தியென்னக்கூடா தென்கிறார், இங்கில்லை இத்யாதியால். குணமாகவுடையனாகையாலே - ஆகையாலே யென்கிறது - இல் ஶப்தார்த்தம். 'குணமுடைமை' என்று சொல்லலாமோ? என்ன, இரண்டும் இரண்டுதர்மமாய் விதிக்கிற ப்ரகாரம் உபபாதிதமாகையாலே சொல்லலா மென்கிறார் - இவையிரண்டும் என்று. உளனிருதகைமையொடு இத்யாதி: உளனென்கிற இத்தாலே - ஒருகுணமும், இலனென்கிற இத்தாலே - ஒருகுணமும் விதிக்கையால், நான் அவனுளனென்று சொல்லுகையாலே-விபூதிவைஶிஷ்ட்ய ரூபஸ்வபாவமும், நீ 'இலன்' என்கையாலே, ஸூக்ஷ்மாவஸ்த்தவஸ்துவைஶிஷ்ட்யரூபஸ்வபாவமும் விதித்தது; ஆகையால், இலனென்று - ஸூக்ஷ்மவஸ்து விஶிஷ்டனென்று சொல்லாதே, உளனென்று - ஸ்தூலஸூக்ஷ்ம ஸமஸ்தவஸ்து வ்யாபியாய்க்கொண்டு ஸவிபூதிகனாயிருக்குமென்ன வமையாதோ? என்று வாக்யார்த்தம். தகைமை - ஸ்வபாவம். ஒழிவிலனாய்க்கொண்டு பரந்தேயுளனென்று அந்வயந் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - நானுளனென்கிற சொல்லாலே இத்யாதி. இனி என்கிறது - ஹேதுபரம். அவன் உளனானால் உளனுமாபோலே - நானுளனென்றால் உளனுமாபோலே யென்றபடி. ஸவிபூதிகனாயே உளனாக வமையாதோ - நீ இப்படி அங்கீகரிக்க அமையாதோ வென்றபடி. யத்வா, அவனுளனானால் இத்யாதி-ஸ யதா பவதி ததா விபூதிரபி ஸ்யாத். அதாவது-அவன் அஸ்தித்வதர்மவிஶிஷ்டனானால் விபூதியும் அஸ்தித்வதர்மவிஶிஷ்டையாகக்கடவது, அவன் நாஸ்தித்வதர்மவிஶிஷ்டனானால் விபூதியும் நாஸ்தித்வ தர்மவிஶிஷ்டையாகக்கடவது என்றபடி. உளனெனில் உளன்; இவ்வுருவுகள் அவனுருவமாயுள; உளனலனெனில் உளன்; இவ்வருவுகள் அவனருவமுள, உளனென இலனென இவைகுணமுடைமையில் இருதகைமையொடுஉளன், ஒழிவிலன் பரந்தே யுளன் இத்யந்வயః.* (கூ)

**ஆ.**—(பரந்த.) ஸமுத்ரஜலபரமாணுக்களிலும் ப்ருதிவ்யந்தரிக்ஷாதி லோகாந்தர்வர்த்தியாய் அதிஸூக்ஷ்மமா யிருந்த அசித்வஸ்துக்களிலும் வ்யாபித்து அவற்றினுள்ளே ப்ரகாஶிக்கிற சித்வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வ்யாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனாய் அந்யைரத்ருஷ்டனாய்க்கொண்டு ஜகத்ஸம்ஹர்த்தாவுமாய் ஸூத்ருட ப்ரமாணஸித்தனுமாயிருந்த எம்பெருமானுடைய துயரறுசுடரடி தொழுதெழு என்மனனே! என்கிறார்.

**௯**—பத்தாம்பாட்டில், கீழ்ச்சொன்ன ஸ்வரூபவ்யாப்தியினுடைய ஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

[பரந்த என்று தொடங்கி] - பரந்து குளிர்ந்திருந்த கடலில் ஜலபரமாணுதோறும் அஸங்குசிதமான அண்டாவகாஶத்திற் போலே வ்யாபித்திருக்கும். [நிலவிசும்பு என்று தொடங்கி]-இப்படி எல்லா பூதங்களிலும் பௌதிகமான க்ஷுத்ரஶரீரங்களிலும் ததந்தர்வர்த்திகளாய் ஸ்வயம்ப்ரகாஶமாயுள்ள ஆத்மாக்கள்தோறும் அந்யைரத்ருஷ்டனாய்க்கொண்டு ஸமஸ்தவஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கும். இவற்றை யெல்லாவற்றையும் தன்திருவயிற்றிலே வைத்து ஸம்ஹரித்தவன் கிமர் பரமாணுக்களிலும் வ்யாபித்துநிற்கிறானென்று கருத்து.

**௰.**—அநந்தரம், கீழ்ச்சொன்ன வ்யாப்தியினுடைய ஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

பரந்த - (எங்குமொக்கப்) பரந்த, தண் - (பூதாந்தரகார்யமான விகாரமில்லாமையாலே ஸ்வதர்மமான) ஶைத்யத்தையுடைத்தான, பரவையுள் - (காரணஜலரூபமான) ஏகார்ணவத்தின், நீர்தொறும்-(அதிஸூக்ஷ்மமான) ஜலபரமாணுக்கள்தோறும், பரந்த அண்டம் இதென - மஹாவகாஶமான இவ்வண்டத்தி லிருக்குமாபோலே, பரந்துளன் - அஸங்குசிதமாக இருக்குமவனாய், (இப்படி), நிலம் - பூமியிலும், விசும்பு - ஊர்த்வலோகங்களிலும், ஒழிவற - ஒன்றொழியாமே, கரந்த - அதிஸூக்ஷ்மமாய், சில்இடந்தொறும் - அல்பமான ஸ்தலங்கள்தோறும், இடம் - அந்தஸ்தலங்களிலே, திகழ் - ஸ்வயம்ப்ரகாஶதயா உஜ்ஜ்வலமான, பொருள்தொறும்- ஆத்மவஸ்துக்கள்தோறும், கரந்து - (வ்யாப்யவஸ்துக்களும் அறியாதபடி) மறைந்து, எங்கும் - எங்குமொக்க, பரந்துளன் - வ்யாப்தனாயிருக்கும், இவையுண்ட கரன் - இவ்வஸ்துக்களை ஸம்ஹாரதஶையிலும் தனக்குள்ளே அடக்கித் தான் ஸ்த்திரனாய் நின்றவன்.

இத்தால், காரணதஶையோடு கார்யதஶையோடு வாசியற அதிஸூக்ஷ்மமான சேதநாசேதநங்களிலும் அஸங்குசிதமாக வ்யாபித்திருக்குமென்றதாயிற்று.

**இ.**—பத்தாம்பாட்டில், கீழ்ச்சொன்ன ஸ்வரூபவ்யாப்தியினுடைய ஸௌகர்யத்தைச் சொல்லுகிறது.

[பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் பரந்த அண்டமிதென] - பரந்து குளிர்ந்த கடலில் ஜலபரமாணுக்கள்தோறும், சதுர்தஶபுவநாத்மகமான அண்டாவகாஶத்திலே ஓர் ஏகாகி வர்த்திக்குமாபோலே அஸங்குசிதமாக வ்யாபித்திருக்கும். இதர பூதங்களிலும் வ்யாப்தி இப்படியே யென்கிறது. [நிலவிசும்பு] - முதலான பூமியையும், முடிவான ஆகாஶத்தையுஞ் சொன்னபடி. இது அநுக்தமான பூதங்களுக்கும் உபலக்ஷணம். [ஒழிவற] - ஒன்றொழியாமே வ்யாபித்திருக்கும். பூதகார்யங்களில் அதிக்ஷுத்ரமான ஶரீர ஶரீரிகளிலுமுண்டான வ்யாப்தி சொல்லுகிறது. [கரந்தசிலிடந்தொறும்] - அதிக்ஷுத்ர ஶரீரங்களிலும். [இடந்திகழ் பொருள்தொறும்] - ததந்தர்வர்த்திகளாய் ஸ்வயம்ப்ரகாஶமான ஆத்மாக்கள்தோறும். [கரந்து] - அந்யைரத்ருஷ்டனாயிருக்கை. [எங்கும்பரந்துளன்] - இப்படி ஸமஸ்தவஸ்துக்களிலும் வ்யாபித்

திருக்கும். [இவையுண்ட]-இவற்றை யெல்லாவற்றையும் தன் திருவயிற்றிலே வைத்து உபகரித்த வன். [கரன்] - இப்படி த்ருடப்ரமாண ஸித்தன். இப்படி எல்லாவற்றையும் தன் திருவயிற்றிலே வைத்து உபகரித்தவன்கிடீர், பரமாணுக்கள்தோறும் வ்யாபித்திருக்கிறு னென்று கருத்து.

ஈடு.—பத்தாம்பாட்டு. **[பரந்த இத்யாதி.]** ஜகத்தை ஶரீரதயா ஶேஷமாகவுடை யனாய் எங்கும் வ்யாபித்து தாரகனாய் நியாமகனாய் ஶேஷியாயிருக்குமென்று கீழே சொன்னார்; இப்படி வ்யாபித்துநின்றால் அசித்ஸம்ஸர்க்கத்தாலே சேதநனுக்கு ஒரு ஸங்கோசம் பிறவாநின்ற திறே; அப்படியே அவனுக்கும் இவற்றோட்டை ஸம்ஸர்க்கத்தாலே ஸங்கோசம் பிறக்குமோ? என்னில்?—அது செய்யாது; அஸங்குசிதமாக வ்யாபித்துநிற்குமென்று வ்யாப்திஸௌகர்யத்தை அருளிச் செய்கிறார்.

[பரந்ததண்பரவை இத்யாதி] - பரந்து குளிர்ந்திருந்துள்ள கடலில் ஜலபரமாணுக்கள் தோறும் வ்யாபித்திருக்கும். நீர்ச்செறிவாலே திரண்டுதோற்றுகிற இத்தனையிறே; பரமாணுஸங்காத மிறே. ***"ஜ்யாயாநந்தரிக்ஷாத்"*** (ஜ்யாயாநந்தரிக்ஷாத்) என்கிற வஸ்து, ஜலபரமாணுக்களிலே வ்யாபியாநின்றால் அல்பாவகாஶமாய் நெருக்குப்பட்டிருக்குமோ? என்னில், [பரந்தவண்டமிதென]- அந்த ஜலபரமாணுக்கள்தான் பரந்த அண்டமிதெனவாயிற்று வ்யாபித்திருப்பது. ஓரண்டத்தைச் சமைத்து, அதிலே ஓரேகாகியை வைத்தாற்போலே யிருக்கும். இப்படி ஜலபரமாணுக்களிலே வ்யா பித்துவிடுமித்தனையோ வென்னில், - [நிலவிசும்பொழிவற] - பூம்யந்தரிக்ஷங்களிலும் அப்படியே. இவைமூன்றும் அஞ்சுக்கும் உபலக்ஷணமாய், அஞ்சாலும் ஆரப்தமான அண்டத்தளவும் நினைத்து, மேல் கார்யமான பதார்த்தங்களில் வ்யாபித்திருக்கும்படி சொல்லுகிறது. [கரந்தசிலிடந்தோறும்] - இமையோடு இமை பொருந்தும்போதைக் காற்றிலே முடியும்படியான ஸூக்ஷ்மமான அல்பஶரீரங் கள் தோறும். [இடந்திகழ்பொருள்தோறும்] - அவ்வவஶரீரங்களிலே ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய்க் கொண்டு மிளிருகிற ஆத்மாக்கள்தோறும். [கரந்து] - வ்யாப்யபதார்த்தங்களுக்குத் தெரியாதபடி அந்யைரத்ருஷ்டனாய். [எங்கும்பரந்துளன்] - சேதநன் ஶரீரத்திலே வ்யாபிக்கும்போது அதில் ஏக தேஶத்திலேநின்று ஜ்ஞாநத்தாலே எங்கும் வ்யாபிக்கக் கடவனாயிருக்கும்; இவன், அங்ஙனன்றிக்கே, ஸ்வரூபத்தாலே, எங்கும் வ்யாபித்திருக்கும். விபுத்வத்தை அவனுக்குச் சொல்லி, அணு

---

*பத்தாம்பாட்டு - **பரந்ததண்** இத்யாதி. கீழேசொன்னார் என்றது - ஏழாம்பாட்டிலே சொன்ன ரென்றபடி. சேதநனுக்கு ஒரு ஸங்கோசம் - ஜ்ஞாநஸங்கோசம். சேதநஜ்ஞாநஸங்கோசம், ஈஶ்வரஸ்வரூபஸங் கோசத்துக்கு த்ருஷ்டாந்தம். ஸங்கோசம் பிறக்குமோ - விபுவானஈஶ்வரஸ்வரூபத்துக்குக் கார்யரூபஸங்கோ சம் பிறக்குமோ? **அஸங்குசிதமாக வ்யாபித்துநிற்கும்** - விபுவான ஸ்வரூபம் அணுவுக்குள்ளே வ்யாபித்தால் விபு வான ஆகாரத்துக்கு ஸங்கோசம் வாராதென்றபடி.*

*'கரந்தசில்' என்று மேலே கார்யத்தைச் சொல்லுகையாலே,'பரவை' என்றது - காரணமான ஏகார்ண வத்தைச் சொல்லுகிறது. ஜலஸமுதாயமொழியப் பரமாணுக்களுண்டோ? என்ன, **நீர்ச்செறிவு** இத்யாதி. **செறிவு** - நிபிடதை. சாந்தோக்யே ஶாண்டில்யவித்யாயாம் 'ஏஷ ம ஆத்மாந்தர்ஹ்ருதயே ஜ்யாயாந் ப்ருதிவ்யா ஜ்யாயாநந்தரிக்ஷாஜ்ஜ்யாயாந் திவோ ஜ்யாயாநேப்யோ லோகேப்ய:' இதி. ஏஷ ம ஆத்மாந்தர்ஹ்ருதயே இத்யந்வய:. விவரணம்-**ஓரண்டத்தை** இத்யாதி. **ஒழிவற** - ஒழியாதே. நிலவிசும்பொழிவற - பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் ஒன்றொழியாதே இதி ஶப்தார்த்த:. இவைமூன்றிலுமோ வ்யாப்தியுள்ள தென்ன, **இவைமூன்றும்** இத்யாதி. ஆகாஶம் ஸாவயவமா கையாலே பரமாணுஸங்காதாத்மகமா யிருக்கும். கரந்தவென்றும் - ஸூக்ஷ்மமாய், சில் என்றும் ஸூக்ஷ்மமாய், இடமென்று - ஶரீரமாய், அத்யல்பஶரீரந்தோறு மென்றபடி. இதின் சரமாவதி-**இமையோடு இமை** இத்யாதி. **இமை** - பக்ஷ்ம. **மிளிருகை** - ப்ரகாஶிக்கை. எங்கும் பரந்துளனென்று - பஹிர்வ்யாப்தியுஞ் சொல்லுகிறது. 'நித்யம் விபும்' 'ஏஷோऽணுராத்மா' இத்யாதியைப் பற்ற, 'விபுத்வத்தையும் அணுத்வத்தையும்*

த்வத்தை இவனுக்குச் சொல்லி, இதுக்குள்ளே அவன் குறைவற வ்யாபித்திருக்குமென்றால், அதுகூடுமோ? என்னில்,—[இவையுண்டகரனே]-சிறுவடிவைக்கொண்டு பெரியவற்றையெல்லாந் தன்வயிற்றிலே வைத்தால் * "தயிருண்டபொன்வயிறு இவ்வேழுலகுமுண்டு மிடமுடைத்தால்" என்கிறபடியே பின்னையும் அவ்வயிறே இடமுடைத்தாம்படி யிருக்கவல்ல ஸர்வஶக்தி, சிறியவற்றிலே குறைவற இருக்கமாட்டானோ? என்கிறார். [கரன்] - இப்படி ஸூத்ருடப்ரமாண ஸித்தன். இவையுண்ட கரன் - பரந்ததண்பரவையுள் நீர்தோறும் பரந்தவண்டமிதெனப் பரந்துளன்; நில விசும்பொழிவறப் பரந்துளன்; கரந்தசிலிடந்தோறுமிடந்திகழ்பொருள்தோறும் எங்குங்கரந்து பரந்துளன் என்று அந்வயம். (கo)

## பதினோராம் பாட்டு.

கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை
வரனவில்திறல்வலி யளிபொறையாய்நின்ற
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல்
நிரனிறையாயிரத்து இவைபத்தும்வீடே.

ஆ.—(கரவிசும்பு.) லீலோபகரணபோகோபகரணோபயவித விபூதி விஶிஷ்டனை எம்பெருமானை ப்ரதிபாதிக்கிறது இத்திருவாய்மொழி யென்கிற இப்பொருளை ஔசித்யத்தாலே அவன் திருவடிகளை ப்ரதிபாதிக்கிறது என்கிறார்; இத்திருவாய்மொழியின் சொற்களினழகையும், ஸந்தர்ப்பத்தினழகையும், பொருளின் சீர்மையையும், இசையினழகையும், இச்சேர்த்திகளினுடைய நிரதிஶயப்ரேமகர்ப்பத்வத்தையும், இவை பொய்யில்பாடலா யிருக்கிறபடியையும் பார்த்து, இப்படியாலே தமிழர் இசைகாரர் பத்தர் பரவும்படி நிரதிஶய கல்யாணமா யிருப்பன எம்பெருமானுக்கு இப்பர்யந்தமாக வேணு மென்று தம்முடைய அபிநிவேஶத்தாலே ஆயிரமென்று அருளிச்செய்கிறார்.

ஒ.—நிகமத்தில், ஸமஸ்தகல்யாண குணாகரனாய், நிரவதிகக்ருபாம்போதியாய், தனக்கு ஸத்ருஶமான திவ்யதேஹத்தையு முடையனாய், ஹேயப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வங்களாலே சேதநாசேதநங்களிற்காட்டில் அத்யந்த விலக்ஷண ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனுமாய், ஸ்வாதீநமான அஶேஷ சிதசித்ஸ்வரூபஸ்த்திதி சேஷ்டைகளையு முடையனாய், ஸமஸ்தஜகத்தையும் ஶரீரதயா ஶேஷமாக வுடையனாய், அப்ரதிபக்ஷமாம்படி வேதப்ரதிபாத்யனாய், வேதங்களில் பராகச்சொல்லுகிற ருத்ராதிகளுக்கும் பரனாய், 'ப்ரமாணமு மில்லை. ப்ரமேயமு மில்லை' என்கிற ஶூந்யவாதிகளால் அவிசால்யமான தன்மையை யுடையனாய், பரமாணுக்கள் தோறும் புக்கு அணுதரனாய் வ்யாபிக்கவல்லனாய், ஶ்ரிய:பதியாய், நாராயணனை ஸர்வேஶ்வரனை தத்ப்ரஸாதலப்தையான ஜ்ஞாந த்ருஷ்டியாலே ஸாக்ஷாத்கரித்து, தத்நுபவஜநித ஹர்ஷப்ரகர்ஷத்தாலே தனக்குத்தானே பிறந்து இவனுடைய ஏவம்வித பரத்வ ப்ரதிபாதகமாய், ஶப்தச்சேர்த்தியையும்

---

சொல்லி' என்றது. இவை - ப்ரத்யக்ஷமானவை. 'இவையுண்ட' என்கிற மாத்ரத்துக்கு பாவம் - சிறுவடிவை இத்யாதி. தயிர் இத்யாதி - தயிரையுண்ட ஸ்ப்ருஹணீயமான வயிறானது இந்தஸப்தலோகங்களையும் புஜித்தும் பின்னையும் அவகாஶமுடைத்தாயிருக்கும்; ஆல் - ஆஶ்சர்யம். கரன் - வரன்: த்ருடன்; த்ருடப்ரமாணஸித்த னென்றபடி. பாட்டுக்கு அந்வயம் - இவையுண்ட இத்யாதி. (கo)

---

* திருமொழி - கக, ஓ, ரு.

அர்த்தபௌஷ்கல்யத்தையு முடைத்தா யிருந்துள்ள இப்பத்தும் எம்பெருமான் திருவடிகளிலே பரிசர்யாரூபமாகப் பிறந்தன என்கிறார்.

[கரவிசும்பென்று தொடங்கி] - ஸஸ்வபாவமான பூதபஞ்சகங்களையும், தது பலக்ஷித மான கார்யவர்க்கநித்யவிபூத்யாதிகளையு முடையனாகையாலே ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே. கரவிசும்பென்னுமிடத்துக்கு அல்லாத பூதங்களிற்காட்டில் அச்சதயா கரந்திருக்கை யென்றுஞ் சொல்லுவர்; திண்மை சொல்லிற்றாகவுமாம். நிரனிறை யென்கிற இடத்துக்கு - அர்த்தபௌஷ்கல்யமும் ஶப்த பௌஷ்கல்யமும். "வாச்யவாசகஸம்ஶ்லேஷ ஸௌஷ்டவம்" என்றாற்போலே சொல்லும் பொருளும் இசையுந் தாளமும் அந்தாதியும் அடைவே நிறுத்தப்படுகை யென்றுஞ் சொல்லுவர். பரனடிமேற்சொன்ன இவ்வாயிரத்து இப்பத்தும் மோக்ஷப்ரத மென்றுஞ் சொல்லுவர்கள்.

ப.—அநந்தரம், கீழுபபாதித்த பரத்வத்தை நிகமியாநின்றுகொண்டு இத்திருவாய்மொழிக்கு பலம் மோக்ஷமாக அருளிச்செய்கிறார்.

கரம் - (ஸூக்ஷ்மமாகையாலே) கரத்தலையுடைய, விசும்பு - ஆகாஶம், எரி - அக்நி, வளி - வாயு, நீர் - ஜலம், நிலம் - பூமி, இவைமிசை - இவற்றை ஆஶ்ரயமாகவுடைத்தாய் இவற்றுக்கு ஸ்வபாவங்களாயுள்ள, வரன் - ஶ்ரேஷ்டமான, நவில் - ஶப்தம், திறல் - தாஹகத்வம், வலி - பலம், அளி - தண்ணளியான குளிர்த்தி, பொறை - தாரகத்வம், ஆய் நின்ற - இத்தர்மிகளோடு தர்மங்களோடு வாசியறத் தனக்கு ப்ரகாரமாம்படிநின்ற, பரன் - ஸர்வஸ்மாத்பரனுடைய, அடிமேல் - துயரறுசுடரடிவிஷயமாக, குருகூர்ச் சடகோபன் - திருநகரியைப் பிறப்பிடமாகவுடையராய் ஶடரான பாஹ்யகுத்ருஷ்டிகளை வெல்லும் ஸ்வபாவரான ஆழ்வார், சொல் - அருளிச் செய்ததாய், நிரனிறையாயிரத்து - (சொல்லும் பொருளும் இயலும் இசையும் தாளமும் அபிநயமும் ஒன்றுக்கொன்று சேருகையாலே) நிரந்து நிறைந்த ஆயிரத்து, இவைபத்தும் - பரத்வப்ரதிபாதகமான இவைபத்தும், வீடே - (பரனடிமேல்) விடப்பட்டன; ஸமர்ப்பிக்கப் பட்டன வென்றபடி.

இவைபத்தும் வீடான மோக்ஷத்தைக் கொடுக்கையாலே 'வீடு' என்று காரணத்திலே கார்யோபசாரமாகவுமாம். 'வால்மீகிர்பகவாந்ருஷி:' என்று அநுபவத்தாலும் ஜ்ஞாநாதிவைபவத்தாலும் அவனுக்குப் பூர்த்திசொன்னாற்போலே 'குருகூர்ச்சடகோபன்' என்று ப்ரபந்த கர்த்தாவான ஆழ்வாருடைய ஆப்தி சொல்லுகிறது. 'நிரனிறை' என்று அடைவேநிறைந்த வென்றுமாம். 'ஆயிரம்' என்கிற ஸங்க்யாநிர்த்தேஶத்தாலே கர்த்தாவான இவருடைய பகவதநுபவம் ஸூசிதமாகிறது. இத்திருவாய்மொழி நாற்சீராய் அளவடி நான்கும் ஒத்திருக்கையாலே கலிவிருத்த மென்பது.

இ.—நிகமத்தில், இப்படி உபயவிபூதிநாதத்வமான பரத்வத்தை ப்ரதிபாதித்த இப்பத்தும் எம்பெருமான்திருவடிகளிலே பரிசர்யாரூபமாகப் பிறந்தன என்கிறது.

[கரவிசும்பு] - த்ருடமான விசும்பு. ஸூக்ஷ்மமான ஆகாஶம். [எரிவளிநீர்நிலம்]- இந்தப் பூதங்களைந்தும் நித்யவிபூதிக்கும் ஸ்வகார்யமான அண்டாதிகளுக்கும் உபலக்ஷணம். [இவைமிசை வரனவில் திறல்வலியளிபொறை] - இந்த பூதங்களின் ஸ்வபாவமான, [வரனவில்]- இவ்வாகாஶ குணமாய் வரிஷ்டமான ஶப்தம். [திறல்]-அக்நியினுடைய ஸ்வபாவமான தாஹகத்வஶக்தி. [வலி]-வாயுவினுடைய ஸ்வபாவமான பலம். [அளி]-ஜலத்தினுடையஶைத்யத்தாலே வந்த தண்ணளி. [பொறை] - பூமியினுடைய ஸ்வபாவமான க்ஷமை. [ஆய்நின்றபரன்] - இந்த

உபயவிபூதியையும் ஶரீரவத்ப்ரகாரமாக வுடையனாகையாலே ஸர்வஸ்மாத்பரன். [அடிமேற் குருகூர்ச்சடகோபன்சொல்] - திருவடிகளிலே பரிசர்யாரூபமாக அருளிச்செய்தது. "வால்மீகி ர்பகவாந்ருஷிः" என்னுமாபோலே தம்முடைய ஆப்தியைத் தாமே அருளிச்செய்கிறார். [நிர னிறை] - ஶப்தபௌஷ்கல்யமும் அர்த்தபௌஷ்கல்யமும். சொல்லும் பொருளும் இசையுந் தாள மும் அந்தாதியும் அடைவே நிற்கப் பாடுகை யென்னவுமாம். [இப்பத்தும் பரனடிமேல்வீடு] - ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கப்பட்டது. [இப்பத்தும் வீடு]-மோக்ஷப்ரத மென்ன வுமாம். 'இச்செய்யடைய நெல்' என்னுமாபோலே மோக்ஷமென்றது - மோக்ஷப்ரத மென்றபடி.

ஈடு.—நிகமத்தில், முதற்பாட்டிலே கல்யாணகுணயோகத்தையும் நித்யவிபூதி யோகத்தையும் விக்ரஹ வைலக்ஷண்யத்தையும் சொல்லி, இரண்டாம்பாட்டிலே இவற் றுக்கு ஆஶ்ரயமான திவ்யாத்ம ஸ்வரூபம் சேதநாசேதநவிலக்ஷண மென்றும், மூன்றாம்பாட் டிலே நித்யவிபூதியோபாதி ததீயத்வாகாரத்தாலே அவனுக்கு அந்தரங்கமாய்த் தோற்றுகிற லீலாவிபூதி யோகத்தை அநுபவித்தார்; நாலாம்பாட்டிலே அந்த லீலாவிபூதியினுடைய ஸ்வரூபம் அவனதீந மென்றார்; அஞ்சாம்பாட்டிலே அதினுடைய ஸ்த்திதியும் அவனதீநை யென்றார்; ஆறாம்பாட்டிலே ப்ர வ்ருத்தி நிவ்ருத்தியும் பகவததீந மென்றார்; ஏழாம்பாட்டிலே ஶரீரஶரீரிகளுக்கு உண்டான லக்ஷ ணம் ஜகத்துக்கும் ஈஶ்வரனுக்கும் உண்டாகையாலே இதுக்கும் அவனுக்குஞ் சொன்ன ஐக்யத் துக்கு நிபந்தநம் ஶரீராத்மபாவ மென்றார்; எட்டாம்பாட்டிலே குத்ருஷ்டிகளை நிரஸித்தார்; ஒன்ப தாம்பாட்டிலே ஶூந்யவாதியை நிரஸித்தார்; பத்தாம்பாட்டிலே வ்யாப்தி ஸௌகர்யத்தை அருளிச் செய்தார்; இப்படிகளாலே அவனுடைய பரத்வத்தை நிஷ்கர்ஷித்தாராய் நின்றார் கீழ்; இத்திருவாய் மொழியில் அந்வயித்தவர்களுக்குத் தாம் பெற்ற பேறே பேறென்னுமிடத்தை அருளிச்செய்கிறார்.

[கரவிசும்பு] - கரமான விசும்பு; த்ருடமான விசும்பென்றபடி. அன்றியே, [கரவிசும்பு]- கரந்த விசும்பு; அச்சமான விசும்பென்னுதல். "அத்ருஶ்யோऽவ்யக்த" என்று நிரூபிக்கவேண் டும்படியாயிருக்குமிறே. [எரி]-தேஜஸ்தத்த்வம். [வளி]-காற்று. [நீர்]-ஜலம். [நிலம்]-பூமி. [இவை மிசை] - இவற்றின்மேலேயுண்டான. [வரன்] - வரனான; ஶ்ரேஷ்டமான. [நவில்] - வரிஷ்ட மான ஶப்தம், அக்நியினுடைய தாஹகத்வஶக்தி, காற்றினுடைய மிடுக்கு, ஜலத்தினுடைய தண் ணளி, பூமியினுடைய பொறை. இப்படி ஸஸ்வபாவமான பூதபஞ்சகங்களையுஞ் சொல்லி, இத் தாலே லீலாவிபூதியைச் சொல்லிற்றாய், ரஜஸ்தமஸ்ஸுக்களைக் கழித்து நிஷ்க்ருஷ்ட ஸத்த்வமேயா யிருக்குமிறே நித்யவிபூதி; அதுக்கும் இதுதானே உபலக்ஷணமாய், ஆக, உபயவிபூதி யுக்தனாயிருக்கிற ஸர்வஸ்மாத்பரன் திருவடிகளிலே. [இவைபத்தும் பரனடிமேல்வீடு] - அவன்திருவடிகளிலே விடப் பட்டன; ஸமர்ப்பிக்கப்பட்டன. [குருகூர்ச்சடகோபன்] - "**வால்மீகிர்பகவாந்ருஷிः**" (வால் மீகிர்ப்பகவாந்ருஷிः) என்னுமா போலே ஆப்திக்கு உடலாக அருளிச்செய்கிறார். நிரல்நிறை என்

---

*நிகமத்தில் - கரவிசும்பு இத்யாதி. ஶ்ரோத்ருபுத்தி ஸமாதாநார்த்தமாகப் பாட்டுக்களில் அர்த்தங்களை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார் - முதற்பாட்டிலே இத்யாதி. தாம்பெற்றபேறே பேறென்றது - 'அவாவற்று வீடுபெற்ற' என்று தாம் பெற்ற பேறென்றபடி; "தொழுதெழென்மனனே" என்று உபக்ரமித்து 'நணுகினம் நாமே' என்றதாதல்.*

*'த்ருடமான' என்ற தாத்பர்யம் - சிரகால வர்த்திஷ்ணுவாதல். ப்ரமாணதாத்பர்யமாதல். அச்சமானபடி யென்? என்ன, அத்ருஶ்யோऽவ்யக்த இத்யாதி. இவற்றின்மேலேயுண்டான-இவற்றினுடைய குணங்களான வென்றபடி. 'ரஜஸ்தமஸ்ஸுக்களைக்கழித்து' இத்யாதியாலே விஶேஷித்தது-ப்ராக்ருதமண்டலத்துக்குள்ளே நித்யவிபூதியென்கிற யாதவப்ரகாஶமதவ்யாவ்ருத்திக்காக. "தமஸஃ பரஸ்தாத்", "ஆதித்யவர்ணம் தமஸः பரஸ்தாத்" என்னக்கடவதிறே. ஸ்வப்ரஶம்ஸை பண்ணலாமோ? என்ன, வால்மீகிः இத்யாதி. பாலகாண்டே சதுர்த்தே "ப்ராப்தராஜ்யஸ்ய ராமஸ்ய வால்மீகிர்பகவாந்ருஷிः। சகார சரிதம் க்ருத்ஸ்நம் விசித்ரபதமாத்மவாந்*

னுதல், நிரன்நிறையென்னுதல்; *நிரல்நிறை என்றபோது - ஶப்தங்களும் நிறைந்து, அர்த்தங்களும் புஷ்கலமாயிருக்கை. நிரன்நிறை என்றபோது - நேரே நிறுத்தப்படுகை. "[illegible]" (ப்ரமாணஸ்த்ரிபிரந்விதம்) "[illegible]" (பாதபத்தோக்ஷரஸமஸ்தந்த்ரீலயஸமந்விதஃ) என்கிறபடியே லக்ஷணங்களிற் குறையாமே, எழுத்தும் சொல்லும்பொருளும் அந்தாதியும் க்ரமத்திலே நிறுத்தப்படுகை. [ஆயிரம்]-"[illegible]" (காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம்ஸீதாயாஶ்சரிதம்மஹத்) என்னுமாபோலே மயர்வறமதிநலமருளப்பெற்றவ ராகையாலே மேலுள்ளதடையத் தோற்றுநின்றது; [illegible], அடைவேசொல்லுமத்தனையாகையாலே 'ஆயிரம்' என்கிறது. அன்றிக்கே, ஆயிரமுஞ்சொல்லியல்லது நிற்கவோண்ணுத விஷயஸ்வபாவத்தாலே சொல்லுகிறாராதல். [இவை பத்தும் வீடே] - இவைபத்தும் பரனடிமேல் விடப்பட்டன வென்னுதல்; அன்றிக்கே, 'இச்செய்யடைய நெல்' என்றால் நெல்லைவிளைக்குமதென்று காட்டுமோபோலே, இவைபத்தும் வீடென்றது - வீட்டை விளைக்குமென்றபடியாய், மோக்ஷப்ரத மென்கிறாராதல். பகவத்ப்ரஸாதத்தாலே தமக்குப்

ப்ர:—(நிரனிறை) [illegible]

வாநு". "[illegible]" [illegible] "[illegible]" இதி. முந்தின அர்த்தத்தில், நிரல், நிறை என்று இரண்டும் பௌஷ்கல்யபரம்; இரண்டாமர்த்தத்தில் நிரன் என்று - நேராய், நிறை என்று - நிறுத்தப்படுகை. நேரே - க்ரமத்திலே. விவரணம் - [illegible] இத்யாதி. [illegible] "[illegible]". அப்படி தோற்றினால் ஒருகாலே சொல்லலாகாதோ வென்ன, [illegible] இத்யாதி. ப்ரதமநிர்வாஹவிவரணம் - அன்றிக்கே இத்யாதி. 'இவைபத்தும்வீடு' என்றதுக்கு "[illegible]" என்றத்தைக் கண்டுகொள்வது. முதற்பாட்டில் அர்த்தத்தோடே இப்

* ஸரியானபாடம் கோஶாந்தரங்களிலே கண்டுகொள்வது.

பரத்வஜ்ஞாநம் பிறந்தபடியையும், அந்த ஜ்ஞாநத்துக்கு பலம் மோக்ஷமென்னுமிடத்தையும், இப்ப்ரபந்தத்தில் ஏதேனும் ஒருபடி அந்வய முடையார்க்கு பலம் தம்முடைய பலமென்னு மிடத்தையும் அருளிச்செய்கிறார். (கக)

---

பாட்டில் அர்த்தத்தைச் சேர்த்து நிகமிக்கிறார் - பகவத்ப்ரஸாத இத்யாதி. 'காவிசும்பு' என்று தொடங்கி 'ஆய்நின்றபரன்' என்றதைப் பற்ற, பரத்வஜ்ஞாநம்பிறந்த படியையும் என்றது. 'இவைபத்தும்வீடு' என்கையாலே, அந்தஜ்ஞாநத்துக்கு பலம் மோக்ஷமென்னுமிடத்தையும் என்றது. 'இவைபத்தும்' என்கையாலே, இப்ப்ரபந்தத்தில் ஏதேனும் இத்யாதி. இப்ப்ரபந்தத்தில்-இத்திருவாய்மொழியிலே. க்ரமேண அந்வய: (கக)

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.** — தத்ராதிமே தேஶகாலாதிகைவல்யாத்யதிலோக்யஸம்பத்ஸம்ப்ரவணாவ்ருதி ...

**த்ரவிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி.** — ...

| | |
|---|---|
| **திருவாய்மொழி நூற்றந்தாதி.** | உயர்வேபரன்படியையுள்ளதெல்லாம்தான்கண்டு<br>உயர்வேதநேர்கொண்டுரைத்து—மயர்வேதும்<br>வாராமல்மானிடரைவாழ்விக்கும்மாறன்சொல்<br>வேராகவேவிளையும்வீடு. |

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## இரண்டாந்திருவாய்மொழி—வீடுமின் : ப்ரவேஶம்.

ஆ.—(வீடுமின்முற்றவும்.) இப்படி பரமபுருஷ யாதாத்ம்யாநுபவ ஜநித நிரவதிக ப்ரீதியானது ஸகவதேகஹோகா யிருப்பார் பலரோடேகூட ஸகவத்ஸ்வரூப ரூபகுணசேஷ்டித விபவங்களைச் சொல்லியும் கேட்டும் அநுபவிக்கவேணுமென்னும் அபேக்ஷையைப் பிறப்பிக்கையாலே அந்த அபேக்ஷாநுகுணமாக அநுபவிக்கைக்கு இந்தலோகத்திலாத்மாக்களில் ஸகவதேகஹோகா யிருப்பா ரில்லாமையாலே 'இவர்களை ஸகவதேக ஹோகாக்கிக்கொண்டாகிலும் அநுபவிக்கவேணும்' என்று இந்த ஆத்மாக்களைக்குறித்து ஸகவதேகஹோகத்வோபாயமான ஸக்தியோகத்தை ஸகவத்வ்யதிரிக்தவிஷய வைராக்யபூர்வகமாக உபதேஶிக்கிறார்.

ஒ.—இரண்டாந்திருவாய்மொழியில், இப்படி எம்பெருமானுடைய பரத்வத்தை அநுஸந்தித்த ஆழ்வார், அவ்வநுபவஜநித ஹர்ஷப்ரகர்ஷத்தாலே "...." என்னும் படியாலே சிலரோடே உசாவியல்லது பூரிக்கமாட்டாத தமைய வருகையாலும், அதுக்கீடானரைக் காணாமையாலும், எல்லாரையும் தமக்குப் பாங்காம்படி திருத்தியாகிலும் அவர்களோடேகூட எம்பெருமானை அநுபவிக்க நினைத்து, அவர்களைத் திருத்தும் விரகு எங்ஙனே? என்று பார்த்தருளி, 'சேதநராகிறார் - பொல்லாதது கண்டால் கைவிடவும், நல்லது கண்டால் கைக்கொள்ளவுங்

கடவரா யிருப்பர்; ஆனபின்பு, அவர்கள்பற்றின நிலத்தில் பொல்லாங்குகளைக் காட்டிக்கொடுத்தும், பகவத்குணங்களுடைய நன்மையைக் காட்டிக்கொடுத்தும் இவர்களைத் திருத்துவோம்' என்று இவர்கள் பற்றின நிலங்களினுடைய அஸ்த்திரத்வாதி தோஷங்களை உபதேசித்து, அகில ஹேயப்ரத்யநீகனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் ஸர்வைஸ்ஸ்ப்ருஹணீயனான எம்பெருமான் படியையும், இவனைப்பற்றுமிடத்திலுள்ள அந்தராயபரிஹாரபூர்வகமாக மற்றும் பஜநத்துக்கு வேண்டும் உறுப்புக்களெல்லாம் உபதேசித்தருளி, இப்படி அவனை பஜியுங்கோ ளென்று பக்தி யோகத்தை அருளிச்செய்கிறார்.

ப.—இரண்டாந் திருவாய்மொழியில், இப்படி ஸர்வஸ்மாத்பரனானவனே ஆஶ்ரயணீயனாகையாலே ஆஶ்ரயணரூபமான பகவத்பஜநத்துக்கு உபயுக்தமான ததிதர ஸகலத்யாகத்தையும், பஜநப்ரகாரத்தையும், அஸ்தைர்யத்தையும், த்யாகப்ரகாரத்தையும், த்யாகபூர்வகமாக ஆஶ்ரயணீயனுடைய ஸ்வரூபவைலக்ஷண்யத்தையும், அதிஶயித புருஷார்த்தத்வத்தையும், ஸர்வஸமத்வத்தையும், விலக்ஷணஸ்வரூபமான ஆஶ்ரயணப்ரகாரத்தையும், தத்பலமான அநிஷ்ட நிவ்ருத்தியையும், ஆஶ்ரயணீயனுடைய அபிமதபலரூபத்வ பூர்த்தியையும் சொல்லிக்கொண்டு ஆஶ்ரயணரூப பஜநத்தைப் பரோபதேஶமுகத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—இரண்டாந்திருவாய்மொழியில், இப்படி எம்பெருமானுடைய பரத்வத்தை அநுபவித்தவர் அநுபவஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே "ஸோபயநதஃ வறஷூறஂ" பண்ணியல்லது தரிக்கமாட்டாத தஶை வருகையாலும், "வஊகஃவஸாஊ-ஂந ஹ-ஜீத" என்கிறபடியே தனியே அநுபவிக்கும் விஷயமல்லாமையாலும், இவர்தாம் தனியே அநுபவிக்க க்ஷமரல்லாமையாலும், துணைதேடி அதுக்கீடானாரை ஸம்ஸாரத்தில் காணாமையாலே 'எல்லாரையுந் திருத்தி யாகிலும் அவர்களோடே அநுபவிப்போம்' என்று நினைத்து, 'திருத்தும் விரகு எங்ஙனே?' என்று பார்த்தருளி, 'சேதநராகிறார் - பொல்லாதது கண்டால் கைவிடுகையும், நல்லது கண்டால் கைக்கொள்ளவுங் கடவர்களாயிருப்பர்கள்; ஆனபின்பு, ஸம்ஸாரத்தின் தன்மையைக் காட்டியும், பகவத்விஷயத்தின் நன்மையைக் காட்டியும், திருத்துவோம்' என்று பார்த்தருளி, இவர்களுக்கு ஸம்ஸாரத்தினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷங்களையும், ஸர்வராலும் ஸ்ப்ருஹணீயனான எம்பெருமான் படியையும் உபதேசித்தருளி, அவனை பஜியுங்கோ ளென்று பக்தியோகத்தை அருளிச்செய்கிறார்.

ஈடு.—(வீடுமின் முற்றவும்.) தத்த்வபரமாயும் உபாஸநபரமாயுமிறே மோக்ஷஶாஸ்த்ரந்தானிருப்பது; அதில் தத்த்வபரமாகச் சொல்லவேண்டுவதெல்லாஞ் சொல்லிற்று, கீழில் திருவாய்மொழியிலே; உபாஸநபரமாகச் சொல்லவேண்டுமவற்றுக்கெல்லாம் ஸங்க்ரஹமாயிருக்கிறது, இத்திருவாய்மொழி. இத்திருவாய்மொழிதன்னை ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் ப்ரபத்திவிஷயமாக்கி நிர்வஹித்துக்கொண்டு போந்து, எம்பெருமானாரும் அப்படியே அருளிச்செய்துகொண்டு போந்து, பாஷ்யம் தலைக்கட்டினபின்பு பக்திவிஷயமாக அருளிச்செய்துகொண்டுபோருவர். பின்பு எம்பாரும் அப்படியே அருளிச்செய்தார். இவருடைய பக்திப்ரபத்திகள்தான் விகல்பிக்கலா

---

வீடுமின்முற்றவும் ப்ரவேஶே-கீழில்திருவாய்மொழியோடு இத்திருவாய்மொழிக்கு இரண்டு விதமாக ஸங்கதி. அதில் வேதாந்தஶாஸ்த்ரப்ரக்ரியயா ஸங்க்ஷேபேண முந்தின ஸங்கதி - தத்த்வபரமாயும் என்று தொடங்கிப் பிறர்க்கு உபதேஶிக்கிறாராகவமையும் என்னுமளவும். கீழ் தாம் அநுபவித்தார், இதில் பரோபதேஶம் பண்ணுகிறாரென்று விஸ்தரேண இரண்டாம் ஸங்கதி - கீழில் திருவாய்மொழியிலே என்றுதொடங்கி. மோக்ஷஶாஸ்த்ரமான வேதாந்தஸூத்ரம் நாலத்யாய மாகையாலே அதுக்குப் பூர்வத்விகமென்றும் உத்தரத்விகமென்றும் இரண்டுவகையான பிரிவுண்டென்று திருவுள்ளம்பற்றி, அவற்றிற்சொல்லுகிற ப்ரமேயங்களை அரு

யிறே யிருப்பது; "மயர்வறமதிநலமருளினன்" என்று இவர் தாம் பெற்றது ஸத்திருபாபங்ஙஜ்ஞாநமா யிருந்தது: தாம்பெற்ற தோன்றும், பிறர்க்கு உபதேஶிப்ப தோன்றுமாக வோண்ணுதே; அப்போது

---

ளிச்செய்கிறுர் - தத்த்வபரமாயும் இத்யாதி. தத்த்வபரமாயும் உபாஸநபரமாயுமிறே யென்றது - "ஸ்வஶேஷாஶேஷ நிர்வர்த்திக நிவ்ருத்யாபஹிரா ஹதாநாந்த்ரதாபஃஹர்ஷிதஶாரீரகஃ! ஶ்ரியஃபதஸ்வயீ: தத்த்வஸத்ருதாவஸஶநீதிஷிதோதிஸ்தத்ராவிதயதிர்த்ராநிர்ந: " என்று சதுஶ்ஶ்லோகீ வ்யாக்யாநோபக்ரமத்தில் பிள்ளை அருளிச்செய்தபடியே ஸமந்வய அவிரோத ஸாதந பலரூப அர்த்தப்ரதிபாதக அத்யாய சதுஷ்டயாத்மகமான வேதாந்தஶாஸ்த்ரந்தான் பூர்வத்விகத்தாலே தத்த்வப்ரதி பாதகமாயும், உத்தரத்விகத்தாலே உபாஸநப்ரதிபாதகமாயு மிறே இருப்ப தென்றபடி. உபாஸநபரம் - உபாய பரம். பூர்வத்விகத்தில் ப்ரதிபாதித்த ப்ரமேயங்கள் - ஸர்வவேதாந்த வாக்யங்களும் ப்ரஹ்மத்தினிடத்திலே நன்ருகச்சேரு மென்னுமதுவும், அப்படி நிர்ணயித்த வஸ்துவுக்கு பாஹ்யகுத்ருஷ்டிகளால் ஒருபாதை யில்லாமை யும், இரண்டத்யாயத்துக்கும் ஸமந்வயமென்றும் அவிரோதமென்றும் பேர். அதில் முதலேழுபாட்டாலே ஸமந்வயாத்யாயத்தில் அர்த்தஞ்சொல்லப்பட்டது; "சுராறி", "உளனெனில்" என்கிற இரண்டுபாட்டாலும் பாஹ்ய குத்ருஷ்டிகளால் வரும் பாதையில்லாமை சொல்லப்பட்டது; இது அவிரோதாத்யாயார்த்தம். உத்தரத்விகத் துக்கு, ஸாதநாத்யாயமென்றும், பலாத்யாயமென்றும் பேர். ஸமந்வயாவிரோதப்ரதிபாதகமான பூர்வத்விகம் தத்த்வபரம்; உபாயபலப்ரதிபாதகமான உத்தரத்விகம் - உபாயபர மென்றபடி. பலபரத்தையும் உபாயபரமென் றது - பலம் உபாயஸாத்யமாகையாலே. "நாநாஶப்தாதி பேதாத் வித்யாபேதநஹஜநே ஸர்வவிதே ஸர்வத்ரைகாரோ:" என்று வேதாந்தவிஹிதோபாயம் த்விவிதமாகையாலே எந்த உபாயத்தை இத்திருவாய் மொழி சொல்லுகிறதென்ன, இத்திருவாய்மொழிதன்னை இத்யாதி. இத்தால் ப்ரபத்த்யுபாயத்தைச் சொல்லு கிற தென்றபடி. தலைக்கட்டினபின்பு இத்யாதி: ப்ரபத்தி, வேதகுஹ்யமான ரஹஸ்யோபாய மாகையாலே உபக்ரமத்திலே வெளியிட வொண்ணு தென்று ப்ரபத்த்யபர்யாயமான ஸாத்யபக்தியாலே மறைத்து அருளிச் செய்துகொண்டு போந்தா ரென்றபடி. பக்தி - ஸாத்யபக்தி. அதாவது - ப்ரபத்தி. "ஸாத்யபக்திஸ்து ஸா ஹந்த்ரீ" என்னக்கடவதிறே. "திண்கழல்சேர்" என்றது - ப்ரபத்திபரதைக்கு ஸூசகம்; "புல்குபற் றற்றே" என்றது - பக்திபரதைக்கு ஸூசகம். யத்வா, 'பாஷ்யந் தலைக்கட்டினபின்பு' இத்யாதிக்கு - பாஷ்யத் திலே விவேகாதிஸாதநஸப்தகஸமதமாத்யங்ககத்வம் உபாஸநத்துக்கே யென்று 'ஆஹாரஶுத்தௌ ஸத்த்வஶுத்திஃ' "ஶாந்தோ தாந்த உபரத:"இத்யாதி வாக்யங்களை யிட்டு நிர்ணயிக்கையாலே, ப்ரபத்திக் குத் ததங்கத்வம் திருவுள்ளமல்லவிறே; ஆகையாலே, "வீடுசெய்து வீடுசெய்மின்" என்கிற வாக்யத்தாலே "ஸர்வகர்மாணி ஸந்த்யஜ்ய" என்னுமாபோலே அங்காங்கிபாவம் தோற்றுகையாலும், "ஆறெனக்கு நின்பாதமே சரணாக","அடிக்கீழமர்ந்துபுகுந்தேனே" என்கையாலே ப்ரபந்நஜந கூடஸ்த்தராக அத்யவஸிதரான இவர் ப்ரபந் நரோ? பக்தரோ? என்று ஸம்ஶயிக்கும்படி விஷயாந்தரவைத்ருஷ்ண்ய பரிஷ்க்ருதையான பக்தியை "மயர்வற மதிநலமருளினன்" என்கையாலே அவன்க்ருபையாலே உடையராயிருக்கையாலும், இவருடைய ப்ரபத்தி வைராக்யஸஹசரிதையாகையாலும், இவருடைய உக்த்யநுஷ்டாநங்களாலே ஶமதமாத்யங்ககையா யிருக்குமென்று ஶங்கிக்க வருமென்று திருவுள்ளம்பற்றி, ப்ராப்யபக்தி பரமாக நிர்வஹித்தருளினு ரென்றபடி. பித்தோபஹத னுக்கு நாக்கில் தீற்றிப் பித்தத்தைப்போக்கிப் பாநம்பண்ணுவிக்கிலிறே க்ஷீரம் ரஸிப்பது; ஆகையாலே, "வீடு செய்துவீடுசெய்மின்" என்கிறதென்றும், இவருடைய வைராக்யம் விஷயதோஷதர்ஶநத்தால் வந்ததித்தனை யென்றும் கருத்தென்று திருவுள்ளம். ஒன்றில் பக்திபரமாகவேணும், இல்லாவிட்டால் ப்ரபத்தி பரமாகவேணு மொழிய, நினைத்தபடி நிர்வஹிக்கக்கூடுமோ? என்ன, இவருடைய இத்யாதி. அதாவது - ஆழ்வாருடைய ப்ர பத்தி பக்திபாரவஶ்யத்தாலே வந்ததாகையாலே கார்யகாரணங்களை அபேதேந வ்யவஹரிக்கலாமென்று கருத்து. இவர்க்கு பக்தியுண்டோ? என்ன, மயர்வற இத்யாதி. அன்றியே, ஸாதநபக்தியை உபதேசிக்கிறுரானுலோ? என்ன, மயர்வற இத்யாதி என்னவுமாம். தாம்பெற்றது ஸாத்யபக்தியானுலும் பிறர்க்கு ஸாதநபக்தியை உப

விப்ரலம்பககோடியிலேயாவரே. "**உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய**" (உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய) என்கிறபடியே கர்மஜ்ஞாந ஸம்ஸ்க்ருதாந்த: கரணனுக்குப் பிறக்குமதிறே பரபக்தி; அந்த ஜ்ஞாந கர்மங்களினுடைய ஸ்த்தாநே பகவத்ப்ரஸாதமாய், அதடியாக அநந்தரம் விளைந்ததிறே இவருடைய பக்திதான். இதுதான் வேதாந்தவிஹிதையான பக்திதானேயானலோ? என்னில்; - ஸர்வேச்வரன் அருள இவர் பெற்றுராகிற ஏற்றம் போம்; அபசூத்ராதிகரண ந்யாயமும் ப்ரஸங்கிக்கும்; ஆன

---

ப்ர:—(அபசூத்ராதிகரணந்யாயமும் ப்ரஸங்கிக்கும்)-உத்தரமீமாம்ஸாயாம் ப்ரதம அத்யாயஸ்ய த்ருதீயபாதே "சுகஸ்ய ததநாதரச்ரவணாத் ததாத்ரவணாத் ஸூச்யதே ஹி" [ஸூ-௩௩]. அஸ்யார்த்தோ பாஷ்யகாரேணாபிஹித:—ப்ரஹ்மவித்யாவைகல்யேந ஹம்ஸவாக்யாநாதரச்ரவணாத், ததைவாவாயாநம் ப்ரத்யாத்ரவணாச், சுவாயேத்ரவணாத்ஸ்ய சூத்ரசிஷோ விதூர்ஜ்ஜாஹகோதா சூத்ர ஸூச்யதே ஹி. ஹி சப்த: ஹேதௌ. யஸ்மாதஸ்ய சுக் ஸூச்யதே, அதச்ரவணாத் சூத்ர இதி க்ருத்வா சுவாயேநா ரைக்வ: ஜாநச்ருதிம் சூத்ர இத்யாமந்த்ரயதே; ந ஜாதியோகேநேத்யர்த்த:. அஸ்ய

---

தேசிக்கிறானலோ? என்ன விப்ரலம்பக இத்யாதி. கர்மஜ்ஞாநங்களடியாகவன்றோ பக்தியுண்டாம்; இவர்க்கு பக்தி வந்தபடியென்? என்ன, உபயபரிகர்மித இத்யாதி. ஆத்மஸித்தௌ யாமுநாசார்ய வசநம் - "உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்யைகாந்திகாத்யந்திகபக்தியோகலப்ய:" இதி. அஸ்யார்த்த: - கர்மஜ்ஞாநங்களிரண்டாலும் அலங்க்ருதமான ஸ்வாந்த:கரணத்தை யுடையவனுக்கு ஒரு விஷயத்திலே நியதமாயிருப்பதாய் நித்யமாயிருக்கிற பக்தியோக மொன்றாலும் லப்ய னென்றபடி. அநந்தரம் - அநந்தரக்ஷண ஏவ. அநந்தரம் விளைந்ததாகையாலே ஸாத்யபக்தி யென்றபடி. விபர்யயே அநிஷ்டங்காட்டுகிறார் - இதுதான் இத்யாதி. இதுதான் - இவருடைய பக்திதான். "சார்வேதவநெறி" ப்ரவேசத்திற்படியே. ந்யாயம் ப்ரஸங்கிக்கும் - ந்யாய விரோதம் ப்ரஸங்கிக்கும். "சுவசூத்ர" இத்யாதி வாக்யத்தை முந்துற அநுஸந்தித்து, விதுராதிகளைப் போலே இவருடைய ப்ரபாவத்தாலே உபதேசிக்கக் கூடாதோ? என்ன, ஸர்வேச்வரனருள இத்யாதி என்று கண்டுகொள்வது. அபசூத்ராதி காணமாவது - "சுகஸ்ய ததநாதரச்ரவணாத் ததாத்ரவணாத் ஸூச்யதே ஹி" என்கிற அதிகரணத்திலே, ஜாநச்ருதியென்கிற ராஜா பஹ்வந்நப்ரதனுமாய் பஹுவித்தப்ரதனுமாயிருக்க, பல்ல பல்லாக்ஷரென்கிற இரண்டு ருஷிகள் இந்தராஜாவினிடத்தில் அநுக்ரஹத்தாலே 'சுஷ்கதர்மங்கொண்டு கார்யமில்லை, ப்ரஹ்மஜ்ஞாநமுண்டாகவேணும்' என்றெண்ணி இரண்டு ஹம்ஸரூபிகளாய் அந்த ராஜாவின்மேலே பறந்துகொண்டு போகிறவிடத்திலே பல்லாக்ஷனை பல்லனென்கிறவன் 'ஜாநச்ருதிமேலே நிழல்படாதபடி பேணிக்கொண்டுபோம்' என்ன, பல்லாக்ஷனென்கிறவன் 'நிழல்பட்டால் வந்ததேது? ரைக்வனைப்புகுகிறானோ?' என்று அநாதரம்பண்ணிக்கொண்டு போக, அத்தைக்கேட்டு ஜாநச்ருதி து:கிதனாய், ரைக்வனைத் தேடி, சிரங்குஞ் சொறிந்துகொண்டு கார்ப்பண்யத்தோடே ப்ரச்சந்நபாவனாயிருக்கிற அவனைக் கண்டு அநுவர்த்தித்து 'ப்ரஹ்மவித்யையை உபதேசிக்கவேணும்' என்ன, 'சுச்ரூஷாஹீநனுக்குச் சொல்லப்போகாது' என்ன, 'ப்ரஜாரக்ஷணதத்பரனான எனக்கு சுச்ரூஷைக்கு அவகாசங் காணேன்' என்ன, ஆதரபரீக்ஷார்த்தமாக, 'ஆனால், பஹுத்ரவ்யங் கொண்டுவா' என்ன, அப்படியே ஸர்வஸ்வத்தையுங் கொண்டுவந்து ஸமர்ப்பிக்க, அந்த ராஜாவினுடைய ஆதரங் கண்டு ரைக்வன் "ஆஜஹாரேமா: சூத்ராநேநைவ முகேநாலாபயிஷ்யதா:" என்றதுக்கு பாஷ்யம்பண்ணுகிற பாஷ்யகாரர் உபநயநாதி ஸம்ஸ்காரமுடையவனுக்கொழிய ப்ரஹ்மவித்யோபதேசத்துக்கு யோக்யதையில்லை; பின்னை சூத்ரனென்றதுக்குக் கருத்தேது?' என்று சங்கித்து "சோகநாச்சூத்ர:" என்று சோகமுடையவனாகையாலே சூத்ரனென்கிறதென்று நிஸ்சயித்தார்; அந்தசோகமாவது-பல்லாக்ஷருடைய அநாதரத்தாலும் ப்ரஹ்மவித்யாராஹித்யத்தாலு முண்டான சோகம். ஆக, அந்த அதிகாணத்திலே சூத்ரனுக்கு ப்ரஹ்மவித்யாயோக்யதையில்லையென்று நிஷ்கர்ஷிக்கையாலே அந்த விரோதம் ப்ரஸங்கிக்கு மென்றபடி. 'ந்யாயமும்' என்கிறவிடத்தில் ச சப்தம் - 'ஏற்றம்போம்' என்றத்தோடே ஸமுச்சயிக்கிறது. ஆக, ஸாதநபக்தியென்றால் பாதகத்வயம் வருகையாலே ஸாத்யபக்தியே யென்று கருத்து.

பின்பு, தாம் பெற்றத்தையே பிறர்க்கு உபதேஶிக்கிறாராக அமையும். கீழில் திருவாய்மொழியிலே அவனுடைய பரத்வத்தை அநுபவித்து ஒரு பெரிய திருநாள்போலேயிறே போந்தது; இவர் இப்போது நெஞ்சொழிந்திருந்து பிறர்க்கு உபதேஶிக்கிறபடி எங்ஙனே தான்? தாம் அநுபவித்த விஷயத்தை எல்லைகண்டோ, அன்றிக்கே தாம் அவ்விஷயத்தில் விரக்தராயோ? என்னில்;— விஷயமோ என்றால், *"தனக்குந் தன்தன்மை யறிவரியான்" என்கிறபடியே அபரிச்சிந்நவிஷயம்; †கொள்ளமாளாவின்ப வெள்ளமிறே. இனித் தம் அபிநிவேஶமோ என்றால், ‡ "காதல் கடலின்மிகப்பெரிதால்" என்றும், §"மண்திணிஞாலமுமேழ்கடலுநீள்விசும்புங்கழியப்பெரிதால்" என்றும், ¶"சூழ்ந்ததனிற்பெரியவென்னவா" என்னும்படி பெருகியிருந்தது. ஆகிலும், ஒருகால் ஒன்றிலே அபிநிவேஶம்பிறந்தால் அப்படிப்பட்ட விஷயந்தானே காலாந்தரத்திலே விரக்தி பிறக்கக் காணாநின்றோம்; அப்படியே சிலகாலம் அநுபவித்துப் பின்பு விரக்தி பிறந்ததோவென்னில்; — அங்ஙனஞ் சொல்லவொண்ணாது; **"எப்பொழுதும் நாள்திங்களாண்டூழியூழிதோறு மப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதம்" என்னும்படி நித்யாபூர்வமாயிருக்கும். இனி ஆசார்யபதம் நிர்வஹிக்கைக்காகவன்று; க்யாதிலாப பூஜை

---

யநவியிவ் ஸ்வாய்யாயாயிமதஜ்ஞாநவெஸ்யெவாவாஸநொவாயகுவாஹ்ஹெஜ்ஜஸ்ய ஹோவாஸநஸாமேஷ்யம் நாஸ்தி. உதிஹாஸாஷ்யவி ஸ்வாய்யாயஸிஜவெவ ஜ்ஞாநஷவஸ்யம்ஹயதீதி தவொவி நாஸ்யஜ்ஞாநஹாஹ; ஶ்ரவணாந ஜ்ஞாந வாவகூயாஷிஹஜா. விஷாராதீநாஷ் ஹவாஷூரவாஸநயா ஜ்ஞாநஜாஹாக ஜஹூநிஷ்கூழ. தஸ்ா ஷநயீதவெஷ வஸ்ரூதவெஷாஷஸ்ய ஜஹூஸ்ரவெதஷவாஸநாஷ்யநஹிஜ்ஞஸ்ய உவாஸநாஷ் ஹஜதயஜ்ஞாஷிஷ்வநயிக்ஷதஸ்யஶஜ்ஜஜெஸ்யாவாஸநொவஸம்ஹாரஸாமேஷ்யாஸஷ வாக சுயிஷுகுவஸ்ஷாவெவ்யவாஸநொவஸம்ஹாரஶக்திவிரஹாச் ஜஹூவிஷ்யாயாம் ஶஜ ஜ்ஜஸ்ய ந கூயஷிஷவ்யயிகாரஜதி.

---

பூர்வோக்தஹேத்வநுவாத பூர்வகமாகத் தாம்பெற்ற பக்தியை உபதேஶிக்கிறு ரென்கிறார்-ஆனபின்பு இத்யாதி. ஆனபின்பு என்று - "உபய" இத்யாதி வாக்யார்த்தத்தைப் பராமர்ஶிக்கிறது. தாம்பெற்றத்தையே - ப்ராப்ய பக்தியையே. ஆக, இந்தப் பத்துப்பாட்டாலும் ஸங்க்ரஹேண ப்ரபத்திஶரீரமும், ததுபயுக்தார்த்தங்களையுஞ் சொல்லி, ப்ரபத்தியிலே தாத்பர்யதஃ பர்யவஸிக்கிற தென்று ஆளவந்தார் நிர்வாஹம். ப்ராப்யருசிக்கு உபயுக்தமான அர்த்தங்களைச் சொல்லி, ப்ராப்யருசியிலே பர்யவஸிக்கிற தென்று பாஷ்யகாரர் நிர்வாஹ மென்றதாயிற்று; இந்த அர்த்தத்தில் வீடுசெய்ம்மினேயாவது - அவன்பக்கலிலே புத்தியை வையுங்கோ ளென்றபடி. பாஷ்யம் தலைக்கட்டின பின்பு என்றதுக்கு - காலவிஶேஷப்ரதர்ஶநமே பலமாகவுமாம். இரண்டாம் ஸங்கதி - கீழில் திருவாய்மொழியிலே இத்யாதி. தனக்கும் இத்யாதி - தனக்குந் தன்னுடைய ஸ்வபாவத்தை யறிய வரியவன். கொள்ள வித்யாதி - அநுபவிக்க எல்லைகாணவொண்ணாத ஆநந்தஸமுத்ரம். காதல் இத்யாதி - ஆசையானது கடலிற்காட்டிற் பெரியது. மண்திணி இத்யாதி - மண்செறிந்த பூமியும், அத்தைச்சூழ்ந்த ஏழ்கடலும், எல்லாத்துக்கு மிடங்கொடுக்கும் மஹாவகாஶமான ஆகாஶமுந் தனக்குள்ளே யாம்படி அவ்வருகே பெருத்திராநின்றது. சூழ்ந்து இத்யாதி - அந்தத் தத்த்வத்ரயத்தையும் வ்யாபித்துக்கொண்டு அதுக்கும்பெரிதான என்னுடைய அபிநிவேஶமானது. விஷயந்தானே - விஷயந்தன்னிலே. இங்கே "தவெஷவஸீதயெஹஜகூவாவஷந ஷஜூஷவாயஜாயதெ" இத்யாத்யநுஸந்தேயம். எப்பொழுதும் இத்யாதி - எல்லாக்ஷணம், எல்லாநாள், எல்லாமாஸம், எல்லாவாண்டு, எல்லாவகைப்பட்ட கல்பம் கல்பந்தோறும் அவ்வோகாலங்களில் எனக்குள்ளே கலந்து அத்ருப்திகரமான அம்ருதமானவன். "ஏபாவம்பரமே" என்கையாலே ஆசார்யபதநிர்வஹணார்த்தமாக வன்று. "நீசனேன்", "பெருஞ்செல்வம் நெருப்பாக", "தொண்டர்தொண்டன்", "ஓதவல்லபிராக்கள்" என்கையாலே க்யாத்யாதிகளுக்காகவன்று. "வீடுமின்முற்றவும்" என்று பலரைக்குறித்து உபதேஶிக்கை

---

* திருவாய்மொழி, அ, ச, கூ. † ஷை ச, எ, உ. ‡ ஷை எ, ந, கூ. § ஷை அ. ¶ ஷை கO, கO, கO
** ஷை உ, ௫, ச.

களுக்காகவன்று; "ப்ரூயாத்" (ப்ரப்ரூயாத்) என்று ஒருவிதிபரதந்த்ரரா யன்று. ஆனால், இது பின்னை எத்தாலேயாவ தென்னில்;—ஸ்வாநுபவப்ரகர்ஷம் இருக்கிறபடி. தாம் அநுபவித்த விஷயம் தனியே அநுபவிக்குமதன்றிக்கே யிருந்தது; இனி நமக்கு போதயந்தஃ பரஸ்பரத்துக்கு ஆளாவாரரென்று ஸம்ஸாரிகள் பக்கலிலே கண்வைத்தார்; தாம் பகவத் விஷயத்திலே ப்ரவணராயிருக்கிறப்போலே அவர்கள் ஶப்தாதிவிஷயங்களிலே ப்ரவணராயிருந்தார் கள்; இவர்களநர்த்தம் பரிஹரித்தல்லது நிற்கவோண்ணுதா யிருந்தது; 'ஒருவனுக்கு வைஷ்ண வத்வமுண்டு, இல்லை என்னுமிடம் தனக்கே தெரியுங்காண்' என்று சீயர் பலகாலும் அருளிச் செய்வர்; பிறரநர்த்தங் கண்டால் ஐயோ! என்றிருந்தானாகில் 'நமக்கு பகவத்ஸம்பந்தமுண்டு' என்றிருக்க அடுக்கும்; இத்தனையும் பட்டிடுவானுக்கென்றிருந்தானாகில், 'நமக்கு பகவத்ஸம்பந்த மில்லை யென்றிருக்க அடுக்கு மென்று. இவர்களை இவர் மீட்கப் பார்க்கிற வழிதானென்? என்னில், இவர்கள் சேதநரா யிருந்தார்கள்; ஶப்தாதிவிஷயங்களில் வாசியறிந்து, தீயவை கழித்து, நல்லவை பற்றிப் போருகிறதோன் றுண்டாயிருந்தது; அவற்றினுடைய ஹேயதையையும், ஸர்வேஶ்வரனுடைய உபாதேயதையையும் இவர்களுக்கு அறிவித்தால் அவற்றைவிட்டு இவனைப் பற்ற அடுக்கு மென்று பார்த்து, ஸர்வேஶ்வரனுடைய நன்மையையும், இவர்கள் பற்றின விஷயங்கள் அல்பாஸ்திரத்வாதி தோஷதுஷ்டங்களென்னு மிடத்தையும், பற்றுமிடத்தில் வரும் அந்தராயபரிஹாரத்தையும், பற்று மிடத்தில் இன்று புதிதாகச் செய்யவேண்டுவதோன்றில்லை - பழையஸம்பந்தத்தை உணர அமையு மென்னுமிடத்தையும், பற்றுவார்க்கு அநுஸந்திக்கப்படும் மந்த்ர மின்னதென்னு மிடத்தையும், அவ

---

ப்ர:—(ப்ரூயாத் என்று). முண்டகோபநிஷதி [க-உ-கங] "தஸ்மை ஸ வித்வாநுபஸந்நாய ஸம்யக் ப்ரஶாந்தசித்தாய ஶமாந்விதாய। யேநாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம் ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம்" இதி. "ப்ரோவாச - ப்ரூயாதித்யர்த்த:" இதி பாஷ்யகாரேண ஸாரோக்திஹிதம்.

---

யாலே "ப்ரூயாத்" என்று ஒருவிதி பாதந்த்ரராயல்ல'வென்றபடி. ப்ரப்ரூயாத் என்றது- "ப்ரோவாச தாம் தத்த்வதோ ப்ரஹ்மவித்யாம்" என்கிற முண்டோபநிஷச்ச்ருதியில் "ப்ரோவாச" என்கிறதுக்கு அர்த் தத்வேந சொன்ன வேதார்த்தஸங்க்ரஹவாக்யத்தையாதல்; "நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரூயாத்" என் றத்தையாதல். விவரணம்- தாம் அநுபவித்த விஷயம் இத்யாதி. "உதிதாத்மத்ருதப்ராணாவோபாயவஞ்சவ ரவ்யாம்। கயயஞ்ஶ்வோணிதம் தாக்ஷ்யஷிவரஹேஷிவ" இதி கீதாஸூக்தஶமே ஸ்த்திதம் வசநம் அவலம்ப்ய "போதயந்தஃபரஸ்பரத்துக்கு" என்றது. ஆனல் அவர்கள் உசாத்துணையாவர்களோ? என்ன, தாம் பகவத்விஷ யத்திலே இத்யாதி. ஆனல் அவர்களுக்கு உபதேஶிப்பானென்? என்ன, தம்முடைய தயாதிஶயத்தாலே யென் கிறுர் - இவர்களநர்த்தம் இத்யாதி. பிறரநர்த்தம் பரிஹரிக்கவேணுமோ? என்ன, ஒருவனுக்கு இத்யாதி. அதாவது-"ஸாஹ்யம் ஸவஹ்ருதாநாம்" என்றவன் இருந்தால் 'யஸ்ய ஸ்வஸா தஸ்ய வோதாஸ:' என்று இவனுக்கு இருக்கவேணுமிறே யென்று கருத்து. அடுக்கும் - ப்ராப்தம். இத்தனையும் பட்டிடுவா னுக்கு - இவ்வளவு அநர்த்தமும் படக்கடவன். பகவத்வைலக்ஷண்யஜ்ஞாந கந்தமில்லாதவர்களை எவ்வழியாலே ஶப்தாதிவிஷயங்களினின்றும் மீட்கப் பார்க்கிறு ரென்கிற ஶங்கையை அநுவதிக்கிறுர் - இவர்களை இவர் மீட்க இத்யாதி. ஶப்தாதிவிஷயங்களில் ரஸிகத்வஜ்ஞாந முடியாக மீட்கப்பார்க்கிறு ரென்று ஶங்கைக்கு உத்தரம் அருளிச்செய்கிறுர் - இவர்கள் சேதநராய் இத்யாதி. "எல்லையிலக்கலம்" என்றத்தைப்பற்ற, ஸர்வேஶ்வா னுடைய நன்மையையும் என்றது. "மின்னினிலையில" என்றத்தைப்பற்ற, அல்பாஸ்திரத்வாதிதோஷ துஷ் டம் என்றது. "அதுசெற்று" என்றத்தைப்பற்ற, அந்தராயபரிஹாரம் என்றது. "அடங்குகவுள்ளே" என்றத் தைப்பற்ற, ஸம்பந்தத்தை யுணரவமையும் என்றது. "வண்புகழ்நாரணன்" என்றத்தைப்பற்ற, மந்த்ரமின்

னுடைய பஜநீயதையையும் அருளிச்செய்யாநின்றுகொண்டு, இதரவிஷய வைராக்யபூர்வகமாக பகவத்பக்தியைப் பண்ணி ஆஶ்ரயியுங்கோ ளென்று பரோபதேஶப்ரவ்ருத்தராகிறார்.

## முதற் பாட்டு.

வீடுமின்முற்றவும், வீடுசெய்து உம்முயிர்
வீடுடையானிடை, வீடுசெய்ம்மினே.

**ஆ.**—பகவத்வ்யதிரிக்த ஸர்வவிஷய ஸங்கத்தையும் விட்டு இவ்வாத்மாவை ஶேஷத்வேந ஸமர்ப்பியுங்கோள்; ஸமர்ப்பிக்கு மிடத்தில் இத்தை உடையவன்பக்கலிலே ஸமர்ப்பியுங்கோள்; ஸமர்ப்பணமாவது - இவ்வாத்மா, அவனுக்கு ஶேஷமென்று ஸம்வதிக்கை யென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், பகவத்வ்யதிரிக்தமான ஸர்வவிஷயங்களையும் அறவிட்டு, ஸர்வஶேஷியான எம்பெருமான் திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப்பியுங்கோள் என்கிறார்.

[வீடுமின்] - பற்றிநின்ற நிலத்தினுடைய த்யாஜ்யதாதிஶயம் தோற்றுகைக்காக முதலிலே விடுங்கோ ளென்கிறார். [முற்றவும்] - பண்டுபற்றின விஷயங்களில் சில ஹேயமும், சில உபாதேயங்களுமா யிருக்கிறனவல்ல; எல்லாம் த்யாஜ்யமே. 'வீடுசெய்து' என்று - அநுபாஷிக்கிறது - பற்றினவற்றை விடுகையே ப்ரயோஜநம் போந்திருக்கச்செய்தே அதுக்குமேலே ஒரு நன்மை உபதேசிக்கைக்காக வென்னுமிடந் தெரிகைக்கு. [உம்முயிர் என்று தொடங்கி] - உம் உயிரை விடுமிடத்தில் உறவில்லா நிலத்திலன்றிக்கே உடையவன்பக்கலிலே விட இசையுங்கோள்.

ப.—இதில், முதற்பாட்டில் ஸகலேதரபரித்யாக பூர்வகமாக ஹகவத்விஷயமான ஆத்மஸமர்ப்பணத்தை விதிக்கிறார்.

முற்றவும் - பஜநவிரோதியான ஸாத்யஸாதநங்களெல்லாவற்றையும், வீடுமின் - ஸவாஸநமாக விடுங்கோள்; (அவ்வளவில் நில்லாதே), வீடுசெய்து - அவற்றை விட்டு, உம் உயிர் - உங்களுடைய ஆத்மாவை, வீடுடையானிடை - மோக்ஷநிர்வாஹகனான ஸ்வாமிபக்கலிலே, வீடுசெய்ம்மின் - விடுதலைப்பண்ணுங்கோள். வீடிசைமினே யென்றுஞ் சொல்லுவர்.

இ.—முதற்பாட்டில், ஹகவத்வ்யதிரிக்தமான ஸர்வவிஷயங்களையும் விட்டு ஸர்வஶேஷியான எம்பெருமான்திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப்பியுங்கோ ளென்கிறார்.

[வீடுமின்] - விடுமி னென்றபடி. இன்னத்தை விடுங்கோ ளென்னுதொழிவா னென்? என்னில்,—சிறுப்ரஜை ஸர்ப்பத்தைப் பிடித்துக்கொண்டிருந்தால், விட்டுக்கொள்ளென்று பின்னையிறே ஸர்ப்பமென்பது. அதுபோலே விடுகிறவற்றினுடைய த்யாஜ்யதாதிஶயந் தோற்றுகைக்காக முதலிலே விடுங்கோ ளென்கிறார். உபதேஶம் அஷட்கர்ணமாயிருக்க பஹுவசநத்தாலே சொல்விற்று - சிலர் ஊந்தராய் அர்த்திக்கச் சொல்லுகிறாரல்லாமையாலும், அநர்த்தம் ஸர்வஸாதாரணமாகையாலும், எல்லாரையுங்குறித்துச் சொல்லுகிறார். எத்தைவிடுவதென்னும் அபேக்ஷையிலே "முற்றவும்" என்கிறார்; "[illegible]". சண்டாலர் குடியிருப்பை ப்ராஹ்ம

---

ணது என்கிறது. "இறைசேர்மின்" என்றத்தைப்பற்ற, பஜநீயதையையும் என்றது. "வீடுமின்முற்றவும்" என்றத்தைப்பற்ற, இதரவிஷயவைராக்யபூர்வகமாக என்றது. "அந்நலம்புல்கு" என்றத்தைப்பற்ற, பக்தியைப்பண்ணி என்றது.

ணனுக்கு ஆக்ரும்போது சண்டாலஸ்பர்ஶமுள்ள பதார்த்தமடைய த்யாஜ்யமானாற்போலே, அஹங்காரகர்ப்பமாக ஸ்வீகரித்தவற்றில் த்யாஜ்யமல்லாததில்லை யென்கை. இனி, “உம்முயிர் வீடுடையானிடை” என்ன அமைந்திருக்க, “வீடுசெய்து” என்று அநுபாஷிக்கிறது - விடுகை தானே ப்ரயோஜநம் போந்திருக்கை. ராஜபுத்ரன் சிறையிலே கிடந்தால் முடிசூடுவதிலும் சிறை விடுகைதானே ப்ரயோஜநமாயிருக்குமிறே. [உம்முயிர்வீடுடையானிடை] - உங்களாத்மாவையும் ஶரீரத்தையும் உடையவன்பக்கலிலே; உங்களாத்மாவைத் தனக்கு சரீரமாகவுடையவன்பக்கலிலே யென்னுதல். உங்களாத்மாவை விடுமிடத்தில் உடையவன்பக்கலிலே யென்னுதல்; மோக்ஷப்ரதன்பக்கலிலே யென்னுதல். [வீடு] - விடுகையை, ஸமர்ப்பிக்கையை. [இசைமினே] - இசையுங்கோள். அவன்நினைவு நித்யமாயிருக்க நீங்கள் இசையாமையாலேயிறே இழந்துபோந்தது; “யஸோவெவஸ்லெதாராஜாயஸ்லெவெஷஹூ்ஜிலஷ்தஃ । தெநவெஊவிவாஊஸ்ஹாமஹூாஂ ஶாகூ்ா்ஸிநுமஃ”

ஈடு.—முதற்பாட்டு. இதரவிஷயங்களை விட்டு, உங்களுக்கு வகுத்தவிஷயத்தைப்பற்றப் பாருங்கோள் என்கிறார்.

[வீடுமின்] - “வீடுமின்” என்று ஒரு சொல்லாய்க் கிடக்கவுமாம்; விடுமினென்றத்தை நீட்டி ‘வீடுமின்’ என்று கிடக்கிறதாகவுமாம். முதலிலே ‘வீடுமின்’ என்பானேன்? என்னில்;—சிறுப்ரஜைகையிலே ஸர்ப்பத்தைப் பிடித்துக்கொண்டு கிடந்தால், போகட்டுக்கோடு நிற்கச்சொல்லி, பின்னை ‘ஸர்ப்பம்’ என்பாரைப்போலேயும், ஒருவன் க்ருஹத்துக்குள்ளே கிடந்து உறங்காநிற்க, நெருப்புப்பற்றிப் புறம்பே எரியாநின்றால் ‘புறப்பட்டுக்கோள்கிடாய்’ என்று பின்பு ‘நெருப்பு’ என்பாரைப்போலேயும், முந்துற விடுங்கோ ளென்கிறார். ஜந்மமரணங்களுக்கு நடுவேயிறே இவைதான் நோவுபடுகிறது. “த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச” (த்யக்த்வாபுத்ராம்ஶ்சதாராம்ஶ்ச) என்றும், “பரித்யக்தா மயா லங்கா” (பரித்யக்தாமயாலங்கா) என்றும் விடுகை முன்னாகவிறே முன்பு பற்றினவர்களும் பற்றிற்று. “வீடுமின்” என்கிற பன்மையாற் சொல்லுகிறதேன்? என்னில்;—ஒருவன் தாந்தனாய் வந்துநிற்க அவனுக்கு உபதேஶிக்கிறா ரன்றே; ஸம்ஸாரவேக்காயம் எல்லார்க்குமொத்திருக்கையாலே ஒருவரல்லாவொருவருக்காகிலும் ருசி பிறக்குமோ? என்று எல்லார்க்கும் உப

---

முதற்பாட்டு - வீடுமின் இத்யாதி. ‘வீடுமின் உம்முயிர் வீடுடையானிடைவீடுசெய்ம்மினே’ என்னுமளவுங் கடாக்ஷித்து அவதாரிகை - இதர விஷயங்களை இத்யாதி. வகுத்த விஷயத்தை யென்றது - ‘உடையான்’ என்றத்தைப் பற்ற.

ஒரு சொல்லாய் - “வீடுமின்” என்று ஒருஶப்தமுண்டாய். விடுமினென்றத்தை நீட்டி யென்றது - “நீட்டுவழி நீட்டல், குறுக்குவழி குறுக்கல்” என்ற தமிழர்மர்யாதையைப் பற்ற; இரண்டாலும் பலிதார்த்த மொன்று. முதலிலே - த்யாஜ்யத்தைச் சொல்லாதே முதலிலே என்று கூட்டுவது. பரிஹாரம்- சிறுப்ரஜை இத்யாதி. த்யாஜ்யவஸ்துக்களினுடைய க்ரௌர்யாதிஶயத் தோற்றுகைக்காக வென்றபடி. இவர்களுக்கு அநர்த்தமேது? என்ன, ஜந்மமரண இத்யாதி. த்யாக கதந பூர்வகமாக த்யாஜ்யத்தைச் சொன்ன விடமுண்டோ? என்ன, த்யக்த்வா இத்யாதி. “ஸோஹம் பரூஷிதஸ்தேந தாஸவத்வாவமாநிதஃ । த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கதஃ” இதி ஸுக்ரீவம் ப்ரதி விபீஷணவசநம். “பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநி ச । பவத்கதம் மே ராஜ்யம் ச ஜீவிதம் ச ஸுகாநி ச” இதி தத்ரைவ ஹநுமந்தம் ப்ரதி விபீஷணவசநம். உபதேஶம் அஷட்கர்ணமாக வேண்டியிருக்க பஹுவசநத்தாலே சொல்லிற்று - சிலர் தாந்தராய் அர்த்திக்கச் சொல்லாமையாலும், அநர்த்தம் ஸர்வஸாதாரணமாகையாலும், எல்லாரையுங் குறித்துச் சொல்லுகிறா ரென்னுமத்தை ஶங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார் - வீடுமினென்கிற இத்யாதி. பன்மை-பஹுவசநம். வேக்காயம் - ஔஷ்ண்யம். முற்றவும் - கட்ட

தேஶிக்கிறார். எத்தை விடுவதென்னில்,—[முற்றவும்] - சண்டாலரிருப்பிடத்தை ப்ராஹ்மணர்க் காக்கும்போது சிலகூட்டிச் சிலகழித்தன்றே கொள்ளுவது; அப்படியே அஹங்காரமமகாரங்களாலே தூஷிதமானவற்றிலே சிலகூட்டிக்கொள்ளவொண்ணாதே; ஆகையாலே, கட்டடங்க விடுங்கோளென்கிறார். [வீடுசெய்து] - "வீடுமின்முற்றவும்" என்றாராகில், திரிய "வீடுசெய்து" என்கிற இதுக்குக் கருத்தென் ? என்னில்;– மேலொருபேறு பெறுவதிலும் இவற்றைவிட்டு நிற்கும் நிலைதானே பேறாகப் போருகையாலே விடுகையாகிற பேற்றைப் பெற்று என்கிறபடி; ராஜபுத்ரன் அழுகுசிறையிலே கிடந்தால், முடிசூடி ராஜ்யம்பண்ணுவதிலும் சிறைவிடுகைதானே ப்ரயோஜநமாயிருக்குமிறே. [உம்முயிர்வீடுடையானிடை] - இதுக்குப் பலபடியாக அருளிச்செய்வர்: "**யஸ்யாத்மா ஶரீரம், யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்**" (யஸ்யாத்மாஶரீரம், யஸ்யப்ருதிவீஶரீரம்) என்கிறபடியே, உம் உயிரையும் அதினுடைய வீட்டையும் உடையவனென்னுதல்; உம்முயிரை வீடாகவுடையவனென்னுதல்; உம்முயிரை விடுமிடத்தில் - ஸமர்ப்பிக்குமிடத்தில், உடையான்பக்கலிலே யென்னுதல் ; [வீடுடையான்] - பரமபதநிலயன்பக்கலிலே யென்னுதல். [உம் உயிர்] - அநித்யமான ஶரீரத்துக்கு நன்மைபார்க்கச் சொல்லுகிறேனோ ? நித்யமான ஆத்மவஸ்துவுக்கன்றோ நான் நன்மைபார்க்கச் சொல்லுகிறது; அதுதானும் என்னுயிர்க்கோ? உம்முயிர்க்கன்றோ? [உடையானிடை] - பொதுவிலே யுடையவனென்கிறார்; ருசிபிறந்து 'அவன்ஆர்?' என்றால், "வண்புகழ்நாரணன்" என்பாராக. அவன் உடையவனாய் உங்கள் ஸத்தையை நோக்கிக்கொண்டு போராநிற்க, நீங்களும் 'நான் என்னது' என்று அகலப்பாராதே உங்களை அவன்பக்கலிலே ஸமர்ப்பிக்கப் பாருங்கோள். அவன்உடையவனானபின்பு அவனோடு அவிவாதமே உங்களுக்கு வேண்டுவது; "யம:" (யம:) - ப்ராதேஶிகமான நியம

---

டங்க: ஸாகல்யேந. இப்படி ஸகலபரித்யாகத்தில் அடியேதென்ன, சண்டாலர் இத்யாதி. இங்கே 'அஹங்காரமமகாரங்களாலே தூஷிதமானவற்றிலே' இத்யாதிவிவக்ஷிதம். இத்தால் பகவத்வ்யதிரிக்த ஸாத்யாந்தரஸாதநாந்தரத்யாகத்தைச் சொன்னபடி. மேல் ஒருபேறு இத்யாதி - விடுகைதானே பலமென்கைக்காக 'வீடுசெய்து' என்று அநுவதிக்கிறதென்றபடி. விடுகைதானே ப்ரயோஜநமாமோ? என்ன, இதுதான் ப்ரயோஜநமாயிருக்குமென்னுமத்தை லௌகிகத்ருஷ்டாந்தத்தாலே தர்ஶிப்பிக்கிறார் - ராஜபுத்ரன் இத்யாதி. "ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச" இத்யாதி. அழுகுசிறை - அழுகியேபோம்படியான சிறை. பலபடியாக - நாலுவிதமாக. அருளிச்செய்வர் - நஞ்சீயரிதி ஶேஷ:. ப்ருதிவீகார்யம்ஹி ஶரீரமென்னும் அபிப்ராயத்தாலே சொல்லிற்று - "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்" என்று. அதினுடையவீட்டையு மென்றபடி. முந்தின அர்த்தத்திலே உடையவனென்றது - ஶரீரமாக வுடையவனென்றபடி. த்ரீயயோஜநையில், உம் உயிர் - வீடுசெய்ம்மினென்று அந்வயம். 'உயிர்' என்றதுக்குத் தாத்பர்யம் - அநித்யமான இத்யாதி. 'உம்' என்றதுக்கு பாவம் - அதுதானும் இத்யாதி. நாராயணனென்னாதே பொதுவிலே 'உடையான்' என்றது - ருசியைப் பிறப்பிக்கைக்காக. இவ்விடத்திலே "ஜநமேஜயனை வைஶம்பாயநர் 'ஸாகல்யேந பாரதகதையைச் சொல்லுகிறேன், கேள்' என்ன, 'அவகாஶமில்லை' என்ன, 'ஓரத்யாயந்தான் கேள்' என்ன, 'அதுக்கும் அவகாஶமில்லை' என்ன, 'ஒருஶ்லோகந்தான் சொல்லுகிறேன்' என்ன, 'ஆனால் சொல்லும்' என்ன, "த்ராவிளவ்ருத்தாந்தளத்திளத்ருஷ்டாயந்த ஶாந்தநவ। ஸர்வ ஹரணம் தஸ்ய பாண்டவா: பாண்டவா:" என்று ஸாகாங்க்ஷமாகச் சொல்ல, அதிலே ருசிபிறந்து 'கோக்ரஹணம் ஏது? வநபங்கம் ஏது?' என்ன, "ருசிபிறந்தபின்பு அடிதொடங்கி பாரதமெல்லாஞ் சொன்னாற்போலே ருசிபிறக்கைக்காக" என்பர்கள். பொதுவிலே - திருமந்த்ரத்தைச்சொல்லாமல். முந்தின அர்த்தத்தையும் இரண்டாமர்த்தத்தையுந் திருவுள்ளம்பற்றி 'வீடுசெய்ம்மின்' என்றதுக்கு அர்த்தம் - அவன்உடையவனாய் இத்யாதி. உங்கள் ஸத்தையை நோக்கிக்கொண்டுஎன்றது- உயிரைவீடாகவுடையவனென்கிறதைப்பற்ற. ஸமர்ப்பணமாவதென்? என்ன, அவன்உடையவனானபின்பு இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம்- யம இதி: "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி ஸ்தித: । தேந சேத் அவிவாதஸ்தே மா கங்காம் மா குரூந் கம:" இதி மாநவே தர்மஶாஸ்த்ரே. யமயதீதி - யம:. நிருபாதிகம் நியமநம் யஸ்மிந் ஸ:-யம: என்று விவக்ஷிதமென்னும் அபிப்ராயேணாஹ - ப்ராதேஶிக இதி. ப்ரபவதீதி: "அஹங்காரவ்ருத்தி

நத்தையுடையவனையன்று சொல்லுகிறது, **"ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:"** (ப்ரபவதி ஸம்யமநேமமாபிவிஷ்ணு:) என்று அவன்தன்னையும் நியமிக்குமவனாயிற்று, இவன். **"வைவஸ்வத:"** (வைவஸ்வத:) - விவஸ்வானுடைய குலத்திலே பிறந்தவ னென்னுதல், ஆதித்யாந்தரவஸ்த்தித னென்னுதல். **"ராஜா"** (ராஜா) - அவனைப்போலே **"ரஞ்ஜக"** என்கையன்றிக்கே எல்லார்க்கும் இனியனாயிருக்குமவனாயிற்று, இவன். **"ய:"** (ய:) - அந்தர்யாமிப்ராஹ்மணாதிகளில் ப்ரஸித்தி. **"தவைஷ ஹ்ருதிஸ்த்தித:"** (தவைஷஹ்ருதிஸ்த்தித:) - அவன் எங்குற்றானென்ன; கண்டிலையோ? உன்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து "ஆட்சியில் தொடர்ச்சி நன்று" என்றிருக்கிறான். ஆனால், செய்யவேண்டுவதேன்? என்னில், - **"தேந சேத விவாதஸ்தே"** (தேந சேதவிவாதஸ்தே) - உடையவனாயிருக்கிறவனோடே உனக்கு அவிவாத முண்டாகில். இத்தால் பேறென் என்பாயோ? **"மா கங்காம் மா குரூந் கம:"** (மாகங்காம்மாகுரூந்கம:) - ஒருதீர்த்தந் தேடிப்போதல், புண்யக்ஷேத்ரந் தேடிப்போதல் செய்யவேண்டா; அஹங்காரமமகாரங்கள் கிடக்க ப்ராயஶ்சித்தம்பண்ணுகையாவது- நிஷித்தத்ரவ்யத்தை உள்ளேவைத்து * மெழுகூட்டின வோபாதியிறே. உடையவனுக்கும் உடைமைக்குந் தக்கபடியிறே ப்ராயஶ்சித்தமும்; உடையவன் - ஸர்வேஶ்வரன். த்ரவ்யங்களில் ப்ரதாநமான ஆத்மத்ரவ்யத்தையிறே அபஹரித்தது. அபஹரித்த த்ரவ்யத்தைப் போகட்டு ப்ராயஶ்சித்தம்பண்ணவேணுமே. போகடுகிற த்ரவ்யம் தானாகையாலே ப்ராயஶ்சித்தம்பண்ணுகைக்கு வேறு அதிகாரியு மில்லையே. ஆகையாலே, நீங்களும் உடையவன் பக்கலிலே வீடுசெய்ம்மினே. வீடு - ஸமர்ப்பிக்கை. அதாகிறது - இசைகை. (க)

---

"தேநயாத்ராஸஹஸ்ராணி லோகஹிதாய தேநியுக்த: । ஹரிமாராத்யமாநஸ்தஸ்ய ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே த்ருதீயேம்ஶே யமகிங்கரஸம்வாதே. வைவஸ்வத: என்றதுக்கு-கோத்ராபத்யத்தில் அண்ப்ரத்யயமாதல், ஸம்பந்தார்த்தே அண்ப்ரத்யயமாதல்என்றுஇரண்டர்த்தமுங் கண்டு கொள்வ தென்கிறார் - விவஸ்வானுடைய இத்யாதி. ரஞ்சயதீதி ராஜேத்யபிப்ராயேணாஹ - அவனைப்போலே இத்யாதி. "ஹ்ருதிஸ்த:" என்றதுக்கு அர்த்தம் - கண்டிலையோ என்றது. ஆட்சியாவது-ஶேஷத்வஜ்ஞாந பூர்வகமான அடிமையைக்கொள்ளுகை. தொடர்ச்சியாவது-ஹ்ருதயாந்தரவஸ்திதி. "அவிவாதஸ்தே" என்கையாலே, விவாதிக்கில் கங்காதிகமநமும் அகிஞ்சித்கரமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்- அஹங்கார இத்யாதி,சேச்சப்தஸூசிதோயமர்த்த:. அத்ர "க்ஷுத்ருட்குக்ஷ்யௌ ஶ்வராஜ்ஞா நாதிஶ்வாஸா: ...", "யேஷ்விஷ்டிஹோத்ரநம் நஸ்ரஜிவஶேஷவ்யு । நதேஷாம் வர்ணுத்தீயே புஷ்மதிஸம்ஸ்ருணாவேஷி" இத்யநுஸந்தேயம். 'மெழுக்கூட்டின' என்று பாடமானால், மெழுகுகை - பூசுகை இத்யர்த்த:. இது பாபவிமோசகமானமாத்ரமன்றிக்கே வேறு இதுக்கு ஸத்ருஶப்ராயஶ்சித்தமுமில்லையென்கிறார் - உடையவனுக்கு இத்யாதி. ப்ராயஶ்சித்தமுண்டானாலும் அதிகாரியில்லை யென்கிறார் - அபஹரித்த இத்யாதி. "த்ரவ்யங்களில் ப்ரதாநம்" என்கிறவிடத்தில் - "ஶ்ரீவாஸுவஸ்ய ப்ரஸ்நஸ்த்ரஹஸ்த்ரேயாவிஜீவ:" இத்யாத்யநுஸந்தேயம். "த்ருணகாஷ்டாபஹரணேயோஷோஷ:வஶிகீர்த்தித: । ஸ்வர்ணரத்நாபஹாரேஷி தாவாநேவஹவேத்ஸயம் । ஶ்வாகஸ்ரவ்யஹரணே" இத்யாத்யநுஸந்தேயம். போகடுகிற த்ரவ்யம் இத்யாதிக்கு-போகடுகிற த்ரவ்யம் தானாகையாலே உடையவனாயிருக்கிற ஈஶ்வரன் பக்கலிலே போகடுகையாவது அவனதென் றிசைகையான படியால்,பின்னை யிசைந்தால் தான் அவனதாகனைத் தானென்று ஒரு ஸ்வதந்த்ர னில்லாதபடியாலே ப்ராயஶ்சித்தாதிகாரியில்லை யென்றபடி. ஆகையாலே யென்றதுக்கு - "அவனுடையவனனபின்பு" என்ற பூர்வதநவாக்யத்தோடே ஸங்கதி. அர்த்ததத்த்வம் இதுவானபின்பு நீங்களும் இப்படியே செய்யுங்கோ ளென்னும் ஆஶயத்தாலே அருளிச்செய்கிறார் - நீங்களும் இத்யாதி. நீங்களுமென்ற ஸமுச்சயம் - ஸ்வத்வேநாநுஸந்திக்கிற ஈஶ்வரனோடே. "வீடுஇசைமின்" என்று இருபத்துநாலாயிரத்தில் பாடம்; "வீடுசெய்ம்மின்" என்று இவ்விடத்தில் பாடம். இத்திருவாய்மொழியில் ப்ரமேயம் - பகவதாஶ்ரயணம்; இப்பாட்டுக்கு ப்ரமேயம் - ஸகலேதரபரித்யாக பூர்வகமாக பகவத்விஷயத்தில் ஆத்மஸமர்ப்பணம். முற்றவும் வீடுமின், வீடுசெய்தித்யாரப்ய க்ரமேண அந்வய:. (க)

---

* 'மெழுக்கூட்டினல்' என்று ஒரு பாடமுண்டு என்பது, அரும்பதத்தா லேற்படும்.

# இரண்டாம் பாட்டு.

மின்னின்நிலையில, மன்னுயிராக்கைகள்
என்னுமிடத்திறை, யுன்னுமின்நீரே.

ஆ.---(மின்னின்நிலை.) சிரகாலவாஸிதமான விஷயங்களை விட முடியுமோ? என்னில், இவ்வாத்மஸம்பந்தியான ஶரீராதி ப்ராக்ருத விஷயங்களினுடைய அஸ்த்திரத்வாதி தோஷங்களை நீங்களே ஆராய்ந்து உணருங்கோள் ; உணரவே எளிதாக விடலாம் என்கிறார்.

ஒ.---இரண்டாம்பாட்டில், நெடுங்காலம் பழகின விஷயங்களை விடவொண்ணுமோ ? என்னில், அஸ்த்திரத்வாதி தோஷங்களை அநுஸந்திக்கவே விடுகை எளிது என்கிறார்.

[மின்னின்நிலையில] - மின்னுக்குள்ள நிலையு மில்லை யென்கிறது; அஸ்திரமாயிருந்தே ஸ்திரங்கள்போலே சிலநாள் செல்லுகிலுஞ் செல்லு மென்றவாறு. [மன்னுயிராக்கைகள்]-ஆத்மா தான் தனக்கு உபாதேயமாகக் கொண்டு விடேனென்று பற்றிக்கிடக்கிற தேஹங்கள். 'உயிர்' என்கிற ஏகவசநத்துக்கும் 'ஆக்கைகள்' என்கிற பஹுவசநத்துக்கும் கருத்து - ஓராத்மாவே கர்மாநுகுணமாக அநேக தேஹங்களிலே நலிவுபடு மென்று தோற்றுகைக்காக. [என்னுமிடத்து என்று தொடங்கி] - என்னும் இஸ்தலத்தில். தோஷப்பரப்பெல்லாம் அநுஸந்திக்கவேண்டு வதில்லை; தோஷத்தினுடைய ஏகதேஶாநுஸந்தாநத்தாலே விஷயங்களில் வைராக்யம் பிறக்கும். [நீரே] - தோஷாநுஸந்தாநத்துக்கு ப்ரமாணாபேக்ஷையில்லை, உங்களுக்கே அநுஸந்திக்கலாம்.

ப.---அநந்தரம், த்யாகபுத்தி ஸௌகர்யத்துக்காக த்யாஜ்யங்களுடைய நிலையாமையை அருளிச்செய்கிறார்.

உயிர் - ஆத்மா, மன் - (தனக்கு அபிமதமாகச்) செறிந்த, ஆக்கைகள் - பந்தகஶரீரங்கள், மின்னின் - மின்னிலுங்காட்டில், நிலை இல - தோன்றியே மாயக்கடவதான நிலையையும் உடையவல்லவா யிருக்கும்; என்னுமிடத்து - என்றுசொல்லும்படியாதலில், நீரே - நீங்கள், இறை - ஸ்வாமியை, உன்னுமின் - மநநம்பண்ணுங்கோள். "மன்னுயிராக்கைகள்" என்று - ஆத்மாவுக்கு மாறிமாறிவரு மாக்கைக ளென்றுமாம். "இறையுன்னுமினீரே" என்று - "நீரே நிலையாமையைச் சிறிது நிரூபியுங்கோள்" என்றுஞ் சொல்லுவர்; இது பூர்வோத்தரமான இரண்டுபாட்டிலுஞ் சொல்லுகிற பகவதாஶ்ரயண பர்யந்ததைக்குச் சேராது.

இ.---இரண்டாம்பாட்டில், நெடுங்காலம் பழகின விஷயங்களை விடவொண்ணுமோ ? என்னில்,---அஸ்த்திரத்வாதி தோஷங்களை அநுஸந்திக்கவே விடலா மென்கிறார்.

[மின்னின்நிலையில] - மின்னுக்குள்ள நிலையு மில்லை; "ஸ்வப்நேந்த்ரஜாலஸத்ருஶாஃ கலு ஜீவலோகா..." [illegible]". அது தோற்றி நசிக்கும், இது கர்ப்பத்திலே நசிக்கும் ; தோற்றினபோதே மாயக்கடவதா யிருப்பதொரு வ்யவஸ்தை உண்டு அதுக்கு; இது சிலநாளிருக்கிலும் இருக்கும். அஸ்திரமென்று ஹிதத்தில் ப்ரவர்த்திக்கவொட்டாது: ஸ்திரமென்று விஶ்வஸிக்கப்பண்ணி நசிக்கும். [மன்னுயிராக்கைகள்]- உயிர் மன்னி விடேனென்று பற்றிக்கிடக்கிற ஶரீரங்கள்; நித்யனான ஆத்மாவினுடைய ஶரீரங்களென்னவுமாம். 'உயிர்' என்கிற ஏகவசநத்துக்கும், 'ஆக்கைகள்' என்கிற பஹுவசநத்துக்கும் கருத்து - ஓராத்மாவே கர்மாநுகுணமாக அநேக ஶரீரங்களிலே நலிவுபட்டுப்போருகிறானென்று தோற்றுகைக்காக; "மகிழலகொன்றேபோல்", "வாஸாம்ஸி ஜீர்ணாநி". அன்றிக்கே, ஜாத்யேக

வசநமாகவுமாம். [என்னுமிடத்து] - என்னும் ஸ்தலத்தில்; என்னும் இவ்வர்த்தத்திலே யென்னவுமாம்; ஆனபின்பு என்னவுமாம். [இறையுள்ளுமின்] - இதினுடைய தோஷம் எல்லாம் அறியவேண்டா; ஏகதேஶாநுஸந்தாநத்தாலே விரக்தி பிறக்கும். [நீரே] - தோஷாநுஸந்தாநத்துக்கு ஶாஸ்த்ரம் வேண்டா; தோஷம் ப்ரத்யக்ஷமாகையாலே உங்களுக்கே தெரியும்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஒகவத்வ்யதிரிக்த விஷயங்களை விட்டு ஸர்வேஶ்வரனை எம்பெருமான்பக்கலிலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணப் பாருங்கோ ளென்றார் முதற்பாட்டில்;'பகவத்வ்யதிரிக்த விஷயங்களை விடச் சொல்லாநின்றீர்; அநாதிகாலம் வாஸநைபண்ணிப் போந்தவற்றை இப்போதாக விடப்போமோ?' என்ன,—அவற்றினுடைய தோஷதர்ஶநம் பண்ணவே விடலாமென்கிறார், இதில்.

[மின்னின் நிலையில] - மின்னுபாதியும் நிலையுடைத்தல்ல. அல்பமாய் அஸ்திரமாயிருக்குமிறே அது; இதுவும் அஸ்திரமாயிருக்கச்செய்தேயும் ஸ்திரபுத்தியைப் பிறப்பித்து, அநர்த்தத்தோடே தலைக்கட்டுவித்துவிடும். சந்தநப்ராந்தியாலே நாற்றம் குளிர்த்தி மென்மைகளைக்கொண்டு ஸர்ப்பத்தின்மேலே கையை வைத்துக்கொண்டு கிடந்து உறங்காநின்றால், ஒருதார்மிகன் 'இது ஸர்ப்பங்கிடாய்' என்று அறிவித்தால், பின்னை அதினின்றும் கைவாங்கியல்லது நிற்கவொண்ணாதிறே; அப்படியே இதரவிஷயங்களிலே போக்யதாபுத்திபண்ணிப்போருகிற இவனுக்கு 'இது அல்பம், அஸ்திரம்' என்று இதினுடைய தோஷதர்ஶநத்தைப் பண்ணுவிக்கவே விடலாயிருக்குமிறே. [மன்னுயிராக்கைகள்] - உயிர்மன்னுகிற ஆக்கைக ளென்னுதல், நித்யமான ஆத்மவஸ்து பரிக்ரஹிக்கிற தேஹங்க ளென்னுதல். திறந்துகிடந்த வாசல்கள்தோறும் நுழைந்துதிரியும் பதார்த்தம்போலேயிறே இவன் திரிவது; மகிழலகொன்றேபோல் மாறும் பல்யாக்கையிறே; ஓரலகுதானே காணிஸ்தாநத்திலே நிற்பது கோடிஸ்தாநத்திலே நிற்பதாமிறே: அப்படியே ஓராத்மாதானே கர்மபேதத்தாலே தேவாதி தேஹபேதங்களைப் பரிக்ரஹிக்குமிறே. அன்றியே, 'உயிர்' என்கிற ஏகவசநம் ஜீவாநந்த்யத்துக்கு

---

இரண்டாம்பாட்டு - **மின்னின்** இத்யாதி. கீழே த்யாஜ்யத்தையடங்க விடுங்கோ ளென்று சொல்லி, அநந்தரம் அல்பாஸ்திரத்வாதிதோஷங்களைச் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் - ஸம்ஸாரிகளுக்குப்பிறந்த ஶங்கையைப் பரிஹரிக்கை யென்கிறார் - **பகவந்வ்யதிரிக்த** இத்யாதி.

"எல்லையேதுவமைநீக்கம்" என்று தமிழர்சொன்னபடியே பஞ்சமிக்கு அநேகார்த்த முண்டாகையாலே இவ்விடத்தில் உபமார்த்தே பஞ்சமி யென்கிறார் - **மின்னுபாதியும்** இத்யாதி. நிலை - ஸ்வபாவம். நிலையுடைத்தல்லாமை எப்படி? என்ன, **அல்பமாய்** இத்யாதி. யத்வா, மின்னிற்காட்டிலென்று அர்த்தாந்தரமாதல். "மஹெ௶விஜீயதெஹ-யொ ஜாயஶோநாஸஶெதிவ" இத்யாதி. மின் தோற்றி மறையும், அதுவுமில்லை இதுக்கென்று வ்யாக்யாநத்தில் அர்த்தம். போக்யதால்பதை - அல்பதையாவது. யத்வா, அல்பமாய் இத்யாதிக்கு - அல்பாஸ்திரத்வாதி தோஷமுண்டா யிருக்கச்செய்தேயும், தத்ப்ரகாஶகத்வகுணமுண்டிறே மின்னுக்கு. இதுக்கும் அந்தத் தோஷமுண்டாயிருக்கவும் தத்ப்ரகாஶகத்வரூபகுணமுமில்லை யென்றபடி. தோஷதர்ஶநம்பண்ணினால் விடலாமோ? என்ன, **சந்தந** இத்யாதி. அநாதிகாலவாஸிதமான வஸ்துக்களினுடைய தோஷங்களை தர்ஶித்தால் ஸுஶகமாக விடலா மென்றபடி. இதுக்கு அவதாரிகையோடே சேர்த்தி. **உயிர்மன்னுகிற ஆக்கைகள்** - ஆத்மாவைப்பற்றி விடே னென்றிருக்கிற ஶரீரங்கள். த்விதீயார்த்தத்துக்கு, **மன்னுகை** - காலத்தோடே பொருந்துதல்; நித்யமான வென்றபடி. 'உயிர்' என்று ஏகவசநமாயிருக்க 'ஆக்கைகள்' என்கிற பஹுவசநம் சேரும்படி யென்? என்ன, **திறந்துகிடந்த** இத்யாதி. **நுழைந்து** - ப்ரவேஶித்து. **திரியும்பதார்த்தம்** - ஶ்வா. ஓராத்மாவே அநேகஶரீர பரிக்ரஹம் பண்ணுமென்னுமதுக்கு ப்ரமாணம்-**மகிழலகு** இத்யாதி. **மகிழலகு** - மகிழம்விரை. உக்தார்த்தத்தை உபாத்த ப்ரமாணமுடையாக்கி அருளிச்செய்கிறார் - **ஓலகுதானே** இத்யாதி. அதாவது - ஜ்யோதிர்வித்துக்கள் மகிழம்விரையை அலகாக வைத்து எண்ணக் கடவர்களிறே; அவர்கள்முந்துற காணிஸ்தாநத்திலே வைத்து, பின்னை பத்துஸ்தாநத்திலே வைத்து, நூறுஸ்தாநத்திலே வைத்து, கோடிஸ்தாநத்திலே வைத்து இப்படி வரக்கடவதிறே; அத்தைச் சொன்னபடி. அத்ர "வடிவெநகவஶாயிகெ

உபலக்ஷணமாய், ஆத்மாக்கள் பரிக்ரஹிக்கிற ஶரீரங்க ளென்னவுமாம். [என்னுமிடத்து] - ஹக வத்குணங்களைப் பரிச்சேதிக்கிலும் பரிச்சேதிக்கப் போகாதாயிற்று தோஷப்பரப்பு; இவ்விடையாட்டத்து என்றபடி. [இறையுன்னுமின்] - இதிலே அல்பத்தை ஆராயுங்கோள். [நீரே] - இது தனக்கு ஒரு ப்ரமாணாபேக்ஷையு மில்லை; ஸதாசார்யோபதேஶமும் வேண்டா. (௨)

## மூன்றாம் பாட்டு.

நீர் நுமதேன்றிவை, வேர்முதல்மாய்த்துஇறை
சேர்மினுயிர்க்கதன், நேர்நிறையில்லே.

**ஆ.**—(நீர்.) ஆத்மநாஶகரமான அஹங்கார மமகாரங்களை ஸவாஸநமாகவிட்டு ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள்; இவ்வாத்மாவுக்கு அத்தோடொத்த சீரியது ஒன்று மில்லை யென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், த்யாஜ்யத்தைச் சுருங்க உபதேசிக்கிறார்.

[நீர் நுமதென்று] - அநர்த்தகரமான அஹங்கார மமகாரங்களைச் சொல்லுகிறது. [இவை வேர்முதல் மாய்த்து] - அஹங்கார மமகாரங்கள்தான் செல்லாநின்றனவேயாகிலும், ஆசார்யஸேவாப்ராசுர்யத்தாலும், ஶாஸ்த்ராப்யாஸத்தின் மிகுதியாலுமாக இவை அபுருஷார்த்தமென்று அத்யவஸிக்கை - இவற்றினுடைய வேர்முதல் மாய்க்கையாவது. ஸவாஸநமாக இவற்றை விட்டு எம்பெருமானை ஆஶ்ரயிக்கை துஷ்கர மாகையால் இதுவே பொருளாகை உசிதம். [இறை என்று தொடங்கி] - ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள்; ஆத்மாவுக்கு அத்தோடொக்கும் சீரியது இல்லை. சீரியதாவது - ஹிதமும், ப்ரியமும்.

ப.—அநந்தரம், த்யாகப்ரகாரத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

நீர் நுமதென்றிவை - (ஆத்மாத்மீயங்களி லுண்டான) அஹங்காரமும் மமகாரமுமாகிற இவற்றை, வேர்முதல்மாய்த்து - ருசிவாஸநைகளாகிற பக்கவேரோடே முதலறுத்து, இறை- ஸ்வாமியை, சேர்மின் - சேருங்கோள்; உயிர்க்கு - ஆத்மாவுக்கு, அதன்நேர் - அத்தோடொத்த, நிறை இல்லை - நிரப்பமில்லை.

**இ.**—மூன்றாம்பாட்டில், அநாதிகாலம் பற்றிப்போந்த விஷயங்களை விடும்போது பற்றின காலமெல்லாம் வேண்டாவோ தனித்தனியே விடுகைக்கு? என்னில்,—அது வேண்டா, எளிதாக விடலாமென்று த்யாஜ்யத்தை இரண்டாகாரத்தாலே சுருங்க உபதேசிக்கிறார்.

---

வக்ஷ்ரேவா ஸ்வயோகாக்ஷிகாவஸவணகொடீ" இத்யாத்யநுஸந்தேயம். 'தேஹபேதங்களைப் பரிக்ரஹிக்குமிறே'-அத்ர "வாஸாம்ஸிஜீர்ணாநி" இத்யாதி த்ரஷ்டவ்யம். இறே இதி - ஶ்ருதிஸ்ம்ருதி ப்ரஸித்தி: விவக்ஷிதா. மதிழலகுத்ருஷ்டாந்தேந தத்தத்ஸ்த்தாக ப்ரவேஶஸ்ய அந்யாதீநத்வம் ஸூச்யதே. 'அன்றியே' என்கிற யோஜநையும் - 'உயிர்மன்னுகிறவாக்கைகள்' என்கிற ப்ரதமயோஜநாஶேஷம். யோஜநாத்வயஸ்ய மூலம் - வக்ஷவநஸாரவஸ்ஹிஸாநாயஶ. அதீபயோஜநாயாம் நித்யகோகே: யோஜநம் தெஹஹாத்விவெக:. என்னுமிடத்து - என்னும் இவ்வர்த்தத்திலே. 'என்னுமிடம்' என்னு போதே தோஷபாஹுல்யம் ஸூசிதம். 'என்னுமிடத்திறையுன்னுமின்' என்றத்தால் பலிதம் - பகவத்குணங்களை இத்யாதி. இவ்விடையாட்டத்து - அஸ்மிந்விஷயே, இதிலே. அல்பத்தை யிதி - தாவந்மாத்ரேண விடலாமென்றபடி. 'நீரே' என்கிற ஏவகாரார்த்தம் - இதுதனக்கு இத்யாதி. தோஷம் ப்ரத்யக்ஷமாகையாலே யென்று கருத்து. உயிர்மன்னுக்கைகள் மின்னின்நிலையில, என்னுமிடத்து நீரே இறையுன்னுமின் இத்யந்வய:. (௨)

[நீர் நுமது] - அநர்த்தகரமான அஹங்காரமமகாரங்களை. 'நான், என்னது' என்னும் அர்த்தத்தைப் பிறர்க்கு உபதேசிக்கப்புக்கால் 'நீங்கள்' என்றும், 'உங்களது' என்றுமிறே சொல்லுவது. அதாகிறது - அநாத்மந்யாத்மபுத்தியும், அஸ்வே ஸ்வத்வபுத்தியும். 'நான், என்னது' என்னில் நாவேமிறே. "அநாத்மந்யாத்மபுத்திர்யா அஸ்வே ஸ்வமிதியா மதி: । அவித்யாதருஸம்பூதிபீஜமேதத் த்விதா ஸ்திதம்" என்று ஸம்ஸார பீஜத்தையும், "அவ்யாஹதாஹ்லாதவாஸ்தி வைஷ்ணவஸம்ஸாரபேஷஜம்" என்று பரிஹாரத்தையும் சொல்லிற்றிறே. [இவை வேர்முதல் மாய்த்து] - இவற்றை ஸவாஸநமாகப் போக்கி. இது 'அக்நிநாவிநைஷ' போலே துஷ்கரம்; இவை நேராக விடும்போது பகவத்விஷயத்தைப்பற்றி விடவேணும்; அவனைப் பற்றும்போது இவற்றை விட்டல்லது பற்றவொண்ணாது; ஆகையாலே, இதரேதராஸ்ரயக்ரஸ்தம். ஆனால், இதுக்குப் பொருளென்? என்னில்,— ஆசார்யஸேவையாலும் ஶாஸ்த்ராப்யாஸத்தாலும் இவை அபுருஷார்த்தமென்று அத்யவஸிக்கை. இரண்டுவ்ருக்ஷம் சேர நின்றால் ஒன்றிலே குட்டமிட்டுப் பெருங்காயத்தை வைத்தால் மற்றையது நிற்க இது க்ரமத்தாலே உலர்ந்துபோமாபோலே இந்தஜ்ஞாநம் பிறந்தால் இவை ஸ்வகார்யம் செய்யமாட்டாது; "பீஜாந்யக்ந்யுபதக்தாநி" இத்யாதி. ரக்ஷகன் அவஸர ப்ரதீக்ஷனாயிருக்க இவன்பக்கலிலே விலக்காமை யுண்டானால் விரோதி போகைக்குத் தட்டில்லை யென்கை. [இறைசேர்மின்] - ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள். கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலேயிறே ஸம்ஸாரிக்கு பகவத்ஸமாஶ்ரயணம். [உயிர்க்கு அதன் நேர்நிறையில்லே] - ஆத்மாவுக்கு அத்தோடொத்த சீரியதுஇல்லை. ப்ரதமத்தில் ஹிதமாய் உதர்க்கத்தில் ப்ரியமாயிருக்கும். நேர் - ஒப்பு. நிறை - மிகுதி. ஒத்ததும் மிக்கது மில்லை யென்னவுமாம். "ஸம்ஸாராணவமக்நாநாம்."

ஈடு.—மூன்றும்பாட்டு. 'தோஷதர்ஶநம்பண்ணவே விடலா மென்றீர்; காலம் அநாதி, மேல் அநந்தமாயிராநின்றது; பற்றின காலமெல்லாம் வேணுமிறே விடுகைக்கும்' என்ன; த்யாஜ்யாம்ஶத்தைச் சுருங்க அருளிச்செய்கிறார்; ஸம்ஸாரபீஜம் இன்னதென்றும், அதுக்கு பேஷஜம் இன்னதென்றும் அருளிச்செய்கிறார்.

[நீர் நுமது] - அநர்த்தகரமான அஹங்காரமமகாரங்கள். நான் என்னது என்னுமத்தைப் பிறர்க்கு உபதேஶிக்கும்போது "நீர் நுமது" என்றிறே சொல்லுவது; நான் என்னது என்று தம்வாக்காலே சொல்லமாட்டாரே, நாக்கு வேமென்று. 'என்னுடைமை' என்னுமது, வேணுமாகில் தவிருகிறான், 'நான்' என்னுமது தவிரும்படி என்? என்னில்,—இவன் அஹமென்றால் ராவணாதிகள்

---

மூன்றும்பாட்டு - **நீர்நுமது.** அஹங்காரமமகார நிவ்ருத்தியையும் பகவத்ஸமாஶ்ரயணத்தையுஞ் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநத்தை ஶங்காபரிஹாரமுகேந தர்ஶிப்பிக்கிறார் - தோஷதர்ஶநம் இத்யாதி. **காலம் அநாதி** - அநாதிகாலார்ஜிதமானதை விடக்கூடாதிறே யென்று ஶங்கை; அநாதிகாலமாக ஆர்ஜித்ததாகையாலே விடுகைக்கு அத்தனைகாலம் வேணு மென்கிறீரோ? ஆகில், அநந்தகாலமுண்டேயென்ன; அத்தைய நுவதித்து, உண்டென்கிறது மெய்யே, அதிற் குறையில்லை; அது விடுகைக்கே போருமத்தனை; ஆஶ்ரயணத்துக்குக் காலமெங்கேயென்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - **மேல் அநந்தமாய்** இத்யாதி. **சுருங்க** - ஸங்க்ரஹமாக. சுருங்க அருளிச்செய்தபடியைக் காட்டுகிறார் - **ஸம்ஸாரபீஜம்** இத்யாதி. 'நீர்நுமது' என்கையாலே - ஸம்ஸாரபீஜம். 'வேர்முதல்மாய்த்து' என்கையாலே - பேஷஜம். **அதுக்கு** - ஸம்ஸாரத்துக்கு.

நான், என்னது என்றன்றோ அஹங்கார மமகாரங்கள் இருப்பது? என்ன, **நான் என்னது** இத்யாதி. பரிஹாராந்தரம்-**நானென்னதென்று** இத்யாதி. **வேம்**-தக்தமாம். இது ஶ்ரௌர்யாபிப்ராயம். ப்ராக்ருத ப்ராக்ருத விஷய மமகாரம் விடலாம்,நானென்னுமது ஸ்வரூபாநுபந்தியாகையாலே அஹங்காரத்தை விடும்படி யென்?என்று ஶங்கிக்கிறார், என்னுடைமை இத்யாதி. **தவிரும்படியென்னென்னில்**-நானென்னுமது அஹமர்த்தாநுபந்தியாகையாலே தவிரும்படி யென்? என்னி லென்றபடி. பரிஹாரம்-**இவன் அஹமென்றல்** இத்யாதி. **நானென்றுப்**

நான் என்றாற்போலே பிறருடைய நாளைத் தவிர்த்துக்கொண்டிறே யிருப்பது; தேஹத்தில் அஹம் புத்தி பண்ணிப்போருமது தவிரவேணுமே! [இவை வேர்முதல்மாய்த்து] - இவை வேர்முதல் மாய்க்கையாவதேன்? என்னில்; - இது அபுருஷார்த்தமென்னும் ப்ரதிபத்தியைச் சொன்னபடி. இரண்டு வ்ருக்ஷம் தன்னிலே சேரநின்றால், ஒன்றிலே தொளைத்துப் பெருங்காயத்தை வைக்கச் சில நாள் ஒன்றுபோலே நின்று, பின்னை பட்டுப்போகாநின்றதிறே; அப்படியே அஹங்கார மமகாரங்கள் த்யாஜ்யமென்னும் ப்ரதிபத்தி யுண்டாகத் தன்னடையே ஸம்ஸாரம் அடியற்று நிற்கும். **"அநாத்மந்யாத்மபுத்திர்யா அஸ்வே ஸ்வமிதி யா மதி: । அவித்யாதருஸம்பூதிபீஜமேதத் த்விதா ஸ்திதம்"** (அநாத்மங்யாத்மபுத்திர்யா அஸ்வேஸ்வமிதியாமதி: - அவித்யாதருஸம்பூதிபீஜமேதத்த்விதாஸ்த்திதம்) என்று ஸம்ஸாரபீஜமுஞ் சொல்லி, **"அச்யுதாஹம் தவாஸ்மீதி ஸைவ ஸம்ஸாரபேஷஜம்"** (அச்யுதாஹந்தவாஸ்மீதி ஸைவஸம்ஸாரபேஷஜம்) என்று பரிஹாரமுஞ் சொல்லிற்றிறே; ரக்ஷகனனவன் அவஸரப்ரதீக்ஷகனாயிருக்க, இவன்பக்கலிலே விலக்காமை யுண்டானால் விரோதி போகைக்குத் தட்டில்லை யென்கை. [இறைசேர்மின்] - அப்ராப்த விஷயங்களை விட்டு வகுத்த ஶேஷியானவனைப் பற்றப் பாருங்கோள். "சேர்மின்" என்கிறார்காணும், கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே யிருக்கையாலே ஸம்ஸாரிக்கு பகவத்ஸமாஶ்ரயணம். [உயிர்க்கதனேர்நிறையில்லே] - இத்தோடொத்த சீரியதில்லையென்னுதல்; நேரென்று - ஒப்பாய், நிறையென்று - மிகுதியாய், உயிர்க்கு இத்தோடொத்ததும் மிக்கது மில்லை யென்றுமாம். ப்ரதமத்தில் *(ஔஷதம்போலே ஸம்ஸாரிகளுக்கு பகவத்ஸம்பந்தம்) ஹிதமுமாய், உதர்க்கத்தில் ப்ரியமுமாயிருக்கும். நித்யமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமான வஸ்துவுக்கு இத்தோடொக்குஞ் சீரியதில்லை; **"ஸம்ஸாரார்ணவமக்நா**

பேரிலே-ஸ்வதந்த்ரோஹ மென்றாற்போலே. பிறருடைய-ஈஶ்வரனுடைய. "உத்தம: புருஷஸ்த்வந்ய:" "பிறர்நன்பொருள்" என்னக்கடவதிறே. ஆக, இத்தால் "ஶுத்தே மஹாவிபூத்யாக்யே பரே ப்ரஹ்மணி ஶப்த்யதே । அநாத்மந்யாத்மவிஜ்ஞானம் ஸோऽஹங்காரோ நிகத்யதே" என்கிறபடியே தேஹாத்மாபிமாந ஸ்வாதந்த்ர்யாபிமாநரூப த்விவிதாஹங்காரநிவ்ருத்தி வேணு மென்றபடி. இவை வேர்முதல்மாய்த்து-இவற்றை ருசிப்ரக்ருதிகளாகிற ஊசிவேரோடும் பக்கவேரோடும் மாய்த்து. 'வேர், முதல்' என்கிற இரட்டிப்பாலே-ஸவாஸநிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ப்ரதிபத்திமாத்ரம் போருமோ? என்ன, இரண்டுவ்ருக்ஷம் இத்யாதி. தார்ஷ்டாந்திகத்தில் அஹங்காரமமகாரங்கள் ஒருவ்ருக்ஷம், ஆத்மா ஒருவ்ருக்ஷ மென்று கண்டுகொள்வது. அவதாரிகைக்குச் சேர ப்ரமாணத்வயம் - அநாத்மநி இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுபுராணே ஷஷ்டேம்ஶே காண்டிக்யம்ப்ரதி கேஶித்வஜோக்தமிதம். "அநாத்மநி தேஹே, யா ஆத்மபுத்தி:, அஸ்வே ஸ்வமிதி யா மதி:, த்விதா ஸ்திதம் ஏதத் அவித்யாதருஸம்பூதிபீஜம். அவித்யா அவித்யாரூபமான கர்மம். கர்மமாகிற வ்ருக்ஷத்தினுடைய உத்பத்திக்கு விதையாயிருக்கு மென்றபடி. "நவ்யாவயதீத்யச்யுத:" என்றத்தைப்பற்ற, ரக்ஷகனனை என்றது. "தவாஸ்மி" என்றத்தைப்பற்ற, விலக்காமை என்றது. 'நீர்நுமது' இத்யாரப்ய 'சேர்மின்' இத்யந்தஸ்ய பாவமாஹ - அப்ராப்த இத்யாதி. பற்றுமின் என்னதே 'சேர்மின்' என்றதுக்கு பாவம் - சேர்மின் என்கிறார் இத்யாதி. கெடுமரக்கலம் - கெடுமரக்கலத்திலுள்ளார் கரைசேர்ந்தாற்போலே யென்றபடி; இத்தால், மரக்கலத்தை ஆலம்பநமாகக் கொண்டன்றோ, வாயுவஶாத் கரைசேருகிறது; அப்படி விஷ்ணுபோதமான ஈஶ்வரன் க்ருபாவானுய்க்கொண்டு கடத்து மென்றபடி. மரக்கலம்-ஓடம். இத்தோடொத்த இத்யாதி. நேரென்று-ஒப்பாய், நிறையென்றத்தாலே - சீர்மையாய், விலக்ஷணமான ஆத்மவஸ்துவுக்கு இத்தோடொத்த சீரியதில்லை யென்றபடி. அர்த்தத்வயபலிதம் - ப்ரதமத்தில் இத்யாதி. இத்தால் "விஷயேந்த்ரியஸம்யோகாத் யத்தத³க்³ரே அம்ருதோபமம் । பரிணாமே விஷமிவ தத் ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம்" என்கிற விஷயங்களை வ்யாவர்த்திக்கிறது. உதர்க்கத்தில் - உத்தரகாலத்திலே. முந்தின அர்த்தத்திலே நோக்காக 'உயிர்க்கு' என்ற பதத்துக்கு வாஸனை - நித்யமாய் இத்யாதி. ஸிம்ஹாவலோகநந்யாயேந, "மரக்கலம்கரைசேர்ந்தாற்போலே

* குண்டலிதக்ரந்தம் - சில ஸ்ரீகோசங்களில் இல்லை.

நாம்'' (ஸம்ஸாரார்ணவமக்நாநாம்) இத்யாதி. "விஷ்ணுபோதம்"(விஷ்ணுபோதம்) - இக்கரையும் அக்கரையும் ஒன்றாய்நின்று அவ்வருகு கடத்தும் ஓடம். (ரு)

## நான்காம் பாட்டு.

இல்லதுமுள்ளதும், அல்லதவனுரு
எல்லையிலந்நலம், * புல்குபற்றற்றே.

ஆ.—(இல்லதும்.) த்யாஜ்யமாகச் சொல்லப்படுகிற ப்ராக்ருத விஷயங்களிற் காட்டில் ஸமாஶ்ரயணீயமாகச் சொல்லப்படுகிற விஷயம் நன்றா யிருக்கிலன்றோ இத்தைவிட்டு அத்தைப் பற்றலாவ தென்னில்,—ஹேயப்ரத்யநீகதயா கல்யாணைகதாநதயா இந்தச் சேதநாசேதநங்களிற் காட்டில் அத்யந்த விலக்ஷண ஸ்வரூபனாய், நிரவதிக கல்யாணகுண விஶிஷ்டனாகையாலே நிரவதிக போக்ய பூதனாயிற்று இவன் இருப்பது; ஆதலால், இந்த ஹேயமான விஷயங்களில் ஸங்கத்தைவிட்டு அவனைப் புல்கு என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், பற்றப்படுகிற விஷயத்தின் நன்மை சொல்லுகிறார்.

[இல்லதென்று தொடங்கி]-ஏகரூபமல்லாமையாலே இல்லை யென்னலாம்படி இருக்கிற அசேதநத்தின் தன்மையும், ஏகரூபமாகையாலே உண்டென்னலாம்படியிருக்கிற சேதநர்படியு மன்றிக்கே யிருக்கும் அவன்ஸ்வரூபம்; அவன் ஸ்வரூபந்தா னிருக்கும்படி எங்ஙனே? என்னில்,—[எல்லையில் என்று தொடங்கி]-அஸங்க்யேய கல்யாண குணங்களை யுடைத்தாயிருக்கும், புறம்புள்ள ஸங்கத்தை விட்டு அவனை ஆஶ்ரயி. 'புல்கு' என்கையாலே, ஆஶ்ரயணம் இனிதென்று கருத்து.

ப.—அநந்தரம், இப்படி த்யாகபூர்வகமாக பஜநீயமான வஸ்துவினுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார்.

இல்லதும் உள்ளதும்-(ஸ்வரூப பரிணாமத்தாலே ஒருபடிப்பட்ட அஸ்தித்வ மில்லாமையாலே அஸத்ய ஶப்தவாச்யமாயும் ஏகரூபத்வத்தாலே ஒருபடிப்பட்ட அஸ்தித்வத்தை யுடைத்தாகையாலே ஸத்யஶப்த வாச்யமாயுமுள்ள) அசித்தினுடையவும் சித்தினுடையவும்படி, அல்லது-அன்றியே, அவன்உரு - அவனுடைய ஸ்வரூபமானது, எல்லைஇல் - அபரிச்சிந்நமான, அந்நலம் - கீழ்ச்சொன்ன ஆநந்தத்தை வடிவாக உடைத்தாயிருக்கும்; பற்றற்றுப் புல்கு - (அத்தை, இதர விஷயங்களில்) பற்றற்று ஸ்நேஹயுக்தமாகச் செறி.

புல்குதலாவது - ஸஸ்நேஹமான செறிவாகையாலே பஜநத்தினுடைய அத்யர்த்த ப்ரியத்வஞ் சொல்லுகிறது. 'புல்கு' என்றுஞ் சொல்லுவர். கீழ் மூன்று பாட்டிலும் பன்மையாலே உபதேஶித்து இப்பாட்டுத் தொடங்கி ஒருமையாலே உபதேஶிக்கிறது. த்யாஜ்யங்கள் பரஸ்பர விருத்தங்களாய்க்கொண்டு பலவாதலாலும், ஸத்த்வாதி குண பேதத்தாலே ருச்யாதி விஶிஷ்டரான அதிகாரிகள் ஒன்றோடொன்று ஒவ்வாத புத்திபேதத்தை யுடையராகையாலும், இதர த்யாகத்தில் பன்மையாலே உபதேஶிக்கவேணும்; பகவத்பஜநத்தில் புத்த்யைக்யத்தாலும், புருஷார்த்தைக்யத்தாலும், அதிகார்யைக்யமுண்டாகையாலே ஒருமையாலே உபதேஶிக்கலாம்.

---

யிருக்கை'' என்னுமதுக்கு ப்ரமாணம் - ஸம்ஸார இத்யாதி. "ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம் । விஷ்ணுபோதம்விநாநாந்யத்கிஞ்சிதஸ்திபராயணம்" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. "விஷ்ணுபோதம்" என்கிறதாத்வர்த்தம் - இக்கரையும் இத்யாதி. க்ரமேண அந்வயঃ. (ரு.)

---

* புல்குஎன்று பன்னீராயிரப்படிக்கு முதற்பாடம்.

இ.—நாலாம்பாட்டில், பற்றுகிற விஷயத்தின் நன்மை சொல்லுகிறார்.

[இல்லது முள்ளது மல்ல தவனுரு] - நச்வரமான அசேதநத்தின் ஸ்வபாவமும், ஏக ரூபனான சேதநன்படியு மன்றிக்கே யிருக்கும் அவன்ஸ்வரூபம், இல்லதென்றது - துச்சத்வ மித்யாத்வங்களைச் சொல்லுகிறதன்று: நச்வரதையைச் சொல்லுகிறது. உள்ளதென்று - அஸ்தித்வமாத்ரத்தைச் சொல்லுகிறதன்று; நித்யதையைச் சொல்லுகிறது. [எல்லையிலந்நலம்] - அவன் ஸ்வரூப மிருக்கும்படிதா னென்? என்னில்,- அஸங்க்யேய கல்யாண குணங்களையுடைத் தாயிருக்கும். எல்லையில்லாத அந்நலத்தை யுடைத்தென்னுதல், எல்லையில்லாத அந்நல மென்னுதல். [புல்கு] - ஆச்ரயி. அபிமத விஷயத்தை அணைத்தாற்போலே ஆச்ரயணந்தான் இனிதா யிருக்கையாலே 'புல்கு' என்கிறார். [பற்றற்றே] - ப்ராக்ருதாப்ராக்ருதங்களில் ஸங்கத்தை விட்டு.

ஈடு.—நாலாம்பாட்டு. விடுகிறவைபோலே அபோக்யமுமாய், ஸதோஷமுமா யிராதென்று பற்றப்படுகிற விஷயத்தினுடைய போக்யதையை அருளிச்செய்கிறார்.

[இல்லதும்] - ப்ரமாணயோக்ய மல்லாமையால் வரும் துச்சத்வத்தைப் பற்றவாதல், ப்ரதீதிமாத்ரமாய் பாத்யயோக்யமான மித்யாத்வத்தைப்பற்றவாதல் "இல்லது" என்கிறதன்று; விநாசித்வத்தைப்பற்றச் சொல்லுகிறது. [உள்ளதும்] - இல்லாதான வஸ்துவில் வ்யாவ்ருத்தியைப் பற்ற "உள்ளது" என்கிறது; "யதஸ்தி யந்நாஸ்தி" (யதஸ்தியந்நாஸ்தி) என்றும், "ஸத்யஞ்சாந்ருதஞ்ச" (ஸத்யஞ்சாந்ருதஞ்ச) என்றுஞ் சொல்லக்கடவதிறே சிதசித்துக்களை.

---

ப்ர:—தைத்திரீயகே [ரு-சு] "ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்":-ந்யாயஸ்தாநி [illegible] ... ந த்ருச்யதே; ... (Grantha passage, partly illegible)

---

நாலாம்பாட்டு - இல்லதும் இத்யாதி. விடுகிறவை - சிதசித்துகள். அபோக்யத்வ ஸதோஷத்வங்கள் அசித்வஸ்துவிலே; ஸதோஷத்வமாத்ரம் சித்வஸ்துவிலே; ஜ்ஞாநாநந்த லக்ஷணத்வேந போக்யத்வாத் தஸ்ய. ஸதோஷத்வம் - நாகாவஹத்வாதி.

சசவிஷாணமென்கிற சூந்யவாதியையும், சுக்திகாரஜதமென்கிற மாயாவாதியையும் போலே இல்லையென்கிற தல்ல வென்கிறார் - ப்ரமாணயோக்யம் இத்யாதி. "ப்ரமாணஸம்பந்தாநர்ஹத்வம் துச்சத்வம்: ப்ரதீதஸத்வே ஸதி பாத்யத்வம் மித்யாத்வம் ..." இல்லாதான வஸ்துவில் - அநித்யமான வஸ்துவில். வ்யாவ்ருத்தியைப்பற்ற - அவிநாசித்வத்தைப்பற்ற. ந து அஸ்தித்வமாத்ர மவலம்ப்ய என்றபடி. அப்படி அசித்தை அஸத்யசப்தவாச்யமாகவும், சித்தை ஸத்யசப்த வாச்யமாகவுஞ் சொன்னவிட முண்டோ? என்ன, யதஸ்தி இத்யாதி. "ஜ்யோதீம்ஷி விஷ்ணுர்புவநாநி விஷ்ணுர் வநாநி விஷ்ணுர் கிரயோ திசச்ச । நத்யஸ்ஸமுத்ராச்ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே த்விதீயேம்சே. தைத்திரீயகே "ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்"-அஸ்திசப்தவாச்யமான ஆத்மவர்க்கம் யாதொன்று உண்டு, நாஸ்திசப்தவாச்யமான அசித்தத்வம் யாதொன்று உண்டு, ஸர்வமும்ததீந மென்றபடி. புவநாதி யென்ற விடம்-கார்யாவஸ்த்தை. ஸத்யஞ்ச இத்யாதி-

அன்றியே, ஆத்மாவுக்கு இருப்பிடமான ஶரீரத்தின்படியும் அத்தை இருப்பிடமாக வுடைய ஆத்மாவின்படியு மல்ல வென்றுமாம். [அல்லது அவனுரு] - நஶ்வரமா யிருக்கிற அசித்தின்படியுமன்று, அசித்ஸம்ஸர்க்கத்தாலே "ஜஹாம்ஸஸ்வீ, ஜஹாம்ஷேதஸ்வீ" என்கிற சேதநன்படியுமன்று, அவன் ஸ்வரூபம். ஆனால், எங்ஙனேயிருக்கும்? என்னில்,—[எல்லையிலந்நலம்]-"ஆநந்தமய:" (ஆநந்தமய:) என்றும், "உணர்முழுநலம்" என்றும், "ஒடியாவின்பப்பெருமையோன்" என்றும், "சுடர்ஞானவின்பம்" என்றும், "ஸமஸ்தகல்யாண குணாத்மகோ ஸௌ" (ஸமஸ்த கல்யாண குணாத்மகோ ஸௌ) என்றுஞ் சொல்லலாம்படி யிருக்கும். [புல்கு] - அங்கநாபரிஷ்வங்கம்போலே போகரூபமா யிருக்குமிறே, குணஜ்ஞாநமுடையவனுக்கு குணாதிகவிஷயாநுபவம். [பற்றற்றே] - அதுசெய்யுமிடத்தில் இருகரையனுகையன்றிக்கே, புறம்புள்ள பற்று அற்றே புல்கு. பற்றிலார்பற்ற நின்றானிறே அவன்; ஆகையாலே, பற்றற்றே புல்கவேணும். (ச)

## ஐந்தாம் பாட்டு.

---

அற்றதுபற்றெனில், உற்றதுவீடுயிர்
செற்றதுமன்னுறில், அற்றிறைபற்றே.

**ஆ.**—(அற்றது.) விஷயத்தில் ஸங்கத்தை விடுமளவில் ப்ரக்ருதிவிநிர்முக்தமாய் ஸ்வரூபமாயிருந்த ஆத்மா தோன்றும்; அதிலகப்படாதே பகவச்சேஷதைகரஸமான உன்னுடைய ஸ்வரூபத்தைப் பெற்று நிலைநிற்க வேண்டியிருக்கில், முதலிலே விஷய ஸங்கத்தை விடும்போதே எம்பெருமானைப் பற்றி விடுவது என்கிறார்.

---

ஸத்யஶப்தவாச்யமான ஆத்மவர்க்கமும், அந்ருதஶப்தவாச்யமான அசித்தும், ஸத்யஶப்தவாச்யனான ஈஶ்வரனுமிற்று. த்விதீயார்த்தத்துக்கு இல்லானது முள்ளானது மென்றபடி. இல்லேன்று-க்ருஹம்.உள்ளானது-ஆத்மா. இவை இரண்டையும்பற்ற பகவத்ஸ்வரூபம் வ்யாவ்ருத்தமாயிருக்கும் ப்ரகாரத்தை விஶதமாக அருளிச்செய்கிறார்-நஶ்வரமாயிருக்கிற இத்யாதி. பூர்வயோஜனையில்நஶ்வரமாயென்கிறஇது-ஶப்தஸாமர்த்த்யலப்யம்; அசித்ஸம்ஸர்க்கத்தாலே யென்கிற இது - அர்த்தஸாமர்த்த்யலப்யம். த்விதீயயோஜனையில் மாறுடியிருக்கும். அதாவது-ஶரீரத்துக்கு நஶ்வரத்வம் அர்த்த ஸாமர்த்த்யலப்யம், ஆத்மாவுக்கு அசித்ஸம்ஸர்க்கம் ஶப்தஸாமர்த்த்யலப்ய மென்றபடி. அவனுரு - அவனுடைய ஸ்வரூபம். எல்லையிலந்நலம் - அபரிச்சிந்நமாகக் கீழ்ச்சொன்ன ஆநந்தத்தை வடிவாக வுடைத்தாயிருக்குமென்று ஶப்தார்த்தம். ஒடியா இத்யாதி - நஶியாத ஆநந்தம் மிக்கிருக்கிறவன். சுடர் இத்யாதி - கல்யாணகுணோஜ்ஜ்வலமான ஜ்ஞாநாநந்தலக்ஷணஸ்வரூபத்தை யுடையவனே. ஸமஸ்தகல்யாணத்வம் குண: - ஸ்வபாவோயஸ்ய வென்கிற ஹாவப்ரதாந நிர்த்தேஶபரமான அர்த்தம் இவ்விடத்துக்கு விவக்ஷிதம். பற்றென்னாதே 'புல்கு' என்றதுக்கு ஹாவம் - அங்கநா இத்யாதி. புல்குதலாவது - ஸ்நேஹயுக்தஸம்ஶ்லேஷம். 'குணாதிகவிஷயாநுபவம்' என்கையாலே நலமென்று - குணங்களையுடைத் தென்னவுமாம். கீழ்மூன்று பாட்டாலும் த்ருதீயாத்யாயத்தில் ஸம்ஸாரதோஷ ப்ரதிபாதக ப்ரதமபாதார்த்தம் சொல்லிற்று; இப்பாட்டில் கல்யாணகுண விஶிஷ்ட ப்ரஹ்மப்ரதிபாதக த்விதீயத்ருதீய பாதார்த்தஞ் சொல்லுகிறது; "நஸூநமெதாவிவாரவஸ்" இத்யாத்யநுஸந்தேயம். "பற்றற்றே" என்கிற ஏவகாரத்துக்கு அர்த்தம் - அதுசெய்யுமிடத்தில் இத்யாதி. உபாயாந்தர ஸம்ஸர்க்கமற்று என்று அர்த்தாந்தர விவக்ஷயா ப்ரமாணம் - பற்றிலார் இத்யாதி. இல்லதுமுள்ளதுமல்லதவனுரு, எல்லையிலந்நலம், பற்றற்றே புல்கு இத்யந்வய:. சிதசித்தின்படியன்றியே அவனுடைய ஸ்வரூபமானது அபரிச்சிந்நமாகக் கீழ்ச்சொன்ன ஆநந்தத்தை வடிவாக வுடைத்தாயிருக்கும்; அத்தை இதரவிஷயங்களிற் பற்றற்று ஆஶ்ரயியுங்கோ ளித்யர்த்த:. தைத்திரீயகே "ஸுஹ்ருத்ஸத்ருஶ ஆநந்தமய:" "ஸமஸ்தகல்யாணகுண" இத்யாதி பூர்வமேவ லிகிதம். (ச)

ஒ.—அஞ்சாம்பாட்டில், பகவத் ஸமாஶ்ரயணத்துக்கு அந்தராய பரிஹாரத்தை அருளிச்செய்கிறார்.

[அற்றது என்று தொடங்கி] - ப்ராக்ருதவிஷய ஸங்கம் அறுங்காட்டில் ஆத்மா மோக்ஷத்தை, உற்றது - கையுற்றது. [செற்றது என்று தொடங்கி] - அந்தப் புருஷார்த்தத்தைத் தவிர்த்து நிரதிஶய புருஷார்த்தமான பகவத் கைங்கர்யத்தைப் பெற்று நிலைநிற்க வேண்டியிருந்தாயாகில் ஆஶ்ரயிக்கும்போது உன்னை எம்பெருமானுக்கே ஶேஷமாக அத்யவஸித்து ஸ்வாமியானவனை ஆஶ்ரயிப்பது.

ப.—அநந்தரம்,பஜநீயனுடைய அதிஶயிதபுருஷார்த்தத்வத்தை அருளிச்செய்கிறார்.

பற்று - (புறம்புள்ள) பற்று, அற்றதெனில் - அற்றதென்றபோதே,உயிர் - உயிரானது, வீடு - மோக்ஷத்தை, உற்றது - உற்றதாம்; அது - அந்த ஆத்மப்ராப்திமோக்ஷத்தை, செற்று - செறுத்து, மன்னுறில் - நிலைநிற்கும்படி (பகவத்விஷயத்தைக் கிட்டப்) பார்க்கில், அற்று - இதரஸங்கத்தையறுத்து, இறை - ஈஶ்வரனை, பற்று - ஆஶ்ரயி.

பற்றற்றதென்னில் உயிர் வீட்டையுற்றதென்று ஸாமாந்யத்தாலே சொல்லி அந்தப் பற்றைச் செற்று நித்யபுருஷார்த்தத்தைக் கிட்டில் அறுதியுடையையாய் இறையை ஆஶ்ரயி என்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், பகவத் ஸமாஶ்ரயணத்துக்கு அந்தராயபரிஹாரஞ் சொல்லுகிறது.

[அற்றதுபற்றெனில்] - பற்று அற்றதென்னில்; இதர விஷயங்களில் பற்றற்றமாத்ரத்திலே ஆத்மா மோக்ஷத்தை, உற்றது - கையுற்றது. அநித்யமாய் ஜடமான அசித்ஸம்ஸர்க்கம் அற்றவாறே நித்யமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமான ஆத்மா தன்பக்கலிலே கால்தாழப்பண்ணும்; நிஶ்சிதம். [செற்றது] - அத்தை ஜயித்து, அத்தை முகம்சிதறப் புடைத்து. [மன்னுறில்] - நிரதிஶயமான பகவத் கைங்கர்யத்தைப் பெற்று நிலைநிற்க வேண்டியிருந்தாயாகில். [அற்றிறை பற்றே] - இதர விஷயங்களில் தொற்றற்று ஸர்வேஶ்வரனைப் பற்று என்னுதல்; ஆஶ்ரயிக்கும்போதே உன்னை பகவச்சேஷமாக அத்யவஸித்து ஸ்வாமியானவனை ஆஶ்ரயி யென்னவுமாம். அன்றிக்கே, விபக்தியை மாறாடி, இறையைப்பற்றி அத்தை அறுங்கோளென்னவுமாம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. பற்றுமிடத்தில் வரும் அந்தராய பரிஹாரத்தையும் அருளிச்செய்கிறார்; "இந்த்ரபதத்தைக் கோலுமவன் இவ்வருகுண்டான ஐஶ்வர்யத்தைக் கோலான்; ப்ரஹ்மபதத்தை ஆசைப்படுமவன் இவ்வருகுண்டானஇந்த்ரபதத்திற் கண்வையான்; ஆத்மாநுபவத்தைஆசைப்படுமவன் ஐஶ்வர்யாதிகளிற் கண்வையான்; ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் நித்யமங்கள விக்ரஹ

---

அஞ்சாம்பாட்டு - அற்றது இத்யாதி. 'செற்றதுமன்னுறில்' என்றத்தைக் கடாக்ஷித்து ஸங்கதி அருளிச்செய்கிறார் - பற்றுமிடத்தில் இத்யாதி. நித்ய புருஷார்த்தமான ஆத்மாநுபவத்தை அந்தராய மென்கிறதென்? என்ன, பகவத்ப்ராப்திரூப அதிஶயிதபுருஷார்த்தாபேக்ஷயா ந்யூநமாகையாலே அந்தராயத்வங் கூடுமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார் - இந்த்ரபதத்தை இத்யாதி. உத்தரோத்தர புருஷார்த்தங்களை இச்சிக்கிறவன் பூர்வபூர்வ புருஷார்த்தங்களை அபேக்ஷியாதொழிகையாலே நீயும் கைவல்யத்தை இச்சியாதேகொள் என்றபடி. அத்தை அபேக்ஷியாமலிருக்கையே பரிஹார மென்று கருத்து. பற்றுமவன் - ப்ராப்யதயா பற்றினவன். இவையித்தனையிலும் கண்வையா னென்ற விடத்திலே - "ஹொமாஉஜெவியிஶிவாஷிவஷஞ" இத்யாதியும், "வாஸுஷெவெ ஜெநா யஸ்ய ஜவஹொமொவஙூநாஷிஷு। தஸ்யாநாரயொ

யுக்தனுயிருக்குமவனைப் பற்றுமவன் இவையித்தனையிலுங் கண்வையான்; ஆக, இங்ஙன்வரும் அந்தராயபரிஹாரத்தை அருளிச்செய்கிறார்.

[அற்றதுபற்றெனில்] - ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான பற்று அற்றதென்னுமளவிலே. [உற்றது வீடுஉயிர்]-ஆத்மா மோக்ஷத்தை ப்ராபித்தது. விலக்ஷணஜ்ஞாநத்தையும் ஸ்வரூபத்தையுமுடைய வஸ்துவுக்குத் திரோதாநத்தைப் பண்ணுகிறது அசித்ஸம்ஸர்க்கமிறே; யோகாப்யாஸத்தாலே கழிந்தவாறே ஸ்வரூபம் ப்ரகாஶிக்கும்; அது நித்யமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாயிருக்கையாலே 'இதுதன்னையே அநுபவிக்க அமையாதோ?' என்று தன்பக்கலிலே கால் தாழப்பண்ணும். [செற்றது] - அத்தைச்செற்று; அத்தை முகம்சிதறப் புடைத்து. [மன்னுறில்] - மன்னவுறில். தன்னைப்பற்றினல் 'இன்னமும் அதுக்கு அவ்வருகே ஒரு அநுபவமுண்டு' என்று இருக்கவேண்டாதபடியான நிலைநின்ற புருஷார்த்தத்தைப் பற்றப் பார்க்கில். [அற்றிறைபற்றே] - ஆஶ்ரயணகாலத்திலே அவனுக்கென்று அத்யவஸித்து, ஶேஷியான அவனைப் பற்றப்பாருங்கோள். அன்றியே, விபக்தியைமாறுடி, இறையைப்பற்றி இத்தை யறப்பாரேன்னுதல். * "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்னுமாபோலே. (ரு)

## ஆறும் பாட்டு.

பற்றிலனீசனும், முற்றவும்நின்றனன்
பற்றிலையாய்அவன், முற்றிலடங்கே.

ஜெஷெதய ஜெவெஷ தாஷிகஂஷஂ" இத்யாதி ச அநுஸந்தேயம். இங்ஙன்வரும் - ஏவம்ப்ரகாரேண வரும். அந்தராயம் - கைவல்யம்.

பற்று அற்றதெனில் உயிர் வீடுற்றது இத்யந்வய:. ஶப்தார்த்தம் - ஆத்மா இத்யாதி. மோக்ஷத்தை ப்ராபித்தது - ப்ராபிக்க ஒருப்படும்; இச்சிக்குமென்றபடி. இங்ஙனன்றிக்கே, ப்ராபித்ததென்று அர்த்தமானல் அத்தை முகஞ்சிதறப்புடைக்கை கூடாதிறே. 'அத்தைச்செற்று' என்கைக்கு - தன்பக்கலிலே துவக்கவல்ல வைலக்ஷண்யம் ஆத்மாவுக்கு உண்டோ? என்ன, விலக்ஷணஜ்ஞாநத்தையும் இத்யாதி. கழிந்தவாறே - திரோதாநங் கழிந்தவாறே. ஸ்வரூபம் ப்ரகாஶிக்கும் - ஸ்வரூபம் போக்யமாக ப்ரகாஶிக்கும். ஏவம்பூதமான ஆத்மாநுபவம் பகவதநுபவத்துக்கு அந்தராயமாம் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - அதுநித்யமாய் இத்யாதி: கால் தாழப்பண்ணும் - தன்பக்கலிலே அகப்படுத்திக்கொள்ளும். 'கைவல்யம் அநித்யம்' என்கிற பக்ஷவ்யாவ்ருத்த்யர்த்தமாக, மன்னுறில் என்றதுக்கு - நித்யபுருஷார்த்தத்தைப் ப்ராபிக்க வேண்டி லென்னுதே, பொருந்தவுறில் என்று அர்த்தம் அருளிச்செய்கிறார் - தன்னைப்பற்றினல் இத்யாதி. மன்னவுறில் - பொருந்தவுறில்; நிலைநின்ற புருஷார்த்தத்தைப் பற்றப்பார்க்கி லென்றபடி. ஸ்வாநுபவமேயமையுமென்றிருக்கிற கேவலனுக்கும் வேறேயொன்றிலே அபேக்ஷை பிறக்குமோ? என்ன, ஸர்வேஶ்வரனுக்கு அடிமைசெய்து அங்குள்ளார்கள் இருக்கிறபடியைக் கேட்டு இவனுக்கும் அபேக்ஷை பிறக்கும்; பிறந்தாலும் தத்க்ரதுந்யாயத்தாலே ஈஶ்வரன் அத்தையே அநுபவிப்பிக்கு மென்றபடி. நிலைநின்ற - அபரிச்சிந்நமாகையாலே மேன்மேலெனப் புருஷார்த்தங்களில் ருசி பிறவாதபடி நிலைநின்ற. இறை - ஶேஷியானவனை. முந்தின அர்த்தத்தில், அற்று-அதுதீர்ந்து, த்விதீயார்த்தத்தில், இறையைப்பற்றி அறு என்றபடியாய், அறப்பாரென்றபடி. விபக்தியை மாறுடி - 'அற்று' என்கிற ல்யப்பை 'பற்று' என்கிறதிலேயும், 'பற்ற' என்றதில் விகுதியை 'அற்று' என்கிறதிலேயும் மாறுடி. ஆக, பற்றியறு என்றபடி. பற்றி - ப்ராப்யதயாபற்றி. இத்தை - கைவல்யத்தை. பகவத்விஷயப்ரீதியால் இதர விஷயப்ரீதி நிவ்ருத்திக்கு த்ருஷ்டாந்தம் - மாற்பால் இத்யாதி. ஸர்வேஶ்வரன்பக்கலிலே மநஸ்ஸு ப்ரவணமாக ஸ்த்ரீகள் தோளோடு அணைகையில் ஆசையைவிட்டு. மங்கையர்தோள் கைவிடுகையாவது - ஸம்ஸார நிவ்ருத்தி யென்றும் ஒருயோஜநை யுண்டென்று திருவுள்ளம். பற்றற்றதெனில் உயிர் வீடுற்றது. அது செற்று மன்னுறில், அற்றிறையைப்பற்று இதிவா, இறையைப்பற்றி அறு இதிவா அந்வய:. (ரு)

* மூன்றாந்திருவந்தாதி - கச.

**ஆ.**—(பற்றிலன்.) எம்பெருமானை நாம் பற்றினால் அவன் நம்மை விஷயீகரிக்குமோ? அவன் ஸர்வேஶ்வரனல்லனோ? என்னில்,—ஸர்வேஶ்வரனே யாகிலும் ஆஶ்ரிதரெல்லார்பக்கலிலும் ஒக்க ஸ்நேஹ ஸ்வபாவனாயிருக்கும்; ஆதலால், நீயும் அவன்பக்கலிலே ஸ்நேஹஸ்வபாவனாய் அவனுடைய ஸர்வஶேஷ வ்ருத்தியிலும் புகு என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், விலக்ஷணரான நித்யாஶ்ரிதரையுடைய ஈஶ்வரன் அவிலக்ஷணராய் இன்றுவந்த அபூர்விகர்களை அங்கீகரிக்குமோ? என்னில்;—

நித்யாஶ்ரிதர்பக்கல் அவன் ஸங்கத்தைத் தவிர்ந்து இன்று ஆஶ்ரயித்தவர்களையே தாரகாதிகளாகக் கொண்டிருப்பானொருவன். ஆனபின்பு, நீயும் அப்படியே புறம்புள்ள ஸங்கத்தையற்று அவனையே தாரகபோஷகாதிகளெல்லாமாகக் கொண்டு பற்று. நிரபேக்ஷனான ஈஶ்வரன் க்ஷுத்ரரான நம்மை அங்கீகரிக்குமோ? என்னில்,—அங்ஙனேயிருந்தானேயாகிலும் ஸங்கஸ்வபாவனாய் ஆஶ்ரிதரெல்லார்பக்கலிலும் ஒக்க ஸங்கித்திருக்கும்; நீயும் ஸங்கஸ்வபாவனாய், அவனுடைய ஸர்வஶேஷ வ்ருத்தியிலும் அதிகரி யென்றுமாம்.

ப.—அநந்தரம், பஜநீயனுடைய ஸர்வஸமத்வத்தை அருளிச்செய்கிறார்.

ஈசனும் - ஸர்வேஶ்வரனா யிருக்கச்செய்தேயும், பற்றிலன் - (பூர்வாஶ்ரிதரான மஹர்ஷி பரிஜநாதிகளில்) ஸங்கமற்று, முற்றவும் - (அபூர்வாஶ்ரிதரான நம்பக்கலிலே) தாரகத்வ போஷகத்வ போக்யத்வாதிக ளெல்லாமாக, நின்றனன் - நிலை நின்றான்; பற்றிலையாய்-(நீயும்) ஸாம்ஸாரிக ஸங்கத்தைவிட்டு, அவன் முற்றில் - அவனுடைய (தாரகத்வாதி) ஸமஸ்தஸ்வபாவங்களிலும், அடங்கு - அந்தர்ப்பவிக்கப்பார். அன்றியே, ஸர்வேஶ்வரனாயிருக்கச்செய்தேயும் நம்பக்கல் ஸங்கத்திலே உளனாய் "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்று ஆஶ்ரயணீயத்வத்தில் தாரதம்யமற்று நின்றான்; நீயும் அவன்பக்கலில் ஸங்கத்திலே நிலையுடையையாய் அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூத்யாதி ஸமஸ்த ப்ரகாராநுபவத்திலே அந்தர்ப்பவி என்னவுமாம்.

**இ.**—ஆறும்பாட்டில், நாம் புறம்புள்ளவற்றை விட்டு அவனைப் பற்றினால் அவன் ஸர்வேஶ்வரனன்றோ? நமக்கு முகந்தருமோ? என்னில்;—ஈஶ்வரத்வம் வந்தேறி யென்னும்படி ஸங்கஸ்வபாவன்கா ணென்கிறார்.

[பற்றிலன்] - பற்று உண்டு - ஸங்கம், அத்தை வாஸஸ்தாநமாக வுடையவன். [பற்றிலன்] - பற்றிலான்; பற்றிலேயுள்ளா னென்னவுமாம்; ஸங்கஸ்வபாவ னென்றபடி. [ஈசனும்] - ஈஶ்வரனும். ஈஶ்வரத்வத்தைத் தவிர்க்கவொண்ணாமையாலே கிடக்குமத்தனை; இஸ்ஸங்கம் குணமாகைக்காகக் கிடக்கிறது; பயப்படுகைக்கு உடலன்று; "[illegible]". [முற்றவும் நின்றனன்] - "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்கிறபடியே ஆஶ்ரயணீயத்வே ஸர்வஸமாநனாயிருக்கை. [பற்றிலையாய்] - நீயும் அவன்பக்கலிலே ஸங்கஸ்வபாவனாய். [அவன் முற்றிலடங்கே]-அவனுடைய எல்லாமுற்றிலும் அடங்கு; எல்லா ஶேஷவ்ருத்தியிலும் அந்வயி. அதவா, நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன் நித்யஸம்ஸாரிகளான நம்மை அங்கீகரிக்குமோ? என்னில்,-இன்று ஆஶ்ரயித்தநாம் ஒருதலையானால் நித்யாஶ்ரிதர்பக்கல் ஸங்கத்தைவிட்டு நம்மையே தாரகாதிகளாக நினைத்திருப்பானொருவ னென்கிறது. [ஈசனும்பற்றிலன்]-நித்யாஶ்ரிதரையுடையனாயிருந்தானேயாகிலும் இன்று ஆஶ்ரயித்த நாம் ஒருதலையானால், அவர்கள்பக்கல் ஸங்கத்தையுடையனல்லன், "[illegible]" இத்யாதி. [முற்றவும் நின்றனன்] - நாமே தனக்கு தாரகாதிகளெல்லாமாக நினைத்திருக்கும். [பற்றிலையாய்]-நீயும் புறம்புள்ள ஸங்கத்தைத் தவிர்ந்து; நாஶகரமான நித்யஸம்ஸாரத்தில் ஸங்கத்தைவிட்டு என்கிறது; அவன் தனக்கு நித்யபோக்யமான

நித்யவிபூதியில் ஸங்கத்தையன்றோ விடுகிறது. [அவன் முற்றிலடங்கே] - அவனுகிற எல்லாவற்றிலும் அடங்கு: அவனே யாரகாதிகளும் ஸர்வவிதபந்துவும் எல்லாமாகப் பற்று; "மாதாபிதா ப்ராதா", "வாஸுதேவஸ்ஸர்வம்" "உண்ணுஞ்சோறு பருகுநீர்", "சேலேய்கண்ணியர்" "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:". இது பட்டர் நிர்வாஹம்.

ஈடு.—ஆறும்பாட்டு. பற்றுமிடத்தில் வரும் அந்தராயபரிஹாரஞ் சொன்னார் கீழ்; நீர் பரிஹாரஞ் சோல்லுகைக்கு அவாப்த ஸமஸ்தகாமனுய் ஸாபேக்ஷியா யிருக்கிற அவன்தான் நமக்குக் கைப்புகுந்தானோ? என்ன, அவன்பக்கல் திருத்தவேண்டுவதோன்றில்லை; அவன் ஸங்கஸ்வபாவனென்கிறார்.

[பற்றிலன்] - பற்று உண்டு - ஸங்கம். அத்தை வாஸஸ்த்தாநமாகவுடையவன். பற்றிலானென்னுமத்தை 'பற்றிலன்' என்று குறைத்துக்கிடக்கிறது. 'இன்னான் இங்கு உண்டோ?' என்றால், 'இங்கில்லை அவன், அகத்திலான்' என்னக்கடவதிறே. [ஈசனும்] - ஈஶ்வரத்வம் கழற்ற வோண்ணுமையாலே கிடக்குமித்தனை. இஸ்ஸங்கம் குணமாகைக்காகக் கிடக்கிறது: பயப்படுகைக்கு உடலன்று. பெரியவ னெளிமையிறே குணமாவது; "ப்ரஸாதபரமௌ நாதௌ" (ப்ரஸாதபரமௌநாதௌ) - தண்ணளியே இவர்களுக்கு விஞ்சியிருப்பது; மேன்மை கழற்ற வோண்ணுமையாலே கிடந்தவித்தனை. இரண்டும் அவ்வாஶ்ரயகதமா யிருக்க, தண்ணளியே யுள்ளதென் றறிந்தபடியென்? என்னில், - "மம கேஹமுபாகதௌ"(மமகேஹமுபாகதௌ)- ஸாபேக்ஷிகளாயிருப்பார்க்கு ஸேஷபூதரை அழைத்துக் கார்யங்கோள்ளலா யிருக்க, நெடுந்தெருவே போகிறவர்கள் நான் இருந்த முடுக்குத்தெருத் தேடி வந்தபோதே ப்ரஸாதமே விஞ்சியிருக்குமென்னு

---

ஆறும்பாட்டு - பற்றிலன் இத்யாதி. 'ஈசனும்' என்றத்தைக் கடாக்ஷித்து - அவாப்த இத்யாதி. கைப்புகுந்தானோ - கைப்புகுரும்படி நின்றானோ? நீர் பரிஹாரஞ்சொல்லி, நாங்களும் ஆஶ்ரயிக்கைக்கு அவன் இப்போது கைப்புகுரும்படி நின்றானோ? என்றபடி.

பற்றென்று - ஸங்கமாய், இல்லென்று - வாஸஸ்த்தாநமாய், ஸங்கஸ்வபாவ னென்னுதல்; பற்றிலானென்றத்தைப் பற்றிலனென்று குறைத்துக்கிடக்கிறதாய், அகத்திலான் என்னுமாபோலே முழுச்சொல்லாய், பற்றிலேயானவன் பற்றிலான் என்றாய், ஸங்கத்தையுடையவ னென்னுதல். இரண்டர்த்தத்தையும் அடைவே அருளிச்செய்கிறார் - பற்றுண்டு இத்யாதி வாக்யத்வயத்தாலே. அர்த்தத்வயத்துக்கும், பற்று - ஸங்கம். பற்றிலான் என்று லோகத்தில் ப்ரயோகமுண்டோ? என்ன, இன்னான் இத்யாதி. ஈஶ்வரனன்றோ அவன்? என்கிற ஶங்கையிலே உத்தரம் - ஈசனும் என்று. 'ஈசனும்' என்ற ஶப்தம் - ஸமுச்சயாந்வாசயேதரேதரயோக ஸமாஹாரங்களில் அந்வாசயத்தைச் சொல்லுகிறது. ஸங்கம் ப்ரதமோபாத்தமாகையாலே ஈஶ்வரத்வம் ததுபஸர்ஜந மென்று கருத்து. ஈசனும் - ஈஶனுமாகிறான். கழற்றவொண்ணாதே கிடந்தாலும் பயஹேதுவோ? என்ன, இஸ்ஸங்கம் இத்யாதி. குணஹேதுத்வம் எப்படி? என்ன, பெரியவன் இத்யாதி. ஸங்கமே ஸ்வபாவம், ஈஶ்வரத்வம் அது குணமாகைக்காக வந்ததென்னுமதுக்கு ப்ரமாணம், ப்ரஸாத இத்யாதி. "ப்ரஸாதபரமௌ நாதௌ மம கேஹமுபாகதௌ। தந்யோऽஹமர்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே பஞ்சமேம்ஶே வந்கோநவிம்ஶோத்யாயே. தண்ணளியே இவர்களுக்கு விஞ்சியிருப்பது என்றது - பரமஶப்தார்த்தம். இரண்டும் - பரத்வ ஸௌலப்யங்கள். நானிருந்த முடுக்குத்தெருத் தேடி - 'மம, கேஹம், உபாகதௌ, மமகேஹமுபாகதௌ' என்று பிரித்து, ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும் இருள்தருமாஞாலத்திலே எழுந்தருளினபடியையும், ஶத்ருபூயிஷ்டமான மதுரையிலே எழுந்தருளினபடியையும், அதிலும் வீதியிலே போகையன்றிக்கே க்ஷுத்ர க்ருஹத்திலே எழுந்தருளின படியையும் அநுஸந்தித்து, அதிலும் ராஜவீதியிலே யிருக்கிற க்ருஹத்திலே யன்றிக்கே க்ஷுத்ரரான மநுஷ்யர்க்கும் அருவருக்கும்படியான என் அகத்திலே வரும்படியே! என்று ஈடுபடுகிற அர்த்தங்களையெல்லாம் ஹ்ருதிகரித்து - நானிருந்த முடுக்குத்தெருத்தேடி என்கிறார். உபாகதௌ - ஸமீபாக

மிடந் தெரிந்ததில்லையோ? "யதோநாஹம்" (தந்யோஹம்) - என்று மோக்ஷ ஸஞ்சரிக்கிற வழியிலே நிதியெடுப்பாரைப் போலே. "அர்ச்சயிஷ்யாமி" (அர்ச்சயிஷ்யாமி)-என்னுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயித்து அழித்துக்கெடுத்து ஜீவிக்கப் பாராநின்றேன். "இத்யாஹ" (இத்யாஹ) - சூட்டுநன்மாலைகள் தூயனவேந்திநிற்பார் சொல்லக்கடவ பாசுரத்தை இவன் சொல்லுவதே! என்று ருஷி கொண்டாடுகிறான். "மால்யோபஜீவந:" (மால்யோபஜீவந:) - பூவில்கண்வைத்துத் தொடுக்கில் சாபலம் பிறக்குமென்று கண்ணை மாறவைத்துத் தொடுத்து, பூவிற்று ஜீவிக்குமத்தனை புல்லியன் சொல்லும் வார்த்தையே ஈது! என்கிறான். [முற்றவும் நின்றனன்] - "ஸமோஹம் ஸர்வபூதேஷு" (ஸமோஹம் ஸர்வபூதேஷு) என்கிறபடியே ஆஶ்ரயணீயத்வே ஸமனாய்நின்றான். இத்தலையிருந்தபடி யிருக்கத் தான் எல்லாருக்கு மொத்திருக்கை. [பற்றிலையாய்] - நீயும் பற்றிலையாய் - நீயும் பற்றையுடையையாய்: ஸங்கத்தையுடையையாய். [அவன் முற்றிலடங்கே] - "அஹம்ஸர்வங்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வங்கரிஷ்யாமி) என்கிறபடியே அவனுடைய எல்லாக் கைங்கர்யத்திலும் அந்வயி. அதவா, பட்டர் அருளிச்செய்யும்படி - [பற்றிலனீசனும்] - "வாஸுதேவோஸிபூர்ண:" (வாஸுதேவோஸிபூர்ண:) என்கிறபடியே ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஜ்ஞாநாநந்தாமலஸ்வரூபனாய்த் திரைமாறின கடல்போலே ஈஶிதவ்யரான நித்யஸூரிகளையுடையனாய் பரமபதத்திலே எழுந்தருளி

---

தௌ: மஹாநிதி ஸமீபாகமநமென்று தாத்பர்யம். தந்யோஹம் - தநவான். 'என்றமொக்ஷ' என்கிற வாக்யத்துக்குத் தாத்பர்யம் - என்னுடைய ஸ்வரூபம் அநாதியாயிருக்க, இழந்த நான் இப்போது நிர்ஹேதுகமாகக் காணப்பெற்றேனென்று. நிதியெடுப்பாரைப்போலே - "தநமணம்லப்யா" என்கிற ஸூத்ரத்திலே திருவுள்ளம். "தநம்லப்யா - தந்ய:, மணம்லப்யா மண்ய:" என்றிறே தத்வ்ருத்தி. "தந்ய:" என்கிறவிடத்தில் ஈஶ்வரனை தநத்வேந சொல்லுகையாலே தநஸமாதியாலேசொல்லுகிறார், அழித்துஇத்யாதி. அழிக்கை-க்ரயவிக்ரயம் பண்ணுகை. கெடுக்கை - அவஸ்த்தாந்தராபத்தி. இத்தால் - யதேஷ்ட விநியோகத்தைச் சொன்னபடி. ப்ராப்யத்வேந ப்ராபகத்வேந ச இத்யர்த்த:. தநத்துக்கு ஆபரணநிரூபேண ப்ராப்யத்வம், அபீஷ்டவஸ்துக்ரய ஸாதநத்வேந ப்ராபகத்வம். அழித்து - ஸ்வபோக்யம் அழியாதே ஸாதநமாக்கி. கெடுத்தென்று - ஆபரணமாக்கிப் பூண்கை. அத்தால் ப்ராப்யத்வஞ் சொல்லுகிறது. சூட்டுநன்மாலைகள் இத்யாதி-சூட்டுகைக்குத் தகுதியான நல்லமாலைகளைப் பரிஶுத்தமானவற்றை தரித்துக்கொண்டு நிற்கிற நித்யஸூரிகள். பூவிற்று - பூ விக்ரயம்பண்ணி. புல்லியன் - க்ஷுத்ரன். முற்றவும் - எல்லாவற்றுக்கும். நின்றனன் - ஆஶ்ரயணீயத்வேந ஸமனாய் நின்றான். "ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:। யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்" இதி கீதாஸு நவமே. மயி தே தேஷு சாப்யஹம் - அவர்கள் என்னிடத்திலே நிரதிஶயப்ராவண்யத்தை யுடையராயிருக்கிறாப்போலே நானும் அவர்களிடத்திலே நிரதிஶய ஸ்நேஹயுக்தனா யிருப்பனென்றபடி. "ஸமோஹம்ஸர்வபூதேஷு" என்றதுக்கு அர்த்தம் - இத்தலை இத்யாதி. இத்தலை இருந்தபடி யிருக்க - ஜந்மவ்ருத்தஜ்ஞாந ஸாஹித்யராஹித்யவிஶேஷேண இருந்தபடியிருக்க. முற்றில் - ஸகலத்திலென்றாய்,' எல்லாக்கைங்கர்யத்திலும் அந்வயி யென்றபடி. "அஹம்ஸர்வம்" இத்யாதி, பூர்வமேவ லிகிதம். நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன் நித்ய ஸம்ஸாரியான நம்மை அங்கீகரிக்குமோ? என்னில், இன்று ஆஶ்ரயித்தாரும் ஒருதலையானால் நித்யாஶ்ரிதர்பக்கல் ஸங்கத்தைவிட்டு நம்மையே தாரகாதிகளாக நினைத்திருப்பானொருவனென்று த்விதீயநிர்வாஹஸ்ய ஸங்கதி:. ஈசனும் பற்றிலனென்று அந்வயம் விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - வாஸுதேவோஸி இத்யாதி. "பூர்ண:" என்று - குணத: உண்டான பூர்த்தி. "ஈசன்" என்றத்தைக் கடாக்ஷித்து - ஜ்ஞாநாநந்த இத்யாதி. திரைமாறின கடலென்றது - "நிஸ்தரங்கார்ணவோபம:" என்றத்தைப்பற்ற கடல்போலே எழுந்தருளியிருக்கிற வித்யந்வய:. பற்றிலன் - பற்றுடையவனல்லன். ஸங்கமில்லாதவ

யிருக்கிறவனும் அவர்கள்பக்கல் பற்றுடையவனல்லன். அவர்கள்பக்கல் பற்றுடையவனன்றிக்கே யிருந்தால் குறைபட்டிராஞே? என்னில், - [முற்றவும் நின்றனன்] - அவர்களெல்லாராலும் வரும் ஏற்றமும் இன்றுஆம்ரயிக்கிற இவனுலேயாம்படி நின்றான்; **'க்வயிகிஞ்சித்ஸமாபந்நேகிம்கார்யம்ஸீதயாமம"** (த்வயிகிஞ்சித்ஸமாபந்நேகிம்கார்யம்ஸீதயாமம) என்னுமாபோலே - இன்று ஆம்ரயித்ததொரு திர்யக்குக்கு ஒரு வாட்டம் வரில் நித்யாம்ரிதையான பிராட்டியாலும் கார்யமில்லை; அன்று ஈன்ற கன்றின்பக்கல் வாத்ஸல்யத்தாலே முன்னணைக்கன்றையும் கோம்பிலே கொள்ளுமா போலே. [பற்றிலையாய்] - விடவோண்ணுதாரை நீ ஒருதலையாக விட்டான் அவன்; அவன் ஒரு தலையானல் விடலாமவற்றை விடத் தட்டேன் உனக்கு? [அவன் முற்றிலடங்கே] - அவனையே எல்லாமாகப் பற்றப்பார்; **"வாஸுதேவஸ்ஸர்வம்"** (வாஸுதேவஸ்ஸர்வம்) என்கிறபடியே, **"மாதாபிதா ப்ராதா நிவாஸஸ்ஸரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:"** (மாதாபிதா

---

னென்றபடி. **அவர்கள்பக்கல்** - *நித்யஸூரிகள்பக்கல்.* **முற்றவும்** - *முற்றவுமாக; தாரகபோஷக போக்யங்க ளெல்லாமாக.* **நின்றனன்** - *நின்றான்.* **ஏற்றம்** - *அதிஶய:. அப்படிநின்ற விடமுண்டோ? என்ன,* **த்வயி கிஞ்சித்** *இத்யாதி.* "உதாதீர்ஜாக்ருஷ்யாவீர ஹநவம்வியஸேவிதம் । க்வயிகிஞ்சித்ஸமாபந்நேகிம் கார்யம்ஸீதயாமம ॥ ஸுமந்த்ரேண ஸேனாவாஹோ லக்ஷ்மணேந யவீயஸா । ஶத்ருக்னேந ஶத்ருக்ந ஸ்வஶரீரேண வா புந:" இதி யுத்தகாண்டே ஹநுமந்தம்ப்ரதி ஸமுத்ராவணக்ஷேபத்ஸஹஸம்க்ருஷ்யா க்ரமதம் ஸுக்ரீவம் ப்ரதி ராம:. **ஶலோகார்த்தம்** - இன்று ஆம்ரயித்தது இத்யாதி. *"இன்று ஆம்ரயித்ததொரு திர்யக்குக்கு ஒரு வாட்டம்வரில் பிராட்டியாலும் கார்யமில்லை" என்றதுக்குப் பிராட்டி நிமித்தமாகவிறே உமக்குக் கிஞ்சித் அவமதிப்படவேண்டுகிறது; இதுக்கு நிமித்தபூதையான அவளையும் வேண்டேன்; அவளிலும் ப்ரியதமரான இளையபெருமாள்நிமித்தமாக உமக்கு ஒருவாட்டம் வரில் அவரையும் வேண்டேன்; அவரிலும் ப்ரியதமரான பரதன் நிமித்தமாக உமக்கு வாட்டம்வரில் அவனையும் வேண்டேன்; அவனுக்கும் ப்ரியனான ஶத்ருக்நன் நிமித்தமாக உமக்கு வாட்டம்வரில் அவனையும் வேண்டேன்; இவ்வளவுமல்ல; இவர்களித்தனைபேர்நிமித்தமாகவும் ஒரு வாட்டம்வரில் இவர்களித்தனைபேரையும் வேண்டேன்; இவர்களுக்கெல்லாம் ஜீவநமிறே திருமேனி; அத்தையும் வேண்டேன்; ஆனபின்பு, உமக்கு ஒரு வாட்டம் வராமலிருக்குமித்தனையே நமக்கு வேண்டுவ தென்று கருத்து.* **ஸ்வஶரீரேண** - *ஸ்வேஷாம்ஶரீரேண; ஸ்வகீயரான பிராட்டி முதலான இத்தனைபேருக்கும் ஜீவநமான தம்முடைய திருமேனியா லென்றபடி.* **ஸ்வ ஶப்தம்** - *பிராட்டி முதலானவரைச் சொல்லுகிறது. தம்மைச் சொல்லுகிறதல்ல; தம்முடைய திருமேனியென் கிற அர்த்தம் ஶரீரமென்றபோதே ஸித்தமிறே. உக்தார்த்தத்தை லௌகிகத்ருஷ்டாந்தத்தாலும் ஸமர்த்திக்கிறார்-* **அன்றீன்ற** *இத்யாதி.* **பற்றிலையாய்** - *பற்றில்லாதவனாய்; ஸங்க மில்லாதவனாய்.* **விடவோண்ணுதாரை** *இத்யாதி - நீ ஒருதலையும் நித்யஸூரிகள் ஒருதலையுமானல் நித்யஸூரிகள் தலையைவிட்டு உன் தலையைப் பற்றி னான் அவன். இப்படி மாணிக்கத்தை விட்டுக் கரியைப்பற்றினாற்போலே நித்யஸூரிகளைவிட்டு உன்னைப்பற்றி னால் நீயும் விடலான ப்ரக்ருதிப்ராக்ருதங்களான கரியைவிட்டுப் பரமப்ராப்யமான மாணிக்கத்தைப் பற்றத் தட்டு என் உனக் கென்றபடி.* **அவன்ஒருதலையானல்** *இத்யாதி-'பகவான் ஸ்வீகர்த்தவ்யனே? விஷயங்களோ? என்று கோடித்வயே ஸதி தத்ர பகவானேக கோடியானு லென்றபடி.* **அவன்முற்றிலடங்கு** - *அவனுகிறமுற்றி லடங்கு.* **அவனையே எல்லாமாகப் பற்றப்பார்** - *தாரகபோஷகபோக்யத்வேநவும், ஸர்வவித பந்துத்வேநவும், பற்றப்பா ரென்றபடி. அவன் அப்படி எல்லாமாக இருக்குமோ? என்ன,* **வாஸுதேவ** *இத்யாதி.* "பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே । வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப:" இதி கீதாஸு ஸப்தமே. **மாதாபிதா** *இத்யாதி - ஸுபாலோபநிஷதி.* **ஸர்வலாபாய -**

ப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயணஃ), "**ஸர்வைகைகஸ்வாஹாய ஸர்வஹூஹாயகேஶவஃ**" (ஏகைகபலலாபாய ஸர்வலாபாயகேஶவஃ). (கூ)

## ஏழாம் பாட்டு.

---

அடங்கெழில்சம்பத்து, அடங்கக்கண்டு ஈசன்
அடங்கெழிலஃதென்று, அடங்குகவுள்ளே.

**ஆ.**—(அடங்கெழில்.) ஸ்நேஹஸ்வபாவனாயிருந்தானேயாகிலும் இந்த லீலோபகரணமான ஜகத்விபூதியையும், போகோபகரணமான அப்ராக்ருத மஹாவிபூதியையு முடையனாயிருக்கிற இருப்பைக் கண்டால் சென்று அணுகலாயிருக்குமோ? என்னில்;—அந்தஸம்பத்தெல்லாம் என் ஸ்வாமியுடைய ஸம்பத்தென்று அநுஸந்திக்கவே கூசாதே சென்று அணுகலாம்; அப்படி அநுஸந்தித்துக்கொண்டு கூசாதேபோய் அடிமைசெய்யுங்கோள் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஸங்கஸ்வபாவனே யாகிலும் அபரிச்சேத்யோபயவிதமஹாவிபூதியா யிருக்கையாலே நம்போல்வாருக்குக் கொள்ளவொண்ணாது; ஆனபின்பு, ஆஶ்ரயிக்கக்கூடா தென்னில்;—எம்பெருமானோடு உள்ள ஸம்பந்தத்தை அநுஸந்திக்கவே தன் சிறுமையால் வெருவாதே யுரித்து ஆஶ்ரயிக்கலா மென்கிறார்.

[அடங்கெழில் என்று தொடங்கி] - அடங்க எழிலான ஸம்பத்து எல்லாவற்றையும் கண்டு. [ஈசனென்று தொடங்கி] - அந்த விலக்ஷணமான ஸம்பத்தெல்லாம் என்ஸ்வாமியது என்று அநுஸந்தித்து. தானும் அவன் விபூத்யந்தர்பூதனாக அநுஸந்திப்பது.

**ப.**—அநந்தரம், அவன் விபூதிமஹத்தையைக் கண்டு இறாயாதே அவனுக்கு அத்தோடு உண்டான ஸம்பந்தத்தை அநுஸந்தித்து அதினுள்ளே சொருகப்பா ரென்கிறார்.

அடங்கெழில் - கட்டடங்க அழகிதான, சம்பத்து - ஸம்பத்தை, அடங்க - ஒன்றொழியாமல், கண்டு - அநுஸந்தித்து, 'ஈசன் - ஈஶ்வரனுக்கு, அஃது - அது, அடங்கெழில் - அடங்கெழிலாய் அதிஶயகரமான ஶேஷமாயிருக்கும்,' என்று - என்று ஸம்பந்தத்தை யறிந்து,உள்ளே- அதினுள்ளே, அடங்குக-(விபூத்யேகதேஶமாகச்)சொருகு. ஸம்பந்தஜ்ஞாநமுண்டானால் உள்ளே யடங்கலாமிறே.

**இ.**—ஏழாம்பாட்டில், ஸங்கஸ்வபாவனேயாகிலும் அபரிச்சேத்யோபயமஹாவிபூதிகனாயிருக்கையாலே நம்மால் முகங்கொள்ளவொண்ணுமோ? என்னில்,—அவனோடு உள்ள ஸம்பந்தத்தை உணரவே கிட்டலா மென்கிறது.

---

ஸர்வவித போக்யத்வமும் விவக்ஷிதம். '"விதரோதரஸந்தஹாதரஃாஶித்ராஃயொவிரா। ஸர்வைகைகஸ்வ" இத்யாதி. ஈசனாயிருக்கச்செய்தேயும் நம்பக்கல் ஸங்கத்தையுடையனாய் எல்லாவற்றுக்கும் ஆஶ்ரணீயத்வே ஸமனாய் நின்றான். நீயும் அவன்பக்கல் ஸங்கத்தையுடையையாய், அவனுடைய எல்லாக் கைங்கர்யத்திலும் அந்தர்ப்பவி யென்று ப்ரதமார்த்தஃ; பட்டர்யோஜனையில், ஸர்வேஶ்வரனா யிருக்கச்செய்தேயும் ஸூரிகள்பக்கல் ஸங்கமில்லாதவனாய் இன்று ஆஶ்ரயித்தவன்பக்கலிலே தாரகத்வாதிக ளெல்லாமாக நிலைநின்றான்; நீயும் ஸாம்ஸாரிக ஸங்கத்தை விட்டனாய் அவனுடைய தாரகத்வாதி ஸம்ஸ்தபாவத்திலும் அந்தர்ப்பவிக்கப் பாரென்று அர்த்தம். இதுவே அந்வயம். (அ)

[அடங்கெழில் சம்பத்தடங்கக்கண்டு] - அடங்க எழிலான ஸம்பத்தை ஒன்றொழி யாமே கண்டு. புறம்பு ஓராஶ்ரயத்திற் காணாத இஸ்ஸம்பத்தை ஓரிடத்தே சேரக் கண்டு. அவன் விபூதியாகில் கட்டடங்க உபாதேயமாயிறே இருப்பது; முக்தனுக்கும் ததீயத்வாகாரேண லீலாவிபூதி அநுஸந்தேயமாயிறே யிருப்பது. [ஈசனடங்கெழிலஃதென்று] - என்நாயகனுடைய ஐஶ்வர்யம் ஈதென்று அநுஸந்தித்து. [அடங்குக உள்ளே] - அந்தஸம்பந்தஜ்ஞாநமடியாகத் தானும் அவன்விபூதியிலே ஒருவனென்று அந்வயிக்கலாம்; ஸமுத்ரம் அபரிச்சிந்நமானாலும் அதிலுள்ள ஸத்வங்களுக்கு வேண்டினபடி புகலாமிறே; அதுபோலே ஸம்பந்தஜ்ஞாநமுண்டாகவே கிட்டலாம். ஸம்பந்தஜ்ஞாந மில்லாத த்ருணத்தையிறே கடல் கரையிலே ஏறத்தள்ளுவது. ஸம்பந்தஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கையிறே வடகக்ருத்யம். இங்கே பட்டர் பிதாபுத்ரர்களிருவரும் படவோடின கதையை அருளிச்செய்வர்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஸங்கஸ்வபாவனேன்றார் கீழ்; அவன் ஸங்கஸ்வபாவனானாலும் அபரிச்சிந்நோபயவித மஹாவிபூதியையுடையனாயிருந்தான் அவன், இவன் அதிக்ஷுத்ரனாய் க்ஷுத்ரோபகரணனாயிருந்தான்; ஆனபின்பு, அவனை இவனாலே கிட்டலாயிருந்ததோ? கடலிலேபுக்க துரும்பானது இரண்டுதலையிலும் நினைவின்றிக்கேயிருக்கத் திரைமேல்திரையாகத் தள்ளுண்டுபோந்து கரையிலே சேருகிறதில்லையோ? அப்படியே அவனுடைய ஐஶ்வர்யதரங்கமானது இவனைத் தள்ளாதோ? என்னில்;—இந்த ஐஶ்வர்யமெல்லாம் நமக்கு வகுத்த ஶேஷியானவனுடைய ஐஶ்வர்யமென்று அநுஸந்திக்கவே, தானும் அதுவாய் அந்வயிக்கலாமிறே; ஆனபின்பு, ஸம்பந்தஜ்ஞாநமே வேண்டுவது என்கிறார். ஒருவ்யாபாரி, ஸ்த்ரீ கர்ப்பிணியான ஸமயத்திலே அர்த்தார்ஜநம்பண்ணவேணுமென்று போவது; அவளும் பிள்ளைபெற்று, அவனும் பக்வனாய்த் தனக்கும் தமப்பனாருடைய வ்யாபாரமே யாத்ரையாய், அவனும் போய் இருவரும் சரக்குப்பிடித்துக்கொண்டு வந்து ஒருபந்தலிலே தங்குவது; அது இருவருக்கும் இடம் போராமையாலே அம்பறுத்தெய்யவேண்டும்படி விவாதம் ப்ரஸ்துதமான ஸமயத்திலே, இருவரையும் அறிவானொருவன் வந்து 'இவன் உன்பிதா, நீ அவன்புத்ரன்' என்று அறிவித்தால், கீழிழந்த நாளைக்கு ஶோகித்து, இருவர்சரக்கும் ஒன்றாய், அவன் ரக்ஷகனாய், இவன்

---

ஏழாம்பாட்டு - **அடங்கெழில்** இத்யாதி. ஸத்ருஷ்டாந்தவிவரணம் - **கடலிலே** இத்யாதி. **இரண்டு தலையிலும்** என்றது - கடலுக்கும் இத்தைத் தள்ளவேணுமென்கிற நினைவில்லை; துரும்புக்குத் தள்ளப்போகிறதென்கிற நினைவில்லை யென்றபடி. **ஐஶ்வர்யதரங்கம் இவனைத் தள்ளுகையாவது**-அவன் எவ்விடத்தான் யான் ஆர்? என்ற அயோக்யதாநுஸந்தாநத்தாலே பிற்காலிக்கை. **தானும் அதுவாய்** - அவ்விபூதிக்குள்ளே ஒருவனாய். **ஸம்பந்தஜ்ஞாநம்** - ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தஜ்ஞாநம். ஸம்பந்தஜ்ஞாநமுண்டானால் கிட்டலாமோ? என்ன, த்ருஷ்டாந்தத்வயம் - **ஒருவ்யாபாரி** இத்யாதி. **அம்பறுத்தெய்யவேண்டும்படி** - அம்பைத் தூணியினின்றும் வாங்கி எய்யவேண்டும்படி. தார்ஷ்டாந்திகத்திலே ஜீவபரர்கள் ஶரீரமாகிற வ்ருக்ஷத்திலே ஸங்கதராயிருக்கச்செய்தே "த்வம்மே" என்றால் "அஹம்மே" என்று ஸ்வாதந்த்ர்யாபிமாநம் பண்ணிப்போந்த வாஸனையாலே அவனோடே ஸ்பர்த்திக்க, அவனும் இவன் செய்த அபராதமடியாக "க்ஷிபாமி ந க்ஷமாமி" என்று ஸ்பர்த்திக்க, இங்ஙனே பிணங்குகிற ஸமயத்திலே இருவருடையவும் ஶேஷஶேஷிபாவஸம்பந்தத்தை அறியும் ஆசார்யன் வந்து 'நீ இவனுக்குஶேஷபூதன், நீ இவனுக்குஶேஷி' என்று ஸம்பந்தத்தை யுணர்த்தி, தன் உபதேஶத்தாலே இவன் அபிமாநம்போம்படி திருத்தி, 'தேவர்க்கு ஶேஷபூதமான ஆத்மவஸ்துவை அபராதமடியாகத் தள்ளவொண்ணாது' என்று அவன் திருவடிகளிலே ஶரணம்புக்கு, இவ்வழியாலே இரண்டுதலையுக்திருந்தினதடியாக இருவருங் கூடினால், 'இப்படி ஸுலபமானவிஷயத்தை அநாதிகாலம் இழந்து அநர்த்தப்பட்டோமே!' என்று இவன் ஶோகிக்க 'நமக்கு அவர்ஜ்ஜநீயஸம்பந்தமுண்டாயிருக்க, கர்மத்தை வ்யாஜீகரித்து அநாதிகாலந் தள்ளிவிட்டோமே!' என்று அவன்ஶோகிக்க, இப்படி இருவரும் கீழிழந்த நாளைக்கு ஶோகித்து இருவரும் ரக்ஷ்யரக்ஷகபாவேந சேருகை. தார்ஷ்டாந்திகத்தில், பந்தலாவது-ஶரீரம் என்னுமத்தை ஸப்ரமாணமாக அருளிச்செய்யாநின்று

ரக்ஷ்யமாய் அந்வயித்துவிடுமிறே; "ஸமாநம்வ்ருக்ஷம்பரிஷஸ்வஜாதே" (ஸமாநம்வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே) - ஜீவாத்மாவும் பரமாத்மாவும் தேஹமாகிற வ்ருக்ஷத்தைப் பற்றியிருந்தால், ஒருவன் கர்மபலங்களை புஜியாநிற்கும்; ஒருவன் புஜிப்பித்து விளங்காநிற்கும். அவன் நியாமகன், நாம் நியாம்ய மென்னும் முறை யறியவே பொருந்தலாமிறே. ராஜபுத்ரன் ஒரு உத்யாநத்தைக் கண்டு புக அஞ்சினால், 'உன்தமப்பனதுகாண்' என்னவே நினைத்தபடிபுக்குப் பரிமாறலாமிறே; ஆனபின்பு, ததீயமென்னும் ப்ரதிபத்தியே வேண்டுவது ; தானும் அதுக்குள்ளே ஒருவனாய் அந்வயிக்கலாமென்கிறார்.

[அடங்கெழில்சம்பத்து அடங்கக் கண்டு]- போகபூமியாயிருக்கும் நித்யவிபூதி, கர்மநிபந்தநமாக அவனாலே நியாம்யமாயிருக்கும் இவ்விபூதி; அதில் ததீயமென்று அநுஸந்திக்கப்புக்கவாறே கர்மநிபந்தநமான ஆகாரம் தோற்றாதே ததீயத்வாகாரமேயிறே தோற்றுவது. [அடங்கெழில் இத்யாதி]-கட்டடங்க நன்றான ஸம்பத்தையெல்லாங் கண்டு, நமக்கு வகுத்த ஸ்வாமியானவனுடைய ஸம்பத்து இதெல்லா மென்று அநுஸந்தித்து, அவ்விபூதிக்குள்ளே தானும் ஒருவனாய் அந்வயிக்கப் பார்ப்பது; அப்போது ஶேஷிக்கு அதிஶயத்தை விளைத்தானாகலாமிறே; ஶேஷபூதனுடைய ஸ்வரூப

---

**ப்ர.**—(ஶேஷபூதனுடைய ஸ்வரூபஸித்தி இத்யாதி.)—பகவாந் பாஷ்யகாரஃ "ஶேஷஃ பரார்த்தத்வாத்" [பூ - மீ] இதி ஶேஷஶேஷிபாவலக்ஷணபரம் ஜைமிநீயம் ஸூத்ரம் பரோத்தேஶ்யதாவ்யாப்தம் ஏவம் தஸ்யார்த்தம் ச தஸ்ய ஸூத்ரஸ்யார்த்தம் யதாவத் ப்ரகடயதி:-"பரகதாதிஶயாதாநேச்சயா உபாதேயத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் - ஸ ஶேஷஃ; பரஃ - ஶேஷீ" [வே-ஸம்] இதி. அஸ்யார்த்தஃ - அந்யஸ்ய ப்ரயோஜநமேவ யஸ்ய ப்ரயோஜநம் - ஸஶேஷஃ, அந்யஶ்ஶேஷீதி; அத்ர பரஶப்தோ பந்யபரஃ. பரஶப்தாதிஶயஶப்தயோஃ அபிப்ராயஶ்சாவ்யாப்த்யபாவ மதஶப்தஃ; தேந ஸ்வகதாதிஶயாயகே ஶேஷிண்யதிவ்யாப்திவ்யுதாஸஃ. அதிஶயஃ -

---

கொண்டு எடுத்த ப்ரமாணத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் - ஸமாநம் வ்ருக்ஷம் இத்யாதி. இதம்பூர்வம் லிகிதம். பந்தல்ஸ்தாநத்திலே, வ்ருக்ஷமென்கிற தேஹம். ஒருவன் புஜிப்பித்து விளங்காநிற்கும் என்றது - "அந்யோ அபிசாகஶீதி" என்கிற ஶ்ருதியைப் பற்ற. "அபிசாகஶீதி - அபிசாகஶீதி" இதி ஹி தத் வ்யாக்யா. 'ஸம்பந்தஜ்ஞாநமே வேண்டுவது' என்றவிடத்திலே ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தத்தை அருளிச்செய்தார்; இதில் நியந்த்ருநியாம்யபாவஸம்பந்தத்தை அருளிச்செய்கிறார்-அவன் நியாமகன் இத்யாதி. இத்தால், "அபிசாகஶீதி" என்றத்தால் பலித்த நியந்த்ருநியாம்யபாவஸம்பந்தமும் இப்பாட்டுக்கு விவக்ஷித மிதி த்ரஷ்டவ்யம். த்ருஷ்டாந்தாந்தரம் - ராஜபுத்ரன் இத்யாதி. ராஜபுத்ரனித்யாதி வாக்யத்திலே - ஸர்வேஶ்வரனை ராஜாவாகவும், ஆத்மாவைப் புத்ரனாகவும், உத்யாநம் பெய்தகாவாகவும், ஜ்ஞாபகன் ஆசார்யனாகவும் த்ரஷ்டவ்யம். உக்தார்த்தநிகமநம்-ஆனபின்பு இத்யாதி.

கட்டடங்க நன்றான ஸம்பத்தென்னலாமோ ? லீலாவிபூதி ஹேயமன்றோ ? என்ன, போகபூமியாய் இத்யாதி. போகேத்யாதி - த்ருஷ்டாந்தார்த்தம். இவனுக்கு அநுகூலமானபடியை அருளிச்செய்கிறார் - அதில் ததீயம் இத்யாதி. ததீயத்வாகாரமே தோற்றுவது - ததீயத்வாகாரமே உத்தேஶ்யதாப்ரயோஜகமாகை. ஶப்தார்த்தத்துக்காக மீளவும் ப்ரதீகோபாதாநம் - அடங்கெழில் இத்யாதி இதி. கட்டடங்க - ஸாகல்யேந; உபயவிபூதியு மென்றபடி. அஃதடங்க ஈஶ்வரனுடைய ஸம்பத்தென்று உள்ளேயடங்குக என்று அந்வயம். அடங்குகை - அந்தர்ப்பவிக்கை. அந்வயித்தால் பலமேது? என்ன, அப்போது இத்யாதி. அப்போது - தானும் அவ்விபூதிக்குள்ளே ஒருவனாய் அந்தர்ப்பவித்தபோது. ஶேஷிக்கு அதிஶயத்தைவிளைக்கை - கைங்கர்யம்பண்ணுகை. ஶேஷிக்கு அதிஶயத்தை விளைத்தால் ஶேஷபூதனுக்கு பலம் ஏது ? என்ன, ஶேஷபூதனுடைய இத்யாதி. ஸ்வரூபஸித்தியே பல மென்றபடி. "பரகதாதிஶயாதாநேச்சயோபாதேய

ஸித்தி, ஶேஷிபக்கல் கிஞ்சித்காரத்தாலேயா யிருக்குமே. [அடங்குகவுள்ளே] - ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தஜ்ஞாநமடியாகத் தானும் அவன்விபூதியிலே ஒருவனாய் அந்வயிக்கலாமிறே; ஸமுத்ரம் அபரிச்சிந்நமானாலும் அதினுள்ளில் ஸத்த்வங்களுக்கு வேண்டினபடி புகலாமிறே; அதுபோலே ஸம்பந்தஜ்ஞாநமடியாகக் கிட்டலாம்; ஸம்பந்தஜ்ஞாநமில்லாத த்ருணத்தையிறே கடல் கரையிலே யேறத் தள்ளுவது. ஸம்பந்தஜ்ஞாநம் பிறப்பிக்கையிறே வடகக்ருத்யம். (எ)

---

विशेषः; किञ्चित्कार इत्यादि। "नाकिञ्चित्करस्य शेषत्वम्" इति हि तेषां सतां प्रसिद्धिः। अनेन आश्रयस्यैव स्वरूपानन्तरक्षणविनाशाद्यापादकानां शेषत्वशङ्काव्यावृत्तिः; अविनाश्यस्य हि क्षणः स्वगतविनाशापादकत्वं प्रति न शेषित्वम्। आश्रयस्यैवातिशयं प्रत्युपायिकारणतया शेषत्वं विवक्षितम्; अनेन परगतातिशयं स्वस्मिन्नाधायितुं द्रव्यवाचे यस्य शेषिणः श्लेषकत्वशङ्कानिवृत्तिः। (द्रव्येति) परगतातिशयस्य द्रव्यविषयतया प्रयोजनत्वसम्भवेऽपि। द्रव्यशब्दस्य निरपेक्षा साक्षाद्द्रव्यविषयत्वमिष्टम्; साक्षाद्द्रव्यविषयस्य परप्रयोजनम्; तद्वत्, "परायत्तस्य" इत्यत्र शब्देनोक्तम्; कर्तृक इति हि कर्तुः; उक्त इत्यादि। निरपेक्षश्रयत्वशब्दः स्वतः परप्रयोजनपरः; अनेन स्वातिशयायापेक्षितं ... लक्षणाव्याप्तिशङ्काव्यावृत्तिः। ... स्वातिशयाय भवतीति ... स्वातिशयायेति; अतो ... स्वातिशयाधानस्य परातिशयः परप्रयोजनमिति नाव्याप्तिः। उपादेयत्वं - स्वीकार्यत्वम्। द्रव्यस्वीकारे यथायोग्यं सङ्गतः। शेषशेषिणोरन्योन्यापेक्षितत्वे चेतनस्य द्रव्यस्वीकारे तद्गतस्वः; यथा राजभृत्ययोः। अन्यतरस्य चेतनत्वे अन्यतरस्यैव द्रव्यस्वीकारे; यथा राजभवनयोः। उभयोरप्यचेतनत्वे तत्प्रतिसम्बन्धिचेतनगता विद्रव्यस्वीकारे यथायोग्यं सङ्गतः; यथा पुष्पपुष्पवतोः। उपादेयत्वम् - उपादातृसम्बन्धित्वम्; चेतनाकिञ्चित्करस्याप्यव्याप्तिपरिहारः। एवकारेण अद्वारकस्वातिशयाधायकस्य शेषिणः परं प्रति शेषत्वाभावः। (स्वरूपेति) स्वरूपातिरिक्तधर्माद्यतिशयाय स्वरूपेति, न तु धर्मादिरूपे प्रयोजनेतिव्याप्तिः। परातिशयावह परप्रयोजनं यस्य स परं प्रति शेष इति लक्षणं द्रष्टव्यम्।

---

கூ ஏவ யஸ்ய ஸ்வரூபம் - ஸஶேஷ:, பர: - ஶேஷீ" என்ற பாஷ்யகாருடைய ஸ்ரீஸூக்தி அநுஸந்தேயம். "பராதிஶயாதாநவபரப்ரயோஜநம், யஸ்ய - ஸ பரம் ப்ரதி ஶேஷ:" என்று ஶேஷத்வலக்ஷணம். அன்றே ஈஸ்வரவிபூதிக்குள்ளேயன்றோ இருக்கிறது; இன்று அடங்குகையாவதென்? என்ன, ஸ்வஸ்வாமிபாவ இத்யாதி. அடங்குகை - ஸ்வஸ்யதத்ஸம்பந்திகோநாநுஸந்தாநம் அவதாரிகையில் 'கடலிலே புக்க துரும்பு' இத்யாதி ஶங்காவாக்யத்தைப் பரிஹரிக்கிறார் - ஸமுத்ரம் இத்யாதி. ஸத்த்வங்களும் ரக்ஷ்யரக்ஷகபாவ ஸம்பந்தத்தாலேயிறே ஸமுத்ரத்தைக் கிட்டுகிறதென்றபடி. த்ருஷ்டாந்தத்தில் பிதாபுத்ரஸம்பந்தத்தை யுணர்த்தினாற்போலே தார்ஷ்டாந்திகத்தில் ஶேஷஶேஷிபாவஸம்பந்தஜ்ஞாபகர் ஆரென்ன, ஸம்பந்த இத்யாதி. அன்றிக்கே, ஸம்பந்தஜ்ஞாநமுண்டாம் படியென்? என்ன, ஸம்பந்தஜ்ஞாநம் இத்யாதி என்று கீழ்வாக்யத்தோடே ஸங்கதியாதல். அடங்கெழிலென்று தொடங்கி, அஃதடங்க ஈசனெழிலென்று உள்ளேயடங்குக என்று அந்வயம். (எ)

## எட்டாம் பாட்டு.

---

உள்ளமுரைசெயல், உள்ளவிம்மூன்றையும்
உள்ளிக்கெடுத்துஇறை, உள்ளிலொடுங்கே.

ஆ.—(உள்ளம்.) என்ன உபகரணங்களைக்கொண்டு அடிமைசெய்வதென்னில்,—ஸம்பாதிக்கவேண்டாதே பண்டே ஸம்பந்தமாயிருந்த வாங்மநஃகாயங்கள் மூன்றையும் பகவத்பரிசர்யாகரணார்த்தமாகப் பரிகல்பித மென்னுமிடத்தை அநுஸந்தித்து தத்வ்யதிரிக்தவிஷயங்களினின்றும் நிவர்த்திப்பித்து பகவத்விஷயமாக்குவ தென்கிறார்.

ஒ.— எட்டாம்பாட்டில், பஜநப்ரகாரத்தைச் சொல்லுகிறார்.

[உள்ளம் என்று தொடங்கி] - மநோவாக்காயங்கள் தேடவேண்டாதே ஸம்பந்தமாய் விதேயமான மூன்றையும் என்ன ப்ரயோஜநங்கொள்கைக்கு இவையுண்டாக்கிற்று ? என்று ஆராய்ந்து அவற்றுக்கு உண்டான அப்ராப்தமான பாஹ்யவிஷய ப்ராவண்யத்தைத் தவிர்த்து அவன்பக்கலிலே நிவேசி யென்கிறார்.

ப.—அநந்தரம், பஜநப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்.

உள்ளம் - (மநநாதிகரணமான) மநஸ்ஸும், உரை - (ஸ்துத்யாதிகரணமான) வாக்கும், செயல் - (ப்ரணாமாதிகரணமான)காயமும், உள்ள - (நமக்கென்ன)அடியிலேயுண்டாய், இம்மூன்றையும் - ஸந்நிஹிதமான இம்மூன்றையும், உள்ளி - (இவற்றினுடைய ஸ்ருஷ்டி ப்ரயோஜநத்தை) நிரூபித்து, கெடுத்து - (இதரவிஷயாந்வயத்தைத்)தவிர்த்து, இறையுள்ளில் - ஸ்வாமியான ப்ராப்தவிஷயத்திலே, ஒடுங்கு - பரதந்த்ரனாய் ஒதுங்கு. 'உரை, செயல்' என்று - வ்ருத்திகளையிட்டு தத்தத்கரணங்களை லக்ஷிக்கிறது. 'உள்ளிக்கெடுத்து' என்று - இவற்றினுடைய பூர்வவ்ருத்தத்தை ஆராய்ந்து, அந்யபரதையைத் தவிர்த்து என்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், பஜநப்ரகாரம் சொல்லுகிறது.

[உள்ளமுரைசெயல்] - மநோவாக்காயங்கள். உரை செய லென்று - ததாஸ்ரயமான கரணங்களை நினைக்கிறது. [உள்ள] - இன்று தேடவேண்டாதே ஸம்பந்தமாயிருக்கை. [இம்மூன்றையும்] - ஸந்நிஹிதங்களும் விதேயங்களுமான இம்மூன்றையும். இவற்றுக்கு அவ்வருகே ஒன்று தேடவேண்டா; இவையே அமையும். [உள்ளி] - இன்னப்ரயோஜநங் கொள்ளுகைக்கு இவற்றை யுண்டாக்கிற்று என்று ஆராய்ந்து. "ஸம்ஸாராயநிவேதிதாஃ" என்று நிரூபித்தால் பகவத்விஷயத்திலே ஸமர்ப்பிக்கைக்காகவா யிருக்குமிறே. [கெடுத்து] - அவற்றுக்கு உண்டான பாஹ்யவிஷய ப்ராவண்யத்தைத் தவிர்த்து. [இறையுள்ளிலொடுங்கே] - வகுத்தவிஷயத்திலே இவற்றையுங் கொண்டு புக்கு அடிமைசெய்யப் பார். அன்றிக்கே, ஒடுக்கென்று மெல்லொற்றை வல்லொற்றாக்கி அவன் திருவடிகளிலே ஸமர்ப்பி யென்றுமாம். இப்பாட்டில் பஜிக்கைக்குப் புறம்பொரு உபகரணம் ஸம்பாதிக்கவேண்டா; முன்னமே யுண்டானவற்றின் வ்யபிசாரத்தைத் தவிர்த்து வகுத்தவிஷயத்திலே ஸமர்ப்பியுங்கோ ளென்கிறார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. அவனுக்கு விபூதியாய் அந்வயித்தால் பின்னை தானும் தனக்கென்ன சிலகரணங்களும் என்று உண்டாய் பஜித்தானுகை அரிதாயிருந்ததே! என்ன, பஜநப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்.

[உள்ளம் உரை செயல்] - பாஹ்யவிஷயங்களிலே ப்ரவணமாகிற மநஸ்ஸை ப்ரத்யக்காக்கினவாறே ஸ்மவதநுஸந்தாநத்துக்கு உடலாமே; அவ்வநுஸந்தாநம் வழிந்து *"பொங்கேழ்புகழ்கள் வாயவாய்" என்கிறபடியே சொல்லாய்ப் புறப்படுகைக்கு உடலாமிறே வாக்கு; "குணைர்தாஸ்யமுபாகதஃ" (குணைர்தாஸ்யமுபாகதஃ) என்கிறபடியே திருவடிகளிலே விழுந்து ஸகல கைங்கர்யங்களும் பண்ணுகைக்கு உடலாயிருக்குமிறே உடம்பு. [உள்ள இம்மூன்றையும்] - இவைதான் இன்றாக ஸம்பாதிக்கவேண்டாதே ஶேஷியான தான் இவற்றை யுண்டாக்கிவைத்தானே; இவையும் வேறே சிலவுந் தேடவேண்டாவே; இங்கே†"தாமுளரே"‡"நாவாயிலுண்டே" இத்யாதிகளை யோஜித்துக்கொள்வது. உள்ள இம்மூன்றையும் உள்ளுவது; 'இவைதான் எதுக்காகக் கண்டது? இவைதான் இப்போது இருக்கிறபடியேன்?' என்று ஆராய்ந்துபார்த்தால் அப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணமாயிருக்கும். [கெடுத்து] - கெடுப்பது - அவற்றினின்றும் மீட்பது. [இறையுள்ளிலொடுங்கே] - பாழிலே மேட்டிலே பாய்கிற நீரைப் பள்ளத்திலே பயிரிலே பாய்ச்சுவாரைப் போலே ப்ராப்தவிஷயத்திலே யாக்கப் பார்ப்பது. ஒடுங்கென்னுதல், ஒடுக்கென்னுதல்; மெல்லினமான ஙகரத்தை வல்லொற்றாக்கி ஒடுக்கென்று கிடக்கிறதாதல்.

---

எட்டாம்பாட்டு - உள்ளம் இத்யாதி. ஸம்பந்தஜ்ஞாநபூர்வகமாக அவன் விபூதிக்குள்ளே ஒருவனுய் அந்வயிப்ப தென்ற அநந்தரம் கரணத்ரயத்தையும் அப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணமாக்காதே பகவத்விஷயத்திலே ப்ரவண மாக்குவ தென்று சொன்னதுக்கு ப்ரயோஜநத்தை ஶங்காபரிஹார கதநமுகேந அருளிச்செய்கிறார் - அவனுக்கு இத்யாதி. பஜநப்ரகாரத்தை யென்றது, 'இறையுள்ளிலொடுங்கே' என்றத்தைப் பற்ற. பஜநப்ரகாரம் - அவன் தனக்காகத் தந்த கரணங்களை அவனுக்கு உறுப்பாக்குகை.

'உள்ளமுரைசெயல்' என்ற இது ப்ரதீகோபாதாந மன்று, பாட்டுக்கெல்லாம் உபாதாநம்; மேல் மஹாவாக்யதாத்பர்யம். இத்தால், எவம்விதமான பஜநம் ஸுகரமென்று த்யோதிதம். த்ரிவித கரணங்களையும் இறை உள்ளே யொடுக்கும்படியைக் காட்டுகிறார் - பாஹ்யவிஷயங்களிலே இத்யாதி. ப்ரத்யக்காக்கினவாறே - அந்தர்முகமாக்கினவாறே. வழிந்து - ஸ்ரவித்து. பொங்கேழ் இத்யாதி-வர்த்தித்துக்கிளம்புகிற குணங்களானவை வாக்விஷயங்களாக. உரையும்செயலும்-ஸ்வகாரணமான வாக்கையும் காயத்தையும் லக்ஷிக்கிறது. உள்ளவென்றதுக்கு பாவம் - இவைதான் இத்யாதி. பிரித்து மூன்றையும் நிர்த்தேஶித்திருக்க, புநஃ 'இம்மூன்றையும்' என்றதுக்கு பாவம் - இவையும் இத்யாதி. உள்ள இம்மூன்றையு மென்றதுக்கு ஸம்வாதம் - இங்கே தாமுளரோ இத்யாதி. ஆதிபதம் - "கராணௌ ஸக்தி வதாணி", "நாராயணே திஷ்டதோஷி" இத்யாதியைக் கடாக்ஷித்து. உள்ளுகை - விசாரிக்கை. உள்ளும் ப்ரகாரத்தையும், உள்ளினால் இருக்கும்படியையுங் காட்டுகிறார் - இவைதான் எதுக்காக இத்யாதி. எதுக்காகக் கண்டது - அவனை ஆஶ்ரயிக்கைக்காகக் கண்டதென்று கண்டுகொள்வது. "ஆராய்ந்துபார்த்தால்" என்ற அநந்தரம் பகவத்ஸமாஶ்ரயணமாக ஸ்ருஷ்டங்களாயென்று அத்யாஹாரம். கெடுத்தென்றதுக்கு அர்த்தம் - கெடுப்பது என்ற. உக்தவிவரணம் - அவற்றினின்றும் இத்யாதி. பகவத்விஷயத்திலே கரணங்களை ப்ரவணமாக்கினால் அது ப்ரயோஜநமுமாய் ஸ்வரூப ப்ராப்தமுமா யிருக்குமென்னுமிடந் தோன்ற அருளிச்செய்கிறார் - பாழிலே மேட்டிலே இத்யாதி. கரணங்களைக்கொண்டு ஒடுங்கென்னுதல்: அதாவது - கரணங்களைக்கொண்டு தான் ஆஶ்ரயிக்கை. யத்வா, கரணங்களை யொடுக்கென்னுதல்: அதாவது - கரணங்களை அவன்விஷயத்திலே ப்ரவணமாக்குகை. "ஒடுங்கு" என்றால் ஒடுக்கென்று காட்டுமோ? என்ன, மெல்லினமான இத்யாதி. ஒடுக்கென்று கிடக்கிறதாதல் என்றது - ஒடுக்கென்கிற அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டுநிற்கிற தென்னுதல் என்றபடி.

---

* திருவாய்மொழி - அ, ௧0, ௭. † இரண்டாந்திருவந்தாதி-உக. ‡ முதல்திருவந்தாதி-கூ.

"தாமுளரே"—தந்தாமைத் தேடவேண்டாவே. "தம்முள்ளமுள்ளுளதே"—'எனக்குச் சற்றுப்போது ஸௌவத்விஷயத்தை நினைக்கைக்கு நெஞ்சு தரவேணும்' என்று தனிசு வாங்கவேண்டாவே; தாம் உளரானல் உண்டான நெஞ்சும் உண்டே. "தாமரையின் பூவுளதே" கைக்கேட்டும் பூ உண்டாக்கிவைத்தானே. * "கள்ளார்துழாய்" என்று அங்குத்தைக்கு அஸாதாரணமான திருத்துழாயைச் சொல்லி, அத்தோடொக்க "கணவலர்" என்று - காக்கணத்தையும் ஆம்பலையும் சொல்லுகையாலே அங்குத்தைக்கு ஆகாததில்லை யென்றபடி; ஆகையாலே, 'தாமரையின் பூவுளதே' என்றது - எல்லாப் புஷ்பங்களுக்கும் உபலக்ஷணமான இத்தனை. "ஏத்தும்பொழுதுண்டே" - காலத்தை யுண்டாக்கி வைத்தானே, அது தனிசு வாங்க வேண்டாவே."வாமன்"-இதேல்லாம் வேண்டுவேது அவன்அவனல்லவாகிலன்றே! தன்னுடைமை பெறுகைக்குத் தான் இரப்பாளனுவானொருவனு யிருந்தானே. "திருமருவுதாள்" - அவனுடைய ஐஶ்வர்ய ப்ரகாஶகமான திருவடிக ளென்னுதல், †"வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" என்னுதல். "மருவுசென்னியரே"-மருவுகை - சேருகை: இப்படிப்பட்ட திருவடிகளிலே சேருகைக்குத் தலையாக்கி வைத்தானே. "வாமன்" அமரர் சென்னிப்பூவான திருவடிகளை நித்யஸம்ஸாரிகள் தலையிலும் வைப்பானொருவனு யிருந்தானே. இப்படியிருக்கச்செய்தே, "செவ்வேயருநரகம் சேர்வதரிது" - இவர்கள் ஸம்ஸாரத்துக்கு விலக்கடி தேடிக்கொண்டுபோகிறபடி எங்ஙனேயோ? "நாவாயிலுண்டே" - இது முன்னம் புறம்பு தேடிப்போக வேண்டாவே. "நமோ நாரணுவென்று ஓவாதுரைக்குமுரையுண்டே" - ஸஹஸ்ராக்ஷரீமாலாமந்த்ரம்போலே இருக்கையன்றிக்கே எட்டெழுத்தாய் நடுவே விச்சேதியாதே சொல்லலாந் திருநாம முண்டாக்கிவைத்தானே. "மூவாதமாக்கதிக்கட் செல்லும் வகையுண்டே"- புநராவ்ருத்தியில்லாத ப்ராப்யத்தை யுண்டாக்கி வைத்தானே. "என்னொருவர்தீக்கதிக்கட்செல்லுந்திறம்" - இங்ஙனே யிருந்தபின்பு இவர் தண்ணிய வழி தேடிப்போகிறபடி யெங்ஙனேயோ? (அ)

---

கீழெடுத்த பாட்டுக்களுக்கு வ்யாக்யாநம் - தாமுளரே இத்யாதி. "தம்முள்ளம்" என்றதுக்குத் தாத்பர்யம் - எனக்குச்சற்றுப்போது இத்யாதி. "உள்ளுளதே" என்றதுக்கு ஸாவம் - தாமுளரானல் இத்யாதி. அன்றிக்கே, வாக்யத்வயமும் - "உள்ளுளதே" என்றதுக்கு ஸாவமாதல். சற்றுப்போது - கிஞ்சித்காலம். தனிசு - கடன். கைக்கேட்டும் பூ வென்றது - தாழநின்ற ஸௌக்ரஹமாகையைப் பற்ற. கைக்கெட்டும்பூவென்கிறதென்? ஶ்லாக்யபுஷ்பங்களுக்கும் உபலக்ஷணமானுலோ? என்ன, கள்ளார் இத்யாதி. கணவலர் - காக்கணம்பூ. கூவிளை - பில்வம். ஆம்பல் - குமுதம். மளரி - தாமரை. வாமனென்று - இரப்பும் அளப்பும் தோன்றும். இதெல்லாம் வேண்டுவது இத்யாதியாலே - இரப்பையும், அமரர்சென்னி யித்யாதியாலே - அளப்பையும் அருளிச்செய்தார். அவன் அவனல்லவாகிலன்றே - வாமனுய் ஸௌலபனன்றிக்கே மேன்மையோடே யிருந்தானுகிலன்றே. அவன் அவனுகையாவதென்? என்ன, தன்னுடைமை பெறுகைக்கு இத்யாதி. திரு - ஐஶ்வர்யமும், பிராட்டியும். ஐஶ்வர்யப்ரகாஶகமென்றது - த்வஜாரவிந்தாதி ரேகையைப் பற்ற. வடிவிணை இத்யாதி - வடிவழகுக்கு ஒப்பில்லாத பெரிய பிராட்டியாரும் மற்ற பூமிப்பிராட்டியும் பிடிக்கும் ம்ருதுவான திருவடிகளை. தாத்பர்யாந்தரம் - அமரர்சென்னி இத்யாதி. அருநரகம் - ஸம்ஸாரம். விலக்கடி - ப்ராப்யப்ராபகாந்தரங்கள். நாவாயிலுண்டே இத்யாதி: 'வாயில்' என்றதுக்கு ஸாவம் - இதுமுன்னம் புறம்பு இத்யாதி. ஸஹஸ்ராக்ஷரீமந்த்ரமென்றும், மாலாமந்த்ரமென்றும் இரண்டு மந்த்ரம். 'ஓவாது' என்கிறதின் ஸாவம் - விச்சேதியாதே என்று. திருநாமத்தினுடைய ஸௌலப்யஞ் சொன்னபடி. மூவாத - நஶியாத, புநராவ்ருத்தி யில்லாத வென்றபடி. கம்யதஇதி - கதிః என்றாய், ப்ராப்ய மென்றபடி. கதிக்கண் - கதியிலே. செல்லும் வகையுண்டே - செல்லுகைக்கீடான உபாயமுண்டே. ஓவாதுரைக்கு முரையென்று - கீழே ஸாதநஞ்சொல்லுகையாலே, மூவாத இத்யாதி ப்ராப்யபரம். "நாராயணேதிஶப்தோஸ்தி வாகஸ்தி" இத்யாதி "வஶவர்த்திநீ கிமிதிதுஷ்க்ருதி" இத்யர்த்தம். க்ரமேண அந்வயः. (அ)

---

* திருமொழி-கக, எ, சு. † திருவாய்மொழி-கூ, உ, கம.

## ஒன்பதாம் பாட்டு.

---

ஒடுங்கஅவன்கண், ஒடுங்கலுமெல்லாம்
விடும்பின்னுமாக்கை, விடும்பொழுதெண்ணே.

ஆ.—(ஒடுங்க.) இப்படி அவன்பக்கலிலே கரணங்களை ஒடுங்கப் பண்ணவே பகவத்கைங்கர்ய ப்ரதிபந்தகங்க ளெல்லாம் போம்; பின்னையும் இவ்வர்த்தமான ஶரீரம் போந்தனையும் பார்த்திரு; அத்தனையே விளம்பமுள்ள தென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், இப்படி ஆஶ்ரயிக்க பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமான கர்மங்களெல்லாம் நஶிக்கும்; ஶரீரபர்யவஸாநமாத்ரமே இவனுக்கு விளம்ப மென்கிறார்.

[ஒடுங்க என்று தொடங்கி] - அவனையாஶ்ரயிக்குங்காட்டில் அவித்யாதி ஸங்கோசங்களெல்லாம் போம்; ஆக்கை என்று - சரீரத்துக்குப் பேர்.

ப.—அநந்தரம், பஜநபலமான விரோதிநிவ்ருத்தியை அருளிச்செய்கிறார்.

அவன்கண் - ஸ்வாமியானவனிடத்திலே, ஒடுங்க - (அப்ருதக்ஸித்த ப்ரகாரதயா) அந்தர்ப்பவிக்கவே, ஒடுங்கலும் - (ஆத்மாவினுடைய ஜ்ஞாநாதிஸ்வஹாவ) ஸங்கோசமும், எல்லாம் - (தத்தேதுவான)அவித்யாதிகளும் எல்லாம், விடும் - விட்டுக்கழியும்; பின்னும் - ("க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே" என்கிறபடியே) பின்னையும், ஆக்கை - ஆரப்த ஶரீரஶேஷத்தினுடைய, விடும்பொழுது - முடிவை, எண் - பார்த்திரு. ஆக்கைவிடும்பொழுது எண்ணவேணுமோ? என்றுமாம். அன்றியே, 'பஜநத்துக்கு அங்கமென்று நினைத்துப் பின்னையும் அந்திமதஶையிலே நினை' என்று அந்திமஸ்ம்ருதியை விதிக்கிற தென்பாருமுளர்.

இ.—ஒன்பதாம்பாட்டில், பஜநம் எளிதானாலும் அநாதிகாலஸஞ்சிதமான அவித்யாதிகள் பஜநப்ராப்திகளுக்கு விரோதியன்றோ? என்னில்; - 'பஜிப்போம்' என்கைக்கு அடியான ஸுக்ருதமே வேண்டுவது; அதடியாக பஜநத்திலே இழியவே அவையடங்கக் கழியு மென்கிறது.

[ஒடுங்க அவன்கண்] - "ஶரீரம் வா ஹி" என்றிருக்கை தவிர்ந்து அவனுக்கு ப்ரகாரமாய் அவனபிமாநத்துக்குள்ளே அந்தர்ப்பவிக்கவே. [ஒடுங்கலுமெல்லாம்விடும்] - ஒடுங்கல்- ஒடுக்கத்தைப்பண்ணுமவை. ஆத்மாவுக்கு ஸங்கோசகங்களான அவித்யாதிகளெல்லாம் போம். ஒடுங்கல் - வந்தேறியாய் ஒடுங்கிக்கிடந்தவை யென்னவுமாம். ஸ்வரூபாதிரேகியாய் ஒடுங்கிக்கிடந்த அவித்யாதிகளெல்லாம் போம். 'எல்லாம்' என்கையாலே - பஜநவிரோதியோடு ப்ராப்திவிரோதியோடு வாசியற ஸர்வமும் நசிக்கு மென்கிறது. [பின்னுமாக்கை விடும்பொழுதெண்ணே]- பின்பு ஶரீராவஸாநமே விளம்பம். காமினி தன் உடம்பில் அழுக்கைக் கழற்றி ஹோமத்திலே அந்வயிக்க அவஸரப்ரதீக்ஷையாயிருக்குமாபோலே ஶரீராவஸாநத்தைப்பார்த்துக்கொண்டிருக்கை. உடையவர் குன்றத்துச்சீயரை "சிங்கப்பிரான்! இன்று அயநம்கிடாய்" என்ன, நிதாநம் அறியாமையாலே திகைத்துநிற்க, "ப்ராப்திப்ரதிபந்தகமான காலத்திலே ஆறுமாஸம் போந்தது உனக்கு ஒன்றாயிருந்ததில்லையோ?" என்று அருளிச்செய்தார். "க்ருதக்ருத்யா:" இத்யாதி. எம்பார் "அஸ்த்திரமான ஶரீரம் தானே நசியாநிற்க இவனுக்குத்தான் மநோரதிக்கவேணுமோ?" என்று அருளிச்செய்வர்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஸம்பந்தஜ்ஞாந முண்டாகவே தன் சிறுமை பார்த்து அகல வேண்டா வென்றும், பஜநமாவது - தான் அவன் தனக்காகத் தந்த கரணங்களை அவனுக்கு உறுப்பாக்குகை யென்றுஞ் சொல்லி நின்றார் கீழிரண்டுபாட்டாலே; இது தன்னரசுநாடாய் ப்ராப்த விஷயம் அவனல்லாமை பஜியாதிருக்கிறோமோ ? பஜநவிரோதிகள் கனக்கவுண்டாகையன்றோ நாங்கள் பஜியாதொழிகிறது ? என்ன, நீங்கள் அவனைக் கிட்டவே அவையடைய விட்டுப்போமென்கிறார் இதில்.

[ஒடுங்க அவன்கண்] - ப்ரகாரபூதரான நீங்கள் ப்ரகாரியான அவன்பக்கலிலே சென்று சேர. [ஒடுங்கலுமெல்லாம்விடும்] - ப்ராப்தத்தைச் செய்ய அப்ராப்தமானவையெல்லாம் தன்னடையே விட்டுப்போம். ஸ்வரூபாநுரூபமானத்தைச் செய்யவே ஸ்வரூபவிரோதிகளடங்க விட்டுப்போம். ''ஒடுங்கல்'' என்கையாலே - இது ஸ்வரூபத்திற் கிடப்ப தொன்றல்ல, ஸ்வரூபவிரோதியாய்க் கொண்டு வந்தேறி யென்னுமிடம் தோற்றுகிறது; அன்றிக்கே, ''ஒடுங்கல்'' என்கிற மெல்லொற்றை ஒடுக்கலென்று வல்லொற்றாக்கி இவனுக்கு ஸங்கோசத்தைப் பிறப்பிக்குமவை யென்னுதல். [எல்லாம் விடும்] - அவித்யாகர்மவாஸநாருசிகள் ஸவாஸநமாக விட்டுக் கழியும். ''வானோ மறிகடலோ'' இத்யாதி, '' மாடேவரப்பெறுவரா மென்றே வல்வினையார் '' இத்யாதிகளை யோஜித்துக்கொள்வது. இவை போமாகில் பின்பு இவனுக்குக் கர்த்தவ்யமெது ? என்னில்,—[பின்னுமாக்கை விடும்பொழுதெண்ணே]- 'உபாஸநத்தால் வந்த ராஜகுலங்கொண்டு பலம் தப்பாது, தன்ன

---

*ஒன்பதாம்பாட்டு. ஒடுங்க இத்யாதி. கீழிரண்டுபாட்டு ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு, இப்பாட்டில் 'ஒடுங்கலுமெல்லாம்விடும்' என்கிற பதத்தைக் கடாக்ஷித்து ஸங்கதி அருளிச்செய்கிறார் - ஸம்பந்த ஜ்ஞாநமுண்டாகவே இத்யாதி வாக்யத்வயத்தாலே. அவனைக்கிட்டவே - அவனை ஆஶ்ரயிக்கவே.*

*ஒடுங்க - சேர. அப்ருதக்ஸித்தவிஶேஷணமான இவன் இன்று ஒடுங்குகையாவதென்? என்ன, ப்ரகாரபூதரான இத்யாதி. 'ஒடுங்க' என்று ப்ரகாரத்வாநுஸந்தாநம் விவக்ஷிதம். ஒடுங்கலென்று - வந்தேறியைச் சொல்லுகிறது. அப்ராப்தம் - வந்தேறி. விவரணம் - ஸ்வரூப இத்யாதி. இது - விரோதிஸமஷ்டி. ஸ்வரூபத்தில் கிடப்பதொன்றல்ல - ஸ்வரூபாநுபந்தியன்று. மெல்லொற்று - ம்ருத்வக்ஷரம். வல்லொற்று - கடிநாக்ஷரம். அவித்யா - அஜ்ஞாநம். பகவத்ஸமாஶ்ரயணாநந்தரம் விரோதிகள் போமென்கைக்கு ப்ரமாணம் - வானோ இத்யாதி. பெரியதிருவந்தாதி - (ருச.) "வானோமறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோ வொருங்கிற்றுங் கண்டிலமா - லானீன்ற, கன்றுயரத்தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம், வன்துயரையாவாமருங்கு." (ஷ-ருக) - " மாடேவரப்பெறுவராமென்றே வல்வினையார், காடானுமாதானுங் கைக்கொள்ளா - ஊடே போய்ப், பேரோதம் சிந்து திரைக்கண்வளரும்பேராளன், பேரோதஞ்சிந்திக்கப்பேர்ந்து." ஆனீன்ற என்று தொடங்கி, தாள்பணிந்தோம் வன்துயரை மருங்குகண்டிலம், வானோவொருங்கிற்றும், மறிகடலோவொருங்கிற்றும், மாருதமோ வொருங்கிற்றும், தீயகமோ வொருங்கிற்றும், கானோ வொருங்கிற்றும் ஆ, ஆ, ஆல்!! இத்யந்வயம். பசுவீன்றகன்றை எறிதடியாகத் தாம் உயர எறிந்து விளங்காயை உதிர்த்தவருடைய திருவடிகளை ஆஶ்ரயித்தோம்; ப்ரபலதுக்கத்தை விளைவிக்கும் ப்ராப்திப்ரதிபந்தக கர்மங்களை நம்முடைய ஸமீபத்திலே கண்டிலோம்; இது ஆகாஶத்திலே போயிற்றோ? திரைக்கிளப்பத்தையுடைய கடலிலே போயிற்றோ? காற்றிலே போயிற்றோ? நெருப்பிலே போயிற்றோ? காட்டிலே மஹாப்ரஸ்தாநமாய்ப் போயிற்றோ? எங்கேயொருங்கிப்போயிற்றோ? ஆ, ஆ, ஆல் - ஹந்த, ஹந்த, இதென்ன ஆஶ்சர்ய மென்றபடி. துயரென்று - துயரைவிளைக்குங் கர்மங்களைச் சொல்லுகிறது. ஊடேபோய் என்றுதொடங்கி, சிந்திக்கப் பேர்ந்து வல்வினையார் காடானுமாதானுங் கைக்கொள்ளார்; மாடேவரப்பெறுவரா மென்றே இத்யந்வயம். நடுவிலேபோய்ப் பெரியகடல் சிந்துகிற திரைகள் தொடைகுத்தக் கண்வளர்ந்தருளும் பெருமையையுடையவனுடைய திருநாமங்களைச் சொல்லவேணுமென்று மநோரதிக்க, நம்மைவிட்டுப்புறப்பட்டு ப்ராப்திப்ரதிபந்தககர்மத்திரளானவர் தமக்குக் காடாதல் மலையாதல் ஓரரண் தேடிக்கொள்ளுகிறிலர், இதுக்கு அடி பூண்டு போலே நம்மண்டையிலே வரலாமென்றோ ? வந்தாராகில் தாமே படுகிறாரென்று கருத்து. வல்வினையாரென்றது - அவித்யாதிகளுக்கும் உபலக்ஷணம். யோஜித்துக்கொள்வது - ப்ரமாணதயா யோஜித்துக் கொள்வது. பின்னும் - அவித்யாதிகள் கழிந்தபின்னும். ராஜகுலங்கொண்டு - ராஜக்ருஹாவஷ்டம்பங்*

டையே வருகிறது' என்று ஆறியிருக்கை யன்றிக்கே, 'ஹேதுவான அவித்யாதிகள் கழிந்ததாகில் அவற்றின் கார்யமான இச்ஶரீரமும் ஒருபடிபோய், தண்ணீர்த் துரும்பற்று ப்ராப்தி கைப்புகுந்ததாவது எப்போதோ?' என்று அதுக்கு விரல் முடக்கி யிருக்கு மித்தனை; காமிநியானவள் தன்னுடம்பில் அழுக்குக் கழற்றி போகத்திலே அந்வயிக்க அவஸரப்ரதீக்ஷையா யிருக்குமாபோலே ஶரீராவஸாநத்தைப் பார்த்துக்கொண் டிருக்கை; "கோங்கைமேற் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள் தங்குமே லென்னுவி தங்கும்" என்று அழுக்குக் கழற்றி யொப்பித்துப் பார்த்திருந்தாளிறே; அப்படி "அழுக்குடம்பு" என்கிற இவ்வழுக்குக் கழன்று, ப்ராப்யம் கைப்புகுந்ததாவது எப்போதோ? என்று பார்த்திருக்கு மித்தனை; "ம்ருத்யும்ப்ரியமிவாதிதிம்" (ம்ருத்யும்ப்ரியமிவாதிதிம்) என்றிருக்குமித்தனை. "க்ருதக்ருத்யா:" (க்ருதக்ருத்யா:). க்ருதக்ருத்யராகிறார் - ஸித்தஸாதநபரிக்ரஹம் பண்ணினவர்களிறே; "விது: க்ருஷ்ணம் ப்ராஹ்மணாஸ்தத்த்வதோயே தேஷாம்ராஜந் ஸர்வயஜ்ஞாஸ்ஸமாப்தா:" (விது:க்ருஷ்ணம் ப்ராஹ்மணாஸ்தத்த்வதோயே தேஷாம்ராஜந் ஸர்வயஜ்ஞாஸ்ஸமாப்தா:) - அவனை உள்ளபடி அறிந்தவர்களிறே எல்லாவற்றையும் அநுஷ்டித்துத் தலைக் கட்டினார்களாகிறார்; ஓரயநத்தினன்று குன்றத்துச்சீயர் எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே புக, அவருடைய சிறுபேரைச் சொல்லி "சிங்கப்பிரான்! இன்று அயநங்கிடாய்" என்ன, திருவுள்ளத்திலோடுகிறது இன்னதென்று அறியாமையாலே அவர் பேசாதிருக்க, "இத்தேஹஸமநந்தரத்திலே ப்ராப்தி கண்ணழிவற்ற பின்பு நடுவு விரோதியாய்ச் செல்லுகிற நாளிலே ஓராண்டு கழியப்பெற்ற இது உனக்கு ஒன்றாயிருந்த தில்லையோ?" என்று அருளிச்செய்தார். அன்றியே, எம்பார் ஒருருவிலே "பின்னுமாக்கைவிடும்பொழுதெண்ணே" என்று "இங்ஙனே காரணமாவது கழிந்தபோதே கார்யமும் தன்னடையே கழிந்ததே யன்றோ! ப்ராப்தியும் இனிக் கைப்புகுந்ததே யன்றோ? இனி சிந்தாவிஷய முண்டோ?" என்று அருளிச்செய்தார். (௩)

---

*கொண்டு.* ஹேதுவான - ஶரீரோத்பத்திகாரணமான. தண்ணீர்த் துரும்பு அற்று - ப்ரதிபந்தகம் போய். 'எண்ணே' என்கிற ஏகாரம் - ஈற்றசையாதல்: ஈற்றசை - பாதபூரணம்: அவ்யய மென்றபடி. யத்வா, தேற்றேகாரமாய், எண்ணவேணுமென்றபடி. தேற்றம் - நிஶ்சயம். கேவலனைப்போலே தேஹநிவ்ருத்தியை அபேக்ஷிக்கிற தென்? என்ன, காமிநி இத்யாதி. அதாவது - ப்ராப்திக்கு உறுப்பாக என்றபடி. இதுக்கு அநுஷ்டாநம் - கோங்கை இத்யாதி. முலையின்மேலே பூசின குங்குமக்குழம்பு அழியும்படி ப்ரவேஶித்து ஒரு நாள் நிற்குமாகில் என்னுடைய ப்ராணனனது நிற்கு மென்றபடி. ப்ராணரக்ஷணத்துக்கு ஒருநாள் வந்து அணையுமாகில் தரிக்கலாமென்று கருத்து. அலங்கரிக்கையாலே அழுக்குக்கழித்தமை வலித்தம். "[illegible]" என்றிருக்க, இது ப்ரார்த்த்யமாமோ? என்ன, ம்ருத்யும் இத்யாதி. "ப்ராயஶ: ஸாவகாஶித்வாந் ம்ருத்யோராஹ்வாநஜா ஜநா: । க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்" இதி மஹாபாரதே ராஜஸூயே தர்மஸூநும்ப்ரதி க்ருஷ்ண:. "க்ருதக்ருத்யா: ம்ருத்யும் ப்ரியமதிதிமிவ ப்ரதீக்ஷந்தே" இந்த அதிகாரிக்குப் புருஷார்த்த மென்றபடி. இஶ்ஶ்லோகத்திலே க்ருதக்ருத்யர்க்கன்றே இது உத்தேஶ்ய மென்கிறதென்ன, க்ருதக்ருத்யர் இத்யாதி. ஸித்தஸாதநபரிக்ரஹம் பண்ணினவர்கள் க்ருதக்ருத்ய ரென்கைக்கு ப்ரமாணம் - விது: இத்யாதி. "ஸ வேத்தி வேதாஸ்ஸ ச வேத்யாஸ்ஸ ஶாஸ்த்ராஸ்ஸ ஸர்வயஜ்ஞாஸ்ஸ ச இஜ்யாஶ்ச க்ருஷ்ண:" இதி பூர்வார்த்தம் - [illegible]. இதுக்கு அர்த்தம்-அவனை இத்யாதி. ஶரீரநிவ்ருத்தி புருஷார்த்தமென்கைக்கு ஐதிஹ்யம் - ஓரயநத்தின் இத்யாதி. 'எண்ணே' என்றதுக்கு - தேற்றேகாரமாய், எண்ணவேணுமென்று ஓரர்த்தம் அருளிச்செய்து, * பிரிநிலை யேகாரமாய், எண்ணவேண்டா வென்றாய், இனி சிந்தாவிஷயமுண்டோ? என்று இரண்டாமர்த்தம் அருளிச்செய்கிறார் - அன்றியே எம்பார் இத்யாதி. பிரிநிலை - வ்யதிரேகம். அவன்கணெண்ணே, ஒடுங்கலு மித்யாரப்ய அந்வய:. (௩)

---

* வினவென்றபொருளில் இவ்வாறு வருகின்றது.

## பத்தாம் பாட்டு.

எண்பெருக்கந்நலத்து, ஒண்பொருளீறில
வண்புகழ்நாரணன், திண்கழல்சேரே.

ஆ.—(எண்பெருக்கு.) இப்படி ஸகலஸமாச்ரயணீயனாகச் சொல்லப்பட்ட ஈச்வரன் தான் ஆர்? என்னில்,—அஸங்க்யேயராய் ஜ்ஞாநாநந்தஸ்வபாவராயிருந்த ஸர்வாத்மாக்களேயும் நித்ய ஸித்தகல்யாணகுணங்களையுமுடையனாயிருந்த நாராயணன். அவனுடைய ஆச்ரிதரை ஒருகாலும் கைவிடாதே ரக்ஷிக்கும் ஸ்வபாவமான திருவடிகளை ஆச்ரயி என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், ஸார்த்தமாகத் திருமந்த்ரத்தை அருளிச்செய்து இத்தாலே யாவச்சரீரபாதம் எம்பெருமானை யாச்ரயியுங்கோள் என்கிறார். அஸங்க்யேயராய் ஜ்ஞாநாதி கல்யாணகுணங்களையுடையருமாய் நித்யமாய் விலக்ஷணமான ஸ்வரூபத்தையுடைய ஸர்வாத்மாவை யும் நித்யஸித்தகல்யாண குணங்களையுமுடைய நாராயணனுடைய ஆச்ரிதரை ஒருகாலும் விடாதே ரக்ஷிக்கும் ஸ்வபாவமான திருவடிகளை ஆச்ரயி.

ப.—அநந்தரம், பஜநீயனுடைய ப்ராப்யத்வபூர்த்தியை அருளிச்செய்கிறார்.

(ஆநந்தவல்லியிற் சொல்லுகிற கணக்கிலே), எண் - எண்ணுக்கு, பெருக்கு - அவ்வருகே பெருகியிருப்பதாய், அந்நலத்து - (அந்தப்ரஹ்மாநந்தத்தோடு ஸமாநமான) ஆநந்தாதி குணத்தையுடைய, ஒண்பொருள் - (அகாமஹதச்ரோத்ரியசப்தவாச்யமாய் ஆவிர்ப்பூதஸ்வரூபமான) விலக்ஷணாத்மவர்க்கமென்ன, ஈறில - (அஸங்க்யேயமாய்) அபரிச்சிந்நமான, வண்புகழ்-கல்யாணகுணங்களென்ன, (இவற்றையுடையனாகையாலே), நாரணன்-நாராயணசப்தவாச்யனான ஸ்வாமியினுடைய, திண் - (ஆச்ரிதரைக்கைவிடாதபடி) ஸ்திரமான, கழல்-திருவடிகளை, சேர் - ஆச்ரயி. விலக்ஷணகுணவிபூதி விசிஷ்டனான நாராயணன் திருவடிகள் ஆச்ரயணீயமாகச் சொல்லுகையாலே இங்குச்சொல்லுகிற ஆச்ரயணம் பஜநரூபநஸாதாரண மென்னவுமாம். இப்படி கீழிற்பாட்டுக்களிலும் உபயாகார ஸாதாரண்யம் நிரூபித்துக்கொள்க.

இ.—பத்தாம்பாட்டில், ஆச்ரயணத்திலே இழிவார் திருமந்த்ரத்தை ஸார்த்தமாக அநுஸந்தித்துக்கொண்டு ஆச்ரயியுங்கோ ளென்கிறார்.

'எண்பெருக்கு' என்று ஜீவாநந்த்யத்தைச் சொல்லுகிறது. [அந்நலம்] - கல்யாணமான ஜ்ஞாநாதிகுணங்களை யுடைத்தாகை. [ஒண்பொருள்] - ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கை. [ஈறில] - நித்யமாயிருக்கை. இப்படிப்பட்ட ஆத்மவர்க்கத்தையும். [வண்புகழ்] - கல்யாண குணங்களையுமுடையனாயிருக்கை. 'ஈறில' என்று குணங்களுக்கு விசேஷணமாகவுமாம். [நாரணன்] - நித்யஸித்த கல்யாணகுணங்களோபாதி ஜீவஸமூஹத்தையும் ஸ்வாதீநமாகவுடையனாகையாலே நாராயணன். [திண்கழல்] - இப்படிப்பட்ட ஸம்பந்தஜ்ஞாநம் முன்னாகப் பற்றினாரை ஒருகாலும் விடாத திருவடிகள். [சேர்] - ஆச்ரயி.

ஈடு.—பத்தாம்பாட்டு. அழகிது; அப்படியேயாகிறது; பஜநத்துக்கு ஆலம்பநமான மந்த்ரம் எது? என்ன,—அது இன்னதென்றும், அதினுடைய அர்த்தம் அநுஸந்தேயமென்றுஞ்

பத்தாம்பாட்டு - எண்பெருக்கு இத்யாதி. பஜநத்துக்கு ஆலம்பநமான மந்த்ரம் எது? என்ன வென்றது - "ஸர்வவேதேஷு ... ... ... ... ... ... ... ..." என்றத்தைப் பற்ற. மந்த்ரமாத்ரம் அமையாதோ? அர்த்தமும் அருளிச்செய்ய

சொல்லுகிறுர். இதுதன்னைப் புறம்புள்ளார் ஜபஹோமாதிகளாலே கார்யங்கொள்ளாநிற்பர்கள்; நம் ஆசார்யர்கள் 'ஸ்வரூபாநுஸந்தாநத்துக்கு ஈடாயிருக்கிற இதினுடைய அர்த்தாநுஸந்தாநம் மோக்ஷ ஸாதநம்' என்று தாங்களும் அநுஸந்தித்து, தங்களைக் கிட்டினுர்க்கும் உபதேசித்துக்கொண்டு போருவர்கள். வேதங்களுக்கும் இவ்வாழ்வார்க்கும் இம்மந்த்ரம் ப்ரஸ்துதமானவாறே, முன்பே சப்தத்தைச்சொல்லி அநந்தரம் அர்த்தத்தைச் சொல்லுதல்; அன்றியே, முன்பே அர்த்தத்தைச்சொல்லிப் பின்பே சப்தப்ரயோகம்பண்ணுதல்; செய்யக்கடவதொரு நிர்ப்பந்த முண்டாயிருக்கும்; அதுக்கு அடி அர்த்தாநுஸந்தாநம் உத்தேஶ்யமாகையாலே; "யாவையும் யாவருந் தானு மமைவுடைநாரணன்"என்னுதல், "நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன்" என்னுதல் செய்வதொரு நிர்ப்பந்தமுண்டு; "அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்ஸ்தித:" (அந்தர்பஹிஶ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஃஸ்திதஃ) என்னுதல், "நாராயணபரோஜ்யோதி:" (நாராயண பரோஜ்யோதிஃ) என்னுதல் செய்யும் வேதம். [எண்பெருக்கந்நலம் இத்யாதி] - இப்பாட்டாலே திருமந்த்ரத்தை ஸார்த்தமாக அருளிச்செய்கிறுர். ஆழ்வான் இப்பாட்டளவும் வரப் பணித்து, இப்பாட்டளவிலே வந்தவாறே 'இத்தையுந் தம் ஆசார்யர்க்ள்பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கோள்' என்ன, பட்டரும் சீராமப்பிள்ளையும் எழுந்திருந்து போகப்புக்கவாறே அவர்களை யழைத்து, 'இன்னபோது இன்னுர் இருப்பார், இன்னுர் போவார் என்று தெரியாது; இருந்து கேளுங்கோள்' என்று திருமந்த்ரத்தை உபதேசித்து, இப்பாட்டை நிர்வஹித்து, 'இப்பாட்டை இதுக்கு அர்த்தமாக நினைத்திருங்கோள்' என்று பணித்தான்.

எண்பெருக்கென்கிற இத்தாலே - ஜீவாநந்த்யத்தைச் சொல்லுகிறது. [நலத்து] - இவ்

---

வேணுமோ? என்ன, இதுதன்னை இத்யாதி. புறம்புள்ளார் - உபாஸகர். ஸ்வரூபாநு ஸந்தாநத்துக்கீடாகை - அநந்யார்ஹ ஶேஷத்வ அநந்ய ஶரணத்வ அநந்ய போகத்வரூப ஸ்வரூபாநுஸந்தாநத்துக்கு ஈடாகை. அர்த்தாநுஸந்தாநம் மோக்ஷஸாதநமென்றது, அர்த்தம் ஈஶ்வரனுகையாலே அவனே ஸாதந மென்றபடி. இவர்களுக்கு அர்த்தப்ராதாந்யஹேது ஆழ்வார்கள் நிஷ்டையும் வேதமு மென்கைக்காக, ததுக்த்யு பாதாநம்பண்ணுவாராக அதிஷ்டிக்கையிடுகிறுர் - வேதங்களுக்கும் இத்யாதி. உக்தநிர்ப்பந்தந்தர்ஶயதி - யாவையும் இத்யாதி. எல்லா அசேதநங்களும் எல்லாச்சேதநங்களுந் தானேயாம்படியான அமைவையுடைய நாரணன். நாரணன் இத்யாதி - நாராயணஶப்தவாச்யனுய், அதினுடைய அர்த்தமான ஸமஸ்த லோகத்துக்கும் ஸ்வாமியானவன். அந்தர்ப்பஹிஶ்ச - பஹுவ்ரீஹிஸித்தமான ஸௌலப்யம். பரோஜ்யோதி: - தத்புருஷஸித்தமான பரத்வம். "நாராயணபர:" என்கிறவிடத்தில் விஸர்ஜநீயாபாவஶ்சாந்தஸ:; நாராயண:பரோஜ்யோதி: என்றபடி. ஏதத்ப்ரதிபாத்யார்த்தத்தினுடைய அத்யந்தோத்தேஶ்யதமத்வத்தைத் திருவுள்ளம்பற்றி ப்ரதமம் ப்ரதிபாத்யம் விஶிஷ்ய தர்ஶயதி - இப்பாட்டாலே இத்யாதி. இப்பாட்டுத் திருமந்த்ரார்த்தமென்னுமதுக்கும், மந்த்ரார்த்தம் ஆசார்யன்பக்கலிலே கேட்டறியவேணுமென்னுமதுக்கும் ஐதிஹ்யம்-ஆழ்வான்இத்யாதி. அத்ர "யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ। தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாஶந்தே மஹாத்மந:" இத்யநுஸந்தேயம். ஆழ்வானுடைய முந்தின வார்த்தைக்கு - கௌரவ்யதையிலே நோக்கு. பிந்தின வார்த்தைக்கு - போக்யதையிலே நோக்கு.

எண்பெருக்கு-எண்ணுக்கவ்வருகே பெருகியிருக்கிற வென்றர்த்தமாய் ஆநந்த்யத்தைச்சொல்லுகிறது. எண்பெருக்கு, அந்நலம் என்று பதபேதமாய், எண்ணுக்கவ்வருகே பெருகியிருப்பதாய் அந்தப்ராஹ்மாநந்தத்தோடு ஸமாநமான ஆநந்தாதிகுணத்தையுடைய வென்று உரையிலர்த்தம். ஸ்வதர்மபூதஜ்ஞாநம் அநுகூலமாகையாலே "நலம்" என்கிறது. நலத்து, அத்து - சாரியைச்சொல். நலம் - நலத்தையுடைய. நலத்தென்று - ஜ்ஞாந குணகத்வமும், ஒண்பொருளென்று - ஜ்ஞாநஸ்வரூபத்வமுஞ் சொல்லுகிறது. ஜ்ஞாநஸ்வரூபத்வத்தைச்சொன்னுற் போராதோ? ஜ்ஞாநகுணகத்வமுஞ்சொல்லவேணுமோவென்ன, இவ்வஸ்துக்கள்தான்இத்யாதி. "ஜ்ஞாந

வஸ்துக்கள்தான் ஜ்ஞாநகுணாஶ்ரயமுமா யிருக்கக்கடவதிறே; ப்ரணவத்தில் த்ருதீயபதமான மகாரத்தாலே ஜ்ஞாநகுணாஶ்ரயமுமாய் ஜ்ஞாதாவுமா யிருக்குமென்று சோல்லிற்றிறே. [ஒண்போருள்]- அசைதந்யம் அசித்துக்கு ஸ்வபாவமாகாநிற்கச்சேய்தே வஸ்துதான் ஜடமுமாயிருக்குமிறே - அஸம்ஜ்ஞாவத்தா யிருக்குமிறே; அங்ஙனன்றிக்கே, வஸ்துதான் ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶமுமாய், தர்மபூதஜ்ஞாநமானதுவும் விஷயங்களை க்ரஹித்துத் தன்னையும் அறிவிக்கக்கடவதாயிருக்கும்; அத்தைப் பற்றச் சோல்லுகிறது. ஈறிலவேன்கிற இது - கீழும் மேலும் அந்வயித்துக்கிடக்கிறது. ஈறிலவான ஒண்போருளையும், ஈறிலவான வண்புகழையு முடையனுகையாயிற்று - நாராயணனுகையாகிறது; “ஹாவத்கமங்கலகுணாஹி நித்யஸங்கம் நஃ” (பாவத்கமங்கலகுணஹிநிதர்ஶநம் நஃ)- தன்னுடைய கல்யாணகுணங்களோபாதி நித்யமுமாய் ப்ரகாரமுமாயிருக்கும் இவ்வஸ்துவேன்கைக்காக குணங்களை நிதர்ஶநமாகச் சோல்லுகிறது; நித்யரான த்ரிவிதசேதநரையும், நித்யமான கல்யாணகுணங்களையு முடையனு யிருக்கையாயிற்று - நாராயணனுகையாவது. அவனுடைய [திண்கழல் சேரே] - இப்படி ஸம்பந்தம் காதாசித்கமான்றிக தவிர்ந்து நித்யமாயிற்றபின்பு, ஸ்வரூபஜ்ஞாநமுடையாரை அவன் ஒருநாளும் விடானிறே; ஆஶ்ரிதரை ஒருகாலும் விட்டுக்கோடாத திண்மையைப்

---

குணாஶ்ரயமுமாய்” என்ற ஶப்தம் - ஒண்மைக்கு விவக்ஷிதமான ஜ்ஞாநஸ்வரூபதையை ஸமுச்சயிக்கிறது. அதாவது - ஜ்ஞாநஸ்வரூபனுமாயிருக்கு மென்றபடி. இதுக்கு நியாமகப்ரமாணம் - ப்ரணவத்தில் இத்யாதி. அதாவது - “ஜ்ஞ அவபோதநே” என்கிற தாதுவிலேயாதல், “ஜ்ஞா அவபோதநே” என்கிற தாதுவிலேயாதல்; ஜ்ஞாநவாசியாய், அதுதான் இன்ன ஜ்ஞாந மென்று விஶேஷியாமையாலே தர்மதர்மிரூப ஜ்ஞாநத்வயத்தையுஞ் சோல்லிற்றிறே யென்றபடி. ஜ்ஞாதாவுமாய் - ஸ்வயம்ப்ரகாஶமுமாய். ஏதந்நியாமகம் -“ ஸ்வவிஷயம் ஜ்ஞாத்ருத்வம் ஜ்ஞாயதே ” என்ற ஹாஷ்யவாக்யத்துக்கு ஶ்ருதப்ரகாஶிகையிலே “ ஸ்வஸ்வஸ்மை ஸ்வஸத்தயா ஸ்வயம் ப்ரகாஶமான ஸ்வரூபம் ஜ்ஞாத்ருத்வேந ஜ்ஞாயமாநம் ஜ்ஞாத்ருஸ்வரூபம், ந து தத்ஸ்வரூபஜ்ஞாநஸ்வரூபம்” என்ற வாக்யம். ஜ்ஞாதாவுமாய் என்றது - ஸ்வஜ்ஞாதாவுமாயென்றபடியாய், ஸ்வஸ்மைஸ்வயம்ப்ரகாஶ மென்றபடி. ஆனால் அந்த ஸ்வப்ரகாஶத்வம் இங்குச் சொல்லவேண்டாவோ? என்ன, அதுவும் இங்கே சொல்லிற்று என்கிறார் - ஒண்போருள் என்று. ‘நலத்து, ஒண்பொருள்’ என்கிற விஶேஷணத்வயத்துக்கும் வ்யாவர்த்யமேது? என்ன, அசைதந்யம் இத்யாதி. அதாவது - ஸ்வரூபேண ஸ்வபாவதஶ்ச ஜடமான அசித்தில் வ்யாவ்ருத்த மென்றபடி. அசைதந்யமாவது - அஜ்ஞாநாஶ்ரயத்வம். அசைதந்யஸ்வபாவவிவரணம் - அஸம்ஜ்ஞாவத்தாய் - இத்யாதி. அஸம்ஜ்ஞாவத்தாய்- ஜ்ஞாநஶூந்யமாய். ‘ஜடமுமாய்’ என்றதுக்கு ப்ரதிகோடி - ஸ்வஸ்மைஸ்வயம்ப்ரகாஶமுமாய் என்றது. இத்தால் ஜ்ஞாநஸ்வரூபத்வஞ் சொன்னபடி. ‘அஸம்ஜ்ஞாவத்தாயிருக்கும்’ என்றதுக்கு ப்ரதிகோடி - தர்மபூதஜ்ஞாநமானதுவும் என்று தொடங்கி. அத்தைப்பற்ற - ஸ்வஸ்மைஸ்வயம்ப்ரகாஶத்வத்தைப்பற்ற. ஆக, இவ்வளவால், ஒண்பொருள்’ என்று ப்ரதீகோபாதாநம் பண்ணினதின் தாத்பர்யத்தை அருளிச்செய்தாராயிற்று. ஒண்மை - ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶத்வம். நாராயணஶப்தத்துக்கு அர்த்தங்கள் அநேகமுண்டாயிருக்க, ஆத்மாவுக்கநந்தரம் குணங்களைச்சொன்னது - நித்யவஸ்துவுக்கும் நித்யபாரதந்த்ரயங்கூடு மென்கிறதுக்கு த்ருஷ்டாந்தத்வேந வென்கிறார் - பாவத்க இத்யாதியாலே “நித்யஸங்கம் நஃ” என்ற அநந்தரம், ‘ஶ்லோகத்தின் படியே’ என்று ஶேஷம். கீழ் ‘ஈறிலவான’ என்ற வாக்யவிவரணம் - நித்யரான இத்யாதி. ஈறு - நாஶம். இலவென்று - இல்லாமை; ஆக, நாஶமின்றிக்கேயிருக்கிற நித்யமாயிருக்கிற வென்றபடி. ஸம்பந்தம் நித்யமாயிற்றபின்பு என்றது - நித்யவஸ்துக்களுடைய ப்ரகாரப்ரகாரிபாவ ஸம்பந்தமாகையாலே ஸம்பந்தமும் நித்ய மென்றபடி. ‘விடானிறே’ ஆகையாலே யென்று கூட்டுவது. உன்னுடையதாய் - உனக்கு போக்யமாய் இது - ‘கழல்’ என்றத்தைப்பற்ற. ‘நாரணன்’ என்ற பதத்தைக் கூட்டித் தாத்பர்யம் - உனக்குவகுத்ததாய் என்றது. யத்வா, “உன்னுடையதாய்” என்றதுக்கு விவரணம் - உனக்குவகுத்ததாய் என்று. இது “நாரணன்

பற்ற "திண்கழல்" என்கிறது. [சேர்] - ஆச்ரயி. உன்னுடையதாய் உனக்கு வகுத்ததா யிருந்த பின்பு நீ கடுக ஸ்வீகரி; நமஃ என்றபடி. (க௦)

# பதினோராம் பாட்டு.

சேர்த்தடத்தென்குரு, கூர்ச்சடகோபன்சொல்
சீர்த்தொடையாயிரத்து, ஓர்த்தவிப்பத்தே.

ஆ.—(சேர்த்தட.) பகவத்குண ப்ரதிபாதகமாயிருந்த இவ்வாயிரத்திலும் இத்திருவாய்மொழி எம்பெருமானை யுணர்ந்து சொல்லிற்று.

ஒ.—நிகமத்தில், எம்பெருமானுடைய குணங்களைத் தொடுத்த ஆயிரம் திருவாய்மொழியும் ஆராய்ந்து சொல்லப்பட்டன இவை யென்கிறார்.

[சேர்த்தடத்தென்குருகூர்ச்சடகோபன்] - திரண்ட தடங்களையுடைய திருநகரியை யுடைய ஆழ்வார். "சேர்த்தடங்களை யுடைத்து" என்றுஞ் சொல்லுவர். "இப்பத்தைச் சேர்" என்று க்ரியாபதமாகவுஞ் சொல்லுவர். பரோபதேசம் பலரைக்குறித்து உபக்ரமிக்கையாலே மேல் ஏகவசநமான இடங்களெல்லாம் ஜாத்யபிப்ராயம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியினுடைய உபாதேயதமத்வத்தை பலமாக அருளிச்செய்கிறார்.

சேர் - செறிதலையுடைத்தான, தடம் - தடாகங்களையுடைய, தென்குருகூர் - அழகிய திருநகரியில், சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, சீர்த்தொடை - ஸப்தலக்ஷணமுத மான சீர்களினுடைய தொடையையுடைய, ஆயிரத்து - ஆயிரத்திலும், இப்பத்து - (ஆச்ரயணோபதேசபரமான) இப்பத்து, ஓர்த்த - நிரூபிக்கப்பட்டன. ஓர்த்தவிப்பத்தைச் சேர் என்று வினையாகவுமாம். இத்திருவாய்மொழி இருசீராய்க் குறளடி நான்கு மொத்திருக்கையால் வஞ்சித்துறை.

இ. — நிகமத்தில், பகவத்குணங்களைத் தொடுத்த ஆயிரந்திருவாய்மொழியிலும் ஆராய்ந்து சொல்லப்பட்டன இவை யென்கிறார்.

[சேர்த்தடம்] - ஊரோடே சேர்ந்த தடம்; தன்னிலே சேர்ந்த தடமென்னுதல். [சீர்த்தொடையாயிரம்] - சீரென்று - கவிக்கு உறுப்பான அலங்காரங்களைச் சொல்லுதல்; பகவத்குணங்களைச் சொல்லுதல். [ஓர்த்தஇப்பத்து]-ஓர்ந்துசொல்லப்பட்டன இவை. ப்ரஜைகள் துர்க்கதியைக் கண்டு இவற்றினுடைய உஜ்ஜீவநோபாயத்தைத் திருவுள்ளத்தாலே ஆராய்ந்து அருளிச்செய்தது; "இப்பத்தைச்சேர்" என்று - க்ரியாபதமாக ஒருவன் சொன்னான். இப்பத்தை நெஞ்சிலே சேர் - அநுஸந்தி. பரோபதேசம் பலரைக்குறித்து உபக்ரமிக்கையாலே ஏகவசநமான இடம் ஜாத்யபிப்ராயம்.

---

திண்கழல்" என்கிற ஸமபிவ்யாஹாரலப்யம். அன்றிக்கே, பஹுவ்ரீஹியிற்சொல்லுகிற ஸௌலப்யத்தையும், தத்புருஷனிற்சொல்லுகிற ஸ்வாமித்வத்தையும்பற்றச் சொல்லுகிறார் - உன்னுடையதாய் இத்யாதி ஆதல். 'சேர்' என்றது - ஸமாச்ரயப்தார்த்த மென்றபடி. எண்பெருக்கந்நலத் தீதிலவான ஒண்பொருளையும், ஈறிலவான வண்புகழையுமுடைய நாரணன் திண்கழல் சேரென்று அந்வயம். (க௦)

ஈடு.—நிகமத்தில், முதற்பாட்டில் வ்யதிரிக்த விஷயங்களை விட்டு ஸர்வேஶ்வரன்பக்கலிலே ஆத்மாவை ஸமர்ப்பிக்க இசையுங்கோ ளென்றார்; இரண்டாம்பாட்டில் வ்யதிரிக்த விஷயங்களினுடைய தோஷதர்ஶநம்பண்ணவே விடலாமென்றார்; மூன்றாம்பாட்டில் த்யாஜ்யாம்ஶத்தைச் சுருங்க அருளிச்செய்தார்; நாலாம்பாட்டில் பற்றப்படுகிற விஷயத்தினுடைய நன்மையை அருளிச்செய்தார்; அஞ்சாம்பாட்டில் பற்றுமிடத்தில் வரும் அந்தராய பரிஹாரத்தை அருளிச்செய்தார்; ஆறாம்பாட்டில் அவன் ஸங்கஸ்வஹாவ னென்றார்; ஏழாம்பாட்டில் ஸம்பந்தஜ்ஞாந முண்டாகவே பொருந்தலா மென்றார்; எட்டாம்பாட்டில் வேறு உபகரணம் தேடவேண்டா, அவன் தந்த கரணங்களை அவனுக்காக்க அமையு மென்றார்; ஒன்பதாம்பாட்டில் அப்படிச்செய்யவே பஜந விரோதிகள் தன்னடையே விட்டுப்போ மென்றார்; பத்தாம்பாட்டில் பஜநத்துக்கு ஆலம்பநமான மந்த்ரம் இன்ன தென்றார்; இதுதான் வாய்வந்தபடி சொல்லிற் றென்றல்ல, சேதநருடைய ஹிதத்துக்கீடாக ஆராய்ந்து சொல்லப்பட்ட தென்னுதல்; அன்றிக்கே, இதுதான் ஹிததமமாயிருப்ப தொன்றாகையாலே எப்போது மொக்க ஓரப்படுவதொன் றென்னுதல்.

[சேர்த்தடம் இத்யாதி] - 'சேர்த்தடம்' என்கிற இத்தைச் சேர்தடமாக்கி, பொய்கைகளோடு பொய்கைகள் சேர்ந்திருக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம்; அன்றியே, "தென்குருகூர்" என்று ஊர் ப்ரஸ்துதமாகையாலே தடாகங்கள் சேர்ந்திருந்துள்ள தென்குருகூர் என்று ஊருக்கு விஶேஷணமாதல்; அன்றிக்கே, "சேர்" என்கிற இது - க்ரியாபதமாய்க் கிடத்தல். [தென்குருகூர்ச் சடகோபன் சொல்] - ஹிதஞ்சொல்ல வென்றிழிந்து அஹிதத்தைச் சொல்லுவானொருவன் வார்த்தையன்று, ஆப்ததமரானவர் சொன்ன வார்த்தை யென்கை. [சீர்த்தொடையாயிரம்] - "எழுத்தசை சீர்பந்தமடி தொடைபாவினம்" என்று கவிக்கு அவயவமாயிருப்பன சிலவுண்டு; அவற்றைச் சொல்லுதல்; அன்றிக்கே, உபாஸகாநுக்ரஹத்தாலே உபாஸ்யனுடைய கல்யாணகுணங்களைத் தொடுத்த ஆயிரமென்னுதல். [ஆயிரத்தோர்த்தவிப்பத்தே] - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு சேதநர்க்கு ஹிதமாவதேதென்று நிரூபித்துச் சொல்லப்பட்ட தென்னுதல்; அன்றிக்கே, சேதநர்க்கு ஹிததமமாயிருப்ப தொன்றாகையாலே எப்போதும் ஓரப்படுவதொன் றென்னுதல். ஓர்த்த இப்பத்தை, நெஞ்சிலே சேர் - அநுஸந்தி. பரோபதேஶம் பலரைக்குறித்து உபக்ரமிக்கையாலே மேல் ஏகவசநமானவிடம் ஜாத்யபிப்ராயம். (கக)

---

*நிகமம்-**சேர்த்தட** இத்யாதி. இதுதான் கீழ்ச்சொல்லப்பட்ட அர்த்தம்.*

*ஆத்மப்ரஶம்ஸநங் கூடுமோ? என்ன, **ஹிதஞ்சொல்ல** இத்யாதி. 'ஆப்ததமரானவர்' என்கையாலே - திருநகரியிற் பிறப்பும் ஆப்ததாஹேது வென்று கருத்து. **உபாஸகாநுக்ரஹத்தாலே** - உபாஸகனிடத்தில் ஆழ்வாருக்கு உண்டான அநுக்ரஹத்தாலே. **ஆயிரத்தோர்த்தவிப்பத்தே** - ஆயிரத்து இப்பத்து ஓரப்பட்டது - ஆராய்ந்துசொல்லப்பட்ட தென்னுதல், ஆயிரத்து இப்பத்து ஓரப்படுவது - எப்போது மொக்க அநுஸந்திக்கப்படுவ தென்னுதல். ஓர்த்த இப்பத்தை - நெஞ்சிலே சேர். அதாவது - அநுஸந்தி யென்னுதல். இவ்வர்த்தத்ரயத்தையும் அடைவே அருளிச்செய்கிறார் - **ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு** இத்யாதி. **பலரைக்குறித்து**- 'வீடுமின்' என்று பலரைக்குறித்து. சேர்த்தட வென்று தொடங்கி, இப்பத்தோர்த்த இத்யந்வயஃ. (கக)*

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி:-** [illegible]

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:**—ஸ்வாஸ்வாதஸ்வீஸ்வாஹிவெகி ரூவயிஷாத்விஷ்ராஷ்யஹாவாதா ஷ்ஸுவரூநாகஷ்யோஷ்ஷவநவதர்ஷாவ்யவெஷ்ஷ்யவதாக: | ஸவ்ருத்யாவக்ஷவாதாஷஹவிஹவதயா ஶாநஸாஷ்யவஷ்யஹாவாதஸ்ஷோவொஷ்ணா வக்ஷா ஜகஷயநதயொவாஷிஸதஸ்வயொஷ்யம் ||

---

| | |
|---|---|
| **திருவாய்மொழி நூற்றந்தாதி.** | வீடுசெய்துமற்றெவையும்மிக்கபுகழ்நாரணன்தாள்<br>நாடுநலத்தாலடைய நன்குரைக்கும்— நீடுபுகழ்<br>வண்குருகூர்மாறன்இந்தமாநிலத்தோர்தாம்வாழப்<br>பண்புடனேபாடியருள்பத்து. |

ஆழ்வார் திருவடிகளே ஶரணம். எம்பெருமானார் திருவடிகளே ஶரணம். ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## மூன்றாந்திருவாய்மொழி — பத்துடையடியவர் : ப்ரவேஶம்.

---

ஒ.—மூன்றாந்திருவாய்மொழியில், லோகத்தில் கண்ணாலே கண்டு கையாலேயாயிற்று பஜிக்கலாவது. இரண்டுபடியுமன்றிக்கே அதீந்த்ரியனான ஸர்வேஶ்வரனை அதிக்ஷுத்ரரான நாங்கள் பஜிக்கும்படியெங்ஙனே? என்னில்;—எம்பெருமான் நிரதிஶயபோக்யனென்று கேட்டமாத்ரத்திலே அவனைக்காணவேணுமென்று அபிநிவேஶம் பிறந்தால் அவர்களுக்குக் காணலாம்படி தன்னுடைய ஸௌஶீல்யாதி குண பலாத்க்ருதனாய்க் கொண்டும், அப்ராக்ருத திவ்ய தேஹத்தோடும் ஆஶ்ரித பரித்ராணார்த்தமாகவும், தத்விரோதி நிரஸநார்த்தமாகவும், தன்னுடைய ஸங்கல்பத்தாலே நிஹீநமான மநுஷ்யாதிகளோடு ஸஜாதீயனாய் ராமக்ருஷ்ணாதி ரூபேண யுகந்தோறும் திருவவதாரம்பண்ணியருளாநிற்கும் ; பரத்வதஶைகளிற்காட்டில் திருவவதாரங்களிலே தன்னுடைய கல்யாணகுணங்கள் நிறம் பெறும்; இவ்வவதார ரஹஸ்யத்தினுடைய சீர்மை ஒருவர்க்கும் அறிய அரிது; சிலதார்மிகர் ஏரியைக் கல்லினால் சிலர்க்கு ஜீவநஹேதுவாய்ச் சிலர்க்கு அநர்த்தஹேதுவாமா போலே இத்திருவவதாரங்கள் அநுகூலர்க்கு உஜ்ஜீவநஹேதுவாய், ப்ரதிகூலர்க்கு எதிரிட்டழிகைக்கு ஹேதுவா மென்று தொடங்கி ஸ்ரீகீதையில் சதுர்த்தாத்யாயத்தில் அருளிச்செய்தபடியே ஸௌலப்யத்தைப் பேசி, இப்படி ஸுலபனாகையாலே ஆஶ்ரயணங் கூடும்; ஆஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், முதல் திருவாய்மொழியில் பத்தாம்பாட்டிலே "நீர்தொறும்பரந்துளன்" என்று நாராயண ஶப்தார்த்தத்தை ஸூசிப்பிக்கையாலும், கீழில் திருவாய்மொழியில் பத்தாம்பாட்டில் "வண்புகழ்நாரணன்" என்று நாராயணஶப்தவாச்யதையைச் சொல்லுகையாலும், "தத்த்வநாராயண: பர:" என்றும், "ஶ்ரேயோநாராயணஸ்ஷா" என்றும் ஸகலஶாஸ்த்ரநிஷ்க்ருஷ்டமான க்ரமத்திலே தத்வஹிதங்கள் நாராயணனே யென்றதாயிற்று: இப்படி பரனான நாராயணன் பஜநீயனாமிடத்தில் பஜநஸௌகர்யாவஹமான ஶுபாஶ்ரயத்துக்கு ஏகாந்தமான அவதாரப்ரயுக்த ஸௌலப்யத்தை ப்ரகாஶிப்பிக்கைக்காக ததுபபாதகமான நவநீதசௌர்யாபதாநத்தையும், அவதாரக்ருத ஸௌலப்யத்தினுடைய ஔஜ்ஜ்வல்யகரத்வத்தையும், அவதாராஶ்சர்யத்தினுடைய துரவபோதத்வத்தையும், அவதாரக்ருதரூப நாமங்களினுடைய அபரிச்சேத்யதையையும், ஸுலபனானவனுடைய பஜநத்துக்கு உண்டான ப்ராமாணிகத்வத்தையும், அவதாரத்திலும் த்ரிமூர்த்திஸாம்யம் விவேகிக்கை அரிதென்னுமிடத்தையும், அதினுடைய

விவேகப்ரகாரத்தையும், விவேகித்து பஜித்தவனுடைய விரோதிநிவ்ருத்தியையும், பஜநீயனுடைய ஸாஜாத்யநிபந்தநமநபேக்ஷாபகரத்வத்தையும், அவதாராஶ்சர்யம்அநிக்ரஹநமென்னுமிடத்தையும், உபதேஶித்து, ஏவம்விதனான ஈஶ்வரனை நான் அநுபவிக்கப்பெறுவதே யென்று ப்ரீதராய், ஸர்வ ப்ரகாரத்தாலும் அநுபவிக்க உபக்ரமிக்கிறார்.

இ.—மூன்றாந்திருவாய்மொழியில், சக்ஷுர்விஷயத்தையாதல் அத்தோடு ஸத்ருஶத்தையாதலாயிற்று பஜிக்கலாவது; அதீந்த்ரியனான ஸர்வேஶ்வரனை அதிக்ஷுத்ரரான எங்களுக்கு பஜிக்கப்போமோ? என்னில்;—ஶாஸ்த்ரங்களிலே 'ஸமஸ்தகல்யாணகுணாத்மகன், ஸர்வாயிகன், பரமபோக்யன், பரமோதாரன்' என்று கேட்டமாத்ரத்திலே ருசி பிறந்தவர்களுக்குக் கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி க்ருபாதிகுணங்களே ப்ரேரிக்க அஜஹத்ஸ்வஹாவனாய்க்கொண்டு ஸங்கல்பத்தாலே அப்ராக்ருததிவ்யதேஹத்தை இதர ஸஜாதீயமாக்கிக்கொண்டு ஸாது பரித்ராண துஷ்க்ருத்விநாஶார்த்தமாக ராமக்ருஷ்ணாதிரூபத்தாலே அவதரித்து ஸுலபனானம்; ஆகையாலே, ஆஶ்ரயிக்கைக்கு ஒரு தட்டில்லை, ஆஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

ஈடு.—ஸர்வஸ்மாத்பர னென்றார் முதல் திருவாய்மொழியில்; பரனாகையாலே பஜநீய னென்றார் இரண்டாந் திருவாய்மொழியில்; "பஜியுங்கோள்" என்று பலகாலும் அருளிச்செய்யா நின்றீர்; இருகை முடவனை "ஆனை யேறு" என்றால் அவனாலே ஏறப்போமோ? அப்படியே ஸர்வேஶ்வரனாய் அவாப்தஸமஸ்தகாமனா யிருக்கிற அவனை இந்த க்ஷுத்ரனான ஸம்ஸாரி சேதநனாலே பற்றப்போமோ? என்ன; -'அவ்வானை தானே அவ்விருகை முடவனுக்கும் ஏறலாம்படி படிந்து கொடுக்குமன்று ஏறத் தட்டில்லையே; அப்படியே இஸ்ஸம்ஸாரிசேதநனுக்கு பஜிக்கலாம்படி அவன் தன்னைக் கொண்டுவந்து தாழவிட்டு ஸுலபனுமாகில் இவனுக்கு பஜிக்கத் தட்டில்லையே' என்கிறார். அவதாரந்தன்னில் வந்தால் ஹாக்யஹீநர்க்கு ஸஜாதீய ப்ரதிபத்திபண்ணி அநர்த்

---

பத்துடை ப்ரவேஶம் - உபாஸநா ப்ரதிபாதநாநந்தரம் இத்திருவாய்மொழியிலே ஸௌலப்யத்தைச் சொல்லுகிறதுக்கு ஸங்கதி யெது? என்ன, வ்ருத்தாநுவாத பூர்வகமாக ஸங்க்ரஹ ஸங்கதி அருளிச்செய்கிறார் - ஸர்வஸ்மாத்பரனென்றார் இத்யாதி - அநுகூலித்து உஜ்ஜீவிப்பார்க்கு உஜ்ஜீவிக்கவுமாயாயிற்று அவதாரந்தானிருப்பது என்னுமளவாக. 'பலகாலும் அவனை பஜியுங்கோ ளென்னுநின்றீர்' என்றது - மேல் விஸ்தர ஸங்கதி. முந்தின ஸங்கதி - "பலபிறப்பாயொளிவரும்" என்றத்தைக் கடாக்ஷித்து. ஸர்வஸ்மாத்பரனென்றார் முதல் திருவாய்மொழியில், பரனாகையாலே பஜநீயனென்றார் இரண்டாந்திருவாய்மொழியில்; இப்படி பஜியுங்கோளென்று பலகாலும் அருளிச்செய்யாநின்றீர்; இதுகூடாது; எழுந்திருக்கவும் மாட்டாத நொண்டியை யானையேறென்றால் அவனாலே யேறப்போமோ? அப்படியே ஸர்வஸ்மாத்பரனாய் அவாப்த ஸமஸ்தகாமனா யிருக்கிறவனை இந்த அதிக்ஷுத்ரனான ஸம்ஸாரியாலே ஆஶ்ரயிக்கப்போமோ? என்கிற ஶங்கையிலே, ஸம்ஸாரிகளுக்கும் ஆஶ்ரயிக்கலாம்படி ஸர்வஸ்மாத்பரனான அவனே தாழநின்று ஸுலபனுமாகில் இவனுக்கும் ஆஶ்ரயிக்கத் தட்டில்லை யென்று அவனுடைய ஸௌலப்யத்தை அருளிச்செய்கிறார் இத்திருவாய்மொழியி லென்று பூர்வோக்த பஜநீயத்வ வ்யவஸ்த்தாபகதயா ஸங்கதி: என்றபடி. இருகைமுடவன் - எழுந்திருக்கவும்மாட்டாத நொண்டி. "பற்றிலனீசனும்" என்கிற பாட்டிலே - ஆஶ்ரயித்தால் அவன் அவாப்தஸமஸ்தகாமனான ஸர்வேஶ்வரன் நமக்கு முகங்கொடுத்து நம்மோடு கலசியிருக்குமோ? என்கிற ஶங்கையிலே அவன் அப்படி யிருக்கு மென்றார்; இங்கே - ஸர்வேஶ்வரனாயிருக்கிறவனை நாம் ஆஶ்ரயிக்கக் கூடாதென்கிற ஶங்கையிலே அவன் ஸுலபனென்று பரிஹரிக்கிறா ரென்று பேதம். இப்படி ஸுலபனானால் எல்லாரும் அவனை பஜித்து உஜ்ஜீவியாதே "அவஜாநந்தி மாம் மூடா:" என்று அவமதி பண்ணி அநர்த்தப்படுவானென்? என்ன, அவதாரந்தன்னில் இத்யாதி. "நமாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: । மாயயாபஹ்ருதஜ்ஞாநா ஆஸுரம் பாவமாஶ்ரிதா:" இத்யாதிப்படியே அவர்கள் பாக்யஹாநியும் பாஶ்யாதிஶயமுமே ப்ரதிகூலித்து

தப்பட்டுப் போகவுமாய், ஹாக்யாதிகர்க்கு "அரியன் எளியனாகப்பெற்றோமே!" என்று ஆஶ்ரயிக் கலாம்படி இரண்டுக்கும் பொதுவாயிறே இருப்பது. "ஸர்வேஶ்வரன் அரியனென்றால் ஸம்ஸாரத்தில் ஆள்பற்றாதென்று அவனெளிமையை உபபாதித்துக் கொண்டு போந்தோம்; அதுதானே இவர்க ளுக்கு 'இத்தனையெளியனோ!' என்று விடுகைக்கு உடலாயிற்று; அவ்வெளிமைதானே ஆதரிக் கைக்கு உடலாயிற்றது உமக்கொருவருக்குமேயிறே" என்று எம்பாரைப் பார்த்து உடையவர் அரு ளிச்செய்தருளினாராம். சில தார்மிகர் ஏரி கல்லினால், சேற்றிலே தலையைநொழுந்திப் பட்டுப்போகா நிற்பர் சிலர்; விடாயர் அதிலே முழுகி விடாய்தீர்ந்து போகாநிற்பர்கள்; விளக்கை யேற்றினால் அதிலே விட்டிலென்று சிலபதார்த்தங்கள் விழுந்து முடிந்துபோம்; சிலர் அதினொளியிலே ஜீவியாநிற் பர்கள்; வேதநல்விளக்கிறே இவன்தான். ஆயர்குலத்தினில்தோன்றுமணிவிளக்கிறே; வேங்கதிரோன் குலத்துக்கோர் விளக்கிறே. அவன்தான் அன்றியவாணனாயிரந்தோளுந் துணிய அன்றாழி தொட்டதும் இப்படிவந்து அவதரித்து ஸாலபனை நிலைதன்னிலேயிறே; அப்படியே ஶிஶுபாலாதிகள் பூதநா ஶகட யமலார்ஜுநாதிகளுக்கு எதிரிட்டு முடியவுமாய், அநுகூலித்து உஜ்ஜீவிப்பார்க்கு உஜ்ஜீவிக் கவுமாயிற்று அவதாரந்தான் இருப்பது. பலகாலும் 'அவனை பஜியுங்கோள்' என்றுநின்றீர்; கண் ணாலே கண்டாலல்லது பஜிக்க விரகில்லை; பஜித்தாலல்லது காணவிரகில்லை; ஆனபின்பு, ஆஶ் ரயிக்கும்படி யெங்ஙனே?' என்ன; "தஸ்மிந்த்ருஷ்டே பராவரே" (தஸ்மிந்த்ருஷ்டேபராவரே)

---

முடிகைக்கும் ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கைக்கும் அடியென்றபடி. ஸௌலப்யமே விநாஶோஜ்ஜீவநங்களுக்கு ஹேதுவென்னுமதுக்கு ஐதிஹ்யமும் த்ருஷ்டாந்தத்வயமுங் காட்டுகிறார் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஏரி யென்றதுக்கு - "வாசத்தடம்" "மரதகமணித்தடம்" என்று கண்டுகொள்வது. விட்டில் - தீபஶாமககீடம். வேதநல்விளக்கு - வேதங்களுக்கு ப்ரகாஶகமான விலக்ஷணவிளக்கு. ஆயர் குலத்தினில் தோன்றும் மணி விளக்கு - இடையருடைய குலத்திலே ஆவிர்ப்பவித்த மணிதீபம். வேங்கதிரோன் இத்யாதி - ஆதித்யனுடைய குலத்துக்கு அத்விதீயமான விளக்கு. ப்ரதிகூலர் முடியவும் அநுகூலர் உஜ்ஜீவிக்கவுங் கண்டவிடமுண்டோ? என்ன, அருளிச்செய்கிறார் - அவன்தான் இத்யாதி வாக்யத்வயத்தாலே. அப்படியே - பாணனைப்போலே. அன்றிய இத்யாதி - பகைத்த பாணனுடைய தோள்களாயிரமுங் கழியும்படி அன்று திருவாழியை ஸ்பர்ஶித்து. "ஶிஶுபாலாதிகள்" என்கிற ஆதிஶப்தத்தாலே - கம்ஸாதிகளும், "யமலார்ஜுநாதி" இதி ஆதிஶப்தத்தாலே தேநுகாதிகளும் சொல்லப்படுகிறார்கள். அநுகூலித்து உஜ்ஜீவிப்பார் - "ஸுக்ரீவமாலாகாரகுப்ஜாவிதுரவிபீஷணஸாமவதாநுகூலா" என்கிறபடியே அக்ரூரமாலாகாராதிகள். கீழ், பஜநீயவிஷய ஸௌலப்யத்தை அநு ஸந்தித்து பஜிக்க விரகில்லையென்று ஶங்கித்தவர்களுக்கு அவதாரமுகேந உண்டான ஸௌலப்யத்தை அருளிச் செய்து பரிஹரித்து, பஜநஸௌலப்யத்தைப்பற்ற பஜநங் கூடாதென்றவர்களுக்கு "பத்துடையடியவர்க் கெளியவன்" என்றத்தைப்பற்ற பஜநங் கூடு மென்று பரிஹரிக்கிறார் - பலகாலும் இத்யாதி. பலகாலு மென் றது - "வீடுசெய்மினே" "இறைசேர்மின்" "அங்நலம்புல்கு" "இறைபற்றே" இத்யாதிகளைப்பற்ற. 'பஜியுங் கோளென்றுநின்றீர்' என்று கீழில் திருவாய்மொழியிற் சொன்ன பஜநம் ஸாதநபூதபரபக்தியென்று ப்ரமித்துச் சொன்னபடி. கண்ணாலே - மநஸ்ஸாலே. கண்டாலல்லது - பரபக்திரூபஜ்ஞாநம் தர்ஶநஸமாநாகாராபந்ந மானாலல்லது. பஜிக்க விரகில்லை - பஜநமாக விரகில்லை; உபாஸநமாக விரகில்லை; ஸாதநத்வாபந்நமாக விரகில்லை யென்றபடி. பஜித்தாலல்லது - ஸாதநத்வாபந்நமானா லல்லது. காண விரகில்லை - மோக்ஷதஶையில் பகவதநு பவரூபபலம் வர விரகில்லை. ஆனபின்பு, ஆஶ்ரயிக்கும்படியெங்ஙனே? தர்ஶநஸமாநாகாராபந்ந பரபக்தி தங்க ளுக்கு உண்டாவதரிதென்று தாத்பர்யம். "கண்டாலல்லது பஜிக்க விரகில்லை பஜித்தாலல்லது காண விரகில்லை" என்கிற வாக்யத்துக்கு - தர்ஶந ஸமாநாகாரமான பக்தியுண்டானாலல்லது இவன் பஜித்தானாக விரகில்லை; இப் படிப்பட்ட பஜநத்தைப் பண்ணினாலல்லது ப்ராப்யஸித்தி யுண்டாகாதென்று தாத்பர்யம். அதாவது - பஜநம் தர்ஶநஸமாநாகாரமாகவேணும், தாத்ருஶபஜநம் பண்ணினாலல்லது ப்ராப்யஸித்தியுண்டாகாது; ஆனபின்பு, ஏதா த்ருஶபஜநம் எங்களாற் செய்து தலைக்கட்டப்போமோ? என்று பலிதார்த்தம். இந்த வாக்யத்துக்கு இப்படி அர்த்தமானாலல்லது "தஸ்மிந்த்ருஷ்டே பராவரே" இத்யாதி மேல் வாக்யம் ஸங்கதமாகாது. "பத்துடை யடியவர்க்கெளியவன்" என்றத்தைக் கடாக்ஷித்து "பலகாலும் அவனை" இத்யாதி ஸங்கத்யந்தரமாதல். 'ஆஶா லேஶமுடையார்க்கு அவன் எளியனாம்படியையாயிற்று' என்ற அநந்தரம், 'ஆனபின்பு ஆஶ்ரயணம் ஸுகரம், ஆஶ்ரயியுங்கோளென்கிறார்' என்று கூட்டிக்கொள்வது. தஸ்மிந்த்ருஷ்ட இத்யாதி - "ஹித்யதே ஹ்ருதய

என்றும், “विशते तदनन्तरम्” (விஶதேதநந்தரம்) என்றுஞ் சொல்லுகிறபடியே சில வருத்தத்தோடே காட்சியாய்த் தலைக்கட்டும் ஸாதநபக்தியை யன்று இங்குச் சொல்லுகிறது; காண வேணுமென்னும் ஆஶாலேஶமுடையார்க்கு அவன் எளியனும்படியையாயிற்று. ஸர்வாதிகன் தாழநிற்குமன்று நிவாரகரில்லை; “बहूनि मे व्यतीतानि” (பஹூநிமேவ்யதீதாநி) என்கையாலே அவதாரந்தன்னில் புரையில்லை; இச்சைதானே யுண்டே; இதுதன்னை அவதார

---

ப்ர:—भगवद्गीताभाष्ये “भक्त्या मामभिजानाति, यावान्यश्चास्मि तत्त्वतः। ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम्” [௫௫]—व्याख्यायते:— भक्त्येति परभक्तिरुच्यते. मद्भक्तिं लभते पराम् [௫௪] इति प्रकृतत्वात्. अभिजानातीति परज्ञानमुच्यते. (यावान्यश्चास्मीति.) गुणतो यावान्, स्वरूपेण यश्चास्मीत्यर्थः. तत इति - परभक्तिरुच्यते. साक्षात्कारलक्षणेन परज्ञानेन मां तत्त्वतो ज्ञात्वा तदनन्तरम् - साक्षात्कारानन्तरम्, तदवस्थ-परभक्तेरेव हेतोः विशते - प्रविशति, मां प्राप्नोतीत्यर्थः इति तद्भाष्यम्(?) “बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन। तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप” ॥५॥ अनेन श्लोकेन परमेश्वरस्य जन्मनि जाताशङ्कानिवृत्त्या उत्पत्तिरिति विषये जन्मनः पारमार्थिकत्वमुच्यते, तव चेति दृष्टान्तोपादानात्; संसारिचेतनस्य जन्मनस्तद्वत् परमेश्वरस्य जन्मनः सत्यत्वमित्यर्थः.

---

[illegible] निश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे” इति मुण्डोपनिषदि. “भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः। ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम्” इति गीताभाष्ये. हृदयस्य ग्रन्थिः - रागादयः; यद्वा हृदयशब्दः हृदयस्थानीय(?)दिव्यात्मा जीवपरः; तस्य ग्रन्थिः - शरीरसम्बन्धः. संशयशब्दः विपर्ययस्यापि प्रदर्शनार्थः, [illegible]त्यर्थः. कर्माणि - पुण्यपापरूपाणि. [illegible] निवृत्तिः [illegible] इत्यर्थः.” இது, இந்த வாக்யத்துக்கெல்லாம் பிண்டிதார்த்தம். परावरे - அஸ்மதாத்யபேக்ஷயா பரரான ப்ரஹ்மாதிகளைத் தனக்கு ஶேஷபூதராக வுடையவன். यावान्यश्चास्मि - யாதொருபடி குணத்தையுடையனு யிருக்கிறேன், யாதொருபடி ஸ்வரூபத்தையுடையனு யிருக்கிறேன். एवंविधं, माम् - என்னை. भक्त्या - பரபக்தியாலே. यः - யாதொருத்தன். तत्त्वतोऽभिजानाति - ஸாக்ஷாத்கரிக்கிறான். भक्तिशब्देन - परभक्तिरुच्यते; अभिजानातीति परज्ञानम्. मां तत्त्वतो ज्ञात्वा - साक्षात्कारलक्षणपरज्ञानेन मां तत्त्वतस्साक्षात्कृत्य, तदनन्तरम् - साक्षात्कारानन्तरम्, तदवस्थ - परभक्तेरेव हेतोः, विशते - प्रविशति; मां प्राप्नोतीत्यर्थः. பாபக்தியாவது - ஶாஸ்த்ரமுகேந அறிந்த விஷயத்தை இப்போதே காணவேணுமென்னும் இச்சை. பரஜ்ஞாநமாவது - ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநஸாநுபவம். பரமபக்தியாவது - விஶ்லேஷாஸஹத்வம். “परभक्तिरूपापन्नं(?) प्रत्यक्षाभिनिवेशनम्। परज्ञानं तदेवस्य साक्षात्कारः परिस्फुटः। पुनर्विश्लेषभीरुत्वं परमा भक्तिरुच्यते” என்னக்கடவதிறே. ஸர்வாதிகனானவன் ஆஶாலேஶமுடையார்க்கு ஸுலபனாகக்கூடுமோ? என்ன, ஸர்வாதிகன் இத்யாதி. ஆக்கரான தேவர்களும் ஹேயபண்ணும் நிலத்திலே ஸர்வாதிகன் வந்தவரித்தானென்றால் இது ஐந்த்ரஜாலிகமன்றோ? என்ன, பஹூநி இத்யாதி. “बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन। तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप” இதி கீதாஸு சதுர்த்தே. “तव” என்று த்ருஷ்டாந்திக்கையாலே அவதாரத்தில் புரையில்லை; ஸத்யமென்று கருத்து. இவனுக்கு ஜந்மஹேது, கர்மம்; அவனுக்கு ஹேது ஏது? என்ன, இச்சைதானே இத்யாதி. “स्वेच्छया” என்னக்கடவதிறே. இதில் ப்ரமாணம், இதுதன்னை இத்யாதி. இதுதன்னை - பகவதவதாரத்துக்கு இச்சையே

ரஹஸ்யத்திலே தானும் அருளிச்செய்தானிறே. "ஜந்மகர்மசமேதிவ்யம்" (ஜந்மகர்மசமேதிவ்யம்) என்று என்னுடைய ஜந்மங்கள் கர்மமடியாகவன்று, இச்சையடியாகவா யிருக்கும். நாம் பிறவா நிற்கச்செய்தே பிறவாமையுங் கிடக்கும்; தாழநின்ற நிலையிலே மேன்மையுங் கிடக்கும்; அப்ராக்ருத ஸம்ஸ்தாநத்தை இதர ஸஜாதீயமாக்கிவந்து பிறப்புதோம்; இவற்றிலே ஒன்றை அறிந்தவர்களுக்குப் பின்னை ஜந்மமில்லை; நானும் பிறந்து அவர்களும் பிறக்கவேணுமோ? ஈரிறை யுண்டோ? என்று அவன் சதுர்த்தாத்யாயத்திலே அருளிச்செய்த படிகளை உபஜீவித்துக்கொண்டு, ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணிக்கொண்டு ஸுலபனும்; ஆனபின்பு, ஆஶ்ரயணங் கூடும்; ஆஶ்ரயியுங் கோள் என்கிறார். அவதாரங்களை முன்னோட்டுக்கொண்டு, அவதாரங்களிலும் நீர்மைக்கு எல்லையான க்ருஷ்ணாவதாரத்திலே இழிந்து, அதுதன்னிலும் பரத்வத்தோ டொக்கச் சொல்லலான நிலைகளைக் கழித்து, நவநீத சௌர்ய நகர க்ஷோஹத்திலே அகப்பட்டு இளமணற்பாய்ந்து, 'எத்திறம்!' என்று மோஹித்துக்கிடக்கிறார்; பரத்வத்தை அநுஸந்தித்தார், தெளிந்திருந்து பரோபதேஶம் பண்ணினார்; ஸௌலப்யத்தை அநுஸந்தித்தார், 'எத்திறம்!' என்று மோஹித்துக்கிடக்கிறார்.

## முதற் பாட்டு.

பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் மலர்மகள்விரும்பும் நம்அரும்பெறலடிகள்
மத்துறுகடைவெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு
எத்திறமுரலினோ டிணைந்திருந்தேங்கியவெளிவே.

ஆ.—(பத்துடையடியவர்.) ஏவம்விதஹக்தியும் இதரவிஷய வைராக்யமும் எம்பெருமானை சக்ஷுராதிகரணங்களாலே அநுபவித்தாலல்லது பிறவாது; தாத்ருஶாநுபவந் தானும் - 'பாஹ்யேந்த்ரியங்களுக்கும் யோகாப்யாஸ பரிஶுத்தமான மநஸ்ஸுக்கும் கோசர னல்லன்' என்று

---

ஹேதுவென்னுமத்தை. திவ்யமென்று அருளிச்செய்தானிறே யென்று அந்வயம். தானும் என்ற வுஶப்தத்தால் - ருஷிகளை ஸமுச்சயிக்கிறது. திவ்யஶப்தார்த்தமாஹ - என்னுடைய இத்யாதி. "அஜோபிஸந்" என்கிற ஶ்லோகத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - நாம்பிறவாநிற்கச்செய்தே இத்யாதி. பிறவாமையுங் கிடக்கு மென்றது - தந்நிபந்தநது:கஶுக்லஶோணிதாத்யஹித்யத்தைப் பற்ற. "ஸம்பவாமியாமவேதி" இத்யாதி ஶ்லோகஶேஷார்த்தம் - இவற்றிலே இத்யாதி. ஜந்மாநி கர்மாணி யென்னாதே "ஜந்மகர்ம" என்கிற ஏகவசநத்தைப்பற்ற-ஒன்றையறிந்தவர்களுக்குஎன்றது. நானும் பிறந்து என்றது-"த்யக்த்வாஜந்மநேதி" என்ன அமைந்திருக்க, "புந:" என்றதின் தாத்பர்யம். சதுர்த்தாத்யாயத்திலே அருளிச்செய்தபடிகள் என்றது- "அஜோபிஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோபிஸந் । ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥ ஜந்மகர்மசமேதிவ்யமேவம் யோவேத்தி தத்த்வத:। த்யக்த்வாதேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" இத்யாதிகளைப்பற்ற. உபஜீவித்துக்கொண்டு - ஆஶ்ரயியுங்கோளென்று அந்வயம். பரோபதேசப்ரவ்ருத்தரான தாம் 'எத்திறம்' என்று மோஹிப்பானென்? என்ன, அவதாரங்களை இத்யாதி. முன்னோட்டுக்கொண்டு - ஆராய்ந்துகொண்டு. இளமணற்பாய்ந்து - ஆர்த்ரஹ்ருதயராய் ஈடுபட்டு. பரத்வத்தைப்பற்ற ஸௌலப்யம் ஈடுபடுத்துமோ? என்ன, பரத்வத்தை இத்யாதி. பரத்வாபேக்ஷயா ஸௌலப்யமே ஈடுபடுத்து மென்றபடி.

"மனனகம்" என்கிற பாட்டாலே சொல்லப்பட்ட எம்பெருமான்பக்கல் கூடாது, ஆதலால் இனி எம்பெருமானை யிழந்துபோமத்தனை யாகாதோ ? என்று அவஸந்நரானவர்களைக்குறித்து 'எம்பெருமானைக் காணவேணுமென்று அபேக்ஷையுடையராயிருப்பார்க்குக் காணலாம்படி எளியனும். ப்ரதிகூலர்க்கு அவன் அரியனும். அரியனுமிடத்து, ஆஸ்ரிதர்க்கு எளியனானை இவ்வாகாரத்தாலே பிறர்களுக்கு அரியனாயிருப்பா னொரு விஸ்மயநீயன்' என்றுகொண்டு எம்பெருமானுடைய ஆஸ்ரிதஸுலபதையை அருளிச்செய்யத் தொடங்கி, மத்துறுகடைவெண்ணெய் களவினி லுர விடையாப்புண்டு உரலினோடிணைந்து உள்ளும் மெய்யர்கட்டுண்டு ஏங்கினபடியே யிருக்கிற எளிமையைக் கண்டு, இவ்வதிமாத்ர ஆஸ்ரித ஸுலபத்வமஹாகுணத்திலே ஈடுபட்டு, ஆஸ்ரித ஸமாஸ்ரயணீயனா யிருக்கைக்கு தத்ஸஜாதீயனாய் வந்து பிறந்தருள அமையாதோ? இங்ஙனே உரலிலே கட்டுண்டு நடுங்கினபடியே இருந்தருளவேணுமோ ? பிரானே! இது என்செய்தருளினாய்? எதுக்காகச் செய்தருளினாய்? என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமானுடைய ஸௌலப்யத்துக்கு உதாஹரணத்தைப் பேசுகைக்காகத் திருவவதாரங்களை முன்னிட்டுக்கொண்டு ஆழ்வார் பரோபதேஸார்த்ருதராய், க்ருஷ்ணனுடைய நவநீத சௌர்யசாரித்ரத்திலே அகப்பட்டு அழுந்துகிறார்.

பத்தென்கிறது, பக்தியை. [வித்தகன்]- ஆஸ்ரிதஸுலபனாயிருக்கிற இருப்பிலே ஸத்ருக்களுக்குக் கணிசிக்க முடியாதே யிருக்கும் விஸ்மயநீயன். [மலர்மகளென்று தொடங்கி]- பெரியபிராட்டியாலும் ஆசைப்படப்படுவானாய் விலக்ஷணனாக ப்ரஸித்தனான பெறுதற்கு அரிய ஸ்வாமி; யஸோதைப்பிராட்டி ஆயாஸித்துக் கடையாநிற்க சாபலாதிஸயத்தாலே அந்தவெண்ணெய் களவுகாண்கிற தஸையிலே உரஸ்த்தலத்திலே உரலோடு கட்டுண்டு உரலோடு தன்னோடு வாசியில்லாதபடியிருந்து ஏங்கின ஸௌலப்யம். எத்திறம் என்றது - இது என்னபடி யென்று தாம் ஈடுபடுகிறார். உரத்தையுடைய விடையென்னவுமாம்; பெருமிடுக்கு என்றவாறு.

ப.—முதற்பாட்டில், ஸ்ரீயபதியான ஸர்வேஸ்வரனுடைய அவதாரஸௌலப்யத்தை உபதேஸிக்க உபக்ரமித்து ப்ரதமத்திலே நவநீதசௌர்யாபதாநத்தை அநுஸந்தித்து ஈடுபடுகிறார்.

பத்துடை - பக்தியையுடைய, அடியவர்க்கு - அடியார்க்கு, எளியவன் - எளியனாய், பிறர்களுக்கு - அதில்லாத பிறர்க்கு, அரிய - கிட்ட அரியனாய், வித்தகன் - வித்தகனாய் (இவை யிரண்டாலும் உகந்து), மலர்மகள் - தாமரைப்பூவைப் பிறப்பிடமாகவுடைய லக்ஷ்மியானவள், விரும்பும் - விரும்பும்படியான, பெறல் அரு - பெறுதற்கு அரிய, நம் அடிகள் - நம்ஸ்வாமியானவன், மத்து - மத்தாலே, உறு - (உற்று) - வருந்தி, கடை - கடைந்த, வெண்ணெய் களவினில்- வெண்ணெயினுடைய களவினில், உரவிடை - மார்வினிடையிலே, ஆப்புண்டு - கட்டுண்டு, உரலினோடு இணைந்திருந்து - உரலோடொக்கச் சலியாதேயிருந்து, ஏங்கிய - (அச்சத்தாலே) ஏங்கின, (குரல் இரங்கமாட்டாத), எளிவு - எளிமை, எத்திறம் - என்னபடியாயிருக்கிறது !

பத்தியை 'பத்து' என்றது - கடைக்குறைத்தல். வித்தகன் - ஆஸ்சர்யபூதன். உரவிடை- மார்பிடை. உரத்த ஏறுபோலச் செருக்க னென்னவுமாம். எளிவு - எளிமை.

இ.—முதற்பாட்டில், ஸௌலப்யத்தை உபதேஸிக்கைக்காக அவதாரங்களை அநுஸந்தித்தவர், தொடங்கின உபதேஸத்தை மறந்து க்ருஷ்ணவதாரத்தில் நவநீத சௌர்யசாரித்ரத்திலே தாம் அகப்பட்டு அழுந்துகிறார்.

[பத்து] - பக்தி. பத்தென்று - பக்தியைக் காட்டுமோ ? என்னில்,— "எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால் மனந்தனைக்கட்டி" என்னக்கடவதிறே. பக்திபரப்தத்தால் - இங்கு

பரத்வத்யாதிகளைச் சொல்லுகிறதன்று, ஸத்யுபக்ரமமான அத்வேஷமாத்ரத்தைச்சொல்லுகிறது, தாழ்ந்தார்க்கு முகங் கொடுக்குமென்கிற குணப்ரகரணமாகையாலே. [உடை] - இம்மாத்ரத்தைக் கனக்க வுடைமையாகச் சொல்லுகிறது - "விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்று இங்கே ஸகவதநு ஸவம்பண்ணுவாரை நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாக நினைத்திருக்கும் ஸகவதபிப்ராயத்தாலே. [அடியவர்]-இதுவும் ஸகவதபிப்ராயத்தாலே. ஆநுகூல்யலேஶம் குவாலாயிருக்கை. "க்ஷயிகிஷி தஸோவஶெஷ"என்று இன்று கிட்டிற்ளுெரு குரங்கை நித்யாஶ்ரிதையான பிராட்டிக்கும் அவ்வருகாக நினைத்திருக்கையாலே. [எளியவன்] - பாபத்தைப் போக்குதல், புண்யத்தைக் கொடுத்தல், தத்பலமான ஸ்வர்க்காதிகளைக் கொடுத்தல், தன்னைக் கொடுத்தல் செய்யுமவனல்லன்; அவர்களுக்குத் தன்னைக் கையாளாக்கிவைக்கும். "ஸக்தீ தொஜநாடிஷுநஃ" தூத்யஸாரத்யங்களைப் பண்ணுகையாலே ஆஶ்ரிதர்க்கு இஷ்ட விநியோகார்ஹனுனிறே. இவ்வெளிமை உகவாதார்க்கும் பொதுவாகிறதோ வென்னுமத்தைப் பரிஹரிக்கிறது; [பிறர்களுக்கரிய] - ராவணாதிகளுக்கு இளைக்கப் போகாதிருக்கை. "ஹிஶவாநநுரொரொஶஃ". [வித்தகன்] - விஸ்மயநீயன். யஶோதைக்கு பவ்யனுயிருக்கிற இருப்பிலே யமலார்ஜுநர்க்கு அநபிபவநீயனுயிருக்கை. இப்படி இருக்கிறவன் தான் ஆர்? என்னில்,-[மலர்மகள் விரும்பும்]-"ஶ்ரீ ஸவஷூஷ தாநாழ்"என்கிறமேன்மையையுடையளாய்ப் பரிமளம் ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிற போக்யதையையுடையளான பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்று விரும்பும் தத்வம். [அரும்பெறலடிகள்] - பெறுதற்கரிய ஸ்வாமிகள். ஶ்ரியஃபதியென்கையிறே ஸர்வாதிகத்வத்துக்கு லக்ஷணம். "நம்" என்று-இந்த மேன்மையும், நீர்மையும் தமக்கு ப்ரகாசித்திருக்கிறபடி. [மத்துறு]-இப்படி மேன்மையை உபபாதித்து ஸௌலப்ய காஷ்டையைச் சொல்லப்புக்கு அதிலே தாம் ஈடுபடுகிறுர். மத்துறுகடை வெண்ணெய் களவினில் - மத்தாலே யுற்றுக்கடையாநிற்கிற வெண்ணெய் களவு காண்கிறவளவிலே. உற்றுக்கடைகையாகிறது - ஆயாஸித்துக் கடைகை. "கடைகிற பராக்கிலே ஒதுங்கிச் சாபலாதிசயத்தாலே அள்ளியமுதுசெய்யும்போலே காண்" என்று பிள்ளான். அவாப்தஸமஸ்தகாமன் தனக்கு ஒருகுறையுண்டாய், அது நேர்கொடுநேர் கிடையாமையாலே களவிலே யிழிந்து, அது தலைக்கட்டப்பெருதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. [உரவிடையாப்புண்டு] - உரஸ்ஸ்தலத்திலே கட்டுண்டு. மலர்மகள் விரும்பியணைக்கும் மார்விலேகிடீர் கயிற்றையிட்டுக் கட்டக் கட்டுண்டிருந்தது. தாமோதரனென்கிறபடியெங்ஙனே? என்னில்; - அப்ப்ரதேசத்தையெல்லாம் நினைக்கிறதாகலாமிறே. அன்றிக்கே, உரத்தவிடையான தான் கட்டுண்டு - பெருமிடுக்க னென்றபடி. [உரவிநோடிணைந்திருந்து] - உரல் மூச்சுவிடிலும் தான் மூச்சுவிடாதே அசிதவ்யாவ்ருத்தனுயிருந்தபடி. [ஏங்கியவெளிவு] - இந்த ஸ்த்தனைக் கள்ளனென்று கட்டினல் பொறுக்கமாட்டாதே அழத்தொடங்குமே; அவள் "வாய் வாய்" என்றுல் ஏறிட்ட த்வநி இழியவிடமாட்டாதே பயப்பட்டு நிற்கும். [எளிவு] - ஸௌலப்யம். [எத்திறம்] - இதுஎன்னபடி! "யதொவாசொ நிவத்தந்தெ" என்று வேதம் மீண்ட பரத்வத்தை எல்லைகாணலாம், இந்த ஸௌலப்யம் தரைகாணவொண்ணுதா யிருந்ததீ! என்கிறுர்.

ஈடு.--முதற்பாட்டில், எம்பெருமானுடைய ஸௌலப்யத்தை உபதேஶிக்கப்புக்கு அவனுடைய நவநீத சௌர்ய சாரித்ரத்திலே அகப்பட்டு அழுந்துகிறுர்.

---

முதற்பாட்டு. - பத்துடை இத்யாதி. 'வெண்ணெய்களவினிலுரவிடையாப்புண்டெத்திறம்' என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - எம்பெருமானுடைய இத்யாதி.

[பத்து] - ஹக்தி. பத்தேன்று - ஹக்தியைக் காட்டுமோ ? என்னில், " எட்டினோடிரண்டேனுங் கயிற்றினால் மனந்தனைக்கட்டி " என்னக் கடவதிறே ; ஆகையாலே, பத்தேன்று ஹக்தியைச் சொல்லுகிறதாய், அதுதன்னிலும் பரஹக்தியையன்று இங்குச் சொல்லுகிறது, ஹக்த்யுபக்ரம மாத்ரத்தை. உபக்ரமமாத்ரமென்று இத்தை நியமிப்பாரார் ? அதினுடைய சரமாவஸ்த்தையைக் காட்டினாலோ ? என்னில் ; - அது ஒண்ணாது ; இப்போது இங்குச் சொல்லிக்கோண்டு போருகிற இது குணப்ரகரணமாகையாலும், ஸர்வேஶ்வரனுக்கு ஒரு உத்கர்ஷஞ் சொல்லுகை இப்போது இவர்க்கு அபேக்ஷிதமல்லாமையாலும், தந்தாமையொழியச் செல்லாதார்க்கு ஸ்நேஹிக்குமது அல்லாதார்க்கு முண்டாகையாலும், " மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந " (மித்ரபாவேநஸம்ப்ராப்தம்நத்யஜேயம்கதஞ்சந) என்னுமவனாகையாலும், உபக்ரமமாத்ரத்தையே சொல்லிற்றாகக்கடவது ; ஆஶாலேஶமுடையார்க்குத் தன்னைக் கொடுப்பதாக ஹகவதுக்தியுமுண்டாயிருந்ததிறே; " எதிர்சூழல்புக்கு " என்றும், " என்னின்முன்னம் பாரித்து " என்றும் விலக்காமைதேடித் திரிகிறவனிறே. [உடை] - இந்த அப்ரதிஷேத்வேஷ மாத்ரத்தைக் கனத்தவுடைமையாகச் சொல்லுகிறது. " விண்ணுளாரிலுஞ்சீரியர் " என்று - இங்கே ஹகவதநுஹவம் பண்ணுவாரை நித்யஸூரிகளிற்காட்டில் கனக்க நினைத்திருக்கும் ஹகவதஹிப்ராயத்தாலே சொல்லுகிறது. " இவர்கள் பக்கலிலே இம்மாத்ரமுண்டானால், பின்னை இவர்களுடைய பரத்துக்கெல்லாம் நானே கடவன் " என்றிருக்குமாயிற்று இவன் ; ராவணஹவநத்தை விட்டு ஆகாஶத்திலே கிளம்பினபோதே ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மி குடிகோண்டபடியிறே " அந்தரிக்ஷகதஶ்ஸ்ரீமாந் " (அந்தரிக்ஷகதஶ்ஸ்ரீமாந்)

---

எட்டினோடு இத்யாதி-எட்டினோடிரண்டு - பத்து என்னுங் கயிற்றினால். பத்தென்று-பக்தியாய், பக்தியென்கிற கயிற்றாலே, மனந்தனைக்கட்டி - மநஸ்ஸை பகவத்விஷயத்திலே ப்ரவணமாக்கி. பத்தென்று பக்தியைச் சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்;-பத்தி என்று பக்தியாய், அதில் இகாரங்குறைந்து, பத்தென்றிருந்தாலும், ஏகதேஶவிகாரந்யாயத்தாலே அநந்யமாய் பக்தியைச் சொல்லு மென்றபடி. பக்த்யுபக்ரமமாத்ரத்தை-அப்ரதிஷேத்வேஷமாத்ரங்களை. சரமாவஸ்த்தையை-பரபக்தியை. குணப்ரகரணமாகையாலும்-ஸௌலப்யகுண ப்ரதிபாதந ப்ரகரணமாகையாலும், "புன்புலவழியடைத்து" என்கிறபடியே உத்கர்ஷஞ்சொல்லுகை முதல் திருவாய்மொழியிலேயிறே அபேக்ஷிதமென்றபடி. உத்கர்ஷம் அபேக்ஷிதமானாலும், பக்த்யுபக்ரமமாத்ரஸாலபத்வமாத்ரமே உத்கர்ஷ மென்கிறார் - தந்தாமையொழிய இத்யாதி. "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந । தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்" இதி யுத்தகாண்டே அஷ்டாதஶே ஸர்கே. அப்ரதிஷேதமாத்ரங்கொண்டு கார்யம் செய்யுமோ ? என்ன, ஆஶாலேஶம் இத்யாதி. யத்வா, "மித்ரபாவேந" இத்யாதி விவரணம் - ஆஶாலேஶ இத்யாதி ஆதல். ஹகவதுக்தி - சரமஶ்லோகமாதல், "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்றதாதல். உக்தியுமென்ற அபிப்ராயம் - கீழ்ச்சொன்ன யுக்திகளோடே ஸமுச்சயிக்கிறது. அநுஷ்டாநங்காட்டுகிறார் - எதிர்சூழல் இத்யாதி; எதிரே திருவவதரித்து. என்னில் இத்யாதி- எனக்குமுன்னே பாரித்து. விலக்காமை - அப்ரதிஷேதம். 'உடை' என்ற மதுப்பு - பூமாவிலே. பத்தரான வென்ன அமைந்திருக்க, 'உடை' என்கையாலே இதுவே ஒரு மஹாஸம்பத்தென்று தோற்றுகிற தென்றபடி. லோகத்திலே தநமுடையவனை - உடையவ னென்றும், தரித்ரனை - இல்லாதவனென்றுஞ் சொல்லக்கடவதிறே. இது கனத்த உடைமையாகக் கூடுமோ? என்ன, விண்ணுளார் இத்யாதி; பரமபதவாஸிகளிலும் சீர்மையுடையவர்க ளென்றபடி. அவன்தான் அப்படி நினைத்திருக்குமோ? என்ன, இவர்கள் இத்யாதி. "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" இத்யாத்யபிப்ரேதம். ஹகவதபிப்ராயமாத்ரத்தாலன்றியே வஸ்துகத்யாவும் ஆத்மாவுக்கு இதுவே ஸம்பத்தென்கிறார் - ராவணஹவந இத்யாதி. யத்வா,லோகத்திலே ஐஸ்வர்யத்தையன்றோ உடைமையாகச் சொல்லுகிறது, அத்வேஷாதிகளைக் கனத்தவுடைமையாகச் சொன்ன விடமுண்டோ? என்ன, ராவணபவந இத்யாதி. ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மி - ஜ்ஞாநபக்திவைராக்யங்கள். ஏநம் ஐஶ்

என்றது, "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:" (லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:) என்றதிறே இளைய பெருமாளை; இதிறே இவனுக்கு நிலை நின்ற ஐஶ்வர்யம். இத்தைப்பற்ற, 'உடை' என்கிறது. [அடியவர்க்கு] - இதுவும் பகவதபிப்ராயத்தாலே; "த்வயிகிஞ்சித்ஸமாபந்நே கிம்கார்யம் ஸீதயாமம" (த்வயிகிஞ்சித்ஸமாபந்நே கிம்கார்யம்ஸீதயாமம) என்று - இன்று கிட்டிற்றொரு குரங்கை நித்யாஶ்ரிதையான பிராட்டிக்கும் அவ்வருகாக நினைத்தானிறே. ஒருதிருவடி திருவநந்தாழ்வானல்ல இவனுக்கு ஶேஷபூதராய் அதிஶயத்தைப் பண்ணுகிறவர்கள்; இவ்விலக்காமையை யுடையவர்களாயிற்று; உள்ளகுணத்தை யநுபவித்திருக்கு மித்தனையிறே அவர்கள்; குணம் நிறம் பெறுவது இவர்கள்பக்கலிலேயிறே. [எளியவன்] - அவர்கள் பாபத்தைப் போக்குதல், புண்யத்தைக்கொடுத்தல், தன்னைக்கிட்டலாம்படி யிருத்தல் செய்கையன்றிக்கே தன்னை அவர்களுக்கு இஷ்ட விநியோகார்ஹமாக்கிவைக்கும்; தன்னை யொழிந்ததொன்றைக் கொடுத்தல், தன்னை யழைத்துக்கொடுத்தல் செய்யான், "இமௌஸ்மமுநிஶார்தூல கிங்கரௌஸமுபஸ்த்திதௌ" (இமௌஸ்மமுநிஶார்த்தூல கிங்கரௌஸமுபஸ்த்திதௌ) என்கிறபடியே - "நான் உங்களடியான், என்னை, வேண்டினபடியேவிக் கார்யங்கொள்ளுங்கோள்" என்று நிற்கும்; "பக்த்யாத்வநந்யயாஶக்ய அஹமேவம்விதோர்ஜுந" (பக்த்யாத்வநந்யயாஶக்ய அஹமேவம்விதோர்ஜுந) பீஷ்மாதிகள் சொல்ல "பரம்ப்ரஹ்மபரந்தாம" (பரம்ப்ரஹ்மபரந்தாம) என்று, கனக்கக்

---

வர்யமாமதொழிய ஜ்ஞாநஶக்த்யாதிக ளாகக்கூடுமோ? என்ன, கூடுமென்னுமத்தை ப்ரமாணோபபத்திகளாலே தர்ஶிப்பிக்கிறார் - லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந இத்யாதி. "உத்வாதஶஹாவாணிஶ்வதா ஹிஸுவஸ்தி வெவஸுஹ । ஸுவ வீவு தஹாவாக்யம் ஜாதவெகாயொவிஹீஷண: । ஸுஹரிக்ஷத: ஸ்ரீமாநு ஹரதாவெவராக்ஷஸாயிவம்" இதி யுத்தகாண்டே ஷோடஶஸர்கே. "ஸவுவியகுரஸுஸ்ய ராம ஸ்யாவி ஶரீரத: லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நோபஹி:ப்ராண இவாபர:" இதிபாலகாண்டே அஷ்டாதஶே. அத்வேஷமாத்ரங்கொண்டு 'அடியவர்' என்னலாமோ? என்ன, இதுவும் இத்யாதி. அத்வேஷம் கனத்தவுடைமையான வோபாதி, இதுடையார் - அடியாரென்கிற இதுவு மென்று - பஶப்தார்த்தம். த்வயிகிஞ்சி இத்யாதி - "முற்றவுநின்றனன்" இத்யத்ர லிகிதம். தாவந்மாத்ரமன்றிக்கே தத்த்வஸ்த்திதியும் அப்படியே யென்கிறார் - ஒருதிருவடி இத்யாதி. அதுக்கு ஹேதுவேது? என்ன, உள்ளகுணத்தை இத்யாதி; பராதிஶயாதாயகத்வரூப ஶேஷத்வம் இவர்களுக்கே யுள்ள தென்றபடி. எளிமையின் சாமாவதியைக் காட்டுகிறார் - அவர்கள் பாபத்தை இத்யாதி. இத்தால் - ஐஶ்வர்யகைவல்ய பகவத்ப்ராப்திகாமரை வ்யாவர்த்திக்கிறது. விவரணம்-தன்னை யொழிந்தது இத்யாதி. அழைத்துக் கொடுத்தல் செய்யான்-தானே மேல்விழு மென்றபடி. அப்படி இஷ்டவிநியோகார்ஹமாக்க எங்கே கண்டோம்? என்ன, இமௌஸ் இத்யாதி - "ஆஜ்ஞாபய யதேஷ்டம் வைஶாஸநம் கரவாவகிம்" இத்யுத்தரார்த்தம். இதம் பாலகாண்டே வாமநாஶ்ரமே விஶ்வாமித்ரம்ப்ரதி ராமலக்ஷ்மணௌ. இப்படி ஶக்திமான்களுக்கு ஸௌலப்யமிருக்கை ஸஹஜமென்னுமதுக்கு த்யோதக ப்ரமாணத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு அர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - பக்த்யாத்வநந்யயா இத்யாதி. நிலைநின்ற ஸ்வபாவமென்றனிறே யென்னுமளவும். "நாஹம் வேதைர்நதபஸா நதாநேந நசேஜ்யயா । ஶக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவாநஸி மாம் யதா । பக்த்யாத்வநந்யயாஶக்ய அஹமேவம்விதோர்ஜுந । ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்த்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப" இதி கீதாஸ்வேகாதஶே. "பரம்ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந் । புருஷம் ஶாஶ்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் । ஆஹுஸ்த்வாம் ருஷயஸ்ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா । அஸிதோ தேவலோவ்யாஸ: ஸ்வயஞ்சைவ ப்ரவீஷி மே" இதி தத்ரைவ தஶமே. "பக்த்யாத்வநந்யயா" என்றது - அத்வேஷமாத்ரபரமென்று இவ்விடத்தில் விவக்ஷிதம். பரந்தாம வென்று-

கேட்டிருந்தபடியாலே 'நீயோருவன் பக்திக்கு எளியவனுவதேன்?' என்ன, "ஒருவன் கறுத்திருக்க ஒருவன் சிவந்திருக்கிறபடி கண்டாயே, அப்படியே எனக்கும் இது நிலைநின்ற ஸ்வபாவம்" என்றுனிறே; "பக்த்க்ரீதோ ஜநார்த்தந:" (பக்திக்ரீதோ ஜநார்த்தந:) - ஸார்வபௌமனுன ராஜபுத்ரன் க்ஷாமகாலத்திலே அல்பத்ரவ்யத்துக்குத் தன்னை எழுதிக்கோடுத்தால் பின்னை தன் செல்வக்கிடப்புக் காட்டி மீட்க வொண்ணுதாப்போலே ஸர்வேஶ்வரனும் பக்திநிஷ்டனுக்குத் தன்னை அறவிலைசெய்து கோடுத்தால் பின்னை மேன்மைகாட்டி அகலமாட்டான்; கழுத்திலே ஓலையைக்கட்டி "தூதுபோ" என்னலாம்படி தன்னைக் கையாளாக்கிவைக்கும்.

இவ்வெளிமை உகவாதார்க்கும் பொதுவாகிறதோ? என்னுமித்தைப் பரிஹரிக்கிறது, மேல்; [பிறர்களுக்கரியவித்தகன்] - பிறர்களாகிறுர் - "இவனைக்கோண்டு கார்யங்கோள்ளோம்" என்றிருக்குமவர்கள்; [வித்தகன்] - விஸ்மயநீயன். இங்கு விஸ்மயநீயமேன்? என்னில், யஶோதாதிகளுக்கு ஸுலபனுனநிலைதன்னிலேபூதநாஶகடயமலார்ஜுநாதிகளுக்கு அநபிபவநீயனுயிருக்கை; இன்னமும் பள்ளிகோண்டருளாநிற்கச் செய்தே அர்ஜுநனும் துர்யோதநனுங் கூடவர, அர்ஜுநனுக்குத் தன்னைக்கோடுத்து, துர்யோதநனுக்குப் பங்களத்தைக் கோடுத்துவிட்டானிறே; நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப் பற்றுநிற்க அல்லாதார் அசேதநக்ரியாகலாபங்களைப் பற்றுகிறுப்போலேயிறே துர்யோதநன்நிலை; ராமாவதாரத்திலும் "ஹிமவாந்மந்தரோ மேரு:" (ஹிமவாந்மந்தரோமேரு:) இத்யாதி. "ஶத்ருணாப்ரகம்ப்யோபிலகுத்வமகமத்கபே:" (ஶத்ருணுமப்ரகம்ப்யோபிலகுத்வமகமத்கபே:) - ராவணன் ஸபரிகரனுய்க் கோண்டு எடுக்கப் புக்கவிடத்தில் நெஞ்சில் ஶாத்ரவத்தாலே எடுக்கமாட்டிற்றிலன்; திருவடி தனியனு யிருக்கச் செய்தேயும் நெஞ்சில் செவ்வையாலே கருமுகை மாலைபோலே எடுத்தேறிட்டுக்கோண்டு போனுன்; இங்ங

---

பீஷ்மாதிகள் சொல்ல என்று அந்வயிப்பது. "ஸ்வபாவ:" என்றதுக்குத் தாத்பர்யம் - ஒருவன் இத்யாதி. பக்தி லப்யனுனுலும் ஸ்வதந்த்ரனுகையாலே கதாசித் துர்லபனுமாயிருக்குமோ? என்ன, பக்திக்ரீத இத்யாதி. "ஸர்வபூதாதிபூதஸ்ய ஸர்வேஶ்வரஸ்ய விஷ்ணவே । பக்த்யா ஸம்ப்ராப்யதே தேவோ பக்திக்ரீதோ ஜநார்த்தந:" இதி வைஷ்ணவே தர்மே. "க்ரீத:" என்றதுக்கு வாஸனை - ஸார்வபௌமனுன இத்யாதி. செல்வக்கிடப்பு - ஸம்பத்ஸம்ருத்தி. அறவிலை - ஶாஶ்வதக்ரயம். பின்னை என் செய்யுமென்னில், கழுத்திலே இத்யாதி. பொதுவாகிறதோ - நாராயணத்வ ப்ரயுக்தஸம்பந்தம் ஸர்வ ஸாதாரணமாகையாலே யென்றபடி. விஸ்மயநீயனுகையாவது - அநுகூலர்க்கு எளியனுன நிலைதன்னிலே ப்ரதிகூலர்க்கு அநபிபவநீயனுயிருக்கை யென்னுமத்தை ஶங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறுர் - இங்கு விஸ்மயநீயம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. அர்ஜ்ஜுநனும் ஸுயோதநனும் படைவேண்டிவந்தபோது இவ்வாகாரத்வயமுங் காணலாமென்கிறுர் - இன்னமும் இத்யாதி. பங்களந்நை - பதரை. துர்யோதநன்படி உபாயாந்தரபரரோடொக்கச் சொல்லலாயிருந்த தென்கிறுர் - நம்முடையவர்கள் இத்யாதி. இவ்வளவன்றிக்கே ராமாவதாரத்திலும் ராவணஶக்தியால் ஈடுபட்ட இளையபெருமாளிடத்திலும் இவ்வாகாரங்காணலா மென்கிறுர் - ராமாவதாரத்திலும் இத்யாதி. "ஹிமவாந்மந்தரோ மேருஸ்த்ரைலோக்யம் வா ஸஹாமரை:। ஶக்யம் புஜாப்யா முத்தர்த்தும் ந ஶக்யோ பரதாநுஜ:" இதி யுத்தகாண்டே ஏகோநஷஷ்டிதமஸர்க்கே. "ஹிமவாந்மந்தரோ மேரு:" என்றவிடத்திலே - ராவணனொருவனே எடுத்தானென்று சொல்லிற்றேயாகிலும், அநுவாதத்திலே "ஶத்ருணா" என்று பஹுவசநமிருக்கையாலே 'ஸபரிகரனுய்க்கொண்டெடுக்க' என்றது. "ஹநுமாநபி தேஜஸ்வீ லக்ஷ்மணம் ராவணார்த்திதம்। அநயத்ராகவாப்யாஶம் பாஹுப்யாம் பரிக்ருஹ்ய தம்। வாயுஸூநோஸ்ஸுஹ்ருத்த்வேந பக்த்யா பரமயா ச ஸ:। ஶத்ருணாமப்ரகம்ப்யோபி லகுத்வமகமத்கபே:" இதி தத்ரைவ. நெஞ்சில் ஶாத்ரவத்தாலே யென்றது - 'ஶத்ருணா' என்றதின் தாத்பர்யம். "லகுத்வமகமத்" என்றதுக்கு அர்த்தம் - கருமுகை இத்யாதி. "நெஞ்சில்

னன்றாகில் "ராவணனுக்குக் கனக்கவேணும்" என்றும் "திருவடிக்கு நோய்தாகவேணும்" என்றுமன்று வஸ்துஸ்வபாவம் இருக்கும்படி யாயிற்று இது. [மலர்மகள் விரும்பும்] - இவ்விரண்டுக்கும் அடி - இவளுடைய சேர்த்தியிறே. புஷ்பத்தில் பரிமளம்போலே புஷ்பத்தை இருப்பிடமாகவுடையளாய், அதில் பரிமளந்தான் ஒருவடிவு கொண்டாற்போலே யிருப்பாளாய், நாட்டார் பரிமளத்தை விரும்புவர்களாகில், பரிமளந்தான் "தண்ணீர் தண்ணீர்" என்னப் பிறந்தவன். [நம்]- "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்கிற ப்ரமாண ப்ரஸித்தியைப் பற்றச் சொல்லுகிறது. நாராயணுநுவாகாதிகளோடே சேர; "ஹ்ரீஸ்ச தே லக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ" (ஹ்ரீஸ்சதேலக்ஷ்மீஸ்சபத்ந்யௌ) என்னக்கடவதிறே; "உளன்சுடர்மிகு சுருதியுள்" என்று - ஸ்ருதிவழியாலே அங்கீகரித்த லக்ஷ்மீ ஸம்பந்தத்தை வெளியிடுகிறார். [அரும்பெறலடிகள்] - பெறுதற்கரிய ஸ்வாமிகள்; [மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள்] - பெரியபிராட்டியார் விரும்பும்படி யிருக்கைபோலேகாணும் ஸர்வாதிக வஸ்துவுக்கு லக்ஷணம். "அப்ரமேயம்ஹி தத்தேஜ:" (அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்னக்கடவதிறே. [மத்துறு] - கீழ்ச்சொன்ன எளிமையை உபபாதிக்கிறார் மேல். மந்தரத்தைப் பிடுங்கிக் கடலில் நடுநெஞ்சிலே நட்டு நெருக்கிக்கடைந்து வெளிகொடுவெளியே தேவர்களுக்கு அம்ருதத்தைக் கொடுத்துவிட்ட மஹாபாஹு கிடீர்!இப்போது இடைச்சேரியிலே வந்து பிறந்து வெண்ணெய் களவுகாணப்புக்கு, கட்டுண்டு அடியுண்டு நின்றானென்கிறார். [மத்துறுகடை வெண்ணெய்]- தயிர்ச்செறிவாலே மத்தாலே நெருக்கிக் கடையப்பட்ட வெண்ணெய். "கடைவெண்ணெய்" என்றால் - காலத்ரயத்திலுள்ளத்தையுங் காட்டும். "முப்போதுங் கடைந்தீண்டிய வெண்ணெய்"

---

செவ்வையாலே" என்றது-"வாத்ஸல்யாதபி நாஸ்வாஹ்யஸ்தே ந" என்றதின் தாத்பர்யம். இங்ஙனன்றாகில்-ஆபிமுக்யமுண்டாகையும் இல்லாமையுமே ஹேதுவன்றாகில். ஆனால் அவைதான் ஹேதுவாம்படி யெங்ஙனே? என்ன, வஸ்துஸ்வபாவம் இத்யாதி. இந்தவஸ்துவின் ஸ்வபாவ மென்றபடி. ஸங்கதிமாஹ-இவ்விரண்டுக்கும் இத்யாதி. இரண்டுக்கும் - எளிமைக்கும் அருமைக்கும். இவளோட்டைச்சேர்த்தி அருமைக்கடி யென்கிறது - 'அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்ய ஸாஜநகாத்மஜா" என்றத்தைப் பற்ற. "மலர்மகள்" என்றதுக்குத் தாத்பர்யம் - புஷ்பத்தில் இத்யாதி. மகளென்ற, உத்பத்திதோன்றுகையாலே, பரிமளத்தினுடைய பரிணமம் போலே யிருக்கிறா ளென்று விவக்ஷித மென்கிறார் - அதில்பரிமளம் இத்யாதி. தண்ணீர்தண்ணீரென்னப் பிறந்தவனென்றது - "விரும்பும்" என்றதுக்கு அர்த்தம். "பிறந்தவள்" என்று திருத்தி நிர்வஹிப்பதும் ஒரு வகையுண்டு. "பிறந்தவன்" என்றபோது, பரிமளந்தானென்று - பிராட்டியைச் சொல்லுகிறது. "பிறந்தவள்" என்றபோது, பரிமளமென்று-ஸர்வகந்தனை ஸர்வேஸ்வரனைச் சொல்லுகிறது. உளன் இத்யாதி-'நம்' என்ற விஶிஷ்ட ப்ரஸித்திபரமென்ற தாத்பர்யம். அந்தப்ரமாணமேது? என்ன, நாராயணநுவாக இத்யாதி. அதிலே ப்ரஸித்தியேது? என்ன, ஹ்ரீஸ்ச இத்யாதி. ஹ்ரீயென்று-பூமிப்பிராட்டி. இந்தப்பதத்துக்கு ப்ரயோஜநம்-உளன் சுடர் இத்யாதி. ஸ்ருதிப்ரதிபாத்ய னென்கையாலே அங்கே ப்ரதிபந்நமான லக்ஷ்மீஸம்பந்தத்தை அங்கீகரித்தாரென்று தோற்றுமிறே; அப்படி அங்கீகார விஷயதயா உந்நீதமான லக்ஷ்மீ ஸம்பந்தத்தை வெளியிடுகிறா ரென்றபடி."மலர்மகள்" இத்யாதி ஸமபிவ்யாஹாரலப்யம் ஸ்வாநுபவகர்ப்பம் பாவமாஹ-பெரியபிராட்டியார் இத்யாதி. லக்ஷ்மீவிஶிஷ்டனே ஸர்வாதிகனென்னுமிடத்தில் ப்ரமாணம் - அப்ரமேயம் இத்யாதி. "அப்ரமேயம் ஹிதத்தேஜோ யஸ்ய ஸாஜநகாத்மஜா। நத்வம் ஸமர்த்தஸ்தாம் ஹர்த்தும் ராமசாபாஶ்ரயாம் வநே" இத்யாரண்யகாண்டே ராவணம்ப்ரதி மாரீச:. மந்தரத்தை இத்யாதி - அம்ருதமதந வ்ருத்தாந்தஞ் சொல்லுகிறது, 'மலர்மகள்விரும்பும்' என்று லக்ஷ்மீஸம்பந்தம் ப்ரஸக்தமாகையாலே ததவதாரஹேதுபூத வ்யாபாரமும் ஸ்ம்ருதமாகையாலேயாதல், தயிர்கடைகிறதுக்கு ப்ரதிகோடித்வேந புத்திஸ்த்தமாகையாலேயாதல். நடுநெஞ்சிலே - ஸர்வதோமத்யே. வெளிகொடுவெளியே - ஸமந்தாத்பஹி:. செறிவு - கைஶிட்யம். கடையப்பட்ட - கடையப்படாநின்ற. கடைவெண்ணெயென்றால் வர்த்தமாநநிர்த்தேஶத்தாலே. காலத்ரயத்திலும் கடைகைக்கு ப்ரஸக்தியுண்டோ? என்ன, முப்போதும் இத்யாதி. காலத்ரயத்திலும் கடைந்துதிரண்ட

என்னக்கடவதிறே; இங்கு வர்த்தமாநத்திலே ஒரு ஸௌகர்ய முண்டாகையாலே, "கடையா நிற்கச்செய்தே, பசியராயிருக்குமவர்கள் சோறுசமையப் பற்ருமல் வேந்தது கோத்தையாக வாயிலிடுமாபோலே, கடையப்பற்ருமல் நடுவே அள்ளி அமுது செய்யும்படியைச் சொல்லுகிறது" என்று பிள்ளான் பணிக்கும்படி. [களவினில்] - கடைகிற பராக்கிலே நிழலிலே யொதுங்கிச் சாபலத்தாலே அள்ளி யமுதுசெய்தான்போலே காணும். [களவினில்] - களவிடையாட்டத்தில். உபக்ரம ஸமயத்திலேகிடீர் அகப்பட்டது! [உரவிடையாப்புண்டு] - உரமென்று - மார்வு. * (மார்விடையிலே யென்றபடி.) "பொன்பெயரோன்தனதுரம்பிளந்து" என்னக்கடவதிறே. பெரிய பிராட்டியார் நெருக்கியணைக்கும் மார்வைக்கிடீர் கயிற்ருலே நெருக்கிக்கட்டக் கட்டுண்டது! அன்றியே, மிடுக்கையுடைய ருஷபம்போலே யிருக்கிறவன்கிடீர் கட்டுண்டான்! [உரவிடையாப்புண்டு] - உதரவிடையாப்புண்டு. உதரமென்கிற இத்தை "உரம்" என்று இடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது. தாமோதரனென்று பிள்ளைபெற்றுப் பேரிடும்படியிறே கட்டுண்டது. "தாம்நாசைவோதரே பத்த்வா ப்ரத்யபத்நாதுலூகலே" (தாம்நாசைவோதரே பத்த்வா ப்ரத்யபத்நாதுலூகலே) என்றும், "யதிஶக்நோஷிகச்ச த்வ மதிசஞ்சலசேஷ்டித: । இத்யுக்த்வாத நிஜம் கர்மஸாசகார குடும்பிநீ" (யதிஶக்நோஷிகச்ச்சத்வ மதிசஞ்சலசேஷ்டித:, இத்யுக்த்வாத நிஜம் கர்மஸாசகார குடும்பிநீ) என்றுஞ் சொல்லும்படியிறே எளியனுயிருக்கும்படி; தான் தாயான பரிவு தோற்ற இவனைக் களவிலே கண்டுபிடித்து, தாம்பாலே ஒருரலோடே யடுத்துக்கட்டி, மறுகண்ணியும் போத்தி "துருதுருக்கைத்தன மடித்துத் திரிந்த நீ வல்லையாகில் போய்க்காணுய்?" என்று உறுக்கிவிட்டால், போகமாட்டாதே யிருக்கும்; "பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே" (பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே) என்று ஓதப்படுகிற வஸ்து இவளுக்கு எளிய

---

வெண்ணெய். 'கடை' என்று - காலத்ரயத்தையுங் காட்டினலும், வர்த்தமாகமாக்கி நிர்வஹித்தால் அர்த்தாதிஶயமுண் டென்கிருர் - இங்கு இத்யாதி. வர்த்தமாநத்திலே ஒருஸௌகர்யம் - ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ளதொரு த்ரவ்யத்திலே அவனுக்கு உண்டான சாபலாதிஶயந் தோற்றுகிற ஸௌகர்யம். சமையப்பற்றமல் - சமையப் பொருமல். வேந்ததுகோத்தையாக - வெந்ததும் வேகாததுமாக. கோத்தை - வேகாதது. கடையாநிற்கக் களவுகாணும்படியென்? என்ன, கடைகிறபராக்கிலே இத்யாதி. நிழலிலேயொதுங்கி - பின்மாலையே திருவிளக்கேற்றிவைத்துத் தயிர்கடைவர்களாகையால் விளக்குநிழலிலே யொதுங்கி யென்றபடி. "உரவிடையாப்புண்டு" என்கிறத்துக்கு மூன்றர்த்தம் அருளிச்செய்கிருர் - உரவிடை இத்யாதி. பொன்பெயரோன் இத்யாதி - ஹிரண்யனுடைய மார்வைப் பிளந்து. "மலர்மகள்விரும்பும்" என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிருர் - பிராட்டியார் இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, உரமென்று - மிடுக்கு. விடை - வ்ருஷபம். த்ருதீயார்த்தம் - உதர இத்யாதி. இடைக்குறைத்தலாய் - நடுவக்ஷரங்குறைந்து. உதரத்திலே கட்டுண்டானேவென்ன, தாமோதரன் இத்யாதி. கட்டுண்டு ஸுலபனுனதுக்குப் ப்ரமாணம் - தாம்நாசைவ இத்யாதி. "தாம்நாசைவோதரே பத்த்வா ப்ரத்யபத்நாதுலூகலே । க்ருஷ்ணமக்லிஷ்டகர்மாணமாஹ சேதமமர்ஷிதா । யதிஶக்நோஷி கச்ச த்வமதிசஞ்சலசேஷ்டித: । இத்யுக்த்வாத நிஜம் கர்மஸா சகார குடும்பிநீ" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே பஞ்சமேம்ஶே ஷஷ்டே. பந்தநஹேதுகயநபூர்வகம் ஶ்லோகார்த்தமாஹ - தான் தாயான இத்யாதி. தாயானபரிவுதோற்ற-"இது பிள்ளைக்கு ஜரியாது" என்கிற பரிவுதோற்ற. அடுத்துக்கட்டி - சேர்த்துக்கட்டி. தாம்நாஉதரேஉலூகலேசைவபத்த்வாப்ரத்யபத்நாத் இத்யந்வயவிவக்ஷயா - மறுகண்ணியும்போத்தி என்றது. துருதுருக்கைத்தனம் என்றது - சேஷ்டிதாதாத்பர்ய விஷயம். துருதுருக்கைத்தனமடித்து - துர்மார்க்கம் பண்ணி. உறுக்கிவிட்டால் - மிரட்டிவிட்டால். ஸர்வஶக்தியை "யதிஶக்நோஷி" என்கைக்கு அடியேது? என்ன, பராஸ்ய இத்யாதி. ஶ்வேதாஶ்வதரே "ந தஸ்ய கார்யம்" இத்யாதி "மிகுநரையிலனே" இத்யத்ர லிகிதம். "எத்திறம்" என்றதுக்குத் தாத்பர்யம் -

---

* குண்டலிதக்ரந்தம் சில ஸ்ரீகோஶங்கல் இல்லை யென்பர்.

தானபடியிறே இங்ஙனே சொல்லலாகிறது; ஸம்ஸாரபந்தஸ்த்திதி மோக்ஷஹேதுவான தானிறே இப்படி கட்டுண்டிருக்கிறான்; ப்ரஹ்மாதிகளைத் தன்ஸங்கல்பத்தாலே கட்டுவது விடுவதாகிறவனிறே இப்போது ஒரு அபலை கையாலே கட்டுண்டிருக்கிறான்; "**த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி**" (த்யக்த்வா தேஹம் புநர்ஜந்மநைதிமாமேதி) என்கிறபடியே நம்முடைய கட்டை யவிழ்க்கவிறே தான் கட்டுண்டிருக்கிறது. [உரலினோடிணைந்திருந்து] "உரலுக்கு ஒரு வ்யாபாரக்ஷமதை யுண்டாமன்று தனக்கு ஒரு வ்யாபாரக்ஷமதை யுள்ளது" என்று தோற்ற இருந்தபடி. [ஏங்கிய] - உரலிற்காட்டில் வ்யாவ்ருத்தி இத்தனையேகாணும். அழப்புக்கவாறே "வாய்வாய்" என்னுமே; பின்னை அழமாட்டாதே ஏங்கி யிருக்குமித்தனை. எளிவுண்டு - எளி வந்தபடி. [எத்திறம்] - பிரானே! இது என்ன ப்ரகாரம்? இன்னம் மேன்மை தரைகாணலாம். நீர்மை தரைகாணவொண்ணுதாயிருந்ததீ! "உயர்வறவுயர்நலமுடையவன்" என்கிற மேன்மை யிலே போவேன் என்கிறார்; நியாம்யனு யிருக்கிற இருப்பில் நியந்தாவாயிருக்கிற இருப்புப் பேசலா யிருந்ததீ! பேசப்புக்க வேதங்களும் "**யதோ வாசோ நிவர்த்தந்தே**" (யதோவாசோநிவர்த்தந்தே) என்றதும் மேன்மையிலேயிறே; நிலமன்று என்கைக்கும் நிலமன்றிறே நீர்மை. இத்தனை தாழநில்லாமையாலே ஸம்ஸாரிகள்பக்கல் காணவொண்ணுது; பரத்வத்தில் இந்நீர்மை யில்லை. இதென்ன ப்ரகாரம்? என்கிறார். பெரியவன்தாழ்ச்சி யாகையாலே பொறுக்கமாட்டுகிறிலர். (௧)

---

ஸம்ஸார இத்யாதி. இயமபி ஶ்வேதாஶ்வதரே, "ஸவிஶ்வக்ருத் விஶ்வவிதாத்மயோநி: ஜ்ஞ: காலகாலோ குணீ ஸர்வவித்ய: । ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶ: ஸம்ஸாரமோக்ஷஸ்திதிபந்தஹேது:" ஸ: ஸர்வேஶ்வர: விஶ்வஸ்ய விஶ்வகர்த்தா. ஸமஷ்டிவ்யஷ்டி: விஶ்வக்ருதாத்மயோநி: - விஶ்வக்ருத்துக்களான ப்ரஹ்மாத்யாத்மாக்களுக்குக் காரணபூதன். வ்யஷ்டிஸ்ருஷ்டி:. ஜ்ஞ: என்றும், ஸர்வவித் என்றுஞ் சொன்னது - ஸ்வரூபஸ்வபாவ ஜ்ஞாநத்தைபற்றவாதல்; ஸர்வவித்-"வித்ள் லாபே" என்கிற தாதுப்ரக்ரியயா அவாப்தஸமஸ்தகாமத்வத்தைச் சொல்லுகிற தென்னுதல். காலகால: - காலநியந்தா, குணீ - கல்யாணகுணவிஶிஷ்ட:; ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதி: ப்ரதாநபுருஷயோர் நியாமகத்வம் ஸர்வேஶ்வரஸ்யைவ நியந்த்ருத்வம் ப்ரோக்தம்; ஶேஷம் ஸர்வமபி ஸ்பஷ்டம்பூர்வமேவ ப்ரதிபாதிதம். ஸததவிவரணம் - ப்ரஹ்மாதிகள் இத்யாதி. ஸர்வஶக்தியானவன் இப்படி அபலைகையாலே கட்டுண்கைக்கு ஹேதுவேது? என்ன, த்யக்த்வா இத்யாதி. இணைந்திருந்து - அசேதநமான உரலோடே ஸமமா யிருந்து. "இணைந்திருந்து" என்றதுக்கு பாவம் - உரலுக்கு இத்யாதி. அழாதே ஏங்குவானென்? என்ன, அழப் புக்கவாறே இத்யாதி. எளிவந்தபடி - ஸௌலப்யம். இன்னம் மேன்மைதரைகாணலாம் இத்யாதி வாக்யம் - "எளிவு எத்திறம்" என்கிற ஸ்வாரஸ்யஸித்தமாதல் ஏகாரஸித்தமாதல். ஆகையாலே-"உயர்வற" என்று கூட்டிக் கொள்வது. உக்தவிவரணம் - நியாம்யனும் இத்யாதி. பரத்வத்தைப்பேசப்புக்க வேதங்களும் "அபரிச்சிந்நம்" என்று மீண்டனவில்லையோ? என்ன, பேசப்புக்க இத்யாதி. மேன்மை நிலமாகையாலே சிறிதுபேசி மீண்ட திறே யென்றபடி. ஸம்ஸாரிகளான ப்ரஹ்மருத்ராதிகள்பக்கலிலும் இந்தஸௌலப்ய முண்டேயென்ன, இத்தனை இத்யாதி. அர்ஜ்ஜுநன் ருத்ரனை வில்லாலேயடிக்க அடியுண்டானிறே, அது ஜந்மாதிகளால் உத்க்ருஷ்டவிஷய பாரதந்த்ர்யமாகையாலே விஸ்மயஹேதுவன்று என்றபடி. அன்றிக்கே, ஸம்ஸாரிகளும் மாத்ராதிவிஷயத்தில் ஸுலபராயிருக்கவில்லையோ? என்ன, இத்தனை இத்யாதி. லோகத்தில் களவுகாண்பாரும் கட்டுண்பாருமில்லை யோ? இதுக்கீடுபடவேணுமோ? என்ன, பெரியவன் இத்யாதி. பத்துடையடியவர்க்கென்று தொடங்கி, உர லினோடிணைந்திருந்தேங்கிய எளிவு எத்திறம்? இத்யந்வய:. (௧)

# இரண்டாம் பாட்டு.

---

எளிவருமியல்வினன் நிலைவரம்பிலபலபிறப்பாய்
ஒளிவருமுழுநலம் முதலிலகேடிலவீடாம்
தெளிதருநிலைமையது ஒழிவிலன்முழுவதுமிறையோன்
அளிவருமருளினோடு அகத்தனன்புறத்தனனமைந்தே.

ஆ.—(எளிவரும்.) இப்படி எம்பெருமான் திருவவதாரம் பண்ணிக்கொண்டு எளியனாம்படியைச் சொல்லப்புக்கு, அந்தஸௌலபத்வ ப்ரஸங்கத்தாலே உரலோடே கட்டுண்டு நடுங்கினபடியே யிருக்கிற நிரதிசயஸௌலபத்வத்தை யநுஸந்தித்து அப்ரக்ருதிங்கதரான ஆழ்வார் நெடும்போதுக்கு ப்ரக்ருதிங்கதராய், பின்னையும், ப்ரஸ்துதமான ஸௌலபத்வத்தை அருளிச்செய்கிறார் ஸௌலபனுமிடத்தில் ஜந்மசேஷ்டிதங்களினுடைய உத்கர்ஷாபகர்ஷம் பாராதே ஆச்ரித ஸஜாதியனாய்க் கொண்டு அபர்யந்தமான பிறவிகளைப் பிறந்துவந்து ஸௌலபனும். பிறந்தருளும்போது, நித்யஸித்த கல்யாணகுண பரிபூர்ணனாந்த ஸ்வஸாக்ஷாத்காரரூபமோக்ஷப்ரதத்வ ஸர்வேச்வரத்வாதி ஸர்வகுணங்களையும் ஒன்றுமொழியாமே கொண்டுவந்து பிறந்தருளும். இப்படிப்பிறந்தருளி ஆச்ரிதர்க்கு ஸஸ்நேஹமாக ஆத்மதாநம் பண்ணிக்கொண்டு எளியனும். அநாச்ரிதர்க்கு அரியனாயிருக்கு மென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், எம்பெருமானுடைய ஸௌலப்யத்தை அநுஸந்தித்து விவசரான ஆழ்வார் ப்ரக்ருதிஸ்த்தராய் ப்ரஸ்துதமான ஸௌலப்யத்தை ஸப்ரகாரமாக உபதேசிக்கிறார்.

[எளிவருமியல்வினன்] - எல்லார்க்கு மொக்க எளியனும் ஸ்வஹாவன். [நிலைவரம்பில பலபிறப்பாய்] - உத்க்ருஷ்டயோநி அபக்ருஷ்ட யோநி யென்றின்றிக்கே, உத்க்ருஷ்டசேஷ்டிதம் அபக்ருஷ்ட சேஷ்டிதமென் றின்றிக்கே யிருந்துள்ள பலஜந்மங்களையு முடையனாய்; இவையிரண்டு பொருளையும் நிலையில்லாமைக்காக்கி, வரம்பில்லாமைக்குப் பொருளாக - திருவவதாரங்களிலே பரத்வத்தை ஆவிஷ்கரிக்கவேண்டிலும் ஆவிஷ்கரிக்கு மென்றுமாம். [ஒளிவருமுழுநலம்] - திருவவதாரங்களிலே நிறம் பெறும்படியான பூர்ணமான கல்யாணகுணங்கள். [முதலில கேடில] - அக்குணங்கள்தான் இன்னநாள் தொடங்கி யுண்டாயிற் றென்றுதல், இன்னநாள் முடியு மென்றுதல் சொல்லவொண்ணுதே நித்யமாயுள்ளன. [வீடாமென்று தொடங்கி] - மோக்ஷமாகிற தெளிவைத் தரும் ஸ்வஹாவந் தொடக்கமான எல்லாவற்றோடுங்கூட.[அளிவருமென்றுதொடங்கி] - ஆச்ரிதபரித்ராணம் தன்பேறுகக்கொண்டு அவர்களிட்ட வழக்காய், அநாச்ரிதர்க்கு எட்டாதேயிருக்கும். [அமைந்தே] - இங்ஙனே சமைந்து.

ப.—அநந்தரம், ப்ரஸக்தமான அவதார வைலக்ஷண்யத்தை உபதேசிக்கிறார்.

(ஜந்மவ்ருத்தங்களில் ஏற்றத்தாழ்வுகள் பாராமையாலே), நிலை - ஒருநிலையும், வரம்பு - ஒருநியதியும், இல - இல்லாத, பல பிறப்பாய் - பலவகைப்பட்ட பிறப்பையுடையனாய், முதலில கேடில முழுநலம் - முதலுமின்றியே முடிவு மின்றியே யுள்ள முழுநலம், ஒளிவரும் - ஒளிவரும்படியான, எளிவருமியல்வினன் - எளிவருதலை இயல்பாகவுடையனாய், (அவ்வளவிலும்), வீடாம் - வீடாகிற, தெளிதரும் - தெளிவைத்தரும், அது நிலைமை - அந்த நிலைமையை, முழுவதும் - அடங்கலும், ஒழிவிலன் - ஒழிவிலனான, இறையோன் - ஸ்வாமியானவன், அளிவரும் - உபகார

ஶீலமான, அருளினோடு - அருளோடே, அமைந்து - சமைந்து, அகத்தனன் - (அடியவர்க்கு) அகத்தனாய், புறத்தனன் - (அல்லாதார்க்குப்) புறத்தனாயிருக்கும். நலம் - கல்யாணகுணங்கள். இத்தால் அவதாரதசையில் ஐஶ்வரமான ஸ்வபாவங்களுக்கு ஔஜ்ஜ்வல்யம் மிகுந்திருக்குமென்றதாயிற்று.

இ.—இரண்டாம்பாட்டில், இந்த ஸௌலப்யத்தை அநுஸந்தித்து ஆறுமாஸம் மோஹங்கதராய், "விரோதஸம்ஜ்ஞாம் ப்ரதிலப்ய சைவ விசிந்தயாமாஸ விசாலநேத்ரா" என்கிறபடியே காலமுணர்த்த ப்ரபுத்தரானவர் ப்ரஸ்துதமான ஸௌலப்யத்தை ஸப்ரகாரமாக உபதேசிக்கிறார்.

[எளிவருமியல்வினன்] - "பத்துடையடியவர்க்கு" என்று - ஸோபாதிகமன்று இவனெளிமை; ஜலத்துக்கு ஶைத்யம்போலே ஸ்வபாவஸித்தம். எளிமையை இயல்வாகவுடையவன். [நிலைவரம்பில] - நிலையில்லாமையாவது - ஜந்மத்தில் உத்கர்ஷாபகர்ஷமில்லாமை. வரம்பில்லாமையாவது - சேஷ்டிதங்களில் நியதியில்லாமை. இவையிரண்டும் நிலையில்லாமையிலே யாக்கி, வரம்பில்லாமைக்குப் பொருள் - அவதரித்தவிடத்திலே பரத்வத்தை ஆவிஷ்கரிக்கிலும் ஆவிஷ்கரிக்கும். அதாகிறது - வண்டாகர்ண மோக்ஷாதிகள். ஒன்றிலும் ஒருநியதியில்லை; ரக்ஷணத்துக்கு உறுப்பானவை ஏதேனுமாக அமையும். [பலபிறப்பாய்] - வேதஞ்சொல்லிலும் "பஹுதா விஜாயதே" என்னுமத்தனை. தான் சொல்லிலும் "பஹூநி மே" என்னுமத்தனை. உட்புக்க தம்போல்வார் சொல்லிலும் "எங்கின்றயோநியுமாய்ப் பிறந்தாய்" என்னுமத்தனை. [பிறப்பாய்] - பரார்த்தமாகத் தாழநின்றோமென்று தன்பக்கலிலும் புரையின்றிக்கேயிருக்கை. "பரித்ராணாய ஸாதூநாம்" "ஸம்பவாம்யாத்மமாயயா" என்னக்கடவதிறே. [ஒளிவருமுழுநலம்] - பிறக்கப்பிறக்கக் கல்யாணகுணங்கள் கட்டடங்க உஜ்ஜ்வலமாகாநிற்கும். "ஸ உ ஶ்ரேயாந் பவதி ஜாயமாந:". [முதலிலகேடில] - இக்குணங்களுக்கு உத்பத்தி விநாஶங்களில்லாமையாலே நித்யங்களாயுள்ளன. [வீடாந் தெளிதரு நிலைமைய தொழிவிலன்] - மோக்ஷமாகிற தெளிவைத் தரும் ஸ்வபாவத்தை விடாதே கூடவந்துஅவதரிக்கும். இதுவும் கல்யாணகுணங்களிலே ஒன்றாயிருக்கப் பிரித்துச்சொல்லுகிறது - அவதாரத்துக்கு மோக்ஷப்ரதாநத்திலே நோக்காகையாலே. [வீடாந்தெளிதரும்] - அவனே இங்கேவந்து அவதரிக்கிலும் ஶோகமோஹங்களைப் பண்ணும். ஸம்ஸாரிஅங்கே செல்லிலும் தெளிவைப்பண்ணுந் தேசம். "பரமம் ஸாம்யமுபைதி". [முழுவதும்] - ஒளிவரு முழுநலம் வீடாந் தெளிதருநிலைமையது முழுவதுமொழிவிலன். [இறையோன்] - "அஜோபிஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோபி ஸந்" என்கிறபடியே நியாம்யர்நடுவே நியாமகத்வம் குலையாமல் வந்துபிறக்கும். [அளிவருமருளினோடு] - பக்வமான அருளோடே. அதாகிறது - ஆஶ்ரிதரக்ஷணம் தன்பேறாயிருக்கை. [அகத்தனன் புறத்தனன்] - அகத்தனாயிருக்கும் ஆஶ்ரிதர்க்கு, புறத்தனாயிருக்கும் அநாஶ்ரிதர்க்கு; அதாகிறது - அர்ஜுநாதிகளுக்குக் கையாளாயிருக்கையும், துர்யோதநாதிகளுக்கு ஆளிட்டுவிடுகையும். [அமைந்தே] - இங்ஙனே சமைந்திருக்கை. இறையோன், முதலில கேடிலவாமொளிவருமுழுநலம், வீடானதெளிதருநிலைமையது, முழுவது மொழிவிலனாய் அளிவருமருளினோடகத்தனன் புறத்தனாய்க்கொண்டு சமைந்து நிலைவரம்பில பலபிறப்பாயெளிவருமியல்வினன்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. 'எத்திறம்' என்று ஆறுமாஸம் மோஹித்துக் கிடந்தா

---

இரண்டாம்பாட்டு - எளிவரும் இத்யாதி. பெரியவர்களுடைய ஸ்த்ரீப்ரமஶயநாதிகளெல்லாம் இவ்வாத்மாவுக்கு ஸத்வஹாநி வர்த்தகங்களாய்க்கொண்டு தஞ்சமாயிருக்கையாலும், காமிநிகளுடைய வ்யாபாரங்களெல்லாம் காமுகர்க்கு அவர்களிடத்தில் அபிநிவேஶத்தாலே போக்யங்களாயிருக்குமாபோலே

ரேன்று ப்ரஸித்தமிறே; இவர் மோஹித்துக்கிடக்க, பெருமாளும் பிராட்டியும் பள்ளி கொண்டரு ளினவிடத்தை ஸ்ரீகுஹப்பெருமாள் நோக்கிக்கொண்டு கிடந்தாற்போலே, ஸ்ரீமதுகரவி ப்ரப்ருதி ஸஜ்ஜநங்களடங்கலும் ஃபலிதமான வ்ருக்ஷத்தைப் பக்ஷிஜாதங்கள் மொய்த்துக்கொண்டு கிடக்குமா போலே, இவரைச் சூழ்ந்துகிடந்தார்கள்; "இங்குதீ ஸாபரணாஸக்தா ஸீதாஸ்மிந் ஜயநோத்தமே" (மங்யேஸாபரணஸக்தாஸீ தாஸ்மிஞ்சயநோத்தமே) - வழிநடந்த விடாயாலே ஆபரணங்கள் கழற்றுதேயாயிற்றுப் பள்ளிகோண்டது. "தத்ர தத்ர ஹி த்ருஶ்யந்தே ஸக்தா: கநகபிந்தவ:" (தத்ரதத்ரஹித்ருஶ்யந்தே ஸக்தா: கநகபிந்தவ:) - பசியர்க்குத் தந்தாம் ஜீவ நத்தைப் பகுந்திடுவோரைப்போலே, வந்த ஸ்ரீபரதாழ்வானுக்குத் தாம் நோக்கிக்கொண்டு கிடந்த விடத்தைக் காட்டுகிறானிறே. அவ்விடத்தைக் கண்டவாறே "ஶத்ருக்நோநந்தரஸ்த்தித:" (ஶத்ருக்நோநந்தரஸ்த்தித:) என்னும்படி அவ்விடத்தைக் காணு மோஹித்துக் கிடந்தானாயிற்று ஸ்ரீபரதாழ்வான்; அப்படியே மோஹித்துக்கிடந்த இவர் "சிரேண ஸம்ஜ்ஞாம் ப்ரதிலப்ய சைவ விசிந்தயாமாஸ விஶாலநேத்ரா" (சிரேணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்யசைவ விசிந்தயா மாஸவிஶாலநேத்ரா) என்கிறபடியே அநுபவிதாக்கள் பாக்யத்தாலே காலமுணர்த்த உணர்ந்தார்; நல்லார்நவில்குருகூரிறே; ஸத்துக்களடங்கலும் இவரைப்பற்றிப் படுகாடுகிடந்தது; உணர்ந்த

---

இவ்வாழ்வார்பக்கல் தமக்கு உண்டான அபிநிவேஶத்தாலே இவருடைய மோஹாவஸ்த்தையும் தமக்கு போக்யமாயிருக்கையாலும், அதில் தமக்கு உண்டான ஆதராதிஶயம் தோன்றும்படி, அவர் மோஹித்த போது ஜ்ஞாதாக்களெல்லாம் அவரை நோக்கிக்கொண்டு எழுந்தருளியிருக்கும் ப்ரகாரத்தை அருளிச் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி அதிஷ்ட்டிகை யருளிச்செய்கிறார் - **இவர் மோஹித்துக்கிடக்க** இத்யாதி. **பலிதமான வ்ருக்ஷத்தை** இத்யாதி - பழுத்தமரத்தைப் பழத்தின் நசையாலே பக்ஷிகள் சூழ்ந்துகிடக்குமா போலே ஸ்வோஜ்ஜீவநார்த்தமான அர்த்தவிஶேஷாநுஷ்டாந விஶேஷ ஜ்ஞாநபக்திவைராக்யாதி விவ்ருத்த்யர்த்தமாக வென்றபடி. **ஸ்ரீகுஹப்பெருமாள் நோக்கிக்கொண்டிருந்ததுக்கு** நியாமகமெது? என்ன, இங்குதீ இத்யாதி. ஸ்ரீ குஹப்பெருமாளுடைய ஆஶ்ரமத்தினின்றும் பெருமாள் புறப்பட்டெழுந்தருளினதுக்கும், அங்கே பரதாழ்வான் எழுந்தருளினதுக்கும் மத்யே இருபத்திரண்டுநாள் வ்யவதாந முண்டாயிருக்கச்செய்தேயும் தச்சயநசிஹ்நங்களை அநுபவித்தபோதே ஸ்ரீகுஹப்பெருமாள் இவ்விடத்தை ரக்ஷித்துக்கொண்டிருந்தமை ஸித்தமென்று கருத்து. "ஸாபரணாஸக்தா இங்குதீ" என்னுமதுக்கு ஹேதுபூர்வகம் பாவமாஹ - **வழிநடந்த** இத்யாதி. **விடா யாலே** - ஆயாஸத்தாலே. "ஸாபரணாஸக்தா" என்றதுக்கு நியாமகமெது? என்ன, தத்ர தத்ர இத்யாதி. உத்தரம் ஶ்ருத்வைவ ஸம்ஸ்தவாக்யம். தன்ஜீவநத்தை பரதாழ்வானுக்குக் காட்டுவானென்? என்ன, **பசியர்க்கு** இத்யாதி. **பகுந்து**-பாகித்து. நோக்கினதுக்கு த்ருஷ்டாந்தங்காட்டி அவர் மோஹித்ததுக்கும் த்ருஷ்டாந் தம்-**அவ்விடத்தை** இத்யாதி. புநருக்திபரிஹாரார்த்தமாக, **அவ்விடத்தைக் காணு**வென்றது-கண்டவநந்தரக்ஷணத் திலே யென்று கண்டுகொள்வது. அநந்தரஸ்த்தித: என்றது-தொட்டால் முடியுமென்னும்படியான அவஸ்த் தையைப் பார்த்துத் தொட அஞ்சி ஸமீபத்திலே நின்றுரென்றபடி. உத்தரார்த்தத்தில் "வஸிஷ்ட:" என் றது-மோஹந்தெளிந்த அவஸ்த்தையைப்பற்ற. இங்குதீ ஸாபரணா இத்யாதிக்கு பூர்வஸர்க்கத்திலே "தமேவமுக்த்வா ஹரதம் ஶத்ருக்நோநந்தரஸ்த்தித: । வஸிஷ்டஸ்ஸோபவேஶாய வஸநஸம்ஜ்ஞாஶோக கர்ஶித:". **உணர்ந்தமைக்கு** த்ருஷ்டாந்தம் - **அப்படியே** இத்யாதி. **சிரேண** இத்யாதி ஸுந்தரகாண்டே த்வாத்ரிம்ஶே ஸர்க்கே ஶாவாந்தர்லீநம் ஹநுமந்தம் த்ருஷ்ட்வா ஸீதா. "ஸாவீக்ஷமாணா ப்ருஶமாஹூரூ வக்த்ரம் ஶாகாஶ்ரயம் தம் ஸ்வயமாஸகாரம்" இத்யாதி, "ஸா தம் ஸமீக்ஷ்யைவ ப்ருஶம் விஸம் ஜ்ஞா கதாஸுகல்பேவ பபூவ ஸீதா" இதி பூர்வார்த்தம். அப்படி அநுபவிதாக்களுண்டோ? என்ன, **நல்லார்** இத்யாதி. மதுரகவிப்ரப்ருதி ஸஜ்ஜநங்களாலே ஸ்துதிக்கப்பட்ட திருநகரியையுடையவர். இதுக்கு அர்த் தம் - **ஸத்துக்கள்** இத்யாதி. **படுகாடு** - வெட்டிவிழுந்தகாடு. **நவிலுகை** - சேருகை; ஸமூஹமாக நெருங்கி

அநந்தரம் 'நான் இங்குச் சொல்லிற்றென்?' என்று கேட்டார்; "'பத்துடையடியவர்க்கெளிய வன்' என்று ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகச் சிலவற்றைச் சொல்லா 'எத்திறம்' என்று மோஹித்துக் கிடந்தீர்" என்றார்கள். 'தப்பச்சொன்னோம்; அழித்து ப்ரதிஜ்ஞை பண்ணவேணும்' என்கிறார் இரண்டாம்பாட்டில். ஆவதேன்? என்னில்; —பரோபதேசம் பண்ணப்புக்குத் தாம் அநுபவித் தார் முதற்பாட்டில்; இப்பாட்டுத் தொடங்கிப் பரோபதேசம் பண்ணுகிறார். கீழ் ப்ரஸ்துதமான ஸௌலப்யத்தை ஸப்ரகாரமாக அருளிச்செய்கிறார் இதில்.

[எளிவருமியல்வினன்] - எளிமையை இயல்வாக - ஸ்வபாவமாகவுடையவன். ஸ்நேஹி களுக்கு ஸ்நேஹியாயிருக்கு மென்னுமிது குற்றமன்றோ? எல்லார்க்கும் காதாசித்கமாக எளிமை கூடும், இவனுக்கு எளிமை ஸ்வரூப மென்கிறார். [நிலைவரம்பில] - 'இன்ன அவதாரம், இன்ன சேஷ்டிதம் என்றில்லை' என்று பூர்வாசார்யர்கள் நிர்வாஹம். பட்டர் இவ்விரண்டையும் நிலை யில்லாமையிலே கொண்டு, "இனி வரம்பில்லாமையாவது - அவதரித்து எளியனாய்நின்ற நிலை தன்னிலே பரத்வம் தோற்ற நிற்கிலும் நிற்கும்" என்று. ஸாரத்யவேஷத்தோடே தாழநிற்கச் செய்தே ஸ்ரீவிஶ்வரூபத்தைக் காட்டியும், தான் புத்ரார்த்தமாகப் போகாநிற்கச் செய்தே வண்டா கர்ணனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தும், ஏழு திருநக்ஷத்ரத்திலே கோவர்த்தநகிரியை தரித்துக் கொண்டு நின்றுஞ் செய்தவை. இத்தாற் சொல்லிற்றாயிற்றது - ஒன்றிலும் ஒரு நியதியில்லை, ரக்ஷ ணத்துக்கு உறுப்பாமத்தனையே வேண்டுவது; ஏதேனுமாக அமையும் இவனுக்கென்கை. [பல பிறப்பாய்] - தெளிவுடைய தான் சொல்லும்போதும் "ப௨ஹூநி" (பஹூநி) என்றும், யதாபூதவாதியான வேதம் "பஹுதா விஜாயதே" (பஹுதாவிஜாயதே) என்றும், அவன் கொடுத்த அறிவுகொண்டு சொல்லுவார் "பலபிறப்பு" என்பர்கள். [பிறப்பாய்] - "பரார்த்த மாகத் தாழநின்றோம்" என்று தன்பக்கலிலும் புரையின்றிக்கே யிருக்கை; "ஜநநீ கர்மஜந்ம

---

வர்த்திக்கை யென்றுமாம். ஆனால், மேல் ப்ரபந்தம் நடந்தபடி யெங்ஙனே? என்ன, உணர்ந்தவநந்தாம் இத்யாதி. ப்ரஸக்தமென்றது - "பத்துடையடியவர்க் கெளியவன்" என்றது. அநுப்ரஸக்த மென்றது - அத்தை யுபபாதிக் கைக்காக "மத்துற" இத்யாதி. சிலவற்றைச் சொல்லா வென்றது - பாட்டை முடியச்சொல்லில் மீளவும் மோஹிப்ப ரென்று நினைத்து. தப்பச்சொன்னோ மென்றது - தப்பச்செய்தோ மென்றபடியாய், அதாவது - பரோபதேசம்பண்ண இழிந்தத்தைவிட்டு ஸ்வாநுபவம்பண்ணினோ மென்றபடி. அழித்து ப்ரதிஜ்ஞைபண் ணுகை - பரோபதேசம்பண்ணுகை. ப்ரதிஜ்ஞாதார்த்தோபபாதகம்-ஆவதேன்னென்னில் இத்யாதி. ஆவதேன் னென்னில் என்றது - அழித்து ப்ரதிஜ்ஞைபண்ணுகையாவ தென்னென்னில்? என்றபடி. இப்பாட்டுக்கு அவதாரிகை - கீழ்ப்ரஸ்துதமான இத்யாதி. ஸப்ரகாரமாக - ஸமஸ்தகல்யாண குணாத்மகத்வ மோக்ஷப்ரதத்வ ஸர்வேஶ்வரத்வ விஶிஷ்டனானவன் அவதரிக்கையாகிற ப்ரகாரஸஹிதமாக.

"பத்துடையடியவர்க்கெளியவன்" என்றத்தை வ்யாவர்த்திக்கிறார் - ஸ்நேஹிகளுக்கு இத்யாதி. "இயல்வினன்" என்றத்துக்கு பாவம் - எல்லார்க்கும் இத்யாதி; ஸ்வரூபாநுபந்தி யென்றபடி. "ஜந்மகர்ம ச" என்கிற விஷயத்தைப் பற்ற, "நிலைவரம்பில" என்றதுக்கு அர்த்தம்- இன்ன அவதாரம் இத்யாதி. உபபாதகம் - ஸாரத்யவேஷத்தோடே இத்யாதி. அவ்யவஸ்திதத்வம் விருத்தமன்றோ? என்ன, இத்தால் இத்யாதி. இத்தால் - "வரம்பில" என்றத்தால். 'பல' என் கிறதென்? இவ்வளவென்று ஸங்க்யையில்லையோ? என்ன, தெளிவுடைய இத்யாதி. அதாவது - ஈஶ்வர னோடு வேதங்களோடு ஆழ்வார்களோடு வாசியற முடிவுகாணவொண்ணாமையைப்பற்ற "பலபிறப்பாய்" என்கிற தென்றபடி. அவன்கொடுத்த அறிவு என்றது-"மயர்வறமதிநலமருளினன்" என்றத்தைப்பற்ற. "பஹூநி மே வ்யதீதாநி" இதி பூர்வமேவ லிகிதம். "அஜாயமாநோ பஹுதா விஜாயதே". "ஆய்" என்ற துக்கு பாவம் - பரார்த்தமாக இத்யாதி. பிறந்தென்னாதே "பிறப்பாய்" என்கையாலே - பிறப்பினுடைய அபிமதத்வம் தோற்றுகிற தென்றபடி. புரையின்றிக்கே யிருக்கை-தன் ஹ்ருதயத்திலும்பரத்வ கந்தமில்லாமை.

ஷம்ஶ்ரயே" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) "அஹம்வோபாந்தவோஜாத:" (அஹம்வோ பாந்தவோஜாத:). [ஒளிவருமுழுநலம்]-அபஹதபாப்மத்வாதிகள் ஜீவாத்மாவுக்கு முண்டிறே; இங்ஙனே யிருக்கச்செய்தே ஜந்மநிபந்தநமான திரோதாநம் பிறவாநின்றதிறே ஸ்வரூபத்துக்கு. அவனுக்கு ஜந்மத்தால் வரும் விகாராதிகளுண்டு; இவன் தன்னைத் தாழவிட்டுப் பிறக்கப்பிறக்க, கல்யாண குணங்கள் புகர்பெற்று வாராநிற்கும். "ஸஉஶ்ரேயாந்பவதிஜாயமாந:" (ஸஉஶ்ரேயாந் பவதிஜாயமாந:) - கர்மநிபந்தநஜந்ம மாகிலிறே பிறக்கப் பிறக்கப் புகரழிவது; அநுக்ரஹமடியாக வருகிற ஜந்மமாகையாலே புகர்பெற்று வாராநிற்கும். ஸஏவஶ்ரேயாந் என்றபடி. அந்குணங்கள் தானிருக்கும்படி யென்? என்றால், [முதலிலகேடில] - ஒருநாள்வரையிலே தோன்றி ஒருநாள் வரையிலே முடியுமவையன்றே, ஸ்வரூபாந்தர்க்கதமாயுள்ளன. [வீடாந் தெளி இத்யாதி] - இக் குணம் "ஒளிவரு முழுநலம்" என்ற இதிற் புகாதோ? என்னில்; — மோக்ஷப்ரதத்வமும் தனியே சொல்ல வேண்டுவதொரு குணமாகையாலே சொல்லுகிறார்; அவதாரத்துக்கு ப்ரயோஜநம் இதுவேயிறே. [வீடாம் இத்யாதி] - மோக்ஷமாகிற தெளிவு - பரமபதம். அத்தைத்தரும் ஸ்வ பாவம் என்றும் ஒத்திருக்குமவன்; அவன் இங்கேவந்து அவதரிக்கிலும் மோகமோஹங்களைப் பண் ணும் இவ்விடம், இவன் அங்கே செல்லிலும் தெளிவைப்பண்ணும் அவ்விடம்; "தெளிவிசும்பு" என்னக்கடவதிறே. [முழுவது மொழிவிலன்] - கீழ்ச்சொன்ன இரண்டையுங்கூட்டிச் சொல்லு

---

அப்படி தாழநின்ற நிலையிலே பரத்வந்தோற்றுமே நின்றதுண்டோ? என்ன, ஆத்மாநம் இத்யாதி ப்ரமாணத் வயம். "ஆத்மாநம்மாநுஷம்மந்யே ராமம் தஶரதாத்மஜம் । யோஹம் யஸ்ய யதஶ்சாஹம் பகவாம்ஸ்தத்ப்ரவீது மே" இதி யுத்தகாண்டே ராவணவதாநந்தரே த்ரிதஶாந்ப்ரதி ராம:. அஹம்ய: யஸ்ய-நான் எவன், எவனுடையவன். அஹம்யத: - யாதொரிடத்திலவன். தத்ஸர்வம் பகவாந் ப்ரவீது. "நாஹம் தேவோ ந கந்தர்வோ ந யக்ஷோ ந ச தாநவ: । அஹம்வோ பாந்தவோ ஜாதோ நைதச்சிந்த்யமிதோந்யதா" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே பஞ்சமேம்ஶே கோவர்த்தநோத்தரணாநந்தரே. "பலபிறப்பா யொளிவருமுழுநலம்" என்ற பதச்சேர்த்தியாலே ஜீவவ்யாவ்ருத்தியைக் காட்டுகிறார் - அபஹத பாப்ம இத்யாதி. ஸ்வரூபத்துக்கு - ஆத்மஸ்வரூபத்துக்கு. தர்மபூதஜ்ஞாநத்துக்கும் விகாரமுண்டென்கிறார்- அவனுக்கு இத்யாதி. அவனுக்கு-ஜீவாத்மாவுக்கு. ஸாம்ஸாரிகப்ரவ்ருத்திகளிலே ஸுகித்வ து:கித்வாதிகளுண் டென்றபடி. "நலம்" என்று ஜாத்யேகவசநம், கல்யாணகுண பரமென்று கல்யாணகுணங்கள் என்கிறார். அவன் அப்படி பிறக்கப்பிறக்க, கல்யாணகுணங்கள் புகர்பெற்றுவருமோ? என்ன, ஸஉஶ்ரேயாந் இத்யாதி. "யாவாநாவாநா: வரிவீகருமா ஸஉஶ்ரேயாந் பவதிஜாயமாந: । தம்தீராஸ: கவய உந்நயந்தி ஸ்வாத்யோமநஸாதேவயந்த:" யாவா தராண:.ஸாவாஸா:.ஶோபநவஸ்த்ரவாந். ஜாயமாநஸ்ஸர்வ ஶ்ரேயாந் பவதி; தம் தீராஸ: தீரா: கவய: மநஸா உந்நயந்தி த்யாநம் குர்வந்தீத்யர்த்த:. ஜந்மம் இருவர்க்கும் ஒத்திருக்க ஈஶ்வரனுக்குக் கல்யாணகுணங்கள் புகர்பெறு கைக்கு ஹேதுவேது? என்ற ஶங்கையிலே ஶ்ருதிக்குத் தாத்பர்யம் - கர்மநிபந்தந இத்யாதி. "ஸ:" என்றதுக்கு அர்த்தம் - ஸஏவ இத்யாதி. ஈஶ்வரகுணங்களானபோதே உத்பத்திவிநாஶரஹிதமாயிருக்க இப்படி விஶேஷிக்கிறது - காதாசித்கோத்பத்தி விநாஶவத்தான லௌகிககுணவ்யாவ்ருத்த்யர்த்தமாக வென்கி றார் - ஒருநாள்வரையிலே இத்யாதி. ஸ்வரூபாந்தர்க்கதம் - ஸ்வரூபாநுபந்தி. இக்குணம் - மோக்ஷப்ர தத்வம். மோக்ஷப்ரதத்வம் ப்ரதாநகுணமாகையாலேயிறே பாஷ்யகாரர் "மோக்ஷைகஹேது:" என்கிறவிடத்தில் ஆநிஶப்தாந்தர்க்கதமாக்காதே "விகத" இத்யாதியாலே பிரித்து அருளிச்செய்தது. ஹேத்வந்தரம் - அவதாரத் துக்கு இத்யாதி. தெளிவை விளைக்கிறதாகையாலே, வீடாகிற தெளிவென்றது - பரமபதம். நிலைமை என் றது - நிலை யென்றபடி. தெளிவைவிளைக்குமென்னுமத்தைக் காட்டுகிறார் - அவன்இங்கே இத்யாதி. மோக மோஹங்களைப் பண்ணுமென்னுமது - அபிப்ராயபரம். இது த்ருஷ்டாந்தார்த்தம். கீழ்ச்சொன்னஇரண்டையும்-

கிறார். [இறையோன்] - மோக்ஷப்ரதத்வம் ஈஶ்வரனுக்கே உள்ளதொன்றிறே. அவதரிக்கச் செய்தே ஈஶ்வரத்வத்திற் குறையாதே நிற்கை. [அளிவருமருளினோடு] - குளிர்ந்து பக்வமான அருளோடே; நிர்ஹேதுகமான அருளோடே. [அகத்தனன்] - ஆஶ்ரிதர்க்குக் கழுத்திலே ஓலை கட்டி 'தூதுபோ' என்னலாம்படி யிருக்கும். [புறத்தனன்] - அநாஶ்ரிதர்க்கு அந்நிலைதன்னிலே கிட்டவொண்ணாதபடி யிருக்கும். [அமைந்தே] - இப்படி சமைந்து. இறையோன் அளிவருமருளினோ டகத்தனன் புறத்தனனாயமைந்து, முதலில கேடிலவா மொளிவருமுழுநலம், வீடாந்தெளிதருநிலைமையது முழுவது மொழிவிலனாய், நிலைவரம்பிலபலபிறப்பாய் எளிவருமியல்வினன் என்று அந்வயம். (உ)

## மூன்றாம் பாட்டு.

அமைவுடையறநெறி முழுவதுமுயர்வறவுயர்ந்து
அமைவுடைமுதல்கெடல் ஒடிவிடையறநிலமதுவாம்
அமைவுடையமரரும் யாவையும்யாவருந்தானும்
அமைவுடைநாரணன்மாயையை யறிபவர்யாரே.

ஆ.—(அமைவுடை.) அவிகல ஸர்வ நிரதிஶய புண்யமார்க்கஸித்தமாய், இதரஸர்வ புருஷார்த்தங்களிற்காட்டில் உத்க்ருஷ்டமாய், நிரபேக்ஷமாயிருந்த ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாராவாந்தர ஸம்ஹாரகர்த்ருத்வங்கள் கைவந்திருக்கையாகிற இவ்வைஶ்வர்யத்தை யுடையராய் நிரபேக்ஷராயிருந்த ப்ரஹ்மருத்ராதி தேவர்களுக்கும் மற்றுமுள்ள சேதநாசேதநங்களுக்கும் ஆத்மாவாயிருக்கையாகிற நிரபேக்ஷைஶ்வர்யத்தையுடையனாயிருந்த நாராயணன் ஸஜாதீயனாய்க்கொண்டு பிறந்தருளி எளியனாயிருக்கிற இந்த ஆஶ்சர்யமான குணம் ஒருவருக்கு நிலமோ? என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஸர்வேஶ்வரனை நாராயணனுடைய ஶ்லாக்யமான ஜந்ம ரஹஸ்யம் அதிஶயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் நிலமன் றென்கிறார்.

[அமையென்று தொடங்கி] - இன்னபடி அநுஷ்டிக்க இன்ன ஹலத்தைத் தரும் என்னும் வ்யவஸ்தையுடைய தர்மமார்க்கம் எல்லாவற்றாலும் எல்லார்க்கும் மேற்படுவதுஞ்செய்து இன்னபடியாக வென்றால் அப்படியுண்டாம் சமைவையுடைத்தான ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் அவாந்தர ஸம்ஹாரமாகிற இவை மிகவும் கைவந்திருக்கும் சமைவையுடைய ப்ரஹ்மாதிகளும் மற்றுமுண்டான அசேதநங்களெல்லாமும் சேதநரெல்லாரும். [தானுமென்று தொடங்கி] - இவையெல்லாம் தனக்கு ஶேஷமாகையாலே இவைதானென்னலாம்படியான சமைவை யுடைய நாராயணனுடைய.

---

ஸமஸ்தகல்யாண குணாத்மகத்வமும், மோக்ஷப்ரதத்வமுமென்றஇரண்டையும். 'வீடாந்தெளிதரும்' இத்யாதியோடே கூட்டித் தாத்பர்யம் - மோக்ஷப்ரதத்வம் இத்யாதி. ஈஶ்வரனாகையாலே மோக்ஷப்ரதனானான் என்றபடி. "பிறப்பாய் இறையோன்" என்றுகூட்டித்தாத்பர்யம் - அவதரிக்கச்செய்தே இத்யாதி. பிறவாநிற்கச்செய்தே குணங்களுடைய தேஜிஷ்டதையாலும் மோக்ஷப்ரதத்வத்தாலும் ஈஶ்வரத்வத்திற்குறைவற்று நிற்குமென்றபடி. 'அளி' என்று - குளிர்த்தியும் பக்வதையுமாக்கி, உபயத்தையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் - குளிர்ந்து இத்யாதி. 'குளிர்த்தி' என்றதால் பலிதம் - நிர்ஹேதுகமான என்று. அருளுக்குப் பக்வதை - ஹலவ்யாப்தமாகை. யத்வா, அளிவருமருளினோடு - க்ருபையாலே வரும் க்ருபையோடு என்று அர்த்தாந்தரமாய், 'நிர்ஹேதுகமான அருளோடே' என்கிறதாதல். அளி - க்ருபை; "க்ருதைஶ்வரம் என்னுமாபோலே. அகத்தனன் - அந்தரங்கன். அந்வயங் காட்டுகிறார் - இறையோன் இத்யாதி. (உ)

ப.—அநந்தரம், அவதாராஸ்சர்யம் ஒருவருக்கும் அறியப்போகா தென்கிறார்.

அமைவு உடை - சமைவை உடைத்தான, அறம் நெறி - தர்மத்தினுடைய வரவாறு, முழுவதும் - எல்லாவற்றிலும், உயர்வற உயர்ந்த - மிகவுமுயர்ந்த, அமைவு - சமைவை, உடை - உடையவான, முதல்கெடல் - ஸ்ருஷ்டிஸம்ஹாரங்கள், இடையொடிவு - இடையொடிவான அவாந்தரஸம்ஹாரம் இவை, அற - மிகவும், நிலமதுவாம் - நிலமான, அமைவு - சமைவை, உடை - உடையரான, அமரரும் - ப்ரஹ்மாதி தேவர்களும், யாவையும் - எல்லா அசேதநங்களும், யாவரும் - எல்லாச்சேதநங்களும், தானும் - தானேயாம்படியான, அமைவு - சமைவை, உடை - உடையனான, நாரணன் - நாராயணனுடைய, மாயையை - அவதாராஸ்சர்யத்தை, யார் அறிபவர் - யார் அறியவல்லார்? அமைவு - நிரப்பம்.

இ.—மூன்றும்பாட்டில், இவ்வவதாரரஹஸ்யம் அதிஸயிதஜ்ஞாநராயிருப்பார்க்கும் அறியவொண்ணா தென்கிறது.

[அமைவுடையறநெறி] - பலத்தோடு நியதமாயிருந்துள்ள தர்மமார்க்கம். [முழுவது முயர்வறவுயர்ந்து] - எல்லாவற்றாலும் இவையநுஷ்டித்தாரில் இவர்களுக்கு அவ்வருகில்லை யென்னும்படி எல்லையிலே நிற்கை. [அமைவுடைமுதல்கெடல்] - இதின்பலமான ஸ்ருஷ்ட்யாதிகள் மிகவும்விஷயமாயிருக்கை. [அமைவுடைமுதல்] - ப்ரஹ்மா ஜகத்ஸ்ருஷ்டிபண்ணினால் “ஸர்வேஸ்வரனோ!” என்று ஸங்கிக்க வேண்டும்படியிருக்கை. [கெடல்] - ஸம்ஹாரம். [ஒடிவிடை] - அவாந்தரஸம்ஹாரம். [அறநிலமதுவாமமைவுடை] - மிகவுங் கைவந்திருக்கும் சமைவையுடைய. [அமரரும்] - ப்ரஹ்மாதிகளும். [யாவையும்] - அசேதநங்களும். [யாவரும்] - சேதநரும். [தானுமமைவுடைநாரணன்] - தானென்கிற சொல்லுக்குள்ளே ப்ரகாரமாய் அந்வயிக்கையாலே நாரணனென்னுந் திருநாமத்தையுடையவன். [மாயையை யறிபவர் யாரே] - ஸகலசேதநாசேதநங்களையும் தனக்கு ப்ரகாரமாகவுடைய தான் தன்னுடையவிபூதியிலே ஒருப்ரகாரத்துக்குத் தான் ப்ரகாரமாய் அவர்களுக்கு நியாம்யனாய் நிற்கிற ஆஸ்சர்யம் ஒருவர்க்கும் நிலமோ? “விதாவ: தேணவிதீராநு யொநியோநள நாவெதவிநநா தெதம் வ்யூஹஜ” இத்யாதி. நித்யஸூரிகள் அநுபவத்திலே அந்யபரராகையாலே அறியமாட்டார்கள்; ப்ரஹ்மாதிகள் தூர்மாநத்தாலே அறியமாட்டார்கள்; ஸம்ஸாரிகள் விஷயப்ரவணராய் அறியார்கள்; இவர்போல்வார் “எத்திறம்” என்று மோஹித்துக்கிடப்பர்கள்.

ஈடு.—மூன்றும்பாட்டு. எளிய னென்றார், எளிமையை ஸப்ரகாரமாக அருளிச்செய்தார்; இவனுடைய அவதாரரஹஸ்யம் ஒருவர்க்கும் நிலமல்லகிடீர் என்கிறார் இதில்.

[அமைவுடையறநெறி இத்யாதி] - ஒரு தர்மத்தை அநுஷ்ட்டியாநிற்கச் செய்தே இப்போதே பலம்பெறு தொழியிலும் ஒழியும்; இடையிலே சில விக்நங்கள் வரிலும் வரும்; அங்ஙனன்றியே, சக்ரவர்த்தி, நாலாஹுதிபண்ணி நாலு ரத்நத்தை எடுத்துக் கொண்டாற்போலே பலத்

மூன்றும்பாட்டு - அமைவுடை இத்யாதி. கீழிரண்டு பாட்டாலும் சொன்ன ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு இப்பாட்டுக்கு ஸங்கதி - எளியன் இத்யாதி. “மாயையை” என்றத்தைப்பற்ற, அவதாரரஹஸ்யம் என்றது.

அமைவு - சமைவாய், அவிளம்ப்ய பலப்ரதமான வென்றபடி. ‘அமைவுடை’ என்றதுக்கு பாவம் - ஒருதர்மத்தை இத்யாதி. இப்போதே பலம்பெற தொழியிலு மொழியும்-கர்மகர்த்ருஸாதந வைகுண்யங்களாலே அநுஷ்டித்தபோதே பலம் லபியாதேபோகிலும் போம். கர்மவைகுண்யமாவது - ஜந்மாந்தரக்ருதபாபம். கர்த்ருவைகுண்யமாவது - கர்மாநுஷ்டாநாயோக்யதை. ஸாதநவைகுண்யமாவது - ஸாஸ்த்

தோடே ஸந்திப்பிக்கக்கடவ தர்மமார்க்கம் எல்லாவற்றாலும், "உயர்வறவுயர் நலமுடையவன்" என்று ஸர்வேச்வரன் குணங்களால் உயர்ந்திருக்குமா போலே 'இதுக்கு இவனுக்கவ்வருகு ஒரு வருமில்லை' என்னும்படி சமைந்திருக்கை. [அமைவுடை முதல் இத்யாதி] - ப்ரஹ்மா ஜகத் ஸ்ருஷ்டி பண்ணினால் 'ஸர்வேச்வரனோ?' என்று சங்கிக்க வேண்டும்படி யிருக்கை. இப்படி சமைவை யுடைத்தான ஸ்ருஷ்டியென்ன, அப்படி யிருந்துள்ள ஸம்ஹாரமென்ன, இடையோடி வென்ன. இடை - இடையிலே, நடுவே. ஒடிவு - ஸம்ஹாரம், அவாந்தர ஸம்ஹார மென்றபடி. இவை [அறநிலமதுவாம்] - இவை தங்களுக்கு நிலையிட்டுக் கோடுத்த ஸர்வேச்வரனையும் மறுத்துக் கேள்விகொள்ளவேண்டாதபடி மிகவும் விதேயமாம்படி சமைந்த ப்ரஹ்மாதிகளும். [யாவையும்] - அசேதநங்களும். [யாவரும்] - சேதநரும். [தானும் அமைவுடை நாரணன்] - சேதநா சேதநங்களெல்லாம் தானென்கிற சொல்லுக்குள்ளே ப்ரகாரமாய் அந்வயிக்கும்படியான சமைவை யுடையனாகையாலே நாராயணனென்னுந் திருநாமத்தை யுடையவனுடைய. [மாயையை அறிபவர்யாரே] - இவனுடைய அவதாரரஹஸ்யம் ஒருவர்க்கும் அறிய நிலமல்ல வென்கிறார். ப்ரகாரியான தான், ப்ரகாரமான வஸ்துவிலே ஒன்று 'என்மகன்' என்று அபிமாநிக்கும்படி வந்து பிறந்த இவ்வாச்சர்யம் ஒருவர்க்கும் நிலமல்ல வென்கிறார். [தானும் அமைவுடை நாரணன்] - ஒருவன் ஒருவனை 'உனக்கு ஜீவநம் என்ன வேணும்? என்றால், தன்புத்ராதிகளையுங் கூட்டிக் கோண்டு 'எனக்குக் கலநெல்லு வேணும்' என்னுநின்றானிறே; அப்படியே இவையடங்கலும் தன் 'அஹம்' சப்தத்துக்குள்ளே யடங்கி, தான் இவற்றுக்கு அபிமாநியா யிருக்கும்படியைச் சொல்லுகிறது. [அறிபவர்யாரே] - நித்யஸூரிகள் பரத்வாநுபவம் பண்ணுகையாலே அறியார்கள்; ஸம்ஸாரிகள் நாஸ்திகராகையாலே அறியார்கள்; ப்ரஹ்மாதிகள் தந்தாமறிவாலே அறிய இருக்கிறவர்களாகையாலே அறியார்கள்; மயர்வறமதிநல மருளப்பெற்றவர்கள் மோஹித்துக்கிடப்பர்கள்; ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை தானும் "ஜந்மகர்ம ச மே திவ்யம்" (ஜந்மகர்மசமே திவ்யம்) என்னுமாகையாலே ஒருவர்க்கும் நிலமல்ல வென்கிறார். (௩)

---

ரோத்தக்ரமாக நுஷ்ட்டாநம். தர்மமார்க்கம் எல்லாவற்றாலும் என்றது - தர்மம் யஜ்ஞதாநதபோரூபேண மூன்று ராசியா யிருக்கையைப் பற்ற. முழுவதும் - முழுவதினாலும். "உயர்வறவுயர்ந்து" என்றதுக்கு பாவம்- உயர்வற இத்யாதி. "அமைவுடை" என்கிற இது - முதலிலும் கெடலிலும் விசேஷணமாகிறது. இங்கு அமைவு - ஸங்கடிதத்வம். முதலென்று - மஹாப்ரளயாநந்தரகாலீநஸ்ருஷ்டியும், நித்யஸ்ருஷ்டியுஞ் சொல்லுகிறது. கெடலென்று - மஹாஸம்ஹாரமும், நித்ய ஸம்ஹாரமுஞ் சொல்லுகிறது. அவாந்தர ஸம்ஹார மென்ற இது - அவாந்தர ஸ்ருஷ்டிக்கும் உபலக்ஷணம். அறநிலமதுவாம் - மிகவும் விதேயமாம். மறுத்து - வ்யாநிஷேதம். மூன்றாம்பாதத்தில் அமைவுக்கு ஜ்ஞாநசக்திவிபாகம் அர்த்தம். நாலாம்பாதத்தில் அமைவுக்கு-"ஸமாஸம்" என்கிற ஸ்வவிபாகரூபக்ருதி அர்த்தம். பஹுவ்ரீஹிஸித்தமான அர்த்தம் - சேதநாசேதநங்கள் இத்யாதி. நிலமல்லாமை எப்படி? என்ன, "விதாவாசத்ரூண" இத்யாதி ச்ருதியை ஹ்ருதிகரித்துக்கொண்டு பாவம் - ப்ரகாரியான இத்யாதி. யொநியொநள-யொநளயொநள. தத்புருஷஸித்தமான அர்த்தம்- ஒருவன் ஒருவனை இத்யாதி. "யாரே யறிபவர்" என்றதுக்கு நித்யஸூரிகளோடு ப்ரஹ்மாதிகளோடு ஆழ்வார்களோடு ஈச்வரனோடு வாசியற ஒருவரும் அறியமாட்டார்களென்று விவக்ஷித்து, இவர்களறியாத ப்ரகாரத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார் - நித்யஸூரிகள் இத்யாதி. 'அறிபவர்யார்' என்ற ஸ்வரத்தாலே - ஒருவரும் அறியார்க ளென்றபடி. திவ்யமென்னும்- 'விலக்ஷணம்' என்று சொல்லும் இத்தனைபோக்கி, இன்னபடியென்று சொல்லமாட்டா னென்றபடி. க்ரமேண அந்வய:. (௩)

## நான்காம் பாட்டு.

யாருமோர்நிலைமையனென அறிவரியஎம்பெருமான்
யாருமோர்நிலைமையனென அறிவெளியஎம்பெருமான்
பேருமோராயிரம் பிறபலவுடையஎம்பெருமான்
பேருமோருருவமும் உளதில்லை இலதில்லைபிணக்கே.

**ஆ.**—(யாருமோர்.) ப்ரதிகூலர்க்கு அறியவரியனுமிடத்தில் அவர்கள் எத்தனையேனும் உத்க்ருஷ்டரேயாகிலும் அவர்களுக்கு, இன்ன ஸ்வபாவத்தையுடையன்' என்று அறிய அரியன். அநுகூலர்க்கு அறிய எளியனுமிடத்தில் அவர்கள் எத்தனையேனுந் தண்ணியரேயாகிலும் 'இன்ன ஸ்வபாவத்தையுடையன்' என்று அறிய எளியன். 'இன்ன ஸ்வபாவத்தையுடையன்' என்று அறிய எளியனுவதென் ? என்னில்;—அஸங்க்யேயகல்யாணகுணவிஶிஷ்டனுய், மற்றும் ஆஶ்ரித பரித்ராணர்த்தமாக அஸங்க்யேய திவ்யரூப விஶிஷ்டனென்று அறிய எளியனும். இப்படி ஓர் பேரும் ஒருருவமும் தங்களுக்குத் தோற்ருமையாலே ப்ரதிகூலர் 'இல்லை' என்ன, அநுகூலர்க்குத் தோற்றுகையாலே அவை அவர் 'உண்டு' என்ன, இப்படி விப்ரதிபந்நங்களாயிருக்கு மென்கிருர்.

ஒ.—நாலாம்பாட்டில், இப்படி யிருக்கிற திவ்யாவதாரங்கள் ஒருவர்க்குப் நிலமன்ரோ வென்னில்;—இதெல்லாம் ஆஶ்ரிதர்க்கு அத்யந்தஸுலபமாய், அநாஶ்ரிதர்க்கு அத்யந்த துர்லபமாயிருக்கு மென்கிருர்.

[யாருமென்றுதொடங்கி] - எத்தனையேனும் அறிவுடையாரேயாகிலும் அநாஶ்ரிதரால் ஒரு ஸ்த்தூலாகாரமும் அறிய அரியனுய் ஒன்றும் அறிவிலராகிலும் ஆஶ்ரிதர்க்கு இப்படிப்பட்டா னென்று பரிச்சேதிக்கலாம்படி யிருக்கும் ஸ்வபாவனுய்த் தன் குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான அநேகந்திருநாமங்களையும் மற்றும் அநேக விக்ரஹங்களையு முடையான். [பேருமென்று தொடங்கி] - இப்பேர்களிலே ஒருபேரும் ஒருவடிவுமாத்ரங்கூட அநாஶ்ரிதரில்லை யென்றிருப்பர்; ஆஶ்ரிதர் இவையெல்லாமுண்டென் றிருப்பர் ; இப்படி நித்யவிப்ரதிபந்நமாயிருக்கும். பலகாலும் 'எம்பெருமான்' என்று ஆஶ்ரிதர்க்கு எளியனுய் அநாஶ்ரிதர்க்கு அரியனுனபடியை அநுஸந்தித்திருக்கிறபடி.

ப.—அநந்தரம், அவதாரக்ருதமான அஸங்க்யேயரூப நாமங்களையுடையவனை ப்ரதிகூலர் அறியமாட்டாதே அநுகூலர் அறியவல்லராய் நித்யவிவாதமாய் நடக்கு மென்கிருர்.

பேரும் - (விக்ரஹவாசகமான) திருநாமங்களும், பிற - (அந்தநாமவாச்யங்களான) மற்ற விக்ரஹங்களும், பல ஆயிரம் உடைய - அநேகமாயிரம் உடையனுய்க்கொண்டு தோற்றி, எம்பெருமான் - எனக்கு நாதனுனவனுய், யாரும் - எத்தனையேனும் ஜ்ஞாநாதிகளால் அதிகராகிலும் அநாஶ்ரிதரால், ஓர்நிலைமையன் - ஒருபடியையுடையன், என - என்று, அறிவரிய - அறிய அரியனும்படியைக்காட்டி, எம்பெருமான் - என்னை அடிமைகொண்ட நாதனுய், யாரும் - எத்தனையேனும் அறிவிலிகளாகிலும் ஆஶ்ரிதர்க்கு, ஓர்நிலைமையன் - வ்யவஸ்த்திதஸ்வபாவன், என - என்று, அறிவெளிய - அறிய எளியனும்படியைக்காட்டி, எம்பெருமான்-என்னை அடிமைகொண்ட நாதனுனவனுக்கு, ஓர்பேரும் - ஒருபேரும், ஒருருவமும் - ஒருரூபமும், உளதில்லை - உண்டாயிருப்பதில்லையென்று ப்ரதிகூலர்க்கும், இலதில்லை - ஒருபேரும் ஒருரூபமுமில்லையாயிருப்பதில்லை யென்று அநுகூலர்க்கும், பிணக்கு - நித்யப்பிணக்காயிருக்கும்.

இங்குப் பலவிடத்திலும் "எம்பெருமான்" என்றது - அந்தவந்த உபகாரங்களாலுண்டான உகப்பாலே.

**இ.**—நாலாம்பாட்டில், இப்படி யிருக்கிற அவதார ஸௌலப்யம் ஒருவர்க்கும் நிலமன்றோ வென்னில் ;—ஆஸ்ரிதர்க்கு அத்யந்த ஸுலபமாய், அநாஸ்ரிதர்க்கு அத்யந்த துர்லபமாயிருக்கு மென்கிறார்.

[யாருமோர்நிலைமையனென அறிவரிய] - அநாஸ்ரிதர் எத்தனையேனும் அதிஸயித ஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளேயாகிலும் ஒருஸ்த்தூலாகாரமும் அறிய அரியனாயிருக்கும். தன்னையுட்புக்கறியமாட்டிற்றிலர்களேயாகிலும் ஆபாதப்ரதீதியாயும் அறியப்போகாதபடியிருக்கும்; "நேரே கடிக்கமலத்துள்ளிருந்துங்காண்கிலான் கண்ணனடிக்கமலந்தன்னை யயன்" என்னக்கடவதிறே. [எம்பெருமான்] - உகவாதார் கண்படாதபடி யிருக்கிற விடம் தன்பேறாக உகக்கிறார். [யாருமோர் இத்யாதி] - அறிவிற்குறைந்த இடைச்சிகள், குரங்குகளேயாகிலும் ஆஸ்ரிதர்க்கு இப்படிப் பட்டானென்று பரிச்சேதிக்கலாம்படி இருக்கும். [எம்பெருமான்] - ஆஸ்ரிதர்க்குக் கைபுகுந்திருக்கிற இடமும் தம்பேறாக உகக்கிறார். "நமோ நமோ வாங்ம நஸாதிபூமயே" இத்யாதி. [பேருமோராயிரம்]-ஆஸ்ரிதர்க்கு அநுபாவ்யமான குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான அநேகம் திருநாமங்களையுடையவன். [பிறபலவுடைய] - இத்திருநாமங்களைச்சொல்லிக் கூப்பிட்டார்க்குக் காட்டும் வடிவைச் சொல்லுகிறது. 'பிற' என்ன, வடிவைக்காட்டுமோ? என்னில், - நாமத்தைச் சொன்ன அநந்தரம் 'பிற' என்றால் ரூபத்தைக் காட்டுமிறே; "நாமரூபே வ்யாகரவாணி". [பேருமோருருவமுமுளதில்லை] - இவற்றிலே ஒருபேரும் ஒருருவமும் அநாஸ்ரிதர்க்கு ப்ரகாசியாமையாலே இல்லையென்றிருப்பர்கள். [இலதில்லை] - ஆஸ்ரிதர்க்கு இவையெல்லாம் ப்ரகாசித்திருக்கையாலே உண்டென்றிருப்பர்கள். [பிணக்கே] - இப்படி நித்யவிப்ரதிபந்நமாய்ச் செல்லா நிற்கும்.

ஈடு.—நாலாம்பாட்டு. இப்படியிருக்கிற அவதாரஸௌலப்யம் ஒருவர்க்கும் அறிய நிலமன்றோ? என்னில்,—ஆஸ்ரிதர்க்கு அத்யந்தஸுலபனாய் அநாஸ்ரிதர்க்கு அத்யந்த துர்லபனாயிருக்கு மென்கிறார்.

[யாரும்] - எத்தனையேனும் அதிஸயிதஜ்ஞாநராயிருக்குமவர்களேயாகிலும் ஸ்வயத்நத்தாலே காணுமன்று 'இன்னபடிப் பட்டிருப்பதொரு ஸ்வபாவத்தை யுடையவன்' என்று அறிய வொண்ணாத என்ஸ்வாமியானவன். [யாரும்] - இந்த யச்சப்தம் தாழ்ச்சிக்கு எல்லையிலே நிற்கிறது. ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களால் ஓரளவுமில்லையேயாகிலும் தானேகாட்டக் காணுமவர்களுக்குத் தன்படிகளெல்லாம் அறியலாயிருக்கும். எங்கே கண்டோம்? என்னில்,— ஒருகுரங்கு, வேடச்சி, இடைச்சி இவர்களுக்கு எளியனாயிருக்கக் கண்டோமிறே. [எம்பெருமான்] - ஆஸ்ரிதர்க்கு எளியனாய் அநாஸ்ரிதர்க்கு அரியனான என்னுடையன் நிலையிருந்தபடியேன்? என்று எழுதிக்கோடுக்கிறார்;

---

நாலாம்பாட்டு - **யாருமோர்** இத்யாதி. கீழ் 'மாயை' என்ற அவதார ரஹஸ்யமாவது - **அவதார ஸௌலப்யம்.**

முந்தின யச்சப்தம் - **உத்கர்ஷபரம்,** பிந்தின யச்சப்தம் - நிகர்ஷபரம். அவதாரிகையிற்சொன்ன ஆஸ்ரிதாநாஸ்ரிதராகிறார் - ஸ்வயத்நபரரும் நிவ்ருத்திபரரு மென்னுதல். யத்வா, அர்த்தத்வயமாதல். நிலைமை - ஸ்வபாவம். **யாரும்** - யார்க்கும். **யச்சப்தார்த்தம்** - **ஜந்மவ்ருத்த** இத்யாதி. **குரங்கு** - ஸுக்ரீவமஹாராஜர். வேடச்சி - ஸபரி. இடைச்சி - யசோதையாதல்; சிந்தயந்தியாதல். எம்பெருமானென்று பதத்வயோபாதாநம். அப்படி ஆஸ்ரிதர்க்கு எளியனாய் அநாஸ்ரிதர்க்கு அரியனாயிருக்கிற **இருப்பிலே** ஈடுபட்டு எழுதிக்கொடுத்த

“ **நமோ நமோ வாங்மநஸாதிபூமயே நமோ நமோ வாங்மநஸைகபூமயே** ” (நமோநமோ வாங்மநஸாதிபூமயே நமோநமோ வாங்மநஸைகபூமயே) என்றாற்போலே. **[**பேருமோரா யிரம்**]** - அநுபவிதாக்களுக்கு இழிந்தவிடமெல்லாம் துறையாம்படி அநேகந்திருநாமங்களையுடையனு யிருக்கை. குணத்துக்கு வாசகமாயும் ஸ்வரூபத்துக்கு வாசகமாயும் வருமவற்றுக்கு ஓரெல்லையில்லை யிறே, “**தேவோநாமஸஹஸ்ரவாந்**” (தேவோநாமஸஹஸ்ரவாந்) என்கிறபடியே. [பிறபல வுடைய]-அந்நாமத்வாராகாணும்அநேகந்திருமேனிகளையுடையனுயிருக்கை.‘பிற’என்ன, திருமேனி யைக் காட்டுமோ? என்னில்,—“**நாமரூபஞ்சபூதாநாம்**” (நாமரூபஞ்சபூதாநாம்),“**நாமரூபேவ்யாகரவாணி**” (நாமரூபேவ்யாகரவாணி) என்று நாமத்தோடே சேர ரூபத்தையுஞ் சொல்லக்கடவது. அவ்வளவேயல்ல, இவர்தாமும் இத்தை அநுபாஷிக்கிற இடத்திலே “பேரு மோருருவமும்” என்று அருளிச்செய்து வைத்தார். [பேருமோருருவமும்] - இவற்றிலே ஒருதிரு நாமமும், ஒரு விக்ரஹமும். [உளதில்லை] - அநாஶ்ரிதர்க்கு ஸ்த்தூலப்ரதிபத்தியும் அரிதாயிருக்கும். [இலதில்லை] - ஆஶ்ரிதர்க்கு எல்லாங் காணலாமாகையாலே இலதில்லை. [பிணக்கே] - ஆஶ்ரிதர் எல்லாம் காண்கையாலே மங்கலாஶாஸநம்பண்ணி நிற்பர்கள்; அநாஶ்ரிதர் இவை இல்லையென் றிருக்கையாலே முதலிலே கிட்டார்கள்; இரண்டுக்கும் நடுவே வஸ்து நித்யமாகப் பெற்றேமே! என்று தாம் இனியராகிறார். * (அன்றியே, [பேருமோருருவமுமுளது] - திருநாமமும் திருநாமத்துக்கு வாச்யமான திருமேனியும் நித்யம்; இலதில்லை. **[**இல்லைபிணக்கே**]** - இவ்விடையாட்டத்தில் விவாதம் வேண்டா வென்கிறார்). (௪)

## ஐந்தாம் பாட்டு.

பிணக்கறவறுவகைச்சமயமும் நெறியுள்ளியுரைத்த
கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம்பகவன்
வணக்குடைத்தவநெறி வழிநின்றுபுறநெறிகளைகட்டு
உணக்குமின்பசையற அவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே.

---

பேருண்டோ? என்ன, நமோநம இத்யாதி. பூமயே என்றாற்போலே இருக்கிறதென்று கூட்டிக்கொள்வது. ஆயிரமென்று - ஆநந்த்யத்தைச் சொல்லுகிறது, “ **ஶதம்ஸஹஸ்ரமயுதம் ஸர்வமக்ஷய்யவாசகம்** ” என்னக்கடவதிறே. உபபாதகம் - குணத்துக்கு இத்யாதி. ‘**ஸஹஸ்ராஸ்யஸஹஸ்ராக்ஷஸஹஸ்ரசரணோ விபு: । ஸஹஸ்ரபாஹுஸ்ஸர்வஜ்ஞோ தேவோநாமஸஹஸ்ரவாந்**’’ இதி மஹாஹாரதே பீஷ்ம:. ஸ்வரூபத்துக்கு - ஸ்வாஸாதாரணவிக்ரஹங்களுக்கு. பிற - மற்றவை; திருநாமங்களுக்கு அர்த்தமாயிருக் கிற திருமேனிகளென்றபடி. நாமத்வாரா காணும் - நாமத்வாரா அறியப்படுகிற. ‘பேரும்’ என்ற அநந்தரம் ‘பிற’ என்கிற இது - ரூபவாசியென்னுமதுக்கு நியாமகம் - பிறவென்ன இத்யாதி. “ **நாமரூபஞ்ச பூதாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம் । வேதஶப்தேப்ய ஏவாதௌ தேவாதீநாஞ்சகார ஸ:**” இதி ப்ரதமேம்ஶே பஞ்சமே. சாந்தோக்யே, “ **அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்யநாமரூபேவ்யாகரவாணி**” **தேவாதீநாம் பூதாநாம் நாமதேயம் ரூபஞ்ச க்ருத்யாநாம் ப்ரபஞ்சநம்.** க்ருத்யங்கள் -செயல்கள். ப்ரபஞ்சநம் - வெளியிடுகை. நியாமகாந்தரம்-அவ்வளவே இத்யாதி. ஓர்பேரும் ஓர் உருவமுமென்று அந்வயம். ஸ்தூலப்ரதிபத்யபாவ: - தர்மிக்ரேஹிஜ்ஞாநாபாவ:. பிணக்கே - பிணக்குண்டோ? இல்லையென்று ஶப்தார்த்தம். ஏகாரம் - பிரிநிலையேகாரம். பிணக்கில்லையென்று உகக்கிறு ரென்கிறர் - ஆஶ்ரிதரெல்லாம் இத்யாதி. பிணக்கு - விவாதம். அன்றிக்கே, பிணக்கே - பிணக்காயிருக்கும். இப்படி ஆஶ்ரிதர்க்கும் அநாஶ்ரிதர்க்கும் நித்யவிவாதமா யிருக்கு மென்றுமாம். நித்யமாக - நிரவத்யமாக. க்ரமேண அந்வய: (௪)

---

* குண்டலிதக்ரந்தம் அடையவனைக்தான் அரும்பதத்துக்குச் சேரும்.

**ஆ.**—(பிணக்கற.) இப்படி விப்ரதிபத்தியுண்டாயிருந்தவிடத்தில் இவனுடைய உண்மையை நிஸ்சயிக்கும்படி யெங்ஙனே? என்னில்,—அந்த ப்ரதிகூலஷட்ஸமயங்களுக்கும் அநுகூலரான வைதிகர்க்கும் இப்படியுள்ள விப்ரதிபத்தி தீரும்படி வேதமார்க்கத்தை உள்ளபடியே அநுஸந்தித்து, ஸாங்கமான ஸகலவேதங்களுக்கும் தானே ப்ரதிபாத்யனென்னுமிடத்தையும், அபௌருஷேயமாகையாலே நிர்த்தோஷமான வேதத்தோடே விரோதிக்கையாலே இதரஸமயங்கள் ப்ரமாணமன்றென்னுமிடத்தையும், ஸ்வாபாவிகஸார்வஜ்ஞ்யாதி ஸகலகல்யாணகுணோபேதனை தானே ஸ்ரீகீதையிலே அருளிச்செய்தருளினான்; இப்படி வேதார்த்தத்தை உள்ளபடியே வ்யக்தமாக்கின இம்மஹாகுணத்தை யுடையனை எம்பெருமான்திறமான பக்தியோகத்திலே நின்று ப்ராக்ருதவிஷயங்களாகிற களையைக் கடிந்து, அவற்றின் ஸங்கத்தையும் விடுங்கோள். எங்ஙனே விடும்படியென்னில்,—அவன் அருளிச்செய்தருளின ஸ்ரீகீதையாலே ஸமஸ்தகல்யாணகுணாத்மகனை அவனை உணர்ந்து வ்யதிரிக்தஸங்கத்தை விடுவதென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், இப்படி அவன் தூரஸ்த்தனாகையாலே ஆஸ்ரயிப்பார்க்கு துர்லபனென்னுமிடத்தைப் பரிஹரித்து, ஆழ்வார், ஸ்ரீகீதையில் அருளிச்செய்தபடியே பக்தியோகத்தாலே எம்பெருமானை ஆஸ்ரயியுங்கோளென்கிறார்.

[பிணக்கற என்று தொடங்கி] - ஷட்ஸமயங்களுக்கும் வைதிகஸமயத்துக்கும் அந்யோந்ய விரோதத்தாலுள்ள பிணக்கு அறும்படி வேதமார்க்கத்தாலே ஆராய்ந்து அருளிச்செய்த பரமோதாரன். [அந்தமிலாதியம்பகவன்] - தனக்கு அந்தமின்றி எல்லார்க்கும் தான் ஆதியாய் ஸ்வாபாவிகமாய் ஹேயப்ரத்யநீகமான ஜ்ஞாநாதி கல்யாணகுணபரிபூர்ணன். இங்ஙனே சொல்லிற்று, இவன் சொல்லியதை விஸ்வஸிக்கலாம்படி இவனுடைய ஆப்ததமத்வம் தோற்றுகைக்காக. [வணக்கென்று தொடங்கி] - பக்தியோகத்தை நிரந்தரமாக அநுஷ்டித்து பாஹ்ய விஷயங்களாகிற விரோதிகளைத் தவிர்த்து அவற்றின் ருசியையும் ஸவாஸநமாக விடுங்கோள்; ஆஸ்ரிதர்க்கு இனிதாயிருந்ததேயாகிலும் இத்தைப் பெருவருத்தமாகக் கொள்ளும் பகவதபிப்ராயத்தாலே 'தவநெறி' என்கிறது. [அவனுடையுணர்வுகொண்டுணர்ந்து]-பக்திரூபதத்விஷய ஜ்ஞாநத்தாலேயாதல், அவன் அருளிச்செய்த சரமஸ்லோகோக்தமான உபாயஜ்ஞாநத்தாலேயாதல்.

ப.—அநந்தரம், இப்படி ஸுலபனானவனை ஆஸ்ரயிப்பது அவன்அருளிச்செய்த கீதோபநிஷத்ப்ரமாணஸித்தமான பஜநத்தாலே யென்கிறார்.

அறுவகைச்சமயமும் பிணக்கற - அறுவகைச்சமயமும் (தன்னில் தானும் வைதிகரோடும்) பிணக்கறும்படி, நெறி - வேதமார்க்கத்தை, உள்ளி - ஆராய்ந்து, உரைத்த - அருளிச்செய்த, கணக்கறு நலத்தனன் - எண்ணிறந்த ஔதார்யாஸ்ரித வாத்ஸல்யாதி கல்யாணகுணங்களையுடையனாய், அந்தமில் - முடிவில்லாத, ஆதி - முதலாகையாலே நித்யனாய், அம் - ஹேயப்ரதிபடனாய், பகவன் - (கல்யாணரூபமான ஜ்ஞாநஸக்த்யாதிகுணவிஸிஷ்டனான) பகவானுடைய, வணக்கு உடை - நமஸ்யாதிகளை உடைத்தான, தவநெறிவழி - பக்திமார்க்கத்திலே, நின்று - நிலைநின்று, புறநெறி - ("ஈநூ|ாவாவொவிஉ—ஹய" என்கிற) அல்லாத வழிகளாகிற, களை - களையை, கட்டு - அறுத்து, அவனுடை - அவனுடைய விஷயமான, உணர்வுகொண்டு - பக்திரூப ஜ்ஞாநத்தைக்கொண்டு, உணர்ந்து - தர்ஸித்து, பசை - (வாஸநாரூபமான) பசை, அற - அறும்படி, உணக்குமின் - உலர்த்திவிடுங்கோள்.

**இ.**—அஞ்சாம்பாட்டில், இப்படி ஆஸ்ரயணீயன் ஸுலபனானபின்பு ஆஸ்ரயிக்கும் வழியென்? என்ன,-அவன் ஸ்ரீகீதையிலே அருளிச்செய்துவைத்த பக்திமார்க்கத்தாலே ஆஸ்ரயியுங்கோளென்கிறார்.

[பிணக்கற அறுவகைச்சமயமும்] - ஆறுவகைப்பட்ட பாஹ்யஸமயத்துக்கு வைதிக ஸமயத்தோடு உண்டான பிணக்கு அற. [நெறியுள்ளியுரைத்த] - வேதமார்க்கத்தை ஆராய்ந்து அருளிச்செய்தபடி. "வாஸுதேவஸ்ஸர்வம்" என்று தான் சொன்னதடங்க வழியாயிருக்க ப்ரஜைகள்பக்கல் பரிவாலே, ஓரர்த்தம்போதியாதவன் நிரூபிக்குமாபோலே ஆராய்ந்து அருளிச்செய்தபடி. [கணக்கறுநலத்தனன்] - எல்லையிறந்த ஔதார்யகுணங்களை யுடையவன். [அந்தமிலாதி] - தனக்கு முடிவின்றிக்கே எல்லார்க்கும் காரணபூதனாயிருக்கும். [அம்பகவன்] - ஹேயப்ரத்யநீகமான ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணனாயிருக்கை. இத்தால் - உதாரனாய் ப்ராப்தனாய் ஆப்தனாயிருந்தவன் வார்த்தையாகையாலே விஸ்வஸநீய மென்கை. [வணக்குடைத்தவநெறிவழி நின்று] - வணக்கத்தையுடைய பக்திமார்க்கமாகிற வழியிலே நிலைநின்று. பக்திஸரீரத்திலே "மாம் நமஸ்குரு" என்கையாலே "வணக்குடை" என்கிறது. தபஸ்ஸப்தத்தாலே பக்தியைச் சொல்லிற்று; பக்தி ஜ்ஞாநவிஸேஷமாகையாலே "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" என்கிற ந்யாயத்தாலே யென்னுதல்; இவனுடைய ப்ரேமமாத்ரத்தையே குவாலாக நினைத்திருக்கும் அவனபிப்ராயத்தாலேயாதல். [புறநெறிகளைகட்டு] - இதுக்கு விரோதியான ஸப்தாதிவிஷயங்களிற் போகிற வழியாகிற களையைக் கடிந்து - பறித்து. இத்தை 'நெறி' என்பானென் ? என்னில்; - இருந்ததே குடியாகப்போகிற மஹாபதமாகையாலே; துர்மார்க்க மென்னக் கடவதிறே. [உணக்குமின் பசையற] - பறித்தாலும் கிடந்திடத்தே கிடக்குமாகில், பருவம் செய்யுமிறே. அதுக்காக ஸவாஸநமாக விடுங்கோள். இது செய்வது என்கொண்டு? என்னில்; - [அவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே] - ததுக்தஜ்ஞாநம், தத்விஷயஜ்ஞாநமென்னுதல். அவனை விஷயீகரித்த ஜ்ஞாநத்தைக் கொண்டு விலக்ஷணவிஷயத்திலே நெஞ்சைவைத்து, இவற்றின் தோஷத்தை தர்ஸித்து விடுங்கோள். அவனை ஸரணம்புக்கு, இவற்றை ஸவாஸநமாக விடுங்கோளென்னவுமாம். "தாநிஸர்வாணிஸம்யம்ய", "மாமேகம் ஸரணம் வ்ரஜ" சரமஸ்லோகத்தின்படியே.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. பலகாலும் பஜியுங்கோ ளென்றுநின்றீர்; பஜநோபாயம் இருக்கும்படியை அருளிச்செய்யீ ரென்ன, இன்று நான் உபதேஸிக்கவேணுமோ? அவன்தான் ஸ்ரீ கீதையிலே அருளிச்செய்த பக்திமார்க்கத்தாலே அவனை ஆஸ்ரயியுங்கோ ளென்கிறார்.

[பிணக்கற அறுவகைச்சமயமும்]-வைதிகஸமயத்துக்கும் பாஹ்யஷட்ஸமயங்களுக்கும் தன்னில்தானுண்டான பிணக்கு அறும்படியாக. [நெறியுள்ளியுரைத்த] - தான்சொல்லிற்றடைய வேதார்த்தமா யிருக்கச்செய்தே, தந்தாமுக்கென்ன ஓரர்த்தம் போதியாதார் ஆராய்ந்துசொல்லுமாபோலே விசாரித்து அருளிச்செய்தான். அதுக்கு நினைவேன்? என்னில்;—அஹ்ருதயமாகச் சொல்லிலும் நன்றாயிருக்கச்செய்தே, ப்ரஜைகளுடைய ஹிதத்தி லுண்டான ஆதராதிஸயத்தாலே, சடக்கெனச் சொன்னால் 'வாய்வந்தபடிசொன்னான் நிரூபியாதே' என்பர்களென்று ஆராய்ந்துசொன்னானாகச் சொன்னபடி. [கணக்கறுநலத்தனன்] - எல்லையில்லாத குணத்தையுடையவ னென்னுதல், எல்லையில்லாத ஸ்நேஹத்தையுடையவ னென்னுதல்; ஆர் இரக்கச் செய்தான்? தன் வாத்ஸல்யத்தாலே அருளிச்செய்தா னித்தனையிறே. வாத்ஸல்யத்தாலே சொல்லிற்றெல்லாம் அர்த்தமாமித்தனை

---

அஞ்சாம்பாட்டு - பிணக்கறஇத்யாதி. அறுவகைச்சமயம் - ஸாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணக கபில பதஞ்சலிமதங்கள். 'உள்ளி' என்று விஸேஷித்ததுக்கு பாவம் - தான்சொல்லிற்று இத்யாதி. "வாஸுதேவஸ்ஸர்வம்" என்றதிலே நோக்கு. போதியாதார் - தேற்றாதார். சடக்கென - ஸீக்ரமாக. ஆதராதிஸயத்தாலே - ஆராய்ந்து சொன்னானென்று அந்வயம். ப்ரதமார்த்தத்துக்கு 'நலம்' என்று - ஜாத்யேகவசநம். ஸ்நேஹமென்றதுக்கு பாவம்-ஆர்இரக்க இத்யாதி. ஸிஷ்யஸ்நேஹமென்றது - வ்யாஜமாத்ரம்; ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் இத்யாதி. வாத்ஸல்யம் - ஸ்நேஹம். அர்த்தமாமித்தனையோ - யதார்த்தத்வமும் வேண்டாவோ? என்னி

யோ? என்னில்,—[அந்தமிலாதி] - ஆப்ததமன். எல்லார்க்கும் உத்பத்தி விநாஶங்களாலேயிறே ஜ்ஞாநஸங்கோசம் பிறப்பது; இவனுக்கு அவையில்லாமையாலே அகர்மவஶ்ய னென்கிறது. [அம் பகவன்] - ஜ்ஞாநாதிகளால் அல்பம்உத்கர்ஷமுடையவன்பக்கலிலே பகவச்சப்தம் வர்த்தியாநின்ற திறே; **“அந்யத்ர ஹ்யுபசாரத:”** (அந்யத்ரஹ்யுபசாரத:) பகவச்சப்தம் முக்யமாக வசிப்பது இவன்பக்கலிலே, அல்லாதார்பக்கல் ஔபசாரிகம். [அம்பகவன்வணக்குடைத் தவநெறிவழி நின்று] - **“ நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா ”** (நமஸ்யந்தஶ்சமாம்பக்த்யா) என்று பக்திஶரீரத்திலே நின்று அருளிச்செய்தானிறே. அங்கநாபரிஷ்வங்கம்போலே போகரூபமாயிறே இதுதான் இருப்பது. [வணக்குடைத்தவநெறிவழிநின்று] - வணக்கத்தையுடைய பக்திமார்க்கமாகிற வழியிலே நின்று. பக்திஶரீரத்திலே**“மாம் நமஸ்குரு”** (மாம்நமஸ்குரு) என்கையாலே “வணக்குடை” என்கிறது. தபஶ்ஶப்தத்தாலே-பக்தியைச் சொல்லிற்று,பக்தி ஜ்ஞாநவிஶேஷமாகையாலே. **“யஸ்ய ஜ்ஞாநமயம் தப:”** (யஸ்யஜ்ஞாநமயம்தப:) என்கிற ந்யாயத்தாலே யென்னுதல், இவனுடைய ப்ரேம மாத்ரத்தையே தவாலாக நினைத்திருக்கும் பகவதபிப்ராயத்தாலே யாதல். [புறநெறிகளைகட்டு] - புறநெறியாகிற களையைக் கடிந்து - பறித்து. கட்டல் - களைதல். பக்திவிஷயமானபோது, ஃபலாந் தரத்திலே போம் விலக்கடிகளைத் தள்ளி என்றுகிறது; ப்ரபத்திவிஷயமானபோது,இதரஸாதநங்களைத்

---

லென்றபடி. ஆத்யந்தராஹித்யத்தாலே யதார்த்ததர்ஶித்வமும் ஸூசிதம். ஏதத்பலிதம் - ஆப்ததமன் என்று. விவரணம் - எல்லார்க்கும் இத்யாதி. உத்பத்தி விநாஶங்களாலே - தத்தேதுபூதகர்மங்களாலே. அவையில்லா மையாலே - அத்தக்கர்மங்களில்லாமையாலே. அகர்மவஶ்யன் - ஜ்ஞாநஸங்கோச ரூப கர்மவஶ்யதை யில்லை. ‘ பகவன் ’ என்ன அமையாதோ? ‘ அம்பகவன் ’ என்ன வேணுமோ ? என்ன, ஜ்ஞாநாதிகள் இத்யாதி. ‘அம்’ என்றதின் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் - அந்யத்ர இத்யாதி. அம் - அழகு. முக்யதையே அழகென்று கருத்து. “ தத்ர பூஜ்யபதார்த்தோக்திபரிபாஷாஸமந்வித:। ஶப்தோயம் நோபசாரேண ஹ்யந்யத்ர ஹ்யுபசாரத:”இதி ஷஷ்டாம்ஶே வாஸுதேவாபித்யாயாம். பூஜ்யபதார்த்தோக்தி: யோக: பரிபாஷா ரூடி: தத்ர நாராயணே அந்யத்ர இத்யாதிக்கு பாவம் - பகவச்சப்தம் இத்யாதி. அல்லாதார்-ப்ரஹ்மாதிகள். வணக்குடைத்தாயிருக்குமோ தவநெறி? என்ன, நமஸ்யந்தஶ்ச இத்யாதி. “ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்ருடவ்ரதா:। நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே”இதி கீதாஸு நவமே. மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு। மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:”இதி தஸ்யைவ.பக்திஶரீரத்திலேநின்று - பக்திஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறவிடத்திலே தானே நின்று. அம்பகவன் விஷயமான வணக்குடைத் தவநெறி யென்று கூட்டி பாவம்-அங்கநாபரிஷ்வங்கம் இத்யாதி.குணவத்விஷயமாகையாலே போகரூபமாயிருக்கு மென்றபடி. ஶப்தார்த்தம்பண்ணுகைக்காக மீளவும் ப்ரதீகோபாதாநம் - வணக்குடை இத்யாதி. வணக்குடைத்தா யிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணாந்தரம்-பக்திஶரீரத்திலே இத்யாதி; பக்திப்ரதிபாதநஸ்த்தலத்திலேயென்றபடி. பக்தி ஜ்ஞாநவிஶேஷமாகையாலே“தப ஆலோசநே”இதி ஹி [illegible]. [illegible] ‘யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்யஸ்ய ஜ்ஞாநமயம் தப:”. தவாலாக-தபஸ்ஸாகவாதல், அதிகமாகவாதல். பகவத பிப்ராயத்தாலே யென்றது - ஸாதநபக்திபக்ஷத்தில் அங்குராவஸ்த்தையைப்பற்ற. ஸாத்யபக்தியானபோது ஸ்வரஸம். அன்றிக்கே, யோஜநாத்வயமும் பக்திப்ரபத்தியோஜநாத்வத்தைப்பற்ற வாதல். கட்டு - பிடுங்கி. விலக்கடிகள் - காம்யங்கள். ப்ரபத்திவிஷயமானபோது ‘தவநெறி’ என்றவிடத்தில், தபஶ்ஶப்தம் - ‘தபஸா ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:” என்கிறபடியே ப்ரபத்திபரம். மேலே “அவனுடையுணர்வு கொண்டு” என்றத்தோடு புநருக்தமாகாமைக்காக, தவநெறிவழிநின்று என்றது - அத்யவஸித் தென்றபடி. ப்ரபத்திவிஷயமானபோது என்கையாலே ப்ரபத்திபரமாக யோஜிப்பது. அப்போது, வணக்குடைத்தவநெறி

தள்ளி என்றுகிறது. [உணக்குமின் பஸையற] - "ரஸவஜூம்" (ரஸவர்ஜம்) என்கிறபடியே பாஹ்யவிஷய ப்ராவண்யத்தை ருசிவாஸநைகளோடே விடுங்கோள். இதெல்லாம் என்கொண்டு தான்? என்னில்,—[அவனுடையுணர்வுகொண்டுணர்ந்து] - தத்விஷயஜ்ஞாநத்தைக்கொண்டு என்னுதல், ததுக்தஜ்ஞாநத்தைக்கொண்டு என்னுதல், பக்திமார்க்கத்தைக் கொண்டு என்னுதல், அவன் அருளிச்செய்த சரமஸ்லோகத்திற்படியைப் பற்றிநின்று என்னுதல். (ரு)

## ஆறாம் பாட்டு.

உணர்ந்துணர்ந்து இழிந்தகன்று உயர்ந்துருவியந்தவிந்நிலைமை
உணர்ந்துணர்ந்துணரிலும் இறைநிலைஉணர்வரிதுஉயிர்காள்!
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து அரியயனரனென்னுமிவரை
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து இறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே.

ஆ.—(உணர்ந்துணர்ந்து.) ஜ்ஞாத்ருத்வைக ஸ்வரூபமாய், ஜ்ஞாநதஸ்ஸர்வகதமாய், ப்ரக்ருதிநிர்முக்தமாயிருந்த பரிஶுத்தாத்மஸ்வரூபத்தை உள்ளபடியே விஶதமாய் உணரிலும் ஆஶ்ரித ஸமாஶ்ரயணீயத்வார்த்தமாக தேவமநுஷ்யாதி ரூபேண அவதீர்ணனான இந்த ஸர்வேஶ்வரனுகிறான் ப்ரஹ்மாவோ ருத்ரனோ நாராயணனோ என்று அறிகை அரிது. ஆகில் எங்ஙனே அறியும்படி? என்னில்;—அரியயனரனென்னு மிவர்திறமாக ப்ரஹ்மஶாஸ்த்ர ஶ்ரவண மநநங்களைப் பண்ணுவது; இப்படி ப்ரஹ்மஶாஸ்த்ர ஶ்ரவணமநநங்களைப் பண்ணவே அவர்களில் ஒருவன் ஈஶ்வரன் என்று தோற்றும்; அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

---

யென்று - "ஶ்ரஶ்யூஶேநம்ஶரணம்" என்று உபதேஶிக்க, "ஓ ளவஷ்யாஸஹிதாஸ்யெஷநஶேஷ கூ ஜஷநாஷஷநஷ" என்று அநுஷ்ட்டாநதஶையில் சொன்ன காயிகநமஸ்காரத்தையுடைத்தான, "தவஸாஶீ ரிகூரோஹஃ" என்கிற தபஶ்ஶப்தவாச்யமான அத்வேஷரூப ப்ரபத்தியைச் சொல்லுகிறது. பக்திபரமான பக்ஷத்தில், காம்யபலங்களில் ருசிவாஸநைகளை விடுங்கோளென்கிறார் -ரஸவஜூம் இத்யாதி. 'விஷயாவிநி வதஷெ நிராஹாரஸ்யெஹிநஃ। ரஸவஜூம் ரஸொவ்யஸ்யவரஂஷ்ட்வா நிவதஷெத" இதி கீதாஸூ த்விதீயே. ரஸவஜூம் என்கிறபடியே-"ரஸொவ்யஸ்யவரஂஷ்ட்வா நிவஷதெ த"இதி ஶ்லோகத்தின்படியே. இத்தால் - நிராஹாராதிகளாலே விஷயாக்ருத்தை நிவர்த்திப்பித்துக்கொண்டு, பகவத் ஸாக்ஷாத்காரத்தாலே ருசிவாஸநைகளைப் போக்கிக் கொள்ளுங்கோள் என்றபடி. ப்ரபத்திபரமானபோது, உபாயாந்தரங்களில் ருசிவாஸநைகளைப் பஸையறவுணக்குமி னென்று கண்டுகொள்வது. தபஶ்ஶப்தோக்தார்த்த த்வயாநுகுண்யேனார்த்தத்வயம்-தத்விஷயஜ்ஞாந இத்யாதி. உக்தார்த்த த்வய விவரணம்-பக்திமார்க்க இத்யாதி. ததுக்தஜ்ஞாநம் என்கிறது - ப்ரபத்தியை. தத்விஷயஜ்ஞாந மென்கிறது - பக்தியை. பக்திபரமானபோது, கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம்பகவ னறுவகைச்சமயமும் பிணக்கற நெறியுள்ளியுரைத்த வணக்குடைத் தவநெறிவழிநின்று. அதாவது - உபக்ரமதஶையில் அத்யவஸித்து. அவனுடையுணர்வுகொண்டுணர்ந்து - அநுஷ்டாநதஶையில் ஜ்ஞாநத்தை ப்ராபித்து. புறநெறி களைகட்டுப் பஸையறவுணக்குமின் இத்யந்வயஃ. அன்றிக்கே - ப்ரபத்திபரமானபோது, அறுவகைச்சமயமும் பிணக்கறவென்று தொடங்கி, அம்பகவனனவனுடைய உணர்வுகொண்டு உணர்ந்து வணக்குடைத்தவநெறிவழிநின்று, புறநெறி களைகட்டுப் பஸையற உணக்குமின் உதந்வயோவா. நெறி - வேதமார்க்கம். சமயமும் - ஸமயத்துக்கும். பிணக்கு - விவாதம். உணக்குமின் - உலர்த்திவிடுங்கோள். (ரு)

ஒ.—ஆறும்பாட்டில், ஸர்வேஶ்வரன் ஸுலபனாகைக்காக ப்ரஹ்ம ருத்ரர்களோடு ஸஜாதீயனாய்த் திருவவதாரம் பண்ணுகையாலே ஸமாஶ்ரயணீயன் இன்னான் என்று நிர்ணயிக்க வொண்ணுமே பழைய துர்லபத்வஶங்கை மீளவும் ப்ரஸங்கிக்க, மூர்த்தித்ரய நிர்ணயோபாயத்தைச் சொல்லிக்கொண்டு அந்த தௌர்லப்யத்தைப் பரிஹரிக்கிறார்.

[உணர்ந்து உணர்ந்து] - வீப்ஸையாலே ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் ஆகந்துகமன்று, ஸ்வாபாவிக நித்யதர்மம் என்கிறது. [இழிந்தென்று தொடங்கி] - ஸ்வஜ்ஞாந ப்ரபையாலே பத்துத்திக்கும் வ்யாபித்து ப்ரக்ருதிவியுக்தமாய்க்கொண்டு இப்படியிருக்கிற ஆத்மாவின்நிலைமையை ஶ்ரவணமநநாதிகளாலே ஸாக்ஷாத்கரிக்கக்கூடிலும் ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மருத்ரர்களோடொக்கத் தன்னை ஸங்கோசித்துக்கொண்டு நிற்கையாலே இவர்களில் ஈஶ்வரன் இன்னான் என்று அறிகை அரிது. [உணர்ந்தென்று தொடங்கி] - குணரூபநாமாதிகளாலும் தத்ப்ரதிபாதகமான ப்ரமாணங்களாலும் இவர்கள் மூவரிலும் எவன் ஈஶ்வரனென்று மிகவும் ஆராய்ந்து ஈஶ்வரதயா நிர்ணீதனானவனை மநநாதிகளாலே ஹ்ருதயத்திலே ப்ரதிஷ்டிதனாம்படி அநுஸந்தித்து ஆஶ்ரயியுங்கோள்.

ப.—அநந்தரம், ப்ரஹ்மருத்ரமத்யகதமான ப்ரதமாவதாரம் தத்ஸஜாதீயபுத்தி விஷயமாகையாலே விவேகிக்க அரிது, அத்தை விவேகித்து ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உணர்ந்துஉணர்ந்து - (ஜ்ஞாத்ருத்வஸ்வபாவனாகையாலே என்றுமொக்க) உணருகையே ஸ்வபாவமாகவுடையனாய், இழிந்தகன்றுயர்ந்து - (அந்த ஜ்ஞாநம் நிஷ்க்ருஷ்டவேஷத்தில் அபரிச்சிந்நமாகையாலே தத்த்வாரா) பத்துத்திக்கிலும் வ்யாபித்து, உரு - ரூபயோக்யமான அசித்திற் காட்டில், வியந்த - வேறுபட்டிருக்கிற, இந்நிலைமை - இந்த ஆத்மாவின் நிலைமையை, உணர்ந்து - (ஶ்ரவணத்தாலே) உணர்ந்து, உணர்ந்து - (அதுக்குமேலே மநநத்தாலே) உணர்ந்து, உணரிலும் - (யோகத்தாலே ஸாக்ஷாத்கரித்து) உணர்ந்தாலும், இறைநிலை - ஸர்வேஶ்வரன் (ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே தன்னை மறைத்துநிற்கிற) நிலை, உணர்வரிது - விவேகித்தறிய அரிது; உயிர்காள் - (சேதநரானபடியாலே) விவேகித்தறியும் ஸ்வபாவரானவர்களே! அரியயனரனென்னுமிவரை - அரி அயன் அரனென்று ப்ரஸித்தரானவர்களை, உணர்ந்துணர்ந்து - (அவர்கள் குணவிபூத்யாதிகளையிட்டுப்)பலகாலும் ஆராய்ந்து, உரைத்துரைத்து - (தத்ப்ரதிபாதகமான ப்ரமாணங்களையும் பலகாலும்) வ்யவஹரித்துப் பார்த்துப்பார்த்து, மனப்பட்டதொன்று - நெஞ்சில் ஈஶ்வரனாகப்பட்டதொருவஸ்துவை, ("வ்யாஹார நாநோ வ்யூஹந்" என்கிறபடியே), உணர்ந்துணர்ந்து - (தத்குணவிக்ரஹாதிகளைப்) பலகாலும் அநுஸந்தித்து, உரைத்துரைத்து - (தத்வாசகமான மந்த்ரநாமாதிகளைப்)பலகாலும் வ்யவஹரித்து, இறைஞ்சுமின் - உபாஸியுங்கோள்.

இயத்தல் - வேறுபாட்டாலே விலக்ஷணமாயிருத்தல். 'இந்நிலைமை' என்று உக்தப்ரகாரவைலக்ஷண்யம் ஆத்மாவுக்கொழிய வில்லை என்கிற ஸம்ப்ரதிபத்தியைச் சொல்லுகிறது.

இ.—ஆறும்பாட்டில், "ஜேஷ்ட்விஷிணுஜிஷிஸம்பூயஶோவதாரஃ" என்று ப்ரதமாவதாரம் ப்ரஹ்மருத்ராதி ஸஜாதீயமாயிருக்கையாலே பிரித்து ப்ரதிபத்திபண்ண அரிதாகையால் பழைய துர்லபத்வமே ஸம்பவித்திருந்ததீ! என்ன, த்ரிமூர்த்திஸாம்யத்தைப் பரிஹரிக்கிறார்.

[உணர்ந்துஉணர்ந்து] - உணர்வென்னாதே 'உணர்ந்து' என்கையாலே - 'ஜ்ஞப்திமாத்ரம் வஸ்து' என்கிறவனை நிரஸிக்கிறது. வீப்ஸையாலே - ஆகந்துக சைதந்யவாதியை நிரஸிக்கிறது. ஜ்ஞாத்ருத்வம் நித்யதர்மமாகையாலே-"ஜ்ஞாநக்ரியாகர்த்ருத்வம் ஜ்ஞாத்ருத்வம்" அதுதான் அநித்யம்' என்கிற க்ரியாவாதியையும் நிரஸிக்கிறது. [இழிந்தகன்று உயர்ந்து] - தான் அணுபரிமாணனாயிருக்க ஸ்வஜ்ஞாநத்தாலே பத்துத்திக்கையும் வ்யாபித்திருக்கும். "வாலாக்ர ஶததாகஸ்ய",

இத்யாதி. [உருவியந்த] - ஆகையாலே ஜடமான அசித்திற்காட்டில் வியந்திருக்கும் - வேறுபட்டிருக்கும். 'உருவு' என்று பதபேதமானபோது, இயத்தல் - கடத்தலாய், கடந்திருக்கு மென்னவுமாம். வேறுபாடுதான் ப்ரகாரித்வ ப்ரமாத்ருத்வ நியந்த்ருத்வங்களாலே. [இந்நிலைமை]- ஸந்நிஹிதனான ஆத்மாவினுடைய ஸ்த்திதி. [உணர்ந்துஉணர்ந்துஉணரிலும்] - ஶ்ரவணமநநாதிகளாலே ஸாக்ஷாத்கரித்தாலும். [இறைநிலையுணர்வரிது] - ஈஶ்வரன் ப்ரஹ்மருத்ரர்களோடொக்கத் தன்னை ஸங்கோசித்து நிற்கையாலே ஈஶ்வரன் இன்னானென்று அறிகை அரிது. [உயிர்காள்] - சேதநராயுள்ளீர்காள்! ஜடவஸ்துவாய் அறியாதொழியப் பெற்றதில்லை. சேதநராய் ஜ்ஞாதவ்யங்களை அறியப்பெற்றதில்லை. உங்கள் நிலையிருந்தபடி யென்? நீர் அறிவிக்க அறியப்பார்த்த எங்களுக்கு அவ்வருமை உண்டோ? என்ன, ஆகில் கேளுங்கோளென்கிறார். [உணர்ந்தென்று தொடங்கி] - அரியயனரனென்னு மிவரை உணர்ந்துஉணர்ந்து உரைத்துஉரைத்து-இவர்களுடைய குணரூபவிபூதிநாமாதிகளையும் தத்ப்ரதிபாதகமான ப்ரமாணங்களையும் மிகவும் ஆராய்ந்து. [உணர்ந்துஉணர்ந்து இத்யாதி]-மனப்பட்டதொன்றை உணர்ந்துஉணர்ந்து உரைத்து உரைத்து இறைஞ்சுமின் - உங்களுக்கேற ஈஶ்வரதயா நிர்ணீதமான வஸ்துவை மநநாதிகளாலே அநுஸந்தித்தும், தத்வாசகமான நாமங்களை உச்சரித்தும் ஆஶ்ரயியுங்கோள். "வ்யாஹரந் நாமதேயாநி" [illegible].

ஈடு.—ஆறும்பாட்டு. அவதாரத்திலே ஆஶ்ரயியுங்கோளென்று நின்றீர்; "மத்யே விரிஞ்சகிரிஶம் ப்ரதமாவதாரஃ" (மத்யேவிரிஞ்சகிரிஶம்ப்ரதமாவதாரஃ) என்கிறபடியே ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே அவதீர்ணனாய்நிற்கிற நிலையாயிருந்தது ப்ரதமாவதாரம்; அதில் மூவரும் ஒத்த கார்யத்திலே அதிகரித்துநின்றார்கள்; இப்படி நிற்கையாலே, மூவரும் ப்ரதாநரோ? மூவரிலே ஒருவன் ப்ரதாநனோ? மூவர்க்கும்அவ்வருகே ஒருவன் ப்ரதாநனோ? என்று எங்களால் விவேகிக்கப்போகாமையாலே ஆஶ்ரயணத்திலே அருமைகூடும்படியாயிருந்தது; ஆஶ்ரயணீயவஸ்துவை நிரூபித்துத் தரலாகாதோ நாங்கள் ஆஶ்ரயிக்கும்படி ? என்ன,—'காண்கிற தேஹமே ஆத்மா' என்றிருக்கும் நிலை தவிர்ந்து, 'தேஹாதிரிக்தமா யிருப்பதோரு ஆத்மவஸ்து உண்டு' என்று அறிகைதானே அரிது; வருந்தி அத்தை யறிந்தானேயாகிலும், ப்ரஹ்மருத்ராதிகளை ஶரீரமாகக்கோண்டு தான் ஶரீரியாய்நிற்கிற ஸர்வேஶ்வரன்படிதானே யறியப்போகாது ; ஆனபின்பு, இவ்வழியே இழிந்து ஆஶ்ரயிக்கப் பாருங்கோள் என்று, ஆஶ்ரயணீயவஸ்து இன்னதென்றும், ஆஶ்ரயிக்கும் ப்ரகாரம் இன்னதென்றும் அருளிச்செய்கிறார்.

[உணர்ந்து]- உணர்வு என்னாதே "உணர்ந்து" என்கையாலே, 'ஜ்ஞப்திமாத்ரமே யுள்ளது, ஜ்ஞாத்ரம்ஶ மில்லை' என்கிற பக்ஷத்தைத் தவிர்க்கிறது. "உணர்ந்துணர்ந்து" என்கிற வீப்ஸைக்குக்

---

ஆறும்பாட்டு—உணர்ந்து இத்யாதி. 'அரியயனரனென்னு மிவரை யுணர்ந்துணர்ந்துரைத்துரைத்து' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து ஶங்காபூர்வகமாக ஸங்கதி - அவதாரத்திலே இத்யாதி. அவதாரிகையிலே "த்ரயோ தேவாஸ் துல்யாஃ" இத்யாத்யநுஸந்தேயம். "மத்யே விரிஞ்சகிரிஶம் ப்ரதமாவதார [illegible] [illegible] ஃ." "உணர்ந்துணர்ந்து" என்றுதொடங்கி, "உணரிலும்" என்கிற பதத்தளவுங் கடாக்ஷித்து ஶாவம் அருளிச்செய்கிறார் - காண்கிறதேஹம் இத்யாதி. 'இறைநிலையுணர்வரிது' என்றத்தைப்பற்ற, வருந்தி இத்யாதி. 'அரியயனரனென்னுமிவரை யுணர்ந்துணர்ந் துரைத்துரைத்து' என்றத்தைப்பற்ற - இவ்வழியே இத்யாதி. 'மனப்பட்டதொன்றை' இத்யாதியைப்பற்ற - ஆஶ்ரயணீயவஸ்து இத்யாதி.

'உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து' என்றத்தைப் பற்ற - ஆஶ்ரயிக்கும் ப்ரகாரமின்னது என்றது. ஜ்ஞப்திமாத்ரமேயுள்ளது என்கிறவன் - யோகாசாரன். வீப்ஸை - த்விருக்தி. "[illegible]"

கருத்து - “சைதந்யம் ஆகந்துகம், முக்த்யவஸ்த்தையிலும் பாஷாணகல்பமா யிருக்கும்” என்கிற பக்ஷத்தைத் தவிர்த்து, சைதந்யம் நித்யமா யிருக்கு மென்னுமிடத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞாத்ருத்வம் நித்யமாகையாலே ‘ஜ்ஞாநக்ரியாகர்த்ருத்வம் - ஜ்ஞாத்ருத்வம்; அதுதான் அநித்யம்’ என்கிற க்ரியாவாதியையும் நிரஸிக்கிறது. [இழிந்தகன்றுயர்ந்து] - இச்சேதநன்தான் அணுபரிமாணனு யிருக்கச்செய்தேயும், ஈஶ்வரன் ஸ்வரூபத்தாலே எங்கும் வ்யாபித்திருக்குமாபோலே ஜ்ஞாநத்தாலே எங்கும் வ்யாபித்திருக்கு மென்கிறது. “**வாதெஜெவெடநா ஶிரஸிஜெவெடநா**” (பாதேமே வேதநா, ஶிரஸிமேவேதநா) என்றிருக்கும்படியைச் சொல்லுகிறது. [உருவியந்தவிந்நிலைமை] - உருவிற்காட்டில் வியந்து - வேறுபட்டிருக்கிற இந்நிலைமை யுண்டு - இந்த ஆத்மாவினுடைய ஸ்வரூபம். அன்றியே, உருவு இயந்த என்று பதபேதமானபோது, இயத்தல் - கடத்தலாய், உருவிற்காட்டில் கடந்திருக்கும் - வேறுபட்டிருக்கு மென்னவுமாம். ஆக, இரண்டாலும் ஜடமான ஶரீரத்திற்காட்டில் வேறுபட்டிருக்கிற ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தைக் கேவலஶ்ரவணமநநாதிகளாலே ஸாக்ஷாத்கரிக்கக்கூடிலும், தேஹாதிரிக்தமாயிருக்கிற ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை யோகஶாஸ்த்ரத்திற்சொல்லுகிற க்ரமத்தாலே இழிந்து வருந்தி ஒருபடி யறிந்தாலும். [இறைநிலையுணர்வரிது] - ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தராத்மாவாய் அவர்களை ஶரீரமாகக்கொண்டு தான் ஶரீரியாய் நிற்கிற நிலை அறியப்போகாது. [உயிர்காள்] - சைதந்யயோக்ய மன்றிக்கே யிருப்ப தொன்றாய்த் தானிழக்கப் பெற்றதோ? சேதநரானபின்பு அதின்கார்யம் பிறக்கப்பெற்றதில்லையே! அறிவுகேடராய் நீங்கள் பட்டதேன்? ‘எங்களறிவும் அறியாமையுங் கிடக்கிடீர்; அறிந்த நீர் அருளிச்செய்யீர், நாங்கள் அப்படி ஆஶ்ரயிக்க’என்ன, அருளிச்செய்கிறார் மேல்; [அரியயனரனென்னுமிவரை யுணர்ந்துணர்ந்துரைத்துரைத்து]—[உணர்ந்துணர்ந்து]-ஒருவுணர்த்தி ஸ்வரூபபரம், ஒருவுணர்த்தி ஸ்வபாவபரம். உரைத்துரைத்து - ஸ்வரூபபரமான ப்ரமாணங்களையும், ஸ்வபாவபரமான ப்ரமா

---

*என்கிறவர்கள்நையாயிகவைஶேஷிகர்கள், முக்த்யவஸ்த்தையிலும் ஆத்மா பாஷாணகல்பமாயிருக்குமென்று அவர்கள் சொல்லுகையாலே. ஜ்ஞாநம் - “ஜாநாதி” என்கிற யாத்வர்த்தமாகையாலே க்ரியையாயிருக்கும். க்ரியைதான் - சலநாத்மகமாயும், யாத்வர்த்தரூபமாயும் த்விவிதமாயிருக்குமிறே. க்ரியைக்கு உத்பத்தி விநாஶங்களுண்டாகையாலே, க்ரியாஶ்ரயத்வமான ஜ்ஞாத்ருத்வமும் அநித்யமென்றுசொல்லுகிற க்ரியாவாதியான மாயியை நிரஸிக்கிறதென்றபடி. ஜ்ஞாத்ருத்வம் நித்யமாகையாலே - ஜ்ஞாத்ருத்வம் நித்யமென்று நமக்குப் பக்ஷமாகையாலே. ஜ்ஞாநக்ரியாகர்த்ருத்வமாவது - ஜ்ஞாநரூபக்ரியைக்குக் கர்த்தாவாயிருக்கை. ‘இழிந்தகன்றுயர்ந்து’ என்றதுக்கு இரண்டர்த்தம் அருளிச்செய்கிறார்-இச்சேதநன்தான் இத்யாதியாலே. முந்தின அர்த்தத்தில், நிஷ்க்ருஷ்ட ஸ்வரூபத்தைப்பற்ற ஸார்வத்ரிகமான வ்யாப்தியைச் சொல்லுகிறது. த்விதீயார்த்தத்தில், ஶரீரவ்யாப்தியைச் சொல்லுகிறது. இந்த இரண்டாமர்த்தம் - வாதெஜெ இத்யாதி. உரு-ஶரீரம். வியத்தல் இயத்தல் இரண்டும் வேறுபாடு. இந்நிலைமை - இவ்வாத்ம ஸ்வரூபத்தை. ‘உணர்ந்துணர்ந்துணரிலும்’ என்றதுக்கு - த்யாநரஹித கேவலஶ்ரவணாதிகளாலே உணரிலு மென்னுதல், அஷ்டாங்கயோக க்ரமத்தாலே உணரிலுமென்னுதலென்று இரண்டர்த்தமாக அருளிச்செய்கிறார் - ஆக, இரண்டாலும் இத்யாதியாலும், தேஹாதிரிக்த இத்யாதியாலும். யத்வா, தேஹேத்யாதிவாக்யம் விவரணமாகவுமாம். “உருவியந்த” என்கிறவிடத்தில் பதபேதமொழிய அர்த்தபேத மில்லை யென்கிறார் - ஜடம் இத்யாதி. “உணர்ந்துணர்ந்து” என்கிறது - ஶ்ரவணமநநங்கள். கேவலஶ்ரவணமநநாதிகளாலே-பகவத்விஷயமான ஶ்ரவணாதிகளன்றிக்கே கேவலாத்மவிஷயமான ஶ்ரவணமநநாதிகளாலே. வக்ஷ்யமாணத்தைக் கடாக்ஷித்து ‘இறைநிலையுணர்வரிது’ என்கிறதுக்கு அர்த்தம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. அறிந்தால் தேவதாந்தரங்களில் பரத்வஶங்கை உதியாதென்றபடி. பரத்வநிர்ணயப்ரகரணத்திலே சைதந்ய விஶிஷ்டதையைச்சொல்லி ஸம்போதிக்கிறவருடைய ஹார்தபாவத்தை அருளிச்செய்கிறார்-சைதந்யயோக்யமன்றிக்கே இத்யாதி வாக்யத்ரயத்தாலே. அரியயனரனித்யாதியாலே-தத்த்வநிஷ்கர்ஷம்பண்ணும் க்ரமத்தைச்சொல்லுகிறது. ‘உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து’என்கிற வீப்ஸைகளுக்கு விஷயபேதத்தாலே பேதம் அருளிச்செய்கிறார் - ஒரு உணர்த்தியென்று தொடங்கி மூன்று வாக்யத்தாலே. “அரியயனரன்” என்*

ணங்களையும். விரோதிநிரஸநஶீலனாய் ரக்ஷகனாயிருக்கும் ஒருவன், ஒருவன் திருநாபீகமலத்திலே அவ்யவதாநேந பிறந்தவனா யிருக்கும், ஒருவன் ஸம்ஹாரமொன்றுக்கே கடவனாயிருக்கும்; இவர்களை ப்ரதிபாதிக்கிற ப்ரமாணங்களை ஆராய்ந்து பார்த்து, அவைதன்னைப் பலகாலுஞ் சொல்லிப்பார்த்து. லிங்கத்துக்கே உத்கர்ஷம் தோற்றும்படியா யிருப்பதொரு ப்ரபந்தம் பண்ணித் தரவேணு மென்பாரைப்போலே ஒருவ்யக்தியிலே பக்ஷபதிக்கப்பாராதே இவர்கள் ஸ்வரூப ஸ்வபாவங்களைப் பலகாலும் ஆராய்ந்து பார்த்து, கோல்விழுக்காட்டாலே உத்கர்ஷங்கிடந்த வ்யக்தியைப்பற்றப் பார்ப்பது. இப்படி ஆராய்ந்தவாறே ஒருவஸ்துவே ப்ரதாநமென்று உங்கள்நெஞ்சிலே தோற்றும்; அவ்வஸ்துவை ஶ்ரவணமநநாதிகளாலே 'கைபுகுந்தது' என்று விஶ்வஸிக்கலாமளவும் ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். (சு)

## ஏழாம் பாட்டு.

ஒன்றெனப்பலவென அறிவரும்வடிவினுள்நின்ற
நன்றெழில்நாரணன் நான்முகனரனென்னுமிவரை
ஒன்றநும்மனத்துவைத்து உள்ளிநும்மிருபசையறுத்து
நன்றெனநலஞ்செய்வது அவனிடைநம்முடைநாளே.

**ஆ.**—(ஒன்றென.) ஏகாதிஷ்டிதமோ? அநேகாதிஷ்டிதமோ? என்று அறிய அரிதான வடிவிலே நின்ற நன்றெழில் நாரணன் நான்முகன் அரனென்னும் இவருடைய ஶ்ரவணமநநங்களை அவஹிதமநஸ்கராய்ப் பண்ணுவது. அவர்களிலே ஒருவனே ஈஶ்வரனென்று தோற்றி வரும். தோற்றிவருமிடத்திலும் ப்ரஹ்மருத்ரர்களுக்கு ஸர்வாத்மநா அஸம்பாவிதமான கல்யாண குணங்களையுடையவனான நாராயணனென்றே தோற்றிவரும். ஆனபின்பு, தத்வ்யதிரிக்த ப்ரஹ்ம

---

றதுக்கு அர்த்தம் - விரோதி இத்யாதி. ரக்ஷகனாயிருக்கும் ஒருவன் என்றது - "நஹிபாலநஸாமர்த்ய-ம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்" இத்யாதியைப்பற்ற. அவ்யவதாநேந-த்யாதி-அதஸ் விஷ்ணோ: ஜாத: ப்ரஜ: என்றபடி. 'உணர்ந்துணர்ந்து' என்கிற வீப்ஸையாலே - ஸ்வரூபஸ்வபாவபரமான ப்ரமாணங்களை ஆராய்ந்தென்றாய், 'உரைத்துரைத்து' என்றதுக்கு - பலகாலும் சொல்லி என்று அர்த்தமாக்கி, இந்த இரண்டார்த்தத்தை அருளிச்செய்கிறார் - இவர்களை இத்யாதி. பலகாலு மென்றது - வீப்ஸையைப்பற்ற. ஆராய்கையாவது - பக்ஷபாதமின்றிக்கே மத்யஸ்த்த புத்த்யா விசாரிக்கை யென்கிறார் - லிங்கத்துக்கே இத்யாதி. ஒருப்ரபந்தம்பண்ணித்தரவேணு மென்பாரைப்போலே என்றது - "தஸாத்ஸஹஸம்வ்யூஹாஸ்ஸாஸ்த்ரேஷ்வேதவள ஶாணிகாம்ருத ।। வாஶாணஸம்ஹிதாம்வாண்யாம்விஷ்ணோஷோத்ருஸம்யாதாம்" என்றத்தைப் பற்ற. ப்ரமாணங்களை ஆராய்கைக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - இவர்கள் ஸ்வரூப இத்யாதி. கோல்விழுக்காட்டிலே - ஸ்வத: ப்ராப்தியாலே. "மனப்பட்டதொன்றே" என்றதுக்கு அர்த்தம்-இப்படியாராய்ந்த இத்யாதி. 'உணர்ந்துணர்ந்துரைத்துரைத்திறைஞ்சுமின்' என்றது - ஶ்ரவணமநநாதிகளாலே அநுஸந்தித்து, வஸ்துவுக்கு வாசகமான திருநாமங்களைப் பலகாலும் உச்சரித்து ஆஶ்ரயியுங்கோளென்றபடி. உரைத்துரைத்து என்றது - அஸக்ருச்ச்ரவணத்தை. உணர்ந்துணர்ந்து என்கிறது - அஸக்ருந்மநநத்தை. கைபுகுருகை - பலோந்முகமாகை. இது வீப்ஸாதாத்பர்யம். உணர்ந்துணர்ந்து என்று தொடங்கி, உயிர்காள்! அரியயனரனென்னுமிவரையுணர்ந்துணர்ந்துரைத்துரைத்து, மனப்பட்டதொன்றை உணர்ந்துணர்ந்து உரைத்துரைத்திறைஞ்சுமின் இத்யந்வய:. முதலில், உணர்ந்துணர்ந்தென்றதுக்கு - ஜ்ஞாத்ருத்வஸ்வபாவனாகையாலே என்றுமொக்க உணருகையே ஸ்வபாவமாகவுடையனாய் இத்யர்த்த:. (சு)

ருத்ரர்கள்பக்கல் ஈஶ்வரத்வ ஶங்கையை விட்டு அந்த நாராயணன்பக்கலிலே நம்முடைய ஶரீராத்யுபகரணங்கள் உள்ளபோதே அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்வ தென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், மந்தாயுஸ்ஸுக்களான நீங்கள் நிர்ணயோபாயங்களாலே மூவரிலும் இன்னான் பரனென்று நிர்ணயித்து, ஈஶ்வரதயா நிர்ணீதனான இன்னானை ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

[ஒன்றென்று தொடங்கி] - மூர்த்தித்ரயத்துக்கும் ஆத்மா ஒருவனோ? பலரோ? பலரானால் அவர்களில் ப்ரதாநன் எவன்? என்று அறியவொண்ணாதபடியையுடையராய் நின்ற. [நன்று எழில் நாரணன்] - தன்வடிவைக்கண்டால் தானே ஈஶ்வரனென்று தோற்றும்படி நல்ல எழிலையுடைய நாராயணன். [ஒன்ற நும் என்று தொடங்கி] - சொன்ன மூன்றுவகையாலும் விஸத்ருஶமாயுள்ள இவர்களைப் பக்ஷபதியாதே.

ப.—அநந்தரம், விவேகப்ரகாரத்தை விஶதமாக உபதேஶித்துச் சடக்கென ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ஒன்றெனப் பலவென - ஏகாத்மப்ரகாரமென்றும் அநேகாத்மாதிஷ்ட்டிதமென்றும், (ஒருவன் ப்ரதாநனென்றும் தனித்தனியே ப்ரதாநரென்றும்), அறிவரும் - அறிவரிதான, வடிவினுள் - வடிவுக்குள்ளே, நின்ற - வர்த்திக்கிற, நன்று - விலக்ஷணமான, எழில் - (அபஹதபாப்மத்வாதி) குணௌஜ்ஜ்வல்யத்தையுடையனாய், நாரணன் - நாராயணனுவாகாதிஸித்தனாய் ஸமஸ்த சிதசித் அந்தராத்மாவான நாராயணன், நான்முகன் - (சதுர்வேதபாராயணத்துக்கும் பஹுமுக ஸ்ருஷ்டிக்கும் உபயுக்தமான முகபேதத்தையுடைய) சதுர்முகன், அரன்-(ஸம்ஹாரணைகஸ்வபாவனான) ஹரன், என்னுமிவரை - என்று தத்தத்ஸ்வபாவவைஶத்யம் பிறக்கும்படி ப்ரமாணங்களாலே சொல்லப்பட்டவர்களை, ஒன்ற - (ஒருவர்பக்கல் ப்ராதாந்யபக்ஷபாதமற) ஏகாகாரதயா, நும்மனத்துவைத்து - உங்கள்நெஞ்சிலே வைத்து, உள்ளி - (அவர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை) ஸப்ரமாணமாக ஆராய்ந்து, நும் இருபசை யறுத்து - உங்கள் ப்ரதிபத்திதோஷத்தாலே இருவர்பக்கலிலுமுண்டான ஈஶ்வரஸங்கத்தை யறுத்து, அவனிடை - அந்தநன்றெழில் நாரணன்பக்கலிலே, நம்முடை - நம்முடைய, நாள் - ஆயுஸ்ஸுள்ளகாலத்திலே, ("ஷணக்ஷஹக்ஷீ" என்கிறபடியே), நன்றென - நன்றான, நலம் - ஸ்நேஹத்தை, செய்வது - பண்ணுவது.

இ.—ஏழாம்பாட்டில், இப்படி அருளிச்செய்தவிடத்திலும் அவர்கள் ஆறியிருந்தவாறே திரியட்டும் மந்தாயுஸ்ஸுக்களான நீங்கள் வஸ்து இன்னதென்று நிர்ணயித்து ஆஶ்ரயிக்கப் பாருங்கோளென்கிறார்.

[ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற] - மூர்த்தித்ரயமும் ஏகாத்மாதிஷ்ட்டிதமோ? அநேகாத்மாதிஷ்டிதமோ? அநேகாத்மாதிஷ்டிதமானால் அவர்களில் ப்ரதாநன் எவன்? என்று அறியவொண்ணாத ஸ்வபாவத்தை யுடையராய் நின்ற. [நன்றெழில்நாரணன்]- அநந்யபரமான நாராயணாநுவாகாதிகளை நினைக்கிறார். எழிலென்று - "கவஹதவாஷாதிவெ௵ாதெவ ஷணகொஹநாராயணஃ" என்கிற புகரை நினைக்கிறது. [நான்முகன் இத்யாதி] - ஸ்ருஷ்டிக்கு உறுப்பான பலமுகங்களையுடைய சதுர்முகன், அழிக்குந்தொழிலே கற்றிருக்கும் ருத்ரன், இவர்களோடு மற்றுள்ள சேதநாசேதநங்களோடு வாசியற ஸர்வமும் ஶரீரமென்னுமிடத்துக்கு வாசகமான திருநாமத்தை யுடையானொருவன். [என்னும் இவரை] - இப்படி விஸத்ருஶஸ்வபாவராயுள்ளவர்களை. [ஒன்றநும்மனத்துவைத்து] - இவனே நிர்வாஹகனாகவேணுமென்று பக்ஷபதியாதே 'ப்ரமாணகதிகளை ஆராய்ந்தால் கோல்விழுந்தவன் பரனாகிறான்' என்று மூவரையு

மொக்க உங்கள் நெஞ்சிலே வைத்து. [உள்ளி] - ஶ்ருதிந்யாயங்களாலே ஆராய்ந்து. [நும் இருபசையறுத்து] - நீங்கள் ஈஶ்வரதயா ஶங்கித்த ப்ரஹ்மருத்ராதிகள்பக்கல் நசையறுத்து. [நும் இருபசை] - புருஷாதமான ரஜஸ்தமஸ்ஸுக்களால் வந்த ஶங்கையொழிய ப்ரமாணாதிகளால் அவர்கள்பக்கல் ஈஶ்வரத்வஶங்கையு மில்லையென்கை. [நன்றெனநலஞ்செய்வதுஅவனிடை] - அவன்பக்கலிலே அநந்யப்ரயோஜநபக்தியைப்பண்ணப் பாருங்கோள். [நம்முடைநாளே] - க்ரமத்திலே செய்கிறோமென்று இராதே, ஶரீரத்தினுடைய நிலையில்லாமையை புத்திபண்ணிச் சடக்கென ஆஶ்ரயியுங்கோள். "நஹ்யஸ்ய ஸுக்ருதைஃ ஸுக்ருதைஃ நஹ்யஸ்ய ஸூக்ஷ்மைஃ தாவத ! ஸூத்ரேநா நாவஸாயஸ்ய ஜீவிதக்ஷயம்".

ஈடு.—ஏழாம்பாட்டு. 'அப்படியே செய்கிறோம்' என்று ஆறியிருந்தார்கள்; ஐயோ! நீங்கள், உங்களுடைய ஆயுஸ்ஸினுடைய ஸ்த்திதியும், இழக்கிற விஷயத்தின் நன்மையும் அறியாமையிறே ஆறியிருக்கிறது ; நீங்கள் முடிந்துபோவதற்குமுன்னே நிர்ணயோபாயங்களாலே வஸ்து இன்னதென்று நிர்ணயித்து, நிர்ணீதனானவன்பக்கலிலே கடுக பக்தியைப் பண்ணப் பாருங்கோளென்று கீழ்ப்பாட்டுக்கு ஶேஷமாயிருக்கிறது இப்பாட்டும். நீங்கள் மந்தாயுஸ்ஸுக்களாகையாலே கடுகச்செய்துகொடுநின்று, 'செய்கிறோம்' என்னவேணும்; 'செய்கிறோம்' என்று செய்யவொண்ணுதென்கிற இதுவே விஶேஷம் கீழ்ப்பாட்டிற்காட்டில்.

[ஒன்றென] - மூவர் ப்ரதாநராய் மூவர்க்கும் மூன்று ஶரீரமுண்டாய்த் தோற்றுகையாலே, மூன்றுஶரீரத்திலும் ஒருவனே அதிஷ்ட்டித்துக்கொண்டு நிற்கிறானோ? அன்றியே, மூன்றிலும் மூன்று சேதநர் அதிஷ்ட்டித்துக்கொண்டு நிற்கிறார்களோ? என்று அறிய அரிய வடிவுகளையுடையராய் நிற்கிற. ஏகாத்மாதிஷ்ட்டிதமோ? அநேகாத்மாதிஷ்ட்டிதமோ? என்று அறியவரிதான வடிவையுடையராய் நின்ற. [நன்றெழில்நாரணன்] - அநந்யபரமான நாராயணநுவாகாதிகளை நினைக்கிறார். எழிலென்று- "அபஹதபாப்மாதிவ்யோதேவ ஏகோநாராயண:" (அபஹதபாப்மாதிவ்யோதேவ ஏகோநாராயண:) என்கிற புகரை நினைக்கிறது. [நன்றெழில்]-ரூபஶ்ரீயைப் பார்த்தவாறே *"கண்டவாற்றால்தனதேயுலகெனநின்றான்" என்கிறபடியே ஸர்வரக்ஷகன் இவனே யென்னலாம். [நார

---

ஏழாம்பாட்டு - ஒன்றென இத்யாதி. 'நம்முடைநாளே' என்றத்தை ப்ரதாநமாக்கிக்கொண்டு, 'நலஞ்செய்வதவனிடை' என்னுமளவுங் கடாக்ஷித்து ஸங்கதி - அப்படியே இத்யாதி வாக்யத்ரயத்தாலே. நன்மையுமென்றது-"நன்றெழிநாரணன்" என்றத்தைப்பற்ற. 'நலஞ்செய்வது' என்றத்தைப்பற்ற, பக்தியைப்பண்ணப் பாருங்கோள் என்றது. கீழ்ப்பாட்டில் இதுக்கு விஶேஷமில்லையோ ? என்ன, நீங்கள் இத்யாதி.

ஒன்றெனப் பலவென அறிவரும் நன்றெழில் நாரணனென்ன அமையாதோ? "வடிவினுள் நின்ற" என்னவேணுமோ? என்ன, இது கோட்யுத்தாபகார்த்தமென்கிறார் - மூவர்ப்ரதாநராய் இத்யாதி. ஶரீரம் மூன்றுகையாலே மூவரென்னலாயிருக்கும்; அந்த அந்த ஶரீரத்தை அதிஷ்ட்டித்து, ப்ரபலமாய் துல்யமாயிருந்துள்ள மூன்றுகார்யங்களைச் செய்கையாலே ஏகைககார்யஶக்தியைப் பார்த்தால் "இவனே ஸர்வஶக்தன், இவனே ஸர்வஶக்தன்" என்று தோற்றுகையாலே ஒருவனே என்னலாயிருக்குமென்று தாத்பர்யம். யோஜநாந்தரம் - ஏகாத்மாதிஷ்டிதமோ இத்யாதி. ஒன்று-ஒன்றாலேஅதிஷ்ட்டிதம், பல-பலராலேஅதிஷ்ட்டிதம். "அறிவரும்வடிவினுள்" என்றதுக்கு முந்தினயோஜனையில்-அறிய அருமைக்கு ஹேதுவான வடிவிலென்று அர்த்தம்; த்விதீய யோஜனையில், அறிவருமைக்கு விஷயமானவென்று அர்த்தம். வடிவு-ஸ்வபாவமாதல், ஶரீரமாதல். நன்மைக்கு அர்த்தம் - அநந்யபரமான இத்யாதி. எழிலென்றதுக்கு அர்த்தம்- அபஹதபாப்மா இத்யாதி. விக்ரஹத்தில் நன்றான எழிலென்று அர்த்தாந்தரம்-ரூபஶ்ரீயை இத்யாதி. இதுக்கு நன்மையேது? என்ன, கண்டவாற்றல் இத்யாதி. ப்ரத்யக்ஷவிஷயமான சேஷ்டிதப்ரகாரங்களாலே ப்ரமாண நிரபேக்ஷமாக லோகம் தனக்கே ஶேஷமென்று

---

* திருவாய்மொழி ச - ரு - கo.

ணன்] - திருநாமத்தைப் பார்த்தவாறே தன்னை ஒழிந்ததடைய ப்ரகாரமாய்க்கொண்டு தான் ப்ரகாரியாயிருப்பானொருவ னென்று தோற்றியிருக்கும். [நான்முகன்] - ஒருவன், ஸ்ருஷ்டிகாலத்திலே வந்தால் நாலுவேதங்களையும் உச்சரிக்கைக்கு நாலுமுகத்தை யுடையனாய் ஸ்ருஷ்டிகார்யமொன்றிலும் அந்விதனென்று தோற்றியிருக்கும். [அரன்] - ஒருவன், ஸம்ஹர்த்ருத்வமொன்றிலும் அந்விதனென்று தோற்றியிருக்கும். "**ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் | ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாநேக ஏவ ஜநார்த்தந:**" (ஸ்ருஷ்டிஸ்த்தித்யந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் - ஸஸம்ஜ்ஞாம்யாதிபகவாநேகஏவஜநார்த்தந:) என்கிற படியே. ஸம்ஜ்ஞைகளில் வந்தால் ஒக்க எடுக்கலாய் விஷ்ணுஶப்தத்தோடு பர்யாயமான ஜநார்த்தநஶப்தத்தையிட்டுத் தலைக்கட்டுகையாலே தானே ப்ரதாநனென்று தோற்றும்படியாயிருக்கும். இப்படி விஸத்ருஶ ஸ்வபாவராயிருக்கிற இவர்களை, **[ஒன்றநும்மனத்துவைத்து]** - அவனையொழிந்த இருவரிலே ஒருவனுக்கு உத்கர்ஷம் வேணு மென்றுதல், நிர்ணயிப்பதற்கு முன்னே இவனுக்கு உத்கர்ஷம் வேணுமென்றுதல் பாராதே ஒருபடிப்பட உங்கள் நெஞ்சிலே வைப்பது. [உள்ளி] - உள்ளுவது - ஶ்ருதிந்யாயங்களாலே ஆராய்வது. அவர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை இப்படி ஆராய்ந்தவாறே ஒருவஸ்து ப்ரதாநமாய் இரண்டு அப்ரதாநமாய்த் தோற்றும்; தோற்றினவாறே [நும்மிருபசையறுத்து] - அவ்விரண்டிலும் நீங்கள் பண்ணுகிற நசையைத் தவிருவது; வஸ்துகதமாய் வரு

---

நாடாகச்சொல்லும்படி நின்ற வென்றபடி. ஸுபாலோபநிஷத்தில் "**ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:**" அஸ்யார்த்த:- ஏதச்சப்தஸ்ய ஸந்நிஹிதவாசித்வாத் உபயவிபூதிஸ்தம் ஸர்வம் ஜாதம் ஸர்வஶப்தேநோக்தம், தஸ்யாந்தராத்மதயா ஸ்தித: ஆத்மா. ஸர்வபூதாந்தஸ்ஸஞ்சாரித்வேऽபி தத்கதைர்தோஷைரஸம்ஸ்ப்ருஷ்ட:. திவ்ய:- திவி ஸ்தித:. பரமவ்யோமநிலய இதியாவத். தேவ:- த்யோதமாந: கல்யாணகுணை:. ஏக:- அத்விதீய:, ஸமாப்யதிகரஹித:. ஏவம்பூதன் ஆர்? என்ன, நாராயண இதி. 'ரூபநாமங்களைப் பார்த்தவாறே' என்றவிடத்திலே "ரூபவதி யாவந்த்யோ யாவந்த்யோ நாமாநி தேஷு ஸர்வேஷு தேஷ்வாத்மதயா ஸ்தித: | விஷ்ணுர்நாராயணோ நாம ஸர்வஶப்தார்த்தோ ஹி ஸர்வஶ்ச ரூபஶ்ச" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். "அநிஹ்ருதேவா: ஸர்வேஸ்வ தேஷ்விஷ ஸதிரோதாநாஷ்யாகாராஜ்யாதிபி: உதாஹ்ருதி:. "ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே" என்று ரூபத்தை மஹிமஜ்ஞாபகமாகச் சொல்லிற்றிறே. பஹுவ்ரீஹியில் அர்த்தம் - திருநாமத்தை இத்யாதி. ப்ரஹ்மாவுக்கு அபரத்வத்தை ஸூசிப்பிக்கிறது - "நான்முகன்" என்கிற நாம மென்கிறார் - ஒருவன் இத்யாதி. நாலுவேதங்களையு மென்றதுக்கு- ப்ரமாணாதீந ஜ்ஞாநத்வத்திலே தாத்பர்யம். 'அரன்' என்றதும் - ருத்ரனுக்கு அபரத்வ ஸூசகமான நாம மென்கிறார் - ஒருவன் இத்யாதி. 'நாரணன்' என்றதுக்கு அர்த்தம்-ஸமஸ்தமும் ப்ரகாரமாய்த் தான் ப்ரகாரியாயிருக்கு மென்று சொன்னபோதே அவனுக்கு ப்ராதாந்யந் தோற்றுமிறே. அவன் ப்ரதாநனென்னுமதுக்கு ப்ரமாணம் - ஸ்ருஷ்டிஸ்தித்யந்த இத்யாதி. இதம் ப்ரதமேம்ஶே த்விதீயே. 'ஜநார்த்தந:' என்கிற படியே என்ற அநந்தரம், 'இந்தநிர்த்தேஶமும்' என்று வாக்யஶேஷம். அதெங்ஙனே ? என்ன, ஸம்ஜ்ஞைகளில் இத்யாதி. ஒக்கவேடுக்கலாய் என்ற அநந்தரம், 'இருக்கிற'வென்று வாக்யஶேஷம். 'ப்ரதாநனென்று தோற்றும்படியாயிருக்கும்' என்ற அநந்தரம், 'அப்படியே இங்கு "நன்றெழில்" என்கிற விஶேஷணத்தால் இவனே ப்ரதாநனென்று தோற்றுகிறது' என்று வாக்யஶேஷம். விஸத்ருஶஸ்வபாவர் - விருத்தஸ்வபாவர். ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம்ஹார கர்த்ருத்வங்களாலே வைஸாத்ருஶ்யம். ஒன்ற - ஒருபடிப்பட, ஶ்ருதிந்யாயங்களாலே - ஶ்ருதியாலும் ந்யாயங்களாலும். ந்யாயங்கள் - யுக்திகள். உள்ளி - விசாரித்து. பசை - நசை. 'நும்' என்றதுக்கு பாவம் - வஸ்துகதமாய் இத்யாதி. ஏற - மநஸ்ஸிலே ஏறும்படி. தேற்றம்-

வதோரு உத்கர்ஷமில்லை,நீங்களேறிடுகிற இவற்றைத் தவிருவது.[நன்றெனநலஞ்செய்வதவனிடை]- இப்படி நிர்ணீதனனவன்பக்கலிலே 'இவன் நமக்குக் கைபுகுந்தான்' என்று உங்களுக்கேறத் தேற்றம்பிறக்கும்படி அநந்யப்ரயோஜநமான ஸக்தியைப் பண்ணப் பாருங்கோள். க்ரமத்திலே செய்கிறோமென்றிருந்தார்கள் ; [நம்முடைநாளே] - கேடுவிகாள்! நம்முடை ஆயுஸ்ஸின் நிலையறிவிகோளே! கடுக ஆஸ்ரயிக்கப் பாருங்கோள். "நம்முடைநாள்" என்னுங்காட்டில் ஆயுஸ்ஸின் நிலையை அறிந்தபடி என்? என்னில், —முன்பே "மின்னின்னிலையில" என்று அருளிச்செய்தாரிறே. ஒருவன் இரண்டுகேதவையும் அடைத்துக்கொண்டு கிடந்து உறங்காநின்றால்,நெருப்புப்பற்றி யெரியாநின்றால், 'அவிக்கிறோம்' என்று ஆறியிருக்கலாமோ? "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ | ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம்" (நந்தந்த்யுதித ஆதித்யேநந்தந்த்யஸ்தமிதேரவௌ, ஆத்மநோநாவபுத்யந்தேமநுஷ்யாஜீவிதக்ஷயம்) - ஆதித்யோதயத்திலே வந்தவாறே 'த்ரவ்யார்ஜநகாலம் வந்தது' என்று உகப்பர்கள்; அவன் அஸ்தமித்தவாறே 'அபிமத விஷயங்களோடே ரமிக்கைக்குக் காலம் வந்தது'என்று உகப்பர்கள்; சாலிலெடுத்த நீர்போலே தங்களாயுஸ்ஸு குறைகிறதென்று அறியாதிரா நின்றார்கள் என்னுநின்றதிறே. (எ)

## எட்டாம் பாட்டு.

நாளும்நின்றடுநமபழமை அங்கொடுவினையுடனே
மாளும் ஓர்குறைவில்லை மனனகமலமறக்கழுவி
நாளும்நந்திருவுடையடிகள்தம் நலங்கழல்வணங்கி *
மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே.

**ஆ.**—(நாளும்நின்றடும்.) இப்படி அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு நம்திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கவே, இடைவிடாதே நின்று நமக்கு பாதகமாய் அநாதிகால ஸஞ்சிதமாய் பகவதநுபவவிரோதியான நம்முடைய கொடுவினையெல்லாம் வணங்கின அப்போதே

---

தெளிவு. அநந்யப்ரயோஜநமான பக்தி-ஸாத்யபக்தி. 'நம்முடைநாள்' என்றதுக்கு - அஸ்த்திரத்வத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் - கேடுவிகாள் இத்யாதி. கெடுவிகாள் - துஷ்டாத்மாக்களே! இவ்விடத்தில் "ஸர்வே க்ஷயாந்தா நிசயா: பதநாந்தா: ஸமுச்ச்ராயா: | ஸம்யோகா விப்ரயோகாந்தா மரணாந்தம் ச ஜீவிதம்" என்றது அநுஸந்தேயம். "நம்முடைநாள்" என்றதுக்கு அநர்த்தாவஹத்வத்தாலும் ஆறியிருக்கப்போகாதென்றுஹாவாந்தரம் - ஒருவன் இத்யாதி. ஆயுஸ்ஸு தான் ஸ்த்திரமானாலும் ஸம்ஸாரப்ரவ்ருத்தியாகிற அநர்த்தவிசேஷம் வருகிறபடியை அநுஸந்தித்தால் ஆறியிருக்கவொண்ணாது, அவனைக் கடுக ஆஸ்ரயிக்கவேணுமென்றபடி. ஆயுஸ்ஸின் அஸ்த்தைர்யத்துக்கு ப்ரமாணம்-நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ. ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம். சாலிலெடுத்தநீர்போலே என்றவிடத்தில், "க்ஷயம் ஆயுஷ: பரிபஶ்யந்தி" என்றது அநுஸந்தேயம். சாலிலெடுத்த நீரென்றது - ஆயுஸ்ஸினுடைய அல்பதையும், க்ஷயத்தினுடைய ப்ரத்யக்ஷதையுந் தோற்றுகைக்காக. குளத்தில் நீர்வற்றுகிறமை தெரியாதிறே. ஒன்றெனஎன்றுதொடங்கி, நம் இருபசையறுத்து அவனிடை நன்றென நலம்செய்வது நம்முடைநாளே இத்யந்வய:. ஒன்றெனப்பலவெனஅறிவரும்வடிவினுள்நின்ற·ஏகாத்மாதிஷ்டிதமென்றும், அநேகாத்மாதிஷ்டிதமென்றும், ஒருவன்ப்ரதாநனென்றும், தனித்தனியே ப்ரதாநரொன்றும் அறியவரிதான வடிவுக்குள்ளே வர்த்திக்கிற என்று ஸப்தார்த்தம். நன்றேழில்நாரணன்-விலக்ஷணமான அபஹதபாப்மத்வாதி குணௌஜ்ஜ்வல்யத்தையுடைய நாரணன். (எ)

---

* வணங்கின என்பது உரையின்பாடம்.

ருத்ரர்கள்பக்கல் ஈஶ்வரத்வ ஶங்கையை விட்டு அந்த நாராயணன்பக்கலிலே நம்முடைய ஶரீராத்யுபகரணங்கள் உள்ளபோதே அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்வ தென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், மந்தாயுஸ்ஸுக்களான நீங்கள் நிர்ணயோபாயங்களாலே மூவரிலும் இன்னான் பரனென்று நிர்ணயித்து, ஈஶ்வரதயா நிர்ணீதனான இன்னானை ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

[ஒன்றென்று தொடங்கி] - மூர்த்தித்ரயத்துக்கும் ஆத்மா ஒருவனோ? பலரோ? பலரானால் அவர்களில் ப்ரதாநன் எவன்? என்று அறியவொண்ணாதபடியையுடையராய் நின்ற. [நன்று எழில் நாரணன்] - தன்வடிவைக்கண்டால் தானே ஈஶ்வரனென்று தோற்றும்படி நல்ல எழிலையுடைய நாராயணன். [ஒன்ற நும் என்று தொடங்கி] - சொன்ன மூன்றுவகையாலும் விஸத்ருஶமாயுள்ள இவர்களைப் பக்ஷபதியாதே.

ப.—அநந்தரம், விவேகப்ரகாரத்தை விஶதமாக உபதேஶித்துச் சடக்கென ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ஒன்றெனப் பலவென - ஏகாத்மப்ரகாரமென்றும் அநேகாத்மாதிஷ்டிதமென்றும், (ஒருவன் ப்ரதாநனென்றும் தனித்தனியே ப்ரதாநரென்றும்), அறிவரும் - அறிவரிதான, வடிவினுள் - வடிவுக்குள்ளே, நின்ற - வர்த்திக்கிற, நன்று - விலக்ஷணமான, எழில் - (அபஹதபாப்மத்வாதி) குணௌஜ்ஜ்வல்யத்தையுடையனாய், நாரணன் - நாராயணநுவாகாதிஸித்தனாய் ஸமஸ்த சிதசித் அந்தராத்மாவான நாராயணன், நான்முகன் - (சதுர்வேதபாராயணத்துக்கும் பஹுமுக ஸ்ருஷ்டிக்கும் உபயுக்தமான முகபேதத்தையுடைய) சதுர்முகன், அரன்-(ஸம்ஹரணைகஸ்வபாவனான) ஹரன், என்னுமிவரை - என்று தத்தத்ஸ்வபாவவைஶத்யம் பிறக்கும்படி ப்ரமாணங்களாலே சொல்லப்பட்டவர்களை, ஒன்ற - (ஒருவர்பக்கல் ப்ராதாந்யபக்ஷபாதமற) ஏகாகாரதயா, நும்மனத்துவைத்து - உங்கள்நெஞ்சிலே வைத்து, உள்ளி - (அவர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களை) ஸப்ரமாணமாக ஆராய்ந்து, நும் இருபசை யறுத்து - உங்கள் ப்ரதிபத்திதோஷத்தாலே இருவர்பக்கலிலுமுண்டான ஈஶ்வரஸங்கத்தை யறுத்து, அவனிடை - அந்தநன்றெழில் நாரணன்பக்கலிலே, நம்முடை - நம்முடைய, நாள் - ஆயுஸ்ஸுள்ளகாலத்திலே, ("வனகுஹாகீஃ" என்கிறபடியே), நன்றென - நன்றான, நலம் - ஸ்நேஹத்தை, செய்வது - பண்ணுவது.

இ.—ஏழாம்பாட்டில், இப்படி அருளிச்செய்தவிடத்திலும் அவர்கள் ஆறியிருந்தவாறே திரியட்டும் மந்தாயுஸ்ஸுக்களான நீங்கள் வஸ்து இன்னதென்று நிர்ணயித்து ஆஶ்ரயிக்கப்பாருங்கோளென்கிறார்.

[ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற] - மூர்த்தித்ரயமும் ஏகாத்மாதிஷ்டிதமோ? அநேகாத்மாதிஷ்டிதமோ? அநேகாத்மாதிஷ்டிதமானால் அவர்களில் ப்ரதாநன் எவன்? என்று அறியவொண்ணாத ஸ்வபாவத்தை யுடையராய் நின்ற. [நன்றெழில்நாரணன்]- அநந்யபரமான நாராயணநுவாகாதிகளை நினைக்கிறார். எழிலென்று - "ஸுவஹதவாஹ்வாரிவெ்யா டெிவ வனகொநாராயணஃ" என்கிற புகரை நினைக்கிறது. [நான்முகன் இத்யாதி] - ஸ்ருஷ்டிக்கு உறுப்பான பலமுகங்களையுடைய சதுர்முகன், அழிக்குந்தொழிலே கற்றிருக்கும் ருத்ரன், இவர்களோடு மற்றுள்ள சேதநாசேதநங்களோடு வாசியற ஸர்வமும் ஶரீரமென்னுமிடத்துக்கு வாசகமான திருநாமத்தை யுடையானொருவன். [என்னும் இவரை] - இப்படி விஸத்ருஶஸ்வபாவராயுள்ளவர்களை. [ஒன்றநும்மனத்துவைத்து] - இவனே நிர்வாஹகனாகவேணுமென்று பக்ஷபதியாதே 'ப்ரமாணகதிகளை ஆராய்ந்தால் கோல்விழுந்தவன் பரனாகிறான்' என்று மூவரையு

*[அமரரோடு உயர்விற்சென்று அறுவர் தம்பிறவிபஞ்சிறையே]* - *சிறையிலேயிருந்த ராஜகுமாரன்தலையிலே அபிஷேகத்தை வைத்துப் பின்னைச் சிறையை வெட்டிவிடுவாரைப்போலே, நித்யஸூரிகள் வரிசையைக் கொடுத்துப் பின்னை ஸம்ஸாரவஞ்சிறையைக் கழிக்கும் ஈஶ்வரன். ஆதிவாஹிகரோடே விரஜையிற் சென்று ஸூக்ஷ்மஶரீர வியோகம்பெறுவர்.*

**ஈடு.**—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் **முற்பட** நித்யஸூரிகள் வரிசையைப் பெற்று, **பின்னை** ஸம்ஸாரமாகிற அறவைச்சிறை வெட்டிவிடப் பெறுவர்களென்கிறார்.

[அமரர்கள்தொழுதெழ] - கவிழ்ந்து 'உப்புச்சாறுகிளருவது எப்போதோ?' என்றுகிடக்கிற தேவஜாதியானது எழுத்துவாங்கும்படியாகவாயிற்று தோளுந் தோள்மாலையுமாய் ஒருகடல் ஒருகடலை நின்று கடையுமாபோலே கடைந்தபடி. [தொழுதெழ] - குணங்களுக்குத் தோற்று "தொழுதெழு" என்கிற தம்பாசுரமேயாய்விட்டது அழகுக்குத் தோற்ற அவர்களுக்கு மென்கிறார். [அமர்பொழில்] - சேர்ந்த பொழில். [வளங்குருகூர்] - வளப்பத்தையுடைத்தாய், ஸம்பத்தையுடைத்தான திருநகரி. [சடகோபன்குற்றேவல்கள்] - இத்திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் வாசிகமான அடிமைசெய்தபடியாயிற்று இதுதான். பூர்ணவிஷயத்தில் வாசிகமான வ்ருத்திக்கு மேற்படச் செய்யலாவதில்லையே; "**தத்விப்ராஸோவிபந்யவ:**" (தத்விப்ராஸோவிபந்யவ:) என்று நித்யஸூரிகளுக்கும் இதுவேயிறே வ்ருத்தி. [அமர்சுவையாயிரம்] - ரஸகநமாயாயிற்று ஆயிரந்தான் இருப்பது. இத்தால் - வாசிகமான அடிமை "**முறை**" என்று கார்யபுத்த்யா செய்யவேண்டா வென்றபடி. [அவற்றினுளிவைபத்தும்]-*"விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்ட" என்னுமாபோலே, அவைதன்னிலே ரஸகநமாயிருக்குமாயிற்று இத்திருவாய்மொழி. இவற்றை அப்யஸிக்க வல்லார் நித்யஸூரிகளோடொத்த உச்ச்ராயத்தை யுடையராய், தங்களுடைய ஜந்ம

---

*நிகமம் -* **அமரர்கள்** *இத்யாதி. 'அமரரோடுயர்வில்' இத்யாதியைக் கடாக்ஷித்து ஸங்கதி -* **இந்திருவாய்மொழியை** *இத்யாதி.* **அறவைச்சிறை** *- தயநீயமான சிறை, துக்கைகரூபமான சிறை யென்றுமாம்.*

*அம்ருதப்ராஶநகாங்க்ஷிணராஹித்யார்த்திகள் அமரர்களென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் -* **கவிழ்ந்து** *இத்யாதி. இத்தால் சாவாமைக்குப் பரிகரமான அம்ருதத்தில் இவர்களுக்கு உண்டான அபிநிவேஶமும், இப்படிக்கொத்தவர்களையும் தனக்கு அடிமையாக்கிக் கொள்ளவல்ல அவனுடைய ஸௌந்தர்யாதிஶயமும் சொல்லுகிறது.* **உப்புச்சாறு** *- அம்ருதம்.* **கிளருவது** *- உத்பந்நமாவது.* **எழுத்துவாங்குகையாவது** *- "வக்ஷஸ்தலே விலஸிதம் உரோவிந்யஸ்தகேஶவம் । தஸ்மை ஹநுமதே தாஸ்யசிஹ்நம் விதுஷே॥" என்றதில் "உரோவிந்யஸ்தகேஶவம்" என்கிற தாஸ்யம். அதாவது ஸ்வாமிபேரை மார்விலே யெழுதிக்கொள்ளுகை.* **தோளுந் தோள்மாலையு** *மென்றது - அர்த்தாத் ஸித்தம். 'அலைகடல்' என்றத்தாலே - அக்ஷுப்தகருணாம்புதி ஸூசிதமாகையாலே அருளிச்செய்கிறார் -* **ஒருகடல்** *இத்யாதி. அநந்யப்ரயோஜநரான தமக்கன்றோ 'தொழுதெழு' என்னக்கூடுவது, ப்ரயோஜநாந்தரபரர்க்குக் கூடுமோ? என்ன,* **குணங்களுக்கு** *இத்யாதி.* **குற்றேவல்** *- குறுகின ஏவல், அந்தரங்க கைங்கர்யம். இத்திருவாய்மொழி இவருடைய குற்றேவலாம் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் -* **இத்திருநகரிக்கு** *இத்யாதி. வாசிகமாத்ரம் போருமோ? என்ன,* **பூர்ண** *இத்யாதி. உக்தார்த்தே - தத்விப்ராஸ இத்யாதி. ஸூரயோ விப்ராஸ: - மேதாவிந: ஸர்வதா ஜாகரூகா இத்யர்த்த:. விபந்யவ: ஸ்துதிஶீலா:. பந ஸ்துதாவிதி தாது: வாசிகமேவ கைங்கர்யம் குர்வந்தீத்யர்த்த:. கார்யபுத்த்யா கர்தவ்யபுத்த்யா. இதினுடைய போக்யதையே இழியப்பண்ணு மென்றபடி. போக்யத்திலும் போக்யாம்ஶமாகச் சொன்னதுக்கு ஸம்வாதம் -* **விண்ணவர்** *இத்யாதி. தேவர்கள் அம்ருதத்தை புஜிக்க அந்த அம்ருதம் கோதாம்படி அதில்நின்றும் வந்துதோற்றின பெரியபிராட்டியாராகிற அம்ருதத்தை புஜித்த என்*

---

* பெரியதிருமொழி, சு - க - உ.

மாகிற விலங்கு அறப்பெறுவர்கள். இப்பத்தைக் கற்றபோதே இவனை நித்யஸூரிகளிலே ஒருவனாக நினைப்பிடும், ஶரீர விஶ்லேஷம் பிறந்தால் போய்ப்புகு மித்தனை; ராஜா ஒருவனுக்கு நாடிட்டால் க்ரமத்திலே போய்ப்புகுமித்தனையிறே. ராஜபுத்ரன் தலையிலே முடியைவைத்து, பின்னை விலங்குவெட்டிவிடுமாபோலே, நித்யஸூரிகளிலே ஒருவராம்படியான தரத்தைப் பெற்று, பின்னை ஸம்ஸாரநிகலவிச்சேதத்தைப் பெறுவர்கள்.(*அன்றியே,[அமரரோடு உயர்வில்சென்று]-ஆதிவாஹிகரோடே விரஜையிலே சென்று. [அறுவர் தம்பிறவியஞ்சிறையே] - ஸூக்ஷ்மஶரீரவிதூநநம்பெறுவர்.) "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி" (த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதிமாமேதி) என்று அருளிச்செய்த அதுவே பலமாகக்கடவது.

முதற்பாட்டில், ஸுலபனென்றார்; இரண்டாம்பாட்டில், கீழ் ப்ரஸ்துதமான ஸௌலப்யத்தை ஸப்ரகாரமாக அருளிச்செய்தார்; மூன்றாம்பாட்டில், அவனுடைய அவதாரரஹஸ்யம் ஒருவர்க்கும் அறியநிலமல்ல வென்றார்; நாலாம்பாட்டில், அப்படிகள்தான் ஆஶ்ரிதர்க்கு அறியலாம், அநாஶ்ரிதர்க்கு அறியப்போகாது என்றார்; அஞ்சாம்பாட்டில், இப்படிப்பட்டவனை அவன் அருளிச்செய்த பக்திமார்க்கத்தாலே ஆஶ்ரயியுங்கோ ளென்றார்; ஆறாம்பாட்டில், ஆஶ்ரயணீய வஸ்து இன்னதென்றும்,ஆஶ்ரயிக்கும் ப்ரகாரம் இன்னதென்றும் அருளிச்செய்தார்; ஏழாம்பாட்டில், நீங்கள் மந்தாயுஸ்ஸுக்களாகையாலே விளம்பிக்கவொண்ணாது, கடுக ஆஶ்ரயியுங்கோ ளென்றார்; எட்டாம்பாட்டில், ஆஶ்ரயிக்கவே விரோதிகளடங்கலும் நஶிக்கு மென்றார்; ஒன்பதாம்பாட்டில், ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும் காரணபூதனானவன் வந்து அவதரிக்கைக்கு ஹேது அருளிச்செய்தார்; பத்தாம்பாட்டில், இப்படி ஸுலபனானவனை த்ரிவிதகரணங்களாலும் அநுபவிக்கப் பாரித்தார்; இத்தை அப்யஸித்தார்க்கு பலஞ்சொன்னார் நிகமத்தில். (கக)

*ஸ்வாமியானவனே என்றபடி. அமரரோடு உயர்விற்சென்று - உயர்வில்வக்தால், அமரரோடொத்த உச்ச்ராயத்தையுடையராய். சிறைக்கு அழகாவது - 'நல்லபாம்பு' என்னுமாபோலே க்ரூரமாயிருக்கை. பிறவியற்று அமரரோடுயர்விற்சென்று என்னவேண்டாவோ? என்ன, இப்பத்தைக்கற்ற இத்யாதி. ஶரீரவிஶ்லேஷத்தை உடனே பிறப்பிக்க வொண்ணாதோ? என்ன, ராஜா இத்யாதி. இவன்பக்கல் ஆதரத்தாலே நித்யஸூரிகளிலே ஒருவனாக நினைப்பிடுகையன்றிக்கே, ஸம்ஸாரத்தினுடைய அநர்த்தகரத்வத்தாலும் நினைப்பிடுமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச் செய்கிறார் - ராஜபுத்ரன் இத்யாதி. தரம் - வரிசை. அவதாரஸௌலப்ய ப்ரதிபாதகமான இத்திருவாய்மொழி கற்றவர்களுக்கு ஸ்ரீ கீதையிற் சொன்னதுவே பலம் என்கிறார் - த்யக்த்வேதி. தேஹம் த்யக்த்வா மாமேதி ந புநர்ஜந்மேதி த்ருஷ்டவ்யம். ஶ்லோகஸ்ய ப்ரத்யேகமந்வயோ விவக்ஷிதः. ஶ்ரோத்ருபுத்தி ஸமாதாநார்த்தம் பாட்டுக்கள்தோறும் ப்ரமேயத்தை அருளிச்செய்கிறார் - முதற்பாட்டில் இத்யாதி. அமரர்கள் தொழுதெழ இத்யாரப்ய, பத்தும்வல்லார் உயர்வில் அமரரோடு சென்று தம்பிறவி யஞ்சிறை யறுவர் இத்யந்வயः. (கக)*

த்ரவிடோபநிஷத் ஸங்கதி:—ஏவம்ரக்ஷ்யத்வேந த்ருஷ்டா ஸ்வாபாவிகஸௌலப்யமஹிமா ஶ்ரிய:பதிர்விபவஸேவ்யதயா ஜநஸ்ய ஸுகரத்வம் வ்யாஜஹார கஷ்டோத்பாதகலேபேந ॥

த்ரவிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி:—ஸாகாஶ்ச்ரிதேஷு ... ஸ்வஸ்மிந்நதி[illegible] ... ॥

** குண்டலிதக்ரந்தம் சில ஸ்ரீகோஶங்களில் இல்லை யென்பர்.*

**திருவாய்மொழி நூற்றந்தாதி:—**
பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும்பிறப்பால்
முத்திதரும்மாநிலத்தீர் மூண்டவன்பால்—பக்திசெயு
மென்றுரைத்த மாறன் தனின்சொல்லாற்போம் நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம். எம்பெருமானர் திருவடிகளே ஶரணம். ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

## நான்காந்திருவாய்மொழி—அஞ்சிறைய: ப்ரவேஶம்.

---

**ஆ.**—(அஞ்சிறைய.) ஆழ்வார் இப்படி தர்ஶநஸமாநாகாரமான ஜ்ஞாநத்தினாலே எம்பெருமானை அநுபவித்து பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே அபேக்ஷைபிறந்து, அதில் ப்ரவ்ருத்தராய், அது கைவாராமையாலே அத்யந்தம் அவஸந்நராய், எம்பெருமானுடைய ஸர்வாபராதஸஹத்வாதி குணங்களை அநுஸந்தித்து, இப்படி குணவானானவன் நம்மைக் கைவிடானென்று பார்த்து, தூதவாக்யத்தினாலே ஸ்வாபிலஷிதத்தை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்கிறார். ஒரு பிராட்டியினுடைய வாக்யாபதேஶத்தாலே ஸ்வாபிலஷிதத்தை விண்ணப்பஞ்செய்கிறார்.

**ஒ.**—நாலாந் திருவாய்மொழியில், எம்பெருமான் தன்னை புஜிக்கைக்கீடான புக்த்யாரோக்யம் ஆழ்வார்க்குப் பிறப்பிக்கைக்காக, வ்யாதிபட்டார்க்கு பிஷக்குகள் போஜநநிரோதமும் பண்ணுமாபோலே அநுபவிக்கவேணுமென்று இவர் பண்ணின மநோரதத்தை அல்பம் தாழ்க்க, அது பொறுக்கமாட்டாதே மிகவும் ஆர்த்தரான ஆழ்வார்; அநந்யார்ஹஶேஷத்வத்தாலும், அந்த ஶேஷத்வாநுகுணத்தில் எம்பெருமானோடு கலந்தால் பிராட்டிமார்க்கு உண்டான ரஸம் பிறக்கையாலும், ததேகபோகத்வத்தாலும், பிரியில்தரியாமையாலும், தமக்குப் பிராட்டிமாரோடு ஸாம்யமுண்டாகையாலே எம்பெருமானோடே கலந்துபிரிந்து பிரிவாற்றாமை நோவுபடுகிறாளொரு பிராட்டிதஶையை ஆபந்நராய், அவள்பேச்சாலே தம்முடைய தஶையை எம்பெருமானுக்கு அறிவிக்கிறார். தன்னுடைய லீலோத்யாநத்திலே தோழிமாரும் தானுமாய் விளையாடாநிற்க, தைவயோகத்தாலே தோழிமாரும் அந்யபரைகளானதஶையிலே எம்பெருமான் இயற்கையிலேஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷிக்க, மிகவும் நோவுபடுகிறாளொரு பிராட்டி, அவன் தானே வரப்பற்றாமையாலே, "நம்பக்கலுண்டான குற்றத்தை அநுஸந்தித்து வாராதொழிகிறான், தன் அபராதஸஹத்வத்தை அறிவிக்க வரும்" என்று பார்த்து, பேரளவுடையரான பெருமாளும் ஸ்ரீஜநகராஜன்திருமகளும் யுக்தாயுக்தநிரூபணக்ஷமரன்றிக்கே "ஶோகஶோகாவநுஷ" என்றும், "ஸம்ஸகாரணவாகீண—" என்றும் அருளிச்செய்தாற்போலே 'இவை நம் வார்த்தை யறியா' என்று பாராதே அவ்வுத்யாநத்திலே வர்த்திக்கிறன சில பக்ஷிகளை எம்பெருமானைக் குறித்துத் தூதுவிடுகிறாள்.

**ப.**—நாலாந்திருவாய்மொழியில், இப்படி ஶீலபனாய் ஸுந்தரனான ஶேஷியைக் கரணத்ரயத்தாலும் அநுபவிக்க இழிந்தவர், அவன் சடக்கென முகங்காட்டாமையாலே அவஸந்நராய், ஶோக விலம்ப ஹேது பூர்வார்ஜிதாபராதங்களைப் பொறுத்து ரக்ஷிக்கைக்கு உறுப்பான பரிகரோச்ச்ராயத்தையும், அமலங்களாக விழிக்கும் புண்டரீகாக்ஷத்வத்தையும், அநந்யார்ஹமாக்கும் அபதாநவைபவத்தையும், அதுக்கு அவ்யவஹித ஸாதநமான அழகையும், ஸஸ்நேஹமான ஸர்வலோக ரக்ஷணத்தையும், ரக்ஷணத்வரைக்கீடான பரிகரவத்தையையும், ஆஶ்ரிததோஷத்தை அதஃகரிக்கும் அநவதிக க்ருபையையும், தோஷமே போக்யமான நிரதிஶயவாத்ஸல்யத்தையும், அதுக்கடியான நிருபாதிகஸம்பந்தத்தையும், அதூரவர்த்தித்வத்தையும் உடையனாகையாலே, நம்

தஶையை அறியாமல் விளம்பித்தானித்தனை யென்று அறுதியிட்டு, ஶடகமுகத்தாலே ஸ்வார்த்தி அறிவிக்கப்பார்த்து, நாயகனை ஈஶ்வரனைப் பிரிந்த நாயகியினுடைய தூதப்ரேஷணமாகிற அந்யாப தேஶத்தாலே அருளிச்செய்கிறுர். இவருடைய ஸ்வரூபம் அநந்யார்ஹஶேஷமாயும், அநந்ய ரக்ஷ்யமாயும், அநந்யபோக்யமாயும் ஶேஷிக்கு ஸர்வப்ரகாரத்தாலும் ஹார்யாவத்பரதந்த்ரமாகை யாலும், ஈஶ்வரனுடைய ஸ்வாமித்வாத்மத்வ ஶேஷித்வ பும்ஸ்த்வாதிகளாகிற ஸ்வபாவங்களை அநுஸந்தித்து, சேதநனுக்கு தாஸத்வ தேஹத்வ ஶேஷத்வ ஸ்த்ரீத்வாதி ஸ்வபாவங்கள் அவர்ஜ நீயமாய் வருகையாலும், புருஷோத்தம விஷயத்தில் இவருடைய ப்ரணயம் நாயகன்பக்கல் நாயகி ப்ரணயத்தோடு ஸரூபமாகையாலே நாயகிபாசுரத்தாலே அருளிச்செய்யக் குறையில்லை; இது, பிரிந்த தலைமகள் தூதாகையாலே கைக்கிளையா யிருக்கிறது.

இ.—நாலாந்திருவாய்மொழியில், கீழ், மநோவாக்காயங்களாலே அநுபவிக்கப்பாரித்த இவர்க்கு ஈஶ்வரன் அப்போதேவந்து முகங்காட்டாமையாலே ஆற்றுமை மேலிட்டு, ஆண் பெண்ணுய் ஒரு பிராட்டி தஶையை ப்ராப்தராய், அவள் பேச்சாலே தம்முடைய தஶையை அவனுக்கு அறிவிக்கிறுர். "ஸ்தேநாவா யஷிவாஞ்ஜ்வத்ஃ" என்கிற விஷயம் அப்போதே முகங்காட்டாதொழி வானென்? என்னில்,—தன்னை புஜிக்கைக்கீடான விடாய் பிறக்கைக்காக; ஶிஷ்க்குகள் வ்யாதிக்ரஸ்தர்க்கு ஹோஜந நிரோதம் பண்ணுமாபோலே எழுநின்றுன். ஆனல், பிராட்டிமார் தஶை பிறந்தபடி எங்ஙனே? என்னில், - அநந்யார்ஹஶேஷத்வத்தாலும், அந்த ஶேஷத்வமடியாக அவனேடு கலந்தால் பிராட்டிமார்க்கு உண்டான ரஸம் பிறக்கையாலும், ததேகபோகத்வத்தாலும், பிரியில்தரியாமை "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" என்று பிராட்டியோடு ஒத்திருக்கையாலும், பிராட்டிமாரோடு ஸாம்யமுண்டாகலாம். ஆனல், பிராட்டி தானுகப் பேசுவானென்? என்னில்; - தாமரை திருவடிகளுக்குப் போலியாயிருக்க, ஸாஸத்ருஶமாகையாலே "மண்விண் முழுதுமளந்த வொண்தாமரை" என்று தாமரையாகப் பேசுகிறுப்போலே இங்கும் பிராட்டியாகப் பேசுகிறது. ராஜருஷி, ப்ரஹ்மருஷியானபின்பு க்ஷத்ரியத்வம் பின்னுட்டிற்றில்லையிறே. எதிர்த்தலையில் பும்ஸ்த்வத்தை அழித்துப் பெண்ணுடையுடுத்தும்படியிறே அவனுடைய புருஷோத்தமத்வம் இருப்பது; ஆகையாலே, இயற்கையிலே புணர்ந்து, அதுதான் தெய்வப்புணர்ச்சியாகையாலே தைவம் பிரிக்கப் பிரிந்து பிரிவாற்றுமை நோவுபடுகிறு ளொரு பிராட்டி, அவன் தானே வரப்பற்றுமையாலே 'அவன் வாராமைக்கு அடி நம்பக்கலுண்டான அபராதம்' என்று பார்த்து, அவனுடைய அபராத ஸஹத்வத்தை அறிவிக்கவே வருமென்று தன் உத்யாநத்தில் பக்ஷிகளைத் தூது விடுகிறுள். ஆனல், பக்ஷிகளைத் தூதுவிடுவானென்? என்னில்,—பேரள வுடையரான சக்ரவர்த்தி திருமகனும் பிராட்டியும் யுக்தாயுக்த நிரூபணம் பண்ண க்ஷமரன்றிக்கே "ஶோகாத் ஶோகாவஹம்" என்றும், "ஹம்ஸகாரண்டவாகீர்ணாம்" என்றும், "ஸர்வாணி ஶரணம் யாதி ஸர்வபக்ஷிமனாதவி" என்றுர்களிறே; அப்படியே இவளும் 'இவை நம்வார்த்தையறியா' என்று பார்க்கமாட்டாதே, 'கமநஸாதநமான சிறகு உண்டு' என்னும் இவ்வளவைப் பார்த்துத் தூதுவிடுகிறுள். பட்டர் - "சக்ரவர்த்தி திருமகன் திருவவதரித்து வாநரஜாதி வீறுபெற்றுற் போலேகாண் ஆழ்வார்கள் திருவவதரித்துப் பக்ஷிஜாதி வீறுபெற்றபடி." தன்னுடைய ஶேஷத்வத்தை அநுஸந்தித்தால், "தத்தஸ்யஸத்ருஶம் ஶவேத்" என்று அவன் செய்தபடி கண்டிருக்கலாம்; அத்தலையில் வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்தால் தூதுவிட்டல்லது இருக்கவொண்ணுது. இவர்க்கு யாத்ருச்சிக ஸம்ஶ்லேஷமாவது - அநாதிகாலம் இவரைத் தன்னேடே சேரவிடுகையிலே அவஸரப்ரதீக்ஷனுய்ப் போந்த ஈஶ்வரன், இவர்பக்கலிலே அப்ரதிஷேதம் உண்டாவதொரு அவகாசம் பெற்று, அவன் மயர்வற மதிநல மருளப்பெற்ற இது. இவர்க்கு விஶ்லேஷமாவது - அந்த ஜ்ஞாநம் பேற்றேடே தலைக்கட்டப் பெறுமை.

ஈடு.—பரத்வத்தையும் ஸுஜநீயதையையும் ஸௌலப்யத்தையும் அநுஸவித்து ஹ்ருஷ்டராய்த் தாமாய்ப் பேசினர் கீழ்; இதில், தாமானதன்மை யழிந்து ஒரு பிராட்டி தசையை ப்ராப்தராய், ஹர்ஷத்தாலே சொல்லும் பாசுரம் போய் ஆற்றாமையாலே சொல்லும் பாசுரமாய்ச் செல்லுகிறது; "**அயமபரஃகாரக நியமஃ**" (அயமபரஃகாரக நியமஃ) என்னுமாபோலே, கீழ்ப் போந்த ரீதி யொழிய வேறொன்றாயிறே இருக்கிறது. முற்காலத்திலே அல்பம் விவக்ஷிதனா யிருப்பானொருவன், 'வீதராகரா யிருப்பார் பரிக்ரஹித்துப் போருகிற தொன்றா யிருந்தது தத்த்வபரமாக அடுக்கும்' என்று இத்திருவாய்மொழியளவும் வர அதிகரித்து, இத்திருவாய்மொழியளவிலே வந்தவாறே 'இது காமுகவாக்யமா யிருந்ததீ!' என்று கைவிட்டுப்போனானும்; "**நிதித்யாஸிதவ்யஃ**" (நிதித்யாஸிதவ்யஃ) என்று விதிக்கிற ஸகவத்காம மென்று அறிந்திலன் ஸாக்யஹாநியாலே. '"அயர்ப்பில னலற்றுவன் தழுவுவன் வணங்குவன்" என்ற இது அநுஸவிக்கிறார்' என்று பிள்ளான் பணிக்குமென்ற இது, இவருக்கு முனியேநான்முகனளவும் உள்ளது மாநஸாநுஸவ மாகையாலே அத்தோடே சேரவிழுமிறே; அநுபவிக்கப் பாரிக்கிறா ரென்கிற விடம், இத்தோடே போரச் சேர்ந்திருக்கும். திருவுலகளந்தருளினவனுடைய திருவடிகளை அநுஸவிப்பதாக ஒருப்பட்டுக் கட்டிக் கொண்டார்; அது ஒரு காலவிஶேஷத்திலேயாய், தாம் பிற்பாடராய்த் தோற்றுகையாலே, துணுக்கென்று தாமான தன்மை யழிந்து ஒருபிராட்டி தசையை ப்ராப்தராய், ஹர்ஷத்தாலே சொல்லும் பாசுரம் போய் ஆற்றாமையாலே சொல்லும் பாசுரமாய்விட்டது. "**ஆர்த்தோவாயதிவாத்ருப்தஃ**" (ஆர்த்தோவாயதிவாத்ருப்தஃ) என்கிற விஷயத்தை அநுஸவித்த இவர்க்கு இழவு வருகைக்கு ப்ரஸங்கம் என்? என்னில்;-'ஆமத்திற் சோறு **வாயகம்**' என்னுமத்தாலே நிதாநஜ்ஞரான ஸிஷக்கு

---

அஞ்சிறையமடநாரை ப்ரவேஶம். ஸங்க்ரஹஸங்கதி - பரத்வத்தையும் இத்யாதி. தாமானதன்மை- புருஷஸாவம். ஆற்றமை - விரஹக்லேஶம். ரீதிபேதத்துக்கு த்ருஷ்டாந்தம் - அயமபர இத்யாதி. இது மஹாபாஷ்யவாக்யம்; கர்மகர்த்த்ருகரணாதிரூபேண காரகம் அநேகவிதமிறே; அங்கே "அபரஃகாரக நியமஃ" என்று பூர்வகாரகநியமாபேக்ஷயா உத்தரகாரகநியமம் விலக்ஷணமென்று சொல்லிற்றிறே; அது போலே என்றபடி. ரீத்யந்தரமென்னுமதுக்கு ஐதிஹ்யம் - முற்காலத்திலே இத்யாதி. விவக்ஷிதன் - வித்வான். தத்த்வபரமான இதிலே காமுகவாக்யமென்று விப்ரதிபத்தி பண்ணுகைக்கு அடியெது? என்ன, நிதித்யாஸிதவ்யஃ இத்யாதி. ப்ருஹதாரண்யகே - மைத்ரேயீப்ராஹ்மணே - "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்யஃ ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யஃ". "ஶ்ரோதவ்யஃ ஶ்ருதிவாக்யேப்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யோ த்ரஷ்டவ்யஃ" இத்யாதயஃ. ஸக்தி கார்யமான உக்தியைக் காமுகவாக்ய ரூபேண சொன்னது - புருஷன் புருஷனைக் கண்டு ஸ்நேஹிக்குமதிலும் "காமிநீஷு ஸ்த்ரைணஃ" என்கிறபடியே ஸ்த்ரீக்குப் புருஷவிஷய ஸ்நேஹம் பள்ளமடையாகையாலே தாத்ருஶமான தம்முடைய அதிமாத்ரப்ராவண்ய ஸூசகமாகையாலும், குடஜிஹ்விகாந்யாயேந விஷயப்ரவணரான ஸம்ஸாரிகள் பரிக்ரஹித்து உஜ்ஜீவிப்பர்களென்னுமத்தாலும். விஸ்தாரஸங்கதி - அயர்ப்பிலன் இத்யாதி. ஆற்றாமையாலே சொல்லும் பாசுரமேது? என்ன, அயர்ப்பிலன் இத்யாதி என்னுதல். அத்தோடே - பிள்ளான் பணித்த மாநஸாநுபவத்தோடே. இத்தோடே - இத்திருவாய்மொழியோடே. போரச்சேர்ந்திருக்கும் - மாநஸாநுபவ மாகையாலே மாநஸமாக அநுபவித்து பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து தத்அலாபத்தாலே தாமானதன்மை யழிந்து என்று அத்யாஹரித்து நிர்வஹிக்கவேண்டும் பிள்ளான் நிர்வாஹத்தைப் பற்றப் போரச்சேரு மென்றபடி. "தழுவுவன் வணங்குவன்" இத்யாதிக்கு வர்த்தமாநார்த்தங் கொள்ளுகிறதும் அமுக்யமிறே. போரச்சேர்ந்திருக்கு மென்றத்தைக் காட்டுகிறார், திருவுலகளந்தருளின இத்யாதி. துணுக்கென்று-திடுக்கிட்டு, பயப்பட்டு, கலங்கி என்றபடி. "ஆர்த்தோ வா யதி வா த்ருப்தஃ - பரேஷாம் ஶரணாகதஃ ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்யஃ க்ருதாத்மநா" பரேஷாம் - நியோதாரணைஷ்வஷீ. பெருமாள் திருவுள்ளத்தாலே ஆர்த்தனாகவுமாம், முதலிகள் திருவுள்ளத்தாலே த்ருப்தனாகவுமா மென்றபடி. அநுபவித்த இவர்க்கு-அநுபவித்து அநுபவவிசேஷத்தையாசைப்பட்ட இவர்க்கு. இழவு-விஶ்லேஷவ்யஸநம். ஆமம்-அஜீர்த்தி. போநின்றன்-

கள் ஹோஜ நிரோயம்பண்ணுமாபோலே,மேல்வரும் அநுஹவங்கள் ஸாத்மிக்கைக்காக நாலடிபேர நின்றான்; மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனிறே. அநந்தரம் கலங்கினார். மயர்வறமதிநல மருளப்பெற்றவரிறே இப்படி கலங்கினார்; அவன்தானே கொடுத்த அறிவும் விஶ்லேஷத்தில் அகிஞ்சித்கரமாம்படியிறே அவனுடைய வைலக்ஷண்யம்; "தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்) என்றிருந்தவள்தானே வேண்யுத்க்ரதநாதிகளிலே ஒருப்பட்டாளிறே. "ஹம்ஸகாரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம்நதீம்" (ஹம்ஸகாரண்டவாகீர்ணம் வந்தே கோதாவரீம்நதீம்) என்றும், "அஶோகஶோகாபநுத ஶோகோப ஹதசேதஸம்" (அஶோகஶோகாபநுத ஶோகோப ஹதசேதஸம்) என்றுமிறே அவர்கள் வார்த்தையும். பிராட்டிமார் தஶைதான் உண்டாகிறபடி யெங்ஙனே? என்னில்;—அநந்யார்ஹஶேஷத்வத்தாலும் அநந்யஶரணத்வத்தாலும், அந்வயத்தில் தரித்தும், வ்யதிரேகத்தில் தரியாதொழிகையாலும், ததேக ஹோகராகையாலும், அவன் நிர்வாஹகனாக இத்தலை நிர்வாஹ்யமாகையாலும், பிராட்டிமார்தஶை யுண்டாகத் தட்டில்லை. ஆனால், பிராட்டிதானாகப் பேசுவானேன்? என்னில்;—தாமரை திருவடி

---

போனான். இவன் பிஷக்கோ? என்ன, மருத்துவன் இத்யாதி. ஆசார்யாதிரூபேண ஸம்ஸாரபிஷக்காய் நின்ற நீலமணிபோன்ற நிறத்தையுடையவன். அநந்தரம்-பேரநின்ற அநந்தரம். கலங்கினார்-கலங்கிப் பிராட்டிதஶையை ப்ராப்தராய்த் தூதுவிடுகிறார். "ஹந்யோ நாநவிவ்யூஹ! ஸுஹித்யோ நாவ்யஸநே" என்றிருக்கவேண்டாவோ? ஜ்ஞாநாதிகரான இவர் கலங்கலாமோ? என்ன, மயர்வற இத்யாதி. ஹக்திரூபாபந்ந ஜ்ஞாநத்தையுடைய ராகையாலே கலங்கினாரென்றபடி. ஹக்திமாத்ரமன்றிக்கே தத்வைலக்ஷண்யமும் கலங்கப் பண்ணுமென்கிறார் - அவன்தான் இத்யாதி. அகிஞ்சித்கரமாகை - "தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்" என்றிருக்கும்படி பண்ணுமை. இப்படி ஜ்ஞாநாதிகராய்க் கலங்கின பேருண்டோ? என்ன, தத்தஸ்ய இத்யாதி. ஸுந்தரகாண்டே ஏகோநசத்வாரிம்ஶே ஹநுமந்தம் ப்ரதி ஸீதா; "ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்தந: । மாம் நயேத்யதி காகுத்ஸ்த: தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்". தத்ரைவ ஷஷ்டிதமே "உதீர்ணவீர ஹர்யாக்ஷ விஶ்வஸீதாயவேண்யுத்க்ரதநம் ம்ருதஹீக்ஷா । உத்ஸ்ருஜ்ய வேண்யுத்க்ரதநேந ஶீக்ரம் ஹம்ஸகிஷ்யாமிய ஸுக்ரீவம்". 'தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்' என்றது-வேண்யுத்க்ரதநாநந்தரத்திலே யாகிலும்,வேண்யுத்க்ரதநாத்பூர்வமும் இத்தநினைவு உண்டாகலாமாகையாலே விரோதமில்லை. கலங்கி, பக்ஷிகளைத் தூதுவிட்டதுக்கு த்ருஷ்டாந்தத்வயம் - ஹம்ஸ இத்யாதி. "க்ஷிப்ரம் ராமாய ஶம்ஸத்வம் ஸீதாம் ஹரதி ராவண:" இத்யுத்தரார்த்தம். இதம் ஆரண்ய காண்டே கோதாவரீம்ப்ரதி, ராவணநீதஸீதாவாக்யம். தத்ரைவ ஸீதாவியோக ஸந்தப்தோ ராம: - அஶோக இத்யாதி. "ஸ்வநாமாநம் குரு க்ஷிப்ரம் ப்ரியாஸந்தர்ஶநேந மாம்" இத்யுத்தரார்த்தம். ஹம்ஸேத்யாதிக்கு - நதிக்குப் பக்ஷிகளைக்கொண்டு தேசாந்தரத்தேயாகிலும் அறிவிப்பிக்கைக்கு ஶக்தி யுண்டென்றிருக்கிறாளாயிற்று, கலக்கத்தாலே யென்று கருத்து. அஶோகேத்யாதிக்கு - ஒருவன் அஶோகனாயிருக்கைக்கு பலம், பிறர்ஶோகத்தைப் போக்குகை யென்றிறே தாமிருப்ப தென்று கருத்து. பகவத்விஶ்லேஷ கார்யங்கள் பிராட்டிமாருடைய தர்மமிறே. அது இவர்க்குக் கூடும்படி யெங்ஙனே? என்னும் ஆக்ஷேபத்தை அநுவதித்துப் பரிஹரிக்கிறார்-பிராட்டிமார் தஶை இத்யாதி. "ஸுந்த்ரைவக்யம்" இத்யாதியாலே அநந்யார்ஹ ஶேஷத்வமும், "தஸ்தஸ்ய ஸத்ருஶம்பவேத்" "தவாஸ்மி தாஸ:" இத்யாதியாலே அநந்யஶரணத்வமும், "நேஷாபஶ்யதி" "யஸ்யா: பஶ்யதி சேந்நாம்" இத்யாதியாலே ததேக போகத்வமும், "யஸ்யா ஸஹ ஸஸ்வர்க:" "நசஸீதா" இத்யாதியாலே அந்வயத்தில் தரிப்பும் வ்யதிரேகத்திலே தரியாமையும், "ஸுந்த்ராராவணோஹம்" இத்யாதியாலே ததேகநிர்வாஹ்யத்வமும் பிராட்டிக்குக் கண்டுகொள்வது. சேதநர்க்கும் இந்த குணஷட்கம் திருமந்த்ரத்திலே கண்டுகொள்வது. ஆனாலும், கிஞ்சித்ஸாத்ருஶ்யங்கொண்டு இப்படி சொல்லலாமோ? என்கிற ஶங்கையை அநுவதித்து ஸௌஸாத்ருஶ்யத்தாலே சொல்லலாமென்று பரிஹரிக்கிறார் - ஆனால் இத்யாதி. பிராட்டி தானா

களுக்குப் போலியாயிருக்க, "வையங்கோண்ட தடந்தாமரை" என்று - தாமரையாகவே திருவடிகளைப் பேசுகிறப்போலே, இங்கும் பிராட்டியாகப் பேசுகிறது; முற்றுவமையிருக்கிறபடி. ராஜருஷி, ப்ரஹ்மருஷியானபின்பு க்ஷத்ரியத்வம் பின்னாட்டிற்றில்லையிறே; எதிர்த்தலையில் பும்ஸ்த்வத்தையழித்துப் பெண்ணுடை யுடுத்தும்படியிறே அவனுடைய புருஷோத்தமத்வம் இருப்பது. கூடுமிடம் - குறிஞ்சி; அதுக்கு பூதம்-ஆகாசம்; பிரியுமிடம் - பாலை; அதுக்கு பூதம் - தேஜஸ்ஸு; ஊடலுக்கு ஸ்தானம்-மருதம்; அதுக்கு பூதம் - வாயு; பிரிந்தார் இரங்குமிடம் - நெய்தல்; அதுக்கு பூதம் - ஜலம்; பிரிந்தார் இரங்குவது - நெய்தல்நிலத்திலே யாகையாலே: பிராட்டி, தானும் தன் பரிகரமுமாக லீலோத்யாநத்திலே புறப்பட்டாளாய், தோழிமார் பூக்கொய்கையிலே அந்யபரைகளாக, நாயகனும் தன்னோராயிரம் பிள்ளைகளும் தானுமாக வேட்டைக்குப் புறப்பட்டுவர, ஏவுண்ட ம்ருகம் இவனை இந்த உத்யாநத்திலே தனியே கொண்டுவந்து மூட்டி, அது மறைய, தைவயோகத்தாலே இருவர்க்கும் ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், கூட்டின தைவம் பிரிக்கப் பிரிந்து, 'இனி இரண்டு தலையையும் அழித்தாகிலும் கிட்டவேணும்' என்னும் ஆற்றாமை பிறந்து, தன் பரிஸரத்திலுள்ளார் "எம்மின்முன் னவனுக்கு மாய்வர்" என்கிறபடியே தளர்ந்து, கால்நடை தருவாரில்லாமையாலே அப்பரிஸரத்திலே வர்த்திக்கிற சில திர்யக்குக்களைப் பார்த்து, 'இவை வார்த்தை சொல்ல

---

கப் பேசுகிறதென்றது - "கிளிமொழியா ளலற்றியசொல்" என்றத்தைப் பற்ற. வையம் இத்யாதி - பூமியெல்லாம் அளந்துகொண்ட விஸ்த்ருதமான தாமரைபோன்ற திருவடிகளுக்கே. அங்குத்தான் எப்படியென்ன, முற்றுவமை இதி. முற்றுவமை - ஸௌஸாத்ருஶ்யம்; பூர்ணோபமை யென்றபடி. புருஷராகையாலே பும்ஸ்த்வம் பின்னாட்டாதோ? என்ன, ராஜருஷி இத்யாதி. 'விஶ்வாமித்ரனுக்கு' என்று கூட்டுவது. ஸ்த்ரீத்வம் ஸித்தமானாலன்றோ தத்விஶேஷமான பிராட்டிதசை கூடுவது? இவர்க்கு ஸ்த்ரீத்வதஶாப்ராப்தி ஹேதுவேது? என்ன, எதிர்த்தலை இத்யாதி. "ஸ வஸவவாஸாஂஷெவொஸள ஸாக்ஷாகு வாமாஷஉவ்யெத, ஸ்த்ரீயபிதாஸகஸவஃ ஜமஉஹவாமஸாமி" "ஸாதிகாத்கஶெஷிகவாஂஸாஉ்யா: ஸாதிஹொமாணா: । ஸெஹெ்யாஉாஸகஸெஉகஸெஷிகஸ ஸ்ரீகஉாயிந:" என்னக்கடவதிறே. "வாஞாவ்யா: வஉாவதூாகஷ்யா: ஸாயதூ்யாஜவநஂவநு । யாஸிபொ உூஷ வத்ய்ஸா:வாஂஹாவஂஉநஸாயயா:" என்று த்ரௌபதியினுடைய ப்ராக்ருதஶரீரம் அவஸ்த்தாந்தரத்தையுண்டாக்கினால் பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரியாய் அப்ராக்ருதமான வடிவழகு பண்ணச் சொல்லவேண்டாவிறே இதிஹாஸ:. பெண்ணுடையுடுக்கும்படி - ஸ்த்ரீவஸ்த்ரதாரணம் பண்ணும்படி. அந்த:புரத்தில் வர்த்திக்கிற இப்பிராட்டிக்குத் தூது விடுகைக்குப் பக்ஷிகளுண்டோ? என்ன, தமிழர் ஸமாதியாலே கூடுமென்கிறார் - கூடுமிடம் இத்யாதி. அதாவது - நாயகவிஶ்லேஷஜநித ஶோகாவிஷ்ட நாயிகாஸ்த்தானம் ஸமுத்ரப்ராந்தம் என்கிற தமிழர் ஸமாதியாலே, தானிருந்த இத்தேசத்தில் வர்த்திக்கிற பக்ஷிகளைத் தூதுவிடுகிறு ளென்றபடி. இதுக்கு ஸம்வாதமாக "போக்கெல்லாம், பாலைபுணர்தல் நறுங்குறிஞ்சி - யாக்கஞ்சேர்ந்தூடலணிமருதம், நோக்குங்கால், இல்லிருக்கைமுல்லை யிரங்கல் நறுநெய்தல், சொல்லிருக்குமைம்பால் தொகை" இத்யாதியைத் திருவுள்ளம்பற்றி ப்ரஸங்காத் ஸ்த்தலாந்தரங்களையும் நிரூபிக்கிறார் - கூடுமிடங்குறிஞ்சி இத்யாதியாலே, போக்கெல்லா மென்றது-புணர்ந்துடன் போக்கென்றும், தனிப்போக்கென்று முண்டாகையைப் பற்ற. "கொடுங்காற்சிலையர்" என்கிற பாட்டிலே தனிப்போக்கையும், "கானிலம் வாய்க்கொண்டு" என்கிற பாட்டிலே புணர்ந்துடன்போக்கையும் அருளிச்செய்தாரிறே. காடுசார்ந்த நிலம் - முல்லை. நாடுசார்ந்த நிலம் - மருதம். மலைச்சார்வு - குறிஞ்சி. கடற்சார்வு-நெய்தல். நீரின்றி வேனில் தெறுநிலம் - பாலை. வேனில் - வெய்யில். தெறு - ஸம்ஹரிக்கிற. ஊடல்-ப்ரணயகலஹம். நெய்தல் நிலத்திலே யாகையாலே என்றதுக்கு - 'கண்ணுற்கண்டவற்றை யெல்லாம்' என்றத்தோடே அந்வயம். இவளுடைய விஶ்லேஷந்தான் ஸம்ஶ்லேஷ பூர்வகமாயல்லது இராமையாலே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானபடி யென்? என்ன, - காந்தர்வவிவாஹப்ராக்ரியையாலே அருளிச்செய்கிறார் - பிராட்டிதானும் இத்யாதி. உத்யாநமென்றது - "புன்னையம்பொழில்சூழ்" என்றத்தைப்பற்ற. ஏவுண்ட-எய்யப்பட்ட. தோழிமாரைத் தூதுவிட்டாலோ வென்ன, எம்மின்முன் இத்யாதி. ஈடுபடுகிற எனக்குமுன்னே 'இவளுக்கு அவனுதவப்பெறு

மாட்டாது' என்னுமது அறியாதே. 'இவற்றுக்குப் பக்ஷபாத முண்டாயிருந்ததாகையாலே கடுகப் போய் நங்கார்யம் செய்யவற்று' என்று கமநஸாதநமான பக்ஷபாதமே பற்றுசாக, ராவணமாயையால் வரும் அதிஶங்கையு மில்லாமையாலே கண்ணால் கண்டவற்றையெல்லாம் தூதுவிடுகிருள்; "சக்ரவர்த்தித்திருமகன் திருவவதரித்த பின்பு வாநரஜாதி வீறுபெற்றாற்போலே காணும், ஆழ்வார்கள் திருவவதரித்துத் திர்யக்ஜாதி வீறுபெற்றபடி" என்று பட்டர் அருளிச்செய்வர். இனி, இவர்க்கு யாத்ருச்சிக ஸம்ஶ்லேஷமாவது - அநாதிகாலம் இவரைத் தன்னோடே சேர விடுகைக்கு அவஸர ப்ரதீக்ஷனாய்ப்போந்தவன் இவர்பக்கலிலே அப்ரதிஷேத முண்டாவதோரு அவகாஶம் பெற்று, அவன் மயர்வறமதிநலமருளபெற்ற இது. விஶ்லேஷமாவது - அவன்கொடுத்த ஜ்ஞாநம் பேற்றோடே தலைக்கட்டப்பெறுமை. தூதுவிடுகைக்குப் பற்றுசுதான் ஏது? என்னில்;- தன்மேன்மையாலே இத்தலையில் தண்மைபாராதே வந்து கலந்தான்; கிட்டினவாறே தோஷ தர்ஶநத்தைப் பண்ணினான்; பிரிந்தவளவிலே 'இதுவன்றோ இருந்தபடி' என்று அநாதரித்தான்; தோஷதர்ஶநம் பண்ணுமளவேயன்றிக்கே, தமக்கு அபராதஸஹத்வ மென்றொரு குணமுண்டு நிரூபகமா யிருப்பதொன்று; அத்தையறிவிக்க வருமென்று அந்த அபராதஸஹத்வம் பற்றுசாகத் தூதுவிடுகிருள்.

## முதற் பாட்டு.

அஞ்சிறையமடநாராய்! அளியத்தாய்நீயும்நின்
அஞ்சிறையசேவலுமாய் அவாவென்றெனக்கருளி
வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு என்விடுதூதாய்ச்சென்றக்கால்
வன்சிறையிலவன்வைக்கில் வைப்புண்டாலென்செய்யுமோ?

**ஆ.**—எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டி, தன்முன்னே ஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிற நாரைகளைக் கண்டு, தான் வ்யஸநாதிஶயத்தாலே அறிவிழந்திருக்கையால், 'தன்வார்த்தைகளை அறியா' என்னுமிடத்தை விவேகிக்கமாட்டாதே, அவற்றினுடைய ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தைக் காண்கையாலே தன்னோபாதி அளவுடையவாகக் கொண்டு, அவற்றைக் குறித்து, தன்னளவிலே வார்த்தை சொல்லுகிறவிடத்தில் சேவலைக்குறித்துச் சொல்லுகை ஈடல்

கிறதில்லை' என்று அவன் பொருட்டு ஈடுபடா நிற்பர்கள். செய்யவற்று - செய்ய ஸமர்த்தம். பக்ஷபாத மென்கிறது - சாடு, பக்ஷாப்யாம் கமநம். "பத்லு - கதௌ" இதிஹி நாதுஃ. தன் ஆற்றாமை அறிவிக்கலாம்படி தன் பரிஸரத்திலே வர்த்திக்கிற பக்ஷபாதம். பற்றசாக-அவலம்பநமாக. பிராட்டியைப்போலே ஒன்றைத் தூதுவிட்டால் அமையாதோ? என்ன, ராவணமாயை இத்யாதி. ரஸோக்தி - சக்ரவர்த்தி இத்யாதி. யாத்ருச்சிக ஸம்ஶ்லேஷத்துக்கு ஸ்வாபதேஶம் அருளிச்செய்கிறார் - இனி இவர்க்கு இத்யாதி. ஸ்வாபதேஶ ப்ரஸங்கத்திலே 'பிராட்டிதானும்' இத்யாதிக்கு ஸ்வாபதேஶம் - இச்சேதநன் "தூர்த்தரோடிசைந்தகாலம்" என்கிறபடியே தூர்த்தரோடேகூட "பெய்தகாவு" என்கிற லீலாவிபூதியிலே அற்பசாரங்களவை சுவைத்தகன்றவளவிலே, ஸர்வேஶ்வரன் "தன்னோராயிரம்பிள்ளைகள்" என்கிறபடியே ஸாம்யாபந்நரான நித்யஸூரிகளும் தானுமாக "காட்டைநாடித்தேனுகனும்" என்கிறபடியே விரோதி நிரஸநார்த்தமாக லீலாவிபூதியிலே அவதரித்து இவர்பக்கல் அத்வேஷமாகிற அவகாஶம் பெற்றவாறே அங்கீகரிக்கையென்று. பற்றுசு எது? என்கிற ஶங்கைக்குப் பரிஹாரம் அபராத ஸஹத்வமென்னப் பார்த்து, பிரிகைக்கு ஹேது அபராதமென்று விவக்ஷித்து, அபராதமுண்டானால் முன்பு கலப்பானென்? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார்-தன் மேன்மையாலே இத்யாதி. மேன்மை - ஸ்வாதந்த்ர்யம். கலந்தவன் பிரிவானென்? என்ன, கிட்டின இத்யாதி. தோஷ தர்ஶநத்தைப்பண்ணி - பிரிந்தானென்று கூட்டுவது. "என் பிழைத்தாள் - தகவினுக்கு" என்றத்தைப் பற்ற, அபராத ஸஹத்வம் என்றது.

லாமையாலே, அத்தைக்குறித்துச் சொல்லுகிற வார்த்தையையும், ஔசித்யத்தாலே பேடையை நோக்கி, 'நினைத்தவிடத்திலே நினைத்தபோதே செல்லுகைக்கீடான உபகரணங்களை யுடையையாய், ஸம்ஶ்லேஷத்தையே தாரகமாகவுடையையாய், துஃகாஸஹிஷ்ணுவுமாயிருந்த நீ, என்பக்கலிலே க்ருபைபண்ணி, ஆஶ்ரிதருடைய ஸமஸ்த துஃகநிரஸந ஸ்வபாவனான பெரிய திருவடியை திவ்யவாஹநமாகவுடைய எம்பெருமானுக்கு என்விடுதூதாய்ச் சென்று என்திறத்தைச் சொல்லவேணும்' என்று அபேக்ஷித்து, பின்னையும் அவைபோகாதிருந்தவாறே, 'சொன்ன வார்த்தையை அவன் அங்கீகரியாதொழியில் செய்வதென்?' என்று போகாதிருந்தனவாகக் கொண்டு, இப்படி ஆஶ்ரிதவத்ஸலனானவன் அங்கீகரியா தொழியுமோ? அவன் என்வார்த்தையை அங்கீகரியா தொழிகையாகிற வன்சிறையில் அவன் உங்களை வைக்கில் அத்தனையும் எனக்காகப் பட்டாலாகாதோ? என்றே செய்யவேணு மென்று சொல்லுகிறாள்.

ஓ.—முதற்பாட்டில், இப்பிராட்டி, உத்யாநத்திலே ஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிறன சில நாரைகளைக் கண்டு, ஸ்த்ரீத்வத்தாலே அவற்றில் தன்னோடு ஸஜாதீயமான பேடையை நோக்கி எம்பெருமானுக்கு என் ஆர்த்தியை அறிவிக்கவேணு மென்கிறாள்.

[அஞ்சிறை என்று தொடங்கி] - சேவலோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே செந்தலித்து நினைத்தவிடத்திலே போகைக்கீடான சிறகை யுடையையாய் பவ்யமான நாராய்! இத்தசையிலே உதவும்படியான தகைமையையுடைய நீயும் நீ இட்டவழக்காய் அழகிய ஸமாந ஸாதநத்தையுடைத்தான சேவலுங் கூடி ஆர்த்தையான எனக்கு ஐயோ? என்று க்ருபை பண்ணி. [வெஞ்சிறைப்புள் உயர்த்தார்க்கு] - அங்கேபோனால் அவனை அறியும்படி எங்ஙனே? என்னில், - ப்ரதிபக்ஷத்துக்கு வெவ்விதான சிறகையுடைத்தான பெரிய திருவடியைக் கொடியாகவுடையவ னென்று அடையாளம் சொல்லுகிறாள்; தன்னைப் பிரித்துச் சடக்கெனக் கொடுபோகையாலே "ஸுபர்ணோऽஸி மஹாபக்ஷ: " என்னுமாபோலே இவ் வெவ்விதான சிறகையுடைய புள்ளாலே வஹிக்கப்பட்டவனுக்கு என்றுளாகவுமாம். [என்விடுதூதாய்ச் சென்றக்கால்] - அத்யார்த்தையான எனக்குத் தூதாய்ச் சென்றக்கால். [வன்சிறையில் என்று தொடங்கி] - தான் அர்த்திக்கச்செய்தே அவை போகாதொழிந்தவாறே, தன்பக்கல்நின்றுஞ் சென்ற தங்கள் வார்த்தையை அவன் அங்கீகரியானென்று பார்த்து அவை போகாதொழிந்தனவாகக் கொண்டு அப்படி நீர்மையுடையவன் உங்களைக் கொண்டாடாமையாகிற வன்சிறையிலே வைக்கில்; 'பாரார்த்தமாகச் சிறையிருக்கை கிடைப்பதொன்றோ?' என்று ஸ்வகோஷ்டீ ப்ரஸித்தியாலே சொல்லுகிறாள்.

ப.—முதற்பாட்டில், தன் புறச்சோலையில் தடாகத்திலே தன்சேவலோடும் இருக்கிற நாரையைக் கண்டு கருடத்வஜனுக்குத் தூதாக அபேக்ஷிக்கிறாள்.

அளியத்தாய்-எனக்கு அளிக்கத் தகுதியான ஸ்வபாவத்தையுடையையாய், அஞ்சிறைய-(நான் சொன்ன கார்யத்தில் செல்லுகைக்கீடான) அழகிய சிறகையும், மடநாராய் - (சேவலோடு உண்டான சேர்த்தியாலே வந்த துவட்சியாலே) மடப்பத்தையுமுடைய நாராய்! நீயும் - (சேவலையொழியச் செல்லாத) நீயும், நின் அஞ் சிறைய சேவலுமாய் - உன்னோட்டைச் சேர்த்தியாலே புதுக்கணித்த சிறகையுடைய சேவலுமாய், ஆவாவென்று - (என் தனிமைகண்டு) ஐயோ! ஐயோ! என்று, எனக்கு அருளி - எனக்கு க்ருபையைப்பண்ணி, வெஞ்சிறை - (விரோதி விஷயத்தில்) வெவ்விய சிறகையுடைய, புள் - பெரிய திருவடியை, உயர்த்தார்க்கு - ரக்ஷணத்துக்குக் கொடியாக எடுத்தவனுக்கு, என்விடுதூதாய்ச் சென்றக்கால் - என்னாலே விடப்பட்ட தூதாய்ச் சென்றக்கால், வன்சிறையில் - (உங்கள் முகம்பார்த்து வார்த்தை கேளாமையாகிற) வலியசிறையிலே, அவன் வைக்கில் - ப்ரணயியான அவன்தானே வைக்கில், வைப்புண்டால் - அதுக்கு இசைந்திருந்தால், என்செய்யும் - (அவ்விருப்பு) என்ன குற்றஞ்செய்யும்?

ஓ என்கிற அசை-கூடாததுகூடுமோ? என்றபடி. பிறர்க்காகச் சிறையிருக்கை பெரிய கோன்மையென்று கருத்து. புள்ளாலே உயர்த்தப்பட்டவ ரென்னவுமாம். இவ்விடத்தில் நாரை தொடக்கமானவற்றைத் தூதாகச் சொல்லிற்று - வடகருடைய கார்யதேஸிகத்வ ஸூசநார்த்தமாக. சிறகைக் கொண்டாடிற்று - ஜ்ஞாநப்ரேமரூப பக்ஷத்வயாந்வயத்தாலே. பேடும் சேவலுமான சேர்த்தி - வடகருடைய பரஸ்பர ஸேஷஸேஷி பாவஸூசகம்.

இ.—முதற்பாட்டில், தன்கண்வட்டத்திலே சேவலோடே கலந்திருக்கிறதொரு நாரையைப் பார்த்து 'நீ அவனுக்கு என் தசையை அறிவிக்கவேணும்' என்கிறாள்.

[அஞ்சிறைய] - ப்ரஜைக்குத் தாய்முலையிலே கண் ஓடுமாபோலே தனக்கு உபகாரகமான சிறகிலேயாயிற்று முற்படக் கண்வைத்தது. ஆசார்யனுடைய ஜ்ஞாநத்தை அநுமித்து ஸிஷ்யன் உபஸத்தி பண்ணுமாபோலே, வடகருடைய பரிகரவத்தையை அறிந்து பற்றவேணுமிறே. 'அம்' என்று அழகு. 'சிறை' என்று சிறகு. அழகிய சிறகையுடைய. தன்னைப்போலே உருவியிராதே, சேவலோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே செந்தளித்திருக்கை. "ஸ்வநுஶாஸநம் காரணம் விஸ்வநாஸஸிவிஷம்நீஷ்ம" என்றிறே தன்தசை. [மடநாராய்]-ஸம்ஶ்லேஷத்தாலே துவண்டு தூதுபோகைக்கு யோக்யமாயிருக்கை. நாண் மடம் அச்சம் என்று ஸ்த்ரீத்வமாய், பிரிவில் வ்யஸநமறியும் தன் இனத்தைப் பார்த்துச் சொல்லுகிறா ளென்னவுமாம். [அளியத்தாய் நீயும்] - இத்தசையிலே உதவும் அநுக்ரஹஸீலையான நீயும். [நின் அஞ்சிறைய சேவலுமாய்] - நீ இட்டவழக்காய், நல்ல ஸமக பரிகரத்தையுடைத்தான சேவலுமாய். சேவலைப் பற்றுவது பேடை முன்னாக வென்றும், ஆர்த்தரக்ஷணம் பண்ணுவதும் ஒரு மிதுந மென்றிருக்கிறாள். [ஆவாவென்று] - என் தசையைப் பார்த்து, ஐயோ! ஐயோ! என்று. [எனக்கு] - "ஸஹதிவஸ்ய ஸஸீராஸ்"என்று தன்வடிவைக் காட்டுகிறாள். [அருளி]-க்ருபைபண்ணி. இரப்புக்குச் செய்ததாகையன்றிக்கே உங்கள்பேறாக அருளி. "விகாதஸம் ஸமேஷஸம் ராஜஸம் வாநரொதஃ." எங்களை ஸ்தோத்ரம் பண்ணுகிறதென்? அங்கேசென்றால் எல்லாரும் ஸாம்யாபந்நரா யிருக்கையாலே தெரிய வொண்ணாது; அடையாளமென்? என்று இருக்கிறனவாகக்கொண்டு சொல்லுகிறாள் - [வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு] - வெவ்விய சிறகையுடைய பெரிய திருவடியை த்வஜமாக எடுத்தவர்க்கு. வரும்போது ப்ரதிபக்ஷத்தை நிரஸித்துக்கொண்டு வரும்படியைச் சொல்லுகிறது; "ஸாவபநியஸஸவஸவாதகம்". உயர்க்கையாகிறது-வஹிக்கையாய் "ககஃ ஓஃ கஃ ஓஸ டியஃ" என்னுமாபோலே தன்னைப்பிரித்துச் சடக்கெனக் கொண்டுபோன கொடுமையைச் சொல்லிற்றாகவுமாம். [என் விடுதூதாய்] - பெருமிடுக்கரான பாண்டவர்கள் க்ருஷ்ணனைத் தூதுவிட்டாற்போலேயோ? அபலையாய் அத்யார்த்தையான நான் விடவன்றோ போகிறது? பாரார்த்தமாகத் தூது போகை கிடைப்பதொன்றோ? [சென்றக்கால்]-அவன்பக்கலிலே யன்றோ செல்லுகிறது. உங்கள் வழிபோக்குத்தானே அடிக்கழஞ்சு பெறுதோ? [வன்சிறையில்]-ப்ராணயிநிபாடுநின்றும் வந்தவர்களைச் சிறையிடுவான் ஒரு மூர்க்க னுண்டோ? இனி, சிறையாகிறது - இவர்கள் வார்த்தையை அநாதரிக்கை; இவர்களைக் கண்டபோதே துணுக்கென்று "ஸ்யாராஸ்யாராவா கிஸாஸ ஹிஸாநிநீ" என்னுமையிறே. [அவன் வைக்கில்] - "நைவ டிஃஸாஸஸேகாரு" என்று ஆதரியாதொழியுமோ? [வைக்கில்] - அநாதரிக்க ப்ரஸங்கமில்லை, ஸிரஸா வஹிக்கு மென்று கருத்து. [வைப்புண்டா லென்செய்யுமோ?]-அங்ஙனேயாகில் அது உங்கள்பேறன்றோ? பாரார்த்தமாகச் சிறையிருக்கை கிடைப்பதொன்றோ? என்றிருக்கிறாள். தேவஸ்த்ரீகளுக்காகத் தான் சிறையிருந்தவளிறே?

ஈடு.—முதற்பாட்டு. தன்பரிஸரத்திலே வர்த்திப்பதொரு நாரையைப் பார்த்து, 'என்றும் சேவலைக்கார்யங்கொள்ளுவார் பேடையை முன்னாகக் காரியங்கொள்ளவேணும்' என்றிருக்கும் தம் வாஸநையாலே பேடையை முன்னிட்டுச் சேவலைப்பற்றி, 'நீ என் தசையை அறிவித்து என்னையும் அவனையுஞ் சேர்க்கவேணும்' என்கிறாள்.

[அஞ்சிறைய] - ப்ரஜை, தாயினுடைய அவயவங்களெல்லாங் கிடக்க, முலையிலே வாய் வைக்குமாபோலே கமநஸாதநமான சிறகிலே யாயிற்று முற்படக் கண்வைத்தது. நீர்பாய்ந்த பயிர்போலே பரஸ்பர ஸம்ஶ்லேஷத்தால் பிறந்த ஹர்ஷம் வடிவிலே தோடைகொள்ளலாம்படி இராநின்றது. சிறையென்று சிறகு. ஆசார்யன்ஜ்ஞாநத்தை அநுமித்து ஶிஷ்யன் உபஸத்தி பண்ணுமாபோலே சிறகிலே கண்வைக்கிறாள். [மட]-ஏவிக்கார்யங்கொள்ளலாம்படி பவ்யதை தோற்ற இருந்தது. ஸம்ஶ்லேஷத்தாலே துவண்டு தூதுபோகைக்கு யோக்யமாம்படி யிருக்கை. நாண் மடம் அச்சமென்று ஸ்த்ரீத்வமாய், பிரிவில் வ்யஸநமறியும் தன்னினமான பேடையைப் பார்த்துச் சொல்லுகிறா ளென்றுமாம். [நாராய்] - "அம்மே!" என்னுமாபோலே. [அளியத்தாய்] - அவன் போகட்டுப்போன ஸமயத்திலே ஆற்றாமை அறிவிக்கலாம்படி வந்து முகங்காட்டின உன் அநுக்ரஹஶீலதை இருந்தபடி யென்! அளி - க்ருபை; க்ருபைபண்ணத் தக்கா யென்றபடி. "பம்பாதீரே ஹநுமதா ஸங்கதஃ" (பம்பாதீரேஹநுமதா ஸங்கதஃ) போலே; வழிபறிப்பார் கையிலே அகப்பட்டு நிற்க, தாய்முகத்திலே விழித்தாற்போலே. [நீயும்] - "ஸப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தநஃ | ஸீதாமுவாச" (ஸப்ராதுஶ்சரணௌகாடம் நிபீட்யரகுநந்தநஃ, ஸீதா

---

முதற்பாட்டு - அஞ்சிறைய இத்யாதி. "மடநாராய்" என்று பேடையை முன்னிடுகிறதுக்கு ஹாவம்- என்றும் சேவலை இத்யாதி. இத்தால் பகவத்விஷயத்திற்போலே ஆசார்யவிஷயத்திலும் புருஷகாரம் வேணுமென்றபடி. சேவல் - பும்பக்ஷி. பேடை - ஸ்த்ரீபக்ஷி. நீ என் தஶையை அறிவித்து இத்யாதி பலிதம்.

அல்லாத அவயவங்கள் கிடக்கச் சிறகைச் சொல்லுகிறதுக்கு ஹாவம் - ப்ரஜை இத்யாதி. 'அம்' என்றதுக்கு ஹாவம் - நீர்பாய்ந்த இத்யாதி. பரஸ்பர ஸம்ஶ்லேஷம் - சேவலோட்டை ஸம்ஶ்லேஷம். தோடைகொள்ளலாம்படி - அறியலாம்படி. த்ருஷ்டாந்த முகேந சிறகுக்கு ஸ்வாபதேசம் - ஆசார்யன் இத்யாதி. ஆசார்யன் - சேவல். "உபாப்யாமேவ பக்ஷாப்யாம் யதா கே பக்ஷிணாம் கதிஃ| ததைவ ஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே ப்ரஹ்ம ஶாஶ்வதம்॥" இத்யாதிகளையும், "ஆசார்யஸ்ய ஜ்ஞாநவத்தாதிநா ஶ்ரேயஸ்தத்ஸாதநஸித்திஃ க்ரியதே" என்ற பாஷ்யவாக்யத்தையும் உட்கொண்டு, ஆசார்யன் ஜ்ஞாநத்தை என்றது. ஸ்வாபதேசத்திலே 'சிறகு' என்று ஜ்ஞாநகர்மங்களும், 'மட' என்று தயாத்யாத்ம குணங்களும், 'நாரா' யென்று வெளுப்பாய் ஶுத்தஸ்வபாவமும் தோன்றுகிறது. அது மத்ஸ்யாதிகளையே த்யாகம் பண்ணிக்கொண்டிருக்குமாபோலே ஆசார்யனுடைய பகவத்த்யாநபரதையும் தோற்றுகிறது. மடப்பம்- பவ்யதையாதல், துவட்சியாதல், ஸ்த்ரீத்வமாதல். துவண்டு - ஶரீரம்வாடி; லகுவாய். நாண் - லஜ்ஜை; அச்சம்- பயம்; மடம் - ஒடுக்கம். ஸ்த்ரீத்வம் சொன்னதுக்கு ப்ரயோஜநம் - பிரிவில் இத்யாதி. தன் இனம் - தன் கூட்டம். "நாராய்" என்றஸ்வரத்துக்கு பாவம்-அம்மேயென்னுமாபோலே என்று. அதாவது-ப்ரஜை ஸங்காதிஶயத்தாலே "அம்மே" என்னுமாபோலே, இவளும் இதன்பக்கல் ஸங்காதிஶயத்தாலே சொல்லுகிற வார்த்தையென்றபடி. அளியத்தாய் - எனக்கு க்ருபை பண்ணுகைக்குத் தகுதியான ஸ்வபாவத்தை யுடையையாயென்று நாரைக்கு விசேஷணம். போகட்டுப்போன ஸமயத்திலே,முகங்காட்டினதுக்கு த்ருஷ்டாந்தம் - பம்பா இத்யாதி. ஸம்க்ஷேபே - "ஶ்ரமணீம் ஶபரீம் த்ருஷ்ட்வா ராமஃ ஸௌமித்ரிணா ஸஹ | பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ" இதுக்குத் தாத்பர்யம் - வழிபறிப்பார் இத்யாதி. இவ்விடத்தில், வழிபறிப்பார்கையிலே அகப்படுகையாவது - பிராட்டியுடைய கண்ணுக்கும் முகத்துக்கும் போலியான செங்கழுநீர் தாமரைப்பூ முதலானவற்றாலே நெஞ்சுபறியுண்கை. விழித்தாற்போலே இருக்கிறது ருஷிக்கு என்று தாத்பர்யம். சேவலுக்கு முன்னே "நாராய்நீயும்" என்றதுக்குத் தாத்பர்யம் - ஸப்ராதுஃ இதி. அயோத்யாகாண்டே

முவாச) என்கிறபடியே என்றும் சேவலைக் காரியங்கொள்ளுவார் பேடையை முன்னிட்டுப்போலே காணும் கார்யம் கோள்வது. [நின்அஞ்சிறைய சேவலுமாய்] - பேடையை யிட்டாயிற்று சேவலின் பக்கல் ப்ரதிபத்தி. "ஶ்ரிய:பதி" என்னுமாபோலே. [நின் அஞ்சிறைய சேவலுமாய்] - "பேண்ணணைந்தவடிவு" என்று தோற்றுநின்றதாயிற்று. அதுஇட்டவழக்கான நீயும், நீயிட்ட வழக்கான சேவலுமாய். [ஆவாவென்று] - "ஐயோ! ஐயோ!" என்று. மிதுநமாயிருக்கிறது தன்ஆர்த்தி பரிஹரிக்கைக்கு என்றிருக்கிறாள். [எனக்கு] - "ஏஹி பஶ்ய ஶரீராணி" (ஏஹிபஶ்யஶரீராணி) என்று விரஹம் தின்ற தன்வடிவைக் காட்டுகிறாள். அவனோடேகலந்து பிரிந்து, 'கண்ணாலே காணப் பெறுவதுகாண்' என்னும் அபேக்ஷையோடே யிருக்கிற எனக்கு. [அருளி] - இரப்புக்குச் செய்ததாகை யன்றிக்கே உங்கள் பேறாக அருளி. தயைபண்ணுகைக்கு அத்தலை குறைவற்றாற்போலே யன்றோ! தயாவிஷயமான இத்தலை குறைவற்றபடி. பகவத்விஷயத்திலுபகரிப்பார், ப்ரத்யுபகாரத்துக்கல்ல உபகரிப்பது, தங்கள் க்ருபையாலே யாயிற்று; உபயவிபூதியுக்தனை அவர்கள் உபகரித்தால், அவனுக்கு ஸத்ருஶமாக உபகரிக்கலாவதில்லையே இவனுக்கு! "விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்தஸ்த்வம் ப்ராஜ்ஞஸ்த்வம் வாநரோத்தம" (விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்தஸ்த்வம் ப்ராஜ்ஞஸ்த்வம் வாநரோத்தம) என்றாற்போலேயிறே இவள் இவற்றை ஶ்லாகித்தது. "எங்களை இங்ஙன் கொண்டாடுகிறதேன்? உன் தசையைக் கண்டு போகட்டுப்போனவன் எங்கள் வார்த்தை கேட்கப் புகாநின்றானோ?

---

ராமம்ப்ரதி லக்ஷ்மணேநோக்தம். "ஸீதாஶோகாபிபூதோऽஹம் ..." இத்யுக்தார்த்தம் அத்ர விவக்ஷிதம். பலிதத்தை ஸ்வாநுபவ கர்ப்பமாக அருளிச்செய்கிறார் - என்றும் சேவலை இத்யாதி. 'நின்' என்று நிரூபித்ததுக்கு பாவம் - பேடையையிட்டு இத்யாதி. ப்ரதிபத்தி - விஶ்வாஸம். "நின்னஞ்சிறைய" என்றவிடத்தில் 'அம்' என்றதுக்கு பாவம்-பெண்ணணைந்த இத்யாதி. ஸமுச்சயத்வயார்த்தம் - அது இட்ட இத்யாதி. 'நீயும்' இத்யாதி பதச்சேர்த்திக்குத் தாத்பர்யம் - மிதுநம் இத்யாதி. எனக்கு - விரஹக்லிஷ்டமான வடிவையுடைய எனக்கு என்னுதல், அவனைக் காணவேணுமென்னும் ஆசையுடைய எனக்கு என்னுதல். இரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - "ஏஹிபஶ்ய" இத்யாதியாலும், அவனோடே கலந்து இத்யாதியாலும். ஆரண்யகாண்டே ஷஷ்ட்டே ராமம்ப்ரதி முநய:. "ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம் । ஹதாநாம் ராக்ஷஸைர்கோரைர்பஹூநாம் பஹுதா வநே." இரப்புக்கு இத்யாதி -"ஸ்வயம்நிரபேக்ஷ பரது:க நிராசிகீர்ஷயா" என்று திருவுள்ளம். 'நீயும் நின்னஞ்சிறைய சேவலுமாயெனக்கு' என்று கூட்டித் தாத்பர்யம் - தயைபண்ணுகைக்கு இத்யாதி. அத்தலை குறைவறுகையாவது - மிதுநமாயிருக்கை. இத்தலை குறைவற்றிருக்கையாவது - ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களையுடைத்தாயிருக்கை. 'அருளி' என்றதுக்கு ஸ்வாபதேஶம் - பகவத்விஷயத்தில் இத்யாதி. அம்மாத்ரமன்றிக்கே உபகாராநுகுண ப்ரத்யுபகாரமும் கூடாதென்கிறார் - உபயவிபூதி இத்யாதி. இவ்விடத்திலே, "ஸ்ருஷ்ட்வா ... [Grantha quotation] ..." என்றது அநுஸந்தேயம். தர்மோபதேஶம் - தர்மாநுஷ்டாநம். 'அஞ்சிறைய' என்று தொடங்கி ஶ்லாகித்ததுக்கு த்ருஷ்டாந்தம் - விக்ராந்த இத்யாதி. ஸுந்தரகாண்டே ஷட்த்ரிம்ஶே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. "ததஸ்து ஹ்ரீமதீ பாலா ... [Grantha quotation] ... விக்ராந்தஸ்த்வம் ஸமர்த்தஸ்த்வம் ப்ராஜ்ஞஸ்த்வம் வாநரோத்தம । யேநேதம் ராக்ஷஸபதம் த்வயைகேந ப்ரதர்ஷிதம் ॥." விக்ரமம் - பராபிபவநஸாமர்த்யம். ஸாமர்த்த்யம் - கார்யகரணஶக்தி. ப்ராஜ்ஞதை - இக்குணங்களை யுடையவனுக்குப் பிரிந்து நோவுபடுகிற அபலையை உபேக்ஷிக்கை கொத்தை யென்கிற ஜ்ஞாநம். மேலுக்கு அவதாரிகை - எங்களை இத்யாதி. 'உன் தசையைக்கண்டு' இத்யாதி ஶங்காத்வயமும் - "புள்ளுயர்த்தார்க்கு வெஞ்சிறை" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து. "எங்கள் வார்த்தை கேட்கப்புகாநின்றானோ" என்கிற முந்தின ஶங்கையிலே - வழியில் விரோதிக

இனித்தான் "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" (நிரஞ்ஜந:பரமம் ஸாம்யமுபைதி) என்கிறபடியே அங்குள்ளார் பரமஸாம்யாபந்நராயன்றே இருப்பது. 'நாங்கள் அவனுக்கும் அவர்களுக்கும் வாசியறியும்படி என்?' என்றன்றே நாங்களிருக்கிற தென்று அவற்றுக்குக் கருத்தாக மேல் வார்த்தை சொல்லுகிறுள். [வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு] - அவர்கள் பரமஸாம்யாபந்நராயிருக்கையாலே தனக்கு வ்யாவர்த்தகவிஶேஷணமாகப் பெரியதிருவடியை த்வஜமாக வுடையனுயிருக்கும். விரோதியைப் போக்கிக்கொண்டு வருகைக்கு அங்கே நமக்கு ஆளுண்டென்கிறுளாதல், நிர்த்தயமாகப் பிரித்துக்கொண்டு போகையாலே "அக்ரூர: க்ரூரஹ்ருதய:" (அக்ரூர: க்ரூரஹ்ருதய:) என்னுமாபோலே சொல்லுகிறுளாதல். [புள்ளுயர்த்தார்க்கு] - புள்ளாலே வஹிக்கப்பட்டவரென்னுதல்; புள்ளை த்வஜமாகவுடையவரென்னுதல். [என்விடுதூதாய்] - அவன் ஆள்வரவிட இருக்கக்கடவ நானன்றே விடுகிறேன். [விடு] - "க்ரியதாம்" (க்ரியதாம்) என்கிறபடியே நான் ஏவவன்றே நீங்கள் போகிறது. பெருமிடுக்கரான பாண்டவர்கள் க்ருஷ்ணனைத் தூதுவிட்டாற்போலேயோ? அபலையாய் அத்யார்த்தையான நான் ஏவவன்றேபோகிறது. பரார்த்தமாகத் தூதுபோகை கிடைப்பதொன்றே? [சென்றக்கால்]-எனக்கு முன்னே உங்களுக்கு உத்தேஶ்யமன்றே ஸித்திக்கப்புகுகிறது? உங்கள் போக்கு அடிக்கழஞ்சு பெறுதோ? [வன்சிறையில்] - இவள்பாடுநின்றுஞ் சென்றவற்றைச் சிறையிட்டு வைக்கிறனன்றே; இவர்களுக்கு முகங்கொடாதே அந்யபரனுகையிறே இவர்களைச் சிறையிட்டுவைக்கையாவது. ராஜபுத்ரர்களுக்கு ப்ராப்தகாலங்களிலே வெள்ளிலையிடாதபோது மாந்துவர்களிறே. [என்விடுதூதாய்ச் சென்றக்கால் வன்சிறையில் அவன் வைக்

---

குண்டேயென்கிற ஶங்கையும் கண்டுகொள்வது; உத்தராநுகுணமாக. இனித்தான் - கிஞ்ச. ஶ்ருதிரபி - "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி." த்விதீயஶங்காபரிஹாரம் - அவர்கள் இத்யாதி. இந்தப்பக்ஷத்துக்கு, புள்ளை த்வஜமாக உடையவனென்ற அர்த்தமே வேண்டுவது. ப்ரதமஶங்கையை த்விவிதமாகப் பரிஹரிக்கிறர்—விரோதியை இத்யாதி வாக்ய த்வயத்தாலே. 'வெம்' என்று - சிறகுக்கு விசேஷணமாதல், புள்ளுக்கு விசேஷணமாதல். விரோதியை இத்யாதி முந்தின பரிஹார வாக்யத்திலே - ப்ரதமஶங்காவாக்யத்திற்சொன்ன ஶங்காத்வயத்துக்கும் தந்த்ரேண பரிஹாரங் கண்டுகொள்வது. அதாவது - நீங்கள் அறிவிக்குமத்தனையே வேண்டுவது; விரோதியைப் போக்குகைக்கும் அங்கே ஆளுண்டென்றபடி; த்விதீயபரிஹாரம் - ஸ்வபுத்த்யாவன்றிக்கே பரப்ரேரிதனுய்ப் போகையாலே வருமென்று. இந்த அர்த்தத்வயத்துக்கும், புள்ளாலே வஹிக்கப்பட்டவனென்று கண்டுகொள்வது. "ஸ ஏஷ ஸ்யந்தநே தீர்ஹ: க்ருஷ்ணஸ்ய பலராமயோஶ்சைவ த்ருஷ்ட்வா க்ரூஹ:, "அக்ரூர: க்ரூரஹ்ருதயஶ்ஶீக்ரம் ப்ரயாதி ஹயாந் । ஸாவதோ ராஸ யோஷித்ஸ க்ருபா க்ஸ்யநஜாயதே." 'என்விடு' என்றதுக்கு - அபிமதையான நான் விடுகிற என்று அர்த்தம் அருளிச்செய்கிறர் - அவன் ஆள்வரவிட இத்யாதி. 'விடு' என்றதுக்கு ஸாவம் - க்ரியதாம் இத்யாதி. ஆரண்யகாண்டே பஞ்சதஶே பஞ்சவட்யாம் ராமம்ப்ரதி லக்ஷ்மண:-"பரவாநஸ்மி காகுத்ஸ்த்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே । ஸ்வயந்து ருசிரே தேஶே க்ரியதாமிதி மாம் வத". நான் ஏவ நீங்கள்போகிறது ஸ்வரூபாநுரூபமன்றே வென்றபடி. "என்விடு" என்றதுக்கு - அபலையாய் ஆர்த்தையான நானென்று அர்த்தாந்தரம் - பெருமிடுக்கரான இத்யாதி. சென்றக்காலென்றதுக்கு க்ருஷ்ணன் தூது போலேயும், அக்ரூரயானம்போலேயுமாக ஸாவத்வயம் அடைவே அருளிச்செய்கிறர் - பரார்த்தமாக இத்யாதி வாக்யத்வயத்தாலே. விவரணம் - உங்கள் இத்யாதி. ஆக, பரார்த்தமாகப் போகை அடிக்கழஞ்சு பெறுமென்றும், எனக்குமுன்னே உங்களுக்குப் பலஸித்தி யென்றும் இரண்டர்த்தம். அடிக்கழஞ்சு பெறுகை - ஶ்லாக்யதை. சிறையிட்டுவைக்குமோ? என்ன, இவள்பாடு இத்யாதி. அவன் வைமுக்யம் இவர்களுக்கு பாதகமென்கைக்கு த்ருஷ்டாந்தம் - ராஜபுத்ரர்களுக்கு இத்யாதி. மாந்துவர் - க்லேஶிப்பர். தாத்பர்யாந்தரம் சொல்லுகைக்காக ப்ரதீகோபாதாநம் - என்விடு தூது இத்யாதி. ஸ்வரஸோசிதம் ஸாவமாஹ-நீங்கள் இத்யாதி வாக்யத்ரயத்தாலே.

கில்] - நீங்கள் ஏதேனும் அவனுக்குத் தூதுபோகிறீகளோ? சிறைகட்டுதல், சிங்கவிளக்கேரித்தல் செய்யில் செய்வதேன்? என்று கூசுகைக்கு; எனக்குத் தூதுபோனாரை "பரிஷ்வங்கோ ஹநூமத:" (பரிஷ்வங்கோஹநூமதஃ) என்னுமாபோலே மார்பிலே யணைக்கும் காணுங்கோள். நான் அணைய ஆசைப்படுகிற மார்வன்றோ உங்களுக்குப் பரிசிலாகப் புகுகிறது? [அவன்வைக்கில்] - "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" (வ்யஸநேஷு மநுஷ்யாணாம்) என்றிருக்குமவன் வைக்குமோ? மிரஸா வஹியானோ? [வைப்புண்டாலென்செய்யுமோ?] - அது பொல்லாதோ கிடைக்குமாகில்? பரார்த்தமாகச் சிறையிருக்கக் கிடைப்ப தொன்றோ? ராவணன் தேவஸ்த்ரீகளைச் சிறையிட்டு வைக்கத் தான் அவர்கள்காலில் விலங்கைத் தன்காலிலே கோத்துச் சிறை மீட்டவளிறே.

## இரண்டாம் பாட்டு.

என்செய்யதாமரைக்கண் பெருமானார்க்கென்தூதாய்
என்செய்யுமுரைத்தக்கால் இனக்குயில்காள்! நீரலிரே
முன்செய்தமுழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல்
முன்செய்யமுயலாதேன் அகல்வதுவோவிதியினமே?

ஆ.—(என்செய்ய.) பின்னையும் அந்த நாரைகள் போகாதிருந்தவாறே சில குயில்களை நோக்கி, தன் அழகாலே என்னைத்தோற்பித்து அடிமையாக்கினவனுக்குநீங்கள்என்திறஞ்சொன்னால் தான் என்செய்யும்? என்று சொல்ல, அவையும் போகாதிருந்தவிடத்தில், சொல்லும்வார்த்தை கேட்டுப் போகைக்கு நின்றனவாகக்கொண்டு, 'என்னுடைய ஜந்மாந்தரபாபத்தாலே உன்திருவடிகளில் அடிமைசெய்கைக்குப் பண்டு பாக்யம் பண்ணப் பெற்றிலேன்; இனி உன்திருவடிகளை நான் அகன்றுபோமத்தனையோ? என்று சொல்லுங்கோள்' என்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், சில குயில்களைக் குறித்து எம்பெருமான்பக்கல் சென்றால் விண்ணப்பம் செய்யும் பாசுரத்தைச் சொல்லுகிறாள்.

[என் என்று தொடங்கி] - விஶ்லேஷதசையில், 'ஆத்மாத்மீயங்களெல்லாம் உன்னது' என்பாரைப்போலே ஸஸ்நேஹமாக நோக்கின நோக்கையும் இத்தலையைத் தோற்பிக்கை

---

அவனுக்கு - அவனனுப்ப வென்றபடி. சிறைகட்டுதல் - ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே கட்டுதல். சிங்கவிளக்கேரிக்கையாவது - லோகத்திலே ஸிம்ஹாகாரப்ரதிமை பண்ணி அத்தைத் தலையிலே வைத்தெரிக்கை யென்றபடி. இங்கு வாலிலே சீலையைக்கட்டி யெரிக்கை; அவமதிபண்ணுகையென்று தாத்பர்யம். பின்னை என் செய்யுமென்ன - எனக்குத்தூது இத்யாதி. இது "வைக்கில்" என்றதின் தாத்பர்யம். யுத்தகாண்டே ப்ரதமே "ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத: । மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மந:." ஸர்வஸ்வபூத: என்றதுக்கு பாவம் - நான் அணைய இத்யாதி. பரிசில் - ஸந்தோஷாதிஶயத்தாலே கொடுக்கும் உசிதம். பதிஶப்தார்த்தம் - "வ்யஸநேஷு இத்யாதி. இதம்வசநம் "துயரறு சுடரடி" இத்யத்ர லிகிதம். இத்தால் அவன் ஸ்வபாவத்தாலும் வையா னென்றபடி. ஸ்வார்த்துக்கு அர்த்தம் - அதுபொல்லாதோ இத்யாதி. அது து:க்கரூபமன்றோ வென்ன, பரார்த்தமாக இத்யாதி. "கிடைப்ப தொன்றோ" என்கைக்குத் தனக்கு உத்தேஶ்யமாயிருக்குமோ? என்ன, ராவணன் இத்யாதி. இதுக்கு, 'ஸீதா ராவணநாயஸ்ய ஸாரஸ்நேஹ: வஶாநுகே । ப்ராணைவஸ்ய மஹதே ப்ராணேஶ்வர...' என்றதிலே நோக்கு.

யாலே மிகவும் மேனணிப்பையும் உடையவனா யிருந்தவனுக்கு; ஸம்ஶ்லேஷ தசையில் ஸஸ்நேஹமாக நோக்கின நோக்காலே என்னை அடிமைகொண்டவனுக்கு என்றுமாம். அத்யார்த்தையான என்னுடைய தூதாய், எனக்காக ஒருவார்த்தை அங்கே அறிவித்தால் உங்களுக்கு என்ன சேதமுண்டு? சிலவருடைய ஆர்த்திக்கு உதவுகை கிடைப்பதொன்றோ? என்று கருத்து. [இனக்குயில்காள் நீரலிரே] - எங்களைப்போலே பிரியாதே கூட இருப்பது நீர்மைக்கு நீங்களாவது. [முன்செய்த என்று தொடங்கி] - அநாதிகாலம் ஸஞ்சிதமான மஹாபாபத்தாலே திருவடிக்கீழ் அந்தரங்கவ்ருத்திகள் பண்ணுகைக்கு ஈடான பாக்யத்தைப் பண்டு பண்ணாத நான் அகன்றே போமித்தனையோ? தந்தாமுக்கென்ன ஒன்றில்லாதார் தயநீயரன்றோ? என்று கருத்து. [விதியினம்] - பாவியோம்; விதி இன்னமென்றுமாம்.

ப.—அநந்தரம், கீழ்ச்சொன்ன நாரைகளிற்காட்டில் திரளாகையாலே கார்யகரங்களென்று நினைத்து, சில குயில்களை,'என்னுடைய புண்டரீகாக்ஷன்பக்கல் தூதாக வேணும்'என்று அபேக்ஷிக்கிறாள்.

இனக்குயில்காள் - திரளான குயில்காள்! நீரலிரே-ஶ்ராவ்யமான வாய்விட்டையுடைய நீங்களல்லீர்களோ? என் - எனக்கே தம்மை ஸ்வம்மாக்கித்தந்த, செய்ய தாமரைக்கண் - சிவந்த தாமரைபோலும் கண்ணையுடையராய், பெருமானார்க்கு - (பின்பு எனக்கு எட்டாமல் உயர்ந்திருக்கிற) ஸர்வாதிகருக்கு, என்தூதாய் - என்னுடைய தூதாய், உரைத்தக்கால் - வார்த்தைசொன்னால், என்செய்யும் - என்ன தப்புச்செய்யும்? முன்செய்த - முன்புசெய்த, முழுவினையால் - பூர்ணபாபத்தாலே, திருவடிக்கீழ் - (ஶ்லாக்யமான) திருவடிகளிலே, குற்றேவல் செய்ய - அந்தரங்கவ்ருத்தி பண்ணுகைக்கு, முன் - முன்புத்தை, முயலாதேன் - ஸாதநத்தில் முயலாத நான், இனம் - இன்னம், அகல்வதுவோ விதி - அகல்வதுவோ அறுதியிட்டது? இவ்விடத்தில் வடகருடைய உக்திமாதுர்யமும் ஸமவாயமும் ஸூசிதம்.

இ.—இரண்டாம்பாட்டில், சில குயில்களைக் குறித்து, அவன்பக்கலிலே சென்றால் சொல்லும் பாசுரத்தைச் சொல்லுகிறாள். நாரைகளைத் தூதுபோகவேணுமென்று அர்த்தித்தாள். அவை போனால் சொல்லும் வார்த்தையைச் சிலகுயில்களைக்குறித்துச் சொல்லுகிறாள்; [illegible] தமாயிருந்ததி! என்னில்;—இவ்வஸங்கத பாஷணம் பண்ணிற்றிலளாகில் விஷய வைலக்ஷண்யத்துக்கு நமஸ்கார மாமிறே.

[என்செய்ய தாமரைக்கண் பெருமானார்க்கு] - விஶ்லேஷ தசையிலே தான் வருந்தனையும் இவள் தரித்திருக்கைக்காக 'ஆத்மாத்மீயங்கள் எங்கேனுங் கிடக்கிலும் உன்னதன்றோ?' என்கிற வார்த்தையாலே, என்னுடையவரென்கிறாள். ஐஶ்வர்யத்தாலும் வாத்ஸல்யத்தாலும் கலவியாலும் சிவந்த திருக்கண்களையுடையவர். இவையெல்லாம் இவள் அநுபவித்தவையிறே; முதல் திருவாய்மொழியில் ஐஶ்வர்யமும், மூன்றாந்திருவாய்மொழியிலே வாத்ஸல்யமும், இத்திருவாய்மொழியிலே கலவியும். [பெருமானார்க்கு] - ஸ்வாபாவிகமான பௌஷ்கல்யத்துக்கு மேலே, தன்னைத் தோற்பித்தத்தால் வந்த மேனணிப்பைச் சொல்லுகிறாள். ஸம்ஶ்லேஷதசையில் ஸஸ்நேஹமாக நோக்கி, அந்நோக்காலே என்னை அடிமைகொண்டவனுக்கு என்றுமாம். [என்தூதாய்] - அந்நோக்குக்கு இலக்காய்; இன்று வெறுந்தரையான என்தூதாய். [என்செய்யு முரைத்தக்கால்] - அவனோடே கூட்டச் சொல்லுகிறேனோ? ஒரு வார்த்தை சொன்னால் என்ன சேதமுண்டு? ஆர்த்தரக்ஷணம் சிலர்க்குக் கிடைப்பதொன்றோ? [இனக்குயில்காள்] - இனமாயிருப்பார்க்கு, தனியராயிருப்பாரைக் கூட்டவேண்டாவோ? [நீரலிரே] - நானும்அவனும் சேர இருந்தபோது, போது

போக்கக்கடவர்களல்லீர்களோ? 'நீர்மைக்கு நீங்கள்' என்னுமத்தனையன்றோ? என்னவுமாம். போனால் சொல்லும் பாசுரம் அறியாமலிருக்கிறனவாகக்கொண்டு சொல்லுகிறாள் - [முன்செய்த முழுவினையால்] - அநாதிகால ஸஞ்சிதமான பாபத்தாலே. பாபம் ஸாவதியாதல், பாபம் பண்ணின காலம் ஸாவதியாதலானாலன்றோ என்கையில் என்னைக் காட்டித்தருவது ? இதிஹாஸம் - பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, தெற்காழ்வானும் கோளரியாழ்வானுமென்று இரண்டு திருப்பதியாருண்டு ; கோளரியாழ்வான் ஸதாசாரபானாயிருக்கும் ; தெற்காழ்வான் மேலெழத் திரியும் ; ஒரு விசேஷதிவஸத்திலே இருவரும் சேர்ந்தவளவில், கோளரியாழ்வான் தெற்காழ்வானை 'இன்றாகிலும் ஒரு முழுக்கிடமாட்டாயோ?' என்ன, 'என்னுடைய பாபம் தெற்காழ்வார்கையில் திருவாழியாலே போக்கப்போமதொழிய ஓரிரண்டுமுழுக்கால்போமதன்றுகாண்' என்ன, அத்தைக் கேட்டு 'இவனை மேலெழ விசாரித்தோமே' என்று வித்தராயருளினர் பட்டர். [திருவடிக்கீழ் குற்றேவல் முன்செய்யமுயலாதேன் அகல்வதுவோ] - திருவடியின்கீழே அந்தரங்கவ்ருத்தி பண்ணுகைக்கு ஏற்கவே ப்ரவர்த்திக்கப்பெறாத நான் அகன்றேபோமித்தனையோ? முன்செய்ய முயலுகையாவது-அதுக்கீடான பாக்யத்தைப் பண்ணுகை;"க்ரியதாமிதி மாம் வத" என்றும், " முகப்பேகூவிப் பணிகொள்ளாய் " என்றும் சொல்லுகிறபடியே கண்வட்டத்திலே நின்று பண்ணுகைக்கு ஈடாக முயலாத நான் அகன்றேபோமித்தனையோ? என்றுமாம். தந்தாமுக்கென்ன ஒன்றில்லாதார் தயநீயரன்றோ? என்று கருத்து. "கஷ்டாவஸ்தாவஸ்தி" என்னக்கடவதிறே. [விதியினம்] - விதியென்று பாபமாய், விதியையுடையோம்; பாவியோமென்றபடி.கீழே "முழுவினை" என்று சொல்லிற்றிறே? என்னில்; மஹாபாபத்தைப் பண்ணின பாவியோமென்றபடி. "பாவமேசெய்து பாவியானேன்" என்னக்கடவதிறே. அன்றிக்கே, எங்கள்தலையில் குற்றத்தை இசைந்தபின்பும் அகலுமத்தனையோ? என்றுமாம். இனம் - இன்னம். விதி - உன்கருத்து.

ஈடு.—இரண்டாம்பாட்டு. சிலநாரைகளைத் தூதுபோகவேணும் என்று இரந்தாள் கீழ் ; அங்குப்போனால் சொல்லும் பாசுரத்தைக் குயில்களுக்குச் சொல்லாநின்றாள்; "அந்யதா பக்ராந்த மந்யதா பதிதம்" (அங்யதுபக்ராாந்தமங்யதாபதிதம்) என்னும்படியாய் வந்து விழுந்தது ; இத்தனையும் கலங்கிற்றிலளாகில் இவள் பிரிந்த விஷயத்துக்கும் நாட்டார் பிரிந்த விஷயத்துக்கும் வாசியன்றிக்கே யொழியுமே, இப்படி கலங்கப்பண்ணுதவன்று குணாதிகவிஷயத்துக்கு நமஸ்காரமா மித்தனையிறே.

---

இரண்டாம்பாட்டு - என்செய்ய இத்யாதி. இரண்டும் அஸங்கதமென்கிறார் - அந்யதித்யாதி. 'லோகேத்வந்யவஸ்து ப்ரஸங்காவிந்யஸ்தே ஸதி ஸஹிவஸ்திராமாஸ ஹரிஹரிகூவிதாவாஸோ அந்யதோபக்ராந்தமந்யதாபதிதம்', "கண்ணாஸ்யே கபிஞ்ஜலாதி", " ஸ்ரீராமவ்ருஷ: கோவிதாரோநாவஷே " இத்யாத்யநுஸந்தேயம். இப்படி கலங்கலாமோ? என்ன,இந்தனையும் இத்யாதி. இத்தனையும் கலங்கிற்றிலளாகில் இவ்விஷயத்தைப் பிரிந்த இவளுக்கும் இதரவிஷயத்தைப் பிரிந்த நாட்டார்க்கும் வாசியன்றிக்கே யொழியுமென்று அந்வயித்து, ஆழ்வார் தம்முடைய ப்ராவண்யத்தாலே கலங்கினாரென்றபடி. இதுக்கு நியாமகம் - கலங்கிற்றிலளாகில் என்று ஸ்வகர்த்ருகநிர்த்தேசம். விஷய வைலக்ஷண்யத்தாலுங் கலங்கினாளென்கிறார் - இப்படி இத்யாதி. ஆக, இரண்டு வாக்யத்தாலும் இவர் ப்ரமேத்துக்கும் விஷயவைலக்ஷண்யத்துக்கும் அவத்யமாமென்கிறாரென்றபடி. நமஸ்காரமாமித்தனை என்றது-'நமஸ்யாமோ தேவான்' என்னுமாபோலே பரித்யாஜ்யமாய்விடுமென்றபடி.

[என்]-பிரிந்த ஸமயத்திலும் 'என்னுடையவன்' என்று சொல்லலாம்படிகாணும் கலக்கிற ஸமயத்திலே அவன் இவளிட்டவழக்காயிருந்தபடி. அன்றிக்கே, பிரிகிற ஸமயத்திலே தான்வருமளவும் இவள் தரிக்கைக்காக 'இது எங்கேயிருக்கிலேன்? எங்கே போகிலேன்? உன்சரக்கன்றோ?' என்று சொல்லிப்போமே; அத்தாலே யாகவுமாம். [என் செய்யதாமரைக்கண்பெருமானுர்க்கு] - ஸ்வாபாவிகமான ஐஶ்வர்யத்தாலும் சிவந்திருக்கும்; ஸ்வகீயவஸ்துக்கள்பக்கல் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கும்; மதுபானமத்தரைப்போலே இவளோட்டைக்கலவியாலும் சிவந்திருக்கும்; பிரிவாலே அரையாறுபட்டுச் சிவந்திருக்கும்; இவையெல்லாம் இவள் அநுபவித்தவளிறே. முதல் திருவாய்மொழியிலே ஐஶ்வர்யம், மூன்றுந்திருவாய்மொழியிலே வாத்ஸல்யம், இத்திருவாய்மொழியிலே கலவியும் பிரிவும். [பெருமானுர்க்கு] - பிரிகிறபோது கண்ணாலேநோக்கி அநங்யார்ஹையாக்கிப் போனபடி; ஸ்வாபாவிகமான ஐஶ்வர்யத்துக்குமேலே இத்தலையிலோடுக்குமாட்டா லுண்டான ஐஶ்வர்யமுண்டாகையாலே இரட்டித்திருக்குமிறே. [என்தூதாய்] - கடலேறிவடிந்தாற்போலேகாணும் கிடக்கிறது. அவனோடே கலந்துபிரிந்து வெறுந்தரையாயிருக்கிற எனக்குத் தூதாய். [என்செய்யுமுரைத்தக்கால்] - உபயவிபூதியுங் கண்டது உங்களுக்குக் கிஞ்சித்கரிக்கவேன்றிருக்கிறுள். [உரைத்தக்கால்] - அவனைக்கொடுவந்து சேர்க்கச் சொல்லுகிறேனே; ஒருஉக்தி நேர்ந்தால் என் செய்யும்? [இனக்குயில்காள்] - என்னைப்போலே தனியிருக்கிறீகளன்றே. [நீரலிரே] - நீர்மைக்கு நீங்களன்றோ? நானும் அவனுமானபோது கேட்ட வார்த்தைக்கு ப்ரதிவசநம் பண்ணின நீங்கள் அவன்பிரிந்தவாறே வேறு சிலரானிகளோ? [முன்] - நான்பாபம்பண்ணிப்போருகிற காலம் ஸாவதியோ? [செய்த]- ஸங்கல்பித்துவிட்டவளவேயோ? [முழுவினை]-அதுதன்னில் ஏதேனும் அகஞ்சுரிப்பட்டதுண்டோ?

---

பிரிந்துபோகட்டுப்போன ஸமயத்திலே "என்னுடையவன்" என்கைக்கு ஹேதுவை இரண்டுவகையாக அருளிச்செய்கிறுர் - பிரிந்தஸமயத்திலும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. இவளிட்டவழக்காய் - இவளதீனனாய். இது - த்வததீநவஸ்து. உன் சரக்கு - உன்பதார்த்தம். பிரிவில் திருக்கண்கள் சிவந்திருக்குமோ? என்ன, ஸ்வாபாவிக இத்யாதி. இத்தால் - தூதர்க்கு நாயகனை யறியும்படி அடையாளஞ் சொன்னபடி. அரையாறுபட்டுச் சிவந்திருக்கும் - அர்த்தம் சிவந்திருக்கும். இதெல்லாம் இவளநுபவித்தாளோ? வென்ன, இவையெல்லாம் இத்யாதி. எங்கேயநுபவித்தாள்? என்ன, முதல் இத்யாதி. வாத்ஸல்யமென்றது, 'கணக்கறுநலத்தனன்' என்றத்தைப்பற்ற. இத்திருவாய்மொழியிலே கலவியும் பிரிவும் என்றது, பிரிவு கலவிமுன்னாக வருமதாகையாலே கலவி அர்த்தாத்ஸித்த மென்றத்தைப் பற்ற. பிரிவில் அரையாறுபட்டுச் சிவந்திருக்கும்படியை இவளநுபவித்தாளோ? என்னில்,-பெரியதிருவடி எடுத்துக்கொண்டு போகிறபோது பிரிவாற்றுமையாலே புரிந்துபார்க்குமே அவன்; அப்போது கண்ணிற் சிவப்பு அரையாறுபட்டிருக்கு மத்தைக் கண்டு அநுபவித்தாளென்றபடி. 'என்' என்றத்தைக் கண்ணுக்கு விசேஷணமாக்கி ஸாவம் - பிரிகிறபோது இத்யாதி. 'என்' என்றத்தை 'பெருமானுர்க்கு' என்றத்தோடேகூட்டித் தாத்பர்யம்-ஸ்வாபாவிகமான இத்யாதி. ஆக, 'பெருமானுர்க்கு' என்றதுக்குப் பிரிகிறபோது கண்ணாலேநோக்கி அநங்யார்ஹையாக்கினவர்க் கென்றும், இத்தலையில்ஸர்வஸ்வாபஹாரம் பண்ணிக்கொண்டுபோருகையாலேபெருமானுயிருக்கிறவர்க்கென்றும்இரண்டர்த்தம். ஒடுக்குமாட்டால் -மாட்டையொடுக்கி யென்ருய், முட்டிக்கோல் கொள்ளுகையாய், ஸ்த்ரீத்வம்முதலான ஸர்வஸ்வாபஹாரத்தாலு மென்றபடி. மாடு-தநம், ஸர்வஸ்வாபஹாரம். விவரணம்-அவனோடே இத்யாதி. "ஹ்ருதஸர்வஸ்வா..." என்கிற ந்யாயத்தாலே. உரைத்தக்கா லென்செய்யும் - என்னபொல்லாங்கு வரும்? ஒருபொல்லாங்கும் வாராது; ப்ரத்யுதவிபூதித்வயத்தையும் தரு மென்கிறுர் - உபயவிபூதியும் இத்யாதி. "உரைத்தக்கால்" என்றதிலே நோக்காக, "என்செய்யும்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் - அவனை இத்யாதி. ஒரு உக்தி நேர்ந்தால் - ஒருவார்த்தை சொன்னுல். என்செய்யும் - என்ன ஹாநிவரும்? இனக்குயில்காள் - மிதுநமான குயில்காள். நீர்மை-க்ருபை. அர்த்தாந்தரம் - நானும்அவனும் இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு, நீரென்று - நீர்மையாய், நீர்மையால் ப்ரவித்தரன்றோ? என்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, நீரலிரே - நீங்களன்றோ? வேறுசிலரானீர்களோ? என்றபடி. 'முழு' என்றதுக்கு - ஸாகல்யமும் மஹத்த்வமும் விவக்ஷிதம். அகஞ்சுரிப்பட்டது - குறைந்தது. வினை

என்றால் பரிஹரிக்கலாதல், தம்மால் பரிஹரிக்க வொண்ணுதொழிதல் செய்யிலன்றே எனக்கு இழக்கவேண்டுவது. திருக்கோட்டியூரிலே தெற்காழ்வான் கோளரியாழ்வானுக்குத் தீர்த்தத்துறையிலே சொன்ன வார்த்தை. "ஒருமுழுக்காலும் இரண்டுமுழுக்காலும் போகாதுகாண் - தெற்காழ்வார்கையில் திருவாழியாலே வினையையறுத்துக்கொண்டுபோகில் அத்தனை யொழிய ஒன்றிரண்டு முழுக்கால் போகாதுகாண் நான்பண்ணின பாபம்"என்று. [திருவடிக்கீழ்] - ப்ராஹ்மணர் பிச்சேறினாலும் ஓத்துச் சொல்லுமாபோலே, இவர் பிராட்டியானாலும், முலையாலணைக்க நினையார்; திருவடிகளிலே யணையத் தேடுமத்தனை. [குற்றேவல்] - திருவடிகளிலே கிட்டி அந்தரங்கவ்ருத்தி பண்ண ஆசைப்படுமத்தனை. **[திருவடிக்கீழ் குற்றேவல் முன்செய்ய முயலாதேன்]** - ஏற்கவே கோலாத நானென்னுதல்; [முன்]- "க்ரியதாமிதி மாம்வத" (க்ரியதாமிதிமாம்வத) என்கிறபடியே இன்னத்தைச் செய்யென்று ஏவத் திருமுன்பே அடிமைசெய்ய முயலாதே னென்னுதல். [அகல்வதுவோவிதி] - திருவடிகளிலே அடிமைசெய்கைக் கீடாயிருப்பதொரு ஸாதநாநுஷ்டாநம் என்தலையால் பண்ணுத நான் அகன்றேபோ மித்தனையோ? முதலில்லாதார் பலிசையிழக்குமித்தனையன்றோவென்ன, முதலில்லாதாரன்றோ பலிசையிழப்பார்! அவன்தானே முதலாகவிருக்கும் கோஷ்டியிறே இவர்கள் கோஷ்டி; * "களைகண்மற்றிலேன்" என்றும், † "உன்சரணல்லால் சரணில்லை" என்றும், ‡ "மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவை" என்றும், ¶ "நெறிவாசல் தானேயாய் நின்றானை" என்றும், § "விழிக்குங்கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்" என்றும், $ "வாழும் சோம்பர்" என்றும் இப்படிகளிலேயிறே இவர்கள் கோஷ்டியில் வார்த்தைகளும் இருக்கும்படி. [விதியினமே] - விதியினன் என்றாய், பாபத்தை யுடையேனான நான்; அகன்றே போமித்தனையோ?

---

*யின் விசேஷணங்களால் பலிதம் -* **என்றால் இத்யாதி.** *இவனால் அபரிஹார்யமென்னுமதுக்கும், அவனால் பரிஹரிக்கலாமென்னுமதுக்கும் ஐதிஹ்யம் -* **திருக்கோட்டியூரிலே இத்யாதி.** *'இந்தப்புண்யதிவஸத்திலே பாபக்ஷயார்த்தமாகப் புண்யதீர்த்தஸ்நாநம்பண்ண வேண்டாவோ?' என்று கேட்ட கோளரியாழ்வானுக்கு என்றபடி. ஸம்ஶ்லேஷிக்கவென்னாதே "திருவடிக்கீழ் குற்றேவல்" என்கிறதென்? என்ன,* **ப்ராஹ்மணர் இத்யாதி. ஓத்து**-*வேதம்.* **அணைக்க** - *ஸம்ஶ்லேஷிக்க.* **முன்** - *ஏற்கவே யென்னுதல், ஸந்நிதியிலே யென்னுதல். இவ்விரண்டர்த்தத்தையும் க்ரமேண அருளிச்செய்கிறார் -* **ஏற்கவே இத்யாதியாலும், க்ரியதாம இத்யாதியாலும்.** *முயலுகை-ஒருப்படுகை.* **கோலாத நான்**-*ஸாதநாநுஷ்டாநம்பண்ணக் கோலாத நான். "முன்செய்யமுயலாதேன் இன்னமகல்வதுவோவிதி" என்று அந்வயித்துத் தாத்பர்யம்-* **திருவடிகளிலே இத்யாதி.** *விதி-ஸங்கல்பம்,ந்யாய்யமாதல்.* **இனம்**-*இன்னம்;ஏற்கவே ஸாதநாநுஷ்டாநம் பண்ணுத நான் இன்னம் அகன்றேபோமதுவேயோ ஸங்கல்பம்? என்றுபொருள்; அன்றிக்கே, விதியினம்-"விதிவிஹிதநம்" என்று புண்ணியமாய், அநந்தன்மேற்கிடந்த எம்புண்ணியனை யுடையோமாய்வைத்தும் அகல்வதுவோ? என்று விவக்ஷித்துத் தாத்பர்யம்-* **முதலில்லாதார் இத்யாதி.** *இந்த யோஜனையில் விதியினம் - புண்யத்தையுடையோ மென்றபடி. பலிசு-வ்ருத்தி.* **இவர்கள்**-*ஆழ்வார்கள்.* **களைகண்மற்றிலேன்**-*வேறொரு கதியுடையேனல்லேன்.* **உன்சரணல்லால்சரணில்லை**-*தேவர் திருவடிகளல்லது வேறுஉபாயமில்லை.* **மைத்தெழுந்த இத்யாதி**-*ஆகாசத்திலே கறுத்தெழுந்த மேகங்களையே பார்த்திருக்குமத்தனையல்லது நீர்நிலந் தேடிப்போக அறியாத பயிர்போலே.* **நெறிவாசல் இத்யாதி** - *உபாயமும், தத்ஸாத்யமான உபேயமும் அநந்யஸாத்யனான தானேயாய்க்கொண்டு நின்ற ஸர்வேஶ்வரனை.* **விழிக்கும் இத்யாதி** - *உன்னுடைய கடாக்ஷமொழிய வேறுநோக்குகைக்கு ஒரு மறுவிழியை யுடையேனல்லேன்.* **வாழும்சோம்பர்** - *உன் பக்கலிலே ந்யஸ்தபரராய் ஸ்வஹிதத்திலே சோம்பினவர்கள். உபாயம் ஈஶ்வரனேயானால், பின்பு ஹேரமே யுள்ளதாகையாலே ஸ்வஹிதத்தில் சோம்பியிருக்கும் இருப்புத்தானே வாழ்ச்சியானஇருப்பாயிருக்கு மென்றபடி. அன்றிக்கே, 'விதி' என்றதுக்கு-பாபமென்று அர்த்தாந்தரம்.* **விதியினமே இத்யாதி** - *விதியினன் - பாபத்தை யுடையனான நா னென்றபடி. இந்தப்பக்ஷத்தில் "மனக்களுழறிவரும்" என்றத்தைக் கண்டுகொள்வது. 'திரு*

---

* திருவாய்மொழி, ரு - அ-அ. † பெருமாள் திருமொழி, ரு - க. ‡ ஷை, ரு - எ. ¶ முதல் திருவந்தாதி, ௬. § பெரியாழ்வார் திருமொழி, ரு - க - உ. $ திருமாலை, ௩அ.

என்னுதல்; "இனம்" என்ற இத்தை இன்னம் என்றாக்கி, 'எங்களபிமதம் பெறுகைக்கு எங்கள் பக்க லொரு நன்மையில்லாதபின்பும் தாழ்க்குமித்தனையோ ? என்கிறாள்' என்று பிள்ளை திருநறையூரரையர் பணிக்கும்படி. விதியினம் - பாவியோ மேன்றபடி. கீழே 'முழுவினை' என்று சொல்லிற் றிறேயென்னில்; மஹாபாபத்தைப் பண்ணின பாவியோ மேன்றபடி; *"பாவமே செய்து பாவியானேன்" என்னக்கடவதிறே. (உ)

## மூன்றாம் பாட்டு.

விதியினால்பெடைமணக்கும் மென்னடையஅன்னங்காள் !
மதியினால்குறள்மாணாய் உலகிரந்தகள்வர்க்கு
மதியிலேன்வல்வினையே மாளாதோவென்றொருத்தி
மதியெல்லாமுள்கலங்கி மயங்குமாலென்னீரே.

ஆ.—(விதியினால்.) பாபம்பண்ணினால் அது மாளுந்தனையும் அநுபவிக்கவேண்டாவோ? என்னில், என்னுடைய பாபமேயோ காலமெல்லாம் அநுபவித்தாலும் மாளாததென்று ஒருத்தி மதியெல்லா முள் கலங்கி அறிவிழந்தாளென்று, தன்னுடைய திவ்யசேஷ்டிதங்களாலே என்னைத் தோற்பித்தவனுக்குச் சொல்லுங்கோளென்று, பாக்யாதிசயத்தாலே பரஸ்பரம் ஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிற சில அன்னங்களைக் குறித்துச் சொல்லுகிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், "தாந்தாம்பண்ணின பாபம் தாந்தாமே அவஶ்யம் அநுபவிக்கவேண்டாவோ?" என்று உபேக்ஷித்திருக்கிறானைக் கொண்டு எல்லைச்சதிரியான சிந்தயந்தி பாபம் அநுபவவிநாஶ்யமாகலாம்; நான் பண்ணின பாபமேயோ அநுபவ விநாஶ்யமாகாதென்று எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்யவேணுமென்று சில அன்னங்களை அர்த்திக்கிறாள்.

[விதியென்று தொடங்கி] - நான்பண்ணின பாக்யத்தாலே பேடையோடே ஸம்ஶ்லேஷித்து அந்த ஸம்ஶ்லேஷ ரஸத்தாலே ஆகர்ஷகமான நடையையுடைய அன்னங்காள்! புத்தி யோகத்தாலே வாமநவேஷனாய் குணசேஷ்டிதாதிகளாலே ஈடுபடுத்தும் ஸ்வபாவனானவனுக்கு. [ஒருத்தி] - ஒருத்தியென்னவே, தானே "இன்னாள்" என்று அறிகிறானிறே என்று கருத்து.

வடிகளிலே அடிமைசெய்கைக்கு' இத்யாதியாற் சொன்ன முந்தின அர்த்தத்துக்கு விவரணம் - இனமென்ற இத்தை இத்யாதி. பிள்ளைதிருநறையூரரையர் யோஜனையில் அகல்வது விதியோ-அகல்வது ந்யாயமோ? என்றபடி. 'விதியினனென்றாய்' என்ற வாக்யவிவரணம்-விதியினம் பாவியோமென்றபடி என்று. ஆக, விதியினமென்றதுக்கு - புண்யத்தையுடையோ மென்னுதல், பாபத்தையுடையேனா னென்னுதல், இன்னம்அகல்வது ந்யாயமோ? என்னுதல் என்று மூன்று அர்த்தம். கீழே இத்யாதி - 'முழுவினை' என்று சொல்லிற்றிறே, 'பாவியோம்' என்றால் அத்தோடு புநருக்தமன்றோ? என்னில் என்றபடி. பாவமேசெய்து பாவியானேன் - பாபங்களையே பண்ணிப் பின்னை பாபங்களையிட்டு நிரூபிக்கவேண்டும்படியானே னென்றபடி. "இனக்குயில்காள் ! முன்செய்த என்று தொடங்கி முயலாதேன் இன்னமகல்வதுவோ ? விதியென்று, என்செய்யதாமரை தொடங்கி உரைத்தக்காலென்செய்யும், நீரலிரே" இத்யந்வய:; இந்தப்பக்ஷத்திலே இழந்தகால விஷயஶோகமும் த்வரையும் ஸூசிப்பிக்கப்படுகிறது. யத்வா, இனக்குயில்காள் முன்செய்த இத்யாரப்ய முயலாதேனான நான் விதியினம் எங்கள் குலமாகப் புண்யத்தை யுடையோமாயிருக்க, அகல்வதுவேயோ? என்செய்யதாமரை தொடங்கி அந்வயமாதல் ; இந்தப்பக்ஷத்தில் ததேகாங்க்ஷத்வ அத்த்யவஸாயம் ஸூசிதம். யத்வா, இனக்குயில்காள் முன்செய்த இத்யாரப்ய முயலாதேனாய் அதஏவ விதியினன் - பாபத்தையுடையேனான நான் அகல்வதுவோ என்று என்செய்யதாமரை தொடங்கி, உரைத்தக்காலென்செய்யும் நீரலிரே இத்யந்வயோவா. இந்தப்பக்ஷத்தில் ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்கள் ஸூசிதங்கள். (உ)

* பெரிய திருமொழி க - க - க.

[மதியெல்லாமென்று தொடங்கி] - பகவத்ப்ரஸாதத்தாலே மயர்வறும்படி பெற்ற ஜ்ஞாநப்பரப்பெல்லாம் நிஶ்ஶேஷமாகக் கலங்கி மயங்காநின்றாள் என்று அறிவியுங்கோள்.

ப.—அநந்தரம், அவற்றிற்காட்டில் நடைப்பழகையும் ஸூக்தியையுமுடைய சில அன்னங்களைக் குறித்து, என்னை அநந்யார்ஹையாக்கினவர்க்குத் தூதாகவேணுமென்று அபேக்ஷிக்கிறாள்.

விதியினால் - பாக்யத்தாலே, (என்னைப்போலே தனியாகாதபடியே), பெடை மணக்கும்- பேடையோடுங்கூட போக ஸக்தராய்க் கலந்து, மென்னடைய அன்னங்காள் - அத்தாலே ம்ருது கதிகளான அன்னங்காள்! மதியினால் - (இந்த்ரனுடைய அபேக்ஷையும் மஹாபலியௌதார்யமும் அவிருத்தமாம்படியான) புத்தி ஸாமர்த்யத்தாலே, குறள் மாணாய் - வாமநனான ப்ரஹ்மசாரியாய், உலகு இரந்த - லோகத்தை இரந்து, (சிறுகாலைக்காட்டிப் பெருகாலாலே யளந்துகொண்ட கணக்கிலே தாழநின்று கலந்து எட்டாது) நின்ற, கள்வர்க்கு - க்ருத்ரிமர்க்கு, மதியிலேன் - (அன்றே இக்களவறியப்பெறாதே) மதிகேடியான என்னுடைய,வல்வினையேயோ-(அநுபவவிநாஶ்ய மல்லாத) வலிய வினையேயோ, மாளாதென்று - (சிந்தயந்தீ ப்ரப்ருதிகளுடைய வினைகள் முடியச் செய்தே) முடியாததென்று, ஒருத்தி - ஒருத்தி, மதியெல்லாம் - (நீர்கொடுத்த) மதியெல்லாம், உள் கலங்கி - ஆஶ்ரயத்தோடே கலங்கி, மயங்கும் - மோஹியாநின்றாள், என்னீர் - என்னுங்கோள். ஒருத்தியென்றாலே - "அது அவன்கையுணரும்" என்னுமாபோலே தாமே அறிவரென்று கருத்து. விதியினாலென்றது - போக ஶாஸ்த்ரமர்யாதையாலே யென்றுஞ் சொல்லுவர். இத்தால் - வடகருடைய ஆசாரவைலக்ஷண்யமும் ஶ்ரைஷ்ட்யமுந் தோற்றுகிறது.

இ.—மூன்றாம்பாட்டில், அத்தலையில் இரக்கத்தால் என்பாபம்போகை தவிர்ந்தால், அநுபவ விநாஶ்யமன்றோ? என்று சொல்லுங்கோளென்று சில அன்னங்களை அர்த்திக்கிறாள்.

[விதியினால் பெடை மணக்கும்] - என் பாக்யத்தாலே பேடையோடே ஸம்ஶ்லேஷிக்கும். பெடைமணக்கும் - பேடையின் கருத்தறிந்து உகப்பிக்கும். என் ஆற்றாமைக்கு மேலே, நீங்களும் பிரிந்திருந்து, உங்களைக் கூட்டுகையிலே யத்நம்பண்ண வேண்டாதொழிந்தது என்பாக்யமிறே. உங்கள் பாக்யத்தாலேயிறே ஸம்ஶ்லேஷமே யாத்ரையாகப் பெற்றதென்னவுமாம். [மென்னடைய அன்னங்காள்] - ஸம்போகத்தாலே வந்த துவட்சியாலே ஆகர்ஷகமான நடையையுடையவையாகை. தாரையுடைய புறப்பாடுபோலே இருந்ததீ உங்கள் புறப்பாடும்! [மதியினால்]- ஔதார்யமென்பதொரு குணமுண்டாகையாலே மஹாபலியை அழிக்கவொண்ணாது, இந்த்ரன் ராஜ்யம்பெறவேணுமென்று புத்தியோகத்தாலே தன்னை அர்த்தியாக்கினான். [குறள்] - பால் செல்லச்செல்ல ரஸிக்குமாபோலே சிறுகினவடிவு ஆகர்ஷகமானபடி. [மாணாய்] - "உண்டு" என்ற போதோடு, "இல்லை" என்ற போதோடு வாசியற முகமலர்ந்து போம்படி இரப்பிலே தகணேறினபடி. [உலகிரந்த] - தன்னதான பூமியை அவனதாக்கி அவன்பக்கலிலே பெற்றானாயிருக்கை. [கள்வர்க்கு] - 'அப்படிப்பட்ட வஞ்சகருக்கு' என்பர் ஆளவந்தார். 'அன்று அச்செயல் செய்ததும் - அக்குணசேஷ்டிதங்களாலே என்னெஞ்சை அபஹரித்து ஈடுபடுத்துகைக்காகவிறே' என்பர் எம்பெருமானார். [மதியிலேன்] - "பிரிவை ப்ரஸங்கித்தவளவிலே, போகாதே கொள்ளும்" என்று ஒருக்கியாலே விலங்கிட்டுவைக்கலாயிருக்க, "அதுவும் கலவியிலே ஒருவகையோ" என்றிருந்த மதிகேடியான என்னுடைய. [வல்வினையே மாளாதோ] - பாக்யவதியாகையாலே அநுபவவிநாஶ்யமான பாபத்தைப் பண்ணினாள் சிந்தயந்தி; நான் பண்ணின பாபத்துக்கேயோ முடிவு காணாதொழிகிறது? "தச்சித்தவிமலாஹ்லாத" இத்யாதி. இவர்தம்மை தீர்க்கசிந்தயந்தியென்றிறே நம்முதலிகள் சொல்லுவது. [ஒருத்தி] - ஒருத்தி என்னவே "இன்னாள்" என்று தானே அறிகிறானிறே; உபய விபூதியிலும் இப்பாடுபட்டாள் இவளொருத்தியுமாயிற்று;

நித்யவிபூதியிலுள்ளார் விஶ்லேஷம் அறியார்கள்; ஸம்ஸாரிகள் விஷயப்ரவணராய் அறியார்கள். [மதியெல்லா முள்கலங்கி]-நீர் கொடுத்த மயர்வறு மதிநலமெல்லாம் அடிமண்டியோடே கலங்கிற்று என்று சொல்லுங்கோள். [மயங்குமால்] - இப்போது அறிவு போயிற்றாகில் பின்பு அறிவுண்டாகிறதென்று இராமே, முடியும் தசையாயிற்று என்னுங்கோள். [என்னீரே] - உங்களவத்யத்தைப் பரிஹரியுங்கோள்; அறிவித்தால் பின்பு அவத்யம் அவனதிறே.

ஈடு.—மூன்றாம்பாட்டு. "அகல்வதுவோ" என்றாற்போலே சொல்லுகிற பக்திவாதங்கள் நமக்குத் தெரியாது, "[illegible]" (அவஶ்யமநுபோக்தவ்யம்) என்று சொல்லுகிறபடியே அநுபவித்தேயறவேணும் என்று ஈஶ்வராபிப்ராயமாகக்கொண்டு, "நான் பண்ணின பாபமேயோ அநுபவித்தாலும் மாளாதது!" என்று சொல்லுங்கோளென்று சில அன்னங்களை யிரக்கிறாள்.

[விதியினால்]-நீங்கள் ஶாஸ்த்ரஞ் சொல்லுகிறபடியே கலக்கையாலேபிரிவின்றியேயிருந்திகோள், இவன் அடைவுகேடக்கலக்கையிறே எனக்குப்பிரிவுவந்ததென்கிறாள். உங்களுடையபாக்யத்தாலே யென்னுதல், என்னுடையபாக்யத்தாலேயென்னுதல். அபிமதஸம்ஶ்லேஷம் புண்யபலம், அபிமதவிஶ்லேஷம் பாபபலம்; (தங்களுடையஸுக்ருதத்தாலே)* அன்றியேஇவைசேரவிருக்கிறஇருப்பு இவள்பாக்யமாகவுமாம். பெருமாள்பிராட்டியைப்பிரிந்து கடலும்மலையும்அரித்துக்கொண்டுவாராநிற்கச்செய்தே, ராஜ்யதாரங்களையிழந்த மஹாராஜரைக் கண்டு அவர்குறைதீர்த்த பின்பிறே தம்மிழவில் நெஞ்சு சென்றது. அங்ஙனன்றிக்கே, இவை குறைவற்றிருக்கிற இதுதான் இவள் கார்யமா யிருக்குமிறே; நீர்மையுடையார்க்குத் தந்தாமிழவிலும் பிறருடைய இழவிறே நெஞ்சில் முற்படப்படுவது. [பேடைமணக்கும்]-பேடையோடேகலக்கும்*(பேடையினுடையகருத்தறிந்து)அத்தையுகப்பிக்கை. [மென்னடைய வன்னங்காள்]-இவ்வன்ன நடைகொண்டோ என்கார்யஞ் செய்யப் புகுகிறது? [மென்னடைய வன்னங்காள்]-"[illegible]" (ஸாப்ரஸ்க்கலந்தீ) என்னுமாபோலே. இளைய பெருமாளுடைய ஜ்யாகோஷம் செவிப்பட்டவநந்தரம் மதுபாநத்தாலே வந்த கலக்கமுந் தெளிந்து,

---

மூன்றாம்பாட்டு - விதியினால் இத்யாதி. ஸங்கதியாவது-அகல்வதுவோ இத்யாதி. பக்திவாதங்கள்-பக்திக்ருதோபசாரோக்திகள். "[illegible]" கொண்டு என்ற அநந்தரம் 'என் அரை க்ஷணம் விஶ்லேஷித்தபோதே யநுபவித்தே னில்லையோ? ஆனபின்பு' என்று ஶேஷம்; நான் பண்ணின இத்யாதி - சிந்தயந்தியுடைய வினை யநுபவித்தால் மாளலாமோ? என்று தாத்பர்யம். இது - 'மதியிலேன் வல்வினையேயோ மாளாது' என்கிற அந்வயத்தைப் பற்ற.

'[illegible]' என்று விதிஶப்தம்-ஶாஸ்த்ரவாசியாய், ஶாஸ்த்ரோக்த க்ரமத்தாலே கலக்குமென்றபடி. 'உங்களுடைய பாக்யத்தாலே' என்றதின் விவரணம்-அபிமதேத்யாதி. 'என்னுடைய பாக்யத்தாலே' என்றத்தை உபபாதிப்பதாக அநுபாஷிக்கிறார்-அன்றியே இவை சேரவிருக்கிற இத்யாதி. இவள் பாக்யமானபடி யெப்படியென்ன - பெருமாள் இத்யாதி. என்றஆற்றாமைக்குமேலே, நீங்களும் பிரிந்து உங்களைக் கூட்டுகையிலேயும் யத்நம்பண்ணவேண்டாதொழிந்தது என்பாக்யமிறேயென்று பலிதார்த்தம். அரித்து - தேடி. அங்ஙனன்றிக்கே - மஹாராஜரைப்போலே தாராதிகளை யிழந்திருக்கை யன்றிக்கே. தம்மிழவு கிடக்க, மஹாராஜர் குறையை முற்படத்தீர்ப்பானென்? என்ன-நீர்மையுடையார்க்கு இத்யாதி. மணம்-ஸம்ஶ்லேஷம். கலப்பதுபேடையோடேயாயிருக்க 'பேடை' என்று விசேஷித்ததுக்குபாவம்-பேடையின் இத்யாதி. இவ்வன்னநடை-ஜாதிப்ரயுக்தமான மாந்த்யம் விவக்ஷிதம். மென்னடை-மெலிந்தநடை. 'பெடைமணக்கும் மென்னடைய' என்று கூட்டி த்ருஷ்டாந்தமுகேநாவாந்தரம்-ஸாப்ரஸ்க்கலந்தீ இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே த்ரயஸ்த்ரிம்ஶே. பாவாந்தராவது - தாரையுடைய ஸம்ஶ்லேஷத்தாலுண்டான நடையழகுபோன்ற நடையழகாலே அவனை வசீகரித்துச் சேரவிடுகை. ஶ்லோகத்துக்கெல்லாம் பாவம் - இளையபெருமாளுடைய இத்யாதி. தன்பட்டமஹிஷியை

* குண்டலிதம் சில ஸ்ரீ கோஶங்களில் இல்லை என்பர்,

கழுத்தில் மாலையையும் அறுத்துப்போகட்டு, 'இச்சீற்றத்துக்கு நாம் முன்னிற்கவொண்ணாது' என்று தாரையைப் புறப்படவிட, அவள், கலவியாலுண்டான பாரவஶ்யமடங்கலும் நடையிலே தோற்றப் புறப்பட்டாற்போலே யிராநின்றதாயிற்று இவற்றின் நடையும். இளையபெருமாளுடைய திருவுள்ளத்தில் சிவிட்குத் தாரையை யிட்டு ஆற்றவேண்டிற்றுக்காணும். "[illegible]"(ஸா)-ஒருகலவியும்பிரிவும் வேண்டாதபடியான நடையழகையுடையவள். "[illegible]" (ப்ரஸ்க்கலந்தீ)- ஸம்ஶ்லேஷத்தாலுண்டான துவட்சியாலே தடுமாறி, அடிமேலடியாக இட்டுவந்தாள். "[illegible]"(மதவிஹ்வலாக்ஷீ)-மதுபாநாதிகளாலே தழுதழுத்த நோக்கையுடையவளா யிருந்தாள்; "[illegible]" (ப்ரலம்பகாஞ்சீகுணஹேமஸூத்ரா) - அரைநூல்வடமிழுப்புண்டு வரும்படி படுக்கையிற் கிடந்தபடியே பேணுதே வந்தாள். "[illegible]" (ஸலக்ஷணா) - ஸம்போக சிஹ்நங்கள் காணலாம்படி வந்தாள். "[illegible]" (லக்ஷ்மணஸந்நிதாநம் ஜகாம) - 'தாய்க்கு ஒளிப்புதுண்டோ?' என்று புறப்பட்டு வந்தாள். "[illegible]"(தாரா)-தாரையானவள். 'இளைய பெருமாள் திருவுள்ளத்தில் சிவிட்கு எத்தாலே யாற்றலாம்?' என்று மஹாராஜரும் திருவடியுமாக விசாரித்து, 'வேறொன்று லாற்றுமதல்ல, தாரையை யிட்டு ஆற்றவேணும்' என்று தாரையை வரவிட்டார்கள். "[illegible]" (நமிதாங்கயஷ்டிঃ) - உருதுபதத்திலே வளைந்தவை நிமிர்க்க வொண்ணுதாபோலே இத்துவட்சி நிரூபகம் இவளுக்கென்று தோற்றும்படி யிருந்தாள். அப்படிப்பட்ட நடையழகாலே அவரைத் துவக்கிக் காரியங்கொள்ளவற்று இவையு மென்றிருக்கிறுள். [மதியினால்] - அவர் சால தூரதர்ஶிகள்கிடிசோள். 'ராவணனைப்போலே தலையறுத்துவிடவொண்ணுதபடி ஔதார்ய மென்றொரு குணலேஶத்தை யேறிட்டுக்கொண்டிருந்தான்; இந்த்ரன் ராஜ்யத்தை இழந்துநின்றுன், இரண்டுக்கும் அவிருத்தமாகச் செய்யலாவதேன்?' என்று "[illegible]" (கோஸஹஸ்ர ப்ரதாதாரம்) என்கிறபடியே கொடுத்து வளர்ந்த கையைக்கொண்டு நீரேற்று அவனுக்குக் கொடுத்த விரகர்க்கு. [குறள்] - கோடியைக் காணியாக்கினாற்போலே பெரிய வடிவழகைக் கண்ணுலே முகந்து அநுபவிக்கலாம்படி சிறுக்கினபடி. [மாணுய்] - 'உண்டு' என்று இட்டபோதோடு, 'இல்லை' என்று தள்ளிக் கதவடைத்தபோதோடு வாசியற முகம்மலர்ந்துபோம்படி இரப்பிலே தழும்பேறின வடிவையுடையனுனபடி. [உலகிரந்த] - தன்ஸங்கல்பத்தாலே யுண்டாக்

---

முன்னிடலாமோவென்ன, ரஸோக்தியாகப்பரிஹாரம் -இளையபெருமாளுடைய இத்யாதி. சிவிட்கு-கோபமும், உஷ்ணமும், சுளுக்கும். சாடுவுக்கு - தாரையை; தாரா - தைலதாரையும் ஒருகலவியும் இத்யாதிக்கு பாவம்-கலவியாலுண்டான அழகேயன்றிக்கே வெறும்புறத்திலும்ஆகர்ஷகமான நடையழகையுடையவளென்றபடி. பிரிவும் வேண்டாதவென்றது - வார்த்தைப்பாடு. தடுமாறி - வ்யத்யஸித்து. தழுதழுத்த - கலங்கின. ஸம்போக சிஹ்நங்களோடே பரபுருஷஸமீபத்திலே வரலாமோ? என்ன - தாய்க்கு இத்யாதி. புறப்பேபுறப்பட்டாளென்றதே 'லக்ஷ்மணஸந்நிதாநம்' என்ற வால்மீகிக்கு இதிலே கருத்தென்று திருவுள்ளம். "[illegible]" என்று ஸ்த்ரீக்கு ஸ்வாதந்த்ர்யம் வரலாமோ ? என்ன, இளையபெருமாள் இத்யாதி. ஹேதுசொல்லாமையாலே சொல்லுகிறார் - உருதுபதத்திலே இத்யாதி. உருதுபதம் - ம்ருதுபக்வம். துவட்சி - நம்ரதை. துவக்கிக் கார்யங் கொள்ளுகை - நடையழகாலே வஶீகரித்துச் சொன்னபடி செய்யும்படி பண்ணிக்கொள்ளுகை. தூதவாக்யம் ஸபலமாமோ ? என்ன, ஹேதுத்வேநாஹ-மதியினால் இத்யாதி. மதியினால் - விசாரத்தால். சால தூரதர்ஶி - மிகவும் விசாரவான். உபபாதகம் - ராவணனைப்போலே இத்யாதி. யுத்தகாண்டே ஏகவிம்ஶே ஸமுத்ரம் ப்ரதி ஶரணவரணகாலே, "[illegible]". மதியினால் என்கிறவிடத்திலே-"[illegible]" என்றது அநுஸந்தேயம். அவனுக்கு-இந்த்ரனுக்கு. விரகர்க்கு-சதுரர்க்கு. ஹ்ரஸ்வத்வ ப்ரஹ்மசர்ய பரிக்ரஹங்களுக்கு ப்ரயோஜநம்-கோடியை இத்யாதி. மாணுய்-ப்ரஹ்மசாரியாய். முகந்து-க்ரோடீகரித்து. தழும்பு-தகண். கொள்வன் -இத்யாதி-

கின லோகத்தை * "கோள்வன்நான்" என்றிரந்த. [கள்வர்க்கு] - 'வஞ்சகர்க்கு' என்று திருமாலை யாண்டான் நிர்வஹிக்கும்படி. எம்பெருமானார், 'ஒன்றை நினைத்து ஒன்றைச் செய்தவர்க்கு' என்று அருளிச்செய்வர். மஹாபலியை வஞ்சித்ததும் என்னை வசீகரிக்கைக்காக; கீழ் தான் †"பெருநிலங்கடந்த நல்லடிப்போது" என்றிறே ஆசைப்பட்டதும்; ‡"உலகங்கொண்டவடியன்அறிவருமேனி மாயத்தனாகிலும் கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்" என்றும், §"அன்றொருகால் வையமளந்தபிரான் வாரானென்றொன் றொருகால்சொல்லாதுலகு" என்றுமிறே இவர்கிடப்பது; திருமங்கையாழ்வாரும் ¶"முன்னங்குறளுருவாய் மூவடிமண்கொண்டளந்த மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன்" என்று இவர்களெல்லாரும் ஈடுபேவது இச்செயலுக்கிறே. [மதியிலேன்] - பிரிகிற ஸமயத்திலே, 'போகாதேகொள்' என்றேனாகில் இப்பாடு படாதொழியலாயிற்றே, அறிவுகேடியானேன். [வல்வினையேமாளாதோ] - இவள் ஒரு தீர்க்கசிந்தயந்தியாயிற்று. எல்லைச்சதிரியாய் குருதர்ஶநத்திலே முடிந்தாளிறே அவள்; "தச்சித்தவிமலாஹ்லாத" இத்யாதி (தச்சித்தவிமலாஹ்லாத இத்யாதி)-அவன்பக்கலிலே நெஞ்சை வைக்கையாலே புண்யபலம் அநுபவித்தாள்; அங்கினைவின்படி அநுபவிக்கப்பெறாமையாலே பாபபலம் அநுபவித்தாள்; ஆகையாலே, புண்யபாபங்களிரண்டும் அரைக்ஷணத்திலே அநுபவித்தாளிறே அவள். [ஒருத்தி] - 'ஒருத்தி' என்றால் அறியுமோ? என்னில்; எய்தவன் கை உணராதோ? 'இன்னகாட்டிலே மான்பேடை ஏவுடனே கிடந்து உழையாநின்றது' என்று ஊரிலே வார்த்தையானால் எய்தவன்கை உணராதோ? 'நீயன்றோ எய்தாய்?'

---

'மாவலி நான் மூவடிகொள்வன்' என்று இரந்த. வஞ்சகர்க்கு-வஞ்சநமாவது-"கொள்வனன்" என்ற முக்தஜல்பிதங்களாலே அவனை வாய்மாளப்பண்ணுகையும், சிற்றடியைக்காட்டிப் பெரியவடியைக் கொண்டு அளக்கையும். விவரணம்-மஹாபலியைஇத்யாதி. பாஷ்யகாரர் யோஜனையில், மதியிலேனென்றதுக்குதாத்பர்யமாவது-தன்னை வசீகரிக்கையே பலமாகக்கொள்ளுகை. அப்படி இச்செயலிலே வசீக்ருதராயிருப்பாரோ? என்ன, கீழ்தான் இத்யாதி. உலகம் இத்யாதி - லோகத்தை யளந்துகொண்ட திருவடிகளையுடையவன், க்ருத்ரிமனென்று விவேகிக்க அரிதாம்படி அழகிய வடிவையுடைய ஆஶ்சர்யத்தையுடையவனேயாகிலும், மீட்க அரிதாம்படி கொடிய என்னெஞ்சானது இஸ்ஸ்வபாவங்களை யுடையவனே தஞ்சமென்று கிடவாநிற்கும். அன்றொருகால் இத்யாதி. 'அபஹரித்த அன்று ஒரு காலத்திலே பூமியை யளந்துகொண்ட உபகாரகனென்று வருகிறானே' என்றாகிலும் ஒருவார்த்தையை ஒருகாற்சொல்லாதே லோகம் உறங்காநிற்கும். முன்னங்குறள் இத்யாதி - முன்பு ஒருகாலத்தில் குட்டைவடிவையுடையனாய் மூவடியையிரந்து, அவ்வடிகளாலே லோகத்தை யளந்துகொண்ட ராஜாதிராஜனான அவனுடைய செயலிலே வ்யாமுக்தையாகி நிறமிழந்தேன் 'பொன் பயந்தேனென்றும்' என்ற அநந்தரம் 'இப்படி' யென்று சேஷம். மதியுண்டானால் விஶ்லேஷம் வாராதோ? என்ன, பிரிகிற இத்யாதி. 'வல்வினையேயோ மாளாது' என்று அந்வயித்து, இத்தால் சிந்தயந்தியில் வ்யாவ்ருத்தி - இவளொரு இத்யாதி. இந்த அந்வயத்துக்கு நியாமகம் - மேலிற்பாட்டின் அவதாரிகை. அவளுக்காகில் மாண்டதோ? என்ன, எல்லைச்சதிரி இத்யாதி. 'மதியிலேன் வல்வினையே மாளாதோ' என்கையாலே - மதியுண்டான ஒருத்தி வல்வினை மாண்டதென்றபடி. எல்லைச்சதிரியாய் - சாதுர்ய ஸீமாபூமியாய். குருதர்ஶநத்திலே-யாமியார்முதலானாருடைய தர்சநத்திலே. முடிந்தாள் - ஸமஸ்த ப்ரதிபந்தகங்களும் போய் எம்பெருமானைப் பெற்றாளிறே என்றபடி. இதுக்கு ப்ரமாணம் - தச்சித்த இத்யாதி. பஞ்சமேம்ஶே த்ரயோதஶே, "தச்சித்தவிமலாஹ்லாதக்ஷீணபுண்யசயா ததா । ததப்ராப்தி மஹாதுஃகவிலீநாஶேஷபாதகா ॥ சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம் । நிருச்ச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா". பக்திப்ரபத்திகளொன்றும் அநுஷ்டியாமலிருக்க முக்தி வந்தபடியெங்ஙனே? என்ன, கர்மபலமெல்லாம் அநுபவித்துத் தீருகையாலே யென்கிறான் ருஷி. ப்ரதிபந்தக நிவ்ருத்திஹேதுவை அருளிச்செய்கிறார் - அவன்பக்கலிலே இத்யாதி. நாங்கள் போய்ச் சொல்லும் வார்த்தையேது? என்ன, ஒருத்தியென்று தொடங்கி. மான்பேடை - பெண்மான். ஏவுடனே - அம்போடே. உழையாநின்றது - க்லேஶியாநின்றது.

---

* திருவாய்மொழி ௩ - ௮ - ௯. † திருவாய்மொழி ௧ - ௩ - ௧௦. ‡ ஷெ ௫ - ௩ - ௫. § ஷெ ௫ - ௪ - ௯. ¶ பெரியதிருமொழி ௯ - ௪ - ௨.

என்று சொல்லவேண்டாவிறே. [ஒருத்தி] - ஸம்ஸாரவிபூதியிலுள்ளாள் இவளொருத்தியுமிறே. ஸம்ஸாரிகள் புறம்பே அந்யபரர், நித்யஸூரிகளுக்கு விஶ்லேஷமில்லை; மற்றையாழ்வார்கள் இவருக்கு அவயவமா யிருப்பர்கள். [மதிகலங்கி] - அறிவழிந்தா ளென்னுங்கோள். தன் அறிவழிந்தாளாகிலும் நாம்கொடுத்த அறிவு உண்டு என்றிருப்பர்; [மதியெல்லாங்கலங்கி] - நாம்கொடுத்த அறிவுகொண்டு "தத்தஸ்யஸத்ருஶம் பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம் பவேத்) என்றிராளோ? என்றிருப்பர்; அறிவுதந்தார் தாமன்றே! என்று அறிவியுங்கோள். தாம் மயர்வறுத்துத் தந்த ஜ்ஞாநப் பரப்பெல்லாம் கலங்குகைக்கு உடலாயிற்று என்னுங்கோள். மேலெழச் சிறிது கலங்கிற்றாகிலும், பின்னையும் நாம் கொடுத்த அறிவன்றே, அப்படிகலங்குமோ? என்பர். [மதியெல்லா முள்கலங்கி]- தாம் தந்த மயர்வறுமதிநலமெல்லாம் அடிமண்டியோடே கலங்கிற்று என்னுங்கோள். அத்தனையோ? நாம் இருந்தோமே! பின்பு நாம் போனவாறே அறிவுகொடுத்துக்கொள்ளுகிறோ மென்றிராமே. [மயங்குமால்] - "மயங்கினாள்" என்னில், 'இனிப்போனால் செய்வதென்?' என்றிருப்பர்; முடியும் தசையாயிற்று என்னுங்கோள். [என்னீரே] - உங்கள் தலையில் பழியைத் துடைக்கப் பாருங்கோள்; அறிவித்தபின்பு வாராதொழிந்தால் அவனதன்றோ அவத்யம்? ஆர்த்தத்வநி பொறுக்கமாட்டான், அறிவியுங்கோள். [என்னீரே]-உங்களுக்கு ஸ்வரூபம், அவனுக்கு குணம், எனக்கு ஸத்தை, உங்களுக்கு ஒருஉக்தி. (௩)

## நான்காம் பாட்டு.

என்நீர்மைகண்டிரங்கி இதுதகாதென்னாத
என்நீலமுகில்வண்ணர்க்கு என்சொல்லியான்சொல்லுகேனோ?
நன்னீர்மையினியவர்கண் தங்காதென்றொருவாய்ச்சொல்
நன்னீலமகன்றில்காள் நல்குதிரோ? நல்கீரோ?

ஆ.—(என்நீர்மை.) நான் தம்மைப் பிரியில் ஒருக்ஷண மாத்ரமும் தரிக்கமாட்டாத ஸ்வபாவை யென்னுமிடத்தை அறிந்துவைத்து என்பக்கலிலே க்ருபைபண்ணி, 'இவள் நம்மைப் பிரிந்திருக்கைக்கீடல்லள்' என்று பாராதவர்க்கு நான் என்ன வார்த்தையைச் சொல்லுவது? என்று

---

விசேஷியாதே 'ஒருத்தி'என்றதுக்கு ஸாவம்-ஸம்ஸாரவிபூதியில் இத்யாதி.'இவளொருத்தியும்' என்கிறதென்? அவனுடைய விஶ்லேஷத்தில் நோவுபடுவார் வேறொருவரில்லையோ? என்ன, ஸம்ஸாரிகள் புறம்பே இத்யாதி. மதிகலங்கி, எல்லாங்கலங்கி, உள்கலங்கி என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - அறிவழிந்தாள் இத்யாதி. 'தன்னறிவழிந்தாளாகிலும்' என்ற கீழ்வாக்யவிவரணம்-நாம்கொடுத்த இத்யாதி.'இராளோவென்றிருப்பர்'என்ற அநந்தரம், மதியெல்லாங்கலங்கி என்று பதோபாதாநத்தைப் பண்ணிக்கொண்டு, அநந்தரம் 'அறிவுதந்தார் தாமன்றோ' இத்யாத்யநுஸந்திப்பது. அறிவுதந்தார் தாமன்றோ என்றது-அறிவும் அகிஞ்சித்கரமாம்படி விலக்ஷணரான தாமன்றோ?என்னுதல், பக்திரூபாபந்நமான அறிவன்றோ தந்தா ரென்னுதல். 'மதியெல்லாங்கலங்கி' என்றதுக்கு சப்தார்த்தம் - தாம் மயர்வறுத்து இத்யாதி. அடிமண்டி - அடிச்சேறு. மேலுக்கு அவதாரிகை-அத்தனையோ இத்யாதி. அத்தனையோ நாமிருந்தோமே என்றது - அறிவு போன அத்தனையன்றோ, ஸத்தையுண்டே, நாமிருந்தோமே யென்றபடி. மயங்கும் - மயங்காநிற்கும். 'மயங்கும்' என்கிற வர்த்தமாநத்துக்கு அர்த்தம் - முடியும்தசை என்று. விதிக்கு ஸாவம் - உங்கள் இத்யாதி. ஸாவாந்தரம் - ஆர்த்தத்வநி இத்யாதி. தயாவானுகையாலே வரு மென்றபடி. 'உங்களுக்கு ஸ்வரூபம், அவனுக்கு குணம், எனக்கு ஸத்தை, உங்களுக்கு ஒரு உக்தி' என்கிற வாக்யம் சில ஸ்ரீகோசங்களிலே இருந்ததாகில், அதுவும் ஸாவாந்தரமென்று கண்டுகொள்வது. ஆல் - அசை. க்ரமேண அந்வயம். (௩)

எம்பெருமானைச் சொன்னளாய், பின்னையும் அவனை விடமாட்டாமையாலே, அவளுடைய நல்லுயிரானது இனி அவள்பக்கல் ஒரு க்ஷணமாத்ரமும் தங்காதென்று ஒரு வார்த்தை சொல்லவேணுமென்று சில அன்றில்களை நோக்கிச் சொல்ல, அவையும் போகாதிருந்த விடத்தில், இத்தனையுஞ் சொல்ல வல்லீர்களோ? மாட்டீர்களோ? என்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், என் ப்ரக்ருதியை அறிந்துவைத்து விஶ்லேஷித்தவனுக்குச் சொல்லலாவதுண்டோ? என்று விஷண்ணையாய், மீள ஓராசையாலே சில மகன்றில்களைக் குறித்து, என்னிடையாட்டம் அவனுக்கு அறிவிக்க வல்லிகளோ? மாட்டிகளோ? என்கிறாள்.

[என்னீலமுகில்வண்ணர்க்கு] - தன்னுடைய ஸௌந்தர்யாதிகளைக் காட்டி முன்பு என்னை ஈடுபடுத்தினவனுக்கு நான்இனிச்சொல்லுவது எத்தை? [நன்னீர்மையென்று தொடங்கி]- ஈண்டெனச் சென்று ஸம்ஶ்லேஷியீராகில் அவள் கிடையாளென்று ஒரு வார்த்தை சொல்லி என்னை உஜ்ஜீவிப்பியுங்கோள். [நன்னீலமென்று தொடங்கி] - நிறம் அவனைப்போலே யிருந்தது; அவனைப்போலே ஆகிறிகளோ? என் அபேக்ஷிதம் செய்கிறிகளோ? என்று கருத்து.

ப.—அநந்தரம், காளமேகநிபஶ்யாமமான வடிவழகையுடையவனுக்குத் தூதாக விடுவதாக நிறத்தழகையுடைய சில மகன்றில்களைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

(ஸம்ஶ்லேஷ தஶையிலே), என்நீர்மை-என்னுடைய (விஶ்லேஷாஸஹ)ஸ்வபாவத்தை, கண்டு - (ஆலிங்கந ஶைதில்யாதிகளில் அங்கவிகாரத்தாலே) கண்டுவைத்து, இரங்கி - (இவள் ம்ருதுப்ரக்ருதியென்று) இரங்கி, இதுதகாதென்னாத - இந்த விஶ்லேஷம் தகுவதல்லவென்னாத, என் நீல முகில்வண்ணர்க்கு - காளமேகம்போலே எனக்குக்காட்டி யூட்டாது நின்ற வடிவையுடையவருக்கு, என்சொல்லி - என்ன பாசுரத்தைச் சொல்லி, யான் - நான், சொல்லுகேனோ - வார்த்தைசொல்லுவது? (ஆனாலும்), நல்-(உமக்கு ஆதரணீயமாம்படி) நன்றான, நீர்மை-(அவளுடைய) ஸத்பாவம், இனி - இனிமேல், அவர்கண் - அவரிடத்து, தங்காதென்று - நிற்கமாட்டாதென்று, ஒருவாய்ச்சொல் - ஒருவார்த்தைசொல்லுதலை, நன்னீலமகன்றில்காள் - நல்ல நீலநிறத்தையுடைய மகன்றில்காள்! நல்குதிரோ - ("வாவாய ஸூவோவ ஹி" என்று)உபகரிக்கிறீர்களோ? நல்கீரோ-உபகரியீர்களோ? "அவர்" என்கிற பஹுமாநோக்தி - நாயகியான கௌரவத்தாலே தூதர் தங்கள் வார்த்தையாகச் சொல்லுகிறாள். இதில் வடகருடைய ரூபவைலக்ஷண்யம் சொல்லிற்றாயிற்று.

இ.—நாலாம்பாட்டில், என் ப்ரக்ருதி அறிந்துவைத்து இரங்காதே போகட்டுப் போனவர்க்குச் சொல்லலாவதுஉண்டோ? என்று நைராஶ்யந்தோற்றச் சொல்லி, பின்னையும் சாபலாதிஶயத்தாலே சில மகன்றில்களைக் குறித்து என்னிடையாட்டம் அவனுக்கு அறிவிக்கிறிகளோ? அல்லிகளோ? என்கிறாள். மகன்றில்களென்று அன்றில்களிலே ஓரவாந்தரபேதம்.

[என்நீர்மைகண்டிரங்கி] - என் ப்ரக்ருதி மார்தவத்தைக் கண்டுவைத்து ஐயோ! என்று இது பிரிவு தகாதென்னாதவர் இவள் ப்ரக்ருதி மார்தவத்தைக் கண்டால் நிர்க்ருணர்க்கும் இரங்கவேண்டிக்காணும் இருப்பது. ஆனால், இப்போது இவள்பிரிவை அவன் கண்டானோ? என்னில்; கலக்கிறபோது அணைக்கைக்காகக் கை நெகிழ்ந்தபோது அதுவும் பொறாதபடி அறியுமிறே; "ஊருண்கேணி", "புல்லிக்கிடந்தேன்". [என்நீலமுகில்வண்ணர்க்கு] - அடியில் வடிவைக் காட்டியாயிற்று அநந்யார்ஹையாக்கிற்று. இவ்வடிவிலுள்ளது அகவாயிலு முண்டாகப் பெற்றிலோம். சிலபதார்த்தங்கள் உருவு அழகிதாய், அகவாய் நஞ்சாய் இருக்குமாபோலே காணும். [என் சொல்லி யான் சொல்லுகேனோ] - என்ன பாசுரத்தைச் சொல்லி உங்களுக்கு நான் சொல்லி விடுவது? என் தசையைக்கண்டு இரங்காதவர் உங்கள் பேச்சைக் கேட்டோ இரங்கப்புகுகிறார்?

கண்டவர்க்குச் சொல்லிவிடுவது ஒரு பாக்ய முண்டோ? "ஸுயவாகிஹஹா ஸேவிடைவரா கி பதாம்கயா" என்று நிராசைகளானவர்கள் "ஸ்வ்யவௌஸராம ஊ்ஷிம ஸகூஜஷவ்யாமதி ஷ்யதி" என்றாற்போலே பின்னையும் தன் ஆற்றாமையாலே "நல்குதிரோ நல்கீரோ" என்கிறாள் [நன்னீர்மை] - நற்சீவன். "ஜீவநீம்ரோமயாரா8ஃ". [இனி] - பாடாற்றலாவதெல்லாம் ஆற்றினாள், இனித் தங்கமாட்டாது. [அவர்கண் தங்காது] - சேஷியான உம்முடையபக்கலிலே தங்கில் தங்குமித்தனை. [என்றொரு வாய்ச்சொல்] - என்றொரு வார்த்தை சொல்லு. [நன்னீலமகன்றில்காள்] - நன்றான நீலநிறத்தையுடைய மகன்றில்காள்! உங்களுக்கு நிறம் அவனைப்போலே இராநின்றது, உள்வாயும்அவனைப்போலேயாய் அநாதரிக்கப்புகுகிறிகளோ? அன்றிக்கே, இத்தசையிலே முகங்காட்டின உங்கள் ஸ்வபாவத்தாலே நல்குதிரோ? என்கிறாள்.

ஈடு.—நாலாம்பாட்டு. அநுபவித்தாலும் மாளாதது நான் பண்ணின பாபமேயோ! என்று நின்றது கீழ்; இவள் அநுபவித்தாளோ பின்னை? யென்னில்,- அவன் அரைக்ஷணந் தாழ்ந்து முகம் மாறவைத்தபோதே எல்லாம் அநுபவித்தாளிறே. இவ்வளவிலே சிலமகன்றில்கள், 'நமக்குக் கிஞ்சித்கரிக்க நல்லவளவு' என்று, 'நாங்கள் இங்குத்தைக்குச் செய்யவேண்டுவதென்ன?' என்று, வந்து முகங்காட்டிற்றினவாகக் கொண்டு, அவற்றைப்பார்த்து, 'என்தசையைக் கண்டுவைத்து இரங்காதே போனவனுக்கு நான் எத்தைச் சொல்லுவது?' என்று நிராசையாய், பின்னையும் சாபலத்தாலே, பலகால் சொல்லுமறுத்தார்க்குச் சொல்லுவாரைப்போலே, இத்தனையுஞ் சொல்லவல்லிகளோ? மாட்டிகளோ? என்கிறாள்.

[என்னீர்மை கண்டிரங்கி] - என் நீர்மையுண்டு - என் ஸ்வபாவம்; என் மார்தவம். [கண்டிரங்கி யிதுதகாதென்னாத]- இத்தைக்கண்டு தயைபண்ணி 'நாம் பிரியுமது தகாது' என்னாதே போகட்டுப் போனவர்க்கு. பட்டரை ஒரு தமிழன் 'கேட்டிரங்கி' என்னாதே 'கண்டிரங்கி' என்னப்பெறுமோ?' என்ன, 'அணைத்த கை நெகிழ்த்தவளவிலே வெளுத்தபடி கண்டால் பிரியத்தகாதென்றிருக்க வேண்டாவோ? இப்படி கூடுமோ?' என்னில்;—"புல்லி" இத்யாதி,

---

நாலாம்பாட்டு - என்னீர்மை இத்யாதி. தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - இவள் இத்யாதி. அவன் அரைக்ஷணம் தாழ்ந்து இத்யாதி வாக்யத்திலே "ஸதயாஸஹமொவீ ஹீராரா8யா ஸஙிஜநஃ। யயாவுகொழிவு கி8ஃக்ஷணஸெநவிநாஹவத" என்றத்தைக் கண்டுகொள்வது. தாழ்ந்து - விளம்பித்து. மகன்றில் - அன்றிலிலே பேதம். நீலமகன்றில்காள் என்னாதே "நன்னீலமகன்றில்காள்" என்றத்தையும்,"என்சொல்லியான்சொல்லுகேனோ" என்றத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை - இவ்வளவிலே இத்யாதி. அவைகள் இவளை உத்தேஸ்யமாக நினைத்திருக்கையாலே, 'நமக்குக்கிஞ்சித்கரிக்க' என்கிறார். நல்லவளவு - நல்லஸமயம். "என்சொல்லி யான் சொல்லுகேனோ" என்று உத்தரமிருக்கையாலே, 'நாங்கள் இங்குத்தைக்குச் செய்யவேண்டுவதென்?' என்று வந்து முகங்காட்டிற்றின என்றது. நிராசையானவள் மீளவும் சொல்லுகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் - பின்னையும் இத்யாதி. சொல்லுமறுத்தார்க்கு - சொற்கேளாதவர்களுக்கு.

நீர்மை - மார்தவம். இது - விஶ்லேஷமென்று ப்ரதமநிர்வாஹம். த்விதீயநிர்வாஹேது, நீர்மை - து8க்காநுபவதசை, இதுவென்று அந்த தசையைச் சொல்லுகிறது. கண்டிரங்கி - ஸம்ஶ்லேஷ தசையிலே கண்டிரங்கி. தகாதென்னாதே - பிரிந்துபோனவென்று கூட்டுவது. ப்ராஸங்கிகமாக ஐதிஹ்யம் - பட்டரை இத்யாதி. நாயகஸந்நிதியில் வைவர்ண்யங் கூடாமையாலே கேட்டிரங்கி யென்னவேண்டாவோ? என்றபடி. என்னப்பெறுமோ என்றது - அத்யுக்தியன்றோ? என்றபடி. நாயகஸந்நிதியிலும் வைவர்ண்யமுண்டாகையாலே "கண்டிரங்கி" என்னப் பெறுமென்று பரிஹரிக்கிறார் - அணைத்தகை இத்யாதி. 'வேண்டாவோ' என்ற அநந்தரம் 'என்கிறாள்காண்' என்று அருளிச்செய்தார் காண் என்று ஶேஷம். இப்படிகூடுமோ? என்னில் என்றது- இப்படி அத்யுக்தமாய்ச் சொல்லலாமோ? என்றபடி; கூடுமென்கைக்கு ப்ரமாணத்வயம் - புல்லி இத்யாதி.

“காதலர் தோவேழி” இத்யாதி, ‘உனக்கு இத்தமிழ் போகாதோ?’ என்றூர். [என் நீலமுகில்வண்ணர்க்கு என்சோல்லி யான் சோல்லுகேனே] - இத்தசையிலும் ‘என்னுடையவன்’ என்னும்படிகாணும் முகங்கோடுத்தபடி, கலந்தபோது. அவர்க்கு நான் சோல்லி விடுவது எத்தை யேன்கிறாள். திருமுகம் மறுத்துப்போனவர்க்கு எத்தைச்சோல்லுவது? என்கிறாள்காணும். இங்ஙன் சோல்லுவானேன்? என்னில்;—கண்டு இரங்காதவரோ கேட்டு இரங்கப்புகுகிறா ரேன்னுமத்தாலே. கண்டானே பின்னை? என்னில்;—ஏன்? கண்டிலனே? கலக்கிற ஸமயத்தில் கைநெகிழ்ந்தவிடமேல்லாம் வேளுக்கக் கண்டிருக்குமே. அன்றிக்கே, இவ்வளவிலே ஸந்நிஹிதனாய் என்தசையைக் கண்டு இதுக்கு ஒரு போக்கடி பாராதே, உங்கள் பக்கலிலே கேட்டறிய இருக்கிறவர்க்கு என்னவுமாம். [என்நீர்மை] - அவனை அநுபவிக்குமதிலும் அவனைப் பிரிந்து நோவுபடுகிற தன்ஸ்வபாவத்தைக் கட்டிக்கோண்டு கிடக்க அமைந்திராநின்றது காணும். [கண்டு இரங்கி] - “எத்திறம்” என்று மோஹித்து உடம்புவேளுத்துக் கிடக்கும்படி கண்டால் பிரியப்போரு தேன்றிருக்க வேண்டாவோ? [இது] - தன்தசைதானும் தனக்கும் பேச்சுக்கு நிலமல்லகாணும். [என்நீலமுகில்வண்ணர்க்கு] - அடியிலே வடிவைக் காட்டிக்காணும் அநந்யார்ஹமாக்கிற்று; இவ்வடிவில் புகர் அகவாயிலும் சிறிது உண்டாகப்பேற்றதில்லை. இல்லையோ? என்னில், யாமுடையாயன்தன் மனம் கல்லிறே. [என் சோல்லி யான் சோல்லுகேனே]-

“புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில், அள்ளிக்கொள்வற்றே பசப்பு.” முன்னொரு ஞான்று காதலரைப் புல்கிக்கிடந்தேன். புடை - அல்பம். பெயர்ந்தேன் - விஶ்லேஷித்தேன். அவ்வளவில் - அப்புடை பெயர்ந்தவளவிலே. பசப்பு - வைவர்ண்யம். அள்ளிக்கொள்வற்று - கபளீகரித்தது. இது வள்ளுவன் குறள். “காதலர்தொடுவுழித்தொடுவுழிநீங்கி, விடுவுழிவிடுவுழிப் பயத்தலானேன்” என்று *சங்கத்தார் செய்யுள். காதலர் - நாயகன். தொடுவுழித் தொடுவுழி - தொட்ட தொட்டஇடம். நீங்கி - பயத்தல் நீங்கி. விடுவுழிவிடுவுழி-விட்டவிட்டவிடமெல்லாம். பயத்தலானேன் - வைவர்ண்யத்தையுடையளானே னென்றபடி. இவ்விரண்டையுமெடுத்து ‘உனக்கு இத்தமிழ்போகாதோ?’ என்றூ ரென்றபடி. இரங்காதே அகன்றவரை “என்” என்பானென்? என்ன, இத்தசையிலும் இத்யாதி. ரஸோக்தி - திருமுகம் இத்யாதி. திருமுகம் - ராஜஶாஸநம்; ஸ்வபாவார்த்தம் - பிராட்டியான தன்னுடைய முகம். திருமுகம் - ஸ்ரீமுகம். திருமுகம் மறுத்துப்போகையாவது - தன் தசையைக் கண்டு அநாதரித்துப் போகை யென்றபடி. ரஸோக்தி கர்ப்பிதமான ஹாவத்தை ஶங்காபூர்வகமாக ஸ்பஷ்டமாக்குகிறார் - இங்ஙன் இத்யாதி. ஏன் கண்டிலனே? என்றது, பட்டர் நிர்வாஹவிவரணம். அன்றிக்கே இத்யாதி-தன்னுடைய வைலக்ஷண்யந் தனக்குத்தெரியுமாகையாலே, ‘இவ்வடிவைப் பிரிந்தவள் தரிக்கமாட்டாள்’ என்று இவ்வளவிலே ஸந்நிஹிதனு யென்றபடி. இந்தப்பக்ஷத்திலே, ‘எனநீர்மை’ இத்யாதிக்கு - என்னுடைய விஶ்லேஷவ்யஸநத்தை ஓடிவந்து கண்டிரங்கி, இந்தவிஶ்லேஷவ்யஸநம் தகாதென்னுதே யிருக்கிற என் நீலமுகில் வண்ணர்க்கு இதி சப்தார்த்தஃ. “என்நீர்மை” என்று - மமகாரம் பண்ணலாமோ? என்ன, அவனையநுபவிக்கும் இத்யாதி. ததநுபவாபேக்ஷயா ஸ்வவிஶ்லேஷத்தில் ஊற்றம் தோன்றியிருக்கிறபடி. தன் ஸ்வபாவத்தைக் கட்டிக் கோண்டு கிடக்கை - தன்ஸ்வபாவத்தைச் சொல்லிக்கொண்டிருக்கை. முந்தின அர்த்தத்திலே ஸ்வாபதேசம் - கண்டிரங்கி எத்திறம் இத்யாதி. கிடக்கும்படி கண்டால் என்றது - ஸம்ஶ்லேஷதசையிலே “எத்திறம்” என்று கொண்டே மோஹித்துக்கிடக்கும்படி கண்டால் விஶ்லேஷ தசையில் சொல்லவேணுமோ? என்றபடி. விரஹவ்யஸநமென்னுதே, ‘இது’ என்கிறதென்? என்ன, தன் தசை இத்யாதி. ஆக, “நீர்மை” என்று - விஶ்லேஷாஸஹமார்தவமாதல், விரஹவ்யஸநமாதல். ‘இது’ என்று பிரியுமதென்னுதல் - இந்த வ்யஸந மென்னுதல். பேச்சுக்கு நிலமல்லாமையாலே “இது” என்று ஸாமாந்ய நிர்த்தேச மென்று தாத்பர்யம். கீழே, “இத்தசையிலும்” இத்யாதியாலே, ‘என்’ என்றத்தை முகில்வண்ணர்க்கு விஶேஷணமாக்கி அருளிச்செய்து, வர்ணத்துக்கு விசேஷணமாக்கி அர்த்தாந்தரம் - அடியிலே இத்யாதி. இத்தால் - குணங்களை விட்டு வடிவைச்சொன்னதுக்கு ஹேதுவும் சொல்லப்பட்டது. வெறுப்பாக மூன்றும்ஹாவம் - இவ்வடிவில் இத்யாதி. புகர் - குளிர்த்தி. வண்ணம் நீலமுகில் போன்றது; உள்ளு அங்ஙனல்ல வென்றபடி. இல்லையோவென்னில் - இல்லையென்பதே இவளுக்கு நிஶ்சயமோ? என்னில். யாமுடை இத்யாதி - நமக்கு ஸுலபனுன க்ருஷ்ணனுடைய ம்ருதுஸ்வபாவமான நெஞ்சு கல்லாய்விட்டதாகவேணும். கல்லிறே - கல்லென்றூளிறே யென்றபடி. அர்த்தம் - என்ன

* “பசலை காதலர், தொடுவுழித்தொடுவுழிநீங்கி, விடுவுழிவிடுவுழிப் பரத்தலானே” என்று குறுந்தொகையிற் காணப்படுகின்றது.

என்ன பாசுரத்தையிட்டு எத்தை உங்களுக்கு நான் சொல்லிவிடுவேது ? நான் சொல்லிவிட இருக்கிறவர் நீங்கள் சொல்லுமளவையோ பார்த்திருக்கிறது ? கண்டு இரங்காதவர்க்கு நான் எத்தைச் சொல்லுவது ? என்று நிராசையாய், பின்னையும் சாபலாதிசயத்தாலே வார்த்தை சொல்லுகிறாள். திருமுகம் மறுத்தவன் கடையீட்டுக்குக் கேட்கப் புகுகிறானோ ? ஸ்ரீ கோபிமார் "**அதவாகிம் ததாலாபை:**" (அதவாகிந்ததாலாபை:) என்ற அநந்தரத்திலே "**அப்யஸௌமாதரம் த்ரஷ்டும் ஸக்ருதப்யாகமிஷ்யதி**" (அப்யஸௌமாதரம் த்ரஷ்டும் ஸகருதப்யாக மிஷ்யதி) என்னுமாபோலே. இக்க்ருஷ்ணன் பிதற்றேழிய வேறொன்றில்லையோ ? என்ன, கலந்த நாமன்றோ வேண்டாதது ? பெற்ற தாயைக் காணவாகிலும் இங்ஙனே ஒருகால் போதானோ ? என்பர்களிறே! [நன்னீர்மை] - நல்லுயிர். [இனி] - ஆனவளவும் கால்கட்டிப் பார்த்தாள் போலே காணும். [அவர்கண் தங்காது] - சேஷியான உம்முடையபக்கலிலே தங்கில் தங்குமத்தனை. "**நசாஸ்யமாதா**" (நசாஸ்யமாதா) - பெருமாள்பக்கல் குறையேயாய், தன்பக்கல் குறை தோற்றாதபடி பிராட்டி வார்த்தை அருளிச்செய்தவாறே, திருவடி, 'நாமோதான் இங்கு நன்றாகச்செய்தோம் ? பெருமாளைப் பிரிந்த அநந்தரம் முடிந்ததென்னும் வார்த்தை கேட்கப்பெற்றதில்லையே' என்ன, 'மாதா' என்றும் 'பிதா' என்றும் பலர்பக்கலிலே பாலிபாயக்கடவதான ஸ்நேஹத்தைப் பெருமாள் என்னொருத்திபக்கலிலும் ஒருமடைசெய்து போந்தார்; அவர் இவ்வாற்றாமையாலே உண்ணாது

---

*பாசுரத்தை இத்யாதி; எந்த அர்த்தத்தை இத்யத்யாஹார:. எந்தப் பாசுரத்தைச் சொல்லி, நான் எந்த அர்த்தத்தைச் சொல்லிவிடுவே தென்றபடி. எத்தை - எந்த அர்த்தத்தை. "என் சொல்லி யான்சொல்லுகேனோ" என்றதுக்கு, "என்னீர்மை" இத்யாதியைக் கடாக்ஷித்து பாவாந்தரம் - **நான் சொல்லிவிட** இத்யாதி. இவ்வாக்யாநந்தரம், "திருமுகம் மறுத்தவன்" இத்யாத்யநுஸந்தேயம். "தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்" என்னும் நிலைகுலைந்து தூதுவிடும்படியான அவஸ்த்தை வருமளவும் தாழ்த்தவர் உங்கள் சொலவுக்கு வரப்புகாநின்றாரோ? என்றபடி. ஆனாலும், நாங்கள் சொன்னது கேட்டு வாராதிருக்குமோ? என்ன, **திருமுகம்** இத்யாதி. அதாவது - ப்ராதாநனை ராஜாவின் ஓலை மறுத்தவன், அப்ராதாநனை கணக்கனோலை கேட்கப்புகுகிறானோ? என்றபடி. அப்படியே நான் சொல்லிவிட இருக்கிறவர் உங்கள்வார்த்தைகேட்டு வரப்புகுகிறாரோ ? என்றபடி. **கடையீடு** - ராஜாநியோகாநாயிகதத்ர்ணாம்வதி கா ஸமெதத்ய் ஸ்ரிமெத ஸாக்ஷாத் நாயகம் ஸ்ருதி வசநம் நமஸ்க்ருதெ, ஆரக்ஷாநெவ வக்ஷ்யஷிதி ஸ்த்தா:, ஸ தத்வக்தா ஸ்ரூமஷிஷ்யதி கிதிதி வஹாவ:. மேலுக்கு அவதாரிகை - **கண்டிரங்காதவர்க்கு** இத்யாதி. இப்படி அலாபத்தாலே வெறுத்து நிராசைகளாய், பின்னையும் சாபலாதிஶயத்தாலே சொன்ன பேருண்டோ? என்ன, **ஸ்ரீகோபிமார்** 'அதவாகிந்ததாலாபை:' என்று தொடங்கி. ஆநுபஸர்க்கத்தை ப்ரோபஸர்க்க ஸமாநார்த்தமாக வ்யாக்யாநம்பண்ணுகிறார்-**பிதற்றேழிய** என்று. பிதற்று - ப்ரலாபம். "ப்ரலாபொ நர்த்தகம் வச:" என்று - என்று சொல்லாநிற்கச் செய்தே யென்றபடி. **போதானோ** - வாரானோ. **கால்கட்டுகை** - போகிறவனைத் தகைகை. அப்படியே வருந்தித் தரித்திருந்தா ளென்றபடி. கால்கட்டி இதி சாடு:. காலிதி வாயுவாசகஶ்வாஸ ப்ராணவாயோ: வாசகஸ்ய வாசக:. **அவர்கண் தங்காது** என்றது - அவர்களுக்காகத் தங்கா தென்றபடி. ஸ்வாஸூசிதமர்த்தமாஹ - **சேஷியான** இத்யாதி. **உம்முடைய பக்கலிலே** - உமக்காக வென்றபடி. அப்படியே நாயகவிஶ்லேஷத்திலே முடியும்படியான அவஸ்த்தையுண்டாயிருக்கச்செய்தேயும், ஆனவளவும் கால்கட்டிப் பார்த்திருந்த பேருண்டோ? என்ன, அருளிச்செய்கிறார் - **நசாஸ்யமாதா** என்று தொடங்கி. இஶ்ஶ்லோகம் எவ்விடத்திலே ? இதுக்குத் தாத்பர்ய மேது ? என்ன, **பெருமாள்பக்கல்** இத்யாதி. **முடிந்ததென்னும் வார்த்தை கேட்கப்பெற்றதில்லையே** யென்ன என்றது - "தாதஜிஜீவிஷேயம்" என்ற உத்தரத்துக்கு அநுகுணமாக. **பாலிபாய்கை** - பிரிந்துபோகை. **ஒருமடைசெய்கை** - ஏகமுகமாக்குகை. **உண்ணாது** இத்யாதி - "நமாம்ஸம்ராகவொபுங்க்தெ, நசாபி மதுஸேவதெ" என்கிறபடியே ஊணும் உறக்கமும் அற்று ஒதம்கிளர்ந்த கடலை யடைத்து - அடைத்து. **உண்ணாது** இத்யாதி-தன்னுடைய ஸ்நேஹத்தைச் சொல்லாமல்*

உறங்காது ஒலிகடலை யூடறுத்துக்கொண்டு வரக்கொள்ள, விடாயன் தண்ணீர்ப்பந்தலிலே வரக் கொள்ளச் சால் உருண்டு கிடந்தாற்போலேயாக வோண்ணுதென்று நோக்கியிட்டு வைத்தே னத்தனை; அவரைக்கண்ட பிற்றைநாள் இருந்தேனுகில்காண் நீ இவ்வார்த்தை சொல்லுவ தேன் றுளிறே. [ஒரு வாய்ச்சொல்] - ஒரு உக்தி நேர அமையும். "[illegible]"(வாசா தர்மமவாப்நுஹி.)[நன்னீலம்இத்யாதி] - அவர் நீலமுகில்வண்ணரா யிருந்தார், நீங்களும் நீலமகன் றில்களா யிருந்திகோள். செயலும் அவரைப்போலே யாகிறதோ? இத்தனையும் செய்கிறிகளோ? முதல் வார்த்தையிலே பதின்கால் சொல்மறுத்தாரைச் சொல்லுமாபோலே சொல்லுகிறுளிறே ஆற் றுமையின் கனத்தாலே. (ச)

## ஐந்தாம் பாட்டு.

நல்கித்தான்காத்தளிக்கும் பொழிலேழும்வினையேற்கே
நல்கத்தானுகாதோ? நாரணனைக்கண்டக்கால்
மல்குநீர்ப்புனல்படப்பை இரைதேர்வண்சிறுகுருகே!
மல்குநீர்க்கண்ணேற்கு ஓர்வாசகங்கொண்டருளாயே.

*ஆ.—(நல்கி.) ஸர்வாத்மாக்களுடைய ஸர்வாபராதங்களையும் பொறுத்தருளி, அவர் களுடைய அநிஷ்டங்களையெல்லாம் போக்கி, ஸஸ்நேஹமாக ரக்ஷித்தருளுகிற பரமகாருணிகனை எம்பெருமானுக்கு, நான் செய்த பிழையைப் பொறுத்து என்னேடு கலந்து பரிமாறவேயோ ஆகாதென்று சொல்லி, பின்னை அவன் அருளிச்செய்தருளின வார்த்தையைக் கொண்டுவந்து எனக்குச் சொல்லவேணுமென்று சில குருகுகளை இரக்கிறுள்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், என்னை இப்படி உபேக்ஷித்தால் எல்லாரையும் ரக்ஷிக்கை யாலே பரிபூர்ணமான தன்னுடைய நாராயணத்வம் விகலமாகாதோ? என்று அவனுக்கு அறிவித்*

---

அவனுடைய ஸ்நேஹத்தை ஹேதுவாகச்சொன்னதுக்குத் தாத்பர்யம். தண்ணீர்ப்பந்தலிலேவாக்கொள்ள இதி- அத்ர, "[illegible]" இதி ஹநுமதோக்தஸ்ஸ்லோகோத்ரஷ்டவ்ய꞉. சாலுருண்டு - ஜலகடம் கவிழ்ந்து. அவரைக்கண்ட பிற்றைநாள் என்றது - அவரை நிராஸராகக்கண்ட மற்றை நா ளென்றபடி. "[illegible]" என்கையாலும், அவர்கண்ட பிற்றைநா ளென்னுமல், 'அவரைக்கண்டபிற்றை நாள்' என்கையாலும் இதுவே பொருள். என்றுளிறே - அப்படியே இங்கும், உமக்காகத் தங்கில் தங்குமித்தனை யென்றபடி. [illegible] - இனித்தங்காது [illegible] ஒருவாய்ச்சொல் - ஒருவார்த்தைசொல்லுகை. ஒருவாய்ச்சொல் நல்குதிரோ நல்கீரோ - [illegible] நேர - சொல்ல. அதவா, நல்குதல் - கொடுத்தலாய் உக்தி ப்ரதான மென்றபடி. "நீலம்" இதி விசேஷணம் [illegible] அவர் நீலமுகில்வண்ணராய் இதி. மகன்றில்கள் - க்ரௌஞ்சங்க ளென்னவுமாம். [illegible] முதல் வார்த்தையிலே இதி. கனம் - அதிசயம். என்னீர்மையென்று தொடங்கி, க்ரமத்திலே உரை யந்வயம்.

தால், அவன் அருளிச் செய்த ப்ரதிவசநத்தை எனக்கு வந்து சொல்லவேணுமென்று சில குருகுகளை அபேக்ஷிக்கிறாள்.

[பொழில்] - பூமி; எல்லாலோகங்களுக்கும் உபலக்ஷணம். [வினையேற்கே நல்கத்தானாகாதோ] - பாபப்ராசுர்ய ஹேதுவான எனக்கேயோ இரங்கலாகாது? [மல்குநீரென்று தொடங்கி] - பெருகாநின்ற நீரையுடைய நீர்நிலங்களிலே இரையைத் தேடி உன் ஸஹசரத்துக்குக் கொடுக்கும் ஸ்வபாவமாய், நினைத்த இடத்திலே போகலாம்படி நொய்தான ஶரீரத்தையுடைய குருகே! [மல்குநீர்க்கண்ணேற்குஇத்யாதி] - அவற்றுக்கு தயைபிறக்கும்படி தன்தசையைச் சொல்லுகிறாள்.

ப.—அநந்தரம், ஸர்வரக்ஷகனானவன்பக்கலிலே போய் ஒருவார்த்தை சொல்லவேணுமென்று வடிவின் சிறுமையாலே ஸமநஸௌகர்யத்தை நினைத்து ஒரு குருகை அபேக்ஷிக்கிறாள்.

பொழிலேழும் - லோகங்களேழையும், நல்கி - (அவர்கள்நலம்பாராதே தானே) நல்கி, தான் - அவர்களபேக்ஷாநிரபேக்ஷமாக, காத்து - அநிஷ்டத்தை நிவர்த்திப்பித்து, அளிக்கும் - அபிமதங்களைக் கொடுக்கும், வினையேற்கேயோ - வினையேனான எனக்கேயோ, தான்நல்கலாகாது - தான் நல்கலாகாதென்று கொண்டு, நாரணனை - (ஸர்வரக்ஷகத்வத்துக்கு ஏகாந்தமான ஸம்பந்தத்தையுடைய) நாராயணனை, கண்டக்கால் - கண்டவளவிலே, மல்கும் - மிக்குவரும், நீர் - ஸ்வபாவத்தையுடைய, புனல் - புனலையுடைத்தான, படப்பை - கொடித் தோட்டங்களிலே, இரை தேர் - இரையை ஆராய்கிற, வண்சிறுகுருகே - கண்ணுக்கினிய சிறுகுருகே! மல்கும் நீர் கண்ணேற்கு - மிக்க நீரையுடைத்தான கண்களையுடைய எனக்கு, ஓர் வாசகம் - ஒரு வாசகம், கொண்டு - (என் பக்கலிலே) கைக்கொண்டு, அருளாய் - (அவனுக்குச்சொல்லுகையாகிற) உபகாரத்தைப் பண்ணவேணும். பொழில் - லோகம். நாராயணனென்று அந்தராத்மத்வ ஸமுத்ரஶாயித்வங்களாகவுமாம். இத்தால், "சிறுமாமனிசர்" என்கிறபடியே வடகவிக்ரஹம் ஸூக்ஷ்மஹமென்று தோற்றுகிறது.

இ.— அஞ்சாம்பாட்டு. 'என்னை உபேக்ஷித்தால் ஸர்வரக்ஷகத்வத்தாலே பூர்ணமான தன்னுடைய நாராயணத்வம் விகலமாகாதோ? என்று அறிவி' என்று ஒரு குருகை அபேக்ஷிக்கிறாள்.

[நல்கி] - விபூதிரக்ஷணம் பண்ணும்போது கர்த்தவ்ய புத்தியாலன்றிக்கே, பேறு தன்னதாகக் கிடீர் ரக்ஷிப்பது. எனக்குத் தன்பக்கலுண்டான வ்யாமோஹம் தனக்கும் தன்விபூதியிலே உண்டாயாயிற்று ரக்ஷிப்பது. [நல்கி] - ஸஸ்நேஹகமாக. [தான்] - அபேக்ஷிப்பாரின்றிக்கேயிருக்கத் தானே ரக்ஷிக்குமவன். [காத்தளிக்கும்] - காப்பதும்செய்து க்ருபைபண்ணுவதும் செய்யும். பொழிலேழென்று பூமியாய், நித்யவிபூதிக்கும் உபலக்ஷணம். [வினையேற்கே நல்கத்தானாகாதோ] - ரக்ஷகன் அநாதரித்தாலும் விடமாட்டதபடியான பாபத்தைப் பண்ணின எனக்கேயோ நல்கலாகாதது? நாட்டுக்கிட்ட நினைப்பும் அந்தஃபுரத்துக்கு அரிதாகவேணுமோ? [நாரணனைக்கண்டக்கால்] - குணங்களில் ஜ்ஞாநாநந்தாமலத்வங்கள் நிரூபகமானாற்போலேயன்றோ ஶப்தங்களில் இத்திருநாமமும். இத்தாலே நிரூபிதமான வஸ்துவுக்குச் சில விசேஷங்களைச் சொல்லுகிறதத்தனையன்றோ மற்றைத்திருநாமங்கள். நாமங்களிலே ஒன்று குறைந்தாலும் தன் கார்யம் ஒறுவாமன்றோ? என்ஸத்தையில் அபேக்ஷை இல்லையாகிலும் தன் ஸத்தையில் அபேக்ஷையில்லையோ? என்று சொன்னேனென்று சொல்லுங்கோள். [மல்குநீர்ப்புனல்படப்பை] - மிக்க நீரையுடைத்தான நீர்நிலங்களில் கொடித்தோட்டங்களிலே. திருவடியைப்போலே கடல்கண்டு தேங்கவேண்டாவே உனக்கு. [இரைதேர்வண்சிறுகுருகே] - உன்னுடைய ஸஹசரத்துக்குக் கொடுக்கைக்காக இரைதேடும் ஸ்வபாவமிறே உன்னது. உபவாஸக்ரு

மையாயிருக்க நினையாதேயிருக்கு மவனைப்போலன்றிறே. கார்யகாலத்திலே சிறுகவேண்டாவே உனக்கு. [மல்குநீர்க்கண்ணேற்கு] - தயநீயதசையை ப்ராப்தையாயிருக்கிற எனக்கு. தனக்கு நிரூபகம் அதுபோலே காணும். [ஓர்வாசகங்கொண்டருளாயே] - ஒரு மறுமாற்றம் கேட்டுச் சொல்லவேணும். [ஓர்வாசகம்] - அவன் "வேண்டா" என்னும் வார்த்தையும் அமையும். [அருளாயே] - சொல்லவேணுமென்னும் ஸ்தாநத்திலே அருளவேணு மென்கிறது; எதிர்த்தலை திர்யக்காகவுமாம், தான் ஜநககுலத்தில் பிறக்கவுமாம்; இவ்விஷயத்தில் உபகாரகரை இங்ஙனல்லது சொல்ல விரகில்லை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நல்கித்தான் இத்யாதி. எங்களைவிடீர், முடிவார்க்கு வேண்டாவிறே; ஜீவிக்க நினைத்திருக்கிற தமக்குத்தாம் வேண்டாவோ? என்கிறாள். தம்முடைய நாராயணத்வம் ஒறுவாய்ப்போகாமே நோக்கிக்கோள்ளச் சொல்லு மென்கிறாள்.

[நல்கி] - விபூதிரக்ஷணம் பண்ணும்போது, கர்த்தவ்ய புத்யாவன்றிக்கே பேறு தன்னதாகக்கிடீர் ரக்ஷிப்பது. எனக்குத் தன்பக்கலுண்டான வ்யாமோஹம் தனக்கு விபூதியிலே உண்டாயிற்று ரக்ஷிப்பது. [தான்] - அபேக்ஷிப்பாரின்றிக்கேயிருக்கத் தானே ரக்ஷிக்குமவன். [பொழிலேழும்] - கீழும்மேலுமொன்றாக நினைத்துச் சொல்லுகிறதாதல், ஸப்தத்வீபவதியான பூமியைச்

---

அஞ்சாம்பாட்டு - நல்கித்தான் இத்யாதி. கீழிற்பாட்டிலே, நான் முடிவதற்குமுன்னே வந்து உதவவேணுமென்ற வளவிலே முகங்காட்டக் காணுமையாலே, நம்முடைய ஸத்தை போனாலும் போகிறது, தம்முடைய ஸத்தைக்கும் ஒரு ஹாநிவாராமல் பரிஹரிக்கச்சொல் லென்று போகவிடுகிறாளென்கிறார் - எங்களை விடீர் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. உன்னை ரக்ஷியாவிட்டால் நம்முடைய ஸத்தைக்கு ஹாநியோ? என்ன, ஸர்வரக்ஷகனை உனக்கு ஒன்று குறைந்தாலும் உம்முடையரக்ஷகத்வத்துக்கு ஒரு வைகல்ய மில்லையோ? என்கிறாளென்று அருளிச்செய்கிறார்-தம்முடைய நாராயணத்வம் இத்யாதி. என் ஸத்தையில் அபேக்ஷையில்லையேயாகிலும், தன் ஸத்தையில் அபேக்ஷை இல்லையோ? என்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். விடீர் - த்யஜத. ஒறுவாய்ப்போகாமே - விகலமாய்ப் போகாமே யென்றபடி.

"நல்கித்தான் காத்தளிக்கும்" இத்யஸ்யார்த்தவயம். பொழிலேழும் தான் நல்கிக்காத்தளிக்கு மிதி ப்ரதமஸ்யாந்வய:. தான் - ஸ்வாபேக்ஷாநிரபேக்ஷதயா ஸ்வயம் ப்ரயோஜநகேந ஸ்வயமேவ நல்கி - "ஸ்நேஹம் க்ருத்வா." காத்து - அநிஷ்டநிவ்ருத்திம் க்ருத்வா. அளித்தும் - "ஸர்வாபீஷ்டப்ரதம் நாராயணமிதி ப்ருவதே:. பொழிலேழும் காததத் தான் நல்கியளிக்கும் இதி த்விதீயஸ்யாந்வய: ஸ்ரஷ்டவ்யபதார்த்தக்ருத்வாஸ காத்து - ஸம்ஹ்ருதிஸமயே ததுதரேஸ்ய வ்ருத்தி ஹவதி இதி ரக்ஷித்வா ஸ்ருஷ்டிகாலே ஸ்வாபேக்ஷாநிரபேக்ஷம் ஸ்வயமேவ கரணகளேபராணி தத்வா. அளிக்கும் - விரோதிநிவர்த்தந பூர்வகம் ஸர்வாபீஷ்டப்ரதம் நாராயணமிதி த்விதீயார்த்த:. ஸஹ்ருதயேஷு நல்குதல் - கொடுத்தல். ப்ருவதே:யேஷுவ இதி விபூதிரக்ஷணமிதி-நல்கி இத்யஸ்யார்த்த:. 'நல்கி' என்கையாலே - பேறு தன்னதாகக்கிடீர் என்கிறார். நான் மல்குநீர்க்கண்ணளாயிருக்க, தான் பொழிலேழும் நல்கிக்காத்தருளியாநின்றானித்யுத்தராஞ்ச பராம்ருஶ்ய "தான்" இதி ஸ்வரஸஸூசிதம் பாவமாஹ - எனக்குத் தன்பக்கல் இதி. பொழிலென்று - லோகங்களைச் சொல்லுகிறது. "பொழிலே சோலையு முலகமும் புகழ்வர்" என்னக்கடவதிறே. புகழ்வர் - சொல்லுவர். கீழும் மேலு மொன்றாக நினைத்து என்றது - பூமிக்குக்கீழும் பூமியு மொன்றாய், மேல் ஆறுமாக ஏழென்றபடி. ஸப்தத்வீபவதியான - "ஜம்பூப்லக்ஷஶால்மலிகுஶக்ரௌஞ்சஶாகபுஷ்கரஸம்ஜ்ஞிதா: ஸப்தத்வீபா:" யத்வா, கீழும் மேலு மொன்றாக நடுவிரண்டு லோகங்களையும் பிடித்து, அத்தையிரண்டையும் அதோலோகவர்க்கத்துக்கும் உபரிலோக வர்க்கத்துக்கும் பரிகணனையில் ப்ரதமமாகப் பண்ணிக்கொண்டு, ப்ராதாந்யேந ஒன்றாக்கி, வர்க்கத்வய த்விதீயங்களையும் ஒன்றாக்கி, இப்படியே முடியக் கண்டுகொள்வது. யத்வா, கீழென்று - ஸப்தபாதாளங்கள். மேலென்று - பூமி. கீழும் மேலு மொன்றாக்குகையாவது - பூவிவரங்களாகையாலே பாதாளங்கள், அவற்றையும் பூமியிலே அந்தர்ப்பவிப்

சொல்லுகிறதாதல். ஸ்வஶரீரரக்ஷணம் பண்ணுவது ஸ்நேஹபுரஸ்ஸரமாகவிறே. [நல்கித்தான் இத்யாதி]-நாமரூப விபாகாநர்ஹமாய்க் கிடந்தவன்று, ஆர் இருந்து அபேக்ஷிக்க இத்தை உண்டாக்கிற்று? ஶக்த்யவஸ்த்தப்ரபைபோலே தான் என்கிற சொல்லுக்குள்ளேயாய், தன்னையிட்டு வ்யவஹரிக்க வேண்டினவன்று தன்மேலே யேறிட்டுக்கொண்டு நோக்கினனையிற்று. [காத்தளிக்கும்] - காத்துக்கொடுக்கு மென்னுதல்; நோக்கி ரக்ஷிக்கு மென்னுதல். [வினையேற்கே நல்கத்தானாகாதோ] - இல்லாதவன்று உண்டாக்கினாய், உண்டாக்கினதுக்கு பலம் கர்மத்தை யேறிட்டுக் கைவிடுகையோ? ஸ்வஜநரக்ஷணம் பண்ணலாகாதோ? நாட்டுக்கிட்ட நினைப்பு அந்தஃபுரத்துக்கு அரிதாக வேணுமோ? [வினையேற்கே] - கடலிலே ஏற்றமிட்டுத் தண்ணீர் அரிதாம்படியான பாபத்தைப் பண்ணுவேனே? [நாரணனைக் கண்டக்கால்] - ஜீவஸமூஹத்தினுடைய ஸ்வரூப ஸ்த்தித்யாதிகள் ஸ்வாதீநமாய், இவை ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய், இவற்றிலே ஒன்று குறையிலும் தம் இழவாம்படி யிருக்கையாலே நாராயணனென்று விருதூதித் திரிகிறவரைக் கண்டக்கால். 'இப்பேர் யோகரூடியோ? என்றிருந்தோம்; மஹாவ்ருக்ஷத்தோபாதியோ?' என்று கேளுங்கோள். [மல்கு நீர் இத்யாதி] - உன்செயல் பரார்த்தமா யிருந்ததீ! பெருகாநின்றுள்ள நீரை யுடைத்தான நீர்நிலத்து கணக்கம்பண்ணுகை. இது - ப்ரதமயோஜநா விவரணம். இரண்டாம் அர்த்தத்தில், "அவனிபொழில் பார்கடலிடம்வையம்,புவனிபுவிபதவி பூமிகுவலயம் ஞாலம் தலம் தரணி காசினி படி தாலந்தரணி தலம்" என்று நிகண்டு. 'நாரணனை' என்றத்தைக் கடாக்ஷித்து ஹாவம் - ஸ்வஶரீர இத்யாதி; ரஸோக்திஶ்ச. நல்குதல்-கொடுத்தலாய், அதாவது - காணகளேபரப்ரதாந மென்றபடியாய், அத்தால் - ஸ்ருஷ்டியைச்சொல்லுகிறதென்று அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் - நாமரூபவிபாகாநர்ஹமாய் இத்யாதி. இந்தயோஜனைக்கு, 'தான்' என்கிற பதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் - ஆரிருந்தபேக்ஷிக்க என்று. 'காத்து' என்கிற பதம் - ஸம்ஹாரவாசக மென்று விவக்ஷித்து, ஸம்ஹாரம் ரக்ஷணமாமோ? என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார் - ஶக்த்யவஸ்த்தப்ரபைபோலே இத்யாதி. ஶக்த்யவஸ்த்த ப்ரபை - பொடிமூடுதணல். 'நல்கி' என்றதுக்கு - ஸ்நேஹமும், ஸ்ருஷ்டியு மென்று சொன்ன யோஜநாத்வயாநுகுணமாக 'காத்தளிக்கும்' என்கிற புநருக்திக்கு இரண்டர்த்தம் அருளிச் செய்கிறார் - காத்துக் கொடுக்கும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஸ்நேஹபக்ஷத்தில், அநிஷ்டங்கள் வாராமல் காத்து, இஷ்டங்களைக் கொடுக்கு மென்கிறது. ஸ்ருட்டிபக்ஷத்தில். ஸம்ஹ்ருதிஸமயத்திலே தன்மேலே யேறிட்டுக்கொண்டுநோக்கி ஸ்த்திதிகாலத்திலே ரக்ஷிக்கும் - அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டங்களைக் கொடுக்கு மென்றபடி. த்விதீய நிர்வாஹத்துக்கு ஹாவம் - இல்லாதவன்று இத்யாதி. ப்ரதமநிர்வாஹத்துக்கு 'பொழிலெழு மளிக்கும்' என்றத்தைக் கடாக்ஷித்து ஹாவம் - ஸ்வஜந இத்யாதி. 'வினையேற்கே' என்கிற அவதாரணார்த்தம் இது. ததேவவிஶதீகரோதி - நாட்டுக்கிட்ட இத்யாதி. நினைப்பு - ஸங்கல்பம், காத்தளிக்கும்-நாரணனை உதாஹ்ருதவ்யம். 'பொழிலேழும் காத்தளிக்கும் நாரணனை' என்ற அநந்தரம், 'வினையேற்கே' என்கையாலே ஸர்வரக்ஷகனைப் பற்றி வைத்து என் அபிமதம் கிடையாதபடியான பாபத்தைப் பண்ணினேனென்னும் அர்த்தம் தோற்றுகிற தென்னுமத்தை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார் - கடலிலே இத்யாதி தார்ஷ்டாந்திகே தண்ணீர் ஸ்த்தாநீயம் - ஜீவநம். ஸமாஸத்வயார்த்தத்தையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் - ஜீவஸமூஹ இத்யாதி. இவ்விடத்திலே ப்ரகாரணாநுகுணமாக, ஸ்ருஷ்டிஸ்த்திதிஸம்ஹாரங்களையுஞ் சொல்லுகிறது. 'நராஜ்ஜாதாநி தத்வாநி நாராணி' என்றத்தைப்பற்ற ஸ்ருஷ்டி அவனதீநமென்கிறது; பஹுவ்ரீஹியாலே ஸ்திதி அவனதீநமென்கிறது. 'நராஜ்ஜாதாநி' என்று காரணத்வம்சொன்னபோதே லயஸ்தாநமே உபாதாநகாரணமாகையாலே ஸம்ஹாரம் அவனதீந மென்கிறது. ஸ்தித்யாதீதி - ஆதிஶப்தத்தாலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் சொல்லுகிறது. ப்ரகாரப்ரகாரிஹாவகதநத்தால் பலிதம் - இவற்றிலே இத்யாதி. நாரணனைக்கண்டக்கால் "வினையேற்கு நல்கலாகாதோ" என்று கேளுங்கோளென்று சொல்லுகிறதுக்கு ஹாவம் - இப்பேர் இத்யாதி. யோகரூடியாவது - அவயவார்த்தம் புஷ்கலமாய், அந்தஶப்தந்தானே அவனுக்கு அஸாதாரணமான பேராயிருக்கை மஹாவ்ருக்ஷத்தோபாதியோவென்று கேளுங்கோள் - மஹாவ்ருக்ஷத்தோபாதி கேவலரூடியே யாம் பேர் மாத்ரமோ உள்ளதென்று கேளுங்கோளென்றபடி. மஹாவ்ருக்ஷம் - கள்ளி. "இரைதேர்" என்கிறதிலே கோக்காக ஹாவம் - உன் செயல் இத்யாதி. புனற்படப்பை - நீர் நிலம். அதாவது - கோடித்தோட்டம்.

ப.—அநந்தரம், கீழ்ச்சொன்னவை போலன்றியே க்ஷீரார்ணவத்திலே அதூரவர்த்தியானவன்பக்கலிலே தானே போகிற நெஞ்சைக் குறித்துக் கார்யநிஷ்கர்ஷம் பண்ணிவிடுகிறாள்.

ஆழி - அகாதமாய், மடநெஞ்சே - (எனக்கு) பவ்யமான நெஞ்சே! உடல் - உடலிலே, ஆழி - சக்ராகாரமாக, பிறப்பு - மாறிமாறிப்பிறக்கிற ஸம்ஸாரஸ்தலமும், வீடு - (ஏதந்நிவ்ருத்தி பூர்வகமாக ப்ராப்யமான) மோக்ஷமும், உயிர் - (இப்போகமோக்ஷங்களுக்கு அவஸ்தா பேதத்தாலே போக்தாவான) ஆத்மாவும், முதலாய் - முதலானவற்றுக்கு நிர்வாஹகனாய், முற்றுமாய் - (மற்றும் போக்யபோகோபகரணாதிகளெல்லாம் ஸ்வப்ரகாரமாம்படி) ப்ரகாரியாய், (ரக்ஷணார்த்தமாக), ஆழிநீர் - அகாதஜலமான, கடல் - க்ஷீரார்ணவத்திலே, தோற்றி - ஸந்நிஹிதனாய், அதனுள்ளே - அதற்குள்ளே, கண்வளரும் - கண்வளர்ந்தருளாநிற்குமவனாய், அடல் - (ஆஸ்ரித விரோதிவிஷய) யுத்தத்தையுடைய, ஆழி - திருவாழியாழ்வானையுடையனான, அம்மானை - ஸ்வாமியை, கண்டக்கால் - கண்டக்கால், இது - (வர்த்தமாநமான) இந்த ஆர்த்தியை, சொல்லி - (அவனுக்குச்) சொல்லி, வினையோம் - (பிரிவுக்கடியான) பாபத்தை யுடையோமான நாம், ஒன்றாமளவு - (அவனோடு) ஒன்றுமளவும், விடல் - விடாதேகொள். ‘என்னைவிடாதேகொள்’ என்றுஞ் சொல்லுவர். ‘ஆழிமடநெஞ்சே - சுழன்று வருகிற பேதைநெஞ்சே!’ என்றுஞ் சொல்லுவர். இத்தால்-வடகராவார் அந்தரங்கபூதரென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், கீழ் ப்ரஸ்துதமான ஶேஷத்வத்தை நினைத்துப் பற்றுகிற திருவுள்ளத்தை ‘நம் காரியம் உறுதிபடுந்தனையும் என்னைக் கைவிடாதே கொள்’ என்கிறாள். ‘கீழ் தூதப்ரகரணமாகையாலே மநஸ்ஸைத் தூதுவிடுகிறாள்’ என்பாரு முண்டு.

[உடலாழிப்பிறப்பு] - சக்ரரூபமான ஶரீரங்களில் பிறப்பு. வீடு - மோக்ஷம். இப்போது மோக்ஷமென்? என்னில், மோக்ஷார்த்தமிறே ஸ்ருஷ்டி. [உயிர்முதலா] - நித்யமான ஆத்மாவை உண்டாக்குகையாவது - ஶரீரத்தோடே கூட்டுகை. [முற்றுமாய்] - இவை முதலான எல்லாவற்றையும் உண்டாக்குகைக்காக முற்றுமா யென்கிறது, “ஸஹஸ்ராக்ஷ” என்கிற ஶ்ருதிச்சாயையாலே. அஸங்க்யேயமான ஶரீரங்களையுடைய ஜந்மத்தையும் ஶரீரஸ்தமான ஆத்மாவையும், இவை முதலான எல்லாவற்றையும் உண்டாக்குகைக்காக என்றுமாம். அப்போது, ஆழியென்று - காம்பீர்யமாய், அபரிச்சிந்நமான ஶரீரபேதங்க ளென்றபடி. [கடலாழி நீர் தோற்றி] - அகாதமான நீரையுடைத்தான கடலைத் தோற்றுவித்து. “அப ஏவ ஸஸர்ஜாதௌ” என்கிறபடியே ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து, [அதனுள்ளே கண்வளரும்] - இப்பாலுண்டான ஸ்ருஷ்ட்யாதிகளுக்காக அதிலே கண்வளரும். இப்போது காரணத்வம் சொல்லுகிறது, இத்தை உண்டாக்கினவன் அறிவித்தால் விடா னென்கைக்காக. [அடலாழியம்மானை] - ஆஶ்ரிதவிரோதி நிரஸந ஶீலமான திருவாழியையுடைய ஸர்வேஶ்வரனை. ‘கண்வளரும்அடலாழியம்மானை’ என்று காரணாவஸ்தையிலும் நித்யவிபூதி விக்ரஹம் திவ்யாயுதம் இவற்றினுடைய ஸத்பாவஞ் சொல்லிற்றாகிறது. [இறசொல்லி] - கீழ் “வைக்கவே வகுக்கின்று” என்ற வார்த்தையைச் சொல்லி. [விடல்] - விடாதேகொள். [ஆழிமடநெஞ்சே] - கம்பீரமாய் பவ்யமான நெஞ்சே! சுழன்று வருகிற பேதைநெஞ்சே! என்றுமாம். [வினையோம்] - அவன் தொடங்கின காரியத்துக்கு இன்று நாம் வழிபார்த்திருக்கும்படி பாபத்தைப் பண்ணின நாம். [ஒன்றுமளவு] - நம் காரியம் ஓருறுதி பிறக்குந்தனையும். “ஸாயுஜ்யம் ப்ரதிபந்நாயே” என்கிறபடியே அவனோடே சேர்ந்துவிடுமளவு மென்றுமாம். ‘அடலாழியம்மானைக் கண்டக்கா லிது சொல்லி, வினையோமொன்றுமளவும் என்னை விடல். தூதானபோது அவனைக் கண்டக்கால் இது சொல்லி, நம் காரியம்அறுதிபடுமளவும் அவனை விடாதேகொள்’ என்று அந்வயம்.

ஈடு.—பத்தாம் பாட்டு. 'அல்லாதவற்றை யெல்லாம் விட்டு, நெஞ்சைத் தூதுவிடுகிருள்' என்பாரு முண்டு. அப்போது, விடலேன்றது-அவனை விடாதேகோள் என்கை. அன்றிக்கே, கீழ்ப்பாட்டில், 'வைக்கவே வகுக்கின்று' என்று கைங்கர்யம் ப்ரஸ்துத மானவாறே, தாய்முலையை நினைத்த கன்றுபோலே திருவுள்ளம் பதறி ஶரீரத்தை விட்டுப் போகப் புக்கது; நம் கார்யம் ஓரறுதி பிறக்குமளவும் நீ என்னை விடாதே கோள் என்னுதல்.

[உடலாழிப்பிறப்பு] - உயிரினுடைய உடலாழிப்பிறப்பு *(ஆத்மாவினுடைய ஸஹஜமான பிறப்பு.) வீடுமுதலா முற்றுமாகைக்காக - மோக்ஷாதி புருஷார்த்தங்களைப் பெறுகைக்காக. ஶரீரத்தினுடைய வட்டமான பிறப்பு; அன்றிக்கே, ஆழியென்று கடலாய், அத்தால் - காம்பீர்யமாய், அஸங்க்யேயமான ஜந்ம மேன்னுதல். வீடு - மோக்ஷம். ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் மோக்ஷமாகையாலே சொல்லுகிறது. அன்றிக்கே, [வீடு உயிர்] - ஜந்மங்கள்தோறு முண்டான ஶரீரஸ்த்தமான ஆத்மாக்கள். உயிர்தொடக்கமாக மற்றுமுண்டான கார்யஜாதத்தை உண்டாக்குகைக்காக. [ஆய்] - "஬ஹு ஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிறபடியே, தன் விகாஸமே யாகையாலே. [கடலாழி நீர்தோற்றி] - ஆழிநீர் - ஆழியநீர். "அப ஏவ ஸஸர்ஜாதௌ" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறபடியே மிக்க ஜலத்தையுடைத்தான ஏகார்ணவத்தை யுண்டாக்கி, இவ்வருகுண்டான ஸ்ருஷ்ட்யாதிகளுக்காக அங்கே வந்து கண்வளர்ந்தருளும். [அடலாழியம்மானை]- ஸ்ருஜ்யபதார்த்தங்களுக்கு விரோதிகளாயிருப்பாரை அழியச்செய்கைக்காக ஆசிலே வைத்த கையுந் தானுமாயிற்றுக் கண்வளர்ந்தருளுவது. [கண்டக்கால்]-என்னிலும்உனக்கன்றோ பேறுமுற்பட்டிருக்கிறது. "சந்த்ரே த்ருஷ்டி ஸமாகம:" (சந்த்ரேத்ருஷ்டிஸமாகம:) போலே கண்டாரைக் காணுமித்தனையிறே தனக்கு. [இதுசொல்லி] -

---

*பத்தாம்பாட்டு - உடலாழி இத்யாதி. விட்டுப்போகப்புக்கது - அத்தைக்குறித்து என்று அத்யாஹாரம். அறுதி - நிர்ணயம். விடாதே கோள் என்னுதல் - விடாதே கொள்ளென்கிறுளென்றபடி.*

*அந்வயம் - உயிரினுடைய இத்யாதி. அதாவது - ஆத்மாவினுடைய ஶரீரத்தினுடைய வட்டமான பிறப்பினுடைய வீடுஉண்டு மோக்ஷம், அது முதலான எல்லாப்புருஷார்த்தங்களையும் பெறுகைக்காக என்றபடி. ஆய் - ஆகைக்காக; பெறுகைக்காக என்றபடி. "ஆழி" என்றமாத்ரத்துக்கு அர்த்தாந்தரம் - அன்றிக்கே ஆழி இத்யாதி. அடைவே சொல்லாதே தர்மார்த்தகாமங்களுக்கு முன்னே மோக்ஷத்தைச் சொல்லுவானென்? என்ன, ஸ்ருஷ்டிக்கு இத்யாதி. "உடலாழி" இத்யாதிக்கு அர்த்தாந்தரம் - அன்றிக்கே வீடுயிர் இத்யாதி. இந்தப் பக்ஷத்தில், ஶரீரத்தினுடைய அஸங்க்யாதமான பிறப்புக்கள்தோறுமுண்டான ஶரீரஸ்த்தாத்மாக்கள் முதலான தேவாதி கார்யஜாதத்தை உண்டாக்குகைக்காக என்றபடி. வீடுயிர் - ஶரீரஸ்தங்களான ஆத்மாக்கள். ஆய் - ஆக்குகைக்காக; உண்டாக்குகைக்காக என்றபடி. இப்பக்ஷத்தில், ஆக்குகைக்காக என்னுதே "ஆய்" என்பானென்? என்ன - பஹுஸ்யாம் இத்யாதி. "கடலாழிநீர்தோற்றி" என்று - ஸமஷ்டி ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. ஆழி நீர்க்கடல் இத்யந்வய:. மநுவும் - "அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத். ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்" அப ஏவ ஸஸர்ஜாதௌ என்கிறபடியே- ஸ்ருஷ்டி க்ரமவாக்யங்களின்படியே என்றபடி. அப ஏவ ஸஸர்ஜாதௌ என்றது - ஸமஷ்டி ஸ்ருஷ்டி பரமிறே. "கடலாழிநீர்" என்று விஶேஷிக்கையாலே - ஏகார்ணவத்தை என்கிறது. அதனுள்ளே என்று - தஜ்ஜாதீயமான கடலைப் பராமர்ஶிக்கிறது. ஆக, முன்னே ஸ்ருஷ்டியைப் பண்ணி, அதிலே ஸங்கல்பரூப வீர்யத்தை விட்டு, அதிலே அண்டத்தையுண்டாக்கி, அதிலே மஹார்ணவத்தை யுண்டாக்கி, அதிலே கண்வளர்ந்து சதுர்முகனை உத்பாதித்து, இவ்வருகுண்டான ஸ்ருஷ்டி ஸ்திதிகளுக்காக க்ஷீரார்ணவத்திலே அநிருத்தரூபியாய்க் கண்வளர்ந்தருளு மென்றபடி. ஆசு - ஆயுதத்தின்பிடி. "கண்டக்கால்" என்று - அலப்யலாபந் தோன்றச் சொன்னதுக்கு பாவம் - என்னிலும் இத்யாதி. தான் கண்டறியாளோ? என்ன, உத்தரராமாயணே ஶ்ரீபரதம் ப்ரதி ஹநுமான் வசனம் - "வாஹிநீ தடமாஸாத்ய த்வதீயம் ராஜஸத்தம । யதி சேந்த்ர ஸம்ஸ்பர்ஶ: சந்த்ரே த்ருஷ்டி ஸமாகம:". த்விதீய ப்ரதமாவதாரிகாநுகுணமாக இதுசொல்லி என்றதுக்கு*

---

* குண்டலிதம் க்வாசித்கம் என்பர்.

‘வைக்கவே வகுக்கின்று’ என்கிற வார்த்தையைச்சொல்லி யென்னுதல்; ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - “விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்” (விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்) என்கிறபடியே, தேவர்திருவடிகளிலே ஸர்வ கைங்கர்யங்களையும் பண்ணுகையன்றே என்கை. விடல் என்கிற பதம், மேலே அந்வயிக்கிறது. [ஆழிமடநெஞ்சே] - அளவுடைமையையாய் பவ்யமான நெஞ்சே யென்னுதல், சுழன்றுவருகிற பேதைநெஞ்சே யென்னுதல். [வினையோமொன்றுமளவும்விடல்] - ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - அங்கே அவரைக் கிட்டி அடிமைசெய்கையாயிருக்க, பிரிகைக்கூடான பாபத்தைப் பண்ணின நாம் அவரோடே சேருமளவும் நீ அவரை விடாதே யொழியவேணும். (கo)

## பதினோராம் பாட்டு.

அளவியன்றவேழுலகத்தவர் பெருமான்கண்ணனை
வளவயல்சூழ்வண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த
அளவியன்றவந்தாதி ஆயிரத்துளிப்பத்தின்
வளவுரையால்பெறலாகும் வானோங்குபெருவளமே.

ஆ.- (அளவியன்ற.) அபரிச்சேத்ய மஹிமையை யுடையனாய், ஸர்வலோகேஶ்வரனாய், ஆஶ்ரிதஸுலபத்வைக ஸ்வரூபனாயிருந்த எம்பெருமானை ப்ரதிபாதிக்கிற அபரிச்சேத்ய மஹிமையை யுடைத்தான இத்திருவாய்மொழியை அழகியதாகச் சொல்லவல்லவர் திருநாட்டிலே சென்று பகவத்கைங்கர்யரூப மஹாஸம்பத்தைப் பெறுவார்களென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் திருநாட்டில் முக்தப்ராப்யமான நிரதிஶய ஸம்பத்தைப் பெறுவரென்கிறார்.

[அளவியன்ற என்று தொடங்கி] - அபரிச்சேத்யமஹிமனாய் ஸர்வலோகேஶ்வரனாய் ஆஶ்ரிதபவ்யனாயிருந்துள்ள எம்பெருமானை, ஏழுலகத்தவர் பெருமானென்று - தம்மையும்அகப்

---

அர்த்தத்வயமென்று கண்டுகொள்வது. விவரணம் - ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - விசித்ரேத்யாதி. ஸ்ரீவிஷ்ணுதத்வே - “விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் । பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா”. அவனைவிடல் என்ற பக்ஷத்திலே - அளவுடைய இத்யாதி. என்னைவிடல் என்ற பக்ஷத்திலே - சூழன்று இத்யாதி. ஆழியென்று-ஆழமாய், அத்தாலே அளவுடைமையைச் சொல்லுகிறது. அளவு - ஜ்ஞாநம். மடப்பம் - பவ்யதை. இரண்டாமர்த்தத்தில், ஆழியென்று - சுழலுகையாய், மடப்பமென்று-அறிவில்தனமாய், சுழன்றுவருகிற பேதைநெஞ்சமே! என்றபடி. வினையோம் என்று - ஆத்மநிபஹுவசநம். ப்ரதமாவதாரிகைக்குச் சேர அருளிச்செய்கிறார் - ஸ்ருஷ்டிக்கு இத்யாதி. ஆழிமடநெஞ்சே, உயிருடலாழிப்பிறப்பு வீடுமுதலாய் முற்றுமாய், ஆழிநீர்க்கடலைத்தோற்றி அதனுள்ளே கண்வளரும் அடலாழியம்மானைக் கண்டக்கால் இது சொல்லி-ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் தேவர் திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணுகையன்றோ? என்கிற இத்தைச் சொல்லி, வினையோமொன்றுமளவும் - வினையோமான நாம் அவனோடே சேருமளவும் அவனை விடல் என்று முந்தின அவதாரிகைக்குச் சேர அந்வயம். த்விதீயாவதாரிகைக்கு, அடலாழியம்மானைக்கண்டு, வினையோமொன்றுமளவும் - வினையோமான நம் கார்யம் ஓரறுதி பிறக்குமளவும், இது சொல்லி - கீழிற்பாட்டிலே “வைக்கவே வகுக்கின்று” என்கிற இத்தைச் சொல்லிக் கொண்டு என்னைவிடல் என்று அந்வயம். கண்டக்காலென்றது - கண்டென்றபடி. காலென்றது - அவ்யயம். கண்ட - கண்டு. (கo)

பட ரக்ஷிக்கையிலே உத்யுக்தனுனென்று ப்ரீதராய்ச் சொல்லுகிறார். [வளவயலென்று தொடங்கி] - வளவிதான வயல் சூழ்ந்து நிரதிசயபோக்யமான குருகூர்ச்சடகோபன் ஸ்நேஹித்து உரைத்த அபரிச்சேத்யமாய் அந்தாதியான ஆயிரத்துள் இப்பத்தினுடைய வளவிதான உரையாலே.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃபலம் மோக்ஷைஸ்வர்யபோக மென்று அருளிச்செய்கிறார்.

அளவு இயன்ற - எல்லையைக் கடந்த, ஏழு - ஏழுவகைப்பட்ட, உலகத்தவர் - லோகத்திலுள்ள சேதநவர்க்கத்துக்கு, பெருமான் - ஸ்வாமியான மேன்மையை யுடையனாய், கண்ணனை - (ஆஸ்ரிதஸுலபனை) க்ருஷ்ணனை, வளம் - ஸம்ருத்தமான, வயல் - வயலாலே, சூழ் - சூழப்பட்ட, வண் - அழகிய, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், வாய்ந்து உரைத்த - (தம்முடைய ஜ்ஞாந ப்ரேமங்களாலே) கிட்டி அருளிச்செய்த, அளவு - (எழுத்துச்சொல்பொருள்யாப்பு அலங்காரங்களைச் சொல்லுகிற) ப்ரமாணங்களிலே, இயன்ற-வர்த்திப்பதாய், அந்தாதி - அந்தாதியான, ஆயிரத்து - ஆயிரத்துள்ளும், உள் - இவருடைய பாவபந்த ப்ரகாஶகமான, இப்பத்தின் - இப்பத்தினுடைய, வளம் - இனிதான, உரையால் - ஶப்தமாத்ரத்தாலே, வான் - பரமபதத்தில், ஓங்கு - உத்துங்கமான, பெருவளம் - கைங்கர்யஸாம்ராஜ்யம், பெறலாகும் - பெறலாம். அளவியன்ற கண்ணனென்று - அளவுக்கீடாக வந்து முகங்காட்டினவ னென்றுமாம். அளவியன்ற அந்தாதியென்று - எல்லையிறந்த பெருமையையுடைய அந்தாதியென்றுஞ் சொல்லுவர். இத்திருவாய்மொழி-அளவடி நான்கு மொத்திருத்தலால் கலிவிருத்தமாம்; நாலடித்தாழிசை யாகவுமாம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார், பரமபதத்தில் முக்தப்ராப்யமான மஹாஸம்பத்தைப் பெறுவ ரென்கிறார்.

[அளவியன்றவேழுலகத்தவர் பெருமான்]- "தரொஷுஷுரஶூரயாஞு விகாவஸிஃவவஊஜ்ஜ" என்கிறபடியே தம்இழவுதீர வந்து தோற்றினபடியை அருளிச்செய்கிறார். [அளவியன்ற] - அபரிச்சேத்ய மஹிமாவாகையாலே இவ்வளவிலே வந்து முகம் காட்டுகைக்கீடான ஜ்ஞாநாதிகுணபூர்ண னென்கை. [ஏழுலகத்தவர்பெருமான்] - நாராயணத்வம் விகலமாகாதபடி ஸர்வேஶ்வரனான். ஏழுலகத்தவரென்று தம்மையுங் கூட்டிக்கொள்ளுகிறார். [கண்ணனை] - 'இவ்வளவில் முகங்காட்டிற்றிலன்' என்கிற குறை தீருகையாலே ஆஸ்ரிதஸுலபனுமானான். "பத்துடையடியவ"ரில் க்ருஷ்ணவதாரத்திலே அநுபவிக்கப் பாரித்து, அது கிடையாமையாலே தூது விட்டாராகையாலே இங்கு முகங்காட்டினன் க்ருஷ்ண னென்னவுமாம். [வளவயல்சூழ் வண்குருகூர்] - வளவிதான வயல் சூழ்ந்து நிரதிசயபோக்யமான ஊர்; இவர் உருவினபோது "ஶுஷ்வ்ருக்ஷாஃவரிஶூஷ்காஃ" என்கிறபடியே உருவின ஊர் இவர் தரித்தவாறே "ஶுகாஉவஷிஶோநாவ்ருக்ஷாஃ" என்கிறபடியே தளிரும் முறியு மானபடி. [வாய்ந்துரைத்த] - கிட்டியுரைத்த. அதாகிறது - மாநஸமான கிட்டுதலாய், ப்ரேமார்த்ரசித்தராகை. [அளவியன்றவந்தாதியாயிரம்] - அபரிச்சேத்யனானவனையும் தனக்குள்ளே ஆக்கவற்றாய் அந்தாதியான ஆயிரம். [இப்பத்தின் வளவுரையால் பெறலாகும்] - வளவுரை - நற்சொல்லு. பாலைக்குடிக்க நோய் போமாபோலே, இத்திருவாய்மொழியின் இனிய சொல்லாலே பெறலாம். [வானோங்குபெருவளமே] - வானென்று-பரமபதமாய், பரமபதத்திலே விஸ்த்ருதமாய் நிரதிஶயமான ஸம்பத்தைப் பெறுவர்கள். பிதா க்ருஷிபண்ணிவைத்தால் புத்ரனுக்கு பலத்திலே அந்வயமாமாபோலே, இப்பத்தையும் கற்றவர்களுக்கு, இவர் தூதுவிட்டுப் பட்ட க்லேசம் படவேண்டா, இவர் பேற்றைக் கொடுக்கும் இப்பத்து.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியில் ஶப்தமாத்ரத்தை அப்யஸிக்கவே யமையும் திருநாட்டைப் பெறுகைக்கு என்கிறார்.

[அளவியன்ற] - வியந்த என்கிறஇது 'வியன்ற' என்று கிடக்கிறது. தவ்வுக்கு றவ்வாய், வியத்தல் - கடத்தலாய், அளவைக் கடந்திருக்கு மென்றபடி; அபரிச்சேத்யமஹிமனாகை. இத்தால் - இத்தலையிலே முகங்காட்டுகைக்கீடான ஜ்ஞாநாதி குண பூர்ண னென்கை. [ஏழுலகத்தவர்பெருமான்] - நாராயணத்வம் விகலமாகாதபடி ஸர்வேஶ்வரனானவன். ஏழுலகத்தவரென்னவே, தாமும் அதிலே அந்தர்ப்பூதரிறே. [கண்ணனை] - இவ்வளவிலே வந்து முகங்காட்டிற்றில னென்கிற குற்றந் தீர வந்து முகங்காட்டுகையாலே ஆஶ்ரிதஸுலபனானவன். 'பத்துடையடியவ'ரில் க்ருஷ்ணாவதாரத்திலே அநுபவிக்கப் பாரித்து, அது கிடையாமையாலே தூதுவிட்டாராகையாலே இங்கு முகங்காட்டினான் க்ருஷ்ண னென்னவுமாம். இத்தால் - அவனுடைய மேன்மையும் ஸௌலப்யமும் நிலைநின்றது, இவர்க்கு முகங்காட்டினபின் பாயிற் றென்றபடி. [வளவயல்] - "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்கிறபடியே திருநகரியும் தளிரும் முறியுமாயிற்று. [வாய்ந்துரைத்த] - வாய்கை - கிட்டுகை. அதாவது - பாவபந்தத்தையுடைய ராகை; நெஞ்சு பிணிப்புண்டு சொன்னதா யிருக்கை. [அளவியன்றவந்தாதி] - அபரிச்சேத்யவஸ்துவுக்கு வாசகமாகையாலே தானும் அபரிச்சிந்நமாய், ஒருவராலும் சலிப்பிக்கவொண்ணாதா யிருக்கிற ஆயிரத்துள் இப்பத்தினுடைய நன்றான உரையாலே. [வானேங்கு பெருவளம் பெறலாகும்] - பால்குடிக்க நோய் தீருமாபோலே இத்திருவாய்மொழியில் இனிய சொல்லாலே பெறலாம். ஸ்வயம்ப்ரயோஜந

---

*நிகமம்-**அளவியன்ற** இத்யாதி. 'வளவுரையால் வானேங்குபெருவளம் பெறலாகும்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து ஸங்கதி - **இத்திருவாய்மொழியில்** இத்யாதி.*

**தவ்வுக்கு றவ்வாய்** - *தகாரத்துக்கு றகரமாய்.* **அளவு** - *பரிச்சேதம். எத்தால் வந்த மஹிமை? என்ன,* **இத்தால்** *இத்யாதி.* **இத்தால்** - *அபரிச்சேத்ய மஹிமனான இத்தால். இப்போது சொன்னதுக்கு ஸாவம்-* **நாராயணத்வம்** *இத்யாதி. ஒன்றுகுறைந்தாலும் ஸர்வஶேஷித்வம் விகலமாமிறே; ஆகையாலே இவரை விஷயீகரித்த பின்பாயிற்று நாராயணத்வம் விகலமாகாமல் ஸர்வேஶ்வரனானா னென்றபடி. 'ஏழுலகத்தவர்' என்றால்-தம்மைச்சொல்லிற்றோ? என்ன,* **ஏழுலகத்தவர்** *இத்யாதி.* **கண்ணன்** *என்று - கண்ணுக்குவிஷயபூதனென்னுதல், க்ருஷ்ணனென்னுதல். முந்தின அர்த்தம் -* **இவ்வளவிலே** *இத்யாதி. த்விதீயார்த்தம் -* **பத்துடை** *இத்யாதி. 'பெருநிலங்கடந்த' இத்யாதியாலே பாரிக்கப்பட்ட த்ரிவிக்ரமாவதாரம் க்ருஷ்ணாவதாரத்தோடே தோள்தீண்டியாகையாலே, 'க்ருஷ்ணாவதாரத்திலே அநுபவிக்கப்பாரித்து' என்னக் குறையில்லை. கீழ் பதத்வய பலிதம் -* **இத்தால்** *இத்யாதி. 'வள' என்கிற விஶேஷணம் வயலுக்கும் ஊருக்கும் விஶேஷணமித்ருஷ்டாயேணாஹ - அகாலபலிந இத்யாதி. பாலகாண்டே ஸாரஜம்வ்ருகிராஸ: - "அகாலபலிநோவ்ருக்ஷாஸ்ஸர்வேசாபி ப்ரமுதிதா:। ஸஹஸ்ராகாஶஸுகம்ஸ்வாயம்ப்ரம் வ்ருகிமத்யத:". இப்போது 'வளவயல்சூழ்வண்குருகூர்' என்கையாலே - விஶ்லேஷதஶையிலே 'அவிவ்ருக்ஷா:வரிஶீர்ணா:' இத்யாதிப்படியே யிருந்ததென்று ஸித்தம். 'அகாலபலிந:' என்றதுக்கு-பரத்வாஜவசநம் வ்யாஜமாத்ரம், ராமாகமநமே ஹேது; இல்லையாகில், 'அவிவ்ருக்ஷா:' என்று விஶ்லேஷத்தில் வாடக்கூடாதிறே; அப்போது ஒருவன் சாபமில்லையிறே. தளிரும்முறியும் - பல்லவமும் மொட்டும். முறி - இளந்தளிர். விவரணம்-நெஞ்சு* **பிணிப்புண்டு** *இத்யாதி. தாம் அவனைக் கிட்டுகையாவது - நெஞ்சு பிணிப்புண்கையிறே.* **பிணிப்புண்கை** *- கட்டுண்கை. அந்தாதி அளவியந்து இருக்கையாவது ஏது? என்ன, 'அளவியன்றபெருமான்' என்றத்தைக் கடாக்ஷித்து ஸாவம்-***அபரிச்சேத்ய** *இத்யாதி. அந்தாதியாகையாலே ப்ரக்ஷேபயோக்யதை யில்லாமையாலே அவிசால்யத்வம் ஸித்தமாகையாலே -* **சலிப்பிக்கவொண்ணாது** *என்கிறது.* **வளவுரை** *- இனிதான உரை. 'வளவுரை' என்றதுக்கு ஸாவம் -* **பால்குடிக்க** *இத்யாதி. இத்தால் ஸாதநத்வ ஶங்கா வ்யாவ்ருத்தி. 'வளவுரையால் வானேங்குபெருவளம் பெறலாகும்' என்றதுக்கு அர்த்தம் -* **ஸ்வயம்ப்ரயோஜநமான** *இத்யாதி.* **வானேங்கு**

மான இத்தாலே ஸம்ஸாரத்தில் ஸங்குசிதமான நிலே போய், பரமபதத்திலே போய், ஸ்வஸ்வரூபத்தைப் பெற்று விஸ்த்ருதஜ்ஞகையாகிற நிரவதிகஸம்பத்தைப் பெறலாம்.

முதல்பாட்டில், ஒரு நாரையைத் தூது விட்டாள்; இரண்டாம் பாட்டில், அங்குப்போனல் சொல்லும் பாசுரத்தைச் சில குயில்களுக்குச் சொன்னுள்; மூன்ரும் பாட்டில், நான் பண்ணின பாபமேயோ மாளாததென்று சொல்லுங்கோ ளென்று சில அன்னங்களை இரந்தாள்; நாலாம்பாட்டில், சிலமகன்றில்களைப் பார்த்து, என்தசையை அங்கே சென்று சொல்ல வல்லிகளோ? மாட்டிகளோ? என்ருள்; அஞ்சாம் பாட்டில், சில குருகுகளைப் பார்த்து, தன்னுடைய நாராயணத்வம் ஒறுவாய்ப் போகாமே நோக்கிக்கொள்ளச் சொல்லுங்கோ ளென்ருள்; ஆரும்பாட்டில், ஒரு வண்டைக் குறித்து, தம்முடைய நாராயணத்வத்துக்கு ஒரு ஹாநி வாராமே எங்கள் ஸத்தையுங் கிடக்கும்படி இத்தெருவே எழுந்தருளச் சொல் என்ருள்; ஏழாம்பாட்டில், ஒரு கிளியைக் குறித்து, இத்தலையில் அபராதத்தையே பார்க்குமத்தனையோ? தம்முடைய அபராதஸஹத்வத்தையும் ஒருகால் பார்க்கச் சொல் என்ருள்; எட்டாம்பாட்டில், தான் உருவினவாறே முன்கையிலிருந்தபூவையும் உருவ, நானே முடியாநின்றேன், நீ உனக்கு ரக்ஷகரைத் தேடிக்கொள் என்ருள்; ஒன்பதாம்பாட்டில், ஒரு வாடையைக் குறித்து, என்தசையை அங்கேசென்று அறிவித்தால், அவன் 'நமக்கு அவள் வேண்டா' என்றுனுகில் என்னை வந்து முடிக்கவேணுமென்று இரந்தாள்; பத்தாம்பாட்டில், தன்னெஞ்சைக் குறித்து நம் கார்யம் ஓரறுதி பிறக்குமளவும் நீ அவனை விடாதேகோள் என்று போகவிட்டாள்; நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டினர்.

முதற்பாட்டில், ஆசார்யனுடைய ஜ்ஞாந வைபவத்தை அருளிச்செய்தார்; இரண்டாம்பாட்டில், மதுரபாஷியா யிருக்கு மென்ருர்; மூன்ரும்பாட்டில், ஸாராஸார விவேகஜ்ஞனென்ருர்; நாலாம்பாட்டில், விக்ரஹஸௌந்தர்யத்தை அநுஸந்தித்தார்; அஞ்சாம்பாட்டில், நினைத்தது கிட்டுமளவும் சலியாத ஶாந்தஸ்வபாவ னென்ருர்; ஆரும்பாட்டில், பகவதேகபோகனுயிருக்கும் ரூபவானுமாய் க்ருபாவானுமாய் கம்பீர ஸ்வபாவனுமா யிருக்கு மென்ருர், மதுகரமிறே; ஏழாம்பாட்டில், தான் ஸர்வஜ்ஞனுகிலும் ஆசார்யர்கள் பக்கல் கேட்ட வார்த்தையல்லது அருளிச்செய்யா னென்று, அவனுடைய ஆப்தியை அநுஸந்தித்தார்; எட்டாம்பாட்டில், ஆசார்யனுடைய தேஹயாத்ரையே இவனுக்கு ஆத்மயாத்ரை

---

பெருவளம்பெறலாதும், வான் - பரமபதத்திலேபோய், ஓங்கு - விஸ்த்ருதஜ்ஞகையாகிற, பெருவளம் - நிரவதிக ஸம்பத்தைப் பெறலாம்.

பத்துப்பாட்டுக்கும் ஸ்வாபதேஶம் - ஆசார்யன் இத்யாதி. ஜ்ஞாநகர்மங்களிறே - சிறகாகிறது. அதில் ஜ்ஞாநப்ராதாந்யத்தைப் பற்ற - ஜ்ஞாந வைபவத்தை என்றது. மதுரபாஷியாய் என்றது, குயிலினுடைய ஶப்தம் போக்யமாயிருக்கு மாகையாலே. "ஹம்ஸோயதாக்ஷீரமிவாம்புமிஶ்ரம்" என்றத்தைப்பற்ற, ஸாராஸாரவிவேகஜ்ஞன் என்றது. விக்ரஹஸௌந்தர்யத்தை என்றது - 'நன்னீலமகன்றில்காள்' என்றத்தைப்பற்ற. நினைத்தது கிட்டுமளவும் என்றது - 'இரைதேர்' என்றத்தைப்பற்ற; புருஷார்த்தம் ஸித்திக்குமளவு மென்றபடி. ஶாந்தஸ்வபாவன் என்றது - குருகினுடைய வண்மையைப்பற்ற. சலியாமையாவது - 'ஶிரயோவஷ்டப்யாராஹி:' இத்யாதிப்படியே இருக்கை. 'வண்டு' என்றத்தைப் பற்ற - பகவதேகபோகனுய் என்றது. ரூபவானுமாய் என்றது - 'வரி' என்றத்தைப்பற்ற. 'ஆழி' என்றத்தைப்பற்ற - கம்பீரஸ்வபாவனுமாய் என்றது. 'அருள்' என்றத்தைப்பற்ற - க்ருபாவானுமாய் என்றது. வண்டு ஏகபோகமோவென்ன - மதுகரமிறே என்றது. தான் ஸர்வஜ்ஞனுகிலும் இத்யாதி - கிளி, சொன்னத்தைச் சொல்லுமிறே. ஆசார்யனுடைய தேஹயாத்ரை இத்யாதி - 'இன்னடிசில்வைப்பாரை

என்றார்; ஒன்பதாம்பாட்டில், ஆசார்யஸம்பந்தமாத்ரமே ஸத்தாதாரகம், இதரஸ்பர்ஶம் ஸத்தா பாதகமென்கிறார்; பத்தாம்பாட்டில், ஆக இப்படி ஜ்ஞாநவானுமாய், மதுரபாஷியுமாய், ஸாராஸார விவேகஜ்ஞனுமாய், தர்ஶநீயனுமாய், ஶுத்தஸ்வபாவனுமாய், க்ருபாகாம்பீர்யங்களையு முடையனும், சிரோபாஸிதஸத்வ்ருத்தஸேவ்யனுமாய், ஸச்சிஷ்யனுகையாலே ஏவம்பூதனை ஆசார்யனுடைய தேஹயாத்ரையே தனக்கு ஆத்மயாத்ரையாய், இதரஸ்பர்ஶமும் தனக்கு பாதகமாய், இப்படி ஸதாசார்யஸேவை பண்ணுகையாலே பகவத்கைங்கர்யத்திலே ப்ரவணமாய், *"நின்னிடையே னல்லேன்" என்று நீங்கி ஓர்கோலநீல நன்னெடுங்குன்றம் வருவதொப்பானுண்மலர்ப்பாத மடைந்தது தந்திருவுள்ளமென்று தலைக்கட்டினார். (கக)

---

நாடாயே' என்றத்தைப்பற்ற. வாயுஸ்பர்ஶம் பாதகமாகையாலே ப்ரதிகோடித்வேந ஆசார்யஸம்பந்தமே தாரகமென்று ஸித்தம். உக்தார்த்தஸங்க்ரஹமாஹ - இப்படி இத்யாதி. கீநபை என்றது - 'ஆழி' என்றதின் தண்ணளியைப் பற்ற. சிரோபாஸிதஸத்வ்ருத்தா: ஸேவ்யா: யஸ்ய என்றபடி. கிளி சிரகாலம் அப்யஸித்ததாலொழிய வார்த்தை சொல்லமாட்டாதிறே. 'உடலாழி' என்கிற பாட்டிலே த்விதீயாவதாரிகையிலே நோக்காக நிகமிக்கிறார் - இப்படி ஸதாசார்ய இத்யாதி. இவ்விடத்திலே, ஏழாம்பாட்டு பர்யந்தம் - ஆசார்யலக்ஷணத்தை விதித்து, மேல் மூன்றுபாட்டாலே - ஶிஷ்யலக்ஷண விதி. நின்னிடை இத்யாதி-என்நெஞ்சமானது, 'உனக்குக் காணமாவே னல்லேன்' என்று காணியான என்னை விட்டகன்று, அத்விதீயமாய் தர்ஶநீயமாய் நீலநிறத்தையுடைத்தாய் விலக்ஷணமாய் உத்துங்கமான மலை நடந்துவருமாபோலே வருமவனுடைய அப்போதலர்ந்த தாமரைபோன்ற திருவடிகளை யடைந்ததென்றபடி. அளவியன்றவென்றுதொடங்கி, வளவுரையால் வானோங்கு பெருவளம் பெறலாகும் இத்யந்வய:. (கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—[illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவலி.—[illegible] ॥

[illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி— அஞ்சிறையபுட்கள்தமையாழியானுக்கு நீர்
என்செயலைச்சொல்லுமென இரந்து—விஞ்ச
நலங்கியதும் மாறனிங்கேநாயகனைத்தேடி
மலங்கியதும் பத்திவளம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், சீயர் திருவடிகளே சரணம்.

---

* திருவாய்மொழி-அ-உ-கo.

## ஐந்தாந்திருவாய்மொழி—வளவேழுலகு: ப்ரவேஶம்.

---

ஆ.—(வளவேழுலகு.) இப்படி ஆழ்வார் எம்பெருமானை விஶ்லேஷித்து அத்யந்தம் அவஸந்நராய், 'தேவரீருடைய நிரவதிக க்ருபையாலே அடியேனுடைய ஸர்வாபராதங்களையும் க்ஷமித்தருளி அடிமைகொண்டருளவேணும்' என்று எம்பெருமானை அபேக்ஷிக்க,எம்பெருமானும் தம்மோடு ஸர்வவிதஸம்ஶ்லேஷம் பண்ணுகைக்கு ஈடாம்படி எழுந்தருள, அவனுடைய ஸர்வப்ரகாரத்தாலுமுள்ள நிரதிஶயோத்கர்ஷத்தையும் தம்முடைய ஸர்வப்ரகாரத்தாலுமுள்ள நிரதிஶயநிகர்ஷத்தையும் பார்த்து, 'இப்படி நிஹீநனான நான் அவன் திருவடிகளில் அடிமைசெய்யில் அவனுக்குஅவத்யாவஹமாதலால் அவனுக்கு அவத்யாவஹமாம்படி அடிமைசெய்து உஜ்ஜீவிக்கையில் அடிமைசெய்யாதே முடிந்துபோமதுவே எனக்கு ஆத்மலாபம்; ஆனபின்பு,இனி ஆத்மாந்தமாக அவன்திறத்துப் படுவேனல்லேன்' என்று பார்த்து, பரமபுருஷ சரணாரவிந்த பரிசரணத்தினின்றும் நிவ்ருத்தராய், இதுக்கு முன்பு இப்படி நிரூபியாதே எம்பெருமான்திறத்துப் பட்டதுக்குத் தம்மை கர்ஹிக்கிறார்.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில், தூதப்ரேஷண வ்யாஜத்தாலே அபராதஸஹத்வத்தை அறிவித்த ஸமநந்தரம் எம்பெருமான் வந்து ஸம்ஶ்லேஷோந்முகனானவாறே, அவனுடைய வைலக்ஷண்யத்தையும் தம்முடைய நிகர்ஷத்தையும் அநுஸந்தித்து, 'அம்ருதத்தை விஷத்தாலே தூஷிக்குமாபோலே விலக்ஷணர்க்கு போக்யனான எம்பெருமானை, ஸம்ஸாரியான நான் தூஷிக்கை ஈடன்று' என்று பார்த்தருளி, ஆழ்வார், 'நான் ஸம்ஶ்லேஷித்து அவனுக்கு அவத்யத்தை விளைவித்து உஜ்ஜீவிப்பதிற்காட்டிலும் விஶ்லேஷித்து முடிந்தேனாகிலும் முடிய அமையும்' என்று பார்த்தருளி, பெருமாளுக்கும் தேவதூதனுக்கும் மந்த்ரம் ப்ரவ்ருத்தமான தஶையிலே, 'துர்வாஸா பெருமாளை ஶபிக்கும்' என்னும் பயத்தாலே அவனுடைய ஆகமநத்தை விண்ணப்பஞ்செய்து, பெருமாளுடைய ப்ரதிஜ்ஞாநுகுணமாகத் தம்முடைய வ்யஸநம் பாராதே இளைய பெருமாள் விடைகொண்டாற் போலே, தம்முடைய விநாஶத்தையே அங்கீகரித்து, அவனை ஸம்ஶ்லேஷிக்கையில் ஆசையற்று, 'பண்டு அவனோடு பரிமாறின பரிமாற்றமும் தப்பச்செய்தோம்' என்று இவர் அகலப்புக, இவரோட்டை ஸம்ஶ்லேஷம் தனக்கு அவத்யாவஹமன்றிக்கே ஸௌஶீல்ய வர்த்தகமாயிருக்கிற படியைக் காட்டியருள, இவர் தன்னோடே ஸம்ஶ்லேஷிக்கையிலே துஃகேந இசைந்தருளி, மீளவும் தம்படியை ஆராய்ந்தும் எம்பெருமான்படியைப் பார்த்தும், 'என்னுடைய ஸ்பர்ஶத்தாலே வரும் ஸௌசீல்யம் எம்பெருமானுக்கு வேண்டா' என்று அகல உத்யோகிக்க,யுத்தேப்ரவ்ருத்தனாய் வைத்துக் கஶ்மலாவிஷ்டனான அர்ஜ்ஜுநனை தத்த்வோபதேஶத்தாலே யுத்தத்திலே மூட்டினாற்போலே, "ஶ்ருஹாவேந ஸம்ஹ்ருஷ்ய" இத்யாதி ப்ரக்ரியையாலே தன்ப்ரக்ருதியைக் காட்டி மீளவும் சேர்த்துக்கொண்டருளினான் என்கிறார்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், இப்படி கடகமுகத்தாலே இவ்வாழ்வார் தம் தஶையை அறிவித்த அநந்தரம், இவரார்த்தி தீரும்படியாக "அளவியன்ற வேழுலகத்தவர் பெருமான்கண்ணன்" என்று ப்ரக்ருதமான ப்ரகாரத்திலே ஸ்வாமித்வ ஸௌஶீல்ய விஶிஷ்டனாய்க் கொண்டு அவ்வளவிலே வந்து ஸந்நிஹிதனான ஸர்வேஶ்வரனுடைய நிரவதிக ஸௌஶீல்யத்தை அருளிச்செய்வதாக, ததுபபாதகமான அவனுடைய ஸர்வேஶ்வரத்வத்தையும், ஸர்வகாரணத்வத்தையும், அஶேஷ ஜநஸம்ஶ்லேஷத்தையும், விபூதித்வயநிர்வாஹகத்வத்தையும், ஆஶ்ரிதார்த்த ப்ரவ்ருத்தியையும், போக்யமான ஸ்வபாவநாமயோகத்தையும், போக்யதாப்ரகாஶகமான ஸௌலப்யத்தையும், ஆஶ்ரிதவிஷயவ்யாமோஹத்தையும், ஸர்வாத்ம வத்ஸலத்வத்தையும், ஆஶ்ரிதோ

பகாராதிஶயத்தையும் அநுஸந்தித்து, "இப்படி விலக்ஷணனான ஸர்வேஶ்வரனை, அத்யந்தநிக்ருஷ்டரான நாம் அணுகுகை அவத்யாவஹம்; அதிஶயிதஜ்ஞாநர் அணுகிலும் அங்குத்தைக்கு மாலிந்யகரம்" என்று அகலப்புக, இவரைத் தன் ஶீலத்தைக் காட்டி ஆகவிடத்தேட, ஸமாஹிதராய் அநுபவித்தவர், பின்னையும் அவ்வநுஸந்தாநத்தாலே அகல, தன்னுடைய ஹேயப்ராதிபட்யத்தையும் ஆஶ்ரிதவ்யாமோஹத்தையும் ப்ரகாஶிப்பித்து ஆகவிட்டுக்கொள்ள, ஸமாஹிதராய், தம்பக்கல் ஈஶ்வரனுக்குப் பிறந்த உபகாரகத்வத்தையும் மேலுண்டான பாரிப்பையும் அநுபவித்து ஸந்துஷ்டராகிறார்.

இ.—அஞ்சாந்திருவாய்மொழியில், தூதப்ரேஷண வ்யாஜத்தாலே அபராதஸஹத்வத்தை அறிவித்த ஸமநந்தரம் வந்து ஸம்ஶ்லேஷோந்முகனாக, ஸூரிபோக்யமான அவன் வைலக்ஷண்யத்தையும் நித்யஸம்ஸாரியான தம்முடைய நிகர்ஷத்தையும் பார்த்து, 'அம்ருதத்தை விஷத்தாலே தூஷிக்குமாபோலே நாம் ஸம்ஶ்லேஷித்து அவத்யத்தை விளைப்பதிற்காட்டில் விஶ்லேஷித்து முடிகை நன்று' என்று பார்த்து, பெருமாளுக்கும் தேவதூதனுக்கும் மந்த்ரம் ப்ரவ்ருத்தமான தசையிலே 'துர்வாஸா பெருமாளை ஶபிக்கும்' என்னும் பயத்தாலே அவன் வரவை இளையபெருமாள் சென்று விண்ணப்பஞ்செய்து "யதிவீ திஷ்டிமஹாராஜ யஜ்ந்யஹ்ந ராஜ்யதாஶயி। ஜஹிஶோம் நிவிஷ்டஸ்யஸ்வஸ்வயம் த்விஜோ நேவாஶய" என்று அவருடைய ப்ரதிஜ்ஞாநுகுணமாகத் தம்மைப் பாராதே இளையபெருமாள் விடைகொண்டாற் போலேயும், "நவஷுஶெத்யஸ்வஸாஶிதே" என்ற பிராட்டியைப்போலேயும் இவர் அகலப்புக, அவனும் 'உம்மோட்டை ஸம்ஶ்லேஷம் நமக்கு அவத்யாவஹமன்று; ஸௌஶீல்யவர்த்தகம்' என்றபின்பும், 'என்னுடைய ஸம்ஶ்லேஷத்தாலே அங்குத்தைக்கு வரும் ஸௌஶீல்யமும் வேண்டா' என்று இவர் அகல, "பிதுஶா வெந ஸம்யுத்வா" என்கிறபடியே தன் ப்ரக்ருதியைக் காட்டி, 'நீர் ஸம்ஶ்லேஷியாதவன்று, நம்முடைய ஸத்தையே இல்லை' என்று யுத்தாந்நிவ்ருத்தனான அர்ஜ்ஜுநனை "கரிஷ்யெ வசநந்தவ" என்னப்பண்ணினாற்போலே தன்னோடே சேர்த்துக்கொண்டானென்கிறார்.

ஈடு.—ஸர்வேஶ்வரன் ஸர்வஸ்மாத்பரனாகையாலே அவனை யாஶ்ரயிப்பார்க்கு ஒரு குறை யில்லை யென்றார்; அந்த ஆஶ்ரயணந்தான் - புருஷோத்தமனை ஆஶ்ரயிக்கிறதாகையாலே பலத்தோடே வ்யாப்தமாயல்லது இராதென்றார்; பஜிப்பார்க்காகத் தான் அவதரித்து ஸுலபனாகையாலே பஜிக்கத்தட்டில்லை யென்றார்;ஸுலபனானவன்தான் அபராதஸஹனாகையாலே பலத்தோடே வ்யாப்தமாயல்லது இராதென்றார்; அயோக்யதாநுஸந்தாநம் பண்ணி அகலுவாரையும் தன்செல்லாமையைக் காட்டிப் பொருந்தவிட்டுக்கொள்ளும் ஶீலவா னென்கிறார் இதில். கீழ்க் கலங்கித் தூது விட்ட இடம் ப்ரேமகார்யம், இங்கு அகலப்பார்க்கிற இடம் ஜ்ஞாநகார்யம்; "மயர்வறமதிநலமருளினன்" என்று பக்திரூபாபந்நஜ்ஞாநமிறே இவர்தாம் பெற்றது. தூதப்ரேஷணவ்யாஜத்தாலே தம்முடைய ஆற்றாமையை அறிவித்த அநந்தரம், 'இவரை இங்ஙனே நோவுபட விட்டோமாகாதே'

---

வளவேழுலகு ப்ரவேஶம் - முதல் திருவாய்மொழி தொடங்கி ஸங்கதி - ஸர்வேஶ்வரன் இத்யாதி. அநுஹவ ஶ்ரீஹபரோபதேஶ ப்ரக்ரியையாலே அருளிச்செய்கிறார் - அவனை யாஶ்ரயிப்பார்க்கு இத்யாதி. ஒரு குறையில்லை என்றது - 'எழு' என்றதின் தாத்பர்யம். புருஷோத்தமன் என்றது - 'பற்றிலனீசனும் முற்றவும் நின்றனன்' என்றதின் தாத்பர்யம் பலத்தோடே வ்யாப்தம் என்றது - 'ஆக்கைவிடும்பொழுதெண்ணே' என்றதின் தாத்பர்யம். அஞ்சிறையமடநாரையிலே, பலத்தோடே வ்யாப்தமாயென்றது - 'எழுலகத்தவர் பெருமான்' என்றத்தைப்பற்ற. 'திருவடியால்தாயோன்' என்றத்தைப்பற்ற - ஶீலவான் என்றது. கீழ் அத்யஹிநிவிஷ்டராய்த் தூதுவிட்டவர் இப்போது அகலுவானென்? என்ன, கீழ்க்கலங்கி இத்யாதி. இரண்டுமுண்டோ? என்ன, மயர்வு இத்யாதி. பக்திரூபாபந்நஜ்ஞாநம் என்றது - ஜ்ஞாநமும் பக்தியுமென்றபடி. விஸ்தாரஸங்கதி - தூதப்ரேஷண இத்யாதி. நோவுபடவிட்டோமாகாதே இத்யாதிக்கு - 'அளவியன்ற'

என்று பிற்பாட்டுக்கு நொந்து, ஆனைக்கு உதவ வந்து தோற்றினாற்போலே அரைகுலையத் தலைகுலைய வந்து தோற்றினான்; அவனுடைய வைலக்ஷண்யத்தையும், தம்முடைய ஸ்வரூபத்தையும் கண்டார்; 'தார்மிகன்வைத்த தண்ணீர்ப்பந்தலை அழிப்பாரைப்போலே நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான வஸ்துவை நாம் கிட்டி தூஷிக்கப்பார்ப்போமல்லோம், அகலுமித்தனை' என்று பார்த்தார். அகன்றால் ஜீவிக்கவல்லரோ? என்னில், முடியுமித்தனையே; சேஷிக்கு அதிசயத்தை விளைக்கத் தேடுமவர்கள் தந்தாம் விநாசம் பாரார்களிறே; பெருமாளுக்கும் தேவதூதனுக்கும் மந்த்ரம் ப்ரவ்ருத்தமான ஸமயத்திலே, துர்வாஸா, 'என்னை உள்ளே புகவிடவேணும்' என்ன, 'இவனைத் தகைந்து பெருமாளுக்கு அவத்யத்தை விளைப்பதில் நாம் அகன்று முடிய அமையும்' என்று பார்த்து, அவனைப் புகவிட்டு,"**யதிப்ரீதிர்மஹாராஜ யத்யநுக்ராஹ்யதாமயி । ஜஹிமாம்நிர்விசங்கஸ்த்வம்ப்ரதிஜ்ஞாமநுபாலய**"(யதிப்ரீதிர்மஹாராஜயத்யநுக்ராஹ்யதாமயி - ஜஹிமாம்நிர்விசங்கஸ்த்வம் ப்ரதிஜ்ஞாமநுபாலய) என்று விடைகொண்டாரிறே இளையபெருமாள்; "**த்யஜேயம்ராகவம்வம்சே பர்த்துர்மாபரிஹாஸ்யதி**" (த்யஜேயம்ராகவம்வம்சேபர்த்துர்மாபரிஹாஸ்யதி) என்று விடைகொண்டாளிறே பிராட்டி; அப்படியே இவரும். 'ஊருணியிலே கள்ளியை வெட்டி யெறிவாரைப் போலவும், அம்ருதத்திலே நஞ்சைக் கலந்தாற்போலவும், நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான வஸ்துவை நாம் புக்கு அழிக்கையாவது என்?' என்று இவர் அகலப்புக, 'இவரை யிழந்தோமாகாதே' என்று ஈச்வரன், 'ஆழ்வீர்! அகலப்பார்த்தீரோ?' என்ன, 'அடியேன் அகலப் பார்த்தேன்' என்ன, 'நீர், நமக்கு அவத்யம்வருமென்றன்றோ அகலப்பார்த்தது? நீர் அகலவே, இவ்விஷயம் அதிக்ருதாதிகாரமாகாதே! என்று நமக்கு ஆள்பற்றுது; இப்படி தண்ணியராக நினைத்திருக்கிற நீரொருவரும் நம்மைக் கிட்டவே, 'ஸர்வாதிகாரம்' என்று தோற்றும்; ஆனபின்பு, நீர் அகலுமதுகாணும் நமக்கு அவத்யம்; இனித்தான், நமக்கு ஆகாதாரில்லை யென்னுமிடம் பண்டே அடிபட்டுக்காணும் கிடப்பது' என்று - 'நாம் குணகுண நிரூபணம் பண்ணுதே எல்லார்தலையிலும் நம் காலை வைத்தோம் கண்டீரே' என்று தான் திருவுலகளந்தருளின ஸௌலப்யத்தைக் காட்ட,

---

என்கிற பாட்டிலே ஹ்ருதயம். அரைகுலையத் தலைகுலைய என்றது - "ஸஹஸா ஸம்ப்ரமாத் யாதவாந்" என்றத்தைப் பற்ற. 'வானோரிறையை அருவினையேன்' என்றத்தைப்பற்ற - அவனுடைய வைலக்ஷண்யத்தையும் தம்முடைய ஸ்வரூபத்தையும் என்றது. 'ஸர்வஸ்வேயம் ந:ஸ்வீகாரம்' என்றன்றோ லோகப்ரதீதி? இப்படி ஸ்வவிநாசத்தை இசைவாருண்டோ? என்ன, சேஷிக்கு இத்யாதி. இதுக்கு அநுஷ்டாநம் - பெருமாளுக்கும் இத்யாதி. தேவதூதன் - சதுர்முகதூதனான யமன். தகைந்து - நிஷேதித்து. உத்தரஸ்ரீராமாயணே ஷட்சத்வாரிம்சஸ்ஸர்க்கே யதிப்ரீதிஃ இத்யாதி. ஹாதமித்ரிஃ ... வஸிஷ்டோ ... நாதஸ்ய ஜலக்ஷணம் ... "நவத்வாஸே ஜீவிதம் ... த்யஜேயம் ராகவம் வம்சே பர்த்துர்மாபரிஹாஸ்யதி ... ராகவம் ஸ்வபரிஹாஸ்ய ... ஜீவிதம்ந த்யஜேயமித்யர்த:" பர்த்தாவான பெருமாளுடைய வம்சத்திலே பெருமாளை லோகமானது இருந்ததே குடியாக விடாதே யிருக்குமென்று நான் ஜீவிதத்தை விடாதே யிருக்கிறேன். நான் ஜீவிதத்தைவிட்டால் பெருமாளை லோகம் த்யஜிக்குமென்று கருத்து. 'ஹாகர்த்தா' என்றிறே தாது. பிராட்டிக்கு ஜீவிக்கையே விநாசம். அகலும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் - ஊருணியிலே இத்யாதி. ஊருணி - ஊராக விநியோகங்கொள்ளுகிற தடாகம். ஊருணிக்கு ப்ரதிகோடியாக 'வாசத்தடம்' 'மரதகமணித்தடம்' என்றது அநுஸந்தேயம். 'அம்ருதத்திலே' என்றதுக்கு ப்ரதிகோடியாக-'ஸ தேவானாம்ருதம் ...'என்றது அநுஸந்தேயம். அதிக்ருதாதிகாரமாகாதே- யோக்யர்க்கே ஆச்ரயிக்கலாம் வஸ்துவாமே என்றபடி. அடிபடுகை - சாடு; அதாவது - ப்ரஹதமாகை; திரு

'ஆகில், கிட்டுவோம்' என்று பாரா, 'ஒரு சுணுதிக்யமேயோ வேண்டுவது? நம்மால் வரும் குணமும் அவனுக்கு வேண்டா' என்று அகலப்புக, 'உம்மால்வரும் சுணுதிக்யமேயன்றே வேண்டாதது? உம்மால்வரும் நான்தான் வேணுமோ? வேண்டாவோ?' என்று - *(நீர் அயோக்யரென்று அகலுகிறது - ஸத்தாஹாநி ; கிட்டுவது - ஸத்தாதாரகங்காணும் ; ஆனபின்பு) நீர் அயோக்யரென்று அகலுமதிலும் ஸம்ஶ்லேஷிக்கிறது திருவாய்ப்பாடியில் வெண்ணெயோபாதி நமக்கு தாரகங்காணும் ; இனி நீர் அகலில் திருவாய்ப்பாடியில் வெண்ணெய் விலக்கினுர் புக்க லோகம் புகுவீர்கிடீர்; நீர் அகலுமது நமக்கு ஸத்தாஹாநி' என்று, "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்" (மித்ரபாவேநஸம்ப்ராப்தம்) என்று அவன்பக்கலுள்ளது போட்கனகவுமாம்; நாம் அவனை விடில் உளோமாகோமென்று சேர்த்துக் கொண்டாற்போலவும், 'பந்துவதம் பண்ணி ஜீவிக்கப் பார்க்கிறிலேன்' என்ற அர்ஜ்ஜுநனை, "கரிஷ்யே வசநந்தவ" (கரிஷ்யேவசநந்தவ) என்னப்பண்ணினுற்போலவும், தம்மை வருந்தி இசைவித்து ஸம்ஶ்லேஷோந்முகனுனபடியே ஸம்ஶ்லேஷித்துத் தலைக்கட்டினு னென்கிருர்.

## முதற் பாட்டு.

வளவேழுலகின்முதலாய வானேரிறையைஅருவினையேன்
களவேழ்வெண்ணெய்தொடுவுண்ட கள்வா! என்பன் பின்னையும்
தளவேழ்முறுவல்பின்னைக்காய் வல்லானுயர்தலைவனுய்
இளவேறேழுந்தழுவிய எந்தாய்என்பன்நினைந்துநைந்தே.

*ஆ.—ஸர்வலோககாரணபூதனுய், அயர்வறுமமரர்களதிபதியான எம்பெருமானை அத்யந்தஹீநனான நான் என்வாயாலே 'களவேழ்வெண்ணெய்தொடுவுண்ட கள்வா' என்பன் ; அதின்மேலே பின்னையும், 'நிரதிஶயஸௌந்தர்யாதி குணங்களை யுடையளான நப்பின்னைப் பிராட்டியோடே கலக்கைக்காக அவள்குலத்தோடு ஸத்ருஶமான குலத்திலே வலியையுடையரான ஆனுயர்தலைவனுய் வந்து பிறந்தருளி, இளவேறேழுந்தழுவிய எந்தாய்' என்றுசொல்லுவன் ; சொல்லுமிடத்தில் குணங்களை என் நெஞ்சாலே நினைந்து சொல்லுவன்; என்ன அதிநிக்ருஷ்டனே? என்ன அயுக்தகாரியோ? என்றுகொண்டு தம்மை நிந்தித்து, அவன் குணங்களை இப்படிச் சொல்லிவைக்கிறது அவன்பக்கலிலே எனக்குள்ள நிரதிஶயஸ்நேஹமாகிற பாபமிறேயென்று நோகிருர். பரமபுருஷார்த்தமான பரமபுருஷவிஷய ப்ரேமத்தைப் பாபமென்று சொல்லுவானென்? என்னில்,—துஃகஜநகமானது பாபமாகையாலும், எம்பெருமானுக்கு அவத்யம்வருகை*

---

வடிகளில் பட்டுக்கிடக்கிறதென்ற. '[illegible]'என்றத்தைப்பற்ற - குணமும் அவனுக்கு வேண்டா என்றது. பின்னையும்அகலப்புக என்றது - 'அடியேன் சிறியஞானத்தன்' என்றத்தைப் பற்ற. இசைவித்தமைக்கு உதாஹரணம் - மித்ரபாவேந, கரிஷ்யேவசநம் தவ இத்யாதி. [illegible] "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந । தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத கர்ஹிதம்." கீதாயாம் ச-"நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயாச்யுத । ஸ்திதோऽஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ". போட்கன் - காபட்யம். 'சார்ந்தவிருவல்வினை' இத்யாதியைப்பற்ற - ஸம்ஶ்லேஷித்துத் தலைக்கட்டினுன் என்றது.

---

* குண்டலிதம் பல ஸ்ரீகோஶங்களில் இல்லை என்பர்.

தமக்கு து:கமாகையாலும், தம்முடைய வாயாலே அவனைப் பேசுகை அவனுக்கு அவத்யமாகத் தாம்கருதுகையாலும்,இப்படி அவனுக்கு அவத்யமாகையாலே தமக்குது:கரூபமான இப்பேச்சைத் தத்விஷயஸ்நேஹமானது விளைவிக்கையாலும், தமக்கு அவன்பக்கலுள்ள ஸ்நேஹத்தையே பாப மென்கிறார்.

௭.—முதற்பாட்டில், அத்யந்த நிக்ருஷ்டனான நான், அத்யந்த விலக்ஷணனான எம் பெருமானை என்னுடைய மநோவாக்காயங்களாலே தூஷித்தே னென்று மோகிக்கிறார்.

[வளவேழுலகின்முதலாய வானோரிறையை] - பகவத்போகத்துக்கிடான வைலக்ஷண்யத்தை யுடையாராய், ஏழுலகுக்கும் முதலாயுள்ள அயர்வறுமமரர்களுக்கு நாயகனை; வளவிதான ஏழுலகு என்றுமாம். தொடங்கின வாக்யம் பூரிப்பதற்குமுன்பே தம்முடைய மௌர்க்யத்தை அநுஸந்தித்து "அருவினையேன்" என்கிறார். அநிஷ்டமான பகவத்ஸம்ச்லேஷத்தை விளைக்கையாலே, பக்தியை அருவினை யென்கிறது. [களவேழென்று தொடங்கி] - 'களவு ப்ரஸித்தமாம் படி வெண்ணெய்களவுகண்ட கள்வா!' என்று யசோதைப்பிராட்டி அவனைக் களவிலே கண்டுபிடித்துச் சொல்லும் சொல்லைச் சொன்னேன். [பின்னையும்மென்று தொடங்கி] - அதுக்குமேலே முல்லையரும்புபோலே யிருக்கிற முறுவலையுடைய நப்பின்னைப்பிராட்டியோடே ஸம்ச்லேஷிக்கைக்காக வலியையுடைய இடையருக்கு ப்ரதாநனாய் வந்து பிறந்து எருதேழடர்த்தபடியை நினைத்து மிதிலனாய் அது உள்ளடங்காமையாலே 'இளவேறேழுந் தழுவின இச்சேஷ்டிதத்தாலே என்னை அடிமை கொண்டவனே!' என்பதும் செய்தேன்.

ப.—முதற்பாட்டில், அம்ருதத்திலே நஞ்சைக் கலக்குமாபோலே ஸர்வஜீவாதுவான ஸர்வேச்வரனை என்கரணத்ரயத்தாலும் தூஷித்தே னென்கிறார்.

வளம் - வளவிதான, ஏழுலகின் - ஏழுலகத்துக்கும், முதலாய - முதலான, வானோர் இறையை - வானவர்க்கு இறையான உபயவிபூதிநாதனை, அருவினையேன் - கழிக்க அரிதான பாபத்தையுடையனான நான், நினைந்து - (என்நெஞ்சினாலே) நினைத்து, நைந்து - (சரீரமும்) கட்டுக்குலைந்து, களவேழ் - களவுகிளம்பும்படியாக, வெண்ணெய் - வெண்ணெயை, தொடுவுண்ட - ஒளித்து உண்ட, கள்வா - க்ருத்ரிமனே! என்பன் - (என்ற தாயார்பாசுரத்தைச்)சொல்லுவன்; பின்னையும் - அதுக்குமேலே, தளவு - முல்லை, ஏழ் - தோன்றும்படியான, முறுவல் - முறுவலையுடைய, பின்னைக்கு - நப்பின்னைப்பிராட்டிக்கு, ஆய் - உன்னை ஆக்கிவைத்து, வல் - ப்ரபலரான, ஆனுயர் - கோபர்க்கு, தலைவனாய் - தலைவனாய் (வந்து), இள - இளமையாலே செருக்கின, ஏறு ஏழும் - எருதுகள் ஏழையும், தழுவிய - (அபிமதஸம்ச்லேஷார்த்தமாகையாலே உகந்து) தழுவி முடித்த, எந்தாய் - என்ஸ்வாமியே! என்பன் - என்று (அபிமதை பாசுரத்தைச்) சொல்லுவன். ஏழுலகின் முதலாய வானோரென்று - 'அஸ்த்ரபூஷணத்யாயக்ரமத்தாலே ஸூரிகளுடைய ஜகத்காரணத்வஞ் சொல்லுகிறது' என்றுஞ் சொல்லுவர்கள். இவ்விடத்தில், வினையென்று அத்தலைக்கு அவத்யகரமாம்படி தம்மை பகவத்விஷயத்திலே மூட்டுகையாலே அநிஷ்டாவஹையான பக்தியைச் சொல்லுகிறது. தளவு - முல்லை. 'இனைந்துநைந்தே' என்று பாடமாய், 'இனைதல்-வருந்துதல்' என்றுஞ் சொல்லுவாருமுளர்.

இ.—முதற்பாட்டில், அத்யந்த விலக்ஷணனான அவனை அத்யந்த நிக்ருஷ்டனான நான் மநோவாக்காயங்களாலே தூஷித்தே னென்கிறார்.

[வளவேழுலகின் முதலாய வானோரிறையை] - வளவியனாய் ஏழுலகுக்கும் காரணபூதனாய் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருந்துள்ளவனை. வளவியனாகையாவது - ஸ்வரூபாதி

களால் வந்த வைலக்ஷண்யத்தை யுடையனாகை. வளவியதாயிருந்துள்ள ஏழுலகுக்கு என்னவுமாம். வளவியராய் ஏழுலகுக்கும் காரணபூதராயிருந்துள்ள நித்யஸூரிகளுக்கு நிர்வாஹக னென்னவுமாம். நித்யஸூரிகளுக்கும் காரணத்வமுண்டோ? என்னில், - அஸ்த்ரபூஷணாத்யாயத்தின்படியே, ஸ்ரீகௌஸ்துபத்தாலே ஜீவஸமஷ்டியை தரிக்கு மென்றும், ஸ்ரீவத்ஸத்தாலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை தரிக்கு மென்றும் சொல்லுகிறது. இவர்கள் வளவியராகையாவது - பகவதநுபவத்தில் குஶலராகை. [அருவினையேன்] - வாக்யம் பூரிப்பதற்கு முன்பே தம்முடைய மௌர்க்யத்தைப் பார்த்து 'அருவினையேன்' என்கிறார். இவர் இப்போது அருவினையே னென்கிறது - பகவத்ப்ராவண்யத்தை. இப்போது பகவத்விஷயத்தைக் கிட்டுகை அநிஷ்டமாகையாலே அவ்விஷயத்தை மேல்விழப்பண்ணுமது பாபமாகக்கடவதிறே. அநிஷ்டாவஹமிறே பாபம். [களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா என்பன்] - களவிலே வேழ்க்கையையுடையனாய் - ஆசைப்பாட்டை யுடையனாய்க்கொண்டு, வெண்ணெய்களவுகண்ட. "களவெழு" என்கிற இத்தை "களவேழ்" என்று நீட்டிற்றாய், களவு ப்ரஸித்தமாம்படி யென்னவுமாம். ப்ரஸித்தமாகையாவது - ஶிஶுபாலாதிகள் கோஷ்டியிலும் ப்ரஸித்தமாம்படி யிருக்கை. [கள்வா என்பன்] - ஸர்வேஶ்வரனைப் பிள்ளையாகப் பெறுகைக்கீடான ஸௌபாக்யத்தை யுடையளான யசோதைப்பிராட்டி, வெண்ணெய் களவு காண்கிற ஸமயத்திலே கண்டு ப்ரேமாதிஶயத்தாலே அவள் சொன்ன வார்த்தையைச் சொன்னேன். "தொல்லையின்பத்திறுதிகண்டாளே" என்று நித்யஸூரிகளுக்கும் மேலாகப் பேசக்கடவதிறே; அவர்கள் தாங்கள் தொழ இருக்கும் மேன்மையிறே கண்டது; அவன்தானே தொழும் நீர்மை கண்டறியார்களிறே. 'என்பன்' என்கிற இது - காலத்ரயவர்த்தியானாலும் இப்போது பூதார்த்தத்திலேயாய், என்றே னென்றபடி. [பின்னையும்] - அதுக்குமேலே பிராட்டிமார் பாசுரத்தையுஞ் சொன்னே னென்கிறார். [தளவேழ்முறுவல்பின்னைக்காய்] - முல்லையரும்புபோலே யிருக்கிற முறுவலையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காய். எழுகை - தோற்கை. தளவு - முல்லை. எழுகையாகிறது - முறுவலைக் கண்டால் முல்லையரும்பு ஸ்ம்ருதிவிஷயமாகை. [பின்னைக்காய்]- "தவாஸ்மி" என்று முறுவலுக்குத் தோற்றபடி. [வல்லானாயர்தலைவனாய்] - "க்ருஷ்ணாஶ்ரயா:" என்கிறபடியே வலியையுடையரான இடையருக்குத் தலைவனாய். அதவா, "தஸ்யாஶீலவயோவ்ருத்தா" என்று இரண்டுதலையும் குறைவற்றிருக்க, எருதுகளை முன்னிட்ட வன்னெஞ்ச ரென்னவுமாம். [தலைவனாய்] - நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாயிருக்குமாபோலே யாயிற்று இடையர்க்கும் அவ்வருகா யிருக்கும்படி. அபிஜாதனுக்கல்லது பெண் கொடார்களிறே. [இளவேறு] - பருவத்தின் இளமையாலே ம்ருத்யுவைப்போலேயிருக்கை. [ஏழும்] - நப்பின்னைப் பிராட்டியை அணைக்கைக்குஉள்ள அபிநிவேசத்தாலே, ஓரொன்றாகவன்றிக்கேஒருகாலேநெரிக்கை. [தழுவிய] - அவற்றினுடைய நிரஸநத்துக்கு பலம் - அவளை அணைக்கையாகையாலே, இதுவும் போகரூபமா யிருந்தபடி. [எந்தாயென்பன்] - அவள் இச்செயலுக்குத் தோற்று 'என்னையன்' என்று சொல்லுமத்தையுஞ் சொன்னேன். [நினைந்து] - அஹ்ருதயமாகச் சொல்லிவிட்டேனோ? நெஞ்சாலும் தூஷித்தேன். [நைந்தே] - மாநஸமாய், பிறர் அறியாதபடி யிருந்ததோ? 'இவ்விஷயத்தே இவன் சிதிலனானான்' என்று நாடு அறியும்படி காயிகமாகவும் தூஷித்தேன். அவதாரத்தில் அணைய ஆசைப்படுவார் அவள் பாசுரத்தாலேயிறே சொல்லுவது. முதல் திருவாய்மொழியிலே, நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான மேன்மையை தூஷித்தேன்; பத்துடையடியவரிலே, யசோதைப்பிராட்டிக்கு அநுபாவ்யமான நீர்மையை தூஷித்தேன்; அஞ்சிறையமடநாரையிலே, பிராட்டிமார் பாசுரத்தைச் சொன்னேன். நினைந்து - மாநஸம். நைந்து - காயிகம். என்பன் - வாசிகம். "நினைந்துநைந்து, வளவேழுலகின் முதலாய வானோரிறையைக் களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா என்பன்; பின்னையும், தளவேழ் முறுவல் பின்னைக்காய் வல்லானாயர்தலைவனாய் இளவேறேழும் தழுவிய எந்தா யென்பன் அருவினையேன்" என்று அந்வயம்.

**ஈடு.**—முதற்பாட்டு. நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனானவனை என்னுடைய மநோவாக் காயங்களாலே தூஷித்தேனென்கிறார்.

[வளவேழுலகு இத்யாதி] - வளவிதான ஏழுலகென்று லீலாவிபூதியாய், 'வானோரிறை' என்கையாலே நித்யவிபூதியைச் சொல்லிற்றாய், இப்படி உபயவிபூதிநாதனைக் கிடீர் ! நான் அழிக்கப் பார்த்ததென்கிறார். வளவியனாய், ஏழுலகுக்கும் முதலாய், வானோரிறையாயிருக்குமவனை யென்று அவன்தனக்கே விசேஷண மாகவுமாம்; வளவியராய், ஏழுலகுக்கும் முதலாயிருக்கிற வானோரென்று நித்யஸூரிகளுக்கு விசேஷண மாகவுமாம் ; இவர்கள் வளவியராகையாவது பகவதநுபவத்தில் குசலராகை. *அஸ்த்ர பூஷணாத்யாயத்திலே, ஸ்ரீகௌஸ்துபத்தாலே ஜீவஸமஷ்டியை தரிக்குமென்றும், ஸ்ரீவத்ஸத்தாலே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை தரிக்குமென்றும் சொல்லாநின்றதிறே. [வானோரிறையை] - தேசிகராகையாலே துறையறிந்தே இழிவர்கள்; "ஸ்வாமி"

---

* ப்ர:—வைஷ்ணவே புராணே ப்ரதமாம்ஸே த்வாவிம்ஸே - "ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபமகுணாமலம் । பிபர்த்தி கௌஸ்துபமணிஸ்வரூபம் பகவாந் ஹரி: । ஸ்ரீவத்ஸஸம்ஸ்தாநதரமநந்தே ச ஸமாஶ்ரிதம் । ப்ரதாநம் புத்திரப்யாஸ்தே கதாரூபேண மாதவே ॥ பூதாதிமிந்த்ரியாதிம் ச த்விதாஹங்காரமீஶ்வர: । பிபர்த்தி ஶங்கரூபேண ஶார்ங்கரூபேண ச ஸ்திதம் ॥ சலஸ்வரூபமத்யந்தம் ஜவேநாந்தரிதாநிலம் । சக்ரஸ்வரூபம் ச மநோ தத்தே விஷ்ணுகரே ஸ்திதம் ॥ பஞ்சரூபா து யா மாலா வைஜயந்தீ கதாப்ருத: । ஸா பூதஹேதுஸங்காதா பூதமாலா ச வை த்விஜ ॥ யாநீந்த்ரியாண்யஶேஷாணி புத்திகர்மாத்மகாநி வை । ஶரரூபாண்யஶேஷாணி தாநி தத்தே ஜநார்த்தந: ॥ பிபர்த்தி யச்சாஸிரத்நமச்யுதோऽத்யந்தநிர்மலம் । வித்யாமயம் து தஜ்ஜ்ஞாநமவித்யாகோஶஸம்ஸ்திதம் ॥ இத்தம் புமாந் ப்ரதாநம் ச புத்த்யஹங்காரமேவ ச । பூதாநி ச ஹ்ருஷீகேஶே மந: ஸர்வேந்த்ரியாணி ச ॥ வித்யாவித்யே ச மைத்ரேய ஸர்வமேதத் ஸமாஶ்ரிதம் । அஸ்த்ரபூஷணஸம்ஸ்தாநஸ்வரூபம் ரூபவர்ஜித: ॥ பிபர்த்தி மாயாரூபோऽஸௌ ஶ்ரேயஸே ப்ராணிநாம் ஹரி: ॥"

---

*முதற்பாட்டு* - **வளவேழுலகு** *இத்யாதி.* **'வானோரிறையை, நினைந்து நைந்து, என்பன்'** *என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை* - **நித்யஸூரிகளுக்கு** *இத்யாதி.*

**வளம்** *என்றது - ஏழுலகுக்கும் ஈஸ்வரனுக்கும் ஸூரிகளுக்கும் விசேஷணம். 'வளவேழுலகின் முதலாய வானோரிறையைக் கள்வாவென்பன்' என்றதுக்கு பாவம்*-**வளவிதான** *இத்யாதி.* **வளப்பம்** *- கட்டளைப்பாடு.* **ஈஸ்வரன் வளவியனாகையாவது** *- ஸ்வரூபாதி வைலக்ஷண்யத்தை யுடையனாகை, ஸூரிகளுக்கு* **வளப்பம்** *- பகவதநுபவகௌசலம். நித்யஸூரிகளுக்கு ஜகத்காரணத்வமுண்டோ? என்ன,* **அஸ்த்ரபூஷண** *இத்யாதி. '*ப்ரதமாம்ஸே த்வாவிம்ஸே-"ஆத்மாநமஸ்ய ஜகதோ நிர்லேபமகுணாமலம்। பிபர்த்தி கௌஸ்துபமணிஸ்வரூபம் பகவாந் ஹரி: । ஸ்ரீவத்ஸஸம்ஸ்தாநதரமநந்தே ச ஸமாஶ்ரிதம்। ப்ரதாநம் புத்திரப்யாஸ்தே கதாரூபேண மாதவே" இத்யாதி த்ரஷ்டவ்யம்*. லீலாவிபூதிக்குக் காரணத்வத்தைச் சொல்லி, நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாகச் சொன்னதுக்கு பாவம் -* **தேசிகர்** *இத்யாதி.* **விவரணம்** *-* **ஸ்வாமி** *இத்யாதி. வானோரிறையைக் கள்வாவென்பன் அருவினையேன் என்னவேண்டியிருக்க இங்ஙன்சொல்லுவானென்? என்ன,* **வானோரிறையை** *இத்யாதி. 'கள்வாவென்பனருவினையேன்' என்னவாயி*

---

* *குண்டலிதம் க்வாசித்கம் என்பர்.*

(ஸ்வாமி) என்றேயாயிற்று இவர்களுக்கு ப்ரதிபத்தி. "வானோரிறையைக் கள்வாவென்பன்" என்ன வாயிற்று நினைத்தது; தொடங்கின வாக்யம் பூரிப்பதற்கு முன்னே தம்மை யநுஸந்தித்து 'அருவினையேன்' என்கிறார். தார்மிகனாயிருப்பானொருவன் ரஜஸ்தமஸ்ஸுக்களாலே அபிபூதனாய், க்ருஹத்திலே அக்நிப்ரக்ஷேபத்தைப் பண்ணி, ஸத்த்வம் தலையெடுத்தவாறே அநுதபிக்குமா போலே அநுதபிக்கிறார். [அருவினையேன்] - இப்போது 'அருவினையேன்' என்கிறது - 'கள்வா' என்கைக்கு அடியான ப்ரேமத்தை. அத்தை 'அருவினை' என்கிறார்-அநிஷ்டாவஹம் பாபம் என்றிருக்குமவராகையாலே. [களவேழ் இத்யாதி] - களவிலே வேழ்க்கையுடையனாய், அபிநிவிஷ்டனா யென்னவுமாம்; அன்றிக்கே, களவு எழும்படி - களவு ப்ரஸித்தமாம்படி யென்னவுமாம். களவு ப்ரஸித்தமாம்படி, வெண்ணெயைக் களவுகண்டு அமுதுசெய்த க்ருத்ரிமனே! என்பன். இத்தால், பரிவுடைய யசோதைப்பிராட்டி சொல்லும் பாசுரத்தைக் கிடீர்! சொல்லிற்றென்கை. 'என்பன்' என்றது - சொன்னேனென்றபடி. [பின்னையும்] - அதுக்குமேலே. [தளவு இத்யாதி] - பரிவுடைய யசோதைப் பிராட்டிக்கு மறைத்தவற்றையும் வெளியிடும்படி அபிமதையான நப்பின்னைப் பிராட்டி பாசுரத்தையும் சொன்னேன். [தளவேழ் முறுவல்]-நப்பின்னைப் பிராட்டியுடைய தந்தபங்க்தியைக் கண்டவாறே முல்லையரும்பு ஸ்ம்ருதிவிஷயமாகை நெஞ்சிலே; கவயத்தைக் கண்டவாறே க்ருஹத்தில் கோ ஸ்ம்ருதிவிஷயமாமாபோலே. * (தளவெழும்படியான முறுவலென்னவுமாம். அதாவது, எழுகை - போகையாய், தோற்றுப்போம்படியான முறுவல்.) "பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை" என்னக்கடவதிறே. [பின்னைக்காய்] - நப்பின்னைப்பிராட்டியுடைய ஸ்மிதத்திலே தோற்று அவளுக்குத் தன்னை இஷ்டவிநியோகார்ஹமாக்கினான். [வல்லானாயர் தலைவனாய்] - "𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌬𑌲𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌨𑌾𑌥𑌾𑌶𑍍𑌚 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃" (க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:) என்னுமாபோலே, அவனைப் பற்றி நாட்டை யழித்துத் திரியும் மிடுக்கைப் பற்ற, 'வல்லானாயர்' என்னவுமாம்; அன்றிக்கே, ஆனாயர் வலிய தலைவனாய்: அதாவது - உடம்புஇருக்கத் தலை குளித்தும், தலையிருக்க உடம்பு குளித்துமிறே திரிவது; கார்த்திகை புதியதுக்குக் குளித்தார்களாகில்

---

*ற்று நினைத்ததென்றபடி. த்ருஷ்டாந்தம் - தார்மிகனாய் இத்யாதி. ப்ரேமத்தைப் பாபமென்னலாமோ? என்ன, அத்தை இத்யாதி. அதாவது-அகலுகை இஷ்டமாயிருக்க, ப்ரேமம்அகலவொட்டாமையாலே அத்தைப் பாபமென்கிறாரென்றபடி. களவிலேவேழ்க்கையுடைய - களவு - களவிலே. வேழ் - வேழ்க்கை தொடுவுண்ட - களவுகண்ட. த்விதீயார்த்தத்தில் - 'எழ்' என்று நீட்டினதைக் குறுக்கி, எழும்படி யென்றபடி. எழும்படி - ப்ரஸித்தமாம்படி. 'க்ருத்ரிமன்' என்று நிந்தித்து அநுதபிக்கிறாரோ? என்ன, அங்ஙனல்ல வென்கிறார்-இத்தால் இத்யாதி. அத்தையும்சொன்னேன் இத்தையும்சொன்னேன் என்ன அமைந்திருக்க, 'பின்னையும்' என்றதுக்கு பாவம் - பரிவுடைய இத்யாதி. பரிவு - ஸ்நேஹம். நப்பின்னைப் பிராட்டி பாசுரமாவது - இளவேறேழுந் தழுவியவெந்தாய் என்றது. தளவு - முல்லை. "மௌவலும் தளவும் முல்லையாகும்" என்னக்கடவதிறே. அர்த்தஸ்மாரகத்வயோக ஶங்கையை த்ருஷ்டாந்தமுகேந பரிஹரிக்கிறார் - தளவேழ்முறுவல் இத்யாதி. முறுவலென்றது - ஸ்மிதமாய், அத்தாலே தந்தபங்க்தியைச் சொல்லுகிறது. எழுகையாவது - ஸ்ம்ருதிவிஷயமாகை. ஸத்ருஶமாகையாலே ஸ்ம்ருதிஹேதுவாகிறது. நெஞ்சிலே - க்ருஷ்ணன் நெஞ்சிலே. கவயம் - காட்டிலே திரிகிற மரை. அது பசுபோலே யிருக்கும். முல்லையரும்பு பல்லுக்கு உபமாநமோ? என்ன, பல்லுக்கு இத்யாதி. 'ஆய்' என்றதுக்கு பாவம் - நப்பின்னை இத்யாதி. வன்மை - ஆனாயர்க்கு விஶேஷணமாய், அத்தை த்வேதா காட்டுகிறார்-க்ருஷ்ணாஶ்ரயா: இத்யாதியாலும், துல்யஶீல இத்யாதியாலும். [illegible] '𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌬𑌲𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌨𑌾𑌥𑌾𑌶𑍍𑌚 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌃 । 𑌕𑍃𑌷𑍍𑌣𑌃 𑌪𑌰𑌾𑌯𑌣𑌂 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌮𑌿𑌵 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃'. [illegible]". வன்மை தலைவனுக்கு விஶேஷணமானபோது, அன்றிக்கே இத்யாதி. கார்த்திகை இத்யாதி - எல்லாரும் கார்த்திகைக்குக் குளிப்பார்கள். புது நெல்லு வரும்*

---

* குண்டலிதம் க்வாசிதகம் என்பர்.

இவன் அதுவும் செய்யாதே இடைத்தனத்திலே ஊன்றி நிற்கும்படியைச் சொல்லுதல். இப்படி யிருக் கிலல்லது பெண்கோடார்களிறே இடையர். "குலஶீலஸத்ருஶீ" (குலேநஸத்ருஶீ) என்னக்கடவ திறே. "துல்யஶீலவயோவ்ருத்தாம்" (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்று இரண்டுதலையும் குறைவற்றி ருக்க, எருதுகளை முன்னிட்ட வன்னெஞ்ச ரென்னவுமாம். [இளவேறு] - ம்ருத்யுஸமரா யிருந்து ள்ள ருஷபங்க ளேழையும் ஊட்டியாக ஒருகாலே தழுவினன். அநந்தரம் அவளை லபிக்கையாலே அவள் முலையிலே யணைந்தாற்போலே யிருக்கையாலே - தழுவி யென்கிறது. [எந்தா யென்பன்] - எருதேழடர்த்த செயலுக்குத் தோற்று நப்பின்னைப் பிராட்டி சொல்லும் பாசுரத்தைச் சொன்னேன். உக்திமாத்ரமேயோ? [நினைந்து] - நெஞ்சாலும் தூஷித்தேன். அவ்வளவோ? [நைந்தே]-பிறர் அறியும் படி சிதிலனாய், காயிகத்தாலும் தூஷித்தேன். வளவேழுலகு இத்யாதிக்கு 'அயர்வறுமமரர்களதிபதி' என்றேன், 'எத்திறம்' என்றேன், பிராட்டிமார் தலைமையை ப்ராப்தனாய்த் தூது விட்டேன் என்று அவற்றுக்கு அநுதபிக்கிறார். நினைந்து நைந்து வளவேழுலகின் முதலாய வானோரிறையைக் களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா வென்பன்; பின்னையும், தளவேழ்முறுவல் பின்னைக்காய் வல் லானாயர் தலைவனாய் இளவேறேழுந்தழுவிய எந்தாயென்பன்; அருவினையேன் என்று அந்வயம். (க)

## இரண்டாம் பாட்டு.

நினைந்துநைந்துள்கரைந்துருகி இமையோர்பலரும்முனிவரும்
புனைந்தகண்ணிநீர்சாந்தம் புகையோடேந்திவணங்கினால்
நினைந்தவெல்லாப்பொருள்களுக்கும் வித்தாய்முதலிற்சிதையாமே
மனஞ்செய்ஞானத்துன்பெருமை மாசூணாதோமாயோனே!

போது மங்களஸ்நாநம்பண்ணி இஷ்ட தேவதைக்குப் பொங்கலிட்டு பந்துக்களும் தாங்களும் புஜிப்பர்களிறே; ஆகையாலே, கார்த்திகைக்கும் புதியதுக்கு மென்றபடி. "புனத்தினைகிள்ளிப் புதுவவிகாட்டி யுன்பொன்னடி வாழ்க" என்னக்கடவதிறே. புதியது - புதுச்சோறு. ஆக, வன்மையாவது-இடைத்தனத்திலே ஊன்றிநிற்கை. இதுக்கு ப்ரயோஜந மேது? என்ன - இப்படி இத்யாதி. இடைத்தனத்திலே ஊன்றியிருக்குமோ? என்ன, குலஶீலஸத்ருஶீத்யாதி. ஸாக்ஷாத்காரணமஸீதாம்ஸத்ருஶீம் ... :- "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா". ஊட்டி என்று கழுத்தாய், எழுசழுத்தையும் ஒன்றாகக் கூட்டித் தழுவினா னென்றபடி. அடர்த் தென்னாதே, 'தழுவி' என்றதுக்கு ஹாவம் - அநந்தரம் இத்யாதி. எந்தாய் - என் ஸ்வாமியே! அடி தொடங் கிப் பாட்டுக்குத் தாத்பர்யார்த்தம் - வளவேழ் இத்யாதி. வளவேழுலகு இத்யாதிக்கு - 'வளவேழுலகு" என்கிற பாட்டிற் சொன்னபடிக்கு. 'என்பன்' என்று அநுதபிக்கைக்கு அப்படி கீழ்ச்சொன்னாரோ? என்ன, அயர்வறும் இத்யாதி. பிராட்டிமார் தலைமையை ப்ராப்தனாய் என்கையாலே, நப்பின்னைப்பிராட்டி சொன்ன வார்த்தையுஞ் சொன்னேனென்ற விதத்தம். அநுதபிக்கிறார் என்றது 'அருவினையேன்' என்றத்தைப் பற்ற. வானோரி றையை என்றதுக்கு - முதல் திருவாய்மொழியிலே நோக்கு. 'கள்வா' என்றதுக்கு - பத்துடையடியவரிலே நோக்கு. 'ஏறேழுந்தழுவியவெந்தாய்' என்றதுக்கு-அஞ்சிறையமடநாரையிலே நோக்கு. 'வானோரிறையைக் கள்வாவென்பன்' என்று ஏகவாக்யமாகக் கீழ்அருளிச்செய்து, இங்கே, 'வானோரிறையென்பன் கள்வாவென்பன்' என்று ப்ரத்யேகமாக அருளிச்செய்கையாலே இதுவும் ஒரு யோஜனை யென்று கண்டுகொள்வது. பாட்டுக்கு அந் வயம் - நினைந்து இத்யாதி. ஹேஸுந்தரேத்யாதி - வாரீர் அழகரே! க்ருஷ்ணாவதாரமான ஒரு ஜந்மத்தன்னிலே இரண்டு தாய்மாரையும் இரண்டு தமப்பன்மாரையும் இரண்டு வம்ஶத்தையும் ஒரு க்ஷணகாலத்திலே பரிக்ரஹித்த உமக்கு பலம் - குலத்தோடொத்திருக்கிற நப்பின்னைப் பிராட்டியும் ருக்மிணிப்பிராட்டியும். இத்தால்-கோபஸ ஜாதீயனாகையாலே நப்பின்னைப் பிராட்டியை லபித்தருளிற்று. க்ஷத்ரியஸஜாதீயனாகையாலே ருக்மிணிப் பிராட்டியை லபித்தருளிற்று என்றபடி. (க)

ஆ.—(நினைந்து.) நீர் என்திறத்துப் பண்ணும் வ்ருத்திகள் எனக்கு ஏற்ற மத்தனை யல்லது, எனக்கு அவத்யமாமோ? என்னில், - ஜாதி குண வ்ருத்த ஜ்ஞாநாதிகளால் உத்க்ருஷ்டரான ப்ரஹ்மேஶாநாதிகள் பலரும், ஸநகாதியோகிகள் பலரும் கல்யாணமான உபகரணங்களைக்கொண்டு பரமபக்தியுக்தமாக உனக்கு அடிமை செய்தாலும், நிகிலபுவந நிர்மாணத்ராண ஸம்ஹரணாதிகளைப் பண்ணினாலும், குறியழியாதேயிருக்கிற திவ்யஸங்கல்பாதி கல்யாணகுணங்களை யுடையையாயிருந்த உன்பெருமை மழுங்காதோ? ஆஶ்சர்யபூதனே! ஆனபின்பு, ஸர்வப்ரகார நிக்ருஷ்டனான நான் உனக்கு அடிமைசெய்தால் அது உனக்கு அவத்யமா மென்னுமிடஞ் சொல்லவேணுமோ? ஆதலால், நான் உனக்கு அடிமை செய்த இதுவும் அத்யந்தாயுக்தம்; இனி அடிமைசெய்கையும் அயுக்தமாதலால் உனக்கு அடிமைசெய்வேனல்லே னென்று அகலுகிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், அர்ஹனல்லே னென்கைக்கு நான் ஆர்? ப்ரேமார்த்ரசித்தரான ப்ரஹ்மருத்ராதிகளன்றோ அது சொல்ல அடுப்பது என்கிறார்.

[நினைந்து என்று தொடங்கி] - த்வத்குணஸ்மரணத்தாலே அத்யந்தம் ஶிதிலராய். [புனைந்தகண்ணிநீர்] - ஸாதரமாகத் தொடுத்த மாலை. [நினைந்த என்று தொடங்கி] - ஸம்ஹார ஸமயத்திலே 'புருஷார்த்தோபயோகியான கரணகளேபரங்களை இழந்து நோவுபட்டன' என்று ஸ்மரிக்கப்பட்ட ஸகலபதார்த்தங்களுக்கும் காரணமாய், ஸ்வகார்யங்களைப் பிறப்பிக்கும்போது தான் முதலழியாதபடியான ஸங்கல்பரூபஜ்ஞாநத்தையுடைய உன் பெருமை மழுங்காதோ? ஆஶ்சர்யமான வைலக்ஷண்யத்தை யுடையவனே!

ப.—அநந்தரம், உம்முடைய ஸம்பந்தம் நமக்கு அவத்யகரமாவா னென்? என்று ஈஶ்வராபிப்ராயமாக, 'என்னளவேயோ, விலக்ஷணரான தேவாதிகளும் அநந்யப்ரயோஜநஸமாதியாலே ப்ரேமயுக்தராய் ஆஶ்ரயிக்கிலும் ஸர்வகாரணபூதனான உன்னுடைய விலக்ஷணமாஹாத்ம்யத்துக்கு மாலிந்யகரமன்றோ?' என்கிறார்.

இமையோர் - (அநுபவத்தில்) அநிமிஷரான ப்ரஹ்மாதி தேவர்களும், முனிவரும்- மநநஶீலரான ஸநகாதி பரமருஷிகளுமான, பலரும் - அஸங்க்யாதபுருஷர்கள், நினைந்து - (உன் குணங்களை நெஞ்சாலே) அநுஸந்தித்து, நைந்து - அத்தாலே ஶரீரஶைதில்யம் பிறந்து, உள் கரைந்து - மநஸ்ஸு கட்டுக்குலைந்து, உருகி - நீர்ப்பண்டமாய்க்கொண்டு, புனைந்த - (இப்படி தாதாத்விகமான ப்ரேமவிகாரத்தோடே) தொடுக்கப்பட்ட, கண்ணி - மாலை, நீர் - (அர்க்யாத்யுபயோகி) ஜலம், சாந்தம் - சாந்து (இப்படி இவற்றை), புகையோடு - அகிற்புகையோடே கூட, ஏந்தி - யாவதங்கீகாரம் தரித்து, வணங்கினால் - (அங்கீகாரோபகார ஸ்ம்ருதியாலே) வணங்கினால், மாயோனே - ஆஶ்சர்யமான விலக்ஷண விபூதியுக்தனே! (ஸ்ருஷ்டிதஶையிலே தயமாநமநாவாய்க்கொண்டு), நினைந்த - நினைக்கப்பட்ட, எல்லாப்பொருள்களுக்கும் - ஸமஸ்தபதார்த்தங்களுக்கும், வித்தாய் - உபாதாநகாரணமாய், முதலில் சிதையாமே - ஸ்வரூபவிகாரம் பிறவாதபடி, மனம் - மநஸ்ஸாலே, செய் - செய்யப்பட்ட, ஞானத்து - ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தை யுடைய, உன் - உன்னுடைய, பெருமை - பெருமையானது, மாசூணாதோ - மலிநமாகாதோ? அகர்மவஶ்ய விபூதியாலே ஆராதிதனான உன்னுடைய பெருமைக்கு, அதிஶயிதரே யாகிலும் அவித்யாத்யுபஹிதருடைய ஆராதநம் மாலிந்யகரமென்று கருத்து. இங்கும் 'இனைந்து' என்று பாடஞ் சொல்லுவர்.

இ.—இரண்டாம்பாட்டில், அர்ஹனல்லே னென்கைக்கு நான் ஆர்? ப்ரேமார்த்ரசித்தரான ப்ரஹ்மாதிகளன்றோ அது சொல்லப்பெறுவ ரென்கிறார்.

னிறே; பர்வத பரமாணுக்களுக்கு உண்டான சேர்த்திபோலேயிறே. [கடிசேர் இத்யாதி] - ஸர்வாதிகவஸ்துவுக்கு அடையாளம் இருக்கிறபடி. "ஸர்வகந்த:" என்கிற விஷயமாகையாலே பரிமளம் அலையெறியாநிற்கும்; திருமேனியிற் குளிர்த்தியாலே செவ்விமாறாதே யிருக்கும். இப்படியிருக்கிற திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனை. [கண்ணனை] - அறிவரிதான நிலை தான் அவதரித்துநின்ற விடத்திலே. கடல்கிட்டிற்றென்றால் பரிச்சேதிக்கலாமோ? மநுஷ்யத்வே பரத்வம் இருக்கிறபடி. அன்றிக்கே, ஐஸ்வர்யத்தாலே எட்டாதிருக்குமோ? என்னில்,- ஆஸ்ரிதர்க்கு ஸுலபனாயிருக்கு மென்னவுமாம். [செடியார் இத்யாதி] - அடியாரைச் செடியாராக்கை சேர்தல் தீர்க்கும். இங்கு 'அடியார்' என்கிறது - கேவலரை. தம்மைப்போலே கிட்டி அவத்யத்தை விளைக்காதே ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டு அகலுகையாலே; அடிமையாவது - ஸ்வாமிக்கு அதிஶயத்தைப் பண்ணுகையிறே. தூறுமண்டின சரீரம் அவர்களைச் சேராதபடி பண்ணும். "ஜராமரணமோக்ஷாய" என்றிறே அவர்கள் புருஷார்த்தம் இருப்பது. [திருமாலை] - அவர்கள் ஶரீரஸம்பந்தம் அறுத்துக்கொடுப்பான் ஶ்ரிய:பதியாயிற்று. அவர்களிற்காட்டில் நீர் குறைய நின்ற விட மென்? என்னில், - [அடியேன் காண்பான் அலற்றுவன்] - அடியேனென்பது ஸ்வாமிக்கு அதிஶயத்தைப் பண்ணப்பார்த்தாலன்றோ? மாம்பழவுண்ணிபோலே பேரைச்சுமந்து காணவேணுமென்று கூப்பிடாநின்றேன்; அவ்விஷயத்தைக் கிட்டி தூஷிக்கப் பாராநின்றேன். [இதனின்மிக்கோரயர்வுண்டே] - இதுக்கு மேற்பட்ட அறிவுகேடு உண்டே? இப்போது அறிந்தேனாய் அத்தலைக்கு அவத்யத்தைப் பண்ணுகிற இதிற்காட்டில், முன்பு ஸம்ஸரித்துப்போந்த அறிவுகேடு நன்றாயிருந்தது! அன்று அவனை யழிக்கப் பார்த்திலேன். ஸம்ஸாரதஶையில் அஜ்ஞாநம் தன்னை யழிக்குமத்திறே; இது அவனை அழிக்குமத்திறே.

ஈடு.—ஏழாம்பாட்டு. 'நைவன்' என்றார்; இவரை நையக் கோடுக்கமாட்டாமையாலே வந்து முகங்காட்டினன்; அவனைப் பார்த்து, 'நம்மால் வரும் குணதிக்யமும் இவனுக்கு வேண்டா' என்று அகலுகிறார்.

[அடியேன் சிறியஞானத்தன்] - 'ஸம்ஸாரிகளில் அறிவுகேடர் ஸர்வஜ்ஞர்' என்னும்படிகிடீர்! என்அறிவுகேடு. 'அல்லேன்' என்று அகலுகிற இவர் 'அடியேன்' என்கிறது - வாஸனையாலே. அன்றிக்கே, 'அடியேன்' என்கிறது - அடிமைக்கு இசைந்தன்று; ஜ்ஞாநாநந்தங்களோபாதி நிரூபகமாக ஶேஷத்வத்தை ப்ரதிபத்தி பண்ணியிருக்கையாலே, 'அஹம்' என்றவோபாதி 'அடியேன்' என்கிறார். [சிறியஞானத்தன்] - அத்யல்பஜ்ஞாநத்தை யுடையவன். [அறிதலார்க்குமரியானை] - எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரா யிருப்பார்க்கும் அறியப்போகாதவனாயிற்று அவன். ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான தனக்கும் அறியப்போகாது; தனக்கும் தன்தன்மை அறிவரியானிறே. தம:ப்ரகாஶங்களுக்கு உள்ள சேர்த்தி போரும்கிடீர் எனக்கும் அவனுக்கும்! [கடிசேர்]- அறிவரிய வஸ்துவுக்கு அடையாளம் - திருத்துழாய்மாலை. நாட்செல்ல நாட்செல்லப் பரிமளமேறி வாராநின்றுள்ள திருத்துழாய்மாலையைப் புனைந்தவனை. [கண்ணனை] - அறிவரியனாயிருந்துவைத்து,

---

ஏழாம்பாட்டு. அடியேன் இத்யாதி. 'இதனின்மிக்கோரயர்வுண்டே' என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - நைவன் இத்யாதி. 'அடியேன் சிறிய ஞானத்தன்' என்று அயோக்யதாநுஸந்தாநம் பண்ணி அகலுகையாலே, முகங்காட்டினது ஸித்தம். நம்மால்வரும் குணதிக்யம் - அயோக்யரான நம்மை விஷயீகரிக்கையால் வரும் ஸர்வாதிகாரத்வரூபகுணதிக்யம்.

சிறுமையின் சரமாவதி - ஸம்ஸாரிகளில் இத்யாதி. ஸ்வஸம்பந்தம் அவனுக்கு அவத்யமென்று அகலுகிறவர் 'அடியேன்' என்று ஸம்பந்தந்தோற்றச் சொல்லுகிற தென்? என்ன, அல்லேனென்று இத்யாதி; ஶேஷத்வஜ்ஞாநவாஸனையாலே என்றபடி. இத்தால்பலிதம் - தம:ப்ரகாஶங்களுக்கு இத்யாதி. மேலுக்கு ஸங்கதி- அறிவரிய இத்யாதி. 'சேர்' என்கிற வர்த்தமாநார்த்தம் - நாட்செல்ல இத்யாதி. கடி - பரிமளம்,

இடையர்க்கும் இடைச்சிகளுக்குந் தன்னை எளியனுக்கிவைத்தவனை. [சேடியார் இத்யாதி] - சேடி - பாபம். ஆர்தல் - மிகுதி. பாபம் மிக்கிருக்கிற ஶரீரம். நோயேலாம் பெய்ததோராக்கை யிறே; "ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தியே" (ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தியே) என்று அவனையே உபாயமாகப் பற்றி, தூறுமண்டின ஶரீரத்தை அறுத்துக்கொள்ளும் அடியாருண்டே - கேவலர். அவர்களுக்கு அத்தைத் தவிர்த்துக்கொடுக்கும் ஸ்ரீமானை. அவர்கள் பின்னை அடியரோ? என்னில்,—'அடியாராவார் - அவர்களே' என்றிருக்கிறுர். என்றியவென்னில்; ஶேஷிக்கு அதிசயத்தை விளைக்குமவர்களிறே - ஶேஷபூதராகிறுர்; என்னைப்போலே கிட்டி அவனுக்கு அவத்யத்தை விளைக்கப் பாராதே, ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டு கடக்க நிற்கிறவர்களிறே. உமக்கு இப்போது வந்ததேன்? என்ன, [அடியேன்காண்பானலற்றுவன்] - 'அடியேன்' என்பது, 'காணவேணும்' என்பது ஆகாநின்றேன் நான். [இதனின்மிக்கோரயர்வுண்டே] - ஸம்ஸாரியான நாளில் அறிவே நன்றாயிருந்ததிறே. அது நன்றானபடியேன்? என்னில்;—அப்போது கடக்கநின்று பகவத்தத்த்வத்தைக் குறியழியாமை வைத்தேன்; இப்போதன்றே நான் கிட்டி யழிக்கப் பார்த்தது! இதிற் காட்டில் அறிவுகேடு உண்டோ? (எ)

## எட்டாம் பாட்டு.

உண்டாயுலகேழ்முன்னமே உமிழ்ந்துமாயையால்புக்கு
உண்டாய்வெண்ணெய்சிறுமனிசர் உவலையாக்கைநிலையெய்தி
மண்தான்சோர்ந்ததுண்டேலும் மனிசர்க்காகும்பீர்சிறிதும்
அண்டாவண்ணம்மண்கரைய நெய்யூண்மருந்தோமாயோனே!

ஆ.—(உண்டாய்.) இப்படி ஆழ்வார் தம்மை நிந்தித்துக்கொண்டு எம்பெருமானை அகல, அவனும் அநாலோசிதகுணகுணமாக ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக தாரகத்வமாகிற தன் ஸ்வரூபத்தைக் காட்டி இவரை ஸமாதாநம்பண்ணுகிறுன். அதிக்ஷுத்ரமநுஷ்ய ஸஜாதீயனுய் வந்து பிறந்தருளி, திருவாய்ப்பாடியிலே போய்ப்புக்கு, ஆய்ச்சியருடைய வெண்ணெயையும் நெய்யையும் அபிநிவேஶாதிஶயத்தினலே அவர்களுக்கு ஒன்றும் ஶேஷியாததொருபடி உண்டருளிற்று;பண்டு இந்த லோகங்களை உண்டுமிழ்ந்தருளுகிறபோது ஏதேனும் மண்தான் சேஷித்தது உண்டாகிலும்

---

கண்ணி-மாலை. பாபம் மிக்கிருக்கிற சரீரம் - பாபகார்யமான நோய் மிக்கிருக்கிற சரீரம். அப்படியிருக்குமோ? என்ன, நோய் இத்யாதி. திருமொழி-(௯,எ,எ)நோயெல்லாமிட்டுப் பண்ணினதொரு சரீரமென்றபடி. 'செடியாராக்கை' என்றதிக்கு அர்த்தாந்தரம் - ஜராமரணேத்யாதி; ஸ்ரீகீதாஸப்தஶதே - "ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே। தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்நமத்யாத்மம் கர்ம சாகிலம்". சேடி - தூறு, அவித்யாதிகள். அடியாரைச் செடியாராக்கை சேருதல் தீர்க்குந் திருமாலை என்று அந்வயிப்பது. அடியார்க்குச் செடியாராக்கையினுடைய சேர்தலை - சரீரஸம்பந்தத்தை, தவிர்த்துக் கொடுக்கும் ஸ்ரீமானை என்றபடி. ஐகாரம் - அவ்யயம்: அடியார்க்கு என்றபடி. தூறுமண்டுகை யாவது - மாறிமாறிப் பல பிறப்பைச் சொன்னபடி. என்றிய - எதுக்காக. திருமாலை-அதிகாரிசதுஷ்டயத்துக்கும் புருஷகாரம் அவர் ஜீயமிறே. அடியேன்காண்பானலற்றுவன் - 'அடியேன்' என்று அலற்றுவன், 'காணவேணும்' என்று அலற்றுவனென்றபடி. இது அயர்வாகில் நல்லவறிவுதான் எது? என்ன, ஸம்ஸாரியான இத்யாதி. குறியழியாமே - வ்யாஹதமாகாமே. க்ரமேண அந்வய:. (எ)

அந்த மண் கரைகைக்கு மருந்தாகவோ? அன்றிறே; ஆஶ்ரிதரோடு கலந்து பரிமாறியல்லது தரிக்கமாட்டாத தன்மையாகையாலே செய்தருளினபத்தனையிறே யென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், இப்படி ஆழ்வார் அகல, இவரைச் சேர்த்துக்கொள்ளுகைக்காக, ஆஶ்ரிதரோடே ஸம்ஶ்லேஷித்தல்லது தரிக்கமாட்டாத தன்னுடைய படியைக் காட்டியருளக் கண்டு விஸ்மிதராகிறார்.

[உண்டாய் என்று தொடங்கி] - இஜ்ஜகத்தையெல்லாம் பண்டே உன்திருவயிற்றிலே வைத்தாய்; அந்த லோகத்தை உமிழ்ந்து அதினுள்ளே உன்னுடைய அப்ராக்ருதமான திருமேனியை க்ஷுத்ரரான மநுஷ்யருடைய ஹேயதேஹங்களோடு ஸஜாதீயமாக்கிக்கொண்டு திருவவதாரம்பண்ணி அபிநிவேஶத்தாலே வெண்ணெயையுண்டாய். [மண்தானென்று தொடங்கி] - லோகங்களைத் திருவயிற்றிலே வைத்து உமிழுகிறபோது ஶேஷித்தது ஏதேனும் மண் உண்டாகிலும் அத்யல்பமும் மநுஷ்யருக்கு ஶேஷியாதபடி நெய்யூண் மண்கரைய மருந்தோ? அங்ஙனன்றே; ஆஶ்ரிதர் த்ரவ்யத்தை புஜித்தல்லது ஆத்மதாரணமில்லாமையென்று கருத்து. [பீர் சிறிதும் அண்டாவண்ணம்] - வைவர்ண்யம் ஒன்றுமின்றியே ஒழியும்படி. யென்னவுமாம். [மாயோனே] - நிரதிஶய ஆஶ்சர்யபூதனே!

ப.—அநந்தரம், இப்படி நிராஶராய் இவர் அகலத் தேட, 'நம்மோடு ஸம்பந்தமுடையாரைக் கைவிடோம்: அவர்களையொழிய நமக்குச் செல்லாது; இத்தால் வருவதொரு அவத்யமில்லை யென்னுமிடம் நம் அபதாநத்திலே கண்டுகொள்ளீர்' என்று ஈஶ்வரன் தன்னுடைய ஆஶ்ரிதவிஷய வ்யாமோஹத்தை ப்ரகாஶிப்பிக்கக் கண்டு ஸமாஹிதராகிறார்.

மாயோனே - (ஸர்வரோடும் ஸர்வப்ரகார ஸம்ஶ்லேஷம் பண்ணச்செய்தே அவத்யம் தட்டாத) ஆஶ்சர்யபூதனே! முன்னமே - முற்காலத்திலே, உலகுஏழ் - (ஒன்றுக்கொன்று பரிஹாரரூபமான) ஸமஸ்தலோகத்தையும், உண்டாய் - அமுதுசெய்தாய்; உமிழ்ந்து - (அத்தை நிஶ்ஶேஷமாக) உமிழ்ந்து, சிறுமனிசர் - அல்பரான மநுஷ்யருடைய, உவலை - ஹேயமான, ஆக்கை - ஶரீரத்தினுடைய, நிலை - நிலையை, எய்தி - அடைந்து, மாயையால் - க்ருத்ரிமத்தாலே, புக்கு - ப்ரவேஶித்து, வெண்ணெய் - வெண்ணெயை, உண்டாய் - அமுதுசெய்தாய்; இது மண்தான் - அக்காலத்திலே அமுதுசெய்த மண்ணிலேகதேஶம், சோர்ந்ததுஉண்டேலும் - சோர்ந்தது உண்டேயாகிலும், மனிசர்க்கு - மநுஷ்யர்க்கு, ஆகும் - உண்டாகக்கடவ, பீர் - வெளுப்பானது, சிறிதும் - அல்பமும், அண்டாவண்ணம் - கிட்டாவண்ணம், மண் - அந்தமண், கரைய - கரைகைக்கு, நெய்யூண் - (அவதாராந்தரத்தில்) நெய்யூண், மருந்தோ - மருந்தல்லவிறே. அதுவும், ஆஶ்ரித ரக்ஷணார்த்தமான ஸம்ஶ்லேஷம்: இதுவும், அவர்கள் வஸ்துவொழியச் செல்லாமையென்று கருத்து. பீர் - வெளுப்பு. வெண்ணெயும், நெய்யும் - பர்யாயம்.

இ.—எட்டாம்பாட்டில், இப்படி அகன்ற இவரைச் சேர்த்துக் கொள்ளுகைக்காக ஆஶ்ரிதரையொழியச் செல்லாத தன்படியைக் காட்ட, கண்டு விஸ்மிதராகிறார்.

[உண்டாயுலகேழ்முன்னமே] - லோகங்களேழையும் எடுத்து வயிற்றிலே வைத்தாய், முன்பு ஒரு காலத்திலே. வெண்ணெயமுதுசெய்தது மண்கரைய மருந்தாகில், ஸமகாலத்திலேயாகவேண்டாவோ? [உமிழ்ந்து] - ஒன்றும் ஶேஷியாதபடி "யதாவதுபபத்யதே" என்கிறபடியே லோகங்களை யுண்டாக்கி; ஶேஷிக்கிலன்றோ மருந்து செய்யவேண்டுவது; உண்கிறபோது ஶேஷித்தது உண்டாகிலிறே உமிழ்கிறபோதும் ஶேஷிப்பது. [மாயையால் புக்கு] - இச்சையாலே, இந்த லோகத்திலே. [சிறுமனிசர் உவலையாக்கைநிலை யெய்திப்புக்கு] - அப்ராக்ருதமான

திருமேனியை க்ஷுத்ரமநுஷ்யருடைய ஹேயஶரீரஸம்ஸ்த்தாநமாக்கிக்கொண்டு அவதரித்து. 'உவலையாக்கையெய்தி' என்னாதே, 'நிலையெய்தி' என்கையாலே - திவ்யஸம்ஸ்த்தாநத்தை இதர ஸம்ஸ்த்தாநமாக்கினா னென்கை. [உண்டாய்வெண்ணெய்] - ஈஶ்வரனாய்ப்புக்கு வெண்ணெயமுது செய்யவொண்ணாதே; அதுக்காக ஸஜாதீயனாய்ப் புக்கு அமுதுசெய்தாய்.மண்ணை அமுதுசெய்தது, அதின்ஸத்தைக்காக; வெண்ணெய்அமுதுசெய்தது, தன் ஸத்தைக்காக. [மண்தான் இத்யாதி] - மண்ணை அமுதுசெய்து உமிழ்கிறபோது அதில் சேர்ந்தது உண்டேயாகிலும். "யஶாவஶிஷ்ட போஜிநஃ" என்கையாலே ஶோஷிக்கைக்கு ப்ரஸங்கமில்லை யென்கை. [மனிசர்க்காகும்] - மநுஷ்யர்களுக்கு ப்ரயோஜநப்படுகைக்கு. பீரென்றும் - அல்பம், சிறிதென்றும் - அல்பம், அத்யல்ப மென்றபடி. அண்டாவண்ணம் - சேஷியாதபடி. நெய்யூண் மண்கரைய மருந்தோ? அன்றிறே; ஆஶ்ரிதர்உகந்ததொருத்ரவ்யத்தாலேயல்லது செல்லாமையிறே. ஶோஷித்தால் மருந்தாகாதோ? அன்றிக்கே, [மனிசர்க்காகும்பீர்] - மநுஷ்யருக்குவரும் வைவர்ண்யம். அத்யல்பமும் சேஷியாதபடி யென்னவுமாம். [மாயோனே] - ஆஶ்சர்யபூதனே! ஆஶ்ரிதஸ்பர்ஶ முள்ளதொரு த்ரவ்யமே தாரகமாயிருக்கிறதோ ராஶ்சர்ய மிருக்கிறபடியென்!

௯ஆ. --எட்டாம் பாட்டு. இவர் இப்படி அகலப்புக்கவாறே, 'இவர் துணிவு போல் லாதாயிருந்தது; இவரைப் பொருந்த விடவேணும்' என்று பார்த்து, 'வாரீர் ஆழ்வீர்! திருவாய்ப் பாடியில் வ்ருத்தாந்தங் கேட்டறியீரோ'? என்ன, 'அடியேன்அறியேன்'என்றார், அதுகேட்கையிலுண் டான ஶ்ரத்தையாலும், 'அவன்தான் அருளிச் செய்யக் கேட்கவேணும்' என்னும் ஶ்ரத்தையா லுமாக. 'முன்பு ஒரு காலத்திலே பூமியை யெடுத்து வயிற்றிலே வைத்தோம்; பின்பு அதுதன்னை வெளிநாடுகாண உமிழ்ந்தோம்; அதில் ஏதேனும் ஶோஷித்த துண்டாகக் கருதி, திருவாய்ப்பாடியில் வெண்ணெயை விழுங்கினேனுங்காணும்' என்ன, 'அது இதுக்குப் பரிஹாரமாகச் செய்தாயோ? அது ஒரு காலவிசேஷத்திலே: இது ஒரு காலவிசேஷத்திலே' என்ன, 'ஆனால், நாம் இது எதுக்காகச் செய்தோம்?' என்ன, 'ஆஶ்ரித ஸ்பர்ஶமுள்ள த்ரவ்யம் உனக்கு தாரகமாகையாலே செய்தா யத்தனை' என்ன, ஆனால், அவ்வெண்ணெயோபாதி உம்மோட்டை ஸம்ஶ்லேஷமும் நமக்கு தார கங்காணும்; ஆனபின்பு, நீர் உம்மைக்கொண்டு அகலுவீராகில், திருவாய்ப்பாடியில் வெண்ணெய் விலக்கினார் புக்க லோகம் புகுவீர்கிடீர்' என்றான். அவன் கருத்தைத் தாம் அறிந்தமை தோற்ற அநுபாஷிக்கிறார், இப்பாட்டில்.

[உண்டா யுலகேழ் முன்னமே] - லோகங்கள் ஏழையும் எடுத்து வயிற்றிலே வைத்தாய் முன்பு ஒரு காலத்திலே. [உமிழ்ந்து] - பின்னை அதுதன்னை வெளிநாடு காணஉமிழ்ந்து. [மாயை யால் புக்குஉண்டாய் வெண்ணெய்] - 'மாயாவயுநம்ஜ்ஞாநம்' (மாயாவயுநம்ஜ்ஞாநம்) என்கிற படியே இச்சாபர்யாயமா யிருக்கிற ஜ்ஞாநத்தாலே புக்குஉண்டாய் வெண்ணெய். அது செய்யுமிடத்தில் சக்ரவர்த்திதிருமகனாய்ப்புக்கு 'வெண்ணெ யமுதுசெய்ய' என்றால் கொடார்களே. [சிறுமனிசர் இத்யாதி] - க்ஷுத்ரரான மநுஷ்யர்களுடைய ஹேயமானஶரீரத்தினுடைய நிலையை அப்

---

எட்டாம்பாட்டு - உண்டாய் இத்யாதி. 'நெய்யூண்மருந்தோ' என்கையாலே - அவன் 'நெய்யூண் மருந்து' என்றானென்று தோற்றுகையாலே, ததநுகுணமாக அவதாரிகை-இவர்இப்படி இத்யாதி. அதுகேட்கை யில் இத்யாதி - விஷயவைலக்ஷண்யத்தாலும், உக்திவைலக்ஷண்யத்தாலு மென்றபடி. 'மாயோனே' என்றத் தைப்பற்ற - ஆஶ்ரிதஸ்பர்ஶம் புக்க லோகம்புகுவீர் - அகப்ஸிதம் செய்தீராவீர் இத்யாதி. 'நெய்யூண்மருந்தோ' என்றத்தைப்பற்ற - அவன் கருத்தைத் தாம் அறிந்தமை தோற்ற என்றது.

'மாயாவயுநம்ஜ்ஞாநம்' என்றது - வேதநிகண்டு. மேலுக்கு அவதாரிகை - அதுசெய்யு மிடத்தில் இத்யாதி. சிறுமனிச ருவலையாக்கைநிலையெய்தி மாயையாலே புக்கு வெண்ணெயுண்டாய்

ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்துக்கு உண்டாக்கிக் கோண்டுவந்தாயிற்று இப்படிச் செய்தது. *"கறையி ஞர் துவருடுக்கை" என்கிறபடியே இடையரளவிலே தன்னையமைத்து வந்து கிட்டியிறே வெண் ணெய் அமுது செய்தது; "[illegible]" (ஸபலம் தேவிஸஞ்ஜாதம்ஜாதோஹம்யத்தவோதராத்) என்று நிற்கச் செய்தேயிறே "[illegible]" (நைஷகர்ப்பத்வமாபேதேநயோங்யாமவஸத்ப்ரபுः) என் கிறது; இக்ஷ்வாகுவம்ஶ்யரிலே ஒருவன் யாகம்பண்ணுநிற்க, பிபாஸை வர்த்தித்தவாறே மந் த்ரபூதமான ஜலத்தைப் பாநம்பண்ண, கர்ப்ப முண்டாயிற்றது, ஶுக்ல ஶோணித ரூபத் தாலே பரிணதமாயன்றிறே; ஶக்த்யதிஶயத்தாலே இப்படி கூடக் கண்ட பின்பு, 'ஸர்வஶக்திக் குக் கூடாததில்லை' என்றுகோள்ளத் தட்டில்லையிறே. மண்ணை அமுதுசெய்தது - அதின் ஸத் தைக்காக; வெண்ணே யமுதுசெய்தது - உன் ஸத்தைக்காக. [மண்தானித்யாதி] - பூமியைத் திருவயிற்றிலே வைத்து உமிழ்ந்தபோது ஶேஷித்தது ஏதேனும் மண் உண்டாகிலும், பிற்பட்ட மநு ஷ்யர்க்கு அத்யல்பமும் ஶேஷியாதபடி நெய்யமுது செய்தது அதுக்கு மருந்தோ? ஒன்றும் ஶேஷி யாதபடி அமுது செய்யிலோ மருந்தாவது? அன்றிக்கே, 'பீர்' என்று - வைவர்ண்யமாய், மண் ணிலே சிறிது ஶேஷித்தால் மநுஷ்யர்க்கு வரக்கடவதான வைவர்ண்யம் சிறிதும் வாராதபடி நெய்யூண் மருந்தோ? அன்றிறே. ஆனால், எதுக்காகச் செய்தோம்? என்னில், [மாயோனே] -

---

இத்யந்வயः. உவலை - ஹேயம். எய்தியென்று - ஏறிட்டுக் கொண்டதுக்கு ப்ரமாணம் - கறையினார் இத்யாதி. காட்டில் பழம்பறித்திடக் கறை நிரம்பித் துவருட்டின உடைத்தோலையுடையவன். '[illegible]' என்று - கர்ப்பவாஸம் சொன்னபோதே, ஶுக்லஶோணிதபரிணதமான ப்ராக்ருத தேஹமாக வேண்டாவோ? 'அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்துக்கு உண்டாக்கி' என்னக்கூடுமோ? என்ன, "[illegible]" இத்யாதிः; [illegible] — "[illegible]" இதி [illegible]. [illegible] — "[illegible] ! [illegible]" இத்யாதி. "[illegible]" என்று யோநிநிஷ்க்ரமணாதி தோஷமில்லை யென்றபடி. கர்ப்பவாஸம் ஶுக்லஶோணிதபரிணதிவ்யாப்தமன்று என்னுமதுக்கு ஐதிஹ்யம் - இக்ஷ்வாகுவம்ஶ்யரிலே இத்யாதி. ஒரு வன் - மாந்தாதாவினுடைய பிதாவான யுவநாஶ்வன். ஆனால், அவனுக்கு ஶரீரம் வந்தவழி எது? என்ன, - ஶக்த் யதிஶயத்தாலே இத்யாதி; மந்த்ரஸாமர்த்த்ய வைபவத்தாலே யென்கை. "மாயோன்" என்றத்தைக் கடாக்ஷி த்து, கீழுக்கெல்லாம் தாத்பர்யம் - மண்ணையமுதுசெய்து இத்யாதி. முன்னமேயுலகேழுமுண்டுமிழ்ந்தாய்; சிறுமனிசருவலையாக்கை நிலையெய்தி, மாயையால்புக்கு வெண்ணெயுண்டாய்; மண்தான்சோர்ந்ததுண்டே லும், மண்கரைய, மனிசர்க்காகும் நெய்பீர் சிறிதும் அண்டாவண்ணம் ஊண்மருந்தோ? என்று அந்வயித்து அரு ளிச்செய்கிறார்-பூமியை இத்யாதி. 'பீர்' என்றும், 'சிறிது' என்றும் அல்பமாய், அத்யல்பமாய் என்றபடி. திரு வயிற்றிலே கிடந்த பூமியை உமிழ்கிறபோது ஶேஷிக்கிலன்றோ மருந்து வேண்டுவது? அத்தை நிஶ்ஶேஷ மாக உமிழ்கையாலே ஶேஷித்ததுண்டாகக் கூடாது, அப்படி கூடிற்றாகிலுமென்று - 'உண்டேலும்' என்கிற யதிஶப்தத்துக்கு அர்த்தம். 'பீர் சிறிது மண்டாவண்ணம்' என்றதுக்கு ஹாவம் - ஒன்றும் இத்யாதி. த்விதீய யோஜனைக்கு, மனிசர்க்காகும் பீர் சிறிதும் அண்டாவண்ணம் நெய்யூண் மண்கரையமருந்தோ? என்று அந்வயம். 'அன்றிறே' என்றதுக்குக் கருத்து - அது ஒரு காலத்திலே தேவஜாதீயனாய் மண்ணுண்டதுக்கு, இக்காலத் திலே மநுஷ்யஜந்மத்திலே வெண்ணெயுண்டது மருந்தோ? என்கை. 'முன்னம்' என்றும், 'மனிசர்க்கு' என்றும் இருக்கையாலே - ப்ரதிகோடித்வேந காலாந்தரத்வமும் தேவத்வமும் விவக்ஷிதம். நெய்யும், வெண்ணெ யும் பர்யாயம். மாயோனே - ஆஶ்சர்யகுண சேஷ்டிதனே! மனிசர்க்காகும் நெய் - மனிசர்க்கு விநியோகப் படுகிற நெய் யென்று ஶப்தார்த்தம். த்விதீயயோஜனையில், மனிசர்க்காகும் பீர் - மனிசர்க்கு உண்டாகக் கடவ வெளுப்பு இதி ஶப்தார்த்தः. பீர் - வெளுப்பு. மாயோனே, முன்னமே யுலகேழுமுண்டாய்; உமிழ்ந்து, சிறு

---

* திருவாய்மொழி. ௪ - ௮ - ௪.

ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தா லல்லது தாரக மில்லாதபடியான ஆச்ரிதவ்யாமோஹத்தாலே செய்தா யித்தனை யன்றோ ? (அ)

## ஒன்பதாம் பாட்டு.

மாயோம்தீயவலவலைப் பெருமாவஞ்சப்பேய்வீயத்
தூயகுழவியாய் விடப்பாலமுதாவமுதுசெய்திட்ட
மாயன் வானோர்தனித்தலைவன் மலராள்மைந்தன் எவ்வுயிர்க்கும்
தாயோன்தம்மானேன்னம்மான் அம்மாமூர்த்தியைச்சார்ந்தே.

ஆ.—(மாயோம்.) ஸர்வேச்வரனை அயர்வறுமமரர்க ளதிபதியாயிருந்து வைத்து, ஆச்ரிதபரித்ராணார்த்தமாக ஸ்வாஸாதாரண திவ்யரூபத்தோடே வந்து பிறந்தருளி, ஆச்ரித விரோதிநிரஸநைக ஸ்வபாவனை, அநாலோசிதகுணதோஷமாக ஸமஸ்தாச்ரிதஜநபரித்ராணைக தாரகனை, அதவுவ எனக்கு ஸ்வாமியாயிருந்த எம்பெருமானுடைய இந்த ஆச்ரித ஸம்ச்லேஷைகதாரகத்வ ஸ்வரூபஸித்த்யர்த்தம் அவனைப்பற்றி, பின்னை ஒருகாலமும் விடே னென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், 'பரிவரான யசோதாதிகளுடைய வெண்ணெய் உனக்கு அம்ருதஸமம்; என்னுடைய ஸ்பர்சம் உனக்கு நஞ்சோடொக்கும்: நான் அகலுகையே யுக்தம்' என்று ஆழ்வார் விண்ணப்பஞ்செய்ய, 'பூதனைநஞ்சு ஸாத்யகமன்றிக்கே யொழிந்தாற்போலே உம்முடைய தோஷம் ஸாத்யகமன்று' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'அங்ஙனேயாகில் அகல்வேனல்லேன்' என்று ஸமாஹிதராகிறார்.

[மாயோமென்று] - மாயக்கடவோமல்லோம்; [தீயவலவலையென்று தொடங்கி]-பொல்லாத நெஞ்சையுடையளாய்வைத்து யசோதைப்பிராட்டியைப்போலே மிகவும் புகழாநின்றதுஞ் செய்து ஈச்வரனை தனக்கும் இன்னளென்று தெரியாதபடி மிருந்திருந்த வஞ்சனையையுமுடையளாயுள்ள பூதனை முடியும்படி ஈச்வரத்வஜ்ஞாநங் கலவாதபடி வெறும்பிள்ளையாயிருக்கச் செய்தே நச்சுப்பாலே அம்ருதமாம்படி அமுதுசெய்து நம்மை உளோமாக்கின ஆச்சர்யபூதன். [வானோர்தனித்தலைவ னென்று தொடங்கி]-அயர்வறுமமரர்களுக்கு அத்விதீயனை அதிபதியுமாய் ஸ்ரீய:பதியுமாய் எல்லாவுயிருக்கும் தாய்போலே பரிவனுமாய் ஸர்வேச்வரனுமாய்வைத்துத் தன்னுடைய குணவத்தையைக் காட்டி என்னை அடிமைகொண்ட பெரியோனைப்பற்றி.

ப.—அநந்தரம், ஸர்வாத்மவத்ஸலனை ஸ்வாமியைக் கிட்டி உஜ்ஜீவிக்கக்கடவோமென்கிறார்.

தீய - கொடிய நினைவையுடையளாய், அலவலை - வாய்பாறியேத்துமவளாயுள்ள, பெரு - அளவிறந்து, மா - பெருத்த, வஞ்சம் - வஞ்சநத்தையுடையளான, பேய் - பேய்ச்சி, வீய - முடியும்படி, தூய - புரையற்ற, குழவியாய் - பிள்ளைத் தனத்தையுடையனை, விடப்பால் - விஷங்கலந்தபால், அமுதா - அம்ருதமாம்படி, அமுதுசெய்திட்ட - அமுதுசெய்த, மாயன் - ஆச்சர்யஸ்வபாவனை, வானோர் - நித்யஸூரிகளுக்கும், தனித்தலைவன் - அத்விதீயநிர்வாஹகனை,

---

மனிச ருவலையாக்கை நிலை யெய்தி, மாயையாற்புக்கு வெண்ணெயுண்டாய் ; மண்தான் சோர்ந்ததுண்டேலு மென்று தொடங்கி, நெய்யூண்மருந்தோ இத்யாதி. (அ)

மலராள் - தாமரையைப் பிறப்பிடமாகவுடைய லக்ஷ்மிக்கு, மைந்தன்-போக்யமான யௌவநத்தை யுடையனாய், எவ்வுயிர்க்கும் - ஸர்வாத்மாக்களுக்கும், தாயோன் - மாத்ருவத் வத்ஸலனாய், தம்மான் - தனக்குத்தானே ஈஶ்வரனாய், என் அம்மான் - என்னையகலாம லாகவிட்ட ஸ்வாமியாய், அம்மா மூர்த்தியை - (அதுக்கடியான) விலக்ஷணவிக்ரஹத்தை யுடையவனை, சார்ந்து - கிட்டி, மாயோம் - இரண்டுதலையையும் முடித்துக்கொள்ளக் கடவோமல்லோம். பிரியாதிருக்க, இரண்டு தலையும் ஸத்தை பெறு மென்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், 'பரிவரான யஶோதாதிகள் வெண்ணெய் உனக்கு அம்ருதஸமம், என்னுடைய ஸ்பர்ஶம் விஷஸமம்: நான் அகலுகையே யுக்தம்' என்ன, 'பூதனை நஞ்சு பாதகமாகாதாபோலே உம்முடைய தோஷமும் பாதகமன்று; 'பெற்றதாய்போல் வந்த பேய்ச்சி' என்று போலியும் அமையும்' என்ன, 'ஆகில் அகல்வே னல்லேன்' என்று ஸமாஹிதராகிறார்.

[மாயோம்] - இரண்டு தலையையும் அழித்துக்கொள்ளக் கடவோமல்லோம்; பிரிகையென்றும், மாய்கையென்றும் பர்யாயம். [தீய] - தீமையாவது - நெஞ்சில் திண்மை. [அலவலை] - யஶோதைப்பிராட்டியைப்போலே பரிவுதோற்ற ஏத்திக்கொடு வருகை. பெரியவஞ்சம், மாவஞ்சம் இரண்டாலும் ஆதிக்யமேயாய், அறமிக்க வஞ்சநத்தை யுடையவள். ஈஶ்வரனும் 'தாய்' என்று ப்ரமிக்கும்படி மறைத்துக்கொடுவருகை. [வீய] - முடிய. [தூயகுழவியாய்] - ஈஶ்வரத்வம் நடையாடாதபடியான பிள்ளைத்தனத்தில் ஶுத்தி. அடியறிவார் 'நீ ஈஶ்வரன்' என்றால் "ஆத்மாநம் மாநுஷம் மந்யே", "ஸஹம்வ:" இத்யாதி யென்னும்படியாயிருக்கை. [விடப்பாலமுதா அமுதுசெய்திட்ட] - இவன் பிள்ளைத்தனத்திற் குறைவில்லையாகில், பின்னை அதின்காரியம் காணாதொழிவானென்? என்னில்,—விஷம் அம்ருதமாம் முஹூர்த்தத்திலேயாயிற்றுப் பிறந்தது. தர்மியை வேறொன்றாக்க வொண்ணாமையாலே, விரோதித்த ஆஸுரப்ரக்ருதிகள் முடிய ப்ராப்தம். [மாயன்] - விஷம் அம்ருதமாம்படி அமுதுசெய்து, தன்னைத்தந்து நம்மை உண்டாக்கின ஆஶ்சர்யபூதன். இப்படி பூதனையுடைய வஞ்சநத்திலே அகப்பட்டிருக்கிறவன் தான் ஆர்? என்னில், [வானோர் தனித்தலைவன்] நித்யஸூரிகளுக்கு அத்விதீயனான நிர்வாஹகன். த்ரிபாத்விபூதியாகப் பரிந்துநோக்க இருக்கிறவன்கிடீர், பூதனை கையிலே அகப்பட்டிருக்கிறவன். [மலராள் மைந்தன்] - நித்யஸூரிகள் ஜீவந மிருக்கிறபடி. மைந்தன் - நித்ய யௌவநஸ்வபாவன். [எவ்வுயிர்க்குந் தாயோன்] - நித்யஸூரிகள்பக்க லிருக்கும் இருப்பு ஸகலாத்மாக்கள் பக்கலிலும் ஒத்திருக்குமவன். ஸகலாத்மாக்களுக்கும் தாய்போல் பரிவனானவன். [தம்மான்] - இந்த வாத்ஸல்யத்துக்கு அடியான ஸம்பந்த மிருக்கிறபடி. தம்மான் - ஸர்வேஶ்வரன். [என் அம்மான்] - நித்யஸூரிகளும் மற்றுமுள்ள ஸகலாத்மாக்களும் ஒரு தட்டும், நான் ஒருதட்டுமாம்படி என்பக்கலிலே விசேஷ கடாக்ஷத்தைப் பண்ணினவன். [அம்மாமூர்த்தியைச் சார்ந்தே] - புருஷோத்தமனைக் கிட்டியே மாயக்கடவோமல்லோம். விலக்ஷணமாய்ப் பூஜ்யமான திருமேனியை யுடையவன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'திருவாய்ப்பாடியில் யஶோதாதிகள் வெண்ணெயோபாதி, தாரகங்காணும், நீர் தண்ணிதாக நினைத்திருக்கிற உடம்பு' என்றான்; 'ஹாவபாவமுள்ளவர்களுடைய வெண்ணெய் உனக்கு தாரகம்; அதில்லாத என்னோட்டை ஸ்பர்ஶம் உனக்கு நஞ்சு' என்றார்; 'நஞ்சோ தான், நஞ்சானமை குறையில்லையே?' என்றான் அவன்; இவரும் 'இது நஞ்சே, இதுக்கோரு குறையில்லை' என்றார்; 'ஆனால், பூதனையுடைய நஞ்சுபாரகமான நமக்கு ஆகாததில்லைகாணும்' என்றான், என்னப் பொருந்துகிறார். அன்றிக்கே, பூதனையை முடித்

---

ஒன்பதாம்பாட்டு - மாயோம் இத்யாதி. இதுக்குக் கீழிற் பாட்டோடே ஸங்காஸோபாநமாக வெண்ண முந்தின அவதாரிகை. இரண்டாவது - கீழிற்பாட்டிலே சேரவிட்டமையை வித்தவத்கரித்து, த்ருஷ்

தாற்போலே 'நான் அல்லேன்' என்று அகலப்புக்க என் நிர்ப்பந்தத்தைப் போக்கினன்' என்பாரு முண்டு.

[மாயோம்] - 'பிரிகையாவது - விநாஶம்' என்று இருக்கையாலே, இனி அகன்று மாயக்கடவோமல்லோ மேன்கிறார். நானும் என்னோடு ஸம்பந்த முடையாரும் முடியக்கடவோ மல்லோம். அன்றியே, இரண்டு தலையையு மழித்துக்கொள்ளக்கடவோமல்லோம். [தீய இத்யாதி] - "ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:" (ஸ்தந்யந்தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:) என்கிறபடியே ஜகத்துக்கு வேர்ப்பற்றானவனை முடிக்கப்பார்த்த நெஞ்சில் தீமையையுடையளாய், யசோதைப்பிராட்டியைப்போலே பரிவுதோற்ற ஜல்பித்துக்கொண்டு வருவாளாய், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனானவனும் 'தாய்' என்று ப்ரமிக்கும்படி தோற்றின மஹாவஞ்சகையான பூதனை முடியும்படியாக. [தூயகுழவியாய்] - ஐஶ்வரமான மேன்மையும் நடையாடாநிற்கச் செய்தே, அது தோற்றாதபடி கலப்பற்ற பிள்ளைத் தனத்தை யுடையனாய். இவனுக்குப் பிள்ளைத்தனத்தில் குறையில்லையாகில், அதின்கார்யம் காணாதொழிவானேன் ? என்னில்,— [விடப்பாலமுதா] - விஷம் அம்ருதமாம் முஹூர்த்தத்திலே யாயிற்று பிறந்தது. தார்மியை வேறுக்க வொண்ணாமையாலே விரோதித்த ஆஸுரப்ரக்ருதிகள் முடிய ப்ராப்தம். [மாயன்] - விஷம் அம்ருதமாம்படி அமுது செய்து தன்னைத் தந்து நம்மையுண்டாக்கின ஆஶ்சர்யபூதன். *('எனக்குமல்ல, பிறர்க்குமல்ல, அவனுக்கே' என்று அவள் அநந்யார்ஹமாக்குகையாலே அம்ருதமாயிற்று.) பூதனையுடைய விஷம் அம்ருதமாம்படி அமுதுசெய்தவன்தான் ஆர் ? என்னில், - [வானோர்தனித்தலைவன்] - அயர்வறுமமரர்களுக்குத் தனித்தலைவனானவன். [மலராள்மைந்தன்] - அவர்கள் பரிந்து பரிசர்யைபண்ண, பெரியபிராட்டியாருந் தானுமா யிருக்குமவன். † "தேவிமாராவார் திருமகள் பூமி யேவ மற்றமரராட்செய்வார்" என்கிறபடியே. [மைந்தன்] - அவளுக்கு மிடுக்கானவன்; அவளோட்டைச் சேர்த்தியாலே நித்யமான நவயௌவநத்தையுடையவனென்னுதல். *(அவளோட்டைச் சேர்த்தியாலே அழகியமணவாளப்பெருமாளா யிருக்கிறவனென்னுதல்.) [எவ்வுயிர்க்குந்தாயோன்] - ஸகலாத்மாக்களுக்கும் தாய்போலே பரிவனானவன். [தம்மான்] - ஸர்வேஶ்வரன். [என் அம்மான்] - நான் தன்னை அகன்று முடிந்து போகாதபடி நோக்கினவன். நித்யஸூரிகளும் மற்றுமுள்ள ஸகலாத்மாக்களும் ஒரு தட்டும், நான் ஒருதட்டுமாம்படி என்பக்கலிலே

---

*டாந்தபரம். ப்ரதமாவதாரிகைக்கு - "விடப்பாலமுதா" என்றதிலேயும், த்விதீயாவதாரிகைக்கு-"வஞ்சப்பேய்" என்றதிலேயும் நோக்கு.*

*பிரியோம் என்னாதே, "மாயோம்" என்கிறதென் ? என்ன, பிரிகையாவது இத்யாதி. "மாயோம்" என்கிற பஹுவசநார்த்தம் - நானும் இத்யாதி. தீமைக்கு பாவம் - ஸ்தந்யம் இத்யாதி. ஹரிவம்ஶே வஞ்சிதம் - "தஸ்யா ஸ்தநம் வவௌ க்ருஷ்ண: ப்ராணைஸ்ஸஹ ஜநார்த்தந: । ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம்" இத்யாதி. அலவலை - பஹுஜல்பம். "பெருமாவஞ்சம்" என்றது - மிகவும் வஞ்சகையென்றாய், அதனெல்லை அருளிச்செய்கிறார்-ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனுமாய் இத்யாதி. அதின் கார்யம் - விஷத்தின் கார்யமான மரணம். "தூயகுழவி" என்றுவைத்து, "விடப்பாலமுதா" என்றதின் தாத்பர்யம் - விஷம் அம்ருதமாம் இத்யாதி. ஆனால், பூதனை முடியும்படி யென் ? என்ன, - தார்மியை இத்யாதி. வஸ்து ஸ்வரூபத்தாலே முடிந்தா ளென்றபடி. "அமரர்களமுதே யசுரர்கள் நஞ்சே" என்றன்றோ தார்மிஸ்வரூப மென்று கருத்து. நம்மை - நம்ஸத்தையை. தனித்தலைவன் - அத்விதீயநாயகன். மைந்தென்று - மிடுக்காதல், யௌவநமாதல். உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் - தேவிமார் இத்யாதி. தனக்குத் தகுதியான தேவிமாராவார் - லக்ஷ்மியும் பூமிப்பிராட்டியும்; அவர்கள் முகத்தாலே நீயேவ அடிமைசெய்வார் மற்றமரர் - அவர்களோடு துல்யமாக விகல்பிக்கலாம்படி யிருக்கிற நித்யஸூரிகள். "வானோர் தனித்தலைவன்" இத்யாதியைக் கடாக்ஷித்து அர்த்தாந்தரம்- நித்யஸூரிகளும் இத்யாதி. மூர்த்திஶப்தம் - விக்ரஹத்துக்கும், ஸ்வாமிக்கும் வாசகமாகையாலே இரண்டை*

---

* குண்டலிதம், ப்ரக்ஷிப்தம் என்பர். † திருவாய்மொழி, அ - க - க.

விசேஷகடாக்ஷத்தைப் பண்ணினவ னென்றுமாம். [அம்மாமூர்த்தியைச் சார்ந்தே] - விலக்ஷண மான திருமேனியையுடைய அம்மஹாபுருஷனைக் கிட்டி மாயக்கடவோமல்லோம். (௯)

## பத்தாம் பாட்டு.

சார்ந்தவிருவல்வினைகளுஞ்சரித்து மாயப்பற்றறுத்துத்
தீர்ந்துதன்பால்மனம்வைக்கத் திருத்திவீடுதிருத்துவான்
ஆர்ந்தஞானச்சுடராகி அகலங்கீழ்மேலளவிறந்து
நேர்ந்தவுருவாயருவாகும் இவற்றினுயிராம்நெடுமாலே.

ஆ.—(சார்ந்த.) இப்படி என்னுடைய நிகர்ஷத்தைப் பாராதே என்பக்கலுள்ள ஸ்வஸம்ஶ்லேஷவிரோதியான மஹாபாபங்களெல்லாவற்றையும் போக்கி, பாபநிபந்தநமான ப்ராக்ருதவிஷயஸங்கத்தையும் போக்கி, ப்ராப்யமும் ப்ராபகமுந் தானேயென்னும் வ்யவஸாயபூர்வகமாக அநவரதஸ்வாநுஸந்தாநைக போகனும்படி என்னைத் திருத்தி, பின்னை எனக்குத் திருநாட்டை யும் தந்தருளுகைக்காக ஆகுவதே, எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ பரமகாருணிகத்வ ஆஶ்ரிதவத்ஸலத்வ மென்ற இப்படி அபர்யந்தகுணங்களெல்லா மென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், அடிமைசெய்கையிலே உந்முகராம்படி பண்ணித் தம்மைத் திருநாட்டிலே கொண்டுபோக உத்யோகியாநின்றுள்ள எம்பெருமானுக்குத் தம்பக்கலுண்டான வ்யாமோஹத்தைப் பேசுகிறார்.

[சார்ந்தனன்று தொடங்கி] - ஆத்மாவோடு அவிநாபூதமான புண்ய பாபரூபங்களான கர்மங்களை அநாயஸேந போக்கி விஷயங்களிலுள்ள ருசி வாஸனைகளை அறுத்து அத்தாலே க்ருதக்ருத்யனாய், தன்னுடைய ஸௌந்தர்யாதிகளைக் காட்டித் தன்பக்கலிலே மநஸ்ஸு ப்ரவணமாம்படி பண்ணி. 'தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி' என்றத்தால் - அநந்ய ப்ரயோஜநனாய்க் கொண்டு தன்பாடே மநஸ்ஸை வைக்கும்படி திருத்தி யென்றுமாம். [வீடுதிருத்துவான்] - ஆழ்வார் எழுந்தருளுகிற மஹோத்ஸவத்துக்குத் திருநாடு கோடிக்கத் தொடங்கினான். பரிபூர்ண ஜ்ஞாநப்ரபனாய், ஸர்வகதனாய், அதிஸூக்ஷ்மமான சேதநாசேதநங்களுக்கு ஆத்மாவாய் ஆஶ்ரித விஷயத்தில் நிரதிஶய வ்யாமோஹத்தை யுடையவன். ஆழ்வாரை இப்படி திருத்துகைக்காக வ்யாப்தனா யிருந்தா னென்றும், அவரைப் பெற்றபின்பு வ்யாப்தி பூர்ணமாயிற்றென்றும் வ்யாப்திக்கு ப்ரயோஜநஞ் சொல்லுவர்.

ப.—அநந்தரம், இவர் இப்படி ஸமாஹிதரானபடியைக் கண்டு, ப்ரீதனான ஈஶ்வரனுடைய உபகாரத்தில் பாரிப்பைக் கண்டு ஹ்ருஷ்டராகிறார்.

---

யும் தத்ரேண அருளிச்செய்கிறார், விலக்ஷணமான இத்யாதி. அம்மா மூர்த்தியை - அந்த விலக்ஷண விக்ரஹ யுக்தனையென்றும், அந்தமஹாபுருஷனையென்றும் ஶப்தார்த்தம். தச்சப்தத்தால் வந்த ப்ரஸித்தி - விக்ரஹத்திலும், புருஷனிலு மென்று கண்டு கொள்வது. ஸஹஸ்ரஶீர்ஷத்வாதி விஶிஷ்ட விக்ரஹயுக்தனாகவும், "வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்று மஹாபுருஷனாகவும், ஸ்ரீ புருஷ ஸூக்தாதிகளிலே அவனுக்கு ப்ரஸித்தியுண்டிறே. தீயவல்லவல்ல யென்றுதொடங்கி, அம்மாமூர்த்தியைச் சார்ந்து மாயோம் இத்யந்வயஃ. (௯)

ஆர்ந்த - (யாவதாஸ்ரயம்) பரிபூர்ணமான, ஞானச்சுடர் ஆகி - ஸ்வயம்ப்ரகாஸஜ்ஞாநப்ரபையையுடையனுய்க்கொண்டு, அகலம் - சுற்றும், கீழ் - கீழும், மேல் - மேலுமான (பத்துத்திக்கிலும்), அளவிறந்து-அபரிச்சிந்நஸ்வரூபனுய், நேர்ந்த-அதிஸூக்ஷ்மமான, உருவாய் அருவாகும்-அசித்தும் சித்துமாகிற, இவற்றின்-இவற்றுக்கு, உயிர் ஆம் - அந்தராத்மாவாய், நெடுமால் - (என் பக்கலிலே) நிரவதிகவாத்ஸல்யத்தையுடையவன், சார்ந்த - (என்னேடு) பொருந்தி, இரு - (புண்யபாபரூபேண) இரண்டுவகையான, வல் - துர்மோசமாயுள்ள, வினைகளும் - கர்மங்களையும், சரித்து-(ஒன்றெழியாமல் ஒருகாலே) தள்ளி, மாயம் - அஜ்ஞாநகார்யமான, பற்று - விஷயஸங்கத்தையும், அறுத்து - அறுத்து, தீர்ந்து - (அநந்யப்ரயோஜந) வ்யவஸாயத்தை யுடையேனுய்க்கொண்டு, தன்பால் - தன்னிடத்திலே (அநுபவார்த்தமாக) மனம் - நெஞ்சை, வைக்க - ப்ரதிஷ்டிதமாக்கும்படி, திருத்தி - (என்னை) நன்ருகப்பண்ணி, வீடு - (எனக்குத்தருவதான) மோக்ஷஸ்த்தலத்திலும், திருத்துவான் - ஒருபுதுமை செய்யாநிற்கும். இங்குச்சொன்ன உபயவ்யாப்தியும் தமக்காகவென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், 'மாயோம்' என்றவாறே ஹ்ருஷ்டனுய், அடிமைசெய்கையிலே உந்முகராம்படி, தம்மை 'அயோக்யன்' என்று அகலாத தேசத்தேறக் கொடுபோவதாகப் பரமபதத்தைக் கோடிக்கத் தொடங்கின னென்கிருர்.

[சார்ந்த] - இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுபந்தியோ வென்னலாம்படி பொருந்தியிருக்கை. [இருவல்வினைகளுஞ் சரித்து] - இருவகைப்பட்ட புண்யபாபரூபமான கர்மங்களை விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே அநாயாஸேந போக்கி. [வல்வினை] - ஸர்வஸக்தியானவனும் அநுஸந்தித்தால் நெஞ்சு உளுக்க வேண்டும்படி யிருக்கை. [சார்ந்த] - எள்ளும் எண்ணெயும் போலே சேர்ந்திருக்கை. [மாயப்பற்றறுத்து] - விஷயங்களில் ருசிவாஸனைகளைப் போக்கி. மாயை-அஜ்ஞாநம்; அத்தாலே - ருசியை நினைக்கிறது. பற்று - வாஸனை. [தீர்ந்து] - க்ருதக்ருத்யனு யென்னுதல், அநந்யப்ரயோஜநனு யென்னுதல். [தன்பால் மனம்வைக்கத்திருத்தி] - விரோதியைப் போக்குமளவன்றிக்கே மநஸ்ஸுக்குத்தானே விஷயமாம்படிபண்ணி. [வீடு திருத்துவான்] - பரமபதத்தைக் கோடிக்கத் தொடங்குவான். அதாகிறது - ஆழ்வார் எழுந்தருளுகிற மஹோத்ஸவத்தாலே ஒருபுதுமைதோற்றியிருக்கை. [ஆர்ந்தஞானச்சுடராகி] - பரிபூர்ணஜ்ஞாந ப்ரபனுய். [அகலங்கீழ்மேலளவிறந்து] - பத்துத்திக்கையும் வ்யாபித்து ஸர்வகதனு யென்றபடி. [நேர்ந்த உருவாய் அருவாம் இவற்றினுயிராம்] - அதிஸூக்ஷ்மமான சேதநாசேதநங்களாகிற இவற்றுக்கு அந்தராத்மாவாய். இப்போது வ்யாப்தி சொல்லுகிறதென்? என்னில், - ஒருவனைப் பிடிக்கைக்காக ஊரைவளைவாரைப்போலே, இவரை அகப்படுத்துகைக்காக வ்யாப்தனுகிறது. அன்றியே, இவர் கிட்டினபின்பு வ்யாப்தியும் ஸப்ரயோஜநமாயிற் றென்னவுமாம். [நெடுமாலே]-என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தை யுடையவன். இவர்பக்கல் பண்ணின வ்யாமோஹம் முனியேநான்முகனளவும் செல்லுகிறதாயிற்று; அவன் தெளிந்துவந்து முகங்காட்டி க்ரமத்தாலே கொடுபோகப்பற்றுத கலக்கத்தின் காரியம் நடுவடைய. [நெடுமால்]-வீடுதிருத்தும் ஸ்வபாவ னென்று அந்வயம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவரை இப்படி இசைவித்துவைத்து, ஒரு புதுமை செய்ய வேண்டாதபடியான பரமபதத்தைக் கோடிக்கத் தொடங்கினன்.

[சார்ந்தவிருவல்வினைகளும் சரித்து] - "திலதைலவத்தாருவஹ்நிவத்" (திலதைலவத்தாருவஹ்நிவத்) என்கிறபடியே பிரிக்கவொண்ணுதபடி பொருந்திக்கிடக்கிற புண்யபாப

---

பத்தாம்பாட்டு-சார்ந்த இத்யாதி. "தீர்ந்து தன்பால் மனம்வைக்கத்திருத்தி வீடுதிருத்துவான்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-இவரை இத்யாதி. புதுமை-நூதநமான அதிஸயம். கோடிக்க-அலங்கரிக்க. கூடின என்னுதே, "சார்ந்த" என்றதுக்கு ஸாவம் - திலதைலவத் இத்யாதி. ஸ்ரீராமடெ

ரூபகர்மங்களையும் சரித்து ஸர்வஶக்தியான தான் போக்குமன்றும் போக்கவொண்ணுதபடி ஶத ஶாகமாகப் பணைத்த வினைகளை, விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே போக்கி. [மாயப்பற்றறுத்து] - ருசிவாஸனைகளையும் கழித்து. [தீர்ந்து] - தான் க்ருதக்ருத்யனு யென்னுதல்; அன்றிக்கே, [தீர்ந்து தன்பால் மனம்வைக்கத் திருத்தி] - 'அல்லேன்' என்று அகலாதே தனக்கே தீர்ந்து, தன் பக்கலிலே நெஞ்சை வைக்கும்படி திருத்தி. [வீடுதிருத்துவான்]-கலங்காப்பெருநகரத்துக்கும் ஒரு புதுமை பிறப்பியாநின்றான். [ஆர்ந்த ஞானச் சுடராகி] - பரிபூர்ணஜ்ஞாந ப்ரபனுய். [அகலம் கீழ்மேலளவிறந்து] - பத்துத் திக்கிலும் வ்யாபித்து. [நேர்ந்த வுருவாயருவாகு மிவற்றினுயிராம்] - அதிஸூக்ஷ்மமான சேதநா சேதநங்களுக்கும் ஆத்மாவா யிருக்கிற, அன்றிக்கே, நேர்ந்த - கிட்டின; அதாவது - ப்ரத்யக்ஷபரித்ருஷ்டமான ப்ரக்ருத்யாத்மாக்களுக்கும் ஆத்மாவா யென்றுமாம். [நெடுமால்] - இப்படி யிருக்கிற நெடுமால் வீடு திருத்துவானுனன். வ்யாப்தியும் இவரைப் பெற்றபின்பு புதுக்கணித்த தென்னுதல்; அன்றியே, ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரைவளைவாரைப்போலே, இவரைத் திருத்துகைக்காக வ்யாப்தனுயிருந்தா னென்னுதல். [நெடுமாலே] - முனியே நான்முகனளவும் அவன் பண்ணின உபகாரத்தைச் சொல்லுகிறது. அவன் தெளிந்துவந்து கோடுபோகப் பற்றுமே கூப்பிடுகிறுரிறே நடுவெல்லாம்.

---

"[illegible]". வன்மைக்கு பாவம்-ஸர்வஶக்தி இத்யாதி. தள்ளி என்னுதே, "சரித்து" என்றதுக்கு பாவம் - விரகர் இத்யாதி. விரகர் - உபாயவான்கள். "மாயம்" என்று - ருசிரூபஜ்ஞாநம். 'பற்று' என்று - வாஸனை. தன்பால் - தன்பக்கலிலே. வீடுதிருத்துவான்- வீடுதிருத்துவானுனன் என்றபடி. கலங்காப் பெருநகரம் - விகாரமில்லாத மஹாநகரம். "நேர்ந்தவுருவாயருவாகும்" என்று - காரணவஸ்த்த ஸூக்ஷ்ம சிதசித்வஸ்து வ்யாப்தியைச் சொன்னபோது, 'அகலங்கீழ்மேலளவிறந்து' என்று - கார்யாவஸ்த்தவ்யாப்திபரம். நேர்மை - ஸௌக்ஷ்ம்யம். உரு - ப்ரக்ருதி. அரு-சேதநன். யத்வா, அகலம் இத்யாதி - பஹிர்வ்யாப்தி. நேர்ந்த இத்யாதி - அந்தர்வ்யாப்தி யென்னவுமாம். நெடுமால் - ஸர்வாதிகனென்னுதல், மிக்க வ்யாமோஹத்தை யுடையவ னென்னுதல். மூந்தின அர்த்தம் - இப்படியிருக்கிற இத்யாதி. 'வ்யாப்தியும்' என்கிற அபிப்ராயத்தாலே - 'ஆர்ந்தஞானச் சுடராகி' என்று சொன்ன ஜ்ஞாநவ்யாப்தியை ஸமுச்சயிக்கிறது. சார்ந்தவென்று தொடங்கி, மனம்வைக்கத் திருத்தின பின்பு, ஆர்ந்தஞானச்சுடரென்று தொடங்கி, நெடுமால் வீடுதிருத்துவானுனன் என்று அந்வயித்துத் தாத்பர்யம் - வ்யாப்தியும் இத்யாதி. இந்தப் பக்ஷத்தில், 'தீர்ந்து' என்றது - தனக்கே யற்றுத் தீர்ந்தென்றபடி. மால் - வ்யாமுக்தன். ஆர்ந்தஞானமென்று தொடங்கி, நெடுமால், சார்ந்தவென்று தொடங்கி, தன்பால் மனம் வைக்கத் திருத்தித் தீர்ந்து-க்ருதக்ருத்யனுய், வீடுதிருத்துவானுனன் என்று அந்வயித்துத் தாத்பர்யம்-அன்றியே இத்யாதி. இப்பக்ஷத்தில், மால் - ஸர்வாதிகன். காலேந்து திருவாய்மொழிக்குள்ளே இவரை அங்கீகரிப்பதாக வீடு திருத்துவானுனல், இப்ப்ரபந்தத்தையும் தலைக்கட்டுவித்து லோகத்தைத் திருத்துவித்த வழியாலே ஜகதுபகாரகனுயிருக்கும்படி யெங்ஙனே? என்ன - முனியே நான்முகன் இத்யாதி. 'மனந்திருத்தி வீடுதிருத்தப்போய் காடுதிருந்தினவாறேவந்து' என்னக்கடவதிறே. அதாவது - ஈஶ்வரன் இவர்பக்கல் வ்யாமோஹத்தாலே வீடுதிருத்துகையிலே விளம்பிக்க, அதுபற்றுமே முனியேநான்முகனளவும் கூப்பிட்டகூப்பீடு ஜகதுபகாரமாய்த் தலைக்கட்டிற்று என்றபடி. ஸர்வஜ்ஞராகையாலே, அவன், வ்யாமோஹத்தாலே வீடுதிருத்தப்போனது அறிந்த இவர் கூப்பிடுவானென்? என்ன, அவன் தெளிந்து இத்யாதி. தெளிந்துவந்து - வ்யாமோஹந் தெளிந்துவந்து. ஆர்ந்த ஞானச்சுடராகி யென்று தொடங்கி, நெடுமால், சார்ந்தவென்று தொடங்கி, வீடுதிருத்துவான் என்று அந்வயம். அகலங்கீழ்மேலளவிறந்து - சுற்றும் கீழும் மேலுமான பத்துத் திக்கிலும் அபரிச்சிந்நஸ்வரூபனுய், நேர்ந்தவுருவாயருவாகுமிவற்றினுயிராம் - அதிஸூக்ஷ்மமான அசித்தும் சித்துமாகிற இவற்றுக்கு அந்தராத்மாவானவன் [illegible]. (௧௰)

## பதினோரம் பாட்டு.

---

மாலே!மாயப்பெருமானே! மாமாயனே! என்றென்று
மாலேயேறிமாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன்
பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரத்தின்
பாலேபட்ட இவைபத்தும் வல்லார்க்குஇல்லைபரிவதே.

ஆ.- (மாலே.) இப்படி எம்பெருமானுடைய ஆஶ்சர்யமான ஸௌஶீல்யவாத்ஸல்யாதிகல்யாணகுணங்களேயும், ஆஶ்சர்யமான திவ்யசேஷ்டிதங்களையும் காலதத்வமெல்லாம் பேசினாலும் ஆராத அபிநிவேஶத்தையுடையனாய், அந்த குணங்களையே தாரகமாக வுடையனான குருகூர்ச்சடகோபன் சொன்ன ஸர்வஜந போக்யமான ஆயிரத்தின்பாலே பட்ட இவைபத்தும் வல்லார்க்கு எம்பெருமானை விஶ்லேஷிக்கையாகிற தீங்கு இல்லை யென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார்க்கு உள்ள பலம் அருளிச்செய்கிறார்.

[மாலேயென்று தொடங்கி]-பெரியோனேயென்றும், ஆஶ்சர்யமான குணங்களை யுடையவனே யென்றும், ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடையவனேயென்றும் அவனுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து 'எம்பெருமானுக்கு அடிமை செய்வோமல்லோம்' என்று ஏங்கி அடிமைசெய்யப் பெறுமையாலே அவஸந்நராய், மீளவும் அவனுடைய நிரவதிகக்ருபையாலே சேர்ந்து அடிமை செய்யப்பெற்றுத் தாம் உளரான ஆழ்வார். [பாலேய் தமிழ ரிசைகார ரென்று தொடங்கி] - இயலறிந்துகொண்டார் இசையறிவார் பகவத்குணவித்தர் விரும்பும் ஆயிரத்திலும் இத்திருவாய்மொழி வல்லார்க்கு எம்பெருமானுடைய வைலக்ஷண்யத்தைக் கண்டு, 'தாம் அயோக்யர்' என்று அகலும் துக்கமில்லை. பாலென்று - தமிழ்நூல். பாலேய் தமிழ் - பால்போன்ற தமிழ்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, இதில் அந்வயித்தார்க்கு ஸ்வநிகர்ஷாநுஸந்தாநத்தாலே வரும் துக்கமில்லை என்று அருளிச்செய்கிறார்.

மாலே - ஸர்வாதிக ஶேஷித்வ ரூபமான ஸ்வரூபோத்கர்ஷத்தையுடையவனே! மாயப்பெருமானே - (நித்யஸம்ஸாரியையும் நித்யஸூரிமத்யத்திலேயாக்கும்) ஆஶ்சர்ய குணங்களால் அளவிறந்தவனே! மாமாயனே - அபரிச்சிந்நமான விபூதிவிக்ரஹ சேஷ்டிதங்களை யுடையவனே! என்று என்று - என்று (ஶேஷித்வஶரண்யத்வ ப்ராப்யத்வங்களில் தனித்தனியுண்டான உத்கர்ஷத்தை) அநுஸந்தித்து, மாலேயேறி - (ஸ்வநிகர்ஷமடியாக 'அகலுவோம்' என்று) ப்ரமித்து, மால்-நிரதிஶயவாத்ஸல்யயுக்தனை ஸர்வேஶ்வரனுடைய, அருளால் - நிரவதிகக்ருபையாலே, மன்னு - ஸமாஹிதராய்ச்சேர்ந்த, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வாருடையதாய், பாலேய்-பால்போலே இனிய, தமிழர் - இயல்தமிழறிவாரும், இசைகாரர் - இசையறிந்து உணர்ந்து பாடவல்லாரும், பத்தர் - பொருளறிந்து ப்ரவணராய் பக்தியுடையாரும், பரவும் - கொண்டாடும், ஆயிரத்தின்பாலே - ஆயிரந்திருவாய்மொழியினிடத்திலே, பட்ட - ('கடலிலேமுத்துப்பட்டது' என்னுங்கணக்கிலே) உண்டாய், இவைபத்தும் - (ஈஶ்வரனுடைய ஶீலாத்யதிஶயப்ரகாஶகமான) இவைபத்தையும், வல்லார்க்கு - (ஹ்ருதயுக்தமாக) அப்யஸிக்கவல்லார்களுக்கு, பரிவது - (ஸ்வநிகர்ஷாநுஸந்தாநத்தாலேவரும் விஶ்லேஷமடியான) க்லேஶம், இல்லை - இல்லை. பரிவது - துக்கம். 'பாலேய்தமிழர்' என்று - தமிழ்ப்பகுதியான நூலோடு பொருந்தினவ ரென்றுமாம். இது அறுசீராய்க் கழிநெடிலடி நான்கு மொத்திருத்தலால், ஆசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியைக் கற்றார்க்கு 'அயோக்யன்' என்று அகலும் துஃகமில்லை யென்கிறார்.

[மாலே]-ஸ்வரூபத்தாலும் ஐஸ்வர்யத்தாலு முண்டான வைலக்ஷண்யத்தை யுடையவனே! [மாயப்பெருமானே]-ஆஸ்சர்யமான குணங்களையுடையவனே! [மாமாயனே]-ஆஸ்சர்யமான சேஷ்டிதங்களையுடையவனே! [என்றுஎன்றுமாலேயேறி] - இவற்றை அநுஸந்தித்துப் பிச்சேறி. அதாகிறது-'அயோக்யன்' என்று அகலுகை. [மாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன்]-அவனும் தன்வ்யாமோஹத்தாலேயாயிற்று இவரைச் சேர்த்துக்கொண்டது. அவன் தன்செல்லாமையைக் காட்டிச் சேர்த்துக்கொண்டபடியைக்கண்டு ப்ரீதராய், அது உள்ளடங்காமையாலே வழிந்து புறப்பட்ட இத்திருவாய்மொழிக்குஉண்டான லோகபரிக்ரஹத்தைச் சொல்லுகிறது. [பாலேய் தமிழர்]- பாலோடொத்துள்ள தமிழறிவார். பாலென்று - தமிழ்நூலென்றுமாம். [இசைகாரர்] - இசையறிவார். [பத்தர்] - ஸர்வேஸ்வரனும் ஆழ்வாருமான பரிமாற்றத்திலே கால்தாழ்ந்திருக்குமவர்கள். பாலேய்தமிழ ரென்கிறது - முதலாழ்வார்களை. இசைகார ரென்கிறது - ஸ்ரீமதுரகவிகள் போல்வாரை. பத்தரென்கிறது - பெரியாழ்வார் போல்வாரை. ஸ்ரீபராங்குசநம்பி, ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர், பிள்ளையுறங்கா வில்லிதாஸர் போல்வார்' என்னுமாம், ஆழ்வான், ஒருருவிலே. [பரவும் ஆயிரம்] - அக்ரமமாகக் கூப்பிடுகை. [பாலேபட்ட] - ஆயிரத்தினுள்ளேபட்ட, உள்ளேயுண்டான. [பட்ட]-'முத்துப்பட்டது' என்றாற்போலே. [பரிவது இல்லை]-'அயோக்யன்' என்று அகலும் துக்கமில்லை.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார்க்கு, அவன்வரக் கோள்ள அயோக்யதாநுஸந்தாநம் பண்ணி அகன்று இவர் பட்ட க்லேஶம் பட வேண்டா என்கிறார்.

[மாலே] - ஸ்வரூபத்தால் வந்த விபுத்வம். [மாயப்பெருமானே] - குணத்தால் வந்த விபுத்வம். [மாமாயனே] - சேஷ்டிதங்களால் வந்த ஆதிக்யம். [என்றென்று மாலேயேறி] - ஏவம்விதமான வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து, 'நான் அயோக்யன்' என்று அகலும்படி பிச்சேறி. [மாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன்] - தன்னை முடித்துக்கொள்வதாகக் கழுத்திலே கயிற்றை யிட்டுக்கொண்டவனை யறுத்து விழவிடுவாரைப்போலே, அகன்று முடியப்புக்க இவரைப் பொருந்தவிட்டுக்கொள்ள, அவனருளாலே பொருந்தின ஆழ்வார். பிடிதோறும் நெய்யொழியச் செல்லாத ஸுகுமாரரைப்போலே, நின்ற நின்ற நிலைகள்தோறும் அவனருளொழிய நடக்கமாட்டார். [பாலேய்தமிழர்] - பால்போலே இனிய தமிழையுடையவர்கள். [இசைகாரர்] - இயலுக்கு இசைய இசையிடவல்லவர்கள். ஸ்ரீமதுரகவிகளையும் நாதமுனிகளையும்போலே யிருக்குமவர்கள்.

---

நிகமம் - மாலே இத்யாதி. ப்ரகரணாநுகுணமாக அவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி.

'மாலே' என்றும், 'மாயப்பெருமானே' என்றும் - 'வானோரிறையை' 'வெண்ணெய்தொடுவுண்ட' என்ற பதங்களினுடைய அநுவாதம். 'மாமாயன்' என்று - 'இளவேறேழுந்தழுவிய' என்றதின் அநுவாதம். இங்கே, விபுத்வமாவது - உத்கர்ஷம். குணசேஷ்டிதங்கள் ஆஸ்சர்யரூபங்களாகையாலே, மாயாஶப்தங்களாலே குணசேஷ்டிதங்களைச் சொல்லுகிறது. மாலே - ஸ்வரூபத: உத்கர்ஷமுடையவனே! மாயப்பெருமானே - ஆஸ்சர்யகுணங்களால் அளவிறந்தவனே! மாமாயனே-அபரிச்சிந்நமான ஆஸ்சர்ய சேஷ்டிதங்களை யுடையவனே! என்று ஶப்தார்த்தம். தன்னை முடித்துக்கோள்வதாக இத்யாதி வாக்யத்திலே - தர்மபுத்ரனை நிந்தித்து, அதுக்காகத் தன்னை முடித்துக்கொள்ள நினைத்த அர்ஜுநனை க்ருஷ்ணன் ரக்ஷித்தானென்கிற கர்ணபர்வத்தில் கதையை நினைப்பது. பலகாலும் அருளைக் கொண்டாடுகிறதுக்கு பாவம் - பிடிதோறும் இத்யாதி. நின்றநின்ற நிலைகள் தோறும்-'மதிநலமருளினன்,' 'அருளாதநீரருளி,' 'மாலருளால்' என்று இப்படி ஸம்ஶ்லேஷ விஶ்லேஷ அயோக்யதாநுஸந்தாநாதி தஶைகளெல்லாவற்றிலு மென்றபடி. அவர்கள் ஆர்? என்ன, ஸ்ரீமதுரகவிகளையும்

[பத்தர்] - பகவத்சுணநுபவத்தில் இவர் தம்மைப்போலே, ''காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்'' என்று இருக்குமவர்கள். ஆழ்வான் ஒருருவிலே, ''ஸ்ரீபராங்குச நம்பியை - பாலேய் தமிழரேன்கிறது; இசைகார ரேன்கிறது - ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையரை; பத்தரேன்கிறது - பிள்ளையுறங்கா வில்லிதாஸரை'' என்று பணித்தானும். ''பாலேய்தமிழரேன்கிறது - முதலாழ்வார்களை; இசைகாரரேன்கிறது - திருப்பாணாழ்வாரை; பத்தரேன்கிறது - பேரியாழ்வாரை'' என்று ஆளவந்தா ரருளிச்செய்வர். இயலறிவார் இசையறிவார் பகவத்குணவித்தரா யிருப்பார் இவர்கள் [பரவும்] - இவர் அகலுகை தவிர்ந்து பாடின பின்பு உண்டான லோகபரிக்ரஹத்தைச் சொல்லுகிறது. [ஆயிரத்தின்பாலேபட்ட] - 'கடலிலே முத்துப் பட்டது' என்னுமாபோலே ஶ்லாக்யமான ஆயிரத்தின் நடுவேபட்ட இத்திருவாய்மொழி வல்லார்க்கு. [இல்லைபரிவது] - பரிவதில்லை. அஞ்சிறைய மடநாரையிலே தூதுவிட்டு அவன் வந்து ஸம்ஶ்லேஷோந்முகனானவாறே 'அயோக்யன்' என்று அகன்றுபடும் துக்கமில்லை.

முதற்பாட்டில், 'அயோக்யன்' என்று அகன்றார்; இரண்டாம் பாட்டில், அகலுகைக்குத்தானும் அதிகாரியல்லே னென்றார்; மூன்றாம்பாட்டில், ஶீலகுணத்தைக் காட்டித் துவக்கத் துவக்குண்டார்; நாலாம்பாட்டில், அகலவோட்டுவேர்களோ உடையவர்கள்? என்றார்; அஞ்சாம்பாட்டில், உடைய உன் திருவடிகளைக் கிட்டும்படி பார்த்தருளவேணு மென்றார்; ஆறாம் பாட்டில், அவன் அரைக்ஷணம் தாழ்க்க, முடியப்புகாநின்றே னென்றார்; ஏழாம்பாட்டில், அவ்வளவில் அவன்வரக்கொள்ள, அயோக்யன் என்று அகன்றார்; எட்டாம்பாட்டில், திருவாய்ப்பாடியில் வெண்ணெயோபாதி உம்மோட்டை ஸம்ஶ்லேஷம் தாரகம் என்றான் அவன்; ஒன்பதாம்பாட்டில், அப்படியல்ல, இது நஞ்சேன்ன, நஞ்சுதானே நமக்கு தாரகமேன்றான்; பத்தாம்பாட்டில், தம்மை யிசைவித்துப் பரமபதத்தைக் கோடிக்கத் தொடங்கினா னென்றார்; நிகமத்தில், கற்றார்க்குப் பலஞ்சோல்லித் தலைக்கட்டினார். (கக)

---

இத்யாதி. பெரியதிருவந்தாதி(௩௪) காலாழும் இத்யாதி. உன்னுடையஸௌந்தர்யஶீலாதிகளை நாம்கேட்டமாத்ரத்திலேயும், கால் தடுமாறுநின்றது; நெஞ்சு ஶிதிலமாகாநின்றது; கண் சுழலாநின்றது என்றபடி. ப்ராஸங்கிகமான ஐதிஹ்யம்-ஆழ்வான் இத்யாதி. நிர்வாஹாந்தரம் - பாலேய்தமிழர் இத்யாதி. பலிதம்-இயலறிவார் இத்யாதி. ஆயிரமருளிச்செய்வதற்கு முன்பு 'பத்தர்பரவுமாயிரம்' என்னக்கூடுமோ? என்ன, இவர் அகலுகை தவிர்ந்து இத்யாதி. ஸர்வஜ்ஞராகையாலே பாடினபின்பு உண்டான லோகபரிக்ரஹந் தோற்று மென்றபடி. சொன்னவென்னுதே 'பட்ட' என்றதுக்கு ஹாவம்-கடலிலே இத்யாதி. பட்டது - உண்டாயிற்றது. துவக்க - சேர்ப்பிக்க. மாலே என்று தொடங்கி, வல்லார்க்குப் பரிவதில்லை இத்யந்வய:. பரிவது - துக்கம். (கக)

த்ரவிடோபநிஷத் ஸங்கதி.— [illegible] ॥

---

த்ரவிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலி.— [illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

வளமிக்கமால்பெருமைமன்னுயிரின்தண்மை
உளமுற்றங்கூடுருவவோர்ந்து—தளர்வுற்று
நீங்கநினைமாறனைமால்நீடிலகுசீலத்தால்
பாங்குடனேசேர்த்தான்பரிந்து.

ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஆறாந்திருவாய்மொழி—பரிவதில் : ப்ரவேஶம்.

---

ஒ.—ஆறாந்திருவாய்மொழியில், அவாப்தஸமஸ்தகாமனாய் நிரபேக்ஷனாய்ப் பரிபூர்ணனான எம்பெருமானை, அதிக்ஷுத்ரனும் அதிக்ஷுத்ரோபகரணனுமாயிருக்குமவன் ஆஶ்ரயிக்கைக்கு உபாயமுண்டோ? என்று ஆஶங்கிப்பார்க்கு, அவன் அத்யந்த பரிபூர்ணனேயாகிலும் அந்தப் பூர்த்தியெல்லாம் ஸ்வாராததைக்கு உறுப்பாம்படி ஸ்ரீய:பதியாய் ஸுஶீலனாகையாலே ஆஶ்ரயிக்கப் புக்கார்க்கு வித்தவ்யயாயாஸங்களில்லாமையாலும், ப்ரத்யவாய ப்ரஸங்க மில்லாமையாலும், பலாதிக்யத்தாலும், த்ரவ்யாதி கார்யங்களுடைய ப்ரகாரவிஶேஷங்கொண்டு கார்யமில்லாமையாலும், பகவத்கீதாமத்யம ஷட்காதிகளில் ப்ரதிபாதித்தாற்போலே ஆஶ்ரயணம் ஸுகரமென்று அருளிச்செய்கிறார்.

ப.—ஆறாந்திருவாய்மொழியில், 'இப்படி ஶீலவானாகிலும் ஸ்ரீய:பதியாகையாலே அவாப்த ஸமஸ்தகாமனான பூர்ணனை ஆராதிக்குமிடத்தில் தததநுரூபமான உபகரணத்யஸாவத்தாலே துஷ்கரமாகில் செய்வதென்?' என்று கூசவேண்டாதபடி, பூர்த்திதானே, ஆபிமுக்யமே பற்றாசாக அங்கீகரிக்கைக்கு உறுப்பாகையாலே ஆஶ்ரயணம் ஸுகரமென்று ப்ரதிபாதிக்கைக்காக; ஆராதநோபகரண ஸௌகர்யத்தையும், ஆராதகனுடைய அதிகாரஸௌகர்யத்தையும், அதிகாரி விஷயத்தில் ஆராத்யன் தோஷகுணம் பாராமையையும், தன்பெருமை பாராதே அங்கீகரிக்கும் ஸந்தவிசேஷத்தையும், அநந்ய ப்ரயோஜநவிஷயத்தில் ஆதராதிஶயத்தையும், அவர்களுக்கு அத்யந்த போக்யனாம்படியையும், அநிஷ்ட நிவர்த்தகனானவனுடைய ஆஶ்ரயணம் காலக்ஷேப ப்ரகாரமென்னுமிடத்தையும், அஞ்ஜலிமாத்ரத்தாலே அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணுமென்னுமிடத்தையும், அநிஷ்டநிவ்ருத்தி அவனுடைய ஸங்கல்பாதீநமென்னு மிடத்தையும், அநிஷ்டத்தை அவிலம்பேந நிவர்த்திப்பிக்கையையும் சொல்லி, ஸ்வாராததையை உபதேஶிக்கிறார்.

இ.—ஆறாந்திருவாய்மொழியில், அவாப்தஸமஸ்தகாமனாய்ப் பரிபூர்ணனாய் ஸ்ரீய:பதியாயிருக்கிற ஈஶ்வரனை க்ஷுத்ரனுமாய் க்ஷுத்ரோபகரணனுமானவன் ஆஶ்ரயிக்கைக்கு உபாயமுண்டோ? என்னில்,—இவன் இட்டதுகொண்டு வயிறுநிறையவேண்டும் குறையில்லாமையாலே அந்தப்பூர்த்தியும் ஸ்வாராததைக்கு உறுப்பு: ஸ்ரீய:பதித்வமும் தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கும் ஶீலாதிகளுக்கு அடியாகையாலே அதுவும் ஸ்வாராததைக்கு உடலாகக் கடவது; வித்தவ்யயாயாஸாதிக ளில்லாமையாலும், ப்ரத்யவாயப்ரஸங்க மில்லாமையாலும், த்ரவ்யாதி கார்யங்களுடைய விஶேஷ நியதி யில்லாமையாலும், "[illegible]" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ஆஶ்ரயணம் ஸுகர மென்கிறார்.

ஈடு.—முதல் திருவாய்மொழியிலே, அவன் ஸர்வஸ்மாத்பரனா யிருக்கிற படியைத் தாம் அநுபவித்தார்; இரண்டாந் திருவாய்மொழியிலே, இப்படி பரனானவனை பஜியுங்கோளென்றார்; அநந்தரம், பஜநத்துக்கு உறுப்பாக அவனுடைய ஸௌலப்யத்தை அருளிச்செய்தார்; அதுக்கு உறுப்பாக அவனுடைய அபராதஸஹத்வத்தை அருளிச்செய்தார்; அதுக்கு உறுப்பாக ஶீலவானென்றார். இவை யெல்லாம் உண்டானாலும் பசையில்லையிறே, பரிமாற்றத்திலே அருமை தட்டியிருக்குமாகில்; என்ன,—அது வேண்டா, ஸ்வாராதனென்கிறார். கீழில் திருவாய் மொழியிலே, 'அயோக்யன்' என்று அகன்ற இவரைப் பொருந்தவிட்டுக்கொண்ட இதுக்கு ஒரு ப்ரயோஜநங் கண்டிலோமீ! பொருந்தவிட்டுக் கொள்ளுகிறது தான் ஒரு பரிமாற்றத்துக்கிறே; அதில், க்ஷுத்ரனான இவனாலே க்ஷுத்ரோபகரணங்களைக்கொண்டு ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்துத் தலைக்கட்டப் போகாமையாலே. ஸம்ஸாரியான இவனாலே நேர்கொடு நேர் ஆஶ்ரயித்துத் தலைக்கட்ட வொண்ணாதபடி அவாப்தஸமஸ்த காமனா யிருக்கையாலும், இவனிட்டதுகொண்டு த்ருப்தனாக வேண்டாதபடி பரிபூர்ணனாகையாலும், இவ்விரண்டுக்குமடியாக ஶ்ரிய:பதியா யிருக்கையாலும், இவன் அவனை யாஶ்ரயிக்கை என்று ஒரு பொருளில்லையீ! என்ன, - அது வேண்டா, அப்படிகளுடைய ஆஶ்ரயணத்துக்கு உறுப்பு: இவன் தன் ஸ்வரூபலாபத்துக்கு உறுப்பாகக் கிஞ்சித்கரிக்கும் இதுதான் தன் பேறாக நினைத்திருக்கும்; இதுக்கு மேற்படத் தனக்கு வேறொன்று தேடவேண்டாதபடி எல்லாம் கைப்புகுந்திருப்பானொருவனாகையாலும், இவன் இட்டதுகொண்டு த்ருப்தனாகவேண்டாதபடி பரிபூர்ணனாயிருக்கையாலே இவன்பக்கல் பெற்றதுகொண்டு முகங்காட்டுகைக்கு உடலாயிருக்கையாலும், ஶ்ரிய:பதியாகையாலே ஸுஶீலனா யிருக்கையாலும், இதரஸமாஶ்ரயணம்போலே பகவத்ஸமாஶ்ரயணம் அருமைப் பட்டிராது. இனி இதுதன்னிலே யிழியவே, விரோதிகளடங்கலும் நஶிக்கும்; ஆஶ்ரயணந்தான் க்லேஶரூபமா யிருக்கையன்றியே ஹேரூபமா யிருக்கும்; இவனுக்கு வருந்தி ஒன்றுந் தேடவேண்டாதபடி பெற்றது உபகரணமா யிருக்கும்; பகவத்ஸமாஶ்ரயண மாகையாலே ப்ரத்யவாய

---

*பரிவதிலீசன் ப்ரவேஶே* - கீழ் அஞ்சு திருவாய்மொழிகளிலுஞ் சொன்ன குணங்களை அநுபாஷியா நின்றுகொண்டு, இத்திருவாய்மொழியில் ப்ரதிபாத்யம் ஸ்வாராததை என்னுமத்தை ஶங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார் - முதல் திருவாய்மொழியில் இத்யாதி. **அதுக்குஉறுப்பாக** என்ற இரண்டுக்கும்-பஜநத்துக்கு உறுப்பாக என்று அர்த்தம். **பரிமாற்றத்தில்**-ஆராதநத்தில். **விஸ்தரஸங்கதி**-கீழ்த்திருவாய்மொழியில் இத்யாதி. "போகாமையாலே" என்றதுக்கு-"ப்ரயோஜநங்கண்டிலோமீ" என்றத்தோடே அந்வயம். **அகன்ற இவரை** என்றது - சேதநர்க்கெல்லாம் உபலக்ஷணம். **ஒருபரிமாற்றத்துக்கிறே** என்று 'அயோக்யன்' என்று அகன்ற இவரைப்'பொருந்தவிட்டுக்கொண்ட ஸௌஶீல்யகுணத்தை அநுஸந்தித்து, எல்லாருமாஶ்ரயித்துப் பரிசர்யை பண்ணுகைக்கிறே யென்றபடி. கீழ், இவன் ஸ்வபாவத்தாலே ஆஶ்ரயணங்கூடாதென்று சொல்லி, அவன் ஸ்வபாவத்தாலுங் கூடாதென்று ஶங்கிக்கிறார் - **ஸம்ஸாரியான** இத்யாதி. **நேர்கொடுநேர்** - நன்றாக. "மதுவார் தண்ணந்துழாயான்முதுவேதமுதல்வன்" என்றதிலே - அவாப்தஸமஸ்தகாமத்வமும் பூர்த்தியும் சொல்லுகிறது. இந்த இரண்டு குணத்துக்கும் ஈஷத்பேதங் கண்டுகொள்வது. **அவாப்தஸமஸ்தகாமன்** - நிரபேக்ஷன். **பூர்த்தியாவது** - அபேக்ஷாஸத்பாவேபி பூர்ண னென்றபடி. "திருமகளார்தனிக்கேள்வன்" என்றத்தைப்பற்ற, **ஶ்ரிய:பதியாம்** என்றது. **அப்படிகளுடைய** என்றது - அவாப்தஸமஸ்தகாமத்வ பூர்ணத்வ ஶ்ரிய:பதித்வங்களை. **உபாதகம்**-இவன்தன்ஸ்வரூப இத்யாதி. **இதுக்கு** - கிஞ்சித்காரத்துக்கு. **எல்லாம்கைப்புகுந்திருப்பான்** - எல்லா அர்த்தங்களும் ஹஸ்தகதமா யிருப்பான். **ஶ்ரிய:பதியாகையாலே** என்றது-அவளோட்டை ஸம்பந்தம் அவளுடைய ப்ரஜைகளிடத்தில் ஸௌஶீல்யத்துக்கு ஹேது என்றபடி. "புகைபூவே" என்றத்தைப்பற்ற-**அருமைப்பட்டிராது** என்றது. "வல்வினைமாள்வித்து" என்றத்தைப்பற்ற, **விரோதிகளடங்கலும் நஶிக்கும்** என்றது. **இதுதன்னிலே** - ஆஶ்ரயணத்திலே. "அமுதிலுமாற்றவினியன்" என்றத்தைப்பற்ற - **போகரூபமாயிருக்கும்** என்றது. **பெற்றது உபகரணமாயிருக்கும்** என்றது - "புரிவதுவும்புகைபூவே" என்றத்தைப்பற்ற. **ப்ரத்யவாயப்ர**

ப்ரஸங்கமில்லே; த்ரவ்யநியதி, காலநியதி, அதிகாரிநியதி இல்லே; இப்படி யிருக்கையாலே ஆஶ்ரயணம் ஸுகரம்: ஆஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

"**த்வதங்க்ரிமுத்திஶ்ய**" (த்வதங்க்ரிமுத்திஶ்ய) - அல்லாத ஆஶ்ரயணீயரிற்காட்டில் இவனுக்கு உண்டான வ்யாவ்ருத்தியும், இவன்பக்கல் ஶேஷபூதனுக்கு இழியுந்துறை திருவடிகளென்னுமிடமுஞ் சொல்லுகிறது. "**கதாபி**" (கதாபி) - காலநியதியை விதிக்கிற கர்மத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி. "**கேநசித்**" (கேநசித்) - அதிகாரிநியதியை விதிக்கிறவற்றிற் காட்டில் வ்யாவ்ருத்தி. "**யதாததா**" (யதாததா) - க்ரமநியதியை அபேக்ஷித்திருக்கும் கர்மங்களில் வ்யாவ்ருத்தி. "**வா அபி**" (வா அபி) என்கையாலே விகல்பஸமுச்சயங்களில் ஒன்றேயாகக்கடவதென்கிற கர்மத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி. "**ஸக்ருத்**" (ஸக்ருத்) - தீர்க்கஸத்ராதிகளில் வ்யாவ்ருத்தி. "**க்ருதஃ**" (க்ருதஃ) - ஆதிகர்மணிக்தவாய், உத்யோகமாத்ரத்திலே பலமாகச் சொல்லுகிறது. "**அஞ்சலிஃ**" (அஞ்சலிஃ) - இப்படி யிருக்கிறது எது? என்னில், அஞ்சலிஃ-வித்தவ்யயாயாஸஸஹகாரி ஸாத்யமான அஶ்வமேதாதிகளில் வ்யாவ்ருத்தி. "**ததைவ**" (ததைவ) - தேஶாந்தரே காலாந்தரே நின்று பலிப்பனவாகச் சொல்லுகிற கர்மங்களில் வ்யாவ்ருத்தி. "**முஷ்ணாதி**" (முஷ்ணாதி) - 'இவன்தான் தொடர்ந்து பிடிக்கும்' என்று இவனை யறியாமே போமென்கை; * 'சும்மெனுதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தன" என்கிறபடியே. "**அஶுபாநி**" (அஶுபாநி) - ஒரு கர்மம் ஒரு பாபத்தைப் போக்குவதாகச் சொல்லுகிற அதில் வ்யாவ்ருத்தி. "**அஶேஷதஃ**" (அஶேஷதஃ) - வாஸநை கிடக்கப்போக்கும் கர்மங்களில் வ்யாவ்ருத்தி. "**ஶுபாநி**"

---

ஸங்கமில்லே என்றது - "நைஹாஸ்ய ஶநாஶௌசஸ்ஸ்தத்வாயோநவிஷ்யதே। வஸ்துஶுத்ய்ஸ்ஸ்யஶுத்தஸ்த்ராயதேஶஹதோஹயாஸ்" என்றத்தைப்பற்ற. முதலிரண்டுபாட்டாலே-த்ரவ்யாதிகாரிநியமாஹாவம் சொல்லுகிறது. காலநியதியில்லாமை-"ஸ்நாதஸ்நிஸிதஶாஸஸ்யாயேஷ்யாஹாஷிஷுஸம்ஸ்நரநு। நாராயணஶோநாதிஸஷ்யஃவாவஸ்யஹரஃ" என்கையாலே ஸித்தம்.

ஆஶ்ரயணம் ஸுகரமென்றதுக்கு ப்ரமாணம் - த்வதங்க்ரீத்யாதி, த்வத் என்றதுக்கு ஹாவம்-அல்லாத இத்யாதி; ப்ராப்தஶேஷியானஉன்னுடைய என்றபடி. அவயவாந்தரமிருக்க"அங்க்ரி"என்ற திருவடிகளைச் சொன்னதுக்கு ஹாவம்-இவன்பக்கல் இத்யாதி. "வஸந்தேவஸந்தேஜ்யோதிஷாயஜேத"என்றுகாலநியதியை விதிக்கிறதென்றபடி."க்ருஷ்ணகேஶோஅக்நீநாதயீத" "அயஜ்ஞாவாஏஷஃயோஅபத்நீகஃ" என்று அதிகாரிநியதியை விதிக்கிறதென்றபடி. ப்ராங்முகத்வாதிகள்-க்ரமநியதியென்றபடி."வ்ரீஹிபிர்யவைர்வா ஜுஹுயாத்" என்று விகல்பம். ஆக்நேயாதிஷட்கர்மங்களுக்கு ஸமுச்சயநியமம் ஒன்றேயாகக்கடவது - எல்லாங்கூடியேயாகக்கடவது என்கிற கர்மத்தில் என்று கூட்டுவது. அதாவது - த்ரிவிதகரணத்தாலே யாகவுமாம், ஏககரணத்தாலே யாகவுமா மென்றபடி. தீர்க்கஸத்ரம்-பஹுகாலகர்த்தவ்யஸத்ரயாகம். 'முஷ்ணாதி' என்றிறே தாது. சும்மெனுதே இத்யாதி - பாபங்களெல்லாம் மூச்சுவிடாதே கைவிட்டோடிப்போய்க் காடுபாய்ந்தன என்றபடி. "தரதிப்ரஹ்மஹத்யாம்யோஅஶ்வமேதேநயஜதே" என்றத்தைப்பற்ற - ஒருகர்மம் ஒரு பாபத்தை என்றது. ஶுபாநி என்றது - மோக்ஷவிரோதித்வேந அஶுபங்களான புண்யங்களையுஞ் சொல்லுகிறது. புண்யங்களைப் போக்குகை இவனுக்குஅநிஷ்டமாகிலும், அர்பகாபத்யபரிஹாரணந்யாயத்தாலே அவற்றையும் போக்குமென்று தாத்பர்யம். வாஸநைகிடக்க இத்யாதி - பஹுவசந மிருக்கச்செய்தே "அஶேஷதஃ" என்கையாலே, அஶுபபதத்தாலே வாஸநையும் ஸங்க்ருஹீதமென்று தாத்பர்யம்.

---

* பெரியாழ்வார்திருமொழி - ரு - ச - ரு.

(ஶாபாநி) - ஒருஸக்ருதம் ஒருபலத்தைப் பலிப்பதாகச் சொல்லுகிற அதில் வ்யாவ்ருத்தி. **"புஷ்ணாதி"** (புஷ்ணுதி) - தீமையைப் போக்கிவிடுமளவன்றிக்கே, அது போனவிட மெங்கும் நன்மையாலே நிறைக்கும். **"நஜாது ஹீயதே"** (நஜாதுஹீயதே) - பலத்தைக்கொடுத்துத் தான் க்ஷயித்துப்போமதில் வ்யாவ்ருத்தி. **"பத்ரம் புஷ்பமித்யாதி"** (பத்ரம் புஷ்பமித்யாதி)-த்ரவ்யதாரதம்யம் பார்ப்பதில்லை: இடுகிறவன் நெஞ்சில் ஈரமேயாயிற்று பார்ப்பது.**"அஶ்நாமி"** * (அஶ்நாமி) - இப்படி தரப்பட்டவற்றை மநோரதபதத்துக்கும் அவ்வருகானவை கைப்புகுந்தாற்போலே நினைத்திருப்ப னென்னுதல், அவன் கலங்கித் தருமாபோலே நானும் கலங்கி அடைவுகெட விநியோகம் கொள்ளுவ னென்னுதல். **"அந்யத் பூர்ணாத் அபாம் கும்பாத்"** **இத்யாதி** (அந்யத் பூர்ணதபாம் கும்பாத் இத்யாதி): **"நசேச்சதி"** (நசேச்சதி) - இவனுடைய உத்யோகமாத்ரத்திலே வயிறுநிறையுமாயிற்று அவனுக்கு. **"யாஃக்ரியாஸ் ஸம்ப்ரயுக்தாஸ்ஸ்யு:"** (யாஃக்ரியாஸ்ஸம்ப்ரயுக்தாஸ்ஸ்யுஃ) - அபிமத விஷயத்தின் பரிமாற்றம்போலே எல்லாம் உத்தேஶ்யமாய்த் தோற்றும். **"ஏகாந்தகதபுத்திபி:"** (ஏகாந்தகதபுத்திபிஃ)-இதுஒன்றுமே வேண்டுவது. **"தாஸ்ஸர்வா:"** (தாஸ்ஸர்வாஃ) - அவற்றிலொன்றும் விட்டுப்பிடியான். **"ஶிரஸா ப்ரதிக்ருஹ்ணாதி"** (ஶிரஸா ப்ரதிக்ருஹ்ணுதி) - இவன் காலாலே போகட்டவற்றையும் அவன் தலையாலே சுமக்கும். **"தேவ:"** (தேவஃ) - காலாலே கொள்ளப் பிறந்தவன். **"ஸ்வயம்"** (ஸ்வயம்) - செல்வக்கிடப்பு உண்டேன்று, மஹிஷீஸ்வேதத்துக்கு ஆளிட வொண்ணுதே. ஆக, இப்படிகளாலே அவனுடைய ஸ்வாராததையைச் சொல்லுகிறுர், இத்திருவாய்மொழியாலே.

---

*"காமீப்ராவ்யஷிகாமோபஜேத" "வித்யாயபஜேதவஶகாரீ" என்றத்தைப்பற்ற - ஒரு பலத்தை பலிப்பதாக என்றது. "க்ஷணம் ப்ருவ்யஜிவஸே" என்று ஸர்வதா அவன் திருவுள்ளத்தில் பட்டுக்கிடக்கையைப்பற்ற - நஜாதுஹீயதே என்றது. மீதாஸ நவஸே - "பத்ரம்புஷ்பம்பலம் தோயம் யோமேபக்த்யா ப்ரயச்சதி । ததஹம்பக்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந:". ப்ரயதாத்மநஸ்ஸ்வபக்த்யுபஹ்ருதம் என்றபடி. நெஞ்சில் ஈரம் - நெஞ்சில் ஆர்த்ரதை. மநோரதபதத்துக்கும் அவ்வருகானவை என்றது - "அஶூ வ்யாப்தௌ" என்கிற தாதுவைப்பற்ற. "அஶூ வ்யாப்தௌ" என்கிற தாதுவாலே வ்யாப்தியைக்காட்டி, அத்தாலே - அபரிச்சேத்யதையைச் சொல்லுகிறது. "அஶ போஜநே" என்கிற தாதுவைப்பற்றத் தாத்பர்யாந்தரம்-அவன்கலங்கி இத்யாதி. அன்றிக்கே, பெரும்பசியனுக்கு அல்பம் இட்டாலும் அதிகமாக நினைத்திருக்கையும், அடைவுகெட விநியோகங்கொள்ளுகையுமாகிற ஆகாரத்வயமுண்டாகையாலே உபயாகாரத்தையும் பற்றத் தாத்பர்யம்- இப்படிதரப்பட்ட இத்யாதி வாக்யத்வயம் என்னுதல். இந்தயோஜனை- "அஶ போஜநே" என்கிற தாதுவையே உபஜீவித்துஅருளிச்செய்தது;'அஶூ வ்யாப்தௌ' என்கிற தாதுவுக்கு அஶ்நாமியென்று ரூபம் இராதிறே. உதாஹரணம்-'அந்யத் பூர்ணாதபாம் கும்பாதந்யத் பாதாவநேஜநாத் । அந்யத் குஶலஸம்ப்ரஶ்நாந்நசேச்சதி ஜநார்தந:" "அந்யத்பூர்ணாதபாம் கும்பாதித்யாதி நசேச்சதி" என்கையாலே - இவனுடைய இத்யாதி. மோக்ஷதர்மே "யா: க்ரியாஸ்ஸம்ப்ரயுக்தாஸ்ஸ்யுரேகாந்தகதபுத்திபி: । தாஸ்ஸர்வாஶ்ஶிரஸா தேவ: ப்ரதிக்ருஹ்ணாதிவை ஸ்வயம்". "யா:" என்றதுக்கு பாவம்-அபிமத இத்யாதி. ஏகாந்த: ஸாவப்யாநோ நிஷ்டாஸ்பத:-ஏகாந்த்ய மென்றபடி. ஒன்றும்விட்டுப்பிடியான்-எல்லாம் பரிக்ரஹிக்குமென்றபடி. செல்வக்கிடப்பு உண்டேன்று-ஸம்பத்ஸ்த்திதியுண்டு என்ற மாத்ரத்திலே. நிகமிக்கிருர் - ஆக இத்யாதி.*

---

* *அஶ்நாமி :—முந்தின அர்த்தம் லக்ஷணை; அஶூ வ்யாப்தௌ என்கிற தாதுவுக்கு அஶ்நாமி என்கிற ரூபம் இராமையாலே இரண்டாமர்த்தம்; இது முக்யம் என்று அடையவளைந்தான்.*

# முதற் பாட்டு.

---

பரிவதிலீசனைப்பாடி, விரிவதுமேவலுறுவீர் !
பிரிவகையின்றிநன்னீர்தூய்ப், புரிவதுவும்புகைபூவே.

ஆ.—(பரிவதிலீசனை.) இப்படி எம்பெருமானுடைய ஸௌசீல்யாதி குணாநுபவ ஜநிதமான தம்முடைய நிரவதிகப்ரீதியாலே, ஹேயப்ரத்யநீகனாய் ஸர்வேஸ்வரனாயிருந்த எம்பெருமானை நிரஸ்த ஸமஸ்தப்ரதிபந்தகராய்க்கொண்டு ஸர்வகாலமும் பிரியாதே திருப்பல்லாண்டுபாடி ஸம்ருத்தராகவேணு மென்று அபேக்ஷை யுடையராயிருந்து, ததுபாய பக்தியோகாநுஷ்ட்டாநத்திலே ப்ரவ்ருத்தராய், பக்தியோகோசிதமான உபகரண த்ரவ்யங்களுடைய துர்ல்லபத்வத்தினாலும், பக்தியோகத்தை அவிகலமாக அநுஷ்ட்டிக்க முடியாமையாலும், பக்தியோகத்தை அநுஷ்ட்டிக்கமாட்டாதே விஷண்ணரா யிருக்கிறவர்களைக் குறித்து, ஸர்வஸுலபமான பத்ர புஷ்ப கேவலதோயாத்யுபகரணங்களைக்கொண்டு அவன் திருவடிகளிலே நீங்கள் ஏதேனும் ஓரடிமை செய்யிலும் அவனுடைய நிரவதிக ஸௌசீல்யத்தாலே அத்தைக் கைக்கொண்டருளும்; ஆனபின்பு, தத்ஸமாராதநத்துக்கு உசிதமான உபகரணங்களை துர்ல்லபமென்றும், தத்ஸமாராதநத்தை அவிகலமாகச் செய்கை அரிதென்றும் விஷண்ணராகாதே அடிமை செய்யுங்கோ ளென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமான் பரிபூர்ணனாகையாலும் சீலவானாகையாலும் ஏதேனும் பத்ரபுஷ்பாதி த்ரவ்யங்களாலே த்ருப்தனாவா னொருவ னென்கிறார்.

[பரிவதிலீசனை] - ஹேயப்ரத்யநீகனான ஸர்வேஸ்வரனை. ஹேயப்ரத்யநீகத்வம் கல்யாணகுணங்களுக்கும் உபலக்ஷணம். இத்தால் ப்ராப்யஸ்வரூபம் சொல்லிற்று. [பாடியென்று தொடங்கி] - ஸம்ஸார முக்தராய் அநுபவித்து, அவ்வநுபவஜநித ப்ரீதியாலே "ஏதத்ஸாம காயந்நாஸ்தே" என்னும்படியாலே பாடி விஸ்த்ருதராகையைப் பெறவேண்டி யிருப்பீர் ! [பிரிவகையென்று தொடங்கி] - உபகரணங்களில் குறைவு பார்த்து அகலுகை தவிர்ந்து அஸம்ஸ்க்ருதமான ஜலத்தை ஏதேனும் ஒருபடி ப்ரயோகித்து மற்றும் அவனுக்குக் கொடுப்பதுவும் ஏதேனும் புகையும் ஏதேனும் பூவும்.

ப.—முதற்பாட்டில், ஆராதநோபகரண ஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

பரிவதில் - து:காதி ஹேயப்ரதிபடனாய், ஈசனை - (நிகிலநியந்த்ருத்வாதி ஸமஸ்தகல்யாணகுண பூர்ணனான) ஸர்வேஸ்வரனை, பாடி - (அநுபவஜநிதப்ரீதிகாரித ஸாமகாந முகத்தாலே) பாடி, விரிவது - ஆவிர்ப்பூதமான ஸ்வரூபவிகாஸத்தை, மேவல் - பெறுகையிலே, உறுவீர் - உறுதியை யுடையவர்களே ! பிரிவகை இன்றி - (ப்ரயோஜநத்தைக்கொண்டு) கடக்கப்போகையின்றிக்கே அநந்யராய், நல்நீர் - ஶுத்த ஜலத்தை, தூய் - (ப்ரேமத்தாலே அக்ரமமாகப்) பரிமாறி, புரிவதுவும் - ஸமர்ப்பிக்குமதுவும், புகை பூவே - கேவலம் புகையும் பூவும். "புரிவதுமாவது பூவே" என்று பாடமாய் - 'தேடவெளியபூ' என்று சொல்லுவாரு முளர்.

இ.—முதற்பாட்டில், ஆஶ்ரயிப்பார்க்கு த்ரவ்யநியதி யில்லை யென்கிறார்.

[பரிவதிலீசனை] - ஹேயப்ரத்யநீகனான ஸர்வேஸ்வரனை. பரிவென்று - து:கமாதல், பக்ஷபாதமாதல். உபாஸகனுக்கு து:கேந ஆஶ்ரயிக்கவேண்டி யிருக்குமதுவும் - ஆஶ்ரயணீயனுக்கு ஹேயம். குருவாக ஆஶ்ரயித்தவன்பக்கலிலே பக்ஷபதித்து லகுவாக ஆஶ்ரயித்

தவன்பக்கலிலே நெகிழ்ந்திருத்தல் செய்யுமதுவும் - ஆச்ரணீய வஸ்துவுக்கு ஹேயம். இவை யில்லாமையாலே ஹேயப்ரத்யநீகனென்கை. ஹேயப்ரத்யநீகதை புக்கவிடத்தே கல்யாணகுண ங்களும் புகக்கடவதாகையாலே, இது அதுக்கும் உபலக்ஷணம். [ஈசனை] - இவனிடுகிறதிற் குறையுள்ளது தன் குறையாம்படி யிருக்கிற ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. இழவுபேறு தன்னதாம்படி யிருக்கும் ஸம்பந்தத்தை யுடையவனை. ஆச்ரயணீயனும் ப்ராப்யனுமாகையிறே உபயவாக்யத்திலும் நாராயணசப்த ப்ரயோகம் பண்ணிற்று; அல்லாதார் துராராதராகையாலே அநாச்ரயணீயர். [பாடிவிரிவது மேவலுறுவீர்] - ஸம்ஸாராந் முக்தராய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனை அநுபவிக்கையாலே, அவ்வநுபவத்துக்குப் போக்கு வீடாக "ஹாவுஹாவுஹாவு ஏதத்ஸாம காயந்நாஸ்தே" என்கிறபடியே பாடி விஸ்த்ருதராகையாகிற ஸம்பத்தைப் பெறவேண்டி யிருப்பீர்! இந்தக் கனத்த பேற்றுக்குச் செய்யவேண்டும் க்ருஷி என்னென்னில்,—[பிரிவகை யின்றி] - பிரிவாகிற வகையின்றி; 'நினைந்து நைந்து' 'சூட்டுநன்மாலைகள்' என்கிறபடியே விலக்ஷணர் ஆச்ரயி க்குமவனை நாம் ஆச்ரயிக்கையாவது என்? என்று அகலுகைக்கு ஒரு வகையிட்டுக்கொண்டு அக லாதே. [நல்நீர்] - ஒரு கந்தத்தாலும் உபஸ்கரியாத வெறு நீர். [தூய்] - அக்ரமமாக ப்ரயோகி த்து. [புரிவதுவும்] - நீங்கள் அருட்கொடையாகக் கொடுக்குமதுவும். [புகைபூவே] - அகிற்புகை கருமுகைப்பூ என்று விசேஷியாமையாலே, ஏதேனும் புகையும் ஏதேனும் புஷ்பமும் அமை யும்; இது ஸ்வாராததையைப் பற்றச் சொல்லிற்று. இவனைப் பார்த்தால், "எண்டிசையு முள்ள பூக்கொண்டு" என்றும், "நாடாத மலர் நாடி" "தூமநல்விரை மலர்கள் துவளறவாய்ந்துகொண்டு" என்றுஞ் சொல்லக்கடவதிறே; அவனைப் பார்த்தால், "கள்ளார் துழாயும்" இத்யாதிகளிற் சொல் லுகிற மாத்ரமே அமையும். "நகண்டகாரிகம் புஷ்பம் தேவாய விநிவேதயேத்" என்கிற விதி யாலே தவிருகிறதும் - ப்ரேமபரவசனாய்ச் சென்று பறிக்கிறவன்கையில் முள்பாயாமைக்காக" என்று பட்டர் அருளிச் செய்வர். ஸ்ரீ வராஹபுராணத்திலே ஸ்ரீவராஹநாயனார்க்கு முத்தக் காசை அமுதுபடியாகச் சொல்லிற்று.

ஈடு.—முதற்பாட்டு. எம்பெருமான் பரிபூர்ணனாகையாலே ஸ்வாராத னென்கிறார்.

[பரிவது] - துக்கமாகவுமாம், பக்ஷபாதமாகவுமாம். [இல்] - இல்லேன்பது - இல் லாமை. இத்தால் - துக்கமில்லை யென்னுதல், பக்ஷபாதமில்லை யென்னுதல். துக்கமாவது - 'நாம் இடுகிறவை அவன் கொள்ளுமோ? கொள்ளானோ?' என்று ஆச்ரயிக்கிற இவன் நெஞ்சிலே துக்கமுண்டாமன்று, ஆச்ரயணீயனுக்கு துக்கமாமிறே; அன்றிக்கே, பக்ஷபாதமானபோது - ஒருவன் குருவாக த்ரவ்யத்தைக்கொடுத்தால் அவன்பக்கலிலேபக்ஷபதித்திருக்குமாகில், துஷ்ப்ராபன் என்று ஆச்ரயணீயனுக்கு ஹேயமிறே; இவையில்லாதபடி இருக்கையாலே ஹேயப்ரத்யநீகனே ன்றபடி. தரதமவிபாகம் பாராதே யிருக்கைக்கு அடி என்? என்னில், - [ஈசனை] - வகுத்த ஸ்வாமி

---

முதற்பாட்டு - பரிவதில் இத்யாதி. 'ஈசனை' என்றத்தால் பலிதம் - பரிபூர்ணனாகையாலே என் றது. 'புரிவதுவும் புகைபூவே' என்றத்தால் பலிதம் - ஸ்வாராதன் என்றது.

ஹேயப்ரத்யநீகனுக்கு துக்கப்ரஸங்க முண்டோ? அதில்லையென்பானென்? என்ன, துக்கமாவது இத்யாதி. ஆச்ரயணீயனுக்கு துக்கமாமிறே - 'இவனெஞ்சில் இப்படி 'துராராதன்' என்று தோற்றும்படி யிருந்தோமிறே' என்று ஆச்ரயணீயனுக்கு துக்கமாமென்றபடி. இவை - துக்கபக்ஷபாதங்கள். 'பக்ஷபாதமில்லை' என்றத்தை உபபாதித்துக்கொண்டு, 'ஈசன்' என்றதுக்கு ஸங்கதி - தரதமவிபாகம் இத்யாதி. 'பரிவதிலீசனை' என்றத்தை 'பிரிவகை' இத்யாதிக்கு சேஷமாக்கி, ப்ராபகத்வபரமாக ஸ்வாராதத்வ ஹேதுபூத பூர்ணத்வபரமாக வ்யாக்யாநம் செய்தருளி, மேல், 'பாடி' என்றதுக்குக் கர்மமாக, 'பரிவதிலீசனை' என்றத்தை ப்ராப்யபரத் வேந வ்யாக்யாநஞ் செய்யத் திருவுள்ளம்பற்றி; 'பரிவதில்' என்று - அகிலஹேயப்ரத்யநீகத்வமாத்ரஞ் சொன் னால் போருமோ? உபயலிங்கவிசிஷ்டனன்றோ ப்ராப்யம்? ஆகையாலே, கல்யாணைகதாநத்வம் சொல்லவேண் டாவோ? என்ன, ஹேயப்ரத்யநீகதை புக்கவிடத்தே இத்யாதி. இப்பக்ஷத்திலே, ஈசனை-சேஷியை யென்று

யாகையாலே. ஹேயப்ரத்யநீகதை புக்கவிடத்தே கல்யாணகுணங்களும் புகுமிறே; ஆக, ஹேய ப்ரத்யநீகதையும் கல்யாணகுணயோகமும் சொல்லிற்றாயிற்று. [ஈசனை] - புறம்பே ஒருவனுக்கு ஒருவன் விருந்திடும்போது நெடுநாள் பச்சைதேடி விருந்திட்டால், 'இவன் உண்டு என்னகுறை சொல்லப்புகுகிறானோ?' என்று நெஞ்சாறலோடே தலைக்கட்டவேண்டி வரும்; புத்ரன் பிதாவுக்கு விருந்திட்டால், உண்டாகில் உள்ள குறை தம்பப்பனதாய் நெஞ்சாறல்பட வேண்டாதிருக்குமிறே; அப்படிப்பட்ட ஸம்பந்தத்தைப் பற்ற "ஈசன்" என்கிறது. [பாடி] - ஸர்வேஶ்வரனைக் கிட்டினால் வாங்கியதியோடே நிற்கை யன்றிக்கே, ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுப் பாடி. [விரிவதுமேவலுறு வீர்] - "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே"(ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்று பாடி, விஸ்த்ருதராகையா கிற பேறு பெறவேண்டியிருப்பீர்! பேறு கனத்திருந்தது,நாங்கள் செய்யவேண்டுவது என்? என்னில், [பிரிவகையின்றி] - பிரிகையாகிற வகையின்றி; "இமையோர்பலரும் முனிவரும் புனைந்தகண்ணி நீர் சாந்தம் புகையோடேந்தி வணங்கினால் உன்பெருமைமாசூணாதோ?" என்று அகலவகையிட்டுக் கொண்டு, அகலாதே. [நன்னீர்] - ஏலாதிஸம்ஸ்காரமு மின்றிக்கேயிருக்கை. கேவலஜலமும் அமை யும். [தூய்]- 'யதாததாவாபி''(யதாததாவாபி.)[புரிவதுவும்]-இவன்அவனுக்கு அருட்கோடை யாகக்கொடுக்குமதுவும். [புகைபூவே]-அகிற்புகை, கருமுகைப்பூஎன்றுவிஶேஷியாமையாலே, ஏதே னும் புகையும், ஏதேனும் பூவு மமையும்.' சேதுகையிட்டுப்புகைக்க அமையும்; கண்டகாலியிடவும் அமையும்' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. இத்தை பட்டரருளிச்செய்தவாறே "நகண்டகாரி காபுஷ்பம் தேவாய விநிவேதயேத்"(நகண்டகாரிகாபுஷ்பம்தேவாயவிநிவேதயேத்) என்னா நின்றதே!' என்று நஞ்சீயர் கேட்க, "அவனுக்கு ஆகாது என்கிறதல்ல; பறிக்கிற ஆஶ்ரிதன்கை யிலே முள்பாயு மென்றதுக்காகத் தவிர்த்ததுகாணும்!" என்று அருளிச்செய்தார். "கள்ளார்துழா யும் கணவலரும் கூவிளையும், முள்ளார்முளரியு மாம்பலும்" என்று விஸஜாதீயங்களைச் சேர எடுக் கிறது கண்டீரே, த்ரவ்யதாரதம்யம் பார்ப்பதில்லை யென்கைக்காக; "புள்ளாயோரேனமுமாய்ப் புக்கிடந்தான்"—'அப்ராக்ருதத்ரவ்யம் வேணும்'என்று இருந்தானாகில் ஸ்ரீவைகுண்டத்தி லிரானோ? வாராஹகல்பம் பாராநிற்கச்செய்தே 'ஸ்ரீவராஹநாயனார்க்கு முத்தக்காசை அமுதுசெய்விப்பது' என்று

---

*கண்டுகொள்வது. 'பரிவது' என்று - ஹேயங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். ப்ராபகபரமான பக்ஷத்தில், ஈசனை-ஸ்வாமியை என்றபடி; 'பரிவதில்' என்று - ஆஶ்ரயிக்கும்போதைக்கு உறுப்பாக துகே பக்ஷபாதரூப ஹேய ப்ரத் யநீகதையைச் சொல்லுகிறது. ஆக, 'பரிவதிலீசனை' என்கிற பதம்-ப்ராப்யவேஷபரமாயும், ப்ராபகவேஷபரமாயு மிருக்கிறது. ப்ராபகபரமானபோது, 'ஈசனை' என்றதுக்குத் தாத்பர்யம் - புறம்பே ஒருவன் இத்யாதி. நெஞ் சாறல் - மநஸ்தாபம். ஸம்பந்தத்தை - ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தத்தை. ப்ராபகபர மானபோது, பரிவதிலீ சனைப்பாடி விரிவதுமேவலுறவீர், பரிவதிலீசனைப்பிரிவகையின்றிப் புரிவதுவும் நன்னீர்தூய்ப்புகைபூவே இத்யந் வயः. "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே":—காமான்னீ காமரூப்யநுஸஞ்சரந்-வேண்டின அந்நங்களையும் வேண் டின ஶரீரங்களையு முடையனாய்க்கொண்டு, 'இமாந் லோகாந் ஸஞ்சரந்' - வக்ஷ்யமாணமான இந்த ஸாமகானம்பண்ணிக்கொண் டிராநிற்கு மென்றபடி. விரிவது - விஸ்த்ருதராகை; ஆவிர்ப்பூதமான ஸ்வரூபவிகா ஸத்தை. மேவல் - பெறுகையிலே. உறுவீர் - உற்றிருக்குமவர்களேயென்று ஶப்தார்த்தம். மேலுக்கெல்லாம் ஸங்கதி - பேறுகனத்து இத்யாதி. மேவலிலேயுற்றிருப்பார்க்குப் பிரிய ப்ரஸங்க முண்டோ? என்ன, இமை யோர் இத்யாதி. நன்னீர் - ஶுத்தஜலம். அருட்கோடை - தயாதாநம். கீழ்வாக்யத்துக்குச் சமாவதியை ஸம் வாதமுகேந அருளிச்செய்கிறார் - சேதுகை இத்யாதி. சேதுகு - கூளமும், பதரும். கண்டகாலி - கண்டகாலி ப்பூ. ப்ராஸங்கிகம்-இத்தை இத்யாதி. இதுக்கு நியாமகமேது? என்ன, கள்ளார் இத்யாதி: திருமொழி-௧௦,௭,௯. கூவிளை - பில்வம். முள்ளார்முளரி - தாமரை. ஆம்பல் - குமுதம். விஸஜாதீயங்களை - அஸாதாரணமான திருத்துழாய்க்கு விஸஜாதீயங்களை. 'புள்ளாயோரேனமுமாய்' என்கிற இது ஹேதாவுபமாநே த்ருஷ்டாந்தே [illegible] - அப்ராக்ருத இத்யாதி. 'ஆய்' என்கிற அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கு ஐதிஹ்யம் - வாராஹ கல்பம் இத்யாதி. முத்தக்காசு - கோரைக்கிழங்கு. மெய்ப்பாடு - ஸத்யதை. இப்படியநுஸந்தியாதார்-'ஸ்தே*

கிடந்ததாய், 'இதென்ன மெய்ப்பாடுதான்!' என்று நஞ்சீயர் போர வித்தராயருளினார். "உள்ளாதா ருள்ளத்தை யுள்ளமாக் கொள்ளோமே" - இப்படி அநுஸந்தியாதாருடைய ஹ்ருதயத்தை ஹ்ருதயமாக நினைத்திரோம். நாங்கள் பதின்மரும் என்று தம்மையொழிந்த ஆழ்வார்களையும். (க)

## இரண்டாம் பாட்டு.

மதுவார்தண்ணந்துழாயான், முதுவேதமுதல்வனுக்கு
எதுவேதென்பணியென்னாது, அதுவேயாட்செய்யுமீடே.

**ஆ.**—(மதுவார்.) இப்படி எம்பெருமானுக்கு அடிமை எளிதானுலென்? நிர்த்தோஷமான அபௌருஷேவேத ப்ரதிபாத்யனுமாய், நிரவத்யமான ஸ்வரூபரூபகுணவிபூதியையு முடையவனானவனுக்கு நாங்கள் அடிமைசெய்கைக்கு அர்ஹரோ? என்னில்,—அடிமைசெய்கைக்கு அர்ஹதையாவது - தந்தாமுடைய அநர்ஹதையைப் பாராதொழிகை.

**ஒ.**—இரண்டாம்பாட்டில், ஆஶ்ரயணத்துக்கு அதிகாரிநியம மில்லை யென்கிறார்.

[மதுவாரென்று தொடங்கி] - ஐஶ்வர்ய ஸூசகமாய், திருக்குழலின் ஸ்பர்ஶத்தாலே மதுஸ்யந்தியான திருத்துழாயை யுடையனாய் அபௌருஷேயமான வேதப்ரதிபாத்யனா யுள்ளவனுக்கு. [எதுவேதென்று தொடங்கி] - இப்படி விலக்ஷணனானவனுக்கு நான் அடிமை செய்கைக்கு அயோக்யனென்று பாராதே, அந்தரங்க வ்ருத்தியோடு பஹிரங்கவ்ருத்தியோடு வாசியின்றிக்கே எல்லாவ்ருத்தியுஞ் செய்யக்கடவனாகை, ஆட்செய்கைக்கு அதிகாரம்.

**ப.**—அநந்தரம், அதிகாரிஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

அம் - (ஸர்வேஶ்வரத்வத்துக்கு) ஸூசகமாய், மது வார் - மதுஸ்யந்தியாய், தண் துழாயான் - குளிர்ந்த திருத்துழாயையுடையனாய், முது வேதம் - பழையதான வேதங்களுக்கு, முதல்வனுக்கு - ப்ரதாநதயா ப்ரதிபாத்யனானவனுக்கு, எது - (அநுரூபமாகச்செய்யும்படி) எது? என்பணி எது - நான்செய்யும்பணி எது? என்னாததுவே - என்னாதே "ஸஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று ஸர்வத்திலும் ஆதரமுடையனாமதுவே, ஆட்செய்யும் ஈடு-அடிமைசெய்கைக்குத் தகுதி. "புரிவதுவும்புகைபூவே" என்கிற பாடத்தில், "வதுவார்" என்றெடுத்த அந்தாதி-உடலெழுத்தான அகரத்தை முதலாக எடுத்ததென்று கொள்வது; "ஏபாவம்" என்கிற பாட்டில், உயிரெழுத்து முதலானவோபாதி.

**இ.**—இரண்டாம்பாட்டில், த்ரவ்யநியதி யில்லாமையே யன்று, அதிகாரி நியதியு மில்லை யென்கிறார்.

[மதுவார் தண்ணந்துழாயான்] - 'பூவே' என்றது கீழ்; "மதுவார்" என்று தொடங்கிற்று இதில்; அந்தாதிக்குச் சேரும்படி யென்? என்னில்;—'பூவாகில் மதுவோடே கூடியிருக்கையாலே சேரும்' என்று சொல்லுவர் தமிழர். ஐஶ்வர்ய ஸூசகமாய்த் திருக்குழலின் ஸ்பர்ஶத்தாலே மதுஸ்யந்தியான திருத்துழாயையுடையவன். ஸர்வேஶ்வரத்வ லக்ஷணம் இதுவிறே. ஐஶ்

---

ஹத்தாலே அவனுக்காகாததில்லை' என்று அநுஸந்தியாதார். நாங்கள்பதின்மரும் என்றது- பரமைகாந்திகள் தம். ஆழ்வார்களையும் என்ற அநந்தரம், 'கூட்டிச்சொல்லுகிறார்' என்று கூட்டுவது. க்ரமேண அந்வயः. (க)

வர்யமும் போக்யதையும் இருக்கிறபடி. [முதுவேதமுதல்வனுக்கு] - இவ்வொப்பனை யழகை அநுபவித்து எத்தப் புக்கு க்ஷம ரன்றிக்கே, இவ்விஷயத்தைப் பேசும்போது அபௌருஷேய மாகையாலே நித்யமான வேதமே யாகவேண்டாவோ? என்கிறார். வேதமுதல்வனாகையாவது- "ஶாஸ்த்ரயோநித்வாத்" என்கிறபடியே வேதப்ரதிபாத்யனென்கை. திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனென்கைக்கு மேயில்லை ஸர்வாதிகனென்கைக்கு; அதுக்குமேலே ஒன்றிறே வேதைக ஸமதிகம்யனென்னுமது. [எதுவேதென்பணி யென்னாததுவே] - வேதமுதல்வனுக்குப் பணி எது? என்பணி எது? என்னாததுவே: 'நித்யஸூரிகளன்றோ அவனுக்கு ஸத்ருஶர்? நாம் செய்யுமது எது?' என்று கைவாங்காதொழிகை. அந்தரங்க வ்ருத்தியோடு பஹிரங்க வ்ருத்தி யோடு வாசியின்றிக்கே "ஸஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றிருக்கை யென்னவுமாம். [ஆட்செய்யு மீடு] - ஆட்செய்கைக்கு அதிகாரம்.

ஈடு.—இரண்டாம் பாட்டு. ஆஶ்ரயிக்குமவனுக்கு 'த்ரவ்யத்தில் குறைபார்த்து அகல வேண்டா' என்றார் முதற்பாட்டில்; 'நான்அதிகாரியல்லேன்' என்று அகலவேண்டா' என்கிறார் இதில்.

[மதுவார்தண்ணந்துழாயான்]* - "புரிவதுவும்புகைபூவே" என்றது கீழ்; இதில் "மதுவார்தண்ணந்துழாயான்" என்று தொடங்கிற்று; இது சேரும்படியென்? என்ன,— 'பூவாகில் மதுவோடே கூடி யல்லது இராமையாலே சேரும்' என்று சொல்லுவர்கள் தமிழர்; "வதுவார்தண்ணந் துழாயான்" என்று பாடமானபோது போரச்சேரும்; வதுவையென்று மணம். ஆர்தல் - பூர்ணம். வதுவை 'வது' என்று கடைக்குறைத்தலாய், நறுநாற்றத்தையுடைய துழாயென்றுமாம். இது தமிழர் போரச்சேரு மேன்பர். [மதுவாரித்யாதி]-ஒருவாடல்மாலையைக் கொண்டுவந்து திருக்குழலிலே வளையமாகவைத்தால், திருக்குழலோட்டை ஸ்பர்ஶத்தாலே செவ்விபெற்று, மது நிரம்பிச் சினையாறு பட்டு, வார்ந்து வெள்ளமிடாநிற்கும். *[முதுவேதமுதல்வனுக்கு] - இவ்வொப்பனையழகு பேசும்

---

இரண்டாம்பாட்டு-மதுவார் இத்யாதி. வ்ருத்தாநுவாதபூர்வகமாக "எதுவேதென்பணியென்னாது" என்றத்தைக் கடாக்ஷித்து ஸங்கதி-ஆஶ்ரயிக்குமவனுக்கு இத்யாதி.

பூவாகில் இத்யாதிக்குக் கருத்து - பொருளிசையந்தாதியென்று. "வதுவார்" என்று பாடமானால், இயலிசையந்தாதிக்குப் போரச்சேரு மென்றபடி. உரைகாரர்-"புரிவதுவும்" என்ற உடலெழுத்தான மகரம் முதலாகத் தொடங்குகையாலே இயலிசையந்தாதிக்குச் சேரும் என்றார். உயிரெழுத்தென்றும் உடலெழுத்தென்றும் இரண்டுஉண்டு: உயிரெழுத்து - அகாராதி: உடலெழுத்து-ககாராதி வ்யஞ்சநரூபமான அர்த்தாக்ஷரங்கள். ஆகில், வதுவையார் என்னவேண்டாவோ? என்ன, வதுவை இத்யாதி. நறுநாற்றம் - மிக்கபரிமளம். பொருளிசையந்தாதி பக்ஷத்துக்கு அர்த்தமருளிச்செய்வதாகப் பதோபாதாநம் பண்ணுகிறார்-மது இத்யாதி. "வார்"என்றதுக்கு பாவம்-ஒருவாடல்மாலை இத்யாதி. வார்தல் - ஒழுகுதல். 'தண், அம்' என்ற பதத்வயத்துக்கு அர்த்தம்-செவ்விபெற்று என்று. சினையாறுபடுகை யாவது - ஆறு நீர்வரஅணித்தானால் பொசிந்து உள்ளே ஜலமுண்டாயிருக்கை. சினை - கர்ப்பஜலம். "வஸிஷ்டாநாம்", "ஸவேஷ்வாவி யஶஸ்வாம்", "மரங்கள்

---

* ப்ர:—(வேதமுதல்வனுக்கு)— உத்தரஶ்லோகஸாயாம் வ்யாஸவ்யாஸேவா... "ஶாஸ்த்ரயோநித்வாத்" [ஸூ-௩] "ஶாஸ்த்ரம் யஸ்யயோநி: காரணம், ப்ரமாணம், ஸ ஶாஸ்த்ரயோநி. தஸ்யபாவ:-ஶாஸ்த்ரயோநித்வம். தஸ்மாத் ப்ரஹ்மஜ்ஞாநகாரணத்வாச்சாஸ்த்ரஸ்ய தத்யோநித்வம் ப்ரஹ்மண:; அத்யந்தாதீந்த்ரியத்வேந ப்ரத்யக்ஷாதி ப்ரமாணாவிஷயதயா ப்ரஹ்மண: ஶாஸ்த்ரைக ப்ரமாணகத்வாத் உக்தஸ்வரூபம் ப்ரஹ்ம "யதோ வா இமாநி பூதாநி" [தைத்-ப்ரு-க] இத்யாதிவாக்யம் போதயதீத்யபிப்ராய:" இதி ஶ்ரீபாஷ்யம்.

போது இன்னமும் பாசிபூத்தவேதம் பேசவேண்டாவோ? நித்யமாய் அபௌருஷேயமான வேத ப்ரதிபாத்யனுயுள்ளவனுக்கு. வேதமுதல்வனுகையாவது - "ஶாஸ்த்ரயோநித்வாத்"(ஶாஸ்த்ரயோநித்வாத்) என்கிறபடியே வேதப்ரதிபாத்யனென்கை. மதுவார்தண்ணந்துழாயானென்கையாலே - ஸர்வாதிக னென்றதாயிற்று. முதுவேதமுதல்வனென்கையாலே-பரிபூர்ண னென்றதாயிற்று. இரண்டும் ஸ்வாராதனென்கைக்கு உறுப்பாகிறது. [எதுவேதுஇத்யாதி] - 'முதுவேதமுதல்வனுக்கு எதுபணி? என்பணி ஏது?' என்னுமதுவே ஆட்செய்கைக்கு அதிகாரமாவது. 'நித்யஸூரிகளன்றோ அவனுக்கூடாக அடிமைசெய்யவல்லார்? நான்செய்யுமது எது?' என்று தன்னைக்கொண்டு கைவாங்காதொழியுமதுவே. அன்றிக்கே, 'முதுவேதமுதல்வனுக்குஎதுபணி? ஏது என்பணி' என்னுமதுவே - 'இது அவனுக்கீடன்று' என்று சிலவற்றை விடாதே, ஸகலகைங்கர்யத்திலும் அந்வயிக்குமதுவே ஆட்செய்கைக்கு அதிகாரமாவ தென்னுதல். (உ)

## மூன்றும் பாட்டு.

ஈடுமெடுப்புமிலீசன், மாடுவிடாதென்மனனே
பாடுமென்னுவவன்பாட, லாடுமெனங்கமணங்கே.

ஆ.—எத்தாலேயென்னில்; அடிமைசெய்கையிலே அபேக்ஷையுடையாரை ஜாதி குணவ்ருத்தாதிகளால் தண்ணியரென்று போகடும் ஸ்வபாவனல்லாமையாலே யென்கிறார்.

---

நின்று மதுதாரைகள்பாயும்" "தழைக்குந்துழாய்" என்றிருக்கையாலே,பகவத்ஸ்பர்ஶத்தாலும்சிரமயராகையாலும், துழாய்க்கும் விஶ்லேஷத்தில் உருவுதலும், ஸம்ஶ்லேஷத்திற் சினையாறுபடுதலும் கூடுமென்று கருத்து. முதுவேதம் - பழையவேதம். "மதுவார்தண்ணந்துழாயான் முதுவேதமுதல்வன்" என்று கூட்டி ஹாவம்-இவ்வோப்பனை இத்யாதி. பாசிபூத்த என்றது - புராதநத்வாபிப்ராயம். நித்யமென்றபோதே அபௌருஷேயத்வம் ஸித்தம். வேதமுதல்வன் - வேதத்தை ஜ்ஞாபக ஹேதுவாக வுடையவன். கீழே, "மதுவார்" இத்யாதி பதத்வயத்துக்குக்கூட்டிபாவமருளிச்செய்து, பதத்வயத்துக்கும்ப்ரத்யேகம்அர்த்தாந்தரம்-மதுவார்தண்ணந்துழாயான் இத்யாதி. பூர்வம், ஸௌந்தர்யபரதயா பாவம்; இங்கே, ஸர்வாதிகத்வாதிபரதயா பாவாந்தரமென்று கண்டுகொள்வது. ஸர்வாதிகன் - அவாப்தஸமஸ்தகாமன். "வக்ஷ:ஸ்த்தலே ஸ்ரீர்..." "ஜயஶ்ரீ ..." இத்யாதிப்படியே திருத்துழாய்மாலை ஸர்வாதிகத்வலக்ஷணமிறே. "வேதமுதல்வன்" என்றால் பூர்த்தியைச் சொல்லும்படி யெங்ஙனே? என்னில், "..." , "..." இத்யாதிகளாலே, ஸத்யகாமத்வ ஸத்யஸங்கல்பத்வாதிகளைச் சொல்லுகையாலே யென்றபடி. "எதுவேது" இத்யாதிக்கு முந்தினஅர்த்தம் - உத்க்ருஷ்ட நிக்ருஷ்டரூபஅதிகாரிவிஶேஷத்தைப்பற்ற. த்விதீயார்த்தம் - அந்தரங்க பஹிரங்க வ்ருத்திவிஶேஷத்தைப் பற்ற; அந்தரங்கத்தோடு பஹிரங்கத்தோடு வாசியற ஸகலகைங்கர்யத்திலு மென்றபடி. ப்ரதமயோஜனை - அதிகாரியினுடைய அயோக்யதாநுஸந்தாநபரம். த்விதீயயோஜனை - கைங்கர்யத்தினுடைய அயோக்யதாநுஸந்தாநபரம். ஈடு - அதிகாரம். ஶாஸ்த்ர "ஶாஸ்த்ரயோநித்வாத்" ஶாஸ்த்ரம் யஸ்ய, யோநி:-காரணம் ... தத்வாதஸ்யயோநி - தஸ்யாவ:ஶாஸ்த்ரயோநித்வம் ... மதுவார்தொடங்கி, முதல்வனுக்குப் பணியெது, என்பணியேது, என்னுமதுவே ஆட்செய்யுமீடே இத்யந்வய:. (உ)

(ஈடுமெடுப்பும்.) இப்படி தனக்கு அடிமை செய்கையிலே அபேக்ஷையுடையராயிருப்பார்பக்கல் உத்கர்ஷாபகர்ஷம்பாராதே அவர்களெல்லாரையும் ஒக்க அடிமைசெய்வித்துக்கொள்ளும் ஸ்வபாவனாயிருந்த எம்பெருமானை, என்னுடைய ஸர்வகரணங்களாலும் அநுபவித்து, அநுபவஜநிதப்ரீதியாலே தைவாவிஷ்டரைப்போலே நின்று ஆடப்பெற்றேனென்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், கீழிரண்டுபாட்டாலும் சொன்ன குணங்களை அநுஸந்தித்து, ஸர்வேஶ்வரன் பக்கலிலே தம்முடைய வாங்மநஃகாயங்கள் ப்ரவணமாயிருக்கிறபடியை அருளிச்செய்கிறார்.

[ஈடுமென்று தொடங்கி] - ஆஶ்ரிதரை ஜாத்யாதிகளுடைய அபகர்ஷமும் உத்கர்ஷமும் நிபந்தநமாக விடுதல் பற்றுதல் செய்யக் கடவனன்றிக்கே நிருபாதிக ஶேஷியானவன் பாடு நின்றும் போகிறதில்லை என் மநஸ்ஸு. [பாடும் என்று தொடங்கி] - என்னுடைய வாக்கும் அவனுடைய இந்த குணப்ரதிபாதகமான ஶப்தத்தைப் பாடாநின்றது; அங்கமும் தேவாவிஷ்டரைப்போலே ஆடாநின்றது.

ப.—அநந்தரம், அதிகாரியினுடைய தோஷகுணம் பாராத ஆராத்யனான ஈஶ்வரன் பக்கலிலே தம்முடைய கரணத்ரயமும் அவகாஹித்தமையை அருளிச்செய்கிறார்.

ஈடும் - (தோஷநிபந்தநமாக)விட்டுவைக்கையும், எடுப்பும்-(குணநிபந்தநமாக) எடுத்துக்கொள்ளுகையும், இல் - இல்லாமையாலே, ஈசன் - (ஸர்வஸாதாரணஸம்பந்தத்தையுடையனான) ஈஶ்வரனுடைய, மாடு - பரிஸரத்தை, என்மனன் - என்நெஞ்சு, விடாது - விடுகிறதில்லை; என்நா - என்னுடைய நாவானது, அவன்பாடல்-அவன்விஷயமானபாடலான திருவாய்மொழியை, பாடும் - பாடாநின்றது; என் அங்கம் - என்ஶரீரம், அணங்கு - தைவாவிஷ்டம்போலே, ஆடும்-ஆடாநின்றது. தனித்தனி "என், என்" என்று கரணத்ரயத்திலும் தம்முடைய உகப்புத் தோற்றுகிறது. ஏகாரம் - "விடாது, பாடும், ஆடும்" என்னும் வினைகளுடனே கூடிக்கிடக்கிறது.

இ.—மூன்றும்பாட்டில், கீழிரண்டுபாட்டிலும் சொன்ன குணங்களை அநுஸந்தித்துத் தாம் அதிகரித்த காரியத்தை மறந்து, அவன்பக்கல் தம்முடைய மநோவாக்காயங்கள் ப்ரவணமாயிருக்கிறபடியை அருளிச்செய்கிறார்.

[ஈடுமெடுப்புமிலீசன்] - 'ஜந்மவ்ருத்தாதிகளால் உத்க்ருஷ்டன்' என்று ஸ்வீகரித்தல், 'அபக்ருஷ்டன்' என்று உபேக்ஷித்தல் செய்யாத ஸர்வேஶ்வரன். ஜாத்யாதிகள் பார்க்க விரகில்லையே; ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமானபின்பு ஆரை விடுவது? [மாடுவிடாதென்மனனே]-அவன் பரிஸரத்தை விடுகிறதில்லை, என்மநஸ்ஸானது. ப்ரயோஜநத்தைப்பற்றக் கிட்டிற்றுகிலிறே, பலத்தளவிலே மீளுவது. நான் அதிகரித்த கார்யத்துக்கு நெஞ்சு ஒழிகிறதில்லை. உம்முடைய அஹ்ருதயமான உக்தியே அமையாதோ எங்களுடைய ஹிதத்துக்கு? என்ன,—[பாடுமென்நா அவன்பாடல்]-என்னுடைய வாக்கானது அவனுடையகுணப்ரதிபாதகமானகாதாவிஶேஷங்களைப் பாடாநின்றது. உம்முடைய ஹஸ்தமுத்ரையே அமையாதோ எங்களுக்கு அர்த்த நிஶ்சயம் பண்ணுகைக்கு? என்ன,—[ஆடுமெனங்கமணங்கே]-என்னுடைய ஶரீரமும் தைவாவிஷ்டரைப்போலே ஆடாநின்றது. தம்முடைய கரணங்கள் தனித்தனியே மேல்விழக் கண்ட ப்ரீதியாலே 'என்மனன், என்நா, என் அங்கம்' என்று உகக்கிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. அவனுடைய இஸ்வபாவத்தை அநுஸந்தித்துத் தாம் அதிகரித்த கார்யத்தை மறக்கும்படி தம்முடைய மநோவாக்காயங்களுக்கு அவன்பக்கலிலே உண்டான ப்ராவண்யத்தை அருளிச்செய்கிறார்.

[ஈடுமெடுப்புமிலீசன்] - சிலரையுபேக்ஷித்தல் சிலரை ஸ்வீகரித்தல் செய்யாத ஸர்வேச்வரன்; ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமாயிருக்கையாலே சிலரை விடப்போகாதிறே. "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" (தேவாநாம்தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்) என்று ஸ்வீகரிக்குமவனேயுள்ள ஸம்பந்தம் விடுமேவன்பக்கலிலு முண்டிறே. [ஈசன்மாடுவிடாதேன் மனனே] - ஒரு ஸாதநபுத்யா கிட்டிற்றாகிலிறே பலம் கைப்புகுந்தவாறே விடுவது, நான் அதிகரித்த கார்யத்துக்கு எனக்கு நெஞ்சு ஒழிகிறதில்லை. *நாவியலா லிசைமாலைகளேத்தியன்றோ, மநஸ்ஸஹகாரம் வேணுமோ உமக்கு? உம்முடைய அஹ்ருதயமான உக்தி அமையாதோ எங்களுடைய ஹிதத்துக்கு? என்ன,—[பாடுமென்னாவவன்பாடல்] - என்னுடைய வாகிந்த்ரியமும் மநஸ்அதிகரித்த கார்யத்திலே அதிகரித்தது. ஆனால் உம்முடைய ஹஸ்தமுத்ரை அமையாதோ எங்களுக்கு அர்த்தநிச்சயம் பண்ணுகைக்கு? என்ன,—[ஆடுமேணங்கமணங்கே]-அதுவும் அவ்விஷயத்திலே ப்ரவணமாயிற்று.

## நான்காம் பாட்டு.

அணங்கேனவாடுமேனங்கம், வணங்கிவழிபடுமீசன்
பிணங்கியமரர்பிதற்றும், குணங்கெழுகோள்கையினனே.

ஆ.—(அணங்கென.) அந்யைரநுபூயமாநமான குணங்களிற்காட்டில் ஸ்வைரநுபூயமாநமான குணங்களுக்குப் பரஸ்பரம் விவாதமாக உத்கர்ஷத்தை ப்ரதிபாதியாநின்றுகொண்டு, அயர்வறுமமரர்கள் அக்ரமமாகக் கொண்டு அநுபவிக்கிற கல்யாணகுணங்கள் சேருகைக்குக் கொள்கலமாய், ஸர்வேச்வரனை எம்பெருமானை நான் அநுபவித்து, ப்ரீத்யதிசயத்தாலே ஹைவா

---

மூன்றாம்பாட்டு - ஈடும் இத்யாதி. கீழும் மேலும் பரோபதேசமாயிருக்க, நடுவிட்டுஇரண்டுபாட்டு ஸ்வாநுபவமாக அருளிச்செய்வானென்? என்ன, அவனுடைய இத்யாதி. இஸ்வபாவத்தை - ஸ்வாராததாஸ்வபாவத்தை யென்றபடி. அதிகரித்தகார்யம் - பரோபதேசம்.

ஈடு - போகட்டுவைக்கையாய், உபேக்ஷிக்கை யென்றபடி. எடுக்கை - ஸ்வீகரிக்கை. எல்லாரையும் ஸ்வீகரிக்கைக்குஅடியேது? என்ன, ஸம்பந்தம் இத்யாதி. 'ஈசன்' என்ற ஸம்பந்த மென்றபடி. 'ஜிதந்தே பாம்தேவாநாம் ஊர்த்வாதி. 'ஸவ்யோமாவரண அநும் வஜாஹிம்ரணஹவ' உத்யோஹத்ராயத்ழ ஈசன் மாடு - ஈசனிடத்தை. விடாமைக்கு அடி ஏது? என்ன, ஒரு ஸாதநபுத்யா இத்யாதி. 'மனனே' என்ற ஏகாரம் - ஈற்றசை; அவ்யய மென்றபடி. 'ஈசன்மாடுவிடாது' என்கிறவருடைய பாவம் - நான் அதிகரித்த இத்யாதி. அதிகரித்தகார்யம் - ஸ்வாராததோபதேசம். மேலுக்குஅவதாரிகை - நாவியலால் இத்யாதி. காவினுடைய உக்தியாலே காகரூபமான ஸந்தர்ப்பங்களை யிட்டேத்துகையாகிற நன்னுதலைப்பெற்றேனென்றபடி. மநஸ்அதிகரித்தகார்யத்திலே இத்யாதி - மநஸ்ஸைப்போலே பகவத்விஷயத்தில் ப்ரவணமாயிற்றென்றபடி. அணங்கு - தெய்வப்பெண், தைவாவிஷ்டமும். என்மனன் ஈடுமெடுப்புமிலீசன் மாடு விடாது, என்னா அவன் பாடல்பாடும்; எனங்கம் அணங்கென ஆடும் இதயந்வயம்.

* திருவாய்மொழி-ச, இ, ச.

விஷ்டரைப்போலே அக்ரமமாக நின்று ஆடி அவனை வணங்கி அடிமைசெய்யுமிதுவே ஸ்வபாவமாகப் பெற்றே னென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், நித்யஸூரிகளைப்போலே எனக்கு பகவத்ப்ராவண்யம் நித்யமாயிற்று என்கிறார்; பஹுகுணனை ஈஶ்வரனை என் அங்கம் வணங்கி வழிபடுமென்கிறாரென்றுமாம்.

[அணங்கென்று தொடங்கி] - தைவாவிஷ்டமானாற்போலே பகவத்குணஜிதமாய்க் கொண்டு ஆடாநின்றுள்ள என்னுடைய அங்கம் என்றும் வணங்குகையே ஸ்வபாவமாக வுடைத்தாயிற்று. [ஈசனென்று தொடங்கி] - ஒருவர்க்கொருவர் 'நான் முற்படவேணும்' என்று பிணங்கி அயர்வறுமமரர்கள் ஸங்கிபதிதரைப்போலே பிதற்றும் குணங்கள் சேருகைக்குப் பாத்ரமாயுள்ள ஸர்வேஶ்வரனை.

ப.—அநந்தரம், இப்படி என்னையும் அங்கீகரித்த ஸ்வாமி, நித்யஸூரிகளுக்கு நிரந்தராநுபாவ்யமான குணவைபவத்தை யுடையவ னென்கிறார்.

அணங்கென - அணங்கேறினாற்போலே, ஆடும் - (ப்ரேமத்தாலே) ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுகிற, என் - என்னுடைய, அங்கம் - ஶரீரம், வணங்கி வழிபடும் - ப்ரணாமாதிமுகத்தாலே ஆராதிக்கும்படியான, ஈசன் - ஸ்வாமியானவன், அமரர் - நித்யாநுபவபரரான ஸூரிகள், பிணங்கிப் பிதற்றும் - (ஸ்வாநுபூதகுணதாரதம்யமுகத்தாலே) ஸரஸவிவாதகோலாஹலோக்தி பண்ணும்படியான; குணம்கெழு - குணங்கள்செறிவு, கொள்கையினன் - கோட்பாட்டையுடையவன்கிடீர்! கொள்கையென்று - ஆஶ்ரயவிஷயமாகவுமாம். இப்படி ஸர்வாதிகன்கிடீர் பந்தத்தாலே என்னை அடிமைகொண்டான் என்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், கீழ்ச்சொன்ன ப்ராவண்யம் காதாசித்கமன்றிக்கே, நித்யமாய்ச் செல்லாநின்றதென்கிறார்.

[அணங்கென வாடுமெனங்கம்] - கீழ், 'அணங்கு' என்றதுக்கு அர்த்தம் இங்கே தெரிவித்தாரிறே. தைவாவிஷ்டரைப்போலே ஆடாநிற்கிற என் ஶரீரம் அவன்பக்கலிலே வணங்கி வழிபடாநின்றது. வழிபடுகையாவது - அதுவே யாத்ரையாய்ச் செல்லுகை. [ஈசன் இத்யாதி]- [பிணங்கி அமரர்] - அமரரென்கிறது - நித்யஸூரிகளை. ஏகரஸரானவர்களுக்கு விப்ரதிபத்தி யுண்டோ? என்னில், தாந்தாம் அநுபவித்த குணங்களிலேற்றத்தை 'நான் முந்துறச் சொல்ல, நான் முந்துறச் சொல்ல' என்று ஒருவர்க்கொருவர் பிணங்காநிற்பர்கள். [பிதற்றும்] - ஜ்வரஸங்கிபதிதரைப்போலே கூப்பிடாநிற்கை. [குணங்கெழுகொள்கையினானை] - ரத்நாகரம் போலே ஏவம்விதமான குணங்கள் வந்து சேருகைக்கு ஆஶ்ரயமாயுள்ளா னென்னுதல்; இக்குணங்கள் வந்து கெழுமுகையை ஸ்வபாவமாக உடையானென்னுதல். பிணங்கி அமரர் பிதற்றுங் குணம்கெழுகொள்கையினனை ஈசனைக் கண்டு, அணங்கென ஆடும் எனங்கம் வணங்கி வழிபடும். அன்றிக்கே, அணங்கென ஆடும் எனங்கம் வணங்கிவழிபடு மீசன், பிணங்கியமரர்பிதற்றும் குணங்கெழுகொள்கையினன்கிடீ ரென்கிறார். நித்யஸூரிகளுடைய யாத்ரையே தம்முடைய கரணங்களுக்கும் யாத்ரையாய்ச் செல்லாநின்றதென்கிறார்.

ஈடு.—நாலாம்பாட்டு. தம்முடைய மநோவாக்காயங்களுக்கு அவன்பக்கலுண்டான ப்ராவண்யம் காதாசித்கமாய் விடுகை யன்றிக்கே, நித்யஸூரிகளைப் போலே யாத்ரையானபடி சொல்லுகிறார்.

---

நாலாம்பாட்டு - அணங்கென இத்யாதி. கீழிற்பாட்டில் இப்பாட்டுக்குவாசி-இதுதானே யாத்ரையாகை.

அணங்கேன வாடுமேனங்கம் வணங்கிவழிபடு மீசன், பிணங்கியமரர்பிதற்றும் குணங்கெழுகொள்கையினன்கிடீர் என்னுதல்; பிணங்கியமரர்பிதற்றும் குணங்கெழுகொள்கையினனை ஈசனை யநுபவித்து, அணங்கேன வாடு மேனங்கம் வணங்கிவழிபடு மென்னுதல். தைவாவிஷ்டமென்னலாம்படி ஆடுகிற என் அங்கம், வணங்கியதுதானே யாத்ரையாய்ச் செல்லும்படியிருக்கிற ஈசன். *( [பிணங்கியமரர்பிதற்றும்] - தாந்தாம் அநுபவிக்கிற குணங்களுக்கு ஏற்றஞ் சொல்லப்புக்கு, எதிரிசொல்லுகிற குணங்களுக்கு ஏற்றம் சொல்லித் தலைக்கட்டுகை.) தாந்தாமகப்பட்ட குணங்களைச் சொல்லி, 'நான் முந்துறச்சொல்ல, நான் முந்துறச்சொல்ல' என்று பிணங்கி நித்யஸூரிகள் ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவுகெடக் கூப்பிடுகிற குணங்கள் வந்து சேருகைக்கு ஆஶ்ரயமானவன். ரத்நாகரம்போலே குணங்கள் சேருகைக்கு ஆஶ்ரயமாயுள்ளானென்னுதல்; இக்குணங்கள் வந்து கெழுமுகையை ஸ்வபாவமாக வுடையவனென்னுதல். ஸர்வஜ்ஞரானவர்கள் படுகிற பாடு என்னுடைய கரணங்களுக்கும் உண்டாகாநின்றதுகிடீரென்கிறார்.

---

## ஐந்தாம் பாட்டு.

**கோள்கைகோளாமையிலாதான், எள்கலிராகமிலாதான்**
**விள்கைவிள்ளாமைவிரும்பி, உள்கலந்தார்க்கோரமுதே.**

*ஆ.—(கொள்கை.)* இப்படி நிர்ஹேதுகமாகத் தாம் பெற்ற ஸம்ருத்தியைத் தம்முடைய ப்ரீத்யதிஶயத்தாலே நடுவே பேசி, பின்னையும் பகவத்பரிசர்யோந்முகராய்த் தங்களுடைய அநர்ஹதையாலே கூசியிருந்தவர்களைக் குறித்து, அவர்களுடைய கூச்சம் போம்படி பின்னையும் எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லுகிறார்.

ஸ்வசரணயுகளபரிசர்யாபேக்ஷையுடையாரா யிருப்பாருடைய உக்கர்ஷாபகர்ஷம்பாராதே அடிமை செய்வித்துக்கொள்ளும் ஸ்வபாவனென்னுமிடம், "ஈடுமெடுப்பும்" என்னும் பாட்டாலே பிறந்தது; இனி அவர்களை அடிமைசெய்வித்துக்கொள்ளுமிடத்தில், அவர்களை எல்லாரையு மொக்க அந்தரங்க பஹிரங்க ஸர்வஶேஷ வ்ருத்தியையும் செய்வித்துக்கொள்ளும் ஸ்வபாவனுமாய், அவர்கள்பக்கல் ஸ்நேஹாபேக்ஷா வைஷம்யம் பண்ணாதே ஸமானமா யிருக்கும். இப்படி ஶீலவானா யிருக்கிறவன் ஆஶ்ரயித்தா ரெல்லார்க்கும் ஒக்கத் தன்னையே ப்ராப்யமாகக் கொடாதே, சிலர்க்கே தன்னைக் கொடுப்பானென்? என்னில்,—அதுக்குக் காரணம் - வேறே ஒரு ப்ரயோஜநத்தைப் பற்றித் தன்னை விடுகையும், தன்னையே ப்ராப்யமாகப் பற்றித் தன்னை விடாமையும். இவற்றைப் பார்த்து, தன்னையே ப்ராப்யமாகப் பற்றி விடாதவர்களுக்குத் தன்

---

முந்தின அர்த்தத்தில், வணங்கி வழிபடுகைக்கு விஷயமான ஈசன் எப்படிப்பட்டவனென்னில்,— **பிணங்கியமரர்** இத்யாதி யென்று ஸங்கதி. இந்த அந்வயத்துக்கு ஶப்தார்த்தம் - தைவாவிஷ்டம் இத்யாதி. **இதுதானே யாத்ரையாய்** என்றது - 'வழிபடும்' என்கிற வர்த்தமானார்த்தம். ஏகரஸரானவர்களுக்குப் பிணக்க முண்டோ? என்ன,—**தாந்தாம்** இத்யாதி. **அடைவுகெட** என்றது - ஒருகுணத்தைச்சொல்ல இழிந்து வேறொரு குணத்தைச் சொல்லுவர்களென்றபடி. **ஆஶ்ரயமானவன்** - கொள்கலமானவன். **கெழுமுகை** - சேருகை. **கொள்கை** - ஆஶ்ரயமும், ஸ்வபாவமும், க்ரஹிக்கையும். **கெழுமுகையென்றது** - "கெழு" என்றதினுடைய ப்ரக்ருதி. **த்விதீயார்த்தத்தில், கொள்கையினன்** - ஸ்வபாவமாக வுடையவனென்றபடி. **த்விதீயாந்வயத்தில்** "அமரர்பிதற்றும்"என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் - **ஸர்வஜ்ஞரானவர்கள்** இத்யாதி "எனங்கம்" என்று ஶரீரத்தைச்சொன்னது-மநோவாக்குக்களுக்கும் உபலக்ஷணம். (ஈ)

---

* குண்டலிதம் க்வாசித்க மென்பர்.

ளையே போக்யமாகக் கொடுக்கும்: அல்லாதார்க்குத் தன்னையொழிய ப்ரயோஜநாந்தரங்களைக் கொடுக்கும்.

ஓ.—அஞ்சாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்கு எம்பெருமான் நிரதிஶய போக்யனு மென்கிறார்.

[கொள்கை கொளாமை யிலாதான்] - ஆஶ்ரிதரோடு தான் பரிமாறுமிடத்தில் அவர்கள்பக்கல் தாரதம்ய மில்லாதான். [எள்கலிராகமிலாதான்] - எல்லாரையுமொக்க ஸ்நேஹித்திருப்பன். [விள்கையென்று தொடங்கி] - ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலுமோ? அநந்ய ப்ரயோஜநனாய் அகலா தொழியுமோ? என்று மிகவும் அநுஸந்தித்து.

ப.—அநந்தரம், அநந்யரான அதிகாரிகளுக்கு போக்ய னென்கிறார்.

கொள்கை - (குணம்பார்த்துக் கனக்கக்) கொள்ளுகையும், கொளாமை - (குணஹாநியாலே) கைவிடுகையும், இலாதான் - இல்லாதவனாய், எள்கல் - (கைவிடுகைக்கு அடியான நெஞ்சில்) நெகிழ்ச்சியும், இராகம் - (கைக்கொள்ளுகைக்கு அடியான) ராகமும், இலாதான் - இல்லாத ஸாதாரணனானவன்; விள்கை - (ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு) விட்டுப்போகையையும், விள்ளாமை - (அநந்யப்ரயோஜநராய்) விடாதொழிகையையும், விரும்பி - விரும்பிப் பார்த்து, உள்கலந்தார்க்கு - (தன்னோடு அநந்யராய், உட்புகுந்தார்க்கு, ஓர் அமுது - அத்விதீயமான நித்ய போக்யமாம்.

இ.—அஞ்சாம் பாட்டில், திரியவும் தாம் அதிகரித்த கார்யத்தே போந்து, அவன் அநந்யப்ரயோஜநர்க்கு நிரதிஶயபோக்யனு மென்கிறார்.

[கொள்கைகொளாமை யிலாதான்] - ஆஶ்ரிதரோடு பரிமாறுமிடத்தில் அவர்கள்பக்கல் தாரதம்யம்பாராதவன். அதாவது - 'இவன் உத்க்ருஷ்டன்: அந்தரங்க வ்ருத்தியைக் கொள்ளுவோம்; இவன் அபக்ருஷ்டன்: புறத்தொழிலைக் கொள்ளுவோம்' என்னுமவை யில்லாதவன். [எள்க லிராக மிலாதான்] - அடிமைகொள்ளு மிடத்தில் வாசியில்லையே யாகிலும் அவ்வாசியை நினைத்திருக்குமோ? என்னில்,—ராக த்வேஷ விபாக மின்றிக்கே எல்லார்க்கு மொக்க வத்ஸலனு யிருக்கும். ஆனல், இவன் தன்னைக்கிட்டினார்பக்கல் பார்க்குமது ஏது என்னில், - [விள்கை விள்ளாமை விரும்பி] - விள்கை - ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டு விடுகை. விள்ளாமை - அநந்ய ப்ரயோஜநனாகை. விரும்பி - ஆதரித்துப் பார்த்து. [உள்கலந்தார்க்குஓரமுதே] - அநந்ய ப்ரயோஜநர்க்கு நிரதிஶய போக்யனு யிருக்கும்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திரியட்டும் தாம்அதிகரித்த கார்யத்திலே போந்து, ஸர்வேஶ்வரன், தன்பக்கலிலே சிலர் வந்து கிட்டினல் 'இவர்கள் ப்ரயோஜநாந்தரத்தைக் கோண்டு அகலுவர்களோ? நம்மையே ப்ரயோஜநமாகப் பற்றுவர்களோ?' என்று ஆராய்ந்து, தன்னையே ப்ரயோஜநமாகப் பற்றினவர்களுக்குத் தானும் நிரதிஶயபோக்யனுயிருக்கு மேன்கிறார்.

---

அஞ்சாம்பாட்டு - கோள்கை இத்யாதி. "விள்கைவிள்ளாமைவிரும்பி" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை-திரியட்டும் இத்யாதி. அவதாரிகையிலே, * அம்பரீஷனைப்பரீக்ஷித்த ப்ரகாரத்தை யநுஸந்திப்பது. திரியட்டும் - புநஶ்ச. ஆராய்ந்து என்றது - 'விரும்பி' என்றத்தைப்பற்ற.

---

* [illegible]

[கொள்கை கோளாமையிலாதான்] - 'இவன் ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களால் உயர்ந்தானொருத்தன்: இவனை அந்தரங்க வ்ருத்தி கோள்வோம்; இவன் அவற்றால் தாழ்ந்தானொருவன்: இவனைப் புறத்தொழில் கோள்வோம்' என்னுமவை யில்லாதான். வ்ருத்திகோள்ளும்போது இல்லையாகில்,திருவுள்ளத்தாலே தான் நினைத்திருக்குமோ? என்னில்,—[எள்க லிராக மிலாதான்] - திருவுள்ளத்தாலே சிலரை இகழ்ந்திருத்தல், சிலரை ஆதரித்தல் செய்யான். 'ஈடுமெடுப்புமிலீசன்' என்றவிடம் - ஸ்வீகாரஸமயத்தில் குறைபாரா னென்றது; இங்குப் பரிமாற்றத்தில் தரமிட்டுக்கோள்ளா னென்கை. [விள்கை இத்யாதி] - இது ஒன்றுமே பார்ப்பது. விள்கை - ப்ரயோஜநங்களைக் கோண்டு விடுகை. விள்ளாமை - அநந்யப்ரயோஜநனாகை. விரும்பி-ஆதரித்து. [உள்கலந்தார்க்கு]-இவனையே ப்ரயோஜநமாகப் பற்றி இவனுடனே ஒருநீராகக் கலந்தவர்களுக்கு. [ஓரமுதே]-அத்விதீயமான அம்ருதமா யிருக்கும்; ஆராவமுதிறே. (ரு)

## ஆறும் பாட்டு.

அமுதமமரர்கட்கீந்த, நிமிர்சுடராழிநெடுமால்
அமுதிலுமாற்றவினியன், நிமிர்திரைநீள்கடலானே.

**ஆ.**—(அமுதம்.) ஆஶ்ரிதவத்ஸலனாய், ஆஶ்ரிதர்க்கு ஆத்மதாநம் பண்ணும் ஸ்வபாவனாய், நிரவதிகதேஜோவிஶிஷ்டனான திருவாழியை யேந்தின அழகாலே அம்ருதத்திற்காட்டிலும் பரமபோக்யனாயிருந்தவனுடைய திருவாழியும் கையும் கண்டுவைத்து, சிலர் அதிக்ஷுத்ரமான ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டுபோவதே, என்ன பாக்யஹீநரோ! என்றுகொண்டு கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ப்ரயோஜநாந்தரார்த்திகளுடைய இழவை அநுஸந்தித்து இன்னாதாகிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், நிரதிஶயபோக்யனான எம்பெருமானை உபாயமாகப்பற்றி ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலுகிறவர்களை இகழ்கிறார்.

[அமுதமென்று தொடங்கி] - 'க்ஷுத்ரபுருஷார்த்தத்தை அபேக்ஷிக்கிறார்' என்று இகழாதே தேர்வகளுக்குக் கடலைக் கடைந்து அம்ருதத்தைக் கொடுப்பதுஞ்செய்து நிரவதிக தேஜஸ்கமான திருவாழியையுடையவனுமாய், ஆஶ்ரயித்தமாத்ரத்திலே அதிவ்யாமுக்தனானவன், அவர்கள் போக்யமாகப்பற்றுகிற அம்ருதத்திற்காட்டிலும் நிரவதிகபோக்யன். [நிமிர்திரைநீள் கடலானே] - தூரஸ்த்தனன்றிக்கே, இவர்கள் ஆசைப்பட்ட அம்ருதம் பிறந்த கடலிலே ஆஶ்ரயிப்பார்க்கு உறுப்பாம்படி கண்வளர்ந்தருளுகிறவன்.

---

கொள்கை, கோளாமை - அங்கீகரிக்கையும் அங்கீகரியாமையும். எள்கல்-உபேக்ஷிக்கை, இராகம்-ஆதரிக்கை. புநருக்தியைப் பரிஹரிக்கிறார் - ஈடுமெடுப்புமித்யாதி. பரிமாற்றத்தில் - கைங்கர்யம்கொள்ளுமிடத்தில். விள்கை விள்ளாமை - த்விதீயாந்தம். விள்கை யாவது - தன்னைவிடுகை. விள்ளாமை யாவது - தன்னைவிடாமலிருக்கை. விரும்பி என்று - ஆதரமாய், விசாரித் தென்றபடி. "வரீக்ஷாணுஜமனாய: க்ஷரோத்யக்ஷயவெதஸாம்" என்னக்கடவதிறே. ஒருநீராகக் கலக்கை யாவது - அவன் சதாநுவர்த்தநம்பண்ணுகை. அத்விதீயத்வோபபாதநம் - ஆராவமுதிறே என்று. க்ரமேண அந்வய:. (ரு)

---

ஸவெ-ஶ்வரஃ ஶ்வாஹாவிகாவதாரஂ வூடிஶூ-ஹ்ரதவெஷ ஸவ-ராஹீஷஂ வூஷிஷயாநு - உ ஶ்ரீ விஷயசெ-வதக-தெ" என்று அடையவளைந்தானரும்பதம் காணத்தக்கது.

ப.—அநந்தரம், ப்ரயோஜநாந்தரபரர்க்கு அபேக்ஷிதபலத்தைக் கொடுத்து, அநந்யர்க்கு அதிஶயிதபோக்யம் தானேயா மென்கிறார்.

அமரர்கட்கு - (சாவாமைக்கு ஆசைப்பட்ட) தேவர்களுக்கு, அமுதம் - (அதுக்கு மருந்தான) அம்ருதத்தை, ஈந்த - கொடுத்தவனாய், நிமிர் சுடர்-வளருகிற சுடரையுடைய, ஆழி - திருவாழியையுடையனாய், நெடுமால் - நிரவதிகமாஹாத்ம்யயுக்தனுமாய்க்கொண்டு, நிமிர் - (தன்னோட்டைஸ்பர்ஶத்தாலே) வளர்ந்துவருகிற, திரை - திரைகளையுடைத்தாய், நீள் - (தன்னுடைய பெருமைக்கீடான) பரப்பையுடைய, கடலான் - திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன், அமுதிலும் - (அக்கடலிற்பட்ட) அம்ருதத்திலும், ஆற்ற இனியன் - மிகவும் இனியன். கடலிலே தோற்றியிருக்கச்செய்தே, கடைந்த அம்ருதத்துக்கும் கிடந்தஅம்ருதத்துக்கும் வாசி யிருக்கிறபடி.

இ.—ஆறும்பாட்டில், நிரதிஶயபோக்யனான அவனை உபாயமாகப்பற்றி ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டு அகலுகிறவர்களை நிந்திக்கிறார்.

[அமுதமமரர்கட்கீந்த] - 'சாவாமைக்குப் பரிஹாரம்பண்ணித் தர அமையும்' என்றுஇருக்கிறவர்களுக்கு, 'க்ஷுத்ரத்தை அபேக்ஷித்தார்கள்' என்று இகழாதே கடலைக்கடைந்து அம்ருதத்தைக் கொடுத்த பரமோதாரன். [நிமிர்சுடராழிநெடுமால்] - "நால்தோளமுது" என்றும், "அமுதென்றும் தேனென்றும்" என்றும் தம்முடைய அம்ருதம் இருக்கிறபடி. மிக்க தேஜஸ்ஸை யுடைத்தான திருவாழியையுடைய ஸர்வேஶ்வரன். இவர்கள் அபேக்ஷித்ததைத் தலைக்கட்டிக்கொடுத்த ப்ரீதியால் வந்த புகர் திருவாழியிலே தோற்றியிருக்கை. 'ப்ரயோஜநாந்தரமேயாகிலும் நம்மைக்கொண்டு பெறப்பெற்றோமே' என்று இவர்கள்பக்கல் வ்யாமோஹத்தையுடையவ னென்னவுமாம். [அமுதிலுமாற்றவினியன்] - இவர்கள் 'போக்யம்' என்றிருக்கிற அம்ருதத்திற்காட்டில் நிரதிஶயபோக்யனானவன். வாசியறிவார்களாகில் அவனையேகிடீர் பற்றடுப்ப தென்கை. பிள்ளைதிருவழுதிநாடுதாஸர்வார்த்தை. [ஆற்றஇனியன்] - மிகவும் இனியன். [நிமிர்திரை நீள்கடலானே]- அவ்வம்ருதம்படுங் கடலிலேகிடீர் அவன் சாய்ந்தருளுகிறது. தன் வாசியறியாதே யிருப்பார்க்கும் எழுப்பிக் கடைவித்துக்கொள்ளலாம்படி கண்வளர்ந்தருளுகிறவன். [நிமிர்திரை] - அவனோட்டை ஸ்பர்ஶத்தாலே கொந்தளித்த திரை. [நீள்கடல்]- "தாளுந்தோளும் முடிகளும்" என்கிறபடியே அஸங்குசிதமாகக் கண்வளர்ந்தருளுகைக்கு இடம்போந்திருக்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. அவன்படி இதுவாயிருக்க, அவனைவிட்டு ப்ரயோஜநத்தைக் கோண்டு அகலுவதே! என்று ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களை நிந்திக்கிறார்.

[அமுதமமரர்கட்கீந்த] - 'என்ன பரமோதாரனோ ?' என்கிறார். 'நீவேண்டா; எங்களுக்குச் சாவாமைக்குப் பரிஹாரம் பண்ணித்தரவேணும்' என்றவர்களுக்கு அவர்கள்உகந்த பதார்த்தத்தைக் கோடுத்து விடுவதே! அவர்கள் ப்ரயோஜநத்தை அருவருத்து, தாமுகந்த ப்ரயோஜநத்துக்குஉண்டான வ்யாவ்ருத்தி சொல்லுகிறார், [நிமிர்சுடராழி நெடுமால்] - இவருடைய அம்ருதம்

---

ஆறும்பாட்டு-அமுதம் இத்யாதி. அவதாரிகையிலே, "[illegible] ஜாயதேயடிவ[illegible] ஸொzவ[illegible]ஜஃ" என்றது அநுஸந்தேயம்.

"ஈந்த" என்றதுக்கு ஸாவம்-என்னபரமோதாரனோ இத்யாதி, பரமௌதார்யமெது? என்ன, நீவேண்டா இத்யாதி. முந்தின அம்ருதபதம்போலே இது போக்யதாபரமன்று என்கிறார்-சாவாமைக்கு என்று. மேலுக்கெல்லாம் அவதாரிகை - அவர்கள் ப்ரயோஜநத்தை இத்யாதி. நிமிர்சுடராழி - வளருகிற சுடரையுடைய திருவாழியை யுடையவன். 'ஆழிநெடுமால் அமுதிலுமாற்றவினியன்' என்று கூட்டி பாவம் - இவருடைய

இருக்கிறபடி. நாற்றோளமுதிறே இவர்க்கு அமுது; "அமுதென்றுந் தேனென்று மாழியானென்றும்" என்று கையுந் திருவாழியுமாயிறே இருப்பது, இவருடைய அம்ருதம். இவர்கள் ப்ரயோஜநத்தைத் தலைக்கட்டிக்கோடுக்கையாலே உண்டான புகர் திருவாழியிலே தோற்றும்படியிருக்கை.[நெடுமால்]- 'நம்பக்கலிலே கொள்ளப்பெற்றோமே வேறொரு ப்ரயோஜநமாகிலும்' என்றுபண்ணின வ்யாமோஹாதிஶயம். [அமுதிலுமாற்றஇனியன்] இவர்கள் வாசியறிவர்களாகில் இவனைக்கிடீர் பற்ற அடுப்பது? நம்பி திருவழுதிநாடு தாஸர் - இத்தேவஜாதி வெறும் மரையோ, 'உப்புச்சாறு கிளருவது எப்போதோ ?' என்று கவிழ்ந்து பார்த்துக்கிடப்பதே இவனழகையும் போக்யதையையும் விட்டு !' என்பராம். [ஆற்றஇனியன்] - மிகவும் இனியன். [நிமிர்திரைநீள்கடலானே] - 'அஸங்நிஹிதன்' என்றுதான் விடுகிறார்களோ ! அவ்வம்ருதம்படுகிற கடலிலே கிடீர் அவன்சாய்ந்தருளிற்று. தன்வாசியறியாதிருப்பார்க்கும் எழுப்பிக் கார்யங்கொள்ளலாம்படி கண்வளர்ந்தருளுகிறவன். * "தாளுந் தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி" என்கிறபடியே கண்வளர்ந்தருளுகைக்கீடான பரப்பையுடைத்தாய், ஸ்வஸங்நிதாநத்தாலே திரைக்கிளப்பத்தையுடைத்தான கடலிலேயாயிற்று, சாய்ந்தருளிற்று. " மாலுங்கருங்கடலேயென்னோற்றாய் " என்னக்கடவதிறே. (சு)

## ஏழாம் பாட்டு.

நீள்கடல்சூழிலங்கைக்கோன், தோள்கள்தலைதுணிசெய்தான்
தாள்கள்தலையில்வணங்கி, † நாள்கடலைக்கழிமினே.

**ஆ.**—(நீள்கடல்.) இப்படி பரமஶீலவானாய், ஆஶ்ரிதவிரோதி நிரஸநைகபோகனாயிருந்த எம்பெருமானுடைய திருவடிகளை, ஒன்றுங் கூசாதே உங்கள் தலையாலே வணங்கிக்கொண்டு காலத்தைப் போக்கிக்கொள்ளுங்க ளென்கிறார்.

ஓ.—ஏழாம்பாட்டில், பஜமாநரான உங்களுக்கு அவனைக் காண்கையிலுள்ள ஆசையாலே ஓரோதிவஸம் ஓரோ கடல்போலே நெடிதாய்க் காலக்ஷேபம் அரிதானால் பெருமாளுடைய வீரசரிதத்தை அநுஸந்தித்துத் திருவடிகளைத் தலையாலே வணங்கிக் காலத்தைப் போக்

இத்யாதி. அதில்ப்ரமாணம்-அமுதென்றும் இத்யாதி. இரண்டாந்திருவந்தாதி(அசு)-நித்யபோக்யமான அம்ருதமென்றும், ஸர்வரஸ ஸ்வபாவமான தேனென்றும், நிரதிஶயபோக்யமான திருவாழியை யுடையவ னென்றும் என்றபடி. அமரர்கட்கமுதமீந்த நிமிர்சுடராழியென்று கூட்டித் தாத்பர்யம்-இவர்கள் ப்ரயோஜந இத்யாதி. நெடுமால் - மிக்க வ்யாமோஹத்தை யுடையவன். இவர்கள் இவன் வாசியறியாமல், நிரதிஶயபோக்யமான ஆராவமுதை விட்டு, ப்ரயோஜநாந்தரத்தைக் கொண்டகல்வதே யென்று தாம் அருளிச்செய்ததுக்கு ஸம்வாதம்- நம்பி இத்யாதி. வெறும் மரையோ - கேவல கவயமோ? மரையோ வென்றது - ஜ்ஞாநமாந்த்யத்தையும், கவிழ்ந்து கிடக்கையையும் பற்ற. இவனழகையும் - 'நிமிர்சுடராழி' 'என்று அழகையும், "அமுதிலுமாற்றவினியன்" என்று போக்யதையையுஞ் சொல்லுகிறது. நிமிர்திரை - கொந்தளிக்கிற அலை. விவரணம் - அவ்வம்ருதம் இத்யாதி. பலிதம் - தன்வாசி இத்யாதி. இதுக்கு - 'அமரர்' என்றதிலே நோக்கு. 'நீள், நிமிர்திரை' என்ற விஶேஷணத்வயத்துக்கும் பாவம்- தாளுந்தோளும் இத்யாதி. நளிர் நீர்க்கடலை இத்யாதி - குளிர்ந்த ஜலத்தையுடைய கடலை ஸ்ருஷ்டித்து, தன்னுடைய ஒப்பின்றிக்கே யிருக்கிற திருவடிகளையும் திருத்தோள்களையும் திருமுடிகளையும் பலபலவாகப்பரப்பி யென்றபடி. ஸ்வஸங்நிதாநத்தாலே திரைக்கிளப்பத்தையுடைத்தாயிருக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம்-மாலும் இத்யாதி. முதல் திருவந்தாதி (கக) - அவன் திருமேனியை நீ ஸ்பர்ஶிக்கப் பெற்று, அந்த ஸ்பர்ஶத்தாலே கொந்தளிக்கிற கறுத்தநிறத்தையுடைய கடலே! இப்பேறு பெறுகைக்கு என்ன ஸாதநாநுஷ்டாநம்பண்ணினாய்? என்றபடி. க்ரமேண அந்வயஃ. (சு)

* திருவாய்மொழி அ - ம - அ. † நாழ்கடலென்றும் பாடம்.

குங்கோ ளென்கிறார்; ஆஸ்ரிதவிரோதி நிரஸந ஸீலனான தஸரதாத்மஜனை ஆஸ்ரயித்து நிர்த்துஃக்கராங்கோ ளென்றுமாம்.

ப.—அநந்தரம், "தஸ்யவீரஸ்யசரிதம்" என்னுங் கணக்கிலே விரோதிநிரஸந ஸீலனான சக்ரவர்த்திதிருமகனை ஆஸ்ரயித்துக் காலத்தைக் கழியுங்கோ ளென்கிறார்.

நீள்கடல் - நீண்ட கடலாலே, சூழ் - சூழப்பட்ட, இலங்கை - லங்கைக்கு, கோன் - நாயகனானவனுடைய, தோள்கள்-இருபது தோளையும், தலை - பத்துத்தலையையும், துணிசெய்தான் - துணித்தவனுடைய, தாள்கள் - (யுத்தகாலத்தில் புகுந்திட்ட) திருவடிகளை, தலையில் வணங்கி - தலையாலே வணங்கி, நாள் கடலை - காலமாகிற கடலை, கழிமின் - கடவுங்கோள். தலையில் என்று ஐந்தாம் வேற்றுமை. 'தலைதுணி செய்தான்' என்கிற ஒருமை - ஜாதிபரம். 'ஆலோடி யாதநம்' இத்யாதி கணக்கிலே, காலக்ஷேப விரோதியான இந்த்ரியபாரவஸ்யாதிகளை அறுத்துத் தருவான், ராவணாந்தக னென்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், அவன் போக்யதை நெஞ்சிற்பட்டால்,ப்ராப்தியளவுஞ் செல்ல, சக்ரவர்த்திதிருமகனுடைய வீரசரிதத்தை அநுஸந்தித்துக் காலத்தைப் போக்குங்கோ ளென்கிறார்.

[நீள்கடல்சூழிலங்கைக்கோன்] - ஸதயோஜந விஸ்தீர்ணமான கடல் - அகழ்; அது மிகையென்னும்படி அரண் மிக்க ஊர்; அவை மிகையென்னும்படி ராக்ஷஸனானவன் மிடுக்கு. [தோள்கள் தலை துணிசெய்தான்] - 'அகப்பட்டானிறே'' என்று கொன்றுவிடாதே, தோள்களைக் கழித்து, தலைகளை க்ரமத்திலே யறுத்து, அவன் இளைத்து நின்றவளவிலே 'நீ இளைத்தாய், இன்று போய்ப் பின்னைவா' என்று போதுபோக்காகக் கொன்றபடி.[தாள்கள் தலையில் வணங்கி] - திருவடிகளிலே நிர்மமனாய் வணங்கி. [நாள்கடலைக்கழிமினே] - ஜ்ஞாநம்பிறந்தால் ப்ராப்தியளவும் 'ஒருபக லாயிரமூழி' என்னுமாபோலே காலக்ஷேபம் அரிதாயிறே யிருப்பது. திருவடியைப்போலே தசரதாத்மஜனுடைய வீரசரிதத்தை அநுஸந்தித்துக் காலத்தைப்போக்குவது; அன்றிக்கே, சக்ரவர்த்திதிருமகனை ஆஸ்ரயித்து ஸம்ஸாரார்ணவத்தை மாற்றிக்கொள்ளப் பாருங்கோ ளென்கிறு ரென்றுமாம். காழ் - குற்றம்.

ஈடு—ஏழாம்பாட்டு. அவன் நிரதிஸயபோக்ய னென்றீர்; அவனை ப்ராபிக்குமளவும் நடுவு காலக்ஷேபம் பண்ணும்படி யென்? என்ன; அதுக்கன்றோ மனத்துக்கினியானுடைய குணங்களிருக்கிறது என்கிறார்.

[நீள்கடல்சூழிலங்கைக்கோன் இத்யாதி] - 'பரந்தகடலை அகழாகவுடைத்தாய், அது தானும் மிகையாம்படியான அரணை யுடைத்தாயிருந்துள்ள லங்கைக்கு நிர்வாஹகனல்லேனோ' என்னும்துரபிமாநத்தாலே 'சக்ரவர்த்திதிருமகன்' என்று மதியாதே எதிரிட்ட பையலுடைய. [தோள்கள் தலைதுணிசெய்தான்] - 'அகப்படாதவன் அகப்பட்டான், தப்பாமல் கொன்று விடுவோம்' என்று பாராதே, தோளைக்கழித்துத் தலையைச்சரித்துப் போதுபோக்காக நின்று கொன்றபடி. அவனுடைய வீரசரிதங்களைக்கொண்டு திருவடியைப்போலே போதுபோக்கி. [நாள்கடலைக் கழிமினே] - அவனு

---

ஏழாம்பாட்டு - நீள்கடல் இத்யாதி. 'நாள்கடலைக் கழிமினே' என்ற பதத்தைக் கடாக்ஷித்து ப்ரஸ்நோத்தர ரூபேண ஸங்கதி-அவன் இத்யாதி. மனத்துக்கினியான் - சக்ரவர்த்திதிருமகன்.

அரண் என்ற அர்த்தாத்ஸித்தம். நீள்கடல் இத்யாதி - ஹேதுகர்ப்பம். தனித்தனியே சொன்னதுக்கு பா[illegible] - அகப்படாதவன் இத்யாதி. சரித்து - சேதித்து. தலையில் - பஞ்சமீவிபக்தி; தலையாலே யென்றபடி. தலை துணிசெய்தான் தாள்கள் வணங்குகையாவது - வீரசரிதாநுஸந்தாந மென்றபடி. திருவடியைப் போலே

டைய போக்யதை நெஞ்சிலேபட்டால், அவனை ப்ராபிப்பதற்குமுன்பு நடுவேபட்ட நாள் ஒருகடல் போலே தோற்றுமாயிற்று. அன்றிக்கே, சக்ரவர்த்திதிருமகனை ஆம்ரயித்து ஸம்ஸார துரிதத்தைக் கழித்துக்கொள்ளுங்கோ ளென்கிறாராதல். (எ)

## எட்டாம் பாட்டு.

---

கழிமின்தொண்டீர்கள்கழித்துத், தொழுமினவனைத்தொழுதால்
வழிநின்றவல்வினைமாள்வித்து, அழிவின்றியாக்கந்தருமே.

ஆ.—(கழிமின்.) அவனைத் தொழுமிடத்து, முந்துறத் தத்வ்யதிரிக்த ஸர்வவிஷயங்களையும் விடுங்கோள். அவனைத்தொழவே, ஸ்வவிஷய கைங்கர்ய ப்ரதிபந்தகமான உங்கள் வினைகளைப் போக்கி, நித்யஸித்தமான அந்தக் கைங்கர்யரூப மஹாஸம்பத்தை உங்களுக்குத் தந்தருளு மென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், அநந்ய ப்ரயோஜநராய் பஜிக்குமவர்களுக்கு, விக்நங்களை யெல்லாம் போக்கி அடிமையாகிற அழிவில்லாத ஸம்பத்தை எம்பெருமான் தரு மென்கிறார்.

[கழிமின் தொண்டீர்கள்] - பாஹ்யருசிகளை விடுங்கோள். [கழித்துத் தொழுமின்]- அவஶ்யம் அவற்றைவிட்டு எம்பெருமானை ஆம்ரயியுங்கோள். [அவனைத் தொழுதால் என்று தொடங்கி] - ஆம்ரயிக்குமவனுக்கு ஆம்ரயணந்தானே ப்ரயோஜநம் போந்திருக்கச்செய்தே, பகவத்ப்ராப்திக்கு விக்நமான அவித்யாதிகளைப் போக்கி.

ப.—அநந்தரம், அவன்விஷயத்தில் அஞ்சலிமாத்ரமே அநாதிஸித்தவிரோதியைக் கழித்து நித்யபுருஷார்த்தத்தைத் தரு மென்கிறார்.

தொண்டீர்கள் - சபலரான நீங்கள், கழிமின் - (உங்கள் சாபல்யத்தைக்) கழியுங்கோள்; கழித்து - (அத்தைக்) கழித்து, அவனை - (கீழ்ச்சொன்ன) சக்ரவர்த்திதிருமகனை, தொழுமின் - தொழுங்கோள் ; தொழுதால் - ஓரஞ்சலிபண்ணின வளவாலே, வல் - (அநாதிஸித்தமாய் அநுபவித்துக் கழிக்க) அரிதான, வழிநின்ற வினை - ப்ராப்யப்ரதிபந்தகபாபங்களை, மாள்வித்து- இல்லையாக்கி, அழிவின்றி - மீட்சியில்லாதபடி (நித்யமாய்), ஆக்கம் - (ஸ்வப்ராப்திரூபமான) ஐஶ்வர்யாபிவ்ருத்தியை, தருமே - அவன் தந்தருளுகை அறுதி. தொண்டீரென்று - பகவத்ப்ரவணரைச் சொல்லி, கழிமினென்று - இதரநிவ்ருத்தியைச் சொல்லிற்றாகவுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், சக்ரவர்த்திதிருமகனை ஆம்ரயித்து விஷயப்ராவண்யத்தைத் தவிரவே, ப்ராப்திப்ரதிபந்தகங்களைப் போக்கி நித்யகைங்கர்யத்தைத் தரு மென்கிறார்.

[கழிமின் தொண்டீர்கள்] - பகவத்விஷயத்திலே நசையுடையீர் ! விஷயங்களில் ருசியைக் கழியுங்கோள். [கழித்துத் தொழுமின்] - இந்த விஷயங்களில் ருசியைக்கழித்து அந்தச் சக்ரவர்த்தி திருமகனைத் தொழுங்கோள். 'கழித்து' என்கிற அநுபாஷணத்தாலே - விஷய

---

யென்றஇடத்திலே - "தாஞ்ஞுணோநநவைஹவியழ" இத்யாத்யநுஸந்தேயம். த்விதியார்த்தத்துக்கு, நாள்கடலென்றதுக்கு - நாளென்று காலமாய், காலோபலக்ஷித ஸம்ஸாரார்ணவ மென்றபடி. க்ரமேண அந்வயஃ.

விரக்தி தானே ப்ரயோஜநமாகப் போருமென்கை; கழிக்கையாவது - 'இது பொல்லாது' என்றிருக்கை. [அவனைத்தொழுதால்] - கரும்புதின்னக் கூலிபோலே, தொழுகை தானே ப்ரயோஜநமென்கை. [வழிநின்ற வல்வினைமாள்வித்து] - ஸ்வயம்ப்ரயோஜநமான ஆஸ்ரயணத்துக்கு பலமிருக்கிறபடி. 'இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுபந்தியோ?' என்னும்படி யிருக்கிற ப்ரபல கர்மங்களை ஸவாஸநமாகப் போக்கி, நடுவேநின்று ப்ராப்தியை விரோதிக்கிற கர்ம மென்னவுமாம். [அழிவின்றி யாக்கந்தருமே] - அபுநராவ்ருத்தி லக்ஷணமோக்ஷமான நிரவதிக ஸம்பத்தைத் தரும்; அதாவது - கைங்கர்யம்தரும். இவ்வர்த்தத்தில் ஸம்ஶயமில்லை.

ஈடு.— எட்டாம்பாட்டு. சக்ரவர்த்திதிருமகனுடைய வீரசரிதத்தை அநுஸந்தித்து இதரவிஷய ப்ராவண்யத்தைத் தவிரவே, அவன்தானே ப்ரதிபந்தகங்களைப் போக்கி நித்யகைங்கர்யத்தைத் தந்தருளு மென்கிறார்.

[கழிமின்] - பாஹ்யவிஷயங்களிலுண்டான ருசியைக் கழியுங்கோள். கழிக்கையாவது-'பொல்லாது' என்றிருக்கை. இந்த ருசியைப் பூண்கட்டிக்கொள்ளத் தேடுகிறவர்கள் கழிக்கச்சொன்னால் கழியார்களிறே; பகவத்விஷயத்தில் சாபலமுடையீர்! கழிக்கப் பாருங்கோள். [கழித்துத் தொழுமின்] - 'அவனைத்தொழாநிற்கச்செய்தே இதுவும் க்ரமத்தாலே கழிகிறது' என்று இராதே அவஶ்யம் கழித்தே தொழுங்கோள். 'கழிமின்' என்றுவைத்து, கழித்து என்றது - இதரவிஷயங்களில் விரக்திதானே ப்ரயோஜநமாகப் போருமென்கை. 'தொழுமின்' என்றுவைத்து, தொழுதால் என்கிறது - கரும்புதின்னக் கூலிபோலே ஒருபல மில்லையே யாகிலும் தொழுகைதானே பலம்போருமென்கை. இப்படிசெய்தால்; [வழிநின்றவல்வினைமாள்வித்து] - 'இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுபந்தியோ' என்னும்படி பொருந்தியிருக்கிற ப்ரபலகர்மங்களை வாஸனையோடே போக்கி. வழிநின்ற வல்வினை - நடுவேநின்று பகவத்ப்ராப்தியை நிரோதிக்கிற கர்ம மென்றுமாம். [அழிவின்றியாக்கந் தருமே] - "நசபுநராவர்த்ததே" என்கிறபடியே அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷத்தைத் தரும். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

தருமவரும்பயனாய, திருமகளார்தனிக்கேள்வன்
பெருமையுடையபிரானார், இருமைவினைகடிவாரே.

---

எட்டாம்பாட்டு-கழிமின் இத்யாதி. 'கழித்து, வழிநின்றவல்வினை'மாள்வித்தழிவின்றி யாக்கந்தரும்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - சக்ரவர்த்தி இத்யாதி.

அநாதிகால வாஸிதத்தைப் போக்கப் போமோ? என்ன, கழிக்கையாவது இத்யாதி. 'தொண்டீர்' என்றதுக்கு பாவம் - இந்த ருசியை இத்யாதி. 'கழித்து' என்றத்தை, 'தொழுமின்' என்றதுக்கு ஶேஷமாக்கி பாவம்-அவனைத் தொழா நிற்க இத்யாதி. 'கழித்து' என்றத்தை, 'கழிமின்' என்ற கீழ்ப்பதத்தோடே கூட்டித் தாத்பர்யாந்தரம்-கழிமினென்று இத்யாதி. அநுவாதத்துக்கு பாவம்-தொழுமினென்று வைத்து இத்யாதி. கரும்பு தின்னக் கூலியில்லாதாப்போலே யென்றபடி. வழிநின்ற - வழியாகநின்ற. ஆத்மாபோகிற வழிகள்தோறும் நின்றன்றாய், ஸ்வரூபாநுபந்தியோ வென்னும்படி நின்ற வென்னுதல்; பகவத்ப்ராப்திக்கு நடுவே ப்ரதிபந்தகமாக நின்ற வென்னுதல். ஆக்கம் - ஸம்பத்து. மோக்ஷமாகிற ஸம்பத் தென்றபடி. அவதாரிகையில் கைங்கர்யமாக அருளிச்செய்கையாலே இங்கே அர்த்தாந்தரமாகக் கண்டுகொள்வது. தொண்டீர்கள் கழிமின், கழித்து அவனைத் தொழுமின், தொழுதால் தொடங்கி அந்வயம். (அ)

ஆ.— (தருமம்.) ப்ரதிபந்தகங்களைப் போக்கி அந்தப் பெறுதற்கரிதான ஸம்பத்தைத் தந்தருளுமிடத்தில், பிராட்டியோடே கூட நின்று தந்தருளு மென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஆஶ்ரயிப்பாருடைய விக்நங்களை நீக்கி நித்யகைங்கர்யத்தைக் கொடுக்கும்போது, பெரியபிராட்டியாரோடே கூடிநின்றே ஸாதரமாகக்கொடுக்கு மென்கிறார்.

[தருமென்று தொடங்கி] - உபநிஷத்ப்ரஸித்தமான பரமபுருஷார்த்தங்களைத் தரும் பெரியபிராட்டியாருடைய குணுதிகளையுள்ள நாயகன். [பெருமையென்று தொடங்கி] - ஸ்ரீயஃபதித்வ நிபந்தநமான பெருமையையுடையராய் ஆஶ்ரிதாநுக்ராஹகஸ்வரூபராய் அவர்களுடைய புண்யபாபஸ்வரூபமான கர்மங்களைப் போக்கும் ஸ்வபாவரானவர். தர்மத்தினுடைய பரமப்ரயோஜநரூபமான திருமகளா ரென்றுமாம்.

ப.—அநந்தரம், ஸ்ரீயஃபதியான அவன் ப்ரதிபந்தகத்தைத் தன் ஸங்கல்பத்தாலே போக்கு மென்கிறார்.

தருமம் - தர்மங்களுக்கும், அரு - பெறுதற்கரிய, பயனாய - ப்ரயோஜநமாயிருக்கிற, திருமகளார் - லக்ஷ்மியாகிற நாரீணுமுத்தமைக்கு, தனிக்கேள்வன் - அத்விதீயப்ரணயியென்கிற, பெருமையுடைய - பெருமையையுடைய, பிரானார் - ஸர்வேஶ்வரன், இருமை - புண்யபாபரூபமான இரண்டுவகைப்பட்ட, வினை - கர்மத்தையும், கடிவார் - முனிவர். கடிதல் - முனிதல். "அவ்வரும்பயனாயவற்றைத் தருந் திருமகளார்" என்னவுமாம். இவை யிரண்டு விசேஷணமும் தனிக்கேள்வனோடே யொட்டியுஞ் சொல்லுவர்.

இ.—ஒன்பதாம்பாட்டில், தன்னைப்பற்றின மாத்ரத்திலே இதெல்லாஞ் செய்தருளக் கூடுமோ? என்னில், "நகஶ்சிஞாவராயதி" என்னுமவள் அருகே யிருந்து தருவிக்கு மென்கிறார்.

[தருமவரும்பயனாய திருமகளார்] - உபநிஷத்துக்களிலே பரம ப்ரயோஜநமாக ப்ரஸித்தமானவற்றைத் தரும் திருமகளார்; தர்மத்தினுடைய பரமப்ரயோஜநமான திருமகளா ரென்னவுமாம். [தனிக்கேள்வன்] - அத்விதீயனான வல்லபன். [பெருமையுடைய பிரானார்] - ஸ்ரீயஃபதித்வ நிபந்தநமான பெருமையையுடையவர். பிரானார் - ஆஶ்ரிதாநுக்ரஹமே ஸ்வரூபமாயுள்ளவர். [இருமைவினைகடிவாரே] - புண்யபாபரூபமான கர்மங்களைப் போக்குவர்.

ஈடு.— ஒன்பதாம்பாட்டு. தன்னைப்பற்றினமாத்ரத்திலே இப்படி விரோதிகளைப்போக்கி இப்பேற்றைத் தரக்கூடுமோ? என்னில்; வெறும்அவன்படியையோ பார்ப்பது! அருகேயிருக்கிறார் படியையும் பார்க்கவேண்டாவோ? "நகஶ்சிந்நாவராயதி" என்பாரன்றே அருகிருக்கிறாரென்கிறார்.

[தரும்] - இவ்வர்த்தத்தில் ஸம்ஶயமில்லை. [அவ்வரும்பயனாய] - பெறுதற்கரிதாக

---

ஒன்பதாம்பாட்டு - தருமவரும் - இத்யாதி. 'திருமகளார்' என்றதைப்பற்ற, அருகேயிருக்கிறார் படியையும் - என்றது. அவர்படிதானெது? என்ன, நகஶ்சித் இத்யாதி. யுத்தகாண்டே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா- "பாபாநாம் வா ஶுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம। கார்யம் கருணமார்யேண நகஶ்சிந்நாபராத்யதி."

கீழிற்பாட்டிலும் 'தரும்' என்றுவைத்து, பின்னையும் 'தரும்' என்றதுக்கு பாவம் - இவ்வர்த்தத்தில் ஸம்ஶயமில்லை என்று. பயனாய - பயன்களை. இப்பக்ஷத்தில், திருமகளார் என்றுதொடங்கி, கடிவார்; அவ்வளவன்றிக்கே, அவ்வரும்பயனாயதரும் என்று அந்வயம். தச்சப்தம் - ப்ரஸித்தபராமர்ஶி. ஶரீரநிஷ்க்ர

ஶாஸ்த்ரங்களிலே ப்ரஸித்தமான ப்ரயோஜந ரூபமானவற்றை. அன்றிக்கே, தர்மத்தினுடைய பரம ப்ரயோஜநந் தான் வடிவுகொண்டாற்போலே யிருக்கிற பெரிய பிராட்டியாருக்கு வல்லபனாகையாலே அத்விதீயநாயகனுயிருக்கிறவ னென்றுமாம். "அப்ரமேயம் ஹி தத் தேஜ:" (அப்ரமேயம்ஹிதத்தேஜ ஃ) என்கிறபடியே - ஸ்ரீயஃபதியாகையாலே வரும் ஏற்றமுள்ளது இவனொருவனுக்குமிறே. லக்ஷ்மீபதியாகையாலே வந்த மேன்மையையுடைய உபகாரகரானவர். [பிரானுர்]- ஆஶ்ரிதாநுக்ரஹமே ஸ்வரூபமாயுள்ளவர். [இருமை வினை கடிவாரே] - பேர்வாசியேயாம்படி நாம் பண்ணிவைத்த இருவகைப்பட்ட கர்மங்களையும் போக்குவார். புண்யபாபங்களுக்குத் தன்னில் தான் வைஷம்யமுண்டேயாகிலும், மோக்ஷவிரோதித்வாத் த்யாஜ்யமாகாநின்றனவிறே. (௯)

## பத்தாம் பாட்டு.

கடிவார்தீயவினைகள், நொடியாருமளவைக்கண்
கோடியாவடுபுள்ளுயர்த்த, வடிவார்மாதவனரே.

**ஆ.**—(கடிவார்.) பிராட்டியோடே கூடநின்று, பெரியதிருவடிக்குக் கொடுத்தருளுமாபோலே தந்தருளும்; அதுக்கு ப்ரதிபந்தகங்களையும் ஒரு க்ஷணத்திலே போக்கியருளுமென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், பெரியபிராட்டியாரோடு கூடவந்து ஈண்டி ப்ரதிபந்தகங்களைப் போக்கியருளு மென்கிறார்.

[கடிவார்தீயவினைகள்] - ப்ரதிபந்தக கர்மங்களைப் போக்கும் ஸ்வபாவர். [நொடியாருமளவைக்கண்] - க்ஷணமாத்ரத்திலே. [கொடியாவடுபுள் ளுயர்த்த வடிவார்] - ஆஶ்ரிதஸம்ரக்ஷணம்பண்ணுகைக்கு ப்ரதிபக்ஷ நிரஸநஸ்வபாவனை பெரிய திருவடியைக் கொடியாக எடுக்கையை ஸ்வபாவமாகவுடையவர். பெரிய திருவடியை விஷயீகரிக்குமாபோலே, இன்று ஆஶ்ரயிப்பாரை விஷயீகரிக்கும் ஸ்வபாவ ரென்றுமாம். [மாதவனர்] - ஸ்ரீயஃபதியானவர்.

ப.—அநந்தரம், விரோதியைப் போக்குமிடத்தில், கொடிகட்டிச் சடக்கெனப் போக்குமென்கிறார்.

தீய வினைகள் - கொடிதான வினைகள், நொடியாரும் - நொடிநிரம்பும், அளவைக்கண் - அளவிடத்து, கடிவார் - கடியுமவர், அடு - (ஆஶ்ரித விரோதிகளை) அழியச்செய்யும், புள் - பெரிய திருவடியை, கொடியா - கொடியாக, உயர்த்த - எடுத்த, வடிவார் - விலக்ஷணவிக்ரஹயுக்தரான, மாதவனர் - ஸ்ரீயஃபதியானவர்.

---

மணந்தொடங்கி, கைங்கர்யபர்யந்தமான பலங்களைச் சொல்லுகிறது. அர்த்தாந்தரம் - அன்றிக்கே இத்யாதி. இந்த இரண்டாம்யோஜனைக்கு க்ரமேண அந்வயம். கேள்வன் - வல்லபன். அத்விதீயநாயகனுயிருக்கிறவன் என்றது - பெருமையின் அர்த்தம். அதாவது - திருமகளார்க்கு நாயகனுகையாலே லோகத்துக்கு அத்விதீயநாயகனான பெருமையையுடையவனுயிருக்கிறவ னென்றபடி. அப்படி பிராட்டியோட்டைஸம்பந்தத்தாலே அத்விதீயநாயகனு யிருக்குமோ? என்ன,-அப்ரமேயம் இத்யாதி: லிகிதம் பூர்வமேவ. ' திருமகளார்தனிக்கேள்வன் ' என்றத்தை, ' பிரானுர் ' என்றத்தோடே கூட்டி பாவம் - லக்ஷ்மீபதி இத்யாதி. பிரான் - உபகாரகன். அநுக்ராஹகனுக அர்த்தாந்தரம் - ஆஶ்ரித இத்யாதி. பேர்வாசியேயாம்படி'- புண்யம், பாபம் என்கிற பேர் வாசிமாத்ரமேயாம்படி. புண்யம் உபாதேயமன்றோ? 'பேர்வாசியேயாம்படி' என்கிற தென்? என்ன, புண்ய பாபங்களுக்கு இத்யாதி. அர்த்தத்வயத்துக்கும் அந்வயம் முன்பே சொல்லிற்று. (௯)

இ.—பத்தாம்பாட்டில், அவள் பொறுப்பிக்கப் பொறுக்குமிடத்தில் விளம்பமில்லை; அரைக்ஷணத்திலே பொறுப்ப ரென்கிறார்.

[கடிவார்தீயவினைகள்] - தன்னால் போக்கிக்கொள்ளவொண்ணாத கொடிய பாபங்களைப் போக்கும் ஸ்வபாவர். [நொடியாருமளவைக்கண்] - நொடி நிறையுமளவிடத்திலே; க்ஷணமாத்ரத்திலே யென்றபடி. [கொடியாவடுபுள்ளுயர்த்த வடிவார்] - ப்ரதிபக்ஷநிரஸந ஸ்வபாவனான பெரிய திருவடியைக் கொடியாக எடுக்கையை ஸ்வபாவமாக வுடையவர். இன்று ஆஸ்ரயித்தவனையும் நித்யாஸ்ரிதரோடொக்க விஷயீகரிக்கு மென்னுமிடத்துக்கு ஸூசக மென்றுமாம். வடிவாரென்று தனியேயாய், அழகியவடிவை யுடைய ரென்றுமாம். [மாதவனார்] - பிராட்டி அருகே யிருந்து போக்குவிக்க வாயிற்று வினைபோக்குவது.

ஈடு.—பத்தாம்பாட்டு. 'இப்படி அவனும் அவளுமாகக் குற்றங்களைப் போக்குவது எத்தனைகாலங்கூடி ?' என்னில்,—தன்திருவடிகளிலே தலைசாய்த்தவளவிலே யென்கிறார்.

[கடிவார்தீயவினைகள்] - காலதத்த்வமுள்ளதனையும் தன்னால் போக்கிக்கொள்ள வொண்ணாத கொடியபாபங்களைப் போக்குவார். "வழிநின்றவல்வினைமாள்வித்து" என்கிறவிடத்தில் - ஆஸ்ரயித்தமாத்ரத்திலே பாபங்களைப் போக்கு மென்றார்; "இருமைவினைகடிவார்" என்கிறவிடத்தில் - அவன்தானனதுக்குமேலே பிராட்டியுங்கூட இருக்கையாலே போக்கு மென்றார்; எவ்வளவில் போக்குவது? என்னில், க்ஷணகாலத்திலே யென்கிறார் இதில்: [நொடியாருமளவைக்கண்]- நொடிநிறையுமளவிலே. [கோடியாவடுபுள்ளுயர்த்தவடிவார்] - தூரத்திலே காணவே ப்ரதிபக்ஷம் மண்ணுண்ணும்படியான பெரியதிருவடியை த்வஜமாக எடுக்கையை ஸ்வபாவமாக வுடையவரென்னுதல்; வடிவார் - ஆர்ந்த வடிவையுடையவர்; அழகிய வடிவையுடையவரென்னுதல்; 'வடிவார் மா' என்று நாய்ச்சியார்க்கு விஶேஷணமாதல். வடிவிலே ஆர்ந்திருக்கிறவளென்னுதல், அழகிய வடிவையுடையவளென்னுதல்; வடிவிலே பொருந்தியிருக்கிறவளென்னுதல். [மாதவனார்] - பிராட்டி அருகே யிருந்து 'போக்குவிக்க வாயிற்று போக்குவது. 'ஒருதலை ஜந்மம், ஒருதலை மரணம், நடுவே ஆதிவ்யாதிகள்; இவைசெய்த குற்றங்களைப் பார்க்கக்கடவதோ! சற்றுங் கண்டுவிடில் விபூதியாக விட்டவேண்டாவோ! பொறுத்தருளீர்' என்றால், அவளுக்காக, 'பொறுத்தோம்' என்னுமித்தனை. (க0)

---

*பத்தாம்பாட்டு-கடிவார் இத்யாதி. 'நொடியாருமளவைக்கண்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-இப்படி இத்யாதி.*

*கீழிரண்டுபாட்டுக்கும் இதுக்கும் வாசியேது? என்ன, வழிநின்ற இத்யாதி. அவன் தானனதுக்கு மேலே - அவன்தானே போக்குகிறதுக்குமேலே. நொடியாருமளவைக்கண - நொடியானது நிறையுமளவிலே. 'வடிவார்' என்றதுக்கு - ஈஸ்வரவிஶேஷணமானபோது இரண்டு அர்த்தம். ஸ்வபாவமாக வுடையவரென்று - முந்தினது; இத்தை அருளிச்செய்கிறார்-தூரத்திலே! இத்யாதி. இந்தப் பக்ஷத்திலே, அடுபுள்ளைக் கொடியாக உயர்க்கையே வடிவாகவுடையவர் என்று அந்வயம். அழகிய வடிவையுடையவரென்று - த்விதீயார்த்தம்: இத்தைக் காட்டுகிறார் - ஆர்ந்த இத்யாதி. ஆர் - அழகு. வடிவு - விக்ரஹம். பிராட்டிக்கு விஶேஷணமான போது, இரண்டு அர்த்தம். முந்தினது - ஈஸ்வரன்வடிவிலே பொருந்தினவளென்று. அத்தை அருளிச்செய்கிறார்-வடிவிலே இத்யாதி. அழகிய வடிவை யுடையவளென்று த்விதீயார்த்தம்; இத்தை அருளிச்செய்கிறார்-அழகிய இத்யாதி. 'வடிவிலே யார்ந்திருக்கிற' என்றதின் விவரணம்-வடிவிலேபொருந்தி இத்யாதி. மாதவன் - மாவுக்கு - பிராட்டிக்கு, தவன் - நாயகனென்றபடி. மாதவனார் தீயவினைகள் கடிவாரென்று கூட்டி பாவம் - பிராட்டி அருகே இத்யாதி. ஸ்வதந்த்ரனைக்கொண்டு போக்குவிக்கும் ப்ரகாரம் எது? என்ன, ஒருதலை இத்யாதி. இஹஜகதிநிர்த்தோஷ: க: என்றத்தைப்பற்ற, விபூதியாகவிடவேண்டாவோ என்றது. அடுபுள்ளைக் கொடியாக வுயர்க்கையே வடிவாக வுடைய மாதவனார், நொடியாருமளவைக்கண் தீயவினைகள் கடிவார் இத்யந்வய:.*

## பதினோராம் பாட்டு.

மாதவன்பாற்சடகோபன், தீதவமின்றியுரைத்த
ஏதமிலாயிரத்திப்பத்து, ஓதவல்லார்பிறவாரே.

ஆ.—(மாதவன்பால்.) கவிபாடுகிற தமக்கும், பாட்டுண்டருளுகிற எம்பெருமானுக்கும் இக்கவிகளுக்கும் ஒரு தீங்கு இல்லாதபடி, மாதவன்பால் சடகோபனுரைத்த ஆயிரத்து இப்பத்து ஓதவல்லார் பகவத்ஸம்ஶ்லேஷ விரோதியான ஸம்ஸாரத்தில் புகாரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் பெறும் பலத்தை அருளிச்செய்கிறார்.

கவிபாடுகிறவனுக்கும் கவிபாட்டுண்கிறவனுக்கும் கவிக்கும் குற்றமாகிற ஏதமில்லாதபடியிருக்கிற ஆயிரத்தில் ஸ்ரீய:பதியான தன்பக்கலுள்ள மேன்மையை அநுஸந்தித்தல், ஆஶ்ரயித்தவனுடைய சிறுமையை அநுஸந்தித்தல் செய்கையாகிற தீதும் அவமும் இல்லாத இத்திருவாய்மொழி கற்கவல்லார் பக்தியோகத்துக்கு மேட்டுமடையான ஸம்ஸாரத்திற் பிறவார். ஏதமாவது-குற்றம். "கவிபாடுகிறவனுக்கும், கவிபாட்டுண்கிறவனுக்கும், கவிக்கும் உள்ள மூன்று குற்றத்தையும் - தீதும், அவமும், ஏதமும்" என்றுஞ் சொல்லுவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஜந்மநிவ்ருத்தியை அருளிச்செய்கிறார்.

சடகோபன் - ஆழ்வார், மாதவன்பால் - ஸ்ரீய:பதியான ஸர்வேஶ்வரன்பக்கல், தீது - (தன்மேன்மை பார்த்து நெகிழநிற்கும்) தீதும், அவம் - (ஆஶ்ரிததோஷம் பார்த்துக் கைவிடும்) அவமும், இன்றி - இல்லாதபடியாக, உரைத்த - சொன்னதாய், ஏதம் இல் - (லக்ஷணவைகல்யாதியான) குற்றம் அற்ற, ஆயிரத்து - ஆயிரத்தில் வைத்துக்கொண்டு, இப்பத்து - ஸ்வாராததையைச் சொன்ன இப்பத்தை, ஓதவல்லார் - (ஆசார்யமுகத்தாலே) அதிகரிக்கவல்லார், பிறவார் - (ஸம்ஸாரத்தில்) பிறவார்கள். தீதென்று - பாட்டுண்கிறவன் குற்றமும், அவமென்று - பாடுகிறவன் குற்றமும், ஏதமென்று - பாட்டின் குற்றமுமாகவுஞ் சொல்லுவர். இது - முச்சீராய்ச் சிந்தடி நான்கும் ஒத்திருத்தலால் வஞ்சிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் பகவதநுபவத்துக்கு மேட்டுமடையான ஸம்ஸாரத்தில் பிறவாரென்கிறார்.

[சடகோபன் மாதவன்பால் தீதவமின்றி யுரைத்த] - தீதாவது - தன்மேன்மையைப் பார்த்து எழநிற்கை; அவமாவது - ஆஶ்ரயிக்கிறவனுடைய சிறுமை பார்த்துக் கைவிடுகை. [இன்றியுரைத்த]-இரண்டு குற்றமு மில்லாமையைச் சொன்ன. [ஏதமிலாயிரம்] - லக்ஷணஹாநியால் வரும் குற்றமின்றிக்கே யிருக்கை, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையும் அப்யஸிக்கவல்லார். [பிறவார்] - பிறக்கையிறே 'மாத்ருஶுஶ்ரூஷணம் அழகிது' என்னுமோபாதி 'பகவத்ஸமாஶ்ரயணம் எளிது' என்று உபதேஶிக்க வேண்டுகிறது; உபதேஶநிரபேக்ஷமாக ஜந்மஸம்பந்தமற்று பகவதேக போகராகப்பெறுவர். 'தீது, அவம், ஏதம் என்று கர்த்தாவுக்கும், கவிக்கும், பாட்டுண்கிறவனுக்கும் உள்ள மூன்று குற்றத்தையுஞ் சொல்லுகிறது' என்றுஞ் சொல்லுவர்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்கள் ஸம்ஸாரத்தில் வந்து பிறவா ரேன்கிறார்.

[மாதவன் இத்யாதி] - தீதும், அவமும், ஏதமும் என்று - மூன்றாய், இம்மூன்றையும் - ப்ரதிபாத்யனுக்கும் வக்தாவுக்கும் ப்ரபந்தத்துக்கு மாக்கி, 'இவையில்லாமையைச் சொல்லுகிறது' என்று நிர்வஹிப்பாரு முண்டு. பட்டர், அங்ஙனன்றிக்கே, 'ஏதமிலாயிரம்' என்று - ப்ரபந்த லக்ஷணஞ் சோன்னபோதே, த்ரிவிததோஷராஹித்யமுஞ் சோல்லிற்றும்; இனி, தீதும் அவமுமாவது - செய்வதேன்? என்னில்; - 'சடகோபன் மாதவன்பால் தீதவமின்றியுரைத்த' என்றுகக்கடவது' என்று அருளிச்செய்தார். அதாவது, தீதாவது - 'நான் ஸ்ரீயஃபதியல்லேனோ!' என்று தன் மேன்மையைப்பார்த்துக் கடக்க இருக்குமது. அவமாவது - 'ஆஶ்ரயிக்கிறவன் நித்யஸம்ஸாரியன்றோ!' என்று இவன்சிறுமையைப் பார்த்துக் கைவிடுமது. இவையில்லாமையைச் சொன்ன இப்பத்து என்றபடி. ஆயிரத்திலும் இந்தப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்கள் பிறவார் - பிறக்கை சுட்டியிறே, 'மாத்ருஸம்ரக்ஷணம் அழகிது' என்னுமோபாதி, 'பகவத்ஸமாஶ்ரயணம் எளிது' என்று உபதேஶிக்கவேண்டுகிறது; இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்கள் உபதேஶநிரபேக்ஷமாக, ஸம்ஸாரஸம்பந்தமற்று பகவதநுபவமே யாத்ரையாம்படி யிருக்கிறவர்களோடே கூடி அநுபவிக்கப் பெறுவர்க ளேன்கிறார்.

முதற்பாட்டில், ஆஶ்ரயிக்குமவனுக்கு த்ரவ்யநியதியில்லை யென்றார்; இரண்டாம் பாட்டில், அதிகாரி நியதியில்லை யென்றார்; மூன்றும்பாட்டில், தம்முடைய கரணத்ரயமும் பகவத்விஷயத்திலே ப்ரவணமானபடியை அருளிச்செய்தார்; நாலாம்பாட்டில், நித்யஸூரிகளைப்போலே அதுதானே யாத்ரையாயிற் றேன்றார்; அஞ்சாம்பாட்டில், தன்னையே ப்ரயோஜநமாகப் பற்றினார்க்கு அவன் நிரதிஶயபோக்யபூத னென்றார்; ஆறும்பாட்டில், இப்படி போக்யபூதனானவனை விட்டு ப்ரயோஜநத்தைக்கோண்டு அகலுவதே! என்று ப்ரயோஜநாந்தரபரரை கர்ஹித்தார்; ஏழாம்பாட்டில், இவனையே ப்ரயோஜநமாகப்பற்றினார்க்குக் காலக்ஷேபம் இன்ன தேன்றார்; எட்டாம்பாட்டில், ப்ராப்திவிரோதிகளையும் அவன்தானே போக்கு மேன்றார்; ஒன்பதாம்பாட்டில், இதுகூடுமோ? என்று ஶங்கையாக; வேறுமவன் படியையோ பார்ப்பது, அருகுஇருக்கிறார் படியையும் பார்க்கவேண்டாவோ? என்றார்; பத்தாம்பாட்டில், இவர்கள் எத்தனைகாலம் கூடி விரோதிகளைப் போக்குவது? என்ன, க்ஷணகாலத்திலே யென்றார்; நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவே ஸம்ஸரிக்கவேண்டா வேன்றார். (கக)

---

*நிகமம் - **மாதவன் இத்யாதி.** தீதின்றியிருக்கிற மாதவன்பால், அவமின்றி யிருக்கிற சடகோபன் உரைத்த ஏதமிலாயிரத்து இப்பத்து ஓதவல்லார் பிறவா ரென்று - மூக்தின நிர்வாஹத்துக்கு அந்வயம். பட்டர் நிர்வாஹத்துக்கு, சடகோபன் மாதவன்பால் தீதவமின்றியுரைத்த ஏதமிலாயிரத்து இப்பத்து ஓதவல்லார் பிறவா ரென்று அந்வயம். மாதவன்பால் தீதவமின்றி - தீதவமில்லாதபடி யென்றபடி.*

*த்ரிவிததோஷ ராஹித்யமும் சோல்லிற்றும் - 'ஏதமில்' என்று - ஸாமாந்யமாகச் சொல்லுகையாலே வக்த்ருதஃ ப்ரதிபாத்யதஶ்ச ஏதமிலாமை ஸித்திக்கு மென்றபடி. பிறக்கை சுட்டியிறே - பிறக்கையினாலே யன்றோ. 'பிறவார்' என்று - ப்ராப்திப்ரதிபந்தக ப்ரக்ருதிஸம்பந்தராஹித்யத்தை அருளிச்செய்கையாலே, ப்ராப்தி பலாநுபவ கைங்கர்யங்களெல்லாம் அர்த்தஸித்தங்க ளென்கிறார் - இத்திருவாய்மொழியை இத்யாதி.*

*அதுதானே - பகவத்விஷயப்ராவண்யமே. இது - அவன்தானே போக்கு மென்னுமிது. வேறுமவன் படி - கேவலம் அவன்படி. அடியிலேசொன்னதே பாட்டுக்கு அந்வயம்.* (கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:—தாஸ்யேஷ்டே ஶேஷவஶ்யாஶ்ரிதஜநவசக்ருத் த்ரவ்யாதிநா நியதை: ப்ரேமதோஷாத்தவஸ்ய । பக்தி:ப்ராப்யம் பஹுமோதகாத்தவநவமோதயம் ஸ்வாரஸ்ய இத்யுபவதிஶேஶ தேநிஷ்டா ஷஷ்டே ॥

---

த்ரவிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலி:—ஈஶே தைராஶ்ச்யஹாவாதிநியத விவிதாஹ்வாநாதிவ்யத்ருஷ்டே: ப்ராஹ்வவெஜஶ்யஸாவாஶ் ஸ்வவிஷய நியதேஷ்வாதிராஶ் ஸாதிதேஹஸ்ஸ்ரீநா । வாதிராஸக்தப்ரஸக்தஸ்ஸக்ஷ்யாதிஷ்டவஸதிநே ஶோக்ஷணாயுஸேஶ்வஸௌஸ்யாஶ் க்ஷிப்ரக்ஷிப்தாஹிதஸ்வாஸ்த்ஶரஹஜநதாஜாயவஸ்யாஹ்யத ॥

| | |
|---|---|
| **திருவாய்மொழி நூற்றந்தாதி—** | பரிவதிலீசன்படியைப் பண்புடனேபேசி<br>அரியனலனாராதனைக்கென்று—உரிமையுடன்<br>ஓதியருள்மாறனெழிவித்தான் இவ்வுலகில்<br>பேதையர்கள் தங்கள்பிறப்பு. |

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், சீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாந்திருவாய்மொழி—பிறவித்துயரற - பிரவேஶம்.

---

ஒ.—ஏழாந்திருவாய்மொழியில், ஸர்வசேஷியாய் ஸ்ரீய:பதியாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் நிரதிஶயாநந்த பூர்ணனாய்த் தன்னை அநுபவித்தாரைத் தன்னிற்காட்டிலும் நிரதிஶயாநந்த பூர்ணராகப் பண்ண வல்லனாயிருந்துள்ள எம்பெருமானை, பஜியாநின்றுவைத்தும் பலாந்தரத்தை இச்சிக்கிறவர்களை நிந்தித்து, அவர்களுக்கு அபேக்ஷிதபலத்தைக் கொடுக்கிற எம்பெருமானைக் கண்டு அதீவ விஸ்மிதராய், ஏவம்விதனாயிருந்துள்ள எம்பெருமான்பக்கலுள்ள பக்தியே நிரதிஶயபோக்ய மென்கிறார்.

ப.—ஏழாந்திருவாய்மொழியில், இப்படி ஸ்வாராதனானாலும் குடிநீர்போலே ஆஶ்ரயணம் ஸரஸமாயிராதாகில் அஹ்ருத்யமாயிருக்குமென்று நினைத்து, ஆஶ்ரயணத்தினுடைய ரஸ்யதைக்கு உறுப்பாக, ஆஶ்ரயணீயனுடைய பாவநத்வத்தையும், நிரதிஶயாநந்த யோகத்தையும், பரதஶையிலும் அவதாரம் அத்யந்த ஸரஸ மென்னுமிடத்தையும், இப்படி ஸரஸனானவனைப் பிரிய விரகில்லை யென்னுமிடத்தையும், தாம் விட க்ஷமரல்லரென்னு மிடத்தையும், அவன்தான் அகலத்தேடிலும் தம்முடைய இசைவில்லாமையையும், தாம் அகலிலும் அவன் நெகிழவிடானென்னுமிடத்தையும், தம்மை அகற்றிலும் தம்நெஞ்சை அகற்றவொண்ணாமையையும், ஸர்வ ப்ரகாரஸம்ஶ்லிஷ்டமான தம்முடைய ஆத்மா அகல ப்ரஸங்கமில்லை யென்னுமிடத்தையும், நிரந்தராநுபவம்பண்ணிலும் த்ருப்தி பிறவாமையாலே தவிர அரிதென்னுமிடத்தையும் அருளிச்செய்து, ஆஶ்ரயண ஸாரஸ்யத்தை உபபாதித்தருளுகிறார்.

இ.—ஏழாந்திருவாய்மொழியில், ஸர்வஶேஷியாகையாலே வகுத்தவனாய், ஸ்ரீய:பதியாகையாலே ஸர்வாதிகனுமாய் ஸுலபனுமாய், ஸமஸ்தகல்யாண குணாத்மகனாகையாலே ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்கும் சீலனுமாய், ஆநந்தாவஹமான ஸ்வரூபரூபகுண விபூதிகளையுடையனாகையாலே நிரதிஶயாநந்தபரிபூர்ணனாய், "ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா" என்கிறபடியே தன்னைக்

கிட்டினுரை ஆநந்திப்பிக்கும் ஸ்வபாவனனவனை பஜியாநின்றுவைத்து, பலாந்தரத்தை ப்ரார்த்திக்கிறவர்களை நிந்தித்து, 'பஜநீயனனவன்தான் வேண்டா, பஜநந்தானே அமையும்' என்று ஆஶ்ரயணத்தினுடைய ரஸ்யதையை அருளிச்செய்கிறுர். "[illegible] | [illegible]", "[illegible]."

ஈடு.—கீழில் திருவாய்மொழியிலே ஸ்வாராதனென்றுர்; அதில்சொன்னஆஶ்ரயணந்தான் போகரூபமாயிருக்கு மென்கிறுர் இதில். பகவத்ஸமாஶ்ரயணமாகிறதுதான் இதுக்கு இட்டுப்பிறவாத ஸர்வேஶ்வரனும் ஆசைப்படும்படி போகரூபமாயிருப்பதொன்றிறே. "[illegible]" (அஶ்ரத்ததாநா:புருஷா:) - விஶ்வாஸபூர்வகத்வராரஹிதரானவர்கள். "[illegible]" என்றுனிறே - தனக்கும் இனிதாயிருக்கையாலே. "[illegible]" (பரந்தப) - விரோதிவர்க்கத்தை உதறவல்லாய் நீயன்றே. "[illegible]" (அப்ராப்யமாம்நிவர்த்தந்தே)-செய்த குற்றங்களை யடையப் பொறுத்துத் தங்களை நல்வழிபோக்கும் என்னை விட்டு, தந்தாமுடைய விநாஶத்தைச் சூழ்ப்பதான ஸம்ஸாரத்தை விரும்பி அவ்வழியே போகாநிற்பர்கள். இதுதான் இருந்தபடி பாரா யென்கிறுன். "[illegible]" (ப்ரத்யக்ஷாவகமம்) - "[illegible]" (நமாம்ஸசக்ஷுரபிவீக்ஷதேதம்) என்கிற நான் ப்ரத்யக்ஷபூதனனவன். "[illegible]" (தர்ம்யம்) - நம்மைக் காண்கை ஒருதலையானுல் அதர்ம்யமானுலும் மேல்விழவேணும்; இது அங்ஙனன்றிக்கே, தர்மாதநபேதமுமாயிருக்கும். "[illegible]" (ஸுஸுகம்கர்த்தும்) - ஸ்மர்த்தவ்ய விஷயஸாரஸ்யத்தாலே தானும் போகரூபமாயிருக்கும். "[illegible]" (அவ்யயம்) - கோலின பலங்களைக் கோடுக்கச்செய்தேயும் ஒன்றும் செய்யாதோமாய் நம்நெஞ்சிலே கிடக்கையாலே தான் முதலழியாதே கிடக்கும். ஸ்ரியஃபதியாய், ஸமஸ்தகல்யாணகுணுத்மகனுய், ஸக

---

பிறவித்துயர் ப்ரவேஶே,—உக்தாநுவாதபூர்வகமாக, "தூயவமுதை" என்றத்தைக் கடாக்ஷித்து ஸங்கதி - கீழில்திருவாய்மொழியிலே இத்யாதி. அதில் - அத்திருவாய்மொழியில். போகரூபதையின் சரமாவதி - பகவத்ஸமாஶ்ரயணம் இத்யாதி. அவனும் ஆசைப்படும்படி போகரூபமாயிருக்குமென்னுமத்தை ஸ்ரீகீதையில் அருளிச்செய்த வசநமுகேந விஶதீகரிக்கிறுர் - அஶ்ரத்ததாநா இத்யாதி. [illegible]. "[illegible]" என்கையாலே - தனக்கும் இனிதாயிருக்கு மென்கிறது. விரோதிவர்க்கத்தை என்றது - பாஹ்யஶத்ருக்களையாதல், இந்த்ரியங்களையாதல். "[illegible]" என்றதின் அர்த்தம்- செய்த குற்றங்களை இத்யாதி. [illegible] "[illegible]" என்னுமாபோலே. '[illegible]' என்றது - ஸம்பந்தஸாமாந்யேஷஷ்டீ. இந்த தர்மஸம்பந்திஶ்ரத்தாரஹிதர். அதாவது - இத்தை விஶ்வஸித்து த்வரித்து அநுஷ்டியாதபே ரென்றபடி. இதுதான் இருந்தபடி பாராய் என்றது- மேல் வக்ஷ்யமாணஶ்லோகத்தைக் கடாக்ஷித்து. இதுதான் - "[illegible]" என்று சொன்ன ஆஶ்ரயணந்தான். ப்ரஸ்துதோபயுக்த மாகையாலே இதுக்குக் கீழ் ஶ்லோகத்தையும் வ்யாக்யாநம்பண்ணுகிறுர் - ப்ரத்யக்ஷ இத்யாதி. "[illegible]" இதி பூர்வார்த்தம். [illegible] விஷய: [illegible] என்றபடி. தானும் - ஆஶ்ரயணந்தானும். நம்நெஞ்சிலே கிடக்கையாலே என்றது, "[illegible]" இத்யாதியைப்பற்ற. "[illegible]" என்று ப்ரஸக்தமான போக்யதோபபாதகம் - ஶ்ரியஃபதியாய் இத்யாதி. விஶேஷணசதுஷ்டயமும் - "பின்னைநெடும்பணைத்தோள்" "[illegible]

லாத்மாக்களுக்கும் ஶேஷியாய், நிரதிஶயாநந்தயுக்தனாய், "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்கிறபடியே - தன்னைக் கிட்டினாரையும் ஆநந்திப்பிக்கக்கடவனாய், மோக்ஷதஶையில் அநுபவம் இனிதாகிறதும் அவனைப்பற்றி வருகையாலேயிறே; அப்படியே ஆஶ்ரயணமும் அவனைப்பற்றி வருகையாலே போகரூபமாயிருக்குமிறே. இப்படி ஸாதநஸமயமே தொடங்கி இனிய விஷயத்தைப் பற்றாநிற்கச்செய்தே, அவனைவிட்டு க்ஷுத்ர ப்ரயோஜநத்தைக் கொண்டுஅகலுவதே! என்று கேவலரை நிந்தியாநின்றுகொண்டு, இத்திருவாய்மொழியில் தாமுளராகாதபடி தமக்கு இனிதாயிருக்கையாலே இவ்வாஶ்ரயணத்தினுடைய இனிமையைச் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

## முதற்பாட்டு.

பிறவித்துயரற ஞானத்துள்நின்று
துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார்
அறவனை ஆழிப்படையந்தணனை
மறவியையின்றி மனத்துவைப்பாரே.

ஆ.—(பிறவித்துயர்.) இப்படி பரமைகாந்திகளான இவர்களோடு யாதொருபடி ஸம்ஶ்லேஷித்தருளும்; அப்படியே கைவல்யாதி க்ஷுத்ரப்ரயோஜநார்த்தமாகத் தன்னையாஶ்ரயித்துவர்த்திக்கிற அவர்களோடு ஒருவாசி பாராதே ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனையாகிற எம்பெருமானுடைய பரமதார்மிகத்வத்தை அநுஸந்தித்து ப்ரீதராய், 'என்ன தார்மிகனே! என்ன தார்மிகனே!' என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், நிரதிஶயபோக்யனான தன்னை ஆஶ்ரயியாநின்று வைத்தே ஆத்மமாத்ரநிஷ்டரான முமுக்ஷுக்களுடைய அபேக்ஷிதலம்விதாநம்பண்ணுகிற எம்பெருமான் படியைக் கண்டு விஸ்மிதராகிறார்.

[பிறவியென்று தொடங்கி] - ஜந்மஜராமரணாதி ஸாம்ஸாரிக து:கம் அறுகைக்காக ஆத்மஜ்ஞாநத்திலே நின்று ப்ரக்ருதிவிநிர்முக்தாத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கவேண்டியிருப்பார். [அறவனை] - அநந்ய ப்ரயோஜநரோடொக்க ப்ரயோஜநாந்தரபரரையும் அங்கீகரித்து, அவர்கள் அபேக்ஷிதத்தைச் செய்யுமவனை. [ஆழியென்று] - கையுந்திருவாழியுங் கண்டு தங்கள் புருஷார்த்தத்தை மறவாதே அவன்பக்கல் சுத்திமாத்ரத்தையேஅநுஸந்தித்து ஆஶ்ரயியாநிற்பரே. இவர்களுக்கும் ஆஶ்ரயிக்கலாம்படியிருப்பதே! என்ன அறவனோ? என்று கருத்து.

ப.—முதற்பாட்டில், பஜநீயனுடைய பாவநத்வத்தை அருளிச்செய்கிறார்.

---

நிலவன்புகழ்" "உய்யக்கொள்கின்றநாதன்" "யவர்க்கும்நலத்தாலுயர்ந்துயர்ந்து" என்கிற பாசுரங்களைப் பற்ற. "பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை" என்றது - ஶ்ரிய:பதித்வத்துக்கும் உபலக்ஷணம். 'ஆநந்திப்பிக்கக்கடவனாய்' இருக்குமாகையால் ஆஶ்ரயணம் போகரூபமாயிருக்கும் என்று அத்யாஹார்யம். கீழ்ச்சொன்ன ஶ்லோகங்களில் பக்தியினுடைய போகரூபதை ப்ரபத்திக்குக் கிம்புநர்ந்யாயஸித்தமென்று கருத்து. அநுபவதஶையிலன்றோ போக்யமாயிருப்பது, ஆஶ்ரயணதஶையில் போகரூபத்வம் கூடுமோ? என்ன, மோக்ஷதஶையில் இத்யாதி. அவனை - உக்தப்ரகார விஶிஷ்டனானவனை. உக்தார்த்தத்தை அநுவதியாநின்றுகொண்டு, இத்திருவாய்மொழியில் ப்ரதிபாத்யார்த்தத்தை நிகமிக்கிறார் - இப்படி இத்யாதி. ஸாதநஸமயம் - உபாஸநஸமயம். தாமுளராகாதபடி என்றது - "யானொட்டுவேனோ" என்றத்தைப் பற்ற.

பிறவித்துயர் - பிறப்பால்வருந் துயர், அற - அறுகைக்காக, ஞானத்துள் - (ஆத்மாவலோகநமாகிற) ஜ்ஞாநத்திலே, நின்று - நிஷ்டராய், துறவி - ஸர்வோபாதிவிநிர்முக்தனாய், சுடர்-தேஜோரூபமான ஆத்மாவினுடைய, விளக்கம் - ஆவிர்ப்பாவத்தை, தலைப்பெய்வார் - தலைப்படவேண்டியிருக்குமவர்கள், அறவனை - (ஏவம்விதாதிகாரிகளுக்கும் பலநிர்வாஹகனாகையாலே) பரமதார்மிகனாய், ஆழிப்படை - (மநஃஶுத்திஹேதுபூதனான) திருவாழியையுடையனாய், அந்தணனை - பரமபாவநபூதனான ஈஶ்வரனை, மறவியையின்றி - ஸாதநத்வேந, மனத்துவைப்பார் - நினைப்பதே! என்று க்ஷேபித்தாராயிற்று. அன்றியே, ஜந்மப்ரயுக்ததுஃகம் தீருகைக்காக யோகரூபஜ்ஞாநத்திலே நின்று அவித்யாகர்ம தேஹாதி ஸமஸ்தோபாதிநிவ்ருத்தனாய்த் தேஜோமயனான ஆத்மாவினுடைய விஶதாநுபவத்தைப் பெறவேண்டுவார், உபாஸநதர்ம நிர்வாஹகனாய், அஜ்ஞாநதமோநிவர்த்தகமான திருவாழியையுடையனாய், அத்யந்த பாவநபூதனான ஸர்வேஶ்வரனை விச்சேதரஹிதமாம்படி நிரந்தரபாவநாமுகத்தாலே நெஞ்சிலே வைப்பார்கள் என்று உபாஸகரைச் சொல்லவுமாம்.

இ.—முதற்பாட்டில், நிரதிசயபோக்யனானவனை ஆஶ்ரயித்துவைத்து க்ஷுத்ரப்ரயோஜநத்தை அபேக்ஷிப்பதே! என்று கேவலரை நிந்தித்து, அவர்கள் சிறுமை பாராதே அவர்கள் அபேக்ஷிதத்தைக் கொடுப்பதே! என்று அவன்நீர்மையைக் கண்டு விஸ்மிதராகிறார்.

[பிறவித்துயர்] - பிறவி என்கிற இது - அஞ்சுவிகாரங்களுக்கும் உபலக்ஷணம்; "ஜராமரணமோக்ஷாய" என்கிறவிடத்திலே ஜந்மாதிகளுங் கூடுகிறாப்போலே. ஜந்மஜராமரணாதி ஸாம்ஸாரிகதுஃகம் அறுகைக்காக. [ஞானத்துள் நின்று] - ஆத்மஜ்ஞாநமாத்ரத்திலே நின்று. அதாகிறது - ஶாஸ்த்ரஜந்ய ஜ்ஞாநமாத்ரத்திலே யென்றபடி. "சுடர்விளக்கம்" என்று - பலமாகச் சொல்லுகையாலே இங்கு ஜ்ஞாநமாத்ரத்தையே சொல்லுகிறது; யதோபாஸநமிறே பலம். [துறவி] - துறக்கை. சரீராவஸாநத்திலே. [சுடர்விளக்கம்] - ஜ்ஞாநகுணகமாய் ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கிற ஆத்மாவினுடைய அஸங்குசிததசையை. [தலைப்பெய்வார்] - கிட்டுவார். பிறவித்துயரற ஞானத்துள் நின்று என்று - உபாஸநம். துறவிச்சுடர்விளக்கந்தலைப்பெய்கை-பலம். ப்ரக்ருதிவிநிர்முக்தாத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க வேண்டியிருப்பார். [அறவனை] - தார்மிகனை. அநந்யப்ரயோஜநரோடொக்க ப்ரயோஜநாந்தரபரரையும் அங்கீகரித்து அவர்கள் அபேக்ஷிதத்தைக் கொடுப்பதே! என்ன தார்மிகனோ! என்கிறார். [ஆழிப்படையந்தணனை] - கையுந்திருவாழியுங் கண்டு அதில் கால்தாழாதே, ஆத்மாநுபவவிரோதியைப் போக்குகைக்கு உறுப்பான ஶுத்தி மாத்ரத்தையே உபஜீவிப்பதே! என்கிறார். அழுக்கறுக்குங் கூரிய உவளைப்போலேயும் சாணிச்சாற்றைப் போலேயுமிறே அவனை நினைத்திருப்பது. [அந்தணனென்று] - ஶுத்திமாத்ரத்தை நினைக்கிறது. கையுந்திருவாழியுமான அழகைக் கண்டால், "இன்னாரென்றறியேன்" என்று முன்னடிதோற்றாதேயிறே தாங்கள் இருப்பது. [மறவியையின்றி மனத்துவைப்பாரே] - அவனுடைய போக்யதையைக் கண்டுவைத்தும் தங்கள் புருஷார்த்தத்தை மறவாதே ஆஶ்ரயியா நிற்பார்களே. [மறவியை] - மறப்பை. [இன்றி] - மறுப்பின்றிக்கே. மறவாதே. அவர்களுக்கும் ஆஶ்ரயிக்கலாம்படி யிருப்பதே என்ன தார்மிகனோ ! என்று கருத்து. ஒருவன் ஒருதப்பைச் செய்தால், ஸம்வதிக்கையும் அரிதாயிறே நிர்வாஹகனுக்கு இருப்பது.

ஈடு.— முதற்பாட்டு. இப்படி நிரதிஶயபோக்யனானவனை விட்டு, ப்ரயோஜநாந்தரத்தைக் கொண்டு அகலுவதே என்று கேவலரை நிந்திக்கிறார்.

---

முதற்பாட்டு - பிறவி இத்யாதி. ' ஆழிப்படையந்தணனை மனத்துவைப்பாரே ' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இப்படி இத்யாதி.

[பிறவித்துயரற ஞானத்துள் நின்று] - "ஜராமரணமோக்ஷாய" (ஜராமரணமோக்ஷாய) என்று இப்பாரு முண்டு, கேவலர்; அவர்களைச் சொல்லுகிறது. ஐஶ்வர்யார்த்திக்கும், ஆத்மப்ராப்திகாமனுக்கும், பகவத்ப்ராப்திகாமனுக்கும் ஒக்குமாயிற்று ஸர்வேஶ்வரனை உபாஸிக்கையும் அந்திமஸ்ம்ருதியும்; இனிப் பேற்றில் தாரதம்யம் வருகிறபடியென்? என்னில்; - உபாஸநஸமயத்திலே சிறுகக்கோலுகையாலே. அதாவது - அவனளவும் செல்லாதே நடுவே வரம்பிட்டுக் கொள்ளுகை. அத்தையிறே "வரம்பொழிவந்து" என்கிறது. அதுதனக்குஅடி - அவர்கள் ஸுக்ருததாரதம்யம்; "சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந" (சதுர்விதாபஜந்தேமாம்ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந) என்று அருளிச்செய்தானிறே. ஸுக்ருதத்துக்கு அநுரூபமாகவாயிற்று புருஷார்த்தங்களில் ருசி பிறப்பது; ருச்யநுகுணமாகவாயிற்று உபாஸிப்பது; உபாஸநாநுகுணமாக இருக்கக்கடவது பலம். [பிறவித்துயர் இத்யாதி]- 'இவனைப்பற்றி இப்பேற்றைப் பெற்றுப்போவதே!' என்கிறார். "பிறவி" என்கிற இத்தால் - ஜந்மந்தொடக்கமாக வுண்டான மற்றை ஜந்துவிகாரங்களையும் நினைக்கிறது. ஆக, ஜந்மஜராமரணாதி ஸாம்ஸாரிக ஸகலதுரிதங்களும் போம்படியாக. "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்று - இவர்தாமும் கழிக்கிறதாயிராநிற்கச்செய்தே, இவர்களை நிந்திக்கிறதுக்குக் கருத்தென்? என்னில்; - இவர்க்கு விரோதிபோமது ஆநுஷங்கிகமாய், பகவதநுபவம் உத்தேஶ்யமாயிருக்கும்; அவர்களுக்கு துக்கநிவ்ருத்திதானே உத்தேஶ்யமாயிருக்கும். [ஞானத்துள் நின்று] - இவ்வநுஸந்தாநம் அவ்வருகே போகாநிற்கச் செய்தேயும், ஆத்மஜ்ஞாநமாத்ரத்திலே கால் ஊன்ற அடியிட்டாயிற்று நிற்பது. "துறவி" என்கிற இது - துறக்கையைச் சோன்னபடி. "பிறவித்

---

இப்பாட்டில் கேவலனுக்கு வாசகமான பதம் 'பிறவித்துயரற' என்கிறதென்று விவக்ஷித்து, இது கேவலனுக்கு வாசகமென்கைக்கு நியாமகம் ஸ்ரீகீதையில் அவன் அருளிச்செய்த வசநமென்கிறார்-ஜராமரணமோக்ஷாய இத்யாதி. "பிறவித்துயரற" என்கிற இது - "ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே" என்றதின் அர்த்தம். 'ஞானத்துள் நின்று துறவிச்சுடர்விளக்கந்தலைப்பெய்வார்' என்கிற இது - 'தே ப்ரஹ்ம தத்விது:' என்றதின் அர்த்தம். 'ஆழிப்படையந்தணனை மனத்துவைப்பார்' என்றது- 'க்ருத்ஸ்நம்' என்றதின் அர்த்தம். இப்படி அந்த ஶ்லோகார்த்தமும் இப்பாட்டும் ஸமாநமாயிருக்கையாலே, அந்தஶ்லோகத்தை உபாதாநம்பண்ணி அவர்களைச்சொல்லுகிற தென்கிறார். கேவலனுக்கும் பகவத்ஸமாஶ்ரயணம் வேணுமோ? என்ன, ஐஶ்வர்யார்த்திக்கும் இத்யாதி. இனி - இப்படியானபின்பு; பகவத்ஸமாஶ்ரயணம் ஸமாநமானபின்பு என்றபடி. விவரணம் - அதாவது இத்யாதி. அத்தையிறே - அத்தைப்பற்றவிறே. வரம்பு-மர்யாதை. வாழ்பொழி இத்யாதி - திருப்பல்லாண்டு-ச. கைவல்யமாத்ரத்திலே நீங்கள் இட்டுக்கொண்ட வரம்பொழிந்து என்றபடி. அதுதனக்கு அடி - இப்படி வரம்பிட்டுக்கொள்ளுகைக்கு அடி. ஸுக்ருததாரதம்ய நிபந்தநத்வத்துக்கு ப்ரமாணம்-சதுர்விதா இத்யாதி. கீதாஸப்தமே. "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப" இத்யுத்தரார்த்தம். 'ஸுக்ருதிநஶ் சதுர்விதா:' என்கையாலே-ஸுக்ருததாரதம்யம் விவக்ஷிதமென்று கருத்து. கீழெல்லாவற்றாலும் பலிதத்தை அவரோஹ க்ரமத்தாலே அருளிச்செய்கிறார் - ஸுக்ருதத்துக்கு இத்யாதி. ருச்யநுகுணமாக - புருஷார்த்தத்தில் ருச்யநுகுணமாக. "ஆழிப்படையந்தணனை வைப்பாரே" என்ற ஏகாரத்திலே நோக்காகப் பாட்டுக்குத் தாத்பர்யம் - இவனைப்பற்றி இத்யாதி. மற்றை யைந்து விகாரங்களையும் - "அஸ்தி ஜாயதே பரிணமதே விவர்த்ததே அபக்ஷீயதே விநஶ்யதி" என்கிற ஜந்துவிகாரங்களையும். பலிதம் - ஆக, ஜந்ம இத்யாதி. தடஸ்தஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - இந்நின்ற இத்யாதி. திருவிருத்தம்-க. இவற்றிலே நிலைநின்றபோந்த வாஸநாருசிகளாகிற ஸ்வபாவங்களை உன் அங்கீகாரம் பற்றினபின்பு உன் அங்கீகாரபலத்தையுடைய நாங்கள் ப்ராபியாதபடி யென்று அர்த்தம். "நின்று" என்ற பதத்துக்கு பாவம்-இவ்வநுஸந்தாநம் இத்யாதி. அவ்வருகேபோகாநிற்கச்செய்தேயும் - இந்த ஸ்வாத்மாநுஸந்தாநம் ப்ரகாரியான ஸர்வேஶ்வரனளவும் செல்லாநிற்கச்செய்தேயும். ஆத்மஜ்ஞாநமாத்ரத்திலே காலூன்ற அடியிட்டு என்றது - 'ஆத்மாநுபவமேஅமையும்' என்ற புருஷார்த்தத்தை வரைந்துகொண்டு, உபாஸநதஶையில் ஆத்மாவை ப்ரதாநமாக அநுஸந்தித்து என்றபடி. துறக்கையைச் சொன்னபடி - "துறவி துறக்கை மறவிமறப்பே" இதி நிகண்டு. "பிறவித்துயரற" என்றுவைத்து, திரியட்டும், "துறவி"

துயரற'' என்றதினுடைய பலரூபமான ப்ரக்ருதிவிநிர்முக்தவேஷத்தை. ''சுடர்விளக்கம்தலைப்பெய்வார்'' என்கிற இது - ''ஞானத்துள்நின்று'' என்ற அதினுடைய பலரூபமா யிருக்கிறது. ஸம்ஸாரதசையில் கர்மமடியாக வரக்கடவ ஸங்கோசமில்லையிறே மோக்ஷதசையில், விகஸிதமாயிருக்குமிறே. ஜ்ஞாநகுணகமுமாய் ஜ்ஞாதாவுமாயிறே வஸ்துதான் இருப்பது. ''பிறவித்துயரற ஞானத்துள் நின்று'' என்றது - உபாஸநமானல் துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்கை பலமா யிருக்குமிறே. [பிறவி இத்யாதி] - 'ஸாம்ஸாரிக ஸகலதுःகங்களும் போகவேணும்' என்று ஆத்மஜ்ஞாநத்திலே ஊன்றநின்று ப்ரக்ருதி விநிர்முக்தமான ஆத்மஸ்வரூபத்தை ப்ராபிக்கவேண்டியிருப்பார். [அறவனை]- அவர்கள்படியையும், பலம்கொடுக்கிறவன்படியையும் பாரா, 'என்ன பரமோதாரனே!' என்கிறார். ஏதேனுமொரு ப்ரயோஜநத்துக்கும் தன்னையே அபேக்ஷிக்குமத்தனையாகாதே வேண்டுவது. 'எங்களுக்கு நீவேண்டா, க்ஷுத்ரப்ரயோஜநம் அமையும்' என்றிருக்கிறவர்களுக்கும் அத்தைக் கொடுத்து விடுவதே! என்ன தார்மிகனே! என்கிறார். [ஆழிப்படையந்தணனை] - ஆத்மாநுபவ விரோதியைப் போக்குகைக்குப் பரிகரமான திருவாழியைக் கையிலே யுடையவன். அந்தணனென்று - சாணிச்சாற்றேபாதி 'ஶுத்தன்' என்று கொண்டார்களித்தனை; போக்யதையில் நெஞ்சுசென்றதில்லை. 'ஶுத்திகுணவிஶிஷ்டன்' என்றுயிற்று அவர்கள் அநுஸந்திப்பது. கையுந் திருவாழியுமான அழகைக் கண்டால் அதிலே கால்தாழாதே, தங்கள் ப்ரயோஜநத்துக்கு உறுப்பான ஶுத்திமாத்ரத்தையே பற்றுவதே! என்கிறார். [மறவியையின்றி] - இவர்க்குக் கையுந் திருவாழியுமான அழகைக் கண்டால் முன்னடிதோற்றாது; 'சக்கரத்தண்ணலே' என்றால், பின்னைத் தரைப்படுமித்தனையிறே இவர்; திருமங்கையாழ்வாரும் ''ஆழியோடும் பொன்னார்சார்ங்கமுடைய வடிகளை யின்னாரென்றறியேன்'' என்று உத்தேஶ்யவஸ்துவையும் மறக்கும்படி கலங்குவர். பிள்ளாய்! நல்லத்தை மறக்கப்

---

என்ற புநருக்திஶங்கையைப் பரிஹரிக்கிறார் - பிறவித்துயாறவென்றதின் இத்யாதி. அதாவது - ''பிறவித்துயரற'' என்றது - உபாஸநவிஷய ஸங்கல்பம். ''துறவி'' என்று - பலவிஷயஸங்கல்ப மென்றபடி. துறவியென்று சொல்லுகிறது என்று கூட்டிக்கொள்வது. 'ஞானத்துள் நின்று' என்றுவைத்து, 'சுடர்விளக்கம்தலைப் பெய்வார்' என்றதுக்கும் - உபாஸநபலவிஷய ஸங்கல்பபரமாகக் கண்டுகொள்வது. ஜ்ஞாநகுணகத்வ ஜ்ஞாத்ருத்வங்கள் ஸம்ஸாரதஶையிலு மில்லையோ? மோக்ஷதஶையிலே 'தலைப்பெய்வார்' என்கிறதென்? என்ன, ஸம்ஸாரதஶையில் இத்யாதி. 'சுடர்' என்றும், 'விளக்கம்' என்றும், இரட்டிப்பதென்? என்ன, ஜ்ஞாநகுணகமுமாய் இத்யாதி. ஜ்ஞாதாவுமாய் - ஜ்ஞாநஸ்வரூபனுமாய். 'சுடர்' என்று - ஜ்ஞாந குணகத்வமும், 'விளக்கம்' என்று - ஜ்ஞாந ஸ்வரூபத்வமுஞ் சொல்லுகிறதென்று பதத்வயத்துக்கும் ஸார்த்தக்யம். ஆக, 'துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார்' என்றதுக்கு - ப்ராக்ருத விநிர்முக்தனாய் ஜ்ஞாநகுணகனாய் ஜ்ஞாநஸ்வரூபனுமான ஆத்மாவைப் பெறவேண்டி யிருப்பர் இதி ஸப்தார்த்தः. கீழ், 'பிறவித்துயரற' என்ற வாக்யவிவரணம் - பிறவித்துயாற ஞானத்துள் நின்று என்றது. உபாஸநமானல் இத்யாதி - உபாஸநமானல் - உபாஸநவிஷயாபிஸந்தியானல். பலமாயிருக்குமிறே - பலவிஷயாபிஸந்தியாயிருக்குமிறே. உக்தார்த்தத்தைத் தொகுத்து ஸப்தார்த்தம் அருளிச்செய்கிறார் - ஸாம்ஸாரிக இத்யாதி. துறவி - துறந்த; ப்ராக்ருதிவிநிர்முக்தமான. அறவன் - தார்மிகன். 'அறவனை' என்கிற விஶேஷணத்துக்கு பாவம் - அவர்கள்படியையும் இத்யாதி. பாரா - பார்த்து. அவன்படி - குணுதிக்யம். அர்த்திகளுடைய மநோரதபூரணம் பண்ணுகை - தார்மிகத்வ மென்கிறார் - ஏதேனும் இத்யாதி. இது வ்யாக்யாதாவின் ஈடுபாடு. 'அவர்கள் படியையும்' இத்யாதி வாக்யவிவரணம் - எங்களுக்கு இத்யாதி. 'ஆழிப்படையந்தணனை' என்ற விஶேஷணத்துக்கு பாவம்-ஆத்மாநுபவ இத்யாதி. அந்தணன்- ப்ராஹ்மணன். விவரணம் - ஶுத்திகுண இத்யாதி. நிந்தாபர்யவஸாயித்வேந ஹார்த்தபாவம் - கையுந் திருவாழியும் இத்யாதி. 'மறவியையின்றி' என்று அவர்களை நிந்திக்கைக்கு, தாம் மறப்பரோ? என்ன, இவர்க்கு இத்யாதி. தரைப்படும் என்றது - 'தாழ்ந்து' என்றதுக்கு அர்த்தம். திருமொழி க௦-௦-க. ஆழியோடும் இத்யாதி திருவாழியோடே ஸ்ப்ருஹணீயமான ஸ்ரீஶார்ங்கத்தையுடைய ஸ்வாமிகளை, தேவனே! மநுஷ்யனே! இன்னாரென்று அறிகிலேனென்றபடி. 'இன்னாரென்றறியேன்' என்றதுக்கு பாவம்-பிள்ளாய் என்ற.பிள்ளாயென்றது- வார்த்தைப்பாடு. நல்லத்தை - பகவத்விஷயத்தை. இவ்விஷயம் - கையுந்திருவாழியுமான இவ்விஷயம்,

பண்ணுநிற்க, இவ்விஷயம் தீயத்தை மறவாதோழிவதே! [மறவியையின்றி] - அவனுடைய போக்யதையையுங் கண்டுவைத்து, தங்கள் புருஷார்த்தத்தை மறவாதே ஆஶ்ரயியாநிற்பர்கள். மறவியை-மறப்பை; மறப்பின்றிக்கே, மறவாதே மனத்துவைப்பாரே. உபாஸகபரமாளுல், சுடர்விளக்கம் - குணப்ரகாஶகமான விக்ரஹமாகக்கடவது. அவனுடைய போக்யதையை அநுஸந்தித்து வைத்தும், பின்னையும் இந்நிலை குலையாதே நிற்பதே! இவ்வரிய செயலைச் செய்கைக்குத் திண்ணியராவதே இவர்கள்! பிறவித்துயரற ஞானத்துள் நின்று துறவிச்சுடர்விளக்கந் தலைப்பெய்வார், மறவியையின்றி, அறவனை யாழிப்படையந்தணனை மனத்து வைப்பாரே இத்யந்வயஃ. (க)

## இரண்டாம் பாட்டு.

வைப்பாம்மருந்தாம் அடியரைவல்வினைத்
துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கோடானவன்
எப்பால்யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து
அப்பாலவன் எங்களாயர்கொழுந்தே.

ஆ.—(வைப்பாம்.) பின்னையும், தன் திருவடிகளையே 'பரமப்ராப்யம்' என்று தன்னை ஆஶ்ரயித்தார்பக்கல் எம்பெருமானுடைய அபிநிவேஶத்தைச் சொல்லுகிறார்.

ஆநந்தாதிகல்யாணகுணங்களால் ப்ரஹ்மாதிகளிற்காட்டிலும் உத்க்ருஷ்டனாய்வைத்து ஆஶ்ரிதஸஜாதியனாய் வந்து பிறந்தருளி, அவர்களுடைய ஸ்வஸம்ஶ்லேஷவிரோதியான ஸம்ஸாரத்தைப் போக்குகைக்கு மருந்துமாய், ப்ராப்யமுமாயிருக்குமென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்திறத்திலே எம்பெருமானிருக்கும்படியை அருளிச்செய்கிறார்.

[வைப்பாமென்று தொடங்கி] - ஆஶ்ரிதர்க்கு ப்ராப்யமான பரமபுருஷார்த்தமும், தத்விரோதியான ஸம்ஸாரம் போக்குகைக்கு மருந்துமாய் அவர்களை ஸ்வவிஶ்லேஷஜநகமான மஹாபாபத்தை விளைக்கவற்றான இந்த்ரியங்கள் நலியிலும் நலிவுபட விட்டுக்கொடான். [எப்பாலென்று தொடங்கி] - ஆநந்தவல்லியில் சொல்லிநின்றபடியே எல்லாவிடத்திலுமுள்ள எல்லாரி

---

தீயந்தை - கைவல்யத்தை. சிலபாக்யஹீநர் மறவா தொழிவதே யென்றபடி. 'மறவியையின்றி' என்றத்தோடே 'மனத்துவைப்பாரே' என்றத்தையுங் கூட்டி ஶப்தார்த்தம் - அவனுடைய இத்யாதி. இப்பாட்டு உபாஸகபரமாயிருக்குமென்று திருவுள்ளம்பற்றி அந்தநிர்வாஹத்திலே 'சுடர்விளக்கம்' என்றதுக்கு அர்த்தம் - உபாஸகபரமாளுல் இத்யாதி. உபாஸகஶப்தம் - இப்பக்ஷத்திலே பகவத்ப்ராப்திகாமபரம். இந்த நிர்வாஹத்திலே பாட்டுக்கு ஶப்தார்த்தம் - ஸாம்ஸாரிகஸகல துரிதங்களும் போம்படியாக பகவத்ஜ்ஞாநத்திலே நின்று ப்ரக்ருதிஸம்பந்தமற்று, குணப்ரகாஶகமான பகவத்விக்ரஹத்தை அநுபவிக்கவேண்டியிருப்பார்கள், உபாஸநதர்மநிர்வாஹகனாய், அஜ்ஞாநதமோநிவர்த்தகமான திருவாழியையுடையவனாய், அத்யந்தபாவநபூதனான ஸர்வேஶ்வரனை விச்சேதரஹிதமாக நிரந்தரபாவநாமுகத்தாலே நெஞ்சிலேவைப்பா ரென்று. சுடர் - குணங்கள். விளக்கம்-தத்ப்ரகாஶகவிக்ரஹம். ப்ரதமநிர்வாஹாநுகுணமாக அருளிச்செய்கிறார் - அவனுடைய போக்யதையை இத்யாதி வாக்யத்வயத்தாலே. இந்நிலை - ஸ்வப்ரயோஜநத்தை மறவாதேயிருக்கிற நிலை. திண்ணியர் - தடிநர். அந்வயம் - பிறவித்துயர் இத்யாதி. (க)

லுங்காட்டில் ஆநந்தத்தாலே மேற்பட்டு வாங்மநஸ்ஸுக்களுக்கு நிலமன்றியே யிருந்துவைத்துத் தன்னுடைய நிரவதிக க்ருபையாலே ஆஸ்ரிதர்க்காக இடையரில் ப்ரதாநனாய் வந்து பிறந்தான்.

ப.—அநந்தரம், அநந்யப்ரயோஜநராய் அநந்யஸாதநராயிருக்கும் விஶேஷாதிகாரிகளுக்கு அநுபாவ்யமான அதிஶயிதாநந்தயோகத்தையுடையவ னென்கிறார்.

அடியரை - (தனக்கு அஸாதாரண)ஶேஷபூதரானவர்களை, வல்வினை - ப்ரபலமான கர்மங்களினுடைய, துப்பாம் - மிடுக்கின்வழியிலேயான, புலனைந்தும் - இந்த்ரியங்களைந்திலும் அகப்பட்டு, துஞ்சக்கொடான் - நஶிக்கும்படி. விட்டுக்கொடாதவனானவன், வைப்பாம் - (அவர்களுக்குப் புருஷார்த்தமான) நிதியுமாய், மருந்தாம் - (தத்ப்ராப்திவிரோதி நிவ்ருத்தி ஸாதநமுமான) மருந்துமாம்:(எங்ஙனேயென்னில்),—எப்பால் - (மநுஷ்யாநந்தம் தொடங்கி ப்ரஹ்மாநந்தம் ஈறான) எல்லாஸ்த்தலத்திலுமுள்ள, யவர்க்கும் - எல்லாச்சேதநர்க்கும், நலத்தால் - ஆநந்தத்தால், உயர்ந்துஉயர்ந்து - மிக்கு, அப்பாலவன் - (வாங்மநஸங்களுக்குஎட்டாதபடி) அவ்வருகானவனாய், எங்கள் - (அநந்யரான) எங்களுக்கே கூறாய், ஆயர் - (அறிவிலிகளான) இடையர்க்கு, கொழுந்து - தலைவனானவன். என்று - ப்ராப்யப்ராபகவேஷத்தை அருளிச்செய்தாராயிற்று. வைப்பாம் மருந்தாமவன் என்று - மேலோடே கூட்டவுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்திறத்தில் அவனிருக்கும்படியைச் சொல்லுகிறார்.

[வைப்பாம்] - ப்ராப்யமான புருஷார்த்தமாம். நினைத்த வகைகளெல்லாம் அநுபவிக்கைக்கு யோக்யமாம்படி சேமித்துவைக்கும் நிதிபோலே தன்னை யாக்கிவைக்கும். [மருந்தாம்] - விரோதியைப் போக்கி போக்த்ருத்வஶக்தியைக் கொடுக்கும். இத்தால் ப்ராபகத்வஞ் சொல்லுகிறது; "நிவர்த்தநௌஷதம்" என்னக்கடவதிறே. இப்படி செய்வது ஆர்க்கு? என்னில், - [அடியரை] - ப்ரயோஜநாந்தரத்தைக் கொண்டு அகலாதே, தானே ப்ரயோஜநமா யிருக்குமவர்களுக்கு. [வல்வினைத்துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடானவன்] - விஷயங்களிலே மூட்டி ஸ்வவிஶ்லேஷ ஜநகமான மஹாபாபத்தைப் பண்ணுவிக்கைக்கு ஸமர்த்தமான ஶ்ரோத்ராதீந்த்ரியங்களால் நசிக்கும்படி விட்டுக்கொடான். துப்பு - ஸாமர்த்யம். "ஹ்ருஷீகேஶாய தே" இத்யாரப்ய "ஸம்ஸிநாஶாஸ்ருணஶ்ருதி" என்னக்கடவதிறே. "அவன்" என்கிறது ஆரை? என்னில், - [எப்பால் இத்யாதி] - எல்லாவிடத்திலுமுள்ள எல்லாரிலுங்காட்டில் ஆநந்தத்தால் மேற்பட்டு. [அப்பாலவன்] - மநுஷ்யாநந்தம் தொடங்கி ஶதகுணிதோத்தர க்ரமத்தாலே ப்ரஹ்மாநந்தத்தளவுஞ் சென்று, அத்தை மநுஷ்யகோடியிலே யாக்கி, மேல்மேல் கல்பித்துக்கொண்டு ஆநந்தத்தைப் பெருக்கினலும் ப்ரமாணங்களால் வாங்மநஸங்களுக்கு நிலமன்றென்று மீளும்படி அவ்வருகான ஆநந்தத்தையுடையவன். [எங்க ளாயர்கொழுந்தே] - இப்படி ஸர்வாதிகனாய்வைத்து, ஆஶ்ரிதர்க்காகத் தாழ்வுக்கு எல்லையான இடையரிலே வந்து பிறந்தவன். [ஆயர்கொழுந்து] - இடையர் ப்ரஹ்மாதிகள் கோடியிலே யென்னும்படி தாழ்வில் வந்தால் அவர்களுக்குத் தலைவனானவன். கோபஸஜாதீயனாய்வந்து அவதரித்தது - தன்பக்கலிலே ந்யஸ்தபரரானாரை விஷயங்கள் நலியாமைக்கன்றோ !

ஈடு.—இரண்டாம் பாட்டு. ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்து க்ஷுத்ரப்ரயோஜநத்தைக் கொண்டு போவதே ! என்று கேவலரை நிந்தித்தார்; அவன்தன்னையே பற்றியிருக்குமவர்களுக்கு அவன்தா னிருக்கும்படி சொல்லுகிறார் இப்பாட்டில்.

---

இரண்டாம் பாட்டு - வைப்பாம் இத்யாதி. கீழ்ப்பாட்டில் ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு, 'வைப்பாம்' இத்யாரப்ய, 'துஞ்சக்கொடானவன்' என்னுமளவுங் கடாக்ஷித்து அவதாரிகை - ஸர்வேஶ்வரனை இத்யாதி.

[வைப்பாம்] - ஆடு அறுத்து பலியிட்டு, அரைப்பையாக்கி, இஷ்ட விநியோகார்ஹமாம் படி க்ஷேமித்துவைக்கும் நிதிபோலே, இவனுக்கு நினைத்த வகைகளெல்லாம் அநுபவிக்கலாம் படி தன்னை இஷ்டவிநியோகார்ஹ மாக்கிவைக்கு மென்றிட்டு ப்ராப்யத்வம் சொல்லுகிறது. [மருந்தாம்] - ஆனாலும், க்ஷுத்ர விஷயங்களையும் உண்டறுக்கமாட்டாத ஸம்ஸாரிசேதநனுக்கிறே ஸர்வாதிகனான தன்னை விஷயமாக்குகிறது, இவன்தன்னை அநுபவிக்கும்படி யென்? என்னில்,— அக்குறைகள் வாராதபடி அநுபவ விரோதிகளைப் போக்கித் தன்னை யநுபவிக்கைக்கு ஈடான ஶக்தி யோகத்தையுங் கொடுத்துத் தன்னையுங்கொடுக்கு மென்று அவனுடைய ப்ராபகத்வம் சொல்லுகிறது. "**ய ஆத்மதா பலதா**" (ய ஆத்மதா பலதா) என்கிறபடியே. ஆக, ப்ராப்யத்வமும் ப்ராபகத்வமும் சொல்லிற்று. இப்படி செய்வது ஆர்க்கு? என்னில்,—[அடியரை]-"**நநமேயம்**" (நநமேயம்) என்னும் நிர்ப்பந்தம் தவிர்ந்தார்க்கு. அவனைப்பற்றி ஒரு ப்ரயோஜநத்தைக் கொண்டு அகலாதே, அவன் தன்னையே பற்றி அவன்படிவிட ஜீவித்திருப்பாரை வலிய வினைகளிலே கொண்டுபோய் மூட்டு கைக்கீடான ஸாமர்த்யத்தை யுடைத்தான இந்த்ரியங்களைந்தாலும் துஞ்சக்கொடா னென்னுதல், அஞ்சிலும் புக்குத் துஞ்சக்கொடா னென்னுதல். துப்பென்று - ஸாமர்த்யம். 'அவன்' என்கிறது, எவனைப் பற்ற? அவன் தான் இப்படி செய்ய எங்கே கண்டோம்? என்னில்,—அத்தை உபபாதிக்கிறது மேல், [எப்பால் இத்யாதி] - ஸ்த்தாந விஶேஷங்களாலும் மநுஷ்யாதி பேதங்களாலும் வரக் கடவன சிலஉயர்த்திக ளுண்டிறே; பூமிபோலன்றிறே ஸ்வர்க்கம், மநுஷ்யர்களைப் போலல்ல விறே தேவர்கள். எப்பால் - எல்லா விடத்திலு மென்றபடி. பாலென்றது - இடம். 'அப்பால், இப்பால்' என்னக்கடவதிறே - அவ்விடம், இவ்விடம் என்றபடியிறே. எல்லாவிடத்திலு முண்டான எல்லார்க்கும். [நலத்தால்] - ஆநந்தத்தாலே மேலேமேலே போய், பின்னையும் அதுதன்னைச் சொல்லப்புக்கால் "**யதோவாசோ நிவர்த்தந்தே**" (யதோவாசோ நிவர்த்தந்தே) என்று மீள வேண்டும்படியான ஆநந்தப்ராசுர்யத்தை யுடையவன். ஶதகுணிதோத்தர க்ரமத்தாலே அப்யஸ்ய

---

வைப்பு - நிதி. ஆடறுத்து பலியிட்டு அரைப்பையாக்குகை-இஷ்டவிநியோகத்திலே ஹேது. அரைப்பை - சாளிகை. என்றிட்டு - என்று. ஆனாலும் - ப்ராப்யமானாலும். உண்டறுக்க மாட்டாத - கார்த்ஸ்ந்யேந அநுபவிக்கமாட்டாத. 'ஆடறுத்து' என்று தொடங்கி, 'ஆக ப்ராப்யத்வமும் ப்ராபகத்வமுஞ் சொல்லுகிறது' என்னுமளவும் - நிதிக்கும் மருந்துக்கு முண்டான ஆகாரங்களை ஈஶ்வரனுக்கு எறிட்டுச் சொல்லுகிறபடி. தன்னையுங்கொடுத்து ஶக்தியையுங் கொடுக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம் - ய ஆத்மதா இத்யாதி. ஆத்மதஃ பலதஃ என்றபடி. இவ்விரண்டு பதங்களுக்கும் பாவம் - ஆக இத்யாதி. அர்த்தாந்தரம் - அவனை இத்யாதி. முந்தின அர்த்தத்திலே, 'அடியரை' என்ற ஐகாரம் - அசை; அடியர்க் கென்றபடி. அடியர்க்கு வைப்பாம், மருந்தாம்; அடியரை வல்வினைத்துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கொடான் என்று, 'அடியரை' என்றத்தை - கீழும் மேலுங் கூட்டிக்கொள்வது. அடியரை என்றதுக்கு முந்தின அர்த்தம் - அத்வேஷாதிகளை யுடையவர்க்கென்று; த்விதீயார்த்தம் - அநந்யப்ரயோஜநரை யென்று. படிவிட என்றது-சாடு. புலன் - இந்த்ரியங்களாதல், விஷயங்களாதல். இந்த்ரியங்களான போது - இந்த்ரியங்களாலே துஞ்சக்கொடான்; விஷயங்களானபோது - விஷயங்களிலே புக்குத் துஞ்சக்கொடா னென்று பொருள். 'எப்பால்' இத்யாதிக்கு அவதாரிகை - அவனென்கிறது இத்யாதி. 'எவனைப் பற்ற' என்றதுக்கு உபபாதகம் - எப்பால் இத்யாதி. அவன்தான் இப்படி செய்யஎங்கே கண்டோம் என்றதுக்கு உபபாதகம் - ஆயர்கொழுந்து என்றது. அவன் - இந்த்ரியங்களாலேயாதல், விஷயங்களாலே யாதல், ஸ்வாஶ்ரிதரை நஶியாதபடி ரக்ஷிக்குமென்னுமது எங்கேகண்டோ மென்று - ஶங்கார்த்தம். 'எவர்க்கும்' என்றால் போராதோ? 'எப்பால்' என்கிறது எதுக்காக? என்ன, ஸ்த்தாநவிஶேஷ இத்யாதி. விவரணம் - பூமி இத்யாதி. பாலென்று - இடத்தைச் சொல்லுமோ? என்ன, அப்பால் இத்யாதி. யவர்க்கும் எல்லார்க்கும். எப்பால்யவர்க்கும் - எல்லாவிடத்திலு முண்டான எல்லார்க்கும். உயர்ந்து உயர்ந்து - மேலே மேலே போய். அப்பாலவன் - அவ்வருகான ஆநந்தத்தை யுடையவன். விவரணம் - ஶதகுணித இத்யாதி. அப்யஸ்யமாந மாகாநின்றுள்ள - மேன்மேலென ஏற்றிக்கொண்டு போகாநின்றுள்ள. உத்தத்துக்கு ப்ர

மாந மாகா நின்றுள்ள நிரதிஶயாநந்தயுக்தன்; "ஆநந்தமயஃ" (ஆநந்தமயஃ) என்னக்கடவதிறே. [எங்களாயர்கொழுந்தே] - இப்படி ஸர்வாதிகனானவன் இதர ஸஜாதீயனாய் வந்து அவதரித்தது - தன்னை ஆஶ்ரயித்தார் விஷய ப்ரவணராய் முடியும்படி விட்டுக்கொடுக்கவோ? தான் ஶோகமோஹங்களை யநுபவிக்கிறது - தன்னைப் பற்றினார் ஶோகமோஹங்களை அநுபவிக்கைக்காகவோ? மேன்மைக்கு எல்லையானவன் தாழ்வுக்கு எல்லையாயிற்றது - இவர்களை அநர்த்தப்படவிடவோ? [எங்களாயர்கொழுந்தே] - க்ருஷ்ணன் திருவவதரித்த ஊரி லுள்ளாரோடே தமக்கு ஒரு ப்ராக்ருத ஸம்பந்தம் தேட்டமா யிருக்கிறபடி. அன்றியே, [எங்கள்] - அவதாரந்தான் ஆஶ்ரிதார்த்தமா யிருக்குமிறே. நவநீத சௌர்யநகரக்ஷேபம் பழையதாக எழுதிக்கிடக்கச் செய்தேயும், "ஏத்திறம்" என்றார் இவரேயிறே. [ஆயர்கொழுந்தே]-இடையர் தங்களுக்குத் தான் ப்ரஹ்மாதிகள் கோடியிலே யாம்படி அவர்களில் ப்ரதாநனானவன் துஞ்சக்கொடான். எப்பால் யவர்க்கும் முதலாக அந்வயம்.

## மூன்றாம் பாட்டு.

ஆயர்கொழுந்தாய் அவரால்புடையுண்ணும்
மாயப்பிரானை என்மாணிக்கச்சோதியைத்
தூயவமுதைப் பருகிப்பருகி என்
மாயப்பிறவி மயர்வறுத்தேனே.

*ஆ.—(ஆயர்.) இப்படி, ஆஶ்ரிதவாத்ஸல்ய ஸௌஶீல்ய ஸௌந்தர்யஔஜ்ஜ்வல்யாதி கல்யாண குணவிஶிஷ்டனாயிருந்த எம்பெருமானாகிற தூயஅமுதைப் பருகிப்பருகி, ஸகலகாலமும் அவனோடு ஸம்ஶ்லேஷிக்கைக்கு விரோதியான ஸம்ஸாரத்தைப் போக்கினே னென்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், எம்பெருமானைத் தனக்கு இனிதாக புஜியாநிற்கச்செய்தே ஸாம்ஸாரிக ஸகல து:கமும் போயிற் றென்கிறார்.*

*[ஆயரென்று தொடங்கி] - ஆயருளராகத் தானுந் தன்மையை யுடையனாய் அவர்களது ஏதேனுமொரு த்ரவ்யத்தாலல்லது தரியாமையாலே வெண்ணெய் களவுகாணப்புக்கு அகப்பட்டுத் தாயிற்காட்டிலும் பரிவரான ஊரிலுள்ளாரெல்லாராலும் புடையுண்ணும் ஆஶ்சர்யத்தை யுடையனாய் ஆஶ்ரிதராலே நெருக்குண்கையாலே பெருவிலையனானதன் திருவழகை எனக்கு அநுபவிக்கத்*

---

மாணம் - ஆநந்தமய இத்யாதி. 'எப்பால்யவர்க்கும்' இத்யாரப்ய, 'புலனைந்துந் துஞ்சக்கொடான்' என்று அந்வயித்துத் தாத்பர்யம்-இப்படி ஸர்வாதிகன் இத்யாதி. இவ்வாக்யம் - 'அவன் தான் இப்படி செய்ய எங்கே கண்டோ மென்னில்' என்றதுக்கு உத்தரம். 'நலத்தா ல்யர்ந்துயர்ந்து' என்றத்தையும், 'கொழுந்து' என்றத்தையுங் கடாக்ஷித்து பாவம் - தான்ஶோக இத்யாதி வாக்யத்வயமும். 'எங்களாயர்' என்று ஆயர்க்கு விஶேஷணமாக்கி பாவம் - க்ருஷ்ணன் இத்யாதி. 'எங்கள் கொழுந்து' என்று அவனுக்கு விஶேஷணமாக்கி பாவம் - அன்றியே எங்கள் இத்யாதி. ஸர்வஸாதாரணமான அவதாரத்தை 'எங்கள்' என்னலாமோ? என்ன,—அவதாரந்தான் இத்யாதி. 'எங்கள்' என்று - ஆஶ்ரிதரெல்லாரையுங் கூட்டிக் கீழ் அருளிச்செய்து, ஆத்மநிபஹு வசநமாக்கித் தாத்பர்யம் - நவநீத இத்யாதி. கொழுந்து என்றதுக்கு ப்ரதாநனென்று அர்த்தாந்தரத்தை அருளிச்செய்துகொண்டு அந்வயிக்கிறார் - இடையர் இத்யாதி. இடையர் தங்கள் இத்யாதிக்குக் கருத்து-இடையருக்கு ப்ரதாநனாயிருக்கையை ப்ரஹ்மாதிகளுக்கு ப்ரதாநனாயிருக்கு மோபாதி அதிசயமாக நினைத்திருக்கு மென்று. எப்பால்யவர்க்கு மித்யாரப்ய, ஆயர்கொழுந்தானவன், அடியர்க்கு வைப்பாம், மருந்தாம், அடியரை வல்வினைத் துப்பாம் புலனைந்துந் துஞ்சக்கொடான் இத்யந்வய:.

தந்தவனை. [தூயஅமுதை யென்று தொடங்கி] - நியமங்களும் வேண்டாதே, அதிகாரிதான் ஆரேனுமாகவுமாய், ஸர்வதா ஸேவ்யமுமாய், ஸம்ஸாரத்தைப் போக்குமதுவுமாயிருக்கிற ஶக்தியையுடைய அம்ருதத்தை மேன்மேலெனப் பருகி ஸம்ஸாரத்தில் பிறக்கையாலே ஸஞ்சிதமான அஜ்ஞாநாதிகளையெல்லாம் போக்கினேன்.

ப.—அநந்தரம், பரத்வஸூசகமான நிரதிஶயாநந்தத்திலும் அவதாரப்ரயுக்தமான ஆஶ்ரிதபவ்யத்வம் அத்யந்தஸரஸ மென்கிறார்.

ஆயர் - கோபர்க்கு, கொழுந்தாய் - ப்ரதாநனாய்வைத்து, (நவநீதசௌர்யாதிநிமித்தமாக), அவரால் - அவர்களாலே, புடையுண்ணும் - அடியுண்டு, மாயப்பிரானை - (தததநுரூபமாக அழுகை தொடக்கமான) ஆஶ்சர்ய சேஷ்டிதங்களைப் பண்ணுமவனாய் அதடியாக அவர்களை உகப்பித்து, என்மாணிக்கச்சோதியை - (சாணையில் ஏறிட்ட) மாணிக்கம்போலே அவர்கள் நியமநத்தாலே ஒளிபெற்ற வடிவை எனக்காக்கினவனாய், தூயஅமுதை - (பரத்வம்கலசாத சீலத்தையுடையனாய்) ஶுத்தாம்ருதமானவனை, பருகிப்பருகி - நிரந்தரமாக அநுபவித்து, (போகார்த்தமாகப் பால்குடித்தவனுக்குப் பித்தம் தன்னடையே நசிக்குமாபோலே), என் - என்னுடைய, மாயம் - ப்ரக்ருதிகார்யமாய்வரும், பிறவி - ஜந்மப்ரயுக்தமான, மயர்வு - அஜ்ஞாநத்தை, அறுத்தேன் - நசிப்பித்தேன்.

இ.—மூன்றும்பாட்டில், எம்பெருமானைத் தமக்கு இனிதாக புஜியாநிற்கச்செய்தே ஸாம்ஸாரிக ஸகல து꞉கங்களும் போயிற்று என்கிறார்; க்ஷுத்ரமான ப்ரயோஜநத்துக்காகப் பற்றினேனல்லேன், அவனைப் பரமப்ரயோஜநத்துக்கு உபாயமாகப் பற்றினேனுமல்லேன்; இனிய விஷயமென்று அநுபவிக்க இழிந்தேன், விரோதியானது தானே போகக்கண்டே னென்கிறார்.

[ஆயர் கொழுந்தாய்] - ஆயர் வேராக, தான் கொழுந்தாய், வேரிலே நோவுண்டானால் கொழுந்து வாடுமாபோலே, அவர்களுக்கு ஒரு நலிவு வரில் தன்முகம் வாடுமென்கை; காட்டிலே இடையர்க்கு அடிகொதித்தால் க்ருஷ்ணன்முகமிறே வாடுவது. [அவரால் புடையுண்ணும் மாயப்பிரானை] - வெண்ணெய் களவுகாணப் புக்கு அகப்பட்டு அவர்களெல்லாராலும் புடையுண்ணும் ஆஶ்சர்யபூதனை. அவ்வூரில் பரிவரில் வந்தால், தாயரில் குறைந்தாரில்லை யென்கை. [மாயம்]- அவாப்தஸமஸ்தகாமனுக்குக் களவுகண்டு ஜீவிக்கவேண்டி, களவிலேயிழிந்து, ஸத்யஸங்கல்பனாயிருந்துவைத்து அது தலைக்கட்டமாட்டாதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அவர்களாலே அடியுண்டு போக்கடியற்று நிற்கிற நிலை. [பிரானை] - செய்தவையடங்க உபகாரமாயிருக்கை. [என்மாணிக்கச்சோதியை] - அவர்கள் நெருக்க நெருக்க, சாணையிலேறிட்டுக் கடைந்த மாணிக்கம்போலே புகர்மிக்குச் செல்லுகிறபடி. [என்] - அப்புகரை எனக்கு முற்றூட்டாக்கித் தந்தவனை. [தூய இத்யாதி]-அந்த அம்ருதம் அதிக்ருதாதிகாரம், இது ஸர்வாதிகாரம்; ப்ரஹ்மசர்யாதிநியதி யுண்டு அதுக்கு; இருந்தபடியிலே அநுபவிக்க அமையும் இதுக்கு. [பருகிப்பருகி]- ஸக்ருத்ஸேவ்யம் அது, ஸதாஸேவ்யம் இது. [என்மாயப்பிறவி மயர்வறுத்தேனே] - ப்ரக்ருதி ஸம்பந்தப்ரயுக்தமான ஜந்மத்தாலே ஸஞ்சிதமான அஜ்ஞாநத்தை ஸவாஸநமாகப் போக்கினேன், அந்த அம்ருதம் ஶரீரஸம்பந்தத்தைப் பூண்கட்டும்.

ஈடு.—மூன்றும்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரரான கேவலரை நிந்தித்தார்; அநந்யப்ரயோஜநர்திறத்தில் அவனிருக்கும்படி சொன்னார். நீர் இவ்விரண்டு கோடியிலும் ஆர்? என்ன, ‘நான் ப்ரயோஜநாந்தரபரனல்லேன், அநந்யப்ரயோஜநனாய் அவனைப் பற்றினேன்’ என்று நேர்கோடுநேரே

மூன்றும்பாட்டு - ஆயர்கொழுந்து இத்யாதி. வ்ருத்தாநுவாத பூர்வகமாக உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்து ஶங்காபரிஹார ரூபேண அவதாரிகை-ப்ரயோஜநாந்தா இத்யாதி. நேர்கோடுநேர்-ஸாக்ஷாத். ஆத்மப்ர

சொல்லவும்மாட்டாரே; அவனை அநுபவியாநிற்க், விரோதி தன்னடையே போய்க்கொடுநின்றவன் நான்' என்கிறார்.

[ஆயர்கொழுந்தாய்] - இடையர்க்கு ப்ரதாநனாயிருக்கும் இருப்புச் சொல்லிற்றுக் கீழ்; இங்கு, அவர்களில் ஏகதேஶஸ்த்தனாயிருக்கும்படி சொல்லுகிறது. அதாவது - அவர்கள் வேராக, தான் கொழுந்தாயிருக்குமவனென்கிறது. இடையர் காட்டிலே பசுக்களின்பின்னே திரிந்து, அவர்களுக்கு அடிகொதித்தால் வாடுவேது க்ருஷ்ணன்முகமாயிருக்கை; வேரிலே வெக்கை தட்டினால் கொழுந்திறே முற்பட வாடுவேது. [அவரால் புடையுண்ணும்] - அவனால் என்னுதல் அவளால் என்னுதல் செய்யாமையாலே - திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷங்குடியிலும் இவனை நியமிக்க உரியரல்லாதார் இல்லை. 'மரத்தாலே ஓரடியடிப்பார்கள் போலேகாணும்' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. [மாயப்பிரானை] - அவாப்தஸமஸ்தகாமனான ஸர்வேஶ்வரன், தனக்கு ஒரு குறையுண்டாய் வந்து அவதரித்து, ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரியாதானாய், அதுதான் நேர்கொடு நேரே கிடையாமையாலே களவுகாணப்புக்கு, தலைக்கட்டமாட்டாதே வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு நிற்கும் நிலையை அநுஸந்தித்து, 'மாயப்பிரானை' என்கிறார். [என் மாணிக்கச்சோதியை] - ஆஶ்ரிதர் கட்டியடிக்க அடிக்க, களங்கமறக் கடையுண்ட மாணிக்கம் போலே திருமேனி புகர்பெற்று வருகிறபடி. கட்டின அளவுக்கு வெட்டெனிருக்குமவன், கட்டியடிக்கப்புக்கால் புகர்பெறச் சொல்லவேணுமோ? கண்ணியார் குறுங்கயிற்றால் கட்ட வெட்டெனிருந்தானிறே. [என்] - அப்புகரை எனக்கு முற்றூட்டாக்கினவன். [தூயவமுதைப் பருகிப்பருகி]- தேவர்கள்அதிகாரிகளாய், ப்ரஹ்மசர்யாதிநியமங்கள் வேண்டி, ஸக்ருத்ஸேவ்யமாயிருக்குமிறே அது; ஸர்வாதிகாரமுமாய், ஒருநியதியும் வேண்டாதே, ஸதாஸேவ்யமுமான அம்ருதமிறே இது. [என் இத்யாதி] - ஆஶ்சர்யமான ஜந்மமடியாக உண்டான அஜ்ஞாநத்தை வாஸனையோடே போக்கினேன். ஜந்மத்துக்கு ஆஶ்சர்யமாவது - ஒருபடிப்பட்டிராமை. மயர்வறுத்தே னென்கிறது - "இந்நின்ற நீர்மை யினியாமுறாமை" என்று அபேக்ஷித்தபடியே பலாநுபவம் தம்மதாகையாலே அருளிச்செய்கிறார். (ரு)

---

ஶம்ஸையாமென்று சொல்லவும் மாட்டாரே யென்றபடி.

பௌநருக்த்யபரிஹாரம் - இடையர்க்கு இத்யாதி. கொழுந்துக்கு வ்ருக்ஷாக்ரவர்த்தித்வாகாரம் அவலம்ப்ய - ப்ராதாந்யஞ் சொல்லிற்று கீழ்; வ்ருக்ஷைகதேஶவர்த்தித்வத்தைப்பற்ற - ஏகதேஶஸ்த்தன் என்கிறது இங்கு. இத்தால் - பாரதந்த்ர்யஞ் சொல்லுகிறது. விவரணம் இடையர்காட்டிலே இத்யாதி. அவர்களுக்குவந்த வ்யஸநம் தன்னதென்னுமத்தை - "ஆயர்கொழுந்து" என்கிற பதம் காட்டுமோ? என்ன, வேரிலே இத்யாதி. 'அவரால்' என்கிற பஹுவசநத்துக்கு பாவம் - அவனால் இத்யாதி. நியாம்யதையின் சரமாவதியை பட்டர் ஸ்ரீஸூக்தியாலே காட்டுகிறார்-மரத்தாலே இத்யாதி. மரத்தாலே-மத்தாலே. ஆஶ்சர்யமேது? என்ன, அவாப்த இத்யாதி. பிரான் - ஸர்வேஶ்வரன். 'நிற்கும்நிலை' என்றவிடத்திலே - "ஜாவஜ்ஞாடிஜெகுயிக்ஷாதாம விஷாஜேதாவஜ" என்கிற குந்தீவசநம் அநுஸந்தேயம். 'ஆயர்கொழுந்தாய்' இத்யாதி பதஸங்கதியை ஹ்ருதீகரித்து அருளிச்செய்கிறார் - ஆஶ்ரிதர்கட்டியடிக்க இத்யாதி. அடியுண்டால் புகர்பெறக் கூடுமோ? என்ன, கட்டினவளவுக்கு இத்யாதி. வெட்டெனிருக்கை - உகந்திருக்கை. அவன் இப்படியிருந்தானோ? என்ன, கண்ணியார் இத்யாதி-திருமொழி-ரு-கூ-எ. பலபிணைகளையுடைத்தாய்க் குறளாயிருந்துள்ள தாம்பாலே கட்ட இசைந்திருந்தா னென்றபடி. முற்றூட்டாக்கினவன் - பூர்ணபோஜநமாக்கினவன். தூய்மை - பரிசுத்தி. தூய்மைக்கு பாவம்-தேவர்கள் இத்யாதி. வீப்ஸைக்கு பாவம்-ஸதாஸேவ்யம் இத்யாதி. ப்ரஹ்மசர்யாதி நியமமாவது - அம்ருதப்ராஶந காலத்தில் விஷயவிரக்த்யாதி நியமம். பிறவி மயர்வு - பிறவியடியாக உண்டான மயர்வு. ஒருபடிப்பட்டிராமை - தேவாதி ஶரீரங்களையெடுக்கை. அவன் போக்கினானாயிருக்க, 'மயர்வறுத்தேன்' என்று-தாம்போக்கினாராகச் சொல்லுகிறது சேருமோ? என்ன,—மயர்வறுத்தேனென்கிறது இத்யாதி. க்ரமேண அந்வயம். (ரு)

## நான்காம் பாட்டு.

மயர்வறஎன்மனத்தே மன்னினான் தன்னை
உயர்வினையேதரும் ஒண்சுடர்க்கற்றையை
அயர்விலமரர்கள் ஆதிக்கொழுந்தை என்
இசைவினை என்சொல்லியான்விடுவேனே!

**ஆ.**—(மயர்வற.) இப்படி எம்பெருமானோடு வ்ருத்தமான ஸம்ச்லேஷத்துக்கு ஒரு படியாலும் மேலொழிவில்லை யென்கிறார். தன்கிறத்தில் எனக்கு உள்ள அஜ்ஞாநமெல்லாம் போம்படி என்னுள்ளே புகுந்தருளி, தன்னுடைய கல்யாணமான குணஸ்வரூபங்களை அத்யந்த விசதமாம்படி எனக்குக் காட்டியருளி, தனக்கு ஸத்ருசரான அயர்வறுமமரர்களோடு ஸம்ச்லேஷிக்குமாபோலே என்னோடு ஸம்ச்லேஷித்தருளினவனை எங்ஙனே நான் விடும்படி? என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், தன்படியைக்காட்டி என்னை இசைவித்து, அயர்வறுமமரர்களோடு கலக்குமாபோலே என்னோடுகலந்த மஹோபகாரகனை எனக்கு விட உபாயமுண்டோ? என்கிறார்.

[மயர்வறவென்று தொடங்கி] - அஜ்ஞாநமெல்லாம் போம்படி ஒருநாளும் மாறாதே என்நெஞ்சிலே யிருந்து எனக்கு மேன்மேலென உச்ச்ராயத்தைத் தந்து அது தன்பேறாகக் கொண்டு ஆத்தாலே விட விளங்காநின்றுள்ள அழகையுடையவனை. 'ஒண்சுடர்க்கற்றை' என்று தம்மை வசீகரிக்கைக்கு அடியான அழகைச் சொல்லுகிறது என்றுஞ் சொல்லுவர். [அயர்வென்று தொடங்கி] - பகவத்விஷயத்தில் விஸ்மரணமில்லாத அமரர்களுடைய ஸத்தாதிகளுக்கு ஹேதுவாய் ப்ரதாநமாய்வைத்து எனக்கு 'தன்னையநுபவிப்போம்' என்னும் இசைவைப் பிறப்பித்தவனை.

ப.—அநந்தரம், இப்படி ஸாஸனை இவனை நான் விடுகைக்கு விரகு உண்டோ? என்கிறார்.

மயர்வு - அஜ்ஞாநம், அற - அறும்படி, என்மனத்தே - என்நெஞ்சுக்குள்ளே, மன்னினான் தன்னை - நித்யவாஸம்பண்ணுமவனாய், (எனக்கு), உயர்வினையே - ஜ்ஞாநபக்த்யாத்யபிவ்ருத்தியை, தரும் - தருமவனாய், ஒண் சுடர்க்கற்றையை - நிரதிசயபோக்யமாம்படி தேஜோராசியான வடிவையுடையவனாய், அயர்வு இல் - மறப்பு இல்லாத, அமரர்கள் - நித்யஸூரிகளுக்கு, ஆதிக்கொழுந்தை - ஸத்தாதிஹேதுபூதனை தலைவனாய், என் இசைவினை-(தன்னைக்கிட்டுகைக்கு) என் இசைவுந் தானிட்ட வழக்காம்படியானவனை, என்சொல்லி - எத்தைச்சொல்லி, யான் - (அவனடியறிந்த) நான், விடுவேன் - விடுவேன்? அஜ்ஞாநத்தைப்போக்கிற்றில னென்று விடவோ? அவஸ்திதனென்று விடவோ? உத்கர்ஷகானல்லனென்று விடவோ? உஜ்ஜ்வலனல்லனென்று விடவோ? அவிலக்ஷண போக்யனென்று விடவோ? அநுமதி ஸ்வாதீனையென்று விடவோ? என்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், தன்படியைக்காட்டி என்னை இசைவித்து, அயர்வறுமமரர்களோடு கலக்குமாபோலே என்னோடுகலந்த உபகாரகனை நினைத்து விட உபாய முண்டோ? என்கிறார். முன்பு 'அயோக்யன்' என்று அகன்றவராகையாலே இனி விடே னென்கிறார்.

[மயர்வற] - அஜ்ஞாநம் ஸவாஸநமாகப் போம்படி. [என்மனத்தே மன்னினன் தன்னை] - அஜ்ஞாநம் பின்னாட்டாதபடி என் ஹ்ருதயத்திலே வந்து புகுந்தான். [மன்னினன் தன்னை] - இனி கந்தவ்ய பூமியில்லை யென்று ஸ்த்தாவர ப்ரதிஷ்டைபோலே யிருந்தான். [உயர் வினையேதரும்] - ஜ்ஞாநவிஸ்ரம்பபக்திகளை மேன்மேலெனத்தரும். தந்து சமைந்தானு யிருக்கிறிலன். [ஒண்சுடர்க்கற்றையை] - உபகரித்தானு யிருக்கையன்றிக்கே, உபகாரங்கொண்டானு யிருக்கும். கொள்கின்றவன்வடிவில் புகர் தன்வடிவிலே தோற்றியிருக்கை. "ஸஸ்வஜ்ராநயிஜ்நோ ஜ்வஷ்டாஸசேத்ய ஜதிநந்ஜ்வ". ஒண்சுடர்க்கற்றையென்று தம்மை வசிகரித்த அழகைச் சொல்லிற்றுகவுமாம். [அயர்விலமரர்கள்] - பகவத்விஷயத்திலே விஸ்ம்ருதியுமின்றிக்கே விச்சேதமுமின்றிக்கே யிருப்பது ஒருநாடாக உண்டாயிருக்கக்கிடீர் ஆளில்லாதாரைப்போலே என்னை விடாதே யிருக்கிறது! [ஆதிக்கொழுந்தை] - அவர்கள் ஸத்தாதிகளுக்கு ஹேதுவாய் ப்ரதாநனுமாயிருக்கை. [என் இசைவினை] - அப்படியிருக்கிறவன் என்னையும் அவர்களோடொக்கப் பண்ணுகைக்கு இசைவும் தானுய் வந்துபுகுந்தான். [என்சொல்லி யான்விடுவேனே] - என்ன கண்ணழிவைச் சொல்லி, நான் கைவாங்குவது? அஜ்ஞாநம் அநுவர்த்தித்து விடவோ? அஸந்நிஹிதனென்று விடவோ? அந்யபரனென்று விடவோ? நன்மைகளைப்பண்ணித்தந்திலனென்று விடவோ? ப்ரத்யுபகாரங்கொள்ள இருந்தானென்று விடவோ? மேன்மை போராதென்று விடவோ? இசைவுக்கு க்ருஷிபண்ணினேன் நானென்று விடவோ? எத்தைச் சொல்லி விடுவது?

ஈடு.—நாலாம்பாட்டு. * ("இங்நின்றநீர்மையினியாமுருமை" என்று அடியிலே நீர் அபேக்ஷித்தபடியே) உம்முடைய அபேக்ஷிதம் தலைக்கட்டிற்றே; இனி இவ்விஷயத்தை விட்டுப் பிடிக்குமித்தனையன்றே? என்ன, நான் என்ன ஹேதுவாலே விடுவேன்? என்கிறார்.

[மயர்வற] - அஜ்ஞாநமானது வாஸனையோடேபோக. [என்மனத்தே மன்னினன் தன்னை] - 'இன்னமும் மயர்வுகுடிகொள்ளவொண்ணுது' என்று என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து ஸ்தாவரப்ரதிஷ்ட்டையாக இருந்தவனை; செடிசீய்த்துக் குடியேற்றின படைவீடுகளை விடாதே யிருக்கும் ராஜாக்களைப்போலே. 'புறம்பேயும் ஒரு கந்தவ்யபூமி யுண்டு'என்றுதோற்ற இராமை. இப்படியிருந்து செய்கிறதேன்? என்னில்,—[உயர்வினையேதரும்] - ஜ்ஞாநவிஸ்ரம்பபக்திகளைத் தாராநின்ருனென்னுதல். யமாதிகள் தலையிலே அடியிடும்படியான உத்கர்ஷத்தைத் தாராநின்ருனென்னுதல். [தரும்]-தந்துசமைந்தானுயிருக்கிறிலன்; † "காதல்கடல்புரைய" ‡ "காதல்கடலின்

---

நாலாம்பாட்டு - மயர்வற இத்யாதி. 'விடுவேனே' என்றதுக்கு ப்ரஸங்கம் அருளிச் செய்யா நின்றுகொண்டு, 'என் சொல்லி யான் விடுவேனே' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - உம்முடைய இத்யாதி. அபேக்ஷிதம் தலைக்கட்டிற்றே யென்றது - "மாயப்பிறவி மயர்வறுத்தேன்" என்றத்தைப் பற்ற.

தம்திருவாயாலே சொல்லுகையாலே 'வாஸனையோடே' என்றது விவக்ஷிதம். ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாக இருக்கைக்கு ஹேதுவை த்ருஷ்டாந்த பூர்வகமாக ஸாதியா நின்றுகொண்டு, 'மனத்தே' என்கிற அவதாரணத்துக்கு அர்த்தம் அருளிச் செய்கிருர் - செடிசீய்த்து இத்யாதி. செடிசீய்த்து - காடுவெட்டி. முந்தின அர்த்தத்திலே, 'வினை' என்று - க்ரியையாய், உத்கர்ஷத்துக்கு ஹேதுவான க்ரியை யென்று - ஜ்ஞாநவிஸ்ரம்பபக்திகளைத் தாராநின்ருனென்னுதல். ஜ்ஞாநமாவது - ப்ரணவத்திற் சொல்லுகிற ஶேஷத்வஜ்ஞாநம். விஸ்ரம்பமாவது - நமஸ்ஸிலே சொல்லுகிற உபாயாத்யவஸாயம். பக்தியாவது - நாராயணபதத்திற் சொல்லுகிற ப்ராப்யத்வரை. த்விதீயார்த்தத்தில், 'உயர்வினையே' என்று முழுச்சொல்லாய், உச்ச்ராயத்தையே தருமென்றபடி. 'தரும்' என்ற வர்த்தமாநார்த்தம்-தந்து இத்யாதி. பக்தியை மேன்மேலுங் கொடுக்குமோ? என்ன, காதல்

---

* குண்டலிதம் வ்யாக்யாநாநுஸாரியென்பர். † திருவாய்மொழி, ஒ - ங - ச. ‡ ஷை எ - ங - க.

மிகப்பெரிதால்'' *''நீள்விசும்பும்கழியப்பெரிதால்'' †'சூழ்ந்ததனிற்பெரிய'. [ஒண்சுடர்க்கற்றையை]- இத்தால், எனக்கு உபகரித்தானுயிருக்கையன்றியே, ' தான் உபகாரங்கொண்டான் ' என்னுமிடம் வடிவில் புகரிலே தோற்ற இராநின்ற னென்னுதல் ; தம்மை வஶீகரித்த அழகைச் சொல்லிற்றாகவுமாம் ; ''தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்'' (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) என்னுமாபோலே. இப்படி தன்பேறாக உபகரித்தவன், தன் உபகாரங் கோள்வா ரில்லாதா னொருவனோ ? என்னில், —[அயர்விலமரர்களாதிக்கொழுந்தை] - தான் உபகரியாத அன்று, தங்கள் ஸத்தைகொண்டு ஆற்றமாட்டாதாரை ஒருநாடாக வடையவன். பகவதநுபவவிஸ்ம்ருதிக்கு ப்ராகபாவத்தை யுடையவராய், அவ்வநுபவத்துக்கு விச்சேதஶங்கை யின்றிக்கே, தாங்கள் பலராயிருக்கிறவர்களுக்கு தாரகாதிகளெல்லாந் தானேயா யிருக்கிறவனை. [என் இசைவினை] - ' நானல்லேன் ' என்று அகலாதபடி என் இசைவு தானாய்ப் புகுந்தவனை. [என்சொல்லி யான்விடுவேனோ] - ' சிறிதுமயர்வுகிடந்தது ' என்று விடவோ ? ' மயர்வைப்போக்கி, தான்கடக்க இருந்தான் ' என்று விடவோ ? 'எனக்கு மேன்மேலென நன்மைகளைப் பண்ணித்தந்திலன்' என்று விடவோ ? 'தான்பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் கொள்ள இருந்தான்' என்று விடவோ? 'வடிவழகில்லை' என்று விடவோ ? 'மேன்மை போராது' என்று விடவோ? 'இப்பேற்றுக்கு க்ருஷிபண்ணினேன் நான்' என்று விடவோ? எத்தைச் சொல்லி நான் விடுவது? என்கிறார். (௪)

---

*இத்யாதி. இந்த ப்ரமாணஜாதம் - ஜ்ஞாநவிஸ்ரம்பங்களுக்கும் உபலக்ஷணம். இத்தால் இத்யாதி: 'ஒண் சுடர்க்கற்றை' என்றது - பூர்வபாவிபாதல், பரபாவியாதல். அதாவது - உயர்வினையே தருகையாலே, அது 'தன் பேறு' என்று தோற்ற, ஒண் சுடர்க்கற்றையா யிருக்கிற னென்னுதல்; நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தைக் காட்டி. எனக்கு ஶேஷத்வஜ்ஞாநாதிகளை யுண்டாக்கி, என்னை வஶீகரித்தவ னென்னுதல். 'ஒண்' என்கிற விஶேஷணத்தாலே - தம்மை வஶீகரித்தமை தோற்றுகிறதிறே. 'சுடர்க்கற்றை' என்றதுக்கு ப்ரமாணம்- தேஜஸாம் இத்யாதி. ப்ரதமேம்ஶே பகவந்தம்ப்ரதி ப்ரஹ்மாதயோ தேவாः, ''[illegible] தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்''. தேஜஸாம்ராஶிமூர்ஜிதமென்னுமாபோலே 'ஒண் சுடர்க்கற்றை'என்கிற ரென்றபடி. சுடர்க்கற்றை-தேஜஸ்ஸமூஹம். அவதாரிகை - இப்படி தன் இத்யாதி. தானுபகரியாதவன்று இத்யாதி: அயர்வில்லாமையாலே - பகவதநுபவவிஸ்ம்ருதி யில்லாமையாலே. அமரராய் - ஸத்தாநாஶம் வாராமலிருக்கிறார்க ளென்றபடி. ஶப்தார்த்தம்-பகவதநுபவ இத்யாதி. ப்ராகபாவத்தை யுடையராய் என்றது - ப்ராகப்யபாவத்தையுடையரா யென்றாய், விஸ்ம்ருத்யத்யந்தாபாவத்தை யுடையராய். தாரகாதிகளெல்லாம் - 'ஆதி' என்கையாலே - தாரகத்வபோஷகத்வங்கள் சொல்லிற்று; கொழுந்து' என்கையாலே - போக்யதை. வேர்ப்பற்று உண்டானபின்பிறே கொழுந்து உண்டாவது, தாரக போஷகங்க ளுண்டானபின்பிறே போக்யத்தில் நெஞ்சு செல்வது; ஆகையாலே, 'கொழுந்து' என்று - போக்யதையை விவக்ஷிக்கிறது. ஆதியத இதி - ஆதிः என்றாய், தாரகாதிகளாக ஸ்வீகரிக்கப்படுமவ னென்னுதல்; யத்வா, நித்யஸூரிகளுக்குக் காரணமாகையாவது - அவர்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாய்க் கொண்டு, அவர்களுக்கு ஸத்தா நிர்வாஹகனாயிருக்கை யென்னுதல். நித்யஸூரிகளுக்கு ஸத்தா ஹேதுபூதனை தலைவனென்று ஶப்தத்துக்கு உள்ள அர்த்தம். என் இசைவு தானாய்ப் புகுந்தவனை - என் இசைவுக்கு அந்தராத்மாவாய் நின்று நியமித்துக்கொண்டிருக்கிறவனை; தர்மபூதஜ்ஞாநம் த்ரவ்யமாகையாலே, தச்சரீரத்வமு முண்டிறே. 'மயர்வற' இத்யாதி - ப்ரதிபதம் ஹேது கர்ப்பமென்று திருவுள்ளம் பற்றிபாவம் - சிறிது மயர்வு இத்யாதி. 'ஒண்சுடர்க்கற்றை' - என்கிறதின் அர்த்தத்வயாபிப்ராயேண அருளிச் செய்கிறார் - தான் பண்ணின இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'என் இசைவினை' என்றத்தைப் பற்ற, இப்பேற்றுக்கு இத்யாதி. எத்தைச் சொல்லி நான்விடுவது - அவனிடத்திலே ஒருகுறை யுண்டானா லன்றோ விடலாவ தென்று கருத்து. க்ரமேண அந்வயः.* (௪)

---

* திருவாய்மொழி ௭ - ௩ - ௮. † ஷ ௧௦ - ௧௦ - ௧௦.

## ஐந்தாம் பாட்டு.

---

விடுவேனோஎன்விளக்கை என்னாவியை
நடுவேவந்து உய்யக்கோள்கின்றநாதனைத்
தோடுவேசெய்து இளவாய்ச்சியர்கண்ணினுள்
விடவேசெய்து விழிக்கும்பிரானையே.

ஆ.—(விடுவேனோ.) நிர்ஹேதுகமாகத் திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகளுடைய கண்களிலே தோற்றி மற்றொருத்தருக்குந் தோற்றாதபடி களவிலே சில செயல்களைச் செய்தும், திருக்கண்களாலே பார்த்தருளியும் அவர்களை வஶீகரித்து அவர்களோடு ஸம்ஶ்லேஷித்தாற்போலே நிர்ஹேதுகமாக வந்து எனக்குத் தன்னுடைய குணசேஷ்டிதங்களைக் காட்டி இவற்றாலே என்னை வஶீகரித்து எனக்கு தாரகனாய், என்னோடே கலந்தருளின அக்கலவியாலே என்னை உய்யக்கொள்கின்ற நாதனை நான் விடுவேனோ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்னையறியாதே மிகவும் அந்யபரனாயிருக்கிற என்னை, தன் திருக்கண்களின் அழகாலே இடைப்பெண்களை அகப்படுத்திக்கொண்டாற்போலே நிர்ஹேதுகமாக விஷயீகரித்தவனை விட உபாயமுண்டோ? என்கிறார்.

[என்விளக்கை யென்று தொடங்கி] - ஸ்வவிஷயாஜ்ஞாநாந்தகாரமெல்லாம் நீங்கும்படி தன்னுடைய கல்யாண குணங்களை ப்ரகாசிப்பித்து நான் மிகவும் அந்ய பரனாயிருக்கச் செய்தே நிர்ஹேதுகமாய் வந்து ஸ்வவிஷயஜ்ஞாந விஸ்ரம்ப பக்திகளைப் பிறப்பித்து உஜ்ஜீவிப்பியாநின்று கொண்டு என்னை அடிமைகொண்டவனை. [தொடுவே செய்து என்று மேலுக்கு] - நவநீதாதிகளைக் களவுகண்டு 'இவன் களவுகண்டான்' என்று முறையிட வந்த இளவாய்ச்சியர்க்கு மறுநாக்குக்கொடுக்கவொண்ணாதபடி வேறொருவர்க்குந் தெரியாதே அவர்கள் கண்ணுள்ளே படும்படியாக விடவேபண்ணி நோக்கி அடிமைகொண்டவனை. [கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும்]-கண்ணினுள்ளே தூதராகவிழிக்கு மென்றுமாம். விடவு-விடருடைய செயல். விடவேசெய்து விழிக்கை-ஸவிலாஸமாக நோக்குகை யென்றுமாம்.

ப.—அநந்தரம், அவன் எனக்குப் பண்ணின உபகாரத்தை அறிந்த நான் விட க்ஷமனல்ல னென்கிறார்.

என்விளக்கை - என்னுடைய ஸ்வரூபவிஷயமான ஜ்ஞாநதீப ப்ரகாஶகனாய், என் ஆவியை - என் ஆத்மாவை, (அவகாஶம்பார்த்து), நடுவே - நடுவே, வந்து - புகுந்து, உய்யக்கொள்கின்ற - (அஹங்காராதிகளால் அழியாதபடி) பிழைப்பித்துக்கொண்ட, நாதனை - நாதனாய், தொடுவே - க்ருத்ரிமசேஷ்டிதங்களை, செய்து - பண்ணி, இள ஆய்ச்சியர் - அநந்யயோக்யமான பருவத்தையுடைய இடைச்சியர், கண்ணினுள் - கண்ணுக்குள்ளே, விடவேசெய்து - தானும் அவர்களுமறிந்த தூர்த்தக்ருத்யத்தைப் பண்ணி, விழிக்கும் - கண்கலப்புச்செய்யும், பிரானை - உபகாரகனை, விடுவேனோ - விடவல்லேனோ? விடவு - தௌர்த்த்யம். பிரானென்று - தமக்கு ப்ரகாஶிப்பித்த உபகாரந் தோற்றுகிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், தன்னை யறியாதே மிகவும் அந்யபரனாயிருக்கிற என்னை, தன் திருக்கண்களினழகாலே இடைப்பெண்களை அகப்படுத்தினாற்போலே நிர்ஹேதுகமாக என்னை வஶீகரித்தவனை விடுவேனோ? என்கிறார்.

[விடுவேனோ என்விளக்கை] - ஸ்வவிஷயமான அஜ்ஞாநாந்தகாரம் நீங்கும்படி பண்ணித் தன்னுடைய கல்யாண குணங்களை ப்ரகாசிப்பித்தவனை விடுவேனோ? [என் ஆவியை] - "அஸந்நேவஸபவதி" என்கிறபடியே உருமாய்ந்துபோன என் ஆத்மாவை. [நடுவேவந்து] - விஷயப்ரவணனாய்ப்போகாநிற்க நடுவேவந்து; நிர்ஹேதுகமாக என்னவுமாம். [வந்து] - நான் இருந்தவிடத்தே தானேவந்து. [உய்யக்கொள்கின்ற] - அஸத்கல்பனான என்னை "ஸந்தமேநந்ததோவிதுஃ" என்னப்பண்ணினபடி. [கொள்கின்ற] - கொண்டு விட்டிலன், மேன்மேலெனக் கொள்ளாநிற்கிற அத்தனை. [நாதனை] - உய்யக்கொள்கைக்கு நிபந்தநஞ் சொல்லுகிறது. இழவு பேறு தன்னதான குடல்துடக்கைச் சொல்லுகிறது. இப்படி தன்பேறாக க்ருஷிபண்ணின விடமுண்டோ? என்னில், - [தொடுவேசெய்து] - வெண்ணெய் அவர்கள் கொடுக்கிலும் 'வேண்டா' என்று களவிலே யிழிந்து. பிடிபட்டது கேட்டுத் திரண்டு சிலுகிடுமதுக்காக வந்த இளவாய்ச்சியர் புருஷர்களுக்கும், வ்ருத்தைகளுக்கும் ஒருபயமுமில்லை. இவனாலே நெஞ்சாறல் பட்டவர்கள் 'இவன் பிடிபட்டுக் கட்டுண்டான்' என்றவாறே, ப்ரீதைகளாய்க் காண வருவர்கள். [கண்ணினுள்] - மற்றை எவர்களுக்குந் தெரியாதபடி. விடவேசெய்து விழிக்கும் - தூதாக விழிக்கும். தூதுசெய்கண்களிறே. விஷமமான சேஷ்டிதங்க ளென்னவுமாம். விடர் உண்டு தூர்த்தர். அவர்களுடைய செயலைச் செய்து என்றுமாம். [பிரானையே] - அந்நோக்காலே அவர்களை அநந்யார்ஹைகளாக்கினாற்போல என்னையும் அநந்யார்ஹனாக்கின உபகாரகனை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருவாய்ப்பாடியில் இடைப்பெண்கள் க்ருஷ்ணனைவிட்டுப் பரமபதத்தை விரும்புமன்றன்றோ நான் இவனை விட்டுப் புறம்பே போவது என்கிறார்.

[விடுவேனோ என்விளக்கை]-ஸ்வவிஷயமான அஜ்ஞாநாந்தகாரம் போம்படி நிர்ஹேதுகமாகத் தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை எனக்கு ப்ரகாஶிப்பித்தவனை. "என்விளக்கை" என்பானேன்? அல்லாதார்க்கும் ஒவ்வாதோ? என்னில்; இவரைப்போலே அல்லாதார்க்கு ஸ்நேஹமில்லையே; ஸ்நேஹமுண்டாகிலிறே இவ்விளக்கும் ப்ரகாஶிப்பது. விளக்காவது - தன்னையுங் காட்டிப் பதார்த்தங்களையுங் காட்டவேதோன்றிறே. இவர்க்குத் தன்னையுங்காட்டி ஸ்வஸ்வரூபத்தையும் விரோதிஸ்வரூபத்தையுமிறே காட்டிக்கொடுத்தது. [என் ஆவியை இத்யாதி] - 'தானொருவனுளன்' என்னும் அறிவாதல் தன்பக்கல் அபேக்ஷையாதலின்றிக்கே, ப்ரக்ருதிவஶ்யனாய் உருமாய்ந்துபோந்த என் ஆத்மாவை. [நடுவேவந்து] - நிர்ஹேதுகமாக வந்து. விஷயப்ரவணனாய்ப் போகாநிற்க நடுவே வந்து மீட்ட இத்தனை. [உய்யக்கொள்கின்ற] - கொண்டுவிட்டிலன்; மேன்மேலெனக் கொள்ளாநிற்கிற இத்தனை. "அஸந்நேவஸபவதி" (அஸந்நேவஸபவதி) என்கிறபடியே அஸத்கல்பனான என்னை "ஸந்தமேநந்ததோவிதுஃ" (ஸந்தமேநந்ததோவிதுஃ) என்னப் பண்ணினான். "என்னாவி" என்று உம்மதாகச் சொன்னீர்; உம்முடைய ஆத்மாவை அவன் வந்து

---

அஞ்சாம்பாட்டு - விடுவேனோ இத்யாதி. கீழ்ப்பாட்டுக்கு ஶேஷம் இப்பாட்டு. இப்போது விடோமென்கிற நிர்த்தனைபோக்கி, பின்னையும் வளவேழுலகு ஆழ்வாரல்லீரோ நீர்? உம்முடைய வார்த்தையை விஶ்வஸிக்கப்போமோ? என்ன என்று அடியிலே அவதாரிகைக்குக் கூட்டிக்கொள்வது.

தீபத்துக்கு உண்டான தமோநிவர்த்தகத்வ பதார்த்த ப்ரகாஶகத்வாகாரங்களை அருளிச்செய்கிறார் - ஸ்வவிஷயமான இத்யாதி. ஸ்நேஹம் - பக்திஃ, தைலஞ்ச. அவனை விளக்காகச் சொல்லுகையிலே ஹேதுவை அருளிச்செய்கிறார்-விளக்காவது இத்யாதி. தன்னையுங்காட்டி இத்யாதியாலே மூன்றைச் சொன்னது, அர்த்த பஞ்சகத்துக்கும் உபலக்ஷணம். பூர்வாவஸ்த்தாபராமர்ஶி 'என்' என்கிற பதம் இத்யபிப்ராயேண பாவம் - தானொருவன் இத்யாதி. உருமாய்ந்து - ஸ்வரூபநாஶமாய். நிர்ஹேதுகமாக வந்து என்கிறது-ஆர்த்திகார்த்தம். விஷயப்ராவணனாய் இத்யாதி - ஶப்தார்த்தம். வர்த்தமாநார்த்தம் - கொண்டு இத்யாதி. உய்யக்கொள்கின்ற

உய்யக்கொள்ள நிபந்தநமேன் ? என்ன, [நாதனை] - ஆருடைய வஸ்து அழியப்புக்கது ? 'நான்' என்று ஒருவனுண்டோ ? உடையவனுகையாலே செய்தான். ஆரேனும்பேற்றுக்கு ஆரேனும் யத்நம் பண்ணுவார்களோ? என்ன, திருவாய்ப்பாடியில் பெண்கள்பேற்றுக்கு யத்நம்பண்ணினுர்ஆர்? [தோடுவேசெய்து] - ஆராய்ச்சிப்படுஞ் செயல்களைச் செய்து. ஓரிடத்திலே போய்க் களவுகண்டு அங்கே அகப்படுமே; 'கள்ளனைக் காணவேணும்' என்று இருப்பாரு முண்டே. இவனுலே புண் பட்டவர்களெல்லாரும் காண வருவர்களே ; புருஷர்களுக்கும் வ்ருத்தைகளுக்கும் ஒருபயமில்லை, அருகே நின்றுர்க்குத் தெரியாமே பருவம்நிரம்பின இடைப்பெண்கள் கண்ணுக்குள்ளே விடும்படி யைச் செய்து விழிக்கும் - தூதுவிடும்படியைச் செய்து விழிக்கும். தூது விடுகையாகிற செயலைச் செய்தேன்னுதல், விடருடைய செயலைச் செய் தேன்னுதல். * "தூதுசெய்கண்கள்" என்னக்கடவதிறே, அதுவாதல்; தூர்த்தருடைய வ்யாபாரங்களைப் பண்ணுதல். († 'தவாஸ்மி, தாஸோஸ்மி' என்றுற்போலே சொல்லுகை.) [பிரானையே] - அந்நோக்காலே இடைப்பெண்களை அநந்யார் ஹைகளாக்கினுற்போலே என்னையும் அநந்யார்ஹமாக்கிவிட்டவனை விடுவேனே ? (௫)

## ஆறும் பாட்டு.

பிரான்பெருநிலங்கீண்டவன் பின்னும்
விராய்மலர்த்துழாய்வேய்ந்தமுடியன்
மராமரமேய்த மாயவன் என்னுள்
இரானெனில் பின்னையானெட்டுவேனே ?

ஆ.—(பிரான்.) அவன் தான்விடில் செய்வதென்? என்னில்; தன்னுடைய அதிமநோ ஹரமான திவ்யசேஷ்டிதங்களாலும் அழகாலும் என்னைத் தோற்பித்து' அடிமையாக்கினவன் 'என்னை விடுவேன்' என்றுல் நான் அவனை விடவொட்டுவேனே ? என்கிறுர்.

ஒ.—ஆறும்பாட்டில், அவனே தான்விடில் செய்வதென் ? என்னில், தன்னுடைய திவ்ய சேஷ்டிதங்களாலே என்னைத் தோற்பித்து என்னோடே கலந்தவனை நான்விட ஸம்வதிப் பேனே? என்கிறுர்.

---

நாதனை - அஹங்காராதிகளால் அழியாதபடி பிழைப்பித்துக்கொண்ட நாதனை யிதி மப்தார்த்தः. நானேன் றேருவன் - ஸ்வதந்த்ரன். மேலுக்கு அவதாரிகை - ஆரேனும் இத்யாதி. ஸ்வாமியான அவன் ஸ்வத்தை லபிக்க யத்நம்பண்ணின விடமுண்டோ? என்றபடி. 'தொடுவே' என்ற வகாரத்துக்குத் தாத்பர்யம் - சிலர் கொடுக்கிலுங் கொள்ளா னென்று. தோடுவு - களவு. அத்தை - ஆராய்ச்சிப்படுஞ் செயலென்றது, வெண்ணெயூண்போலே ஆராய்ச்சிப்படுகையும் அவனுக்கு உத்தேஶ்ய மாகையாலே; ஆராய்ச்சி பிறக்கிலிறே பெண்கள் திரளுவது. ஆராய்ச்சிப்படும் செயல்கள் - கேள்விபிறக்கும் செயல்கள். ஆராய்ச்சிப்படும் ப்ரகார மேது? என்ன, ஓரிடத் திலே இத்யாதி. புண்பட்டவர்களென்று - குணசேஷ்டிதவித்தராதல், விஶ்லேஷதுঃகிதராதல். 'ஆய்ச்சியர்' என்கையாலே புருஷர்களுக்கும், 'இளவாய்ச்சியர்' என்கையாலே வ்ருத்தைகளுக்கு மென்றபடி. பயமில்லை - க்ருஷ்ணவிஶ்லேஷஜநிதபயமில்லை; ஈடுபாடில்லை யென்றபடி. அருகே நின்றார்க்குத் தெரியாமே என்றது - 'கண்ணினுள்'என்றத்தைப் பற்ற. அவர்கள் தனக்குத் தூதுவிடும்படியைச் செய்தென்னுதல்,தான் தூதுவிடுகை யாகிற செயலைச் செய்தென்னுதல். த்விதீயார்த்தவிவரணம் - தூதுசெய் இத்யாதி. த்ருதீயார்த்தவிவரணம் - தூர்த்தருடைய இத்யாதி. தூதுசெய்கண்கள் இத்யாதி - தூதக்ருத்யத்தைப்பண்ணும் கண்களைக் கொண்டு ஸ்வாபிப்ராயத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லி யென்றபடி. என்விளக்கை யித்யாதப்ய பிரானைவிடுவேனே இத்யந்வயঃ. (௫)

---

* திருவாய்மொழி, ௯ - ௯ - ௬.† குண்டலிதம் ஶ்வாஸிதகம் என்பர்.

[பிரானென்று தொடங்கி] - தொடுக்கப்பட்டுப் பரிமளத்தையும் செவ்வியையுமுடைய திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையனாய், ப்ரளயார்ணவமக்நையான பூமியை எடுப்பதுஞ்செய்து ஆஸ்ரிதர் ஏவிற்றுச்செய்து அவர்கள்பக்கலிலே வ்யாமுக்தனாய், இச்செயல்களாலே என்னை அடிமைகொண்டவன். விராய்மலர்த்துழாய் - பூக்கள் விரவின துழா யென்றுமாம்.

ப.—அநந்தரம், அவன்தான் அகலத்தேடிலும் நான் இசையே னென்கிறார்.

பிரான் - உபகாரகனாய்க்கொண்டு, பெருநிலம் - மஹாப்ருதிவியை, கீண்டவன் - எடுத்தவனாய், பின்னும் - தொடுக்கப்பட்டு, விராய் மலர் - விரவின மலரையுடைத்தான, துழாய் - திருத்துழாயாலே, வேய்ந்த - செறியச்சூழப்பட்ட, முடியன் - திருமுடியை யுடையனாய், மராமரமெய்த - (மஹாராஜர் விஸ்வஸிக்கைக்காக) மராமரத்தை யெய்த, மாயவன் - ஆஸ்சர்யபூதனானவன், என் - என்னுடைய, உள் - நெஞ்சுக்குள், இரானெனில் - இரானென்னுமளவில், பின்னை - பின்னை, யான் - (அவனையொழியச் செல்லாத) நான், ஒட்டுவேனோ - இசைவேனோ? தொங்குவேனோ? என்றுமாம். மாயவனென்று - மராமரமொன்றளவில் நில்லாதே, ஏழுமராமும் மலையும் பாதாளமும் உருவ எய்த ஆஸ்சர்யம். விராய்மலர்த்துழாயென்று - பரிமளத்தையுடைய செவ்வித்துழா யென்றுமாம்.

இ.—ஆறும்பாட்டில், அவன் தான் விடில் செய்வதென்? என்னில்; தன் சீர்மையாலே என்னைத் தோற்பித்தவனை நான் விட இசைவேனோ? என்கிறார்.

[பிரான்] - நிலா தென்றல் போலே தன்படிகளைப் பரார்த்தமாக்கி வைக்குமவன். இதினுடைய உபபாதநம் மேல்: [பெருநிலங்கீண்டவன்] - ரக்ஷ்யவர்க்கம் பரப்புண்டென்னாக் கைவிடானே. ப்ரளயார்ணவத்திலே புக்கு, பூமியைத் தன்பேறாகத் தன்னை அழியமாறியெடுத்தாற்போலே, ஸம்ஸாரார்ணவத்திலே அகப்பட்ட என்னை எடுத்தவன். [பின்னும் விராய் மலர்த்துழாய் வேய்ந்த முடியன்] - ஒப்பனையோடேயாயிற்று ப்ரளயத்திலே முழுகிற்று; நெருங்கத் தொடையுண்டு, பரிமளத்தை யுடைத்தாய், செவ்விபெற்றுள்ள திருத்துழாய். விரையை, 'விராய்' என்று நீட்டிக்கிடக்கிறது. அன்றிக்கே, மலர் விரவின துழா யென்னவுமாம். (வேய்ந்த முடியன் - சூழப்பட்ட திருமுடியையுடையவன்; 'ஏய்ந்த' என்று பாடமானபோது - சேர்ந்தமுடி. [மராமரமெய்த மாயவன்] - ரக்ஷணத்திலே அதிஸங்கை பண்ணினவனுக்கு மழுவேந்திக்கொடுத்தும் அவன் காரியத்தை முடியச்செய்யும் வ்யாமோஹாதிஸயத்தை யுடையவன். [என்னுளிரானெனில்] - இப்படி ஆஸ்ரிதர் தன்பக்கலிலே சேருகைக்கு க்ருஷி பண்ணுமவன் என்பக்கலிரானென்னில். 'எனில்' என்கையாலே - விட ஸம்பாவனை யில்லை யென்கை. [பின்னை யானொட்டுவேனோ] - பின்னை நான் இசைவேனோ? 'பின்னை நான் தொங்குவனோ' என்னும் ஆச்சான்.

ஈடு.—ஆறும்பாட்டு. இப்போது 'விடோம்' என்கிறீரித்தனைபோக்கிப் பின்னையும் நீரல்லீரோ; உம்முடைய வார்த்தையை விஸ்வஸிக்கப்போமோ? என்ன, அவனாலே அங்கீக்ருதனான நான் அவனை விடுவேனோ? என்றார் கீழிற்பாட்டில்; உம்மை அவன்தான் விடில் செய்வதென்? என்ன, தன்குணசேஷ்டிதங்களாலே என்னைத்தோற்பித்து என்னோடே கலந்தவனை நான் விட ஸம்வதிப்பேனோ? என்கிறார் இதில்.

[பிரான்] - நிலா தென்றல் சந்தநம் பிறர்க்கேயாயிருக்குமாபோலே, தன்படிகளை யுடை

---

ஆறும்பாட்டு - பிரான் இத்யாதி. கீழிற்பாட்டில் அர்த்தத்தை அநுவதிக்கிறார் - இப்போது இத்யாதி. பின்னையும் நீரல்லீரோ - வளவேழுலகி லாழ்வாரன்றோ? என்றபடி.

பிரான் - உபகாரகன். நாராயணன், வாஸுதேவன் என்றாற்போலே 'உபகாரகன்' என்று நிரூபக

யப் பிறர்க்காக்கி வைக்குமவன். ஸர்வவிஷயமாகவும் ஆஶ்ரிதவிஷயமாகவும் பண்ணும் உபகாரத்தை நினைத்து "பிரான்" என்கிறது. அத்தை உபபாதிக்கிறது மேல்: [பெருநிலம்கீண்டவன்]- ஸர்வவிஷயமாகப் பண்ணும் உபகாரம். ப்ரளயங்கொண்ட பூமியை நீருக்கும் சேற்றுக்கும் இறுயாத வடிவைக் கொண்டு எடுத்தாற்போலே, ஸம்ஸாரப்ரளயங்கொண்ட என்னை யெடுத்தவன். [பின்னும் விராய்மலர்த்துழாய்வேய்ந்தமுடியன்] - ஒப்பனையோடேயாயிற்று ப்ரளயத்திலேமுழுகிற்று. நெருங்கத்தொடையுண்டு பரிமளப்ரசுரமாய், செவ்விபெற்றிருந்துள்ள திருத்துழாய்மாலையாலே சூழப்பட்ட திருவபிஷேகத்தை யுடையவன். விரையை - 'விராய்' என்று நீட்டிக்கிடக்கிறது. அன்றியே, மலர்விரவின திருத்துழா யென்றுமாம். [மராமரமெய்த மாயவன்] - ஆஶ்ரிதவிஷயமாக உபகரிக்கும்படி. மஹாராஜர், வாலிமிடுக்கையும் பெருமாள் ஸௌகுமார்யத்தையும் அநுஸந்தித்து, 'நீர், வாலியைக் கொல்லமாட்டீர்' என்ன, 'நான் வல்லேன்' என்று மழுவேந்திக்கொடுத்துக் கார்யஞ்செய்யும் வ்யாமோஹத்தையுடையவன். [என்னுளிரானெனில்] - இப்படி ஆஶ்ரிதரை விஷயீகரித்து அவர்கள்பேற்றுக்குத் தான் க்ருஷிபண்ணுமவன், என்னுள் இரானெனில். 'எனில்' என்கையாலே - விட ஸம்பாவனையில்லையென்கை. [பின்னையானொட்டுவேனோ] - 'எப்ரகாரத்தாலும் இரேன்' என்னுமாகில், பின்னை, நான் அவன்போக்கை இசைவேனோ? என்னுடைய கர்மபாரதந்த்ர்யம்போலே அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்துக்கும் ஏதேனும் கண்ணழிவுண்டோ? என் இசைவின்றிக்கேயிருக்க அவனாலேபோகப்போமோ? அன்றியே, 'நான்தொங்குவேனோ?' என்று, பிள்ளான் பணிக்கும்படி. (௬)

## ஏழாம் பாட்டு.

யானொட்டியென்னுளிருத்துவ மென்றிலன்
தானொட்டிவந்து என்தனிநெஞ்சைவஞ்சித்து
ஊனொட்டிநின்று என்னுயிரில்கலந்து இயல்
வானொட்டுமோ? இனியென்னை நெகிழ்க்கவே.

---

*மாகச்சொன்னதுக்கு பாவம்* - **நிலா** *இத்யாதி.* **படிகள்** - *ப்ரகாரங்கள்.* **அடைய** *என்கையாலே ஸ்வரூபரூபகுணவிபூதிகளைச் சொல்லுகிறது. '*இன்னார்க்கு*' என்னுமையாலே ஸர்வவிஷயமாகவும் ஆஶ்ரிதவிஷயமாகவுமென்கிறார். ஆபத்தசையிலே உதவியுபகரிக்குமென்று அர்த்தாந்தரம்* - **ஸீர்வ** *இத்யாதி; ஏகார்த்தமாதல்.* **அத்தை** - *உபகாரத்தை. இப்போது பூம்யுத்தரணம்பண்ணினத்தை யருளிச்செய்ததுக்கு பாவம்* - **ப்ரளயம்** *இத்யாதி.* **இறுயாத** - *பின்வாங்காத.* **பின்னும்** - *நெருக்கத்தொடுக்கப்பட்ட.* **விராய்** - *விரை, பரிமளம்.* **மலர்** - *செவ்வி. இரண்டாமர்த்தத்துக்கு, புஷ்பம்.* **வேய்ந்த** - *சூழப்பட்ட.* **வேய்தல்** - *புனைதலும் சூழுதலும். '*பெருநிலங்கீண்டவன்*' என்றத்தோடே கூட்டி பாவம்* - **ஒப்பனையோடே** *இத்யாதி.* **ஒப்பனை** - *அலங்காரம்.* **மலர்விரவின** - *மலரோடேகூடின.* **விரவுதல்** - *கூடுதல்.* **மாமரம்** - *ஸாலவ்ருக்ஷம்.* **மாயவன்** - *வ்யாமோஹத்தையுடையவன். ஆஶ்ரிதர்க்கு உபகரிக்குமிடத்தில் மராமரமெய்கைக்கு ப்ரஸக்தியேது? என்ன,* **மஹாராஜர்** *இத்யாதி. '*மராமரமெய்த*' என்றத்தால் பலிதத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, '*என்னுளிரானெனில்*' என்றதுக்கு அர்த்தம்* - **இப்படி** *இத்யாதி.* **எனில்** - *யதி. '*இரான்*' என்றதுக்கர்த்தம்* - **எப்ராகாரத்தாலும்** *இத்யாதி. ஸ்வதந்த்ரனைகையாலே போகானோ? என்ன,* **என்னுடைய** *இத்யாதி. கர்மபாரதந்த்ர்யம் தத்க்ருபாப்ரதிஹதம்; ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்துக்கு ப்ரதிஹதியில்லையென்றபடி. அர்த்தாந்தரத்திலே* **ஒட்டுகை** - *தொங்குகை; அதாவது - தரிக்கை. க்ரமேண அந்வயம்.* (௬)

ஆ.—(யானொட்டி.)-என்னுடைய பாக்யஹாநியாலே அவன் என்னை விட்டு எனக்கும் ஒரு புத்தி தன்னோடு பிறப்பிக்கில் செய்வதென்? என்னில்,—என்னுடைய ஸம்வாதமின்றியே யிருக்கச்செய்தே தானே ஓட்டிக்கொண்டுவந்து, தன்னுடைய குணசேஷ்டிதாவிஷ்காரத்தாலே என்னெஞ்சை வஞ்சித்து அகப்படுத்தி ‘இந்த ஹேயமான ப்ரக்ருதியோடே ஸம்பந்தித்திருக்கிற ஆத்மாவோடே ஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிற இவன், தன்னை “விடுவேன்” என்றால் என்னை விடவொட்டுமோ ?’ என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், எனக்கு இசைவின்றிக்கேயிருக்கத் தானே வருந்தித் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்டவன், ‘நான் போவேன்’ என்னிலும் என்னைப் போகவிடா னென்கிறார்.

[யானொட்டி யென்று தொடங்கி] - நான் இசைந்து ஹ்ருதயத்திலே இருத்துவே னென்றிலேன்; தானே இருப்பனாக ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொடுவந்து அவிதேயமான என்னுடைய நெஞ்சைத் தன்னுடைய கல்யாண குணங்களைக் காட்டி என்னை அறியாமே அகப்படுத்தி. [ஊனொட்டியென்று தொடங்கி] - என்னுடைய தேஹத்தையே நிரதிஶயபோக்யமாகப்பற்றி விடாதே நின்று என் ஆத்மாவோடே கலந்து அக்கலவியாலல்லது செல்லாத தன்மையை யுடையவன்.

ப.—அநந்தரம், நான் நெகிழ்த்துக்கொடுபோகிலும் அவன் இசையா னென்கிறார்.

யான் - நான், ஒட்டி - இசைந்து, என்னுள்-என்னுள்ளே, இருத்துவம் - இருத்துவோம், என்றிலன் - என்று நினைத்திலேன்; தான் - தானே, ஒட்டிவந்து-ப்ரதிஜ்ஞை பண்ணிவந்து, என்- என்னுடைய, தனி - ஸ்வதந்த்ரமான, நெஞ்சை - நெஞ்சை, வஞ்சித்து - நான்அறியாதபடி வஶீகரித்து, (அதுஅடியாகவே), ஊன் - சரீரத்திலே, ஒட்டி - பொருந்தி, நின்று-புகுந்து நின்று, என் உயிருள் - என் ஆத்மாவிலே, கலந்து - கலந்து, இயல்வான் - (அத்தாலே ஸத்தை பெற்றானாய்) நடக்கிறவன், இனி - இனி, என்னை - என்னை, நெகிழ்க்க - நெகிழ்த்துக்கொள்ள, ஒட்டுமோ - ஒட்டுமோ ?

இ.—ஏழாம்பாட்டில், எனக்கு இசைவின்றிக்கேயிருக்க, ‘வருந்திச்சேர்த்துக்கொண்டவன், ‘நான் போவேன்’ என்னிலும் போகவொட்டான் என்கிறார்.

[யானொட்டியென்னுளிருத்துவமென்றிலன்] - நான் இசைந்து என் ஹ்ருதயத்திலே யிருத்துவே னென்றிலன். இசைவு என்னாலே வந்ததாகிலன்றோ விடுகை என்னாலே வந்ததாவது. இசைவின்றிக்கேயிருக்கக் கிட்டினபடி யென் ? என்னில்,— [தானொட்டிவந்து] - நிரபேக்ஷனான தான் ‘உம்முடையபக்கலிலே யிருக்கை தவிரேன்’ என்று ப்ரதிஜ்ஞைபண்ணிவந்து. “ஸஜ்ஞ ஶரணம்பவ ஶரணம்ஸாமரஸ்யா”. [என் தனி நெஞ்சை] - எனக்குபவ்யமாய், தன்னாலும் திருத்தவொண்ணாதபடி ஸ்வதந்த்ரமான நெஞ்சை. [வஞ்சித்து]-தன்னுடைய ஶீலாதி குணங்களாலும் வடிவழகாலும் என்னை அறியாமே அகப்படுத்தி. மநஸ்ஸு பிடிபட்டபின்பு செய்ததென்? என்னில்,—[ஊனொட்டிநின்றுஎன்னுயிரிற்கலந்து] - அபிமதவிஷயத்தில் அழுக்கு உகப்பாரைப் போலே, எனக்கு த்யாஜ்யமான ஶரீரத்தைத் தனக்கு போக்யமாகப் பற்றிநின்று; விலக்காததொரு ஸமயம் பெற்றவாறே என் ஆத்மாவோடே வந்து ஸம்ஶ்லேஷித்தான். [இயல்வான்] - வ்யாமோஹத்தை ஸ்வபாவமாகவுடையவ னென்னுதல், இப்படி உத்ஸஹிக்குமவ னென்னுதல். [ஒட்டுமோ இனி யென்னை நெகிழ்க்கவே] - முன்பு த்வேஷம்பண்ணித் திரிந்த நாள் என்னை என் கைவசத்தே விட்டுத் திரிந்தான் ; இப்போது இப்படி நிர்ஹேதுகமாக விஷயீகரித்தவன் பல தஶையிலே ‘நான் நெகிழ்ந்துபோவேன்’ என்றால், அவன் ஸம்மதிக்குமோ ?

ஈடு.—ஏழாம்பாட்டு. குணத்ரயவஶ்யராய்ப்போந்தீர், காதாசித்கமாக 'அவனைவிடேன்' என்கிறீர், உம்முடைய வார்த்தையை விஶ்வஸிக்கப் போமோ ? என்ன, நான் 'அவனை விட்டாலும், அவன் தான் என்னை விடான்' என்கிருர்.

[யான் இத்யாதி] - இசைவு என்னுலே வந்ததாகிலன்ரே விடுகையும் என்னுலே வந்ததாவது. 'ஆழ்வீர்! நாம் உம்முடையபாடே யிருப்போம்' என்ருல், 'ஒட்டேன்' என்பரே; 'ஆகில் இங்கே யிருக்கக்கடவோம்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணியாயிற்று வந்திருப்பது. நான் இசைந்து 'என்னுடைய ஹ்ருதயத்திலே யிருக்கவேணும்' என்றிலேன். [தாஞெட்டி வந்து] -" அத்யைவ மரணம்வாபி தரணம்ஸாகரஸ்யவா" (அத்யமே மரணம்வாபி தரணம் ஸாகரஸ்யவா) என்று இத்தை முடித்தல் கடத்தல் செய்யுமதுக்கு மேற்படவில்லை யென்ருற்போலே, ப்ரதிஜ்ஞை பண்ணியாயிற்று புகுந்தது. [என் தனி நெஞ்சை] - தன்னுலும் திருத்தவொண்ணுதபடி ஸ்வதந்த்ரமாய், அவிதேயமான நெஞ்சை. [வஞ்சித்து] - தன்னுடைய சீலாதி குணங்களாலும் வடிவழகாலும் தனக்கு விதேயமாம்படிபண்ணி. பின்னைச் செய்ததேன் ? என்னில்,—[ஊஞெட்டி நின்று என்னுயிரிற் கலந்து]- 'ஶரீரத்தைப் பற்றி நிற்கிற என்னுயிரிலே கலந்து என்கிருர்' என்பாருமுண்டு; அன்றிக்கே, 'அபிமத விஷயத்தில் அழுக்கு உகப்பாரைப்போலே என்னுடைய ஶரீரத்தைப் பற்றி நின்று பின்னை என்பக்கலிலே விலக்காமை பெற்றவாறே என் ஆத்மாவோடே வந்து கலந்தான்' என்று சீயர் அருளிச்செய்யும்படி. [இயல்வான்] - இப்படியை ஸ்வபாவமாக வுடையவனென்னுதல்; இப்படி எதிர்சூழல்புக்கு உத்ஸஹித்தவ னென்னுதல். [ஒட்டுமோ இனி என்னை நெகிழ்க்கவே] - இப்படி நிர்ஹேதுகமாக என்னை விஷயீகரித்தவன், 'நான் தன்பக்கலினின்றும் நெகிழ்ந்துபோவேன்' என்ருல் அவன் இசையுமோ ? எனக்கு ஜ்ஞாநம் பிறக்கைக்கு க்ருஷி பண்ணி, பிறந்த ஜ்ஞாநம் பலிக்குமளவாகக்கோண்டு நான் 'அகன்று போவேன்' என்ருல் அவன் ஸம்வதிக்குமோ ? (எ)

---

ஏழாம்பாட்டு—யாஞெட்டி இத்யாதி. 'ஒட்டுமோ வினியென்னை நெகிழ்க்கவே' என்ற பதத்தைக் கடாக்ஷித்து ஶங்காபரிஹாரரூபேண அவதாரிகை - குணத்ரயவஶ்யராய் இத்யாதி. காதாசித்கமாக - ஸத்த்வம் தலையெடுத்த காலத்திலே.

'இருத்துவமென்றிலன்' என்றதுக்கு பாவம் - இசைவு என்னுலே இத்யாதி. முந்துற இசையாமலிருக்கிலன்ரே ப்ரதிஜ்ஞைபண்ணவேண்டுகிறதென்று அதுக்காக இசையாமையைக் காட்டுகிருர் - ஆழ்வீர் இத்யாதி. ஶப்தார்த்தம்-நானிலசந்து இத்யாதி. ஒட்டி-இசைந்து. தாஞெட்டிவந்து-தான்ப்ரதிஜ்ஞைபண்ணிவந்து. ப்ரதிஜ்ஞைபண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் 'அத்யைவ' இத்யாதி; யுத்தகாண்டவசனமிது "இதிராமோ மதிம் க்ருத்வா மஹாபாஹுர்மஹோததிம். அயமிதாநீம் ஸமயஸ்தரணே யஸ்யமே ராக்ஷஸா:" என்று உத்தரார்த்தம். அத்யைவ தரணம் வா ஸாகரஸ்ய மரணம் வா என்று அந்வயித்து அர்த்தம் - இத்தைமுடித்தல் இத்யாதி. "யாவம்ஶேஷ" இத்யாதிப்படியைக் கடாக்ஷித்து இப்படி யோஜித்தது. தனி - ஸ்வதந்த்ரம். ஸ்வதந்த்ரமாய் - அதவ அவிதேயமான என்றபடி. முந்தினயோஜனையில், 'நின்று' என்கிற ல்யப்புக்கு அர்த்தஸ்வாரஸ்யமில்லை. இயல்வு - ஸ்வபாவமும், முயலுகையும். முயலுகை - உத்ஸஹிக்கை. 'இயல்வான்' என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக இப்படி நிர்ஹேதுகமாக இத்யாதி வாக்யத்வயமும். பலிக்குமளவாகக்கோண்டு - பலிக்குமளவானவளவிலே. கீழிற்பாட்டில் 'யாஞெட்டுவேனே' என்று- "ஹிதோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்" என்றதின் அர்த்தத்தையும், இப்பாட்டிலே 'என்னை நெகிழ்க்கவொட்டுமோ' என்கையாலே - 'ஸசமமப்ரிய:' என்றதின் அர்த்தத்தையுஞ் சொல்லுகிறது. யாஞெட்டியித்யாரப்ய, இயல்வான் இனி என்னை நெகிழ்க்கவொட்டுமோ ? இத்யந்வய:. (எ)

## எட்டாம்பாட்டு.

---

என்னைநெகிழ்க்கிலும் என்னுடைநன்னெஞ்சந்
தன்னைஅகல்விக்கத் தானுங்கில்லானினிப்
பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை
முன்னையமரர் முழுமுதலானே.

ஆ.—(என்னை.) ஆஶ்ரிதவத்ஸலனுகையாலே அவன்தானும் என்னை விடான்; என் பக்கலுள்ள குணஹாநியாலே என்னை விட நினைக்கிலும், ஸர்வேஶ்வரன் தன்னாலும் என்னுடைய நெஞ்சை விடமுடியாது; நெஞ்சோடுஉள்ள ஸம்பந்தத்தாலே என்னையும் விடமுடியாது. நெஞ்சை விடமுடியாதொழிவானென்? என்னில்,—அது நப்பின்னைப்பிராட்டியடிமை யன்றோ? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், என்னை ஒருபடி விடுவித்தானாகிலும் அயர்வறுமமரர்கள் ஸேவிக்க நப்பின்னைப்பிராட்டியோடு கூட இருந்தருளின அழகைக் கண்டு அடிமைபுக்க என் நெஞ்சை ஸர்வஶக்தியான தானும் தன்பக்கல்நின்றும் இனி விடுவிக்கமாட்டா னென்கிறார்.

[பின்னை யென்று மேலுக்கு] - நப்பின்னைப்பிராட்டியுடைய நெடியதாய்ப் பணைத்திருந்துள்ள தோளை அநுபவிக்கைக்கு ஈடான முதன்மையுடையனானை. பணைத்தோள் - வேய்போலேயிருந்த தோ ளென்றுமாம்.

ப.—அநந்தரம், இப்படிக்கொத்தவன் விடில் செய்வதென்? என்னில்,—என்னைப் பிரிக்கிலும் என்நெஞ்சை அவனாலும் பிரிக்கஅரிது என்கிறார்.

என்னை - (தான்தந்த ஜ்ஞாநப்ரேமங்களையுடையனாய்த் தன்னை யொழியச் செல்லாத) என்னை, நெகிழ்க்கிலும் - நெகிழ்க்கிலும், நல் - (தன்னால் வஞ்சிதமாய்த் தனக்கு) நலப்பட்ட, என்னுடை நெஞ்சந்தன்னை - என்னுடைய நெஞ்சுதன்னை, அகல்விக்க - தனித்து அகல்விக்க, தானும் - (ஸர்வஶக்தியான)தானும், இனி கில்லான்-இனி மாட்டான்; (முன்போலே விஷயாந்தரஸக்தமன்றே அவன்தான்), பின்னை - நப்பின்னைப் பிராட்டியுடைய, நெடும் - நெடியதாய், பணை - சுற்றுடைத்தான, தோள் - தோளோடேசேர்ந்த, மகிழ் - மகிழ்ச்சியாகிற, பீடுடை - மேன்மையையுடையனாய், முன்னை - பூர்வரான, அமரர் - நித்யஸூரிகளுக்கு, முழு - தாரகாதி ஸமஸ்தத்துக்கும், முதலானே - தானே முதல்வனானவனன்றோ? ஆதலால், அவர்களை விடிலன்றோ என்னையும் என்நெஞ்சையும் விடுவது என்று கருத்து. பணைத்தோளென்று - வேய்போன்ற தோளென்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டு. என்னை விடுவித்தானாகிலும், தன் கல்யாணகுணங்களிலே அகப்பட்ட என் நெஞ்சை இனி விடுவிக்க ஶக்தனல்ல னென்கிறார்.

[என்னை நெகிழ்க்கிலும்] - என்னாலன்றிக்கே "ஊனெட்டிநின்று" என்கிறபடியே அத்தலையாலே கிட்டின என்னை நெகிழ்க்கவொண்ணாது; அவ்வரியசெயலைச் செய்யிலும், மயர்வற்ற என்னைப் பிரிக்கை அரிது, அச்செயலைச் செய்யிலும் என்னவுமாம். [என்னுடை நல்நெஞ்சந் தன்னை யகல்விக்க] - "நெஞ்சேயியற்றுவா யெம்மொடு நீ கூடி" என்றும், "தொழுதெழென் மனனே" என்றுஞ் சொல்லலாம்படி தன்பக்கலிலே அவகாஹித்த விலக்ஷணமான என்னுடைய மநஸ்ஸை விடுவிக்க. [தானும்கில்லான்] - ஸர்வஶக்தியான தானும் ஶக்தனல்லன். ஸர்வஶக்தியான தான் பண்ணிவைத்த வ்யவஸ்தையை தன்னால்தான் அழிக்கப்போமோ? ஸர்வஶக்தித்வத்தோயாதி ஸத்யஸங்கல்பத்வமும் வ்யவஸ்தித மென்கை. [இனி] - முன்பு செய்யலாம், இனிச்

செய்யப்போகாது. எத்தாலேயென்னில்,—[பின்னை இத்யாதி] - நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக, நித்யஸூரிகள் ஓலக்கமிருக்க, அச்சேர்த்தியழகிலே தோற்று அடிமைபுக்க என்னெஞ்சை மீட்கப்போகா தென்கை. அந்தஃபுர பரிகரத்தை ராஜாவாலும் அநாதரிக்க வொண்ணாது. "ஸூர்யக்ஷயமணிவஸ்ஸநே" என்கிறபடியே, நித்யஸூரிகள் முன்பு பண்ணின ப்ரதிஜ்ஞை முடிய நடத்தவேணு மென்கை. நப்பின்னைப்பிராட்டியுடைய நெடிதாய்ப்பணைத்திருந்துள்ள தோளோடே யணைகையாலே ஆநந்திக்கிற முதன்மையை யுடையவன். பணையென்று - வேயாய், பசுமைக்கும், சுற்றுடைமைக்கும், செவ்வைக்கும் மூங்கில்போலேயிருக்கை யென்னவுமாம். "யஸ்யா ஜநகாத்மஜா, ஸௌபரேயம்ஸாதநேஜஃ". [முன்னையமரர்] - பழைய அமரர், "யத்ரர்ஷயஃ ப்ரதமஜாயேபுராணாஃ" என்கிற பழமையை யுடையராகை, [முழுமுதல்]-அவர்களுடைய ஸ்வரூபாதிகளெல்லாம் ஸ்வாதீநமாயிருக்கை.

ஈடு.—எட்டாம்பாட்டு. 'நான் விடேன், அவன் விடான்' என்றுற் போலே சொல்லுகிற தேன்? இனி அவன்தான் 'பிரிப்பேன்' என்னிலும் தன்னுடைய கல்யாண குணங்களிலே அகப்பட்ட என் நெஞ்சை அவனாலும் பிரிக்கப்போகாது என்கிறார்.

[என்னை நெகிழ்க்கிலும்] - மயர்வறமதிநலமருளப்பெற்ற என்னைத் தானே அகற்ற அரிது; இவ்வரிய செயலைச் செய்யிலும், [என்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்க] - "நெஞ்சேயியற்றுவா யெம்மோடு நீ கூடி" என்றும், "தொழுதெழென்மனனே" என்றுஞ் சொல்லலாம்படி தன்பக்கலிலே அவகாஹித்த நெஞ்சந்தன்னை அகல்விக்க. [தானும்கில்லான்] - ஸர்வஶக்தி யென்னு, எல்லாஞ் செய்யப்போமோ? என், செய்துபோந்திலனோ? இது நெடுங்காலம் என்ன,—[இனி] - அவனும் இனிமேலுள்ள காலம் மாட்டான்; 'இனி' என்கிற உரப்பு எத்தைப் பற்ற? என்னில்,—அத்தைச் சொல்லுகிறது, மேல். [பின்னை இத்யாதி.] - நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக நித்யஸூரிகள் ஓலக்கமிருக்க அடிமைபுக்கு அந்தஃபுரபரிகரமான வஸ்துவை அகற்றப் போமோ? நப்பின்னைப் பிராட்டியுடைய நெடிதாய்ச் சுற்றுடைத்தாய்ப் பசுமையை யுடைத்தான மூங்கில்போலே யிருக்கிற தோளோடே அணைகையால் வந்த பெருமையை யுடையனாய், "யத்ரர்ஷயஃ ப்ரதமஜாயேபுராணாஃ" (யத்ரர்ஷயஃ ப்ரதமஜாயேபுராணாஃ) என்கிறபடியே பழையரா யிருந்துள்ள நித்யஸூரிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தன் அதீநமாம்படி யிருக்கிற

---

எட்டாம்பாட்டு - என்னை இத்யாதி. "என்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங் கில்லான்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - நான்விடேன் இத்யாதி.

யதிஶப்தார்த்தம் - மயர்வற இத்யாதி.. நன்மைக்கு அர்த்தம் - நெஞ்சே இத்யாதி. பெரியதிருவந்தாதி - க. என்னில் முற்பட்ட நெஞ்சே! முற்பட்டிருக்கிற நீ பிற்பட்ட என்னோடுகூடிக் காரியத்தை நடத்துவாயென்றபடி. "தானும்" என்றதின் அர்த்தம் - ஸர்வஶக்தி இத்யாதி. நெடுங்காலம் - ஸம்ஸாரத்திலே வைத்த காலம். உரப்பு - தார்ட்யம். தாத்பர்யம் - நப்பின்னை இத்யாதி. ஶப்தார்த்தம் - நப்பின்னைப்பிராட்டியுடைய இத்யாதி. பணை - மூங்கில். பணையை த்ருஷ்டாந்தமாகச்சொல்லுகையாலே அதுக்குஉண்டான ஆகாரங்களை அருளிச்செய்கிறார் - சுற்றுடைத்தாய் இத்யாதி. தோள்மகிழ்பீடு - தோளோடேஅணைகையாலே வந்த பெருமையென்றபடி. ஸம்ஶ்லேஷஸூசகமான மகிழ்ச்சியை - ஸம்ஶ்லேஷமென்கிறது, ஔபசாரிகமாக. 'முன்னையமரர்' என்றதுக்கு ப்ரமாணம் - யத்ரபூர்வேத்யாதி. ருஷயஃ-ஜ்ஞாநிநஃ; ப்ரதமஜாஃ - பழையராயிருக்குமவர்கள். "புராணாஃ-புராபிநவாஃ நித்யயௌவநாஃ". முழு - ஸ்வரூபஸ்த்தித்யாதிகளெல்லாவற்றுக்கும். முதல் - காரணமாயிருக்கிறவன் என்றபடி. தானுங்கில்லான் என்று அந்வயம் காட்டினபடி.

வன் தானும் கில்லான். "ஸூர்யக்ஷகணஸந்நிதௌ" (ஸூர்யர்க்ஷகணஸந்நிதௌ) என்கிற படியே அவர்கள் ஸந்நிதியிலே ப்ரதிஜ்ஞைபண்ணிற்று; நப்பின்னைப்பிராட்டி புருஷகாரம் எங்ஙனே அகற்றும்படி? (௮)

# ஒன்பதாம் பாட்டு.

அமரர்முழுமுத லாகியவாதியை
அமரர்க்கமுதீந்த ஆயர்கொழுந்தை
அமரவழும்பத் துழாவியென்னாவி
அமரத்தழுவிற்று இனியகலுமோ?

ஆ.—(அமரர்.) அயர்வறுமமரர்களதிபதியாய், அர்த்திகல்பகனாய், நிரதிசயஸௌந்தர்யத்தையுடையனான எம்பெருமானோடே ப்ருதங்நிர்த்தேசாநர்ஹமாம்படி ஸம்ச்லேஷிக்கையாலே, இனி என்னாலும் அவனை விடமுடியாது என்கிறார்.

ஒ.– ஒன்பதாம்பாட்டில், தாம் அவனோடு கலந்த கலவியின் மிகுதியால் விஸ்லேஷ ஸம்பாவனை யில்லை யென்கிறார்.

[அமரவென்று தொடங்கி] - அயர்வறுமமரர்களுக்கு எல்லாம் தானே காரணமாயிருப்பானாய் இஜ்ஜகத்துக்கும் காரணமாய் க்ஷுத்ரமான ப்ரயோஜநங்களை வேண்டின ப்ரஹ்மாதிகளுக்கும் அவர்களபேக்ஷிதங்களைக் கொடுப்பது செய்து இடைச்சாதியிலே வந்து அவர்கள் உளராகத் தானும் உளனானவனை. [அமரவென்று தொடங்கி] - மிகவும் நெருங்கக் கலசி என் ஆத்மா ஒருவராலும் பிரிக்கவொண்ணாதபடி ஸம்ச்லேஷித்தது.

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரத்தாலும் அவனை ஸம்ச்லேஷித்த என் ஆத்மா இனி அகல ப்ரஸங்கமுண்டோ? என்கிறார்.

அமரர்-நித்யஸூரிகளுடைய, முழு ஸ்வரூபஸ்த்திதிப்ரவ்ருத்திகளெல்லாவற்றுக்கும், முதலாகிய-ஹேதுவாய்க்கொண்டு, ஆதியை-ப்ரதாநனானவனாய், அமரர்க்கு-அமரர்க்கு, அமுது-(அவர் ஆசைப்பட்ட) அம்ருதத்தை, ஈந்த - கொடுத்தவனாய், ஆயர் - (தன்னோடு உறவுடையரான) ஆயர்களுக்கு, கொழுந்தை - தலைவனானவனை, என்ஆவி - என் ஆத்மாவானது, அமர - அநந்யார்ஹமான பொருத்தம் பிறக்கும்படியாகவும், அழும்ப - (ஸ்வாதந்த்ர்யாதிகளான இடைத்துரும்பு அறும்படி) கலப்புப் பிறக்கவும், [*]துழாவி - (ஸ்வரூபாதிஸமஸ்தவிஷயத்திலும் புக்கு) ஸஞ்சரித்து, அமர - இப்படிப்ருதக்ஸ்த்தித்யாதிகளில்லாதபடி, தழுவிற்று - உகந்துகலந்தது; இனி அகலுமோ - இனி அகல ப்ரஸங்கமுண்டோ? அழும்புதல்-செறியக்கலத்தல்.

இ.—ஒன்பதாம்பாட்டில், தாம் அவனோடு ஸம்ச்லேஷித்தபடி, பிரிக்கயோக்யமன்று என்கிறார்.

---

ஸாவாந்தரம்-ஸூர்யர்க்ஷ ஐதரேயாதி.-ராவணம் ப்ரதிரோதி: "ராவணோ ப்ரதிஜ்ஞாதம் ஸூர்யர்க்ஷகணஸந்நிதௌ! உத்தாட நேதி த்ராணாம் ஸீதாயை: பரிவஞ்சிதா" அவர்கள் ஸந்நிதியிலே-நித்யஸூரிகள் ஸந்நிதியிலே. பின்னைநெடும்பணைமித்யாரப்ய முழுமுதலான், என்னை நெகிழ்க்கிலுமித்யாரப்ய இல்லா னித்யர்வய:. (௯)

[அமரர் முழுமுதலாகிய]-நித்யஸூரிகளுக்கு ஸ்வரூபாதிகளெல்லாவற்றுக்குந் தானே காரணமாகை. [ஆதியை] - லீலாவிபூதியிலுள்ளார்க்குப் புருஷார்த்தோபயோகியான கரணகளே பரங்களைக் கொடுக்குமவனை. இவ்வருகுள்ளார்க்கும் ஸூரிகளோபாதி ப்ராப்தியுண்டாயிருக்க இச்சையில்லாமையாலே, யோக்யதையைப் பண்ணிக்கொடுக்குமளவிறே செய்யலாவது. [அமரர்க்கமுதீந்த] - அந்தக்கரணங்களைக்கொண்டு க்ஷுத்ரப்ரயோஜநங்களை அபேக்ஷிப்பார்க்கு அவற்றையும் செய்யுமவனை. [ஆயர்கொழுந்தை] - அநந்யப்ரயோஜநர்க்கு வந்து அவதரித்து ஸுலபனுய்த் தன்னைக்கொடுக்குமவனை. "வரிஷ்ணாயவாமநாய". [அமர இத்யாதி] - இப்படி உபய விபூதியுக்தனைச் கிட்டிச்செறிந்து எங்கும் புக்கு அநுபவித்து என் ஆத்மா ஏகத்ரவ்ய மென்னலாம்படி கலந்தது. [இனியகலுமோ] - ப்ருதக்ஸ்த்தித்யுபலம்பமில்லாதபடி ஸ்வரூபம் ஸ்வரூபாநுரூபமாக ஸம்ஶ்லேஷித்தும் அகல ப்ரஸங்கமுண்டோ? ப்ரகாரப்ரகாரிகளுக்கு ஏகத்வபுத்தி பிறந்தால் பிரிக்கப்போமோ? ஜாதிகுணங்களைப் பிரிக்க வொண்ணுதாபோலே த்ரவ்யத்துக்கும் நித்யததாஶ்ரயத்வமுண்டாகையாலே பிரிக்கவொண்ணுதாயிறே யிருப்பது.

ஈடு.— ஒன்பதாம்பாட்டு. 'தானுங்கில்லான்' என்கிற ப்ரஸங்கந்தானேன்? ஏகத்ரவ்ய மேன்னலாம்படியான இத்தை எங்ஙனே பிரிக்கும்படி? என்கிறுர்.

[அமரர்முழுமுதலாகிய] - நித்யஸூரிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தன் அதீநமாம்படி யிருக்கிறவனை. [ஆதியை]-அதுதோடங்கி லீலாவிபூதி விஷயமாயிருக்கிறது. தன்பக்கல் ஹாவபந்தம் ஸத்தாப்ரயுக்தமன்றிக்கே யிருக்கிறவர்களுக்கும் தன்னைவழிபடுகைக்குஉறுப்பாகக்கரணகளே பரங்களைக் கோடுக்குமவனை. [அமரர்க்கு அமுதுஈந்த]-அவன்கோடுத்த கரணங்களைக்கோண்டு, 'எங்களுக்கு நீவேண்டா, உப்புச்சாறு அமையும்' என்பார்க்குக் கடலைக்கடைந்து அம்ருதத்தைக்கோடுக்குமவனை. [ஆயர்கோழுந்தை]-'அவ்வம்ருதம் வேண்டா, நீ அமையும்' என்பார்க்காக வந்துஅவதரித்துத் தன்னைக்கோடுக்குமவனை. [அமர இத்யாதி] - இப்படி உபயவிபூதியுக்தனுயிருக்கிறவனைக் கிட்டிச் செறிந்து எங்கும்புக்கு அநுபவித்து, என்னுடைய ஆத்மாவானது ஏகத்ரவ்யமேன்னலாம்படி கலந்தது. [இனி அகலுமோ] - இரண்டுவேஸ்துவாகிலன்றே பிரிக்கலாவது. ப்ரகாரப்ரகாரிகளுக்கு ஏகத்வபுத்தி பிறந்தால் பிரிக்கப்போமோ? ஜாதிகுணங்களோபாதி த்ரவ்யமானதுக்கும் நித்யததாஶ்ரயத்வமுண்டாகில் பிரிக்கப்போமோ? (௯)

---

ஒன்பதாம்பாட்டு - அமரர் இத்யாதி. 'அமரத்தழுவிற்றினியகலுமோ' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - தானும் இத்யாதி. அமரருடைய முழுவதுக்கும் முதலாகிய என்று திருவுள்ளம் பற்றி அர்த்தம் - நித்யஸூரிகள் இத்யாதி.

கீழ் நித்யவிபூதிவிஷயமாகையாலே - இதுதொடங்கி லீலாவிபூதிவிஷயம் என்கிறது. தன்பக்கல் ஹாவபந்தம் ஸத்தாப்ரயுக்தமன்றிக்கே யிருக்கிறவர்களுக்கு-ஹாவபந்தாஹாவம் ஸத்தாப்ரயுக்தமென்றபடி. ஆதியை என்றதுக்கு அர்த்தம் - தன்பக்கல் இத்யாதி. கொழுந்து - போக்யதாபரம். அமர - அமர்ந்து. கிட்டி, அழும்ப-அழும்பி. செறிந்து-நெருங்கி. துழாவி - எங்கும்புக்கு அநுபவித்து. என் ஆவி - என்னுடைய ஆத்மாவானது. அமரத்தழுவிற்று - பொருந்தக்கலந்தது. அதாவது - ப்ருதக்ஸ்த்தித்யாதிகள் இல்லாதபடி ஏகத்ரவ்யமென்னலாம்படி கலந்ததென்று ஸப்தார்த்தம். ஆனுல், ஸ்வரூபைக்யம் சொல்லுகிறதோ? என்ன, ப்ரகாரப்ரகாரிகளுக்கு இத்யாதி; ப்ரகாரப்ரகாரிஹாவேந ஏகத்வபுத்தி பிறந்தா லென்றபடி. ஜாதிகுணங்களை யன்றோ பிரிக்கப்போகாது, த்ரவ்யத்தைப்பிரிக்கப்போகாதோ? என்ன, ஜாதிகுணங்கள் இத்யாதி. ப்ரபாப்ரபாவத்ருஷ்டாந்தம் கண்டுகொள்வது; இரண்டும் த்ரவ்யமிறே. நித்யததாஶ்ரயத்வமுண்டாகில் - நித்ய ததாஶ்ரயத்வபுத்தி யுண்டாகில். அமரர்முழுமுதல் இத்யாரப்ய, ஆயர்கொழுந்தை என்னுவி அமரவழும்பத்துழாவி, அமரத்தழுவிற்று இனியகலுமோ இத்யந்வயః. (௯)

## பத்தாம் பாட்டு.

---

அகலிலகலும் அணுகிலணுகும்
புகலுமரியன் பொருவல்லனெம்மான்
நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம்
பகலுமிரவும் படிந்துகுடைந்தே

ஆ.—(அகலிலகலும்.) ப்ரயோஜநாந்தரார்த்தமாகத் தன்னை ஆஶ்ரயித்துத் தன்பக்கலிலே அந்த ப்ரயோஜநத்தைக் கொண்டு தன்னை அகலில், தான் இழவாளனாய்க்கொண்டு அவனை அகலும் ஸ்வபாவனாய், அவர்களை அந்த ப்ரயோஜநத்தை விட்டுத் தன்திறத்திலே அல்பாபிமுக்யத்தைப்பண்ணினால், அவர்கள்பக்கல் நிரதிஶயாபிநிவேஶத்தோடே விழும் ஸ்வபாவனாய், ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபனாய், ஸமாஶ்ரயணோந்முகராயிருப்பார்க்கு ஒரு தடையின்றியே புக்கு ஆஶ்ரயிக்கலாம்படி எளியனாய், எனக்கு ஸ்வாமியாயிருந்த எம்பெருமானுடைய ஒப்பில்லாத கல்யாணகுணங்களிலே படிந்து குடைந்து பாடி, பின்னையும் த்ருப்தனாகப்போருகிறிலேன் என்று கொண்டு தம்மோடு ஸம்ஶ்லேஷித்தருளின எம்பெருமானுடைய குணங்களை அநுபவிக்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், என்னோடுகலந்த எம்பெருமானுடைய குணங்களைக் காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் த்ருப்தனாகிறிலேனென்கிறார்.

[அகலிலென்று தொடங்கி] - தன்னை யாஶ்ரயித்து ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டுபோகில் தான் இழவாளனாய்க் கொண்டு அகலும் ஸ்வபாவனாய், அவர்களை அநந்யப்ரயோஜநராகில் நிரதிஶயாபிநிவேஶத்தோடேகூட ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனாய், ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணாதானாய், ஸமாஶ்ரயணோந்முகராயிருப்பார்க்கு ஒரு தடையின்றியே எளியனுமாய், இந்நீர்மைகளினாலே என்னை அடிமைகொண்டவன். [நிகரிலென்று தொடங்கி] - ஒப்பில்லாத அவன் குணங்களிலே மிகவும் அவகாஹித்து நிரந்தரமாகப் பாடி இனிமையின் மிகுதியாலே விடவும் மாட்டுகிறிலேன்.

ப.—அநந்தரம், இப்படிப்பட்டவனை நிரந்தராநுபவம் பண்ணினாலும் த்ருப்தி பிறவாமையாலே தவிர அரிது என்கிறார்.

அகலில்-(ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டு) அகலில், அகலும் -(செய்யலாவது அற்று) அகலுமவனாய், அணுகில் - (அநந்யப்ரயோஜநராய்) அணுகில், அணுகும் - (அவர்களோடு ஒருநீராகக்)கலக்குமவனாய், புகலும்அரியன்-(அந்யபரர்க்குக்கிட்ட)அரியனாய், பொருவல்லன்-அநந்யர்க்குத் தடையற்றவனாய், எம்மான் - இந்த ஶீலத்தாலே எனக்கு ஸ்வாமியாய், நிகரிலவன் - இப்படிக்கு ஒப்பில்லாதவனுடைய, புகழ்-புகழை, பகலும் இரவும்-பகலுமிரவும் விடாமல், படிந்து - உள்புக்கு, குடைந்து - எங்குங்கலந்து, பாடி - ப்ரேமயுக்தராய்ப் பாடி, இளைப்பிலம் - ஓவுதலுண்டாகிறிலோம். தவிரமாட்டுகிறிலோமென்று கருத்து. பொரு என்று - எதிராய், தடையைக் காட்டுகிறது; அன்றியே, பொரு என்று - பொருத்தமாய், அநந்யரைச் சேரவல்லனென்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில்,இப்படிப்பட்ட இவ்வநுபவத்தைக் காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் த்ருப்தனாகிறிலேனென்கிறார்.

[அகலில் அகலும்] - தன்னை யாஶ்ரயித்து ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டுபோகில் தானும் இழவாளனாய்க் கொண்டு அகலும். "ந நமேயம்" என்கிறபடியே அகலில், "யதிவாராவ

வணஃஸ்வயம்'' என்கிற சாபலம் உள்ளேகிடக்கக் கண்ணநீரோடே கொல்லு மென்னவுமாம். [அணுகில்அணுகும்] - நாலடி வரநின்றாரை ''ஆவ்யாஹிமமதத்வேந ராக்ஷஸாநாம்பலாபலம்'' என்கிறபடியே அவர்கள்படியைப் பாராதே, இளையபெருமாளோபாதி தம்காரியத்துக்குக்கடவராம்படி கூட்டிக்கொள்வன். முதற்பாட்டில் - 'அகலிலகலும்' என்கிற இடஞ் சொல்லிற்று; இரண்டாம் பாட்டில் - 'அணுகிலணுகும்' என்கிற இடஞ் சொல்லிற்று. [புகலுமரியன்] - ப்ரதிகூலர்க்குக் கிட்டச்செய்தே அணுக அரியன். துர்யோதநன், அர்ஜுநனோபாதி கூட வரச்செய்தே, இஞ்சிப் பயிரில் தழைகூறுகொள்வாரைப்போலே தன்னை யொழிந்தவற்றைக் கொண்டுபோம்படி பண்ணும். [பொருவல்லன்] - ஆஸ்ரிதர் தன்னைக் கிட்டுமிடத்தில் தடையுடையனல்லன். 'பொரு' என்று - ஒப்பு. ஒப்பு - எதிராய், நேர்நிற்குமதுவாய்; அத்தாலே - தடையைச்சொல்லிற்றாய்த் தலைக்கட்டுகிறது. ''யத்ருக்ஷேணவக்ஷாவ ஸத்யஹாரோவஹாரிணீ। நவாஹீநந்யாநுய யௌ தநேஸஹிஜஞாதா:''. ப்ரஜைகளுக்கும் புகவொண்ணாத தசையிலே ஸஞ்ஜயனுக்குத் தடையின்றிக்கே யிருக்கை. [எம்மான்] - இஸ்ஸ்வபாவங்களைக் காட்டி என்னை எழுதிக்கொண்டவன். [நிகரிலவன்] - நீர்மைக்கு ஒப்பில்லாதவனுடைய. [புகழ்பாடியிளைப்பிலம்] - கல்யாண குணங்களைப் பாடி விச்சேதிக்க க்ஷமனாகிறிலேன். இளைக்கையாகிறது - விடுகை. அதாகிறது - விச்சேதம். [பகலுமிரவும்] - அநுபவகாலம் ஸாவதியோ? என்னில்,—திவாராத்ர விபாகமறக் காலமெல்லாம் அநுபவித்தாலும் விட க்ஷமனாகிறிலேன். [படிந்துகுடைந்தே] - இவ்விஷயத்தில் அவகாஹநம் அளவுபட்டோ இருப்பது? என்னில், படிந்து - கிட்டி. குடைந்து - எங்கும்புக்கு. அவகாஹித்து விடமாட்டுகிறிலேன்.

ஈடு.—பத்தாம்பாட்டு. என்னோடேகலந்த எம்பெருமானுடைய குணங்களைக் காலதத்த்வமுள்ளதனையும் அநுபவியாநின்றாலும் த்ருப்தனாகிறிலேன் என்கிறார்.

[அகலில்அகலும்] - இவன் அகன்றபடியே நிற்கில், ''யதிவா ராவணஸ்ஸ்வயம்'' (யதிவா ராவணஸ்ஸ்வயம்) என்கிற சாபலமும் கிடக்கச்செய்தே கண்ணநீரோடே கைவாங்கும். ''த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயம்'' (த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயம்) என்னும் நிர்ப்பந்தத்தோடே நிற்கில் முடித்தேவிடும். [அணுகில் அணுகும்] - தன்பக்கலிலே ஆபிமுக்யம் பண்ணினால், ''ஆவ்யாஹிமமதத்வேந''(ஆக்யாஹிமமதத்வேந)என்னும். இளையபெருமாள் நிற்க, நாலடிவர நின்றவனையிறே 'ராஜகார்யஞ் செய்யும்படி சோல்லீரோ?' என்றது; ''ராக்ஷஸாநாம்பலாபலம்'' (ராக்ஷஸாநாம்பலாபலம்)இவனை ராக்ஷஸஜாதீயனாக நினைக்கை யின்றிக்கே, இக்ஷ்வாகு வம்ஸ்யனாகவே புத்திபண்ணி, 'ராக்ஷஸருடையபலாபலஞ்சோல்லீரோ?' என்றாரிறே. இத்திருவாய்

---

பத்தாம்பாட்டு - அகலில் இத்யாதி. ''அவன்புகழ் படிந்து குடைந்து பாடியிளைப்பிலம்'' என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்னோடு இத்யாதி.

கண்ண நீரோடே - திருவுள்ளத்திற்குறையோடே. இது 'ரணாஹாதி' இத்யாதியைப்பற்ற; யுத்தகாண்டேஷ்டாதஸே - ''ஆநயைநம் ஹரிஸ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம்மயா। விபீஷணோவா ஸுக்ரீவ யதிவாராவணஸ்ஸ்வயம்''. விவரணம்-த்விதாபஜ்யேயமித்யாதி யுத்தகாண்டேஷ்டத்ரிம்ஸே ''த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயந்து கஸ்யசித்। ஏஷமேஸஹஜோதோஷ: ஸ்வபாவோ துரதிக்ரம:''. அணுதும் - ''ஆவ்யாஹிமமதத்வேந'' என்னும்படி ஒருநீராகக் கலக்கும். யுத்தகாண்டே ஸப்தவிம்ஸேவிபீஷணம்ப்ரதிராம: ''ஸுஸ்வாஸாஸ்யதத்வேநஸௌமநஸ்யம்விபீஷண। ஆவ்யாஹிமமதத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்'' இந்தஸ்லோகத்துக்கு ஸாவம் - இளையபெருமாள் இத்யாதி. க்ஷத்ரியாநாம் என்னாதே 'ராக்ஷஸாநாம்' என்றதுக்கு ஸாவம்-இவனை இத்யாதி. ப்ரயோஜ

மொழியில் முதற்பாட்டு - ‘ அகலிலகலும் ’ என்கிற இடம் சொல்லிற்று; இரண்டாம்பாட்டு - ‘அணு கிலணுகும்’ என்கிற இடம் சொல்லிற்று. [புகலுமரியன்] - அர்ஜுநனும் துர்யோதநனுங் கூடவரச் செய்தே, அர்ஜுநனுக்குத் தன்னைக்கொடுத்து, துர்யோதநனுக்குத் தன்னையொழிந்த பங்களத்தைக் கொடுத்துவிட்டானிறே. உகவாதார்க்குக் கிட்ட அரியனாயிருக்கும். [பொருவல்லன்] - ஆச்ரிதர் தன்னைக் கிட்டுமிடத்தில் தடையுடையனல்லன். “யத்ர க்ருஷ்ணௌ ச க்ருஷ்ணா ச ஸத்யபாமா ச பாமிநீ ” (யத்ரக்ருஷ்ணௌசக்ருஷ்ணாசஸத்யபாமாசபாமிநீ.) புத்ரர்களுக்கும் புகவொண்ணாத ஸமயத்திலேயிறே ஸஞ்ஜயனை அழைத்துக் காட்சிகொடுத்தது. பொரு என்று ஒப்பாய், ஒப்பாவது - நேர் நிற்குமதாய்,அத்தால் - தடையைச் சொல்லிற்றாய், தடையையுடையனல்லனென்கை. [எம்மான்]- இஸ்ஸ்வபாவங்களைக் காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவன். [நிகரிலவன்புகழ் பாடியிளைப் பிலம்] - அவனுடைய ஒப்பில்லாத கல்யாணகுணங்களைப்பாடி, ஒருகாலமும் விச்சேதிக்க க்ஷமனா கிறிலேன். இப்படி விடுகைக்கு க்ஷமனன்றிக்கேயொழிகிறது காலம் ஸாவதியாயோ ? என்னில்,- [பகலும்இரவும்] - ஸர்வகாலமும். ஆனால், விஷயத்தைக் குறைய அநுபவித்தோ ? என்னில், [படிந்து குடைந்தே] - எங்குங்கிட்டி விஷயத்தை அநுபவியாநிற்கச்செய்தே விடமாட்டுகிறிலேன்.

## பதினோராம் பாட்டு.

குடைந்துவண்டுண்ணுந் துழாய்முடியானை
அடைந்த தென்குருகூர்ச்சடகோபன்
மிடைந்தசொல்தொடை யாயிரத்திப்பத்து
உடைந்துநோய்களை யோடுவிக்குமே.

**ஆ.**—(குடைந்து.) இத்திருவாய்மொழி வல்லாருடைய ஸமஸ்ததுக்கங்களையும் இத் திருவாய்மொழி உடைந்தோடும்படி பண்ணு மென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி, பக்திக்கு ப்ரதிபந்தகமான ஸகல துரிதங்களை யும் உந்மூலிதமாக்கு மென்கிறார்.

[குடைந்து என்று தொடங்கி]-வண்டுகள்முழுகி மதுபாநம்பண்ணின திருத்துழாயைத் திருமுடியிலே யுடையனாகையாலே நிரதிசயபோக்யனாயுள்ளவனை அவ்வண்டுகள் திருத்துழா யிலே மதுவுக்குப்படிந்தாற்போலே அநந்யார்ஹராம்படி ஆக்ருஷ்டரான ஆழ்வாருடைய சொல் செறிந்த தொடையையுடைய ஆயிரத்து இப்பத்து.

---

ஈச்வர பாரதந்த்ர்யப்ரயோஜநபரத்வேந பாவாந்தரம் - இத்திருவாய்மொழியில் இத்யாதி. இத்தால் - யதோபக்ரமம் நிகமநமும் ஸூசிதம். அநுகூலர்க்கு பவ்யனான நிலைதன்னிலே ப்ரதிகூலர்க்குக் கிட்ட அரியனாயிருக்குமென்னு மத்தை ஸதிதர்சநமாக அருளிச்செய்யாநின்றுகொண்டு பூர்வார்த்தம்அருளிச்செய்கிறார்-அர்ஜுநனும் இத்யாதி. ‘ புகலுமரியன், பொருவல்லன் ’ என்ற பதத்வயமும் ‘ அகலிலகலும், அணுகிலணுகும்’ என்ற ப்ரதிஜ்ஞாதார்த் தோபபாதநபரம். பங்களம் - கூளக்கூட்டம் ; அஸார மென்றபடி. பங்களத்தைக்கொடுத்துவிட்டானிறே: ஆகையாலே உகவாதார்க்குக் கிட்டவரியனாயிருக்கும் என்றபடி. உக்தத்துக்கு உதாஹரணம்-யத்ர க்ருஷ்ணௌ ச இத்யாதி: உத்யோகபர்வணி [illegible] ஸஞ்ஜய: —

‘யத்ர க்ருஷ்ணௌ ச க்ருஷ்ணா ச ஸத்யபாமா ச பாமிநீ। [illegible]’ என்கிறத்தைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்-புத்ரர்களுக்கும் இத்யாதி. [illegible] அவர்களும், புத்ரஸமாநத்வாத் புத்ரர்களென்கிறது. இளைப்பு என்று - ச்ரமமாய், தத்கார்யமான விச்சேதத்தை லக்ஷிக்கிறது. காலம் ஸாவதியாயோ - ஒழிகிற காலம் ஸாவதியாயிருக்கிறதோ ? படிந்து - கிட்டி. குடைந்து - அவகாஹித்து. அகலிலகலும் இத்யாரப்ய, அவன் புகழ்பாடிப் பகலுமிரவும் படிந்துகுடைந்து இளைப்பிலம் இத்யந்வய:.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸாம்ஸாரிக மஹாவ்யாதி நிவ்ருத்தியை அருளிச்செய்கிறார்.

வண்டு - வண்டுகள், குடைந்து - புக்கு, உண்ணும் - மதுவையுண்கிற, துழாய் - திருத்துழாயை, முடியானை - திருமுடியிலே யுடைய ஸர்வேஶ்வரனை, அடைந்த - (ஸர்வப்ரகாரத்தாலும்) செறிந்த, தென் - பரமோதாரரான, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வாருடைய, மிடைந்த - நெருங்கின, சொல் - சொல்லின், தொடை-தொடையையுடைய, ஆயிரத்து இப்பத்து- ஆயிரத்து இப்பத்து, நோய்களை-(அஹங்காரார்த்தகாமங்களின் செயல்களாகிற) மஹாவ்யாதிகளை, உடைந்து-உருக்குலைந்து, ஓடுவிக்கும் - சடக்கெனப் போம்படி பண்ணும். இது கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி, பகவதநுபவவிரோதியான ப்ரயோஜநாந்தர ருசிகளை உந்மூலிதமாக்கு மென்கிறார்.

[குடைந்து வண்டுண்ணும் துழாய்முடியானை] - வண்டுகள் உள்ளே அவகாஹித்து மதுபாநம்பண்ணும்படி மதுஸம்ருத்தியையுடைய திருத்துழாயாலே அலங்க்ருதமான திருவபிஷேகத்தையுடையவனை; இத்தால் - நிரதிஶயபோக்யபூத னென்கிறது. [அடைந்த இத்யாதி] - மதுவிலே அவ்வண்டுகள் படிந்தாற்போலே யாயிற்று இவர் பகவத்குணங்களிலே அவகாஹித்தபடி. [மிடைந்தசொல்தொடை] - செறிந்த சொல்தொடையையுடைய; தனித்தனியே 'என்னைக்கொள் என்னைக்கொள்' என்று மேல்விழுந்த சொல் என்னவுமாம். இப்பத்துத்தானே நோய்களை உடைந்தோடும்படி பண்ணும். நோயாகிறது - க்ஷுத்ரபுருஷார்த்தருசி. உடைந்தோடுகை - ஆஶ்ரயாந்தரங்களுக்கும் ஆகாதபடி உருவழிகை.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழிதானே இதுகற்றவர்களுடைய ப்ராப்திப்ரதிபந்தகங்களை உந்மூலிதமாக்கு மென்கிறார்.

[துடைந்து இத்யாதி]-மதுபாநம்பண்ண இழிந்தவண்டுகளானவை பெருங்கடலிலேஇழிந்தாரைப்போலே உள்ளேஉள்ளே இடங்கொண்டு புஜியாநிற்கும்தனைபோக்கி, மதுவற்றிக் கைவாங்கவொண்ணாதபடியிருக்கிற திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதமாயிருக்கிற திருவபிஷேகத்தையுடையவனைக் கவிபாடிற்று. [அடைந்ததென்குருகூர்ச்சடகோபன்] - அம்மதுவிலே படிந்த வண்டுகள் விடமாட்டாதாப்போலே, பகவத்விஷயத்தை விடமாட்டாத ஆழ்வாராயிற்று அருளிச்செய்தார். [மிடைந்தசொல்தொடை] - அநுபவஜநிதப்ரீதியாலே பிறந்தவையாயிருக்கச்செய்தேயும், சொற்கள்தாம் 'நாம் இங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தோமாகவேணும்' என்று, 'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று மேல்விழுந்தன. ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்களுக்கு, ஐஶ்வர்யகைவல்யங்கள் புருஷார்த்தமென்கைக்கு அடியான பாபங்கள் ஓடிப்போம். [நோய்களையுடைந்தோடுவிக்கும்] - இவனைவிட்டுப்போம்போதும் திரளப்போகப்பெறாது, "வள்ளலே

---

நிகமம் - துடைந்து இத்யாதி. உந்மூலிதமாக்கும் - வேரோடே போக்கும்.

வண்டு என்றது-ஜாத்யேகவசநம். குடைந்து என்றதுக்கு அர்த்தம்-உள்ளே உள்ளே இடங்கொண்டு என்று. 'உண்ணும்' என்கிற வர்த்தமாநார்த்தம் - கைவாங்கவொண்ணாதபடி என்றது. அடைந்த - விடமாட்டாத. அடைகை - விடமாட்டாமை. பதச்சேர்த்திக்கு பாவம் - அம்மதுவிலே இத்யாதி. படிந்த - அவகாஹித்த. நெருங்கினசொல்லென்றதுக்கு பாவம்-அநுபவஜநித இத்யாதி. மிடைந்த-நெருங்கின. சொல்தொடையாயிரம் - ஸப்தஸந்தர்ப்பங்களையுடைய ஆயிரம். 'நோய்களை' என்றதுக்கு - பாபங்களை யென்றது, காரணே கார்யோபசாரத்தாலே. நோய் - க்ஷுத்ரபுருஷார்த்தருசி. 'உடைந்து' என்றதுக்கு அர்த்தத்வயம் - சிதறி யென்னுதல், உருமாய்ந்து என்னுதல். உருமாய்கை - கார்யாக்ஷமத்வம். முந்தின அர்த்தம் - இவனை விட்டு இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம்-வள்ளலே இத்யாதி. (திருமொழி-அ, ௧௦, எ.) பரமோதாரனே! உன்னடியார்க்கு யமபடர்

உன்தமர்க்கேன்றும் நமன்தமர்கள்ளர்போல்'' என்கிறபடியே இருவர் ஒருவழிபோகப்பெறுர்கள். இப்பாபங்கள் ஆஶ்ரயாந்தரத்தில் கிடந்தாலும் மறுமுட்டுப்பெறுதபடி உடைந்தோடும்.

முதற்பாட்டில், கேவலரை நிந்தித்தார்; இரண்டாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர் திறத்திலிருக்கும்படியைச்சொன்னுர்; மூன்றும்பாட்டில், இவ்விரண்டுகோடியிலும் நீர் ஆர்? என்ன, 'உன்னை அநுபவியாநிற்க விரோதிகழிந்தவன் நான்' என்றுர்; நாலாம்பாட்டில், 'என்னை இவ்வளவாகப்புகுரநிறுத்தினவனை என்னஹேதுவாலே விடுவது' என்றுர்; அஞ்சாம்பாட்டில், திருவாய்ப்பாடியில்பெண்கள்க்ருஷ்ணனைவிடுமென்றன்றோ நான் அவனைவிடுவது என்றுர்; ஆறும்பாட்டில், அவன்தான்விடிலோ வேன்ன, அவன்போக்கை இசையே னென்றுர்; ஏழாம்பாட்டில், நீர்தாம் விடிலோவேன்ன, அவன் என்னைப் போகவொட்டா னென்றுர்; எட்டாம்பாட்டில், இந்நாள்வரைபோகவிட்டிலனே? என்ன, 'நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாகப்பற்றின என்னை இனி அவனுலும் விடவோண்ணுது' என்றுர்; ஒன்பதாம்பாட்டில், இப்ப்ரஸங்கந்தானேன்? 'ஒருநீராகக்கலந்ததை ஒருவராலும் பிரிக்கவோண்ணுது' என்றுர்; பத்தாம்பாட்டில், அவனுடைய கல்யாணகுணங்களை ஸர்வகாலமும்அநுபவித்து ஶ்ரமமுடையேனல்லே னென்றுர்; இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டினுர். (கக)

---

*கள்ளர்போலே மறைந்தன்றோ வர்த்திப்ப தெனறபடி. 'உடைந்து' என்றதுக்கு - உருமாய்ந்தென்ற அர்த்தாந்தரம் - இப்பாபங்கள் இத்யாதி. மறுமுட்டுப்பெறுதபடி யாவது - வேறோரிடத்திலே போனுலும் விநியோகயோக்யமன்றிக்கேயிருக்கை. அதாவது - "விஷஜ்ஞ:வாவக்ருத்யாம்" என்கிறபடியே அசல்பிளந்தேறிடிலும் கார்யக்ஷமமன்றிக்கே ஒழியு மென்றபடி. ஒடுவிக்தும் - சடக்கெனப்போம்படி பண்ணும். வண்டுகுடைத் துண்ணுமென்று தொடங்கி, இப்பத்து, கோய்களை யுடைந்தோடுவிக்கு மித்யந்வய:.* (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.—வாத்ஸல்யஶ்ஶீலாதியோ: ப்ரணயிந: வாராஷாயோ வஸிஷ்ட நிஹந்த்ருத்வாஜு வாராந்த்ரவத்யமாஸ । தத் ஸ்வதாஹம் ப்ரமணஜாத ஸம்யோதேந தத்ஸ்வநம் ஸாரஸாஹ ஸஸத்ஸேந ॥

---

த்ரவிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலி.— ஸ்வீதாக்ஷஹமெதாரவஶ உநநியெநி த்ருஹோ ஹ்யாசேதஸ்ய த்யாமெஹதஜ்ஜ்தஸ்ய ப்ரவஹ வக்ரதேஷ ஸ்வஜஸ்ரா நஹதே: । த்யாகாஜ்க்ஷாநிரோஶ் ஶ்ரிதஹத்ய வய்யக்ஷாரநித்ய க்ஷஸ்ய ஸ்வாதஶ்ரிஷஸ்ய மாயஹ ஆஹரயஶஸலஸ்வநம்ஸ்வாவொவஸ ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி:--

பிறவியற்றுநீள்விசும்பிற்பேரின்பமுய்க்கும்
திறமளிக்குஞ்சீலத்திருமால்— அறவினியன்
பற்றுமவர்க்கென்று பகர்மாறன்பாதமே
உற்றதுணையென்றுள்ளமேயோடு.

*ஆழ்வார் திருவடிகளே ஶரணம். எம்பெருமானுர் திருவடிகளே ஶரணம். சீயர் திருவடிகளே ஶரணம்.*

## எட்டாந் திருவாய்மோழி— ஒடும்புள் : ப்ரவேஶம்.

---

**ஆ.**—(ஒடும்புள்.) இப்படி தம்மோடு கலந்தருளின எம்பெருமானுடைய திவ்யைஶ்வர்யம் சொல்லுகிறது.

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், முக்தரும் பத்தருமான சேதநர்க்கும் தனக்கும் ஸம்ஶ்லேஷம் பிறக்கும்போது இரண்டத்தொருதலை பவ்யமாகவேணும்; பவ்யமாமிடத்தில்,

அவர்களைத் திருத்துவதிற்காட்டில் தான் அவர்களுக்குப் பாங்காகை ஸுகமாகையாலே மேடான ஸ்தலத்துக்கு நீர் அபேக்ஷையானல் விரகாலே நீரை மேட்டிலே யேற்றுமாபோலே, தன்னுடைய ஸ்வரூபரூபசேஷ்டிதாதிகளை ஸங்கோசித்து அவர்களுக்குத் தன்னைப் பாங்காக்கி அவர்களோடே கலக்கு மென்கிறார்.

ப.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி ஸரஸனை ஸர்வேஶ்வரன், நிர்த்தோஷரான நித்யாஶ்ரிதரோபாதி இன்று ஆஶ்ரயிக்கிற நிகிலாஶ்ரிதருடைய லீலாவிபூதி ஸம்பந்தமடியான செவ்வைக்கேட்டைப் பார்த்து வைஷம்ய ப்ரதிபத்தி பண்ணுதே, அவர்கள் செவ்வைக் கேட்டைச் செவ்வையாம்படி தன்னையொக்க இட்டுச்சேரும்படியான ஆர்ஜவகுணத்தை அருளிச்செய்வதாக; அதுக்கு ப்ரதமபாவியான நித்யபுருஷ ஸம்ஶ்லேஷ ப்ரகாரத்தையும், நிகிலாஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமான அவதார வைலக்ஷண்யத்தையும், உபயவிபூதிஸாதாரணமான அர்ச்சாவதாரஸ்திதியையும், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமான ஆபத்ஸகத்வத்தையும், அந்த ஸம்ஶ்லேஷத்துக்கு எல்லையான ஸ்வஸம்ஶ்லேஷத்தையும், இது ஸகல ஸம்ஶ்லேஷ ஸாதாரண மென்னுமிடத்தையும், ஆஶ்ரிதர் நினைவே தன் நினைவாம்படி கலக்கு மென்னுமிடத்தையும், ஆஶ்ரிதஸங்கமடியான அவதாரத்துக்கு ஸங்க்யையில்லை யென்னுமிடத்தையும், அவதாரங்கள் ஆஶ்ரிதாநுபாவ்யமான அஸாதாரணசிஹ்நயுக்தங்க ளென்னுமிடத்தையும், ஏவம்விதஸ்வபாவன் வேதைகஸமதிகம்யனென்னுமிடத்தையும் அருளிச்செய்து, ஆஶ்ரிதார்த்தமான அவனுடைய ஆர்ஜவகுணத்தை ப்ரதிபாதித்தருளுகிறார்.

இ.—எட்டாந் திருவாய்மொழியில், நித்யரும் முக்தரும் பத்தருமான த்ரிவிதசேதநவர்க்கத்தோடும் தனக்குப் பரிமாறவேண்டிலுல் நாநாருசிகளான அவர்களைத் தன்னளவிலே பவ்யராக்குகை அரிதாகையாலே, அதிற்காட்டில் மேட்டிலே நீரை வருந்தி யேற்றுமாபோலே தன் ஸ்வரூப ரூபகுண சேஷ்டிதங்களை ஸங்கோசித்துத் தன்னை அவர்களுக்குப் பாங்காக நியமித்து அவர்களோடே பரிமாறுமென்று, அவனுடைய ஆர்ஜவகுணம் சொல்லுகிறது. அதாகிறது - அவர்கள் போனவழி செவ்வை வழியாம்படி தன்னைத் திருத்திப் பரிமாறுகை.

ஈடு.—கீழில் திருவாய்மொழியிலே நிரதிஶயபோக்ய னென்றூர்;இதில் அவனுடைய ஆர்ஜவகுணம் சொல்லுகிறூர். ஸௌலப்யமாவதேன்? ஸௌஶீல்யமாவதேன்? ஆர்ஜவமாவதேன்? என்னில்;—ஸௌலப்யமாவது-ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாக வுடையவன், அங்குநின்றும் ஸம்ஸாரி சேதநர் நின்ற இடத்தே வந்து அவதரித்து எளியனுகை. ஸௌஶீல்யமாவது - இப்படி தாழவிட்டால், 'சிறியாரளவில் நம்மைத் தாழவிட்டோமே' என்று தன் திருவுள்ளத்திலு மின்றிக்கேயிருக்கை. இனி, ஆர்ஜவகுணமாவது - இப்படி போருந்திலுல், நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிராதே பலவகைப்பட்ட சேதநரோடு தான் பரிமாறுமிடத்தில், அவர்கள் போன வழி தனக்கு வழியாம்படி தான் அவர்களுக்குச் செவ்வியனுய்ப் பரிமாறுகை. 'குணவான்' என்று - ஸௌஶீல்யகுணத்தைச் சொல்லாநிற்கச்செய்தே, "ருஜு:" என்று ஆர்ஜவகுணத்தைப் பிரிய அருளிச்செய்தாரிறே. 'இத்

---

ஒடும்புள் ப்ரவேஶே, கீழில் திருவாய்மொழியிலே நிரதிஶயபோக்ய னென்றூர்; இப்படி போக்யனுன தன்னை அநுபவிப்பிக்கும்போது போக்தாக்களளவில் தன்னையமைத்து அநுபவிப்பிக்குமென்கிறது, இத்திருவாய்மொழியிலே என்று ஸங்கதி. "புள்ளேறியோடும்" "தண்டுழாய்சூடும்" "நீர்புரைவண்ணன்" இத்யாதியைப் பற்ற, ஆர்ஜவகுணஞ் சொல்லுகிறூர் என்றது. பத்துடையடியவரிலே-ஸௌலப்யஞ் சொல்லிற்று, வளவேழுலகிலே ஸௌஶீல்யஞ் சொல்லிற்று, இங்கே ஆர்ஜவகுணஞ் சொல்லுகிறது; இவற்றுக்கு பேதமேது? என்ன, ஸௌலப்யமாவது இத்யாதி. கலவிருக்கையாக - ஓலக்கமாக. ஶீலமாவது - மஹதோமந்தைஸ்ஸஹநீரந்த்ரேண ஸம்ஶ்லேஷம். அதுதான் நெஞ்சிலுமின்றிக்கே யிருக்கை - ஸௌஶீல்யம். யத்வா, மந்தர்களோடே புரையறக் கலக்கை - ஶீலம். அது ஸ்வயம்ப்ரயோஜநமாயிருக்கை - ஸௌஶீல்ய மென்னுதல். ஆர்ஜவமாவது

திருவாய்மொழிதான் - ஸர்வேஶ்வரனுடைய ஐஶ்வர்யத்தைச் சொல்லுகிறது' என்பாரு முண்டு; அன்றிக்கே, 'ஈஶ்வரத்வலக்ஷணம் சொல்லுகிறது' என்பாரு முண்டு; அன்றிக்கே, 'கீழே, "பாடியிளைப்பிலம்" என்றார், 'அப்படியே பாடி அநுபவிக்கிறார்' என்பாரு முண்டு. 'ஆர்ஜவகுணம் சொல்லுகிறது' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. பத்தர் முக்தர் நித்யர் என்று - சேதநர்க்கு ஒரு த்ரைவித்ய முண்டிறே; த்ரிவித சேதநரோடும் பரிமாறுமிடத்தில், அவர்கள் தன்னினைவிலே வரும்படி பண்ணுகையன்றிக்கே, நீரேறுமேடுகளிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே தன்னை அவர்களுக்கீடாக அமைத்துப் பரிமாறும் என்னும் அவ்வழியாலே இவனுடைய ஆர்ஜவகுணம் சொல்லுகிறார்.

## முதற் பாட்டு.

ஓடும்புள்ளேறிச், சூடுந்தண் டுழாய்
நீடுநின்றவை, ஆடுமம்மானே.

ஆ.—அதில் முதற்பாட்டில், திருநாட்டில் ஐஶ்வர்யம் சொல்லுகிறது.

ஒ.—முதற்பாட்டில், நித்யஸித்தரோடு எம்பெருமான் கலக்கும்படி பேசுகிறார்.

[ஓடுமென்றுதொடங்கி] - பெரியதிருவடிக்குத் தன்னை வஹிக்கை அபேக்ஷிதமானால் அவன்மேலேயேறி ஸஞ்சரிக்கும்; திருத்துழாய் செவ்வியழியாமே சூடவேண்டுந்தசை யறிந்து சூடும். [நீடென்று தொடங்கி] - ஸர்வேஶ்வரன் காலமுள்ளதனையும் மிகவும் அத்தோடு ஸாதாரமாக ஸம்ஶ்லேஷிக்கும்.

ப.—முதற்பாட்டில், நித்யரோடு பரிமாறும்படியை அருளிச்செய்கிறார்.

அம்மான் - நிருபாதிகஸ்வாமியானவன், புள்ஏறி - பெரியதிருவடி நினைவுக்கீடாக அவனை மேற்கொண்டு, ஓடும் - உலாவும்; தண்துழாய் - ஶ்ரமஹரமான திருத்துழாயை, சூடும் - (செவ்விகுலையாமல் தன் திவ்யாவயவங்களிலே) சூடும்; (இப்படி), நீடுநின்றவை-காலதத்வமுள்ளதனையும் நிலைநிற்கிற நித்யவஸ்துக்களோடே, ஆடும் - பரிமாறும். நெடுங்காலம் அவற்றோடே நின்று பரிமாறும் என்று - "புள்ளு, துழாய்" என்று ப்ரஸ்துதத்தைச் சொல்லிற்றாகவுமாம். அங்குத்தை திர்யக் ஸ்தாவர ஜந்மம் கர்மநிபந்தநமல்லாமையாலே ஈஶ்வரேச்சாதீந மென்று கருத்து.

இ.—முதற்பாட்டில், நித்யஸித்தரோடு பரிமாறும்படி சொல்லுகிறது.

---

சரணத்ரயைகரூப்யமேயாகிலும், ஆஶ்ரிதருடைய செவ்வைக்கேடே தனக்குச் செவ்வையாயிருக்கை யென்று ஸௌஶீல்யத்தில் இதுக்கு பேதங் கண்டுகொள்வது. ஸௌஶீல்யத்துக்கும் ஆர்ஜவத்துக்கும் பேதமுண்டென்கிறதுக்கு ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியை ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் - குணவான் இத்யாதி. குணவானென்றது - குணவிஶேஷஸஹபடிதமாகையாலும், ஸாமாந்யகுணமாகக் கொள்ளுமளவில் "ஸஹஸ்ரகல்யாண குணார்ணவோ" என்றத்தோடு புநருக்தமாகையாலும், குண்யதஇதி - குணः என்கிற வ்யுத்பத்தி பௌஷ்கல்யத்தாலும், ஸௌஶீல்யபரமாகக்கடவது. குண்யதே - அப்யஸ்யதே. "குணஸாத்ருஶ்யஸ்வாதி ஜ்யேஷ்ட்யாநுவ்ருத்தந்தா" இத்யமரः. நிர்வாஹாந்தரங்கள் - இத்திருவாய்மொழி இத்யாதி. "கண்ணன்" இத்யாதியைப்பற்ற, ஐஶ்வர்யத்தை என்றது. ஐஶ்வர்யமென்றது - ஈஶ்வரத்வமாய், பரத்வ மென்றபடி. "சங்குசக்கரம்" "ஓடும்புள்" இத்யாதியைப்பற்ற, லக்ஷணம் என்றது. "சீர்கற்பன்" என்றத்தைப் பற்ற, பாடியநுபவிக்கிறார் என்றது. "நீர்புரைவண்ணன்" இத்யாதியைப் பற்ற, ஆர்ஜவகுணம் என்றது. பட்டர் நிர்வாஹ விவரணம் - பத்தர் இத்யாதி.

[ஓடும்புள்ளேறி] - புள்ளேறி யோடும். பெரியதிருவடியை மேற்கொண்டு ஸஞ்சரியா நிற்கும். மஹிஷிக்கு ஸ்தநபரிரம்பணம்போலே, தன்னை மேற்கொள்ளுகை வாஹநத்துக்கு அபேக்ஷிதமாயிருக்கை. மேற்கொள்ளுமதுதான் - அங்குள்ளார்க்குக் காட்சிகொடுக்கைக்கும், அவனுடைய ஸ்வரூபலாபத்துக்குமாயிருக்கும். " ஸ்வஷ்ஜிஸஜ்ஜகிணாங்கஶோபிநா ". [சூடுந் தண்துழாய்] - தண்டுழாய் சூடும். "தன்பக்கல் செவ்வி - திருக்குழலிலே யாகவேணும்" என்னு மளவிலே வளையமாக வைக்கும். " விநயஸ்வகாஶெளஶ்ஞ " இங்கு திர்யக்ஸ்தாவாஜங் மங்கள் பாபபலமாய் ஜ்ஞாநஸங்கோசஹேதுவாயிருக்கும்; அங்கு இவையுண்டாகைக்கு அடியென்? என்னில்;—அந்தஃபுரத்தில் கூனர்குறளராய் வர்த்திக்குமாபோலே, இச்சையாலே ஜ்ஞாநபலமாகப் பரிக்ரஹித்த ஶரீரங்கள். ஸம்ஸாரிகளுக்கன்றோ ருசிபேதமும் செவ்வைக்கேடுமுள்ளது; நித்யஸூரிகளுக்கு விஷயம் ஒன்றாகையாலே ருசிபேதமு மில்லை; செவ்வைக்கேடு மில்லை. அவர்களோடு செவ்வியனாய்ப் பரிமாறுகையாவதென்? என்னில்;—எல்லார்க்கும் விஷயம் ஒன்றேயாகிலும், அவ்விஷயந்தன்னில் வ்ருத்திபேதத்தாலே ருசிபேதங்களு முண்டாம். [நீடு நின்று] - கர்மாநுகூலமாகிலிறே அநித்யமாவது; ஸ்வரூபாநுகூலமாகையாலே நித்யமாய்ச் செல்லா நிற்கும். அவனுக்கு இவர்களையொழியச் செல்லாது; இவர்களுக்கும் அவனையொழியச் செல்லாது. 'புள்' என்றும், 'துழாய்' என்றுஞ் சொல்லுகிறபடியாலே, அவை யென்கிறது; [ஆடும்] - அவற்றோடே பரிமாறுமென்னுமிடத்திலே 'ஆடும்' என்கிறது - இரண்டுதலைக்கும் போகரூபமாயிருக்கையாலே. [அம்மானே] - நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஸாதாரணமான ஸ்வாமித்வ முண்டாயிருக்கச்செய்தேயும், இப்படி தனித்தனியே அஸாதாரணமாய்ப் பரிமாறுகை. இப்படி பரிமாறுகைக்கு நிபந்தநஞ் சொல்லுகிறதென்னவுமாம். நித்யஸூரிகளுடைய தாரகாதிகளும் தன்னினைவிலேயாம்படியான ஏற்றத்தையுடையவனென்றுமாம்.

ஈடு.— முதற்பாட்டு. நித்யவிபூதியிலுள்ளாரோடே செவ்வியனாய்ப்பரிமாறும்படி சொல்லுகிறது; அவர்களுக்குச் செவ்வைக்கேடு இல்லையிறே, அவர்கள் பலராய் ருசிபேதமுண்டானால் அவர்கள் நினைவு அறிந்து பரிமாறவே அங்கும் ஆர்ஜவகுணம் ஏறுமிறே.

[ஓடும்புள்ளேறி] - புள்ளேறி ஓடும்; பெரிய திருவடியை மேற்கோண்டு ஸஞ்சரியாநிற்கும். மஹிஷிக்கு ஸ்தநபரிரம்பணம்போலே, தன்னை மேற்கோண்டு நடத்துமது அபேக்ஷிதமாயிருக்குமிறே வாஹநத்துக்கு; பெரியதிருவடியை மேற்கோள்ளுமதுதான் அவ்விபூதியிலுள்ளார்க்குக் காட்சி கோடுக்கைக்கும், அவனுடைய ஸ்வரூபலாபத்துக்காகவுமாயிருக்குமிறே. " ஸ்வஷ்ஜிஸஜ்ஜகிணாங்கஶோபிநா " (த்வதங்க்ரிஸம்மர்த்தகிணாங்கஶோபிநா).காமிநியானவளுக்கு போக சிஹ்நங்

முதற்பாட்டு—ஒடும்புள் இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - நித்யவிபூதியில் இத்யாதி. சந்தாநுவர்த்திகளானவர்களுக்குச் செவ்வைக்கேடில்லையே, அவர்களுடன் ருஜுவாய்ப் பரிமாறுகை யாவதென்? என்ன, அவர்களுக்கு இத்யாதி. இக்ஶங்கோத்தரங்கள்-" மேலே ஸம்ஸாரிகளுக்கன்றோ" இத்யாதி வாக்யத்திலே ஸ்பஷ்டங்கள். செவ்வைக்கேடு - அநார்ஜவம்.

"புள்ளேறியோடும்" என்றதில் ஆர்ஜவமேது? என்னில்; - திருவடி 'இப்போது அடியேனை மேற்கொள்ளவேணும்' என்று அர்த்தித்தால், 'வேண்டா' என்னாதே மேற்கொள்ளுகை ஆர்ஜவமிறே. வாஹநத்துக்கு வஹிக்கை துக்கரூபமன்றோ? அது அபேக்ஷிதமாமோ? என்ன, மஹிஷிக்கு இத்யாதி. பரிரம்பணம் - ஆலிங்கநம். தன்னைமேற்கோண்டு - தன்மேலேயிருந்து. திருவடியை மேற்கொள்ளுகிறது அவன் அபேக்ஷைக்காகவோ? நித்யஸூரிகளுக்குக் காட்சிகொடுக்கைக்கன்றோ? என்ன, பெரியதிருவடியை இத்யாதி. ஸ்தநபரிரம்பணம்போலே போக்யமாமளவன்றிக்கே, கஸ்தூரணம்போலே தாரகமுமாய் அலங்காரமுமா மென்கிறார், ஸ்வஷ்ஜி இத்யாதி. "ஶாலஸ்வா" ஊதஸ்ராதி வெஷ்தூரதெ. இதுக்குஅர்த்தம் - காமிநி இத்யாதி. "போகசிஹ்நங்

கள் தாரகமாமோபாதி, திருவடிகள் உறுத்துகையால் வந்த தழும்பு இவனுக்கு தாரகமாயிருக்குமிறே. [சூடேந் தண்துழாய்] - 'இப்போதே பறித்துத் திருக்குழலிலே வளையமாக வையாதொழியில் சேவ்வி யழியும்' என்னுமளவிலே அப்போதே பறித்துத் திருக்குழலிலே வைக்கும். இதுக்குச் சைதந்ய முண்டோ? என்னில்;—"சிந்மயைஸ் ஸ்வப்ரகாஸைஸ்ச" (சிந்மயைஸ்ஸ்வப்ரகாஸைஸ்ச) என்னக்கடவதிறே. சில சேதநர் புள்ளாயும் துழாயாயும் அங்குத்தைக்கு உறுப்பாய் வர்த்திக்கிறபடியிறே. விரோதிசைதந்யமே கழிந்தது; ராஜஸந்நிதியில் வர்த்திப்பார் கூனர் குறளராய் வர்த்திக்குமோபாதியிறே; கர்மநிபந்தநமாகப் பரிக்ரஹித்த ஶரீரங்களன்றே, இச்சையாலே பரிக்ரஹிக்கிற இத்தனையிறே. இவ்விபூதியில் திர்யக்ஸ்த்தாவரங்களாமவை கர்மத்தாலேயாயிருக்கும், அங்கு ஸ்வேச்சாதீநமாயிருக்கும் பரிக்ரஹித்த ஶரீரங்கள். ஸம்ஸாரிகளுக்கன்றே ருசிபேதமும் சேவ்வைக் கேடு முள்ளது; நித்யஸூரிகளுக்கு விஷயம் ஒன்றாகையாலே ருசிபேதமுமில்லை, சேவ்வைக்கேடு மில்லையே; அவர்களுடன் சேவ்வையனுப் பரிமாறுகையாவது என்? என்னில்;—எல்லார்க்கும் விஷயம் ஒன்றேயாகிலும் அவ்விஷயந்தன்னில் வ்ருத்தி பேதத்தாலே ருசிபேத முண்டாம். [நீடு நின்று] - கர்மாநுகூலமாகிலிறே அநித்யமாவது ; ஸ்வரூபாநுரூபமான பரிமாற்றமாகையாலே இது

---

கள் தாரகம்" என்றவிடத்திலே, "தாம்ரவீநக்ஷிநஸ்தநாதஸ்ய தேவஸ்ய நாவக்ஷதஸ்ய ஶுஸ்ரூஷணாதி விஸ்ருணாதி வீக்ஷதே க்ருஹ்ணாதி ஜுஷதே நியச்சதோயதே" என்றது அநுஸந்தேயம். தழும்பு - காய்ப்பு. இது ஆர்ஜவமானபடியைக் காட்டுகிறார் - இப்போதே 'இத்யாதி. சேவ்வியழியும் இதி விஶ்லேஷாஸஹிஷ்ணுத்வாதிதிஹாவ:. இதுக்குச் சைதந்யமுண்டோ? என்னில்-அசேதநமான இதுக்கு 'சூட வேணும்' என்னும் அபேக்ஷையுண்டோ? என்னில். வ்ருக்ஷரஸம்ஹிதாயாம், "ஸகுஸ்ஸாஹஸ்ரணே யத்ராகம் ஸாநந்தநந்தவநேஷு: । சிந்மயைஸ் ஸ்வப்ரகாஸைஸ்ச ஸந்த்ராந்த ரதிராஜகை:". இவர்கள் நித்யஸூரிகளானால் திர்யக்ஸ்த்தாவரங்களாகைக்கு அடி ஏது? என்ன, சில சேதநர் இத்யாதி. ப்ரமாணத்தில் ஸ்ரகாதிக்ரஹணம் - துழாய் முதலானவற்றுக்கும் உபலக்ஷணம். ஸ்த்தாவராத்யவஸ்த்தையை பஜித்தால் சைதந்யம் நிஶ்ஶேஷமாகப் போகாதோ? அபேக்ஷை கூடுமோ? என்ன, விரோதி இத்யாதி. விரோதி சைதந்யம் ஆவது - ஈஶ்வரனுக்குப் பிராட்டியோடு உண்டான போகவிரோதியாய், பும்ஸ்த்வாபிமாநரூபமான சைதந்யம் என்றபடி. விரோதிசைதந்யம்போய், மற்ற சைதந்யத்தோடே வர்த்திக்கிறதுக்கு த்ருஷ்டாந்தம்-ராஜஸந்நிதியில் இத்யாதி. ராஜலீலாபாத்ரதையாலே குப்ஜாதிஹாவம் உத்தேஶ்யமாயிருக்கிறதிறே யென்றபடி. கூனர் குறளர் - குப்ஜா வாமநாஶ்ச. விரோதிசைதந்யங் கழிந்து போகரூபமான சைதந்யங் கிடக்கக் கூடுமோ? என்ன, கர்மநிபந்தந இத்யாதி. "வாசிகை: பக்ஷிம்ருகதாம் மாநஸைரந்த்யஜாதிதாம் । ஶரீரஜை: கர்மதோஷைர்யாதி ஸ்தாவரதாம் நர:" என்றிருக்க, இச்சையாலே பரிக்ரஹிக்கக் கூடுமோ? என்ன, இவ் விபூதியில் இத்யாதி. 'அவர்களுக்குச் சேவ்வைக்கேடில்லை' இத்யாத்யவதாரிகாவாக்ய விவரணம்-ஸம்ஸாரிகள் இத்யாதி. வ்ருத்திபேதத்தாலே - ஈஶ்வரகல்பிதமான வ்ருத்திபேதத்தாலே யென்றபடி. வ்ருத்தி: - கைங்கர்யம். ஸமவத: ஸூரிஸிஸ்ஸஹஸம்ஶ்லேஷஸ்ய நித்யத்வம் கதம்? உதாஶங்க்யாம் விவக்ஷவாயகர்மஞ்ஜ்ஞம் வக்ஷவாயகர்மஞ்ஜ்ஞாஹ— கர்மாநுகூலமித்யாதி வாக்யத்வயேந. கர்மாநுகூலம் என்றது - கர்மஜந்யமென்றபடி. ஸமவதோ நிரஸ்தஶஸ்வஸ்தஸ்ய கர்மஸ்வேதநஸ்யேஶாஸ்ரோ கர்மாஸ்ரோகர்ஷ்யிம்ஸ்ருதிஷ்யோர்மஸம்ஸவாவ் விஷயோமஸம்ஸவாஶங்காயாஸத்வாம், "அநாவ்ருத்திஶ்ஶப்தாதநாவ்ருத்திஶ்ஶப்தாத்" இதி ஸூத்ரந்யாயஸேவம்ஸ்யாத்ஸம்ஹ-அவனுக்கு இவர்களையொழிய உத்யாதி வாக்யத்வயேந. 'ஸமவதஸ் ஸூரிஸிஸ்ஸஹஸம்ஶ்லேஷஸ்ய நித்யதாயாம் ஹேதுத்வம்' இதி வடீஷி; "நவோர்த்திர்கர்மஜந்யாஸஞ்ஜ்ஞாவிதஜ்ஞாநஸ்யவரவ ஹாநாஸமவேகஸ்வஹாவஸ்ய சதுர்விதயஸ்யாநவயிகாதிஶயாநந்தம் வஹாநாஸமவேதாரநந்த்யா வேக்ஷாதயார்ஹாத்யஸஹ்வாக் வாநராவ்ருத்திஶங்கா நவ

தான் நித்யமா யிருக்கும். அவனுக்கு இவர்களை யொழியச் செல்லாது, இவர்களுக்கு அவனை யொழியச் செல்லாது. [அவை] - "புள்" என்றும், "துழாய்" என்றும் சொல்லுகையாலே "அவை" என்கிறது. [ஆடும்] - அவற்றோடே பரிமாறும் என்றதே, அவை ஆடுமென்கிறது - ஸர்வேஶ்வரனுக்கு அவர்களோடே அணையுமது, விடாயர் மடுவிலே புக்காடினாற்போலே யிருக்கையாலே. [அம்மானே] - நித்யஸூரிகளோடு நித்யஸம்ஸாரிகளோடு வாசியறும்படி ஸர்வாதிகனாயிருந்து வைத்து, இப்படி பரிமாறும். (க)

## இரண்டாம் பாட்டு.

அம்மானாய்ப்பின்னும், எம்மாண்புமானான்
வெம்மாவாய்கீண்ட, செம்மாகண்ணனே.

**ஆ.**—(அம்மானாய்) - நித்யஸித்தமான அந்த ஐஶ்வர்யத்தின்மேலே அஸங்க்யேய திவ்யாவதாரரூபமான நிரவதிகைஶ்வர்யத்தையுடையவனானானென்கிறார்.

**ஒ.**—இரண்டாம்பாட்டில், ஸம்ஸாரத்தில் ஸமாஶ்ரிதரானாரோடு ஸம்ஶ்லேஷிக்கும்படியை அருளிச்செய்கிறார்.

[அம்மானாயென்று தொடங்கி] - கீழ்ச்சொன்ன நித்யவிபூதியை யுடையனாய் அதின்மேலே எல்லாமாண்பையு முடையனானான்; மாண்பென்று - திருவவதாரங்களைச் சொல்லுகிறது. [வெம்மாவென்று தொடங்கி] - கொடியனான கேஶியின் வாயை அநாயாஸேந பிளந்த ப்ரீதியாலே சிவந்து மலர்ந்த திருக்கண்களை யுடையான்.

**ப.**—அநந்தரம், லீலாவிபூதியில் ஆஶ்ரிதஸம்ஶ்லேஷார்த்தமான அவதார வைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார்.

அம்மானாய் - ஸர்வஸ்மாத்பரனை ஸ்வாமியாய்வைத்து, (ஆஶ்ரிதார்த்தமாக), வெம் - வெவ்விய, மா - குதிரையை, வாய்கீண்ட - வாயைப் பிளந்த, செம் - சிவந்த, மா - பெரிய, கண்ணன் - கண்ணையுடைய க்ருஷ்ணன், பின்னும் - அவ்வளவன்றியே பின்னையும், எம்மாண்பும் ஆனான் - எல்லாமாட்சிமையுமுடையவன் ஆனான். எவ்வவதாரங்களில் அழகுமுடையனானானென்றபடி. அன்றியே, க்ருஷ்ணாவதாரந் தன்னிலேயாய், மாட்சிமையென்று - தர்ஶநீய சேஷ்டிதங்களாகவுமாம்.

**இ.** - இரண்டாம்பாட்டில், லீலாவிபூதியில் ஆஶ்ரிதருடைய விரோதிகளைப் போக்கி, அவர்களோடு பரிமாறும்படி சொல்லுகிறது.

---

[illegible]"

என்கிற பாஷ்யத்தைக் கண்டுகொள்வது. நித்யஸூரிகளைப் பின்னை "அவை" என்கிறபடி எங்ஙனே? என்ன, லோகத்ருஷ்டஸாஜாத்யத்தாலே அவைபோலே வ்யவஹரிக்கக் குறையில்லை யென்கிறார் - புள்ளென்றும் இத்யாதி. [illegible] - நித்யஸூரிகளோடு இத்யாதி. [illegible] ஸர்வாதிகனாயிருந்துவைத்து- இப்படியிருக்கிறவன் நியமிக்கவிறே அடுப்பது, தச்சந்தாநுவ்ருத்தி பண்ணக்கூடாதிறே அம்மானாய் வைத்து, புள்ளேறியோடும்; தண்டுழாய்சூடும்; நீடுநின்றவையாடும் என்று அந்வயம். (க)

[அம்மானைய்] - ஸர்வாதிகனைய் வைத்து. [பின்னும்] - அதின்மேலே. [எம்மாண்புமானன்] - எல்லா அவதாரங்களையு முடையனானன். மாண்பென்று - அழகு. பரத்வத்திற்காட்டில் அவதாரங்களிலே அழகு மிக்கிருக்கை. "ஸஉஶ்ரேயாந்பவதி ஜாயமாநஃ. [வெம்மாவாய்கீண்ட]-வெவ்விதான மாஉண்டு - கேஶி; அதினுடைய வாயைக் கிழித்த. தத்காலத்தில் கேசியினுடைய வெம்மை இப்போது ஸ்ம்ருதிவிஷயமாய்த் துணுக் கென்கிறது; "விவ்ருதாஸ்யஃ" இதி. [செம்மா கண்ணனே] - அநாயாஸேந பிளந்த ப்ரீதியாலே சிவந்துமலர்ந்த திருக்கண்களையுடையவன். அம்மானைய் வெம்மாவாய்கீண்ட செம்மாகண்ணன் பின்னும் எம்மாண்புமானன்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இப்பாட்டு, நித்யவிபூதியில்நின்றும் வந்துஅவதரித்து விரோதிகளைப்போக்கி ஸம்ஸாரிகளுடன் சேவ்வையனைய்ப் பரிமாறும்படி சொல்லுகிறது.

[அம்மானைய்] - இப்படி ஸர்வாதிகனையிருந்துவைத்து. [வெம்மா வாய் கீண்ட செம்மா கண்ணன் பின்னும் எம்மாண்புமானன்] - வெவ்விதான மாஉண்டு - கேசி; அதினுடைய வாயைக் கிழித்துப் போகட்ட. கேசி, வாயை அங்காந்துகோண்டுவந்து தோற்றினபோது கண்ட ஸ்ரீநாரத பகவான் "ஜகத்வஸ்திதம்" (ஜகதஸ்தமிதம்) என்று கூப்பிட்டுக்கோண்டு வந்து விழுந்தானிறே; அவனுக்குத் தத்காலத்திற்பிறந்த பயம். அவன் பட்டுப்போகச்செய்தேயும், ஸ்ம்ருதிஸமயத்திலே அஞ்சுகிறார் இவர். [செம்மாகண்ணனே] - விரோதி போகையால் வந்த ப்ரீதியாலே சிவந்து மலர்ந்த் திருக்கண்களையுடைய க்ருஷ்ணன். [பின்னும் எம்மாண்புமானன்] - அவ்வவதாரத்திலே பர்யவஸிக்கையன்றிக்கே அதுக்குமேலே அநேகாவதாரங்களைப் பண்ணினன். "பஹூநி" (பஹூநி) என்கிறபடியே. மாண்பு என்று - அழகு. பரத்வத்திலும் மநுஷ்யத்வேபரத்வத்தால் வந்த அழகைச் சோல்லுகிறது. (உ)

---

இரண்டாம்பாட்டு - அம்மானைய் இத்யாதி. இப்பாட்டு இத்யாதி, தைத்யபீடிதர்களான தேவர்கள் வந்து, தாங்களுங் கடக்க நின்று சர்த்திபண்ணிப் போம் பூமியிலே 'பிறக்கவேணும்' என்ன, அப்படியே பிறக்கை - ஆர்ஜவமிறே; அவதரித்தபின்பு, ஸம்ஸாரிகளுடைய சந்தாநுவ்ருத்தி பண்ணினதுக்கு ஒரெல்லையில்லையிறே.

வேம்மா இதி - அத்ர ஶோபந க்ஷோதஸ் ஸமூகஸ் கேஶிநம் வததி. நிகண்டு - "மாவே கருமையும் பெருமையும் நிறமும், மேவியகாற்காலுடையவும் வண்டும், பூவுடைத்திருவும் நறையும் பொருந்தும்." வேம்மை - க்ரௌர்யம். தத்வவாதயதி - கேசிவாயை இதி. அங்காந்துகோண்டு - திறந்துகொண்டு. நாரதாதவி வராக்ஷஸாயஸ்ய விஶேஷம் தஶயதி. அவனுக்குத் தத்காலத்தில் இத்யாதிநா. அவன்பட்டுப்போகச்சேய்தே - வெம்மின் தாத்பர்யம். பட்டு - செத்து. சேம்மா இதி அத்ர, மா - மஹத்தா. "மாண்பு" இத்யஸ்ய வாசகார்த்தமாஹ - மாண்பு என்று அழகு இதி. "தத்ணஸாரஸ்வாத்தஸ்ய வஶேஶஃ" இதிந்யாயேந விஶேஷாஹ உவ்யுக இதி ஸாவஃ. அவதாரத்துக்கு அழகு - மநுஷ்யத்வே பரத்வம். அம்மானையிருந்துவைத்துப் பின்னும் எம்மாண்புமானன் இத்யேதத் ஶ்ருதி நிதாயாஹ -பரத்வத்திலும் இதி. மநுஷ்யத்வே இத்யாதி-"அம்மான்" என்கிற பதஸமபிவ்யாஹாரத்தாலே - மநுஷ்யத்வேபரத்வத்தால் என்கிறது. அதிமாநுஷ சேஷ்டிதத்வாதிகளாலே வந்த பரத்வம் ஸௌலப்யாதிகளோடே கூடியிருக்கையாலே, அதிலும் இது விஞ்சியிருக்குமிறே. அம்மானைய் வெம்மாவாய் கீண்ட செம்மா கண்ணன், பின்னும் எம்மாண்புமானன் என்று அந்வயம். (உ)

## மூன்றாம் பாட்டு.

---

கண்ணாவானென்றும், மண்ணோர்விண்ணோர்க்குத்
தண்ணார்வேங்கட, விண்ணோர்வெற்பனே.

ஆ.—(கண்ணாவான்.) அந்த ஐஶ்வர்யத்தின்மேலே அயர்வறுமமரர்க்கும் இந்த லோகத்திலுள்ள ஆத்மாக்களுக்கும் ஒக்க த்ருஷ்டிபூதனாய்க்கொண்டு, அயர்வறு மமரர்களுக்கும் ப்ராப்யமான திருமலையிலே நிற்கையாகிற மஹாஸம்பத்தை யுடையனாயிருக்கு மென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், பத்த முக்த கோடித்வயத்தோடும் ஸம்ஶ்லேஷிக்கைக்கு ஈடாகத் திருமலையிலே வந்து நின்றருளினா னென்கிறார்.

[கண்ணென்று தொடங்கி] - ஸம்ஸாரிகளுக்கும் நித்யஸித்தருக்கும் என்றும் கண்ணாகைக்காக; கண்ணாவா னென்றுமாம். [தண்ணென்று தொடங்கி] - ரக்ஷணீய ஜந்துக்களுக்கு ப்ரத்யாஸந்நமாகையாலே ஈஶ்வரனுக்கு ஶ்ரமஹரமாய் அயர்வறுமமரர்களுக்குப் பரமப்ராப்யமான திருமலையிலே நின்றருளினான்.

ப.—அநந்தரம், உபயவிபூதிஸாதாரணமான திருமலையில் ஸ்திதியை அருளிச்செய்கிறார்.

("[illegible]" என்கிறபடியே), மண்ணோர் - மண்ணோர்க்கும், விண்ணோர்க்கு - விண்ணோர்க்கும், என்றும் - என்றுமொக்க, கண்ணாவான் - கண்ணுமவன், தண் - குளிர்த்தியால், ஆர் - மிஞ்சியிருப்பதாய், வேங்கடம் - திருவேங்கடமென்று பேரான, விண்ணோர் வெற்பன் - ஸூரிஸேவ்யமான திருமலையையுடையவன்.

இ.—மூன்றாம்பாட்டில், இரட்டைப்பிள்ளைபெற்ற தாயார் இருவர்க்கும் பாங்காகக் கிடந்து முலை கொடுக்குமாபோலே, பத்தமுக்தகோடித்வயத்துக்கும் முகங்கொடுக்கைக்காகத் திருமலையிலே வந்து நின்றருளினா னென்கிறார்.

[மண்ணோர் விண்ணோர்க்கு என்றும் கண்ணாவான்] - ஸம்ஸாரிகளோடு நித்யஸூரிகளோடு வாசியில்லை, அரைக்ஷணம் தங்கள் காரியம் நிர்வஹித்துக்கொள்ள மாட்டாமைக்கு. [கண்ணாவான்] - கண்ணாகைக்காக என்னுதல்; கண்ணுமவ னென்னுதல். கண்ணென்று - நிர்வாஹகன். "[illegible]" என்கிற ஶ்ருத்யர்த்தத்தின்படியே சொல்லுகிறார். [தண்ணார்வேங்கடம்] - குளிர்மிக்கிருந்துள்ள திருமலை. ரக்ஷகனுக்கு ரக்ஷ்யவர்க்கம் பெறாமையால் வரும் தாபத்தையும், இங்குள்ளார்க்கு ரக்ஷகனைப் பெறாமையால் வரும் தாபத்தையும் தீர்க்கவற்றாயிருக்கை. [விண்ணோர் வெற்பனே] - நித்யவிபூதியின் மேன்மையையும் திருமலையிலே நிற்கிற நீர்மையையும் ஒருபோகியாக அநுபவித்துக்கொண்டு விடாதே படுகாடு கிடக்கையாலே 'விண்ணோர்வெற்பன்' என்கிறார். ஸம்ஸாரிகள் மேன்மையைக் கண்டறியாமையாலே நீர்மையும் அறியார்கள். "மண்ணோர் விண்ணோர்க்கு" என்கிறவிடம் - ஈஶ்வராபிப்ராயத்தாலே. "நின்றவேங்கடம்நீணிலத்துள்ளது" என்று - திருமலை ஸம்ஸாரிகளுக் கென்னுமிடம் ஸித்தம்; "விண்ணோர் வெற்பு" என்கிறவிடமிறே ஸாத்யம். "விண்ணோர் வெற்பன்" என்கிறவிடம் நித்யஸூரிகளபிப்ராயத்தாலே; விண்ணோர், "எங்களது" என்று அபிமாநிக்கும்படியான தண்ணார் வேங்கடவெற்பை யுடையவன்.

ஈடு.—மூன்றும் பாட்டு. இரட்டை ப்ரஜை பெற்ற மாதாவானவள் இருவர்க்கும் முலை கொடுக்கப் பாங்காக நடுவே கிடக்குமாபோலே, நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கு மொக்க முகங்கொடுக்கைக்காகத் திருமலையிலே நின்றருளின நீர்மையை அருளிச்செய்கிறார்.

[கண்ணுவான்] - நிர்வாஹகனுவா னென்னுதல், கண்ணுகைக்காக என்னுதல், கண்ணுமவ னென்னுதல். "வக்ஷுர்தேவாநாமுதமர்த்யாநாம்" (சக்ஷுர்த்தேவாநா முதமர்த்யாநாம்) என்கிற ஶ்ருத்யர்த்தத்தை அருளிச்செய்கிறார் - [மண்ணோர் விண்ணோர்க்கு என்றுங் கண்ணுவான்] - நித்யஸூரிகளோடு ஸம்ஸாரிகளோடு வாசியில்லையாயிற்று தங்கள் காரியம் தாங்கள் செய்துகொள்ளமாட்டாமைக்கு. [தண்ணார்வேங்கடம்] - "குளிரருவிவேங்கடம்" என்னுமாபோலே, அவனுக்கு ரக்ஷ்யம்பெருமையால்வரும் தாபத்தையும் ஆற்றி, இவர்களுக்கு ரக்ஷகனைப் பெறுமையால் வரும் தாபத்தையும் ஆற்ற வற்றாயிருக்கை. [விண்ணோர்வெற்பனே] - அவன் இரண்டு விபூதியிலுள்ளார்க்கும் முகங்கொடுக்க வந்து நின்றானேயாகிலும், திருமலைதான் நித்யஸூரிகளதாயிற்று. "வானவர் நாடு" என்னுமாபோலே 'விண்ணோர்வெற்பு' என்கிறார். கானமும் வானரமுமான இவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிற நீர்மையை அநுஸந்தித்து, "இது என்ன நீர்மை!" என்று ஈடுபட்டிருக்கையாலே அவர்களதே திருமலை யென்கிறார். (௩)

---

*மூன்றும்பாட்டு* - **கண்ணுவான்** *இத்யாதி. "மண்ணோர் விண்ணோர்க் கென்றுங் கண்ணுவான்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம்* - இரட்டைப்ராஜை *இத்யாதி.*

**கண்ணுவான்** *இதி - சுஸ்யாயஅயடிரக்ஷகஇதி வ்யுத்பத்தி; ஈஷிகூடத:ஜ்ஞாநவ்ருத்த இதி யாவத் இதி த்ரிதய:. "கண்ணுவான்" இதௌ தஸ வ்யுத்பெகவசநாதுஸைவா தமோநுவ்ருத்யாதுஸைவா. த்ரிதயநிவஹாஹெ வ்ருஜணஹவக்ஷுர்தேவாநாமிதி; வக்ஷு: ஜ்ஞாநவ்ருத்தி இத்யஷ:. உத - அபியென்றபடி. "ஆவான்" என்றமாத்ரத்துக்கே - அர்த்தபேதமாய், கண் என்றதுக்கு - நிர்வாஹகனென்று ஏகார்த்தமாதல். இப்பக்ஷத்தில், பூர்வவாக்யத்துக்கு விவரணம் -* **கண்ணுகைக்காக** *என்று. "மண்ணோர்க்கும் விண்ணோர்க்குங் கண்ணுவான்" இத்யுவ்யதெ ஸம்ஸாரிணாம் ஹி நிவஹாஹகாபெக்ஷா உஜ்ஜீவநஸாநாம் வரஹேஸாந்யாவஹாநாம் சுஸ்வஷஸம்ஸாரமாநாம் ஸூரீணாஞ்ச நிவஹாஹகாபெக்ஷாஸ்திகிம் இத்யத்ராஹ-* **நித்யஸூரிகளோடு** *இதி. ஸம்வாதம் - குளிர் இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி (அ-௩). சீதலமான ப்ரவாஹங்களையுடைய திருமலை; இத்தாபம் அத்தேஶத்தை நினைக்கத் தீருங்காணும், ஸகலதாபங்களையு மாற்றவல்ல தேசமாயிற்று. "தண்ணார்" என்று - குளிர்த்தியினுடைய மிகுதியைச் சொல்லுகிறதுக்குத் தாத்பர்யம் -* **அவனுக்கு** *இத்யாதி. யதா "தண்ணார்" இத்யநேந ஶைஹாரகும் விவக்ஷிதமிதி ஹ்ருதிநியாய சுஸ்ய ஶைஹாரம் இதி வ்ருதியொதுவெக்ஷாயாஹ -* **அவனுக்கு** *இதி. விண்ணோரதான வெற்பையுடையவன் இதி ஶப்தார்த்தம் ஹ்ருதிநியாயாஹ-* **அவன் இரண்டு விபூதியில்** *இதி. நநுவெஷ்டாவஹோஹஶவதீய வைவா ஸூயாத விஸுதிஅயநிஷ்டாநாம் ஸாயாரணோ வா ஸூயாத கோடிஅயனு வரித்ருஜ்ய "விண்ணோர் வெற்பு" இதி கயஹேயியத இத்யத்ர கூ ஹெணோதாஹ-* **வானவர் நாடு** *இத்யாதிவாக்யஅயெந. வானவர்நாடு - "வரஷவஸகஜெகதமஸ்ம் தாயஷு ஹகயஷு" இதி ஸஶவாநு ஸ்வயம் ஸவஹோஸ்ரீ தாயீநம்க ரொதீதி ஸாவ:. "வானவர் நாடு" என்கைக்கு - அவ்விபூதியில் அவர்கள் வரிக்குமாபோலே, "விண்ணோர்வெற்பு" என்கைக்கு அது உண்டோ? என்ன,* **கானமும்** *இத்யாதி என்றுமாம். புஷ்பிதமான வ்ருக்ஷங்களும், நாநாவிதார்த்தங்களும் அருவிகள்நீரோடே சண்ட இடமெங்கும் புரண்டுவந்து விழுகிற காடுகளும், நீரைக்கண்டால் வெருவி மரங்களிலே யேறக்கடவ குரங்கும். மண்ணோர் விண்ணோர்க்கு என்றுங் கண்ணுவான், தண்ணார்வேங்கட விண்ணோர் வெற்பன் என்று அந்வயம். இது - முன்பக்ஷத்திலே. தண்ணார்வேங்கட விண்ணோர் வெற்பன், மண்ணோர்விண்ணோர்க்குஎன்றும் கண்ணுவான் அவன் என்ற ப்ரதமார்த்தபக்ஷத்திலே அந்வயம்.* (௩)

## நான்காம் பாட்டு.

---

வெற்பையொன்றெடுத்து, ஒற்கமின்றியே
நிற்குமம்மான்சீர், கற்பன்வைகலே.

ஆ.—(வெற்பை.) ஏவம்விதமான ஐஶ்வர்ய பரம்பரைகளை யுடையனான எம்பெருமான் தன்னுடைய காருண்யாதி கல்யாணகுணங்களைக் காட்டியருள, நானும் அவற்றைக்கண்டநுபவித்து, அவ்வநுபவ ஜநித ப்ரீத்யதிஶயம் என்னைக் கற்பிக்க, ஸர்வகாலமும் இந்த குணங்களைக் கற்கப்பெற்றேன் என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், கோவர்த்தநோத்தரணம் பண்ணினவனுடைய குணத்தை என்றும் அநுபவிப்பே னென்கிறார்.

[வெற்பை யொன்றெடுத்து இத்யாதி] - அப்போதைக்கு எட்டிற்றொரு மலையெடுத்து. [ஒற்கமின்றியே என்று மேலுக்கு] - இளைப்பு இன்றியே நிற்பதுஞ்செய்து கோவர்த்தநோத்தரணோபகாரத்தாலே ஜகத்திலுள்ளாரையெல்லாம் அடிமைகொண்டவனுடைய குணங்களை என்றும் சொல்லுவன்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிஷயத்தில் ஆபத்ஸகத்வத்தை அருளிச்செய்கிறார்.

(இந்திரன் ப்ரவர்த்திப்பித்த அஶ்மவர்ஷத்தில் ரக்ஷ்யவர்க்கம் இடர்படாதபடி),ஒன்று - ஒரு, வெற்பை - மலையை, எடுத்து - எடுத்து, ஒற்கம் இன்றியே - ஒடுக்கம் இன்றியிலே, நிற்கும் - நிற்கிற, அம்மான் - ஸ்வாமியினுடைய, சீர் - ஆபத்ஸகத்வ கீர்த்தியை, வைகல் - காலதத்த்வமுள்ளதனையும், கற்பன் - அப்யஸியாநிற்பன். ஒற்கம் - ஒல்குதலாய், பலஸங்கோசத்தைக் காட்டுகிறது.

இ.—நாலாம்பாட்டில், அவ்வார்ஜவகுணம் தம்மளவிலே வர, பலித்தபடியைச் சொல்லுகிறார்.

[வெற்பையொன்றெடுத்து] - பசுக்களும் இடையரும் தொலைய வர்ஷிக்கப் புக்கவாறே, கைக்கெட்டிற்றொரு மலையை யெடுத்து ரக்ஷித்தபடி. கீழ், ஒரு மலையை ஆதாரமாகக்கொண்டு ரக்ஷித்தபடி சொல்லிற்று; இப்போது ஒரு மலையை ஆதேயமாகக்கொண்டு ரக்ஷித்தபடி சொல்லுகிறது. ஏழு வயஸ்ஸிலே ஏழுநாள் ஒருபடிப்பட மலையை யெடுத்து ரக்ஷித்தவிடத்தில் இளைப்பு உண்டாயிற்றில்லையோ? என்னில், [ஒற்கமின்றியே நிற்கும்] - பாரார்த்தமாக வ்யாபரிக்கையாலே இளைப்பின்றிக்கே நின்றான். ஒற்கமாவது - ஒல்குதலாய், அதாவது - ஒடுங்குதலாய், அதாவது - இளைப்பு; தாதுக்ஷயம் பிறவாவிட்டால் இளைப்பில்லையிறே. [அம்மான்] - வகுத்த ஸ்வாமியாகையாலும் இளைப்பில்லை; ப்ரஜாரக்ஷணத்தில் இளைப்பு மாதாவுக்கு உண்டாகாதிறே. [சீர் கற்பன்] - அவன் மலையையெடுத்து ரக்ஷித்த அப்போதை நீர்மையையும் அழகையும் வாய்வெருவுவன். "சொல்லுவன்" என்கிற ஸ்தாநத்திலே, 'கற்பன்' என்கிறது - குணப்ரேரிதராய்ச் சொன்னொன்னுமிடந் தோற்றுகிறது. [வைகலே] - "நீடுநின்று" என்று, நித்யஸூரிகளுக்கு அதுவே யாத்ரையானாற்போலே, எனக்கும் இதுவே யாத்ரையாயிருக்கும்.

ஈடு.—நாலாம்பாட்டு. அவனுடைய ஆர்ஜவகுணம் தம்மளவிலே பலித்தபடியை அருளிச்செய்கிறார்.

[வெற்பை யொன்றெடுத்து] - பசுக்களும் இடையரும் தோலையும்படி வர்ஷிக்கப் புக்கவாறே, அதுக்கு ஈடாயிருப்பதோன்றை விட்டு ரக்ஷிக்கப் பற்றுமையாலே, தோற்றிற்றொருமலையை யெடுத்துப் பரிஹரித்தானாயிற்று. இப்படி ஏழுபிராயத்தின்பாலன் ஒருபடிப்பட மலையை யெடுத்துத் தரித்துக்கொண்டுநின்ற இடத்தில், இளைப்பு உண்டாயிற்றில்லையோ? என்னில், [ஒற்கமின்றியே நிற்கும்] - ஒற்கமாவது - ஒடுங்குதல்; அதாகிறது - இளைப்பு. ஏழுநாள் ஒருபடிப்பட மலையைத் தரித்துக்கொண்டு நின்ற இடத்தில் இளையாமைக்கு ஹேது என்? என்னில், - * (அவன்ரக்ஷணத்தைப் பகிர்ந்துகொள்வாரில்லாமையாலே இளைப்பில்லை; தாதுக்ஷயம் பிறவாவிடில் இளைப்பில்லையிறே; உண்கிறசோற்றிலே மணலைத் தூவுகை யில்லாவிட்டால் இளைப்பில்லையிறே.) [அம்மான்]- வகுத்த ஸ்வாமியாகையாலே. ஸ்வாபாவிக ஸம்பந்தத்தாலே இளைப்பின்றிக்கே நின்றான். ப்ரஜா ரக்ஷணத்தில் மாதாவுக்கு இளைப்பு உண்டாகாதிறே. [சீர்கற்பன்] - அவன்மலையையெடுத்து ரக்ஷ்யவர்க்கத்தை நோக்கின நீர்மையை அநுஸந்தித்து, அவனுடைய கல்யாணகுணங்களை அந்த குணப்ரேரிதனாய் அப்யஸிப்பன். "குணைர்தாஸ்யமுபாகத:" (குணைர்தாஸ்யமுபாகத:) என்னுமாபோலே. [வைகலே] - ஒருகால் இத்தைச்சொல்லி, பின்னை என்காரியத்துக்குப் போமவனல்லேன்; நித்யஸூரிகளைப்போலே எனக்கும் இதுவே யாத்ரையாயிருக்கும்; "விபந்யவ:" (விபந்யவ:) இறே. (௪)

## ஐந்தாம் பாட்டு.

வைகலும்வெண்ணெய், கைகலந்துண்டான்,
பொய்கலவாது என், மெய்கலந்தானே.

ஆ.—(வைகலும்.) தாரார் தடந்தோள்கள் உள்ளளவுங் கைநீட்டி ஆராதவெண்ணெய் விழுங்கினவன், வெண்ணெயளைந்த திருவுடம்போடே கூடவந்து, தன்னுடைய ஆந்ருஶம்ஸ்ய குணாகஷணார்த்தமாகக் கார்யபுத்த்யா என்னோடு ஸம்ஶ்லேஷிக்கையன்றியே, என்னோடு ஸம்ஶ்

நாலாம்பாட்டு - வெற்பை இத்யாதி. அவனுடைய ஆர்ஜவ இதி-" சீர்கற்பன் " இத்யத்ர ஹ்ருதயம். அப்யாஸஸ்ய குணப்ரேரிதத்வம் விவக்ஷிதம். தாம் குணலுப்தராகையாலே, தம்முடைய சந்தத்தை அநுவர்த்தித்துக்கொண்டு, தாம் கற்கைக்காக வெற்பெடுத்தது என்ற இவ்வழியாலே இங்கு ஆர்ஜவஞ்சொல்லிற்றாகிறது.

ஒன்றெடுத்து என்று - அநாதரோக்தி. ரக்ஷணத்துக்குப் பரிகரமான திவ்யாயுதங்களை யெடுத்தாக்ஷியாமல் முன்னே நின்றதொரு மலையெடுத்து ரக்ஷிக்கைக்கு ஹேது அருளிச்செய்கிறார் - பசுக்களும் இத்யாதி. தோலையும்படி - பாதிதாம்படி. இளைப்பு - ஶ்ரமம். கீழ்வாக்யவிவரணம் - ஸ்வாபாவிக இத்யாதி. ஸம்பந்தம் ஸ்வாபாவிகமானால் இளைப்பின்றிக்கே யிருக்குமோ? என்ன, ப்ரஜாரக்ஷணத்தில் இத்யாதி. அவன் மலையை யெடுத்து இத்யாதி-இப்படிப்பட்டவனுடைய சீரைக்கற்பன் என்கையாலே-இப்படிப்பட்டவனாக அநுஸந்திக்கை அவனுடைய கல்யாணகுணங்களையெல்லாம் கற்கையிலே ஹேதுவாகிறது. சீர்சொல்லுவன் என்னாதே, "கற்பன்" என்றத்தைப்பற்ற, குணப்ரேரிதனாய் என்றது. நித்யஸூரிகளைப்போலே இதி - [illegible], 'நீடு நின்று' இத்யத்ர த்வ விவக்ஷிதம் இதி வதந்தி-விபந்யவ இதி. [illegible] இதி [illegible]. இதுவே யாத்ரையாயிருக்கும் என்றது - "வைகல்" என்றத்தைப்பற்ற. வெற்பையொன்றெடுத்து ஒற்கமின்றியே நிற்குமம்மான் சீர் வைகல்கற்பன் இத்யந்வய:. (௪)

* குண்டலிதம் க்வாசித்கம் என்பர்.

லேஷித்தல்லது தரிக்கமாட்டாத ஸ்வபாவனுய்க்கொண்டு என்னுடைய இந்த உடம்போடே ஸம்ச்லேஷித்தருளினு னென்கிருர்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்னுடைய குணகீர்த்தநோபக்ரமத்திலே தம்பக்கல் எம்பெருமான் அபிநிவிஷ்டனுனபடியை அருளிச்செய்கிருர்.

[வைகலுமென்று தொடங்கி] - நாடோறும் வெண்ணெய் களவு காணப்புக்க அபிநிவேஶாதிஶயத்தாலும் மௌக்த்யத்தாலுமாக இரண்டு கையாலும் வெண்ணெய் விழுங்குமவன். [பொய்யென்று தொடங்கி] - அப்படியே தத்தேக தாரகனுய்க்கொண்டு என் உடம்பிலே கலந்தான்.

ப.—அநந்தரம், ஏவம்பூதனுன க்ருஷ்ணன் தம்மோடு ஸம்ச்லேஷித்தபடியை அருளிச்செய்கிருர்.

வைகலும் - என்றுமொக்க, வெண்ணெய் - வெண்ணெயை, கைகலந்து - கையுள்ளளவும் நீட்டி, உண்டான் - உண்டவன், பொய்கலவாது - (காரியப்பாடான) பொய்கலவாதபடிவிரும்பி, என் - என்னுடைய, மெய் - (ஹேயமான) ஶரீரத்திலே, கலந்தான் - ஒன்றுபடக் கலந்தான். கைகலந்தென்று - இரண்டுகையுங் கலந்து என்னவுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், நான் அவன்ஸ்வரூபத்தை விட்டு அவன்குணங்களையே விரும்புகிறுப் போலே, அவனும் என்னை விட்டு என்னுடைய தேஹத்தையே விரும்பாநின்ருனென்கிருர்.

[வைகலும் வெண்ணெய் கைகலந்து உண்டான்] - "கற்பன்வைகலே" என்று-எனக்கு அவன் குணம் என்றும் தாரகமாயிருக்கிறுப்போலே, ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ளதொரு த்ரவ்யமே அவனுக்கும் நித்யதாரகமாயிற் றென்கிருர். [கைகலந்து உண்டான்] - "தாரார்தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி" என்கிறபடியே "குடத்திலே கைபுக்கதனையும் வயிறுநிறையும்" என்கிற மௌக்த்யத்தாலே யென்னுதல்; "கள்ளன்" என்று சிலுகிட்டவாறே, அவர்கள் தங்களோடே கலந்து அமுதுசெய்தா னென்னுதல்; "ஓரிளப்பனும் ஒரு சதிரனும் களவுகண்டார்கள்" என்று பட்டர் கதையை ஸ்மரிப்பது; அபிநிவேஶத்தாலே இரண்டு கையாலும் அமுதுசெய்தா னென்னுதல், கைவாசி யறியாத மௌக்த்யத்தாலும் அபிநிவேஶத்தாலும். [பொய்கலவா தென்மெய்கலந்தானே] - வெண்ணெயிற்பண்ணின விருப்பத்திற் பொய்யில்லாதாப்போலே கிடீர் என்னுடம்பிற் பண்ணுகிற விருப்பமும். அவன் மேல் விழ, தாம் மேன்மையைக் கண்டு இருய்க்கிருராயிற்று; அவன்மேல்விழுகிறதும் இத்தாலேயாயிற்று. "இங்நின்றநீர்மை" என்று நான் அநாதரிக்கிற ஶரீரமும் இவனுக்குக் கலக்கைக்கு விஷயமாவதே!

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நீர் அவன் குணங்களை அப்யஸியாநின்றீராகில், அவன் தான் செய்கிறதென்? என்னில்; நான் அவனை விட்டு அவன் குணங்களை விரும்புகிறுப்போலே, அவனும் என்னை விட்டு என்னுடைய தேஹத்தை விரும்பாநின்ரு னேன்கிருர்.

[வைகலும்] - "கற்பன்வைகலே" என்று - எனக்கு அவன் குணம் என்றும் யாரகமாயிருக்கிறுப்போலே, ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யம் என்றுமொக்க யாரகமாயிருக்குமாயிற்று

---

அஞ்சாம்பாட்டு - **வைகலும்** இத்யாதி. "என்மெய்கலந்தானே" என்ற பதத்தைக் கடாக்ஷித்து ஶங்கா பூர்வகமாக ஸங்கதி அருளிச்செய்கிருர் - **நீர் அவன்குணங்களை** இத்யாதி.

"வைகலும்வெண்ணெய்" என்றத்தை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிருர் - **கற்பன்** இத்யாதி. **கைகலந்து** - இடக்கையும் வலக்கையுங் கலந்தென்னுதல்; கைகளுள்ளளவும் வெண்ணெயிலே கலந்தென்னுல்;

அவனுக்கு. [வெண்ணெய் கைகலந்து உண்டான்] - வெண்ணெயிலுண்டான ஆதரத்தாலே இடக்கையாலும் வலக்கையாலும் வாங்கி அமுதுசெய்தான்; அன்றியே, "தாரார்தடந்தோள்களுள்ளளவுங்கைநீட்டி" என்கிறபடியே - "கை நிறையுந்தனையும் வயிறுநிறையும்" என்னும் மௌக்த்யத்தாலே திருக்கைகளுள்ளளவும் கலந்து அமுதுசெய்தா னென்னுதல்; "கள்ளன்" என்று சிலுகிட்டவாறே அவர்கள்தங்களோடே கலந்து அமுதுசெய்தா னென்னுதல். 'ஸர்வாதிகனானவன் நித்யஸம்ஸாரியாய்ப் போந்தவனுடைய தேஹத்தைத் திருவாய்ப்பாடியில் வெண்ணெயோபாதி ஆதரித்தான்' என்றால், இது கூடவேதோன்றுமோ? என்னில், [போய்கலவாதென்மெய்கலந்தானே] - அவ்வெண்ணெயில் பண்ணின விருப்பத்தில் பொய்யில்லாதாப்போலேகிடீர் என்னுடம்புடன்கலந்த கலவியிலும் பொய்யில்லாதபடி யென்கிறார். [என்மெய்] - அவன் மேல்விழ மேல்விழத் தாம் இறாய்த்தமை தோற்றுகிறது. "அழுக்குடம்பு" என்று நான் அநாதரிக்கிற ஶரீரம் இவனுக்கு ஆதரணீயமாவதே! என்கிறார். (௫)

## ஆறாம் பாட்டு.

கலந்தேன்னுவி, நலங்கோள்நாதன்
புலன்கோள்மாணாய், நிலங்கோண்டானே.

**ஆ.**—(கலந்தென்னுவி.) இப்படி என்னோடே கலந்த கலவியாலே தோற்பித்து அடிமையாக்கின இவன் எனக்கு போக்யமாகைக்காக, ஸகலஜநமநோநயந ஹாரியான தன்னுடைய அழகிய திருவடிவைக் காட்டி, மஹாபலியை வஶீகரித்து இந்த லோகத்தையும் கொண்டானென்கிறார்.

ஒ. —ஆறாம்பாட்டில், தம்மோடு கலந்த எம்பெருமான் தம்மை அநந்யார்ஹமாக்கிக் கொண்டபடியை ஸநிதர்ஶநமாகச் சொல்லுகிறார்.

---

மூன்றாமர்த்தம் - தேடுகிறவர்களோடே தானும் ஒருவனாய்க் கலந்தென்னுதல். அதாவது - கள்ளனுடைய ஸாமர்த்த்யம் சொல்லுகிறது. மூன்றாமர்த்தத்துக்கு, "கைகலந்து" என்றது - முழுச்சொல்லு. "வெண்ணெயுண்டான்" என்றபோதே - வெண்ணெயோடே கலந்தமை தோற்றுகிறது; ஆனபின்பு, "கைகலந்து" என்றதுக்கு ப்ரயோஜநமேது? என்ன, இடக்கையாலும் இத்யாதி. இரண்டு கையுங் கலந்து வெண்ணெயுண்டானென்றபடி. தாரார் இத்யாதி - சிறியதிருமடல். மாலையோடுகூட வெண்ணெய்க்குடத்திலே கையையிட்டான். உள்ளளவுங்கைநீட்டி - 'வெண்ணெயிலே ஆழக் கையிட்டதனையும் வயிறுநிறையும்' என்றிருக்கிறான்காணும் மௌக்த்யத்தின்மிகுதியாலே; 'இவன் தாரார்தடந்தோள்களுள்ளளவுங்கைநீட்டி அள்ளியமுதுசெய்தான்' என்றறியும்படி எங்ஙனே? என்ன, பானையைப் பார்த்தாள், பானைவாயிலே சாந்து பட்டிருந்தது; இவன்தோளிலே கோயிற்சாந்திருக்குமே ஆகையாலே, கையளவும் நீட்டினானென்றறிந்தாள். ப்ராதாந்யந்தோற்ற வேண்டியிருக்கையைப்பற்ற முன்னேயெடுக்கிறார், கள்ளன் என்று. சிலுகு - கலஹம். "தன்னேராயிரம்பிள்ளைகள்" என்றபடி. "ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேத:" இதிந்யாயேந ப்ரதிஷேதஸ்ய ப்ரஸக்திஸம்வாதயதி. ஸர்வாதிக இதி. அவ்வெண்ணெயில் இதி "வெண்ணெய்கைகலந்துண்டான்" இதி த்ருஷ்டாந்த ப்ரதிபாத: "என்மெய்" என்றதுக்கு பாவம்-அவன் இத்யாதி. ஏகாரஸ்ய பாவமாஹ-அழுக்குடம்பு இதி. கீழ்வாக்யவிவரண மென்னவுமாம். வைசதும் வெண்ணெய் கைகலந்துண்டான் - உண்டவன் என் மெய் கலந்தான்; இதில் பொய்கலவாது என்று அந்வயம். (௫)

[கலந்தென்று தொடங்கி] - என்னோடே ஸம்ச்லேஷித்து என் ஆத்மாவில் நன்மையைக் கொண்டு என்னை ஆளுங்கொண்டான். [புலனென்று தொடங்கி] - ஸர்வேந்த்ரியாபஹார க்ஷமமான குறள்வடிவைக் காட்டி மஹாபலியில் நிலங்கொண்டாற்போலே.

ப.—அநந்தரம், லோகத்தை அநந்யார்ஹ மாக்கினாற்போலே என் ஆத்மாவையும் அநந்யார்ஹமாக்கினா னென்கிறார்.

கலந்து - ஒரு நீராகக் கலந்து, என் ஆவி - என் ஆத்மஸ்வரூபத்தினுடைய, நலம் - ஸ்வாஸாதாரணசேஷத்வமாகிற நன்மையை, கொள் - தனக்கு ப்ரயோஜநமாகக் கொண்ட, நாதன் - சேஷியானவன், புலன் - இந்த்ரியங்களுக்கு, கொள் - ஆகர்ஷகமான, மாணாய் - வாமநப்ரஹ்மசாரிவேஷத்தையுடையவனாய், நிலம் - பூமியை, கொண்டான் - தன்னதாக்கிக்கொண்டவன். நிலமென்று - லோகாந்தரங்களுக்கும் உபலக்ஷணம்.

இ.—ஆறும்பாட்டில், தேஹத்தளவன்றிக்கே என்னை அநந்யார்ஹமாக்கினான் என்கிறார்.

[கலந்து] - என்னோடே ஒரு நீராகக் கலந்து. [என்னாவி நலங்கொள் நாதன்] - என் ஆத்மாவினுடைய நலத்தை - நற்சீவனைக் கொண்டான். [நாதன்] - "என்னையாளுங்கொண்டு" என்கிறபடியே தன்னையொழியச் செல்லாமையை விளைத்து நான் எனக்கு உரியேனாயிருக்கிற நிலையைத் தவிர்த்தான். தாம் அகப்பட்டபடிக்கு மஹாபலியை நிதர்சநமாகச் சொல்லுகிறார். [புலன்கொள் மாணாய்] - ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமான வடிவைக்கொண்டு. [நிலங்கொண்டானே] - மஹாபலி 'தன்னது' என்று அபிமாநித்த பூமியைக் கொண்டான். அவன் என்னைப்போலே தன்னைக் கொடுத்திலன். அவன் வடிவிலே தோற்றான், நான் நீர்மையிலே தோற்றேனென்கிறார்.

ஈடு.—ஆறும்பாட்டு. இப்படி கலந்து செய்ததேன்? என்ன, தேஹத்தளவிலே விரும்பி விட்டிலன்; என்னாவி நலத்தையுங் கொண்டா னென்கிறார்.

[கலந்து இத்யாதி]-என்னோடே ஒரு நீராகக் கலந்து, பின்னை என் ஆத்மாவினுடைய நற்சீவனைக் கொண்டான். அவ்வளவேயோ? [நாதன்] - "என்னையாளுங்கொண்டு" என்கிறபடியே, நான் எனக்கு உரியேனா யிருக்கிற இருப்பையும் தவிர்த்தான். இப்படி அகப்பட்டார் நீரேயோ? என்ன, மஹாபலியும் அகப்பட்டான். ஆவிநலங்கொடுத்திலன், கழஞ்சுமண்கொடுத்தானித்தனை. ஸர்வேந்த்ரியாபஹார க்ஷமமான வேஷத்தைப் பரிக்ரஹித்து, அவன் 'என்னது' என்று அபிமாநித்திருக்கிற பூமியை அபஹரித்தான். (௬)

---

ஆறும்பாட்டு - கலந்தென்னாவி இத்யாதி. "என்னாவிநலங்கொள்நாதன்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து சங்காபூர்வகமாக ஸங்கதி அருளிச்செய்கிறார் - இப்படி இத்யாதி.

"நலம்" என்று - போக்யதையாய், "ஆவிநலம்" என்று - ஆத்மாவினுடைய போக்யதை. ஸௌசீல்யாதிகுணங்களாகிற அகவாயில் குணங்களைக் காட்டி, என்னுடைய அகவாயில் பதார்த்தத்தைஅபஹரித்தான் : புறவாயில் ஸௌந்தர்யத்தைக் காட்டி, அவனுடைய புறவாயில் பதார்த்தத்தை அபஹரித்தா னென்றபடி. என்னையாளுங்கொண்டுஇத்யாதி-திருநெடுந்தாண்டகம்(உ௫.)என் ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டுபோகையன்றியே, சுமையாளும் நானேயாகவேணுமோ? அவனோடே கலந்து பரிமாறின பரிமாற்றத்தை அடிமையாக நினைத்திருக்கையாலே "என்னையடிமையுங்கொண்டு" என்கிறாளாகவுமாம். "நிலங்கொண்டான்" உதேத்ர தசுஹஸ்ரூஷி நியாய ஸஹஸா தஸ்ய விஶேஷணம் - ஆவிநலங்கொடுத்திலன் இத்யாதி. ஸப்தார்த்தம் - ஸர்வேந்த்ரிய இதி. "மன்னுங்குறளுருவின்மாணி" இத்யாதி. மாணி - ப்ரஹ்மசாரி. அவன் - மஹாபலி. கலந்தென்னாவி நலங்கொள்நாதனானன் புலன்கொள் மாணாய் நிலங்கொண்டான் இத்யந்வய꞉. (௬)

## ஏழாம் பாட்டு.

---

**கோண்டானேழ்விடை, உண்டானேழ்வையம்**
**தண்தாமஞ்சேய்து என், எண்தானானே.**

**ஆ.**—(கொண்டான்.) திருநாட்டிற்பண்ணும் ப்ரேமத்தை என்பக்கலிலே பண்ணி, தன்னோடு ஸஹஸ்த்வேந ஸம்ஶ்லேஷிக்கவேணு மென்றுள்ள என்னுடைய மநோரதத்தைத் தான் கைக்கொண்டு என்னோடு ஸம்ஶ்லேஷித்தருளின இவன், எனக்கு போக்யமாகைக்காக, இன்னம் எருதேழடர்த்தது தொடக்கமாக அபர்யந்த திவ்யசேஷ்டிதங்களைப் பண்ணியருளாநின்றான் என்கிறார்.

**ஒ.**—ஏழாம்பாட்டில், தன்விஷயத்தில் என்னுடைய மநோரதத்தை என் பக்கலிலே தான் பண்ணினா னென்கிறார்.

[கொண்டானென்று தொடங்கி] - நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷவிரோதியான எருதேழையும் கொன்றான்; ஜகத்தையடையத் திருவயிற்றிலே வைத்துக்கொண்டான்; இதுக்குக் கருத்து - தம்முடைய ஸம்ஶ்லேஷ விரோதிகளைப் போக்கி, ஜகத்துக்குத் தன்னையொழியச் செல்லாதாபோலே தம்மையொழிய எம்பெருமானுக்குச் செல்லா தென்று. [தண் தாமஞ் செய்து] - பரமபதத்திற் பண்ணும் வ்யாமோஹத்தைப் பண்ணி நான் நினைத்தபடி செய்தா னென்றுமாம்.

**ப.**—அநந்தரம், என் நினைவே தனக்கு நினைவானா னென்கிறார்.

ஏழ்விடை - (அபிமதவிரோதியான) ஏழ்விடைகளையும், கொண்டான் - ப்ராணனைக் கொண்டவனாய், (ஆபத்திலே), ஏழ்வையம்-ஸர்வலோகத்தையும், உண்டான் - வயிற்றிலே வைத்து ரக்ஷித்தவன், தண் - ஸாம்ஸாரிகதாபஶாந்திகரமான, தாமம் - பரமபதத்தில் விருப்பத்தை, செய்து - (என்பக்கலிலே) பண்ணி, என் - என்னுடைய, எண் - மநோரதத்தின்படியே, தான் - தான், ஆனான் - மநோரதிக்கத் தொடங்கினான். அதாவது - நான் பரமபதத்திலே தன்னை அநுபவிக்க எண்ணுமாபோலே, தான் இங்கே என்னை அநுபவிக்க எண்ணாநின்றா னென்றபடி. என்எண்ணிலே தான் கைப்புகுந்தா னென்றுமாம்.

**இ.**—ஏழாம்பாட்டில், தன்பக்கலுண்டான என்னுடைய மநோரதத்தை என்பக்கலிலே தான் பண்ணினா னென்கிறார்.

[கொண்டானேழ்விடை] - ஏழுவகைப்பட்ட வ்ருஷபங்களை ஜயித்தான். இன்ன படைவீட்டைக்கொண்டா னென்னுமாபோலே, "கொண்டான்" என்றது - ஜயித்தா னென்றபடி. நப்பின்னைப் பிராட்டியோட்டைக் கலவிக்கு விரோதியைப் போக்கினாற்போலே, என்விரோதிகளைப் போக்கி வந்து கலந்தா னென்கை. [உண்டானேழ்வையம்] - ஜகத்தையெல்லாம் ப்ரளயாபத்திலே தன்திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்தான். ப்ரளயாபத்தில் ஜகத்துக்குத் தன்னையொழியச் செல்லாதாபோலே, என்னையொழியத் தனக்குஞ் செல்லாதபடியாயிராநின்றா னென்கை. [தண்தாமஞ்செய்து] - தட்பத்தையுடைய தாம முண்டு - பரமபதம்; அதில் பண்ணக்கடவ விருப்பத்தை என்பக்கலிலே பண்ணி. தத்விபூதிகனாக என்னை யாதரித் தென்னவுமாம். [என் எண்தானானே] - நான் மநோரதித்தபடியே எனக்குக் கைப்புகுந்தா னென்னுதல், என் மநோரதத்தைத் தான் கைக்கொண்டான்; அதாகிறது - "மாகவைகுந்தங்காண்பதற் கென்மன

மேகமெண்ணும்" என்று - நான் அத்தேசத்திலே அநுபவிக்க எண்ணத் திருநகரியிலே வந்து என்னை அநுபவிக்க எண்ணுகிற்கை.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஆவிநலங்கோண்டு விட்ட அளவேயோ? நித்யவிபூதியில் பண்ணும் ஆதரத்தையும் என்பக்கலிலே பண்ணினு னென்கிறார்.

[கோண்டானேழ்விடை] - " இன்ன படைவீட்டைக் கோண்டான் " என்னுமா போலே, நப்பின்னைப்பிராட்டி யோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு ப்ரதிபந்தகமான ருஷபங்களேழையும் ஜயித்தான். [உண்டானேழ்வையம்] - ப்ரளயாபத்தில் பூமி தன்வயிற்றிலே புகாவிடில் தரியாதாபோலே, தான் என்பக்கலிலே புகுந்தல்லது தரியாதானுய்க் கலந்தான். தனக்கு ஸ்நேஹிகளாயிருப்பார்க்குச் செய்யுமதுஞ்செய்தான். தான் பண்ணும் ரக்ஷணம் விலக்காதார்க்குச் செய்யுமதுஞ் செய்தான். அதுக்குமேலே, [தண்தாமஞ்செய்து] - தட்பத்தையுடைத்தான தாமமுண்டு - பரமபதம்: அதில் பண்ணும் விருப்பத்தையும் என்பக்கலிலே பண்ணினுன். தத்விபூதிகளுக என்னை யாதரித் தென்றுமாம். [என்எண்தானுனே] - நான் மநோரதித்தபடியே எனக்குக் கைப்புகுந்தா னென்னுதல்; அன்றிக்கே, என்மநோரதத்தைத் தான் கைக்கோண்டா னென்னுதல். அதாவது-மாகவைகுந்தங்காண்பதற்கிறே இவர்-ஏகமெண்ணுவது ;* " கண்ணன் விண்ணோர்தொழவே சரிகின்றது சங்கம் " என்று நான் 'ஸ்ரீவைகுண்டத்தேறப் போகவேணும்' என்றும், 'அங்கேஅநுபவிக்கவேணும்' என்றும் ஆசைப்பட, அவன் 'திருநகரியேறப் போகவேணும், ஆழ்வாரை அநுபவிக்கவேணும்' என்று பாரியாநின்றான். (எ)

---

ஏழாம்பாட்டு - கோண்டான் இத்யாதி. "தண்தாமஞ்செய்து" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-ஆவிநலம் இத்யாதி.

இன்னபடைவீடு - வென்றுன் என்னுதே, "கொண்டான்" என்கிற பதஸ்வாரஸ்யம். போலே என்று - வாக்யம். அலப்யலாபத்திலே த்ருஷ்டாந்தம், யத்நத்திலன்று. நப்பின்னைப்பிராட்டி ஸம்ஶ்லேஷத்துக்கு நிமித்தமாகையாலே அலப்யலாபமிறே. ப்ரளயாபத்ரக்ஷணத்தை அருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம்-ப்ரளயாபத்திலே இத்யாதி. யத்வா, "என்னெண்தானுனன்"என்றத்தைக் கடாக்ஷித்து பாவம்-ப்ரளயாபத்திலே இத்யாதி. அதவா, " கலக்தென்னுவி " என்றதுக்கு இது த்ருஷ்டாந்தமாயிருக்கிற தென்கிறார் - ப்ரளய இத்யாதி. ஸவிஷூஹமவசுக தாத்ராதிராஹியாநாவஸரெ "கொண்டா னேழ்விடை யுண்டானேழ் வையம்" உதிவசுஹுராவரோஹ-தனக்கு ஸ்நேஹிகளாய்உத்ராதிவாக்யஅயெந. தான்பண்ணும் ரக்ஷணமிதி வாக்யம் - "உண்டானேழ்வையம்" இத்யஸ்ய பாவார்த்தம். ஸ்நேஹிகளாயிருப்பார்க்கு- நப்பின்னைப்பிராட்டிக்காகவிறே விடைகொண்டது. ஸ்நேஹிகளாயிருப்பார்க்குச் செய்யுமதுஞ் செய்தா னென்றது - அவர்கள் விரோதியைப் போக்கினுற்போலே, என் விரோதியையும் போக்கினுனென்றபடி. விலக்காதார்க்குச்செய்யுமதுஞ்செய்தானென்றது-அவர்களை ப்ரளயாபத்தில் நஶியாதபடி தரிப்பித்தாற்போலே, பிரிந்து நஶியாதபடி என்னையும் குணவிஷ்காரத்தாலே தரிப்பித்தா னென்றபடி. இப்படி பூர்வகண்டத்தைப் பூர்வஶேஷமாக்கி, உத்தரகண்டத்தை அவதரிப்பிக்கிறார்- அதுக்குமேலே என்று. செய்து -புத்திபண்ணி. தண்தாமமாகச்செய்து - தண்டாமமென்று புத்திபண்ணி. தண்தாமஸத்ருஶமாக புத்திபண்ணியென்னுதல்; தண்தாமத்திலவனுக புத்திபண்ணி யென்னுதல். தட்பம் என்று - குளிர்த்தியாய், "நலமந்தமில்லதோர்" என்ற போக்யதையைச் சொல்லுகிறது. தத்விபூதிகனுக - தத்ரத்யத்வேந நான்மநோரதித்த இத்யாதி-எண்ணின ப்ரகாரத்திலேயானுன், அக்ரூரர் மநோரதித்தபடி யானுற்போலே, நான்மநோரதித்தபடியே எனக்குக் கைப்புகுந்தா னென்றபடி. என் மநோரதத்தை இத்யாதி - என் எண்ணைப்போலொத்த எண்ணைத் தான் உடையனுனு னென்றபடி. "என்மநோரதத்தை" என்றத்தை விவரிக்கிறார்-அதாவது இத்யாதி. மாகவைகுந்தம் இத்யாதி பரமாகாஶஶப்தவாச்யமான ஸ்ரீவைகுண்டத்தைக் காண்பதற்கு என் நெஞ்சானது இராப்பகலும் ஏகப்ரகாரமாக எண்ணுகின்றது. " அன்றிக்கே" இத்யாதிக்கு விவரணம் - கண்ணன் இத்யாதி. க்ருஷ்ணனுடைய பரமவ்யோம ஶப்தவாச்யமான பரமபதத்தை நித்யாஞ்சலிபந்தம் பண்ணி அநுபவிக்கவேணுமென்கிற மெலிவாலே வளை சரியாநின்றது. " சரிகின்றன " என்றுஞ் சொல்லுவார்கள். பாரியாநின்றான் - உத்யோகியாநின்றான். ஏழ்விடைகொண்டான்; ஏழ்வையமுண்டான்; தண்டாமஞ்செய்து என் எண்தானுனன் என்று அந்வயம். (எ)

---

* திருவிருத்தம் - சஎ.

# எட்டாம் பாட்டு.

ஆனானாயன், மீனோடேனமும்
தானானேனென்னில், தானாயசங்கே.

ஆ.—(ஆனான்.) தன்னுடைய திவ்யசேஷ்டிதமாத்ரமேயோ எனக்கு போக்யமாகச் செய்தருளிற்று? தன்னுடைய திவ்யாவதாரங்களு மெல்லாம் என்பக்கலுள்ள ஸங்கத்தாலே எனக்கு போக்யமாகச் செய்தருளினா னென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஸர்வேச்வரன் என்பக்கலுண்டான ஸங்காதிசயத்தாலே தேவமநுஷ்யாத்யநேகாவதாரங்களைப் பண்ணியருளினா னென்கிறார்.

[என்னில் தானாயசங்கே] - 'ஸர்வேஸ்வரனாயிருந்துவைத்து, எனக்காகப் பண்ணின திருவவதாரத்துக்கு எண்ணில்லை' என்றுஞ் சொல்லுவர்.

ப.—அநந்தரம், ஆச்ரிதார்த்தமான அவதாரத்துக்கு எல்லை யில்லை யென்கிறார்.

ஆனாயன் ஆனான்-கோரக்ஷண ஸ்வபாவமான கோபஜாதியையுடைய, தான்-தான் (ஆபத்ரக்ஷணார்த்தமாக), மீனோடேனமும்-மத்ஸ்யாவதாராதிரூபேண, ஆனான்-அவதீர்ணனானான், என்னில்-என்று சொல்லுமளவில், தானாய-(விலக்ஷண ஸ்வரூபனான)தன்னுடைய வான அவதாரங்கள், சங்கு-சங்கென்கிற ஸங்க்யைக்குப் போரும். அன்றியே, என்னில் தானாய சங்கென்று-என்பக்கல் தான் பண்ணின ஸங்கத்தாலே, ஆனாயனான தான் மீனோடேனமுமானா னென்றுமாம். அன்றியே, என்னிலென்று - அஞ்சாம் வேற்றுமையாய், என்நிமித்தமாகப் பண்ணினவை அஸங்க்யாதங்களென்றுமாம். சங்கு - பேரிலக்கம், ஸங்கமுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், என்பக்கல் ஸங்காதிசயத்தாலே என்னைப்பற்ற அவன் பட்டதுக்கு ஓரளவில்லை யென்கிறார்.

[ஆனானாயன்] - ஆனாயனானான், கையிலே கோலைக்கொடுத்து'பசுமேய்த்துவா' என்னலாம்படி இடையனாய்ப் பிறந்த மெய்ப்பாடு. அவ்வளவேயோ? [மீனோடேனமுந்தானானான்] - ஸர்வாதிகனான தானிறே திர்யக்ஸஜாதீயனானான். அவன் க்ரமத்திலே பிறக்கச்செய்தேயும், அநுஸந்தாநத்திற் பதற்றத்தாலே ஏககாலத்திலே இரண்டவதாரம்போலே சொல்லுகிறார். [ஆனான்]- வடிவுஞ் சொலவுஞ் செயலும் ஜாதிக்கு அடுத்தவையா யிருக்கை. இதுக்கு ஹேதுவென்? என்னில், [என்னில் தானாயசங்கே] - என்பக்கல் தனக்கு உண்டான ஸங்காதிசயத்தாலே யென்னுதல்; என்னைக்குறித்துத் தான்பண்ணின அவதாரங்கள் சங்கமென்கிற மஹாஸங்க்யைக்குப் போரும். என்னில் - என்னைக்குறித்து. தானாய - தானானவை. சங்கே - சங்கத்தளவேயன்றிறே.

ஈடு.—எட்டாம்பாட்டு. என்னைச்சுட்டி அவன்பிறந்த பிறவிகளுக்கு ஒருமுடிவில்லை யென்கிறார்.

[ஆனானாயன்] - இடையனாய்ப்பிறந்து, முடிசூடஇராதே ஜாத்யுசிதமான கோரக்ஷணத்திலே அதிகரித்தான், இடையனாய்ப் பிறந்த மெய்ப்பாடு. அவ்வளவிலேதான் விட்டானோ?

---

எட்டாம்பாட்டு - ஆனானாயன் இத்யாதி. "என்னில்தானாயசங்கே" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-என்னைச்சுட்டி இத்யாதி.

"ஆயனானான்" உதாஹரிஷ்யாய, "ஆனாயனானான்" - ஆக்களை ரக்ஷிக்கும் ஆயனானான் உக்தி வக்த்ருஸ்வாரஸ்யோ - இடையனாய் இத்யாதி. ஆச்சளுக்கு நாய னென்றபடி. "இடையனாய்ப் பிறந்த மெய்ப்பாடு" உதாஹ்ருதவ்ருத்தாக்ய - "கன்றுமேய்த்து விளையாடவல்லானை - நடம்பருகு கருமுகிலை" உதாஹ்ருதாவ்ய

[மீனோடேனமுந்தானானான்] - கீழே க்ருஷ்ணவதாரத்தைச் சொன்னார்; அது அயர்வறுமமரர்களதிபதியாயிருந்த வோபாதியிறே இவ்வவதாரங்களைப்பற்ற. ஸர்வாதிகனான தான் இவற்றோடே ஸஜாதீயனானான். அவன் க்ரமத்திலே பிறக்கச்செய்தே, அநுஸந்தாநத்தில் பதற்றத்தாலே ஏககாலத்திலே இரண்டவதாரம் போலே யிருக்க அருளிச்செய்கிறார். [ஆனான்] - வடிவும் செயலும் சோலவும் தஜ்ஜாதீயர்க்கு அடுத்தவையாயிருக்கை. இவைதான் வித்யாவதாரங்கள். இதுக்கு அடியேன்? என்னில், [என்னில்தானாயசங்கே] - என்பக்கல் தனக்குஉண்டான ஸங்காதிசயத்தாலே யென்னுதல், என்னைக் குறித்து, தானானவை - தன்அவதாரங்கள். சங்கே - மஹாஸங்க்யை என்னுமத்தனை. அங்ஙனன்றிக்கே, சங்கே - மஹாஸங்க்யையளவோ! முடிவுண்டோ! "பஹூநி" (பஹூநி) என்னுமித்தனை. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

சங்குசக்கரம், அங்கையில்கோண்டான்
எங்கும்தானாய, நங்கள்நாதனே.

ஆ.—(சங்குசக்கரம்.) இப்படி எனக்காக ஸர்வயோநிகளிலும் வந்து பிறந்தருளுகிறான், தன்னுடைய திருக்கைகளில் அழகிய திருவாழியுந் திருச்சங்கமு மேந்தி, அவ்வழகோடு கூட வந்துபிறந்தா னென்கிறார்.

---

ஈாநவஸ்தஸம்ரக்ஷணவ்யாபாராவிவக்ஷிதா:ஐதிஷ்டி.தைவவ்யாபாரா:வாநீயவாநாநஷிஜ்ஞாநதாநுஷ்ஸம்தடாகேவாநீயம்விவநுதஷெவவாயயதி; ஸதாஷ்யஸாகாஸெஷ்த்யணாநிஹொஜயதீதெத்வஶோஷ்ய:.யதா,"தான்" என்கிறத்தை அபகர்ஷித்து, அத்தை கோபாலபால விஷயமாக்கிக் கொண்டு அருளிச்செய்கிறார்-இடையனாய் இத்யாதி. மெய்ப்பாடு - மெய்ப்பாட்டாலே. "தான்" இத்யஸ்யார்த்தமாஹ-ஸர்வாதிகனான் தான் இதி. "தான்இவற்றோடு ஸஜாதீயனானான்" என்கிறவிடத்திலே - "யஜாதீயொ யாத்ருஶொயத்ஸ்வாவ: வாத்வாயாம் ஸம்ப்ரிதொயொவிகொவி । தஜாதீயஸ்தாத்ருஶஸ்தஸ்வாவஸ்ஹிஷ்ணு:தெத்ருஶம்ஸொத்ரெரவஸ்தவாஸ" இத்யாத்யநுஸந்தேயம். "மீனோடேனம்" என்று ஏககாலீகமாகச் சொல்லுவானென்? என்ன, அவன்க்ரமத்திலே இத்யாதி. அவதாரவிஷயமான அநுஸந்தாநத்தில் த்வராதிஶயத்தாலே ஒருகாலே யநுஸந்தித்து, அது உருவெளிப்பாடுபர்யந்தமாய், அத்தாலே ஏககாலமாகவே புத்திபண்ணி, "மீனோடு" என்று ஏககாலமாக அருளிச்செய்கிறா ரென்றபடி. பதற்றம் - த்வரை. "ஆனான்" என்ற மெய்ப்பாட்டுக்குத் தாத்பர்யம்-வடிவும் இத்யாதி. அவதாரிகையில் "என்னைச்சுட்டி" என்கைக்கு இவ்வவதாரங்களாலே இவர்க்கு உபகாரமேது? என்ன, இவைதான் இத்யாதி. ஈஶ்வராவதாரெஷு ந்ரஸிம்ஹ வராஹாவதாரெ ஶ்ரீமத்ஸ்ரீநீஶா: வ்யத்ரவஷிதெஶெஷஸிஹாவ:. விஷ்ணுர்வ்யவதநஹ வெதந விஷயீகரணாயஉதிதீஶஷ்டியஃ. யதா, அவதாராந்தரங்களை யெடாமல், மூன்று அவதாரங்களை யெடுத்ததுக்குத் தாத்பர்யம்-இவை இத்யாதி. வித்யாப்ரதாநலக்ஷணோபகாராநுஸந்தாநத்தாலே மூன்று அவதாரத்தையும் அநுஸந்தித்தாரென்றபடி. "தானானவை" என்றதுக்கு விவரணம் - தன் அவதாரங்களை என்றது. சங்கு - மஹாஸங்க்யாவிஶேஷம். 'ஒன்று, பத்து, நூறு' என்று சிற்றிலக்கஞ் சொல்லுகிறபடியே, 'கோடி, மஹாகோடி, சங்கம், மஹாசங்கம்' என்று பேரிலக்கமுஞ் சொல்லக்கடவதிறே. அந்தப் பேரிலக்கமான சங்கமாகும் - "சங்கு" என்றது. மூன்றுமர்த்தத்துக்கு, ஏகாரம் - ஸ்வரத்திலே. என்னில் தானாயசங்கத்தாலே தான் ஆனயனானான்; அவ்வளவுமன்றிக்கே, மீனோடேனமுமானான் இதி ப்ராதமிகார்த்தாநுகுணக்ரம:. க்ருஷ்ணவதார: பராங்குஶார்யநிமித்த இத்யத்ரப்ரமாணம்-"ஆட்கொள்ளத் தோன்றிய வாயர்தங் கோவினை" இதி. தான் ஆனயனானான்; மீனோடேனமுமானான்; என்னில் தானாய சங்கே உதி ஷிதிய க்ரதீயயொஜிவாஹ யொரநய:. (அ)

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஆஶ்ரிதரோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக எங்கும் வந்து திருவவதாரம் பண்ணும்போது தன்னுடைய ஐஶ்வரமான சிஹ்நங்களைக் கொண்டுவந்து திருவவதாரம் பண்ணியருளு மென்கிறார்.

[எங்கு மென்று தொடங்கி] - பலவிடத்திலும் தேவமநுஷ்யாதிரூபேண வந்து திருவவதாரம் பண்ணியருளி எங்களை வசீகரித்து அடிமைகொண்டவன். [எங்குந்தானாய] - வ்யாப்தியாகவுமாம். (கூ)

ப.—அநந்தரம், அவதாரங்களெல்லாவிடத்திலும் அஸாதாரணசிஹ்நயுக்தனென்கிறார்.

எங்கும்-எல்லாப்ரதேசத்திலும், தானாய-(அவதாரமுகத்தாலே) தான் ஸந்நிஹிதனான, நங்கள்-நம்முடைய, நாதன்-நாதன், அம் - (வெறும்புறத்திலே) அழகிய, கையில்-திருக்கையிலே, சங்குசக்கரம் - (ஆஶ்ரிதர்க்குஅநுபாவ்யமான) சங்க சக்ரங்களை, கொண்டான்-கொண்டான்.

இ.—ஒன்பதாம்பாட்டில், இப்படி அவதரிக்கு மிடத்தில் ஐஶ்வரமான சிஹ்நங்களோடே வந்து அவதரிக்கு மென்கிறார்.

[சங்குசக்கரம்அங்கையிற் கொண்டான்]-வெறும்புறத்திலே துவக்கவல்ல கையிலே,திவ்யாயுதங்களை தரித்தான். திவ்யாயுதங்கள் எல்லாஅவதாரங்களிலு முண்டோ? என்னில்; எங்குமுண்டு; ராஜாக்கள் கறுப்புடுத்துப் புறப்பட்டால் அந்தரங்கர் அபேக்ஷிததசையிலே வந்துமுகங்காட்டுகைக்காகப் பிரியத் திரிவர்கள்; அதுபோலே தோற்றுதேயும் நிற்பர்கள். "கூராராழிவெண் சங்கேந்தி" என்னும்இவர்க்கு அப்படியேயிறே தோற்றுவது. [எங்குந்தானாய] - தேவாதி ஜாதி பேதங்கள்தோறும் வந்து அவதரிக்கும்; வ்யாப்தியாகவுமாம். [நங்கள் நாதனே] - நம்மை எழுதிக் கொள்ளுகைக்காக.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இப்படி அவதரிக்கு மிடத்தில் ஐஶ்வரமான சிஹ்நங்களோடே வந்துஅவதரிக்கு மென்கிறார்.

[சங்குசக்கரம்அங்கையிற்கொண்டான்] - சிலரை வஶீகரிக்க நினைத்தவர்கள், கையிலே மருந்துகொண்டு திரியுமாபோலே, அவதாரங்கள்தோறும் திவ்யாயுதங்களோடே வந்து அவதரிக்கும். திவ்யாயுதங்கள் எல்லா அவதாரங்களிலு முண்டோ ? என்னில் ; எங்குமுண்டு; ராஜாக்கள் கறுப்புடுத்துப் புறப்பட்டால், அந்தரங்கர் அபேக்ஷிததசையிலே முகங்காட்டுகைக்காகப் பிரியத் திரிவர்கள். அதுபோலே தோற்றுதேயும் நிற்பர்கள். * "கூராராழிவெண்சங்கேந்தி - வாராய்" என்னுமிவர்களுக்கு அப்படியேயிறே தோற்றுவது. [சங்குசக்கரம்] - வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டுங் கையிலே திவ்யாயுதங்களைத் தரித்தான். [எங்குந்தானாய] - தேவமநுஷ்யாதிபேதங்கள்

---

ஒன்பதாம்பாட்டு-சங்குசக்கரம் இத்யாதி. "சங்குசக்கரமங்கையிற்கொண்டா னெங்குந்தானாய" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-இப்படி இத்யாதி.

சிலரை வஶீகரிக்க விதி "ஆட்கொள்ளத்தோன்றிய வாயர்தங்கோவினை" "வஶீகரணாய ஸாயுதோநாம" இத்யாதி, "யதாயதா ஹியோகீஶ" இத்யாதி. அஸ்மிந்ஸ்லோகத்வயே தாத்பர்யம் - பகவத்ருசிபரஃ. தடஸ்தஸங்கையை அநுவதிக்கிறார்-திவ்யாயுதங்கள் இத்யாதி. தர்ஹிஸர்வேஷாம் கதாப்ரகாஶத இத்யத்ராஹ-ராஜாக்கள் இத்யாதி. அவன்இப்படி மறைத்துக்கொண்டிருந்தால்,"உண்டு" என்று இவர் அறிந்தபடியென்? என்ன, கூராராழி இத்யாதி. ஸாதாரணாகாரத்தையொழிய, ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்தில் கூர்மையையுடைய திருவாழியையும், ஆஶ்ரிதர்க்கநுபாவ்யமான வர்ணத்தையுடைய பாஞ்சஜந்யத்தையுமேந்தி. அங்கையிலே சங்குசக்கரங்களையுங் கொண்டானிதி-ஹ்ருதிநிதாயார்த்தமாஹ-வெறும்புறத்திலே இத்யாதி. ஆலத்திவழிக்க - நீராஜநமெடுக்க. "எங்குந்தானாய" என்று அவதாரபரமானபோது, நங்கள் நாதனுகைக்காக எங்குந்தானாய

---

* திருவாய்மொழி - கூ-கூ-க.

தோறும் தான் வந்துஅவதரித்துளனாய், அன்றிக்கே, ஒருவனைப்பிடிக்க நினைத்து ஊரைவளைவாரைப் போலே, தம்மை விஷயீகரிக்கைக்காக வ்யாபித்தபடியைச் சோல்லுதல். [நங்கள் நாதனே] - நம்மை யெழுதிக்கோள்ளுகையே ப்ரயோஜநமாக. (௬)

## பத்தாம் பாட்டு.

நாதன்ஞாலங்கோள், பாதன் என்னம்மான்
ஓதம்போல்கிளர், வேதநீரனே.

**ஆ.**—(நாதன்.) இப்படி எனக்காக அஸங்க்யேயமான திருவவதாரங்களைப் பண்ணியருளின இவனுடைய இந்த நிரவதிகமான ஆஶ்ரிதவ்யாமோஹத்தைப் பேசுமிடத்தில், கடலோதம்கிளர்ந்தாற்போலே கிளர்ந்துகொண்டு அவனைப்பேசக்கடவிய வேதங்களே பேசவேண்டாவோ? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், எம்பெருமானுடைய படி வேதைகஸமதிகம்ய மென்கிறார்.

[நாதனென்று தொடங்கி] - ஸர்வேஶ்வரனாய்வைத்து த்ரைவிக்ரமமானபடியைக்காட்டி என்னை அடிமைகொண்டவன். [ஓதமென்று தொடங்கி] - தன் குணாநுஸந்தாநத்தாலே ஓதம் போலே கிளராநின்றுள்ள வேதங்களாலே ப்ரதிபாத்யமான நீர்மையுடையவன்.

ப.—அநந்தரம், ஏவம்வித ஸ்வபாவன் வேதைகஸமதிகம்ய னென்கிறார்.

நாதன்-நிருபாதிக ஸர்வசேஷியாய்(அந்தசேஷித்வநிர்வஹணத்துக்காக), ஞாலம்-ஸமஸ்த ஜகத்தோடும்,கோள் - (தாரதம்யம்பாராமல்) செறிந்த, பாதன்-திருவடிகளையுடையனாய், என்அம்மான் - அத்தாலே எனக்கு அஸாதாரண சேஷியானவன், ஓதம்போல் - ஸமுத்ரம்போலே, கிளர்-கிளர்ந்து ஸ்தோத்ரம்பண்ணி ஸ்வஹ்ருதயத்தை வெளியிடுகிற, வேதம் - வேதங்களாலே சொல்லப்பட்ட, நீரன்-நீர்மையை யுடையவன்.

இ.—பத்தாம்பாட்டில், இவன்படியைப் பேசும்போது, கடல்கிளர்ந்தாற்போலே வேதமே பேசவேண்டாவோ? என்கிறார்.

[நாதன்] - ஸர்வநியந்தாவானவன். [ஞாலங்கோள் பாதன்] - வஸிஷ்ட சண்டால விபாக ரஹிதமாக எல்லார்தலைகளிலுந் திருவடிகளைப் பரப்பினவன். [என்அம்மான்] - இம்மேன்மையையும் நீர்மையையுங் காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவன். அதவா, [நாதன்] - முதற்பாட்டில் சொன்ன நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன். [ஞாலங்கோள் பாதன்] - இரண்டாம் பாட்டிற்சொன்ன அவதார ஸௌலப்யத்தை யுடையவன். [என்அம்மான்] - நான் நின்றநிலையிலே நின்று அநுபவிக்கலாம்படி, மூன்றாம்பாட்டிற்சொன்ன திருமலையிலே வந்து நின்றவன். [ஓதம் போல் கிளர் வேதநீரனே] - இவனுடைய இப்படிகளைச் சொல்லப்புக்கால் கடல்கிளர்ந்தாற்போலே கிளராநின்றுள்ள வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்ட நீர்மையையுடையவன். நீர்மையாகிறது-ஆர்ஜவகுணம்.

---

அங்கையில் சங்குசக்கரங்கொண்டானென்ற அந்வயம்.வ்யாப்திபரமானபோது,சங்குசக்கரமங்கையிற்கொண் டான் நங்கள் நாதனுகைக்காக எங்குந்தானானன் என்ற அந்வயம். தானாய-தானாய்என்னுதல், தானானனென்னுதல். (௬)

ஈடு.—பத்தாம்பாட்டு. அவன்நீர்மையைப் பேசப்புக்கு நம்மால் பேசப்போமோ! கடல்கிளர்ந்தாற்போலே வேதமே பேசவேண்டாவோ? என்கிறார்.

[நாதன்] - ஸர்வநியந்தாவானவன். [ஞாலங்கோள்பாதன்] - வஸிஷ்ட்ட சண்டால விபாகரஹிதமாக எல்லார்தலைகளிலும் திருவடிகளைப் பரப்பினவன். [என் அம்மான்] - இம்மேன்மையையும் நீர்மையையுங் காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவன். அதவா, [நாதன்] - முதற் பாட்டில் சொன்ன ஶேஷித்வத்தை யுடையவன். [ஞாலங்கோள்பாதன்] - இரண்டாம் பாட்டில் சொன்ன அவதாரஸௌலப்யத்தை யுடையவன். [என் அம்மான்] - எனக்குக் கிட்டலாம்படி திருமலையிலே வந்து என்னை அடிமைகொண்டவன். மூன்றும்பாட்டில் "கண்ணுவான்" என்றத்தை நினைக்கிறார். [ஓதம் இத்யாதி] - இவனுடைய இந்நிலைமைகளைப் பேசும்போது, கடல்கிளர்ந்தாற் போலே கிளராநின்றுள்ள வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்ட நீர்மையையுடையவன். நீர்மையாவது- ஆர்ஜவகுணம். (க௦)

## பதினோராம் பாட்டு.

---

நீர்புரைவண்ணன், சீர்சடகோபன்
நேர்தலாயிரத்து, ஓர்தலிவையே.

ஆ.—(நீர்புரை.) அதிஶீதளமாய் ஸர்வபோக்யமான திருநிறத்தையுடையனுயிருந்த எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யமாகிற மஹாகுணத்தை உள்ளபடி பேசிற்று இத்திருவாய் மொழி யென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி எல்லாத் திருவாய்மொழியிலும் ஆராய்ந்து சொல்லப்பட்ட தென்கிறார்.

[நீர்புரைவண்ணன்சீர்] - உபாயஜ்ஞர்க்கு நினைத்தவிடத்திலே கொடுபோகலான நீரின் தன்மையை யுடையவனுடைய குணத்தை. நேர்தல் - சொல்லுகை. ஓர்தல் - ஒப்பன என்னவுமாம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி ஆர்ஜவகுணத்தினுடைய நிரூபணரூபமென்று அருளிச்செய்கிறார்.

நீர்புரை - (ஒருக்கினவிடத்திலே சென்று பாயும்) நீரின் செவ்வைபோலேயிருக்கிற, வண்ணன் - ஸ்வபாவத்தையுடையவனுடைய, சீர் - ஆர்ஜவகுணத்தை, சடகோபன் - ஆழ்வார், நேர்தல் - நேர்ந்து அருளிச்செய்த, ஆயிரத்து - ஆயிரத்தில், இவை - இவை, ஓர்தல் - ஓர்தலை வடிவாக வுடைத்தாயிருக்கும். இது - குறளடிவஞ்சித்துறை.

---

பத்தாம்பாட்டு - நாதன் இத்யாதி. அவன்நீர்மை இத்யாதி-"நீர" என்ற நீர்மையாய், ஆர்ஜவத்தைச் சொல்லி, வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்ட ஆர்ஜவகுணத்தை யுடையவ னென்றபடி.

கீழிரண்டு பதத்தையுங் கூட்டிக்கொண்டு பாவம் - இம்மேன்மையையும் இத்யாதி. பூர்வவாக்ய விவரணம்-மூன்றும்பாட்டில் இத்யாதி. இப்போது, "ஓதம்போல் கிளர் வேதம்" என்ற விஶேஷித்ததுக்குக் கருத்தென்? என்ன, இவனுடைய இந்நிலைமைகளை இத்யாதி. பேசும்போது - பேசப்புக்கால். கடல் கிளர்ந்தாற்போலே கிளராநிற்கும் வேதம்; இப்படி 'கிளராநின்றுள்ள வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்ட நீர்மையையுடையவன்' என்ற கூட்டுவது. அதவா, நீர்மையுடையவனென்னுமித்தனை, நம்மால் பேசமுடியாது என்ற வாக்யஶேஷம். இந்நிலைமைகளை - இஸ்ஸ்வபாவங்களை. ஓதம் - ஸமுத்ரம். கிளருகை - பொங்குகை. க்ரமேண அந்வய:. (க௦)

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி எல்லாத் திருவாய்மொழியிலும் ஆராய்ந்து சொல்லப்பட்ட தென்கிறார்.

[நீர்புரைவண்ணன் சீர்] - நீரோடொத்த ஸ்வபாவத்தை யுடையவனுடைய ஆர்ஜவ குணத்தை. புரை - ஒப்பு. வண்ணம் - ஸ்வபாவம். நீரை வருந்தி மேட்டிலே யேற்றினுற் போலே, ஸம்ஸாரிகள் விலங்கிப்போனது தனக்கு வழியாம்படி தான் செவ்வியனுகை. [சடகோபன் நேர்தல்] - ஆழ்வார் அருளிச்செய்த. நேர்தல்-சொல்லுதல். [ஆயிரத்துஓர்தலிவையே] - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இவை ஓர்ந்து அருளிச்செய்யப்பட்டவை. அதாகிறது - ஸம்ஸாரிகளுடைய அநார்ஜவத்தாலும் இழக்கவேண்டாதபடியான அவனுடைய ஆர்ஜவகுணத்தை அநுஸந்தித்து அருளிச்செய்கை. அன்றிக்கே, சேதநர்க்கு ஓரப்படுமவை. தந்தாம் செவ்வைக் கேட்டால் இழக்கவேண்டாதபடி அவனுடைய ஆர்ஜவகுணத்தைச் சொல்லப்பட்டவை யாகையாலே, சேதநர்க்கு எப்போதும் அநுஸந்தேயமென்கை. ஆயிரத்திலும் சடகோபன் நீர்புரைவண்ணனுடைய சீரை நேர்ந்த இவை யோர்தல்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி எல்லாத்திருவாய்மொழியிலும் அவனுடைய ஆர்ஜவகுணத்தை ஆராய்ந்து சொன்ன பத்து என்கிறார்.

[நீர்புரைவண்ணன்] - ஆக இத்திருவாய்மொழியில் சொல்லிற்றுயிற்று ஸர்வேஶ்வரனுடைய ஆர்ஜவகுணமாயிற்று. நீரோடொத்த ஸ்வபாவத்தையுடையவனுடைய ஆர்ஜவகுணத்தையாயிற்று சொல்லிற்று. ஆர்ஜவகுணமாவது - ஸம்ஸாரிகள் விலங்கிப்போனது தனக்குவழியாம்படி தான் செவ்வையனுகை. [சடகோபன்நேர்தல்] - இவைதாம், இவ்வர்த்தத்தைக் கடக்க நின்று ஒருவன் கவிபாடுகையன்றிக்கே, இவ்வார்ஜவகுணத்துக்கு இலக்கான ஆழ்வார் அருளிச்செய்தவை. [ஆயிரத்து ஓர்தலிவையே] - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு ஓர்ந்து அருளிச்செய்யப்பட்டவை. அதாவது - ஸம்ஸாரிகளுடைய செவ்வைக்கேட்டை யநுஸந்தித்து, அத்தால் இழக்கவேண்டாதபடி அவனுடைய ஆர்ஜவகுணத்தை அநுஸந்தித்து அருளிச்செய்யப்பட்டவை. அன்றிக்கே, ஸம்ஸாரிகளுக்கு ஓரப்படுமவை என்னுதல். ஆயிரத்திலும் சடகோபன் நீர்புரைவண்ணனுடைய சீரை நேர்ந்தஇவை யோர்தல் என்று அந்வயம்.

முதற்பாட்டில், நித்யவிபூதியிலுள்ளாரோடு செவ்வையனுய்ப் பரிமாறும்படியை அருளிச்செய்தார்; இரண்டாம்பாட்டில், லீலாவிபூதியிலுள்ளாருடன் செவ்வையனுய்ப் பரிமாறும்படியை அருளிச்செய்தார்; மூன்றும்பாட்டில், இரண்டு விபூதியி லுள்ளார்க்கும் முகங்கொடுக்கைக்காகத் திருமலையிலே நிற்கிறபடியை அருளிச்செய்தார்; நாலாம்பாட்டில், அவ்வார்ஜவகுணம் தம்மளவிலே பலித்தபடியை அருளிச்செய்தார்; அஞ்சாம்பாட்டில், நான் அவன் குணங்களை விரும்புமாபோலே அவனும் என்தேஹத்தை விரும்பாநின்று னென்றார்; ஆறும்பாட்டில், என்னுடைய தேஹத்தினளவன்றிக்கே, என்னுடைய ஆத்மாவையும் கைக்கொண்டா னென்றார்; ஏழாம்பாட்டில், அவ்வளவுமல்ல, நித்யவிபூதியில் பண்ணும்ஆதரத்தை என்பக்கலிலே பண்ணினு னென்றார்; எட்டாம்பாட்டில், என்னைச்சுட்டி அவன்பிறந்த பிறவிகளுக்கு முடிவில்லை யென்றார்; ஒன்பதாம்பாட்டில், இப்படிப் பிறந்த பிறவிகள்தோறும் தன்ஐஶ்வர்யத்தோடே வந்தவதரித்தா னென்றார்; பத்தாம்பாட்டில், அவ

---

நிகமம் - நீர்புரை இத்யாதி. எல்லாத் திருவாய்மொழியிலும் "ஆராய்ந்து" என்று அந்வயம்.

புரை - ஒப்பு. நீருக்கு ஆர்ஜவமாவது - காட்டின வழியே போகை. லக்ஷ்யமாணுந்வயத்தாலே பலிதம்-ஆக இத்யாதி. ஸப்தார்த்தம்-நீரோடு இத்யாதி. சீரென்று - ஆர்ஜவகுணம். நேர்தல் - சொல்லுதல். ஓர்ந்து - ஆராய்ந்து. ஓரப்படுமவை - நித்யாநுஸந்தேயம். ஓரப்படுமவையென்ற பக்ஷத்தில்அந்வயம்- ஆயிரத்திலும் இத்யாதி. ஓர்ந்து அருளிச்செய்யப்பட்டவை என்ற பக்ஷத்திலே, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு, சடகோபன் நீர்புரை

னுடைய ஆர்ஜவகுணத்தைப் பேசும்போது வேதமே பேசவேண்டுமென்றார்; நிகமத்தில் இத்திருவாய்மொழி ஸம்ஸாரிகளுக்கு எப்போதுமொக்க அநுஸந்திக்கப்படுமென்றார். (௧௧)

---

வண்ணனுடைய சீரையோர்ந்து சேர்த்தவை இவையென்ற அந்வயங் கண்டுகொள்வது. என்னைச்சூட்டி- என்னைக் குறித்து. (௧௧)

---

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**—களபிஜ்ஞவத்ஸகாரணத்வ தயேவிஜந்தஷாத்ரீயமேவ காரணத்வ தயேகாரவ்யம் । ஸந்தஶ்யுதகாநவீ ஹரிஃ ஸ்வவஶீகரோதீத்யாவஷ்ஸாந்த் கரிணொஜநிரஷ்ஜேந ॥

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளீ.**—ஸர்வீணாம் ஸ்வரஸேவ்ய ஸ்வயஜவதாரதி க்ஷூபதிவெத்யகநெதெ மொவாஷ்யமும் யத்தாதஜள ஶ்ரீகதநஸ்ரவஸிகேவாஜநீஸாவஷ்யஸெ । ஸஹ்ந்தாநந்த் வத்தள விஹவஸஜதநள ஸ்வாயயாரவஹஸ்தநீவொஹ்வஹ்ராஹ்யவாஷெநிரவயிஜஜதாஹீரவணெ ஜஹாஷ ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

*ஓடுமனஞ்செய்கைஉரையொன்றினில்லாதாருடனே*
*கூடிநெடுமாலடிமைகொள்ளும்நிலை—நாடறிய*
*ஓர்ந்துஅவன்தன்செம்மை உரைசெய்தமாறனென*
*ஏய்ந்துநிற்கும்.வாழ்வாமிவை.*

*ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.*

---

## ஒன்பதாந் திருவாய்மொழி—இவையும்: ப்ரவேஶம்.

---

ஒ.—ஒன்பதாந்திருவாய்மொழியில், தன்னுடைய விபூதிஶ்ரவணத்தாலே ஸஞ்ஜாத பக்திகனைப், ஏவம்விதனான தன்னை 'ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கவேணும்' என்ற அர்ஜுநனுக்கு அதுக்கீடான திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்தருளி, அதிவிஸ்மயகாமான வைஶ்வரூப்யத்தைக் காட்டி அவனை உஜ்ஜீவிப்பித்தருளினாற்போலே ஸர்வேஶ்வரனைப் ஸ்ரீயஃபதியாய் பரமரஸிகனைப் ஆழ்வார் பக்தியிலே துவக்குண்டு அவரோடு ஏகரஸனான எம்பெருமான், கீழில் திருவாய்மொழியிற் சொன்ன ஆர்ஜவகுணாநுஸந்தாநத்தாலே பிறந்த பக்த்யாரோக்யத்தையுடைய ஆழ்வாருக்கு, மஹிஷீபரிஜநாதிரூபத்தாலே பலவகைகளாலுந் தனக்கு போக்தாக்களானவர்களுக்கு நிரதிஶய போக்யமான தன்னுடைய படிகளைக் காட்டி, அவர்களெல்லாரோடுங் கூட ஸம்ஶ்லேஷிக்கும் ஸம்ஶ்லேஷத்தை, அநாதிகாலம் தாம் இழந்த இழவெல்லாந் தீரும்படி ஸர்வேந்த்ரியங்களாலும் ஸர்வகாத்ரங்களாலும் யதாமநோரதம் தமக்கு ஸாத்மிக்கும்படி தம்மோடே ஸம்ஶ்லேஷிக்க, அத்தை அநுபவித்து ப்ரீதராகிறார்.

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி ஆர்ஜவகுணத்தையுடைய ஸர்வேஶ்வரன், "பொய்கலவாதென்மெய்கலந்தான்" என்றும், "என்னெண்தானானான்" என்றும், கீழ் இவர் சொன்ன க்ரமத்திலே தன்னுடைய குணவிக்ரஹமஹிஷீ பரிஜநவிபூதி சேஷ்டிதங்களோடே

கூட இவரோடே பரிபூர்ணமாக ஸம்ஶ்லேஷித்து அநுபவிப்பிக்கப் பாரித்து, 'இவர் வெள்ளக் கேடாய் உடைகுலையப்படிற் செய்வதென்?' என்று பார்த்து, ஸாத்மிக்க ஸாத்மிக்க புஜிப்பிப்பானாக, இவர் பரிஸரத்திலே வர்த்திப்பது, இவருக்கு அந்திகஸ்த்தனாவது, கூடநிற்பது, இவர் ஶரீரத்தில் ஒரு பக்கத்திலே யாவது, ஹ்ருதயப்ரதேஶத்திலேயாவது, தோள்களிலேசேர்வது, நாவிலே நிற்பது, கண்ணுக்குள்ளேயாவது, நெற்றியிலேயாவது, உச்சியிலேயாவதாகக் கொண்டு, க்ரமத்திலே போகம் தலைமண்டையிடும்படி ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸம்ஶ்லேஷித்தபடியை அருளிச்செய்கிறார்.

இ.—ஒன்பதாந்திருவாய்மொழியில், விபூதிஶ்ரவணத்தாலே ஸஞ்ஜாதபக்திகனாய், 'தன்னைக்காணவேணும்' என்ற அர்ஜுநனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து வைஶ்வரூப்யத்தைக் காட்டி அநுபவிப்பித்தருளினாற்போலே, ஸர்வேஶ்வரனாய் ஸ்ரிய:பதியாய்ப் பரமரஸிகனாய், கீழ்ச் சொன்ன ஆர்ஜவகுணாநுஸந்தாநத்தாலே பெருவிடாய்ப்பட்ட ஆழ்வார் பக்தியிலே துவக்குண்டு அவரோடு ஏகரஸனானவன், மஹிஷீபரிஜநாதிரூபத்தாலே பலவகைகளாலுந் தனக்கு போக்தாக்களானவர்களுக்கு நிரதிஶயபோக்யனானாற் போலே, அநாதிகாலம் இவரிழந்த இழவெல்லாந் தீரும்படியும் ஸாத்மிக்கும்படியுமாக ஸர்வேந்த்ரியங்களாலும் ஸர்வகாத்ரங்களாலும் ஸம்ஶ்லேஷிக்க, அத்தை அநுபவித்து ப்ரீதராகிறார்.

ஈடு.—கீழில்திருவாய்மொழியிலே, அவனுடைய ஆர்ஜவகுணாநுஸந்தாநம் பண்ணினார்; இப்படி அநுஸந்தித்தார்விஷயத்தில் ஸர்வேஶ்வரனிருக்கும்படியை அருளிச்செய்கிறார் இதில். ஸர்வேஶ்வரனாய் ஸ்ரிய:பதியாய்ப் பரமரஸிகனாயிருக்கிறவன், ஆழ்வார்பக்தியிலே துவக்குண்டு இவரோடே ஏகரஸனாயிருந்தான்; ஆழ்வாராகிறார், கீழில் ஆர்ஜவகுணாநுஸந்தாநத்தாலே அவன்பக்கலிலே பெரியவிடாயை யுடையரானார்; 'இது நமக்கு நல்ல வாய்ப்பாயிருந்தது' என்றுபார்த்து, அர்ஜுநன், விபூதிஶ்ரவணத்தாலே 'விபூதிமானானவனைக் காணவேணும்' என்றுஅபேக்ஷிக்க, அதுக்கு உறுப்பாக "[illegible]" (திவ்யம்ததாமிதேசக்ஷு:) என்கிறபடியே - திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து வைஶ்வரூப்யத்தைக் காட்டினாற்போலே, இவர்க்கும் தன்னையநுபவிக்கைக்கீடான விடாயைப் பிறப்பித்துத் தன்னை யநுபவிப்பிக்கிறான், நித்யவிபூதியிலுள்ளாரோடு பரிமாறுமாபோலே பரிமாறக் கோலி. அதாவது - பிராட்டிமாரோடு பரிமாறுவது, மஹிஷிகளான முறையாலே; திருவடியோடு பரிமாறுவது, வாஹநமான முறையாலே; திருவநந்தாழ்வானோடு பரிமாறுவது, படுக்கையான முறையாலே; இப்படி அவர்களோடு ஓரோமுறையாலே பரிமாறும் பரி

---

இவையும் ப்ரவேஶ, வ்ருத்தாநுவாதபூர்வகமாக ஸங்கதி - கீழில் இத்யாதி. ஸர்வேஶ்வரனிருக்கும்படியை அருளிச்செய்கிறார் - ஸாத்ம்யபோகப்ரதத்வம் அருளிச்செய்கிறாரென்றபடி. விஸ்தாரஸங்கதி - ஸர்வேஶ்வரனாய் இத்யாதி. "இவையுமவையும்" இத்யாதியையும், 'திருவின்மணாளன், சுவையன்" இத்யாதியையும்பற்ற, ஸர்வேஶ்வரனாய் இத்யாதி விஶேஷணத்ரயமும். துவக்குண்டு - ஈடுபட்டு. இது - அநயோக்யப்ராவண்யமுண்டான இது நல்லவாய்ப்பா யிருந்ததென்றபடி. இதில் பண்ணுகிற ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை அடியிலே பண்ணுமைக்கு அடியை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - அர்ஜுநன் இத்யாதி. "அபேக்ஷிக்க" என்கிறவிடத்திலே - "[illegible]" என்ற கீதாவசநம் அநுஸந்தேயம். கீதாஶ்லோகாதிஶ - "[illegible]". விடாயைப்பிறப்பித்து - பக்திரூபாபந்நஜ்ஞாநத்தை விஶதமாக்கி. கோலி - "அநுபவிப்பிக்கிறான்" இதிபூர்வே

மாற்றமெல்லாம் இவரோருவரோடு பரிமாறுகிறுனய், அதுதன்னைக் குளப்படியிலே கடலைமடுத்தாற்போலேயன்றிக்கே, போறுக்கப்போறுக்கப் பரிமாற, இவரும் அவனை ஸர்வேந்த்ரியத்தாலும் ஸர்வகாத்ரத்தாலும் யதாமநோரதம் அநுபவித்து,அவ்வநுபவஜநிதப்ரீதியாலே அவனைப்பேசி அநுபவிக்கிறுர்.

## முதற்பாட்டு.

இவையுமவையுமுவையும் இவருமவருமுவரும்
யவையும்யவருந்தன்னுள்ளே ஆகியுமாக்கியுங்காக்கும்
அவையுள்தனிமுதலெம்மான் கண்ணபிரானென்னமுதம்
சுவையன்திருவின்மணுளன் என்னுடைச்சூழலுளானே.

ஆ.—(இவையுமவையும்.) இப்படி எம்பெருமான் என்னேடு ஸம்ச்லேஷித்தருளினுனென்கிறுர்.

ஸ்வஸங்கல்பக்ருத நிகில ஜகதுதய விபவ லயலீலனுய், ஸர்வஜகதாத்ம பூதனுனவன் என்னேடு ஸம்ச்லேஷிக்கையிலுள்ள அபிநிவேசத்தாலே என்னை வசீகரிக்கைக்காக என்னுடைய சூழலிலே வந்து புகுந்தானென்கிறுர்.

ஒ.—முதற்பாட்டில், ஜகத்தினுடைய ஸ்ருஷ்ட்யாதி ஹேதுவாய் ஸர்வாந்தராத்மதயா நின்று, அவற்றுக்கு தாரகனுய் ச்ரியஃபதியாய்ப் பரமரஸிகனுய் எனக்கு போக்யபூதனுய் எனக்கு நாதனுயுள்ள க்ருஷ்ணனுனவன் என்தனக்குத் தன்னேட்டை ஸம்ச்லேஷ ரஸத்தைத் தந்தருளுகைக்காக என்னுடைய பர்யந்தங்களிலே வந்து வர்த்தியாநின்றுனென்று ஹ்ருஷ்டராகிறுர்.

[இவையுமவையும்]-சேதநாசேதநங்களை எல்லாவற்றையும். [தன்னுள்ளே யாகியுமாக்கியுங் காக்கும்]-ஸம்ஹரித்துத் தன்னுடைய தயையாலே அவற்றை யுண்டாக்கி அவற்றினுடைய ரக்ஷணத்தையும் பண்ணுமவன்.

ப.—முதற்பாட்டில், ஸர்வகாரணத்வ ஸர்வாந்தராத்மத்வத்தாலே ஸர்வஸ்மாத்பரனுய் ஸர்வஸுலபனுன ஸ்ரியஃபதி, என்னுடைய பரிஸரத்திலே அநுராவர்த்தியாகாநின்றுனென்கிறுர்.

இவையும் அவையும் உவையும் - அந்திகஸ்த்தமாயும் தூரஸ்த்தமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள அசேதநங்களும், இவரும் அவரும் உவரும் - ஏவம்வித சேதநரும், யவையும் யவரும் - எல்லாம் ஸம்ஹ்ருதி ஸமயத்திலே, தன்னுள்ளே - தன்னுள்ளே, ஆகியும் - ஆம்படியாயும், ஆக்கியும் - (ஸ்ருஷ்டிஸமயத்திலே) உண்டாக்கியும், காக்கும்-(ஸ்ருஷ்டமானவற்றுக்கு ஆபத்துக்களைப் போக்கி அபிமதங்களைக் கொடுத்து) ரக்ஷிக்குமவனுமாய், அவையுள் - அவற்றி

ஞர்வயஃ. "அருகலிலாய்" என்கிற பாட்டைக் கடாக்ஷித்தது,பிராட்டிமாரோடு இத்யாதி.ஸர்வேந்த்ரியத்தாலும் என்றது - "நெஞ்சினுளான்" "கண்ணினுளான்" இத்யாதியைப்பற்ற. ஸர்வகாத்ரத்தாலும் என்றது-"ஒக்கலையான்" "நெற்றியுளான்"-"உச்சியுளான்" இத்யாதியைப்பற்ற."சூழலுளான்" என்றதொடங்கிச் சொன்னதுக்குத் தாத்பர்யம் - போறுக்கப்போறுக்க இத்யாதி. அவனைப்பேசி - அவன் குணங்களைப் பேசி.

னுள்ளே அந்தராத்மாவாயும், தனிமுதல் - உள்ளே ஸஹாயாந்தர நிரபேக்ஷ காரணமுமாய், அம்மான் - ஸ்வாமியுமாய், கண்ணபிரான் - க்ருஷ்ணனுன ஸௌலப்யத்தைக் காட்டி, என் அமுதம் - எனக்கு போக்யபூதனுய், சுவையன் - அத்தாலே தானும் ரஸிகனுனவன், திருவின்மணாளன் - லக்ஷ்மியோடேகூட, என்னுடை - என்னுடைய, சூழலுளான் - சூழலிலேயானுன்.

இ.—முதற்பாட்டில், ஜகத்காரணபூதனுய் ஸர்வாந்தராத்மாவாய் ஸ்ரீயஃபதியா யிருந்துள்ள க்ருஷ்ணனுனவன்,என்னுடையபர்யந்தத்தை விட்டுப்போகமாட்டாதபடியானு னென்கிருர்.

[இவையுமவையுமுவையும் இத்யாதி]-முதல் திருவாய்மொழியில், "நாமவன்" என்கிற பாட்டிற் சொன்ன சேதநாசேதநங்களை மூன்றுவகையாலே சொல்லுகிருர் முதல்திருவாய்மொழிக்குப்பின்பு, தமக்குப் பிறந்த வைஶத்யத்தால் பாசுரப்பரப்பறச் சொல்லுகிருர். [இவையுமவையுமுவையும் இத்யாதி]- பார்ஶ்வஸ்த்தமாயும் தூரஸ்த்தமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள சேதநாசேதநங்களைச் சொல்லுகிறது. [யவையும்யவரும்]-இப்படிகளாலே திரட்டப்பட்ட சேதநாசேதநங்களையும். [தன்னுள்ளேயாகியும்] - "ஸதேவ" என்கிறபடியே 'தான்' என்கிற சொல்லுக்குள்ளேயாம்படி இவற்றை ஸம்ஹரித்தும். [ஆக்கியும்] - தன்னுடைய தயையாலே அவற்றை ஸ்ருஷ்டித்தும். [காக்கும்] - ஸ்ருஷ்டமான அவற்றை ரக்ஷித்தருளும். [அவையுள்தனிமுதல்] - அவற்றின்பக்கலிலே அந்தராத்மாவாய், தானொருவனுமே நிர்வாஹகனுய் நிற்கும். [எம்மான்] - தன்விபூதிவிஷயமாக வுண்டான ஓரத்தைக்காட்டி என்னை அநந்யார்ஹனுக்கினவன். [கண்ணபிரான்] - இப்படிப்பட்டவன் முகந்தோற்றுதபடி மறையநிற்கை யன்றிக்கே கண்ணுக்கு விஷயமாய் வந்து நிற்கும் உபகாரத்தைச் சொல்லுகிறது. [என்அமுதம்] - தேவர்களதிகாரிகளான அம்ருதத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி. [சுவையன்] - ரஸிகன். அவ்வம்ருதத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி, அதுக்கு போக்த்ருத்வ மில்லையே. [திருவின்மணாளன்] - இவருடைய அம்ருதம் ஒருமிதுநமாயிற்று. [என்னுடைச் சூழலுளானே] - பிராட்டி "அகலகில்லேன்" என்னுமவன் என் பர்யந்தத்திலே வர்த்திக்குமது தன்பேருக இராநின்ருன். [திருவின்மணாளன்] - ரஸிகத்வத்துக்குச் சிரமஞ்செய்த விடமென்னுதல், ரஸிகத்வத்துக்கு விஷயம் அவளென்னுதல். [என்னுடைச் சூழலுளானே]-என்னுடைய பர்யந்தத்திலே வர்த்திக்கைக்கு அடி,பிராட்டி யென்னவுமாம். "யஸ்ய ப்ரஸாதஸதநம் ப்ரஸீதே யாஶ்ரிதாஃ ப்ரஜாஃ । ஸாஶ்ரிதோ வாஸுதேவஸ்ய ப்ரஸாதஶ்ரீகாங்க்ஷதே" என்கிறபடியே.

ஈடு.—முதற்பாட்டு. ஸ்ருஷ்ட்யாதி ஹேது பூதனுமாய் ஸர்வாந்தராத்மாவுமான க்ருஷ்ணனுனவன் என்னுடைய பர்யந்தத்தை விட்டுப் போகமாட்டாதபடியானு னென்கிருர். அவனுடைய குணுநுபவத்தோடு விபூத்யநுபவத்தோடு வாசியில்லையிறே இவர்க்கு. முதல் திருவாய்மொழியிலே பரக்க அநுபவித்த இத்தை விஶதமாயிருக்கையாலே திரள அநுபவிக்கிருர்.

[இவையும் அவையும் இத்யாதி] - சித்வர்க்கத்தையும் அசித்வர்க்கத்தையும் திரளச் சொல்லுகிறது. [தன்னுள்ளேயாகியும்] - "இவையுமவையும்" என்று இங்ஙனே பிரித்து வ்யவ

---

முதற்பாட்டு- இவையும் இத்யாதி. "அவையுள்தனிமுதல், கண்ணபிரான், என்னுடைச்சூழலுளான்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-ஸ்ருஷ்ட்யாதி இத்யாதி. ஸாத்ம்யபோக ப்ரதஸ்வரூபகுணுநுபவம் பண்ணுகிற இவர், விபூத்யநுபவம் பண்ணுகிறதென்? என்ன, அவனுடைய இத்யாதி குணங்களோபாதி, ததீயத்வாகாரத்தாலே விபூதியும்அநுபாவ்யமாகையாலே சொல்லுகிருரென்றபடி. ஆனுல் "நாமவன்" என்கிற பாட்டிற்படியே பரக்க அநுபவியாதொழிவானென்? என்ன, முதல் திருவாய்மொழியிலே இத்யாதி; புநருக்திபரிஹாரமாதல். திரள - ஸமுதாயமாக.

இவையும் இத்யாதி - ஸமீபஸ்த்தங்களாயும், தூரஸ்த்தங்களாயும், அதூரவிப்ரக்ருஷ்டங்களாயும், ஸமீபஸ்த்தராயும், தூரஸ்த்தராயும், அதூரவிப்ரக்ருஷ்டராயுமுள்ள. யவையும்யவரும் - சேதநா

ஹரிக்க வோண்ணுதபடி "ஸதேவ" (ஸதேவ) என்கிறபடியே - தானேன்கிற சோல்லுக்குள்ளே யாம்படி தன்மேலே ஏறிட்டுக்கோண்டு தரிக்கும்படியைச் சோல்லுகிறது. [ஆக்கியும்] - "பஹு ஸ்யாம்" (பஹு ஸ்யாம்) என்கிறபடியே தன்பக்கலிலேநின்றும் பிரித்து, நாமரூப விபாகார்ஹமாம் படி பண்ணியும். [காக்கும்] - ஸ்ருஷ்டமான பதார்த்தங்களை ஈரக்கையாலே தடவி ரக்ஷிக்கும் படி. [அவையுள்தனிமுதல்] - ஸ்ருஷ்டமான பதார்த்தங்களிலே, இவை ப்ரவ்ருத்தி நிவ்ருத்யாதி களுக்கு யோக்யமாம்படி அந்தராத்மாவாய் நிற்கும் நிலையைச் சோல்லுகிறது. இது - பின்னை, "ஆக்கியும்" என்று ஸ்ருஷ்டியைச்சோன்னபோதே சோல்லிற்றாகாதோ? என்னில்; "ததநுப்ரவிஶ்ய" (ததநுப்ரவிஶ்ய) என்று இவற்றினுடைய வஸ்துத்வ நாமபாக்த்வங்களுக்காகப் பண்ணும் அநுப்ரவேஶத்தைச் சோல்லுகிறது அங்கு; இங்கு இவற்றுக்குச் சோல்லும் வாசகஶப்தம் தன்னளவிலே பர்யவஸிக்கும்படியாக நிற்கும் நிலையைச் சோல்லுகிறது. [எம்மான்] - தன்விபூதி விஷயமாகத் தனக்கு உண்டான ஓரத்தைக் காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவன். [கண்ண

---

*சேதநங்களெல்லாம். தன்னுள்ளேயாகியும் - ஸம்ஹ்ருதிஸமயத்திலே தன்னுள்ளேயாம்படி பண்ணியும். ஆக்கியும்-ஸ்ருஷ்டிஸமயத்திலே ஸ்ருஷ்டித்தும். காக்கும்- ஸ்ருஷ்டமானவற்றை ரக்ஷிக்குமவனாய். அவையுள் தனிமுதல்-அவற்றினுள்ளே அந்தராத்மாவாயுமுள்ள அத்விதீயகாரணமுமா யென்று ஶப்தார்த்தம். உக்தாநுவாதம்- "யவையும்யவரும்" என்று. "ஆகியும்" என்று ஸம்ஹாரத்தை முந்துறச சொல்லிற்று-ஸருஷ்டி அப்யயபூர்விகை யாகையாலே. ஸ்ருஷ்டிக்குப் பிற்பாடு அத்விதீயகாரணமாவது - ஸர்வாந்தராத்மாவென்னுமதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார்-ஸ்ருஷ்டமான இத்யாதி. பூர்வவாக்யத்தை ஶங்காமுகேந விவரிக்கிறார்-இது பின்னை இத்யாதி; இது - அநுப்ரவேஶம். "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி" என்று- ஸ்ருஷ்டிக்கு அநுப்ரவேஶபூர்வகத்வம் ப்ரதிபந்நமாகையாலே, ஸ்ருஷ்டியைச் சொன்னபோதே அநுப்ரவேஶம் ஸித்தமாகாதோ? என்று ஶங்காதாத்பர்யம். அந்த அநுப்ரவேஶத்திற்காட்டில் இங்குச் சொல்லுகிறதுக்கு வ்யாவ்ருத்தியை தர்ஶிப்பியாநின்றுகொண்டு, இங்கு விவக்ஷிதமான அநுப்ரவேஶத்தை அருளிச்செய்கிறார் - அநேந ஜீவேந இத்யாதி. ஆக, "ஆக்கியும்" என்கிறவிடத்திலே - "அநேந ஜீவேந" இத்யாதிவாக்யோக்தமான ஸ்ருஷ்ட்யர்த்தாநுப்ரவேஶம் சொல்லுகிறது; "அவையுள் தனிமுதல்" என்கிறவிடத்திலே ஸ்ருஷ்டமான பதார்த்தங்களுடைய ஸத்தாநிர்வஹணார்த்தமான ஸ்த்தித்யர்த்தாநுப்ரவேஶஞ் சொல்லுகிறதென்று கருத்து. ஸ்ருஷ்ட்யர்த்தாநுப்ரவேஶமென்றும், ஸ்த்தித்யர்த்தாநுப்ரவேஶமென்றும் அநுப்ரவேஶம் த்விவிதம். காரணாவஸ்த்தையோடு கார்யாவஸ்த்தையோடு வாசியற ஸர்வதா சிதசிதநுப்ரவிஷ்டனான பரமாத்மாவுக்கு ஸ்ருஷ்ட்யர்த்தாநுப்ரவேஶமாவது ஏது? ஸ்த்தித்யர்த்தாநுப்ரவேஶமாவது ஏது? என்னில்; "தத்ஸ்ருஷ்ட்வா ... ... விஶேஷ" என்று ஸம்ப்ரதாயம். சில ஸ்ரீகோஶங்களிலே, "அநேந ஜீவேந" இத்யாதி வாக்யமில்லை; "இது பின்னை" இத்யாதிஶங்காவாக்யாநந்தரம், "ததநுப்ரவிஶ்ய" என்று இவற்றினுடைய வஸ்துத்வ நாமபாக்த்வங்களுக்காகப் பண்ணும் அநுப்ரவேஶத்தைச் சொல்லுகிறது அங்கு. இங்கு இவற்றுக்குச் சொல்லும் வாசகஶப்தம் தன்னளவிலே பர்யவஸிக்கும்படியாக நிற்கும்நிலையைச் சொல்லுகிறது" என்று பரிஹாரவாக்யாவலி சில ஸ்ரீகோஶங்களிலே யிருக்கிறது. அந்தப் பக்ஷத்திலே "சொல்லிற்றாகாதோவென்னில்" என்றதநந்தரம், 'அநேகஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய என்று' என்று கூட்டிக்கொள்வது; 'ததநுப்ரவிஶ்யஎன்று' என்கிறத்தை 'இங்கு' என்ற அநந்தரம் கூட்டிக்கொள்வது" என்று வாக்யத்தைத் திருத்துவர்கள். "தத்ஸ்ருஷ்ட்வா" இத்யாதி வாக்யத்துக்கு - "அக்நிஹோத்ரம் ஜுஹோதி" "யவாகூம் பசதி" என்ற இடத்திற்போலே, பாடக்ரமத்தை அநாதரித்து அர்த்தக்ரமத்தை ஸ்வீகரித்து "ததேவாநுப்ராவிஶத் தத்ஸ்ருஷ்ட்வா ததநுப்ரவிஶ்ய ஸச்ச த்யச்சாபவத்" இத்யாதி ... அந்த - "ஆக்கியும்" என்கிறவிடத்திலே. இங்கு - "அவையுள் தனிமுதல்" என்கிறவிடத்திலே. "இவையும்அவையும்" இத்யாதிக்கு அநந்தரம், "எம்மான்" என்றதுக்கு பாவம்-தன்விபூதி இத்யாதி. ஓரம்-பக்ஷபாதம். "கண்ணபிரானென்றதுக்கு-க்ருஷ்ணனாய் உபகரிக்கு*

பிரான்] - இப்படியிருக்கிறவன்தானே க்ருஷ்ணனென்கையும், அவன்தான் கண்ணுக்குத் தோற்றி நின்று உபகரிக்குமென்கையும். [என் அமுதம்]- தேவர்கள் அதிகாரிகளாம் அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. [சுவையன்] - அவ்வம்ருதத்துக்கு போக்த்ருத்வ மில்லையே. சுவையன் - பரமரஸிகன். இந்த ரஸிகத்வத்துக்கு ஊற்றுவாய்சொல்லுகிறது. [திருவின்மணாளன்] - இவருடைய அம்ருதம் ஒரு மிதுனமாயிற்று. [என்னுடைச்சூழலுளானே] - பெரியபிராட்டியார் * "அகலகில்லே னிறையும்" என்னப் பிறந்தவன், என் பரிஸரத்திலே வர்த்திக்கை தன்பேறாக வர்த்தியாநின்றான். "யஸ்ய ப்ரஸாதேஸததம் ப்ரஸீதேயுரிமாஃப்ரஜாஃ। ஸராமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே" (யஸ்யப்ரஸாதேஸததம் ப்ரஸீதேயுரிமாஃப்ரஜாஃ - ஸராமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே) என்கிறபடியே; "லோகநாதஃபுராபூத்வா ஸுக்ரீவம்நாதமிச்சதி" (லோகநாதஃ புராபூத்வா ஸுக்ரீவம்நாதமிச்சதி) - தம்மையொழிந்தார்க் கெல்லாம் நாதரானவர் ஸுக்ரீவனை நாதனாக இச்சியாநின்றார். கிடைப்பது கிடையாதொழிவது, தாம் முந்துற முன்னம் இச்சியாநின்றார். (க)

## இரண்டாம் பாட்டு.

சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துலகைக்
கேழலொன்றாகியிடந்த கேசவனென்னுடையம்மான்
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்கெண்ணலரியான்
ஆழநெடுங்கடல்சேர்ந்தான் அவனென்னருகலிலானே.

ஆ.—(சூழல்பலபல.) இப்படி என்னுடைய சூழலிலே வந்து புகுந்து, தன்னுடைய திவ்யசேஷ்டிதங்களையும், ப்ரஹ்மாதி வாங்மநஸாபரிச்சேத்யமான தன்னுடைய கல்யாணகுணங்களையும் எனக்குக் காட்டி என்னை வஸீகரித்து, பின்னை என்னருகே எழுந்தருளினா னென்கிறார்.

ஒ.—இரண்டாம் பாட்டில், ப்ரஹ்மேஶாநாதிகளுடைய வாங்மநஸ்ஸுகளுக்கும் அபூமியாயிருந்துவைத்து, அவர்களுக்காக க்ஷீரார்ணவஶாயியாய், தன்னுடைய திருவவதாரங்க

---

மவனென்னுதல், கண்ணுக்கு விஷயமாய் உபகரிக்குமவ னென்னுதல். இவ்வர்த்தத்வயத்தையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார்-இப்படியிருக்கிற இத்யாதி. க்ருஷ்ணனென்கையும்-க்ருஷ்ணனாய் வந்தவதரிக்குமவனென்கையும். "என்" என்றதுக்கு பாவம்-தேவர்கள் இத்யாதி. கீழையுங்கூட்டிபாவம்-அவ்வம்ருதத்துக்கு இத்யாதி. 'சுவையன் திருவின்மணாளன்" என்கிற பதச்சேர்த்திக்கு பாவம் - இந்த இத்யாதி. "என்னமுதம் திருவின் மணாளன்" என்று கூட்டி பாவார்த்தம் - இவருடைய இத்யாதி. "இந்தத் தாத்பர்யத்வயத்தாலும் - வாக்யத்வயோக்தமான புருஷகாரத்வோபேயத்வங்கள் ஸூசிதங்கள்" என்று ஸம்ப்ரதாயம். "திருவின்மணாளனென்னுடைச் சூழலுளான்" என்று கூட்டி அவதாரணத்துக்கு பாவம் - பெரியபிராட்டியார் இத்யாதி. "இவையுமவையும்" இத்யாதியாலே மேன்மையைச்சொல்லி, "அவன்சூழலுளான்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - யஸ்ய இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே சதுர்த்தே, "தஷிணாவித்தாதிஶ்ரேஷ்டோவாநாதோபயாஃ। லோகநாதஃ புராபூத்வா" இத்யாதி. வர்த்தமாநார்த்தம்-கிடைப்பது இத்யாதி. "இச்சதி" என்கையாலே - தௌர்லப்யம் ஸித்தம். க்ரமேண அந்வயஃ. (க)

---

* திருவாய்மொழி - ௬ - ௧௦ - ௧௦.

ளாலும் குணசேஷ்டிதங்களாலும் வஶீகரித்து என்னைத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டவன், எனக்குத் தன்னோட்டை ஸம்ஶ்லேஷ ரஸம் தருகைக்காக என்னருகே வந்து நின்றானென்று த்ருப்தராகிறார்.

[சூழலென்று தொடங்கி] - சேதநரையெல்லாம் தன்பக்கலிலே அகப்படுத்திக்கொள்ள வல்லவான பல திருவவதாரங்களைப் பண்ணவல்லனாய் வராஹகல்பத்துக்கு முதலாய்த் தான் திருவவதரிக்கக்கடவனாகையாலே அழகிதான காலத்திலே ப்ரளயார்ணவ மக்நமான பூலோகத்தை அதிவிலக்ஷணமான அழகையுடைய ஸ்ரீ வராஹமாய் அநாயாஸேந எடுத்தருளி ஆர்த்ரமாய் அதிஸுந்தரமான கேஶபாஶத்தை யுடையவன். [வேழமருப்பை யொசித்தான்] - குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேந பிடுங்கினவன்.

ப.—அநந்தரம், அவதாரமுகத்தாலே ஆஶ்ரிதோபகாரகனானவன், என் அருகே யானான் என்கிறார்.

சூழல் - (ஆஶ்ரிதரை வஶீகரிக்கைக்கீடான) சூழ்ச்சியையுடைய அவதாரங்களை, பல பல - பலவும், வல்லான் - (தன் இச்சையாலே) பண்ணவல்லனாய், தொல்லை - பழையதாய், அம் - (அவதாரோபயுக்தமாகையாலே) அழகியதான, காலத்து - வாராஹகல்பத்தின் முதலிலே, உலகை - (ப்ரளயார்ணவமக்நமான) லோகத்தை, கேழல் ஒன்றாகி - அத்விதீய வராஹமாய்க்கொண்டு, இடந்த - இடந்தெடுத்து, கேசவன் - (ப்ரளயஜலத்திலே நனைந்த) மயிரழகையுடைய, என்னுடை அம்மான் - என் ஸ்வாமியாய், (க்ருஷ்ணனாய் வந்தவதரித்து), வேழம் - (ப்ரதிபந்தகமான) குவலயாபீடத்தை, மருப்பை ஒசித்தான் - ஶ்ருங்கபங்கம் பண்ணினவனாய், (இவ்வுபகாரம்), விண்ணவர்க்கு - (அதிஶயிதஜ்ஞாநரான) தேவர்களுக்கும், எண்ணல் - நினைக்க, அரியான் - அரியனாய், (பின்னையும் ஆஶ்ரிதர்க்கு உதவுகைக்காக), ஆழும் - அகாதமாய், நெடும் - பெருத்த, கடல் - க்ஷீரார்ணவத்திலே, சேர்ந்தான் அவன் - கண்வளர்ந்தருளினவன், என் அருகலிலான் - என் அருகான இடத்திலே யானான். அருகலிலென்று - ஏழாம்வேற்றுமை.

இ.—இரண்டாம்பாட்டில், பர்யந்தத்திலே வந்து நின்ற நிலை ஸாதிக்கித்தவாறே, என்னருகே வந்து நின்றானென்கிறார்.

[சூழல் பலபல வல்லான்] - சூழலென்று அவதாரம் ; அத்தைச் சூழலென்கிறது, சேதநரைத் தப்பாமல் அகப்படுத்திக்கொள்ளுகையாலே. [பலபல] - ஜாதிபேதமும் அவாந்தரபேதமும். [வல்லான்] - அஹேதுகமாகப் பிறக்க வல்லான். [தொல்லை இத்யாதி] - தாம் அகப்பட்டிருப்பதொரு சூழலைச் சொல்லுகிறார். தொல்லை - பழமை. வாராஹகல்பாதியிலே. அம்காலம் - தன் வடிவைக் கண்ணுக்கு இலக்காக்கின காலம். [உலகை] - விமுகமான ஜகத்தைப்பற்றக்கிடீர் தன்னை அழியமாறிற்று. [கேழலொன்றாகி] - அத்விதீயமான வராஹமாய். பின்பு தானே 'இவ்வடிவு கொள்ளவேணும்' என்றாலும் கொள்ளவொண்ணாதபடி அத்விதீயமாயிருக்கை. [இடந்த] - ஜாத்யுசிதமான செருக்கு. பூர்வாவஸ்தையும் ஸ்ரீயபதியேயிறே. [கேசவன்] - தத்காலத்திலே நனைந்த உளைமயிரும் தானுமாயிருந்தபடி. அதிஸுந்தரமான கேஶபாசத்தை யுடையனாயிருக்கை. [என்னுடையம்மான்] - லோகமடங்க ரக்ஷணதர்மத்துக்குக் கர்மீபவித்த நித்தனை ; இவர் ஒருவருமே அச்செயலுக்குத் தோற்று எழுத்துவாங்கினார். ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தாற்போலே ஸம்ஸாரார்ணவங் கொண்ட என்னை எடுத்தவன். [வேழமருப்பை யொசித்தான்] - குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்தாற்போலே என் விரோதி

யைப் போக்கினபடி. இப்படித் தனியே குவலயாபீடத்தின் கையிலே அகப்பட்டிருக்கிறவன் தான் ஆரென்னில்,—[விண்ணவர்க் கெண்ணலரியான்] - ப்ரஹ்மாதிகளுடைய வாங்மநஸுகளுக்கு எட்டாதவன். [ஆழநெடுங்கடல் சேர்ந்தான்] - ப்ரஹ்மாதிகள் ஆபந்நிவ்ருத்திக்காக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தவன். ஆழம் - உறுத்தாமைக்கு. நெடுமை - "தாளுந் தோளும் முடிகளும்" என்கிறபடியே கண்வளர இடம்போந்திருக்கைக்கு. [அவன் என்னருகலிலானே] - அத்தேவர்களுக்குப்போலே அநாதரவிப்ரக்ருஷ்டனன்றிக்கே, என்அருகே வந்து நின்றான்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. என்பரிஸரத்திலே வர்த்தித்தவன், அது ஸாத்மித்தவாறே என் அருகே வந்து நின்றானென்கிறார்.

**[சூழல்பலபலவல்லான்]** - இப்போது சூழலென்கிறது - அவதாரத்தை. அவதாரத்தை "சூழல்" என்பானேன்? என்னில்; சேதநரை அகப்படுத்திக் கொள்ளுமதாகையாலே. ஜாதி பேதத்தையும், அவாந்தர பேதத்தையும் பற்ற, "பலபல" என்கிறது. **[வல்லான்]** - கர்ம நிபந்தநமாகப் பிறக்குமவனுக்கும் முடியாத பிறவிகளைப் பிறக்க வல்லான். கர்மம் செய்ய வல்லதன்றிறே, அநுக்ரஹம் செய்யவல்லது. அவற்றிலே ஒரு சூழல் சொல்லுகிறார் - **[தொல்லை]** - வாராஹகல்பத்தின் ஆதியிலே. **[அம்காலத்து]**-தன்வடிவைக்கண்ணுக்குஇலக்காக்கின காலமிறே, அத்தைப்பற்ற, அங்காலமென்கிறார். [உலகை] - ஒரு திருவடி திருவநந்தாழ்வானுக்காகத் தான் இப்படிப் படப்பெற்றதோ! ஸங்கல்பத்துக்கும் பாத்தம்போராத பூமிக்காகக்கிடீர்! [கேழலொன்றாகி] - தன்மேன்மையோடு அணைந்திருப்பதொரு வடிவைத் தான் கொள்ளப்பெற்றதோ? [ஒன்றாகி] - பின்பு ஸர்வஶக்தியான தானே "இவ்வடிவைக்கொள்ள" என்னிலும் ஒண்ணாதபடி அத்விதீயமாயிருக்கிறபடி. பூமி, ப்ரளயத்திலே அகப்பட்டவாறே, நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத வடிவைக்கொண்ட இத்தனை அவன்தான்; அது அவன் கொண்ட வடிவாகையாலே அழிவுக்கிட்ட வடிவுதனக்கே ஆலத்திவழிக்க வேண்டியிருக்கும்; பன்றியாம்தேசிறே. [இடந்த] - அஜ்ஜாதிக்காக உள்ளதொரு குண மாயிற்றுச் செருக்கு, ஸ்ரியப்பதி அவ்வடிவைக் கொண்டால் சொல்லவேண்டாவிறே. அண்டபித்தியிலே சேர்ந்த பூமியைப் புக்கு எடுத்துக்கொண்டு ஏறினான். [கேசவன்] -

---

*இரண்டாம்பாட்டு-சூழல் இத்யாதி. "என்னருகலிலான்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-என்பரிஸரத்திலே இத்யாதி.*

*"சூழல்" என்கிறது - கீழ்போலே பரிஸரவாசியன்று, அவதாரவாசியென்கிறார்-இப்போது இத்யாதி. சேதநரைச் சூழ்ந்துகொள்ளுமது-சூழலென்றபடி. சூழ்ந்துகொள்ளுகை - வளைத்துக்கொள்ளுகை. வீப்ஸைக்கு - பாவம் - ஜாதிபேத இத்யாதி. அவாந்தரபேதம் - ஏகஜாதியிலுள்ள பேதம். பலவுடையான் என்னாதே, "வல்லான்" என்றதுக்கு ஹாவம் - கர்மநிபந்தந இத்யாதி. கர்மவஶ்யனுக்கொழிய, அகர்மவஶ்யனுக்கு அநேக ஜந்மங் கூடுமோ? என்ன, கர்மம்செய்யவல்லது இத்யாதி. அநுக்ரஹம் நித்யமாகையாலே பாரார்த்தமாக அநேகாவதாரங்களுண்டென்று கருத்து. காலத்துக்கு அழகு ஏது? என்ன, தன்வடிவை இத்யாதி. பாத்தம் - தரம். "கேழல்" என்றதுக்கு பாவம் - தன்மேன்மையோடு இத்யாதி. அணைந்து - கூடி. "ஒன்று" என்றதக்கு பாவம் - பின்பு ஸர்வஶக்தி இத்யாதி. கொள்ளவென்னிலும் - பரிக்ரஹிக்கவேணுமென்றாலும். ஒண்ணாத - கூடாத. விவரணம் - பூமிப்ராளயத்திலே இத்யாதி. அழிவுக்கிட்டவடிவு - வ்யயத்துக்காக ஸம்பாதித்த வடிவு; அதாவது - ராஜாக்கள் ஸ்வார்த்தமாக நல்லபதார்த்தங்களும் ஸம்பாதியாநிற்கச்செய்தே, புறச்செலவுக்காகவும் சில ஸம்பாதிக்குமாபோலே, ஆஶ்ரிதருடைய ஆபத்ரக்ஷணார்த்தமாகக் கொண்ட வடிவென்றபடி. ஆலத்திவழிக்க - ஆலத்தியெடுக்க. அப்படியிருக்குமோ? என்ன, ப்ரமாணம்-பன்றியாம் இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி (கக-அ) வாராஹமான தேஜஸ்ஸையுடைய தேவரென்றபடி. எடுத்து என்னாதே, "இடந்து" என்கிறது - செருக்கின் கார்யமாகையாலே, அத்தைஅருளிச்செய்கிறார்-அஜ்ஜாதிக்காக இத்யாதி. சொல்லவேண்டாவிறே - செருக்*

ப்ரஶஸ்தகேஶன். அப்போதைத் திருமேனியும் உளைமயிருமாய் நின்ற நிலை. [என்னுடை யம்மான்] - ஸம்ஸாரப்ரளயங் கொண்ட என்னை யெடுத்தவன். [வேழமருப்பை யொசித்தான்] - குவலயாபீடத்தினுடைய மருப்பை அநாயாஸேந முறித்தவன். அப்படியே என்னுடைய மதக்களிறு ஐந்தினையும் சேரிதிரியாமல் பண்ணினவன். விரோதிநிரஸநஶீல னென்றபடி. [விண்ணவர்க் கேண்ணலரியான்] - தனியே குவலயாபீடத்தோடே பொருதவன் ப்ரஹ்மருத்ராதிகள் மநோரதத்துக்கும் அவ்வருகானவன். [ஆழநெடுங்கடல் சேர்ந்தான்] - அந்தப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கத் திருப்பாற் கடலிலே சாய்ந்தருளினவன். ஆழம் - உறுத்தாமைக்கு. நெடுமை - தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி வேண்டினபடி கண்வளர்ந்தருளுகைக்கு. [அவனென்னருகலிலானே] - அவர்களைப்போலே எனக்கு அதூரவிப்ரக்ருஷ்டமாகவும் நிற்கிறிலன். (உ)

## மூன்றாம் பாட்டு.

அருகலிலாயபெருஞ்சீர் அமரர்களாதிமுதல்வன்
கருகியநீலநன்மேனிவண்ணன் செந்தாமரைக்கண்ணன்
பொருசிறைப்புள்ளுவந்தேறும் பூமகளார்தனிக்கேள்வன்
ஒருகதியின்சுவைதந்திட்டு ஒழிவிலனென்னோடுடனே.

**ஆ.**—(அருகலில்.) ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநவதிகாஸங்க்யேய குணவிஶிஷ்டனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், நிரதிஶய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமித கல்யாணகுண பரிபூர்ணனாய், பெரியதிருவடியை திவ்யவாஹநமாக வுடையனாய், ஸ்ரீபஃபதியாயிருந்த எம்பெருமான் என்அருகே வந்து பின்னை ஒருபடியால் என்னோடு ஸம்ஶ்லேஷித்து விட்டிலன், ஸர்வப்ரகாரத்தாலும் ஸம்ஶ்லேஷியாநின்றா னென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், மஹிஷீப்ரப்ருதிகள் ஒரோவகைகளாலே தன்னோடு ஸம்ஶ்லேஷரஸம் பெறுமாபோலே யன்றிக்கே, எல்லாவகைகளாலுமுள்ள ஸம்ஶ்லேஷரஸத்தை எனக்குத் தந்து என்னை ஒருகாலும் விடாதபடியானா னென்கிறார்.

[அருகலிலென்று தொடங்கி] - ஹேயப்ரத்யநீக கல்யாணமஹாகுணனாய் அயர்வறுமமரர்களுடைய ஸ்வரூப ஸ்தித்யாதிகளுக்கும் போஷணாதிகளுக்கும் காரணமாய், கறுத்து நெய்த்து விலக்ஷணமான திருவுடம்பில் நிறத்தையுடையான், [பொருசிறையென்று தொடங்கி] - தன்னுடைய விஷயீகாரத்தாலே பிறந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே பற்றி நின்றுள்ள திருச்சிறகையுடைய பெரியதிருவடிமேலே ப்ரீதனாய்க்கொண்டு ஏறுவதுஞ்செய்து பெரிய பிராட்டியாருக்கு நாயகனென்னும் வைலக்ஷண்யத்தை யுடையான். அருகல் - க்ஷயிக்கை.

---

ருக்கு என்று ஶேஷம். செருக்கு - கர்வம். உளைமயிர் - கேஸரங்கள். "உலகையிடந்த கேசவ னென்னுடையம்மான்" என்று கூட்டி ஹாவம் - ஸம்ஸார இத்யாதி. "வேழமருப்பையொசித்தா னென்னுடையம்மான்" என்று கூட்டி ஹாவம் - அப்படியே இத்யாதி. முதல்திருவந்தாதி (சஎ)-மதக்களிறு இத்யாதி. ஶ்ரோத்ராதிகளாகிற மத்தகஜங்களைந்தையும் விஷயங்களாகிற குடியிருப்புகளிலே ஸஞ்சரியாத படியாக என்றபடி. பலிதம்-விரோதி இத்யாதி. "விண்ணவர்க்கெண்ணலரியான்" என்கிற பதத்தைக் கீழும்மேலுங்கூட்டி யோஜிப்பது. தனியே - அஸஹாயேந. விஶேஷணங்களுக்கு ப்ரயோஜநம்-ஆழம் இத்யாதி. நெடுமை - தைர்க்யம். தாளும் இத்யாதி - ஒப்பில்லாத பல திருவடிகளையும் திருத்தோள்களையும் திருமுடிகளையும் பரப்பியென்றபடி. அவர்களைப் போலே - ப்ரஹ்மருத்ராதிகளுக்குப்போலே. அருகலிலான் - அருகான இடத்திலே யானன், ஸமீபஸ்தனானா னென்றபடி. அருகல் - அந்திகம். "அருகலில்" என்ற - ஸப்தமி. க்ரமேண அந்வய:. (உ)

ப.—அநந்தரம், என்னோடே கூடிநின்று பஹுமுகமாக ரஸிப்பியாநின்றானென்கிறார்.

அருகலில் - அபக்ஷயாதிதோஷரஹிதமாய், ஆய - ஸதாஸ்தித்வத்தாலே நித்யமாய், பெரும் - அபரிச்சிந்நமான, சீர் - குணங்களையுடையனாய், அமரர்கள் - நித்யஸூரிகளுக்கு, ஆதி - ஸத்தாதிஹேதுபூதனான, முதல்வன் - ப்ரதாநனாய், கருகிய - மிகவுங்கருகின, நீலம் - நீலரத்நம் போலே, நல் - நன்றான, மேனிவண்ணன் - திருமேனி நிறத்தையுடையனாய், செம் - (அவ்வடிவுக்குப் பரபாகமாம்படி) சிவந்த, தாமரை - தாமரைபோன்ற, கண்ணன் - திருக்கண்களையுடையனாய், பொரு - செறிந்த, சிறை - சிறகையுடையனான, புள் - பெரியதிருவடியை, உவந்து - மிகவும் விரும்பி, ஏறும் - மேற்கொள்ளக்கடவனாய், பூமகளார் - பூவில் மணம் வடிவுகொண்டாற்போலே போக்யபூதையான லக்ஷ்மிக்கு, தனிக்கேள்வன் - அத்விதீயபோக்தாவானவன், என்னோடுடனே - என்னோடே கூடிநின்று, ஒருகதியின் - ஒருவழியாலுள்ள, சுவை - இனிமையை, தந்திட்டு - தந்து, ஒழிவிலன் - தவிருகிறிலன். ஹேயப்ரத்யநீகமாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகமானஸ்வரூபவைலக்ஷண்யமும், நித்யஸூரிநிர்வாஹகத்வரூபமான மேன்மையும், விலக்ஷணவிக்ரஹயோகமும், புண்டரீகாக்ஷத்வமும், கருடவாஹநத்வமும், ஸ்ரிய:பதித்வமுமாகிற பரத்வசிஹ்நங்களாயுள்ள அறுசுவையுந் தாராநின்றானென்று கருத்து. அருகலென்று - குறையாய், க்ஷயமென்றபடி.

இ.—மூன்றாம்பாட்டில், மஹிஷீப்ரப்ருதிகளோடு ஒருவகையாலேயிறே பரிமாறுவது. அங்ஙன் ஓரளவில் தலைக்கட்டுகிறிலன் என்பக்கல் என்கிறார்.

[அருகலிலாய பெருஞ்சீர்] - ஹேயப்ரத்யநீக கல்யாணமஹாகுணன். அருகல் - க்ஷயம்; அதாகிறது - குற்றம். அதாகிறது - ஹேயம். இல் - இல்லாத. அருகல் - கேடு. துர்ப்பிக்ஷமென்னவுமாம். ஆய - ஆன. அருகலிலான - நன்றான. பெருஞ்சீர் - நிஸ்ஸீமமாய் நிஸ்ஸங்க்யமாயிருக்கை. [அமரர்களாதிமுதல்வன்] - அக்குணாநுபவமே யாத்ரையான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகளுக்கும் தாரகாதிகளுக்கும் ஹேதுவானவன். [கருகியநீலநன்மேனி வண்ணன்] - அவர்கள் ஸதாதர்ஶநம்பண்ணுகிற வடிவு இருக்கிறபடி. கருகி செய்த்து நன்றான திருமேனியின் நிறத்தையுடையவன். [செந்தாமரைக் கண்ணன்] - அகவாயில் தண்ணளிக்கு ப்ரகாஶகமாயிருக்குந் திருக்கண்களையுடையவன். [பொருசிறைப்புள்] - ஸ்வவிஷயீகாரத்தாற் பிறந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே பதறாநின்றுள்ள திருச்சிறகையுடையவன். [உவந்தேறும்] - ஒருவினைக்காகவன்றியிலே, ஸ்வயம்ப்ரயோஜநமாயிருக்கை. [உவந்தேறும்] - அவனுக்குள்ள ப்ரியமன்று ஈஶ்வரனுக்கு உள்ளது. [பூமகளார்] - பரிமளம் ஒருவடிவுகொண்டாற்போலேயிருக்கும்படியான போக்யதையையுடையவள். [தனிக்கேள்வன்] - "அத்விதீயநாயகன்" என்னும் வைலக்ஷண்யத்தையுடையவன். [ஒருகதியின் சுவை தந்திட்டு ஒழிவிலன்] - ஒருவகைப்பட்ட ரஸத்தை அநுபவிப்பித்து விடுகிறிலன். நித்யஸூரிகளெல்லார்பக்கலிலும் பண்ணும் ஓரத்தை என்பக்கலிலே பண்ணாநின்றான். [என்னோடுடனே] - "நித்யவிபூதி நிர்வஹணமும் இங்கேயிருந்து" என்னும்படி என்னை விடுகிறிலன்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருவடி, திருவநந்தாழ்வான் பிராட்டிமார் தொடக்கமானாரோடு ஓரோவகையாலே பரிமாறுமவன், என்னளவில் ஓரோவகையில் பரிமாறி விடமாட்டுகிறிலன் என்கிறார்.

[அருகல்] - குறைகை; கேடு. இல் என்பது - இல்லாமை. குறைவின்றிக்கே, ஆய - ஆன; நன்றான. ஹேயப்ரத்யநீகமுமாய் கல்யாணைகதாநமுமான நிரவதிககுணங்களையுடையனு

மூன்றாம்பாட்டு - அருகலிலாய இத்யாதி. "பொருசிறைப்புள்ளுவந்தேறும்" இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை - திருவடி இத்யாதி. இவர்களைச் சொன்னது - திருவநந்தாழ்வானுக்கும் உபலக்ஷணம்.

கேடு என்றது - விவரணம். குறைவாலே ஹேயதையைச் சொன்னபடி. "பெருஞ்சீர்" என்றதுக்கு அர்த்தம் - நிரவதிககுணங்களை என்று. "ஆதி" என்றதுக்கு அர்த்தம் - அக்குணங்களை இத்யாதி. ஆதியத

மாய், அக்குணங்களை நித்யஸூரிகளை ஸதாநுபவம்பண்ணுவிக்கு மவனுமாய், அவர்கள் ஸத்தாதிகள் தன்அதீநமாம்படி யிருக்கிறவன். [கருகியநீலநன்மேனிவண்ணன்] - கறுத்து நெய்த்துப் பேச்சுக்கு அவிஷயமாம்படி விலக்ஷணமான திருமேனியில் நிறத்தையுடையவன். விலக்ஷணமான திருமேனியில் கறுத்து நெய்த்த நிறத்தையுடையவன். அவர்களை ஸதாநுபவம்பண்ணிவைக்கும்போது படி விடும்படி. [செந்தாமரைக்கண்ணன்] - அகவாயில் குணங்களுக்கு ப்ரகாசகங்களான திருக்கண்களையுடையவன். [பொருசிறைப்புள்ளுவந்தேறும்] - ஸர்வேச்வரன் பெரியதிருவடியை மேற்கொள்ளுவதாக நினைத்து 'வா' என்றழைத்தால், அவனுடைய அங்கீகாரத்தாலுண்டான ஹர்ஷத்தாலே பெருக்காறுசுழித்தாற்போலே சுழித்துத் தன்னில் தான் பொராநின்றுள்ள சிறகையுடையனாய்க்கொண்டாயிற்று தோற்றுவது. அவனும் 'நாம்இவனைமேற்கொள்ளப்பெற்றோமே' என்று திருவுள்ளத்தில் ப்ரீதியோடே யாயிற்று மேற்கொள்ளுவது. [பூமகளார்தனிக்கேள்வன்] - புஷ்பத்தில் பரிமளம் வடிவுகொண்டாற்போலே யிருப்பாளாய் போக்யதைகவேஷையான பெரியபிராட்டியார்க்கு வல்லவனென்றால், இப்படிப்பட்ட ஐச்வர்யத்துக்கு இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடியிருக்கிறவன். [ஒருகதியின் இத்யாதி] - அவர்களோடு பரிமாறுமாபோலே ஒருவழியால்வந்த ரஸத்தைத்தந்து விடுகிறிலன், என்னளவில் நித்யஸூரிகளெல்லார்பக்கலிலும் பண்ணும் ஆதரத்தை என்பக்கலிலே பண்ணுநின்றான். [உடனே] - "இவன் ஒருவிபூதிமான், அந்யபரான்" என்று தோற்றஇருக்கிறிலன். நித்யவிபூதியில் கேள்வியும் இங்கேயிருந்தேயாமித்தனை. "தண் தாமம்செய்து" என்று - நித்யவிபூதியில் பண்ணும் விருப்பத்தைப் பண்ணினானென்றார் கீழில் திருவாய்மொழியில்; இதில் - அவ்விபூதியிலுள்ளாரோடு பரிமாறும்படியை என்னோருவனோடு பரிமாறினானென்கிறார். (௩)

## நான்காம் பாட்டு.

உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகள்ஆயர்
மடமகள் என்றிவர்மூவர் ஆளும்உலகமும்மூன்றே
உடனவையொக்கவிழுங்கி ஆலிலைச்சேர்ந்தவனெம்மான்
கடல்மலிமாயப்பெருமான் கண்ணனென்னொக்கலையானே.

---

*இத்யாதி: என்றாய், அமரர்களாலே குணவிசிஷ்டத்வேந ஸ்வீகரிக்கப்படுமவனென்றாய், அத்தாலே-ஸதாநுபாவ்யனென்றபடி. "முதல்வன்" என்றதுக்கு அர்த்தம்-ஸத்தாதிகள் இத்யாதி. ஆதிசப்தத்தாலே-ஸ்த்திதிப்ரவ்ருத்திகளைச் சொல்லுகிறது. ஸத்தாதிகளுக்குக் காரணபூதனென்றபடி. "கருகிய, நீலம், நல்" என்கிற மூன்றையும் நிறத்துக்கு விசேஷணமாக அருளிச்செய்கிறார் - கறுத்து இத்யாதி நெய்த்து - ஸ்நிக்தமாய். நல் - விலக்ஷணமான. பேச்சுக்கு அவிஷயமாம்படி விலக்ஷணமான என்றது - வைலக்ஷண்யாதிசயத்தாலே, "இன்னபடி" என்று சொல்லவொண்ணாதென்றபடி. "நல்" என்றத்தை மேனிக்கு விசேஷணமாக்கி அருளிச்செய்கிறார் - விலக்ஷணமான இத்யாதி. வண்ணம் - நிறம். "அமரர்களாதிமுதல்வன் கருகிய நீலநன்மேனிவண்ணன்" என்ற கூட்டி பாவம் - அவர்களை இத்யாதி. படி - ஜீவநமும், திருமேனியும். "பொருசிறை, உவந்தேறும்" என்ற பதங்களுக்கு பாவம் - ஸர்வேச்வரன் இத்யாதி வாக்யத்வயமும். "பொருசிறை" என்கையாலே - திருவடியுடைய ப்ரீதி சொல்லுகிறது. "உவந்தேறும்" என்கையாலே - ஈச்வரனுடைய உகப்புச் சொல்லுகிறது. மேற்கொள்ளுவதாக - ஆரோஹணார்த்தமாக. காமாக்ஷரங்களைச் சொல்லாமல், "பூமகளார்" என்றவர்க்கு பாவம் - புஷ்பத்தில் இத்யாதி. "அமரர்களாதிமுதல்வன்" "பொருசிறை" இத்யாதிகளைக் கூட்டி பாவம் - அவர்களோடு இத்யாதி. கதி - வழி. சுவை - ரஸம். அவதாரணார்த்தம் - இவனொரு இத்யாதி. அவதாரணார்த்த சமகாஷ்டமாஹ-நித்யவிபூதியில் இத்யாதி. பாட்டுக்கெல்லாந் தாத்பர்யம் - தண்தாமம் இத்யாதி. அருகலிலாய இத்யாத்ய, தனிக்கேள்வன் என்னோடு உடன் ஒரு கதியின் சுவைதந்திட்டொழிவிலன் இத்யந்வய:. (௩)*

ஆ.—(உடனமர்.) இனிமேல் அவன் கலந்தருளின க்ரமத்தைச் சொல்லுகிறார்.

பெரியபிராட்டியாரும் ஸ்ரீ பூமிப்பிராட்டியும் நப்பின்னைப் பிராட்டியும் அவனுக்கு திவ்யமஹிஷிகள்; ப்ருதிவ்யந்தரிக்ஷாதி ஸர்வலோகங்களும் அவனுக்கு லீலோபகரணம்; இந்த லோகங்களினுடைய ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாராதிகள் அவனுக்கு லீலை; இன்னம் அபர்யந்தமாய் ஆஸ்சர்யமான கல்யாணகுணங்களை யுடையனாயிருந்த கண்ணன் யஸோதைப்பிராட்டியொக்கலை யிலே இருந்தருளுமாபோலே, என்னுடைய ஒக்கலையிலே யேறியருளினா னென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ஸர்வேஸ்வரனாய் அத்யாஸ்சர்யபூதனாய் எனக்கு ஸ்வாமியான க்ருஷ்ணன் என்னொக்கலையிலே வந்திருந்தா னென்று ப்ரீதராகிறார்.

[உடனமர்காதல்மகளிர்] - அவனோடு நிரந்தரஸம்ஸ்லேஷாதி ரஸத்தையுடைய பிராட்டிமார். [ஆளுமுலகமும் மூன்றே] - கீழும் மேலும் நடுவு முள்ள லோகங்களாதல், த்ரிவித சேதநராதல். [உடனவையொக்க விழுங்கி ஆலிலைச்சேர்ந்தவன்] - தன்விபூதியில் ப்ரளயாபத்மதமானவற்றைத் தரம்பாராதே ஒருகாலே விழுங்கி ஆலிலையிலே கண்வளர்ந்தருளினவன். [கடல் மலிமாயப்பெருமான்] - கடலில் மிக்கிருந்துள்ள ஆஸ்சர்யங்களை யுடைய ஸர்வேஸ்வரன்.

ப.—அநந்தரம், பூர்ணனாய் ஸர்வரக்ஷகனானவன் என்மருங்கிலே யிராநின்றா னென்கிறார்.

உடன் - கூடியிருந்து, அமர் - தரிக்கும்படியான, காதல் - காதலையுடைய, மகளிர் - பிராட்டிமார், திருமகள்-(அதிஸயிதஸம்பத்ரூபையான) லக்ஷ்மி, மண்மகள் - (க்ஷமாதத்த்வமான) பூமி, ஆயர்மடமகள் - (அநுருபமான) ஆபிஜாத்யந்தன்னையும் ஆத்மகுணத்தையு முடைய நப்பின்னை, என்று - என்று ப்ரதாநதயா ப்ரஸித்தைகளான, இவர் - இவர்கள், மூவர் - மூவர்; ஆளும் - ரக்ஷணீயமான, உலகமும் - ஜகத்தும், மூன்றே - (ஸ்வர்க்கலோக பர்யந்தமான க்ருதகலோகமும், ஜநஸ்தபஸ்ஸத்யரூபமான அக்ருதகலோகமும், மஹர்லோகமாகிற க்ருதகாக்ருதகலோகமுமாகிற) மூன்றாயிருக்கும்; (ப்ரளயகாலத்திலே), அவை - அவற்றை, உடன் - தாரதம்யவிபாகரஹிதமாக, ஒக்க - ஏகோத்யோகத்திலே, விழுங்கி - விழுங்கி, ஆலிலை - ஆலிலையிலே, சேர்ந்தவன் - கண்வளர்ந்து, எம்மான் - (இவ்வபதாநத்தாலே) என்னை அடிமைகொண்ட ஸ்வாமியாய், கடல் - க்ஷீரார்ணவத்திலே, மலி - கண்வளரும் அபிவ்ருத்தியையுடையனாய், மாயம் - ஆஸ்சர்யகுணசேஷ்டிதங்களாலே, பெருமான் - அநவதிகஸ்வபாவனான, கண்ணன் - க்ருஷ்ணனானவன், என் ஒக்கலையான் - (யஸோதைபக்கல் போலே) என் ஒக்கலையிலே யானான். கடலின் மிகுத்த மாய மென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், ஸர்வாதிகனாய் அகடிதகடநா ஸமர்த்தனாயிருக்கிற க்ருஷ்ணன், என்மருங்கிலே யிருக்கை தன்பேறாக நினைத்திராநின்றா னென்கிறார்.

[உடனமர்காதல்மகளிர்] - உடனே அமரவேண்டும்படியான காதலுடைய பிராட்டிமார். "அகலகில்லேனிறையும்" என்றிறே யிருப்பது. அவர்களாரென்னில், - [திருமகள்] - ப்ரதாநமஹிஷியான "நகஸ்ரீணாவபராயுஷி" என்னுமவள்; [மண்மகள்] - முதலிலே "குற்றங் காணக்கடவதோ" என்று அவன்பொறைவிளையுந் தரை. [ஆயர்மடமகள்] - தன்வடிவாலே துவக்கி அவன் திருவுள்ளத்திலே குற்றம்படாதபடி யிருக்கும் நப்பின்னைப்பிராட்டி. [என்றிவர்மூவர்] - மேன்மைக்கும் புருஷகாரத்துக்கும் தனித்தனியே அமைந்திருக்கை. [ஆளுமுலகமும்மூன்றே] - த்ரிவித சேதநவர்க்கமாதல், மேலுங் கீழும் நடுவு மாதல். கீழோடே சேர, "படுக்கைப்பற்று" என்பர் பட்டர். [உடனவையொக்கவிழுங்கி] - ஒருகாலே எல்லாவற்றையும் விழுங்கி. உபயவிபூதியையுஞ் சொன்னபோது, ஸம்ஹாரஞ் சேரும்படி என்னென்னில்;-

ரக்ஷணத்தில் ஒத்திருக்கையாலே சொல்லிற்று அங்கு; இங்கு - அவையென்று - போக்யத்திலே யாகக்கடவது. [ஆலிலைச்சேர்ந்தவன்] - லோகத்தை அடங்க விழுங்கி ஒரு பவனன ஆலந்தளிரின்மேலே கண்வளர்ந்தருளுகிற அகடிதகடநாஸாமர்த்த்யம். [எம்மான்] - அதுக்குமேலே ஒரு அகடிதகடநமிறே இது; "ந ந ஶேஷ" என்றிருந்தவனை, அநந்யார்ஹனாக்கினபடி. பத்ராலம்பநம்பண்ணிக்கிடீர் என்னை எழுதிக்கொண்டது. [கடல்மலிமாயப்பெருமான்] - கடலில் மிக்கிருந்துள்ள ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய ஸர்வேஶ்வரன். க்ஷீராப்தியிலே வந்து குறைவற வர்த்திக்குமவனாய் ஆஶ்சர்ய சேஷ்டிதங்களையுடைய ஸர்வேஶ்வர னென்றுமாம். [கண்ணன்] - இவ்வாஶ்சர்யங்களை யெல்லாம் தன்பக்கலிலே காணலாம்படி யிருக்கிற க்ருஷ்ணன். [என் ஒக்கலையானே] - யஶோதைப்பிராட்டி ஒக்கலையிலே யிருக்குமாபோலே என்னொக்கலையிலே யிருந்தான்.

ஈடு.—நாலாம்பாட்டு. மேன்மைஅது, அகடிதகடநாஸாமர்த்த்யம்அது; இப்படி யிருக்கிறவன், யஶோதைப்பிராட்டி மருங்கிலே யிருக்குமாபோலே என்மருங்கிலே வந்திருக்கை தனக்குப் பேறுப்பேறாக நினைத்து இராநின்றானென்கிறார்.

[உடனமர்காதல்மகளிர்] - உடனே அமரவேண்டும்படியான காதலையுடைய பிராட்டிமார். "அகலகில்லேனிறையும்" என்றாயிற்று இவர்களிருப்பது. அவர்களார்? என்னில்,—[திருமகள்] - ஸர்வேஶ்வரனுக்கு ப்ரதாநமஹிஷியாய்ப் பட்டத்துக்குரியளாய் "நகஸ்ஸிங்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்றிருக்கும் பெரிய பிராட்டியார். [மண்மகள்] - முதலிலே 'குற்றம் பார்க்கக்கடவதோ' என்று அவனுக்குப் பொறைக்கு உவாத்தாய்ப் பொறைவிளையும்படியான ஸ்ரீபூமிப்பிராட்டி. [ஆயர்மடமகள்] - அநுபவஸாதகம் தானாய், தன்வடிவழகாலே துவக்கித் திருவுள்ளத்தில் குற்றம்படாதபடி யிருக்கும் நப்பின்னைப் பிராட்டி. திருமகள் - அவனைஶ்வர்யம். மண்மகள் - அதுவிளையும் பூமி. ஆயர்மடமகள் - அத்தை புஜிக்கிற போக்தாவானவ ளென்றுமாம். [இவர் மூவர்] - மேன்மைக்கும் புருஷகாரத்துக்கும் தனித் தனியே அமைந்திருக்கிற இவர்கள் மூவர். [ஆளுமுலகமும் மூன்றே] - அவர்களுடைய படுக்கைப்பற்று இருக்கிறபடி. த்ரிவிதசேதநரையுஞ் சொல்லுதல்; கிழும், மேலும், நடுவுமான லோகங்களைச் சொல்லுதல். [உடனவையொக்கவிழுங்கி] - அவற்றிலொன்றும் பிரிகதிர்ப் படாதபடி ஏககாலத்திலே தன்திருவயிற்றிலே

---

நாலாம்பாட்டு—**உடனமர்** இத்யாதி. "உடனமர்" இத்யாரப்ய, "ஆலிலைச் சேர்ந்தவ னென்னொக்கலையான்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-**மேன்மையது** இத்யாதி. "ஒக்கலையானே" என்ற ஏகாரத்தைப் பற்ற - **தனக்குப் பேறுப்பேறாக** இத்யாதி. பேறுப்பேறாக - அலப்யலாபமாக.

**அமரவேண்டும்படியான** - க்ஷணமும்பிரியாதே ஸம்ஶ்லேஷிக்கவேண்டும்படியான. **மகளிர்** - பிராட்டிமார். புருஷகாரத்துக்கு உடலாக ஹாவம் - **ஸர்வேஶ்வரனுக்கு** இத்யாதி. **உவாத்தாய்** - உபாத்யாயையாய். மேன்மைக்கு உடலாகத் தாத்பர்யார்த்தம் - **அவனைஶ்வர்யம்** இத்யாதி. இந்த யோஜநாத்வயத்தாலும் - பூர்வோத்தரவாக்யார்த்தம் ஸூசிதம். **படுக்கைப்பற்று** - ஸ்திரீகளுடைய விஷயம். மூன்றின யோஜனையில், லோகஶப்தம் - சேதநவாசி. இத்தால் - விபூதித்வயத்தையுஞ் சொல்லுகிறது. **கீழும் மேலும் நடுவுமான** இத்யாதி - கீழாவது - "த்ரைலோக்யம் க்ருதகம்" என்கிறபடியே க்ருதகமான த்ரைலோக்யம். அதாவது - பாதாளலோகங்களோடே கூட பூமியுமாக வொன்றும், புவர்லோகமும், ஸுவர்லோகமுமாக த்ரைலோக்யமும். மேலாவது - "ஜநஸ்தபஸ்ஸத்யம்" என்கிற மூன்று லோகமும். இந்த மூன்றும் - அக்ருதகம். **நடுவாவது** - "க்ருதகாக்ருதகோ மஹர்லோக இதி ஸ்ம்ருத:" என்கிற மஹர்லோகம். ஆக, க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம் என்கிற மூன்று லோகத்தையுஞ் சொல்லுகிறதென்றபடி. "உடனவையொக்கவிழுங்கி" என்றது - அவாந்தரப்ரளயவிஷயம். "**அவை, உடன், ஒக்க, விழுங்கி**" என்கிற பதத்ரயத்துக்கும் க்ரமேண அர்த்தம் - **அவற்றிலொன்றும்** இத்யாதி.

வைத்து. விபூதித்வயமும் ரக்ஷ்யவர்க்கமென்றால், திருவயிற்றிலே வைக்குமது - ப்ரளயத்துக்குச் சுர்மீபவிக்கும் எல்லையிலே யாகிறது. [ஆலிலைசேர்ந்தவன்] - ஸகலலோகங்களையும் வயிற்றிலே வைத்து ஒரு பவனை ஆலந்தளிரிலே சாய்ந்தருளினவன். அகடிதகடநாஸாமர்த்த்யத்தையுடையவன். [எம்மான்] - அச்சேயலாலே என்னை எழுதிக்கோண்டவன். பத்ராலம்பநம்பண்ணிக் கிடீர் அடிமைகோண்டது. கீழில் அகடிதகடநாஸாமர்த்த்யத்துக்கு மேலே ஒரு அகடிதகடநாஸாமர்த்த்யமாயிற்று இது. "நநமேயம்" (நநமேயம்) என்று இருந்த என்னை அநந்யார்ஹமாக்கினபடி. [கடல் இத்யாதி] - திருப்பாற்கடலிலே குறைவற வந்து வர்த்திப்பானாய், ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களையுடைய ஸர்வேஶ்வரன். அன்றிக்கே, கடலிற்காட்டில் மிக்க ஆஶ்சர்யத்தையுடைய ஸர்வேஶ்வர னென்றுமாம். [கண்ணன்] - அந்த ஆஶ்சர்யங்களெல்லாம் தன்பக்கலிலே காணலாம்படி யிருக்கிற க்ருஷ்ணன். [என் ஒக்கலையானே] - யஶோதைப்பிராட்டி மருங்கிலே யிருக்குமாபோலே என்மருங்கிலே இராநின்றான். (௪)

## ஐந்தாம் பாட்டு.

ஒக்கலைவைத்துமுலைப்பாலுண்ணென்று தந்திடவாங்கிச்
செக்கஞ்செகவன்றுஅவள்பால் உயிர்செகவுண்டபெருமான்
நக்கபிரானோடு அயனும்இந்திரனும்முதலாக
ஒக்கவுந்தோற்றியவீசன் மாயன்என்நெஞ்சினுளானே.

ஆ.—(ஒக்கலை.) *ப்ரஹ்மாதி ஸ்த்தாவராந்தமான ஸர்வஜகத்துக்கும் ஸ்ரஷ்டாவாய், ஸர்வஜகந்நியந்தாவாய், ஆஶ்சர்யபூதனுமாய், விரோதிநிரஸந ஸ்வபாவனுமா யிருந்தவன், என் ஒக்கலையிலே தான் இருந்த இருப்பு எனக்குஸாத்மித்தவாறே, என்மார்விலே வந்திருந்தருளினானென்கிறார்.*

ஒ.—அஞ்சாம்பாட்டில், *ப்ரஹ்மேஶாநாதிகளுக்குங்கூட ஜநகனான ஈஶ்வரன் என்னுடைய ப்ரதிபந்தகங்களெல்லாம் போக்கி என்னெஞ்சிலே வந்து புகுந்தா னென்கிறார்.*

---

உடன்-கார்த்ஸ்ந்யபரம். ஒக்க - காலபரம். பிரிகதிர்ப்படாதபடி - கதிர்பிரியாதபடி. ஒன்றுந்தப்பாதபடி இத்யர்த்த꞉. "உலகமு மூன்று" என்று - த்ரிவிதசேதநரையுஞ் சொன்னபக்ஷத்தில், "உடிஂஜ்ஞாநவோஶி... ஸோய... ோமதா꞉। ஸஹைவிநோவஜாயஞெவ... யெநவ்யஙிவ" என்ற நித்யமுக்தரை- "அவை" என்று - தச்சப்தத்தாலே பராமர்ஶிக்கும்போது, அவர்களையும் விழுங்கக்கூடுமோ? என்ன, விபூதித்வயமும் இத்யாதி. ப்ரளயத்துக்கு-சுர்மீபவிக்குமெல்லையிலே யாகிறது-பத்தாத்மவிஷயமென்றபடி. "ஸவஂ வஷிஂஂ ஹ தஜஜா நிதி" என்கிறவிடத்திலே, 'தஜ்ஜத்வதல்லத்வங்களைச் சொல்லும்போது தச்சப்தம்-ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது; ததந்த்வத்தைச் சொல்லும்போது ரக்ஷணம் ஸ்வேநரூபேண ஆகவேணும் என்கிற ஔசித்யத்தைப் பற்ற, தச்சப்தம்-ஸ்த்தூலசித்விஶிஷ்ட ப்ரஹ்மத்தைப் பராமர்ஶிக்கிறது' என்று ஓதுக்கி ஶ்ருதப்ரகாஶிகாகாரர் வ்யாக்யாநம் பண்ணினாற்போலே, இங்கும், "சுர்மீபவிக்குமெல்லையிலே யொதுக்குகிறார்" என்று ஸம்ப்ரதாயம். பவனை - பவதீதி - பவ꞉ என்றாய், உத்பவியாநிற்கிறவென்றபடி. தளிர் - பல்லவம். பலிதம் - அகடித இத்யாதி. பத்ராலம்பநமாவது - ஆலிலையை அவலம்பிக்கை, ஸ்வபாவார்த்தம். ஆவணவோலை,சாடுவுக்கு அர்த்தம்; அடிமையோலையென்றபடி. "எம்மான்" என்றதுக்கு பாவார்த்தம்-கீழில்அகடிதஇத்யாதி. விவரணம்-நநமேயம் இத்யாதி. கடல்மலி - கடலிலேவர்த்திக்கிற என்னுதல், கடலிற்காட்டில் மிக்கவென்னுதல். மலிதல் - வர்த்திக்கையும், மிகுதியும். யஶோதைப் பிராட்டி மருங்கிலே யென்றது - "கண்ணன்" என்றத்தைப்பற்ற. க்ரமேண அந்வய꞉. (௪)

தந்திட - கொடுக்க. [செக்கஞ்செகவன்றென்று தொடங்கி]-தாய்முகம்பார்த்து முலையுண்ணுமாபோலே திருப்பவளத்தில் சிவப்பு மிகவுந்தோற்றும்படி பூதனைமுகத்தைப் பார்த்து அத்தசையிலே அவள்பக்கல் நின்றும் ப்ராணன் போம்படியாக முலையையுண்ட இவ்வுபகாரத்தாலே எல்லாரையும் அடிமைகொண்டவன். [செக்கஞ்செக] - அவள் கருதின தீங்கு வெல்லும்படி யென்றுமாம். தோற்றிய - தோற்றுவித்த. மாயன் - இப்படியாலே மஹாஶ்சர்யபூதன்.

ப.—அநந்தரம், ஸர்வாதிகனாய் விரோதிநிவர்த்தகனான க்ருஷ்ணன், ஹ்ருதய ப்ரதேஶத்திலே அடங்கியிருந்தா னென்கிறார்.

நக்கபிரானோடு - நிகம்பரனாய் ஈஶ்வரனாக ப்ரஸித்தனான ருத்ரனும், அயனும் - யோநிஜந்மமில்லாமையாலே அஜனென்று ப்ரஸித்தனான ப்ரஹ்மாவும், இந்திரனும்-பரமைஶ்வர்யவிஶிஷ்டனாக பாவித்திருக்கிற இந்த்ரனும், முதலாகவும் - முதலான ஸமஸ்தபதார்த்தங்களையும், ஒக்க - ஏகோத்யோகேந, தோற்றிய - உத்பாதித்த, ஈசன் - ஸர்வேஶ்வரனாய்வைத்து, (அவதாரதசையிலே), ஒக்கலைவைத்து - யஶோதையைப்போலே எடுத்துவைத்து ப்ரேமபாவனையாலே, முலைப்பாலுண்ணென்று - முலைப்பாலையுண்ணென்று, தந்திட-(ஸத்வரமாகத்)தர, வாங்கி - (அத்தை அஶங்கிதமாக) ஸ்வீகரித்து, செக்கம் செக - (அந்தப்பூதனையானவள் "முடிக்கவேணும்" என்று வந்த) நினைவு (அவள்தன்னோடே) முடியும்படி, அன்று - (அவள்நலிவதாக வந்த) அன்று, அவள்பால் - அவளிடத்து, உயிர் - ப்ராணனை, செக - முடியும்படி, உண்ட - (அவள் தந்த பாலை) அமுதுசெய்து, பெருமான் - ஜகத்துக்கு ஈஶ்வரனையுண்டாக்கின ஸர்வாதிகனான, மாயன் - ஆஶ்சர்யபூதன், என் - என்னுடைய (அவயவைகதேஶமான), நெஞ்சினுளான் - ஹ்ருதயப்ரதேஶத்துக்குள்ளே யடங்கினான். செக்கம் - செகுத்தல்; முடிதல்.

இ.—அஞ்சாம்பாட்டில், ப்ரஹ்மாதிகளுக்கு ஜநகனானவன், என் ப்ரதிபந்தகங்களைப் போக்கி என்நெஞ்சிலே வந்து புகுந்தா னென்கிறார்.

[ஒக்கலைவைத்து] - தாய்மார் பிள்ளைகளை ஒசழக்காக † எடுக்குமாபோலே பூதனை ப்ராப்திதோற்ற எடுத்து ஒக்கலையிலே வைத்து முலைப்பாலுண்ணென்று பரிவுதோற்ற உறுக்கிக் கொடுத்தபடி. [தந்திட] - கொடுக்க. அன்றிக்கே, அந்நஞ்சு, தமக்குத் தந்ததாக நினைத்திருக்கும் புத்தியாலே யாகவுமாம்; "ஜுஹ்ஸாநுஹஸ்தை:" என்னுமாபோலே: [வாங்கி] -அவளுடைய ஆதாரம் தனக்கு உண்டாயிருக்கை. [செக்கஞ்செக]-செக்கமென்று - மரணமாய், அவள் நினைத்த மரணம் அவளோடே போம்படி யென்னுதல்: செக்கமென்று - சிவப்பாய், அத்தாலே சீற்றத்தை நினைத்ததாய், அவள்சீற்றம் அவளோடே முடியும்படியென்னுதல்: "இலங்கை செந்தீயுண்ணச்சிவந்து" என்றுஉவப்பைச் சீற்றமாக ப்ரயோகித்ததிறே; செக்கஞ்செக - மிகவும் சிவக்கும்படி; அதாகிறது - தாய்முகம்பார்த்து முலையுண்ணுமாபோலே, திருப்பவளம் மிகச்சிவக்கும்படி பூதனையைப்பார்த்து ஸ்மிதம்பண்ணி, [அன்று அவள்பால்உயிர்செகவுண்ட]-அவள்பக்கல் ப்ராணன் முடியும்படிஉண்டான். [பெருமான்]-"ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ் ஜகத்குரோ:" என்கிறபடியே அவளைமுடித்து ஜகத்துக்கு ஒரு ஶேஷியைத் தந்தான். பெருமானென்று - ஸர்வாதிகத்வத்தைச் சொல்லுகிறது. நக்கன் - நக்நன். பிரானென்று - ஸ்வகோஷ்டி ப்ரஸித்தி. [அயனும்] - அஜனும். அவனுக்கு ஜநகனான ப்ரஹ்மாவும்: [இந்திரனும்] - க்ஷேத்ரஜ்ஞனை ஸம்ப்ரதிபந்நனானவனை ஒக்கச்சொல்லிற்று - ப்ரஹ்மருத்ராதிகளும் அவனோபாதி என்கைக்காக. [ஒக்கவுந்தோற்றியவீசன்] - ஒருகாலே ஸ்ருஷ்டித்த ஸர்வேஶ்வரன். தோற்றியவென்றது - 'பஹு ஸ்யாம்' என்றாற்போலே. [மாயன்]-ஸ்ருஷ்டமான ஜகத்தில் அநுப்ரவேசம் முதலான ஆஶ்சர்யத்னதயுடையவன். [என்னெஞ்சினுளானே] - என்ஶரீரத்தில் ஏகதேஶத்திலே வர்த்தியாநின்றான். நெஞ்சென்று - ஹ்ருதயமாதல், மார்வாதல்.

---

† ஒசழக்கு - செவ்வை.

ஈடு.—அஞ்சாம் பாட்டு. விரோதி நிரஸநஶீலனாய் ஸர்வ ஸ்ரஷ்டாவானவன் வந்து என்னுடைய ஹ்ருதயஸ்தனானானென்கிறார்.

[ஒக்கலைவைத்து] - பரிவுடைய யஶோதைப் பிராட்டியைப்போலே தூக்கியெடுத்து மருங்கிலே வைத்து. [முலைப்பாலுண்ணென்று] - முலைக்கண்ணெறித்து க்லேஶப்படாநின்றேன், உண் என்று உறுக்கிக்கொடுக்க. [தந்திட] - "அஸ்மாநு ஹஸ்தம்" (அஸ்மாந்ஹந்தும்) என்னுமாபோலே, அந்நஞ்சு தமக்குக்கொடுத்தாற்போலே யிருக்கையாலே "தந்திட" என்கிறாராதல்; தருகை - கொடுக்கையாய் வழங்குகையாலே, "தந்திட" என்கிறாராதல். [வாங்கி] - அவள் முலைகொடாவிடில் தரியாதாளாய்க்கொடுத்தாற்போலே, இவனும் முலையுண்ணாவிடில் தரியாதானாய் உண்டபடி. [செக்கஞ்செக]-செக்கம் என்று-மரணமாய், அவள்கோலின மரணம் அவள் தன்னோடே போம்படியென்னுதல். அன்றிக்கே, செக்கம்என்று-சிவப்பாய், அத்தால்-நினைக்கிறது-சீற்றத்தையாய், அவள் சீறினசீற்றம் அவள்தன்பக்கலிலே பலிக்கும்படி யென்னுதல். "இலங்கை செந்தீயுண்ணச் சிவந்து" என்று சிவப்பைச் சீற்றமாக ப்ரயோகித்ததிறே. அன்றியே, செக்கஞ்செக என்றது-செக்கச் சிவக்கவென்றாய்,முலைகொடுத்தஉபகாரஸ்ம்ருதியாலே திருவதரத்தில்பழுப்புத்தோற்ற ஸ்மிதம்பண்ணினபடியாதல். [அன்று]-ஜகதுபஸம்ஹாரம் பிறக்கப் புக்கவன்று. தனியிடத்திலே இவள் நலியவந்த அன்று. [அவள்பாலுயிர்]-அவள்பாலென்றது- அவளிடத்தென்றபடி. அவளுடைய ஹேயஶரீரத்தைப் பற்றிநிற்கிற உயிர். [செக] - முடியும்படி. அன்றிக்கே, அவள்பாலையும் உயிரையும் முடியும்படி என்றுமாம். "முலையூடுயிரைவற்ற வாங்கியுண்டவாயான்" என்னக்கடவதிறே. முலையால்நினைக்கிறது - பாலையிறே அங்கு. முலையுண்டான் என்றால் - முலைப்பாலுண்டா னென்றபடியிறே. [உண்டபெருமான்] - அவள் முலையுண்டு அவளை முடித்து, ஜகத்துக்கு ஒரு ஶேஷியைத் தந்தவன்;

---

*அஞ்சாம்பாட்டு—ஒக்கலை இத்யாதி. "உயிர்செகவுண்டபெருமான், ஒக்கவுந்தோற்றியவீசன், என்னெஞ்சினுளான்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - விரோதி இத்யாதி.*

*"ஒக்கலைவைத்து" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - பரிவுடைய இத்யாதி. முலைகொடுத்த என்னாதே, "முலைப்பாலுண்" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - முலைக்கண் இத்யாதி. உறுக்கி - அதட்டி. கொடுத்தளென்னாதே. "தந்திட" என்கிறதென்? என்ன, - அஸ்மாந்ஹந்தும் இத்யாதி. யுத்தகாண்டே ஸப்ததஶே, "வஷிஷ்வ ப்ராயோபெதஸ்து தாஷி ஷ்வஹராக்ஷஸெஸ்ராக்ஷஸொஹ்யதிவஷ்யஸொஸ்ரு ஹதுகாம ந ஸம்ஶய:" ராமம்ஹந்தும் என்னவேண்டுமஸ்தாநத்திலே, அவரைஹிம்ஸிக்கைதங்களை ஹிம்ஸிக்கிறதாகநினைத்து, "அஸ்மாநு ஹந்தும்" என்றுசொன்னாற்போலேயென்றபடி. அந்நஞ்சு-அவனுக்குக்கொடுத்த நஞ்சு. வழங்குகையாலே - ப்ரயோகமுண்டாகையாலே. தந்திடவுண்ட என்னஅமைந்திருக்க, "வாங்கி" என்றதுக்கு பாவம் - அவள் இத்யாதி. ஆதாதிஶயந்தோற்றுகிறதென்றபடி. முந்தின அர்த்தத்வயத்துக்கும், செக - போக என்றபடி. மூன்றாமர்த்தத்துக்கு, "செக்கம்" என்றும், "செக" என்றும்-சிவப்பாய்.மிகவும்சிவக்கவென்றபடி. திருமொழி(அ-கூ-கூ.)-இலங்கை இத்யாதி.லங்கைதக்தமாம்படிகோபித்தென்றபடி. சிவப்பை இத்யாதி-சிவப்புக்கு வாசகமான ஶப்தத்தைச் சீற்றத்துக்கு ப்ரதிபாதமாக ப்ரயோகித்ததிறே யென்றபடி. (மழலைமென்னகை யிடையிடையருளா வாயிலே முலையிருக்கவென்முகதே)- வாயிலேமுலையிருக்கச்செய்தே, முலைசுரக்கும்படியாக என்முகத்திலே நடுவே நடுவே மழலைச்சிரிப்பாகச் சிரித்துக்கொண்டென்றபடி. பழுப்பு - சிவப்பு. "அன்று" என்றதுக்குத் தாத்பர்யவிஸ்தாரம் - ஜகத் இத்யாதி. ஶப்தவிஸ்தாரம் - தனியிடத்தில் இத்யாதி. பாலையுமுயிரையுமொக்க வுண்டதுக்கு ப்ரமாணம் - முலையூடு இத்யாதி-திருமொழி(க-ந-க)பூதனையுடைய முலைவழியே ப்ராணனும் பாலோடொக்க வற்றும்படியாக வாங்கிபுஜித்த வாயை யுடையவனென்கை. "அவள்பால்" என்றதுக்கு - "முலையூடு" என்றது - ப்ரமாணமோ? என்ன, முலையால் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு லௌகிக ப்ரயோகமுண்டென்கிறார் - முலையுண்டான் இத்யாதி. "உண்ட" என்ற அநந்தரம் "பெருமான்" என்றதுக்கு பாவம் - அவள்முலையில் இத்யாதி. உக்தார்த்தே ஸம்மதிமாஹ - ஸ்தந்யம் இத்யாதி. "ரஸஸ்ரோவீக" என்றவாக்தாம், "ஜஹௌ ப்ராணா:" என்கை*

"ஸ்தந்ய ஜஹிஷஸம்மிஸ்ரம் ஸஸ்ரம்ஸஜஜகத்குரோ:" (ஸ்தந்யந்தத்விஷஸம்மிஸ்ரம்ஸ்ய மாஸீஜ்ஜகத்குரோ:) என்கிறபடியே. [நக்கபிரான் இத்யாதி] - ஸ்வகோஷ்டிக்கு உபகாரகனுக ப்ரஸித்தனு யிருக்கிற ருத்ரனேடேகூட, அவனுக்கும் ஜநகனை சதுர்முகனும், அவனுக்கும் இவ்வருகான இந்த்ரனுந் தொடக்கமாக இவ்வருகு உள்ளாரெல்லாரையும், அத்திக்காயில் அறுமான் போலே ஒன்றாக அரும்பிக்கும்படி பண்ணின ஸர்வேஶ்வரன். [மாயன்] - ஸ்ருஷ்டமான ஜகத்திலே அநுப்ரவேஶம் முதலான ஆஶ்சர்யத்தையுடையவன்; *(ஸர்வஶரீரியாயிருக்கிற ஸர்வேஶ்வரன். [என்னெஞ்சினுளானே] - என்ஶரீரத்தில் ஏகதேஶத்தைப்பற்றி நின்றான். (௫)

## ஆறும்பாட்டு.

மாயனென்னெஞ்சினுள்ளான் மற்றும்யவர்க்குமதுவே
காயமுஞ்சீவனும்தானே•காலுமெரியுமவனே
சேயனணியன்யவர்க்கும் சிந்தைக்குங்கோசரமல்லன்
தூயன்துயக்கன்மயக்கன் என்னுடைத்தோளிணையானே.

ஆ.—(மாயன்.) தேவாதிசரீராதிகளுக்கும் ததந்தர்வர்த்திகளான ஜீவர்களுக்கும் ப்ருதிவ்யாதி பூதங்களுக்கும் ஆத்மாவாய், ஆஶ்ரிதஸுலபனுய், அநாஶ்ரிதர்க்கு அபூமியாய், அபூமியாமிடத்து அவர்கள் எத்தனையேனும் உத்க்ருஷ்டரேயாகிலும் அவர்கள் மநஸ்ஸுக்குங்கூட அபூமியாயிருந்தவன் தான் என்மார்விலே யெழுந்தருளி யிருந்த இருப்பு ஸாத்மித்தவாறே, ஸம்ஶ்லேஷைகப்ரயோஜநனுய்த் தன்னுடைய குணங்களாலும் செயல்களாலும் என்னை நைவித்து என்னை அறிவழித்துக்கொண்டு பெரியதிருவடி திருத்தோளிலே யிருந்தருளுமாபோலே என்னுடைய தோளிலே யேறியிருந்தருளினன். இப்படி மற்றும் ஆரேனும் ஒருவருக்குச் செய்தருளினனே? இவனுக்கு என்பக்கலுள்ள அபிநிவேஶமிருக்கும்படியே ஈது ! என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், ஸர்வாந்தராத்மாவாய் அநாஶ்ரிதர்க்கு துர்லபனுய் ஆஶ்ரிதர்க்கு ஸுலபனை எம்பெருமான் வந்து தோளிணையானனது என் ஒருவன்பக்கலிலே பண்ணும் ப்ரஸாதிஶய மென்கிறார்.

[மற்றும் யவர்க்குமதுவே] - நான்பெற்றபேறு மற்று மாரேனும் பெற்றாருண்டோ? [காயமென்று தொடங்கி] - தேவாதிஶரீரபேதங்களுக்கும் ததந்தர்வர்த்திகளான ஆத்மாக்களுக்கும் ஜகதாரம்பகமான ப்ருதிவ்யாதி பூதங்களுக்கும் அந்தராத்மா தான்; காலுமெரியுமென்று- பூதபஞ்சகத்துக்கும் உபலக்ஷணம். [சேயனென்று தொடங்கி] - அநாஶ்ரிதர்க்கு அத்யந்ததுர்லபனுய் ஆஶ்ரிதர்க்கு அத்யந்தஸுலபனுய் எத்தனையேனும் அளவுடையாரேயாகிலும் அநாஶ்ரி

யாலே - விரோதியைப்போக்கி, ஜகத்துக்கு ஶேஷியைத்தந்தானென்று பாவம். நக்கன் - நக்ந:. அத்திக்காயிலறுமான் - அத்திக்காயிற் கொசுகு. ஒன்றாக - ஏககாலத்திலே. தோற்றிய - தோற்றுவித்த. ஒருகாலே ஸ்ருஷ்டித்தவென்றபடி. அரும்பித்தும்படி - தளிர்வெடிக்கும்படி. ஸ்ருஷ்டிப்ரஸ்த்தமாகையாலே, தத்ஸமபிவ்யாஹ்ருதமான அநுப்ரவேஶ பஞ்சீகரணுதிகளை மாயாஶப்தார்த்தமாக அருளிச்செய்கிறார் - ஸ்ருஷ்டமான இத்யாதி. "மாயனென்னெஞ்சினுளான்" என்றுகூட்டி - என்ஶரீரத்திலேகதேஶத்தை என்றது. மாயன் - ஸர்வஶரீரி. ஏகதேஶத்தைப்பற்றி - என்றது - என்மார்வைப்பற்றியென்னுதல்; அவதாரிகைக்குச்சேர ஹ்ருதயத்தைப்பற்றியென்னுதல். "நெஞ்சிடந்தான்" என்னக்கடவதிறே. இது சதுர்விம்ஶத்ஸஹஸ்ரத்திலே ஸ்புடம். (௫)

* குண்டலித க்ரந்தம் த்வாசித்கம்.

தர்க்கு மநோரதத்துக்கும் விஷயமன்றிக்கே ஆஶ்ரிதர்க்கு அறிய எளியனாய் அநாஶ்ரிதர்க்குத் தன்னை அறியவொண்ணாதபடி ஸம்ஶயவிபர்யயஜ்ஞாநங்களைப் பிறப்பித்து மதிகெடுக்குமவன்.

ப.—அநந்தரம், அநுகூலர்க்கு எளியனாய் ப்ரதிகூலர்க்கு அரியனானவன் என்னுடைய தோள்களை விடுகிறில னென்கிறார்.

என் - என்னுடைய, நெஞ்சினுள்ளான் - நெஞ்சிலே வர்த்திக்கிற, மாயன் - ஆஶ்சர்ய பூதனானவன், மற்றும்யவர்க்கும் - மற்றும் எல்லார்க்கும், அதுவே - அப்படிசெய்யுமோ? (இப்படி என்னளவிலே எளியனாய், ஸர்வாத்மபூதனாய்க்கொண்டு), காயமும் - சரீரமும், சீவனும் - ஆத்மாவும், தானே - தானென்னலாம்படி தனக்கு ப்ரகாரமாகவுடையனாய், காலும் - வாயுவும், எரியும்-அக்நியும், அவனே-அப்படி தனக்கு ப்ரகாரமாய், சேயன்-(இந்நிலை அநாஶ்ரிதர்க்கு அறியவொண்ணாதபடி) தூரஸ்தனாய், அணியன்-(ஆஶ்ரிதர்க்கு அறியலாம்படி) ஆஸந்நனாய், யவர்க்கும்-எத்தனையேனும் அதிகர்க்கும், (ஸ்வயத்நத்தாற் காணுமளவில்),சிந்தைக்கும்-நினைக்கவும், கோசரமல்லன் - விஷயமல்லாதவனாய், தூயன் - (ஆஶ்ரிதர்க்கு அணியனாகைக் கீடான) பரிஶுத்தியையுடையனாய், துயக்கன் மயக்கன் - (அநாஶ்ரிதர்க்கு தூரஸ்தனும்படி) ஸம்ஶய விபர்யய ஜ்ஞாநஜநகனானவன், (பெரியதிருவடியை மேற்கொள்ளுமாபோலே) என்னுடை - என்னுடைய, தோளிணையான் - இரண்டுதோளிலு மிராநின்றான்; (மற்றும் யவர்க்கும் அதுவே யென்று அந்வயமுமாம்.) துயக்கு - விபரீதஜ்ஞாநம். மயக்கு - ஸம்ஶயஜ்ஞாநம்.

இ.—ஆறும்பாட்டில், ஸர்வாந்தராத்மாவாய் அநாஶ்ரிதர்க்கு அரியனாய் ஆஶ்ரிதர்க்கு எளியனானவன் என்தோளைப்பற்றி விடுகிறில னென்கிறார்.

[மாயனென்னெஞ்சினுள்ளான்] - இது என்ன பெறுப்பேறு? ஆஶ்சர்யபூதனானவன் என்னெஞ்சைப்பற்றி வர்த்திக்கையாகிறஇது என்ன சேராச்சேர்த்தி? [மற்றும் யவர்க்கு மதுவே]- புறம்பு ஆரேனும் இதுபெற்றாருண்டோ? நீர்பெற்ற பேறு என்? என்னில்,—[காயமும் சீவனும் தானே] - தேவாதி ஶரீரபேதமும் ததந்தர்வர்த்தியான ஆத்மாவும் அவனிட்டவழக்காயிற்று. [காலுமெரியுமவனே] - ஶரீரத்துக்கு அடியான பூதபஞ்சகமும் அவனிட்ட வழக்கு. காலுமெரியுமென்று - மற்றமூன்றுக்கும் உபலக்ஷணம். [சேயனணியன்] - அநாஶ்ரிதர்க்கு துர்லபன் ஆஶ்ரிதர்க்கு ஸுலபன். [யவர்க்குஞ் சிந்தைக்குங் கோசரமல்லன்] - அநாஶ்ரிதர்க்கு தூரஸ்தனாமதுக்கு எல்லை சொல்லுகிறது. அதிகஜ்ஞாநரேயாகிலும் மநோரதத்துக்கும் அவிஷயமாயிருக்கும். [தூயன்] - யஶோதாதிகளுக்கும் தன்னைப் பரிச்சேதிக்கலாம்படி எளியனாயிருக்கும். [துயக்கன் மயக்கன்] - துயக்கு - மனந்திரிவு. மயக்கு - கூடலும், கலத்தலும். அநாஶ்ரிதர்க்கு அகோசரனுமளவன்றிக்கே, ஸம்ஶய விபர்யயஜ்ஞாநத்துக்கு ஹேதுவாயிருக்கும். [என்னுடைத்தோளிணையானே] - ஸம்ஶயவிபர்யய ரஹிதமாக என்தோளிலே வர்த்தியாநின்றான், பெரிய திருவடிதோளிருப்பை மாறி என் தோளிலே இராநின்றான்.

ஈடு.—ஆறும்பாட்டு. ஸர்வாந்தராத்மாவானவன் என்தோளைப்பற்றி வர்த்தியா நின்றான் என்றார்.

[மாயனென்னெஞ்சினுள்ளான்] - இது என்னபெறுப்பேறு? ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவன், என்னுடைய ஹ்ருதயஸ்த்தனானான். இது என்னசேராச்சேர்த்தி? [மற்

ஆறும்பாட்டு—**மாயன்** இத்யாதி. "காயமும் சீவனுந் தானே, என்னுடைத் தோளிணையானே" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - **ஸர்வாந்தராத்மா** இத்யாதி.

வ-றிவெ-ூாகுரமாயா நாரோதிஷு-ந-வாதாடிஶ-ூநாக: ச-த்ரா-ந-வாதிஶ-ூநாக: சஶகூுடி-ஷெகுரா தரா திஶயகாய-ூகவாஶ்ரா-ந-ஷாஷணஸ்யூஷாவரோஷஇதஎன்னபெறப்பேறு

நும்யவர்க்குமதுவே] - மற்றுமாரேனும் நான்பெற்றபேறு பெற்ருருண்டோ? நீர் பெற்றபேறுதான் என்னென்னில், [காயம்இத்யாதி]-இது என்கிருர் மேல். [காயமும் சீவனுந் தானே]-தேவமநுஷ்யாதி ஶரீரங்களும் அவ்வவஶரீரஸ்த்தமான ஆத்மாக்களும் அவனிட்டவழக்கு. [காலுமெரியும் அவனே] - காற்றும், தேஜஸ்த்தத்வமும், இரண்டும்-அஞ்சுக்கும் உபலக்ஷணமாய், பூதபஞ்சகமும் அவனிட்ட வழக்கு. [சேயன்] - ஸ்வயத்நத்தாலே காண்பார்க்கு தூரஸ்த்தனுயிருக்கும். [அணியன்] - அவனுலே அவனைக் காண்பார்க்குக் கைப்புகுந்தணியனுயிருக்கும். [யவர்க்கும்சிந்தைக்கும் கோசரமல்லன்] - தூரஸ்த்தனும்படிக்கு எல்லை சொல்லுகிறது. எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரா யிருக்குமவர்களுக்கும் கண்ணுக்கு விஷயமாகாமையேயன்றிக்கே, மநோரதத்துக்கும் அவிஷயமாயிருக்கும். [தூயன்] - இப்படியிருக்கிறவன் யஶோதாதிகளுக்கு "யதிஶக்நோஷி" (யதிஶக்நோஷி) - என்னலாம்படியிருக்கும். [துயக்கன் மயக்கன்] - உகவாதார்க்கு ஸம்ஶய விபர்யயங்களைப் பிறப்பிக்

---

இதி; சுடரடிநவவாக்யே "மற்றும்யவர்க்கு மதுவே" உக்தத்வாத், "தோளிணையான்" உக்தாத்வஸம்வந்தே உதி ஸம்ப்ருதே உதிவசநி. "மாயன், என்" உதிவசநம் ஹ்ருதிநியாயாஹ - ஆஶ்சர்யமான இதி. இது என்ன பேறப்பேறு புநருக்திதாத்பர்யம். இதென்ன சோரசீசோர்த்தி - என்னின் தாத்பர்யம். பெருப்பேருனமைக்கு உபபாதகம் - மற்றுமாரேனும் என்று அஃதும்மற்றும்யவர்க்குமே - யவர்க்குமோவென்றபடி. என்னென்னில் - இனியென்னென்னி லென்றபடி. இது இதி - அநேக - "என்னுடைத்தோளிணையான்" உக்தத்வாரஸ்யே. மேலென்றது - "தோளிணையான்" என்றத்தைப்பற்ற. "காயமுஞ்சீவனும்" என்று - ஜாத்யேகவசநமாக அருளிச்செய்கிருர்- தேவமநுஷ்ய இத்யாதி. இவ்விரண்டுமாத்ரமேயோ? ததிதம் என்ன, இரண்டும் இத்யாதி. "சேயன்"- என்றதின் சரமாவதி - யவர்க்கும் இத்யாதி. "யவர்க்கும்" என்ற சஶப்தார்த்தம்-எத்தனையேனும் இத்யாதி. "சிந்தைக்கும் கோசரமல்லன்" என்கிற சஶப்தார்த்தம் - கண்ணுக்குவிஷயமாகாமையேயன்றிக்கே என்றது. தூயன் - பாத்வகந்தரஹிதன். நிஷ்க்ருஷ்டஸௌலப்யகுண ஸஹித இத்யர்த்த꞉. - இப்படியிருக்கிறவன் "தூயன்" என்று - "அணியன்" என்றதுக் கெல்லையைச்சொல்லுகிற தென்றபடி. "உகவாதார்க்கு ஸம்ஶய விபர்யயங்களைப்பிறப்பிக்கும்" என்கிற இடத்திலே ஒரைதிஹ்யம் அருளிச்செய்வர் - பட்டர்திருவோலக்கத்துக்குப் பலகாலும் ஶாஸ்த்ரியாயிருப்பானொரு ப்ராஹ்மணன் சென்ருடியிருப்பானுய், அவனைக்கண்டால் பட்டரும் "வந்தாயோ போனுயோ" என்று ஸாமாந்யேந வ்யவஹரித்தருளிச்செய்வர்; ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பலகாலும் ஸேவிக்க எழுந்தருளுவர், அவரைக்கண்டால் மிகவும் க்ருபைபண்ணி ஆதரித்துக்கொண்டெழுந்தருளியிருப்பர். இத்தைப்பலகாலுங்கண்டிருப்பாரொருவர் பட்டரை வந்துஸேவித்து, 'ஸ்வாமீ! தேவரீர் திருவோலக்கத்துக்கு வருகிற ஶாஸ்த்ரி ப்ரவித்தனுயிருக்கிறவன்; அவன் வந்தால் ஸாமாந்யமாக வ்யவஹரித்தருளுகிறது, ஒருஸாது ஸ்ரீவைஷ்ணவர் வந்தாரென்ருல் அவரை மிகவும் ப்ரதிபத்திபண்ணி யருளுகிறது, இதிரண்டையு மெனக்கு அருளிச்செய்யவேணும்' என்ன, 'ஆனல், எப்போதும்போலே அவர்க ளிரண்டுபேரும் நாளையும் வருவர்கள். அப்போது நீயும் எப்போதையும்போலேபார்த்திரு, இரண்டுஞ்சொல்லுகிருேம்' என்ன, அவரும் அப்படியே பார்த்திருக்க, மற்றைநாள் விடிவோறே அந்தப்ராஹ்மணன் ப்ரதமம்வந்துஸேவிக்க, அவனை யெப்போதையும் போலே வினவியருளி, 'நீராரைத்தான் பரதத்வமென்று நினைத்திருக்கிறது" என்ன, 'சிறிதுப்ரமாணங்கள் ப்ரஹ்மாவே பரதத்வமென்று சொல்லுகிறது, சிறிது ப்ரமாணங்கள் விஷ்ணுவேபரதத்வமென்று சொல்லுகிறது, சிறிது ருத்ரனே பரதத்வமென்று சொல்லுகிறது; ஆகையினலே நம்மாலே நிஶ்சயிக்கப்போமோ" என்ன, "நல்லது" என்றிருந்து, அவன்போனவாறே, ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருளி ஸேவிக்க, அவரையும் க்ருபைசெய்தருளி, "தேவரீர் ஆரைத்தான்பரதத்வமென்றிருப்பீர்" என்ன, "தேவரீர் 'ஶ்ரிய꞉பதிநாராயணனே பரதத்வம்' என்றருளிச்செய்யுமே, அதொழிய அடியேன் வேறொன்றறியேன்" என்ன, "இன்னமுமக்குத்தஞ்சமாகநினைத்திருப்பதென்" என்ன, "எம்பெருமானர் திருவடிகளே உபாயோபேயம்' என்று ப்ரஸாதித்தருளுமே, அத்தையே தஞ்சமாக நினைத்திருப்பேன்." என்ன, திருவுள்ளமுகந்து, "அபசாரத்தை க்ஷமித்தருள, திருமாளிகைக்கெழுந்தருள' என்று அருளிச்செய்து பார்த்திருந்தவரைப்பார்த்து, கண்டீரே 'இருவர்க்குமுண்டான தாரதம்யம், ஆகையாலே இவரைவணங்களோ? அவனை வணங்கவோ, இப்படியன்றே ஸ்வ

கும். [துயக்கன்மயக்கன்] - துயக்கு - மனந்திரிவு. "அருவினையேன்" என்று அகன்ற என் மநஸ்ஸைத் திரியவிட்டு; "உன்தேனேமலரும் திருப்பாதஞ்சேருமாறு" என்னும்படி. திரியவிட்டு என்னுடனே கலந்தவன். மயக்கம் - கலத்தலும், கூடலும். [என்னுடைத்தோளிணையானே] - என்னளவில் அங்ஙனன்றிக்கே, திருவடிதிருத்தோளிலே யிருக்குமாபோலே, இராநின்றான். (சு)

## ஏழாம் பாட்டு.

தோளிணைமேலும்நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும்
தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்
கேளிணையொன்றுமிலாதான் கிளருஞ்சுடரொளிமூர்த்தி
நாளணைந்தொன்றுமகலான் என்னுடைநாவினுளானே.

*ஆ.—(தோளிணை.) தம்மோடு கலந்தருளுகைக்காக எம்பெருமான் தன்னுடைய நிரவதிகமாய் நிருபமுமாய் ஸ்வாபாவிகமான அழகுக்குமேலே, என்னோடே ஸம்ச்லேஷிக்கைக்காக தண்ணந்துழாய்கொண்டணிந்து, ஒருக்ஷணமாத்ரம் என்னைவிடில் தரிக்கமாட்டாத ஸ்வபாவனாய்க் கொண்டு என்னுடைய நாவிலேவந்து புகுந்தருளினானென்கிறார்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், என்னோடு ஸம்ச்லேஷிக்கைக்காகத் திருத்துழாயாலே திருமேனியெல்லாம் அலங்கரித்துக்கொண்டு, எம்பெருமான் என்னுடைய நாவிலே வந்து புகுந்தானென்கிறார். எனக்கு ஸ்துதிவிஷயமானானென்றுமாம்.*

*[கேளிணையொன்று மிலாதான்] - தன்னுடைய ஸ்வரூப குணாதிகளுக்குத் திரளவும் தனியும் ஒப்பில்லாதான். பூர்ணமான ஒப்பில்லாதானென்றுமாம். [கிளருஞ்சுடரொளிமூர்த்தி]- கிளராநின்றுள்ள ஔஜ்ஜ்வல்யத்தையுடைய ஒளியேவடிவாக வுடையவன். [நாளணைந்தொன்று மகலான்] - நாள்தோறும் அணைந்து ஒருகாலும் அகலுகிறிலன்.*

*ப.—அநந்தரம், நிரதிசயபோக்யபூதனானவன் நிரந்தரமாக என் நாவினுள்ளே யானானென்கிறார்.*

*தோளிணைமேலும் - (ரக்ஷகமான) திருத்தோள்களிலும், நல் - அபிமதவிஷயமிருக்கும் மார்பின்மேலும், திருமார்பிலும், சுடர் - சேஷித்வௌஜ்ஜ்வல்யத்தையுடைய, முடிமேலும்- திருமுடியிலும் - தாளிணைமேலும் - சேஷபூதர் பற்றும் திருவடிகளிலும், புனைந்த - அணியப்பட்ட, தண்ணந் துழாயுடை - செவ்வித் திருத்துழாயுடைய, அம்மான் - ஸ்வாமியாய் கேள் - இவ்வொப்பனையழகுக்குப்பொருந்தின, இணை - உவமை, ஒன்றும் இலாதான் - ஒருபடியாலும் இல்லாதவனாய், கிளரும்சுடர் - (ஸ்வாபாவிக தேஜஸ்ஸோடே திருத்துழாயினொளியுங் கலந்து) அபிவ்ருத்தமான சுடர்விடுகிற, ஒளிமூர்த்தி - தேஜோமயதிவ்யவிக்ரஹத்தையுடையனானவன், நாள் - நாடோறும், அணைந்து - கிட்டி, ஒன்றும் - சிறிதும், அகலான்-*

ரூபஸ்த்திதியிருந்தது' என்றருளிச்செய்ய, அவரும் க்ருதார்த்தராய்ப்போனாரென்று. "அடியேன்" என்றத்தோடே சேர அவர் அருளிச்செய்கிறார் - துயக்குமனந்திரிவு இத்யாதி. திரியவிடுகையாவதென்? என்ன, உன்தேனேமலரும் இத்யாதி. கீழே, துயக்குமயக்குகளுக்கு ஸம்சயவிபர்யயபாத்வஞ் சொல்லி, துயக்கு - மனந்திரிவு, மயக்கம் - கலவியாகவுமருளிச்செய்கிறார் - திரியவிட்டு இத்யாதி. என் அளவில் அங்ஙனன்றிக்கே யென்றது - "துயக்கன்மயக்கன்" என்றதின் பூர்வார்த்தத்தைக்கடாக்ஷித்து. த்விதீயார்த்தத்துக்கு, மயக்கென்றதின் சாமாவதி - "தோளிணையான்" என்றதென்று கண்டுகொள்வது. அங்ஙனன்றிக்கே - கலக்கைமாத்ரமன்றிக்கே. காயமும் சீவனுமென்று தொடங்கி, அது மற்றும் யவர்க்குமே என்று அந்வயம். (சு)

அகலாதவனையக்கொண்டு, என்னுடை நாவினுளான் - என் ஜிஹ்வாஸ்தாநத்திலேயானான். கேள்- பொருத்தம்.

இ.—ஏழாம்பாட்டில், நான் உகந்தபடியே அலங்கரித்துக்கொண்டு,என்னாவிலே வந்து புகுந்தான் என்கிறார்.

[தோளிணை இத்யாதி] - அபிமதவிஷயத்தை யணைவார் புழுகு நெய் ஒட்டிக்கொண்டு போமாபோலே, தாம் உகந்தபடியே திருத்துழாயாலே திருமேனியையெல்லாம் அலங்கரித்து வந்தபடி. [தோளிணைமேலும்] - 'ஸமாலம்பவரிஷ்வஜே' என்கிறபடியே அணைக்குந்தோள்களிலும், [நன்மார்பின்மேலும்] - அவன் அப்படி அணைகைக்குப் பற்றுசான பிராட்டி யிருக்கிற திருமார்விலும். [சுடர்முடிமேலும்] - இவ்வணைக்கைதான் வகுத்தவிஷயமாகவிறே புருஷார்த்தமாவது; அந்தசேஷித்வப்ரகாசகமான ஸர்வாதித்வ லக்ஷணமான திருவபிஷேகத்திலும். [தாளிணை மேலும்] - அந்தசேஷித்வத்துக்குத் தோற்றுவிழும் திருவடிகளிலும். [புனைந்ததண்ணந்துழா யுடையம்மான்] - சாத்தின திருத்துழாயையுடைய ஸர்வேஶ்வரன். இதுதான் ஸர்வாதிகத்வ லக்ஷணமிறே. [கேளிணையொன்றுமிலாதான்] - "கேழென்று - அழகும், நிறமும், ஒளியும். கேளென்றத்தை - கேழாக்கி, அத்தாலும் - ஒப்பாய், இணையொன்றும் - ஒப்பைச் சொல்லுகிறதாய், திரளவும் ஒப்பில்லை; ஒருவகையாலும் ஒப்பைச் சொல்லப்போகாது" என்பர்கள். "கேளென்று - உறவாய், இணையென்று-சேர்த்திபாய், ஸர்வதா ஸாத்ருஶ்யஞ் சொல்லலாவதொன்றில்லை" என்பர் பட்டர். [கிளருஞ்சுடரொளிமூர்த்தி] - சுடரென்றும், ஒளியென்றும் - பர்யாயம். மிக்கவொளி யென்றபடி. ஒப்பணமிகையான வடிவையுடையவன். [நாளணைந்தொன்றுமகலான்]- நாள்தோறும் அணைந்து ஒருகாலும் அகலுகிறிலன். [என்னுடை நாவினுளானே] - எனக்கு ஸ்துதிவிஷய மென்னுதல், என்னுடைய நாக்கினுள்ளே நின்றானென்னுதல்.

ஈடு.—ஏழாம்பாட்டு. நான் உகந்தபடியே அலங்கரித்துக்கோண்டு வந்து என்நாவிலே கலந்தா னென்கிறார்.

[தோளிணையித்யாதி] - அபிமதவிஷயம் இருந்த இடத்துக்குப் போவார் அவர்கள் உகந்தபடியே பூசிப்புலர்த்தி யோப்பித்துக்கோண்டு போமாபோலே, ஆழ்வாருகந்தபடியே திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனாய் வந்தானாயிற்று. இவர் உகப்பதும் அதுவே, அவன்கோடுப்பதும் அதுவே

ஏழாம்பாட்டு —தோளிணை இத்யாதி இப்பாட்டுக்கு வாக்யார்த்தமாவது நானுகந்தபடியே அலங்கரித்துக் கொண்டு வந்து என்னாவிலே கலந்தானென்கிறாரென்று இவருகந்தபடியே யொப்பித்துக்கொண்டு வருகைக்கு ஹேதுவேது? என்ன, அபிமத இத்யாதி. இவரபிமதராகையாலே யென்றபடி. பூசிப்புலர்த்தியோப்பித்து இதி- [illegible] "[illegible]" "[illegible]" "[illegible]" இதிஶ்லோக [illegible] "என்னதன்னதாவியும் - உன்னதென்னதாவியுமின்னவண்ணமே நின்றாய் - என்னதாவி மேலையாய்" இத்யாதிகம் [illegible] - இவருகப்பதும் இதி. இதுக்கு ப்ரமாணங்கள்-புள்ஊர்தி இத்யாதி. திருவிருத்தம்.(உ௪)பெரியதிருவடியை நடத்தும் ஸ்வபாவனான க்ருஷ்ணனுடைய மதுஸ்யந்தியான திருத்துழாயினுடைய வட்டணித்தவாளையுடைத்தான மலரிலே அபிநிவிஷ்டமான நெஞ்சோடேகூட. வண்டுதிவளும் இத்யாதி-வண்டுகள் மதுபாநம்பண்ணி, ரஸாயநஸேவை பண்ணினாற்போலே ஒளிவிடும்படியான திருத்துழாயைக் கொடுக்கிறிலீர். விரைமட்டலர் இத்யாதி - பரிமளமும் மதுவும் பரவின செவ்வித்திருத்துழாயென்னாநிற்கும். இதுவும் திருத்தாயார்வார்த்தையாகிலும், "என்னும்" என்று - மகள் ஆசைப்படுகிறதாகச் சொல்லுகையாலே," இவர்தாம்" என்னக்குறையில்லையிறே. கண்ணன்கழல் இத்யாதி - க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயை, விரஹவைவர்ண்யமாகிற பொன்னால்செய்யப்பட்ட

யிறே. புள்ளூர்திகள்ளூருந் துழாய்க்கோயல்வாய் மலர்மேல் மனத்தை யுடையராயிருப்பர்; திருத்தாயார் சோல்லும்போதும் "வண்டுதிவளும் தண்ணந்துழாய்கோடீர்" என்னும்; இவர்தாம் விரைமட்டலர் தண்டுழாயென்னும், கண்ணன்கழல் துழாய் போன்செய்பூண் மேன்முலைக்கேன்று மேலியும்; அவனும் "தன்மன்னுநீள் கழல்மேல் தண்துழாய் நமக்கன்றி நல்கான்" என்று இவர்க்கல்லது கோடான். [தோளிணைமேலும்] - "ஸா காடம் பரிஷஸ்வஜே" [ஸாகாடம் பரிஷஸ்வஜே] என்கிறபடியே அணைக்கக்கணிசிக்கிற திருத்தோள்களிலும். [நன்மார்பின்மேலும்] - அணைப்பிக்குமவளிருக்கிற திருமார்பிலும். [சுடர்முடிமேலும்] - அணைத்துக்கோண்டு நின்று மேல்நோக்கிப் பார்த்தவாறே தன்னுடைய சேஷித்வப்ரகாஸகமா யிருக்கிற திருவபிஷேகத்திலும். [தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழா யுடை யம்மான்] - தன்னுடைய சேஷித்வத்தை ஸ்த்திதிப்பிக்கிற திருவடிகளிலும் சாத்தின திருத்துழாயையுடைய ஸர்வேஸ்வரன். தோளிணையித்யாதிகளுக்கு - பட்டர். 'வீரராயிருப்பார் முற்பட ஆயுதத்துக்கு இவேர்கள், அப்படியே திருத்தோள்களுக்கிட்டான்; ப்ரணயிகளாயிருப்பார் அநந்தரம் அபிமதவிஷயத்துக்குஇவேர்கள். அப்படியே பேரியபிராட்டியார் எழுநதருளியிருக்கிற கோயில் கட்டணத்துக்குக் கோடுத்தான்; ஆயுதத்துக்கும் அபிமதவிஷயத்துக்கும்இட்டால், பின்னைத் தாந்தாம் விநியோகங்கோள்ளுமித்தனையிறே; ஆகையாலேதான் சூடினுன்; சேஷம் பின்னையடியாரிறே கைக்கோள்ளுவார், ஆகையாலே திருவடிகளுக்குச் சாத்தினுன்; ஆபத்துக்கு உதவுவார் அடியாரிறே, தளர்ந்து முறிந்தும் சகடவசுரருடல் வேறுப்பிளந்து வியப்போருவாரடியாரிறே; நம்முடைய ஆபத்துக்களுக்குத் திருவடிகளே துணையாறுற்போலே காணும் அவனுடைய ஆபத்துக்களுக்கும் திருவடிகளே துணையானபடி' என்று அருளிச்செய்வர். [கேளிணையோன்றுமிலாதான்]-

---

ஆபரணசோபையையுடைய, விஸ்லேஷாஸஹமான தவண்டமுலைக்கலங்காரமாக வேணுமென்றுசைப்பட்டு, அது கிடையாமையாலே க்ருஶஶரீரையாகின்றுள் "அன்கொடுப்பதுமதுவே" என்றதுக்கு ப்ரமாணம் - அவனும் இத்யாதி. தன்மன்னுநீள் இத்யாதி-தன்னுடையதாய் ஆஶ்ரிதரிருக்தவிடத்தளவும் செல்லும் திருவடிகளின்மேலே மன்னின ஶ்ரமஹரமான திருத்துழாய் நமக்கன்றி யுகந்து வேறொருவர்க்குக் கொடான். "தோளிணைமேலும்" [illegible] - [illegible]. அணைக்கக் கணிசிக்கிற இதி-[illegible] - அணைப்பிக்குமவள் - புருஷகாரபூதையாகையாலே. அணைத்துக்கோண்டுநின்று இதி -"[illegible]" என்றதுஇவ்விடத்திலே அநுஸந்தேயம். திருவபிஷேகத்திலும் - கிரீடத்திலும். தன்னுடைய சேஷித்வத்தை இதி - "உன்தேனேமலரும் திருப்பாதம்" வடிவிணையில்லாமலர்மகள் பற்றைநிலமகள் பிடிக்கு மெல்லடியைக் கொடுவினையேனும்பிடிக்க" [illegible]. தோளிணை இத்யாதிகளுக்கு-பட்டர் இத்யாதிவாக்யம் ரஸோக்தியாயிருக்கச் செய்தே, தாத்பர்யாந்தரமாயுமிருக்கிறது. அப்படியே திருத்தோள்களுக்கு ஶங்கசக்ராத்யாயுதங்களாகையாலே. கோயில்கட்டணம் - அந்தஃபுரம். "[illegible]." சேஷம்-பின்னை இத்யாதி. ரஸோக்திஃ. [illegible] - ஆபத்துக்கு இதி. அப்படி எங்கே உதவினது? என்ன, தளர்ந்தும் இத்யாதி ஶகடாஸுரனுடைய உடலானது கோப்புக்குலைந்து நடுவே முறிந்தும் வேறும்படி பிளந்திஉருமாயும்படியாகத் திருவடிகளைக் கார்யங்கொண்ட ஸ்வாமியானவனே. நம்முடைய ஆபத்துக்கொழிய, அவனுடைய ஆபத்துக்குத் துணையோ? என்ன, நம்முடைய இத்யாதி. துணையானபடியென்று - 'பட்டருளிச் செய்வர்' என்று அந்வயம். கேளிணையோன்றுமிலாதான்-[illegible]

கேள்என்ற இத்தை - கேழ்என்றாக்கி, அதாவது - ஒப்பாய், இணையென்றும் - ஒப்பாய், திரளவும் தனித்தனியும் ஒப்பில்லாதானென்னுதல் ; அன்றிக்கே, கேள்என்று - உறவாய், சேர்ந்தவொப்பில்லாதான் என்னுதல். [கிளரும்] - ஆற்றுப்பெருக்குப்போலே மேல்மேலெனக்கிளராநிற்பதாய் நிரவதிகதேஜோரூபமான திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையவன். "சுடர்" என்றும், "ஒளி" என்றும் - பர்யாயம். இரண்டாலும் - மிக்கவொளி யென்றபடி. ஒளி - பேரழகு. [மூர்த்தி] - கீழ்ச்சொன்ன ஒப்பனை மிகையாம்படியான வடிவை யுடையவன். [நாளணைந்து] - நாள்தோறும் வந்து கிட்டுமேத்தனையல்லது கால்வாங்கமாட்டுகிறிலன். [என்னுடை யித்யாதி] - என்னுடைய ஸ்துதிவிஷயமானனென்னுதல் ; அன்றிக்கே, "வாசி திஷ்டு" [வாசிதிஷ்டட்டங்] என்கிறபடியே, என்னுடைய வாகிந்த்ரியத்துக்கு விஷயமானனென்னுதல். (எ)

## எட்டாம் பாட்டு.

நாவினுள்நின்றுமலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம்
ஆவியுமாக்கையுந்தானே அழிப்போடளிப்பவன்தானே
பூவியல்நால்தடந்தோளன் பொருபடையாழிசங்கேந்தும்
காவிநன்மேனிக்கமலக்கண்ணன் என்கண்ணினுளானே.

*ஆ.—(நாவினுள்.) ஸாங்கஸகலவேத ப்ரதிபாத்யனாய் தத்ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திஹேதுபூதனாய் நிகிலஜகதுதயவிபவ லயலீலனாய் புஷ்பஹாஸஸுகுமாரனாய் சதுர்ப்புஜனாய் ஶங்கசக்ரகதாதரனாய் இந்தீவரதளஶ்யாமனாய் கமலபத்ராக்ஷனாயிருந்தவன், என்கண்ணுக்குள்ளே புகுந்தருளினா னென்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், ஸர்வவித்யாஸ்தலங்களுக்கும் ஶப்தார்த்த ஸம்பந்தநியமங்களையும், அவற்றினுடைய ஸ்திதி ஸம்ஹாரங்களையும் பண்ணும் ஸ்வபாவனான எம்பெருமான், என் கண்ணுள்ளே வந்து புகுந்தா னென்கிறார் ; என்கண்ணுக்கு விஷயமானா னென்றுமாம்.*

*[நாவினுள்நின்று மலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம்] - ஜிஹ்வாக்ரத்திலே விகஸியாநின்றுள்ள வித்யாஸ்தலங்களுக்கெல்லாம். ஆவியாகிறது - அர்த்தம். ஆக்கையாகிறது - ஶப்தம். அழிப்போடளிப்பாவது-வித்யைகள் கெடாமே காக்கையும், லேககதோஷாதிகளாலே ஸ்வரூபம் அந்யதாபவித்தால் அத்தை ஸம்ஹரிக்கையும். [பூவியல் நாற்றடந்தோளன்] - திருமாலைகளாலே அலங்க்ருதமான நாலு திருத்தோள்களையுமுடையான். [பொருபடையென்று தொடங்கி] - யுத்தஸாதகமான திருவாழியையும் ஶ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஏந்தும் ஸ்வபாவனாய், ஒருசாயல் செய்த*

---

ஸாஜ்யெஷதி. தஸிஷ-ஷயவியெஸாஜெகிஷிஃவி ஸாஜஜஸ்யநாஸீதிவ்யஶாய௯ஃ. ஊநாரஸுவஃஜஷாஷஷஸுதஃகஸுநவஃாயெ௯ாஃஸ்ய நாஸீதிஷிர்யஃ. உறவு - ஸத்ருஶம். "நிரவதிகதேஜோரூபமான" என்றத்தை உபபாதிக்கிறார்-சுடரென்றும் இத்யாதி. அர்த்தாந்தரம்- ஒளி பேரழகு என்ற. அதாவது - ஸமுதாயஸௌந்தர்யம். "புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" என்றவநந்தரம் வடிவைச்சொன்னதுக்குபாவம் - கீழ்ச்சொன்ன இத்யாதி. ஒன்றுமகலான் - ஏகதேஶமுமகலான். ஸ்துதிவிஷயமானன் - நாவாலுண்டான ஸ்துதிக்கு விஷயமானன். வாகிந்த்ரியத்துக்குவிஷயமானன் என்றது - அந்தர்யாமியானனென்றபடி. வ்யூஹஃாரணாகெ ஊஷயஃாதி வ்யூஹணெ', 'யொவாசிதிஷ்டு வாசொஷரஃ', உதஜாஷி. க ஜெணஊஷயஃ. (எ)

லோடொந்து அதிற்காட்டில் அத்யந்தவிலக்ஷணமான திருமேனியும் தாமரைப்பூப்போலே யிருந்துள்ள திருக்கண்களையு முடையான்.

ப.—அநந்தரம், தர்ஶநீயவிக்ரஹத்தோடே "வக்ஷ்யதி ஷிதிஷ்டநு" என்கிறபடியே என்கண்ணுக்குள்ளே யானு னென்கிறார்.

நாவினுள்நின்று - நாவினிடத்தினின்றும், மலரும் - பரவும், ஞானம் - ஜ்ஞானஸாதகமான, கலைகளுக்கெல்லாம் - வித்யாஸ்த்தாநங்களுடையன, ஆவியும் - உயிரான அர்த்தமும், ஆக்கையும் - உடப்பான ஶப்தமும், தானே - தானிட்ட வழக்காய், அழிப்போடு அளிப்பவன் தானே-அவற்றினுடைய உத்பத்தி விநாஶங்களும் தானிட்டவழக்கானவனுய், பூவியல்-பூமாருந்த, நால் தடந்தோளன் - நாலு பெரியதோள்களையுடையனுய், (தோள்களிலே), பொரு - ஆஶ்ரித விரோதிகளைப் போக்குகைக்கு, படை - ஆயுதமான, ஆழி - திருவாழியையும், சங்கு - திருச்சங்கையும், எந்தும் - ஏந்துமவனுய், காவி - நெய்தல்போலே, நல் - நன்றான, மேனி - திருநிறத்தையும், கமலம் - கமலம்போன்ற, கண்ணன் - கண்களையுமுடையவன், என்கண்ணினுளான் - இவ்வழகோடே என்கண்ணுக்குள்ளே யானுன். பூவியலென்று • பூவின் ஸ்வபாவமான மார்த்தவத்தைச் சொல்லவுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், அது ஸாத்மித்தவாறே என்கண்ணுக்கு விஷயமானு னென்கிறார்.

[நாவினுள் நின்று இத்யாதி] - ஜிஹ்வாக்ரத்தில் விகஸியாநின்றுள்ள ஜ்ஞாநஸாதகமான வித்யாஸ்தலங்களுக்கெல்லாம். [ஆவியுமாக்கையுந்தானே] - ஆவியென்று - ஆத்மா. ஆக்கையென்று - ஶரீரம். அர்த்தத்தையும் ஶப்தத்தையுஞ் சொல்லுகிறது. ஆக, ஶப்தார்த்த ஸம்பந்த நியமம் அவனிட்டவழக்கென்றது. [அழிப்போடளிப்பவன் தானே] - வித்யைகளை ப்ரவர்த்திப்பித்து அழியாமே காக்கை - அளிக்கையாகிறது. அழிக்கையாகிறது - லோகதோஷாதிகளாலே ஸ்வரூபம்அந்யதாபவித்தால், அவற்றை ஸம்ஹரிக்கை. [பூவியல்நால்தடந்தோளன்]- பூவை இயல்வாக வுடைத்தாய் நாலாய்ச் சுற்றுடைத்தான தோளையுடையவன். [பூவியல்] - பூவாலே அலங்க்ருதமானதோ ளென்னுதல்,பூவை யொழியச்செல்லாத ஸௌகுமார்யத்தைச் சொல்லுதல்.[பொருபடை யாழிசங்கேந்தும்] - பணைத்த கல்பகதரு பரப்புமாறப்பூத்தாற்போலே யாயிற்று திவ்யாயுதங்க ளிருப்பது. பொருபடை - யுத்தஸாதநங்களானவை. [காவிநன்மேனி] - காவி - நெய்தல். காவி உபமாநமாகப் போராதபடியான நன்றான திருமேனி. [கமலக்கண்ணன்] - புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரன். [என்கண்ணினுளானே] - என்கண்ணுக்குள்ளே புகுந்தா னென்னுதல், கண்ணுக்கு விஷயமானு னென்னுதல்.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸகலவித்யாவேத்யனுன ஸர்வேஶ்வரன், ப்ரமாணங்களாலே காணக்கடவ வடிவை என்கண்ணுக்கு விஷயமாக்கினு னென்றூர்.

[நாவினுள் இத்யாதி] - ஜிஹ்வாக்ரத்திலே விகஸியாநின்றுள்ள ஜ்ஞாநஸாதநமான வித்யாவிஶேஷங்களுக் கெல்லாம். [ஆவியுமாக்கையுந்தானே] - ஆவிஎன்கிறது - அர்த்தத்தை. ஆக்கையென்கிறது - ஶப்தத்தை. 'இவ்வர்த்தத்தை இஶ்ஶப்தம் காட்டக்கடவது' என்று நிய

---

எட்டாம்பாட்டு —நாவினுள் இத்யாதி. ஸகலவித்யாவேத்யனுன என்றது - "கலைகளுக்கெல்லாமாவியுமாக்கையுந்தானே" என்றத்தைப்பற்ற. இஸ்ஸாமாநாதிகரண்யத்துக்குநிபந்தநம் - ப்ரதிபாத்யப்ரதிபாதகபாவம். ஆவியோடேகூடின ஆக்கையினுலே ப்ரதிபாத்யனென்றபடி. ப்ரமாணங்களாலே- "ஶ்ருதிதூவ ணஞ்ச" "யதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" இத்யாதிகளாலே.

"ஆவியுமாக்கையுந்தானே" என்றஸாமாநாதிகரண்யம் நிர்வாஹ்யநிர்வாஹகபாவ நிபந்தநமாக அர்த்தாந்தரம் - இவ்வவர்த்தத்தை இத்யாதி. இந்தப்பக்ஷத்தில், ஞானக்கலைகளுக்கபேக்ஷிதமான ஆவியுமாக்கையு

மித்துவிட்டான்எவனுயிற்று. ஆக, ஶப்தார்த்தஸம்பந்தம் அவனிட்டவழக்காயிற்று. [அழிப்போடளிப்பவன்தானே] - மந்தமதிகளான சேதநருடைய ப்ரதிபத்திதோஷங்களாலும் லேககதோஷங்களாலும் பாடபேதங்களாலும் இவையுருமாயுமளவிலே ஸம்ஹரித்தும், அபேக்ஷிதஸமயத்திலே ஸ்ருஷ்டித்தும் போருகிறுன்தானே. 'அல்லாத ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் சொல்லுகிறது' என்பாரு முண்டு. [பூவியல்இத்யாதி] - பூவாலல்லது செல்லாதபடி ஸுகுமாரமாய், கல்பகதரு பணைத்தாற்போலே நாலாய், சுற்றுடைத்தாயிருக்கிற திருத்தோள்களையுடையவன். பூவியல் - பூவாலே அலங்க்ருதமான தோளேன்னுதல்; பூவையொழியச்செல்லாத ஸௌகுமார்யத்தையுடையவனென்னுதல். [பொருபடை] - பணைத்துப்பூத்த கல்பகதருப்போலேயாயிற்று யுத்தத்துக்குப் பரிகரமான திவ்யாயுதங்களைத் தரித்தால் இருக்கும்படி. பொருபடை - யுத்தஸாதநங்களானவை. [காவிநன்மேனி] - அவ்வாயுதங்களாலே விரோதியைப்போக்கி அநுபவிக்கும் வடிவழகு. [நன்மேனி] - காவி, வடிவழகுக்கு உபமாநமாக நேர்நில்லாமையாலே "நன்மேனி" என்கிறுர். [கமலக்கண்ணனேன்கண்ணினுளானே] - இவர்கண்வட்டமொழியப் புறம்பேபோனல் கண்வட்டக்கள்ளனுமே. பெருவெள்ளத்திலே யொரு சுழிபோலே திருக்கண்கள். [என்கண்ணினுளானே] - ப்ராக்ருத விஷயங்களை அனுபவித்துப் போந்த என் கண்ணுக்குத் தன்னை விஷயமாக்கினுன். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

கமலக்கண்ணனேன்கண்ணினுள்ளான்·காண்பனவன்கண்களாலே
அமலங்களாகவிழிக்கும் ஐம்புலனுமவன்மூர்த்தி
கமலத்தயன்நம்பிதன்னைக் கண்ணுதலானெடும்தோற்றி
அமலத்தேய்வத்தோடுலகமாக்கி என்நேற்றியுளானே.

---

மவனிட்டவழக்கென்றபடி, பலிதம் - ஆகஇத்யாதி, ஏகார்த்தமாதல். ஞானக்கலைகளையழிப்பானென்? என்ன, மந்தமதிகளான இத்யாதி. இத்தோஷாதிகளாலே உருமாய்ந்தவிவற்றை யதாவாக ஸ்ருஷ்டிக்கைக்காக ஸம்ஹரிக்குமென்றபடி. இவை என்றது - வித்யாவிஶேஷங்களை. ஸம்ஹரிக்கிறது கலியுகாந்தத்திலே, ஸ்ருஷ்டிக்கிறது க்ருதயுகாதியிலே யென்றபடி. அல்லாதஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை - ஜகத்ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை. பூவியல் - இயல்வு - ஸ்வபாவம். பூவின்ஸ்வபாவமான ஸௌகுமார்யத்தையுடையவென்று, மூந்தினவர்த்தம். பூவாலல்லது செல்லாத வேன்றது - ஸௌகுமார்யோபபாதகம். செல்லாத - தரியாத. த்விதீயார்த்தத்தில், இயல்வு - அலங்காரமாய், பூவாலேயலங்கருதமானதோள் என்றபடி. ப்ரதமார்த்த விவரணம்- பூவையொழிய இத்யாதி. "எந்தும்" என்றதுக்கு ஹாவம் - பணைத்து இத்யாதி. தடம் - பெருமை. "பொருபடை" என்றதுக்கு அர்த்தம் - யுத்தஸாதநங்களானவை என்று. ஆயுதாகத்தரம் திருமேனியைச்சொன்னதுக்குபாவம் - அவ்வாயுத இத்யாதி. காவி - செய்தல். "நல்" என்கிற விஶேஷணத்துக்கு பாவம் - காவி வடிவழகுக்கு இத்யாதி. காவியில்விலக்ஷணமான மேனியென்றபடி. "ஹ்ரு காந்தாநநம்" இதிவத். சந்த்ராத்காந்தாநநம். "கண்ணினுளானே" என்கிற அவதாரணுர்த்தம் - இவர்கண்வட்டம் இத்யாதி. கண்வட்டம் - சக்ஷுர்விஷயப்ரதேஶம். கண்வட்டக்கள்ளன் ஆவது - ஸ்நேகித்தவனுக்கொன்று வேண்டியிருக்க, செய்யாவிட்டால் அவன்கண்முன்னே வர பயப்படுமோபோலே, "ஹ்ரீரேஷா ஹிஜோ தூஷா" என்கிறபடியே த்ருஷ்டிவிஷயமாக பயப்படுகையென்று ஸ்வபாவார்த்தம். சாடுவுக்கு, கண்வட்டக்கள்ளன் - டங்கசாலையிலே க்ருத்ரிமப்பணமடிக்கிறவன். கண்வட்டம் - டங்கசாலை. திருமேனியைச்சொன்ன அநந்தரம் திருக்கண்களைச்சொன்னதுக்குபாவம் - பெருவெள்ளத்திலே இத்யாதி. "என்" என்றதுக்கு பாவம்-ப்ராக்ருத இத்யாதி. காவினுள் நின்று மலருமென்று தொடங்கி, அளிப்பவன்தானே, பொருபடையாழிசங்கேந்தும் பூவியல்நால்தடந்தோளன் காவிநன்மேனி இத்யாசப்ய: அந்வய:. (அ)

ஆ.—(கமலக்கண்ணன்) - ப்ரஹ்மாதி ஸ்த்தாவராந்தமான ஸகல ஜகத்தையும் படைத்தருளின கமலக்கண்ணன், என்கண்ணினுள்ளே புகுந்தருளினன்; நானும் அவனை என் கண்களால் காணப்பெற்றேன்; அவனும் தன்னுடைய ஶீதளமான அழகிய திருக்கண்களாலே என்னுடைய ஸமஸ்தஸந்தாபங்களும் போம்படி என்னைக் குளிரப் பார்த்தருளாநின்றான்; இப்படி மற்றுமுள்ள ஶ்ரோத்ராதிஸகலகரணங்களாலும் அவனையே புஜிக்கப்பெற்றேன். நிரவதிகமான நிர்வ்ருதி எனக்கு ஸாத்மித்தவாறே, பின்னை என்நெற்றியுள் நின்றருளினன் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸர்வ ஸ்ரஷ்டாவான எம்பெருமான், என் நெற்றியிலே வந்து நின்றானென்கிறார்.

[காண்பன் என்று தொடங்கி] - நானும் அவனைக் காணாநின்றேன்; தன்னைக்காண வல்லேனும்படி நிர்த்தோஷனாக என்னை நோக்கி யருளாநின்றான்; அவனுடைய திருவழகைக் கண்டு என் இந்த்ரியங்களும் அவனுக்கு ஶரீரவத் விதேயமாயிற்றின. [கமலத்தயன் என்று தொடங்கி] - கமலாஸநனாய் ப்ரதாநனான ப்ரஹ்மாவை லலாடநேத்ரனான ருத்ரனோடுங்கூடத் தோன்றுவித்து ஸத்வப்ரசுரரான தேவர்களோடுங்கூட லோகங்களையெல்லாம் உண்டாக்குமவன்.

ப.—அநந்தரம், என்கண்களிலே நின்று ப்ரகாஶியா நிற்கச்செய்தே, ஸகலஜகத் ஸ்ரஷ்டாவானவன் என்னுடைய லலாடமத்யத்திலே யானானென்கிறார்.

கமலக்கண்ணன் - கமலக்கண்ணனானவன், என்கண்ணினுள்ளான் - என் கண்ணுக்கு விஷயமாகாநிற்கும்; (அத்தாலே "நவக்ஷுஷாவஶ்ய:" என்கிற நிலைதவிர்ந்து), காண்பன் - நானும் அவனைக் காணாநின்றேன்; (அதுக்கடி), அவன்-அக்கமலக்கண்ணன், கண்களாலே-தன் கண்களாலே, அமலங்களாக - அஜ்ஞாநாதி மலம் போம்படி, விழிக்கும் - பார்த்தருளா நிற்கும். (அத்தாலே), ஐம்புலனும் - சக்ஷுரிந்த்ரியமும் இந்த்ரியாந்தரங்களோடு வாசியற, அவன் மூர்த்தி - அவனுக்கு ப்ரகாரதயா ஶேஷமாயிற்று; (இப்படி செய்தவனாரென்னில்), கமலத்து - கமல ஸம்பவனாகையாலே, அயன் - அஜனென்று பேராய், நம்பி தன்னை - ஸ்ருஷ்ட்யாத்யுபயுக்த ஜ்ஞாநாதி பூர்ணனான ப்ரஹ்மாவை, கண்ணுதலானொடும்-லலாட நேத்ரத்வத்தாலே வ்யக்த ஶக்திகனான ருத்ரனோடே, தோற்றி - தோற்றுவித்து, (அவர்கள் முதலாக), அமலம் - ஸத்வோத்தரைகளான, தெய்வத்தோடு - தேவதைகளோடே, உலகம் - லோகங்களையும், ஆக்கி - ஸ்ருஷ்டிக்கும் ஸ்வபாவனானவன், (இந்நிலைகுலையாதே), என் - என்னவயவைகதேஶமான, நெற்றியுளான் - நெற்றியிலே யானான். உலகமாக்கியென்று - பேர், கண்ணுதலானொடுமென்று - ருத்ரனுடைய அப்ரதாநத்வம் தோற்றுகிறது.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஸ்வஸங்கல்பைகதேஶத்திலே ஸர்வத்தையும் உண்டாக்கினவன், என்னுடைய ஶரீரைகதேசத்தைப் பற்றித் தான் உளனாக நினையாநின்றானென்கிறார்.

[கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான்] - புண்டரீகாக்ஷனான ஸர்வேஶ்வரன் என் கண்ணுக்கு விஷயமானான், "ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி" என்கிற மர்யாதை குலைந்தது. [காண்பன்] - நானும் அவனைக் காணாநின்றேன். காண்பனென்கிறவிடம் - வர்த்தமாநம். நீர் காணவல்லீராயிற்று எத்தாலே? என்னில்,—[அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்] - அவன் திருக்கண்களாலே நிர்த்தோஷனாம்படியும், காணவல்லேனாம்படியும் விஶேஷகடாக்ஷத்தைப் பண்ணினான். விஷயப்ரவணமான இந்த்ரியங்கள் செய்ததென்? என்னில்;-[ஐம்புலனும் இத்யாதி] - அவையும் அவனழகைக்கண்டு அவனுக்கு ஶரீரவத்விதேயமாயிற்றின. அவனைக் காண்பதற்கு முன்பு அவிதேயமானவை அவனைக்கண்டவாறே விதேய

*பாயிற்றின. [கமலத்தயன் இத்யாதி] - கமலோத்பந்நனைகையாலே அஜனாய், ஜ்ஞாநாதி பரி பூர்ணனாய் ப்ரதாநனானவனை, லலாடநேத்ரனோடே கூடத் தோற்றுவித்து. [அமலத்தெய்வத் தோடுலகமாக்கி] - ஸத்வப்ரசுரரான தேவர்களோடே ஸர்வலோகங்களையும் உண்டாக்கும் ஸ்வ பாவன். [என்னெற்றியுளானே] - தன்னை யொழிந்த ஸகலாத்மாக்களும் தன்னைப்பற்றி யுண் டாம்படி யிருக்கிறவன், என்ஶரீரத்தில் ஏகதேஶத்தைப் பற்றி வர்த்தியாநின்றான்.*

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. கண்ணில் நின்றநிலை ஸாத்மித்தவாறே என் நெற்றியிலே வந்து நில்லாநின்றானென்கிறார்.

[கமலக்கண்ணனென் கண்ணினுள்ளான்]- புண்டரீகாக்ஷனானவன் என் கண்ணுக்கு விஷயமானான். "*நசக்ஷுஷா க்ருஹ்யதே*" (நசக்ஷுஷாக்ருஹ்யதே) என்கிற மர்யாதை குலைந்தது. அவன் அவ்வடிவை உம்முடைய கண்ணுக்கு விஷயமாக்கினானாகில், நீர் பின்னைச் செய்வதென் ? என்னில்,—[காண்பன்] - நானும் கண்டு அநுபவியாநின்றேன். இவ்விலக்ஷண விஷயத்தை நீர் கண்டநுபவிக்க வல்லீரானபடி எங்ஙனே? என்ன,—[அவனித்யாதி] - அவன் தன்திருக்கண்களாலே, என்தோஷமெல்லாங் கழிந்து நான்காணவல்லேனாம்படி குளிரக்கடாக்ஷியா நின்றான். ஆனாலும், இந்த்ரியங்களென்று சிலவுண்டே காட்சிக்கு ப்ரதிபந்தகங்கள், அவைசெய்தது என் ? என்ன, [ஐம்புலனுமவன்மூர்த்தி] - காட்சிக்கு ப்ரதிபந்தகங்களான ஶ்ரோத்ராதிகளும் அவனிட்ட வழக்காம்படி அவனுக்கு சரீரவத்விதேயமாய் அங்கே படையற்றன. [கமலத்தயன்இத் யாதி] - திருநாபிகமலத்திலே அவ்யவதாநேந பிறந்து, எல்லாரிலும் விஸஜாதீயமான ஜந்மத்தை யுடையனாய், தனக்கு இவ்வருகுள்ளவற்றை யுண்டாக்குமிடத்தில் ஸர்வேஶ்வரனைக் கேள்வி கொள்ளவேண்டாதபடி நிரபேக்ஷனான சதுர்முகனை லலாடநேத்ரனான ருத்ரனோடே யுண்டாக்கி, அவ்வளவில் பர்யவஸியாதே, ஸத்வப்ரசுரரான தேவதைகளோடே லோகங்களை யுண்டாக்கினவன். "நெய்யுண்ணி" என்னுமாபோலே, "ஆக்கி" என்றது - ஆக்கும் ஸ்வபாவனென்றபடி. [என் னெற்றியுளானே] - கர்மாநுகுணமாக ஜகத்தை ஸ்ருஷ்டித்துவிட்டான், ப்ரயோஜநநிரபேக்ஷமாக என் நெற்றியிலே புகுந்துநின்றான். (௯)

---

*ஒன்பதாம்பாட்டு —* **கமலக்கண்ணன்** *இத்யாதி. இத்தால்பலித்த தாத்பர்யம்-***நசக்ஷுஷா** *இத்யாதி.*

**அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்** - *அக்கமலக்கண்ணன் தன் கண்களாலே அஜ்ஞா நாதி தோஷங்களெல்லாம் போம்படியாகக் கடாக்ஷியாநிற்கு மிதி ஶப்தார்த்தம்.* **கடாக்ஷியாநின்றான் ஆகையாலே காண்பன்** *என்று அந்வயம். விஷயப்ராவண்ய ஹேதுவாகையாலே இந்த்ரியங்களை - ப்ரதிபந்தகங்களென்கிறது.* **படையற்றன** - *பரிகரமாயிற்றின. படை - பரிகரம். அவனுக்கு ஶேஷமாயிற்றதுக ளென்றபடி. இப்படி அமலங்களாக விழிக்கக்கூடுமோ? என்ன, ஸங்கல்பத்தாலே ஸகலஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணவல்ல ஸர்வேஶ் வரனுக்குக் கூடாததுண்டோ? என்று அவனுடைய காரணத்வத்தை அருளிச்செய்துகொண்டு, இப்படி ஸர்வா திகனாயிருக்கிறவன் ப்ரயோஜநநிரபேக்ஷமாக என் நெற்றியிலே யிருக்கிறானென்கிறார் -* **கமலத்தயன்** *என்று தொடங்கி. என்று மேலுக்கு ஸங்கதி கண்டுகொள்வது. அஜஶப்தார்த்தம்-*எல்லாரிலும் *இத்யாதி. கமலத்திலே பிறக்கையாலே - அஜனென்று பேராகிறதென்றபடி. "நம்பி" என்றதின் தாத்பர்யம்-*தனக்கு *இத்யாதி.* **கேள்வி கொள்ளவேண்டாதபடி** - *கேட்கவேண்டாதபடி. நுதற்கண்ணனொடும் என்று அந்வயித்து அருளிச்செய்கிறார்-* **லலாடநேத்ர** *இத்யாதி. தோற்றி - தோற்றுவித்தென்று விவக்ஷித்து உண்டாக்கி என்றது.* **நெய்யுண்ணி** *இத்யாதி- "ஆக்கி" என்கிறது - ல்யப்பன்று, ப்ரத்யைகவசகாந்தஶப்த மென்றபடி. அவதாரணார்த்தம்-***கர்மாநு குணமாக** *இத்யாதி. விஷயஸ்ருஷ்டி சொல்லுகையாலே - கர்மநிபந்தநத்வம் ஸித்தமென்று கருத்து.* **ப்ரயோஜந நிரபேக்ஷமாக** - *அவ்வருகு போக்கில்லாமையாலே - ப்ரயோஜநநிரபேக்ஷத்வம் ஸித்தமென்றபடி, க்ரமேண அந்வயம்.* (௯)

## பத்தாம்பாட்டு.

நெற்றியுள்நின்றென்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள்சூடிக்
கற்றைத்துழாய்முடிக்கோலக் கண்ணபிரானைத்தொழுவார்
ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும்
மற்றையமரருமெல்லாம்வந்து எனதுச்சியுளானே.

**ஆ.**—(நெற்றியுள்.) ப்ரஹ்மேஶாதி ஸகலதேவதைகளும், நெற்றியுள் நின்று என்னை அடிமைகொண்டருளுகிற இந்தத் திருவடிமலர்களைச் சூடிக்கொண்டு, கற்றைத்துழாய் முடிக் கோலக் கண்ணபிரானைத் தொழுவார்; அவனே ஸர்வேஶ்வரனாய் அவாப்த ஸமஸ்தகாமனான எம்பெருமான், என்நெற்றியுள் நின்றருளின நிலை எனக்கு ஸாத்மித்தவாறே, பின்னை என்னுச்சி யுள்ளே வந்து புகுந்தருளினா னென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், ப்ரஹ்மருத்ராதிகளுக்கு அறவரியனாயுள்ள எம்பெருமான், தன்திருவடிகளை அவர்கள் கொண்டாடி வத்தாநிற்கச்செய்தே அத்தை அநாதரித்து, தான் வந்து என் உச்சியுள்ளே புகுந்தா னென்கிறார்.

[நெற்றியுள் நின்றென்று தொடங்கி] - நெற்றியுள்ளே நிற்கிற என்னை ஆளுகிற ஒழுங்கான மலர்கள்போலே யிருக்கிற திருவடிகளை ஆதரித்துத் திருக்குழலில் செவ்வியாலே சாத்தி யருளின திருத்துழாய் தழைக்கும்படியான திருமுடியின் அழகையுடைய க்ருஷ்ணனைத் தொழுவார்.

ப.—அநந்தரம், ப்ரஹ்மாதிகளுக்கும் ஆஶ்ரயணீயனானவன் என்னுடைய உத்தமாங்கத்திலே யானா னென்கிறார்.

நெற்றியுள் நின்று - அபிமுகமாய்நின்று, என்னை - என்னை, ஆளும் - அடிமை கொள்வதாய், நிரைமலர் - (ஆஶ்ரிதரிட்ட) பூநிரையையுடைத்தான, பாதங்கள் - திருவடிகளை, சூடி - (தங்கள் தலையிலே) சூடி, கற்றை-செறிந்த, துழாய் - திருத்துழாயாகிற, முடிக்கோலம் - திருமுடி யலங்காரத்தை யுடையனாய்,கண்ணபிரானை - (ஆஶ்ரிதபவ்யனாய் உபகரிக்கும்) க்ருஷ்ணனை,தொழுவார் - (அஞ்சலி பந்தாதி முகத்தாலே) ஆஶ்ரயிப்பார், ஒற்றைப்பிறை - ஏககலாரூபமான பிறையை, அணிந்தானும் - ஶிரோபூஷணமாகவுடைய ருத்ரனும், நான்முகனும் - சதுர்முகனும், இந்திரனும் - இந்த்ரனும், மற்றை - மற்றுமுள்ள, அமரருமெல்லாம் - தேவர்களெல்லாரும், (இப்படி அவர்களாலே தொழப்பட்டவன்), வந்து - அந்த நெற்றியுள் நின்றும் வந்து, எனது உச்சி யுளான் - என் தலையின்மேலேயானான்.

இ.—பத்தாம்பாட்டில், ப்ரஹ்மாதிகள் தன்பக்கலிலே மேல்விழாநிற்க, அவர்களை அநாதரித்து என் பக்கலிலே தான் மேல்விழாநின்றா னென்கிறார்.

[நெற்றியுள்நின்றென்னை யாளும்] - என்னெற்றியிலே நின்று என்னை யாளுகிற, [நிரைமலர்ப்பாதங்கள்] - மலரொழுங்குபோலே யிருக்கிற திருவடிகளை. [சூடி] - ஶிரஸாவஹித்து. [கற்றைத்துழாய்] - திருக்குழலின் ஸ்பர்ஶத்தாலே தழையாநிற்கிற திருத்துழாய். [முடிக்கோலம்] - கோலம் - அழகு. ஒப்பனையழகை யுடைய திருமுடி. [கண்ணபிரானை] - உபகாரஶீலனான க்ருஷ்ணனை. [தொழுவார்] - ஸர்வேஶ்வரன் ஆழ்வாரை யல்லது அறியானா யிருக்கையாலே. நெற்றியுள்நின்று திருமுடிக்குப்போம்போது நடுவேயாயிற்று ப்ரஹ்மாதிகள்

தொழுவது. ராஜாக்கள் அந்தஃபுரத்தில் ஒருகட்டில் நின்றும் ஒருகட்டுக்குப் போம்போது நடுவே வந்து கார்யத்துக்குக் கடவார் முகங்காட்டுமாபோலே. [ஒற்றை இத்யாதி] - ஒருகலா மாத்ரமான சந்த்ரனை ஒப்பனையாகவுடைய ருத்ரனும், சதுர்முகனும், இந்த்ரனும், மற்றுமுண்டான ஸர்வதேவதைகளும். அவர்கள் தங்கள் செல்லாமையாலே தொழாநிற்க, அவர்களை அநாதரித்து, தான் என்னை யொழியச் செல்லாதானாய் வந்து என் உச்சியிலே புகுந்தான்.

ஈடு.—பத்தாம் பாட்டு. ப்ரஹ்மாதிகள் தன்னைப்பெறுகைக்கு அவஸர ப்ரதீக்ஷராய்த் தமோறும்படி யிருக்கிறவன்தான் என்னைப் பெறுகைக்கு அவஸரம் பார்த்து வந்து என் உச்சியுளானான் என்கிறார்.

[நெற்றிஇத்யாதி] - நெற்றியுள் நின்று என்னை யடிமை கொள்ளுகிற [நிரைமலர்ப் பாதங்கள்சூடி] - மலரை நிரைத்தாற்போலே யிருக்கிற திருவடிகளை ஶிரஸாவஹித்து. [கற்றைத் துழாய்இத்யாதி] - ஒருவாடல் மாலையைக் கொண்டுவந்து திருமுடியிலே வைத்தாலும்,திருக்குழலின் ஸ்பர்ஶத்தாலே செவ்விபெற்றுத் தழையாநிற்கும். "தழைக்குந்துழாய்" என்னுமாபோலே. செவ்விபெற்றுத் தழைக்கிற திருத்துழாயோடே கூடின திருவபிஷேகத்தை யுடையனாய், தர்ஶநீய மான வடிவையுமுடைய உபகார ஶீலனை க்ருஷ்ணனை - நிரைமலர்ப்பாதங்கள்சூடித் தொழு வார். [ஒற்றைப்பிறை யணிந்தானும்]-ஒருகலா மாத்ரமான சந்த்ரனை ஜடையிலே தரித்து ஸாதக ப்ரதாநனாயிருக்கிற ருத்ரனும் அவனுக்கு ஜநகனான சதுர்முகனும், தேவர்களை மெய்க்காட்டுக்கொண் டிருக்கிற இந்த்ரனும், மற்றுமுண்டான தேவர்களுமெல்லாம். இப்படிஅவர்கள் தடுமாறுநிற்க தன்னைப் பெறுகைக்கு, அதேல்லாம் தான் என்னைப் பெறுகைக்குப்பட்டுவந்து, என் உச்சியுளானாகா நிற்கிறான். ராஜாக்கள் அந்தஃபுரத்தில், ஒருகட்டில்நின்றும் மற்றைக்கட்டேறப் போகாநிற்க, நடுவே அந்தரங்கர் முகங்காட்டித் தங்காரியங்கோண்டுபோமாபோலே, இவர் திருநெற்றியில் நின்றும் திரு முடியேறப் போகாநின்றால் ப்ரஹ்மாதிகள் நடுவே முகங்காட்டித் தங்கள் காரியங்கோண்டுபோ மித்தனை. (௧௦)

## பதினோராம் பாட்டு.

உச்சியுள்ளேநிற்கும்தேவதேவற்குக் கண்ணபிராற்கு
இச்சையுள்செல்லவுணர்த்தி வண்குருகூர்ச்சடகோபன்
இச்சொன்னவாயிரத்துள் இவையுமோர்பத்துஎம்பிராற்கு
நிச்சலும்விண்ணப்பம்செய்ய நீள்கழல்சென்னிபொருமே.

---

பத்தாம்பாட்டு.—நெற்றியுள் இத்யாதி. "ப்ரஹ்மாதிகள் தொழும்படி யிருக்குமவன் "உச்சியுளான்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்யா நின்று கொண்டு, இப்பாட்டுக்கு ஸங்கதி - ப்ரஹ்மாதிகள் இத்யாதி. "வந்து" என்றத்தைப்பற்ற, என்னைப்பெறுகைக் கவஸரம்பார்த்து என்றது.

"தொழுவார்" என்று - அவர்கள் தடுமாற்றம்; "வந்து" என்று - இவன் தடுமாற்றம். நிரைத்தாற் போலே - அடைவுபட நிறுத்தினாற்போலே. கற்றைத்துழாய் - கற்றை - தழைக்கிற. பறிக்கப்பட்டதுழா யாகிலும், ஸ்பர்ஶவிஶேஷத்தாலே தழையாநிற்கக் குறையில்லையிறே. ஸம்வாதம் - தழைக்கும் இத்யாதி. ஶப்தார்த்தம் - செவ்விபெற்று இத்யாதி. "கண்ணபிரானை" என்கிற த்விதீயாவிபக்திக்கு அந்வயங் காட்டு கிறார் - நிரைமலர்ப்பாதங்கள் சூடித் தொழுவார் என்று. ஒற்றைப்பிறை - ஏககலாமாத்ரசந்த்ரன. மெய்க் காட்டு - எண்ணிக்கை. நெற்றியுள் நின்றென்னையாளும் கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானை, ஒற் றைப்பிறை தொடங்கி, அமரருமெல்லாம் நிரைமலர்ப்பாதங்கள் சூடித் தொழாநிற்கச்செய்தே, வந்தெனதுச்சி யுளான் என்று அந்வயித்து பாவம்-இப்படிஇவர்கள் இத்யாதி. தன்னைப்பெறுகைக்கு இப்படி அவர்கள் தடுமாறு நிற்க என்று அந்வயிப்பது. ஸத்ருஷ்டாந்தவிவரணம் - ராஜாக்கள் இத்யாதி. கீழ்ச்சொன்னதே அந்வயம். (௧௦)

ஆ.—(உச்சியுள்ளே.) இப்படி உச்சியுள்ளே நிற்கையாலே ஸர்வேஶ்வரனானவனுக்கு இப்படிச்சொன்ன இத்திருவாய்மொழியை எம்பெருமானுக்கு நிச்சலும் விண்ணப்பஞ்செய்ய, நீள்கழல் சென்னிபொரு மென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் திருவடிகள் அவன் தலையிலே நாடோறுஞ்சேரு மென்கிறார்.

[உச்சியுள்ளேநிற்குந் தேவதேவற்கு] - தேவதேவனாய்வைத்து என்னுச்சியுள்ளே நின்றவனுக்கு; என்னுச்சியுள்ளே நிற்கையாலே அயர்வறுமமரர்க ளதிபதியானா னென்றுமாம். [கண்ணபிராற்கு] - உள்ளத்திலே படும்படி அமைத்து.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக நித்யமான பகவத்ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

உச்சியுள்ளே நிற்கும் - (இப்படியே) உச்சியிலே நிற்குமவனாய், தேவதேவற்கு - தேவதேவனுமாய், கண்ணபிராற்கு - கண்ணபிரானுமான (பரத்வஸௌலப்யங்களை யுடையவனுக்கு), இச்சை - (தம்பக்கல் அவன் பண்ணின) அபிநிவேசம், உள் - தம்முடையவுள்ளே, செல்ல - நடக்க, உணர்த்தி - அத்தை அவனுக்கு அறிவித்து, வண்குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், இச்சொன்ன ஆயிரத்துள் - அருளிச்செய்த இந்தவாயிரத்துள், (அவனுடைய ஸம்ஶ்லேஷக்ரமஸூசகமான), இவை - இந்த, ஓர் - அத்விதீயமாயுள்ள, பத்து - பத்தையும், எம்பிராற்கு - எம்பெருமானுக்கு, விண்ணப்பஞ்செய்ய - விண்ணப்பஞ்செய்ய, நீள் - (ஆஶ்ரிதரிருந்த விடத்தளவும்) வருவதான, கழல் - அவன்திருவடிகள், சென்னி - இவர்கள் தலையிலே, நிச்சலும் - நிச்சலும், பொரும் - பொருந்தும். பொரும் - பொருந்தும். இத் திருவாய்மொழி-அறுசீராசிரிய விருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை விண்ணப்பஞ்செய்ய, நாள்தோறும் திருவடிகள் தலையிலே சேரு மென்கிறார்.

[உச்சியுள்ளே நிற்குந் தேவதேவற்கு] - "அமரர் சென்னிப்பூவினை" என்கிறபடியே தேவர்களுக்கு ஶிரோபூஷணமாய் வைத்து, "இனி ஒரு கந்தவ்யபூமி யில்லை" என்று என்னுச்சியுள்ளே வர்த்தியாநின்றான். என்னுச்சியுள்ளே நிற்கையாலே அயர்வறுமமரர்களதிபதியானா னென்றுமாம். [கண்ணபிராற்கு] - எனக்கு க்ருஷ்ணனாய் வந்து உபகரித்தவனுக்கு. [இச்சையுள்செல்லவுணர்த்தி] - தன்பக்கலிலே அவன்பண்ணின அபிநிவேசத்தைத் தாம் அறிந்தபடியைத் திருவுள்ளத்திலேபட அறிவித்து. [இச்சொன்னவாயிரம்] - இப்பாவ வ்ருத்தியோடே சொன்ன ஆயிரம். [எம்பிராற்கு] - இப்படி ஸாத்மிக்க ஸாத்மிக்கவும் இழவுமறக்கவும் அனுபவிப்பித்த உபகாரகற்கு. [விண்ணப்பஞ்செய்ய நிச்சலும் நீள்கழல்சென்னிபொரும்] - ஒருகால் விண்ணப்பஞ்செய்ய என்றுமொக்கத் திருவடிகள் தலையிலே சேரும். நீள்கழல் - ஆஶாலேஶமுடையார் இருந்த இடம் எல்லையாக வளருந் திருவடிகள். பொருவென்று - ஒப்பாய், சேருமென்றபடி. "உச்சியுள்ளேநிற்கும்" என்று இவர் பெற்றதுவே பேறாகக்கடவது.

ஈடு.—பதினோராம்பாட்டு. நிகமத்தில், இத்திருவாய்மொழியை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்ய, அவர்கள் தலையிலே எம்பெருமான் திருவடிகள் நாடோறும் சேருமென்கிறார்.

---

பதினோராம்பாட்டு—நிகமம் - உச்சியுள்ளே இத்யாதி. "விண்ணப்பஞ்செய்ய நிச்சலும்நீள்கழல் சென்னிபொரும்" என்றந்வயித்து அவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி.

இனி எங்கேபோவதாக இருந்தானென்னில், - [உச்சியுள்ளே நிற்கும்] - அமரர் சென்னிப்பூவான தான் என்சென்னிக்கவ்வருகு 'கந்தவ்ய பூமியில்லை' என்று என்னுச்சியுள்ளே வர்த்தியா நின்றான். என்னுச்சியுள்ளே நிற்கையாலே தேவதேவனுனென்றுமாம். [உள்ளே நிற்கும்]- இனிஅவ்வருகு போக்கில்லை. [தேவதேவற்கு]-அயர்வறுமமரர்களபதியாயிருக்கிற இருப்பையும் நினைக்கிறிலன். [கண்ணபிராற்கு] - உபகாரசீலனுன க்ருஷ்ணனுக்கு. [இச்சையுள் செல்லஉணர்த்தி]-ஸர்வேச்வரனுக்குத் தம்பக்கலுண்டான இச்சையைத் தாமறிந்தபடியை அவன் திருவுள்ளத்திலே படும்படி உணர்த்தி. [வண்குருகூர்ச்சடகோபன்] - ஸர்வேச்வரனுக்கு அறிவித்தவளவே யன்றிக்கே, ஸம்ஸாரிகளுமறியும்படி பண்ணின உதாரரான ஆழ்வார். [இச்சொன்ன] - இப்பாவவ்ருத்தியாலே சொன்ன ஆயிரத்திலும் இவையுமோர்பத்து. [எம்பிராற்கு இத்யாதி] - எம்பிராற்கு விண்ணப்பஞ்செய்ய, நிச்சலும் நீள்கழல் சென்னிபொரும் - தனக்குப்பாங்கான ஸமயத்திலே ஒருகால் விண்ணப்பஞ்செய்ய, நாள்தோறும் ஆசாலேசமுடையாரிருந்த விடத்திலே செல்ல வளரும் திருவடிகள் சென்னியோடே சேரும்- எம்பிரானென்றது - இப்படி ஸாத்மிக்க ஸாத்மிக்கவும், இழவு மறக்கவும் அநுபவிப்பித்த உபகாரக னென்றபடி. ஆழ்வார் க்ரமத்திலே "உச்சியுளானே" என்ற பேறு, இதுகற்றார்க்கு முதலடியிலே யுண்டாம். பொரு என்று - ஒப்பாய், ஒப்பாவது - சேருகையாய், சேரு மென்றபடி. "உச்சியுள்ளேநிற்கும்" என்று - இவர்பெற்றதுவே பேறாகக்கடவது.

முதற்பாட்டில், - என்னுடைய பர்யந்தத்திலே வந்து நின்று னென்றார்; இரண்டாம்பாட்டில் - அதுஸாத்மித்தவாறே அருகே நின்று னென்றார்; மூன்றாம்பாட்டில், தம்முடனே கூட நின்று னென்றார்; நாலாம்பாட்டில் - ஒக்கலையிலே வந்திருந்தா னென்றார்; அஞ்சாம்பாட்டில் - நெஞ்சிலேவந்து புகுந்தா னென்றார்; ஆறாம்பாட்டில் - தோளிலே வந்திருந்தா னென்றார்; ஏழாம்பாட்டில் - நாவிலே வந்து புகுந்தா னென்றார்; எட்டாம்பாட்டில், கண்ணுள்ளே நின்று னென்றார்; ஒன்பதாம்பாட்டில் - நெற்றியிலே நின்று னென்றார்; பத்தாம்பாட்டில் - திருமுடியிலே நின்று னென்றார்; நிகமத்தில் - ஆக, இத்தால் - தம்முடனே ஸாத்மிக்கும்படி கலக்கையாலே அவனை சிரஸாவஹித்தார், பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். (கக)

---

"உச்சியுள்ளே" என்கிற அவதாரணத்தையும், "நிற்கும்" என்கிற வர்த்தமாநத்தையுங் கடாக்ஷித்து ஸாவம் -இனிஎங்கே இத்யாதி. "தேவதேவன்" என்றத்தைப் பூர்வபாவியாகவும், அபரபாவியாகவும் அருளிச்செய்கிறார் - அமரர்சென்னி இத்யாதிவாக்யத்வயத்தாலே. அவதாரணார்த்தவிவரணம் - இனிஅவ்வருகுபோக்கில்லை என்று. "அமரர்சென்னி" இத்யாதியின் விவரணம் - அயர்வறும் இத்யாதி, மூன்றும் தாத்பர்யமாதல் இச்சையைத் தாமறிந்தபடியை - தாம்க்ருதஜ்ஞானபடியை. உட்செல்ல - அவன் திருவுள்ளத்திலே படும்படி. இச்சை - அபிநிவேசம். யத்வா, உள் - தம்முடைய அறிவு. செல்ல - அவன் திருவுள்ளத்திலே செல்ல. அவனுடைய இச்சாவிஷயமான தம்முடைய அறிவென்றாய், இச்சையைத் தாமறிந்தபடியை அவன் திருவுள்ளத்திலேபடும்படி யறிவித்தவென்றபடி. வண்மையேது? என்ன, ஸர்வேச்வரனுக்கறிவித்த இத்யாதி. இச்சொன்ன - இப்படிச்சொன்ன. தனக்கு இத்யாதி - நிச்சலும் - விண்ணப்பஞ் செய்ய என்றால், "கழல் சென்னிபொரும்" என்கைக்குக் காலம் இன்றிக்கேயொழியு மென்று கருத்து. இழவுமறக்கவும் - பூர்வாவஸ்தாஸ்மரணஜதுக்கசாஹிதமாகவும். "கண்ணபிரான்" என்கிறவிடத்திலே ஸர்வவிஷயோபகாரஞ் சொல்லுகிறது. "எம்பிராற்கு" என்கிற இடத்தில்-தம்முடைய விஷயமான உபகாரஞ்சொல்லுகிறது. அதோ நபௌநருக்த்யம். இத்தால் இதுகற்றவர்களுக்கு வ்யாவ்ருத்தி - ஆழ்வார் இத்யாதி. பகவத்விஷயீகாரத்திலும் ஆசார்யாபிமாநத்துக்கு ஆதிக்யமுண்டென்றபடி. "பொரும்", என்றால் - "சேரும்" என்னலாமோ? என்ன, பொரு என்றித்யாதி. இதுகற்றார்க்கு பலபேதமில்லை: இவர்க்குள்ள பலமே பலமென்கிறார் - உச்சியுள்ளே இத்யாதி. நிகமத்தில், திரியவும் "உச்சியுள்ளே நிற்கும்" என்றதுக்குத் தாத்பர்யார்த்தம்-ஆகஇத்தால் தம்முடனே இத்யாதி. உச்சியுள்ளேயித்யாரப்ய, எம்பிராற்கு விண்ணப்பஞ்செய்ய நீள்கழல் நிச்சலும் சென்னி பொரு மித்யந்வயஃ. (கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— ஶூத்ராஜூவாநாஹவகௌதாகிநோஸ்யுஶள ஶிராத்ராவஹோமஶாவிஶேஷயிகாநந்தாநஃ । ஷெவ்யாதி வஜ்ரவஸயிதா கஹ்ஶதாவிஶாஷ்டா ந்யாஶி ப்ரயத்தஃவடிஷவஶேஶோஶிஃ ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.—வயஃதெஃஷெஃவஷூஷஂ ஸ்விர ஊவிஶவஂபிஶ வத்ராஶஶ்ரீநஂ விதேக்ஷவவுவெஶஂ ஷஜஶிவாரமதஂ தாஶவஶிஂஹாவ நஷ்டி । வக்ஷாஶ்யெயெந்திவிஷஂ ஷிதஶிக்தடஶஸகெதஷிவாஂவஂ வுத்யாஹாரொக்த ஶீத்யா விஹாஶநாவாஹாஜெஷாத்யொமவுஷாநாகஂ ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

இவையறிந்தோர் தம்மளவில்ஈசனுவந்தாற்ற
அவயவங்கள்தோறுமணையும்—சுவையதனைப்
பெற்றுஆர்வத்தால் மாறன்பேசின்சொற்பேச மால்
பொற்றாள் நஞ்சென்னிபொரும்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## பத்தாந்திருவாய்மொழி—பொருமாநீள்—ப்ரவேசம்.

---

ஆ.—(பொருமாநீள்படை.) இப்படி எம்பெருமான் தம்மோடே கலந்தகலவியால் தமக்குப் பிறந்த நிரவதிகமான நிர்வ்ருதியாலே அக்கலவியைப் பேசுகிறார்.

ஒ.—பத்தாந்திருவாய்மொழியில், புத்த்யாதி பதார்த்தங்களுக் கெல்லாம் தானே காரணமாகையாலே ஜ்ஞாந விஶேஷாத்வேஷ மென்ன, கணையென்ன, நிரதிஶய பக்தியென்ன, இவற்றை யெல்லாம் நிரதிஶயமாக எம்பெருமான் தமக்குப் பிறப்பித்துத் தம்மோடே நிரவதிக ஸம்ஶ்லேஷத்தைப் பண்ணின படியைக் கண்டு "அத்வேஷாதிக ளுடையாரோடு தம்மோடு ஸம்ஶ்லேஷித்தாற்போலே ஸம்ஶ்லேஷிக்கும்" என்றும், "தான் நினைத்தார்க்கு அவ்வளவுகளைப் பிறப்பிப்பான் தானே" என்றும் அநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார்.

ப.—பத்தாந் திருவாய்மொழியில், 'இப்படி ஸர்வப்ரகார ஸம்ஶ்லேஷம் பண்ணுகைக்குஅடி - அவனுடைய நிர்ஹேதுக மஹோபகாரகத்வமிறே' என்று அநுஸந்தித்து, அதுக்கு உபபாதகமாக, அவன் தன் வடிவைத் தம்முடைய கண்ணுக்கிலக்காக்கினபடியையும், கணகாமாத்ரத்திலும் ஸுலபனென்னு மிடத்தையும், அவனுடைய அநுபாவ்ய ஸ்வபாவத்வத்தையும், நிரந்தராநுபாவ்யதையையும், அர்த்தித்வமும் வேண்டாத அதிஶயிதோபகாரகத்வத்தையும், அதுக்கடியான பந்த விஶேஷத்தையும், இதுக்குப் படிமாவான ஸூரிபோக்யதையையும், உபகாரகத்வோபயுக்தமான பூர்ணதையையும், இவ்வுபகார க்ரமம் மறக்க அரிதென்னுமிடத்தையும், மறவாமைக்கு அவன் பண்ணின யத்நவிஶேஷத்தையும் அருளிச்செய்து, அவனுடைய மஹோபகாரகத்வத்தை அநுபவித்துக் களிக்கிறார்.

இ.—பத்தாந் திருவாய்மொழியில், கீழ்ப்பெற்ற பேற்றை அநுஸந்தித்து, 'இக்கனத்த பேறு நமக்கு எத்தாலே வந்தது?' என்று இதுக்கடியை ஆராய்ந்தவாறே, "வாஜிஜ்ஞாநஃ

[illegible] " என்கிறபடியே புத்யாதி ஸகலபதார்த்தங்களுக்கும் தானே காரணமாகையாலே, அத்வேஷமென்ன, பரிகணனை யென்ன, பரமபக்தியென்ன இவ்வளவுகளை நிர்ஹேதுகக்ருபையாலே தமக்குப் பிறப்பித்துத் தம்மோடு கலந்தபடியைக் கண்டு, அத்வேஷாதிகளுடையாரோடும் தம்மோடு கலந்தாற்போலே கலக்கும் ஸ்வபாவனென்றும், அவர்களுக்கு அவ்வளவுகளைப் பிறப்பிப்பான் அவனேயென்றும் அநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார். முன்புள்ளார், 'கீழ் பெற்ற பேற்றை அநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார்' என்னுமளவேயாயிற்று நிர்வஹிப்பது; பட்டர் தம்முடைய வைபவமெல்லாங் காட்டுந் திருவாய்மொழியாயிற்று இது.

ஈடு.—' கீழில் திருவாய்மொழியில் பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார் ' என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி. *(அதாவது)-நிர்வ்ருதியென்று-ஸுகமாய், ஸுகிக்கிறாரென்றபடி. கீழ்ப்பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்து பட்டர் அருளிச்செய்வதோரேற்ற முண்டு. அதாவது - " உச்சியுள்ளேநிற்கும் " என்றிறே கீழ்நின்றது, பேற்றில் இனி இதுக்கவ்வருகு ஏற்றமாகச் செய்துகொடுக்கலாவ தொன்றுமில்லை; இனி இதினுடைய அவிச்சேதத்தைப் பண்ணிக்கொடுக்கையே உள்ளது; ' பேறு கனத்திருந்தது, இது வந்த வழியென்ன? என்று ஆராய்ந்தார், இப்பேற்றின்கனத்துக்கு ஈடாயிருப்பதொரு நன்மை தந்தலையிலின்றிக்கே யிருந்தது; இத்தலையிலும் ஏதேனுமுண்டாகப் பார்த்தாலும், அத்வேஷமாதல், ஆபிமுக்யமாதலிறே உள்ளது, அத்தை ஸாதநமாகச்சொல்லப்போராதே, இத்தலையிலே பரமபக்தி பர்யந்தமாகப் பிறந்தாலும் பேற்றின்கனத்துக்கு இத்தை ஒருஸாதநமாகச் சொல்லப்போராதே, ஒருவன் ஓரெலுமிச்சம்பழங் கொடுத்து ராஜ்யத்தைப்பெற்றால் இது விலையாயிராதே; ஸர்வேஶ்வரனடியாக வரும் பேற்றுக்கு இத்தலையால் ஓரடி நிரூபிக்கலாயிராதே, "வரவாறென்றில்லையால் வாழ்வினி

---

பொருமாநீள்படை ப்ரவேஶே - " கருமாணிக்கமென்கண்ணுளதாகுமே " என்ற பதத்தை நிதாநமாக விவக்ஷித்து, கீழோடே இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி - நிர்வ்ருதராகிறாரென்று இத்யாதி. " கீழ்ப்பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்து " என்ற வாக்யம் - ப்ரவேஶத்தினுதியிலே அநுஸந்தேயம். பட்டர் அருளிச்செய்வதோரேற்றமாவது - நிர்ஹேதுகத்வாநுஸந்தாநபூர்வகமாக நிர்வ்ருதராகிறாரென்ற. " கீழில் திருவாய்மொழியிற் பிறந்த ஸர்வாங்கஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்து நிர்வ்ருதராகிறாரென்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி, நிர்வ்ருதியென்று - ஸுகமாய், ஸுகிக்கிறாரென்றபடி. "கீழ்ப்பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்து பட்டர் அருளிச்செய்வதோரேற்றமுண்டு" என்று இங்ஙனே பாடபேதமுண்டு; இப்போது யதாக்ரமமே அநுஸந்தேயம்; முன்பின்னாக வாக்யம் அநுஸந்திக்கவேண்டியதில்லை. அநுஸந்தித்து - ஆராய்ந்துபார்த்து. அதாவது - " கீழ்ப்பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்துக்கு ஹேதுவாக ஒன்றைச் சொன்னதுண்டோ? " என்று ஆராய்ந்துபார்த்து, காணாமையாலே பட்டர் இங்ஙனே யோஜித்தாரென்று கருத்து. இல்லை என்கிறதென்? நித்யவிபூதியிலே கொண்டுபோயநுபவிப்பிக்கிறது ஏற்றமன்றோ? என்ன; அன்று என்கிறார் - இனி இதினுடைய இத்யாதி. ஆகையாலே, பேறுகனத்திருந்தது என்று கூட்டுவது. இதினுடைய-ஸர்வாங்கஸம்ஶ்லேஷத்தினுடைய. " இப்பேற்றின்கனத்துக்கீடாயிருப்பது" இத்யாதி வாக்யத்துக்கு- "நித்யஸூரிகள்பேற்றை " இத்யாதி வாக்யத்தோடே ஸங்கதி. நடுவுள்ளதெல்லாம் - ப்ரஸக்தாநுஷங்கபரிஹாரபரம். ஸர்வமுக்திப்ரஸங்கபரிஹாரார்த்தமாக இவனிடத்திலும் சிலவுண்டாகவேண்டாவோ? என்ன, இத்தலையிலும் இத்யாதி. அஸ்துகோதோஷஇத்யத்ராஹ - அத்தை ஸாதநமாக இத்யாதி. அத்வேஷாபிமுக்யங்களுக்கு ஸாதநத்வ ராஹித்யத்தை கைமுத்யந்யாயத்தாலே ஸாதிக்கிறார் - இத்தலையிலேபரமபக்தி இத்யாதி. பரமபக்த்யாதிகள் ஸாதநமன்றென்கைக்கு த்ருஷ்டாந்தம் - ஒருவன் இத்யாதி. விலை - ஸத்ருஶம். கார்யத்தைக் கொண்டு ஏதத்ஸத்ருஶகாரணத்தைக் கல்பித்தாலோ வென்ன, ஸர்வேஶ்வரன் இத்யாதி. இத்தலையால் ஓரடி-சேதநனால் அநுஷ்டிதமான ஸாதநம் நிர்ஹேதுகத்வத்துக்கு ப்ரமாணம்-வரவாறு இத்யாதி. ஆல்-ஆஶ்சர்யத்

தால்'' என்னும்படியிறே யிருப்பது; இவனை முதலிலே ஸ்ருஷ்டிக்கிறபோது "இவன் தீயவழியைத்தப்பி நல்லவழி போகவேணும்'' என்று உபகரணங்களைக்கொடுத்து விடுகையாலே, இவன் தலையால் பிறந்த நன்மைக்கும்அடி அவனுயிருக்குமே; இனி புத்த்யாதி ஸகலபதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனுகையாலே, அத்வேஷந் தொடக்கமாக, பரிகணனை நடுவாக, பரமபக்தி பர்யந்தமாகத் தானே பிறப்பிப்பானொருவன்; 'நித்யஸூரிகள் பேற்றை அநாதிகாலம் ஸம்ஸரித்துப்போந்த நமக்குத் தந்தான், ஒருவிஷயீகாரமிருக்கும்படி யென்?" என்று, கீழில்திருவாய்மொழியில் உந்மஸ்தகமாகப் பிறந்த ஸம்ஶ்லேஷரஸத்தை அநுஸந்தித்து நிர்வ்ருதராகிருர்" என்று.

## முதற் பாட்டு.

பொருமாநீள்படை ஆழிசங்கத்தொடு
திருமாநீள்கழல் ஏழுலகுந்தொழ
ஒருமாணிக்குறளாகி நிமிர்ந்த அக்
கருமாணிக்கம் என்கண்ணுளதாகுமே.

**ஆ.**—*விரோதிநிரஸநஸமயத்தில் அவர்களுக்குத் தக்கபடியன்றியே, அதிகமாகக் கிளர்ந்துகொண்டு செல்லும் ஸ்வபாவமான திருவாழி திருச்சங்கு முதலான திவ்யாயுதங்களை ஏந்தின அவ்வழகையும், அளவிறந்த அழகையுடைத்தான தன்திருவடியையும் ஸர்வாத்மாக்களுங் கண்டு தொழும்படியாக, ஒருமாணிக்குறளாகி நிமிர்ந்த அக்கருமாணிக்கம் அவ்வழகோடே என்கண்ணுள்ளேயிருந்தது என்கிருர்.*

ஒ.—*முதற்பாட்டில், எம்பெருமான் தன்னுடைய ஸௌந்தர்யஶீலாதிகளைக்காட்டி வஶீகரித்துத் தம்மை அநந்யார்ஹமாக்கித் தம்மோடு உந்மஸ்தகரஸமாக முன்புகலந்த கலவியை அநுபாஷிக்கிருர்.*

[பொருமாவென்று தொடங்கி] - எம்பெருமான்பக்கல் பரிவாலே ப்ரதிபக்ஷத்தின் மேலே விழாநிற்பதுஞ் செய்து எம்பெருமான் வளர்த்திக்குத் தக்கபடி மிகவும் வளராநின்றுள்ள

---

*திலே. கீழ், ஸாதகத்வத்தை அப்யுபகம்ய அருளிச்செய்து அப்யுபகம்ய அருளிச்செய்கிருர் - இவனைமுதலிலே இத்யாதி. பரிஹாரார்த்தம் - இனிபுத்த்யாதி இத்யாதி. இனி - கிஞ்ச. "யொவ்ஸாஜிஹெரொ ஸஹுாநு" "ஶாஸ்த்ரவஶ்யஸுஹுாநாம்" இத்யாத்யநுஸந்தேயம். கீதாஸு நவமே, "வுஷிஜ்ஞாநம் ஸம்மொஹ: க்ஷமா ஸத்யம் தம: ஶம: । ஸுகம் து:கம் பவோ பாவோ பயம் சாபயமேவ ச । அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோதாநம் யஶோயஶ: । பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா:". பரிகணனையென்றது - "எண்ணிலும்வரும்" என்றத்தைப்பற்ற. நிகமிக்கிருர் - நித்யஸூரிகள் இத்யாதி. "ஓரெண்தானுமின்றியே" இத்யாதியைப்பற்ற - அநாதிகாலம் இத்யாதி "என் கண்ணுளதாகும்" "கண்டாயேநெஞ்சே" இத்யாதியைப் பற்ற - நிர்வ்ருதராகிறர் என்றது. "ஓரெண் தானுமின்றியே" என்றத்தைப்பற்ற - பட்டர்நிர்வாஹம். "ஸர்வாங்கஸம்ஶ்லேஷாநுஸந்தாநத்தாலே நிர்வ்ருதராகிருர்." என்று - முந்தின நிர்வாஹம். "நிர்ஹேதுகத்வாநுஸந்தாநமும் நிர்வ்ருதிக்குஹேது" என்று - பட்டர் யோஜனைக்கு விஶேஷம்.*

திவ்யாயுதமான திருவாழியோடும், ஶ்ரீபாஞ்சஜந்யத்தோடும், அழகியதாய்ப் பூஜ்யமாய் வளரா நின்றுள்ள திருவடிகளை ஸகலலோகங்களும் கண்டுதொழும்படி. [ஒருமாணிக்குறளாகி யென்று தொடங்கி] - அர்த்திதைக்கீடாய் அழகாலே ஆகர்ஷகமான குறள்வடிவாய்த் தன்னுடைய அபேக்ஷிதம் பெற்ற ப்ரீத்யதிஶயத்தாலே மிகவும் வளருவதுஞ்செய்து விலக்ஷணமான அழகையுடைய எம்பெருமான் அப்படியே எனக்கு வந்து ஸுலபனானன்.

ப.—முதற்பாட்டில், த்ரைவிக்ரமாபதாநத்தாலே ஸர்வலோகத்துக்கும் உபகரித்தாற் போலே, அவ்வடிவை என்கண்ணுக்கு இலக்காக்கினா னென்கிறார்.

பொரு - விரோதிநிரஸநசீலமாய், மா - (அத்தாலே) அதிஶயிதோத்க்ருஷ்டமாய், நீள்-(வடிவோடொக்க)வளரக்கடவதாயுள்ள, படை - ஆயுதமான, ஆழிசங்கத்தொடு - ஶங்கசக்ரங்களோடேகூட, திரு - ஸ்ரீய:பதித்வசிஹ்நங்களையுடைத்தான, மா - உத்கர்ஷயுக்தமாய், நீள் - ஆஶ்ரிதரளவுஞ் செல்வதான, கழல் - திருவடிகளை, ஏழுலகும் - (ஜ்ஞாநாஜ்ஞாநவிபாகமற) ஸகலலோகமும், தொழ - ஶேஷத்வாநுரூபவ்ருத்தியைப்பண்ணி அநுபவிக்கும்படியாக, ஒரு - அத்விதீயமான, மாணிக்குறளாய் - (அர்த்தித்வாநுரூப ப்ரஹ்மசாரி) வாமநத்வத்தையுடையனாய்க் கொண்டு, நிமிர்ந்த - (கார்யஸித்திஸமநந்தரம்) வளர்ந்தருளின, அ - அந்தவைபவத்தையுடைய, கருமாணிக்கம் - நீலரத்நம்போலே தர்ஶநீயவிக்ரஹனானவன், என்கண்ணுளது ஆகும் - என் கண்ணுக்கு விஷயம் ஆகாநிற்கும். என்கண் என்று - என்னிடத் தென்றுமாம். உளதாகு மென்ற அஃறிணை - மாணிக்க மென்கையாலே.

இ.—முதற்பாட்டில், தன்னுடைய ஸௌந்தர்யஶீலாதிகளைக் காட்டித் தம்மை அநந்யார்ஹராக்கி உந்மஸ்தகரஸமாகக் கலந்த கலவியை அநுபாஷிக்கிறார். இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹம் - முதற்பாட் டென்னவுமாம்.

[பொரு] - விரோதிகளான நமுசி ப்ரப்ருதிகள் மேலேவிழாநிற்கை. "ஹ்ருதஸ்ய வயெஷொஷணாஷம் வஶ்யாதி ராவவ" தன்னிலே பொருகை யென்றுமாம். [மா] - ஆஶ்ரிதவிஷயத்தில் ஈஶ்வரன் நெகிழநின்றாலும் விடாத ஓரத்தின்மிகுதியைச் சொல்லுகிறது. [நீள் படை]-ஈஶ்வரன் வளருகிறபோது ஒக்கவளராநின்றுள்ள திவ்யாயுதமான ஆழிஶங்கத்தோடே கூட. "திவிக்ஷு ஈக்ஷு ஈக்ஷு ஈஹதெத்ருஜொக்ஷ்ய ஷுஹரஷாயாய:" "இடங்கைவலம்புரிநின் றார்ப்ப". மாநீள்படையென்று - மிக்கவளர்த்தியைச் சொல்லிற்றாகவுமாம். [திருமாநீள்கழல்]-திரு - ஶங்கவாஷ்யாஂமகஞ்ஜக - என்கிற ஐஶ்வர்யஸூசகமான சிஹ்நங்களையுடைத்தாகை. மா - அவன் தன்னிலும் பூஜ்யமாயிருக்கை. நீள்கழல் - ஆஶாலேஶமுடையாரளவும் வளருந் திருவடிகள். [ஏழுலகுந்தொழ] - அஜ்ஞரோடு ஸர்வஜ்ஞரோடு வாசியறத் தொழும்படி திருவடிகள் தலையிலே வந்திருக்கையாலே தொழுதார்களாமத்தனையிறே. [ஒரு] - அத்விதீயமாயிருக்கை. "இன்னமுந்தானே அவ்வடிவைக் கொள்ளவேணும்' என்னிலும் அப்படி வாயா திருக்கை. [மாணி]-அர்த்தித்வத்திலே தகணேறினபடி. மாண் - அழகு. [குறளாகி] - சேர்ப்பால்போலே சுருங்கினதனையும் போக்யமாயிருக்கை. [நிமிர்ந்த] - அபேக்ஷிதம் பெற்ற ப்ரீதியாலே வளர்ந்தபடி. [அக்கருமாணிக்கமென்கண்ணுளதாகுமே] - குளிர்ந்து பெருவிலையனான ரத்நம்போலே அவ்வழகை நிர்ஹேதுகமாக என்கண்ணுக்கு விஷயமாக்கினான். மயர்வறமதிநல மருளப்பெற்ற தம்மாலும் பரிச்சேதிக்க வொண்ணாமையாலே "அக்கருமாணிக்கம்" என்கிறார். கண்ணென்று - இடமாய். எனக்கு ஸுலபனானா னென்னவுமாம்.

ஈடு.—முதற்பாட்டு. இத்திருவாய்மொழியில் சொல்லுகிற அர்த்தத்தைத் திரள அருளிச்செய்கிறார், முதற்பாட்டில். மஹாபலி, தன்வரவை நினையாதேயிருக்க அவன்பக்கலிலே தானே இரப்பாளனாய்ச் சென்று தன்னுடைமையைத் தன்னதாக்கினாற்போலே, எனக்கு நினைவின்றிக்கேயிருக்கத் தானேவந்து தன்வடிவழகை என்கண்ணுக்கிலக்காக்கினான் என்று அவன்படியை அநுஸந்தித்து இனியராகிறார்.

[பொரு] - திருவுலகளந்தருளுகிறபோது, திவ்யாயுதங்கள் நமுசிப்ரப்ருதிகள் மேலே பொருதபடியைச் சொல்லுதல்; திவ்யாயுதங்கள்தான் ஒருவரையொருவர் அதிசங்கைபண்ணிப் பொருகிறபடியைச் சொல்லுதல். நமுசிப்ரப்ருதிகளோடே பொருமென்றது சேருமிறே; [இடங்கை வலம்புரிநின்றார்ப்ப] - இடத்திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யமானது அப்போதப்போது பிறந்த விஜயத்தை அநுஸந்தித்து ஆர்த்துக்கொண்டது; அங்ஙன் ஆர்த்துக்கொள்ள அவஸரமின்றிக்கே, திருவாழி, நெருப்பையுமிழ்ந்து விரோதிகளை "வாய்வாய்" என்று ஒடுங்கப்பண்ணிற்று; [விடங்காலுந் தீவாயரவணை]- திருவநந்தாழ்வான் உகவாதார் மேலே கிடந்த இடத்தேகிடந்து நெருப்பை யுமிழ்ந்தான்; விரோதிபூயிஷ்டமான இத்தேசத்தில் அவன் இப்படி செய்யச்சொல்லவேணுமோ? அங்கேயுட்பட இப்படிசெய்யக்கடவ அவன், * ஆங்காரவாரமதுகேட்டழலுமிழும் பூங்காரரவணையிறே, ஆங்கு - தேசமது. ஆரவாரமது - "அஹமந்நமஹமந்நமஹமந்நம் அஹமந்நாதோஹமந்நாதோஹமந்நாதஃ" (அஹமந்நமஹமந்நமஹமந்நம் அஹமந்நாதோஹமந்நாதோஹமந்நாதஃ) என்கிற ஆரவாரம். அங்கே அதுகேட்டு அப்படி படுகிறவர்கள் இங்கே இதுகண்டால் இப்படிபடச் சொல்லவேணுமோ? இவர்கள் இப்படி அலமருகைக்கு அடியென்? என்னில், [அரவணைமேல் தோன்றல்]- திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன் காடுமோடையும் அளக்கைக்காகப் புஷ்பஹாஸ ஸுகுமாரமான திருவடிகளை நிமிர்த்தபோது, எல்லாம் பட்டவேண்டாவோ? அவன் இப்படி வ்யாபரியா நின்றால், தன்னில்தான் பொருதென்றபோது - அஸ்த்தானே பயஶங்கையாலே ஒருவரையொருவர் அதிஶங்கைபண்ணிப் பொருகை. "ராகவம் ஶரணம் கதஃ; (ராகவம்ஶரணம்கதஃ) என்றவனையிறே "வத்யதாம்" (வத்யதாம்) என்றது; "பரதஸ்யவதே தோஷம் நாஹம் பஶ்யாமி" (பரதஸ்யவதேதோஷம் நாஹம்பஶ்யாமி) என்றாரிறே இளைய

---

முதற்பாட்டு - பொருமா இத்யாதி. இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தமாவது - நிர்ஹேதுகவிஷயீகாரம். திரள - ஸங்க்ரஹேண. விவரணம் - மஹாபலி இத்யாதி. தன் உடைமையை - தன்னுடைய ஸ்வமான பூமியை. "அக்கருமாணிக்கம்" என்கையாலே, தன்வடிவை என்றது.

இது எப்படி கூடும்? என்கிற ஶங்கையிலே, த்விதீயபக்ஷத்தைப் பஶ்சாத்ப்ரதிபாதிக்கிறவராய்க்கொண்டு, ப்ரதமபக்ஷத்தை அருளிச்செய்கிறார் - நமுசி இத்யாதி. சேருமிறே - நமுசிப்ரப்ருதிகள் விரோதிகளாகையாலே சேருமிறே. நமுசிப்ரப்ருதிகளோடே பொருதமைக்கு ப்ரமாணம் - இடங்கை இத்யாதி. இதுக்கு அர்த்தம்-இடத்திருக்கையில் இத்யாதி. ஆர்ப்பு - ஆரவாரம். வாய்வாய் என்று ஒடுங்கப்பண்ணிற்றென்றது- "என்னிதுமாயமென்னப்பனறிந்திலன்" என்ற நமுசிப்ரப்ருதிகளை "வாய்வாய்" என்று ஒடுங்கப்பண்ணிற்றென்றபடி. வாய்வாயென்று - கபோலதாடநத்தைச் சொல்லுகிறது. கிடந்தவிடத்தே - க்ஷீராப்தியிலே. அவன் - திருவநந்தாழ்வான். அங்கே - பரமபதத்திலே. அங்கும் அப்படி செய்யுமோ? என்ன, ஆங்காரவாரம் இத்யாதி. அங்கு விரோதிகளில்லையே, ஆரவாரமேது? என்ன, அஹமந்நம் இத்யாதி. "அரவு" என்றத்தை - கீழும் மேலும் அந்வயிப்பது. தோன்றல் - ராஜா. தோன்றல் என்றது - ஸௌகுமார்யஸூசகம். இப்படி வ்யாபரியாநின்றாலென்றது - சாடு. இப்படி - இந்த பூமியிலென்று ஸ்வபாவார்த்தம். த்விதீயபக்ஷத்தை அருளிச்செய்கிறார் - தன்னில் தான் இத்யாதி. "ஸ்நேஹாத்வஸூராக்ஷாவ்யஸநிஹிஃ" இத்யாதி. அஸ்தானே பயஶங்கைபண்ணினதுக்கு த்ருஷ்டாந்தத்வயம் - ராகவம் இத்யாதி வாக்யத்வயேந. யுத்தகாண்டே ஸப்தமே, "ஸோஹம் பருஷிதஸ்தேந தாஸவச்சாவமாநிதஃ । த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கதஃ" அயோத்யாகாண்டே சித்ரகூடே லக்ஷ்மணஃ, "பரதஸ்ய வதே தோஷம் நா

பெருமாள். [மா] - அவற்றின்வடிவின் பெருமையைச் சொல்லவுமாம், அன்றியே, ஆஶ்ரித விஷயத்தில் அவனிற் காட்டில் இவர்களுக்கு உண்டான பக்ஷபாதத்தைச் சொல்லவுமாம். "**அவ்யாஹதாநி க்ருஷ்ணஸ்ய சக்ராதீந்யாயுதாநிதம் | ரக்ஷந்தி ஸகலாபத்ப்யோ யேந விஷ்ணுருபாஸிதஃ**" (அவ்யாஹதாநிக்ருஷ்ணஸ்ய சக்ராதீந்யாயுதாநிதம், ரக்ஷந்திஸகலாபத்ப்யோயேநவிஷ்ணுருபாஸிதஃ) என்கிறபடியே ஸர்வேஶ்வரன் எதிரியாகிலும் அவன் கையில் காட்டிக்கோடாதே நோக்கும் மஹத்தையைச் சொல்லுகிறது. [நீள்படை] - "ஆயிரக் காதம்பறப்பதின்குட்டி ஐந்நூறுகாதம் சிறகடிக்கொள்ளும்" என்னுமாபோலே, ஸர்வேஶ்வரன் அதிகரித்த கார்யத்திலே அவன்தன்னிலும் முற்பட்டிருக்கை. நீள்படையான ஆழிஶங்கத்தோடே கூட. [திருமாநீள்கழலேழுலகுந்தொழ] - "**கதாபுநஃ**" (கதாபுநஃ) என்று நான் ஆசைப்பட்டுக் கிடக்குந் திருவடிகளைக்கொண்டுகிடீர் ஆசையில்லாதார்தலையிலே வைத்தது. திரு - ஐஶ்வர்ய ஸூசகமான த்வஜாரவிந்தாதிகளை யுடைத்தாயிருக்கை, மா - பரமபூஜ்யமாயிருக்கை. நீள்கழல் - ஆஶாலேஶமுடையாரிருந்த இடம் எல்லையாக வளருந் திருவடிகள். ஏழுலகுந்தொழ - ஒருஸாதநாநுஷ்டாநம் பண்ணுதாருந் தொழ. [ஒரு]-இவன்தானே "இவ்வடிவை இன்னமொருகால் கொள்ள வேணும்" என்னிலும் வாயாதபடி அத்விதீயமாயிருக்கை. [மாணி] - ஶ்ரியஃபதியென்று தோற்றாதபடி இரப்பிலே தழும்பேறுகை. [குறளாகி] - கோடியைக் காணியாக்கினாற்போலே, பெரிய வடிவைக் கண்ணுலே முகக்கலாம்படி சுருக்கினபடி. [நிமிர்ந்த] - அடியிலே நீர் வார்த்துக்

---

ஹம்வஶ்யாதி பாவக । வஹ்நிவர்ஷாவகாரிணாம் த்யாநேநஹந்யதே வியயதே".
அவனிற்காட்டில் இவர்களுக்குப் பக்ஷபாதமுண்டென்றதுக்கு ப்ரமாணம்- அவ்யாஹதாநி இத்யாதி. ஶ்ரீவிஷ்ணு தர்மே, "அவ்யாஹதாநி க்ருஷ்ணஸ்ய சக்ராதீந்யாயுதாநிதம் । ரக்ஷந்திஸகலாபத்ப்யோயேந விஷ்ணுருபாஸிதஃ." ஸகல ஶப்தத்துக்கு அர்த்தம் - ஸர்வேஶ்வரன் எதிர் இத்யாதி. ஆகையாலிறே திருவாழியாழ்வானும் இஷீகாஸ்த்ரமும், துர்வாஸாவையும் காகத்தையும் மெள்ள மெள்ளப் பின்தொடர்ந்தது; அத்தாலேயிறே அவர்களுக்கு ஶரணாகதிக்கு அவகாஶம் கிடைத்தது. அவனுடைய அந்தரங்க பரிகரமெல்லாம் இப்படியே யிருப்பது, "வாமேந சைவாங்குஷ்டேந நிஹிதாம் ஶங்கிநீம் யதி நாக்ஷ்யேஷீம் । ஸ ஏவ ஶத்ருவர்க்கஸ்ய வதஶம் ஜகத்ஸேஶம் பரிவர்த்யாத்ம்யஹம்" என்று பெருமாள் அம்பு தொடுத்தபோது, "வாநராஹ்ருஷ்யா ஸ்ருஷ்டாத்ஸ்வர்க்காஹ்ருதஹிதோரதஃ । நகேராயவஶேவநஃ ப்ருகுதிம் ஹாதஶஹேர்வஷி" என்று தணியப்பண்ணினாரிறே இளைய பெருமாள். "மா" என்று - வடிவிற்பெருமையானபோது, மாவென்றும், நீளென்றும் - மீமிசையாய், அதுக்கு ஹாவம் - ஆயிரக்காதம் இத்யாதி. "மா" என்றது - ஆஶ்ரிதபக்ஷபாதரூப மாஹாத்ம்யபரமானபோது, "க்ஷஸாதீவஷ்ஃ" இத்யபேக்ஷாம்பூரயந்காஹ - ஆயிரக்காதம் இத்யாதி. பறப்பதின் - பறக்கிற பக்ஷியின். அடிக்கொள்ளும் - அடித்துக்கொள்ளும். உத்தார்த்தத்வயாநுகுண்யேந, ஸர்வேஶ்வரன் அதிகரித்த கார்யம் - வர்த்தநமும், ஜகத்ரக்ஷணமுமென்று கண்டுகொள்வது. "உலகு" என்றதுக்கு ஹாவம் - கதாபுநஃ இத்யாதி. ஸ்த்தோத்ரே. கதாபுநஃ என்று ஆளவந்தார் ஆசைப்பட்டாற்போலே, "நின்பாதபங்கயமே தலைக்கணியாய்" "என்று நான் ஆசைப்பட்டுக் கிடக்கும்" என்றபடி. "ஆஶாலேஶமுடையார்" இத்யாதிக்கு ப்ரமாணமாக - "நாராயணேதி யஸ்யாஸ்யே வர்த்ததே நாமஸம்ஜ்ஞம் । நாராயணஸ்தஸ்ய ஸர்வஸ்தம் ஶரீரவஸ்தயா" "ஶாஹஸாத்ரீஸாக்ஷ்யஷ்யாதா" "ஸோஹம் மநஸ் ஸமாதேஜாஶ்வஸீம் ஶத்ருவஸதீநஃ" இத்யாத்யநுஸந்தேயம். "ஏழுலகுந்தொழ" என்றதுக்கு பலிதம் - ஒரு ஸாதநாநுஷ்டாநம் இத்யாதி. கொள்ளவேணும் - பரிக்ரஹிக்கவேணும். மாணி - ப்ரஹ்மசாரி. குறள் - வாமநன். முகக்கலாம்படி - க்ரஹிக்கலாம்படி. சுருக்கினபடி - ஸங்கோசித்தபடி. "க்ரோநிவதி தேஜோ யேவா ஶ்ரேநா வஸ்யேக்ஷணாக" என்றத்தைப்பற்ற சாடு; அடியிலே இத்யாதி. வாஸுதேவதருவிறே,

கோடுத்தவாறே நிமிர்ந்தபடி. * வாஸுதேவ தருவிறே. நெய்தற்காடு அலர்ந்தாற்போலே, ஆகாஶாவகாஶமடையத் தன்வடிவழகாலே பாரித்தபடி. [அக்கருமாணிக்கம்] - மயர்வறமதிநலமருளப் பெற்ற தம்மாலும் பரிச்சேதிக்கப்போகிறதில்லைகாணும். [என்கண்ணுளதாகுமே] - ஏழுலகத்துள்ளார், வாசியறிந்திலர்களிறே; அவ்வாசியறியுமவராகையாலே "என்கண்ணுளதாகுமே" என்கிறார். கண் என்று - இடமாய், என்னிடத்தாகும் என்னவுமாம். "கருமாணிக்கம்" என்கையாலே, 'கண்ணுளதாகும் என்கிறது. (க)

## இரண்டாம் பாட்டு.

கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால்தொழில்
எண்ணிலும்வரும் என்னினிவேண்டுவம்?
மண்ணும்நீரும்எரியும் நல்வாயுவும்
விண்ணுமாய்விரியும் எம்பிரானையே.

ஆ:—(கண்ணுள்ளே நிற்கும்.) ஸர்வ ஜகதீஶ்வரனான எம்பெருமான், தன்னுடைய அபிநிவேஶத்தாலே என்னுடைய மநோரதத்தை விஞ்சும்படி என்னுடைய கண்கள் தொடக்கமாகவுள்ள ஸர்வகரணங்களுக்கும் போக்யமாக இனி நமக்கு வேண்டுவதுண்டோ? என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், எம்பெருமான், தன்பக்கல் நிரதிஶய பக்தரானவர்களுக்கும் "தானொருவனுளன்" என்று பரிகணித்தார்க்கும் அத்யந்தஸுலபனென்ற குணத்தாலே தாம் ஈடுபடுகிறார்.

[என்னினிவேண்டுவம்] - இங்ஙனே யானபின்பு நமக்கு ஒரு குறையில்லை. [மண்ணு நீருமென்று - மேலுக்கு] - இப்படி ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாகக் கார்யபூத ப்ருதிவ்யாதி ஸகல பதார்த்தரூபேண அத்யந்த விஸ்த்ருதனுயுள்ளவன் - ஸர்வேஶ்வர னென்றுமாம். நல்வாயுவு மென்கிறது - தாரகத்வத்தைப்பற்ற.

ப.—அநந்தரம், ஸர்வகாரணபூதனான ஸர்வேஶ்வரன், ஸர்வாத்மகபஜநத்தோடு ஸத்பாவாபிஸந்தியோடு வாசியற ஸந்நிஹிதனு மென்கிறார்.

மண்ணுநீருமெரியு நல்வாயுவும் விண்ணுமாய் - ப்ருதிவ்யாதி பூதங்களையும் ப்ரகாரமாக வுடையனுய்க்கொண்டு, விரியும் - ஜகதாகாரேண விஸ்த்ருதனுகிற, எம்பிரானை - என்னுடைய ஸ்வாமியை, காதன்மையால் - அபிநிவேஶாத்மக பக்தியாலே, தொழில் - ப்ரணாமார்ச்சநாதிகளைப் பண்ணில், கண்ணுள்ளே - 'த்ராஂஷ்ஸ்யெவ ஹஜாஉ்ூஷறஂ' என்று அவர்கள் கண்வட்டத்தை

---

"நிமிர்ந்த - கருமாணிக்கம்" என்ற பதச்சேர்த்திக்கு ஶாவம்-நெய்தற்காடு இத்யாதி. பாரித்தபடி - பரப்பினபடி. "அக்கருமாணிக்கம்" என்ற தச்சப்தத்துக்கு ஶாவம் - மயர்வற இத்யாதி. "என்" என்றதுக்கு ஶாவம் - ஏழுலகு இத்யாதி. என்னிடந்தாகும் - எனக்கு போக்யமாயிருக்கும். முந்தின அர்த்தம் - என்கண்ணுக்கு விஷயமாகு மென்று. என்கண்ணுளான் என்று உயர்திணையாகச் சொல்லாதே, அஃறிணையாகச் சொல்லுவானென்? என்ன, கருமாணிக்கமென்கையாலே இத்யாதி. உயர்திணை - தேவமநுஷ்யாதி சேதநவாசி ஶப்தம். அஃறிணை - திர்யக்ஸ்தாவரங்களான அசேதநவாசிஶப்தம். த்ரிவிக்ரமனேயாகிலும், "கருமாணிக்கம்" என்று நிர்த்தேஶிக்கையாலே, "உளதாகும்" என்கிறு ரென்றபடி.. க்ரமேண அந்வயம். (க)

விடாமல், நிற்கும் - நித்யஸந்நிதிபண்ணும், எண்ணிலும் - "(ஜவிலவு ஹெதி வெஷெடி" என்று) ஸத்பாவசிந்தாமாத்ரத்திலும், வரும் - (அவன்வசத்திலே) வரும்படியாயிருக்கும்; இனி - இப்படி துஷ்கரஸுகரங்களான உபாயத்வயத்திலும் ஸுலபனானபின்பு, என்வேண்டுவம் - (அகிஞ்சனர் யத்திகளான நமக்குச்) செய்யவேண்டுவதுண்டோ?

காரணத்வம் - உபயோபாயஸாதாரணம். எண் - சிந்திப்பு. "சிந்திப்பேயமையும்" என்கிற ப்ரபந்நஸௌகர்யம். எண்ணிலும் வருமென்று - நினைவிற்காட்டில் மிகவுங்கைவரு மென்றுமாம். நல்வாயு - தாரகத்வவைலக்ஷண்யம்.

இ.—இரண்டாம்பாட்டில், பரிகணனையோடு பரமபக்தியோடு வாசியற முகங் கொடுக்குமென்று அக்குணத்திலே ஈடுபடுகிறார்.

[கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால் தொழில்] - அவனைப்பெறுவிடில் தரியாதானும் படியான பரமபக்தியை யுடையனுய்க்கொண்டு தொழில் கண்வட்டத்தே விடாதேநிற்கும். [நிற்கும்] - இத்தலைக்காக நிற்கையன்றிக்கே, தன் செல்லாமையோடே ஸ்தாவரப்ரதிஷ்டையாய் நிற்கும். [எண்ணிலும்வரும்] - கடபடாதிகளுடைய அஸ்திபாவத்தை இசையும், ஈச்வரனுடைய அஸ்திபாவத்தை இசையான்; பஞ்சவிம்சயதிதத்வத்தையும் இசையும், ஷட்விம்சகனை இசையான்; 'நம்முடைய உண்மையை இசைந்தானிறே' என்று அப்போதே வந்து முகங்காட்டும். இவன் எண்ணின அளவுக்கு அவ்வருகே வரு மென்னவுமாம். [என்னினிவேண்டுவம்] - ஸர்வேச்வரன் ஸ்வபாவம் இதுவானபின்பு ஹிதாம்சத்தில் நமக்கு ஒருகுறையில்லை. வேல்வெட்டிப்பிள்ளை இதிஹாஸம். [மண்ணும்நீரித்யாதி] - "நல்வாயுவும்" என்கிறது - தாரகத்வத்தைப் பற்ற. [ஆய்] - அந்தராத்மாவாய். [விரியும்] - "வஹுஸ்யாம்" என்கிறபடியே விஸ்த்ருதனுகாநிற்கும். [எம்பிரானையே] - ஜகத்காரணத்வ ப்ரயுக்தமான உபகாரத்தை நினைத்தல், ஸர்வேச்வர னென்னுதல். "எம்பிரானை" என்கிற த்விதீயையை - ப்ரதமையாக்கி, "எம்பிரான் - கண்ணுள்ளே நிற்கும" என்னுதல்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. பரமபக்திக்கும் பரிகணனைக்கு மொக்க முகங்காட்டு மென்கிறார்.

[கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால் தொழில்] - பரமபக்தியுக்தராய்க்கொண்டு தொழில், அவர்கள் கண்வட்டத்துக்கவ்வருந போகமாட்டாதே நிற்கும். தன்னையொழியச் செல்லாமையை யுடையராய்க்கொண்டு தொழில், தானும் அவர்களை யொழியச் செல்லாமையையுடையனுய் அவர்கள் கண்வடடத்தினின்றும் கால்வாங்கமாட்டாதே நிற்கும். [எண்ணிலும்வரும்] - "கடம், படம், ஈச்வரன்" என்றால், "நம்மை, 'இல்லை' என்னாதே. இவற்றோடொக்கப் பரிகணித்தானிறே" என்று வரும். "சதுர்விம்சதிதத்த்வமாயிருக்கும் அசித்து, பஞ்சவிம்சகன்

---

இரண்டாம்பாட்டு - கண்ணுள்ளே இத்யாதி. "காதன்மையால், எண்ணிலும்வரும்" என்ற பதங்களிலே நோக்காக அவதாரிகை-பரமபக்தி இத்யாதி.

காதன்மையாவது - "நவேஸ்யஹஸு ஸோம ஹஸ்த்யா" என்கிற பக்தி. விவரணம் -தன்னையொழிய இத்யாதி. "கண்ணுள்ளே நிற்கும்" என்கையாலே, "காதன்மை" என்று - பரமபக்தியே விவக்ஷித மென்று கருத்து. தானும் அவர்களை யொழியச் செல்லாமையை யுடைய னென்றது - அவதாரண தாத்பர்யம். எண்ணென்று - ஸங்க்யையாய், இத்தை-வாதிகளுடையவும், வேதாந்திகளுடையவும், லௌகிகருடையவும் ப்ரக்ரியையாலே த்ரிவிதமாக அருளிச்செய்கிறார்- கடம் இத்யாதியாலும், சதுர்விம்சதிதத்த்வம் இத்யாதியாலும், இருபத்தொன்று இத்யாதியாலும். வரும்படியின் சரமாவதி-இவன்போவென்ற இத்யாதி. அதுக்கும் - போகைக்கும்.

ஆத்மா, ஷட்விம்ஶகன் ஈஶ்வரன்'' என்றால், "நம்முடைய உண்மையையும் இவற்றோபாதி இசைந்தானிறே'' என்று வந்து முகங்காட்டும். [வரும்] - நிற்குமதில்லை, இவன் 'போ' என்ற போதும் அதுக்குமுடலாக வருமித்தனை. அன்றியே, [எண்ணிலும்வரும்] - நம்முடைய எண்ணை மிஞ்சிவரு மென்றுமாம். [எண்ணிலும்வரும்] - "இருபத்தொன்று, இருபத்திரண்டு, இருபத்து மூன்று, இருபத்துநான்கு, இருபத்தஞ்சு, இருபத்தாறு'' என்று எண்ணினால், 'இருபத்தாறு நானே' என்றுவரு மென்றுமாம். [என்னினிவேண்டுவம்] - ப்ரமபக்திக்கும் பரிகணனைக்கு மொக்க முகங் காட்டுவோனானபின்பு எனக்கு ஒருகுறை யுண்டோ? அவன் இவன்பக்கல் அப்ரதிஷேதத்துக்கு அவ ஸரம்பார்த்திருந்து முகங்காட்டுவோனானபின்பு, இவனுக்கு ஹிதாம்ஶத்திற் செய்யவேண்டுவது உண்டோ? இப்படியிருக்கிற பகவத்ஸ்வரூபத்தை புத்திபண்ணுகையிறே - இவன் ப்ரபந்நனாகை யாவது. அவன்தன் ஸ்வரூபோபதேசத்தைப் பண்ணி, "உன்னால்வரும் இழவுக்கு அஞ்சவேண்டா - மாஶுச:'' என்றாற்போலே, இவரும் அவன் ஸ்வரூபத்தை அநுஸந்தித்து, "என்னினிவேண்டுவம்'' என்கிறார். அப்ரதிஷேதமே பேற்றுக்கு வேண்டுவது, அதுக்குப்புறம்பான யோக்யதாயோக்யதைகள் அகிஞ்சித்கரம். வேல்வெட்டிநம்பியார் நம்பிள்ளையை, 'பெருமாள் கடலை ஶரணம்புகுகிறவிடத்தில் பராங்முகத்வாதிநியமங்களோடே ஶரணம்புக்காராயிருந்தது. இவ்வுபாயம் இதரஸாதநங்கள் போலே சிலநியமங்கள் வேண்டியிருக்கிறதோ?' என்று கேட்க, 'பெருமாள் தமக்கு, "ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி'' ('ஸமுத்ரம்ராகவோராஜாஶரணங்கந்துமர்ஹதி') என்றுஉபதேஶித்தான் ஸ்ரீவிபீஷணாழ்வான்; அவன் நான் பெருமாளை ஶரணம்புகுகிறவிடத்தில், 'கடலிலே ஒருமுழுக்கிட்டு வந்தான்' என்றில்லை; ஆக, இத்தால் சொல்லிற்றாயிற்று என்னென்னில்; பெருமாள், இக்ஷ்வாகுவம்ஶ்யராய் ஆசாரப்ரதாநராகையாலே, சிலநியமங்களோடே ஶரணம் புக்கார்; ராக்ஷஸஜாதியனாகையாலே, அவன் நின்றநிலையிலே ஶரணம் புக்கான்; ஆகையாலே, யோக்யனுக்கு அயோக்யதை ஸம்பாதிக்கவேண்டா, அயோக்யனுக்கு யோக்யதை ஸம்பாதிக்க வேண்டா; ஆகையாலே, ஸர்வாதிகாரம் இவ்வுபாயம்'' என்று அருளிச்செய்தார். பகவத்ப்ரபாவஜ்ஞாநமுடையார்க்கு 'இதுவே அர்த்தம்' என்று தோற்றியிருக்கும், 'கேவலக்ரியாமாத்ரத்துக்கே

---

அதுக்கும் உடலாக வரும்-போவென்ற உக்தியை வருகைக்கு ஹேதுவாகக் கொண்டுவரும். "எண்'' என்று மநோரத பரமாக அர்த்தாந்தரம் - நம்முடைய இத்யாதி. எண்ணை மிஞ்சவருகையாவது - எண்ணின்றிக்கே யிருக்க வருகை. விவரணம் - அவன் இவன்பக்கல் இத்யாதி. அதுவென்? ப்ரபத்தி பண்ண வேண்டாவோ? என்ன, இப்படியிருக்கிற இத்யாதி. பலிதம்-அவன்தன் இத்யாதி. "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ । அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:'' என்னக்கடவதிறே. அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: - தவிபாது. அகாவம் - பண்ணினேன். அப்ரதிஷேதமே அமையுமோ? என்ன, அப்ரதிஷேதமே இத்யாதி. அதுக்கு - அப்ரதிஷேதத்துக்கு. யோக்யதை - ப்ராகாரநியமாதிகள். அயோக்யதையென்றது - த்ருஷ்டாந்தார்த்தம். ப்ராகாரநியமம் வேண்டா வென்றதுக்கு ஸம்வாதம்-வேல்வெட்டி இத்யாதி 'நம்பிள்ளையை' என்றதுக்கு - 'கேட்க' என்றத்தோடே அந்வயம். இதர ஸாதநங்கள் - ஜ்யோதிஷ்டோமாதிகள். வேல்வெட்டி நம்பியார் பாஞ்சராத்ரஶாஸ்த்ரநிஷ்டனாகையாலே, "ந ஜாதி பேதம் ந குலம் ந லிங்கம் ந குணக்ரியா: । ந தேஶகாலௌ நாவஸ்தாம் யோகோ ஹ்யயமபேக்ஷதே'' என்ற ப்ரபத்தியொன்றையும் அபேக்ஷியாத தென்னுமத்தை அறிந்தவராகை யாலே கேட்டா ரென்றபடி. லிங்கம் - க்ருஷ்ணகேஶத்வாதிகள். க்ரியைகள் - ஸதநுஷ்டாநங்கள். அவஸ்தை - ஶுத்த்யஶுத்த்யவஸ்தைகள். இப்படி எல்லார்க்கும் தோற்றாதோ? என்ன, பகவத்ப்ரபாவ இத்யாதி. "ஶ்ரீயபதிம் ஶரணாகதமோக்ஷதாம் ஶ்ரீத்வாதயாஸ்த்ய மஹாவிஷயத்வம் தேஶகாலாத்ய அஸம்பாத்யம்'' 'ஸ்ரீமாவாரநோதந:'' என்னக்கடவதிறே. இதுவே அர்த்தமென்று -

பலப்ரதாநஶக்தி யுள்ளது' என்று இருப்பார்க்கு "இவ்வர்த்தம் அநுபபந்நம்" என்று தோற்றியிருக்கும். [மண்ணும் இத்யாதி] - காரணமான பூதபஞ்சகத்துக்கும் உள்ளீடாய், "வஹூஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிறபடியே தன்விகாஸமேயாம்படி யிருக்கிற உபகாரகன் - கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில் எண்ணிலும்வரு மென்னினி வேண்டுவம்? தன்னையொழிந்த ஸகல பதார்த்தங்களும் தன்ஸங்கல்பத்தைப்பற்றி உளவாம்படி யிருக்கிற ஸர்வேஶ்வரன், தன்பக்கல் ஆஶாலேஶமுடையார் ஸங்கல்பத்தைப்பற்றித் தான் உளனும்படி யிருப்பானபின்பு, இவ்வாத்மாவுக்கு ஒரு குறையுண்டோ? என்கிறார். நல்வாயுவு மென்றது - தாரகத்வத்தைப்பற்ற. விண்ணுமாய் - இவற்றுக்கு அந்தராத்மாவா யென்றபடி. விரியும் - "வஹூஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிறபடியே விஸ்த்ருதனாகாநிற்கும். எம்பிரான் - எனக்கு உபகாரகன். ப்ரதமையை த்விதீயையாக்கி, 'எம்பிரானை' என்று கிடக்கிறது. (உ)

---

## மூன்றும் பாட்டு.

> எம்பிரானை எந்தைதந்தைதந்தைக்குந்
> தம்பிரானைத் தண்தாமரைக்கண்ணனைக்
> கோம்பராவு நுண்ணேரிடைமார்பனை
> எம்பிரானைத்தொழாய் மடநெஞ்சமே!

*ஆ.*—(எம்பிரானை.) இப்படி தம்மோடு கலந்தருளின எம்பெருமான், பிராட்டியுந் தானுமாக வெழுந்தருளியிருக்கிற இருப்பையும் தன்திருக்கண்களாலே தம்மைக் குளிரப்பார்த்தருளுகிற படியையும் கண்டு ப்ரீதராய், 'எம்பிரான்' என்றும், 'எந்தைதந்தை தந்தைக்குந்தம்பிரான்' என்றும் அவனை ஏத்திக்கொண்டு தமக்குத் துணையாக, 'எம்பெருமானைத்தொழாய் மடநெஞ்சமே' யென்று தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், எம்பெருமானுக்கு ஆஶ்ரிதவிஷயத்தில் வந்த நீர்மைக்கு அடியான லக்ஷ்மீஸம்பந்தத்தை அநுஸந்தித்து, திருவுள்ளத்தைக் குறித்து அவனைத்தொழாய் ஹவ்யமான நெஞ்சே! என்கிறார்.

[எம்பிரானையென்று தொடங்கி] - என்னையனை என்குடிநாயனை யென்று ப்ரீத்யதிஶயத்தாலே அருளிச்செய்கிறார். [கொம்பராவுநுண்ணேரிடைமார்பனை] - வஞ்சிக்கொம்புபோலவும், அரவுபோலவும், நுண்ணிதாய் நேரிதான இடையையுடைய பெரியபிராட்டியாரைத் திருமார்

---

பரமார்த்தமென்று. உத்தரார்த்தத்துக்கு அர்த்தம் - காரணமான இத்யாதி. உள்ளீடாய் - அந்தராத்மாவாய். "விரியும்" என்றதுக்கு ஹாவம் - வஹூஸ்யாம் இத்யாதி. விரியும் - விஸ்த்ருதனாகாநிற்கும். அந்வயம் காட்டுகிறார் - கண்ணுள்ளே இத்யாதி. பஞ்சபூதங்களைச் சொன்னது - உபலக்ஷணமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - தன்னை இத்யாதி. "பிரான்" என்றதுக்கு அர்த்தாந்தரம் - ஸர்வேஶ்வரன் என்று. "எண்ணிலும்" என்றதின் அர்த்தம் - ஆஶாலேஶம் என்று. "என்னினிவேண்டுவம்" என்றதின் ஹாவம் - ஒருகுறையுண்டோ என்று. ஸ்வரூபைக்யம் வ்யாவர்த்தயதி-அந்தராத்மாவாய் என்று. "எம்பிரானை" என்கிற த்விதீயை சேரும்படியெங்ஙனே? என்ன, ப்ரதமையை இத்யாதி. "காதன்மையால்" என்றத்தாலே - பக்தி சொல்லிற்று. "எண்ணிலும்வரும்", என்றத்தால் - ப்ரபத்தி விவக்ஷிதமென்று பலிதம். மண்ணுநீருமித்யாதப்ய, எம்பிரான், காதன்மையால் தொழில், கண்ணுள்ளே நிற்கும்; எண்ணிலும் வரும்; என்னினி வேண்டுவம் இத்யந்வய:. (உ)

விலே யுடையவன். கொம்பை - லக்ஷரியாநின்றுள்ள இடை யென்றுமாம். [எம்பிரானை] - பிராட்டியோட்டை ஸம்பந்தத்தை அநுஸந்தித்து ப்ரீத்யா மீளவும் என்னையனை யென்கிறார்.

ப.—அநந்தரம் ஸ்ரிய꞉பதித்வாதிகளான அநுபாவ்ய ஸ்வபாவங்களை யுடையவனை அநுபவியென்று நெஞ்சை நியோகிக்கிறார்.

மடம் - (சொல்வழிவரும்) ஶ்ரவ்யதையையுடைய, நெஞ்சமே - நெஞ்சே! எம்பிரானை - தன்பக்கலிலே அத்வேஷாபிமுக்யாதிகளைத் தரும் உபகாரகனாய், எந்தை தந்தை தந்தைக்கும் தம்பிரானை - நம்மளவில் நில்லாதே நங்குலத்துக்கெல்லாம் நாதனாய், தண் - இஸ்ஸம்பந்த மடியாகக் குளிர நோக்கும், தாமரைக்கண்ணனை - புண்டரீகாக்ஷத்வத்தை யுடையனாய், கொம்பு - வஞ்சிக்கொம்பிலும், அராவு - அரவிலும், நுண் - நுண்ணிதான, நேர் - நேர்மையையுடைய, இடை - இடையையுடையளான லக்ஷ்மியை, மார்பனை - மார்பிலே யுடையனை, எம்பிரானை - ஸ்வாமியை, தொழாய் - தொழும்படி பார். ஸ்ரிய꞉பதித்வம் - இதிற்சொன்ன ஸ்வபாவங்களுக் கெல்லாம் மூலமென்று கருத்து. அராவு - அரவு. அராவுதல் - குறைத்தலாய், கொம்பை இழைத்ததாகவுமாம்.

•

இ.—மூன்றும்பாட்டில், அவனுடைய இந்நீர்மைக்கு அடியான லக்ஷ்மீஸம்பந்தத்தை அநுஸந்தித்து, இவ்விஷயத்தை அநுபவிக்கப் பாராயென்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

[எம்பிரானை] - கீழ்ப்பாட்டில் அவன் நீர்மையை அநுஸந்தித்து, என்னைய னென்கிறார். [எந்தை இத்யாதி] - தம்மளவேயாய் அடியற்றிருக்கையன்றிக்கே, என்குடிநாயன் என்கிறார். "ஸஶோத்ரிதஸ்ய ஜநநாயம் ஶைவேஷு விதாஶோ꞉। விவக்ஷாவஹாஸ்தம் ராஜ்யேவாஸ꞉ ஸாராஷாகூஶ"". [தண்தாமரைக் கண்ணனை] - 'ப்ரயோஜந நிரபேக்ஷமாகப் புகழுகிறார்' என்று உயிர்க்கெல்லாந் தாயாயளிக்கின்ற தண்தாமரைக் கண்ணாலே குளிர நோக்கினன். இந் நோக்குக்கு அடி சொல்லுகிறது மேல்.[கொம்பு இத்யாதி]-வஞ்சிக்கொம்பு போலேயும்,அரவுபோலேயும் நுண்ணிதாய் நேரியதா யிருந்துள்ள இடையையுடைய பிராட்டியைத் திருமார்விலே யுடையவனை. 'அரவு' என்கிறத்தை - " அராவு " என்று நீட்டிக்கிடக்கிறது. 'நச்சராவணை' என்னக்கடவதிறே. பணம்போலே நிதம்பப்ரதேஶம். கொம்பை லக்ஷரியாநின்றுள்ள இடை யென்னவுமாம். [எம்பிரானை] - இச்சேர்த்தியழகைக் கண்டு 'எம்பிரானை' என்கிறார். [தொழாய்] - இவர்தொழும் வஸ்து - மிதுநமாயிறே யிருப்பது. [மடநெஞ்சமே] - " தொழுதெழு " என்னலாம்படி ஶ்ரவ்யமான நெஞ்சே.

ஈடு.—மூன்றும் பாட்டு. கண்டாயே அவன் ஸ்வரூபம் இருந்தபடி ; நீயும் உன் ஸ்வரூபத்துக்குச்சேர நிற்கப் பாராய் நெஞ்சே என்கிறார்.

[எம்பிரானை] - கீழிற்பாட்டில் அவன்நீர்மையை அநுஸந்தித்து, என்னையனனவனை யென்கிறார். [எந்தை இத்யாதி] - தம்மளவிலேயாய் அடியற்றிருக்கையன்றிக்கே, என்குடிக்கு நாயகனனவனை என்கிறார். இவர் இப்படி ஏத்தினவாறே, ப்ரயோஜநாந்தரபரருடைய பாசுரத்துக்கும் அநந்யப்ரயோஜநர் பாசுரத்துக்கும் வாசியறியுமவனாகையாலே, 'இப்படி ஏத்துகிறவன் ஆர்?'

---

மூன்றும் பாட்டு. எம்பிரானை இத்யாதி. அவன்குணநிக்யத்தைச் சொன்னவநந்தரம், " எம்பிரானைத்தொழாய் மடநெஞ்சமே " என்றதால் பலித்ததை அருளிச்செய்கிறார் - கண்டாயே இத்யாதி. அவன் ஸ்வரூபம் - பரமபத்திக்கும் பரிகணனைக்கு மொக்க வந்துமுகங்காட்டும் ஸ்வரூபம். உன்ஸ்வரூபத்துக்குச்சேர - " மடநெஞ்சமே " என்று - எனக்கு பவ்யமாகையன்றோ உனக்கு ஸ்வரூபம். ஆகையால் உன்னுடைய பாரதந்த்ர்யத்துக்கீடாக வென்றபடி. ' எம்பிரான் ' என்றதுக்கு ஶாவம் - கீழிற்பாட்டில் இத்யாதி. நாயன்-

என்று குளிரக்கடாக்ஷித்தான். [தண்தாமரைக்கண்ணனை] - "தாநஹம் த்விஷதஃ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் | க்ஷிபாமி" (தாநஹம்த்விஷதஃக்ரூராந்ஸம்ஸாரேஷு நராதமாந் க்ஷிபாமி) என்னுமவன் இப்படி கடாக்ஷிக்கைக்கு ஹேதுவேன்? என்று பார்த்தார்; அருகே கடாக்ஷிப்பிக்கிறார் உண்டாயிருந்தது. [கோம்பராவநுண்ணேரிடைமார்பனை] - கோம்புபோலவும் அரவுபோலவு மிருப்பதாய், அதுதானும் நுண்ணிதாயிருந்துள்ள இடையையுடைய பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே யுடையவனை. அரவு என்கிற இத்தை, 'அராவு' என்று நீட்டிக்கிடக்கிறது; "நச்சராவணை" என்னக்கடவதிறே. அன்றியே, கோம்பை லகூகரிக்கிற இடை யென்றுமாம். [எம்பிரானை] - அச்சேர்த்திக்கு ஒருகால் 'எம்பிரானை' என்கிறார். [தோழாய்] - தொழப்படும் விஷயம் - ஒருமிதுநமாயாயிற்று இருப்பது. [மடநெஞ்சமே] - "தொழுதெழு" என்னலாம்படி பாங்கான நெஞ்சன்றோ நீ. (ங)

## நான்காம் பாட்டு.

நெஞ்சமே! நல்லைநல்லை உன்னைப்பெற்றால்
என்செய்யோம்? இனியென்னகுறைவினம்?
மைந்தனை மலராள்மணவாளனைத்
துஞ்சும்போதும் விடாதுதொடர்கண்டாய்.

ஆ.—(நெஞ்சமே.) இப்படி தாம் அருளிச்செய்வதற்கு முன்பே தம்முடைய திருவுள்ளம் அவனுடைய திருவடிகளிலே விழுந்தபடியைக் கண்டு உகந்து, நல்லை நல்லை, உன்னைப் பெற்றால் நமக்கு முடியாததென்? இனி நமக்கு என்ன குறையுண்டு? என்று, தம்முடைய திருவுள்ளத்தைக் கொண்டாடி, இனி ஒருதசையிலும் அவனை விடாதே கிடா யென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், தம்முடைய நிகர்ஷாநுஸந்தாநத்தைப் பண்ணி விஶ்லேஷத்தாலே முடியவேண்டும் தசை வந்ததேயாகிலும் அவனை விடாதே பற்று என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

[நெஞ்சமே நல்லை நல்லை] - அத்யந்தவிலக்ஷணமா யிருந்தது உன்படியென்று தம்முடையநெஞ்சைக் கொண்டாடுகிறார். [உன்னை என்று தொடங்கி] - பகவத்விஷயமென்னில் ப்ரதிகூலியாதே பாங்காயிருக்கிற உன்னைப்பெற்றால் இனி நமக்கு ஸாதிக்கமுடியாததுண்டோ? நமக்கு

ஸ்வாமி. அடியற்று - முதலற்று. கீதாஸு ஷோடஶே, "தாநஹம் த்விஷதஃ க்ரூராந்" இத்யாதி. த்விஷதஃ க்ரூராந் நராதமாந் அஶுபாந் ஸம்ஸாரேஷு ஆஸுரீஷ்வேவ யோநிஷு அஜஸ்ரம் க்ஷிபாமீதி அந்வயஃ. கோம்பு - நீர்வஞ்சிக்கொம்பு. கோம்புபோலவுமிதி - கொம்பராவு - நேர்நுண்ணிடை இத்யந்வயஃ. நேர் - ஸாத்ருஶ்யம். நுண்மை - ஸௌக்ஷ்ம்யம். 'அராவு' என்றால் - அரவைச் சொல்லுமோ? என்ன, அரவென்கிற இத்யாதி. திருச்சந்தவிருத்தம் (அக) நச்சராவென்று - விஷமுடைய ஸர்ப்ப மென்றபடி. அன்றியே இத்யாதி - அராவுகை - லகூகரிக்கை. இப்பக்ஷத்தில், 'நுண், நேர்' என்கிறபுநருக்தியாலே அதிஸூக்ஷ்மமான இடை என்று அர்த்தம். "நுண்" என்றும், 'நேர்' என்றும் - ஸௌக்ஷ்ம்யவாசி. பின்னையும் 'எம்பிரானை' என்கிறதென்? என்ன, அச்சேர்த்திக்கு இத்யாதி. "கொம்பராவு" இத்யாதியோடே கூட்டிபாவம் - தொழப்படும் இத்யாதி. "மடம்" என்றதுக்குபாவம் தொழுதெழு இத்யாதி. மடநெஞ்சமே, எம்பிரானை இத்யாரப்ய அந்வயஃ. (ங)

இனி என்னகுறையுண்டு? [மைந்தனேயென்று தொடங்கி] - நித்யமான யௌவநத்தை யுடையனாய், [மலராள் மணவாளனை] - நிரதிசயபோக்யமான பெரிய பிராட்டியாருக்கு போக்தாவாயுள்ளவனை.

ப.—அநந்தரம், தம்முடைய நியோகத்துக்கு ஈடாக நெஞ்சு இசைந்தவாறே உகந்து, இனி ஒருகாலும் விடாதே அநுபவிக்கப் பாரென்கிறார்.

நெஞ்சமே - (அறிவுக்கு ஆச்ரயமான) நெஞ்சே! நல்லை நல்லை - (நீ செய்தபடி) நன்று நன்று! உன்னைப்பெற்றால் - உன்னைப்பெற்றால், என் செய்யோம் - எக்காரியம்செய்து தலைக்கட்டோம்? இனி - (உன் இசைவு) பெற்றபின்பு, என்னகுறைவினம் - அஸாத்யமாய்க் குறைகிடப்பதொன்றை யுடையோமோ? (ஆனபின்பு), மைந்தனை - நித்யயௌவந ஸ்வபாவனாய், மலராள்- (நிரதிசயபோக்ய பூதையான) லக்ஷ்மிக்கு, மணவாளனை - போக்தாவானவனை, துஞ்சும்போதும்- நாம் முடியுமளவிலும், விடாது - விடாதே, தொடர்கண்டாய் - நிரந்தராநுவ்ருத்திபண்ணப் பார். துஞ்சுதலாவது - நிகர்ஷாநுஸந்தாநத்தாலே வந்த விச்லேஷ மென்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், தாம்சொன்னபோதே மேல்விழுந்து தொழுதவாறே திருவுள்ளத்தைக்கொண்டாடி, நிகர்ஷாநுஸந்தாநம் பண்ணி நான் விச்லேஷிக்கும் ஸமயத்திலும் நீ விடாதேகொள் என்கிறார்.

[நெஞ்சமே நல்லை நல்லை] - சொன்னகாரியத்தை உகந்து செய்த ஸத்புத்ரர்களை உகக்குமாபோலே உகக்கிறார். என்னைக்கொண்டாடுகிறதென்? என்னில்; - [உன்னைப்பெற்றா லென்செய்யோம்] - பலந்தருகைக்கு ஈச்வரனுண்டு, விலக்காமைக்கு நீயுண்டு, இனிச் செய்ய முடியாததுண்டோ? [இனியென்ன குறைவினம்] - "உன்னைப்பெற்றா லென்செய்யோம்" என்று-ஸாத்யாம்ஶ முண்டாகச் சொன்னவிடம் தப்பச்சொன்னோம்; உன்பக்கல் விலக்காதவளவே பற்றாசாக அவன் காரியஞ்செய்வானாயிருந்தால் இனி ஸாத்யாம்ஶமுண்டோ? அவனுபாயபாவம் நித்யநிரபேக்ஷமானால் ஸாத்யாம்ஶமுண்டோ? எனக்கு க்ருத்யாம்ஶமென்? என்ன;— எனக்கு வளவேழுலகு பின்னாட்டுவ தொருபோது உண்டு, அப்போதும் நீ விடாதேகொள் என்கிறார். [மைந்தனை] - நித்யநவயௌவந ஸ்வபாவனை. [மலராள் மணவாளனை] - நிரதிசயபோக்யையாயிருக்கிற பிராட்டி செவ்விகொள்ள இட்டுப்பிறந்தவனை. [துஞ்சும்போதும்] - "அயோக்யன்" என்று அகலும்போதும். விச்லேஷம்விநாஶபர்யாயமென்கை; "நவஶீதாக்ஷயா ஹீநா,யக்ஷயாவஸஹ". [விடாது தொடர்] - நான்விடிலும் நீவிடாதே மேல்விழுந்து அநுபவிக்கப்பார். அவன் விடிலும் நீதொடரப்பார். [கண்டாய்] - இவ்வேப்பங்குடிநீரை யன்றோ நான் உன்னைக்குடிக்கச் சொல்லுகிறது. பிராட்டி "அகலகில்லேன் இறையும்" என்கிற விஷயத்தை யன்றோ நான் அநுபவிக்கச் சொல்லுகிறது.

ஈடு.— நாலாம்பாட்டு. தாம்சொன்னபோதே மேல்விழுந்து தொழுதவாறே நெஞ்சைக் கொண்டாடி, நிகர்ஷாநுஸந்தாநம் பண்ணினான் விச்லேஷித்த ஸமயத்திலும் நீவிடாதேகொள் என்கிறார்.

[நெஞ்சமேநல்லைநல்லை] - சொன்னகாரியத்தைச் சடக்கெனச் செய்த ஸத்புத்ரர்களை மடியிலே வைத்துக் கொண்டாடும் மாதா பிதாக்களைப் போலே, இவரும் மார்விலேயணைத்துக்

---

நாலாம்பாட்டு.—நெஞ்சமே இத்யாதி. நெஞ்சைக்கொண்டாடி யென்றது - "நல்லை நல்லை" என்றதின் தாத்பர்யம். நிகர்ஷ இத்யாதி - "துஞ்சும்போதும்" இத்யாதியின் தாத்பர்யம்.

"நெஞ்சமே நல்லைநல்லை" என்கிற பதமாத்ரத்துக்கு ஸங்கதி - சொன்ன காரியத்தை இத்யாதி. சடக்கென - சீக்ரமாக. நெஞ்சு இருப்பது மார்விலேயாகையாலே, அணைத்து என்றது. தடஸ்தஶங்கையை

கொண்டாடுகிறார் நெஞ்சை. [நெஞ்சமேநல்லைநல்லை] - நல்லை என்ன அமையாதோ? "நல்லை நல்லை" என்கிற வீப்ஸைக்குக் கருத்தேன்? என்னில்; இவர்தாம் அவன்பக்கல் தூதுவிடுமோபோலே, தனக்கு அவர் தூதுவிடவேண்டும்படி இவர் தம்மை விட்டு அவன்பக்கலிலே நிற்கவல்ல நெஞ்சாகையாலே; "என்னெஞ்சினாரைக்கண்டால் என்னைச்சொல்லி அவரிடை நீர் இன்னஞ் செல்லீரோ?" என்னும்படி முந்துற்ற நெஞ்சாகையாலே - "நல்லை நல்லை" என்கிற மீமிசை. என்னை இப்படி ஶ்லாகிக்கிறதேன்? என்ன, [உன்னைப்பெற்றா லென்செய்யோம்]-நீ என்னோடு ஒருமிடறான பின்பு, எனக்குச் செய்ய முடியாததுண்டோ? நெஞ்சு ஒத்தபின்பு முடியாததுண்டோ? பலந்தருகைக்கு ஈஶ்வரன் உண்டு, விலக்காமைக்கு நீ உண்டு, இனிச் செய்யமுடியாதது உண்டோ? [இனியென்ன குறைவினம்] - "உன்னைப்பெற்றா லென்செய்யோம்" என்று ஸாத்யாம்ஶமுண்டாகச் சொன்னவிடம் தப்பச்சொன்னோம்; உன்பக்கல் விலக்காமையே பற்றாசாக அவன்கார்யம் செய்வானாயிருந்தால், ஸாத்யாம்ஶந்தானுண்டோ? அவனுபாயபாவம் நித்யநிரபேக்ஷமானால் ஸாத்யாம்ஶ முண்டோ? ஆனால், பின்னை, க்ருத்யாம்ஶ மேன்? என்ன, ஸாத்யாம்ஶ முண்டுகிடாயென்கிறார். [மைந்தனை இத்யாதி] - நான் அவனைக் கிட்டக்கொள்ள, வளவேழுலகு தலையெடுத்து அகலப்பார்ப்ப தொன்று உண்டு; நீ அப்போது அவனை விடாதேகிடாய். [மைந்தனை] - இவ்விஷயத்தைக் கேவோய் சிலராலே விடப்போமோ? * (மைந்து - இனிமை, அழகு, மிடுக்கு.) [மலராள்மணவாளனை] - பெரியபிராட்டியார் "அகலகில்லேனிறையும்" என்னும் விஷயத்தையன்றோ நான் உன்னை 'விடாதேகிடாய்' என்கிறது. [துஞ்சும்போதும்] - 'அயோக்யன்' என்று அகலும்போதும். விஶ்லேஷம் - விநாஶபர்யாயமேன்கை - "முஹூர்த்தமபிஜீவாவ:" (முஹூர்த்தமபிஜீவாவ:) என்னுமதிறே - இவர்க்குத் துஞ்சுகையாகிறது. நான் அவனை அகன்று முடியுமன்றும், நீ அவனை விடாதே தொடரப்பார் கிடாய். இவ்வேப்பங்குடி நீரையன்றோ நான் உன்னைக் குடிக்கச் சொல்லுகிறது, பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்கிற விஷயத்தையன்றோ நான் உன்னை யநுபவிக்கச் சொல்லுகிறது. (௪)

## ஐந்தாம் பாட்டு.

கண்டாயேநெஞ்சே கருமங்கள்வாய்க்கின்று ஓர்
எண்தானுமின்றியே வந்தியலுமாறு
உண்டானை யுலகேழும்ஓர்மூவடி
கொண்டானைக் கண்டுகொண்டனைநீயுமே.

---

அநுவதித்துப் பரிஹரிக்கிறார்-நல்லையென்ன இத்யாதி. தனக்கு - நெஞ்சுக்கு. விவரணம்- என்னெஞ்சினாரை இத்யாதி. திருவிருத்தம். - (௩௦) என்னெஞ்சைக் கண்டால் ஆர்த்தையாயிருக்கிற என்னைச் சொல்லி. இப்படி ஆர்த்தையா யிருக்கிற அவள் பக்கல் இன்னமும் போகாதொழிவதே? என்கை. முந்துற்றநெஞ்சு - முற்பட்ட நெஞ்சு. மீமிசை-வீப்ஸை. ஒருமிடறு - ஏகஹ்ருதயம். விவரணம் - நெஞ்சொத்த இத்யாதி. ஆனால் பலம் கைப்புகுந்ததோ? என்னபலந்தருகைக்கு இத்யாதி. "உன்னைப்பெற்றா லென்செய்யோம்" என்றவிடம் - உபாஸகர் பாசுரத்தைப்பற்ற. "இனியென்னகுறைவினம்" என்றது - ப்ரபந்நர்பாசுரமாயிருக்கிறது; ப்ரபந்நனுக்குக் கர்த்தவ்யாம்ஶமில்லையிறே. 'இனி' என்றதுக்கு அர்த்தம்-உன்பக்கல் இத்யாதி. விவரணம்-அவனுபாயபாவம் இத்யாதி. மேலுக்குத் தாத்பர்யம்-நான் அவனை இத்யாதி. மைந்தனை-நித்யயௌவந ஸ்வபாவனை. மைந்து என்று- அழகுக்கும், யௌவநத்துக்கும், மிடுக்குக்கும், நாயகத்வத்துக்கும் பேர். அகலும்போது என்னாதே "துஞ்சும்போது" என்கிறதென்? என்ன, விஶ்லேஷம்இத்யாதி. ஸப்தார்த்தம்-நான் அவனை இத்யாதி. "மைந்தனை" என்றத்தைப் பற்ற, இவ்வேப்பங்குடிநீரை இத்யாதி. வேப்பங்குடிநீர் - வேப்பஞ்சாறு. "மலராள்மணவாளன்" என்றத்தைப்பற்ற, பிராட்டி இத்யாதி. மணவாளன் - பதி. நல்லை என்று - ஸம்புத்தி. நெஞ்சுக்கு விஶேஷணம், க்ரமேண அந்வய:. (௪)

---

* குண்டலிதம் க்வாசித்கம்.

ஆ.—(கண்டாயே.) உண்டானை உலகேழும் ஓர் மூவடிகொண்டானை நீயும் நானுங் காணப்பெற்றோம்; நெஞ்சமே! நமக்கு அசிந்திதமாகவந்து ஸம்ருத்திகள் விளைகிறபடி கண்டாயே யென்று தம்முடைய திருவுள்ளத்தோடே கூட அநுபவிக்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்திறத்தில் எண்ணுகை, தானுமின்றியே யிருக்கச்செய்தே எம்பெருமான் தம்மை ஆகஸ்மிகமாக விஷயீகரித்தபடியைச் சொல்லுகிறார்.

[கருமங்கள் வாய்க்கின்று] - ஓரோப்ரயோஜநங்கள் நேர்படப்புக்கால். இயலுதல்-பலிக்கை. [உண்டானை யுலகேழுமோர் மூவடிகொண்டானை] - இவையிரண்டும் ரக்ஷணத்திலே அபேக்ஷை யில்லாதாரையும் ரக்ஷிக்குமென்னுமிடத்துக்கு த்ருஷ்டாந்தம். [கண்டுகொண்டனை நீயுமே] - வேறே சில த்ருஷ்டாந்தங்கள் சொல்லவேணுமோ? அபேக்ஷாகந்த ரஹிதமான நீயுமன்றோ கண்டுகொண்டாய்.

ப.—அநந்தரம், நம்நினைவற நமக்குக்கார்யம் பலிக்கிறபடி, நீயும் அவனைச்கிட்டும் படியாயிற்றிறே என்கிறார்.

நெஞ்சே-மநஸ்ஸே! கருமங்கள்-(அத்வேஷம், ஆபிமுக்யம், ஆச்ரயணம், அறிவு, நலம் தொடக்கமான) காரியங்கள், வாய்க்கின்று-பலிக்கிறவை; ஓர் - ஒரு, எண்தானுமின்றியே - நினைவு தானுமின்றியிலே, வந்தியலும் - நமக்குக்கைவந்து நடக்கிற, ஆறு - ப்ரகாரம், கண்டாயே - கண்டாயே; (எங்ஙனேயென்னில்; அபேக்ஷாநிரபேக்ஷமாக), உலகேழும் - லோகமெல்லாவற்றையும், உண்டானை - (ப்ரளயாபத்திலே) வயிற்றிலே வைத்து, ஓர் - அத்விதீயமான, மூவடிகொண்டானை-த்ரிவிக்ரமாபதாநத்தாலே அநந்யார்ஹமாக்கிக் கொண்டவனை, நீயும் - (ஆபிமுக்ய ப்ரஸங்கமில்லாத) நீயும், கண்டுகொண்டனை - லபிக்கப்பெற்றாயிறே.

இ.—அஞ்சாம்பாட்டில், "எண்ணிலும்வரும்" என்கிறதுதானும் மிகையானபடி கண்டாயே என்று அவன் படியை மூதலிக்கிறார்.

[கண்டாயேநெஞ்சே] - சைதந்யத்துக்கு ப்ரஸரணத்வாரமான உனக்குத் தெரியாமையுண்டோ? [கருமங்கள் வாய்க்கின்று] - ப்ரயோஜநங்கள் நேர்படப்புக்கால். [ஓரெண்தானுமின்றியே வந்தியலுமாறு] - "எண்ணிலும்வரும்" என்ற இதுமிகையாம்படி வந்து பலித்துக்கொண்டு நிற்கிறபடி கண்டாயே. இயலுகை - பலிக்கை. இப்படிபலிக்க, வேறெங்கே கண்டோம்? என்னில், [உண்டானையுலகேழும்] - அபேக்ஷாநிரபேக்ஷமாக ஆபத்தையே பற்றத் திருவயிற்றில் லோகங்களைவைத்து ரக்ஷித்தபடி. [ஓர்மூவடி கொண்டானை] - 'மஹாபலியால் வந்த இடரைப் போக்கவேணும்'என்றவத்தனைபோக்கி, திருவடிகளைத் தலையிலே வந்திருக்க எண்ணினருண்டோ? "உலகேழும்" என்கிறவிடம் - இரண்டிடத்திலுங் கூட்டிக்கொள்ளக்கடவது. [கண்டுகொண்டனைநீயுமே] - பழங்கிணறு கண்வாருகிறதென்? நீ அவனைக்காண எங்கே யெண்ணினாய்? ப்ரளயாபத்தில் ப்ரதிகூலிக்கைக்குப் பரிகாரமில்லை, ப்ரதிகூலிக்கைக்கும் பரிகாரமுடைய நீயன்றோ பெற்றாய்.

ஈடு.— அஞ்சாம்பாட்டு. கீழ், "எண்ணிலும்வரும்" என்ற எண்தானும் மிகையானபடி கண்டாயே என்று அவன்படியை நெஞ்சுக்கு மூதலிக்கிறார்.

[கண்டாயே நெஞ்சே] - நான் சொன்னபடியே பலத்தோடே வ்யாப்தமானபடி கண்டாயே. [நெஞ்சே] - ஜ்ஞாநப்ரஸரத்வாரமான உனக்குச் சொல்லவேண்டாவிறே. [கருமங்கள்

---

அஞ்சாம்பாட்டு.—கண்டாயே இத்யாதி. எண் என்று - ஸங்க்யாபரமான பக்ஷத்தைப் பற்ற அவதாரிகை-கீழெண்ணிலும்வரும் இத்யாதி.

"எண்ணைமிஞ்சிவரும்" என்ற பக்ஷத்தைப்பற்றத் தாத்பர்யம் - நான் சொன்னபடியே இத்யாதி. இது "பலத்தோடே வ்யாப்தமானபடியை" இத்யாதி நிகமநவாக்யத்திலே வ்யக்தம். நெஞ்சே, கருமங்கள் வாய்க்கின்று ஓரெண்டானுமின்றியே வந்தியலுமாறு கண்டாயே யித்யந்வய:. காரியங்கள்-

வாய்க்கின்று] - கார்யங்கள் பலிக்குமிடத்தில், [ஓரெண்தானுமின்றியே வந்தியலுமாறு கண்டாயே]- "எண்ணிலும்வரும்" என்றது தான் மிகையாம்படி வந்து பலித்துக்கொண்டு நிற்கிறபடி கண்டாயே. இயலுகை - பலிக்கை. ஹகவத்ப்ரஹாவம் சொல்லுவார் சொல்லுமளவல்லகாண். இத்தலையில் எண்ணின்றிக்கே யிருக்கப் பலிக்குமென்னுமிடத்துக்கு உதாஹரணங் காட்டுகிறார் மேல்; [உண்டானை இத்யாதி] - ப்ரளயங்கொண்ட ஜகத்துக்கு 'அவன் நம்மை வயிற்றிலேவைத்து நோக்கும்' என்னும் நினைவுண்டோ? 'உலகேழும்' என்கிற விடம் - இரண்டிடத்திலுங் கூட்டிக்கொள்ளக்கடவது. அவன், ஜகத்தையடைய அளக்கிறபோது 'நந்தலையிலே திருவடிகளை வைக்கப்புகாநின்றான்' என்னும் நினைவு உண்டோ? இதுக்கு உதாஹரணம் தேடிப்போகவேணுமோ ஒன்று. [கண்டுகொண்டனை நீயுமே] - விலக்குகைக்குப் பரிகரமுடைய நீயுமன்றே கண்டுகொண்டாய். ப்ரளயாபத்தில் அவற்றுக்கு ப்ரதிகூலிக்கப் பரிகரமில்லையே! இங்கு அவஸரமில்லை, அறியில் விலக்குவர்களிறே; அஸங்கிதமாக வருகையாலே பேசாதிருந்தார்களித்தனை. (௫)

## ஆறும்பாட்டு.

நீயும்நானும் இந்நேர்நிற்கில் மேல்மற்றோர்
நோயுஞ்சார்கொடான் நெஞ்சமேசொன்னேன்
தாயுந்தந்தையுமாய் இவ்வுலகினில்
வாயுமீசன் மணிவண்ணனெந்தையே.

*ஆ.—(நீயும்.) இப்படி இருவரும் ஒருவண்ணம் எம்பெருமானைக் காணப்பெற்றோம்; இனி அவன் நம்மை விடில் செய்வதென்? என்னில், நீயும்நானும் இப்படி அவனைவிடாதே நிற்கில், ஸர்வாத்மாக்களுக்குந் தாயுந்தந்தையுமாய், ஸர்வஸ்வாமியாய் ஆஶ்ரிதஸுலபனாய் இப்படி ஸம்ஶ்லிஷ்டனாயிருந்தவன் ஒருநாளும் நம்மைவிடான் நெஞ்சமே என்னை விஶ்வஸித்திரு என்கிறார்.*

*ஒ.—ஆறும்பாட்டில், இப்படி ஸுலபனானவன் நம்மை விடானிறே யென்னில்; நீயும் நானும் நம் அயோக்யதையை அநுஸந்தித்து 'அவனோடே ஸம்ஶ்லேஷிப்போமல்லோம்' என்னாதே, இப்படி இசைந்திருக்கில் நம்மை ஒருநாளும் விடானென்று திருவுள்ளத்தைக்குறித்துச் சொல்லுகிறார்.*

---

*பலங்கள். பலிக்குமிடத்தில் - ஸித்திக்குமிடத்தில். அவதாரிகாவாக்யவிவரணம் - எண்ணிலும்வரும் என்றது தான் இத்யாதி. இயலுகை - ஸித்திக்கை. எண்தான் மிகையாம்படி வரக்கூடுமோ? என்ன, பகவத்ப்ரபாவம் இத்யாதி. "ஸவெ-ரஶ்வரெஶ்வரஃ க்ருஷ்ணஃ ப்ராவ்ருதெ யதி வஞ்சிதெஃ । தயாவி ஸஃவெ வொகஃ ஹாஸ்ராயெ-ர்கதரோஸ்தி" என்னக்கடவதிறே. எண்ணை - பரிகணந பரமாக வ்யாக்யாநம் பண்ணி, ஹாவிகார்யபராமர்ஶபரமாக வ்யாக்யாநம் பண்ணுகிறார்-இத்தலையில் இத்யாதி. "உலகு" என்ற அசேதந ஸமாதிக்கு பாவம் ப்ரளயங்கொண்ட இத்யாதி. இரண்டிடத்திலும் - கீழும்மேலும். உண்டானை - உலகேழுமென்று கீழோடேகூட்டி அருளிச்செய்து, உலகேழும் - ஓர்மூவடிகொண்டானை யென்று மேலோடே கூட்டி அருளிச்செய்கிறார் - அவன் ஜகத்தை இத்யாதி. மேலுக்கு அவதாரிகை - இதுக்கு இத்யாதி. பரிகரம் - யோக்யதை. "காரணம் வாஸுதேவோ ரக்ஷயோஃ" என்னக்கடவதிறே. கண்டுகொண்டனை-கண்டுகொண்டாய். கண்டுகொண்டா யென்றது - "கண்ணுளதாகும்" என்றத்தைப்பற்ற. "நீயும்" என்ற சப்தத்துக்கு பாவம் - ப்ரளயாபத்தில் இத்யாதி. அவற்றுக்கு - ஜகத்துக்கு. இங்கு - அளக்கிறவிடத்தில். ஐஶ்வர்யாதிஶயத்தாலே அவஸரமில்லை யென்றபடி. நெஞ்சே, கருமங்களித்யாரப்ய, இயலுமாறு கண்டாயே; உலகேழுமுண்டானை, உலகேழுமோர் மூவடிகொண்டானை நீயுங் கண்டுகொண்டனை இத்யந்வயஃ.* (௫)

[மேலென்று தொடங்கி] - மேலுள்ள காலம் ஸ்வஸம்ஶ்லேஷவிரோதிகளையெல்லாம் போக்கி, நம்மோடே ஸம்ஶ்லேஷம்பண்ணும், நெஞ்சே! இவ்வர்த்தத்துக்கு என்னை விஶ்வஸித்திரு. [தாயுமென்று தொடங்கி] - தாயும் தமப்பனும் போலே பரிவுடையனாய் இவ்வுலகத்திலே வந்து திருவவதாரம்பண்ணித் தன் வடிவழகைக் காட்டித் தானிட்ட வழக்காக்கி அடிமைகொள்ளுகிறவன். ஸகலலாபத்துக்குச் சேதநர்பக்கல் வேண்டுவது ப்ராதிகூல்யநிவ்ருத்தியே யென்று இப்பாட்டுக்குக் கருத்து.

ப.—அநந்தரம், இப்படி ஏககண்டராய் நிற்கில், அஸாதாரணபந்தவிஶிஷ்டனானவன் ஒருக்லேஶப்படக் கொடா னென்கிறார்.

தாயாயும் - மாத்ருவத்ப்ரியபரனாயும், தந்தையாயும் - பித்ருவத்ஹிதபரனாயும், இவ்வுலகினில் - (தன்வரிசையறியாத) இந்தலோகத்திலே, வாயும் - அவதரித்து வந்து, ஈசன் - தன் நிருபாதிகஸ்வாமித்வமே அடியாக, மணிவண்ணன் - நீலரத்நம்போலே யிருக்கிற வடிவை எனக்கு உபகரித்து, எந்தை-(அவ்வழியாலே) என்னை அடிமைகொண்ட ஸ்வாமியானவன், நெஞ்சமே-நெஞ்சமே, நீயும்-("தொழு" என்று நியமிக்கலாம்படி பவ்யமான) நீயும், நானும்-(உன்னைக் கரணமாகவுடைய) நானும், இ - கீழ்ச்சொன்ன ப்ரக்ரியையாலே, நேர் - விமுகவ்யாவ்ருத்தியையுடையோமாய், நிற்கில் - நிற்கில், மேல் - மேலுள்ள காலமெல்லாம், மற்று - (ஸ்வாநுபவத்தையொழிய) மற்றும், ஓர்நோயும் - நோயாயிருப்பதொன்றையும், சார்கொடான் - அணுகக்கொடான்; சொன்னேன் - (இப்பரமார்த்தத்தை உனக்குச்) சொன்னேன். நோயென்று - அஹங்காரார்த்தகாமங்கள், அதுக்கு அடியான ஶரீரஸம்பந்தம், கர்மஸம்பந்தந் தொடக்கமானவை. ஸ்வநிகர்ஷாநுஸந்தாநமடியான விஶ்லேஷமுமாம்.

இ.—ஆறும்பாட்டில், நான் விடாதொழிகிறேன், அவன் விடில் செய்வதென்? என்னில்;—நாம் அயோக்யதை பார்த்து விடாதொழியு மத்தனை வேண்டுவது; நம் இசைவையே பற்றி அவன் ஒருகாலும் விடா னென்கிறார்.

[நீயும் இத்யாதி] - "தொழு" என்று சொல்லலாம்படி யிருக்கிற நீயும், தொழச்சொல்லுகிற நானும், ப்ரதிகூலித்துப் போந்த நீயும், உன்னைப் பின்சென்ற நானும். [இந்நேர் நிற்கில்] - ஒரெண் தானுமின்றியே நிற்கில். "ஈநநெயேபூ"என்கிற நீர்ப்பந்தத்தைத் தவிரப்பெறில் இப்படி நின்றால் அவன் செய்வதென்? என்னில்:—[மேல் மற்றோர் நோயும் சார்கொடான்] - மேலுள்ள காலம் ஒரு நோயும் சாரவிட்டுக் கொடான்; நிஷித்தாநுஷ்டாநம்பண்ண விட்டுக்கொடான். முன்பு பண்ணின பாபபலாநுபவம் பண்ண விட்டுக்கொடான். விஷயப்ரவணனாகவிடான்; ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலவிடான்; "அயோக்யன்" என்று அகலவிடான்; உபாயாந்தரங்களைப்பற்றி அகலவிடான். [நெஞ்சமே சொன்னேன்] - நான் உன்னை ஆராயாதே உன் அநர்த்தத்தைப் பார்த்து உனக்கு இவ்வர்த்தத்தைச் சொல்லிக்கொடுகின்றேன். பகவத்விஷயம் பிறர் அறியலாகாதென்றிருக்கைக்கு ஒரு திருக்கோட்டியூர் நம்பியோ டொப்பர்; சொல்லிச் சமைந்து 'பதண்பதண்' என்கைக்கு ஒரு கீதாசார்யனோ டொப்பர், "ஐடிஜைநாதவஹாய". [சொன்னேன்] - உபதேஶத்திற் குறையில்லை, ப்ரதிபத்திபண்ணுதொழியில் இழக்குமத்தனை. இப்படி விட்டுக்கொடாதொழிவது ஶாஸ்த்ரமுகத்தாலேயோ? தன் ஸ்வாதந்த்ர்யத்தாலேயோ? என்னில்,—[தாயும் இத்யாதி] - ப்ரியகாமனுமாய், ஹிதகாமனுமாய். அப்படியாவதும் தன்நிலை குலையாதே நின்றோ வென்னில்,—[இவ்வுலகினில் வாயுமீசன்] - தன்வாசியறியாத ஸம்ஸாரத்திலே தன்னை அழிய மாறிவந்து அவதரித்து. [ஈசன்] - இப்படி வந்து அவதரிக்கைக்கு ஹேது ப்ராப்தனாகை. இங்கே வந்து அவதரித்து ஈரரசு தவிர்க்கையாலே, ஈசனானா னென்னவுமாம்.

[மணிவண்ணனெந்தையே] - வடிவைக்காட்டி விஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்து, தன்ஶேஷித்வத்தைக் காட்டி என்ஶேஷத்வத்தை நிலைநிறுத்தினவன் தாயும் தந்தையுமாய் இவ்வுலகினில் வாயும் மணிவண்ணனாய் எந்தையான ஈசன், நீயும் நானும் இந்நேர்நிற்கில் மேல் மற்றோர்நோயுஞ் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன் - "ஸத்யம்ஸத்யம்" என்கிறபடியே இதுமெய்.

ஈடு.—ஆறும்பாட்டு. 'இப்படி ஸுலபனானவன் நம்மைவிடானிறே' என்ன, நம் அயோக்யதையை அநுஸந்தித்து அகலாதொழியில் நம்மை ஒருநாளும் விடா னென்று திருவுள்ளத்துக்கு அருளிச்செய்கிறார்.

[நீயும்நானும் இந்நேர்நிற்கில்] - அப்புள்ளின் பின்போன நீயும், உன்னைப் பரிகரமாக வுடைய நானும், பலாநுபவம்பண்ண இருக்கிற நாம் இப்படி விலக்காதேயிருக்கில். "நநமேயம்" (நநமேயம்) - என்னும் ப்ராதிகூல்ய மநோரதமின்றிக்கே யொழியில். [மேல்மற்றோர் நோயும் சார்கொடான்] - நிஷித்தாநுஷ்டாநம் பண்ணி அகலவிடுதல், தன்னையொழிய ப்ரயோஜநத்தைக் கொண்டு அகலவிடுதல், அயோக்யதாநுஸந்தாநம்பண்ணி அகலவிடுதல், வேறொரு ஸாதநபரிக்ரஹம் பண்ணி அகலவிடுதல், முன்பு பண்ணின பாபபலாநுபவம்பண்ணி அகலவிடுதல் செய்ய விட்டுக்கொடான். [நெஞ்சமே சொன்னேன்] - 'திருக்கோட்டியூர் நம்பியைப்போலே, பிறர் அறியலாகாது பகவத்விஷயம் என்றுபோலேகாணும்' இவர் இருப்பது. உபதேசித்துவைத்து "இதந்தேநாதபஸ்காய"(இதந்தேநாதபஸ்காய)என்றவனைப்போலே படுகிறார்;[சொன்னேன் என்று]-த்ரௌபதி,குழல் விரித்துக் கிடக்கிறபடியைப் பார்த்து, செய்வது காணாமல் சொல்லிக்கொண்டு நின்றான்; அர்த்தத்தின் கனத்தைப் பார்த்து, 'கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே போகட்டோம்' என்று 'பதண் பதண்' என்றானிறே. இனி ப்ரதிபத்திபண்ணாதார் இழக்குமித்தனை. [தாயுந்தந்தையுமாய்] - மாதாபிதாக்களைப்போலே பரிவனாய். அவர்களளவன்றிக்கே, [இவ்வுலகினில்வாயுமீசன்]-ப்ரஜை, கிணற்றில் விழுந்தால் ஒக்கக் குதிக்கும் மாதாவைப்போலே, ஸம்ஸாரத்திலே ஒக்க விழுந்து எடுக்குமவன். இங்குவந்து அவதரிக்கைக்கு ஹேதுவென்? என்னில் - [ஈசன்] - ப்ராப்தனாகையாலே. அன்றிக்கே, இங்கேவந்து அவதரித்து ஈரரசு தவிர்க்கையாலே ஈசனானா னென்னவுமாம். [மணிவண்ணனெந்தையே] - தன்வடிவழகைக் காட்டி என்னை முறையிலே நிறுத்தினான். என்னை விஷயாந்தரப்ரவணனாகாதபடி மீட்டு, தன்ஶேஷித்வத்தைக் காட்டி என்னுடைய ஶேஷத்வத்தை

---

ஆறும்பாட்டு —நீயும் இத்யாதி. "இந்நேர்நிற்கில் மற்றோர்நோயும் சார்கொடான்" என்றதுக்கிடாக அவதாரிகை இப்படி ஸுலபனான இத்யாதி. அகலாதொழியி லிதி - நாம் அகன்று முடியில் முடியுமித்தனை போக்கி, அவன் நம்மைவிடா னென்று தாத்பர்யம்.

அப்புள்ளின் பின்போன - அந்தப் பெரியதிருவடியின்பின்னே போன. 'இந்நேர்நிற்கில்' என்றதுக்கு அவதாரிகையிலே அருளிச்செய்த அர்த்தமொழிய, அர்த்தாந்தரம் பலாநுபவம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'ஓர்நோயும்' என்றத்தை விவரிக்கிறார்-நிஷித்த இத்யாதி. 'சொன்னேன்' என்றதுக்கு மூன்று தாத்பர்யம்-அநுதாபபரமாகமுந்தினது-திருக்கோட்டியூர் இத்யாதி. விவரணம்-உபதேஶித்து இத்யாதி.கீதாஸ்வஷ்டாதஶே, "இதந்தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந । நசாஶுஶ்ரூஷவே வாச்யம் நச மாம் யோऽப்யஸூயதி" இதம் - இந்த ரஹஸ்யமானது. தே - த்வயா என்றபடி. அநுதபிக்கிறதென்? முதலிலே அதிகாரிஶோதநம் பண்ணி உபதேஶிக்க வொண்ணாதோ? என்ன, த்ரௌபதி இத்யாதி. பதண் பதண்-பரிதபிக்கை. யத்வா, பதறினேன் பதறினே னென்றபடி. த்விதீயதாத்பர்யம் - இனி ப்ரதிபத்தி இத்யாதி. அதாவது - உபதேஶத்திற் குறையில்லை, இனி ப்ரதிபத்தி பண்ணாதாரிழக்குமித்தனை யென்றபடி. பரிவனாய்-ஸ்நிக்தனாய். அவர்களளவன்றிக்கே - அவர்கள் மாத்ரமன்றிக்கே. "ஈசன்" என்றதுக்குப் பூர்வபாவியாக அருளிச்செய்கிறார் - ப்ராப்தனாகையாலே யென்று. அபரபாவியாக அர்த்தம்-அன்றிக்கே இத்யாதி. ஈரரசு-த்வைராஜ்யம். வாய்கை - கிட்டுகை. "எந்தை" என்றதின் அர்த்தம் - தன்ஶேஷித்வத்தை இத்யாதி. நிலை

நீலநிறத்தினவன். தாயுந்தந்தையுமாய் இவ்வுலகினில் வாயும் மணிவண்ணனுய் எந்தையான ஈசன், நீயும் நானும் இந்நேர்நிற்கில் மேல் மற்ருேர்நோயும் சார்கோடான்; நெஞ்சமே சொன்னேன் - "ஸத்யம் ஸத்யம்" என்கிறபடியே இதுமெய். (௬)

## ஏழாம் பாட்டு.

எந்தையேயென்றும் எம்பெருமானென்றும்
சிந்தையுள்வைப்பன் சொல்லுவன்பாவியேன்
எந்தையெம்பெருமானென்று வானவர்
சிந்தையுள்வைத்துச் சொல்லுஞ்செல்வனையே.

ஆ.—(எந்தையே.) இப்படித் தம்முடைய திருவுள்ளத்தோடே எம்பெருமானை யநுபவிக்கிற ஆழ்வார் அவனுடைய உத்கர்ஷத்தையும் தம்முடைய நிகர்ஷத்தையும்பார்த்து, அயர்வறுமமரர்கள் தங்கள் சிந்தையுள்ளே வைத்துச் சொல்லும் அந்த ஸ்ரீமானை, நான் தரித்ரனுக்கினேன் இத்தனை; என்ன நிக்ருஷ்டனோ! என்று தம்மை ஗ர்ஹிக்கிருர்.

ஒ.—ஏழாம்பாட்டில், அத்யந்தவிலக்ஷணனை எம்பெருமானை அத்யந்த நிக்ருஷ்டனை நான் வாங்மநஸங்களாலே நினைத்தும் பேசியும் தப்பச்செய்தேனென்று அகலுகிருர்.

[எந்தையேயென்று தொடங்கி] - என்தனுக்குப் பரிவனென்றும் ஸ்வாமியென்றும். [எந்தையென்று தொடங்கி] - எம்பெருமானை நினைக்கவும் பேசவும் யோக்யராயுள்ள அயர்வறுமமரர்கள், ஸ்நேஹயுக்தராய்க்கொண்டு எம்பெருமானை நினைத்து அது உள்ளடங்காமையாலே எந்தை எம்பெருமானென்று சொல்ல அத்தாலே மதிப்பனானவனை.

ப.—அநந்தரம், ஏவம்விதனுடைய ஸூரிபோக்யத்வ வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து, ஸ்வநிகர்ஷமடியாக அகலத் தேடுகிருர்.

வானவர் - பரமபதவாஸிகளானவர்கள், எந்தை - எங்கள் ஸத்தாதிஹேது பூதனை, எம்பெருமானென்று - எங்களுக்குப் பரமசேஷியென்று, சிந்தையுள் வைத்து - அநுஸந்தாநம் பண்ணி, சொல்லும் - சொல்லும்படியான, செல்வனை - ஐஶ்வர்யத்தையுடையவனை, பாவியேன் - பாபிஷ்டனை நான், எந்தையேயென்றும் - எனக்கு ஹிதபரனே யென்றும், எம்பெருமானென்றும் - என்னுடைய சேஷியானவனேயென்றும், சிந்தையுள் - நெஞ்சுக்குள்ளேயும், வைப்பன் - வைத்து, சொல்லுவன் - சொல்லுவதுஞ் செய்யாநின்றேன்.

இ.—ஏழாம்பாட்டில், "மணிவண்ண னெந்தை" என்று அவனுடைய வைலக்ஷண்யத்தையும் ஸ்வநிகர்ஷத்தையும் அநுஸந்தித்து அகலுகிருர். "துஞ்சும்போதும் விடாது தொடர் கண்டாய்" என்றதுவே வந்து பலித்தபடி.

[எந்தையேயென்றும்] - எனக்குப் பரிவனானவனே யென்றும். பரிவனுமளவேயன்றிக்கே, [எம்பெருமானென்றும்] - எனக்கு வகுத்த ஸ்வாமியே யென்றும். [சிந்தையுள்வைப்பன்] - விஷயாந்தர ப்ரவணமான நெஞ்சிலே வைப்பன். நெஞ்சிலேநினைத்து ரஹஸ்ய ப்ராயஶ்

நிறுத்துகை - ஸ்தாபிக்கை. அந்வயிக்கிருர்-தாயும் இத்யாதி. "சொன்னேன்" என்றதுக்கு மூன்ரும் பாவம்-ஸத்யம்ஸத்யம் இத்யாதி. "சார்கொடான்" என்ன அமைந்திருக்க, "சொன்னேன்" என்ற இதுக்கு - இப்படி தாத்பர்யஞ்சொல்ளவேணு மென்றபடி. (௬)

சித்தம்பண்ணி விடுமளவன்றிக்கே, [சொல்லுவன்] - இவன் பேசுமளவோ இவ்விஷயம்? என்று கைவிடும்படி பிறர்கேட்கச் சொல்லாநின்றேன். [பாவியேன்] - விலக்ஷணபோக்யமான இவ்விஷயத்தை அழிக்கைக்கு நான் ஒரு பாபகர்மா உண்டாவதே! தமோऽபிபூதியாலே அகத்திலே அக்நிப்ரக்ஷேபத்தைப்பண்ணி, ஸத்வந் தலையெடுத்தவாறே அநுதபிக்குமாபோலே 'பாவியேன்' என்கிறார். நீர் இங்ஙன் சொல்லுவானென்? பகவத்விஷயத்தை நினைக்கையுஞ் சொல்லுகையும் பாபபலமோ? என்னில்;—புரோடாஶத்தை நாய் தீண்டினாற்போலே விலக்ஷணருடைய போக்யத்தை அழிக்கை பாபபலமன்றோ? [எந்தை இத்யாதி] - நினையாவிடில் அரைக்ஷணம் தரிக்கமாட்டாத நித்யஸூரிகள் நினைத்து, அவ்வநுபவம் வழிந்து "எந்தை யெம்பெருமான்" என்று சொல்ல, அத்தாலே ஶ்ரீமானாய் மதிப்பனானவனை நான் நினைத்தும் பேசியும் ரிக்தனுமாக்கி மதிப்பையுங் கெடுத்தேன்.

ஈடு.—ஏழாம்பாட்டு. கீழ் இவர் அஞ்சினாற்போலே விடிந்தது; 'அயோக்யன்' என்று அகலுகிறார்.

[எந்தையேயென்றும்] - எனக்குப் பரிவனானவனே யென்றும். [எம்பெருமானென்றும்] - எனக்கு வகுத்த ஸ்வாமி யென்றும்; [சிந்தையுள்வைப்பன்] - எத்தனை விஷயங்களை நினைத்துப்போந்த நெஞ்சிலே வைத்தது. நான் அறிந்ததாக நெஞ்சிலே வைத்து தூஷித்தவளவேயோ? [சொல்லுவன்] - பிறர் அறியும்படி தூஷித்தேன். [பாவியேன்] - விலக்ஷணபோக்யமான இவ்வஸ்துவை அழிக்கைக்கு நான் ஒருபாபகர்மா உண்டாவதே! [பாவியேன்] - ஸாத்விகனாயிருப்பானொருவன் தமோகுணாபிபூதனாய் ஒரு க்ருஹத்திலே நெருப்பை வைத்து, ஸத்வந் தலையெடுத்தவாறே அநுதபிக்குமாபோலே 'பாவியேன்' என்கிறார். நீர் இங்ஙனே சொல்லுவானென்? பகவத்விஷயத்தை நினைக்கையும் சொல்லுகையும் பாபபலமோ? என்னில்;—புரோடாஶத்தை நாய் தீண்டினாற்போலே, விலக்ஷணருடைய போக்யவஸ்துவை அழிக்கை பாபபலமன்றோ? [எந்தை இத்யாதி] - நினையாவிடில் அரைக்ஷணம் தரிக்கமாட்டாத நித்யஸூரிகள் நினைத்து அநுபவித்து அவ்வநுபவம் வழிந்து 'எங்களுக்குப் பரிவனானவனே, ஸ்வாமியானவனே' என்று தங்கள் நெஞ்சிலே வைத்துச் சொல்லும்படியான ஐஶ்வர்யத்தை யுடையவனை நான் என்சொன்னேன்? இவ்வஸ்துவை ஒருவர் நம்பாதபடி யழித்தே னென்கிறார். (எ)

---

ஏழாம்பாட்டு.—எந்தையே இத்யாதி. 'தஞ்சம்போதம்விடாது' என்றத்தைப்பற்ற, இவரஞ்சினாற்போலே என்றது. விடிந்தது - பலித்தது.

வகுத்த - ப்ராப்தமான. "வானவர் சிந்தையுள் வைத்து" இத்யாதியைக் கடாக்ஷித்து பாவம் - விலக்ஷண இத்யாதி. சொன்னபின் "பாவியேன்" என்றதுக்கு பாவம் - ஸாத்விகனாய் இத்யாதி. "எந்தை யெம்பெருமான்" இத்யாதிக்கு அவதாரிகை-பகவத்விஷயத்தை இத்யாதி. நீர் இங்ஙனே சொல்லுவானேன்? என்றது- "நாயநீ: கௌரவம் ஹ்ரஸதி" என்றத்தைப்பற்ற. புரோடாஶத்தை நாய் தீண்டினாற்போலே என்றவிடத்திலே - "ஸமுத்ரஜநிதா ஶ்ரீ: ... ஶ்வவஷட்க்ருதம் ஶ்ரீயோ ... " என்றது அநுஸந்தேயம். தேவவஷட்க்ருதம் - தேவாநுத்திஶ்ய வஷட்காரமந்த்ரேண ஸம்ஸ்க்ருதம் ஹவி: விலக்ஷணருடைய என்றது - "வானவர்" என்றத்தைப்பற்ற. "எந்தை யெம்பெருமான்" என்றதின் அர்த்தம் - பரிவனானவனே இத்யாதி. வானவர் எந்தையெம்பெருமானென்று சிந்தையுள்வைத்துச் சொல்லும் செல்வனை எந்தையே யென்றும் இத்யாரப்ய சொல்லுவன் பாவியேன் இத்யந்வய:.

## எட்டாம் பாட்டு.

செல்வநாரண னென்றசொற்கேட்டலும்
மல்குங்கண்பனி நாடுவன்மாயமே
அல்லும்நன்பகலும் இடைவீடின்றி
நல்கியென்னைவிடான் நம்பிநம்பியே.

**ஆ.**—(செல்வநாரணனென்ற.) இப்படி என்னுடைய அயோக்யதையைப் பார்த்து 'அவன் திறத்துப் படுவேனல்லேன்' என்று இருக்கச்செய்தேயும், செல்வநாரணனென்றசொல்லைக் கேட்குமளவில் என்னுடைய ஸர்வகரணங்களும் என்வசமன்றியே இழுத்துக்கொண்டு அவன் பக்கலிலே விழாநின்றன; நானும் அதிசபலனாய் "எங்குற்றாயெம்பெருமான்" என்று அவனை நாடுவன்; இது என்ன ஆச்சர்யம்? இப்படி நான் அதிசபலனாய்த் தன்னை விடமாட்டாதொழிந்தால் அவன் என்னை விடலாமிறே; அவன் என்னிற்காட்டிலும் அபிநிவிஷ்டனாய் என்பக்கலிலே அதிபஹுமாநத்தைப் பண்ணிக்கொண்டு என்னை விடுகிறிலன்; நான் என் செய்வன்? என்று சோகிக்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், அநர்ஹனென்று அகன்ற நான் யாத்ருச்சிகபகவந்நாம ச்ரவணத்தாலே அவலனாய் அகலமாட்டுகிறிலேன்; எம்பெருமானும் என்னை விரும்பி விடுகிறிலன். இது ஒரு விஸ்மய மென்கிறார்.

[செல்வன் நாரணனென்ற] - ச்ரீமானான நாராயணன். [நாடுவன் மாயமே] - "அல்லேன்" என்ற நான் என்னுடைய சாபலாதிசயத்தாலே "எங்குற்றாய்" என்று தேடாநின்றேன்; இது ஒரு ஆச்சர்யம் இருந்தபடி யென்! [அல்லும்நன்பகலுமென்று மேலுக்கு] - என்னைப்பெறுகையாலே பரிபூர்ணனான எம்பெருமான் தன்னோட்டை ஸம்ச்லேஷத்தாலே நன்றான இரவும் பகலும் இடைவிடாதே என்னை ஸ்நேஹித்து விடுகிறிலன்.

ப.—அநந்தரம், இப்படி அகல நினைத்திருக்கச்செய்தேயும், திருநாமச்ரவணத்தாலே மேல்விழும்படி என்னைப் பரிபூர்ணனான அவன் விடுகிறில னென்கிறார்.

செல்வநாரணனென்ற - ஸ்ரீமந்நாராயணனென்கிற, சொல் - திருநாமத்தை, கேட்டலும் - கேட்டவளவிலே, கண் - கண்ணானது, பனி மல்கும் - நீர் மல்காநின்றது; நாடுவன் - ("எங்ஙனே" என்று) தேடாநின்றேன், மாயமே - இது ஒரு ஆச்சர்யமாயிருக்கிறதே; நம்பி - பரிபூர்ணனான நம்பியானவன், நல் - (தன்னைக்கிட்டுகைக்கு அடியான) நன்மையையுடைய, அல்லும் - இரவும், பகலும் - பகலும், இடைவீடின்றி - விச்சேதாஹிதமாக, நல்கி - ஸ்நேஹித்து, என்னை - என்னை, நம்பி - ஸ்வகீயத்வப்ரதிபத்திபண்ணி, விடான் - விடுகிறிலன். நம்புதல் - தன்னுடையவனாக விச்வஸித்தல்.

**இ.**—எட்டாம்பாட்டில், "அநர்ஹன்" என்று அகன்ற நான், யாத்ருச்சிகபகவந்நாமச்ரவணத்தாலே சிதிலனாய் அகலமாட்டுகிறிலேன்; அவனும் என்னை விடமாட்டுகிறிலன்; இது ஒரு விஸ்மயமென்? என்கிறார்.

[செல்வன்நாரணன்] - ஆழ்வார் பரிஸரத்தில், லக்ஷ்மீஸம்பந்தமொழிய ப்ரஹ்மசாரியெம்பெருமானைப் பற்றுவார் இல்லாமையாலே, "ஸ்ரீமந்நாராயணன்" என்று யாத்ருச்சிகமாகச் சொன்னார்கள். [என்றசொற்கேட்டலும்] - இச்சப்தம் செவிப்பட்டவளவிலே. அர்த்தாநுஸந்தாநம் பண்ணிற்றிலேன்; பாவித்திலேன்; விஷவாரணமந்த்ரம்போலே அர்த்தாநுஸந்தாந மொழி

யவே பலித்தது. [மல்குங்கண்பனி] - என்னை யொழியவே கண்ணானது நீர்மல்கத்தொடங்கிற்று. [நாடுவன்] - நெஞ்சானது "எங்குற்றாயெம்பெருமான்" என்று தேடத்தொடங்கிற்று. [மாயமே] - "அல்லேன்" என்கைக்கு நான் வேண்டிற்று, "ஆவன்" என்கைக்கு நான் வேண்டிற்றில்லை; இது ஒரு ஆஶ்சர்ய மென்? என்கிறார். அவன் செய்கிறதென்? என்னில்,—[அல்லும் இத்யாதி] - தம்முடைய அபிஸந்தியொழிய அவன் மேல்விழுகிற காலமாகையாலே நன்றான இரவும் நன்றான பகலும். [இடைவீடின்றிநல்கி] - நான் ஒருகால் தேடி விடாநின்றேன்; அவன் இடைவிடாதே ஸ்நேஹியாநின்றான். [என்னைவிடான் நம்பிநம்பியே] - அபூர்ணனை தான் நம்பி விடுகிறிலன். நம்பி - ஒருத்தனாக நினைத்து. நம்பி - அல்லும் நன்பகலும் வீடின்றி நல்கி நம்பி என்னைவிடான் மாயமே. ஆழ்வான், "நம்பியே" என்று ஸ்வரதஃ - இவனையே பூர்ணனென்பது என்பர்.

ஈடு.—எட்டாம்பாட்டு. 'நாம் இதுக்குமுன்பு நினைத்தும் பேசியும் தப்பச்செய்தோம், இனித்தவிருமித்தனை' என்று 'அவன் குணங்கள் நடையாடாத தோரிடத்திலே கிடக்கவேணும்' என்று போய், ஒருதட்டிச்சுவரிலே முட்டாக்கிட்டுக்கொண்டு கிடந்தார்; அங்கே, வழிபோகிறானொருவன், சுமைகனத்து "ஸ்ரீமந்நாராயணன்" என்றான்; அச்சொல்லைக் கேட்டுந் தம்முடைய கரணங்கள் அங்கே ப்ரவணமாகிறபடியைக் கண்டு விஸ்மிதராகிறார்.

[செல்வநாரணனென்ற சொல்கேட்டலும்] - ஆழ்வார்பரிஸரத்தில் ப்ரஹ்மசாரி எம்பெருமான் பேர் சொல்லுவாரில்லை; அதில்அர்த்தாநுஸந்தாநம் பண்ணவேண்டா வாயிற்று இவர்நோவுபடுகைக்கு. என்போல வென்னில்;—விஷஹரணமந்த்ரம்போலே. அச்சொல் செவிப்பட்ட வளவிலே, கண்ணானது என்னை யொழியவே நீர்மல்கப்புக்கது; நெஞ்சும் அவ்வளவிலே, "எங்குற்றாய்" என்று தேடப்புக்கது. [மாயமே] - "அல்லேன்" என்று அகலுகைக்கு நான் வேண்டிற்று. 'ஆவேன்' என்று கூடுகைக்கு நான் வேண்டிற்றில்லையீ! ஈது ஓராஶ்சர்யம் இருந்தபடியென்! அவன் பின்னைச்செய்கிறதென்? என்னில்,—[அல்லும் இத்யாதி] - தம் அபிஸந்தியொழியவே, தம்முடைய கரணங்களுக்கு பகவதநுபவமே யாத்ரையாம்படி அவன் மேல்விழுகிற காலமாகையாலே 'நல்லஅல்லும், நல்லபகலும்' என்கிறார். திவாராத்ரவிபாகமற எனக்கு ஸ்நேஹித்துப் பரிபூர்ணனானவன் என்னை ஸ்வீகரித்து என்னைவிட க்ஷமனாகிறிலன்; அவன்பேர்மாத்ரத்தைக் கேட்டவளவிலே, என்கண்ணானது பனிமல்காநின்றது; நெஞ்சானது தேடாநின்றது இது ஓர் ஆஶ்சர்ய மிருந்தபடியென்? என்கிறார். [இடைவீடின்றி] - நான் ஒருகால் தேவிடாநின்றேன், அவன் இடைவிடாதே ஸ்நேஹியாநின்றான். [என்னைவிடான் நம்பிநம்பியே] - அபூர்ணனை என்னைப் பூர்ணனை தான் நம்பிவிடுகிறிலன். நம்பி - என்னை ஒருமதிப்பனாக நினைத்து, நம்பி, அல்லும் நன்பக

---

எட்டாம்பாட்டு. —**செல்வநாரணன்** இத்யாதி. "கேட்டலும்" என்கையாலே-அஸம்பாவிதஸ்தலத்தி லிருப்பு வித்தமென்று திருவுள்ளம்பற்றி அவதாரிகை - **நாம்இதுக்குமுன்பு** இத்யாதி. **தட்டிச்சுவர்** - ஏகாந்த ஸ்தலம். "மாயமே" என்றத்தைப்பற்ற-விஸ்மிதராகிறார் என்றது.

**செல்வநாரணன்** - **ஸ்ரீ**மந்நாராயணன். வழிபோகிறவன் **ஸ்ரீ**மந்நாராயணனென்பனோ வென்ன, **ஆழ்வார்** இத்யாதி. "ஊரும் நாடு முலகமுந் தன்னைப்போல்" இத்யாதி. "சொல்" என்றதுக்கு பாவம் - **அதில் அர்த்தாநுஸந்தாநம்** இத்யாதி. **மல்கும்** - ப்ரவஹிக்கும். **நெஞ்சும்** இத்யாதி - கீழிற்பாட்டிலே பாஹ்ய கரணமும் அந்தஃகரணமுஞ் சொல்லுகையாலே இங்கும் பாஹ்யகரணத்தைச் சொல்லுகிறவிடத்திலே அந்தஃ கரணத்தைச் சொல்லுகை உசிதமென்று தாத்பர்யம். "மல்கும்கண்பனி" என்று - பாஹ்யகரணத்துக்குக் கர்த்ருத்வம் கீழே சொல்லுகையாலே, நெஞ்சுக்கே நாடுகையிலே கர்த்த்ருத்வத்தை விவக்ஷித்து, ஸ்வாபதேசபசாரத்தாலே "நாடுவன்" என்கிற தென்றபடி. **மாயம்** - ஆஶ்சர்யம். என்னையொழியவும் கண்பனி மல்கும், நெஞ்சு தேடுமென்கையாலே ஆஶ்சர்யஹேது வென்கிறார்-**அல்லேன் என்று** இத்யாதி. "வெந்நாள்" என்கிறவர், "நல் லல்லும் நன்பகலும்" என்கிறதென்? என்ன - **தம் அபிஸந்தி** இத்யாதி. **அல்லுநன்பகலு மிடைவீடின்றி நல்கி**

லும் இடைவீடின்றி நல்கி, நம்பி என்னைவிடான்; மாயமே. [நம்பியே] - இவனையே பரிபூர்ண னென்கிறது. ஸம்ஸாரி சேதநனைப்பெற்று, பேறுப்பேறு பெற்றானுயிருக்கிற இவனையே! பரிபூர்ண னென்கிறது லோகத்தார். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

நம்பியைத் தென்குறுங்குடிநின்ற அச்
செம்பொனேதிகழும் திருமூர்த்தியை
உம்பர்வானவர் ஆதியஞ்சோதியை
எம்பிரானை என்சொல்லிமறப்பனோ?

*ஆ.—(நம்பியை.) தன்னுடைய சாபலத்தாலே நம்மை விடாதொழிந்தால், அவனுடைய குணஶ்ரவணாதிகளைப் பண்ணாதே அந்யபரனாய் அவனை மறந்திருந்தாலோவென்னில்:—தத்குணஶ்ரவணமாத்ரத்தாலே சபலனாய்த் தன்பக்கலிலே விழாநிற்கச்செய்தே, அதின்மேலே அயர்வறுமமரர்களோடேகூடத் திருக்குறுங்குடியிலே நின்றருளி, தன்னுடைய நிரவதிகமான அழகைக் காட்டி என்னைத் தோற்பித்துத் தன்பக்கலிலே விழவிட்டுக்கொண்டான்; இனி எங்ஙனே நான் அவனை மறக்கும்படி என்கிறார்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், அவன் விடாதொழிந்தால் நீர் அந்யபராய் அவனை மறந்தாலோ வென்னில்,—திருக்குறுங்குடியிலே நின்றருளின நம்பியைக் கண்டுவைத்து மறக்க உபாயமுண்டோ? என்கிறார்.*

*[அச்செம்பொனென்று தொடங்கி] - ஓடவைத்த செம்பொன்னின் ஒளிபோலே திகழாநிற்பதுஞ்செய்து ஒருவருடைய வாங்மநஸாதிகளாலும் பரிச்சேதிக்க வொண்ணாதபடியான திருமேனியை யுடையவனை. [உம்பரென்று தொடங்கி] - ப்ரஹ்மேஶாநாதிகளிற் காட்டில் அத்யந்த விலக்ஷணரான நித்யஸூரிகளுக்கு ஜீவநஹேதுவாய் அதிமநோஹரமான தேஜஸ்ஸை யுடையனுமாய் அயர்வறுமமரர்களைப்போலே தாமே தாரகமாம்படி என்னைப் பண்ணினவனை.*

*ப.—அநந்தரம் அவனுடைய உபகாரகத்வம் மறக்கப்போமோ? என்கிறார்.*

தென்குறுங்குடி - திருக்குறுங்குடியிலே, நின்ற - நிற்கையாலே, நம்பியை - ஸமஸ்த கல்யாணகுண பூர்ணனாய், (பரமபதத்தில் வடிவிலுங்காட்டில்), அ - ஒப்பமிட்ட, செம்பொன் - செம்பொன்போலே, திகழும் - உஜ்வலமான, திருமூர்த்தியை - திருமேனியை யுடையனாய், உம்பர் - மேலான, வானவர் - நித்யஸூரிகளுக்கு, ஆதி - ஸத்தாதிஹேதுபூதனாய், அம் - ஸதா

---

நம்பி என்னை நம்பிவிடானென்று அந்வயித்து, அர்த்தம்-நீவாராத்ர இத்யாதி. | 'என்னை' என்றதுக்கு - த்ரிராவ்ருத்தி. ஸ்வீகரித்து - தன்னுடையவனாக விஸ்வஸித்து. 'மாயம்' என்கிறதுக்குத் தாத்பர்யாந்தரம் - அவன் பேர் இத்யாதி. அர்த்தாநுஸந்தாநமின்றிக்கே ஶப்தமாத்ரமே பனிமல்குகைக்கு நிமித்தமாகை - ஆஶ்சர்யஹேதுவென்றபடி. கீழே, நீவாராத்ரேத்யாதியாலே - உத்தரார்த்தபூர்வகமாகப் பூர்வார்த்தாந்வயஞ் சொல்லி, பூர்வார்த்தபூர்வகமாக, நம்பி என்னை நம்பி அல்லும் நன்பகலும் இடைவீடின்றி நல்கிவிடான் என்று அந்வயாந்தரம் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - இடைவீடின்றி இத்யாதி. இடைவிடாதே - விச்சேதியாதே, "நல்கி" என்றதுக்கு அர்த்தம்-ஸ்நேஹியாநின்றன் என்று. நாடுவன் - தேடுவன். "நம்பி" என்றதுக்கு அர்த்தாந்தரம்-என்னை ஒருமதிப்பன் இத்யாதி. இந்தப் பக்ஷத்துக்கு அந்வயங் காட்டுகிறார் - நம்பி அல்லுநன்பகலும் இத்யாதி. மதிப்பன் - பெரியவன். செல்வநாரணனென்று தொடங்கி, நாடுவன்; நம்பி அல்லு நன்பகலும் இடைவீடின்றி நல்கி நம்பி என்னைவிடான்; மாயமே இத்யந்வய꞉. (அ)

தர்ஶநீயமான, சோதியை - பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யனை, எம்பிரானை - தாத்ருஶமான வடிவை என்னை அநுபவிப்பித்து அடிமைகொண்டவனை, என்சொல்லி - எத்தைச்சொல்லி, மறப்பன் - மறப்பது. அபூர்ணனென்று மறக்கவோ? அஸுலபனென்று மறக்கவோ? அநுஜ்ஜ்வலவிக்ரஹனென்று மறக்கவோ? அவிலக்ஷணபோக்யனென்று மறக்கவோ? ஸுஶீலனல்லனென்று மறக்கவோ? என்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், அவன் விடாதொழிந்தால் நீர் அந்யபரராய் அவனை மறந்தாலாகாதோ? என்னில்,—அவன்படிகளைக் கண்டுவைத்து மறக்கப்போமோ? என்கிறார்.

[நம்பியை] - கல்யாணகுணபரிபூர்ணனை; பரமபதத்தில் குணங்களுக்கு ஸத்பாவமே உள்ளது, இங்கே குணங்களுக்குப் பூர்த்தி. [தென்குறுங்குடிநின்ற] - கலங்காப்பெருநகரத்தைக் கலவிருக்கையாகவுடையவன், அத்தைவிட்டு என்னைப்பற்றத் திருக்குறுங்குடியிலே அவஸரப்ரதீக்ஷனாய்க் கொண்டு ஸ்த்தாவரப்ரதிஷ்டையாய் நின்றவனை; [அச்செம்பொனேதிகழும் திருமூர்த்தியை] - ஓடவைத்த செம்பொன்போலே நிரவதிக தேஜோரூபமாய் எல்லாருடைய வாங்மநஸ்ஸுக்களாலும் பரிச்சேதிக்க வொண்ணாத திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவனை. [உம்பர் இத்யாதி] - ஆக்கரான ப்ரஹ்மாதிகளன்றிக்கே, அவ்வருகான நித்யஸூரிகளுக்கு ஸத்தாஹேதுவுமாய், அவர்களுக்கு அதிமநோஹரமுமான தேஜஸ்ஸையுமுடையவனை. அவ்வடிவுக்கு போக்தாக்களிறே அவர்கள். [எம்பிரானை] - நித்யஸூரிகளுக்குப் போலே தானே யாரகமாம்படி எனக்கு உபகரித்தவனை. [என்சொல்லி மறப்பனோ] - குணஹீநனென்று மறக்கவோ? அஸந்நிஹிதனென்று மறக்கவோ? வடிவிற்பசையில்லையென்று மறக்கவோ? மதிப்பனல்லனென்று மறக்கவோ? எனக்கு உபகாரகனல்லனென்று மறக்கவோ?

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நீர்தாம் இங்ஙனே கிடந்து படாநில்லாதே, அவ்விஷயத்தை மறந்து ஸம்ஸாரிகளோபாதி உண்டு உடுத்துத் திரியமாட்டீரோ? என்ன;—நான் எத்தைச்சொல்லி அவனை மறப்பது என்கிறார்.

[நம்பியை] - கல்யாணகுணபரிபூர்ணனை. பரமபதத்தில் குணங்களுக்கு ஸத்பாவமேயிறே உள்ளது, இங்கேயிறே குணங்களுக்குப் பூர்த்தி. [தேன்சறுங்குடி நின்ற] - கலங்காப்பெரு நகரத்தைக் கலவிருக்கையாகவுடையவன், அத்தைவிட்டு என்னைப்பற்றத் திருக்குறுங்குடியிலே அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாக நின்றவன். [நம்பியைத் தேன்சறுங்குடி நின்ற] - குணத்திலே குறையுண்டாதல், தூரஸ்த்தனென்னுதல் செய்து, நான் மறக்க வேணுமே. [அச்செம்பொனேதிகழுந் திருமூர்த்தியை] - வடிவழகிலே குறையுண்டாய்த்தான் மறக்கவோ? [அச்செம்பொன்] - உபமாநரஹிதமாய், ஒட்டற்ற செம்பொன்போலே நிரவதிகதேஜோரூபமாய், வாங்மநஸ்ஸுக்களாலும் பரிச்சேதிக்க வொண்ணாத திவ்யமங்கள விக்ரஹத்தை யுடைய

---

ஒன்பதாம்பாட்டு.—நம்பியை இத்யாதி. "என்சொல்லி மறப்பனோ" என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - நீர்தாம் இத்யாதி.

"தென்குறுங்குடிநின்ற நம்பியை" என்று கூட்டி பாவம் - பரமபதத்தில் இத்யாதி. "நம்பி - உம்பர் வானவராதி" என்கிற பதஸமபிவ்யாஹாரதாத்பர்யம் - கலங்கா இத்யாதி. கலவிருக்கை - வாஸஸ்தாநம். "நின்ற" என்றதின் பாவம் - அவஸர இத்யாதி. குணபூர்த்தியும் ஸந்நிஹிதத்வமுஞ் சொன்னதுக்கு பாவம் - குணத்திலே இத்யாதி. வடிவழகைச் சொன்னதுக்கு பாவம் - வடிவழகிலே இத்யாதி. 'செம்பொனே திகழுந்திருமூர்த்தியை' என்று அந்வயித்து, ஶப்தார்த்தம் - உபமாந இத்யாதி. உபமாநரஹிதமா யென்றதின் விவரணம் - வாங்மநஸ்ஸுக்களாலும் பரிச்சேதிக்கவொண்ணாத என்றது. ஒட்டற்ற - கல்மஷமற்ற. இனிமேல் ஓடவைக்கத்தக்க மலாம்ஶமில்லாத வென்றபடி. பதச்சேர்த்திக்கு பாவம் - அவ்வடிவழகை இத்யாதி.

வனை. [உம்பர் இத்யாதி] - அவ்வடிவழகை அநுபவிக்க இட்டுப்பிறந்த நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. ஆக்கரான இவ்வருகில் வானவரைப்போலே யன்றியே மேலான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகளுக்கும் தானே கடவனாய், அவர்களுக்கு அநுபாவ்யமான திவ்யமங்களவிக்ரஹத்தையுடையவனை. [எம்பிரானை] - அவர்களநுபவிக்கும்படியை எனக்கு உபகரித்தவனை. [என் சொல்லி மறப்பனோ] - அபூர்ணனென்று மறக்கவோ? அஸந்நிஹிதனென்று மறக்கவோ? வடிவழகில்லை யென்று மறக்கவோ? மேன்மை யில்லையென்று மறக்கவோ? எனக்கு உபகாரகனன்றென்று மறக்கவோ? எத்தைச்சொல்லி மறப்ப னென்கிறார். (கூ)

## பத்தாம்பாட்டு.

மறப்பும்ஞானமும் நானொன்றுணர்ந்திலன்
மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடு
மறப்பறவென்னுள்ளே மன்னினான்தன்னை
மறப்பனோவினி யானென்மணியையே.

ஆ—(மறப்பும்.) வருந்தியாகிலும் அவன்பக்கலில்நின்றும் நெஞ்சை நிவர்த்திப்பித்து, அவனை மறந்திருந்தாலோ வென்னில்:— இப்படி தன்னழகை எனக்குக் காட்டியருளி; 'ஒருகால் தன்னைக்காட்டிப்போகில், ஜ்ஞாநாஜ்ஞாநங்களிரண்டுக்கும் ஆஶ்ரயமல்லாமையாலே அசித்கல்பனான இவன் நம்மை மறக்கும்' என்று பார்த்தருளி, தன்னை நான் மறவாமைக்காக, அசேதநத்தைச் சேதநமாக்கவல்ல தன்னுடைய அழகிய திருக்கண்களோடேகூட என்னுள்ளே புகுந்து எனக்குப் பரமஸுலபனாய்க்கொண்டு 'இனிப் பேரேன்' என்று இருந்தருளினான்; இவனை நான் 'மறப்பேன்' என்ற வருந்தினால் மறக்கமுடியுமோ? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், வருந்தியாகிலும் அவனை மறந்தாலோ? என்னில்,—அழகிய திருக்கண்களாலே நோக்கிக்கொண்டு ஒருநாளும் மறக்கவொண்ணாதபடி என்னுள்ளே நிரந்தரமாக வர்த்திக்கிறவனை நான் மறக்கும்படி எங்ஙனே? என்கிறார்.

[மறப்பும் ஞானமும் நானொன்றுணர்ந்திலன்] - ஜ்ஞாநமென்று ஒன்றென்றும் மறப்பென்று ஒன்றென்றும் அறிந்திலேன்; அஸத்கல்பன். [மறக்குமென்று தொடங்கி] - ஏவம்விதனான எனக்கு அறிவைப்பிறப்பித்து 'இவன் நம்மை மறக்கும்' என்று பார்த்து; [என்மணியை]- தன்னுடைய திருவழகை எனக்கு போக்யமாம்படி தந்தவனை.

ப.—அநந்தரம், மறவாதபடி அவனே யத்நம்பண்ணுகிற்க, மறக்க விரகுண்டோ? என்கிறார்.

மறப்பும் - மறப்பென்றும், ஞானமும் - அறிவென்றும், ஒன்று - ஒன்றை, உணர்ந்திலன் - அறிந்திலேனாயிருக்க, (தன்விஷயத்திலறிவை யுண்டாக்கி), மறக்கும் - இத்தை இவன்

---

ஶப்தார்த்தம் - ஆக்கரான இத்யாதி. ஆக்கரான - ஸூக்ருதாநுகுணமாக ஸ்ருஷ்டரான. உம்பர் - மேல். "திருமூர்த்தி" என்றதுக்கு - வடிவழகிலும், "ஆதியஞ்சோதி" என்றதுக்கு - மேன்மையிலும் நோக்கு. இது, நிகமத்திலும், சாற்றப்பாட்டிலும் வ்யக்தம். "ஆதி" என்றதின் அர்த்தம் - ஸத்தாதிகளுக்கும் இத்யாதி. உபகாரமாஹ-அவர்கள் இத்யாதி. படி - திருமேனியும், ப்ரகாரமும். "என்சொல்லி" என்றதுக்குப் பூர்வோக்தமான விஶேஷணங்களிலே நோக்காக அருளிச்செய்கிறார் - அபூர்ணனென்று இத்யாதி. தென்குறுங்குடி நின்ற நம்பியை, அச்செம்பொனே இத்யாரப்ய அந்வயः. (கூ)

மறக்கும்; என்று - என்றுநினைத்து, (கடாக்ஷிக்கைக்கடியான), செந்தாமரை - சிவந்த தாமரை போன்ற, கண்ணோடு - கண்ணோடே, மறப்பற - மறப்புப்புகுராதபடி, என்னுள்ளே - என் னெஞ்சுக்குள்ளே, மன்னினன்தன்னை - நிரந்தரவாஸம்பண்ணி, என்மணியை - நீலரத்நம்போலே முடிந்தாளலாம்படி எனக்குஸுலபனானவனை, இனி - இனி, யான் - நான், மறப்பனோ - மறக் கும்படியென்?

இ.—பத்தாம்பாட்டில், அவன் மறவாமைக்கு க்ருஷிபண்ணநிற்க, என்னாலே மறக்கப் போமோ? என்கிறார்.

[மறப்பும் ஞானமும் நானொன்றுணர்ந்திலன்]-மறப்பென்றும் ஞானமென்றும் ஒன்றும் அறிந்திலேன் நான். ஒருசேதநனாய், நினைத்தேனோ மறக்கைக்கு? நினைவு நானடியாகவரிலன்றோ மறப்பும்நானடியாக வருவது; அசித்கல்பன். [மறக்குமென்று]-அறிவுக்கு அடைவின்றிக்கே யிருக் கிற என்பக்கலிலே அறிவைப்பிறப்பித்து, "மறக்கக்கூடும்" என்று பார்த்து, அழகிய திருக்கண் களாலே குளிரநோக்கிக்கொண்டு ஒருநாளும் மறக்கவொண்ணாதபடி. என்னுள்ளே ஸ்தாவர ப்ரதிஷ்டையா யிருந்தவனை. புறம்பு ஒரு*அந்யபரதைதோற்ற இருக்கிறிலன். [மறப்பனோவினி]- மறவாமைக்குப் பரிஹாரம் அவன்கையிலே யுண்டாயிருக்க, இனி மறக்க உபாயமுண்டோ? கீழ் அநாதிகாலம் நினைக்க விரகில்லாதாபோலே யிறே, மேலுள்ளகாலம் மறக்க விரகில்லாதபடியும். [யான்] - அநாதிகாலம் விஸ்மரித்துப்போந்த நான். [என்மணியையே]-பெருவிலையனாய் முடிந்து ஆளலாம்படி கைப்புகுந்து புகரையுடைத்தான நீலமணிபோலே யிருக்கிற தன்னை எனக்கு அநு பவயோக்யமாம்படி பண்ணிவைத்தபின்பு, நான் அவனை அநாதரிப்பனோ?

ஈடு.—பத்தாம்பாட்டு. ஆனாலும் வருந்தியாகிலும் மறந்தாலோ வென்ன, நெஞ்சில் இருளை அறுத்துக்கொண்டு நிரந்தரவாஸம் பண்ணுகிறவனை மறக்க விரகுண்டோ? என்கிறார்.

[மறப்பும் ஞானமும் நானொன்றுணர்ந்திலன்] - நான் சேதநனாய் நினைத்தேனாகி லன்றோ மறப்பது - நினைத்தேன் நானானவன்றிறே மறக்க இடமுள்ளது. ஜ்ஞாநத்துக்கு ஆஸ்ரயமாமதிறே அஜ்ஞாநத்துக்கும் ஆஸ்ரயமாவது, அசித்கல்பனாய்க்கிடீர் நான் இருந் தது. [மறக்கும் இத்யாதி] - இப்படி யிருக்கிற நான் நினைத்தேனாகவும் நினைவையும் என்

பத்தாம்பாட்டு.—மறப்பும் இத்யாதி. புநஸ்ச "மறப்பனோவினி" என்றதிக்கு அநுகுணமாக அவ தாரிகை - ஆனாலும் இத்யாதி.

மறப்பும் ஞானமும் நானொன்றுணர்ந்திலன் - மறப்பென்றும் ஞானமென்றும் நான் ஒன்றை யறிந் திலேன் என்று ஶப்தார்த்தம். நான் மறப்பென்று மொன்றை அறியேன், ஞானமென்று மொன்றை அறி யேன் என்று நிஷ்க்ருஷ்டார்த்தம். 'ஞானம் நானொன்றுணர்ந்திலன்'? என்றபோதே - விஸ்ம்ருதிராஹித்ய மும் ஸித்தமாயிருக்க, "மறப்புநானொன்றுணர்ந்திலன்' என்கிறதென்? என்ன, நான் சேதநனாய் இத்யாதி. அதாவது - இப்போது பகவத்விஷயஜ்ஞாந மில்லையாகிலும், காலம் அநாதியாகையாலே முன்பு காதாசித்கஸ்ம் ருதியுண்டாய், தத்ப்ரம்ஶம் வரக்கூடுமிறே; அதில்லை யென்கைக்காக - விஶேஷிக்கிற தென்றபடி. ஆனால், காதாசித்கஸ்ம்ருதியுமில்லை யென்னாதே, "மறப்பில்லை" என்கிறதென்? என்ன, நினைந்தேன் இத்யாதி. அதா வது - "மறப்பில்லை" என்றபோதே - தத்பூர்வபாவியான ஸ்ம்ருதியுமில்லை யென்று கருத்து. "ஸுப்தே ஸ்தவா வபுஷா விநா விரஹே விஸ்ம்ருதிঃ குதঃ। ந ஹி விநா விரஹேஜாயதே ககஶா திகம்" என்னக்கடவதிறே. கீழ்வாக்யவிவரணம் - ஜ்ஞாநத்துக்கு ஆஸ்ரயமாமதிறே இத்யாதி. ஜ்ஞாநமா வது - ஸ்ம்ருதி. அஜ்ஞாநமாவது - விஸ்ம்ருதி. எல்லாவற்றாலும் பலிதம் - அசித்கல்பனாய் இத்யாதி. "ஜ்ஞாநத்திலும் மறப்பிலும் ஸ்வாதந்த்ர்யமில்லை" என்றாரே, ஆனபின்பு "மறக்கும்" என்னக்கூடுமோ? என்ன, இப்படியிருக்கிற இத்யாதி. 'நினைவையும்' என்கையாலே - மறப்பையு மென்றபடி. இத்தவாக்யம்

தலையிலே யேறிட்டு, 'பிறந்த ஜ்ஞாநத்துக்கு விச்சேதம் வரவொண்ணுது' என்றுபார்த்து, அழகிய திருக்கண்களாலே குளிரநோக்கிக்கொண்டு, தன்னைப்பற்றி எனக்கு வரும் விஸ்ம்ருதி போம்படி என்ஹ்ருதயத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனை. [மன்னினுன்] - 'புறம்பே அந்யபரதை உண்டு' என்று தோற்ற இருக்கிறிலன். [மறப்பனே இனியானென்மணியையே] - பெருவிலையனை ரத்நம் கைப்புகுந்தால் அத்தை முடிந்து அநுபவியாதே உதறுவர்களோ? [மறப்பனேவினி] - மறவாமைக்குப் பரிகரம் அவன்கையிலே யுண்டாயிருக்க, இனி மறக்க உபாயமுண்டோ? கீழ் அநாதிகாலம் நினைக்க விரகில்லாதாபோலேயிறே மேலுள்ளகாலமும் மறக்க விரகில்லாதபடியும். [யான்] - அநாதிகாலம் "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறபடியே விஸ்மரித்துப்போந்த நான். [என்மணியையே] - பெருவிலையனாய் முடிந்தாளலாம்படி கைப்புகுந்து புகரையுடைத்தான நீலமணிபோலே யிருக்கிற தன்னை எனக்கு அநுபவயோக்யமாம்படி பண்ணிவைத்தபின்பு நான் அவனை அநாதரிப்பனே? (கo)

## பதினோராம் பாட்டு.

மணியைவானவர்கண்ணனைத் தன்னதோ
ரணியைத் தென்குருகூர்ச்சடகோபன் சொல்
பணிசெயாயிரத்துள் இவைபத்துடன்
தணிவிலர்கற்பரேல் கல்விவாயுமே.

*ஆ.*—(மணியை.) வானவர் கண்ணனாயிருந்துவைத்து எனக்கு எளியனாய்த் தனக்குத் தானே பூஷணமாயிருந்த எம்பெருமானுக்கு ஶேஷவ்ருத்திரூபமாகச் சொன்ன இத்திருவாய்மொழியைக் கற்றாரிருக்குமவர்களுக்கு அக்கல்விதானே வாயுமென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இப்பத்தும் கற்பார் நிரதிஶய புருஷார்த்தமான பகவத்கைங்கர்யத்தைப் பெறுவரென்கிறார். இக்கல்விதானே அமையுமென்றுமாம்.

[மணியையென்று தொடங்கி] - தனக்குத்தானே பூஷணமாய் அயர்வறுமமரர்களதிபதியாய் ஆஶ்ரயிப்பார்க்கு எளியனா யிருந்துள்ளவனை. [தென்குருகூரென்று தொடங்கி] - ஆழ்வார்க்கு அத்யந்தவிதேயமாய்ச் சொற்கள் பணிசெய்த ஆயிரத்து இப்பத்தையும்; எம்பெருமானுக்குச் சொல்லாலே ஆழ்வார் பணிசெய்த ஆயிர மென்றுமாம். [உடனென்று தொடங்கி]- ஸாபிப்ராயமாக ஶ்ரத்ததாநராய்க் கற்பாராகில் கல்வி வாய்க்கும்.

---

பூர்வதாத்பர்யஶேஷம். சேம் - அழகு. மன்னுகையாவதேது? என்ன - புறம்பு இத்யாதி. "மறப்பனேவினி" என்று தொடங்கி, வ்யாக்யாநமெல்லாம் - த்விதீயதாத்பர்யஶேஷம். தாத்பர்யார்த்தம் - பெருவிலையனை இத்யாதி. பெருவிலையனை - அநர்க்கமான. 'இனி' என்றதுக்கு அர்த்தம் - மறவாமைக்கு இத்யாதி. பரிகரம் - செந்தாமரைக்கண். 'பரிஹாரம்' என்று பாடமானபோது - 'மணி' என்கிற பதத்தில் சாடுவில் தாத்பர்யம்; "மணிமந்த்ரௌஷதாதிகள்" என்னக்கடவதிறே. கீழ்வாக்யவிவரணம் - கீழ் அநாதிகாலம் இத்யாதி. 'யான்' என்றதுக்கு அர்த்தம் - அநாதிகாலம் இத்யாதி. ப்ரதமதாத்பர்யத்தில், யான் - பாதந்த்ரனான நான். மறப்பனே - மறக்கஸ்வதந்த்ரனே? என்றபடி. மறந்தேனுன்னைமுன்னம் - யாதொரு விஷயம் விடாதே நினைக்க அடுக்கும்; அப்படியான உன்னை அநாதிகாலம் மறந்துபோந்தே னென்னுதல்; முந்துறமுன்னம் மறந்துபோந்தே னென்னுதல். ஸப்தார்த்தம் - பெருவிலையனாய் இத்யாதி. மணிக்கு ஶ்லாக்யதையும், முடிந்தாளலாம்படியான ஸௌலப்யமு முண்டிறே. 'என்மணி' என்கையாலே, எனக்கு அநுபவ யோக்யமாம்படி என்றது. (கo)

ப.—இத்திருவாய்மொழிக்கு பலம் - இதினுடைய கல்வியே கைங்கர்யமென்று அருளிச்செய்கிறார்.

மணியை - (உஜ்ஜ்வலமான)மாணிக்கம்போன்ற வடிவையுடையனாய், (அத்தவடிவாலே), வானவர் - பரமபதவாஸிகளுக்கு, கண்ணனை - நிர்வாஹகனாய், (அவ்வழகுக்கு ஒப்பில்லாமையாலே), தன்னதோரணியை - தனக்குத்தான் அலங்காரமாம்படி அத்விதீயனானவனை, தென்- கட்டளைப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - சொல்லாலே, பணிசெய் - பணிசெய்த, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்து - இவை பத்தையும், உடன் - அபிப்ராயத்தோடே உடன்பட்டு, தணிவிலர் - ஆறுதலற்று, கற்பரேல் - (அபிநிவேஶத்தோடே ஓராசார்யமுகத்தாலே) அப்யஸிப்பார்களாகில், கல்வி - அந்தக்கல்வி, வாயும் - கைங்கர்யரூப பலத்தோடே சேரும். சொற்பணிசெய் என்றது - சொல்லெடுத்துக் கைநீட்டினவென்றுமாம். அன்றியே, சடகோபன் - சொல் என்றுகூட்டி., பணிசெயாயிரமென்றது, கைங்கர்யரூபமான ஆயிர மென்றுமாம். இது கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இப்பத்தும் கற்பார் நிரதிஶயபுருஷார்த்தமான கைங்கர்யத்தைப் பெறுவ ரென்கிறார்.

[மணியை] - தமக்கு முடிந்து ஆளலாம்படி ஸுலபனானபடியைச் சொல்லுகிறார். [வானவர்கண்ணனை] - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனை மேன்மையையுடையவனை. [தன்னதோரணியை] - தனக்குத்தானே ஆபரணமான அழகையுடையவனை. "தென்குறுங்குடிநின்ற" என்கிறவிடம் - ஸௌலப்யம், "உம்பர்வானவராதியஞ்சோதியை" என்கிறவிடம் - மேன்மை, "செம்பொனேதிகழுந்திருமூர்த்தி" என்கிறவிடம் - அழகு. ஸௌலப்யமும் மதிப்பும் அழகுங் கூடின பசுங்கூட்டு-பகவத்தத்வம். [சொற்பணிசெயாயிரம்] - "மிடைந்தசொல்" என்கிறபடியே, சொற்கள் பணிசெய்த ஆயிரமென்னுதல்; சொல்லாலே பணிசெய்த ஆயிரமென்று - வாசிகமான அடிமையைச் சொல்லுதல். [உடன்கற்பரேல்] - ஸாபிப்ராயமாகக் கற்பராகில். [தணிவிலர் கற்பரேல்] - தணிவாகிறது - ஆறுதல். ஶ்ரத்ததாநராய்க் கற்பராகில். [கல்விவாயுமே] - கல்விதானே ப்ரயோஜநமென்னுதல், கல்வியின் பலமான கைங்கர்யஸித்தியுண்டா மென்னுதல். ஸர்வஸ்மாத்பரனென்றார்; பஜநீயனென்றார்; அவன்தான் ஸுலப னென்றார்; ஸுலபனானவன் அபராதஸஹனென்றார்; அவன் ஶீலவா னென்றார்; ஸ்வாராதனென்றார்; நிரதிஶயபோக்ய னென்றார். அவனுடைய ஆர்ஜவகுணஞ் சொன்னார்; ஸாத்ம்யபோகப்ரத னென்றார்; இப்படி ஏவம்பூதனானவன் நிர்ஹேதுகமாக விஷயீகரிப்பா னொருவன் என்றார். ஆகையாலே, "அவன் துயரறு சுடரடி தொழுதெழென்மனனே" என்று தந்திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்து தலைக்கட்டினார்.

ஈடு.—நிகமத்தில், இப்பத்தைக் கற்றவர்கள் நிரதிஶயபுருஷார்த்தமான பகவத்கைங்கர்யத்தைப் பெறுவ ரேன்கிறார்.

[மணியை] - முன்தானையிலே முடிந்து ஆளலாம்படி கைப்புகுந்திருக்கு மென்று ஸௌலப்யஞ் சோல்லுகிறது. "தேன்குறுங்குடிநின்ற" என்கிறவிடத்தில் - ஸௌலப்யம். [வானவர்கண்ணனை] - "உம்பர் வானவராதியஞ்சோதி" என்ற மேன்மையைச் சோல்லுகிறது. [தன்னதோரணியை] - "அச்சேம்போனேதிகழுந்திருமூர்த்தி" என்கிற வடிவழகை நினைக்கிறது, இம்மூன்றுங்

---

நிகமம் - மணியை இத்யாதி. "கல்வி" என்றதுக்குக் கைங்கர்யத்தை விவக்ஷித்து அவதாரிகை - இப்பத்தை இத்யாதி.

"மணி" என்கிற பதத்தாலே - ஸௌலப்யஞ் சொல்லும் ப்ரகாரத்தைக் காட்டாநின்றுகொண்டு, "தென்குறுங்குடிநின்ற" என்ற பதத்தை நிகமிக்கிறதென்கிறார்-முன்தானையிலேயித்யாதி வாக்யத்வயத்தாலே. முன்தானையிலேமுடிந்து - தலைப்பிலே முடிந்து. "மணியை" இத்யாதி விஶேஷணங்களுக்கு - விஶிஷ்டத்

கூடின பசுங்கூட்டாயிற்று பரதத்வமாகிறது. [தென்குருகூர்ச்சடகோபன்] - ஆழ்வார் அருளிச்செய்த தாய், 'நாம் இங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தோமாகவேணும்' என்று, சொற்கள்தாம் 'என்னை க்கோள், என்னைக்கோள்' என்று 'மிடைந்த சொல்' என்கிறபடியே சொற்கள் பணி செய்த ஆயிர மென்னுதல்; சொல்லாலே பணிசெய்த ஆயிரமென்று - வாசிகமான அடிமையைச் சொல்லுதல். [உடன் தணிவிலர்கற்பரேல்] - ஸாபிப்ராயமாகக் கற்பராகில். தணிவாகிறது - மெத்தென்கை. "வரில் போகடேன், கெடில் தேடேன்" என்றிருக்கையன்றியே, ச்ரத்தைமாறுதே கற்பராகில். [கல்விவாயுமே] - "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே - ஜ்ஞாநமாகில் பகவத்விஷயத்தைப்பற்றியல்லது இராமையாலே இத்தை அப்யஸிக்க, இதுக்கு பலமாகக் கைங்கர்யத்தை இதுதானே தரும். [கல்விவாயும்]-கல்வி தானே ப்ரயோஜந மென்றுமாம்.

இத்திருவாய்மொழியில், மேல் பரக்க அருளிச்செய்யப் புகுகிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண முதற்பாட்டிலே அருளிச்செய்தார்; இரண்டாம்பாட்டில், பரமபக்திக்கும் பரிகணைக்கு மொக்க முகங்காட்டு மென்றார்; மூன்றும்பாட்டில் கண்டாயே அவன் ஸ்வரூபமிருந்தபடி, நீயும் உன் ஸ்வரூபத்துக்குச் சேர நிற்கப்பாரா யென்றார்; நாலாம்பாட்டில் ஸ்வரூபாநுரூபமாக நெஞ்சு தொழுதவாறே நெஞ்சைக் கொண்டாடினார்; அஞ்சாம்பாட்டில் கீழ் "எண்ணிலும் வரும்" என்றது பலத்தோடே வ்யாப்தமானபடியை நெஞ்சுக்கு அருளிச்செய்தார்; ஆறும்பாட்டில்- நாம் இருவரும் இப்படியே நிற்கப்பெறில் நமக்கு ஒரு அநர்த்தமும் வாரா தென்றார்; ஏழாம்பாட்டில் கீழ் இவர் அஞ்சினபடியே விடிந்தபடி சொன்னார்; எட்டாம்பாட்டில் - திருநாமச்ரவணத்தாலே தம்முடைய கரணங்களுக்குப் பிறந்த விக்ருதியைச் சொன்னார்; ஒன்பதாம்பாட்டில் - விக்ருதராகாதே மறந்தாலோ வென்ன, மறக்கவொண்ணாதென்றார்; பத்தாம்பாட்டில் - வருந்தியாகிலும் மறந்தாலோ வென்ன, என்ஹ்ருதயத்திலே யிருக்கிறவனை மறக்கப்போமோ? என்றார்; நிகமத்தில்-

---

*திலே தாத்பர்யமென்கிற அபிப்ராயத்தாலே அருளிச்செய்கிறார் - தென்குறுங்குடிநின்ற இத்யாதி. தன்னதேர்ணி - தனக்குத்தானே அத்விதீயமான பூஷணம். இம்மூன்றும் - "தணிவிலர்கற்பரேல் கல்விவாயும்" என்கிறதுக்கு ஔசித்யம் உபபாதித்தபடி. "யதா வரஸ்ய காரணஸ்ய வ்யாபகஸ்ய நியந்த்ருஸ்ய காரணிகஸ்ய சரண்யஸ்ய சக்திகஸ்ய ஸத்யகாமஸ்ய ஸ்வதந்த்ரஸ்ய ஸ்திதிஹரஸ்ய விசிஷ்டம் மயர்வையறுக்க" இதி। வாக்யார்த்த வ்ருத்யா வ்யுத்பத்தஸ்ய வரஸ்ய வரஸ்யாத், உபக்ரோபஸம்ஹாராவஸ்யாவோ ஏகவாக்யதாஸம்। ஸ்யவாஷோபவத் வ ஸ்ம்ருதம் தாதவ யந்நிணயே" இதிந்யாயம் ஸ்ருதிஸிதாயாஹ - இம்மூன்றுங்கூடினவிதி; கம்பியிடத்திலே இம்மூன்றும் பூர்ணமென்று கருத்து. பசுங்கூட்டு - கர்ப்பூரசந்தநகுங்குமங்கள் கூட்டினது. ஶேஷவிஷ ஸமேதஜீஸம் வா - ஆழ்வார் இத்யாதி. மிடைந்த - நிபிடமான. முந்தின அர்த்தத்தில், சடகோபன் சொன்னதாய், சொற்பணிசெயாயிரம் என்று இரண்டிடத்திலும் அந்வயிப்பது. மெத்து - மாந்த்யம். அதாவது - அஶ்ரத்ததாநனாயிருக்கை. இத்தை உபபாதிக்கிறார் - வரில்போகடேன் இத்யாதி. "கல்விவாயும்" என்றவிடத்திலே, கல்வி யென்று - ஜ்ஞாநமாய், அத்தாலே - ஜ்ஞாநபலமான கைங்கர்யத்தைச் சொல்லுதல். வாய்கை - கிட்டுகை. அன்றியே, ஜ்ஞாநந்தானே ப்ரயோஜந மென்றுமாம். "உடன்" என்கிறத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - ஒண்தாமரையாள் இத்யாதி. பகவத்விஷயமானதே ஜ்ஞாநமாகையாலும், ஜ்ஞாநம் மோக்ஷமாகையாலும், இப்பத்தை ஸார்த்தமாக அப்யஸிக்கவே பகவத்கைங்கர்யம் ஸித்திக்கு மென்றபடி. இதுக்கு - ஜ்ஞாநத்துக்கு. இதுதானே - கல்விதானே கல்விதானே - "கற்பரேற்கல்விவாயும்" என்று - கற்கைக்குக் கல்வியைப் பலமாகச் சொல்லுகையாலே, ஸ்வயம்ப்ரயோஜந மென்றபடி.*

கற்றார்க்குப் பலஞ்சொன்னார். ஸர்வஸ்மாத்பர னென்றார், பஜநீய னென்றார், அவன்தான் ஸுலப னென்றார், ஸுலபனானவன் அபராதஸஹ னென்றார், அவன் ஶீலவா னென்றார், ஸ்வாராத னென்றார், நிரதிஶயபோக்ய னென்றார், அவனுடைய ஆர்ஜவகுணம் சொன்னார், ஸாத்ம்யபோக ப்ரத னென்றார்; இப்படி ஏவம்பூதனானவன் நிர்ஹேதுகமாக விஷயீகரிப்பானொருவ னென்றார்; ஆகையாலே, "அவன்துயரறுசுடரடிதொழு தெழென்மனனே" என்று தந்திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்து தலைக்கட்டினார்.

முதற்பத்தால் - பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்று அறுதியிட்டார்; இரண்டாம்பத்தால் - அந்தக்கைங்கர்யத்தில் களையறுத்தார்; மூன்றாம்பத்தால் - விரோதிகழிந்த கைங்கர்யவேஷம் பாகவத ஶேஷத்வ பர்யந்தமான பகவத்கைங்கர்ய மென்றார்; நாலாம்பத்தால் - இப்படிப்பட்ட கைங்கர்யத்துக்கு விரோதி ஐஶ்வர்ய கைவல்ய மென்றார்; அஞ்சாம்பத்தால் - அந்தவிரோதியைப் போக்குவானும் அவனே யென்றார்; ஆறாம்பத்தால் - விரோதிநிரஸநஶீலனானவன் திருவடிகளிலே சரணம்புக்கார்; ஏழாம்பத்தால் - இப்படி பெரியபிராட்டியார் முன்னிலையாக ஶரணம்புக்க விடத்திலும், தக்தபடந்யாயம்போலே ஸம்ஸாரம் அநுவர்த்திக்கிறபடியைக் கண்டு விஷண்ணராகிறார்; எட்டாம்பத்தால் - 'இப்படி ப்ரபந்நராயிருக்கச்செய்தேயும் தக்தபடந்யாயம்போலே நம்மைவிடாதே அநுவர்த்திக்கிறது நம்முடைய ஆத்மாத்மீயங்களில் நசையறாதபடியாலே' என்று பார்த்து, அவற்றில் ஒருநசையில்லை யென்கிறார்; ஒன்பதாம்பத்தால் - 'இப்படி நசையற்றபின்பும் ரக்ஷியாதொழிவானேன்?' என்று அதிஶங்கைபண்ண, 'நான் நாராயணன், ஸர்வஶக்தியுக்தன், உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும்செய்து முடிக்கிறோம்' என்று அருளிச்செய்ய, அவனுடைய ஶீலகுணத்திலே ஆழங்காற்படுகிறார்; பத்தாம்பத்தால் - ஆழ்வாருடைய பதற்றத்தைக் கண்டு, திருமோகூரிலே தங்கு வேட்டையாக வந்து தங்கி, இவர்க்கு அர்ச்சிராதிகதியையுங் காட்டி, இவருடைய அபேக்ஷிதஸம்விதானம் பண்ணினபடியை அருளிச்செய்தார். (கக)

---

*இத்திருவாய்மொழிப் பாட்டுக்களுக்கு அர்த்தத்தை அருளிச்செய்து, இப்பத்தில் திருவாய்மொழிகளுக்கு அடைவே அர்த்தம் அருளிச்செய்கிறார் - ஸர்வஸ்மாத்பரன் என்றார் இத்யாதி. "ஃபெடுகவா டீகம் வாக்யம்" இதி ந்யாயேந ஸதகைகார்த்யமாஹ - ஆகையாலே அவன் துயரறுசுடரடியிதி.*

*இப்ப்ரஸங்கத்திலே பத்துக்களுக்குத்தாத்பர்யம் அருளிச்செய்கிறார்-முதற்பத்தால் இத்யாதி. கைங்கர்யம் புருஷார்த்த மென்றது - 'அடிதொழுதெழு' என்று உபக்ரமித்து, "கல்விவாயும்" என்று உபஸம்ஹரிக்கையாலே. களையறுத்தது - "தனக்கேயாக" என்கிற விடத்திலே. பாகவதஶேஷத்வபர்யந்த மென்கிறது "பயிலும் சுடரொளியிலே". கைங்கர்யத்துக்கு விரோதிஐஶ்வர்யகைவல்யமென்றது "ஒருநாயகத்திலே". அந்தவிரோதியைப் போக்குவானும் அவனே யென்றது "களைகண்மற்றிலேன்" என்கிறவீடத்திலே; "உழலையென்பின்பேய்ச்சி" இத்யாதியைப்பற்ற வென்னவுமாம். சரணம்புக்கா ரென்றது-"அடிக்கீழமர்ந்துபுகுந்தேன்" என்கிற விடத்திலே. முன்னிலையாக - புருஷகாரமாக. விஷண்ணராகிறா ரென்றது - உண்ணிலாவியிலே, "விண்ணுளார் பெருமானேயோ" என்றத்தைப்பற்ற. நசையில்லை யென்கிறா ரென்றது-நங்கள்வரிவளையிலே, "உங்களோடெங்களிடையில்லை" என்றத்தைப்பற்ற. அதிஶங்கைபண்ண வென்றது - "அறிவொன்றும் சங்கிப்பன்" என்றத்தைப் பற்ற. ஶீலகுணத்திலே ஆழங்காற்படுகிறார் - மாலைநண்ணியிலே யென்றபடி. பதற்றம் - த்வரை - "தங்கு வேட்டையாக வந்து" என்றுதொடங்கி, அபேக்ஷிதஸம்விதானம் பண்ணினபடியை அருளிச்செய்தா ரென்றது - "என்னவாவறச் சூழ்ந்தாயே" என்கையாலே. 'முதற்பத்தால்' என்று தொடங்கி, இந்த நிகமநப்பாட்டுக்கு ஶேஷமாகச் சில ஸ்ரீகோஶங்களிலே; சிலஸ்ரீகோஶங்களிலே, இரண்டாம்பத்தினுடைய ஈட்டினடியிலே உண்டாயிருக்க, அப்படியே அருப்பதமு மென்ற கண்டு கொள்வது.* (கக)

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**— [illegible]

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— [illegible]

[illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

பொருமாழி சங்குடையோன் பூதலத்தே வந்து
தருமாறேரே துவறத்தன்னைத்—திரமாகப்
பார்த்துரைசெய்மாறன் பதம்பணிகவென்சென்னி
வாழ்த்திடுகவென் னுடையவாய்.

---

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானுர் திருவடிகளே ஶரணம், சீயர் திருவடிகளே ஶரணம்.

முதற்பத்து ஸம்பூர்ணம்.

# க-ஆம் பத்து—பிழை திருத்தம்.

## அவதாரிகை.

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௩அ | ௧அ | நாலார்த்தமும் | நாலர்த்தமும் |
| ௪0 | ௩௪ | ஸ்வாதீநகங் | ஸ்வாதீநங்க |
| ௪அ | ௧௩ | ப்ரதாந ப்ரயோஜிகை | ப்ரதாந ப்ரயோஜகை |
| ௫உ | ௧எ | கவ்யுஞெ | கஷ்யுஞெ |
| ௫௩ | ௩ | ஸவஸத்ரு | ஸவத்ரு |
| ,, | ௫ | ஷுவ்யஸ்யாஷ்யாவிஶேஷா: | ஷுவ்யஸ்யாஷ்யாவிஶேஷா: |
| ,, | உஅ | தத்வவிசாரணாயம் | தத்வவிசாரணாயாம் |
| ௫அ | ௧௬ | தெத்தெஷ்வகெஷாஹா | தத்தெஷ்வகெஷாஹி |
| ௬0 | அ | க்ருத்ஸ்நத | க்ருத்ஸ்ந |
| ,, | உ௫ | தநெக்ஞணாக்தி: | தஞெணாக்தி: |
| ௬௧ | உ | நேகராய் | அநேகராய் |
| ,, | ௧௩ | யஜுஷிகாரு | யஜுராஷிகாரு |
| ௬உ | ௩௧ | விநாத்ருஷ் | விநூத்ருஷ் |
| ,, | ௩௬ | ஸஹஸ்ரவி | ஸஹஸ்ரவி |
| அ0 | ௬ | அபய்ஸிக்கைக்கு | அப்யஸிக்கைக்கு |
| அ௫ | ௩0 | ஸ்வாராதகை | ஸ்வாராதகை |
| அ௬ | ௩ | அவன் பரஸாதத்தாலே | அவன் ப்ரஸாதத்தாலே |
| அஎ | ௧௧ | சதுர்விம்ஶதிததத்வ | சதுர்விம்ஶதிதத்வ |
| ,, | ௩௩ | ஶரீரம் | ஶரீரம் |
| ௬௪ | ௧உ | ஹத்யாதியாதிகள் | ஹத்யாதிகள் |
| ௬௫ | ௧௬ | யஞெஹாவஷ்டி | யஷ்ஹாவஷ்டி |
| ௬அ | உ | உன்னடிக்கீழ்மர் | உன்னடிக்கீழமர் |
| ௧0௪ | அ | உட்பொருகள் | உட்பொருள்கள் |
| அ | உ0 | வுஹாடியஞு | வுஹாடியநு |
| ௬ | ௪௧ | விஷேணர்குண | விஷ்ணோர்குண |
| ௧0 | ௩அ | இத்தநல் | இத்தால் |
| ௧உ | ௬ | ஶாகோயாத: | ஶாகோயாதா: |
| ௧௩ | ௧௪ | வுஷிவாஷித: | வுதிவாஷித: |
| உ௪ | எ | காவஷி | காவஷி |
| ௩௫ | ௬ | வஸ்துத்வதநாம | வஸ்துத்வநாம |
| ,, | உ௩ | ஶக்யயவஸ்த | ஶக்த்யவஸ்த |

| பக்கம். | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௯ | ௩௮ | ஈநதாஜெவ | ஈநஜ்ஞாஜெவ |
| ௭௫ | ௮ | கடலுநீள் | கடலும்நீள் |
| ௭௬ | ௨௬ | ஸெவாயவஜ: | ஸெவாயயஜ: |
| ௯௫ | ௩௪ | விட்டனுய் | விட்டவனுய் |
| ௧௨௫ | ௪ | பக்ஷி ஜாகங்கள் | பக்ஷி ஜாதங்கள் |
| ௧௪௮ | ௨௮ | வித்யாயாழ | விஜ்ஞாயாழ |
| ௧௬௫ | ௨௪ | வெணுஷ்யமெநத | வெணுஷ்யமெநந |
| ௧௮௯ | ௧௩ | மதங்களைக் | ங்களைக் |
| ௧௯௦ | ௩௩ | நல்கிக்காத்தருளி | நல்கிக்காத்தளி |
| ௧௯௧ | ௪௩ | கோடித்தோட்டம் | கொடித்தோட்டம் |
| ௧௯௬ | ௨௨ | ஹைஷாராவஸுநாஜி | ஹைஷாராவஸாஉநாஜி |
| ௨௨௦ | ௩௯ | நிர்வாஹகனு | நிர்வாஹகனு |
| ௨௫௮ | ௩௬ | ஶமநகஸ | ஶமநாகஸ |
| ௨௫௯ | ௩௪ | க்ஷவஜி | க்ஷவஜி |
| ௨௭௨ | ௨௦ | உக்கர்ஷா | உத்கர்ஷா |
| ௨௭௪ | ௩௬ | ஸ்ரீவிஷயஜெஉ | ஸ்ரீவிஷயஜெஉ |
| ௨௮௯ | ௩ | இப்பாரு | இருப்பாரு |
| ௩௦[illegible] | ௧௮ | ஓட்டுமோ | ஓட்டுமோ |
| ௩௦௯ | ௩௨ | ஹயஉக்ஷஉ | ஹாரஉக்ஷஉ |
| ௩௧௨ | ௩௭ | நயிகெவநெ | நயிகெவநெ |
| ௩௨௫ | ௨௫ | சிற்கர்பன் | சிர்கற்பன் |
| ௩௫௨ | ௩௫ | ஞூலைசுரக்கும் | முலைசுரக்கும் |
| ௩௫௫ | ௨௧ | விஷயமாமையே | விஷயமாகாமையே |
| ௩௫௫ | ௩௭ | ஙழுந்தருளி | எழுந்தருளி |
| ,, | ௪௩ | இவரைவணங்களோ | இவரைவணங்கவோ |
| ௩௫௮ | ௧௧ | தோளினை | தோளிணை |
| ௩௫௯ | ௧௪ | தோளள் | தோளன் |
| ௩௯௦ | ௧௨ | எந்தும் | ஏந்தும் |
| ௩௯௦ | ௧௪ | யானுள் | யானுன் |
| ௩௯௦ | ௩௮ | பவம் | பாவம் |
| ௩௭௧ | ௩௯ | தம்மார் | தம்மா |
| ௩௭௨ | ௨௮ | ஸ்வமான | ஸ்வம்மான |
| ௩௭௯ | ௩௪ | நிஷட்ணுத | நிஷ்ணுத |
| ௩௮௪ | ௩ | செஞ்சே ! | நெஞ்சே! |
| ௩௮௪ | ௨௯ | நீர்ப்பந்த | நிர்ப்பந்த |

ஸ்ரீ

# பகவத்விஷயம்

## இரண்டாம் பத்து

### திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்திநாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி, திருவாய்மொழிநூற்றந்தாதி இவைகளுடன்

---

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு.

---

ஆமூர். ஸ்ரீனிவாஸாசாரியராலும்,
வீ. நரஸிம்மாசாரியராலும்
பரிசோதிக்கப்பெற்றது.

---

சென்னை
கணேச அச்சுக்கூடம்.

குரோதன ஹு] [1925.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## இரண்டாம் பத்து.

### முதல்திருவாய்மொழி—வாயுந்திரை: ப்ரவேஶம்.

### ஆறாயிரப்படி.

(வாயுந்திரை.) இப்படி நிரவதிகஸௌந்தர்யாதி கல்யாணகுணகண பரிபூர்ணனாயிருந்த எம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாற்போலே தம்முடைய திருவுள்ளத்தாலே அநுபவித்து, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலுள்ள அபேக்ஷையாலே அதிலே ப்ரவ்ருத்தராய், அது கைவாராமையாலே அத்யந்தம் அவஸந்நராய் அந்யாபதேஶத்தாலே ஸ்வதஶையைப்பேசுகிறார். பகவத்ஸம்ஶ்லேஷ வியோகைக ஸுகதுஃகையாய், தத்விஶ்லேஷத்தினாலே அத்யந்தம் அவஸந்நையா யிருந்தா ளொரு பிராட்டி, ஸ்வத்ருஷ்டிகோசரமான பதார்த்தங்களினுடைய ப்ரவ்ருத்திவிஶேஷங்களை பகவத்விஶ்லேஷஜநித துஃகஹேதுகமாக ஸ்வாத்மாநுஸந்தாநத்தாலே அநுஸந்தித்து, அந்தச் சேதநாசேதந பதார்த்தங்களைக் குறித்து, 'நீங்களும் நான் பட்டது பட்டிகளாகாதே' என்கிறாள்.

### ஒன்பதினாயிரப்படி.

"மணியை வானவர் கண்ணனைத் தன்னதோ ரணியை" என்று நம்பியுடைய ஸௌலப்பத்தையும் வேண்டற்பாட்டையும் அழகையும் அநுஸந்தித்து பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய் அது கைவாராதொழிந்தும், இவ்வளவும்வர பகவத்குணங்களிலே அவகாஹித்துப் பிரிகையாலும் "அஞ்சிறைய மடநாரை" யிற்போலுமின்றியே தூதப்ரேஷணத்துக்கு ஆளில்லாதபடி தம்மைப்போலே எல்லாப்பதார்த்தங்களும் எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறனவாக அநுஸந்தித்துக் கலங்கி அத்தாலும் மிகவும் விஷண்ணரான ஆழ்வார் தம்முடைய தஶையை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார்; எம்பெருமானோடே புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி, மஹாந்தகாரமான மத்யராத்ரத்திலே தன் ஆற்றாமை கைகொடுக்கக் கடற்கரையோடு தோள்நீண்டியான க்ருஹோபவநத்திலே சென்று ராமவிஶ்லேஷப்ரஸங்கத்திலே தம்முடைய தரியாமைக்கு நீர்பிரிந்த மத்ஸ்யத்தை த்ருஷ்டாந்தமாய்ச் சொல்லும் இளையபெருமாளையும் பிராட்டியையும் போலன்றியே, எல்லாலோகத்தில் அந்யபரமான ஸகலபதார்த்தங்களும் தன்னைப்போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறனவாகக் கொண்டு அவற்றினுடைய துஃகாநுஸந்தாநத்தாலும் தன்னுடைய துஃகம் இரட்டித்து துஃகிதர் துஃகிதரோடே கூடி ப்ரலாபித்து தரிக்குமாபோலே அவற்றோடே ப்ரலாபித்து தரிக்கிறாள்.

## பன்னீராயிரப்படி.

இரண்டாம்பத்தில், இப்படி பரத்வாதிகுணங்களாலே பரஶேஷியான ஸர்வேஶ்வரனுடைய ஸர்வரக்ஷகத்வ ப்ரயுக்தமான உபாயத்வத்தை ப்ரதிபாதித்து, அநந்தரம் இப்பத்தாலே - உபேயத்வோபயுக்தமான அவனுடைய நிரதிஶயபோக்யதையை அருளிச்செய்வதாக, அந்த போக்யதாதிஶய ஸூசகமான அல்பகாலவிஶ்லேஷத்திலும் அதிக்லேஶாவஹத்வத்தையும்; ஆஶ்சர்யரூபமான உத்துங்க லலிதத்வத்தையும், ஸர்வஸாரஸ்ய ஸமவாயரூப திவ்யபோக்யதையையும், போகாலாபத்தில் வந்த ஆர்த்தியைப் போக்கி ரக்ஷிப்பான் அவனே யென்னுமிடத்தையும், ஆர்த்தி தீரும்படி கிட்டினவனுடைய ஹர்ஷகாரிதமான ஸௌந்தர்யாதிஶயத்தையும்; ஆஶ்ரிதஸம்ஶ்லேஷப்ரீதனுடைய தத்விஶ்லேஷ பீருத்வத்தையும், ஸம்ஶ்ரித ஸம்பந்தி குலஸந்தாநபர்யந்த ஸம்ரக்ஷணத்தையும், ரக்ஷணகாஷ்டையான மோக்ஷப்ரதத்வத்தையும், மோக்ஷதாத்பர்யமான பாரதந்த்ர்யத்தையும் அருளிச்செய்வதாக, ததுபபாதகமான அவனுடைய ஶ்ரிய:பதித்வத்தையும், ஶேஷஶாயித்வத்தையும், அநிஷ்ட நிவர்த்தகத்வத்தையும், நிவர்த்தநபரிகரவத்வத்தையும், ஶக்தியோகத்தையும், ஸத்யவாதித்வத்தையும், ஸம்பந்தவிஶேஷவத்வத்தையும், காருணிகத்வத்தையும், கமநீயவிக்ரஹயோகத்தையும், காரணத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விதபோக்யபூதனுடைய அல்பகால விளம்பத்தில் ஆற்றாமையாலே அஶேஷபதார்த்தங்களும் தம்மைப்போலே அவனைப் பிரிந்து நோவுபடுகிறனவாக அபிஸந்திபண்ணும்படி கலங்கின ப்ரகாரத்தை, நாயகனான ஈஶ்வரனைப் பிரிந்தாளொரு நாயகி, ஸகலபதார்த்தங்களும் தன்னைப்போலே தத்விரஹ து:கத்தாலே ஈடுபடுகிறனவாக நினைத்துப் போலிமைக்கு இரங்கி யுரைத்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். இது "தன்னுடையாறெய்திடுகிளவி" என்பர்.

## இருபத்துநாலாயிரப்படி.

முதற்பத்தால் - பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்று அறுதியிட்டார்; இரண்டாம்பத்தால் - அந்தக்கைங்கர்யத்தில் களைபறித்தார்; மூன்றாம்பத்தால் - விரோதி கழிந்த கைங்கர்யவேஷம் பாகவதஶேஷத்வபர்யந்தமான பகவத்கைங்கர்ய மென்றார்; நாலாம்பத்தால் - இப்படிப்பட்ட கைங்கர்யத்துக்கு விரோதி ஐஶ்வர்யகைவல்ய மென்றார்; அஞ்சாம்பத்தால்-அந்த விரோதியைப் போக்குவானும் அவனே யென்கிறார்; ஆறாம்பத்தால் - விரோதி நிரஸந ஶீலனானவன் திருவடிகளிலே ஶரணம் புக்கார்; ஏழாம்பத்தால் - இப்படிப் பெரியபிராட்டியார் முன்னிலையாக ஶரணம்புக்கவிடத்திலும் தக்தபடந்யாயம்போலே ஸம்ஸாரம் அநுவர்த்திக்கிறபடியைக் கண்டு விஷண்ணராகிறார்; எட்டாம்பத்தால் - "இப்படி ப்ரபந்நராயிருக்கச்செய்தேயும் தக்தபடந்யாயம்போலே நம்மை விடாதே அநுவர்த்திக்கிறது நம்முடைய ஆத்மாத்மீயங்களில் நசையறாதபடியாலே" என்று பார்த்து, அவற்றில் ஒருநசையில்லை யென்றார்; ஒன்பதாம்பத்தால் - இப்படி நசையற்றபின்பும் ரக்ஷியாதொழிவானென்? என்று அதிஶங்கை பண்ண, 'நான் நாராய

ணன், ஸர்வஶக்தியுக்தன், உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும் செய்துமுடிக்கிறோம்' என்று அருளிச்செய்ய, அவனுடைய ஶீலகுணத்திலே ஆழங்காற்படுகிறார்; பத்தாம்பத்தால் - ஆழ்வாருடைய பதற்றத்தைக் கண்டு திருமோகூரிலே தங்குவேட்டையாக வந்து தங்கி இவர்க்கு அர்ச்சிராதிகதியையுங் காட்டி இவருடைய அபேக்ஷிதஸம்விதானம் பண்ணினபடியை அருளிச்செய்கிறார்.

இரண்டாம்பத்தில் - முதல்திருவாய்மொழியில், "மணியை வானவர் கண்ணனைத் தன்னதோரணியை" என்று நம்பியுடைய ஸௌலப்யத்தையும் வேண்டற்பாட்டையும் அழகையும் அநுஸந்தித்து பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய் அது கிட்டாமையாலே "லோகத்தில் பதார்த்தங்களுக்கும் தம்மோபாதி ப்ராப்தியுண்டு" என்று அநுஸந்தித்திருக்குமவராகையாலே அவற்றையும் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாக அநுஸந்திக்கும்படி அவஸந்நரானவர் தம்முடைய தசையை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார்.

எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொரு பிராட்டி, மஹாந்தகாரமான மத்யராத்ரத்திலே தன் ஆற்றாமை கைகொடுக்கக் கடற்கரையோடே தோள்தீண்டியான தன்னுடைய லீலோத்யாநத்திலே புறப்பட்டு, ராமவிஶ்லேஷ ப்ரஸங்கத்தில் தங்களுடைய தரியாமைக்கு நீர்பிரிந்த மத்ஸ்யத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லும் பிராட்டியும் இளங்கோவும் போலன்றிக்கே, மிகவும் அவஸந்நையாய்க் கண்ணுற்கண்ட பதார்த்தங்களெல்லாம் தன்னைப்போலே அவனைப் பிரிந்து நோவுபடுகிறனவாகக் கொண்டு, அவற்றினுடைய து:க்காநுஸந்தாநத்தாலும் தன்னுடைய து:கம் இரட்டித்து து:கிகள் ஸமது:கிகளோடு கூடி "ஏவமார்த்தைர்வயாஹ்யதெ" என்கிறபடியே அவற்றோடே கதறித்திரிகிறாளொருபிராட்டிபேச்சாலே தம்தசையைப் பேசுகிறார்; அஞ்சிறையமடநாரை- அவதாரஸௌலப்யத்திலே யதாமநோரதம் அநுபவிக்கப்பெறாத ஆற்றாமை; இங்கு அர்ச்சாவதாரத்திலே யதாமநோரதம் அநுபவிக்கப்பெறாத ஆற்றாமை: இவ்விஷயத்தில் ஏற்றமேயன்றிக்கே, அஞ்சிறையமடநாரை தொடங்கி பகவத்குணங்களை இவ்வளவும் அவகாஹித்த ஏற்றத்தாலும் ஆற்றாமை மிக்கிருக்கக்கடவது; அங்கு - தூதுவிட ஆள் பெற்றார்; இங்கு - எல்லாரும் இழவாளராகையாலே தூதுவிடவும் ஆள்பெற்றிலர். நாரையாகில் வெளுத்திருக்கையும், காற்றாகில் ஸஞ்சரிக்கையும் முதலான ஸ்வபாவங்கள் இவற்றுக்கு நியதமென்று அறியாதே, "வ்யதிரேகத்திலே சேதநாசேதநவிபாகமற ஆற்றாமையை விளைவிக்கவல்ல விஷயம்" என்னுமத்தை புத்திபண்ணி அவற்றுக்குமாக வெறுக்கிறார்; "ஸவிவ்ருக்ஷா:பரிம்லாநா:ஸபுஷ்பாங்குரகோரகா: | விஷயெ தெ மஹாராஜ ராமவ்யஸநகர்ஶிதா: | உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச | பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச". பாட்டுத்தோறும் 'எம்மேபோல்' என்கிறது- இவற்றுக்குத் தனித்தனியுண்டான ஆற்றாமை இவர்க்கு ஒருவகைக்குப் போருமத்தனையென்கைக்காக.

ஈடு.

முதற்பத்தால் - பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்று அறுதியிட்டார்; இரண்டாம்பத்தால் - அந்தக்கைங்கர்யத்தில் களையறுத்தார்; மூன்றாம்பத்தால் - விரோதிகழிந்த கைங்கர்யவேஷம் பாகவதஶேஷத்வ பர்யந்தமான பகவத்கைங்கர்ய மென்றார்; நாலாம் பத்தால் - இப்படிப்பட்ட கைங்கர்யத்துக்கு விரோதி ஐஶ்வர்ய கைவல்ய மென்றார்; அஞ்சாம்பத்தால் - அந்த விரோதியைப் போக்குவானும் அவனே யென்றார்; ஆறாம்பத்தால் - விரோதிநிரஸநஶீலனானவன் திருவடிகளிலே ஶரணம் புக்கார்; ஏழாம்பத்தால்- இப்படி பெரியபிராட்டியார் முன்னிலையாக ஶரணம்புக்கவிடத்திலும் தக்தபடந்யாயம் போலே ஸம்ஸாரம் அநுவர்த்திக்கிற படியைக் கண்டு விஷண்ணராகிறார்; எட்டாம் பத்தால் - 'இப்படி ப்ரபந்நராயிருக்கச்செய்தேயும் தக்தபடந்யாயம்போலே நம்மை விடாதே அநுவர்த்திக்கிறது நம்முடைய ஆத்மாத்மீயங்களில் நசையறாதபடியாலே' என்று பார்த்து, அவற்றில் ஒரு நசையில்லை யென்கிறார்; ஒன்பதாம்பத்தால் - 'இப்படி நசையற்றபின்பும் ரக்ஷியாதொழிவானேன்?' என்று அதிஶங்கைபண்ண, 'நான் நாராயணன், ஸர்வஶக்தியுக்தன், உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும் செய்து முடிக்கிறோம்' என்று அருளிச்செய்ய, அவனுடைய ஶீலகுணத்திலே ஆழங்காற்படுகிறார்; பத்தாம் பத்தால் - ஆழ்வாருடைய பதற்றத்தைக் கண்டு, திருமோகூரிலே தங்குவேட்டையாக வந்து தங்கி, இவர்க்கு அர்ச்சிராதிகதியையுங் காட்டி, இவருடைய அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணினபடியை அருளிச்செய்தார்.

கீழில்திருவாய்மொழியிலே *"மணியை வானவர்கண்ணனைத் தன்னதோரணியை" என்று - ஸௌலப்யத்தையும், மேன்மையையும், வடிவழகையும் சொல்லிற்று; இவையோரொன்றே போருமிறே மேல்விழப்பண்ணுகைக்கு; இங்ஙனன்றிக்கே இவை மூன்றும் குறைவற்ற விஷயமானால் அநுபவியாதிருக்கப் போகாதிறே; 'இவ்விஷயத்தை இப்போதே அநுபவிக்கவேணும்' என்று பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்தது; அப்போதே நினைத்த பரிமாற்றம் பெறாமையாலே பிறந்த அவஸாதாதிஶயத்தை, எம்பெருமானோடே கலந்து பிரிந்து ஆற்றாமையாலே நோவுபடுகிறாளொரு பிராட்டி, ஆற்றாமை கைகொடுக்க லீலோத்யாநத்திலே புறப்பட்டு, அங்கேவர்த்திக்கிற பதார்த்தங்களைக் கண்டு,

---

வாயுந்திரை ப்ரவேஶே ஶீழோடு இதுக்கு ஸங்க்ரஹஸங்கதி - கீழில்திருவாய்மொழியிலே இத்யாதி. தன்னதோரணியை - தனக்குத்தானே அத்விதீயமான ஆபரணமானவனை. அவஸந்நையான இவளுக்கு உத்யாநகமநமெப்படி? என்ன, ஆற்றாமை இத்யாதி. 'பகவத்விலாபத்தாலே நோவுபடுகிறனவாக' என்கிற விடத்திலே க்ருஷ்ணன் தர்மபுத்ராதிகளை வினவப்போயெழுந்தருளியிருக்க, பதினாறாயிரம் ஸ்த்ரீகளும் விஶ்லேஷவ்யஸநம் பொறுக்கமாட்டாமல் நோவுபடாநிற்க, ஒருநாள் ராத்ரி ஓரன்றில் கதற, அத்தைப்பார்த்து, 'நீயும் எங்களைப்போலே நோவுபட்டாயாகாதே' என்று அவற்றுக்குமாகத் தாங்கள் நோவுபட்டுச் சொன்ன "க்ராரிவிஹ்வலவஸிதம்வீதநித்ரா நஶேஷே ஸ்வபிதி ஜகதிராத்ர்யாமீஶ்வரோ குப்தபோதே | வயமிவஸகிகச்சிதாடநிர்விண்ணசேதா: நளிநநயநஹாஸோதாரலீலேக்ஷிதேந" என்கிற ஶ்லோகமும், "த்வம் யக்ஷமணாமப்யவதா நிருத்தஹீதஉதாக்ஷீணஸோமோ நிஜதீதிபிஃ க்ஷிதோவஷி| க்ஷிதுதோக்ஷேரமதிதாநி யதாவயம் த்வம் விஸ்ம்ருத்யேஹஸ்மிதயிராவமக்ஷ்யஸே நஃ", என்கிற ஶ்லோகமும் அநுஸந்தேயம். அஞ்சிறைய மடநாரையிலும் இத்திருவாய்மொழியிலும்

---

* திருவாய்மொழி - க-௧0-௧௧.

அவையுமெல்லாம் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாகக் கொண்டு, அவற்றுக்கு மாகத் தான் நோவுபடுகிற பாசுரத்தாலே பேசுகிறார். "அஞ்சிறையமடநாரை" யிலும் இதுக்கு ஆற்றாமை கரைபுரண்டிருக்கும். அதுக்கு அடியென்? என்னில்; * "பெருநிலங் கடந்தநல்லடிப்போதயர்ப்பிலனலற்றுவன்" என்று அவதாரத்திலே அநுபவிக்கக் கோலிப் பெறுததாகையாலே, 'அது ஒருகாலத்திலே, நாம் பிற்பாடராகை' என்று ஆறலாம்; இது அங்ஙனன்றிக்கே, அவதாரத்தில், பிற்பாடர்க்கும் இழக்கவேண்டாதபடி முகங்கொடுக் கைக்கு நிற்கிற விடமிறே உகந்தருளின நிலங்கள்; † "நம்பியைத்தென்குறுங்குடிநின்ற" என்று உகந்தருளின நிலத்திலே அநுபவிக்க ஆசைப்பட்டுப் பெறாமையாலே வந்த ஆற் றாமை யாகையாலே இது கனத்திருக்கும். அஞ்சிறையமடநாரையில் தூதுவிடுகைக் குத் தரிப்பு உண்டாயிற்று; இதில் அங்குத் தூதுவிட்டவையும் நோவுபடுகிறனவாக அவற் றுக்குமாகத் தாம் நோவுபடுகிறார். அநுபவிக்கிற இவர்தம்படியாலும் இத்திருவாய்மொழிக்கு ஆற்றாமை கனத்திருக்கும்; பத்துடையடியவர்க்கு முன்பு அவ்விஷயத்தை அநுபவித்துப் பிரிந்தவளவா லுள்ள ஆற்றாமையிறே அதி லுள்ளது; அஞ்சிறையமடநாரைக்குப் பின்பு இவ்வளவும் வர அவனுடைய குணங்களை அநுபவித்துப் பிரிந்த பிரிவாகையாலே ஆற் றாமை மிகவுங் கனத்திருக்கும் இதில்; பயிலப்பயிலவிறே இனிதாயிருப்பது இவ்விஷயம்.

நாரையாகில் வெளுத்திருக்கையும், அன்றிலாகில் வாயலகு நெகிழ்த்தவாறே கதறுகையும், கடலாகில் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி கூப்பிடுகையும், காற்றாகில் ஸததகதியாய்த் திரிகையும், மேகமாகில் நீராய் இற்றிற்றுவிழுகையும், சந்த்ரனா கில் தேய்வது வளருவதாகக் கடவதென்றும், தமஸ்ஸாகில் பதார்த்ததர்ஶநம் பண்ண வொட்டாதென்றும், கழியாகில் அலைவாய் முகமாய் ஏறுவது வடிவதாகக் கடவதென்றும், விளக்காகில் இற்றிற்று எரியக்கடவதென்றும், இவற்றுக்கு இவை நியதஸ்வபாவமென்று அறியாதே, இவையெல்லாம் தம்மைப்போலே பகவத்விஶ்லேஷத்தாலே வ்யஸநப்படுகிற னவாகக் கொண்டு, அவற்றுக்குமாகத் தாம் அநுஶோகிக்கிறார்.

---

*விஶ்லேஷவ்யஸநம் துல்யமாயிருக்க, அங்கு நாரை முதலானவை தூதுவிடும்படி களித்து வர்த்திக்கிறனவாகவும், இங்கு தூதுவிடவொண்ணுதபடி நோவுபடுகிறனவாகவும் நினைக்கையாகிற இக்தக்கார்யவைஷம்யக் கூடினபடி யெங்ஙனே? என்ன, அஞ்சிறைய இத்யாதி. அதுக்கடியேது? என்ன, விஷயஸ்வபாவத்தாலே யென்கிறார் - அதுக்குஅடி இத்யாதி. உகந்தருளின நிலங்களிலே ஆசைப்பட்டாரோ?என்ன, நம்பியை இத்யாதி. 'கனத்திருக்கும்' என்ற அநந்தரம் 'ஆகையாலே' என்ற ஶேஷம். விஷயஸ்வபாவமாத்ரத்தா லன்றிக்கே, அநுபவித்ரு ஸ்வபாவத்தாலும் ஆற்றாமை அதிக மென்கிறார் - அநுபவிக்கிற இத்யாதி. அக்கார்யவைஷம்யத்துக்குஅடி - ஆற்றாமையின் தார தம்யம்; அதுக்குஅடி-விஷயஸ்வபாவமும் அநுபவித்ருஸ்வபாவமு மென்றபடி. அதௌப்படி?என்ன, பத்துடை இத்யாதி. பத்துடையடியவர்க்குமுன்பு - பத்துடையடியவரோடேகூட முன்பு. "விநா தெநேதிரோப்ராதாவஸஹெதெநேதஶிவிஷி:" இதி ந்யாயாதஶிவிஷிஸிஸஹிவக்ஷித:. அதிலுள்ளது - அஞ்சிறையமடநாரையிலுள்ளது. இதில் - இத்திருவாய்மொழியில். "ஊதிவஶிவ யாதவஜாஷிஸவதி" என்ற சிரபரிசயம் இழக்கைக்கு உறுப்பன்றோ வென்ன, பயிலப்பயில இத்யாதி. பயிலப்பயில - அப்யஸிக்க அப்யஸிக்க.*

*'நோவுபடுகிறனவாகக் கொண்டு' என்கைக்கு அவற்றுக்கு வாஸ்தவாகாரமேது? என்ன, நாரையாகில் இத்யாதி. யத்வா, விஸ்தரஸங்கதியாதல். நெகிழ்த்தவாறே-நெகிழ்த்தவாறே. இற்றிற் றெரியக்கடவதென்று மென்றது - ஸந்தாநாவிச்சேத பரமான 'நந்தாவிளக்கம்' என்றத்தைப்பற்ற.*

---

* திருவாய்மொழி - க-ந-கO. † ஷை க-கO-க.

இத்திருவாய்மொழியால் - இளையபெருமாளிற் காட்டில் இவர்க்கு உண்டான வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. எங்ஙனே யென்னில்;— மத்ஸ்யத்துக்கு ஜலம் தாரகமாக அறுதியிட்டார் அவர்; இவர் அந்த மத்ஸ்யத்தோடு ஜலத்தோடு தம்மோடு வாசியற பகவத்குணங்களே தாரகமென்று இருக்கிறார். ஆகையாலே, துஃகிகளாயிருப்பார் தங்களோடு ஸமதுஃகிகளைக் கழுத்தைக் கட்டிக்கொண்டு கிடந்து கூப்பிட்டு ஆற்றாமைக்குப் போக்குவிட்டு தரிக்குமாபோலே, இவளும் கண்ணுக்கிலக்கான பதார்த்தங்களெல்லாவற்றோடும் கழுத்தைக் கட்டிக்கொண்டு கிடந்து 'நீ பட்டதோ? நான் பட்டதோ?' என்று கூப்பிடுகிறாளா யிருக்கிறது; "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" (அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:) என்னுமாபோலே சேதநாசேதந விபாகமற நோவுபடுத்த வற்றாயிறே இவள் பிரிந்தவிஷயந்தானிருப்பது. "உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச" (உபதப்தோதகாநத்ய: பல்வலாநிஸராம்ஸிச) என்று - ஆறுகளோடு சிறுகுழிகளோடு பெருங்குழிகளோடு வாசியற, கரையருகுஞ் சென்று கிட்டவொண்ணாதபடி ராமவிரஹத்தாலே கொதித்ததிறே. "பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச" (பரிஶுஷ்கபலாஶாநிவநாந்யுபவநாநிச) என்று - சிறுகாட்டோடு பெருங்காட்டோடு வாசியற, விரஹாக்நி கொளுத்திற்று. பெருமாள் "ஸீதே ம்ருதஸ்தே ஶ்வஶுர: பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண" (ஸீதேம்ருதஸ்தேஶ்வஶுர:பித்ராஹீநோஸிலக்ஷ்மண) என்று ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு கிடந்து கூப்பிட்டாற்போலே கூப்பிடுகிறாள் இங்கு.

---

*ஸ்வாபதேஶம் - இத்திருவாய்மொழியில் இத்யாதி. "ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ" என்று ஜலம் தாரகமாக அறுதியிட்டா ரென்றபடி. ஆகையாலே - உக்தஹேதுக்களால் ஆற்றாமை மிக்கிருக்கையாலே. யோக்யதையுள்ள விடத்தேயன்றோ ப்ரமமுள்ளது, அசேதநங்களுக்கு பகவத்விரஹவ்யஸந யோக்யதை யுண்டோ? என்ன, அபிவ்ருக்ஷா இத்யாதி. அயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதி ஸுமந்த்ர:, "விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்ஶிதா: | அபிவ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா: | உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச | பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச". வற்று - ஸமர்த்தம். உபஶப்தார்த்தம் - கரையருகும் இதி. துஃகிகள் ஸமதுஃகிகளைக் கழுத்தைக்கட்டிக்கொண்டு கூப்பிட்டவிடமுண்டோ? என்ன, பெருமாள் இத்யாதி. அயோத்யாகாண்டே ராம: - "ஜலக்ரியார்த்தம் தாதஸ்ய கமிஷ்யந்தி | உபஸ்ய ஶோகஸந்தப்தம் வாக்யம் சாநிதம் ப்ரவீத் | ஸீதே ம்ருதஸ்தே ஶ்வஶுர: பித்ரா ஹீநோஸி லக்ஷ்மண". சில ஸ்ரீகோஶங்களிலே ஈட்டுவாக்யங்கள் முன்பின்னாக இருந்தால், அதுக்கு அநுகுணமாக அரும்பதவாக்யங்களை யோஜித்துக்கொள்வது. "முதற்பத்தால் பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்று அறுதியிட்டார்" இத்யாதி வாக்யம் சில ஸ்ரீகோஶங்களிலே இத்திருவாய்மொழியின் ப்ரவேஶாதியில் இருந்தபோது, ப்ரவேஶஶேஷமாக யோஜித்துக் கொள்வது.*

# முதற்பாட்டு.

வாயுந்திரையுகளும் கானல்மடநாராய்!
ஆயுமமருலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்
நோயும்பயலைமையும் மீதூரவெம்மேபோல்
நீயுந்திருமாலால் நெஞ்சங்கோள்பட்டாயே.

ஆ.—(வாயும்) வாயும்திரைக ளுகளுகிற கழியிலே வர்த்திக்கிற மடநாராய்! நீ உறங்கிலும் உறங்காத உன்னுடைய தாய்மாரும் ஸ்வபாவதஏவ உறங்காத தேவலோகமும் உறங்கிலும் நீ உறங்குகிறிலை; ஆதலால், விரஹவ்யஸந வைவர்ண்யத்தாலே அபிபூதையான என்னைப்போலே நீயும் எம்பெருமானை ஆசைப்பட்டா யாகாதே யென்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், ஆமிஷார்த்தமாக ஏகாக்ர சித்தமாயிருக்கிற தொரு நாரையைக் கண்டு தன்னைப்போலே எம்பெருமானாலே அபஹ்ருத சித்தையாயிருக்கிறதாகக் கொண்டு, ஐயோ! நீயும் இங்ஙனே பட்டாயாகாதே யென்கிறாள்.

[வாயு என்றுதொடங்கி] - வருகிற திரைகள் தலைமேலேபோக, அத்தால் வந்த துக்கபரிபவங்களைப் பொறுத்திருக்கிற நெய்தல்நிலத்தில் நாராய்! என்னுடைய வ்யஸநத்திலே உறங்காத தாயும் உறங்காமையே ஸ்வபாவமான தேவலோகமும் உறங்கக்கூடிலும் நீ உறங்குகிறிலை. [நோயும்என்று தொடங்கி] - விரஹவ்யஸநமும் அத்தால் வந்த வேறுபாடும் மிகவும் அபிபவிக்க எம்மைப்போலே நீயும் மைந்தன் மலராள்மணவாளனாலே நெஞ்சு பறியுண்டாயோ?

ப.—முதற்பாட்டில், "மணியை வானவர்கண்ணனை" என்று கீழ் ப்ரஸ்துதமான போக்யதாதிசயத்துக்கு வர்த்தகமாயுள்ள லக்ஷ்மீஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்து ஈடுபட்ட நாயகி, கடற்கரைக்கருகான தன்உத்யாநத்திலே யிருந்ததொரு நாரையைப் பார்த்து, நீயும் அவனாலே நெஞ்சுபறியுண்டாயோ? என்கிறாள்.

வாயும் - மேல்மேலுங் கிட்டுகிற, திரை - திரையிலே, உகளும் - அமுக்கிநடப்பதாய், கானல் - கடற்கரையிலே, மடம் - (உன் நினைவு கைவருந்தனையும்) ஒங்கியிருக்கிற, நாராய் - நாராய்! ஆயும் - உறக்கமில்லாத தாயும், அமருலகும் - உறங்காமை நித்யமான தேவலோகமும், துஞ்சிலும் - உறங்கிலும், நீ - நீ, துஞ்சாய் - உறங்குகிறிலை: ஆல் - ஆதலால், நோயும் - உள்ளேநோவு உண்டாய், பயலைமையும் - (அதின்கார்யமான) பயலைமையாகிற உடம்பில்வெளுப்பு, மீதூர-மேலிட்டுவர, எம்மேபோல்-(அபிமதவிஷயமாய் அகப்பட்ட) எங்களைப்போலே, நீயும்-(அதுக்கு அடைவற்றிருக்கிற) நீயும், (ஆஸத்திமாத்ரமே ஹேதுவாக), திருமாலால் - ஸ்ரிய:பதியாலே, நெஞ்சம் - நெஞ்சு, கோள்பட்டாயே - பறித்துக்கொள்ளப்பட்டாயே? ஏ என்னும் அசை - வினா. இத்தால் - ஸாம்ஸாரிக கல்லோலத்தை மதியாதிருப்பார்க்கு உறங்காமையும் ரூபவிபர்யாஸமும் பகவத்விஶ்லேஷஜநித மென்றிருக்கை.

இ.—முதற்பாட்டில், தான்இருக்கிற கடற்கரையிலே ஆமிஷார்த்தமாக இருக்கிற தொருநாரையைக் கண்டு, நீயும் நான் அகப்பட்ட விஷயத்தே அகப்பட்டா யாகாதே யென்கிறாள்.

[வாயுந்திரையுகளும்] – வாய்கை - கிட்டுகை; உகளுகை - மேலேமேலே போகை. "அலைகடல்நீர்குழம்ப வகடாடவோடி" இத்யாதி. மலைபோலே வருகிற திரைகளால் சலிப்பிக்கவொண்ணாதபடி தன்ஆமிஷம் கிட்டுந்தனையும் பேராதே யிருக்கை; தன் நாயகனொருவனையுமே நினைத்து இவ்வருகுண்டான து:க பரிபவங்களைப் பொறுத்திருக்கிற இருப்புக்குப் போலியாக நினைத்திருந்தாள். பகவத்த்யாநபரர் இருக்குமாபோலேயிருக்கும். "ஸிமயொவஷ-ியாஙாஹி:". [கானல்] - நெய்தல்நிலம். பிரிந்தார் இரங்குமிடம் நெய்தல்நிலம்; அத்தாலும் தன் ஆற்றாமை அவற்றுக்கு முண்டென் றிருக்கிறாள். நெய்தலுக்கு பூதம் ஜலம். கூடுமிடம் குறிஞ்சி; பூதம் ஆகாசம். பிரியுமிடம் பாலை; பூதம் தேஜஸ்ஸு. ஊடலுக்கு ஸ்தாநம் மருதம்; பூதம் வாயு. [மடநாராய்] - மடப்பம் - பற்றிற்று விடாதேயொழிகை. க்ராமணிகள், யாகங்களும்பண்ணிப் பவித்ரங்களும் முடிந்திட்டு "தார்மிகர்" என்னும்படி திரியாநிற்பர்களிறே பரஹிம்ஸை பண்ணுநிற்கச்செய்தே; அப்படியே தான் நினைத்த ஆமிஷம் கிட்டுந்தனையும் க்ஷுத்ரமத்ஸ்யங்கள் மேலிட்டாலும் அநாதரித்திருக்கை. [ஆயும்] - என்னைப்பெற்றதே யடியாக உறங்காத தாயும். [அமருலகுந் துஞ்சிலும்]-ஸத்தையே பிடித்து உறக்கமின்றியே யிருக்கிற நித்யஸூரிகளும் உறங்கிலும். தாயானவள் "வதிவஸம்யொமவஸூஹம்வயொஜூஷ்ணவஜெவிதா ! வித்நாண-வமதீ:வாஙம்நாவஸவாஜாவூவொயயா" என்கிறபடியே ஸத்ருஶவரனைத் தேடியுறங்காள் முன்பு; விரஹவ்யஸநத்தாலே உறங்காள் பின்பு. [நீதுஞ்சாயால்] - கூடாததுகூடிலும், நீ இமையோடிமை பொருந்துகிறிலை. [நோயும் பயலைமையும்] - விரஹவ்யதையும் அத்தால் வந்த வைவர்ண்யமும். அதினுடைய வெளுப்பையும் தன்னுடைய வைவர்ண்யத்துக்குப் போலியாக நினைக்கிறாள். [மீதூர] - விஷமேறினாற்போலே உடம்பிலே ஊர. [எம்மேபோல்] - வருகிற து:கபரம்பரைகளைப் பொறுத்திருக்கையாலும், பற்றிற்று விடாதிருக்கையாலும்; வைவர்ண்யத்தாலும் என்னைப்போலே இராநின்றாயீ! [நீயும்] - இந்நோவுபடுகைக்கு நானொருத்தியும் அமையாதோ? ம்ருதுப்ரக்ருதியான நீயும். "தத்தவஸ்யவஜூஸ்ஹவெக" என்றிருக்கமாட்டாமைக்கு இருவரும் ஒத்தோமோ? [திருமாலால்] - மைந்தனை மலராள்மணவாளனையோ நீயும்இழந்தது? தாயையும் தமப்பனையுமோ நீயும் பிரிந்தது? [நெஞ்சங்கோள்பட்டாயே] – நெஞ்சுபறியுண்டாயாகாதே? தோற்புரையன்றிக்கே மறுபாடுருவ நோவு பட்டாயாகாதே?

ஈடு.—முதற்பாட்டு. பிரிந்தார்இரங்குவது நெய்தல்நிலத்திலே யாகையாலே, கடற்கரைச்சோலையைப்பற்ற இவள் பிரிவுக்கிரங்கி யிருக்கச்செய்தே, அங்கே ஆமிஷார்த்தமாக அவதாநம்பண்ணிக்கொண் டிருக்கிற தொரு நாரை கண்ணுக்குஇலக்காக, அதினுடம்பில் வெளுப்பைக் கண்டு, அதுவுந் தன்னைப்போலே பிரிவாற்றாமையாலே வந்த வைவர்ண்யத்தோடே யிருக்கிறதாகக் கொண்டு; பாவியேன், நீயும் நான் அகப்பட்ட விஷயத்திலேஅகப்பட்டு நெஞ்சு பறியுண்டாயாகாதே யென்கிறாள்.

---

முதற்பாட்டு - வாயுந்திரை இத்யாதி. அந்த:புரத்திலிருக்குமிவளுக்கு கடற்கரையில் வர்த்திக்கிற பக்ஷிதர்ஶநம் எப்படிகூடும்? என்கிற ஶங்கையையும் பரிஹரியாநின்றுகொண்டு அருளிச்செய்கிறார் - பிரிந்தார் என்று. இரங்குவது - து:கப்படுவது. அவதாநம்பண்ணிக்கொண்டு- ப்ரமாதமின்றிக்கே. பறியுண்டாய் - அபஹரிக்கப்பட்டாய்.

[வாயும்திரையுகளும்]- வாய்கை - கிட்டுகை. பெரியமலைபோலே வந்து கிட்டு கிற திரைகள் மேலே தாவிப்போகாநின்றாலும் நினைத்தது கைப்புகுருமளவும் சலியாதே யிருக்குமாயிற்று. பகவத்த்யாநபரர் இருக்குமாபோலே யிருக்கும். அலைகடல்நீர்குழம்ப வகடாட வோடி யகல்வானுரிஞ்ச முதுகில் மலைகளைமீதுகொண்டு வருமீனை மறவாதிருப்பார்க்குப் போலியாயிராநின்றது, அலைகளை மீதுகொண்டு வருமீனை மறவாதிருக்கிற இதுவும். "ஶிரயோவர்ஷதாராபிர்ஹந்யமாநாநவிவ்யது: । அபிஷூயமாநா வ்யஸநைர்யதா தோக்ஷஜசேதஸ:" (கிரயோவர்ஷதாராபிர்ஹந்யமாநாநவிவ்யது: - அபிபூயமாநாவ்யஸநைர்யதாதோக்ஷஜசேதஸ:) என்று சொல்லக்கடவதிறே. நிரந்தரமாக வர்ஷதாரைகள் விழாநிற்கச் செய்தேயும் மலைகள் சலியாதே நின்றன ; என்போலேயென்றால் - 'ஸர்வேஶ்வரனே ரக்ஷகன்' என்றிருப்பார் தாபத்ரயங்களால்வந்த வ்யஸநங்களுக்குஇடையாதேயிருக்குமாபோலே. வந்துகிட்டுகிற திரை உகளாநின்றுள்ள கானலிலே - நெய்தல்நிலத்திலே

---

'வாயுந்திரையுகளும் மடநாராய்' என்றதுக்கு அர்த்தம் - பெரியமலைபோலே இத்யாதி. மேலேதாவி - வாயுந்திரையுகளும்போது மேலே தாவவேணுமிறே. மடப்பம்-பற்றிற்றுவிடாமை. அத்தைச்சொல்லுகிறது - நினைத்தது இத்யாதி. சலியாதே 'உகளும்' என்கிற வர்த்தமான நிர்த்தேஶத்தால் திரை தாவுகையில் அநுஸ்யூதிதோன்றுகையாலே, சலியாமை விவக்ஷிதமிறே. நினைத்தது கைபுகுருமளவும் சலியாமைக்கு த்ருஷ்டாந்தம் - பகவத்த்யாந இத்யாதி. இத்தை விஶேஷித்தாகக் காட்டுகிறார் - அலைகடல் இத்யாதி. 'எங்களுக்கு ஒருரக்ஷகனில்லை' என்ன, 'நான் உளனாயிருக்க, நீங்கள் அஞ்சவேணுமோ? நான் ரக்ஷகனாகிறேன்' என்னும்படியான க்ருபையாலே, ஸ்வேச்சையாய் வருகிறதாகவும், தன்கீழ்வயிற்றிலே அலையெறியும்படியாகவும், ஆகாசத்திலே ப்ரஹ்மாதிகள் குடியிருப்பிலே சென்று வீசும்படியாகத் தன் திருமுதுகிலே மலைகளைக் கழலாதபடி யேறிட்டுக்கொண்டு வருகிற ஜலம் தாரகமான வஸ்துவை, ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனை. அவன் அப்படி தன்னுருக் கெடுத்து வேற்றுருக்கொண்டு அரியன செய்து ரக்ஷியாநின்றான், உனக்குச் செய்யவேண்டும் அருந்தேவை, அவனை மறவாதிருக்கை; இத்தனையுஞ் செய்யப்பாராய். மறக்கவொண்ணாத செயல்களை அவன் செய்யாநின்றால் மறவாதிருக்க வேண்டாவோ? என்று பொருள். இதுவும் - நாரையும். த்ருஷ்டாந்தாந்தரம்-"ஶிரய இத்யாதி"; யத்வா, ஆமிஷார்த்தமாக அவதாநம் பண்ணிக்கொண்டிருக்கிற ஆகாரத்துக்குக் கீழில் த்ருஷ்டாந்தமாய், திரைகள் மேலே தாவினாலும் சலியாமைக்கு த்ருஷ்டாந்தம்-"ஶிரய இத்யாதி" என்னுதல். முந்தினது-'மடம்' என்றத்தைப்பற்ற; இரண்டாம் த்ருஷ்டாந்தம் - 'திரையுகளும்' என்றத்தைப்பற்ற. யத்வா, 'பகவத்த்யாநபரர் இருக்குமாபோலே' இத்யாதி ஶ்லோகத்தில் உக்தமான அர்த்தத்தை ஸமர்த்திக்கிறது - ஶிரயோவர்ஷதாராபிர் இதி. ஶயந்த்யஸ்யாம் - ஶ்ரேயோர்த்தா: இதி ஶிரய: தேஷாம் பர்வதாநாம் வர்ஷ இத்யர்த்த:. தத்ர உதாஹரணம் - ஶிரயோ வர்ஷதாராபிர் இதி. ஶ்ருத்யாதிப்ய: ... [illegible] ... "ஸ்ருஷ்டிதஶ்யாமவைணவேய இதி" ... அதோக்ஷஜ: என்றது; "ஜ:" என்றத்தின் நிருக்தி - 'ஜாத' என்றது. எல்லாவற்றாலும் ஸர்வகாலத்திலும் அம்ருதோததிபோலே அநுபவிக்கப்படாநிற்கச் செய்தேயும், ஜாது - ஒருகாலும், யாதொரு காரணத்தாலே ந க்ஷீயதே. ஆகையாலே - அதோக்ஷஜனென்றபடி. ஏதேந - "கொள்ளமாளா வின்பவெள்ளம்" இத்யுக்தம் பவதி. கொள்ளக்கொள்ள, மாளாத - நசியாத, ஆநந்தஸாகர இத்யர்த்த:. இஸ்லோகார்த்தம்-நிரந்தரமாக இத்யாதி. இடையாதே - சலியாதே; க்லேஶப்படாதே யென்றபடி. ஶப்தார்த்தம் - வந்து கிட்டுகிற இத்யாதி. 'திரையுகளும்'

யிருக்கிற மடநாராய் ! யாகங்களும் பண்ணிப் பவித்ரங்களும் முடிந்திட்டு 'தார்மிகர்' என்னும்படி திரியாநிற்பர்களிறே பரஹிம்ஸை பண்ணுநிற்கச் செய்தே க்ராமணிகள் ; அப்படியே க்ஷுத்ரமத்ஸ்யங்கள் வந்தாலும் அநாதரித்திருக்குமாயிற்று நினைத்தது கைப்புகுருமளவும் ; பற்றிற்று விடாதொழிகையிறே - மடப்பமாவது. [ஆயும்] - என்பிறப்பே பிடித்து உறங்காத தாயும் உறங்கிலும். [அமருலகுந்துஞ்சிலும்] – தங்கள் ஸத்தையே பிடித்து உறங்காத நித்யஸூரிகள் உறங்கிலும் நீ உறங்குகிறிலை. இவளைப் பெற்ற தாய்க்கு உறக்கமின்றிக்கே யொழிவானேன்? என்னில்,—முன்பெல்லாம் 'இவளுக்கு ஸத்ருஶனாயிருப்பானொருவனைப் பெற்றுக் கொடுத்தோமாக வல்லோமே' என்று கண்ணுறங்காது, பின்பு நாயகனைப் பிரிந்து இவள் நோவுபடுகிற படியைக் கண்டு, அத்தாலே கண்ணுறங்காது; "பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா | சிந்தார்ணவகத:" (பதிஸம்யோகஸுலபம்வயோத்ருஷ்ட்வாசமேபிதா - சிந்தார்ணவகத:) என்றருளிறே பிராட்டி. 'ஒரு உபக்நத்திலே கொண்டுபோய்ச்சேர்த்து நோக்கில் நோக்கலாய், இல்லையாகில் கிடையாதபடியான பருவமாய் இராநின்றது, இவளுக் கீடாயிருப்பானொருவனைப் பெற்று அவன்கையில் காட்டிக்கொடுத்தோமாக வல்லோமே' என்று - எங்களையர் சிந்தார்ணவகதரானா ரென்றருளிறே பிராட்டி. அப்படியேயிறே இவளைப்பெற்ற தாயாரும் கண்ணுறங்காதே படும்படி. அநிமிஷராய் ஸதாதர்ஶநம் பண்ணுகிறவர்களாகையாலே நித்யஸூரிகளுக்கும்தானே நித்ரை யில்லையே. [நோயும்பயலைமையும்] - மாநஸவ்யதையும், அத்தாலேவந்த வைவர்

---

*என்றது நாரைக்கு விஶேஷணமாதல், கானலுக்கு விஶேஷணமாதல். நாரைக்கு விஶேஷணமென்றது - ஆசார்யஹ்ருதயத்திலே, "திரையுகளும் வ்யஸநவ்யதை' என்றவிடத்திலே ஸ்பஷ்டம். இப்போது, உகளாநின்றுள்ளதா யிருக்கிற நாராயென்று கொள்ள வேணும். 'திரையுகளும்' என்கிறது - கானலுக்கு விஶேஷணமானபோது, நாரைக்கு 'திரையுகளும்' என்கிறது - அர்த்தாத்ஸித்தம். கானல் என்கிறது - நெய்தல் நிலத்துக்கும், கடற்கரைச் சோலைக்கும் பேர். நெய்தல் நிலம் - ஸமுத்ரதீரப்ரதேஶம். பகவ்ருத்திகளான க்ராமணிகள் ஸ்வபாவத்தை இதின்ஸ்வபாவத்துக்கு த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்யாநின்றுகொண்டு, க்ஷுத்ரமத்ஸ்யங்களை வந்தாலும் முனியாதிருக்கும் ப்ரகாரத்தை மடப்பத்துக்கு அர்த்தமாக அருளிச்செய்கிறார் - யாகங்களும் இத்யாதி. மடப்பமென்றால் - இவ்வர்த்தத்தைக் காட்டுமோ? என்னில், பற்றிற்று இத்யாதி. தடஸ்தஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - இவளை இத்யாதி. 'ஸத்ருஶனாயிருப்பானொருவனைப் பெற்றுக்கொடுத்தோமாக வல்லோமே யென்று கண்ணுறங்காது' என்னுமதுக்கு ப்ரமாணம் - பதிஸம்யோக இத்யாதி. "த்ருஷ்ட்வா" என்கிறவிடத்தில் சகாரம் முன்பெல்லாம் சிந்தார்ணவகதரானபடி சொல்லுகிறது. பிதாவென்றது - மாதாவுக்கும் உபலக்ஷணம். "பதிஸம்யோக ஸுலபம்" என்று அர்த்தம் விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - ஒருஉபக்நத்திலே இத்யாதி. 'ஸத்தையேபிடித்துஉறங்காத' என்றத்தை ஹேதுபூர்வகமாக அருளிச்செய்கிறார்-அநிமிஷராய் இத்யாதி. நோயும் பயலைமையும் இதுக்குஉண்டாகைக்கு நியாமகம் காட்டுகிறார்-மாநஸவ்யதையும் இத்யாதி. வைவர்ண்யம் ஸ்ய தத்க்ஷணாத் தஜ்ஜா நம்வ்யாதே; மாநஸவ்யதாயா கார்யத்வக்ஷணாத் வஸ்துத: பக்ஷிணி மாநஸவ்யதாஸம்பவாத் 'நோயும் பயலைமையும்' இதி க்ஷயரோஹேதுர் ஶஷ்ஸஞ்சாரம் ஸ்வஸ்மிந் ஸாதவ்ய ஸம்பந்நாதித்வமித்யர்த்தம் அவரி*

ண்யமும் தன்பக்கலிலே காண்கையாலே அவ்விரண்டும் அதுக்குஉண்டென்றிருக்கிறாள். [மீதூர] - விஷமேறினாற்போலே உடம்பிலே பரக்க. [எம்மேபோல்] – இப்படி க்லேஶப் படுகைக்கு நானொருத்தியு மென்றிருந்தேன்; நீயும் என்னைப்போலே யாவதே? து꞉கபரி பவங்களைப் பொறுத்திருக்கையாலும், பற்றிற்று விடாதிருக்கிறபடியாலும், வைவர்ண்யத் தாலும், என்னைப்போலே யிராநின்றாய். [நீயும்] - விரஹவ்யஸநம் பொறுக்கமாட்டாத மார்த்தவத்தையுடைய நீயும். "[illegible]" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கமாட்டாமைக்கு இருவரும் ஒத்தோமோ? [திருமாலால்நெஞ்சம்கோட்பட்டா யே]-மாநஸவ்யதையும் வைவர்ண்யமும் இருந்தபடிகண்டேனுக்கு, நீயும் நான்அகப்பட்ட துறையிலே அகப்பட்டாயாகாதே. மைந்தனை மலராள்மணவாளனையோ நீயும் ஆசைப் பட்டது? [நெஞ்சங்கோட்பட்டாயே]-நெஞ்சு பறியுண்டாயாகாதே. தோற்புரையன்றியே, மறுபாடுருவ வேர்ப்பற்றிலே நோவுபட்டாயாகாதே. (௧)

---

ஹாதி-தன்பக்கலிலே காண்கையாலே இதி. 'ஊர' என்றதுக்குத் தாத்பர்யம் - விஷமேறினாற் போலே என்றது. 'எம்' என்ற - [illegible]. 'எம்மே' என்கிற ஏவகாரத்துக்கு வாஸநை - இப்படி இத்யாதி. 'எம்மேபோல்' என்கையாலே தமக்குஉண்டான ஆகாரத்தை இன்னதென்று விஶதீகரியாநின்றுகொண்டு, இப்படி நீயும் இராநின்றாயோ? என்கிறாளென்று தோற்றுவிக்கிறது - து꞉கபரிபவங்களை இத்யாதி; பகவத்விஶ்லேஷத்தாலுண்டான பரிபவம். பற்றிற்று விடாதிருக்கிறபடி யென்றது - 'மடநாராய்' என்றத்தைப்பற்ற; த்ருஷ்டாந்தத்திலே, பற்றின பகவத்விஷயத்தை விடாதிருக்கை. ப்ராதாந்யத்திலே வஶ்யமாகத் தாத்பர்யம் - விரஹவ்ய ஸநம் இத்யாதி. யதா, [illegible]. ஸமுச்சயத்திலேயாகத் தாத்பர்யாந்தரம் - [illegible] இத்யாதி. 'ஶ்ரியꞽபதியாலே அபஹ்ருத சித்தையானாய்' என்னுமதுக்கு நியாமகஞ் சொல்லுகிறார் - மாநஸவ்யதையும் இத் யாதி. திருமாலிடத்திலே தான் ஆசைப்பட்டிருப்பாளோ? என்ன, மைந்தனை இத்யாதி. மாநஸ வ்யதையும் வைவர்ண்யமும் - நோயும் பயலைமையும். யத்வா, "நானகப்பட்ட துறையிலே அகப் பட்டாயாகாதே" [illegible] - மைந்தனை இதி. [illegible] [illegible] 'எம்மேபோல்' என் கையாலே, "திருமாலால் நெஞ்சங்கோட்பட்டாய்" என்றதுக்கு மைந்தனை மலராள்மணவா ளனையோ நீயும் ஆசைப்பட்டதென்று தாத்பர்ய மென்கிறாரென்னவுமாம். மைந்தனை - யுவாவை. கோட்பட்டாய் - கொள்ளப்பட்டா யென்றபடி. 'நெஞ்சம்' என்று அந்த꞉கரணம் சொன்னதுக்குத் தாத்பர்யம் - தோற்புரை இத்யாதி. மறுபாடுருவ என்றதுக்கு - அ꞉காதிஶயத்திலே நோக்கு. நெஞ்சு எல்லாவற்றுக்குங் காரணமாகையாலே - வேர்ப்பற்று என்கிறார். (௧)

## இரண்டாம் பாட்டு.

---

கோட்பட்டசிந்தையையாய்க் கூர்வாயவன்றிலே!
சேட்பட்டயாமங்கள் சேராதிரங்குதியால்
ஆட்பட்டவெம்மேபோல் நீயுமரவணையான்
தாட்பட்டதண்டுழாய்த் தாமங்காமுற்றுயே.

ஆ.—(கோட்பட்ட) கூர்வாயஅன்றிலே! அபஹ்ருதமான நெஞ்சை யுடையையாய் நீளியவான ராத்ரிகளில் உறங்காதே இரங்காநின்ருய்; நீயும் என்னைப்போலே பெரியபெருமாள்திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்பட்டாயாகாதே யென்கிருள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், விஶ்லிஷ்டமான அன்றிலினுடைய தாருணத்வநியைக் கேட்டு அத்தைக்குறித்து ஶோகிக்கிருள்.

[கோட்பட்ட என்று தொடங்கி] - அபஹ்ருதமான நெஞ்சையுடையையாய், கேட்டார்க்கும் பிழைக்கவொண்ணுதபடி தாருணத்வநியையுடைய அன்றிலே! அறநெடிய சாமங்கள் படுக்கையிற் சேராதே கண்டார்க்கு தயநீய மாம்படி நோவுபடாநின்ருய். [ஆட்பட்ட என்று தொடங்கி] - அடிமைச் சுவட்டிலே அகப்பட்ட எங்களைப்போலே துஃகம் பொறுக்கமாட்டாத நீயும், பெரியபிராட்டியாரும் தானும்கூடத் திருவணைமேலே கண்வளர்ந்தருளுமிடத்தில் அந்தரங்கஸேவையை ஆசைப்பட்டு இங்ஙனே படுகிருயே.

ப.—அநந்தரம், ஓரன்றிலைப்பார்த்து, 'நீயும் ஶேஷஶாயியான அவன்திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்பட்டாயோ'? என்கிருள்.

கோட்பட்ட - பறியுண்ட,சிந்தையையாய்-நெஞ்சையுடையையாய்க்கொண்டு, கூர்வாய - (அந்தஆர்த்தியடியாக கத்கதமாகையாலே) செறிந்த குரலை யுடைத்தான, அன்றிலே - அன்றிலே! சேண்பட்ட - நெடிதான, யாமங்கள் - யாமங்கள், சேராது - சேக்கையிற்சேராதே, இரங்குதி - துஃகியாநின்ருய்; ஆல் - ஆதலால், ஆள்பட்ட - அடிமைப்பட்ட, எம்மேபோல் - எங்களைப்போலே, நீயும் - (பிரிவாற்றுமை தோற்றியிருக்கிற) நீயும், அரவணையான் - திருவரவணையைத் தனக்குநிரூபகமாக வுடையவனுடைய, தாள் - திருவடிகளிலே, பட்ட - (போகதசையிலே) மிதியுண்ட, தண்துழாய்த்தாமம் - செவ்வியையுடைய திருத்துழாய்மாலையை, காமுற்றுயே - ஆசைப்பட்டாயோ?

வாயென்று - வாய்மையாய், குரலைச் சொல்லுகிறது. கூர்தல் - செறிவு. அன்றியே, கூர்த்தவாயென்று - பிரிந்தாரை யீருங் குரலென்றுமாம். இத்தால் - ஆர்த்தத்வநியுடையார் அவனைப்பிரிந்து கூப்பிடுகிருர்களென்றிருக்கை.

இ.—இரண்டாம்பாட்டில், விஶ்லேஷித்து வர்த்திக்கிற அன்றிலினுடைய தாருணத்வநியைக் கேட்டு அத்தைக்குறித்து வெறுக்கிருள்.

[கோட்பட்ட சிந்தையையாய்] - க்ரஹிக்கப்பட்ட மநஸ்ஸையுடையையாய், அபஹ்ருதமான சித்தத்தை யுடையையாய். [கூர்வாயவன்றிலே] - "அபஹ்ருதமான மாநஸம்" என்றுஅறிந்தபடி எங்ஙனேயென்னில்; - இதின்பேச்சு அடியற்றிருக்கையாலே

தோற்றியிருக்கிறது. கூர்த்த வாயையுடைய வென்னுதல்; வாயென்று - வார்த்தையாய், தனியிருப்பாருடைய நெஞ்சை ஈரும் பேச்சையுடைய வென்னுதல். [சேட்பட்டயாமங்கள்] - நெடிய சாமங்கள். ராத்ரி நெடுகுகையன்றிக்கே, ராத்ர்யவயவங்கள்தான் நெடிதாகை. [சேராது] - படுக்கையிற் சேராதே. [இரங்குதியால்] - படுக்கையிலே சேராதொழிந்தாலும் தரிப்போடே யிருக்கலாமிறே. ஶிதிலமான நெஞ்சையுடையை யாகாநின்றாய். [ஆட்பட்ட எம்மேபோல்] - ஐஶ்வர்யம், ஆத்மப்ராப்தி என்கிற இவ்வளவன்றிக்கே, ப்ராப்திபலமான தாஸ்யபரிமளத்தையோ நீயும் ஆசைப்பட்டது? [நீயும்] - என்னைப்போலே, "வதிம்விஶ்வஸ்ய" "யஸ்யாஸ்மி" "தஸ்யைஷ ஆத்மாவிவ்ருணுதே தநூம் ஸ்வாம்" என்கிறபடியே வேதாந்த வாஸநையாதல், மயர்வற மதிநலமருளப்பெற்றுத் துயரறுசுடரடிதொழுதெழென்னுதல், இவை யொன்று மின்றிக்கேயிருக்க, நீ,நோவுபடுவதே! இதுக்கோர் அதிகாரி நியதியுமின்றிக்கே யிருந்ததீ! [அரவணையான் தாட்பட்ட தண்டுழாய்த்தாமம்] - படுக்கையைச் சொல்லுகையாலும், "திருமாலால்" என்று கீழேசொல்லுகையாலும் படுக்கையிலே இருவருங்கூடின சேர்த்தியிலே அந்தரங்கஸேவையையோ ஆசைப்பட்டது? [தாட்பட்ட தண்துழாய்த்தாமம்] - சுடர்முடிமேல் துழாயையொழிய, அவர்களிருவருங் கூடித்துகைத்த தாளிணைமேல் துழாயையோ ஆசைப்பட்டது.? தாமம் - மாலை. [காமுற்றாயே] - ஸங்கத்தளவில் விட்டிலையாகாதே, "ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:" என்னுமளவு ஆசைப்பட்டாயாகாதே?

ஈடு.—இரண்டாம்பாட்டு. இப்படி நாரையைப்பார்த்து வார்த்தை சொல்லாநிற்கச் செய்தே, அருகே நின்ற பனையிலே தங்கின அன்றிலானது வாயலகு நெகிழ்த்தவாறே கூப்பிட்டது; இதினுடைய ஆர்த்தத்வநியைக் கேட்டு, 'பாவியேன், நீயும் என்னைப்போலே அகப்பட்டா யாகாதே?' என்கிறார்:

[கோட்பட்ட சிந்தையையாய்] - அபஹரிக்கப்பட்ட ஹ்ருதயத்தை யுடையையாய்; 'அபஹ்ருதமான மநஸ்ஸை' என்று அழிந்தபடி என்? என்னில்;—அதினுடைய அடி

---

இரண்டாம்பாட்டு - கோட்பட்ட இத்யாதி. 'கூர்வாயவன்றிலே, எம்மேபோல் தாமம் காமுற்றாயே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-இப்படி இத்யாதி. பனை - தாலத்ருமம். "முன்றில் பெண்ணைமேல்" இத்யாதிப்படியே, அன்றிலாகில் பனையிலே யிருக்கை ஸித்தம். வாயலகு - சஞ்சுபுடம். நெகிழ்த்தவாறே - நெகிழ்த்தவாறே இத்யர்த்த: க்ரௌஞ்சியுக்தம் ஸஹவாஸஸம்ஶ்லிஷ்ட வக்த்ரகம் ஹவதீதிவ்யவஸிதி:.

கோட்பட்ட சிந்தையையாய்-கமலவிமலவீக்ஷ்யாதி.ஹேகமலாநி,ஸ்வம்ராத்ர்யா ஶ்ரீஸ்வாந்தஜுஷோ ஜகதி ஸ்வபதிஸதி என்று - ஸதிஸப்தமியாய், ராத்ரியிலே ஈஶ்வரனாலே க்ரஸிக்கப்பட்டிருக்கிற ஜ்ஞாநத்தையுடைத்தான ஜகத்தானது நித்ரைபண்ணி யுள்ளளவில், போயிருக்கிற நித்ரையை யுடையையாய்க்கொண்டு சயிக்கிறாயில்லை; கூப்பிடா நிற்கிறாய் எங்களைப்போலே; வாராய்ஸகியே! நளிந நயந ஹாஸோதாரலீலேக்ஷணேந - தாமரை போன்ற திருக்கண்களென்ன, அப்படியிருந்துள்ள திருமுறுவலென்ன இவற்றாலே உதாரமான லீலையையுடைய பார்வையை யுடைத்தான க்ருஷ்ணனாலே. மாஸநிவிண்ணசேதா: - மிகவும் து:கப்பட்ட நெஞ்சையுடையை யாணயோ? என்றபடி. தடஸ்தலக்ஷணத்தை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - அபஹ்ருத இத்யாதி. அடியற்ற த்வநி யென்றது, 'கூர்வாய' என்றத்தின் க்ரூரமான

யற்றத்வநிதான் 'நெஞ்சிழந்தது' என்று தோற்ற நின்றதுகாணும் இவளுக்கு.[கூர்வாயவன்றிலே] - தனியரா யிருப்பாரை இருதுண்டமாக இடவல்ல த்வநியாயிற்று. [கூர்வாய]- வாயென்று – வார்த்தை. அன்றியே, கூர்த்த வாயலகையுடைய என்னுதல். [சேட்பட்டயாமங்கள்] - ராத்ரியாய் நெடுகுகை யன்றிக்கே, யாமங்கள் தோறும் நெடுகாநின்றதாயிற்று. [சேராதிரங்குதியால்] - நெடுகுகிற யாமங்களில் படுக்கையிற் சேராதொழிந்தாலும் தரிக்கலாமிறே. அங்ஙனே செய்யாதே ஶிதிலையாகா நின்றாய். [ஆள்பட்ட எம்மேபோல்] - நெஞ்சு பறியுண்டு படுக்கையிலுஞ் சேராதே நோவுபடுகைக்கு என்னைப் போலே நீயும் அவன் திருவடிகளில் தாஸ்யபரிமளத்திலே யாகாதே அகப்பட்டது. [நீயும்]- நாட்டாரில் வ்யாவ்ருத்தமாகப் போந்திருக்கிற நீயும். "பதிம்விஶ்வஸ்ய" (பதிம்விஶ்வஸ்ய), "யஸ்யாஸ்மி" (யஸ்யாஸ்மி) என்று ஓதினையல்லை. மயர்வற மதிநலம் பெற்றாயில்லை - என்தனைஉட்புகாத நீயும் இப்படியாவதே! [அரவணையான் இத்யாதி] - "திருமாலால்" என்றதிறே கீழே, இருவருமானால் இருப்பது படுக்கையிலேயா யிருக்குமே; 'அவனும் அவளுமாய்த் துகைத்த திருத்துழாய்மாலை பெறவேணும்' என்று அத்தையோ நீயும் ஆசைப்பட்டது? [தாள்பட்ட தண்துழாய்த்தாமம்] - சுடர்முடிமேல் துழாயொழிய, அவர்களிருவருங் கூடத் துகைத்த துழாயையோ நீயும் ஆசைப்பட்டது? புழுகிலே தோய்த்தெடுத்தாற்போலே பரிமளத்திலே தெரியுமே, கலம்பகன் நாறுமே. "தாளிணை மேலணிதண்ணந்துழாய்" என்றிறே தான் கிடப்பது. தாமம் - ஒளியும், மாலையும்.

---

வார்த்தை யென்ற அர்த்தத்தைப் பற்ற. அடியற்ற - அமூலகமான. அடி-மகஸ்ஸு. வார்த்தைக்குக் கூர்மையேது? என்ன, தனியராய் இத்யாதி. ப்ரதமார்த்தே, கூர்மை - க்ரௌர்யம். தனியரா யிருப்பார் - நாயகனைப் பிரிந்திருப்பார். இதின் த்வநிக்கு பாதகத்வம் - நாயகஸம்ஶ்லேஷ ஸ்மாரகத்வேந. கூர்த்தவாயலகை இதி, வாயலகுக்குக் கூர்மையாவது-க்ரூரமான த்வநியுண்டாக்குகை. சேண்-நெடுமை. படுகை-உடைத்தாகை' நீட்சியையுடைத்தான யாமங்க ளென்றபடி. சேட்பட்ட ராத்ரி என்னாதே, 'யாமங்கள்' என்கிறதென்? என்ன, ராத்ரியாய் இத்யாதி. வ்யஸநாதிசயத்தாலே நெடுகித்தோற்று மென்றபடி. சேராதென்ற படுக்கையிலே யென்று அத்யாஹார்யம். இரங்குகை- ஶைதில்யம். அத்யாஹ்ருதபதத்தோடேகூட 'சேராது, இரங்குதி'என்கிறபதத்வயத்துக்கும்ஹாவம்- நெடுகுகிற இத்யாதி. அங்ஙனே செய்யாதே - அம்மாத்ரயன்றிக்கே. மேலையுங் கூட்டி ஹாவம்- நெஞ்சுபறியுண்டு இத்யாதி. போந்திருக்கிற என்றதுக்கு - உன்னகத்திலே யிருக்கிற நீயும் என்று ஸ்வபாவார்த்தம்; பொங்தென்று-பனையென்று த்வர்யர்த்தம். தாத்பர்யாந்தரம் - பதிம்விஶ்வஸ்ய இத்யாதி. யத்வா, வ்யாவ்ருத்யுபபாதநமாதல். இத்தால் - ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந மில்லையென்றபடி. பலிதம் - என்தனை இத்யாதி. என்தனை - என்மாத்ரம். கீழே "திருமாலால்" என்கையாலும், "அரவணையான்" என்ற பதஸாமர்த்யத்தாலும், "தாட்பட்டதண்டுழாய்" என்றதுக்கு இருவருமாய்த் துகைத்த தண்டுழாயென்று அருளிச்செய்கிறார், திருமாலால் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. 'தாட்பட்ட' என்றதுக்கு வ்யாவர்த்யம் - சுடர்முடி இத்யாதி. இருவரும் துகைத்த துழாயென்று அறியும்படி யென்? என்ன, புழுகிலே இத்யாதி. தான் துகைத்த திருத்துழாயை ஆசைப் பட்டிருக்குமோ? என்ன, தாளிணை இத்யாதி. தாமம் - மாலை. காழற்றுயே - ஆசைப்பட்டாயோ ?

[காமுற்றுயே]-ஸங்கத்தளவிலே நின்றிலையாகாதே, பேறில் ஜீவித்தல், பெறுவிடில் முடிதலான அவஸ்த்தையை ப்ராபித்தாயாகாதே. (உ)

## மூன்றாம் பாட்டு.

காமுற்றகையறவோடு எல்லேயிராப்பகல்
நீமுற்றக்கண்டுயிலாய் நெஞ்சுருகியேங்குதியால்
தீமுற்றத்தென்னிலங்கை ஊட்டினான்தாள்நயந்த
யாமுற்றதுற்றாயோ? வாழிகனைகடலே!

ஆ.—(காமுற்ற.) எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறுமையாலே நீ இரவு பகலெல்லாங் கண் துயிலாதே நெஞ்சுருகி ஏங்காநின்றாய்; தீமுற்றத் தென்னிலங்கையூட்டினவன் திருவடிகளை ஆசைப்பட்ட நான் பட்டது பட்டாயாகாதே? ஐயோ! கடலே! என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், கோஷிக்கிற கடலைக் கண்டு, 'ஐயோ! நீயும் ராமகுணத்திலே அகப்பட்டு நான்பட்டதே பட்டாயாகாதே!' என்கிறாள்.

[காமுற்ற கையறவோடு] - ஆசைப்பட்டபொருள் பெறுமையால் வந்த வ்யஸநத்தோடே; எல்லேயென்று - தோழியை ஸம்போதிக்குமாபோலே துணையாகையாலே அத்தை ஸம்போதிக்கிறாள். [இராவென்று தொடங்கி] - உறங்காமைக்குக் கண்ட பகலோடு உறங்குகைக்குக் கண்ட இரவோடு வாசியின்றிக்கே ஒருகாலும் உறங்குகிறிலை; ஹ்ருதயம் ஶிதிலமாய்த் தரிப்பின்றியே ஏங்காநின்றாய். [தீமுற்ற என்று மேலுக்கு] - அக்நி ஹ்ருஷ்டமாம்படியாக லங்கையை விருந்திட்ட பெருமாளுடைய திருவடிகளை ஆசைப்பட்ட நாங்கள் பட்டதே பட்டாயன்றே? முற்றவென்று - லங்கையையெல்லாமென்றுமாம்.

ப.—அநந்தரம், கத்துகிற கடலைப் பார்த்து, 'விரோதிநிவர்த்தகனை அவனுடைய திருவடிகளை ஆசைப்பட்ட என்னைப்போலானாயோ?' என்று சொல்லுகிறாள்.

காமுற்ற - காமிக்கப்பட்ட போகங்கள், கையறவோடு - கைப்படாத இழவோடே கூடினாற்போலே, நீ - நீ, இராப்பகல் - இராப்பகல், முற்ற - முழுக்க, கண்துயிலாய் - கண்ணுறங்குகிறிலை; நெஞ்சு உருகி - அகவாயும் நீராய், ஏங்குதி - (ஏங்கின குரலிறங்காமல்) முழுக்கக் கூப்பிடாநின்றாய்; ஆல்-ஆதலால், தென்இலங்கை - தென்னிலங்கையை, முற்ற – முற்ற, தீயூட்டினான் - தீயூட்டினவன், தாள் - திருவடிகளை, நயந்த- ஆசைப்பட்ட, யாம் - நாங்கள், உற்றது - பட்டது, உற்றாயோ - பட்டாயோ? கனை

---

ஸங்கஇதி - ஸங்ககாமாநுராகஸ்நேஹாத்யவஸ்த்தைகளிலே ப்ரதமபர்வம் - ஸங்கம். உத்தரபர்வம் - காமம். விவரணம் - பேறில் இத்யாதி. க்ரமேண அந்வய:. ஆல் - விஷாதே. "தாட்பட்ட தண்டுழாய்த் தாமம் காமுற்றாயே" என்கிறவிடத்திலே - "[illegible]" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். (உ)

கடலே – இரைகிற கடலே! வாழி - (உன் க்லேஶந் தீர்ந்து) வாழ்வாயாக. எல்லே என்று - கடலுக்கு ஸம்புத்திபாதல், என்னே என்னும் வெறுப்பாதல். இத்தால் - மஹத்தையையுடையார் வாய்விட்டலறுவது அவனைப் பிரிந்தா லென்றிருக்கை.

இ.—மூன்றும்பாட்டில், கோஷிக்கிற கடலைக் கண்டு, 'நீயும் ராமகுணத்திலே அகப்பட்டு நான் பட்டது பட்டாயாகாதே!' என்கிறாள்.

[காமுற்ற கையறவோடு] - ஆசைப்பட்ட பொருள் கைப்புகுராமையாலே வந்த இழவோடே. காமுறுகையும் இழவும் கடலுக்கின்றிக்கே யிருக்க, த்ருஷ்டாந்தபூதையான தனக்கு உண்டாகையாலே அநுமித்துச் சொல்லுகிறாள். [எல்லே] - "ஓதமும் நானு முறங்காதிருந்தேனே" என்றுஉறங்காமைக்குக்கூட்டாகையாலே, "வாராய்" என்று ஸம்போதநமாதல்; "என்னே" என்று ஆஶ்சர்யமாதல். [இராப்பகல் முற்ற நீ கண் துயிலாய்] - உறங்கக்கண்ட இராவோடு, விழித்திருக்கக்கண்ட பகலோடு வாசியற உறங்குகிறிலை. [நீ] - உன் காம்பீர்யமெல்லாம் எங்கே போயிற்று? [நெஞ்சுருகியேங்குதியால்] - கண்உறங்காதேயொழிந்தால், நெஞ்சு ஶிதிலமாகாதொழிதல், வாய்விட்டுக்கூப்பிடுதல் தான் பெற்றதோ? [ஏங்குதியால்] - ஏங்காநின்றாய். [தீமுற்ற இத்யாதி] - அக்நிவயிறு நிறைய ஊட்டினை னென்னுதல். இலங்கையை முற்றத் தீயூட்டினை னென்னுதல். 'ஒருத்தியைப்பெறுகைக்கு மார்விலே அம்பேற்றவன், அவளுடைய அந்தஃபுரபரிகரத்துக்கு உதவானோ?' என்று நீயும் ஆசைப்பட்டாயோ? [தாள்நயந்தயாமுற்றதுற்றாயோ]-அவன் திருவடிகளை ஆசைப்பட்டு நான் பட்டது பட்டாயோ? தாள் நயந்தாரோடு தோள் நயந்தாரோடு வாசியில்லை. அவனுடைய ப்ரணயித்வ குணத்திலேயோ நீயும் அகப்பட்டது? [வாழி] - வாழ்ந்திடுக. எல்லாருக்கும் தாரகமான உன்னுடைய அவஸாதநம் நீங்குக. [கனைகடலே] - வாய்விட்டுக் கூப்பிடமாட்டாதே விம்மல்பொருமலாய்ப் படுகிறாயாகாதே; ஶப்திக்கிற கடலே! என்னவுமாம்.

ஈடு.—மூன்றும்பாட்டு. அன்றிலினுடைய த்வநிக்கு இடைந்திருக்கிறவளவிலே கடலென்றொரு மஹாதத்த்வமாய், அது தன் காம்பீர்யமெல்லாம் இழந்து கரையிலே வருவது கரையேறமாட்டாதே உள்ளேவிழுவதாய்; எழுத்துஞ் சொல்லும் பொருளுந் தெரியாதபடி ஊமைக்கூறனுகக் கூப்பிடுவதாகிற படியைக் கண்டு, 'பாவியேன், நீயும் ராமகுணத்தில் அகப்பட்டு நான் பட்டது பட்டாயாகாதே?' என்கிறாள்.

[காமுற்ற கையறவோடு] - "நெஞ்சுருகி யேங்குதியால்" என்று அந்வயம். [காமுற்றகையறவோடு] - ஆசைப்பட்ட பொருளிழவோடே. கைத்து என்றது - பொருள். ஆசைப்பட்ட பொருள் கைபுகுராமையால் வந்த இழவோடே. காமுறுகையும் இழவும்

---

மூன்றும்பாட்டு - காமுற்ற இத்யாதி. 'கனைகடலே தீமுற்ற'இத்யாதிபதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - அன்றில் இத்யாதி.இடைந்து - க்லேஶப்பட்டு. ஊமைக்கூறன் - மூகஜல்பிதம்.

அவதாரிகாநந்தரம், காமுற்ற கையறவோடு என்றது - பாட்டுக்கெல்லாம் உபாதாநம். நெஞ்சுருகி யேங்குதியால் என்று அந்வயம் என்றது - பாட்டையெல்லாஞ் சொல்லி, நெஞ்சுருகி யேங்குதியால் என்று முடிக்க வென்றபடி. எல்லே, கனைகடலே, தீமுற்ற இத்யாரப்ய, உற்றாயோ? இராப்பகல்முற்றவும் நீகண்டுயிலாய்; காமுற்ற கையறவோடு நெஞ்சுருகி யேங்குதியால்; வாழியென்று அந்வயமென்று தாத்பர்யம். காமுற்ற - ஆசைப்பட்ட. கை - பொருள். அறவு - இழவு. "கைத்து" என்றத்தை 'கை' என்று - குறைத்துக்கிடக்கிறது. விவரணம்-ஆசைப்பட்ட இத்யாதி. கடலுக்கு இவ்வாகாரமுண்டென்று அறிந்தபடி யென்? என்ன, காமுறுகை இத்யாதி. 'எல்லே'

கடலுக்கின்றிக்கே யிருக்க, த்ருஷ்டாந்தபூதையான தனக்கு உண்டாகையாலே, 'இதுக்குமுண்டு' என்று அநுமித்துச் சொல்லுகிறாள். [எல்லே] - இரவோடு பகலோடு வாசியறக் கதறுகிறபடியைக் கண்டு, தன்படிக்குப் போலியா யிருக்கையாலே தோழியை ஸம்போதிக்குமாபோலே ஸம்போதிக்கிறாள் சிறையுறவுபோலே; *"ஓதமு நானு முறங்காதிருந்தேனே" என்னக்கடவதிறே. அன்றிக்கே, எல்லே என்றது - என்னே என்று ஆஶ்சர்யமாதல். [இராப்பகல் நீ முற்றக் கண்துயிலாய்] - உறங்கக் கண்ட இரவுக்கும், உறங்காமைக்குக் கண்ட பகலுக்கும் உன்பக்கல் ஒருவாசி கண்டிலோமீ! [நீ] - உன் காம்பீர்யமெல்லாம் எங்கே போயிற்று? [நெஞ்சுருகி யேங்குதியால்] - உறக்கமின்றிக்கே யொழிந்தால் நெஞ்சுதான் அழியாதிருக்கப்பெற்றதோ? †(பேற்றுக்கேற்ற) நெஞ்சழிந்து கூப்பிடாநின்றாய். [தீ முற்றத் தென்னிலங்கை யூட்டினான்] - பாவியேன், பரத்வத்திலே ஆசைப்பட மாட்டிற்றில்லையாகாதே, ப்ரணயிநீ விரஹம் பொறுக்க மாட்டாத சக்ரவர்த்தி திருமகனை யாகாதே நீயும் ஆசைப்பட்டது. தென்னிலங்கை முற்றத் தீயூட்டினான். விபீஷண க்ருஹம் லங்கைக்குள் அன்றுபோலே. அவன் அவர்களுக்குக் கூட்டில்லாதாப்போலே, அவனகமும் அவர்க ளகத்துக்குக் கூட்டில்லைகாணும்; அவனகம் - தாஸோஹமிறே. அன்றிக்கே, [தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான்] - ராவணபயத்தாலே முன்பு அரைவயிறாக ஜீவித்த அக்நி, ‡"ஒள்ளெரி மண்டியுண்ண"என்கிறபடியே வயிறு நிறைய உண்டு ஜீவிக்கப் பெற்றதாயிற்று பெருமாளை அண்டைகொண்ட பலத்தாலே; §"செந்தீயுண்டு தேக்கிட்டதே" என்னக் கடவதிறே. [தாள்நயந்தயாமுற்றதுற்றாயோ] - பரமப்ரணயியான சக்ரவர்த்தி திருமகன் திருவடிகளை ஆசைப்பட்ட நான் பட்டது பட்டாயாகாதே நீயும். தாள்நயந்தாரோடு தோள்நயந்தாரோடு வாசியறுவதே

*என்றும், 'எடி' என்றும், 'தோழி'என்றும் முன்னிலைப்பேர். எல்லேயென்று - தோழியை ஸம்போதிக்குமாபோலே அசேதநத்தை ஸம்போதிக்கிறதென்? என்ன, இரவோடு இத்யாதி. 'வாசியற' என்ற அநந்தரம், உறங்காதேயிருந்து என்று அத்யாஹார்யம். சிறையுறவு-சிறைக்கூடத்திலேசேர இருக்கையால் வந்த உறவு. தன்படிக்குப் போலியாயிருக்குமோ? என்ன, ஓதமும்நானும் இத்யாதி. ஓதம்-ஸமுத்ரம். பகல் கண்துயிலாமை ஸித்தமாயிருக்க,இங்கே எடுத்துக்கழித்தது த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார்-உறங்கக்கண்ட இத்யாதி. பகல்போலே இராமுற்ற நீ கண்துயிலாய் இத்யந்வய:. 'நீ' என்கிற ஸ்வரத்துக்குஹாவம்-உன்காம்பீர்யம் இத்யாதி.நெஞ்சழிந்து-மநஶ்ஶைதில்யம்பிறந்து. பாவியேன் இத்யாதி-பரத்வத்திலே ப்ரணயிநீவிரஹாக்ஷமதா ப்ரஸங்கமில்லாமையாலே விளம்பம் பொறுக்கலாமென்று ஹாவம். ப்ரணயிநீ விரஹம் பொறுக்க மாட்டாத என்றது - "ஒ..நவஷ.. ஶாநு நஶேகாநு" "நஜா.வஸ.ஶாவவொஹ..ஷெ" இத்யாதியைப் பற்ற. விபீஷணக்ருஹம் தப்பியிருக்க 'முற்ற' என்னப்போமோ? என்ன, விபீஷணக்ருஹம் இத்யாதி. உபபாதகம்-அவன் இத்யாதி. "விபீஷணஸ்து" என்று அவர்களில்வேறுபட்டானிறே. கூட்டல்லாதபடி யெங்ஙனே? என்ன, அவனகம் இத்யாதி-ரஸோக்தி. அகமென்று-க்ருஹமும், அபிமாநமும்.த்விதீயார்த்தத்துக்கு 'முற்ற' என்றது - பூர்ணமாக என்றபடி. ஒள்ளெரிமண்டியுண்ண - திருமொழி. ஒள்ளெரி - ஶ்லாக்யமான அக்நி. மண்டி - ஸாதரமாக. "வயிறுநிறையவுண்டு" என்றதுக்கு ஸம்வாதம் - செந்தீ இத்யாதி. கம்பநாடகத்திலே; தேக்கிட்டதென்று - த்ருப்தி. கீழ்ச்சொன்ன நாரை யன்றில்கள் ஸ்த்ரீவ்யக்திகளாகையாலே தம்மைப்போலே ஆசைப்படக்கூடும், புருஷனான கடலுக்குத் தம்மைப்போலே அதிஶயித ப்ராவண்யங் கூடுமோ? என்ன, தாள்நயந்தாரோடு இத்யாதி. ஸேதுபந்தநஸம*

* பெரிய திருமொழி - கூ - ௬ - கூ. ‡ ஷை - ௧௦ - கூ - ௧.

† குண்டலிதம் க்வாசித்கம் என்பர். § கம்பராமாயணத்தில் சுந்தர. இலங்கை.௬௬-ஆவது செய்யுளில் "நெருப்புத், தின்றதேக்கிடுகின்றது" என்று உள்ளது.

க்லேஶப்படுகைக்கு; பிராட்டியோடு ஸ்ரீபரதாழ்வானோடு வாசியற்றதிறே. [வாழி] - இவ்வவஸாதம் நீங்கி நீ ஜீவித்திடுகே. [கனைகடலே] - வாய்விட்டுக் கூப்பிடமாட்டாதே, விம்மல்பொருமலாய்ப் படுகிறுயாகாதே. கோஷிக்கிற கடலே! என்னவுமாம். (௩)

## நான்காம் பாட்டு.

கடலும்மலையும்விசும்பும் துழாய்எம்போல்
சுடர்கொளிராப்பகல் துஞ்சாயால்தண்வாடாய்!
அடல்கொள்படையாழி அம்மானைக்காண்பான்நீ
உடலம்நோயுற்றுயோ? ஊழிதோறூழியே.

ஆ.—(கடலும்.) என்னைப்போலே "எங்குற்று யெம்பெருமான்" என்று கடலும் மலையும் விசும்பும் துழாவி இராப்பகல் உறங்குகிறிலை; நீயும் எம்பெருமானுடைய திருவாழியுங் கையுங் காண ஆசைப்பட்டுப் பெருமையாலே காலதத்த்வமெல்லாம் உடலம் நோயுற்றுயாகாதே? தண்வாடாய்! என்கிறுள்.

ஒ.—நாலாம்பாட்டில், ஸஞ்சரிக்கிற காற்றைக் கண்டு நீயும் என்னைப்போலே க்ருஷ்ணனுடைய கையுந் திருவாழியுங் காண ஆசைப்பட்டு நோவுபட்டாயோ?என்கிறுள்.

[கடலும் என்று தொடங்கி] - கடலிலும் மலையிலும் விசும்பிலும் ஓரிடமொழியாமே தேடிக்கொண்டு எம்பெருமானலல்லது செல்லாதே அலமருகிற எங்களைப்போலே. [சுடர்கொளிராப்பகல்] - விஶ்லேஷ வ்யஸநத்தாலே நெருப்பை யுருக்கி வார்த்தாற்போலே யிருக்கிற இராவும் பகலும்; சந்த்ரஸூர்யர்களுடைய இரவும் பகலு மென்றுமாம். [துஞ்சாயால்] - உறங்குகிறிலை. [அடல்கொள் என்று தொடங்கி] - பாரதஸமரத்தில் சக்ரோத்தாரதசையில் விபக்ஷஸேனையடைய மண்ணுண்ணும்படியான திருவாழியைக் கையிலேயுடையனுன ஸர்வேஶ்வரனைக் காண்கைக்காக நெடுங்காலமெல்லாஞ் சென்று ஶரீரத்தோடே முடியும் நோய் நீ கொண்டாயே.

---

யத்திலே தாள் நயந்தது கடல், பிராட்டியவஸ்த்தையை பஜிக்கையாலே தோள்நயந்தார் தாம்; கடலுக்கு ஸ்வாபாவிகதாஸத்வ முண்டிறே. தோள்நயந்த யாம் என்னுதே, "தாள்நயந்தயாம்" என்கிறது - ப்ராஹ்மணர் பிச்சேறினுலும் ஒத்துச்சொல்லுமாபோலே அடிவிடாத தம் வாஸனையாலே யென்று கண்டுகொள்வது. வாசியற்றமையை த்ருஷ்டாந்தத்தாலே உபபாதிக்கிறுர் - பிராட்டியோடு இத்யாதி. அவதாரிகையில் 'ஊமைக்கூறனுய்' என்றதுக்குச் சேர அருளிச்செய்கிறுர் - வாய்விட்டு இத்யாதி. கனைக்கை - அநக்ஷரமாக விரைலகையும் கோஷிக்கையும். விம்மல்பொருமல்- ப்ரீதியில் ஶரீரவிகாரம். "[illegible] ।[illegible]" இதி ஶ்லோகோத்ராநுஸந்தேயः. [illegible]. காம்பீர்யம் கடலுக்கு லக்ஷணமிறே. அந்வயம் கீழ்ச்சொன்னபடியே கண்டுகொள்வது. யத்வா, எல்லே இராப்பகல்முற்ற நீ கண்துயிலாய்; காமுற்ற கையறவோடு நெஞ்சுருகி யேங்குதியால்; கனைகடலே! தீமுற்ற தொடங்கி, உற்றுயோ? வாழி இத்யந்வயோவா. (௩)

ப.—அநந்தரம், 'விரோதிநிரஸநபரிகரத்தை யுடையவனைக் காணவேணும் என்னும் வ்யஸநத்தை நீ உற்றனையோ? என்று ஒருவாடையைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

தண் - (ஸந்நிபதித ஶரீரம்போலே) குளிர்ந்திருக்கிற, வாடாய் - வாடாய்! கடலும் - கடலும், மலையும் - மலையும், விசும்பும் - விசும்பும், துழாய் - தடவிக்கொண்டு, எம்போல் - ("க்ஷீராப்திவாஸோஹம் நயநாப்யாம் நாகஸ்யாப்யுஷே" என்று க்ஷீராப்தியிலும் திருமலையிலும் பரமபதத்திலும் அவனை ஆராய்கிற) எங்களைப்போலே, சுடர்-சந்த்ராதித்ய தேஜஸ்ஸுக்களை, கொள் - நிரூபகமாகவுடைய, இரா-இரவும், பகல் - பகலும், துஞ்சாய் - (ஓரிடத்தில் பர்யவஸித்து) உறங்குகிறிலை; ஆல் - ஆதலால், அடல் - மஹாபாரதயுத்தத்திலே, கொள் - ("ஆயுதமெடேன்" என்று வைத்து) எடுத்த, படையாழி - திருவாழியையுடைய, அம்மானை - ஸர்வேஶ்வரனை, காண்பான் - (அந்த பீஷ்மன் கண்டாற்போலே) காண நினைத்து, நீ - (ஸர்வோபகாரகமான) நீ, ஊழிதோறூழி - கல்பபேதங்கள் பிறந்து நடந்தாலும் காலமுள்ளதனையும் (அவனை ஒருப்பட்டு); உடலம் - ஶரீரமுள்ளதனையும் வ்யாப்தமான, நோய் - வ்யாதியை, உற்றாயோ – கொண்டாயோ? உபகாரஶீலர்க்கும் உடம்பில் வரும் விகாரங்கள் அவனைக் காணப்பெறுமவென்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், ஸஞ்சரிக்கிறதொரு காற்றைக் கண்டு 'நீயும் என்னைப் போலே க்ருஷ்ணனுடைய கையும் திருவாழியும் காண ஆசைப்பட்டு நோவுபட்டாயோ?' என்கிறாள்.

[கடலும் இத்யாதி] - பரப்புடைத்தான கடலோடு, நிர்விவரமான மலையோடு, அபரிச்சிந்நமான ஆகாஶத்தோடு வாசியறத் துழாவி. "காரார் திருமேனி காணுமளவும் போய்" என்று - க்ஷீராப்தியோடு திருமலையோடு பரமபதத்தோடு வாசியறத் தேடுவாருக்குப் போலியா யிருக்கிறபடி. "தத்ர நாபி ஶஶம் பஶ்யே ஸரித்ஸ்வபி |  நிவேஶநேஷ்வபி ஶ்ரீமாந் ஸீதாம் ஸம்யக் ததர்ஶ ஸ:". [எம்போல்] - அவனைப்பிரிந்து தேடித்திரிகிற எங்களைப்போலே. [சுடர்கொள் இராப்பகல்] - விரஹவ்யஸநத்தாலே நெருப்பைச் சொரிந்தாற்போலே யிருக்கிற இராவும் பகலும். சந்த்ரஸூர்யர்களையுடைய வென்னவுமாம். [துஞ்சாயால்] - உறங்குகிறிலை. [தண்வாடாய்] - ஜ்வரஸந்நிபதிதரைப் போலே குளிர்ந்திராநின்றாய்; இனி, ஸத்தையோடே ஜீவித்திருக்கமாட்டாயாகாதே. [அடல்கொள் இத்யாதி] - பாரதஸமரத்திலே சக்ரோத்தாரணதசையிலே பீஷ்மாதிகள் மேலே திருவாழியைக்கொண்டு தொடர்ந்த ஸர்வேஶ்வரனை. "க்ருஷ்ண ஶரண்யம்", "ஶரதாத்ரீ" என்னுமளவன்றிக்கே ஆஶ்ரிதவிஷயத்தில் அஸத்யப்ரதிஜ்ஞனை ஆசைப்பட்டாயாகாதே. "ஸ ஹேஷ்டிஷ்டாத்மா ஜவேந ரதாதவப்லுத்ய ஶோந்த்ர ரோஷான் | தத்யோதநாய ஸ்தோத்ரம் ஶரண்யம்". அடல் கொள் படை - எதிரிகளை மண்ணுண்ணப் பண்ணும் ஆயுதம். [நீ உடலம் நோயுற்றாயோ] - ப்ரத்யுபகாரநிரபேக்ஷமாக உபகரிக்கும் நீ ஶரீராந்தமான நோயைக் கொண்டாயாகாதே. ஸஞ்சாரம் இதுக்கு நியதஸ்வபாவமிறே. [ஊழிதோறூழியே] - காலம்மாறிவரச்செய்தேயும் நோய் ஏகரூபமாய்ச் செல்லுகை.

ஈடு.—நாலாம்பாட்டு. காற்றென்று ஒருவ்யாபகதத்த்வமாய், அதுதான் அபிமத விரஹவ்யஸநத்தாலே இருந்தவிடத்தி லிருக்கமாட்டாதே, மடலூருவாரைப்போலே உடம்பிலே புழுதியை யேறிட்டுக்கொண்டு வடிவுதெரியாதபடியாய், ஜ்வரஸந்நிபதித ரைப்போலே குளிர்ந்திருந்தது ; அத்தைப்பார்த்து, 'நீயும் நான் பட்டது பட்டாயாகாதே' என்கிறாள்.

[கடலும் மலையும் விசும்பும் துழாய்] - "காரார்திருமேனிகாணுமளவும்போய்" என்று க்ஷீராப்தியோடு திருமலையோடு பரமபதத்தோடு வாசியறத் தேடுவார்க்குப் போலியா யிருக்கிறபடி. ஊராயவெல்லாமொழியாமே தேடுவார்க்குப் போலியா யிருக்கிறபடி. "தௌவநாநிகிரீம்ஶ்சைவ ஸரிதஶ்சஸராம்ஸிச | நிகிலேநவிசிந்வாநௌ ஸீதாம் தஶரதாத்மஜௌ" (தௌவநாநிகிரீம்ஶ்சைவ ஸரிதஶ்சஸராம்ஸிச | நிகிலேநவிசிந்வாநௌ ஸீதாம் தஶரதாத்மஜௌ) என்று தேடித்திரிந்தவர்களுக்குப் போலியாயிராநின்றது. "ஸீதாம்" (ஸீதாம்)-"தேடிக்கண்டிலோம்"என்று ஆறியிருக்கலாம் விஷயமன்று. "தஶரதாத்மஜௌ" (தஶரதாத்மஜௌ) - தேடப்பிறந்தவர்களல்லர் ; அவர்கள் ஜீவிக்கை யென்று ஒரு பொருளுண்டோ? இத்தால் - சென்றுஅற்ற தென்றபடி. [கடல் இத்யாதி] - அபரிச்சிந்நமான கடல், நிர்விவரமான மலை, அவகாசப்ரதாநம்பண்ணுகிற ஆகாசம்; அன்றியே அச்சமான ஆகாசம். [எம்போல் சுடர்கோளிராப்பகல் துஞ்சாயால் தண்வாடாய்] - ஜ்வரஸந்நிபதிதரைப்போலே சென்றற்றுயாகாதே என்னைப்போலே. சுடரென்று - ஆதித்யன். சுடரைக்

---

நாலாம்பாட்டு - கடலும் இத்யாதி. வ்யாபகதத்த்வம் - வ்யாபிக்கிற தத்த்வம். அதவே, இருந்தவிடத்திலிருக்கமாட்டாதே யென்றபடி. 'துழாய்' என்றத்தைப்பற்ற, இருந்தவிடத்தில் இத்யாதி. ஜ்வரஸந்நிபதிதரைப்போலே யென்றது - உள்ளில் வெதுப்பும், புறம்பில் சைத்யமும் தோன்றுகைக்காக. குளிர்ந்திருந்தது - இவளுக்கு இப்படியுந் தோற்றிற் றென்றபடி.

'எம்போல்' என்னலாம்படி இவர் தேடினரோ? என்ன, காரார் இத்யாதி. சிறியதிருமடல். மேகம்போன்ற அழகிய திருமேனியைக் காணுமளவும் போ யென்கை. தேடுவார்க்குப் போலியாயிருக்கிறபடி யென்றது - 'எம்போல்' என்றதுக்கு அர்த்தம். தேடுவார் - தாமும், திருமங்கையாழ்வாரும். 'காரார்' இத்யாதியிலே க்ஷீராப்தியும் பரமபதமுஞ் சொல்லவில்லையே யென்ன-ஊராய இத்யாதி. 'ஊராயவெல்லாம்' என்கையாலே-க்ஷீராப்தியும் பரமபதமும் விவக்ஷிதமென்றபடி. இவ்வளவன்றிக்கே, பிராட்டியைத் தேடித்திரிந்தவர்களுக்கும் போலியா யிருக்கிற தென்கிறார் - "தௌவநாநி" இத்யாதி. ஆரண்யகாண்டே ஏகஷஷ்டிதமே. "நிகிலேந" என்கையாலே - கடல் ஆகாஶம் உட்பட எங்கும் விஶ்லேஷப்ரயுக்தமயக்கத்தாலே ஸுஸாயுஜ்ய என்று அறியாதே தேடத் தொடங்கினர்க ளென்றபடி. தேடிக்கண்டிலோம் இத்யாதி - அயோநிஜத்வத்தால் வந்த வைலக்ஷண்யத்தையுடையளாகையாலே ஆறியிருக்கப்போகா தென்றபடி. தஶரதாத்மஜௌ என்று ராஜபுத்ரர்களாகையால் வந்த ஸௌகுமார்யஞ் சொன்னபடி. தேடப்பிறந்தவர்களல்லர் என்றது - "ஹேதாதவஸாராஹேதாவாவிகஜ்ஞா|ராஜாதஶரதோநாம் ஶ்ரீமாந் ஸத்யபராக்ரம:" என்றத்தைப் பற்ற. சென்றுஅற்றது - ஜீவிக்க ஶக்யமன்று. "ஸுஹ்ருஸ்வா ரோஹவநஸ்யஜயேஜ்நாகஸ்யவ்யஷே" என்கிற ஶ்ருதியை - "கடலும்" இத்யாதிக்கு ஸம்வாதமாக அருளிச்செய்வர். துழாய் எம்போல் - தேடுகிறஎங்களைப்போலே. குளிர்த்தியைச் சொல்லுகிறவளுடைய ஹார்த்தஹாவம் - ஜ்வரஸந்நிபதித இத்யாதி. சென்றற்றுயாகாதே - முடியுமளவாணயன்றே. "சுடர்கொள்" என்று ராத்ரிக்கு விஶேஷணமானபோது, ஆதித்யனை க்ரஸித்த இர

கோள்ளப்பட்ட தென்றது - ஆதித்யன் அஸ்தமித்த இரவோடு, சுடரையுடைத்தான பகலோடு வாசியற உறங்குகிறிலே; குளிர்ந்த வாடாய்! [அடல்கோள்இத்யாதி] - அடலென்று மிடுக்கு. எதிரிகள் மிடுக்கைக்கோள்ளுகை யென்னுதல், தான் மிடுக்கையுடைத்தாயிருக்குமென்னுதல். "ஏதத் வ்ரதம் மம" (ஏதத்வ்ரதம்மம) என்றவளவன்றிக்கே, ஆஶ்ரிதார்த்தமாக அஸத்யப்ரதிஜ்ஞனவனோரத்தளவும் அகப்பட்டாயாகாதே. பாரதஸமரத்திலே சக்ரோத்தாரணத்தினன்று அர்ஜுநன் இளைத்துக் கைவாங்கினவாறே;பண்ணின ப்ரதிஜ்ஞையை அழித்துத் திருவாழியைக்கோண்டு ஸ்ரீபீஷ்மரைத் தோடர்ந்தானிறே. "ஏஹ்யேஹி" (ஏஹ்யேஹி) - கேட்டோடுகிறவன் பிற்காலித்து நின்று 'எங்களம்மை நாயனுர் மாறிமாறியிடுகிற அடி யிருக்கிற அழகேன்?' என்றுன். "புல்லாம்புஜபத்ரநேத்ர" (புல்லாம்புஜபத்ரநேத்ர) - என்றும் ஆணைமறுத்தால் சேதமேன்? சீறிச்சிவந்த கண்ணழகைக் காணப் பேற்றுல். "ப்ரஸஹ்ய மாம் பாதய" (ப்ரஸஹ்யமாம்பாதய) - 'ஆயுதமேடேன்' என்ற நீர் ஆயுதமேடுத்தாலும் அடியேன் கையில் ஆயுத மிருக்கில் தோலேன்;ஆயுதத்தைப் போகடச்சோல்லித் தலேயறுத்தருளீர். "லோகநாத" (லோகநாத) - உமக்கும் வீரத்துக்கும் தோலேன்; முதன்மைக்குத் தோற்பன். [அடல்கோள்படையாழி] – மிடுக்கையுடைத்

---

வென்றபடி. கோள்கை - க்ரஸிக்கை. பகலுக்கு விஶேஷணமானபோது, கோள்கை - உடைத்தாகை. மேலுக்கெல்லாம் ஹாவம் - "ஏதத் வ்ரதம் மம" இத்யாதி. யுத்தகாண்டேஅஷ்டாதஶே. "ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே । அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம." அதாவது - ஏதத் வ்ரதம் மம என்று ஆஶ்ரிதரக்ஷணத்தளவன்றிக்கே, ஆஶ்ரிதரக்ஷணத்துக்காக அஸத்யப்ரதிஜ்ஞனவனுடைய ஓரத்தளவும் அகப்பட்டாயாகாதே யென்றபடி. ஓரம் என்றதுக்கு த்வங்யர்த்தம் - திருவாழியின்முனை; ஸஹஜார்த்தம் - பக்ஷபாதம். ஆஶ்ரிதார்த்தமாக அஸத்யப்ரதிஜ்ஞனை இட முண்டோ? என்ன, பாரத இத்யாதி. பீஷ்மபர்வணி - "ஏஹ்யேஹி புல்லாம்புஜபத்ரநேத்ர நமோஸ்து தே தேவவராப்ரமேய । ப்ரஸஹ்ய மாம் பாதய லோகநாத ரதோத்தமாத் பூதஶரண்ய ஸங்க்யே". 'பண்ணின ப்ரதிஜ்ஞையை யழித்து' என்றவிடத்திலே - "ஸ்வநிகமமபஹாய மத்ப்ரதிஜ்ஞாம் ருதமதிகர்த்துமவப்லுதோ ரதஸ்த:" இத்யாத்யநுஸந்தேயம். பீஷ்மரைத் தொடர்ந்தமைக்கு ஸூசகப்ரமாணம் - ஏஹ்யேஹி இத்யாதி. ஏஹ்யேஹிஎன்கிற வீப்ஸைக்கு ஹாவம் - கேட்டோடுகிறவன் இத்யாதி. அஸக்ருதாவ்ருத்தி ஆதராதிஶயகார்யமிறே யென்றபடி. நடையழகிலே ஈடுபட்டுச் சொன்னபடி. கெட்டோடுகிறவன் -பீஷ்மன். அம்மைநாயனுர் - தாயும் தமப்பனுமானவர். ரதத்தினின்றும் அவப்லுதனுய்க்கிட்டியிருக்கச்செய்தே 'வாரீர்வாரீர்' என்னும்போது, பத்தெட்டடி ஒடிகின்று சொல்லுகிறுனுகவேணுமென்றபடி. ஆணைமறுத்தால் சேதமேன்? என்றது - சேஷியுடைய 'ஆயுதமெடேன்' என்ற ப்ரதிஜ்ஞையை சேஷபூதன் பரிபாலிக்க ப்ராப்தமாயிருக்க, அதுசெய்யாதே ஆயுதமெடுக்கும்படி பண்ணினுலும் சேதமென்? என்றபடி. லோகநாத என்று - 'முதன்மைக்குத் தோற்பன்' என்கையாலே - 'வீரத்துக்குத் தோலேன்' என்றது ஸித்தமென்கை. கீழே, கெட்டோடுகிறவனென்றது - வாஸ்தவமான ஆகாரத்தைப் பற்ற; இங்கு, தோலேனென்கிறது - ஆஶ்ரிதஜயம் தன்னதாக நினைத்திருக்கும் பகவத்குணுதிக்யத்தைப் பற்ற. புல்லாம்புஜபத்ரநேத்ர, ஏஹ்யேஹி; பூதஶரண்ய, ஸங்க்யே ரதோத்தமாத் ப்ரஸஹ்ய பாதய லோகநாத தேவவர, அப்ரமேய தே நமோஸ்து இத்யந்வய:. பாதய - விழவிடு. த்விதீயார்த்தவிவரணம் - மிடுக்கை

தான படையாகிற திருவாழி. [ஆழியம்மானை]-கையிலே திருவாழியையுடைய ஸர்வேச்வரனையாகாதே நீயுங் காணஆசைப்பட்டது? [நீயுடலம்நோயுற்றுயோ] – ப்ரத்யுபகார நிரபேக்ஷமாக உபகரிக்கும் நீ, ஸர்வரக்ஷகமான சரீரத்திலே நோவுவரும்படி பட்டாயாகாதே என்கிருள். ஸஞ்சாரம் இதுக்கு நியதஸ்வபாவமிறே. [ஊழிதோறூழியே] - கல்பந்தோறும் கல்பந்தோறும்.நோவுபடாநிற்கச்செய்தே தவிராதபடி சரீராந்தமான நோவுகொண்டாயாகாதே. காலம் மாறிவரச்செய்தேயும் நோவு மாருதே ஏகரூபமாய்ச் செல்லுகிறபடி. (ச)

## ஐந்தாம்பாட்டு.

ஊழிதோறூழி உலகுக்குநீர்கொண்டு
தோழியரும்யாமும்போல் நீராய்நெகிழ்கின்ற
வாழியவானமே! நீயும் மதுசூதன்
பாழிமையிற் பட்டு அவன்கண்பாசத்தால் நைவாயே.

ஆ.—(ஊழிதோறூழி.) லோகமெல்லாம் நிறையும்படி இக்காலமெல்லாம் நின்று நீராயுருகுகிற வாழிய வானமே! நீயும் எங்களைப்போலே எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களிலே அகப்பட்டு அவன்பக்கலுள்ள ஸங்கத்தாலே இப்படி நைந்தாயாகாதே யென்கிருள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், நீராய் இற்று விழுகிற மேகத்தைக் கண்டு 'என்னைப்போலே எம்பெருமானுடைய குணசேஷ்டிதாதிகளிலே அகப்பட்டு அத்தாலே நோவுபடுகிருய்' என்று சோகிக்கிருள்.

[ஊழி என்று தொடங்கி] - கல்பந்தோறும் கல்பந்தோறும் லோகமெல்லாம் வெள்ளமிட வேண்டும் நீரைக்கொண்டு தோழிமாரைப் போலேயும் எங்களைப்போலேயும் நீராய் நெகிழாநின்றுள்ள வானமே! உன்னுடைய அவஸாதம் நீங்கி வாழ்ந்திடுக; [நீயும் என்று தொடங்கி] - எங்களைப்போலே நீயும் ஆஸ்ரிதவிரோதிகளைப் போக்கும் ஸ்வபாவனைவனுடைய வீர்யகுணத்திலே அகப்பட்டு அவன்பக்கலுண்டான நசையாலே நோவுபடுகிருயே; பாழிமை யென்று - இடமுடைமையுமாம்.

ப.—அநந்தரம், நீயும்! அவன் சக்தியோகத்திலே அகப்பட்டு சிதிலமாகிருயோ? என்று ஒரு மேகத்தைக் கண்டு உரைக்கிருள்.

---

இத்யாதி. ஸர்வரக்ஷகமான நீ நோயுற்றுயோ? என்ன அமைந்திருக்க, 'உடலம்' என்கையாலே - அதினுடைய உத்கர்ஷந் தோற்றுகிறது. நோயுற்றமையை இவளறிந்தபடியென்? என்ன, ஸஞ்சாரம் இத்யாதி. அதாவது - நியதமாக ஸஞ்சரிக்கையாலே, 'நோவுகண்டது' என்றிருக்கிருளென்றபடி. நியதஸ்வபாவமிறே - இது அபிமதவிஶ்லேஷ ப்ரயுக்தமான நோயாலே வந்ததென்று இருக்கிருள் என்று சேஷம்.யாவச்சரீரஹாவியான நோயென்று ஹாவாந்தரம்-நோவுபடாநிற்க இத்யாதி. ஊழி என்னுதே, ஊழிதோறூழி' என்றதுக்கு ஹாவம்-காலம்மாறி இத்யாதி; "ஶோகஶுகிஷு காலெஷு" இத்யாதி. 'எம்போல்' என்றது - கீழுக்கும் மேலுக்கும் சேஷம். தண்வாடாய், எம்போற் கடலும் மலையும் விசும்பும் துழாய்; எம்போற் சுடர்கொளிராப்பகல் துஞ்சாயால்; அடல்கொளித்யாரப்ய காண்பான் நீ ஊழிதோறூழி உடலம்நோயுற்றுயோ? இத்யந்வய:. (ச)

தோழியரும்-(ஸமாநதுꣳகைகளான) தோழிமாரும், யாமும்போல் - (துꣳகோத்தரைகளான) நாங்களும்போலே, உலகுக்கு-லோகம் நிரம்பவேண்டும், நீர்கொண்டு-நீரைக் கொண்டு, ஊழிதோறு ஊழி - காலமுள்ளதனையும், நீராய் - ஜலமயமாய், நெகிழ்கின்ற- இற்றுவிழுகிற, வானமே - மேகமே! நீயும் - (உதாரஶீலமான) நீயும், மதுசூதன்-மதுமர்த்தநனுடைய, பாழிமையில் - பெருமிடுக்கிலே, பட்டு - அகப்பட்டு, அவன்கண்-அவன்பக்கல், பாசத்தால் – ஸ்நேஹத்தாலே, நைவாயே-சிதிலமாகிறாயே. வாழிய-இந்த சைதில்யம் தீர்ந்து வாழ்வாயாக. உதாரஸ்வபாவர்க்கு ஶைதில்யம் பகவத்விரஹஜநித மென்கை.

இ.—அஞ்சாம்பாட்டில், நீராய் இற்று விழுகிற மேகத்தைக் கண்டு, 'அவன் வீரசரிதத்தே நீயும் அகப்பட்டா யாகாதே' என்கிறாள்.

[ஊழிதோறூழி]-[உலகுக்கு நீர்கொண்டு ஊழிதோறூழி நீராய் நெகிழ்கின்ற வானமே] – லோகமெல்லாம் வெள்ளமிட வேண்டும் நீரைக் கொண்டு கல்பந்தோறும் நீராய் உருகாநின்றாய். வானமென்று - ஆகாஶத்தைச் சொல்லவுமாம். அதிஸூக்ஷ்மமான ஆகாஶம், மேகஶகலமாய்ச் சிதறி நீராயுருகி விழுகிற தென்று நினைக்கிறா ளென்னவுமாம். [தோழியரும் யாமும்போல்] - உனக்கு நல்ல நிதர்ஶநம். இவளுக்கும் அவ்வருகாயிற்று, தோழிமாருடைய அவஸாதம். [வாழிய] - ஜகத்துக்கு உபகாரமாயிருக்கிற உன்னுடைய கண்ணநீரும் நீங்கி வாழ்ந்திடுக. [மதுசூதன் இத்யாதி] - விரோதிகளை ஸங்கல்பத்தாலன்றிக்கே கைதொட்டழித்தவனுடைய வீரகுணத்திலே அகப்பட்டு. பாழிமை-பலம்; இடமுடைமை யென்னவுமாம்; ஏற்றமென்னவுமாம். [அவன்கண் பாசத்தால்] - அவன்பக்கல் நசையாலே. விஷயாநுகூலமாயிறே நசை இருப்பது; நசையுள்ளளவும் வ்யதிரேகத்தில் நோவுமுண்டாயிறே இருப்பது. [நைவாயே] – பக்த்யேகலப்தி ப்ரவிருத்தியே; நைவே பலம்; ஜீவிக்கவும் பெறாதே முடியவும் பெறாதே ஶிதிலமாகிறாயே!

ஈடு.—அஞ்சாம்பாட்டு. அவ்வளவிலே ஒருமேகமானது கரைந்து நீராய் விழப்புக்கது;'நீயும் அவனுடைய விரோதிநிரஸநசீலதையிலே அகப்பட்டாயாகாதே?' என்கிறாள்.

[ஊழிதோறூழி - நீராய்நெகிழ்கின்ற] - கல்பந்தோறும் கல்பந்தோறும் நீராய் நெகிழ்கின்ற. [உலகுக்கு நீர்கொண்டு] - லோகமடங்க வெள்ளமிடவேண்டும்படி நீரை முகந்துகொண்டு. உனக்கு நல்ல நிதர்ஶநமுண்டு. [தோழியரும்யாமும்போல்] - என்இழவுக்கு எம்மின்முன் அவனுக்கு மாயுந் தோழிமாரையும் என்னையும் போலே. [நீராய்நெ

---

அஞ்சாம்பாட்டு - ஊழிதோறு இத்யாதி. 'நீராய்நெகிழ்கின்ற மதுசூதன் பாழிமையிற்பட்டு' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - அவ்வளவிலே இத்யாதி.

உலகுக்குநீர்கொண்டு என்றது - லோகரக்ஷகமான உனக்கும் நோவுவந்ததென்று ஸ்வஹாவகதநமித்தனை; அந்யதாவாக ப்ரமிக்கைக்கு உடலன்று. ஊழிதோறூழி நீராய்நெகிழ்கின்ற என்றது - அந்வயப்ரதர்ஶநம். யதாக்ரமமானால், 'ஊழிதோறூழி' இத்யாதியாலே - லோகோபகாரகத்வமும், 'தோழியரும்' இத்யாதியாலே ஶைதில்யமுந் தோன்றுகிறது; இவை தம்மில்சேரும்படி யெங்ஙனே? என்ன, ஊழிதோறூழி யென்று அந்வயிக்கிறது. 'உலகுக்கு' என்கிற இது - தாதர்த்த்யே சதுர்த்தியன்று, ஸம்பந்தமாத்ரத்திலே ஷஷ்ட்டி யென்கிறார் - லோகமடங்க என்று. முகந்துகொண்டு - ஒரு ஸமுத்ரத்தில்நின்றும் முகந்துகொண்டு வந்தாற்போலே யிருக்கிற தென்கிறாள் ஜலஸம்ருத்தியைப் பற்றவென்று தாத்பர்யம். தங்கள் கண்ணநீர் பாயலுக்குப் பாய்ச்சலாமோ பாதி, இந்நீருமென் றிருக்கிறாள். மேலுக்கு அவதாரிகை - உனக்கு இத்யாதி.தோழியரை முன்னே நிர்த்தேஶித்ததின் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் - என்இழவுக்கு இத்யாதி. மாயும் - ஶிதில

கிழ்கின்ற] - கரைந்து நீராய்விழுகிற. [வாழிய] - ஜகத்துக்கு உபகாரகமாயிருக்கிற நீ உன்னுடைய கண்ணநீர் நீங்கி வாழ்ந்திடுக. [வானமே] - மேகத்தைச் சொல்லுதல்; ஆகாசத்தைச் சொல்லுதல். அதிஸூக்ஷ்மமான ஆகாசம் நீரை முகந்துகொண்டு சிதறி உருகி நீராய் விழுகிறதென்று நினைக்கிறாள். வானமென்று மேகத்துக்குப் பேர்: "வான்கலந்தவண்ணன்" என்றதிறே; "வானம்வழங்காதெனின்" என்றானிறே தமிழனும். [நீயும்]–லோகோபகாரகமாக வடிவுபடைத்த நீயும். [மதுசூதன்இத்யாதி] - விரோதிநிரஸநசீலனானவனுடைய வீரகுணத்திலே அகப்பட்டு, அவன்பக்கலுண்டான நசையாலே ஜீவிக்கவும் மாட்டாதே முடியவும் மாட்டாதே நோவுபடுகிறாயாகாதே. பாழிமை - பலம்; இடமுடைமை யென்றுமாம் [அவன்கண்பாசத்தால்] - அவன்பக்கல் நசையாலே. விஷயாநுகூலமாயிறே நசை இருப்பது; எவ்வளவு நசையுண்டு, அவ்வளவும் நைவுஉண்டாமிறே வ்யதிரேகத்தில். [நைவாயே] - நைவே பலம். (ரு)

---

மாகாநின்றாள். கரைந்து - நெகிழ்கின்றதின் தாத்பர்யம். நீராய்நெகிழ்கின்றவிதி-ஸூக்ஷ்மாதி ஸூக்ஷ்மோகாஶவஶக்ஷேவேவக்ஷேஷவிஸரோ நடி. ஜகத்துக்கு உபகாரகமா யென்றதுக்கு - 'உலகுக்குநீர்கொண்டு' என்றதிலே நோக்கு. உபகாரமாயிருக்கிற மேகத்தைச் சொல்லும்போது, ஆதபத்ராணத்தாலே; ஆகாஶத்தைச் சொல்லும்போது, அவகாஶப்ரதாநத்தாலே. ஆகாஶத்துக்கு வர்ஷம் நியதஸ்வபாவமாக இல்லாமையாலே, நீராய்விழக்கூடுமோ? என்ன, அதிஸூக்ஷ்மம் இத்யாதி. பலாஶபுஷ்பவ்ருக்ஷங்களில் தாவப்ரமா ப்ரமங்கள்போலே, இங்கும் ஏககாலத்திலே, மேகத்தை ஆகாஶமாகவும், வர்ஷத்தைத் துளிக்கிறதாகவும் ப்ரமிக்கக்கூடு மென்று கருத்து. 'வானம்' என்று - மேகத்தைச் சொல்லுமோ? என்ன, வான்கலந்தவண்ணன் இத்யாதி. இரண்டாந் திருவந்தாதி-எடு. மேகத்தோடு ஸத்ருஶமாய்ச் சேர்ந்த வடிவையுடையவன். 'பெருகுமதவேழம்' இத்யாதி. ப்ரயோகாந்தரம் - வானம் இத்யாதி. "தானந்தவமிரண்டுந்தங்காவியனுலகம், வானம்வழங்காதெனின்" என்று குறள். 'மதுசூதன்பாழிமை' என்கையாலே - வீரகுணமென்று பலிக்கிறது. 'நைவாய்' இத்யத்ர வர்த்தமானார்த்தமாவது - ஜீவிக்கவும்மாட்டாதே இத்யாதி. பலம் - காயபலம். இடமுடைமை-ரக்ஷகத்வப்பாரிப்பு. யத்வா, இடமுடைமையென்றது - 'மநஸ்வீ' என்கிறபடியே அவன் மநஸ்ஸில் இடமுடைமை யென்றபடி. க்லேஶசரமாவதிம் ஹேதுகர்ப்பபதாப்யாம் தர்ஶயதி - அவன்கண் பாசத்தால் இத்யாதி. 'மதுசூதன்' என்றத்தைக் கடாக்ஷித்து ஹாவம்-விஷயாநுகூலம் இத்யாதி. 'பாசத்தால்நைவாயே' என்று மேலேகூட்டித் தாத்பர்யம் - எவ்வளவு இத்யாதி; ஏவகாரார்த்தம் - நைவேபலம் என்று. யத்வா, நைவேபலம் - வர்த்தமாநநிர்த்தேஶதாத்பர்யம். ஸம்ஶ்லேஷவிநாஶங்களில் அந்யதரத்தைப் பெறாமல் இதுவே பலமாய்விட்டதென்கிறார். வானமே, உலகுக்கு நீர் கொண்டு, தோழியரும் யாமும்போ லூழிதோறூழி நீராய் நெகிழ்கின்ற நீயும் மதுசூதன்பாழிமையிற்பட்டு அவன்கண்பாசத்தால் நைவாயே; வாழிய இத்யந்வய:. தோழியரும் யாமும்போ லூழிதோறூழி நீராய்நெகிழ்கின்ற நீயுமிதி — ஸுநந - வ்யதிகஸ்வ்யாஸநாப்ஹவாதிவஸவாராகஸஶவாகாயதிவராடியொவிஸஷீதிஸூவ்யேத. "க்ஷணாணவ:கஸ்கொப்ய:" 'பலபலவூழிகளாயிடும்' இத்யுக்திவ்யாயாதிக்ஷம்வா "ஷேவஸ்ரீகஸ்ஸஜவிடியிதாயாடிவெதூவஸ்வஸூநாம் ஸ்ரீவக்ஷாக்ஷம்வயஜிவஹவாநுய்யாயதிவெஜவெஷ: । ஸுத்யாக்ஷணாவவஹ்யடியொவூஜியொவாஷ்யாராஷ்ஹஸ்யதாஷ்யதா விஸ்யஜவிவநூ:வடிவஸதவஸஜ:" ஸ்ரீமந் - 'மேகங்களோவுரையீர் திருமால்திருமேனியொக்கும் யோகங்களுங்களுக்கெவ்வாறுபெற்றீர்' என்கிறான். "தவேவிஷயிதஃ" இப்போது அவனுக்குப் போலியான வடிவைக் காட்டிற்று எங்களிடத்தில் ஆதரத்தாலே. "விஸ்யஜவி - ஸுதவாவநடிடிவஷஸஷ்வ்யஸம்ஜ:". உங்களிழவுபார்த்திருக்குந்தனை பலம் எனக்கில்லாமையாலே அவன்பக்கல் உங்களுக்கு உண்டான இந்த ப்ரக்ருஷ்டமான ஆஸக்தி எனக்கு துக்கத்தை உண்டாக்காநிற்கிறது. (ரு)

# ஆறும்பாட்டு.

**நைவாயஎம்மேபோல் நாள்மதியே ! நீயிந்நாள்**
**மைவானிருளகற்றாய் மாழாந்துதேம்புதியால்**
**ஐவாயரவணைமேல் ஆழிப்பெருமானார்**
**மேய்வாசகங்கேட்டு உன்மெய்ந்நீர்மைதோற்றாயே.**

**ஆ.**—(நைவாய.) நாள்மதியே! நீ இந்நாள் வலிதான இருளை அகற்றுகிறிலை; மழுங்கித் தேயாநின்றாய்; நைவுந்தானுயிருந்த என்னைப்போலே நீயும், "பேதைநின்னைப்பிரியேன்" என்றும், "ந த்யஜேயம்" என்றும், "மாஶுச:" என்றும் எம்பெருமான் அருளிச்செய்த வார்த்தையைக் கேட்டு, 'திருவநந்தாழ்வான் தொடக்கமாகவுள்ள திவ்யபுருஷர்களோடே பழகி வர்த்திக்கிற இவன் மெய்யல்லது சொல்லான்' என்றுகொண்டு அவ்வார்த்தையை விஶ்வஸித்து அகப்பட்டாயாகாதே யென்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், கலாமாத்ரமாம்படி தேய்ந்த சந்த்ரனைக்குறித்து, 'நீயும் எம்பெருமானுடைய அஸத்யவசநத்தை விஶ்வஸித்து நான்பட்டது பட்டாயாகாதே' என்கிறாள்.

[நைவென்று தொடங்கி] - விரஹவ்யஸநத்தாலே நைகிற எங்களைப்போலே பண்டு பூர்ணனான சந்த்ரனே! இப்போது மைபோலேயிருக்கிற இருளை ஆகாஶத்தினின்றும் போக்குகிறிலை; ஒளிமழுங்கித் தேயாநின்றாய். மைவானிருள் - மிக்க இருளென்றுமாம். [ஐவாயரவணை என்று மேலுக்கு] - பல்வார்த்தை சொல்லுகைக்கு ஐந்துவாயையுடைய திருவநந்தாழ்வானோடும், ஜயத்ரதவதத்திலே பகலை இரவாக்கின பொய்க்குப் பெருநிலைநின்ற திருவாழியாழ்வானோடும் பழகி, அவர்களும் தன்பக்கலிலே பொய்யோத வேண்டும்படி பெரியனான எம்பெருமான் "ந த்யஜேயம்" என்ற பெரும்பொய்யை மெய்யாகக் கருதி உன்னுடைய உடம்பில் அழகிய ஒளியை இழந்தாயே.

ப.—அநந்தரம், 'எங்களைப்போலே அவன் ஸத்யவாதித்வத்திலே நீ அகப்பட்டாயோ?' என்று க்ஷீணனான சந்த்ரனைக்குறித்துச் சொல்லுகிறாள்.

நைவுஆய - நைகையே ஸ்வபாவமான, எம்மேபோல் - எங்களைப்போலே, நாள்மதியே - கலாமாத்ரமான சந்த்ரனே! நீ - (தேஜோரூபனான) நீ, இந்நாள் - இக்காலத்திலே, மை - மைபோலேயிருக்கிற, வான் - ஆகாசத்தில், இருள் - இருளை, அகற்றாய்-போக்குகிறிலை: மாழாந்து - மழுங்கி, தேம்புதி - குறையாநின்றாயே: ஆல் - ஆதலால், ஐவாய் - பொய்ம்மைக்குப் பல முகமும் இரண்டுநாவுமுடைய, அரவணைமேல் - திருவரவணைமேற்கொண்டு, ஆழி - (பொய்க்குப் பெருநிலைநிற்கும்) திருவாழியை யுடையராய், பெருமானார் - (இவர்களைப் பொய்கற்பிக்கும்) பெருமையை யுடையவருடைய, மெய் - பெரும்பொய்யான, வாசகம் — வார்த்தையை, கேட்டு - கேட்டு, உன்மெய் - உன்வடிவில், நீர்மை - உஜ்ஜ்வலஸ்வபாவத்தை, தோற்றாயே - இழந்தாயோ? நாள்மதி - புதுமதி. மைவானிருள் - கறுத்த பெரிய இருளென்றுமாம். மாழாந்து - மழுங்கி. இத்தால் - உஜ்ஜ்வலஸ்வபாவருடைய ஒளிமழுக்கம் அவனுடைய உக்திவையர்த்த்யமூலமான விளம்பமென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், கலாமாத்ரமான சந்த்ரனைக் கண்டு, 'நீயும் அவன் அஸத்யவசநத்தை விஸ்வஸித்து நான்பட்டது பட்டாயாகாதே' என்கிறாள்.

[நைவாய எம்மேபோல்] – விரஹவ்யஸநத்தாலே நைகிற எங்களைப்போலே; நைவுதான் ஒருவடிவுகொண்டாற்போலே யென்றுமாம். தர்ம தர்மி விபாகமற நைகிற எங்களைப்போலே. ''ஸவஜ்ஞாநேநவஜ்ஞாராம் விவஜ்ஞாஜிவவஜ்ஞிநீ'', ''ஸுவ்யக்தெவாஜிவ வாரு வெவாம் வாமஸாவ்யக்ஷூஜிவ ஹெஜெவாழ| க்ஷதவ்யாரூஸாஜிவவாணமெ வாம் வாயாவ்யூஹஹ்ராஜிவஜெவெவாழ''. [நாள்மதியே] - நாள்நிரம்பின மதியே! பண்டு பூர்ணனாகக் கண்டிருக்குமிறே. 'நாட்பூ' என்னுமாபோலே, இளமதியே யென்றுமாம். [நீ] - தர்ஶநீயனான நீ. [இந்நாள்] - இப்போது. [மைவானிருளகற்றாய்] - ஆகாஶத்திற் செறிந்த இருளை அகற்றுகிறிலை. அணித்தான ஆகாஶத்திலிருளையும் போக்குகிறிலை. ஶத்ருக்கள், எதிரி எளியனானால் கூடநின்று உறுமுமாபோலே மேலிடாநின்றது ஸஹாவஸ்த்தாநமும் உண்டாகாநின்றதீ! மிக்க இருளென்றுமாம். [மாழாந்து தேம்பு தியால்] - ஒளிமழுங்கித் தேயாநின்றாய். [ஐவாய்இத்யாதி] - பலவார்த்தை சொல்லுகைக்குப் பலவாயையுடைய திருவநந்தாழ்வானோடேயிறே பழக்கம். ஜயத்ரதவதத்தில் பகலை இரவாக்கின பொய்க்குப் பெருநிலைநின்ற திருவாழியாழ்வானோடேயிறே பழக்கம். பேறு அவர்களாலே யானால் இழவில் இன்னாதாக ப்ராப்தியுண்டாகை. [பெருமானார்] - அவர்களும் தம்பக்கலிலே பொய்யோதவேண்டும்படி பொய்யாற் பெரியவர். [மெய்வாசகங் கேட்டு]-''பேதை நின்னைப்பிரியேன்'' என்று ஏகாந்தத்திலும், ''வநதஞ்சதஜெ'' என்று ஓலக்கத்திலுஞ் சொன்ன பெரும்பொய். உக்திமாத்ரமேயாய், அர்த்தக்ரியாகாரி யன்றிக்கே யொழிகை. மெய் என்று - விபரீதலக்ஷணை. [உன்மெய்ந்நீர்மை தோற்றாயே] - உன் உடம்பி லொளியை இழந்தா யாகாதே. தர்ஶநீயமாய்த் தண்ணளியேயாய் லோகோபகாரகமான உன்னுடம்பிலொளியையாகாதே இழந்தது.

ஈடு.—ஆறும்பாட்டு. மேகத்தினருகே கலாமாத்ரமான சந்த்ரன் தோற்றினான்; அவனைப் பார்த்து, 'உன்வடிவில் எழிலிழந்தாயாகாதே' என்கிறாள்.

[நைவாயஎம்மேபோல்] - நைவையுடைய எங்களைப்போலே யென்னுதல், நைவுதான் ஒருவடிவுகொண்டாற்போலே யென்னுதல். ''ஸவஜ்ஞாம்'' (ஸபங்காம்) - பூமியில் நின்றும் தோற்றினபோதுபோலே யிருந்தாள். ''அநஜ்ஞாராம்'' (அநலங்காராம்) -

---

ஆறும்பாட்டு - நைவாய இத்யாதி. மேகத்தைச்சொன்ன அநந்தரம் சந்த்ரனைச் சொல்லுகிறதுக்கு ப்ரஸக்தியென்? என்ன, மேகத்தினருகே இத்யாதி. மேகஸமூஹத்துக் கருகே நிற்கையாலே, பூர்ணனாகிலும் அர்த்தம் ப்ரகாசிக்கையாலே-கலாமாத்ர மென்கிறுராதல்; ப்ரதமையில் சந்த்ரனாதல்.

முந்தின அர்த்தத்துக்கு ஶப்தநிர்வாஹமாவது - 'நைவு' என்றது 'நை' என்று கடைக்குறைத்தலாய், 'வாய்' என்று - இடமாய், நைவுக்கிடமாய். அதாவது - நைவையுடைத்தான வென்றபடி. அன்றியே, 'நைவு ஆய' என்று பதபேதம்பண்ணி, ஆய - உண்டான; நைவுதான் ஒரு வடிவுகொண்டிருக்கிற வென்னுதல். எங்களை என்கிறது - நாரை, அன்றில், கடல், வாடை, வானம் ஆன இவைகளை. நைவுதான் ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிறதுக்கு ப்ரமாணம்-ஸபங்காம் இத்யாதி. லங்கையிலே யிருந்தபோது பெருமாளைப்பிரிந்து திருமேனியெல்லாம் புழுதி படிந்து, அதுக்குமேலே கண்ணநீருமாய், நனைந்தவிடமும் நனையாதவிடமுமா யிருக்கையாலே - ''ஸவஜ்ஞாழ'' என்று விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தம்-பூமியினின்றும் இத்யாதி. அந்தை

அத்தையழித்து ஒப்பிக்குமவர் அஸந்நிதியாலே ஒப்பனை யழிந்திருந்தாள். "விபத்மாமிவபத்மிநீம்" (விபத்மாமிவபத்மிநீம்) - 'பெருமாள்வந்தாலும் இவ்வாஶ்ரயத்தை யுண்டாக்க வொண்ணாது' என்னும்படி முதலிலே தாமரைகுடிபோன பொய்கைபோலே யிருந்தாள். "அவ்யக்தலேகாமிவசந்த்ரலேகாம்" (அவ்யக்தலேகாமிவசந்த்ரலேகாம்) - போய்த்தேய்ந்தற்ற படிக்கும் வைவர்ண்யத்துக்கும் நிதர்ஶநமாகச் சொல்லுகிறது. "பாம்ஸுப்ரதிக்தாமிவ ஹேமலேகாம்" (பாம்ஸுப்ரதிக்தாமிவஹேமலேகாம்) - 'நற்சரக்குக்கு வந்த அழுக்கு' என்று தோற்ற இருந்தாள். "க்ஷதப்ரரூடாமிவ பாணலேகாம்" (க்ஷதப்ரரூடாமிவ பாணலேகாம்) - அம்பு வாயுள்ளேகிடக்கப் புறம்பே ஸமாதாநம்பண்ணினாற்போலே, 'அக

---

யென்றது - பங்கத்தை யென்றபடி. அபத்மாதித்யநஹியாப விபத்மாதித்யஹியாநாஶவிஶேஷணமதாநிவிமதாநி; விமதாநி பத்மாநி யஸ்யாஸ்ஸா - விபத்மேதி வ்யுத்பத்திம் ஹ்ருதி நிதாய ஆஹ - பெருமாள்வந்தாலும் இதி. இவ்வாஶ்ரயத்தையுண்டாக்க வடாதி பதார்த்தங்களைப்போலே, 'இதுவும் ஒரு ஸத்தாயோகிபதார்த்த முண்டு' என்னும்படியாகவாகிலும் பண்ணவொண்ணாதபடி சென்றற்றிருந்தா ளென்றபடி. இந்த அர்த்தம் - "விபத்மாமிவபத்மிநீம்" என்கிற த்ருஷ்டாந்தத்தாலே தோற்றுகிறது. "ஸபத்மாம், விபத்மாம்" என்கையாலே, நீர்வற்றினமை தோன்றுகிறதிறே; அத்தாலே, ஓடையினுடைய ஸ்வரூபம் இழந்தமை தோன்றுகிறதிறே; நீரோடேகூடின நிம்நப்ரதேஶமிறே - ஓடையாகிறது. 'எம்மேபோல் நாண்மதியே' இதி வசஸம்மதிம் ஹ்ருதி நிதாய நாயகீவக்த்ரயோஸ்ஸாத்ருஶ்யாத் ஸாம்யமாஹ - அவ்யக்தலேகாமிவ இதிவசநம். ஸபத்மாம் இதி ஶ்லோகஶேஷாக்ஷஸம்மதிரேவாஸ்யா விஸம்மதி:. போய்த்தேய்ந்தற்ற என்றது - மிகவும் தேய்ந்தற்ற என்றபடி. போய்த்தேய்ந்தற்றபடிக்கும் "சந்த்ரலேகாம்" என்றது - க்ஷீணனாய், கலாமாத்ராவஶிஷ்டனான சந்த்ரனைச் சொல்லிற்றிறே. வைவர்ண்யத்துக்கும் - "சந்த்ரலேகாம்" என்றும்தோன்றுகிறதில்லை வைவர்ண்யத்தாலே யென்றபடி. மேகவிஶேஷ ஸம்ஸர்க்காதிகளாலே காதாசித்கமாக விவர்ணமாகத் தோற்றுமிறே. ஹேமலேகை யென்றது - ஹேமஶலாகை. சந்த்ரலேகையை த்ருஷ்டாந்தமாகச் சொல்லி யிருக்க, த்ருஷ்டாந்தாந்தரோபாதாநத்துக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் - நற்சரக்குக்கு இத்யாதி. அத்ர "ஸாவிஜய நாவிஷ்டம்பேஶலே நாவிநாஶம் ஶ்ரீநிவாஸம் ஶாஸ்த்ரக்ஷேமக்ஷேமதோநாதி । ஐயஜயிஶதோநாஜ்ஞாவக்ஷோநாவிதநீதிவஹியேஷ்ராணாஜ்ஞாநந்நாக்ருதீநாம்" என்றது அநுஸந்தேயம். "க்ஷதப்ரரூடாமிவ பாணலேகாம்" என்றது - க்ஷதேஸதி ப்ரரூடாம்பாணலேகாம் என்றபடி. க்ஷதமென்றது - க்ஷதஸாதநமான அம்புத்தாரையைச் சொல்லிற்றென்றாக்கி, அம்பு வாயுள்ளே கிடக்க வென்கிறார். பாணலேகை - அம்புபட்ட வடு. அன்றிக்கே, க்ஷதமென்று - அம்புபட்ட வ்ரண மென்றுமாம். இத்தப்பக்ஷத்தில், அம்புவாய் என்றது-அம்புபட்ட வ்ரண மென்றபடி. அம்பு வாயுள்ளே கிடக்க, ப்ரரூடமாய் - மேலே ஸமாதாநம்பண்ணப்பட்ட பாணலேகையுண்டு-பாணம் போன வழி யென்றபடி. ப்ரரூடஶப்தம் - ஸமாதாநவாசியாயோ? என்ன, "ஸம்ரூடவ்ரணஹ தேஹத்ராஸ்" என்று கண்டுகொள்வது. புறம்பே ஸமாதாநம்பண்ணினாற்போலே இதி-உபரி

வாயில் இழவுபெரிது' என்று தோற்ற இருந்தாள். "வாயுப்ரபக்நமிவமேகலேகாம்" (வாயுப்ரபக்நமிவமேகலேகாம்) - பெருங்காற்றாலே சிதற அடியுண்ட மேகஶகலம்போலே யிருந்தாள். [நாள்மதியே] - நாளால் பூர்ணனான சந்த்ரனே! பண்டு பூர்ணனாகக் கண்டு வைக்குமே. [நாள்மதியே] - "நாட்பூ" என்னுமாபோலே இளமதி யென்றுமாம். [நீ] - தர்ஶநீயனான நீ. [இந்நாள்] - இக்காலம். [மைவானிருளகற்றாய்] - இப்படி குறையற்றிருக்கக்கடவ நீ இக்காலத்திலே வந்தவாறே ஆகாசத்தில் கறுத்தஇருளைப் போக்கமாட்டு கிறிலை யென்னுதல், கறுத்து வலிதான இருளைப் போக்கமாட்டுகிறிலை யென்னுதல். எதிரி எளியனானால் ஶத்ருக்கள்கூடநின்றுஉறுமுமாபோலே மேலிடாநின்றது. ஸஹாவஸ்த்தாநம் உண்டாகாநின்றதீ! [மாழாந்துதேம்புதியால்]-ஒளிமழுங்கிக் குறைந்திராநின்றாய். [ஐவாய் இத்யாதி] - அவருடைய பெரும்பொய்யிலே அகப்பட்டா யாகாதே நீ. "தம்பாம்புபோல் நாவுமிரண்டுளவாயிற்று"என்கிறபடியே, தமக்குப் பொய்சொல்ல ஒருவாயுண்டாகில்,தம்பரிகரத்துக்கு அஞ்சு வாயுண்டு. அவனுக்குப் பள்ளித்தோழமை பலித்தபடி. [ஆழிப்பெருமானார்] - அல்லாத பரிகரமோதான்? நன்றாயிருக்கிறது! தாம் பகலை இரவாக்க நினைக்கில், அதுக்குப் பெருநிலைநிற்கும் பரிகரம். பேறு அவர்களாலேயானால், இழவிலும் இன்னாதாக ப்ராப்தியுண் டேன்கை. [பெருமானார்]-அவர்களுக்கும் தம்பக்கலிலே பொய்யோத வேண்டும்படி பொய்யால் பெரியவர். * "பொய்ந்நம்பி புள்ளுவன் கள்வம்பொதியறை" என்னக்கடவதிறே. "ஆழிப்பெருமானார்மெய்வாசகம்"என்னவே 'பொய்' என்று ப்ரஸித்தமாயிருக்

---

த்வாரஸோஹிதவாணவ்ரணவதித்யுக்தி: ஈதர், க்ஷதஸ்ய நாராவணோக்தபூவ ஶதாயாதவ்யஸநோவ்யே "தீயினாற்சுட்டபுண் ணுள்ளாறுமாறாதே,நாவினாற்சுட்டவடு" இதிவத். "வாயுப்ரபக்நமிவமேகலேகாம் - வாயுஸ்ஸாதீயோராவணஃ; மேகஸ்ஸாதீயஸ்ஸீதா; விஶிஷ்டாராசீ:. பெருங்காற்றாலே இத்யாதி - பெருமானுடையதிருமேனியிற்பிரிக்கப்பட்ட ஏகதேஶம் என்று தோற்ற இருந்தா ளென்றபடி. நாளால்பூர்ணனான - இல்லையாகில், ஸர்வஸாதாரணமான நாளோட்டை ஸம்பந்தஞ் சொல்லவேண்டாவிறே. பூர்ணசந்த்ரன் என்றால் 'மாழாந்துதேம்புதியால்' என்றத்தோடு வ்யாஹதமன்றோ? என்ன, பண்டு இத்யாதி. மாழாந்து - மழுங்கி. தேம்புதி - தேயாநின்றாய். 'நீ' என்றதுக்கு அர்த்தாந்தரம் - இப்படிகுறையற்றிருக்க இத்யாதி. வான் - ஆகாஶமும், வலிமையும். 'நீயகற்றாய்' என்கையாலே-'அது உன்னைமேலிடுகிறது' என்று விவக்ஷித்து ஸத்ருஷ்டாந்தமாக ஸாவம்-எதிரி இத்யாதி. 'பெருமானார்' என்றத்தைப்பற்ற, பெரும்பொய் என்றது. மெய்யென்று - பொய்யிலே லக்ஷணை. 'ஐவாய்' என்றதுக்கு ஸாவம் - தம்பாம்பு இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி. தம்முடைய பாம்புபோலே தமக்கும் இரண்டுவாக்கு உண்டாயிற்றென்கை. 'அரவணை' என்றத்தைப்பற்ற, சாடு - அவனுக்கு இத்யாதி. பள்ளி - படுக்கையும், பள்ளிக்கூடமும். பெருநிலைநிற்கையாவது - களவுக்கு ஸஹாயமாகப் புறம்பே ஆட்பார்த்துக் காத்துநிற்கை. யத்வா, 'தானே நிர்வாஹகனும்' என்று கொண்டுவந்து நிற்கை. புருஷகாரபூதரை வெறுக்கலாமோ? என்ன, பேறு இத்யாதி. இன்னாதாக - வெறுக்க. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம்-பொய்ந்நம்பி இத்யாதி. பொய்ந்நம்பி - பொய்யால் பரிபூர்ணன், கபடன், க்ருத்ரிமத்தால் நிறைந்த களஞ்சிய மென்கை. 'மெய் வாசகம்' என்றிருக்க, பொய்யாகவே வ்யாக்யாநம் பண்ணுகிறதென்? என்ன, ஆழிப்பெருமானார் இத்யாதி. நாட்டார் பொய்யோபாதியாமே - அத்தை

---

* பெரியதிருமொழி - கo-எ-ச.

கும்போலேகாணும். போய்யேன்ஞதோழிவானேன் ? என்னில்; – 'போய்' என்னில் - நாட்டார் போய்யோபாதியாமே. அவர் "வ்ரதம் மம" (ஏதத்வ்ரதம்மம) என்ற வார்த்தை கேட்டே நீயும் இப்படி அகப்பட்டது இப்போது உதவாமையாலே 'போய்' என்றிருக்கிருளிறே. ராமாவதாரத்தில் மெய்யும் க்ருஷ்ணவதாரத்தில் போய்யுமிறே ஆஶ்ரிதர்க்குத் தஞ்சம். [உன்மேய்ந்நீர்மைதோற்ருயே] - உன்வடிவில்எழில் இழந்தாயாகாதே; தர்ஶநீயமான தண்ணளியேயாய் லோகோபகாரகமான உன்னுடம்பிேளியையாகாதே இழந்தது. (சு)

## ஏழாம் பாட்டு.

தோற்ரேம்மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு எம்
ஆற்ருமைசோல்லி அழுவோமைநீநடுவே
வேற்ரேர்வகையிற் கோடிதாய்எனையூழி
மாற்ருண்மைநிற்றியோ? வாழிகனையிருளே!

ஆ.—(தோற்ரேம்.) எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யாதி குணங்களாலே அவனுக்குத் தோற்று அடிமையானேம்; ஆதலால், 'அவனைப்பிரிந்த வ்யஸநத்தை ஒன்றும் பொறுக்க மாட்டுகிறிலோம்' என்று சொல்லிக்கொண்டு அழுகிற எங்களை நீ நடுவே சத்ருக்களிலும் கொடியையாய் நின்று எத்தனைகாலம் பாதிக்கக்கடவை? கனையிருளே! என்கிருள்.

---

வ்யாவர்த்திக்கைக்காக "மெய்வாசகம்" என்கிருளென்றபடி. மெய்வாசகமேது? என்ன, அவர் ஏதத்வ்ரதம் இத்யாதி. க்ருஷ்ணவதாரப்ரஸங்கத்திலே, ஏதத்வ்ரதம்மம என்றது - தர்ம்யைக்யத்தாலே. ஆனல், "வ்ரதம் மம" என்றது - பொய்யோ? என்ன, இப்போது இத்யாதி. ஆனல்,வாஸ்தவமானஆகாரமேது?என்ன,ராமாவதாரத்தில் இத்யாதி. க்ருஷ்ணவதாரத்தில் பொய்யுமென்றது - ப்ராஸங்கிகம். "ராமோ த்விர் நாபிபாஷதே" என்னும் படியான "வ்ரதம் மம" என்கிற ராமாவதாரத்தில் மெய்யும், "ஆயுதமெடேன்" என்ற ப்ரதிஜ்ஞையைப் பொய்யாக்கின க்ருஷ்ணவதாரத்திற் பொய்யு மென்றபடி. யத்வா, பொய்யான வார்த்தைக்கு மெய்ந்நீர்மை தோற்கக்கூடுமோ? என்ன, ராமாவதாரத்தில் இத்யாதி என்னுதல். தஞ்சமாகையாலே தோற்கிருளென்றபடி. நீர்மை தோற்கையாவது - அழகழிகை. தர்ஶநீயமான இத்யாதி - தர்ஶநீயமாய், தண்ணளியையுடைத்தாய், லோகோபகாரகமுமான உன்னுடம்பிலொளி யென்றபடி. நாண்மதியே, நீ இந்நாள் மைவா னிருளகற்ருய்; கைவாய எம்மேபோல் மாழாந்து தேம்புதியால்; ஐவாயரவணை இத்யாரப்ய அந்வய:. "நீர்மை தோற்ருய்" என்றது - மாழாந்தின் விவரணமாதல். இங்கே, "ஸ்வம் யக்ஷ்ணாவவதா நிஶ்ரஹீதஜநோ ராக்ஷீணஸ்தமோ ந நிஜதீயி திஹி:க்ஷி ணோஷி । க்ஷீநாக்ஷ மதிதாநியமாவயஸ்நம் விஸ்ருஹ்யோஹஸ்மிதயீரபவக்ஷ்யஸே ந:" இதிஹாமவதஷேஶஹஸ்ஸநஸ்ய: ஶ்லோகொ:ஸ்நவஸஷ்யா:. யக்ஷ்ணா - க்ஷயவ்யாயிநா. நக்ஷிணோஷி-போக்குகிருயில்லே. விஸ்ருஹ்ய-விஶ்வஸித்து. ஹஸிதயீ: - கலாவிஷயீஸு. ந: உவக்ஷ்யஸே - எங்கள்முன்னே தோற்றுகிருய். (சு)

ஒ.—ஏழாம்பாட்டில், பரஸ்பரம் காணவொண்ணுதபடி மூடின அந்தகாரத்தைக் குறித்து, 'எங்களை எத்தனைகாலம் நலியக்கடவை?' என்கிருள்.

[தோற்றேமென்று தொடங்கி] - சபலமான நெஞ்சை எம்பெருமானுடைய ஆஶ்ரிதஸௌலபத்வாதி குணங்களாலே இழந்தோம்; எங்கள் தரியாமை சொல்லி ப்ரலாபிக்கிற எங்களை விரோதம் பண்ணுகைக்கு ஒரு ஹேதுவின்றியே யிருக்கச்செய்தே ஆபத்துவந்தால் ஶத்ருக்களும் ஐயோ! என்பர்; அவர்களிற்காட்டிலும் கொடிதான படியையுடையையாய். [மாற்றுண்மை நிற்றியோ]- ஶாத்ரவத்திலே நிற்கக்கடவையோ? [வாழி] - பாதியாமைக்கு மங்களாஶாஸநம். [கனையிருளே] - செறிந்தஇருளே! 'தமஃபதார்த்தந்தான் மழுங்கியிருக்கை ஸ்வபாவமிறே' என்று பாராதே, எம்பெருமானைப் பிரிந்த அதிமாத்ர து:கத்தாலே ஒளியும் மழுங்கி, வாய்திறந்து கதறவும்மாட்டாதேயிருக்கிறதாகக்கொண்டு, 'பண்டேநோவுபடுகிற எங்களை உன்னுடைய து:கத்தைக் காட்டி என்னுடைய ஶத்ருக்கள் நலியும் நலிவும் ஸுக மென்னும்படி கொடியையாய்க்கொண்டு எத்தனை காலம் நலியக்கடவை? ஐயோ! உனக்கு து:கம் நீங்குக' என்றுமாம்.

ப.—அநந்தரம், 'நிருபாதிக ஸம்பந்த யுக்தனுனவனைப் பிரிந்து ஆர்த்தையான என்னை உன் ஈடுபாட்டைக் காட்டி நலிவதே!' என்று இருளைக்கண்டு ஈடுபட்டு உரைக்கிருள்.

எம் பெருமான் - எங்கள் ஸ்வாமியான, நாரணற்கு - நாராயணனுக்கு, மடம் நெஞ்சம் - எங்களுக்கு விதேயமான நெஞ்சை, தோற்றேம் - இழந்தோமாய், எம் ஆற்றுமை – (அது அடியான) எங்களாற்றுமையை, சொல்லி - வாய்விட்டுச்சொல்லி, அழுவோமை - அழுகிற எங்களைப்பற்ற, நீ - நீ, நடுவே - (பாத்யபாதகஸம்பந்த மற்றிருக்க) நடுவேபுகுந்து, வேற்றோர்வகையில் – ஶத்ருக்கள் படியிலும், கொடிதாய் – கொடிதாம் படி, எனையூழி - காலமுள்ளதனையும், மாற்றுண்மை - (எங்கள் நோவுக்கு) மறுதலையான ஆளாகையாலே, நிற்றியோ - நிலைநிற்கிருயோ? கனைஇருளே - திணுங்கின இருளே! வாழி - (உன்ஸந்நிதியைக் காட்டி நலியாதே க்லேஶந் தீர்ந்து) வாழவேணும். கனையிருள் - திணுங்கின இருள். இவள் நோவுக்கு மறுதலையான ஆளாகையாவது - இருள்தானும் ஈடுபடுகை. இதின் கருகுதல் விரஹத்தாலே யென்று நினைத்து, பொறுக்கமாட்டாமல் உரைத்தாளாயிற்று. இத்தால் தமஃ ப்ரக்ருதிகளுடைய மாலிந்யமும் ஸர்வேஶ்வரனைப் பிரிந்த தென்றிருக்கை.

இ.—ஏழாம்பாட்டில், மதிகெட்டவாறே அந்தகாரம் வந்து மேலிடுமதிறே; பரஸ்பரம் காணவொண்ணுதபடி. நடுவே மூடின அந்தகாரத்தைக் குறித்து, 'நீ எங்களை இங்ஙனே நலியக்கடவையோ?' என்கிருள்.

[தோற்றேம்] - "எம்மேபோல்" என்று - கீழும் மேலு முண்டான பதார்த்தங்களை யெல்லாங் கூட்டிக்கொண்டு தோற்றே மென்கிருர். மடநெஞ்சந் தோற்றேம், பற்றிற்று விடாத சபலமான நெஞ்சென்னுதல், பவ்யமான நெஞ்சென்னுதல். [எம்பெருமான்] - அப்ராப்தவிஷயத்துக்குத் தோற்றேமோ? [நாரணற்கு] - 'அல்லோம்' என்றுரையும் விடமாட்டாத வத்ஸலனுக்கு; ஸௌலபனுக்கு என்னவுமாம். ப்ராப்த விஷயத்

தில் வாத்ஸல்யாதிகளாலே இழந்தோ மென்கை. [எம்ஆற்றாமை இத்யாதி] - எங்களாற்றாமையைச் சொல்லிக் கூப்பிடுகிற எங்களை. நாங்கள் பெறுகிறதுஉண்டோ? நீ பொறுக்க மாட்டாதே ஶாத்ரவங்கொண்டாட; அவனைப்பெறவோ? போன நெஞ்சைப் பெறவோ? எங்கள் தரியாமையாலே அழப்பெறுமோ? [நீ நடுவே] - உனக்கு பாத்ய பாதகஸம்பந்தமின்றிக்கே யிருக்கச் செய்தே. [வேற்றோர் இத்யாதி] - ஶத்ருக்கள்படியிலும் கொடிதாகச் செய்யாநின்றாய். வகை – ப்ரகாரம். கொடிதாய் - கொடிதானபடியை யுடையையாய். ஶத்ருக்களானாலும் நோவுபட்டாரை 'ஐயோ!' என்னவன்றோ அடுப்பது. [எனைஊழிஇத்யாதி] - காலதத்த்வ முள்ளதனையும் ஶாத்ரவத்திலே நிற்கக்கடவையோ? [வாழி] - காதுகரை 'உடன் பிறந்தீர்' என்னுமாபோலே, பாதியாமைக்காக மங்களாஶாஸநம் பண்ணுகிறாள். [கனையிருளே] - செறிந்த இருளே! அன்றிக்கே, 'தமஃ பதார்த்தம் ஒளிமழுங்கியிருக்கை ஸ்வபாவம்' என்று அறியாதே விரஹவ்யஸநத்தாலே ஒளிமழுங்கிக் கதறவும்மாட்டாதே யிருக்கிறதாகக் கொண்டு, பண்டேநோவுபடுகிற எங்களை. [நீ நடுவே] - எங்களாற்றாமையிற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிராநின்றதீ உன் ஆற்றாமை! ஶத்ருக்கள் நலியும் நலிவிலும் கொடிதாயிராநின்றதீ உன் துஃகத்தைக் காட்டி நலிகிற நலிவு! [வாழிகனையிருளே]-உன்மாலிந்யம் போய் நீ ஜீவித்திடுக.

ஈடு.—ஏழாம்பாட்டு. மதிகெட்டவாறே அந்தகாரம் வந்துமேலிட்ட தென்கிறாள். [தோற்றோம் இத்யாதி] - கீழும் மேலும் போருகிறபடியொழிய, ஶப்தஸ்வாரஸ்யத்தைப் பற்ற எம்பெருமானார் அருளிச்செய்து போருவதொன்று உண்டு; அம்மங்கியம்மாளும் அத்தையே நிர்ப்பந்தித்துப்போரும். அதாகிறது - தான், பிரிவாற்றாதார் அநேகர் கூடக் கட்டிக்கொண்டு கூப்பிடாநிற்க, இருள் வந்து முகத்தை மறைக்க, அத்தைப்பார்த்து, 'ஆற்றாமைக்குப் போக்குவிட்டு தரிக்கவொட்டாதே நீ வந்து நலியக்கடவையோ?' என்கிறாள்.

"எம்மேபோல்" என்கிற பதார்த்தங்களையெல்லாங் கூட்டிக்கொண்டு சொல்லுகிறது. [தோற்றோம் மடநெஞ்சம்] - பகவத்விஷயமென்றால் விடமாட்டாதபடி சபலமான நெஞ்சை யிழந்தோம்; அன்றியே, பவ்யமான நெஞ்சை யிழந்தோ மென்னுதல். [எம்பெருமான்நாரணற்கு] - கேடுவாய், வகுத்தவிஷயத்திலேயன்றோ நாங்கள் நெஞ்சிழந்தது? "தன்னுடைமை" என்றால் வத்ஸலனாயிருக்கு மவனுக்கன்றோ இழந்தது; ஸ்வாமி பனுக்கு என்றுமாம். [எம்ஆற்றாமைசொல்லி யழுவோமை] - ஆற்றாமையுடையார், தந்தாம் ஆற்றாமைசொல்லிக் கூப்பிடக்கடவதன்றோ? நாங்கள் பெறப்புகுகிறதொரு ப்ரயோஜந

---

ஏழாம்பாட்டு - தோற்றேம் இத்யாதி. மதி என்று - சாடு; புத்தியும், சந்த்ரனும். அந்தகாரம் - இருளும், அஜ்ஞாநமும். கீழும் மேலும் போருகிற படியாவது - 'எம்மேபோல்' என்று ஸமது:கிகளாகச் சொல்லுகை. ஶப்தஸ்வாரஸ்யத்தைப்பற்ற - 'வேற்றோர்வகையில்' இத்யாதியான ஶப்தஸ்வாரஸ்யத்தைப் பற்ற வென்றபடி.

'தோற்றோம்' என்கிற பஹுவசநார்த்தம் - எம்மேபோல் இத்யாதி. மூந்தின அர்த்தத்தில், மடப்பம் - பற்றிற்றுவிடாமை. 'எம்பெருமான், நாரணன்' என்கிற பதத்வயத்துக்கும் க்ரமேண அர்த்தம் - கேடுவாய் இத்யாதி வாக்யத்வயேந. கெடுவாயென்றது - வார்த்தைப்பாடு. ஆற்றாமையுண்டானால் ஆறியிராதே அழவேணுமோ? என்ன, ஆற்றாமையுடையார் இத்யாதி. 'ஆற்றாமை' என்கிற பதத்துக்கு வாஸநை - நாங்கள்பெற இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'சொல்லியழு

முண்டாய் 'அத்தை விலக்கி நாம் பெறவேணும்' என்றுதான் செய்கிறுயன்றே. அவனைப் பெறவோ? போனநெஞ்சைப் பெறவோ? எங்களாற்றுமையாலே அழப்பெறுமோ? [நீநடுவே] - அல்லாதவற்றுக்கு உள்ளது அமையாதோ உனக்கு? அவனையொழிந்த நம்மில் நாம் கழுத்தைக்கட்டிக்கொண்டு கிடந்து கூப்பிடுகையொழிய பாத்யபாதகபாவமுண்டோ? நலிகைக்கு ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்கச்செய்தே. [வேற்றோர்வகையில் கொடிதாய்] - வேற்றோருண்டு - ஶத்ருக்கள்; வகையுண்டு - அவர்கள் நலியும் ப்ரகாரம். அதிலுங் கொடிதாக நலியாநின்றாய். ஶத்ருக்களாகிலும், நோவுபட்டாரை 'ஐயோ!' என்னவன்றோ அடுப்பது; [எனையூழிமாற்றாண்மைநிற்றியோ] - காலதத்த்வமுள்ளதனையும் ஶாத்ரவத்திலே நிற்கக்கடவையோ? ராவணாதிகள், பிரித்தஇத்தனை, கூப்பிடப் பொறுத்தார்கள்; நீர்மையுடையார், "ஸஞ்ஜாதபாஷ்ப:" (ஸஞ்ஜாதபாஷ்ப:) என்று கண்ணநீரை விழவிட்டார்கள்; நீர்மையுடையார் படியும் கண்டிலோம், ஶத்ருக்கள்படியும் கண்டிலோம், உன்னது வ்யாவ்ருத்தமாயிருந்ததீ! [வாழி] - காதுகரை 'உடன்பிறந்தீர்' என்னுமாபோலே. [கனையிருளே] - செறிந்தஇருளே யென்னுதல், கனையிருள் - கனைத்துக் கொண்டு செருக்கி

---

வோம்' என்கையாலே கூப்பிடுகைக்கு ப்ரயோஜநம் அழுகையென்று தோற்றுகிறது. ஒருப்ரயோஜநமென்றதின் விவரணம் - அவனைப்பெறவோ இத்யாதி. எம்பெருமான் காரணற்கு மடநெஞ்சந் தோற்றோம், எம்ஆற்றாமைசொல்லி அழுவோமை இத்யந்வயம் ஹ்ருதிநிதாயோக்தம் - அழப்பெறுமோ என்றது. ஆற்றாமையாலே அழுகைக்கும் யோக்யதையில்லையோ? என்றபடி. அல்லாதவற்றுக்கு இத்யாதி - தன்னோடு ஸமது:கிகளானவற்றின் படியு மன்றிக்கே, உதாஸீநர்படியு மன்றிக்கே, உபயவிலக்ஷணமான ஆகாரம் உனக்கு உண்டாவதேயென்று - நீயின் தாத்பர்யம். கீழ் வாக்யவிவரணம் - அவனையொழிந்த இத்யாதி. நம்மில்நாம் - உனக்கும் இதுவேயிறே அடுப்பதென்று கருத்து. 'நடுவே' என்றஇதுக்கு - எங்கள்மத்யத்திலே யென்று பொருள்; இல்லையாகில், இந்தயோஜனைக்கு ஶப்தஸ்வாரஸ்யஞ் சொல்ல வழியில்லையிறே. அவதாரிகையிலே, இருள் வந்து முகத்தை மறைக்கவென்று ஶப்தார்த்தம் சொன்ன ப்ராயமிறே. 'நடுவே' என்றதின் தாத்பர்யம் - நலிகைக்கு இத்யாதி. நலிகைக்குஎன்கிறது - இவ்வளவுக்கும் ஆர்த்திகார்த்தம். வேற்றோர் - ஹிம்ஸகா:. வகை - தேஷாம்பேத:. அதிலும்கொடிதாக நலிகிறதென்? என்ன, அதினுடைய க்ரௌர்யத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - ஶத்ருக்களாகிலும் என்று தொடங்கி. நோவுபட்டாரை - கச்சாநுஜாநாமியிலே தாத்பர்யம். எனை - அநேகம். 'வேற்றோர்வகை' இதி - ஸ்வய ஹிம்ஸகஸ்வைந, நிஷ்டுரஹிம்ஸகஸ்வைநவஹேஷ்டிவிவக்ஷித:; தஸ்மாத்ஸபவியாக்ஷேதாஷ்வ்யதிக்ரமக்ஷமயவிஸ்த்யப்ராஹரோஹ - ராவணாதிகள் இத்யாதி. நீர்மையுடையார் - நீர்மையுடைய ஶத்ருக்க ளென்றபடி. பலிதம் - நீர்மையுடையார்படியும் இத்யாதி. ஶத்ருக்கள் - நீர்மையில்லாத ஶத்ருக்கள். 'வேற்றோர்வகையிற் கொடிதா யெனையூழிநிற்றி' உத்ருஹியாநஶாயாம் 'வாழி' இதி - க்ருஶீவப்ராஷஸ்ருஷ்டாஷ்ராஹரோஹ - வாதுகரை இதி. உடன்பிறந்தீர் - 'தயைபிறக்குமோ'என்னும் நசையாலே சொல்லும் வார்த்தை. எம்பெருமான் காரணற்கு மடநெஞ்சந்தோற்றோமாயிருக்க எம்ஆற்றாமை சொல்லியென்று அந்வயம். கனவிருளென்னுதல், கனையிருளென்னுதல்-செறிந்தவிருள் இதி. "கஜநிஷ்யெப்யாகாரயொஶாஷ்காரஸ்வெணகாரஸ்யாதஉதிஹாவ:." கனைத்துக்கொண்டு - கோபித்துக்கொண்டு. யோஜநாந்தரம் -

வருகிற இருளே யென்னுதல். அன்றியே, ப்ரகரணத்தோடே சேர்ந்த பொருளாவது- தமஸ்ஸென்று ஒரு பதார்த்தமாய், 'அதுதான் ஒளிமழுங்கி அடங்கியிருக்கை ஸ்வபாவம்' என்று அறியாதே, அபிமதவிஶ்லேஷத்தாலே ஒளிமழுங்கி வாய்விட்டுக் கூப்பிடவும்மாட்டாதே நோவுபடுகிறபடியைக் கண்டு, 'உன்இழவு கனத்திருந்ததீ!' என்கிறாள். வகுத்தவிஷயத்திலே நாமெல்லாம் நெஞ்சிழந்து கூப்பிடாநிற்க, நீ உன்ஆற்றாமையைக் காட்டி நலியாநின்றாய்; உன் அவஸாதம் நீங்கி நீ ஜீவித்திடுகே என்கிறாள். (எ)

## எட்டாம் பாட்டு.

இருளின் திணிவண்ணம் மாநீர்க்கழியே! போய்
மருளுற்றிராப்பகல் துஞ்சிலும்நீ துஞ்சாயால்
உருளுஞ்சகடம் உதைத்தபெருமானார்
அருளின்பெருநசையால் ஆழாந்துநொந்தாயே

ஆ.—(இருளின்.) இருளின் திணிவண்ண மாநீர்க்கழியே! போய்அறிவழிந்து இராப்பகல் முடியிலும் நீ உறங்குகிறிலை; நீயும் என்னைப்போலே உருளுஞ் சகட முதைத்த பெருமானாரோடே ஸம்ஶ்லேஷிக்கையிலுள்ள அபிநிவேசத்தாலே ஆழாந்து நொந்தாயாகாதே யென்கிறாள்.

ஓ.—எட்டாம்பாட்டில், இருளாலே ஜலஸத்தலவிபாக மறியாதே ஒருகழியிலே சென்று 'நீயும் என்னைப்போலே எம்பெருமான்பக்கல் நசையாலே தரைப்பட்டு நொந்தாயாகாதே' என்கிறாள்.

[இருளென்று தொடங்கி] - இருள்செறிந்தாற்போலே யிருக்கிற பெருநீரை யுடைய கழியே! மிகவும் அறிவுகெட்டுக் காலம் முடியிலும் நீ முடிகிறிலை. [உருளுஞ் சகடமென்று மேலுக்கு] – அஸுராவேசத்தாலே உருளுகிற சகடத்தை உதைத்த உப

---

அன்றியே இத்யாதி. உன்ஆற்றமையைக் காட்டி நலியாநின்றய்-உன்ஆற்றாமையைக்காட்டி ஶத்ருக்களைக்காட்டிலும் நலியாநின்றா யென்றபடி. இந்தயோஜனையில், 'நடுவே' என்கிறது - நாரைமுதலானவற்றின் நடுவே யென்றபடி. அதாவது - நாரைமுதலானவை தங்கள் வ்யஸநத்தைக்காட்டி என்னைப் பிரியாநிற்க, நீயும் அவைபோலே உன்னுடைய வ்யஸநத்தைக் காட்டிப் பிரிக்கக்கடவையோ? என்றபடி. 'நீநடுவே' என்றது - எங்களாற்றாமையைக்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருந்ததீ! உன்ஆற்றாமை யென்றபடி யென்னவுமாம். இது ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு. 'கனையிருள்' என்றது - நியதஸ்வபாவ மென்று அறியாதே, 'பகவத்விஶ்லேஷத்தாலே ஒளிமழுங்கியிருக்கிறது' என்றிருக்கிறா ளென்று கருத்து. அடங்கியிருக்கை - வெளிப்புறப்படாம லிருக்கை. எம்பெருமான் நாரணற்கு மடநெஞ்சம் தோற்றோமென்று அந்வயத்திலே அர்த்தம்-வகுத்தவிஷயத்திலே என்று தொடங்கி. இந்தயோஜனைக்கு, வேற்றோர்வகை இத்யாதிக்கு - உன்ஆற்றாமையைக்காட்டி ஶத்ருக்கள் நலியும் ப்ரகாரத்திலும் அதிகமாக நலிகிறாயென்று கண்டுகொள்வது. 'எனையூழி மாற்றாண்மை நிற்றியோ' என்றதுக்கு ஸ்வாரஸ்யமில்லை; 'வாழி' என்றதுக்கு - ஸ்வாரஸ்ய முண்டு. முந்தினயோஜனையில், 'கொடிதாயெனையூழிமாற்றாண்மைநிற்றி' இத்யாதி ஸ்வாரஸ்ய முண்டு. கனையிருளே, எம்பெருமான் நாரணற்கு மடநெஞ்சந்தோற்றோம்; எம்ஆற்றாமைசொல்லி யழுவோமை நீநடுவே வேற்றோர்வகையில் கொடிதாய் எனையூழி மாற்றாண்மை நிற்றியோ? வாழியென்று அந்வயம். (எ)

காரத்தாலே சேதநரையெல்லாம் அடிமைகொண்ட க்ருஷ்ணன் அவ்வாபத்தை நீக்கினாற்போலே இவ்வாபத்துக்கும் உதவுமென்னும் பெருநசையாலே முடியாதே ஆழவிழுந்து நோவுபட்டாயே!

ப.—அநந்தரம், 'அவன்காருணிகத்வத்திலே நசைபண்ணி ஆழங்காற்பட்டாயோ?' என்று கழியைப் பார்த்துக் கலங்கி உரைக்கிறாள்.

இருளின் - இருளினுடைய, திணிவண்ணம்-செறிந்த நிறத்தையுடைத்தான, மா - பெரிய, நீர் - நீரையுடைய, கழியே - கழியே! போய் - மிகவும், மருளுற்று - அறிவு கெட்டு, இராப்பகல் - அஹோராத்ரரூபமான காலமும், துஞ்சிலும் - முடியிலும், நீ - நீ துஞ்சாய் - உறங்குகிறிலை; ஆல் - ஆதலால், உருளும் - உருளுதலையுடைத்தான, சகடம்- சகடத்தை, உதைத்த - (திருவடிகளாலே) உதைத்த, பெருமானார் - பெரியவருடைய, அருளின் - க்ருபாகுணத்திலுண்டான, பெருநசையால் - பெரிய ஆசையாலே, ஆழாந்து- ஆழங்காற்பட்டு, நொந்தாயே - நொந்தாயோ? மாநீ ரென்றது - கறுத்தநீ ரென்றுமாம். இத்தால் - ஜலப்ரக்ருதிகளும் அவன்க்ருபாகுணத்திலே அகப்பட்டால் கால்தாழ்வ ரென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், இருளாலே ஜலஸ்தலவிபாக மறியாதே ஒருகழியிலே சென்று 'நீயும் என்னைப்போலே அவன்பக்கல் நசையாலே தரைப்பட்டு நொந்தாயாகாதே' என்கிறாள்.

[இருளின் இத்யாதி] - இருள் செறிந்தாற்போலே யிருக்கிற பெருநீரையுடைய கழியே! [போய்மருளுற்று] - மிகவும் அறிவுகெட்டு; உள்ளுள்ளவையெல்லாங் கலங்கி; மயர்வறமதிநலமருளப்பெற்ற அவ்வளவெல்லாங் கலங்கினார்க்குப் போலியாயிருக்கை. [இராப்பகல் இத்யாதி] - காலதத்த்வம் முடியிலும் நீ உறங்குகிறிலை. [உருளும் சகட முதைத்த] - ரக்ஷையாக வைத்த சகடம், அஸுராவேசத்தாலே மத்யராத்ரத்திலே ஊர்ந்துவந்து மேல்விழ ஸ்தந்யார்த்தியாய் அழுகிறபோதைத் திருவடிகளுக்கு இலக்காய், அது துகளாம்படி பண்ணின. [பெருமானார்] - அத்தையழியச்செய்து ஜகத்துக்கு ஒரு ஶேஷியைத் தந்தவன். [அருளின்பெருநசையால்] - அவ்வாபத்துக்கு உதவினாற்போலே இப்போதும் உதவுமென்னும் நசையாலே. அருள் ஸாவதியாகிலிறே நசையும் ஸாவதியாவது. தாய்க்கு உதவினவன் ப்ரணயிநிக்கு உதவானோ? என்னும் நசையாலே. [ஆழாந்துநொந்தாயே] - அறவிழிந்து நோவுபடுகிறாயே!

ஈடு.—எட்டாம்பாட்டு. அவ்விருளுக்கு இறாய்த்து அங்கேஇங்கே ஸஞ்சரியா நிற்க,இருள் செறிந்தாற்போலே யிருப்பதோரு கழியிலே சென்று இழிந்தாள்; அது மடலேடுப்பாரைப்போலே கேட்டோடாநிற்குமே; பாவியேன், சகடாஸுரநிரஸநம் பண்ணின அச்செயலிலே நீயும் அகப்பட்டாயாகாதே யென்கிறாள்.

---

எட்டாம்பாட்டு - இருளின் இத்யாதி. இருளுக்கு அநந்தரம் கழியைச் சொன்னதுக்குச் சேர்த்தியேது? என்ன, அவ்விருளுக்கு இத்யாதி. இறாய்த்து-பின்வாங்கி.

[இருளின்திணிவண்ணம்] - அச்சமான இருள். வெளிறின இருளன்றிக்கே, இருளின் புறவிதழை வாங்கி வயிரத்தைச் சேரப்பிடித்தாற்போலே யிராநின்றது. இருளின்திணிபோலே யிருக்கிற நிறத்தை யுடைத்தாய்ப் பெருநீரையு முடைத்தான கழியே! [போய்மருளுற்று] - மிகவும் அறிவுகேட்டு. மயர்வற மதிநலமருளப்பெற்றார் அறிவுகேட்டுக் கும் அவ்வருகேயா யிராநின்றதீ! உன்அறிவுகேடு! [இராப்பகல் இத்யாதி] - காலத்துக்கு ஓரெல்லை காணிலும் உன் ஆற்றாமைக்கு ஓரெல்லை காண்கிறிலோம். [உருளும்சகடமுதைத்த]-காவலாகவைத்த சகடந்தானே அஸுராவேசத்தாலே ஊர்ந்துவர, தாயுங் கூட உதவாத ஸமயத்திலே மூலைவரவுதாழ்த்துச் சீறிநிமிர்த்த திருவடிகளாலே முடித்து, 'ஜகத்துக்கு ரக்ஷியைத்தந்த உபகாரகன் ப்ரணயிநிக்கு உதவானோ?' என்னும் நசையாலே. [அருளின்பெருநசையால்] - அருளின்கனத்துக்குத் தக்கபடியிறே நசையின் கனம் இருப்பது. [ஆழாந்துநொந்தாயே] - தரைப்பட்டு நோவுபட்டாயாகாதே. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

நொந்தாராக்காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த
நந்தாவிளக்கமே! நீயுமளியத்தாய்
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமான்
அந்தாமத்தண்துழாய் ஆசையால்வேவாயே.

ஆ.—(நொந்தாரா.) நந்தாவிளக்கே! இப்பாடு படுகைக்கு ஈடன்றியே யிருந்த நீயும் என்னைப்போலே, காலதத்த்வமெல்லாம் அநுபவித்தாலும் ஆராத காதல்

---

'திணி' என்றதுக்கு ஸாவம்-அச்சமான இத்யாதி. வெளிறனஇருளன்றிக்கே - வெளிறு-அஸாரம். புறவிதழ் - பஹிர்தளம். ஸப்தார்த்தம் - இருளின் இத்யாதி. திணிபோலே - வயிரம்போலே. போய் - மிகவும். "வார்தல் போத லொழுக லிவை நெடுமையாகும்" என்னக்கடவதிறே. 'மிகவும்' என்றத்தை விவரிக்கிறார் - மயர்வற இத்யாதி. இராப்பகல் என்று காலாவயவங்களைச் சொன்னது - காலத்துக்கும் உபலக்ஷணம். காலத்துக்கு இதி - "ஸநாதிஸம்ஸாராநாகாலொநாதொஸ்யவிஜவிஷ்யதெ" இதி. ஸுஹாஹிதஸ்யகாலவெஸ்யத்யயம்:. துஞ்சிலும்-முடியிலும். தனக்கு திவாராத்ரவிபாக மற்றிருக்கையாலும்,'காலமாகில் திவாராத்ரவிபாக விபத்தமாயே யிருக்கும்' என்றிருக்கையாலும், 'காலம் நசித்தது' என்றிருக்கிறான். துஞ்சாயால் - உறங்குகிறிலை. ஆற்றாமையால் வரும் ஜாகரத்துக்குக் காலம் வேண்டாவாகாதே. அதவா, "ஸநாதிஸம்ஸாராநாகா:" என்கிறபடியே அநந்தமான காலம் அவன் விஷயமாக மருளுற்று, ஆற்றாமையாலே முடிந்து பிழைத்திருக்கவும், என்னைப்போலே "ஜீவநுஹஸ்ராணிவஶ்யதி" என்ற நசையின் கனத்தாலே முடிந்து பிழைக்கவும் பெற்றாயில்லை யென்றபடி. காவல் - ரக்ஷை. உருளும் - ஊர்ந்துவரும். தாழ்த்து-விளம்பித்து. "விக்ஷெபவாரணாவஸ்யந்தஸ்ஸந்யாஶீவ்ரஸ்வொராஷஹ" இதிஸந்தஸ்யதியாயாஹ - மூலைவ்ரவு இத்யாதி. உதைத்த - முறித்த. கழி, ஸ்த்ரீயாகையாலே ப்ரணயிநிக்குஉவதானோஎன்றது. நசைக்குப் பெருமையேது? என்ன, அருளின் இத்யாதி. ஆழாந்து-தரைப்பட்டு. (அ)

நோயானது உன்னுடைய மெல்லாவியை உள்ளுலர்த்த, செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய் எம்பெருமான் அந்தாமத் தண்துழாயினுள்ளே ஆசையாகிற மஹாக்நியாலே வேவாநின்றாயாகாதே யென்கிறாள்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஆற்றாமையாலே தன் மாளிகையிலே புகுந்து அங்கே எரிகிற விளக்கைக்கண்டு, பகவத் விஸ்லேஷத்தாலே வெதும்புகிறதாகக் கொண்டு, 'என்னைப்போலே நீயும் இங்ஙனே பட்டாயாகாதே' என்கிறாள்.

[நொந்தாரா என்று தொடங்கி] - விடாதே நலிகிற ப்ரேமவ்யாதி, பகவத்து:க்கானுஸந்தாநத்தாலே நைந்திருக்கிற ஆத்மாவை உள்ளுள்ள பசையெல்லாம் அறும்படி உலர்த்த, விச்சேதியாதே உருவச்செல்லுகிற விளக்கே! நானேயன்றிக்கே நீயும், [அளியத்தாய்] - அருமந்த நீ. [செந்தாமரைத் தடங்கணென்று மேலுக்கு] - அப்போதலர்ந்த செந்தாமரைப் பூப்போலேயாய்ப் பெருத்திருக்கிற திருக்கண்களாலே நோக்குகை பூர்வகமாக ஸாந்த்வநம் பண்ணித் திருத்தோளில் தோள்மாலையை வாங்கித் தோளிலேயிட்டு அவன் பண்ணும் ப்ரஸாதத்தை நினைத்து அதில் ஆசையாலே பரிதபிக்கிறாயே.

ப.—அநந்தரம், 'கமநீய விக்ரஹனானவனுடைய போக்யதா விஷயமான ஆசையாலே வெதும்புகிறாயோ?' என்று ஒரு விளக்கை உரைக்கிறாள்.

நந்தா விளக்கமே - ஒன்றாய் வீவற்ற விளக்கே! அளியத்தாய் - இப்படி விலக்ஷணமான, நீயும் - நீயும், நொந்தாரா - ஈடுபட்டிருக்கச் செய்தேயும் ஈடுபடுத்துகிறதால் வயிறுநிறையாத, காதல் நோய் - காதலாகிற நோயானது, மெல்லாவி - (உன்மேனிபோலே) மெல்லிதான ப்ராணனையும், உள் உலர்த்த - உள்ளே உலர்த்தும்படியாக, செம்தாமரை - சிவந்த தாமரைபோன்ற, தட - பெரிய, கண் - கண்களையும், செம் கனி - சிவந்த கனிபோன்ற, வாய் - வாயையுமுடையனான, எம்பெருமான் – என்ஸ்வாமியானவனுடைய, அம் - அழகிய, தண்துழாய்த்தாமம் - திருத்துழாய் மாலையி லுண்டான, ஆசையால் - ஆசையாலே, வேவாயே - பரிதபிக்கிறாயோ? அளியத்தா யென்று - 'அருமந்த' என்னுமாபோலே, நன்மையைக் காட்டுகிறது. இத்தால் – அவன் வடிவழகில் ஆசை தேஜஸ்விகளையும் பரிதபிக்கு மென்கை.

இ.—ஒன்பதாம் பாட்டில், ஆற்றாமையாலே தன் மாளிகையிலே புகுந்து அங்கே எரிகிற விளக்கைக் கண்டு, பகவத்விஸ்லேஷத்தாலே வெதும்புகிறதாகக்கொண்டு 'நீயும் நான்பட்டது பட்டாயாகாதே' என்கிறாள்.

[நொந்தாராக்காதல் இத்யாதி] - இடைவிடாதே உருவநலிகிற ப்ரேமவ்யாதி. ப்ரேமவ்யாதிக்கு உள்ளதொன்றிறே இது. [மெல்லாவி] - விளக்கின் ப்ரக்ருதியின் மார்த்தவம்போலே யிருக்கும் ஆத்மாவு மென்றிருக்கிறாள். அதாகிறது - பகவத்து:க்கானுபவத்தாலே நைந்திருக்கை. [உள் உலர்த்த] - தோற்புரையன்றிக்கே, உள்ளே குருத்து வற்றாக வற்றுவிக்க. [நந்தா விளக்கமே] - முடியவும்பெறாதே உருவச் செல்லுகிற விளக்கே! அநுமாநஸித்தமான நஶ்வரத்வத்தை விஸ்மரித்தாள். [நீயும்] - லோகத்துக்குக் கண்காட்டியான நீயும். [அளியத்தாய்] - அருமந்த நீ பரார்த்தமான உடம்பிலே இந்நோவுபடுவதே! [செந்தாமரை இத்யாதி] - கண்ணாலே குளிரநோக்கி ஸ்மிதபூர்வமாக ஸாந்த்வநம் பண்ணி, அந்த நோக்காலும் அந்த ஸ்மிதத்தாலுமாக என்னை

அநங்யார்ஹமாக்கினவனுடைய அழகிய திருத்துழாய்மாலையி லுண்டான ஆசையாலே. "ஆவாரூ நவ ராஜ" என்று மங்களாஶாஸநம் பண்ணின பிராட்டியை, தாம் வருமளவும் தரித்திருக்க, "பதிஸம்மாநிதா ஸீதா" என்கிறபடியே - தோளின்மாலையை இவள்தோளிலே யிட்டுக் குளிரநோக்கி ஸ்மிதம்பண்ணிக் கொண்டாடினுற்போலே. [ஆசையால் வேவாயே] - ஆசையே நெருப்பாக வேகிருயே. உடம்பே இந்தநமாக வேகிருயே. "க்ஷிதிநேவாக்நிவைவது:" என்னக் கடவதிறே.

௬.—ஒன்பதாம்பாட்டு. அக்கழிக்கு ஒருகரை காணமாட்டாதே மீண்டுவந்து படுக்கையிலே விழுந்தாள்; அங்கு எரிகிற விளக்கைக் கண்டாள்; அது 'உடம்பில் கை வைக்கவொண்ணுதபடி விரஹஜ்வரம் பற்றி எரியாநின்றது' என்று அத்தைப்பார்த்து நீயும் நோவுபட்டாயாகாதே யென்கிருள்.

[நொந்து இத்யாதி] - 'நோவ' என்று புக்கால், நொந்து தலைக்கட்டக்கடவதன்றிக்கே யிருக்கிற ப்ரேமவ்யாதியானது, தொட்டார்மேலே தோஷமாம்படி ம்ருதுவாயிருக்கிற ஆத்மாவைக் குருத்துவற்ருக உலர்த்த. [மெல்லாவி] - பகவத்குணுநுபவத்தாலே நைந்திருக்கை. காற்றுப்படப் பொருதிருக்கை. [நந்தாவிளக்கமே] - ஜ்வாலாபேதாநுமாநம் இருந்து பார்க்கிருளன்றே. ஸந்தாநவிச்சேதமின்றிக்கே உருவ நோவுபடுகிருயாகாதே. [நீயும் அளியத்தாய்]-நாட்டேக்குக் கண்காட்டியான நீ படும்பாடே இது! [அளியத்தாய்]- அருமந்த நீ பரார்த்தமான உடம்பிலே உனக்கு நோவுவருவதே? [செந்தாமரை இத்யாதி] - "பதிஸம்மாநிதா ஸீதா ஹர்த்ருராவேஷ்டிதேக்ஷணா" (பதிஸம்மாநிதா ஸீதா

---

ஒன்பதாம்பாட்டு - நொந்தாரா இத்யாதி. கழியைச்சொன்ன அநந்தரம் விளக்கைச் சொன்னதுக்கு ப்ரஸக்தி யேது? என்ன, அக்கழிக்கு இத்யாதி. அக்கழிக்கு ஒரு கரை காணமாட்டாதே உதிவாடீ:. தஸ்மாத்வஸ்யவாரம் ஷ்டஷ்வேஸஜய-ராவஸதீதிய்வதி:.

'ஆரா' என்றதுக்குத்தாத்பர்யம்-நோவவென்றுபுக்கால்நொந்துதலைக்கட்டக் கடவதன்றிக்கே என்றது. உள்-குருத்துவற்ருக. ஆத்மாவுக்கு மார்தவமேது? என்ன, பகவத்குண இத்யாதி. "தொட்டார்மேலே தோஷம்" இத்யாதியின் விவரணம் - காற்றுப்பட இத்யாதி. நந்தாவிளக்கு - விச்சேதமில்லாத விளக்கென்று ஶப்தார்த்தம். நந்துதல் - சிந்துதல். ஜ்வாலாபேதாநுமாநத்தாலே நாஶம்விதமாயிருக்க, 'நந்தாவிளக்கம்' என்கிறதென்? என்ன, ஜ்வாலாபேத இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஸந்தாநவிச்சேதமின்றிக்கே இருக்கையாலே உருவநோவுபட்டாயாகாதேஎன்கிருளென்று கூட்டுவது; ப்ரமித்துச்சொல்லுகிருளென்று கருத்து 'நந்தா' என்ற இதுக்கு - முடிந்துபிழைக்கப்பெற்றிலையேயென்று ஹாவம். அந்தஸந்தாநம் ஏகாத்மாதிஷ்டிதமென்று தாத்பர்யம். எப்போதுமொக்க உனக்கு இப்படிஇற்றிற்றெரிகையே ஸ்வபாவமாம்படி விளைவதேயென்றபடி. ஜ்வாலாபேதாநுமாநமாவது-ப்ரதிக்ஷணவாஸ்வராவத்திந்நீஜ்வாலா,ப்ரதிக்ஷணஸ்வத்திவிநாஶவதீ; க்ஷதம், வத்ப்ரவயவஸம்யோகஜந்யவத்த்ரவயவவிநாஶிந்த்வாத், ப்ரயஶ்வரக்ஷணஜ்வாலாவத் என்றது. அளியத்தாய் நீயுமென்று அந்வயம் திருவுள்ளம்பற்றி அர்த்தம்-நாட்டேக்குஇத்யாதி. கண்காட்டியான - கண்ணுக்கு விஷயங்களைக் காட்டுகிற. "அளியத்தாய்" என்று முழுச்சொல்லாய், அருமந்த நீ யென்றபடி. அதாவது - எல்லாராலும் க்ருபை பண்ணத்தக்க நீ யென்றபடி. "அளியத்தாய்" என்றத்தை "வேவாயே" என்றத்தோடே கூட்டி ஹாவம்-பரார்த்தமான இத்யாதி. உத்தரார்த்தமாத்ரத்துக்கு ஹாவம்-பதிஸம்மாநிதா இத்யாதி. யத்வா, "அந்தாமத் தண்டுழாய்"

பர்த்தாரமஸிதேக்ஷ்ணு) என்ற பேறு பெறவேணும்' என்றத்தையோ நீயும் ஆசைப்பட்டது? [சேந்தாமரைத் தடங்கண்] - முகத்தைப் பார்த்துக் குளிரநோக்கினபோதைத் திருக்கண்களில் சேவ்வி சோல்லுகிறது. [சேங்கனிவாய்] - இன்சோல் சோல்லுகிறபோதைத் திருவதரத்தில்பழுப்பைச் சோல்லுகிறது. [எம்பெருமான் இத்யாதி] - 'நோக்காலும் ஸ்மிதத்தாலும் என்னை அநந்யார்ஹையாக்கினவனுடைய அழகிய திருத்துழாய்மாலை பெறவேணும்' என்னும் ஆசையாலே. [வேவாயே] - உக்கக்காலுக்கு உளையக்கடவ உன்னுடம்பே நெருப்பாக வேகிறுயாகாதே. (௯)

# பத்தாம்பாட்டு.

வேவாராவேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த
ஓவா திராப்பகல் உன்பாலேவீழ்த்தொழிந்தாய்
மாவாய்பிளந்துமருதிடைபோய் மண்ணளந்த
மூவாமுதல்வா! இனியெம்மைச்சோரேலே.

*ஆ.—(வேவாரா.) அதாஹ்யமான என்னுடைய மெல்லாவி முடிந்தாலும் தவிராதே நின்று வேட்கைநோயானது தஹிக்கும்படி உன்னுடைய குணசேஷ்டிதங்களாலே என்னை ஓவாதே இராப்பகல் உன்பக்கலிலே விழுந்து கிடக்கும்படி பண்ணினுய்; இனி அடியேனைச் சோரவிடாதொழியவேணும் என்கிறுர்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், இப்படி தன்னுடைய அவஸாதமெல்லாந் தீரும்படி வந்துஸம்ஶ்லேஷித்த எம்பெருமானைக் குறித்து, இனி ஒருநாளும் என்னை விடாதொழிய வேணு மென்று அவனை அர்த்திக்கிறுர்.*

*[வேவாராவென்றுதொடங்கி] - சிலநாள் நலிந்து விடக்கடவதன்றிக்கே, மேன்மேலென மிகவும் நலியக்கடவதான விரஹவ்யஸநம் பாரமில்லாத ஆத்மாவை மிகவும் நோவுபடுத்த, நிரந்தரமாக உன்னுடைய குணசேஷ்டிதாதிகளைக் காட்டி என்னை அகப்படுத்திக் கைவிட்டாய். [மாவாய்பிளந்துஎன்று மேலுக்கு] – கேஶியை நிரஸித்து, யமளார்ஜுநங்களின் நடுவே போய், திருவுலகளந்தருளி மஹாபலியால் வந்த ஆபத்தை இந்த்ரனுக்குப் போக்கியருளி ஒன்றுஞ்செய்யாதாரைப்போலே மீளவும் ஜகத்ரக்ஷணத்திலே ஒருப்படுமாபோலே, என்னுடைய ப்ரதிபந்தகத்தைப் போக்கி இம்மஹாவஸாதத்திலே வந்து ஸம்ஶ்லேஷித்து என்னை யுண்டாக்கினவனே!*

---

*என்றத்தைத்கடாக்ஷித்து ஸாவம்-வதிஇத்யாதியாதல்.ஸஜ்ஜாமிதா என்றுய்,தன்திருக்கழுத்தில் மாலையை வாங்கிச் சாத்த, அஸிதேக்ஷணு என்கையாலே "அவளும் ஒருமாலையிட்டாள்போலே காணும்" என்றஆழ்வான் நிர்வஹித்தானிறே. அயோத்யாகாண்டேஷோடஶே"வதிஸம்ரோதிதாஸீதாஹஸ்தாமஸிதேக்ஷணா । குமாரம் ப்ரதிவ்ராஜ ஸீதாந்திஜீர்யஷீ." பழுப்பு - சிவப்பு. "செங்கனிவாய்" என்றதுக்கு ஸாவம்-இன்சோல் இத்யாதி. 'வேவாய்' என்றதுக்கு ஸாவம்-உக்கம் இத்யாதி. உக்கம் - விசிறி. கால் - காற்று: உளைகை - குன்றுகை. நந்தாவிளக்கமே, அளியத்தாயான நீயும், செந்தாமரை இத்யாரப்ய, ஆசையால் - நொந்தாராக் காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த - வேவாயே இத்யந்வய:. உலர்ந்திறே வேவது. (௯)*

ப.—அநந்தரம், இவ்வார்த்தியைக் கண்டு ஸந்நிஹிதனான ஸர்வகாரணபூதனாயுள்ள ஈஶ்வரனை, நீ என்னை நழுவாதொழியவேணுமென்று அபேக்ஷிக்கிறார்.

வேவாரா - வேவித்து த்ருப்தமாகாத, வேட்கை நோய் - ஆசையாகிற நோயானது, மெல் ஆவி - (விரஹத்தாலே) பலஹீநமான ஆத்மாவை, உள் உலர்த்த - குருத்துவற்றாக வற்றுவிக்க, இராப்பகல் - இராப்பகல், ஓவாது - இடைவிடாதே, உன்பாலே - உன் ஸ்வபாவங்களிலே, வீழ்த்தொழிந்தாய் - தாழ்ந்து அகப்படும்படி பண்ணினவனாய், மா - (உன்னைக்கிட்டுவார்க்கு விரோதியான கேஶியாகிற) குதிரையின், வாய்-வாயை, பிளந்து - பிளந்து, மருது - (த்வந்த்வமான) மருது (முறியும்படி), இடை - நடுவே, போய் - போய் (அநர்ஹமாம்படி), மண் - பூமியை, அளந்த - அளந்துகொண்டு, மூவா - அத்தாலே இளகிப்பதித்த, முதல்வா - ஸர்வகாரணபூதனே! இனி - இனி ஒருகாலமும், எம்மை - எங்களை, சோரேல் - நழுவ விடாதொழியவேணும். மூவா முதல்வா என்றது - நித்யயௌவநஸ்வபாவனான உத்பாதகனென்றுமாம். இத்தால் - தம்முடைய அநிஷ்டங்களைப் போக்கி ஸத்தையையுண்டாக்கினபடியை அநுஸந்தித்தாராயிற்று. இதில் ஏகாரம் - தேற்றம்.

இ.—பத்தாம்பாட்டில், அவன் இவ்வவஸாதமெல்லாம் தீரும்படி வந்து முகங்காட்ட, இனி ஒருநாளும் என்னைவிடாதொழியவேணு மென்கிறார்.

[வேவாராவேட்கைநோய்] - ஒருகால் வெந்து சமையக்கடவதன்றிக்கே, "கூழ்நெவாழிவவ-ல்தஃ" என்கிறபடியே வெந்தஇடமே இந்தநமாக தஹியாநிற்கிற காதல். அளவில்லாத வேட்கைநோய். [மெல்லாவி] - பாத்தம்போராத ஆத்மாவை. அதாஹ்யமாயிருப்பது கேவலாக்நியாகிலிறே. [உள் உலர்த்த]-"மஒெஒொ$ஹிஸிவவாடிவழ" கோடரத்தில்பற்றின அக்நிபோலே குருத்துவற்றாக வற்றுவிக்க.[ஓவாதுஇராப்பகல்உன்பாலே வீழ்த்தொழிந்தாய்] - வேவாராவேட்கைநோயாகைக்கு அடியிருக்கிறபடி. இடைவிடாதே ஸர்வகாலமும் உன் குணங்களைக் காட்டி என்னை உன்பக்கலிலே விழவிட்டு நீ கடக்க நின்றாய். விழவிட்டுக்கொண்டா யென்னவுமாம். [மாவாய் இத்யாதி] - கேஶியை நிரஸித்து யமளார்ஜுநங்கள் நடுவே போய் அவ்வாபத்தைத் தப்பி, மஹாபலியால் வந்த ஆபத்தை இந்த்ரனுக்குப்போக்கி, ஒன்றுஞ் செய்யாதாரைப்போலே ஸ்ருஷ்ட்யாதி ஜகத்ரக்ஷணங்களைப் பண்ணினவனே! மூவாதொழிகையாவது - இளகிவருகை. அதாகிறது - ஒன்றுஞ்செய்யாதானாய் ரக்ஷணத்தே ஒருப்படுகை. இத்தாற் சொல்லிற்றாயிற்று-அப்படியே என்னுடைய விரோதிகளைப் போக்கி இம்மஹாவஸாதத்திலே வந்து ஸம்ஶ்லேஷித்து என்னையுண்டாக்கினவனே! என்கிறார். [இனி எம்மைச் சோரேலே] - இதுக்குமுன் நீ போய்நின்று பட்டது போரும், இனி என்னை விடாதொழிய வேணுமென்கிறார்.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவளவஸாதமெல்லாம் தீர வந்துஸம்ஶ்லேஷித்த எம்பெருமானைக்குறித்து, 'இனி ஒருநாளும் என்னை விடாதொழியவேணும்' என்கிறார்.

---

பத்தாம்பாட்டு - வேவாரா இத்யாதி. 'இனியெம்மைச்சோரேலே' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இவளவஸாதம் இத்யாதி.

[வேவாராவேட்கைநோய்] - ‘வேவ’ என்று தோடங்கிஞல், ஒருகால் வேந்து தலைக்கட்டமாட்டாதாயிற்று. அல்லாதவைபோலன்றிக்கே, ப்ரேமவ்யாதிக்கு உள்ள தோன்றுயிற்று இதுதான். [மேல்லாவி] - ஶரீரத்திலுண்டான ஸௌகுமார்யம், ஆத்மாவிலுமுண்டாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. [உள்ளுலர்த்த] - “ம௱ஶோஷ்ணிவபாதபம்” (கூடோக்நிரிவபாதபம்) என்கிறபடியே, உள்ளேபிடித்துப் புறம்பே வர வேவாநின்றதாயிற்று. அதாஹ்மாயிருப்பது கேவலாக்நியாகிலிறே. “மஹாஜ்வலதாநித்யமக்நிநோவாக்நிபர்வத:” (மஹாஜ்வலதாநித்யமக்நிநோவாக்நிபர்வத:)என்று வேந்தவிடமே விறகாக வேவாநின்றது. [ஓவாது இராப்பகல்] - வேவாராவேட்கைநோய்போலே இராப்பகல் ஓவாதோழிகிறபடி. [உன்பாலே வீழ்த்தோழிந்தாய்] - அகப்பட்டார்க்கு மீளவோண்ணுத உன்பக்கலிலே விழவிட்டுக்கோண்டாய் என்னுதல்; [உன்பாலே வீழ்த்து] - உன்பக்கலிலே விழவிட்டுக்கோண்டு. [ஒழிந்தாய்] - முகங்காட்டாதே கடக்கநின்று யென்னுதல். [மாவாய் இத்யாதி] - கேஶிவாயை அநாயாஸேந கிழித்து, யமளார்ஜுநங்களின் நடுவே போய், மஹாபலி அபஹரித்துக்கோண்ட பூமியை எல்லைநடந்து மீட்டுக்

---

வேவஎன்றுதோடங்கிஞல் - தஹிக்கவென்று தொடங்கிஞ லென்றபடி. லோகத்தில் தஹித்துத் தலைக்கட்டவில்லையோ ? என்ன, அல்லாதவை இத்யாதி; அல்லாதவை சரீராந்தமாகையாலே முடியும், இது ஆத்மாந்தமாகையாலே முடியா தென்றபடி. இதுதான் - வெந்து தலைக்கட்டாமைதான். மென்மை சரீரத்துக்கன்றோ உள்ளதென்ன, சரீரத்திலுண்டானஇத்யாதி. அதாவது-ப்ரேமவ்யாதிக்கு தாஹ்யமாமிடத்தில் பாத்தம்போராத மார்த்தவம் இவள தென்றபடி. இது இருபத்து நாலாயிரத்திலே வ்யக்தம். ஆத்மாவுக்கு மார்த்தவம்-பகவத்ப்ராவண்யப்ரயுக்தம். புறம்புஉலர்த்தியன்றோஉள்உலர்த்தவேணும், முதலிலே உள்ளுலர்த்த என்பானென்? என்ன,-“ம௱ஶோஷ்ணி:” இத்யாதி. அயோத்யாகாண்டே ஶ்ருங்கிபேரபுரே பரத: - “ராமேதிஸாயஶோகோஹா தஸ்யைஹாத்மந:” இத்யாதி. “ஶோகஜாமஹதாஹந்தஸாவய திவாவஹ | ஸதாஹாஹிவஸத்வம் ம௱ஶோஷ்ணிவபாதபம்”. “ஶோகாஹ்நோஶயம்”என்ஞநிற்க, இதுகூடுமோ? என்ன, அதாஹ்யமாய்இத்யாதி. ‘வேவாரா’ என்றதுக்கு ப்ரமாணம்-“மஹதா” இத்யாதி.ஸுந்தரகாண்டே பஞ்சத்ரிம்ஶே ஸீதாம்ப்ரதி மாருதி: - “ஸதவாதஸ்நாதாஶோஹவ: வரிதப்யதே | மஹதாஜ்வலதாநித்ய மக்நிநேவாக்நிபர்வத:”. ‘ஹிமவத்பர்வதம்’ என்றாற்போலே, ‘அக்நிபர்வதம்’ என்றொரு பர்வதமுண்டு என்ற உடாலியை வ்யாவர்த்தித்து, அக்நிமய: பர்வத: என்று அபூதோபமா விவக்ஷிதேத்யபிப்ராயேணாஹ - வேந்தவிடமே இத்யாதி. அதாவது - அக்நிபர்வதம் அக்நியிஞலே வேமாபோலே யென்றபடி. வேவாரா வேட்கைநோய்போலே இராப்பகலோவாதொழிகிறபடி இதி - “விரஹக்லேஶாதிஶய: ஸகாலஶூந்யவேளாஹவதீத்யர்த:”. ப்ரேமவ்யாதி அவிச்சிந்நமாக நலிகிறப்போலே, இராவும்பகலும் அவிச்சிந்நமாக நலிகிறதென்றிறே - வேவாரா வேட்கைநோய்போலே இத்யாதி வாக்யத்துக்கு அர்த்தம்; இது ‘ஓவாதிராப்பகலுன்பாலே வீழ்த்தொழிந்தாய்’ :என்ற மூலத்துக்கு அநுகுணமாக யோஜிக்கப்போகாமையாலே, வேவாராவேட்கைநோய்போலே இத்யாதி வாக்யம் - கிஞ்சித்ஸந்திக்தம்; வேவாராவேட்கைநோய்போலே யென்ற வாக்யத்துக்கு - அவிச்சிந்நமாக நோய் வேவிக்கிறப்போலே என்னை இராப்பகலோவாதே உன்பக்கல் விழவிட்டுக்கொண்டாயென்று பொருள்; உரையிலே, ‘இராப்பகல்இடைவிடாதே உன் ஸ்வபாவங்களிலே தாழ்ந்து அகப்படும்படி பண்ணிஞய்’என்றிருக்கையாலே,என்று இப்படி மூலாநுகுணமாக யோஜிக்கில் ஸந்தேஹம் பரிஹரிக்கலாம். முந்தின அர்த்தத்திலே, ‘வீழ்த்தொழிந்தாய்’

கோண்டு,இப்படி உபகாரங்களைப் பண்ணி;பின்னையும் ஒன்றும் செய்யாதானுய்க் குறைப் பட்டு, இவற்றினுடைய ரக்ஷணத்திலே உத்யுக்தனுயிருக்குமவனே! இப்படியெல்லாம் செய்யச்செய்தேயும் ஒன்றுஞ் செய்யாதாரைப்போலே ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணின வனே! [இனியெம்மைச்சோரேலே] - கேஶிதொடக்கமான விரோதிகளைப் போக்கினுற் போலே தம்விரோதியையும் போக்கி அவன் வந்து முகங்காட்டச் சொல்லுகிருராதல்; தம்முடைய ஆபத்தின் கனத்தாலே 'வந்து முகங்காட்டும்' என்னும் விஶ்வாஸத்தாலே சொல்லுகிருளாதல். [இனி] - "[illegible]" (புத்வாகாலமதீதஞ்சமுமோஹபரமாதுர:) என்னுமாபோலே, முன்புள்ள காலம் இழந்ததாகிலும் இனிமேலுள்ள காலம் இவ்வஸ்துவைக் கைவிடாதொழியவேணும்; 'போனகாலத்தைமீட்கவொண்ணுது' என்று அதுக்கு ஶோகிக்கிருர். "[illegible]" (நமேது:கம்ப்ரியாதூரே) - என்னுடைய ப்ரியையானவள் தூரத்திலே இருக்கிருளென்று அதுக்கு ஶோகிக்கிறேனல்லேன்; அது ஒருபயண மெடுத்து விடத் தீரும். "[illegible]" (நமேது:கம்ஹ்ருதேதிவா) - வலிய ரக்ஷஸ்ஸாலே பிரிவுவந்ததென்று அதுக்கு ஶோகிக்கிறேனல்லேன்; அது அவன் தலையை அறுக்கத் தீரும். "[illegible]" (ஏததேவாநுஶோசாமி) - இதுஒன்றுமே எனக்கு ஶோகநிமித்தம்: "[illegible]" (வயோऽஸ்யாஹ்யதிவர்த்ததே) - போனபருவம் இப்பால் மீட்கவொண்ணுதிறே. (கo)

---

என்று - முழுச்சொல்லு. த்விதீயார்த்தத்தில், பிக்கபதம். ஒன்றுஞ்செய்யாதானுய்க் குறைப்பட்டு என்றது - 'மூவா' வின் தாத்பர்யம். மூவா - முடியாத; சோம்பாத என்னுதல். மூவுதல் - நஶித்தல். மூவாமை - நஶியாமை; நித்ய மென்றபடியாதல். 'முதல்வா' என்றதுக்கு ரக்ஷகனுக அர்த்தம்- இவற்றினுடைய ரக்ஷணத்திலே இத்யாதி. ஸ்ரஷ்டாவாக அர்த்தாந்தரம் - இப்படியெல்லாம் இத்யாதி. 'இனியெம்மைச்சோரேல்' என்றது - எந்த அவஸ்தையைப்பற்றச் சொல்லுகிறதென்ன, இரண்டுவகையாக அருளிச்செய்கிருர் - கேஶி இத்யாதியாலும்,தம்முடைய இத்யாதியாலும். வந்து முகங்காட்டச்சொல்லுகிருரென்று - முந்தின அர்த்தம்; 'ஸமீபஸ்தனுயிருந்தே முகங்காட்டுகிறிலன், அவஶ்யம்முகங்காட்டும்' என்னும் விஶ்வாஸத்தாலே யென்று - இரண்டாமர்த்தம். "இனி" என்றதுக்குத்தாத்பர்யம் - [illegible] இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே மால்யவதி ராம: "[illegible] | [illegible] | [illegible]." 'முன்புள்ளகாலமிழந்ததாகிலும்' என்றத்தால் பலிதமாஹ - போனகாலத்தை இத்யாதி. அப்படி சோகித்த பேருண்டோ? என்ன, [illegible] இத்யாதி. யுத்தகாண்டே பஞ்சமே ஸமுத்ரதீரே லக்ஷ்மணம்ப்ரதி ராம: - "[illegible] | [illegible]." என்னுடைய ப்ரியையானவள் இத்யாதி-"[illegible]" என்று - போனபருவத்தை மீட்கையினுடைய துஶ்ஶகத்வஞ் சொல்லுகையாலே, கீழ்ச்சொன்னவற்றினுடைய ஸுஶகத்வம் த்யோதிதமிறே. மாவாய் இத்யாரப்ய, முதல்வா - வேவாரா இத்யாரப்ய, வீழ்த்தொழிந்தாய் - இனி எம்மைச்சோரேலே இத்யந்வய:. உள்உலர்ந்த - உள்ளே உலர்த்தும்படியாக. (கo)

## பதினோராம் பாட்டு.

சோராதவெப்பொருட்கும் ஆதியாஞ்சோதிக்கே
ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன்
ஓராயிரஞ்சொன்ன அவற்றுளிவைபத்தும்
சோரார்விடார்கண்டீர் வைகுந்தம்திண்ணனவே.

ஆ.—(சோராத.) இப்படி எம்பெருமானைப் பிரிந்த வ்யஸநத்தாலே முடியப்புகுகிற தம்மை உஜ்ஜீவிப்பிக்கைக்காக வந்து தோற்றியருளின எம்பெருமானைக் கண்டு தாம் உஜ்ஜீவித்து, ஸ்வோஜ்ஜீவநத்தாலே எம்பெருமான் ஸர்வேஶ்வரத்வம் அவிகலமானபடியைக கண்டு ப்ரீதராய், 'அடியேன் இவனுடைய ஸர்வேஶ்வரத்வம் அவிகலமாகப் பெற்றேனாகாதே' என்று உகந்துகொண்டு எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வத்தை அநுபவித்து, இப்படி ஸர்வேஶ்வரனாயிருந்த எம்பெருமான்பக்க லுள்ள நிரவதிகமான ஆசையாலே சொன்ன இத்திருவாய்மொழியை விடாதார் ஒருநாளும் எம்பெருமானைப் பிரியார்; இது நிஶ்சித மென்கிறார்.

ஒ—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் திருநாட்டிலே நித்யவாஸம் பண்ணப் பெறுவார்; இது நிஶ்சித மென்கிறார்.

[சோராத என்று தொடங்கி] - ஆழ்வாரோடே ஸம்ஶ்லேஷித்து அவரை உளராக்குகையாலே ஒன்றொழியாமே ஸகலபதார்த்தத்துக்கும் ஈஶ்வரனானவன் திருவடிகளிலே லோகத்தில் அந்யபரமான பதார்த்தங்களெல்லாம் தம்மைப்போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறனவாக ப்ரமிக்கைக் கீடான நிரவதிகபக்தியை யுடையரான ஆழ்வார். ஓராயிரம் – விலக்ஷணமா யிருக்கை.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலம் பரமபதப்ராப்தி யென்று அருளிச்செய்கிறார்.

சோராத - ஒன்றுஞ் சோராதபடி, எப்பொருட்கும்-எல்லாப் பொருளுக்கும், ஆதியாம் - காரணபூதனான, சோதிக்கே - பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யனுக்கே, ஆராத - (ஒருகாலும்) த்ருப்திபிறவாத, காதல் - அபிநிவேஶத்தையுடைய, குருகூர்ச் சடகோபன்- ஆழ்வார், ஓர் ஆயிரம் - அத்விதீயமான ஆயிரமாக, சொன்ன அவற்றுள்•- சொன்னவற்றுக்குள்ளே, இவை பத்தும் - (அதிப்ரேமப்ரகாசகமான) இவை பத்தையும், சோரார் - நழுவவில்லாதவர்கள், வைகுந்தம் - பரமபதத்தை, திண்ணன - அறுதியாக, விடார்கண்டீர் - விடாதவர்கள்கிடீர். இது - கலிவிருத்தம்; நாலடித்தாழிசையுமாம்.

இ.—நிகமத்தில், இப்பத்தையும் அப்யஸிப்பார் பரமபதத்திலே நித்யவாஸம் பண்ணப்பெறுவர்; இது நிஶ்சிதம் என்கிறார்.

[சோராத இத்யாதி] - இப்படி இவரோடே கலந்து இவரை உளராக்குகையாலே ஒன்றொழியாதபடி ஸகலபதார்த்தங்களுக்கும் ஈஶ்வரனுமாய், சோதி - மூக மலர்த்தியும் தன்னதாம்படி யிருந்தான். இவரொருவரையுஞ் சோரவிட்டானாகில், ஸர்வ

ஶேஷியாகமாட்டானே. [சோதிக்கே] - நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தை யுடையனென்றுமாம். ஸர்வ ரக்ஷகத்வமும் நிலைநின்றது, வடிவழகும் புதுக்கணித்தது. [ஆராத இத்யாதி] - லோகத்தில் ஸகலபதார்த்தங்களும் தம்மைப்போலே அவனைப் பிரிந்து நோவுபடுகிறனவாகக் கொண்டு ப்ரமிக்கும்படியான நிரவதிகபக்தியையுடையவர். நிரூபகதர்மம் இவர்க்குக் காதலாயிற்று. தம்படி சொல்லிலும் தாமே சொல்லுமத்தனை. [ஓராயிரம்] - அபிநிவேஶத்தோடே அருளிச் செய்த தாகையாலே விலக்ஷணமான ஆயிரம். [அவற்றுளிவை பத்துஞ் சோரார்] - அவற்றிலும் விலக்ஷணமான இவை பத்தையுஞ் சோராதவர்கள். [விடார்கண்டீர் வைகுந்தம்] - எல்லாரும் இழந்து நோவுபடுகிறனவாக அநுஸந்திக்க வேண்டும் தேசத்தை விட்டு, ஸகலரும் பகவல்லாபத்தாலே களித்து வர்த்திக்கும் தேசத்திலே நித்யவாஸம் பண்ணப்பெறுவர். கண்டீரென்று - கையெடுத்துக் கூப்பிடுகிறார். [திண்ணனவே]-ஸுநிஶ்சிதம்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார், கண்ணால்கண்டதெல்லாம் பகவதலாபத்தாலே நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே யிருந்து நோவுபடாதே, கண்டாரெல்லாம் பகவல்லாபத்தாலே களித்துவர்த்திக்கும் நாட்டிலே புகப்பெறுவ ரென்கிறார்.

[சோராத எப்பொருட்குமாதியாஞ்சோதிக்கே] - இவ்வளவிலே வந்து இவரோடே கலந்து இவரை உளராக்குகையாலே, ஒன்றொழியாதபடி ஸகலபதார்த்தங்களுக்கும் ஈஶ்வரனுமாய்; இவரோடே வந்துகலந்து அத்தாலே உஜ்ஜ்வலனுமாயிருந்தான். இவர்க்கு வந்து முகங்காட்டுவதற்குமுன்பு ஸர்வேஶ்வரத்வமும் அழிந்ததுபோலே கிடந்தது; இவரொருத்தரையும் சோரக்கொடுக்கவே ஸர்வேஶ்வரத்வம் அழியுமிறே. இவரிழவு தீர வந்து முகங்காட்டினபின்பு எல்லாப்பொருட்கும் நிர்வாஹகனானான். [சோதிக்கே] - பேறிழவுகள் இவரதன்றிக்கே, 'தன்னது' என்னுமிடம் வடிவில் புகரிலே தோற்றுகின்றது. "க்ருதக்ருத்யஃ" (க்ருதக்ருத்யஃ) என்னும்படியானான். [ஆராதகாதல்] - இத்திருவாய்மொழியால் சொல்லிற்றாயிற்று-கண்ணால்கண்ட பதார்த்தங்களுமெல்லாம் பகவதலாபத்தாலே தம்மைப்போலே நோவுபடுகிறனவாகக்கொண்டு, அவற்றுக்குமாகத் தாம் நோவுபடும்படியான இவருடைய அபிநிவேசமாயிற்று. [காதல்குருகூர்ச்சடகோபன்] - காதலையிட்டாயிற்று இவரை நிரூபிப்பது. தம்படிசொல்லும்போதும் தாமே சொல்லவேணுமே.

---

நிகமம் - சோராத இத்யாதி. 'இவைபத்தும் சோரார் விடார்கண்டீர் வைகுந்தம்' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி கற்றார் இத்யாதி. இந்த அவதாரிகை - "இனியெம்மைச்சோரேல்" என்கிறவிடத்தில் த்விதீயார்த்தாபிப்ராயேண. இப்பத்தும் கற்றார்க்கு ஆழ்வாருடைய ஹாவவ்ருத்தி யுண்டாமென்று தாத்பர்யம்.

சோராதஎப்பொருட்கும் - ஒன்றுங்குறையாத எல்லாப்பதார்த்தங்களுக்கும். ஆதியாம் - ஈஶ்வரனும். இவரொருத்தருக்கு முகங்காட்டாவிடில் ஸர்வேஶ்வரத்வம் அழியுமோ? என்ன, இவர்க்குவந்து இத்யாதி. அது எப்படி? என்ன, இவரொருத்தரையும் இத்யாதி. இவரோடேவந்து கலந்துஅத்தாலே உஜ்ஜ்வலனாயிருந்தத்தால் பலிதமாஹ - பேறிழவுகள் இத்யாதி. அவன் அப்படியிருக்குமோ? என்ன, க்ருதக்ருத்ய இத்யாதி. ஶ்ரீஸங்க்ஷேபே "ஜஹிஷித்வா ஸமஜ்ஞாயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் | க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ". 'ஆராத காதல்' என்று இப்போது எதுக்காகச் சொல்லுகிறார்? என்ன, இத்திருவாய்மொழியால் இத்யாதி. ஸ்வப்ரஶம்ஸை பண்ணலாமோ? என்ன, தம்படி இத்யாதி. இது - ஆராதவின் தாத்பர்யம். அவர்

[சொன்ன]-இக்காதலோடேயாயிற்று ஆயிரம் அருளிச்செய்தது. [அவற்றுளிவைபத்தும்]-அல்லாதவை ஒருதலையாக, இது ஒருதலையாம்படி அக்காதலை முக்தகண்டமாகச் சொன்ன திருவாய்மொழியாயிற்று இது. [இவைபத்தும் சோரார் விடார்கண்டீர் வைகுந்தம்] - இங்கேயிருந்து, கண்ணுக்கிலக்கான பதார்த்தங்களடங்கலும் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாக அநுஸந்திக்குமவர்கள், இவ்விருப்பைவிட்டு, கண்ணால்கண்டாரடங்கலும் பகவல்லாபத்தாலே களிக்கும் நித்யவிபூதியை விடாதே நித்யாநுபவம்பண்ணப் பெறுவர்கள். கண்டீரென்று - கையெடுத்துக் கூப்பிடுகிறார். [திண்ணனவே] - இது ஸுநிஶ்சிதம். இவ்வருகே சிலரைப்பற்றிச் சொல்லிற்றோரர்த்தமாகிலிறே ஸம்ஶயவிபர்யயங்களுள்ளது, பகவத்ப்ரபாவத்தைப்பற்றிச் சொன்னதாகையாலே இதுதனக்கு எங்கேனும் ஶபதம்பண்ணலாம். முதற்பாட்டிலே தொடங்கி, நாரைதொடக்கமாக, அன்றில் கடல் காற்று மேகம் சந்த்ரன் இருள் கழி விளக்கு இப்பதார்த்தங்களைக் குறித்து அநுஶோகித்து மிகவுந்தளர்ந்தவளவிலே அவன் வந்து முகங்காட்ட 'இனி என்னைவிடாதொழியவேணும்' என்று, இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பலத்தைச் சொல்லித் தலைக்கட்டினார். (கக)

---

ஹ்ருதிஸ்வஹாவம்அவர்க்கே தெரியுமதொழிய,பிறர்க்குத்தெரியாதிறே; இவருடையஆகாரங்கள் ஓரிடத்திலும் காணுமையாலே யென்றபடி. ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன் சொன்ன ஓராயிரம் என்று அந்வயித்து அர்த்தம் - இக்காதலோடே இத்யாதி. ''இவை'' என்றதுக்கு ஹாவம் - அல்லாதவை இத்யாதி. சோரார் - விடாதவர்கள்; அநுஸந்திக்குமவர்க ளென்றபடி. அநுஸந்திக்குமவர்களாவது - அநுஸந்திக்க யோக்யரானவர்க ளென்றபடி. "விடார்" என்ன அமைந்திருக்க, 'கண்டீர்' என்றதின் தாத்பர்யம் - கையெடுத்துக்கூப்பிடுகிறார் என்றது. அப்யவஹிதமாத்ரத்திலே இது கூடுமோ? என்ன, இவ்வருகே சிலரை இத்யாதி. சோராத இத்யாரப்ய, இவைபத்தும் சோரார் வைகுந்தம் விடார்கண்டீர்; இது திண்ணனவே இத்யந்வய꞉. (கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:— [illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:— [illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

வாயுந்திருமால்மறையநிற்க ஆற்றாமை
போய்விஞ்சிமிக்கபுலம்புதலாய்—ஆய
அறியாதவற்றோடணைந்தழுதமாறன்
செறிவாரைநோக்கும்திணிந்து.

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.

## இரண்டாந்திருவாய்மொழி—திண்ணன்வீடு: ப்ரவேஶம்.

**ஆ.**—(திண்ணன்வீடு.) இப்படி ப்ரஸ்துதமான ஸர்வேஶ்வரத்வத்தைத் தம்முடைய ப்ரீத்யதிஶயத்தாலே ஸஹேதுகமாக உபபாதிக்கிறார்.

ஒ.—இரண்டாந் திருவாய்மொழியில், கீழ் தமக்கு வந்த வ்யஸநாதிஶயத்தையும் மறக்கும்படி வந்த ப்ரீதி ப்ரகர்ஷத்தையும் அநுபவித்து விஸ்மிதராயுள்ள ஆழ்வார், 'இப்படி ப்ரீதராகைக்குக் காரணம் - எம்பெருமான் நிரதிஶய போக்யனாகையால்' என்றும், 'இந்தபோக்யதைக்கு ஹேது - ஸ்ரஷ்ட்ருத்வ வாத்ஸல்யப்ரமுகமான ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸர்வேஶ்வரனாகை' என்றும் இம்முகத்தாலே அவனுடைய ஈஶ்வரத்வத்தையும் அநுஸந்தித்து அத்தை உபபாதிக்கிறார்.

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், கீழ்உக்தமான போக்யத்வத்தினுடைய நிரதிஶயத்வாபாதகமாய், "மாவாய்பிளந்து" என்று தொடங்கிக் கீழ் ப்ரக்ருதமான ஸௌலப்யத்துக்கும் ஸ்வாமித்வத்துக்கும் ப்ரகாஶகமான மநுஷ்யத்வேபரத்வத்துக்கு உபபாதகமான அவதார தஶையிலும் அவனுடைய ஸர்வநிர்வாஹகத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்தி ஹேதுத்வத்தையும், ஸர்வாதிகத்வத்தையும், ஸர்வப்ரகார ஸமாராத்யதையையும், ஆதிக்யஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமான அர்ணவஶாயித்வத்தையும், அகடித கடநா ஸாமர்த்யத்தையும், ஸர்வப்ரகாரரக்ஷகத்வத்தையும், ஜகஜ்ஜந்மாதி ஹேதுத்வத்தையும், ஸர்வதேவதா ஸமாஶ்ரயணீயத்வத்தையும் அருளிச்செய்து, ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வஸுலபனான ஈஶ்வரனுடைய போக்யத்வவர்த்தகமான உத்துங்கலலிதத்வத்தை உபபாதிக்கிறார்.

இ.—இரண்டாந் திருவாய்மொழியில், கீழ் தமக்குப்பிறந்த ஆற்றாமையை மறக்கும்படி முகங்கொடுக்கையால் வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தை அநுபவித்து, 'இதுக்குஅடி - அவனுடைய நிரதிஶய போக்யதை' என்றும், 'அதுக்குஅடி - ஸ்ரஷ்ட்ருத்வ வாத்ஸல்ய ப்ரமுக ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாகை; அதுக்குஅடி - ஸர்வேஶ்வரத்வம்' என்றும், இம்முகத்தாலே ப்ராஸங்கிகமாகப் பரத்வத்தை அநுஸந்தித்து அத்தை உபபாதிக்கிறார். கீழே, "சோராதவெப்பொருட்கு மாதியாஞ்சோதிக்கு" என்று ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தைத் தெரியப் பிறர்க்கு உபதேசிக்கிறாராகவுமாம். 'இப்பரத்வம் முதல்திருவாய்மொழியிலே சொல்லிற்றன்றோ?' என்னில்; இவர்தாம் ஒருகால் அநுபவித்த குணத்தையே அபூர்வமாக அநுபவிக்கவல்ல அபிநிவேஶத்தையுடையவர்; அவனும் அநுபூத குணங்களையே அபூர்வமாக அநுபவிப்பிக்க வல்லன்; அதுவேயன்றி: அங்கு - தாம் அநுபவித்தார்; இங்கு - பிறர்க்கு உபதேசிக்கிறார். அங்கு - அந்வயத்தாலே உபபாதித்தார்; இங்கு- அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் உபபாதிக்கிறார். அங்கு - ஶ்ருதிப்ரக்ரியையாலே; இங்கு - இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலே.

ஈடு.—கீழில் திருவாய்மொழியில் இவர்க்குப் பிறந்த ஆற்றாமை பேச்சுக்கு நிலமன்றிறே; 'கடல் வேதும்பினால் விளாவ நீரில்லை' என்னுமாபோலே. 'ஆற்றாமையோடே முடிந்துபோமித்தனை' என்றிருந்தார்; அநந்தரம் அவன் வந்து முகங்காட்டினவாறே ஆற்றாமை புக்கவிடங் கண்டிலர்; 'இதுக்கு அடி என்?' என்று பார்த்து ஆராய்ந்தவாறே, இதரவிஷயங்களினுடைய லாபாலாபத்தளவல்லாத விஷயவைலக்ஷண்யமாயிருந்தது; பிரிந்தபோது தன்னையொழிய வேறொன்று தோற்றாதபடியாய், கலந்தபோதும் தன்னையொழிய மற்றொன்று தோற்றாதபடியான விஷயவைலக்ஷண்யமா யிருந்தது; 'இதுக்கு அடி என்?' என்று பார்த்தார், ஸமஸ்தகல்யாண குணாத்மகனாகையாலேயா யிருந்தது; 'இதுதனக்கு அடி என்?' என்று பார்த்தவாறே, ஸர்வேஶ்வரனாகையாலேயா யிருந்தது; "உயர்வறவுயர்நலமுடையவன்" என்றால், "அயர்வறுமமரர்களதிபதி" என்றிறே தோற்றுவது; ஆக, இங்ஙனே ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தை அநுஸந்தித்து; அத்தை அருளிச்செய்கிறார். 'கீழே 'மூவாமுதல்வா' என்று காரணத்வம் ப்ரஸ்துதமாகையாலே, 'அந்தக்காரணத்வத்தை உபபாதிக்கிறார்' என்று பணிக்கும் பிள்ளான். முதல் திருவாய்மொழியிலுஞ் சொல்லிற்றில்லையோ ஈஶ்வரத்வம்? என்னில்; —'ஒருகால் சொன்னோம்' என்று கைவாங்கியிருக்கவல்லரல்லர் இவர்; ஒருகால் சொல்லிற்றென்று கைவாங்கலாம் விஷயமன்று அது. இனித்தான் பகவத்விஷயத்தில் புநருக்தி, தோஷாய

---

திண்ணன்வீடு ப்ரவேஶே, 'கீழோடு இதுக்கு, ப்ராஸங்கிக ஸங்கதியும், ஸாக்ஷாத் ஸங்கதியுமென்று த்வேதா ஸங்கதி' என்று திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் ப்ராஸங்கிக ஸங்கதி மாஹ - கீழில் திருவாய்மொழியில் இத்யாதி - ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தை அநுஸந்தித்து அத்தை அருளிச்செய்கிறார் என்னுமளவும். கீழே "மூவாமுதல்வா" இத்யாதி வாக்யத்தாலே ஸாக்ஷாத்ஸங்கதி:. ப்ராவஸங்கிகஶ்ச என்றதுக்கு ஹாவம் - ஈஶ்வரன் ஸாத்ம்ய போகப்ரதனாகையாலே, முந்துறத் தன்னுடைய ஈஶ்வரத்வத்தை அநுபவிப்பித்துப் பின்னை ஊனில்வாழுயிரிலே தன்னை அநுபவிப்பிக்கிறானென்று. வேதும்பினால் - உஷ்ணமானால். இதுக்கடி - அவன் பிரிந்தபோது 'முடிந்துபோமித்தனை' என்றிருக்கையும், அவன் முகங்காட்டினால் ஆற்றாமை தெரியாமையுமாகிற இதுக்கு அடி யென்றபடி. கீழ் வாக்ய விவரணம் - பிரிந்தபோது இத்யாதி: இதுக்குஅடி - இந்த வைலக்ஷண்யத்துக்கு அடி. வைலக்ஷண்யத்துக்கு அடி குணங்க ளென்றது - "ஸமஸ்தகல்யாணகுணாத்மகோ ஸௌ ஸ்வஶக்தி லேஶாத் த்ருதபூதஸர்க:" என்றத்தைப் பற்ற. இதுதனக்கு அடி - ஸமஸ்த கல்யாணகுணாத்மகத்வத்துக்கு அடி. ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வத்துக்கு அடி ஸர்வேஶ்வரத்வமென்று தோற்றுமோ? என்ன, உயர்வற இத்யாதி. ('ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ' இத்யாதிகளாலே பெருமாள் குணங்களைச் சொல்லிக்கொடுவந்து, கீழ்சொன்ன குணங்களுக்கு ஹேதுவாக, "ஸர்வேஶ்வரோ ஸ்வதந்த்ர:" இத்யாதியாலே ஈஶ்வரத்வஞ் சொல்லிற்றிறே" என்று அருளிச்செய்வர். "ஈஶ்வரத்வத்தை யநுஸந்தித்து" என்ற அநந்தரம் - பரார்த்தாஸஹிஷ்ணுவாகையாலே, தேவதாந்தரபரத்வ புத்தியாலே அநர்த்தப்படுகிற ஸம்ஸாரிகளுக்கு அத்தை நிவர்த்திப்பிக்கைக்காக 'பகவத்பரத்வத்தை உபதேஶிப்போம்' என்று பார்த்து 'அத்தை அருளிச்செய்கிறார்' என்று சிலகூட்டி நிர்வஹிப்பது. ஸாக்ஷாத்ஸங்கதிமாஹ - கீழே மூவா இத்யாதி. கீழ்வாக்யத்வயத்தாலும் ஶங்காபரிஹாரத்வயம் அருளிச்செய்து, த்ருதீயபரிஹார மாஹ - இனித்தான் இத்யாதி. "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:கித: | உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி:" என்றதில் பகவத்பரத்வ ப்ரதிஜ்ஞாப்ரமாகையாலே புநருக்தி தோஷமில்லை. 'ஒருகால் சொன்னோமென்று' இத்யாதி வாக்யத்வயத்தையும்

வாகாது; ஒருகுணத்தையே எல்லாக்காலமும் அநுபவிக்கவல்லா ரோருவ ரிவர்; ஒரு குணந்தன்னையே ‘இதுக்குமுன்புஅநுபவிப்பித்தது இக்குணம்’என்றுதோற்ருதபடி க்ஷணந்தோறும் புதுமை பிறப்பித்து அநுபவிப்பிக்கவல்லானொருவன்அவன்; பயிலாநிற்கச்செய்தேயிறே பண்டேஇவரைக்கண்டறிவதெவ்வூரில் யாமேன்பது; ஆகையிறே, ஏகவிஷயமே நித்ய ப்ராப்யமாகிறது; இவர்தாமும்,* “எப்போழுதும் நாள் திங்களாண்டூழி யூழிதோறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதம்” என்னுநின்ருர். ஆனாலும், இதுக்கு வாசியுண்டு; முதல்திருவாய்மொழியிலே - பரத்வஞ் சொல்லாநிற்கச்செய்தே, அது ஸ்வாநுபவமாயிருக்கும்; அந்தப்பரத்வந்தன்னை எல்லார்க்கும் அநுபவிக்கலாம்படி பிறர் நெஞ்சிலே படுத்துகிருராகையால் பரோபதேஶத்தாலே பரத்வாநுபவம் பண்ணுகிருர்; அங்கு - அந்வயமுகத்தாலே பரத்வஞ் சொன்னுர்; அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் பரத்வஞ்சொல்லுகிருர் இங்கு; அங்கு - ஶ்ருதிச்சாயையாலே சொன்னுர்; இங்கு - இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே சொல்லுகிருர்; அங்கு-பரத்வத்திலே பரத்வம்; இங்கு-அவதாரத்திலே பரத்வம்.

## முதற்பாட்டு.

திண்ணன்வீடு முதல்முழுதுமாய்
எண்ணின்மீதியன் எம்பெருமான்
மண்ணும்விண்ணு மெல்லாமுடனுண்ட நங்
கண்ணன்கண்ணல்லது இல்லையோர்கண்ணே.

*அடைவே விவரிக்கிருர் - ஒருகுணத்தையே இத்யாதி வாக்யத்வயத்தாலே. இந்த வாக்யத்வயமும் - அந்த வாக்யத்வயத்துக்கு விவரணமா யிருக்கச் செய்தே, அதிற் சொன்ன அர்த்தத்வயத்திலேயும் க்ரமேண ஹேதுபரமா யிருக்கிறது. யத்வா, உபதேஷ்ட்ருஸ்வஹாவத்தாலும், உபதேஶ்யஸ்வஹாவத்தாலும் அநுஹாவ்யஸ்வஹாவத்தாலும், அநுபவித்ருஸ்வஹாவத்தாலும், அநுஹாவயித்ருஸ்வஹாவத்தாலும் புநருக்தி தோஷாய அன்று என்கிருர் - ஒருகால்சொன்னோம் என்று தொடங்கி க்ரமேண அஞ்சுவாக்யத்தாலே. அப்படி க்ஷணந்தோறும் புதியதா யிருக்குமோ? என்ன, பயிலாநிற்க இத்யாதி. பயிலா நிற்கச்செய்தே - பரிசயம்பண்ணுநிற்கச் செய்தே. பண்டு இத்யாதி - திருமொழி - (அ,க,க.) பண்டிவரைக் கண்டறிந்தது எவ்வூரிலே நா மென்கை. அவ்விஷயம் இவர்க்கும் அப்படி யிருக்குமோ? என்ன, இவர்தாமும் இத்யாதி. எப்போழுதும் இத்யாதி. எல்லா க்ஷணம், எல்லாநாள், எல்லாமாஸம், எல்லாவாண்டு, எவ்வகைப்பட்ட ஊழியூழிதோறுமான அவ்வோஅகாலங்களிலே எனக்கு அத்ருப்திகரமான அம்ருதமானவனே யென்கை. ஆக, கீழ் பௌநருக்த்யத்தை அப்யுபகம்யவாதத்தாலே பரிஹரித்து, அநப்யுபகம்யவாதத்தாலே பரிஹரிக்கிருர் - ஆனாலும் இத்யாதி. இதுக்கு - இத்திருவாய்மொழிக்கு. ஆனாலும் - ஈஶ்வரத்வஞ் சொன்னாலும். வாசியுண்டு - விசேஷமுண்டு. வாசியை நாலுவிதமாகக் காட்டுகிருர் - முதல் திருவாய்மொழியில் இத்யாதி. அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் என்றது - “நங்கண்ணன் கண்ணல்லதில்லையோர் கண்ணே” என்றத்தைப் பற்ற. ஶ்ருதிச்சாயை - ஸாமாநாதிகரண்யம். இதிஹாஸபுராண ப்ரக்ரியை - வையதிகரண்யம். இதிஹாஸபுராண ப்ரக்ரியையாலே என்றது - “க்ருஷ்ண வஹ்நெ ... [illegible]”, “மாபாவம் விட வரற்குப் பிச்சைபெய்” இத்யாதியைப்பற்ற. பரத்வத்திலே பரத்வம் என்றது-“அயர்வறுமமரர்களதிபதி” என்றத்தைப்பற்ற. அவதாரத்திலே பரத்வம் என்றது - “கண்ணன்” என்றத்தைப்பற்ற.*

* திருவாய்மொழி - உ - ரு - ச.

**ஆ.**—மோக்ஷாத்யசேஷபுருஷார்த்தப்ரதனாய், வாங்மநஸாபரிச்சேத்ய கல்யாணகுணங்களை யுடையனாய், எனக்கு ஸ்வாமியாய், ஸர்வாத்ம ஸம்ரக்ஷகனாயிருந்த வண்துவரைப்பெருமானே இஜ்ஜகத்தில் ஈஸ்வரன்; மற்றுஈஸ்வரனில்லை; இதில் ஒரு ஸம்ஸய மில்லை யென்கிறார்.

**ஒ.**—முதற்பாட்டில், இஜ்ஜகத்துக்கு க்ருஷ்ணனே ஈஸ்வர னென்கிறார்.

[திண்ணம்] - த்ருடம். [வீடு முதல் முழுதுமாய்] - மோக்ஷப்ரப்ருத்யசேஷ புருஷார்த்த ப்ரதனாய்; [திண்ணன் வீடு முதல் முழுதுமாய்] - ஒருநாளும் அழியாத பரமபதம் தொடக்கமான அசேஷவிபூதியையுடையனா யென்றுமாம். [எண்ணின் என்று தொடங்கி]-அஸங்க்யேயகல்யாணகுணங்களையுமுடையனாய், ப்ரளயாபத்து வந்தபோது பூமி தொடக்கமான ஸகலலோகத்தையும் தரம்பாராதே ஒக்கத் திருவயிற்றிலே வைத்துக் கொண்ட நம்முடைய க்ருஷ்ணனே இஜ்ஜகத்துக்கு த்ருஷ்டி. நங்கண்ணனென்று - ரக்ஷகத்வ ப்ரஸித்தியைச் சொல்லுகிறது.*

**ப.**—முதற்பாட்டில், க்ருஷ்ணனே ஸர்வநிர்வாஹக னென்கிறார்.

திண் - திண்மையையுடைத்தாய், நல்வீடு - விலக்ஷணமானமோக்ஷம், முதல் - முதல், முழுதுமாய் - ஸகலப்ரயோஜநநிர்வாஹகனாய், எண்ணின்மீதியன் - நினைவுக்கு அவ்வருகான அபரிச்சிந்நஸ்வபாவனாய்,எம்பெருமான்-(இம்மேன்மையைக்காட்டி என்னை அடிமைகொண்ட) ஸ்வாமியாய், மண்ணும் - பூமியும், விண்ணும்-ஊர்த்வலோகமும், எல்லாம் - ஒன்றொழியாமல், உடன் -(தாரதம்யமில்லாதபடி) ஏகோத்யோகத்திலே, உண்ட- வயிற்றிலே வைத்துநோக்கி, நம்கண்ணன்-க்ருஷ்ணனாய் அவதரித்து நமக்கே தன்னைத் தந்த ஸுலபனே, கண் - ஜகத்துக்கு நிர்வாஹகன்; அல்லது - அல்லது, ஓர்கண் - ஒரு நிர்வாஹகவஸ்து, இல்லை-இல்லை. கண் - களைகண். திண்ணனென்றது - நிஸ்சித மென்றுமாம்.

**இ.**—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியில் சொல்லுகிற பரத்வத்தை ஸங்க்ரஹேண சொல்லுகிறார். ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ப்ரளயாபத்ஸகனான க்ருஷ்ணனே ஈஸ்வர னென்கிறார்.

[திண்ணன்] - த்ருடம். [வீடுமுதல்முழுதுமாய்] - மோக்ஷப்ரப்ருத் யசேஷ புருஷார்த்த ப்ரதனாய். [திண்ணன் வீடுமுதல்முழுதுமாய்] - ஒருநாளும் அழியாத பரமபதம் முதலான ஸகலலோகங்களையுமுடையனா யென்றுமாம். [எண்ணின்மீதியன்] - எண்ணுக்கு மேற்பட்டான். அஸங்க்யேயகல்யாணகுணகணன். கீழ் - புருஷார்த்த ப்ரதத்வமாகிற ஔதார்யகுணபரமானபோது அநுக்தகுணங்களைச் சொல்லிற்றாகக்கடவது. [எம்பெருமான்] - குணவிபூதிகளைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவன் [மண்ணும் இத்யாதி] - பூம்யந்தரிக்ஷாதிகளைப் பிரிகதிர்படாமே தரம்பாராதே ஒருகாலே திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த. [நங்கண்ணனென்று] - "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய: । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதம் இதம் விஸ்வம் சராசரம்" என்கிற ப்ரமாண ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. நம்மென்று - அத்தைத் தமக்கு ப்ரகாஸிப்பித்தவன். [கண்] - த்ருஷ்டி; நிர்வாஹகன். "களைகண்" என்று - நிர்வாஹகரைச சொல்லக்கடவதிறே. [அல்லதில்லையோர்கண்ணே] - வேறொரு த்ருஷ்டி யில்லை. அர்த்தமின்றிக்கே,

* இப்பாட்டின் பிச்சவ்யாக்யாநம் கிடைக்கவில்லை.

"பீலிக்கண், மாலைக்கண்" என்னுமாபோலே உக்திமாத்ரமாக இருப்பது மொன்றில்லை. 'தண்ணன் கண்' என்றது - அந்வயத்தாலே; 'அல்லதில்லையோர்கண்' என்றது - வ்யதிரேகத்தாலே. இல்லை யோர்கண் - இது திண்ணம்.

ஈடு.—முதற்பாட்டு. இத்திருவாய்மொழியில் சொல்லுகிற பரத்வத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[திண்ணன்வீடுமுதல்முழுதுமாய்] - திண்ணனென்றது – திண்ணம் என்றபடி; அதாவது - த்ருட மென்றபடி. த்ருடமான வீடென்று நித்யவிபூதிக்கு விசேஷணமாய், தார்ட்யமாவது ஆவிர்ப்பாவ திரோபாவஜந்மநாச விகல்பங்க ளென்னுமவை யில்லாமையாலே கர்மநிபந்தநமாக வரும் அழிவில்லை யென்கை. ஐச்சமாக வரும் விகாரங்களுண்டானுல் தோஷாயவுமன்று; அது அழிவாயுந் தோற்றுதிறே. ஏதேனுமாக ஸம்ஸாரவிபூதியிற்போலே கர்மநிபந்தநமாக வருமவை யில்லை யென்கை. திண்ணிதான நித்யவிபூதி தொடக்கமான எல்லாவிபூதியையு முடையனுய். அன்றியே, "திண்ணம்" என்கிற இத்தை விட்டுவைத்து, வீடுமுதல் முழுதுமாய் மோக்ஷப்ரப்ருத் யசேஷபுருஷார்த்தப்ரதனு யென்னவுமாம். [எண்ணின்மீதியன்] - அஸங்க்யேயமான கல்யாணகுணத்தையுடையவன். கீழ் விபூதிபரமானபோது, எண்ணின்மீதிய னென்றது - குணபரமாகிறது; கீழ் குணபரமானபோது, எண்ணின்மீதிய னென்ற விடம் - விபூதிபரமாகிறது. வீடுமுதல் முழுதுமா யென்றபோது - மோக்ஷப்ரதத்வத்தையே நினைத்ததாகில், எண்

---

முதற்பாட்டு - திண்ணன் இத்யாதி. "மனக்க ளுழறிவரும்" என்கிற ந்யாயத்தாலே, திண்ணமென்றபடி என்றது. ஸ்ரீவிஷ்ணுபுராணே ப்ரதமேம்சே, "தடைதக்ஷயம் நித்யம் ஜகந்முநிவராகிலம் | ஆவிர்பாவதிரோபாவஜந்மநாசவிகல்பவத்", "ஸத்ய தஸாம தம்நித்யமேகம்வாஷூர்ஷ்டிவம் | ஸாஜஷஸத்யம்ஷிவ்யக்ஷாரம்ப்ய ஹறணம்வஷம்" இத்யாதிகளை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - தார்ட்யமாவது - ஆவிர்ப்பாவ இத்யாதி. ஆவிர்ப்பாவதிரோபாவங்களென்று - ஸமஷ்டி ஸ்ருஷ்டியையும், ஸமஷ்டி ஸம்ஹாரத்தையுஞ் சொல்லி; ஜந்மநாசங்களென்று - வர்த்தமாநோத்பத்திநாசங்களைச் சொல்லுதல்; ஆவிர்ப்பாவ திரோபாவரூப ஜந்மநாசங்க ளென்னுதல். ஆவிர்ப்பாவம் - தோற்றுகை. திரோபாவம் - மறைகை. விமாநகோபுர மண்டபாதி ரூபேண பரிணும முண்டாயிருக்க, 'இல்லை என்கிறதென்?' என்ன, கர்மநிபந்தந இத்யாதி. அங்கும் பரிணுமமுண்டேயென்ன, ஐச்சமாக இத்யாதி. அழிவாய்த்தோற்றுவிட்டாலும் விகாரமுண்டேயென்ன, ஏதேனும் இத்யாதி. பலிதார்த்தம் - திண்ணிதான இத்யாதி. இவ்வர்த்தத்தில், 'முழுதமாய்' என்றது - லீலாவிபூதியைச் சொல்லுகிறது. 'ஆய்' என்ற ஸாமாநாதிகரண்யம் - நிர்வாஹ்யநிர்வாஹகபாவேந. மோக்ஷ இத்யாதி - ஐஸ்வர்யகைவல்யாத்யசேஷபுருஷார்த்த ப்ரதனு யென்றபடி. இத்தால் - ஔதார்யகுணத்தைச் சொல்லிற்றாய், இது மற்ற குணங்களுக்கும் உபலக்ஷணமாய், ஸமஸ்தகல்யாணகுணங்களையு முடையவ னென்றபடி. 'ஆய்' என்ற ஸாமாநாதிகரண்யம் - ப்ரதாத்ருப்ரதேயபாவேந. பௌநருக்த்யம் வாராமல் பரிஹரிக்கிறார் - கீழ் விபூதி இத்யாதி. குணபரமாகிறது-ஸமஸ்தகுணபரமாகிறது. கீழ்குணபரமானபோது - புருஷார்த்த ப்ரதத்வம்-குணாந்தரங்களுக்கும் உபலக்ஷணமென்று தாத்பர்யம். மோக்ஷப்ரதத்வத்தையே-மோக்ஷ ப்ரதத்வமாத்ரத்தையே; அதாவது - ஔதார்யகுணமாத்ரத்தையே சொல்லிற்றாகி லென்றபடி. மோக்ஷபதம் - புருஷார்த்தமாத்ரோபலக்ஷணம். ஆக, 'திண்ணன்வீடு' இத்யாதிக்கு மூன்றர்த்தம்: அதாவது - 'திண்ணன்வீடு' இத்யாதியாலே - உபயவிபூதியையும், 'எண்ணின்மீதியன்' என்று குணங்களையுஞ் சொல்லுதல்; யத்வா, 'திண்ணன்வீடு' இத்யாதியாலே - மோக்ஷபுருஷார்த்தப்ர

ணின்மீதிய னென்ற இடம் - அநுக்தமான குணங்களைச் சொல்லுகிறது. எண்ணின்மீதிய னென்ற இடம் - எண்ணுக்குமேலாயுள்ளா னென்றபடி; குணங்களாலேயாதல், விபூதியாலேயாதல் வந்த அபரிச்சேத்யஸ்வபாவதையைச் சொல்லுகிறது. [எம்பெருமான்] - குணவிபூதிகளை யுடையனாயிருக்கிற இருப்பைக் காட்டி என்னையெழுதிக்கொண்டவன். [மண்ணும்இத்யாதி]-இப்படி இவற்றையுடையனாய், உடைமை நோவுபட விட்டிருக்கையன்றிக்கே, ப்ரளயாபத்திலே வயிற்றிலேவைத்து நோக்கு மென்கிறார். பூம்யந்தரிக்ஷாதிகளை வெள்ளங்கொள்ளப்புக, எடுத்து வயிற்றிலேவைக்கிற இடத்தில் ஒன்றும் பிரிகதிர்ப்படாமே, ஏககாலத்திலே வைத்து ரக்ஷித்த நம் கண்ணன். [உடனுண்ட] - ரக்ஷணம் அவனுக்கு தாரகமாகையாலே - "உண்ட" என்கிறது. இல்லையாகில், காக்கும் என்ன அமையும். க்ருஷ்ணனோ பின்னை ஜகத்தை விழுங்கினான்? என்னில்; - ஆம், க்ருஷ்ணனே; அங்காந்திட வையமேழுங் கண்டாளிறே யசோதை. ஆகையாலே, ஸர்வரக்ஷகனான க்ருஷ்ணனே ஜகத்துக்கு த்ருஷ்டி; "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய: । க்ருஷ்ணஸ்யஹிக்ருதே) என்கிறப்ரமாணப்ரஸித்தியிருக்கிறபடி. [அல்லதில்லை யோர்கண்ணே]- இவ்வர்த்தத்தையொழிய ஶப்தத்தைக்கொண்டுபோய், "பீலிக்கண்" என்று வ்யவஹரியா நின்றதிறே; அதுக்குங் கூசவேண்டும்படியிருக்கும். மாலைக்கண் என்றிருப்பார்க்கு அல்லாத

---

தத்வரூபௌதார்யாதி குணங்களைச் சொல்லி, 'எண்ணின்மீதியன்' என்று உபயவிபூதியையுஞ் சொல்லுதல்; அன்றிக்கே, 'திண்ணன்வீடு' இத்யாதியாலே - ஔதார்யாதிகுணமாத்ரத்தையே சொல்லி, 'எண்ணின்மீதியன்' என்று அநுக்தங்களான குணங்களைச் சொல்லுதலென்று. ஏகஶப்தத்துக்கே நினைத்தவகைகளெல்லாஞ் சொல்லக்கூடுமோ? என்ன, ஸாமாந்யஶப்தமாகையாலே கூடு மென்கிறார் - எண்ணின்மீதியனென்றவிடம் இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - குணங்களாலே இத்யாதி. 'மண்ணும்' இத்யாதிக்கு அவதாரிகை - இப்படி இத்யாதி. 'எல்லாம்' என்றதுக்கு அர்த்தம் - ஒன்றும்பிரிகதிர்ப்படாமே என்று. பிரிகதிர்ப்படாமே - தப்பிப்போகாதே. 'உடன்' என்றதுக்கு அர்த்தம்-ஏககாலத்திலே என்று. ரக்ஷித்தவன் என்னாதே, 'உண்ட' என்கிறதென்? என்ன, ரக்ஷணம் இத்யாதி. தாரகமானலாயிற்று- 'உண்ட' என்ன அடுப்பதென்று கருத்து. காக்குமென்ன அமையும் - 'கண்ணன்கண்' இத்யாதிக்கு இதுவே ஹேதுவாகப் போருமிறே யென்று கருத்து. "ஐயநாவழித்தாளுக்கங்காந்திட,வையமேழுங்கண்டாள்பிள்ளைவாயுளே"-பெரியாழ்வார்திருமொழி-(க - க - ௬.)ம்ருதுவான திருநாக்குவழித்தயசோதைக்கு அதுக்குடலாக வாயைத்திறக்க, லோகங்களேழையும்பிள்ளையுடைய வாய்க்குள்ளேகண்டா ளென்கை. த்ருஷ்டி-நிர்வாஹகன். 'எம்பெருமான்' என்றிருக்க, 'நம்' என்கிறதென்? என்ன, அது ப்ரஸித்திபரமென்கிறார்-க்ருஷ்ண ஏவஹி இத்யாதி. மஹாபாரதே ராஜஸூயே பீஷ்ம: - "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்". இத்தால்உண்டஎன்றதுக்கு ஸ்வாதாரரக்ஷ்யபாவரக்ஷணவிவக்ஷயா, உதாரக்ஷ்யபாவரக்ஷணவிவக்ஷயா வா ஸாவத்யம் ஸம்ஸித்தம். 'ஓர்' என்றதுக்கு பாவம்-இவ்வர்த்தத்தை இத்யாதி. இவ்வர்த்தத்தையொழிய - 'கண்' என்று - ரக்ஷகமென்னும் இவ்வர்த்தத்தை யொழிய. அதாவது - தர்ஶநஸாதநமான சக்ஷுரிந்த்ரியஸ்த்தாநமான கோளகத்தையிறே 'கண்' என்கிறது; தாத்ருஶநிர்வாஹகத்வமில்லாமலிருக்கவும் 'பீலிக்கண்' என்று ப்ரயோகிக்கிற திறே கிஞ்சிதாகார ஸாத்ருஶ்யத்தாலே; அங்ஙனும் இங்குச் சொல்லவொண்ணாது அத்யந்தவைஸாத்ருஶ்யத்தாலே; கிஞ்சிந்நிர்வாஹகத்வமும் தததீந மென்றபடி. பீலிக்கண் என்கிறது-மயில்தோகையி லுண்டானவை. அதுக்கும் - ஶப்தமாத்ரத்துக்கும். கண்-ரக்ஷகன். ப்ரஹ்மாதிகளையும் லோகத்திலே ரக்ஷகராக வ்யவஹரிக்கிறார்களே யென்ன, மாலை இத்யாதி. மாலைக்கண் என்றிருப்பார்க்கு - ஸர்வேஶ்வரனை 'ரக்ஷகன்' என்றிருப்பார்க்கு. மாலைக்கண்

தெல்லாம் மாலைக்கண்ணுய்த் தோற்றுமிறே. இது திண்ணம் - த்ருடம். "ஸத்யம்ஸத்யம்" (ஸத்யம்ஸத்யம்) என்னுமாபோலே. நம் கண்ணன் கண் என்கையாலே - அந்வயத்தாலே பரத்வஞ் சொன்னூர்; அல்லதில்லை யென்கையாலே - வ்யதிரேகத்தாலே பரத்வஞ் சொன்னூர். (க)

## இரண்டாம் பாட்டு.

ஏபாவம்பரமே யேழுலகும்
ஈபாவஞ்செய்து அருளாலளிப்பாரார்?
மாபாவம்விட அரற்குப்பிச்சைபெய்
கோபாலகோளரி யேறன்றியே

ஆ.—(ஏபாவம்.) இஜ்ஜகத்துக்கு வேறுரக்ஷகனில்லையோ? என்னில்; - "நஹிபாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம்ஹரிம்" என்றுகொண்டு, ருத்ரனுடைய மஹாபாபத்தைப் போக்கி அவனை ரக்ஷித்தருளின பரமகாருணிகனுயிருந்த கோபால கோளரியேறன்றி, இந்த ஸர்வலோகங்களினுடைய பாபத்தைப் போக்கி ரக்ஷிப்பார் உளரோ? ரக்ஷிக்கவல்லார்தா னுளரோ? இது உபபாதிக்க வேணுமோ? என்கிறூர்.

*ஒ.—[மாபாவமென்று தொடங்கி]-ருத்ரனுக்கு; லோககுருவாயும் பிதாவாயுமுள்ள ப்ரஹ்மாவினுடைய ஶிரஸ்ஸை அறுக்கையாலே வந்த மஹாபாபம் நீங்கும்படி அவனுடைய பிக்ஷாபாத்ரமான கபாலத்தைத் தன் திருவுடம்பிலே ஸ்வேத ஜலத்தாலே நிறைப்பதுஞ் செய்து இங்ஙனஒத்த ஆபத்துக்களுக்கு உதவுகைக்காக ஸ்ரீநந்தகோபர் திருமகனுய் வந்து திருவவதாரம் பண்ணினவனுகையாலே மேனுணித்திருந்துள்ள எம்பெருமானன்றி.

ப.—அநந்தரம், அநிஷ்ட நிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் ஹேது க்ருஷ்ண னென்கிறூர்.

மா - அறப்பெரியதான, பாவம் - குருபாதகம், விட - விட்டுப்போம்படி, அரற்கு - ருத்ரனுக்கு, பிச்சைபெய் - பிக்ஷாப்ரதாநம்பண்ணினவனுய், கோபாலகோள்

---

ணுய்த்தோற்றுமிறே - ராத்ரியில் பதார்த்ததர்ஶநாக்ஷமமான சக்ஷுஸ்ஸுபோலே அரக்ஷகமென்றே தோற்று மென்றபடி. ஸம்வாதம் - ஸத்யம்ஸத்யம் இத்யாதி. ஐதிஹாஸிகபௌராணிகவசநம் "ஸத்யம்ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்த்ருத்ய புஜமுச்யதே । வேதஶாஸ்த்ராத்பரம் நாஸ்தி ந தைவம் கேஶவாத்பரம்". 'அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் பரத்வஞ் சொல்லுகிறூர் இங்கு' என்ற ப்ரவேஶத்தில் சொன்ன அர்த்தத்தைக் காட்டுகிறூர் - நங்கண்ணன்கண் இத்யாதி. அந்வயத்தாலேஇதி - வாக்யபேதே தாத்பர்யம். அல்லது-தத்வ்யதிரேகேண. ஓர்கண் -ஒருநிர்வாஹகன். திண்ணன்வீடு இத்யாரப்ய, நங்கண்ணன்கண்; அல்லதோர்கண்ணில்லையே இத்யந்வய:. யத்வா வீடுமுதலித்யாரப்ய அல்லதோர் கண்ணில்லையே; திண்ணம் இத்யந்வய:. (க)

---

* இப்பாட்டின் அவதாரிகையும், இதன் முன்பாதிக்கு வ்யாக்யாநமும் கிடைக்கவில்லை.

அரியேறு - கோபகுலத்தில்பிறந்தார்க்குள் ஸிம்ஹஶ்ரேஷ்டமான க்ருஷ்ணன், அன்றியே - அன்றி, ஏழுலகும் - ஸர்வலோகத்தையும், ஈபாவஞ்செய்து - நஶித்த பாபத்தையுடைத்தாம்படி பண்ணி, அருளால் - தன்க்ருபையாலே, அளிப்பார் - (அபிமதங்களைக் கொடுத்து) ரக்ஷிப்பார், ஆர் - ஆர்? ஏபாவம் - என்னபாவமிருந்தபடி! பரமே - (இவனுடைய ஸர்வாதிகத்வஞ் சொல்லுதல் நமக்கு) பரமாவதே! ஏ என்று - வெறுப்பைக் காட்டுகிறது.

இ·—இரண்டாம்பாட்டில், 'அல்லதில்லை' என்கிறதென்? ருத்ராதிகளும் ஈஶ்வரர்களாயன்றோ இருக்கிறதென்ன, அவர்கள் அநீஶ்வரத்வம் இன்றாக ப்ரதிபாதிக்க வேண்டும்படி அப்ரஸித்தமாயிருக்கிறதோ? என்கிறார்.

[ஏ பாவம் பரமே] - 'இவனுடைய பரத்வம் ஸாத்யமாய், ஸாதிக்கவேண்டுவதே! என்னபாபமோ!' என்கிறார். "ஏ" என்றது - ஓவென்றபடி; விஷாதாதிஶயஸூசகம். [பரமே] - ஜ்ஞாநம்பிறந்தால் குணாநுபவம் பண்ணுகையன்றிக்கே, சிலருடைய விப்ரதிபத்தியைப் பரிஹரிக்கை பரமாவதே! [ஏழுலகும்இத்யாதி] - ஸகலசேதநருடைய பாபங்களையும் தன்க்ருபையாலே போக்கி ரக்ஷிப்பார் ஆர்? [ஈபாவஞ்செய்து]-பாபங்களை ஈயும்படி பண்ணி. 'ரக்ஷிப்பார் இன்னார்' என்னாதே, 'ஆர்' என்கிறது - ப்ரதிவாதிகளுக்கும் இசையவேண்டும்படியான ப்ரமாணப்ரஸித்தி. "வாவநஸ்வதொகாநா கூஜெவ", "நஹிவாஅநஸாயெ ஹ்ஜூதெ ஸவெஸ்ரூரஹரிழ".[மாபாவம்இத்யாதி]- அதில், ஈஶ்வராபிமாநிகளை ரக்ஷிக்கும்படி சொல்லுகிறது. [மாபாவம் விட] - லோககுருவுமாய், பிதாவுமாயிருக்கிறவன் தலையை அறுத்த பாபம் விட்டுப்போம்படி; "வாஜாநூஷ நவாஜெ ணஞூஷ தஸ்யஶிரொஜயா"- தன்னுடைய ஜந்மாதிக்யமும் ஜ்ஞாநாதிக்யமும் செருக்குக்கு உடலாய்ப் பாபார்ஜந ஹேதுவானபடி. [அரற்கு] - அரனுக்கு. [பிச்சைபெய்] - தன்திருவுடம்பில் ஸ்வேதஜலத்தாலே அவன்கபாலத்தை நிறைத்தவன்; "தத்ர நாராயணஶ்ஶ்ரீமாநுயாஷிக்ஷா வ்யாவிதஃ" என்று அவன் அபேக்ஷிக்க, "தத வெஸநஸகுவாஶலநவாமெ ணவிஷாரிதழ । விஷெணாஃவுஸாஷாஸூசெஜ்ணி கவாஜஸதஸஸ்யா। ஷூஷிதவஹஷாயாதஷ ஸவூஜயநயா" என்னக்கடவதிறே. [கோபாலகோளரியேறு] - சிறியாரை ரக்ஷிக்கும்படி சொல்லுகிறது; ஸ்ரீநந்தகோபர் திருமகனாய் வந்து அவதரித்து, அவர் சீராட்டி வளர்க்க, அத்தாலே மேனாணித்திருக்குமவன். கோளென்று - மிடுக்காதல், ப்ரதிபக்ஷத்தை க்ரஹிக்கு மென்னுதல், இடையருடைய ஶத்ருக்களைக் கொள்ளு மென்கை. [கோளரியேறு] - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன், இடையருக்கு நியாம்யனாகப்பெற்ற மேனாணிப்பு. [அரற்குப் பிச்சைபெய் கோபாலகோளரி] - ருத்ரன் பாதகியாயிற்றது, தன்நிலை குலையாத ஏற்றத்தோடே யாயிற்று; இவன் ரக்ஷிப்பது, தாழநின்றவிடத்தே யாயிற்று; ஹிமவானிலேயாதல், திருப்பாற்கடலிலேயாதல். [ஏறன்றி அருளால் அளிப்பாரார்] - தலையறுப்புண்டும், தலையையறுத்துப் பாதகியாயும் நின்ற இவர்களை 'ஈஶ்வரன்' என்னவோ? கர்மவஶ்யரை ஈஶ்வரராகச் சொல்லவொண்ணாதிறே!

ஈடு.—இரண்டாம் பாட்டு. "அல்லதில்லை" என்று நீர் சொல்லுவானேன்? ப்ரஹ்ம ருத்ரர்களும் ஈஶ்வரர்களாக அவர்களுக்கும் சில ப்ரமாணங்க ளுண்டாயன்றோ போருகிறது என்னில், - அவர்கள்நிலைகளை ஆராய்ந்து பார்த்தால், தலையறுப்பார் சிலரும், அறுப்புண்டுநிற்பார் சிலரு மாகாநின்றார்கள்; அவர்களாபத்தைப் போக்கி ரக்ஷியாநின்றான் இவன்; அவர்களோ இவனோ ஈஶ்வரன்? என்கிறார்.

ஏ என்றது - ஓ என்றபடி: விஷாதாதிஶயஸூசக மிருக்கிறபடி. [ஏபாவம்]- ரத்ந *கரீஷங்களுக்கு வைஷம்யஞ் சொல்லவேண்டுவதே! சேதநர் மந்தமதிகளாய் பகவத் பரத்வம் உபபாதிக்கவேண்டுவதே! என்னும் இன்னாப்பாலே, 'என்னே பாவம்!' என்கிறார். [பரமே] - பகவத்குணாநுபவம் பண்ணுகையொழிய இது நமக்கு பரமாவதே! இது நமக்கு ஸாத்யமாய் வந்துவிழுவதே. [ஏழுலகும்] - ஏழுலகங்களிலு முண்டான சேதநர் இருந்ததே குடியாகப் பாபங்களைக் கூடுபூரிக்க. [ஈபாவஞ்செய்து] - பாபமானது ஈயும்படியாகச் செய்து; அழியும்படியாகப்பண்ணி. இதுதான் சேதநர் அர்த்திக்கச் செய்கையன்றிக்கே; [அருளால்] - நிர்ஹேதுகக்ருபையாலே. [அளிப்பாரார்] - இவர்களை ஈரக்கையாலே தடவி ரக்ஷிப்பார் ஆர்? இவர்கள்பண்ணின பாபம் அவனருளாலே போக்கில் போமத்தனையல்லது, தாங்கள் ப்ராயஶ்சித்தம்பண்ணிப் போக்குகையாவது - அவற்றை வர்த்திப்பிக்கையிறே. அளிப்பானிவன் என்னாதே, ஆர்என்கிறது - அவர்களுக்கும் ஸத்த்வம் தலையெடுத்தபோது, 'நீர்சொல்லுகிறவனே' என்று இசையவேண்டும் ப்ரஸித்தியாலே; "பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவ" (பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவ), "நஹிபாலந

---

இரண்டாம்பாட்டு - ஏபாவம் இத்யாதி. 'மாபாவம் விட அரற்குப் பிச்சை பெய்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகையை ஶங்காபரிஹாரமுகேநாஹ - அல்லதில்லை இத்யாதி. அவர்களுக்கும் சிலப்ரமாணங்கள் என்றது - "ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே", "ஶிவஏவ கேவல:", "ஏகஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்து:" இத்யாதியை நினைத்து. அவர்கள் நிலைகளை இதி - அர்த்தப்ரகரணாதிகளாலே ஹிரண்யகர்ப்பாதி ஶப்தங்களெல்லாம் பரமாத்மபரங்களென்று ஹாவம்.

ஓ என்பானென்? என்ன, விஷாத இத்யாதி. 'ஏபாவம்' என்கைக்கு - தமக்கு வந்ததென்? என்ன, ரத்ந இத்யாதி. விவரணம் - சேதநர் இத்யாதி. 'பரமே' இந்த உபதேஶமித்யத்யாஹார்யம். 'பரமே' என்று து:கிக்கிறீர், உமக்கு பரமேது என்ன, பகவத்குண இத்யாதி. விவரணம் - இது நமக்கு இத்யாதி. இது - உபதேஶம். ஏழுலகும், ஈபாவஞ் செய்து - நஶித்த பாபத்தை யுடைத்தாம்படி பண்ணி. உலகு என்றது - லோகஸ்த்தசேதநபரம்; "மஞ்சா: க்ரோஶந்தி" இதிவத். 'உலகும்' என்ற அபிஶப்தம் - ஸாகல்யபரம். இருந்ததே குடியாக - எல்லாருமொக்க. கூடுபூரிக்க - உறையை நிறைக்க. "பாவமீசெய்த" என்றவிடத்திலே - "உபோஷிதஸ் ஸ்நாதோவா ஜ்யேஷ்டோவா நிஶாதோபிவா । ப்ரஸஹ்ய ஹரதே பாபம் கோநஸேவேத மாதவம்" என்றது அநுஸந்தேயம். அருளால் ஈசெய்து என்று கீழே அந்வயித்து அர்த்தம் - இதுதான் இத்யாதி. அருளால் அளிப்பாரார் என்று மேலேயுங் கூட்டி ஹாவம் - இவர்களை இத்யாதி. 'அருளால்' என்றத்தை 'ஈ செய்து' என்றத்தோடே கூட்டி பலிதம் - அவற்றை இத்யாதி. தங்கள் ப்ராயஶ்சித்தத்தாலே போக்க வொண்ணாதோ? என்ன, இவர்கள்பண்ணின இத்யாதி. 'ஈபாவஞ்செய்து' என்றதுக்கு ப்ரமாணம் - பாவந இத்யாதி. உத்தரஶ்ரீராமாயணே த்வ்யஶீதிதமே ராமம்ப்ரத்யகஸ்த்ய: - "க்ருதஜ்ஞதவிஷம்வாக்யம் தவ ராம ஶ்ருணுஷ்வமே । பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந". பாவந:-பாபநிவர்த்தக:. அளிக்கையிலே ப்ரமாணம் - நஹி இத்யாதி. ப்ரதமேம்ஶே, "நஹிபாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம்

---

* கரீஷம் - காட்டுவறட்டி.

ஸாமர்த்த்யம்ருதே" (நஹிபாலநஸாமர்த்த்யம்ருதே) - அவன் ஸர்வவிஷயமாகப் பண்ணின ரக்ஷணங் கிடக்கிடீர்; தந்தாம்கால் தாந்தாம் நீட்டி முடக்கவல்லரா யிருக்கிறவர்களும் ஓரோரளவுகளிலே ஆபந்நராஞல் அவற்றைப் போக்கி ரக்ஷிக்கும்படியைப் பார்க்கலாகாதோ? என்கிறுர். [மாபாவம்விட] - ஆனைக்கும் தனக்குத் தக்க வாதமிறே. அல்லாதாரில் ஜ்ஞாநஶக்த்யாதிகளாலே ஓராதிக்யமுண்டிறே அவனுக்கு; அவற்றைக்கொண்டு லோக குருவுமாய்த் தனக்குப் பிதாவுமாயிருக்கிறவன் தலையை யறுத்துப் பாதகியாய் நின்ருன்; "வாமாங்குஷ்டநகாக்ரேண சிந்நம் தஸ்யஶிரோம்யா" (வாமாங்குஷ்ட்டநகாக்ரேணச் சிந்நம் தஸ்யஶிரோம்யா) என்கிறபடியே. மஹாபாபமானது விடும்படியாக. [அரற்குப் பிச்சைபெய் கோபாலகோளரியேறு] - அவன்தான் ஸம்ஹர்த்தாவான வேஷத்தோடே அதிகாரங்குலையாதே நின்று பாபத்தை விளைத்துக்கொள்ள, இவன் அவனுக்கு துஃகநிவர்த்தகனுமிற்று அங்கே இங்கே ஆவிர்ப்பவித்துத் திரிகிறவிடத்திலேயாயிற்று. இவர்கள் எத்தனையேனும் உயரநின்ருலும் அநர்த்தத்தையே சூழ்த்துக்கொள்ளுமித்தனை; அவன் எத்தனையேனுந் தன்னைத் தாழவிட்டாலும் ரக்ஷகனுமென்கையுஞ் சொல்லுகிறது. கோபாலருடைய மிடுக்கை யுடைத்தான ஸிம்ஹபுங்கவ மென்றபடி. [கோபாலகோளரியேறு] -

---

ப்ர.— (மாபாவம்விட) மாத்ஸ்யபுராணே, "தத:க்ரோதபரீதேந ஸம்ரக்தநயநேந வ। வாமாங்குஷ்டநகாக்ரேண சிந்நம் தஸ்யஶிரோம்யா । ப்ரஹ்மோவாச யஸ்மாதநபராதஸ்ய ஶிரஶ்சிந்நம்த்வயாமம । தஸ்மாச்சாபஸமாவிஷ்ட: கபாலீத்வம்பவிஷ்யஸி । ப்ரஹ்மஹாகுலிதோபூத்வா சர தீர்த்தாநிபூதலே । ததாஹம் ததாகேநவி ஹிதேஹம்ஶிரோத்பவ: । ததோ நாராயணஶ்ஶாந்த்யாபிக்ஷாம் ப்ரயாசித: । ததச்ச நகாக்ரேண விதாரிதம் । ஹரேர்ஹ்ருதயாத்தஸ்ய ரக்தஸ்ய ஸ்ருதா । விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணிகபாலம் தத்ஸஹஸ்ரதா । ஸ்புடிதம்பஹுதா யாதம் ஸ்வப்நலப்தம்யதா" ‖உ‖

---

ஹரிம் । ஶ்ரீ தள ஶ்ரீ தம் ஹோதா நம் ஹவ த்ரந்யஸ்ய கஸ்ய விசு." தந்தாம்கால் இத்யாதியாலே - அல்லாதாரைப்பற்ற ருத்ராதிகளுக்கு வ்யாவ்ருத்தி. தங்கள்கால் தாங்கள் நீட்டி முடக்க வல்லாராகை என்று - அவர்கள் ஶக்தியைத் துச்சீகரிக்கிறபடி. 'மா' என்றதுக்கு ஹாவம் - ஆனைக்கும் இத்யாதி. விவரணம் - அல்லாதார் இத்யாதி. தலையறுத்ததுக்கு ப்ரமாணம் - வாமாங்குஷ்ட்ட இத்யாதி. மாத்ஸ்யபுராணே, "தத:க்ரோதபரீதேந ஸம்ரக்தநயநேந வ" இதி பூர்வார்த்தம். ஶப்தார்த்தம் - மஹாபாபமானது இத்யாதி. 'அரற்கு' என்று - அவனுடைய பெருமையையும், 'கோபாலகோளரி' என்று இவனுடைய நிஹீநகுலத்திலவதாரத்தையுஞ் சொன்னதுக்கு ப்ரயோஜநமாஹ - அவன்தான் இத்யாதி. ஹரதீதி - ஹர: என்றத்தைப்பற்ற, ஸம்ஹர்த்தாவான வேஷத்தோடே என்றது. அங்கே இங்கே ஆவிர்ப்பவித்து என்றது - "கோபாலகோளரி" என்றத்தைப் பற்ற. இந்த அபதாநம் அவதாராந்தரத்திலே யாகிலும், இந்த அபதாந ஸமபிவ்யாஹ்ருதமான இந்த அவதாரம் - அவதாராந்தரத்துக்கு ஸூசக மென்றபடி. பலிதமாஹ - இவர்கள் இத்யாதி. பிச்சைபெய் - பிச்சையிடுகிற. ஶப்தார்த்தம் - கோபாலருடைய இத்யாதி. கோள் - மிடுக்

கோளென்று - மிடுக்காதல், ப்ரதிபக்ஷத்தைக் கொள்ளுமென்னுதல். நித்யஸூரிகளுக்கு நியந்தாவானவன் இடையருக்கு நியாம்யமாகப்பெற்றமேன்மைணிப்பு. கர்மவஶ்யராய் ஆபந்நரான இவர்களை 'ஈஶ்வரர்கள்' என்போமோ? ஆபத்துக்களைப் போக்கி ரக்ஷிக்கிற இவனை 'ஈஶ்வரன்' என்போமோ? ஏறன்றி-அருளால் அளிப்பாரா ரேன்று அந்வயம். (௨)

## மூன்றாம்பாட்டு.

ஏறனைப்பூவனைப் பூமகள்தன்னை
வேறின்றிவிண்தொழத் தன்னுள்வைத்து
மேறன்னைமீதிட நிமிர்ந்துமண்கொண்ட
மாறனின்மிக்குமோர் தேவுமுளதே?

ஆ.—(ஏறனை.) அயர்வறுமமரர்கள் தன்னுடைய ஸௌஶீல்யகுணத்தைக் கண்டு தொழுகைக்காக, ஸர்வேஶ்வரியான பெரியபிராட்டியாரோ டொக்க, அத்யந்தம் அபக்ருஷ்டரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் தன்னை ஆஶ்ரயமாகக் கொடுத்துக்கொண்டிருக்கையாலும், ஸர்வலோகங்களும் திருவடிகளினுள்ளே அடங்கும்படி அளந்தருளுகையாலும், இவனே ஸர்வேஶ்வரன்; மற்றில்லை யென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஸௌஶீல்யத்தாலும், த்ரைவிக்ரமமான அதிமாநுஷ ப்ரவ்ருத்தியாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[ஏறணைஎன்று தொடங்கி] - ருஷபவாஹநனையும் திருநாபிகமலத்திலே பிறந்த ப்ரஹ்மாவையும் தனக்கு ஸ்ப்ருஹணீயையான பெரியபிராட்டியாரையும் விஷயீகரிக்கும் ப்ரகாரத்தைக் கண்டு அயர்வறுமமரர்கள் கொண்டாடும்படி அவர்களைத் தரம்பாராதே தன்பக்கலிலே ஒக்கவைத்து ; [மேல்தன்னை யென்று தொடங்கி] - மேல்லோகங்களை யெல்லாம் விஞ்சும்படி அநாயாஸேந வளர்ந்து பூம்யந்தரிக்ஷாதி லோகங்களையெல்லாம் அளந்துகொண்ட அபரிச்சேத்ய மஹிமனான எம்பெருமானையொழிய வேறு ஈஶ்வரதயா ஶங்கிக்கலாம் தைவம் உண்டோ?

---

கும், கொள்கையும். 'அரியேறு' என்று எந்த மேன்மைணிப்பைச் சொல்லுகிறது? என்ன, நித்யஸூரிகளுக்கு இத்யாதி. மேன்மைணிப்பு - கர்வம். பாட்டுக்குத் தாத்பர்யம் - கர்மவஶ்யராய் இத்யாதி. 'ஏறன்றி' என்றதுக்கு அந்வயங் காட்டுகிறார் - அருளால் இத்யாதி. மாபாவம் விட இத்யாரப்ய, ஏறன்றி அருளால் - எழுலகு மீபாவஞ் செய்து அருளா லளிப்பாரார்; ஏ பாவம்! பரமே இத்யந்வய:. (௨)

ப —அநந்தரம், இவனே ஸர்வஸ்மாத்பர னென்கிறார்.

ஏறனை - ருஷபவாஹநனை ருத்ரனையும், பூவனை-கமலாஸநனை ப்ரஹ்மாவை யும், பூமகள் தன்னை — பத்மவாஸிநியாய்த் தனக்குஅஸாதாரணையான பிராட்டியையும், வேறின்றி - (தன்திருமார்பில்வைத்ததிற்காட்டில்) வேறு தோன்றாதபடி, தன்னுள் - தன் திருமேனிக்குள்ளே, விண் - (இந்த ஶீலமறிந்த) பரமபதவாஸிகள், தொழ - தன்னைத் தொழும்படி, வைத்து - வைத்து, மேல்தன்னை - ஊர்த்வலோகத்தை, மீதிட - கீழ்த்தும் படி, நிமிர்ந்து - வளர்ந்து, மண் - பூமியை, கொண்ட - அளந்துகொண்ட, மால்தனில் - பெரியவனை, மிக்கும் - மிகுத்திருப்பது, ஓர்தேவும் - ஒரு தேவதாதத்வமும், உளதே - உண்டோ? ஏகாரம் - வினா.

இ.—மூன்றாம்பாட்டில், ஶீலப்ராசுர்யத்தாலும், த்ரைவிக்ரமமான அதிமா நுஷசேஷ்டிதத்தாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[ஏறனையென்று தொடங்கி] - த்ரயீமயனை பெரியதிருவடியை வாஹநமாக வுடைய ஈஶ்வரனோ டொக்கத் தானும்'ருஷபவாஹநன்'என்று அபிமாநித்திருக்கும் ருத்ர னையும், பத்மயோநித்வத்தாலே 'அஜன்' என்று அபிமாநித்திருக்கும் ப்ரஹ்மாவையும், பரிமளம் ஒருவடிவு கொண்டாற்போலே நிரதிஶய போக்யையான பிராட்டியையும். தன் னையென்று - அவளுக்கு உண்டான ப்ராதாந்யம் இருக்கிறபடி. "ஏறனைப்பூவனை" என்று, 'சாத்தனை, கூத்தனை' என்றாற்போலே அநாதரோக்தியாலும், இவள் ப்ராதாந் யம் தோற்றுகிறது. [வேறின்றி விண்தொழத் தன்னுள் வைத்து] - அந்யபரரான அவர் களையும், அநந்யபரையான பிராட்டியையும் தரம்பாராதே, ஒக்க உடம்புகொடுத்த நீர் மைக்குத் தோற்று நித்யஸூரிகள் தொழாநிற்பர்களாயிற்று. "கூறாளுந்தனியுடம்பன்" என்கிறபடியே வ்யவஸ்த்திதமாக உடம்புகொடுக்கை. [விண்தொழ]-"ஜ்ஞாநெ ஶ்ராஶக்தி" ஐதிவக. இங்குள்ளார் 'ஐஶ்வர்யம்' என்றிருப்பர்கள்: அங்குள்ளார் 'ஶீலம்' என்று தோற்றிருப்பர்கள்; "தாளதாமரையான்" இத்யாதி. [மேறன்னை] - மேல்தன்னை யென் றபடி. "அப்பால் மிக்கு" என்கிறபடியே உபரிதநலோகங்களையும் விஞ்சும்படி அநாயா ஸேந வளர்ந்து எல்லாவற்றையும் தன்திருவடிகளின்கீழே இட்டுக்கொண்ட. [மாறனில்]- மால்தன்னில். இவ்வதிமாநுஷசேஷ்டிதத்தையுடைய ஸர்வேஶ்வரனிற்காட்டில். [மிக்கு மோர் தேவுமுளதே] - மற்று 'ஈஶ்வரன்' என்று எடுத்து 'கட்டக்குடி' என்று கழிக்க லாவாரு மில்லை. எல்லார்தலையிலும் காலைவைத்தவனை ஈஶ்வர னென்னவோ? இவன் காலி லே துகையுண்டவர்களை ஈஶ்வர னென்னவோ?

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஸௌஶீல்யத்தாலும், த்ரைவிக்ரமக்ரமணமாகிற அதிமாநுஷசேஷ்டிதத்தாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[ஏறனை] - ஸர்வேஶ்வரன் 'கருடவாஹநன்' என்று இறுமாந்திருக்குமாபோ லே, ஒரு எருத்தைத் தேடிக் கைக்கொளாண்டிகளைப்போலே இறுமாந்திருக்கும்.

---

மூன்றாம்பாட்டு - ஏறனை இத்யாதி. ஸௌஶீல்யத்தாலும்இதி - ஸௌஶீல்யகுணம் ஈஶ்வரத்வ ஸாதக மென்று கருத்து.

'ஏறனை' என்றத்தை நிரூபகமாகச் சொன்னதுக்கு ஹாவம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. அபிமாநிகளுக்கு முகங்கொடுக்கையிறே ஶீலகுண மென்றபடி. இறுமாந்திருத்தும் - கர்வித்திருக்-

[பூவனை] - 'திருநாபிகமலத்திலே அவ்யவதாநேந பிறந்தவனன்றே' என்று இறுமாந்திருக்கும் சதுர்முகனை. அதாவது - பத்மயோநித்வத்தாலே 'அஜன்' என்று அபிமாநித்திருக்கை. [பூமகள்தன்னை] - தாமரைப்பூவில் பரிமளமும் உபாதாநமாகப் பிறந்தவளாய், போக்யதைகவேஷையாய் "உனக்குஏற்கும்" என்னும்படியான ப்ராதாந்யந் தோற்ற இருக்கிறவளை. தன்னை என்று-அவர்களில் இவளுக்கு உண்டான ப்ராதாந்யம் இருக்கிறபடி "ஏறனை, பூவனை" என்கிற அநாதரோக்தியாலும், இவள் ப்ராதாந்யம் தோற்றுகிறது. [விண்தொழ வேறின்றித் தன்னுள்வைத்து] - அந்யபரரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும், அநந்யையான பெரியபிராட்டியார்க்கும் ஒக்க முகங்கொடுத்துவைக்கிற ஶீலத்தை அநுஸந்தித்து விண்ணினுள்ளார் தொழாநிற்பர்கள். 'ப்ரஹ்மாதிகள் எப்போதுந் திருமேனியைப் பற்றி யிருப்பர்களோ'? என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க,—'ஒரோஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுக்கிறான்; அந்நீர்மையை விடமாட்டாமையாலே ஆழ்வார்கள் அத்தையே வாய்புலற்றுகிறார்களத்தனையிறே' என்று அருளிச்செய்தார். [வேறின்றி] - *"கூறுளுந்தனியுடம்பன்" என்கிறபடியே வ்யவஸ்த்திதமாக உடம்பைக் கொடுக்கை. [விண்தொழ] - "ஊ்ஜாஃெ ஞாமுஷி" (மஞ்சாஃக்ரோஶந்தி) இதிவத். இங்குள்ளார் 'ஐஶ்வர்யம்' என்றிருப்பார்கள்; அங்குள்ளார் 'ஶீலம்' என்று தோற்றிருப்பர்கள். [மேல்தன்னை மீது இத்யாதி] - மேல்தன்னை - உபரிதநலோகங்களை, "அப்பால் மிக்கு" என்கிறபடியே விஞ்ச வளர்ந்து பூமிப்பரப்பெல்லாந் திருவடிகளின்கீழே இட்டுக்கொண்ட. [மால்தனில்]- இவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தையுடைய ஸர்வேஶ்வரனிற்காட்டில். [மிக்குமோர்தேவுமுளதே] - ஒக்கப்பரிமாறுநிற்க, 'கட்டக்குடி' என்று கழிக்கலாந்தெய்வந்தானுண்டோ? எல்லார்தலையிலும் காலைவைத்தவனை 'ஈஶ்வரன்' என்னவோ? இவன்காலிலே துகையுண்டவர்களை 'ஈஶ்வரர்கள்' என்னவோ? (௩)

---

கும். 'பூவனை' என்றஇடத்திலும் - அஹிமாநக் தோன்றுகிறதென்று கண்டுகொள்வது. இறுமாப்புக்கு அடி எது? என்ன, அதாவது இத்யாதி. அயோநிஜத்வம் இறுமாப்புக்கு அடியென்று கருத்து. ப்ராதாந்யத்துக்கு ஶப்தம் எது? என்ன, தன்னையென்று இத்யாதி. ஸாபேக்ஷகாந்தரம் - ஏறனை இத்யாதி. அநாதரோக்தியாலும் இதி-'வ்ருஷபவாஹநன்,அப்ஜஸம்பவன்' என்றாற்போலே சொல்லிற்றில்லையே யென்று கருத்து. வேறின்றி - ஸமமாக. தன்னுள்வைத்து - தன் திருமேனியிலே வைத்து.'ப்ரஹ்மாதிகளுக்கு முகங்கொடுக்கிற இதுக்கு விண்ணினுள்ளார் தொழுவானென்?' என்ன, அந்யபரரான இத்யாதி. ப்ராஸங்கிகம் - ப்ரஹ்மாதிகள் இத்யாதி. 'வேறின்றி' என்றதுக்கு பாவம் - கூறுளும் இத்யாதி. 'விண்தொழ' என்றால் - விண்ணுளாரைக்காட்டுமோ? என்ன, மஞ்சா இத்யாதி. விண்ணினுள்ளாரொழிய மண்ணினுள்ளார் தொழார்களோ? என்ன, இங்குள்ளார் இத்யாதி. ஶீலத்திலே தோற்றிருக்கையாலே - 'விண்தொழ' என்றதித்தனை. எல்லாரும் தொழுவர்க'ளென்று கருத்து. மேல்தன்னைமீதிடநிமிர்ந்து - உபரிதநலோகங்களைக் கிட்டும்படி மிஞ்சவளர்ந்து. மால்தனில் - ஸர்வேஶ்வரனிற்காட்டில். மிக்குமோர்தேவுமுளதே -மிகுத்திருப்பதொரு தேவதை யுண்டோ? இதி ஶப்தார்த்தஃ. 'ஏறு' என்றதுக்கு பாவம் - ஒக்க இத்யாதி. கட்டக்குடி - கஷ்டப்படுகிற குடும்பி; அகிஞ்சந குடும்பி. அல்லாதாரோடொக்கப் பரிமாறுநிற்கச்செய்தே, 'இறை இறுக்கமாட்டான்' என்று கழிப்புண்ணும் கட்டக்குடிபோலேயென்றபடி. 'உளதே' என்ற பிரிநிலையேகாரத்துக்கு பாவம் - எல்லார்தலையிலும் இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (௩)

---

* திருவாய்மொழி - ௪, ௮, ௧.

## நான்காம்பாட்டு.

---

தேவுமெப்பொருளும் படைக்கப்
பூவில்நான்முகனைப்படைத்த
தேவனெம்பெருமானுக்கல்லால்
பூவும்பூசனையுந் தகுமே?

ஆ.—(தேவும்.) சதுர்முகாதி ஸகலபதார்த்த ஸ்ருஷ்டி லீலனாய், தன்னுடைய ஸௌந்தர்ய குணத்தாலே எனக்கு ஸ்வாமியாயிருந்த எம்பெருமானல்லது ஸர்வேஸ்வரனும் அழகியாரும் உளரோ? என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், பூவுக்குஈடான ஸௌந்தர்யஸௌகுமார்யங்களும் பூஜைக்குஈடான ப்ராதாந்யமும் எம்பெருமானை யொழிய வேறு சிலர்க்கு இல்லாமையாலே அவனே ஸர்வேஶ்வர னென்கிறார்.

[தேவும் என்று தொடங்கி] - தேவமநுஷ்யாதி ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்குகைக்காக வல்லனான ப்ரஹ்மாவைத் திருநாபிகமலத்திலே படைப்பதுஞ்செய்து தன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே என்னை அடிமைகொண்டவனுக் கல்லது.

ப.—அநந்தரம், ஆராத்யதைக்கு ஈடான ஆதிக்யம் அவனுக்கொழிய இல்லையென்கிறார்.

தேவும் - தேவஜாதியையும், எப்பொருளும் - (மநுஷ்யாதி) ஸகல பதார்த்தங்களையும், படைக்க - ஸ்ருஷ்டிக்கைக்காக, பூவில் - திருநாபி கமலத்திலே, நான்முகனை - சதுர்முகனான ப்ரஹ்மாவை, படைத்த - படைத்த, தேவன் - பரதேவதையான, எம்பெருமானுக்கு - என்னையனுக்கு, அல்லால் - அல்லது, பூவும் - புஷ்பாத்யுபஹாரமும், பூசனையும் - ஆராதநோபசாரமும், தகுமே - (வேறு சிலர்க்குத்) தகுமோ? தகாதென்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், பூவுக்கீடான ஸௌகுமார்யமும், பூஜைக்கீடான ப்ராதாந்யமும், அவனையொழிய வேறொரு வ்யக்தியில் இல்லாமையாலே, இவனே ஈஶ்வர னென்கிறார்.

[தேவும் எப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப் படைத்த] - தேவஜாதி முதலான ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்குகைக்காகத் திருநாபிகமலத்திலே தன்னையும் மிகும்படியான சதுர்முகனை ஸ்ருஷ்டித்த. [தேவன்] - ஸ்ரஷ்ட்ருத்வத்தால் வந்த த்யுதி யென்னுதல், ஸ்ருஷ்டி அவனுக்கு லீலை யென்னுதல், ஸௌந்தர்யாதிகளால் வந்த விளக்க மென்னுதல். [எம்பெருமானுக்கல்லால்] - ஸ்ருஷ்ட்யுபகாரத்தாலும் அழகாலும் என்னை எழுதிக்கொண்டவனுக்கல்லது. [பூவும் பூசனையுந் தகுமே] - பூத் தருவது ஸுகுமாரனுக்கு; பூஜை தருவது ப்ரபுவுக்கு; சிக்குத்தலையனுக்குப் பூத்தகாது; பிச்சையுண்ணிக்குப் பூசனை தகாது. "[illegible]", "[illegible]".

ஈடு.—நாலாம்பாட்டு. ஸௌகுமார்யத்தாலும் முதன்மையாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[தேவும்இத்யாதி]-தேவஜாதியையும் ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்குகைக்காக, ஒருபூவிலே நாலுபூப் பூத்தாற்போலே சதுர்முகனை யுண்டாக்கினவன். [தேவன்]-சதுர்முகஸ்ரஷ்டா வாகையால் வந்த த்யுதியைச் சொல்லுதல், இதுதன்னை லீலையாக வுடையவ னென்னுதல், ஸௌந்தர்யாதிகளால் வந்த விளக்க மென்னுதல். [எம்பெருமானுக் கல்லால்] - ஸ்ருஷ்ட்யாத்யுபகாரத்தாலும், ஸ்ருஷ்டிக்கு உறுப்பான குணங்களாலும் என்னை எழுதிக்கொண்டவனுக் கல்லது. [பூவும் பூசனையுந் தகுமே]-சிக்குத்தலையனுக்குப் பூத் தகாது; பிச்சையுண்ணிக்குப் பூசனைதகாது; பூத்தகுவது ஸுகுமாரனுக்கு; பூசனை தகுவது முதன்மையுடையவனுக்கு; இவனையொழிந்தார்க்குத் தகாது என்கிறார். "ஸர்வேஷாமேவ லோகாநாம் ஸம்பந்தீ தேஜஸாந்நிதி:" (ஸஏஷப்ருதுதீர்க்காக்ஷஸ்ஸம்பந்தீதேஜநார்தந:) என்று ஸ்ரீபீஷ்மர் நெடும்போது அவனுடைய பரத்வத்தை உபபாதித்துக்கொண்டு போந்து,'ஶ்ருதிஸித்தமான கண்ணழகையுடையவன்காண் உங்களுக்கு மைத்துனனாய்ப்

---

நாலாம்பாட்டு - தேவும் இத்யாதி. "பூவும்பூசனையும்" என்றத்தைப் பற்றவாதல், "தேவன்" என்ற காந்தியையும், "எம்பெருமான்" என்றத்தையும் பற்றவாதல், ஸௌகுமார்யத்தாலும் முதன்மையாலும் என்றது. யத்வா, "பூவில்" என்ற பத்மநாபத்வத்தாலே, இரண்டும் ஸித்தமாதல். பத்மநாபத்வம் பரத்வாஸாதாரணமிறே:

ப்ரஹ்மாவை என்னாமல், 'நான்முகன்' என்றதின் பாவம் - ஒருபூவிலே இத்யாதி. "ஶிவாத்ரீ ஜ்யாவிஜிதீஷா வ்யவஹாரஶ்ச த்யுதிஸ்துதிமோதமதஸ்வப்நகாந்திகதிஷு" என்கிற யாதுவை உட்கொண்டு அர்த்தம் - சதுர்முக இத்யாதி. இதுதன்னை - ஸ்ருஷ்டியை. இப்பக்ஷத்தில், தேவன் - க்ரீடாபரன். விளக்கம் - காந்தி; அத்தாலே - காந்தனென்றாய். அதிமநோஹர னென்றபடி. 'படைத்த' என்றத்தைப்பற்ற, ஸ்ருஷ்ட்யாதீதி. ஸ்ருஷ்டிக்கு உறுப்பான குணங்களாலும் என்றது - "நான்முகனைப்படைத்த" என்று ஸ்ருஷ்டிசொன்னாற்போலே ததுபயுக்தஜ்ஞாநஶக்த்யாதி குணங்களும் அர்த்தஸித்தங்கள். 'தகுமே' என்ற பிரிநிலையேகாரத்துக்கு பாவம் - சிக்குத்தலையன் இத்யாதி. சிக்குத்தலையன் - ப்ரஹ்மா: ஜடாவானகையாலே, ருத்ரனாதல். ருத்ரபக்ஷே "பூவும்பூசனையுந்தகுமே" என்றது - ருத்ரனுக்கே அந்வயிப்பது ஆகில், தகுவது ஆர்க்கு? என்ன, பூத்தகுவது இத்யாதி. இத்தால் - தபோநிஷ்டனாகையாலே ஸௌகுமார்யமும், உபாஸகனாகையாலே முதன்மையும் ருத்ரனுக்கில்லை யென்று கருத்து. "முதன்மையுடையவனுக்கு" என்ற அநந்தரம், ஆகையாலே இத்யத்யாஹார்யம். 'அல்லதில்லையோர்கண்' 'கோளரியேறன்றி யருளாலளிப்பாரார்' இத்யாதியாலே - பலகாலும் வ்யதிரேகநிர்த்தேஶத்தாலே வைராக்யஞ் சொல்லுகிறதுக்குக் கருத்து - ஜ்ஞாநத்திற்காட்டில் வைராக்யத்துக்கு ஆதிக்ய ப்ரதர்ஶநார்த்த மென்னுமிடத்தைச் ஸப்ரமாணமாக அருளிச்செய்கிறார்-"ஸர்வேஷ" இத்யாதி: இதம்ஹா ரஞ்ஜநாஜஸ்ரயேணஹவஸ்துகம் ஸஹஸ்ரவேதநாக்ஷீஷ்ணஹ- தமேவ ஸஹ ஜேவ:-"தமிமம் ஸர்வஸந்நோ வாரய்யம் விதாஜம் | ஸர்வஸ்தா ஸர்வஸம் ஞாஸ்ய", "ஶோநிநாம் வீநாம் ராஜ்ஞாம் ஶ்ரேயஸ் ந்ருபதேஷ | தமோதாவ தத்வ ஷவ்ய ஷிலஸஹஷேவஸ்யேயஞ்ஜா ". ஶ்ருதிஸித்தமான - "தஸ்யயதா" இத்யாதி ஶ்ருதிஸித்த

புகுந்திருக்கிறான்'என்று பரத்வத்தை அவன் தலையிலே மாட்டேறிந்தார்; "[illegible]" (அர்ச்யமர்ச்சிதுமிச்சாமஸ்ஸர்வேஸம்மந்துமர்ஹத) என்ற ஸஹதேவன் தலையிலே புஷ்பவ்ருஷ்டியைப் பண்ணினார்களிறே. இத்தால் - ஜ்ஞாநத்திற் காட்டில் வைராக்யத்துக்கு உண்டான ப்ராதாந்யம் சொல்லுகிறது. (௪)

## ஐந்தாம் பாட்டு.

தகுஞ்சீர்த்தன் தனிமுதலினுள்ளே
மிகுந்தேவும் எப்பொருளும்படைக்கத்
தகுங்கோலத் தாமரைக்கண்ணனெம்மான்
மிகுஞ்சோதி மேலறிவார்யவரே.

ஆ.—(தகுஞ்சீர்.) தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்துக்கு உசிதமான கல்யாண குணங்களை யுடையனாய், ஸ்வஸங்கல்பகல்பித நிகில ஜகத்தையுடையனாய், தன்னுடைய ஸர்வேஶ்வரத்வோசிதமான அழகிய திருக்கண்களை யுடையனாயிருந்த எம்பெருமானுடைய திருமேனியின் அழகு ஒருவர்க்கு நினைக்க நிலமோ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில்,புண்டரீகாக்ஷனாகையாலே அவனே ஈஶ்வர னென்கிறார்.

[தகுஞ்சீர்த் தன்தனிமுதலினுள்ளே] - ஸ்ரஷ்ட்ருத்வஶக்தி யுக்தமான தன்னுடைய ஸங்கல்பத்தினுள்ளே. 'தனிமுதல் - ப்ரக்ருதி' என்று சொல்லுவர். [மிகுந்தேவுமென்று தொடங்கி] - ஐஶ்வர்யங்களாலே மிக்கிருந்த தேவர்களையும் மற்றுமுள்ள பதார்த்தங்களையு மெல்லாம் படைக்க 'தகும்' என்னுமித்தைத் தெரிவியாநின்றுள்ள திருக்கண்களையுமுடையனாய் அவ்வழகாலே என்னை அடிமைகொண்டருளின எம்பெருமானே பரதத்த்வம். [மேலறிவார்யவரே] - இவனொழிய வேறு சில ஈஶ்வரர்கள் உண்டென்னுமிடத்துக்கு ப்ரமாணமில்லை.

ப.—அநந்தரம், இப்பரத்வஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தை அருளிச்செய்கிறார்.

---

மான. இது-"[illegible]" என்றிருக்க, "ஸ:" என்றதின் தாத்பர்யம். [illegible] என்னுமல் "[illegible]" என்றது - ஶப்தமுகேந "[illegible]" இத்யாதி ஶ்ருதிப்ரத்யபிஜ்ஞாநார்த்தம். மைத்துனனாய் - அத்தைபிள்ளையாய். மாட்டேறிகை - எறிகை. '[illegible]' இத்யாத்யுத்தரஶ்லோகத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார்-என்ற ஸஹதேவன் இத்யாதி. இத்தால் பஹுமுகமாகப் பரத்வத்தை உபபாதித்த ஜ்ஞாநியான பீஷ்மர் தலையிலே புஷ்பவ்ருஷ்டி கண்டதில்லை; தேவதாந்தரங்கள்பக்கல் சரக்கறுத்து '[illegible]' இத்யாதிப்படியே - நான் சொன்னத்தை ஸம்மதியாதிருக்கிறவன் தலையிலே என்காலை வைக்கிறேனென்று ஸஹதேவன் காலைக்காட்டினபோது அவன்தலையிலே புஷ்பவ்ருஷ்டி உண்டாயிற்று; ஆகையால், ஜ்ஞாநத்திற்காட்டில், இதரவிஷயத்தில் சரக்கறுக்கையாகிற வைராக்யம் ஶ்ரேஷ்டமென்றபடி. இத்தால் - புஷ்பவ்ருஷ்டிப்ரதிபாதகத்தால். க்ரமேண அந்வய:. (௪)

தகும் - (ஸ்ருஷ்ட்யாதிகளுக்குத்) தகுதியான, சீர் - ஜ்ஞாநஶக்த்யாதிகளையு டையனான, தன் - தன்னுடைய, தனி - அத்விதீயமாய், முதலினுள்ளே - ஜகத்துக்கு மூலமான ஸங்கல்பத்துக்குள்ளே, மிகும் - ('ஈஶ்வரன்' என்று ஶங்கிக்கலாம்படி) மிக்க, தேவும் - ப்ரஹ்மருத்ராதி தேவஜாதியையும், எப்பொருளும் - மநுஷ்யாதி ஸகலபதார்த் தங்களையும், படைக்க - ஸ்ருஷ்டிக்க, தகும் - ('இவன் தனக்குத் தகும்' என்ன) ஸூசக மான, கோலம் - அழகிய, தாமரை - தாமரைபோன்ற, கண்ணன் - கண்களையுடைய, எம்மான் - என்ஸ்வாமியானவனைக் காட்டிலும், மிகுஞ் சோதி - பரஞ்ஜ்யோதிஸ்ஸு, மேல் – இதுக்குமேலொரு தத்த்வ முண்டென்று, அறிவார் - (வைதிகரில்) அறிவார், யவர் - ஆர்? உண்டென்று அறிவார் அவைதிக ரென்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், புண்டரீகாக்ஷனுகையாலும், அவனே ஈஶ்வர னென்கிறார்.

[தகுஞ்சீர் இத்யாதி] - தனக்குத் தகுதியான ஸ்ரஷ்ட்ருத்வஶக்த்யாதி குணங் களை யுடையனாய், தனக்கு ஸ்வம்மாய், ஏககாரணமான மூலப்ரக்ருதியினுள்ளே. ஏக காரணமென்று - பரமாணுகாரண வாதியை வ்யாவர்த்திக்கிறது. அதுக்கும் அடியான "பஹுஸ்யாம்" என்கிற ஸங்கல்பஜ்ஞாநத்தினுள்ளே யென்னவுமாம். [மிகுந்தேவும்]- தன்னோடே விகல்பிக்கலாம்படி கொள்கொம்பு மூடப் படர்ந்த தேவஜாதியையும். வில்லை வளைத்த போதாக "ஈஶிதவ்யே விஷ்ணு" என்னும்படியிறே அவர்கள்மிகை. [எப்பொருளும் படைக்க] - மற்றுமுள்ள பதார்த்தங்களை யெல்லா முண்டாக்க. [தகுங் கோலத் தாமரைக்கண்ணனெம்மான்] - 'தகும்' என்னுமிடத்தை ஸ்பஷ்டமாக்குவதாய், ரக்ஷகத்வம்இல்லையே யாகிலும் விடப்போகாதபடி தர்ஶநீயமான அக்கண்ணழகாலே என்னை "ஜிதம்" என்னப் பண்ணினவன்; "யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ", "ராஜீவலோசநாக்ஷ:". [மிகுஞ்சோதி] - "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய", "நாரா யணபரோஜ்யோதி:" என்று நாராயணனுவாக ஸித்தமான பரதத்த்வம். [மேலறிவார் யவரே] - இவனையொழிய வேறே சிலருண்டு என்று சொன்னால் வைதிகரா யிருப்பாரில் இசைவாருண்டோ? என்கை. இவ்வுபநிஷத் ப்ரஸித்தி வேறொருவர்க்கு உண்டோ? என்கை. "வேதைஶ்ச", "தத்வேதிஷ்டா ப்ரத்யக்ஷம்".

ஈடு.—அஞ்சாம்பாட்டு. புண்டரீகாக்ஷனுகையாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[தகும்இத்யாதி] - ஸ்ரஷ்ட்ருத்வத்துக்கு உபயோகியான ஜ்ஞாநஶக்த்யாதிகளை யுடையனான. [தன்தனிமுதலினுள்ளே] – கார்யவர்க்கத்துக்கடையக் காரணமான மூல ப்ரக்ருதியைச் சோல்லுதல், "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிற அதுக்குமடியான

---

அஞ்சாம்பாட்டு - தகுஞ்சீர் இத்யாதி. 'தாமரைக்கண்ணன்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - புண்டரீக இத்யாதி.

தன்தனிமுதலினுள்ளே மிகுந்தேவு மெப்பொருளும் படைக்க - தகுஞ்சீரையுமுடைய னாய், தகுங்கோலத்தாமரைக்கண்ணையுடைய எம்மான் மிகுஞ்சோதிமேல் அறிவார் யவர் என்று அந் வயித்து அர்த்தம் - ஸ்ரஷ்ட்ருத்வத்துக்கு இத்யாதி. இதுவே பாட்டுக்கு அந்வயம். தன் - தன்னு டைய. தனிமுதலினுள்ளே - அத்விதீயகாரணமான மூலப்ரக்ருதிக்குள்ளே யென்னுதல், ஸங் கல்பரூபஜ்ஞாநத்துக்குள்ளே யென்னுதல் என்று ஶப்தார்த்தம். அதுக்கும் அடி - ப்ரக்ருதி

ஸங்கல்பஜ்ஞாநத்தைச் சொல்லுதல். [தனிமுதல்] - ஏககாரணமேன்று பரமாணுகாரணவாதிகளை வ்யாவர்த்திக்கிறது. [மிகும்இத்யாதி] - தன்னோடு மசக்குப்பரலிடலாம்படியான தேவஜாதியையும். வில்லைவளைத்தபோதாக "𑌅𑌧𑌿𑌕𑌂𑌮𑍇𑌨𑌿𑌰𑍇𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂" (அதிகம் மேநிரேவிஷ்ணும்) என்னும்படியிறே இவர்கள் மிகை. [எப்பொருளும்] - 'மற்றமுண்டான ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்குகைக்குத் தகுவா னொருவன்' என்னுமிடத்தைத் தெரிவிப்பதாய், ரக்ஷகத்வமில்லையாகிலும் தர்ஶநீயமாய்க் குளிர்ந்திருக்கிற திருக்கண்களையுடையனாய்; அக்கண்ணழகாலே என்னை அடிமைகொண்டவனே மிக்க தேஜஸ்ஸையுடையான். திருவடிதோற்ற துறையிலே இவருந் தோற்றது; "𑌰𑌾𑌮𑌃" (ராம:)-ஸர்வாங்கஸுந்தரராயிருக்கை. "𑌕𑌮𑌲𑌪𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃" (கமலபத்ராக்ஷ:) – அதிலே ஒருசுழியாயிற்று அமிழ்ந்துவார்க்கு வேண்டுவேது. அக்கண்ணழகுக்குளல்லை யேன்? என்னில், - "𑌸𑌰𑍍𑌵

---

ப்ர.—(தருஞ்சீர் இத்யாதி) (மிகுந்தேவும்) 𑌬𑌾𑌲𑌕𑌾𑌣𑍍𑌡𑍇 [௭௫] 𑌜𑌾𑌮𑌦𑌗𑍍𑌨𑍍𑌯 [illegible] 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌕𑌥𑌯𑌾, "𑌤𑌦𑌾 𑌤𑍁 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌪𑍃𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌮 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌮𑍍 । 𑌶𑌿𑌤𑌿𑌕𑌣𑍍𑌠𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌶𑍍𑌚 𑌬𑌲𑌾𑌬𑌲𑌨𑌿𑌰𑍀𑌕𑍍𑌷𑌯𑌾 ॥௧௪॥ 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌂 𑌤𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌦𑍇𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 । 𑌵𑌿𑌰𑍋𑌧𑌂 𑌜𑌨𑌯𑌾𑌮𑌾𑌸 𑌤𑌯𑍋𑌃 𑌸𑌤𑍍𑌯𑌵𑌤𑌾𑌂 𑌵𑌰𑌃 ॥௧௫॥ 𑌵𑌿𑌰𑍋𑌧𑍇 𑌚 𑌮𑌹𑌦𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑌮𑌭𑌵𑌦𑍍𑌰𑍋𑌮𑌹𑌰𑍍𑌷𑌣𑌮𑍍 । 𑌶𑌿𑌤𑌿𑌕𑌣𑍍𑌠𑌸𑍍𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌶𑍍𑌚 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌜𑌯𑍈𑌷𑌿𑌣𑍋𑌃 ॥௧௬॥ 𑌤𑌦𑌾 𑌤𑍁 𑌜𑍃𑌮𑍍𑌭𑌿𑌤𑌂 𑌶𑍈𑌵𑌂 𑌧𑌨𑍁𑌰𑍍𑌭𑍀𑌮𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 । 𑌹𑍁𑌙𑍍𑌕𑌾𑌰𑍇𑌣 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌃 𑌸𑍍𑌤𑌮𑍍𑌭𑌿𑌤𑍋𑌽𑌥 𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌚𑌨𑌃 ॥௧௭॥ 𑌦𑍇𑌵𑍈𑌸𑍍𑌤𑌦𑌾 𑌸𑌮𑌾𑌗𑌮𑍍𑌯 𑌸𑌰𑍍𑌷𑌿𑌸𑌙𑍍𑌘𑍈𑌃 𑌸𑌚𑌾𑌰𑌣𑍈𑌃 । 𑌯𑌾𑌚𑌿𑌤𑍌 𑌪𑍍𑌰𑌶𑌮𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌜𑌗𑍍𑌮𑌤𑍁𑌸𑍍𑌤𑍌 𑌸𑍁𑌰𑍋𑌤𑍍𑌤𑌮𑍌 ॥௧௮॥ 𑌜𑍃𑌮𑍍𑌭𑌿𑌤𑌂 𑌤𑌦𑍍𑌧𑌨𑍁𑌰𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌶𑍈𑌵𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑍈𑌃 । 𑌅𑌧𑌿𑌕𑌂 𑌮𑍇𑌨𑌿𑌰𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌸𑌰𑍍𑌷𑌿𑌗𑌣𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 ॥௧௯॥

---

காரணமாகைக்கும் அடி. "[illegible]" என்னக்கடவதிறே. மூலப்ரக்ருதிபரமான பக்ஷத்தில் அருளிச்செய்கிறார் - ஏககாரணம் இத்யாதி. பரமாணுகாரணவாதிகளை - அநேகபரமாணுகாரணவாதிகளை யென்றபடி. 'அநேகபரமாணுக்கள் கூடி ஒரு கார்யத்தை யுண்டாக்குகிறது' என்றிறே அவர்கள் சொல்லுவது. [illegible] - தன்னோடு இத்யாதி. மசக்குப்பரலிடலாம்படி - ஸம்ஶயிக்கும்படி. மசக்கு - ஸம்ஶயம். பரல் - விரை. ஸம்ஶயத்தைப்பண்ணும் விரையென்ற ஶப்தார்த்தம். அதாவது - பயல்கள் கோடுகீறி, ஸங்கேதபூர்வகமாக ஆடுகிற புளியம்விரை. அப்படி மிகுத்திருப்பார்களோ? என்ன, வில்லை இத்யாதி. 𑌬𑌾𑌲𑌕𑌾𑌣𑍍𑌡𑍇 𑌜𑌾𑌮𑌦𑌗𑍍𑌨𑍍𑌯 [illegible] 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌕𑌥𑌯𑌾-"𑌜𑍃𑌮𑍍𑌭𑌿𑌤𑌂 𑌤𑌦𑍍𑌧𑌨𑍁𑌰𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌶𑍈𑌵𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑍈𑌃। 𑌅𑌧𑌿𑌕𑌂𑌮𑍇𑌨𑌿𑌰𑍇𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂𑌦𑍇𑌵𑌾𑌃𑌸𑌰𑍍𑌷𑌿𑌗𑌣𑌾𑌸𑍍𑌤𑌥𑌾". மற்றமுண்டானஇதி - 'படைக்கத்தகும் தாமரைக்கண்ணன்' என்ற ஸமபிவ்யாஹாரத்தாலே - தகுகைக்கு ப்ரகாஶகங்களான திருக்கண்களென்கிற அர்த்தம் தோற்றுகிறதென்றபடி. 'தாமரை' என்றதின் பாவம் - தர்ஶநீயம் இத்யாதி. ஸமபிவ்யாஹாரஸித்தார்த்தமாஹ - அக்கண்ணழகாலே இத்யாதி. கண்ணழகிலே தோற்றமையை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - திருவடி இத்யாதி. அப்படி திருவடி கண்ணழகிலே தோற்றிருக்குமோ? என்ன, 𑌰𑌾𑌮 இத்யாதி. இந்த ஶ்லோகம் ஸுந்தரகாண்டத்தில் திருவடிவாக்யம். எடுத்த ஶ்லோகத்துக்கு அர்த்தம் - 𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗 இத்யாதி. 𑌰𑌮𑌯𑌤𑍀𑌤𑌿 𑌰𑌾𑌮𑌃 என்ற - ஸர்வாங்க ஸௌந்தர்யங்களாலேயும் ஈடுபடுத்துமவரென்று கொண்டு, ஸர்வாங்கஸுந்தரராயிருக்கை என்கிறார். அதிலே - ஸௌந்தர்யத்திலே. [illegible]

ஸர்வஸத்த்வமநோஹர:” (ஸர்வஸத்த்வமநோஹர:)- திர்யக்ஜாதீயனைப் பணையோடு பணைதத் தித்திரிகிற என்நெஞ்சையும் அபஹரித்ததன்றே! “ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூத:” (ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூத:) - தேஹகுணங்களாலும் ஆத்மகுணங்களாலும் குறையற்றதுதான் ஔத்பத்திகமாயிருக்கும். “ஜநகாத்மஜே” (ஜநகாத்மஜே)–‘அறவிஞ்சச் சொன்னாய்: இனி இங்ஙன் சொல்லலாவாருண்டோ? இல்லையோ?’ என்று பிராட்டிக்குக் கருத்தாக, “ஜநகாத்மஜே” (ஜநகாத்மஜே)-பின்னை உம்மைச்சொல்லலாம், நீரு முண்டு. [மிகுஞ்சோதி] - “பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய” (பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய), “நாராயணபரோஜ்யோதி:” (நாராயணபரோஜ்யோதி:) என்று, நாராயணாநுவாகாதிகளிலே இவனே பரஞ்ஜ்யோதிஸ்ஸென்றுஓதப்படுகிறான். [மேலறிவார்யவரே] - ‘இவனையொழிய நாராயணாநுவாக ஸித்தமாயிருப்பதொரு வஸ்து வுண்டு’ என்று அறிவார் ஆரேனு முண்டோ? [யவரே] - “வைதிக: க:” (வைதிக: க:) என்னுமாபோலே. அந்யபரமான நாரா யணாநுவாகாதிகளிலே ப்ரதிபாதிக்கப்பட்ட வைபவத்தையுடைய உன்பக்கலிலே பொறாமைகொண்டாடியிருப்பான் ஒருவைதிக னுண்டோ? உண்டாகில் அவன் அவைதிகனாமித்தனை; “தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம்” (தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம்). (ரு)

---

த்ருஷ்டிசித்தாபஹாரித்வ ஸர்வஸத்த்வமநோஹரத்வம் எப்படி தோற்றும்? என்ன, திர்யக் இத்யாதி. பணை- சாகை. தந்தி - குதித்து. ‘ஸம்பந்ந:’ என்கையாலே, குறையற்று என்றது. ஸம்பந்நஸ்ஸந் ப்ரஸூத: - ஸம்பந்நராய்க்கொண்டே பிறந்தா ரென்கையாலே, ஔத்பத்திகம் என்கிறது. தேஹ குணங்களாலு மென்றது - கீழ் ‘ராம:’ என்கிற இடத்திற் சொன்ன ஸௌந்தர்யவ்யதிரிக்த ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதி தேஹகுணபரம்; அதோநபௌநருக்த்யம். குணதாக்ஷிண்யாஹி யாநம் - குணாந்தரோபலக்ஷணம். ஸம்போதிக்கிறவனுடைய பாவத்தை ஆகாங்க்ஷாபூர்வகமாக அருளிச்செய்கிறார் - அறவிஞ்ச இத்யாதி. அறவிஞ்ச - மிகவும் அதிகமாக. பின்னை உம்மைச்சொல்லலாம்- அடியே தொடங்கி அவளை அபிமுகீகரித்துக் சொல்லாநிற்க, அநபேக்ஷிதமான ஸம்போதநத்துக்கு இதுவே கருத்தென்று தாத்பர்யம். உம்மைப்பெற்றவனேயிறே ஜநக னென்றபடி. ‘மிகுஞ்சோதி’ என்றதுக்கு பாவம் - பரஞ்ஜ்யோதி இத்யாதி. “பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய” இதி சாந்தோக்யே. நாராயணபரோஜ்யோதி: - நாராயண:பரஞ்ஜ்யோதி: என்றபடி. விஸர்க்கலோபஸ் சாந்தஸ:. ஆரேனுமுண்டோ - இல்லை யென்றபடி. அந்தப்பிதற்றம் லோகத்தில் பாசுபதாத்யாகமங் களிலே நடையாடாநிற்கிறதே என்ன, ‘யவரே’ என்று. எந்த வைதிகரென்று விவக்ஷித மென்கிறார், யவரே என்று. இப்படி விவக்ஷித்ததுக்கு ஸம்வாதம் - வைதிக: க: இத்யாதி. ஸ்தோத்ரே, “ஸ்வாபாவிகாநவதிகாதிஶயேஶித்ருத்வம் நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:”இதி. எடுத்த ஶ்லோகத்துக்கு, ‘க:’ என்று க்ஷேபத்திலேயாய், தாத்பர்யம் - அநந்யபரமான இத்யாதி. அநந்யபரமான-தேவதாந்தரபரத்வஸம்பாவநா விதுரமான. “வைதிக:” என்று விஶேஷிக்கிறவர்க்கு பாவமாறு - உண்டாகில் இத்யாதி. வேதாத்யயநம்பண்ணினவர்களை ‘அவைதிகர்’ என்கிறதென்? என்ன, தஸ்யோத்பத்தி: இத்யாதி. விஷ்ணுபக்தியில்லாமையாலே ‘அவைதிகர்’ என்கிறதென்றபடி. பாத்மபுராணே, “விஷ்ணுபக்திவிஹீநோ ய: ஸர்வஶாஸ்த்ரார்த்தவேத்யபி। ப்ராஹ்மண்யம் தஸ்ய நஷ்டம் ஸ்யாத் தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம்.” உத்பத்திநிரூபணம்- “ய: ஸர்வஜ்ஞ: [illegible]” இத்யாதி ஶ்லோகத்திலே கண்டுகொள்வது. அந்வய: பூர்வோக்த:. (ரு)

# ஆறும் பாட்டு.

யவரும்யாவையும் எல்லாப்பொருளும்
கவர்வின்றித் தன்னுளொடுங்கநின்ற
பவர்கொள்ஞான வெள்ளச்சுடர்மூர்த்தி
அவரெம்மாழியம் பள்ளியாரே.

**ஆ.**—(யவரும்.) அஸம்பாதமாகத் தன்னுள்ளே வைக்கப்பட்ட ஸர்வஜகத்தையு முடையனாய், ஸ்வாபாவிக ஸார்வஜ்ஞத்தை யுடையனாய் க்ஷீரார்ணவ நிகேதனான வண் துவரைப் பெருமாளே ஸர்வேஶ்வர னென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், சேதநாசேதநாத்மகமான ஸகலபதார்த்தங்களையும் தன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கையாலே அவனே ஈஶ்வர னென்கிறார்.

[யவரும்யாவையுமெல்லாப்பொருளும்]-சேதநாசேதந பதார்த்தங்க ளொன்று மொழியாமே எல்லாவற்றையும். [கவர்வின்றி என்று மேனுக்கு] - ப்ரளயகாலத்துக்குப் பரஸ்பரம் நெருக்குப்படாதபடி திருவயிற்றிலே வைப்பதுஞ் செய்து, பரந்திருந்துள்ள ஜ்ஞாந வெள்ளத்தையும் தேஜோரூபமான திருமேனியையுமுடையரா யிருந்துள்ளவர் ஜகத்திதார்த்தமாக வந்து ப்ரளயார்ணவத்திலே கண்வளர்ந்தருளுவர்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தருளினா ரென்கிறார்.

யவரும் - எல்லாச்சேதநரும், யாவையும் - எல்லா அசேதநங்களுமாகிற, எல்லாப்பொருளும் - ஸமஸ்தபதார்த்தங்களும், கவர்வின்றி - சோர்வின்றி, தன்னுள் - தன் ஸ்வரூபைக தேஶத்திலே, ஒடுங்க - அடங்கும்படியாக, நின்ற - நின்ற, பவர்கொள் - பரப்பையுடைத்தான, ஞானவெள்ளம் - ஞானவெள்ளத்தை, சுடர் - (தனக்கு) ப்ரபையாகவுடைய, மூர்த்தி - ஸ்வாமிகளான, அவர்-ஸர்வாதிகரானவர், எம் - நமக்கு போக்யமாய், அம் - தர்ஶநீயமான, ஆழி - க்ஷீரார்ணவத்திலே, பள்ளியார் - கண்வளர்ந்தருளுகிறார். கவர்வு — சோர்வு. பவர்வு — பரப்பு. சுடர்மூர்த்தி, விக்ரஹமாகவுமாம்.

**இ.**—ஆறும்பாட்டில், ப்ரளயாபத்திலே ஸகல பதார்த்தங்களையும் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கையாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[யவரும் இத்யாதி] - சேதநரும் அசேதந வர்க்கமும் ஒன்றுங் குறையாதபடி எல்லாவற்றையும். [கவர்வின்றி] - கவராதபடி; பரஸ்பரம் நெருங்காதபடி. [தன்னுளொடுங்க நின்ற] - தன் திருவயிற்றிலே ஒதுங்கும்படி நின்ற; தன் ஸங்கல்பைகதேஶத்திலே என்னவுமாம்; "[illegible]" என்னக் கடவதிறே. [பவர்கொள் ஞானவெள்ளம்] - பரம்பாநின்றுள்ள ஜ்ஞாநவெள்ளத்தையும். [சுடர்மூர்த்தியவர்] - நிரவதிகதேஜோரூபமான திருமேனியையு முடையவர். [எம் ஆழியம்பள்ளியாரே] - ப்ரளயார்ணவத்திலே ரக்ஷணார்த்தமாக வந்து கண்வளர்ந்தருளினார். ப்ரளயாபத்ஸகரானவர், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாக வந்து

திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினு ரென்றுமாம். [ஆழியம்பள்ளியார்] - கடலைப் படுக்கையாகக் கொண்டார். "பாயலும் பள்ளியும் பாழியும் படுக்கை". எம் என்று - தாமிருக்கிற ஸம்ஸாரத்திலே வந்து கண்வளர்ந்தருளிற்று; தம்மை உஜ்ஜீவிப்பிக்கைக் கென்று.

ஈடு.—ஆறும்பாட்டு. ஆபத்ஸகனுகையாலும் இவனே ஈஶ்வர னென்கிறுர்.

[யவரும்இத்யாதி] - சேதநவர்க்கத்தையும் அசேதநவர்க்கத்தையும், இப்படி இரண்டுவகையாகச் சொன்னவற்றைக் கூட்டி, இப்படியிருக்கிற ஸகலபதார்த்தங்களும் ப்ரளயாபத்திலே தன் வயிற்றிலே சேரும்படியானபோது. [கவர்வின்றி] - கவர்கையாவது - க்ரஹிக்கை. அதாவது - ஹிம்ஸையாய், ஒருவரையொருவர் நெருக்காதபடி. [தன்னுள்ஒடுங்கநின்ற]-"தத³பஶ்யம்ஹம்ஸர்வம் தஸ்யகுக்ஷௌமஹாத்மந:" (ததபஶ்யமஹம்ஸர்வம் தஸ்யகுக்ஷௌமஹாத்மந:) என்னக்கடவதிறே. தன்னுள் - தன் ஸங்கல்பைகதேஶத்திலே யென்னவுமாம். [பவர்கொள்இத்யாதி] - இவர்களை ரக்ஷிக்கைக்கு உறுப்பான பரம்பின ஞானவெள்ளத்தை யுடையனுய், 'இப்படி ரக்ஷிக்கப்பெற்றவிடம் தன்பேறு' என்று தோற்றும்படி யிருக்கிற திவ்யவிக்ரஹத்தை யுடையரான அவர். [எம்ஆழியம் பள்ளியாரே] - தாம் ஸம்ஸாரமத்யஸ்த்தரா யிருக்கையாலே எல்லாரையுங் கூட்டிக்கொண்டு, எங்களுடைய ரக்ஷணார்த்தமாக வந்து ஏகார்ணவத்தை அழகிய படுக்கையாக வுடையரானுர். "பாயலும் பள்ளியும் பாழியும் படுக்கை". இப்படி ஆபத்ஸகனுய் அணியனுகையாலும் இவனே ஈஶ்வர னென்கிறுர். (சு)

# ஏ ழா ம் பா ட் டு.

பள்ளியாலிலை யேழுலகுங்கொள்ளும்
வள்ளல் வல்வயிற்றுப்பெருமான்
உள்ளுளாரறிவார் அவன்தன்
கள்ளமாய மனக்கருத்தே.

ஆறும்பாட்டு - யவரும் இத்யாதி. "தன்னுள் ஒடுங்கநின்ற" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஆபத்ஸகன் இத்யாதி.

யவரும்யாவையு மெல்லாப்பொருளும்-சேதநரும்அசேதநங்களுமான எல்லாப்பொருளு மென்று ஶப்தார்த்தம். உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - தத³பஶ்யம் இத்யாதி. ஆரண்யபர்வணி தர்மபுத்ரம் ப்ரதி மார்க்கண்டேய:, "யதா³கிஞ்சிந்மயா லோகே த்³ருஷ்டம் ஸ்தா²வரஜங்க³மம் । தத³பஶ்யம்" இத்யாதி. 'தன்னுள்' என்று - ஸங்கல்பபரமானபோது, 'கவர்வின்றி' என்றது - ஒன்றுந் தப்பாதபடி யென்று பொருள்; 'ஒடுங்க' என்றது - மஹாஸம்ஹாரபரம்; திருவுதரபரமானபோது அவாந்தரப்ரளயபரம். பவர்கொள் - பரம்புதலையுடைய. 'சுடர்' என்றதிலே நோக்காக ஹாவம் - இப்படி இத்யாதி. மூர்த்தியான அவரென்று அந்வயித்து அர்த்தம் - திவ்ய விக்ரஹத்தையுடையரான அவர் என்று. 'எம்' என்ற பஹுவசநார்த்தம் - தாம்ஸம்ஸார இத்யாதி. ஏகார்ணவம்-ப்ரளயஜலதி. 'பள்ளி' என்று படுக்கையைச் சொல்லுமோ? என்ன, பாயலும் இத்யாதி. "ஆழியம் பள்ளியார்" என்றத்தைப்பற்ற, அணியனுகையாலும் என்றது. க்ரமேண அந்வய:. (சு)

ஆ.—(பள்ளியாலிலை.) ஸர்வலோகாவகாஶ ப்ரதத்வ பரமௌதார்யத்தையுடைத்தாய், ஸர்வலோகஹரண ஸமர்த்தமாயிருந்த தன் வயிற்றிலே ஸர்வலோகத்தையும் வைத்துக்கொண்டு ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகிற இவனுடைய ஸர்வேஶ்வரத்வசிஹ்நபூத திவ்யசேஷ்டிதங்களுக்கு ஒரு முடிவுண்டோ? என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், அவடிதமான வடதளஶயந ப்ரகாரத்தைச் சொல்லி, அத்தாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[ஏழுலகுமென்று தொடங்கி] - ஜகத்தெல்லாம் உள்ளே புக்காலும் பின்னையும் இடமுண்டாய் ரக்ஷகமான வயிற்றை யுடைய ஈஶ்வரனே. [உள்ளுளென்று தொடங்கி] - அத்யகாதமாய்த் தெரியாதே ஆஶ்சர்யமான அவனுடைய மநோவ்ருத்தியை ஒருவர்க்கும் அறியவொண்ணாது.

ப.—அநந்தரம், வடதளஶாயித்வரூபமான அவடிதவடநா ஸாமர்த்யத்தாலே அவன்பரத்வம் துரவபோத மென்கிறார்.

பள்ளி - படுக்கை, ஆலிலை - ஆலிலையாக, ஏழுலகும் - எல்லாலோகத்தையும், கொள்ளும் - கொள்ளுகைக்கு இடங்கொடுக்கும், வள்ளல் - ஔதார்யத்தையும், வல் - ஶக்தியையுமுடைத்தான, வயிறு - வயிற்றையுடைய, பெருமான் - ஸர்வாதிகனானவனுடைய, கள்ளம் - ஒருவர்க்குந்தோன்றாதே, மாயம் - ஆஶ்சர்யமான, மனக்கருத்து - மாநஸவ்யாபாரம் (ஜகதர்த்தமான ரக்ஷணசிந்தாவ்யாபாரம்), உள்ளுள் - மாநஸவ்யாபாரத்தாலே, அறிவார் - அறியுமவர்கள், ஆர் - ஆர்? எவர்க்கும் அறியஅரிதென்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், அவடிதவடநாஸாமர்த்யத்தாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[பள்ளி யாலிலை] - படுக்கை ஆலந்தளிர். [ஏழுலகுங்கொள்ளும்] - அதில்கண் வளர்ந்தருளுகிற சிறுபிள்ளைவயிறு ஜகத்தெல்லாங் கொள்ளுகிறது. [வள்ளல்வல்வயிறு]- வள்ளல்தனமாவது - புக்கார்க்கெல்லாம் இடமுண்டாயிருக்கை. வலிமையாவது - ப்ரளயத்துக்கு அஞ்சவேண்டாதபடி நிர்ப்பயமா யிருக்கை. [பெருமான்] - இப்படி ரக்ஷிக்க வேண்டிற்று உடைபவனுகையாலே. [உள்ளுள்என்று தொடங்கி] - அத்யகாதமாய் ஒருவர்க்குந் தெரியாதே, அறிந்ததோற்றம் - ஆஶ்சர்யமான மாநஸவ்யாபாரமானது ஒருவர்க்கும் அறியவொண்ணாது. அவனுடைய பாஹ்யமான வ்யாபாரமும் நிலமன்று, மாநஸவ்யாபாரமும் ஒருவர்க்கும் அறிய நிலமன் றென்கிறது.

ஈடு.—ஏழாம்பாட்டு· அகடிதகடநாஸாமர்த்த்யத்தாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

---

ஏழாம்பாட்டு - பள்ளி இத்யாதி. 'பள்ளியாலிலை' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - அகடித இத்யாதி. 'மண்ணும்விண்ணுமெல்லாமுடனுண்ட' என்றது-இத்திருவாய்மொழியின் அர்த்தஸங்க்ரஹ ரூபமாகையாலும், "யவரும்யாவையும்" இத்யாதி-ஆபத்ஸகத்வபரமாகையாலும், "பள்ளியாலிலை" இத்யாதி - அகடிதகடநாஸாமர்த்யபரம்; அதோநபௌ ந ருக்த்யம்.

[பள்ளியாலிலை] - படுக்கை, பவனுயிருப்பதோரு ஆலந்தளிர். [ஏழுலகுங் கொள்ளும்]-இப்படுக்கையிலே ஸப்தலோகங்களையும் வயிற்றிலேவைத்துக் கண்வளரும். [வள்ளல்] - புக்க லோகங்களுக்கு அவ்வருகே 'இன்னங்கோண்டுவோ' என்னும்படி இடமுடைத்தாயிருக்கை. [வல்வயிற்றுப்பெருமான்] - உட்புக்க பதார்த்தங்களுக்கு க்ஷய ப்ரஸங்கமின்றியேயொழியும்படி மிடுக்கையுடைத்தாயிருக்கை. [பெருமான்] - இப்படி ரக்ஷிக்கவேண்டிற்றுஉடையவனுகை. அவனுடைய உள்ளுளாய கள்ளமாய மனக்கருத்தை யார்அறிவார்? கண்டதுஒன்றைச் சோன்ன இத்தனை போக்கி, உள்ளுள் - இன்னம் உள்ளேயுள்ளேயுண்டாய், கள்ளமாய் - ஒருவர்க்குந்தெரியாதபடியாய், மாயமாய் – ஜ்ஞாதாம்ஶம் ஆஶ்சர்யமா யிருக்கிற அவனுடைய மனக்கருத்து-மநோவ்யாபாரத்தை, ஒருவரால் அறியலா யிருக்கிறதோ? (எ)

## எட்டாம் பாட்டு.

கருத்தில்தேவும் எல்லாப்பொருளும்
வருத்தித்த மாயப்பிரானையன்றி யாரே
திருத்தித்திண்ணிலை மூவுலகுந் தம்முள்
இருத்திக்காக்கு மியல்வினரே.

ஆ.—(கருத்தில்.) ஸ்ருஷ்டிரக்ஷணங்கள் பிறர்கர்த்ருக மல்லவோ? இவற்றைப்பரமபுருஷைககர்த்ருகமாகச் சொல்லுவாருண்டோ? என்னில்;—பெற்ற மாதாவே புத்ரரக்ஷணம் பண்ணுகிறப்போலே ஸ்ருஷ்டித்தவனே ரக்ஷிக்க ப்ராப்தம்; ஆதலால், ரக்ஷிக்கிறுன் பரமபுருஷனே. ஸ்ருஷ்டி ரக்ஷணங்க ளிரண்டும் பரமபுருஷைககர்த்ருகமென்கிறுர்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்டி ரக்ஷணங்களைப் பண்ணுகையாலும் இவனே ஈஶ்வர னென்கிறுர்.

[கருத்தில் என்று தொடங்கி] - தன் ஸங்கல்பத்திலே தேவர்கள் தொடக்கமான ஸகலபதார்த்தங்களையும் உண்டாக்கின ஆஶ்சர்யபூதனையன்றி மற்றுஆர்? [திருத்தியென்று தொடங்கி] - திண்ணிதான நிலையையுடைத்தாம்படி மூவுலகையும் திருத்தித் தம் ஸங்கல்பத்திலே வைத்துக்கொண்டு காக்கும் ஸ்வபாவர்.

---

பவனுயிருப்பது - ஹவனுயிருப்பது; அப்போது உண்டாயிருப்ப தென்றபடி. 'அவாந்தரப்ரளயத்தில் வயிற்றிலேவைத்தது க்ருதகமான த்ரைலோக்யமாயிருக்க, 'ஏழுலகும்' என்றது - ரக்ஷகத்வப்பாரிப்பாலே; மஹாபலி அபஹரித்தது த்ரைலோக்யமாயிருக்க, 'ஸத்யலோகபர்யந்தம் அளந்தாற்போலே' என்று அருளிச்செய்வர். 'வள்ளல்' என்றது - வயிற்றுக்கு விசேஷணம். இவ்விடத்திலே - "இவ்வேழுலகமுண்டுமிடமுடைத்தால்" என்றது அநுஸந்தேயம். 'வல்' என்ற வன்மைக்கு ஹாவம்-உட்புக்க இத்யாதி. அவனுடைய உள்ளுளாய என்றது - கருத்துக்கு விசேஷணம். நீர் அறிந்து சொன்னீரோ? என்ன,- கண்டதோன்றை இத்யாதி. ஆலிலையைப் பள்ளியாகவுடையனாய், ஏழுலகுங்கொள்ளும் வள்ளல் வல்வயிற்றையுடைய பெருமானான அவன் தன்னுடைய உள்ளுளாய கள்ளமாய மனக்கருத்தை ஆரறிவார்? இத்யந்வய:. (எ)

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரரக்ஷகன் அவனே யென்கிறார்.

கருத்தில் – தன்னினைவாலே, தேவும் - தேவவர்க்கமும், எல்லாப்பொருளும் - மநுஷ்யாதி ஸகலபதார்த்தங்களும், வருத்தித்த - (ஸத்தைபெற்று அபிவ்ருத்தமாம்படி) உண்டாக்கின, மாயம் - ஆஶ்சர்யஶக்த்யாதிகளையுடைய, பிரானை - ஈஶ்வரனை, அன்றி – ஒழிய, ஆரே - ஆர்தான், மூவுலகும் - ஸமஸ்தலோகத்தையும், திண் - திண்ணிதான நிலை - நிலையையுடைத்தாம்படி, திருத்தி - (அநிஷ்ட நிவ்ருத்யாதிகளாலே) திருந்தச் செய்து, தம்முள் - தம்நினைவுக்குள்ளே, இருத்தி - அவற்றை ப்ரதிஷ்டிதமாக்கி, காக்கும் - ரக்ஷிக்கும், இயல்வினர் - ஸ்வபாவத்தையுடையார்? ரக்ஷணைகஸ்வபாவன் அவனென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்டி ரக்ஷணங்களைப் பண்ணுகையாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[கருத்திலித்யாதி] – தன் ஸங்கல்பத்திலே தேவஜாதி முதலாக ஸகல பதார்த்தங்களையும், [வருத்தித்த] - நிர்வர்த்திப்பித்த, உண்டாக்கின, ஸ்ருஷ்டித்த. [மாயப்பிரான் இத்யாதி] - ஆஶ்சர்யபூதனை ஸர்வேஶ்வரனை யொழிய; மற்றார், [திருத்தி யென்று தொடங்கி] - மூவுலகும் திண்ணிதான நிலையை உடைத்தாம்படி திருத்தி, தன்ஸங்கல்பத்திலே வைத்து, ஒருநோவு வாராதபடி அவதாநம்பண்ணி நோக்குகை இயல்வாக வுடையவர் - ஸ்வபாவமாக வுடையார் மற்றார்? "தமைக்ஷத பஹுஸ்யாம்", "நஹிபாலந ஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்".

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸ்ருஷ்டியும் பாலநமும் ஸ்வாதீநமாகவுடையவனுகையாலே இவனே ஈஶ்வர னென்கிறார்.

[கருத்தில் இத்யாதி] - தன்னுடைய ஸங்கல்பத்திலே தேவஜாதியையும் மற்றுமுண்டான ஸகலபதார்த்தங்களையும், வர்த்திப்பித்த - உண்டாக்கின; ஸ்ருஷ்டித்த. ஆஶ்சர்யபூதனை ஸர்வேஶ்வரனையன்றி, மூன்றுலோகங்களையும் திண்ணிதான ஸ்த்திதியையுடைத்தாம்படியாகத் திருத்தி, தம்முளிருத்தி, அவ்வோபதார்த்தங்களுக்கு அநுரூபமான ரக்ஷணங்களையும் திருவுள்ளத்தே வைத்து [காக்கும்]. "நஹிபாலந ஸாமர்த்யம்" (நஹி பாலநஸாமர்த்த்யம்) என்கிறபடியே ரக்ஷணத்தைப்பண்ணும். [இயல்வினரே] - இத்தை இயல்வாக வுடையவர், ஸ்வபாவமாக வுடையவர் ஆர்? மாயப்பிரானையன்றி - காக்குமியல்வினர் - ஆர்? என்று அந்வயம். (அ)

---

எட்டாம்பாட்டு - கருத்தில் இத்யாதி. 'வருத்தித்த, காக்கும்' என்கிற பதங்களிலே நோக்காக - ஸ்ருஷ்டியும் இத்யாதி.

கருத்தில் - ஸங்கல்பத்தில். வருத்தித்த - வர்த்திப்பித்த. திண்ணிதான ஸ்த்திதி - ஸத்தாநுவ்ருத்தி. திருத்தி - மர்யாதைகளையுண்டாக்கி. தம்முள் - தம்முடைய திருவுள்ளத்திலே. காக்கை - அநிஷ்டநிவர்த்தந இஷ்டப்ராபணங்கள். "இயல்வினரார்" என்றத்தால் பலித்த அர்த்தத்துக்கு ப்ரமாணம் - நஹி இத்யாதி. தேவும் எல்லாப்பொருளும் - கருத்தில் வருத்தித்த மாயப்பிரானையன்றி - மூவுலகும் திண்ணிலையாகத் திருத்தி - தம்முளிருத்திக் காக்குமியல்வினர் ஆர்? இத்யந்வய:. (அ)

# ஒன்பதாம் பாட்டு.

காக்குமியல்வினன் கண்ணபெருமான்
சேர்க்கைசெய்து தன்னுந்தியுள்ளே
வாய்த்ததிசைமுகன் இந்திரன்வானவர்
ஆக்கினன் தெய்வவுலகுகளே.

ஆ.—(காக்கும்.) கேவலம் ஸ்ருஷ்ட்டிமாத்ரமே அன்று, பரமபுருஷகர்த்த்ருகம்: ப்ரஹ்மாதி ஸ்தம்பபர்யந்த ஸர்வஜகத்ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் பரமபுருஷகர்த்த்ருகம்; ஆதலால், அவனே ஸர்வேஶ்வரன் ஏன்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸ்ருஷ்டிஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் இவனிட்ட வழக்காகையாலே இவனே ஈஶ்வர னென்கிறார்.

[காக்குமியல்வினன்] - பரிபாலநத்தை ஸ்வபாவமாக வுடையான். [சேர்க்கை செய்து] - ஸம்ஹரித்து. [தன்னுந்தியுள்ளே யென்று மேலுக்கு] - தன்உந்தியுள்ளே ஸ்ருஷ்டிக்ஷமனான திசைமுகன் இந்திரன் வானவர் தெய்வவுலகுகள் இவற்றையெல்லாம் உண்டாக்கினன்.

ப.—அநந்தரம், இந்த ரக்ஷணத்தோபாதி ஜகதுத்பத்தி ஸம்ஹாரங்களும் தததீந மென்கிறார்.

காக்குமியல்வினன் - ரக்ஷணத்தை ஸ்வபாவமாகவுடைய, கண்ணன் - க்ருஷ்ணனான, பெருமான் - ஸர்வேஶ்வரன், சேர்க்கைசெய்து - (ஸம்ஹ்ருதி ஸமயத்திலே நாமரூபவிபாக ரஹிதமாய், "தமேகீபவதி" என்கிறபடியே) சேரும்படிபண்ணி, தன் உந்தியுள்ளே - தன் திருநாபிக்குள்ளே, வாய்த்த - ஸ்ருஷ்டிக்கு வாய்த்த, திசைமுகன் - சதுர்முகன், இந்திரன் - இந்த்ரன், வானவர் - தேவர்கள், தெய்வவுலகுகள் - (அவர்களுக்கு வாஸஸ்த்தாநமான) திவ்யலோகங்கள், ஆக்கினன் - இவற்றை உண்டாக்கினன். உந்தியுள்ளே பிறந்த திசைமுக னென்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் இவனிட்ட வழக்காகையாலும் இவனே ஈஶ்வர னென்கிறார்.

[காக்குமியல்வினன்] - ரக்ஷணத்தை ஸ்வபாவமாக வுடையவன்; "நவஸம்வ ஜாரவஸோஹாரெ" இத்யாதி. [கண்ணபெருமான்] — ரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாய் வந்து அவதரித்த ஸர்வேஶ்வரன். [சேர்க்கை செய்து] - ஸம்ஹாரகாலம் வந்தவாறே "தமேகீபவதி" என்கிறபடியே தன்பக்கலிலே சேர்க்கையைச் செய்து. [தன்னுந்தி இத்யாதி] - தன்னுடைய திருநாபி கமலத்திலே, ஸ்ரஷ்ட்ருத்வத்தில் விலக்ஷணனான ப்ரஹ்மா இந்த்ரன் அல்லாத தேவதைகள் தேவலோகங்கள் இவற்றை உண்டாக்கினன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் ஸ்வாதீநமாம்படி யிருக்கையாலும் இவனே ஈஶ்வர னேன்கிறார்.

---

ஒன்பதாம்பாட்டு - காக்கும் இத்யாதி. 'சேர்க்கைசெய்து' என்ற ஸம்ஹாரமொன்றுமே கீழ்ப்பாட்டைப்பற்ற இப்பாட்டுக்கு விஶேஷம்.

[காக்குமியல்வினன்] - "நஸம்பதாம்ஸமாஹாரே" (நஸம்பதாம்ஸமாஹாரே) என்கிறபடியே பாலநகர்மத்தை ஸ்வபாவமாகவுடையவன். [கண்ணபெருமான்] - ரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாய்வந்து அவதரித்த ஸர்வேஶ்வரன். [சேர்க்கைசெய்து]-ஸம்ஹார காலம் வந்தவாறே கார்யரூப ப்ரபஞ்சமடையத் தன்பக்கலிலே சேர்க்கையாகிற செயலைச் செய்து. [தன் இத்யாதி] - தன்னுடைய திருநாபிகமலத்திலே, தான் ஒருகால் ஸ்ருஷ்டி என்று விட்டால் பின்பு தன்னையுங் கேட்கவேண்டாதபடி ஸ்ருஷ்டிக்ஷமனான சதுர்முகன் இந்த்ரன் மற்றுமுண்டான தேவர்களோடேகூட,இவர்களுக்கு இருப்பிடமான லோகங்களையும் கட்டளைப்பட உண்டாக்கினான். தன்உந்தியுள்ளே - ஆக்கினான். (௯)

## பத்தாம் பாட்டு.

கள்வாஎம்மையும் ஏழுலகும் நின்
னுள்ளேதோற்றிய இறைவவென்று
வெள்ளேறன்நான்முகன் இந்திரன்வானவர்
புள்ளூர்திகழல் பணிந்தேத்துவரே.

*ஆ.—(கள்வா.) இப்படி சதுர்முக பஶுபதி ஶதமகப்ரப்ருதி தேவர்களுக்கும் எம்பெருமானே காரணபூதனுமாய் ஈஶ்வரனுமாயிருக்கு மென்னுமிடத்தில் ப்ரமாணமென்? என்னில்,—அவர்கள் தங்களுடைய வாக்யமே ப்ரமாண மென்கிறார்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், கீழ் 'எம்பெருமானே ஈஶ்வரன், அல்லாதார் அநீஶ்வரர்கள்' என்றுஞ் சொன்னபோதுக்கு அவர்கள் தங்களுடைய ஸ்துதிவாக்யமே ப்ரமாண மென்கிறார்.*

*[கள்வா] - உன் ஐஶ்வர்யத்தை மறைத்து எங்களுக்குத் தெரியாதபடி வந்து நிற்கிறவனே! [எம்மையும் ஏழுலகும் நின்னுள்ளே தோற்றிய இறைவவென்று] - எங்களையும் நாங்களிருந்த லோகங்களையும் உன் ஸங்கல்பத்தாலே தோன்றுவித்த ஸ்வாமியென்று. [புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே] - லோகார்த்தமாகப் பெரியதிருவடி மேலே யேறிப் புறப்படுமிடத்திலே அவன் திருவடிகளிலே விழுந்து ஏத்தாநிற்பர்.*

*ப.—அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனாகையாலே ஸர்வதேவதா ஸமாஶ்ரயணீயன் அவனே யென்கிறார்.*

கள்வா - (அவதாரமுகத்தாலே ஆதிக்யத்தை மறைக்கும்) க்ருத்ரிமனே! எம்மையும் - எம்மையும், ஏழுலகும் - ஸமஸ்தலோகங்களையும், நின்னுள்ளே - உன்னு

---

'பாலநம்அவனது' என்னுமதுக்கு ப்ரமாணம் - நஸம்பதாம் இத்யாதி.ஸமாஹாரே-ஸம்பாதநே. சேர்க்கை - ஸமாஹாரம்; அத்தால், ஸம்ஹாரஞ்சொல்லுகிறது. 'வாய்த்த' என்றதுக்கு பாவம் - தானொருகால் இத்யாதி. வாய்ந்த - ஸமர்த்தனான. திசைமுகன் - திக்முகன். வானவர்-தேவர்களோடேகூட. தெய்வவுலகுகள்-தேவதைகளுக்கு இருப்பிடமான லோகங்களை. கட்டளைப்பட - மர்யாதைபடும்படி. காக்குமியல்வினன் இத்யாரப்ய, வானவர்களோடேகூட தெய்வவுலகுகளைத் தன்உந்தியுள்ளே ஆக்கினான் இத்யந்வய꞉. (௯)

டைய ஸங்கல்பத்துக்குள்ளே, தோற்றிய - தோன்றுவித்த, இறைவ - ஸ்வாமியே! என்று - என்றுகொண்டு, வெள்ஏறன் - வெளுத்த ஏற்றையுடைய ருத்ரனும், நான்முகன் - சதுர்முகனும், இந்திரன் - இந்த்ரனும், வானவர் - ஸ்வர்க்கவாஸிகளும், புள்ளூர்தி - கருடவாஹநனுடைய, கழல் - திருவடிகளை, பணிந்து - பாஷணம்பண்ணி, ஏத்துவர் - ஸ்துதியாநிற்பார்கள். இத்தால் - தர்மபர்யாய வ்ருஷபவாஹநத்வத்தாலே ருத்ரனுடைய கர்மவஶ்யதையும், வேதமயனான கருடன் வாஹநமாகையாலே ஈஶ்வரனுடைய வேதாந்தவேத்யத்வமும் தோற்றுகிறது.

இ.—பத்தாம்பாட்டில், 'இவனே ஈஶ்வரன்' என்கிற இப்பொருளுக்கு அவர்கள் ஸ்துதிவாக்யமே ப்ரமாண மென்கிறார்.

[கள்வா] - உன் ஐஶ்வர்யத்தை மறைத்து எங்களுக்குத் தெரியாதபடி வந்து நிற்கிறவனே! பரதந்த்ரனாய்த் தன் ஸ்வாதந்த்ர்யத்தை அபலபிக்கையிறே களவாவது; கைலாஸயாத்ரையிலே இது ப்ரகாசிக்கிறது; "நமோஹிரண்யபாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய" என்று இவன் ஸ்தோத்ரம் பண்ணினபடியை வாசிக்கக் கேட்ட ப்ராஹ்மணன், 'ஸ்தோத்ரம் பண்ணியறியாத வாயாகையாலே மீன்துடிக்கிறபடி பாராய்'என்றான்; "நாத் தழும்ப நான்முகனு மீசனுமாய் முறையாலேத்த" என்கிறபடியே வாய் தழும்பேறிக் கிடக்கிறதன்றே. நீ மறைத்து நிற்கிற நிலையை நாங்கள் அறிந்திலோமாகில் செய்வதென்? என்கிறார்கள். [எம்மையும் இத்யாதி] - 'அது களவு' என்னுமிடத்தை உபபாதிக்கிறார்கள். எங்களையும், நாங்களிருக்கிற லோகங்களையும் உன் ஸங்கல்பைகதேசத்திலே தோற்றுவித்த ஸ்வாமீ! இது ஸ்வரூபமாயிருக்க எங்களை ஸ்தோத்ரம் பண்ணக்கடவையோ? [வெள்ளேறன் இத்யாதி] - ராஜபரிகரமானவர்கள் சட்டையும் பிரம்பும் மயிர்கட்டுமாய்க்கொண்டு தந்தம் தரத்தோடே ஸேவிக்குமாபோலே, தந்தம் வரிசை போடேயாயிற்று ஸேவிப்பது; "இரவியர் மணிநெடுந்தேரொடும்" இத்யாதி. [புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே] - அந்தஃபுரத்திலே செல்லுகைக்கு அந்தரங்கதை போராமையாலே ஆட்டத்து வெளியிலே யானைக்காலிலே விழுந்து கூப்பிடுவாரைப்போலே பெரிய திருவடியின்மேலே யேறிப் புறப்பட்ட விடத்தேயாயிற்றுப் புகழ்வது.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவ்வளவும் வர, நான் ப்ரதிபாதித்த பரத்வத்தை நீங்கள் ஆஶ்ரயணீயராக நினைத்திருக்கிறவர்கள் மேலெழுத்தைக்கொண்டு விஶ்வஸியுங்கோள் என்கிறார்.

[கள்வா] - ஸர்வேஶ்வரன்பக்கலிலே வந்து வரங்கொள்ளுகிற இடத்திலே, 'தேவர் இன்னம் எனக்கு ஒருவரம் தரவேணும்: நீர் தந்த வரம் நிலைநிற்கும்படி என்பக்க

---

பத்தாம்பாட்டு - கள்வா இத்யாதி. கீழெல்லாம் ப்ரதிபாதித்த அர்த்தத்தை இதிலே த்ருடீகரிக்கிறு ரென்கிறார் - இவ்வளவும் இத்யாதி. மேலெழுத்து என்றது - பூர்வார்த்தத்திற் சொன்ன அவர்கள் பாசுரம்.

பராவஸ்த்தையில் வரங்கொள்ளாதே தான் தாழநின்று வரங்கொள்ளுகை - களவென்று விவக்ஷித்து இதுக்கு ஹேதுவேது? என்ன, ஸர்வேஶ்வரன் இத்யாதி. தேவரீர் இன்னும் எனக்கு ஒரு வரந்தரவேணும் என்கிறவிடத்திலே மஹாமேதத்திலே ருத்ரன், தன்தலையை யறுத்து ஹோ

லிலே வந்து ஒருவரம் பெற்றுப்போகவேணும்' என்று அர்த்திக்க, 'அப்படியேசெய்கிறோம்' என்றுவிட்டு,'ருக்மிணிப்பிராட்டிக்கு ஒருபிள்ளை வேணும்' என்று சேன்று நின்று "நமோ வண்டாயகர்ணாய" (நமோகண்டாயகர்ணய) என்றாற்போலே ஏத்த, அவனும் "உமயா ஸார்த்தமீசாநః" (உமயாஸார்த்தமீசாநః) என்கிறபடியே புறப்பட்டு, "நீ கறுப்புடுத்துத் தாழ நின்ற நிலையிலே இச்செயலைச் செய்தால் இத்தை நாட்டார் 'மேய்' என்றிருப்பர் களோ கள்வா?" என்பர்கள் தன்ஸ்வாதந்த்ர்யத்தை மறைத்துப் பரதந்த்ரனாய் நிற்கை யிறே - களவாகிறது. கைலாஸயாத்ரையிலே "நமோவண்டாயகர்ணாய நமःகடகடாயச" (நமோகண்டாயகர்ணயநமःகடகடாயச) என்று ஸ்தோத்ரம் பண்ணினபடியைக் கேட்ட ப்ராஹ்மணன், 'இதுக்குமுன்பு ஒருவரை ஸ்தோத்ரம் பண்ணியறியாத வாயான வாறே மீன்துடிக்கிறபடி பாராய்' என்றான். *"நாத்தழும்ப நான்முகனு மீசனுமாய் முறையாலேத்த" என்கிறபடியே - ஸ்தோத்ரம்பண்ணி நாத்தழும்புபட்டுக் கிடக்கிறதன்றே. 'இவன் தாழநின்ற நிலையும் ஸ்தோத்ரம்பண்ணின நிலையும் களவு' என்னுமிடத்தை உபபாதிக்கிறது மேல். [எம்மையும் இத்யாதி] – நீ இவற்றை மனைகிறபோது, எங்களையும் மனைந்து பின்னையன்றோ திர்யக்ஜாதிகளை உண்டாக்கிற்று. [இறைவ]-இறைவ என்று நிற்பர்கள். இங்ஙனே சொல்லுகிறவர்கள்தான் ஆர்? என்னில், - [வெள்ளேறன் இத்

---

மம்பண்ண உத்யோகித்தபோது, ஸர்வேஶ்வரன் வந்து தோற்றிச் சிலவரங்கள்கொடுத்து, 'இன்னம் ஏதுவேணும்?' என்றவளவிலே, - "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு ... ॥" என்றது அநுஸந்தேயம். வஹ்ஸ வஹித்தது மேகமாய், வராஹபுராணே ருத்ரகீதாயாம் பகவாந், "... ... ... ... ... ... ... ... ... ... ... ... ॥ ... ... ... ... ... ... ॥" "மேகமாய்த் தாங்கினன் திருமால் காண் சாழலே" என்றிறே அவர்கள் சொல்லுவது. கறுப்புடுக்கை - பரத்வத்தை மறைக்கை. இச்செயலைச் செய்தால் - ஸ்தோத்ரம்பண்ணுகை வரங்கொள்ளுகை முதலான செயலைச் செய்தால். மெய்யென்றிருப்பார்களோ வென்றது - 'வரங்கொடுத்ததுக்காகச் செய்தான்' என்றிறே இருப்பர்களென்றபடி. கள்வா என்பர்கள் - ருத்ராதிகளென்று கூட்டுவது. தாழநிற்கை களவோ வென்ன, தன்ஸ்வாதந்த்ர்யத்தை இத்யாதி. ப்ராஸங்கிகம்-கைலாஸ இத்யாதி. கேட்டப்ராஹ்மணன் - புராணஶ்ரவணவேலாயாம் கேட்ட ப்ராஹ்மணன். மீன்துடிக்கிறபடி-மீன் துடிக்கிறாப்போலே நாக்குத் துடிக்கிறபடி. நமோகண்டாய இதி- ஸ்ரீஹரிவம்ஶே கைலாஸயாத்ராயாம். தத்ரைவ, "... ... ॥ உமயா ஸார்த்தமீஶாநோ ... ॥". அப்படி ஸ்தோத்ரம் பண்ணியறியானோ? என்ன, நாத்தழும்ப இத்யாதி. திருமொழி. நாக்கானது தழும்பேறும்படியாகச் சதுர்முகனும் ருத்ரனும் முறையாலே - ஶேஷித்வப்ராப்தியாலே ஸ்தோத்ரம்பண்ணவென்கை. தழும்புபட்டு - தகணேறி. 'எம்மையும் ஏழுலகும்' என்ற க்ரமத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் - நீ இவற்றை இத்யாதி. மனைகை - ஸ்ருஷ்டிக்கை. நின்னுள்ளே - உன்ஸங்கல்பத்திலே. இறைவ - ஸ்வாமீ! ஸ்வாமிஸந்நிதியிலே வாஹநங் கொண்டு வரலாமோ? என்ன,

---

* பெரிய திருமொழி - க-எ-அ.

யாதி]-ராஜஸேவைபண்ணுவார் தந்தாம்அடையாளங்களோடே சட்டையும் பிரம்புமாய் ஸேவிக்குமாபோலே,இவர்களுந் தந்தாம்அடையாளங்களோடேயாயிற்று வந்துஸேவிப்பது. "இரவியர் மணிநெடுந்தேரோடும்" இத்யாதி. [புள்ளூர்திகழல்பணிந்தேத்துவரே] - ஸர்வேஶ்வரன், பெரியபிராட்டியாருந் தானுமாயிருக்கிற இருப்பில் புகப்பெறுமையாலே திருப்பாற்கடலுக்கு இவ்வருகே கூப்பிட்டால், இவர்களுக்குக் காட்சிகொடுக்கைக்காகத் திருவடிதிருத்தோளிலே ஏறிப்புறப்படும். ஆட்டத்து வெளியிலே யானைக்காலிலே *துகை யுண்ணுநிற்பார்கள். (கா)

# பதினோராம் பாட்டு.

ஏத்தவேழுலகும் கொண்டகோலக்
கூத்தனைக் குருகூர்ச்சடகோபன்சொல்
வாய்த்தவாயிரத்துள் இவைபத்துடன்
ஏத்தவல்லவர்க்கு இல்லையோருனமே.

ஆ.—(ஏத்தவேழுலகும்.) ஸர்வலோகங்களும் தன்னுடைய விஜயத்தைச் சொல்லிக்கொண்டு நின்று ஏத்த ஏழுலகுங்கொண்டருளின இது தொடக்கமாக வுள்ள திவ்யசேஷ்டிதங்களாலே எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வத்தை ப்ரதிபாதிக்கிற இந்தத் திருவாய்மொழியை இந்த பாவனையோடே கூட ஏத்தவல்லார்க்கு இனி ஒரு நாளும் எம்பெருமானோடு விஶ்லேஷ மில்லை யென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இப்பத்தும் ஸாபிப்ராயமாக வல்லார்க்கு, 'எம்பெருமான் அநீஶ்வரன்' என்று புத்திபண்ணுதல், 'இதரதேவதைகள் ஈஶ்வரர்கள்' என்று புத்தி பண்ணுதல் செய்யும் இவ்வநர்த்தங்க ளொன்றும் வாரா தென்கிறார்.

[ஏத்தஎன்று தொடங்கி] - தேவாதிகளெல்லாம் நின்று புகழ லோகங்களை யெல்லாம் அளந்துகொண்ட மநோஹாரி சேஷ்டிதத்தை யுடையவனை நேர்பட்ட.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸர்வப்ரகார வைகல்ய ராஹித்யத்தை அருளிச்செய்கிறார்.

---

ராஜஸேவை இத்யாதி; அவன்கொடுத்த வரிசையோடே வந்தால் விரோதமில்லை யென்றபடி. உக்தத்துக்குப்ரமாணம் - இரவியா இத்யாதி. திருப்பள்ளியெழுச்சி-க. த்வாதஶாதித்யர்கள், விலக்ஷணமான பெரியதேரோடே வந்தார்க ளென்கை. 'புள்ளூர்திகழல் பணிந்தேத்துவர்' என்று விஶேஷிப்பானென்? என்ன, ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஆட்டத்துவெளி-வையாளிவெளி. ராஜாக்களுடைய வையாளிவெளியிலே யானைக்காலிலே ஸாமந்தராஜாக்கள் நிரபிமாநராய்த்துகையுண்பர்களிறே; அப்படியே இங்கும் நிரபிமாநராய் ஸ்தோத்ரம்பண்ணுகிற்பர்க ளென்றபடி. வெள்ளேறனித்யாரப்ய, கழல்பணிந்து - கள்வா எம்மையும் இத்யாரப்ய, தோற்றிய இறைவனென்று - ஏத்துவர் இத்யந்வய:. (கo)

---

* இங்கு 'துகையுண்டுவிழுந்து கூப்பிடுவோரைப்போலே அவ்விடத்திலே திருவடிகளிலே விழுந்து புகழாநிற்பர்கள்' என்னும் வாக்யம் சில ஸ்ரீகோசங்களில் காண்கிற தென்பர்.

ஏத்த - லௌகிகரேத்துகிற இதுவே விளைநீராக, ஏழுலகும் - ஸமஸ்த லோகத்தையும், கொண்ட - அளந்துகொண்ட, கோலம் - வடிவழகையும், கூத்தனை - வல்லாராடினாற்போலே அளந்த அநாயாஸத்தையு முடையவனை, குருகூர்ச்சடகோபன்- ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, வாய்த்த - லோகத்துக்கு அலப்யலாபமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்து - இவைபத்தையும், உடன் - அர்த்தத்தோடே உடன் பட்டு, ஏத்த - ஸ்துதிரூபமாகச் சொல்ல, வல்லவர்க்கு - வல்லவர்க்கு, ஓரூனம் - (தேவதாந்தரங்களினுடையஉத்கர்ஷபுத்தியும், அவர்களோடு உண்டான ஸாம்யபுத்தியும், அவர்களில் நிகர்ஷபுத்தியுமாகிற) குறைவுகளொன்றும், இல்லை - இல்லை. ஊனம் - குறைவு. சொல்வாய்த்தவென்று - அர்த்தப்ரதிபாதந ஸாமர்த்த்யமாகவுமாம். ஏழுலகென்று - கீழும் மேலுங் கூட்டுகிறது. இது கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இப்பத்தையும் ஸாபிப்ராயமாக வல்லார்க்கு, இவனுடைய அநீஶ்வரத்வ புத்தியென்ன, இதர தேவதைகளுடைய ஈஶ்வரத்வ புத்தியென்ன இவ்வநர்த்தங்கள் பிறவா தென்கிறார்.

[ஏத்தவேழுலகுங்கொண்ட]- "[illegible]" என்கிறபடியே தேவஜாதி யேத்த, அதுவே விளைநீராக வளர்ந்து ஸகலலோகங்களையும் அளந்துகொண்ட. [கோலக்கூத்தனை] - திருவுலகளந்தருளுகிறபோது, வல்லாராடினாற்போலே தர்ஶநீயமாயிருந்தபடி. அப்போதை வடிவழகொழிய, இந்த்ரனைப்போலே ராஜ்யஶ்ரத்தை யில்லையே இவர்க்கு. [குருகூர்ச்சடகோபன் சொல்] - வேதத்திற்காட்டில் ஆழ்வாரடியாகப் பிறந்த ஆபிஜாத்யம். [வாய்த்தவாயிரம்] - ஈஶ்வரனுக்கு இதுவுமொரு ஐஶ்வர்யமாயிற்று நேர்பட்டது. [சொல்வாய்த்தவாயிரம்] - வாச்யத்திற்காட்டில் வாசகம் நேர்பட்டபடியென்றுமாம். அதாகிறது - விஷயத்தை உள்ளளவும் பேசவற்றாயிருக்கை. [உடனேத்த வல்லவர்க்கு]-ஸாபிப்ராயமாகச் சொல்லுமவர்களுக்கு. அல்லாதாருடைய அநீஶ்வரத்வத்தையும் இவனுடைய பரத்வத்தையுஞ் சொல்லுகிறதாகையாலே அபிப்ராயத்தோடே கற்கவேணுமாயிற்று. [இல்லையோரூனமே] - தேவதைகளோடொக்க நினைத்தல், அவர்களுக்கு உத்கர்ஷத்தை நினைத்தல், இவனுக்கு அபகர்ஷத்தை நினைத்தல் இவையாயிற்று ஊனம். அவை இவர்களுக்கில்லை. தேவதாந்தர ஸ்பர்ஶமாயிற்று ஸம்ஸாரபீஜம்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்க வல்லவர்களுக்கு, தேவதாந்தரங்கள்பக்கல் ஈஶ்வரத்வபுத்தி பண்ணுகையாகிற ஊன மில்லை யென்கிறார்.

[ஏத்த ஏழுலகுங் கொண்ட] - "[illegible]" (ஸங்கைஸ்ஸ—ராணும்) என்கிறபடியே ஏத்த, அந்த ஹர்ஷத்தாலே ஸகல லோகங்களையும் திருவடிகளின் கீழே இட்டுக்கொண்ட. [கோலக்கூத்தனை] - திருவுலகளந்தருளினபோது வல்லாராடினாற்போலேயாயிற்று இருப்பது. அப்போதை வடிவழகை யநுபவிக்குமதொழிய, இந்த்ரனைப்போலே ராஜ்யஶ்ரத்தை இல்லையே இவர்க்கு. [குருகூர்ச்சடகோபன்சொல்] - ஆப்திக்கு 'இன்னார் சொல்லிற்று' என்னக்கடவதிறே. [சடகோபன்] – வேதாந்தத்திற்

---

நிகமம் - ஏத்த இத்யாதி. 'ஏத்தவல்லவர்க்கோரூனமில்லை' என்றத்தைப்பற்ற, அவதாரிகை.

ஏத்த - தேவாதிகள் ஸ்துதிக்க. ஸங்கைரிதி - ஸ்ரீவிஷ்ணுதர்மே மங்கல்யஸ்தவே. "[illegible] | [illegible]". 'கூத்தன்' என்கிறதென்? என்ன, திருவுலகு இத்யாதி. 'கோலம்' என்றதுக்கு பாவம்-அப்போதை இத்யாதி. ஸ்வப்ரஶம்ஸைபண்ணலாமோ? என்ன, ஆப்திக்கு இத்யாதி. தாத்பர்யாந்தரம் - வேதாந்தத்தில் இத்

காட்டில் ஆழ்வார்பக்கலிலே பிறந்த ஆபிஜாத்யம். [வாய்த்தவாயிரம்] - இத்தனைபோது இவர் ப்ரதிபாதித்த பரவஸ்து நேர்பட்டாற் போலேயாயிற்று இப்ப்ரபந்தமும் நேர்பட்ட படி. வாச்யத்திற்காட்டில் வாசகம் நேர்பட்டபடி யென்றுமாம் அதாவது - விஷயத்தை உள்ளபடி பேச வற்றாயிருக்கை. [இவை பத்துட னேத்த வல்லவர்க்கு] - இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக ஏத்தவல்லவர்களுக்கு. [இல்லையோரூனமே] - இவ்வாத்மாவுக்கு ஊனமாவது - அபரதேவதைகள்பக்கலிலே பரத்வப்ரதிபத்திபண்ணுகையும், பரதேவதைபக்கல் பரத்வப்ரதிபத்தி பண்ணாமையும். இப்படி வரக்கடவதான ஊனம் இது கற்றார்க்கு இல்லை.

முதற்பாட்டில் - மேல் பரக்க அருளிச்செய்கிற இத்திருவாய்மொழியில்அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்தார். இரண்டாம்பாட்டு முதல் - து:கநிவர்த்தகனுகையாலும்; ஶீலவானுகையாலும், ஸுகுமாரனுகையாலும், புண்டரீகாக்ஷனுகையாலும், ஆபத்ஸகனுகையாலும், அகடிதகடநாஸமர்த்தனுகையாலும்; ஸ்ருஷ்டிஸ்த்திதிகளைப் பண்ணுகையாலும், ஸம்ஹாரமாகிற செயலைச் செய்கையாலும்; ஈஶ்வராபிமாநிகளா யிருக்கிறவர்களுடைய ஸ்தோத்ராதிகளாலும். இப்படி பஹுப்ரகாரங்களாலே அவனுடைய பரத்வத்தை அருளிச்செய்து; இதுகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினுர். (கக)

---

*யாதி. ஆபிஜாத்யம் - திருவாய்மொழிக்கு என்றபடி. "வாஸ்யவாஸ்யவாசகெய ந வாஸ்யாஜாயிக்ஸ்யவாசகெயநவ ஹாவஙயரோஹ - இத்தனைபோது இத்யாதி வாக்யத்வயோ. அதாவது இத்யாதி - விஷயமான அவன் தன்னை உள்ளபடி ப்ரகாஶிப்பியாமல் மறைத்துக்கொண்டிரேயிருப்பது; அவனுடைய ஸ்வஹாவத்தையெல்லாம் ஸ்பஷ்டமாக ப்ரகாஶிப்பிக்கிறது இப்ப்ரபந்தமிறே. உடன் - ஸஹஸ்ரேணைட. 'ஓர்' என்கையாலே - ஊனத்தினுடைய வைவித்யத்தை அருளிச்செய்கிருர்-இவ்வாத்மாவுக்கு இத்யாதி. ஊனம்-குறை.*

*இரண்டாம்பாட்டு முதல் - இரண்டாம்பாட்டுத்தொடங்கி. க்ரமேண அந்வய:.* (கக)

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி** :—ஸம்ஶ்லிஷ்யஸ்வைஸ்ஸம்நாந்நாஷி தஃவ்யஸம் மாத்நாஙெஷெஜ நய நவஸ்யஷெஹஶஸக்யூ | ஸூஹாநயாஷி தரமதாவிஜநஷ்யஹாவெ வளரணிகொக்நய தஶ்ஶம்ஜிஷ்ஷிதீயெ.

---

**த்ரவிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி** :—வஙெஶௌர்யாவதாரம் ஹவஷஙரிதஹரம்வாஜநக்கெஜஹாஜம் நாஹீவஷொஜவிஷ்ஷெஷநஙமணஸ்யஶம்கஷு தஷ்க்ஷதாஷ்யி | ஸ்வஷ்வம்நமெதாயவதெ ஜமஷவநயிமம் மக்ஷணாயாவதீரணம் மஷதாஷிஸஙதுஷ்ஙம்வ்யவ்யணஙத ஷெஷிதொதஷஜஹாவெநநாயஷு॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

திண்ணிதாமாறன் திருமால்பரத்துவத்தை
நண்ணியவதாரத்தேநன்குரைத்த — வண்ணமறிந்து
அற்றார்கள்யாவர் அவரடிக்கேயாங்கவர்பால்
உற்றாரைமேவிடாதான்.

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானுர் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.

## மூன்றாந்திருவாய்மொழி—ஊனில்வாழ்: ப்ரவேசம்.

**ஆ.**—(ஊனில்வாழுயிரே.) இப்படி ஸ்வோஜ்ஜீவநார்த்தமாக வந்து தோற்றியருளினவன் தம்மோடே கலந்தருளினபடியைச் சொல்லுகிறார்.

ஒ.—மூன்றாந்திருவாய்மொழியில், எத்தனையேனும் அளவுடையார்க்கு பாஹுபலத்தால் ஸம்பாதிக்கவொண்ணாததுமாய், தமக்கு நிர்ஹேதுகபகவத்ப்ரஸாத லப்தமுமாய், நிஸ்ஸமாதிகமுமா யிருந்துள்ள பகவத்ஸம்ஶ்லேஷஸுகத்தை அநுபவித்து, அப்படிப்பட்ட ஸுகம் தம்மால் தனியநுபவிக்க வொண்ணாமையாலே, அதுக்கு நிலவரான அயர்வறு மமரர்களோடேகூட அநுபவிக்கைக்காக,'அவர்களை நான் என்றோ கிட்டுவது?' என்று மநோரதித்து முடிக்கிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், இப்படி உத்துங்கலலிதனான இவனுடைய ஸர்வவித ஸாரஸ்யாதிஶய ப்ரயுக்தமான திவ்யபோக்யதையை அருளிச்செய்வதாக, அவனுடைய ஸர்வரஸாத்மகத்வத்தையும், ஸாரஸ்யயுக்தனான அவன்விஷயத்தில் தம்முடைய உபகாரஸ்ம்ருதியையும், ஸ்வவிஷயத்தில் தம்மை அவன் அபிநிவேஶிப்பித்தபடியையும், அவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகார மில்லாதபடியையும், தன்னுடைய அப்ராக்ருதபோக்யதையையும் ப்ரகாஶிப்பித்துச் சேர்த்துக்கொண்டபடியையும், இந்த ஸம்ஶ்லேஷம் ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே அநாதிஸித்தமானபடியையும், போக்யதாதிஶயத்தாலே வ்யதிரேகத்தில் தரிக்க அருமையையும், அவ்வநுபவம் தமக்குக் கைபுகுந்தமையையும், ஸர்வப்ரகாராநுபவத்தால் பிறந்த ஆநந்த விஶேஷத்தையும்,இப்படி அநுபவித்து ஆநந்திகளான ஸூரிகளோடு தாம் கூடியநுபவிக்கையி லுண்டான ஆசையையும் அருளிச்செய்து, கீழ்ச்சொன்ன ஸர்வப்ரகாரஸாரஸ்யம் ஸூரிபோக்யமென்னுமிடத்தையும் உபபாதித்தருளுகிறார்.

இ.—மூன்றாந்திருவாய்மொழியில், எத்தனையேனும் அளவுடையார்க்கும் ஸ்வயத்நத்தாற் கிட்டவரிதாய், அவன்தானே காட்டுகையாலே தமக்குஎளிதாய், ஸமாதிகவிவர்ஜிதமுமா யிருந்துள்ள அநுஹவரஸம் தம்மால் தனியநுபவிக்கவொண்ணாமையாலே, இதுக்கு உசாத்துணையாவாரை இங்குக்கிடையாமே இதுக்கு நிலவரான நித்யஸூரிகளோடே அநுபவிக்க ஆசைப்பட்டு அதுகிட்டாமையாலே, 'அவர்கள் திரளை என்றோ நான்கிட்டுவது?' என்று அநவாப்தியோடே தலைக்கட்டுகிறார். வாயுந்திரையுகளோடேயாயிற்று, இத்திருவாய்மொழிக்கு நேரே ஸங்கதியுள்ளது; ஈஶ்வரன் இவர்ப்ரக்ருதியறியுமவனுகையாலே ப்ராஸங்கிகமாகப் பரத்வத்தை அநுபவிப்பித்து, பின்னை இத்தை அநுபவிப்பித்தான். வாயுந்திரையுகளில் ஆற்றாமைக்கு, அறிவுநடையாடாத திர்யக்குக்களையும் அசேதநங்களையுஞ் சேர்த்தார்; ஸம்ஶ்லேஷத்தால் வந்த ப்ரீதிக்கு, அறிவு நைஸர்க்கிகமான நித்யஸூரிகளை உசாத்துணையாகத் தேடுகிறார்.

ஈடு.—வாயுந்திரையுகளில் ஆர்த்திதீர வந்து ஸம்ஶ்லேஷித்த ஸம்ஶ்லேஷத்தைச் சொல்லுகிறது-இத்திருவாய்மொழியில். நடுவே ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமான இத்தனை ஈஶ்

---

ஊனில்வாழுயிர் ப்ரவேஶே ஸங்கதிமாஹ - வாயுந்திரை இத்யாதி. நடுவே திண்ணன் வீடு எதுக்கு? என்ன, நடுவு இத்யாதி. விஸ்தாரமாஹ - தாம்பெற்ற இத்யாதி. அளவுபட்

வரத்வம். தாம்பெற்ற பேற்றின் கனத்தைப் பார்த்தார்; அது தாமடியாக வந்ததாகிலிறே அளவுபட்டிருப்பது; ஸர்வேஶ்வரனடியாக வந்ததாகையாலே கனத்திருக்குமிறே. தாம் அநுபவித்த அநுபவத்துக்குள்ளே எல்லாரஸங்களு முண்டாய், அதுதான் ஸமாப்யதிக வர்ஜிதமுமாயிருந்தது; 'இப்படிப்பட்ட பேற்றுக்கு உசாத்துணையாவார் ஆர்?' என்று பார்த்த விடத்தில், ஸம்ஸாரத்தில் ஆளில்லாமையாலே, 'அவன் தன்னோடொக்க ப்ராப்யருமாய், அவனை நித்யாநுபவம்பண்ணுநிற்பாருமாய், பகவதநுபவத்துக்கு தேஶிகருமா யிருக்கிற நித்யஸூரிகள் திரளிலே போய்ப்புக்கு போதயந்த பரஸ்பரம் பண்ணி யநுபவிக்கப் பெறுவது எப்போதோ?' என்னும் அநவாப்தியோடே தலைக்கட்டுகிறார். வாயுந்திரையுகளில் ஆற்றாமைக்கு அறிவுநடையாடாத திர்யக்குக்களையும் அசேதநங்களையும் சேர்த்தார் அங்கு; இங்கு, ஸம்ஶ்லேஷத்தால் வந்த ப்ரீதிக்கு அறிவு நைஸர்க்கிகமான நித்யஸூரிகளைத் தேடுகிறார். "ராமஸ்து" (ராமஸ்து) - பெருமாளும் பிராட்டியும் ஏகதத்த்வமென்னலாம்படி கலந்த கலவியைச் சொல்லுகிறது. 'பித்ருஶுஶ்ரூஷணபரரானார், தர்மங்களை ப்ரவர்த்திப்பித்தார்; தேவதாஸமாராதநம் பண்ணினார்' என்றாயிற்று சொல்லிக்கொண்டுபோந்தது; இப்படிப்போந்த இவர் இப்போது 'வாத்ஸ்யாயநங்கற்றுக் காமதந்த்ரமேயோ நடத்திப்போந்தது?' என்னும்படி வேறுபட்டார். "ஸீதயாஸார்த்தம்" (ஸீதயாஸார்த்தம்) - பரமபதத்தில் செவ்வியோடே வந்தவளும் பிற்பாடையாம்படி போமஸ்ரோதஸ்ஸிலே முற்பாடரானார். "விஜஹார" (விஜஹார) - இப்படி பரிமாறச்செய்தேயும்

---

டிருப்பது - பரிச்சிந்நமாயிருப்பது. 'தேனும் பாலும்' இத்யாதியைப் பற்ற, எல்லாரஸங்களும் என்றது. ஸமாப்யதிகவர்ஜிதம் என்றது - 'ஒத்தார்மிக்காரையிலையாய' என்றதைப் பற்ற. விஷயம் ஸமாதிகரஹிதமாகையாலே அநுபவமும் ஸமாதிகரஹித மென்றபடி. 'களிப்பும் கவர்வும்' என்கிற பாட்டை உட்கொண்டு, இப்படிப்பட்ட இத்யாதி. உசாத்துணை - ஸஹாயம். 'நித்யஸூரிகள் உசாத்துணை' என்கைக்கு ஹேது - அவன்தன்னோடு இத்யாதி. ப்ராப்யராய் இத்யாதி விஶேஷணத்ரயமும் - "ஸாயுஜ்யாஸஸ்தி", "ஸதாபஶ்யந்தி", "பெவஶ்ராணா:" என்றத்தைப் பற்ற. ஸாத்யா:-ப்ராப்யா இத்யர்த்த:. 'உடன்கூடுவதென்றுகொலோ' என்றத்தைப்பற்ற, அநவாப்தியோடே தலைக்கட்டுகிறார் என்றது. வாயுந்திரையுகளிற்போலே ப்ரீதிக்கும் திர்யக்குக்களைத் தேடாதே நித்யஸூரிகளைத் தேடுகிறதென்? என்ன, வாயுந்திரைஇத்யாதி. அதாவது-வாயுந்திரையுகளில் ஆற்றாமையால்வந்த கலக்கத்துக்குச்சேர அஜ்ஞமான திர்யகாதிகளைக் கூட்டிக்கொண்டார்; இங்கு - ஸம்ஶ்லேஷமூகத்தால் வந்த தெளிவுக்குச் சேர அறிவுநைஸர்க்கிகமானவர்களைத் தேடுகிறாரென்றபடி. போதயந்த இத்யாதி - கீதாஶ்லோகமே. "மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் । கதயந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச". ஸம்ஶ்லேஷத்துக்கு த்ருஷ்டாந்தம் - ராமஸ்து இத்யாதி. பாலகாண்டே, "ராமஸ்து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந் ருதூந் । மநஸ்வீ தத்கதஸ்தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பித:". ஶ்லோகதாத்பர்யம்-பெருமாளும்இத்யாதி. தமப்தார்த்தம்-பித்ருஶுஶ்ரூஷண இத்யாதி. வேறுபட்டார் என்றது - துமப்தார்த்தம். கீழெல்லாம் - பூர்வாவஸ்த்தாப்ரதர்ஶபரம். வாத்ஸ்யாயநம் - காமஶாஸ்த்ரம். ஸீதாஶப்தத்தால் தோற்றுகிற அயோநிஜத்வத்தையும், "ஸஹயஶ்சைத்வயாநே" இதி த்ருதீயாவிபக்த்யர்த்தத்தையும பற்ற ஹாவம்-பரமபதத்தில் இத்யாதி. லாங்கலபத்ததியிலே பிறந்தவள்-ஸீதேத்யர்தத: - "ஸீதாலாங்கலபத்ததி:"

ஹோமோபோகீவாதத்துக்கு அவ்வருகுபட்டிலர். "பஹூந் ஸம்வத்ஸராந்" (பஹூந்ஸம்வத்ஸராந்)- 'பஹூந்ஸம்வத்ஸராந்' என்னுதே யொழிந்தது 'அவ்வோகாலவிசேஷங்களுக்கு அடுத்த போகோபகரணங்களைக்கொண்டு புஜித்தார்' என்னுமிடம் தோற்றுகைக்காக. "மநஸ்வீ" (மநஸ்வீ) - ஸம்ஶ்லேஷத்தில் பிராட்டிகோலினவளவுக்கு அவ்வருகுபட்டுப் பரிமாறினர். "தத்கத:" (தத்கத:) - தஸ்யாம்கத:-ஜாதிகுணங்கள் த்ரவ்யத்துக்கு ப்ரகாரமாய்ப் பிரிக்க வொண்ணுதபடியா யிருக்குமாபோலே பிரிக்கவொண்ணுதபடி ஒருநீராகக் கலந்தபடி. "தஸ்யாநித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:" (தஸ்யாநித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:)-இவருயர்த்தியை யறிந்திருப்பாளொருத்தியாகையாலே 'அப்பெரியவன் இப்படி தாழவிடுவதே' என்று அச்செயலிலே தன்னெஞ்சு துவக்குண்டு 'அதுஅது' என்று கிடக்குமாயிற்று. அப்படியாயிற்று இங்குக்கலந்த கலவிதான்.

## முதற்பாட்டு.

ஊனில்வாழுயிரே! நல்லைபோஉன்னைப்பெற்று
வானுளார்பெருமான் மதுசூதனென்னம்மான்
தானும்யானுமெல்லாம் தன்னுள்ளேகலந்தொழிந்தோம்
தேனும்பாலும்நெய்யும் கன்னலுமமுதுமொத்தே.

ஆ.—'ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகபோகனாய், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனாய், எனக்கு ஸ்வாமியா யிருந்த எம்பெருமான்தானும் யானும் எல்லாப்படியாலும் இந்தக்கலவியினுள்ளே எல்லா ரஸங்களும் உண்டாம்படி கலந்தொழிந்தோம்; திருநாட்டிலே சென்றால் ரஸிக்கக்கடவ பகவதேகபோகத்வத்தை, இந்த ப்ரக்ருதியிலே யிருந்து வைத்தே பெற்று வாழ்கிற நெஞ்சே! உன்னைப்பெற்றே இந்தஸம்ருத்தியெல்லாம் விளைந்தது; நல்லைநல்லை' என்று நெஞ்சைக் கொண்டாடுகிறார்.

ஒ.—முதற்பாட்டில், அபரிச்சேத்யமான ஸுகம் பிறக்கும்படி எம்பெருமானும் நானும் கலந்தோம்; இதெல்லாம் உன்னாலேவந்த ஸம்ருத்தியிறே யென்று நெஞ்சைக் கொண்டாடுகிறார்.

[ஊனில்வாழுயிரே]-ப்ரக்ருதியிலே யிருந்துவைத்தே பகவத்குணங்களை தாரகமாகக்கொண்டு வாழ்கிற நெஞ்சே! 'ப்ரக்ருதியே தாரகமாக வாழ்கிற நெஞ்சே!' என்று

---

"விஜஹார" என்று-விளையாட்டாகச் சொல்லுகையாலே, உபோத்காதத்துக்கு அவ்வருகுபட்டிலர் என்றது. உபோத்காதம் - உத்யோகமாத்ரம். ஸம்வத்ஸராந் என்னுதே என்றது -"ஸஹஸ்ராணி ஸமாஸஹஸ்ரம்" என்றத்தைப் பற்ற. அடுத்த - உசிதமான. "மநஸ்வீ" என்கிற விவக்ஷிதார்த்தம்- பூமாவிலே என்று திருவுள்ளம்பற்றி, அது ஸப்ரதிகோடிகமாகையாலே அருளிச்செய்கிறார் - ஸம்ஶ்லேஷத்தில் இத்யாதி. "மத:" என்றதுக்கு வாஸனை - ஜாதி இத்யாதி. "தத்கத:" என்கையாலே - பெருமாளுக்குப் பிராட்டியிடத்தி லுண்டான ப்ராவண்யஞ் சொல்லுகிறது; "தஸ்யா ஹ்ருதிநித்யம்ஸமர்ப்பித:" என்று அவளுடைய ஹ்ருதயத்திலே தாம் ஸமர்ப்பிக்கப்பட்டாரென்கையாலே - பிராட்டிக்குப் பெருமாளிடத்திலுண்டான ப்ராவண்யஞ் சொல்லப்பட்டது. "ஸஸ்யா தேவ்யா மநஸ்தஸ்யாம் தஸ்யா தஸ்மிந் ப்ரதிஷ்டிதம்" என்னக்கடவதிறே.

பழையதசையைச் சொல்லிற்றாகவுமாம்; நல்லைநல்லையென்று கொண்டாடுகிறது. [உன்னையென்று தொடங்கி] - நீ பாங்காகையாலே அயர்வறுமமரர்களதிபதியாய்வைத்து என்னோட்டை ஸம்ஶ்லேஷத்துக்குள்ள விக்நங்களையெல்லாம்போக்கி என்னை அடிமைகொண்டு அத்தாலே நிரதிஶயபோக்யனை தானும் தன்னோடு யதாமநோரதம் ஸம்ஶ்லேஷிக்கப் பெறுகையாலே வாயுந்திரைகளிற்படியே மிகவும் நோவுபட்ட நானும் ஸர்வஸுகமும் இக்கலவியிலே யுண்டாம்படி பூர்ணமாகக் கலந்தோம்; ரஸவஸ்துக்க ளெல்லாஞ் சேர்ந்தால் அதினுள்ளே ஸர்வரஸமுமுண்டாயிருக்குமாபோலே. இதிலே சொன்னவை - ஸர்வவஸ்துக்களுக்கும் உபலக்ஷணம்.

ப.—முதற்பாட்டில், ஸர்வரஸமான வஸ்துவோடு தமக்கு உண்டான ஸம்ஶ்லேஷம் தம்முடைய திருவுள்ளமடியாக வாதலால் நெஞ்சைப்பார்த்து உகக்கிறார்.

ஊனில் - மாம்ஸமயமான சரீரத்திலே, வாழ் - (இந்தளத்தில் தாமரைபோலே பகவதநுபவத்தைப்பெற்று) வாழ்கிற, உயிரே – நெஞ்சே! நல்லை போ - நல்லைகாண்; (எங்ஙனேயென்னில்), - உன்னை – உன்னை, பெற்று - (எனக்குவிதேயமாகப்) பெறுகையாலே, வானுளார் - பரமபதவாஸிகளான நித்யஸூரிகளுக்கும், பெருமான் - மேலான மேன்மையையுடையனாய், மதுசூதன் – (தன்னையநுபவிக்கப்பாரித்த என்னுடைய ப்ரதிபந்தகத்தை) மதுவைமுடித்தாற்போலேமுடித்து; என் அம்மான் தானும் - என்னை அடிமைகொண்டருளின தன்மையையுடைய அவனும், யானும் - (அவனையநுபவிக்க ஆசைப்பட்டு அடிமைபுக்க) நானும், தன்னுள்ளே - தனக்குள்ளே, எல்லாம் - எல்லாவினிமையுமாம்படி, தேனும்–தேனும் தேனும், பாலும்-பாலும் பாலும், நெய்யும்-நெய்யும் நெய்யும், கன்னலும் - கன்னலும் கன்னலும், அமுதும்ஒத்து-அமுதமும்அமுதமும்போல, கலந்தொழிந்தோம் - கலந்துவிட்டோம். இதனால் - ஏகஜாதித்ரவ்யங் கலந்தாற்போலே யென்றபடி. அநேகத்ருஷ்டாந்ததாத்பர்யம் - ஸர்வவிதஸாரஸ்யமும் தோற்றுகைக்காக. தேனென்று – ஸர்வரஸஸமவாயம். பாலென்று - ஸ்வாபாவிகரஸம். நெய்யென்று - ப்ருஂஹணரஸம். கன்னலென்று - கரும்பாய், அதினுடைய பாகஜாரஸத்தை நினைக்கிறது. அமுதென்று - நித்யரஸம். உயிரென்று - ப்ராணாஶ்ரயமான நெஞ்சைச் சொல்லுகிறது. போவென்று - ஸாதரமான ஸம்புத்திஸூசகம்.

இ.—முதற்பாட்டில், இந்த ஸம்ருத்தியெல்லாம் உன்னாலே வந்ததன்றோ? என்று திருவுள்ளத்தைக் கொண்டாடுகிறார்.

[ஊனில் வாழுயிரே] - மாம்ஸப்ரசுரமான ஶரீரத்திலே யிருந்துவைத்து வாழுகிற உயிரே! ஶரீரத்தைப்பற்றி வாழ்ந்து போந்த உயிரே! என்றுமாம். பரமபதத்தைப்பெற்று அங்கேதான் பகவதநுபவம்பண்ணுகிற விடத்தேயோ நீ உதவிற்று? மாம்ஸாதிபுஞ்ஜமான ஶரீரத்திலே, நித்யஸூரிகள் அநுபவிக்கும் அநுபவத்தையன்றோ நீ உபகரித்தது. [நல்லைபோ] - "போ" என்று போக்கு – வரவைக்காட்டி, நெஞ்சே வா என்னுதல்; "ஹோ" என்கிறத்தைத் தமிழ்செய்து; ஸம்போதந மென்னுதல். நல்லைபோ என்று முழுச்சொல்லாய், நல்லைநல்லை யென்னுதல். 'என்னைக்கொண்டாடுகிறதென்?' என்ன, [உன்னைப்பெற்று] - ஈஶ்வரனும் என்று முளன்; தத்ஸம்பந்தமும் அநாதி; அவன் எதிர்சூழல்புக்கு அவஸரப்ரதீக்ஷனாய்நிற்க, நீ ஆபிமுக்யம்பண்ணாமையாலேயன்றோ இழந்தது; நீ ஆபிமுக்யம்பண்ணியிறே இப்பேறு பெற்றது. 'நீர்பெற்ற பேறுதான் எது?' என்ன,

[வானுளார் இத்யாதி] - நித்யஸூரிகளுக்கும் அவ்வருகானவன், ஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகான என்னளவும் வரச் செடிசெய்த்து என்னைத் தனக்காக்கின தானும், வாயுந்திரையுகளில் யானும்; விடாய்ப்பித்த தானும், விடாய்த்த நானும்; க்ருஷிபண்ணின தானும், க்ருஷிக்கு விஷயபூதனான நானும்; எல்லாரஸங்களுந் தன்னுள்ளேயாம்படி கலந்தோம். "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ: | ஸர்வமிதமப்யாத்தோவாக்யநாதர:" [கலந்தொழிந்தோம்] - பேற்றுக்கு இனி அவ்வருகில்லை. பரமபதத்தே போகத் தேடுகிறதும், உசாத்துணைக்காகவும் விச்சேதியாமைக்கு மாயிற்று. [தேனும்இத்யாதி] - 'தேனும் தேனு மென்று - ஏகஜாதித்ரவ்யங் கலந்தாற்போலே' என்று ஆளவந்தார்; "ஸர்வரஸ:" என்கிற வஸ்துவாகையாலே ஸர்வரஸங்களும் உண்டாம்படி கலந்தோம்' என்று எம்பெருமானர்.

ஈடு.—இதில், முதற்பாட்டில்-ராஜ்யத்தையிழந்த ராஜபுத்ரனை ஒருவன் ராஜ்யத்திலே ப்ரவேசிப்பித்தால், 'இவனாலே நாம் இப்பேறு பெற்றோம்' என்று அவனைக் கொண்டாடுமாபோலே, 'கைங்கர்யஸாம்ராஜ்யத்துக்கு இட்டுப் பிறந்துவைத்து நெடுநாள் இழந்துகிடக்க இந்நெஞ்சிறே இத்தைத்தந்தது' என்று திருவுள்ளத்தைக்கொண்டாடுகிறார்.

[ஊனில்வாழுயிரே] - ஊனென்று-ஶரீரமாய், வாழ்கையாவது - வர்த்திக்கையாய், சரீரத்திலே வர்த்திக்கிற உயிரேன்னுதல்; சரீரத்தைப்பற்றி அவ்வருகு ஒன்றறியாதே வாழ்ந்துபோன உயிரேன்னுதல். மாம்ஸலமான சரீரத்திலே யிருந்துவைத்து வாழ்கிற உயிரே! பரமபதத்தைப்பெற்று அங்கே நாநாஸவநத்தோடே அநுபவிக்கிறவிடத்தேயோ நீ உதவிற்று; மாம்ஸாஸ்ருக் பூய விண் மூத்ர ஸ்நாயு மஜ்ஜாஸ்த்திகளான ஶரீரத்திலே, நித்யஸூரிகள் அநுபவிக்கும் அநுபவத்தையன்றோ நீ உபகரித்தது? இத்தால் - வாழ்கையாவது - அநுபவிக்கையாய், நெடுநாள் ப்ராக்ருதபோகங்களை புஜித்துப்போந்த நீ அப்ராக்ருத போகத்துக்குக் கைதர நிற்பதே! என்றபடி. மநஸ்ஸை 'உயிர்' என்பானேன்?

---

*முதற்பாட்டு - ஊனில் இத்யாதி. திருவுள்ளத்தைக் கொண்டாடுகைக்கு ஹேதுவை ஸதிதர்ஶநமாக அருளிச்செய்கிறார் - ராஜ்யத்தை இத்யாதி.*

*வர்த்திக்கையாய் என்றது - ஊனிலிருப்பை வாழ்வாக நினைத்திருக்குமவரல்லாமையைப்பற்ற. ஶரீரத்தைப்பற்றி இதி-முன்பு உண்டான புத்த்யநுஸாரத்தாலே வாழ்வாகச் சொல்லவுமா மென்றபடி. அவ்வருகொன்றறியாமை - வாழ்வென்கையாலே அர்த்தாத்ஸித்தம். மாம்ஸலமான இத்யாதி வாக்யம் - சில ஸ்ரீகோஶங்களிலே இல்லை. உண்டானால் - அர்த்தத்ரயம்; அதாவது - வாழ்கை - வர்த்தநமும், ஶப்தாதிவிஷயாநுபவஸுகமும், நித்யமுக்தரைப்போலே பகவதநுபவஸுகமும். இல்லாத பக்ஷத்தில்-அர்த்தத்வயம்; அதாவது - ஊனிலே வர்த்திக்கிற உயிரே யென்றும், ஊனிலே ஸுகிக்கிற உயிரே யென்றும். வாழ்கை - ஸுகிக்கை. முந்தின அர்த்தவிவரணம்-பரமபதத்தை இத்யாதி வாக்யத்வயமும். "ஸவநக்யாஹவதி" இத்யாதியைப்பற்ற நாநாபவநத்தோடே என்றது. மாம்ஸ இத்யாதி - ப்ரதமேம்ஶே (கஎ - சஉ) தைத்யதநயாந்ப்ரதி ப்ரஹ்லாதஃ, "மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ரஸ்நாயுமஜ்ஜாஸ்த்திஸம்ஹதௌ | தேஹேஸ்மின் நாநுரக்தோஹம் நாஹம்...". த்விதீயார்த்தவிவரணம்-இத்தால் இத்யாதி. இத்தால்-'ஶரீரத்தைப்பற்றி அவ்வருகுஒன்றறியாதே வாழ்ந்துபோனஉயிரென்னுதல்' என்கிறஇத்தால். தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - மநஸ்ஸை இத்யாதி. மநஏவ இதி-ஷஷ்ட்*

என்னில்; - ஆத்மாவுக்கு தர்மபூதஜ்ஞாநம் நித்யமாயிருக்கச்செய்தே, "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:"(மநஏவமநுஷ்யாணும்காரணம்பந்தமோக்ஷயோ:) என்று - பந்தமோக்ஷங்களுக்கு ஹேது மநஸ்ஸென்கிற ப்ராதாந்யத்தைப் பற்ற. 'உயிரே' என்று - ஆத்மாவை ஸம்போதிக்குமாபோலே, ஸம்போதிக்கிறுர். [நல்லைபோ] - நல்லைவா என்றபடி. நல்லைநல்லை என்று கொண்டாடுகிறுர். போ' என்று ஸம்போதநமாகவுமாம். நல்லைபோவென்று - முழுச்சொல்லாய், நல்லை நல்லையென்னுதல். நடுவே என்னைக்கொண்டாடுகிற தேன்? என்ன, [உன்னைப்பெற்று] - பந்துஹேதுவாய்ப் போந்த நீ மோக்ஷஹேதுவாகப்பெற்று. ஈஶ்வரனும் என்றும் உண்டு, தத்ஸம்பந்தமும் அநாதி; அவன் எதிர்சூழல்புக்குத் திரியாநிற்கவும், நீ ஆபிமுக்யம்பண்ணுமையாலேயன்றோ நெடுங்காலம் இழந்தது; இன்று நீ ஆபிமுக்யம்பண்ணியன்றோ இப்பேறு பெற்றது. நீர்பெற்றபேறு எது? என்ன, சொல்லுகிறுர் மேல்,- [வானுளார்பெருமான் மதுசூதனென்னம்மான் தானும் யானும்] - அயர்வறுமமரர்களபதியாயிருந்து வைத்து அவதரித்து, மதுவாகிற அஸுரனைப் போக்கினுற்போலே என்னுேட்டை ஸம்ஶ்லேஷவிரோதியைப் போக்கி, என்னைத் தோற்பித்துத் தன்பக்கலிலே கைங்கர்யத்திலே மூட்டின தானும்; கைங்கர்யத்துக்கு விஷயபூதனுன நானும். வாயுந்திரையுகளில் - கண்ணுற்கண்ட பதார்த்தங்களடங்கலும் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாக நினைத்து விடாய்த்த நானும், நெடுநாள் என்னைப்பெறுகைக்கு எதிர்சூழல்புக்கு விடாய்ப்பித்த தானும். க்ருஷிபண்ணின தானும்; க்ருஷிக்கு விஷயபூதனுன நானும். [எல்லாம் தன்னுள்ளே கலந்

---

டேம்மே ஸப்தமே, (உ௬) "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ: । பந்தாய விஷயாஸங்கி மோக்ஷே நிர்விஷயம் ஸ்ம்ருதம்". "நல்லைபோ" என்றதுக்கு மூன்று அர்த்தம்: முந்தினது - 'போ' என்று விபரீதலக்ஷணையாய், நல்லைவா என்றபடி. 'நல்லைவா' என்று - லாலநோக்தியாதல்; 'நல்லைபோ' என்று - முழுச்சொல்லாய், நல்லைநல்லை யென்று கொண்டாடுகிறதாதல். 'போ' என்று - 'ஹோ' என்றபடியாய், ஸம்போதநமாதல். த்விதீயார்த்தவிவரணம் - நல்லைபோவென்று இத்யாதி. நடுவே-பகவதநுபவமத்யத்திலே. மநஸ்ஸம்பந்தம் முன்பே ஸித்தமாயிருக்க, இப்போ'பெற்று' என்கிறதுக்கு ஹாவம் - பந்தஹேதுவாய் இத்யாதி. என்னை 'மோக்ஷஹேது' என்கிறது எக்கொண்டு? என்ன, ஈஶ்வரனும் இத்யாதி. ஈஶ்வரனும் தத்ஸம்பந்தமும் நித்யமாயிருக்கச்செய்தேயும், பலாந்வயவ்யதிரேகங்கள் த்வதாபிமுக்யாந்வய வ்யதிரேகாயத்தமாகையாலே மோக்ஷஹேதுவென்கிறதென்று தாத்பர்யம். 'வானுளார்' இத்யாதி பதங்களுக்கு அடைவே அர்த்தம்-அயர்வறும் இத்யாதி. வானுளார் - வானிலுள்ளார். ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் - மதுவாகிற இத்யாதி. 'அம்மான்' என்றத்தால் பலிதார்த்தம்-கைங்கர்யத்திலே மூட்டின தானும் என்று. கைங்கர்யத்துக்கு விஷயபூதனுன நானும்-கைங்கர்யத்திலே மூட்டுகைக்கு விஷயபூதனுன நானுமென்றபடி. அர்த்தாந்தரம் - வாயுந்திரையுகளில் இத்யாதி. ப்ரதமார்த்தவிவரணம் - க்ருஷிபண்ணின இத்யாதி. 'அம்மான் தானும் யானும்' என்கிறதுக்கு அர்த்தமாக - ஆறுவாக்யங்கள் சில ஸ்ரீகோஶங்களிலே இருக்கின்றன; சில ஸ்ரீகோசங்களிலே* எட்டுவாக்யங்கள்; இந்த வாக்யங்களெல்லாம் - 'ஏகார்த்தபரங்களாதல்-அர்த்தத்வயபரங்களாதல்' என்று நிர்வஹிப்பர்கள்; "இந்தவாக்யங்களெல்லாம்-ஆளவந்தார் நிர்வாஹாநுகுணங்கள்; மேலே, 'தானும்யானும்' என்கிறதுக்கு அர்த்தமாகச்

---

* எட்டுவாக்யமுள்ள பாடம் கிடைக்கவில்லை.

தொழிந்தோம்] - ஆயிரத்திலொன்றும், கடலிற்குளப்படியும் போலே, தானும் நானுமான சேர்த்தியிலே எல்லாரஸங்களும் பிறக்கும்படி ஸம்ஶ்லேஷித்தோம். [ஒழிந்தோம்]-நித்ய விபூதியில் புக்காலும் இப்பேற்றை அசையிட்டிருக்குமித்தனை; அங்கு ஏற்றமாகச் செய்ய லாவதில்லை, இதினுடைய அவிச்சேதமே அங்குள்ளது. இப்படி இங்கே கலந்திருக்க, இனிப் பரமபதத்தேறப்போகத் தேடுகிறது உசாத்துணைக்காகவும், இதுதான் விச்சேதியா மைக்கு மாயிற்று. என்போலே கலந்தது? என்றால்-[தேனும்பாலும் இத்யாதி] - இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - 'ஏகஜாதீயத்ரவ் யங்கள் தன்னிலே கலந்தாற்போலே' என்று. அதாவது-தேனும் தேனுங் கலந்தாற்போல வும், பாலும் பாலுங் கலந்தாற்போலவும், நெய்யும் நெய்யுங் கலந்தாற்போலவும், கன் னலும் கன்னலுங் கலந்தாற்போலவும், அமுதும் அமுதுங் கலந்தாற்போலவும் - என்று. அங்ஙனன்றியே, எம்பெருமானார் அருளிச்செய்யும்படி:' இவற்றை - ரஸவத்பதார்த் தங்களுக்கெல்லாம் உபலக்ஷணமாக்கி - 'தானும் நானுமான கலவிக்குள்ளே எல்லா ரஸங்களும் பிறக்கும்படி ஸம்ஶ்லேஷித்தோ மென்கிறார்' என்று. "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" (ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:) என்கிற வஸ்துவோடேயிறே கலக்கிறது; ஜ்ஞாநாநந்தவஸ்துக்க ளுடைய சேர்த்தியிலே ஸர்வரஸங்களும் பிறக்கும்படியாயிற்று கலந்தது. இவையேல்

---

சொல்லுகிற 'ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:' இத்யாதி வாக்யங்கள் - எம்பெருமானர் நிர்வாஹாநுகுணங் கள்" என்று சொல்லுவர். எம்பெருமானர் நிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார் - ஆயிரத்தில் இத் யாதி. ஆயிரத்திலொன்றும், கடலிற்குளப்படியும் உண்டாயிருக்குமாபோலே, ஜ்ஞாநாநந்தவஸ் துக்களான தானும் யானுமான சேர்த்தியிலே எல்லாரஸங்களும் பிறக்கும்படி ஸம்ஶ்லேஷித்தோ மென்றபடி. இவ்விடத்திலே - "யத்வாஸ்யாஹாஸித்யத்நாஸித்வஸ்தத்வஸித்துஸம்ஹிதம்" என்றது அநுஸந்தேயம். 'ஒழிந்தோம்' என்று - இனிக் கர்த்தவ்யாம்ஶமில்லை யென்று தோற்றுகையாலே அதின்கருத்தை அருளிச்செய்கிறார் - நித்யவிபூதியில் இத்யாதி. ஆனால், "அடி யார்கள் குழாங்களை உடன்கூடுவ தென்றுகொலோ" என்கிறதென்? என்ன, இப்படி இங்கே இத்யாதி. 'என்போலே கலந்ததென்றால்' என்கிற வாக்யம் - நிர்வாஹத்வயஸாதாரணம். ஆள வந்தார் நிர்வாஹத்துக்கு, 'தானும் யானுமெல்லாம்' என்றது முழுச்சொல்லாய், தானும் யானு மென்றபடியாய், 'தன்னுள்' என்று - தன்னில் தானென்றபடியாய், தானும் யானுமாகிற இரண்டு பேரும் பரஸ்பரம் தேனும் தேனும் பாலும் பாலும் நெய்யும் நெய்யும் கன்னலும் கன்னலும் அமு தும் அமுதுங் கலந்தாற்போலே கலந்தொழிந்தோ மென்று ஶப்தார்த்தம்; இப்பக்ஷத்தில், 'ஒத்து' என்றது - போலே யென்றபடி. எம்பெருமானர் நிர்வாஹத்துக்கு, தானும் யானுமாகிற தன் னுள்ளே - தானும் யானுமாகிற கலவிக்குள்ளே தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமான எல்லாமுண்டாம்படி கலந்தொழிந்தோ மென்று ஶப்தார்த்தம்; இந்தயோஜனையில், தன்னுள்ளே என்றது-கலவிக்குள்ளே யென்றபடி. 'ஒந்து' என்றது - உண்டாம்படி யென்றபடி. அவனோட்டை ஸம்ஶ்லேஷத்துக்குள்ளே எல்லாரஸமும் உண்டாம்படியென்? என்ன - ஸர்வகந்த இத்யாதி. சாந் தோக்யே ஶாண்டில்யவித்யாயாம்- "ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ:" இத்யாரப்ய, "ஸர்வமிதமப்யாத்தோऽவாக்யநாதர:". ஆனாலும், இரண்டு தலையும் விலக்ஷணமாக வேண்டாவோ? என்ன, ஜ்ஞாநாநந்த இத்யாதி. ஆளவந்தார் நிர்வாஹத்திலே, தேனும் தேனும் கலந்தாற்போலே கலந்தோமென்றால்-ஸ்வரூபைக்யஞ் சொல்லிற்றாகாதோ? என்ன, இவையேல்

லாவற்றையும் சேர்த்துச்சொல்லும்போது, வருவதொரு பரிமாணுதிக்யம் உண்டிறே; அது தானேயிறே த்ரவ்யஸத்பாவத்தில் ப்ரமாணம். (க)

## இரண்டாம் பாட்டு.

ஒத்தார்மிக்காரை இலையாயமாமாய
ஒத்தாயெப்பொருட்கும் உயிராய்என்னைப்பெற்ற
அத்தாயாய்த்தந்தையாய் *அறியாதனவறிவித்து
அத்தா! நீசெய்தன அடியேனறியேனே.

ஆ.—(ஒத்தார்.) இப்படி நெஞ்சைக் கொண்டாடி, எம்பெருமான் தமக்குச் செய்தருளின ஸம்ருத்தியை அவன்தனக்குச் சொல்லிக்கொண்டு அநுபவிக்கிறார்.

நிரஸ்தஸமாப்யதிகனாய், ஆஸ்சர்யபூதனாயிருந்து வைத்து, ஆஸ்ரித ஜநங்களெல்லாரோடும் ஸஜாதீயனாய் வந்து பிறந்தருளி அவர்களுக்கு அத்யந்தஸுலபனாயிருந்து, எனக்கு அவ்வளவன்றியே ஒருவன் தான் தனக்குச் செய்யும் நன்மையும், மாதா புத்ரனுக்குச் செய்யும் நன்மையும், பிதா புத்ரனுக்குச் செய்யும் நன்மையும், ஆசார்யன் ஸிஷ்யனுக்குச் செய்யும் நன்மையும் செய்தருளினாய்; இன்னம் அடியேன் திறத்து நீ செய்தருளினவற்றுக்கு ஒரு முடிவு காண்கிறிலேனென்கிறார்.

ஒ.—இரண்டாம் பாட்டில், நிரபேக்ஷனாயிருக்கிற நீ என் பக்கலிலே ஸாபேக்ஷனாய்க்கொண்டு என் ஹ்ருதயத்தையும் எனக்கு அநுகூலமாக்கி எனக்குப் பண்ணின உபகார பரம்பரைகளை என்னால் பரிகணித்து முடியவெண்ணாதென்கிறார்.

[ஒத்தார் இத்யாதி] - ஸமாதிக தரித்ரனாய் அத்யாஸ்சர்யமான படியையுடையவனே! ஆஸ்ரிதஸுலபத்வார்த்தமாக தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாய். [உயிராய் என்று தொடங்கி] - ஒருவன் தான் தனக்குப் பண்ணிக்கொள்ளும் நன்மைகளையும் பெற்ற தாய் செய்யும் நன்மைகளையும் தமப்பன் செய்யும் நன்மைகளையும் ஆசார்யன் செய்யும் நன்மைகளையுஞ் செய்து இவ்வழியாலே என்னை அடிமைகொண்ட என்ஸ்வாமீ!

---

லாவற்றையும் இத்யாதி. சேர்ந்துச்சொல்லும்போது - கூட்டிப்பார்க்கும்போது. இவையெல்லாவற்றையும் - தேன்முதலாகிய எல்லாவற்றையும். ஐக்யமாகில், ப்ரஸ்த்தத்வயஸம்மேலநத்தில் ப்ரஸ்த்தமாத்ரபரிஸேஷம் ப்ரஸங்கிக்கும் என்றபடி; ஆகையாலே, பிரிக்கவொண்ணாமைக்கு த்ருஷ்டாந்தமித்தனை யொழிய, வஸ்து இரண்டாயேயிருக்குமென்றபடி. த்ரவ்யஸத்பாவம்-த்ரவ்யாந்தரஸத்பாவம். ஆளவந்தார் நிர்வாஹத்தில் 'உன்னைப்பெற்று' இத்யாரப்ய, தன்னுள்ளே தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்துக்கலந்தோம்; ஊனில்வாழுயிரே, நல்லைபோ இத்யந்வய:. எம்பெருமானார் நிர்வாஹத்தில், உன்னைப்பெற்று இத்யாரப்ய, தானும் யானுமாகிற தன்னுள்ளே தேனும்பாலும் நெய்யும் கன்னலும் அமுதமான எல்லாம் ஒத்துக்கலந்தொழிந்தோம்; ஊனில்வாழுயிரே நல்லைபோ இத்யந்வய:. யச்சாஸ்யேத்யாதி - அஸ்ய - உபாஸகஸ்ய, இஹ - லோகே, யத் - போக்யஜாதம் அஸ்தி, இஹ யந்நாஸ்தி, தத்ஸர்வமஸ்மிந்-ஸர்வேஸ்வரே ஸமாஹிதமஸ்தீத்யந்வய:. (க)

---

* அறியாதன வறிவித்த என்றும் பாடமுண்டு.

ப.—அநந்தரம், ஏவம்விதஸாரஸ்யயுக்தன் தம்விஷயத்தில் பண்ணின உபகாரம் அபரிச்சேத்யம் என்கிறார்.

ஒத்தார் மிக்காரை இலையாய - இந்த ஸாரஸ்யாதிசயத்துக்கு ஸமாப்யதிகதரித்ரனாய், மாமாய - (ப்ரதிக்ஷணம் அநுபவியாநின்றாலும் அபூர்வவத் விஸ்மயாவஹமான) மஹாஸ்சர்யயுக்தனாய், ஒத்தாய் எப்பொருட்கும் - ஸர்வபதார்த்த ஸஜாதீயனாய் வந்தவதரித்து அநுபவிப்பிக்குமவனாய், உயிராய்-ஆத்மா சரீரத்துக்கு தாரகனாமோபாதி ஸர்வபதார்த்ததாரகனாய், என்னை - என்னை, பெற்ற - உத்பாதித்த, அ - அந்த அஸாதாரண ஸம்பந்தத்தையுடைய, தாயாய் - தாயாம்படி ப்ரியபரனாய், (அ) - ததாவிதோத்பத்தி ஹேதுவான, தந்தையாய் - பிதாவாம்படி ஹிதபரனுமாய் (ஆசார்யனோபாதி), அறியாதன - அஜ்ஞாதமான அநுபவாதிகளை, அறிவித்து - அறிவிப்பதுஞ் செய்து, அத்தா - இவ்வுபகாரங்களுக்கு அடியான ஸம்பந்தத்தையு முடையவனே! நீ - (ஸோபாதிகரான அவர்களைப்போலன்றியே நிருபாதிகஸம்பந்தயுக்தனான) நீ, செய்தன - செய்த உபகாரங்கள், அடியேன் - அடியேனான உறவாலே யென்றிருக்குமதொழிய, அறியேன் - அளவிட்டு அறியமாட்டுகிறிலேன். ஸர்வவிதபந்துவான நாராயணனிறே மாதாவும் பிதாவும குருவு மென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், எம்பார் கோஷ்டியில் இதிஹாஸம். 'என்னைக் கொண்டாடுகிறதென் உபகரித்தா ரிருக்க?' என்ன, இசைவிக்கும்படியான ஸர்வேஸ்வரனைக் கொண்டாடுகிறார்.

[ஒத்தார் இத்யாதி] - ஸமாதிகதரித்ரனாய் அபரிச்சேத்யங்களான குணசேஷ்டிதங்களை யுடையவனே! அவாப்தஸமஸ்தகாமனுக்கும் நித்யதாரித்ர்யமுண்டு. [ஒத்தா யெப்பொருட்கும்] - இப்படி ஸர்வாதிகனான நீ என்னைப் பெறுகைக்காக அநேகாவதாரங்களைப் பண்ணினாய். மேன்மையோடே வரில் 'கிட்டவொண்ணாது' என்று அகலுவர்கள்; தாழவிட்டு வரில் காற்கடைக் கொள்ளுவர்கள்; ஆகையாலே, ஸஜாதீயனாய் வந்து பொருந்தும்; "[illegible] | [illegible]". இப்படி அவதரித்துச் செய்ததென்? என்னில்,—[உயிராய்] - தனக்குத்தான் பண்ணிக்கொள்ளும் நன்மை யென்னுதல், ஆத்மாவா யென்னுதல். [என்னைப்பெற்ற அத்தாயாய்] - வளர்த்த தாயை வ்யாவர்த்திக்கிறது; எனக்கு ப்ரியமே செய்யக்கடவ தாயாய். [தந்தையாய்] - நேரே உத்பாதகனாய்க்கொண்டு ஹிதைஷியாய். [அறியாதன அறிவித்து] - "[illegible]" என்கிறபடியே ஆசார்யனாய். "[illegible]" என்னுமவனிறே. [அத்தா] - ஸ்வாமீ! இவ்வுபகாரங்களை உடையனாகையாலே செய்தா யென்கிறார். "மாதா பிதா ப்ராதா" இத்யாதி, "நாராயண:". என்கிறார். [நீ செய்தன] - பேசவும் போகாது, நினைக்கவும் போகாது; 'நீசெய்தன' என்னுமத்தனை. [அடியேன் அறியேனே] - உபகரித்த நீயே அறியுமத்தனை. நான் அதுக்கு இலக்காய்க் குமிழிநீருண்ணுமத்தனை யென்கிறார்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இப்பாட்டு ப்ரஸ்துதமான வளவிலே எம்பார் கோஷ்ட்டியிலே 'இவ்வாத்மாவுக்கு ப்ரதமகுரு ஆர்?' என்று பிறந்ததாய், இருந்த முதலிகளிற் சிலர், 'ஆசார்யனன்றே' என்றார்கள்; சிலர் 'ஆசார்யன்ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயிக்கப்போரு' என்று அழைத்துக்கொண்டுபோய்ச் சேரவிட்ட ஸ்ரீவைஷ்ணவன் ப்ரதமகுரு என்றார்கள்; 'அங்ஙனன்றுகாண், அவன்இவனை அழைத்தாலும் இவன் 'அல்லேன்' என்னுதபடி "இசைவித்தென்னை" என்கிறபடியே அகவாயிலேயிருந்து இசைவித்த ஸர்வேஶ்வரன்காண் ப்ரதமகுரு' என்று அருளிச்செய்தார். 'அகன்ற நம்மை அவன் திருவடிகளிலே சேரவிட்டது நெஞ்சிறே' என்று இவர் திருவுள்ளத்தைக் கொண்டாடப் புக்கவாறே, 'நீர் வழி போவாரைக் கொண்டாடுகிறதென் அடியறியாதே?' என்ன, ஆராய்ந்தவாறே, அதுக்கும் அடி அவனாயிருந்தது; 'நடுவே நெஞ்சைக் கொண்டாடினே மித்தனை யாகாதே' என்று; அத்தைவிட்டு - 'என்னையும் இசைவித்த ஸர்வேஶ்வரனைக் கொண்டாடீர்' என்ன, தந்திருவுள்ளத்தை விட்டு, ஸர்வேஶ்வரனைக் கொண்டாடுகிறார்.

[ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாய] - என்னை இப்படி விஷயீகரித்த நீதான் ஒருகுறைவாளனாய்ச் செய்தாயோ? ஶ்ரியःபதிக்கும் தன்னால் கழிக்கவொண்ணாதபடி யிருப்பதொரு தாரித்ர்ய முண்டு: "ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" (நதத்

இரண்டாம்பாட்டு - ஒத்தார் இத்யாதி. 'அறியாதன அறிவித்து' என்ற பதத்திலே நோக்காக ஐதிஹ்யம்-இப்பாட்டு இத்யாதி. பிறந்ததாய் இதி-'அறியாதனவறிவித்தத்தா' என்று - ஸாக்ஷாதநுபதேஷ்டாவான ஈஶ்வரனிடத்திலும் ஆசார்யத்வம் ப்ரஸ்துதமாகையாலே ஆசார்யபஹுத்வம் தோற்றுகையாலே, அந்த ப்ரஸங்கத்திலே, பித்ருமாதுலாத்யநுபதேஷ்டாக்களிலும், காயத்ர்யுபதேஷ்டாக்களிலும், பின்னையும் மந்த்ரோபதேஷ்டாக்களிடத்திலும் குருஶப்தப்ரயோகம் காண்கையாலே, இவர்களிலே உத்தேஶ்யரான ப்ரதமகுருக்கள் ஆரென்று விமர்ஶம் பிறந்ததாயென்றபடி. ஆசார்யனன்றே என்றார்கள் - 'ஆசார்யன் ப்ரதமகுரு' என்பார்க்கு - குருபரம்பராநுஸந்தாநம் ஆலம்பநம். ஸ்ரீ வைஷ்ணவன் ப்ரதமகுரு என்றார்கள் - 'ஸ்ரீ வைஷ்ணவன் ப்ரதமகுரு' என்பார்க்கு - "ஸாத்விகைஸ்ஸம்பாஷணோ வாசார்யப்ராப்திஹேதவः" இதிவசநம் ஆலம்பநம். கீழ்ப்பாட்டோடே இப்பாட்டுக்கு ஸங்கதி - அகன்ற இத்யாதி. கொண்டாடப்புக்கவாறே, 'அடியறியாதே நீர் வழிபோவாரைக் கொண்டாடுகிறதென்? அத்தைவிட்டு என்னையும் இசைவித்த ஸர்வேஶ்வரனைக் கொண்டாடீர்' என்ன, ஆராய்ந்தவாறே அதுக்கடி அவனாயிருந்தது: 'நடுவே நெஞ்சைக்கொண்டாடினே மித்தனையாகாதே' என்று தந்திருவுள்ளத்தை விட்டு ஸர்வேஶ்வரனைக் கொண்டாடுகிறாரென்று வாக்யத்தை அந்வயித்துக்கொள்வது. அத்தை - என்னைக்கொண்டாடுகிற அத்தை.

'ஒத்தார்மிக்காரையிலையாயமாமாய' என்று ஸம்போதிக்கிறவருடைய ஹார்தபாவம்- என்னை இப்படி இத்யாதி. இப்படி விஷயீகரித்த என்றது - 'அறியாதனவறிவித்து' என்றத்தைப் பற்ற. இப்பதம் வந்தவாறே எம்பார் அருளிச்செய்தபோரும் ரஸோக்தி-ஶ்ரியःபதிக்கும் இத்யாதி வாக்யத்வயேந. ஒத்தார் இத்யாதிக்கு - ஸமரையும் அதிகரையு முடைத்தை யல்லையாய், அபரிச்சேத்யமான ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவனே! என்று ஶப்தார்த்தம். இல்லாதவனை 'தரித்ரன்' என்று சொல்லுவர்களிறே. அது எது? என்ன, ந தத்ஸம இத்யாதி. இயம்ஶ்ருதி:

ஸமஸ்சாப்யதிகஶ்சத்ருஶ்யதே) என்கிறபடியே ஸமாதிகதரித்ரனாயிருக்கும். [மாமாய]- இது என்ன ஆஶ்சர்யந்தான்! [ஒத்தாய் எப்பொருட்கும்] - நீ யாராய் என்பட்டாய்? ஸமாதிக தரித்ரனா யிருக்கிற நீயே இதரஸஜாதீயனாய் வந்து அவதரித்தாய். [எப்பொருட்கு மொத்தாய்] - ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே விஷ்ணுநாமாவாயும், இந்த்ராநுஜனாயும், ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணியும், திர்யக்குக்களோடொக்க மஹாவராஹமாய், ஸ்த்தாவரங்களோடொக்க குப்ஜாம்ரமாயும் நிற்கும் நிலை. குப்ஜாம்ரமாய் நின்றதுக்குக் கருத்து - 'சேவலேனின்றால் பெண்ணுக்கும் பேதைக்கும் ஏறவொண்ணாது' என்று எல்லார்க்கு மொக்க ஸுலபனாகைக்கு. இப்படி நிற்கிறதேன்? என்னில்; மேன்மையோடேவரில் 'கிட்டவொண்ணாது' என்று அகலுவர்கள்; தாழவிட்டுவரில் காற்கடைக்கொள்ளுவர்கள்; ஆகையாலே, ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கவேணும்; "ப்ரஹ்மேஶமத்யகணநாகணநார்க்கபங்க்தாவிந்த்ராநுஜத்வமதிதேஸ்தநயத்வயோகாத் । இக்ஷ்வாகுவம்ஶயதுவம்ஶஜநிஶ்ச ஹந்த ஶ்லாக்யாந்யமூந்யநுபமஸ்ய பரஸ்ய தாம்நஃ" (ப்ரஹ்மேஶமத்ய கணநாகணநார்க்கபங்க்தாவிந்த்ராநுஜத்வமதிதேஸ்தநயத்வயோகாத், இக்ஷ்வாகு வம்ஶயதுவம்ஶஜநிஶ்ச ஹந்த ஶ்லாக்யாந்யமூந்யநுபமஸ்ய பரஸ்யதாம்நஃ) என்னக்கடவதிறே. இப்படி அவதரித்துச் செய்ததேன்? என்னில்,— [உயிராய்] - இச்சேதநன்தான் தனக்குப் பார்க்கும் ஹிதத்தையும் பார்க்கக்கடவனா யிருக்கை. தாரகனா யென்னவுமாம். [என்னைப்பெற்ற அத்தாயாய்] - தானுண்டாகிலிறே தான் தனக்கு ஹிதம் பார்ப்பது.

---

ஶ்வேதாஶ்வதரே (கச). ஸமாப்யதிகோஹி தேஷ்வபி ஸ்வவிஷயீகாராநுகுணகல்யாணகுணவத்தாம் பராம்ருஶர் 'மாமாய' என்றதுக்கு பாவம் - இது என்ன ஆஶ்சர்யந்தான் என்று. இப்போது, 'மாமாய' என்றது - கீழுக்கு ஶேஷம். ஒத்தார்மிக்காரையிலையாய - ஒத்தாய் எப்பொருட்குமென்று கீழேயுங் கூட்டி பாவம்-நீயாராய் இத்யாதி. இப்போது 'மாமாய' என்றது - மேலுக்கு ஶேஷம். நீ யாராய் என்பட்டாய் என்றது - நீ ஒரு காபுருஷனாய் இப்பாடுபடுகிறாயோ? என்றபடி. விவரணம் - ஸமாதிக இத்யாதி. 'ஒத்தார்மிக்காரையிலையாய' என்றதுக்கு - 'அறியாதனவறிவித்து' என்றத்தைப் பற்றக் கீழே ஒரு தாத்பர்யம் 'என்னை இப்படி' இத்யாதி வாக்யத்திலே அருளிச்செய்து, இவ்வாக்யம் - 'ஒத்தார்மிக்காரையிலையாய' என்றதுக்குத் தாத்பர்யாந்தரமாகக் கண்டுகொள்வது. ஸகலபதார்த்தங்களிலும் ஒத்தவனும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - ப்ரஹ்மருத்ரர்கள் இத்யாதி. இவ்விடத்திலே - "ஸுரநரதிர்யக்ஸ்தாவரஜாதிஸம்பவேஷ்வேவ | யயா வாஸநாகாரணேஷு ஜாதஸ்ஸர்வேஷ்வபியா" என்றது அநுஸந்தேயம். இப்படிநிற்கிறது - எப்பொருட்கும் ஸஜாதீயனாய் நிற்கிறது. அப்படி தேவதிர்யகாதி ரூபேண அவதரித்தானே? அப்படி அவதரித்தால் ஜந்மநிபந்தநமான தோஷஸம்ஸர்க்கம் வாராதோ? என்ன, ப்ரஹ்மேஶ இதி. அதிமாநுஷஸ்தவே (கச) சசாரவஸுதாம் ப்ரஹ்மணா "க்ருத்வா நாரஸிம்ஹம் விஷ்ணுஃ" இதி. ஜநிஶ்ச - ஜந்மமும். ஜநிம் - ஜந்மாநி. அநுபவதஸ்ய உபாதாநாஹிதஸ்ய. யாதவஸ்ய - நிரவதிகதேஜோரூபமான ஸர்வஸ்மாத்பரனுக்கு. ஶ்லாக்யாநி - தோஷாவஹங்களன்று. 'உயிர்' என்று - ஆத்மாவையும், பிராணனையுஞ் சொல்லுகிறது. மாதாபிதாக்கள் செய்யும் க்ருத்யத்தையும், ஆசார்யன்செய்யும் உபகாரத்தையும் தமக்குச் செய்ததாக மேல்சொல்லுகையாலே, இதுவும் - தமக்குச்செய்ததோ ருபகாரமாகவேணு மென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - இச்சேதநன் இத்யாதி. 'தாரகனாய்' என்ற பக்ஷத்திலும் - அந்தர்யாமியாய் நின்று தாரகனுமளவன்றிக்கே, அவர்கள் த்ருஷ்டிகோசரனாய்க்கொண்டு தாரகனாயிருக்கையைச் சொல்லுகிறதென்று யோஜிக்கக்கடவது. 'உயிராய்' என்றது போராதோ? தாயாய்த்தந்தையாய் நிற்கையிலே ஆதிக்யமெது? என்ன, தானுண்டாகில் இத்யாதி. 'பெற்ற' என்றும் 'அ' என்றுஞ் சொல்லுகிறதுக்கு பாவம் -

வளர்த்துக்கோண்ட தாயன்றிக்கே, 'பெறவேணும்' என்று நோன்புநோற்றுத் தன் சரீரத்தை யொறுத்துப்பெற்று, இவன் ப்ரியத்தையே நடத்தக்கடவ தாயாய். [தந்தையாய்]- இப்படி நோன்பு நோற்று வருந்தி வரங்கிடந்து பெற்ற தாயும் இட்டுவைக்கைக்கு ஒருபை மாத்ரமாம்படி, இவனுக்கு உத்பாதகனாய் ஹிதம்பார்க்குந் தந்தையாய். அவ்வளவன்றிக்கே, [அறியாதன அறிவித்து] - "ஶரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:" (ஶரீரமேவ மாதாபிதரௌஜநயத:) என்னுமளவன்றிக்கே, ஜ்ஞாநவிகாஸத்தைப் பண்ணித்தரும் ஆசார்யனுமாய்; "ஸஹிவித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம" (ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதிதச்ச்ரேஷ்ட்டம்ஜந்ம) என்கிறபடியே. "ஏதத்வ்ரதம் மம" (ஏதத்வ்ரதம்மம), "மாமேகம் ஶரணம் வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்னுமவனிறே. [அத்தா] - மஹோபகாரகனானவனே! இவ்வுபகாரங்களை உடையவனாகையாலே செய்தா னென்கிறார். "மாதா பிதா ப்ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" (மாதாபிதாப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர்நாராயண:) என்கிறார். * "பெற்றதாய் நீயே பிறப்பித்ததந்தை நீ மற்றையாராவாரும் நீ" என்றாரிறே [நீசெய்தன] – ஒன்று இரண்டாகிலிறே 'இன்னது' என்னலாவது; ஆகையாலே, 'நீசெய்தன' என்றுமித்தனை. ஸ்வாமியான நீ ஶேஷபூதனான என்பக்கல் பண்ணின உபகாரங்கள் அடியேன் அறியேனே; உபகரித்த நீ அறியில்அறியுமித்தனை; என்றுச் சொல்லித் தலைக்கட்டப்போமோ அநுபவித்துக் குமிழிநீருண்டுபோமித்தனை யொழிய என்கிறார். (உ)

---

வளர்த்துக்கோண்ட இத்யாதி. மாத்ரம் என்றது-"மாதா ஹ வா ஸாவித்ர்யா: வாஸ்த்ராயஸ்ரா ஜாதஸ்ய வஸ்த்ர வஸ:" என்றத்தைப்பற்ற. இப்போது, 'ஆசார்யனுமாய்' என்கைக்கு - ஆசார்யன் மாதாபிதாக்களிலும் பற்றப் பண்ணும் ஆதிக்யம் எது? என்ன, ஶரீரமேவ இத்யாதி. 'ஆசார்யன் ஜ்ஞாநப்ரதாநம்பண்ணும்' என்னுமதுக்கு ப்ரமாணம் - ஸஹிவித்யாத இத்யாதி. ஆபஸ்தம்பதர்மே, "யஸ்மாத்தர்மாநாசிநோதி ஸ ஆசார்ய: தஸ்மை ந த்ருஹ்யேத் கதாசந ஸ ஹி வித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம ஶரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:" - யாதொரு காரணத்தாலே தர்மத்தை அநுஷ்டிப்பிக்கிறான் ஆசார்யன், அவன்பொருட்டு ஒருகாலும் அபசாரப்படக் கடவனல்லன்; அந்த ஆசார்யன் அந்த ஸிஷ்யனை வித்யையாலே ஜநிப்பிக்கிறான்; அந்தவித்யையால் வந்த ஜந்மமே ஶ்ரேஷ்ட - மன்று அர்த்தம். அறியாதன அறிவித்தானோ? என்ன, "ஏதத்வ்ரதம்" இத்யாதி. 'அத்தா' என்கிறதுக்கு அர்த்தாந்தரம் - மஹோபகாரகனானவனே என்று. அர்த்தாந்தரம் - இவ்வுபகாரங்களை இத்யாதி. அத்தன் - ஸ்வாமி. இவ்வுபகாரங்களை யென்றது - ப்ரியஹிதகரணோபதேசங்களை. ஆக, 'அத்தா' என்கிறதுக்கு - ஜ்ஞாநப்ரதத்வமும், உபகாரகத்வமும், ஸ்வாமித்வமும் என்று அர்த்தத்ரயம். 'தாயாய்' இத்யாதி - ஸர்வவிதபந்துத்வத்துக்கும் உபலக்ஷணமென்கிறார் - மாதாபிதா இத்யாதி. ஸுபாலோபநிஷத்தி இயம்ஶ்ருதி: ஸர்வவிதபந்துத்வத்துக்கு ப்ரமாணாந்தரம் - பெற்றதாய் இத்யாதி. தாய்போல் பரிவனானவனும் நீ, உத்பாதகனான பிதாவைப்போலே ஹிதபரனானவனும் நீ, மஹோபகாரகரான ஆசார்யர்களைப்போலே அறியாதன அறிவிப்பாயும் நீயே யென்கை. 'செய்தன' என்கிற பஹுவசநத்துக்கு பாவம் - ஒன்றிரண்டு இத்யாதி. 'அத்தா, அடியேன்' என்கிற பதங்களை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - ஸ்வாமியான இத்யாதி 'அடியேன்' என்கிறதுக்கு பாவம் - உபகரித்த இத்யாதி 'அடியேனறியேன்' என்கிறதுக்குத் தாத்பர்யாந்தரம் - அநுபவித்து இத்யாதி. குமிழிநீருண்கை - தலஸ்பர்ஶியாக அவகாஹிக்கை. க்ரமேண அந்வய:. (உ)

---

* பெரிய திருவந்தாதி - ௫.

## மூன்றாம்பாட்டு.

அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து
அறியாமாமாயத்து அடியேனைவைத்தாயால்
அறியாமைக்குறளாய் நிலம்மாவலிமூவடியென்று
அறியாமைவஞ்சித்தாய் எனதாவியுள்கலந்தே.

**ஆ.**—(அறியா.) தந்திறத்தில் எம்பெருமான் செய்தருளின நன்மைகளைப் பேசுகிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், 'உமக்கு என்ன உபகாரஞ்செய்தோம்?' என்று எம்பெருமான் கேட்க, 'என்பக்கல் யோக்யதையின்றிக்கேயிருக்க, உன்னோட்டைக்கலவிக்கு என்னை நிலவனாக்கி வைத்தாய்' என்கிறார்.

[அறியாவென்று தொடங்கி] - மிகவும் அறிவுகேட்டைப் பண்ணவற்றான ஸம்ஸாரத்திலே யிருக்கிற என்னை அறிவுபிறக்கைக்கு ஸம்பாவனையில்லாத பால்யத்திலே அடிமையிலே ஸ்நேஹத்தைப் பிறப்பித்துவைத்தாய். [அறியாமையென்று தொடங்கி]- அழகிலே மஹாபலி மதிமயங்கி 'ஈஶ்வரன்' என்று ஆராயாதபடி வாமநனாய் மநோஹரமான பேச்சாலே மஹாபலி மதிமயங்கும்படி பண்ணி அவன் ஸர்வஸ்வாபஹாரத்தைப் பண்ணினாய். [எனதாவியுள் கலந்தே என்றது] - அப்படியே என்னுள்ளே புகுந்து உன்னுடைய குணசேஷ்டிதங்களைக் காட்டி வசீகரித்து.

**ப.**—அநந்தரம், தன்பக்கலிலே அவன் தம்மை அபிநிவேஶிப்பித்தபடியை அருளிச்செய்கிறார்.

அறியாமை - (பிறர் தன்னை உள்ளபடி அறியாதபடி வடிவழகாலே) மதிமயக்கின, குறளாய்-வாமநனானவனாய், நிலம் மாவலி மூவடி யென்று - நிலம் மாவலி மூவடி என்று அநந்விதபதமாய் அபரிஸமாப்தமானவாக்யத்தாலே, அறியாமை-'(இவன் ஈஶ்வரன் என்று அறிவிக்கிற ஶுக்ராதிகள் பாசுரமும்) நெஞ்சில்படாதபடியாக, வஞ்சித்தாய் - (அவன் 'தன்னது' என்றிருந்த ஜமத்தை) வஞ்சித்துககொண்டவனே! எனது ஆவியுள் கலந்து - (இவ்வபதாநத்தை எனக்கு ப்ரகாசிப்பித்து) என்னெஞ்சுக்குள்ளே கலந்து அக்கணக்கிலே, அறியா - அறியாமையை விளைப்பதாய், மா - துஸ்தரமான பெருமையை யுடைத்தாய், மாயத்து-மாயாகார்யமான ஸம்ஸாரத்திலே, (ஸ்வதஸ்ஸித்தமான ஶேஷத்வஸம்பந்தம் பற்றாசாக), அடியேனை-என்னை, அறியாக்காலத்துள்ளே - அந்தஶேஷத்வம் அறிகைக்கு ஸம்பாவனையில்லாக் காலத்திலே, அடிமைக்கண் - தத்பலமான ஶேஷவ்ருத்தியிலே, அன்பு - ஆதரத்தை, செய்வித்துவைத்தாயால் - பிறப்பித்துவைத்தாயிறே. இது, உன்னுடைமை நழுவவிடாமைக்கிறே யென்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், நாம் உமக்கு என்ன உபகாரம்பண்ணினோம்? என்ன, யோக்யதையின்றிக்கேயிருக்க, உன் திருவடிகளிலே கைங்கர்யத்திலே நிலவனாக்கி வைத்தாயென்கிறார்.

[அறியாக்காலத்துள்ளேஇத்யாதி] - அறியாமாமாயத்து அடியேனை - அறி யாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து - வைத்தாய். அறிவுகேட்டைப் பண்ண வற்றாய் துஸ்தரமான ஸம்ஸாரத்திலே யிருக்கிற என்னை. அடியேன் என்கிறது- அஹம்ஶப்த பர்யாயம். அறிவுக்கு ஸம்பாவனையில்லாத பால்யத்திலே ப்ராப்தி பலமான அடிமையிலே ஸ்நேஹத்தைப் பிறப்பித்து வைத்தாய். அடியே னென்கிறது - 'நமக்கு அர்ஹமான வஸ்து இப்படி எளிவரவுபடுவதே!' என்று செய்தருளின அத்தனையிறே யெ ன்றுமாம். இங்கேவைத்து பகவத்விஷயத்தை அவகாஹிப்பித்தது - அத்தாலே ஒரு தேஶவிசேஷத்தில் பெறும்பேறு ஸாத்மிக்கைக்காகவும், ப்ராப்யத்தில் த்வரை விஞ்சுகைக் காகவுமிறே; போக்யதை மிக்கிருக்கிறபடி. மேல் தம்மை வஶீகரித்தபடிக்கு நிதர்ஶநம் - [அறியாமைஇத்யாதி] - தன்நெஞ்சை யொளிப்பாரைப்போலே பிராட்டியும் அறியாத படி. [குறளாய்] - சேர்ப்பால்போலே போக்யதை மிக்கிருக்கிறபடி. தன்னைத்தாழவிட்டு அர்த்தியானபடி. "நிலம்" என்றால், அவன்முகம்பாராமையாலே, 'மாவலி' என்றான். முதற்பேர்சொல்லுவாரில்லாமையாலே அவன்பார்த்து, 'உனக்குவேண்டுவதென்?' என்ன, 'மூவடி' என்றான். இப்படி அநந்விதமான பேச்சாலே வசீகரிக்கை. [அறியாமை வஞ் சித்தாய்] - சுக்ராதிகள் 'இவன் ஸர்வேஶ்வரன், தேவகார்யஞ்செய்ய வந்தான்' என்ற வார்த்தை செவிப்படாதபடி தன்பேச்சாலே வஞ்சித்தான். [எனதாவியுள்கலந்தே] - அந்யபரமான என் ஆத்மாவிலே புகுந்து, தன் குணசேஷ்டிதாதிகளாலே வசீகரித்து. அறியாமைக் குறளாய் நிலம்மாவலிமூவடி யென்று அறியாமை வஞ்சித்தாற்போலே என தாவியுள் கலந்து அறியாமாமாயத்தடியேனை அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து வைத்தாயால்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண் டான் பணிக்கும்படி:— 'அறிவுநடையாடாத தசையிலே ஸம்பந்தஜ்ஞாநத்தைப் பிறப் பித்து, பிறந்த ஜ்ஞாநத்தை யழிக்கக்கடவதான தேஹஸம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய் என்கிற இழவாலே சொல்லுகிறார்' என்றும். இத்தை எம்பெருமானார் கேட் டருளி, 'முன்னிற்பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் ப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதி தோற்றச் சொல்லுமது சேராது; ஆனபின்பு, இங்ஙனேயாமித்தனை - 'அறியாமாமா யத்தடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து - வைத்தாயால் - என்கிறார்' என்று இத்தையும் ஒருவுபகாரமாக்கி அருளிச்செய்தார். "அத்தா நீசெய்தன" என்று - நாம்பண்ணின உபகாரங்களைச் சொல்லாநின்றீர்; அவற்றிலே நீர் மதித்திருப்ப தொரு உபகாரத்தைச் சொல்லிக் காணீர்-என்ன, அத்தைச் சொல்லுகிறார்.

---

மூன்றாம்பாட்டு - அறியாக்காலம் இத்யாதி. ஆளவந்தார் நிர்வாஹத்தில் - கீழிரண்டு பாட்டிலும் கலந்த கலவி மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷயோக்யமல்லாமையாலே, 'இதுக்குஅடி ப்ரக்ருதிஸம்ஸர்க்கம்' என்று வெறுக்கிறார் இப்பாட்டிலென்று ஸங்கதி கண்டுகொள் வது. 'கையார்சக்கரத்திலே கீழும் மேலும் ஹர்ஷமாயிருக்க, "என்கொள்வன்" என்கிற இரண்டு பாட்டாலும் - கீழ்ப்பிறந்த ஸம்ஶ்லேஷம் பாஹ்யஸம்ஶ்லேஷயோக்யமல்லாமையாலே, 'இதுக்கு உடலான ப்ரக்ருதியோடே வைத்தாய்' என்று வெறுத்தாரிறே; இங்கும் அப்படியே வெறுக் கிறார்' என்று அருளிச்செய்வர். எம்பெருமானார் நிர்வாஹத்திலே அவதாரிகை - அத்தாநீ இத்யாதி.

[அறியாக்காலத்துள்ளே] – "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" (பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:) என்கிறபடியே, அறிவுநடையாடாத பால்யத்திலே. [அடிமைக்கணன்பு செய்வித்து] - அடிமைக்கண் - அடிமையிலே. "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்கிறபடியே, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுடைய பரிமாற்றத்திலேயன்றோ என்னை அந்வயிப்பித்தது. [அன்புசெய்வித்து] - "வரில்போகடேன், கெடில் தேடேன்" என்றிருக்கையன்றிக்கே, "குருஷ்வ" (குருஷ்வ) என்னும் படி பெறுவிடில் முடியும்படியன்றோ பண்ணிற்று? [அறியா இத்யாதி] - பிள்ளாய்! ஊமத்தங்காய் தின்று ப்ரமித்தாரைப்போலே, அசித்ஸம்ஸ்ருஷ்டனுயிருக்கிற என்னைக் கிடீர் இப்படி பண்ணிற்று. அறிவுகேட்டைப் பண்ணக்கடவதான ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டனுயிருக்கிற அடியேனை, 'இது எங்கே சிறைப்பட்டாலும் நல்லது, நம்வஸ்துவன்றோ' என்று. [வைத்தாயால்] - இத்தண்ணீர்ப்பந்தலை வைத்தாயா லென்கிறுர். அறியா மாமாயத்து அடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து வைத்தாயால். இதுக்கு நல்லநிதர்ஶந முண்டு. [அறியாமை இத்யாதி] - நெஞ்சறியாதபடி கார்யம் செய்வாரைப்போலே, திருமார்விலிருக்கிற நாய்ச்சியாருங்கூட அறியாமே வாமநவேஷத்தைப் பரிக்ரஹித்து "கோள்வனுன்மாவலி" என்றுற்போலே, நிலம்மாவலிமூவடியென்று - அநந்விதபாஷணங்களைப்பண்ணி. பண்டும் இரந்து பழக்கமுண்டாகிலிறே அந்விதபாஷணம்பண்ணுவது. [அறியாமைவஞ்சித்தாய்] - சுக்ராதிகள் 'இவன் ஸர்வேஶ்வரன், தேவ

---

இத்தால் ஸாவம் - அஹம்ஸர்வம் இத்யாதி. அன்புஎன்று - பெறில் ஜீவித்தல், பெறுவிடில் முடியுமதான ஸங்காநந்தரஸாவிகாமத்தைச் சொல்லுகிறது. "குருஷ்வ" என்றதில் "ப்ரியமநுஹஸிஷ்யதே" என்றது இவ்விடத்துக்கு உபயுக்தம். அயோத்யாகாண்டேஙக-உஉ. "குருஷ்வமாமநுசரம் வைதர்ம்யம்நேஹவிஷ்யதே । க்ருதார்தோஹம்பவிஷ்யாமி தவசார்தஸ்ய கல்பதே" "பால்யாத்ப்ரப்ருதி" "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" இத்யாதி, பூர்வமேவ மஹாப்ரவேஶே லிகிதம். இதுக்குத் தாத்பர்யம் - பிள்ளாய் இத்யாதி. பிள்ளாயென்றது - வார்த்தைப் பாடு. அசித்ஸம்ஸ்ருஷ்டனும் - தத்ப்ரயுக்தமௌட்யபர்யந்தம் விவக்ஷிதம். ஶப்தார்த்தம் - அறிவு கேட்டை இத்யாதி. 'அடியேன்' என்றதுக்கு ஸாவம் - இதெங்கே இத்யாதி. இந்தவாக்யம் - எம்பெருமானுர் நிர்வாஹத்திலே யானபோது, அதிஜுகுப்ஸநீயமான அசித்ஸம்ஸ்ருஷ்டனே யாகிலும் ஸம்பந்தத்தாலே அங்கீகரித்து அடிமைக்கண் அன்பு செய்வித்து வைத்தா யென்று தாத்பர்யம். ஆளவந்தார் நிர்வாஹத்திலே யானபோது, 'நமக்குப் பாதந்த்ரமன்றோ, எங்கே சிறைப்பட்டாலும் க்ரமேண அங்கீகரிக்கிறோம்' என்று வைத்தாயாலென்று வெறுக்கிறு ரென்று கருத்து. சிறைப்படுகை - ஹேயஸம்ஸ்ருஷ்டமாகை. அன்பு செய்வித்தாயால் என்ன அமைந்திருக்க, 'வைத்தாயால்' என்கையாலே - ஒரு கௌரவம் தோற்றுகிறதிறே, அத்தை அருளிச் செய்கிறுர் - இத்தண்ணீர்ப்பந்தலை இத்யாதி. இது - எம்பெருமானுர் நிர்வாஹத்தைப் பற்றி உபகாரஸ்ம்ருதியிலே. அந்வயங்காட்டுகிறுர் - அறியாமாமாயத்து இத்யாதி. மேலே 'அறியாமை' என்றிருக்கையாலே, அத்தோடு புநருக்தமாகாதபடி வ்யாக்யாநம் பண்ணுகிறுர் - நெஞ்சறியாத இத்யாதி. 'அப்போது பிராட்டியுண்டோ?' என்ன, ரஸமாக, "க்ருஷ்ணாஶ்ரிதே நவஸம்வ்ருணு தெய்யஶம் வக்ஷஸ்தலாஶ்ரயாம்" என்னக்கடவதிறே - என்று அருளிச் செய்வர். அநந்வயமாகச் சொல்லுகைக்கு ஹேது - பண்டும் இத்யாதி. "வ்ருஸ்கஸ்யஹி வ்ருத்திஷ்ய:" இதி ந்யாயேந, அறியாமைக்கு ப்ரஸங்கம் ஸம்பாதயதி - ஶுக்ராதிகள் இத்யாதி. "அறியாமை" இத்யாதிகம் - த்ருஷ்டாந்தார்த்த

கார்யம்செய்ய வந்தான்; உன்ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கவந்தான்' என்றால், அவர் கள்பாசுரஞ் செவிப்படாதபடி தன் பேச்சாலே அவனை அறிவுகெடுத்து வஞ்சித்தானாயிற்று. அப்படியே, [எனதாவியுள்கலந்து]-நானிருக்கிற இடத்தளவும் வந்து, என்னோடேகலந்து. அத்யந்தம் அந்யபரனான என் ஆத்மாவிலே புகுந்து உன்குணசேஷ்டிதங்களாலே வசீகரித்து. அறியாமைக்குறளாய் நிலம் மாவலி மூவடியென்று அறியாமை வஞ்சித்தாற்போலே,' எனதாவியுள்கலந்து – அறியாமாமாயத்து அடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து வைத்தாயால் என்று அந்வயம். (௩)

## நான்காம்பாட்டு.

எனதாவியுள்கலந்த பெருநல்லுதவிக்கைம்மாறு
எனதாவிதந்தொழிந்தேன் இனிமீள்வதென்பதுண்டே?
எனதாவியாவியும்நீ பொழிலேழுமுண்டவெந்தாய்!
எனதாவியார்யானார்? தந்தநீ * கொண்டாக்கினையே.

ஆ·—(எனதாவி.) இப்படி எம்பெருமானோடு கலந்த கலவியாலுள்ள நிரவதிகப்ரீதியாலே அறிவழிந்து, 'இவ்வாத்மா தம்முடையதன்று' என்று நிரூபிக்கமாட்டாராய், அவன் தம்மோடுகலந்த இப்பெருநல்லுதவிக்குக் கைம்மாறாகத் தம்முடைய ஆத்மாவை அவனுக்கு மீளாவடிமையாகக் கொடுத்து, பின்னையுந் தம்முடைய ஸ்வரூபத்தை உள்ளபடி விவேகித்து; 'தருகிற நான்ஆர்? தரப்புகுகிற இவ்வாத்மா ஆர்? பண்டே உனக்குச் சேஷமாயிருக்கிற இவ்வாத்மாவை நீகொண்டருளினையத்தனையிறே' என்கிறார்.

ஒ·—நாலாம்பாட்டில், தமக்கு எம்பெருமான் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாதே தடுமாறுகிறார்.

[எனதாவியுள்கலந்த என்று தொடங்கி] - அத்யந்தநிக்ருஷ்டனான என்னுடைய ஆர்த்தி தீரும்படி உன்பேறாக வந்து கலந்த மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக என்ஆத்மாவை உனக்கே தந்தேன். [எனதாவியென்று தொடங்கி] - என்னாத்மாவுக்கு ஶேஷியாயிருக்கிற நீ ப்ரளயம் நலியாதபடி லோகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்துக்கொண்டாற்போலே உன்னைப் பிரிந்து நான்பட்ட வ்யஸநமெல்லாம் தீரும்படி என்னோடே வந்து கலந்து என்னை அடிமைகொண்டவனே! கொடுக்கப்படுகிறேனாய் நிற்கிற என்னோடும் கொடுக்கிறேனாய் நிற்கிற என்னோடும் எனக்கு என்ன அடைவுண்டு? உன்னை நீ கொண்டபின்பு.

---

மென்கிறார் - அப்படியே இத்யாதி. நானிருக்கிறஇடத்தளவும் வந்து என்கையாலே - தாம் விமுகராயிருந்தமை தோற்றுகிறது. 'மஹாபலியை வஞ்சித்தாற்போலே என்னையும் வஞ்சித்தான்' என்று விவக்ஷித்து, வஞ்சநம் உபகாரமாம் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - அத்யந்தம் இத்யாதி. ப்ரதிபத்திஸௌகர்யார்த்தம் அந்வயம்-அறியாமை இத்யாதி. ஆளவந்தார் நிர்வாஹத்திலே, அறியாமைக்குறளாயென்று தொடங்கி, வஞ்சித்தாற்போலே எனதாவியுள் கலந்து அறியாக்காலத்துள்ளே யித்யாரப்ய, வைத்தாயா லித்யந்வய:. (௩)

* கொண்டாய்க்கினியே என்றும் பாடமுண்டு.

ப.—அநந்தரம், இவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

பொழிலேழும் - ஸமஸ்தலோகங்களும், (ப்ரளயத்திலே அழியப்புக), உண்ட - வயிற்றிலேவைத்துநோக்கின, எந்தாய் - ஸ்வாமியே! (அப்படி நானும் அழிந்துபோகாதபடி), எனதாவியுள் - (அத்யந்தஹேயமான) என் ஆத்மாவுக்குள்ளே, கலந்த - ஒருநீராகக் கலந்த, பெரு - (அது தன்பேறும்படி) பெருத்து, நல் - (நிர்ஹேதுகமாகையாலே) நன்றான, உதவி - உதவிக்கு, கைம்மாறு - ப்ரத்யுபகாரமாக, எனது ஆவி - என் ஆத்மாவை, தந்தொழிந்தேன் - (உனக்குத்) தந்தேவிட்டேன்; இனி - இனி, மீள்வது - (அதுக்கு) மீட்சியென்பதொன்று, உண்டே - இல்லை; (இதுதான் ஆரதென்று ஆராயில்), எனது ஆவியும் - என்னுத்மாவுக்கும், ஆவி - ஆத்மா, நீ - நீ, (ஆதலால்), எனதாவி யார்-(தரப்படுகிற) என் ஸ்வரூபத்தினுடைய கர்மத்வமும் நானிட்டவழக்கல்ல; யான் ஆர் - தருகிற என்னுடைய கர்த்ருத்வமும் நானிட்டவழக்கல்ல; தந்த - (ஜ்ஞாத்ருத்வகர்த்ருத்வாதி விஶிஷ்டமான இவ்வஸ்துவினுடைய ஸத்தையை அடியிலேயுண்டாக்கித்) தந்த, நீயே - நீதானே, கொண்டாக்கினை - பின்னையும் ஸ்வீகரித்தாய். ஆதலால், உனக்கே சேஷமென்றிட்டு, எனக்கு ஸமர்ப்பணத்தில் கர்மத்வமில்லை, கர்த்த்ருத்வமுமில்லை. கைம்மாறு - ப்ரத்யுபகாரம்.

இ.—நாலாம்பாட்டில், தமக்கு அவன் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாதே தடுமாறுகிறார்.

[எனதாவி] - அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே வாஸனைபண்ணிப்போந்த என்னோடேகிடீர் கலந்தது. வஸிஷ்டன் சண்டாள ஸ்ரேணியிலே புகுந்தாற்போலே தம்மை அநுஸந்திக்கிறார். [உள்கலந்த] - அபிமதவிஷயத்தில் அழுக்குஉகக்கும் செருக்கரைப்போலே, அதுவே ஹேதுவாகத் தன்பேறாகக் கலந்தான். "தன்னுள்ளே கலந்தொழிந்தோம்" என்கிறபடியே கலந்தபடி. [பெருநல்லுதவி] - அதாவது - தன்பேறாக உபகரிக்கை. [கைம்மாறு] - கைம்மாறாக. ப்ரத்யுபகாரம்பண்ணியல்லது தரிக்கவொண்ணாதபடி. [எனதாவிதந்தொழிந்தேன்] - நீ உன்னை எனக்காக்குகையாலே வெளிறாகழிந்த என் ஆத்மாவைத் தந்தேன். 'நெடுநாளிழந்தவராகையாலே இவர் திரியநிற்கும்' என்றுகொண்டு, இது எத்தனைகுளிக்கு நிற்கும்? என்ன, [இனிமீள்வதென்பதுண்டே] - ஸத்யோதஸாஹமாகத் தந்தேன்; 'மீள்வு' என்றோர் அர்த்தந்தானுமுண்டோ? 'இவரை ப்ரமத்தரோடே விடுகிறதென்? என்று 'யார்பொருளை யாருக்குக் கொடுத்தீர்?' என்ன, [எனதாவியாவியும்நீ] - என் ஆத்மாவுக்கு அந்தராத்மாவாய் நிற்கிறாய் நீ; இது உனக்கு அநந்யார்ஹ ஶேஷமன்றோ? [பொழிலேழுமுண்ட வெந்தாய்] - ப்ரளயார்ணவத்திலே நஶியாதபடி ஜகத்தை ரக்ஷித்தாற்போலே நான் பிரிந்து நோவுபடாதபடி என்னோடே கலந்து அடிமைகொண்டவனே! ப்ரளயங்கொள்ளாமே நோக்குகையாலும் நீயே ஸ்வாமி யென்னவுமாம். [எனதாவியார் யானார்] - "எனதாவி" என்று - ப்ரதேயவஸ்துவான நான் ஆர்? "தந்தொழிந்தேன்" என்று - ப்ரதாதாவான நான் ஆர்? [தந்த நீ கொண்டாக்கினையே]-நீரென்று ஒருத்தரில்லையோ? பலபோக்தாக்கள் நீரல்லீரோ? என்ன, உன்னுடைய வஸ்துவை நீயே கொண்டபின்பு; நித்யமான ஆத்மாவை இவன் தருகையாவதென்?என்னில்; ஸத்தை அவனிச்சாதீநமாகையாலே - 'தந்தான்' என்கிறது. "உஹ்ய தவைவ தவஸ்வஹாய-ஸ்வஸ்தா".

ஈடு.—நாலாம்பாட்டு. "வைத்தாயால்" என்று அவன்பண்ணின உபகாரத்தை அநுஸந்தித்து இங்ஙனே கிடந்து நெஞ்சாறல் படாநில்லாதே, ப்ரத்யுபகாரமாக உம்மதாயிருப்பதொரு வஸ்துவைக் கொடுத்து நெஞ்சாறல் தீரமாட்டீரோ? என்ன, 'அப்படியேயிறே செய்வது' என்று அவன்திருவடிகளிலே ஆத்மஸமர்ப்பணத்தைப் பண்ணி அநுஶயிக்கிறார்.

[எனதாவியுள்கலந்த] - அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே வாஸநை பண்ணிப் போந்த என்னுடைய ஆத்மவஸ்துவிலேகிடீர் வந்து கலந்தது. [எனதாவி]-வஸிஷ்டன் சண்டாலஶ்ரேணியிலே புகுந்தாற்போலே தம்மைஅநுஸந்திக்கிறார்;†"நீசனேன்"என்றிறே தம்மைஅநுஸந்திப்பது. [உள்கலந்த] - அதுதன்னிலுங் கடக்கநின்று சில போகமோக்ஷங்களைத் தந்துபோகையன்றிக்கே, "எல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம்" என்னும்படி கலப்பதே! உதவி, நல்லுதவி, பெருநல்லுதவி. உதவியாவது - உபகரிக்கை. நல்லுதவியாவது - பச்சைகொள்ளாதே உபகரிக்கை. பெருநல்லுதவியாவது - தன்பேறாக உபகரிக்கை. இம்மஹோபகாரத்துக்கு, கைம்மாறாக - ப்ரத்யுபகாரமாக. [எனதாவிதந்தொழிந்தேன்] - என்னுடைய ஆத்மவஸ்துவை தேவர்திருவடிகளிலே ஸமர்ப்பித்தேன். அழகிது, இதுதான் எத்தனைகுளிக்கு நிற்கும்? என்றான் ஈஶ்வரன். [இனிமீள்வதென்பதுண்டே] – *ஸத்யோதஶாஹமாகத் தந்தேன். 'அழகிது! நீர்தாம் ஆரதை யாருக்குத் தந்தீரென்று ஆராய்ந்துபார்த்துக்காணும்' என்றான் ஈஶ்வரன் ; ஆராய்ந்தவாறே அவனதை அவனுக்குக் கொடுத்ததாயிருந்தது. [எனதாவியாவியும்நீ]-என்னாத்மாவுக்கு அந்தராத்மா

---

நாலாம்பாட்டு - எனதாவி இத்யாதி. 'எனதாவிதந்தொழிந்தேன், எனதாவியார் யானார்' என்றத்தைக் கடாக்ஷித்து ஶங்காபரிஹாரரூபேண ஸங்கதி - வைத்தாயாலென்று இத்யாதி. அநுஶயிக்கிறார் - அநுதபிக்கிறார். நெஞ்சாறல் - மநோதுஃகமும், விசாரமும்.

"எனதாவி" என்றதுக்கு ஹார்த்தபாவம் - அநாதிகாலம் இத்யாதி. பலிதம் - வஸிஷ்ட்டன் இத்யாதி. 'புகுந்தாற்போலே அவன் தம்மோடே கலந்தான்' என்று தம்மை அதிநீசனாக அநுஸந்திக்கிறா ரென்றபடி. இப்படி அநுஸந்திப்பானென்? என்ன, - நீசனேன் இத்யாதி. 'உள் கலந்த' என்றதுக்கு வாஸனை - அதுதன்னிலும் இத்யாதி. கடக்கநின்று சிலபோகத்தைக் கொடுக்கையாவது - தான் ப்ராப்யனன்றிக்கேயொழிகை. கடக்கநின்று மோக்ஷத்தைக் கொடுக்கையாவது - "மோக்ஷயிஷ்யாமி", "நித்யகிங்கரோ பவிஷ்யஸி" என்று புருஷார்த்த ப்ரதாநத்தை ஸங்கல்பித்து, அந்தரஸத்தை அநுபவிப்பியாமலிருக்கை. எல்லாம் இத்யாதி - எனதாவியி லுண்டான கலவிக்குள்ளே ஸமஸ்தரஸங்களுமாம்படி கலந்தா னென்றபடி. விஶேஷணங்களுக்கு பாவம் - உதவியாவது இத்யாதி. கைம்மாறு - கைமாறுகை. கை - கொடுக்கை. மாறு - ப்ரதியாக. ப்ரதியாகக்கொடுக்கை - ப்ரத்யுபகார மென்றபடி. தன்பேறாக - இவன் அர்த்தியாதிருக்க, ஸ்வப்ரயோஜநமாக. அழகிது - ஸம்யக் என்றபடி. எத்தனைகுளிக்கு என்றது - குளியென்று - ஸ்நாநமாய், நாலு ஆறு குளிபர்யந்தம் புஷ்பாங்கராகாதி பரிமளம் இருக்குமாபோலே இதுவும் எத்தனைகாலமிருக்கு மென்றபடி; ஸ்தாயித்வாபாவத்திலே நோக்கு. ஸத்யோதஶாஹம் என்றவிடத்திலே - "க்ரயஶ்ச விக்ரயஶ்சைவ ஸந்தி ஶாஹாந்நிவர்த்ததே ந விஷ்யதே நவதஶாஹ" என்றத்தை நினைப்பது. நவதஶாஹ - வ்யவதஶாஹ உத்யதே. "ஸத்யோதஶாஹ" என்ற வளவன்றிக்கே ஸத்யோதஶாஹ மென்றபடி. மேலுக்கு அவதாரிகை - அழகிது இத்யாதி. "ஆராய்ந்தவாறே" இத்யாதி வாக்யாநந்தரம் - "பகவதீயமான" இத்யாதி வாக்யத்தை அநுஸந்தித்து, அநந்தரம், "எனதாவியாவியும்நீ" என்று பதோபாதாநம்பண்ணி, "என்னாத்மாவுக்கு" இத்

---

† திருவாய்மொழி ரு-ரு-ச.

* க்ரய விக்ரயங்கள் பரிவர்த்தனைகள் பண்ணுமிடத்தில் பத்துநாளுக்குள்ளே யானால் மீளக்கடவது; அப்பால் மீளக்கடவதில்லை என்ற சொல்லக்கடவதிறே; அப்படி இந்தப் பத்துநாளும் இன்றே சென்றதாகக் கொடுத்துவிட்டே னென்றபடி என்பது அடையவளைந்தான்.

வாய்ப் புகுந்து நிற்கிறுயும் நீயாயிருந்தாய். பகவதீயமான வஸ்துவை நெடுநாள் 'நம்மது' என்றிருந்து; இத்தை இன்று அவன்பக்கலிலே ஸமர்ப்பித்தோம்; ஸர்வஜ்ஞனவன் என்நினைத்திருக்கும்? என்று,தாம் அத்தையறிந்து அதுக்கு லஜ்ஜிக்கிறுர். ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவிடில் ஸர்வமுக்திப்ரஸங்கமாம். ஸமர்ப்பிக்கில் அவனதான வஸ்துவை அவனுக்குக் கொடுத்ததாம்; ஆனுல் செய்யஅடுப்பதேன்? என்னில்; - ப்ராந்திஸமயத்தில் ஸமர்ப்பிக்கவும் வேணும்; தெளிந்தால் 'கொடுத்தோம்' என்றுஇருக்கக்கடவனல்லன்; "யோஸ ஸ்ரீதஃ - க்ஷவாகிந்ஸஸமர்ப்பயாமிதே" (மயாஸமர்ப்பிதஃ - அதவாகிந்நுஸமர்ப்பயாமிதே) என்ருரிறே. [பொழிலேழுமுண்டஎந்தாய்] - ஸ்வாபாவிகமான சேஷித்வங்கொண்டு சொல்லவேணுமோ? ப்ரளயாபத்திலே வயிற்றிலேவைத்து நோக்கின அது போராதோ 'நீ சேஷி' என்கைக்கு? [எந்தாய்] - ப்ரளயாபத்திலே நசியாதபடி ஜகத்தை ரக்ஷித்தாற்போலே, பிரிந்துநசியாதபடி என்னேடே கலந்து அடிமைகொண்டவ னென்றுமாம். [எனதாவியார் யானுர்] - ப்ரதேயமான வஸ்து ஆரது? ப்ரதாதா ஆருடையவன்? 'நான் என் ஆத்மாவை ஸமர்ப்பித்தேன்' என்னக்கடவேனே? [தந்தநீகொண்டாக்கினையே] - முதலி

---

யாதி வாக்யஞ் சொல்லிக்கொள்வது. லஜ்ஜிக்கிறர் என்றது - "எனதாவியார்யானுர்" என்றத்தைப் பற்ற. இந்த ப்ரஸங்கத்திலே ஸ்வரூபசிக்ஷைபண்ணுகிறுர் - ஆத்மஸமர்ப்பணம் இத்யாதி. யத்வா, "ஆத்மாநம் ஸமர்ப்பயாமி" என்றுஇராதே, ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவானென்? பின்பு லஜ்ஜிப்பானென்? என்ன, - ஆத்மஸமர்ப்பணம் இத்யாதி ஆதல். அதாவது - "க்ஷந்தவ்யோ மேபராதஃ" என்று சொல்லும்படியான வ்யவஸாயஃ என்ற அத்யந்தபாரதந்த்ர்யாநுஸந்தாநதசையைப் பார்த்தால், 'ஸ்வயோஸஸ்ரீதஃ' "தவாஸ்மி தாஸஸ்ய ஸர்வஸ்ய" என்று அநுஸந்திக்கிற கேவலசேஷத்வ ஜ்ஞாநதசையும் பாரதந்த்ர்யஜ்ஞாநகார்யமேயாகிலும், 'அதுவும் ப்ராந்திதசை' என்னும்படியாயிருக்கும் என்று அருளிச்செய்வர். "ஏயிதவ்யீ நதாம்நிஸ்ரிதஃ" என்றவிடத்தில் - த்வத்விஷயமான பாரதந்த்ர்யத்தை நிஸ்சயித் தென்றபடி. இதுக்கு நியாமகமெது? என்ன, மயாஸமர்ப்பித இத்யாதி. அதாவது-ஆத்மஸமர்ப்பணம் ஸர்வமுக்திப்ரஸங்கபரிஹாரார்த்தமாகிலும், ஆத்மவஸ்து அத்யந்தபாரதந்த்ரமாகையாலே அநந்தரம் அநுதபிக்கவேண்டும்படி யிருக்கு மென்றபடி. "கிஞ்சஸமர்ப்பயாமி" என்று - ஸ்வாதீநகர்த்த்ருத்வநிவ்ருத்தி சொல்லுகிறது - என்ற பக்ஷாந்தரம் அயுக்த மென்றபடி. ஸ்தோத்ரே * "வபுராதிஷு" இத்யாதி. "ஏநாய" இத்யாதி. "எனதாவியாவியும்நீ" என்றத்தால் - ஸ்வாமித்வஞ் சொல்லி, மீளவும் 'எந்தாய்' என்கிறதென்? என்ன, ஸ்வாபாவிகமான இத்யாதி. பொழிலேழு முண்கையாலே, 'எந்தை' என்ற முந்தின அர்த்தம். அர்த்தாந்தரம் - ப்ரளயாபத்திலே நசியாதபடி இத்யாதி. பொழிலேழு முண்டாற்போலே எந்தையானதுவும் என்றுஇரண்டாமர்த்தம். எனதாவியாவியும் நீயானபின்பு - எனதாவியார் யானுர் என்று ஹேதுஹேதுமத்பாவேநார்த்தம் - ப்ரதேயமான இத்யாதி. ஸர்வமும் ஈஸ்வரனுக்கே சேஷமாகையாலே, தத்வ்யதிரேகேண ஸ்வதந்த்ரதயா ஸமர்ப்பணகர்த்தாவும் ஸமர்ப்பணீயவஸ்துவும் இல்லையென்றபடி. பாப்தார்த்தம் - முதலிலே இத்யாதி. தந்தநீ - உண்டாக்கின நீ. தருகை - உண்டாக்குகை. கொண்

---

* "வபுராதிஷு யோபி கோபி வா குணதோஸாநி யதாதயாவிதஃ | ததயம் தவ பாதபத்மயோரஹமத்யைவ மயா ஸமர்பிதஃ ||" "ஏநாயமத்ரிஜகதாவபுஷா ஹம் ஸகலம் தவைவரோயவ | நியதஸ்மிதிவ்யவஸாயவாகின ஸமர்ப்யாமிதே."

லே இத்தையுண்டாக்கின நீயே கோண்டாயானுய். உண்டாக்குகையாவதேன் நித்ய வஸ்துவை? என்னில்; - "ஐஹா தவனவ தவவிஶ்வஷாரூஸத்தா" (இச்சாதஏவதவவிஶ்வ பதார்த்தஸத்தா) என்று அவனுடைய நித்யேச்சையாலேயிறே இதினுடைய நித்யத்வம்.

## ஐந்தாம்பாட்டு.

இனியார்ஞானங்களால் எடுக்கலெழாதவெந்தாய்!
கனிவார்வீட்டின்பமே! என்கடற்படாவமுதே!
தனியேன்வாழ்முதலே! பொழிலேழுமேனமொன்றாய்
நுனியார்கோட்டில்வைத்தாய் உனபாதஞ்சேர்ந்தேனே.

**ஆ.**—(இனியார்.) அநாஶ்ரிதர் எத்தனையேனும் உத்க்ருஷ்டரேயாகிலும் அவர்களுடைய ஜ்ஞாநங்களுக்கு அகோசரனாய், அநந்யபக்திகளாயிருப்பார்க்குப் பரம ஸுலபனாய், தாத்ருஶபக்திஹீநனாயிருக்கச்செய்தே எனக்கு அயத்நஸித்த போக்யனாய், ஸமுத்ரத்திலே அழுந்திக்கிடக்கிற ஆத்மவர்க்கத்தை நிர்ஹேதுகமாகஎடுத்து உஜ்ஜீவிப்பித்தாற்போலே, உன்னுடைய க்ருபையாலே, அநந்யகதியாயிருந்த என்னுடைய உஜ்ஜீவநஹேதுபூதனானவனே! உன்திருவடிகளை இனிஒருநாளும் பிரியாதபடி சேர்ந்தேனே யென்கிறார்.

ஓ.—அஞ்சாம்பாட்டில், ப்ரளயார்ணவத்திலே மக்நமான ஜகத்தை எடுத்தருளினாற்போலே, ஸம்ஸார ஸாகரத்திலே முழுகிக்கிடக்கிற என்னை உன் திருவடிகளில் உறவை அறிவித்து எடுத்தருளுகையாலே, இனி உன் திருவடிகளைப் பெற்றேனென்று க்ருப்தராகிறார்.

[ஆர்ஞானங்களா லெடுக்கலெழாத வெந்தாய்] - திருவடிகளில் அடைவிலராகில் எத்தனையேனும் அளவுடையாருடைய அறிவுகளாலும் பரிச்சேதிக்கவொண்ணாத என் நாதனே! [கனிவாரென்று தொடங்கி] - ஓரளவுமில்லையே யாகிலும் திருவடிகளில் ஆசையுடையார்க்கு மோக்ஷஸுகம் போலே போக்யமாமவனே! பக்திமான்களில் பரிகணிக்கப்படாதே யிருக்கிற எனக்கும் அயத்நஸித்த போக்யமே. வீட்டின்பம் - அவர்களிருந்தவிடத்தே வந்து போக்யமாகையுமாம். [தனியேன்என்று தொடங்கி]-ஸம்ஸாரியாய்த் திருவடிகளி லுறவும் அறியாதிருக்கிற காலத்திலே திருவடிகளைப் பெறுகைக்கு அடியான ஸுக்ருதத்துக்கு உத்பாதகனே! நுனியார் கோடு - கூர்மைமிக்க கொம்பு.

**ப.**—அநந்தரம், உன்னுடைய அப்ராக்ருதபோக்யதையைக் காட்டி ருசிஜநகனானபடியாலே உன்திருவடிகளைப் பெற்றேனல்லேனோ? என்கிறார்.

யார் - எத்தனையேனும் அதிஶயிதரானவர்களுடைய, ஞானங்களால் - ஜ்ஞாநங்களால், எடுக்கல் எழாத - எடுக்கைக்கு எடுப்புண்ணாத, எந்தாய் - ஸ்வாமியாய், கனி

---

டாக்கினையே - கொண்டாயானுய். தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - உண்டாக்குகை இத்யாதி. நித்யேச்சையடியாக இது நித்யமாயிருக்கையாலே 'உண்டாக்கின' என்கிறாரென்றபடி. ஸ்ரீவைகுண்டஸ்தவே- "ஐஹா தவனவ தவவிஶ்வஷாரூஸத்தாநித்யம் ப்ரியாஸ்வதத்கெவநதெவநித்யாः। நித்யம் தநெகவாதஜூநிஜஸாரூவாஹாவத்ஜெஹூ ஹுணாஹிநிஷ்ரூநஷாः". க்ரமேண அந்வயঃ.

வார் - (உன்பக்கல் ஸ்நேஹத்தாலே) பரிபக்வஹ்ருதயரானவர்களுக்கு: வீட்டின்பமே - மோக்ஷாநந்தபூதனாய், என் - (உபயவ்யாவ்ருத்தனான) எனக்கு (மதநாதியத்நத்தால்), கடல்படா - கடலிலே உண்டாகாத, அமுதே - (அப்ராக்ருதமான) அம்ருதமாய், தனியேன் - (ஸம்ஸாரத்திற்பொருந்தாமையாலே) தனியனான என்னுடைய, வாழ் - (த்வதநுபவரூபமான) வாழ்வுக்கு, முதலே - (ருசிஜநகத்வாதியாலே) ப்ரதமஹேதுபூதனாய் (என்னை ஸம்ஸாரார்ணவத்தினின்று மெடுக்கைக்கு ஸூசகமாக), பொழிலேழும் - ஸப்தத்வீபயுக்தமான ஜகத்தை, ஒன்று - அத்விதீயமான, ஏனமாய் - மஹாவராஹமாய்க் கொண்டு, நுனியார் - கூர்மைமிக்க, கோட்டில் - கொம்பிலே, வைத்தாய் - வைத்தவனே! இனி - இனி நீயே ஹேதுபூதனாய் நிர்வஹிக்கிறபின்பு, உனபாதம் - உன்திருவடிகளை, சேர்ந்தேனே - ப்ராபித்தேனேயன்றோ? ஏகாரம்-தேற்றம். எடுக்கல்-தம்வசமாக்குதல்.

இ:—அஞ்சாம்பாட்டில், 'உமக்கு ஜ்ஞாநலாபமே அமையுமோ? ப்ராப்தி வேண்டாவோ?' என்ன, 'எனக்கு ப்ரதம ஸுக்ருதமும் நீயேயாய் உன் திருவடிகளிலே கைங்கர்ய ருசியைத் தந்த பின்பு இனிப் பெற்றேனேயன்றோ' என்கிறார்.

[ஆர்ஞானங்களா லெடுக்க லெழாத வெந்தாய்] - ஸ்வயத்நத்தாலே காண நினைப்பார் எத்தனையேனும் அதிசயித ஜ்ஞாநரே யாகிலும் அவர்களால் பரிச்சேதிக்க வொண்ணாத என்நாயனே! அதாகிறது - துர்யோதநனால் பரிச்சேதித்தல், ராவணனால் எடுக்கலாயிருத்தல் செய்ய அரிதாயிருக்கை. "ஹிவோ நீ" இத்யாதி, "வாயவஸ்ச நாவஸ்ய ஹ்ருஷிகேச ஹக்ஷ்யாவபாயோவஸ: | ஸர்வஜ்ஞாவேத்யகம் வ்யாவி ஸவஸ்ய ஹிருதிகேச:". [கனிவார்வீட்டின்பமே] – ஓரளவில்லையேயாகிலும் பகவத் விஷயத்தில் பக்வமான ப்ரேமமுடையவர்களுக்கு மோக்ஷ ஸுகமானவனே! அவர்களிருந்த விடத்தே வந்து போக்யனானவனே யென்னவுமாம்; "தொல்லையின்பத்திறுதி கண்டாளே" என்னக் கடவதிறே. [என் கடற்படாவமுதே] - உபயகோடியிலும் வ்யாவ்ருத்தனான எனக்கு அயத்ந ஸித்தமான போக்யமே! [தனியேன் வாழ்முதலே] - எனக்கு இப்பேற்றுக்கு அடியான ப்ரதம ஸுக்ருதத்துக்கு உத்பாதகனானவனே! பந்துக்கள் நடுவே யிருக்கிறவர் 'தனியேன்' என்கிறாரிறே; வழிபறிக்காரர் நடுவே நின்றால் அவர்கள் துணையாகாரிறே. எனக்கென்றிருப்பார் நடுவே இருக்கையிறே - இவர்க்குத் தனிமை. தம்மை அத்தலைக்கு ஆக்கிவைக்கையிறே - இவர்க்கு வாழ்வு. [பொழிலேழும் இத்யாதி] - ஸப்தத்வீபவதியான பூமியை அத்விதீயமான வராஹவேஷத்தைக்கொண்டு கூர்த்தகொம்பிலே எடுத்துவைத்தாற்போலே, ஸம்ஸாரஸாகரங் கொண்ட என்னை எடுத்தா யென்கிறார். [இனியுனபாதஞ் சேர்ந்தேனே] - "இமையோர் தலைவா - இந்நின்ற நீர்மை யினியாமுறாமை" என்னும்படி அறிவைத் தந்தபோதே உன் திருவடிகளைப் பெற்றேனேயன்றோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஜ்ஞாநலாபமே அமையுமோ? ப்ராப்திவேண்டாவோ? என்ன, எனக்கு ப்ரதமஸுக்ருதமும் நீயேயாய், என்னை ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாக்கின அன்றே பெற்றேனேயன்றோ? என்கிறார்.

---

அஞ்சாம்பாட்டு - இனியார் இத்யாதி. 'தனியேன்வாழ்முதலே, இனி யுனபாதஞ் சேர்ந்தேனே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து இரண்டாம் பாட்டோடே ஸங்கதி - ஜ்ஞாநலாபமே இத்யாதி. "அறியாதன வறிவித்து" என்று ஜ்ஞாநலாபமுண்டாயிற் றென்றபடி.

இனி - மேலே அந்வயம். [ஆர்ஞானங்களால் எடுக்கலெழாதவெந்தாய்] - எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநரானவர்களுடைய ஜ்ஞாநவிஶேஷங்களாலும் ஸ்வயத்நத்தாலே அறியப்பார்க்குமன்று பேர்க்கப்போராதிருக்கிற என்நாயனே! அதாவது - துர்யோதநனாலே பரிச்சேதித்தல், ராவணனாலே எடுக்கலாயிருத்தல் செய்ய அரிதாயிருக்கை. [கனிவார் வீட்டின்பமே] - 'நீ' என்றால் உள்கனிந்து பக்வமாயிருக்குமவர்களுக்கு மோக்ஷஸாதகமானவனே! அன்றியே, 'நீ' என்றால் இனியராயிருக்குமவர்களிருப்பிடத்திலே வந்து அவர்களுக்கு ஆநந்தத்தை விளைக்குமவனே! அப்படி எங்கேகண்டோம்? என்னில்; யசோதைப் பிராட்டி, தோல்லையின்பத்திறுதிகண்டாளிறே. [என்கடற்படாவமுதே] - அவ்விரண்டு கோடியிலும், எண்ணவோண்ணாதபடியிருக்கிற எனக்குஅத்யந்தஸித்தபோக்யனானவனே! [தனியேன்வாழ்முதலே] - தனியேனான என்னுடைய அநுபவத்துக்கு ப்ரதமஸாக்ருதமானவனே! ஏகாக்ஷியேககர்ணிகள் நடுவே யிருந்தாற்போலே பிராட்டி, இவருக்கும் தனியாயிருக்குமிறே ஸம்ஸாரத்திலிருப்பு. [பொழில்இத்யாதி] - தனிமையிலே வந்துஉதவும்படியைச் சொல்லுகிறது. அத்விதீயமஹாவராஹவேஷத்தைப் பரிக்ரஹித்து, ப்ரளயங்கொண்ட புவநங்களேழையும் எடுத்து. [நுனியார்கோட்டில்வைத்தாய்] - நுனியென்று - கூர்மை. ஆர்கை - மிகுதி. கூர்மைமிக்க கோட்டிலே வைத்தா யென்றபடி. இத்தால், ரக்ஷ்யவர்க்கத்தினளவல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பைச் சொல்லுகிறது. [இனியுனபாதஞ் சேர்ந்தேனே] - ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தாற்போலே ஸம்ஸாரப்ரளயங்கொண்ட என்னை எடுத்தபோதே, தேவர்திருவடிகளை நான் கிட்டினேனேயன்றோ. "இமையோர்

---

இனி மேலே அந்வயம் என்றது - 'இனி' என்றதிக்கு - 'உன பாதஞ் சேர்ந்தேன்' என்றத்தோடே அந்வய மென்றபடி. ஆர்ஞானங்களால் - ஆருடைய ஜ்ஞாநங்களாலும். ஆர் என்று - உத்க்ருஷ்டபுருஷவாசி. எடுக்கலெழாதவெந்தாய் - எடுக்கைக்கு எடுப்புண்ணாத என்ஸ்வாமீ யென்று ஶப்தார்த்தம். பேர்க்கப்போராதிருக்கிற - சலிப்பிக்கச் சலியாதே யிருக்கிற. அதாவது - பரிச்சேதித்து அறியப்போகாதிருக்கிற வென்றபடி. எடுக்கப்பார்க்குமன்று, எடுக்கப்போகாதிருக்கிற என்று கூட்டிக்கொள்வது. 'ஞானங்களால்' என்றது - சக்திக்கும் உபலக்ஷணம். எடுக்கலெழாத என்றது - அறியப்போகாமைக்கும் உபலக்ஷணம். விவரணம் - அதாவது இத்யாதி. வீடு - மோக்ஷமும், க்ருஹமும். மோக்ஷஸாதகமானவன் - மோக்ஷஸாதகத்தைக் கொடுக்குமவன். வீட்டிலே வந்து ஆநந்தத்தை விளைக்குமவனென்று இரண்டாமர்த்தம். தொல்லை இத்யாதி - பெருமாள்திருமொழி எ-அ. பழையதான ஆநந்தத்தினுடைய எல்லைகண்டாளே யென்றபடி. கடற்படாவமுதே-படுகை - உண்டாகை. "கடற்படாவமுது" என்கையாலே - ப்ராப்யத்வஞ் சொல்லிற்று. அவ்விரண்டு கோடியிலும் என்றது - ஶத்ருக்களான ராவணாதிகளுடையவும், அதிஶயிதபக்திமான்களான யசோதாதிகளுடைய கோடியிலும் என்றபடி. எனக்கு - அத்வேஷமாத்ரமுடைய எனக்கு. வாழ்முதலே - வாழ்ச்சிக்கு முதலானவனே. இவர்க்கு வாழ்ச்சி - பகவதநுபவமிறே. ஸம்ஸாரிகளிருக்க, 'தனியேன்' என்கிறதென்? என்ன, ஏகாக்ஷி இத்யாதி. பிராட்டிக்கு ஏகாக்ஷியேககர்ணிகள் நடுவிருப்புப்போலே, இவர்க்கும் ஸம்ஸாரத்திலிருப்புத் தனியாயிருக்கு மென்றபடி. "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ...ந்தீ" இத்யாதி. தனிமையிலே - ரக்ஷகாபேக்ஷாதஶையிலே. இத்தால் - "நுனியார்" என்கிற இத்தால். பூர்வவாக்யார்த்தத்தை த்ருஷ்டாந்தீகரித்துக்கொண்டு, "அறியாதனவறிவித்து" என்றதைக் கடாக்ஷித்து 'இனி' என்றதுக்கு ஹாவம் - ப்ரளயங்கொண்ட இத்யாதி. பொய்ந்நின்றஞானத்தில் விசேஷகடாக்ஷபரமாகத் தாத்பர்யார்த்தம்-இமையோர்தலைவா இத்யாதி. திருவிருத்தம்-க.

தலைவா - இந்நின்றநீர்மை யினியாமுறாமை” என்னும்படி, அறிவைத் தந்தபோதே உன் திருவடிகளைப் பெற்றேனேயன்றோ? (௫)

## ஆறாம் பாட்டு.

சேர்ந்தார் தீவினைகட்கருநஞ்சைத் திண்மதியைத்
தீர்ந்தார் தம்மனத்துப் பிரியாதவருயிரைச்
சோர்ந்தேபுகல்கொடாச் சுடரையரக்கியைமூக்கு
ஈர்ந்தாயையடியேனடைந்தேன் முதன்முன்னமே·

**ஆ.**—(சேர்ந்தார்.) ‘போனகாலமும் ஸம்ஶ்லேஷித்தோம்’ என்று தமக்குத் தோற்றும்படி எம்பெருமானோடே தாம் ஸம்ஶ்லேஷிக்கையாலே, ஆஶ்ரிதருடைய ஸ்வ விஷயதிவ்யஜ்ஞாநவிரோதிபாபங்களுக்கு நஞ்சாய், அவர்களுக்கு ஸ்வவிஷயத்ருடஜ்ஞாந ப்ரதனாய், இப்படி தன்னுடைய ப்ரஸாதத்தாலே லப்தஜ்ஞாநராகையாலே ஸம்யகவ்யவ ஸிதராயிருந்தவர்களை ஸம்ஸாரத்திற்புகவிடாதே அவர்களோடு பிரியாதே ஸம்ஶ்லேஷிக் கும் ஸ்வபாவனுமாய், ஆஶ்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனுமாயிருந்த உன்னோடு இன்றோ அடியேன் ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றது? இவ்வாத்மா உள்ளவன்றே பெற்றேனன்றோ? என்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், அநாதிகாலம் விஶ்லேஷித்த விஶ்லேஷமெல்லாம் தெரி யாதபடி எம்பெருமான் தன்னோடே ஸம்ஶ்லேஷிக்கையாலே, இன்றோ பெற்றது; இவ் வாத்மாஉள்ளவன்றே தேவரீரைப் பெற்றேனல்லவோ? என்கிறார்.

[சேர்ந்தாரென்று தொடங்கி] - ஆஶ்ரிதருடைய பாபங்களை மறுவலிடாதபடி போக்குவதுஞ்செய்து ஒருவராலும் கலக்கவொண்ணாத அறிவைக் கொடுக்கும் ஸ்வபாவ னாய் உனக்கே தீர்ந்து உன்னாலல்லது செல்லாதே யிருக்கிறவர்கள் ஹ்ருதயத்தினின்றும் ஒருகாலும் பிரியாதேயிருந்து உன்னைப்பிரிந்து அவர்களாத்மா மங்கிப்போகாதபடி பரி ஹரித்து அத்தாலே உஜ்ஜ்வலனாய்ப் பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதி யானசூர்ப்பணகியைப் போக்கினாற்போலே அவர்களோட்டைப் பரிமாற்றத்துக்கு விரோ தியைப்போக்கும் ஸ்வபாவனானவனை.

**ப.**—அநந்தரம், இந்தப்ராப்தி, ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே அநாதிஸித்த மன்றோ வென்கிறார்.

---

நித்யஸூரிகளுக்குத் தலைவனானவனே! இவற்றில் நிலைநின்றபோந்த வாஸநாருசிகளாகிற ஸ்வபாவ விசேஷங்களை, உன்கடாக்ஷம்பெற்ற நாங்கள் அடையாதபடி யித்யர்த்தঃ. மேலிற்பாட்டிலே ‘முதல் முன்னமே’’ என்ற பதத்தின் மூன்றாமர்த்தத்துக்குச் சேர, ‘இனி’ என்றதுக்கும் மூன்றாமர்த்தமாக இன்னமும் ஓரர்த்தம் அத்யாஹரித்துக்கொள்வது. அதாவது - வாயுந்திரையுகளில் வ்யஸநந்தீர, ஊனில்வாழுயிரிலே ஸம்ஶ்லேஷித்தபோதே, உனபாதஞ் சேர்ந்தேனேயன்றோ வென்று. ஆக, ‘இனி’ என்றதுக்கு - மூன்றர்த்தம், அர்த்தத்வயம்வா. ஆர் ஞானங்களால் தொடங்கி, வாழ் முதலே - ஓரேனமாய் - பொழிலேழும் - நனியார்கோட்டில் வைத்தாய் இனியுனபாதஞ்சேர்ந் தேனே இத்யந்வயঃ. ‘என்கடற்படாவமுது’ என்கையாலே - ப்ராப்யத்வமும், ‘தனியேன்வாழ் முதல்’ என்கையாலே - ப்ராபகத்வமுஞ் சொல்லிற்று. (௬)

சேர்ந்தார் - உன்னையடைந்தவர்களுடைய, தீவினைகட்கு - க்ரூரமான பாபங்களுக்கு, அருநஞ்சை - காற்றவரிய நஞ்சாய், திண்மதியை - திண்ணிதான மதியாகிற (வ்யவஸாயந் தானாய்நிற்கிறா னென்னலாம்படி அதுக்கு உத்பாதகனாய்), தீர்ந்தார்தம் - அந்த வ்யவஸாயத்தை யுடையவர்களுடைய, மனத்து - மநஸ்ஸிலே, பிரியாது - விடாதே, அவருயிரை - அவர்களாத்மவஸ்துவை, சோர்ந்தே - (என்றும் விஷயாந்தரங்களிலே புக்குச்) சோர்ந்து, புகல்கொடா - போகக்கொடாதே, சுடரை - (தன்வடிவையே அவர்களுக்கு விஷயமாக்கும்) உஜ்ஜ்வலஸ்வபாவனாய் (அவர்கள்விஷயருசியை), அரக்கியை - சூர்ப்பணகியை, மூக்குஈர்ந்தாயை - அழித்தாற்போலே அழித்துக்கொடுக்க வல்ல உன்னை, அடியேன் - (உனக்குசேஷபூதமான ஸ்வரூபத்தையுடைய) நான், முதல் முன்னமே - முதலுக்குமுன்னே, அடைந்தேனே - அடைந்தேனல்லவோ? மயர்வற மதிநலமருளுவதற்குமுன்னே ப்ராப்தி யுண்டல்லவோ என்று கருத்து.

இ.—ஆறாம்பாட்டில், "இனிஉனபாதஞ்சேர்ந்தேனே" என்றார். 'இனி'என்று விசேஷிக்கவேணுமோ? முன்பே உன்னைப்பெற்றேனல்லேனோ? என்கிறார்.

[சேர்ந்தார்] - கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே இவனைக்கிட்டினவர்கள். [தீவினைகட்கு அருநஞ்சை]-அவர்களுடைய பாபத்துக்குக்காற்றப்போகாத நஞ்சானவனை. [திண்மதியை] - விரோதியைப் பரிஹரிக்கையன்றிக்கே, தன்னாலும் கலக்கவொண்ணாத அத்யவஸாயத்தைக் கொடுக்குமவனை. "ஸ்வயாவிவ்ருதவத்ரோப்யஸ்தஸ்யதேவாஷ்யாப்ருஹஸ்பதி | நாஹமாராயயாமிகீர்த்திசாவமிஹாயப்ருப்ர:" அம்பரீஷன்தபஸ்ஸு பண்ணாநிற்க ஸர்வேஶ்வரன் இந்த்ரவேஷத்தை தரித்துக்கொண்டு சென்று, 'உனக்கு வேண்டுமவற்றை வேண்டிக்கொள்' என்ன, 'நான் உன்னை யாராதிக்குமவனல்லேன்காண், என்னை ஸமாதிபங்கம் பண்ணாதே போகவல்லையே; உன்னைக் கும்பிடுகிறேன்' என்றானிறே. [தீர்ந்தார் இத்யாதி] - தன்னையொழியச் செல்லாதவர்கள் - தீர்ந்தாராகிறார். அவர்களுக்குச் செல்லிலும் தனக்குச்செல்லாதாயிருக்கை. [அவருயிரை இத்யாதி] - விஶ்லேஷத்தில் நீர்ப்பண்டமாய் மங்கிப்போம்படியாயிற்று அவர்கள்படி. அவர்களாத்மாவை மங்கிப்போக விட்டுக்கொடான். [சுடரை] - அவர்கள் நோவுபடாத இத்தால் தனக்குஉண்டான ஔஜ்ஜ்வல்யம்; "க்ருதக்ருத்யஸ்ததா". [அரக்கியைமூக்கீர்ந்தாயை] - அவர்களோட்டைக் கலவிக்கு வரும் ப்ரதிபந்தங்கள் சூர்ப்பணகிபட்டது படுமத்தனை; 'ஈர்ந்தாயை' என்கிறார், "நாஸிகோஷ்டவிவர்ஜிதா:" என்கிற ப்ரஸித்தியாலே. [அடியேனடைந்தேன்முதன் முன்னமே]-அநாதிகாலம்இழந்தஇழவை மறக்கும்படி வந்துகலக்கையாலே இன்றோபெற்றது, இவ்வாத்மாஉள்ளவன்றேபெற்றேனல்லேனோ? சேஷத்வம்ஸ்வதஸ்ஸித்தம், அசித் ஸம்ஸர்க்கமாய்அது புகுதியேறினவோபாதி; அத்தை மறக்கும்படி கலந்தானாகையாலே சொல்லலாமிறே. ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாக்கி,முறையை அறிவித்தவன்றே பெற்றேனல்லேனோ? என்றுமாம். வாயுந்திரையுகளில் - முன்பு ஸம்ஶ்லேஷித்த தேற்றமும் கலங்கி விஶ்லேஷமாய்ச் சென்றாற்போலே கலவியின்மிகுதியாலே அதனை மறந்து, முன்பேபெற்றேனல்லேனோ? என்றுமாம். [முதன்முன்னமே] - முன்பே; பழையதாக வென்றபடி.

௯௫.—ஆறும்பாட்டு. "இனியுனபாதஞ்சேர்ந்தேனே" என்றார்; 'இனி' என்று விசேஷிக்கவேணுமோ? பொய்ந்நின்றஞானத்திலே நீ விசேஷகடாக்ஷம்பண்ணினபோதே கிட்டிற்றிலேனோ? என்னுதல்; அன்றிக்கே, ஸ்வரூபத்தைஅநுஸந்தித்தவாறே ஸ்வாபாவிகசேஷத்வமேயாய் நிலைநின்றஆகாரம்; நடுவுள்ளது வந்தேறியாய்த் தோற்றுகையாலே சொல்லுகிறா ராகவுமாம்.

சேர்ந்தாருண்டு - "த்விஷாஹஜ்யபேவ்யம் நநமேய நுஸ்ஸ்யசித்" (த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயந்துக்ஸ்யசித்) என்னும் நிர்ப்பந்த மில்லாதவர்கள். [சேர்ந்தார்]-கேடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே இவனைக் கிட்டினவர்கள். அநாதிகாலம் ஸம்ஸரித்துப்போந்த ஆத்மா ஸர்வேஶ்வரனைக் கிட்டுகையாவது - கரைசேர்கையிறே. இக்கரையேறினார்களிறே அவர்கள். [தீவினைகட்கருநஞ்சை]-அவர்களுடைய ப்ராப்திப்ரதிபந்தக கர்மங்களுக்குக் காற்றவோண்ணாத நஞ்சானவனை. [திண்மதியை] - முன்பே சேர்ந்திருக்குமவர்களுக்குத் திண்ணியதான மதியைக் கொடுக்குமவனை. அம்பரீஷன் தபஸ்ஸு பண்ணாநிற்க, ஸர்வேஶ்வரன் இந்த்ரவேஷத்தை தரித்துக்கொண்டு சென்று, 'உனக்கு வேண்டியவற்றை வேண்டிக்கொள்' என்ன, 'நான்உன்னைஆராதிக்குமவனல்லேன் காண்; என்னை ஸமாதிபங்கம்பண்ணாதே போகவல்லையே, உன்னைக் கும்பிடுகிறேன்' என்றானிறே - "நாஹமாராதயாமி த்வாம் தவ பத்தோயமஞ்ஜலி:" (நாஹமாராதயாமித்வாம் தவபத்தோயமஞ்சலி:) என்று தானே அழிக்கப்பார்க்குமன்றும் அழிக்கவோண்ணாதபடியான திண்ணியமதியைக் கொடுக்குமவனை. [தீர்ந்தார்இத்யாதி] - "ஜநார்த்தநாவிஷ்டா"

ஆறும்பாட்டு - சேர்ந்தார் இத்யாதி. கீழ்ப்பாட்டில், 'இனி' என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக அவதாரிகாத்வயம் - இனியுனபாதம் இத்யாதி. இனிஎன்றுவிசேஷிக்கவேணுமோ-"அறியாதனவறிவித்த" என்று விசேஷிக்கவேணுமோ? என்றபடி. 'கிட்டிற்றிலனோ' என்ற அநந்தரம் - என்கிறா ரென்று சேஷம். அன்றிக்கே இத்யாதி - இவ்வவதாரிகையிலே, இனியென்று விசேஷிக்கவேணுமோ? என்கிறது - பொய்ந்நின்ற ஞானத்திலே மயர்வறமதிநல மருளினபோதே பெற்றேனேயன்றோ வென்று விசேஷிக்கவேணுமோ? என்றபடி. நிலைநின்ற ஆகாரம் ஸ்வாபாவிகசேஷத்வமேயாய் என்று அந்வயம். ஸ்வரூபத்தை அநுஸந்தித்தவாறே, ஸ்வாபாவிகாகாரம் சேஷத்வமேயாய், நடுவுள்ளது வந்தேறியாய்த் தோற்றுகையாலே, பண்டேயடைந்தேனேயன்றோ வென்கிறா ரென்றபடி.

மேலே, 'தீர்ந்தார்' என்று சொல்லுகையாலே. அத்தோடே புநருக்தமாகாமைக்காக, 'ஆபிமுக்யமுடையவர்கள்' என்று அர்த்தம் - சேர்ந்தாருண்டு இத்யாதி. நிர்ப்பந்தமில்லாதவர்கள் - அத்வேஷாதிகளுடையவர்கள். யுத்தகாண்டே ஷட்த்ரிம்சே ராவண:, - "த்விதா பஜ்யேயம்" இத்யாதி பூர்வமேவ லிகிதம். இவர்களை 'சேர்ந்தார்' என்கிறதென்? என்ன, கேடுமரக்கலம் இத்யாதி. கேடுமரக்கலம் - வழிதப்பின ஓடம். கரைசேர்ந்தாற்போலேயானபடியென்? என்ன, அநாதிகாலம் இத்யாதி. இத்தை ப்ரமாணமுகேந அருளிச்செய்கிறார் - இக்கரை இத்யாதி. பெரியாழ்வார் திருமொழி ரு-௩-எ. "அக்கரையென்னும்" இத்யாதி - பாட்டடி. அக்கரை - ஸம்ஸாரம். இக்கரை - பரமபதம். காற்றவோண்ணாத - ப்ரத்யௌஷதமிட்டுக் காக்கவொண்ணாத. திண்ணிதானமதி - த்ருடாத்யவஸாயம். "திண்மதியை" என்கிற ஸாமாநாதிகரண்யம் - ஜந்யஜநகபாவநிபந்தநம். அப்படிகொடுத்த இடமுண்டோ? என்ன - அம்பரீஷன் இத்யாதி. "உக்ரேண தபஸா யுக்தம் … நாஹம்" இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுதர்மே த்விதீயேத்யாயே - "… " இத்யுத்தரார்த்தம். 'தீர்ந்தார்' என்றதுக்கு அர்த்தத்வயம் - ப்ராப்யத்வராநிஷ்டரென்னுதல், ப்ராப்யப்ராபகநிஷ்ட ரென்னுதல். ப்ரதமார்த்தம் - ஜலாந்மத்ஸ்யா இத்யாதி: "சோர்ந்தேபுகல்கொடா" என்கிறதுக்கு அர்த்தம்

தள" (ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) என்று தன்னைப் பிரியமாட்டாதே யிருக்குமவர்கள் நெஞ்சைவிட்டுப்போகமாட்டாதே, அவர்களுயிர் தன்னைப்பிரிந்து த்ரவீபூதமாய் மங்கிப்போகக்கோடாதே, 'அது தன்பேறு' என்னுமிடம் வடிவிலே தோன்ற இருக்குமவனை. தீர்ந்தாருண்டு - உபாயத்தில் துணிவுடையார். அவர்களாகிறார் - 'ப்ராப்யப்ராபகங்களிரண்டும் அவனே' என்றிருக்குமவர்கள். அவர்கள் தன்னைப்பிரிந்து நோவுபடாதபடி அவர்கள்நெஞ்சிலே யிருக்குமவ னென்றுமாம். [அரக்கியைமூக்கீர்ந்தாயை] – பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷவிரோதியைப் போக்குமாபோலே யாயிற்று, அவர்களுடைய விரோதிகளைப் போக்கும்படியும். ஆனால், இவனோ பின்னைஅவள்மூக்கறுத்தா னென்னில்;-ஆம், கையாலே யறுக்கவேணுமே, "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" (ராமஸ்யதக்ஷிணோபாஹு:) என்னக்கடவதிறே. [அடியேன்இத்யாதி] - ஶேஷபூதனான நான் பண்டேஅடைந்தேனேயன்றோ? [அடியேனடைந்தேன்முதன்முன்னமே] - அநாதிகாலம்இழந்த இழவை மறக்கும்படி வந்து கலக்கையாலே, இன்றோபெற்றது? இவ்வாத்மாவுள்ளவன்றே பெற்றேனல்லேனோ? என்றுமாம். வாயுந்திரையுகளில் - கீழ் ஸம்ஶ்லேஷித்த தேற்றம் போய்க்

---

த்ரவீதபூதமாய் மங்கிப்போகக்கோடாதே என்று. 'சுடர்' என்றதின் தாத்பர்யம் - அதுதன்பேறு இத்யாதி. த்விதீயார்த்தம் - தீர்ந்தாருண்டு இத்யாதி. துணிவு-அத்யவஸாயம். தடஸ்த்தஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - ஆனல் இத்யாதி. ராமஸ்ய இத்யாதி - ஆரண்யகாண்டே த்வாத்ரிம்ஶே ராவணம்ப்ரதி சூர்ப்பணகா, "ஜாதாவாஸ்" இத்யாதி. "லக்ஷ்மணோ நாம வீர்யவாந் | ஸுஸந்ந்ஷ...ஜயொஜகதாவிக்ராந்தோ ப்ராதா ந்மவ்ரஸ் | ராமஸ்ய தக்ஷிணோ பாஹு: நித்யம் ப்ராணோ பஹிஶ்சர:". த்விதீயாவதாரிகைக்குச் சேர அருளிச்செய்கிறார் - ஶேஷபூதனான இத்யாதி. ப்ரதமாவதாரிகைக்குச் சேர, அறியாதன வறிவித்தபின்பு என்று விஶேஷிக்க வேணுமோ? பொய்ந்நின்ற ஞானத்திலே விஶேஷகடாக்ஷம் பண்ணினபோதே கிட்டிற்றிலனோ என்று த்விதீயார்த்தங் கண்டுகொள்வது. கீழ்ப்பாட்டில் "இனி" என்றதின் மூன்றுமர்த்தத்துக்குச் சேர மூன்றுமர்த்தம் - அநாதிகாலம் இத்யாதி. இத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக விவரிக்கிறார் - வாயுந்திரை இத்யாதி. முழுச்சொல்லென்று காட்டுகிறார் - பழையதாகவென்றபடி என்று. ஆக, 'இனி' என்றதுக்கு - அறியாதன வறிவித்தபோதே பெற்றேனேயன்றோ வென்றும், பொய்ந்நின்ற ஞானத்தில் விஶேஷகடாக்ஷம் பண்ணினபோதே பெற்றேனன்றோ வென்றும், வாயுந்திரையுகளில் ஆர்த்திதீர ஸம்ஶ்லேஷித்தபோதே உனபாதஞ் சேர்ந்தேனேயன்றோ வென்றும் இப்படி மூன்றர்த்தமானபோது, "முதன்முன்னமே" என்றதுக்கும் மூன்றர்த்தம். அதாவது- 'இனி' என்று - பொய்ந்நின்ற ஞானத்திலே விஶேஷகடாக்ஷம் பண்ணினபோதே பெற்றேனென்று விஶேஷிக்கவேணுமோ? அநாதிகாலமே பிடித்துப் பெற்றேனேயன்றோ வென்னுதல்; இனியென்று - அறியாதன அறிவித்தபோதே பெற்றேனேயன்றோ வென்று விஶேஷிக்க வேணுமோ? பொய்ந்நின்ற ஞானத்தில் நீ விஶேஷகடாக்ஷம் பண்ணினபோதே பெற்றேனென்னுதல்; இனியென்று - வாயுந்திரையுகளில் ஆர்த்திதீரக் கலந்தபோதே பெற்றேனென்று விஶேஷிக்கவேணுமோ? அநாதிகாலந்தொடங்கி விஶ்லேஷமின்றிக்கே ஸம்ஶ்லேஷமாயன்றோ நமக்குச் சொல்லுகிற தென்னுத லென்று. 'இனி' என்றதுக்கு அர்த்தத்வயமானபோது, ததநுகுணமாக அவதாரிகாத்வயம்; அதில் ப்ரதமாவதாரிகாநுகுண ஸ்வாரஸ்யம் - ஶேஷபூதனான இத்யாதிவாக்யம். த்விதீயாவதாரிகாநுகுண ஸ்வாரஸ்யம் - அநாதிகாலம் இத்யாதி வாக்யம். வாயுந்திரை யித்யாதி வாக்யம் - தத்விவரணபரமென்று. இப்படியே "முதன்முன்னமே" என்றதுக்கும் அர்த்தத்வயம். இரண்டர்த்தமென்றால் நன்றாயிருக்கும். இந்தப் பக்ஷத்தில், பண்டேயென்றது - பொய்ந்நின்ற ஞானத்தில் விசேஷகடாக்ஷம் பண்ணினபோதே யென்றபடி. 'என்றுமாம்' என்கிற பதஸ்வாரஸ்யத்தாலே, வாயுந்திரையுகளில் இத்யாதி வாக்யம் - மூன்றும் ஸ்வாரஸ்யமாகவுமாம். இப்போது

கலங்கி விஸ்லேஷமேயாய்ச் சென்றாற்போலே, இங்குக் கலவியின்மிகுதியாலே அத்தை மறந்து முன்பே பெற்றேனல்லேனோ? என்கிறு ரேன்றுமாம். முதல்முன்னமே - பழைய தாக வென்றபடி. (௬)

## ஏழாம் பாட்டு.

முன்னல்யாழ்பயில் நூல்நரம்பின்முதிர்சுவையே!
பன்னலார்பயிலும் பரனே! பவித்திரனே!
கன்னலே! அமுதே! கார்முகிலே! என்கண்ணா!
நின்னலாலிலேன்காண் என்னைநீகுறிக்கொள்ளே.

ஆ.—(முன்னல்.) ஸர்வ கரணங்களுக்கும் நிரவதிக போக்யபூதனாய், உன் திருவடிகளுக்கு நல்லராயிருப்பா ரெல்லாருக்கும் உன்னைக்கொடுக்கும் ஸ்வபாவனாய், அவர்களுடைய த்வதநுபவவிரோதி ஸர்வதோஷநிரஸந ஸ்வபாவனாயிருந்த உன்னை எனக்கு நிர்ஹேதுகமாகத் தந்தருளினாய். நீயல்லது எனக்கு ஒரு தாரகமில்லை; இனி என்னைக் கைவிடாதே கிடாய் என்று கொண்டு, 'எம்பெருமானோடு தமக்கு வ்ருத்தமான ஸம்ஶ்லேஷத்துக்கு பங்கம்வருகிறதோ?' என்னும் அதிஶங்கையாலே எம்பெருமானை அபேக்ஷிக்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், கலந்த கலவிக்கு விச்சேதம் பிறக்கிலோ வென்று ஶங்கித்து 'விஶ்லேஷிக்கில் தரிக்கும் ப்ரக்ருதியல்ல' என்று என்னைத் திருவுள்ளத்திலே கொண்டருளவேணு மென்கிறார்.

[முன்நல்யாழ்பயில் நூல்நரம்பின்முதிர் சுவையே] - பழையதாய் விலக்ஷணமாய் அப்யஸிக்கப்படுவதுமாய் யாழ் விஷயமாக ப்ரவ்ருத்தமான ஶாஸ்த்ரஞ்சொன்ன லக்ஷணத்தையுடைய நரம்பாலே பிறந்த முதிரான ரஸம்போலே போக்யனானவனே! [பன்னலாரென்று தொடங்கி] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான அயர்வறு மமரர்களெல்லாரும் எப்போதும் அநுபவித்தாலும் தொலையாத போக்யதையை யுடையையாய் ஸம்ஸாரிகளையும் அந்யபரதையைக் கெடுத்து உன்பக்கலிலே ப்ரவணராக்கிக் கொள்ளுமவனே! உன்திருவடிகளுக்கு நல்லார் பலரும் எப்போதும் அநுபவியா நின்றாலும் தொலையாத போக்யதையை யுடையையாய், அவர்களுக்கு த்வதநுபவ விரோதிகளைப் போக்குமவனே! என்றுமாம். [கன்னலேயென்று தொடங்கி]-நிரதிஶயபோக்யனாய்ப் பரமோதாரனாய் நிர்ஹேதுகமாக எனக்கு உன்னைத் தந்தவனே! உன்னையொழியத் தரியேன்.

ப.—அநந்தரம், இப்படி உபகரித்த நிரதிஶயபோக்யனான உன்னை யொழிந்தால் எனக்கு ஸத்தையுண்டோ? என்கிறார்.

முன் - அநாதியாய், நல் - விலக்ஷணமாய், யாழ் - யாழைப்பற்றியிருப்பதாய், பயில் - (வ்யுத்பித்ஸுக்களாலே) பயிலப்படுவதான, நூல் - கீதஶாஸ்த்ரத்தில் லக்ஷணம்

'முதன்முன்னமே' என்றதுக்கு அர்த்தத்ரயம்; பொய்க்கின்ற ஞானத்தில் விசேஷகடாக்ஷம் பண்ணினபோதே யிதி ப்ரதமஃ, அநாதியாகவேஇதி த்விதீயஃ, வாயுந்திரையுகளில் ஆர்த்திக்குமுன்னே தானே இதி த்ருதீயஃ. க்ரமேண அந்வயஃ. (௬)

தப்பாத, நரம்பில் - நரம்பிலேகிளர்ந்த, முதிர்சுவையே - கீதரஸம்போலே நிரதிஶயபோக்யபூதனுய், பல் - (இந்த ரஸஜ்ஞராய்) பஹுவிதராயிருக்கிற, நலார் - (அஸ்கலிதஜ்ஞாநாதி) வைலக்ஷண்யத்தை யுடையார், பயிலும் - நித்யாநுபவம்பண்ணுவதற்கு, பரனே - மேலாயிருக்குமவனுய், பவித்திரனே - (இந்த ரஸஜ்ஞரல்லாதார்க்கும் அஜ்ஞாநாதி தோஷங்களைப் போக்கி புஜிப்பிக்கும்) பாவநபூதனுய், கன்னலே - இக்ஷுரஸம்போலே பர்வந்தோறும் நிரதிஶயபோக்யபூதனுய், அமுதே - (அழிந்தாரையும்ஆக்குவதான) அம்ருதரஸமாய், கார்முகிலே - (ஏவம்விதஸாரஸ்யத்துக்கு ஆஶ்ரயமான) கார்காலத்தில் மேகம்போலே உதாரவிக்ரஹயுக்தனுய்,என் -(அவ்வடிவபூ,கோடே)எனக்குஅநுபாவ்யனுகைக்கு, கண்ணு - க்ருஷ்ணனுனவனே! நின்அலால் - (இப்படி நிரதிஶயபோக்யபூதனுன) உன்னையொழிந்தால், இலேன்காண் - (எனக்கு) ஸத்தையில்லைகாண்; என்னை - (வ்யதிரேகத்தில் அழியும்படியான) என்னை, நீ - (வ்யதிரேகத்தில்அழிக்கும்படியான போக்யதையையுடைய) நீ, குறிக்கொள் - (இரண்டுதலையையும்அறிந்து) திருவுள்ளம்பற்றவேணும்.

இ.—ஏழாம்பாட்டில், கலந்தகலவிக்கு விச்சேதம் பிறக்கிலோ என்று ஶங்கித்து விஶ்லேஷத்தில் தரிக்கமாட்டேன் என்று திருவுள்ளத்திலே கொண்டருளவேணுமென்கிருர்.

[முன்னலித்யாதி] - பழையதாய் விலக்ஷணமாய், யாழ்விஷயமாக ப்ரவ்ருத்தமாய் அப்யஸிக்கப்படுவதான நாலுண்டு ஶாஸ்த்ரம்; அது சொன்ன லக்ஷணத்தையுடைய நரம்பிலே பிறந்த முதிர்ந்த ரஸம்போலே போக்யனுனவனே; "யசூஜூஷீாடீடு நாழ" என்று - ஶப்தஸாரஸ்யத்தைத் தலையாகச் சொல்லக்கடவதிறே. மிடற்றைச் சொல்லாதே, நரம்பைச்சொல்லிற்று - கர்மத்தாலே போது செய்யாததாகையாலே. மேல் இதுக்கு போக்தாக்க ளிருக்கிறபடி. [பன்னலார் பயிலும் பரனே] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள் ஸதா அநுபவித்தாலும் தொலையாத போக்யனுனவனே! "நிரவத்யம்வரம்வராவேஷம்". [பவித்திரனே] - ஸம்ஸாரிகளையும் அந்யபரதையைப் போக்கி உன்பக்கலிலே ப்ரவணராக்கிக் கொள்ளுமவனே! பன்னலாரென்று - முமுக்ஷுக்களைச் சொல்லிற்ருகவுமாம். பவித்திரனே - அவர்களுக்கு த்வதநுபவ விரோதிகளைப் போக்குமவனே! [கன்னலே] - நிரதிஶயபோக்யனுனவனே! [அமுதே] - போனவுயிரை மீட்கவற்ருகை. [கார்முகிலே] - ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் கொடுக்கை. [என்கண்ணு]- எனக்கு உன்னைத் தந்தவனே! [நின்னலால்இலேன்காண்] - உன்னையொழிய ரக்ஷகரையுடையேனல்லேனென்னுதல், உன்னையொழியத் தரிக்கமாட்டேனென்னுதல். [என்னை]- "வெயஶ்ஶ்ரேநஹவிஜ்ஞெத" என்று தம்மைக் காட்டுகிருர். [குறிக்கொள்ளே] - திருவுள்ளம்பற்றவேணும்.

ஈடு.—ஏழாம்பாட்டு. இப்படி தாம்பெற்ற பேற்றின்கனத்தையும் அநுஸந்தித்து, இவ்விஷயத்தினுடைய போக்யதையையும் அநுஸந்தித்து, 'இதுஇருந்தபடி கண்டோமுக்குத் தோங்காதுபோலே யிருந்தது' என்று அதிஶங்கைபண்ணி, 'தேவர் என்னைக் கைவிடில் நான்உளேனுகேன்; என்னைக் கைவிடாதொழியவேணும்' என்கிருர்.

---

ஏழாம்பாட்டு - முன்னல் இத்யாதி. பேற்றின்கனத்தையும் என்றது - கீழ்ப்பாட்டுக்களெல்லாவற்றையுக் கடாக்ஷித்து. போக்யதையும் என்றது - இப்பாட்டில் பதங்களைக் கடாக்ஷித்தாதல், "வீட்டின்பமே - கடற்படாவமுதே" என்றத்தைப்பற்றவாதல். கண்டோமுக்கு - கண்டநமக்கு. தோங்காதுபோலே - நில்லாதுபோலே. உளேனுகேன் - ஸத்தாவானுகேன்.

[முன்னல் இத்யாதி] - "முன்னல்" என்கிற ஒற்றைப்போக்கி - முனலாக்கி, முரலாக்கி நிர்வஹிப்பாரு முண்டு. அன்றிக்கே, முன்னலென்றது - உன்னலாய், உன்னல் - நினைத்தலாய், இனிமையாலே 'அதுஅது' என்று வாய்புலற்றும்படி யிருக்கை. அன்றிக்கே, முன் - ஶாஸ்த்ரத்தினுடைய பழமையாய், ஆதியிலேயுண்டாய், •நல் - அதுதான் நன்றாய், யாழ்பயில்நூல் - யாழ்விஷயமாக அப்யஸிக்கப்படுவதான நூலுண்டு - ஶாஸ்த்ரம். அந்த ஶாஸ்த்ரோக்தமானபடியே. [நரம்பின்முதிர்சுவையே] - நரம்பிலே தடவப்பட்ட - அதிலேபிறந்த பண்பட்ட. ரஸம்போலே போக்யனானவனே! மிடற்றைச் சொல்லாதொழிந்தது - கர்மாநுகுணமாகப் போதுசெய்யுமது உண்டாகையாலே அதுக்கு. இப்படி போக்யதை குறைவற்றால் போக்தாக்கள் வேணுமே; அவர்களைச் சொல்லுகிறது மேல்; [பன்னலார் பயிலும் பரனே] - "தேள்ளியார்பலர்கைதோழுந்தேவனார்" என்கிறபடியே - தாங்கள் பலராய், பகவத்குணங்களுக்கு தேசிகராயிருந்துள்ள நித்ய ஸூரிகள் ஸதாநுபவம்பண்ணாநின்றாலும், அநுபூதாம்ஶம் அளவுபட்டு அநுபாவ்யாம்ஶமே பெருத்திருக்கை. [பவித்திரனே] - நித்யஸம்ஸாரிகளுக்கும் நித்யஸித்தரோபாதி உன்னை அநுபவிக்கைக்கு யோக்யராம்படியான சுத்தியைப் பிறப்பிக்குமவன். அன்றிக்கே, பன்னலாரென்று - முமுக்ஷுக்களை யாக்கி, அவர்கள்எப்போதும் அநுபவியாநின்றாலும் தோலையாத போக்யதையை யுடையையாய், அவர்களுக்கு த்வதநுபவவிரோதியைப்போக்கும் சுத்தியோகத்தையுடையவனே! என்றுமாம். [கன்னலே] - எனக்கு நிரதிஶயபோக்யனானவனே! [அமுதே] - என்னைச் சாவாமல் ஜீவிப்பித்துக்கோண்டு போருகிறவனே! [கார்முகிலே] - ஔதார்யத்தைப்பற்ற. [என்கண்ணா] - தன்னைக் கோடுத்தபடி. இவ்வளவும் இவருடைய ஶங்காஹேது. [நின்னலால் இலேன்காண்] - உன்னையோழிய அரைக்ஷணம் ஜீவிக்கமாட்டேன். உன்னையோழிய ரக்ஷகரை யுடையேனல்லே னென்றுமாம். [என்னைநீகுறிக்கோள்ளே] - என்னைப் பார்த்தருளவேணு மென்னுதல், என்னைத் திரு

---

ஒற்றைப்போக்கி - ஒற்று - ஸம்யுக்தாக்ஷரம். முனலாக்கி முரலாக்கி என்றது - "ஈராலாம்" என்கிற லக்ஷணத்திலே ரேபநகாரங்களுக்கு பேதமில்லாமையைப்பற்ற. முனலுகை - முரலுகை. அதாவது - ஶப்திக்கை. முந்தின அர்த்தத்துக்கு, ஶப்தியாநின்றுள்ள யாழ்விஷயமாக அப்யஸிக்கப்படாநின்றுள்ள ஶாஸ்த்ரோக்த க்ரமத்திலே நரம்பிலே தடவப்பட்ட - அதிலேபிறந்த பண்பட்ட ரஸம்போலேயிருக்கிறவனே யென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு 'முன்னல்' என்றது - நூலுக்கு விஶேஷணம். ஶாஸ்ரத்தினுடைய - காந்தர்வஶாஸ்த்ரத்தினுடைய. நரம்பிலே தடவப்பட்ட என்றதுக்கு விவரணம் - அதிலேபிறந்தஎன்று; நரம்பிலே தடவுகையாலே பிறந்த வென்றபடி. பட்ட - பிறந்த. பண்பட்ட வென்றது - "முதிர்" என்றதின் அர்த்தம். யாழ் - வீணை. மிடற்றிலுண்டான கானத்தைச் சொல்லாதொழிவானென்? என்ன, மிடற்றை இத்யாதி. போதுசெய்யுமது - ஶ்லேஷ்மாதிகளாலே விசரிக்குமது. பன்னலார் இத்யாதி - பலராய் தேஶிகரான நித்ய ஸூரிகளுக்கும் அளவிறந்தவனென்று விவக்ஷித்து அதுக்கு ப்ரமாணம் - தேள்ளியார் இத்யாதி நாய்ச்சியார் திருமொழி. ௬-௧. தெளிவுடையார் பலர் கைதொழும்படியிருக்கிற தேவரானவ ரென்கை. நன்மைக்குஅர்த்தம் - தேஶிகராயிருந்துள்ள என்றது. 'பயிலும்' என்றவர்த்தமாநார்த்தம் - ஸதாநுபவம் இத்யாதி. பவித்ரம் - ஸ்வதஶ்ஶுத்தமாய், ஶுத்த்யாபாதகமுமாயிருக்குமது. அதில், ஶுத்த்யாபாதகத்வத்தை அருளிச் செய்கிறார் - நித்யஸம்ஸாரிகளுக்கும் இத்யாதி. தோலையாத - பரிச்சிந்நமாகாத. ஶுத்தியோகத்தை அருளிச் செய்கிறார்-அவர்களுக்கு இத்யாதி. கன்னல் - வெல்லம். என்னைச் சாவாமல் இத்யாதியாவது - வாயுக்திரையுகளிலே விஶ்லேஷித்து முடியாதபடி ஜீவிப்பித்தவனே யென்றபடி. நிறத்தைப்பற்றவுஞ் சொல்லலாமாகையாலே அத்தை நிவர்த்திப்பிக்கிறார் - ஔதார்யத்தைப்பற்ற என்று. ஔதார்யசரமாவதி - தன்னைக்கொடுத்தபடி யென்று. குறிக்கோள்ளுகையாவது - மெய்க்காட்டைக் கொள்ளுகையாய், பார்க்கையைச் சொல்லுகிறது. 'குறிக்

வுள்ளம்பற்ற வேணு மென்னுதல். [என்னை] - உன்னையொழிந்தவன்று அசித்ப்ராயனை என்னை. [நீ] - இதுக்கு தாரகனை நீ யென்றுமாம். (எ)

## எட்டாம்பாட்டு.

குறிக்கோள்ஞானங்களால் எனையூழிசெய்தவமும்
கிறிக்கொண்டிப்பிறப்பே சிலநாளிலெய்தினன்யான்
உறிக்கொண்டவெண்ணெய்பால் ஒளித்துண்ணுமம்மான்பின்
நெறிக்கொண்டநெஞ்சனாய்ப் பிறவித்துயர்கடிந்தே.

ஆ.—(குறிக்கொள்.) தாம் இப்படி எம்பெருமானை அபேக்ஷிக்க, அவனும், 'நாம் விஶ்லேஷிக்க ப்ரஸங்கமென்?' என்று அருளிச்செய்ய, தாமும் நிவ்ருத்தாதிஶங்கராய்க்கொண்டு, அதிதுஷ்கரமாய் அநேககாலஸாத்யமான கர்மயோக ஜ்ஞாநயோக ஸஹக்ருதபக்தியோக ஸாத்யமான ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வக பகவதநுபவத்தை இஜ்ஜந்மத்திலே அல்பகாலத்திலே அயத்நேந நான் பெற்றேனென்று தாம்பெற்ற ஸம்ருத்தியைச் சொல்லி அநுபவிக்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், 'ஏழ்ப்பாட்டில் நீரெண்ணின விஶ்லேஷத்துக்கு ப்ரஸங்கமுண்டோ?' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, அத்தாலே தரித்த ஆழ்வார், அநேககால ஸாத்யமான நிரதிஶய புருஷார்த்தத்தை இஜ்ஜந்மத்திலே அல்பகாலத்திலே அயத்நேந பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

[குறிக்கொள்என்று தொடங்கி] - யமநியமாதி க்ரமங்களாலே அவஹிதராய்க்கொண்டு ஸம்பாதிக்கும் பக்திரூபஜ்ஞாநங்களாலே அநேககாலஸாத்யமான புருஷார்த்தத்தை. [யான்] - 'இங்ஙனே யிருப்பதொரு புருஷார்த்த முண்டு' என்றும் அறியாத நான், அநாவிலமாயிருப்பதோருபாயத்தைக் கொண்டு. [உறிக்கொண்ட வெண்ணெ யென்று மேலுக்கு] - தன்திருவடிகளை ஆஶ்ரயித்தாரது ஏதேனுமொரு த்ரவ்யத்தாலல்லது தரியாத ப்ரக்ருதியாகையாலே உறிகளிலே வைத்த வெண்ணெயும் பாலு மெல்லாம் போக்கினேன். இது - பேறுவது. கிறியாவது-பகவத்ப்ரஸாதம். [உறிக்கொண்ட வெண்ணெய் பாலென்று தொடங்கி] - எம்பெருமான் சரமஶ்லோகத்தில் அருளிச்செய்தபடியே; பிறவித்துயர்கடிந்து - பகவத்ப்ராப்திக்கு உபலக்ஷணம். இப்படியும் நிர்வஹிப்பர்.

---

கொள்' என்றதின் அர்த்தத்வயத்துக்கும் சேர அர்த்தத்வயம் - உன்னை இத்யாதி. இதுந்த - இவ்வாத்மவஸ்துவுக்கு. 'இதுக்கு தாரகனை நீ யென்றுமாம்' என்றிருக்கையாலே - "தின்னலாவிலேன்" என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக "என்னை, நீ" என்கிறவிடத்திலும் அர்த்தத்வயபரமான வாக்யங்கள் சில ஸ்ரீகோஶங்களிலே யில்லாதபோது, "ரக்ஷகனை நீ ரக்ஷ்யமான என்னை" என்றும் ஓரர்த்தம் அத்யாஹரித்துக் கொள்வது. "முன்னல்யாழ்" இத்யாதிக்கு - அன்றிக்கே, முன்னலென்றது - உன்னலாய், உன்னல் - நினைத்தலாய், இனிமையாலே "அதுஅது" என்று வாய் புலற்றும்படி யிருக்கை என்றமோரர்த்தம் சில ஸ்ரீகோஶங்களிலே யிருக்கிறது; இத்தவாக்யத்திலே, நினைத்தலா யென்றது - தத்கார்யமான வாய்புலற்றலை லக்ஷித்து, இனிமையாலே வாய் புலற்றும்படியிருக்கு மென்ற யாழுக்கு விஶேஷணமாதல், நாலுக்கு விஶேஷணமாதல். க்ரமேண அந்வய:. (எ)

ப.—அநந்தரம், இவ்வநுபவம் தமக்குக் கைவந்தபடியை அருளிச்செய்கிறார்.

உறிக்கொண்ட - உறியிலே சேமித்துவைத்துக்கொண்ட, வெண்ணெய்-வெண்ணெயையும், பால் - பாலையும், ஒளித்து - (உடையவர்கள் அறியாமல்) க்ருத்ரிமத்தாலே புக்கு, உண்ணும் - அமுதுசெய்த செயலாலே, அம்மான் - (அடிமைகொண்ட) ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய, பின் - பின்னே (அவ்வபதாநத்துக்குத் தோற்று), நெறி - (அவன்போன) வழியே, கொண்ட - போய்த்திரிகிற, நெஞ்சனைப் - நெஞ்சையுடையேனைப், பிறவித்துயர் - ஜந்மப்ரயுக்த துரிதங்களை, கடிந்து - காற்கடைக்கொண்டு அநாதரித்து, குறிக்கொள் - (கர்த்ருத்வாதி த்யாகத்தாலும் யமநியமாதிகளாலும்) குறிக்கொள்ளப் படுவதான, ஞானங்களால் - (வேதநத்யாநோபாஸநரூப பர்வபேதங்களாலும் ஸத்வித்யா தஹராவித்யாதி வ்யக்தி பேதங்களாலும்) பலவகைப்பட்ட ஜ்ஞாநயோகங்களாலே, "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு", "ஸஹஸ்ரநாம்ஜந்மநாமந்தே" என்கிறபடியே, எனையூழி - அநேககாலங்களிலே, செய் - செய்யப்பட்ட, தவமும் - (பக்தியோகமாகிற) தபஸ்வி னுடைய பலத்தை, கிறிக்கொண்டு - (பகவத்க்ருபையாகிற) நல்விரகைக்கொண்டு, இப் பிறப்பே - இஜ்ஜந்மத்திலே, சிலநாளில் - அல்பகாலத்திலே, யான் - (அநுபவத்துக்கு அடைவில்லாத) நான், எய்தினன் - கிட்டப்பெற்றேன். கிறி - விரகு.

இ.—எட்டாம்பாட்டில், 'என்னை நீ குறிக்கொள்' என்று நீர் விஶ்லேஷஶங்கை பண்ணும்படியோ உமக்கு நாம் செய்தவை? என்ன, அவ்வுபகாரங்களை அநுஸந்தித்து ப்ரீதராகிறார்.

[குறிக்கொள் இத்யாதி] - யமநியமாதி க்ரமத்தாலே அவஹிதராய்க்கொண்டு ஸம்பாதிக்கும் பக்திரூபாபந்ந ஜ்ஞாநங்களாலே. வேதநோபாஸந த்யாநாத்யவஸ்தா விஶேஷங்களாலே - பலவாகச்சொல்லுகிறது. [எனையூழி இத்யாதி] - அநேககால ஸாத்யமான புருஷார்த்தத்தை, அநாயாஸேந பெறலாவதொரு நல்விரகைப் பெற்று. தபஸ் ஸென்று - தத்பலத்தைச் சொல்லுகிறது. கிறியென்று - பகவத்ப்ரஸாதம். [இப் பிறப்பு இத்யாதி] - இஜ்ஜந்மத்திலே, அதுதன்னிலும் அல்பகாலத்திலே பெற்றேன். [யான்] - 'ஒரு புருஷார்த்தமுண்டு' என்றுஅறியாத நான். [உறிக்கொண்ட இத்யாதி] - கீழ் 'எய்தினன்' என்கிற பேற்றைச் சொல்லிற்றாதல், 'கிறி' என்கிறத்தை உபபாதிக்கிறதாதல். கிறியானபோது [உறிக்கொண்ட வெண்ணெய்பால்] - லோஹத்தாலேயாதல், 'இவனுக்கு ஸாத்மியாது' என்றாதல் உறியிலே சேமித்துவைத்த வெண்ணெயையும் பாலையும். [ஒளித்துண்ணும்] - 'தைவங்கொண்டதோ' என்னும்படியாயிற்று அமுதுசெய்வது. ஐஶ்வரமான மாயையாலன்றிக்கே, களவில் வாஸனை யிருந்தபடி [அம்மான்] - நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்தாலே நாட்டை எழுதிக்கொண்டபடி. [பின்னெறிக்கொண்ட நெஞ்சனைப்] - அவனொளித்தாலும் பெருநிலைக்கள்ளரான இவர்க்குத் தெரியாமை யில்லையே. திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநன் சரமஶ்லோகங் கேட்டது; இவர்,வெண்ணெய் களவுகாணப்புக்க இடத்தேயாயிற்று கேட்டது. அர்ஜுநனுக்கு உபதேசித்த அம்ஶத்தைச் சொல்ல நினைத்து, அவ்வளவும்போகமாட்டாதே நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்திலே நடுவேமோஹிக்கிறார். அநதாஹஸ்யத்தைப் பின்சென்ற நெஞ்சனைய். [பிறவித்துயர்கடிந்தே] - அதின் பலமாக ஸம்ஸாரதுரிதத்தைக் கடிந்தேன். "ஜஹநாஸவஷ்வாவெஹ்ய:" என்கிற இடம் - ப்ராப்திக்கும் உபலக்ஷணம். ப்ராப்யத்தைச்

சொல்லிற்றனபோது க்ருஷ்ணனே ப்ராப்யனும். [பின்னெறிக்கொண்ட நெஞ்சனாய்] - ‘‘யெநயெநயாதாமவூதி’’. [பிறவித்துயர் கடிந்தே] - விரோதிநிவ்ருத்தியும் ப்ராப்யாந் தர்க்கதமிறே. பிறவித்துயர்கடிந்தே னென்னுதல், கடிந்தே - எய்தினன் என்னுதல்.

ஈடு.—எட்டாம்பாட்டு ‘‘என்னை நீ குறிக்கொள்ளே’’ என்றவாறே அவன் குளிரக்கடாக்ஷித்தான்; அத்தாலே ஸகலவ்யஸநங்களும் போய் அவனை அநுபவிக்கிறார்.

[குறிக்கொள் ஞானங்களால்] - யமநியமாத்யவஹிதராய்க்கொண்டு ஸம்பா திக்கவேண்டும் ஜ்ஞாநவிசேஷங்களாலே. அவையாவன - வேதந த்யாந உபாஸநா த்யவஸ்த்தாவிசேஷங்கள். [எனையூழிசெய்தவமும்] - அநேககல்பங்கள் கூடி ச்ர வணமாய் மநநமாய் த்ருவாநுஸ்ம்ருதியாய், இங்ஙனே வரக்கடவதான தப பலத்தை. [கிறிக்கொண்டு] ஒருயத்நமின்றிக்கே யிருப்பதோரு விரகைப் பெற்று. அதாவது - அவன் தன்னையே கொண்டு என்றபடி. கிறி என்ன - அவனைக்காட்டுமோ? என்னில்; *‘‘பெருங் கிறியார்’’ என்னக்கடவதிறே. இதுதான் எத்தனை ஜந்மங் கூடி யென்னில், - [இப்பி றப்பே] - இஜ்ஜந்மத்திலே. இஜ்ஜந்மமெல்லாங் கூடியோ? என்னில், [சிலநாளில்] - அல்பகாலத்திலே. அழகிது; ப்ராபிக்கக்கடவீராய் நின்றீரோ? என்ன, [எய்தினன்] - ப்ராபித்தேன் [யான்] - இப்பேற்றுக்கு ஒருயத்நம் பண்ணாத நான். [உறிக்கொண்ட இத்யாதி] - ‘‘தவமெய்தினன்’’ என்கிற பலத்தைச் சொல்லுகிறதாதல். ‘‘கிறிக் கொண்டு’’ என்கிற உபாயத்தைச் சொல்லுகிறதாதல். [உறி இத்யாதி] - உறிகளிலே சேமித்துக் கள்ளக்கயிறு உருவிவைத்த வெண்ணெயையும் பாலையும் ‘தெய்வங் கொண்டதோ’ என்னும்படி மறைத்து அமுசெய்த அச்செயலாலே ஜகத்தை எழுதிக்

---

எட்டாம்பாட்டு - குறிக்கொள் இத்யாதி. ‘பிறவித்துயர்கடிந்து தவமெய்தினன்’ என் கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்னைநீ இத்யாதி.

குறி - குறிப்பு, ஸாவதாநதை. இத்தால் - யமநியமாத்யவஹிதத்வத்தைச் சொல்லுகிறது. எனையூழி - குறிக்கொள்ஞானங்களால் செய்தவமும் என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி, கீழே சொன்ன ‘வேதந’ இத்யாதியை விவரிக்கிறார் - அநேககல்பங்கள் இத்யாதி. வேதநத்தால் - ச்ரவணமநநங்களையும், த்யாநோபாஸநங்களாலே - நிதித்யாஸநத்தையும் அதினுடைய உத்தரோத் தராவஸ்த்தையையும், ஆதிசப்தத்தால் - தர்சநரூபதையையுஞ் சொல்லுகிறது. இங்ஙனேவரக்கடவ தான தபப்பலத்தை - இங்ஙனே வரக்கடவதாயிருக்கிற யாதொரு தபஸ்ஸுஉண்டு அதினுடைய பலத்தை யென்றபடி. ‘‘தவ ஞுமௌவலெந’’ என்கிற தாதுவாலும் ‘‘யஸ்ஜ்ஞாநமயந்தவ:’’ என்கிற ந்யாயத்தாலும், தபச்சப்தம் - ஜ்ஞாநாவஸ்த்தா விசேஷமான பரபக்த்யாதிபரம். ‘தவம்’ என்றது - தப:பல மென்றபடி. பகவத்ப்ராப்திரூபபலே லக்ஷணை. ‘குறிக்கொள்’ இத்யாதி - அநேககாலங்களிலே யமநியமாத்யவஹிதங்களான ச்ரவணமநநாதி ரூபஜ்ஞாநங்களாலே வரக்கடவ பரபக்த்யாதிகளாகிற தபஸ்ஸினுடைய பலத்தை யென்று சப்தார்த்தம். கிறி - உபாயம். அவன் தன்னையேகொண்டு - அவன் தன்னையே உபாயமாகக்கொண்டு, தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - கிறியென்ன இத்யாதி. பெருங்கிறியார் - பெருவிரகர், மஹோபாயசாலிக ளென்ற படி. ‘பின்னெறிக்கொண்டநெஞ்சனாய்’ என்றதுக்கு அர்த்தத்வயம். பலபரமாகவும் உபாயபரமாக வுங் காட்டுகிறார் - தவமெய்தினன் இத்யாதி வாக்யத்வயத்தாலே. பலபரயோஜநை - உறிகளிலே இத்யாதி. ‘‘கொண்ட’’ என்றதின் அர்த்தம் - சேமித்து இத்யாதி. ஒளித்தின் அர்த்தம் - மறைத்து

---

* திருவிருத்தம் - கக.

கோண்டவனுடைய. [பின்நேறிக்கோண்டநேஞ்சனுய்] – அவன்பின்னே நேறிப்பட்ட நேஞ்சையுடையனுய்; "யெநயெநயாதாஹூதிதெநதெநஸஹஹூதி" (யேநயேந தாதாகச்சதி தேநதேநஸஹகச்சதி) என்கிறபடியே. அன்றியே, பின்நேறிக்கோண்ட என்கிறது, ப்ரபத்தியை. பின்நேறி என்கிறது - பின்னே சோன்ன நேறி யேன்றபடி. நேறி-வழி. [பிறவித்துயர்கடிந்தே] - பலத்தைச் சோன்ன இடத்திலே விரோதிநிவ்ருத்தியையுஞ் சோல்லிக்கிடந்ததிறே; அத்தைச்சோல்லுகிறது. அன்றியே, [பின்நேறிக்கோண்டநேஞ்சனுய்] - பாரதஸமரத்திலே அர்ஜுநனுக்கு ஓரவஸ்த்தையைப் பிறப்பித்திறே உபாயத்தை உபதேசித்தது; இவர் வேண்ணேய்களவுகாணப் போனஇடத்திலே அடியோற்றிக் கோண்டுசேன்று அவன்புக்க க்ருஹத்திலே படலைத் திருகிவைத்தாயிற்று கேட்டுக்கோண்டது. [பிறவித்துயர்கடிந்தே] - "ஸர்வபாபெஹ்யொமொக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றே வைத்தானிறே. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

> கடிவார்தண்ணந்துழாய்க் கண்ணன்விண்ணவர்பேருமான்
> படிவானமிறந்த பரமன்பவித்திரன்சீர்ச்
> சேடியார்நோய்கள்கேடப் படிந்துகுடைந்தாடி
> அடியேன்வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே.

**ஆ.**—(கடிவார்.) நிரவதிகபோக்யபூதனுய், அயர்வறுமமரர்களதிபதியாய், திருநாட்டிலுங்கூடத் தன்னேடு ஒத்தாரையும் மிக்காரையு முடையவனல்லாமையாலே

---

என்றது. அவன்பின்னே நேறிப்பட்ட நெஞ்சையுடையனுய் - அவன்பின்னே வழிப்படும்படியான நெஞ்சையுடையனுய். அதாவது - கைங்கர்யத்திலே அந்வயித்த நெஞ்சையுடையனு யென்றபடி. உபாயபரயோஜநாமாஹ - அன்றியே இத்யாதி. பின்நேறிக்கோண்ட நேஞ்சனுய் - பின்பு சொன்ன சரமஶ்லோகோக்தமான உபாயத்திலே அந்வயித்த நெஞ்சையுடையனு யென்று இரண்டாமர்த்தம். பலஞ்சொல்லுகிறவிடத்திலே விரோதிநிவ்ருத்தியைச் சொல்லுவானென்? என்ன,-பலத்தை இத்யாதி. அதாவது - பலபரமான சரமஶ்லோகத்தில் உத்தரார்த்தத்திலே யென்றபடி. "வாமெஸாஸ்ரூசெவெதி" என்றஇடத்திலே, "வாணுவாவெவியமெய" என்றுஞ் சொல்லிக்கிடந்ததிறே; அப்படியே இங்கும் "பிறவித்துயர்கடிந்து" என்று விரோதிநிவ்ருத்தியைச் சொல்லுகிறதென்றபடி. இந்தவாக்யம் - பலபரபூர்வயோஜநாசேஷம். "உறிக்கொண்ட" இத்யாதிக்கு ரஸமாக த்ருதீயதாத்பர்யம்-பாரதஸமர இத்யாதி உறிக்கொண்ட வெண்ணெயையும்பாலையும் ஒளித்து உண்ணுகிற்கிற அம்மான்பின் சென்று, நெறியான ப்ரபத்த்யுபாய ப்ரதிபாதக சரமஶ்லோகத்தை க்ரஹித்த நெஞ்சையுடையனு யென்று ஸப்தார்த்தம். ஓரவஸ்த்தையைப் பிறப்பித்து-ஸோகயுக்தாவஸ்த்தையைப் பிறப்பித்து. இவர் - ஆழ்வார். அடி யோற்றிக்கோண்டு சேன்று - அடிபிடித்துக் கொண்டுபோய்; பின்னே சென்று என்றபடி. "பலத்தைச் சொன்னவிடத்திலே" இத்யாதி வாக்ய விவரணம் - ஸர்வபாபேப்ய இத்யாதி. இவ்விடத்தில் ததிபாண்டன்கதையை நினைப்பது. யான், உறிக்கொண்ட இத்யாரப்ய, நெஞ்சனுய்ப் பிறவித்துயர் கடிந்து - எனையூழி குறிக்கொள்ஞானங்களால் செய்தவமும் கிறிக்கொண்டு இப்பிறப்பே சில நாளி லெய்தினன் என்று அந்வயம். (அ)

பரமனாய், ஸ்வாஸ்ரிதருடைய ஸ்வஸம்ஸ்லேஷ விரோதிஸர்வதோஷங்களையும் போக்கும் ஸ்வபாவனாயிருந்த எம்பெருமானுடைய கல்யாணகுணங்களாகிற அம்ருதவெள்ளத்திலே என்னுடைய விடாயெல்லாங் கெடும்படி போய்ப்புக்குப் படிந்து குடைந்தாடி வாய்மடுத்துப் பருகிக் களித்தேன் அடியேன் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், எம்பெருமானுடைய குணங்களைப் பெரியவிடாயோடேகூட அநுபவித்துக் களிக்கப்பெற்றேனென்கிறார்.

[கடிவாரென்ற தொடங்கி] - திருவுடம்பில் ஸ்பர்ஶத்தாலே எப்போதும் ப்ரவ்ருத்த மதுதாரமான திருத்துழாயாலே அலங்க்ருதனான க்ருஷ்ணன். [விண்ணவரென்று தொடங்கி] - இவ்வழகாலே அயர்வறுமமரர்களை ப்ரதிக்ஷணந் தோற்பித்து அவர்களை அடிமை கொள்வதுஞ் செய்து திருநாட்டிலுங் கூட ஒருபடியாலுந் தன்னோடொத்தாரை உடையனன்றிக்கே, எல்லாரிலும் மேற்பட்டுள்ளானுமாய், ஸம்ஸாரத்தில் ஆஸ்ரயித்தார்க்குத் தன்னோட்டை ஸம்ஸ்லேஷத்துக்கு விரோதியான பாபத்தைப் போக்குமவனுடைய கல்யாண குணங்களிலே வாயுந்திரைகளிற் பிறந்த வ்யஸநமெல்லாம் தீரும்படி ப்ரவேசித்து மிகவும் அவகாஹித்து. [படிவானமிறந்த பரமன்] - மேகம் ஒப்பாக மாட்டாத திருநிறத்தை யுடையனென்றுமாம். [செடியார் நோயென்று] - ஸம்ஸார துரித மென்னவுமாம்.

ப.—அநந்தரம், இப்படி அவன் குணங்களை அநுபவித்து ஆநந்தியானேன்என்கிறார்.

கடி - பரிமளம், வார் - ப்ரவஹிபாநிற்கிற, தண்ணந்துழாய் - செவ்வித்திருத்துழாயையுடையனாய்க்கொண்டு, கண்ணன் - ஆஸ்ரிதபவ்யனான க்ருஷ்ணனாய், விண்ணவர்பெருமான் - (இவ்வடிவழகையநுபவிக்கிற) பரமபதவாஸிகளுக்கு அவ்வருகான மேன்மையையுடைய தனக்கு, வானம் - பரமபதத்திலும், படிஇறந்த - ஒப்பு இல்லையாகையாலே, பரமன் - தனக்கு மேலில்லையான பெரியவனாய், பவித்திரன் - (இப்பெருமையறியாதாரறிவுகேட்டையும் போக்கி யநுபவிப்பிக்கும்)பாவநபூதனுடைய,சீர்-(பரத்வ ஸௌலப்யபோக்யத்வபாவநத்வ ப்ரகாசகமான) குணங்களிலே, செடியார் - ஒன்றோடொன்று மிடைந்து தாறுமண்டினாற்போலே யிருக்கிற, நோய்கள் - (விஷயருசிதொடக்கமான) மஹாவ்யாதிகள், கெட - நஶிக்கும்படி, படிந்து - கிட்டி,குடைந்து - எங்கும் உட்புக்கு, ஆடி - முழுகி, அடியேன் - (அவனையொழியச்செல்லாதபடி அநந்யார்ஹனான) நான், வாய்மடுத்து - (புஜிக்கைக்குஉபகரணமான அபிநிவேஶமாகிற) வாயை மடுத்து, பருகி - (பெருவிடாயன் தண்ணீர்குடித்தாற்போலே) நிரம்பபுஜித்து, களித்தேன்-நிரதிஶயமான ஆநந்தத்தைப் பெற்றேன். படிவானமிறந்த வென்று - வடிவழகுக்கு மேகம் ஒப்பல்லவென்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், "ஸொ*ஸ்ரு*தெ" என்கிறபடியே ஒருதேஶ விஶேஷத்தில் குணாநுபவத்தை இங்கே அநுபவிக்கப் பெற்றேனென்கிறார்.

[கடிவாரென்று தொடங்கி]-திருமேனியில் ஸ்பர்ஶத்தாலே பிறந்த மதுதாரைகளை யுடைத்தான திருத்துழாயாலே அலங்க்ருதனான க்ருஷ்ணன். கடியென்று - பரிமளமாய், வாரென்று - மிகுதியாகவுமாம். கடியென்று - புதுமையாய், செவ்விமிக்க என்னவுமாம். [விண்ணவர் பெருமான்] - இவ்வழகுக்கு போக்தாக்களைச் சொல்லுகிறது. நித்யாநுபவம் பண்ணுநிற்கச் செய்தேயும், க்ஷணந்தோறும் தோற்று எழுதிக்கொடாநிற்பர்கள். [படிவானமிறந்தபரமன்] - பரமபதத்திலும் ஒப்பில்லாத பரமன்.

வானமென்று - மேகமாய், வெறும்புறத்திலே மேகமும் ஒப்பன்று என்னவுமாம். [பவித்திரன்] - ஸம்ஸாரிகளை நித்யஸூரிகளோடே ஒருகோவையாக்கவல்ல ஶுத்தியுக்தன். [சீர்] - சீரிலே. [செடி இத்யாதி] - வாயுந்திரையுகளில் தூறுமண்டின க்லேசமெல்லாம் போம்படி. ஸாம்ஸாரிக துரித மென்னவுமாம். [படிந்து] - சென்றுகிட்டி. [குடைந்து]- எங்கும்புக்கு. [ஆடி] - அவகாஹித்து. [அடியேன் வாய்மடுத்துப்பருகி] - பெருவிடாயோடே அநுபவித்து. [களித்தேனே]-இதரவிஷய ஸ்பர்ஶம் து:கமேயானாற்போலே, பகவத்குணாநுபவம் களிப்பேயாகக்கடவது.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. "ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" (ஸோஶ்நுதேஸர்வாங்காமாங் ஸஹ ப்ரஹ்மண விபஶ்சிதா) என்கிறபடியே, என்னுடைய ஸகலதுரிதங்களும் போம்படி ஸர்வேஶ்வரனை அநுபவிக்கப்பெற்றேனென்று ஹ்ருஷ்டராகிறார்.

[கடிவார் தண்ணந்துழாய்க் கண்ணன்] - பரிமளப்ரசுரமான திருத்துழாய் மாலையையுடைய க்ருஷ்ணனென்னுதல்; மது ஸ்யந்தியாநின்றுள்ள திருத்துழாயையுடையவ னென்னுதல். [விண்ணவர்பெருமான்] - இவ்வோப்பனையழகாலே எழுதிக்கொள்வது, அநந்தவைநதேயாதிகளை யாயிற்று. [படிவானமிறந்தபரமன்] - தன்படிக்கு வானிலுள்ளார் ஒப்பாகாதபடி யிருக்கிற பரமன். பரமஸாம்யாபந்நரான நித்யஸூரிகளும் தன்படிக்குஒப்பாகாதபடியான மேன்மையையுடையவ னென்னுதல்; தன்திருமேனிக்கு வானமுண்டு - மேகம், அது ஒப்பாகாதபடியிருக்கிறவ னென்னுதல். [பவித்திரன்] - இவ்வடிவழகை ஸம்ஸாரிகளும் அநுபவிக்கைக்கு யோக்யராம்படி பண்ணும் சுத்தியையுடையவனுடைய சீருண்டு - கல்யாணகுணங்கள் - அவற்றை, அடிகாணவொண்ணாதபடி தூறுமண்டிக்கிடக்கிற ஸாம்ஸாரிக ஸகலதுரிதங்களும் போம்படி வந்துகிட்டி, நாலுமூலையும் புக்கு அவகாஹித்து; அநந்யார்ஹனான நான் முழுமிடறுசெய்துஅநுபவித்து, யமாதிகள் தலையிலேயும் அடியிட்டுக் களிக்கப்பெற்றேன். படிந்து - கிட்டி. குடைந்து - எங்கும்புக்கு. ஆடி - அவகாஹித்து. அடியேன், வாய்மடுத்துப் பருகி - பெருவிடாயோடே அநுபவித்து. [களித்தேனே] - இதரவிஷயஸ்பர்ஶம் து:கமேயானாற்போலே; பகவத்குணாநுபவம் களிப்பேயாகக்கடவது. (௯)

---

ஒன்பதாம்பாட்டு-கடிவார் இத்யாதி. 'செடியார் நோய்கள்கெட-சீர்-வாய்மடுத்துப்பருகிக் களித்தேன்'என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-ஸோஶ்நுதே இத்யாதி. துரிதங்களும்-து:கங்களும்.

கடி - பரிமளமும், மதுவும். வார்தல் - மிகுதியும், ஒழுகுதலும். கீழோடே கூட்டி அர்த்தம் - இவ்வோப்பனை இத்யாதி. படி - ஸ்வபாவமும், விக்ரஹமும். வான மென்றது "த்யௌ:கோஶ:" இதிவத், வானிலுள்ளாரைச் சொல்லுதல்; மேகத்தைச் சொல்லுதல். இறந்த - ஒப்பாகாத. "ப்ரஸக்தஸ்ஸஹிப்ரகிஷெய:" இதிவத் ப்ரஸங்கஸம்பாவனா... யதி - வனஸோஷ்ய இத்யாதி. 'செடியார்' என்றதின் அர்த்தம் - தூறுமண்டிக்கிடக்கிற என்று. தூறுவது - அவித்யாதிகள். ஆர்தல் - பூர்த்தி. 'படிந்து, குடைந்து,ஆடி' என்கிற பதத்ரயத்துக்கும் க்ரமேண அர்த்தம்-கிட்டி இத்யாதி. வாய்மடுத்துப் பருகி-முழுமிடறுசெய்து அநுபவித்து, மிடறு நிறையக் குடித்தென்றபடி. வாய்மடுத்துக் குடித்தென்று ஶப்தார்த்தம். மடுத்து - மடக்கிட்டு; பாநபாத்ரமாக்கி யென்றபடி. ஆநந்தஸ்ய சரமாவதிமாஹ - யமாதிகள் இத்யாதி. 'வாய்மடுத்து' என்றதுக்கு பாவம் - பெருவிடாயோடே என்று. 'களித்தேனே' என்ற ஏவகாரார்த்தம் - இதர விஷய இத்யாதி. ஏவகாரம் - அந்யயோக வ்யவச்சேதபர மென்றபடி. க்ரமேண அந்வய:. (௯)

## பத்தாம் பாட்டு.

களிப்புங்கவர்வுமற்றுப் பிறப்புப்பிணிமூப்பிறப்பற்று
ஒளிக்கொண்டசோதியமாய் உடன்கூடுவதென்றுகொலோ?
துளிக்கின்றவானிந்நிலம் சுடராழிசங்கேந்தி
அளிக்கின்றமாயப்பிரான் அடியார்கள்குழாங்களையே.

**ஆ.**—(களிப்பும்.) இப்படி எம்பெருமானுடைய குணங்களாகிற அம்ருதத்தை புஜிக்கிற ஆழ்வார், 'இந்தஅம்ருதத்தை, நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகனாய்க்கொண்டு பகவத்குணைகபோகரான நித்யஸித்தபுருஷர்களுடைய திவ்யபரிஷத்திலேசென்று அவர்களோடேகூட நான் புஜிப்பதுஎன்றோ?' என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், 'ஸாம்ஸாரிக துரிதமெல்லாம் ஸமூலமாக நீங்கி அயர்வறு மமரர்களுடையஸமூஹங்களிலே சென்று புகுவதென்றோ?' என்று அநுபவித்த பகவத்குணங்களுக்கு உசாத்துணை தேடுகிறார்.

[களிப்புமென்று தொடங்கி] - விஷயலாபங்களால் வரும் களிப்பையும் விஷய ஸங்கத்தையும், அற்று - ஜந்மமும் ஜந்மப்ரயுக்தமான துரிதங்களுமெல்லாம் அற்று, பகவதநுபவத்துக்குப் பாங்கான தேஹத்தை யுடையோமாய். [துளிக்கின்றவானிந்நிலமென்று மேலுக்கு] - வர்ஷிக்கிற ஆகாசத்தையும் வர்ஷத்தாலே ஜீவித்துக்கிடக்கும் இந்த பூமியையும் தானே திவ்யாயுததரனாய்க்கொண்டு ரக்ஷித்தருளுகிற ஆஸ்சர்யபூதனான எம்பெருமான்.

ப.—அநந்தரம், ஏவம்விதபோகாநந்தத்துக்கு முக்யபோக்தாக்கள் ஸூரிகளாகையாலே, அவர்களோடுகூடுகையை அர்த்திக்கிறார்.

களிப்பும் - (விஷயலாபத்தில்) களிப்பும், கவர்வும் - (தத்லாபத்தில்) அபிநிவேசமும், அற்று - அற்று, பிறப்புப் பிணி மூப்புஇறப்புஅற்று - (அதுக்கடியான) ஜந்மவ்யாதி ஜராமரணங்களும்அற்று, ஒளிக்கொண்ட - (ஆவிர்ப்பூதமான ஜ்ஞாநாதிகளாகிற) ஒளிகளுக்கு ப்ரகாசகமான, சோதியுமாய் - ஜ்யோதிர்மயவிக்ரஹத்தையுடையோமாய்க் கொண்டு, துளிக்கின்ற - வர்ஷிக்கிற, வான் - ஆகாசத்தையும், இந்நிலம் - (அத்தாலே தரிக்கிற) பூமியையும் (பாதகரஹிதமாம்படி), சுடர் - பேரொளியை யுடைய, ஆழி - திருவாழியையும், சங்கு - திருச்சங்கையும், ஏந்தி - ஏந்தி; அளிக்கின்ற - ரக்ஷித்தருளுகிற, மாயப்பிரான் - மஹோபகாரகனுடைய, அடியார்கள் - நித்யதாஸ்யைகநிரூபணீயரான ஸூரிகளுடைய, குழாங்களை - ஸங்கங்களை, உடன்கூடுவது - ஒருநீராம்படிஉடன்பட்டுக் கூடுவது, என்றுகொலோ - என்றோ? ஸமஸ்தவிரோதி நிவ்ருத்தி பிறந்து ஆவிர்ப்பூதஸ்வரூப ஸ்வபாவரானவர்க்கு ப்ராப்யம் அடியாரான ஸூரிகளென்று கருத்து.

**இ.**—பத்தாம்பாட்டில், இப்படி களித்து இன்னமும் ஹேயவிஷயங்களிலும் களிக்கஇராதே இதுவே யாத்ரையான நித்யஸூரிகள் திரளிலே புக்கு அவர்களோடே களிக்கப்பெறுவது எப்போது? என்கிறார்.

[களிப்புமென்று தொடக்கி]-அல்பாஸ்த்திரத்வாதிதோஷ துஷ்டமான விஷயலாபத்தால் வந்த களிப்பும், அவை கிட்டாதொழிந்தால் 'இவைகிட்டாதொழியப்பெற்றோ

மே!' என்றுஇராதே பண்ணும் சாபலமும், இரண்டுக்கும்அடியான ஜந்மம், ஜந்மப்ரயுக்த மான வ்யாதி, ஒன்றால் பரிஹரிக்கவொண்ணுதே அவர்ஜநீயமாய்வரும் மூப்பு, இவற்றோ டேயாகிலும் ஜீவிக்கநினைத்தால் வரும் நிரந்வயவிநாசம்-ஆக ஷட்பாவவிகாராதிகள் அற்று. [ஒளிக்கொண்ட]-சுத்தஸத்த்வமயமாகையாலே ப்ரகாசகமான ஶரீரத்தையுடையோமாய். [உடன்கூடுவதென்றுகொலோ]-'நான், எனக்கு' என்று அகன்று நிற்கவேண்டாதே அத்திரளிலே ஒருநீராகக்கூடுவதுஎன்றோ? 'வைஷ்ணவஸஹவாஸம்இனிது' என்றிருக்கச் செய்தேயும் அஹங்காரத்தாலே செய்யப்போகாதொழிகிறதிறே. [துளிக்கின்றஇத்யாதி]- வர்ஷிக்கிறஆகாசத்தையும், அத்தாலே ஜீவிக்கிற பூமியையும், ஸங்கல்பத்தாலன்றிக்கே கையுந் திருவாயுதங்களுமாய் ரக்ஷணமே யாத்ரையாயிருக்கிற ஆஶ்சர்யசக்தியுக்தனை ஈஶ்வரன். பரமபதத்தில்ஆபரணமாய்க் காட்சிதரும், இங்குஆயுதமாயிறே திவ்யாயுதங்க ளிருப்பது. [அடியார்கள் குழாங்களையே] - இவன்தன்னையேயன்றிக்கே இவனுடைய ரக்ஷகத்வத்திலே தோற்றிருக்கும் ததீயர்திரள்களை. [குழாங்களை]-திரளாகவேணும், அது தான் அநேகமாகவேணும். இவ்விஷயத்துக்கு உசாத்துணையாம்போது அஸங்க்யாதராக வேணுமென்றிருக்கிறார்.

ஈடு.—பத்தாம்பாட்டு. 'களித்தேனே' என்று,திரியட்டும் ஸம்ஸாரிகளோடே யிருக்கையன்றியே, இவ்வநுபவத்துக்கு தேசிகரான நித்யஸூரிகள் திரளிலே போய்ப் புகுவது எப்போதோ?' என்கிறார்.

[களிப்பும்] - இதரவிஷயாநுபவத்தாலே வரும் களிப்பும். [கவர்வும்] - அவை பெறுதபோது ஆசைப்பட்டேவரும் க்லேசமும். [அற்று] - போய். இவையிரண்டுக்கும்அடி யான ஜந்மம், அதுபுக்கவிடத்தே புகக்கடவதான வ்யாதி, அநந்தரம் வரும் ஜரை; 'இத் தோடேயாகிலும் இருந்தாலாகாதோ?' என்று நினைத்திருக்கச்செய்தே வரும் நிரந்வயவிநா சம் - இவையடையஅற்று. [ஒளிக்கொண்டசோதியமாய்] - ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசின இந்த சரீரம்போலன்றியே,சுத்தஸத்த்வமயமாய் நிரவதிகதேஜோரூபமான சரீரத்தையுடை யோமாய். [உடன்கூடுவதுஎன்றுகோலோ] - 'நான், எனக்கு' என்றுஅகலவேண்டாத இவ்வுடம்புடையார் திரளிலே போய்ப்புக்கு நெருக்கப்பெறுவதுஎன்றோ? [துளிக்கின்ற இத்யாதி] - வர்ஷிக்கையே ஸ்வபாவமாகவுடைத்தான ஆகாசம், அத்தாலே விளையக்கட வதான இந்தப்பூமி, இவற்றைக் கடற்கரைவெளியிலே நோக்கினுற்போலே; திவ்யாயுதங் களைத் தரித்து நோக்குகிற ஆஶ்சர்யபூதன். [சுடராழிசங்கேந்தியளிக்கின்ற மாயப்பிரான்]-

---

பத்தாம்பாட்டு - களிப்பும் இத்யாதி. 'அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - களித்தேனே இத்யாதி. திரியட்டும் - மீளவும்.

கவர்வு - க்லேசம். பிணி - வ்யாதி. நிரந்வயவிநாசம் - சரீராத்வயாஹாவ ரூபவிநாசம், சரீரஸம்பந்தாஹாவரூபவிநாசம்; மரணமென்றபடி. ஸாந்வயவிநாசமாவது - சைஶவயௌவநாத்ய வஸ்த்தைகள். சப்தார்த்தம் - ரஜஸ்தமஸ்ஸுக்கள் இத்யாதி. 'ஒளிக்கொண்டசோதி' என்றத்தால் பலிதம் - சுத்தஸத்த்வமயமாய் என்றது.'அடியார்கள்'என்றத்தைப்பற்ற, நான்எனக்கு என்று இத் யாதி. 'பாகவதஸமுதாயம் ப்ராப்யம்' என்று அறியாநிற்கச் செய்தேயும், அஹங்கார மமகாரங்க ளாலே அகல வேண்டாநின்றதிறே;அப்படி அகலவேண்டாத ஸம்பந்தஜ்ஞாநமுடையவர்க ளென்ற படி. இவ்வுடம்புடையார் - சுத்தஸத்த்வமயமான உடம்புடையார். கூடுவதென்றுகொலோ என் ணுதே, 'உடன்' என்கையாலே, நெருக்கப்பெறுவது என்றே என்றது. 'துளிக்கின்ற' என்ற வர்த்தமாநார்த்தம்-வர்ஷிக்கையே ஸ்வபாவமாக என்றது. 'கடற்கரை' என்றவிடத்திலே - "ராஜ ஶ்ருஷணமூவாஸா" இத்யாத்யநுஸந்தேயம். அளிக்கின்ற - ரக்ஷிக்கிற. போக்யமான திருவாழி

பரமபதத்தில் ஆபரணமாய்க் காட்சிதரும்;இங்கு ஆயுதமாயிறே இருப்பது. இப்படி ரக்ஷிக்கிறவனுடைய அந்த ரக்ஷணத்திலே தோற்றிருப்பாராய்,அவன்தன்னேடொக்க ப்ராப்யருமாய், பகவத்குணங்களுக்கு தேசிகராயிருப்பாருமாய், போதயந்தஃபரஸ்பரத்துக்குத் துணையாயிருக்கிறவர்களுடைய குழாங்களை கலியர் 'கலவரிசிச்சோறுண்ண' என்னுமாபோலே அத்திரள்களிலே போய்ப்புகப்பெறுவது எப்போதோ? என்கிறுர். (கo)

## பதினேராம் பாட்டு.

குழாங்கோள்பேரரக்கன் குலம்வீயமுனிந்தவனைக்
குழாங்கோள்தேன்குருகூர்ச் சடகோபன்தேரிந்துரைத்த
குழாங்கோளாயிரத்துள் இவைபத்துமுடன்பாடிக்
குழாங்களாய் அடியீருடன்கூடிநின்றுடிமினே.

ஆ.—(குழாங்கொள்.) ஸபுத்ரஜநபாந்தவமாக ராவணன் மடியும்படி சிவந்தவனை உள்ளபடி கண்டுசொன்ன இத்திருவாய்மொழியை பகவதேகபோகராயிருப்பார் எல்லாருங் கூடி புஜியுங்க ளென்கிறுர்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை பகவதேகபோகராயிருப்பார் எல்லாரும், என்னைப்போலே தனிமைப்படாதே, கூடி புஜியுங்கோ ளென்கிறுர்.

[குழாங்கொள் பேரரக்கன் குலம்வீய முனிந்தவனை]-அஸங்க்யேயமான ஸேநாஸமூஹங்களை யுடையனுய் அதிபலவானுன ராவணன் குலம் முடியும்படி சீறினவனை. [குழாங்கொளென்று தொடங்கி]-தம்மை யநுபவிக்க வந்த வைஷ்ணவஸமூஹங்களோடு கூடின திருநகரியையுடைய ஆழ்வார் உள்ளபடியை அநுஸந்தித்துச்சொன்ன. [குழாங்கொளென்று தொடங்கி]-ஓரோதிருவாய்மொழியாய்க்கொண்டு குழாமான ஆயிரத்திலும் இத்திருவாய்மொழியைக் கருத்தோடே கூடப் பாடி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியைப் பாடிப் பரஸ்பரஸங்கதராய் ஸங்ஙிபவித்து ப்ரீதிப்ரேரிதராய் வர்த்தியுங்கோ ளென்று பலத்தை அருளிச்செய்கிறுர்.

குழாங்கொள் - (பாதகரான ராக்ஷஸரைத்) திரள்திரளாகவுடையனுயிருக்கிற, பேர்அரக்கன் - பெருமையையுடையனுன ராவணனுகிற ராக்ஷஸனுடைய, குலம் - குலமகப்பட, வீய - நசிக்கும்படி; முனிந்தவனை-முனிந்தருளினவனை, குழாங்கொள் - (ஸ்ரீவைஷ்ணவர்கள்) திரளையுடைத்தான, தென்குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், தெரிந்து உரைத்த - ஆராய்ந்து அருளிச்செய்த, குழாங்கொள் - பத்தான திரள்களை வடிவாகவுடைத்தான,ஆயிரத்துள்-ஆயிரம்திருவாய்மொழியிலும், இவை பத்தும் - இவைபத்தையும், உடன் - அர்த்தத்தோடேஉடன்பட்டு, பாடி - (ப்ரீதிக்குப்

திருச்சங்குகளை ரக்ஷணத்துக்குப் பரிகரமாகச் சொல்லுவானென்? என்ன - பரமபதத்தில் இத்யாதி. போக்யமென்றது - 'சுடர்' என்றும், 'எந்தி' என்று மிருக்கையாலே. ஸமூஹபாஹுள்ய கதநத்துக்குத் தாத்பர்யம் - கலியர் இத்யாதி. கலியர் - பசித்தவர். ஆற்றாமையின்மிகுதி இப்படி சொல்லப்பண்ணுமென்று கருத்து. உத்தரார்த்தபூர்வகம் பூர்வார்த்தாநுஸந்தாநம் அந்வயஃ. (கo)

போக்குவீடாகப் பாடி;குழாங்களாய் - பரஸ்பரஸம்ஶ்லிஷ்டராய்க்கொண்டு பலதிரளாய், அடியீருடன் - அடியாரான உங்கள் ஸ்வரூபத்துக்கு அநுரூபமாம்படி ஏககண்டராய்; கூடி - ஸம்ஶ்லேஷித்து, நின்று - இடைவிடாதே நின்று, ஆடுமின் - ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணப் பாருங்கோள். இது – கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை பகவதேகபோகராயிருப்பாரெல்லாரும் என்னைப்போலே தனிப்படாதே கூடியநுபவியுங்கோ ளென்கிறார்.

[குழாங்கொள் இத்யாதி]-பரஹிம்ஸைக்கு ஸஹகாரிகளான பந்துவர்க்கத்தை யுடையனாய், தான் பெருமிடுக்கனான ராவணனை நிஸ்ஸந்தாநமாம்படி சீறினவனை. "கரிஷ்யே மைதிலீஹேதோ ரபிஶாசமராக்ஷஸம்" என்றிறே சீற்றம். [குழாங்கொள் தென்குருகூர்] - 'வாயுந்திரையுகளில் அவஸாதத்தே பிழைத்தவர்' என்று இவரை யநுபவிக்கைக்கு "வ்யூஹ வ்யூஹோபயோஜ்யாம்" என்கிறபடியே வைஷ்ணவஸமூஹங்களை யுடைத்தாயிற்று திருநகரி. [தெரிந்துரைத்த] - உள்ளபடி யநுஸந்தித்துச் சொன்ன. [குழாங்கொளாயிரம்] - திரண்ட ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு ஜீவநத்தைக் கூடுபூரித்தாராயிற்று. பத்துப்பத்தான ஆயிரம்; "தொண்டர்க்கமுதுண்ண"என்னக்கடவதிறே. [உடன் பாடி]- கருத்தோடே பாடி. [குழாங்களாய்] - "பருகிக்களித்தேனே" என்று, "உடன் கூடுவதென்றுகொலோ" என்று நான்பட்டதுபடாதே முதலிலே திரளோடே யநுபவிக்கப் பாருங்கோள். [அடியீர் இத்யாதி] - அநுகூலராயிருப்பார் அஹங்காராதிகளாலே பிரிய வர்த்தியாதே, ஏககண்டராய் அநுபவிக்கப் பாருங்கோள். அர்த்தகாமாதிகளைப் பற்றி ஸ்வரூபத்தை இழவாதே கொள்ளுங்கோ ளென்கிறார்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை, பகவதேகபோகராயிருப்பார் என்னைப்போலே தனிப்படாதே திரளாக அநுபவியுங்கோ ளென்கிறார்.

[குழாங்கோள் இத்யாதி] - புத்ரபௌத்ராதிகளும் பந்துக்களுமான இவர்களாலே குழாங்கொண்டு, வரபலபுஜபலத்தாலே தழைத்து வேரூன்றின ரக்ஷஸ்ஸினுடைய ஜாதியாகக் கிழங்கெடுத்த சக்ரவர்த்திதிருமகனை "கரிஷ்யே மைதிலீஹேதோ ரபிஶாசமராக்ஷஸம்" (கரிஷ்யேமைதிலீஹேதோரபிஶாசமராக்ஷஸம்) என்கிறபடியே. [குழாங்கோள் தென்குருகூர்ச்சடகோபன்] - ஜநஸ்த்தாநம்அடியறுப்புண்டபின்பு தண்டகாரண்

நிகமம் - குழாங்கோள் இத்யாதி.'இவைபத்தும் குழாங்களாய் உடன்கூடிநின்றாடுமினே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி. கூட்டமாக இத் திருவாய்மொழியை அநுபவிக்கையே பலமென்று கருத்து. இவர்களாலே குழாங்கொண்டு - இவர்களாலே திரண்டுகொண்டு. பெருமையேது? என்ன, வரபலபுஜபலத்தாலே தழைத்துவேரூன்றின இதி. தழைத்து - ஸம்ருத்தமாய். நிர்மூலமாக்கினமைக்கு ப்ரமாணம் - கரிஷ்யே இத்யாதி. ஆரண்ய காண்டே சதுஷ்ஷஷ்டிதமே-"க்ருதாஞ்ஜலிஸ்ததோ ராமோ லக்ஷ்மணோ ஜநகாத்மஜாம்" இதி பூர்வார்த்தம். ஜநஸ்த்தாநம் இதி - ரகுவம்ஶே த்ரயோதஶே,"ஸ்ரீஜநஸ்தாநே வ்ருத்தாவ ஸாரஸ்ய ஜநஸ்தாநம் ஜநஸ்தானம் । ஸ்யால யாவஸத்தீநியாஸ்தாந ஸ்ரீணி" இதி வ்ருத்தியாண ஸமேதஞ் காண்டாவஸாநே த்ரயோதஶ்யாம். அடியறுப்புண்டபின்பு - ஸம்ஹ்ருதமானபின்பு. ஶ்ரீவைஷ்ணவர்கள் அங்கே திரண்டிருப்பர்

யங் குடியேறினாற்போலே, 'வாயுந்திரையுகளுக்குத் தப்பின ஆழ்வாரைக் காணவேணும்' என்று ஸ்ரீவைஷ்ணவர்களடையத் திரண்டதாயிற்று; நல்லார்நவில் குருகூரிறே. ஸத்துக் களிருந்தவிருந்த இடங்களிலே வாய்புலற்றும்படியான தேசமானால், அத்தேசத்திலுள்ளார் திரளச் சொல்லவேண்டாவிறே. [தெரிந்துரைத்த] - உள்ளபடி அநுஸந்தித்துச் சொன்ன. இவைபத்தும்; திரண்டவர்களுக்கு ஜீவநம்வேணுமே. [குழாங்கொளாயிரம்] - *"தொண் டர்க்கமுதுண்ண" என்கிறபடியே. பத்துப்பாட்டு ஒருதிருவாய்மொழியாய், பத்துத்திரு வாய்மொழி ஒருபத்தாய், இப்படி பத்துப்பத்தான ஆயிரம். திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்க ளுக்கு ஜீவநம் வேணுமே. [இவைபத்தும்உடன்பாடி] - ஸாபிப்ராயமாக அப்யஸித்து. [குழாங்களாய்] - என்னைப்போலே "பருகிக்களித்தேனே" என்னு; குழாங்தேடஇராதே. முற்படவே திரளாக இழியப் பாருங்கோள். [அடியீருடன்கூடிநின்றுமினே] - அவன் பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கிற நீங்கள் நால்வ ரிருவர்இங்கிருக்கும் நாலுநாளும் த்யாஜ்ய மான அர்த்தகாமங்களைப்பற்றி 'சீறு, பாறு' என்னுதே, நம் பெரியகுழாத்திலே போய்ப்புகு மளவும் ஒருமிடறாய் அநுபவிக்கப் பாருங்கோள்.

முதற்பாட்டில் – திருவுள்ளத்தைக் கோண்டாடினார்; இரண்டாம்பாட்டில் - அத்தையும்இசைவித்த ஸர்வேச்வரனைக் கோண்டாடினார்; மூன்றாம்பாட்டில் - தம் நெஞ்சிற் பட்டதோரு உபகாரத்தைச் சொன்னார்; நாலாம்பாட்டில் - அதுக்கு ப்ரத்யுபகார மாக ஆத்மஸமர்ப்பணம்பண்ணி அது தனக்கு அநுசயித்தார்; அஞ்சாம்பாட்டில் - எனக்கு ப்ரதமஸுக்ருதமும் நீயேயானபின்பு உன்திருவடிகளைக் கிட்டினேனேயன்றே வென்றார்; ஆறாம்பாட்டில் - இன்றோ கிட்டிற்று? தேவர் எனக்கு விசேஷகடாக்ஷம்பண்ணினவன் றே பெற்றேனே யல்லேனோ? என்றார்; ஏழாம்பாட்டில் - அவனுடைய போக்யதையை அநுஸந்தித்து, உன்னைப்பிரியில் தரியே னென்றார்; எட்டாம்பாட்டில் - இப்படி நிரதிசய போக்யனானவனை எளியதோரு விரகாலே லபிக்கப்பெற்றே னென்றாராதல்; அன்றியே,

களோ? என்ன, நல்லார் இத்யாதி. திருவிருத்தம்-க00. நவிலுகையாவது - வாய் புலற்றுகை யன்றோ, இது திரளுகைக்கு ப்ரமாணமோ? என்ன, ஸத்துக்கள் இத்யாதி. வாய்புலற்றும் - பல காற் சொல்லு மென்றபடி. 'குழாங்கொளாயிரம்' என்று விசேஷிக்கவேணுமோ? என்ன, திரண் டவர்களுக்கு இத்யாதி. அதாவது - கீழே "குழாங்கொள்தென்குருகூர்" என்கையாலே, 'அந்தத் திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஜீவநம்வேணும்' என்று அருளிச் செய்தார் என்றபடி. இது ஜீவ நமோ? என்ன, தொண்டர்க்கமுது இத்யாதி. ஆயிரமும் குழாங்கொண்டிருக்கும்படி யென்? என்ன, பத்துப்பாட்டு இத்யாதி. திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இதி-ஆயிரம்பாட்டும் ஜீவந மென்றபடி. கீழே திரண்டவர்களுக்கு ஜீவநம்வேணுமே யென்றது - பத்துப்பாட்டும் ஜீவந மென்றபடி. யத்வா, 'திரண்டவர்களுக்கு' இத்யாதி வாக்ய விவரணமாதல். குழாங்கொள் தென்குருகூர்ச் சடகோபன் தெரிந்துரைத்த - பத்தென்றுதல், குழாங்கொளாயிர மென்றுதல் அந்வய மென்றபடி. இது மூந் தின பக்ஷத்திலே. 'குழாங்களாய்' என்றுவைத்து, பின்னையும் "உடன்கூடி" என்றதுக்குக் கருத் தென்? என்ன, அவன்பக்கலிலே இத்யாதி. நீங்களென்றது - 'அடியீர்' என்ற ஸம்போதநவிவ க்ஷிதம். நால்வரிருவர் என்றது - அநுகூலர் கிடையாமையாலே. நம்பெரியகுழாத்திலே - அந்தமில் பேரின்பத்தடியவர்குழாத்திலே. உடன் - ஸஹ்ருதயமாக. ஆடுகை - அவகாஹிக்கையாய், அத் தாலே அநுபவிக்கப்பாருங்கோள் என்கிறார்.

பத்துப்பாட்டின் அர்த்தநிகமநம் - முதற்பாட்டில் திருவுள்ளத்தை இத்யாதி. இப்படி நிரதிசயபோக்யனை இத்யாதி வாக்யத்வயமும் - 'உறிக்கொண்ட' இத்யாதிக்கு உபாயோபேயபர

* திருவாய்மொழி-க - ௬ - க.

அநேககாலங் கூடிப் பண்ணி லபிக்கக்கடவ தபஃபலத்தை அவனைப்பின்சென்று எளிதாக லபித்தே னென்னுதல்; ஒன்பதாம்பாட்டில் - என்னுடைய ஸகலக்லேஶங்களும் போம்படி அநுபவித்துக்களித்தே னென்றார்; பத்தாம்பாட்டில் - இப்படிஇவனை யநுபவித்துக் களிப்பார் திரளிலே போய்ப் புகப்பெறுவது எப்போதோ? என்றார்; நிகமத்தில்- இத்திருவாய்மொழியை ஸாபிப்ராயமாக அப்யஸித்து நாலுநாளும் நால்வரிருவருள்ளார் கூடியிருந்து அநுபவிக்கப் பாருங்கோ ளென்றார். (கக)

---

*யோஜநாத்வயத்தைப்பற்ற வென்று கண்டுகொள்வது. 'எளிதாக லபித்தேன்' என்ற அநந்தரம் - என்கிறு ரென்று ஶேஷம். க்ரமேண அந்வயஃ.* (கக)

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி:—** [illegible] ||

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:—** [illegible] ||

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

ஊனமறவேவந்துள் கலந்தமாலினிமை
யானது அனுபவித்தற்காந்துணையா—வானில்
அடியார்குழாங்கூட ஆசையுற்றமாறன்
அடியாருடன் நெஞ்சேயாடு

*ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.*

## நான்காந்திருவாய்மொழி — ஆடியாடி: ப்ரவேஶம்.

**ஆ.**—(ஆடியாடி.) இப்படி நித்யபுருஷர்களோடேகூட எம்பெருமானை அநுபவிக்க ஆசைப்பட்ட ஆழ்வார், அப்போதே அப்படி யநுபவிக்கப் பெறாமையாலே வந்த நிரதிஶயாவஸாதத்தாலே ஒருக்ஷணமாத்ரமும் ஆத்மதாரணம்பண்ணவொண்ணாத தயநீயதஶாபந்நராய், அந்தத்தஶாநுகுணமாக எம்பெருமானைக்குறித்துத் தாம் சொல்லுகிற வார்த்தைகளையுஞ் செய்கிற சேஷ்டிதங்களையுங் கண்டு தம்மோடு ஸமாநஶோகரான தம்முடைய பந்துக்கள் எம்பெருமானைநோக்கித் தம்முடைய தஶையை விண்ணப்பஞ்செய்து சொல்லுகிறபடியை அநுஸந்தித்து; இப்பொருளை, எம்பெருமானை ஆசைப்பட்டு அத்யந்தம் அவஸந்நையா யிருந்தாளொரு பிராட்டியுடைய திருத்தாயார் அவளுடைய தஶையை விண்ணப்பஞ்செய்துகொண்டு, 'இவள் முடிவதற்குமுன்பே ஈண்டென வந்து விஷயீகரித்தருளவேணும்' என்றுகொண்டு எம்பெருமானை அபேக்ஷிக்கிற வாக்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார்.

ஒ.—நாலாந்திருவாய்மொழியில், "அடியார்கள் குழாங்களை யுடன்கூடுவதென்றுகொலோ" என்று மநோரதித்தபடி அக்ஷணத்திலே கைவாராமையாலே கீழ்ப்பிறந்த ப்ரீதியையும் மாறி மிகவும் அவஸந்நரான ஆழ்வார், ஸ்வகீயரானவர்கள் தம்முடைய தஶையை எம்பெருமானுக்கு விஜ்ஞாபிக்கிறபடியை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார்.

எம்பெருமானோடே புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி க்ஷணமாத்ரவிஶ்லேஷத்தாலே அறத்தளர்ந்து, ஆர்த்தியாலே கிடந்தஇடத்திற் கிடவாதே, மோஹமும் உணர்ச்சியுமாய் மாறிமாறிச்சென்று கண்டார்க்கெல்லாம் தயநீயையான தஶையை ப்ராப்தையாய், ராமக்ருஷ்ணாதி ரூபேண வந்து திருவவதாரம் பண்ணியருளி ஆஶ்ரிதஸம்ரக்ஷணம்பண்ணும் நீர்மைகளை அநுஸந்தித்து, தனக்கு உதவாமையாலே மிகவும் நோவுபடுகிற பெண்பிள்ளையுடைய வ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்து, இவளுடைய திருத்தாயார் அத்தை எம்பெருமானுக்குஅறிவித்து, 'ஆஶ்ரிதர்க்குஉண்டான விரோதிகளையெல்லாம் போக்கி அவர்களை ரக்ஷிக்கும் ஸ்வஹாவரான நீர் இவள் முடிவதுக்குமுன்னே வந்து இவளை விஷயீகரிக்கவேணும்' என்று ப்ரார்த்திக்கிறாள்.

ப.—நாலாந்திருவாய்மொழியில், இப்படி தாம் ஆசைப்பட்டபடியை அநுபவிக்கப்பெறாமையால் அவஸந்நராய், 'தமக்குப்பிறந்த ஆர்த்த்யதிஶயத்தை ஶமிப்பிக்கைக்கு ஸர்வரக்ஷகனாய் போக்யபூதனான அவனையொழிய இல்லை' என்று அறுதியிட்டு, அவன் ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதனுக்கு உதவினபடியையும், அநிருத்தனுக்கு உதவினபடியையும், அபிமதையான பிராட்டிக்கு உதவினபடியையும், நாட்டுக்குஉதவினபடியையும், சுத்தஹாவதையையும், நிரதிஶயபோக்யதையையும், ரக்ஷணார்த்தமான ஆஸத்தியையும், ஆஸந்நஜநங்களுக்கும் அநுபவவிரோதிகளைப் போக்கின படியையும், ரக்ஷணோபகரணவத்தையையும், விரோதிமிகுத்தாலும் வெந்துவிழப்பண்ணும் வீரப்பாட்டையும் அநுஸந்தித்து, தம்முடைய ஆர்த்தியைப் பரிவர்முகத்தாலே அவனுக்குஅறிவித்தபடியை, பிரிந்த தலைமகளாற்றாமைக்கு நற்றாய் இரங்கின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

**இ.**—நாலாந்திருவாய்மொழியில், "அடியார்கள் குழாங்களை யுடன்கூடுவதென்றுகொலோ" என்று மநோரதித்தபடி அப்போதே லபிக்கப்பெறாமையாலே கீழ்ப்

பிறந்த ப்ரீதியும் மாறி மிகவும் அவஸந்நரானவர்,ஸ்வகீயரான ஸ்ரீவைஷ்ணவர்கள் தம்முடையதஶையை எம்பெருமானுக்கு அறிவிக்கிறபடியை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார்.

எம்பெருமானோடே புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி, விஶ்லேஷத்தாலே தளர்ந்து ஆர்த்தியாலே கிடந்தஇடத்திற்கிடவாதே மோஹமும் உணர்ச்சியும் மாறிமாறிச் சென்று கண்டார்க்குதயநீயமானதசையை ப்ராப்தையாய் நோவுபடுகிற இவளைக் கண்ட திருத்தாயார், அவன் திருமுன்பே போகட்டு ராமக்ருஷ்ணாதிரூபேண வந்து அவதரித்து ஆர்ஜித்த நீர்மையெல்லாம் இவளுடைய அவஸாதத்தைப் போக்காமையாலே இழக்கப்புகாநின்றீரென்று கூப்பிடுகிறாள். அஞ்சிறையமடநாரையிலும் வாயுந்திரையுகளிலுங் காட்டில் இதில் ஆற்றாமை விஞ்சியிருக்கும்; காசையிழந்தவனுக்கும், பொன்னையிழந்தவனுக்கும், மாணிக்கத்தை யிழந்தவனுக்கும் இழவு ஒத்திராதிறே; இங்கு தம்தசை தாம் பேசமாட்டார். இவர் ததீயரையநுபவிக்கவாகில் ஆசைப்பட்டது, அவர்களைச்சொல்லாதே "உம்மைக்காணுமாசையுள்நைகின்றாள்" என்று அவனைச்சொல்லுவானென்? என்னில்; - முன்பு பகவத்விஷயத்தில் அநுபூதாம்ஶமும் அஸத்ஸமமாம்படி அடிமண்டியோடே கலங்கி, அடிதொடங்கி ஸம்ஶ்லேஷிக்க வேண்டும்படி யிருக்கை; "கஷாத்வஹம் ஸமெஷ்யாமி", "ஶூஹெ நஸஹிநெதாரா". இன்னமும், இத்திருத்தாயார் எத்தனையேனும் அவஸாத முண்டானாலும் அவனுக்கு அறிவிக்கு மத்தனை யொழியத் தாந்தாமே பரிஹரித்துக்கொள்ளும் குடியல்லாமையாலே அவன்முன்னே போகட்டுக்கூப்பிடுகிறாள்.

ஈடு.—கீழில்திருவாய்மோழியிலே - "பருகிக்களித்தேனே" என்று ஹ்ருஷ்டராய், 'அதுதன்னை பாகவதர்களோடே உசாவி தரிக்கவேணும்' என்று பாரித்து, அதுக்கு இவ்விபூதியில் ஆளில்லாமையாலே, நித்யவிபூதியிலே நித்யஸூரிகள்திரளிலே போய்ப்புக்கு போதயந்த:பரஸ்பரம்பண்ணி அநுபவிக்கக்கோலி நினைத்தபோதே அத்திரளிலே போய்ப்புக்கு அநுபவிக்கப்பெறாமையாலே மிகவும் அவஸந்நராய், தம்முடைய தசையை ஸ்வகீயரான ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுக்கு அறிவிக்கிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். அஞ்சிறையமடநாரையில் - தூதுவிட க்ஷமரானார்; வாயுந்திரையுகளில் - கண்ணாற்கண்ட பதார்த்தங்களுடைய பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாகக் கொண்டு அவற்றுக்குமாக நோவுபட க்ஷமரானார்; அவ்வளவன்றிக்கே ஆற்றாமை கரைபுரண்டு, தாமானதன்மையழிந்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், அது தன்னிலும் தன்தசை தான் வாய்விட்டுப்பேசமாட்டாதே பார்ஶ்வஸ்த்தர் அறிவிக்கவேண்

---

ஆடியாடி ப்ரவேஶே, வ்ருத்தாநுவாதபூர்வகமாக இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி - கீழில் திருவாய்மோழியிலே இத்யாதி. பருகிக் களித்தேன் - பாநம் பண்ணி ஆகந்தித்தேன். அதுதன்னை - ஹ்ருஷ்டரானமையை. உசாவி - பரஸ்பரஞ் சொல்லிக்கொண்டு. அதுக்கு - அப்படி தரிக்கைக்கு. "மாதா அஞ்சி முறைப்பட்டு முறையிடுகிற எழிலத்யவஸாயம்" என்று ஆசார்யஹ்ருதயத்திலும், கடல்ஞாலாதிகளிலும், 'தாயாராவது - உபாயாத்யவஸாய தசை' என்று சொல்லியிருக்க, இங்கே - ஸ்ரீவைஷ்ணவர்களாக ஸ்வாபதேசம் அருளிச்செய்தது - யோஜநாந்தராபிப்ராய மென்று கண்டு கொள்வது. அந்யாபதேசத்தில், கீழில் திருவாய்மொழிகளில் வ்யாவ்ருத்திகதநமுகேந விஸ்தர ஸங்கதி - அஞ்சிறைய இத்யாதி. தாமானதன்மை - புருஷஸ்வபாவம். தன்தசைதான் வாய்விட்டுப்பேசமாட்டாதே பார்ஶ்வஸ்த்தர் அறிவிக்கவேண்டும்படியாய் இதி-பார்ஶ்வஸ்த்தர்வார்த்தையும் தம்முடைய பாசுரமேயாயிருக்க, இதுதான் கூடினபடி யெங்ஙனே? என்னில்; ஈஶ்வரன் ஆழ்வார்க்குத் தந்தசையைத் தாம் அறிவிக்கமாட்டாதபடி பிறந்த அவஸாதாதிசயத்தைக் கண்டு, இவர் தரிக்கைக்காக,பரிஸரத்தில்வர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் இவர் தசையைத் தனக்குஅறிவித்ததாக இவர்க்கு ஒருபுத்திவிசேஷத்தைப் பிறப்பிக்க, அத்தாலே தரிப்பு உண்டாய் அவர்கள்பாசுரத்தாலே

டும்படியாய், ஸ்த்திரீ கமநசயநாதிகளில் ஒருநியதியின்றியிலே அரதியாய் நோவுபட, இப் பெண்பிள்ளைதசையை அநுஸந்தித்த திருத்தாயார், 'ராமக்ருஷ்ணத்யவதாரங்களைப் பண்ணி ஆர்த்தராநாரார்த்தியெல்லாம் பரிஹரிக்கக்கடவ ஸ்வபாவரான நீர் உம்மை ஆசைப்பட்டஇவள் நோவுபடப் பார்த்திருப்பதே!' என்று; எல்லாவளவிலும் அவனையிட்டுப் பரிஹரித்துக்கோள்ளுங் குடியாகையாலே அவன்திருவடிகளிலே போகட்டு, 'இவளிடையாட்டத்தில் நீர் செய்ய நினைத்திருக்கிறதென்?' என்று கேட்கிற பாசுரத்தாலே தம்முடைய தசையை அருளிச்செய்கிறார்· காசையிழந்தவனுக்கும், பொன்னையிழந்தவனுக்கும், ரத்நத்தையிழந்தவனுக்கும் ஒத்திராதிறே க்லேஶம்; அவதாரத்திலே பெருநிலங்கடந்த நல்லடிப்போதை அநுபவிக்க ஆசைப்பட்டுக்கிடையாமையாலே வந்த ஆற்றாமை- அஞ்சிறைய மடநாரையில், "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" என்று அர்ச்சாவதாரத்திலே அநுபவிக்க ஆசைப்பட்டுக் கிடையாமையாலே வந்த ஆற்றாமை - வாயுந்திரையுகளில்; இதில் - அவன்தனக்கும் ப்ராணபூதரான நித்யஸூரிகளை அநுபவிக்க ஆசைப்பட்டுக் கிடையாமையாலே வந்த ஆற்றாமையாகையாலே அவற்றிலும் இதுக்குஆற்றாமை விஞ்சியிருக்கும்; நித்யஸூரிகள்திரளிலே போய்ப் புக்கு அநுபவிக்கப் பெறாமையாலே நோவுபடுகிறதாகில், பின்னை அவர்களைச் சோல்லிக்கூப்பிடாதே அவனைச்சோல்லிக் கூப்பிடுவானேன்? என்னில்,- எங்கேனும் ஒருகாட்டிலே ரத்நங்கள் பறியுண்டாலும், நாட்டிலே ராஜாவின்வாசலிலே அவன்பேர்சோல்லியிறே கூப்பிடுவது; அவர்களோட்டை

---

*தாம் பேசுகிறா ரென்று கருத்து. "ஆடியாடி" என்றத்தைப் பற்ற, ஸ்த்ரீகமநஶயநாதிகளில் ஒருநியதியின்றியிலே என்றது. அரதி - விஶ்லேஷவ்யஸநம். "இலங்கைசெற்றீர்" "வாணனையிரக் தோள்துணித்தீர்" என்றத்தைப்பற்ற, ராமக்ருஷ்ணத்யவதாரங்கள் என்றது. ஆதிஶப்தத்தால் - நரஸிம்ஹாவதாராதிகள். "பார்த்திருப்பதே" என்று அவனைச் சொல்லுகிறதென்? தான்பரிஹரிக்கவொண்ணாதோ? என்ன, எல்லாவளவிலும் இத்யாதி. கேட்கிறபாசுரத்தாலே என்றது - "நும திட்டமென்கொல்" இத்யாதியைப் பற்ற. "அஞ்சிறையமடநாரை" "வாயுந்திரையுகள்" இவற்றைப்பற்ற, இதில் வ்யஸநம் அதிஶயிக்கைக்கு அடியேது? என்ன, காசை இத்யாதி. காசு என்கிறது - அவதாரங்களை. பொன் என்கிறது - அர்ச்சாவதாரத்தை. ரத்நம் என்கிறது - நித்யஸூரிகளை. "காசினைமணியை" "செம்பொனேதிகழும்" "செழுமாமணிகள் சேரும்" என்னக்கடவதிறே. 'காசு, பொன்' இரண்டும் ஒன்றானால், காசையிழந்தவனுக்கும் பொன்னையிழந்தவனுக்குமென்று க்லேஶதாரதம்ய ஹேதுவாகச் சொல்லுகைக்கு அடி - அவற்றில் உத்கர்ஷாபகர்ஷஹேதுவான மாற்றில் தாரதம்யம். அப்படியே அவதாரங்களுக்கும், அர்ச்சாவதாரத்துக்கும் ஸௌலப்யாதி தாரதம்யங் கண்டுகொள்வது. யத்வா, காசு - காசாதல். அத்யல்பகாலீநத்வத்தையும் காலாந்தராநுபயோகித்வத்தையும் பற்ற - த்ரிவிக்ரமாவதாராதிகளைக் காசுஸ்த்தாநத்திலே வைத்தார்; ஸர்வகாலம் அநுபாவ்யத்வத்தையும், "செம்பொனேதிகழுந் திருமூர்த்தியை" என்றத்தையும் பற்ற - அர்ச்சாவதாரமான நம்பியை ஸ்வர்ணஸ்த்தாநத்திலே யாக்கினார்; சரமபர்வத்வத்தையும், "செழுமாமணிகள்" என்ற ப்ரயோகத்தையும் உட்கொண்டு - ஸூரிகளை ரத்நஸ்த்தாநத்திலே யாக்கினார்; "செழுமாமணிகளாவார் - திருமழிசைப்பிரான் போல்வார்" என்றிறே வ்யாக்யாநம் பண்ணிற்றென்று - "காசையிழந்தவனுக்கும்" இத்யாதி வாக்யத்துக்குத் தாத்பர்யம். உபபாதநம்-அவதாரத்திலே இத்யாதி. ப்ராணபூதரான என்றது - "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" என்றத்தைப்பற்ற. தடஸ்த்தஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - நித்யஸூரிகள் இத்யாதி. "நரசிங்கா" "இலங்கை செற்றவனே" என்ற-அவனைச்சொல்லிக் கூப்பிடுவானேன்? என்றபடி. 'கூப்பிடுவது'*

ஸம்ஶ்லேஷத்துக்கும் கடவன் அவனுகையாலே அவனைச்சொல்லிக்கூப்பிடுகிறது. பகவத்விஶ்லேஷத்திலே உட்புகநின்றுலிறே பாகவதவிஶ்லேஷந்தான் தெரிவது; "கதாந்வஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா । ஶத்ருக்நேந ச வீரேண த்வயா சரகுநந்தந" (கதாங்வஹம்ஸமேஷ்யாமிபரதேநமஹாத்மநா, ஶத்ருக்நேநசவீரேண த்வயாசரகுநந்தந) - ஸ்ரீபரதாழ்வானோடும் ஸ்ரீஶத்ருக்நாழ்வானோடும் கூடப்பெறுத கிழிக்குறையாலே, கூட நிற்கிற இளையபெருமாளோடும் கூடிற்றுய்த் தோற்றிற்றில்லையிறே பெருமாளுக்கு; "குஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா" (குஹேநஸஹிதோராமோலக்ஷ்மணேநசஸீதயா) - கூடப்போன இளையபெருமாளோடும் பிராட்டியாரோடும் கூடிற்றுய்த் தோற்றிற்று ஸ்ரீகுஹப்பெருமாளோடு கூடினபின்பிறே; இப்படியிறே அவன்தனக்கும் அந்வயவ்யதிரேகங்கள் இருக்கும்படி; ததீயஸம்ஶ்லேஷத்தை ஆசைப்பட்டுப் பெறுமையாலே வந்த இழவு, பெற்ற பகவத்ஸம்ஶ்லேஷம் இழந்து அடியேபிடித்துப் ப்ரார்த்திக்கவேண்டும்படியாய் வந்துவிழுந்தது. வாயுந்திரையுகளில் ஆர்த்திதீர வந்து ஸம்ஶ்லேஷித்த ஸம்ஶ்லேஷம் முற்றுவதற்குமுன்னே வந்த பிரிவாகையாலும் ஆற்றவொண்ணுதிறே.

---

என்ற அநந்தரம் - அப்படியே யென்று கூட்டுவது. பரிஹாராந்தரம் - பகவத்விஶ்லேஷத்திலே இத்யாதி. அதாவது - பாகவதவிஶ்லேஷ வ்யஸநாதிஶயந் தெரிவது, பெற்ற பகவத்ஸம்ஶ்லேஷமும் போய், அதுவும் ப்ரார்த்த்யமாம்படி உட்புகநின்றுலிறே; இல்லையாகில், பாகவதவிஶ்லேஷமாகாது; ஆகையாலே, இவர் பாகவதவிஶ்லேஷத்திலே உட்புகநின்றவராகையாலே, அது இவர்க்கு பகவத்விஶ்லேஷபர்யந்தமாய், அவன் தன்னை அடியேபிடித்து ப்ரார்த்தித்துக் கூப்பிடுகிறுரென்றபடி. அப்படி, பெற்றது அஸத்கல்பமாகத் தோற்றுமோ? என்ன, கதாந்வஹம் இத்யாதி. ஆரண்யகாண்டே ஶோகாடமே லக்ஷ்மணம்ப்ரதி ராம:. ஸங்க்ஷேபே, - "குஹேந ஸஹித:" இத்யாதி. கிழிக்குறை - சாளிகைக்குறை. கிழி - சாளிகை. கூடிற்றுய்த் தோற்றிற்றில்லையிறே - கூடியிருக்கச் செய்தேயும் கூடிற்றுய்த் தோற்றிற்றில்லையிறே யென்றபடி. எப்படியென்னில், த்ருஷ்டாந்தம் - கிழிக்குறையாலே என்றது. அதாவது - தநலுப்தனுக்கு ஒரு முடிச் சிறையிலே சிலகுறைந்தால், ஶேஷமிருந்தது இருக்கிறதாய்த் தோன்றுதிறே; அப்படி யென்று கருத்து. அந்வயத்தில் கூடினதா யிருக்குமென்னுமதிக்கு உதாஹரணம் - குஹேந இத்யாதி. அவன்தனக்கும்- "ந [illegible]ஷ்யாஸ்தி ந ப்ரிய:" என்னுமவனுக்கும். அவனுக்கும் இப்படியானுல் இவர்க்குச் சொல்லவேண்டாவிறே யென்று கருத்து. 'பகவத்விஶ்லேஷத்திலே' இத்யாதி வாக்யவிவரணம் - ததீயஸம்ஶ்லேஷத்தை இத்யாதி. எதத்வாக்யாத்பூர்வம் - அப்படியே இத்யத்யாஹார்யம். 'இதில் அவன் தனக்கும் ப்ராணபூதரான' இத்யாதி வாக்யத்திலே - விஷய வைலக்ஷண்யத்தாலே ஆற்றுமை விஞ்சியிருக்கு மென்றுர்; அவ்வளவன்றிக்கே, ஸ்வஸ்வபாவத்தாலும் ஆற்றுமை விஞ்சியிருக்குமென்கிறுர் - வாயுந்திரையுகளில் இத்யாதி. முடிவிலேயிருக்கிற இந்தவாக்யம்- 'இதில் அவன் தனக்கும் ப்ராணபூதரான' இத்யாதி வாக்யாநந்தரம் அநுஸந்தேயம்.

# முதற்பாட்டு.

ஆடியாடியகங்கரைந்து இசை
பாடிப்பாடிக்கண்ணீர்மல்கி எங்கும்
நாடிநாடிநரசிங்காவென்று
வாடிவாடும்இவ்வாணுதலே.

**ஆ.**—எம்பெருமானைப் பிரிந்த வ்யஸநத்திலே தன்னைக்கொண்டு தரிக்கமாட்டாமையாலே தன்னுடைய ஆஶ்வாஸார்த்தமாக அவனுடைய குணசேஷ்டிதங்களைப் பாடியாடின இடத்திலும் அது தனக்கு ஆஶ்வாஸகரமாகாதே அவஸாதகரமேயாக, 'இனி அவனைக்கண்டாலல்லது தரிக்கமுடியாது' என்றுபார்த்து அவனை எங்குந் தேடி, ஆஶ்ரிதருடைய துர்த்தஶைகளில் ஸஹஸைவ தோன்றிக்கொண்டுநிற்கும் ஸ்வபாவனானவனே! யென்றுஅழைத்துப் பின்னையுங் கண்டாளும் தேறாததொருபடி அற வாடிப்போய் அற வாடினாள் இவ்வாணுத லென்று திருத்தாயார் ப்ரலாபிக்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், 'நரஸிம்ஹமாய் வந்து ஶ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய ஆபத்துக்கு உதவினவன் எனக்கு உதவுகிறிலன்' என்று பெண்பிள்ளை அவஸந்நையாகா நின்றாளென்று சொல்லித் திருத்தாயார் ஶோகிக்கிறாள்.

[ஆடியாடி] - வ்யஸநாதிஶயத்தாலே மேன்மேலெனப் பண்ணுகிற சேஷ்டிதங்கள் மநோஹாரிகளா யிருக்கிறபடி. துடிப்பின்மிகுதியைச் சொல்லிற்றாகவுமாம்; '[illegible]' இதிவத். [அகங்கரைந்து] - வ்யஸநாதிஶயத்தாலே மிகவும் ஶிதிலாந்தஃகரணையாய். [இசைபாடிப்பாடி] - ஆற்றாமை சொல்லுகிற சொல் பாட்டாயிருக்கிறபடி. [மல்கி] - மிக்கு. [எங்கும் நாடிநாடி] - 'இவ்வவஸாதத்தில் ஸர்வதா வாராதொழியான்' என்று எங்கும் பலகாலுந் தேடி. அநந்தரம் அவனைக்காணாமையாலே மிகவும் வாடாநின்றாள். [இவ்வாணுதலே] - அழகிய நுதலையுடைய இவள். 'இவ்வழகுஅழியவும் பேசாதிருப்பதே!' என்று இன்னாதாகிறாளென்று கருத்து.

ப.—முதற்பாட்டில், 'ப்ரஹ்லாதனுக்குஉதவினாற்போலே வந்துஉதவுகிறிலன்' என்று இவள் தளராநின்றாளென்கிறாள்.

இவ்வாணுதல் - ஒளிவிடுகிற நெற்றியையுடையளான இவள், ஆடியாடி - (வல்லாராடினாற்போலே) தர்ஶநீயமாம்படி தன்னாற்றாமையாலே நின்றஇடத்தில் நில்லாதே பலகாலும்உலாவி, அகம்கரைந்து - மநஶ்ஶைதில்யம்பிறந்து, இசைபாடிப்பாடி - (அந்தக்லேஶமடியாக) இசையிலே பலகாலும்பாடுவாரைப்போலே ப்ரலாபித்து; கண்ணீர்மல்கி- (கரைந்தநெஞ்சு ப்ரவஹிக்குமாபோலே) கண்கள்நீர்மல்கி, எங்கும் - ஸர்வதேஶத்திலும், நாடிநாடி - (அவன்வரவை) ஆராய்ந்து பலகாலும்பார்த்து, நரசிங்காவென்று - (எங்குந் தோற்றவல்ல) நரஸிம்ஹரூபத்தையுடையவனேயென்று, வாடிவாடும் - (அவ்வளவிலும் வரக்காணாமையாலே) வாட்டத்தின்மேல் வாட்டமாம்படி தளராநிற்கும்.

**இ.**—முதற்பாட்டில், 'ஶ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய ஆபத்துக்குஉதவினவன் எனக்குஉதவுகிறிலன்' என்று இவள் அவஸந்நையாகாநின்றாளென்கிறாள்.

[ஆடியாடி] - ஸ்த்திதிகமநஶயநாதிகள் மாறிமாறி வருகிற வ்யஸநாதிஶயத்தை யிறே ஆடிற்ருகச் சொல்லுகிறது. வடிவழகாலே தாய்மார்கண்ணுக்கு ஆகர்ஷகமாயிருக்கையாலே வல்லாராடினாற்போலே யிருக்கிறது. "ந்ருத்யதீவ ச தாபஸ:" என்னக்கடவதிறே. வீப்ஸையாலே - 'ப்ரதம வ்யாபாரத்தோடே முடிந்ததோ' என்னும்படி யிருக்க, அவ்வளவில் பர்யவஸியாதே பின்னையும் அநுவர்த்திக்கை. விலக்ஷணவிஷயத்தைப் பிரிந்தால் முடிகையும் அரிது, ஜீவிக்கையும் அரிது. வைலக்ஷண்யம் ஜீவிக்கவொட்டாது, நசை முடியவொட்டாது. "ஸகாமா நைவ ஸா தேவ்யா ஸா வோ ஷா வ வஸ்யோஹி | நஹி ஸா ஸேகரோ ராஜ்யம் ஸாமோ ஜநகாத்மஜயா" இறே. முந்துற 'ஆடி' என்ருல், இரண்டாமடிக்குச் சென்றகாலத்தினளவைப் பரிச்சேதித்துத் தருவது தாளமாயிற்று. ஒருதாளம் அதிலே யேறியிருக்கும். [அகங்கரைந்து] - இவள் வ்யாபாரங் கண்ணுக்கிலக்கானாற்போலே, அகவாயும் இவள்நெஞ்சுக்கு இலக்காயிருக்கிறபடி. இவள்வ்யாபாரம்அடியற்றிருக்கையாலே மநஸ்தத்வம் நீராயுருகிப்போயிற்று என்கிருள். [இசைபாடிப்பாடி] - "யோ ஸா யோ ஸா வா" என்றும், "பண்ணைவென்றவின்சொன்மங்கை" என்றுஞ் சொல்லுகிறபடியே ஆற்ருமையாலே கூப்பிடுகிற இது பாடினாற்போலே யிருக்கிறபடி. வீப்ஸையும் - "ஆடியாடி" என்ருற்போலே. [கண்ணீர்மல்கி] - உருகின மநஸ்தத்வம் இசையாய் ப்ரவஹித்து, மிக்கது கண்ணநீராய் ப்ரவஹிக்கிறபடி. [மல்கி] – மிக்கு. "கியோ லேஹவ நேத்ராஸ்யா". [எங்குநாடிநாடி] - 'இவ்வவஸாதத்தில் ஸர்வதா வாராநிரான்' என்று வரவுக்கு ஸம்பாவனையில்லாதவிடமெல்லாம் பலகாலுந் தேடி. "ஸாதிய லீ" இத்யாதி. வரவுக்கு ஸம்பாவனையில்லாத இடத்தே தேடுவானென்? என்னில்;- [நரசிங்கா]-வரவுக்கு ஸம்பாவனையில்லாத இடத்திலே தோற்றினவனாகையாலே. பத்துடையடியவர்க்குப் பின்பு அவதாரங்களுக்கவ்வருகு போகமாட்டார்; ஆனுமாய், "உதகஸவ உலோ ஸவலோ" என்னும் தெளிவும் வேணுமோ உதவும்போது? முன்பு தனக்குஉதவினவன் இப்போது உதவுகிறிலனாகச் சொல்லுகிருள். [நரசிங்காவென்று வாடும்] - அப்போதே உதவாமையாலே, ஆஶ்ரயமிழந்த தளிர்போலே வாடாநின்ருள். [வாடிவாடும்] - அதுதான் 'தளிரும் முறியும்' என்னும்படி வாடாநின்ருள். விஶ்வாஸங்குலையாமையாலே முடியப்பெறுகிறிலள். [இவ்வாணுதலே] – ஒளியையுடைய நுதலையுடைய இவள். நுதல் - நெற்றி. 'இவ்வ்யக்தியை யிழந்தால் ஸமாதாநம் பண்ணலாம்' என்றுஇருக்கிறீரோ. இவ்வழகுக்குஇலக்கானார் வாடுமத்தை இவள்வாடுவதே; [வாணுதலே] - 'அம்புபட்டு முடிந்தார் முகம்போலன்றிறே நீரிலேமுடிந்தார்முகம். 'இவ்வழகு அழியவும் பேசாதிருப்பதே!' என்று இன்னுதாகிருளென்று கருத்து.

ஈடு.—முதற்பாட்டில், ஆபத்தே செப்பேடாக ஆஶ்ரிதன் ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே வந்து உதவும் ஸ்வபாவனானவனைச் சொல்லிக் கூப்பிடாநின்ருளென்கிருள்.

---

முதற்பாட்டு - ஆடியாடி இத்யாதி. 'நரசிங்கா' என்றத்தைப்பற்ற, ஆபத்தே இத்யாதி. செப்பேடு - தாம்ரஶாஸநம்; ப்ராபக மென்றபடி. ஆபத்தே செப்பேடாக ஆஶ்ரிதன் பண்ணின ப்ரதிஜ்ஞை இத்யந்வய:. 'இந்தஆபத்தில் அவன்உதவாநிரான்' என்று விஶ்வஸித்துப் பண்ணின ப்ரதிஜ்ஞை யென்றபடி.

[ஆடியாடி] - ஸ்த்திதிகமநஶயநாதிகளில் ஒரு நியதியின்றிக்கே அரதியாலே படுகிற பாடுதான், திருத்தாயார்க்கு ஆகர்ஷகமாயிராநின்றதாயிற்று; ஸ்ரீகௌஸல்யையார் பெருமாளைப்பிரிந்து துடிக்கிற துடிப்பை "[illegible]" (ந்ருத்யந்தீமிவமாதரம்) என்ருனிறே; வடிவழகியார் வ்யாபாரங்களெல்லாம் இனிதாயிருக்குமிறே, பிரிந்து அழகு அழிந்திருக்கிற ஸமயத்திலேயிறே "[illegible]" (ஶாபாம்) என்றது. [ஆடி] - முதல் 'ஆடி' என்றதுக்கு அவ்வருகே ஒருநிலையிறே - இரண்டாம்ஆடி. முதலிலே ஸஞ்சாரம் அரிதாம்படியிருக்கச்செய்தே, ஆற்ருமை ப்ரேரிக்க ஸஞ்சரியாநிற்கும்: குணதிகவிஷயமாகையாலே முடிந்துபிழைக்கவு மொட்டாதே. "[illegible]" (ராமாகமநகாங்க்ஷயா) - 'இன்னம்ஒருகால் அவர்முகத்திலே விழிக்கலாமாகில் அருமந்தப்ராணனைப் பாழேபோக்குகிறதேன்?' என்று ராஜ்யத்தையும் தோட்டேக்கொண்டு கிடந்தானிறே. முதல் 'ஆடி' என்கிறதிற்காட்டில், இருகால்மட்டு 'ஆடி' என்றதில் - அவஸாதத்தின் மிகுதி, தாளங்கொண்டறியுமித்தனை. [அகம்கரைந்து] - ஸஞ்சாரம் செல்லாநிற்கச்செயதே ஸஞ்சாரம் அடியற்றிருக்கும். இவள் வ்யாபாரம் கண்ணுக்கு இலக்கானுற்போலே அகவாயும் இவள்நெஞ்சுக்கு இலக்காயிருக்கிறபடி. மநஸ்தத்வம் நீராயுருகிப்போயிற்று

---

அரதியாலே துடியாகிற்க, 'ஆடி' என்கிறதென்? என்ன, ஸ்த்திதிகமந இத்யாதி. இப்படி சொன்னபேருண்டோ? என்ன, ஸ்ரீகௌஸல்யையார் இத்யாதி. என்ருனிறே வால்மீகி யென்று சேஷம். ந்ருத்யந்தீமிதி - அயோத்யாகாண்டே வககமநார்த்தம் அபிவாத்ய ப்ரஸ்த்திதேஸதி ராமே கௌஸல்யா,-"[illegible]". ஆகர்ஷகத்வஹேதுவேது? என்ன, வடிவழகியார் இத்யாதி. "[illegible]" இத்யாதி. "[illegible]" என்னக்கடவதிறே. பிரிந்து அழகழிந்திருக்கிற ஸமயத்தில் வ்யாபாரம் தர்ஶநீயமாமோ? என்ன, பிரிந்து இத்யாதி. ஶாபாமிதி - ஸுந்தரகாண்டே ஏகோநத்ரிம்ஶே - "[illegible]" புநஶ்ச 'ஆடி'என்கிறது எதுக்காக? என்ன, அவஸாதாதிசயத்தாலே யென்கிருர் - முதலாடி இத்யாதி. 'ஆடி' என்று - அதின் ஆகர்ஷகத்வஞ் சொல்லும்போது ஸஞ்சாரம் விலக்ஷணமாகவேணுமே, மோஹித்திருக்கிற இவளுக்கு ஸஞ்சாரமுண்டோ? என்ன, முதலிலே இத்யாதி. ஆனல், க்லேசிப்பானென்? முடியவொண்ணுதோ? என்ன, குணதிக இத்யாதி. ஏதத்த்ருஷ்டாந்தம் - ராமாகமந இத்யாதி. "[illegible]" இதி ஸங்க்ஷேபே. இதுக்கு அர்த்தம் - இன்னம் இத்யாதி. அருமந்த - ஶ்லாக்யமான. பாழே - வ்யர்த்தமே. "முதலாடி யென்றதுக்கு அவ்வருகே" என்ற வாக்யவிவரணம் - முதலாடி யென்கிறதில் இத்யாதி. தாளங்கொண்டு - வெண்கலத்வநிபோலே ஒருகாலுக்கு ஒருகால் ஓய்ந்துவருகிற தென்றபடி. "[illegible]" யென்ருேர் அகங்கரைந்தால் ஆடுகிறபடி யெங்ஙனே? என்ன, ஸஞ்சாரம் இத்யாதி. ஸஞ்சாரம் செல்லாநிற்கச்செய்தே - யாதாயாதங்கள் நடவாநிற்கச்செய்தே அவஸாதாதிசயமே ஸஞ்சரிப்பிக்கு மென்றபடி. மநஸ்ஸிறே ப்ரவ்ருத்திக்குஅடி, அது கரைகையாலே அடியற்றிருக்கு மென்றபடி. "[illegible]" அகங்கரைந்து அறிந்தபடி யென்? என்ன, இவள்வ்யாபாரம் இத்யாதி. நாயிகவ்யாபாரத்தைக் கொண்டு அநுமிக்கிருளென்றபடி. ஶப்தார்த்தம் - மநஸ்தத்வம் இத்யாதி. அகங்கரைந்தால் பாடக்கூடுமோ? மநःபூர்வக

என்கிருள். [இசைபாடிப்பாடி] - ‹‹மநःபூர்வோவாகுத்தரः›› (மநःபூர்வோவாகுத்தரः) என்கிற க்ரமநியமமில்லை. ஆற்ருமையாலே கூப்பிடுகிற கூப்பீடுதான் பாட்டாய்த் தலைக்கட்டுகிறஇத்தனை; *பண்ணேவென்ற இன்சொன்மங்கையிறே இவள்தான்; ‹‹மதுராமதுராலாபா›› (மதுராமதுராலாபா). ஆற்ருமையாலே துடித்த துடிப்பு ஆடலானுற்போலே, ஆற்ருமையாலே கூப்பிட்ட கூப்பீடும் பாட்டாய் விழாநின்றது. முதல்கூப்பீடுபோலன்றிக்கே, இரண்டாங்கூப்பீடு தளர்ந்திருக்குமிறே. [கண்ணீர்மல்கி] - உருகின மநஸ்தத்வம் இசையாய் ப்ரவஹித்து, மிக்கது கண்ணீராய் ப்ரவஹிக்கிறபடி; நெஞ்சொழியப் பாய்கிற கண்ணீரிறே. [மல்கி] - மிக்கு. ‹‹கிமர்த்தம்தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிஶோகஜம்›› (கிமர்த்தம்தவநேத்ராப்யாம் வாரிஸ்ரவதிஶோகஜம்) - ‘ஆநந்தாஶ்ருவுக்கு யோக்யமான கண்களாலே ஶோகாஶ்ரு ப்ரவஹிக்கிறது ஆர்குடி வேரற’ என்று பட்டர் அருளிச்செய்யும்படி; அன்றிக்கே, பிள்ளான், ‘ஆரைச் சேதநராகக்கொண்டு?’ என்று பணிக்கும். ‹‹புண்டரீகபலாஶாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம்›› (புண்டரீகபலாஶாப்யாம்

---

மன்ருே? வாக்ப்ரவ்ருத்தி? என்ன, மநःபூர்வ இத்யாதி. ‹‹மாநிஷாத›› இத்யாதி ஶ்லோகவதிதி பாவः. கூப்பீட்டை - “பாடி” என்னலாமோ? என்ன, ஆற்றமையாலே இத்யாதி. ‹‹நடவெவடிவீவிராகேஜி தாக›› என்னக் கடவதிறே. கூப்பீடு பாட்டாகைக்கு ஹேதுவேது? என்ன, பண்ணை இத்யாதி. கானத்தை ஜயித்த இனிய பேச்சையுடைய மங்கை யென்றபடி. மதுரே இதி. ஸுந்தரகாண்டே ஷட்ஷஷ்டிதமே மாருதிம்ப்ரதி ராமः-‹‹மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ । மத்விஹீநா வராரோஹா ஹநுமந் கத்யஸ்வ மே›› இதி. பலிதம் - ஆற்றமையாலே இத்யாதி. வீப்ஸைக்கு பாவம் - முதற்கூப்பீடுஇத்யாதி. “அகங்கரைந்து” என்று தொடங்கிப் பதச்சேர்த்திக்கு பாவம் - உருகின இத்யாதி. அகங்கரைந்தால் கண்ணீர்மல்கக்கூடுமோ? என்ன, நெஞ்சொழிய இத்யாதி. அதாவது - முடியானேயிற் கரணங்களாகையாலே கூடு மென்றபடி. ஆகையால், ‘மல்கி’ என்கிருளென்றபடி. புத்திபூர்வகமாகிலிறே ததநுகுணமான தாரதம்ய முண்டாவது, அதில்லாமையாலே அபரிச்சிந்ந மென்று கருத்து. ‘ஆடியாடி’ இத்யாதியாலே ஸஞ்சாராதிகளுக்கு ஆகர்ஷகத்வஞ் சொல்லிக்கொண்டு வருகிற ப்ரகரணபலத்தாலே கண்ணீருக்கும் ஆகர்ஷகத்வத்தை விவக்ஷித்து இதுக்கு த்ருஷ்டாந்தம் - கிமர்த்தம் இத்யாதி. ஸுந்தரகாண்டே த்ரயஸ்த்ரிம்ஶே ஸீதாம்ப்ரதி ஹநுமாந், ‹‹கிமர்த்தம்›› இத்யாதி. ‹‹ஶோகஜம்›› என்றதிலே நோக்காக பட்டர்நிர்வாஹம் - ஆநந்தாஶ்ருவுக்கு இத்யாதி. ‹‹கிமர்த்தம் நேத்ராப்யாம் வாரிஸ்ரவதி›› என்று ப்ரஶ்நம் பூர்ணமாகையாலே, ‹‹தவநேத்ராப்யாம் ஶோகஜம்›› என்றதுக்கு பாவம் உன்னுடைய கண்ணுக்கு இது யோக்யமோ! ஆநந்தாஶ்ருவன்ருே யோக்யம் என்றிறே தோற்றுகிற தென்று கருத்து. ஆர்குடி - ராவணன்குடிவேர்பறியவோ? ‹‹ஸபிஶாசகணாக்ஷஸம்›› என்றவர்களெல்லார்குடியும் வேர்பறியவோ வென்றபடி. ‹‹புண்டரீகபலாஶாப்யாம்›› என்றதிலே நோக்காகப் பிள்ளான் நிர்வாஹம். அன்றிக்கே பிள்ளான் இத்யாதி-ஆரைச் சேதநராகக்கொண்டு - சேதநன் போக்தா; ஆருடைய போகார்த்த மென்றபடி. இந்தயோஜனையில் கிம் க்ஷேபே. தாமரையிதழிலே முத்துப்பட்டாற்போலே யிருக்கிற இந்த ஸௌந்தர்யத்தை அநுபவிக்கைக்கு அர்ஹரான பெருமாள் அருகே யின்றிக்கே யிருக்க, இதுக்கு ப்ரயோஜநமென்? என்றபடி. ‘பட்டர்நிர்வாஹத்தைப்பற்ற, பிள்ளான்நிர்வாஹமே உத்தரார்த்தத்துக்குச் சேர்த்திருப்பது’ என்னுமிடந் தோன்ற, உத்தரார்த்தோபாதாநம் பண்ணுகிருர் - புண்டரீக இத்யாதி. பிள்ளான்நிர்

---

* திருவிருத்தம் க-டு.

விப்ரகீர்ணமிவோதகம்.)பாவியேன், இவ்வரவு உடைய பெருமாள்வரவாய்க் காணப்பெற்ற தில்லை. [எங்கும்நாடிநாடி] - தன்ஆபத்தே செப்பேடாக, வர ஸம்பாவனையில்லாத திக்கையும் பார்க்கும். "ஸாதிர்யகூர்த்வஞ்சததாப்யஸ்தாத்" (ஸாதிர்யகூர்த்வஞ்சததாப்யதஸ்தாத்) - நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே வாராத் திருநாமம் செவிப்பட்டவாறே விலங்கப்பார்ப்பது மேலே பார்ப்பது கீழேபார்ப்பதானாள். கீழ் பார்த்ததுக்குக் கருத்தேன்?' என்னில்;--- 'பூமியைப் பிளந்துகொண்டு புறப்பட்டு ஒருவன் திருநாமஞ்சொல்ல ஸம்பாவனையுண்டாகில், அல்லாத திக்குகளிலு முள்ளது' என்று பார்த்தாள்; அன்றிக்கே, மாஸோபவாஸிகள், 'சோறு' என்றவாறே அலமாக்குமாபோலே பார்த்தா ளென்னுதல்; அங்ஙனன்றிக்கே, ஶிம்ஶுபாவ்ருக்ஷத்தை எங்குமோக்கப் பார்த்தா ளென்னுதல். "தமசிந்த்யபுத்திம்ததர்ஶ" (தமசிந்த்யபுத்திம்ததர்ஶ)-அவன்வடிவு காண்பதற்குமுன்னே அகவாயையாயிற்று பரிச்சேதித்தது; 'இந்நிலத்திலே புகுந்து இடங்கொண்டு நாமிருந்தவிடந் துருவி நிலைகுத்தவல்ல நெஞ்சையுடையவனன்றோ' என்று. "பிங்காதிபதேரமாத்யம்" (பிங்காதிபதேரமாத்யம்) - 'இவன் ஸ்வதந்த்ரனல்லன், ராஜகார்யம் இவன் கையிலே யுண்டு' என்று அறிந்தாள். "வாதாத்மஜம்" (வாதாத்மஜம்)-பெருமாளுக்குப்ரா

---

வாஹ விவரணம் - பாவியேன் இத்யாதி. இவ்வரவு - நான்வந்த வரவு. உடைய - ப்ராப்தரான. ஆக, "கண்ணீர்மல்கி" என்றதுக்குஹாவத்வயம்-ஆநந்தாஶ்ருவுக்கு யோக்யமான கண்களினின்றும் சோகாஶ்ரு ப்ரவஹிக்கிறதென்று மூர்த்தினது, கண்ணீரோடே யிருக்கிற இருப்பு அத்யாகர்ஷகமாயிருக்கையாலே அந்த அழகை ப்ராப்தரேஷியன்றே அநுபவிக்க யோக்யனென்று இரண்டாவது. 'எங்கும்நாடிநாடி' என்கிறது-"நரசிங்கா" என்கிற பர்யந்தத்துக்கு உபாதாநம். 'எங்கும்' என்ற பதத்துக்கு - ஸம்பாவனை யில்லாத திக்கையும் தேடுமென்று அர்த்தம் விவக்ஷித்து, அத்தை ஹேதுபூர்வகமாக அருளிச்செய்கிறார் - தன்ஆபத்தே இத்யாதி. செப்பேடு - தாம்ரஶாஸநம். ஆபத்தே செப்பேடாக - ஆபத்தே ப்ராப்தமாக நினைத்தென்றபடி. இப்படி பார்த்தபேருண்டோ? என்ன ஸாதிர்யகூர்த்வம் இத்யாதி. தத்ரைவ ஏகத்ரிம்ஶே ஹநுமத்வாக்யஶ்ரவணாநந்தரம் ஸீதா "ஸாதிர்யகூர்த்வஞ்சததாப்யதஸ்தாந்நிரீக்ஷமாணா தமசிந்த்யபுத்திம் । ததர்ஶ பிங்காதிபதேரமாத்யம் வாதாத்மஜம்ஸூர்யமிவோதயஸ்தம்." இதில் "அபஸ்தாத்" என்கிறது உபயுக்தம். விலங்கப்பார்ப்பது - இலக்கையைச் சுற்றும்பார்ப்பது. பூமியை இத்யாதி-அயோக்யதாயுக்தி, ஸர்வத்ராவிஶிஷ்டமாகையாலும், ஶப்தம் ஶ்ரவிக்கையாலும் எங்கும்பார்த்தா ளென்றபடி. த்விதீய பரிஹாரம் - அன்றிக்கேமாஸோபவாஸிகள் இத்யாதி. முன்னேசொன்ன அஹிஸக்தியின்றிக்கே அலமரப்புத்தானே இப்படி பார்க்கைக்கு ஹேதுவென்று கருத்து. அலமாப்பு - அதிக்லேஶம். மூன்றும்பரிஹாரம் - அங்ஙனன்றிக்கே ஶிம்ஶுபா இத்யாதி. அலமாக்குமாபோலே - தடுமாறுமாபோலே. "அசிந்த்யபுத்திம், வாதாத்மஜம்" என்கிற பௌர்வாபர்யத்துக்குஹாவம்-அவன்வடிவு இத்யாதி. ததேவவிஶதயதி - இந்நிலத்திலே இத்யாதி. துருவிநிலைகுத்துகை - தேடிநிக்ஷேபமுள்ளவிடத்திலே குத்துகை; களவுபோன வஸ்துவை அடையாளமறிந்து பிடிக்கையாதல். இவன்ஸ்வதந்த்ரனல்லன் இதி - ஸ்வதந்த்ரனாகில்இந்த அதிஸங்கடஸ்த்தலத்திலே வருவனோ? பாதந்த்ரனாகையாலே 'நிவ்ருத்தியில் ஸ்வாமிதண்டம்வரும்' என்கிற புத்தியுடையவனே இங்கு வர யோக்யனென்று தாத்பர்யம். ராஜகார்யம் இத்யாதி - 'அமாத்யன்' என்று அறிகைக்கு ஹேதுவில்லாமையாலே இதுவே கருத்தென்றபடி. தோற்ற - தடஸ்த்தர்க்கு என்றபடி. ஸூர்யஶப்தம் - அருணவாசி. "ஸூர்யோதயாத்ப்ரகாஶதேநாஸ்" என்னக்கடவதிறே. ரஸோக்தி - லங்கையிலும் இத்யாதி. பெருமாளாகிற ஆதித்யோதயத்துக்கு இதி - "ஶாரஜாராம்ஶுஸம்ரூடாஸ்ஸ்ரக்வேஶாஶிவாக:" என்றது அநுஸந்தேயம், உதயஸ்தம்ஸூர்யமிவவாதாத்மஜம்ததர்ஶ இத்யந்வய:

ணஹேதுவான பிராட்டிக்கு ப்ராணங்களைக் கொடுக்கையாலே 'இவன் ஸர்வர்க்கும் ப்ராணஹேதுவான வாயுபுத்ரன்' என்று தோற்ற இருந்தான். "ஸூர்யமிவோதயஸ்தம்" (ஸூர்யமிவோதயஸ்த்தம்)-லங்கையிலும் கிழக்குவெளுக்க அடியிட்டது. பெருமாளாகிற ஆதித்யோதயத்துக்குஅருணோதயம்' என்னலாம்படி யிருந்தான்; ஆகையிறே, லங்கை நாலுமதிளுக்குநடுவே 'ஹரிஹரி' என்றபடியே யிருக்கிறது. இப்படி வருகைக்கு ஸம்பாவனை யில்லாத திக்கிலுந் தேடுவானென்? என்னில்;— ஸம்பாவனையில்லாத விடத்தேயும் வந்து தோற்றுமவனாகையாலே. பத்துடையடியவர்க்குப் பின்பு அவதாரத்துக்கு அவ்வருகு இவர் போகமாட்டார். [எங்கும்நாடிநாடி] - தன்கோய்சகமுட்படப் பாராநின்றாள் என்று பட்டர்அருளிச்செய்யும்படி. அதுக்குக் கருத்து-"கண்ணனேன்றேக்கலையானே" என்று அவனிருந்த ப்ரதேசமாகையாலே. [நரசிங்காவென்று] - ப்ரஹ்லாதனைப்போலே ஒருதம்பமில்லாதபடி யிருக்கையாலே வாடும். "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" (மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம்) என்னும் தெளிவுடையவனுக்குத் தோற்றினவன் கலங்கின அபலைக்குத் தோற்றானோ!" என்னுமத்தாலே. தமப்பன் பகையானாலோ உதவலாவது, நீர் பகையா னல் உதவலாகாதோ? ஜ்ஞாநநிஷ்டர்க்கோ உதவலாவது? பக்திநிஷ்டர்க்கு உதவ லாகாதோ? ஆண்களுக்கோ உதவலாவது? பெண்களுக்கு உதவலாகாதோ? சேராத வடிவு சேர்த்து உதவிலோ உதவலாவது? இருந்தபடியே உதவலாவார்க்கு உதவலா காதோ? ஒரு அதிகாரிநியதி, ஒருகாலநியதி, ஒருஅங்கநியதி என்கிற நிர்ப்பந்தம் வேணு மோ இவளுக்கு? இவளுடைய ரக்ஷணத்துக்கும் ஏதேனும் முகம்பண்ணவேணுமோ? [வாடிவாடும்] - கொம்பையிழந்த தளிர்போலே வாடும். 'முதல்வாட்டம் - தளிர்' என் னும்படியிறே அநந்தரத்தில் வாட்டம். [வாடும்] - தர்மிலோபம் பிறந்ததில்லை; 'வரும்'

---

உதயஸ்தனான அருணனை ஆதித்யோதயஸூசகமாகக் காணுமாபோலே, இவனையும் ராமோதய ஸூசகமாகக் கண்டாளென்றபடி. ரஸோக்தி - ஆகையிறே இத்யாதி. ஹரி - குரங்கு. அருணோ தயவேளையிலே ஹரி ஶப்தஶ்ரவணமுமுண்டே யென்றபடி. ப்ரஶ்நோத்தரரூபேண "நரசிங்கா" என்றதுக்கு பாவம் - இப்படிவருகைக்கு இத்யாதி. பரத்வாதிகளை விட்டுஅவதாரத்தைச் சொல்லு வானென்? என்ன, பத்துடை இத்யாதி. ரஸோக்தி - தன்கோயிசகம் இத்யாதி. அதுக்குஅடி யேது? என்ன, அதுக்குக்கருத்து இத்யாதி. நரசிங்காவென்று என்றது - 'வாடும்' என்கிற பர்யந் தத்துக்கு உபாதாநம். 'வாடும்' என்றதுக்குஅவதாரிகை - ப்ரஹ்லாதனை இத்யாதி. தம்பம் - ஸ்தம்பம். சாடுவுக்கு, ஆதார மென்றபடி. ஸ்தம்பத்தில்தோற்றினாற்போலே இங்குத் தோற்றாமை யாலே யென்றபடி. ஸ்வாபாவிகம் ஹேதுமாஹ - மத்தஸ்ஸர்வம் இத்யாதி.ப்ரதமேம்ஶே ஏகோந விம்ஶே - "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம் மயிஸர்வம் ஸநாதநே | அஹமேவாவ்யயோநந்தஃ பரமாத்மாத்மஸம்ஶ்ரயஃ". தோற்றன் - தோற்றுகிறிலன். ஓஎன்று - விஷாதாதிஶயஸூசகம். "நர சிங்காவென்றுவாடும்" என்றதுக்கு வெறப்பாக பாவம் பஹுமுகமாக அருளிச்செய்கிறார் - தமப் பன் இத்யாதி. ஒருஅதிகாரிநியதி இத்யாதி - ப்ரஹ்லாதன், ஸந்த்யாகாலம், நரத்வஸிம்ஹத்வங்கள் என்கிற நிர்ப்பந்தம் வேணுமோ? வென்றபடி. முகம்பண்ணுகை - ஸிம்ஹமுகத்வேந ஆவிர்ப்பவிக் கை; கோபிக்கை யென்று த்வநி. அதாவது - அவனுடைய ரக்ஷணத்திற்போலே இங்கு ஸிம்ஹ முகம்பண்ணவேணுமோ? இப்படி சீறியருளவேணுமோ? இருந்தபடியே முகங்காட்ட அமையா தோ? என்றபடி. பதஸ்வாரஸ்யஸித்தார்த்தம் - கொம்பை இத்யாதி. புநருக்திக்குபாவம் - முதல் வாட்டம் இத்யாதி. வர்த்தமாநத்துக்கு பாவம் - தர்மிலோபம் இத்யாதி. ஆனால்அது ப்ராணயத் துக்குக் கொத்தையன்றோ? என்ன, வருமென்னும் இத்யாதி. 'வாணுதல்' என்றதுக்கு ஶப்தார்

என்னும் ஆசையாலே முடியப்பெறுகிறிலள். [இவ்வாணுதலே] – ஒளியுடன்கூடின நுதலையுடைய இவள். இவ்வழகுக்கு இலக்கானார் படுமத்தை இவள்படுவதே! இவள் முடிந்தால், உம்முடைய மேன்மையாலே 'இன்னம்இப்படியிருப்பதொரு வ்யக்தியை உண்டாக்கலாம்' என்றிருக்கிறீரோ? "யாதாயதாபூர்வமகல்பயத்" (தாதாயதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே ஸ்ருஷ்டிக்கலா மென்றிருக்கிறீரோ? ஊனில்வாழுயிரில் கலவியாலுண்டான புகர் இன்னம் அழிந்ததில்லைகாணும். அம்புபட்டு முடிந்தாரையும் நீரிலே புக்கு முடிந்தாரையும் முகத்திலே தெரியுமிறே; குணாதிகவிஷயவிரஹத்தாலே வந்த இழவென்னுமிடம் முகத்தினெழிலிலே தெரியாநின்றதுகாணும். (க)

## இரண்டாம்பாட்டு.

வாணுதலிம்மடவரல் உம்மைக்
காணுமாசையுள்நைகின்றாள் விறல்
வாணனாயிரந்தோள்துணித்தீர் உம்மைக்
காணநீரிரக்கமிலீரே.

ஆ.—(வாணுதல்.) 'உம்மைக் காணவேணும்' என்னும்ஆசையாலே இவள் நையாநின்றாள்; உம்மைக்காணும்படி இவள்பக்கல் க்ருபைபண்ணுகிறிலீர்; ப்ரதிகூலர் திறத்திலன்றோ இப்படி நைர்க்ருண்யம் பண்ணுவது, உம்மைஆசைப்பட்டார்திறத்திலும் இப்படி நைர்க்ருண்யம்பண்ணலாமோ? என்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், பாணனுடைய பாஹுவநத்தைச் சேதித்து அநிருத்தாழ்வானுக்கு உதவின நீர் இவளுக்கு இத்தசையில்இரங்காதொழிவதே! என்கிறாள்.

[வாணுதலென்று தொடங்கி] - மிக்கஅழகை யுடையளாய்ப் பொறுப்பின்றிக்கே யிருக்கிற இப்பெண்பிள்ளை 'பிரிந்தால் தரிப்பது அரிதாம்படி யிருக்கிற உம்மைக் காணவேணும்' என்னும் ஆசையிலே சிதிலையாகாநின்றாள். [விறல்]-வெற்றி. [உம்மைக் 'காணநீரிரக்கமிலீரே] – உம்மை இவள் காணும்படி நீர் இரக்கமுடையீராகிறிலீர்.

ப.—அநந்தரம், அநிருத்தனை நிரோதித்த பாணனைத் தோள்மிடுக்கறுத்த நீர் இவளுக்கு இரங்குகிறிலீ ரென்கிறாள்.

வாள் - ஒளிவிடுகிற, நுதல் - நுதலையுடையளாய், இம்மடவரல் - மடப்பத்தால் விஞ்சின இவள், உம்மை - (தர்சநீயரான) உம்மை, காணும்ஆசையுள் - 'காணவே

த்தம் - ஒளியுடன் இத்யாதி. 'வாணுதல்' என்றதுக்கு பாவம் - இவ்வழகுக்கு இத்யாதி. 'இவ்வாணுதல்' என்றதுக்கு பாவம் - இவள்முடிந்தால் இத்யாதி. ஏதத்விவரணம் - தாதாயதாபூர்வம் இத்யாதி. இவ்வவஸ்த்தையில் 'வாணுதல்' என்னக்கூடுமோ? என்ன, ஊனில் இத்யாதி. பரிஹாராந்தரம் - அம்புபட்டு இத்யாதி வாக்யத்வயதாலே. 'குணாதிகவிஷயப்ராயுக்தம் இத்தக்லேசம்' என்னுமிடத்தை முககாந்தியே தெரிவிக்கிறதென்றபடி. முகத்திலேதெரியுமிறே அப்படியே யித்யத்யாஹார்யம். இவ்வாணுதல் - ஆடியாடிதொடங்கி, வாடிவாடும் இத்யந்வய:. (க)

ணும்' என்கிற ஆசையிலே, நைகின்றாள் - சிதிலையாகாநின்றாள்; விறல் - பெருமிடுக்கனான, வாணன் - பாணனுடைய, ஆயிரந்தோள் துணித்தீர் - ஆயிரந்தோள் துணித்தவரே! உம்மை - உம்மை, காண - காண்கைக்கு, நீர் - நீர், இரக்கமிலீர் - இரக்கமில்லாமையாயிராநின்றீர். இவள் ஆசைப்பட்டாலும் பசையில்லை, உம்முடைய இரக்கமிறே காட்டுவதென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், வாணனுடைய தோள்களைத் துணித்து அநிருத்தாழ்வானுக்கு உதவின நீர் இவளுக்கு இரங்காதொழிவதே! என்கிறாள்.

[வாணுதல்]-இவள் அவயவஶோபை, போகஹேதுவாகை யன்றிக்கே நைகைக்கு உறுப்பாவதே! பெற்றவளுக்கு ஆகர்ஷகமாயிருக்கிற இது உமக்கு அநாதரஹேதுவாவதே! "ஐயம்ஸீதா" -[இம்மடவரல்] - மடப்பம் வந்திருக்கை. மடப்பத்தை யுடையவள். மடப்பத்தை வரவாறாக வுடையவள். "ஊஷ்ரம் க்ருதவாநாஸௌ ஹீநோயநயா வ்யஹ: | பாராயத்யாத்மநோதேஹம் ஶோகேநாவஸீதி" பெண்மையாலே ம்ருதுஸ்வபாவை, பிரிவில் பாடாற்றமாட்டாதவள், முன்பு உம்மைப் பிரிந்த ம்ருதுஸ்வபாவைகளளவோ இவள்? [உம்மைஇத்யாதி] - பிரிந்தார்க்கு தரிக்கவொண்ணாத உம்மை இவளையறியாதொழிந்தால் உம்மையறியாதொழிய வேணுமோ? உம்மை நீர் கண்ணாடிப்புறத்திலுங் கண்டறியீரே. [காணுமாசையுள்] - உம்மைக்கிட்டியணைக்கவோ ஆசைப்படுகிறது? ஒருகால் காணவன்றோ? [நைகின்றாள்]-வாடுகைதான் தேட்டமாம்படி யாயிற்று. "ஸாவாஹநாம்ஷ்ச்வஸத்ப்ராம் வ்யஸநாநாமகோவிதா" ப்ரபல ப்ரதிபந்தகமுண்டானால் வரப்போமோ? என்னில், - [விறல் இத்யாதி] - வாணனுடைய பாஹுவநத்திலும் பரப்புண்டோ இவள் விரோதி? விறல் - வெற்றி. ஆணாகவும் பேராணாகவும் வேணுமோ? பெண்ணாய் ப்ரணயிநியானலாகாதோ? [உம்மைக்காண] – உம்மைக் கிட்டவோ? ஸதா தர்ஶநம் பண்ணவோ? ஒருகால் காணவன்றோ ஆசைப்பட்டது? [நீரிரக்கமிலீரே] - "நைநவஷம்ஶாந்" என்கிறபடியே நீர் ஈடுபடுகை தவிர்ந்தால் ஸாமாந்யமான இரக்கமும் போகவேணுமோ? 'இவள் நைவும் தெளிவும் பெற்றுக்கடி' என்றிருக்கிறிலள், 'அவரிரக்கமே' என்றிருக்கிறாள்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. நடுவே வாடுமித்தனையேயோ வேண்டுவது? விரோதி கிடக்கச்செய்தே யன்ன, பாணனுடைய பாஹுவநத்திலும் ப்ரபலமோ இவள் விரோதி? என்கிறாள்.

[வாணுதல்] - இவ்வவயவசோபை போகஹேதுவாகை யன்றிக்கே, நைகைக்கு உறுப்பாவதே! பெற்ற எனக்கு ஆகர்ஷகஹேதுவான இது, கைப்பிடித்த உமக்கு அநாதரஹேதுவாவதே. "ஐயம்ஸீதாமமஸுதாஸஹதர்மசரீதவ|ப்ரதீச்சசைநாம் பத்ரம்தே பாணிம் க்ருஹ்ணீஷ்வபாணிநா" (இயம்ஸீ தாமமஸுதாஸஹதர்மசரீதவ|ப்ரதீச்ச

இரண்டாம்பாட்டு - வாணுதல் இத்யாதி. 'வாணனாயிரந்தோள் துணித்தீர்' என்றத்தைக் கடாக்ஷித்து சங்காபரிஹாரமுகேந அவதாரிகை நடுவே -இத்யாதி.

'வாணுதல் - நைகின்றாள்' என்று கூட்டி ஹாவம் - இவ்வவயவசோபை இத்யாதி. 'இம்மடவரல்' என்றவிடத்தில் 'இ' என்றத்தை, 'இரக்கமிலீர்' என்றத்தோடே கூட்டி ஹாவம்- பெற்றவெனக்கு இத்யாதி. பெற்றவர்களுக்கு ஆகர்ஷகஹேதுத்வே ஸம்வாதம் - இயம்ஸீதா இத்

சைநாம்பத்ரங்தேபாணிம்க்ருஹ்ணீஷ்வபாணிநா.) [இம்மடவரல்] - மடப்பம் வந்திருக்கையாவது - மென்மையையுடையவளாகை. பிரிந்து கலக்கப்பொருத ஸௌகுமார்யத்தை யுடையவள். பிராட்டிதசையைக் கண்ட திருவடியைப்போலே யிருக்கிறதுகாணும், இப்பெண்பிள்ளை தசையைக் கண்ட திருத்தாயார்க்கு; “துஷ்கரம் க்ருதவாந் ராம:” (துஷ்கரம்க்ருதவாந்ராம:) - இவளைப் பிரிந்து ஸமாதாநம்பண்ணியிருந்த பெருமாள் சால அரிதாகச் செய்தார். “ஹீநோ யதநயா ப்ரபு:” (ஹீநோயதநயாப்ரபு:) - இவளைப் பிரிந்து தேஹத்தைத் தரித்திருந்தா ரென்பது யாதொன்று, அது சாலஅரிதாகச் செய்தார். “ப்ரபு:” (ப்ரபு:) - ஆனைகுதிரையேறவும், நாடாளவும் கற்றுரித்தனை;ப்ரணயதாரையில் புதியது உண்டிலர். மால்யவானில் பெருமாள் இருந்தபோது மேகதர்ஶநத்திலே பட்ட பாட்டைக் கண்டு, ‘வஸிஷ்டஶிஷ்யன் ஒரு ஸ்த்ரீநிமித்தமாக இப்படிபடுவதே!’ என்று கர்ஹித்துச் சிரித்திருந்தான் விரக்தனுகையாலே ; இப்போது ‘இவளைப் பிரிந்து தேஹத்தைத் தரித்துக்கொண் டிருப்பதே!’ என்கிறுனயிற்று விஶேஷஜ்ஞனுகையாலே. “தாரயத்யாத்மநோ தேஹம்” (தாரயத்யாத்மநோதேஹம்) - இது ஏதேனும் இரவ

யாதி. பாலகாண்டே ராமம்ப்ரதி ஜநக:. “இயம், ஸத்ருஶே” என்கிற பதங்களாலே ஆகர்ஷகத்வம் ஸூசிதம். ஜநகராஜன் பிராட்டியுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து “இயம்ஸீதா” என்றாற்போலே, திருத்தாயாரும் பெண்ணினுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து ‘இம்மடவரல்’ என்கிறு ளென்றபடி. மேன்மை - மார்த்தவம். விவரணம் - பிரிந்து இத்யாதி. பாட்டையெல்லாம் பராமர்ஶித்து அருளிச்செய்கிறூர் - பிராட்டிதசையை இத்யாதி. அதாவது - பிராட்டி வைலக்ஷண்யத்தைக் கண்ட திருவடிக்கு, ‘இவளை விஶ்லேஷித்திருக்கிற பெருமாள் அதிஸாஹஸம் பண்ணினுர்’ என்று தோற்றினுற்போலே இவளுடைய அவயவஶோபையையும் ஸௌகுமார்யத்தையும் அநுஸந்தித்த திருத்தாயார்க்கு ‘ஈஶ்வரன் ஸாஹஸப்ரவ்ருத்திகன்’ என்று தோற்றியிருக்கிற தென்றபடி. ‘அப்படி திருவடி, பெருமாளை வெறுத்தானே? என்ன, துஷ்கரம் இத்யாதி. ஸுந்தரகாண்டே பஞ்சதஶே ஸீதாம்த்ருஷ்ட்வா ஹநுமத்விசார:. “துஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யதநயா ப்ரபு: । தாரயத்யாத்மநோ தேஹம் ந ஶோகேநாவஸீததி”. விஶ்லேஷமே துர்க்கடமென்கிற அபிப்ராயேணுஹ - இவளைப்பிரிந்து இத்யாதி. இருந்த - தரித்திருந்த. “ப்ரபு: - ராஜா. அநயா ஹீநஸ்ய - ஸ்வதேஹம் தாரயதீதி யத், தத் துஷ்கரம் க்ருதவாந்” இத்யந்வயமுகேந ஹாவம் - இவளைப்பிரிந்து தேஹத்தை இத்யாதி; “தாரயதி” என்றதிலே நோக்கு. ‘தைவ க்ருதமான விஶ்லேஷத்துக்கு அவர் என் செய்வர்?’ என்றிருக்கையாலே, “ஹீந:” என்று குற்றஞ்சொல்லுகிறுனல்லன்; “தாரயதி” என்று குற்றஞ் சொல்லுகிறு னென்றபடி. ப்ரணய இத்யாதி - இத்தனைநாளும் “ப்ரணயி” என்று ப்ரமித்திருந்தோம்; ப்ரணயிகள்படியன்றிக்கே, பிரிந்து தரித்திருக்கையாலே ப்ரணயியல்லர்; கேவலம் ப்ரபுவென்றபடி. புதியதுஉண்டிலர் - ஏகதேஶமும் அநுபவித்திலர். புதியதுண்கை - ஏகதேசாநுபவம். “மாநவம் ஸீதா ந்த்ருஷ்டா ஹ்ருஷ்ட ஸ்வைவ நஸ்ஸ்வ:” என்கிற மேல் ஶ்லோகத்தில், “ததா” என்றதிலே நோக்காக ஹாவம் - மால்யவானில் இத்யாதி. இப்போது இவளைக் கண்டு இப்படிச் சொல்லுகையாலே, இவளைக்காணுமையாலே மால்யவானிலே கர்ஹித்தது அர்த்தஸித்தம்; “ஸோ விவ்யதே ந:” என்றதே இதுக்கு நியாமகம். “ஹீந:” என்று விஶேஷித்ததுக்கு ஹாவம்- இது ஏதேனும் இத்யாதி. இரவலுடம்போ - பிராட்டிக்குப்போலே பரதந்த்ரமான உடம்போ?

லுடம்போ சுமந்துகோண் டிருக்கைக்கு. ஹோமாயதநமன்றே? து:க்காயதநமோ இது? ‘பிரிந்தால் ‘க்ரமத்திலே கூடுகிறோம்’ என்று யரித்திருக்கவல்லளல்லளே. [உம்மை] - ‘இவள்படியன்றே உமக்கு உபதேசிக்கவேண்டுவது; உம்மை நீர் அறியாமையில்லையே; ‘நம்மைப் பிரிந்தார் பிழையார்கள்’ என்று இருக்க வேண்டாவோ? [வாணுதலிம்மடவரலும்மை] - “துல்யஶீலவயோவ்ருத்தாம்” (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்னும்படி காணும் இருக்கிறது. [உம்மைக் காணு மாசையுள் நைகின்றாள்] - விஷயாநுரூபமாயிறே ஆசையும் இருப்பது. [காணுமாசையுள்] - உம்மோடே அணைய ஆசைப்பட்டாளோ? காட்சியிலேயும் அருமைப்படுத்துவீரோ? [நைகின்றாள்] - இவளைத் தரிப்பிக்கவேண்டா? அடியில் நிலையிலே நிறுத்த அமையும். [உம்மைக்காணுமாசையுள் நைகின்றாள்] - கடலிலே அழுந்தாநின்றாள். * ஆசையென்னும் கடலிறே. வாடுகைதான் தேட்டமாம்படியாயிற்று [விறல்வாண னாயிரந்தோள் துணித்தீர்] - ‘நையும்இதுவேயோ வேண்டுவது, ப்ரதிபந்தகங் கிடக்க?’ என்றே நீர் சொல்லுவது பாணனுடைய பாஹுவநத்தில் பரப்புண்டோ இவளுடைய விரோதிவர்க்கம்? உஷாநிருத்த வடகரன்றே நீர். பேரனுமாய்

---

இரவல் - பரதந்த்ரம். பாரதந்த்ர்யத்தாலே இப்பிராட்டிக்கு தேஹதாரணம் கூடும், அப்படி இவர் பரதந்த்ரரன்றே தேஹத்தை தரித்திருக்கைக் கென்றபடி. “நவாஸ்யோதா” இத்யாதி. “நவ ஸ்வதேஹ” இத்யாதி. “தேஹம்” என்றதுக்கு பாவம் - போகாயதநம் இத்யாதி. “போகாயதநம் - ஶரீரம்” என்று ஶரீரலக்ஷணம். து:காயதநமோ - து:கைகாயதநமோ? ஆனல் இவர் ப்ருகுபதநாதிகளைப் பண்ணவோ அடுப்பதென்ன, அங்ஙனல்ல வென்கிறார் - நஶோகேநாவஸீததி என்று. இதுவேயிறே ப்ரணயித்வத்துக்குச் சேர்ந்தது; அது ப்ரணயித்வத்துக்குச் சேராதென்றபடி. நிருச்ச்வாஸதைபோலே யாகவேணு மென்று தாத்பர்யம். “க்ரமஶ:” என்றதுக்கு பாவம் - பிரிந்தால் இத்யாதி; ‘மடவரல்’ என்றதுக்கு ஶப்தார்த்தமாதல். விசேஷணமிடாமல் கேவலம் ‘உம்மை’ என்றதுக்கு பாவம் - இவள்படி இத்யாதி. அதாவது - ‘வாணுதலிம்மடவரல் - நைகின்றாள்’ என்று இவள் ப்ரகாரமே யன்றோ உமக்குச் சொல்ல வேண்டுவதென்கை. அறிந்தாலோ வென்ன, நம்மை இத்யாதி. இவ்வாக்யத்துக்கு அடியிலே - ஆகையாலே யித்யத்யாஹார்யம். கீழே, இருவர்வைலக்ஷண்யத்தையும் பார்த்தாலும் வரவேணு மென்றொரு தாத்பர்யம் அருளிச்செய்து, இருவர் வைலக்ஷண்யத்துக் கீடாகவும் இவளுக்கு ஆசைகனக்கப்பிறந்ததென்ற பாவாந்தரம் - துல்யஶீல இத்யாதி. ஸுந்தரகாண்டே ஸீதாம்த்ருஷ்ட்வா ஹநுமாந்; “துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் | ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா.” விஷயாநுரூப மென்றதுக்கு ‘உம்மை’ என்றதிலே நோக்கு. ‘காணும்’ என்றதிலே நோக்காக பாவம் - உம்மோடே இத்யாதி. அடியில் நிலையிலே - ‘வாடிவாடும்’ என்கிற நிலையிலே. ‘உள்’ என்கைக்கு - ஆசை அகாதமாயிருக்குமோ? என்ன, கடலிலே இத்யாதி. ஆசையைக் கடலென்னலாமோ? என்ன, ஆசையென்னும் இத்யாதி; பெரியதிருமொழி. ஆசையென்னுங்கடலில் வீழ்ந்து இங்கயர்த்தோம் - ‘உம்மைக்காணவேணும்’ என்கிற ஆசையாகிற கடலிலே புக்கு அகப்பட்டு அறிவுகெட்டோ மென்கை. ‘அடியில் நிலையிலே’ இத்யாதிக்கு விவரணம் - வாடுகைதான் இத்யாதி. ‘விறல்வாணன்’ இத்யாதிக்கு அவதாரிகாபூர்வகமாக பாவம் - நையுமிதுவேயோ இத்யாதி. விறல் - மிடுக்குடை. வாணனுடைய பாஹுவநத்தில் இத்யாதி வாக்யம் - ஸ்வாபதேஶார்யாபதேஶ ஸாதாரணம். இப்படி நைகிறவர்களுக்கு ஆருக்குதவினே மென்ன, உஷாநிருத்த இத்யாதி. இது - தாத்பர்யாந்தரம். இத்தைச் சொல்லுகிறவளுடைய ஹார்த்த பாவம் - பேரனுமாய் இத்யாதி. ஸ்வாபதேசத்திலே பாவம் - கரு,

---

* பெரியதிருமொழி - ச - க - ரு.

ஆணுமாகிலோ உதவலாவது; உம்மோடே கலந்த அபலைக்கு உதவலாகாதோ? [உம்மைக்காண] – கருமுகைமாலை தேடுவோர் சூடவிறே தேடுவது? சும்மாட்டைக்கொள்ள வல்லவிறே ; இவ்வஸ்துவை ஆசைப்படுவோர் படுவது காட்சிக்காகவாயிற்று. "அழைப்பன்திருவேங்கடத்தானைக் காண", "காரார்திருமேனி காணுமளவும்" ; இவர்தாமும், "கண்களாற்காணவருங்கொலென்று" உம்மை இவள் காண்கைக்கீடாக நீர் இரக்கத்தையுடையீராகிறிலீர். [நீரிரக்கமிலீரே] - "ஹெநவஷ௦ஸாநு" (நைவதம்ஸாந்) என்கிறபடியே நீர் நோவுபடுகை தவிர்ந்தால், ஸாமாந்யமான இரக்கமும் போகவேணுமோ? 'இவள் நைவு பேற்றுக்கு உபாயமல்ல ; அவனிரக்கம் பேற்றுக்கு ஸாதநம்' என்று காணும் திருத்தாயார் இருக்கிறது. 'இவள்நைவு அவனிரக்கத்துக்குப் பரிகாரம், அவனிரக்கம் பேற்றுக்கு ஸாதநம்' என்றிருக்கிறாள். "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்" (தஸ்யைஷஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்) என்று, தானே காட்டக்காணுமித்தனையிறே. (உ)

# மூன்றாம்பாட்டு.

இரக்கமனத்தோடு எரியணை
அரக்குமெழுகு மொக்குமிவள்
இரக்கமெழீர் இதற்கென்செய்கேன்?
அரக்கனிலங்கை செற்றீருக்கே.

ஆ.—(இரக்கமனத்தோடு.) அவஸந்நமான மநஸ்ஸையுடையளாய் எரியணை அரக்கும் மெழுகும்போலே விரஹாக்நியாலே தஹ்யமானையான இவள்பக்கல் க்ருபையுங் கூடப்பண்ணுகிறிலீர்; இதற்குஎன்செய்கேன்? கெட்டேன் ஓ! கொடுமையே இது! வென்கிறாள்.

---

முகைமாலை இத்யாதி. சும்மாட்டைக்கொள்ளவல்லவிறே என்று இத்தால் பலிதம் - ப்ரயோஜநாந்தர ஸாதநத்வேநவன்றிறே யென்றபடி. இவ்வஸ்துவை இத்யாதி வாக்யத்தின் அடியிலே அப்படிபோலே யித்யத்யாஹாரः. இதுக்கு உதாஹரணம் - அழைப்பன் இத்யாதி. நாலாந்திருவந்தாதி. (நக) ஸ்பஷ்டோர்த்தः. ஸப்தார்த்தம்-உம்மை இத்யாதி. "நைவதம்ஸாநு" இத்யாதிக்கு பாவம் - ஸ்நேஹமில்லாவிட்டால் இரக்கமானாலும் வேண்டாவோ? என்றபடி. ஸாமாந்யமான இரக்கமென்றது - "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" இத்யாதியைப்பற்ற. ஸுந்தரகாண்டே ஷட்த்ரிம்ஸே ஸீதாம்ப்ரதி மாருதிः. "நைவதம்ஸாந்" இத்யாரப்ய, "நைவதம்ஸாந் ந மஸகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந் । ராகவோऽபநயேத்காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா." 'இரக்கமிலீர்' என்கிறதென்? 'நைகின்றாள்' என்கிற ப்ராவண்யம் ஸாதநமாகாதோ? என்ன, இவள்நைவு பேற்றுக்கு இத்யாதி. ஆனல் நைவுக்கு விநியோகமேது? என்ன, இவள்நைவுஅவனிரக்கத்துக்கு இத்யாதி. அவனிரக்கம் ஸாதநமென்கைக்கு ப்ரமாணம் - தஸ்யைஷ இத்யாதி. கடவல்லயாம், "நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ஸ்ருதேந । யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்யைஷ:" இத்யாதி. ப்ரவசநமென்று - மநநத்தைச் சொல்லுகிறது. மேதயா வென்று - த்யாநத்தையும், ஸ்ருதேந என்று ஸ்ரவணத்தையுஞ் சொல்லுகிறது. க்ரமேண அந்வயः.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஸ்ரீஜநகராஜன் திருமகள் திறத்து நீர் செய்த செயல்களை அநுஸந்தித்து உம்மை ஆசைப்பட்டு இவள் நோவுபடாநின்றாள்; இதுக்கு நீர் இரங்குகிறிலீர்; நான் என்செய்வேன்? என்று செயலற்றுச் சொல்லுகிறாள்.

[இரக்கமென்று தொடங்கி] - அவஸந்நமான மநஸ்ஸையுடையளாய் எரியைக் கிட்டின அரக்கும் மெழுகும் போலே வ்யஸநத்தாலே கரையாநின்றாள்.

ப.—அநந்தரம், பிராட்டிக்காக ராவணனையும் லங்கையையும் அழித்த நீர் இரங்குகிறிலீர்; இதற்குச் செய்வதென்? என்கிறாள்.

இரக்கம் - ச்லேஷோத்தரமான, மனத்தோடு - நெஞ்சோடே, இவள் - இவள், அரக்கும்-(சிக்கென்ற)அரக்கும்,மெழுகும்-(மெத்தென்ற) மெழுகும்,எரியணையொக்கும்-(அக்நிஸகாசத்தில் ஒக்கவுருகுமாபோலே) கற்பும் மடமும் கட்டுக்குலையாநின்றாள்; இரக்கமிலீர்-நீர் இரக்கந்தோற்றஇருக்கிறிலீர்; இதற்கு - இதுநிமித்தமாக, அரக்கன் - ராக்ஷஸனான ராவணனுடைய, இலங்கை - லங்கையை, செற்றீருக்கு - அழித்த உமக்கு, என்செய்கேன் - எத்தைச்செய்வேன்? இல்லாத இரக்கத்தை உண்டாக்குவோ? இவள் ஸைதில்யத்தை "த்ருதஸ்ய ஸத்ரு ஸம்ஹிவேஷ" என்றவள் நெஞ்சுபோலே சிக்கெனப் பண்ணவோ? என்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், ஒருப்ரணயிநிக்கு உதவினபடியை நினைத்து உம்மை ஆசைப்பட்டு நோவுபடாநின்றாள், நீர்இரங்குகிறிலீர்; நான் செய்வதென்? என்கிறாள்.

[இரக்கம்] - நெகிழ்ச்சியாதல், ஈடுபாடாதல், ஈரிப்பாதல். ஆற்றாமையையுடைத்தான மநஸ்ஸோடே.நீர் முகங்காட்ட நினையாவிட்டால் உம்மைப்போலே பிரியில் வலியதொரு நெஞ்சைக் கொடுக்க மாட்டிற்றிலீரோ? [எரியணையரக்குமெழுகு மொக்குமிவள்] - எரியணை என்கையாலே - தீந்துமுடிதல் வலித்தல் செய்யாதொழிகை. [அரக்குமெழுகுமொக்குமிவள்] - த்ரவத்ரவ்யங்களெல்லாங் கூடினாலும் இவளாற்றாமைக்குப் போராதென்கை. [இவள்] - நீர் குறியழியாதிருக்க, சைதில்யாம்ஸம் இவளுக்கேயாவதே! [இரக்கமெழீர்]-இரக்கமுடையீராகிறிலீர். ப்ரணயித்வம் குடிபோனால், வழிபோக்கருக்கு உண்டான அம்ஸமும் போகவேணுமோ? இப்போது உதவாமையாலே 'இரக்கமுமில்லை' என்றிருக்கிறாள். [இதற்கென்செய்கேன்] - இவளை உருகாதொழியப்பண்ணவோ? உம்மை இரங்கப்பண்ணவோ? [அரக்கனிலங்கை செற்றீருக்கே] - உமக்குஇரக்க மின்றிக்கேயொழிந்தால், இவள் இரங்குவதொன்றைச் செய்துவைக்கவேணுமோ? 'ஒருப்ரணயிநிக்கு உதவினவன் நமக்குஉதவானோ?' என்று ஈடுபடாநின்றாள். புழுக்குறித்தது எழுத்தானாற்போலே ஒன்றுவாய்த்ததைக்கொண்டு, அந்யார்த்தமென்றிராதே நோவுபடுகிறாள். அரக்கனிலங்கை செற்றீருக்கு - இவள் – இரக்கமனத்தோடு எரியணை யரக்கு மெழுகு மொக்கும், நீர் இரக்க மெழீர்; நான் இதற்கு என் செய்கேன்?

ஈடு.—மூன்றாம்பாட்டு. இன்று இச்செயல் செய்யக்கடவதாக நினைத்த நீர், அன்று உண்ணாது உறங்காது ஒலிகடலை யூடறுத்து அச்செயலை என்றிய செய்தீர்? என்கிறாள்.

---

மூன்றாம்பாட்டு - இரக்கமனத்தோடு இத்யாதி. 'அரக்கனிலங்கை' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - இன்று இச்செயல் இத்யாதி. இச்செயலென்று - இரக்கமெழாமை. உண்ணாது இத்யாதி - நாச்சியார்திருமொழி. (கக - எ) "நசோஸம்ராவஹொஹ்ஜெ", "கதி ஷ்ருஸ்த தொராஃ" இத்யாதிப்படியே ஊணும் உறக்கமும் அற்று, கோஷிக்கிற கடலை நடுவேயடைத் தென்றபடி. என்றியசெய்தீர் - எதுக்காகச் செய்தீர்?

[இரக்கம்இத்யாதி] - இரக்கம் - நெஞ்சில் நெகிழ்ச்சியாதல்; ஈடுபோடாதல் ஈரிப்பாதல். இரங்கின நெஞ்சையுடைய இவள், எரியையணைந்த அரக்கும் மெழுகும் போலே உருகாநின்றாள். அரக்கும் மெழுகும் என்கிற இரண்டையும் - நெஞ்சுக்கு ஒன்றும், இவள்தனக்கு ஒன்றுமாக்கி நிர்வஹிப்பர் பிள்ளை திருநறையூரரையர். நெஞ்சும் இவள் தனக்குக் கையடைப்பாகையாலே இவள் தனக்கே இரண்டையும் ஆக்கி அருளிச்செய்வர் பட்டர் ; “ விஷ்ணுநாஸத்ருஶோவீரே ” (விஷ்ணுநாஸத்ருஶோவீர்யே) என்கிறபடியே, எல்லாம் இவள்தன்படிக்கு த்ருஷ்டாந்தமாக வேண்டும்படியிறே இவள்தன்னிலை; அக்நிக்குள்ளே புகில் கரிந்துபோம், கடக்கஇருக்கில் வலிக்கும், அக்நிஸகாசத்திலே உருகாநிற்குமிறே ; முடிந்து பிழைக்கவும்பெறாதே, தரித்திருக்கவும் பெறாதே நோவுபடும்படி பண்ணுவீரே! இவள்தசை இது. [இரக்கமெழீர்] - ‘நீரும் இவளைப்போலே உருகவேணும்’ என்று வளைக்கிறோமோ? நொந்தார்பக்கல் பண்ணும் க்ருபையும் பண்ணுகிறிலீர். இரக்கமனத்தையுடைய ளாகாநின்றாள் இவள், நீர் இரக்க மெழுகிறிலீர் ; நீர் இரங்காவிட்டால், உம்மைப்போலே யிருப்பதொரு நெஞ்சை இவளுக்குக் கொடுத்தாலாகாதோ? [இதற்கென்செய்கேன்] - உம்முடைய இரக்க மொழிய ஏதேனும் உபாயாந்தர ஸாத்யமோ இப்பேறு? [என்செய்கேன்] – உம்மை இரங்கப் பண்ணவோ? இவளை இரங்காமற்பண்ணவோ ? [அரக்கனிலங்கைசெற்றீருக்கே] - உமக்கு இரக்கமின்றியே யொழிந்தால், இவள் இரங்குவதொரு செயலைச் செய்து வைக்கவேணுமோ? ‘ஒருப்ரணயிநிக்கு உதவினவன் நமக்கு உதவானோ’ என்று ஈடுபடாநின்றாள். புழுக்குறித்தது எழுத்தானாற்போலே ஒன்று வாய்த்ததைக்கொண்டு

---

நெஞ்சில்நெகிழ்ச்சி-க்ருபை. ஈடுபாடு-து:கம், வித்ததையாதல். ஈரிப்பு - ஸ்நேஹம். இங்கு - ஈடுபாடு வேண்டுவது. பட்டர் நிர்வாஹத்துக்குச் சேர ஶப்தார்த்தம் - இரங்கின இத்யாதி. அரையர் நிர்வாஹத்திலே, எரியணை யரக்கு ஒக்கும் இரக்கமனத்தோடு இவள் எரியணைமெழுகொக்கு மித்யந்வய:. நெஞ்சும் இவள் தனக்குக் கையடைப்பாகையாலே யென்றது - மநஸ்ஸும்: இவளுக்கு உபகரணமாய்க்கொண்டு இவளிடத்திலே அந்தர்ப்பூதமாகையாலே யென்றபடி. ஒன்றுக்கு அநேகத்ருஷ்டாந்தம் கூடுமோ? என்ன, விஷ்ணுநா இத்யாதி. ஸங்க்ஷேபே, “ விஷ்ணுநாஸத்ருஶோவீரே்யஸோமவத்ப்ரியதர்ஶந:”. “அணை” என்றதுக்கு ஹாவம் - அக்நிக்குள்ளே இத்யாதி. கரிந்துபோம் - வெந்துபோம். தார்ஷ்டாந்திகம் - முடிந்து இத்யாதி. இவ்வாக்யாதியிலே - அப்படியே இத்யத்யாஹார்யம். பூர்வார்த்தம் பராம்ருஶந்நாஹ-இவள்தசைஇதுவென்று. ‘இரக்கமெழீர்’ என்கிறவிடத்தில், ‘இரக்கம்’ என்றதுக்கு அர்த்தத்வயம் - க்ருபையாதல், ஈடுபாடாதல். க்ருபாபக்ஷமாஹ - நீரும் இத்யாதி. த்விதீயமாஹ - இரக்கமனத்தை இத்யாதி. பலிதம் - நீர்இரங்காவிட்டால் இத்யாதி. ‘இதற்கு’ என்றதுக்கு அர்த்தத்வயம் - உம்முடைய லாபத்துக் கென்னுதல், இவள்இரங்க நீர்இரங்காமலிருக்கிறதுக் கென்னுதல். ‘இரக்கமெழீர்’ என்றதின் க்ருபாபக்ஷத்திலே ஹாவம் -உம்முடையஇரக்கம் இத்யாதி. உபாயாந்தர ஸாத்யமோ ? என்றது - “ நாயமாத்மா ” இத்யாதிவைப்பற்ற. ‘ஈடுபாடு’ என்ற த்விதீயபக்ஷத்துக்குச் சேர ஹாவம் - உம்மைஇரங்க இத்யாதி. இவளைஇரங்காமற்பண்ணவோ விதி - “ ஶமௌ தஸ்வஸ்ஸம்க்ஷயணம் கூர்தா” இத்யாதிவ ஷிதிஹாவ:. தாத்பர்யார்த்தம் - உமக்குஇரக்கம் இத்யாதி. அரக்கனிலங்கை செற்றது இவளிரக்கத்துக்கு எப்படி ஹேது? என்ன, ஒருப்ரணயிநிக்கு இத்யாதி. உதவினவன் - உபகரித்தவன். ப்ரணயிநிக்குஉதவின செயலுக்குஈடுபட ப்ராப்தமன்றோ வென்ன, புழுக்குறித்தது

'அதுஅங்யார்த்தம்' என்று இராதே நோவுபடாநின்றாள். அரக்கனிலங்கைசெற்றீருக்கு - இரக்கமனத்தோடு - இவள் - எரியணையரக்கு மெழுகுமொக்கும்; இரக்கமெழீர் ; இதற்கென்செய்கேன் என்று அங்வயம். (௩.)

## நான்காம்பாட்டு.

இலங்கைசெற்றவனேயென்னும் பின்னும்
வலங்கொள்புள்ளுயர்த்தாயென்னும் உள்ளம்
மலங்கவெவ்வுயிர்க்கும் கண்ணீர்மிகக்
கலங்கிக் கைதொழும்நின்றிவளே.

ஆ.—(இலங்கை.) இப்படி நான் அவனுடைய கொடுமையை நினைத்து "இலங்கைசெற்றீர்" என்று சொல்லுமளவில், தான் அத்தைக்கேட்டு அவனுடைய ப்ரணயித்வத்தையே நினைத்து, இலங்கைசெற்றவனே யென்னும்; பின்னையும், பெரியதிருவடிமேலே ஏறியருளி வந்து தோன்றாயென்னும்; என்றால் அப்போதே வரக்காணாமையாலே உள்ளம்மலங்க வெவ்வுயிர்க்கும்; கண்ணீர்மிகக்கலங்கி இவள் நின்று கைதொழாநிற்கு மென்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், ராமவ்ருத்தாந்தத்தை நான் சொல்லக்கேட்டுச் சிறிது தரித்தஇவள், பின்னையுந் தன் ஆற்றாமையாலே அலற்றுவது தொழுவதாகாநின்றாளென்கிறாள்.

[வலங்கொளென்று தொடங்கி] - நினைத்தவிடத்திலே கொடுவரவல்ல பெரிய திருவடியை வாஹநமாக வுடையவனே! என்னாநின்றாள். [உள்ளம் மலங்கவென்று தொடங்கி] - வருகைக்கு ஒரு தட்டின்றிக்கே யிருக்க அவன் வாராமையாலே ஹ்ருதயம் கலங்கும்படி நெடுமூச்செறியும், கண்ணீர் மல்கும்படியாகத் தான் நோவுபட்டு வருந்தி விழித்துத் தன்னுடைய நோவு வாயாற்சொல்லமாட்டாமையாலே தன்கருத்தைக் கைதொழுகையாலே ஆவிஷ்கரியாநின்றாள். இவளே யென்றது – தன்னைப்பிரிந்தார் இப்பாடு படும்படி விலக்ஷணை யென்று கருத்து.

ப.—அநந்தரம், நாட்டுக்கு உதவினபடியைச் சொல்லி க்லேஶியாநின்றாளென்கிறாள்.

இவள் - இவள், பின்னும் - (முன்புத்தை க்லேஶத்தளவன்றியே) பின்னையும், இலங்கை-(மாலிப்ரப்ருதிகளிருந்த) லங்கையை, செற்றவனே - செறுத்தவனே! என்னும்- என்னும்; (அதுக்குஉறுப்பாக), வலங்கொள் - பலவானான, புள் - பெரியதிருவடியை, உயர்த்தாய் - வாஹநமும் த்வஜமுமாகவுடையவனே! என்னும் - என்னும்; (அப்படி

---

இத்யாதி. அதாவது - 'குணக்ஷரங்யாயத்தாலே செய்தசெயல்' என்றும், 'அது ஸஹ்ருதயமாகிலும் அர்யார்த்தம் என்றும் அறியாதே நோவுபடாநின்றாளித்தனையொழிய ப்ரணயிநிக்காகச் செய்த செயலன்றென்றபடி. அது - ஒருத்திக்கு உதவினது. அர்யார்த்தம் - அபலைகளை நோவுபடுத்துகைக்காகச் செய்த செயல். பட்டர்நிர்வாஹத்திலே அங்வயம் - அரக்கனிலங்கை இத்யாதி. (௩.)

தனக்குவந்துதோற்றுமையாலே), உள்ளம்மலங்க - நெஞ்சு அலமாக்கும்படி, வெவ்வுயிர்க்கும் - வெவ்விதாக மூச்சுவிடும்; கண்ணீர் - கண்ணீரானது, மிக - மேலிட, கலங்கி-அறிவு சலங்கி, நின்று - (வருகிறுனை) நினைத்து, கைதொழும் - அஞ்சலிபண்ணுகிற்கும்.

இ.—நாலாம்பாட்டில், முன்புள்ளார்க்கு உதவின படியைச் சொல்லிக் கூப்பிட்டு, அப்படிப்பட்டவன் தனக்குஉதவாமையாலே நோவுபடாநின்றாளென்கிறாள்.

[இலங்கை செற்றவனே யென்னும்]– சேஷபித்துத் திருத்தாயார் 'இலங்கை செற்றீருக்கே' என்றாள்; அத்தைப்பொறுதே, ஒருத்திக்காக மார்விலே அம்பேற்ற மஹோபகாரகனே! என்னுநின்றாள். முன்னம் தனக்கு உதவினவன் இப்போது தனக்கு உதவாதொழிந்தாற்போலே கூப்பிடாநின்றாள். கடலடைக்கவேணுமோ? அம்பேற்கவேணுமோ? என்பக்கல் வரும்போது என்ன ப்ரதிபந்தக முண்டு? [பின்னும்இத்யாதி] - பலத்தையுடைய பெரியதிருவடியைக் கொடியாகவுடையவ னென்னுதல், அவனாலே வஹிக்கப்பட்டவ னென்னுதல்; கொடியென்றபோது - தூரத்திலே கண்டபோதே ஆர்த்தி தீரும்படி வருகையும், விரோதிகளை அழியச்செய்துகொடு வருகையும்; வாஹநமானபோது - நினைத்தவிடத்தே கொடுவர வல்லனுகையும். [உள்ளம் மலங்க வெவ்வுயிர்க்கும்] - ஆபத்து மிக்கவிடத்தே ஆனைக்குஉதவினாற்போலே வருகைக்குத் தட்டின்றியேயிருக்க, வாராமையாலே ஹ்ருதயங்கலங்கி நெடுமூச்செறியாநின்றாள்; "ஓஹஸீதிவ". [கண்ணீர்மிக] - உள்ளம் நெடுமூச்சாய்க் கழிந்து கழியாதது கண்ணீராய்க் கழிகிறபடி. [கலங்கிக்கைதொழும்] - ப்ரணயிநி கைதொழுவது கலங்கியிறே. [நின்று]-கைதொழுகை மாறுதொழிகை. [இவள்] - தொழுவித்துக்கொள்ளக்கடவ இவளிறே தொழுகிறாள்.

ஈடு.—நாலாம்பாட்டு. 'அரக்கனிலங்கைசேற்றீர்' என்கிறஇது நியதஸ்வபாவமன்றுகாண், காதாசித்கங்காண்' என்றாள் திருத்தாயார்; அதுபொறுக்கமாட்டாமை, அதுதன்னையே சொல்லுகிறாள்.

[இலங்கைசேற்றவனேயென்னும்] - எனக்குப் பண்டேயுதவி உபகரித்தவனே! என்னுநின்றாள். முன்பு தனக்குஉதவினவன் இப்போது தனக்கு உதவாதொழிந்தாற்போலே கூப்பிடாநின்றாள். கடலடைத்தல், மலையெடுத்தல், அம்பேற்றல் செய்யவேணுமோ? என்பக்கல் வரும்போது என்ன ப்ரதிபந்தகமுண்டு? திருத்தாயார் இவள்

---

நாலாம்பாட்டு - இலங்கை இத்யாதி. 'இலங்கைசெற்றவனேயென்னும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - அரக்கன் இத்யாதி. கீழ்ப்பாட்டிலே 'புழுக்குறித்தது எழுத்தானாற்போலே' என்கிற வாக்யத்துக்கு உத்தரமாயிருக்கிறது - 'இலங்கைசெற்றவனே' என்கிற பதமென்று ஸங்கதி. 'அர்த்தவாக்யத்திலே நியதஸ்வபாவமன்று' என்று திருத்தாயார்சொன்னது பொறுமல், அது நியதஸ்வபாவமென்கிறுளென்றபடி. 'இலங்கைசெற்றவனே' என்ற ஏவகாரத்தாலேயாதல், 'இலங்கைசெற்றவனே' என்று இத்தையே நிரூபகமாகச்சொல்லி ஸம்போதிக்கையாலேயாதல் - நியதஸ்வபாவ மென்கிற தென்றபடி.

பிராட்டிதானாக விவக்ஷித்து பாவம் - எனக்குப் பண்டே இத்யாதி. விவரணம் - முன்பு இத்யாதி. 'அன்றிக்கே பிராட்டிக்குஉதவினவன் எனக்குஉதவானோ?' என்று விவக்ஷித்துத் தாத்பர்யாக்தரம் - கடலடைத்தல் இத்யாதி. மலையெடுத்தல் - கடலடைத்தலென்று அந்வயிப்பது; மலையாலே கடலடைத்த லென்றபடி. இத்தாத்பர்யத்தால் பலிதம் - திருத்தாயார் இத்யாதி.

விடுகைக்குச் சொன்னதுதானே அவளுக்குப் பற்றுகைக்கு உடலாய்விட்டது. [பின்னும் இத்யாதி] - அதுக்குமேலே; விடாயர்இருந்தவிடத்தே சாய்கரகம்போலே உயரவைத்துக் கோண்டுவந்துகாட்டும் பரிகரமுடையவனே யென்னுநின்றாள். மிடுக்கையுடைய புள்ளை த்வஜமாகவுடையவ னென்னுதல்; அன்றியே; புள்ளாலே வஹிக்கப்பட்டவ னென்னுதல். கோண்டுவருகைக்குப் பரிகரமுண்டாயிருக்கச்செய்தே வரக்காணாமையாலே, மநஸ்தத்த்வம் வேர்பறியும்படி நெடுமூச்செறியாநிற்கும்; "தஹந்தீமிவநிஶ்வாஸைர்வ்ருக்ஷாந்பல்லவதாரிண:" (தஹந்தீமிவநிஸ்வாஸைர்வ்ருக்ஷாங்பல்லவதாரிண:) என்னுமாபோலே. [கண்ணீர்மிக] - நெடுமூச்சாய்ப் புறப்பட்டு, புறப்படாதது கண்ணீராய்ப் புறப்படாநின்றது. [கலங்கிக்கைதோழும்] - தெளிந்திருந்து தோழுமதில்லையிறே ப்ரணயிநி. [இவளே.] - அவன் தோழும்படியான வேண்டற்பாடுடைய தான் தோழாநின்றாள். (ச)

## ஐந்தாம்பாட்டு.

இவளிராப்பகல்வாய்வெரிஇத் தன
குவளையோண்கண்ணநீர்கோண்டாள் வண்டு
திவளுந் தண்ணந்துழாய்கோடீர்என
தவளவண்ணர் தகவுகளே.

**ஆ.**—(இவள்.) "இலங்கைசெற்றவனே" என்றும், "வலங்கொள் புள்ளுயர்த்தாய்" என்றும் இப்படி இராப்பகல் வாய்வெருவி; தனகுவளையொண்கண்ணநீர்கொண்டாள்; இப்படி தயநீயதசைவரச்செய்தேயும் வண்டுதிவளும் தண்ணந்துழாய் கொடுக்கிறிலீர்; பரமகாருணிகரான உம்முடைய காருண்யம் இருக்கும்படி இதுவோ? என்கிறாள்.

---

இப்படி பாவத்வயமாதல்; 'எனக்குப்பண்டே' இத்யாரப்ய, நாலுவாக்யமும் - நாலு தாத்பர்யமாதல். திருத்தாயார்விடுகைக்குச் சொன்னதுதானே யிதி - 'அது அதந்யார்த்தம்' என்று - 'அபலைகளை நோவுபடுத்துகைக்காகச் செய்தது' என்று சொன்னதுதானே, அபலைகளுடைய ரக்ஷணார்த்தமாகச் செய்த செயலென்ற உக்திபோலே ஆதாரஹேதுவாய்விட்டதென்றபடி. புள்ளுயர்த்தாய் - புள்ளைஉயர்த்தவன், புள்ளாலே வஹிக்கப்பட்டவ னென்றும். த்விதீயார்த்தத்திலே பாவம் - அதுக்குமேலே இத்யாதி. சாய்கரகம் - தண்ணீர்ப்பந்தலிலே உயரவைத்துச் சாய்க்கிற கரகம். கீழ்வாக்யத்தோடே கூட்டி மேல்வாக்யத்துக்கு அர்த்தம்-கோண்டுவருகைக்கு இத்யாதி. உள்ளம் - மநஸ்தத்த்வம். மலங்கி - வேர்பறியும்படி. வெவ்வுயிர்க்கும் - வெவ்விதாம்படி உயிர்க்குமென்று - ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி த்ருஷ்டாந்தம் - தஹந்தீ இத்யாதி. ஸுந்தரகாண்டே ஸீதாம் த்ருஷ்ட்வா ஹநுமாந், "ஸஜாதபிவஶோகாநாநு:வஸ்யாஸ்திவஹிதாம்" இத்யுத்தரார்த்தம். உயிர்க்கை - மூச்சுவிடுகை. ஶுஷ்கமானத்தையிறே அக்நி தஹிப்பது, அங்ஙனல்லவிறே இதினுடைய கொடுமை யென்கிறான், பல்லவதாரிண: என்று. கண்ணீராய்ப் புறப்படாநின்றது - மநஸ்தத்த்வ மென்றபடி. 'உள்ளம்மலங்க' என்றதுக்கு - மலங்கியென்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - நெடுமூச்சாய் இத்யாதி. 'மலங்க' என்கிற நிர்த்தேஶஸ்வாரஸ்யத்தைப்பற்ற நெஞ்சை தாஹகர்மமாக விவக்ஷித்து, "தஹந்தீவ்ருக்ஷாந்" என்று - கர்மகர்த்த்ருநிர்த்தேஶவத்தான வாக்யத்தை உதாஹரித்தார் கீழ்; கண்ணீருக்கு உள்ளம் மலங்குகையே ஹேதுவாக விவக்ஷிக்கவேண்டுகையாலே, அது இரண்டுக்குமொக்குமென்று திருவுள்ளம்பற்றி யோஜநாந்தரம் அருளிச்செய்தார் இங்கு. 'கலங்கி' என்ற விசேஷணத்துக்கு பாவம் - தெளிந்து இத்யாதி. 'இவளே' என்ற ஸ்வரத்துக்கு பாவம் - அவன் தோழும்படியான இத்யாதி. வேண்டற்பாடு - பெருமை. நின்று - கைதொழுகை மாறாதே நின்று. இவள் - பின்னும் - இலங்கை செற்றவனே யென்னு மித்யாரப்ய, நின்று - கைதொழு மித்யந்வய:. (ச)

ஒ.—அஞ்சாம்பாட்டில், இப்படி துர்தஶாபந்நையான இவள்பக்கல் தயை பண்ணுகிறிலீர்; இங்ஙனேயோ உம்முடைய தயாவத்தை இருக்கும்படியென்று உபாலம்பிக்கிறாள்.

[இவள் இராப்பகல் வாய்வெரீஇ] - இப்படி அவஸந்நையான இவள் இரவும் பகலும் வாய்வெருவி. [தனகுவளையொண்கண்ணநீர் கொண்டாள்] - சோகத்துக்கு அநர்ஹமாய்க் குவளைப்பூப்போலே யிருக்கிற தன்னுடைய கண்கள் ஶோகஜமான அஶ்ருவாலே பூர்ணமாயிற்று. [வண்டென்றுதொடங்கி] - இவளுக்கு நிரதிஶயபோக்யமான திருத்துழாயைக் கொடுத்து ஆஶ்வஸிப்பிக்கிறிலீர். உம்முடைய பரது:காஸஹத்வம் இவள் பக்கலிலே கண்டோமிறே. திவளும்-படியும்.

ப.—அநந்தரம், சுத்தபாவரான உம்முடைய ஸ்வபாவம்இருந்தபடி யென்? என்கிறாள்.

இவள் - (விலக்ஷணையான) இவள், இராப்பகல்-இரவோடு பகலோடு வாசியற, வாய்வெரீஇ - (திருத்துழாயை) வாய்வெருவி, (அது கிடையாமையாலே), தன - தன்னுடைய, குவளை - நெய்தல்போலே, ஒண் - அழகியவான, கண் - கண்களிலே, நீர் - சோகாஶ்ருவை, கொண்டாள் - உடையளானாள்; வண்டு - வண்டுகள், திவளும் - (மதுபாநம் பண்ணி ரஸாயநஸேவை பண்ணினாரைப்போலே படிந்து) ஒளிவிடும்படியான, தண்ணந் துழாய்-திருத்துழாயை, கொடீர் - கொடுக்கிறிலீர்; தவளவண்ணர்-(ஆஶ்ரிதவிஷயத்தில்) சுத்தஸ்வபாவரான உம்முடைய, தகவுகள் - க்ருபாதிஸ்வபாவங்கள், என-என்னென்னவா யிருக்கின்றன? வாய்வெருவினதற்கு இரக்கமற்று, கண்ணநீர்க்கு இரக்கமற்று, 'இவளுக்குக்கொடுக்கவேணும்' என்று இரக்கமற்று, வண்டுகளுக்குக் கொள்ளைகொடுத்தது என்ன ஸ்வபாவம்? என்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், இப்படி துர்தஶாபந்நையான இவள்பக்கல் தயை பண்ணுகிறிலீர்; உம்முடைய தயாவத்தை இருந்தபடியென்? என்று உபாலம்பிக்கிறாள்

[இவளிராப்பகல் வாய்வெரீஇ] - "ஸுதிஷ்டு ஸுதுதத்ரா:" என்கிறபடியே அத்தலையிலே யுண்டாக ப்ராப்தமானவையெல்லாம் இங்கேயாயிற்று. இரவொடு பகலொடு வாசியற இடைவிடாதே வாய்வெருவாநின்றாள். வாய்வெரீஇ - வாய்வெருவி. அவதாநம் பண்ணிச் சொல்லுகிறதொன்றுமில்லை, வாஸநையே உபாத்யாயராகச் சொல்லுகிற இத்தனை. [தனகுவளையொண்கண்ணநீர்கொண்டாள்] - ஆநந்தாஶ்ரு ப்ரவஹிக்கக்கடவ கண் ஶோகாஶ்ரு ப்ரவஹியாநின்றது. தனக்கு அஸாதாரணமாய், குவளைபோலேயாய், அவ்வளவன்றிக்கே விலக்ஷணமான கண்கள் நீராலே நிரம்பிற்று. நம்மைச்செய்யச்சொல்லுகிறதென்? என்ன, [வண்டுஇத்யாதி] - விரஹத்துக்குஇளையாமையாலே செவ்விமாறுதலாயிருக்கிற தோளின்மாலையைக் கொடுக்கிறிலீர். வண்டுகள் கண்ணிலே என்னகண்ணநீரைக் கண்டு கொடுத்தீர்? [திவளும்] - படிந்து ஒளிவிடாநிற்கை. இதஸ்ததஸ்ஸஞ்சரிக்கை யென்றுமாம். [தவளவண்ணர்] - சுத்தஸ்வபாவர். நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிருக்கை. [என] - "என்னென்பின - எங்கேபோயிற்று?" என்னும் பிள்ளான்; 'நாட்டிலே இப்படி ருஜுக்களுமாய்ப் பரது:காஸஹிஷ்ணுக்களுமாயிருப்பார் சிலர் தார்மிகர் நடையாட, அபலைகளுக்கு அழகிதாக ஜீவிக்கலாம் என்பர் பட்டர். [தகவுகளே] - தயநீயவிஷயங்கள் பலவாகையாலே தயையும் பலவாயிருக்கை.

ஈடு—அஞ்சாம்பாட்டு. இவள் இப்படி க்லேசிக்கிறவிடத்திலும் வரக்காணாமையாலே, நிர்த்தய ரென்கிறாள்.

[இவள்இராப்பகல்வாய்வேரீஇ] - "ஸீதேதிமதுராம்வாணீம்வ்யாஹரந்ப்ரதிபுத்யதே" (ஸீதேதிமதுராம்வாணீம்வ்யாஹரந்ப்ரதிபுத்யதே) என்று - வாய்வெருவுவான் அவன்கிடீர். "அநித்ரஸ்ஸததம்ராம:" (அநித்ரஸ்ஸததம்ராம:) - நித்ரையோடே காலக்ஷேபம்பண்ணவேண்டும் செல்வுடையவர், ஸததம்அநித்ரராயிருப்பர். "ஸுப்தோபிச" (ஸுப்தோபிச) - "ஸததமநித்ர:" (ஸததமநித்ர:) என்றுவைத்து, "ஸுப்தோபிச" (ஸுப்தோபிச) என்கிறது - பராகர்த்தாநுஸந்தாநாபாவத்தைப் பற்ற. "நரோத்தம:" (நரோத்தம:) - அபிமதவிச்லேஷத்தில் இங்ஙனே யிருக்கை போலே - புருஷோத்தமத்வமாவது. [இராப்பகல்] - போய்நின்றஞானந் தொடங்கி இவ்வளவும் வாய்வெருவின இத்தனைகாணும். [வாய்வேரீஇ] - வாய்வெருவி. அவதாநம் பண்ணிச் சொல்லுகிற தோன்றுமில்லை, வாஸநையே உபாத்தியாயராகச் சொல்லுகிற இத்தனை. [தனகுவளையொண்கண்ணநீர்கொண்டாள்] - [தன] - ஆநந்தாச்ரு ப்ரவஹிக்கக்கடவ கண், சோகாச்ரு ப்ரவஹியாநின்றது. இக்கண்ணுக்குஇலக்கானார் கண்ணிலே காணக்கடவ கண்ணீரைத் தன்கண்ணிலே கொண்டாள். தன்னுடையவாய், குவளைப் பூப்போலே யிருக்கிற அழகிய கண்களிலே நீரைக் கொண்டாள். நம்மைச் செய்யச் சொல்லுகிற தென்? என்ன, [வண்டுதிவளும்தண்ணந்துழாய்கொடீர்] - விரஹஜ்வரத்தாலே வாடின இவள்மார்வில் மாலையை வாங்கி, உம்முடையமார்வில் செவ்விமாறாத மாலையைக் கொடுக்கிறிலீர். அவ்வண்டுகளுக்கு என்ன கண்ணீரைக் கண்டு கொடுக்கிறீர்? திவளுகை - படிகை, அசைகை, ஒளிவிடுகை; இவை யித்தனையுஞ் சொல்லக்கடவது.

---

அஞ்சாம்பாட்டு - இவள் இத்யாதி. பாட்டையெல்லாம் அடைவே கடாக்ஷித்து அவதாரிகை - இப்படிஇவள் இத்யாதி.

"இவள் - வாய்வெரீஇ" என்றதுக்கு பாவம் - ஸீதா இத்யாதி. ஸுந்தரகாண்டே ஷட்த்ரிம்சே, "அநித்ரஸ்ஸததம்ராமஸ்ஸுப்தோபிசநரோத்தம: | ஸீதேதிமதுராம் வாணீம்வ்யாஹரந்ப்ரதிபுத்யதே" பூர்வார்த்தத்தையும் வ்யாக்யாநம்பண்ணுவதாக அத்தை உபாதாநம்பண்ணுகிறார் - அநித்ரஸ்ஸததம் இத்யாதி. செல்வு - ஸம்பத்து. அதாவது - ரமயதீதி ராம என்கிற வ்யுத்பத்தியாலே ஸ்வவ்யதிரிக்தரை ரமிப்பிக்குமவர்க்கு ஸ்வயரம்மிக்கும்படியான ஸம்பத்து ஸித்தமிறே, அத்தைச் சொல்லுகிறதென்கை. "அநித்ர:" என்றுவைத்து, "ஸுப்தோபி" என்றால் - வ்யாஹதமுமாய், ஸ்நேஹத்துக்குக் கொத்தையுமாயிராதோ? என்ன, ஸததமநித்ர:என்றுவைத்து இத்யாதி. பராகர்த்தேத்யாதிக்கு பாவம் - வ்யதிரிக்தபதார்த்தங்களிற் கண்வையாதே, பிராட்டியையே எப்போதும் த்யாநம்பண்ணிக்கொண்டிருப்ப ரென்றபடி. ஸ்வாபதேசம் - போய்நின்ற இத்யாதி. 'இராப்பகல் வாய்வெரீஇ' இதி ஸமுச்சித்ய பாவம் - அவதாநம் பண்ணி இத்யாதி. ஆனால்தான் எப்படி? என்ன, வாஸநையே இத்யாதி. 'குவளையொண்' என்ற விசேஷணத்துக்கு பாவம்-ஆநந்தாச்ரு இத்யாதி. 'தன' என்றதுக்கு பாவம்-இக்கண்ணுக்கு இத்யாதி. சப்தார்த்தம் - தன்னுடையவாய் இத்யாதி. குவளை - கருநெய்தல். 'வண்டுதிவளும்' என்று- அவன்மாலையை விசேஷிக்கையாலே, இவள்மாலையிற் செவ்வியில்லாமை ஸித்தமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - விரஹஜ்வரத்தாலே இத்யாதி. 'வண்டுதிவளும்' என்ற விசேஷணத்துக்கு பாவம் - வண்டுகளுக்கு இத்யாதி. இவையென்னென்பின என்றது - எம்பார்நிர்வாஹத்திலே. 'தகவில்லை' என்கிறவள், 'தவளவண்ணர்' என்று விசேஷிக்கிறதுக்குக் கருத்தை

[என]- இவை என்னேன்பின? [தவளவண்ணர்தகவுகளே] - 'சுத்தஸ்வபாவரான உம்முடைய தகவுகள் எங்கேபோயிற்றின?' என்று எம்பார் அருளிச்செய்யும்படி. அன்றிக்கே, பட்டர், 'உம்மைப்போலே நாலுஶிஷ்டர்கள் அமையுமிறே அபலைகள் குடிகெட' என்றார். (ரு).

# ஆரும் பாட்டு.

தகவுடையவனே யென்னும் பின்னும
மிகவிரும்பும் பிரானேன்னும் என
தகவுயிர்க்கமுதே யென்னும் உள்ள
முகவுருகி நின்றுஉள்ளுளே.

ஆ.—(தகவு.) இப்படி இவளுடைய ப்ரஸங்கத்தாலே அவனுடைய க்ருபையை நினைத்துப் பரமகாருணிகனே! யென்று கூப்பிடும்; இப்படி க்ருபையையுடையவன் நம்மைக் கைவிடானென்று பார்த்துப் பின்னையும் மிகவும் ஆசைப்படும்; ஆசைப்பட்ட அப்போதே பெருமையாலே வந்த அவஸாதத்தாலே நெஞ்சு உருகும்படி உருகி நின்று, கேட்கச் சொல்ல க்ஷமையல்லாமையாலே போய்த் தன்னுள்ளுளே பிரானே யென்றும் என்னுடைய போக்யமென்றுஞ் சொல்லாநிற்கு மென்கிறாள்.

ஒ.—ஆரும்பாட்டில், நான் எம்பெருமானைக், குணஹாநி சொல்லிற்றுப் பொறுக்கமாட்டாமை, அவனுடைய தயாதிகுணங்களைப் பேசப்புக்கு, அந்த குணங்களிலே அழுந்தாநின்றா ளென்கிறாள்.

[பின்னுமென்று தொடங்கி] - இப்படி சொல்ல வாராதொழியச்செய்தேயும் மிகவும் விரும்பும்; அவன் பண்டு தனக்குப்பண்ணின உபகாரங்களை ஸ்மரித்துப் பிரானென்னும். [எனதகவுயிரென்று தொடங்கி] - என் ஆத்மாவுக்கு நிரதிஶய போக்யனவனே! என்னும்; அந்தஃகரணம் மிகவும் ஶிதிலமாம்படி தான் தளர்ந்து நின்று. [உள்ளுளே] - ஹ்ருதயத்திலே செல்லுகிற வ்யஸநம் வாசாமகோசரம்.

ப.—அநந்தரம், தன்னிலே சிதிலையாய் உம்முடைய் போக்யதாதிசயத்தைப் பேசி, வாய்புலற்றாநின்றா ளென்கிறாள்.

---

வாஸ்தவமாகவும், உபாலம்பமாகவும் இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - சுத்தஸ்வபாவரான இத்யாதி வாக்யத்வயத்தாலே. முன்பு சுத்தஸ்வபாவருமாய் தயாவானுமாயிருக்கிற நீர், இப்போது சுத்தஸ்வபாவருமன்றிக்கே தயாஹீநருமாய்விட்டீ ரென்று எம்பாருக்குக் கருத்து; என - எங்குற்றன? என்றபடி; என்னென்பின என்றது - முன்புத்தையில் க்ருபை இப்போது எங்கேபோயிற்று? என்றபடி. சுத்தஸ்வபாவருமல்ல, தயாவானுமல்ல வென்று பட்டர்; என-என்னபடியா யிருக்கிற தென்று க்ஷேபோக்தி. 'என - தவளவண்ணர், என - தகவுகள்' என்றாய் - என்ன சுத்தஸ்வபாவர்? என்ன தகவுகள்? என்று விவக்ஷித்து ரஸோக்தியாக பாவம் - உம்மைப்போலே இத்யாதி. 'தகவுகள்' என்கிற பன்மை - "கா‌ருண்யாநாந்ருஶம்ஸ்யாந" இத்யாதிப்படியே ஸாமாந்யவிஷயமாயும் ஆஶ்ரிதவிஷயமாயு முள்ள க்ருபைகளைச் சொல்லுகிறது. க்ரமேண அந்வயஃ. (௬)

(இவள்), உள்ளம் - தன்னெஞ்சு, உக - அழியும்படி, உருகி - (ஸ்வரூபம்) நீராயுருகி, உள்ளுளே - தன்னிலே தன்னிலே, நின்று - நின்று, தகவு - (என்னைப் புஜிப்பிக்கைக்கடியான க்ருபாதி) ஸ்வபாவங்களை, உடையவனே - உடையவனே! என்னும் - என்னும்; பின்னும் - அவ்வளவிலேநில்லாதே, மிக - மேன்மேலும், விரும்பும்-விரும்பும்படியான, பிரான்-உபகாரகனே! என்னும் - என்னும்; எனது - என்னுடைய, ஆகவுயிர்க்கு - அந்தராத்மாவுக்கு, அமுதே-நித்யமான நிரதிஶய போக்யமே! என்னும் - என்னுநிற்கும். மிகவிரும்புமென்று - தன்னை அவன் விரும்பினபடி யாகவுமாம்.

இ.—ஆறும்பாட்டில், நான் அவன்குணஹாநி சொல்ல, பொறுதே அவன் குணங்களைப் பேசப்புக்கு அதிலே அழுந்தாநின்று ளென்கிறுள்.

[தகவுடையவனே யென்னும்] - தயாகுணத்துக்கு ஊற்றுவாயானவனே! என்னும். [பின்னும் மிகவிரும்பும்] - இப்படி சொல்லாநிற்க, வாராதொழியச் செய்தேயும் மிகவும் ஆதரியாநின்றுள். [பிரானென்னும்] - தாயார் குணஹாநி சொல்ல இடமறும்படி இவ்வாபத்திலே உதவினுரைப்போலே பிரா னென்னுநின்றுள். முன்பு பண்ணினஉபகாரத்தை நினைத்துச் சொல்லுகிறுளாகவுமாம். [எனது அகவுயிர்க்கமுதே யென்னும்] - அகவுயிர் - ஆத்மா. என்னுடைய ப்ரத்யகாத்மாவுக்கு நிரதிஶயபோக்யனனவனே யென்னும். போகதசையிற் சொல்லுமவையெல்லாம் சொல்லாநின்றுள். [உள்ளமுக வுருகி நின்று] - அகவாய்இருந்தபடி யென்? என்னில்;—மநஸ்ஸு நீராயுருகும்படி உருகி நின்றுயிற்றுச் சொல்லுகிறது. [உள்ளுளே] - பரிச்சேதிக்கலாம் அளவு இது, மேல் வாசாமகோசரம். ‘உள்ளுளே - உருகி நின்று’ என்பாரு முண்டு.

ஈடு.—ஆறும்பாட்டு. இவள்அவஸாதத்தைக் கண்ட திருத்தாயார் ‘நிர்த்தயர்’ என்றுள்; இவள் அதுபொறுதே, ‘தகவுடையவனே’ என்று அத்தை நிரூபகமாகச் சொல்லாநின்று ளென்கிறுள்.

[தகவுடையவனே யென்னும்] - கெடுவாய், ஆகரத்தில் தகவு மறுக்குமோ? நங்குற்றங்கா ணென்னுநின்றுள். ‘தகவில்லை யென்றவள் வாயைப் புதைத்தாற்போலே வந்து தோற்றுவதே’’ என்று, அவன் வந்தால் பண்ணும் விருப்பத்தைப் பண்ணுநிற்கும்.

---

ஆறும்பாட்டு - தகவு இத்யாதி. நான் அவன்குணஹாநி சொல்ல, பொறுதே அவன் குணங்களைப் பேசப்புக்கு அதிலே அழுந்தாநின்று ளென்று இப்பாட்டுக்கு அவதாரிகை.

பதாவதாரிகாமாஹ - இவளவஸாதத்தை இத்யாதி வாக்யத்வயேந. நிர்த்தய ரென்றுளென்றது - “எனதவளவண்ணர்தகவுகளே’’ என்றத்தைப் பற்ற. நிரூபகமாகச் சொல்லும் ப்ரகாரத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, வாராமைக்குஅடி ஸ்வாபராத மென்கிறு ளென்று அருளிச்செய்கிறுர் - கெடுவாய் இத்யாதி. கெடுவாயென்றது - வார்த்தைப்பாடு. ஆகரத்தில்-கநியில்;உத்பத்திஸ்த்தாநத்தி லென்றபடி. மறுக்குமோ-வற்றுமோ?“வ்யா_த³வ்யாஜ³க்ஷ_தஜஸு’’ ‘‘ஜெலெவேஷ_ஷ்_தம்கிம்விக்’’ இத்யாத்யநுஸந்தேயம். ‘தகவுடையவனே’ என்கிற இது, ‘க்ருபாவானே என்கிறுப்போலே ஸம்போதநமுமாம், ஸாவதாரணநிர்த்தேசமுமாம். அவன் வாராதிருக்கச்செய்தே விரும்புகைக்கு ஹேது அருளிச்செய்கிறுர் - தகவில்லை இத்யாதி. விருப்பமாவது - பரிசரிக்கையிறே; அதுதான் - ஸந்நிதாநத்திலே செய்யும தொன்று; அதுசெய்கையாவது-பூசும்சாந்தும் புனையும் கண்ணியும் முதலானவற்றைச் சேர்க்கை. புதைத்தாற்போலே - மூடி

[பின்னும் மிகவிரும்பும்] - பாவநாப்ரகர்ஷம் இருக்கிறபடி. [பிரானென்னும்] - பெற்ற தாய்க்குஅவகாசம்வையாதே வந்துதோற்றுவதே! இதுஎன்ன உபகாரந்தா னென்னும். [எனதுஅகவுயிர்க்கமுதேயென்னும்]-என்னுடையப்ரத்யகாத்மாவுக்குபோக்யனுனவனே! என்னும். நித்யவஸ்து அழியாமல் நோக்கும் அம்ருதமாயிற்று இது. ஹோகதசையிற் சொல்லுமவையெல்லாம் சொல்லாநின்றாள். [உள்ளமுகவுருகிநின்று] - உள்ளேன்பது - மேல். அமூர்த்தமானது மூர்த்தீபவித்து உருகி த்ரவீபூதமாய் மங்கிப்போகாநின்றது. உள்ள முதவுருகிநின்று தகவுடையவனே யென்னும், பின்னும் மிகவிரும்பும், பிரானென்னும், எனதகவுயிர்க்கமுதே யென்னும்; இது, நாம்பேச்சுக்கோண்டறிந்த அம்ஶம்; உள்ளோடு கிறது. [உள்ளுளே] - வாசாமகோசரம். 'உள்ளுளே - உருகிநின்று' என்பாரு முண்டு.

## ஏழாம் பாட்டு.

உள்ளுளாவி உலர்ந்துலர்ந்து என
வள்ளலே கண்ணனே யென்னும் பின்னும்
வெள்ளநீர்க்கிடந்தா யென்னும் என
கள்விதான் பட்டவஞ்சனையே.

ஆ.—(உள்ளுளாவி.)எம்பெருமானைப் பிரிகையாலே பரிதப்தையாய் அந்தப் பரிதாபத்தைப் பொறுக்கமாட்டாமையாலே, விடாய்ப்பட்டார்; 'தண்ணீர் தண்ணீர்'என் னுமாபோலே 'என்வள்ளலே! என் கண்ணனே' என்னும்; பின்னும் 'வெள்ளநீர்க்கிடந்

---

ஞற்போலே. ஆனல் அவன் வந்தானே? என்ன, பாவந இத்யாதி; உருவெளிப்பாட்டாலே யென்றபடி. விஶ்லேஷவேளையிற் பண்ணின உபகாரமேது? என்ன, பெற்றதாய' இத்யாதி. 'எனது அகவுயிர்க்கு' என்று பதச்சேதம். 'அகவுயிர்' என்று - ப்ராணவாயுவை வ்யாவர்த்திக் கிறது. அம்ருதம் போக்யமுமாய் தாரகமுமாயிறே யிருப்பது; இக்கே இரண்டும் விவக்ஷித மென் கிறார் - என்னுடைய இத்யாதியாலும், நித்யவஸ்து இத்யாதியாலும். "உயிர்க்கமுதே" என்கையா லே - தேஹத்தைப் பூண்கட்டுகிற அம்ருதத்தை வ்யாவர்த்திக்கிற தென்னு மிடந் தோற்ற அருளிச் செய்கிறார் - இது என்று. கீழெல்லாவற்றுக்கும்பலிதம் - போகதசையில் இத்யாதி. உள்ளேன்பது மேலென்று - இதுக்குஅநுகுணமாக 'உள்ளமுகவுருகிநின்று' என்றதுக்கு - மேன்மேலென உருகி நின்று என்றுஓரர்த்தம் கண்டுகொள்வது. 'உள்ளம்' என்பதுக்கு - ஹ்ருதயபரமாக அர்த்தாந்தரம்- அமூர்த்தமான இத்யாதி. அமூர்த்தம் - அஸ்பர்ஶவத்த்ரவ்யம். இதுக்குச்சேர 'உள்ளுள்' என்ற துக்கும்அர்த்தாந்தரம்-உள்ளுளேயுருகிநின்றுஎன்பாருமுண்டேன்று. அதாவது - மேன்மேலென என் றபடி.இந்தப்பக்ஷத்திலே, உள்ளுளேயுள்ளமுகவுருகிநின்று-தகவுடையவனே யென்னு மித்யாரப்ய, அமுதேயென்னு மித்யந்வயः. 'உள்ளென்பது மேல்' என்ற பக்ஷத்தில் அந்வயங்காட்டுகிறார் - உள்ளமுகவுருகிநின்று இத்யாதி. உள்ளோடுகிறது உள்ளுளே இதி - உள் - உள்ளோடுகிறது. உளே - உள்ளேதானே. ஆகையால் வாசாமகோசர மென்றபடி. ஆக, இப்பாட்டுக்கு இரண்டு விதம் அந்வயங் கண்டுகொள்வது. 'உள்ளம்' என்றதுக்கு - மேன்மேலென்றும், மநஸ்ஸென்றும் அர்த்தத்வயம். 'உள்ளுளே' என்றதுக்கும் - உள்ளோடுகிறது உள்ளேதானே யென்றும், மேன் மேலென்றும் அர்த்தத்வயம். உக - உக்குப்போம்படி, சிதிலமாம்படி. உருகி - த்ரவீபூதமாய். நின்று - தரித்துநின்றென்று ஶப்தார்த்தம். 'உள்ளென்பது மேல்' என்ற வாக்யம் - 'உள்ளுளே யுருகி நின்றென்பாரு முண்டு' என்ற வாக்யாநந்தரம் படிதமானலும், கீழ்ச்சொன்னபடியே அர்த் தம் அநுஸந்தேயம். (சு)

தாய்' என்னும்; எம்பெருமானையுங்கூட வசீகரிக்கும் அழகுடையளான இவள் அவனுடையகுணங்களிலே இங்ஙனே அகப்பட்டா ளென்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், இவள் அவஸாதத்தையும், அவன் தன் குணங்களாலே இவளை வஞ்சித்தபடியையுஞ் சொல்லுகிறாள்.

[உள்ளு ளென்று தொடங்கி] - பாவபந்தத்தாலே வந்த நோவாகையாலே ஆத்மா உள்ளே மிக உலர்ந்து தனக்கு தாரகமாக அவனுடைய ஔதார்ய பவ்யதைகளைச் சொல்லாநிற்கும். [பின்னுமென்று தொடங்கி] - தன்னுடைய விடாயாலே பின்னையும் நீர்வெள்ளத்திலே கண்வளர்ந்தருளினபடியைச் சொல்லாநிற்கும்; என்னுடைய அதிசதுரையான இவள் அவனைப் படுத்தும் பாட்டைத் தான்படுவதே!

ப.—அநந்தரம், 'அபேக்ஷித்தார்க்கு உபகரிக்க அணித்தாக வர்த்திக்கிறவனே!' என்னாநின்றா ளென்கிறாள்.

என கள்வி - எனக்குத் தன்னெஞ்சில் விகாரந் தோன்றாதபடி மறைக்குங் களவையுடைய இவள், தான்பட்ட - தான் அகப்படும்படி அவன்செய்த, வஞ்சனை - வஞ்சனைக ளிருந்தபடி, உள்ளுள் - ஹ்ருதய ஸ்தாநத்துக்குள்ளே நிற்கிற, ஆவி - (அஶோஷ்யமான) அந்தராத்மாவானது, உலர்ந்து உலர்ந்து - உலர்த்திமே லுலர்த்தியாம்படியாய், என - எனக்கு உன்னை முற்றூட்டாகத்தந்த, வள்ளலே-மஹோதாரனே; கண்ணனே – (அதுதான் உன்பேறும்படியான தாழ்ச்சியையுடைய) க்ருஷ்ணனே! என்னும் - என்னும்; பின்னும் - அதுக்குமேலே, (அவதாரகந்தமாம்படி அணித்தாக), வெள்ளநீர் - பரிபூர்ண ஜலமான கடலிலே, கிடந்தாய் - கண்வளர்ந்தருளினவனே!' என்னும் - என்னும். அப்படுக்கை தனக்கு உறுப்பென் றிருக்கிறாள்.

இ.—ஏழாம்பாட்டில், இவள் அவஸாதத்தையும், இவள் அவன்குணங்களாலே வஞ்சிக்கப்பட்டபடியையுஞ் சொல்லுகிறாள்.

[உள்ளுளாவி] - ஆந்தரமான மநஸ்ஸுக்கு தாரகமான ஆத்மா சருகாய் வருகிறபடி. [உள்ளுளாவி] - அந்தஃகரணத்துக்கும் அவ்வருகான ஆத்மா. "அஶோஷ்ய:" என்கிறதுவும் போயிற்று என்கிறாள். பாவபந்தமடியாக வந்த நோயாகையாலே குருத்துவற்றாக உலர்ந்து செல்லாநிற்கை. [என வள்ளலே கண்ணனே யென்னும்] - தனக்கு தாரகமாக அவனுடைய ஔதார்ய பவ்யதைகளைச் சொல்லாநின்றாள். 'அதிப்ராவண்யம் ஆகாது' என்று ஜநநிசொன்ன ஹிதமும் நெஞ்சிற்படாதபடி என்னை அநந்யார்ஹையாக்கினவனே! அவ்வளவன்றிக்கே, உன்னை எனக்குக் கையாளாகத் தந்தவனே! [பின்னும்] - அதுக்குமேலே. [வெள்ளநீர் கிடந்தாயென்னும்] - வந்து அவதரித்துப் பரமபதத்தேறப் போகை யன்றிக்கே, "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா:" அவஸரப்ரதீக்ஷனாய்க் கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனே! இது இவளுக்கு ஒருபடுக்கையிலே சாய்ந்தாற்போலே யிருக்கிறது. "தாவுபௌ ஶயநே ஶயிதௌ". [எனகள்வி] – தனக்கு ஆற்றாமையுண்டானாலும் தான் அவிக்ருதையாய் அவனை விக்ருதனாக்கவல்ல ஸ்த்ரீத்வத்தையுடையவள். [தான்பட்ட] - அத்தலையித்தலையாய், அவன் அவிக்ருதனாய் இவளைத் தோற்பிக்கும்படியாவதே! [வஞ்சனையே] - பெரும்படையுடையாரை அளவுபடையுடையார் வெல்லுவது வஞ்சனையாலேயிறே. நேர்கொடுநேரே ஜயமன்று என்கிறாள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. தன்னெஞ்சிலோடுகிறது பிறரறியாதபடி அடக்க முடைய இவள், வாய்விட்டுக் கூப்பிடும்படி இவளை வஞ்சித்தா னென்கிருள்.

[உள்ளுளாவி] - ஆந்தரமான மநஸ்ஸுக்கு தாரகமான ஆத்மா சருகாய் வருகிறபடி. "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோஶோஷ்யஏவச" (அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோஶோஷ்யஏவச) என்று - அஶோஷ்யமென்று சொல்லுகிற இதுவும் போயிற் றேன்கிருள். பாவபந்தமடியாக வருகிற நோயாகையாலே அகவாயேபிடித்து வெந்துகொண்டு வருமாயிற்று. விடாயர் கற்பூரநிகரம் வாயிலிடுமோபோலே; [எனவள்ளலே கண்ணனேயென்னும்] - இவ்வளவான ஆர்த்திகளிலே வந்து உன்னை எனக்குக் கையாளாகத் தருமவனே என்னுநின்ருள். அதுக்குமேலே, "தாபார்த்தோஜலஶாயிநம்" (தாபார்த்தோஜலஶாயிநம்) என்று, என்விடாய்க்கு உதவத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளிற்றே யென்னும். இக்கிடை, இவளுக்கு ஒரு படுக்கையிலே சாய்ந்தாற்போலே யிருக்கிறதுகாணும். [எனகள்வி] - தன்ஹ்ருதயத்தி லோடுகிறது பிறரறியாதபடி மறைத்துப் பரிமாறக்கடவ இவள் படும்பாடே இது! [தான்பட்ட] - "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்கிற தான் அவிக்ருதனாய், இவள் விக்ருதையாவதே!

---

ஏழாம்பாட்டு - உள்ளுளாவி இத்யாதி. 'எனகள்விதான்பட்ட வஞ்சனையே' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - தன்னெஞ்சில் இத்யாதி.

உள் - ஆந்தரமான, உள் - மநஸ்ஸுக்கு, ஆவி - தாரகமான ஆத்மாவென்று ஶப்தார்த்தம். இரண்டாமுள் - மநோவாசி. "அஶோஷ்யோ" என்னுநிற்க, 'உலர்ந்து' என்னலாமோ? என்ன, அச்சேத்யோயம் இத்யாதி. கீதாஸு த்விதீயே. "நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம் ஸநாதந:" இத்யுத்தரார்த்தம். ஶரீரம் முற்படஉலர்ந்து, அநந்தரம் ஆவிஉலரவேண்டாவோ? என்ன, பாவபந்தம் இத்யாதி. 'உலர்ந்துலர்ந்து' என்ற அநந்தரம், 'எனவள்ளலே கண்ணனே' என்றதுக்கு பாவம் - விடாயர் இத்யாதி. தன்னுடையதாஹத்துக்கு ஆப்யாயநமாகக் குணங்களைச் சொல்லுகிரு ளென்றபடி. கற்பூரநிகரம் - கற்பூரவுண்டை. பாவாந்தரம் - இவ்வளவான இத்யாதி. 'வெள்ளநீர்க்கிடந்தாய்' என்றதுக்கு ப்ரயோஜநம் - அதுக்குமேலே இத்யாதி. தாபார்த்த இத்யாதி - ஸ்ரீவிஷ்ணுதர்மே சத்வாரித்சேத்யாயே, "ஸுநகாரோதிதீவ்ரஞ்ச நரஸிம்ஹேந ஸம்ஸ்ரக | தாபத்ரயவிமுக்தோ தாபார்த்தோஜலஶாயிநம் | ஶரண்யம் ஜாநந் ஸர்வ ணாஷிவீர்யம் வ்யாஶ்ரயதி." தாஸ்த்தனாய்த் திருப்பாற்கடலிலே கிடந்தால் தனக்கு உதவினதாமோ? என்ன, இக்கிடை இத்யாதி. ஒருபடுக்கையிலே சாய்ந்தாற்போலே என்கிற விடத்திலே - 'ஸஹைத்யா ந ஸம்ஶய்யே தேந ஜீவிதம் | யதி ஹம்ஸா ஜவா கோரோ காமயாணி ஶ்ரிதாள்" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். ஒருபடுக்கையிலேசாய்ந்தாற்போலே யென்றது-பாவநாப்ரகர்ஷத்தாலே யென்றபடி. 'கள்வி' என்றதற்கு பாவம் - தன்ஹ்ருதயத்தில் இத்யாதி. கள்விதான்பட்ட வஞ்சனை, என - என்னவாயிருந்ததென்று அந்வயித்துத் தாத்பர்யமென்று கண்டுகொள்வது. 'பட்ட வஞ்சனை' என்ன அமைந்திருக்க, 'தான்' என்றதுக்கு பாவம் - நஜீவேயம் இத்யாதி. ஸுந்தரகாண்டே ஷட்ஷஷ்டிதமே, "சிரம்ஜீவதி வைதேஹீ யதி மாஸம் தரிஷ்யதி | நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்". இவள்விக் ருதையானால் அது வஞ்

[வஞ்சனை] - அளவுபடைக்குப் பெரும்படைதோற்பது வஞ்சநத்தாலேயிறே. பகலை இராவாக்கியும்; 'ஆயுதமெடேன்' என்று எடுத்தும் செய்த செயல்போலே இவனை வஞ்சித்தீரித்தனை. (எ)

## எட்டாம்பாட்டு.

வஞ்சனேயென்னும் கைதொழும் தன
நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும் விறற்
கஞ்சனைவஞ்சனைசெய்தீர் உம்மைத்
தஞ்சமென்று இவள்பட்டனவே.

ஆ.—(வஞ்சனே.) உன்னுடைய குணங்களிலே என்னை அகப்படுத்தினவனே யென்னும்; பின்னைத் தன்திருவாயால் ஒன்றுஞ் சொல்லமாட்டாமையாலே தன்கைகளாலே தொழுதிருக்கும்; அப்போதே அவனைக்காணாமையாலே தன்னெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும்; உம்மை 'தன்னுடைய ஆபத்துக்குத் துணை' என்று விஶ்வஸித்திருந்த இவளும் உமக்கு ப்ரதிகூலனான கம்ஸன் பட்டது படுவதே! என்கிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், உம்மை அபாஶ்ரயமாகப் பற்றின இவள், ப்ரதிகூலர் பட்ட பாட்டைப் படக் கடவளோ? என்கிறாள்.

[வஞ்சனேயென்று தொடங்கி] - குணசேஷ்டிதாதிகளாலே என்னை வஞ்சித்தவனே! என்னும்; அதுவே உபகாரமாகத் தொழாநிற்கும். முன்னமே உலர்ந்திருக்கிற நெஞ்சம் விரஹாக்நியாலே வேம்படி நெடுமூச்செறியும்.

ப.—அநந்தரம், ஆஸந்ந ஜநங்களுக்கு அநுபவ விரோதி நிவர்த்தகரான உம்மை விஶ்வஸித்து இவள் பட்டபாடுகளென்? என்கிறாள்.

வஞ்சனே - (உட்புகுந்தாரைப்போலே பவ்யதையைக்காட்டி) வஞ்சித்தவனே! என்னும் - என்னும்; கைதொழும்-("அவ்வஞ்சநத்துக்குத் தொழவேண்டாவோ" என்று ப்ரணயரோஷத்தாலே) கையெடுத்துத் தொழாநிற்கும்; (பூர்வஸம்ஶ்லேஷ ப்ரகாரத்தை நினைத்து); தனநெஞ்சம் - தன் நெஞ்சானது, வேவ - தக்தமாம்படி, நெடிதுஉயிர்க்கும் - நெடுமூச்செறியும்; விறல் - பெருமிடுக்கனான, கஞ்சனை - கம்ஸனை, வஞ்சனைசெய்தீர் - அவன்வஞ்சனை அவனோடேபோம்படிபண்ணினவரே! உம்மை-(மதுரையில்பெண்களுக்கு உதவின) உம்மை, தஞ்சமென்று - (தனக்குத்) தஞ்சமென்று, இவள்-இவள், பட்டன - பட்ட வெள்ளம், ஏ - என்? இப்படி கரணத்ரயமும் ஶிதிலமாம்படி பண்ணவேணுமோ? என்று கருத்து.

---

சநமாகவேணுமோ? என்ன, அளவுபடைக்கு இத்யாதி. அளவுபடை - அல்பஸேநை. நாயகன்-அளவுபடை. பிராட்டி - பெரும்படை. "கவலிதெக்ஷணா" என்கிற சக்ஷுஸ் ஸௌந்தர்யாதிக்யத்தைப் பற்ற, பெரும்படை என்றது. "தாவுஶீலவயோவ்ருத்தௌ" இத்யாதி. அப்படி வஞ்சகனோ? என்ன, பகலை இத்யாதி. 'வஞ்சனையே' என்ற ஏகாரம் - இதுஇருந்தபடியென்? என்ற ஈடுபாட்டிலே. (எ)

இ.—எட்டாம்பாட்டில், உம்மை அபாஶ்ரயமாகப்பற்றினவள் ப்ரதிகூலர் பட்டது படக்கடவளோ? என்கிறாள்.

[வஞ்சனேயென்னும்] - தாயார் 'வஞ்சகன்' என்னப் பொறாதே அதுதன்னையே குணமாகச் சொல்லுகிறாள். குணசேஷ்டிதங்களாலே என்னை வஞ்சித்தவனே!, அதாவது - தாயார்வார்த்தைகேட்டல், தானே மீளுதல் செய்யவொண்ணாதபடி அநந்யார்ஹையாக்கினபடி. [கைதொழும்] - அந்த உபகாரத்துக்காக கைதொழாநின்றாள். [தனநெஞ்சம் வேவ நெடிதுயிர்க்கும்] - இவள் 'உபகாரகன்' என்னுங்காட்டில், விரஹம் விட்டுவையாதே, முன்பே உருகாநிற்கிற நெஞ்சம் விரஹாக்நியாலே, தக்தமாம்படி நெடுமூச்செறியும். "தஹ்யமாநா நலேநேவ ஸர்வ ஸந்தாபஸஹா விஹ்வலா । உபாஶ்ரஸ்ரா ஸீதா நிஶ்வஸந்தீ முஹுர்முஹு:" [விறற்கஞ்சனை வஞ்சனை செய்தீர்] - மிடுக்கையுடைய கஞ்சனை அவன் நினைத்த நினைவு அவன்தன்னோடே போம்படி வஞ்சித்தீர். ஆணுமாய், மிடுக்கனுமாய், எதிரியுமான அவன்பட்டது படுவதே! பெண்ணுமாய், அபலையுமாய் உம்மையுகந்தவள். [உம்மைத்தஞ்சமென்று] - அதஸ்மிந்தத்புத்திபண்ணி அந்தரப்பட்டாள். 'தஞ்சமாகிய தந்தைதாய்' என்னும் ஸர்வரக்ஷகனை காதுகரைச் சொல்லுமாபோலே சொல்லுகிறாளிறே, மகளுடைய தசையைப் பார்த்து. [இவள்]-விறலுக்கு எதிர்த்தலையான இவள். [பட்டனவே] - எதிரிகளோபாதி முடியப்பெற்றாளல்லள், ஸம்ஸாரிகளோடொக்க அகலவிருக்கப்பெற்றிலள், நித்யஸூரிகளோபாதி அநுபவிக்கப்பெற்றிலள், எங்களைப்போலே "த்வத்ஸ்வஸ்ரூஸம்பவேதி" என்னுமளவில் இருக்கப்பெற்றிலள், என் வழிவாராதே உம்மைத் தஞ்சமாகப் பற்றின இவளை எத்தனை படுத்தவேணுந்தான்?

ஈடு.—எட்டாம்பாட்டு. உம்மைஅநுபவித்து ஸுகிக்க வைத்தீரல்லீர், கம்ஸனைப்போலே முடித்துவிட்டீரல்லீர், உம்மை 'ரக்ஷகர்' என்றிருந்த இவள் படும்பாடே இது என்கிறாள்.

[வஞ்சனேயென்னும்] - தாயார், 'வஞ்சித்தான்' என்னப்பொறுத்திலள், 'நானல்லேன்' என்றாலும் தவிரவொண்ணாதபடி வஞ்சித்து உன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்ட உபகாரகனே யென்னாநின்றாள்; தானேயோட்டிவந்து என்தனிநெஞ்சை வஞ்சித்து ஊனோட்டிநின்று என்னுயிரிற்கலந்தியலுமவனன்றோ? இப்படி என்னையும் அறியாதே வஞ்சித்து உன்திருவடிகளிலே சேர்த்த உபகாரகனே யென்னாநின்றாள். [கைதொழும்] - வஞ்சித்த உபகாரத்துக்குத் தோற்றுத் தொழும். தாயார் சொன்ன குணஹாநிக்கு ஒரு பரிஹாரம் பண்ணினவாறே ஆற்றாமை போகாதே; தனநெஞ்சம் வேவ நெடுமூச்செறியாநிற்கும்; "தஹ்யமாநா நலேநேவ ஸர்வ ஸந்தாபஸஹா விஹ்வலா । உபாஶ்ரஸ்ரா ஸீதா நிஶ்வஸந்தீ முஹுர்முஹு:" ( ததோமலிநஸம்வீதாம்ராக்ஷஸீ

எட்டாம்பாட்டு - வஞ்சனே இத்யாதி. 'தனநெஞ்சம்வேவ' இத்யாரப்ய, மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - உம்மை இத்யாதி.

அதெப்படி? என்ன, நானல்லேன் இத்யாதி. வஞ்சநத்தை உபகாரமாகச் சொல்லுகையாலே யென்றபடி. அப்படி வஞ்சித்துச் சேர்த்துக்கொண்டானோ? என்ன, தானோட்டி இத்யாதி. "நானல்லேன்" இத்யாதி வாக்யவிவரணம் - இப்படி என்னையும் இத்யாதி. புநஶ்ச நெடுமூச்செறிவானென்? என்ன, தாயார்சொன்ன இத்யாதி. உயிர்க்கை-மூச்சுவிடுகை. பலகாலும்நெடுமூச்செறிகிறதுக்கு ஸம்வாதம் - ததோமலிந இத்யாதி. ஸுந்தரகாண்டே பஞ்சதஶே. நெஞ்சின்

பிஸ்ஸமாவ்ருதாம் | உபவாஸக்ருஶாம்தீநாம் நிஶ்வஸந்தீம்புநꣃபுநꣃ.) "உள்ளம் மலங்க" என்று - வெட்டிவிழுந்தபடி சொல்லிற்று; 'உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து' என்கிற விடத்திலே - உலர்ந்தபடி சொல்லிற்று; இங்கே, தனநெஞ்சம் வேவ என்கையாலே - நெருப்புக்கொளுந்தினாற்போலே சொல்லுகிறது. [விறற்கஞ்சனை வஞ்சனைசெய்தீர்] - மிடுக்கனான கம்ஸனை அழியச்செய்தீர். உம்மைத்தோற்பிக்க நினைத்தாரை நீர் தோற்பிக்குமவராயிருந்தீர். ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமற உமக்கு இரண்டிடத்திலும் கார்யமொன்றேயோ? [உம்மைத்தஞ்சமென்று] - தஞ்சமல்லாதாரை 'தஞ்சம்' என்றிருந்தால் சொல்லுமாபோலே சொல்லுவதே. 'தஞ்சமாகிய தந்தைதாயோடு தானுமாய்' என்னும் ஸர்வரக்ஷகனை, வாதுகரைச் சொல்லுமாபோலே சொல்லுகிறாளிறே மகள்தசையைப் பார்த்து. [இவள்பட்டனவே] - ஒரு மஹாபாரதத்துக்குப் போரும்போலே. ஸம்ஸாரிகளைப்போலே உண்டுடுத்துத் திரியவைத்தீரல்லீர், உம்மை நித்யஸூரிகளைப்போலே அநுபவிக்கக் கொடுத்தீரல்லீர், எங்களைப்போலே "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்னுமளவில் இருக்கப்பெற்றிலள், கம்ஸனைப்போலே முடித்தீரல்லீர், என்வழிவாராதே உம்மைத் தஞ்சமாகப்பற்றின இவளை எத்தனைபடுத்தவேணும்? (அ)

---

கோலைப் பலகாலுஞ் சொன்னதை - காஷ்டஸமாதியாக நிரூபிக்கிறார் - உள்ளம்மலங்கவென்று இத்யாதி. இத்தால் - அச்சேத்யத்வாதி ப்ரதிகோடியைச் சொன்னபடி. கொளுந்தினாற்போலே சொல்லுகிறது - கொளுந்தினாற்போலிருக்கிறமையைச் சொல்லுகிறது. ஶப்தார்த்தம் - மிடுக்கனை இத்யாதி. ஹார்த்தஹாவம்-உம்மைத்தோற்பிக்க இத்யாதி. "உம்மைத்தஞ்சம்" என்ற பதத்தையும் கூட்டிக்கொண்டு ஹாவம்-ஆஶ்ரிதாநாஶ்ரித இத்யாதி. கார்யம்-வஞ்சனை. ஆஶ்ரிதரான யஶோதாதிகளுக்குத் தோற்கையும், அநாஶ்ரிதரான கம்ஸாதிகளை ஜயிக்கையுமன்றோ உமக்கு ஸ்வபாவம், இப்போது இரண்டிடத்திலும் தோற்பிக்கையேயாய்விட்டதே யென்றபடி. வ்யாக்யாதாவின் ஈடுபாடு - தஞ்சமல்லாதாரை இத்யாதி. அப்படிசொல்லலாமோ? என்ன, தஞ்சமாகிய இத்யாதி. "தஞ்சமல்லாதாரை" இத்யாதி வாக்யம் - "உம்மை" என்றதின் தாத்பர்யம். பஹுவசநார்த்தம் - ஒரு மஹாபாரதம் இத்யாதி. விவரணம் - ஸம்ஸாரிகளை இத்யாதி. வஞ்சநத்தை உபகாரமாகச் சொல்லுகையாலே - ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தி; 'தனநெஞ்சம்வேவ' என்கையாலே நித்யஸூரிகளிலும், திருத்தாயாரான தன்னிலும் வ்யாவ்ருத்தி. 'கைதொழும்' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - எங்களைப்போலே இத்யாதி. "கஞ்சனை" இத்யாதியைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - கம்ஸனை இத்யாதி. "உம்மைத்தஞ்சம்" என்றதுக்குத் தாத்பர்யார்த்தம் - என்வழிவாராதே இத்யாதி. அதாவது-இத்தனைநாளும் என்னை 'தஞ்சம்' என்றிருந்தாள், இப்போது என் சொற் கேளாமல் என்னைவிட்டு உம்மைத் தஞ்சமாகப் பற்றின இவள்படும்பாடே இது; இவளை இத்தனைபாடு படுத்தவேணுமோ? என்றபடி. என்வழிவாராதே - என்சொல்வழி வாராதே. அதாவது- "இலங்கைச்செற்றீருக்கே" என்றும், "எனதவளவண்ணர்தகவுகளே" என்றும், "எனகள்விதான் பட்ட வஞ்சனையே" என்றும், நான் சொன்ன வார்த்தைகளை அநாதரித் தென்றபடி. யத்வா, என்வழி - "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்கிற நிலையாதல். ஸுந்தரகாண்டே ஏகோநசத்வாரிம்ஶே, "ஶயௌரஸ்த்வம்ஸம்க்ஷாம்ய ததாம் காம் வரஷாரூநꣃ | ஶாத்நயேத்ஷிகாஸுத்தஸ்தஸ்யஸத்ருஶம்பவேத்". க்ரமேண அந்வயꣃ. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

பட்டபோது எழுபோதறியாள் விரை
மட்டலர்தண்டுழா யென்னுஞ் சுடர்
வட்டவாய் நுதிநேமியீர் நும
திட்டமென்கொல் ? இவ்வேழைக்கே.

ஆ.—(பட்டபோது.) ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாகத் திருவாழியை ஏந்திக் கொண்டிருக்கிற நீர், உம்மோடு ஸம்ஶ்லேஷிக்கையிலுள்ள அபிநிவேசத்தாலே மற்றொன்றும் அநுஸந்திக்க க்ஷமையன்றிக்கே யிருக்கிற இவள் திறத்திற் செய்ய நினைத் தருளிற்றென்? என்கிறாள்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், உம்மை விஶ்லேஷித்து நிரந்தரமாக நோவுபடுகிற சபலையான இவள் திறத்திற் செய்தருள நினைத்ததென் ? என்கிறாள்.

[பட்டபோதென்று தொடங்கி] - உதித்ததும் அஸ்தமித்ததும் அறியாள், திருவுடம்பில் ஸ்பர்ஶத்தாலே வந்த பரிமளத்தாலும் மதுவாலும் பூர்ணமான திருத்துழாயை 'வேணும்' என்று வாய்வெருவாநிற்கும். [சுடர்வட்டவாய் நுதிநேமியீர்] - ஆஶ்ரிதருடைய ப்ரதிபந்தக நிரஸநார்த்தமாகவன்றோ சுடரையும் வட்டமான வாயையும் கூர்மையையுமுடைய திருவாழியை தரித்தருளுகிறது.

ப.—அநந்தரம், இவ்வளவில், ரக்ஷணோபகரணவத்தையை யுடைய உம்முடைய நினைவு ஏதாயிருக்கிறது? என்கிறாள்.

(உறங்காமையாலும், உணர்ந்துதெளிவுடையளா யிராமையாலும்), பட்டபோது - அஸ்தமித்தபோதும், எழுபோது - உதித்தபோதும், அறியாள் - அறிகிறிலள்; (அறிகிறது நெஞ்சத்திலேயாகையாலே). விரை - பரிமளமும், மட்டு - மதுவும், அலர் - பரம்பின; தண்துழாய் - செவ்வித்திருத்துழாய்; என்னும் - என்னுநிற்கும்; சுடர் - ஜ்வாலைகளையுடைய, வட்டம் - வட்டமான, வாய் - வாயையும், நுதி - கூர்மையையுமுடைய, நேமியீர் - திருவாழியையுடையவரே ! நுமது - (ப்ரதிபந்தகத்தைக்கழித்துக் கிட்டப் பரிகரமுடையீரான) உம்முடைய, இட்டம் - நினைவானது, இவ்வேழைக்கு - பற்றிற்றுவிடமாட்டாத இச்சபலைக்கு, என்கொல் - ஏதாயிருக்கிறது?

ஸத்தைக்கு உறுப்பாயிருக்கிறதோ? முடிவுக்குஉறுப்பாயிருக்கிறதோ? என்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், இவர் பட்டதுதான் ஏது? என்ன, அத்தைச் சொல்லுகிறாள்; உம்முடைய கையும் திருவாழியும் காண ஆசைப்பட்டு உதித்ததும் அஸ்தமித்ததும் அறியாதே சபலையுமாய் இப்படி நோவுபடுகிற இவள் திறத்திற் செய்ய நினைத்ததென்? என்னவுமாம்.

[பட்டபோதெழுபோதறியாள்] - உதித்ததும் அஸ்தமித்ததும் அறிகிறிலள்; இனிச்செய்வதென்? இது தாயாரறிந்தபடியென்? என்னில்; - ராத்ரியில் நித்ரைகாணாமையாலும், பகல் வார்த்தை சொல்லிப் போதுபோக்காமையாலும். [விரைமட்டலர் தண்

துழாயென்னும்] - இவ்வறியாமை ஸர்வவிஷயமாகிலுமாமிறே, ஒன்றையே எப்போதும் வாய்வெருவாநிற்கும். பரிமளத்தாலும் தேனாலும் பரிபூர்ணமான திருத்துழாயென்னும். பரிமளம் தேன் செவ்வி குளிர்த்தி இவற்றையுடைய திருத்துழாயென்னுதல். [சுடர் இத்யாதி] – கையுந்திருவாழியுமான சேர்த்தியைக் காட்டி அநுபவிப்பித்தல், விரோதிகளை யழியச்செய்தல் செய்கையன்றியே, அச்சேர்த்தியை இவளுக்குக் காட்டி அவ்வழகைக்கொண்டு அகலநின்று நலியத்தொடங்கினீர். சுடரையும், வட்டமான வாயையும், கூர்மையையுமுடைத்தாகை. 'உகப்பாரை அவ்வழகைக்காட்டி அவ்வழகைக் கொண்டு அகல நின்று முடிக்கும், உகவாதாரைக் கிட்டிநின்று அத்திருவாழியாலே அழியச்செய்து முடிக்கும்' என்பர் சீயர். [நுமதிட்ட மென்கொல்] - நித்யஸூரிகளைப் போலே கிட்டநின்று அநுபவிக்க நினைக்கிறீரோ? அகலநின்று முடிக்க நினைக்கிறீரோ? வேறொன்றையும் அறியாதே அவனையே வாய்புலற்றுகிற இத்தையும் பேற்றுக்குப் பரிகரமென்றிருக்கிறிலள்; 'அவன் நினைவே உபாயம்' என்று இருக்கிறாள். [இவ்வேழைக்கே] - 'அபலைகள் பலரு முண்டு' என்றிறே நீர் இருப்பது, இப்படியிருப்பதொரு வ்யக்தி புறம்பில்லை யென்கிறாள். அத்யந்தம் சபலையான இவள்திறத்தில் நீர் நினைத்திருக்கிறதென்?

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'இவள்பட்டன' என்கைக்கு என்பட்டாளென்ன; படுவதெல்லாம் பட்டாளாகில் இவள் இனி என்படுவோள்? என்கிறாள்.

[பட்டபோதெழுபோதறியாள்] - உதித்ததும் அஸ்தமித்ததும் அறிகிறிலள். இவள்அறிவதும் ஏதேனுமுண்டோ? என்னில் - [விரைஇத்யாதி] - விரை - இதொரு பரிமளமே, மட்டு - இதொரு தேனே, அலர் - இதொரு பூவே, தண் - இதொரு குளிர்த்தியே, என்று திருத்துழாய்விஷயமாக ஒரு கோடியைச் சொல்லும். உம்முடைய பேருந் தாரு மொழிய அறியாளென்கிறாள். என்றவாறே, 'நம்மை ஆசைப்பட்டு இப்படி படப்பெற்றோமே' என்று அலப்யலாபத்தாலே கையில் திருவாழியை விதிர்த்தான். [சுடர்வட்டவாய்நுதிநேமியீர்] – சுடரையும் வட்டமான வாயையும், கூர்மையையுமுடைய திருவாழியைக் கையிலேயுடையீர். இப்போது "சுடர்வட்டவாய் நுதி" என்கிற விசேஷண மேன்? என்னில்; - பெண்பிள்ளையைக் காட்டில் திருத்தாயார், கையுந்திருவாழியுமான அழகுக்கு ஈடுபட்டு, விசேஷணங்க ளிட்டு அநுபவிக்கிறாள்.

---

ஒன்பதாம்பாட்டு - பட்டபோது இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை- இவள்பட்டன இத்யாதி. இனியென்படுவாளிதி இதுக்கு முன்பு அநுபவியாததாய் இனிமேலே அநுபாவ்யமான திஃகமுண்டோ? என்றபடி.

'பட்டபோது' என்றது - 'முத்துப்பட்டது' என்னுமாபோலே, உதித்தபோதென்றபடி 'எழுபோது' என்றது - 'எழுகளம்' என்னுமாபோலே, அஸ்தமித்தபோதென்றபடி. எழுகளம் - முடிகிற யுத்தபூமி. விவரணம் - உம்முடைய இத்யாதி. விதிர்த்தான் - சலிப்பித்தான். தடஸ்த்த சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - இப்போது இத்யாதி- இப்போது - தாயார் தன்வார்த்தையாய்ச் சொல்லுகிறபோது. 'சுடர்வட்டவாய்நுதிநேமியீர் - பட்டபோது" இத்யாதி பூர்வார்த்தத்தோடே கூட்டி, மகளுடைய வ்யஸநத்துக்குத் திருவாழியாழ்வானோட்டைச் சேர்த்தியழகே ஹேதுவென்று தாத்பர்யம் அருளிச்செய்கிறார் - ஆஶ்ரிதாநாஶ்ரித இத்யாதி. அதாவது - அநாஶ்ரிதரான ஹிரண்யாதிகளை அழிக்கைக்கும், ஆஶ்ரிதையான இவளைச் சேர்த்தியழகைக்காட்டி அழிக்கைக்கும் பரிகரமொன்றேயோ? என்றபடி. இவர் அப்படி கையுந் திருவாழியுமான அழகிலே ஈடு

ஆஸ்ரிதாநாஸ்ரிதவிபாகமற உமக்கு அழிக்கைக்குப்பரிகரமொன்றேயோ? “ஆழிப்படையந் தணனை மறவியையின்றி மனத்துவைப்பாரே” என்றிறே இவர் தம்முடைய வார்த்தையும். கையுந்திருவாழியுமான அழகைக் கண்டால் நெஞ்சழியுமவர்களிறே. [நமதிட்டமென்கோல்] - ராவணஹிரண்யாதிகளைப்போலே முடிக்க நினைக்கிறீரோ? நித்யஸூரிகளைப் போலே கையுந்திருவாழியுமான அழகை அநுபவிப்பிக்கிறீரோ? தன்னையும் மறந்து உம்மையும் மறந்து ஸம்ஸாரிகளைப்போலே உண்டுஉடுத்துத் திரியவைக்கிறீரோ? இவள் பேற்றில் நீர் நினைத்திருக்கிறதேன்? [இவ்வேழைக்கே] - அத்யந்தசபலையான இவள் விஷயத்தில் நீர் நினைத்திருக்கிறதேன்?. (கூ)

# பத்தாம் பாட்டு.

ஏழைபேதை இராப்பகல் தன்
கேழிலொண்கண்ணநீர்கொண்டாள் கிளர்
வாழ்வைவேவ இலங்கைசெற்றீர் இவள்
மாழைநோக்கொன்றும் வாட்டேன்மினே.

ஆ.—(ஏழைபேதை.) உம்மை ஆசைப்படும் ஸ்வபாவையாய், உம்முடைய துர்லபத்வத்தை அறியமாட்டாத பால்யதஶாபந்நையா யிருந்த இவள், உம்மைஆசைப் பட்டுப் பெறுத் வ்யஸநத்தாலே அத்யந்தம் அவஸந்நையானுள்; இவள்முடிவதற்கு முன்னே ப்ரதிபந்தகங்களையும் நீரே போக்கிக்கொண்டு ஈண்டென வந்து ரக்ஷித்தருளவேணு மென்று எம்பெருமானை அபேக்ஷிக்கிறுள்.

ஒ.—பத்தாம்பாட்டில் இவளுடைய முக்தமான நோக்கே நோக்காக அல்லாததெல்லாம் இழந்தாள், இவ்வழகியநோக்கை இத்தனையும் போக்காதொழியவேணு மென்கிறுள்.

---

பட்டிருப்பரோ? என்ன, ஆழிப்படை இத்யாதி. அந்தணனை - பரிசுத்தனை. ‘சக்கரத்தண்ணலே யென்று தாழ்ந்து’ ‘ஆழியொடும் பொன்னூர்சார்ங்கமுடையவடிகளை யின்னுரென்றறியேன்’ இத்யாதியைத் திருவுள்ளம்பற்றி, திருமங்கையாழ்வார் முதலானுரையுங் கூட்டி அருளிச்செய்கிறுர் - கையும் இத்யாதி. ‘சுடர்வட்டவாய்நுதிநேமியீர்’ என்றத்தையுங கூட்டி ஹாவம் - ராவண இத்யாதி வாக்யத்வயோ. ‘நுதி’ என்ற - தைக்ஷ்ண்யத்தைப்பற்ற, ராவணஹிரண்யாதிகளைப்போலே என்றது. ‘சுடர்’ என்றத்தாற் சொன்ன ஸௌந்தர்யத்தைப்பற்ற, நித்யஸூரிகளைப்போலே இத்யாதி. இந்தஅர்த்தத்வயத்தையே உத்தரத்ர விவரிக்கிறுர் - கூர்மைக்கிலக்காக இத்யாதி வாக்யத்வயோ. ‘பட்டபோதெழுபோதறியாள்’ என்றத்தைப் பற்ற, தன்னையும்மறந்து இத்யாதி. அதாவது - ‘பட்டபோதெழுபோதறியாள்’ என்கிறவிடத்திலே - [Grantha text] ஜீவிதக்ஷயம்” இத்யாதிப்படியே எல்லாரும் ஸுகமாகவிருக்க இவள்உதித்ததும் அஸ்தமித்ததும் அறியாதேயிருக்கிறு ளென்றிறே தாத்பர்யம்; அந்த ஹாவத்தைத் திருவுள்ளம்பற்றி, இப்படியிருக்கிற இவளை அவர்களைப்போலே உண்டு உடுத்துத் திரியவைக்கிறீரோ வென்றபடி. ‘இவ்வேழைக்கு - ‘நமதிட்டமென்கொல்’ என்கிற பதஸங்கதியைத் திருவுள்ளம்பற்றி, ‘விரைமட்டலர்’ இத்யாதியையுங கடாக்ஷித்து, சாபலஸ்ய விஷயந்தர்ஶயந் ஹாவமாஹ - பற்றிற்றுவிடாத - இத்யாதி. ஏழை - சபலை. ‘சுடர்’ இத்யாதியையும், ‘விரை’ இத்யாதியையும் உட்கொண்டு சாபலத்தை விவரிக்கிறுர் - கையும் இத்யாதி. (கூ)

[ஏழைபேதை] - 'கிடையாது' என்றாலும் விடாதபடி அத்யந்தசபலையுமாய் ஹிதஞ்சொன்னால் கேளாதபடி பாலையுமான இவள். [இராவென்றுதொடங்கி] - இரவோடு பகலோடு வாசியின்றிக்கே தன்னுடைய ஒப்பில்லாத அழகியகண்கள் அஶ்ரு பூர்ணமாயிருக்கும். கண்ணநீராலே மிகவும்அழகிதான இவள்கண்ணை எம்பெருமான் காணில் என்படுமோ? என்று கருத்து. [கிளரென்றுதொடங்கி] - இவளோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு ப்ரதிபந்தகம் பெரிதென்னில் கிளர்ந்திருந்துள்ள இலங்கையில் வாழ்வை யெல்லாம் போக்கின உமக்குப் போக்க வொண்ணாததொரு ப்ரதிபந்தக முண்டோ?

ப.—அநந்தரம், விரோதிமிக்கால் வெந்துவிழப்பண்ணும் வீரப்பாட்டை யுடைய நீர் இவள்நோக்கொன்று மொழியச் சென்றற்றது, இத்தைமுடியாதொழிய வேணு மென்கிறாள்.

ஏழை - (கிட்டாதொழியிலும் விடாத) சபலையுமாய், பேதை - (என்சொற் கேளாத) பேதையுமான இவள், இராப்பகல் - இரவோடு பகலோடு வாசியற, தன - தன், கேழ்இல் - ஒப்புஇல்லாத, ஒண்கண் - அழகியகண்கள், நீர்கொண்டாள் - நீர்கொள்ளும் படியானாள்; கிளர் - மிக்கவுபர்த்தியையுடைத்தாய், (பரபீடாபலமான), வாழ்வு - ராவணைஶ்வர்யம், வேவ - அக்நிஸாத்தாம்படி, இலங்கை - லங்கையை, செற்றீர் - அழியச் செற்றவனே! (அவளுக்குஉதவினாற்போலே), இவள் - இவளுடைய, மாழை - முக்தமான மானின்நோக்குப்போலேயிருக்கிற, நோக்கொன்றும் - நோக்கையொன்றையுமாகிலும், வாட்டேன்மின் - க்ஷயிப்பியாதொழியவேணும். இவள்நோக்குக்கிடீர் எல்லார்க்கும் உஜ்ஜீவநஹேது வென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், இவள்நோக்கொன்றும் ஒழிய அல்லாதன வெல்லாம் சென்றற்றது, இதொன்றும் தொங்கும்படி பார்க்கவேணு மென்கிறாள்.

[ஏழை] - 'கிடையாது' என்றாலும் விடமாட்டாத அத்யந்தசபலை. [பேதை]- நான் ஹிதஞ்சொன்னால் அது கொள்ளும்பருவ மன்றென்கை. [இராப்பகல் தனஇத்யாதி] - ஆநந்தாஶ்ருவுக்குத் தகுதியாய் ஒப்பின்றிக்கே கண்ணீரில்லாவிடிலும் கண்டார்க்கு ஆலத்திவழிக்கவேண்டும்படியான கண் ஸர்வகாலமும் அஶ்ரு பூர்ணமாயிற்று. நெடுநாள் இக்கண்ணநீர்க்கு க்ருஷிபண்ணி, பலவேளையிலே, இது காட்டிலெறித்த நிலாவாய்ப்போக நீர்உபேக்ஷைபண்ணித்திரிவதே! பொன்னும் முத்தும் விளையும்படியிறே நீர் க்ருஷிபண்ணிற்று. இப்போது இவளிழவுக்கன்றிக்கே, அவனிழவுக்காயிற்று இவள் நோகிறது. [கிளர்இத்யாதி] - ப்ரதிபந்தகம் பெரிதேயென்னில்; - ராவணனிலும் பெரிதோ இவள் விரோதி? கிளர்ந்திருந்துள்ள லங்கையில் வாழ்வைப் போக்கின உமக்கு முடியாத துண்டோ? [கிளர்வாழ்வு] - தாயும் தகப்பனுஞ் சேரவிருக்க ஸம்வதியாதபடியிறே அவனுடைய கிளர்த்தி. ஒருத்திகண்ணநீர் மாற்றுகைக்கன்றோ அச்செயலைச் செய்தது. ஒன்றையழிக்கப்புக்கால் நிஶ்ஶேஷமாக அழிக்குமவரிறே நீ ரென்னவுமாம். நம்மைச் செய்யச்சொல்லுகிறதென்? என்ன, [இவள் மாழைநோக்கு] - முக்தமான மான்போலேயிருக்கிற நோக்கு. மாழை - இளமையும் அழகும். நோக்கு - கண். இந்நோக்கொன்று மொழிய அழிந்தது, அஸமாதேயமான நோக்கொன்றும் அழியாதபடி பண்ணவேணும்.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவள், நோக்கோன்றும் ஒழிய அல்லாததெல்லாம் ஒழிந்தாள்; இந்நோக்கோன்றையும் நோக்கிக்கொள்ளீ ரென்கிறாள்.

[ஏழை] - 'கிடையாது' என்று ப்ரமாண ப்ரஸித்தமானத்திலே, கிடைக்குமதில் பண்ணும் சாபலத்தைப் பண்ணுகை. [பேதை] - 'கிடையாது' என்று அறிந்து மீளும் பருவமல்ல, நான் ஹிதஞ்சொன்னாலுங் கேளாத பருவம். [இராப்பகல் தனகேழிலொண்கண்ணநீர்கொண்டாள்] - ஆநந்தாஶ்ருவுக்குத் தகுதியாய்; [கேழில்] - கேழ் என்று - ஒப்பாய், இல்என்று - இல்லாமையாய், ஒப்பின்றிக்கே யிருப்பதாய்; ஒண்கண் - கண்ணநீரில்லாவிடிலும், கண்டார்க்கு ஆலத்திவழிக்கவேண்டும்படியான கண், ஸர்வகாலமும் அஶ்ரு பூர்ணமாயிற்று. தாமரையிலே முத்துப்பட்டாற்போலே இக்கண்ணும் கண்ணநீருமா யிருக்கிற இருப்பை, காட்டிலெறித்த நிலாவாக்குவதே! இவ்விருப்புக்கு க்ருஷிபண்ணி. பலவேளையிலே இழப்பதே; பொன்னும் முத்தும் விளையும்படியிறே க்ருஷிபண்ணிற்று. இப்போது இவளிழவுக்கன்றியே, அவனிழவுக்காயிற்று இவள் கரைகிறது. [கிளர்இத்யாதி] - நடுவே கண்ணீர்விழவிடுமித்தனையோ விரோதி கனத்திருக்கவேன்ன, ராவணனிலும் வலிதோ இவளுடைய விரோதிவர்க்கம்? "உதீர்ணஸ்யராவணஸ்ய" (உதீர்ணஸ்யராவணஸ்ய) என்கிறபடியே - தாயும் தமப்பனும் சேரவிருக்கப் பெறாத ஐஶ்வர்யமிறே. கிளர்ந்த ஐஶ்வர்யமானது வேம்படி லங்கையை நிரஸித்தீர்.

---

*பத்தாம்பாட்டு - ஏழை இத்யாதி. 'மாழைநோக்கொன்றும் வாட்டேன்மின்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இவள் இத்யாதி.*

*கிடையாதென்று ப்ரமாணப்ரஸித்தமானத்திலே யென்றது - "ஹஸ்தி நாராயணம் ஸர்வம் ஸர்வஸ்வம் ... ஸர்வஸ்ய ... ஸர்வஹாம்" "நவக்ஷ ... ஷாவஸ்ய ... " "நஹ்யாஸ்ய ... " 'கட்கிலீ' இத்யாதியைப்பற்ற. நான் ஹிதஞ்சோன்னாலு மிதி - 'தகவுகளே' 'வஞ்சனையே' இத்யாதிஸ்தலங்களிலே சொன்னே னென்றபடி. ஆலத்திவழிக்கை - ஆலத்தியாலே த்ருஷ்டிதோஷத்தை யழிக்கை; போக்குகை யென்றபடி. 'தனசேழிலொண்கண்ணிலே - இராப்பகல்நீர்கொண்டாள்' என்று அந்வயித்து அர்த்தம் - ஸர்வகாலமும் இத்யாதி. கண்ணை வர்ணிக்கிறவளுடைய ஹார்த்தஹாவம் - தாமரையிலே இத்யாதி. அதாவது - ஸம்ஶ்லேஷாங்கமஸ்தகரஸமஸாத்மிக்கைக்காகவும், மேன்மேலென த்ருஷ்ணைபிறப்பிக்கைக்காகவு மன்றோ நீர் விஶ்லேஷித்தது; அவைஅப்படியே பலித்தபின்பும், கண்ணநீரையும் மாற்றிக் கலக்கப்பெறாதே இழப்பதே யென்றபடி. தாமரையிலே - தாமரைப்பூவிலே, அநிலநிச்சுவாயிழக்கிறீரல்லீர், 'இது வேணும்' என்று ஸ்ருஷ்ட்யவதாராதிகளாலே பாடுபட்டு இழந்துவிட்டீரே யென்கிறாள் - இவ்விருப்புக்கு இத்யாதி. 'ஒண்முத்தும்பைம்பொன்னுமேந்தி' என்றத்தைஉட்கொண்டு ரஸோக்தி - பொன்னும்முத்தும் இத்யாதி. பொன் - வைவர்ண்யம். முத்து - அஶ்ருபிந்துக்கள். இப்போதுஇவளிழவுக்கன்றியேயிதி - இல்லையாகில், 'தனசேழிலொண்' என்கிற விசேஷணத்துக்கு ப்ரயோஜநமில்லையிறே. கீழுக்கு ஶேஷமாக்கி அவதாரிகை - நடுவே இத்யாதி. ராவணனிலும் வலிதோ? என்கைக்கு அவன் அப்படி அதிகனோ வென்ன, கிளர்த்தியின் சரமாவதியாஹ - 'உதீர்ணஸ்ய' இத்யாதி. அயோத்யாகாண்டே ப்ரதமே, "ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: । அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:." 'வாழ்வை' இத்யத்ர - ஐகாரம் - அவ்யயம். 'கிளர்வாழ்வைவேவ இலங்கைசெற்றீர் - இவள் மாழைநோக்கொன்றும் வாட்டேன்மினே' என்று மேலுக்கு*

ஒன்றைஅழிக்கநினைத்தால், முதல்கிடவாமே அழிக்குமவரா யிராநின்றீர். [இவள்மாழை நோக்கொன்றும் வாட்டேன்மினே] - இவளுடைய முக்தமான நோக்கொன்றும் கிடக்கும்படி கார்யம்பார்க்கவேணும் மாநழையென்று - இளமை. [நோக்கொன்றும் வாட்டேன்மினே] - இவள்தானே முடிந்துபோகிருள். நாங்கள் தானே யிழக்கிறேம், ஜீவிக்க இருக்கிற நீர் வேணுமாகில், உம்முடைய ஜீவநத்தை நோக்கிக்கொள்ளப் பாரும். (கo)

## பதினோராம் பாட்டு.

வாட்டமில்புகழ் வாமனனை இசை
கூட்டி வண்சடகோபன்சொல் அமை
பாட்டோராயிரத்திப்பத்தால் அடி
சூட்டலாகு மந்தாமமே.

**ஆ.**—(வாட்டமில்.) ஆழ்வார் இப்படி அவஸந்நரானவிடத்தில், அவருடைய அவஸாதமெல்லாம் போம்படி வந்துதோன்றி யருளுகையாலே வாட்டமில்லாத ப்ரணயித்வ வாத்ஸல்ய காருண்ய ஸௌசீல்யாதி கல்யாணகுணங்களை யுடையனாயிருந்த எம்பெருமானைச் சொன்ன இத்திருவாய்மொழி, அவன் திருவடிகளிலே அழகியதொரு திருமாலையாகச் சூட்டலா மென்கிறார்.

**ஒ.**—நிகமத்தில், இப்பத்துங் கற்றார்க்கு எம்பெருமான் திருவடிகளிலே ஆழ்வார் பட்ட க்லேசமெல்லாம் படாதே திருமாலை சாத்தி அடிமை செய்யப்பெறலா மென்கிறார்.

[வாட்டமில் புகழ் வாமனனை] - இவ்வவஸாதத்திலே வந்து ஸம்ஶ்லேஷித்து ஆழ்வாரை உளராக்குகையாலே வாட்டமின்றிக்கே பரிபூர்ணமான கல்யாணகுணங்களை யுடையனான வாமநனை. [இசைகூட்டி] - இசையோடேகூட்டி. [அமைபாட்டு] - அர்த்த ஸௌஷ்கல்யத்துக்கும் ஶப்தஸௌஷ்கல்யத்துக்கும் அமைந்த ஶாதைகள்.

**ப.**—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவதாராதநரூபகைங்கர்யத்தை அருளிச்செய்கிறார்.

(நோக்கு வாடாதபடி தன்குறைவுதோன்ற அர்த்தியாய்வந்து முகங்காட்டினபடியாலே), வாட்டம்இல் - வாட்டம்இல்லாத, புகழ்-குணப்ரதையையுடைய, வாமனனை - வாமநனைக்குறித்து, வண்சடகோபன் - உதாரரான ஆழ்வார், இசைகூட்டி-இசையோடே கூட்டி, சொல் - சொன்ன, அமை - (லக்ஷணபூர்த்தியாலே) அமைதியையுடைய, ஓர் - அத்விதீயமான, பாட்டு - பாட்டுக்கள், ஆயிரத்து - ஆயிரத்திலும், இப்பத்தால் - இப்

---

ஶேஷமாக்கி ஸாவார்த்தம் - ஒன்றையழிக்க இத்யாதி. அதாவது - வக்கையை நிஶ்ஶேஷமாக அழித்தாற்போலே இவளையும் அழியாதே கொள்ளுமென்றபடி. 'வாட்டேன்மின்' என்று பலம் அவனதாகச் சொன்னதுக்கு ஸாவம் - இவள்தானே இத்யாதி. உம்முடைய ஜீவநத்தை யென்றது - 'மணநோக்கமுண்டானே' என்றத்தைப் பற்ற. க்ரமேண அந்வயஃ. (கo)

பத்தால், அடி - அந்தவாமநனடியிலே; அம் - அழகிய, தாமம் - மாலையை, சூட்டலாகும் - சூட்டலாம். இது வஞ்சிவிருத்தம்.

இ.—நிகமத்தில். இத்திருவாய்மொழியப்யஸித்தார் சூட்டுநன்மாலைப்படியே அத்திரளிலே கூடித் திருமாலை சாத்தியநுபவிக்கப் பெறுவர்க ளென்கிறார்.

[வாட்டமில்புகழ்] - "நோக்கொன்றும் வாட்டேன்மினே" என்றவாறே, 'புறப்பட்டோம்' என்று லஜ்ஜையோடே வந்து தோற்றினான். இவள் வாட அவன்புகழாயிற்று வாடுவது. இவ்வவஸாதத்திலே வந்து முகங்காட்டுகையாலே பூர்ணமான கல்யாண குணங்களை யுடையனானான். [வாமனனை] - இவளுடைய ஆற்றாமையில் க்ருஶனாய், அர்த்தித்வந்தோற்ற வந்தபடி. தன்னுடைமைக்குத் தானர்த்தியாய் வருமவனிறே. [இசைகூட்டி] - இயல்தானே ஆகர்ஷகமாயிருக்க, புஷ்பம் பரிமளத்தோடே அலர்ந்தாற்போலே இசையோடே புணர்ப்புண்ட தென்கை. [வண்சடகோபன்சொல்] - மாநஸாநுபவமன்றிக்கே வாசிகமாக்கி நாட்டையடைய வாழ்வித்த ஔதார்யம். [அமைபாட்டு] - சப்தலக்ஷணங்களாலும் அர்த்தத்தாலும் பூர்ணமாயிருக்கை. அமைவு - சமைவு. [ஓராயிரத்திப்பத்தால்] - ஆயிரமும்இப்படியே, அதில்இப்பத்தையும் கற்றார்க்கு. [அடிசூட்டலாகு மந்தாமமே] - திருவடிகளிலே சூட்டுநன்மாலைப்படியே செவ்விமாலையைச் சூட்டலாயிற்று: இவர் "அடியார்கள் குழாங்களை; உடன்கூடுவதென்றுகொலோ" என்று ஆசைப்பட்டது அப்படியே அநுபவிக்கப்பெறுவர்கள்; பித்ருதநம் புத்ரனுக்கு ப்ராப்தமாமாபோலே, இவ்வாற்றாமையால் வந்த க்லேஶம் அநுபவிக்கவேண்டாதே பேற்றிலே அந்வயிப்பர்கள்.

ஈடு.—நிகமத்தில் – இத்திருவாய்மொழியை அப்யஸிக்க வல்லார், இவர் ப்ரார்த்தித்தபடியே நித்யஸூரிகள்திரளிலே போய்ப்புக்கு ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே, சூட்டுநன்மாலைப்படியே திருமாலைசாத்தி அடிமைசெய்யப்பெறுவர்க ளென்கிறார்.

[வாட்டமில்புகழ்வாமநனை] - இவ்வளவிலே வந்து முகங்காட்டிற்றிலனாகில், அவன்புகழுக்கு வாட்டம் வந்ததிறே. [வாமனனை] - தன்னுடைமைபெறுகைக்கு இரப்பாளனுமவனிறே. [இசைகூட்டி] - பரிமளத்தோடே பூஅலருமாபோலே, இசையோடே புணர்ப்புண்டதாயிற்று. [வண்சடகோபன்சொல்] - "உதாரதீர்முநி:" (உதாரதீர்முநி:)

---

நிகமம்-வாட்டம் இத்யாதி. 'அடிசூட்டலாகுமந்தாமமே' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி. திருவிருத்தம் உக - சூட்டுநன்மாலைகள் - சூட்டுகைக்குத் தகுதியான நல்லமாலைகள்.

நித்யநிர்த்தோஷகுணங்களுக்கு வாட்டத்துக்கு ப்ரஸக்தியுண்டோ? என்ன, இவ்வளவிலே இத்யாதி. 'வாமனன்' என்கிற பதத்துக்கு - 'இவளாற்றாமை தனக்குஉண்டு' என்னுமிடந்தோன்ற வர்த்தியாநின்றா னென்று அர்த்தமாக விவக்ஷித்து, இப்பதம் இவ்வர்த்தத்தைக்காட்டுமோ? இத்யாஶங்காயாமாஹ - தன்னுடைமை இத்யாதி. இசை - காநம். புணர்ப்புண்டதாயிற்று - ஸந்தர்ப்பிதமாயிற்று. இவர்க்கு வண்மையேது? என்ன, "உதாரதீ:" இத்யாதி. பாலகாண்டே த்விதீயே, "உதாரவ்ருத்தார்த்தபதைர்மநோரமைஸ்ததாஸ்ய ராமஸ்ய சகார கீர்த்திமாந் । ஸமாக்ஷரைஶ்லோகஶதைர்யஶஸ்விநோ யஶஸ்கரம் காவ்யமுதாரதீர்முநி:". 'அமைபாட்டு' என்றவிடத்திலே - "ஸந்திம் ஸமாஹ்ய தந்த்ர" இத்யாத்யநுஸந்தேயம். 'அந்தாமம்' என்றதுக்கு

என்னுமாபோலே, மாநஸாநுஹவமன்றிக்கே வாசிகமாக்கி நாட்டை வாழ்வித்த ஔதார்யம். [அமைபாட்டோராயிரத்து] - அமைவு - சமைவாய், ஶப்தார்த்தங்கள் நிறைந் திருக்கை. [இப்பத்தால்இத்யாதி] - இப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்களுக்குச் சேவ்விமாலையைக்கோண்டு அவன்திருவடிகளிலே நித்யகைங்கர்யம்பண்ணப்பெறலாம். "கைங்கர்யம் பண்ணவேணும்" என்றுஆசைப்பட்டு, அதுபெருமையாலேபோலேகாணும் இவ்வாற்ருமையெல்லாம் பிறந்தது; பித்ருதநம் புத்ரனுக்கு ப்ராப்தமாமாபோலே, இவ்வாற்ருமையால்வந்த க்லேஶம் இதுகற்றவர்களுக்கு அநுபவிக்கவேண்டாதே, "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்றுகோலோ" என்று ஆசைப்பட்டபடியே அத்திரளிலே போய்ப்புக்கு அநுபவிக்கப்பெறுவ ரேன்கிருர்.

முதற்பாட்டில் - ஆஶ்ரிதராபத்தே சேப்பேடாக உதவும் ஸ்வஹாவனுனவன், இவளுடைய ஆபத்துக்கு வந்துதவுகிறில னேன்ருள்; இரண்டாம்பாட்டில் - "விரோதியுண்டே" என்று நினைவாக, ஶாணனுடைய ஶாஹூபவநத்திலும் வலிதோ இவள் விரோதி? என்ருள்; மூன்ரும்பாட்டில் - இப்படிசெய்ய நினைத்த நீர் முன்புஅச்செயலை என்றியசெய்தீர்? என்ருள்; நாலாம்பாட்டில் - அதுபொறுக்கமாட்டாமல் அதுதன்னையே உபகாரமாகச் ,சோல்லாநின்ரு ளேன்ருள்; ஐந்தாம்பாட்டில் - அவ்வளவிலும் வாராமையாலே, நிர்த்தயனேன்ருள் திருத்தாயார்; ஆரும்பாட்டில் - அதுபொறுக்கமாட்டாமல், கேவோய் ஆகரத்தில் தகவுமறுக்குமோ? அது நங்குறைகா ணேன்கிரு ளேன்ருள்; ஏழாம்பாட்டில் - அவன்குணஹாநிதன்னையே குணமாகக் கொள்ளும்படி இவளை வஞ்சித்தானேன்ருள்; எட்டாம்பாட்டில் - உம்மை அபாஶ்ரயமாகப் பற்றினஇவள் பமேபாடேயிது வேன்ருள்; ஒன்பதாம்பாட்டில் - இவள்பேற்றில் நீர்சேய்தருள நினைத்திருக்கிறதேன்? என்ருள்; பத்தாம்பாட்டில் - சேஷித்தது நோக்கோன்றுமேயாயிற்று, இதோன்றையும் நோக்கிக்கோள்ளீ ரேன்ருள்; நிகமத்தில் - இத்திருவாய்மொழியை அப்யஸித்தார்க்குப் பலஞ்சோல்லித் தலைக்கட்டினர்.

---

*அர்த்தம் - சேவ்விமாலை என்றது. இங்கே இதுகற்றவர்களுக்குக் கைங்கர்யத்தைப் பலமாகச் சொல்லுகையாலே - கீழே, 'அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ' என்றவிடத்திலும் கைங்கர்யபர்யந்தம் விவக்ஷித மென்கிருர் - கைங்கர்யம்பண்ண இத்யாதி. இவர்களுக்கும் இவரைப்போலே ஆற்ருமை:பிறக்கவேண்டாவோ? என்ன, பித்ருதநம் இத்யாதி. இவருடைய பாசுரங் கற்றவழியாலே இவரைக்குறித்து ஶிஷ்யபுத்ரத்வ முண்டிறே கற்றவர்களுக்கு மென்றபடி. அநுபவிக்கப்பெறுவரேன்கிறரீதி - இதுகற்றவர்களுக்கு இவருடைய ப்ரார்த்தனையே ப்ரார்த்தனை, தனித்து ப்ரார்த்தனைவேண்டா வென்றபடி. என்றிய - எதுக்காக. மறுக்குமோ - வற்றுமோ? அபாஶ்ரயம் - ஆஶ்ரயம். 'ஈயாடுவதோ கருடற்கெதிரே யிரவிக்கெதிர் மின்மினியாடுவதோ, நாயோடுவதோ வுறுமிப்புலிமுன் கரிகேசரிமுன் னடையாடுவதோ, பேயாடுவதோ அழகூர்வசிமுன் பெருமானடிசேர்வகுளாபரணன், ஓராயிரமாமறையின் றமிழி லொருசொற்பொறுமோ வுலகிற்கவியே.' என்கிற சங்கத்தார்கவியும், 'அமைபாட்டோர்' என்றவிடத்திலே அநுஸந்தேயம். வாமநனை - வாமனனைக்குறித்து. இசைகூட்டி - இசையோடுகூட்டி. சொல் - சொன்ன. க்ரமேண அந்வய:.* (கக)

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி :— [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஆடிமகிழ்வானில் அடியார்குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக்குறைய தனல்—வாடிமிக
அன்புற்றார் தன்னிலைமையாய்ந் துரைக்கமோகித்துத்
தன்புற்றான்மாறனங்தோ.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## ஐந்தாந்திருவாய்மொழி—அந்தாமத்தன்பு: ப்ரவேஶம்.

ஆ.—(அந்தாமத்தன்பு.) இப்படி தோற்றியருளின எம்பெருமான் தம்மோடு கலந்த கலவியையும், அக்கலவியால் தமக்குப்பிறந்த ஸம்ருத்தியையுஞ் சொல்லுகிறார்.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில் ஶ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆர்த்தத்வநியைக்கேட்டு மிகவும் வ்யாகுலனாய் எழுந்தருளி அவனுடைய ஆர்த்தியெல்லாந் தீர்த்து அத்யந்த ஸுகிதனாம்படி பண்ணியருளினாற்போலே, க்ருபாஸமுத்ரமான எம்பெருமான் ஆழ்வாருடைய ஆர்த்தத்வநியைக் கேட்டுத் தான் மிகவும் ஆர்த்தனாய் 'அழிதாக ஜகந்நிர்வஹணம் பண்ணினோமாகாதே' என்று தன்னுடைய ரக்ஷணஸ்வபாவத்தை நிந்தியாநின்றுகொண்டு சீக்ரமாக வந்து தம்முடைய ஆர்த்தியைத் தீர்த்து மிகவும் நிர்வ்ருதராம்படி பண்ணித் தம்மோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே தான் அத்யுஜ்வலனாய்த் தம்பக்கலிலே அத்யபிநிவிஷ்டனாய், தன்னுடைய ஸ்வரூபகுண விபூதிகளையும் திவ்யாபரணங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும், மற்றுந் தனக்குள்ள திவ்யபோகங்களையும், இவற்றையெல்லாந் தமக்குக்காட்டிக்கொடுத்து க்ருதக்ருத்யனானபடியை அநுஸந்தித்து ஹர்ஷவிஸ்மய நிர்பரரான ஆழ்வார், தமக்குப்பிறந்த ஸம்ருத்தியைப் பேசியநுபவிக்கிறார்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், இப்படி இவருடைய ஆர்த்தியைக் கண்டு த்வரிதனாய் ஸம்ஶ்லேஷித்த ஸர்வேஶ்வரனுக்கு ப்ரீதியாலே வந்த ஸௌந்தர்யாதிஶயத்தை அருளிச்செய்கிறதாக; ப்ரதமத்திலே ஸங்க்ரஹேண பூஷணவயவாயுத ஶோபாவிஶிஷ்டமான வடிவழகையும், அத்தோடேகூடின விபூதயுக்மேஷத்தையும், ஸம்ஶ்லேஷ

காரிதமான ரக்ஷகத்வோந்மேஷத்தையும், ஸ்த்திரௌஜ்ஜ்வல்யத்தையும், உபமாநராஹித்யத்தையும், அபர்யந்தபூஷணாதி யோகத்தையும், தர்ஶநீயசேஷ்டிதத்வத்தையும், ஸம்ஶ்லேஷவைலக்ஷண்யத்தினுடைய வாசாமகோசரதையையும், சொல்லுகைக்கு அதிகாரிகளில்லை யென்னுமிடத்தையும், சொல்லுகை அரிதென்னுமிடத்தையும் அருளிச்செய்து, தம்முடைய ஸம்ஶ்லேஷப்ரீதிகாரித ஸௌந்தர்ய பாரம்யத்தை அருளிச்செய்கிறார்.

இ.—அஞ்சாந்திருவாய்மொழியில், ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, "பரமாபத்மாபந்ந:"—என்கிற பரமமான ஆபத்தில் ஆர்த்தத்வநியைக் கேட்டு, "ஸஹஸா நிஷ்பபாத யயௌ ஜவேந:" என்கிறபடியே அரைகுலையத் தலைகுலைய வந்து, அவனுடைய ஆர்த்தியெல்லாந் தீரமுகங்காட்டி ஆஶ்வஸிப்பித்து, அத்தாலே தான் ஹ்ருஷ்டனாய்ப் பெருப்பேறு பெற்றானாய் நின்றாற்போலே ஆழ்வாருடைய ஆர்தத்த்வநியைக் கேட்டு "அழகிதாக ரக்ஷகரானோம்" என்று ரக்ஷகத்வத்தை நிந்தியாநின்றுகொண்டு, அந்த ஆர்த்தியெல்லாந் தீர முகங்காட்டி அத்தாலே தான் அத்யுஜ்வலனாய், அழகையும் சேஷ்டிதங்களையும் ஆயுதாபரணாதிகளையும் இவரிழவு மறக்கும்படி அநுபவிப்பித்து க்ருதக்ருத்யனான படியைக் கண்டு ஹ்ருஷ்டராய், தமக்குப்பிறந்த ஸம்ருத்தியைப் பேசியநுபவிக்கிறார்.

ஈடு.—"கஜாகர்ஷதே தீரே க்ராஹாகர்ஷதே ஜலே" (கஜஆகர்ஷதே தீரேக்ராஹஆகர்ஷதேஜலே) என்னுமாபோலேயிறே கீழ் ஆடியாடியில் ஆழ்வார்க்குப் பிறந்த வ்யஸநம்; அதேல்லாம் ஆறும்படியாக, "அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம்" (அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம்) என்கிறபடியே பேரியத்வரையோடே ஆயுதாபரணங்களை அக்ரமமாகத் தரித்துக்கோண்டு மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து

அந்தாமத்தன்பு ப்ரவேஶே, வ்ருத்தாநுவாதபூர்வகம் வர்த்திஷ்யமாணஸங்கதிமாஹ-கஜ இத்யாதி. அதாவது விஶ்லேஷவ்யஸநம் முடிக்கத் தேட, நசையானது முடியவொட்டாமல் ஜீவிப்பிக்க, இப்படியேயிறே சென்றதென்றபடி. விஷ்ணுதர்மே அஷ்டஷஷ்டிதமேத்யாயே, "கஜாகர்ஷதே தீரே க்ராஹாகர்ஷதே ஜலே। தயோர்த்வந்த்வஸமம் யுத்தம் திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம்." ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வ்யஸநமாறும்படி தோன்றின ப்ரகாரத்தை விஸ்தரேண அருளிச்செய்யாநின்றுகொண்டு அப்படியே இவர்க்குப்பிறந்த வ்யஸநமாறும்படி தோன்றின ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்-அதேல்லாமாறும்படி இத்யாதி. ஸ்ரீரங்கராஜஸ்தவே, "அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்த:புரம்। அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜமாரோஹத: கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ்த்வராயை நம:". "ஸஹஸா நிஷ்பபாத யயௌ ஜவேந:" என்றத்தைப்பற்ற: ஆயுதாபரணங்களை இத்யாதி. "அஸ்த்ராயுதோ ஹ்யநிமிஷாயுதகாமஜேந:" என்றத்தைப்பற்ற-மடுவின்கரையிலே யென்கிறார். மஹாபாரதே விஷ்ணுதர்மே, "க்ராஹக்ரஸ்தம் கஜேந்த்ரம் தம் க்ராஹஞ்ச ஜலாஶயாத்। உஜ்ஜஹாராப்ரமேயாத்மா தரஸா மதுஸூதந:। ஸ்தலஸ்தம் தாரயாமாஸ க்ராஹஞ்சக்ரேண

உள்ளேபோய்ப் புக்கு, ஆனையையொருகையாலும் முதலையையொருகையாலுமாக அணைத் தேடுத்துக்கொண்டு கரையிலே யேறி, "ஶ்ராஹம்வக்ரேணஶாயவ:" என்கிறபடியே - ப்ரஜையின்வாயிலே முலையைக்கொடுத்து க்ரந்தியை சிகித்ஸிப்பிக்குமாபோலே, பெரிய பிராட்டியாரும் தானுமாக இரண்டுக்கும் நலிவுவாராமே திருவாழியாலே விடுவித்து சாத்தியருளின திருப்பரிவட்டத்தலையைச் சுருட்டித் திருப்பவளத்திலே வைத்து அதினுடைய புண்வாயை வேதுகொண்டு திருக்கையாலே குளிர ஸ்பர்ஶித்துநின்றாற்போலே, இவரும் "வலங்கொள்புள்ளுயர்த்தாய்" என்று கூப்பிட்ட ஆர்த்தநாதம் செவிப்பட்டு, 'அழகிதாக நாம் ஜகந்நிர்வஹணம் பண்ணினோம், நாமாரானோம்' என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜாபயங்களினாலே விஹ்வலனாய், தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்கள் ஒப்பனை, திவ்யாயுதங்கள் சேர்ந்த சேர்த்தி, இவையெல்லாவற்றோடும் வந்து ஸம்ஶ்லேஷித்து அத்தாலே ஹ்ருஷ்டனாய் க்ருதக்ருத்யனாயிருக்கிற இருப்பை அநுபவித்து, அவ்வநுபவஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே தாம்பெற்ற பேற்றைப் பேசி யநுபவிக்கிறார்.

## முதற்பாட்டு.

அந்தாமத்தன்புசெய்து என்னாவிசேரம்மானுக்கு
அந்தாமவாழ்முடிசங்கு ஆழிநூலாரமுள
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய்செங்கமலம்
செந்தாமரையடிக்கள் செம்பொன்திருவுடம்பே.

*ஆ.—நித்யநிர்த்தோஷ நிரதிஶயகல்யாண திவ்யதாமத்திற்பண்ணும் ப்ரேமத்தை என்பக்கலிலே பண்ணிக்கொண்டு, ஸர்வதிவ்யபூஷணாயுத பூஷிதமாய் நிரதிஶயஸௌந்தர்யாதி கல்யாணகுணவிஶிஷ்டமாய், ஶுத்தஜாம்பூநத ப்ரபமான திவ்யரூபத்தோடே வந்து என்னோடே கலந்தருளினானென்கிறார்.*

---

*ஶாயவ:" இத்யாதியைப்பற்ற, ஆனையையொருகையாலும் இத்யாதி. "ஶாயவ:" என்றதுக்கு அர்த்தம் பெரிய பிராட்டியாரும் இத்யாதி. இரண்டுக்கும்-வாராமே-முதலைக்கே நலிவுவரும்படி யென்றகூட்டுவது. அவன் நிரவதிகவ்யாமோஹயுக்தனாகையாலே ஸம்பாவிதஸ்வபாவங்களை அருளிச்செய்கிறார்- சாத்தியருளின இத்யாதி. இதுக்குஸூசகம் - "விஶ்வஸ்மிந்நபி யெவவிரவஹ்யஸ்நிவாய்யஹஸ்தயஸ்ய ஜுஹூஷஸ்திவஸோஶ்ரி தவஸ்தஜெஸ்த । ஶ்ஜஷ்ஷஸ்தவஹஜொஸ்தஸ்யோஹிஜெதநவாஷம் வஸாஸ்ஷஜஷொவிவகாஸஷணீஷா" என்று ஆழ்வார் அருளிச்செய்த வசநம். வேதுகொண்டு- உஷ்ணமாக்கி, காய்ச்சி யூற்றி யென்றபடி. "யிஜாம்" என்றத்தைக் கடாக்ஷித்து, நாமாரானோம் என்றது. "ஹ்ரீரெஷா ஹிஸஸோதஷா" என்றத்தைப்பற்ற, லஜ்ஜாபயங்களினாலே என்றது. 'முடிந்துவிடுமோ' என்கிற ஶங்கை - பயநிமித்தம். 'தன்னுள்கலவாதது' 'செம்பொன்திருவுடம்பு' 'அரனேயோ' 'பலபலவேயாபரணம்' 'ஆழிநூலாரம்' இத்யாதிகளைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - ஸ்வரூப இத்யாதி. 'என்னுள்கலந்தவன்' என்றத்தைப்பற்ற, வந்துஸம்ஶ்லேஷித்து என்கிறார். 'மரதகக்குன்றமொக்கும்' 'ஆராவமுதமாய்' இத்யாதியைப்பற்ற, ஹ்ருஷ்டனாய் இத்யாதி. "க்ருதக்ருத்யஸ்ஷாஸஸ:" என்றத்தைப்பற்ற-க்ருதக்ருத்யனாய் என்றது.*

ஒ.—முதற்பாட்டில், தாம் மநோரதித்தபடியே தன் பரிகரங்களோடேகூடத் தம்மோடேவந்து ஸம்ஶ்லேஷிக்கையாலே எம்பெருமானுக்குப் பிறந்த ஔஜ்வல்யத்தைப் பேசுகிறார்.

[அந்தாமத்தென்று தொடங்கி] - திருநாட்டிலுள்ளார் பக்கல் பண்ணும் அபிநிவேஶத்தை என்பக்கலிலே பண்ணி என்னோடே வந்து ஸம்ஶ்லேஷித்த ஸர்வேஶ்வரனுக்கு அழகிய மாலை செவ்விபெறுகின்றுள்ள திருவபிஷேகம் ஶ்ரீபாஞ்சஜந்யம் திருவாழி திவ்யாபரணங்கள் என்று தொடக்கமாகப் பண்டு என்னோட்டை விரஹத்தாலே அநுஜ்வலமானவை, ஸம்ஶ்லேஷத்தாலே உளவான என்னும்படி உஜ்வலமாயின. தாமம் - தேஜஸ்ஸாகவுமாம். [செந்தாமரைத்தடங்கண்] - ஹர்ஷப்ரகர்ஷத்தாலே உத்புல்ல புண்டரீக தடாகம்போலே விகஸிதமான திருக்கண்கள்.

ப.—முதற்பாட்டில், பூஷணாதி விஶிஷ்டமான விக்ரஹஶோபையை அநுபவிக்கிறார்.

அந்தாமத்து - பரமபதத்தில், அன்புசெய்து - விருப்பத்தைப்பண்ணி, என்னுவிசேர் - ஹேயனானவென்னெஞ்சுக்குள்ளே பொருந்தின, அம்மானுக்கு - நிருபாதிக ஸ்வாமியானவனுக்கு, (ஶேஷித்வஸூசகமான), அம் - அழகிய, தாமம் - மாலையையுடைத்தான, வாள் - உஜ்ஜ்வலமான, முடி - திருவபிஷேகம், சங்கு ஆழி - திவ்யாயுதங்கள், நூல் - திருயஜ்ஞோபவீதம், ஆரம் - திருவாரம், உள - (இவை) ஸ்ப்புரித்துத் தோன்றுகின்றன; கண் - திருக்கண்கள், செந்தாமரைத்தடம் - சிவந்ததாமரைத்தடாகமாயிராநின்றன; செம்கனி - சிவந்தபக்வபலம்போன்ற, வாய் - அதரம், செம்கமலம் - சிவந்ததாமரையாயிராநின்றது; அடிக்கள் - திருவடிகள், செம்தாமரை - சிவந்ததாமரையாயிராநின்றன; திருவுடம்பு - திருவுடம்பு, செம்பொன் - செம்பொன்னாயிராநின்றது; இப்பாட்டு - அந்தராதித்ய வித்யையிற்சொன்ன ஹிரண்மய விக்ரஹயோகத்தையும், புண்டரீகாக்ஷத்வாத்யவயவஶோபையையும், கிரீடமகுடாத்யாபரண ஶோபையையும், த்ருதஶங்கசக்ரத்வத்தையுஞ் சொல்லி, இப்படி ஆதித்யமண்டலாந்தர்வர்த்தியானவன், “ஸயஶ்சாயம்புருஷெயஶ்சாஸாவாதித்யெஸஏக:” என்கிறபடியே - அழகிய ஆதித்யமண்டலத்திற்பண்ணும் விருப்பத்தை என்னெஞ்சிலே பண்ணிப்புகுந்து, அந்தவ்யக்தைக்யம் இங்கே ஸ்ப்புரிக்கும்படி அத்யுஜ்ஜ்வலனாயிராநின்றானென்றுஞ் சொல்லும்.

இ.—முதற்பாட்டில், தன் பரிகரங்களோடே வந்து கலந்து, அத்தாலே அவனுக்குப்பிறந்த ஔஜ்வல்யத்தைப் பேசியநுபவிக்கிறார்.

[அந்தாமத்தன்பு செய்து] - பரமபதத்திலுள்ளாரெல்லார்பக்கலிலும் பண்ணும்அபிநிவேஶத்தை என்பக்கலிலே பண்ணி. “ஜ்ஞாநக்ராஹ்ய:” இதிவத். [என்னுவிசேர்] - கமர்பிளந்த கரையிலே நீரைப்பாய்ச்சினாற்போலே, “உள்ளுளாவி யுலர்ந்துலர்ந்து” என்று குருத்து வற்றுகவற்றின என்னாத்மாவிலே, விடாயர் மடுவிலே விழுமாபோலே வந்து கலந்தான். [அம்மானுக்கு] - நித்யவிபூதியிலுள்ளாரோபாதி லீலாவிபூதியிலுள்ளார்க்கும் வந்து முகங்காட்டவேண்டும் ப்ராப்தியையுடையவனுக்கு. இவரைப்பெற்றபின்பாயிற்று அவன் ஸர்வேஶ்வரனாயிற்று. [அந்தாமவாழ்முடி] - அழகிய

மாலை வாழாநின்றுள்ள முடி. வாளென்று ஒளியாய், அழகியமாலையையும் ஒளியையு முடைத்தான திருவபிஷேக மென்றுமாம். தாமம் - தேஜஸ்ஸாகவுமாம். சங்கு, ஆழி, நூல், திருயஜ்ஞோபவீதம், ஆரம் இவை நித்ய ஸூரிகளுக்கும் உபலக்ஷணம். அடியார்கள் குழாங்களை என்று இவர் ஆசைப்பட்டபடியே ஸபரிகரனாய் வந்து கலந்தான். [உள] - இவரோடு கலப்பதற்கு முன்பு அஸத்ஸமமாய் அநுஜ்வலமுமாயிருந்த இவை உளவுமாய், உஜ்வலமுமாயின வென்கிறது. நித்யரானவர்கள் உளராகையாவதென்? என்னில்;—"வனகாகீ-நஸெ௨-த" என்கிறபடியே இவரோடு கலவாதபோது அந்த விபூதியுமில்லையாய்த் தோற்றுகையாலே சொல்லுகிறது. [செந்தாமரை இத்யாதி] - ஆடியாடியில் உருவின திருக்கண்கள் உத்புல்லபங்கஜ தடாகம்போலே விகஸிதமானபடி. ஆர்த்தியெல்லாந் தீர இவரைப்பார்த்துக்கொடுநிற்கிற நிலை. சிவந்து கனிந்தவாய், சிவந்த தாமரைபோலே இராநின்றது. "வவஸாவஸா நயிகூவா" என்னும்படியே ஸாந்த்வநம் பண்ணுகிறவாய். நோக்குக்கும் முறுவலுக்குந் தோற்றுவிழும் திருவடிகளும் அப்படியே இராநின்றது. [செம்பொன் திருவுடம்பே] - திருவடிகளிலே விழுந்தாரை எடுத்தணைக்கும்உடம்பு. தம்மையணைத்தபின்பு பிறந்தபுகரைச் சொல்லுகிறது. "ரு-ஜாஹம்".

ஈடு.—"அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவ தென்று கொலோ" என்று இவர் ஆசைப்பட்டபடியே வந்து கலந்தா னென்கிறார்.

[அந்தாமத்தன்புசெய்து] - அழகிய தாமத்திலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தை என்பக்கலிலே பண்ணி. தாமமென்று-ஸ்த்தாநமாய், மஞ்சா:க்ரோஶந்தி போலே, பரமபதத்திலுள்ளார்பக்கலிலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தை என்பக்கலிலே பண்ணி. ஒரு விபூதியிலுள்ளார்பக்கலிலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தைக்கிடீர் என்னொருவன்பக்கலிலும் பண்ணிற்று. தாமே அருளிச்செய்தாரிறே "முற்றவும்நின்றனன்" என்று. [என்னாவி]- அவன் மேல்விழத் தாம்இறாய்த்தமை தோன்றுகிறது. இவர் பூர்வவ்ருத்தத்தை அநுஸந்தித்து இறாயாநின்றார்; அதுவே ஹேதுவாக அவன் மேல்விழாநின்றான். கமர்பிளந்த விடத்திலே நீர்பாய்ச்சுவாரைப்போலே, "உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து" என்கிற ஆவியிலே காணும் வந்துசேருகிறது. [சேர்] - விடாயர் மடுவிலே சேருமாபோலே வந்து சேராநின்றான். இப்படி மேல்விழுகைக்கு ஹேதுவேன்? என்னில், - [அம்மானுக்கு]-வகுத்த ஸ்வாமியாகையாலே. நித்யவிபூதியிலுள்ளாரோபாதி லீலாவிபூதியிலுள்ளார்க்கும் வந்து

---

முதற்பாட்டு - அந்தாமத்தன்பு இத்யாதி. 'ஆழிநூலாரமுள' என்றத்தைக் கடாக்ஷித்து, ஆளவந்தார் நிர்வாஹத்திலே அவதாரிகை - அடியார்கள் இத்யாதி.

'அம்' என்றத்தாலே - விலக்ஷணபோக்ய போகோபகரண போகஸ்தாநங்களாலே வந்த அழகைச்சொல்லுகிறது. தாமமென்று ஸ்த்தாநமாய் இத்யாதி வாக்யம் - பூர்வவாக்யவிவரணமாதல், அர்த்தாந்தரமாதல். விபூதியையிட்டு லக்ஷித்த இதுக்கு ப்ரயோஜநம் - ஒருவிபூதியில் இத்யாதி. அப்படிபண்ணினானோ வென்ன, தாமே இத்யாதி. 'என்' என்றதுக்கு பாவம் - அவன்மேல் விழ இத்யாதி. இறாய்த்தமை - பின்வாங்கினமை. விவரணம் இவர் இத்யாதி. 'ஆவி' என்று விஶேஷிப்பானென்? என்ன, கமர்பிளந்தவிடத்தே இத்யாதி. ஆக, 'என்னாவிசேர், ஆவிசேர், சேர்,' என்று மூன்றுவிதமாக்கி அருளிச்செய்தாராயிற்று. வகுத்தஸ்வாமியாகையாலே யிதி - அதாவது - அம்மானுகையாலே அந்தாமத்தன்பு செய்தான், என்னாவிசேர்ந்தா னென்றபடி. விவரணம் - நித்யபூவிதியில் இத்யாதி. அந்தாமத்தன்புசெய்து என்னாவிசேர்ந்த வகாந்தரம் - அம்மா

முகங்காட்டவேண்டும் ப்ராப்தியை யுடையவனுக்கு. இவரைப் பெற்றபின்பாயிற்று அவன் ஸர்வேஶ்வரனுயிற்று. [அந்தாமம்இத்யாதி] - "'அடியார்கள்குழாங்களை யுடன் கூடுவதென்றுகொலோ" என்று இவர்ஆசைப்பட்டபடியே, நித்யஸூரிகளோடேவந்து கலந்தான்' என்று ஆளவந்தார்அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும் படி. ஆனல், அவர்களை "ஆழிநூலாரம்" என்றே சொல்லுவதென்னில்; சிந்மயரா யிருக்கச்செய்தே, பாரதந்த்ர்யஸித்திக்காகத் தங்களை அமைத்துவைக்கிற இத்தனையிறே. அங்ஙனன்றிக்கே, எம்பெருமானர்அருளிச்செய்யும்படி - 'இவரோடு ஸம்ஶ்லேஷிப்பதற்கு முன்பு அவனோடொக்க இவையும் அநுஜ்ஜ்வலமாய் அஸத்ஸமமாய், இவரோடு கலந்த பின்பு உஜ்ஜ்வலமாய் ஸத்தைபெற்றபடி சொல்லுகிறது' என்று; கல்பகதரு வாடினல் அதில் பூவும் தளிரும் வாடுமிறே. [அந்தாமவாழ்முடி] - அழகியமாலையானது முடிசூடி வாழத் தொடங்கிற்று, அன்றியே "வாண்முடி" என்றாய், வாளென்று - ஒளியாய், நிரவ திகதேஜோரூபமான முடியென்றுமாம் தாமம் - தேஜஸ்ஸாகவுமாம். தேஜோரூபமான ஸ்ரீபாஞ்சஜந்யம், தேஜோரூபமான திருவாழி, நூல் - திருயஜ்ஞோபவீதம், ஆரம் - திருவாரம், இவை - நித்யஸூரிகளுக்கு உபலக்ஷணம். [உள] - நித்யரான இவர்கள் உளராகையாவதென்? என்னில்;—"ஸவனகாகீநரமேத" (ஸஏகாகீநரமேத) என்கிற படியே, இவரோடு கலப்பதற்குமுன்பு அந்தவிபூதியும் இல்லையாய்த் தோற்றுகையாலே. [செந்தாமரைத்தடங்கண்] - ஆர்த்தியெல்லாந் தீர இவரைப்பார்த்துக்கொண்டு நிற்கிற நிலை. இவரோடேகலந்த பின்பாயிற்று திருக்கண்கள் செவ்விபெற்றதும், விகஸிதமா

---

னுனென்ற அபரபாவியாகத் தாத்பர்யாந்தரம் - இவரைப்பெற்ற இத்யாதி. இந்தப்பக்ஷத்தில் 'அம்மான்' என்கிற இது - ஸாத்யபரம். ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, அந்தாமவாழ்முடி சங்காழி நூலாரம், உள - உண்டென்றபடி; அதாவது - இவற்றோடே வந்தானென்று கருத்து. ஆனல் இத்யாதி - 'ஆழிநூலாரம்' என்று - அசேதநமாகச் சொல்லுவா னென் னென்னி லென்றபடி. லோகந்யாயத்தாலே அசைதந்யம் தோன்றுகையாலே இப்படியேயாகவேண்டாவோ வென்று கருத்து. சிந்மயராய் இத்யாதி - பௌஷ்கரே, "ஸ்வஸ்வஹுதுஹுறெணரூாதுஃவ்ஸாநூாறுவெரா நூவுெெஃ। விநூெயெஸ்வூகாமெஶ்ஸ்ஹெநூாநூறூவிரஜூெகெஃ". இவரோடு இத்யாதி - எம்பெருமானர் நிர்வாஹத்தில், அம்மானுக்கு - அம்மானுடையதான, அந்தாமவாழ்முடி சங்காழிநூலாரம், உள - ஸத்தைபெற்றன வென்றபடி. இவன்வாடினல் அவற்றுக்கும் வாட்டம் வேணுமோ? என்ன, கல்பகதரு இத்யாதி. "ஜிவ்யாஸ்துவாஷ்இதவதாஹூஜெதூாஷாறo" என்னக்கடவதிறே. முடிசூடிவாழத் தொடங்கிற்றென்று - ரஸோக்தி. முடிசூடி - முடியிலே சூட்டப்பட்டு. தாமம்-மாலை. அழகியமாலையானது வாழ்கிற முடியென்ற சப்தார்த்தம்: 'வாள்' என்று பாடமான போது, 'தாமம்' என்றும் - தேஜஸ்ஸாய், 'தாமவாள்' என்கிற வீப்ஸையாலே - நிரவதிக தேஜோரூபமான முடியென்றபடி. இத்தைக்காட்டுகிறார் - தாமம்-தேஜஸ்ஸாகவுமாம் என்ற 'அந்தாமவாள்' என்றத்தை சங்குமுதலானவற்றுக்கும் விசேஷணமாக்கி அருளிச்செய்கிறார் - தேஜோரூபமான - இத்யாதி. ஆரம்-ஹாரம். எம்பெருமானர் நிர்வாஹத்திலே ஶங்கிக்கிறார் - நித்யரான இத்யாதி. உளராகையாவது - இப்போது உளராகையாவது. ஸஏகாகி இத்யாதி - இந்தவாக்யம் - எம்பெருமானர் நிர்வாஹவிவரணமாதல், அந்தநிர்வாஹத்திலே தாத்பர்யாந்தரமாதல். தாத்பர்யாந்தரமானபோது - முந்தினது வஸ்துதஃ வாடினர்க ளென்றபடி. இரண்டாவது - பகவதபிப்ராயத்தாலே அந்தவிபூதியு மில்லையாய்த் தோற்றிற்றென்றபடி. ஆளவந்தார் நிர்வாஹத்தில், ஆர்த்தியெல்லாம் இத்யாதி. எம்பெருமானர் நிர்வாஹத்தில், இவரோடே இத்யாதி. வ்யாக்யாதாவின்

யிற்றதும். ஏகரூபமானவற்றுக்கெல்லாம் இதொரு விகாரம் பிறக்கிறதிறே. "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய) என்கிறவிடத்தில் - கர்மமடியாக வரும் விகாரமில்லையென்கிற இத்தனையிறே. [செங்கனிவாய்செங்கமலம்] – சாமுதங்கள் சொல்லுகிற திருவதர மிருக்கிறபடி. சிவந்துகனிந்தஅதரமானது, சிவந்தகமலம்போலே யிரா நின்றது. [சேந்தாமரையடிக்கள்] - நோக்குக்கும் ஸ்மிதத்துக்கும் தோற்றுவிழுந் திருவடிகள். திருவடிகளிலே விழுந்து அநுபவிக்கும்திருமேனி [செம்போன்திருவுடம்பே]-"ருக்மாபம்" (ருக்மாபம்) என்னும்படியாயிற்று இவரோடேகலந்தபின்பு திருமேனியிற் பிறந்த புகர்தான்.

# இரண்டாம்பாட்டு.

திருவுடம்புவான்சுடர் சேந்தாமரைகண்கைகமலம்
திருவிடமேமார்வம் அயனிடமேகோப்பூழ்
ஒருவிடமும் எந்தைபெருமாற்கரனேயோ
ஒருவிடமோன்றின்றி என்னுள்கலந்தானுக்கே.

ஆ.—(திருவுடம்பு.) என்னோடேகலந்தருளுகிறான், ஸர்வேஶ்வரியான பெரியபிராட்டியாரோடும் ஆஶ்ரிதரான ப்ரஹ்மருத்ராதிகளோடும் கலந்தருளினாற்போலன்றியே, தன்னுடைய நிரதிஶயதேஜோமயமான திருவுடம்பில் ஒருப்ரதேஶமொழியாமே ஸ்மஸ்தப்ரதேஶத்தாலும் கலந்தருளினான்; ஒருவனுடைய அபிநிவேஶமே இது என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், லக்ஷ்மீப்ராப்ருதிகளுக் தன்பக்கல் ஓரோப்ரதேசத்தையேபற்றி லப்தஸத்தாகராம்படி யிருக்கிற ஸர்வேஶ்வரன் ஸர்வாங்கங்களாலும் என்னோடே ஸம்ஶ்லேஷித்தத்தாலே உஜ்வலனானனென்கிறார்.

[திருவுடம்பென்று தொடங்கி] - தேஜோரூபமான திருவுடம்பு மிகவும் ஒளிபெற்றது. [ஒருவிடமு மெந்தை பெருமாற்கரனே] - பிராட்டிக்கும் ப்ரஹ்மாவுக்

---

ஈடுபொடு - ஏகரூபமான இத்யாதி. ஏகருபமானவற்றுக்கெல்லா மென்றது - முடிமுதலான நித்யஸூரிகளை யபேக்ஷித்து. ஆனால், "ஸதைகரூபரூபாய" என்கிற ப்ரமாணத்தோடே சேரும்படி யெங்ஙனே யென்ன, ஸதைக இத்யாதி. ப்ரதமேம்ஶே த்விதீயே, "அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மநே। ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே". பதச்சேர்த்திக்கு ஹாவம் - நோக்குக்கும் இத்யாதி. செம்பொன்போலே திருமேனி யிருக்குமோ? என்ன, ருக்மாபம் இத்யாதி. மாநவே த்வாதஶேத்யாயே, "ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம் புருஷம் பரம்". ஸ்ப்ருஹணீய மென்றபடி. ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, அந்தாமவாழ்முடி சங்காழி நூலார முளவாய்க்கொண்டு, அந்தாமத்தன்பு செய்தென்னாவி சேரம்மானுக்கு செந்தாமரை யித்யாரப்யாந்வயః; சிராமாந்வயேர்வா, எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு, அந்தாமத்தன்பு செய்தென்னாவி சேர்ந்த வநந்தரம் - அந்தாமவாழ்முடிசங்காழி நூலாரமுளவாய் - அம்மானுமானவனுக்கு - செந்தாமரையித்யாரப்யாந்வயः. (க)

கும் அபாஶ்ரயமான விடத்தையொழிய நீங்கின விடத்தைப் பற்றி லப்தஸ்வரூபனு யிருக்கும் ருத்ரனும். ஓ என்று - விஸ்மயம். [ஒரு விடமென்று தொடங்கி] - இப்படி யிருக்கிற ஸர்வேஶ்வரன் என்னுடைய அங்கத்தில் ஏகதேஶத்திலே தன்னுடைய ஸர்வாங்கத்தோடும் ஸம்ஶ்லேஷித்தான்.

ப.—அநந்தரம், இவ்வவயவஶோபையையுடையவன், ப்ரஹ்மருத்ராதிகளான விபூதிபூதர்க்கும் பிராட்டியோபாதி திருமேனியிலே இடங்கொடுத்த ஔஜ்ஜ்வல்யத்தை அருளிச்செய்கிறார்.

ஒருவிடமொன்றின்றி - ஸ்வரூபரூபகுணவிபூதிகளொன்றுஞ் சோராதபடி, என்னுள் - என்னுள், கலந்தானுக்கு - கலந்த, எந்தைபெருமாற்கு - என்குலநாதனுக்கு, திருவுடம்பு - ஶ்லாக்யமானவடிவு, வான்சுடர் - ஆதித்யவர்ணமாயிராநின்றது; கண்கை கமலம் - திருக்கண்ணும் திருக்கையும், செம்தாமரை - சிவந்ததாமரைபோலே செவ்வி பெற்றது; மார்வம் - திருமார்வு, திருவிடமே - லக்ஷ்மீஸ்த்தாநமேயாயிற்று; கொப்பூழ் - கொப்பூழ், அயன் - ப்ரஹ்மாவுக்கு, 'இடமே - ஸ்த்தாநமேயாயிற்று; ஒருவிடமும் - நீக்கியுள்ள இடம், அரனே - ருத்ரனேயாயிராநின்றது. ஓ - இதென்ன ஆஶ்சர்யம், ஒருவுதல் - நீங்குதல். தந்திருவுள்ளத்திலே அவன்கலந்தபின்பு ரூபௌஜ்ஜ்வல்யமும் அவயவௌஜ்ஜ்வல்யமும் உண்டானவோபாதி, விபூத்யௌஜ்ஜ்வல்யமும் உண்டாயிற்றென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், லக்ஷ்மீ ப்ரப்ருதிகளும் தன் பக்கலிலே ஒரோ ப்ரதேஶத்தைப் பற்றி லப்தஸத்தாகராம்படி யிருக்கிறவன், ஸர்வாங்கங்களாலும் என்னோடே கலந்து உஜ்வலனானென்கிறார்.

[திருவுடம்பு வான்சுடர்] - தேஜோரூபமான திருமேனி மிகவும் ஒளிபெற்றது. "'விக்ரஹமில்லை' என்கிறார் முன்பே மயர்வற மதிநலமருளப்பெற்றவர்தாமே 'திருவுடம்பு' என்பதே" என்று சீயர் வித்தராவர். [செந்தாமரை இத்யாதி] - திமிர்க்கும்படி நோக்கின கண்ணும், அந்நோக்கிலே நைந்தவர்களை "க்ருதவிஹேநந வாணிநா" என்று ஸ்ப்ருஶிக்குங் கைகளும். இவர்க்குக் கவிகளைப்போலே ஒருகாற் சொன்னது தன்னைப் பலகாற் சொல்லுவானென்? என்னில்; முத்துக்கோக்கவல்லவன் முகம்மாறிக் கோத்தவாறே மிகவிலைபெறுமாபோலே, இவரும் ஒரோ முகபேதத்தாலே அநுபவிக்கிறார். [திருவிடமே மார்வம்] - அக்கையாலே அணைப்பிக்கும் பெரிய பிராட்டியார்க்கு இருப்பிடம் திருமார்வு. [அயனிடமே கொப்பூழ்] - சதுர்த்தஶபுவந ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மா திருநாபிகமலத்திலே யிருக்கும். [ஒருவிடம்] - ஓரிடம் என்னாதே, "ஒருவிடம்" என்கிறது - ஒருவுதல் - நீங்குதலாய், ஶேஷித்தவிடமென்றபடி. என் குலநாதனுக்கு ஶேஷித்தவிடமெல்லாம் ருத்ரனுக்கு ஸ்த்தாநம். [ஓ] - ஓ என்று - விஸ்மயம். [ஒரு விடம் இத்யாதி] - இப்படி யிருக்கிறவன் என்னுடைய ஶரீரைகதேஶத்திலே தன்னுடைய ஸர்வாங்கங்களோடே கலந்தான். ஒருவிடமொன்றின்றி என்னுள் கலந்தானுக்கு - திருவுடம்பென்று தொடங்கி, அரனே, ஓ! என்று அந்வயம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. தம்மோடே கலந்தபின்பு அவனுக்குப்பிறந்த புகரைச் சொல்லி, தன்னுடம்பைப்பற்றி ப்ரஹ்மேசாநாதிகள் ஸத்தையாம்படி யிருக்கிறவன்தான் என்னுடம்பைப்பற்றித் தன்ஸத்தையாம்படி இராநின்ருனென்கிருர்.

[திருவுடம்புவான்சுடர்] - அணைத்தபோதை ஸ்பர்சஸுகங் கொண்டு அருளிச்செய்கிருரிறே. "'ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை, விபூதியில்லை' என்கிறவர்கள்முன்பே, ஆப்ததமரானஇவர் .'திருவுடம்பு வான்சுடர்' என்னப்பேறுவதே! 'ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை, குணமில்லை' என்கிறவர்கள் பண்ணிவைக்கமாட்டாத பாபமில்லை; அவர்களை அநுவர்த்தித்து அதுகேட்கஇராதபடி பெருமாள் நமக்குப்பண்ணின உபகாரமேன்?" என்று அருளிச்செய்வர் சீயர். மயர்வறமதிநல மருளப்பெற்றவர் - துவக்குண்கிற திருமேனியிறே. "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" (இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:) என்று தனக்கும் அபிமதமாயிருப்பதொன்றிறே. தான்மதித்தார்க்கு 'ஏஷஸர்வஸ்வபூதஸ்து' (ஏஷஸர்வஸ்வபூதஸ்து) என்றுகொடுப்பதும் திருமேனியையே. [வான்சுடர்] - முதலிலே தேஜோரூபமான திருமேனி மிகவும் ஒளிபெற்றது இவரோட்டைக்கலவியாலே. புறம்பு ஒளியாய் உள்ளும்மண்பற்றியிருக்கை யன்றிக்கே, நெய்திணுங்கினுற்போலே தேஜஸ்தத்வமே யாயிருக்கை. "தேஜஸாம்ராசிமூர்ஜிதம்" (தேஜஸாம்ராசிமூர்ஜிதம்) என்கிறபடியே. பஞ்சசக்திமயமாயிருக்கச்செய்தே, "ஷாட்குண்யவிக்ரஹம்" (ஷாட்குண்ய

---

இரண்டாம்பாட்டு - திருவுடம்பு இத்யாதி. 'என்னுவிசேரம்மானுக்கு - செம்பொன்திருவுடம்பே' என்றதிலே நோக்காக - தம்மோடே இத்யாதி. 'அயனிடமே' இத்யாதியைக் கடாக்ஷித்து - தன்னுடம்பை இத்யாதி. 'ஒருவிடமொன்றின்றி' என்றத்தைக் கடாக்ஷித்து - தானென்னுடம்பை இத்யாதி.

வான்சுடர் - மிக்கதேஜஸ்ஸு. 'என்னுள்கலந்தானுக்குத் திருவுடம்பு வான்சுடர்' இத்யந்வய முகேநாஹ - அணைத்தபோதை இத்யாதி. பலகாலும் விக்ரஹத்தை வர்ணிக்கிறபடியை அநுஸந்தித்து நம்பிள்ளை ஈடுபாடு - ஈச்வரனுக்கு இத்யாதி. ப்ராஸங்கிகமாக நஞ்சீயருடைய ஸ்வலாபாநுஸந்தாநமாஹ - ஈச்வரனுக்கு இத்யாதி. இத்தால் - விக்ரஹாதிகளில்லை யென்கைக்கு நிமித்தம் அவர்களுடைய பாபப்ராசுர்ய மென்றபடி. இவர் அருளிச்செய்தால் ப்ரமாணமாமோ? என்ன - மயர்வற இத்யாதி. ஆகையாலே, இவரநுபவபரீவாஹரூபமான ஸ்ரீஸூக்தியும் பரமப்ரமாண மென்றபடி. துவக்குண்கிற - ஈடுபட்டு அநுபவிக்கிற. திரு' என்று - அழகாய், அத்தைக் காட்டுகிருர், இச்சாக்ருஹீத இத்யாதி; ஷஷ்ட்டேம்சே பஞ்சமே, பூர்வமேவ லிகிதம். கார்யத்தாலும் அபிமதத்வத்தை உபபாதிக்கிருர் - தான்மதித்தார்க்கு இத்யாதி. யுத்தகாண்டே ப்ரதமே, "ஏஷஸர்வஸ்வபூதஸ்து" பூர்வமேவ லிகிதம். முதலிலே இத்யாதி - 'திரு' என்றபோதே - ஸ்வாபாவிகஸர்வாதிசயங்களும் ஸித்திக்கையாலே, பின்னையும் பின்னையும் 'சுடர்' என்னும்போது - இப்படியேயாகவேணு மென்றபடி. வானின்தாத்பர்யம்- புறம்பொளியாய் இத்யாதி. திணுங்குகை- கடீபவிக்கை. உக்தார்த்தஸ்யப்ரமாணம் - தேஜஸாம் இத்யாதி. இந்த நிரவதிகதேஜோரூபதைக்கு அடி பஞ்சசக்திமயமாகையாலே யென்று விவக்ஷித்து, ஆனால் 'ஷாட்குண்யவிக்ரஹம்' என்கிறது சேரும்படியென்? என்ன - பஞ்சசக்திமயம் இத்யாதி; ப்ரதமேம்சே நவமே, "தந்த்ரைலோக்யநாதம்க்ஷீராப்தௌ ... ஸூர்யவஸம்ஸ்தாநம் தேஜஸாம்ராசிமூர்ஜிதம்." "பஞ்சசக்திமயோதேவ: ஸர்வாஜ்ஞாஸஹித: ... ஸாக்ஷாத்விக்ரஹ: ... ஷாட்குண்யவிக்ரஹம்தேவம் ... நவஸ்வம்". பஞ்சசக்திகளாவன-

விக்ரஹம்) என்கிறது குணங்களுக்கு ப்ரகாஶகமாகை சுட்டியிறே. [சேந்தாமரைகண்] - கடாக்ஷத்தாலே வவ்வலிட்டுச்சொல்லுகிற வார்த்தை. [கைகமலம்]-"கரேணம்ருதுநா" (கரேணம்ருதுநா) என்கிறபடியே அணைத்த கை. இவர் ஒருகால் சோன்னத்தைப் பல கால்சோல்லுவானேன்? என்னில்; - முத்துக்கோக்கவல்லவன் முகம்மாறிக் கோத்த வாறே விலைபெறுமாபோலே, இவரும் ஓரோமுகபேதத்தாலே மாறிமாறி அநுபவிக்கிறார். [திருவிடமே மார்வம்] - அக்கையாலே யணைப்பிக்கும் பேரியபிராட்டியார்க்கு இருப் பிடம் திருமார்வு. [அயனிடமே கோப்பூழ்] - சதுர்த்தஶபுவநஸ்ரஷ்டாவான ப்ரஹ்மா, திருநாபீகமலத்தை இருப்பிடமாகக் கோண்டிருக்கும். [ஒருவிடமுமெந்தைபெருமாற் கரனே] - ஓரிடமென்னுதே, ஒருவிடமேன்கிறது - ஒருவுதல் - நீங்குதலாய், நீங்கினவிட மேன்றபடி. என்னுயனுன ஸர்வேஶ்வரனுக்கு நீங்கினஇடமும் ருத்ரனுக்குஇருப்பிடமா யிருக்கும். தாமஸதேவதை யிருப்பிடமாகையாலே, 'நீங்கினவிடம்' என்று அநாதரோக்தி யிருக்கிறபடி. [ஒருவிடமோன்றின்றி என்னுள்கலந்தானுக்கே] - என்னோடேவந்து கலக் கிறவிடத்தில், நீங்குமிடமோன்றுமின்றிக்கே வந்துகலந்தான். [ஓ] - 'அநங்யபரையான பேரியபிராட்டியோடோக்க, அந்யபரரான ப்ரஹ்மருத்ரர்களுக்கும் திருமேனியிலே இடங் கோடுத்துவைப்பதே!' என்று இந்த ஶீலகுணத்தை அநுஸந்தித்து வித்தராயிருந்தார் முன்பு; இப்போது தமக்குஉடம்புகோடுத்தபடி கண்டவாறே 'அது பரத்வம்' என்று தோற்றி, இதுஎன்னஶீலாதிஶயம்! ஓ! என்கிறார். ஒருவிடமோன்றின்றி என்னுள்கலந்தா னுக்கு - திருவுடம்பேன்றுதோடங்கி, அரனே; ஓ என்று அந்வயம். (உ)

## மூன்றும்பாட்டு.

என்னுள்கலந்தவன் சேங்கனிவாய்சேங்கமலம்
மின்னுஞ்சுடர்மலைக்குக் கண்பாதங்கைகமலம்
மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள
தன்னுள்கலவாதது எப்போருளுந்தானில்லையே.

ஆ.—(என்னுள்.) நிரதிஶயகல்யாணகுண திவ்யரூபத்தை யுடையனுய், ஸ்வ ஸங்கல்பாதீந ஸமஸ்தவஸ்துஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகனுயிருந்தவன் என்னுள்ளே கலந்தருளினு னென்கிறுர்.

---

"பஞ்சஶக்திமயம் வபுஃ" என்றுசொல்லப்படுகிற நித்யவிபூதிஸ்த்தித பஞ்சபூதங்கள். 'கரேணம்ருதுநா' என்கிறபடியே தடவியணைத்த கை யென்றபடி. ஹரிவம்ஶே வண்டாகர்ணமோக்ஷப்ரதாநே, "வஸ்த்ரம் ச தஸ்ய விஷ்ணுஃ விஶாலவக்ஷா விஸ்ருஜ்ய கரேணம்ருதுநா தேவஃ பஸ்பர்ஶ புநஃ புநஃ ஹரிஃ." முகபேதத்தாலே - க்ரமபேதத்தாலே. மார்வமே - திருவிடம். கொப்பூழே - அயனிடம். எந்தைபெருமாற்கு ஒருவிடமே - அரன். அரனது என்றபடி. கோப்பூழ் - திருநாபி. ஓரிடமேன்னுதே - இன்னவிடமென்று விஶேஷி யாதே. விவரணம் - என்னுயனுன இத்யாதி. நிரவதிகதேஜோரூபவிக்ரஹத்தில் நீங்கின விட முண்டோ வென்ன, தாமஸஇத்யாதி. வித்தராயிருந்தார் முன்பு - "ஏறனைப்பூவனை" என்கிறபாட் டிலே யென்றபடி. ஒருவிடமொன்றின்றி யென்னுள்கலந்தானுக்கு - திருவுடம்பு வான்சுடரென்று தொடங்கி, கொப்பூழ், எந்தைபெருமாற்கு - ஒருவிடமே - அரன், ஓ இத்யந்வயஃ. (உ)

ஒ.—மூன்றாம்பாட்டில், ருத்ராதிகள் மாத்ரமன்றிக்கே ஸகலலோகங்களுக்கும் அபாஶ்ரயமான எம்பெருமான், தன்னையொழிந்தால் இவ்வுலகங்களெல்லாம் படும் பாட்டை என்னைப்பிரிந்து தான்பட்டு, என்னோடே ஸம்ஶ்லேஷிக்கையாலே அத்யந்தம் புஷ்கலனானா னென்கிறார்.

[மின்னுஞ்சுடர்மலைக்கு] - என்னோடே ஸம்ஶ்லேஷிக்கையாலே வளர்ந்து உஜ்வலமான திருமேனியையுடையவனுக்கு. [மன்னுமென்று தொடங்கி] - ஸமஸ்த லோகங்களும் தன் ஸங்கல்பத்தைப்பற்றி நிலைநிற்கிறன; தன் திருவுள்ளத்தை அபாஶ்ரயமாக வுடைத்தன்றிக்கேயிருக்கும் வஸ்துதான் முதலிலே யில்லை.

ப.—அநந்தரம், தன்னுள்இராத வஸ்துவுக்கு ஸத்தையில்லையாமோபாதி, என்னுள் தான் கலவாதபோது தனக்கு ஸத்தையில்லையாக நினைத்து என்னுள்ளே கலந்து உஜ்ஜ்வலனானா னென்கிறார்.

என்னுள் - என்னுள்ளே, கலந்தவன் - கலந்தவனாய், மின்னும் - (அத்தாலே) விளங்கின, சுடர் - சுடரையுடைய, மலைக்கு - மலைபோன்றவனுக்கு, செங்கனிவாய்செங் கமலம் கண்பாதங்கைகமலம் - (முன்புசொன்ன) அவயவஶோபையும் யதாபூர்வமத்யுஜ்வலமாயிராநின்றது; மன்னும் - ஸ்த்திரமாய், முழு ஏழுலகும் - பூர்ணமான ஸகலலோகங்களும், வயிற்றின் உள - அவன்வயிற்றிலேயாய் ஸத்தைபெறாநின்றன, தன்னுள் - தனக்குள்ளே, கலவாதது - ஸம்பந்தியாதிருப்பது, எப்பொருளுந்தான் - ஏதேனுமொரு பொருளும், இல்லை - இல்லை. ஸர்வவஸ்துவுக்கும் தத்வ்யதிரேகத்தில் ஸத்தாஹாநிஸ்வரூபப்ரயுக்தை, ஈஶ்வரனுக்கு 'இவருடைய வ்யதிரேகத்தில் ஸத்தையில்லை' என்று நினைக்கிறவிடம் ஶீலக்ருதமென்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், ருத்ராதிகளளவேயன்றிக்கே ஸர்வலோகங்களுந் தன்னைப்பற்றியல்லது ஸத்தையில்லாதாப்போலே, என்னைப்பற்றியல்லது தனக்கு ஸத்தையில்லை யென்னும்படி இராநின்றா னென்கிறார்.

[என்னுள் கலந்தவன்] - "ஈமஹஸ்த்ரஹா-தா" என்னுமாபோலே, மேன்மைக்கு "ஶ்ரிய:பதி" என்னுமாபோலேயாயிற்று, நீர்மைக்கு - இதுவும். [செங்கனிவாய் இத்யாதி] - சிவந்து கனிந்த வாய், என்னோட்டைக்கலவியாற்பிறந்த ப்ரீதியெல்லாம் ஸ்மிதத்திலே தோற்றும்படி யிருக்கை. [மின்னும் இத்யாதி] - வந்துகலந்தபின்பு புகர்த்து வளர்ந்து ஸ்த்திரனாய்க் கால்வாங்கிப்போகமாட்டாதே நிற்கிற நிலை. வாமநன் வளர்ந்தபடி. நோக்குகிற கண், நோக்குக்குத்தோற்றுவிழும் திருவடிகள், எடுத்தணைக்கும் கை. [மன்னும் இத்யாதி]- ப்ரவாஹரூபேண நித்யமாய்ப்போருகிற ஸகலசேதநாசேதநங்களும் தன்ஸங்கல்பத்தைப்பற்றி நிலைநிற்கிறன. [தன்னுள் இத்யாதி] - "நதத்ஸ்திவிநாய த்ஸ்யாத்" என்கிறபடியே, ப்ருதக்ஸ்திதியோக்யமாயிருப்பதொரு வஸ்து ஶஶவிஷாணத்தோபாதி முதலிலே யில்லை. அவை இவனைப் பற்றாதபோது, ஸத்தையின்றிக்கே யிருக்கிறது ஸ்வரூபத்தாலே, இவன் இவரைக் கலவாதபோது ஸத்தையின்றிக்கே யிருக்கிறது குணத்தாலே.

ஈடு.—மூன்ரும்பாட்டு. ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தவஸ்துக்களும் தன்னைப்பற்றி உளவாம்படியிருக்கிற ஸர்வேஶ்வரன், தான் என்னைப்பற்றி உளனுய் என்னேடேவந்து கலந்தா னென்கிருர்.

[என்னுள்கலந்தவன்] - "அகஸ்த்யப்ராதா" (அகஸ்த்யப்ராதா) என்னுமா போலே நிரூபக மிருக்கிறபடி. "நாராயணன்" "வாஸுதேவன்" என்னுமாபோலே, "என்னுள்கலந்தவன்" என்றுகாணும் அவனுக்குத் திருநாமம். [செங்கனிவாய்செங்கமலம்] - சிவந்து கனிந்த வாய் செங்கமலம்போலே யிராநின்றது. [மின்னும் சுடர்மலைக்கு]- வாட்டமில்புகழ்வாமநன், கலந்தபின்பு வளர்ந்தபடியும், புகர்பெற்றபடியும், தரையிலே கால்பாவித் தரித்தபடியும், திண்மையையுடையனுனபடியும் பற்ற, மலையென்கிருர்.[கண் பாதம் கைகமலம்] - முகமறிந்து கோத்தவாழே முத்து விலைபெறுமாபோலே, இவரும் திவ்யாவயவங்களைச் சேர்த்து அநுபவிக்கிருர். [மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள] - ப்ரவாஹரூபத்தாலே நித்யமான ஸகலலோகங்களும் தன் ஸங்கல்பத்தைப்பற்றிக் கிடக்கிறன.[தன்னுள் இத்யாதி] - தன்திருவுள்ளத்தை அபாஶ்ரயமாக வுடைத்தன்றிக்கேயிருக்கிறவஸ்து யாதொன்று,அது நாஸ்திஶப்தத்துக்கு அர்த்தமாகிறது. அப்ரஹ்மாத்மகமாயிருப்பதொரு பதார்த்தந்தா னில்லை; "நததஸ்திவிநாயத்ஸ்யாத்" (நததஸ்திவிநாயத்ஸ்யாத்) என்

---

மூன்ரும்பாட்டு - என்னுள் இத்யாதி. 'மன்னுமுழுவேழுலகும்' என்று தொடங்கி, 'என்னுள்கலந்தவன்' என்னுமளவுங் கடாக்ஷித்து அவதாரிகை - ஸ்வவ்யதிரிக்த இத்யாதி.

'நாராயணன்' என்கிற வாக்யாநந்தரம், "அகஸ்த்யப்ராதா" என்கிற வாக்யம் அநுஸந்தேயம். அஸங்க்யாதமான நாமங்களிருக்க, 'என்னுள்கலந்தவன்' என்று விசேஷிக்கிறதுக்கு ஹாபவம்-நாராயணன்இத்யாதி. இவ்வர்த்தத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக விஶதீகரிக்கிருர்-அகஸ்த்யப்ராதா இத்யாதி. நாராயண வாஸுதேவ நாமங்கள் பரத்வத்துக்கு ப்ரதாநங்களானுற்போலே, 'என்னுள்கலந்தவன்' என்கிறது - ஸௌலப்யத்துக்கு ப்ரதாந மென்றபடி. பதத்வயதுக்கும் வ்யுத்க்ரமேண ஹாவம்-வாட்டமில்இத்யாதி. 'வாட்டமில்புகழ்வாமநனை' என்றதுக்கு - 'தன்னுடைமை பெறுகைக்குத்தான் அர்த்தியானவன்' என்றுவைத்து, இங்கே கலந்தபின்பு வளர்ந்தபடியும் என்கையாலே - அவ்விடத்திலே, சிரும்பினவ னென்றும் ஓரர்த்தம் விவக்ஷிதம்' என்றுஅருளிச்செய்வர். மலையேன்கிறர் - மின்னும்சுடர்மலை யென்கிருர். திவ்யாவயவங்களைப் பாட்டுக்கள்தோறுஞ் சொன்னல் புநருக்திவாராதோவென்ன, பரிஹரிக்கிருர் - முகமறிந்து இத்யாதி. ப்ரவாஹரூபத்தாலே நித்யமான என்றவிடத்திலே - "யதாஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" இத்யாத்யநுஸந்தேயம். ருதுலிங்காநி - ருதுசிஹ்நங்கள். பர்யயே - ருதுவின்முடிவிலே. ஹாவாः - ப்ரபஞ்சபதார்த்தாः. "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" இத்யாதி. வயிறு - உள். "தேநவஸந்த்ய்" என்று கருத்து. 'மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள' என்று அந்வயமுகேந சொன்ன அர்த்தத்தை வ்யதிரேகமுகேந த்ருடீகரிக்கிருர் - தன்னுள்கலவாததேப்போருளுந்தானில்லையே என்று. தந்திருவுள்ளத்தையிதி - உள் - உள்ளம். கீழே - ஸங்கல்பாதீந மென்ருர்; இப்போது - ஸ்வரூபாஶ்ரிதமென்று அர்த்தாந்தரம் - அப்ரஹ்மாத்மகம் இத்யாதி. தன் - தான். ஸ்வரூபாஶ்ரிதமென்னுமதுக்கு ப்ரமாணம் - நததஸ்தி இத்யாதி. கீதாஸுதபமே, "யச்சாபி ஸர்வபூதாநாம் பீஜம் ததஹமர்ஜுந । நததஸ்திவிநாயத்ஸ்யாந்மயா பூதம் சராசரம்"

ருனிறே. தன்னுள் கலவாதது எப்பொருளுந்தா னில்லையே அவைஇவனைப்பற்றுதபோது ஸத்தையின்றிக்கே யிருக்கிறது - ஸ்வரூபத்தாலே; இவன் இவரைக் கலவாதபோது ஸத்தை யின்றிக்கே யிருக்கிறது - ப்ரணயித்வகுணத்தாலே. (௩)

## நான்காம்பாட்டு.

எப்பொருளுந்தானாய் மரதகக்குன்றமொக்கும்
அப்பொழுதைத்தாமரைப்பூக் கண்பாதங்கைகமலம்
எப்பொழுதும்நாள்திங்க ளாண்டூழியூழிதோறும்
அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே.

ஆ.—(எப்பொருளும்.) ஸர்வாந்தராத்மபூதனாய், அளவிறந்த அழகை யுடையனாயிருந்த இவன், அழகாலே ஸர்வகாலமும் ப்ரதிக்ஷணம் எனக்கு அபூர்வவத் ஹோக்யமாயிராநின்றான்; ஒருவனுடைய அழகு இருக்கும்படியே ஈது என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், என்னோடே கலந்த எம்பெருமான், காலதத்வமுள்ள தனையும் அநுபவிக்கிலும் க்ஷணந்தோறும் நிரதிஶயஹோக்யனாயிருக்குமென்று விஸ்மித ராகிறார்.

[எப்பொருளுமென்று தொடங்கி] - எல்லாப்பதார்த்தமும் தானிட்டவழக் காய் என்னோடே ஸம்ஶ்லேஷித்து அத்யுஜ்வலனாகையாலும் வளர்த்தியாலும் என்னை விட்டுப்போகாதே நிற்கையாலும் மரதகக்குன்றமொக்கும். [அப்பொழுதைத் தாமரைப்பூ] - அப்போதலர்ந்த தாமரைப்பூ. [எப்பொழுதும்] - ஒருக்ஷணமும்.

ப.—அநந்தரம், நிரதிஶயஹோக்யபூதனானவன் என்னுள்ளே புகுந்தபின்பு ஸ்த்திரஸ்வபாவனானென்கிறார்.

எப்பொழுதும் – எல்லாக்ஷணம், எந்நாள் - எல்லாநாள், எத்திங்கள் - எல்லா மாஸம், எவ்வாண்டு - எல்லாவாண்டு, எவ்வூழியூழிதொறும் - எல்லாவகைப்பட்ட ஊழி தோறும், அப்பொழுதைக்கப்பொழுது - அவ்வோகாலங்களிலே, என் - என்னுள்ளே கலந்து, ஆரா அமுதம் - அத்ருப்திகரமான அம்ருதமானவன்; (அத்தால்வந்த தன்னு டைய ப்ரீத்யதிஶயத்தாலே), எப்பொருளும் - எல்லாப்பொருளும், தானாய் - தானான ஸர்வாத்மபாவமும் நிறம்பெற்று, மரதகக்குன்றமொக்கும் - மரதகமலைபோலே உயர்த்தி யும் நிறமும் உரமு முடையனானான்; அப்பொழுதை - அப்போதலர்ந்த, தாமரைப்பூ - தாமரைபோலே, கண் - கண்ணும், அப்பொழுதைக்கமலம் - அப்போதைக் கமலம்போ லே, பாதம் - பாதமும், கை - கையும் புதுமைபெற்றன.

---

ஶ்ரீ. அவதாரிகைக்குச்சேரத் தாத்பர்யம் - அவைஇவனை இத்யாதி. என்னுள்கலந்தவனை-மின்னும்சுடர்மலைக்கு - செங்கனிவாய்செங்கமலம், கண்பாதம் கைகமலமித்யாரப்ய அந்வய꞉. (௩)

இ.—நாலாம்பாட்டில் அவன் காலதத்வமுள்ளதனையும் அநுபவிக்கினும் நித்யாபூர்வமாய்க்கொண்டு நிரதிஶயபோக்யனாயிருக்கு,மென்று விஸ்மிதராகிறார்.

[எப்பொருளும்தானாய்] - ஸகலபதார்த்தங்களும் தனக்கு ப்ரகாரமாகையாலே தானிட்ட வழக்காய். ஸ்வாதீநமல்லாததொரு பதார்த்தத்தைப் பற்றி இப்பாடுபடுகிறானோ. [மரதகக்குன்றமொக்கும்] - ஜகச்சரீரத்வமேயன்றியே அஸாதாரண விக்ரஹத்தைச் சொல்லுகிறது. கீழே "மின்னும் சுடர் மலைக்கு" என்று - தம்மோட்டைக் கலவியாலே வந்த புகரைச் சொல்லிற்று; இங்கு - அதுக்கு ஆஶ்ரயமான அஸாதாரண விக்ரஹத்தைச் சொல்லுகிறது. [அப்பொழுதைத்தாமரைப்பூ] - முன்புசொன்ன ஸாமாந்யம் ஒப்பாகமாட்டாது, அப்போதலர்ந்ததானாலாயிற்றுஒப்பாவது. [கண்] - வஸ்த்தை விளக்குங் கண். [பாதம்] - வஸ்தம்பிறந்தால்அநுபவிக்க இழியுந் துறை. [கைகமலம்] - தம்மோட்டை ஸ்பர்ஶத்தாலே செவ்விபெற்றபடி. [எப்பொழுதும்] - க்ஷணகாலமும், கலாகாஷ்டாதிகளாலும் பேதிக்கவொண்ணாத அத்யல்பகாலம்அநுபவிப்பது, ஒருநாள் அநுபவிப்பது, ஒருமாஸம்அநுபவிப்பது, ஒருஸம்வத்ஸரம்அநுபவிப்பது, கல்பந்தோறும் கல்பந்தோறும்அநுபவிப்பது, இப்படிகாலதத்வமுள்ளதனையும் அநுபவியாநின்றாலும் பூர்வக்ஷணத்திலநுபவம்போலேயன்று உத்தரக்ஷணத்திலநுபவம் இருப்பது. [ஊழியூழி] - மேற்போக்கில்லாமையாலே மடிக்கிறார். [அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே]-பாஹ்ய வாஹிக ஜ்ஞாநத்தில் காலோபஷ்டம்பாதிகளால் வருவதொரு பேதமுண்டிறே ஜ்ஞாநத்துக்கு; அதுபோலன்றிக்கே, அநுபவியாத தொன்றை அநுபவித்தாற்போலே நித்யாபூர்வமாயிருக்கை.

ஈடு.—நாலாம்பாட்டு. நீர் ஒருகால்சொன்னத்தை ஒன்பதின்கால் சொல்லி இங்ஙனேகிடந்து படுகிறதேன்? என்ன; நான்அது தவிர்கிறேன், நீங்கள்அவ்விஷயம் ஒருகாலிருந்தபடியே எப்போதுமிருக்கும்படி பண்ணவல்லிகோளோ? என்கிறார்.

[எப்பொருளுந்தானாய்] - ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் 'தான்' என்கிற சொல்லுக்குள்ளே ப்ரகாரமாம்படி, தான் ப்ரகாரியாய். ஸ்வாதீநமல்லாததொரு பதார்த்தத்தைப் பெற்றுத்தான் இப்பாடுபடுகிறானோ? [மரதகக்குன்றமொக்கும்] - கீழ் - ஜகதாகாரனாய் நிற்கும் நிலைசொல்லிற்று; இங்கு - அஸாதாரணவிக்ரஹந்தன்னையே சொல்லுகிறது. கீழ்; மின்னும் சுடரென்று - தம்மோட்டைக்கலவியால் வந்த புகரைச் சொல்லிற்று; அதுக்குஆஶ்ரயமான அஸாதாரணவிக்ரஹத்தைச் சொல்லுகிறது இங்கு. [அப்போழுதை] - 'கீழ் - தாமரையை ஒப்பாகச் சொன்னவிடம் தப்பச்சொன்னோம்' என்றுஅழித்து ப்ரதிஜ்ஞைபண்ணுகிறார். கேவலம் தாமரையை ஒப்பாகச் சொல்லில், செவ்வியழிந்த ஸமயத்திலும் ஒப்பாகத் தொடங்குமே;அப்போதலர்ந்த-செவ்வியையுடைத்

நாலாம்பாட்டு. எப்பொருளும் இத்யாதி. திவ்யாவயவங்களைப் பலகாலுஞ் சொன்னதுக்குக் கீழ்ப்பாட்டுக்களில் அருளிச்செய்த பரிஹாரமொழியப் பரிஹாராந்தரம் - நீர்ஒருகால் இத்யாதி. ஒன்பதின்கால் - ஒன்பதுதரம். 'அப்பொழுதைக்கு' இத்யாதியைப்பற்ற, ஒருகாலிருந்தபடியே இத்யாதி.

ஜகதாகாரதையைச் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் - ஸ்வாதீந இத்யாதி. இப்பாடு என்றது - தம்மைப்பெற்றபின்பு திருமேனியிற் பிறந்த புகரைப் பற்ற. கீழ்ஜகதாகாரன் இத்யாதி இரண்டும் விக்ரஹயோகமாகையாலே, "எப்பொருளும்தானாய்" என்ற வநந்தரம், "மரதகக்குன்றம்" என்றுசேர்த்து அநுபவிக்கிறாரென்று கருத்து. புநருக்திக்குப் பரிஹாரம்-கீழ்மின்னும்

தான தாமரை. [கண்பாதம்] - கண் - ஸந்தத்தை விளைக்குங் கண். பாதம் - ஸந்தமறிந் தால் அநுபவிக்கஇழியும் துறை. [கைகமலம்] - தம்மோட்டை ஸ்பர்ஶத்தாலே சேவ்வி பெற்றபடி. இவையெல்லாம் அப்போதலர்ந்த கமலம்போலே யிருக்கும். [எப்பொழு தும்இத்யாதி] - கலாகாஷ்டாதிகளாலும் ஹேதிக்கவொண்ணாத அத்யல்பகாலம் அநுபவிப் பது, ஒருநாள் அநுபவிப்பது; ஒருமாஸம்அநுபவிப்பது. ஓராண்டுஅநுபவிப்பது, கல்பந்தோ றும் கல்பந்தோறும்அநுபவிப்பது, இப்படி காலமெல்லாம் அநுபவியாநின்றாலும், கீழ்ச் சொன்ன அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே - பூர்வக்ஷணத்தில் அநுபவம்போ லல்ல வாயிற்று உத்தரக்ஷணத்தி லநுபவம் இருப்பது. தாராவாஹிக விஜ்ஞாநத்தில் காலோபஷ்டம்பாதிகளாலே வருவதொரு பேதமுண்டிறே ஜ்ஞாநத்துக்கு, இங்கு விஷயந் தானே பேதியாநின்றதாயிற்று. (ச)

# ஐ ந் தா ம் பா ட் டு.

ஆராவமுதமாய் அல்லாவியுள்கலந்த
காரார்கருமுகில்போல் என்னம்மான்கண்ணனுக்கு
நேராவாய்சேம்பவளம் கண்பாதங்கைகமலம்
பேராரநீண்முடிநாண் பின்னுமிழைபலவே.

---

இத்யாதி. அவதாரிகை - கீழ்தாமரையை இத்யாதி. 'அப்பொழுதை' என்று விஶேஷித்த துக்கு ஹாவம்-கேவலம் இத்யாதி. பந்தத்தைவிளைக்குங்கண்-ஸவலிதஸம்பந்தத்தையும் ஸ்வவீக்ஷ ணாதிகளாலே விஶதமாக ஸ்ப்புரிப்பிக்கிறகண் என்றபடி. இவையெல்லாமப்போதலர்ந்த விதி- கண்பாதம் - அப்பொழுதைத் தாமரைம்பூ; கை - அப்பொழுதைக் கமலம் இத்யந்வய:. 'எப்பொழு தும்' என்று - அத்யல்பகாலத்தைச் சொல்லுகிறது. 'அப்பொழுதைக்கப்பொழுது' என்று 'எப் பொழுது நாள் திங்கள் முதலானவற்றையெல்லாம் பராமர்ஶிக்கிறது' என்று வானமாமலைஜீயர் நிர்வாஹம். 'நாள் திங்கள் முதலானஎல்லாவற்றிலுமுண்டான, எப்பொழுது மென்று சொன்ன - அத்யல்பகாலங்கள்தோறும் என்னாராவமுதம்' என்று ராமாநுஜப்பிள்ளை நிர்வாஹம். இதுவே ஸ்வரஸம், 'பூர்வக்ஷணத்தில்அநுபவம்போலல்லவாயிற்று உத்தரக்ஷணத்திலநுபவமிருப்பது' என்று வ்யாக்யாந வாக்யம் இருக்கையாலே. 'அப்பொழுதைக்கப்பொழுது' என்கிறவிடத்தில், 'அ' என்கிறது - எல்லாக்காலத்தையும் பராமர்ஶிக்கிறதன்று, அவ்வவகாலங்களிலுண்டான க்ஷண மாத்ரபராமர்ஶியென்று தோற்றஅருளிச்செய்கிறார் - பூர்வக்ஷணத்தில் இத்யாதி. "தாராவாஹி கேதி - தாராவத்வொவாஹ: - தாராவாஹ:; தாராவாஹோஸ்யாஸ்தீதி - தாரா வாஹிகம்; தாராவாஹிகஞ்ச தத்விஜ்ஞாநஞ்ச-தாராவாஹிகவிஜ்ஞாநம்". இங்கு விஷயந் தானே யிதி - "வடோயம்வடோயம்" என்கிற தாராவாஹிகவிஜ்ஞாநத்தில் பூர்வோத்தர காலா வச்சிந்நவேஷேண கடரூபவஸ்துவுக்கு பேதமுண்டு, இங்கு, காலஸம்யோகரூபகாலோபஷ்டம்பத் தாலும் தேஶஸம்யோகாதிகளாலும் பேதிக்கையன்றிக்கே, ஸ்வதஏவ விஷயந்தானே பேதிக்கிற தென்றபடி; "க்ஷந்யாந்யக்ஷணவிஶேஷணவிஶிஷ்டவஸ்துவிஷயத்வாந்நயிமதாரு மந்நதா" என்றிறே ப்ராபாகரமதம்; ததநுஸாரேண நிர்வஹிக்கவுமாம். அன்றிக்கே. "வடோ யம்வடோயம்' என்கிற தாராவாஹிகவிஜ்ஞாநத்தில் காலோபஷ்டம்பாதிகளாலே ஜ்ஞாநத்துக்கு பேதமொழிய விஷயத்துக்கு பேதமில்லை" என்ற நையாயிகமதாநுஸாரேண நிர்வஹிக்கவுமாம். உபஷ்டம்பம் - ஸம்யோகம். ஆதிஶப்தத்தாலே-தேஶஸம்யோகமும், உத்பத்திவிநாஶங்களும் சொல்லப்படுகிறது. ப்ரதமநிர்வாஹத்தில், ஜ்ஞாநத்துக்கு - விஷயத்துக்கு. விஷயம் பேதிக்கை யாவது - போக்யதாப்ரகர்ஷத்தாலே புதியதாய்த் தோற்றுகை. க்ரமேண அந்வய: (ச)

ஆ.—(ஆராவமுதமாய்.) நிருபமமான ஸௌந்தர்யத்தை யுடையனாய், அபரிமித திவ்யபூஷணோபேதனாய், ஸர்வகாலமும் அநுபவித்தாலும் ஆராதபோக்யமாயிருந்தவன், அத்யந்தம் அவஸ்துபூதனாயிருந்த என்னுள்ளே கலந்தருளினானென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், எம்பெருமானுக்குஎன்னோட்டை ஸம்ஶ்லேஷத்திற் பிறந்த அழகுக்கு உபமாநமில்லை யென்கிறார்.

[ஆராவமுதமா யென்று தொடங்கி] - நிரதிஶய போக்யனா யிருந்துவைத்து அத்யந்தஹீநனான என்னோடே கலப்பதுஞ்செய்து அத்தாலே கார்காலத்தில் ஆர்ந்த கருமுகில்போலே உஜ்வலனாய் என் ஸ்வாமியான க்ருஷ்ணனுக்கு. [நேராவாயென்று தொடங்கி] - வாயை ஒவ்வாது செம்பவளம் கண்பாதங்கைகளோடு ஒவ்வாது கமலம். இழை - ஆபரணம்.

ப.—அநந்தரம், தம்முடைய திருவுள்ளத்திலே கலந்தவனுடைய அவயவ ஶோபைக்கு உபமையில்லை யென்கிறார்.

ஆராவமுதமாய் – நிரதிஶயபோக்யபூதனாய், அல் - ஒன்றல்லாத, ஆவியுள் - என்னெஞ்சுக்குள்ளே, கலந்த - கலந்து, (அத்தாலே), கார் - கார்காலத்திலே, ஆர்-பூர்ணமான, கருமுகில்போல் - காளமேகம்போலேயிருக்கிற, என் அம்மான் - என்னுதனான, கண்ணனுக்கு - க்ருஷ்ணனுக்கு, செம் பவளம் - சிவந்த பவளம், வாய் - அதரத்தை, நேராது - ஒவ்வாது; கமலம் - கமலங்கள், கண்பாதம்கை - கண்பாதங்கைகளை, நேரா - ஒவ்வா; (அதுக்குமேலே), பேர் - பெரிய, ஆரம் - ஆரமும், நீள் – உயர்ந்த, முடி - முடியும், நாண் - நாணும் முதல், பின்னும் - மற்றுமுண்டான, இழை - ஆபரணங்களும், பல - அஸங்க்யாதங்கள்.

இ.—அஞ்சாம்பாட்டில், என்னொட்டைக்கலவியாலே அவனுக்குப்பிறந்த அழகுக்கு உபமாநமில்லை யென்கிறார்.

[அராவமுதம் இத்யாதி] - நிரதிஶயபோக்யனாய்வைத்து, 'ஈஸ ஹ்வ' - என்கிற ஆத்மாவோடே வந்துகலந்தான். தன்னையும்அறிந்திலன், என்னையும்அறிந்திலன். [அல்லாவி]- அசித்திற்காட்டிலும் தம்மைக் குறையநினைத்தபடி. அசித்துக்குஇழவில்லை, சேதநனாய்வைத்து ஜ்ஞாநபலமில்லாமையாலே அசித்துக்கவ்வருகாக நினைத்திருக்கிறார். [உள்கலந்த] - "பெருமக்களுள்ளவர்" என்கிற ஸூரிகளளவிற் கலக்குமாபோலேதான் கலந்தானோ? என்னை ஆராவமுதாக நினைத்து, என்னளவாகத்தன்னைநினைத்துக்கிடீர் கலந்தது. அவன் இப்படியிருந்தமை என்கொண்டறிவோம் என்னில், - [காரார் கருமுகில்போல்] - "என்னோட்டைக்கலவி பெறாப்பேறு" என்னுமிடம் வடிவிலே தோற்றஇராநின்றான்; தனக்கு நிறக்கேடாம்படியிறே என்னோட்டைக்கலவி இருப்பது. கார்காலத்தில் ஆர்ந்தமேகம். தன்காலத்திற் காளமேகம். [என்னம்மான் கண்ணனுக்கு] - அவ்வடிவைக்காட்டி முறையையுணர்த்தின க்ருஷ்ணனுக்கு. [நேராவாய்செம்பவளம்] - கீழ்ஒப்பாகச் சொன்ன சிவந்த பவளம் ஜாதியாக நேர்நில்லாது. [கண்பாதங்கைகமலம் நேரா] - முதலுறவுபண்ணும் கண், ப்ராப்யமான திருவடிகள், எடுத்தணைக்கும் கை

இவற்றுக்குத் தாமரை ஜாதியாகவுப்பாகா. [பேராரம்] - பெரியஆரம், திருக்கழுத்திலே இருமடியாகச்சாத்தின பெரியதிருவாரம். [நீள்முடி] - ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகம். [நாண்] - விடுநாண். [பின்னும்] - பின்னையும் உபமாநமில்லாத ஆபரணம்அநேகம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. இத்தனைபோதும் தாமரையை ஶிக்ஷித்து உபமாநமாகச் சொல்லிப்போந்தார்; விஷயத்திலே அவகாஹித்தவாறே நேர்கோடுநேரே உபமாநமாய் நின்றதில்லை; அவற்றைக்கழித்து உபமேயந்தன்னையே சொல்லுகிறார்.

[ஆராவமுதமாய்] - எப்போதும் புஜியாநின்றாலும் மேன்மேலென த்ருஷ்ணையை விளைக்கும் அம்ருதம் போலே நிரதிஶயபோக்யனாய். [அல்லாவியுள்கலந்த] – இப்படிபோக்யம் குறைவற்றால் போக்தாக்களும் அதுக்கு அநுரூபமாகப்பெற்றதோ.[அல்லாவி] - ஒருவஸ்துவாக எண்ணவொண்ணாத என்னுடைய ஆவியோடேகிடீர் வந்து கலந்தது. தன்னையும் அறிந்திலன், என்னையும் அறிந்திலன். [அல்லாவி] - அசித்திற்காட்டில் தம்மைக் குறையநினைத்தபடி. அசித்துக்கு இழவில்லையே, தன்ஸ்வரூபத்திலே கிடந்ததே ; சேதநனாயிருந்துவைத்து ஜ்ஞாநபலமில்லாமையாலே அசித்திற்காட்டில் தம்மைக் குறையநினைத்திருக்கிறார். [உள்கலந்த] - பெருமக்களுள்ளவரான நித்யஸூரிகளளவில் கலக்குமாபோலேதான் கலந்தானோ? என்னை ஆராவமுதாக நினைத்து, என்னளவாகத்தன்னை நினைத்துக்கிடீர் கலந்தது. [உள்கலந்த]-“வனகூததூo” (ஏகதத்வம்) என்னலாம்படி கலந்தானாயிற்று. அவன் இப்படி கலந்தமை நீர்என்கொண்டுஅறிந்ததென்னில் ; வடிவிலே தோடைகோண்டேனென்கிறார். [காரார்கருமுகில்போல்] - என்னோட்டைக்கலவி ‘பேறுப்பேறு’ என்னுமிடம் தன்வடிவிலேதோற்ற இராநின்றான். கார்காலத்தில் ஆர்ந்த கருமுகில்போலென்னுதல் ; காரென்று - கறுப்பாய், கருமை

---

*அஞ்சாம்பாட்டு. ஆராவமுதம் - இத்யாதி. கீழ், உபமாநமான தாமரையை ஶிக்ஷித்து ஒப்பாகச் சொல்லிப்போந்தவர், இங்கு ‘ஒப்பில்லை’ என்று சொன்னதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - இத்தனைபோதுஇத்யாதி. ஶிக்ஷித்து - சிறிது விஶேஷணமிட்டு. நேர்கோடுநேர் - ஸாக்ஷாத்.*

*மேன்மேலென இது - அபூதோபமை. அவனுடைய போக்யதையைச் சொன்ன வநந்தரம், தம்முடைய ஹேயதையைச் சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம்-இப்படி இத்யாதி. அல்லாவி - அல்லாதஆவி. ஒருவஸ்துவல்லாத ஆத்மாவுக்குள்ளே யென்றபடி. இது அநுரூபமன்றோவென்ன, ஒருவஸ்துவாகஇத்யாதி. விவரணம் - தன்னையும்இத்யாதி. ‘நல்லதுகெட்டால் நாய்க்குமாகாது’ என்றத்தை நினைத்து அருளிச்செய்கிறார் - அசித்திற்காட்டில்இத்யாதி. அத்தைஉபபாதிக்கிறார் - அசித்துக்குஇத்யாதி. அசித்துக்குஇழவில்லையே - அசித்துக்கு ‘இழந்தோம்’ என்னும்அறிவு இல்லையே. தன்ஸ்வரூபத்திலேகிடந்ததே - வஸ்த்வந்தரமன்றிக்கே கிடந்ததே. ஜ்ஞாநபலமில்லாமையாலே - ‘பகவத்ஸம்ஶ்லேஷத்துக்குஅயோக்யம்’ என்னும் ஜ்ஞாநபலமில்லாமையாலே. ‘உள்கலந்த’ என்றதுக்கு அர்த்தத்த்வயம் - விடாயர் மடுவிலேயவகாஹிக்குமாபோலே அத்யபிநிவிஷ்டனாய்க் கலந்தானென்னுதல், “வனகூததூo” என்னலாம்படி கலந்தானென்னுதல். இரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - பெருமக்கள் இத்யாதியாலும் ஏகதத்வமென்னலாம் இத்யாதியாலும். நித்யஸூரிகளளவில் - போக்யவிஷயத்திற் கலக்கும்போதும் பெருமானையிறே கலந்ததென்றபடி. என்னளவாகத்தன்னைநினைத்து - தன்னை அல்லாவியாக நினைத்து. தோடைகொண்டேன் - க்ரஹித்தேன். என்னுள்ளே கலந்த அநந்தரம் - காரார்கருமுகிலானான் என்று பரபாவியாக பாவம் - என்னோட்டைக்கலவி இத்யாதி. காரார்கருமுகில்போல் - வர்ஷாகாலீந பரிபூர்ண*

மிக்க முகிலென்னுதல். இவ்வடிவையுடையவன்கிடீர் என்னோடே வந்துகலந்தானென்கிறார். [என்னம்மான்கண்ணனுக்கு] - அவ்வடிவழகாலே என்னையெழுதிக்கொண்ட க்ருஷ்ணனுக்கு. [நேராவாய்செம்பவளம்]-பவளமாகிற் சிவந்தன்றோ இருப்பதென்னில்; ப்ரவாளத்தை ஸ்ப்படிகஸ்த்தாநத்திலே யாக்கி அவ்வருகே சிவந்த பவளத்தைக் கற்பித்தால், அப்படி சிவந்த பவளமாயிற்று ஜாதியாகத் திருப்பவளத்துக்கு ஒப்பாகாதது. [கண்பாதம்கைகமலம்நேரா]-குளிரநோக்கின கண், நோக்குக்குத்தோற்று விழுந் திருவடிகள், திருவடிகளிலே விழுந்தாரை யெடுத்தணைக்குங் கை; இவற்றுக்குத் தாமரைஜாதியாக ஒப்பாகா. [பேராரம்] - "பெரியவரைமார்பிற்பேராரம்" என்கிறபடியே, திருக்கழுத்துக்கிருமடியிட்டுச் சாத்தவேண்டும்படியான ஆரம். [நீள்முடி] - ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகம். [நாண்]-விடுநாண். [பின்னுமிழைபலவே] அநுபவித்துப்போ மித்தனை போக்கி, என்றுச் சொல்லித் தலைக்கட்டப்போமோ.? (ரு)

## ஆறும் பாட்டு.

பலபலவேயாபரணம் பேரும்பலபலவே
பலபலவேசோதி வடிவுபண்பெண்ணில்
பலபலகண்டுண்டு கேட்டுற்றுமோந்தின்பம்
பலபலவேஞானமும் பாம்பணைமேலாற்கேயோ!

ஆ.—(பலபலவே.) அஸங்க்யேய திவ்யபூஷணங்களையும், அஸங்க்யேய கல்யாணகுணங்களையும், அஸங்க்யேய தோஜோமயகல்யாண திவ்யரூபங்களையும், அஸங்க்யேய திவ்யஹோகங்களையும், அஸங்க்யேய திவ்யஜ்ஞாநங்களையுமுடையனாய், நாகபர்யங்கஶாயியாய், இப்படி பரிபூர்ணனாயிருந்துவைத்து என்னோடே கலந்தருளினானென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், நம்மோடே கலந்த எம்பெருமானுடைய அஸங்க்யமான திவ்யபூஷணாதிகளை யநுபவிக்கிறார்.

[பலபலவே யாபரணமென்று இப்பாட்டெல்லாம்] - பாம்பணைமேலாற்கு ப்ரகாரங்களை எண்ணப்புகில், ஆபரணங்கள், குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்

---

மேகம்போலே யிதி ப்ரதமார்த்தஃ; காரென்று - கறுப்பாய், ஆர்தல் - மிகுதியாய், கருமைமிக்க கருமுகில் -செய்த்தமுகிலென்று த்வீதியார்த்தம். காரார்கருமுகில்போலே யிருக்கிறவன்கிடீர் - அல்லாவியுள் கலந்ததென்று பூர்வபாவியாக அர்த்தாந்தரம் - இவ்வடிவை இத்யாதி. வாய்க்குச் செம்பவளம், நேரா - ஸத்ருஶமாகா தென்றபடி. பவளமாகிற் சிவந்தன்றேயிருப்பதென்று-அநந்தரம், 'செம்' என்று விஶேஷிக்கவேணுமோ? என்னில் என்று கூட்டுவது. 'பவளம்' என்கிற ஸாமாந்ய நிர்த்தேசத்தைப்பற்ற, ஜாதியாக என்றது. ஜாதிக்குள்ளே ஒருவ்யக்தியும் ஸத்ருஶமன்றென்றபடி. கண்பாதம் கைகமலம்நேரா - கண் பாதம் கைகளுக்குக் கமலம் ஒப்பாகாது. ஆரம் - ஹாரம், முத்துமாலை. பேரியவரையித்யாதி - மூன்றாந்திருவந்தாதி. பெரியமலைபோலே பொருந்தியிருக்கிற திருமார்விலே பெருத்திருக்கிற திருவாரத்தைச் சாத்தி யென்றபடி. இருமடியிட்டு - இரட்டையாக மடித்து. விடுநாண் - கடிஸூத்ரம். 'பலவே' என்றதுக்கு ஹாவம் - அனுபவித்து இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (ரு)

அங்ஙன் ஒருபோக்கடி கண்டிலனாகில், "உரஸாயாரயாரோஸவாஸ்ரும்ஸத்ரு ஷ்ரோயவ:" (உரஸாதாரயாமாஸபார்த்தம்ஸஞ்சாத்யமாதவ:)என்றுஸகதத்தன்விட்டஶக்தியை,அர்ஜுநனைத்தள்ளித் தன்அந்த:புரத்திலே ஏற்றாற்போலே, தானேறிட்டுக்கொண்டு அநுபவித்தல் செய்யுமித்தனை. பாபங்களாவன தான்-அசேதநமாயிருப்பன சிலக்ரியாவிஶேஷங்களாய், அவை, செய்தபோதே நசிக்கும்; கர்த்தா அஜ்ஞனாகையாலே மறக்கும்; ஸர்வஜ்ஞன் உணர்ந்திருந்து பலாநுபவம்பண்ணுவிக்க அநுபவிக்குமித்தனையிறே. அவன்மார்விலே ஏற்றுக்கொள்ளுகையாவது - "பொறுத்தேன்" என்னத் தீருமித்தனையிறே. "அபூர்வங்காண், ஶக்திகாண், பலாநுபவம்பண்ணுவிக்கிறது" என்பதில், ஒரு ஸர்வஜ்ஞன் செய்விக்கிறானென்கை அழகிதிறே. குந்தமென்று - குருந்தமென்றபடியாய், அதன்பூ வெளுத்தாயிற்றிருப்பது, அவ்வழியாலே சுத்தியைநினைக்கிறது அன்றிக்கே, குந்தாவென்று - திருநாமம்; "குமுத:குந்தர:குந்த:" (குமுத:குந்தர:குந்த:) என்கிறபடியே. [உன்னை] - ஆஶ்ரிதபக்ஷபாதியான உன்னை. [நான்] - ஆடியாடியில் விடாய்த்த நான். நீ உஜ்ஜீவிப்பிக்க, உன்னாலே உளேனான நான். [பிடித்தேன்கொள்] - பிடித்தேனாகவே திருவுள்ளம்பற்று. முன்பும் சொல்லிப்போரும் வார்த்தையன்றோ இது என்ன; அங்ஙனல்ல, [சிக்கெனவேபிடித்தேன்கொள்] - என்னைப்பெறுக்கைக்குப் பூர்வஜனான நீ விடிலும் விடாதபடி நான் பிடித்தேனாகவே திருவுள்ளம்பற்றவேணும். அவனை 'ஶாஶ்வத:' என்கிறார். (௧)

---

தாரா: உக்ரெதாஹி நீவெத| ஸ்ரோவோ்யம்ஹோவாண:ஸஸ்ரிஹெரு நிவாத்ரு தாழ| (௨௬) ராவேஸ்யவநம்ஸ்ருஸ்ா தம்ஷ்டிஷாவஹோஶாழ| ஹொதஹிஉஹா தெஜாராவவம்வாஸ்யேவீஸ| || ௬௦ || உத்ரேணாவகாஶேவஸிகஶித்ருணாதஸோ ஹிஉஷுஹுஉஷ்யுஉதிவ்யாதொ ஶொகெவ்யாதாயயாஹவாநு|| (௬௧) || உருஷஶுந ஸஹாணொவவஹவஸ்தஸூஷஸ்யவ: | ஸுஹீரவஹவா:வாவா:விவத்ஸரியஹ || (௬௨)|| தெதநவஸம்ஸுஶவநம்வாவம் ஸஹெயம் வாவகஷ்ஷி: | ஸரோவ:கிய தாமரா: யம்தஸுஶரொத்: || (௬௩) || தஸ்யதவநம்ஶ்ருஸ்ா ஶாஶாஸ்ய ஸராவவ: | ஹேஜோவதம்ஶரம்ஹீவம் ரளஸாஶரஷஶநாதீ|| (௬௪) ||

[ஶார - ஷேராண - ௬௫] - விஸ்ரஷ்டம்ஹமஷதெநதஷஸம்ஸவஜவாதஸம் | உரஸாயாரயாரோஸவாயஜம்ஸத்ரு ஷ்ரோயவ:||

---

வதென்? என்ன - அங்ஙனேநு இத்யாதி. தன் அந்த:புரத்திலே யென்றது - "உரஸாயாரயாரோஸவாஸ்ரும்ஸத்ருஷ்ரோயவ:"என்கிற ஶ்லோகத்தில், "ஶ்ரோயவ:" என்றத்தைப் பற்ற. அந்த:புரம்-திருமார்வு. அவன் ஏறிட்டுக்கொள்ளுகையாவதேது?என்ன, பாபங்கள் இத்யாதி. இத்தால் பலிதம்-அவன்மார்விலே இத்யாதி. அவன் பலப்ரதனாகவேணுமோ? க்ரியாதிகள் பலப்ரதமாஞலோ? என்ன, அபூர்வங்காண் இத்யாதி. ஸர்வஜ்ஞன் செய்விக்கிறானென்றது - "ஃபலமத உபபத்தே:" இத்யாதியைப்பற்ற. "க்ரியாதஜ்ஜிவஜா" இத்யாதிகம் அநுஸந்தேயம். 'குந்தா' என்கிற பதம் - கீழ், சுத்தியோகத்தைச் சொல்லும்படி எங்ஙனே என்ன, குந்தமென்று இத்யாதி. தாத்பர்யார்த்தம் - நீ உஜ்ஜீவிப்பிக்க இத்யாதி. உஜ்ஜீவிப்பிக்கை - மயர்வறமதிநலமருளுகை. கோள் - கொண்டருளவேணும்; திருவுள்ளம்பற்றவேணு மென்றபடி. முன்பும் - வளவேழுலகுக்கு முன்பும். 'வைகுந்தா - திருக்குறளா' என்றத்தைப்பற்ற - பூர்வஜனான நீ என்றது. பூர்வஜனான - முற்பாடனான. பலிதம் - அவனை இத்யாதி. க்ரமேண அந்வய:. (௧)

## இரண்டாம்பாட்டு.

**சிக்கெனச்சிறிதோரிடமும் புறப்படாத்தன்னுள்ளே யுலகுகள்
ஒக்கவேவிழுங்கிப் புகுந்தான்புகுந்ததற்பின்
மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த் துளக்கற்றமுதமாய் எங்கும்
பக்கநோக்கறியான் என்பைந்தாமரைக்கண்ணனே.**

ஆ.—(சிக்கென.) இப்படி தம்முள்ளே புகுந்தபின்பு எம்பெருமானுக்குப் பிறந்த ஸம்ருத்தியைப் பேசுகிறார்.

ஜகத்ஸ்ருஷ்ட்யாத்யந்யபரதையைப் போக்கிக்கொண்டு என்னுள்ளே புகுந்தான்; புகுந்ததற்பின் அளவிறந்த ஜ்ஞாநாதி ஸகலகல்யாணகுணவிஶிஷ்டனாய், விஜ்வரனாய், ப்ரமுதிதனாய், ஹர்ஷாதிஶயத்தாலே புதுக்கணித்த திருக்கண்களையுடையனாய், என்னையல்லது எங்கும் பக்கநோக்கறியா னென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தம்மோடுகலந்தபின்னை எம்பெருமானுக்குப் பிறந்த பௌஷ்கல்யத்தைப் பேசுகிறார்.

[சிக்கெனவென்று தொடங்கி] - என்னோடு கலக்கும்போது அந்யபரதை பிறவாமைக்காக க்ஷுத்ரபதார்த்தங்களும் ஒழியாதபடி எல்லா லோகங்களுக்கு வேண்டும் ஸம்விதாநத்தை ஒருகாலே தன் திருவுள்ளத்தாலே பண்ணியருளி பிரியாதபடி என்பக்கலிலே புகுந்தான். [புகுந்ததற்பின்னென்று தொடங்கி] - புகுந்தபின்பு விகஸித ஸஹஜஸார்வஜ்ஞ்யனாய் விஜ்வரனாய் தன்னுடைய ப்ரமோதரஸத்தாலே எனக்கு போக்யமாய் பெரியபிராட்டியார்வந்து ஸ்பர்ஶித்தாலும் விலங்கப்பார்க்கவறியாதபடியானான், என்னோட்டைக்கலவியாலே குளிர்ந்த திருக்கண்களையுடையவன்.

ப.—அநந்தரம் தம்முடையபக்கல் கலந்த அவன்உஜ்ஜ்வலஸ்வரூபனாய்க்கொண்டு ஓரிடத்தி லந்யபரதையற்று இராநின்றா னென்கிறார்.

சிறிதோர் - அல்பமான, இடமும் - தேசமும், புறப்படா - புறம்புபோகாதபடி, உலகுகள் - உலகுகளை, தன்னுள்ளே - தன்ஸங்கல்பத்துக்குள்ளே, ஒக்கவே-ஏகப்ரகாரமாக, விழுங்கி - அடக்கி, சிக்கென - இனிஒருகாலும் புறப்படாதபடி, புகுந்தான் - (என்னுள்ளே) புகுந்தான், புகுந்ததற்பின் - புகுந்தபின், மிக்க - மிகுத்துவருகிற, ஞானவெள்ளம் - ஜ்ஞாநபூர்த்தியாகிற, சுடர் - ப்ரபைக்கு ஆஶ்ரயமான, விளக்காய் - ஸ்வரூபமாகிற தேஜோத்ரவ்யமாய், துளக்கு - (நான் சிக்கெனப்பிடித்தபின்பு) விஶ்லேஷாதிஶங்கையால் வந்த நடுக்கமும், அற்று - தீர்ந்து, அமுதமாய் - நிரதிஶயபோக்யபூதனுமாய், என் - என்னையே பார்த்திருக்கிற, பைம் - அழகிய, தாமரை-தாமரைபோன்ற, கண்ணன்-கண்ணையுடையவன், எங்கும் - ஓரிடத்திலும், பக்கம் - பக்கத்தில், நோக்க அறியான்-நோக்க அறிகிறிலன். என்பக்கல் அபிநிவேஶாம் பத்நீபரிஜநாதிகள்பக்கலிலுங் காண்கிறிலனென்று கருத்து. ஸ்வரூபாதிகளில் அவனுக்குண்டான ஸ்புரிதப்ரகாஶமும் ஸ்வஸம்ஶ்லேஷமடியாக வென்று நினைக்கிறார்.

இ.—இரண்டாம்பாட்டில், அவன் தம்மை அநுபவித்தபடியையும், அவ்வநுபவத்தாலே அவன் திருமேனியிற்பிறந்த புகரையுஞ் சொல்லுகிறுர்.

[சிக்கெனஇத்யாதி] - க்ஷுத்ரமாயிருப்பதொரு பதார்த்தமும் பிறிகதிர்ப்படாதபடி தன்ஸங்கல்பத்திலே ஸகலலோகங்களையும் ஒருகாலே வைத்து சிக்கெனப் புகுந்தான் - இனியொருகாலமும் பிரியாதபடி புகுந்தான். புகுந்தபின்பு அவன் இருந்தபடியென்? என்னில்,—[மிக்கஞானவெள்ளச்சுடர் விளக்காய்]-ஜ்ஞாநவெள்ளத்தால்வந்த மிக்கதேஜஸ்ஸையுடையனுய், விகஸித ஸஹஜ ஸார்வஜ்ஞ்யனுய். சேதநனுக்கு கர்மபாரதந்த்ர்யத்தால் வரும் ஜ்ஞாநத்தில் விகாரம் ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தாலே ஈஶ்வரனுக்கும் உண்டாகிறதாயிற்று. அங்ஙனேயாகிலிறே ஆஶ்ரயணீயனுவது. [துளக்கற்று] - ஆடியாடியில் ஆற்ருமையால்வந்த உண்ணடுக்கந்தீர்ந்தானுயிராநின்ருன்; "விஜ்வர:" என்னக்கடவதிறே. [அமுதமாய்]-"ஶ்ரோத்ரோஹ" என்கிறபடியே தன்னுகப்பாலே எனக்கு நிரதிஶய போக்யனுய், அவன் தம்மையநுபவித்து இனியனுயிருக்கும் இருப்பிறே இவர்க்கு போக்யம். [எங்கும் பக்கநோக்கறியான்] - பிராட்டி பின்னே வந்தணைத்தாலும் விலங்கப்பார்க்கிறிலன். இங்கே ஆளவந்தார்க்கு குருகைக்காவலப்பன் அருளிச்செய்தவார்த்தை. [என்பைந்தாமரைக்கண்ணனே] - ஆடியாடியில் ஆற்ருமையால்வந்த தாபந்தீர்ந்து திருக்கண்களும் குளிர்ந்தபடி.

ஈடு.—இரண்டாம்பாட்டு. அவன், 'இவர் நம்மை விடிற்செய்வதேன்' என்று அதிஶங்கைபண்ணபடியைச் சோல்லிற்று கீழிற்பாட்டில்; இவர், 'விடேன்' என்றபின்பு அவனுக்கு வடிவிற் பிறந்த பௌஷ்கல்யம் சோல்லுகிறது இப்பாட்டில்.

[சிறிதோரிடமும் புறப்படாத் தன்னுள்ளே உலகுகளோக்கவே விழுங்கிச் சிக்கெனப்புகுந்தான்] - "நாம் ஆழ்வாரை யநுபவிக்கும்போது, செருப்புவைத்துத் திருவடி தொழப்புக்காற்போலே யாகவொண்ணுது" என்றுபார்த்து, ஜகத்ரக்ஷணத்துக்கு வேண்டும் ஸம்விதாநமெல்லாம் பண்ணி, அநந்யபரனுய் அநுபவித்து, போகமாட்டாதே யிருந்தான்; ராஜாக்கள் அந்த:புரத்திற்புகுவது, நாட்டுக்கணக்கற்றபின்பிறே. அத்யல்பமாயிருப்பதொரு பதார்த்தமும் தன்பக்கல்நின்றும் பிரிகதிர்ப்பட்டு நோவுபடாதபடியாகத் தன்ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்திலே லோகங்களை ஒருகாலேவைத்து, இனிப் பேராதபடிபுகுந்

---

இரண்டாம்பாட்டு - சிக்கென இத்யாதி. கீழிற்பாட்டில் ப்ரமேயத்தை அநுவதியாநின்றுகொண்டு, "மிக்க ஞானவெள்ளச்சுடர்விளக்காய்" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - அவன் இத்யாதி. இவர் "பிடித்தேன்கொள்சிக்கென" என்றவநந்தரம், அவனுடைய ஜ்ஞாநாதிகளிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறுரென்று இப்பாட்டுக்கு ஸங்கதி யென்றபடி. அதிஶங்கைபண்ண - அது நிவ்ருத்தமான படி - என்று கூட்டுவது. "சுடர்விளக்காய்" என்றத்தைப்பற்ற - வடிவிற்பிறந்த பௌஷ்கல்யம் என்றது.

அந்வய ப்ரதர்ஶநபூர்வகம் ஹ்வமாஹ - சிறிதோரிடமும் இத்யாதி. ஓரிடமும் - ஒரு பதார்த்தமும். செருப்புவைத்துத் திருவடிதொழுகையாவது - ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பெருமாளைத் திருவடிதொழ எழுந்தருள, அவர் ஸ்ரீபாதம் பித்தப்பிளப்பாயிருக்கையாலே ஸ்ரீபாதரக்ஷைகொண்டு எழுந்தருளினராய் அத்தைத் திருவாசலிலேவைத்து எழுந்தருளினவளவிலே, ஸ்ரீபாதரக்ஷையிலே தானே திருவுள்ளம் சென்று, "தீர்த்தம் ப்ரஸாதிக்க" என்று அருளிச்செய்கிறத்தை, "செருப்பு

தான். [சிக்கேனப்புகுந்தான்] – அநந்ய ப்ரயோஜனமாகப் புகுந்தா னென்றுமாம். [புகுந்த இத்யாதி] - இவரோடே வந்துகலந்து, அக்கலவியில்அதிஶங்கையும் தீர்ந்தபின் பாயிற்று விகஸித ஸஹஜ ஸார்வஜ்ஞ்யனுமாய் விஜ்வரனுமாயிற்றது. தனக்கு நித்யதர்ம மான ஜ்ஞாநத்தை யுடைத்தான ஆத்மவஸ்து, கர்மநிபந்தநமாக ஒருதேஹத்தைப் பரிக்ர ஹித்து, இந்த்ரியத்வாரத்தை அபேக்ஷித்துக்கொண்டு ப்ரஸரிக்கவேண்டும்படி போந்தது' ஒருநாள்வரையிலே ஹகவத்ப்ரஸாதமும் பிறந்து ஜ்ஞாநஸங்கோசமும் கழியக்கடவதாயிருக்

---

ப்ர—(சிக்கெனவித்யாதி) (துளக்கற்ற) ஸம்க்ஷேபே, "அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் । க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர꞉ ப்ரமுமோத ஹ" ॥அரு॥

---

ப்ரஸாதித்தருள'' என்றாராம். ஸம்விதாநம் - வ்யாபாரம். "சிக்கென'' என்றதுக்கு அர்த்தத் வயம் - அந்யபரதையில்லாதபடி யென்னுதல், ப்ரயோஜநாந்தர பரதையில்லாதபடி யென்னுதல். லௌகிகத்ருஷ்டாந்தம்-ராஜாக்கள் இத்யாதி. ஶப்தார்த்தம்-அந்யலப்பமாய்-இத்யாதி. பிரிகதிர்ப் பட்டு - தப்பிப்போய். அநந்யப்ரயோஜநமாகவென்றது - ஜகத்ரக்ஷணரூபப்ரயோஜநம் ஸித்திக் கையாலே யென்றபடி. "புகுந்ததற்பின் மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த்துளக்கற்று" என்னு மளவுக்குஅர்த்தம்-இவரோடேஇத்யாதி. மிகுந்துவருகிற ஜ்ஞாநபூர்த்தியாகிற ப்ரபைக்குஆஶ்ரய மான ஸ்வரூபமாகிற தேஜோத்ரவ்யமாயிதி ஶப்தார்த்த꞉. "புகுந்ததற்பின்'' என்கிற இது - உப லக்ஷணமித்யபிப்ராயேணாஹ-அதிசங்கையுந்தீர்ந்தபின்பாயிற்று என்று. ஞானவெள்ளத்தால்வந்த மிக்கதேஜஸ்ஸையுடையனுயென்று அர்த்தாந்தரத்தையும் விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - விகஸித ஸஹஜஸார்வஜ்ஞ்யனுமாய் என்று. விஜ்வரனுமா 'யென்றது - "துளக்கற்று''என்றதுக்கு ஹாவம். கர்மவஶ்யனான சேதநனுக்கு ஸம்ஸாரியான நாளில் பகவந்நிக்ரஹமடியாக ஜ்ஞாநஸங்கோசம் பிறக் கக்கடவதாய், பகவத்ப்ரஸாதமடியாக முக்தனான அவஸ்தையில் ஜ்ஞாநவிகாஸம்பிறக்கக்கடவதா யிருக்கும்; அப்படிஒருஹேதுவின்றியிலே யிருக்கிறவனும் ஆழ்வாரோட்டை விஶ்லேஷத்தாலே ஸங்குசிதஜ்ஞாநனாய், அவரோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே விகஸிதஜ்ஞாநனாயிராநின்றான்; இது என்ன ப்ராணயித்வம்? என்கிறார்-தனக்குஇத்யாதி "ஜ்ஞாநம் வைராக்யமைஶ்வர்யம் யஶ꞉ ஸ்ரீர்தர்ம ஏவ ச । ஜ்ஞாநேநாவ்ருதமேததஸ்ய நித்யமேதத்வதாத்ம்யம்'' என்றத்தைப்பற்ற, நித்யதர்மமான என்றது. தர்மம் - ஶேஷத்வம். ஐஶ்வர்யம் - நியந்த்ருத்வம். "புமாந் ந தேவோ ந நரோ ந பஶுர் ந ச பாதப꞉ । ஶரீராக்ருதிபேதாஸ்து பூபைதே கர்மயோநய꞉'' என்றத்தைப்பற்ற-கர்மநிபந்தநமாக இத்யாதி. இவ்விடத்திலே - "விஷ்ணுஶக்தி꞉ பரா ப்ரோக்தா க்ஷேத்ரஜ்ஞாக்யா ததா பரா । அவித்யா கர்மஸம்ஜ்ஞாந்யா த்ருதீயா ஶக்திரிஷ்யதே । யயா க்ஷேத்ரஜ்ஞஶக்தி꞉ ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வகா'' இத்யாத்யநுஸந்தேயம். இந்த்ரியத்வாரத்தை அபேக்ஷித்துக்கொண்டு என்றவிடத்திலே - "இந்த்ரியாணாம் ஹி ஸர்வேஷாம் யத்யேகம் க்ஷரதீந்த்ரியம் । தேநாஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞா த்ருதே꞉ பாத்ராதிவோதகம்'' என்றது அநுஸந்தேயம். "வாஹிந்யா நாத்ராதிரோஹித தகதோதாஹ்யஸ்ய பத்விபர்யயள்''. "ஸம்ஜ்யோதிராபஸம்வத்ஸவேந ஏவேணாபி நிஷ்கத்யதே'' இத்யாதி யைப்பற்ற, ஒருநாள்வரையிலேஇத்யாதி. மிக்கஞானவெள்ளத்தையும், "சுடர்விளக்கு'' என்று-

குமிழே, அங்ஙனொரு ஹேதுவு மின்றிக்கே யிருக்கிறவனும் இவரோடேவந்து கலப்ப தற்குமுன்பு ஸங்குசித ஜ்ஞாநனாய், இவரோடேகலந்தபின்பு விகஸிதமான ஜ்ஞாநவெள் ளத்தையு முடையனானான், திவ்யமங்கள விக்ரஹமும் புகர்பெற்றது இப்போது. [துளக்கற்று] - ஆடியாடியி லாற்றாமையால் வந்த உள்நடுக்கமுந் தீர்ந்தானா யிராநின்றான்; "விஜ்வர:" (விஜ்வர:) என்னக்கடவதிறே. 'இவர் நம்மைவிடிற் செய்வதென்' என்கிற உள்நடுக்கமும் அற்றது இப்போது. [அமுதமாய்] - "ப்ரமுமோதஹ" (ப்ரமுமோதஹ) என்கிறபடியே. அவன் தம்மைவிரும்பி போக்யமாக நினைத்திருக்கிற இருப்புத் தமக்கு போக்யமாயிருக்கிறபடி. [எங்கும்பக்கநோக்கறியான்] - 'ஆழ்வார்பக்கல் இவனுக்குண் டான அதிமாத்ரப்ராவண்யத்தைத் தவிர்க்கவேணும்' என்று நாய்ச்சிமார் திருமுலைத்தடத் தாலே நெருக்கிலும் அவர்கள்பக்கல் கண்வைக்கமாட்டுகிறிலன். இங்கே, ஆளவந்தா ர்க்குக் குருகைக்காவலப்பன் அருளிச்செய்ததாக அருளிச்செய்யும் வார்த்தை - "அப்பன் ஸ்ரீபாதத்திலே ஒருரஹஸ்யவிஶேஷமுண்டு' என்று மணக்கால் நம்பி அருளிச்செய்ய, 'அதுகேட்கவேணும்' என்று ஆளவந்தாரும் எழுந்தருள, கங்கைகொண்ட சோழபுரத்தேற, அப்பனும் அங்கே ஒருகுட்டிச்சுவரிலே யோகத்திலே எழுந்தருளியிருக்க, 'இவரை ஸமாதி பங்கம்பண்ணவொண்ணாது' என்று சுவருக்குப்புறம்பே பின்னே நிற்க, அப்பனும் யோகத் திலே எழுந்தருளியிருக்கிறவர் திரும்பிப்பார்த்து, 'இங்குச் சொட்டைக்குலத்தி லாரேனும் வந்தாருண்டோ?' என்று கேட்டருள, 'அடியேன்' என்று ஆளவந்தாரும் எழுந்தருளிவ ந்து கண்டு, 'நாங்கள் பின்னே தெரியாதபடி நிற்க இங்ஙன் அருளிச்செய்கைக்கு ஹேது வென்?' என்ன, 'நானும் தானுமாக அநுபவியாநின்றால், பெரியபிராட்டியார் திருமுலைத்த டத்தாலே நெருக்கியணைத்தாலும் அவள்முகங்கூடப்பாராத ஸர்வேஶ்வரன், என்கழுத் தையமுக்கி நாலுமூன்றுதரம் அங்கே எட்டிப்பார்த்தான்; இப்படி அவன் பார்க்கும் போது சொட்டைக்குடியிலே சிலர் வந்தாருண்டாகவேணும் என்றிருந்தேன்காணும்" என்று அருளிச்செய்தார். [என்பைந்தாமரைக்கண்ணனே] - ஆடியாடியி லாற்றாமை யால் வந்த தாபமுந் தீர்ந்து, திருக்கண்களும் குளிர்ந்தது. (உ)

---

*நிரவதிகதேஜோரூபமானவிக்ரஹத்தையுமுடையவனென்ற அர்த்தாந்தரம்-விகஸிதமானஇத்யாதி. "விஜ்வரனுமாய்" என்றத்தை விவரிக்கிறார்-ஆடியாடியில்இத்யாதி. "க்ருதக்ருத்யஸ்ததாராமோ விஜ்வர: ப்ரமுமோதஹ" இதிஸ்ரீஸங்க்ஷேபே. ஆற்றமையாலே - ஆழ்வாருடைய ஆற்றாமை யாலே. உள்நடுக்கம் - அந்த:கம்பம். இதுக்கு ஸம்வாதம் - விஜ்வர இத்யாதி.' இதுக்கு 'பூர் வார்த்தத்திலே நோக்கு. "துளக்கற்று" என்றதுக்கு அர்த்தாந்தரம்-இவர்நம்மைவிடில் இத்யாதி. எவ்வாகாரத்தாலே போக்யத்வமென்ன, "ப்ரமுமோதஹ" இத்யாதி. "ஹ" என்றது - பெரு மாளுடைய ப்ரமோததசையில் போக்யதையைக் கண்ட ருஷியினுடைய ஈடுபாடு. 'எங்கும்' இத் யஸ்ய சரமாவதிமாஹ-ஆழ்வார்பக்கல் இத்யாதி. அதிமாத்ரப்ராவண்யத்தையிதி - அதிமாத்ரப்ரா வண்யம் ஸத்தாநாசகமாகையாலே தவிர்க்கவேணுமென்றபடி. "அவர்கள்பக்கல் கண்வையான்", என்னுமதுக்கு ஸம்வாதம்-இங்கேஆளவந்தார் இத்யாதி. என்பைந்தாமரைக்கண்ண னித்யாரப்ய அந்வய: (உ)*

# மூன்றாம்பாட்டு.

---

தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவுந்தலைமகனைத் துழாய்விரைப்
பூமருவுகண்ணியெம்பிரானைப் பொன்மலையை
நாமருவிநன்கேத்தியுள்ளிவணங்கி நாமகிழ்ந்தாட நாவலர்
பாமருவிநிற்கத்தந்த பான்மையேவள்ளலே.

ஆ.—(தாமரை.) நிரதிஶயஸௌந்தர்யலாவண்யாதி கல்யாணகுணவிஶிஷ்டனாய், நிரதிஶயஸுகந்ததிவ்யமால்யாலங்க்ருதனாய், ஶேஷஶேஷாஶநவைநதேயாதிதிவ்ய புருஷர்களாலே ஸம்ஸ்தூயமாநனாயிருந்தவனை, நாம் மருவி நன்கேத்தி யுள்ளிவணங்கி நாமகிழ்ந்தாடும்படி நம்முடைய நாவிலேயலருகிற சொற்களுக்குத் தன்னை விஷயமாகத் தருகையே ஸ்வபாவமாயிருப்பதே! என்னௌதார்யமோ வென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், அயர்வறுமமரர்களுக்குப்போலே எனக்குத் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளை வர்ணிக்கைக்கீடான வாக்கைத் தந்தருளினான், ஒருவனுடைய ஔதார்யமிருக்கும்படியே! என்று ஹ்ருஷ்டராகிறார்.

[தாமரைக்கண்ணனை யென்றுதொடங்கி] - திருக்கண்களின் அழகிலே ஈடுபட்டு ஸ்துதிக்கிற அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாயுள்ளவனை. [துழாயென்றுதொடங்கி] - விரையும் பூவும் மாறாதேயிருக்கும் திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனான தன்னுடைய திருவழகை எனக்கு நிர்ஹேதுகமாகக் காட்டினவனை [பொன்மலையை -] என்னோட்டைக் கலவியாலே அபரிச்சேத்யமான திருவழகையுடையனாய் என்னைப் பிரிந்துபோகைக்கு க்ஷமனன்றிக்கே யிருக்கிறவனை. [நாமருவியென்றுதொடங்கி] - அயர்வறுமமரர்கள் ஏத்தக்கடவ நிலத்துக்கு நாம்நிலவராய் ஸத்ருஶமாம்படி ஏத்தி குணாநுஸந்தாநத்தைப்பண்ணி இக்குணாநுஸந்தாந பலாத்காரத்தாலே நிர்மமராய்க்கொண்டு திருவடிகளிலேவிழுந்து ப்ரீதிதத்வம் புதியதுண்டறியாத நாம் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே மகிழ்ந்து ஆடும்படி. [நாவலரென்று தொடங்கி] - ஹர்ஷப்ரகர்ஷம் அநாயாஸேந சொல்லுவிக்கச் சொல்லுகிறகவிக்கு நிலவராய் நிற்கும்படி நம்மைப்பண்ணுகை ஸ்வபாவமாகவுடையனாய் இருக்கிறவனல்லவோ.

ப.—அநர்த்தரம் தன்னைக் கரணத்ரயத்தாலும் நிரந்தராநுபவம்பண்ணுவித்த மஹோதாரனானவன் என்னையொழிய அறிகிறிலனென்கிறார்.

தாமரை - தாமரைபோன்ற, கண்ணனை - கண்களையுடையனாய், (அவ்வழகாலே), விண்ணோர் - நித்யஸூரிகள், பரவும்-நிரந்தரமாகப் புகழும்படியான, தலைமகனை - மேன்மையையுடையவனாய், விரை - விரையும், பூ - பூவும், மருவு - மருவின, துழாய்க் கண்ணி - துழாய்மாலையையுடையனாய்க்கொண்டு, எம் - எங்களுக்கு, பிரானை - ஸ்வாமியாய், பொன்மலையை - (எங்களோட்டைச்சேர்த்தியாலே) பொன்மலைபோலே யோங்கி

உஜ்வலனான தன்னை, நாம் - நாங்கள் நிகர்ஷம்பார்த்தகலாதே, மருவி - மருவி, நன்கு - (ஸூரிகளோபாதி அங்குத்தைக்குத் தகுதியாம்படி) நன்றாக, ஏத்தி - ஏத்தி, உள்ளி - (அவர்கள் சிந்தையுள் வைக்குமாபோலே) நினைத்து, வணங்கி - ("வணங்கிவழிபடும்" என்றபடியே திருவடிகளிலே) விழுந்து, 'இப்படி கரணத்ரயத்தாலுமுண்டான அநுபவத்தாலே), நாம் - நாங்கள், மகிழ்ந்து - ஆநந்திகளாய், ஆட - ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணும்படியாக, நா - நாவிலே, அலர் - அலருகிற, பா - பாவிலே, மருவி - மருவி, நிற்க - (திருவாய்மொழிபாடி) நிற்கும்படி, தந்த - உபகரித்த, பான்மை - ஸ்வபாவத்துக்கு, ஏய்- பொருந்தின, வள்ளல் - ஔதார்யகுணவிசிஷ்டனானவன். எங்கும் பக்கநோக்கறியானென்று அந்வயம். பான்மை - ஸ்வபாவம்.

இ·—மூன்றாம்பாட்டில், நித்யஸூரிகளைப்போலே தன்படிகளிலே ஈடுபட்டுப் புகழும்படி பண்ணின இது ஔதார்யமேதான் என்கிறார்.

[தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும்] - ஒருகால் நோக்கினால், நித்யஸூரிகள் ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவுகெடக் கூப்பிடுவர்களாயிற்று. [தலைமகனை] - இப்படிகூப்பிடாநின்றாலும் "ஸூரவஷூஃ வஸஃவஜ்ராஷூஃ" என்கிறபடியே அவ்வருகாயிருக்கும். [துழாயித்யாதி] - அவர்களைக்கண்ணாலேதோற்பித்தான், என்னைத்தோளின் மாலையாலே தோற்பித்தான். விரையும் பூவும் மருவியிருந்துள்ள திருத்துழாய் மாலையையுடைய என்னயனை. [பொன்மலையை] - என்னோட்டைக்கலவியாலே அபரிச்சிந்நமான அழகையுடையனாய்க் கால்வாங்கமாட்டாதே யிருக்கிறவனை; நான் ஏத்தப்பெற்றபடியாலே வளர்ந்தபடி என்னவுமாம். [நாமருவி] - "அருவினையேன்" என்று அகன்றநான் வந்துகிட்டி; பகவத்ப்ரத்யாஸத்தியை 'பாபம்' என்று அகன்றநான்கிட்டி. [நன்கேத்தி]- நித்யஸூரிகள் ஏத்தக்கடவ விஷயத்துக்கு நிலவனாய், ஸத்ருசமாம்படி யேத்தி. "வானவர் சிந்தையுள் வைத்துச் சொல்லும் செல்வனை" என்றவரிறே. "யதோவாசோ நிவர்த்தந்தே" என்று வேதம் மீண்டவிஷயத்தை நன்றாகவேத்தி என்றுமாம். [உள்ளி] - குணங்களை யநுஸந்தித்து. "நினைந்துநைந்து" என்றவரிறே. [வணங்கி]-குணபலாத்க்ருதனாய் நிர்மமனாய் வணங்கி. "வணங்கினால் - மாசூணாதோ" என்றவரிறே. [நாமகிழ்ந்தாட]- பகவதநுபவத்தால்வந்த ப்ரீதிதத்வத்தில் புதியதுண்ணுதநாம் ஹ்ருஷ்டராய், அதுக்குப் போக்குவிட்டாட. [நாவலரித்யாதி] - காலபுஷ்பம்போலே நாவிலே அலராநின்றுள்ள, பாவுண்டு - கவி, அதிலே மருவிநிற்கும்படி - நிலவனாய் நிற்கும்படி தந்த. [நாவலர்பா]- மநஸ்ஸஹகாரமும் வேண்டாதபடி யிருக்கை. [பான்மையே வள்ளலே] - வள்ளலேயென்று - ஸம்போதநமாய், வள்ளலே - இதொருஸ்வபாவமே என்னுதல்; பான்மையேய் - அத்தை ஸ்வபாவமாகவுடையவன் என்னுதல். பான்மை - கடன்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. நித்யஸூரிகளுக்கும் அவ்வருகானவன்தன்னை நான் தேசிகனாய் அநுபவிக்கும்படி பண்ணின இதுவும் ஔதார்யமேதா னென்கிறார்.

---

மூன்றாம்பாட்டு - தாமரை இத்யாதி. "விண்ணோர் பரவும்தலைமகனை, நாவலர் பாமருவி நிற்கத் தந்த பான்மையே வள்ளலே" என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை-நித்யஸூரிகளுக்கும் இத்யாதி.

[தாமரைக்கண்ணனை இத்யாதி]- ஒருகால் திருக்கண்களாலே குளிரநோக்கினால், அதிலேதோற்று ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவுகெட ஏத்தாநிற்பர்களாயிற்று நித்யஸூரிகள். “ஶ்ருதோயமர்த்தோ ராமஸ்ய ஜாமதக்ந்யஸ்ய ஜல்பத:” (ஶ்ருதோயமர்த்தோராமஸ்யஜாமதக்ந்யஸ்யஜல்பத:) என்கிறபடியே. [தலைமகனை] - இவர்கள் ஏத்தாநின்றாலும், “நிரவத்ய: பர: ப்ராப்தே:” (நிரவத்யபர:ப்ராப்தே:) என்று அவன் பரனாயிருக்கும். [துழாய் இத்யாதி] - நித்யஸூரிகளைக் கண்ணழகாலே தோற்பித்தான், இவரைக் கண்ணியிலே அகப்படுத்தினான். மார்வில் மாலையைக்காட்டி மாலாக்கினான். விரை - பரிமளம். விரையும் பூவும் மருவியிருந்துள்ள துழாய்க்கண்ணி யெம்பிரானை. [பொன்மலையை] - என்னோட்டைக்கலவியாலே அபரிச்சிந்நமான அழகையுடையனாய், கால்வாங்கமாட்டாதே யிருக்கிறவனை. நான் ஏத்தப்பெற்றபடியாலே வளர்ந்தபடி யேன்

---

ப்ர.—(தாமரையித்யாதி) (விண்ணோர்பரவும்) ஶ்லாக்யமேவ, (௩.௪) ஶ்ருதோயமர்த்தோ ராமஸ்ய ஜாமதக்ந்யஸ்ய ஜல்பத: । நாரதஸ்ய ச தேவர்ஷே: க்ருஷ்ணத்வைபாயநஸ்ய ச”.

(தலைமகனை) [illegible], “[illegible] । [illegible] ॥௭௭॥ நிரவத்ய: பர: ப்ராப்தேர் நிரதிஷ்டோக்ஷர: க்ரம: । ஸர்வேஶ்வராதாராய தாம்நாம் தாமாத்மகாக்ஷய ॥௭௮॥” “(பர: ப்ராப்தே:) ப்ராப்தே: பர: - [illegible]. நிரதிஷ்ட: - நிராதார:. க்ரம: - [illegible]; ‘[illegible] க்ரம:’ இதி ஸூத்ரே. வ்யாப்தி:-[illegible]. [illegible] - [illegible]: தாமநாம் - [illegible]. க்ரமதே - [illegible]. ஸர்வேஶ்வராதாராய - ஸர்வேஷாமீஶ்வராணாம் ஆதாராய. தாம்நாம் தாமாத்மக-ஜ்யோதிஷாம் ஜ்யோதி:’ இதி ஶ்ரீவிஷ்ணுசித்தீயே வ்யாக்யாதம்.

---

“தாமரைக்கண்ணனை, விண்ணோர் பரவும்தலைமகனை” என்கிற பதச்சேர்த்திக்கு பாவம்- ஒருகால் இத்யாதி. பரவுகை - அடைவுகெடக் கூப்பிடுகை. இது - பக்திபாரவஶ்யக்ருதம். “பரவும்” என்றதுக்கு ஸம்வாதம் - ஶ்ருதோயம் இத்யாதி. “நாரதஸ்ய ச தேவர்ஷே: க்ருஷ்ணத்வைபாயநஸ்ய ச” இத்யுத்தரார்த்தம். இதம்ப்ரமாணம்மோக்ஷதர்மே. ஜல்பத:என்று - தவில் ப்ரத்யயார்த்தமான அவ்யயமாய், ராமனுடைய ஜல்பத்தினாலே கேட்கப்பட்டதென்றபடி. ஜல்பநம்- அக்ரமமாகச் சொல்லுகை. தலைமகனை - முதன்மையையுடையவனை. நிரவத்ய இத்யாதி-பஞ்சமேம்ஶேப்ரதமே, “நிரவத்ய: பர: ப்ராப்தேர் நிரதிஷ்டோக்ஷர: க்ரம: । ஸர்வேஶ்வராதாராய தாம்நாம் தாமாத்மகாக்ஷய” “பர: ப்ராப்தே:- ப்ராப்தே: பர:- [illegible]. நிரதிஷ்ட: - நிராதார:. க்ரம:-[illegible]. ஸர்வேஶ்வராதாராய-ஸர்வேஷாமீஶ்வராணாமாதாராய. தாம்நாம் தாமாத்மக-ஜ்யோதிஷாம் ஜ்யோதிரித்யர்த்த:.” “கண்ணியெம்பிரானை” என்ற பதத்தைக் கடாக்ஷித்து ரஸோக்தி-நித்யஸூரி இத்யாதி வாக்யத்வயமும். அந்வயம்-விரையும்இத்யாதி. “எம்பிரானை, பொன்மலையை” இதி பதஸங்கதிஸித்தம்பாவமாஹ - என்னோட்டை இத்யாதி. “ஏல் சேர்த்தி” என்றத்தைக் கடாக்ஷித்து

னவுமாம். ஆக, இத்தால் - இவரைப்பெற்றபின்பு வளர்ந்து புகர்பெற்றபடி. [நாமருவி]- "அருவினையேன்" என்று அகலக்கடவநாம் கிட்டி. [நன்கேத்தி] - நித்யஸூரிகள் ஏத்தக்கடவ விஷயத்தை நன்றாக ஏத்தி; வானவர்சிந்தையுள் வைத்துச்சொல்லும் செல்வனை, எந்தையேயென்பன் என்று அகன்றவரிறே. "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோ வாசோநிவர்தந்தே) என்று வேதங்களுங்கூட மீண்டவிஷயத்தை மறுபாடுருவ ஏத்தியென்றுமாம். [உள்ளி] - "நினைந்து" என்று - அநுஸந்தாநத்துக்கு ப்ராயஶ்சித்தம்பண்ணத் தேடாதே அநுஸந்தித்து. [வணங்கி] - குணபலாத்க்ருதராய் நிர்மமராய் வணங்கி. "வணங்கினால், உன்பெருமை மாசூணாதோ" என்னும் நாம்வணங்கி. [நாமகிழ்ந்தாட] - பகவதநுபவத்தால் வந்த ப்ரீதிதத்வம் கணுக்கண்டறியாத நாம் ஹ்ருஷ்டராய் அதுக்குப் போக்குவிட்டாட. [நாவலர் இத்யாதி] - நாட்பூ அலருமாபோலே ஜிஹ்வாக்ரத்திலே விகஸியாநின்றுள்ள சந்தஸ்ஸானது என்பக்கலிலே நிற்கும்படியாகத் தந்த இதுதன்னை ஸ்வபாவமாகவுடையையா யிருக்கிற பரமோதாரனே. [நாவலர்பா] - மநஸ்ஸஹகாரமும் வேண்டாதபடி யாயிருக்கை. தாமரைக்கண்ணனாய், விண்ணோர் பரவுந் தலைமகனாய் துழாய்விரைப்பூ மருவு கண்ணி யெம்பிரானாய், பொன்மலையாயிருக்கிற தன்னை, நாம் மருவி நன்கேத்தி யுள்ளிவணங்கி நாம் மகிழ்ந்தாடும்படி, நாவலர் பாமருவிநிற்கத் தந்த பான்மையேய்ந்த வள்ளலே யென்று சொல்லுகிறாராகவுமாம். அன்றியே, "தாமரைக் கண்ணனை" என்கிற ஐகாரத்தை - அவ்யயமாக்கி, தாமரைக்கண்ணனாய் - பொன்மலையாயிருக்கிற நீ, நாமருவி - நாவலர் பாமருவிநிற்கத்தந்த பான்மையே - இதுவும் ஒரு ஸ்வபாவமே! வள்ளலே - பரமோதாரனே! என்கிறாராகவுமாம் (௩)

---

*அர்த்தாந்தரம்* - நானேந்த இத்யாதி. பலிதம் - ஆகஇத்தால்இத்யாதி: உக்தார்த்தத்வயத்தாலுமென்றபடி. 'நாம்'என்ற பதத்தை - 'மருவி, நன்கேத்தி, உள்ளி, வணங்கி,'என்ற பதங்களோடே ப்ரத்யேகம்அந்வயித்து, அத்தால் - ஔதார்யாதிசயம் தோன்றுகிறதென்று திருவுள்ளம்பற்றி, ப்ரதிபதம் ப்ரதிகோடிஞ்சதர்ஶயதி-அருவினையேனித்யாதியாலும், வானவர் சிந்தையுள் வைத்துஇத்யாதியாலும், நினைந்தென்றுஇத்யாதியாலும், வணங்கினால்உன்பெருமை யித்யாதியாலும், பகவதநுபவத்தால்இத்யாதியாலும். அருவினையே னென்றதுக்கு - "வளவேழுலகின்முதலாய வானோரிறையை" இத்யாதௌ ஹ்ருதயம். "விண்ணோர்பரவும்தலைமகனை" இத்யேதத்ஹ்ருதிகிதாயாஹ- நித்யஸூரிகளோத்தஇத்யாதி. நன்மைக்கு பாவம் - வானவர்இத்யாதி. ஆகையாலே, நித்யஸூரிகளைப்போலே நன்றாகஏத்தியென்று, அகன்றவரிறே என்றஅநந்தரம் வாக்யத்தைப் பூரிப்பது. நன்மைக்குஅர்த்தாந்தரம் - யதோவாசஇத்யாதி. விஷயத்தை - அபரிச்சிந்நவிஷயத்தை. மறுபாடுருவ என்றது - நன்மையின் அர்த்தம். மறுபாடுருவுகை - பின்னே புறப்படுகை. யாவதவகாஹநத்தைச் சொல்லுகிறது. ஆக, "நன்கேத்தி" என்றதுக்குஅர்த்தத்வயம் - அயோக்யதாநுஸந்தாநத்தாலே அகன்ற நான்அது தவிர்ந்து நித்யஸூரிகளைப்போலே நன்றாக ஏத்தியென்னுதல், அபரிச்சிந்நவிஷயத்தை மறுபாடுருவ ஏத்தி யென்னுத லென்று. நினைந்தென்று இதி - அஸ்ய 'என்பன் நினைந்து நைந்து' இத்யத்ரஹ்ருதயம். ப்ராயஶ்சித்தம்பண்ணத்தேடாதே - அயோக்யதாநுஸந்தாநத்தால் அகலநினையாதே. குணம் - ஸௌஶீல்யாதி. ப்ரதியோகியோடே கூட்டி விவரணம் - வணங்கினால் இத்யாதி. அதுக்கு - ப்ரீதிதத்வத்துக்கு. போக்குவிட்டு - வழிவிட்டு. நாட்பூ - ஸத்யோவிகஸித புஷ்பம். சப்தார்த்தம் - ஜிஹ்வாக்ரத்திலேஇத்யாதி. சந்தஸ்ஸாகில் நாவினுலேயன்றோ அலருவது, 'நாவலர்' என்று விஶேஷிப்பானென் என்ன-மநஸ்ஸஹகாரம்இத்யாதி. முந்தின அந்வயம்-பரோக்ஷநிர்த்தேசமாய், பான்மையோடேகூடின ஔதார்யமிருந்தபடியென் னென்று ஈடுபாடு. த்விதியாந்வயம் - அபரோக்ஷநிர்த்தேசமாய் ப்ரதமாந்தமாகக் கண்டுகொள்வது. பான்மை-ஸ்வபாவம். பான்மையேய்ந்த - ஸ்வபாவமாக வுடையையாயிருக்கிற. வள்ளலே யென்கிறது - ஸம்போதனை.

# நான்காம்பாட்டு.

வள்ளலே! மதுசூதனா! என்மரதகமலையே! உனைநினைந்து
எள்கல்தந்தவெந்தாய்! உன்னையெங்ஙனம்விடுகேன்?
வெள்ளமேபுரைநின்புகழ்குடைந்தாடிப்பாடிக் களித்துகந்துகந்து
உள்ளநோய்களெல்லாம்துரந்து உய்ந்துபோந்திருந்தே.

ஆ.—(வள்ளலே.) ஆஶ்ரிதர்க்கு ஆத்மதாநம்பண்ணும் ஸ்வபாவனே! தத்விரோதிநிரஸந ஸ்வபாவனே! என்னுடைய பரமபோக்யமே! உன்னைநினைந்தால் நீராயுருகும் ப்ரக்ருதியாக என்னைப்பண்ணினவனே! உன்னுடைய ஏவம்விதமான கல்யாணகுணங்களாகிற அம்ருதவெள்ளத்தைக் குடைந்தாடிப் பாடிக்களித்து உகந்துஉகந்துள்ளநோய்களெல்லாந் துரந்து உய்ந்து போந்திருந்து உன்னை எங்ஙனே விடும்படி என்கிறார்.

ஒ.—காலாம்பாட்டில், நிர்ஹேதுகமாக உன்னைத்தரும் ஸ்வபாவனாய் விரோதிநிரஸந ப்ரமுகமான கல்யாணகுணாந்விதனாயிருந்துள்ள உன்னையநுபவித்து வைத்து, விட உபாயமுண்டோ என்கிறார்.

[வள்ளலேயென்று தொடங்கி] - பரமோதாரனாய் உன்னைபுஜிக்கைக்கு விரோதியான ப்ரதிபந்தகங்களைப்போக்கும் ஸ்வபாவனாய். [என்மரதகமலையே] - ஶ்ரமஹரமாய் அபரிச்சேத்யமான உன்னுடைய அழகை எனக்கு அநுபவிக்கத்தந்தவனே. [உனைநினைந்தெள்கல்தந்தவெந்தாய்] - உன்னை அநுபவித்தால் புறம்புள்ளவற்றையெல்லாம் இகழும் ஸ்வபாவத்தை எனக்குத்தந்தவனே. உன்னையநுபவித்தால் ஈடுபடும் ஸ்வபாவத்தை எனக்குத்தந்தவனே யென்றுமாம். [வெள்ளமேயென்றுதொடங்கி] - அபரிச்சேத்யமான உன்னுடைய கல்யாணகுணங்களை ஒரிடமொழியாமே அவகாஹித்து அத்தால் வந்த ப்ரீத்யதிஶயத்தாலே ஆடிப்பாடிக்களித்து ப்ரதிக்ஷணம் ப்ரீதிபெருகிவர அநர்ஹதாநுஸந்தாநத்தாலும் விஶ்லேஷத்தாலும் வந்த வ்யஸநங்களெல்லாவற்றையும் போக்கி உஜ்ஜீவித்து உன்திருவடிகளிலே வந்திருந்து.

ப.—அநந்தரம்,: ஸர்வப்ரகாரோபகாரகனான உன்னை விடப்போமோ? என்கிறார்.

வள்ளலே-அர்த்தித்வநிரபேக்ஷமாக உபகரிக்கும் மஹோதாரனாய், மதுசூதனா-உபகாரங்கொள்ளுகிற என்விரோதியை மதுவையழித்தாற்போலே அழிக்குமவனாய், என் - (நிவ்ருத்தவிரோதிகனான) எனக்கு, மரதகமலையே - (உத்துங்கமாய் உஜ்வலமான) மரதகமலைபோலே யிருக்கிற வடிவை யநுபவிப்பிக்குமவனாய், ("மாற்பான்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்கிறபடியே), உனை - உன்னை, நினைந்து - அநுஸந்தித்து, எள்கல் - இதரவிஷயங்களையிகழும் ஸ்வபாவத்தை, தந்த - தந்த, எந்தாய் - ஸ்வாமியே; வெள்ளமேபுரை - பெருங்கடல்போலே அபரிச்சிந்நமான, நின் - உன்னுடைய, புகழ் குணங்களை, குடைந்து - அவகாஹித்து அநுபவித்து, ஆடிப்பாடி - அந்தப்ரீதியாலே ஆடுவதுபாடுவதாய், களித்து - களித்து, உகந்துஉகந்து - அதோரளவில்நில்லாதே மேன்மேலெனஉகந்து, உள்ளநோய்களெல்லாம் - அஹங்காரார்த்தகாமங்கள் அநுபவவிஶ்

லேஷம் நிகர்ஷாநுஸந்தாநம்முதலாகவுள்ள நோய்களையெல்லாம், துரந்து - தூரப்போம்படி அகற்றி; உய்ந்து - லப்தஸத்தாகனாய், போந்து - (ஸம்ஸாரஸ்திதிகுலைந்து) உன்னளவும் போந்து, இருந்து - ("மாயநாநௌ" என்று) அநுபவித்துக்கொண்டிருக்கப் பெற்றுவைத்து, உன்னை - (இப்படி உபகாரகனான) உன்னை, எங்ஙனம் - எங்ஙனே, விடுகேன் - விடுவேன்.

இ.—நாலாம்பாட்டில், இந்த ப்ரீதி எத்தனைகுளிக்குநிற்குமோவென்ன, உன்படிகளை அநுபவித்துவைத்து விடவுபாயமுண்டோ வென்கிறார்.

[வள்ளலேயித்யாதி] - அவன் படிகளைச்சொல்லுகிறார். [வள்ளலே] - உன்னை எனக்குத் தந்த பரமோதாரனே. [மதுசூதனா] - உன்னையநுபவிக்கைக்கு விரோதிகளைப் போக்குமவனே. [என்மரதகமலையே] - உன்னிலும் சீரியதான உன்வடிவழகை எனக்கு அநுபவிக்கத் தந்தவனே. ஶ்ரமஹரமாய் அபரிச்சேத்யமான வடிவு. [உனையித்யாதி] உன்னை அநுபவித்தால் புறம்புள்ளவற்றையெல்லாம் இகழும் ஸ்வபாவத்தை எனக்குத் தந்தவனே. எள்கல் - இகழ்ச்சியாதல், ஈடுபாடாதல். 'உன்னை அநுபவித்தால் அமையும்' என்றிராதே மேன்மேலென ஈடுபடும் ஸ்வபாவத்தை என்றுமாம். [உன்னை யெங்ஙனம் விடுகேன்] - பாஹ்யருசியைத் தவிர்த்த உன்னைவிட்டு எங்கேபோவேன். உன்பக்கலிலே ஈடுபட்டநான் உன்னைவிட்டால் ஸத்தையுண்டோ. [வெள்ளமேயித்யாதி] - கடல்போலே யிருந்துள்ள உன்னுடையகல்யாணகுணங்களிலே அவகாஹித்து. [ஆடிப்பாடி]- ப்ரீதிக்குப்போக்குவீடான, காயிகமாயும் வாசிகமாயும் உண்டான விக்ருதி. [களித்து கந்துகந்து] - ஹ்ருஷ்டனாய் அநவிச்சேதியாதபடியாய் மேன்மேலென ஒருபடிப்பட்டிராதே பெருகிவர. [உள்ளநோய்களெல்லாந்துரந்து] - விஷயப்ராவண்யத்தால் வரும் நோய், விரஹத்தால் வரும் நோய், அயோக்யதாநுஸந்தாநத்தால் வரும்நோய். [உய்ந்து]- "அஸந்நேவ ஸ பவதி" என்கிற நிலைதவிர்ந்து. "ஸந்தமேநம்" என்னும்படி உஜ்ஜீவித்து. [போந்து] - உன்னளவும்போந்து. ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தே நித்யஸூரிகள் பரிமாற்றமாயிருக்கை. [இருந்தே] - க்ருதக்ருத்யனாயிருந்து. இப்படி யிருந்துவைத்து- உன்னை எங்ஙனம்விடுகேன்.

ஈடு.—நாலாம்பாட்டு. "நாமருவிநன்கேத்தியுள்ளிவணங்கிநாமகிழ்ந்தாட" என்று - தம்முடைய நைச்யத்தை அநுஸந்தித்தவாறே, 'இவர் நம்மைவிடிற் செய்வதேன்?' என்று, அவன் அதிஶங்கைபண்ண, நிர்ஹேதுகமாக உன்வடிவழகை நீ என்னையநுபவிப்பிக்க அநுபவித்துஅத்தாலேஶிதிலனான நான்உன்னைவிடஸம்பாவனையுண்டோ? என்கிறார்.

[வள்ளலே]-நிர்ஹேதுகமாகஉன்னை யெனக்குத்தந்த பரமோதாரனே! [மதுசூதனா]- நீயுன்னைத்தருமிடத்தில் நான்ஸ்வீகரியாதபடிபண்ணும்விரோதிகளை,மதுவாகிறஅஸுரனை

---

நாலாம்பாட்டு - வள்ளலேஇத்யாதி. தம்முடையநைச்யத்தையிதி - 'நாம்' ப்ரீதித்வம் கணக்கண்டறியாத நாமென்கையாலே - நைச்யம் த்யோதித மென்றபடி. அதிசங்கைபண்ண - நைச்யாநுஸந்தாநம்அதிசங்காஹேது வென்றபடி. வடிவழகையென்றது - "மரதகமலை" என்றதைப் பற்ற. "எள்கல்" என்ற பதத்தின் த்விதீயார்த்தத்திலே நோக்காக - சிதிலனானநான் என்றது. விடஸம்பாவனை யுண்டோ ? என்றது - 'எங்ஙனம் விடுகேன்' என்றத்தைப் பற்ற.

ஹேதுபூர்வகமாகத் தரில், அது ஔதார்யமல்லாமையாலே-நிர்ஹேதுகமாக-என்கிறார். 'மதுசூதனா' என்றது-த்ருஷ்டாந்தார்த்தம். உன்னை நீ யாக்கும்படி-உன்னை 'பரன்'என்று ப்ரகாசிப்

நிரஸித்தாற்போலே நிரஸித்தவனே. [என்மரதகமலையே] - உன்னை நீயாக்கும்படி உன்னிலும் சீரியதாய், ஶ்ரமஹரமாய், அபரிச்சேத்யமான வடிவழகையன்றே எனக்கு ஔதார்யம்பண்ணிற்று. [உனைநினைந்தெள்கல்தந்தவெந்தாய்] - உன்னையநுஸந்தித்தால், இதரவிஷயங்களை நான் விடும்படி பண்ணினவனே யென்னுதல்; அன்றிக்கே, எள்கலாவது - ஈடுபாடாய், உன்னை யநுஸந்தித்தால் * "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்கிறபடியே அள்ளியெடுக்கவேண்டும்படி பண்ணித் தந்த என்னுயனே! என்னுதல். [உன்னையெங்ஙனம்விடுகேன்] - "உதாரனல்லை" என்று விடவோ? "விரோதிநிரஸநனல்லை" என்று விடவோ? "உனக்கு வடிவழகில்லை" என்று விடவோ? உன்விஷயத்திலே இப்படிஈடுபட்டநான் உன்னைவிட ஸம்பாவனையுண்டோ?என்னுதல்; உன்னை யநுஸந்தித்தால், இதரவிஷயங்களில் விரக்தனான நான் விட ஸம்பாவனை யுண்டோ? என்னுதல். இனி மேலெல்லாம் அவன் அதிஶங்கையைத் தீர்க்கிறார், [வெள்ளமேஇத்யாதி] - கடலோடொத்திருந்துள்ள உன்னுடைய கல்யாணகுணங்களை நாலுமூலையும் புக்கு வ்யாபித்து, நான்மறுநினைந்து ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு பாடி, அத்தாலேசெருக்கி மிகவும்ப்ரீதனாய். [உள்ளநோய்களெல்லாம்துரந்து] - கர்மநிபந்தநமாக வருமவை, உன்னைப்பிரிந்து படுமவை, "அயோக்யன்" என்றுஅகன்று வருமவை, இத்யாதிக ளெல்லாவற்றையும் ஓட்டி. [உய்ந்து] - "ஸந்தமேநந்ததோவிது:" (ஸந்தமேநந்ததோவிது:) என்கிறபடியே உஜ்ஜீவித்து. [போந்து]-ஸம்ஸாரிகளைவிட்டு வ்யாவ்ருத்தனாய். [இருந்து]-நிர்ப்பரனாயிருந்து - வள்ளலே மதுசூதனா - உன்னைஎங்ஙனம் விடுகேன். (ச)

## ஐந்தாம்பாட்டு.

உய்ந்துபோந்தென்னுலப்பிலாத வெந்தீவினைகளைநாசஞ்செய்துஉனது
அந்தமிலடிமையடைந்தேன் விடுவேனோ?
ஐந்துபைந்தலையாடரவணைமேவிப் பாற்கடல்யோகநித்திரை
சிந்தைசெய்தவெந்தாய்! உன்னைச்சிந்தைசெய்துசெய்தே.

பிக்கிறபடியென்றபடி. இங்கே "ஸவஶ்யாவஶ்யோ" இத்யாத்யநுஸந்தேயம். மரதகமலையின் தாத்பர்யம் - உன்னிலும்சீரியதாய் இத்யாதி. சீரியதாய் - ஹோக்யமாய். "எள்கல்" என்றதுக்கு அர்த்தத்வயம் - த்யாகமும், ஈடுபாடும். மூன்றினது - உன்னை இத்யாதி. காலாழும் இத்யாதி - கால் தடுமாறுகிற்கும், நெஞ்சு சிதிலமாகாநிற்கும், கண் சுழலாநிற்கு மென்றபடி. அள்ளியெடுக்க-வாரியெடுக்க. எங்ஙனம் - எத்தப்ரகாரத்தாலே. "எங்ஙனம்" என்றத்தை விவரிக்கிறார் - உதாரன் இத்யாதி. "வள்ளலே" இத்யாதி பதங்கள் - ஹேதுகர்ப்பங்கள். "எள்கல்" என்கிற பதத்தின் அர்த்தத்வயத்தையும் வ்யுத்க்ரமமாக அருளிச்செய்கிறார் - உன்விஷயத்தில் இத்யாதி. வெள்ளமேபுரை - கடலோடொத்திருந்துள்ள - அபரிச்சின்னமான வென்றபடி. குடைந்து என்றதின் அர்த்தம் - நாலுமூலையும்புக்கு வ்யாபித்தென்றது. அதாவது - அவகாஹித்து அநுபவித்தென்றபடி. மறுநினைந்து-மறுபாடுருவ நினைந்து; பூர்ணாநுபவம் பண்ணி யென்றபடி. இது "குடைந்து" என்றதில் விவக்ஷிதமான அர்த்தம். "ஆடி" என்றதின் தாத்பர்யமாதல்; ஆடி - அவகாஹித்து. களித்து - செருக்கி. உகந்துஉகந்து-மிகவும்ப்ரீதனாய். துரந்து - துரத்தி. போந்து - ஸாம்ஸாரிகஸ்திதி குலைந்து உன்னளவும் போந்து. வெள்ளமேபுரை தொடங்கி, போந்திருந்து - வள்ளலே தொடங்கி, எள்கல்தந்தவெந்தாய்உன்னைஎங்ஙனம்விடுகே னித்யந்வய: (ச)

* பெரிய திருவந்தாதி - ருசு-ம் பாட்டு.

ஆ.—(உய்ந்து.) த்வதநுபவ ஜநிதமான ப்ரீதியாலே களித்தாடுகிற திருவநந்தாழ்வான்மேலே உன்னுடைய திவ்யரூபகுணங்களை அநுபவித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற உன்னை அநுபவித்துய்ந்து போந்திருந்து, என்னுடைய முடிவில்லாத மஹாது:கங்களைப் போக்கி உன் அந்தமிலடிமை யடைந்தேன்; இனி, விடுவேனோ என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், நித்யகைங்கர்யத்தை ப்ராபித்திருந்துள்ள எனக்கு உன்னை விட ஸம்பாவநையுண்டோ வென்கிறார்.

[உய்ந்தென்று தொடங்கி] - ஸ்வரூப ஸத்பாவம்பெற்று ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தனாய், முடிவு இன்றிக்கே மிகவுங்கொடிதான என் கர்மங்களை நஶிப்பித்து. [ஐந்தென்று தொடங்கி] - திருப்பாற்கடலிலே உன்னோட்டை ஸம்ஶ்லேஷஸுகத்தாலே யலர்ந்த ஐந்துபணங்களை யுடைத்தாய் கண்வளர்ந்தருளுகைக்கீடாம்படி அசைந்துவாராநின்றுள்ள திருவரவணைமேலே சாய்ந்தருளி ஜகத்ரக்ஷாசிந்தாத்மகயோக நித்ரையைப்பண்ணியருளின இக்குணத்தைக்காட்டி என்னை அடிமைகொண்டவனே, இப்படி உபகாரகனானவுன்னை மிகவும் அநுஸந்தித்து.

ப.—அநந்தரம், த்வதநுபவஜநித கைங்கர்யஸாம்ராஜ்யத்தைப் பெற்ற நான் விடும்படியென் என்கிறார்.

பாற்கடல் - திருப்பாற்கடலிலே, ஐந்து - ஐந்துவகையாய், பை - விரிந்த, தலைபணங்களையுடையவனாய், ஆடு - அசைந்துவருகிற, அரவணை - திருவரவணையின்மேலே, மேவி - பொருந்தக்கண்வளர்ந்து, யோகம் நித்திரை - ஜகத்ரக்ஷணயோகத்தில் நிப்ருததையாலே உறங்குவாரைப்போலே, சிந்தைசெய்த - (ரக்ஷணப்ரகார) சிந்தைபண்ணின, எந்தாய் - என்ஸ்வாமியே! உன்னை - (இப்படிரக்ஷகத்வத்தை ப்ரகாசிப்பித்த) உன்னை, சிந்தைசெய்துசெய்து - நிரந்தராநு ஸந்தானம்பண்ணி, உய்ந்து - லப்தஸ்வரூபனாய், போந்து - அந்யபரரானஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாய், என் - நானே எனக்குத் தேடிக்கொண்டு, உலப்புஇலாத - அஸங்க்யாதமாய், வெம் - க்ரூரமாய், தீ - அக்நிகல்பமான, வினைகளை - பாபங்களை, நாசஞ்செய்து - நசிக்கும்படி பண்ணி, உனது - (ப்ராப்தனான)உன்னுடைய, அந்தம்இல்-அபரிச்சிந்நமான, அடிமை-கைங்கர்யபோகத்தை, அடைந்தேன் - கிட்டப்பெற்ற நான், விடுவேனோ - விடக்ஷமனல்லன். ஆஶ்ரிதவிஷயத்தில் உனக்குப் பொருத்தமில்லாமல் விடுகிறேனோ? அவர்கள்ரக்ஷணத்தில் உனக்குச் சிந்தையில்லாமல் விடுகிறேனோ? உன் அநுபவத்தில் எனக்கு ஶீலனமில்லாமல் விடுகிறேனோ? என்ஸ்வரூபம் ப்ரகாசியாமல் விடுகிறேனோ? விஷயாஸக்தரான ஸம்ஸாரிகளோடு பொருத்தமுண்டாய் விடுகிறேனோ? ப்ரதிபந்தகமான பாபமுண்டாய் விடுகிறேனோ? ப்ராப்யமான கைங்கர்யத்தில் சுவடறியாமல் விடுகிறேனோ? இப்படி லப்தாபீஷ்டனான நான் விடுவேனோ? என்றுகருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், நித்யகைங்கர்யத்தை லபித்த எனக்கு உன்னைவிட ஸம்பாவநையுண்டோ வென்கிறார்.

[உய்ந்துபோந்து] - ஸ்வரூபத்தைப் பெற்று, ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தனாய்ப் போந்து. [என்னுலப்பிலித்யாதி] - முடிவின்றிக்கே அதிக்ரூரமான கர்மங்களைநஶிப்பித்து. [உனதித்யாதி] - விரோதிநிவ்ருத்திமுன்னாக உன் திருவடிகளிலே நித்ய கைங்கர்யத்திலே அந்வயித்தநான். ''ஐயடைதஸூயோர்வஹாவ்ஹா:'' என்கிறபடியே இதிலே

எல்லாமுண்டாம்படியானத்தைக் கிட்டின நான். [விடுவேனே] - விஷயாந்தரங்களை விரும்பினேனே விடுகைக்கு, ஸ்வரூபஸித்தி யின்றிக்கே விடுகிறேனே, தாஸ்யபரிமளத்திற்சுவடறியாமே விடுகிறேனே. [ஐந்துபைந்தலையித்யாதி] - அடிமையிற்சுவடறிந்த திருவநந்தாழ்வான் விடிலன்றே நான் விடுவது. ஸகவதநுபவஹர்ஷத்துக்குப் போக்கு விடுகைக்கு ஐந்துபைந்தலையை யுடையனாய், சாய்கைக்கு ஸ்வாபாவிகமான குளிர்த்தியையுடையனாய், ப்ரீதியாலே தூங்குமெத்தைபோலே யசைந்து வாராநிற்பானாய், நாற்றந் துடக்கமானவற்றை ப்ராக்ருதியாகவுடையனான திருவநந்தாழ்வான்மேலே. [மேவி] - கிளப்பவொண்ணாதபடி பொருந்தி. திருப்பாற்கடலிலே, யோகநித்திரை - ஜகத்ரக்ஷண சிந்தாத்மகயோகநித்ரையைப் பண்ணியருளின. [சிந்தைசெய்த] - சேதநருடைய உஜ்ஜீவநப்ரகாரமாதல், "ஆத்மாநம் வாஸுதேவாக்யம் சிந்தயந் மதுஸூதந:" என்கிறபடியே தன்னை அநுஸந்தித்தலாதல். [எந்தாய்] - இந்நீர்மையைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவனே. [உன்னை] - நான் விட்டவன்றும் விடாதஸ்வபாவனான உன்னை. [சிந்தைசெய்து செய்து] - விச்சேதியாதபடி உன்னை யநுஸந்தித்து.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஆத்மாந்ததாஸ்யத்திலே அதிகரித்த நான் உன்னை விட ப்ரஸங்கமுண்டோ? என்கிறார்.

[உய்ந்துபோந்து]- நான்உளேனாய், ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாய்ப்போந்து. [என்உலப்பிலாதஇத்யாதி] - என்னுடைய, முடிவின்றிக்கேயிருந்துள்ள கொடியபாபங்களை வாஸனையோடே போக்கி, உன்திருவடிகளிலே ஆத்மாந்ததாஸ்யத்திலே அதிகரித்த நான், இனிவிட ப்ரஸங்கமுண்டோ? [விடுவேனே] - விஷயாந்தரங்களை விரும்பினேனே விடுகைக்கு? ஸ்வரூபஸித்தியின்றிக்கே ஒழிந்து விடுகிறேனே? தாஸ்யபரிமளத்தில்சுவடறியாமல் விடுகிறேனே? எனக்குத் தெவிட்டிவிடுகிறேனே? [ஐந்துஇத்யாதி] - அடிமையிற்சுவடறிந்த திருவநந்தாழ்வான் உன்னைவிடிலன்றே நான்உன்னை விடுவது. பெருவெள்ளத்துக்குப் பலவாய்த்தலைகள்போலே ஸகவதநுபவத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகப் பலதலைகளையுடையனாய், மதுபாநமத்தரைப்போலே ஆடாநிற்பானாய், ஶைத்யஸௌகுமார்யஸௌகந்த்யங்களை யுடையனான திருவநந்தாழ்வான்மேலே,

---

அஞ்சாம்பாட்டு - உய்ந்துஇத்யாதி. "உனதந்தமிலடிமையடைந்தேன்விடுவேனே" என்றத்தைப்பற்ற அவதாரிகை-ஆத்மாந்தஇத்யாதி. ஆத்மாந்ததாஸ்யம் - யாவதாத்மபாவியான கைங்கர்யம்.

நானுளேனாய் - "உன்னைச்சிந்தைசெய்துசெய்து - உய்ந்துபோந்து" என்றந்வயத்திலே தாத்பர்யம். உன்னை நிரந்தராநுஸந்தாநம்பண்ணி லப்தஸ்வரூபனா யென்றபடி. ஸம்ஸாரிகளில்- அந்யபரரான ஸம்ஸாரிகளில். முடிவின்றிக்கே - அஸங்க்யாதமாய். வெந்தீ - க்ரூரமாய், அக்நிகல்பமான. அந்தமிலடிமை - அபரிச்சிந்நமாய் நித்யமான அடிமை. தாஸ்யம்செய்வது திருவடிகளிலேயாகையாலே - உன்திருவடிகளிலே என்கிறார். 'உனது' என்றத்தைக் கடாக்ஷித்து - விஷயாந்தரங்களைஇத்யாதி. "உய்ந்து" என்றத்தைப்பற்ற - ஸ்வரூபஸித்திஇத்யாதி. 'அடிமை' என்றத்தைப்பற்ற - தாஸ்யபரிமளம் இத்யாதி. சுவடு - ரஸம். "அந்தமில்" என்றத்தைப்பற்ற, தெவிட்டிவிடுகிறேனேஎன்றது. தெவிட்டி - அதித்ருப்தியாலே வேண்டியிராமை. "விடுவேனே" என்றஅநந்தரம் திருவநந்தாழ்வானைச் சொல்லுகிறதுக்கு பாவம் - அடிமையில்இத்யாதி. "ஐந்து" என்றதுக்கு பாவம் - பெருவெள்ளத்துக்குஇத்யாதி. வாய்த்தலைகள் - வாய்க்கால்கள். பைந்தலை - பரந்த தலைகள். பலவாய்த்தலைகளென்றது - தாத்பர்யார்த்தம். "அரவு" என்றதுக்கு பாவம் - ஶைத்ய இத்யாதி. திருவநந்தாழ்வான்மேலே பொருந்தியென்று - 'மேவி' என்றதுக்கு

திருப்பாற்கடலிலே, 'ஸகலப்ராணிகளும் கரைமரஞ்சேர்ந்ததாம் விரகேன்?' என்று யோகநித்ரையிலே திருவுள்ளஞ்செய்த என்னுயனுனவனே! [யோகநித்திரை] - "ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்" (ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்) என்கிறபடியே தன்னை யநுஸந்தித்தல் [எந்தாய்] - நீர்மையைக்காட்டி என்னை அநந்யார்ஹனுக்கின வனே! [உன்னைச்சிந்தைசெய்துசெய்து] - நான்நினைக்கைக்கு க்ருஷிபண்ணினஉன்னை நினைத்துவைத்து விட ப்ரஸங்கமுண்டோ? (ரு)

## ஆரும் பாட்டு.

உன்னைச்சிந்தைசெய்துசெய்து உன்னெடுமாமொழியிசைபாடியாடி என்
முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான்
உன்னைச்சிந்தையினுலிகழ்ந்த இரணியனகன்மார்வங்கீண்ட என்
முன்னைக்கோளரியே! முடியாததேன்எனக்கே?

*ஆ.—(உன்னை.) இப்படி உன்னை ஸர்வகரணங்களாலும் அநுபவித்து என்னுடைய ஸமஸ்தப்ரதிபந்தகங்களையும் போக்கினேன்; ஆஶ்ரிதன்உன்னைக்கோலுவதற்கு முன்பு அவனுடைய இஷ்டத்தை முடித்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவனுனவனே; எனக்குமுடியாததென்? இந்தஸம்ருத்தியெல்லாம் உன்னுடைய ப்ரஸாதத்தாலே விளைந்ததென்கிறுர்.*

*ஓ.—ஆரும்பாட்டில், 'உமக்கினிச்செய்ய வேண்டுவதென்' என்று எம்பெருமான் கேட்டருள; நான் பெறுததுண்டோ, எல்லாம்பெற்றேன் என்கிறுர்.*

---

*ப்ர.—(உய்ந்துபோந்தித்யாதி) (யோகநித்திரை) - ஷஷ்டம்ஶ்லோகத்தில் விஷ்ணுபுராணத்தில், "ஜநலோகமயே தஸ்மிந்தேஷ ஸநகாதயோ மஹர்ஷய: । ப்ரஹ்மலோகமயே தஸ்மிந்த்யாநாரூடா மஹர்ஷய: ॥ ரு ॥ ஆத்மப்ரயோகநிஷ்ட்ராம் யோகநித்ராம் ஸமாஶ்ரித: । ஆத்மாநம்வாஸுதேவாக்யம் சிந்தயந் மதுஸூதந: ॥ சு ॥ வஸந்த்யத்ர நிஷ்க்ரோதா நாராயணபராயணா: ॥ நித்யம் தத்ர யதந்தே ஹ்யுபாஸநபராயணா: ॥ எ ॥"*

---

**அர்த்தமாகக் கூட்டுவது.** "யோகஸ்நேஹாந் நாராயணஸம்மதியாந்திஷ்ட" என்றதில்உபாயவிவக்ஷயா பாவம்-ஸகலப்ராணிகளும்இத்யாதி. த்யாநவிவக்ஷயா அர்த்தாந்தரம்-ஆத்மாநம்இத்யாதி.ஷஷ்டேம்ஶேசதுர்த்தே. "ஆத்மப்ரயோகநிஷ்ட்ராம் யோகநித்ராம் ஸமாஶ்ரித:। ஆத்மாநம்வாஸுதேவாக்யம் சிந்தயந் மதுஸூதந:". யோகரூபநித்ரையிலே சிந்தைசெய்கையாவது - யோகரூபநித்ரையைப்பண்ணுகை. நீர்மையைக்காட்டி யென்றது - "பாற்கடல்" இத்யாதியைப் பற்ற. "யோகநித்திரை" என்றதின் முக்கிய அர்த்தத்தைக் கடாக்ஷித்து - நான் நினைக்கைக்குஇத்யாதி. உன்னைச் சிந்தைசெய்துசெய்து - உன்னை நிரந்தரமாக அநுஸந்தாநம் பண்ணி. ஐந்துபைந்தலை தொடங்கி, எந்தாய்உன்னைச் சிந்தைசெய்துசெய்து - உய்ந்துபோந்து தொடங்கி, அடிமையடைந்தேன் விடுவேனே இத்யந்வய: (ரு)

[உன்னையென்றுதொடங்கி] - நிரதிஶய போக்யனானவுன்னை நிரந்தரமாக அநுஸந்தித்து ப்ரீதிவலாத்க்ருதனாய்க்கொண்டு அபரிச்சேத்யரஸமான இயலை நல்லிசையாலே பாடியாடி அவ்வழியாலே என்னுடைய ப்ராக்தநமான ப்ரதிபந்தகங்களை ஸவாஸநமாகப் போக்கினேன். [உன்னையென்றுதொடங்கி] - நிரதிஶய போக்யனானவுன்னை மநஸ்ஸாலே இகழ்ந்த ஹிரண்யனுடைய அகன்ற மார்வைப் பிளந்து பண்டே எனக்கு உபகரித்த நரஸிம்ஹமே.

ப.—அநந்தரம், இந்தக்கைங்கர்யலாபத்தாலே தம்முடைய ஸர்வாபீஷ்டமும் தலைக்கட்டிற்று என்கிறார்.

உன்னை - (வகுத்தஸ்வாமியுமாய் உபகாரகனுமான) உன்னை, சிந்தையினால் - நெஞ்சாலே, இகழ்ந்த - அநாதரித்த, இரணியன் - ஹிரண்யனுடைய, அகல் மார்வம் - பேரிடமுடைத்தான மார்வை, கீண்ட - (அநாயாஸேந) கிழித்தவனாய், என் - விரோதிநிவ்ருத்திக்கு நிதர்ஶநபூதனாய், முன்னை - (ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதன் நினைவுக்கு) முற்கோலின, கோளரியே - நரஸிம்ஹமானவனே! உன்னை – (இப்படி ஆபத்ஸகனாய் ப்ராப்தனாய்போக்யனான) உன்னை, சிந்தைசெய்துசெய்து-நிரந்தரா நுஸந்தாநம்பண்ணி, நெடு - அந்தப்ரீதியாலே உத்துங்கமான, உன் - உன்னுடைய குணவாசகமான, மொழி - திருவாய்மொழியை, மா - அவ்விஷயத்துக்கீடான பெருமையுடைய, இசை - இசையோடே, பாடி - பாடி, ஆடி - (அப்பாட்டுக்கீடான அபிநயந்தோற்றும்படி) ஆடி, (இப்படி கரணத்ரயத்தாலுமுண்டான போகத்தாலே), என் - என்னுடைய, முன்னைத்தீவினைகள் – அநாதிகாலார்ஜிதபாபங்களை, ("ஜ்ஞாநாக்நி ஸர்வகர்மாணி" என்னும் கணக்கிலே), யான் - நான், முழுவேரரிந்தனன் - ஒன்றொழியாமல் வேரோடே அரிந்தேன்; (போக்த்ருத்வம் இத்தலையிலே யானவோபாதி, விரோதிநிவர்த்தகத்வமும் இங்கேயாகக் குறையில்லையிறே. ஸ்வரூபம் தத்ப்ரகாரமானபின்பு), எனக்கு - எனக்கு, முடியாதது - தலைக்கட்டாதது, என் - எதுதான்? ஸர்வாபீஷ்டமும் ஸித்தமன்றோ வென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், உமக்கினிச்செய்யவேண்டுவதென்? என்ன - நான் பெறாததுண்டோ, எல்லாம்பெற்றேன் என்கிறார்.

[உன்னையித்யாதி] - போக்யனுமாய் ப்ராப்தனுமானவுன்னை, "ந்ருஷிம்ஹவபுஷஸ்தவ" என்கிற வியிப்ரேரிதனாயன்றிக்கே, விடமாட்டாமையாலே அநவரதபாவனை பண்ணி. [உன்னெடுமாமொழியிசைபாடியாடி] - நெடியமொழி, மாவானவிசை. இரண்டின் வைலக்ஷண்யமும் பரிச்சேதிக்கவொண்ணாதிருக்கை. ப்ரீதிப்ரேரிதனாய்ப்பாடி, "ஹா வு ஹா வு ஹா வு" என்கிற முக்தாநுபவத்தை இங்கேபெற்றேன். [ஆடி] - காயிகமானவிக்ருதி. பால்குடித்து நோய்போக்குமாபோலே [என்முன்னைத்தீவினைகள்]- அநாதிகாலஸஞ்சிதமான கர்மங்களை. [முழுவேரரிந்தனன்] - ஸவாஸநமாகப்போக்கினேன். யானென்கிறது - பேறுதம்மதானபடியாலே. விரோதியை நீபோக்கினபடியென்? என்ன ;-நரஸிம்ஹமாய்வந்து ஹிரண்யனைப்போக்கினாப்போலே. [உன்னை] - வகுத்தவனுமாய் உபகாரகனுமானவுன்னை. [சிந்தையினாலிகழ்ந்த] - உன்னை வாக்கால் இகழுகையன்றிக்கே, நெஞ்சாலேயிகழ்ந்த. ப்ராப்தியாலும் அழகாலும் இகழப்போகாது, விஷயீகரிக்கைக்கு மித்ரபாவமேயமையும். நெஞ்சோடே தூஷித்தாலாயிற்று கைவிடுவது. [இரணியனகல்மார்வம்] - அஹங்காரமமகாரத்தாலே யகன்றமார்வம். திருவுகிருக்கிரை

போரும்படி வரத்தை யூட்டியாக இட்டு வளர்த்ததிறே. [கீண்ட] - நரஸிம்ஹத்தின் சீற்றத்தைக்கண்டவாறே ஒத்துப்பதஞ்செய்தது; அநாயாஸேந கிழித்தபடி. [என்முன்னைக்கோளரியே] – ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு உபகரித்தது உந்தமக்கென்றிருக்கிறார். ஆஸ்ரிதரிலே ஒருவர்க்குச்செய்தது தனக்குச்செய்ததாக நினைத்திராதவன்று ஸகவத்ஸம்பந்தமில்லையாமித்தனை. [முடியாததென்னெனக்கே] - ஆஸ்ரிதப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலே உன்னையழியமாறித் தோற்றுவாயானபின்பு பெறுததுண்டோ, எல்லாம்பெற்றேனல்லேனோ.

ஈடு —ஆறும்பாட்டு. ஆஸ்ரிதனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தோற்றுவானொருவனானபின்பு எனக்குஒரு கர்த்தவ்யாம்ஸ முண்டோ? என்கிறார்.

[உன்னைச்சிந்தைசெய்துசெய்து] - இனிமையாலே விடவொண்ணாதிருக்கிற உன்னை மாறாதே அநுஸந்தித்து. [உன்னை] - ஹோக்யனுமாய் ப்ராப்தனுமான உன்னை. [சிந்தைசெய்துசெய்து] "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) என்கிற விதிப்ரேரிதனையன்றிக்கே, ஹோக்யதையாலே விடமாட்டாதே அநவரதஹாவனை பண்ணி. [உன்இத்யாதி] - நெடுமையும், மஹத்தையும் - மொழிக்கும், இசைக்கும் விஶேஷணம். இயலிற்பெருமையும், இசையிற்பெருமையுஞ் சொல்லுகிறது. இயலும்இசையும் கரைகாணவொண்ணாதபடியிருக்கிற மொழியைப் பாடி, அதுஇருந்தவிடத்தில் இருக்கவொட்டாமை ஆடி. [என்இத்யாதி] - என்னுடைய ப்ராக்தநமான கர்மங்களை வாஸனையோடே போக்கினேன். முழுவேர் - வேர்முழுக்க என்றபடி; பக்கவேரோடே என்றபடி. அவன் விரோதியைப் போக்கச்செய்தேயும், பலாந்வயம் தம்மதாகையாலே [அரிந்தனன்யான் என்கிறார்]. [உன்னைஇத்யாதி] – எனக்குப் பண்டேஉபகரித்தவனே! [உன்னைச்சிந்தை

---

ப்ர.—(சிந்தைசெய்து செய்து) வ்யாஸஷாரண்யகெஒெ௦ஹெ்ருயீவ்யாஹணெ, [சூ - ரு] "ஆத்மாவா அரெ த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:".

---

ஆறும்பாட்டு - உன்னை இத்யாதி. 'என் முன்னைக்கோளரியே முடியாததென்னெனக்கே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஆஸ்ரிதனுடைய இத்யாதி. 'இனிஉமக்குச் செய்ய வேண்டுவதென் ? என்ன,' என்று அவதாரிகையினடியிலே கூட்டிக்கொள்வது.

இனிமையாலே யென்றது - "யோகநித்திரைசிந்தைசெய்த" என்றதின் த்விதீயார்த்தத்தைப்பற்ற. வீப்ஸைக்கு அர்த்தம் - மாறாதேயநுஸந்தித்து என்றது. விவரணம் - போக்யனுமாய் இத்யாதி. 'யோகநித்திரை சிந்தைசெய்த, எந்தாய்' என்ற பதத்வயத்தையும்பற்ற - போக்யனுமாய் ப்ராப்தனுமானஉன்னை யென்றது. ஸாதநத்வேந பலகாலும் சிந்திக்கிறாரோஎன்ன, நிதித்யாஸிதவ்யஇத்யாதி. நெடுமையும்,மஹத்தையும்-பர்யாயமன்றோ வென்ன, நெடுமையும்இத்யாதி. நெடு-மொழி, மா - இசை, என்றபடி. உபபாதகம் - இயலிற்பெருமையும்இத்யாதி. இயலிற்பெருமையும், இசையிற்பெருமையுமாவது—அர்த்தகாம்பீர்யத்தாலும், ரஸ்யதாதிஶயத்தாலும்எல்லை காணவொண்ணாதிருக்கை யென்கிறார் - இயலும்இசையும் இத்யாதி. மொழியைப்பாடி - திருவாய்மொழியைப் பாடி. ப்ராக்தநமான - அநாதிகர்லார்ஜிதமான. விவரணம் - பக்கவேர் இத்யாதி. ப்ரதாநவேரும், பக்கவேருமாவன - ருசிவாஸனைகள். தீவினைகள் முழுதும் வேரோடே அரிந்தனன் என்றும் ஓரர்த்தமுண்டு. 'அரிந்தனன்யான்' என்று ஸ்வகர்த்ருகமாகச் சொல்லுவானென்? என்ன - அவன்விரோதியைஇத்யாதி. பலாந்வயம் - ப்ரதிபந்தகநிவ்ருத்திரூபபலாந்வயம். அரிந்தனன் - அரியப்பெற்றேனிதியாவத். தாத்பர்யம் - எனக்கு இத்யாதி. இந்தத் தாத்பர்யம் - "என்முன்னைக்கோளரியே' என்னுமளவுங் கடாக்ஷித்து. 'சிந்தையினால்' என்று விஶே

பிஞலிகழ்ந்த] - உக்திமாத்ரமன்றிக்கே, நெஞ்சாலே இகழ்ந்தாஞயிற்று. இத்தால்-அவன் விடுவது; புத்திபூர்வம் ப்ராதிகூல்யம்பண்ணிஞரை ; கைக்கோள்ளுகைக்கு மித்ரபாவம் அமையும் [இரணியனகன்மார்வங்கீண்ட] - வரபலஜபலமூட்டியாக வளர்ந்தஶரீரமானது திருவுகிர்க்குஇரைபோராமையாலே, அநாயாஸேந கிழித்துப்போகட்டாஞயிற்று. [என்முன்னைக்கோளரியே] - நரஸிம்ஹமாய்உதவிற்றும் தமக்கென்றிருக்கிருர், கோளென்று-மிடுக்காதல், தேஜஸ்ஸாதல். "மஹாவிஷ்ணும்"(மஹாவிஷ்ணும்) என்கிற மிடுக்காதல்,"ஜ்வலந்தம்"(ஜ்வலந்தம்)என்கிற தேஜஸ்ஸாதல்·ஆஶ்ரிதரிலே ஒருவனுக்குச் செய்ததும் தனக்குச் செய்ததாக நினைத்திராதவன்று ஸகவத்ஸம்பந்தமில்லையா மித்தனை. [முடியாததேன் எனக்கே] நீ ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே வந்து தோற்றுவாயாயிற்ற பின்பு எனக்கு முடியாததுண்டோ? (கூ)

## எழாம் பாட்டு.

முடியாததேன்னெனக்கேலினிமுழுவேழுலகுமுண்டான்உகந்துவந்து
அடியேனுட்புகுந்தான் அகல்வானுமல்லனினிச்
செடியார்நோய்களெல்லாந்துரந்து எமர்கீழ்மேலெழுபிறப்பும்
விடியாவெந்நரகத்து என்றுஞ்சேர்தல்மாறினரே.

அ:—(முடியாததென்.) ஸர்வேஶ்வரனுயிருந்த எம்பெருமானுக்கு என்பக்கல் அபிநிவேசம்என்னளவில் பர்யவஸியாதே, என்னேடு ஸம்பந்தித்தார்பக்கலிலுங்கூட வெள்ளங்கோத்தது ; ஆதலால் அவன் என்னை அகலநினைக்கிறிலன் ; இனி முடியாததொன்றுண்டோ என்கிருர்.

---

ஷித்ததுக்கு ஸாவம் - உக்திமாத்ரமன்றிக்கே இத்யாதி. இகழ்ந்தான்-அநாதரித்தான். "சிந்தையிஞலிகழ்ந்த" என்கையாலே - அவனே புத்திபூர்வகமாக ப்ரதிகூலஞய்விட்டால் அவன் விடுமென்றும், இவன்பக்கல்அல்பாநுகூல்யமுண்டாஞல் அவன் அங்கீகரிப்பனென்றும் ஈஶ்வரனுக்குஉண்டான குணுதிக்யம் பலித்த தென்கிருர்-இத்தால் இத்யாதி வாக்யத்வயேந. அமையும்என்ற அநந்தரம், என்றதாயிற்று என்று கூட்டுவது. அகல்மார்வம் - பேரிடமுடைய மார்வம். தாத்பர்யார்த்தம் - வரபலஇத்யாதி. ஊட்டியாக - ஆஹாரமாக. உகிர் - நகம். இரை - லக்ஷ்யம். அநாயாஸேந வென்றது - 'கீண்ட' என்றத்தைப் பற்ற. என்முன்னைக்கோளரியே-என்னுடைய விரோதிநிவ்ருத்திக்கு நிதர்ஶநபூதனுய், ஆஶ்ரிதனுன ப்ரஹ்லாதன் நினைவுக்கு முற்கோலினவனுய், நிரதிஶயதேஜோபலங்களையுடைய நரஸிம்ஹமானவனே! இதி ஶப்தார்த்த:. 'என்' என்றதுக்கு ஸாவம் - நரஸிம்ஹமாய் இத்யாதி. கோள் - மிடுக்கும், தேஜஸ்ஸும். "மஹாவிஷ்ணும்" என்றவிடத்தில், மிடுக்காவது - ஸர்வலோக வ்யாபகஶக்தி. மிடுக்கையும் தேஜஸ்ஸையும் மந்த்ரலிங்கத்திலே காட்டுகிருர் - மஹாவிஷ்ணும் இத்யாதி. இவ்வவதாரம் தமக்காகவென்றிருக்கைக்குஅடியேது? என்ன-ஆஶ்ரிதரிலே இத்யாதி. 'கோளரியே, முடியாததென் எனக்கு" என்கிற ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் - நீப்ரதிஜ்ஞ இத்யாதி. முடியாததேன் - தலைக்கட்டாதது எதுதான்? உதாநீம் - ஸுவிஷ்ட: வாஸுஶ்வஸ்யாந்தி ஸுஷ்கீம், ஸுகு:ஸ்வஸித:ஸவிதா. உன்னைச்சிந்தைசெய்துசெய்து இத்யாப்ய, என்முன்னைக்கோளரியே - எனக்கு - முடியாததென்? இத்யந்வய:. (அ)

ஒ.—ஏழாம்பாட்டில், நீர் எல்லாம்பெற்றுச் சமைந்தீரோவென்ன; என்பக்கல் எம்பெருமான் பண்ணின பக்ஷபாதராஜகுலத்தாலே என்னோடு ஸம்பந்திஸம்பந்திகளானாருங்கூட ஸம்ஸாராதுத்தீர்ணரானார்கள்; ஆனபின்பு நான் பெறாததுண்டோ வென்கிறார்.

[முடியாததென்னெனக்கேலினி]-எனக்குஆப்தவ்யமாயிருப்பதுஒன்றுண்டோ. [முழுவேழுலகுமென்றுதொடங்கி] - ப்ரளயகாலத்தில் இஜ்ஜகத்தையடையத் தன்திருவயிற்றிலே வைத்துக்கொண்டவன் ஜகத்துக்குத் தன்னையொழியச் செல்லாதாப்போலே என்னையொழியத் தனக்குச் செல்லாமையாலே அத்யபிநிவிஷ்டனாய் என்னுள்ளே புகுந்தான், இனிஒருகாலமும் விஶ்லேஷிப்பதுஞ் செய்யான். [செடியாரென்றுதொடங்கி]-ஸாம்ஸாரிக து:கங்களெல்லாம் போக்கிக் கீழும்மேலும் ஏழுபடிகாலான அஸ்மதீயர் ஸம்ஸாரத்திலே என்றும் கிடக்கக்கடவதான தன்மையைத் தவிர்ந்தார்கள்.

ப.—அநந்தரம், என்பக்கல்பண்ணின உபகாரம் என்குலத்தில் ஸம்பந்தித்தாரெல்லாரும் உஜ்ஜீவிக்கும்படியாயிற்று என்கிறார்.

முழுவேழுலகும் - ஸமஸ்தலோகமும், உண்டான் - (தன்செல்லாமையாலே தனக்குள்ளேயாம்படி அவற்றை) அமுதுசெய்தவன், உகந்து - (அச்செல்லாமைதனக்கு என்பக்கலிலேயுண்டாய் அதுக்குமேலே) ஆதராதிசயத்தை யுடையனாய்க்கொண்டு, அடியேன் - என்னுடைய ஶேஷத்வஸம்பந்தமே பற்றாசாக, உள் - உள்ளே, வந்து - வந்து, புகுந்தான் - புகுந்தான்; இனி - இனி, (அந்தலோகங்கள்போலே), அகல்வானும், புறம்புபோமவனும், அல்லன் - அல்லன்; (இதடியாக), கீழ் - கீழும், மேல் - மேலும்-எழுபிறப்பும் - ஏழுபிறப்பிலும், எமர் - என்னோடுஸம்பந்தமுடையார், செடி - செடிபோலே, ஆர் - செறிந்த, நோய்களெல்லாம் - (அவித்யாகர்மவாஸநாதிகளான) ஸமஸ்தவ்யாதிகளையும், துரந்து - கடக்கஓட்டி, விடியா - ஒருகால்முடிந்து வெளிச்சிறப்பதன்றியே, வெம் - நிரதிஶயதாபகரமான, நரகத்து-ஸம்ஸாரமாகிற நிரயத்திலே, என்றும்-யாவதாத்மபாவி, சேர்தல் - கிட்டுகை, மாறினர் — தவிர்ந்தார்கள்: இனி - இப்படிகுலஸம்பந்திபர்யந்தமாக என்னைப் பக்ஷபதித்தபின்பு, எனக்கேல் - எனக்காகில், முடியாதது-முடியாதது, என் - உண்டோ? என்னோடுஅநுபந்தித்ததாகில் எல்லாக்காரியமும் தலைக்கட்டுமென்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், நீர் எல்லாம்பெற்றீரோவென்ன; என்பக்கல் அவன் பண்ணின பக்ஷபாதராஜகுலத்தாலே என்னோடு ஸம்பந்திஸம்பந்திகளானாருங்கூட ஸம்ஸாரோத்தீர்ணரானார்கள். ஆனபின்பு நான்பெறாததுண்டோ வென்கிறார்.

[முடியாததென்னெனக்கேலினி]-எனக்காகில் இனிமுடியாததுண்டோ? இனி அநவாப்தமாயிருப்பதுண்டோ. எங்ஙனேயென்னில்,—[முழுவேழித்யாதி] - ப்ரளயாபத்தில் ஸகலலோகமும் நோவுபடாதபடி திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தவன், ஜகத்துக்குத் தன்னையொழியச் செல்லாதாப்போலே என்னையொழியச் செல்லாதானாய் ஸம்பந்தத்தைப் பார்த்து உட்புகுந்தான். ஒரு நீராகக்கலந்தான், தன்பக்கல்ஜகத்துப் புக்காப்போலன்றிக்கே உகந்துபுகுந்தான். இவனுக்கும் ஜகத்துக்குஞ் செல்லாமை யொக்கும், உகப்பேற்றம் இவ்விஷயத்தில் இவனுக்கு. மத்ஸம்பந்திகளளவும் கீழ்மேலோடும்படி புகுந்தான். [அகல்வானுமல்லனினி] - ப்ரளயாநந்தரம் உமிழ்ந்தான், இங்கு அங்

னேசெய்வாஞ யிருக்கிறிலன். சேதநரைப்போலே பாபத்தாலேயகன்று ஒருஸுக்ருதத்தாலே கிட்டுதலில்லையே யிவனுக்கு. பனிநிழல்போலேயும் மைநோக்கிவிடவமையுமோ, உம்மோடு ஸம்பந்தித்திருப்பார் செய்வதென் ? என்ன ;—அவர்களும்பெற்றார்கள். [செடியாரித்யாதி] - தூறுமண்டின நோய்களெல்லாந்துரந்து. விஷயப்ராவண்யத்தாலே வந்தநோய், ஹநவதலாபத்தாலேவந்தநோய், இவற்றையெல்லாம் வாஸநையோடேயோட்டி. [எமர்] - வேறொன்றாலன்றியே என்னோட்டை ஸம்பந்தமெ ஹேதுவாக. எவ்வளவென்னில், - [கீழ்மேலெழுபிறப்பும்] - கீழேழுபடியும் மேலேழுபடியும். [விடியாவெந்நரகத்து] - ஒருநாளிலே முடிவுண்டானதண்டல் யமனது, விடியாதநரகம் ஸம்ஸாரம். [வெந்நரகம்] - "நரகம்" என்று புத்திபிறக்கு மதில், தண்மை தோற்றாத நரக மிது. [என்றுஞ்சேர்தல் மாறினரே] - என்றுங் கிட்டக்கடவதான தண்மையுந் தவிர்ந்தார்கள். நானும் ப்ரார்த்திக்கவேண்டிற்றில்லை, அவனும்நினைப்பிடவேண்டிற்றில்லை. என்பக்கல் அவன்பண்ணின பக்ஷபாதராஜகுலத்தாலே மாறிக்கொண்டு நின்றார்கள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. என்னளவில் விஷயீகாரம் என்னுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் சென்றதுகிடீர் என்கிறார்.

[முடியாததேன்னேக்கேலினி] - எனக்காகில் இனி முடியாதது உண்டோ? எனக்கு இனி முடியாததுண்டோ? எனக்கினி அநவாப்தமா யிருப்பதொன்றுஉண்டோ? நீர்இதுஎன்கொண்டு சொல்லுகிறீர்? என்ன; - [முழுஇத்யாதி] – ப்ரளயாபத்திலே அகப்பட்ட பூமி, தன்வயிற்றிலே புகாதபோது படும்பாடடங்க தான்என்பக்கல் புகுராதபோது படுவானாய் வந்துபுகுந்தான்; எனக்கு இனி முடியாதது உண்டோ? [அடியேனுட்புகுந்தான்] - ஸம்பந்தத்தைப்பார்த்துப் புகுந்தான். [உட்புகுந்தான்] - ஒருநீராகக் கலந்தான். தன்பக்கல் ஜகத்துப் புக்காற்போலன்றியே, உகந்து புகுந்தான். இவனுக்கும் ஜகத்துக்கும் செல்லாமை யொக்கும், உகப்பே இவ்விஷயத்தில் தன்ஏற்றம். [அகல்வானுமல்லனினி] - அந்தபூமிக்கு, ப்ரளயங்கழிந்தவாறே அகலவேணும்; இவனுக்குஅதுவுமில்லை. முதலிலே பிரிவை ப்ரஸங்கிக்கவொட்டுகிறிலன். சேதநரைப்போலே பாபத்தாலேஅகன்று ஒருஸுக்ருதத்தாலே கிட்டுமதில்லையே இவனுக்கு. உம்மை அவன் இப்படி விரும்பின

---

ஏழாம்பாட்டு - முடியாததேன் இத்யாதி. 'எமர்கீழ்மேல்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்னளவில் இத்யாதி.

எனக்கேல் - எனக்காகில். 'ஏல்' என்றது - சேத் என்றதின் அர்த்தம். முடியாததேன் - ஸாத்யமாகாததுஎது? ஸாத்யமாகாததுண்டோ? என்றபடி. விவரணம் - எனக்கு இத்யாதி. நீர் இதுஎன்கொண்டு என்கிற ஶங்கைக்கு - அவன்என்பக்கல் பண்ணின வ்யாமோஹங்கொண்டு சொல்லுகிறேனென்று உத்தரம். 'முழுவேழுலகுமுண்டான்' என்கிறஇது - த்ருஷ்டாந்தார்த்தமித்யபிப்ராயேணஹ - ப்ரளயாபத்திலே இத்யாதி. 'அடியேன்' இதி பதம் - ஹேதுகர்ப்பமித்யபிப்ராயேணாஹ - ஸம்பந்தத்தை இத்யாதி. 'உகந்து, வந்து, உள்' இதி பதத்ரயம் த்ருஷ்டாந்தாத் தார்ஷ்டாந்திகஸ்யாதிக்யபர மித்யபிப்ராயேணாஹ - ஒருநீராக இத்யாதி. உகப்பே இவ்விஷயத்தில் தன்னேற்றம் - ஆழ்வார்விஷயத்தில் இவனுக்குண்டானஉகப்பே இவன்தனக்கு ஏற்றம். யத்வா, இவ்விஷயமென்றது - ஈஶ்வரனையாதல் உத்கர்ஷஸமுச்சயபரஶ்சஶப்த இத்யபிப்ராயேணாஹ - அந்தபூமிக்கு இத்யாதி. அகலாமையின் சரமாவதிமாஹ - முதலிலே இத்யாதி. அகல

ரிதுபெற்று] - "விதிசூழ்ந்ததால்" என்கிற ஆகஸ்மிகபகவத்க்ருபையாதல், "மாதவனேன் றதேகொண்டு" என்கிற உக்திமாத்ரத்தையாதல், தாம்பெற்றபேற்றைத் தம்மோடு ஸம்பந்தமுடையாரும் பெறும்படியான பேற்றைப் பேற்றென்னுதல். [மாசதிரிதுபெற்று] - பெருஞ்சதிரைப்பெற்று. தடக்கைச்சதுரனைப்பெற்று என்றபடி. தந்தலையாலே வந்ததாகிலிறே ஸாவதியாயிருப்பது. [இதுபெற்று] - காணக்காண அவன் ஶிரஸாவஹிக்கிறபடி. [நம்முடைவாழ்வு வாய்க்கின்றவா] - நம்மோடு ஸம்பந்தமுடையாரையும் அவன் இப்படி விஷயீகரிக்கிறது நம்முடைய ஸம்பத்திறே. [நம்முடைவாழ்வு]-ஸ்ரீவைஷ்ணவ ஸம்பத்து. [வாய்க்கின்றவா] - ஊற்றுமாறுதே மேன்மேலெனப்பெருகி வருகிறபடி. எழ்படிகா லென்றதுதான் ஓரளவில்லை, இன்று நம்மளவும் வரச்செல்லுகிறதிறே. இப்படி விஷயீகரிக்கைக்கு ஹேதுவேன்? என்னில்,-[ஈசன்] - வகுத்த ஸ்வாமியாகையாலே. [என்கருமாணிக்க மென்செங்கோலக்கண்ணன்] - கண்ணழகாலே என்னை அநந்யார்ஹனாக்கி, தன்வடிவழகை என்னை அநுபவிப்பித்தவன். [விண்ணோர்நாயகனெம்பிரானெம்மான்] – நித்யஸூரிகளைத் தோற்பிக்குமாபோலே என்னை வடிவழகைக் காட்டித் தோற்பித்து, என்னை அவ்வடிவழகையநுபவிப்பித்த உபகாரகன் [நாராயணனாலே] – தன்மேன்மையைப் பாராதே உகவாதாரையும் விடமாட்டாதபடி வத்ஸலனுயுள்ளவனாலே. ஸமிதைபாதி ஸாவித்ரிபாதியாக வன்றிக்கே, அவனுடைய நிர்ஹேதுக

---

[illegible] | [illegible] | [illegible] நः". கூ.

---

[illegible]" இதி போதாயநதர்மே. இவ்விடத்தில் - "[illegible]" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். இது - "மாசதிர்பெற்று" இத்யந்வய꞉. "இது" என்று - வக்ஷ்யமாண க்ருபாதிபராமர்ஶியாதல், கீழுக்தமான "எமர்கீழ்மேலேழுபிறப்பும் - கேசவன்தமரானார்கள்" என்றதைப் பராமர்ஶிக்கிறதாதல். விதிசூழ்ந்ததால் இத்யாதியிற் சொல்லப்படுகிற அர்த்தத்ரயத்தில், முந்தின அர்த்தத்வயம்-உபாயபரம்; த்ருதீயார்த்தம் - பலபரம். உபாயபரமான முந்தின அர்த்தத்வயத்தில் 'மா' என்றதுக்கு அர்த்தம்-பெருஞ்சதிரை இத்யாதி. இது - காலாமர்த்தமாதல். இப்போது, அநந்தரார்த்தத்வயமும்-பலபரம். இந்தப் பெரிய சதிரைப்பெற்று இதி சப்தார்த்த꞉ பலபரமான த்ருதீயார்த்தத்தில் "மா" என்றதுக்கு அர்த்தம் - தந்தலையாலே இத்யாதி. இந்தத்ருதீயார்த்தத்தில் - "இது" என்றதுக்குஅர்த்தம் - காணக்காண இத்யாதி. இத்தால் - "கேசவன்தமர்" என்றதின் சரமாவதியைக் காட்டினாராயிற்று. இவர்கள் கேசவன்தமரானால் தமக்கு வாழ்வானபடி யென்? என்ன, நம்மோடு ஸம்பந்தம் இத்யாதி ஸம்பத்தாகச் சொல்லுகிறதுஎத்தை? என்ன, அருளிச்செய்கிறார் - ஸ்ரீவைஷ்ணவஸம்பத்து என்று. வாழ்வு - ஸம்பத்து: ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ யென்றபடி. "வாய்க்கின்ற" என்கிற வர்த்தமாநார்த்தம் - ஊற்றுமாறுதே இத்யாதி. வாய்க்கின்றவா - வளர்கிறபடியென்? இதி சப்தார்த்த꞉. ஆனால் "கீழ்மேலெழுபிறப்பும்" என்றத்தோடு விரோதியாதோ? என்ன, அது உபலக்ஷணமென்கிறார்-ஏழ்படிகால் இத்யாதி. ஓரளவு - ஒருமர்யாதை. "விண்ணோர்நாயகன் எம்மான் - எம்பிரான்" என்று அந்வயித்து, "என்கருமாணிக்கமென்செங்கோலக்கண்ணன் விண்ணோர்நாயகன்" என்ற வநந்தரம் "எம்மானெம்பிரான்" என்றதுக்கு பாவம் - நித்யஸூரிகளை இத்யாதி. வத்ஸலனுயுள்ளவனாலே யென்றது - பஹுவ்ரீஹ்யர்த்தம். ஏகாரத்துக்கு பாவம்-ஸமிதை இத்யாதி. ஸமிதை பாதி ஸாவித்ரிபாதியாவது-உபாக

க்ருபையாலே. நாராயணனாலே - எமர் - கீழ்மேலேழெழுபிறப்பும் - கேசவன் தமரா னார்கள், மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வு வாய்க்கின்றவா! நாராயணனாலே என்ற விடம் மாசதிரினுடைய உபபாதகம். (க)

## இரண்டாம்பாட்டு.

நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன் வேதமயன்
காரணம்கிரிசை கருமமிவைமுதல்வனெந்தை
சீரணங்கமரர்பிறர்பலரும் தொழுதேத்தநின்று
வாரணத்தைமருப்பொசித்தபிரான் என்மாதவனே.

*ஆ.—(நாரணன்.) "ஈசன்" என்று ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தை உப பாதிக்கிறது.*

*ஸர்வாந்தராத்மபூதனாய், ஸர்வலோகேஶ்வரனாய், ஸர்வவேதவேத்யனாய், காரணத்துக்கும் க்ரியைக்கும் கார்யத்துக்கும் நிர்வாஹகனாயிருந்துவைத்து, எனக்குபோக்ய மாகைக்காக, பெரியபிராட்டியாரும் அயர்வறு மமரர்களும் தொழுதேத்த, அதனாலே ஸம்வர்த்திதபலனாய்நின்று வாரணத்தை மருப்பொசித்த பிரான் மாதவனாலே எமரே ழெழுபிறப்பும் கேசவன்தமராயிற்று என்கிறார்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில்,ஸர்வலோகங்களுக்கும் ஸ்வாமியாய்க்ரியாஸாதநம் க்ரியை தத்ஸாத்யமானகார்யம் இவற்றுக்கு நிர்வாஹகனுமாய் இப்படி வேதத்திலே மிக வும் ப்ரதிபாதிக்கப்படுகிறவன் க்ருஷ்ணனாய்வந்து திருவவதாரம்பண்ணி, சீர்மையை*

---

*மத்தின் மற்றைநாள் ப்ரஹ்மசாரிகளுக்கு ஆயிரம்ஸமிதையிடுதல், இல்லாவிட்டால் ஆயிரம் காயத்ரி ஜபம்பண்ணுதல் செய்யாதே, ஐந்நூறுஸமிதையும் ஐந்நூறுகாயத்ரியுமாகப் பண்ணலாகா தென்ற படி. உபாயோபேயபரநிர்வாஹத்வயத்துக்கும் ஸாதாரணமான யோஜநையை அருளிச்செய்கிறார்- நாராயணனாலே இத்யாதி. நாராயணனாலே யென்கிற இது - தத்விஶேஷணங்களான 'ஈசன்" இத்யாதிபதங்களுக்குமுபலக்ஷணம். "மாசதிர்" என்றது - உபாயபரமான பக்ஷத்தில், "நாரா யணனாலே" என்றது புநருக்தமன்றோவென்ன, நாராயணனாலேயென்றவிடம்இத்யாதி. மாசதிரி னுடைய உபபாதகமாவது - நாராயணசப்தத்துக்கு - பஹுவ்ரீஹியாலே, வாத்ஸல்யஞ்சொல்லு கையாலே, "மாசதிர்" என்று - க்ருபாதிகளைச் சொன்ன பக்ஷத்தில், மாசதிருக்கு அது உபபாதகமாயிருக்கு மென்றபடி. இந்தப்பக்ஷத்தில், "நாராயணனாலே" என்கிற த்ருதீயை - ப்ரதமார்த்தகம். நாராயணனாகிற மாசதிரைப்பெற் றென்றபடி. ஆக, "மாசதிரிது" என்ற தின் - உபாயபரமான முந்தின அர்த்தத்தினுடைய உபபாதகம் - "நாராயணனாலே" என்கிற விடம்; பலபரமான த்விதீயார்த்தத்தினுடைய உபபாதகம் - "எமர்கீழ்மேலேழெழுபிறப்பும் கேச வன்தமரானார்கள்" என்கிறவிடம் கீழ்மேலேழெழுபிறப்பிலுமுண்டான எமரென்றபடி. உபாய பரமான பக்ஷத்தில், "ஈசனித்யாரப்ய, நாராயணனாகிற - மாசதிரிதுபெற்று - கீழ்மேலேழெழு பிறப்பிலு முண்டான எமர் - கேசவன்தமரானார்கள்; நம்முடைவாழ்வு வாய்க்கின்றவர்" இத்யந் வயஃ. பலபரமானபக்ஷத்தில், "ஈசன்தொடங்கி, நாராயணனாலே-கீழ்மேலேழெழுபிறப்பிலு முண் டான எமர் கேசவன்தமரானார்கள்; மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வு வாய்க்கின்றவா!" இத் யந்வயஃ. (க)*

யுடையராய் அப்ராக்ருதஸ்வபாவரான நித்யஸூரிகளும் மற்றும் பலரும் தொழுது ஏத்தும்படி நின்று குவலயாபீடத்தின் கொம்பைப் பறிக்கையாகிற மஹோபகாரத்தைப்பண்ணுவதுஞ்செய்து இப்படிகளாலே "நாராயணன்" என்னுந்திருநாமத்தை யுடையனுமாய் என்பக்கலிலே ப்ரவணனுன ஶ்ரிய:பதி என்னை அடிமைகொண்டான். "சீரணங்கென்று-பெரியபிராட்டியார்" என்றுஞ் சொல்லுவர்.

ப.—அநந்தரம், கீழுக்தமான நாராயணஶப்தார்த்தத்தை உபபாதியாநின்று கொண்டு ஸ்வவிஷயபக்ஷபாதத்தை அருளிச்செய்கிறார்.

நாரணன் - நாராயணஶப்தவாச்யனாய், (அதனுடைய அர்த்தமான), முழுவேழுலகுக்கும் - ஸமஸ்தலோகத்துக்கும், நாதன் - ஸ்வாமியாய், வேதமயன் - அந்தஶப்தத்தையே ப்ரதாநமாக ப்ரதிபாதிக்கிற வேதப்ரதிபாத்யனாய், காரணம் - க்ரியாஹேது, கிரிசை - க்ரியை, கருமம் - க்ரியாபலமான கார்யம், இவை - இவற்றுக்கு, முதல்வன்-காரணபூதனாய், சீர் - குணோத்தரராய், அணங்கு - திவ்யரான, அமரர் - தேவர்களும், பிறர் - ருஷிகளும் மநுஷ்யாதிகளுமான, பலரும் - எல்லாரும், தொழுது ஏத்த - வணங்கி ஸ்தோத்ரம்பண்ணும்படியாக, நின்று - நின்று, வாரணத்தை-குவலயாபீடத்தை, மருப்பு ஒசித்த - கொம்பைமுறித்த, பிரான் - மஹோபகாரகனாய், என் - (இப்படிகாரஶப்தார்த்தங்கள் தனக்குவிபூதியானபடியை) எனக்கு ப்ரகாஶிப்பித்த,மாதவன் — ஶ்ரிய:பதியான க்ருஷ்ணன், எந்தை - என்னை அநந்யார்ஹனாக்கின சேஷி. சீரணங்கென்று - லக்ஷ்மியாகவுமாம்.

இ:—இரண்டாம்பாட்டில், ப்ரஸ்துதமான நாராயணஶப்தார்த்தத்தைச் சொல்லுகிறார்.

[நாரணன்] - அர்த்தத்தைச்சொல்லுகைக்காக ஶப்தத்தை உபாதாநம்பண்ணுகிறார். அதுக்குப்பொருளென்னென்னில், - [முழுவேழுலகுக்கும்நாத னித்யாதி] - ஸர்வலோகேஶ்வரன். [காரணம்] - க்ரியாஸாதநம், [கிரிசை] - அதடியாகவரும் க்ரியை, [கருமம்] - தத்ஸாத்யமான கார்யம், இவற்றுக்கு நிர்வாஹகனாயிருக்கை. [வேதமயன்]- இப்படி வேதப்ரதிபாத்யனானவன். [சீரணங்கித்யாதி] - குவலயாபீடத்தை நிரஸித்தாற்போலே என்விரோதியைப்போக்கின மஹோபகாரகன். சீரியராய் அப்ராக்ருதஸ்வபாவரான நித்யஸூரிகளும், [பிறர் பலரும்] - இவ்வருகுண்டான தேவமநுஷ்யாதிகளெல்லாரும். [தொழுதேத்தநின்று] - "சிறியார் பெரியார்" என்னுதே முறைதோற்ற நின்று ஏத்தும்படிநின்று குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்த மஹோபகாரகன். [என்மாதவனே] - என்பக்கலிலே ப்ரவணனான ஶ்ரிய:பதி. [எந்தை] - என்னை அநந்யார்ஹனாக்கினான். சீரணங்கென்று - பிராட்டியாகவுஞ்சொல்லுவர். [எந்தை] - மாதவனான நாராயணன் இவர்க்கு ஸ்வாமி. அதவா, காரணம் - உபாதாநம். கிரிசை - வடநிர்மாணக்ரியை. கருமம் - உதகாஹரணாதி யென்றுமாம்

ஈடு.—இரண்டாம்பாட்டு. "நாராயணனாலே" என்று நாராயணஶப்தம் ப்ரஸ்துதமாயிற்றே; அதுக்குஅர்த்தம் அருளிச்செய்வதாக ஶப்தத்தை உபாதாநம் பண்ணுகிறார்.

---

இரண்டாம்பாட்டு - நாரணன் இத்யாதி. கீழ் ப்ரஸ்துதமான நாராயணஶப்தத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறாரென்று பாட்டுக்கு ஸங்கதி கண்டுகொள்வது.

[நாரணன்] - இதுக்கு அர்த்தமேன்? என்னில், -[முழுவேழுலகுக்குந்நாதன்]- ஸர்வஸ்வாமி. இவ்வர்த்தத்தில் ப்ரமாணமேன்? என்னில்,-[வேதமயன்] - "[illegible]" (நாராயணபரம்ப்ரஹ்ம) இத்யாதிகளாலே "ஸர்வஸ்வாமி" என்று ஓதப் படுகிறவன். [காரணங்கிரிசைகருமமிவை முதல்வன்] - தன்விபூதியில், காரணமாயும், கார்யமாயும், உதகாஹரணமாகிற பலமாயும் வரக்கடவதான இவற்றுக்கு நியந்தாவாயுள்ளான். க்ரியாஸாதநம், அதடியாகவரும் க்ரியை, தத்ஸாத்யமான கார்யம்; இவற்றுக்கு நிர்வாஹகனு யிருக்கு மென்றுமாம். [எந்தை] - எனக்கு ஜநகனானவன். [சீரணங்கு] - ஸ்ரீயான அணங்கு அணங்கென்று - தெய்வப்பெண் என்றபடி; பெரியபிராட்டியார். அன்றியே, சீரணங்கமரரென்று - நித்யஸூரிகளுக்கு விசேஷண மாகவுமாம். சேஷத்வாநுரூபமான ஆத்மகுணங்களை யுடையாநிற்பாராய் அப்ராக்ருத ஸ்வபாவரான நித்யஸூரிகள், இவ்வருகுண்டான ஸம்ஸாரிகள், இப்படி, "சிறியார் பெரியார்" என்று வாசியின்றிக்கே எல்லாரும் எழுத்துவாங்கி ஏத்தும்படியாக நின்று, குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்த உபகாரகன். "[illegible]" (நஸமம்யுத்தமித்யாஹு:)

---

ஆனால் அர்த்தமாத்ரத்தைச் சொல்ல அமையாதோ? சப்தோபாதாநம் எதுக்கு? என்ன, நாராயணனாலே இத்யாதி. நாரணன் - நாராயணசப்தவாச்யன். முழுவேழுலகுக்கும் நாதன்-அதனுடைய அர்த்தமான, ஸமஸ்தமான ஏழுலகுக்கும் ஸ்வாமியானவன். காரணமாயுமிதி-காரணம் - ம்ருத்பிண்டாதிகள். கார்யம் - கடாதிகள். உதகாஹரணமாவது - அத்தால்வரும் வ்யவஹாரங்கள். இத்தால் - காரணமான பூதபஞ்சகத்தையும், தத்கார்யமான அண்டாதிகளையும், ததந்தர்வர்த்திகளான ஆத்மாக்களுடைய வ்யவஹாரங்களையுஞ் சொல்லுகிறது. கிரிசை - க்ரியை. க்ரியத இதி க்ரியா என்று - கடாதிகார்யத்தைச் சொல்லுகிறது கருமம் - கர்மம். கார்யவர்க்கத்தினுடைய வ்யாபாரங்களைச் சொல்லுகிறது. க்ரியாஸாதந மித்யாதி - க்ரியாஸாதநமாவது - ப்ரமணரூப க்ரியாஸாதநமான ம்ருத்பிண்டசக்ர சீவராதிகள். க்ரியை - ப்ரமணரூபக்ரியை. தத்ஸாத்யமான கார்யம் - கடாதி கார்யங்கள். "கருமம் என்று - க்ரியத இதி கர்ம என்று, கடாதிகாரியத்தைச் சொல்லுகிறது. இத்தால் - நிமித்தோபாதாந ஸஹகாரிகாரணங்களையும், தத்கார்யமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையும், தத்ஸாத்யமான தேவாதிபதார்த்தங்களையுஞ் சொல்லுகிறது. முந்தின அர்த்தத்திலே, சீர் - ஸ்ரீ:. சீரணங்கு - ஸ்ரீயாகிற தெய்வப்பெண். நித்யஸூரிபக்ஷே, சீரென்ற-குணவாசி. அணங்கு-அப்ராக்ருதஸ்வபாவர். பிறர்-ஸம்ஸாரிகளான ப்ரஹ்மாதிகள். பலர் - உபயரும். நமஸ்காரமும் தாஸ்யஸூசகமாகையாலே சொல்லிற்று-எழுத்துவாங்கி என்று. எழுத்துவாங்குகை - சேஷிபேரை மார்பிலே எழுதிக்கொள்ளுகை. "[illegible] । [illegible]" என்னக்கடவதிறே. அகாரவிவரணமான நாராயணசப்தத்திலே-"[illegible]" என்கிற ரக்ஷகத்வமும் அர்த்தஸித்தமாகையாலே, "வாரணத்தை மருப்பொசித்தபிரான்" என்று - அநிஷ்டநிவ்ருத்தி சொல்லுகிறது. "ஏத்த" என்றதுக்கு ப்ரமாணம் - நஸமம் இத்யாதி. இச்சலோகம் க்ருஷ்ணவிஷயமாகக் காணப்படவில்லை, "[illegible] । [illegible]" என்று ராமவிஷயமாகக் காணப்படுகிறது

என்னும்படியாக. [என்மாதவனே] - நான்தோற்ற துறை· மாதவனுன - நாராயணன் - எந்தை. ஸ்ரீமந்நாராயணன் எனக்கு ஸ்வாமி யென்கிருர்.  (௨)

## மூன்ரும்பாட்டு.

**மாதவனென்றதேகொண்டு என்னையினியிப்பாற்பட்டது**
**யாதவங்களுஞ்சேர்கொடேனென்று என்னுட்புகுந்திருந்து**
**தீதவங்கெடுக்குமமுதம் செந்தாமரைக்கட்குன்றம்**
**கோதவமிலென்கன்னற்கட்டிஎம்மானென்கோவிந்தனே.**

ஆ —(மாதவன்.) இப்படி எம்பெருமான்என்னேடுஸம்பந்தித்தாரையுங்கூட விஷயீகரிக்கும்படி என்னை வைஷ்ணவனுக்குகைக்கு ஹேதுவான என்பக்க லுள்ள சதிராகிறதென்? என்னில், - அது இன்னதென்று சொல்லுகிறது.

யத்நுச்சயா பிராட்டி பரிக்ரஹித்தார் சொல்லுவதொருசொல்லைச் சொல்ல, அச்சொல்மாத்ரத்தையே கொண்டு மெய்யே பிராட்டி பரிக்ரஹமாயிருப்பாரைப் பார்த்தருளும் பார்வையாலே என்னைப் பார்த்தருளி, "இவரையாகாதே தான் நெடுங்காலமெல்லாம் இழந்தது" என்று, இழந்தகாலத்தை அநுஸந்தித்து மோஹித்து, பின்னை நெடும்போதுகூட ப்ரபுத்தனுய், போனகாலத்தை இனிச்செய்யலாவதில்லையிறே; இனி, இப்பாலுள்ள காலமாகிலும் என்னைவிடேன் என்று, நிரதிஶயஸௌந்தர்யத்தை யுடையனுய், நிரதிஶயபோக்யபூதனுய், ஆஶ்ரிதஸுலபனுய், பரமகாருணிகனுயிருந்த எம்பெருமான் என்னுள்புகுந்திருந்து, என்பக்கலுள்ள ஸ்வஸம்ஶ்லேஷவிரோதியான ஸ்வரூபப்ரயுக்ததோஷத்தையும் ஹேதுக்ருதமான தோஷத்தையும் போக்கி, எனக்குப் பரமபோக்யனுனென்கிருர்.

ஒ —மூனரும்பாட்டில்; மாதவனென்கிற உக்திமாத்ரத்தாலே என்னுடைய ஸகலதோஷங்களையும் போக்கி என்னை விஷயீகரித்தருளினுனென்கிருர்.

[மாதவனென்று தொடங்கி] - மாதவனென்னுந் திருநாமத்தினுடைய உக்திமாத்ரத்தையே அநேகவ்யயாயாஸஸாத்ய ஸமாஶ்ரயணமாகக்கொண்டு என்னைப் போன நெடுங்காலமெல்லா மிழந்தோம், இனி,மேலுள்ளகாலமாகிலும் இவர் பக்கல் ஒரு தோஷமும் சேரவொட்டேனென்று என்னுள்ளே வந்துபுகுந்து நிரந்தரவாஸம்பண்ணி எனக்கு நிரதிஶயபோக்யமாய்க்கொண்டே "ஸ்வரூப ப்ரயுக்தம்" என்னலாய்படி அநாதியாய் வருகிற தோஷத்தையும், நாடோறும் ஒருஹேதுவஶத்தாலே வருகிற தோஷத்தையும்

---

க்ருஷ்ணன் விஷயத்திலேயும் உண்டென்று கண்டுகொள்வது. என்மாதவன் - என்னை எழுதிக்கொண்ட ஸ்ரீயஃபதி. அந்வயபூர்வகமாக ஹாவம்-மாதவனுன நாராயணனேந்தையென்று. எந்தை- எனக்கு ஜநக னென்னுதல்,எனக்கு ஸ்வாமி யென்னுதல். மூழுவேழுலகுக்கும் நாதனுய், வேதமயனுய், காரணம் கிரிசை கருமமிவற்றுக்கு முதல்வனுய், சிரணங்கமரர்பிறர்பலரும் தொழுதேத்தநின்று வாரணத்தை மருப்பொசித்த பிரானுய், என்மாதவனுன-நாரணன்-எந்தை இத்யந்வயஃ· (௨)

பேர்க்குவதுஞ்செய்து என்னேட்டை ஸம்ச்லேஷத்தாலே விகஸிதமாய்ச் சிவந்திருந்துள்ள திருக்கண்களையும் வளர்ந்த திருமேனியையுமுடையான். "தீது, அவம்" என்றது - நிஷ்க்ருதியில்லாத பாபமும், நிஷ்க்ருதியுண்டான பாபமுமென்றுமாம். [கோதவமென்று தொடங்கி] - பாகுதப்பாதல் மற்றென்றினுடைய ஸம்ஸர்க்கத்தாலே வரும் தோஷமாதல், ஒன்றுமின்றிக்கே யிருந்துள்ள கன்னற்கட்டிபோலே நிரதிசயபோக்யமாய்த் தன்னுடைய போக்யதையைக்காட்டி என்னை அடிமைகொண்டவன்.[என்கோவிந்தன்] - என்னை விஷயீகரிக்கைக்காக கோவிந்தனானவன்.

ப.—அநந்தரம், இப்பக்ஷபாதமடியாக ஸ்வவிஷயத்தில் உக்திமாத்ரத்தையே பற்றாசாகக்கொண்டு பண்ணின உபகாரத்தை அருளிச்செய்கிறார்.

என் - எனக்காக, கோவிந்தன் - க்ருஷ்ணனாய்வந்தவதரித்த, எம்மான் - என்னுடைய ஸ்வாமியானவன், மாதவன் - ஸ்ரீமான், என்றதே - என்று நான்சொன்ன இந்த அஹ்ருதயோக்தியையே, கொண்டு-பற்றாசாகக்கொண்டு,என்னை-(உக்தியில்வாசியறியாத) என்னை, இனி - உக்த்யநந்தரமாக, இப்பாற்பட்டது - மேலுள்ள காலமெல்லாம், அவங்கள் - அவித்யாதிகளான குறைகள், யாதும் - ஏதேனுமொன்றையும், சேர்கொடேன் - சேர்கொடேன், என்று - என்று ஸங்கல்பித்து: (அதுக்கீடாக);என்னுள் - என்னெஞ்சுக்குள்ளே, புகுந்து - புகுந்து, இருந்து - அநந்யபரனாயிருந்து, தீது - (புத்திபூர்வகமான) தீமையையும், அவம் - (ப்ராமாதிகமான) அவத்தையும், கெடுக்கும் - கெடுக்கும்படியான, அமுதம் - நித்யபோக்யபூதனாய்: (இஸ்ஸம்ச்லேஷத்தாலே), செம்தாமரை-சிவந்த தாமரைபோலேயிருக்கிற, கண் - திருக்கண்களையும், குன்றம் - ஸமஸ்த்திரமாய்வளர்ந்த வடிவையும் அநுபவிப்பித்து, கோது - கோதும், அவம்-அவமும், இல் - இல்லாத, என் கன்னற்கட்டி - கன்னற்கட்டிபோலே எனக்கு இனியனானன். கன்னற்கட்டி - கருப்புக்கட்டி. அதுக்கு,கோதும், அவமும் - நீரஸமான வஸ்த்வந்தரஸம்ஸர்க்கமும், பாகதோஷமும்; ஈச்வரனுக்கு; கோதும், அவமுமாவது-உபகாரத்தினுடைய ஹேது:ஸாபேக்ஷத்வமும், ஸ்வப்ரயோஜகார்த்தத்வமும்.

இ.—மூன்றாம்பாட்டில், "மாதவன்" என்ற உக்திமாத்ரத்தாலே என்னை விஷயீகரித்து, என்னுடைய தோஷங்களையும் போக்கினானென்கிறார்.

[மாதவனென்றதேகொண்டு]-மாதவனென்கிற உக்திமாத்ரத்தையேகொண்டு. என்பக்கல் அஹ்ருதயமான உக்திமாத்ரமே உள்ளது, அத்தை, அந்தஃபுரத்திலுள்ளார் வார்த்தையாகையாலே ஸஹ்ருதயமாகவும் அநேகாயாஸ ஸாத்யமான ஆச்ரயணமாகவுங் கொண்டு. [என்னை] - கேவல நாராயண சப்தத்துக்கும் இதுக்கும் வாசியறியாத என்னை. [இனி] - "போனகாலமே போரும், இனி விடேன்" என்னுநின்றான். "பழுதே பலபகலும் போயின" என்று ஈச்வரனைக்கிட்டின சேதநனிருக்கு மிருப்பைத்தான் இராநின்றான். [இப்பாற்பட்டது] - அணைக்குக்கிழக்குப்பட்ட நீரோபாதியிறே போனகாலம், இனிமேலுள்ள காலமாகிலும் ஒருபொல்லாங்கும் சேரவிட்டுக்கொடேனென்று. [யாதவங்களும்] - அவித்யாதிகளான நரகஹேதுக்கள், விரஹம், "அயோக்யன்" என்று அகலுகை. [என்னுட்புகுந்து]-அது உக்திமாத்ரமன்றிக்கே என்பக்கலிலே வந்து புகுந்து. [இருந்து] - ராஜாக்கள் ஆஸகப்பற்றாலே ஜயிக்குமாபோலே ஸ்த்தாவர

ப்ரதிஷ்டையாக இருந்து. இவரை வரகிறுத்தவொண்ணாதே. புகுந்திருந்து செய்கிற தென்? என்னில், - [தீதவங்கெடுக்கும்] - தீதாகிறது - மயர்வறமதிநல மருளப்பெறுவதற்குமுன்பு புத்திபூர்வகமாகப்பண்ணின கர்மங்கள் அவமாகிறது - பின்பு ப்ராமாதிகமானவை. நிஷ்க்ருதியில்லாத கர்மங்களும், நிஷ்க்ருதியுள்ளவையு மென்றுமாம். [அமுதம்]-போக்குவது தன்போக்யதையைக்காட்டி.[செந்தாமரை இத்யாதி]-என்னோட்டைக் கலவியாலே சிவந்த திருக்கண்களையும் . வளர்ந்த திருமேனியையு முடையனானன். ஸதைகரூபமான வடிவு விகஸிதமாயிற்று.[கோது இத்யாதி]-கோதும் அவமு மில்லாத கன்னற்கட்டிபோலே எனக்கு நிரதிஶயபோக்யனானவன். கோதாவது - த்ரவ்யாந்தர ஸம்பந்தத்தால் வரும் குற்றம். அவமாவது - பாகுதப்பால் வரும் குற்றம். [எம்மான்] -அந்த போக்யதையைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினன். [என் கோவிந்தனே] -அவதரித்ததும் தம்மை விஷயீகரிக்கைக்காக, பூபார நிர்ஹரணாதிகளுக்கன்று என்றிருக்கிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. கீழே "மாசதிரிதுபெற்று" என்றார்; இந்நன்மைக்கு அடியேன்?என்ன; - நினைவின்றிக்கேயிருக்க அந்த புரவாஸிகள் சொல்லும் வார்த்தையைச் சொன்னேனேன்கிறார்;"ஜாமாதா தயிதஸ்தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா ஹரிம் பஶ்யேம", (ஜாமாதாதயிதஸ்தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யாஹரிம்பஶ்யேம) என்றாரிறே பட்டர்.

[மாதவனென்றதேகொண்டு] - நான் "மாதவன்" என்ற உக்திமாத்ரத்தைக் கொண்டு. இத்தையே திருவுள்ளத்திலே குவாலாகக்கொண்டு. "அல்லாததிருநாமங்களுக்கும் இதுக்கும் வாசியறிவதே" என்று இத்தையே குவாலாகக்கொண்டு. [என்னை] - அல்லாத திருநாமங்களுக்கும் இதுக்கும் வாசியறியாத என்னை [இனி] - முன்பு கழிந்த

---

ப்ர.—(மாதவனென்றதேகொண்டு) - ஸ்ரீகுணரத்நகோஶே, "மாதர்லக்ஷ்மி யதைவ மைதிலஜநஸ் தேநாத்வநா தே வயம் த்வத்தாஸ்யைகரஸாபிமாநஸுபகைர் பாவைரிஹாமுத்ர ச । ஜாமாதா தயிதஸ்தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா ஹரிம் பஶ்யேம ப்ரதியாம யாம ச பரீசாராந் ப்ரஹ்ருஷ்யேம ச ! ௫௨ ||"

---

மூன்றாம்பாட்டு - மாதவன் இத்யாதி. கீழ்ப்பாட்டு ப்ராஸங்கிகமாகையாலே முதற்பாட்டோடே ஸங்கதி - கீழே இத்யாதி. இது - ஸாத்யபரமான யோஜநையைப்பற்ற. அந்த:புரஸம்பந்திகள் அப்படிசொல்லுவார்களோ? என்ன, ஜாமாதா இத்யாதி. ஸ்ரீகுணரத்நகோஶே, "மாதர்லக்ஷ்மி யதைவ மைதிலஜநஸ் தேநாத்வநா தே வயம் த்வத்தாஸ்யைகரஸாபிமாநஸுபகைர் பாவைரிஹாமுத்ர ச । ஜாமாதா தயிதஸ்தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா ஹரிம் பஶ்யேம ப்ரதியாம யாம ச பரீசாராந் ப்ரஹ்ருஷ்யேம ச". அஸ்யார்த்த:-வாரீர் தாயாரே, லக்ஷ்மியே, மைதிலஜநமானது யாதொருபடி உம்முடைய ஸம்பந்தத்தை யிட்டுப் பெருமாளை விரும்புகிறது, அந்தமார்க்கத்தாலே அந்த நாங்கள் உம்முடைய தாஸ்யமொன்றிலுமே ரஸமாயிருக்கிற அபிமாநத்தாலே அழகியதாயிருக்கிற பாவங்களினாலே இஹலோக பரலோகங்க ளிரண்டிலும் 'மணவாளப்பிள்ளை' 'தேவரீருடைய நாயகன்' என்னும், மைதிலஜநம்போலே தேவரீருடைய ஸம்பந்தத்தையிட்டே ஸர்வேஶ்வரனை ஸேவிக்கக்கடவோம்; கிட்டக்கடவோம்;கைங்கர்யங்களைப் பண்ணக்கடவோம்; அந்தக்கைங்கர்யத்தால்அவனுக்கு விளைகிற ப்ரீதியைக் கண்டு அத்தாலே உகக்கக்கடவோ மென்றபடி. 'என்றதே' என்ற ஏகாரத்தின் அர்த்தம் - நான்மாதவன் என்றது. 'கொண்டு' என்றதுக்கு பாவம் - இத்தையே இத்யாதி. குவாலாக - அதிகமாக. 'மாதவன்' என்றதுக்கு பாவம் - அல்லாத இத்யாதி. தாத்பர்யம் - முன்பு இத்யாதி. 'இனி' என்கிறஇது-பகவத்வசநாத்

காலம் கழிந்தே விட்டதிறே. மேல் அத்யல்பகாலமாய்த் தோற்றுநின்றதாயிற்று ஈஶ்வர னுக்கு. * "பழுதேபலபகலும்போயின" என்று ஈஶ்வரனைக் கிட்டின சேதநனிருக்கும் இருப்பைத் தான் என் பக்கலிலே இராநின்றான். "பால்யகாலமதீதஞ்சமோஹ" (புத்த்வாகாலமதீதஞ்சமுமோஹ) என்று இராநின்றானாயிற்று. [இப்பாற்பட்டது]-அணைக் குக்கிழக்குப்பட்ட நீரோபாதியிறே போனகாலம்; இனிமேலுள்ள காலமாகிலும். [யாத வங்களுஞ்சேர்கொடேனென்று]-உன்னை யாதோரு தபஸ்ஸிலும் புக்கு க்லேஶிக்கவிடே னென்று. அம்மிதுணையாக ஆழிழிகையிறே இவனைவிட்டு உபாயாந்தரத்தைப்பற்றுகை. அவங்கள் - நரகஹேதுவான அவித்யாதிகள். புறம்பே, சில ப்ரயோஜநங்களைக்கொண்டு போகவிடுதல், "அயோக்யன்" என்று அகலவிடுதல், உபாயாந்தர பரிக்ரஹம் பண்ணவிடு தல் செய்யேனென்று. [என்று] - "ஏதத்வ்ரதம்மம" (ஏதத்வ்ரதம்மம) என்கிறபடியே ஸங் கல்பித்து. இப்படி ஸங்கல்பித்து நெடுங்கைநீட்டாக இருக்கையன்றிக்கே, என் ஹ்ரு தயத்திலே வந்துபுகுந்து. "புகுந்தாலும் போக்குவரத்து உண்டாமாகில், வாலிபோன வழியை அடைத்து மஹாராஜர் குறும்புசெய்தாற்போலேயாம்" என்று ஸ்த்தாவர ப்ர திஷ்டையாக இருந்து. [புகுந்திருந்து] - இவரை வரநிறுத்தவொண்ணாதே இவர்க்கு மாகத் தான் புகுந்திருந்தானத்தனை. புகுந்து செய்த க்ருஷியேது? என்னில்; [தீதவங்கெடுக்

ப்ர.—(இனி) - கிஷ்கிந்தாகாண்டே த்ரிம்ஶே "காலவ்ருத்தஸ்வரூபம் நஷ்டராஜ்ய நகாத்மஜாம் | பால்யகாலமதீதஞ்ச மோஹவசாகதம் ||ரு||"

யுத்தகாண்டே [கஅ] ஶ்லோ விபீஷணஶரணாகதௌ, "ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே | அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத்வ்ரதம் மம ||௩௩||"

(தீதவங்கெடுக்கும்) - கிஷ்கிந்தாகாண்டே சதுஸ்த்ரிம்ஶே ஸுக்ரீவம் ப்ரதி லக்ஷ்மண:, "ஶ்ரீதேஜாயம் ஸுஹ்ருணாம் ஶ்லாக்யவம்ஶோ கநஸ்யத: | த்ருஷ்டாக்ருதஸ்ய ஸம்க்ருத்தே ந தந்நிர்வாயமஹ்ஸ || கக || ஸர்வதோபிவஸர்வாமேதவோதே ஸம்ப்ருதேகயா | நிஷ்க்ருதிவிஹிதாஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: || கஉ ||"

தர்க்கதம். பலிதம் - மேல்அத்யல்ப இத்யாதி. மேல்அத்யல்பகாலமாய்த் தோற்றி து:கிப்பானிவ னன்றோ? என்ன, பழுதே இத்யாதி. முதற்றிருவந்தாதி. இப்படி அநுபவத்தோடே செல்லுகைக்கு உறுப்பான கீழ்க்கழிந்தகாலமெல்லாம் வ்யர்த்தமே போய்விட்டதே யென்றபடி. அவன் இப்படி யிருந்தவிடமுண்டோ? என்ன, "பால்யகாலம்" இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே த்ரிம்ஶே, "காலவ்ருத்தஸ்வரூபம் நஷ்டராஜ்ய நகாத்மஜாம்| பால்யகாலமதீதஞ்ச மோஹவசாகதம்". 'இப்பாற்பட்டது' என்கையாலே - அப்பாற்பட்டதிற் செய்யலாவதில்லை யென்ற விவக்ஷித்து ஹாவம் - அணைக்கு இத்யாதி. இனிஇப்பாற்பட்டது-உத்யகந்தரமான மேலுள்ள கால மெல்லாமென்று சப்தார்த்தம். உபாயாந்தரங்களினுடைய ஆபாஸத்வத்தை ஸநிதர்ஶநமாக அருளிச் செய்கிறார் - அம்மிதுணையாக இத்யாதி. 'அவங்கள்' என்றதுக்கு அர்த்தம் - நரகஹேதுவான இத் யாதி.'யாது' என்ற விசேஷணத்துக்கு ஹாவம்-புறம்பே இத்யாதி. 'யாது, அவங்கள்' என்று பதச்சேதம். ஏதேனுமொரு குறைகளும் சேரும்படி விட்டுக்கொடே னென்று சப்தார்த்தம். 'என் னுள்' என்றதுக்கு ஹாவம் - இப்படி இத்யாதி. நெடுங்கைநீட்டாக-அதிதூரமாக. 'இருந்து'என்ற துக்கு ஹாவம் - புகுந்தாலும் இத்யாதி. வாலிபோனவழியையடைத்து - வாலிபோன பிலத் வாரத்தையடைத் தென்றபடி. குறும்புசெய்கை - துஷ்டத்தனம்பண்ணுகை. 'புகுந்திருந்து' என் றதுக்கு ஹாவம் - இவரைநிறுத்த இத்யாதி. தீதவம்-பூர்வோத்தராகங்களாதல், நிஷ்க்ருதியுள்ள

* முதல்திருவந்தாதி—கக.

கும்] - தீதாவது - போய்நின்றஞானத்துக்கு முன்பு புத்திபூர்வகமாகப் பண்ணிப்போந்த பாபம், அவமாவது - ஜ்ஞாநம்பிறந்தபின்பு ப்ராமாதிகமாகப் பண்ணினவை. இரண்டாலு மாக-ஸகவத்ப்ராப்திப்ரதிபந்தக கர்மங்களைச் சோல்லுகிறது. அன்றியே, "கோக்நேசைவ ஸுராபேசௌரேபக்நவ்ரதேததா । நிஷ்க்ருதிர்விஹிதாஸத்பி: க்ருதக்நேநாஸ்திநிஷ்க்ருதி:" (கோக்நேசைவஸுராபேசசோரேபக்நவ்ரதேததா। நிஷ்க்ருதிர்விஹிதாஸத்பி: க்ருதக்நேநாஸ்திநிஷ்க்ருதி:) என்கிறபடியே, நிஷ்க்ருதியுள்ள பாபங்களையும் இல்லாதபா பங்களையும் சொல்லிற்றாகவுமாம். இவற்றைக்கெடுப்பது கஷாயபாநத்தைப் பண்ணுவித்தோ வென்னில், [அமுதம்]-தன்னுடைய போக்யதையை அநுபவிப்பித்தாயிற்று. [செந்தாமரைக்கண்குன்றம்] - ரஸநேந்த்ரியத்துக்கே யன்றியே கண்ணுக்கும் போக்யமாயிருக்கை. [குன்றம்] - இத்தலையில் தீதும் அவமும் போக்கினை யிருக்கையன்றிக்கே, "தனக்கு உண்டாய்க்கழிந்தது" என்று தோற்றும்படியாயிற்று வடிவிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யம்; "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:கித:" (வ்யஸநேஷுமநுஷ்யாணும்ப்ருஶம்பவதிது:கித:) என்றிருக்குமவனிறே [கோதவமிலென்கன்னற்கட்டி] - கோதாவது - த்ரவ்யாந்தர ஸம்ஸர்க்கத்தாலே வருமது. அவமாவது-பாகத்தாலே வருமது. தார்ஷ்டாந்திகத்தில், கோதும் அவமுமாகிறது-ஆந்ருஶம்ஸ்யத்துக்காகவாதல், இவனுக்கு உபகாரமாகவாதல் விஷயீகரிக்கை. தனக்குப் புறம்பாயிருப்பதோரு போக்யவஸ்து இல்லாதபடி தான் போக்யனாயிருக்கும். [எம்மான்]-நான் "வேறொன்று போக்யம்" என்று

---

ப்ர.—(குன்றம்) - அயோத்யாகாண்டே த்விதீயே ஸர்கே ஶ்ரீராமகுண வர்ணநே, "வ்ருத்தாநாம் ஸர்வதைவ ஸதாம் ... ப்ராஹ்மணாநாம் உபாஸிதா ॥ கஉ ॥ ... ॥ கக ॥ வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:கித: । உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி ॥ சo ॥"

---

வையும்அதில்லாதவையுமாதல். இரண்டர்த்தத்தையும் க்ரமேண அருளிச்செய்கிறார் - தீதாவது போய்நின்ற இத்யாதியாலும்,அன்றியே"கோக்நேசைவ"இத்யாதியாலும். கோக்நேசைவேத்யாதிஶ்லோக: - கிஷ்கிந்தாகாண்டே சதுஸ்த்ரிம்ஶே ஸுக்ரீவம் ப்ரதி லக்ஷ்மணேநோக்த:. நிஷ்க்ருதியில்லாத பாபங்களென்றவிடத்திலே - "ப்ராயஶ்சித்தம் நஶ்யத்யஹோ ... ஶரணாகதஹந்தா ..." என்ற ரகுராக்ஷஸஸம்வாதத்தின் ஶ்லோகம் அநுஸந்தேயம். ரஸநேந்த்ரியத்துக்கேயிதி - 'என்றக்கால் அண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கு' என்றாற்போலே ஸ்துதித்வாரா ரஸநேந்த்ரியத்துக்கு போக்யமென்றபடி. 'குன்றம்' என்றதுக்கு பாவம்-இத்தலையில் இத்யாதி. அவர்கள்வ்யஸநம் தன்னதாயிருக்குமோ?என்ன,"வ்யஸநேஷு" இத்யாதி. அயோத்யாகாண்டே த்விதீயே, பூர்வமேவ 'துயரறு' இத்யத்ர லிகிதம். த்ருஷ்டாந்தத்திலே இவ்விரண்டுமேது? என்ன, கோதாவது இத்யாதி. தார்ஷ்டாந்திகத்தில் இவனிடத்தில். தார்ஷ்டாந்திகத்திலென்ற வாக்யத்தால் பலிதம் - ப்ரணயித்வத்தாலே தன்பேறாகச் செய்யுமவனென்று. ஆந்ருஶம்ஸ்யத்துக்காக -ஆந்ருஶம்ஸ்யத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக. இவனுக்கு - சேதநனுக்கு. 'அமுதம், கன்னற்கட்டி' என்ற பதத்வயத்துக்கு பாவம்-தனக்கு இத்யாதி. இவ்வாக்யம் - 'கோதவமில்' என்கிறதுக்குத் தாத்பர்யார்த்தமாதல். இப்போது, கோதாவது - ஸ்வஸமாநபோக்யவஸ்த்வந்தரஸத்பாவம். அவமாவது-ஸ்வாதிகபோக்யவஸ்த்வந்தரஸத்பாவம். கன்னற்கட்டி-வெல்

இராதபடி என்னைத் தோற்பித்தவன். [என்கோவிந்தனே] - க்ருஷ்ணுவதாரமும் தமக்கென்று இருக்கிறார்; * ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தங்கோவிறே. (௩)

## நான்காம்பாட்டு.

கோவிந்தன்குடக்கூத்தன் கோவலனென்றென்றேகுனித்து
தேவுந்தன்னையும் பாடியாடத்திருத்தி என்னைக்கொண்டேன்
பாவந்தன்னையும்பாறக்கைத்து எமரேழேழுபிறப்பும்
மேவுந்தன்மையமாக்கினுன் வல்லனெம்பிரான்விட்டே

ஆ.—(கோவிந்தன்.) இப்படி என்னுள்ளே புகுந்திருந்து தன்னுடைய குணசேஷ்டிதங்களை ஏத்திக் களிக்கும்படியாகவும், தன்னுடையஸர்வேஶ்வரத்வத்தையும் ஆஶ்ரிதபாரதீநத்வமாகிற தன்னுடைய ஸ்வரூபத்தையும் பாடியாடும்படியாகவும் என்னைத் திருத்தி, இப்படி என்னை விஷயீகரித்து, பின்னை என்பக்கலுள்ள ப்ரதிபந்தகங்களையெல்லாம் போக்கி அவ்வளவில் பர்யவஸியாதே, என்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட என்னைப்போலே தன்திருவடிகளை ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவராக்கினுன்; வல்லன் வல்லன் எம்பிரான், வல்லன் என்னுயன், வல்லன் என்னப்பன், வல்லன் என்றென்று அவனைப் புகழுகிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், என்னோடு பரம்பரயா ஸம்பந்தராணுரையுங்கூட என்னைப்போலே யாக்கினுன் ஒருவனுடைய ஸாமர்த்யமிருந்தபடியே! என்று விஸ்மிதராகிறார்.

[கோவிந்தனென்று தொடங்கி] - தன்னுடைய குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான திருநாமங்களைச்சொல்லாநின்றுகொண்டே ப்ரீதிப்ரகர்ஷத்தாலே குனிக்கவும் தன்னுடைய ஐஶ்வர்யத்தையும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தையும் பாடி ஆடும்படியாகவும் என்னைத்திருத்தி. [என்னையென்று தொடங்கி] - ஸம்ஸாரத்திலே மக்நனுயிருக்கிற என்னைப் பரிக்ரஹித்துப் பின்னை என்னுடைய துஸ்ஸாயமான பாபங்களையும் போக்கி ஏழேழுபடிகாலும் மேலேழுபடிகாலும் என்னோடு ஸம்பந்திகளானுரைத் தன்னையல்லது செல்லாத ஸ்வபாவராக்கினுன், என்னை விஷயீகரிக்கைக்காக ஜகத்தெங்கும் வ்யாப்தனுயிருக்கிறவன் தான் நினைத்தபடி செய்யவல்லன்.

ப.—அநந்தரம், இவ்வுபகாரம் ஸ்வஸம்பந்திகுலபர்யந்தமாம்படி பண்ணின ஸாமர்த்யத்தை அருளிச்செய்கிறார்.

வல்லன் - நினைத்ததுசெய்யவல்ல ஶக்திமானுய், விட்டு - ஸமஸ்தபதார்த்தங்களையும் வ்யாபித்து, எம்பிரான் - (ஊரைவளைந்தொருவனைப்பிடிக்குமாபோலே) என்னை

லக்கட்டி. 'என்' என்றதுக்கு ஹாவம் - க்ருஷ்ணுவதாரமும் இத்யாதி. அப்படி தமக்காயிருக்குமோவென்ன - ஆட்கொள்ள இத்யாதி - பெரியாழ்வார்திருமொழி. ஸர்வரையும் அடிமைகொள்வதாக வந்து ஆவிர்ப்பவித்த கோபநிர்வாஹகனுனவனையென்றபடி. இத்தால் ஆஶ்ரிதர்க்காக அவதரிக்கை 'தமக்கு' என்னலாயிருக்கு மென்று கருத்து. ✽ அடியே தொடக்கி, என்கோவிந்தன் - எம்மானித்யக்வயஃ. (௩)

* பெரியாழ்வார் திருமொழி—௪, எ, ௧௧.

அங்கீகரித்தஸ்வாமியானவன், கோவிந்தன் - (ஜாத்யுசிதமான) கோஸம்ருத்தியை யுடையவன், குடக்கூத்தன் - (அந்தஸம்ருத்த்யுசிதமான ஹர்ஷவ்யாபாரமாயுள்ள) குடக்கூத்தையுடையவன், கோவலன் - (இந்த ஐஶ்வர்யசேஷ்டிதங்களுக்கு அநுரூபமான) கோபாலஜந்மத்தையுடையவன், என்றென்றே என்றென்று இவற்றைத் தனித்தனியே சொல்லி, குனித்து - (ப்ரீதியாலே) கூத்தாடி, தேவும் - இந்தஸௌலப்யத்துக்கடியான பரத்வத்தையும், தன்னையும் - தனக்கு அஸாதாரணஸ்வபாவமான நீர்மையையும், பாடி - (ப்ரீதிக்குப் போக்குவீடாகப்) பாடி, ஆட - ஸஞ்சரிக்கும்படி, திருத்தி - (இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே நித்யஸூரிஸமானனும்படி) திருத்தி, என்னை - என்னை, கொண்டு - தன்னுடையவனாகக் கொண்டு, (ஸ்வாங்கீகாரவிரோதியான), என் - என்னுடைய பாவந்தன்னையும் - பாபங்களையும், பாற - ஓடிப்போம்படி, கைதது - தூரத்தி, எமர் - என்னோடு அந்வயமுடையார், ஏழெழுபிறப்பும் - ஏழேழுஜந்மமும், மேவும் - தன்னை ப்ராபிக்கும், தன்மையம் - தன்மையையுடையோமாம்படி, ஆக்கினான் - பண்ணினான். இது ஒரு ஶக்தியோக மிருந்தபடி யென்? என்று கருத்து. பாற - ஓட.

இ.—நாலாம்பாட்டில், என்னளவன்றிக்கே, என்னோடு பரம்பரயா ஸம்பந்தரானாரையுங்கூட என்னைப்போலே தன்னைக்கிட்டி யநுபவிக்கும்படி பண்ணினான் ஒருவனுடைய ஸாமர்த்த்யமே! என்று விஸ்மிதராகிறார்.

[கோவிந்தன்] - நித்யவிபூதியில்ஐஶ்வர்யம் போலன்றிக்கே, பிறந்து படைத்த ஐஶ்வர்யமான கோஸம்ருத்தியை யுடையவன். [குடக்கூத்தன்] - ப்ராஹ்மணர், ஐஶ்வர்யம் மிக்கால் யாகாதிகளைப்பண்ணுமாபோலே, இடையர்க்கு கோஸம்ருத்தியுண்டானால் செருக்குக்குப் போக்குவீடாக ஆடுவதொன்றாயிற்று - குடக்கூத்து. [கோவலன்] - இவையிரண்டுக்கும் இட்டுப்பிறந்தவன். பிறந்து படைத்த ஐஶ்வர்யமிது. [என்றென்றே குனித்து] - வாசிகமாகவும் காயிகமாகவும் போக்குவிட்டு. [தேவும்] - ஐஶ்வர்யத்தையும். [தன்னையும்] - ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தையும்; “ஆத்ரா நவாதிவ தேஹ்யா:”. இரண்டையுஞ் சேர்த்து [பாடியாடத்திருத்தி] - தரிசுகிடந்த தரையைச் செய்காலாக்குமாபோலே, நித்யஸம்ஸாரியை நித்யஸூரிகள் யாத்ரையாம்படி பண்ணி. [என்னைக் கொண்டு] - என்னைக் குணங்கோடேவிஷயீகரித்து. [என் இத்யாதி] - என்னுடைய துஸ்ஸாயமான பாபங்களையும் பாறும்படியோட்டி. “ஜரோபேந்த்ர ஸாமேதூலி”. [எமர் இத்யாதி] - என்னுடைய ஸம்பந்தமே ஹேதுவாகக் கீழேழுபடிகாலும், மேலேழுபடிகாலும் கர்மத்தைப்போக்கி. [மேவுந்தன்மையமாக்கினான்] - மேவுந்தன்மையை யுடையோமாம்படி பண்ணினான். தன்னையொழியச் செல்லாத ஸ்வபாவராக்கினான். [எம்பிரான் கிட்டு] - ஒருவனைப்பிடிக்க நினைத்து ஊரைவளையுமாபோலே, வ்யாப்திக்கு ப்ரயோஜநம் தம்மை வஶீகரிக்கையென்றிருக்கிறார். [வல்லன்] - தான் நினைத்தபடி செய்யவல்லன்.

ஈடு.—நாலாம்பாட்டு. என்னோடு பரம்பரயா ஸம்பந்தமுடையாரையுங்கூட என்னைப்போலேயாக்கின னொருவனுடைய ஸாமர்த்த்யம் இருக்கும்படியே! என்று விஸ்மிதராகிறார்.

---

நாலாம்பாட்டு - கோவிந்தன் இத்யாதி. 'எமரேழெழுபிறப்புமேவுந்தன்மையமாக்கினான் வல்லனெம்பிரான்' என்றதிலே நோக்காக அவதாரிகை - என்னோடு இத்யாதி.

[கோவிந்தன்] - ஸ்ரீவைகுண்டத்தி லில்லாத தொரு ஸம்பத்திறே இது. கோ ஸம்ருத்தியாலுண்டான ஐஶ்வர்ய முள்ளது இங்கேயிறே. [குடக்கூத்தன்] - ப்ராஹ்மணர் ஐஶ்வர்யம்விஞ்சினால் யாகங்கள்பண்ணுமாபோலே, இடையர் ஐஶ்வர்யம்மிகுத்தால் செருக்குக்குப் போக்குவிடுவதொன்றாயிற்று - குடக்கூத்தாவது. "अवाक्यनादराः" (அவாக்யநாதர ) என்றிருக்கக்கடவ வஸ்து; தைர்யபங்கம்பிறந்துசெருக்குக்குத்தலைச்சாவி வெட்டியாடினபடியிறே. [கோவலன்]-இவற்றுக்கு அடியான பிறப்புடையவன். பிறந்து படைத்த ஐஶ்வர்யமிறே இது. [என்றென்றே குனித்து] - இக்குணங்களை மாறாதே சொல்லாநின்றுகொண்டு, உடம்பு இருந்தவிடத்திலிராதே ஆடி. அவனுடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை அநுஸந்தித்தால் இவர்க்குப் பேசாதிருக்கவொண்ணாதிறே. [தேவும்] - தேவுமென்கிறது-ஐஶ்வர்யத்தை. தன்னையென்கிறது-ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை; அதிறே தானானதன்மை; "आत्मानं नातिवर्तेथाः" (ஆத்மாநம்நாதிவர்த்தேதா:) என்றானிறே. "आत्मभूतं भरतं नातिवर्तेथाः" (ஆத்மபூதம்பரதம் நாதிவர்த்தேதா:) என்கிறான் என்று சிலர் சொல்லுவர்கள். பட்டர், "நீரானதன்மையாகிறது - ஆஶ்ரித பரதந்த்ரராகை. உம்முடைய தம்பி சொன்ன வார்த்தையை மறுத்து நீரானதன்மையை இழவாதேகொள்ளு மென்கிறான்" என்று. [பாடியாடத்திருத்தி] - "என்றென்றே

---

ப்ர.—(தன்னையும்) - अयोध्याकाण्डे एकादशोत्तरशततमे सर्गे रामं प्रति वसिष्ठः, "वृद्धाया धर्मशीलाया मातुर्नार्हस्यवर्तितुम् । अस्यास्तु वचनं कुर्वन्नातिवर्तेः सतां गतिम् ॥ ६ ॥ भरतस्य वचः कुर्वन् याचमानस्य राघव । आत्मानं नातिवर्तेथाः सत्यधर्मपराक्रम ॥ ७ ॥"

---

கோவிந்தநீதி - கோவிந்தனென்றபடி. இத்தை நிரூபகமாகச்சொல்லுகையாலே-கோஸம்ருத்தியை ஸம்பத்தாக விவக்ஷித்து, பரத்வமொழியஇது ஸம்பத்தோ? என்ன, ஸ்ரீவைகுண்டத்தில் இத்யாதி. இது - கோவிந்தத்வம். இது அங்குஇல்லையோவென்ன, கோஸம்ருத்தி இத்யாதி. கோஸம்ருத்தி குடக்கூத்துக்கு ஹேதுவென்று ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - ப்ராஹ்மணர் இத்யாதி வாக்யத்வயேந. அப்படியே அவாக்யநாதரா: என்று கூட்டுவது. தலைச்சாவி வெட்டுகையாவது - எழுச்சியறுக்கை. அதாவது - பயிர்மிகவளர்ந்தவாறே, பதர்த்துப்போகாமைக்கு அதன் வளர்த்தியைக் கொய்யக்கடவதிறே; அப்படியேசெருக்குக்குப் போக்குவிட்டாடினபடி. இவற்றுக்கு- கோவிந்தனாகைக்கும், குடக்கூத்தனாகைக்கும். பிறப்புடையவன் - கோபஜந்மத்தையுடையவன். சாடு - பிறந்து இத்யாதி. அவதரித்து ஸம்பாதித்த ஐஶ்வர்யமென்று ஸ்வபாவார்த்தம். ஜந்மஸித்தம், தத்வாகந்துகமிதி த்வநி:. இக் குணங்களை - "கோவிந்தன், குடக்கூத்தன், கோவலன்," என்று சொன்ன குணங்களை. வீப்ஸார்த்தம் - மாறாதே இத்யாதி. குனித்து - ப்ரீதியாலே கூத்தாடி. மாறாதே சொல்லுகைக்கும் குனிக்கைக்கும் அடியேதென்ன, உக்தபதத்ரயபலிதம் ஹேதுமாஹ - அவனுடைய இத்யாதி. ஐஶ்வர்யத்தை - ஈஶ்வரத்வத்தை. "தன்னை" என்றால் - ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தைச் சொல்லுமோ? என்ன, அதிறே இத்யாதி. தானானதன்மை - ஸ்வஸ்வபாவம். அப்படி ஆஶ்ரித பாரதந்த்ர்யமே தானானதன்மையா யிருக்குமோ? என்ன. - 'आत्मानं' இத்யாதி. அயோத்யாகாண்டே ஏகாதசசததமே ராமம்ப்ரதி வஸிஷ்ட:, "भरतस्य वचः कुर्वन् याचमानस्य राघव । आत्मानं नातिवर्तेथाः सत्यधर्मपराक्रम". 'என்றானிறே' வஸிஷ்டனிதி சேஷ:. உபாத்த வசநஸ்யோக்தார்த்தே ப்ரமாணதாம் தர்ஶயதி-"आत्मभूतं" இத்யாதி. தம்பி - பரதன். மறுத்து - நிஷேதித்து. நீரான தன்மையை - நீரானஸ்வபாவத்தை. அதாவது - ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை யென்றபடி. தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - என்றென்றே இத்யாதி. கீழ் ஸௌலப்யபர மென்றது - ஸௌலப்யத்தை அநுஸந்தித்

குனித்து" என்கிறவிடத்துக்கும், "பாடியாட" என்கிறவிடத்துக்கும் வாசியேன்? என்னில்;-கீழ்-ஸௌலப்யபரம்; இங்கு-ஐஶ்வர்யமும் ஸௌலப்யமும் இரண்டுமுண்டு; விஷய பேதத்தாலே சொல்லவுமாம். அன்றிக்கே, என்றென்று என்கிற விடம்-அஹ்ருதயமான உக்திமாத்ரமாய், குனிக்கையாவது-உத்யோகத்தளவாய், இங்கு-ஸஹ்ருதயமாகப் பாடுவது ஆடுவதான படியாய், என்றென்றே குனித்து - பாடுவதாடுவதாம்படி யென்றதாதல். [திருத்தி] - தரிசுகிடந்த தரையைச் செய்காலாம்படி திருத்துவாரைப்போலே, நித்யஸூரிகள் யாத்ரையே யாத்ரையாம்படி திருத்தி. [என்னைக்கொண்டு] - "என்னைக் கைக்கொண்டு. ஒருபாயாநுஷ்ட்டாநத்தைப் பண்ணுவித்து என்னில் இப்போது இவர்க்கு அபஸித்தாந்தமாம்; ஭கவத்ப்ரஸாதத்தாலே பெற்றாராகச் சொல்லுமதுக்கும் சேராது. ஆனால் என் சொல்லுகிறது? என்னில்; - சேற்றிலே விழுந்த மாணிக்கத்தை யெடுத்துக்கழுவி விநியோகங்கொள்ளுமாபோலே, என்னை ஸ்வீகரித்து, என்னால் போக்கிக்கொள்ளவொண்ணாத பாபங்களையும் உருமாய்ந்துபோம்படி ஓட்டி. [எமர் இத்யாதி] - இதுதான் என்னொருவனளவன்றிக்கே, என்னோடு ஸம்பந்தமுடையார் ஏழேழுபிறப்பும் தன்னைக்கிட்டுகையே ஸ்வபாவமாகவுடையோமாம்படி பண்ணினான். [எம்பிரான் விட்டு வல்லன்] - எனக்கு உபகாரகனான ஸர்வேஶ்வரன், நினைத்தகார்யஞ்செய்து தலைக்கட்டவல்லன். ஸர்வஶக்தி மாட்டாததுண்டோ? வ்யாப்தியும் தமக்காகவென்றிருக்கிறார். (ச)

---

*தத்தால் வந்த கூத்தைச் சொல்லுகிற தென்றபடி. இங்கு - "தேவும்தன்னையும்" என்றவிடத்திலே. ஐஶ்வர்யமும் இத்யாதி - ஈஶ்வரத்வத்தையும், ஸௌலப்யத்தையும் அநுஸந்தித்ததால் வந்த பாடுதலாடுதலைச் சொல்லுகிற தென்றபடி. என்றென்றேதனிந்துப் பாடுவதாடுவதாம்படி- அஹ்ருதயமாகச்சொல்லி ந்ருத்தோத்யோகம்பண்ணி ஸஹ்ருதயமாகப் பாடுவதாடுவதாம்படியென்றபடி. தரிசு-கரம்பு. செய்காலாம்படி - பயிர்நிலமாம்படி. நித்யஸூரிகள் யாத்ரை-பகவதநுபவ கைங்கர்யங்கள். ஒருபாயாநுஷ்ட்டாநத்தைப் பண்ணுவித்து - பாபங்களைப் போக்கினான் (என்னில்) என்று கூட்டுவது. அபஸித்தாந்தமாம் - "கோற்றகோன்பிலேன்" என்றிருக்கும் ப்ரபந்நராஜகையாலே அபஸித்தாந்தமா மென்றபடி. பரிஹாராந்தரம் - பகவத்ப்ரஸாதத்தாலே இத்யாதி. இதுக்கு - "அருளினன்" என்றதிலே நோக்கு. என்னைஸ்வீகரித்து - என்னைத் தன்னுடையவனாகக்கொண்டு. பாபங்களையுமென்ற சஶப்தம் - "என்னைக்கொண்டு" என்றத்தை ஸமுச்சயிக்கிறது. பாறக்கைத்து - ஓடத் துரத்தி. உருமாய்ந்துபோம்படி யென்றது - பலிதார்த்தம். உருமாய்ந்து - உருவழிந்து, ஸ்வரூபநாச மென்றபடி. மேவும்தன்மையமாக்கினான் - தன்னைக்கிட்டுகையே ஸ்வபாவமாகவுடையோமாம்படி பண்ணினான் என்று ஶப்தார்த்தம். மேவுகை - கிட்டுகை. தன்மை - ஸ்வபாவம். "வல்லன்" என்றதுக்கு ஭ாவம் - ஸர்வஶக்தி இத்யாதி. "விட்டு" என்றதுக்கு - ஸர்வேஶ்வரனென்று ஓரர்த்தம் அருளிச்செய்து, வ்யாப்தனானென்று அர்த்தாந்தரம் - வ்யாப்தியும் இத்யாதி. 'விஷ்லு வ்யாப்தௌ" இதி ஹி தாது: வல்லன் - சக்தன். எம்பிரான்விட்டு - என்னைக்கொண்டு ,என்பாவந்தன்னையும் பாறக்கைத்து - கோவிந்தனென்று தொடங்கி, திருத்தி - எமரேழேழுபிறப்பும் மேவும்தன்மையமாக்கினான்; வல்லனே இத்யந்வய:.* (ரு)

## ஐந்தாம்பாட்டு.

விட்டிலங்குசெஞ்சோதித் தாமரைபாதங்கைகள்கண்கள்
விட்டிலங்குகருஞ்சுடர் மலையேதிருவுடம்பு
விட்டிலங்குமதியஞ் சீர்சங்குசக்கரம்பரிதி
விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனன்தனக்கே.

ஆ.—(விட்டிலங்கு.) இப்படி என்னை வைஷ்ணவனுக்குகைக்குத் தன் அழகை உபகரணமாகக்கொண்டு என்னுள்ளே புகுந்தருளினு னென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தம்மையும் தம்மோடு ஸம்பந்திகளானாரையும் ததேகஹோகராக்கிற்று தன்திருவழகைக் காட்டி யென்கிறார். தம்மையும் தம்முடன் ஸம்பந்திகளானாரையும் பெறுகையாலே எம்பெருமானுக்கு நிரதிஶயமான ஔஜ்வல்யம் பிறந்ததென்கிறு ரென்றுமாம்.

விட்டிலங்குகை-மிகவும்விளங்காநிற்கை. மதியம்-சந்த்ரன், பரிதி-ஆதித்யன். அம்மான்—ஸர்வேஶ்வரன். மதுசூதனன்-தம்முடைய ப்ரதிபந்தகநிராஸகன்.

ப.—அநந்தரம், ஸபரிகரமாகத் தம்மை அங்கீகரித்தபடியாலே அவனுக்குப் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தை அருளிச்செய்கிறார்.

இப்பாட்டில் முதலடியில், விட்டுவென்று - திருநாமமாகப்பிரித்து, "விட்டி லங்குமுடியம்மான்" என்று நாலாமடியோடே அந்வயித்துக் கிடக்கிறது; அல்லாத போது, திருநாமம் முதலாய் எழுகிறபாட்டுக்களின் மர்யாதை குலையும். "விட்டு" என்னும் இவ்விடத்தில் உகரம்-குற்றியலாகக் கொள்க.

விட்டு-விஷ்ணுவாய், விட்டு-பறந்து, இலங்கு-விளங்குகிற, முடி-அபிஷேகத்தையுடையனாய், அம்மான்-ஸ்வாமியான, மதுசூதனன்தனக்கு - மதுசூதனன்தனக்கு, இலங்கு-இலங்கி, செம்-சிவந்த, சோதி-ஒளியையுடைய, தாமரையே-தாமரைபோன்றன; பாதம்-திருவடிகளும், கைகள்-திருக்கைகளும், கண்கள்-திருக்கண்களும், விட்டு-விகஸிதமாய், இலங்கு-விளங்காநிற்கிற, கரு-நீலமான, சுடர்-ப்ரபையையுடைத்தான, மலையே - மலைபோன்றது; திரு உடம்பு-அழகிய வடிவு, சீர்-அழகிய, சங்கு-சங்கு, விட்டு-பரம்பி, இலங்கு-விளங்குகிற, மதியமே-சந்த்ரனைப்போன்றது; சக்கரம்-சக்ரம், விட்டிலங்கு-அப்படிப்பட்ட, பரிதியே - ஆதித்யனைப்போன்றது. ஸாமாநாதிகரண்யம் - உபமாநோபமேயபாவத்தாலே.

இ.—அஞ்சாம்பாட்டில், ஸபரிகரரான தம்மை இப்படியாக்கிற்று தன் அழகைக்காட்டி யென்கிறார். "ஆழ்வாரைப்பெற்ற ஹர்ஷத்தாலே திருமேனி உஜ்வலமானபடி" என்று பட்டர் அருளிச்செய்வர். 'விஶாயிதஜடிஸ்ஸாதஸ்ஸிதஶாந்யாநுவெவநீ உஹாஹூவஸெநாராஜஸ்ஹெஸ்ஸ தத்ஶ்ரியாஜஸ்ந்".

[விட்டிலங்கித்யாதி] - விட்டு விளங்காநின்றுள்ள, சிவந்த தேஜஸ்ஸையுடைத்தான தாமரைப்பூப்போலே தலையிலே வைக்கப்புகுகிற திருவடிகளும் அணைக்கப்புகுகிற

கைகளும், குளிரநோக்குகிற கண்களும் [விட்டிலங்கித்யாதி] - அத்யுஜ்வலமான நீல பர்வதம்போலே யாயிற்றுத் திருமேனி. [விட்டிலங்கித்யாதி] - மறுவற்று ப்ரகாசத்தை யுடைத்தான சந்த்ரனைப்போலேயாயிற்று ஸ்ரீபாஞ்சஜந்யம். [சீர்சங்கு] - ஸகவத்ப்ரத்யா ஸத்தியாலே வந்த ஐஸ்வர்யம். சக்கரம், பரிதி - ஆதித்யன். கண்டதில் மின்னிற்றொன்றை உபமாநமாகச் சொல்லுமத்தனையிறே. [விட்டிலங்கித்யாதி] - உத்தமான தேஜஸ்ஸை யெல்லாம் முட்டாக்கிடாநின்றுள்ள தேஜஸ்ஸையுடைய முடி. [அம்மான் மதுசூதனன் தனக்கே] - மதுவைப்போக்கினாற்போலே என் விரோதிவர்க்கத்தைப்போக்கி என்னை அடிமைகொண்ட ஸர்வேஸ்வரனுக்கு.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருமாலையாண்டானோடே எம்பெருமானார் திருவாய்மொழிகேட்டருளுகிற நாளில், பாட்டுக்கள்தோறும் சிலவார்த்தைகளை அருளிச்செய்து "இது அர்த்தமானாலோ" என்றால், "இது விஸ்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறியேன்" என்று பணிக்குமாம் ஆண்டான்; ஆண்டான் "இப்பாட்டுக்கு விஸ்வாமித்ரஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்ததீ!" என்ன, "இப்பாட்டால் - தன் அவயவஸௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினானென்கிறார்" என்று அருளிச்செய்தருளினாராம். அதுவுங் கிடக்க, பட்டர் அருளிச்செய்வதொன்று உண்டு – "ஆழ்வாரையும் ஆழ்வார்பரிகரத்தையும் விஷயீகரித்து அத்தாலே திருமேனியிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறது" என்று; "விஶோபித ஜடாஸ்நாத ஶ்சித்ர மால்யாநுலேபந꞉ । மஹார்ஹவஸநோ ராமஸ் தஸ்தௌ தத்ர ஶ்ரியாஜ்வலந்" (விஶோபிதஜடஸ்ஸ்நாதஶ்சித்ர மால்யாநுலேபந꞉ । மஹார்ஹவஸநோராமஸ்தஸ்த்தௌதத்ர ஶ்ரியாஜ்வலந்) என்று நின்றாற்போலே.

[விட்டிலங்குஇத்யாதி] - மதகுதிறந்தாற்போலே விட்டு விளங்காநின்றுள்ள, சிவந்த ஒளியையுடைத்தான தாமரைபோலே யாயிற்று தாம் தோற்றுவிழும் திருவடிகள், தம்மைஅணைத்த கை, குளிரநோக்கின திருக்கண்கள், இவை. உபமேயத்துக்கு உபமாநம் நேராகப்போராமையாலே, அதுதன்னையே ஶிக்ஷித்துச் சொல்லுகிறார். அன்

---

அஞ்சாம்பாட்டு - விட்டிலங்கு இத்யாதி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, கீழ்ஸபரிகரமாகத் தம்மை விஷயீகரித்தது எத்தாலே யென்னில்; - இப்பாட்டால் தன்னவயவஸௌந்தர்யத்தாலே யென்னைத்தனக்காக்கினான் என்கிறார் என்று கூட்டி நிர்வஹிப்பது; எமரேழெழுபிறப்பும் மேவும் தன்மையமாக்கின குணத்துக்குத் தோற்று "விட்டிலங்கு" இத்யாதி விசேஷணங்களை இட்டேத்துகிறு ரென்று திருமாலையாண்டான் நிர்வாஹமென்று கண்டுகொள்வது. ஒருவனை விஷயீகரித்தத்தாலே உஜ்ஜ்வலனாயிருந்த விடமுண்டோ என்ன, விஶோபித இத்யாதி. இஶ்ஶ்லோகம்-பாதாழ்வானை விஷயீகரித்த அநந்தரத்தி லிருப்பைச் சொல்லுகிறது. யுத்தகாண்டே ஏகத்ரிம்ஶத்தரஶததமே, "ஸ வ்ருத்தஹஸ்தோ ஹஸ்தாக்ஷணே வ்யமோசயத்" இத்யாத்யநந்தரம், "விஶோபித ஜடஸ்நாத꞉" இத்யாதி.

விட்டு-விகஸிதமாய். இலங்கு-விளங்காநின்றுள்ள. யத்வா, விட்டு-புறப்பட்டு. 'தாமரை' என்னாதே, "விட்டிலங்கு" இத்யாதியாலே விசேஷிப்பானென் ? என்ன, உபமேயத்துக்கு இத்யாதி. நேராக - ஒப்பாக. அதுதன்னை - உபமாநந்தன்னை. "அன்றிக்கே விட்டுவிக்கு" என்கிற வாக்யம் - சில ஸ்ரீகோஶங்களிலேயிருக்கிறது, சில ஸ்ரீகோஶங்களி லில்லை. இல்லாதபக்ஷத்திலே, அந்வயம் அருளிச்செய்கிறவிடத்திலே "விட்டுவிக்கு" என்று அருளிச்செய்கையாலும், பாட்டுக்கள்தோறும் கீழ்முடிந்த திருநாமங்களை ஆதியாக அருளிச்செய்கிற ப்ரகரணமாகையாலும்,

ழிக்கே, விட்டுவுக்கு - இலங்குசெஞ்சோதித்தாமரைபாத மென்று அந்வயம். [விட்டிலங்கு இத்யாதி] “ஶோபயந்தண்டகாரண்யம்” (சோபயந்தண்டகாரண்யம்) என்னுமாபோலே இராநின்றது வடிவழகு. தம்மையணைத்தபோதைக் குளிர்ந்தவடிவு இருந்தபடி. விட்டிலங்குகிற ப்ரகாசத்தையுடைய சந்த்ரனைப்போலே யாயிற்று ஸ்ரீபாஞ்சஜந்யம். [சீர்சங்கு] - பகவத்ப்ரத்யாஸத்தியாலே வந்த ஐஶ்வர்யம். *“உண்பதுசொல்லிலுலகளந்தான் வாயமுதம் கண்படைகொள்ளிற் கடல்வண்ணன்கைத்தலத்தே”-ப்ரஸாதத்தைச்சூடிக் கைப்புடையிலே கிடப்பாரைப்போலே, அவன்வாயாலே ஊட்ட உண்டு, வடிவைப் பாராத் திருக்கையிலே சாயுமித்தனை. [சீர்சங்கு] - “உன்செல்வம் சாலஅழகியது” என்னும்படி வாயதுகைய தான ஐஶ்வர்யமிறே. [சக்கரம்பரிதி]-கண்டதில் மின்னிற்றொன்றை உபமாநமாகச்சொல்லுமித்தனையிறே; ஆதித்யனைப்போலேயன்றே திருவாழியாழ்வான் இருப்பது. [விட்டிலங்குமுடி] - இவையித்தனையும் தன்புகராலே முட்டாக்கிடுமோயிற்று

---

ப்ர.—(விட்டிலங்கித்யாதி) ஆரண்யகாண்டே அஷ்டத்ரிம்ஶே ராவணம் ப்ரதி மாரீச:, “ஜாதவ்ருக்ஷஸ்ஸ்ரீமாந் ஸத்வத்ருக்மீ மேகஷண: | வநகவஸ்த்ரயுநோ நீசிவீக்ஷ நக்ஷோபயா ‖ கஅ ‖ ஶோபயந் தண்டகாரண்யம் தீப்தேந ஸ்வேந தேஜஸா | அத்ருஶ்யத ததோ ராமோ பாலவ்யாப்த இவாம்ஶுமாந் ‖ கடு ‖”

---

“விட்டு” என்றதுக்கு - விஷ்ணுவுக்கு என்று அர்த்தாந்தரமுண்டென்று கண்டுகொள்வது. இப்போது, மதுஸூதனனை - விட்டுவுக்கு என்று அந்வயிப்பது. “விட்டு” என்னுமிவ்விடத்தில் உகரம் - குற்றியலாகக் கொள்வது. குற்றியல் - குறுகினசப்தம். அதாவது - உகாரம் லோபித்துக்கிடக்கிறதென்றபடி. ப்ரகாஶாதிசயம் த்ருஷ்டாந்தமுகேநாஹ-ஶோபயந் இத்யாதி. ஶோபயந் தண்டகாரண்யம் தீப்தேந ஸ்வேந தேஜஸா | அத்ருஶ்யத ததோ ராமோ பாலவ்யாப்த இவாம்ஶுமாந்” இத்யாரண்யகாண்டே அஷ்டத்ரிம்ஶே ராவணம்ப்ரதி மாரீச:. கருஞ்சுடரென்று-குளிர்ந்த நிறமென்று அறிந்தபடி யென்? என்ன, தம்மை இத்யாதி. கருமைக்குஅர்த்தம்-குளிர்ந்தவென்கிறது. விகஸிதமாய் விளங்காநிற்கிற நீலமான ப்ரபையையுடைய மலைபோன்ற அழகிய வடிவென்று ஶப்தார்த்தம். “மதி, அம், சீர், சங்கு” என்று பதபேதம்பண்ணி, அம் - அழகிய சங்கென்று விவக்ஷித்து ஸ்ரீபாஞ்சஜந்ய மென்றது. யத்வா, “மதியம்” என்று-சந்த்ரவாசகம் ஒருஶப்தமுண்டு. அப்போது, ஸ்ரீபாஞ்சஜந்யமென்றது - உபசாரோக்தி. சீர்சங்கு - ஐஶ்வர்யமுடைய சங்கு. அழகிய சங்கென்னுதல். சங்குக்குச் சீர்மையேது? என்ன, பகவத் இத்யாதி. ப்ரத்யாஸத்திதன்னைக் காட்டுகிறார் - உண்பது இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி. நீயுண்ணும்படி சொல்லில், திருவுலகளந்தருளினவனுடைய வாகம்ருதமாயிற்று புஜிப்பது; கண்ணுறங்கில், கடல்போன்ற வர்ணத்தையுடையவனுடைய கைத்தலத்திலே யாயிற்று சாய்வது இத்யர்த்த:. எடுத்தபாசுரத்துக்கு அர்த்தம்-ப்ரஸாதத்தை இத்யாதி. சூடி - புஜித்து. கைப்புடை - திருக்கோபுரவாசலிலறை. பாரா-பார்த்துக்கொண்டு. சாயும்-சயிக்கும். இந்தப்ரத்யாஸத்தி ஐஶ்வர்யமோ? என்ன, உன்செல்வம் இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி. உன் ஐஶ்வர்யம் மிகவும் அழகியது இத்யர்த்த:. வாயது கையதான வென்றது - சாடு. “ஸமுத்ரநேமிஜ்ஞாநகோடிஸூர்யஸமப்ரபம்” என்றிருக்க, “பரிதி” என்று ஸூர்யனை உபமாநமாகச்சொல்லுகிறதென்? என்ன, கண்டதில் இத்யாதி. மின்னிற்றொன்றை-ப்ரகாசிப்பதொன்றை. “சக்கரம்” “பரிதி” என்கிற ஸாமாநாதிகரண்யம் - உபமாநோபமேய பாவத்தாலே. மூடிலே சொல்லுகையாலும், விசேஷணமிட்டு உபமாநஞ் சொல்லாமையாலும், உபமேயமாத்ரத்தைச் சொல்லுகையாலும் பலித்த பாவம், இவையித்தனையும் இத்யாதி. “விட்டு” என்று திருநாமமாக விவக்ஷித்தபக்ஷத்திலே அந்வயக்

---

* நாய்ச்சியார்திருமொழி - எ, அ.

திருவபிஷேகம். [அம்மான்மதுசூதனன்தனக்கே]-ஸர்வேஶ்வரனாயிருந்துவைத்து ஆஶ்ரித விரோதிநிரஸந ஸ்வபாவனானவனுக்கு. விட்டுவுக்கு - இலங்குஇத்யாதி - என்று முதலாக அந்வயம். (ரு)

## ஆறாம் பாட்டு.

மதுசூதனையன்றிமற்றிலேனென்று எத்தாலுங்கருமமின்றி
துதிசூழ்ந்தபாடல்கள் பாடியாடநின்றூழியூழிதோறும்
எதிர்சூழல்புக்கெனைத்தோர்பிறப்பும் எனக்கேயருள்கள்செய்ய
விதிசூழ்ந்ததாலெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே.

ஆ.—(மதுசூதனை.) அநாதிகாலந்தொடங்கி இன்றளவும்வர நான்பிறந்த பிறவிகள்தோறும் என்னை வசீகரிக்கைக்கிடான வடிவுகளைக் கொண்டுவந்து பிறந்தருளி என்னை வசீகரித்து, மதுசூதனல்லது எனக்கு மற்றொரு ப்ராப்யமில்லையென்று அத்யவஸித்து தத்வ்யதிரிக்தங்களையெல்லாம் விட்டு ஸர்வகாலமும் நின்று துதிசூழ்ந்தபாடல்கள் பாடியாடுகையாகிற இஸ்ஸம்ருத்தியை எனக்கே தந்தருளுகைக்காக, திரிவிக்கிரமனை எனக்காகவே க்ருபையாகிற விதி சூழ்ந்ததென்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், தன்பக்கலிலே நான் ப்ரவணனாகைக்கு எம்பெருமான் அநேக காலம் வருந்திற்றெல்லாம் தன்னுடைய க்ருபையாலேயென்கிறார்.

[மதுசூதனையென்றதொடங்கி] - மதுஸூதநனையொழிய, மற்றொரு ப்ராப்யத்தை உடையேனல்லேன் என்று அத்யவஸித்து பற்றுள்ள புருஷார்த்தங்களைக் கொண்டு கார்யமின்றிக்கே காலமுள்ளதனையும் நின்று தன்னுடைய ஸ்தோத்ராத்மகமாய் ஸ்பஷ்டமாக வாசகமான பாட்டுக்களைப் பாடி அந்தஹர்ஷத்தாலே ஆடும்படியாக. [எதிரென்றுதொடங்கி] - அநேகஜந்மங்களையெல்லாம் என்னை யகப்படுத்திக்கொள்ளுகைக்கிடான திருவவதாரங்களைப்பண்ணி. [எனக்கேயருள்கள் செய்யவென்று மேலுக்கு]- ஸர்வேஶ்வரனாய்வைத்து ஸர்வஸுலபத்வார்த்தமாக த்ரிவிக்ரமனாயிருக்கிற எம்பெருமானை அதுக்குமேலே எனக்கே நிரவதிக ப்ரஸாதம்பண்ணும்படி எனக்கென்னவே விதி சூழ்ந்தது. தம்மை விஷயீகரித்தல்லது எம்பெருமானை யிருக்கவொட்டாமையால், அவனுடைய க்ருபாகுணத்தை - விதியென்கிறது.

ப.—அநந்தரம், கீழ்ச்சொன்ன உபகாரத்துக்கும் தத்ருதௌஜ்ஜ்வல்யத்துக்கும் ஹேதுவான க்ருபாபாரவஶ்யத்தை அருளிச்செய்கிறார்.

---

காட்டுகிறார்-விட்டுவுக்கு இலங்கு இத்யாதி யென்று முதலாக அந்வயமென்று. "விட்டிலங்கு இத்யாதி" என்று பாடமிருக்குதாகில் முந்தின அர்த்தத்தில் அந்வயங்காட்டுகிறபடியாகிறது. விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனனை தனக்கு - பாதம்கைகள்கண்கள் - விட்டிலங்கு செஞ்சோதித்தாமரையே, திருவுடம்பு - விட்டிலங்கு கருஞ்சுடர்மலையே, சீர்சங்கு - விட்டிலங்குமதியமே, சக்கரம்-பரிதியே யித்யந்வய:. த்விதீயபக்ஷே, விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனனை-விட்டுவுக்கு-பாதம் கைகள் கண்கள் - இலங்குசெஞ்சோதி யித்யாத்ய பூர்வவதேவாந்வய:. (௫)

மதுசூதனையன்றி - (என்விரோதியைப்போக்கின) மதுசூதனையன்றி, மற்று இலேன் - மற்றுப்ராப்யம் உடையேனல்லேன், என்று – என்று, எத்தாலும் - ஏதேனுமொரு பதார்த்தத்தாலும், கருமம்இன்றி - ஒருகார்யம் அற்று, துதி - ஸ்தோத்ரரூபத்தாலே, சூழ்ந்த - (அவன்குணகளுநிகளைச்) சூழ்ந்த - பாடல்கள் - பாடல்களை, நின்று– (ப்ரயோஜநார்த்தமன்றியே, ஸ்வயம்ப்ரயோஜநமாக) நின்று, பாடி - பாடி, ஆட - ஆடும்படி, ஊழியூழிதொறும் - கல்பங்தோறும் கல்பங்தோறும், எனைத்து - அநேகங்களாய், ஓர் - அத்விதீயங்களான, பிறப்பும் – பிறப்புக்கள்தோறும், எதிர் - எனக்குஅபிமுகனுகைக்கிடான, சூழல்புக்கு - சூழ்ச்சியோடேஅவதரித்து, எனக்கே - எனக்கே அஸாதாரணமாக, அருள்கள் - ப்ரதமகடாக்ஷந்தொடங்கி பரமபக்திபர்யந்தமான உபகாரங்களை, செய்ய - பண்ணுகைக்கு, எனக்கு - எனக்குஉறுப்பான, ஏல் - ஏன்றுகோளையுடையவனாய், அம்மான் - ஸ்வாமியான, திரிவிக்கிரமனை - த்ரிவிக்ரமனை, விதி - (தப்பவொண்ணுத) விதி யென்னலாம்படியான க்ருபையானது, சூழ்ந்தது - சூழ்ந்துகொண்டது. ஏலுதல் - கொள்ளுகையாதல்; தருதியாகவுமாம்.

இ.—ஆறும்பாட்டில், தன்பக்கலிலே நான் ப்ரவணனுகைக்கு க்ருபாபரதந்த்ரனாய் அநேக காலம் வருந்தினுன் அவ னென்கிருர்.

[மதுசூதனை இத்யாதி] - விரோதிநிரஸநசீலனையொழிய மற்றொரு ப்ராப்யத்தை உடையேனல்லேனென்று அத்யவஸித்து. [எத்தாலுமித்யாதி] - வேறொரு பதார்த்தத்தாலும் ஒரு ப்ரயோஜநமின்றிக்கே. ப்ராப்யாபாஸங்களிலும் ப்ராபகாபாஸங்களிலும் நெகிழ்ந்து அவனை யொழிந்த எல்லாவற்றுலும் ஒரு ப்ரயோஜநமின்றிக்கேயிருப்பர். [துதிசூழ்ந்தபாடல்கள்] - துதியென்று - ஸ்துத்யகுணமாய், குணங்களைவிளாக்கொலை கொண்டு பேசவற்றுன வாசகசப்தம். ஸ்தோத்ராத்மகமாய் ஸ்பஷ்டமாக வாசகமான பாடலென்னவுமாம். [பாடியாடநின்று] - ஹர்ஷத்தாலே பாடியாடும்படி நின்று. "ஷெஷிஷெ" என்று ப்ரயோஜநங்களைப் பற்றி யகலுகைக்காக வன்றிக்கே, அதிலே நிலைநின்று கல்பங்தோறும் கல்பங்தோறும் இதுவே யாத்ரையாம்படி. உமக்கு இப்பேற்றுக்கு அடியென்? என்ன, - [எனைத்தோர்பிறப்பும் எதிர்சூழல்புக்கு] - நான் இழவுக்கு யத்நம்பண்ணிப்போந்த காலமெல்லாம் என்னைப்பெறுகைக்கு அவன் க்ருஷிபண்ணிப்போருகையாலே பெற்றேன். எதிரானசூழல் - என்னையகப்படுத்திக்கொள்ளுகைக்கிடான திருவவதாரங்கள். [எனக்கேயருள்கள்செய்ய] - எனக்கும் பிறர்க்குமாக வன்றிக்கே எனக்கே யருள்கள் பண்ணும்படி. [அம்மான் திரிவிக்கிரமனை] - எனக்கென்னவே விதிசூழ்ந்தது. ஸர்வேஶ்வரனுய்வைத்து ஶ்ரீவாமநனுய் ஸகலலோகங்களையும் திருவடியின்கீழே இட்டுக்கொண்டவனை. அது பரதசையென்னும்படிஎனக்கென்னவே விதிசூழ்ந்தது. தம்மை விஷயீகரித்தல்லது அவனையிருக்கவொட்டாமையாலே அவனுடைய க்ருபாகுணத்தை - விதியென்கிறது. "ஸ தந்நிவ தி தழ".

ஈடு.—ஆறும்பாட்டு. தன்பக்கல் நான் ப்ரவணனுகைக்கு எம்பெருமான் வருந்திற்றெல்லாம் தன்க்ருபையாலே யென்கிருர்.

---

ஆறும்பாட்டு. - மதுசூதனை இத்யாதி. "எனைத்தோர்பிறப்பும் - எதிர்சூழல்புக்கு-எனக்கேயருள்கள் செய்ய விதிசூழ்ந்ததால்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - தன்பக்கல் இத்யாதி. வருந்திற்றெல்லாம் - ப்ரயாஸப்பட்டதெல்லாம்.

[மதுசூதனையன்றிமற்றிலேனென்று] - விரோதிநிரஸந ஸ்வபாவனானவனை யொழிய வேறுசிலரைத் தஞ்சமாகவுடையேனல்லே னென்றாயிற்று இவர்இருப்பது. ஸத்த்வந்தலையெடுத்தபோது ஒருகால் இவ்வார்த்தை சொல்லுமது நமக்கு முள்ளதோன்றிறே; இவர்க்கு வாசியேன் ? என்னில், - [எத்தாலும்கருமமின்றி] - அந்த உக்திக்குச்சேர்ந்த அநுஷ்டாந முண்டாயிருக்கும். ப்ராப்யாபாஸங்களிலும் ப்ராபகாபாஸங்களிலும் நெகிழ்ந்து, அவனையொழிந்த எல்லாவற்றாலும் ஒருப்ரயோஜநமின்றிக்கே யிருப்பர். [துதிஇத்யாதி] - ஸ்தோத்ராத்மகமான பாடலென்னுதல், ஸ்துத்யகுணங்களை விளாக்கொலை கொள்ளும்படியான பாடல்க ளென்னுதல். கல்பந்தோறும் கல்பந்தோறும் துதிசூழ்ந்த பாடல்களைக்கொண்டு பாடுவது ஆவேதாம்படி பண்ணினான். [நின்று] - "தேஹிமே" (தேஹிமே) என்று ப்ரயோஜநங்களைப்பற்றி யகலுகையன்றிக்கேயிருக்கை. இப்படிஅவன் பண்ணுகைக்கு ஹேதுவேன் ? என்ன, சொல்லுகிறார் : [விதிசூழ்ந்ததால்] - எதிர்சூழல்புக்கு ஒருவனைப் பிடிக்க நினைத்தவன் அவன்போம்வரம்புக்கு எதிர்வரம்பே வருமாபோலே, இவர்பிறந்த ஜந்மங்கள்தோறும் தானும் எதிரேபிறந்து வந்தானாயிற்று. இவர் கர்மமடியாகப் பிறக்க, அவன்அநுக்ரஹத்தாலே பிறந்துவந்தவித்தனை. சூழலென்று அவதாரத்தைச் சொல்லக்கடவதிறே; எனைத்தோர்பிறப்பும் எதிர்சூழல்புக்கு - எனக்கேஅருள்கள்செய்ய விதிசூழ்ந்ததா லென்கிறார். விதியென்கிறது - பகவத்க்ருபையை. பகவத்க்ருபையை விதி யென்பானேன் ? என்னில் ; - அவனுக்குத் தப்பவொண்ணாததாகை

---

ப்ர.—(மதுசூதனை) வ்யூஹாணுவ—ஜாணெ ஜெஹாஜநாஜ ஸஂவாஜெ நாஜஂவ்ர திஜெஹஜாஃ, "தஷ்மிநாஜெஹமவதஃகண—விஷ்ணுஜோவாவஜஹள । ஜஜஸ்த ஜஃவ்யக்ருதிகளஜய—ஜெகெடஹ ஸஂஜ்ஞதள । சுஸஜாளவ்யூஹணொஜெஹ்யதஜஸகா ஜெஜொகககணகள । வெஷாந்தஷீகா ஸஜிஜஂவ்ரவிஷளவ்ரஜயொஜெஃ । தள ஹகாஜாநவஜெஜ்ஜெஷளஹாஜிஹவூயஜிஜாஜஜெந । ஆஜாயவெஷாநாமஹஷதிகஂ வஜெஜெஷிநஃ."

(ஆடநின்று) யஜுஷி, "தெஹிமெஜெதாஜிதெநிஜெயெஹிநிதெதஜெ".

---

தஞ்சமாக - ப்ராப்யப்ராபகமாக. மேலுக்கு அவதாரிகை - ஸத்த்வம் இத்யாதி. தாத்பர்யம்-அந்தவுக்திக்கு இத்யாதி. சப்தார்த்தம்-ப்ராப்யாபாஸங்களிலும் இத்யாதி. ப்ராப்யாபாஸங்கள் - ப்ரயோஜநாந்தரங்கள். ப்ராபகாபாஸங்கள் - உபாயாந்தரங்கள். கருமம்-கார்யம். ப்ரயோஜந மென்றபடி. துதிசூழ்ந்த பாடல்கள் - ஸ்துதியாகச் சூழ்ந்திருக்கிற பாடல்க ளென்று மூன்றின அர்த்தம். சூழுகை - கார்த்ஸ்ந்யேநஸம்பந்தம். ஆகையாலே, ஸ்ப்புடதையைச் சொல்லுகிறது. த்விதீயார்த்தத்திலே, ஸ்தூயதஇதி ஸ்துதிः என்ற-ஸ்துத்யகுணங்களைச் சொல்லுகிற தென்றபடி. விளாக்கொலை கொள்ளுகை-கபளீகரிக்கை. ஊழிமூழிதொறும் - துதிசூழ்ந்த பாடல்கள்-நின்று-பாடியாட என்று அந்வயித்து அர்த்தம், கல்பந்தோறும் இத்யாதி. "நின்று" என்றதுக்கு பாவம்-தேஹிமே இத்யாதி. எதிர்சூழல்புக்கு - சேதநனுக்கெதிரே பிறந்துவந்து. சேதநன் கர்மமடியாகப் பிறக்கிறான், அவன்பிறக்கைக்கு அடியேது? என்ன, இவர்கர்மம் இத்யாதி. ஸ்வோக்தார்த்தஸ்யமூலம் தர்ஶயதி-எனைத்தோர்பிறப்பும் இத்யாதி. "அநுக்ரஹத்தாலே" என்னுமதுக்கு சப்தங்காணுமே யென்ன, விதியென்கிறது இத்யாதி. த்ருஷ்டாந்த கதாமுகேந விவரணம்-நாம்நினைத்த

யாலே. நாம்நினைத்தவை தலைக்கட்டவொட்டாத கர்மம்போலே, ஈஶ்வரன் நினைத்த கார்யங்களும் க்ருபாபரதந்த்ரனாய்த் தலைக்கட்டமாட்டான் ; “ வயார்ஹமபிகாகுத்ஸ்த்தா: க்ருபயாபர்யபாலயத்” (வதார்ஹமபிகாகுத்ஸ்த்த: க்ருபயாபர்யபாலயத்) - காகுத்ஸ்த்தர்கள் தங்களிலும் க்ருபையேவிஞ்சி ரக்ஷித்துக்கொண்டு போரும் குடியிலே பிறந்தவர். வதார்ஹமான காகத்துக்கு விட்ட அம்புக்குட்படக் கண்ணழிவுபண்ணு மவரிறே. [எனக் கேல்இத்யாதி] - ஸர்வேஶ்வரனா யிருந்துவைத்து, ஸ்ரீவாமனனாய்வந்துஅவதரித்து மூன் றடியாலே த்ரைலோக்யத்தையும் திருவடிகளின்கீழே இட்டுக்கொண்டு எல்லாரோடும் பொருந்தின ஸௌலப்யந்தான் பரத்வமென்னும்படி, என்னை விஷயீகரிக்கைக்கு ஒரு விதிசூழ்ந்தது. அம்மான் திரிவிக்கிரமனை எனக்கே அருள்கள்செய்ய - எனக்கேன்னவே ஒருவிதி சூழ்ந்தது.

---

ப்ர.—(விதிசூழ்ந்தது) ஸுந்தரகாண்டே (௩அ) ராமம் ப்ரதி வாயஸவ்ருத்தாந்தகதநே ஸீதா, “ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம்। வதார்ஹமபி காகுத்ஸ்த்த: க்ருபயா பர்யபாலயத் ॥ ௩௪ ॥”

(திரிவிக்கிரமனையே) ஸ்ரீ நாரஸிம்ஹவாமனே, “ தாயயாராதிவதிதா வாமநஸ்ய கரேவாந: । கரே நிபதிதே தோயே வாமநோ வவ்ருதே க்ஷணாத் । வாமநோ நிகநிக்ராஹோ ஸர்வம் ஸந்நிரோத்ய । குதரிக்ஷம் தி தீயே நக்ஷத்ரதீயே நவஸத்த:” (க).

---

இத்யாதி. க்ருபாபரதந்த்ரனாய் நினைத்த கார்யம் தலைக்கட்டமாட்டா னென்னுமதுக்கு ப்ரமாணம்- வதார்ஹம் இத்யாதி. தங்களிலும் க்ருபையே விஞ்சியென்றது - தங்களுக்குஹாநிவந்தாலும் க்ருபையே விஞ்சி யென்றபடி. ஆனால், காகத்துக்குக் கண்ணழிவுசெய்கிறதென்? என்ன, வதார்ஹமான இத்யாதி. இது - ரஸோக்தி. கண்ணழிவு - விளம்பமும், கண்ணையழிக்கையும். அதுவும் க்ருபாகார்ய மென்றபடி. “அம்மான் திரிவிக்கிரமனை எனக்கென்ன - விதிசூழ்ந்தது” என்று அந்வயித்து அருளிச்செய்கிறார் - ஸர்வேஶ்வரனாய் இத்யாதி. “எனக்கு” என்று இரண்டிடத்திலே யிருக்கையாலே, புநருக்திவாரணைக்கு அந்வயங்காட்டுகிறார் - அம்மான் இத்யாதி. ஸ்வாமியான திரிவிக்கிரமனை எனக்கே அஸாதாரணமாக ப்ரதமகடாக்ஷந்தொடங்கிப் பரமபக்தி பர்யந்தமான உபகாரங்களைப் பண்ணுகைக்கு அஸாதாரணமாக ஒருக்ருபைசூழ்ந்துகொண்டதுஎன்று ஶப்தார்த்தம். விதிஶப்தம் - க்ருபாவாசியாகையாலே, “அருள்கள்” என்கிற இது - க்ருபாகார்யபரம். “ஏல்” என்றது - அவதாரணபரமென்று கருதி - எனக்கேன்னவே என்கிறார். “ஏல்” என்றது - ஸந்தோஷாதிசய ஸூசகமவ்யயமாதல். மதுசூதனை யென்று தொடங்கி, ஊழியூழிதொறும் - நின்ற-நிதி சூழ்ந்தபாடல்கள் பாடியாடும்படி - எனைத்தோர்பிறப்பும் - எதிர்சூழல்புக்கு - எனக்கே அருள்கள் செய்ய-அம்மான் திரிவிக்கிரமனை - எனக்கேல் - விதிசூழ்ந்தது இத்யந்வய:. எனைத்து - அநேகங்களாய். ஓர் - அத்விதீயமான. பிறப்பும் - பிறப்புக்கள்தோறு மிதி ஶப்தார்த்த:. ஏலுதல் - தகுதியாகவுமாம். (௧)

## ஏழாம் பாட்டு.

**திரிவிக்கிரமன்சேந்தாமரைக்கணெம்மான் என்சேங்கனிவாய்**
**உருவிற்பொலிந்தவெள்ளைப்பளிங்கு நிறத்தனனென்றென்று உள்ளிப்**
**பரவிப்பணிந்து பல்லூழியூழிநின்பாதபங்கயமே**
**மருவித்தொழும்மனமேதந்தாய் வல்லைகாணென்வாமநனே.**

ஆ.—(திரிவிக்கிரமன்.) ஆஸ்சர்ய திவ்யசேஷ்டிதன், ப்ரபுத்தமுக்தாம்புஜ சாருலோசநன், அழகியதிருப்பவளத்தையுடையவன், ஸுஸ்மிதன், இவற்றாலே என்னை அடிமையாக்கினவ னென்றென்று உள்ளிப் பாவிப்பணிந்து இப்படியே ஸர்வ காலமும் உன்னுடைய பாதபங்கயமே மருவித்தொழும் மனமே தந்தாய்; வல்லைகாண் எம்பிரானே! வல்லைகாண், ஒருவர்க்குஞ் செய்ய முடியாதனவெல்லாஞ் செய்ய வல்லா னொருவனல்லையோ வென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், உன்னுடைய குணாநுஸந்தாநபூர்வகமாக ஸ்துதிப்ரணாமாதிகளைப் பண்ணிக்கொண்டு உன்னை யநுபவிக்குமிதுவே ப்ரயோஜநமாகக் கொண்டிருக்கும் மநஸ்ஸை எனக்குத் தந்தாய்; ஸ்ரீவாமநனான உனக்கு அரியதுண்டோ? என்கிறார்.

[என்செங்கனிவாயென்றுதொடங்கி] - சிவந்து தோற்றின திருவதா நிறத்திலே பகைத்தொடையனாய் அதியவளமான திருமுத்தின் நிறத்தைக்காட்டி என்னை ஈடுபடுத்தினவன். [என்றென்றுதொடங்கி] - இப்படி பலகால் நினைத்தும் அடைவுகெடப் பேசியும் குணபரவசனாய் வணங்கியும் இப்படி காலதத்வமுள்ளதனையும் அநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு உன்திருவடிகளிலே அடிமைசெய்யும்படியான மநஸ்ஸைத் தந்தாய், என் வாமனனேயென்று - எம்பெருமானை யுகக்கிறார்.

ப.—அநந்தரம், ஸ்வாநுபவத்துக்கு உறுப்பாக ஸத்வோத்தரமான மநஸ்ஸைத்தந்தா னென்கிறார்.

திரிவிக்கிரமன் - த்ரைவிக்ரமாபதாநத்தாலே லோகத்தை அநந்யார்ஹமாக்கினவனாய், (அதுபோலே), செம் - சிவந்த, தாமரை - தாமரைபோன்ற, கண்-கண்ணாலே, எம்மான் - ("ஜிதம்" என்னும்படி) என்னை அடிமைகொண்ட ஸ்வாமியானவன், செம்-சிவந்த, கனி - கனிபோலேயிருக்கிற, வாய் - திருப்பவளத்தின், உருவில் - வடிவிலே, பொலிந்த - புறம்பிவளர்ந்துவருகிற, வெள்ளை - வெளுத்த, பளிங்கு - பளிங்குபோலேயிருக்கிற, நிறத்தன் - திருமுத்தின்நிறத்தை, என் - எனக்குஅநுபவிப்பித்தவன், என்றென்று - என்றென்று தனித்தனியே, உள்ளி - (சேஷ்டிதத்தையுங்கண்ணழகையும் முறுவலழகையும்) நெஞ்சாலேஅநுபவித்து, பரவி - (அதுள்ளடங்காமையாலே அக்ரமமாகப்) பரவி; பணிந்து - (அந்தப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டுதிருவடிகளிலே) விழுந்து, பல் - பலவகைப்பட்ட, ஊழியூழி - கல்பவிபாகத்தையுடைத்தான காலதத்வமுள்ளதனையும், நின் - (ப்ராப்தனான) உன்னுடைய, பாதபங்கயமே - போக்யமான திருவடிகளிலே, மருவி - (அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு) பொருந்தி, தொழும் - அடிமைசெய்யும், மனமே - மநஸ்ஸையே, தந்தாய் - தந்தாய், என்வாமனனே - என்வாமநனே! வல்லை

காண் - வல்லேகாண். மஹாபலியினுடைய நெஞ்சை வஞ்சித்து அநுகூலமாக்கின நீ, என்னெஞ்சையும் அநுகூலிப்பிக்க ஶக்தனென்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், உன்னையநுபவிக்குமிதுவே ப்ரயோஜநமென்னும் மநஸ்ஸைத் தந்தா யென்கிறார்.

[திரிவிக்கிரமனென்று தொடங்கி] - ஸகலலோகங்களையும் தன் ஸௌலப்யத்தாலே காற்கீழே யிட்டுக்கொண்டான். என்னைத் தன் கண்ணழகாலே தோற்பித்துப் புறம்புள்ள துவக்கை யறுத்தான். [என்செங்கனிவாயித்யாதி] - சிவந்து கனிந்த திருவதரத்தின் நிறத்திலே உஜ்வலமாய், வெள்ளைப்பளிங்குபோலே அதியவளமான திருமுத்தின் நிரையின் நிறத்தைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவன். [என்றென்றித்யாதி]- இப்படிப் பலகாலும் நினைத்தும் அடைவுகெடப் பேசியும் குணபரவஶனாய்வணங்கி, இப்படி காலதத்வமுள்ளதனையும் ஹோக்யமுமாய் ப்ராப்தமுமான உன் திருவடிகளையே யநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு அடிமைசெய்யும் மநஸ்ஸையே தந்தாய். விஷயாந்தரங்கள் அஸ்திரமுமாய் அஹோக்யமுமாமாகையாலே. "வஞ்சூ ஹிஜநஃ" என்னும்படியிறே யிருப்பது. [வல்லேகாணென் வாமனனே] - ஶுக்ராதிகள் வார்த்தை செவிப்படாதபடி மஹாபலியை வடிவழகாலே வஞ்சித்தாற்போலே, என்னை அநந்யார்ஹனாக்கிக்கொள்ள வல்லேகாண். இஶ்ஶக்தியை உடையவனுக்கு முடியாததுண்டோ?

ஈடு.—ஏழாம்பாட்டு. உன்னுடைய குணஙஸந்தாநபூர்வகமாக ஸ்துதிப்ரணாமங்களைப் பண்ணிக்கொண்டு உன்னை அநுபவிக்கும் இதுவே ப்ரயோஜநமாயிருக்கும் மநஸ்ஸை எனக்குத் தந்தா யென்கிறார்.

[திரிவிக்கிரமன்] - மூன்றடியாலே ஸகலலோகங்களையும் தன்காற்கீழே இட்டுக்கொண்டவன். [சேந்தாமரைக்கணெம்மான்] - நோக்காலே என்னைத் தன்காற்கீழே இட்டுக்கொண்டவன். [என்செங்கனிவாய்இத்யாதி] - இவர் "ஜிதம்" (ஜிதம்) என்றபின்பு, அவன் ஸ்மிதம்பண்ணினபடி. என்னை அநந்யார்ஹனாக்குகையாலே சிவந்து கனிந்த திருவதரத்தினுருவிலே - அழகிலே, நிறத்திலே, பொலிந்த - பரபாகத்தாலே ஸம்ருத்தமாய், பரிசுத்தமான ஸ்ப்படிகம்போலே யிருக்கிற திருமுத்துநிரையினுடைய நிற

---

ப்ர.—(என்செங்கனிவாய்) ஜிதஙாயாம் "ஜிதந்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விஶ்வபாவந | நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ மஹாபுருஷ பூர்வஜ".

---

ஏழாம்பாட்டு. - திரிவிக்கிரமன் இத்யாதி. "மருவுத்தொழும் மனமேதந்தாய்" என்றதைப்பற்ற-உன்னையநுபவிக்குமிதுவே ப்ரயோஜநமாயிருக்கும் மநஸ்ஸை என்றது.

ஸாரம் - மூன்றடியாலே இத்யாதி. "செந்தாமரைக்கணெம்மான்" என்ற பதங்களுக்கு ஸாரம் - நோக்காலே இத்யாதி. "எம்மான்" என்றதைப்பற்ற, ஜிதமென்றபின்பு என்றது. "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்றது விவக்ஷிதம். "எம்மான்" என்றதொடங்கி சப்தார்த்தம்- என்னை இத்யாதி. அழகிலே நிறத்திலே யிதி - "உரு" என்ற - அழகாய், அத்தாலே நிறத்தைச் சொல்லுகிறதென்று கருத்து. திருவதரத்துக்கு அழகாவது - சிவந்தநிறத்தை யுடைத்தாகையிறே. உருவாலே - அழகாலே பொலிந்த வண்மையையுடைய இதி ஶப்தார்த்தஃ. பளிங்கு - ஸ்ப்படிகம். திருமுத்தை "பளிங்கு" என்றது -'முற்றவமையாலே. ஒருவிஷயத்தினுடைய ஸ்மிதம் அப்படி

த்தை யுடையவன். [என்றேன்றுள்ளி] - இதரவிஷயங்களினுடைய ஸ்மிதத்திலுண் டான ஸ்ம்ருதி, அகவாய்கண்டவாறே விட்டல்லது நிற்கவொண்ணுதா யிருக்குமிறே; இதுமாருதே அநுஸந்திக்கலாமிறே. [பரவிப்பணிந்து] - அக்ரமமாகக் கூப்பிட்டு, நிர்மம ளுய்த் திருவடிகளிலே விழுந்து. இப்பேறுதா ளுெருநாளுண்டாய் மற்றைநாள் மறுக்கை யன்றிக்கே, [பல்லூழியூழி] - கல்பந்தோறும், கல்பந்தோறும் பரமபோக்யமான உன் திரு வடிகளையே அநந்யப்ரயோஜநனுய்க்கொண்டு தொழும் மநஸ்ஸைத்தந்தாய். விஷயாந்தரங் கள் அஸ்த்திரமாகையாலும் அபோக்யமாகையாலும் ஒன்றையே பற்றிநிற்க விஷயமில்லை யாகையாலே, மநஸ்ஸு "சஞ்சலம் ஹி மந:" (சஞ்சலம்ஹிமந:) என்று சஞ்சலமாயிறே யிருப்பது; அப்படியன்றியே, நித்யமுமாய் நிரதிஶயபோக்யமுமா யிருக்கையாலே மருவித் தொழும் மநஸ்ஸைத் தந்தா யென்றுமாம். பழையநெஞ்சைத் திருத்தினவளவன்றிக்கே, கருவூலத்திலே ஒருநெஞ்சைத்தந்தாய். திவ்யம் ததாமி போலே. "பழையநெஞ்சுஇது"என்று ப்ரத்யபிஜ்ஞை பண்ணவொண்ணுதபடி இராநின்றது. [என்வாமனனே வல்லைகாண்]- கோள்கைக்கும் கொடுக்கைக்கும் உனக்கு ஒன்றேயோ பரிகரம். வாமநவேஷத்தைக்

---

ப்ர.—(மனமே தந்தாய்) ஸ்ரீமத்கீதாஸு ஷஷ்டே, "யோயம் யோகஸ்த்வயா ப்ரோக்தஸ் ஸாம்யேந மதுஸூதந | ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ||௩௩|| சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் | தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ||௩௪||".

(தந்தாய்) தத்ரைவ ஏகாதஶே, "ந து மாம் ஶக்யஸே த்ரஷ்டுமநேநைவ ஸ்வசக்ஷுஷா | திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகமைஶ்வரம் ||அ||".

---

அகவாதாநுஸந்தாநவிஷயமா யிருக்குமோவென்ன, இதரவிஷய இத்யாதி. அகவாய்-துர்க்கந்த மாம்ஸாதி மயாந்த: ப்ரதேஶம். மாருதேயென்றது - வீப்ஸையைப்பற்ற. மறுக்கை - இல்லாதே போகை. யாவத்காலம் மருவித்தொழுகைக்கு இரண்டுஹேது - அநந்ய ப்ரயோஜநத்வமும், பக வந்நிரதிசயபோக்யத்வமும். எததுபயவித ஹேதுவைப்பற்ற நிர்வாஹத்வயமாஹ-பரமபோக்ய மான இத்யாதியாலும், விஷயாந்தரங்கள் இத்யாதியாலும். "மருவித்தொழும் மனமேதந்தாய்" என்றதுக்கு அர்த்தத்வயம் - விஷயாந்தர ப்ரவணமான மநஸ்ஸைத் திருத்தி உன்னை மருவித்தொ ழும் மனமே தந்தாய் என்னுதல், கருவுகலத்திலே ஒருநெஞ்சைத் தந்தாயென்னுத லென்று. முந் தின அர்த்தத்தை விஷயாந்தரங்க ளித்யாதி வாக்யத்தாலே அருளிச்செய்து, த்விதீயார்த்தத்தை அருளிச்செய்கிருர்-பழையநெஞ்சை இத்யாதி. மநவுகை - அநந்ய ப்ரயோஜநத்வமாதல், அநந்ய பரதையாதல். கருவூலம் - திருவாபரணுதிக ளிட்டுவைக்கும் அறை; ஸ்ரீபண்டார மென்றபடி. அதிலுள்ள நெஞ்சுகளிலே ஒருநெஞ்சை யென்றபடி. புதியதாக ஒன்றைக் கொடுத்தவிடமுண் டோ? என்ன, திவ்யம் ததாமி போலே என்ற. கீதாஸு ஷஷ்டே, "சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்" இத்யாதி. ஏகாதஶே, "ந து மாம் ஶக்யஸே த்ரஷ்டுமநேநைவ ஸ்வசக்ஷுஷா | திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகமைஶ்வரம்". கருவுகலத் திலே ஒரு நெஞ்சைத் தருகையாவது என்? என்ன, பழையநெஞ்சு இத்யாதி. விவரணம்-வாமந

காட்டி என்னெஞ்சைத் திருத்தித்தந்தாய் ; அவ்வடிவழகாலே, மஹாபலி, "என்னது" என்றிருந்த பூமியை யபஹரித்தாய் ; வல்லேகா ணென்று - உகக்கிறார். (எ)

## எட்டாம் பாட்டு.

வாமனனென்மரதகவண்ணன் தாமரைக்கண்ணினன்
காமனைப்பயந்தாய் என்றென்று உன்கழல்பாடியேபணிந்து
தூமனத்தனனாய்ப் பிறவித்துழதிநீங்க என்னைத்
தீமனங்கெடுத்தாய் உனக்கென்செய்கேன்? என்சிரீதரனே!

ஆ.—(வாமனன்.) நிரதிஶய ஸௌந்தர்யஜந்மபூமியாயிருந்த உன்னுடைய வடிவையும்அழகையும் அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு பாடி, உன் திருவடிகளைப் பணிந்துகொண்டு ப்ரதிபந்தகங்களைப் போக்கும்படி என்னுடைய மநஸ்ஸை உன் திருவடிகளல்லது மற்றொன்றுஅறியாதபடி பண்ணினாய் ; ஸ்ரீமானே ! உனக்கு நான் என்னகைம்மாறு செய்வது ? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், எம்பெருமான் பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

[என் மரதகவண்ணன்] - எனக்கு ஶ்ரமஹரமான நிறத்தையுடையவன். [காமனைப்பயந்தாய்]-லோகத்தையெல்லாம் தன்னழகாலே பிச்சேற்றும் காமனுடைய அழகுக்கும் உபாதாநமானவனே. [என்றென்று தொடங்கி] - கீழ்ச்சொன்ன திருநாமங்களை இனிதாகச் சொல்லாநின்றுகொண்டே உன் திருவடிகளிலே விழுந்து நிர்த்தோஷாந்தஃகரணனாய் ஸாம்ஸாரிகதுஃகமெல்லாம் நீங்கும்படியாக என்னுடைய மநோதோஷத்தைப் போக்கினாய். பூர்ணனாகையாலே உனக்கு ப்ரத்யுபகாரமாக என்னாற்செய்யலாவது காண்கிறிலேன்.

ப.—அநந்தரம், அநுபவத்துக்கு உறுப்பல்லாத பொல்லாத நெஞ்சைப் போக்கின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமுண்டோ ? என்கிறார்.

வாமனன் - (ஸர்வஸுலபனான) வாமநனே ! என் - எனக்கு அநுபாவ்யமான, மரதகவண்ணன் - மரதகம்போன்ற வடிவழகையுடையவனே ! (ஹோக்தாக்களைக்கண்டு உகந்து பூர்ணமாகநோக்கும்), தாமரை - தாமரைபோலும், கண்ணினன்-கண்ணையுடையவனே ! காமனை – எல்லாரும் ஆசைப்படும்அழகை யுடைய காமனுக்கும், பயந்தாய்-உத்பாதகனானவனே ! என்றென்று - என்றென்றுசொல்லி, உன்கழல் - உன்திருவடிகளை, பாடியே - பாடியே, பணிந்து - பணிந்து, தூமனத்தனனாய் - (ப்ரயோஜநாந்தரங்களிற் போகாத) சுத்தமநஸ்ஸையுடையேனாய், பிறவி - ஜந்மப்ரயுக்தமான, துழதி- அலமாப்பு,

---

வேஷத்தை இத்யாதி. திரிவிக்கிரமன் இத்யாரப்ய, நிறத்த னென்றென்று - பல்லூழியூழி - உன் விப்பரவிப்பணிந்து - நின்பாதபங்கயமே மருவித்தொழும் மனமே தந்தாய்; என்வாமனனே-வல்லை காண் இத்யந்வயஃ. வல்லைகாண் - நீ ஶக்தனன்றோ வென்றபடி. வல்லை - ஶக்தனேயென்று ஸம்போதநம். (எ)

நீங்க - தீரும்படியாக, என்னை - என்னை, தீமனங்கெடுத்தாய் - (விஷயாந்தரங்களிலே அந்யபரமான) தீயமனங்கெட்டுப்போம்படி பண்ணினாய்; என் - இப்படி எனக்கு உபகாரகனான, சிரீதரனே - ஸ்ரீமானே! உனக்கு - (பரிபூர்ணனான) உனக்கு, என் - எத்தை, செய்கேன் - செய்கேன்? ஸ்ரீயஃபதியாகையாலே பூர்ணனான உனக்குச் செய்யலாவதொரு ப்ரத்யுபகாரமில்லை யென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில். என் திறத்தில் நீ பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

[வாமனனித்யாதி] - ஸௌலப்யத்தையும், ஶ்ரமஹரமான வடிவழகையும், அதுக்குப்ரகாசகமாய் தன்பேறாகநோக்கின கண்ணழகையுமுடையவன். [காமனைப் பயந்தாய்]-லோகத்தையெல்லாம தன்னழகாலே பிச்சேற்றும் காமனுடைய அழகுக்கும் உத்பாதகனானவனே. மாநஸாநுபவ வைஶத்யத்தாலே முன்னிலையாகப்பேசுவர் ஒரோவிடங்களிலே; அதுக்குமேலே சிலபரிமாற்றங்களை யாசைப்பட்டு, அதுகிடையாமையாலே படர்க்கையாகப் பேசுவர்; இவையிரண்டுக்கும் அடி அபிநிவேசம். [என்றென்றித்யாதி]-இத்திருநாமங்களை இடைவிடாதே ப்ரீதிப்ரேரிதனாய்ச்சொல்லி, அத்தாலும் பர்யாப்தி பிறவாமையாலே உன்திருவடிகளிலே விழுந்து. [தாமனத்தனாய்] - பந்தஹேதுவன்றிக்கே குணாநுபவமே யாத்ரையாம்படியான நிர்த்தோஷாந்தஃகரணனாய். [பிறவித்துழதிநீங்க] - ஜந்மமாகிற துழதியுண்டு - தூர்துஃகம், அது போம்படியாக. [என்னைத்தீமனங்கெடுத்தாய்] - விஷயாந்தரஸ்பர்ஶியான நெஞ்சைப் போக்குவதுஞ் செய்தாய். [உனக்கித்யாதி] - ஶ்ரியஃபதியாகையாலே பூர்ணனான உனக்கு என்னால் ப்ரத்யுபகாரமாகச் செய்யலாவது ஒன்றும் காண்கிறிலேன், ப்ரத்யுபகாரம் பண்ணியல்லது நிற்கமாட்டுகிறிலேன்.

ஈடு —எட்டாம்பாட்டு. எம்பெருமான் தந்திறத்திற் பண்ணினஉபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங் காணாமல் தடுமாறுகிறார்.

[வாமனன்] - வடிவழகைச் சொல்லுகிற தென்னுதல், நன்மைகளைத் தருமவனென்னுதல். [என்மரதகவண்ணன்] - ஶ்ரமஹரமான வடிவழகை என்னைஅநுபவிப்பித்தவன். [தாமரைக்கண்ணினன்] - வடிவழகேயன்றிக்கே, அகவாயில்தண்ணளிக்கு ப்ரகாஶகமான திருக்கண்களையுடையவன். [காமனைப்பயந்தாய்]-வடிவழகாலே நாட்டை வெருட்டித்திரிகிற காமனுக்கு உத்பாதகனானவனே! அநுஸந்தாநத்திலே ஒருவைஶத்யம் பிறந்தவாறே முன்னிலைபோலே தோற்றும், அப்படியுஞ் சொல்லிக் கூப்பிடுவர்; அதுக்குமேலே சிலபரிமாற்றங்களை ஆசைப்பட்டு அதுகிடையாமையாலே படர்க்கையாகவுஞ் சொல்லிக் கூப்பிடுவேர்; இவையிரண்டுக்கும் அடி அபிநிவேசம். [என்றென்றுஇத்யாதி]-

---

எட்டாம்பாட்டு.—வாமனன் இத்யாதி. "உனக்கென்செய்கேன்" என்றதிலே நோக்காக அவதாரிகை-எம்பெருமான் இத்யாதி. "வாஞ்ஸாநுரூபயோஃ" என்றத்தைப்பற்ற, வடிவழகை இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, வாமம் என்ற - ஸுகமாய், "ஆஷ்ருநுஸாஸாரோநிநயதீதி-வாமநஃ" என்றபடி. நன்மைகளை - ஸுகங்களை. மரதகசப்தார்த்தம்-ஶ்ரமஹரமான என்றது. அகவாயில் தண்ணளி - அந்தஸ்ஸௌஶீல்யம். வெருட்டி - ப்ரமிப்பித்து. "வாமனன்" இத்யாதியாலே - பரோக்ஷமாகவும் "காமனைப்பயந்தாய்" என்று - அபரோக்ஷமாகவுஞ் சொல்லக்கூடுமோ? என்ன, அநுஸந்தாநத்தில் இத்யாதி. முன்னிலை - அபரோக்ஷம். அதுக்குமேலே, சிலவென்றது - பாஹ்யஸம்ஶ்லேஷத்தை. இவையிரண்டுக்கும் - பரோக்ஷமாகவும், அபரோக்ஷ

இத்திருநாமங்களை இப்படி வாயாலே மாறாதே சொல்லாநிற்கத் திருவடிகளிலே விழுந்து. [தூமனத்தனனாய்] - பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவான நெஞ்சின்றிக்கே, மோக்ஷத்துக்கே ஏகாந்தமான நெஞ்சை யுடையனாய். பரிசுத்தாந்தஃகரணனாய். அதின்பலமாய் வருமதிறே ஜந்மம் போமது; பிறவித்துழதியுண்டு-தூர்துஃகம், அது நீங்கும்படியாக. [என்னைத்தீமனங்கெடுத்தாய்] - அம்ருதத்தையும் விஷத்தையு மொக்க விரும்புவாரைப்போலே, உன்னையும்உகந்து க்ஷுத்ரவிஷயங்களையும் உகக்கும் பொல்லாத நெஞ்சைத் தவிர்த்தாய். நல்லநெஞ்சைத் தந்த வளவன்றிக்கே, பொல்லாத நெஞ்சைக் கொடுப்பதுஞ் செய்தாய். [உனக்கு இத்யாதி] - பண்ணின உபகாரத்தின் கனத்தாலே ப்ரத்யுபகாரம்பண்ணியல்லது தரிக்கமாட்டுகிறிலேன். அதுக்கு விரகு காண்கிறிலேன். நான் ஒரு உபகாரங் கொள்ளாதொழிதல், நீ குறைவாளனாதல் செய்யப் பெற்றிலேன், புஷ்கலனாயிருக்கிற உனக்கு நான் எத்தைச்செய்வேன்? (அ)

## ஒன்பதாம்பாட்டு.

சிரீதரன்செய்யதாமரைக்கண்ணன் என்றென்றிராப்பகல்வாய்
வெரீஇ அலமர்ந்துகண்கள்நீர்மல்கி வெவ்வுயிர்த்துயிர்த்து
மரீஇயதீவினைமாள இன்பம்வளரவைகல்வைகல்
இரீஇ உன்னையென்னுள்வைத்தனை என்னிருடீகேசனே!

ஆ—(சிரீதரன்.) ஸ்ரீதரனாகையாலே செய்யதாமரைக்கண்ண னென்றென்று இராப்பகல் வாய்வெருவி அலமந்து கண்கள் நீர்மல்கி வெவ்வுயிர்த்துயிர்த்து

---

ப்ர.—(வாமனன்) ஊஷ்ஞ நீஷுகாஷூா, வாரோதி - ஸாவாதி நயதீதி வாநேநஃ, ஸவஹாணிவாரோதி நயதீதிஶூநேதஃ [ஊாo-உ-சு-கரு]."

---

மாகவுஞ் சொல்லிக்கூப்பிடுகிற இரண்டுக்கும். "என்றென்று-பாடியே-உன்கழல்பணிந்து" என்று அந்வயித்து அர்த்தம் - இத்திருநாமங்களை இத்யாதி. பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான வென்றது - "ஶநவஶநஷ்யாணாoகாரணoவஐநூமோக்ஷயோஃ" என்றத்தைப்பற்ற. ஶப்தார்த்தம் - பரிசுத்த இத்யாதி. தூய்மை - சுத்தி. பௌர்வாபர்யத்துக்கு ஸாவம் - அதின்பலமாய் இத்யாதி. அது - ஜந்மப்ரயுக்ததுஃகம். என்னைத்தீமனங்கெடுத்தாய் - என்னை விஷயாந்தரங்களிலே தத்பரமான தீமநங்கெட்டுப்போம்படி பண்ணினையிதி சப்தார்த்தஃ. "மருவித்தொழும்மனமே தந்தாய்" என்றபோதே - பொல்லாதநெஞ்சைத் தவிர்த்தமை ஸித்தமன்றோ வென்ன, நல்லநெஞ்சை இத்யாதி. அதாவது-அநர்யப்ரயோஜநமானாலும் கதாசித்விஷயப்ராவண்யம் ஸம்பாவிதமாகையாலே அத்தைத் தவிர்த்தா யென்னுதல்; கீழ் - அந்வயமுகேந அருளிச்செய்து, இங்கே - வ்யதிரேகமுகேந அருளிச்செய்கிறா ரென்னுதல். "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்றது- "மதஷாoஸதயாநா நாoஹஜதாo" இத்யாதி ஶ்லோகார்த்தம்; "தீமனங்கெடுத்தாய்" என்றது - "மதஷாமெவாநகூரமஹஜாநஜநஃ | நாஶயாமி" இத்யாதி ஶ்லோகார்த்தம். தாத்பர்யம்-பண்ணின இத்யாதி. அதுக்கு-ப்ரத்யுபகாரம்பண்ணுகைக்கு. தீமனங்கெடுத்தாய் - சிரீதரனே - உனக்கென் செய்கேனென்று கூட்டி ஸாவம்-நான் ஒரு இத்யாதி. "சிரீதரன்" என்கிற இத்தால் பலிதம்-புஷ்கலனாய் இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (அ)

மருவியிருந்த தீவினைகள் மாள இன்பம்வளர எப்போதும் உன்னை என்னுள்ளே இருத்தி வைத்தருளினாய்; இப்படி உன்னழகாலே என்னுடைய கரணங்களையும் தோற்பித்தவனே, உனக்கு என்செய்கேன்? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஆடியாடியிற்பிறந்த வ்யஸநமெல்லாம் போய் மிகவும் ப்ரீதனும்படி என்னுள்ளே வந்து பேராதபடி புகுந்தருளி, என்னுடைய இந்த்ரியங்களை நீயிட்ட வழக்காக்கினாய் என்று ப்ரீதராகிறார். பக்தி பூர்வகமாக உன்னை யநுபவியாநிற்க, ப்ரதிபந்தகங்களும் நீங்கி நிரதிஶய ஸுகமும் பிறக்கும்படியாக உன்னை என்னுள்ளே வைத்தாயென்று ப்ரீதராகிறா ரென்றுமாம். வாய்வெரீஇ - வாய்வெருவி. மரீஇய - மருவின. இரீஇவைத்தனை - இருத்தி வைத்தாய்.

ப.—அநந்தரம், விஶ்லேஷதுஃகம் தீரும்படி என்னெஞ்சுக்குள்ளே புகுந்து, நான் ஹ்ருஷ்டனும்படி அநுபவிப்பித்தா னென்கிறார். தூமனத்திலே தோற்றுவித்த பக்திக்கு விஷயமாய்க்கொண்டு நான் உகக்கும்படி புகுந்தா னென்கிறா ரென்றுமாம்.

சிரீஇதரன் - ஶ்ரிய:பதியானவன், செய்ய - அவளோட்டை ஸம்ஶ்லேஷப்ரீதியாலே செவ்விபெற்ற, தாமரை – தாமரைபோலும், கண்ணன் - கண்ணையுடையவன், என்று என்று - என்றென்று, ("இவளிராப்பகல்வாய்வெரீஇ" என்கிறபடியே), இராப்பகல் - இரவும் பகலும், வாய்வெரீஇ - வாய்வெருவி, அலமந்து - ("எங்கும்நாடிநாடி" என்கிறபடியே) அலமந்து, கண்கள் நீர்மல்கி - ("குவளையொண்கண்ணநீர்கொண்டாள்", "கேழிலொண்கண்ணநீர்கொண்டாள்" என்கிறபடியே) கண்ணநீர்மல்கி, வெவ்வுயிர்த்து உயிர்த்து-("உள்ளம்மலங்கவெவ்வுயிர்க்கும்" "நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும்" என்கிறபடியே) பலகாலும் வெவ்விதாக நெடுமூச்செறிந்து, மரீஇய - (இப்படி ஆடியாடியில்) மருவின, தீவினை - தீவினை, மாள - போம்படியாக, இன்பம்வளர - (அந்தாமத்தன்பு தொடங்கி) இன்பம்வளரும்படி, வைகல்வைகல் - ஸர்வகாலமும், என் இருடீகேசனே - என் இந்த்ரியங்களுக்கு நியாமகனுகையாலே, என்னுள் - (உனக்குவிதேயமான) என் னெஞ்சிலே, உன்னை - (நியந்தாவாய் போக்யனான) உன்னை, இரீஇ - ("பக்கநோக்கறியான்" என்கிறபடியே) இருத்தி, வைத்தனை - வைத்தாய்.

பக்திபாரவஶ்யத்தாலே வந்த விகாரத்தை - வெவ்வுயிர்த்துயிர்த்து அநுதியாகச்சொல்லி, ப்ராப்திப்ரதிபந்தகநிவ்ருத்தி பிறந்து அநுபவாநந்தம் வளரும்படி ஸம்ஶ்லேஷித்த ப்ரகாரத்தைச் சொல்லிற்றாகவுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஆடியாடியிற்பிறந்த வ்யஸநமெல்லாம் போய் ஹ்ருஷ்டனும்படி என்னுள்ளே வந்து புகுந்தருளி, என்னுடைய இந்த்ரியங்களை நீயிட்ட வழக்காக்கினை யென்று ப்ரீதராகிறார். பக்திபூர்வகமாக உன்னை யநுபவியாநிற்க, ப்ரதிபந்தகங்களும் நீங்கி நிரதிஶய ஹர்ஷம் பிறக்கும்படி உன்னை என்னுள்ளே வைத்தாயென்று ப்ரீதராகிறா ரென்றுமாம்.

[சிரீஇதரன்] - "ஶ்ரியாஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே" என்று நித்யஸூரிகளோலக்கத்திலே பிராட்டியும் தானும் சேரவிருக்கு மிருப்பிலே யாயிற்று - இவர் ஊனில் வாழுயிரில் ஆசைப்பட்டது. [செய்ய தாமரைக்கண்ணன்] - நீர்பாய்ந்த பயிர்போலே, அவள் ஸந்நிதியாலே குளிர்ந்த திருகண்களையுடையவன். "வக்ஷஸ்ஸ்தலஸ்ரியோபேதம்

ஹ்ருதிஸ்தா: | விஸ்தாரிவக்ஷோத்வய...'', "மையகண்ணாள்" என்றிறே அவளை யநுபவிக்கிறவன் கண்ணிருப்பது. [என்றென்றித்யாதி] - பக்திபாரவஶ்யத்தாலே இவர் தேஹயாத்ரை யிருக்கும்படியிறே யிது" என்று பூர்வர்கள் நிர்வாஹம்; "ஆடியாடியிலோடின ஆர்த்தி சொல்லுகிறது - இன்பம் வளர, என்கிறதுக்கு முன்பு" என்பர் பட்டர். [இராப்பகல் வாய்வெரீஇ] - "இவளிராப்பகல் வாய்வெரீஇ" என்கிறவிடம். வாய்வெருவி. [அலமந்து]-"எங்கும்நாடி நாடி" என்கிறத்தைச் சொல்லுகிறது. [கண்கள் நீர்மல்கி]-"தனகுவளையொண் கண்ணநீர்கொண்டாள்" என்கிறத்தைச் சொல்லுகிறது. [வெவ்வுயிர்த்துயிர்த்து]- "உள்ளம் மலங்க வெவ்வுயிர்க்கும்" என்கிறவிடம். [மரீஇய தீவினை மாள]-பொருந்தின து:கம் ஸவாஸநமாகப் போம்படி. மரீஇய - மருவிய. ஆயிரமாண்டு முதலையின் கையிலே யானை இடர்பட்டாற்போலே ஆடியாடியில் இவாற்றாமை. [இன்பம்வளர]-அந்தாமத்தன்பு தொடங்கி இவ்வளவும் வர விளைந்த ப்ரீதியைச் சொல்லுகிறது. [வைகல்வைகல்] - நாள்தோறும் நாள்தோறும். [உன்னையென்னுளிரீஇவைத்தனை] - இருத்திவைத்தாய். து:க நிவ்ருத்திக்கும் ஸுகவ்ருத்திக்குமாகப் பண்ணின க்ருஷி என்னுடைய ஹ்ருதயஸங்கதியேயாயிற்று. [என்னிருடீகேசனே]-என்னுடைய இந்த்ரியங்களும் எனக்குப் பரிகரமாய் விரோதிக்கை தவிர்ந்து, இன்பம் வளருகைக்கு உனக்குக் கையாளாயின.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ஆடியாடியிற்பிறந்த வ்யஸநமெல்லாம் நான் மறந்து மிகவும் ப்ரீதனும்படி பண்ணி, இந்த்ரியங்களைத் தானிட்ட வழக்காக்கினானென்கிறார். பக்திபூர்வகமாக உன்னைஅநுபவியாநிற்கச்செய்தே, ப்ரதிபந்தகங்களும் நீங்கி நிரதிஶய ஹர்ஷமும் பிறக்கும்படி உன்னை என்னுள்ளே வைத்தாயென்று ப்ரீதராகிறாராகவுமாம்.

[சீரீஇதரன்] - பெரியபிராட்டியாரைத் திருமார்விலே யுடையவன். [செய்ய தாமரைக்கண்ணன்] - நீர்பாய்ந்த பயிர் செவ்விபெற்றிருக்குமாபோலே, அவள் திருமார்விலே யிருக்கையாலே குளிர்ந்த கண்ணழகை யுடையவன். "வக்ஷஸ்ஸ்தலே நஸ்ரீயமா...

---

ப்ர.— (சீரீ இதரன் செய்யதாமரைக் கண்ணன்) ஸ்ரீ விஷ்ணுபுராணே... "வ்யாப்தஸ்ஸஹஸ்ரோம்ஶா... [illegible] ... ||

---

ஒன்பதாம்பாட்டு.—சீரீஇதரன் இத்யாதி. ஆடியாடியில் இத்யாதி. அவதாரிகாத்வயமும் - பட்டர்நிர்வாஹத்தையும், பூர்வர்கள் நிர்வாஹத்தையும் பற்ற. க்ரமேண. "மரீஇயதீவினை மாள" என்றதிலே நோக்காக, ஆடியாடியில் இத்யாதி. "இன்பம்வளர" என்றதிலே நோக்காக-ப்ரீதனும்படிபண்ணி என்றது. 'இருடீகேசன்' என்றத்தைப்பற்ற,இந்த்ரியங்களை இத்யாதி.இட்ட வழக்கு - ததீநம்."இராப்பகல்" இத்யாதியைக் கடாக்ஷித்து, பக்திபரவசராயிருக்கிற இவருடைய தேஹ யாத்ரையிருக்கும்படியைச் சொல்லுகிறதென்று பூர்வர்கள் நிர்வாஹம்-பக்தி இத்யாதி.

ஸம்பிவ்யாஹாரதாத்பர்யம்-நீர்பாய்ந்த இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம்-வக்ஷஸ்

ஹ்ருதி ஹ்ருதி: | விஷ்ணு சைவ ததா வக்ஷ சு ஸ்தோ வ்யதி:" என்கிறபடியே. [என்றுஎன்று]- இப்படி மாறுதேசொல்லி. [இராப்பகல்இத்யாதி]-"இவர் ஸக்திபரவஶராகையாலே இவருடைய தேஹயாத்ரை யிருக்கும்படி" என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி. அன்றிக்கே, பட்டர் "மரீஇயதீவினைமாள என்கிற விடத்தளவும் - ஆடியாடியில்இவர்க்கு ஓடின தசையாய், இன்பம்வளர என்கிற இது - அந்தாமத்தன்பு தொடங்கி, கேசவன் தமரளவும் வர வுண்டான ப்ரீதியைச் சொல்லுகிறது" என்று. 'இராப்பகல் வாய்வெரீஇ' என்கிறது - "இவளிராப்பகல் வாய்வெரீஇ" என்றத்தை. 'அலமந்து' என்கிறது - "எங்கும் நாடிநாடி" என்றத்தை. 'கண்கள்நீர்மல்கி' என்கிறது—"தனகுவளையொண் கண்ண நீர்கொண்டாள்" என்றத்தை. 'வெவ்வுயிர்த்துயிர்த்து' என்கிறது - "உள்ளம்மலங்கவெவ்வுயிர்க்கும்" என்றத்தை. [மரீஇயதீவினைமாள] - ஆயிரமாண்டு முதலையின்கையிலே ஆனை இடர்பட்டாற்போலே, ஆடியாடியி லாற்றாமை. இவர்க்கு இப்படி பொருந்தின விஶ்லேஷவ்யஸநம் ஆறும்படியாக. [இன்பம்வளர] - அந்தாமத்தன்பு தொடங்கிப் பிறந்த ப்ரீதி. [வைகல்வைகல்] - கழிகிற காலந்தோறும். [உன்னை யென்னுள் இரீஇ வைத்தனை] - உன்னைஎன்னுள்ளே யிருத்திவைத்தனை. [என் இருடீகேசனே] - எனக்குப் பரிகரமாய் விரோதித்த இந்த்ரியங்களும் உன்பக்கலிலே படையற்றன. பரமஶேஷியைக் கண்டார் த்வாரஶேஷிகளளவில் நில்லார்களிறே. (கூ)

---

ஜைந இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுதர்மே மங்கள்யஸ்தவே, "தயா வராஹோ வ்ருவிகா லிவக்ஷஜாம் வக்ஷஸ்யை நஶ்யதி ஹ்ருதி ஹ்ருதி: | விஷ்ணு சைவ ததா வக்ஷ சு ஸ்தோ வ நாஶோ ஸ்ஸ ஜ்ஞ்விவ்யஷ்யை ஹரி:". பத்மோத்பலஶப்தங்களுக்கு பேதங் கண்டுகொள்வது. அவதாரிகையிற் சொன்ன அர்த்தத்வயத்தையும் வ்யுத்க்ரமமாக ஆப்த ஸம்வாதத்தாலே தர்ஶிப்பிக்கிறார்-இவர்பக்தி இத்யாதிவாக்யத்வயேந. தேஹயாத்ரை-தேஹதாரணம். அநுபவப்ரகார இதி யாவத்.பட்டர் நிர்வாஹோபபாதகம்-இராப்பகல்வாய்வெரீஇ இத்யாதி. "மரீஇயதீவினை" என்னுமத்தை த்ருஷ்டாந்தமுகேந விஶதயக்கர்த்தமாஹ-ஆயிரம் இத்யாதி. மரீஇய - பொருந்தின. வைகல்-கழிகிற. வைகல் - காலமெல்லாம். முந்தின வைகல் - கழிகையைச் சொல்லுகிறது. இரண்டாவது-காலபரம்; ஸர்வகாலமு மென்றபடி. எனக்கு விரோதித்த என்றது-அப்ராப்த விஷயப்ரவணமாய்க் கொண்டு அவ்வழியாலே விரோதித்த வென்றபடி. "என்" என்றதின் அர்த்தம் - எனக்குப் பரிகாரமாய் என்றது. "ஈசன்" என்றதுக்கு அர்த்தம்-உன்பக்கல் இத்யாதி. படையற்றன-கிட்டின. படையறுகை-ஆயுதத்தைப் போகடுகை: ததீந மென்றபடி. சேதநசேஷமான இந்த்ரியங்கள் அவனுக்குப் பாதந்த்ரமாகக்கூடுமோ? என்ன, பரமஶேஷியை இத்யாதி. இவ்விடத்திலே - 'ஹ்ருஷீகாணீந்த்ரியாண்யாஹு ஸ்தேஷாமீஶோ யதோ பவாந் | ஹ்ருஷீகேஶஸ்ததோ விஷ்ணு: க்யாத:' என்ற கைலாஸயாத்ரையில் நாமநிர்வசநாத்யாயத்தில் ருத்ரோக்தியான நிருக்தி அநுஸந்தேயா. பரமசேஷி-ஈஶ்வரன். நிர்வசநப்ரகாரத்திலே - இந்த்ரியங்களுக்கு ஸாக்ஷாத் சேஷி ஈஶ்வரனுகையாலே, பரமஶேஷி என்கிறது. த்வாரஶேஷி - சேதந:. "ஜைஹ யாஜைத்ரு" என்றது-விஶ்லேஷப்ரயுக்தமேயாகிலும், ஆடியாடியில் விஶ்லேஷவ்யஸநமாத்ரம்-பட்டர் நிர்வாஹத்துக்கு விசேஷம். என் இருடீகேசனே-சிரீதர னித்யாரப்ய, வைகல்வைகல் - உன்னை என்னுள்-இரீஇ-வைத்தனை யித்யந்வய:. (க)

## பத்தாம்பாட்டு.

இருடீகேசனெம்பிரான் இலங்கையரக்கர்குலம்
முருடுதீர்த்தபிரானெம்மான் அமரர்பெம்மானென்றென்று
தெருடியாகில்நெஞ்சேவணங்கு திண்ணமறியறிந்து
மருடியேலும்விடேல்கண்டாய் நம்பிபற்பநாபனையே.

ஆ.—(இருடீகேசன்.) தன்னழகாலும் செயலாலும் என்னை அடிமைகொண்டவன், அயர்வறுமமரர்களதிபதி யென்றென்று அவனை ஏத்தி நினைந்துவணங்கு; இத்தை அழகியதாகக் கைக்கொள்ளக்கொண்டு, மறந்தும் நம்பிபற்பநாபனை விடாதேகிடாய் நெஞ்சே! என்றுகொண்டு தம்முடைய நெஞ்சைக் குறைகொள்ளுகிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், நமக்கு மிகவும் உபகாரகனானவனை யொருகாலும் விடாதே கிடாயென்று திருவுள்ளத்தைக் குறித்து அநுஸாவிக்கிறார்.

[இருடீகேசனென்றுதொடங்கி] - லங்கையில் ராக்ஷஸஸந்தாநத்தில் முருடனான ராவணனை முடித்து உபகரித்தாற்போலே தன்னழகாலே என் இந்த்ரியங்களை அநந்யபரமாக்குகையாகிற மஹோபகாரத்தைப் பண்ணினவன். [எம்மானென்றுதொடங்கி] - அயர்வறுமமரர்க ளதிபதியாய்வைத்து என்னை யடிமை கொண்டான் என்றுகொண்டு மிகவும் அநுஸந்தித்து நெஞ்சே அறிவுடையையாகில் அவனை யநுபவி, இத்தை த்ருடதரமாகக்கொள். [அறிந்தென்று தொடங்கி] - 'அவனை விட அடாது' என்றறிந்து ஸர்வகுண ஸம்பந்நனாய் நிரதிஶய ஸௌந்தரனானவனை நம்முடைய அயோக்யதாநுஸந்தாநத்தாலே 'விடுவோம்' என்று தோற்றினாலும் விடாதேகிடாய்.

ப.—அநந்தரம், இப்படி ஸர்வப்ரகாரோபகாரகனை விடாமையிலுண்டான அபேக்ஷையை அருளிச்செய்கிறார்.

இருடீகேசன் - (தசேந்த்ரியாநநமான என்னுடைய) மாநஸேந்த்ரியத்தை நியமித்து, எம்பிரான் - எனக்குஉபகாரகனாய், (அதுக்குஉதாஹரணமென்னலாம்படி), இலங்கை - லங்கையில், அரக்கர்குலம் - ராக்ஷஸகுலத்துக்கு, முருடு - முருடான ராவணனை, தீர்த்த - அழித்து பிரான் - நாட்டுக்குஉபகரித்தவன், அமரர்பெம்மான் - நித்யஸூரிகளோபர்தி, எம்மான் - என்னையநுபவிப்பித்த ஸ்வாமியானவன், என்றுஎன்று - என்று பலபடியும்அநுஸந்தித்து, நெஞ்சே - நெஞ்சே! தெருடியாகில் - அறிவுடையையாகில், வணங்கு - (அவனை) வணங்கும்படி பார்; (இத்தை), திண்ணம் - சிக்கென, அறி-புத்திபண்ணு; அறிந்து - இவ்வறிவுக்குமேல், மருடியேலும் - அயோக்யதையடியான கலக்கம் வந்ததேயாகிலும், நம்பி - குணபரிபூர்ணனாய், பற்பநாபனை - காரணபூதமான திருநாபிகமலத்தையுடைய இம்மஹோபகாரகனை, விடேல்கண்டாய் - விடாதேகிடாய். என்று நெஞ்சை அபேக்ஷிக்கிறார்.

இ.—பத்தாம்பாட்டில், எனக்கு உபகாரகனானவனை ஒருகாலும் விடாதே கிடாயென்று, திருவுள்ளத்தைக்குறித்து அநுஸாவிக்கிறார்.

[இருடீகேசனெம்பிரான்] - இந்த்ரியங்களைக்கொண்டு விஷய ப்ரவணனாய் நசியாதபடி, தன்னழகாலே அவற்றைத் தன்பக்கலிலே ப்ரவணமாக்கின மஹோபகார

கன். [இலங்கைஇத்யாதி] - இலங்கையில் ராக்ஷஸஸங்காதத்திலே விபீஷணாதிகளை யொழிய முருடான ராவணாதிகளை நிரஸித்தாற்போலேயாயிற்று என்னுடைய இந்த்ரிய வஶ்யதையைத் தவிர்த்தபடி. [எம்மானித்யாதி] - விஷயாந்தர ப்ராவண்யத்தைத் தவிர்த்தமாத்ரமே யன்றிக்கே, நித்யஸூரிகளை அநுபவிக்குமாபோலே என்னை அநுபவிப்பித்தவன். [என்றென்று] - இப்படிநினையா நின்றுகொண்டு. [தெருடியாகில்] - தெருளுதியாகில். அறிவுடையையாகில். ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும் அறிவுக்கும் வாய்த்ததலையான ஏற்றமுண்டாகில், [நெஞ்சேவணங்கு] - உபகாரகனை அவன் திருவடிகளிலே விழப்பார். [திண்ணமறி] - இத்தை "ஓலக்க வார்த்தை" என்றிராதே, த்ருடமாக புத்திபண்ணு. [அறிந்து] - "அவன் விடஅடான்" என்று அறிந்து. [மருடியேலும் விடேல்கண்டாய்]- உனக்கு ஒருபோதாக அயோக்யதாநுஸந்தாநத்தாலே அகல நினைப்பதொரு அறிவுகேடுண்டு, அவ்வளவிலும் விடாதேகிடாய். [நம்பிபற்பநாபனையே] - அவன் குணபூர்த்தி யிருந்தபடிகண்டாயே, வடிவழகிருந்தபடி கண்டாயே, முன்பு உபகரித்து நின்றபடி கண்டாயே. இவ்விஷயத்தைவிட்டால் எத்தைக்கொண்டு உஜ்ஜீவிக்க.

ஈடு.—பத்தாம்பாட்டு. நமக்கு மிகவும் உபகாரகனானவனை நீ ஒருகாலும் விடாதேகிடாயென்று திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்கிறு ரிப்பாட்டில்.

[இருடீகேசனெம்பிரான்] - தன்னையறிகைக்குப் பரிகரமாகத் தந்த இந்த்ரியங்களைக்கொண்டு ஶப்தாதிவிஷயங்களை விரும்பி நான்அநர்த்தப்படாமே, தன்னையே யறிகைக்குப் பரிகரமாம்படி பண்ணி யுபகரித்த மஹோபகாரகன். [இலங்கைஇத்யாதி] - இவருடைய இந்த்ரியவஶ்யதையைத் தவிர்த்தபடி, லங்கையில் ராக்ஷஸஜாதியில் விபீஷணாதிகளை வைத்து, முருடரான ராவணாதிகளை நிரஸித்தாற்போலேயாயிற்று. [எம்மான் அமரர்பெம்மான்] - இந்த்ரியங்களினுடைய இதரவிஷய ப்ராவண்யத்தைத் தவிர்த்த

---

ப்ர.—(இருடீகேசனெம்பிரான்இலங்கை யரக்கர் குலம்முருடுதீர்த்தபிரான்) "ஹ்ருஷீகேஶம் ஶரணம் யாமி நாராயணம் | விபீஷணாதீந் ஸம்ரக்ஷ்ய ராவணாதீந் ஹதவாந்".

---

பத்தாம்பாட்டு - இருடீகேசன் இத்யாதி. "இருடீகேசனெம்பிரான்" என்றத்தைப் பற்ற - நமக்குமிகவு முபகாரகனானவனை என்றது.

இந்த்ரியங்களுக்கு நியாமகனாய் உமக்கு உபகரித்த உபகாரமேதென்ன, தன்னையறிகைக்கு இத்யாதி. பதயோகத்துக்குஹாவம் - இவருடையஇத்யாதி. அரக்கர்குலத்தில் முருட்டைத்தீர்த்த உபகாரக னென்றபடி. முருடான - கடினரான. முருடு - காடிந்யம். இவ்விடத்திலே- "ஹ்ருஷீகேஶம் ஶரணம் யாமி நாராயணம் | விபீஷணாதீந் ஸம்ரக்ஷ்ய ராவணாதீந் ஹதவாந்" என்றதுஅநுஸந்தேயம். இது த்ருஷ்டாந்தார்த்த மென்கிறார் - லங்கையில் இத்யாதி. "முருடு" என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - விபீஷணாதிகளைவைத்து என்றது. நிரஸித்தாற்போலேயாயிற்று - இவருடைய இந்த்ரியம் வஶ்யாதிருக்கச்செய்தே, இதினுடைய விபரீதாகாரத்தைப் போக்கினபடி யென்றபடி. பூர்வோத்தரபத ஸமபிவ்யாஹாரலப்ததாத்பர்யம்-இந்த்ரி

மாத்ரமன்றிக்கே, நித்யஸூரிகளுக்குத் தன்னைஅநுபவிக்கக் கொடுக்குமாபோலே எனக்குத் தன்னை அநுபவிக்கத் தந்தவன். இப்படி சொல்லாநின்றுகொண்டு [தெருடியாகில்]- தெருளுதியாகில். ஜ்ஞாநப்ரஸரத்வாரமாகில். [நெஞ்சே வணங்கு] - ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும்அறிவுக்கும் வாய்த்தலையான ஏற்றம்உனக்குண்டாகில், உபகாரகனானவன் திருவடிகளிலே விழப்பார். [திண்ணமறி]-இத்தை "ஓலக்கவார்த்தை" என்றிராதே த்ருடமாகப் புத்திபண்ணு. [அறிந்து] - அறிகைதானே போரும்ப்ரயோஜநம். அதுக்குமேலே [மருடியேலும் விடேல்கண்டாய்] - உனக்கு ஒருபிச்சுண்டிறே அவன்வைலக்ஷண்யத்தைப் பாராவருவது - 'நாம்இவ்விஷயத்தை தூஷிக்கையாவதேன்?' என்று அயோக்யதாநுஸந்தாநத்தாலே அகலப்பார்ப்பதொன்றுண்டு; அத்தைத் தவிரப்பார்கிடாய். [நம்பி பற்பநாபனையே] - கேடுவாய், இவ்விஷயத்தை விட்டுப் புறம்பேபோய் மண்ணை முக்கவோ? அவன்குணபூர்த்தியிருந்தபடி கண்டாயே, வடிவழகுஇருந்தபடி கண்டாயே, முன்பு நமக்கு உபகரித்தபடி கண்டாயே. (கo)

## ப தி ஞ் ரா ம் பா ட் டு.

பற்பநாபனுயர்வறவுயரும் பெருந்திறலோன்
எற்பரனென்னையாக்கிக்கொண்டு எனக்கேதன்னைத்தந்த
கற்பகம் என்னமுதம்கார்முகில்போலும் வேங்கடநல்
வெற்பன் விசும்போர்பிரான் எந்தைதாமோதரனே.

---

யங்களினுடைய இத்யாதி. தெருளுதியாகில் - அறிவுடையையாகில். தெருள் - அறிவு. இது பின்னை ஜ்ஞாநத்தையுடைத்தோ? என்ன, ஜ்ஞாநப்ரஸரத்வாரமான ஆகாரத்தைப்பற்றச் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, ஜ்ஞாநப்ரஸரத்வாரமாகில் என்கிறார். ஜ்ஞாநேந்த்ரியங்களுக்குமித்- மநஸ்ஸஹகாராஹாவே பாஹ்யஜ்ஞாநேந்த்ரியங்களுக்கு விஷயப்ரகாசகத்வ மில்லாமையாலே ஜ்ஞாநேந்த்ரியாபேக்ஷயா மநஸ:ப்ராதாந்யம் அவலம்ப்யோக்தம்-ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும் வாய்த்தலையான என்று. "வாஹ்யாநாம் விஷயஜ்ஞாநஸ்வாதந்த்ர்யஸ்ய ஸம்பந்திநாம் நயநாதீநாம் ஜ்ஞாநஸ்ய ஸாதநத்வாந்ந ஸ்வாதந்த்ர்யம்"-அறிவுக்கும் வாய்த்தலையான என்றுசொல்லப்பட்டது. ஜ்ஞாநேந்த்ரியங்களாலே உண்டாகக்கடவ அறிவுக்கும் வாய்த்தலையானவென்றபடி. வாய்த்தலையான - மூலமான. இல்லையாகில் பேதம் தோற்றாது; இந்த்ரியங்களுக்கு வாய்த்தலை யென்றபோதே - இந்த்ரியஜந்யஜ்ஞாநத்துக்கும் வாய்த்தலையென்றது ஸித்தமாகையாலே யென்று கண்டுகொள்வது. அநுவாதத்துக்கு ஸ்வாவம் - அறிகைதானே இத்யாதி. ஜ்ஞாநஸ்யைவபலத்வஸூசநார்த்தோநுவாத இதி பாவ:. மருடியேலும் - மருளுதியேலும்; ப்ரமத்தையுடையையாகிலும். மருள் - அஜ்ஞாநம். இங்கு - ப்ரமம். பாரா - பார்த்தமாத்ரத்திலே. பிச்சுத்தானேது? என்ன- நாம்இவ்விஷயத்தை இத்யாதி. அத்தை - அயோக்யதாநுஸந்தாநத்தை. "நம்பிபற்பநாபனை - மருடியேலும்விடேல் கண்டாய்" என்றதுக்கு ஸ்வாவம்-கேடுவாய் இத்யாதி. முக்கவோ - தின்னவோ. "இவ்விஷயத்தை" என்றத்தை விவரிக்கிறார்-அவன்குணபூர்த்தி இத்யாதி. "நம்பிபற்பநாபன்-இருடீகேசனெம்பிரான்" இத்யாதியைப்பற்ற ஸ்வாவம்-அவன்குணபூர்த்தி இத்யாதி ஆதல். நெஞ்சே, தெருடியாகில் - நம்பிபற்பநாபனை - இருடீகேசனித்யாரப்ய, என்றென்று - வணங்கு; திண்ணமறி; அறிந்து மருடியேலும் விடேல் கண்டாய் இத்யந்வய:. (கo)

ஆ.—(பற்பநாபன்.) அவன் நம்மைவிடிற் செய்வதென்? என்னில்; அள விறந்த அழகையுடையனாய், நிரவதிகதேஜஃப்ரப்ருதிகல்யாணகுணங்களையுடையனாய், என்னை ஸ்வேதரஸர்வவிஷயவைராக்யபூர்வக ஸ்வாநுபவைகபோகனாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத்தந்த பரமோதாரனாய், என்னுடைய போக்யமாய், நிரதிசயஸௌந்தர்ய பரிபூர்ணமான திருமலையோடு உள்ள ஸம்பந்தத்தாலே லப்தமான இந்த ஔதார்யத்தையுடையனாய் திருநாட்டில் திவ்யபுருஷர்களுக்கு நாதனாய், எனக்கு ஸ்வாமியாய் ஆஶ்ரித பராதீனனான எம்பெருமான் என்னையல்லது அறியான்; ஆதலால், அவன் என்னை விடானென்கிறார்.

ஒ.—பதினோராம்பாட்டில், அத்யந்த விலக்ஷணனாயிருந்துவைத்து, அத்யந்த ஸுலபனாய் என்னை அடிமைகொண்டவன் என்னையல்லது அறியானென்கிறார்.

[பற்பநாபனென்றுதொடங்கி] - ஜகதுத்பத்தி காரணமான திருநாபிகமலத்தை யுடையனாய் அபரிச்சேத்யமானவன், ஸமஸ்த கல்யாணகுணகனானவன் மதேகசித்தன். [என்னையென்றுதொடங்கி] - என்னை தனக்கு அர்ஹனாக்கி பரிக்ரஹித்து எனக்குத் தன்னை அஸாதாரணமாகத் தந்த விலக்ஷண கல்பகமுமாய் நிரதிசயபோக்யமானவன். [கார்முகில் போலும் வேங்கட நல்வெற்பன்] - இவனுக்கு இவ்வௌதார்ய முண்டாயிற்றது திருமலையின் மிதியாலே. [விசும்போர் பிரான்] - அயர்வறுமமரர்களதிபதி.

ப.—அநந்தரம், இப்படி அறிவுபிறந்த நெஞ்சையுடைய எனக்கு அவன் ஸர்வப்ரகாரோபகாரகனானானென்கிறார்.

பற்பநாபன் - (ஜகதுத்பத்திஹேதுவான) திருநாபிகமலத்தையுடையனாய், (உதபங்கஜகத்ரக்ஷணார்த்தமாக), உயர்வற உயரும் - மிகவும்உயராநின்ற, பெருந்திறலோன் - அபரிச்சிந்நையான ஶக்தியையுடையனாய், எற்பரன் - (இம்மேன்மையோடே) என்பக்கலிலே தத்பரனாய், (அதடியாக), என்னை - என்னை, ஆக்கி - உண்டாக்கி, கொண்டு - அங்கீகரித்து, எனக்கே - எனக்கேஅஸாதாரணமாம்படி, தன்னை - தன்னை, தந்த-தந்த, கற்பகம் - கல்பகமாய், என் - எனக்கு, அமுதம் - போக்யமாய், கார்முகில்போலும் - (தாம்பாராமல்உபகரிக்கும்) காளமேக ஸத்ருஶனாய், (அதுக்குயோக்யஸ்த்தலமான), வேங்கடம் - திருவேங்கடமென்று பேராய், நல் - விலக்ஷணமான, வெற்பன் - திருமலையில் நிலையையுடையனாய், (இந்நிலையிலே), விசும்போர் - நித்யஸூரிகளை, பிரான் - அநுபவிக்கிற ஆஶ்ரிதபவ்யதையை யுடையனான, தாமோதரன் - தாமோதரன், எந்தை - என்னை அடிமைகொண்டான். கல்பகத்திற்காட்டில் இவனுக்கு வாசி - அர்த்தியையுண்டாக்குகையும், அவனைத் தானே ஸ்வீகரிக்கையும், அவன் அபேக்ஷித்ததைக் கொடுக்கையன்றியே தன்னைக்கொடுக்கையும், தானே போக்யமாகையும்.

இ.—பதினோராம்பாட்டில், அத்யந்த விலக்ஷணனாய் வைத்து அத்யந்த ஸுலபனாய் என்னை அடிமைகொண்டவன் என்னையல்லது அறியானென்கிறார்.

[பற்பநாபன்] - ஜகதுத்பத்தி காரணமான திருநாபிகமலத்தையுடையவன். [உயர்வறவித்யாதி] - அபரிச்சேத்யமான ஶௌர்யவீர்யாதிகுணப்ரதையை யுடையவன்.

திறல் - பராபிபவந ஸாமர்த்த்யம். அது - அல்லாத குணங்களுக்கு, உபலக்ஷணம். [எற்பரன்] - அம்மேன்மை யுடையவன் மதேகசித்தன். [என்னையாக்கி] - என்னைத் தனக்கு அர்ஹனாக்கி. [கொண்டு] - பரிக்ரஹித்து. [எனக்கே]-அஸாதாரணமாக. [தன்னைத்தந்த கற்பகம்]-ஔதார்யத்தில் ப்ரஸித்தமான கல்பகதருவிற்காட்டில் இவனுக்கு வ்யாவ்ருத்தி சொல்லுகிறது - அர்த்தியையுண்டாக்கிக் கொடுக்கமாட்டாது, ஸாதநாநுஷ்டாநம் பண்ணுதார்பக்கல் தான் மேல்விழுமதில்லை, ஒருவனுக்கே குறைவறக் கொடுக்கமாட்டாது, பலங்களைக்கொடுக்கு மித்தனைபோக்கி தன்னைக்கொடுக்குமதில்லை. [என்னமுதம்] - எனக்கு நிரதிஶயபோக்யமானவன். தானே போக்யமாயிருக்குமதில்லையே அதுக்கு.[கார்முகில் இத்யாதி]-இந்த ஔதார்யத்துக்கடி திருமலையில் ஸம்பந்தமாயிற்று. "கொடுத்தோம்" என்று நினையாதே கொடுக்கும் மேகஸ்வபாவமான திருமலை. [விசும்போர்பிரான்] - நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகனாய் வைத்து ஆஶ்ரிதைகளான இடைச்சிகளுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி யிருக்கிற ஸௌலப்யத்தைக் காட்டி என்னை அடிமைகொண்டவன்.

௲டு.—பதினோராம்பாட்டு. அத்யந்தவிலக்ஷணனாயிருந்துவைத்து, அத்யந்த ஸுலபனாய் என்னை அடிமைகொண்டவன் என்னையல்லது அறியானாஞ னென்கிறார்.

[பற்பநாபன்]-ஸகலஜகதுத்பத்திகாரணமான திருநாபிகமலத்தையுடையவன். [உயர்வற இத்யாதி] - பேசப்புக்கால் பரிச்சேதித்துப்பேசவொண்ணாதபடியான ஶௌர்ய வீர்யாதி குணப்ரதையையுடையவன். திறல் - பராபிபவநஸாமர்த்த்யம். அல்லாதகுணங்களுக்கும் உபலக்ஷணம் இது. காரணத்வப்ரயுக்தமான மேன்மை அது, பராபிபவந ஸாமர்த்த்யந் தொடக்கமான குணங்கள் அவை, இப்படி யிருக்கிறவன் [எற்பரன்] - மதேகசித்தன். [என்னை இத்யாதி] - ஔதார்யத்தில் ப்ரஸித்தமாயிருப்பது கல்பகமிறே, அதில் வ்யாவ்ருத்திசொல்லுகிறது. [என்னையாக்கிக்கொண்டு] - அர்த்திகளை யுண்டாக்கிக் கொடுக்கு மதில்லையிறே அதுக்கு. [எனக்கே] - ஒருவனுக்கே குறைவறக் கொடுக்கு மதில்லையிறே அதுக்கு. [தன்னைத்தந்த] - சிலப்ரயோஜநங்களைக் கொடுக்கு

---

பதினோராம்பாட்டு - பற்பநாபன் இத்யாதி. 'பற்பநாபன்' இத்யாதிகளெல்லாம் கடாக்ஷித்து-அத்யந்தவிலக்ஷணனாய் என்றது.'தாமோதரன்' என்றத்தைப்பற்ற, அத்யந்தஸுலபனாய் என்றது. 'எந்தை' என்றத்தைப்பற்ற - என்னையடிமைகொண்டவன் என்றது. 'எற்பரன்' என்றத்தைப்பற்ற, என்னையல்லதறியான் என்றது.

உயர்வற இத்யாதி - நாட்டாருடைய உயர்வு அல்பமாம்படியாக உயராநின்ற அபரிச்சின்நஶக்தியையுடையவன் என்று பாவார்த்தம். திறல் - பராபிபவநஸாமர்த்யமானால், 'ஶௌர்யாதிகுணப்ரதையையுடையவன்' என்று சொல்லக்கூடுமோ? என்ன, அல்லாத இத்யாதி. 'பற்பநாபன்' என்றத்தையுங் கூட்டி அருளிச்செய்கிறார், காரணத்வ இத்யாதி. எற்பரன் - என்னிடத்திலே தத்பரன். அத்தாலே, மதேகசித்தன் என்றது. வாக்யதாத்பர்யம் - ஔதார்யத்தில் இத்யாதி. வ்யாவ்ருத்யுபபாதகம் - அர்த்திகளை இத்யாதி. என்னையாக்கி - என்னை உண்டாக்கி. கொண்டு - அங்கீகரித்து. குறைவற-மோக்ஷபர்யந்தம். எனக்கேதன்னைத்தந்த - எனக்கே

மதல்லது தன்னைக்கொடுக்குமதில்லையிறே அதுக்கு [என் அமுதம்] - தான்ஹோக்யமாயிருக்குமதில்லையிறே அதுக்கு. எனக்கு நிரதிஶயஹோக்யமானவன். [கார்முகில்போலும் வேங்கடநல்வெற்பன்] - இந்தஔதார்யத்துக்குஅடி திருமலையின் ஸம்பந்தம்; ஸஹ்யம் பற்றின ஔதார்யமிறே. கொடுத்தத்தை நினையாதே கொடுக்கும் மேகம்போன்ற ஸ்வபாவத்தையுடைய திருமலையைத் தனக்கு வாஸஸ்த்தாநமாக வுடையவன். [விசும்போர் பிரான் இத்யாதி] - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருந்துவைத்து, ஆஶ்ரிதரான இடையருக்கும் இடைச்சிகளுக்கும் கட்டவும் அடிக்கவுமாம்படி வந்து அவதரித்து, அச்செயலாலே என்னை அடிமைகொண்டவன். (கக)

## பன்னிரண்டாம்பாட்டு.

தாமோதரனைத்தனிமுதல்வனை ஞாலமுண்டவனை
ஆமோதரமறிய ஒருவர்க்கென்றேதொழுமவர்கள்
தாமோதரனுருவாகிய சிவற்குந்திசைமுகற்கும்
ஆமோதரமறிய எம்மானையென்னாழிவண்ணனையே.

ஆ.—(தாமோதரனை.) ஆஶ்ரிதபாரதந்த்ரனாய், ஸர்வஜகதேககாரணமாய், ஸர்வஜகத்ரக்ஷகனாயிருந்த எம்பெருமானை, ஒருவர்க்குந்தானறியலாமோ? என்று தொழுகிற பரமபுருஷஶேஷதைக ஸ்வபாவரான சிவற்கும் திசைமுகற்கும் எம்மானை என்னாழிவண்ணனைத் தாமறியலாமோ? என்றுகொண்டு, அவனுடைய அபரிச்சேத்யமஹத்வத்தைச் சொல்லி, ஏவம்பூதனானவன்கிடீர் எற்பரனாயிருக்கிறவனென்கிறார்.

---

அஸாதாரணமாம்படி தன்னைத்தந்தவென்று ஶப்தார்த்தம். ஆக, கல்பகத்திற்காட்டில் இவனுக்கு வ்யாவ்ருத்தி-அர்த்திகளை உண்டாக்குகையும், அவனைத் தானே ஸ்வீகரிக்கையும், அவன் அபேக்ஷித்தங்கொடுக்கையன்றிக்கே தன்னைக் கொடுக்கையும், தானே போக்யமாகையும். 'கார்முகில் போலும்' என்றது-வேங்கடத்துக்கு விசேஷணம். கார்முகில்போன்ற 'வேங்கடம்' என்கிற பேரையுடைய விலக்ஷணமான திருமலையை உடையவன் இதி ஶப்தார்த்தः. பதச்சேர்த்தியால் ஸித்தித்த ஹாவம் - இந்த ஔதார்யத்துக்கு இத்யாதி. இந்தஔதார்யத்துக்கு - 'எனக்கேதன்னைத்தந்த' என்று சொன்ன ஔதார்யத்துக்கு. கார்முகில்போலும் வேங்கடமென்று - மேகஸாத்ருஶ்யஞ்சொன்னது - மேகத்தினுடைய ஔதார்யம்போலேயிருக்குமென்னுமத்தைப் பற்ற; ஆகையாலே அத்தைப்பற்ற, இந்த ஔதார்யத்துக்குஅடி திருமலையின் ஸம்பந்தம் என்கிறார். ஔதார்யம் ப்ரவாஹத்வேநஹ்ருதிரிதாயாஹ - ஸஹ்யம்பற்றின ஔதார்யமிறே என்று. அதாவது - ஸஹ்யபர்வதத்தினின்றும் ப்ரவ்ருத்தமான ப்ரவாஹத்துக்கு நாசமில்லாதாப்போலே, திருமலையோட்டை ஸம்பந்தமடியாக உண்டான பகவதௌதார்யத்துக்கும் ஒருகாலும் ஸங்கோசமில்லை என்றபடி. 'கார்முகில்' இத்யாதிக்கு ஶப்தார்த்தம் - கொடுத்தத்தை இத்யாதி. 'விசும்போர்பிரான் - தாமோதரன் - எந்தை' என்று அந்வயித்த ஹாவம் - நித்யஸூரிகளுக்கு இத்யாதி. பற்பநாபன் உயர்வறவுயரும் பெருந்திறலோன் - என்னையாக்கிக்கொண்டு இத்யாரப்ய, விசும்போர்பிரான் - தாமோதரன் - எந்தை - எற்பரன் இத்யந்வயः. இப்பாட்டில் - உபாயோபேயத்வ பரத்வஸௌலப்யங்களும், பராபிபவநஸாமர்த்ய்ங் தொடக்கமான குணங்களும் சொல்லுகிறது. (கக)

ஒ.—பன்னிரண்டாம்பாட்டில், பகவத்ஜ்ஞாநத்தில் அபிமாநிகளா யிருந்துள்ள ப்ரஹ்மாதிகளுக்கும் எம்பெருமானை அறியவொண்ணா தென்கிறார்.

[தாமோதரனை யென்று தொடங்கி] - ஜகத்காரணபூதனாய் ஜகத்துக்கு ப்ரளயாபத்ஸகனுமாய் ஆஶ்ரிதபவ்யனானவனை ஒருவர்க்கு அளவிடலாமோ என்று அறிந்தார்களாகக்கொண்டு தொழும் ஸ்வபாவருமாய் எம்பெருமானுக்கு ஶரீரவத் அந்தரங்கரான ருத்ரனுக்கும் ப்ரஹ்மாவுக்கும், தன்னுடைய குணார்ணவத்தை என்பக்கலிலே மடுத்து என்னை அடிமைகொண்டவனைப் பரிச்சேதிக்கலாமோ.

ப.—அநந்தரம், தம்மளவில் அவன் பண்ணின உபகாரம் அதிஶயிதஜ்ஞாநர்க்கும் அளவிடவொண்ணா தென்கிறார்.

தாமோதரனை - ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தையும், தனிமுதல்வனை - ஸமஸ்தஜகதேககாரணத்வத்தையும், ஞாலமுண்டவனை - ப்ரளயாபத்ஸகத்வத்தையுமுடையவனை, தரம் - பரிச்சேதித்து, அறிய - அறிய, ஒருவர்க்கு - ஒருவர்க்கும், ஆமோ - போமோ? என்று - என்று, தொழுமவர்கள் - தொழுமவர்களாய், தாமோதரன் - அந்த தாமோதரனுக்கு;உருவாகிய-ப்ரகாரதயா ஶேஷபூதரான,சிவற்கும்-ருத்ரனுக்கும்,திசைமுகற்கும்-ப்ரஹ்மாவுக்கும், (கடுகிலேகடலைமடுத்தாற்போலே), என் - என்பக்கலிலே, ஆழிவண்ணன் - தன்குணார்ணவத்தைவைத்து, எம்மானை-என்னை அடிமைகொண்ட ஸ்வாமியை, தரம் - அளவிட்டு, அறியவாமோ - அறியப்போமோ? ஸாமாந்யமான உபகாரங்களை அறிந்தாலும், என்பக்கல் பண்ணின விஶேஷோபகாரம் அறிய அரிதென்று கருத்து.

இ.—பன்னிரண்டாம்பாட்டில், "எற்பரன்" என்று என்னளவிற் செய்தாற்போலே தானே காட்டக்காணுமத்தனையல்லது, பகவத்ஜ்ஞாநத்திலே அபிமாநிகளான ப்ரஹ்மாதிகளுக்கும் ஸ்வயத்நத்தால் அவனை அறிய வொண்ணா தென்கிறார்.

[தாமோதரனை இத்யாதி] - ப்ரஹ்மாதிகள் பாசுரமிருக்கிறபடி. ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் ஒருவர்க்கும் தரைகாணப்போமோ. [தனிமுதல்வனை] - "ஸதேவ" என்கிற படியே - ஜகத்துக்கு த்ரிவிதகாரணமும் தானேயா யிருக்கிறபடியைத்தான் அறியப்போமோ. [ஞாலமுண்டவனை] - ஆபத்ஸகத்வத்தைத்தான் அறியப்போமோ. [ஆமோதரமறியவொருவர்க்கு] - எங்களையொழிய ஒருவர்க்குத்தான் அறியப்போமோ என்பர்கள். இப்படி சொல்லிக்கொண்டு தொழும் ஸ்வபாவருமாய், அவனுக்கு ஶரீரவத் அந்தரங்கரான ருத்ரனுக்கும் ப்ரஹ்மாவுக்குந்தான் அறியலாமோ. [என்னாழிவண்ணனை யெம்மானை] - தன் குணார்ணவத்தை என்பக்கலிலே மடுத்து என்னை அடிமைகொண்டவனை. எம்மானை யென்னாழிவண்ணனை - தாமோதரனைத் தனிமுதல்வனை ஞாலமுண்டவனை ஆமோதரமறிய ஒருவர்க்கென்றே தொழுமவர்களாய், தாமோதரனுருவாகிய சிவற்குந் திசைமுகற்கும் - தரமறியவாமோ.

ஈடு.—பன்னிரண்டாம்பாட்டு. "எற்பரன்" என்கிறபடியே - என்னளவில் அவன்செய்தாற்போலே செய்வார்க்கு அவனைக்காணலாமல்லது, 'ஸ்வயத்நத்தாலே அறிவோம்' என்பார்க்கு அறியப்போகா தென்கிறார்.

---

பன்னிரண்டாம்பாட்டு - தாமோதரனை இத்யாதி. என்னளவில் அவன் செய்தாற்போலே செய்வார்க்கு என்றது - என்னளவில் அநுக்ரஹம் செய்தாற்போலே அநுக்ரஹிக்கப்பெற்றார்க்கு என்றபடி.

தாமோதரனைத் தனிமுதல்வனை ஞாலமுண்டவனை ஆமோ தரமறிய ஒருவர்க்கென்றாயிற்று ப்ரஹ்மாதிகள் சொல்லுவது. [தாமோதரனை] - அவன் ஆஶ்ரித பரதந்த்ரனாய் நிற்கிற நிலையை அறியப்போமோ? [தனிமுதல்வனை] - "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்கிறபடியே - த்ரிவிதகாரணமும் தானேயாயிருக்கிற இருப்பை அறியப்போமோ? [ஞாலமுண்டவனை] - உண்டாக்கிவிடுகையன்றிக்கே, ஆபத்ஸகனாய்நிற்கும் நிலையை அறியப்போமோ? ஆமோதரமறிய ஒருவர்க்கு? என்னாநிற்பர்கள். தாங்கள் எல்லாம் அறிந்தார்களாக நினைத்து, ஆமோதரமறிய ஒருவர்க்கு என்றே தொழுமவராய், தாமோதரனுருவாகிய-ஸர்வேஶ்வரனுக்கு ஶரீரவத்விதேயரான சிவற்கும் திசைமுகற்கும் தரமறிய ஆமோ? அல்லாதாரிற்காட்டில் தாங்கள் அறிந்தார்களாக அபிமானித்திருக்கிறவர்களாலே தான் அறியப்போமோ? ஆரைத்தா னென்னில், [எம்மானை என்னாழிவண்ணனை] - குளப்படியிலே கடலைமடுத்தாற்போலே, தான் குணார்ணவமா யிருக்கிறஇருப்பை எனக்கு அறிவித்தவனை. இப்படி அவன்தானே காட்ட, நான்கண்டாற்போலே காண்பார்க்குக் காணலாமித்தனையல்லது, ஸ்வயத்நத்தால் காண்பார்க்கு அறியப்போமோ? எம்மானை யென்னாழிவண்ணனை - தாமோதரனைத் தனிமுதல்வனை ஞாலமுண்டவனை ஆமோ தரமறிய ஒருவர்க்கென்றே தொழுமவர்களாய், தாமோதரனுருவாகிய சிவற்கும் திசைமுகற்கும் தரமறியவாமோ? என்று அங்வயம். (கஉ)

---

ப்ர —(தாமோதரனைத்தனிமுதல்வனை) ஊாநொழேு ஷஷ்வுவாஂஜெ ஸஜிஷ்யாயாஂ [உ], "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் - ததைக்ஷத பஹுஸ்யாஂ ப்ரஜாயேயேதி".

---

"தாமோதரனை" என்று தொடங்கி, "ஒருவர்க்கு" என்னுமளவும் - ப்ரஹ்மாதிகள் வார்த்தை யென்கைக்காக அருளிச்செய்கிறார் - தாமோதரனை இத்யாதி. இப்பதத்ரயத்துக்கு ஹாவம்-அவன் இத்யாதி. 'தனிமுதல்வன்' என்று - நிமித்தோபாதாநங்கள் சொன்னது-ஸஹகாரி காரணத்துக்கும் உபலக்ஷணம். ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் - உண்டாக்கி இத்யாதி. "யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேதஸ:" இத்யேவமாகாரேண ஹிதேபிவதர்தி, 'சிவற்கும் திசைமுகற்கும் தரமறியவாமோ' இதி கதமுச்யத இத்யத்ராஹ - ஆமோதரமறிய இத்யாதி. ஒருவர்க்கும் - தரமறியவாமோ வென்று அந்வயம். தரமறியவாமோ - பரிச்சேதித்தறியவாமோ. தரம் - பரிச்சேதம். 'சிவற்கும் திசைமுகற்கும்' என்ற பூஜ்யோக்திக்கு ஹாவம் - அல்லாதாரில் இத்யாதி. 'ஆழிவண்ணனை-எம்மானை' என்று அந்வயித்து அருளிச்செய்கிறார் - குளப்படியிலே இத்யாதி. ஆழிபோன்ற ஸ்வபாவத்தை உடையவனென்று பாவார்த்தம். 'எம்மானை யென்னாழிவண்ணனை' என்றது - ஆழ்வார்வார்த்தை. ஆனால் ஒருத்தராலும் அறியப்போகாதோ? என்ன; 'எம்மானை' என்றத்தால் ஸூசிதம் ஹாவமாஹ - இப்படி இத்யாதி. எம்மானை என்னாழிவண்ணனை - தாமோதரனைத் தனிமுதல்வனை ஞாலமுண்டவனை - ஒருவர்க்கு - தரம் அறியவாமோ - என்று தொழுமவர்களாய்த் தாமோதரனுருவாகிய சிவற்கும் திசைமுகற்கும் - தரமறியஆமோ? இத்யந்வய:. (கஉ)

## பதின்மூன்றாம்பாட்டு.

**வண்ணமாமணிச்சோதியை அமரர்தலைமகனைக்**
**கண்ணனைநெடுமாலைத் தென்குருகூர்ச்சடகோபன்**
**பண்ணியதமிழ்மாலையாயிரத்துள் இவைபன்னிரண்டும்**
**பண்ணிற்பன்னிருநாமப்பாட்டு அண்ணல்தாளணைவிக்குமே.**

ஆ.—(வண்ணமாமணி.) இத்திருவாய்மொழி வல்லார் எம்பெருமானைப் பெறுவா ரென்கிறார்.

ஓ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியைக் கற்றவர்களை இத்திருவாய்மொழி தானே எம்பெருமான் திருவடிகளிலே சேர்க்கு மென்கிறார்.

[வண்ணமென்று தொடங்கி] - நிறமுடைத்தாய் மஹார்க்கமான மணியினுடைய ஒளியையுடையனாய் அயர்வறுமமரர்களதிபதியுமாய் அஸ்மதாதிகளுக்கும் ஸுலபனாகைக்காக க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம்பண்ணுவதுஞ்செய்து என்பக்கலிலே மிகவும் அபிநிவிஷ்டனானவனை. [பண்ணில்] - பண்ணிலே நடந்த.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத்ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

வண்ணம் - நிறத்தையுடைத்தாய், மா - பெருவிலையனான, மணி - நீலமணியினுடைய, சோதியை - ஒளிபோலேயிருக்கிற தேஜஸ்ஸையுடையனாய், (இவ்வழகு), அமரர் - நித்யஸூரிகளுக்கும், தலைமகனை - பரிச்சேதிக்கவொண்ணாத பெரியவனாய், கண்ணனை - ஆஶ்ரிதரைத்தானே அநுபவிக்குமவனாய், நெடுமாலை - அதுக்கு அடியான நிரதிசயவ்யாமோஹத்தை யுடையனானவனைப்பற்ற, தென் - அழகிய, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், பண்ணிய - செய்தவையாய், தமிழ்மாலை - ஸர்வாதிகாரமான த்ராவிடஸந்தர்ப்பரூபமான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும், பண்ணில் - பண்ணிலே வர்த்திப்பதாய், பன்னிருநாமப்பாட்டு - திருத்வாதசநாமத்தைப்பற்றிவருகிற பாட்டான, இவை பன்னிரண்டும் - இவை பன்னிரண்டும், அண்ணல்- ஸர்வேஶ்வரன், தாள் - திருவடிகளை, அணைவிக்கும் - ப்ராபிப்பிக்கும். இது கலித்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்களை இத்திருவாய்மொழி தானே அவன் திருவடிகளிலே சேர்க்கு மென்கிறார்.

[வண்ணமாமணிச்சோதியை] - அழகிய நிறத்தையுடைத்தாய்ப் பெருவிலையனான நீலமணிபோலேயிருக்கிற வடிவையுடையவனை. [அமரர் தலைமகனை] - இவ்வழகு நித்யஸூரிகளாலும் அநுபவித்து முடிக்கவொண்ணாதபடி அவ்வருகா யிருக்கை. [கண்ணனை] - இவ்வழகு விலக்ஷணாதிகாரமாகையன்றிக்கே, அஸ்மதாதிகளுக்கும் ஸுலபனானவனை. [நெடுமாலை] - என்னளவில் பர்யவஸியாதே, என்னோடு பரம்பராஸம்பந்தித்தவர்களளவும் செல்லும் வ்யாமோஹாதிஶயத்தை யுடையவனை.[பண்ணிய]-வேதம்போலே அடியின்றிக்கே யிருக்கிறதன்று. "அபௌருஷேயம்" என்னுமதிற்காட்டிலும் விலக்ஷணமா யிருக்கிறதாயிற்று வக்த்ருசுத்தியாலே. [பண்ணில்]இவைதான் பண்ணிலே

புணர்க்கப்பட்டன. [பன்னிருநாமப்பாட்டு] - ஶ்ரீவைஷ்ணவசிஹ்நமான திருநாமங்களைவைத்துப் பாடினவை. [அண்ணல் தாளணைவிக்குமே] - ஸர்வேஶ்வரன் திருவடிகளை அணைவிக்கும் - சேர்க்கும். இப்பத்தோட்டை ஸம்பந்தந்தானே கேசவன் தமராக்கும்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றவர்களை, இத்திருவாய்மொழி தானே எம்பெருமான்திருவடிகளைச் சேர்த்துவிடு மென்கிறார்.

[வண்ணம்] - அழகிய நிறத்தை யுடைத்தாய்ப் பெருவிலையனான ரத்நம்போலேயிருக்கிற விக்ரஹத்தையுடையவனை. [வண்ணமாமணிச்சோதியை] - வண்ணம் - நிறம். [மாமணி]-மா-கறுப்பு. கறுத்தமணிபோலே. நீலரத்நம்போன்றவடிவில்தேஜஸ்ஸை யுடையவ னென்றுமாம். இவ்வழகைக் கொள்ளைகொள்ளும் போக்தாக்களைச் சொல்லுகிறது. [அமரர்தலைமகனை] - ஒருநாடாக அநுபவியாநின்றாலும் தன்னழகைப்பரிச்சேதிக்க வொண்ணாதிருக்கிறவனை. [கண்ணனை] - அவர்களே அநுபவித்துப்போகாமே, இங்குள்ளாரும் அநுபவிக்கும்படி க்ருஷ்ணனாய்வந்து அவதரித்தவனை. [நெடுமாலை] - ஒருவனை விஷயீகரித்தால் அவனளவில் தலைக்கட்டாத வ்யாமோஹத்தையுடையவனை. [தென் குருகூர்ச்சடகோபன்பண்ணிய] - வேதம்போலே பிறப்பிலியன்று. 'அபௌருஷேயம்' (அபௌருஷேயம்) என்னுமதிலும் வீறுண்டாயிருக்கிற தாயிற்று வக்த்ருவிஶேஷத்தாலே. இவை பண்ணிலேயாயிற்று நடந்தது. [பன்னிருநாமப்பாட்டு] - வைஷ்ணவத்வசிஹ்நமான திருநாமங்களைவைத்துப் பாடினவை. இவை செய்வதேன்? என்னில், [அண்ணல் தாளணைவிக்கும்] - ஸர்வேஶ்வரன் திருவடிகளோடே சேர்த்துவிடும். இத்திருவாய்மொழியோட்டை ஸம்பந்தந்தானே கேசவன்தமராக்கிவிடும்.

---

நிகமம் - வண்ணமாமணி இத்யாதி. 'பன்னிருநாமப்பாட்டு அண்ணல்தாளணைவிக்கும்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

ப்ரதமார்த்தத்தில், வண்ணம் - அழகிய நிறம். மா என்று - மஹத்தை. சோதி என்று விக்ரஹம். த்விதீயார்த்தத்தில், "மாமணி - வண்ணச்சோதி" இத்யந்வய:. "மா" என்று - கறுப்பாய், நீலமணி யென்றபடி. "வண்ணம்" என்று - நிறத்துக்கு ஆஶ்ரயமான விக்ரஹத்தை லக்ஷிக்கிறது. "தலைமகனை" என்றதுக்கு ஹாவம் - ஒருநாடாக இத்யாதி. ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் - அவர்களே இத்யாதி. பிறப்பிலியன்றாகில் வீறுண்டாகக்கூடுமோ? என்ன, அபௌருஷேயம் இத்யாதி. வீறு - அதிசயம். வக்த்ருவிசேஷத்தாலே யென்றவிடத்தில் - "வ்யாஹவாதிநோவக்த்ரு" "ஸஹோவாசவ்யாஸ:பாராஶர்ய:" "யதேகிஞ்சமநுரவதத்பேஷஜம்" என்றிருக்கையாலே, மயர்வற மதிநலம்பெற்ற இவருடைய ஸ்ரீஸூக்திவைலக்ஷண்யம் ஸம்புகர்க்யாயஸித்தமிறே யென்றபடி. தென்குருகூர் இத்யாதிக்கு - அழகிய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த, த்ராவிடஸந்தர்ப்பரூபமான ஆயிரத்தினுள்ளும், பண்ணிலேவர்த்திப்பதாய்த் திருத்வாதசநாமத்தைப்பற்றி வருகிற பாட்டான இவை பன்னிரண்டுமென்று ஶப்தார்த்தம். "பன்னிருநாமப்பாட்டு" என்றவிடத்திலே விவக்ஷிதம் விஶேஷமாஹ - வைஷ்ணவத்வ இத்யாதி. பூர்வவாக்யத்தை விவரிக்கிறார் - இத்திருவாய்மொழி இத்யாதி.

முதற்பாட்டில் - தம்மோடு ஸம்பந்திஸம்பந்திகளுமெல்லாரும் தம்மைப் போலே விஷயீக்ருதராளுர்க ளென்ருர்; இரண்டாம்பாட்டில்-அதுக்கு அடி நாராயணனுகையாலே என்றும், அந்நாராயண ஶப்தார்த்தத்தையும் அருளிச்செய்தார்; மூன்ரும்பாட்டில் – இப்படி விஷயீகரிக்கைக்கு ஹேது சொன்னுர்; நாலாம்பாட்டில் - ஸர்வகாலமும் தன்னையே அநுபவிக்கும்படி பண்ணிஞ னென்ருர்; அஞ்சாம்பாட்டில் - இப்படி தம்மை யநுபவிப்பித்ததனுலே அவன்வடிவில்புகரைச் சொன்னுர்; ஆரும்பாட்டில் - இப்படி என்னை விஷயீகரிக்கைக்கடி நிர்ஹேதுக க்ருபையென்ருர்; எழாம்பாட்டில் - தன்னையே ஸர்வகாலமும் அநுபவிக்கும்படியான நெஞ்சைத் தந்தா னென்ருர்; எட்டாம்பாட்டில் - தந்தவளவன்றிக்கே, விரோதியான நெஞ்சையும் போக்கிஞ னென்ருர்; ஒன்பதாம்பாட்டில் - தன்னுடைய கல்யாணகுணங்களையே நான் அநுபவிக்கும்படி என் ஹ்ருதயத்திலே புகுந்தா னென்ருர்; பத்தாம்பாட்டில் - அநுபவவிரோதியான இந்த்ரியங்களையும் தன்வழியாக்கிக்கொண்டா னென்ருர்; பதிஞேராம்பாட்டில் - ஏவம்பூதனுனவன் என்னையல்லது அறியாஞுை னென்ருர்; பன்னிரண்டாம்பாட்டில் - என்னைப்போலே காண்பார்க்குக் காணலாமதொழிய ஸ்வயத்நத்தால் அறியப்போகா தென்ருர்; நிகமத்தில் - பலஞ்சொல்லித் தலைக்கட்டிஞர். (கரு)

---

*ஹேதுசொன்னுரென்றது-'மாதவனென்றதேகொண்டு'என்றத்தைப்பற்ற. இப்படி என்னை விஷயீகரிக்கைக்கு அடி - உக்திமாத்ரத்தையே வ்யாஜமாக்கி விஷயீகரிக்கைக்கு அடி.* (கரு)

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி:—** [illegible]

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:—** [illegible]

---

| | |
|---|---|
| திருவாய்மொழி நூற்றந்தாதி. | கேசவனுலெந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்<br>தேசடைந்தாரென்றுசிறந்துரைத்த - வீசுபுகழ்<br>மாறன்மலரடியேமன்னுயிர்க்கெல்லாமுய்கைக்கு<br>ஆறென்று நெஞ்சேயணை. |

**ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானுர்திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.**

## எட்டாந் திருவாய்மொழி—அணைவதரவணை: ப்ரவேசம்.

ஆ.—(அணைவது.) "தாமோதரனை" என்கிற பாட்டில் ப்ரஸ்துதமான ஸர்வேச்வரத்வத்தைத் தம்முடைய ப்ரீத்யதிசயத்தாலே ஸஹேதுகமாக உபபாதித்து, இப்படி ஸர்வேச்வரனான எம்பெருமானை ஆச்ரயியுங்கோளென்று பரரை நோக்கி அருளிச்செய்கிறார்.

ஒ.—எட்டாந் திருவாய்மொழியில், தம்முடைய பரிகரத்தையும் தம்மைப்போலே யாக்கி, "இத்தாற் போராது" என்று பார்த்தருளி, தனக்கு அஸாதாரணமாய், பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே பெரிய பிராட்டியாரையும் தனக்குப் பர்யங்கபூதனான திருவனந்தாழ்வான் தொடக்கமான அயர்வறுமமரர்களையும் பரிகரமாகவுடைத்தாய், எத்தனையேனும் அளவுடைய ப்ரஹ்மாதிகளுக்கும் ஸ்வபாஹுபலத்தால் துஷ்ப்ராபமாய், ஓரளவுமில்லையே யாகிலும் திருவடிகளையே பற்றினர்க்கு அநாயாஸேந பெறலாய், து:ககந்தரஹிதமாய், அத்யந்த ஸுகரூபமாய், நிரதிசயமங்களமாய், அநுபவிப்பார்க்கு அதிஸ்புடமாய், அபரிச்சேத்யமாய், உத்தமமுமாயுள்ள முக்தப்ராப்யமான தன்னுடைய ஐச்வர்யத்தை, ஸர்வேச்வரனுகையாலே அபேக்ஷித ஸம்விதாநக்ஷமனுயுள்ள ஸ்ரீயப்பதியான எம்பெருமான், தமக்கும் தம் பரிகாரத்துக்கும் தருகையிலே யுபக்ரமித்தருளுகிற விருப்பைக் கண்டு அதிப்ரீதரான ஆழ்வார், "எல்லாரையும் ஈத்ருசபோகபாகிகளாக்கவேணும்" என்று பார்த்தருளி, அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தையும், அதுக்கு உறுப்பாக ஐச்வர்யத்தையும் உபதேசித்து, நானும் இவர்களைப்போலே யாகாதே தநேகபோகனுப்கொண்டு அவனை புஜிக்கப்பெற்றேனென்று த்ருப்தராய் முடிக்கிறார்.

ப.—எட்டாந் திருவாய்மொழியில், "மேவுந்தன்மையமாக்கினன்" என்று - ஸ்வஸம்பந்தி ஜநங்களுக்கும் ப்ராப்திபர்யந்தபலரூப மோக்ஷப்ரதனுய்க் கொண்டு ஈச்வரன் நிற்கிற நிலையையும், அதுக்கு அடியான பரத்வத்தையும் அநுஸந்தித்து, 'இத்தை ஸம்ஸாரிகள் இழக்கவொண்ணாது' என்று உபதேசிப்பாராகக் கோலி; அவனுடைய ஸர்வ நிர்வாஹகத்வத்தையும், ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமான மோக்ஷப்ரதத்வத்தையும், அதுக்கு உறுப்பான சேஷ்டித வைலக்ஷண்யத்தையும், இந்தவ்யாபார ப்ரகாசிதமான ஸௌலப்யாதி குணங்கள் நித்யாநுபாவ்யமென்னுமிடத்தையும், அந்த குணப்ரகாசகமான அவதாரபாஹுள்யத்தையும், அவதாரதசையிலும் பரத்வம் அதிப்ரஸித்தமென்னுமிடத்தையும், அவதீர்ணனனவன் ரக்ஷணவ்யாமோஹத்தால் பண்ணும் வ்யாபாரம் அநேகமென்னுமிடத்தையும், அவதீர்ணனுடைய பரத்வோபயுக்தமான அதிசயிதாகாரங்கள் அறியவல்லாரில்லையென்னுமிடத்தையும், அவனுடைய ஆச்ரித ஸௌலப்யம் அபரிச்சிந்நமென்னுமிடத்தையும், ஏவம்விதனைத் தாம் அநுபவிக்கப் பெற்றமையையும் அருளிச்செய்து, உபதேசாந்நிவ்ருத்தராய் ஸ்வலாபத்தோடே தலைக்கட்டுகிறார். இதிற் சொல்லுகிற பரத்வம், முதல் திருவாய்மொழி போலே-ஸ்வரூபகதமாயுமன்றியே, திண்ணன் வீட்டிற்போலே - மநுஷ்யத்வே பரத்வமுமன்றியே, மோக்ஷப்ரதத்வோபயுக்தமாயிருக்கிறது.

இ.—எட்டாந் திருவாய்மொழியில், தம்முடைய பரிகரத்தையும் தம்மைப்போலே யாக்கி, "இத்தாற் போராது' என்றுபார்த்து, முக்தப்ராப்யமான ஐச்வர்யத்தைத் தமக்கும் தம்பரிகரத்துக்கும் தருகையிலே யொருப்பட்டிருக்கிற விருப்பைக் கண்டு அதிப்ரீதராய், ஸம்ஸாரிகள் படுகிற அநர்த்தத்தைக்கண்டு, "எல்லாரும் ஈத்ருசபோகபாகிகளாகவேணும்" என்று மோக்ஷப்ரதத்வத்தை யுபதேசிக்க, அது ராவணனுக்குச் சொன்ன ஹிதம்போலே நிஷ்பல

மாகையாலே, "இவர்களைப்போலே யாகாதே நாம்ததேகஹோகராகப் பெற்றோமே" என்று த்ருப்தராய் முடிக்கிறார். "இத்திருவாய்மொழி பரத்வோபதேசம்" என்று பூர்வர்கள் நிர்வஹிப்பர்கள். "பலவிடத்திலும் பரத்வஞ்சொல்லா நின்றது, மோக்ஷப்ரதத்வம் தனியே சொல்ல வேண்டுவதொன்று, அத்தைச் சொல்லுகிறது" என்று பட்டர் அருளிச்செய்வர். இவைதான் ஒன்றை யொன்று ஒழிந்திராது, மோக்ஷப்ரதத்வம் ஸர்வேஶ்வரத்வத்தோடே வ்யாப்தம். ஸர்வேஶ்வரனாகில் மோக்ஷப்ரதனாயிருக்கும். மோக்ஷமாகிறது - தனக்கு அஸாதாரணமாய் முக்தப்ராப்யமான தன்னுடைய ஐஶ்வர்யம். அதாகிறது - பிராட்டி திருவநந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளைப் பரிகரமாகவுடைத்தாய், அளவுடையார்க்கும் ஸ்வயத்நஸாத்யமன்றிக்கே தன்னாலே தன்னைப்பெறுவார்க்கு அநாயாஸஸித்தமாய், நிரதிஶய ஸுகரூபமாய், அபரிச்சேத்யமாய், அதிஸ்புடமாய் ஸர்வோத்க்ருஷ்டமான ஐஶ்வர்யம்.

ஈடு.— ஸர்வேஶ்வரன் தம்பக்கல் பண்ணின வ்யாமோஹம் தம்மோருவரளவிலுமன்றிக்கே, தம்மோடு ஸம்பந்தமுடையாரளவிலும் வெள்ளமிட்டபடியைச் சொன்னார் - கீழ்; இத்திருவாய்மொழியில் - "நம்மோட்டை ஸம்பந்தமே ஹேதுவாக அவன் இப்படி விஷயீகரிப்பானான பின்பு ஸம்ஸாரிகளுக்கும் நம்மோட்டை ஒரு ஸம்பந்தத்தை உண்டாக்கி அவன் க்ருபைக்கு விஷயமாக்குவோம்" என்று, அவர்களுக்கு மோக்ஷப்ரதத்வத்தை அருளிச்செய்கிறார். இத்திருவாய்மொழி தன்னை - 'ஈஶ்வரத்வஞ் சொல்லுகிறது' என்று நிர்வஹிப்பாருமுண்டு; 'மோக்ஷப்ரதத்வஞ் சொல்லுகிறது' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. இவைதான் ஒன்றையொன்று விட்டிராது, ஈஶ்வரனாயிற்று மோக்ஷப்ரதனாமவன்; மோக்ஷப்ரதனாம்போது ஈஶ்வரனாகவேணும். இதுதன்னிற் செய்ததாகிறது என்? என்னில்; - ஆழ்வார்க்கு முதல்தன்னிலே ஸர்வேஶ்வரன் அத்வேஷத்தைப் பிறப்பித்து ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து, ருசியை யுண்டாக்கி, இவர்விடிலும் தான் விடாதே

---

அணைவதரவணை ப்ரவேஶே. வ்ருத்தாநுவாதபூர்வகமாக ஸங்கதி - ஸர்வேஶ்வரன் இத்யாதி. இந்த வாக்யம் - "கேசவன்தமர்கீழ்மேலெமரேழெழுபிறப்பும்" இத்யாதியைக் கடாக்ஷித்து. நம்மோட்டை ஒரு ஸம்பந்தத்தை யுண்டாக்கி - நாம் உபதேசித்து சிஷ்யரூபஸம்பந்தத்தை யுண்டாக்கி. நம்மோட்டை ஸம்பந்தமென்கிறவிடத்திலே - "பிள்ளை லோகாசார்யர், 'ஆய்க்குடி' என்கிற க்ராமத்திலே 'பெருமாள் பறிகொடுத்தார்' என்று கேட்டுத் தாமும் பறிகொடுத்தார்; அத்தைக் கேட்டருளிப் பெருமாள் அத்யந்தம் ப்ரீதராய்ப் பிள்ளை லோகாசார்யரைப் பார்த்து, 'உமக்கும் உம்முடைய ஸம்பந்திகளுக்கும் மோக்ஷம் தந்தோம்' என்று திருவுள்ளமாக, அநந்தரம் பிள்ளைலோகாசார்யர் "யம் யம் ஸ்ப்ருஶதி பாணிப்யாம்" இத்யாதிப்படியே தம்முடைய பரமக்ருபையாலே எறும்பு முதலானவற்றை ஸ்பர்ஶிப்பது, ஸ்தாவராதிகளைக் கடாக்ஷிப்பது முதலான க்ருபாகார்யமான செயல்களைச் செய்து எல்லார்க்கும் ஸ்வஸம்பந்தத்தை யுண்டாக்கியருளினாப்போலே" என்று அருளிச்செய்வர். "தீர்த்தனுலகளந்த" இத்யாதியையும், "இருவரவர்முதலுந்தானே" இத்யாதியையும் பற்ற-ஈஶ்வரத்வம் சொல்லுகிறதென்று நிர்வஹிப்பாருமுண்டு என்றது. அது முதல்திருவாய்மொழி, "திண்ணன்வீடு" இத்யாதியாலே ஸித்தமாகையாலே, "பிறவிக்கடல் நீந்துவார்க்கு - புணைவன்" என்றத்தை உபஜீவித்துக்கொண்டு மோக்ஷப்ரதத்வம் சொல்லுகிறதென்று பட்டர் அருளிச்செய்யும்படி யென்றபடி. ஈஶ்வரத்வாபேக்ஷ ஈஶ்வரத்வாஶ்ரயாயி நாம ஸ்வாதந்த்ர்யம் கார்மதிஸித்தம் ஹ - இவைதான் இத்யாதி வாக்யத்ரயேண. மோக்ஷப்ரதனை ஈஶ்வர ப்ரதிபாதகம் இத்திருவாய்மொழி யென்றபடி. இரண்டும் - முதற்பாட்டிலே வ்யக்தம். விஸ்தாரஸங்கதி - இது தன்னில் இத்யாதி. இது தன்னில் - இத்திருவாய்மொழியிலே. அத்வேஷத்தைப் பிறப்பித்து என்றது - "யாதானும்பற்றி நீங்கும்விரதத்தை நல்வீடுசெய்யும்" "இசைவித்தென்னை" "என்னிசைவினை" இத்யாதியைப்பற்ற. ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து என்றது - மயர்வற மதிநலமருளினமையைப் பற்ற. யத்வா, இரண்டும் - "தீமனங்கெடுத்தாய்" "மருவித்தொழும்மனமேதந்தாய்" என்றத்தைப் பற்றவாதல். ருசியை யுண்டாக்கி என்றது-"அடிமைக்கணன்புசெய்வித்து" "நின்னலாலிலேன்காண்" இத்யாதியைப்பற்ற. "யானொட்டி" இத்யாதியைப்பற்ற - இவர்விடிலும் இத்யாதி. "முடியாததென்னெனக்கேலினி" "கேசவன்

விரும்பி, இதுதான் இவர்தம்மளவிலன்றிக்கே தம்மோடு ஸம்பந்தமுடையாரளவும் இப்படியே பெருகிக் கரைபுரளுகிறபடியை அநுஸந்தித்து, "ஸர்வேஶ்வரன் ஸ்வபாவம் இதுவானபின்பு, நாம் பெற்றபேறு எல்லாரும் பெறும்படி பண்ணுவோம்" என்று, ஸம்ஸாரிகளை யடையப்பார்த்து, அவர்களுக்கு, 'மோக்ஷப்ரதன்' என்னுமிடத்தை அருளிச்செய்கிறார். இவர், தாம்பெற்றதாய்ப் பிறர்க்கு உபதேசிக்கிற பேறுதான்; பிராட்டி, திருவடி, திருவநந்தாழ்வானைப் பரிகரமாகவுடைத்தாய், எத்தனையேனும் அளவுடையார்க்கும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்க அரிதாய், அவனாலே பெறப் பார்ப்பார்க்கு வருத்தம் அறப்பெறலாய், ஸம்ஸாரத்தில் போகங்கள்போலே அஸ்த்திரமாயிருக்கையன்றிக்கே நித்யமாய், அவிஶதமாயிருக்கை யன்றிக்கே, அத்யந்தம் ஸ்புடமாய், துக்கமிஶ்ரமா யிருக்கையன்றிக்கே ஸுகைகதாநமாய், மங்களமாய், உத்தமமாய், அபரிச்சிந்நமாய், இப்படியிருக்கிற முக்தப்ராப்ய போகத்தைத் தமக்கும் தம்பரிகரத்துக்கும் அவன் கொடுப்பானாகப் பாரிக்கிற படியைக் கண்டு, "ஸம்ஸாரிகளையும் ஈத்ருஶபோகிகளாம்படி பண்ணவேணும்" என்று பார்த்து அவர்களைக்குறித்து ஹிதம் அருளிச்செய்ய, அதுகேட்டபின்பும் அவர்கள் பழைய நிலையில்நின்றும் குலையாதே, மால்யவான் தொடக்கமானார் ராவணனுக்குச் சொன்ன ஹிதம்போலே அவர்கள் இத்தை அநாதரித்திருக்க,

---

ப்ர—அணவதரவணை ப்ரவேஶே—(மால்யவான் தொடக்கமானார் ராவணனுக்குச் சொன்னஹிதம்போலே அவர்கள் இதை யநாதரித்திருக்க):—"[illegible],
"[illegible] । ராவணஸ்ய [illegible] [illegible] । [illegible] । [illegible] । [illegible] । [illegible] । [illegible] ராவண । [illegible]"
இதி [illegible] ராவண: [illegible], '[illegible] வாக்யம் [illegible] । [illegible]"

[illegible] ஸீதா[illegible] [illegible],"[illegible]

---

தமர்" "கோவிந்தன்" இத்யாதிகளைப்பற்ற - **இதுதான் இவர் தம்மளவிலன்றிக்கே** இத்யாதி. "அவன் க்ருபைக்கு விஷயமாக்குவோம்"என்றதின் விவரணம்-**நாம் பெற்றபேறு எல்லாரும்** இத்யாதி. பாட்டுக்களிலே யிறங்கி உத்தரார்த்தத்தை விவரிக்கிறார் - **இவர் தாம்** இத்யாதி. **பரிகரமாகவுடைத்தாய்** - பரிகரமாகவுடைய ஸர்வேஶ்வரனை விஷயமாகவுடைத்தாய். பிராட்டி திருவடி திருவநந்தாழ்வா னென்றதுக்கு - "அணவதரவணை மேல்" இத்யாதௌ ஹ்ருதயம். **ஸ்வயத்நத்தால் ப்ராபிக்க அரிதா** யென்றது-"ஆர்காண்பாரே"என்றத்தைப் பற்ற. **வருத்தமறப் பெறலாய்** என்றது - "புணைவன்" என்றத்தைப்பற்ற. "கலமந்தமில்லதோர்நாடு" என்றத்தைப்பற்ற - **ஸம்ஸாரத்தில் போகங்கள்** இத்யாதி. மேலெல்லாம் - "[illegible]" இத்யாதி ஶ்ருத்யவாக்யம் அநுஸந்தேயம். **அபரிச்சிந்நமாய்** இருக்குமென்று கூட்டி நிர்வஹிப்பது. **தமக்கும் தம்பரிகரத்துக்கும்** என்றது-"கேசவன் தமர்" இத்யாதியைப் பற்ற. **அவன் கொடுப்பானாகப் பாரிக்கிறபடியை** என்றது-"ஆள்வரெம்மாவீடே" என்றதிலே ஸூசிதம். **ஹிதம் அருளிச்செய்ய** என்றது - "நாடு புகுவீர்" என்றத்தைப் பற்ற. **பழையநிலை** - பூர்வஸ்த்திதி. **மால்யவான் தொடக்கமானார்** என்றது-மாரீசன், ஸ்ரீவிபீஷணாழ்வான், இவர்களை. "[illegible] ராவண । [illegible]" என்று மால்யவானும், "[illegible] ராவண[illegible]" என்று மாரீசனும், "[illegible] । [illegible]" என்று விபீஷணாழ்வானும் சொன்னார்களிறே.

'நாம் நம்முடைய அநுபவத்தைவிட்டு இவர்களோடே துவக்குண்கிற இதுக்கு ப்ரயோஜநமேன்?' என்று, வழிபறிக்கும்நிலத்தில் தம்மைப்பொருள்கொண்டு தப்பினர் ஹ்ருஷ்டராமாபோலே, 'நாம் முந்துறமுன்னம் இவர்களைப்போலே யாகாதொழியப் பெற்றோமிறே' என்று ஸ்வலாபத்தை அநுஸந்தித்து இனியராகிறார்.

## முதற்பாட்டு.

அணைவதரவணைமேல் பூம்பாவையாகம்
புணர்வது இருவரவர்முதலுந் தானே
இணைவனுமெப்பொருட்கும் வீடுமுதலாம்
புணைவன் பிறவிக்கடல்நீந்துவார்க்கே.

ஆ.—சாமபர்யங்கஸாயி யாகையாலும், ஸ்ரீயஃபதியாகையாலும், ப்ரஹ்மருத்ராதிகளுக்கு நிர்வாஹகனாகையாலும், ஸர்வாத்மஸஜாதீயதயா அவதீர்ணனாய்க்கொண்டு ஸர்வஜகத்ரக்ஷகனாகையாலும், முமுக்ஷுக்களுக்கு ப்ரதிபந்தக நிவர்த்தகனாய்க்கொண்டு மோக்ஷப்ரதனாகையாலும், நாராயணனே ஸர்வேஸ்வரனென்கிறார்.

---

[illegible]

[illegible]

---

துவக்குண்கிற - ஈடுபடுகிற. ஸ்வலாபத்தை யநுஸந்தித்து என்றது - "கண்ணனை நான் கண்டேனே" என்றத்தைப்பற்ற. இனியராகிறார் - ப்ரீதராகிறார்.

ஒ.—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கிற அர்த்தத்தை ஸம்க்ஷேபிக்கிறார்.

[அணைவதென்று தொடங்கி] - பெரியபிராட்டியாரும் எம்பெருமானும் திருவநந்தாழ்வான்மேலே யிருக்குமிருப்பைக் காண்கை முக்தப்ராப்யமென்று கருத்து. ஆகம் - உடம்பு. [இருவரவர்] - ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ரர்கள். [இணைவனென்று தொடங்கி] - தேவமநுஷ்யாதி ஸமஸ்த ஜந்து ஸஜாதீயனாய் வந்து திருவவதாரம்பண்ணி மோக்ஷப்ரதனும். [புணைவன்] - துஸ்தரமான ஸம்ஸாரத்தை "கடக்கவேணும்" என்றிருக்கும் ஆஸ்ரிதர் பரமெல்லாம் தானே நிர்வஹிப்பானாகை.

ப.—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியில் அர்த்தத்துக்கு ஸங்க்ரஹரூபமான ஸர்வநிர்வாஹகத்வத்தை அருளிச்செய்கிறார்.

அரவு அணைமேல் - திருவநந்தாழ்வானாகிற அணைமேலே, அணைவது - அபிமதமாகச் சேர்வது, பூ பாவை - பூவிலே பரிமளம் வடிவுகொண்டாற்போலே போக்யபூதையான பிராட்டியின், ஆகம்-திருமேனியை, புணர்வது - (போக்யமாக) ஸம்ஸ்லேஷிப்பது, (இது நித்யவிபூதிநிர்வாஹகத்வம்); (லீலாவிபூதிநிர்வஹணத்தில்), அவர் - காரணேஸ்வரராக ப்ரஸித்தரான, இருவர்-ப்ரஹ்மருத்ரர்கள், (இவருடைய உத்பத்திஸ்த்தித்யாதிகளுக்கும்), தானே - தானே, முதலும் - ஹேதுவாயிருக்கும், எப்பொருட்கும்-(ரக்ஷ்யமான ஜகத்தில்) ஸமஸ்தபதார்த்தங்களுக்கும், இணைவனும் - (அவதாரமுகத்தாலே) ஸஜாதீயனாயிருக்கும், விடு - (ரக்ஷணத்துக்கு மேலெல்லையான) மோக்ஷத்துக்கு, முதலாம் - ஹேதுவாயிருக்கும், (இத்தால் ஸர்வமுக்திப்ரஸங்கியாமைக்காக), பிறவி-ஸம்ஸாரமாகிற, கடல்-கடலை, நீந்துவார்க்கு-நீந்திக்கரையேற வேண்டுவார்க்கு, புணைவன் - தெப்பமாமவனா யிருக்கும், புணைவன் - தெப்பமாமவன்.

இ.—முதற்பாட்டு. ஸர்வஸங்க்ரஹமாய், இதிலேயோரொரு பதத்தைப்பற்றி - மேலிற்பாட்டுக்களும், அவை தம்மைப்பற்றி யெழுவனவுமாகிறன மேல்.

[அணைவதரவணைமேல்] - மென்மை, குளிர்த்தி, நாற்றம், இவற்றை ஸ்வபாவமாகவுடைய திருவநந்தாழ்வான்மேலே யணைவது. ஸேஷபூதன் அடிமைசெய்தல்லது தரிக்கமாட்டாதாப்போலே, ஸேஷியும் திருவநந்தாழ்வான்மேலே யணைந்தல்லது தரியானாயிருக்கிறபடி. [பூம்பாவை]- பூமென்று - அழகு. பாவையென்று-ஸ்த்ரீத்வம். நிரவதிகமான போக்யதையையும் ஸ்த்ரீத்வத்தையு முடையளாயிருக்கை. தேஹகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் குறைவற்றிருக்கை. [ஆகம் புணர்வது]-இவளுடைய ரூபகுணத்திலே துவக்குண்டு ஆத்மகுணத்தளவும் செல்லமாட்டாதிருக்கை. அணைவது, புணர்வது என்கையாலே - போகம் ஒத்திருக்கிறபடி. "ரஜோ ணாவநேத்ரயஃ". மாதா பிதாக்கள் கூடவிருக்கும் படுக்கையிலே ஸம்பந்தமே ஹேதுவாக வேறும் புத்ரனைப்போலே, பிராட்டியும் அவனும் திருவநந்தாழ்வான்மேலே யிருக்க "தஸ்யைவம் விதாஷேநாயுஷாரோஹதி" - என்கிறபடியே அதிலேயேற, அவர்கள் இவனை யணைக்கை யிறே முக்தப்ராப்யம். [இருவரவர் முதலுந்தானே] - "நஷ்ட ஸ்ராவேஸாநஃ" என்று ஸ்ருதிப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணபூதன். "காரணந்துத்யேயஃ" என்கிறபடியே உபாஸ்யனும் அவனே. ப்ரஹ்மாதிகளுக்குக் காரணத்வமில்லை, ஸாவநாத்ரயாங்விதராகையாலே. [இணைவனமெப்பொருட்கும்] - தேவாதி ஸகலபதார்த்தங்களோடும் ஸஜாதீயனா யவதரிக்கும். அவதாரப்ரயோஜநம் சொல்லுகிறது [வீடுமுதலாம்] - மோக்ஷஹேதுவாகைக்காக அவதரிக்க

வேண்டுகிறது. பரமபதம், சென்று அபேக்ஷிக்க நிலமல்லாமையாலே, ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கிறது. உத்க்ருஷ்டனாகில் வெருண்டு அகலுவர்கள், தாழப்பிறக்கில் காற்கடைக்கொள்ளுவர்கள். ஸர்வஸாதாரணன் மோக்ஷப்ரதனாகைக்காக வந்தவதரித்தால், ஸர்வமுக்தி ப்ரஸங்கியாதோவென்னில். [பிறவிக்கடல் நீந்துவார்க்குப் புணைவனும்] - "ஸம்ஸாரமாகிறதொருகடல், அது நம்மாற்கடக்கவரிது, ஒரு ஸர்வஶக்தியைப்பற்றிக் கடக்கவேணும்" என்று நினைப்பார்க்கு ப்ரதிபூவரீப்த் தலைக்கட்டிக் கொடுக்கும். ஸர்வபர நிர்வாஹகனிறே - ப்ரதிபூ. "விஷ்ணுபோதம்" என்கையாலே தெப்பமென்னவுமாம்.

ஈடு.— முதற்பாட்டு. முக்தப்ராப்யபோகத்தைச்சொல்லுகிறது. முதற்பாட்டுத்தான் இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமாய், மேலுள்ளபாட்டுக்களிலே ஒருபதத்தைப்பற்றிப் போருமவையும்; அதுதன்னைப்பற்றி யெழுமவையுமா யிருக்கிறது

[அணைவது அரவணைமேல்] - முக்தப்ராப்யலோகந்தான் இருக்கிறபடி. பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே, ஸர்வேஶ்வரனும் பிராட்டிமாருங் கூடத் திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே யிருக்கிற இருப்பிலே, இச்சேதநன் முக்தனாய்ச்சென்று கிட்டினால் "அஹம்ப்ரஹ்மாஸ்மி" (அஹம்ப்ரஹ்மாஸ்மி) நான் ராஜபுத்ரன், ப்ரஹ்மப்ரகாரபூதன் என்னக்கடவன்; 'ஆகில் இங்ஙனே போராய்' என்றால், அவன் அங்கீகாரம்பெற்று, மாதாபிதாக்களிருந்த படுக்கையிலே ப்ரஜை சென்று ஏறுமாபோலே "தமேவம்வித்பாதேநாத்யாரோஹதி"( தமேவம்வித்பாதேநாத்யாரோஹதி) என்று ஏறக்கடவனாகச் சொல்லுகிற அப்பேற்றைச் சொல்லுகிறது. [அணைவது] - தாபத்ரயங்களாலே நொந்த ஸம்ஸாரிசேதநன், 'ஏஷ ப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மி' (ஏஷப்ரஹ்மப்ர

---

ப்ர:—முதற்பாட்டு (அணைவதரவணைமேல்). (அணைவது)—ஸ்ரீஹாரீதே (அ-ச) உக்தம் ஹி தாபத்ரய, "த்ருஷ்ணாகாலம் ஸ்வயம் ஶோகம் ஶோகம் உக்த்வா । ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரதம் ॥ ௩௦॥"

---

முதற்பாட்டு - அணைவது இத்யாதி. "அணைவதரவணைமேல் பூம்பாவையாகம்புணர்வது" என்கிற இவ்வளவைப் பராமர்ஶித்து அருளிச்செய்கிறார் - முக்தப்ராப்ய இத்யாதி. "இருவரவர்முதலுந்தானே" இத்யாதியைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - முதற்பாட்டுத்தான் இத்யாதி. அதுதன்னைப்பற்றி - அப்பாட்டுத் தன்னைப்பற்றி.

முக்தப்ராப்ய போகந்தான் இருக்கிறபடி யென்கிற விடத்திலே - "கௌஷீதகீ" என்கிற ஶ்லோகமும், "ஸப்ய்ங்காதி" என்கிற ஶ்லோகமும் அநுஸந்திப்பது. "அணைவதரவணைமேல்" என்றால்-முக்தப்ராப்யபோகம் எப்படி சொல்லிற்றாம்? என்ன - பர்யங்கவித்யையில் இத்யாதி. 'ஸஹஸ்ர ஸ்தூணே விமிதே த்ருடே உக்ரே யத்ர தேவாநாமதிதேவ ஆஸ்தே" என்ற - திருமாமணி மண்டபத்திலே, திருவநந்தாழ்வான்மேலே தர்மாத்யஷ்டபீடத்தை யுடைத்தான திவ்யஸிம்ஹாஸநத்தின்மேலே, "தந்நமத்யே ஷடிஶஸம்பந்நம்" என்கிற பத்மத்திலே, "விமலோத்கர்ஷிணீ ஜ்ஞாநா க்ரியா யோகா ததைவ ச । ப்ரஹ்வீ ஸத்யா ததேஶாநா அநுக்ரஹாஸநஸ்ததா" என்று அந்தப்பத்மத்தின் அஷ்டதளத்திலே, விமலாத்யஷ்ட பரிசாரிகைகளும், அதின் கர்ணிகையிலே யிருக்கிற "ஸுநந்தாத்யைஶ்ச" என்ற வனோடேகூடத் திருவெண்சாமரம்பரிமாற, அந்தக்கர்ணிகையிலே திருவநந்தாழ்வான்மேலே பிராட்டிமாரோடேகூட வீற்றிருக்குமது - பர்யங்க வித்யாப்ரகாரம்; கௌஷீதகீப்ராஹ்மணத்திலே சொல்லப்பட்டது என்று அருளிச்செய்வர். விமிதே - விஶாலே. உக்ரே - அநபிபவநீயே. "அஹம்ப்ரஹ்மாஸ்மி" என்ற ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரண பாவத்தாலேயாதல், ஶரீராத்மபாவத்தாலேயாதல். இந்த இரண்டையும் அருளிச்செய்கிறார் - நான் ராஜபுத்ரன் ப்ரஹ்மப்ரகாரபூதன் என்று. ராஜபுத்ரனென்கையாலே - கார்யகாரணபாவம். ப்ரஹ்மப்ரகாரபூதனென்கையாலே - சரீராத்மபாவம். ராஜபுத்ரன் - ப்ரஹ்மபுத்ர னென்றபடி.

விஷ்டோஸ்மி) என்கிறபடியே - அப்பெரியமடுவிலே விழுந்து தன்தாபமெல்லாம் ஆறுமாபோலேயா யிற்று, முதலிலே இவை யில்லாதவன் திருவநந்தாழ்வான்மேலே யணைந்து, இவை உண்டாய்க் கழிந்தாரைப்போலே யிருக்கும்படி. விடாயர் மடுவிலே விழுமாபோலே யாயிற்று அணைவது. [அரவணைமேல்]-நாற்றம், குளிர்த்தி, மென்மைகளை ஸ்வபாவமாகவுடைய திருவநந்தாழ்வானோடே யணைவது; 'புல்குமணையாம்' என்னக்கடவதிறே அவனை. சேஷபூதன் அடிமை செய்தல்லது தரியாதாப்போலே, சேஷியும் சேஷபூதனோடே அணைந்தல்லது தரியாதானா யிருக்கிறபடி. [பூம்பாவையாகம்புணர்வது] - போக்யதைகவேஷையாய் நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய பெரியபிராட்டியாரோடே கலந்துவர்த்திப்பது. [ஆகம்புணர்வது]-ஆத்மகுணங்கள் குமரிருந்துபோமித்தனை. 'அணைவது, புணர்வது' என்கிறதிறே - மூவர்க்கும் போகம் ஒத்திருக்கையாலே. '**ரம்யாவஸதம் க்ருத்வா**' (ரம்யமாவஸத²ம்க்ருத்வா) - அறுபதினாயிரமாண்டு மலடுநின்ற சக்ரவர்த்தி தன் ஆதரத்துக்குப் போரும்படி சமைத்த மாளிகைகளிலும், திருவுள்ளத்துக்குப்பொருந்தி அழகியதா யிருந்தது காட்டிலே இளையபெருமாள் சமைத்த ஆஸ்ரமமாயிற்று. '**த்ரயோ ரமமாணா:**' (த்ரயோரம

---

ப்ர:—(போகமொத்திருக்கையாலே) ஸ்ரீஸங்க்ஷேபே, "ரம்யாவஸதம் க்ருத்வா ரமமாணா வநே த்ரய:। தேவகந்தர்வஸங்காஸாஸ் தத்ர தே ந்யவஸந் ஸுகம்॥"

---

போராய் - வாராய். எவம்வித் - எவம்ப்ரகாரேணோபாஸக:. தம் - பாதேகாத்யாரோ ஹதீத்யர்வய:. அபிமத விஷயத்தை அணைவார் அத்யபிநிவிஷ்டராய் அணையுமாபோலே, இவனோடே அணையும்போது அபிநிவேசம் தோற்ற அணையுமாகையாலே அவ்வபிநிவேசத்தை அருளிச்செய்கிறார்-தாபத்ரய இத்யாதி. இது - "அணைவது" என்ற பத ஸாமர்த்ய ஸித்தமான பாவம். ஸ்ரீபாரதே மங்கிதீதாயாம், "த்ருஷ்ணார்த்தோஹம் ஸுதாந்தோ ஹ்யஹமஹதஸ்ரம: । ஸர்வஸம்ஹ்ருதவிஷோவஸ் ஸ்ரீஜீவஸர்வதஹ்ய:". "ஸ்நேஹ க்ஷாத்ரம் பாவாஸ்த்ரோ ஹிதஸ்யகே" என்ற ப்ரஹ்மஸப்தத்தின் நிருக்தியைப்பற்ற- அப்பெரிய மடுவிலே என்றது. இவையில்லாதவன் - தாபங்களில்லாதவன். "ஸ்ரீஜீவஸர்வதஹ்ய" என்றதக்கு அர்த்தம்-விடாயர் இத்யாதி. "அரவணை" என்ற பதத்துக்கு வாஸனை - நாற்றம் இத்யாதி. மென்மை - ம்ருதுத்வம். "அணைமேல்" என்றது - அணையோடே யென்று த்ருதீயாவிபக்தியாக்கி - திருவநந்தாழ்வானோடே என்கிறது. உக்தார்த்தே ப்ரமாணம் - புல்குமணையாம் என்னக்கடவதிறே அவனை என்று. முதற்றிருவந்தாதி. புல்குமணையாம் - சாய்ந்துகொள்ள யோக்யமான அணையா மென்றபடி. ஸம்ஸாரதப்தனுகையாலே தன்னைப்பற்றி இவன் ஆநந்திக்கிறான், ஸ்வதோநிரதிசயாநந்தியானவன் இவனைப்பெற்று ஆநந்திக்கக் கூடுமோ? என்ன - சேஷபூதன் இத்யாதி; ஸங்கத்தாலே யென்றபடி. "பூம்" என்ற - அழகாய், அத்தால், போக்யதையைச் சொல்லுகிறது. ஸ்த்ரீத்வம் அல்லாதார்க்கும் இவளுக்கும் ஒத்திருக்கையாலே லக்ஷ்மியென்ன அமைந்திருக்க, "ஸ்த்ரீ" என்று விசேஷிக்கிறது - கர்மோபாதிகமல்லாத ஸ்த்ரீத்வத்தையுடைய ளாகையாலே; அவர்களில் வ்யாவ்ருத்தமான ஸ்த்ரீத்வமுண்டென்னுமிடந் தோன்ற, நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய - என்கிறார். "ஆகம்புணர்வது" என்ற பதப்ரயோகத்துக்கு பாவம் - ஆத்மகுணங்கள் இத்யாதி. குமரிருக்கை - குமரியாயிருக்கை யென்று ஸப்தார்த்தம். அதாவது - குமரி - குமாரீ, கந்நிகை. அநுபவயோக்யமன்றிக்கே யிருக்கை யென்றபடி. ஆத்மகுணங்கள் இத்யாதி வாக்யத்துக்கு - பரமரஸிகனன ஈஸ்வரன் பிராட்டியுடைய விக்ரஹ ஸௌந்தர்யாதிசயாத்ருபகுணங்களையிட்டு ஆத்மகுணபர்யந்தம் போகமாட்டா னென்று கருத்து. அணைவது புணர்வதென்கிறதிறே யென்கிற வாக்யம், வ்யாக்யாதாவின் ஈடுபாடு. இவ்வாக்யத்துக்குக் கருத்து-அக்ர்யப்ராய ந்யாயத்தாலே, பிராட்டியோடேகூட எடுக்கையாலே - இவ்விருவருக்கும் பிறக்கும் ரஸம், சேர்த்தியை அநுபவிக்கையாலே திருவநந்தாழ்வானுக்கும் பிறக்குமென்று. உக்தத்துக்கு ஸம்வாதம் - ரம்யாவஸதம் இத்யாதி. ஸ்ரீஸங்க்ஷேபே. "ரம்யம்" என்றதுக்கு பாவம் - அறுபதினாயிரம் இத்யாதி. சமைத்த - ஆக்கின, கட்டினவென்றபடி. நாயகநாயகிகள் பரஸ்பரஸம்ஸ்லேஷத்தாலே ரமிக்கிறார்கள், இளையபெருமாள் ரமிக்கும்படியென்?

மாணு:) - நாயகரான பெருமாள் ரஸமல்லவே பிராட்டியது, பிராட்டிக்குப் பிறக்கும் ரஸமன்றே பெருமாளது, அப்படியே, அச்சேர்த்திகண்டு உகக்குமவரிறே இளையபெருமாள். **'வநே'** (வநே)- "படைவீடர் காட்டிலே ரமித்தார்கள்" என்று தோற்றுதே, காடர் காட்டிலே வர்த்தித்தாற்போலே பொருந்தியிருந்தபடி. ஆகச் சொல்லிற்றாயிற்று - ஸர்வேஶ்வரனும் பிராட்டிமாருமாகத் திருவநந் தாழ்வானுகிற படுக்கையிலே இருக்கக் கண்டு உகந்து அடிமை செய்கை முக்தப்ராப்ய போகமா கிறது. [இருவரவர்முதலுந்தானே] - ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணபூதனாயிருக்கும். **'ஸப்ரஹ்மா ஸஶிவ:'** (ஸப்ரஹ்மாஸஶிவ:) என்கிற ப்ரஸித்தியாலே 'இருவரவர்' என்கிறார். அவ்விபூதி யைச் சொல்லுகிற விடத்திலே 'அணைவது, புணர்வது' - என்கையாலே அது போகபூமி யாய் நித்யமாயிருக்கு மென்னுமிடமும், இங்கு 'முதல்' என்கையாலே - இவ்விபூதியில் கார்ய காரணபாவத்தால் வந்த ஸம்பந்தமும், இதுதான் ஆவது அழிவதாமென்னு மிடமும் சொல்லு கிறது. இத்தால்-ப்ரஹ்மருத்ரர்கள் ஸம்ஸாரபத்தர்க ளென்னுமிடமும், ஈஶ்வரனே மோக்ஷ ப்ரதனாக வல்லானென்னு மிடமும் சொல்லுகிறார். ஆக, ஆஶ்ரயணீயன் அவனே, ப்ரஹ்ம ருத்ரர்கள் ஆஶ்ரயணீயரல்ல ரென்கை; **'ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா ஜகதந்தர்வ்யவஸ்திதா:। ப்ராணிந: கர்மஜநிதஸம்ஸாரவஶவர்த்திந:'** (ஆப்ரஹ்மஸ்தம்பபர் யந்தா ஜகதந்தர்வ்யவஸ்த்திதா: ப்ராணிந:கர்மஜநிதஸம்ஸாரவஶவர்த்திந:) என்றுநின்றதிறே. இப் படி ப்ரஹ்மருத்ரர்களுக்கும் காரணபூதனாகையாலே வந்த மேன்மையையுடையவன். [எப் பொருட்குமிணைவனும்] - தேவாதி ஸகல பதார்த்தங்கள்தோறும் ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கும். ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே வந்து அவதரிப்பது, உபேந்த்ரனாவது, சக்ரவர்த்தி ஸ்ரீவஸுதேவர்களள விலே அமைத்துவந்துபிறப்பது, மஹாவராஹமாவது, குப்ஜாம்ரமாவதாகாநிற்கும். இப்படி தாழ

---

**ப்ர:**—(இருவர்)—ஸ்ரீநாராயணாநுவாகே "ஸப்ரஹ்மா ஸஶிவஸ்ஸேந்த்ர ஸோக்ஷர: பரமஸ்ஸ்வராட்"

ஸ்ரீவிஷ்ணுதர்மே "ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா ஜகதந்தர்வ்யவஸ்திதா: । ப்ராணிந: கர்மஜநிதஸம்ஸாரவஶவர்த்திந:॥" இதி ஶௌநகவசநஞ்ச.

---

என்ன - நாயகரான இத்யாதி. விஷயபேத ப்ரயுக்தரஸபேதஸ்ஸர்வத்ர ஸமாந இதி பாவ:. சித்ரகூடத்தி லிருப் பைச் சொன்னபோதே - "வநே" என்றது ஸித்தமாயிருக்க, புந: "வநே" என்று விசேஷித்ததுக்கு ஹாவம்- படைவீடர் இத்யாதி. படைவீடர் - படைவீட்டிலே யிருக்குமவர்கள். காடர் - காட்டிலேயிருக்குமவர்கள். "பர்யங்கவித்யையில்" இத்யாதி வாக்யோக்தார்த்த நிகமநம் - ஆக இத்யாதி. ஆகிறதென்ற அநந்தரம் - என்று இத்யத்யாஹார்யம். இன்னார் என்னுதே, "இருவரவர்" என்கிறதென்? என்னில், - ஸப்ரஹ்ம இத்யாதி. இவ்விடத்திலே - "ஸ:" என்கிறது அநுபயுக்தம்; "ப்ரஹ்மா ஶிவ:" என்கிறதே வேண்டுவது. இத்தால்

பலிதம் - அவ்விபூதியை இத்யாதி. நித்யமாயிருக்கு மென்றது - "அணைவது, புணர்வது" என்கிற வர்த்தமா நத்தாலே ஸித்தமான அர்த்தம். ஆவது அழிவது - உண்டாவது நசிப்பது. காரணத்வகதநத்தாலே பலிதம்-இத் தால் இத்யாதி. கர்மவஶ்யராகையாலே பத்த ரென்றபடி. "முதலும்" என்ற சஶப்தத்துக்கு அர்த்தம் - ஆக ஆஶ்ரயணீயன் இத்யாதி. த்யேயனுமென்று அநுக்தஸமுச்சய மென்றபடி. ப்ரஹ்மாதிகள் ஆஶ்ரயணீய ரல்லா மைக்கு அடி - ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வங்க ளென்று திருவுள்ளம்பற்றி, அவர்கள் கர்மவஶ்யரென்கைக்கு ப்ர மாணம் - ஆப்ரஹ்ம இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுதர்மே ஶௌநகவசநம். "ஸர்வாதிகனானவன் ஸுலபனானன்" என்று அவன் ஸௌலப்யத்துக்கு அதிசயஞ்சொல்லுவாராக, இத்தால் அவன் பெருமை சொல்லுகிற தென் கிறார் - இப்படி இத்யாதி. இணைவன் - ஸஜாதீயன். தேவாதி ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் அவதாரமுகேந ஸஜாதீயனா மென்று ஶப்தார்த்தம். அப்படி அவன் அவதரித்ததுண்டோ? என்ன - ப்ரஹ்மருத்ரர்கள் இத் யாதி. அமைத்து - ஸங்கோசித்து. வீடுமுதலாம் - மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கும். அப்படிமோக்ஷம்

விட்டுப் பிறக்கிறது எதுக்காக வென்னில், - [வீடுமுதலாம்] - மோக்ஷப்ரதனைகைக்காக. அவதரித்த விடங்களிலே, பக்ஷிக்கு மோக்ஷத்தைக் கொடுப்பது, பிஶாசத்துக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதாகா நிற்கும். அவன் வந்து அவதரிப்பது மோக்ஷப்ரதனைகைக்காகவாகில், எல்லாரும் பின்னை முக்தராக வேண்டாவோ? என்னில்,—[பிறவிக்கடல்நீந்துவார்க்கு - புணைவன்] "ஸம்ஸாரமென்றொரு பெருங் கடல், அது எங்களாற் கடக்கப்போகாது, ப்ரபலனை நீயே கழித்துத்தரவேணும்" என்று இருப்பார்க்கு ப்ரதிபூவாய் நின்று கடத்திக்கொடுக்கும். புணையாமவ னென்றபடி - ஸர்வபாரநிர்வாஹகனு மவ னென்றபடி. "ஸம்ஸாரஸாகரம்கோரமநந்தக்லேஶபாஜநம்। த்வாமேவ ஶரணம் ப்ராப்ய" (ஸம்ஸாரஸாகரம்கோரமநந்தக்லேஶபாஜநம்- த்வாமேவஶரணம்ப்ராப்ய) என்றிருப்பார்க்குக் கடத்திக்கொடுக்கும். * (புணைவனென்று-தெப்பமாமவ னென்னவுமாம்.) "விஷ்ணுபோதம்"

---

ப்ர:—(வீடுமுதலாம்) (பக்ஷிக்கு மோக்ஷத்தைக் கொடுப்பது) ஆரண்யகாண்டே ஷஷ்டிதமே, "க்ருத்ரராஜம் திதக்ஷ்யாமி மத்க்ருதே நிதநம் கதம்॥ நாதம் பதகலோகஸ்ய சிதாமாரோபயாம்யஹம்॥ ௨௮॥ யா கதிர்யஜ்ஞஶீலாநாமாஹிதாக்நேஶ்ச யா கதி:। அபராவர்திநாம் யா ச யா ச பூமிப்ரதாயிநாம்॥ மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமாந்। க்ருத்ர ராஜ மஹாஸத்த்வ ஸம்ஸ்க்ருதஶ்ச மயா வ்ரஜ॥௩௰॥"

(பிஶாசத்துக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதாகா நிற்கும்)—ஸ்ரீஹரிவம்ஶே கைலாஸயாத்ராயாம், "தத: ப்ரோவாச பகவாந் ஸ்மிதம் க்ருத்வா ஜநார்தந:॥௨௩॥ அக்ஷய்யஸ்ஸர்வ ஸஸ்தேயாவஸம் ப்ராப்ஸ்யஸி। தாவஸ்ஸமீபவாந் ஸ்தஶாஸநாத்பிநாத்ப: ॥ ௨௪ ॥ நஷ்டஶோகஸ்ததஸ்ஸர்வாத் ஸாயுஜ்யம் ஸமவாப்ஸ்யஸி॥"

(புணைவன்)—ஜிதந்தாயாம், "ஸம்ஸாரஸாகரம்கோரமநந்தக்லேஶபாஜநம்। த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:॥"

(தெப்பமாமவன்)—ஸ்ரீவிஷ்ணுதர்மே, "ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம்। விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்॥"

---

கொடுத்தவிடமுண்டோ? என்ன - அவதரித்த இத்யாதி. "ஸம்ஸாரகோராத்ஸ்யுஷ் ஹயேநரா வவ:। ஸ்வதக்ஷிணதயோ ஶியோக்யம் ஸநாதநம்" என்றத்தைப்பற்ற - பக்ஷிக்குமோக்ஷத்தைக்கொடுப்பது என்றது. பக்ஷி - ஜடாயு. "அக்ஷய்யஸ்ஸர்வாஸஸ்தேயாவஸம்ப்ராப்ஸ்யஸி। நஷ்டஶோகஸ்ததஸ்ஸர்வாத் ஸாயுஜ்யம் ஸமவாப்ஸ்யஸி" என்றத்தைப்பற்ற - பிஶாசத்துக்கு மோக்ஷத்தைக் கொடுப்பது என்றது. பிஶாச: - கண்டாகர்ண:. புணைவனும் - புணைபட்டவனும். புணை - ப்ரதிபூவும், தெப்பமும், ஹாரமும். யோதநிகாதமர்ணயோர்மத்யே திஷ்டதி, ஸ:-ப்ரதிபூரித்யுச்யதே. இவன் புணையாய், பலப்ரதன் வேறொருத்தனோ? என்ன - புணையாமவன் இத்யாதி. அப்படிகடத்திக்கொடுக்குமோ? என்ன- ஸம்ஸாரஸாகரம் இத்யாதி. ஜிதந்தாயாம். "நிஸ்தரந்தி மநீஷிண:" என்றமேல். புணைவன் - தெப்பமாமவ னென்று அர்த்தாந்தரத்துக்கு ப்ரமாணம்-விஷ்ணுபோதம் இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுதர்மே, "ஸம்ஸாரார்ணவமக்நாநாம்விஷயாக்ராந்தசேதஸாம்। விஷ்ணுபோதம்விநாநாந்யத்கிஞ்சிதஸ்திபராயணம்". "விஷ்ணுர்வ்யாஸ:" இதிவத் ஶ்ருதிநிதாய விஷ்ணுஶப்தார்த்தமாஹ - ஏகதேசத்தை இத்யாதி.

---

* குண்டலிதம் ஶ்வாஸிக்கம்.

(விஷ்ணுபோதம்) என்னக்கடவதிறே. ஏகதேசத்தைப்பற்றி நிற்கையன்றிக்கே, அக்கரையும் இக்கரையுமாய் நிற்கும் ஓடமாயிற்று. (க)

## இரண்டாம் பாட்டு.

நீந்துந்துயர்ப்பிறவியுட்பட மற்றெவ்வெவையும்
நீந்துந்துயரில்லா வீடுமுதலாம்
பூந்தண்புனற்பொய்கை யானையிடர்கடிந்த
பூந்தண்துழாய் என் தனிநாயகன்புணர்ப்பே.

ஆ.—(நீந்தும்.) 'வீடுமுதலாம்' என்கிற பதத்தை விவரிக்கிறது. ஜந்மஜராமரணாத்யபரிமித ஸமஸ்தது:கரஹிதமான மோக்ஷத்துக்குக் காரணம் எம்பெருமானோடு உள்ள ஸம்பந்தம்; அது எங்கேகண்டோம்? என்னில்,- ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பக்கலிலே கண்டோமென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், "வீடுமுதலாம்" என்கிறபதத்தை விவரியாநின்றுகொண்டு, எம்பெருமான்தானே வேணுமோ, அவனோடுள்ள ஸம்பந்தமே மோக்ஷப்ரதமென்கிறார்.

[நீந்துமென்று தொடங்கி] - கடக்கவரிதான து:கத்தையுடைத்தான ஜந்மமரணாதிகளொன்றும் இல்லாத மோக்ஷத்துக்கு அடியாம்; [பூந்தண்புனல் என்று தொடங்கி] - பூத்துக்குளிர்ந்த நீரையுடைய பொய்கையிலே முதலையாலே நலிவுபட்ட ஆனையினுடைய இடரைப்போக்கின நிரதிஶயபோக்யனாய் என்னை யநந்யார்ஹமாக அடிமைகொண்ட எம்பெருமானோட்டை ஸம்பந்தம். இங்கு, ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணம்- த்ருஷ்டாந்ததயா சொல்லிற்று.

ப.—அநந்தரம், ஸம்ஸாரநிஸ்தாரணபூர்வகமான மோக்ஷத்துக்கு ஹேது அவனுடைய ஸம்பந்தமென்கிறார்.

(இஸ்ஸம்ஸாரநிவ்ருத்திக்கு நிதர்ஶநமென்னலாம்படி), பூ - பூவையுடைத்தாய், தண்- குளிர்ந்த, புனல் - புனலையுடைய, பொய்கை - பொய்கையிலே, யானை - யானைக்கு, இடர்-(முதலையால்வந்த) இடரை, கடிந்த - போக்கின, பூம்-செவ்வியையுடைத்தாய், தண் - குளிர்ந்த, துழாய்- திருத்துழாயையுடையனாய், (அத்தாலே),என் - எனக்கு, தனிநாயகன் - அத்விதீயநாயகனானவனுடைய, புணர்ப்பு - ஸம்பந்தமானது, நீந்தும் - (இச்சேதநனுக்கு) நீந்தாநிற்கும்படி துஸ்தரமாய், துயர் - து:கோத்தரமான, பிறவி - பிறவி, உட்பட மற்று - உட்பட மற்றும், நீந்தும்-நீந்தும்படியான, எவ்வெவை - (ஜராமரணாதிகளான) எவ்வகைப்பட்ட, துயரும் - து:கமும், இல்லா-ஸ்பர்ஶியாத, வீடு - மோக்ஷாநந்தத்துக்கு, முதலாம் - ஹேதுவாம். முதற்பாட்டில் " வீடுமுதலாம்" என்றத்தை விவரித்தது.

இ.—இரண்டாம்பாட்டில், 'வீடுமுதலாம்' என்கிறபதத்தை விவரியாநின்றுகொண்டு, அவன்தானே செய்யவேணுமோ, அவனோடுண்டான ஸம்பந்தமே மோக்ஷப்ரதமென்கிறார்.

---

[illegible]. அரவணைமேல் - அணைவது, பூம்பாவையாகம் புணர்வது, இருவரவர் முதலுந்தானே, வீடுமுதலாகைக்காக - எப்பொருட்கு மிணைவனும், பிறவிக்கடல் நீந்துவார்க்கு - புணைவ னித்யந்வய:. (க)

[நீந்தும் துயர்ப்பிறவியுட்பட மற்றெவ்வெவையும் நீந்தும்] - துஸ்தரமான துகத்தை யுடைய ஜந்மம் முதலான ஸர்வவிகாரங்களையும் கடத்தும். நீந்துமென்றது - நீத்துமென்றபடி. "நீந்தும்" என்கிற வர்தமாந நிர்தேசத்தாலே - துஸ்தரமென்கை. [துயரில்லாவீடுமுதலாம்] துக்கஸம்பந்தரஹிதமான மோக்ஷத்துக்கு ஹேதுவாம். இதுபிள்ளை திருநறையூரரையர் நிர்வாஹம். நீந்தும் துயர்ப்பிறவியுட்பட மற்றும் - நீந்தும் துயரான - எவ்வெவையும் - இல்லா வீடுமுதலா மென்றுமாம். இவர், வீடென்கிறது - ஸம்ஸாரநிவ்ருத்தி மாத்ரத்தையன்று, ஸுகஹாந்வக லக்ஷணையான பகவத்ப்ராப்தியை; "[illegible]" என்னக்கடவதிறே. [பூந் தண் புனற்பொய்கை யானையிடர்கடிந்த] - இது த்ருஷ்டாந்தம். பரப்புமாறப் பூத்துக் குளிர்ந்த நீரையுடைய பொய்கையிலே முதலையாலே நலிவுபட்ட யானையிடரைப்போக்கின. [பூந்தண் துழாய் என் தனிநாயகன்] - செவ்வியையுடைத்தாய்க் குளிர்ந்த திருத்துழாயாலே யலங்க்ருதனான அத் விதீயநாயகன். இத்திருத்துழாயின் குளிர்வாஸத்தாலே யாயிற்று யானையை ஆச்வஸிப்பித்தது. ஆனைக்கு உதவினதும் தமக்கு உதவிற்றாக நினைத்திருக்கிறார். [புணர்ப்பு] - அவனோட்டைச் சேர்த்தி, ஸம்பந்தம். தனிநாயகன் புணர்ப்பு - வீடுமுதலாமென்று அந்வயம்.

ஈடு.— இரண்டாம்பாட்டு. என்தனிநாயகன் புணர்ப்பு என்கையாலே - எம்பெருமான் தான்வேணுமோ? அவனோடுள்ள ஸம்பந்தமே மோக்ஷப்ரத மென்கிறார்.

[நீந்தும் இத்யாதி] - "பிறவிக்கடல்நீந்துவார்க்கு" என்கிற அதினுடைய விவரணமா யிருக்கிறது. நீந்தும் துயர்ப்பிறவியுட்பட மற்றேவ்வேவையும் நீந்தும், துயரில்லா வீடு முதலா மென்று பிரித்து யோஜிக்கவுமாம்; அன்றிக்கே, ஒன்றாக வீட்டுவிசேஷணமாகவுமாம். [நீந்தும் இத்யாதி]- 'நீந்தும்' என்கிற வர்த்தமாநநிர்த்தேசத்தாலே - கடக்க அரிதான துகத்தை விளைப்பதான ஜநநந் தொடக்கமான மற்றுமுண்டான அபக்ஷயவிநாசாதிகளையும் கடத்தும்; [துயரில்லாவீடுமுதலாம்]- துகஸம்பந்தரஹிதமான மோக்ஷத்துக்கும் ஹேதுவாம். கடக்க அரிதான துகத்தையுடைத்தான ஜந்மந் தொடக்கமாக நீந்துந் துயரான மற்றெவ்வேவையும் இல்லாத மோக்ஷத்துக்கு ஹேதுவா மென்னு தல். இவர் வீடு என்கிறது - ஸம்ஸாரநிவ்ருத்திமாத்ரத்தையன்று, ஸுகஹாவைகலக்ஷணையான

ப்ர:—(துரியல்லாவீடு)— [illegible]

இரண்டாம்பாட்டு - நீந்தும் இத்யாதி புணர்ப்பு-ஸம்பந்தம்

பிறவிக்கடல் இத்யாதி - 'பிறவிக்கடல்நீந்துவார்க்கு - புணைவனும்' என்று சொன்ன மோக்ஷப்ரதத்வ விவரண மித்யர்த்தம். முந்தின அந்வயத்துக்குச் சேர அர்த்தம் - நீந்துமென்கிற இத்யாதி. எவ்வெவையும் நீந்தும் - நீத்தும். 'நீந்தும்' என்கிற மெல்லொற்றை - வல்லொற்றாக்கிக்கொள்வது. நீத்தும் - கடத்தும். த்விதீயாந்வயத்துக்குச் சேர அர்த்தம் - கடக்க அரிதான இத்யாதி. துயர்ப்பிறவி - துயரைவிளைக் கிற பிறவி. ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவேந. 'மற்றெவ்வெவையும்' என்று - ஜந்மவ்யதிரிக்தவிகார பஞ்சகத்தையும் சொல்லுகிறது. நீந்தும்துயரான - மற்றெவ்வெவையும் - இல்லாத நீந்தாநிற்கும்படி துஸ்தர மாய் துகோத்தரமான ஜராமரணாதிகளான மற்றெவ்வெவ்வகைப்பட்ட துகங்களு மில்லாத வென்றபடி. முந் தின அந்வயார்த்தத்திலே - அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைச் சொல்லுகிறது. த்விதீயாந்வ யார்த்தத்திலே-கேவலம் இஷ்டப்ராப்தியைச் சொல்லுகிறது. 'கைவல்யப்ராப்திம்வாரயதி-இவர்வீடேன்கிறது'

கின. [பூந்தண்டுழாயென்தனிநாயகன்] - வைத்தவளையத்தோடேகாணும் மடுவிலேபோய் விழுந்தது. திருத்துழாயிற் பரிமளம்போலேகாணும் ஆனையிடரைக் கடிந்தது. ஆனையிடராவது - "'ஸர்வேஸ்வரன் ஆபத்ஸகன்' என்றிருந்தோம்; இவன் இப்படி ஆபந்நனை உதவாதொழிவதே; நிர்க்ருணனாயிருந்தானீ! என்று நாட்டிலுள்ளார் நினைக்கிற் செய்வதென்" என்று அத்தாலேவந்த இடராகிலுமாம். [என்தனிநாயகன்] - ஆனையிடரைப் பேரக்குகையன்றிக்கே, தம் இடரைப் பரிஹரித்தாற்போலே யாயிற்று இவர்க்கு இருக்கிறது. [புணர்ப்பு]-அவனோட்டைஸம்பந்தம். அவன்திருவடிகளில் ஸம்பந்தம், துக்கநிவ்ருத்தியையும்பண்ணி, 'ஸுவஹா வெகதுக்ஷணடீ'(ஸுகபாவைகலக்ஷணம்) என்கிற பேற்றையும் தரும். தனிநாயகன்புணர்ப்பு-வீடுமுதலாம் என்று அந்வயம். (உ)

## மூன்றும் பாட்டு.

புணர்க்குமயனும் அழிக்குமரனும்
புணர்த்ததன்னுந்தியோடு ஆகத்துமன்னிப்
புணர்த்ததிருவாகித் தன்மார்வில்தான்சேர்
புணர்ப்பன்பெரும்புணர்ப்பு எங்கும்புலனே.

ஆ.—(புணர்க்கும்.) ஜகத்ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கும் தன்னுந்தியை ஆஸ்ரயமாகக் கொடுத்துவைக்கும்; ஜகத்ஸம்ஹர்த்தாவான ருத்ரனுக்கும் தன்திருவுடம்பை ஆஸ்ரயமாகக் கொடுத்துவைக்கும்; ஸர்வலோகேஸ்வரியான பிராட்டிக்கும் தன்திருமார்வைக் கொடுத்துவைக்கும்; திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளும்; இப்படி எம்பெருமானுடைய ஸர்வேஸ்வரத்வ சிஹ்னபூதமான திவ்யசேஷ்டிதங்கள் எங்கும் ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், "இருவரவர் முதலுந்தானே" என்கிற பதத்தை விவரியாநின்றுகொண்டு, ஸ்ரியஃபதியான எம்பெருமானுடைய ஐஸ்வர்ய ஸூசகமான சேஷ்டிதங்களையெங்கும் ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

[புணர்க்குமென்று தொடங்கி] - ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கும் ஸம்ஹர்த்தாவான ருத்ரனுக்கும் திருநாபிகமலத்திலும் திருவுடம்பிலுமாக இடங்கொடுத்து அவர்களுக்கு நிர்வாஹகனாய்; உந்திக்குப்புணர்ப்பாவது - ப்ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்தாநமாகை. [புணர்த்தவென்று தொடங்கி] - தன்மார்விலே ஸம்ஸ்லிஷ்டையான பெரியபிராட்டியாரை யுடையனாய் ஏகார்ணவத்திலே ஸ்ருஷ்ட்யர்த்தமாக ஶயாநனாயிருந்துள்ளவனுடைய பெருந்தொழில். தான் தனக்கு ஸத்ருஶமான சேஷ்டிதங்களை யுடையனென்றுமாம்.

---

இன்று உதவாதொழிந்தால், 'நிர்க்ருணன்' என்று லோகத்தார்சொல்லப்போகிறார்கள்" என்கிறக்லேஶமாதல். முதலர்த்தம் - பாப்புமாற இத்யாதி. த்விதீயார்த்தம் - பூவில் இத்யாதி. "பூம்தண்டுழாயென் தனிநாயகன் - பொய்கையானை யிடர்கடிந்த" என்றுகூட்டி அர்த்தம் - வைத்த இத்யாதி. "ஆனையிடர்கடிந்த, பூம்தண்டுழாய்" என்றுகூட்டித் தாத்பர்யம் - திருத்துழாயில் இத்யாதி. நதுஸர்வேஸ்வர இத்யர்த்த꞉. பரிமளம் முன்னேவந்து இடரைப்போக்கிற்றென்றபடி. த்ருதீயார்த்தம் - ஆனையிடராவது இத்யாதி. "என்" என்றதுக்கு பாவம்- ஆனையிடர் இத்யாதி. அந்வயமுகேந ப்ரதயோஜகமாஹ அவன் திருவடிகளில்இத்யாதி. ஸம்பந்தம்- ஸம்பந்தஜ்ஞாநம். "தவேவ விதாநு", "ஸஹதேநம்" என்னக்கடவதிறே. த்விதீயயோஜநையைப்பற்ற, தனிநாயகன் இத்யாதி. உபயவிதநிர்வாஹேபி - உத்தரார்த்தபூர்வகம் அந்வய꞉. பூந்தண்ணித்யாரப்ய, நாயகன் புணர்ப்பு - நீந்தும்துயர்தொடங்கி, எவ்வெவையும்நீந்தும்; துயரில்லாவீடு முதலாமித்யந்வய꞉. யத்வா, நீந்தும் துயர்ப்பிறவியுட்பட - நீந்தும்துயரான பற்றெவ்வெவையும் இல்லாவீடுமுதலா மித்யந்வய꞉. (உ)

ப.—அநந்தரம், அவனுடைய திவ்யமான சேஷ்டிதங்கள் ஸர்வத்ர ப்ரஸித்த மென்கிறார்.

தன் - தன்னை, புணர்த்த - உத்பாதித்த, உந்தியோடு - திருநாபியோடே கூட, ஆகத்து - திருமேனியில் ஒரு பார்ஶ்வத்திலும், மன்னி - நித்யவாஸம்பண்ணி, புணர்க்கும் - லோகஸ்ருஷ்டி பண்ணுகிற, அயனும் - அஜனுமாய், அழிக்கும் - ஸம்ஹரிக்கிற, அரனும் - ஹரனுமாய், (இப்படி தத்ததந்தராத்மதையாலே ததாத்மகனாய்), தன்மார்வில் - தன்மார்விலே, புணர்த்த - (நிரூபகமாம்படி) சேர்த்துக்கொள்ளப்பட்ட, திருவாகி - திருவுடையனாய், தான் - தானே, சேர் - தனக்குத்தகுதியான, புணர்ப்பன் - ஸ்வாதீநசேஷ்டிதனானவனுடைய, பெரும்- அபரிச்சிந்நமான, புணர்ப்பு - திவ்யவ்யாபாரங்களானவை, எங்கும்-எங்கும், புலன் - கண்டு அநுபவிக்கலாம்படி ப்ரஸித்தம். "இருவரவர்முதலுந்தானே" என்றத்தை விவரித்தது.

இ.—மூன்றும்பாட்டில், "இருவரவர் முதலுந்தானே" என்கிற பதத்தை விவரியா நின்றுகொண்டு, ஸ்ரீயஃபதியான அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களை யெங்குங் காணலா மென்கிறார்.

[புணர்க்குமித்யாதி] - ஸ்ருஷ்டிக்குக்கடவ ப்ரஹ்மாவுக்கும், ஸம்ஹாரத்துக்குக்கடவ ருத்ரனுக்கும்நிர்வாஹகனும். "ததாதர்ஶித பந்தாநௌ", "ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ" [illegible]. [புணர்த்தவித்யாதி] - தன்னையுண்டாக்கின திருநாபி கமலத்திலே யிருந்தாலாயிற்று ஸ்ருஷ்டிக்கு க்ஷமனாவது, ருத்ரன் திருமேனியில் வலப்பார்ஶ்வத்தைப் பற்றி யிருந்தாலாயிற்று ஜகத்ஸம்ஹாரத்துக்கு க்ஷமனாவது. இவர்களிருப்பை மாற்றினால் அதிகரித்த காரியத்துக்கு க்ஷமரல்லரென்கை. ஸாமாநாதிகரண்யத்தாலே - அந்தர்யாமித்வஞ் சொல்லுகிறது. புணர்த்ததன்னுந்தி யென்கையாலே - காரணத்வஞ் சொல்லிற்று. ஆகத்துமன்னி யென்கையாலே - திருமேனியைப் பற்றி லப்தஸ்வரூபரென்னுமிடஞ் சொல்லிற்று. [புணர்த்தவித்யாதி] - தன்மார்விலே ஸம்ஶ்லேஷிக்கப்பட்ட பெரியபிராட்டியாரை யுடையவன். கீழே - நீர்மை சொல்லிற்றாய், இத்தாலே - மேன்மை சொல்லுகிறது. [தான்சேர் புணர்ப்பன்] - ஏகார்ணவத்திலே ஸ்ருஷ்ட்யர்த்தமாகக் கண்வளர்ந்த சேஷ்டிதத்தை யுடையவனென்னுதல்; தனக்கு ஸத்ருஶமான சேஷ்டிதங்களை யுடையவனென்னுதல். [பெரும்புணர்ப் பெங்கும் புலனே] - இப்படிப்பட்ட அதிமாநுஷ சேஷ்டிதங்கள் எங்கும் ப்ரஸித்தமன்றோ வென்கை.

ஈடு.—மூன்றும்பாட்டு. "இருவரவர்முதலுந்தானே" என்கிற பதத்தை விவரியா நின்றுகொண்டு, ஸ்ரீயஃபதியானவவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களை ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

[புணர்க்கும் அயனும்]-இவற்றை ஸ்ருஷ்டிக்கையே தொழிலாயிருக்கிற பிரஹ்மாவுமாம். [அழிக்கும் அரனும்] - சுடுதடிபோலே இவற்றையடைய அழித்துக்கொண்டு நிற்கிற ருத்ரனுமாம். "ததாதர்ஶித பந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ" (ததாதர்ஶிதபந்தாநௌஸ்ருஷ்டிஸம்

---

ப்ர:—(அழிக்குமரனும்)—[ஹார-மோ-கசுக]—நாராயணீயே நார நிவ [illegible] நாயாயெ, "வ தள அளவிவ [illegible] யெ ஷ [illegible] ஸ்ரூதள। ததாதர்ஶித பந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ ॥

---

மூன்றும்பாட்டு - புணர்க்கும் இத்யாதி. "ஆகத்துமன்னி" என்கிற பதங்களையும், "புணர்த்ததிருவாகி" என்றுதொடங்கி "எங்கும்புலனே" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - இருவரவர் இத்யாதி. "பெரும்புணர்ப்பு" என்கையாலே அதிமாநுஷசேஷ்டிதங்களை என்றது.

"புணர்க்கும்" என்கிற வர்த்தமாநார்த்தம் - ஸ்ருஷ்டிக்கையே தொழிலாயிருக்கிற என்றது. "அயனும்" என்கிற ஸாமாநாதிகரண்யநிபந்தநம் - ஶரீராத்மபாவமென்று விவக்ஷித்து, ப்ரமாணம் - ததாதர்ஶித இத்

ஹாரகாரகேள), "ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே" (ஸ்ருஷ்டிம்ததஃ கரிஷ்யாமித்வாமாவிஶ்யப்ரஜாபதே) என்கிறபடியே அவன் அந்தராத்மாவாய் நின்று ப்ரவர்த்திப்பிக்க, இவற்றைச் செய்கிறார்கள். [புணர்த்ததன்னுந்தியோடாகத்துமன்னி] - புணர்க்கும் அயனும் அழிக்கும் அரனும். இவைதான் இவர்கள் செய்யவல்லராவது அவன் திருமேனியைப் பற்றியிருந்த போதாயிற்று, ஸ்தநந்யயப்ரஜை,வாயில்முலைவாங்கினால் தரியாதாப்போலே. இத்தால், ஸாமாநாதிகரண்யத்தாலே - அந்தர்யாமித்வஞ் சொல்லிற்று. புணர்த்ததன்னுந்தி யென்கையாலே - காரணத்வஞ் சொல்லிற்று; ஆகத்து மன்னியென்கையாலே - திருமேனியைப்பற்றி லப்தஸ்வரூபரென்னுமிடஞ் சொல்லிற்று. [புணர்த்ததிருவாகித்தன்மார்வில்] - தன்திருமார்வில் நித்யஸம்ஶ்லிஷ்டையாயிருக்கிற பெரியபிராட்டியாரையுடையனாய். இது இப்போது சொல்லுகிறதேன்? என்னில்; - ப்ரஹ்மாதிகளுக்கு நிர்வாஹகன் என்றவோபாதி, லக்ஷ்மீஸம்பந்தமும் ஐஶ்வர்யத்துக்கு உடலாகையாலே. பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தி, நீர்மைக்கும் மேன்மைக்கும் உடலா யிருக்குமிறே. [தான்சேர்புணர்ப்பன்] - ஸ்ருஷ்ட்யர்த்தமாக ஏகார்ணவத்திலே சாய்ந்தருளினவனென்னுதல், தனக்குத்தகுதியான சேஷ்டிதங்களை யுடையவனென்னுதல். [பெரும்புணர்ப்பெங்கும்புலனே] - ப்ரஹ்மாதிகள் அதிகரித்த கார்யங்களை அவர்கள் வழியாலே நடத்தியும், தான் அதிகரித்த கார்யங்களைத் தானே நடத்தியும் போருகையாலே, தன்னுடைய பெரும் புணர்ப்பு - ஆனைத்தொழில்கள் எங்கும் காணலாயிருக்கும். (ரு)

---

ப்ர.—ஸ்ரீ விஷ்ணுபுராணே, "உத்தாநஶய்யாஶயிதம் ஸஹஸ்ரகேஶாவயிதம் யோகநித்ராம். ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே".

---

யாதி. நாராயணீயே நாரதம் ப்ரதி ப்ரஹ்மவாக்யம், "ஸஹ தேந அஹம் விஷ்ணு ப்ரஜாபதே ப்ரஹ்மாதி கோ ராஜஸஸ்ய தத" இதி பூர்வார்த்தம். ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமீதி - ஸ்ரீவிஷ்ணுதர்மே "உத்தாநஶய்யாஶயிதம் ஸஹஸ்ரகேஶாவயிதம் யோகநித்ராம்" இதி பூர்வார்த்தம். புணர்ந்ததன்னுந்தியோடிதி - தன்னையுண்டாக்கின உந்தியோடேகூடத் திருமேனியில் ஒருபார்ஶ்வத்தில் நித்யவாஸம்பண்ணி ஸ்ருஷ்டிக்கிற அஜனுமாம், ஸம்ஹரிக்கிற ருத்ரனுமா மென்ற ஶப்தார்த்தம். ஸம்பிவ்யாஹாரதாத்பர்யம் - இவைதான் இத்யாதி. ஸ்தநந்தயேத்யாதிக்கு முன்னே - அல்லாதபோதென்று கூட்டுவது. இத்தால் - "புணர்க்குமயனும்" இத்யாதி ப்ரதமபாதத்தாலே. அந்தர்யாமித்வஞ் சொல்லிற்று - ஶரீராத்மபாவஞ் சொல்லிற்று. "தன்மார்வில் - புணர்த்ததிருவாகி" என்று அந்வயித்து அர்த்தம் - தன் திருமார்வில் இத்யாதி. "விஶேஷாரோஷா நவாயிநீ", "அகலகில்லேனிறையும்" இத்யாதியைப்பற்ற - நித்யஸம்ஶ்லிஷ்டையாய் என்றது. புணர்ந்த - சேர்த்துக்கொள்ளப்பட்ட. தடஸ்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - இது இப்போது இத்யாதி. இது - லக்ஷ்மீஸம்பந்தம். ஈஶ்வரத்வஞ்சொல்லுகிற ப்ரகரணத்திலே இதுசொல்லுகை அபேக்ஷிதமோ? ஆனபின்பு,இது சொல்லுகிறதென்? என்னி லென்றபடி. லக்ஷ்மீஸம்பந்தம் நீர்மைக்குடலாயன்றோ இருப்பது என்ன- பெரியபிராட்டியார் இத்யாதி. முக்தின அர்த்தத்தில், புணரியை - "புணர்ப்பு" என்றதாய், அத்தையுடையவன் 'புணர்ப்பன்' என்றதாய், தான்சேருகிற ஸமுத்ரத்தையுடையவ னென்றபடி.. புணரி- ஸமுத்ரம். த்விதீயார்த்தத்தில், தான்சேர் - தனக்குத்தகுதியாகச் சேர்ந்திருக்கிற, புணர்ப்பை - சேஷ்டிதத்தை யுடையவனென்றபடி. பூர்வார்த்தம் பராம்ருஶக்காஹ - ப்ரஹ்மாதிகள் இத்யாதி. "தான்சேர் - புணர்ப்பன்" என்றதின் த்விதீயார்த்தத்தைப்பற்ற - தான் அதிகரித்த இத்யாதி. ஆனைத்தொழில் - அதிமாநுஷவ்யாபாரம். 'புலன் - இந்த்ரியம். இங்கு - தத்கோசரத்திலே லக்ஷணை. புணர்த்த தன்னுந்தியோடு - மன்னி - புணர்க்கும் அயனும்; ஆகத்துமன்னி - அழிக்கும்அரனும்; தன்மார்வில் !- புணர்த்த திருவாகி - தான்சேர் புணர்ப்பனுடைய பெரும்புணர்ப்பு எங்கும் புலனே யித்யந்வயஃ. (ரு)

## நான்காம் பாட்டு.

புலனைந்துமேயும் பொறியைந்துநீங்கி
நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்
அலமந்துவீய அசுரரைச்செற்றான்
பலமுந்துசீரில் படிமினோவாதே.

ஆ.—(புலன்.) ப்ரக்ருதிபந்தவிநிர்முக்தராய்க் கொண்டு நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்; இப்படி ஸர்வேஸ்வரனாயிருந்த எம்பெருமானுடைய நிரதிஶயபோக்யமான கல்யாண குணங்களிலே ஓவாதே படியுங்க ளென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், க்ஷுத்ரமான விஷயஸங்கங்களை விட்டு நிரதிஶயஸுகரூப மான மோக்ஷபுருஷார்த்தத்தை வேண்டியிருப்பீர், எம்பெருமானை யாஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

[புலனைந்து மென்று தொடங்கி] - ஐந்துவிஷயங்களிலும் ப்ரவணமாம் ஐந்து இந்த்ரி யங்களுக்கும் வஶ்யராகையைத்தவிர்ந்து நிரதிஶயபோக்யமான திருநாட்டிலே புகவேண்டியிருப் பீர். [அலமந்தென்று தொடங்கி] - உங்களுடைய ஸமாஶ்ரயணவிக்நங்களை நிஶ்ஶேஷமாகப் போக்கும்ஸ்வபாவனான வெம்பெருமானுடைய ஸமாஶ்ரயிக்கும்தஶையிலே ஸாத்யதஶையிற் போலே இனிதாயிருந்துள்ள கல்யாணகுணங்களிலே நிரந்தரமாக ப்ரவணராகுங்கோள்.

ப.—அநந்தரம், ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமான பரமபத ப்ராப்திக்கு ஏவம்வித னுடைய குணங்களிலே நித்யாவகாஹநம்பண்ணுங்கோ ளென்கிறார்.

புலன் - புலப்படும் விஷயங்கள், ஐந்து - ஐந்திலும், மேயும் - பொருந்தி, பொறி - பொறிபோலே இவனையகப்படுத்திக்கொள்ளும், ஐந்து - ஐந்திந்த்ரியங்களின் வசத்தினின்றும், நீங்கி - அகன்று, நலம் - ஆநந்தம், அந்தமில்லது - அளவிறந்திருப்பதாய், ஓர் - அத்விதீயமான, நாடு - தேசத்திலே, புகுவீர் - போய்ப்புகவேண்டி யிருப்பீர், அலமந்து - அலமந்து, வீய - நசிக் கும்படி, அசுரரை - அசுரரை, செற்றான் - கொன்றவனுடைய, முந்து - ஆரம்பமேதொடங்கி, பலம் - (இனிமையாலே) "பலம்" என்னலாம்படியான, சீரில் - குணங்களிலே, ஓவாதே - என்றுமொக்க, படிமின் - அவகாஹியுங்கோள். ரஸாயநமான பயஃபாநகைங்கர்யத்தாலே பித்த சாந்தியும் இனிமையும் பிறக்குமாபோலே, போக்யகுணங்களிலே நிரந்தராநுபவம் பண்ணவே அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியுந் தன்னிடையே வரு மென்று கருத்து. புலனும் பொறியு மென்கிற இவையிரண்டும் - விஷயங்களுக்கும் இந்த்ரியங்களுக்கும் கலந்து பேராய் வரும்.

இ.—நாலாம்பாட்டில், "இப்படிப்பட்டவன்" என்றநுஸந்தித்து ஸம்ஸார ஸம்பந்த மற்று மோக்ஷத்தைப் பெறவேண்டியிருப்பார், அவன் கல்யாண குணங்களிலே!யவகாஹியுங்கோ ளென்கிறார்.

[புலனைந்தென்று தொடங்கி] - அஞ்சுவிஷயங்களிலும் ப்ரவணமாம் ஐந்திந்திரியங் களுக்கும் வஶ்யராகையைத் தவிர்ந்து. சிலபதார்த்தத்தை வறைநாற்றத்தைக் காட்டி முடிக்குமா போலே ஶப்தாதிகளிலே மூட்டி நசிப்பிக்கையாலே, இந்த்ரியங்களை பொறியென்கிறது. [நல மந்தமித்யாதி] - இவ்விபூதி அநந்தக்லேஶபாஜநமா யிருக்குமாபோலே, முடிவிறந்தபோக்ய தையை யுடைத்தாயிருக்கை. நாடென்கையாலே - அவித்யா நிவ்ருத்யாதிகளன்று, மோக்ஷ மென்கை. புகுவீரென்கையாலே - அர்ச்சிராதிமார்க்கத்தாலே தேஶப்ராப்தியையும், அதுக்

கிச்சையே யதிகார மென்னுமிடத்தையுஞ் சொல்லுகிறது. [அலமந்தித்யாதி] - விரோதிவர்க்கஞ் செய்வது என்? என்னில்;—அஸுரஸங்கங்களைத் தடுமாறிமுடியும்படி நிரஸித்தாப்போலே நிரஸிக்கும். [பலமுந்தித்யாதி] - ஸ்மர்த்தவ்ய விஷயஸாரஸ்யத்தாலே, ஆஶ்ரயண தசையே தொடங்கி ரஸியாநிற்கிற கல்யாண குணங்களிலே யவகாஹியுங்கோள். [ஓவாதே] - "அபர் வணி கடல் தீண்டலாகாது" என்னுமாபோலே, இதுக்குக்காலநியதியில்லை யென்கை. தமக்கு ரஸித்தபடியாலே யிடைவிடாமல் அநுபவியுங்கோ ளென்கிறார். "நானும்சொன்னேன் நமரு முரைமின்" என்னுமவரிறே.

ஈடு.—நாலாம்பாட்டு. அவனுடைய ஈஶ்வரத்வத்தில் கண்ணழிவற்றிருந்தது, 'இனி இதுக்க அவ்வருகில்லை' என்று 'நன்மைபெறவேணும்' என்றிருப்பார் அவனைக் கடுக ஆஶ்ரயிக்கப்பாருங்கோ ளேன்கிறார்.

[புலன் இத்யாதி] - புலனைந்து என்கிறது - விஷயங்களையாய், அவற்றிலே ப்ரவணமாகக்கடவவான பொறியைந்து உண்டு - ஶ்ரோத்ராதிகள்; அவற்றுக்கு வஶ்யராகை தவிர்ந்து. சில பதார்த்தங்களை வறைநாற்றத்தைக்காட்டி முடிக்குமாபோலே, ஶப்தாதிகளிலே மூட்டி நஶிப்பிக்கையாலே, இந்த்ரியங்களை - 'பொறி' என்கிறது. இத்தால் பரிச்சிந்நவஸ்துக்ராஹகமான இந்த்ரிய வஶ்யராகை தவிர்ந்து. [நலம் இத்யாதி] - நன்மைக்கு முடிவின்றிக்கே யிருக்கிற நாட்டிலே புக வேண்டியிருப்பீர்! "ஸ்வவிநாஶங்காண் மோக்ஷம்" என்கையன்றிக்கே, ஆப்ததமரான இவர் நன்மைக்கு முடிவில்லாததோரு தேசவிஶேஷமுண்டாக அருளிச்செய்துவைத்தாரிறே. [புகுவீர்] - இப்பேற்றுக்கு இசைவே அதிகார மேன்கிறார். அது ஒருநாடு முண்டாய், 'அது பெறவேணும்' என்னும் நசையு முண்டானாலும், ப்ரபலவிரோதிகள் கிடக்குமாகில் ப்ரயோஜநமில்லையே யென்னில், - [அலமந்துவீய அசுரரைச் செற்றான்] - விரோதிபோக்குகை நம்பணியோ? என்கிறார். தடுமாறி முடிந்துபோம்படி அஸுரவர்க்கத்தை அழியச்செய்தான். அவனுடைய [பலமுந்துசீரில்படிமின்]- பலம்முற்பட்டிருக்கிற கல்யாணகுணங்களிலே ப்ரவணராகுங்கோள். "ஸாக்ஷாத்கர்த்தவ்யம் ..."

---

ப்ர:—(பலமுந்துசீரில்)—ஶ்ரீபகவத்கீதாயாம் நவமே, "இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே। ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபாத்॥ ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம்। ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யயம்॥"

---

நான்காம்பாட்டு - புலன் இத்யாதி. கீழ்ப்பாட்டில் ப்ரமேயம் - அவனுடைய ஈஶ்வரத்வத்தில் கண்ணழிவற்றிருந்த தென்ற. கண்ணழிவற்றிருந்தது - அத்ருடமாகை தவிர்ந்து ஸ்திரமாயிருந்தது.

புலப்படும் - அறியப்படுமவையாகையாலே, புலனைந்து என்கிறது - விஷயங்களையா யேன்றது. ஐந்துமேயும் - ஐந்திலும் பொருந்திவர்த்திக்கும். அத்தாலே - ப்ரவணமாகக்கடவவான என்றபடி. இந்த்ரியங்களை - "பொறி" என்பானென் என்ன,—சிலபதார்த்தங்களை இத்யாதி. சிலபதார்த்தங்களை - எலி, பெருச்சாளி முதலானவைகளை. வறைநாற்றத்தை - ஹேயகந்தத்தை. பொறி - போன். பொறியைந்து நீங்கி - இந்த்ரியங்களைந்தினின்றும் அகன்று இதி ஶப்தார்த்தஃ. இத்தால் - "புலனைந்து" என்கிற இத்தால். மேலேகடாக்ஷித்து பலிதம் - பரிச்சிந்ந இத்யாதி. வித்தவ்யாக்யாதருவாக்யம் - ஸ்வவிநாசங்காண் இத்யாதி. ஸ்வரூபோச்சித்திர்விநாஶோ மோக்ஷஇத்யபரேऽப்யூசுஃ। ஸுகஸம்வேத்யவஸ்துரோக்ஷ கயா ப்ரஸாதமநுதஃ॥" இத்யநுஸந்தேயம். "புகுவீர்" என்றதற்கு பாவம் - இப்பேற்றுக்கு இத்யாதி. பாவம்- விரோதி இத்யாதி. சப்தார்த்தம் - தடுமாறி இத்யாதி. அலமந்து - தடுமாறி. பலம் முற்பட்டிருக்கையாவதென்? என்ன- ஸாக்ஷாத்கர்த்தவ்யம் இத்யாதி. படிமின் - அவகாஹியுங்கோள். இத்தால் பலிதம் - ப்ராவண்ய,

யம்'' (ஸுஸுகம் கர்த்துமவ்யயம்) என்னும்படி - ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யத்தாலே, ஸாதந தசையே தொடங்கி இனிதாயிருக்குமிறே. [ஓவாதே] - "அபர்வணி கடல்தீண்டலாகாது'' என்னுமாபோலே ஒரு நியதியில்லை இதுக்கு, மாறாதே ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். தமக்கு ரஸித்தபடியாலே, இடைவிடாமல் அநுபவியுங்கோ ளென்கிறா ரென்றுமாம். *"நானும் சொன்னேன் நமரு முரைமின்" என்னுமாபோலே. (சு)

## ஐந்தாம்பாட்டு.

ஓவாத்துயர்பிறவி உட்படமற்றெவ்வெவையும்
மூவாத்தனிமுதலாய் மூவுலகுங்காவலோன்
மாவாகியாமையாய் மீனாகிமானிடமாம்
தேவாதிதேவபெருமான் என்தீர்த்தனே.

ஆ.—(ஓவா.) "இணைவனும்" என்கிற பதத்தை விவரிக்கிறது.

ஸம்ஸாரசக்ர ப்ரவர்த்தகனாகையாலும், ப்ரஹ்மேஶாநாதி தேவர்களுக்குக் காரணபூதனாய் அயர்வறுமமரர்களுக்கு ஸ்வாமியாகையாலும், அஶேஷதோஷ ப்ரத்யநீகனாகையாலும், தேவமநுஷ்யாதி வ்யாபாரங்களைப் பண்ணிக்கொண்டு ஸர்வஜகத்ரக்ஷகனாகையாலும் அவனே ஸர்வேஶ்வர னென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஹயக்ரீவாதிரூபத்தினாலே திருவவதாரம் பண்ணியருளி, தன்னாலேஸ்ருஷ்டமான ஜகத்தையெல்லாம் ரக்ஷித்தருளாநிற்கும் என்றுகொண்டு, முதற்பாட்டில் ப்ரஸ்துதமான ஸர்வஸஜாதீயத்வத்தை விவரிக்கிறார்.

[ஓவாவென்று தொடங்கி] - நிரந்தர து:காவஹமான ஜந்மமகப்பட மற்றுமெல்லாவற்றுக்கும் "நிஷ்பலம்" என்றுகைவிடாத காரணமாய். [தேவாதிதேவபெருமான்] - ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் ஆதிதேவராயுள்ள அயர்வறுமமரர்களதிபதியானவன். [என்தீர்த்தனே] - என்னை ப்ரயோஜநாந்தர பரதையைத் தவிர்த்தவன்.

ப.—அநந்தரம், ஸமஸ்தகாரணபூதனானவன் கார்யபூத ஜகத்ரக்ஷணார்த்தமாகப் பண்ணின அவதாரங்களில் வைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார்.

ஓவா - அவிச்சிந்நமான, துயர் - து:கத்தைத்தருவதான, பிறவி - ஜந்மஸம்பந்த ரூபமான ஸ்ருஷ்டி, உட்பட - அகப்பட, மற்று - மற்ற ஸ்த்திதி ஸம்ஹாராதிகளான, எவ்வெவையும் - எல்லா வ்யாபாரங்களுக்கும், மூவா - மூத்துச்சோம்பிவிடாத, தனிமுதலாய் - ஸஹாயாந்தர நிரபேக்ஷகாரணபூதனாய்க்கொண்டு, மூவுலகும் - ஸ்ருஜ்யமான லோகத்தினுடைய, காவ

---

லுங்கோ ளென்றது. ஆஶ்ரயணம் ஸக்ருத்தாயிருக்க, "ஓவாதே" என்பானென் என்ன, அபர்வணி இத்யாதி. "ஸுஸுகம்ஸஂவிஸுராஜஂ" இத்யாத்யநுஸந்தேயம். கீழையும்கூட்டி ஹாவாந்தரம் - தமக்கு இத்யாதி உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம்-நானும் இத்யாதி. பெரியதிருமொழி. இதரவிஷயங்களினுடைய பேரைச் சொல்லிப் போந்த நானும் சொன்னேன், என்னோடு ஸம்பந்தமுடையாரும் இத்தையே சொல்லிப்போருங்கோ ளென்றபடி. புலனைந்துமேயுந் தொடங்கி, சீரில் - ஓவாதேபடிமி னித்யந்வய: (சு)

---

* பெரியதிருமொழி—சு, சுo, ரு. o

லோன் - ரக்ஷணத்தையுடையனுய், தேவ - ப்ரஹ்மாதி தேவதைகளுக்கும், ஆதிதேவர் - (அவ்வருகாம்படி) ஆதிதேவர்களான அயர்வறுமமரர்களுக்கு, பெருமான் - அதிபதியாய், என் - எனக்கு, தீர்த்தன் - அவகாஹிக்குந் துறையாம்படி ஸுலபனுனவன், (அந்த ஜகத்ரக்ஷணார்த்தமாக), மாவாகி - வேதப்ரவர்த்தகனுன ஹயக்ரீவனுய், ஆமையாய் மீனுகி - (புராணப்ரவர்த்தக) கூர்மமத்ஸ்யரூபியாய், மானிடமாம் - (கீதோபநிஷதாசார்யனுமான) மநுஷ்யனுமாம். "இணைவனு மெப்பொருட்கும்" என்கிற பதத்தை விவரிக்கிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், "இணைவனு மெப்பொருட்கும்" என்கிறபதத்தை விவரித்துக்கொண்டு, ஹயக்ரீவாத்யவதாரங்களாலே ரக்ஷிக்கு மென்கிறுர்.

[ஓவாத்துயர்ப்பிறவியுட்பட] - நீங்குந்துயரிற்காட்டில் தன்னேற்றம். நிரந்தரதுகாவஹமான ஜந்மமுட்பட - ஜந்மம் தொடக்கமாக. [மற்றெவ்வெவையும்]-மற்றுமுண்டான ஸ்த்திதி ஸம்ஹாராதி ஸர்வத்துக்கும். [மூவாத் தனிமுதலாய்] - மூவாதொழிகையாவது - முசியாதொழிகை. இவன் தன்னைப் பெறுகைக்காக கரணகளேபரங்களைக் கொடுக்க, அவற்றைக் கொண்டு விஷயப்ரவணராய் அநர்த்தப்படா நின்றால், "நிஷ்பலமாயிற்று" என்று முசியாதொழிகை. [மூவுலகும் காவலோன்] - மேலும், கீழும், நடுவும்; க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம். [காவலோன்] - ஶாஸ்த்ரப்ரதாநாதிகளாலே ரக்ஷிக்கை. "ஸாக்ஷாந்நாராயணோ தேவ:" இத்யாதி. தன்மேன்மை குலையாதேநின்றே ரக்ஷிப்பதென்னில்,—[மாவாகி யாமையாய் மீனுகி] - வித்யாப்ரவர்த்தகமான அவதாரங்கள். [மானிடமாம்] - அநுஷ்டேயார்த்தப்ரகாஶகமான ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள். "யேநாத்ய நாதாஸ்ய லோகஸ்ய க்ருதாநாதா ஜநார்தந" என்றும், "யத்யதாசரதி ஶ்ரேஷ்ட:" என்றுஞ் சொல்லுகிறபடியே. இப்படி செய்கிறவன்தான் ஆரென்னில்—[தேவாதிதேவபெருமான்] - ப்ரஹ்மாதிகளுக்கு ஆதிதேவர்களான நித்யஸூரிகளுக்கும் அவ்வருகானவன் கிடீர் இப்படிதாழ நின்றுனென்கை. இந்த்ராதிகளும் பூமியில் துர்கந்தாதிகள் பொறுக்கமாட்டாதே யொருயோஜநத்துக்கவ்வருகேயிறே நிற்பது. [என்தீர்த்தனே] - என்னை ப்ரயோஜநாந்தர பரதையைத் தவிர்த்தவன். நானிழிந்தாடும் துறையென்றுமாம்.

ஈடு·— அஞ்சாம்பாட்டு. கீழே "இணைவனுமெப்பொருட்கும்" என்றார்; அத்தை உபபாதிக்கிறார்.

[ஓவாத்துயர்ப்பிறவியுட்பட] - கீழே "நீந்துந்துயர்ப்பிறவி" என்றார்; இதிலே ஒருகால் விட்டுப்பிடிக்குமதுவு மில்லை யென்கிறார். உச்சிவீடும் விடாத துயரை விளைக்கக்கடவதான ஜந்மந் தொடக்கமாக மற்றுமுண்டான ஐந்துக்கும்; அவற்றையுடைத்தான பதார்த்தங்களுக்கும். மூவா வென்கிற இத்தை - கீழேகூட்டுதல்; மூவா - தனிமுதலென்று மேலேகூட்டுதல். ப்ரவாஹரூபத்

---

அஞ்சாம்பாட்டு - ஓவா இத்யாதி. "மாவாகி ஆமையாய் மீனுகி மானிடமாம்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - கீழே இத்யாதி.

புநருக்தியைப் பரிஹரிக்கிறார் - கீழே நீந்தும் இத்யாதி. "நீந்தும்துயர்ப்பிறவி" என்கிறது இது - "யாவஜ்ஜீவமஹ்நி ஹோதவ்யம் ஜுஹோதி" இத்யாதிவந்மத்யே துகாஹிதகாலமாயிருக்கு மென்று தத்வ்யாவ்ருத்யர்த்தம் புநரிஹாபிதாநமென்று கருத்து. ஓவா - அவிச்சிந்நமான. ஐந்துக்கும் - "ஜாயதே, அஸ்தி, வர்த்ததே, விபரிணமதே, அபக்ஷீயதே, விநஶ்யதி" என்கிற ஐந்துவிகாரங்களுக்கும். விகாரங்களைச்சொன்னது - விகாராஶ்ரயவஸ்துக்களுக்கும் உபலக்ஷண மென்கிறார் - அவற்றை இத்யாதி. உத்தயோஜநாத்வயத்துக்கும் அடைவே அர்த்தம் - ப்ரவாஹ இத்யாதி. அதாவது - ஓவாத்துயரை விளைக்கக்கடவதாய், மூவா - ப்ரவாஹரூபேண நித்யமாயிருக்கிற - பிறவியுட்பட மற்றெவ்வெவற்றுக்கும் தனிமுதலென்று முந்தின யோஜநையில் அர்த்தம்; இத்தயோஜநையில், மூவுதல் - நசித்தலாய், அதில்லாதது - "மூவா" என்றாய், நித்யனானவனைச்

தாலே நித்யமாய்ப்போருகிற இதுக்குத் தனிமுதலென்னுதல், முசியாத அத்விதீயகாரண'மா யென்னுதல். தான், "தன்பக்கலிலே வழிபடவேணும்" என்று நினைத்து உபகரணங்களைக் கொடுத்துவிட, கொடுத்த உபகரணங்களைக்கொண்டு வழிகேட நடவாநின்றால், 'இப்போது இங்ஙனே போயிற்றதாகில், க்ரமத்திலே நம்பக்கலிலே ருசியைப்பிறப்பித்து மீட்டுக்கொள்ளுகிறோம்' என்று அநுமதிதாநத்தைப் பண்ணி உதாஸீநனாயிருக்கும்; இப்படி தன்னினைவைத் தப்பிப்போரச்செய்தேயும், கர்ஷகனாயிருக்குமவன் 'ஒருகால் பதர்த்ததிறே' என்று சோம்பிக்கைவாங்காதே மேலேமேலே கோலுமாபோலே, 'ஒருகாலல்லா வோருகாலாகிலும் ஆகிறது' என்று ஸ்ருஷ்டியாநிற்கும். "சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா" என்னக்கடவதிறே. இப்படி இவன் ஸ்ருஷ்டித்து ரக்ஷிப்பது எவ்வளவேன்னில்;-[மூவுலகுங்காவலோன்] - ஸ்ருஷ்டிக்குக்கர்மீபவிக்கும் எல்லையளவும். கீழும், மேலும், நடுவுமென்னுதல்; க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதக மென்னுதல். [காவலோன்] - ஶாஸ்த்ரப்ரதாநாதிகளாலே ரக்ஷிக்கை. இப்படி ரக்ஷிப்பது தன்மேன்மை குலையாதே நின்றோ வேன்னில், [மாவாகி இத்யாதி] - அகர்மவஶ்யனானவன் கர்மவஶ்யரோடொக்கப் பிறந்தாயிற்று. [மாவாகி] - ஹயக்ரீவமூர்த்தியாய் அவதரித்தபடி. [ஆமையாய்மீனாகி] -

---

ப்ர:—(மூவுலகு)—ஶ்ரீவிஷ்ணுபுராணே, "த்ரைலோக்யமேதத்க்ருதகம் மைத்ரேய பரிபட்யதே । ஜநஸ்தபஸ்ததா ஸத்யமிதி சாக்ருதகத்ரயம் ॥ ௧௯ ॥ க்ருதகாக்ருதயோர்மத்யே மஹர்லோக இதி ஸ்ம்ருத: । ஶூந்யோ பவதி கல்பாந்தே யோऽத்யந்தம் ந விநஶ்யதி॥௨0॥"

(மாவாகி)—ஸஹஸ்ரநாம்நி, "தேஜஸா ஹயரூபேண ஹரிர்ஹயஶிராஸ்ததா । ருசாம்யஜூம்ஷி ஸாமாநி வரதோऽஹிதவாந்॥௨॥"

(ஆமையாய்)—ஸ்காந்தே, "க்ஷீரோதமத்யே ஸ்வயமாநநாமா ஸோமாஸ்ய நிஶாநாம் ஸஹோதா ஸம்ப்ரதாநேந॥அஅ॥" கூர்மவதார: பராணவேஷதாரோ.

(மீனாகி)—ஶ்ரீநாரஸிம்ஹே, "உத்தம்ஸ்தம் ஸ்தவமா ததா மத்ஸ்யரூபேண மஹாதேவ: ஸஹஸ்ராக்ஷாம் விஶ்வஶ்மிநா வாரிதே ஜ்ஞாநமாதத: । உத்ஸ்ருஷ்டம் தஸ்ய விஷ்ணோ ஸ்ம்ருதியாஸ வாயுநா । வேதாஸ்ய நீதம் விஜ்ஞாநம் வேதாந்வேஷணவாதினே । யேநாவேதைவநாஷ்டம் ஜ்ஞாநம் ஜநாதிபுந: । மாத்ஸ்யம் ரூபம் மஹாத்ம்யா ஸஹஸ்ரயோஜநாயதம் ।

---

சொல்லுகிறது. த்விதீயயோஜநையில், "மூவா" என்ற-முசியாமையைச் சொல்லுகிறது. இதுக்கு - ஜந்மாதி விகாரத்துக்கும், ஜந்மாதிவிகாரத்தையுடைய பதார்த்தஸமூஹத்துக்கு பென்றபடி. முசியாத - சோம்பாத. முசியாமையை உபபாதிக்கிறார் - தான்தன்பக்கலிலே இத்யாதி. உபகரணங்கள் - களேபராதிகள். பதர்த்ததிறே - பதராய்ப்போயிற்றிறே; நிஷ்பலமாயிற்றிறே யென்றபடி. கோலுகை - உத்யோகிக்கை. உக்தார்த்தே ப்ரமாணம்-சோம்பாள் இத்யாதி. பெரியதிருவந்தாதி (௧அ)-சோம்பிக் கைவாங்காதே இந்தப் பலவகைப்பட்ட வஸ்துக்களை யெல்லாம் விஸ்த்ருதமாக்கின காரணபூதனே யென்ற பாசுரார்த்தம். எல்லைக்கு உபபாதகம் - கீழும் இத்யாதி. "மூவுலகும்" என்றது - ஸ்ருஜ்யங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். கீழென்றது - பூமிக்குக்கீழான ஏழுலோகத்தை. மேலென்றது - பூமிக்குமேலான ஆறலோகத்தை. நடுவும் - நடுவான பூமியு பென்றபடி. "ஸூர்புவஸ்ஸுவ:" என்கிற மூன்றுலோகமும் - க்ருதகம். "ஜநஸ்தபஸ்ஸத்யம்" என்கிற மூன்றும் - அக்ருதகம். "மஹர்லோகம்" - க்ருதகாக்ருதகம். காவலோன் - ரக்ஷகன். ரக்ஷகத்வம் சதமித்யத்ராஹ-சாஸ்த்ர இத்யாதி. மேலே "மாவாகி" இத்யாதி—வித்யாவதாரங்களைச் சொல்லுகையாலே - சாஸ்த்ரப்ரதாநாதிகளாலே ரக்ஷிக்கை யென்கிறார். ஆதிஶப்தேந - அநுஷ்டேயார்த்த ப்ரகாஶநாதிருச்யதே. தாத்பர்யம்

எம்பார் இத்திருவாய்மொழி யருளிச்செய்யப்புக்கால், இருந்தவர்களை "யார்" என்றுகேட்டுக் கதவுகளையும்அடைப்பித்து, குஹ்யமாகவாம் அருளிச்செய்வது. ப்ராப்யமாகில் இப்படியன்றோ இருப்பது, இவர் நிஷ்கர்ஷிக்க வேண்டுகிறதேன்? என்னில்;— ஸர்வேஶ்வரன் இவ்வாத்மாவுக்கு ஶேஷியாய் இவனும் ஶேஷபூதனாய், அவனுடைய உபாயபாவமும் நித்யமாயிருக்கச்செய்தேயன்றோ இவனுக்கு இன்று ஸ்வீகாரம் வேண்டுகிறது; அப்படியே, அவன் ஸ்வதந்த்ரனாகையாலே நினைத்தபோது நினைத்தபடி கோள்வா ணொருவனாகையாலே, ப்ராப்திஸமயத்தில் அநுபவம் இருக்கும்படியையும் நிஷ்கர்ஷித்துப் பெறவேணுமிறே. உத்தரார்த்தத்திலும் இவ்வர்த்தத்தைச் சோல்லாநின்றதிறே. த்வயந்தன்னில் நிஷ்கர்ஷிக்க வேண்டுகிறதேன்? என்னில்;—பூர்வார்த்தத்தாற் சொன்ன ஸாதநம் ஸர்வபலப்ரதமாகையாலே, ப்ரயோஜநாந்தரபரராய் ஶரணம்புகுவார்க்கும் அவற்றைக்கொடுத்து விடுவானொருவனிறே ஸர்வேஶ்வரன். இதுதன்னிலோடுகிறதேன்? என்னில்;-"முக்தனாய் நிரதிஶய ஸுகாநுபவத்தைப் பண்ணவுமாம், ஆத்மப்ராப்தியைப் பெறவுமாம்; ஆத்மவிநாஶமேயாகவுமாம், நரகாநுபவம்பண்ணவுமாம், இவற்றில் எனக்கு ஒரு நிர்ப்பந்தமில்லை; உனக்காய் வருமன்று இவையித்தனையும் வரவுமாம், எனக்காய்வருமன்று இவையித்தனையும் வேண்டா; ஆனபின்பு, தேவருக்கு உறுப்பாமிதுவே எனக்கு வடிவாம்படி பண்ணியருளவேணும்" என்று ஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறார். இப்படிப்பட்ட பரிமாற்றந்தான் லோகத்தில் பரிமாறுவதொன்றல்ல; இவ்வாழ்வார்பக்கலிலே காணுதல்; ராமாயண புருஷர்களில் ஸ்ரீபரதாழ்வான், இளையபெருமாள், இவர்கள் பக்கலிலே காணுதல் செய்யுமித்தனை. கைகேயி "ராஜ்ந்" என்ற சொல் பொறுக்க

---

*நில் என்று அவனை நிறுத்தியென்றது - "தனக்கேயாக" என்று முகம்மாறவைத்ததைப்பற்ற. இது குஹ்யதமமென்கைக்கு ஸம்வாதம் - எம்பார் இத்யாதி. ப்ராப்யமாகில் இத்யாதிக்குத் தாத்பர்யம் - ஶய்பதோக்தாத்யந்த பாரதந்த்ர்யாநுகுணமாகச் சந்தநகுஸுமாதிகளைப்போலே அவனே தன்பேருக விநியோகம் கொள்வதாயன்றோ இருப்பது, இப்போது இவர் நிஷ்கர்ஷிக்கவேண்டின அம்ஶமேது? என்ற. ஶேஷியாய் - நிருபாதிகசேஷியாய். சேஷபூதனாய் - ஸஹஜதாஸபூதனாய். உபாயபாவமும் நித்யமாயென்றது - "உபாயோபேயபாவ ...[illegible]" என்றத்தைப்பற்ற. ஸ்வீகாரம் வேண்டுகிறது - ஸர்வமுக்திப்ரஸங்கபரிஹாரார்த்தமாக ஸ்வீகாரம் வேண்டுகிறதென்றபடி. நினைத்தபடி கோள்வானென்றது-ஐஶ்வர்யாதிகளையாதல், ஸ்வார்த்த கைங்கர்யத்தையாதல் கொடுத்து விநியோகம் கொள்வானொருவனாகையாலே யென்றபடி. "ஏற்கவே நிஷ்கர்ஷித்துப் பெறவேணும்" என்றால், மேலே முக்தனாய் இத்யாதியிற் சொல்லுகிறத்தோடு விரோதியாதோ? என்று கேட்க, "அவைகளெல்லாம் - அதிஶயோக்தி, ப்ராப்யத்திலே நோக்கு" என்று அருளிச்செய்வர். ப்ராப்யமீத்ருஶமென்னுமதில் ப்ரமாணமேது? என்ன - உத்தரார்த்தத்தில் இத்யாதி. "நமஸ்ஸாலே உனக்கே நாமாட்செய்வோ மென்னும்படி யாகவேணும்" என்று ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணுநின்றதிறே யென்கை. த்வயந்தன்னில் - முமுக்ஷுவினுடைய ஸாதநவிஶேஷத்தைச் சொல்லுகிற த்வயத்தி லென்றபடி. "ஏழில் திருவாய்மொழியில்" இத்யாதி வாக்யத்தால் சொன்ன அர்த்தத்தை விவரிக்கிறார் - இதுதன்னில் இத்யாதி. இத்திருவாய்மொழியில் நிஷ்கர்ஷிக்கிற ப்ராப்யமேது என்னி லென்றபடி. "சிறப்பில்வீடு" என்கிற பாட்டைப்பற்ற - முக்தனாய் இத்யாதி. "சிறப்பில்வீடு" என்று விசேஷிக்கையாலே - கேவலம் வீடுமுண்டென்று விவக்ஷித்து, ஆத்மப்ராப்தியைப்பெறவுமாம் என்றது. "எய்தற்க" என்றதுக்குப் பலிதார்த்தத்தைக் கடாக்ஷித்து, ஆத்மவிநாசமேயாகவுமாம் என்றது. ஆத்மவிநாஶம் - ஸம்ஸாரம். ஏவம் அநுஷ்டிதவக்தஸ்ஸக்திகிமித்யத்ராஹ - இப்படிப்பட்ட இத்யாதி. பகவதத்யந்தபாரதந்த்ர்யாநுகுணமான கைங்கர்யகாண மென்றபடி. லோகத்தில் பரிமாறுவதொன்றல்ல வென்றவிடத்திலே - "நிரஸாவிஶேஷ...[illegible]" என்று அஹமர்த்தாத்மத்வஸமர்த்தந பாஷ்யத்தில் வசநம் அநுஸந்தேயம். இப்பாரதந்த்ர்யத்துக்கு அநுஷ்டாநம் காட்டுகிறார் - கைகேயி இத்யாதி. அயோத்யாகாண்டே பாதம்ப்ரதி கைகேயீ, "...[illegible]"*

மாட்டாமே திரளிலேவந்து கூப்பிட்டானிறே. "விருஜாவஸஹாமெயே" (விலலாபஸபாமத்யே)- ஒருதிரளாகவிருந்து என்னுடைய ஶேஷத்வத்தை அபஹரிப்பதே! "தஸ்யபிர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும்ப்ருஶம்" (தஸ்யுபிர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும்ப்ருஶம்) என்னும் படி இழந்தவஸ்துவுக்குத் தக்கபடியா யிருக்குமிறே கூப்பீடும். "ஜகர்ஹேச" (ஜகர்ஹேச)- ஸந்த்யாவந்தநத்துக்குப் பிற்பாடரை ஶிஷ்டர் ஗ர்ஹை பண்ணுவாரைப்போலே ஗ர்ஹித்தான். 'புரோஹிதம்' (புரோஹிதம்) - அழகியதாக இக்குடிக்கு முன்னேடி ஹிதம்பார்த்தாய். "ஸபாமத்யே புரோஹிதம் ஜகர்ஹே" (ஸபாமத்யேபுரோஹிதம்ஜகர்ஹே)-'நியமாதிக்ரமம்ரஹஸி போதயேத்' (நியமாதிக்ரமம்ரஹஸிபோதயேத்) என்கிற நிலையும் பார்த்திலன், "ராஜ்யஞ்சாஹஞ்சராமஸ்ய" (ராஜ்யஞ்சாஹஞ்சராமஸ்ய) - ஒருவனுக்கு இரண்டுவஸ்து

---

ப்ர:—(எம்மாவிடு ப்ரவேஶே).—அயோத்யாகாண்டே(அஉ) கஙிஷைகம் ப்ருதிநியோகாரம் புரோஹிதம்ப்ருதி ஹரதஃ, "தமுக்வா ஹரதாவாக்யம் ஶோகேநாபிவரிப்லுதஃ। ஜகாமநஸா ராமம் யதுஜேதாயகாஙா யா ॥ கூ ॥ ஸ்வாஷகயா வாசா கஹம் ஸவரோயவா। விலலாபஸபாமத்யே ஜகர்ஹேசபுரோஹிதம் ॥ கo॥ உசிதஞ்ஹ யஸ்ய விதாஸ்நாதஸ்யயீதஃ। யதேபுயதாநஸ்யகோராஜ்யம் தமியோஹரேக॥கக॥ கயம் தஶரயாஜாதோ ஹவேதராஜ்யாவஹாரகஃ। ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய யதும் வக்துமிஹாஹஸி॥கஉ॥"

"வநகவிஙவ்ருதிக்ராதேஹஹதெயுத்யாநவஜிதெ। தஸ்யுபிர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும்ப்ருஶம்॥க॥"

ஆபஸ்தம்பதே, "ப்ராதிநாதிவாரஸ்யஸ்ய பாஙிவதிவதும் வா நியமாதிக்ரமம் ரஹஸிபோதயேத்॥உ॥"

---

இத்யாதி பூர்வமேவ லிகிதம். மூன்ரும் ஶ்ரியஃபதியிலே. இதுக்கு ப்ரமாணம் - விலலாப இத்யாதி. இந்த ஶ்லோகம் - சக்ரவர்த்தியின் ஶாஸ்த்ரார்த்தஸமநந்தரத்திலே "பரதாழ்வான் ராஜாவாகவேணும்" என்று மணமுரசு அறைய, அது அஸஹ்யமாய்ச் சொன்னதாயிருக்க, கைகேயி சொற்பொறுக்கமாட்டாமே கூப்பிட்டானென்றது - அவன் சொன்ன வார்த்தையும் நெஞ்சிலேபட்டுக் கிடக்கையாலே யென்று கண்டுகொள்வது. "ஸபாமத்யே-விலலாப, ஸபாமத்யே-புரோஹிதம்ஜகர்ஹே" என்று இரண்டிடத்திலும் கூட்டுவது. ஸபாமத்யே விலபிதுர்ஹ்ருதயமாஹ - ஒருதிரளாக இத்யாதி. விசேஷணலலாப இத்யுபஸர்க்கார்த்தம் ஹ்ருதி நிதாயதத்ரோபபத்திமப்யாஹ-தஸ்யுபிஃ இத்யாதி. "ப்ருஶம்" என்றது-இங்குவேண்டுவது. "வநகவிஙவ்ருதிக்ராதேஹஹதெயுத்யாநவஜிதெ" இதி பூர்வார்த்தம் இழந்தவஸ்து என்றது-பெருமாளையாதல், பாரதந்த்ர்யத்தையாதல். ஶிஷ்டகர்ஹை - "ஶிஷ்டர்க்கு இதுதகாதுகாண்" என்ற கர்ஹை. "ஶிஷ்டர் இப்படியைக் கண்டாலும் கேட்டாலும் ஸஹியார்கள்காண்" என்ற கர்ஹை யென்றுமாம். புரஃஹிதம்பஶ்யதீதி - புரோஹிதஃஇதி வ்யுத்பத்திம்ஹ்ருதிநிதாயாஹ-அழகியதாக இத்யாதி என்கிற நிலையும் பார்த்திலன்-புரஃஹிதம் பஶ்யதீத்யேவம் ரூபமான குருத்வஹேது, கழிகையாலேயென்ற கருத்து. இவ்விடத்திலே - "ப்ரஸஹ்யவபுநஃப்ராஹகிதேநஜேநஸாஸ்வதி। ஸாயஶோஃகிதேநஜேநஸாயஶோமபுரவொதே" என்ற ப்ரஹ்லாதவசநம் கண்டுகொள்வது. ஆபஸ்தம்பதர்மே, "ப்ராதிநாதிவாரஸ்யஸ்ய பாஙிவதிவதும் வா நியமாதிக்ரமம் ரஹஸிபோதயேத்". "என்னை யித்தனை கர்ஹிக்கைக்கு ஹேதுவென்?" என்று அவனுக்குக் கருத்தாகச் சொல்லுகிருர் - ராஜ்யஞ்ச இத்யாதி. அயோத்யாகாண்டே!புரோஹிதம் ப்ரதி பரதஃ.

ஶேஷமானால் ஒன்றையொன்று நிர்வஹிக்குமோ ? ஆனால், ராஜ்யந்தான் என்னையாண்டாலோ ? "த4ர்மம் வக்துமிஹார்ஹஸி" (தர்மம்வக்துமிஹார்ஹஸி)-" பெருமாள் காடேறப்போனார், சக்ரவர்த்தி துஞ்சினான்; நாடு அராஜகமாய்க் கிடக்கவொண்ணாது; நின்றாரில் ப்ரதாநர்தலையிலே முடியை வைக்கவேணும்" என்றுபார்த்தாயித்தனைபோக்கி இதுக்கு விஷயபூதனான என்னைப் பார்த்து வார்த்தைசொல்லிற்றில்லை. "கத2ம் த3ஶரதா2ஜ்ஜாதோ ப4வேத்3ராஜ்யாபஹாரக:" (கதம் தஶரதாஜ்ஜாதோபவேத்ராஜ்யாபஹாரக:)-அவர் போகட்டுப்போன ராஜ்யத்தை அபஹரித்து, அவரைப்பிரிந்த அநந்தரத்திலே முடிந்தவன் வயிற்றிலே பிறந்தேனும்படி எங்ஙனே நான்? இளையபெருமாள், "நில்" என்ன, "குருஷ்வ" (குருஷ்வ) - என்றாரிறே - அந்வயத்தாலே த4ரிக்கக்கடவ வஸ்துவை வ்யதிரேகித்து நிற்கச்சொல்லுகையாவது அழிக்கையிறே. குரு என்னாதே, "குருஷ்வ" (குருஷ்வ) என்றாரிறே - ஆருடைய ப்ரயோஜநத்துக்கு ஆர்தானிருக்கிறார் ? உம்முடைய இழவுக்கு நீர் பதறுகிறதேன் ? "அநுசரம்" (அநுசரம்) - பண்ணும் ப்ரகாரத்தை விதிக்கிறார். நீர்தாம் "நில்" என்று அருளிச்செய்தது, நான், நிற்கச்சொல்லுகைக்கு யோக்யனும்படி யிருக்கையிறே; உம்முடைய சாயையை "நில்" என்றுசொல்லிற்றிலீரே, சாயையோபாதி உம்மைப் பின் செல்வேனாகவேணும். "நீரும்நிழலும் வாய்த்திருப்பதோரு ப்ரதேசத்தைப் பார்த்துப் பர்ணசாலையைச்

---

"ஸ பா4ஷ்பகலயா வாசா கலஹம்ஸஸ்வரோ யுவா । விலலாப ஸபா4மத்4யே ஜக3ர்ஹே ச புரோஹிதம்" இத்யாதி. "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய த4ர்மம் வக்துமிஹார்ஹஸி । கத2ம் த3ஶரதா2ஜ்ஜாதோ ப4வேத்3ராஜ்யாபஹாரக:". "ராமஸ்ய" என்ற ஷஷ்ட்டியை - ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தத்திலேயாக்கி அர்த்தம் - ஒருவனுக்கு இத்யாதி. ஆனால் - நிர்வஹிக்குமாகில். வைபரீத்யம் கிங்கஸ்யாதித்யாஹ - ராஜ்யந்தான் என்னை இத்யாதி. "இஹ" என்றதுக்கு பா4வம் - பெருமாள் இத்யாதி. இஹ - அஸ்மத்விஷயே. கீழ் - ஸ்வரூபத்தோடு சேராதென்றார், இனி - குடிப்பிறப்புக்கும் சேராதென்கிறார் - கதம் தஶரதாத் இத்யாதி. "ராஜ்யாபஹாரகஶ்ச - கத2ம் த3ஶரதா2ஜ்ஜாதோ ப4வேச்ச" இத்யந்வயமுகேந - அவர்போகட்டுப்போன இத்யாதி. இப்பரிமாற்றம் இளையபெருமாள்பக்கலிலும் காணலாமென்கிறார் - இளையபெருமாள் இத்யாதி. நில்லென்ன - இளையபெருமாள் - குருஷ்வ என்றாரிறேயென்று அந்வயிப்பது. பெருமாள் "நீர்நில்லும்" என்று சொன்னவளவிலே, இளையபெருமாள் "குருஷ்வ மாமநுசரம்" என்று சொன்னாரிறேயென்றபடி. அயோத்யாகாண்டே ராமம்ப்ரதி லக்ஷ்மண:, "குருஷ்வ மாமநுசரம் வைத4ர்ம்யம் நேஹ வித்3யதே । க்ருதார்தோ2ஹம் ப4விஷ்யாமி தவ சார்த2: ப்ரகல்பதே". 'நில்'என்கை-அழிக்கப்பார்க்கையென்று விவக்ஷித்து, "நில்" என்றால் - அழிக்கையாமோ வென்ன, அந்வயத்தாலே இத்யாதி. "ஜலாந்நத்ஸ்யாவிவ" என்றதிலே நோக்கு. அன்றிக்கே, "வைத4ர்ம்யம் நேஹ வித்3யதே" என்றத்தைக் கடாக்ஷித்துபா4வமாதல், "வைத4ர்ம்யம்" இதி வாக்யம் - "திஷ்ட2" இத்யுக்தே "குருஷ்வ" இதி வசநம் ஹேதுபரம். அஸ்மிந்ஸ்லோகே ஸ்வார்த்ததாராஹித்யம் குத்ரஸூச்யதே இத்யத்ராஹ-குருவென்னாதே இத்யாதி. "ஸ்வரிதஞித: கர்த்ரபி4ப்ராயே க்ரியாப2லே"- ஸ்வரிதேதோஞிதஶ்சயேதாதவ:தேப்ய: பரஸ்யலகாரஸ்யஸ்த்தாநேஆத்மநேபதம்பவதிகர்த்தாரஞ்சேத்க்ரியாபலமபிப்ரைதீதிஸூத்ரஸூத்ரப்ரக்ரியயா, இங்கு "டு3க்ருஞ் கரணே" என்று ஞகாரேத்தானதாதுவாய், அதின்மேலே ஆத்மநேபதம் வருகையாலே - இவரால் வரும்பேறு பெருமாளதென்று சொல்லுகிறதென்றபடி. என்னாலேதென்ன - ஆருடைய இத்யாதி. தாத்பர்யம்-உம்முடைய இத்யாதி. பதறுது - த்வரியாது. "அநுசரம்" என்றதுக்கு பா4வம் - நீர்தாம் இத்யாதி. "மாம்"என்றதுக்கு பா4வமாதல். நிற்கச்சொல்லுகைக்கு யோக்யராகாமையை த்ருஷ்டாந்தமுகத்தாலே காட்டுகிறார் - உம்முடைய சாயையை இத்யாதி. இந்தப் பாரதந்த்ர்யத்தை ஸ்த்தலாந்தரத்திலும் காட்டுகிறார்-நீரும் நிழலுமித்யாதி. என்

சமையும்'' என்ன, “ நந்தலையிலே ஸ்வாதந்த்ர்யத்தை வைத்தபோதே பெருமாள் நம்மைக் கை விட்டார்'' என்று வேறுபட்டார். “ஏவமுக்தஸ்துராமேண'' (ஏவமுக்தஸ்துராமேண)- “ இதுக்கு முன்பெல்லாம் நம்குறையாலே யிழந்தோம்'' என்றிருந்தோம்; இவர்தமே நம்ஸ்வரூப மழியக் காரியம்பார்த்தார், இனி, 'நம்ஸ்வரூபம்' என்றொன்றுண்டோ?'' என்று வேறுபட்டார். லக்ஷ்மண:'' (லக்ஷ்மண:) - பாரதந்த்ர்யத்தை நிரூபகமாகவுடையவர். “ஸம்யதாஞ்ஜலி:'' (ஸம்யதாஞ்ஜலி:)-நாம் நம் ஸ்வரூபத்தை யழித்துக்கொண்டவன்று நோக்குகையன்றிக்கே, ஶேஷி தானே யழித்தவன்றும் ஸ்வரூபத்தைத் தரவற்றாயிற்று அஞ்ஜலி. ஸர்வாபிமத ஸாதநமாயிற்று. “ஸீதாஸமக்ஷம்'' (ஸீதாஸமக்ஷம்)-பண்ணின அஞ்ஜலிக்கு அந்யபரதை ஶாவிக்க வொண்ணுத வள் ஸந்நிதியிலே. “காகுத்ஸ்தம்'' (காகுத்ஸ்தம்)-பிராட்டிஸந்நிதியும் மிகையாம்படியான குடியிற் பிறப்பை யுடையவரை. “இதம்வசநமப்ரவீத்'' (இதம்வசநமப்ரவீத்) - “இவ்வார்த்தையைச் சொல்லுவானே'' “என்றுகொண்டாடுகிறான் ருஷி. “பரவாநஸ்மி''(பரவாநஸ்மி)-உம்முடையஅஸ் மிதைபோலல்லகாணும் என்னுடைய அஸ்மிதை. இப்படிக்கொத்த பாரதந்த்ர்யத்தை யாயிற்று இவர் ஆசைப் படுகிறது. “ இதுதான் ஒருவர் அபேக்ஷிக்கு மதுவுமல்ல, அபேக்ஷிப்பாரில்லாமையாலே

---

ஆரண்யகாண்டே பஞ்சதஶே, “ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ்ஸம்யதாஞ்ஜலி: । ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்தம் இதம்வசநமப்ரவீத் ॥ ௬ ॥ பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே । ஸ்வயம் து ருசிரே தேஶே க்ரியதாமிதி மாம் வத ॥ ௭ ॥ ஸுவீர்யவாந் ஸ ந வா க்யேந லக்ஷ்மணஸ்ய மஹாத்யுதி:। விம்ருஶந்ரோசயாமாஸ தேஶம் ஸர்வகுணாந்விதம் ॥ ௮ ॥''

---

னுடைய வஸ்மிதை யென்னுமளவாக நீரும் நிழலு மித்யாதி வாக்யம் - “ஏவமுக்தஸ்துராமேண'' இத்யாதி ஶ்லோகத்துக்கு அவதாரிகை. இதுக்கு - “ ஜநஸ்தாநே வயம் தஸ்மாஜ்ஜநஸ்தாநே ததா । ஶாத்ரவம் நரஶார்தூல ஜநாஶய:'' என்றதிலே நோக்கு. ஏவமுக்தஸ்துராமே ணேத்யாதி: - பஞ்சவடீப்ரவேஶாநந்தரஶ்லோக: ; “ ஜநஸ்தாநம்'' இத்யாதி, ஶ்லோகத்துக்கு மேலில் ஶ்லோகம் இது. “ ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மணஸ்ஸம்யதாஞ்ஜலி: । ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்தம் இதம்வசநமப்ரவீத் । பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே । ஸ்வயந்து ருசிரே தேஶே க்ரியதாமிதி மாம் வத''. துஶப்தார்த்தம் - இதுக்குமுன்பு இத்யாதி. கைங்கர்யாலாபதஶா:காஶ்சநஸந்தி சேத்தாஶ்ச, “ காமம் ஸ்வபிஷ்ட்வா'' இதிஸ்வயம்விதாது மநுகுணஸ்த்திதிஶ்சாத்ரவிவக்ஷிதா. “ ஸ்நேஹம் லக்ஷ்மலக்ஷணோ'' இதி, மதுப்ப்ரத்யயார்த்தஞ்சஸ்ருதிநிதாயாஹ - பாரதந்த்ரியத்தை இத்யாதி. வேறுபட்ட பின்பு அஞ்சலி பண்ணுவானென்னென்ன, நாம் நம்ஸ்வரூபத்தை இத்யாதி. பலிதம் - ஸர்வாபிமத இத்யாதி. நாம் அழித்ததோடு, அவன் அழித்ததோடு வாசியற எல்லாவபிமதங்களு மென்றபடி. புருஷகாரத்வம் ஸ்ருதி நிதாயாஹ - பண்ணின அஞ்ஜலிக்கு இத்யாதி. “நஹ்யஞ்ஜலி: காரயஸாநோ வேதா: ககுஸ்தவம் ஶேவிஶ்வா: வ்யாஜி'' இத்யாதிகம் ஸ்ருதிநிதாயாஹ - பிராட்டிஸந்நிதியும் இத்யாதி. “இதம்'' என்றதிலே நோக்காக பாவம்-இவ்வார்த்தையை இத்யாதி. உம்முடையவஸ்மிதைபோலல்லகாணுமித்-உம்முடைய வஸ்மிதை “ஸ்வதந்த்ராஸ்மி'' என்றிறே யிருப்ப தென்றபடி. அலம்ப்ரஸக்தாநுப்ரஸக்த்யேதி ப்ரக்ருதம் அநுஸரதி - இப்படிக்கொத்த இத்யாதி. “ஒல்லே'' “ஒல்லே'' “ஈதே'' “ஈதே'' இத்யாத்யஸக்ருதபிதாகம், “ விடவில்சக்காத்தண்ணலேமேவல்விடலில் வண்குருகூர்ச்சடகோபன்சொல்'' இத்யாதிகஞ்ச பராம்ருஶ்ய. ப்ர

நாம்கோடுத்துப்போரு மதுவுமல்ல; அவ்வழி புல்லெழுந்துபோயிற்றுக்காணும்'' என்று அவன் அநாதரித்திருக்க; புருஷன் அர்த்திக்க வருமதிறே - புருஷார்த்தமாவது; ''இப்பேறித்தனையும் நான்பெற்றேனாகவேணும்'' என்று இவர் அபேக்ஷிக்க, அவனும் தலைதுலுக்கப்பெற்ருராய்த் தலைக்கட்டுகிருர்.

## முதற்பாட்டு.

எம்மாவீட்டுத் திறமும்செப்பம் நின்
செம்மாபாதபற்புத் தலைசேர்த்துஒல்லை
கைம்மாதுன்பம் கடிந்தபிரானே !
அம்மாவடியேன் வேண்டுவதீதே.

*ஆ.—எத்தனையேனும் உத்க்ருஷ்ட புருஷார்த்தமான ஸ்ரீ வைகுண்டத்திலும் எனக்கபேக்ஷையில்லை, மற்றெதிலே அபேக்ஷையுள்ள தென்னில்; - உன்னுடைய அழகிய திருவடி மலர்களை என் தலையிலே வைத்தருளவேணும்; அது செய்தருளுமிடத்து ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்குச் செய்தருளினாற்போலே வந்து செய்தருளப்பற்ருது, செய்துகொண்டு நிற்கவேணும்; ஈதே அடியேன் வேண்டுவது என்கிருர்.*

*ஒ.—முதற்பாட்டில், எத்தனையேனும் உத்க்ருஷ்ட புருஷார்த்தமான ஶ்ரீவைகுண்டத்திலும் எனக்கு அபேக்ஷையில்லை, உன்திருவடிகளை என் தலையிலே வைக்குமித்தனையே வேண்டுவ தென்கிருர்.*

வீட்டுத்திறம் - வீட்டிடையாட்டம், செப்பம் - சொல்லோம். [நின் செம்மா பாத பற்புத் தலைசேர்த்து] - உமக்குச் செய்யவேண்டுவது என்? என்னில்;-அகவாய் சிவந்து புறங்கரியதாய் நிரதிசயபோக்யமான உன்னுடைய திருவடிகளை என் தலையிலே சேர்த்தருளவேணும்; ஆஶ்ரிதர்க்கு அருமைப்படவேண்டாதபடி செவ்விதாய்ப் பரமபூஜ்யமான பாதபத்ம மென்றுமாம். ஒல்லை - ஈண்டென. [கைம்மாதுன்பம் கடிந்தபிரானே] - ஶ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபந்நிவாரணமாகிற மஹோபகாரத்தைப் பண்ணினவனே; இது - த்ருஷ்டாந்தம். [அம்மாவடியேன்] - உம்முடைய அபேக்ஷிதம் செய்கைக்கு உறவறியவேணுமிறே என்னில்;-நீ நாதன் நான் அடியேன். [வேண்டுவது] - ''உறும்'' என்று வேண்டுகிறே னல்லேன், உகந்து அபேக்ஷிக்கிறேன். [ஈதே] - இவ்வடிமையும் மற்று என்ன புருஷார்த்தமும் வேணுமென்னில்;-இதுவேயமையும்.

*ப.—முதற்பாட்டில்,ஸர்வப்ரகாரவிஶிஷ்டமான மோக்ஷத்திலும் திருவடிகளோட்டை ஸம்பந்தமே உத்தேஶ்யமென்று அபேக்ஷிக்கிருர்.*

எ - எவ்வகைப்பட்ட, மா - உத்க்ருஷ்டமான, வீட்டுத்திறமும் - மோக்ஷப்ரகாரமும், செப்பம் - சொல்லோம், நின் - உன்னுடைய, செம் - சிவந்த, மா - உத்தேஶ்யமான, பாதபற்பு - திருவடித்தாமரைகளை, தலை - தலையிலே, ஒல்லை - கடுக, சேர்த்து - சேர்க்கவேணும், கை -

---

மேயபோஷமாஹ - இதுதான் இத்யாதி. அநாதரஹேதுவேதென்ன-புருஷனர்த்திக்க இத்யாதி. இப்பேறித்தனையும் - ஸ்வார்த்ததாகந்தரஹிதமான பேறித்தனையும். ''விடலில்சக்கரத்தண்ணலே'' என்றத்தைப்பற்ற, அவனும்தலை துலுக்கப்பெற்றாய் என்றது.

துதிக்கை முழுத்தும்படி அழுந்தின, மா - ஆனையினுடைய, துன்பம் - துக்கத்தை, கடிந்த - போக்கின, பிரானே - மஹோபகாரகனாய், அம்மா - இவ்வபதாநத்தைக் காட்டி என்னை அடிமைகொண்ட ஸ்வாமியே, அடியேன் - உனக்கு அடியேனான நான், வேண்டுவது - என் (ஸ்வரூபத்துக்குத் தகுதியான பலமாக) வேண்டியிருப்பது, ஈதே - இதுவே.

புருஷன் அர்த்திக்கப்படுமதன்றோ - புருஷார்த்தமென்று கருத்து. ஒல்லை - சடக்கென. கைம்மா - ஆனை. ஒல்லை - கைம்மாவென்று கூட்டவுமாம். செப்பம் - செப்போம். அன்றியே, செப்பமென்று - செவ்விதாமென்றாய், மோக்ஷப்ரகாரமெல்லாம் செவ்விதாகையாவது - திருவடிகளிலே சேர்த்தியென்றாகவுமாம்.

இ.—முதற்பாட்டில், எத்தனையேனும் விலக்ஷணமான பரமபதத்திலும் எனக்கு அபேக்ஷையில்லை, உன்திருவடிகளை என் தலையிலே வைக்குமித்தனையே வேண்டுவதென்கிறார்.

[வீடு] - மோக்ஷம். [மாவீடு] - உத்க்ருஷ்டமான மோக்ஷம், அவித்யாநிவ்ருத்தி மாத்ரமன்று. [எம்மாவீடு] - எல்லா ப்ரகாரத்தாலும் உத்க்ருஷ்டமான மோக்ஷங்கிடீர் என்ன; - ஆனாலும் அபேக்ஷையில்லை. [வீட்டுத்திறம்] - வீட்டிடையாட்டம். [செப்பம்] - செப்போம். சொல்லோம். என் கருத்தறிகைக்காக நீ 'கொள்' என்னும், நாம் "வேண்டா" என்று நிஷேதார்த்தமாகவும் ப்ரஸங்கிக்கக் கடவோமல்லோம். ஒருதமிழன் "எம்மாவீட்டு விகற்பங்களும் செவ்வியவாய்" என்றான்; அப்பக்ஷத்தில் ஸாலோக்ய ஸாரூப்ய ஸாமீப்ய ஸாயுஜ்யம் என்கிற இவையெல்லாம் இம்மோக்ஷத்திலே உண்டாகை. உமக்குச் செய்யவேண்டுவது என்? என்ன - [நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து] - ப்ராப்தமாய் அகவாய் சிவந்து அதுக்குப் பரபாகமான புறவாயிற் கறுப்பை உடைத்தாய் விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றம், இவற்றாலே நிரதிசய போக்யமான திருவடிகளை. ஆஸ்ரிதர்க்கு அருமைப்பட வேண்டாதபடி செவ்விதாய்ப் பூஜ்யமான திருவடிகளென்னவுமாம். [தலைசேர்த்து] - என்தலையிலே கொக்குவாயும் படுகண்ணியும்போலே சேர்த்தருளவேணும். சேர்த்து என்று - ல்யப்பன்று; விதியாய், சேர்த்தருளவேணுமென்கை. [ஒல்லை] - ஈண்டென. [கைம்மா இத்யாதி] - இது த்ருஷ்டாந்தம். "கைம்மா துன்பம்" என்னுமித்தனை, பேச்சுக்கு நிலமன்று. பாய்மா - குதிரை. கைம்மா - ஆனை. இப்பேச்சாலே சொல்லிற்று - துதிக்கையொழிய முழுகிற்றென்கை. [துன்பம்கடிந்த] - "வரோவடிரோவண:" என்கிற தசையிலே "ககஸ்தவ0வரவிஷுவஹிதஹஸூ" என்று த்வரையோடேவந்து ஸவாஸநமாக துக்கத்தைப் போக்கினவனே. [பிரானே] - அவனுச்கு உதவிற்று தமக்கு உதவிற்றாயிருந்தபடி. நம்மோடு உமக்கு ஸம்பந்தம் ஏதாக அபேக்ஷிக்கிறீரென்ன - [அம்மாவடியேன்] - நீ ஸ்வாமி, நான் சேஷபூதன். [வேண்டுவது] - "உத்க்ருஷ்டம்" என்று வேண்டுகிறேனல்லேன், "நிஷித்தம்" என்றாலும் விடவொண்ணாதபடி எனக்கு ராகப்ராப்தம். மற்று என் வேணுமென்ன; [ஈதே] - உன் திருவடிகளை என் தலையிலே வைக்குமிதுவே.

ஈடு.—முதற்பாட்டில், எவ்வகையாலும் விலக்ஷணமான மோக்ஷத்திலும் எனக்கு அபேக்ஷையில்லை, உன்திருவடிகளை என்தலையிலே வைக்கவேணு மென்கிறார்.

" ஆழ்வீர்! மோக்ஷத்தைக்கொள்ளும்" என்றான் ஈஶ்வரன், " வேண்டா " என்றார்; " மாவீடுகிடீர் - விலக்ஷணமான மோக்ஷங்கிடீர் " என்றான், " அதுவும் வேண்டா " என்றார்;

---

முதற்பாட்டு - எம்மாவீடு இத்யாதி. 'எம்மாவீடு' தொடங்கி, 'தலைசேர்த்து' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை-எவ்வகையாலும் இத்யாதி.

"செப்பம்" என்ற ப்ரதிஷேதத்துக்கு ப்ரஸக்தியைக் காட்டா நின்றுகொண்டு, "வீடு, மாவீடு, எம்மாவீடு," என்று விவக்ஷித்து க்ரமேண தாத்பர்யம். ஆழ்வீர் இத்யாதி-வீடென்று-ஐஶ்வர்யம்; மாவீடென்று-

"எம்மாவீடுகிடீர் - 'ஐஶ்வர்யம், ஆத்மாலாபம்' என்றிருக்கவேண்டா, பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷம்" என்றான்; அதுவும் எனக்கு வேண்டா வென்கிறார். எவ்வகையாலும் நன்றான மோக்ஷத்திடையாட்டமும். [செப்பம்]-செப்போம்; சொல்லோம். நீ ப்ரஸங்கிக்கவும் கடவையல்லை, நான் ப்ரதிஷேதிக்கவும் கடவனல்லேன். [எம்மாவீட்டுத்திறமும்செப்பம்] - ஒரு தமிழன் "எம்மா வீட்டு விகல்பமும் செவ்வியவாம்" என்றான். அந்தப்பக்ஷத்திலே, வீட்டுவிகல்பமாவது - ஸாலோக்யஸாரூப்ய ஸாமீப்யஸாயுஜ்ய மென்கிறவை. செவ்வியவாகையாவது - ஸாலோக்யாதிகளெல்லாம் இம்மோக்ஷத்திலேயுண்டாகை. ஆனால் உமக்கு வேண்டுவதேன்? என்னில்,—[நின்செம்மாபாத பற்புத்தலைசேர்த்து] - இது எனக்கு வேண்டுவது. செம் என்று - சிவப்பாய், மா வென்று - கறுப்பாய்; உன்னுடைய, அகவாய் சிவந்து புறவாய் ஶ்யாமமாய்; விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றங்களுக்குத் தாமரையை ஒருபோலிசொல்லலாம்படி யிருக்கிற திருவடிகளைக் கொண்டுவந்து என் தலையிலே வைக்கவேணும். அன்றிக்கே, செம்மையால் நினைக்கிறது - செவ்வையாய் ஆஶ்ரிதர்க்கு வருந்தவேண்டாதபடியான ஆர்ஜவத்தையுடைத்தாய்; மாவென்று - மஹத்தையாய், பரமபூஜ்யமான திருவடிகளென்னவுமாம். சேர்த்துஎன்றது - சேர்க்கவேணு மென்றபடி. கோக்குவாயும் படுகண்ணியும் போலே, உன்திருவடிகளும் என்தலையும் சேரவேணும். சேர்த்து என்று - ல்யப்பாகையன்றிக்கே, விதியாய், சேர்த்தருளவேணு மென்கை. "*யாவந்நசரணௌ மூர்த்நா கரிஷ்யாமி நசேஷ்டேகிமித்யுக்தம்*" (யாவந்நசரணௌ

---

ப்ர:—(எம்மாவீடுஇத்யாதி)—(பாதபற்புத்தலைசேர்த்து)—அயோத்யாகாண்டே (கூ-அ) வித்ருகூடவாஸிஸமீபே ஸ்நாதம் நிவேஶ்யாமாஸ ஶத்ருஷ்ணோ ஶத்ருஹ்நம் ஸ்த்தித ஸ்தித:, யாவந்நசரணௌ மூர்த்நா: வாஸிஷ்டநாமிஷேஸ் । ஶிரஸா யாசயிஷ்யாமி நசேஶாஷிஹ விஷ்யதி॥அ॥யாவந்நராஜ்யராஜ்யாஹ: வித்யதேதாசேஹஷிதஃ। ஸமிஷேக ஜஙக்ஷேமா நசேஶாஷிஹவிஷ்யதி॥கூ॥ "ஶிரஸா: வஹ ஸௌமித்ரி யூஶஸு விசேஷா வசே । சேவம் வஶ்யதி ராகேஸ்ய ராஜீவாக்ஷஜஹாத்யதி॥க௦॥"

---

கைவல்யம்; எம்மாவீடென்று - பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷம். "கேசிதேராகேஷாகேஹாநஃ" என்று - முக்திஶப்தத்தாலே ஆநந்தத்தைச் சொல்லுகையாலே, ஐஶ்வர்யமும் ஆநந்தாவஹமாகையாலே, "வீடு" என்று - கௌணமாக ஐஶ்வர்யத்தைச் சொல்லுகிறது. கைவல்யத்துக்கு ஐஶ்வர்யாபேக்ஷயா மஹத்வமுண்டாகையாலே - "மாவீடு" என்று கைவல்யத்தைச் சொல்லுகிற தென்றபடி. ஶப்தார்த்தம் - எவ்வகையாலும் இத்யாதி. இடையாட்டம் - ப்ரஸங்கம். "செப்பம்" இத்யஸ்ய சாமாவதி மாஹ - நீப்ரஸங்கிக்கவும் இத்யாதி. யத்வா, "செப்பம்" என்றது - த்விவசநமாக விவக்ஷித்து அர்த்தமாதல். பக்ஷாந்தரத்துக்காக ப்ரதீகோபாதாநம்-எம்மாவீடு இத்யாதி. வீட்டுவிகல்பம் - வீட்டினுடைய பேதங்கள். திறம் - ஸமூஹம்; விகல்பமென்றபடி. செப்பம் - செவ்வியவாம். இம்மோக்ஷத்திலே - பாதபற்புத்தலை சேர்க்கையிலே. தமிழன் நிர்வாஹத்துக்கு - மாவீட்டினுடைய எல்லாமான பேதமும் செவ்வியவா மென்கை. இவ்விடத்திலே - ஸாலோக்யஸாரூப்யஸாமீப்யஸாயுஜ்யம் என்றதநுஸந்தேயம். ஆகிலும், ப்ரகரண ஸ்வாரஸ்யமுள்ளது முந்தின அர்த்தத்திலே யாகையாலே அத்தை அவலம்பித்து மேலில் பதத்துக்கு அவதாரிகை-ஆனால் உமக்கு இத்யாதி. பற்பு - பத்மம். மா வென்று - கறுப்பும், மஹத்தையும். அகவாய் - உள்ளங்கால். கூட்டு என்னாதே, "சேர்த்து" என்று சொன்னதுக்கு ஹாவம் - கோக்குவாயும் இத்யாதி. கோக்குவாயும் படுகண்ணியுமாவது - ஆபரணவிசேஷங்களில் பரஸ்பரபந்தகமான அவயவவிசேஷங்கள். கொக்கினுடைய வாயும்,குளச்சான கண்ணியுமாதல். "ல்யப்" இதிப்ரமம்வாரயதி-சேர்த்தேன்று இத்

ப்ராதுः பார்த்திவவ்யஞ்ஜநாங்விதௌ - ஶிரஸாதாரயிஷ்யாமி நமேஶாந்திர்ப்பவிஷ்யதி) - பிள்ளாய் ! உன்னுள்வேதுப்பு ஆறுவது எப்போது? என்றார்கள் : பெருமாளும் தமக்கு வகுத்தமுடி சூடி, நானும் எனக்கு வகுத்தமுடி சூடின அன்று என்றானிறே. [நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து] - மயிர் கழுவிப் பூச்சூட இருப்பாரைப்போலே, இவரும் ஈறிலின்பத் திருவெள்ளத்திலே முழுகிப் பூச்சூட இருக்கிறார்காணும். "அப்படியே செய்கிறோம்" என்றான் ; அக்க்ரமம் பற்றாது. [ஒல்லை]-செய்து கோடு நின்று, "செய்கிறோம்" என்னவேணும். இப்படி த்வரிக்கவேண்டு மிடமுண்டோ? என்ன, [கைம்மாதுன்பங் கடிந்தபிரானே] - நீ த்வரித்துவந்து விழும்படி அறியாயோ.? "பரமாபதமாபந்ந:" (பரமாபதமாபந்ந:)-ஸர்வேஶ்வரன் தன்னைப்பேணுதே வந்து விழும்படியான ஆபத்தாயிற்று. "மநஸாசிந்தயந்" (மநஸாசிந்தயத்)-கூப்பீடோவிற்று. [கைம்மாதுன்பம்] - ஆனையும் தன்னளவிலேயிறே கோவுபடுவது. துதிக்கை முழுத்தின ஆபத்திறே. அப்படி உமக்கு ஆபத்து உண்டோ? என்ன; அங்கு முதலையொன்று, எனக்கு முதலை ஐந்து; அங்கு ஆயிரம் தேவஸம்வத்ஸரம், இங்கு அநாதிகாலம் ; அங்கு ஒருசிறுகுழி, இங்கு பிறவியென்னும் பெருங்கடல் ; அதுக்கு ஶரீரநாசம், எனக்கு ஆத்மநாசம் ; ஆனையின் காலையாயிற்று முதலைபற்றிற்று, இங்கு என்னுடைய நெஞ்சையாயிற்று அருவித்தின்றிடுகிறது ; ஆனல் அதுக்கும் இதுக்கு முள்ள வாசிபாராய். [பிரானே]-ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய துःகத்தைப் போக்கின இதுவும், "தமக்குப் பரிகரித்தது" என்றிருக்கிறார். அதுக்கு உதவினமையுண்டு, உமக்கேன்னென்ன,—[அம்மா] - அதுக்கும் எனக்கும் ஒவ்

---

ப்ர:—(கைம்மாதுன்பம்)—விஷ்ணுதர்மே அஷ்டஷஷ்டிதமே, "பரமாபதமாபந்நோ மநஸாசிந்தயத்தரிம் । ஸது நாகவர: ஶ்ரீமாந் நாராயணபராயண:॥"

---

யாதி. "நடத்து, செலுத்து" என்றாற்போலே யென்றபடி. அப்படி ப்ரார்த்தித்த பேருண்டோ? என்ன, யாவந்நசரண வித்யாதி. அயம்ஶ்லோக: அயோத்யாகாண்டே சித்ரகூடபரிஸரே ஶத்ருக்நம் ப்ரதி பரதேநோக்த:. இஶ்லோகதாத்பர்யம் - பிள்ளாய் இத்யாதி. இந்தஶ்லோகம் - ஸ்ரீ ஶத்ருக்நாழ்வானோடே சொன்னதாகிலும், ஸ்ரீ கௌஸல்யையார் முதலானாரோடும் சொல்ல யோக்யதையுண்டென்று கருத்து. பார்த்திவவ்யஞ்ஜநங்களாவன - சத்ரசாமராதிகளாதல், த்வஜாரவிந்தாங்குசாதி ரேகைகளாதல். பார்த்திவவ்யஞ்ஜநம் - ராஜசிஹ்நம். - வாயிழுவவ்யஞ்ஜநாநிதள என்கிற விசேஷண வித்தார்த்தம் - பெருமாளும் தமக்கு வகுத்த இத்யாதி. அபிஷேகாபாவே பார்த்திவவ்யஞ்ஜநாந்விதத்வமில்லையிறே யென்று கருத்து. "ஶிரஸாதாரயிஷ்யாமி" என்றதின் பாவம் - நானும் எனக்கு இத்யாதி. "பற்புத்தலைசேர்த்து" என்ற பதஸாமர்த்யத்துக்கு பாவம் - மயிர்கழுவி இத்யாதி. அக்க்ரமம் - அந்தக்ரமம். ஒல்லை - சீக்கிரமாக. இப்படித்வரிக்கவேண்டு மிதி-வசநம் [illegible] ஶௌஶிக்கம் [illegible]. பாய்மா - குதிரை. கைம்மா - ஆனை. கைம்மாவுக்குத் துன்பமுண்டோவென்ன, ப்ரமாணம் - பரமா பதம் இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுதர்மே அஷ்டஷஷ்டிதமே, "பரமாபதமாபந்நோ மநஸாசிந்தயத்தரிம் । ஸது நாகவர: ஶ்ரீமாந் நாராயணபராயண:". பரமாபதமாபந்ந: - பரமாபத்; தாம் பரமாபதம். ஆபத்தினுடைய பாரம்யத்தை கார்யமுகேந தர்ஶிப்பிக்கிறார் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஆக்ரோஶநுமர்ஜ: மநஸாசிந்தயத் இத்யுக்தா வஸிதரா - கூப்பீடோவிற்றிதி. ஒவிற்று - முடிந்தது. "கைம்மா" என்று - ஆனைக்கே ரூடியாய், தாத்பர்யம் - ஆனையும் இத்யாதி. அவயவார்த்தவிவக்ஷயா தாத்பர்யாந்தரம் - துதிக்கை இத்யாதி. இவ்வபதாநத்தைச் சொன்ன இவர்க்கு இத்தனையும் விவக்ஷிதமென்கிறார் - அப்படி உமக்கு இத்யாதி. ஐந்து - பஞ்சேந்த்ரியங்கள். அருவித்தின்றிடுகை - அத்யந்தம் பாதிக்கை. "பிரானே" என்கைக்கு - தமக்குச்செய்த உபகாரமேதென்ன, ஸ்ரீகஜேந்த்ரேத்யாதி. "அம்மாவடியேன்" இத்யத்ர வ்யாக்யாந ப்ரக்ரியயா கிஞ்சித் பௌநருக்த்யம் ஸ்ப்புரதிசேத், நீராரேன்ன இதி ஶங்காயா:, உத்தரஸ்ய சாயமர்த்த: - மதீயம்ஸ்வாமித்வம் ஸர்வவிஷயகம் பவதி, ஏகோப்யேவம்ப்ரார்த்தயதே; ஏவம்ப்ரார்த்தயிதாஸ்த்

வாதோ தேவரோட்டை ஸம்பந்தம், நீ ஸ்வாமியன்றே. நீரார் ? என்ன, [அடியேன்] - நான் சேஷபூதன். இருவருடைய ஸ்வரூபத்தையும்பற்றி "தவிரவொண்ணாது" என்றபேக்ஷிக்கிறீரோ ? என்ன, [வேண்டுவது] - ராகப்ராப்தம். இதுவாகில் வேண்டுவது, இது செய்கிறோம் ; இதுவும் இன்னுமேதுவும் வேணுமென்றான். [ஈதே] - "நின்செம்மாபாதபற்புத் தலைசேர்த்து" என்ற இதுவேயென்கிறார். (க)

## இரண்டாம் பாட்டு.

ஈதேயானுன்னைக் கோள்வதெஞ்ஞான்றும் என்
மைதோய்சோதி மணிவண்ணவெந்தாய்
எய்தாநின்கழல் யானெய்த ஞானக்
கைதா காலக்கழிவுசெய்யேலே.

**ஆ.**—(ஈதே.) எற்றைக்குமிதுவே நானுன்பக்கல் கொள்ளும் ப்ராப்யம். பக்தியோகத்தாலல்லது ஸித்திக்குமோ? என்னில்;—அந்த பக்தியோகந்தன்னையும் நீயே ஈண்டெனத் தந்தருளவேணு மென்கிறார்.

**ஒ.**—இரண்டாம்பாட்டில், "இப்புருஷார்த்தம் பெற்றேன்" என்று நான் தேறும்படி ஈண்டெனப் பண்ணியருளவேணு மென்கிறார்.

[ஈதேயானுன்னைக்கொள்வது] - பலகாலும் கேட்கிலும் நான் உன்னைக் கொள்வது இதுவே. [எஞ்ஞான்றும்] - இவ்வபேக்ஷை எத்தனை காலைக்கு நிற்குமென்னில்; - யாவதாத்மபாவி. [என் மைதோய் சோதி மணிவண்ணவெந்தாய்] - இங்ஙனேயிருக்கிற அடிமைச்சுவடு உமக்கு எங்ஙனே வந்ததென்னில்:-ஸ்ரமஹரமான உன் திருவழகை எனக்குக்காட்டி அவ்வழியே நீ என்னை அடிமை கொள்கையாலே. [எய்தா நின்கழல் யானெய்த ஞானக்கைதா] - பெறுதற்கு அரிதான திருவடிகளை நான் பெற்றேனென்னுமது அறியும்படி பண்ணவேணும். ஞானமென்று - பக்தியோகமுமாம். ஜ்ஞாநப்ரதாநம் அமிழ்ந்தினார்க்குக் கைகொடுத்தாற்போலேயிருத்தலால் [ஞானக்கைதா], என்கிறார். [காலக்கழிவுசெய்யேலே] - "செய்கிறோம்" என்னவொண்ணாது, செய்துகொடுநிற்கவேணும்.

**ப.**—அநந்தரம், இத்தலம்பந்த விஷயமான ஜ்ஞாநத்தைத் தந்தருளவேணு மென்கிறார்.

**என்** - எனக்கு இந்த ருசிஜநகமான, **மை** - கருமை, **தோய்** - செறிந்த, **சோதி** - ஒளியையுடைத்தான, **மணி** - மாணிக்கம்போன்ற, **வண்ணம்** - வடிவழகையுடைய, **எந்தாய்** - என் ஸ்வாமியே! **உன்னை** - உன்னை, **யான்** - நான், **எஞ்ஞான்றும்** - எக்காலத்திலும், **கொள்**

---

வம் க இதி சங்கார்த்தஃ. த்வத்ப்ராஸாதலப்த ஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநவாநஹ மித்யுத்தாஸ்யார்த்தஃ. தவிரவொண்ணாதென்று இதி கிர்ப்பந்தரூபதயேதியாவத். "நின்செம்மாபாதபற்புத் தலைசேர்த்து" என்கையாலே சேஷத்வமே புருஷார்த்தமென்றும், ஸ்வரூபத்தைப் பற்ற விக்ரஹமே உத்தேஸ்யமென்றும் தோற்றுகிறது. வேண்டுவது - வேண்டியிருப்பது ; அபேக்ஷிப்ப தென்றபடி. புருஷார்த்தித்ததன்றே - புருஷார்த்தமென்று கருத்து. எம்மாவீடு தொடங்கி, தலை - ஒல்லை - சேர்த்து; கைம்மாதுன்பம் கடிந்தபிரானே அம்மாவடியேன் வேண்டுவ தீதே யித்யட்வயஃ. (க)

வது - கொள்ளும் ப்ரயோஜநம், ஈதே - இதுவே; (ஏதென்னில்), எய்தா - பெறுதற்கரிய, நின் - உன், கழல் - திருவடிகளை, யான் - நான், எய்த - பெறுதற்கிடான, ஞானக்கை - தெளிவாகிற ஜ்ஞாநக்கையை, தா - தரவேணும், காலக்கழிவு - காலவிளம்பம், செய்யேல் - பண்ணாதேகொள். ஞானத்தை - கையென்றது, தமக்கு ஆலம்பநமாகையாலே.

இ.—இரண்டாம்பாட்டில், "இந்தப் புருஷார்த்தத்தைப் பெற்றேன்" என்று நான் தெளியும்படி பண்ணியருளவேணு மென்கிறார்.

[ஈதேயானுன்னைக்கொள்வது] - "இவரைப் பலகால் கேட்கவே தடுமாறி அகவாயிற் கிடந்தது தெரியும்" என்று திரியவும் கேட்க, [ஈதே.] இப்படி நிஶ்சயித்தது ஏதத்தைக் கொண் டென்ன, [யானுன்னை] - இரண்டு தர்மியையும் கொண்டறியுமித்தனை. இது நம்மை அர்த்திப் பாருமில்லை, அத்தாலே நாம் கொடுத்தறிவதுமில்லை, உம்முடைய பக்கலிலே கண்ட இத்தனை; இது உமக்கு எத்தனை நாளைக்கு நிற்குமென்ன, [என்ஞான்றும்] - யாவதாத்மபாவி நிற்கும். இவ்வடிமைச்சுவட்டில் ருசியைப்பிறப்பித்தார் ஆரென்ன, [என் மைதோய் சோதிமணிவண்ண வெந்தாய்] - உன்வடிவழகிறே ருசிஜநகம். கருமையோடேகூடின ஒளியையுடைய மணி போலே யிருக்கிற வடிவழகைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவனே. அபேக்ஷிதான் என் னென்ன, - [எய்தா நின்கழல் யானெய்த ஞானக்கைதா] - ஸ்வயத்நத்தாலே காண்பார்க்குக் கிட்ட வரிதான திருவடிகளை நீயே காட்டக் காண விருக்கிற நான் "பெற்றேன்" என்று தெளியும்படி பண்ணவேணும். [ஞானக்கைதா] - "மயர்வற மதிநலமருளப்பெற்ற போதே பெற்றிலீரோ" என்று நினைத்திருக்குமது போராது, "நானுன்னைப் பெற்றேன்" என் றிருக்கும்படி தெளிவா கிற கையைத் தரவேணும். ஞானமென்று - பக்தியாய், பக்தியாலே நம்மைப்பெறவேண்டாவோ வென்ன; - அத்தையும் நீயே தந்தருளவேணுமென்கிறு ரென்றுமாம். ஜ்ஞாநப்ரதாநம் அமிழ்ந்தி னார்க்குக் கைகொடுத்தாற்போலே யிருக்கையாலே [கைதாவென்கிறார்.] எம்பார்க்கு முதலியாண் டான் அருளிச்செய்த வார்த்தை—ஒருவன் கிணற்றிலே விழுந்தால் இருவராக வெடுக்கும். [காலக்கழிவுசெய்யேலே] "செய்கிறோம்" என்னவொண்ணாது, செய்துகொடு நிற்கவேணும்.

ஈடு.—இரண்டாம் பாட்டு. முதற்பாட்டில் - காயிகமான பேற்றை அபேக்ஷித்தார்; இதிலே - மாநஸமான பேற்றை அபேக்ஷிக்கிறார்.

கீழிற்பாட்டிலே "ஈதே" என்னச்செய்தேயும், "ஓரர்த்தத்தையே பலகால் கேட்ட வாறே மற்றொன்றிலே தடுமாறிச் செல்லவுங்கூடுமே, இதிலே நிலைநின்றமை யறியவேணும்" என்று, இதுவும் இன்னுமேதுவும் வேணும் என்றான் [ஈதேயென்கிறார்.] "நீரிதிலேநிலைநின்றீர்" என்னு மிடம் நாம் அறியும்படி யேன்? என்ன, [யானுன்னைக்கொள்வது] - இருவருடையவும் தர்மியே

---

இரண்டாம்பாட்டு - ஈதே இத்யாதி. முதற்பாட்டில் காயிகமான இத்யாதிக்கு - "தலைசேர்த்து," "ஞானக்கைதா" என்கிற பதங்களிலே நோக்கு.

"ஈதே" என்கிற புநருக்திக்கு ஹாவம் - கீழிற்பாட்டிலே இத்யாதி. இவ்விடத்திலே - ஶ்ருதிஸித்த மான நசிகேதன்கதையை அநுஸந்திப்பது. அதாவது - வரப்ரதாநார்த்தம் அதிகாரிசோதநத்துக்காக "ஸந்த்ருக்ஷி வெக்ஷிதம்" இதி அஸக்ருத்ஸப்ரச்சயமபி; நசிகேதாஶ்ச "ஊதுவெவோ வெக்ஷிதம், ஸந்த்ருக்ஷிவேஷவெ க்ஷிதம் ந" இத்யுவாசேதி நசிகேதஸ்கதா. "ஈதே" என்று - கீழ்ச்சொன்ன "நின் செம்மாபாதபற்புத் தலை சேர்த்து" என்றத்தைப் பற்றவாதல், வக்ஷ்யமாணமான "ஞானக்கைதா" என்றத்தைப் பற்றவாதல். இருவ ருடையவும் தர்மியே யென்றது - சேஷசேஷித்வ ரூபமே இதில் ப்ரமாண மென்றபடி. பூர்வவாக்யவிவரணம்-

இதில் ப்ரமாணம். ஸ்வாமியான உன்பக்கல் ஶேஷபூதனை நான் கொள்ளுமது இதுவே. நம்முடைய ஸ்வாமித்வமும் உம்முடைய ஶேஷத்வமும் கிடக்கச் செய்தேயன்றே நெடுநாள் இழந்து போந்தது, ஆனபின்பு நமக்கு அதிஶங்கை வர்த்தியாநின்றதுகாணும்; இது எத்தனை குளிக்கு நிற்கும்? என்ன, [எஞ்ஞான்றும்] - யாவதாத்மபாவி இதுவே எனக்கு வார்த்தை. "இதிலே நிலைநிற்கும் படி உம்மை இத்துஶ்ஶிக்ஷை பண்ணுவித்தாரார்" என்றான் ஈஶ்வரன்; இப்படி யார் கற்பித்தார்? மற்றுமுண்டோ? தேவர்வடிவழகிறே! [என்மைதோயித்யாதி] - மைதோய்ந்திருந்துள்ள தேஜஸ்ஸை யுடைத்தான மணியினுடைய நிறம்போன்ற திருநிறத்தைக் காட்டி என்னை அநந்யார்ஹனாக்கி உன் ஶேஷித்வத்தை அறிவித்தவனே! அழகிது, உமக்குச் செய்யவேண்டுவதுதா னேன்? என்ன, [எய்தாநின்கழல்யானெய்த] - ஸ்வயத்நத்தாலொருவர்க்கும் ப்ராபிக்க வொண்ணாத திருவடிகளை "உன்னாலே பேறு" என்றிருக்கிற நான் ப்ராபிக்கும்படி பண்ணு. அது நீர் மயர்வற மதிநலம்பெற்றவன்றே பெற்றிலீரோ?வென்ன, [ஞானக்கைதா]-இது நினைத்திருக்கு மளவு போராது, அது நான் 'பெற்றேன்" என்று தெளியும்படி பண்ணவேணும். அமிழ்ந்தினார்க்குக் கைகொடுத் தாற்போலே யிருக்கையாலே ஜ்ஞாநலாபம் - "ஞானமான கையைத்தா" என்கிறார். இங்கே, எம்பார்க்கு ஆண்டான் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. அதாவது - "ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால், எடுக்குமவர்களுக்கும் எளிதாய், ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது என்று. [ஞானக்கைதா]-அங்ஙனன்றிக்கே, அது பின்னை பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை யுடையார் பெறும் பேறன்றோ வென்ன,[ஞானக்கைதா] - அவற்றையும் தேவரே பிறப்பித்து, தேவர் திருவடிகளைப் பெறவேணு மென்னவுமாம். அப்படி செய்கிறோமென்ன, [காலக்கழிவுசெய்யேலே]. "ஒல்லை" என்றதுதானே யன்றோ எனக்கு எப்போதும் வார்த்தை. (உ)

---

**ஸ்வாமியான** *இத்யாதி. இவ்வாக்யம் - "அம்மாவடியேன்" என்றத்தைப்பற்ற. இது - "பாதபற்புத்தலை சேர்த்து" என்கிற இது.* **எத்தனைகுளிக்குநிற்கும்** *- எத்தனை ஸ்நாநத்துக்கு நிற்கும்? அங்காராதிகளின் வாஸனை நாலுமூன்று ஸ்நாநத்துக்கும் போகாது. தத்வத் எவ்வளவு பர்யந்தமிருக்கு மென்றபடி.* **யாவதாத்மபாவி** *- நித்யமாக.* **இதிலே** *- இந்த ப்ராப்யத்திலே.* **இதிலே யித்யாதி** *ஶங்கோத்தரங்கள் - உத்தரவாக்யாவதாரிகை.* **மைதோய்ந்திருந்துள்ள** *- கருமை செறிந்திருந்துள்ள. கருமைசெறிந்த ஒளியையுடைய மாணிக்கம் போன்ற வடிவையுடையவனே! இதிஸப்தார்த்த:.* **எய்தா** *- பெறுதற்கரிய.* **அது நீர்தீ**-*மயர்வற மதிநலம் பெற்றபோதே திருவடிகளை ப்ராபிக்கை ஸித்தமன்றோ; ஆகையாலே, பெற்றிலீரோவென்ன வென்றபடி.* **தெளியும்படி பண்ணவேணு மென்றது** *- மாநஸஸாக்ஷாத்காரம் போராது, ப்ரத்யக்ஷமாம்படி பண்ணவேணு மென்றபடி.* **அது**-*திருவடிகளை ப்ராபிக்கை. ஞாநம் தா என்னுதே, "ஞானக்கை தா" என்றதுக்கடி யேதென்ன,* **அமிழ்ந்தினார்க்கு** *இத்யாதி. ஜ்ஞாநலாபம் -* **அமிழ்ந்தினார்க்குக் கைகொடுத்தாற்போலே** *இத்யந்வய: ஞாநத்தைக் கையாகச் சொன்னதிலே ஐதிஹ்யம் -* **எம்பார்க்கு** *இத்யாதி. எம்பார், ஆண்டான் ஸ்ரீபாதத்தில்அவரை அறியாமல் பகவத்ஸம்பந்தம்பண்ணி, அவர் அறிந்தபின்பு பயப்பட, அப்போது ஆண்டான் அருளிச்செய்த வார்த்தை யென்றபடி. "ஞானக்கைதா" என்றதுக்கு இரண்டு பொருள்:—முந்தினது -* **நான்பெற்றேன் என்று தெளியும்படி பண்ணவேணு** *மென்றது, இரண்டாமர்த்தம் - பரமபக்த்யாதிகளையும் தத்கார்யபாவியான ஸாக்ஷாத்ஸாக்ஷாத்காரத்தையும் தரவேணுமென்று. இந்த இரண்டாமர்த்தத்தை அருளிச்செய்கிறார் -* **அங்ஙனன்றிக்கே யித்யாதி.** *முந்தின அர்த்தத்தில், "ஞானம்" என்கிறது - ப்ரத்யக்ஷரூபஜ்ஞாநம். த்விதீயார்த்தத்தில் - பக்திரூபஜ்ஞாநம். அர்த்தத்வயத்திலும் ஸங்கதிபேத மொழிய அர்த்தபேத மில்லை.* **காலக்கழிவு செய்யேலே** *- காலவிளம்பம் பண்ணாதேகொள். "கீழிற்பாட்டிலே ஈதே என்னச் செய்தேயும்" இத்யாதி பதஸங்கதி வாக்யத்துக்குச் சேர, "என்மைதோய்சோதி மணிவண்ணவெந்தாய் - எஞ்ஞான்றும் - யானுன்னைக்கொள்வது - ஈதே" என்ற இவ்வளவும் கீழிற்பாட்டுக்கு சேஷமாய், "எய்தாநின்கழல்" என்று தொடங்கி - இப்பாட்டுக்கு சேஷமாதல்; அன்றிக்கே, "என்மைதோய்சோதி" என்று தொடங்கி, எஞ்ஞான்றும் - யான் உன்னைக்கொள்வது ஈதே; "எய்தாநின்கழல்" என்று தொடங்கி - இப்பாட்டுக்கு சேஷமாக அந்வயமாதல். இதுவே முக்யம்.* (உ)

## மூன்றாம்பாட்டு.

செய்யேல்தீவினையென்று அருள்செய்யும் என்
கையார்சக்கரக் கண்ணபிரானே!
ஐயார்கண்டமடைக்கிலும் நின்கழல்
எய்யாதேத்த அருள்செய் எனக்கே.

ஆ.—(செய்யேல்.) உன்கையுந் திருவாழியுமாயிருக்கிற அழகைக் காட்டி வ்யதிரிக்த விஷயத்தில் ப்ராவண்யத்தைத் தவிர்த்து உன் திருவடிகளி லென்னை ப்ரவணனாக்கினவனே, உத்க்ராந்திதசையிலுங்கூட உன்திருவடிகளை நான் இளையாது ஏத்தும்படி பிரானே! க்ருபைபண்ணியருளவேணு மென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், உத்க்ரமணதசையான துர்க்கதியிலும் நான் இளையாதே உன் திருவடிகளை ஏத்தும்படி பண்ணியருளவேணு மென்கிறார்.

[செய்யேலென்று தொடங்கி]-கையும் திருவாழியுமா யிருக்கிற அழகைக்காட்டி எனக்குண்டான பாஹ்யவிஷய ப்ராவண்யத்தைத் தவிர்த்த மஹோபகாரகனான க்ருஷ்ணனே! [ஐயார் கண்டமடைக்கிலும்] - மிக்கஶ்லேஷ்மம் மிடற்றைக் கட்டிலும்.

ப.—அநந்தரம், அவ்வறிவுக்கிடாக ஆபத்தசையிலும் உன்னை ஸ்தோத்ரம் பண்ணும்படி பண்ணியருளவேணு மென்கிறார்.

தீவினை-(அக்ருத்யகரணாதிகளான) தீவினைகளை, செய்யேல்-செய்யாதேகொள், என்று - என்று, என் - என்பக்கலிலே, அருள் - க்ருபாகார்யமான நியமநத்தை, செய்யும் - பண்ணுகைக்கு உறுப்பாய், கை - திருக்கையோடு, ஆர் - பொருந்தின, சக்கரம் - திருவாழியையுடையனாய், கண்ணன் - க்ருஷ்ணனான ஸௌலப்யத்தாலே, பிரானே - உபகரித்தவனே, ஐ - ஐயாலே, ஆர் - நிறைந்த, கண்டம் - கண்டமானது, அடைக்கிலும் - உக்திஸாமர்த்யமில்லாதபடி நிர்விவரமாகிலும், நின் - விரோதிநிவர்த்தகனாய்ஸுலபனாய் ப்ராப்தனானஉன், கழல் - திருவடிகளை, எய்யாது - இளைப்பற்று, ஏத்த - ஏத்தும்படி, எனக்கே - எனக்கே அஸாதாரணமாக, அருள்செய் - க்ருபை பண்ணியருளவேணும். ஐ - ஶ்லேஷ்மா.

இ.—மூன்றாம்பாட்டில், காயிகமான அடிமையை வேண்டினார்-முதலிலே; அநந்தரம்-மாநஸமான அடிமையை வேண்டினார். இதில் - வாசிகமான அடிமையை வேண்டுகிறார்.

[செய்யேல் தீவினையென்று அருள் செய்யும்] - விஷயப்ராவண்யரூபமான துஷ்கர்மங்களைப் பண்ணாதே கொள்ளென்று ப்ரஸாதத்தைப்பண்ணும். விஷயப்ராவண்யத்தை மாற்றுவது ஶாஸ்த்ர ப்ரதாநாதிகளாலேயோ? என்னில், [என்கையார் சக்கரக்கண்ணபிரானே] - கையும் திருவாழியுமான அழகையும் ஸௌலப்யத்தையும் காட்டி பாஹ்யருசியைத் தவிர்த்த மஹோபகாரகனே. [ஐயார் கண்டமடைக்கிலும்] - ஐயாருகையாவது - ஶ்லேஷ்மம் செறிகை. அது மிடற்றைக்கட்டிலும் "கஃபவாதாவிலாதாயா:" என்கிறபடியே உத்க்ரமணதசையாய்ச் செல்லிலும். [நின்கழல் இத்யாதி] - உன்திருவடிகளை இளையாதே ஏத்தும்படி. து:கநிவ்ருத்தியே எனக்கு வேண்டுவது, உன்னை அநுபவிக்கவேணுமென்கை. இது ஒரு ஸுக்ருதபலமன்றோ? என்ன, [அருள்செய்] - "இவன் பெற்றிடுவான்" என்று இரங்கி யருளவேணும். இது

*ஸர்வர்க்கும் ப்ரயோஜநமாகாதோ ? என்ன, [எனக்கே] - எனக்கொருவனுக்கும் செய்தருள வேணும்.*

ஈடு.—மூன்ரும்பாட்டு. இதில் - வாசிகமான பேற்றை அபேக்ஷிக்கிருர்.

[செய்யேல் இத்யாதி] - "கையும் திருவாழியும் பொருந்தியிருக்கிற இருப்புக் கண்டாயே, நம் பவ்யதை கண்டாயே ; நம்மை அநுபவிக்கை அழகியதோ ? க்ஷுத்ரவிஷயங்களிலே ப்ரவணனுய் அநர்த்தப்படுகை அழகியதோ" என்று கையில் திருவாழியையும் பவ்யதையையும் காட்டியாயிற்று இவருடைய விஷய ப்ராவண்யத்தைத் தவிர்த்தது; ஶாஸ்த்ரப்ரதாநாதிகளாலன்று. [ஐயார் இத்யாதி] - "துஃகநிவ்ருத்திவேணும்" என்கிறேனல்லேன்; "***துர்க்கதாவபி***" (துர்க்கதாவபி) என்கிறபடியே, ஏதேனும் உத்க்ரமணஸமயத்திலும் உன் திருவடிகளை நான் இளையாதே ஏத்தும்படி பண்ணியருளவேணும். செறிந்த ஶ்லேஷ்மாவானது கண்டத்தை யடைக்கிலும் உன்னுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகளை நான் மாருதே ஏத்தவல்லேனும்படி பண்ணியருளவேணும். உத்க்ரமணதஶை பார்த்திருப்பர்காணும் கோழைப் பையலார் வந்து மிடறு பிடிக்க. நீர் சொல்லுகிற அது ஒரு ஸுக்ருதபலமன்றே வென்ன,-[அருள்செய்]-" இவன் பெற்றிடுவான்" என்று இரங்கியருளவேணும். இது பின்னை ? ஸர்வர்க்கும் ப்ரயோஜநமாகாதோ வென்ன, [எனக்கே] - எனக்கு ஒருவனுக்கும் செய்தருளவேணும். (௩)

---

***ப்ர.***—(*செய்யேல் தீவினை இத்யாதி*)—(*ஐயாரித்யாதி*)—*ஜிதந்தாயாம்*, "விஜ்ஞாநம் யதிதம் ப்ராப்தம் யதிதம் ஸ்தாநமர்ஜிதம் । ஜந்மாந்தரேபி மேதேவ மாபூத் தஸ்ய பரிக்ஷய: ॥ துர்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத: । யதி நாஶம் ந விந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா".

---

*மூன்ரும்பாட்டு* - **செய்யேல்** *இத்யாதி.* **வாசிகமான** பேற்றை *யென்றது* - "*ஏத்தவருள்செய்*" *என்றத்தைப் பற்ற.*

*பூர்வார்த்தத்துக்குத் தாத்பர்யம்* - **கையும் திருவாழியும்** *இத்யாதி.* "*என்கையார்சக்கரக்கண்ணபிரானுக்கொண்டு - தீவினை - செய்யேல் - என்றருள்செய்யும்*" *என்று அந்வயம்.* "*கையார்*" *என்றத்தைப் பற்ற* - **பொருந்தியிருக்கிறவிருப்பு** *என்றது.* **பவ்யதை** *யென்றது* - "*கண்ணபிரான்*" *என்றத்தைப் பற்ற.* "*தீவினை*" *என்கிறதுக்கு அர்த்தம்* - **விஷயப்ராவண்யத்தை** *யென்றது. இதுக்கு வ்யாவர்த்த்யம்* - **ஶாஸ்த்ர** *இத்யாதி.* "*ஐயார்*" *இத்யாதிக்கு பாவம்* - **துஃகநிவ்ருத்தி** *இத்யாதி.* "*துர்கதாவபிஜாதாயாம்த்வத்கதோமே மநோரத:। யதிநாஶம்நவிந்தேத தாவதாஸ்மிக்ருதீஸதா*" *இதி ஜிதந்தாயாம். ஏதத்பூர்வ* **ஶ்லோகம்** - *விஜ்ஞாநம்* **இத்யாதி.** **யதிதம்விஜ்ஞாநம் ப்ராப்தம்** - *யாதொருஇந்தஸ்வரூபஜ்ஞாநம் ப்ராப்தமாயிற்று.* **யதிதம்ஸ்தாநமர்ஜிதம்** - *யாதொரு இந்த அத்யவஸாயமானது ஆர்ஜிக்கப்பட்டது.* **தஸ்ய பரிக்ஷய:** - *அதினுடைய பரிக்ஷயமானது, ஜந்மாந்தரேபி மாபூத். ஸ்தாநமென்று* - *ஸ்திதியாய்,* **அதாவது** - *நிலைநிற்கையாய்,* "*நாடொறும் ஏகசிந்தையனுய்*" *என்கிறபடியே* **அத்யவஸாயத்தைச்** *சொல்லுகிறது.* "*ஐ*" *என்று* - **ஶ்லேஷ்மம்.** **ஆர்தல்** - *மிகுதி.* "**ஆர்ந்த - ஐ**" *என்று அந்வயித்து முந்தின அர்த்தம்.* **செறிந்த ஶ்லேஷ்மாவானது** *இத்யாதி* - "*எய்யாது*" *இளையாது.* *அத்தாலே* - *மாருதே என்றபடி.* *யத்வா,* "*ஐயார்*" *என்று* - *நித்தாயாம் பஹுவசநமாய், சேதநஸமாதியாக அர்த்தாந்தரம்* - **உத்க்ரமண** *இத்யாதி.* *இது-ரஸோக்தி.* **கோழை** - *ஶ்லேஷ்மம்; க்ஷுத்ரனிதி த்வநி:.* **கோழையென்று** - *க்ஷுத்ரனுக்கும் பேர்.* **ஸுக்ருதபலமன்றே** *வென்றது* - "*நாயந்து:கேஶவம்ஸ்தாதி நாயந்யோஸ்வர்யதிஷ்டஹு। நசைதாந்யந்யாநஹரிம் நாயந்யாவேதிரோயவம்*" *என்றத்தைப்பற்ற.* **பெற்றிடுவான்** - *அடையக்கடவன்.* **ஸர்வர்க்கும் ப்ரயோஜநமாகாதோ** - *எல்லார்க்கும் செய்யவேண்டி வாராதோ? வென்றபடி.* **எனக்கொருவனுக்கும்** - *உன் ஸந்நிதியிலே ப்ரார்த்தியாநிற்கிற எனக்கொருவனுக்கு மென்றபடி.* (௩)

## நான்காம்பாட்டு.

---

எனக்கேயாட்செய் எக்காலத்துமென்று என்
மனக்கேவந்து இடைவீடின்றிமன்னித்
தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே
எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே.

ஆ.—(எனக்கே.) தம்மை அடிமைசெய்வித்துக்கொள்ளும்படியை எம்பெருமானைக் கற்பிக்கிறார்.

ஸர்வகாலமும் எமக்கே அடிமைசெய் என்று திருவாயாலே அருளிச்செய்தருளி, ஒரு க்ஷணமாத்ரமொழியாமே என்னெஞ்சிலே புகுந்திருந்தருளி, தாம் சாத்தியருளும் சாத்து, சந்தநம், திருமாலை, திருப்பரிவட்டங்கள்போலே என்னைத் தனக்கே சேஷமாகக் கொள்ளுமிதுவே எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், உபநிஷத்குஹ்யமான பாரதந்த்ர்யமே எனக்குத் தந்தருள வேண்டுவதென்கிறார்.

[எனக்கேயென்று தொடங்கி] - எல்லாக்காலத்திலும் எனக்கே அடிமைசெய் என்று நான் புரிக்கும்படி அருளிச்செய்து என் ஹ்ருதயத்திலே வந்து நிரந்தரமாக இருந்தருளுவதும் செய்து. [தனக்கேயென்று தொடங்கி] - ஸ்ரக்சந்தநாதிகளைப்போலே தனக்கே சேஷமாக என்னைக் கொள்ளும் இது எனக்கு அஸாதாரணமாக க்ருஷ்ணனை நான் கொள்ளும் புருஷார்த்தம்.

ப.—அநந்தரம், காயிகமாயும், மாநஸமாயும், வாசிகமாயுமுள்ள பகவச்சேஷத்வத்தை - கீழ் மூன்றுபாட்டிலும் அநுஸந்தித்து, இதில் ப்ரதாநமான ததேகபாரதந்த்ர்யத்தை ப்ரயோஜநதயா நிஷ்கர்ஷிக்கிறார்.

எக்காலத்தும் - எல்லாக்காலத்திலும், எனக்கே - எனக்கே, ஆள் - அடிமை, செய் - செய், என்று - என்று அருளிச்செய்து, (அவ்வளவில் நில்லாதே), என் - என், மனக்கே - மநஸ்ஸுக்கே, வந்து - வந்து, இடைவீடு இன்றி - விச்சேதம் இல்லாதபடி, மன்னி - நிரந்தரவாஸம் பண்ணி, தனக்கே-(பிறர்க்குமன்றியே, எனக்குமன்றியே, எனக்கும் தனக்குங்கூடவுமன்றியே) தனக்கே, ஆக - பாரதந்த்ரனும்படி, எனை - என்னை, கொள்ளும் - அங்கீகரிக்கும், ஈதே - இதுவே, எனக்கே - எனக்கநுரூபமாக, கண்ணனை - க்ருஷ்ணனை, யான் - நான், கொள் - அபேக்ஷிக்கும், சிறப்பு - ப்ரயோஜநம். சிறப்பு - ப்ரயோஜநம்.

இ.— நாலாம்பாட்டில், மனோவாக்காயங்கள் ஸ்வரூபாநுகூலமாக தேவர்பக்கலிலே ப்ரவணமாம்படி பண்ணியருளவேணுமென்றார் - கீழ்மூன்று பாட்டாலே. அதுக்கடியான உபநிஷத்குஹ்யமான பாரதந்த்ர்யத்தை நிஷ்கர்ஷித்து அபேக்ஷிக்கிறார் இதில்.

[ஆட்செய்யென்று] - ஸ்வாதந்த்ர்யத்தை வ்யாவர்த்திக்கிறது.[எனக்காட்செய்என்று]- அப்ராப்தவிஷயங்களை வ்யாவர்த்திக்கிறது. [எனக்கே ஆட்செய்யென்று] - விஷயாந்தர வ்யாமிஶ்ரதையை வ்யாவர்த்திக்கிறது. [எக்காலத்தும்] - "ஒழிவில் காலமெல்லாம்" என்கிறபடியே நித்யமாகவேணும். [என்று] - "க்ரியதாமிதி மாம் வத" என்று ஏவிக்கொண்டு அருளவேணும். [என்மனக்கேவந்து] - தூரஸ்தனாகாதே என் ஹ்ருதயத்திலே புகுரவேணும். [இடை

வீடின்றி] - வேறு போக்கின்றியே நிரந்தரமாகவேணும். [மன்னி] - திருவுள்ளத்தில் அந்ய பரதையின்றிக்கே ஸ்தாவரப்ரதிஷ்டையாக வேணும். [தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே] - இருந்துகொள்ளும் காரியம் சொல்லுகிறது. ஶேஷஶேஷிகள் கலந்தால் ஶேஷபூதனுக்கும் வருவதொரு ரஸமுண்டிறே; அப்படியேயன்றியே நீ உகந்த அடிமை கொண்டருளவேணும். ஸ்ரக்சந்தநாதிகளைப்போலே மிக்க அம்சம் கழிக்கலாயிருக்கை. கீழ் - முன்னிலையாய்ப் போரச்செய்தே தனக்கேயென்கிறது - "முகத்தைப்பார்க்கில் நோக்கிலும் ஸ்மிதத்திலும் துவக்குண்டு அத்தாலே நிஷ்கர்ஷம் குலையும்" என்று கவிழ்ந்திருந்து கையோலை செய்துகொடுக்கிறார். எனக்கே ஆட்செய் என்கிறவிடம் - அந்யஶேஷத்வத்தைத் தவிர்க்கிறது. தனக்கேயாக என்கிறவிடம் - தன்னோடு தனக்குள்ள அந்வயத்தைத் தவிர்க்கிறது. [எனக்கே கண்ணனை யான்கொள்சிறப்பு] - எனக்கு அஸாதாரணமான சிறப்பு; ப்ராப்தனைப் பவ்யனானவனைக்கொள்ளும் சிறப்பு; ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான் கொள்ளும் சிறப்பு. சிறப்பாகிறது - ஏற்றம். அதாகிறது - புருஷார்த்தம். தனக்கே யென்கிறது - பாரதந்த்ர்யகாஷ்டை. எனக்கே யென்கிறது - புருஷார்த்தம்.

ஈடு.—நாலாம்பாட்டு. இத்திருவாய்மொழியில் இவர் நிஷ்கர்ஷித்த ப்ராப்யமாவது - ஸ்ரக்சந்தநாதிகளோபாதி தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே என்றிறே; இவ்விடத்திலே எம்பார் அருளிச்செய்யும்படி - "ஸர்வேஶ்வரன் த்ரிவிதசேதநரையும் ஸ்வரூபாநுரூபமாக அடிமைகொள்ளா நின்றான்; நாமும் இப்படி பெறுவோமே யென்று". முக்தரும், நித்யரும், தாங்களும் ஆநந்தித்து அவனையும் ஆநந்திப்பிப்பர்கள்; பத்தர் தாங்கள் ஆநந்தியாதே அவனை ஆநந்திப்பிப்பர்கள்; இன்புறும் இவ்விளையாட்டுடையானிறே. "மயர்வற மதிநல மருளப்பெற்றவர், 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே' என்று ப்ரார்த்திப்பானேன்? 'திருவுள்ளமானபடி செய்கிறான்' என்றிராதே" என்று பிள்ளைதிருநறையூரரையர் எம்பாரைக்கேட்க, "அது கேளீர்; முன்பு பிரிந்தன்று, பின்பு பிரிவுக்கு ப்ரஸங்கமுண்டாயன்று, இரண்டுமின்றியிருக்கத் திருமார்விலே யிருக்கச்செய்தே, 'அகலகில்லேன் அகலகில்லேன்' என்னப்பண்ணுகிறது விஷயஸ்வபாவமிறே; அப்படியே ப்ராப்யருசி

---

நாலாம்பாட்டு - எனக்கே இத்யாதி. இத்திருவாய்மொழிக்கு நிதாநம் இப்பாட்டென்னுமிடந்தோன்ற அருளிச்செய்கிறார் - இத்திருவாய்மொழியில் இத்யாதி. எனைக்கொள்ளுமீதே யென்றிறே - அத்தை இப்பாட்டிலே அருளிச்செய்கிறாரென்று கூட்டுவது. சேதநரான இவர், "ஸ்ரக்சந்தநாத்யசேதநங்களோபாதி விநியோகம் கொள்ளவேணும்" என்று உல்லோகமாக ப்ரார்த்திக்கக்கூடுமோ? என்ன, இவ்விடத்திலே இத்யாதி. யத்வா, இவர் ப்ரார்த்திக்கைக்கு அவன் ஸ்ரக்சந்தநாதிகளோபாதி அடிமைகொண்ட விடமுண்டோ? என்ன, இவ்விடத்திலே இத்யாதி என்னுதல். இவ்விடத்திலே - இப்படி கண்டவிடமுண்டோ வென்கிற சங்காஸ்பதமான இவ்விடத்திலே. ஸ்வரூபாநுரூபமாக - "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" இத்யேவம் ப்ரகாரேண. அயமர்த்த: - இவ்விடத்திலே, ஸர்வேஶ்வரன் த்ரிவிதசேதநரையும் ஸ்வபோக்த்ருத்வமின்றியிலே தனக்கே உறுப்பாம்படி ஸ்வரூபாநுரூபமாக அடிமைகொள்ளா நின்றானன்றோ; நாமும் அப்படியே ஸ்வரூபாநுரூபமான பேறு பெறுவோமே யென்றருளிச்செய்கிறாரென்று எம்பார் அருளிச்செய்யும்படி யிதி. த்ரிவிதசேதநரும் அத்தலைக்கு உறுப்பாம்படியை உபபாதிக்கிறார் - முக்தரும் இத்யாதி. அதாவது - முக்தரும் நித்யரும் "ஸுஹ்ருதம்" என்று அவனை யாநந்திப்பித்து, அவனுகந்தவழியாலே "ஸுஹ்ருதோऽஹம்" என்று தாங்களும் ஆநந்திப்பர்கள்; பத்தர், "ஸுஜேஜ்ஞாஜ்ஞ ... நீஶோ ..." இத்யாதிப்படியே தாங்கள் ஆநந்தியாதே அவனுக்கு லீலாவிஷயமாய்க்கொண்டு அவனை யாநந்திப்பிப்பர்களென்றபடி. பத்தர்க்கு ஸ்வத: ஆநந்தமில்லையாகில், பகவதாஶ்ரயண மெதுக்காக வென்னில்; "தாங்களும் அறிந்து பாரதந்த்ர்யாநுகுணமாக அடிமை செய்கைக்காகவேணும்" என்றருளிச்செய்வர். அப்படி பத்தசேதநர் அவனுக்காகத்தாவஹரா யிருப்பரோ என்ன, இன்புறும் இத்யாதி. மயர்வறமதிநலமருளப்பெற்றவர் மயர்வறமதிநலம் பெறுகையாலே ... ஜ்ஞாநமுடையவரென்றபடி. ப்ரவேஶத்திலே - "ஸ்வதந்த்ரனுகையாலே பலாந்தரங்களைக் கொடாமைக்காக ப்ரார்த்திக்கவேணும்" என்று அருளிச்செய்து, இங்கே "ப்ராப்யருசியாலே ப்ரார்த்

ப்ரார்த்திக்கப்பண்ணுகிறது '' என்று அருளிச்செய்தார். எம்மாவீட்டி லெம்மாவீடாய், வைஷ்ணவ ஸர்வஸ்வமுமாய், உபநிஷத்குஹ்யமுமாய், ஸர்வேஶ்வரன் பக்கலிலே அபேக்ஷித்துப் பெறுமதாய், இவ்வாத்மாவுக்கு வகுத்ததுமான பாரதந்த்ர்யத்தை அவன் பக்கலிலே அபேக்ஷிக்கிறார். முதலிலே " ஆட்செய் " என்னவேணும்; ஆட்செய்யென்று - ஸ்வாதந்த்ர்யத்தை வ்யாவர்த்திக்கிறது. அதில் "எனக்காட் செய்" என்னவேணும்; எனக்காட்செய் என்று - அப்ராப்தவிஷயங்களை வ்யாவர்த்திக்கிறது. எனக்கேயாட்செய் என்று - தனக்கு மெனக்கும் பொதுவான நிலையைத் தவிர்த்து, "எனக்கேயாட்செய்" என்னவேணும். இதுதான் ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி நிற்கவேணும்; "க்ரியதாமிதி மாம் வத" என்கிறபடியே, " இன்னத்தைச் செய் " என்று ஏவிக்கொள்ளவேணும்; இப்படி ஒரு வார்த்தை அருளிச்செய்து நெடுங்கைநீட்டாக இருக்கவொண்ணாது, என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுரவேணும்; புகுந்தாலும் போக்குவரத்துண்டாகவொண்ணாது, ஸ்த்தாவரப்ரதிஷ்டையாக எழுந்தருளியிருக்கவேணும். இருந்து கொள்ளும் கார்யமென்? என்றால், [தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே] - ஸ்ரக்சந்தநாதிகளோபாதியாகக் கொள்ளவேணும். அது சூடுமவனுக்கும் பூசுமவனுக்கு முறப்பாய் மிகுதிகழித்துப்போகடு மித்தனையிறே. ஒருமிதுநமாய்ப் பரிமாறநின்றால் பிறக்கும் இனிமையும் இரண்டு தலைக்கும் ஒத்திருக்குமிறே, அங்ஙன் என்னுடைய ப்ரீதிக்கு நான் அந்வயித்தவனாக வொண்ணாது. "நின்" என்றும், " அம்மா " என்றும் - முன்னிலையாக ஸம்போதித்துக்கொண்டு போரா நிற்கச்செய்தே, இங்குப் படர்க்கையாகச் சொல்லுவானேன்? என்னில்; ''ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணுகிற ஸமயத்திலே திருமுகத்தைப் பார்க்கில் வ்யவஸாயங் குலையும்'' என்று, கவிழ்ந்திருந்து கையோலைசெய்து கொடுக்கிறார். [எனக்கே கண்ணனை] - " தனக்கேயாக " என்றபின்புத்தை, எனக்கேயிறே. புருஷார்த்தமாகைக்காகச் சொல்லுகிறார். ஒருசேதநனிறே அபேக்ஷிப்பான். நீர் அபேக்ஷிக்கிற இது செய்வோமாகப் பார்த்

---

திக்கிறார்" என்கையாலே - ப்ரார்த்தனைக்கு இதுவும் ஒரு ஹேதுவென்று கண்டுகொள்வது. இத்திருவாய்மொழிக்கு நிதாநமான பாட்டாகையாலே ஏதத்ப்ரதிபாத்யார்த்த வைபவத்தை அருளிச்செய்கிறார் - எம்மாவீட்டில் இத்யாதி. ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு ப்ராப்யநிஷ்கர்ஷபரமான எம்மாவீடு பத்துப்பாட்டும் ஸாரமாயிருக்கும், அதிலும் இது நிதாநமான பாட்டாகையாலே அதிஸாரதமமா யிருக்குமென்றபடி. வைஷ்ணவாதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதம் இந்தப்பாட்டின் அர்த்தாநுஸந்தாநமிதி தர்ஶயதி - வைஷ்ணவ ஸர்வஸ்வமுமாயிதி. ஏதஸ்யார்த்தஸ்ய மூலப்ரமாணம் கிமித்யபேக்ஷாயாமாஹ - உபநிஷத்குஹ்யமுமாயிதி; கடவல்யுபநிஷத்வஸித்தமான த்வயத்தில் நமஃபதம் இங்கு விவக்ஷிதம். "ஊாயாவாவஸ தநே மதெ ஜ" என்று முண்டிறே. ஸ்வரூபாநுரூப புருஷார்த்தத்வம் தர்ஶயதி - ஸர்வேஶ்வரன் பக்கலிலே யித்யாதி. ஏதேந விசேஷணத்வயேந - ராகப்ராப்தத்வம், ஸ்வரூபப்ராப்தத்வம் சோச்யதே. "ஆட்செய், எனக்காட்செய், எனக்கேயாட்செய்" என்று மூன்றுவகையாகப் பதத்தைப் பிரித்து, மூன்றுக்கும் வ்யாவர்த்த்யம் அருளிச்செய்கிறார் - முதலிலே யென்றுதொடங்கி அஞ்சு வாக்யத்தாலே. " எக்காலத்தும் " என்றதுக்கு பாவம் - இதுதான் இத்யாதி. " என்று " என்றதுக்கு ஹாவம் - க்ரியதாம் இத்யாதி. மேலுக்கு அவதாரிகை - இப்படி இத்யாதி. நெடுங்கை நீட்டாக - அதிதூரமாக. மனக்கே - மனஸ்ஸிலே. " இடைவீடு " என்றதுக்கு பாவம் - புகுந்தாலும் இத்யாதி. " மன்னி " என்றதுக்கு ஹாவம் - ஸ்தாவர இத்யாதி. " தனக்கே " என்ற ஏவகாரார்த்தம் - ஸ்ரக்சந்தந இத்யாதி. அது பரார்த்தமா யிருக்குமோ? என்ன, அது சூடுமவனுக்கும் இத்யாதி. சேஷவஸ்துவுக்கு ஸ்வார்த்ததா ப்ரஸக்தியுண்டோ வென்ன, ஒருமிதுநமாய் இத்யாதி. முன்னிலையாய் - அபரோக்ஷத்வேந. "தனக்கே" என்று படர்க்கையாக வென்றபடி. படர்க்கையாக - பரோக்ஷமாக. திருமுகத்தைப்பார்க்கில் வ்யவஸாயம் குலைகையாவது - நோக்கும் ஸ்மிதமும் சுழியாறுபடுத்தி ஸ்வரூபத்தை மறக்கும்படியாயிருக்கை. கையோலைசெய்து - நிஷ்கர்ஷித்து. " தனக்கேயாக " என்ற அநந்தரம், "எனக்கே" என்று - ஸ்வார்த்ததை தோற்றச் சொல்லுகை வ்யாஹதமன்றோ? என்ன; கீழ் நிஷ்கர்ஷித்ததுக்கு அநுகுணமாக இதுக்கு அர்த்தம் சொல்லிக்கொள்வதென்கிறார் - தனக்கேயாக இத்யாதி. இப்படியாகிலும் சொல்லவேணுமோவென்ன, புருஷார்த்த இத்யாதி. புருஷார்த்தமாகில் "எனக்கு" என்னவேணுமோ? என்ன,

தால் எல்லார்க்கும் செய்யவேணுங்காணு மென்ன, [யான்கோள்] - ஸ்வரூபஜ்ஞாநத்தை நீ பிறப்பிக்க, அத்தாலே ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான் ஒருவனும் பெறும்படி பண்ணவேணும். உமக்கும் எப்போதும் நம்மாற்செய்யப்போகாதேன்ன, [சிறப்பே] - பலகால் வேண்டா, ஒருகால் அமையும்; அதுதன்னிலும், திருவாசலைத் திருக்காப்புக்கோண்டு ஒருவர் அறியாதபடி சிறப்பாகச் செய்யவும் அமையும். சிறப்பாகிறது - ஏற்றம். அதாவது - புருஷார்த்தம். ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தைக் கோண்டருளவேணு மென்றபடி. சிறப்பாவது - முக்தியும், ஸம்பத்தும், நன்றியும். இவற்றில், நான் உன்பக்கல் கோள்ளும் மோக்ஷம் உனக்கேயாக எனைக்கோள்ளுமதுவே. உன் பக்கல் நான் கோள்ளும் ஸம்பத்தேன்னவுமாம். நன்றி யேன்னவுமாம். (௪)

## ஐந்தாம்பாட்டு.

சிறப்பில்வீடு சுவர்க்கநரகம்
இறப்பிலேய்துக வெய்தற்க யானும்
பிறப்பில்பல் பிறவிப்பெருமானை
மறப்போன்றின்றி யென்றுமகிழ்வேனே.

ஆ.—(சிறப்பில்.) தேஹமே ஆத்மாவாகலாம், தேஹாதிரிக்தமாய் நித்யஸித்த ஜ்ஞாநகுணமான அஹமர்த்தமே ஆத்மாவாகலாம், அதில் ஓராதரமில்லை; கர்மநிபந்தநமான ஜந்மாஹிதனுய்வைத்து ஆஸ்ரிதபரித்ராணார்த்தமாக தேவமநுஷ்யாதிரூபேண வந்து பிறந்தருளும் ஸ்வபாவனுயிருந்த எம்பெருமானுடைய ஸர்வ திவ்யாவதாரங்களையும் ஸர்வ திவ்யசேஷ்டிதங்களையும் ஸர்வ கல்யாணகுணங்களையும் மறவாதே என்றும் அநுபவிக்கப் பெறவேணு மென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தேஹமே ஆத்மாவாகவுமாம்; தேஹாதிரிக்தனுயிருப்பானொருவன் ஆத்மாவாகவுமாம்; அவ்விடத்தில் ஆதரமில்லை; ஆஸ்ரிதார்த்தமான அநேகாவதாரங்களில் ஒன்று ஒழியாமே யநுபவிக்கவேணு மென்கிறார்.

[சிறப்பிலென்று தொடங்கி] - ஶரீரவிஶ்லேஷம் பிறந்தால் ஸாதகைகதானமான மோக்ஷம் ஸ்வர்க்கம் நரகம் இவற்றைப்பெறவுமாம் தவிரவுமாம். [யானும்] - நானும் அத்தனையும் பெற்றேனுய்விடுவதுகாண் என்று கருத்து. [பிறப்பிலென்று தொடங்கி] - கர்மவஶ்யமான பிறவியின்றிக்கே யிருக்கச்செய்தே ஸம்ஸாரிகள் பக்கலுண்டான க்ருபாதிசயத்தாலே அஸங்க்யாவதாரங்களைப் பண்ணியருளும் ஸர்வேஶ்வரனை ஒன்றும் மறவாதே ப்ரீதிபூர்வகமாக அநுபவிக்கவேணும்.

---

ஒருசேதநன் இத்யாதி. ஆக, "எனக்கே" என்றது - உனக்கே உறுப்பான எனக்கென்றபடி. ஸ்வரூபஜ்ஞாநம் இத்யாதி-அல்லாதார்க்கு யதார்த்ரூஸஜ்ஞாநமில்லாமையாலே அதிப்ரஸங்க சங்கையில்லை யென்றபடி. ஒருகால விசேஷத்திலே யேற்றமாகச் செய்யுமதிறே - சிறப்பு; அத்தைப்பற்ற, பலகால் இத்யாதி. பலகால் வேண்டா இத்யாரப்ய, அதாவது புருஷார்த்தமித்யந்தம் சிறப்பு-மோக்ஷ இத்யஸ்மிந்நர்த்தே சலதி. "கண்ணனை, யான்" என்ற ஏகவசநங்களுக்கு ஹாவம்-அதுதன்னிலும் இத்யாதி. புருஷார்த்தமென்றதும், முக்தியென்றதும் - ஏகார்த்தம். ப்ரகரணாநுகுணமான தாத்பர்யம்- ஸ்வரூபாநுரூபமான இத்யாதி. இவற்றில் - இம்மூன்றிலும் வைத்துக் கொண்டு. ஆக, "சிறப்பு" என்றதுக்கு மூன்றர்த்தம். எல்லாவற்றுக்கும் பலிதார்த்தமொன்று. நன்றி - நன்மை. எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பு-எனக்கேயாட்செய் என்றதொடங்கி, எனைக்கொள்ளுமீதே யித்யந்வயः. மனக்கேயேன்றது - மனத்தே என்றபடி. இப்படி அருளிச்செய்தது காலடியும் சேருகைக்காக. (௪)

ப.—அநந்தரம், இப்பாரதந்த்ர்யப்ரகாசகனன ஈஶ்வரனை மறவாதொழிகையாகிற உகப்பைப் பெறவேணு மென்கிறார்.

இறப்பில் - இஶ்ஶரீரத்தை விட்டவளவிலே, சிறப்பில் - ஆநந்தமாகிற நன்மையிலே யான, வீடு - மோக்ஷம், சுவர்க்கம் - (ஸுகாபாஸமான) ஸ்வர்க்கம், நரகம் - (து:கைகதாநமான) நரகமாகிற இவற்றை, எய்துக - தேஹாத்பானய்க்கொண்டு போய்க் கிட்டவுமாம்; எய்தற்க - (தேஹம் தானென்றாய் இவற்றைக்) கிட்டாதே முடிந்துவிடவுமாம்; பிறப்பு - தனக்குப்பிறவிக்கு ஹேது, இல்-இன்றியே யிருக்கச்செய்தே, பல்-பஹுதாவாக, பிறவி - பிறக்கக்கடவனை, பெருமானை - ஸர்வேஶ்வரனை, ஒன்று - இவ்வவதாரத்தாலே ஆஶ்ரிதரை நித்யபாதந்த்ரராக்கின குணசேஷ்டிதங்களொன்றையும், மறப்பின்றி-மறவாதே, என்றும்-என்றும், மகிழ்வேன்-(அவிஸ்மரணத்தால்வந்த) ஆநந்தத்தை யுடையேனாகவேணும். கீழ்ப்பாட்டும் இப்பாட்டும் - முன்னிலை யன்றியே ஸ்வகதாநுஸந்தாநமாயிருக்கிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், உமக்கு ஸ்வரூபமெது? ஸ்வரூபாநுரூபமாயிறே புருஷார்த்தம் இருப்பதென்ன; நான் ஆராகிறேன், நானுயிற்றவஸ்து அத்தலைக்கே யாவதுவே எனக்கு வேண்டுவ தென்கிறார்.

[சிறப்பில்வீடு] - ஸுகைகதாநமான மோக்ஷம். [சுவர்க்கம்] - பரிமித ஸுகமான ஸ்வர்க்கம். [நரகம்] - நிஷ்க்ருஷ்ட து:கமேயான நரகம். [இறப்பில்] - ஶரீரவிஶ்லேஷத்தில். [எய்துக] - ப்ராபிக்க. இத்தால் - தேஹாதி வ்யதிரிக்தமாக ஆத்மாவுமுண்டாய்ப் பரமபதாதிகளை யநுபவிக்கவுமாம். [எய்தற்க] - ப்ராபியாதொழிக. தேஹாதிகளே யாகவுமாம். இதில் ஒரு நிர்ப்பந்தமில்லை. [யானும்] - ஸ்வரூபநிர்ணயத்தில் நிர்ப்பந்தமின்றிக்கே "அத்தலைக்கேயாமதுவே பேறு" என்றிருக்கிற நானும்; ச-ஶப்தத்தால் - நானும் இத்தைப் பெற்றேனாய்விடுவதுகாணென்கிறார். [பிறப்பிலித்யாதி] - ஜந்மஹேதுவான கர்மஸம்பந்தமின்றிக்கே யிருக்க, அநுக்ரஹத்தாலே அஸங்க்யாவதாரங்களைப் பண்ணும் ஸர்வேஶ்வரனை. [மறப்பொன்றின்றி]- அவதாரங்கள், அவற்றிலுண்டான சேஷ்டிதங்கள், இவற்றில் ஒன்றும் மறவாதே. இத்தலையிலுள்ளவெல்லாம் மறக்கலாம், அத்தலையிலுள்ள ஒன்றும் நழுவவொண்ணாது. [என்றும் மகிழ்வேனே]- மகிழ்கையென்றும், அநுபவிக்கையென்றும் - பர்யாயம். ப்ரீதிபூர்வகமாக என்றும் அநுபவிக்கவேணும்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. கீழ் - மநோவாக்காயங்கள் மூன்றாலு முண்டான பேற்றை ஆசைப்பட்டு, இவைமூன்றாலு முண்டான அநுபவத்தில் உன்னுடைய ப்ரீதியிலே அந்தர்ப்பூதனாமிதுக்கு மேற்பட எனக்காயிருக்கு மாகாரத்தைத் தவிர்க்கவேணு மென்றார்; "இதுதான் ஸம்ஸாரிகள் பக்கல் பரிமாறுவதொன்றல்ல, இவர்தாம் தம்மை யாராகநினைத்து இந்தப்பேற்றை அபேக்ஷிக்கிறார் என்று ஆராய்ந்துபார்ப்போம்" என்று நீர்ஆராய்த்தான் நம்மை இப்படி அபேக்ஷிக்கிற தென்ன;

---

அஞ்சாம்பாட்டு - சிறப்பில் இத்யாதி. பூர்வார்த்தத்தைப்பற்ற விஸ்தரேண அவதாரிகை - கீழ்மனோவாக்காயங்கள் இத்யாதி. முதற்பாட்டிலே "பாதபற்புத்தலை சேர்த்து" என்கையாலே - காயிகம்; இரண்டாம்பாட்டில் "ஞானக்கைதா" என்கையாலே - மாநஸிகம். மூன்றாம்பாட்டில் "வத்தவருள்செய்" என்கையாலே - வாசிகம். க்ரமம் அவிவக்ஷிதம். "தனக்கேயாக" என்கையாலே - எனக்காயிருக்கும் இத்யாதி. இப்படி "ஸ்வர்க்காதிகளைக் கிட்டுவோம், கிட்டாதிருப்போம்" என்கைக்கு ப்ரஸங்கம் ஸம்பாதிக்கிறார் - இதுதான் இத்யாதி. நீர்ஆராய்த்தான்நம்மைஇப்படி அபேக்ஷிக்கிறதென்றது-"ஜ்ஞாதா ஹி நாநாஸம்ஸாரவ்யவஸ்யா । ஜ்ஞவத்ராரதஜ்ஞாநி வ்யவஸ்யா ஸ்வாயதே" என்று - ஆத்மாபிமாநாநுரூபமாயன்றோ புருஷார்த்தவ்யவஸ்த்தை யிருப்பதென்றத்தைப்பற்ற. "நீர் ஆராய்த்தான்" என்றதுக்கு பாவம் - நித்யஸூரிகளிலே ஒருவராகநினைத்தோ வென்று. நித்யஸூரிகளிலே ஒருவனாகவுமாம்,

"தேஹமே ஆத்மா" என்பார்; கேவலதேஹத்துக்கு இந்த்ரியமொழிய அநுபவ மில்லாமையாலே "இந்த்ரியங்களேகாண் ஆத்மா" என்பார்; அந்த இந்த்ரியங்களும் மநஸ்ஸஹகாரமில்லாதபோது பதார்த்தக்ரஹணம் பண்ணமாட்டாமையாலே "மநஸ்ஸேகாண் ஆத்மா" என்பார்; "அம்மநஸ்ஸு தனக்கும் ப்ராணங்கள் ஸஹகரிக்கவேண்டுகையாலே ப்ராணங்காண் ஆத்மா" என்பார்; "இவை யெல்லா முண்டானாலும் அத்யவஸாயம் வேணுமே, அதுக்குக் கருவியான புத்திதத்வமேகாண் ஆத்மா" என்பார்; "இவையித்தனைக்கும் அவ்வருகாய் ஜ்ஞாநகுணகமாய் ஜ்ஞாநஸ்வரூபமா யிருப்பதொன்று ஆத்மா" என்பாராகா நிற்பர்கள்; அதில் எனக்கொரு நிர்ப்பந்தமில்லை, ஏதேனு மாகவுண்டான வஸ்து தேவர்க்கு உறுப்பாமிதுவே வேண்டுவ தென்கிறார், "**வபுராதிஷு யோபி கோபி வா**" (வபுராதிஷுயோபிகோபிவா) என்றாற்போலே.

[சிறப்பில்வீடு] - நித்யஸம்ஸாரியாய்ப் போந்தவன் நித்யஸூரிகளுடைய அநுபவத்தைப் பெற்று அநுபவிக்கக்கடவதாகச் சொல்லுகிற மோக்ஷம், பரிமித ஸுகத்தை யுடைத்தான ஸ்வர்க்கம், நிஷ்க்ருஷ்டதுஃகமே யான நரகம்; இவற்றை ஶரீரவியோக ஸமயத்தில் ப்ராபிக்க, ப்ராபியாதொழிக. இதுக்குக் கருத்தேன்? என்னில்; - தேஹாதிரிக்தனா யிருப்பானொரு ஆத்மா உண்டாகவுமாம், தேஹமே ஆத்மாவாகவுமாம், இதில் நிர்ப்பந்தமில்லை யென்கை. தேஹாதிரிக்தமா யிருப்பதொரு வஸ்து உண்டாகிலிறே ஸ்வர்க்காத்யநுபவங்க ளுள்ளது, கேவலதேஹம் இங்கே நஶ்யமாகக் காணாநின்றோமிறே. [யானும்] - சமுச்சயத்தாலே - நான் இப்பேறித்தனையும் பெறுவதுகாணேனென்கிறார். ஸ்வரூபநிர்ணயத்தில் நிர்ப்பந்தமின்றிக்கே, "நான் ஆரேனுமாக அமையும்" என்று இருக்கிற நானும். [பிறப்பில் பல்பிறவிப்பெருமானை] - பிறக்கைக்கு ஹேதுவான கர்மமின்றிக்கே யிருக்கச்செய்தே, கர்மவஶ்யரும் பிறவாத ஜந்மங்களிலே பிறக்கவல்ல ஸர்வாதிகனை.

---

ப்ர :— (*சிறப்பிலித்யாதி*)—ஸ்லோகம், "வபுராதிஷு யோபிகோபிவா குணதோஸாநியதாதயாவிய: । ததஹம் தவ பாதபத்மயோ ரஹமத்யைவ மயாஸமர்ப்பித:".

---

*ஸம்ஸாரிசேதநரிலே ஒருவனாகவுமா மென்றதைச் சொல்லுகிறது - தேஹமே ஆத்மா இத்யாதியாலே. அதுக்குக் கருவியான புத்திதத்வம் ஆத்மா வென்றது- அத்யவஸாயத்துக்குக் காரணமான ஜ்ஞானம் ஆத்மாவென்றபடி. புத்தி தத்வம் - மஹத்தத்வ மென்னவுமாம். இதுக்கு ஸம்வாதம் - வபுராதிஷு இத்யாதி.*

*சிறப்பில்வீடு-சிறப்பிலேயானவீடு. அதாவது-சிறப்பையுடையவீடென்றபடி. சிறப்பு-அதிஶயம். வீட்டுக்கு அதிஶயமாவதேது? என்ன, நித்யஸம்ஸாரியாய் இத்யாதி. இறப்பு-சரீரவியோகம். "எய்துக, எய்தற்க" என்றால் - தேஹாதிரிக்தாத்மா உண்டாகவுமாம், இல்லையாகவுமா மென்கிற அர்த்தத்தைக் காட்டும்படி என்? என்ன; அதுக்கு உபபத்தியைக் காட்டுகிறார்-தேஹாதிரிக்தனும் இத்யாதி. அதாவது - தேஹாதிரிக்தமா யிருப்பதொரு வஸ்துவன்றோ சரீர வியோகத்திலே புண்யபாப பலமான மோக்ஷ ஸ்வர்க்க நரகங்களை ப்ராபிக்கிறது; "கேவலதேஹமே ஆத்மா" என்றிருந்தால், அது நஶ்யமாகாநிற்குமிறே, ஸ்வர்க்காதிகளை ப்ராபிக்கக்கூடாதே; ஆகையாலே, "எய்துக" என்கையாலே - தேஹாதிரிக்தனான ஆத்மாவைச் சொல்லிற்று. "எய்தற்க" என்கையாலே - தேஹமே ஆத்மா என்றத்தைச் சொல்லிற்றென்றபடி. சமுச்சயத்துக்கு இரண்டு பாவம். அதாவது - இப்படிப்பட்ட பலத்துக்கு அயோக்யனான நானு மென்னுதல்; யத்வா, ஸ்வரூபநிர்ணயத்தில் நிர்ப்பந்த மின்றிக்கே யிருக்கிற நானு மென்னுதல். இவ்வர்த்தத்வயத்தையும் க்ரமேண அருளிச்செய்கிறார் - சமுச்சயத்தாலே இத்யாதி வாக்யத்வயத்தாலே. முந்தினத்துக்கு - கைச்யத்திலே நோக்கு. த்விதீயத்துக்கு - பாரதந்த்ர்யத்திலே நோக்கு. பிறப்பில் - பிறக்கைக்கு ஹேதுவின்றிக்கே யிருக்கச்செய்தே. "பல்" என்றதுக்கு பாவம் - கர்மவஶ்யரும் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - அஜாயமாந இத்யாதி. மறப்பொன்றின்றி - ஒரு மறப்புமின்றிக்கே யிதி சப்தார்த்தம் ஸ்ம்ருதிநிதாய விஸ்ம்ருதிபேதஸ்ய விஷயபேதாதீநத்வாதாஹ - அவதாரங்களிலும் இத்யாதி. "ஒன்றின்றி" என்றதுக்கு பாவம் - இத்தலையில் இத்யாதி. இத்தலையிலுள்ள*

"ஊஜாயஊாநோவஹூ¬யாவிஜாயதெ" (அஜாயமாநோபஹூ¬தாவிஜாயதே) [மறப்பொன் றின்றி]-அவதாரங்களிலும் சேஷ்டிதங்களிலும் ஒரு மறப்பின்றிக்கே. [மறப்பொன்றின்றி]-இத்தலையி லுள்ளதெல்லாம்மறக்கலாம், அத்தலையிலுள்ளதொன்றும் நழுவவொண்ணுது. [என்றும்மகிழ்வேனே]- மகிழ்ச்சியென்றும், அநுபவமென்றும் - பர்யாயம். அநுபவிப்பே னென்கிருர். ஆக, இத்தாலே - ஸ்வரூபமும் வெளியிடுகிருர். பெருமானென்கையாலே - தம்முடைய ஶேஷத்வமும், மறப்பொன் றின்றி என்கையாலே - ஜ்ஞாத்ருத்வமும், என்று மென்கையாலே - நித்யத்வமும், மகிழ்வு என்கை யாலே - ஶோக்த்ருத்வமும். (ரு)

## ஆரும்பாட்டு.

மகிழ்கொள்தெய்வம் உலோகமலோகம்
மகிழ்கொள்சோதி மலர்ந்தவம்மானே
மகிழ்கொள்சிந்தை சொற்செய்கைகொண்டென்றும்
மகிழ்வுற்று உன்னைவணங்கவாராயே.

ஆ. (மகிழ்கொள்) பரமகாருண்யத்தாலே இஜ்ஜகத்தையெல்லாம் படைத்தருளின வனே! என்னுடைய ஸர்வகாணங்களாலும் ஸர்வகாலமும் த்வதநுபவைகஸ்வபாவனுய்க்கொண்டு உன்னை அநுபவிக்கும்படி வந்தருளவேணு மென்கிருர்.

---

ப்ர:—(பிறப்பில் பல்பிறவிப்பெருமான்)—உத்தரநாராயணெ, (கக) "ப்ரஜாபதி ஶ்சரதி மஹெ ஈஞ: ஊஜாயஊநொபஹூ¬யாவிஜாயதெ". "வஸவஷஸதி ஜ்ஞாநாநொகூ ஷ¬தராரூ¬ஜூஹ உத்ய்ாஶக்ருவஸிஹாரதி. விஷயஸ்ர்கிஹ¬ஙிகிவாகஜ்ஞாநதெளஷ்யக ஶக்நாம் ஊவதாரெண ஸௌஊஸ்யம் த்ருஷ¬ஸொஊம் த்ருதீயயா (ப்ரஜாபதிஶ்சரதி) யஃ ப்ரஜாபதிஃ-ப்ரஜாநாம் - ஊஸஆ்ாவ்ருத்தாநாம் ஸவெஷாம்பதிஃ-ஸ்வாமீ. ரக்ஷிதா; வாதெயக்ருதயஃ. (மஹெ) மஹ¬ந்தெ, ஸகஊ்ராணா நாம் ஹ¬ஙிஹ¬ந்தெவர ஜெவதெ. (ஈஞஃ) நிம¬ஙம்ஷரதி. ஊயவா, ஸவெஷ¬ ஹ¬ந்தெஷ¬ஞூதயாஈஞஃப்ரவிஶ்ய ஷ்ரியம¬ஷாயாம் யஶ்சரதி, ஸஃ (ஊஜாயஊநஃ) ஜநிஜராதி ஸகஊ¬ரிகடி¬ருஃ ஊகஉ வஶ்யா ஸெஷமெவ ஸாவஸாயாரணயாஜிவ்யாவஷஶக்திர¬ஙிவயா ப்ருக்ருத்யா(பஹூ¬ யா) பஹூ¬ப்ருகாரம். தெவதிர்யங்மநுஷ்யாவெ்ஷ¬ நாநாவியெஷ¬ ஹ¬ந்தஜாதெ ஷ¬ விவியம். (ஜாயதெ) யடாய்டாயஉரூராநிரயஉ வ்யஜிஶ்ஹவதி, தடாதடா. வஊக ஸ்யாவே ஜாதெள நாநாப்ருகாரம் ஜாயதெ" வஊவஸ்யாஶ்ரு¬ தெநாராயணயதிஷி வஜாவ்யாகதா.

---

தெல்லா மென்றது - தேஹாபிமாந ஸ்வாதந்த்ர்யாபிமாந ப்ரப்ருதயஃ. "மறப்பொன்றின்றி" என்றதுக்கு ப்ரதிகோடித்வேந, அநுபவரூபேண நினைப்பேன் என்னதே, "மகிழ்வேன்" என்பானென்? என்ன, மகிழ்ச்சி யென்றும் இத்யாதி. உக்தவிசேஷணங்களாலே ஜீவஸ்வரூபயாதாத்ம்யம் விதமாயிற்றென்கிருர் - ஆக இத் யாதி. உக்தார்த்தோபபாதகம் - பெருமான் இத்யாதி. "பெருமான்" என்று - அவனுடைய சேஷித்வம் சொன்ன போதே, தத்ப்ரதிகோடித்வேந சேஷத்வமு மென்றபடி. இத்தனையும் - த்ருதீயாக்ஷரவிதமிறே யென்றபடி. க்ரமேண அந்வயஃ. (ரு)

ஒ.—ஆரும்பாட்டில், தேவாதிபதார்த்தங்களைத் தனித்தனியே நியதஸ்வபாவங்களாம்படி ஸ்ருஷ்டித்தாற்போலே ப்ரீதியுக்தமான மனோவாக்காயங்களோடேகூட நானும் ப்ரீதியுக்தனாய்க்கொண்டு என்றும் உன்னை அநுபவிக்கும்படி பண்ணவேணு மென்கிறார்.

[மகிழ்கொள்] - ஆநந்தயுக்தம். [உலோகமலோகம்] - சேதநாசேதநங்கள். [சோதி] - சந்த்ர ஸூர்யாதிகள். [மலர்ந்த அம்மானே] - உண்டாக்கின ஸர்வேஶ்வரனே.

ப.—அநந்தரம், இந்த ஆந்தராநுபவமடியாக பாஹ்யாநுபவத்தை அபேக்ஷிக்கிறார்.

மகிழ்கொள் - ஸுகப்ரசுரமான, தெய்வம் - தேவதாவர்க்கம், உலோகம் - ஜ்ஞாநப்ரகாஶயுக்தமான மநுஷ்யவர்க்கம், அலோகம் - ப்ரகாஶரஹிதமான திர்யக்ஸ்த்தாவரங்கள், மகிழ்-தேஜஸ்விதையால் வந்த உகப்பை, கொள்-உடைத்தான, சோதி - ஜ்யோதிஃபதார்த்தங்களாய்க் கொண்டு, மலர்ந்த - "பஹுஸ்யாம்" என்கிற கணக்கிலே விஸ்த்ருதனான, அம்மானே - ஸ்வாமியானவனே! மகிழ்கொள் - உன்பக்கல் ஆபிமுக்யத்தாலே ப்ரீதியுக்தமான, சிந்தை - நினைவையும், சொல் - உக்தியையும், செய்கை - க்ரியையையும், கொண்டு - கொண்டு, என்றும் - ஸர்வகாலமும், மகிழ்வுற்று - ஆநந்தநிர்ப்பரனாய்க்கொண்டு, (நான்), உன்னை-(இக்காரணத்ரய வ்யாபாரத்தையுண்டாக்கித்தந்த) உன்னை, வணங்க - அநுபவிக்கும்படி, வாராய் - எழுந்தருளிவரவேணும். உலோகமலோகமென்று - சேதநாசேதநங்களாகவுமாம்.

இ.—ஆரும்பாட்டில்,தேவாதிபதார்த்தங்களைத் தனித்தனியே நியதஸ்வபாவங்களாம்படி பண்ணினாற்போலே, எனக்கும் உன்னை யநுபவிக்கையே ஸ்வபாவமாகப் பண்ணவேணு மென்கிறார். தேவாதி ஸர்வஸ்ருஷ்டியையும் பண்ணின நீ, ஸ்ருஷ்டிப்ரயோஜநமான உன்னுடைய அநுபவத்தை, மாநஸாநுபவமாத்ரமன்றிக்கே பாஹ்யஸம்ஶ்லேஷம் பண்ணும்படி எனக்குத் தரவேணுமென்கிறாராகவுமாம்.

[மகிழ்கொள் தெய்வம்] - மநுஷ்யாதிகளிற்காட்டில் போகஸம்ருத்தியாலே ப்ரீதியுக்தரான தேவர்கள். [உலோகம்] - ப்ரத்யக்ஷஸித்தமான அசித் அம்சம். லொக்யதஇதி-லொகஃ. [அலோகம்] - ப்ரத்யக்ஷத்தால் காணவொண்ணாத சேதநவஸ்து. [மகிழ்கொள்சோதி] - ப்ரகாஶகத்வாதிகளாலே ப்ரீதியுக்தரான சந்த்ராதித்யர்கள். [மலர்ந்தவம்மானே] - "பஹுஸ்யாம்" என்கிறபடியே ஸூக்ஷ்ம சிதசித் விஶிஷ்டனாய்க்கொண்டு விஸ்த்ருதனான ஸர்வேஶ்வரனே. [மகிழ்கொள்சிந்தை] - "நீ" என்றால் நெஞ்சு ப்ரீதியுக்தமாகவேணும். [சொல்] - அந்த ப்ரீதி வழிந்த சொல். [செய்கை] - ப்ரீதிகாரிதமான செயல். [என்றும் மகிழ்வுற்று] - ஸர்வகாலமும் நானும் ப்ரீதியுக்தனாய். [உன்னை வணங்கவாராய்] - ப்ராப்தனான உன்னை முறையிலே அநுபவிக்க வரவேணும்.

ஈடு.—ஆரும்பாட்டு. தேவாதிபதார்த்தங்களை உண்டாக்கினாற்போலே, என்னையும் உன்னை யநுபவிப்பேனாம்படியாகப் பண்ணவேணு மென்கிறாராதல். அன்றியே, தேவாதிபதார்த்தங்களுக்கு ஓரோஸ்வபாவம் நியதமாம்படி பண்ணினாற்போலே, எனக்கு உன்னை யநுபவிக்குமது நியதஸ்வபாவமாம்படி பண்ணியருளவேணு மென்கிறாராதல்.

[மகிழ்கோள்தேய்வம்] - போக்யபோகோபகரண போகஸ்த்தாநங்களாலே மநுஷ்யரிற்காட்டில் ஆநந்தப்ரசுரராயிருந்துள்ள தேவர்கள். [உலோகம்] - லோக்யத இதி - லோகஃ என்கிற

ஆரும்பாட்டு - **மகிழ்கோள்** இத்யாதி. மூந்தின அவதாரிகை - "மலர்ந்த" என்றதைப்பற்ற. இரண்டாவது - "மகிழ்கொள்" என்ற விசேஷணத்தைப்பற்ற. ஓரோஸ்வபாவ மென்றது - ஆநந்தித்வேந்த்ரிய ஜ்ஞாத்ருத்வ ஜடத்வாதிகள்.

படியே, சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமான அசித்து. [அலோகம்] - இவற்றை க்ரஹிக்கும் ஸாதநங்களால் க்ரஹிக்கப்படாதே ஶாஸ்த்ரைக ஸமதிகம்யமான சித்வஸ்து. [மகிழ்கொள்சோதி] - தாஹகமான தேஜஃபதார்த்தம். சந்த்ரஸூர்யர்களென்னவுமாம். இவற்றை யுண்டாக்கின ஸர்வேஶ்வரனே. "வஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிறபடியே தன்விகாஸமாகையாலே [மலர்ந்தவென்கிறார்.] சிதசித்விசிஷ்டப்ரஹ்மமே காரணமுமாய் கார்யமுமாகக்கடவதிறே. நீர் சொன்னவையெல்லாம் செய்தமை யுண்டு, உமக்கு இப்போது செய்யவேண்டுவது தானென்னென்ன, [மகிழ்கோள் இத்யாதி] - என்னுடைய ஹ்ருதயம் உன்னை யநுபவித்து மகிழ்ச்சியை யுடைத்தாம்படி பண்ணவேணும்; என்னுடைய வாக் வ்யவஹாரமும் அப்படியேயாகப்பண்ணவேணும்; என்னுடைய வ்யாபாரமும் ப்ரீதிபுரஸ்ஸரமாகப்பண்ணும் கைங்கர்யமாகவேணும், நானும் தனியே யநுபவித்து ப்ரீதியையுடையேனும்படி பண்ணவேணும், என்றும் இப்படி நான் உன்னை யநுபவிக்கும்படி வரவேணும். (௬)

---

## ஏழாம்பாட்டு.

---

வாராய்உன்திருப்பாதமலர்க்கீழ்
பேராதே யான்வந்தடையும்படி
தாராதாய் உன்னையென்னுள்வைப்பிலென்றும்
ஆராதாய் எனக்கேன்று மேக்காலே.

ஆ.—(வாராய்.) உன்னுடைய நிரவதிகபோக்யதையை எனக்குக் காட்டி வைத்து உன்னை புஜிக்கத் தாராதிருக்கிற நீ, ஸர்வகாலமும், உன் திருப்பாத மலர்க்கீழ் பேராதே யான் வந்தடையும்படி, பிரானே! வாரா யென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், தம்முடைய அபிநிவேஶத்தின் மிகுதியாலே எல்லாக்காலமும் என்னை அடிமை கொள்ளலாம்படி வரவேணு மென்கிறார்.

[உன்னென்று தொடங்கி] - உன் திருவடிக்கீழ் நிரந்தர கைங்கர்யத்தை எனக்குத் தாராதே யிருந்துவைத்து மறக்கவொண்ணாதபடி உன்னை என்னுள்ளே நிரந்தரமாகக் காட்டுகிறவனே.

---

அல்லாதார்க்கும் மகிழ்ச்சியுண்டாயிருக்க, இவர்களை "மகிழ்ச்சியையுடையவர்கள்" என்பானென்? என்ன, போக்ய இத்யாதி. மகிழ்கோள் - ஆகர்ஷத்தையுடைய. அக்நிக்கு மகிழ்ச்சியாவது - தாஹகத்வம். தாஹகத்வஸ்யாக்கோஶந்த ஹேதுத்வாதிதி பாவ: சந்த்ரஸூர்யர்களுக்கு மகிழ்ச்சி - ப்ரகாஶகத்வம். "மலர்ந்த" என்றதுக்கு பாவம் - வஹுஸ்யாம் இத்யாதி. ப்ரஹ்மவிகாஸ ஏவ ஹிம் ஜகதித்யத்ராஹ - சிதசித்விஶிஷ்ட இத்யாதி. சிதசித்விசிஷ்டபதேந - ப்ரஹ்ம ஸ்வரூபவிகார: கிங்கர்யாதிதி ஶங்காபரிஹ்ருதா. "மகிழ்கொள் - சிந்தை, மகிழ்கொள் - சொல், மகிழ்கொள் - செய்கை" என்றபடி. முடியானேயில் காணங்களையுடையராகையாலே "இவையெல்லாம் மகிழ்ச்சி யுடைத்தாம்படி பண்ணவேணும்" என்னக் குறையில்லை. இத்தால் தாத்பர்யம் - ப்ரீதிபூர்வகமாக நான் நினைக்கைக்காகவும் சொல்லுகைக்காகவும் செய்கைக்காகவு மென்றபடி. முதல் மூன்றுபாட்டிலேயும் - காணத்ரயங்களாலும் அபேக்ஷித்த பேற்றை, "மகிழ்கொள்" என்று ப்ரீதிபூர்வகமாகவேணு மென்னுமதுவும், தாமும் அநுபவித்து மகிழவேணுமென்னுமதுவும் இப்பாட்டுக்கு விசேஷம். கீழிற்பாட்டில், இப்பாட்டுக்கு விசேஷம் - காணத்ரயங்களோடே தாமும் அநுபவிக்கை. மகிழ்கொள்தெய்வ மித்யாரப்ய, சோதியாய்க்கொண்டு மலர்ந்தவம்மானே மகிழ்கொள் சிந்தை சொற்செய்கைகொண்டு என்றும் நானும் மகிழ்வுற்று உன்னை வணங்குவாரா யித்யந்வய: (௬)

ப.—அநந்தரம், ஆந்தராநுபவம் ஆராமையாலே ஸவிஷாதமாக பாஹ்யாநுபவாபேக்ஷை பண்ணுகிறார்.

உன்னை - (நித்யாநுபாவ்யனான) உன்னை, என்னுள் - என்னெஞ்சுக்குள்ளே, என்றும் - நிரந்தரமாக, வைப்பில் - வைக்குமிடத்தில், எனக்கு ஆராதாய் - "அமையும்" என்னாதபடி எனக்கு அத்ருப்திகரனாய், என்றும் - எல்லாநாளிலும், எக்கால் - எல்லாப்போதிலும், உன் - (ப்ராப்தனான) உன்னுடைய, திரு - ஶ்லாக்யமாய், மலர் - போக்யமான, பாதம் - திருவடிகளிலே, கீழ் - பாதந்த்ரனாய்க்கொண்டு, போராதே - விஶ்லேஷ ரஹிதனாம்படி, யான் - நான், வந்து - வந்து, அடையும்படி - கிட்டுகைக்கு, தாராதாய் - அவகாசந்தாராதவனே! உன்திருப்பாதமலர்க்கீழ் போராதே யான் வந்தடையும்படி - நான் அப்படி கிட்டும்படி, வாராய் - வந்தருளவேணும்.

இ.—ஏழாம்பாட்டில், "வாராய்" என்றபோதே வரக்காணாமையாலே விஷண்ணராய், பின்னையும் அபிநிவேஶத்தாலே நான் உன்னைக் கிட்டும்படி வாரா யென்கிறார்.

[வாராய்] - வரவேணும். [உன்திருப்பாதமலர்க்கீழ்] - ப்ராப்தமுமாய்ப் பூஜ்யமுமாய் போக்யமுமான திருவடிகளின்கீழே. [போராதே] - இடைவிடாதே. [யான்] - ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான். [வந்தடையும்படி] - வந்து அடிமைசெய்யும்படி. "தாராதாய்" என்கைக்கும், கீழ் "வாராய்" என்கைக்கும் போது நடுவுசொன்னவிடம். அந்யபரோக்தியிலே - ப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறார். [தாராதாய்] - உன்னைத் தருகிறிலை. "வாராத" இன்னாப்பாலே இத்தை நிரூபகமாகச் சொல்லுகிறார். [உன்னையித்யாதி] - இது பெறுதொழிந்தால் அகவாய் பெரியதிருநாளாய்ச் செல்லவேணுமோ? கிட்டாவிட்டால் மறந்துபிழைக்கலாகாதோ? நிரதிஶய போக்யனான உன்னை பாஹ்யஸம்ஶ்லேஷம் பண்ணாதபோது தரிக்கமாட்டாத என்னுள்ளே நிரந்தரமாக ப்ரகாஶிப்பிக்கிறவனே. [எனக்கென்று மெக்காலே] - எனக்கு எல்லாக்காலத்திலும், எல்லாவவஸ்தையிலும். எனக்கென்று மெக்காலமும் - உன் திருப்பாதமலர்க்கீழ்போராதேயான் வந்தடையும்படி - வாராய்.

ஈடு.—ஏழாம்பாட்டு. தம்முடைய அபிநிவேஶத்தாலே, எல்லாக்காலமும் என்னை அடிமைகொள்ள வரவேணு மேன்கிறார்.

உன்னுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகளின்கீழே புநராவ்ருத்தியில்லாத பேற்றை நான் பெறும்படி உன்னை எனக்குத் தாராதே யிருக்கிறவனே! வாராத இன்னாப்பாலே, தாராதாய் என்று - இத்தை அவனுக்கு நிரூபகமாகச் சொல்லுகிறார். அந்யபரோக்தியிலே - ப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறார். தரநில்லையாவிட்டால் நெஞ்சிலே ப்ரகாசிக்கிறவத்தைத் தவிர்க்கவுமாமிறே. அகவாய் பேரியதிருநாளாய்ச் செல்லாநின்றது. நிரதிஶயபோக்யனான உன்னை பாஹ்யஸம்ஶ்லேஷம்

---

ஏழாம்பாட்டு.—வாராய் இத்யாதி. "நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்று வைத்து, இப்போது "வாராய்" என்கிறதென்? என்ன, தம்முடைய இத்யாதி. அபிநிவேசத்தாலே யென்றது - பாஹ்யஸம்ஶ்லேஷத்தை அபேக்ஷித்தென்றபடி.

சப்தார்த்தம் - உன்னுடைய இத்யாதி. புநராவ்ருத்தியில்லாத வென்றது - "அநாவ்ருத்திஶ்ஶப்தாத்" இத்யாதி ஸூத்ரத்தைப்பற்ற. "தாராதாய்" என்று நிரூபகமாகச் சொல்லும்படியென்? என்ன, வாராத இத்யாதி. இன்னாப்பு - வெறுப்பு. அந்யபரோக்தியிலே யிதி - தாராதேயிருக்கிறவனே யென்றது ஆராமைக்கு கர்மத்வேந "உன் திருப்பாதமலர்" என்கையாலே, அதாநாபிதாந பரோக்தியிலே - "உன்திருப்பாத மலர்க்கீழ் போராதே யான் வந்தடையும்படி" என்று ப்ராப்ய நிஷ்கர்ஷம்பண்ணுகிறாரென்றபடி. "உன்னையென்னுள்வைப்பிலென்று மாராதாய்" என்றதுக்குத் தாத்பர்யம் - தரநில்லையாவிட்டால் இத்யாதி. சப்தார்த்தம் - நிரதிசய இத்யாதி. வைப்பில் - வைக்குமிடத்தில். அமையாதபடி - த்ருப்தனாகாதபடி. தாராதாயென்னுதல் வாராயென்னுதல் என்றதுக்கு அர்த்தம் - "யான்வந்தடையும்படி" என்றதுக்கு - "தாரா

பண்ணுதபோது யரிக்கமாட்டாத என்னுடைய ஹ்ருதயத்திலே உன்னைக்கொண்டு புகுந்துவைக்கு மிடத்தில், ஒருநாளும் அமையாதபடி யிருக்கிறவனே. [எனக்கேன்றுமெக்காலே] - எனக்கு எல்லாக் காலத்திலும் எல்லாவவஸ்த்தையிலும், வாராய் - வரவேணும். உன்திருப்பாதமலர்க்கீழ் போாதே யான் வந்தடையும்படி தாராதா யென்னுதல், வாரா யென்னுதல். (எ)

## எட்டாம் பாட்டு.

எக்காலத்தேந்தையாய் என்னுள்மன்னில் மற்று
எக்காலத்திலும் யாதோன்றும்வேண்டேன்
மிக்கார் வேதவிமலர்விழுங்கும் என்
அக்காரக்கனியே! உன்னையானே.

*ஆ.*—(*எக்காலத்து.*) *எக்காலமும் என்னை எல்லாவடிமையுஞ் செய்வித்துக்கொண்டு என்னுள்ளே மன்னில் உன்னைப் பின்னை ஒருகாலமும் ஒன்றும் அபேக்ஷிக்கிறிலேன் என்று கொண்டு எம்பெருமானை அபேக்ஷித்து, பின்னையும் எம்பெருமானுக்கு அடிமை செய்கையிலுள்ள ஸ்ப்ருஹையாலே, எம்பெருமானை உள்ளபடி கண்டநுபவிக்கிற மஹாத்மாக்கள் ஆரோ வென்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், அத்யல்பகாலமாகிலும் மோஷியாய் என்னோடே ஸம்ஶ்லேஷிக்கப்பெறில் பின்னை ஒருகாலமும் அதுவும் வேண்டா என்று தமக்கு அடிமை செய்கையிலுள்ள விடாயாலே அருளிச்செய்கிறார்.*

*[எக்காலம்] - எல்லாக்காலமுமாகவுமாம். [மிக்காரென்று தொடங்கி]-விமலதயா வேத ப்ரதிபாத்யராய் ஜ்ஞாநபக்திகளால் மிக்கிருந்துள்ள அயர்வறுமமரர்களுக்கு நிரதிஶயபோக்யனை உன்னை எனக்குக் காட்டினவனே!*

*ப.—அநந்தரம், அத்யல்பகாலாநுபவம் பெறிலும் அதொழியவேறொன்றும்வேண்டா என்கிற அத்யபிநிவேஶத்தை அருளிச்செய்கிறார்.*

*மிக்கார் - அதிஶயிதஸ்வபாவராய், வேதம் - வைதிகாக்ரேஸராான, விமலர் - நிர்மல ரானவர்கள், விழுங்கும் - (தங்களாதராதிஶயத்தாலே) கபளீகரித்தநுபவிக்குங் கணக்கிலே, என் - எனக்கு, அக்காரம் - அக்காரந்தோய்ந்த, கனியே - கனிபோலே போக்யபூதனானவனே! எக் காலத்து - ஏதேனும் அல்பகாலத்திலேயாகிலும், எந்தையாய் - எனக்கு ஸ்வாமியான ஆகாரந் தோன்றும்படி, என்னுள் - என்நெஞ்சிலே, மன்னில் - ப்ரகாசிப்பித்துநிற்கப்பெறில், மற்று - இதொழிய, எக்காலத்திலும் - எல்லாக்காலத்திலும், யாது - ஏதேனும், ஒன்றும் - ஒன்றையும், உன்னை - உன்னை, யான் - நான், வேண்டேன் - அபேக்ஷியேன்.*

*இ.—எட்டாம்பாட்டில், தம்முடைய விடாயாலே அத்யல்பகாலமாகிலும் ஸம்ஶ்லேஷிக்கப்பெறில் பின்னையொருகாலமும் அதுவும் வேண்டாவென்று அருளிச்செய்கிறார்.*

---

*தாய்" என்றத்தோடே அந்வயமாதல், "வாராய்" என்றத்தோடே அந்வயமாத லென்று. முந்தின பக்ஷத்துக்கு - உன்திருப்பாதமலர்க்கீழ் ரித்யாரப்ய, எக்காலும் வாரா யித்யந்வய꞉. த்விதீயபக்ஷத்துக்கு - உன்னைத் தாராதாய் உன்னையென்னுள் வைப்பி லித்யாரப்ய, எக்காலு முன்திருப்பாதமலர்க்கீழ் போாதே யான் வந்தடையும்படி வாரா யென்றந்வயம். இப்பக்ஷத்தில், "உன்னை" என்றத்தை - "தாராதாய்" என்றதிலும் கூட்டுவது. (எ)*

"[எக்காலத்து]-எத்தனையேனும் கூறிடவொண்ணாத அத்யல்ப காலத்திலும். [எந்தையாய் என்னுள் மன்னில்] - வகுத்தஸ்வாமியாய் என்னோடு கலக்கப்பெறில், மற்றெக்காலத்திலும் இதுதன்னையும் வேண்டேனென்கிறார்" என்பார் ஆளவந்தார்; "எக்காலமென்றது - எல்லாக் காலத்திலு மென்றபடி. எக்காலத்திலும் ஈதொன்றுமொழிய மற்றொன்றும் வேண்டேனென்கிறார்" என்று எம்பெருமானார். இது ஆருடைய பரிமாற்றமென்ன, [மிக்கார்]-பகவத்ப்ரேமத்தால் அதிஶயித்தவர்கள். [வேதவிமலர்] - வேதத்திலே நிர்மலராக ப்ரஸித்தரானவர்கள்; "யத்ரருஷய: ப்ரதமஜாயேபுராணா:". [விழுங்கும்]-நித்யாநுபவம் பண்ணும். [அக்காரக்கனியே]-அவர்களுக்கு ஸர்வவித போக்யமும் தானே யென்னுமிடத்துக்கு உபலக்ஷணம். அக்காரம் போலேயும், கனிபோலேயு மிருக்கை. அக்காரம் வ்ருக்ஷஸ்தானேயாய் அது கோட்புக்குப் பலித்தாற்போலே யிருக்கை. அவர்களுக்கு நிரதிஶயபோக்யனான உன்னை எனக்குக் காட்டினவனே! [உன்னை] - ப்ராப்தனாய் போக்யனான உன்னை. [யான்] - உன்போக்யதையிலே சபலனான நான்.

ஈடு.—எட்டாம்பாட்டு. அத்யல்பகாலமாகிலும் ஶேஷியாய் என்னோடே ஸம்ஶ்லேஷிக்கப்பெறில், பின்னை யொருகாலமும் இதுவும்வேண்டா என்று, தமக்கு அடிமைசெய்கையிலுண்டான விடாயின்மிகுதியை அருளிச்செய்கிறார்.

[எக்காலம் இத்யாதி] - இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி - "இனிக்கூறிடவொண்ணாதபடி சிறுகூறான அத்யல்பகாலத்திலும், நீ ஸ்வாமியான முறை தப்பாதபடி என் ஹ்ருதயத்திலே வந்து புகுரப்பெறில், மற்றெக்காலத்திலும் - இதொழிந்த எல்லாக் காலத்திலும், யாதொன்றும் வேண்டேன், பின்னை இதுதானும் வேண்டேன். ஜ்வரஸந்நிபதிதர் 'ஒருகால் நாக்கு நனைக்க' என்னுமாபோலே 'க்ஷணகாலம் அநுபவிக்க அமையும்' என்னும்படியான விஷயமுண்டோ? வென்ன, [மிக்காரித்யாதி] - பகவதநுபவத்தில் மிக்காராய், 'யத்ரருஷய: ப்ரதமஜாயேபுராணா:' (யத்ரருஷய:ப்ரதமஜாயேபுராணா:) என்கிறபடியே வேதத்திலே விமலராக ப்ரதிபாதிக்கப்பட்டுள்ள நித்யஸூரிகள் அநுபவியாநின்றுள்ள அக்காரம்போலவும் கனிபோலவு முண்டான உன்னுடைய போக்யதாதிஶயத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தவனே! அக்காரம் - வ்ருக்ஷமாய்,

---

ப்ர:—(எக்காலத்தெந்தையித்யாதி)—(வேதவிமலர்)— யஜுஷி-(சஅ-ந) "தஸ்மிந் ஶுக்ரே லோகே (ஸ-சக) யத்ரருஷய: ப்ரதமஜாயேபுராணா:(ஸ-சஉ)"

[ய-வெ-கா-டு-ஷ-எ-கூ-எ] யதாகதாசிந் ஸந்நிபதிதாய வாரிணோவா ஸம்ஹ்ருதம் வக்ஷ்யேஷாவா வனதம் ஸயஸ்யவரிதே ஏயாதியோவஹாஷெ ஸயிம் ஜாதவேஷா: சுமாகநாயஜஷ்வதிஷெஷூ சத்ரு தம்ஸ்யஜாநீதவரயெவெஷ்ராநே"

---

எட்டாம்பாட்டு—எக்காலத்து இத்யாதி. ஆளவந்தார்நிர்வாஹத்திலே அவதாரிகை-அத்யல்பகாலம் இத்யாதி.

கூறிட - பாகிக்க. சிறுகூறான - அணுமாத்ரமான. ஸ்வாமியான முறையென்றது - "எந்தையாய்" என்றத்தைப் பற்ற. இதொழிந்த - இந்த அத்யல்பகாலமொழிந்த. "யாதொன்றும்" என்றதுக்கு பாவம் - பின்னை இதுதானும் இத்யாதி. பின்னை இதுதானும் வேண்டேன் - பின்னை இப்படிப்பட்ட அத்யல்பக்ஷணகாலாநுபவமும் வேண்டேன். அப்படி ஒருகால் அநுபவிப்பித்தால் பின்னையர்த்தியாரோ வென்ன, ஜ்வர இத்யாதி. யத்ரருஷய இத்யாதி - ஸூக்ஷ்மதர்ஶித்வவாசியான ருஷிஶப்தத்தாலே - பகவதநுபவாதிக்யம் சொல்லப்படுகிறது. புராணா: - பூர்வா:. பகவதநுபவேநித்யாபூர்வா:. ஏநேந - விமலத்வம்ஸித்தம். அக்காரம் - சர்க்கரைக்கட்டி.

அதுகோட்புக்குப் பழுத்தபழம்போலே நிரதிஶயபோக்யனானவனே! அக்காரக்கனி என்கிற இது - அவர்களுக்கு ஸர்வவிதபோக்யங்களும் தானே யென்னுமிடத்துக்கு உபலக்ஷணம். [உன்னை யானே] - இப்படி நிரதிஶயபோக்யனான உன்னை, உன்சுவடறிந்த நான், எக்காலத்தெந்தையா யென்னுள் மன்னில் மற்றெக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்." இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "இது பொருள் அழகியது; இவ்வாழ்வாருடைய ப்ரக்ருதிக்குச் சேராது, பெறிலும் பெறு தொழியிலும் சிறுகக்கோலமாட்டார்; இங்ஙனே யாகவேணும்" என்று அருளிச்செய்வர். "[எக்காலத்து இத்யாதி] - எல்லாக்காலத்திலும் எனக்கு ஶேஷியான நீ நான் ஶேஷமான முறை தப்பாமே வந்து என் ஹ்ருதயத்திலே புகுரப்பெறில், எக்காலத்திலும் - இக்காலமெல்லாவற்றிலும், [மற்று - யாதொன்றும் வேண்டேன்] - பின்னை இதொழிந்த மற்றொன்றையும் நான் வேண்டேன்." (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

யானேயென்னை யறியகிலாதே
யானேயென் தனதே யென்றிருந்தேன்
யானேநீ யென்னுடைமையும்நீயே
வானேயேத்தும் *எம்வானவரேறே.

ஆ.—(யானே.) நானும் என்னுடைமையும் உனக்கேயடிமையா யிருக்கச்செய்தே, இதுக்குமுன்பு போன காலமெல்லாம் "உனக்கடிமை" என்னுமிடத்தை யறியாதே, நானென்றும் என்னுடையதென்று முண்டான ஸ்வாதந்த்ர்யாபிமாநத்தாலே நஷ்டனானேனென்று தம்முடைய இழவை அநுஸந்தித்து அத்யந்தம் அவஸந்நராய், ஸ்வபாவதஸ்வாஸ்க்கலிதஜ்ஞாநராய் ஒருக்ஷண மாத்ரமும் எம்பெருமானை இழவாதே திருநாட்டிலே இருந்தநுபவிக்கிறவர்களாரோ வென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், நிரதிஶயபோக்யமான இவ்வடிமையை அநாதிகாலம் நான் இழந்தே னென்று ஶோகிக்கிறார்.

[யானே யென்று தொடங்கி] - நானும் என்னுடைமையும் உனக்கு ஶேஷமாயிருக்கச் செய்தே இதுக்குமுன்பு போனகாலமெல்லாம் உனக்கடிமை யென்னுமிடத்தை அறியாதே நானென்றும் என்னதென்றும் உண்டான விபரீதஜ்ஞாநத்தை யுடையேனாய்இருந்தேன். "யானே" என்கிறவிடத்தில் அவதாரணைக்குக் கருத்து - இவ்வஜ்ஞாநம் பகவத்க்ருதமன்று, என் தோஷத்தாலே வந்ததென்று. [வானேயென்று தொடங்கி] - அயர்வறுமமரர்கள் என்றும் அடிமைசெய்து

---

அக்காரத்தினுடைய கனியென்று அர்த்தாந்தரம் - அக்காரம் வ்ருக்ஷமாய் இத்யாதி. கோட்புக்கு - நாநமாக. முந்தின அர்த்தத்திலே அருளிச்செய்கிறார் - அக்காரக்கனியேயென்கிற இத்யாதி. சிறுகக்கோலுகை - அல்பமாக ஆசைப்படுகை. ஆளவந்தார் நிர்வாஹத்திலே, "எக்காலத்து" என்றது - அத்யல்பகாலத்திலு மென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, 'எக்காலத்து' என்றது - எல்லாக்காலத்திலும் என்றபடி. மற்று யாதொன்றும் வேண்டேன் - பகவத்வ்யதிரிக்த புருஷார்த்தங்களொன்றும் வேண்டேன். ஆளவந்தார் நிர்வாஹத்திலே, மிக்கார் வேதவிமலர் விழுங்கும் என் அக்காரக்கனியே - எக்காலத்தெந்தையா யென்னுள்மன்னில் மற்றெக்காலத்திலும் - யான் - உன்னை - யாதொன்றும் வேண்டே னித்யந்வயஃ. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, மிக்கார்வேத மித்யாரப்ய, கனியே - எக்காலத் தெந்தையா யென்னுள் மன்னில் - எக்காலத்திலும் - யான் - உன்னை - மற்று - யாதொன்றும் வேண்டே னித்யந்வயஃ. (அ)

---

* 'அவ்வானவரேறே' என்று உரையின்பாடம்.

வாழாநிற்க, நீயும் அவர்களை அடிமைகொண்டு செல்லாநிற்க. இஸ்ஸம்பத்தில் எங்களுக்கும் அவர்களோபாதி ப்ராப்தியுண்டாயிருக்க, இழப்பதே! என்று கருத்து.

ப.—அநந்தரம், ஸம்பந்தம் அப்ருதக்ஸித்தமாயிருக்க அநாத்யஜ்ஞாநத்தாலே அஹங்காரமமகாரதூஷிதனாய் இழந்தே னென்கிறார்.

யானே - நான்தானே, என்னை - என்விஷயத்திலே, அறியகிலாதே - யாதாத்ம்யஜ்ஞாநம் இல்லாமையாலே, யானே - நான்ஸ்வதந்த்ரனேயாகவும், என் தனதே - என்னையொழிந்தவை என்னுடைமையாகவும், என்று - அஹங்காரமமகாரங்களைப்பண்ணி, இருந்தேன் - முடிந்துபோகாதே ஆத்மநித்யத்வமும்அநர்த்தாவஹமாம்படியிருந்தேன்; வானே-இவ்வறிவுகேடின்றியிலே யாதாத்ம்யஜ்ஞாநம் நடையாடும் பரமபதமாக, ஏத்தும் - உன்னுடைய ஸம்பந்தத்தை யேத்தும்படி, அவ்வானவர் - அங்குள்ளார்க்கு, ஏறே - சேஷியான செருக்குத்தோன்ற இருக்குமவனே! (அர்த்தஸ்த்திதியுணர்ந்தால்), யான் - நான், நீயே - நீயேயென்னலாம்படி அப்ருதக்ஸித்தப்ரகாரபூதனாயிருப்பன், என் உடைமையும் - என்னுடைமையானவையும், நீயே - உனக்கு அப்படி ப்ரகாரமாய்க்கொண்டு நீயேயென்னலாம்படியா யிருக்கும்.

இ.—ஒன்பதாம்பாட்டில், இஸ்ஸம்பந்தத்தையும் உன் போக்யதையையும் அநாதிகாலம் இழந்தே னென்கிறார்.

[யானே] - அவனுக்குக் கலக்கமில்லாமையாலே தன்னைத் தருகைக்கு எதிர்சூழல்புக்குத் திரிய, நான் என்னை முடியச் சூழ்த்துக்கொண்டேன். [என்னையறியகிலாதே] - தேஹாத்மாபிமாநத்தாலே என்னை "அவனுக்கு ப்ரகாரம்" என்றறிந்திலேன். [யானேயென்தனதேயென்றிருந்தேன்] - "ஈஶ்வரோஹம்" என்றிருந்தேன். இவன் "நான்" என்றால் ஈஶ்வரனுக்கும் கிட்டவரிதாயிறே இருப்பது. [என்தனதேயென்றிருந்தேன்] - நானும் எனக்குரியனன்றிக்கேயிருக்க, எனக்கு ஒருடைமையு முண்டாக நினைத்திருந்தேன். தேஹத்தை ஆத்மாவாகவும், ஈஶ்வரவிபூதியை என்னுடைமையாகவும், இந்த விபரீதஜ்ஞாநமேயாயிருந்தேன். [இருந்தேன்]- இப்படி ஸ்வரூபம் நஶித்துக்கிடக்க, அநுதாபமின்றிக்கே க்ருதக்ருத்யனாயிருந்தேன். "ஸஹஸ்ரம் ஸஹஸ்ரம் ஊரிஷ்யாதி" என்றிருக்கை ப்ராப்தமாயிருக்க, ஒரு கார்யமில்லாதாரைப்போலே இருந்தேன். அர்த்ததத்வம் இங்ஙனன்றோ வென்ன, [யானேநீ] - நானும் உனக்கு ப்ரகாரமே, என்னுடைமையும் உனக்கு ப்ரகாரமே. இது எங்கேயுள்ள பரிமாற்ற மென்ன, [வானேயேத்தும்] - வானிலுள்ளார் முறையறிந் தேத்த, நீ ஶேஷியான உத்கர்ஷத்தோடே இருக்குமவனல்லையோ? "ஜுஷாஃணெ ரஸம்" போலே. எம்மென்று - தமக்கும் அவர்களோடே ப்ராப்தியுண்டாயிருக்கிறபடி.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. "மிக்கார் வேதவிமலர் விழுங்கும்" என்று நித்யஸூரிகள் நித்யாநுபவம் பண்ணுகிறபடியை அநுஸந்தித்தார்; அவர்களோடொத்த ப்ராப்தி தமக்கு உண்டாயிருக்க, இழந்திருக்கிறபடியையும் அநுஸந்தித்து அநர்த்தப்பட்டே னென்கிறார்.

[யானே] - என் இழவு பகவத்க்ருதமல்ல, அவன் எதிர்சூழல்புக்குத் திரியாநிற்க, நானே கிடீர் விநாஶத்தைச் சூழ்த்துக்கொண்டேனென்கிறார். [என்னையறியகிலாதே] - ராஜபுத்ரன் வேடன்

ஒன்பதாம்பாட்டு.—யானேயென்னை இத்யாதி. ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணுகிறவிடத்தில் "அஹங்காரமமகாரவஶ்யனாய்க் கெட்டுப்போனேன்" என்றருளிச்செய்கைக்கு ப்ரஸங்கமேதென்ன, மிக்கார்வேதம் இத்யாதி. ப்ராப்தி - ஶேஷத்வம்.

அவதாரணார்த்தம் - என்இழவு இத்யாதி. பகவத்க்ருதமல்லவிதி - "உத்தாவஶேவா[illegible]" , "[illegible]" இத்யாதிவத். சூழ்த்து - ஸம்பாதித்து. "யானேயென் தனதே"

கையிலே யகப்பட்டுத் தன்னை வேடனுக ப்ரதிபத்திபண்ணுமாபோலே, ஸர்வேஶ்வரனுக்கு ப்ரகார பூதனை என்னை யறியாதே. [யானேயென்தனதேயென்றிருந்தேன்]-"அவனும் அவனுடைமையும்" என்றிருக்கை தவிர்ந்து, நானும் என்னுடைமையு மென்று வகுத்துக்கொண்டு போந்தேன். [இருந் தேன்] - இப்படி நெடுநாள் போருகிறவிடத்தில் ஒருநாள்அநுதாபம் பிறக்கவுமாமிறே, அதின்றிக்கே க்ருதக்ருத்யனுய் நிர்ப்பரனுயிருந்தேன்; "தீவினையேன் வாளாவிருந்தேன்" என்னுமாபோலே - "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்கைக்கு ப்ராப்தியுண்டாயிருக்க, ஒருகார்யமில்லாதாரைப்போலே கையொழிந்திருந்தேன்; "முடிந்தேன்" என்றுற்போலே யிருக்கிற திறே; ஒருநாளை யிழவே போந்திருக்க, அநாதிகாலம் இழந்துபோந்தேன். அங்ஙனன்றே அர்த்ததத்வ மென்ன, [யானேநீ]-"அஹம் மநுரபவம் ஸூர்யஶ்ச" (அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச) என்று நிற்பர்களாயிற்று முக்தர், "மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம்" (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்)என்றுநிற்பர் ஸம்ஸாரத்தில் தெளிவுடையார்; "அஹம் ப்ரஹ்மாஸ்மி" (அஹம்ப்ரஹ்மாஸ்மி) "நான் ராஜபுத்ரன்"

---

ப்ர.—(யானேயென்னை யறியவித்யாதி)—(இருந்தேன்) — அயோத்யாகாண்டே, (கூக) "ஹவாஂஸ்த ஸஹவைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே। அஹம்ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ்ஸ்வபதஶ்ச தே॥உரு॥"

(யானேநீ)—ப்ருஹதாரண்யகே (க) ஆதர்வணப்ராஹ்மணே "ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத் ததாத்மாநமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத்தத்ஸர்வமபவத் தத்யோ யோ தேவாநாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ தத்பவத் ததர்ஷீணாம் ததா மநுஷ்யாணாம் தத்தைதத்பஶ்யந்ருஷிர்வாமதேவ: ப்ரதிபேதே அஹம் மநுரபவம் ஸூர்யஶ்சேதி ததிதமப்யேதர்ஹி ய ஏவம் வேதாஹம் ப்ரஹ்மாஸ்மீதி ஸ இதம் ஸர்வம் பவதி".

ப்ரயோஜநம் ததிஜ்ஞாநஸ்ய ஸர்வாத்மப்ராபதி [illegible] ஸ்த்ரி, "ஏகத்வ நிஷ்டா [illegible] ததேவ தத்ஸ்வம் யத்ஸர்வம் யத்ஸ்வம் ஸர்வம் தஸ்ய: ॥அச॥ ஸர்வமகாத நஸ்ய ஸர்வாத்மவேஷ்டித: । மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம் மயி ஸர்வம் ஸநாதநே॥அரு॥ அஹமேவாவ்யயோநந்த: பரமாத்மாத்மஸம்ஶ்ரய: । ப்ரஹ்மஸம்ஜ்ஞோஹமேவாக்ரே ததாந்தே ச பர: புமாந்॥அசா॥ (மத்தஸ்ஸர்வமித்யாதி) மத்தஸ்ஸர்வமிதி, நிமித்தமிவா. மத்தஸ்ஸர்வ-உபாதாநஹ வதி. அதஏவ மயி ஸர்வம். ஸர்வாத்மா:-ஸர்வாத்மாதவேந ப்ரவஸதி, (ஸர்வாத்மேதி) ஆத்மாநஸ்ய ஸர்வமதங்கமத: அயஜத்வாத்மா (ப்ரஹ்மஸம்ஜ்ஞாதி) ப்ரஹ்மாத்மகாத்மவேவ ப்ரஹ்மஸம்ஜ்ஞ:. அஹம் ஸ்ருஷ்டே: ப்ராக் அஹம் ப்ருதே".

---

என்கிற ஏவகாரார்த்தம் - அவனும் இத்யாதி. வகுத்து - விபஜித்து. "இருந்தேன்" என்றதுக்கு வாஸனை - இப்படி இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம்-தீவினையேன் இத்யாதி. பெரிய திருவந்தாதி(அஉ). துஷ்கர்மத் தைப்பண்ணின நான் வ்யர்த்தமேயிருந்துவிட்டேனென்று பாசுரார்த்தம். "வாளாவிருந்தேன்" என்றதுக்கு பாவம் - அஹம்ஸர்வம் இத்யாதி. "ஒழிந்தேன்" இத்யஸ்யபாவம் - முடிந்தேன் இத்யாதி. "கீழ்நாள்களெல் லாம்" இத்யஸ்யபாவமாஹ - ஒருநாளை இத்யாதி. அத்ர "யதாஹமேகம்" இத்யாத்யநுஸந்தேயம். "யானேநீ" என்கிற ஸாமாநாதிகரண்யம் - சரீராத்மபாவநிபந்தந மென்று திருவுள்ளம்பற்றி, இப்படி ஐக்ய மாகச் சொன்னபேருண்டோவென்ன, அஹம் மநுர்பவம் இத்யாதி. ப்ருஹதாரண்யகே சதுர்த்தேப்ராஹ்மணே, "தத்தைதத்பஶ்யந் ருஷிர்வாமதேவ: ப்ரதிபேதே அஹம் மநுரபவம் ஸூர்யஶ்சேதி"

என்னுமாபோலே, "நான் ப்ரஹ்மம்" என்னலாம்படியிறே ஸம்பந்த மிருக்கும்படி. "ஸ வாஸுதேவ:"(ஸவாஸுதேவ:) என்றதுவாஸுதேவ ஶரீரமென்றபடியிறே. [என் உடைமையும் நீயே]- "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்னுமாபோலே. இது எங்கே பரிமாறக் கண்டு சொல்லும் வார்த்தை? என்ன, நித்யஸூரிகளுடைய இப்படியன்றோ உன்னை யநுபவிப்பது. "மஞ்சா: க்ரோஶந்தி" (மஞ்சா:க்ரோஶந்தி) என்கிறபடியே [வானேயேத்துமென்

---

தத்ர த்விதீயேம்ஶே த்வாதஶே புவநகோஶாக்யாநஸ்ய ஸமாப்தாந்தகக்ரமேऽத்யாயே, "தஸ்மாந்ந விஜ்ஞாநம்ருதேऽஸ்தி கிஞ்சித் க்வசித் கதாசித் த்விஜ வஸ்துஜாதம் | விஜ்ஞாநமேகம் நிஜகர்மபேதவிபிந்நசித்தைர் பஹுதாऽப்யுபேதம் ||௪௩|| ஜ்ஞாநம் விஶுத்தம் விமலம் விஶோகமஶேஷலோபாதிநிரஸ்தஸங்கம் | ஏகம் ஸதைகம் பரம: பரேஶஸ் ஸ வாஸுதேவோ ந யதோऽந்யதஸ்தி ||௪௪|| ஸத்பாவ ஏவம் பவதோ மயோக்தோ ஜ்ஞாநம் யதா ஸத்யமஸத்யமந்யத் | ஏதத்து யத் ஸம்வ்யவஹாரபூதம் தத்ராபி சோக்தம் புவநாஶ்ரிதம் தே ||௪௫||" ஏவம் ஸதி கிம் வ்யதிரிக்தவஸ்துஸம்பாவநாபாதாநபிவ்யதிரிக்தமீநம் ஸததைகரூபமேவேத்யுக்திதஸ்ஸ்தி கிம், நந்வஸ்தித்வவிப்ராய: ||௪௩|| யஸ்மாதேவம், தஸ்மாத் ஜ்ஞாநஸ்வரூபாத் வ்யதிரிக்தவி வஸ்துகாதி தக்வசித்கதாசித் ஸம்பாவ்யம் நபவதீத்யாஹ (தஸ்மாந்நவிஜ்ஞாநமிதி) ஜ்ஞாத்ருத்வ ஸம்ஸ்த்ருஜ்ஞாநைகாகாரதயாதேவாதிதேஹப்ருத்யநீகஸ்வரூபோபவிதேவாதிஶரீரப்ரவேஶதேஹஸ்வகர்மவிபிந்நசித்தைர்பஹுதாப்யுபேதம் நாநாரூபேண பஹுப்ரகாரம் ஸம்பாவிதமிதி ததேவாநந்தஸ்வாநம் நாஸ்வரூபப்ரபுத்யமிதிஶாஹ (விஜ்ஞாநமேகமிதி) ||௪௩|| ஜ்ஞாத்ருஸ்வரூபம் தத்கர்மரஹிதம், ததேவ கேவலஸ்வரூபப்ருதிவ்யாதிரூபரஹிதம், ததஸ்ஸ்வ தத்வப்ரகாஶோககோபாதிருபாத்யஶேஷதோஷஸங்காஸங்கம், உபாயாயோபாயாநபூததயைகம், ததேவ ஸதைகரூபம், தத்வாஸுதேவஶரீரமிதி ததாத்மகம், ஸதாத்மகஸ்யாதிவ்யாவாதித்யாஹ(ஜ்ஞாநம் விஶுத்தமிதி) ||௪௪|| இதம் ஸ்வஸதைகரூபதயா ஸத்பாவஸ்ஸ்தித்வாவ்ய:, ஸதிதம் ஸ்வகர்மக்ஷணவரிணாமி ரூபேந ஸத்பாவாநாஶமநபூஜதி ஸத்பாவநாஸ்திஸ்வபாவியேய:, ஏவம்ரூபம் விதவிதாத்மகம் ஜகதாவாஸுதேவஶரீரரூபேந ததாத்மகமிதி ஜகத்ப்ரயாதாத்ம்யம் ஸ்வரூபமுக்தித்யாஹ

---

தமிதி ஸ்வே ப்ரதஷிப்தவாணம் வேதாஹம் ப்ருஹத்ஸீதி". ஏதஸ்-ப்ருஹ,வஶ்யு-வாஸுதேவ:-ஜிஷ்ஷ்: - அஹம் ஸநாதனம் ஸர்வபூதாத்மகம்-இதி ப்ருதிவ்யாதி. ப்ரயோகம்ஶே ஏகோந விம்ஶே ப்ரஹ்லாதவேதாஸ்துதௌ, "யத: ஸர்வம் யதஸ்ஸர்வம் யஸ்ஸர்வம் ஸர்வதஶ்ச ய: | ஸர்வ மகாதஞ்ஜதஸ்ய ஸ ஏவாஹமவஸ்தித: | மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம் மயி ஸர்வம் ஸநாதநே | அஹமேவாவ்யயோநந்த:" இத்யாதி. ஏவம்ப்ரயோக்தும் ஹேதுமாஹ - அஹம் ப்ருஹ்மாஸி இத்யாதி.
ஸம்பந்தம் - ப்ரகாரப்ரகாரிபாவ:, கார்யகாரணபாவஶ்ச. "ஸ வாஸுதேவ:" இதி-ஐக்யமேவஹ்ரயபிதீயத இத்யத்ராஹ-ஸவாஸுதேவ இத்யாதி. த்விதீயேம்ஶே த்வாதஶே,"ஜ்ஞாநம் விஶுத்தம் விமலம் விஶோக மஶேஷலோபாதிநிரஸ்தஸங்கம் | ஏகம் ஸதைகம் பரம: பரேஶஸ் ஸ வாஸுதேவோ

கிறது]. [எம்வானவரேறே] - அவர்கள் தங்கள் ஶேஷத்வாநுரூபமாக அடிமைசெய்யாநிற்க, இவனும் தன் ஶேஷித்வத்தால்வந்த உத்கர்ஷந்தோற்ற இருக்கும் இருப்பு. எம்என்று - எனக்கும் அவர்களோடொத்த ப்ராப்தியுண்டாயிருக்க, இழந்து அநர்த்தப்பட்டே னென்கிறார். (கூ)

---

## பத்தாம்பாட்டு.

---

ஏறேலேழும்வென்று ஏர்கொளிலங்கையை
நீறேசெய்த நெடுஞ்சுடர்ச்சோதி
தேறேலென்னை உன்பொன்னடிச்சேர்த்தொல்லை
வேறேபோக எஞ்ஞான்றும்விடலே.

ஆ.—(ஏறேல்.) இந்த ப்ராப்யத்தைப்பெறுகைக்கு ப்ரதிபந்தகங்களுளவேயென்னில்; அவற்றையெல்லாம், நப்பின்னைப் பிராட்டிக்கும், அசோகவநிகையில் பிராட்டிக்கும் உன்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்கு ப்ரதிபந்தகங்களை நீயே போக்கினாற்போலே போக்கியருளி, உன் திருவடிகளிலே என்னை ஈண்டெனச்சேர்த்தருளி, உன்திருவடிகளில் திவ்யரேகைபோலே பின்னையொரு காலமும் உன்னைப் பிரியாததொருபடிப் பண்ணியருளவேணும்; இப்படி இக்ஷணமே செய்தருளாவிடில் ஒன்றும் தரியே னென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், "இவன் தானே வந்து ஸ்வப்ராப்யத்தை ஸாதித்துக்கொள்ளுகிறானிறே" என்று கைவிடாதே, ப்ரதிபந்தகங்களை நீக்கி என்னை ஈண்டென உன்தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்டருளவேணு மென்கிறார்.

---

(ஸப்தாவஸவதி) ஈருஸதஸ்வஸத்திதி-"யடிவஸ்யணாவஸ்" ஐதிவ்ருக்ஷாஹவெஸ்ராவஸம் ஹாரஃ. (வாதக) ஜ்ஞாநெநகாகாரதயா ஸமீஶ்லஷமொவரவஸ்ரநிவஹெஷதெலாவிந்தி ப்ரஸஹாவநாஶ்ரிதம் ஷெவநெஷ்ராதிரநிவெண ஸம்ஸ்வஹாராஹ்ஹெஷம யஅதஷெத, தருஹெதஃ கஜெஷ்வெத்ரஙதிதராஹ (வாததயதிதி)॥சகூ॥" விஷ்ணுதாஜெயெஷ ரெவம் வ்யாவ்யாதம்.

ப்ர.—(என்னுடைமையும் நீயே)—மஹாஸாரதெ உத்ரொகவவணி யுதராஷ்டு வ்ருதிவிஷுரஃ, "ருயணவாயநாரஜ்நு ஸாயநூராஷாஸஸயாஸநதஃ। யதெஸயிரஷி யவெஸ்யெதஸ்யதஷநஶ॥௧॥"

---

நயதொநாஶஸ்" யவெஸ்த இத்யாதி - மஹாபாரதே உத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம்ப்ரதிவிதுரஃ, "ருயணவாயநாராஜநு ஸாயநூராஷாஸஸயாஸநதஃ। யதெஸயிரஷி யவெஸ்யெதஸ்ய தஷநம்". "வானேயேத்தும்" என்கிறதுக்கு - ஒருநாடாக ஏத்துகிற இத்யமுமர்த்தம் ஹ்ருதிகிதாயாஹ - நித்யஸூரிகள் இத்யாதி. "ஏத்தும்" என்கிற பதஸாமர்த்த்யத்தாலே, "வான்" என்கிறவிது - நித்யஸூரிகளைச் சொல்லுகிற தென்றபடி. "எம்" என்றது - ஏற்றுக்கு விசேஷணம். வானேயேத்தும் எம் வானவரேறே - யானே யென்னை யித்யாரப்யார்வயஃ. (கூ)

[ஏறேலென்று தொடங்கி] - நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு விக்நமான எருது ஏழையும் அடர்த்தருளி ஸ்ரீ ஜநகராஜன் திருமகளோட்டை ஸம்ச்லேஷத்துக்கு விக்நமாய் அதிஸம்ருத்தமான லங்கையை பஸ்மமாக்கின வீரஸ்ரீயாலே வந்த அத்யௌஜ்வல்யத்தை யுடையவனே! [தேறேல்] - தேறாதேகொள். 'தேறேன்' என்று பாடமானபோது - தரியேனென்கிறது. [என்னையென்று தொடங்கி] - என்னை உன் திருவடிகளிலே ஈண்டென சேர்த்தருளி ஒருநாளும் பிரியாதபடி பார்த்தருளவேணும்.

ப.—அநந்தரம், அந்த ஸம்பந்தங் குலையாதபடி என்னைக் கைவிடாதொழியவேணு மென்கிறார்.

ஏல் - என்று கொண்ட, ஏறு - ஏறு, ஏழும் - ஏழையும், வென்று - வென்று, ஏர் - அழகை, கொள் - உடைத்தான, இலங்கையை - லங்கையை, நீறேசெய்த - பஸ்மஸாத்கரித்தத்தாலே, நெடும் - மிக்க, சுடர் - தேஜஸ்ஸையுடையனை, சோதி - உஜ்ஜ்வலவிக்ரஹனே, என்னை - என்னை, தேறேல் - "எனக்கு நன்மையறிவன்" என்று விச்வஸியாதே, உன் - உன்னுடைய, பொன் - உஜ்ஜ்வலமான, அடி - திருவடிகளிலே, ஒல்லை - சடக்கென, சேர்த்து - சேர்த்து, வேறேபோக - விஷயாந்தரங்களை நினைத்து வேறு போகும்படி, எஞ்ஞான்றும் - எல்லாக்காலத்திலும், விடல் - விடாதொழியவேணும். விதிநிர்மிதமான இந்த அந்வயத்தைப் பாலநம்பண்ணி, விடாதொழிய வேணுமென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், என்னை விச்வஸியாதே ப்ரதிபந்தகங்களைப் போக்கி என்னை ஈண்டெனத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேணு மென்கிறார்.

[ஏறேலேழும்வென்று] - ஏறேழையும் நிரஸித்து. ஏல் - அசை. நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு ப்ரதிபந்தகமான ருஷபங்களேழையும் வென்றாய். [ஏர்கொளிலங்கையை நீறேசெய்த] - கட்டளைப்பட்டு அதிஸம்ருத்தமான லங்கையை பஸ்மஸாத்கரித்த. [நெடும்-சுடர்சோதி] - ராவணனை அழியச்செய்து வீரஸ்ரீயோடே நின்றபுகர். அவர்களுடைய விரோதிகளைப் போக்கினாற்போலே, என்னுடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கவேணும். [தேறேலென்னை] - என்பக்கல் வந்தால் அவ்வளவு போராது, என்கையிலே என்னைக் காட்டித்தரில் நான் அநர்த்தத்தை விளைவித்துக்கொள்வன். தேறேனென்று பாடமானபோது - தெளியேனென்னுதல், தரியேனென்னுதல். [என்னை இத்யாதி] - என்னை நான் இசைந்தபோதே சடக்கென உன் திருவடிகளிலே சேர்த்தருளி ஸர்வகாலமும் பிரியாதபடி பார்த்தருளவேணும்.

ஈடு.—பத்தாம்பாட்டு. "யானேயென்தனதே யென்றிருந்தேன்" என்று நீர் அநுதபிக்கும்படி பண்ணினோமாகில் உமக்குச் செய்யவேண்டுவதொன்றுண்டோ? நீர் இங்ஙனேகிடந்து படுகிற தேதுக்காக வென்ன; இதுக்காக வென்கிறார்.

[ஏறேலேழும்வென்று] - ஏறுகில் ஏழையும் வென்று. நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு ப்ரதிபந்தகமான ருஷபங்களேழையும் வென்று. [ஏர்கொளிலங்கையை]-

---

பத்தாம்பாட்டு-ஏறேல் இத்யாதி. யானே இத்யாதி-பூர்வவ்ருத்தத்தை அநுஸந்தித்து அநுதபிக்கும்படி பண்ணின இதுக்கு மேற்பட ஒரு பேறு உமக்குச் செய்யத்தக்கதென்னென்றபடி. நீரிங்ஙனே யிதி - "உன் திருப்பாத மலர்க்கீழ் போராதே யான் வந்தடையும்படி தாராதாய்" என்று நீர் இங்ஙனே படுகிற தெதுக்காக வென்றபடி. இதுக்காக வென்றது - "உன் பொன்னடி சேர்த்தொல்லை" என்றத்தைப்பற்ற.

"ஏல்" என்றது - பாதபூரணார்த்தம் அவ்யயம். ஏறுகிலென்றது - வார்த்தைப்பாடாய், ஏறேழையு மென்றபடி. "ஏர்" என்று - தர்ஸநீயதைக்கும், கட்டுடைமைக்கும் பேர். இரண்டர்த்தத்தையும் ஸமுச்சித்யாஹ-

தர்ஶநீயமாய்க் கட்டுடைத்தான லங்கையை. "அஹோ வீர்யமஹோ தைர்யம்" (அஹோவீர்யமஹோதைர்யம்) என்று திருவடி மதிக்கும்படியான லங்கையை. "பபூவ புத்திஸ்து ஹரீஶ்வரஸ்ய" (பபூவபுத்திஸ்துஹரீஶ்வரஸ்ய)-ராவணனும் ஸ்த்ரீகளுமாயிருக்கிற இருப்பைக் கண்டவாறே, தானுமோரு ஸமுதாயத்துக்குக் கடவனுகையாலே இங்ஙனேயிருப்பதொரு புத்தி பிறந்தது. "யதீத்ருஶீத்யாதி" (யதீத்ருஶீத்யாதி)-பையல், தானும் ஸ்த்ரீகளுமாயிருக்கிற இருப்பைப் பெருமாளும் பிராட்டியுமாயிருக்க ஸம்பவித்தாளுகில், இந்த ஐஸ்வர்யம் குலையாதிருக்க லாயிற்றுக்கிடீர். "இமா யதா ராக்ஷஸராஜபார்யா: ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே:" (இமாயதாராக்ஷஸராஜபார்யாஸ்ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே:) - 'சத்ருக்களுக்கும் நன்மைவேணும்' என்றிருக்கும் புத்தியை யுடையவனுக்கு. [நீறேசெய்த] - பிராட்டியருளிச்செய்தபடியே பஸ்மஶேஷமாம்படி பண்ணின. [நெடுஞ்சுடர்ச்சோதி] - ராவணனைப் பரிகரத்தோடேகோன்று, கையும்வில்லுமான வீரஸ்ரீயோடே நின்றநிலை. அவ்விரோதிகளைப் போக்கினாற்போலே என்னுடைய விரோதிகளையும் போக்கவேணு மென்கிறார். [தேறேலேன்னை] - நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்தில் ப்ரதிபந்தகம் போக்க அமையும், ஸ்ரீஜநகராஜன் திருமகளளவில் அவளைப்பிரித்த ராவணனை முடிக்க அமையும், அவர்களை உனக்காக்கவேண்டா; பண்டே உனக்காயிருக்கையாலே; அப்படியே "இவன்விரோதிகளைப் போக்கி நமக்காக்கினோமாகில் இனியேன்" என்றிருக்கவோண்ணாதே! என்னளவில். தேறேனென்று பாடமானபோது -

---

ப்ர:—(ஏறேலேழுமித்யாதி)—(ஏர்கொளிலங்கையை)—ஸுந்தரகாண்டே ஏகோநபஞ்சாஶே ராக்ஷஸேந்த்ரஸ்ய ராவணஸ்ய ஸமீபகதஸ்ய ஹநுமதோ ராஜமாநம் த்ருஷ்ட்வா விசார:, 'ராஜமாநம் ததா த்ருஷ்ட்வா ஹநுமாந் ராக்ஷஸேஶ்வரம் । மநஸா சிந்தயாமாஸ தேஜஸா தஸ்ய மோஹித: ॥ ௧௬ ॥ அஹோ வீர்யமஹோ தைர்யமஹோ ஸத்த்வமஹோ த்யுதி: । அஹோ ராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா ॥ ௧௭ ॥ யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர: । ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா ॥ ௧௮ ॥"

ததைவ நவமே, "பபூவ புத்திஸ்து ஹரீஶ்வரஸ்ய யதீத்ருஶீ ராகவதர்மபத்நீ । இமா யதா ராக்ஷஸராஜபார்யா: ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே: ॥ ௭௨ ॥"

---

தர்ஶநீயமாய் இத்யாதி. கட்டுடைமையாவது-ரக்ஷாவத்த்வம். ரக்ஷாவத்வந்நாம-ராவணபாலிதத்வம். உக்தார்த்தே ப்ரமாணத்வயம் - அஹோ வீர்யம் இத்யாதி. ஸுந்தரகாண்டே ஏகோநபஞ்சாஶே ராவணம் ப்ரதி ஹநுமத்விசார:, "அஹோ வீர்யமஹோ தைர்யமஹோ ஸத்த்வமஹோ த்யுதி: । அஹோ ராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா". ததைவ நவமே, "பபூவ புத்திஸ்து ஹரீஶ்வரஸ்ய யதீத்ருஶீ ராகவதர்மபத்நீ । இமா யதா ராக்ஷஸராஜபார்யா: ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே:". ஹரீஶ்வர ஶப்த துஶப்தயோரர்த்தமாஹ - ராவணனும் இத்யாதி. துஶப்த: - சார்த்தே. "இமா: - ராக்ஷஸராஜபார்யா: - யதா, ராகவதர்மபத்நீ - ஈத்ருஶீ யதி" இத்யந்வய:. ஸாதுபுத்தே: என்றதுக்கு அர்த்தம் - சத்ருக்களும் இத்யாதி. ஶ்மஶாநஸத்ருஶீ பவேத் என்றத்தைப்பற்ற - பிராட்டி அருளிச்செய்தபடி யென்றது. நெடுஞ்சுடர்ச்சோதி - மிக்க புகரையுடைய வடிவையுடையவனே. இத்தால் பலித்த அர்த்தம் - ராவணனை இத்யாதி. பூர்வார்த்தத்துக்கு பாவம் - அவ்விரோதிகளை இத்யாதி. தேறேலென்னை - என்னைத் தெளியேல். என்னை "எனக்கு நன்மையறிவேன்" என்று விஶ்வஸியாதே யென்றபடி. "ஏறேலேழும்" இத்யாதியையும் கூட்டிக்கொண்டு "என்னை" என்றதுக்கு பாவம் - நப்பின்னை இத்யாதி. அவர்கள் விரோதியைப் போக்கினாற்போலே என்னுடைய அஹங்கார மமகாராதி விரோதிகளையும் போக்கினாய், அவ்வளவால் என்னை விஶ்வஸியாதே உன் திருவடிகளையும் அடைவிப்பிக்கவேணுமென்றபடி. இனியேன் என்றிருக்கவோண்ணு

தெளியேனென்னுதல், தரியேனென்னுதல். ஆனால் செய்யவேண்டுவதென் ? என்ன, - [உன்பொன்னடிச்சேர்த்தொல்லை]-" நின்செம்மாபாதபற்புத்தலை சேர்த்து " என்று தொடங்கின அர்த்தத்தைத் தலைக்கட்டுகிறார். [உன்பொன்னடி] - கல்லுக்கும் சைதந்யங் கொடுக்கவல்ல அடியன்றே. சேர்த்து - சேர்த்தருளவேணும். ஒல்லை - நானிசைந்தபோதே சடக்கெனத் திருவடிகளில் திவ்ய ரேகையோபாதி சேர்த்தருளவேணும். அவ்வளவும் போராது. "இவனுக்கு எல்லா உத்கர்ஷமும் பண்ணிக்கொடுத்தோம், ஆகில் இனியேன்" என்னவொண்ணாது. நீ எல்லாவுயர்த்திகளும் பண்ணித்தந்தாலும் நானெல்லாத்தாழ்வுகளும் பண்ணிக்கொள்வேன், என்னை என்கையில் காட்டித்தாராதொழியவேணும். (கo)

## பதினோராம்பாட்டு.

விடலில்சக்கரத்தண்ணலை மேவல்
விடலில் வண்குருகூர்ச்சடகோபன்சொல்
கெடலிலாயிரத்துள் இவைபத்தும்
கெடலில்வீடுசெய்யும் கிளர்வார்க்கே.

ஆ.—(விடலில்). இப்படி ஆழ்வார் அபேக்ஷிக்க, அபேக்ஷித்தபடியே திருமலையிலே புகுந்தருளி, ஆழ்வாரோடே, திருவாழியாழ்வானோடு ஸம்ஶ்லேஷித்தாற்போலே ஒருகாலும் பிரியாதபடி ஸம்ஶ்லேஷித்த எம்பெருமானைச்சொன்ன இத்திருவாய்மொழிவல்லார் ஆழ்வார் பெற்றபேறு பெறுவரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியில் ஶ்ரத்ததாநரானவர், இத்திருவாய்மொழியிற்சொன்ன ப்ராப்யத்தைப் பெறுவாரென்கிறார்.

[விடலிலென்று தொடங்கி] - திருவாழியைப்போலே தம்மையும் பிரியாதே அடிமைகொள்ளும் ஸ்வபாவனான எம்பெருமானை விடில் தரியாத தன்மையான ஆழ்வார் அருளிச்செய்த. [கெடலிலென்று தொடங்கி] - அப்யஸித்தார்க்கு அநர்த்த கந்தம் வாராதபடியிருக்கிற ஆயிரத்துள் இப்பத்தும்.

ப.— அநந்தரம், இத்திருவாய்மொழி மோக்ஷாநந்தப்ரதம் என்று பலத்தை அருளிச்செய்கிறார்.

---

தேனன்னளவில்-ப்ராப்திபர்யந்தமாகப்பண்ணித்தரவேணுமென்றபடி. தெளியேன்-நீ இவ்வளவும்பண்ணினஇத்தாலே விஶ்வஸியேனென்றபடி. தேறேன்-தரியேன்என்றபோது, "பயிர்தேறிற்று" என்றால்-"பயிர்தரித்தது" என்றத்தை அருளிச்செய்வர். பொன்னடியென்றது-பரிசுத்தமான அடியென்றாய், அத்தாலே-கல்லுக்கும்சைதந்யம் கொடுக்கவல்ல அடியன்றேவென்ற. இவ்விடத்திலே-[illegible] என்றத்தையும், [illegible] என்றத்தையும் கண்டுகொள்வது. பாளிঃ - ஸமூஹঃ. அவ்வளவும் போராது-உன் பொன்னடி சேர்த்தமாத்ரம் போராது. விவரணம்-இவனுக்கு இத்யாதி."வேறேபோக வெஞ்ஞான்றும்விடல்" என்றதுக்கு ஸாவம் - நீ எல்லா இத்யாதி. விஷயாந்தரங்களை நினைத்து வேறுபோகாதபடி எக்காலத்திலும் விடாதொழிய வேணுமென்று சப்தார்த்தம். உயர்த்தி-உத்கர்ஷம். தாழ்வுகள்-விஷயாந்தரங்களை விரும்புகை முதலானவை. என்கையில் காட்டித்தருகையாவது - "உபாயாந்தரங்களை யநுஷ்டித்து வாரும்" என்கை. எநேலேழு மித்யாரப்ய, சோதி - என்னை - தேறேல்; உன் பொன்னடி - ஒல்லை - சேர்த்து, வேறேபோக வெஞ்ஞான்றும் விடல் இத்யந்வயঃ (கo)

விடல் - விடுதல், இல் - இல்லாத, சக்கரத்து - திருவாழியையுடைய, அண்ணலை - ஸ்வாமியை, (அப்படியே), மேவல் - மேவி, விடலில் - விடக்ஷமரல்லாத, வண் - மஹோதாரரான, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்ததாய், (இதிலங்வயித்தார்க்கு), கெடல் - அநர்த்தம், இல் - வாராதபடியான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்தும் - இவைபத்தும், கிளர்வார்க்கு - ஸாதரமாகச் சொல்லவல்லவர்களுக்கு, (இதுதானே), கெடலில்-அவித்யாத்யநர்த்த கந்தரஹிதமான, வீடு - மோக்ஷாநந்தத்தை, செய்யும் - பண்ணிக்கொடுக்கும். கிளர்தல் - சொல்லுதல். கிளத்தியாய், உத்யோகமாகவுமாம். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியிலே ஶ்ரத்ததாநாளுர்க்கு இதுதானே தாம் நிஷ்கர்ஷித்த ப்ராப்யத்தைக் கொடுக்குமென்கிறார்.

[விடலில் சக்கரத்தண்ணலை] - கையில் திருவாழியை ஒருநாளும் விடாத ஸர்வேஶ்வரனை. "இத்திருவாழியை விடிலன்றோ நாம் ஆஶ்ரிதரைப் பிரிவது, எஞ்ஞான்றும்விடலே என்னக்கடவீரோ?" [மேவல் விடலில் வண்குருகூர்ச்சடகோபன்சொல்] - அவன் விடிலும், அவனைவிடில் தரியாத ஆழ்வார் அருளிச்செய்தது. வண்மையாவது - இவ்வநுபவத்துக்குப் பாசுரமிட்டு உபகரித்தபடி. [கெடலிலாயிரத்துள் இவை பத்தும்] - அப்யஸித்தார்க்கு அநர்த்தகந்தமில்லாதபடியிருக்கிற ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தும். [கிளர்வார்க்கு - கெடலில் வீடுசெய்யும்] - ஸப்ரத்தராய் இதிலே இழிவார்க்கு இதுதானே "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்று நிஷ்கர்ஷித்த அஹங்காரகந்தமில்லாத பேற்றைக் கொடுக்கும்.

ஈடு.—நிகமத்தில்-இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் இதிற்சொன்ன ப்ராப்யத்தைப் பெறுவரென்கிறார்.

"'நாம்விடுகிறோம்' என்று அதிஶங்கை பண்ணுகிறதென்? நாம் ஒருவரையும் விடோங்காணும்" என்று கையில் திருவாழியைக் காட்டினான். [விடலில்சக்கரத்தண்ணலை] - ஒருகாலும் விடாத திருவாழியைக் கையிலேயுடைய ஸர்வேஶ்வரனைக் கவி பாடிற்று. [மேவல்விடலிலித்யாதி] - அவன் ஸ்வபாவத்தாலே கிட்டி அவனைப்பிரியில் தரியாதபடி பரமோதாரரான ஆழ்வார் அருளிச்செய்தார். வண்மையாவது - இவ்வநுபவத்துக்குப் பாசுரமிட்டு உபகரித்த உபகாரம். [கேடலிலாயிரம்] - இவ்வாத்மாவுக்கு அநர்த்தகந்தம் வாராதபடி ஹிதத்தை ஆராய்ந்தருளிச்செய்த இதுதான். அவற்றில் இப்பத்தும் - கிளர்வார்க்கு - கேடலில் வீடுசெய்யும். "வரில்போகடேன், கேடில்தேடேன்" என்றிருக்கையன்றிக்கே ஶ்ரத்ததாநராயிருப்பார்க்கு, அநர்த்தகந்தரஹிதமாய் அஹங்கார மமகாரங்களை யுடைத்தன்றிக்கே "தனக்கேயாகவேணும்" என்று இவர் ப்ரார்த்தித்தபடியே இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமான பேற்றைப் பண்ணித்தரும்.

---

நிகமம் - விடலில் இத்யாதி. "கிளர்வார்க்கு - கெடலில்வீடுசெய்யும்" என்றத்தைப்பற்ற அவதாரிகை. இதிற்சொன்ன ப்ராப்யமாவது - ஸ்வார்த்ததா கந்தரஹிதமான பேறென்றபடி.

"வேறேபோக எஞ்ஞான்றும் விடல்" என்றவநந்தரம், "விடலில் சக்கரத்தண்ணல்" என்று ப்ரயோகிக்கிறவருடைய ஹார்த்தபாவம் - நாம்விடுகிறோம் இத்யாதி. அதாவது - திருவாழியை விடிலன்றோ உம்மை விடலாவதென்றபடி. அவன் ஸ்வபாவத்தாலே - விடலில் சக்கரத்தண்ணலான அவன் ஸ்வபாவத்தாலே. மேவல் - மேவியென்றாய், கிட்டியென்றபடி. "பிரியில் தரியாதபடி என்கையாலே - 'விடலில்' என்றதுக்கு - விட்டால் உளராகமாட்டாதவரென்று தோற்றுகிறது" என்று அழகப்பங்கார் நிர்வாஹம். விடலில் - "விடக்ஷமரல்லாத" என்று உரையிலர்த்தம். ஸ்வார்த்ததை அநர்த்தமாகையாலே - அநர்த்தகந்தம் வாராதபடியென்றது. கிளர்வார்க்கு - ஶ்ரத்ததாநரா யப்யஸிப்பார்க்கு. கிளருகை - ஶ்ரத்ததாநராய்ச் சொல்லுகை. 'கிளர்வார்க்கு" என்றதுக்கும், "கெடலில்வீடு" என்றதுக்கும் தாத்பர்யம் - வரில்போகடேன் இத்யாதி. கிளர்தல் - சொல்லு

முதற்பாட்டில் - காயிகமான பேற்றை அபேக்ஷித்தார் ; இரண்டாம்பாட்டில் - மாநஸ மான பேற்றை அபேக்ஷித்தார் ; மூன்றும்பாட்டில் - வாசிகமான பேற்றை அபேக்ஷித்தார் ; நாலாம்பாட்டில் - ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்தார் ; அஞ்சாம்பாட்டில் - நீரா ராய் இப்பேற்றை அபேக்ஷித்தீ ரென்ன, நான் ஆராயிடுகே, உன்னையநுபவித்து மகிழும்படி பண்ணி யருளவேணுமென்றூர் ; ஆறும்பாட்டில் - த்ரிவிதகரணங்களாலும் உன்னைப்ரீதிபுரஸ்ஸரமாக அநு பவிக்கும்படி பண்ணியருளவேணு மென்றூர் ; ஏழாம்பாட்டில் - அப்படி சடக்கேனச் செய்யா மையாலே இன்னுதானுர் ; எட்டாம்பாட்டில் - ஸ்வரூபாநுரூபமாக நீ க்ஷணகாலம் என்னேடே யநுபவிக்கப்பெறில், பின்புள்ள காலமெல்லாம் வேண்டேனென்றூர் ; ஒன்பதாம்பாட்டில் - உன்னை யநுபவிக்க இட்டுப்பிறந்து வைத்து, அது கிடையாதபடி நானே அநர்த்தத்தைச் சூழ்த்துக் கோண்டே னென்றூர் ; பத்தாம்பாட்டில் - எனக்கு ஒருநாளும் "ஜ்ஞாநவிஶேஷத்தைப் பண்ணித் தந்தோமிறே" என்று என்னை என் கையிற் காட்டித்தாராதொழியவேணு மென்றூர் ; இதுகற்றூர்க் குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினுர். (கக)

---

*தலும், உத்யோகித்தலும். ஆராயிடுக - ஆராளுலுமாயிடுக. இட்டுப்பிறந்துவைத்து - யோக்யனுயிருந்துவைத்து. க்ரமேண அந்வய꞉.* *(கக)*

**த்ரவிடோபநிஷத் ஸங்கதி.**—[illegible]

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**—[illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

எம்மாவீடும் வேண்டா வென்றனக்குன் தாளிணையே
அம்மாவமையுமெனவாய்த்துரைத்த— நம்முடைய
வாழ்முதலாமாறன் மலர்த்தாளிணை சூடிக்
கீழ்மையற்று நெஞ்சேகிளர்.

*ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானுர் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.*

# பத்தாந்திருவாய்மொழி—கிளரொளி: ப்ரவேஶம்.

ஆ. (கிளரொளி.) இப்படி தம்மோடு கலந்தருளின எம்பெருமான் நின்றருளின திருமலையை அநுபவிக்கிறார்.

ஒ.—பத்தாந்திருவாய்மொழியில், எம்மாவீட்டில் - ஆழ்வார் தாம் அபேக்ஷித்து எம்பெருமானும் தந்தருளக்கடவனாக இசைந்த புருஷார்த்தத்தை "இங்கே இவ்வுடம்போடே பெற வேணும்" என்று தாம் அபேக்ஷிக்க, எம்பெருமானும் இவர்க்கு அடிமையிற்பிறந்த விடாய்க்கு ஈடாக அடிமைகொள்கைக்கு ஈடாகத் திருமலையைக் காட்டியருளக் கண்டு அதிப்ரீதராய், இனி அடிமைதான் வேணுமோ? திருமலைதானே எனக்கு பரமப்ராப்ய மென்கிறார்.

ப.—பத்தாந்திருவாய்மொழியில், கீழ் - புருஷார்த்ததயா நிர்ணீதமான அத்யந்த பாரதந்த்ர்யயுக்தமா யிருந்துள்ள கைங்கர்யத்தை இவர் அபேக்ஷித்தபடியே, காலவிளம்பம் பிறவாதபடி இங்கே கொடுத்தருளுகைக்காகத் தெற்குத் திருமலையிலே எழுந்தருளி நிற்கிறபடியை ப்ரகாஶிப்பிக்கக் கண்டு அத்யந்த ஹ்ருஷ்டராய்; அழகருடைய ஔஜ்ஜ்வல்யத்தையும், ஆபிரூப்யத்தையும், ஔதார்யத்தையும், ரக்ஷகத்வத்தையும், ரக்ஷோபகரணவத்தையையும், ஆஶ்ரிதவ்யாமோஹத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆஶ்ரிதாநுகூலதையையும், விரோதிநிரஸந ஶீலதையையும், ஜ்ஞாநப்ரதத்வத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்விதனான ப்ராப்யபூதன் தானும் விரும்பும்படியான திருமலையே பரமப்ராப்யம்" என்று நிஷ்கர்ஷித்து, முதலிட்டு ஐந்து பாட்டாலே - திருவுள்ளத்தையும், மேலிட்டு ஐந்து பாட்டாலே - லௌகிகரையுங் குறித்து அவன் போக்யதையை உபதேஶித்து முடித்தருளுகிறார்.

இ.—பத்தாந்திருவாய்மொழியில், "எம்மாவீட்டில் இவர் அபேக்ஷித்த புருஷார்த்தத்தைப் பெறுகைக்குத் திருமலையை ஆஶ்ரயிக்கிறார்" என்று ஆளவந்தார் நிர்வாஹம். அங்ஙனன்றிக்கே, எம்பெருமானார், "கீழ் தாம் நிஷ்கர்ஷித்த புருஷார்த்தம் ஶரீரஸமநந்தரம் பரமபதத்திலே பெறுமதாயிருக்க, 'ஒல்லை' என்றும், 'காலக்கழிவு செய்யேல்' என்றும் - க்ரமப்ராப்தி பற்றுதாராய் த்வரிக்கிற இவர்படி இப்ரக்ருதியோடே அநுபவிக்கவேண்டும்படியிருக்கையாலே, அதுக்கு ஏகாந்ததேசமாகத் திருமலையைக் காட்டியருளக் கண்டு ப்ரீதராய், அடிமைதான் வேணுமோ? திருமலைதானே எனக்குப் பரமப்ராப்ய மென்கிறார்" என்று.

ஈடு.—"கீழ் எம்மாவீட்டிலே நிஷ்கர்ஷித்த ப்ராப்யம் பெறுகைக்குத் திருமலையையாஶ்ரயிக்கிறார்". என்று ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி. எம்பெருமானார், "அங்ஙனல்ல, இவர் பாட்டுத்தோறும் 'ஒல்லை' 'ஒல்லை' என்றும், 'காலக்கழிவு செய்யேல்' என்றும் - த்வரிக்கப்புக்கவாறே, 'நமக்கும்அறிவித்து நாமும் இவர்காரியஞ்செய்யக் கடவதாக அறுதியிட்டால், 'ஶரீரஸமநந்தரம் பேறு தப்பாது' என்று அறுதியிட்டிருக்கலாயிருக்க, இவர் இப்படி த்வரிக்கிறது இஶ்ஶரீரத்தோடே நாம் அடிமைகொள்ளவேணுமென்றுபோலே யிருந்தது; இனி இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு ஏகாந்தமான தேசமேதோ' என்று ஞாலத்தூடே நடந்துழக்கிப்பார்த்து வரச்செய்தே 'இவ்விடம் சால ஏகாந்தஸ்த்தலமாயிருந்தது' என்று திருமலையிலே ஸந்நிதி பண்ணியருளி, 'நாம் உமக்கு முகந்தருகைக்காக வந்து நின்றோம், நீர் இங்கே வந்து நினைத்தவகைகளெல்லாம் பரிமாறி அநுபவியும்' என்று தெற்குத்திருமலையிலே நிற்கிற

---

கிளரொளி ப்ரவேஶே, "சார்வதுசதிர்" "அடைவதுதிறம்" இத்யாதியைப்பற்ற ப்ராபகபரமாக ஆளவந்தார் நிர்வாஹம். "எழுவதுபயன்" இத்யாதியைப்பற்ற ப்ராப்யபரமாக எம்பெருமானார் நிர்வாஹம். நமக்கும் அறிவித்தென்றது-"தனக்கேயாக" இத்யாதியைப்பற்ற. "விடலில் சக்கரத்தண்ணலை" என்றத்தைப்பற்ற-நாமும் இவர்காரியம் செய்யக்கடவதாக அறுதியிட்டால் என்றது. ஶால ஏகாந்த ஸ்த்தலமென்றவிடத்திலே - "ஆயி

நிலையைக் காட்டிக்கொடுக்க, இவரும் அத்தையநுஸந்தித்து; பகவான் ப்ராப்யனானால் அவன் வர்த்திக்கும் தேசமும் ப்ராப்யமாகக்கடவதிறே; அத்தாலே, திருமலையோடு, அத்தோடு சேர்ந்த அயன்மலையோடு புறமலையோடு, திருப்பதியோடு, போம்வழியோடு, 'போகக்கடவோம்' என்று துணியும் துணிவோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமாய் அநுபவித்து இனியராகிறார்'' என்று.

## முதற்பாட்டு.

கிளரொளியிளமை கெடுவதன்முன்னம்
வளரொளிமாயோன் மருவியகோயில்
வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை
தளர்விலராகில் சார்வதுசதிரே.

**ஆ.**—*யாதொன்றிலே நின்றருளுகையாலே அங்குத்தைச் சோலைபோல எம்பெருமானுடைய திருவுடம்பு அதிசீதளமாய் அதிவர்த்திஷ்ணுவான ஔஜ்ஜ்வல்ய யௌவநாதி கல்யாண குணங்களை உடைத்தாயிற்று, அங்ஙனேயிருந்த திருமாலிருஞ்சோலையை, உங்களுக்கு கரண பாடவமுள்ளபோதே உங்களுடைய க்லேசமெல்லாம் தீரும்படி சென்று புஜியுங்கள்; இது பரம ப்ராப்ய மென்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், திருமலையை ப்ராபிக்கையே நிரதிசய புருஷார்த்த மென்கிறார்.*

*[கிளரொளியென்று தொடங்கி] - கரணபாடவம் கெடுவதற்குமுன்னே திருமலையோட்டை ஸம்பந்தத்தாலே பிறந்த அழகாலே ஆஸ்சர்யபூதனானவன் போக்யதையின் மிகுதியாலே விடாதேயிருக்கிற கோயிலாய் நிலமிதியாலே வளராநின்றுவைத்து நாள்தோறும் இளகிப் பதியாநின்ற திருச்சோலை சூழ்ந்திருந்துள்ள திருமலையை. [தளர்வென்று தொடங்கி] - திருமலையையொழிய இருக்குமிருப்பாகிற அநர்த்தபாகிகளன்றிக்கே அத்தைப்ராபிக்கையே சதிர்.*

*ப.— முதற்பாட்டில், நிரதிசயௌஜ்ஜ்வல்ய விசிஷ்டனான ஸர்வேஸ்வரன் விரும்பின திருமலையே ப்ராப்ய மென்கிறார்.*

*கிளர் - கிளர்ந்துவருகிற, ஒளி - ஜ்ஞானௌஜ்ஜ்வல்யத்துக்கு யோக்யதையுண்டான, இளமை - யௌவநாரம்பரூபமான இளமை, கெடுவதன்முன்னம் - விஷயாந்தரகதமாய்க் கெடுவதற்கு முன்னே, வளர் - (ஆஸ்ரிதார்த்தமாக இங்கே எழுந்தருளினபின்பு) வளர்ந்து வருகிற, ஒளி - சீலஸௌலப்யாதி குணௌஜ்ஜ்வல்யத்தையுடைய, மாயோன் - ஆஸ்சர்யரூபனான ஸர்வேஸ்வரன், மருவிய - பொருந்திவர்த்திக்கிற, கோயில் - திவ்யஸ்த்தாநமாய், வளர் - வளராநிற்கச்செய்தே, இளம் - இளமையை யுடைத்தான, பொழில் - பொழில்களாலே, சூழ் - சூழப்பட்டு, மாலிருஞ்சோலை - அத்தாலே ''மாலிருஞ்சோலை'' என்று திருநாமமான திருமலையை, தளர்வு இலராகி - (ப்ரயோஜநாந்தர ஸம்பந்தமாகிற) தளர்த்தி அற்று, சார்வதே - ப்ராபிக்குமதுவே, சதிர் - சதிர். ''இதொழிய ப்ரயோஜநாந்தரமுண்டு'' என்றிருக்கை-இளமையென்று கருத்து. சேதநர் பால்யத்திலே விவேகாத்மாக்களாய்க் கொண்டு அநந்ய ப்ரயோஜநராய்ப்பற்றுமிது சதிரிறேயென்று தந்திருவுள்ளத்தைக் குறித்து உரைத்தாராயிருக்கிறது.*

---

*மாறுகளும்'' இத்யாத் யநுஸந்தேயம். பாட்டுக்களின் ப்ரமேயம் -* **பகவான்** *இத்யாதி.* **அயன்மலை** *- அசல்மலை, அதாவது - தத்ஸம்பந்தமே நிரூபகமாகச் சேர்ந்திருக்கிற மலை யென்றபடி.* **புறமலை** *- தத்ஸமீபஸ்த்திதமான மலை. இனியராகிறு ரென்றதுக்கு - இனியராய் பரோபதேசம் பண்ணுகிறுரென்று கூட்டிக்கொள்வது.*

இ.—முதற்பாட்டில், திருமலையை ப்ராபிக்கையே நிரதிஶய புருஷார்த்தமென்கிறார்.

[கிளரொளியிளமை கெடுவதன்முன்னம்] - கிளராநின்றுள்ள ஒளியையுடைத்தான யௌவநம் கழிவதற்குமுன்பே. கரணபாடவ முள்ளபோதே. பால்யம் போய் யௌவநம் தலை வைக்கிற வளவிலே. யௌவநம் விஷயத்திலேமூட்டி நஶிப்பிப்பதற்கு முன்பே யென்றுமாம். "தஸ்மாத் ப்ராஜ்ஞோ விவேகாத்மா யதேத ஶ்ரேயஸே ஸதா" என்னக்கடவதிறே. "கோஜாநீதே கஸ்ய கஸ்ய ம்ருத்யுகாலோ பவிஷ்யதி । யுவைவ தர்மஶீலஸ்யாத் அநித்யம் கலு ஜீவிதம்". "திருமலையை ஆஶ்ரயிப்போம்" என்று பிறந்த ஸ்ரத்தை மாளுவதுக்கு முன்னே யென்றுமாம். [வளரொளிமாயோன்]-ஏகரூபமாக ப்ரமாண ப்ரஸித்தனா யிருக்கச்செய்தே, திருமலையின் நிலமிதியாலே வளராநின்றுள்ள அழகை யுடைய ஆஶ்சர்ய பூதன். [மருவியகோயில்] - அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே விரும்பி வர்த்திக் கிற தேஶம். [வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ்சோலை] - வளராநிற்கச்செய்தே இளகிப் பதியாநின்ற திருச்சோலை. நாள்செல்லச்செல்ல கீழ்நோக்கி வயஸ்ஸு புகாநிற்கை, முக்தர் பஞ்சவிம்ஶதிவார்ஷிகரா யிருக்குமாபோலே. அடிமை செய்கிறவர்கள் கிளரொளியிளமையை யுடையவர்கள், அடிமை கொள்ளுகிறவன் வளரொளிமாயோன், தேஶம் வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை. [தளர்விலராகி] - தளர்வாகிறது - திருமலைக்குப் புறம்பாகை. அந்த அநர்த்த மின்றிக்கே. [சார்வது சதிரே]-திருமலையை யபாஶ்ரயமாகச் சென்று புகுவதுவே சதிர்; இதர விஷயங்களைப்பற்றுகை யிளிம்பு. "ஸாஹஸநிஃ".

ஈடு.—முதற்பாட்டு. திருமலையை ப்ராபிக்கையே இவ்வாத்மாவுக்கு நிரதிஶய புருஷார்த்த மென்கிறார்.

[கிளரொளியிளமை இத்யாதி] - "திருமலையையாஶ்ரயியுங்கோள்" என்றார்; "செய்கிறோம்" என்று ஆறியிருந்தார்கள்; கெடுவிகாள் எத்தை விஶ்வஸித்துத்தான் நீங்கள் ஆறியிருக்கிறது; "வயோவஸ்தா ஹ்யதிவர்த்ததே" யன்றே, "வாள்களாகி நாள்கள்செல்ல" வன்றே நீங்கள் ஆறியிருக்கிறது-கழிந்தபருவத்தை உங்களாலேதான் மீட்கப்போமோ? [கிளரொளியிளமையென்றது]-

---

ப்ர.—(கெடுவதன்முன்னம்)—யாதகாண்டே பஞ்சமே, "நஶேஷாஸ்வம் வியா தவநோ நஶேஷாஸ்வம் ஹ்ருதேதி வா । வஶதைவாநுஶோசாமி வயோவஸ்தா ஹ்யதிவர்த்ததே॥ரு॥"

---

முதற்பாட்டு - கிளரொளி இத்யாதி "சார்வதுசதிர்" என்றத்தைப்பற்ற அவதாரிகை - திருமலையை இத்யாதி.

ஆளவந்தார் நிர்வாஹத்திலே "முன்னம்" என்றதுக்கு அவதாரிகாகதமுகேந "இளமை" என்று - பருவமாக அர்த்தம் அருளிச்செய்கிறார் - திருமலையையாஶ்ரயியுங்கோள் இத்யாதி. "இளமைகெடுவதன் முன்னம்" என்னும்போது - அவர்களாறியிருந்தார்களென்னுமது ஸித்தமாகையாலே அத்தைக் காட்டுகிறார்- ஆறியிருந்தார்கள் என்று. இளமை - பால்யம். இது கெடுமென்றதுக்கு ப்ரமாணத்வயம் - வயோவஸ்தா இத்யாதி. யுத்தகாண்டே பஞ்சமே, "நஶேஷாஸ்வம் வியாதவநோ நஶேஷாஸ்வம் ஹ்ருதேதிவா। வஶதைவாநுஶோசாமி வயோவஸ்தா ஹ்யதி வர்த்ததே". வாள்களாகி இத்யாதி - திருச்சந்த விருத்தம். வ்யர்த்தமாக நாள்கள் செல்லவென்னுதல், ஆயுஸ்ஸைச் சேதிக்கிற வாள்களாகி யென்னுதல். வாள் - ஆயுதம். ப்ரமாணத்வயத்துக்கும் ஹ்ருதயம் - கழிந்தபருவத்தை இத்யாதி. இதஞ்ச ப்ரமாணத்வயம் - கரணபாட வதசாகமாத் பூர்வமித்யஸ்மிந்நர்த்தே இதி த்ரஷ்டவ்யம். "ஒளிகொள் விளக்கு", "ஞானச்சுடர்விளக்கு" என்கிறபடியே, "ஒளி" என்று - ஜ்ஞாநமாய், தத்விஶேஷமான இச்சையைச் சொல்லி, "இளமை" என்றது - தருணக்ரமாவஸ்த்தையான ஸங்கத்தைச் சொல்லி, அதுதான் இச்சாநுபஜ்ஞாந ப்ரஸ்ருதித்வாரமான மநோஜந்யமாகையாலே மாநஸஶ்ரத்தையென்கிறார் - கிளரொளியிளமையென்றது இத்யாதி. பிறந்த ஸ்ரத்தை-

மாநஸஶ்ரத்தையாய், பிறந்த இஶ்ஶ்ரத்தை இதில்நின்றும் மாறி விஷயாந்தரத்திலே பிறப்பதற்கு முன்னே. ஒருவனுக்கு ஒருவிஷயத்திலே ஒருகால் ஶ்ரத்தைபிறக்கும், அவன்தனக்கே அவ்விஷ யத்திலே அஶ்ரத்தை பிறக்கக்கடவதாயிருக்கும்; ஆக, பிறந்த ருசி மாறுவதற்குமுன்னே என்னுதல். அங்ஙனன்றிக்கே, "ப்ராப்யம்" (ப்ராப்யம்) என்னும் ப்ரதிபத்தி பிறந்தாலும், 'கரணபாடவ மில்லையே' என்று கைவாங்க வேண்டாதபடி, கரணபாடவமுள்ளபோதே யென்னுதல்; "பால்யே க்ரீடநகாஸக்தா:" (பால்யேக்ரீடநகாஸக்தாః) என்ற, "தஸ்மாத்பால்யே விவேகாத்மாயதேத" (தஸ்மாத்பால்யேவிவேகாத்மாயதேத) என்றுநின்றதிறே. [வளரொளி]- ஸ்வதஃவ்ருத்திக்ஷயாதிகளில்லாதவனுக்கு விகாரத்தைப் பிறப்பிக்க வற்றாயிற்று தேஶஸ்வபாவம். நாட்செல்ல நாட்செல்ல வளராநின்றுள்ள புகரையுடையனாய், ஆஶ்சர்யஶக்தியுக்தனான ஸர்வேஶ் வரன், அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிற தேஶம். [வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ்சோலை] - அடிமைசெய்கிறவர்கள் கிளரொளியிளமையை யுடையவர்கள், அடிமைகொள்ளுகிறவன் வளரொளிமாயோன், அடிமைசெய்கிற தேஶம் வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை; ஆக, இப்படி அடிமை செய்யுமவனும், அடிமைகொள்ளுமவனும், அடிமை செய்யும் தேஶமும் ஒத்த பருவமாயாயிற்று இருப்பது. வளரவளர இளகிப்பதித்துச் செல்லா

---

ப்ர.—வ்யஸனம் ஸத்ஸுமே ஶ்ராத்தா ஜைவஸ்து வாசாநுவ்ருத்திவ்ருஹ்ரதः, "ஹரவம்ஶ்ராஸயாகஷித ஶநஸ்வம்ஹருஷஸ்த । ஶ்ரேயஸோஹமிஶ்வம்யாதி நகஷா விதிவாஸிதः॥ஏச॥ பால்யே க்ரீடநகாஸக்தாயௌவநே விஷயோந்முகா: । அஜ்ஞா நயந்த்யஶக்த்யாவாயுகம் வஶ்வஸ்திதம் ॥ எடு ॥ தஸ்மாத்பால்யே விவேகாத்மாயதேதஶ்ரேயஸே ஸதா । பால்யயௌவநவ்ருத்தேஷு தேஹபேதஸம்யுதः॥எசு॥"

---

மநஸ்ஸாதவயாகப் பிறந்த இஶ்ஶ்ரத்தை. இதில் நின்றும் - பகவத்விஷயத்தில் நின்றும். அப்படி ஶ்ரத்தை பிறந் தால் திரும்பிப்போமோ வென்ன, ஒருவனுக்கு இத்யாதி. யத்வா, மாநஸஶ்ரத்தையென்ற அர்த்தத்திலே எம் பெருமானார் நிர்வாஹத்துக்குச் சேர ஹாவம் - ஒருவனுக்கு இத்யாதி. எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச் சேரப் பருவமென்ற பக்ஷத்திலும் அர்த்தாந்தரம் - அங்ஙனன்றிக்கே இத்யாதி. கிளராநின்ற ஒளியையுடைய இளமை யென்றபடி. ஆஶ்ரயணநுபவயோராநுரூபகரணபாடவாபகமாத் பூர்வமிதியாவத். "கிளர்ந்துவருகிற ஜ்ஞாநௌஜ் ஜ்வல்யத்துக்கு யோக்யதையுண்டான யௌவநாரம்பரூபமான இளமை விஷயாந்தரகதமாய்க் கெடுவதற்கு முன்னே" என்று உரையில் அர்த்தம். "இளமைகெடுவதற்குமுன்னம்" என்றிறே சொல்லிற்று, பால்யத்திலே மோக்ஷார்த்த ப்ரவ்ருத்தியுண்டோ வென்ன, அருளிச்செய்கிறார் - பால்யே க்ரீடநகாஸக்தா இத்யாதி. ப்ரத மேம்ஶே ஸப்தமே பாலாந்ப்ரதிப்ரஹ்லாதஃ, "பால்யே க்ரீடநகாஸக்தா யௌவநே விஷயோந்முகா: । அஜ்ஞா நயந்த்யஶக்த்யாவாயுகம் வஶ்வஸ்திதம் । தஸ்மாத்பால்யே விவேகாத்மாயதேத ஶ்ரேயஸே ஸதா". அதாவது - "தஸ்மாத்பால்யே" என்கிறவிடத்திலே - க்ரீடாஹேதுவான ஶைஶவமு மன்றிக்கே, விஷயப்ராவண்யஹேதுவான யௌவநமுமன்றிக்கே, ஆஶ்ரயணோபயுக்தமான பால்யயௌவநஸந்தி விவக்ஷிதமானாற்போலே, "கிளரொளியிளமை" என்றவிடத்திலும் - பால்யயௌவநஸந்தியைச் சொல்லுகிற தென்று கருத்து. "வளரொளி" இத்யாரப்ய, "கோயில்" என்னுமளவுக்கும் சப்தார்த்தம்-நாட்செல்ல இத்யாதி. ஸ்வதோவ்ருத்திக்ஷயேத்யாதிவாக்யம் - தாத்பர்யார்த்தம். வர்த்தமாநார்த்தம் - நாட்செல்ல நாட்செல்லவிதி தீர்த்தம்ப்ரஸாதியாதே - தீர்த்தத்துக்கு அநந்தரம் திருநாள்படி ஸமாப்தியாமாபோலே யாகாதே. பதச்சேர்த்தி யாலே பரமபதஸாம்யம் அருளிச்செய்கிறார்-அடிமைசெய்கிறவர்கள் இத்யாதி. "உளர்" என்று வைத்த, "இளமை" என்றதுக்கு அர்த்தம் - வளரவளர இத்யாதி. இளகிபதித்துச்செல்லாநிற்கும் - பால்யமே வ்ருத்தி

நிற்குமாயிற்று சோலை. [தளர்விலராகில்] - "யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி" (யந்முஹூர்த்தம் க்ஷணம்வாபி) இத்யாதி. ஸர்வப்ரகாரத்தாலும் வரும் அநர்த்தமாகிறது - திருமலையைக் கிட்டாமை யென்றிருக்கிறார். "திருமலைப்ராப்யம்" என்னும் புத்திபிறந்து லபிக்கைக்கு விரோதியாய் வரும் அநர்த்தபாகிகளன்றியே ஒழியவேண்டில். [சார்வதுசதிரே] - திருமலையைக் கிட்டுமிதுவே இவ்வாத்மாவுக்குச் சதிர்; அல்லாதவையெல்லாம் இளிம்பு. "கண்ணுக்கிலக்கான விஷயங்களைவிட்டு வேறே சிலவற்றைப் பெறுகைக்கு யத்நியாநின்றீகோளீ" என்று நீங்கள் நினைத்திருக்கு மதுவே இளிம்பு; இதுவே சதிர்.

## இரண்டாம் பாட்டு.

சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது
அதிர்குரல்சங்கத்து அழகர்தங்கோயில்
மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை
பதியதுவேத்தி எழுவதுபயனே.

ஆ.—(சதிரிளமடவார்.) ப்ராக்ருத விஷயங்களில் ப்ராவண்யத்தைவிட்டு, ப்ரதிகூல ஹ்ருதயபேதகமான திவ்யத்வநியை யுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஏந்துகையாலே நிரவதிகமான அழகையுடையனாய், அத்தாலே "அழகர்" என்னும் திருநாமத்தை யுடையனான எம்பெருமானுக்குக் கோயிலாய், பரிபூர்ண சந்த்ரமண்டலத்தாலே அலங்க்ருதமான ஸிகரங்களை யுடைத்தான திருமாலிருஞ்சோலைப்பதியை யேத்தி யெழுங்கள்; அதுவே பரமப்ரயோஜந மென்கிறார்.

ஒ.— இரண்டாம்பாட்டில், திருமலையிற் காட்டிலும் அத்தோடே சேர்ந்த திருப்பதியை அநுபவிக்கையே பரம ப்ரயோஜந மென்கிறார்.

---

ப்ர.—(தளர்விலராகில்)—"யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே। ஸா ஹாநிஸ்தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ்ஸா ச விக்ரியா".

---

யடையாநிற்கும். "தளர்விலராகிற் சார்வதுசதிர்" என்கையாலே - சாராதபோது தளர்வுண்டென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - யந்முஹூர்த்தம் இத்யாதி. "யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே। ஸா ஹாநிஸ்தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ்ஸா ச விக்ரியா". இத்தால்- திருமலையைக் கிட்டாமையே தளர் வென்றபடி. ஆளவந்தார், எம்பெருமானர், இருவருடைய நிர்வாஹாநுகுணமாக க்ரமேண அர்த்தத்வயம்-ஸர்வப்ரகாரத்தாலும் இத்யாதி வாக்யத்வயேந. தளர்விலராகில்-தளர்வில்லாதவர்களாக வேண்டில். து:கபாகிகளன்றிக்கேயொழியவேண்டிலென்றமுந்தினவர்த்தம்;தளர்வு-து:கம். அநர்த்தபாகிகளன்றிக்கே யொழியவேண்டிலென்று த்விதீயார்த்தம். இந்தப் பக்ஷத்திலே, "தளர்வு" என்று - து:கஹேதுவான பாபத்தைச் சொல்லுகிறது. திருமலையைச் சாராமை யாகிற து:கபாகிகளன்றிக்கே யொழியவேண்டிலென்று முந்தின பக்ஷத்திலே ஸப்தார்த்தம்; திருமலையைக் கிட்டுகைக்கு விரோதியான பாபபாகிகளன்றிக்கே யொழிய வேண்டிலென்று த்விதீய பக்ஷத்திலே ஸப்தார்த்தம். சதிர் - சாதுர்யம். "சார்வதே சதிர்" என்று அந்வயித்து, அவதாரணத்துக்கு அர்த்தம் - அல்லாதவை இத்யாதி. இளிம்பு - தைந்யம். விவரணம் - கண்ணுக்கு இத்யாதி. இப்பாட்டில் ப்ராபகபரமாயும் ப்ராப்யபரமாயு மிருந்துள்ள வாக்யங்களை உபயநிர்வாஹாநுகுணமாகக் கண்டுகொள்வது. கோயிலான - மாலிருஞ்சோலையென்று, "கோயில்" என்றது - மாலிருஞ்சோலைக்கு விஸேஷணம். சோலை - சோலையை. க்ரமேண அந்வய:. (க)

[சதிரென்று தொடங்கி] - ஆத்மகுணங்களையும் வடிவழகையு முடைய ஸ்த்ரீகள் உங்கள்பக்கல் பண்ணும் ப்ராவண்யத்தை ஜந்மப்ரயோஜநமாக நினையாதே கம்பீரத்வநியையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஏந்தின அழகாலே "அழகர்" என்னும் திருநாமத்தை யுடையவர்க்கு ஸ்ப்ருஹணீயமான கோயில். [மதிதவழ்குடுமி] - சந்த்ரனுக்கு வருந்திப்போகவேண்டும்படியாய் உயர்ந்திருக்கை. [ஏத்தியெழுவது] - ஏத்தி உஜ்ஜீவிக்கை. மாலிருஞ்சோலையாகிற பதியையென்றுமாம்.

ப.—அநந்தரம், அழகருடைய திருமலையோடுசேர்ந்த திருப்பதியை யேத்துமதே ப்ரயோஜந மென்கிறார்.

சதிர் - (அர்த்தானுரூபமாகவும் ஸ்வதோஷத்துக்கீடாகவு மொதுக்கி உடம்புகொடுக்குஞ்) சதிரையுடையராய், இளம் - இளமையாலே மதிமயக்கி செல்லாமை தோன்ற விருக்கும், மடவார் - ஸ்த்ரீகளுடைய, தாழ்ச்சியை - தாழ்ச்சிதோற்ற விருக்கும் உக்திசேஷ்டிதாதிகளை, மதியாதே - ப்ரீதிபண்ணாதே, அதிர்குரல் - ஸம்ஶ்லேஷஜநித ப்ரீதியாலே முழங்குகிற, சங்கத்து - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையராகையாலே நிரதிஶய ஸௌந்தர்யத்தையுடைய, அழகர் - அழகருக்கு, தம்கோயில் - அஸாதாரண ஸ்தானமாய், மதி - சந்த்ரனானவன், தவழ் - தவழும்படி யோங்கின, குடுமி - சிகர சிகைகளையுடைத்தான, மாலிருஞ்சோலை - திருமலையில், பதி - திருப்பதியாகிற, அது - ப்ரஸித்த ஸ்தலத்தை, ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, எழுவதே-உச்ரிதராகையே, பயன் - ப்ரயோஜநம். இதுவும் - நெஞ்சை நோக்கி யுரைத்தல்.

இ.—இரண்டாம்பாட்டில், திருமலைதான் வேணுமோ? அத்தோடு சேர்ந்த திருப்பதியே பரம ப்ரயோஜந மென்கிறார்.

[சதிரிளமடவார்] - கிளரொளியிளமையையுடையவர்களை இழுத்துக்கொள்ளும் முதலைகளாயிற்று விஷயங்கள். கலவியால் வந்த ரஸம் இரண்டுதலைக்கு மொத்திருக்க, த்ரவ்யத்தளவிலே உடம்பு கொடுக்குமவர்கள். இவ்வஞ்ஜநமாகிற அநாத்மகுணத்தைக்கண்டு "அல்லேன்" என்னவொண்ணாதபடி பருவத்தையிட்டு மருட்டுவர்கள். [மடவார் தாழ்ச்சியை மதியாது] - ஸ்த்ரீகள்பக்கல் உங்களுக்குண்டான ப்ராவண்யத்தை ப்ரயோஜநமாக நினையாதே யென்னுதல்; அவர்கள் ப்ரவணைகளாக பாவிக்குமத்தை மதியாதே யென்னுதல். ப்ரயோஜநமில்லாமையே யன்று, மேல் நரகம், இங்குப் பிறர் நாக்கு வளைக்கை; "ஹஸ்தோ நாம ஸூம்" என்று நிரதிஶய போக்யமாயுமிருக்கும் விஷயமன்றே. [அதிர்குரலித்யாதி] - தன்னோட்டையநுபவத்தாலே முக்தர் ஸாமகாநம் பண்ணுமாபோலே முழங்காநின்ற ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கையிலே யுடையவராகையாலே வந்த அழகை யுடையராகை. [தங்கோயில்] - "என்னது" என்று அவர் ஆதரித்துவர்த்திக்கிற தேஶம். [மதிதவழ்குடுமி] - சந்த்ரனுக்கும் தவழ்ந்துபோக வேண்டும்படி உயர்ந்திருக்கை. மாலிருஞ்சோலையாகிற பதி யென்றுமாம். [ஏத்தியெழுவது] - "தொழுதெழு" என்னும் தம்மைப்போலே யென்றிருக்கிறார். [பயனே] - இதுவே ப்ரயோஜநம், அல்லாதன ப்ரயோஜநஶூந்யம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. திருமலையோடு சேர்ந்த ஸ்ரீபதியைக் கிட்டுகையே பரம ப்ரயோஜநமென்கிறார். அன்றிக்கே, திருமலைதன்னையே சொல்லுகிறதாதல். அன்றிக்கே, திருப்பதியையாதல்.

---

இரண்டாம்பாட்டு—சதிர் இத்யாதி. "மாலிருஞ்சோலைசேர்ந்தபதி" என்று விவக்ஷித்த - முந்தின அவதாரிகை. ஸ்ரீபதியை - திருப்பதியை. "மாலிருஞ்சோலையாகிற-பதி" என்று திருமலைதன்னையே சொல்லுகிறதாதல். திருப்பதியையாதல் என்று சில ஸ்ரீகோசங்களிலிருந்ததாகில் - முந்தின அர்த்தவிவரணமென்று கண்டுகொள்வது.

[சதிரிளமடவார்தாழ்ச்சியைமதியாது] - சதிரிளமடவார் விஷயமாக நீங்கள் பண்ணும் தாழ்ச்சியை ஒன்ருக புத்திபண்ணுதே யென்னுதல். சதிரிளமடவார் தாங்கள் பண்ணும் தாழ்ச்சியை மதியாதே யென்னுதல். மதித்தால் ப்ரயோஜநமில்லாமையேயன்று, மேல் நரகம், இங்கு ஶிஷ்டகர்ஹை; "ஹ்ருத நாடு" (பக்தாநாம்) என்று பரார்த்தமாய், நிரதிஶய போக்யமாயிருக்கும் விஷயமன்றே. சதிரையுடையராயிருப்பர்கள் - பிறரை யகப்படுத்திக்கொள்ளுகைக் கீடான விரகை யுடையராயிருப்பர்கள். சேத்துக்காட்டவுங்கூட வல்லராயிருக்கை. சதிரையும் பருவத்தினிளமையையுங் காட்டியாயிற்று அகப்படுத்துவது. கீழே "கிளரொளியிளமை" என்றதே, அப்பருவங்கண்டவிடத்தே இழுத்துக்கொள்ளும் முதலைகளாயிற்று விஷயங்கள். [அதிர்குரல் இத்யாதி] - திருக்கையின் ஸ்பர்ஶத்தாலே எப்போதும் ஒக்க முழங்காநின்றுள்ள ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருக்கையிலேயுடையராய் அச்சேர்த்தியழகாலே அதுதன்னையே தமக்குத் திருநாமமாக உடையவர், "ஆஶ்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கான நிலம்" என்று திருவுள்ளத்தாலே விரும்பி, "என்னது" என்று ஆதரித்து வர்த்திக்கிற கோயில். [மதிதவழ்குடுமி] - சூற்பெண்கள் சுரமேறுமாபோலே, சந்த்ரன் தவழ்ந்தேறுநின்றுள்ள ஶிகரத்தையுடைய திருமலை. மாலிருஞ்சோலையாகிற - பதியென்னுதல், மாலிருஞ்சோலையில் - பதியென்று - திருப்பதியைச் சொல்லுதல். [பதியதுவேத்தியெழுவது பயனே]-ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிஶேஷத்தைப்பண்ணி உஜ்ஜீவிக்குமிதுவே இவ்வாத்மாவுக்கு ப்ரயோஜநம்; அல்லாதவை நிஷ்ப்ரயோஜநம். ப்ரயோஜநமென்றது - ப்ராப்ய மென்றபடி. (உ)

---

*ப்ர.—(சதிரிளமடவாரித்யாதி)—(தாழ்ச்சியை மதியாது)—ஜிதந்தாயாம்,* "நதே ரூபம் நசாகாரோ நாயுதாநி நசாஸ்பதம் । ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஸஸே॥".

---

"சதிரிளம்" இத்யாதியின் அர்த்தத்வயத்துக்கும், "பணிமின் திருவருள்" "பாண்தேன் வண்டறையும்" இத்யாதியை நினைப்பது. தாழ்ச்சி - இழிதொழில். மதியாதே - எண்ணுதே. மேல்நரகமென்றவிடத்திலே - [illegible] இத்யாத்யநுஸந்தேயம். நரகாவஹத்வாதிமாத்ரமன்றிக்கே துர்க்கடத்வாதிகமப்யாஹ-ஹந்த நாம இத்யாதி. ஜிதந்தாயாம், "நதே ரூபம் நசாகாரோ நாயுதாநி நசாஸ்பதம்। ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஸஸே". ஆக ப்ரயோஜநஶூந்யத்வ நரகாவஹத்வ ஶிஷ்டகர்ஹிதத்வ துர்க்கடத்வாபோக்யத்வாதி தோஷேணதுஷ்ட மென்றபடி. பக்தாநாமித்யாதி வாக்யம் - த்விதீயார்த்தாநுகுணம். த்விதீயார்த்தாநுகுணமாஹ - சதிரையுடையார் இத்யாதி.பிறரையகப்படுத்திக்கொள்ளுகைக்காக வென்றபடி. சாதுர்யத்தினுடைய சரமாவதியைக் காட்டுகிருர் - சேத்துக்காட்டவும் இத்யாதி.விஶ்லேஷ ப்ரஸங்காதாவிதி பாவ:. இளமைக்கு பாவம்-கீழே கிளரொளி இத்யாதி. அதிர்குரல் சங்கத்து - அதிராநின்றுள்ள த்வநியையுடைய சங்கத்தையுடைய வென்றபடி. அது தன்னையே தமக்குத் திருநாமமாக - "சங்கத்தழகர்" என்றே திருநாமம். "தங்கோயில்" என்றதுக்கு பாவம்-ஆஶ்ரிதரக்ஷண இத்யாதி. "அதிர்குரல்" "மதிதவழ்" என்றவிடத்திலே "[illegible] ஶிவம்" இத்யாதி ஶ்லோகம் அநுஸந்தேயம். சூற்பெண்டுகள் - கர்பிணிஸ்த்ரீகள். சுரம் - மலை. பதி - ஸ்த்தாநம். 'வத்தி" என்றதின் அர்த்தம்-ஸ்வரூபாநுரூபமான இத்யாதி. வ்ருத்தி - வாசிககைங்கர்யம். "எழுவதே - பயன்" என்று கூட்டி, ஏவகாரத்துக்கு அர்த்தம்-அல்லாதவை இத்யாதி. க்ரமேண அந்வய:. (உ)

## மூன்ரும்பாட்டு.

பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே!
புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில்
மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை
அயன்மலையடைவது அதுகருமமே.

ஆ.—(பயனல்ல.) ப்ரயோஜந ஶூந்யமாயிருந்த செயல்களைச்செய்து ஒரு ப்ரயோஜந மில்லை நெஞ்சே, ஆதலால் அவற்றைத் தவிர்ந்து ஆஶ்ரிதர்க்கு ஆத்மதாநம் பண்ணிக்கொண்டு நிற்கிற கோயிலாய், தன்னுடைய போக்யதையாலே ப்ரவிஷ்டரையும் மதிப்பியாநின்ற பொழில்களையுடைத்தான மாலிருஞ்சோலையினுடைய அயன்மலை யடைவது; அதுவே நமக்கு பரமஹித மென்கிருர்.

ஒ.—மூன்ரும்பாட்டில், திருமலையைச்சேர்ந்த அயன்மலையை ப்ராபிக்கையே செய்ய வடுப்ப தென்கிருர்.

[புயலென்று தொடங்கி] - வர்ஷூகமான மேகம்போலே ஜலஸ்த்தலவிபாகமின்றிக்கே ஸர்வஸ்வதாநம்பண்ணிவர்த்திக்கிற அழகருடைய கோயில். [மயல்மிகு பொழில்] - போக்யதையாலும் இருட்சியாலும் புக்கார் மிகவும் மதிமயங்கும்படியான திருச்சோலை.

ப.—அநந்தரம், பரமோதாரன் வர்த்திக்கிற திருமலையோடு சேர்ந்த அயல் மலையை ப்ராபிக்கையே கார்ய மென்கிருர்.

நெஞ்சே - நெஞ்சே! பயனல்ல - ப்ரயோஜநஶூந்யமானவற்றை, செய்து - செய்து, பயன் இல்லை - ப்ரயோஜநம் இல்லை, புயல் - தூறலுந்துளியுமான, மழை - காளமேகம்போலே, வண்ணர் - ஜலஸ்த்தலவிபாகமற வர்ஷிக்கும் ஸ்வபாவத்தையுடையவர், புரிந்து - அபிமுகனுய்க் கொண்டு, உறை - நித்யவாஸம்பண்ணுகிற, கோயில் - வாஸஸ்த்தாநமாய், மயல்மிகு - கண்டார் நெஞ்சுகலங்கும்படி தர்ஶநீயமான, பொழில் - பொழில், சூழ் - சூழ்ந்த, மாலிருஞ்சோலை - திருமலையினுடைய, அயல் - அருகின, மலை - மலையை, அடைவததுவே - அடைகையாகிற அதுவே, கருமம் - கர்த்தவ்யம் : ஸ்வரூப ப்ராப்தம்.

இ.—மூன்ரும்பாட்டில், திருமலையைச்சேர்ந்த அயன்மலையை ப்ராபிக்கையே கர்த்தவ்ய மென்கிருர்.

[பயனல்லசெய்து பயனில்லை] - ப்ரயோஜந ஶூந்யமானவற்றைச்செய்து ப்ரயோஜந மில்லை. செயலும் பலமு மிரண்டும் ப்ரயோஜநமாயாயிற்று தாம்பற்றின விஷய மிருப்பது, "ஸு²ஸு²வம் கத²பூ²ஷ்" என்னக்கடவதிறே. ஸாதநதஶையிலும் துஃகரூபமாய், பலவேளையிலும் துஃகமிஶ்ரமாயிருக்கிற ஸ்வர்க்க தத்ஸாதநங்களையாயிற்று இவர் நினைக்கிறது. [நெஞ்சே] - விஷயாந்தரங்களுக்கும் இவ்விஷயத்துக்கு முண்டான நெடுவாசி உனக்குஅநுபூதமிறே. [புயல் மழைவண்ணர் புரிந்துறைகோயில்] - வர்ஷூகமான மேகம்போலே ஜலஸ்த்தலவிபாகமின்றிக்கே ஸர்வஸ்வதாநம்பண்ணி வர்த்திக்கிற தேஶம். வர்ஷூகவலாஹகம்போலே யிருக்கிற திருமேனியை யுடையவனுய், அவ்வடிவழகை வழங்கிக்கொண்டு நிரந்தர வாஸம்பண்ணுகிற கோயிலென்றுமாம். தமக்கு ப்ராப்ய ப்ராபகங்கள் ஒருவனேயா யிருக்கிறபடி. [மயலித்யாதி] - போக்யதையாலும் இருட்சியாலும் புக்கார் மிகவும் மதிமயங்கும்படியான திருச்சோலை. ப்ராப்ய பூமியில் கலக்கமாகையாலே ப்ராப்யாந்தர்க்கதமிறே. [அயன்மலையித்யாதி] - திருமலையோட்டை ஸம்பந்தத்தையே தமக்குப் பேராக வுடைய மலையை ப்ராபிக்குமிதுவே ப்ராப்த மென்கிருர்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. உத்தேஶ்யத்துக்கு இதெல்லாம் வேணுமோ ? திருமலையோடு சேர்ந்த அயன்மலையை யடைய அமையு மென்கிறார்.

[பயனல்ல இத்யாதி] - பயனல்லவாக நினைத்திருக்கிறது - பரமபதத்திலிருப்பையும், அல்லாத அவதாரங்களையும். அன்றியே, [பயனித்யாதி] - ப்ரயோஜநஶூந்யமானவற்றைச் செய்து ஒருப்ரயோஜநமில்லை. செயலும் பலமும் இரண்டும் ப்ரயோஜநமாயிற்று தாம்பற்றின விஷயம், "ஸாஸாஸங்கர்த்ரு" (ஸாஸகம்கர்த்தும்) என்னக்கடவதிறே; ஸாதநதசையிலும் து:கரூபமாய், பல வேளையிலும் து:கமிஶ்ரமாயிருக்கிற ஸ்வர்க்க தத்ஸாதநங்களையாயிற்று இவர் நினைத்திருக்கிறது. [நெஞ்சே] - விஷயாந்தரத்துக்கும் இவ்விஷயத்துக்கும் உண்டான நெடுவாசி உனக்கு அநுபூதமிறே. [நெஞ்சே] - பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிறே நெஞ்சுதான் இருப்பது. இவ்வளவிலும் இவ்விஷயத்தை அகலுகைக்குக் காரியம்பார்த்தாய் நீயிறே. [புயல் மழைவண்ணர் புரிந்துறைகோயில்] - பயனான விஷயந்தானிருக்கிறபடி. வர்ஷுகவலாஹகம் போலே யிருக்கிற வடிவழகையுடையவர் அவ்வடிவழகை ஸர்வஸ்வதானம்பண்ணி வர்த்திக்கிற கோயில். வர்ஷுகமான மேகம்போலே ஜலஸ்த்தலவிபாகமின்றிக்கே ஸர்வஸ்வதானம்பண்ணி வர்த்திக்கிற தேச மென்றுமாம். இத்தால் - தமக்கு ப்ராப்யப்ராபகங்கள் ஒருவனேயாயிருக்கிறபடி. [மயல்மிகுபொழில்சூழ்] - சோலைச்செறிவாலே புக்கார்க்கு இருண்டிருக்கு மென்னுதல்; அன்றியே போக்யதாப்ரகர்ஷத்தாலே நெஞ்சை யிருளப்பண்ணு மென்னுதல். [மாலிருஞ்சோலைஅயன்மலை] - திருமலையோட்டை ஸம்பந்தத்தையே தனக்குப் பேராகவுடைத்தான மலை. "அகஸ்த்யப்ராதா" (அகஸ்த்யப்ராதா) என்னுமாபோலே. [அடைவததுகருமமே] - அதொன்றுமே கர்த்தவ்யம், அல்லாதவையடைய அகர்த்தவ்ய மென்கிறார். (ங)

---

ப்ர.—(பயனல்லசெய்து)—ஸர்வஜ்ஞ தாஸாநவநௌ, "ராஜவித்யாராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம் । ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யயம் ॥" •

---

மூன்றாம்பாட்டு—பயனல்ல இத்யாதி. உத்தேஶ்யத்துக்கு-தாம்நிஷ்கர்ஷித்த ப்ராப்யத்துக்கு. அயன் மலை - அசல்மலை.

பயனல்லவாகவிதி - பரமபதத்திலிருப்பையும் அவதாரங்களையும் ஆஶ்ரயித்து ஒரு ப்ரயோஜந மில்லை, இரண்டும் தேசகாலவிப்ரகர்ஷங்களால் துர்லபமாகையாலே; ஆகையாலே பகவந்நித்யஸந்நிதிமத்தேஶ ஸமாஶ்ரயணம் ப்ரயோஜநவதிதி பாவ:. ப்ரயோஜநஶூந்யமானவற்றை - காம்யகர்மங்களான ஸ்வர்க்காதிஸாதநங் களை. முந்தினவர்த்தத்திலே, செய்து - ப்ராப்யப்ராபகமாக ஆஶ்ரயித்து. த்விதீயார்த்தத்தில், ஸ்வர்க்காதி தத் ஸாதநங்களிலே அந்வயித் தென்றபடி. அவ்விஷயம் அப்படியிருக்குமோவென்ன-ஸாஸாவம் இத்யாதி. த்விதீ யார்த்தவிவரணம் - ஸாதநதசையிலும் இத்யாதி. "நெஞ்சே" என்றதுக்கு பாவம் - விஷயாந்தர இத்யாதி. பாவாந்தரமாஹ - பந்தமோக்ஷங்கள் இத்யாதி. "வண்ணர்" என்கிறவிடத்தில், வண்ணசப்தத்துக்கு - வர்ண வாசகத்வேநவும், ஸ்வபாவவாசகத்வேநவும் அர்த்தபேதம். அர்த்தத்வயத்திலும், புரிதல் - கொடுத்தல். வர்ணத: பலிதம் - ஸௌந்தர்யம்; த்விதீயார்த்தத்தில், மழைபோன்ற ஸ்வபாவத்தையுடையராகையாலே புரிகிறா ரென்ற படி. இத்தால் - அர்த்தத்வயத்தாலு மென்னுதல், "புயல்மழைவண்ணர், புரிந்து" என்றத்தா லென்னுதல். புயல்மழைவண்ணர் என்று - ப்ராப்யம். புரிந்தென்று - ப்ராபகம். செறிவு - நைபிட்யம். மயல்மிகுபொழில்- ப்ராந்தியை மிகப்பண்ணுகிற பொழில். மயல் - ப்ராந்தி. "மயல்மிகு" என்றவிடத்திலே, "ப்ரவிஷ்டாநாம் நாஸ்யஹ்ந:" என்ற கத்யவாக்யமும், "நிரந்தரநிபிட ஸ்ருஷ்ண த்வம் ரோமம்" இத்யாதியும் அநுஸந்தேயம். தத்ஸம்பந்தத்தையே பேராகவுடைத்தானமைக்கு த்ருஷ்டாந்தம் - அகஸ்த்ய இத்யாதி. "அதுவே - கருமம்" என்ற ஏவகாரார்த்தம் - அதொன்றுமே இத்யாதி. புயல் - வர்ஷுகமான. மழை - மேகம். உறைகை - நித்யவாஸம்பண்ணுகை. க்ரமேண அந்வய:. (ங)

## நான்காம் பாட்டு.

கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே
பெருமலையெடுத்தான் பீடுறைகோயில்
வரும்மழைதவழும் மாலிருஞ்சோலை
திருமலையதுவே அடைவதுதிறமே.

ஆ—(கருமம்.) நிரஸ்தப்ரதிபந்தகராய்க்கொண்டு தன் திருவடிகளிலே நாம்அடிமை செய்து உஜ்ஜீவிக்கைக்காகவே பரமகாருணிகனான தான் வந்துறைகின்ற ஸமஸ்தஸந்தாபநாஶகமான திருமலையை யடைகையே அடிமைசெய்கைக்கு உபாயமென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில் கர்மபந்தத்தைப் போக்கி ஆஶ்ரிதரானவர்கள் அடிமைசெய்து வாழ்கைக்கு ஈடாம்படி ஸர்வேஶ்வரன் வர்த்தித்தருளுகிற திருமலையை ஆஶ்ரயிக்கையே ஸத்ருஶமானபடி யென்கிறார்.

[பெருமலையென்று தொடங்கி] - ஆஶ்ரிதாபத்ஸகனான க்ருஷ்ணன் தன் ஐஶ்வர்யத்தோடே உறைகிற கோயில். [வருமழையென்று தொடங்கி]-மேகபதத்திற்காட்டிலும் உயர்ந்து அறப்பெருத்துள்ள திருச்சோலையை யுடைத்தான திருமலை.

ப.—அநந்தரம், ரக்ஷகனானவன் வர்த்திக்கிற பெரியபொழில்சூழ்ந்த திருமலையை ஆஶ்ரயிக்குமதுவே செய்யக்கடவபடி யென்கிறார்.

கருமம் - பந்தகமான கர்மங்களாகிற, வன் - கழற்றஅரிய, பாசம் - பாசங்களை, கழித்து - கழற்றி, உழன்று - அடிமைசெய்து வ்யாபரித்து, உய்யவே - சேதநர் உஜ்ஜீவிக்கைக்காகவே, (ஆர்த்தமான கோபகோபீஜநங்களுடைய ஆர்த்தி தீரும்படி) பெரு - பெரிய, மலை - மலையை, எடுத்தான் - எடுத்து ரக்ஷித்தவன், பீடு - தன்னுடையரக்ஷணைஶ்வர்யம், உறை - விளங்கும்படி நித்யவாஸம்பண்ணுகிற, கோயில் - ஸ்தாநமாய், வரு - (வர்ஷோன்முகமாய்)வருகிற, மழை - மேகங்கள், தவழும் - தவழும்படி, மால் - மிகவுமுயர்ந்து, இரும் - பரந்த, சோலை - சோலையை யுடைத்தான, திருமலையதுவே - திருமலைதன்னையே, அடைவதே - அடைவதே, திறம் - செய்யும்படி. மால் - உயர்த்தி. இருமை - பரப்பு. மாலிருஞ்சோலைத் திருமலையென்கையாலே - திருமலையிற் சோலையினுடைய ப்ராப்யதை தோற்றுகிறது.

இ.—நாலாம்பாட்டில், ஆஶ்ரிதர் தங்கள் கர்மபந்தத்தைப் போக்கி அடிமைசெய்து உஜ்ஜீவிக்கைக்காக. ரக்ஷகன் வந்து நித்யவாஸம் பண்ணுகிற திருமலையை ஆஶ்ரயிக்கையே ஸத்ருஶ மென்கிறார்.

[கருமமென்று தொடங்கி] - ப்ரபலமான கர்மபாஶத்தைப்போக்கி அடிமைசெய்து உஜ்ஜீவிக்கைக்காக. 'பரித்ராணாய ஸாதூநாம்' என்கிறபடியே விரோதிகளைப்போக்கி உஜ்ஜீவிப்பிக்கையேயிறே அவதார ப்ரயோஜநம். [பெருமலையித்யாதி] - "மொமொவீஜநஸஞ்ஜம். ஈதீவா த௶ம்" என்று இடையரும்இடைச்சிகளும்நோவுபட, ஒருமலையையெடுத்துநோக்கின அநந்த ஐஶ்வர்யத்தோடே வந்து நித்யவாஸம்பண்ணுகிற கோயில். பெருமலை - பஞ்சலக்ஷம் குடியும் நிழலிலே ஒதுங்கலாம்படியிறே மலையின் பரப்பு. பீடு-பெருமை. அதாகிறது - ஐஶ்வர்யம். ஒரு மலையை ஆதேயமாகக்கொண்டு ரக்ஷித்தவன் "ஒருமலையை ஆதாரமாகக்கொண்டு நோக்குவோம்"

என்று நிற்கிற இடம். [வருமழையித்யாதி] - ஊருக்குமழையிரண்டு - நின்றுநிரந்தரமாக வர்ஷிக்கும் மழையும், கறுப்பதுவெளுப்பதாய் வர்ஷிக்கும் மழையும். மழை - மேகம். [தவழும்] - "ஸ்ரீஅஹஹஸ்ஸிஷாதிஹாரா" என்று கர்ப்பிணிகள் சுரமேறுமாபோலே யாயிற்று மேகங்கள் ஸஞ்சரிப்பது. மாலென்று - பெருமை. இருமையென்றும் - பெருமை. இத்தால் - ஓங்கிப் பரந்த சோலையை யுடைய திருமலையென்கை. திருமலையை ஆஶ்ரயிக்குமதுவே செய்யக்கடவ ப்ரகாரம். திறம் - ப்ரகாரம்.

ஈடு.—நாலாம்பாட்டு. கர்மபந்தத்தைப்போக்கி ஆஶ்ரிதரானவர்கள் அடிமை செய்து வாழுகைக்கீடாம்படி ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருமலையை ஆஶ்ரயிக்கையே ஸத்ருஶமேன்கிறார்.

[கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே] - "இது நம்மாற்செய்து தலைக்கட்டப்போமோ திருமலையை யாஶ்ரயிக்குமதொழிய" என்று இங்ஙனே ஆழ்வான் ஒருருவிலே பணித்தானும்; அங்ஙனும் நிர்வஹிக்கக்கடவது. அன்றிக்கே, "கருமவன்பாசம் கழிக்கைக்காகவும், உழன்றுய்கைக்காகவும்", என்று இங்ஙனே எம்பெருமானர் அருளிச்செய்யும்படி. மூராஸுரன் அநேகமாயிரம் பாசங்களாலே தன்னை மறைய வரிந்துகொண்டிருந்தாற்போலேயிறே அவித்யாதிகளாலே தன்னை மறைய வரிந்துகொண்டிருக்கும்படி. கர்மமாகிற வலியபாசங்களைக் கழிக்கைக்காகவும், தன் பக்கல் கைங்கர்யத்தைப்பண்ணி யுஜ்ஜீவிக்கைக்காகவும். "**பரித்ராணாய ஸாதூநாம்**" (பரித்ராணயஸாதூநாம்) என்கிறபடியே - விரோதிகளைப்போக்கி உஜ்ஜீவிப்பிக்கையிறே அவதாரங்களுக்கு ப்ரயோஜநம். [பெருமலையெடுத்தான்] - அரியனசெய்தும் ஆஶ்ரிதரக்ஷணம் பண்ணுமவன்; "**கோகோபீஜநஸங்குலம் | அதீவார்த்தம்**" (கோகோபீஜநஸங்குலம் அதீவார்த்தம்) என்று - இடையரும் இடைச்சிகளும் நோவபட, ஒருமலையையெடுத்து நோக்கினவன், அந்த ஐஶ்

---

ப்ர:—(கருமவனித்யாதி)—(வன்பாசம்)—பத்தம் பதார்த்தம் ... ஸம்ஸாரயாபநம் ... "ப்ராஜ்ஞாதிஷ்ட ... ஸ்ருஷ்டிஸ்த்தியோஜநம் | ... ||கசு|| ... ||கஎ||".

(பெருமலையெடுத்தான்) — ... "... | ... ||கஉ|| ... கோகோபீஜநஸங்குலம் | அதீவார்த்தம் ... ||கங|| ...

---

நாலாம்பாட்டு — கருமம் இத்யாதி. எம்பெருமானர் நிர்வாஹத்தைப்பற்ற- கர்மபந்தத்தை இத்யாதி.

ஆழ்வான் நிர்வாஹத்திலே, உய்யவே - உஜ்ஜீவிக்கப்போமோ என்று, ஏகாரம் - பிரிநிலையேகாரம். வ்யதிரேகார்த்த மென்றபடி. எம்பெருமானர் நிர்வாஹத்திலே, ஏகாரம் - தேற்றத்திலே. தேற்றம் - நிஶ்சயம். உழலுகை - ஸஞ்சாரமாய், "தேநதேநஸஹஸ்ருதி" என்று - கைங்கர்யத்தை நினைக்கிறதென்றபடி. "வன்" என்றதுக்கு பாவம் - முராஸுரன் இத்யாதி. வரிந்துகொண்டு-பந்தித்துக்கொண்டு. அவித்யாதி-ஆதி சப்தேந-கர்மவாஸநாருசி ப்ரக்ருதிஸம்பந்தாதய உச்யந்தே. ஸப்தார்த்தம்-கர்மமாகிற இத்யாதி. திருமலையில் ஸ்த்திதிக்கு இதுவோ ப்ரயோஜநமென்ன, பரித்ராணாய இத்யாதி. அவதாரங்களுக்கென்றதிலே-அர்ச்சாவதாரமும் விவக்ஷிதம். "பெருமலையெடுத்தான்" என்றதுக்குத் தாத்பர்யம் - அரியனசெய்தும் இத்யாதி. கோவர்த்தநோத்தரணஹேதுகதநபூர்வகமாக அர்த்தம்-கோகோபீ இத்யாதி-பஞ்சமேஶ்லோகே, "ததஸ்தேகோஷ்ட..."

வர்யத்தோடேவந்து நித்யவாஸம் பண்ணுகிற கோயில். [பெருமலை]- பஞ்சலக்ஷங்குடியும் நிழலிலே யொதுங்கலாம்படியிறே மலையின்பரப்பு. பீடு - பெருமை. அதாவது - ஐஶ்வர்யம். ஆபத்ஸகத்வாதிகள். ஒருமலையை ஆதேயமாகக்கொண்டு ரக்ஷித்தவன் ஒருமலையை ஆதாரமாகக்கொண்டு ரக்ஷிக்க நிற்கிற விடம். பசுக்களுக்கும் இடையருக்கும் ரக்ஷகனுகையால் வந்த ஐஶ்வர்யந் தோற்ற வர்த்திக்கிற கோயில். [வருமழைதவழுமாலிருஞ்சோலை] - [illegible] " (ஸமுத்வஹந்தஸ்ஸலிலாதிபாரம் பலாகிநோவாரிதராநதந்தः- மஹத்ஸுஶ்ருங்கேஷுமஹீதராணும் விஶ்ரம்யவிஶ்ரம்யபுநःப்ரயாந்தி) என்கிறபடியே, சூற்பெண்டுகள் சுரமேறுமாபோலே யாயிற்று மேகங்கள் சஞ்சரிப்பது. ஊர்க்கு இரண்டாயிற்று மழை,—நின்றவிடத்திலே நின்று வர்ஷிப்பதோரு மேகமும், போவதுவருவதாயிருப்பதோரு மேகமும்; "புயல்மழைவண்ணர்" என்கிறதிறே. மாலிரும்சோலையாகிற திருமலையை ஆஶ்ரயிக்கு

---

[illegible] ॥கசு॥ [illegible] ॥கரு॥ ஸ்ரீவராஶர:॥ [illegible] ॥கசு॥ [illegible] ॥கள॥ [illegible] ॥கஅ॥ [illegible] ॥கக॥".

(வருமழை தவழும்)— [illegible] ॥உக॥ [illegible] ॥உஉ॥".

---

[illegible] " இத்யாரப்ய, [illegible] ". யத்வா, கோ:கோபீத்யாதிவாக்யம் - "பீடுறைகோயில்" என்றதுக்கு ஹாவமாதல். அந்த ஐஸ்வர்யத்தோடே - அந்தப் பெருமையோடே. பீடாவது - ஆபத்ஸகத்வாதிகளால் வந்த பெருமை. பெருமைக்கு அவதியைக் காட்டுகிறூர் - பஞ்சலக்ஷம் இத்யாதி. ஐஸ்வர்யமாவதேதென்ன, ஆபத்ஸகத்வாதிகள் என்று. "பெருமலை" என்றத்தைக் கடாக்ஷித்து, "உறைகோயில்" என்றதுக்கு ஹாவம் - ஒருமலையை இத்யாதி. "அதாவது ஐஸ்வர்யம்" இத்யாதியின் விவரணம் - பசுக்களுக்கும் இத்யாதி. மழை - மேகம். "தவழும்" என்றதுக்கு ஹாவம் - [illegible] இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே. லக்ஷ்மணம்ப்ரதி ராமேணுக்தோஅயம் ஶ்லோகஃ. சூற்பெண்டுகள் - கர்ப்பிணிஸ்த்ரீகள். சுரம் - மலை. "மழை" என்னுதே, "வருமழை" என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - ஊர்க்கு இத்யாதி. இவனும் மழையோ வென்ன, புயல் இத்யாதி. விவரணம் - சேமிய

மிதுவே, திறம் - செய் திறம். செய்யவடுப்பது இதுவே. மாலிரும்சோலையை யுடைத்தான திருமலையை யென்னுதல். மாலென்று - பெருமை. இருமையென்றும் - பெருமை. ஒன்று - ஒக்கத்திலே, ஒன்று - பரப்பிலே. (௪)

## ஐந்தாம் பாட்டு.

திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது
அறமுயலாழிப் படையவன்கோயில்
மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலை
புறமலைசாரப் போவதுகிறியே.

**ஆ.**—(திறமுடை.) விரகாலும் பலத்தாலும் தீவினைபெருக்காதே, ஆஸ்ரிதரக்ஷணைக ஸ்வபாவனான திருவாழியை திவ்யாயுதமாக வுடையனானவன் நின்றருளுகிற நிர்மலமாய் ஸர்வபோக்யமாயிருந்த சுனைகளை யுடைத்தான மாலிருஞ்சோலைமலையினுடைய புறமலை சாரப் போவது பரமப்ராப்ய மென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருமலைக்குப் புறம்பான மலையை ப்ராபிக்கையே நல்விரகென்கிறார்.

[திறமென்று தொடங்கி] - மிக்கிருந்துள்ள பலத்தாலே இதாபுருஷார்த்த ப்ராவண்யமான பாபத்தை வர்த்திப்பியாதே. [அறமென்று தொடங்கி] - ஆஸ்ரிதபரித்ராணமான பரம தர்மத்திலே மூளும் திருவாழியை திவ்யாயுதமாக வுடையவனுக்கு ஸ்த்தாநமாய் ரமணீயமான சுனைகளாலே சூழப்பட்ட திருமலையின்.

ப.—அநந்தரம், ரக்ஷணைத்யுக்தமான திருவாழியையுடையவன் வர்த்திக்கிற திருமலையின் புறமலையைக் கிட்டப்போவது நல்விர கென்கிறார்.

திறமுடை - நாநாவிதமான, வலத்தால் - பலங்களாலே, (அக்ருத்யகரணாதிகளான), தீவினை - கொடிய பாபங்களை, பெருக்காது - வர்த்திப்பியாதே, அறம்-ஆஸ்ரிதரக்ஷணமாகிற தர்மத்திலே, முயல் - உத்யோகத்தையுடைய, ஆழி - திருவாழியை, படையவன் - ஆயுதமாகவுடையவனுடைய, கோயில்-வாஸஸ்த்தாநமாய், மறு-சைவலகர்த்தமாதிகளாகிற களங்கம், இல்-அற்று, வண் - கிட்டினார்க்கு ஸர்வப்ரகாரோபஜீவ்யமான, சுனை - சுனைகளாலே, சூழ் - சூழப்பட்ட, மாலிருஞ்சோலை - திருமலையின், புறமலை - புறமலையை, சார - கிட்ட, போவது - போகிறவது, கிறி - நல்விரகு. கிட்டுமதிலும் கிட்டப்ரவர்த்திக்குமது நல்விரகென்று கருத்து.இப்பாட்டளவும்-உபதேசத்தை நெஞ்சோடேகூட்டி, மேல் - பிறரைக்குறித்து உபதேசிக்கிறார்.

**இ.**—அஞ்சாம்பாட்டில், திருமலைக்குப் புறம்பான மலையை ப்ராபிக்கையே நல்விரகென்கிறார்.

[திறமித்யாதி] - திறம் - ஸமூஹம், திரள். வலம் - பலம். திரண்டபலத்தாலே ப்ரயோஜநாந்தர ப்ராவண்யமாகிற பாபத்தைக் கூடுபூரியாதே. [அறமித்யாதி] - அறத்திலே

---

வடுப்பதிதுவே யென்று. "திருமாலிருஞ்சோலை" என்ற ரூடியான திருநாமத்தையுடைய மலையென்று முந்தின அர்த்தம். யோகார்த்தமவலம்ப்ய த்விதீயோநிர்வாஹஃ. ஒக்கம் - உயர்த்தி. பரப்பு - விஸ்தாரம். திறம் - செய்யும்படி. கருமவன்பாச மித்யாரப்ய, திருமலை - அடைவததுவே திறமித்யனீவயஃ. (௪)

முயலா நின்றுள்ள திருவாழியை ஆயுதமாகவுடையவன் வர்த்திக்கிற தேசம். அறமுயலாழி - ஸர்வேஶ்வரனிற் காட்டிலும் ஆஶ்ரிதரக்ஷணத்தில் முற்பாடனாகை; “லக்ஷ்மணஸ்ய ச தீமத:” என்னக்கடவதிறே. [மறுவிலித்யாதி] - “ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸுஹ்ருஜ்ஜநமநோ யதா” என்கிறபடியே தெளிந்து மநோஹரமாயிருக்கை. அதாகிறது - இவர் திருவுள்ளம்போலே யிருக்கை. [புறமலையித்யாதி]-அயன்மலையைச் சூழ்ந்த புறமலையைக் கிட்டப்போமதுவே நல்விர கென்கிறார். கிறியாவது - விரகு. அதாவது - அஸாத்யமானத்தை அபத்நேந லபிக்கை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருமலைக்குப் புறம்பான மலையை ப்ராபிக்கையே நல்விரகென் கிறார்.

[திறமுடைவலத்தால்] - திறம் - ஸமூஹம். வலம் - பலம். திரண்டபலத்தாலே ப்ர யோஜநாந்தர ப்ராவண்யமாகிற மஹாபாபத்தைக் கூடுபூரியாதே. [அறமுயல் இத்யாதி] - “லக்ஷ்மணஸ்ய ச தீமத:” (லக்ஷ்மணஸ்யசதீமத:) என்கிறபடியே - ஸர்வேஶ்வரனிலும் ஆஶ் ரிதரக்ஷணத்திலே முயலாநின்றுள்ள திருவாழியை ஆயுதமாகவுடையவன் வந்து வர்த்திக்கிற தேசம். ஸர்வேஶ்வரன் கடைக்கணித்துவிட, அரைக்ஷணத்திலே வாராணஸியை தஹித்து வந்துநின்ற

---

ப்ர:—(திறமுடைவலத்தாலித்யாதி)—(அறமுயலாழி)—ஸுந்தரகாண்டே ஷோட ஶே ஸீதாம் பஶ்யந்மாருதி:, “ஸோऽயம் ஸித்தார்த்தவ்யாக்ரா வாக்ஷ்வபூர்வகாம்பி யலக்ஷண:| ஸீதாஸ்ரிய தேஜஸ்வீ ஹநூமாநிவ பாவந ॥ உ ॥ ராமஸ்ய தயிதா ராஜ்ஞோ லக்ஷ்மணஸ்ய நார்யா । யதி ஸீதாவிஷோ:வாதுர்காஸோ ஹிடிரதிக்யே:॥ ௬॥ ராமஸ்ய வ்யவஸா யஜ்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீமத: । நாத்யகூம் க்ஷோப்யதே தேவீ மதுவஜலஷாமதெ॥ ௪॥”.

வஞ்சௌம்ஶே உத்தஸ்கிம்ஶே காஶீராஜவயஶ்ரவணாத் தத்தஸ்ய க்ருத்யா ஸ்ருயொமெக்ருஷ:, “ தவெதாஜ்ஞாலோகராஜாஜ்ஞாஜலெதஶகலாவிகா । க்ருஷக்ருஷெதி க்ஷவிதாக்ருத்யா ஆரவதீம் யயௌ ॥ ௬உ ॥ தாமெவெக்ஷ்யஜநஸ்ஸ்ராஸா ஷிவஜெஜ்ஞாவநொமா ஶெ । யயௌஶரண்யம் ஜமதாம் ஶரணம் மேஸுதஸூநம்॥ ௬௬॥ காஶீராஜஸுதெநெய மொராயவ்யுஷஷ்யஜம் । உத்வாதிதாமோஹாக்ருதெத்யவமஹாயவகீ ணா॥௬௪॥ ஜஹிக்ருத்யாமி மாமோஹ ராம் வஹ்னிஜாலாஜடாகராம் । வக்கமேஸ்துஷ்டெக்ஷஷ ஸீ யாஸஷேந ஶீலயா ॥

---

அஞ்சாம்பாட்டு.—திறம் இத்யாதி. நாலாம்பாதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை- திருமலைக்கு இத்யாதி. பலிதம் - திரண்ட இத்யாதி. அற - மிகவுமென்றுதல்; அறம் - தர்மமாதல். அர்த்ததவயஞ்சதந்த்ரே ணவ-லக்ஷ்மணஸ்ய இத்யாதி. ஸுந்தரகாண்டே ஷோடஶேஸீதாம்பஶ்யந்மாருதி:, “ராமஸ்யவ்யவஸாய ஜ்ஞாலக்ஷ்மணஸ்யசதீமத: । நாத்யகூம்க்ஷோப்யதெதேவீமதுவஜலஷாமதெ”. “தீமத:” என்று விசேஷிக்கையாலே - பெருமாளைப்பற்றவும் ஆஶ்ரிதரக்ஷணத்தில் மிகுந்திருப்பரென்றபடி. முயலுகை - உத்யோகிக்கையும், உத்ஸாஹிக்கையும். அப்படி ஆஶ்ரிதரக்ஷணத்தில் ஸர்வேஶ்வரனிற்காட்டிலும் முயன்றவிட முண்டோவென்ன, ஸர்வேஶ்வரன் இத்யாதி. வாராணஸியை தஹித்துவந்து நின்றுனிறேயென்றவிடத்திலே- “க்ஷேஷஷஸஷ்ஷேதிநாவ நிராதிரேண வாராணஸீ ஹாரவாரீஹவதாவிஷயா” என்றது அநுஸந்தேயம். பஞ்சமேம்ஶே சதுஸ்த்ரிம்ஶே, “ஓதாஹதமெரஶக ஸகலாவெதாம்வாரீம்”

னிறே. [மறுவில்இத்யாதி] - "ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா" (ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா) என்கிறபடியே, மறுவற்று ஆழ்வார்திருவுள்ளம்போலே தெளிவையுடைத்தாய், தர்ஶநீயமாய் ஊற்றுமாறாத சுனைகளாலே சூழப்பட்ட மாலிருஞ்சோலைப் புறமலை சாரப்போமிதுவே பகவத்ப்ரத்யாஸத்தி வேண்டியிருப்பார்க்கு வருத்தமற லபிக்கலாம் நல்விரகு. (ரு)

## ஆறாம் பாட்டு.

கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே
உறியமர்வெண்ணெ யுண்டவன்கோயில்
மறியோடுபிணைசேர் மாலிருஞ்சோலை
நெறிபடவதுவே நினைவதுநலமே.

---

[illegible] ||சூ|| [illegible] ||சு|| [illegible] ||சுஎ|| [illegible] ||சுஅ|| [illegible] ||சுகூ|| [illegible] ||௨0|| [illegible] ||௨க|| [illegible] ||௨௨|| [illegible] ||௨௩||".

ப்ர:—(மறுவில்)—[illegible] ||௨|| [illegible] ||ரு|| [illegible] ||சு||".

---

என்றது வாராணஸீ தஹநத்தில் ப்ரமாணமாக அநுஸந்தேயம். மறுவில் - ஶைவலகர்தமாதிகளாகிற களங்கமின்றியிருக்கிற. ரமணீயமிதி- பாலகாண்டேத்விதீயே பாத்வாஜம்ப்ரதிவால்மீகி:, "[illegible]" இதிபூர்வார்த்தம். இத்தால் பலிதம் - ஆழ்வார்திருவுள்ளம் இத்யாதி. வண்மை - அழகும், ஔதார்யமும். இவ்விரண்டையு மருளிச்செய்கிறார் - தர்ஶநீயமாய் ஊற்றுமாறாத வென்று. சாரப்போவது - கிட்டப்போகிறவது இதிஶப்தார்த்த:. கீட்டுமெதிலும் கிட்ட ப்ராவர்த்திக்குமது நல்விரகென்று கருத்து. கிறி - விரகு. க்ரமேண அந்வய:. (சு)

ஆ.—(கிறியென.) இத்தையே பரமப்ராப்யமென்று நினையுங்கள், வேறொன்றை ப்ராப்யமென்று நினையாதே; உறியமர்வெண்ணெ யுண்டவன் அச்சுவடழியாமே புகுந்துநின் றருளுகிற ஸர்வபோக்யமான திருமலையை அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு நினைக்குமதுவே ப்ராப்ய மென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், திருமலைக்குப் போகக்கடவ மார்க்கசிந்தனை நல்லதென்கிறார்.

[கிறியென்று தொடங்கி] - இதரபுருஷார்த்தங்களில் ப்ரவணராகாதே இதுவே நிரதிசய புருஷார்த்தம் என்று நினையுங்கோள். [உறியமரென்று தொடங்கி] - எட்டாதபடி உறியிலே யிருந்த வெண்ணெயை அமுதுசெய்து அச்சுவடழியாமே வந்துநின்றருளுகிற க்ருஷ்ணனுடைய கோயிலாய் நிலமிதியாலே திர்யக்குகளுங்கூடத் தந்தாமுடைய இனங்களைப் பிரியாதபடியான திருமலைக்குப் போம்வழி நெஞ்சிலேபட அத்தை நினையாநிற்கை. நெறிபட நினைகை - மிகவும் நினைக்கை யென்றுமாம்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதவ்யாமுக்தன் வர்த்திக்கிற திருமலைக்குப் போகிற வழியை யுள்பட நினைக்குமதுவே நன்மை யென்கிறார்.

கீழ்மை - (விஷயாந்தரங்களை நோக்கிப்போக நினைக்கும்) நீசதையை, செய்யாதே - பண்ணாதே, (இத்தை), கிறி - நல்விரகு, என - என்று, நினைமின் - நினையுங்கோள்! (ஏதென்னில்), உறி - உறியிலே, அமர் - பொருந்தச்சேமித்துவைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, உண்டவன் - அமுதுசெய்த க்ருஷ்ணனுடைய, கோயில் - கோயிலாய், மறியொடு - (தன்னுடைய) கன்றுகளோடேகூட, பிணை - மான்பேடைகள், சேர் - சேருகிற, மாலிருஞ்சோலை - திருமலையினுடைய, நெறி - வழியிலே, பட - உட்படவேணுமென்கிற, அதுவே - அத்தையே, நினைவது - நினைக்கை, நலம் - புருஷார்த்தம். மறி - குட்டி. பிணை - மான்பேடை.

இ.—ஆறும்பாட்டில், திருமலைக்குப்போம் மார்க்கசிந்தனையே நல்விர கென்கிறார்.

[கிறியெனநினைமின்] - நல்விரகென்று புத்தி பண்ணுங்கோள். [கீழ்மைசெய்யாதே] - இதுக்குப் புறம்பான ப்ரயோஜநங்களில் ப்ரவணராகாதே. கீழ்மையாவது-பகவத்வ்யதிரிக்தங்களில் ப்ராவண்யமிறே. [உறியமரித்யாதி] - உறியிலே சேமித்துவைத்த வெண்ணெயைக் குறியழியாமே அமுதுசெய்த க்ருஷ்ணன் அச்சுவடழியாமே வந்துநிற்கிற தேஶம். இத்தால் - அநுகூலஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாதவ னென்கை. [மறிபித்யாதி] - மறியென்று - மான், பிணையென்று - இளமான். மானானது தன் கன்றோடேசேர்ந்து வர்த்திக்கை. ரக்ஷ்யரக்ஷகங்கள் தம்மில் பிரியாதே வர்த்திக்கிற தேஶமென்கை. [மாலிரும்சோலைநெறிபட] - திருமலைக்குப்போம்வழி நெஞ்சிலே பட வென்னுதல், உங்கள் ஸத்தையுண்டாக வென்னுதல். [அதுவேநினைவது நலமே] - அத்தையே நினைக்குமது விலக்ஷணம். அத்தையொழிந்ததெல்லாம் பொல்லாத தென்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. திருமலைக்குப்போம் மார்க்கசிந்தை பண்ணுமிதுவே இவ்வாத்மாவுக்கு நல்ல தென்கிறார்.

[கிறியெனநினைமின்] - இது நல்விரகென்று புத்திபண்ணுங்கோள். [கீழ்மைசெய்யாதே]- நான் சொல்லுகிற தொழிய, தண்ணிதானவற்றைச் செய்ய நில்லாதே. அதாவது - ப்ரயோஜநாந்தர

---

ஆறும்பாட்டு.—கிறியென இத்யாதி. காலாம்பாதத்தைப் பற்ற - அவதாரிகை.

இது - நான் சொல்லுகிற இது. ப்ரயோஜநாந்தரப்ராவண்யம் - விஷயாந்தரப்ராவண்யம். முன்பே "சதிரிளமடவார்தாழ்ச்சி" என்றாரே. கீழ்மை - நீசவ்ருத்தி. களவுகண்டமுதுசெய்கிறதுக்கு ப்ரயோஜநம் -

ப்ராவண்யம். [உறிஇத்யாதி] - உறிகளிலே சேமித்துக் கள்ளக்கயிறுருவிவைத்த வெண்ணெயை "தெய்வங்கொண்டதோ" என்னலாம்படி களவுகண்டு அமுதுசெய்தவன் வந்துவர்த்திக்கிற தேசம். இத்தால் - அநுகூலஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாதவ னென்கை. [மறியோடு பிணைசேர்மாலிருஞ்சோலை] - குட்டியும் தாயும் பிரியாதே வர்த்திக்கிற தேசம். ரக்ஷ்யரக்ஷகங்கள் தம்மில்பிரியாதே வர்த்திக்குந் தேச மென்கை. [நெறிஇத்யாதி]-நெஞ்சிலே யடிபடும்படியாகத் திருமலையை அநுஸந்திக்குமதுவே நன்மையாவ தென்னுதல்; அன்றிக்கே, நெறிபடுகைக்கு நினைக்குமதுவே - மார்க்கசிந்தைபண்ணுமதுவே இவ்வாத்மாவுக்கு நன்மையாவ தென்னுதல். [அதுவே-நினைவதுநலம்] - அத்தை நினைக்குமதுவே விலக்ஷணம்; அதொழிந்தவை யெல்லாம் பொல்லாத தென்கை. (சு)

## ஏழாம் பாட்டு.

நலமெனநினைமின் நரகழுந்தாதே
நிலமுனமிடந்தான் நீடுறைகோயில்
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை
வலமுறையெய்தி மருவுதல்வலமே.

ஆ.—(நலம்.) இதுவே ப்ராப்யமென்று நினையுங்கள், வேறொன்றை ப்ராப்யமாக நினையாதே; நிலமுனமிடந்தான் என்றைக்கும் தனக்குக் கோயிலாகக்கொண்ட, பாமபுருஷ நிர்மல ஜ்ஞாநஜநகமான திருமலையை அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு வலம்செய்து மருவுங்கள்; இதுவே பரம ப்ராப்ய மென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், "திருமலை" என்று அநுகூலிக்கையே வென்றி யென்கிறார்.

[நலமென்று தொடங்கி] - இது புருஷார்த்தம் என்று நினையுங்கோள் இதர புருஷார்த்தமாகிற நரகத்தில் புகாதே. [நிலமென்று தொடங்கி] - ஸ்ரீவராஹமாய் ஜகத்தை எடுத்தருளினவனைக் காணப்பெற்றிலோமென்னாதே அவன் நித்யவாஸம்பண்ணுகிற கோயிலாய் தன்கோடுகளிலே தேய்ந்து களங்கம் போம்படி சந்த்ரன் வந்துசேருகிற திருமலையை அநுகூலனாய்க்கொண்டு சேர்ந்து.

ப.—அநந்தரம், ப்ரளயாபத்ஸகன் வர்த்திக்கிற திருமலையி லாநுகூல்யமே ப்ரபல மென்கிறார்.

(பஹிஷ்ட்டராய்), நரகு - ஸம்ஸாரநிரயத்தில், அழுந்தாதே - அழுந்தாதே, (இத்தை), நலம் - பரமப்ரயோஜநம், என - என்று, நினைமின் - புத்திபண்ணுங்கோள், முனம் - (ப்ரளயங்

---

இத்தால் இத்யாதி. மறி குட்டி. பிணை - மான். "மறியொடு பிணைசேர்" என்றதால் பலிதம் ஸ்வாபதேச மாஹ - ரக்ஷ்யரக்ஷகங்கள் இத்யாதி. நெறிபட - ப்ரஹதமாக. விஶதமாக வென்று முந்தின அர்த்தம். த்விதீயார்த்தத்திலே, நெறிபடுகைக்கு - மார்க்கத்திலே வர்த்திக்கைக்கு என்று அர்த்தம். அதுவே - அத்தையே. திருமலைக்குப் போம் வழியையே நினைவது நலம். ஏவகாரவ்யவச்சேத்யம் - அதொழிந்தவை இத்யாதி. "மாலிரும்சோலைநெறிபட" இத்யாதிக்கு - "திருமலையினுடைய வழியிலே யுட்படவேணுமென்கிற அத்தையே நினைக்கை புருஷார்த்தம்" என்றஉரையில் அர்த்தம். கீழ்மைசெய்யாதே-கிறியென நினைமின்; உறியமரித்யாதிப்ய க்ரமேண அந்வய: (சு)

கொண்ட) முற்காலத்திலே, நிலம் - பூமியை, இடந்தான் - (வராஹவேஷத்தைக்கொண்டு) இடந்தெடுத்தவன், நீடுறை - நித்யவாஸம் பண்ணுகிற, கோயில் - கோயிலாய், மலம்அறு - சிகரங்களிலே தேய்கையாலே களங்கரஹிதனை, மதி - சந்த்ரன், சேர் - பொருந்துகிற, மாலிருஞ்சோலை - திருமலையை, முறை - (சேஷசேஷிபாவமாகிற) முறைப்பாட்டாலுள்ள, வலம் - ஆநுகூல்யத்தை, எய்தி - பெற்று, மருவுதலே - பொருந்துகையே, வலம் - பலோத்தரம்.

இ.—ஏழாம்பாட்டில், "திருமலை" என்றால் அநுகூலிக்கையே ப்ரபல மென்கிறார்.

[நலமென நினைமின்] - இத்தை விலக்ஷணமான புருஷார்த்தமென்று நினையுங்கோள். [நரகழுந்தாதே] - இதுக்குப்புறம்பாகையாகிற நரகத்திலே புக்கு விழாதே. "நிரயொயஸ்த்வயா விநா", "ஸதெவெநிரயா:". [நிலமுனமித்யாதி]-கல்பாதியிலே பூமியை உத்தரித்த ஆபத்ஸகனானவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [மலமறுமதியித்யாதி] - சாணையிலிட்ட மாணிக்கம்போலே கொடுமுடிகளிலே தேய்ந்து ஒளிபெறுநின்றுள்ள சந்த்ரன் வந்து சேருகிற திருமலை. ஸம்ஶயரஹிதமான ஸ்வரூபஜ்ஞாந முண்டாம் தேசமென்னவுமாம். [வலமுறை யித்யாதி] - ஸ்ரீ மதுரையைக்கிட்டின காலயவநஜராஸந்தாதிகளைப் போலன்றியே, அநுகூலராய் முறையாலே சென்று கிட்டி அநுகூல வ்ருத்திகளைப் பண்ணுகையே பலவத்தரம். வலமென்று-வரமென்னவுமாம். வலமென்னுதல், ஶ்ரேஷ்டமென்னுதல்.

ஈடு. ஏழாம்பாட்டு. திருமலையைச் சேன்றுகிட்டி நிரந்தரவாஸம் பண்ணுகையே இவ்வாத்மாவுக்கு வெற்றி யென்கிறார்.

[நலமேனநினைமின்] - நான் சொல்லுகிற வார்த்தையை நன்மையென்று புத்திபண்ணுங்கோள். விலக்ஷணமான புருஷார்த்தமென்று புத்திபண்ணுங்கோள். [நரகழுந்தாதே] - நரகங்களும் இவர்களுக்கு வ்யவஸ்த்திதமாயிறே யிருப்பது; 'யஸ்த்வயாஸஹஸஸ்வர்க:' (யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்க:) - "காட்டிலே போமது து:கம், படைவீட்டிலே யிருக்குமது சுகம்" என்றாயிற்று பெருமாள் அருளிச்செய்தது; அங்ஙனல்ல, ஸுகது:கங்கள் வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதமாய்க் காணு மிருப்பது; யாதோன்று உம்மோடே பொருந்துகிறது, அது ஸுகமாகிறது, உம்மையொழியப் படைவீட்டிலிருக்கு மிருப்பு து:கமாகிறது. "இதிஜாநந்" (இதிஜாநந்)-தந்தாமுக்கில்லாதவை, பிறர்பக்கலிலே கற்றறியவேணும் காணும். "பராம்ப்ரீதிம்" (பராம்ப்ரீதிம்)-உம்மைப் போலே நிறுத்தல்ல காணும் என்னுடைய ப்ரீதி யிருப்பது. நம்மில் உனக்கு ப்ரீதிபரையாகச் சொன்

---

ஏழாம்பாட்டு.—நலமேன இத்யாதி. "மாலிருஞ்சோலை-மருவுதல் வலம்" என்றத்தைப்பற்ற, திருமலையை இத்யாதி.

நன்மையாவதேதென்ன, விவரிக்கிறார் - விலக்ஷணமான இத்யாதி. "மருவுதல்" என்ற பதத்துக்குச் சேர, "நரகு" என்கிறது - விஶ்லேஷவ்யஸநத்தையென்று விவக்ஷித்து, "நரகு" என்றால் - விஶ்லேஷவ்யஸநத்தைச் சொல்லுமோ? வென்ன-நரகங்களும் இத்யாதி. நரகு - நரகம். இவர்களுக்கு - ஆழ்வார்களுக்கு. இதுக்கு ஸம்வாதம் - யஸ்த்வயா இத்யாதி. அயோத்யாகாண்டே ராமம்ப்ரதி ஸீதா, "யஸ்த்வயாஸஹஸஸ்வர்கோ நிரயொயஸ்த்வயாவிநா । இதிஜாநந்பராம்ப்ரீதிம்கச்சராமமயாஸஹ । அதிக்ஷம்யசுஶ்ரூஷிதொடிஸ்மிந்வநகுலேஷ்வபாவக । கர்மந்தஶேஷாமாதிர்ஶ்யாமிஸ்ரீகாந்தபஞ்சகாநு". ஶ்லோக வ்யாக்யாநார்த்தம் பூர்வவ்ருத்தமநுவததி - காட்டிலே இத்யாதி. "த்வயாஸஹ-யொவாஸ:, ஸஸ்வர்க:; த்வயாவிநா-யொவாஸ:, ஸநிரய:-இதி-இவபராம்ப்ரீதிம்-ஜாநந்-மயாஸஹ-கச்ச" இத்யந்வயம் ஹ்ருதிநிதாயார்த்தமாஹ - யாதோன்று இத்யாதி. பிறர்பக்கலிலே யிதி - மதுபதேஶாதிதியாவத். "பராம்" என்றதுக்கு ஊவம்-உம்மைப்போலே இத்யாதி. "மயாஸஹ" என்றதுக்கு-"ஸஹமயாகெத்யாநே"

ணய், அதுக்கு நம்மைச் சொல்லுகிறதென்? என்ன, "**கச்ச ராம மயா ஸஹ**" (கச்சராமமயாஸஹ)- "**அக்ரதஸ்தே கமிஷ்யாமி**" (அக்ரதஸ்தேகமிஷ்யாமி) என்று - நான் புறப்பட்டபடியே, என்னை முன்னே போகவிட்டுப் பின்னே வரப்பாரும். "**நச ஸீதா த்வயா ஹீநா**" (நசஸீதாத்வயாஹீநா) என்றிறே இளையபெருமாள். [நரகமுழ்ந்தாதே] - பிரிவால்வரும் க்லேஶாநுபவம் பண்ணாதே. [நிலம் இத்யாதி] - வராஹகல்பத்தின் ஆதியிலே மஹாவராஹமாய், அண்டபித்தியிலே சேர்ந்து உருமாய்ந்த பூமியை ஒட்டுவிடுவித்து எடுத்துக்கொண்டேறின நிருபாதிகஸௌஹார்த்தமுடையவன், அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [மலமறு] - சந்த்ரபதத்துக்குஅவ்வருகே வளர்ந்து நிற்கையாலே, அவன்போம்போது ஶிகரங்களிலே தேய்ப்புண்டு சாணையிலே யிட்டாற்போலே களங்கமறுநிற்கு மென்னுதல்; அன்றிக்கே, "திருமலையாழ்வார்தாம் ஜ்ஞாநலாபத்தையுண்டாக்குவர்" என்று பிள்ளான் வார்த்தை. [வலமுறையெய்தி] - கால யவந ஜராஸந்தாதிகளைப் போலேயன்றிக்கே, அநுகூலமான முறையிலே கிட்டி, மருவுதல் வலமென்னுதல், வரமென்னுதல் - பலவத்தர மென்னுதல், ஶ்ரேஷ்டமென்னுதல். (எ)

---

ப்ர.—(வலமெனவித்யாதி) —(நரகமுழ்ந்தாதே) —அயோத்யாகாண்டே ॥௩௦॥ வநாநுயாநாய ராமம் ப்ரதி ஸீதா, "ந ச தத்ர கத: கிஞ்சித் த்ரஷ்டுமர்ஹஸி விப்ரியம் । இச்சதே கேவலம் ஸத்யே ந பவிஷ்யாமி துர்ஹரா ॥௭॥ யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயா விநா । இதி ஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ ॥௧௯॥" [ரா-அ-௨௭] யதி த்வம் ப்ரஸ்திதோ துர்கம் வநமத்யைவ ராகவ । அக்ரதஸ்தே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குஶகண்டகாந் ॥௬॥

அயோத்யாகாண்டே த்ரிபஞ்சாஶே நிஸ்ஸரணாநந்தரம் ஸாயம் ஸந்த்யாகதே ஸதி ஸுப்தயோ: ப்ரதிஸமாதாநார்த்தம் ராமம் ப்ரதி லக்ஷ்மண:, "நைதத் ஔபயிகம் ராம யதிதம் பரிதப்யஸே । விஷாதயஸி ஸீதாம் ச மாம் சைவ புருஷர்ஷப ॥௩௦॥ ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ । முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ ॥௩௧॥ நஹி தாதம் ந ஶத்ருக்நம் ந ஸுமித்ராம் பரந்தப । த்ரஷ்டுமிச்சேயமத்யாஹம் ஸ்வர்கம் சாபி த்வயா விநா ॥௩௨॥".

---

என்கிற க்ரமமன்றிக்கே, லோகவ்யவஹாராநுகுணமாக வ்யாக்யாநம் பண்ணுகிறார்-அக்ரத இத்யாதி பிராட்டிமார்க்கன்றோ விஶ்லேஷம் நரகமாய்த் தோற்றுவது, புருஷரான இவர்க்கு அப்படி தோற்றமோ? என்ன; இளைய பெருமாளைப்போலே இவர்க்குங்கூடும் இத்யபிப்ராயேணாஹ-நசஸீதா இத்யாதி. "நரகமுழ்ந்தாதே" என்றதுக்கு வ்யாக்யாநம் - பிரிவால் இத்யாதி. "முனம் - நிலமிடந்தான்" என்று அந்வயித்து அர்த்தம்- வராஹ இத்யாதி. அத்தால் பலிதம் - நிருபாதிகஸௌஹார்த்தமுடையவன் என்று. மலமறும்படி - மதிசேரென்று முந்தின அர்த்தம். மலமற்ற ஜ்ஞாநம் சேரும்படி யிருக்கிற மாலிருஞ்சோலையென்று த்விதீயார்த்தம். தேய்ப்புண்டு - உரையுண்டு வலமுறையெய்தி - ப்ரதக்ஷிணம் செய்கையாகிற முறையாலே கிட்டியென்று ஶப்தார்த்தம். "வலமுறையெய்தி" என்று விசேஷித்ததுக்கு பாவம் - காலயவந இத்யாதி. அர்த்தத்வயத்தையும் அடைவே விவரிக்கிறார்- பலவத்தரம் இத்யாதி. (எ)

## எட்டாம் பாட்டு.

வலஞ்செய்துவைகல் வலங்கழியாதே
வலஞ்செய்யுமாய மாயவன்கோயில்
வலஞ்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை
வலஞ்செய்துநாளும் மருவுதல்வழக்கே.

**ஆ.**—(வலம்செய்து.) ஹேயவிஷயங்களிலே விநியோகித்து அருமந்தபலத்தைப் போக்காதே, ஆஸ்சர்யபூதனாய் ஆஸ்ரிதஸுலபனாயிருந்த எம்பெருமானும் அயர்வறுமமரர்களும் வலம்செய்துகொண்டு அநுபவிக்கிற திருமாலிருஞ்சோலைமலையை வலம்செய்து நாளும்மருவுகை வழக்காவதென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், திருமலையைச்சென்று நிரந்தரமாக வலம்செய்கையே வழக்கு என்கிறார்.

[வலமென்று தொடங்கி]- நல்ல பலங்களை ஸம்பாதித்து க்ஷுத்ரவிஷய ப்ராவண்யத்தாலே அந்த பலங்களை வ்யர்த்தமாக்காதே. [வலமென்று தொடங்கி] - நம்மோடொக்கத் திருமலையை வலம்செய்யாநின்றுள்ள ஆஸ்சர்யபூதனான க்ருஷ்ணனுடைய கோயில். வலம்செய்யும் - பலக்ஷ னென்றுமாம். [வலம்செய்யுமென்று தொடங்கி]- எம்பெருமானோடொக்க வலம்செய்யாநின்றுள்ள அயர்வறுமமரர்களுடைய திருமலையை.

**ப.**—அநந்தரம், ஆஸ்ரிதாநுகூலனான க்ருஷ்ணன் வர்த்திக்கிற திருமலையிலே நிரந்தராநுகூல வ்ருத்தியே ஸ்வரூபப்ராப்தமென்கிறார்.

(கரணங்களுக்கு), வலம்-பலத்தை, செய்து-உண்டாக்கி, வைகல்-நிரந்தரமாக, வலம் - அந்தபலத்தை, கழியாதே - இதரவிஷயமாக்கிக்கெடாதே, வலம் - (ஆஸ்ரிதர்க்கு பவ்யதையாகிற) ஆநுகூல்யத்தை, செய்யும் - பண்ணும், ஆயன் - க்ருஷ்ணனான, மாயவன் - ஆஸ்சர்யபூதனுடைய, கோயில் - கோயிலான, வானோர் - பரமபதவாஸிகள், வலம் - அநுகூலவ்ருத்தி, செய்யும் - பண்ணும், மாலிருஞ்சோலை - திருமலையைக்குறித்து, வலம் - ப்ரதக்ஷிணாத்யநுகூலவ்ருத்தியை, செய்து - பண்ணி, நாளும் - நிரந்தரம், மருவுதல் - ஸம்ஸ்லேஷம் பண்ணுகை, வழக்கு - ந்யாயம்.

**இ.**—எட்டாம்பாட்டில், திருமலையை நிரந்தரமாக அநுகூலிக்கையே ப்ராப்தமென்கிறார்.

[வலம்செய்து இத்யாதி] - கரணபாடவத்தை உண்டாக்கி நாடோறும் அந்தபலத்தை இதரவிஷயங்களுக்கு உறுப்பாக்கி வ்யர்த்தமாக்காதே. [வலம்செய்யுமித்யாதி] - தன்னையும் கொடுத்து தன்னை அநுபவிக்கைக்கீடான ஸக்தியையும் கொடுக்கும் ஆஸ்சர்யபூதனான க்ருஷ்ணன் வர்த்திக்கிறதேஸம். "ய ஆத்மதா பலதா:" என்னக்கடவதிறே. அழகர் பிராட்டிமாரோடே கூட வலம்செய்கிற திருமலை என்றுமாம். [வலம்செய்யுமித்யாதி] - ராஜாக்கள் நகரசோதனைக்கு உறப்பட்டால் அந்தரங்கர் முகம்தோற்றாமல் திரியுமாப்போலே நித்யஸூரிகளும் அநுகூலவ்ருத்தி பண்ணுகிறதேஸம். [வலம்செய்து இத்யாதி] - நாமும் திருமலையிலே சென்று அவர்களோடு ஒரு கோஷ்டியாய்ஸர்வகாலமும் அநுகூலவ்ருத்திகளைப்பண்ணி வர்த்திக்குமிதுவே ப்ராப்தமென்கிறார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. திருமலையை நிரந்தரமாக வலஞ்செய்கையே வழக்கென்கிறார்.

[வலஞ்செய்து இத்யாதி] - ஸர்வேஶ்வரன் தன்னை ஆஶ்ரயிக்கைக்கு உறுப்பாகத் தந்த மநுஷ்யஶரீரத்தைக்கொண்டு ஃபலத்தையுண்டாக்கி,பின்னை அவனை ஆஶ்ரயிக்கையன்றிக்கே இதர விஷய ப்ராவண்யத்துக்கு உடலாக்கி அநர்த்தப்படாதே. [வலஞ்செய்யும்] - திருச்சித்ரகூடபரிஸரத்திலே பிராட்டியையுங்கூடக் கையைப்பிடித்துக்கொண்டு உலாவினாற்போலே, பிராட்டி கையைப் பிடித்துக்கொண்டு அழகர் ஆதரத்தோடே ஸஞ்சரிக்கிற தேசம். "**யஶ்ஶத்ருக்நாவநுஜா:**" (யஶாத்ம தாபலதா:) என்கிறபடியே - தன்னையுங் கொடுத்து, தன்னை யநுபவிக்கைக்கீடான ஶக்தியையுங் கொடுக்கும் ஆஶ்சர்யபூதனான க்ருஷ்ணன் வர்த்திக்கிற தேசம். [வலம்செய்யும்வானோர்மாலிருஞ்சோலை] - கீழ் "விண்ணோர்வெற்பன்" என்றார், இங்கே "வானோர்மாலிருஞ்சோலை" என்கிறார்; இதுக்கு நினைவென்? உகந்தருளின தேசமெல்லாங்கிடக்க வென்னில்; ப்ரஜைக்குத் தாயினுடைய அவயவமெல்லாங் கிடக்க முலைக்கண்ணிலேயிறே வாய்வைக்கலாவது, அப்படியே இங்கு "தென்னனுயர்பொருப்பும் தெய்வவடமலையும்" என்கிற முலையாகையாலே அவர்களுக்கேயா யிருக்கிறது. [வானோர்மாலிருஞ்சோலை] - பெருமாள் காட்டேக்கு எழுந்தருளுகிறபோது லக்ஷ்மணபரதர்கள் பின் தொடர்ந்தாற்போலே, ஸர்வேஶ்வரன் இங்கே போருகையாலே நித்யஸூரிகளும் போந்து வலஞ்செய்யாநிற்பர்கள். [வலஞ்செய்து] - நாமும் இவர்களோடேகூட அங்கே அநுகூலவ்ருத்திகளைப் பண்ணி. "பிள்ளைதிருநறையூரரையரும் பட்டரும் ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்கப் பின்னே ஸேவித்துக்கொண்டு போனேன்; அல்லாதார் கடுங்குதிரைபோலே வாராநிற்க, இவர்கள், திருக்கோபுரங்களையும் திருமாளிகைகளையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக்கொண்டு வந்தார்கள்" என்று

---

எட்டாம்பாட்டு.—வலம்செய்து இத்யாதி. காலாம்பாதத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகை. வழக்கு-ந்யாயம்.

"விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்" என்றத்தைப்பற்ற, தன்னையாஶ்ரயிக்கைக்கு உறுப்பாக வென்றது. ஃபலத்தையுண்டாக்கி - அங்கபாகாதிகளாலே உண்டாக்கி யென்றபடி. உடலாக்கி - அந்தபலத்தை உடலாக்கி. பலத்தை உடலாக்கி - நிரந்தரமாக வந்தபலத்தை இதர விஷயமாக்கிக் கெடாதே யென்று ஶப்தார்த்தம். "வலஞ்செய்யுமாயமாயவன்" என்றதுக்கு • மாவென்று - பிராட்டியாய் அவளையுடையவன் - மாயவனாய், "மாயவனான - ஆயன் - வலம்செய்கிற- கோயில்" என்று விவக்ஷித்து ஹாவம்-திருச்சித்ரகூட இத்யாதி. "வலம்செய்யும்-மாயவனான - ஆயன் வர்த்திக்கிற-கோயில்" என்ற அர்த்தாந்தரம் - யஶ்ஶத்ருக்நா இத்யாதி. இந்தப் பக்ஷத்தில், வலமென்று - பலமாய், செய்கை - கொடுக்கையாய், பலத்தைக் கொடுக்கு மென்றபடி. மாயவன் - ஆஶ்சர்யபூதன். "ஸத்யஶாத்யத்ருஷ்டாத்ருஷ்டாஸ்ஸ்வதீஜஸ்யவோ யகா:" இதிந்யாயேந, "வானோர்மாலிருஞ்சோலை" இத்யஸ்ய ஸத்ருஶம் ப்ரயோகாந்தரம் விசிந்த்ய, ப்ரயோகத்வயஸ்ய ச ஹேதுமாஹ-கீழ் இத்யாதிநா. நித்யஸூரிகள் இங்கே வருகைக்கும் அநுகூலவ்ருத்திபண்ணுகைக்கும் ஹேதுமாஹ - பெருமாள் இத்யாதி. தென்னன் இத்யாதி-பெரியதிருமடல். உயர்ந்த தெற்குத்திருமலையும், மேன்மையிலேற்றத்தையுடைய வடக்குத் திருமலையு மென்று சொல்லப்படுகிற இவை யிரண்டும் முலையாக வென்று பாசுரார்த்தம். வலம்செய்கை உபாயகோடியி லந்வயியாதோ? என்ன; அந்வயியாதென்கைக்கு ஐதிஹ்யம் - பிள்ளை இத்யாதி. அல்லாதார்இத்யாதி—அல்லாதார் - ஸாதநத்வேந ப்ரதக்ஷிணம் பண்ணுகிற பேர். கண்ணாலே பருகுவாரைப்போலே என்கையாலே - ப்ராப்யத்வம் ஸுஸ்பஷ்டம். "காணும்மருவுதல்" என்கிற இது கூடுமோ? கதாசித் ப்ரயோஜநாந்தர ப்ராவண்யத்தாலே ஸாதநத்வபுத்தி பிறவாதோ? என்ன, நித்யஸூரிகளுடைய இத்யாதி. நித்யஸூரிகளைப்போலே கைங்கர்யைக தாரக போஷக போக்யனானால், ப்ரயோஜநாந்தர

நஞ்சீயர் அருளிச்செய்வர். [நாளும்மருவுதல்வழக்கே] - நித்யஸூரிகளுடைய யாத்ரையே தனக்கு யாத்ரையானால் பின்னை மறுவலிடாதிறே. இதுவே வழக்கு. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது
அழக்கொடியட்டான் அமர்பெருங்கோயில்
மழக்களிற்றினஞ்சேர் மாலிருஞ்சோலை
தொழக்கருதுவதே துணிவதுசூதே.

ஆ.—(வழக்கென.) வேறொன்றை யுக்தமென்று பாராதே இதுவே யுக்தமென்று பார்த்து, ஆஸ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனா யிருந்தவனுடைய அபிமதமான திவ்யஸ்த்தாநமாய், ஸர்வாத்மபோக்யமாயிருந்த திருமலையைத் தொழுவோ மென்று உண்டான ஸங்கல்போத்யோக மாத்ரத்தைப் பண்ணுகை அவனுக்கு அடிமைசெய்கைக்கு நல்லவுபாய மென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், திருமலையைத் தொழுவோமென்று நினைக்கையே அமையு மென்று அத்யவஸிக்கையே விஜயஹேது வென்கிறார்.

[வழக்கென்று தொடங்கி] - இதுவே ந்யாயம் என்று நினையுங்கோள். இதரபுருஷார்த் தத்திலே ப்ரவணராய்த் தலைமடாதே. [அழக்கொடியென்று தொடங்கி] - பூதனையை முடித்தவனுக்கு போக்யதையாலே விடவொண்ணாதபடியாய் அஸங்குசிதமாக வர்த்திக்கலாம் கோயில். [மழக்களிறென்று தொடங்கி] - அழகரைப்போலே முக்யமான கஜயூயங்கள் சேர்ந்த திருமலை.

ப.—அநந்தரம், பூதநாநிரஸநம்பண்ணினவன் வர்த்திக்கிற திருமலையைத் தொழவேணு மென்கிற நினைவில் துணிவு வெற்றிக்கடி யென்கிறார்.

வல் - (கடக்க அரிதாம்படி) ப்ரபலமான, வினை - பாபங்களிலே, மூழ்காது - முழுகாதே, வழக்கு - இது ஸ்வரூபாநுரூபம், என - என்று, நினைமின் - நினையுங்கோள், அழன் - பேயான, கொடி - பெண்ணை, அட்டான் - நசிப்பித்தவன், அமர் - பொருந்திவர்த்திக்கும், பெரும் - அஸங்குசிதமான, கோயில் - கோயிலாய், மழ - கன்றுகளான, களிற்றினம் - ஆனைத்திரள், சேர் - சேருகிற, மாலிருஞ்சோலை - திருமலையை, தொழ - தொழவேணுமென்கிற, கருதுவதே - நினைவிலே, துணிவதே - துணிகையே, சூது - ஸம்ஸாரத்தை வெல்லுகைக்கு ஹேது. அழன் - பேய். கொடி - பெண்.

இ.—ஒன்பதாம்பாட்டில், திருமலையைத் தொழநினைக்கவே அமையுமென்று அத்யவஸிக்கையே விஜயஹேது வென்கிறார்.

[வழக்கெனநினைமின்] - நான்சொல்லுகையாலே "ஆப்தம்" என்றிருக்கையே யன்றியே, இது ஸ்வரூபப்ராப்தமென்று நினையுங்கோள். [வல்வினைமூழ்காது] - வ்யதிரிக்தவிஷயங்க

ப்ராவண்யத்துக்கும் தந்மூல ஸாதநத்வ புத்திக்கும் ப்ரஸங்கமில்லை என்றபடி. மறுவலிடாது - திரும்பாது. "மருவுதலேவழக்கு" என்று அந்வயித்து அர்த்தம்-இதுவேவழக்கு என்று. இதமேவ ப்ராப்தமித்யர்த்தஃ. நாளும் மருவுதல் - நிரந்தரஸம்ஸ்லேஷம்பண்ணுகை. வைகல் - வலம்செய்து - வலம்கழியாதே, மாயவனை - ஆயன் - வலம்செய்யும் - கோயிலாய், அதவ, வானோர் - வலம்செய்யுமதான - மாலிரும்சோலையை நீங்களும் வலம்செய்து நாளும்மருவுதலே-வழக்கு இத்யந்வயஃ. (அ)

ளில் ப்ராவண்யமாகிற வலிய பாபங்களிலே புக்கவகாஹியாதே. [அழக்கொடி இத்யாதி] - அழனென்று - பிணமாய், அத்தாலே - பேயென்றபடி. அழக்கொடியென்று - பேய்ப்பெண்ணென்றபடி. பூதனையை நிரஸித்த க்ருஷ்ணன், நம்விரோதிகளைப் போக்குகைக்கு விரும்பிவர்த்திக்கையாலே ஶ்லாக்யமான திருமலை. போக்யதையாலே விரும்பி அஸங்குசிதமாக வர்த்திக்கிற தேஶம் என்னவுமாம். [மழக்களிறித்யாதி] - செல்வாலும் இளமையாலும் அழகரோடொத்த கஜயூயங்கள் சேர்ந்து வர்த்திக்கிற தேஶம். லக்ஷணோபேதமாயிருப்பதொரு ஆனை நின்ற விடத்திலே ஆயிரம் ஆனை வந்துசேருமிறே; அங்கு நிற்கிறதும் சோலைமழகளிறிறே. [தொழவித்யாதி] - திருமலையைத் தொழுவோமென்று மநோரதித்து அத்தையே ப்ரயோஜநமாக அத்யவஸித்திருக்குமதுவே விஜயஹேது.

ஈடு.—ஒன்பதாம் பாட்டு. "திருமலையைத் தொழுவோம்" என்று அத்யவஸித்து நினைக்கை யமையும் விஜயஹேது வென்கிறார்.

[வழக்கெனநினைமின்] - நான்சொல்லுகிற இதுவே முறையென்று புத்திபண்ணுங்கோள். [வல்வினைமூழ்காது] - உங்களால் போக்கிக்கொள்ளவொண்ணாத மஹாபாபங்களைப் பரிஹரிக்க வேண்டியிருந்திகோளாகில். அழனென்று - பேய்க்குப் பேர்; கோடியென்று - பெண்ணுக்குப் பேர்; பேய்ப்பெண்ணென்றபடி. அழனென்று - பிணமாய், அத்தால் - பேயென்றபடி. பூதனையை முடித்தவன் "இங்ஙனொத்தவிரோதிகள் வந்தபோதாக நம்மை நெடுங்கைநீட்டாக்கி வைக்கவொண்ணாது" என்று நித்யவாஸம்பண்ணுகையாலே ஶ்லாக்யமான கோயில். [மழம் இத்யாதி] - அங்குண்டான திர்யக்குகளும் அழகரோடு ஓரினமாயாயிற்று இருப்பது. இளவானைக்கன்றுகள் இனமினமாகச் சேராநின்றுள்ள திருமலையை. லக்ஷணோபேதமாயிருப்பதோரு ஆனைநின்றவிடத்தே ஆயிரம் ஆனை வந்து சேராநிற்கும்; அங்கு நிற்கிறதும் சோலைமழகளிறிறே, "தென்னானை"யிறே. திருமலையைத் தொழவேணும் என்னும் மநோரதத்திலே துணிவதே இவ்வாத்மாவுக்கு விஜயஹேது. (கூ)

---

ப்ர.—(வழக்கென)—(அழக்கொடியட்டான்)—வைஷ்ணவைவ ஸார்வணே வக்ஷ்யதே ஸௌ வக்ஷ்யதே, "வஸந்தாம் ஸௌகாஷேத தேஷாம் வாஸுதேவார்ச்சனாதிநீ| ஸாவ்ருதம் க்ருஷ்ணஶேஷாய ராத்ரௌ தத்வைஷ்டிஷ்டவஸ்ரு ||எ|| யதைஷயதைஷஸ்ரஸம் ராத்ரௌ வாஸுதேநாஸம் ப்ருயது தி| தஸ்ய தஸ்ய க்ஷணேநாஷம் பாபகஸ்யாவஹந்யதே || அ || க்ருஷ்ணஸ்தஸ்தநம் ஶாஶம் க்ராஹ்யாஶதி வீக்ஷிதம்| ஹ்ருஷீகா ப்ராணஸஹிதம் வவளகொவஷேஷிதஃ|| கூ|| ஸாவிஶேஷக ஶேஷாராவா விவிக்ஷஸாயாஸவ்ருந்நா| வவாதவாஸுதேநாஸுஶேஷிர்ய ஶேஷாணதிஷீஷணா||க0||".

---

ஒன்பதாம்பாட்டு.—வழக்கென இத்யாதி. சதுர்த்தபாதத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகை. "சூது" என்ற பதத்தைப் பற்ற - விஜயஹேது என்றது.

முறையென்று - ப்ராப்தமென்ற. மூழ்காது - மூழ்காதேயிருக்கவேண்டில். "அழன்" என்று - பேயைச் சொல்லும்படி யென்னென்ன, அழனென்றுபிணமாய் இத்யாதி. நெடுங்கைநீட்டாக்கி - அதிதூரமாக்கி. "பெரும்" என்றதின் அர்த்தம் - ஶ்லாக்யமான என்றது. "மழம்" என்ற விசேஷணத்துக்கு ஸாவம்- அங்குண்டான இத்யாதி. ஓரினம் - ஒரு பருவம். இனம் - பருவம். 'இனம்" என்று - ஸமூஹமாக விவக்ஷித்து அர்த்தாந்தரம் - இளவானை இத்யாதி. மழ - இளமை. இனத்துக்கு ஹேதுவேது? என்ன, லக்ஷண இத்யாதி. லக்ஷணோபேதமான ஆனை அங்கிருக்கிறதோ? என்ன, அங்குநிற்கிறதும் இத்யாதி. ப்ரமாணாந்தரம் - தென்னானையிறேயென்ற, திருநெடுந்தாண்டகம். சூது - விஜயஹேது. தொழக்கருதுவது - தொழவேணுமென்கிற நினைவிலே. துணிவதுவே - துணிகையே. வல்வினைமூழ்காதித்யாரப்ய, தொழக்கருதுவதே துணிவது சூது; இத்தை வழக்கென நினைமின் இத்யந்வயம். (கூ)

## பத்தாம்பாட்டு.

சூதென்றுகளவும் சூதும்செய்யாதே
வேதமுன்விரித்தான் விரும்பியகோயில்
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை
போதவிழ்மலையே புகுவதுபொருளே.

**ஆ.**—(சூதென்று.) புருஷார்த்தமானசெயலைச் செய்கிறோ மென்றுகொண்டு சௌர்ய க்ருத்ரிமங்களைச் செய்யாதே, "ஸர்வவேதங்களுக்கும் தானே ப்ரதிபாத்யன்" என்னுமிடத்தை ஸ்ரீகீதையாலே அருளிச்செய்தருளின அந்த மஹாகுணத்தையுடைய எம்பெருமான்தனக்குங் கூட ஸ்ப்ருஹணீயமான திருமலையிலே போய்ப்புகுவதுவே பரமபுருஷார்த்த மென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், பலபடிகளாலும் திருமலையே புரமப்ராப்யமென்று உபக்ர மித்தபடியே உபஸம்ஹரிக்கிறார்.

[சூதென்று தொடங்கி] - நேர்பாடு என்று பார்த்துக்களவுகாணுதல், பஸ்யதோஹரதை யாதல் செய்யாதே. [வேதமென்று தொடங்கி] - ஸ்ரீகீதையாலே வேதார்த்தத்தை விரித்தவன் "வேதார்த்தபூதனை தன்னை ஆஸ்ரிதர்க்குக் காட்டலாம் நிலம்" என்று விரும்பின கோயில் [மாதுறுமயிலென்று தொடங்கி] - அங்குள்ள ஸத்வங்களெல்லாம் மிதுநமாயே வர்த்திக்கும்படி யிருக்கிற மாலிருஞ்சோலையாகிற நித்யவஸத்தமான திருமலையிலே புகுகை பரம ப்ரயோஜநம். மாதுறுமயிலென்றது - மார்தவத்தையுற்ற மயிலென்னவுமாம்.

ப.—அநந்தரம், வைதிக ஜ்ஞாநப்ரவர்த்தகன் வர்த்திக்கிற திருமலையிலே ப்ரவேஸிக் கிறவிது புருஷார்த்த மென்று உபக்ரமித்த உபதேஸத்தை நிகமித்தருளுகிறார்.

சூது - ஸுகரமான அர்த்தஸாதநம், என்று - என்றுநினைத்து, களவும் - களவுகாணு தல், சூதும் - பார்த்திருக்கஅபஹரித்தல், செய்யாதே - செய்யாதே, முன் - முற்காலத்திலே, (கீதோபநிஷதாதி முகத்தாலே), வேதம் - வேதார்த்தத்தை, விரித்தான் - விவரித்தவன், விரும் பிய - விரும்பிவர்த்திக்கிற, கோயில் - கோயிலாய், மாது - மாதிமை, உறு - உடைத்தான, மயில் - மயில்கள், சேர் - சேர்ந்துவர்த்திக்கிற, மால் - ஓங்கி, இரு - பரந்த, சோலை - சோலைகளில், போது - பூவானது, அவிழ் - மலருகிற, மலை - திருமலையிலே, புகுவதே - சென்றுபுகுவதே, பொருள் - புருஷார்த்தம். மாதிமை - மென்மை. மாதுறுவென்று - பேடையோடே சேர்ந்த வென்றுமாம்.

**இ.**—பத்தாம்பாட்டில், பலபடியாலும் திருமலையே பரமப்ராப்யமென்று உபக்ரமித்த படியே உபஸம்ஹரிக்கிறார்.

[சூதென்று இத்யாதி] - சூது - வெற்றி. நேர்பாடென்று பார்த்துக் களவுகாணுதல், பஸ்யதோஹரணமாதல் செய்யாதே. ஆத்மாபஹாரணம் பண்ணுதல், "ஈஸ்வரனே ரக்ஷகன்" என்றிருக்கும் ஸாத்விகரை யுக்த்யாபாஸங்களாலே விஸ்வாஸத்தைக் குலைத்தல் செய்யாதே என்றுமாம். [வேதமுன் விரித்தான்] - ஸ்ரீகீதாமுகத்தாலே வேதார்த்தத்தை விஸதீகரித்த வன். [விரும்பியகோயில்] - உபதேஸத்தால் மீளாதாரை வடிவைக்காட்டி மீட்கைக்காக விரும்பி வர்த்திக்கிறதேஸம். [மாதென்று தொடங்கி]-பேடையோடேகூடின மயில்கள் சேர்ந்து வர்த்திக் கிற திருமலை. மாதென்று - மார்த்தவமாய், ஸுகுமாரமான மயிலென்றுமாம். அங்குள்ள ஸத்வங்க ளெல்லாம் மிதுநமேயாய் வர்த்திக்குமென்கை. [போதுஇத்யாதி] - போதென்று - பூவாய், திரு

மலையை முட்டாக்கிடப் பூத்துக்கிடக்குமத்தனை. நித்யவஸந்தமான திருமலையிலே புகுகையே பரமப்ரயோஜநம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. பலபடியாலும் திருமலையே பரமப்ராப்யமென்று உபக்ரமித்த படியே உபஸம்ஹரிக்கிறார்.

[சூதென்று] - நமக்கு நல்லவாய்ப்பாயிருந்ததென்று சூதும் களவும் செய்யாதே, ஶாஸ்த்ரங்கள் இவற்றை நிஷேதிக்கையாலே அவற்றையுஞ் சொல்லவுமாம். அன்றிக்கே, களவாவது - "சோரேணாத்மாபஹாரிணா" (சோரேணாத்மாபஹாரிணா) என்கிற ஆத்மாபஹாரமாய், சூதாவது - ஸாத்விகனாய் ப்ராமாணிகனா யிருப்பானொருவன் "ஸர்வேஶ்வரன் ரக்ஷகன்" என்று விஶ்வஸித்திருந்தால், "காண்கிற தேஹத்துக்கவ்வருகே ஓரீஶ்வரனாவதேன்? ஆத்மாவாவதேன்" என்று காணக்காண அபஹரிக்கை. [வேதமித்யாதி] - இவை ஒருவர்க்கு வாராதபடி வேதார்த்தத்தை விஶதீகரித்த கீதோபநிஷதாசார்யன் வர்த்திக்கிற கோயில். [மாதுறுமயில்] - மாதென்று - மார்தவத்தைச் சொல்லுகிறதாய், ஸுகுமாரமாய் தர்ஶநீயமான மயிலென்னுதல்: பேடையையுற்ற மயிலென்னுதல். அங்குள்ள ஸத்வங்களெல்லாம் மிதுநமேயாய் வர்த்திக்குமென்கை. [போதவிழ்மலையே] - கோடியும் தண்டும் சருகும் இடையிடையிலே பூவுமாயிருக்கையன்றிக்கே, திருமலை தன்னை முட்டாக்கிடப் பூத்துக்கிடக்குமித்தனை. திருமலையைக்கிட்டுமதுவே இவ்வாத்மாவுக்கு ப்ரயோஜநமாய்த் தலைக்கட்டுவது, அல்லாதவையெல்லாம் வ்யர்த்தவ்ருத்திக ளென்கிறார். (௧௦)

---

ப்ர.—(சூதுஇத்யாதி)—(களவும்)— உத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸநத்ஸுஜாதः, "யோந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே । கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥௧॥".

---

பத்தாம்பாட்டு - சூதென்று இத்யாதி. "சதிர்" என்றும் - "பொருள்" என்றும் உபக்ரமோப ஸம்ஹாரங்களிலே - ப்ராப்யவாசகங்களாகக் கருதி யவதாரிகை - **பலபடியாலும்** இத்யாதி.

**சூதென்று** - ஸுகரமான அர்த்தஸாதநமென்று நினைத்து. **நல்லவாய்ப்பு** - நல்லஆதாயம். **சூதும் களவும்** - சதுரங்காதிகளும், பரத்ரவ்யாபஹாரமு மென்றபடி. வ்யுத்க்ரமமாக வ்யாக்யாநம்பண்ணிற்று - "சூதனாய்க் கள்வனாகி" என்றத்தைப் பற்ற. **நிஷேதிக்கையாலே** என்றவிடத்திலே - "அநாஹிதாக்நிதா ஸ்தைந்யம் க்ஷணாநாம் ஜ்ஞாநவர்ஜநம் । அஸத்ஶாஸ்த்ராபிநந்தநம் கௌஶீல்யம் வ்யஸநக்ரியா" என்ற வசநம் அநுஸந்தேயம். **கௌஶீல்யம்**-குத்ஸிதஶீலதா. வ்யஸநக்ரியா - த்யூதாதிः. **ஸ்தைந்யம்**-ஸ்தேநத்வம். "ஹவேதி கிணிஜிஜः" இத்யாதௌஹ்ருதயம். **அந்தரிதிணி** - த்யூதாதிவ்யாபாரரஹிதः. அவற்றையென்றது- களவும் சூதும். **களவாவது** - காணாதே அபஹரிக்கை. **சூதாவது** - கண்முன்னே அபஹரிக்கை. "யோந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே । கிம்தேநநக்ருதம்பாபம்சோரேணாத்மாபஹாரிணா" இத்யுத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸநத்ஸுஜாதः. இவை - த்யூதசௌர்யங்கள். **மாது** - ஸௌகுமார்யமும், ஸௌந்தர்யமும், ஸ்த்ரீயும். ஸௌகுமார்ய ஸௌந்தர்யங்களை தந்த்ரேணாஹ - **மாதென்று இத்யாதி**. பேடையென்ற அர்த்தத்தைப்பற்ற, **அங்குள்ள** இத்யாதி. "போதே - அவிழ்மலை" என்று அந்வயித்து, ஏவகாரார்த்தம் - **கோடியுமித்யாதி**. போது - புஷ்பம். **அவிழ்கை** - மலருகை. "புகுவதுவே-பொருள்" என்று அந்வயித்து, ஏவகாரவ்யாவர்த்த்யம் - **அல்லாதவை இத்யாதி**. க்ரமேண அந்வயः. (௧௦)

## பதினோராம்பாட்டு.

பொருளேன்றிவ்வுலகம் படைத்தவன்புகழ்மேல்
மருளில்வண்குருகூர் வண்சடகோபன்
தேருள்கொள்ளச்சோன்ன ஒராயிரத்துளிப்பத்து
அருளுடையவன்தாள் அணைவிக்கும்முடித்தே.

ஆ.—(பொருளென்று.) ஸம்ஸாரிகளான ஆத்மாக்களினுடைய ஸம்ருத்தியே நமக்கு ப்ரயோஜநமென்று பார்த்து, தத்ஸம்ருத்த்யர்த்தமான ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுயருளினவன் குணங்களில் ஓரஜ்ஞாநகந்தமின்றியே யிருந்த வண்குருகூர்ச்சடகோபன்,எல்லாருக்கும் எம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாற்போலே அறியலாம்படி சொன்ன இப்பத்து, அழகர் திருவடிகளிலே சேர்வித்து முடிக்கு மென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரை, இத்திருவாய்மொழிதானே ஜந்மத்தை முடித்து, அழகர் திருவடிகளிலே சேர்க்கு மென்கிறார்.

[பொருளென்று தொடங்கி] - பலகால் ஸ்ருஷ்டிக்க,விததமாகாநின்றாலும், என்றேனுமொருநாள் ப்ரயோஜநப்படுமென்று கருதி இந்த லோகத்தை உண்டாக்கினவனுடைய கல்யாண குணங்களிலே அஜ்ஞாநகந்தமில்லாத ஆழ்வார், தம்மிற்காட்டிலும் கேட்டார்க்குத் தெளிவு பிறக்கும்படி அருளிச்செய்த ஆயிரத்திலும் இத்திருவாய்மொழி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத்ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

பொருள் - ஆஶ்ரிதாபிமுக்யம்ப்ரயோஜநம், என்று - என்று, இ - இந்த, உலகம் - லோகத்தை, படைத்தவன் - ஸ்ருஷ்டித்தவனுடைய, புகழ்மேல் - தயாக்ஷமௌதார்யாதி குணப்ரதைவிஷயமாக, மருளில் - அஜ்ஞாநகந்தரஹிதராய், வண் - விலக்ஷணமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகராய், வண்-மஹோதாரரான, சடகோபன் - ஆழ்வார், தெருள் - தத்வஜ்ஞாநமானது, கொள்ள - சேதநரை ஸ்வீகரிக்கும்படி, சொன்ன - அருளிச்செய்த, ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்து - இப்பத்தும், முடித்து-ஸம்ஸாரத்தை நசிப்பித்து, அருளுடையவன் - க்ருபாபரிபூர்ணரான அழகருடைய, தாள்-திருவடிகளை, அணைவிக்கும் - அடைவிக்கும். முடித்தென்று - கர்த்தவ்யங்களைத் தலைக்கட்டியென்றுமாம். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரை, இதுதானே ஸம்ஸாரத்தை முடித்து அழகர் திருவடிகளிலே சேர்க்கு மென்கிறார்.

[பொருள்இத்யாதி] - பண்ணின க்ருஷிகள் தப்பினாலும் சோம்பாதே க்ருஷிபண்ணும் கர்ஷகனைப்போலே; கொடுத்த கரணங்களைக் கொண்டு அநர்த்தத்தை விளைத்துக்கொள்ள, பின்னையும் கரணங்களைத்தந்தஜகத்காரணபூதனுடைய கல்யாணகுணங்களிலேசேர்த்து.[மருள்இத்யாதி]- அஜ்ஞாநகந்தமில்லாதவராய், ஸர்வப்ரகாரவிலக்ஷணமான திருநகரியை உடைய பரமோதாரரான ஆழ்வார் அருளிச்செய்தது. [தெருள்இத்யாதி]-கேட்டார்க்குத் தம்மிலும் தெளிவைப்பிறப்பிக்கும்படி அருளிச்செய்தது. தம்முடைய ஜ்ஞாநத்துக்கடி ஈஶ்வரன், இவர்களுக்குத் தாம் அடியாக வந்தது. [அருளுடையவன்இத்யாதி] - அருளே நிரூபகமான அழகர் திருவடிகளிலே ஸம்ஸாரத்தை முடித்துச் சேர்க்கும்.

ஈடு.— நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரை, இத்திருவாய்மொழிதானே ஜந்மத்தைப்போக்கி அழகர்திருவடிகளிலே சேர்த்துவிடு மென்கிறார்.

[பொருள் இத்யாதி] - ப்ரயோஜநப்படுமென்று இந்த லோகங்களை உண்டாக்கினவனுடைய கல்யாணகுணவிஷயமாக அஜ்ஞாநகந்தமில்லாத ஆழ்வார் அருளிச்செய்தது இதுதான். இவற்றையுண்டாக்கி கரணகளேபரங்களைக் கொடுத்து விட்டால், கொடுத்த உபகரணங்களைக் கொண்டு ஶப்தாதி விஷயங்களிலே ப்ரவணராய்க் கைகழியப்புக்கால், "நம்மினைவு தப்பிற்றிறே" என்று நெகிழ்ந்து கைவாங்குகையன்றிக்கே, "ஒருநாளல்லாவொருநாளாகிலும் ப்ரயோஜநப்படாதோ?" என்று பலகாலும் உண்டாக்காநிற்கும்; மயர்வறமதிநல மருளப்பெற்றவராகையாலே அவனுடைய குணவிஷயமாக மருளில்லாதவராயிற்று இவ்வாழ்வார். ப்ரபந்தமோவென்னில், - [தெருள்கொள்ளச்சொன்னவோராயிரம்] - மருளுண்டாய்க் கழியவேண்டிற்று இவர்க்கு, இவருடைய ப்ரபந்தம் அப்யஸித்தார்க்கு முதலிலே அஜ்ஞாநந்தானில்லை. கேட்டார்க்குத் தெளிவைப் பிறப்பிக்கும்படியாயிற்று அருளிச்செய்தது. தம்முடைய ஜ்ஞாநத்துக்கடி ஈஶ்வரன், இவர்களுக்குத் தாம் அடியாக வந்தது. ப்ரபந்தந்தான் செய்வதென்? என்னில், - [அருளுடை இத்யாதி]- அருளையிட்டாயிற்று வஸ்துவை நிரூபிப்பது. அருளையுடையவன் திருவடிகளிலே சேர்த்துவிடும். அதுசெய்யுமிடத்தில் [முடித்தே] - ஸம்ஸார ஸம்பந்தத்தை வாஸநையோடே போக்கித் திருவடிகளிலே சேர்த்துவிடும். ஒருஜ்ஞாநலாபத்தைப்பண்ணித் தந்துவிடுமளவன்றிக்கே, அர்த்தக்ரியாகாரியாயிருக்கும்.

முதற்பாட்டில் - கடுகத் திருமலையாழ்வாரை ஆஶ்ரயியுங்கோ ளென்றார்; இரண்டாம் பாட்டில் - திருமலையோடு ஸம்பந்தித்த ஸ்ரீபதியை ஆஶ்ரயிக்கச்சொன்னார்; மூன்றாம்பாட்டில் - அத்தோடுசேர்ந்த அயன்மலை யமையு மென்றார்; நாலாம்பாட்டில் - "திரிதந்தாகிலும்" என்கிறபடியே திரியவும் திருமலையை ஆஶ்ரயிக்கச்சொன்னார்; அஞ்சாம்பாட்டில் - அத்தோடு சேர்ந்த புறமலையை ஆஶ்ரயியுங்கோ ளென்றார்; ஆறாம்பாட்டில் - திருமலைக்குப்போம் மார்க்கசிந்தைபண்ண வமையு மென்றார்; ஏழாம்பாட்டில் - அவ்வழியோடு சேர்ந்த திருமலையை ஆஶ்ரயிக்கச்சொன்னார்; எட்டாம்பாட்டில் - நித்யஸூரிகளுக்குங்கூட ப்ராப்யமாகையாலே திருமலையே பரமப்ராப்ய மென்றார்; ஒன்பதாம்பாட்டில் - "திருமலையைத் தொழக்கடவோம்" என்கிற துணிவே வேண்டுவ தென்றார்; பத்தாம்பாட்டில் - எல்லாப்படியாலும் திருமலையாழ்வாரை ஆஶ்ரயிக்கையே புருஷார்த்த மென்று தலைக்கட்டினார்; நிகமத்தில் - இதுகற்றார்க்குப் பலம் அருளிச்செய்தார்.

முதல் திருவாய்மொழியாலே - "மணியை வானவர் கண்ணனைத் தன்னதோரணியை" என்ற - விலக்ஷணவிஷயமாகையாலே, பிரிந்தார் கண்ணுஞ்சுழலை இடப்பண்ணு மென்றார்;

---

*நிகமம் - பொருள் இத்யாதி. "முடித்தே - அருளுடையவன்தாள் அணைவிக்கும்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி. "முடித்தே" என்றதிலே நோக்காக, ஜந்மத்தைப்போக்கி யென்றது.*

*ஶப்தார்த்தம் - ப்ரயோஜந இத்யாதி. பொருளென்று - பொருளையுடையதாமென்று. உக்தார்த்த விவரணம் - இவற்றையுண்டாக்கி இத்யாதி. அஜ்ஞாநகந்தமில்லாத - என்ற வாக்யத்தை ஸஹேதுகமாக விவரிக்கிறார் - மயர்வற இத்யாதி. எடுத்துக்கழியாமையாலே - அஜ்ஞாநந்தானில்லையென்றது. ஶப்தார்த்தம் - கேட்டார்க்கு இத்யாதி. இந்த வெவ்வாசிக்குஅடியேதென்ன-தம்முடைய இத்யாதி. பந்தமோக்ஷஸாதாரண ஸ்வதந்த்ரேஶ்வர ஹேதுகமாகையாலும் உஜ்ஜீவகைகஹேதுபூதமான தம்முடைய க்ருபாமூலமாகையாலு மென்று கருத்து. அருளையிட்டாயிற்றுவஸ்துவைநிருபிப்பது - "அருளுடையபெருமாள்" என்ற - அழகருக்குத் திருநாமமிதிஹாஸ். "முடித்தே" என்றதுக்கு ஹாவம் - ஸம்ஸாரஸம்பந்தத்தை இத்யாதி. அவதாரணார்த்தம் - ஒருஜ்ஞாநலாபம் இத்யாதி. அர்த்தக்ரியாகாரியாயிருக்கும் - ப்ரார்த்தநீய பலப்ரதம் பவதீத்யர்த்த:. வண்திருநகரி - விலக்ஷணமான திருநகரி. வண்சடகோபன் - உதாரரான ஆழ்வார். தெருள்கொள்ளச்சொன்ன - சேதநர், தெருளை - ஜ்ஞாநத்தை, கொள்ளும்படி அருளிச்செய்த.*

இரண்டாம் திருவாய்மொழியாலே - அவ்வோபாதி கூடினாலும் மறப்பிக்கு மென்றார்; மூன்றாந் திருவாய்மொழியாலே - கூடினவிஷயந்தான் நிரதிஶயஸுகரூப மென்றார்; நாலாந்திருவாய்மொழியாலே - அவ்விஷயத்துக்கு தேசிகரோடே அநுபவிக்கப் பெறுமையாலே மோஹங்கதரானார்; அஞ்சாந்திருவாய்மொழியாலே - தாம் அசைபட்டபடியே வந்துகலந்தபடி சொன்னார்; ஆறாந்திருவாய்மொழியாலே - தம்மிழவுக்கும் அவன் அதிஶங்கைபண்ணு மென்றார்; ஏழாந்திருவாய்மொழியாலே - தம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளையும் விஷயீகரித்தபடி சொன்னார்; எட்டாந்திருவாய்மொழியாலே - அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தை அருளிச்செய்தார்; ஒன்பதாந்திருவாய்மொழியாலே - ப்ராப்யநிஷ்கர்ஷம்பண்ணினார்; பத்தாந்திருவாய்மொழியாலே - நிஷ்கர்ஷித்த ப்ராப்யத்தை லபிக்கைக்குத் திருமலையாழ்வாரை ஆஶ்ரயிக்கச்சொன்னார். (கக)

---

*தஶகஸங்க்ரஹம் - முதற்பாட்டில் இத்யாதி. பத்தின்நிகமநம் - முதல்திருவாய்மொழியாலேஇத்யாதி. முடித்தே-அருளுடையவன் தாள் அணைவிக்கும் இத்யந்வய꞉.* (கக)

**த்ரவிடோபநிஷத் ஸங்கதி.**— வனகிரிஜயி துஷ்டிமௌஹவஹரி꞉ ப்ராப்தாந்தராஸெளிவாநுவநஶரீயஶர்திக்ருவெக்ஷ்ய ப்ராவ்யம் தமெவதத்ரமயிநஷ ஸவ்ரும் ப்ராப்த ஶகத்ரஶமெதிஶகெஶந்ரநீரு꞉.

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— ஶ்ரீமத்ஸவ்யஸஹாவம்ஶவஸிதஜலஜம்வஷிர்காமெஹாரவணும் மௌஸௌவ்ருத்ராஸிம்வ்ராஶ்ரிதஶகீவிஷஸஷெக்ஶாவீதமவ்ய்ழ। ஸம்ஶஹ்ஶாக்ஷிவ்ஹதிஶிம் வ்ரணசூநம்ஷணம் வஷிதநாவெதநாஜம் வஷிவநிஹார்யம் ப்ராதீநாம்ஶஹஸவியமிஸிஷ்யாநநொதாநிவிரவெஶ.

ஐதந்வெஷிதாத்ஸஹ்ஸணவிஶஹதயாசோநஷெவஶஸாவஸ்நா ஸாவிக்ஷஹஷிநாவ்யஸநஹாஶதயாவ்ஸாவிஸம்வ்ஷீ க்ஷிதாஸ। வெஶவ்யத்ராஸயொமாஜிஜஸஹ்யவநாந்த்ரகீ வ்ஶாஶஸ்யநாநா வெக்ஷகவெஷ்யாவெஷ்ஶ்யஹாவாவ்ஹநியதயாவாதிமொஜ்யம் ஷிதீயெ.

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

கிளரொளிசேர்கீழுரைத்தபேறுகிடைக்க
வளரொளிமால்சோலைமலைக்கே—தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனும்நீடுபுகழ்மாறன்தாள்
முன்செலுத்துவோம்எம்முடி.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளேஶரணம்.

இரண்டாம்பத்து ஸம்பூர்ணம்.

# 2-ஆம் பத்து — பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௯ | ௩௯ | நிரக்தி | நிராக்தி |
| ௨௭ | ௧௮ | [illegible] | [illegible] |
| ,, | ௧௯ | ஷியயாநவேஸ்வ்ரா | ஷியாநவெஸ்வ்ரா |
| ௫௯ | ௨௩ | ஐதிவஜ | ஐதிவஜ |
| ௯௨ | ௧௭ | ஹராக ஜீ | வராக ஜீ |
| ௮௪ | ௯ | பக்துஹோதவாய்ப் | பக்தஹோதவாய்ப் |
| ௯௭ | ௧௦ | அத்யத்க | அயத்க |
| ௧௦௪ | ௧௫ | த்ராவீதபூதமாய் | த்ராவீபூதமாய் |
| ,, | ௩௧ | சொல்லுகிற | செல்லுகிற |
| ௧௦௩ | ௨௧ | இனேன் | இலேன் |
| ௧௨௩ | ௨௫ | ஹைநிஹைஜிரே | ஹைஜிரே |
| ,, | ௩௪ | யன்ரோ | யன்ரோ ? |
| ௧௨௮ | ௩௨ | வாக்பத்வயதாலே | வாக்யதவயத்தாலே |
| ௧௨௯ | ௩௭ | "ஞூசநஃ" | "ஞூதநஃ" |
| ௧௩௮ | ௨௮ | ராம | ராமஃ |
| ,, | ,, | ஸ்வயரம்மிக்கும் | ஸ்வயம்ரமிக்கும் |
| ௧௪௩ | ௨௯ | சத்வாரித்சேத்யாயே | சத்வாரிய்சேத்யாயே |
| ௧௪௯ | ௩௩ | இலக்கைச்செற்றிருக்கே | இலங்கைசெற்றிருக்கே |
| ௧௫௩ | ௧௧ | சூட்டுகன்மலே | சூட்டுகன்மாலே |
| ௧௫௯ | ௩௪ | ஹஹஜைகுகெண | ஹாஹஜைகுகெண |
| ௧௭௪ | ௩௭ | ஸ்வ்யதிரிக்தங்களை | ஸ்வவ்யதிரிக்தங்களை |
| ௧௮௩ | ௮ | வஞிஜோஂஷஂ | வஜோஂஷஂ |
| ௧௮௫ | ௨௭ | அம்மனை | அம்மானை , |
| ௧௮௯ | ௨௫ | இம்மாஹாகுண | இம்மஹாகுண |
| ௧௮௯ | ௨௭ | நஜெந வாகாய | நஜெநாவாகாய |
| ௧௯௪ | ௧௯ | பெறக்கைக்குப் | பெறுகைக்குப் |
| ௧௯௭ | ௩௦ | ஸவபூமா | ஸவபூமா |
| ,, | ௩௩ | வராஹியஸ்ரநா | வராஹியஸ்ரநா |
| ,, | ,, | வைநூ | வைஙு |
| ௨௧௦ | ௪௮ | வாஸனையோடோ | வாஸனையோடே |
| ௨௧௧ | ௩௪ | நீப்ரதிஜ்ஞு | நீப்ரதிஜ்ஞா |
| ௨௨௭ | ௧௨ | நீவகே | நீவகே |
| ,, | ௧௮ | நெமொவகாரா | நெகொவகாரா |
| ௨௩௧ | ௧௫ | ஹதா | ஹாதா |
| ௨௫௪ | ௪௯ | ம்பெருமான் | எம்பெருமான் |
| ௨௫௩ | ௧௯ | ஜெஹூரா | ஜெஹஸூரா |
| ௨௫௩ | ௨௯ | பருவுத்தொழும் | மருவித்தொழும் |

# 2 - ஆம் பத்து — பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 4 | யாகாதோழியப் | யாகாதொழியப் |
| 5 | 18 | விடு | வீடு |
| 11 | 25 | திரியல்லா, | துயரில்லா |
| **12** | **2** | [illegible] | [illegible] |
| ,, | **17** | [illegible] | [illegible] |
| ,, | 37 | விபூற் | பூவிற் |
| 17 | 10 | இதுக்க | இதுக்கு |
| 19 | 24 | தவித்தவன் | தவிர்த்தவன் |
| 32 | 37 | அறியுமளவே? | அறியுமளவோ? |
| **43** | **13** | [illegible] | [illegible] |
| 77 | 23 | இப்ராக்ருதியோடோ | இப்ராக்ருதியோடே |
| **81** | **25** | [illegible] | [illegible] |
| 104 | 5 | அசைபட்டபடியே | ஆசைப்பட்டபடியே |